## இப்புத்தகத்திலடங்கியவை:—

யுத்தகாண்டம்:— பக்கம்.

ஸ்ரீ



# கம்பராமாயணம்

## யுத்தகாண்டம்

### கக-ஆவது படைத்தலைவர்வதைப்படலம்.

மகாபாரிசுவன் தூமிராட்சன்முதலிய படைத்தலைவரின் வதையைக் கூறும் படலமென்பது, பொருள். ஒருபிரதியில் இப்படலமும் அடுத்தபடல முஞ்சேர்க்கப்பட்டுக் கந்தல்மகாராட்சப்படைத்தலைவர் மகாகண்ணன் வதைப்படலம் என்ற பெயர் காணப்படுகின்றது.

வானரர்கள் ஆரவாரித்ததைக்கேட்டு அரக்கர் போர்வேட்கைகொண்டு இராவணனிடஞ்சென்று போர்க்குச் செல்ல விடைகேட்க, இராவணன் மகாபாரிசுவதூமிராட்சரைநோக்கி, 'நீவிர்பிரதானராகஇருந்து போர்க்குச்செல்க' என்ன அதுபொருத தூதர்கள்அன்றுபகலில் நிகழ்ந்தபோரில் அவர்கள் இந்திரசித்தைத் தனியேவிட்டிட்டுஓடிவந்திட்டதைத் தெரிவிக்க, இராவணன் அவர்மீதுசினங்கொண்டு அவர்களைப்பற்றி மூக்கையறுக்கும்படி சொல்ல, மாலியென்பவன் நியாயங்கூறித் தடுக்கவே இராவணனும் கோபம் மாறினனாக,—உடனே மகாபாரிசுவதூமிராட்சர் தாம் சபதஞ்செய்து போர்க்குச் செல்லவேண்ட, பத்துவெள்ளஞ்சேனையுடனே யஜ்ஞசத்துரு சூரியசத்துருமுதலியோரையும் இராவணன் ஏவினன். யாவரும் போர்க்களங் குறுகினர். விபீஷணன் ஸ்ரீராமனுக்குப் படைத்தலைவர்களை இன்னாரின்னாரென்று தெரிவித்தனன். பிறகு வானரசேனைக்கும் இராட்சசசேனைக்கும் கைகலந்தபோர் நிகழ்ந்தது. அப்போரில் தூமிராட்சன் அநுமானுடனும், மகாபாரிசுவன் அங்கதகுமாரனுடனும், மாலி நீலனுடனும், பிசாசன் பனசனுடனும், சூரியசத்துரு சுக்கிரீவனுடனும், யஜ்ஞசத்துரு இளையபெருமாளுடனும்,வச்சிரதந்தன் விருஷபனுடனும் எதிர்த்துநின்றார்கள்: அப்போது நிகழ்ந்த மும்முரமானபோரைக்கண்டு தேவர்களும் நடுநடுங்கினர். அப்போரில் ஆறுவெள்ளஞ்சேனையை வானரத்தலைவர் மாய்த்தனர்: மற்றைநாலுவெள்ளஞ்சேனையை இலட்சுமணன் மாய்த்தனன். இவ்வாறு கடும்போர் நிகழ்கையில், இரவுகழிந்து சூரியன் உதயமானான். பின்னும் மும்முரமாக நிகழ்ந்த போரில், அநுமான் தூமிராட்சனைத் தரையில்தள்ளிஉதைத்து அவனுடைய தலைகளைத்திருகித்தள்ளிக் கடலில்வீழ்த்திக் கோபம்மாறினன்: மகாபாரிசுவனும் அங்கதனும் உக்கிரமாகப்பொருகையில், மகாபாரிசுவன் அம்புகளை மிகுதியாக அங்கதன்மேலெய்ய,அவன் அவ்வரக்கனதுவில்லைமுறித்துத் தேருடனே அவனை வானத்தின்மீதுஎறிந்தான். அரக்கன் தேரைவிட்டிழிந்து யுகாந்தகாலத்து இடிபோன்றசூலத்தை அங்கதன்மேலெறிய, இராமபிரான் தனதுஅம்பால் அதனை அறுத்துத்தள்ளினர்: அப்பால், அங்கதன்

மிக்கவலிமையோடு அவ்வரக்கனைப்பிடித்து இருபிளவாகப்பிளந்து எறிந்திட்டான். மாலியென்பவன் கடும்போர்புரிகையில் நீலனென்னும் வானரன் ஒருமலையையெறிந்து அவன்வில்லை இருதுண்டாக்க, மாலி வாட்படைகொண்டு நெருங்க, குமுதன் ஒருமலையையெறிந்து அவ்வரக்கன்தேரைச் சிதைத்தனன். நீலன் ஒருமராமரத்தைப்பிடுங்கி அவ்வரக்கன்மீதுஎறிய, அதை அவன் வாட்படையாற் சிதைத்துப் பின்னுந் தொடர, இலட்சுமணன் வாளேந்திய அவ்வரக்கன்தோளை வெட்டி வீழ்த்தி, இனி இவனுடன் பொருதல்தகாதென்று அப்பாற்சென்றனன். அவ்விளையபெருமாளின் வீரகுணத்தை யாவரும் புகழ்ந்தனர். பின்பு இலட்சுமணன் கடுங்கோபங்கொண்டு யஜ்ஞசத்துருவைக் கொன்றனன். வச்சிரதம்ஷ்ட்ரன் இடபனோடுபொருது தண்டாயுதத்தால்உயிர்ச்சந்தேகமுண்டாம்படி அவனைமோதினனாக, அநுமான் பொருது குத்தி அவனைக் கொன்றான். பனசனோடுபொருத பிசாசன் அவன்மீதுதோமரத்தை விட்டெறிந்து, ஆச்சரியசக்தியுள்ள குதிரைமீதுஏறி வானரர்களைவருத்திக்கொண்டு போர்க்களத்தில் திரிந்துகொண்டிருக்கையில், இலட்சுமணன் வாயவ்யாஸ்திரத்தினால் அவன்தலையை யறுத்துத்தள்ளிவிட்டான். பின்பு இராவணன்தூதுவர்கள் படைத்தலைவரெல்லாம் மாண்டமையைத் தெரிவிக்கும்பொருட்டு இராவணனிடம் ஓடினார்களென்பது, இப்படலத்துக் கூறப்படுகின்றது.

க.—வானரர்கள் ஆர்த்தெழுமோசையைக்கேட்டு,அரக்கர் சினம்பொங்கப் போர்விரும்பி இராவணனிடம் விடைகேட்டல்.

ஆர்த்தெழு மோசை கேட்ட வரக்கரு முரச மார்ப்பப்
போர்த்தொழில் [1]வேட்கை பூண்டு [2]பொங்கினர் புகுந்து மொய்த்தார்
தார்த்தட மார்பன் றன்னைத் தாவிடை யென்னச் [3]சார்ந்தார் [ர்
பார்த்தனன் [4]முனிந்து மன்ன னினையன பகர்வ தானான்.

(இ - ள்.) ஆரவாரித்தெழுந்த ஓசையைக் கேட்ட அரக்கரும்,—முரசம் ஆரவாரிக்கப் போர்த்தொழிலில் விருப்பம்பூண்டு (சீற்றம்) பொங்கினவராய், (இராவணனிருக்குமிடத்திற்) புகுந்து மொய்த்தாராகி, மாலையையணிந்த விசாலமானமார்பையுடையனான இராவணனைப்பார்த்து, 'விடை தருவாய்' என்றுஅணுகினர்;(அரக்கர்)மன்னவனான இராவணனும் பார்த்துச்சினங்கொண்டு இவ்வார்த்தைகளைச்சொல்வதானான்; (எ - று.)—அரக்கன்வார்த்தையை மேற்கவியிற் காண்க. பி-ம்:—[1]வேடம். [2]பொங்கியே. [3]சொன்னார். [4]அரக்கர்கோனும் போமெனப்பகருங்காலை. (உ௨௫௩)

உ.—மகாபார்சுவ தூமிராட்சர்களைப் பிரதானராகக் இராவணன்விடைதர, தூதுவர் போறமல் அவர்தன்மையை இராவணனிடஞ் சொல்லத்தொடங்குதல்.

மாபெரும் பக்க னோடு [1]வான்புகைக் கண்ணை [2]நீயும்
[3]ஏகுதி யென்னப் பாரா வவர்முக [4]மினிதி னோக்கிப்
போவது புரிதி [5]யென்னப் [6]புகறலும் பொருத தூதர்
தேவமற் றிவர்கள் செய்கை கேளெனத் தெரியச் சொன்னார்.

(இ - ள்.) 'சிறந்ததூமிராட்சனே! மகாபாரிசுவனென்பவனோடு நீயும் பிரதானமாயிருந்து (போர்க்குச்) சென்மின்' என்று (அவர்களைப்)பார்த்துச் சொல்ல, அவர்முகத்தை (இராவணன்) இனிதாகப்பார்த்து '(போர்த்தொழிலுக்குப்)போவதைச் செய்க' என்று சொல்லுதலும்(அதனைப்)பொறாத தூதர்,— 'தேவ! இவர்கள்செய்தசெய்கையைக் கேள்' என்றுசொல்லி, (அவர்கள்செய்கையை) விளங்கச் சொல்லலாயினர்; (எ-று.)—தூதர்கூறுவதை அடுத்த கவியிற்காண்க. பி - ம்:—1மா. 2நீயும், வந்திங்கு. 3எவுதியெம்மையென்றார், எவுதிரெம்மையென்பாரவர், எகுதுமென்னப்பாராவவர், எகுதியெம்மையென் பார்தம், எவுறுமெம்மையென்பார்தம். 4இனிது. 5என்னைப். 6புகுதலும். ()

ங.—தூதர் மகாபார்சுவதூமிராட்சரின் செய்கையை இராவணனிடங் கூறுதல்.

ஆனையும் பரியுந் தேரு மரக்கரு [1]மமைந்த [2]வாழித்
[3]தானைகள் வீய நின்ற தலைமகன் றனிமை யோரார்
மானவன் வாளி வாளி யென்கின்ற மழலை வாயார்
[4]போனவர் மீளவந்து [5]புகுந்தனர் [6]போலு மென்றார்.

(இ-ள்.) ஆனையும் குதிரையும் தேரும் (பதாதிகளான) அரக்கருமாகிய (சதுரங்கங்களும்) அமைந்த கடல்போன்றசேனைகள் அழிந்திட(த் தனித்து) நின்ற தலைமகனை இந்திரசித்தின் தனிமையைச் சிறிதும்எண்ணாமல், 'மானவனுடைய வாளிவாளி' என்கின்ற குதலைச்சொல்லைச் சொல்லும்வாயையுடையவராய் (இந்தமகாபார்சுவ தூமிராட்சர்கள்)ஓடிப்போனவர் மீளவந்து (தமது வீரத்தைக் காட்டுமாறு) புகுந்தார்போலுமென்றார்; (எ - று.)

'சமயத்திற் பின்வாங்கிய இவரும் ஒருவீரராவரோ?' என்ற குறிப்புப்பட, தூதுவர் 'போனவர் மீளவந்து புகுந்தனர்போலும்' என்றார். இலட்சுமணனது பாணத்தினிடத்துள்ள அச்சத்தினால் அதனைச் சொல்லும்போது வாய்தழுதழுத்ததென்பதுபட 'மழலைவாயார்' என்றது. பி-ம்:—1ஐய. 2ஆளித், யாளித், வெள்ளத். 3தானையும். 4ஆனவர்மீண்டு. 5புகுந்துளர். 6அரச. ()

வேறு.

ச.—மகாபார்சுவ தூம்ராட்சரின்மீது இராவணன் சீற்றங்கொண்டு, அவர்களைப் பிடித்துக்கொள்ளுமாறு கட்டளையிடல்.

[1]அற்றவர் கூறலு மா[2]ரழ லிற்றாய்
முற்றிய கோப முருங்க முனிந்தான்
[3]இற்றது வோவிவர் சேவக மென்னாப்
பற்றுமி னென்றனன் வெம்மை பயின்றான்.

(இ-ள்.) அவ்வாறானவார்த்தையை அந்தத்தூதுவர் சொல்லவும்,—கொடுமையிற் பழகியவனான இராவணன்,—நிறைந்த நெருப்பின்தன்மையைக்கொண்டதாய் முதிர்ந்த கோபத்தால் (தன்னிலை) அழிய மிகமுனிந்தவனாய், 'இவர் சேவகம் இப்படிப்பட்டதோ!' என்று சொல்லி (இவர்களைப்)பற்றுங்கள் என்றான்; (எ-று.)—பி-ம்:—1அற்றதுணர்த்தலும். 2அழலிற்காய், 3இற்றிது.

ரு.—இராவணன் கட்டளைப்படியே கிங்கரர் அவ்விருவரையும் பற்றிக்கொள்ளுதல்.

என்றலு [1]மெய்தினர் கிங்கர ரென்பார்
[2]பின்றலி லாரை வலிந்து பிடித்தார்
நின்றன ராயிடை நீல நிறத்தான்
[3]கொன்றிடு வீரலிர் கொண்மினி தென்றான்.

(இ - ள்.) என்று கூறியவுடனே, கிங்கரரென்பவர் எய்திப் (போரிற்) பின்வாங்கிய அவர்களை வலியப் பிடித்துக்கொண்டுநின்றனர்; அப்போது கருநிறமுள்ள இராவணன், '(இவர்களைக்) கொல்லவேண்டா; (யான் கூறப்போகின்ற) இதை உறுதியாக மனத்துக்கொள்ளுங்கள்' என்று கூறலானான்; (எ - று.) —அதனை மேற்கவியிற் காண்க. பின்றலிலார் - பின்னிடுதலையுடையவர்: பின்றல் - பின்னிடுதல்: "அரசிலார்" "தவமிலார்" என்ற இடங்களிற்போல, இல்-சாரியை. பி-ம்: —[1]எயினர். [2]பின்றலிேனாரையுடன்றுபிடித்தே, பின்றினவோரை...பிடித்தே, பின்றலிலோரை...பிடித்தார். [3]கொன்றிடுவீரெனக் கொல்லலிர், கொன்றிடுவீரர்கேண்மினிது, கொன்றிடுவீரலிர்கொண்மினீர்.

சு.—அவ்விருவரையும் மூக்கறுத்துப் பறைகோட்டி ஊர்க்குத் தெரிவிக்குமாறு இராவணன் கட்டளையிடல்.

ஏற்ற மினிச்செயல் வேறிலை [1]யீர்வீர்
நாற்ற [2]நுகர்ந்துயர் நாசியை [3]நாமக்
[4]கோற்றரு திண்பணை [5]கொட்டினிர் [6]கொண்டூர்
[7]சாற்று மினஞ்சின [8]ரென்றுரை தந்தே.

(இ - ள்.) 'நாற்றத்தைநுகர்ந்து ஓங்கித்தோன்றுகின்ற (இவர்களை) மூக்கினை யீர்வீர்: (ஈர்ந்து பின்புஇவர்களை) ஊர்முழுதுங்கொண்டுபோய் (இவர்) அஞ்சினவரென்றுசொல்லி சிறந்தகடிப்பினால் அறைகின்ற திண்ணியபறையைக் கொட்டியவண்ணம் அறிவியுங்கள்; இனித்தகுந்தசெயல் (இதனின்) வேறில்லை (என்று இராவணன் கட்டளையிட்டான்); (எ - று.)—பி-ம்:—[1]வீரை, ஈர்ந்து, ஈர்ந்தவர். [2]நுகர்ந்திடு. [3]ஈவீர். [4]கோற்செருகு. [5]கொட்டினர். [6]கொண்டே. [7]சாற்றினரஞ்சினர். [8]என்றதனைத்தான். (உஉருஅ)

எ.—மாலி அச்செயலைத் தடுத்தல்.

அக்கண னே[1]யயில் வாளினர் [2]நேரா
மிக்குயர் நாசியை யீர விரைந்தார்
[3]புக்கன ரப்பொழு திற்புகழ் தக்கோய்
தக்கில தென்றனன் மாலி தடுத்தான்.

(இ-ள்.) அப்போதே, (கிங்கரர்),—உடன்பட்டு, கூரிய வாளினையுடையவராய், மிக்குயர்ந்த நாசியை யீர்தற்கு விரைந்து புகுந்தார்; அப்பொழுது மாலியென்பவன் (இராவணனைப்பார்த்து), 'புகழப்படுகின்ற பெரியோனே! (இது) தக்கதன்று' என்று சொல்லித் தடுத்தான்; (எ - று.)—பி-ம்:—[1]அரி, உயர். [2]ஆனோர், வாளால், வந்தார். [3]புக்கனன். (உஉருகூ)

அ.—இதுமுதல் எட்டுக்கவிகள்-ஒருதொடர்:மாலி மகாபாரிசுவ தூமிராட்சர்களின் மூக்கையரிதலாகாதென்பதற்கு நியாயங்காட்டுதலைத் தெரிவிக்கும்.

அஞ்[1]சம மஞ்சி யழிந்துள [2]ரானோர்
வெஞ்சமம் [3]வேறலும் [4]வென்றிய தின்றாய்த்
துஞ்சலு மென்றிவை [5]தொல்லைய வன்றே
தஞ்செனவாருள ராண்மை [6]தகைந்தார்.

(இ - ள்.) அழகியபோரில் அஞ்சி யழிந்தவரானவர் (பின்னர்க்)கொடிய போரில் வெல்லுதலும் (முன்பு வென்றவர் மற்றொருபோது) வெற்றியென்பது விளைந்திடாமல் துஞ்சுதலும் என்ற இவை, பழமையாய் நடந்துவரும் முறைமையவன்றோ? ஆண்மையை(த் தஞ்சமாக)த் தம்மிடத்துத் தடுத்து வைத்துக்கொண்டிருப்பவர் யாவருளர்? (எ - று.)

ஒருமுறை அஞ்சியோடியதற்காக இவரைத் தண்டித்தல் தக்கதன்று: தோற்றஇவர் இப்போது வென்றாலும் வெல்லலாமென்று குறிப்பித்தபடி. ஆண்மையைத் தடுத்துத் தம்மிடத்திலேயே ஸ்திரமாகஇருக்கும்படி வைத்துக்கொள்ளுதல்,எவர்க்கும் இயலாதென்க. 'அழிந்துளரானோர்' என்பதற்கு ஏற்ப 'முன்பு வென்றவர்' என்று வருவித்து உரைக்கப்பட்டது. துஞ்சுதல் - சோர்தல், இறத்தல் என்றபொருள்களைத் தரும். தஞ்சம் - ஸ்திரமானது. சமம்=ஸமரம்: வடசொற்றிரிபு. பி-ம்:—[1]சமர். [2]ஆனால். [3]வென்றலும், ஏறலும். [4]வென்றியரன்றோ, வென்றியதன்றோ, வென்றியதன்றால், வென்றியதன்றே. [5]தொல்லையவன்றோ, தொல்லையதன்றே. [6]தகைந்தாய், தகைந்தே. ()

கூ. அந்தர மொன்று மறிந்திலை யன்றே
[1]வந்தது நம்வயி [2]னெத்தனை மன்னா
[3]தந்திரம் வானவர் தானவ [4]ரென்னும்
[5]இந்திர னஞ்சின னெண்ணுதி யன்றே.

(இ - ள்.) (நீ) வேறுபாடு சிறிதும் அறிந்திலையன்றோ;மன்னா! வானவர் தானவர் என்கிற எத்தனைச்சேனை நம்மிடத்து எதிர்க்கவந்தது? (அதெல்லாம் தோற்றிடவில்லையோ?)இந்திரன் அஞ்சினனே:(அதை)எண்ணிப்பார்;(எ-று.)

எப்போதும் ஒருவர் வென்றே இருக்கவேண்டுமென்கிற நியதியில்லையென்பதை ஆராய்ந்துணரவேண்டுமென்பது, 'அந்தரமொன்று மறிந்திலை' என்றதன்குறிப்பு. முதல் வாக்கியத்தைச் சமர்த்திக்குமாறு தேவதானவர் தம்மிடத்துத் தோற்றதையும் தேவேந்திரனும் தோற்றதையும் எடுத்துக்காட்டுகிறான். தேவர் தோற்றதில் இந்திரன்தோற்றமையும் அடங்குமாயினும்,சிறப்பினதாதலால், அவன்தோற்றமையைத் தனியே எடுத்துக் கூறினான். அந்தரம் - நடுவுநிலையுமாம். பி - ம்:—[1]வந்தன, வந்தனை. [2]எத்துணை. [3]தந்திர. [4]ஏனும், என்றும். [5]இந்திரனஞ்சினர். (உஉசுக)

கO. வருண னடுங்கினன் வந்து வணங்கிக்
கருணை பெறுந்துணை யும்[1]முயிர் கால்வான்

[2]இருணிற வஞ்சக ரெங்குள [3]ரெந்தாய்
பருணிதர் தண்ட மிதன்று [4]பகர்ந்தாரை.

இ - ள்.) (இராமனிடத்துக்) கருணை பெருமளவும் வருணதேவன் நடுங்கினவனாய், வந்து வணங்கிப் பெருமூச்சுவிடுபவனானான்; (அந்த இராமனிடத்துத் தேவர்களே அஞ்சவேண்டியிருத்தலினால்) இருணிறமுள்ளவஞ்சகர் [அரக்கர்] எங்கே இருப்பர்? [அவ்விராமனுக்குமுன்னே சாதாரண ராட்சசர் போரில் முனைந்துஇருப்பது முடியாததே யென்றபடி]; எந்தாய்! ஆராய்ந்துசொல்லுமிடத்து, (நாசியையறுப்பதுஎன்ற) இச்செயல் அறிந்தோர்செய்தற்குஉரிய தண்டனையல்ல; (எ-று.)—பி - ம்:—[1]உயிர்காலா. [2]இருணிறை. [3]உய்ந்தார். [4]பகர்ந்தாய், பகர்ந்தான். (உஉகூஉ)

கக. பத்தொரு [1]நாலு பகுத்த பரப்பின்
அத்தனை வெள்ள மரக்க [2]ரவிந்தார்
ஒத்தொரு மூவர் [3]பிழைத்தன ருய்ந்தார்
[4]வித்தக [5]யாரினி வீரம் விளைப்பார்.

(இ - ள்.) நாற்பதுவெள்ளமாகப்பகுத்த பரப்பினையுடைய அத்தனை யரக்கரும் உயிரவிந்தார்: (அந்நாற்பதுவெள்ளச்சேனையில்) தூமிராட்சன் மகாபார்சுவன் இந்திரசித்து என்ற இம்மூவருந்தாம் உயிர்பொருந்தித் தப்பிப் பிழைத்தார்கள்; வித்தகனே! இனி (இவர்களைக்காட்டிலும்)வீரம்விளைத்தற்கு உரியவர் யாவருளர்? (எ - று.)—[4]வித்தகர்என்றபாடத்துக்கு-நாற்பதுவெள்ளஞ்சேனையழியவும் தப்பிப்பிழைத்தஇவர்கள் வல்லமையுள்ளவராவரென்க. பி-ம்:-[1]நான்கு.[2]அடைந்தார்,இடைந்தார் [3]பிறிந்தனர்,பிளந்தனர்.[5]ஆருளர். ()

கஉ. பாசமு மிற்றது பாதியின் மேலும்
[1]நாசமு முற்றது நம்பி நடந்தாய்
பூசன் [2]முகத்தொரு [3]கான்முளை [4]போதா
நீசரை [5]வெட்டுதி யோநெடு நாசி.

(இ - ள்.) (இந்திரசித்து இராமலட்சுமணரைக்கட்டிய)நாகபாசமும் இற்றுப்போய்விட்டது; பாதிக்குமேலாகவே (இராட்சசசேனை) மாண்டுவிட்டது; நம்பி! (நீயும் ஒருமுறைபோர்க்குப்) போய்த்திரும்பிவந்திட்டாய்; போர்முகத்திலே ஒப்பற்றஉன்புதல்வனுடன் போகாத எளியபணியாளரானவரை நெடியநாசியை வெட்டக்கடவையோ? (எ - று.)

உன்னாலும் எதிரிகளை எதிர்க்கமுடியவில்லை;உன்புதல்வன்செயலும் பயனற்றுப்போயிற்று: இப்படியிருப்பதனால், எதிரிகளுடன்செய்தபோரில் உன்மகனுக்குத் துணையாய்ப் போகவில்லையென்று இவர்கள் நாசியை வெட்டுதல் தகுதியாமோ? என்றவாறு. [4]போதஎன்ற பாடத்திற்கு-பூசன்முகத்தினின்று உன்கான்முளை மீண்டுவந்திட, நீசரை நாசிவெட்டுதியோ? என்று பொருள்: பூசன்முகத்துமீண்டுவந்த கான்முளைநாசியைவெட்டவேண்டாவோ?அது புரியாது இவர்கள்நாசியைவெட்டுதல்முறையோ?என்றவாறு. பி-ம்:—[1]தாசமுமற்றது தம்பிநடந்தாய், நாசமுமுற்றது நம்படைசாய்ந்து, நாசமுமற்றது நம்பி நடந்தான். [2]முடித்து. [3]ஞார். [4]போக, போகா. [5]சுருதியோ,வெட்டுதுமோ. ()

கங. வாழி யிலக்குவ [1]னென்னின் மறுக்குற்று
ஆழி யரக்கர்தம் வாயி லடைப்பார்
ஏழு கடற்றுணை யோவினி நாசி
ஊழி யறுத்திடி னும்[2]முல வாதால்.

(இ - ள்.) இலக்குவனென்றுசொன்னாலும் மனக்கலக்கமடைந்து ஆழிபோல்மிக்குள்ள அரக்கரெல்லாம் தம்(வீட்டு) வாசலை மூடிக்கொள்வார்கள்; (ஆகையால், அவர்கள்எல்லாருடையநாசியையும் அறுக்கவேண்டும்: ஆகவே), இனி நாசி ஏழு கடலளவுமாத்திரமோ? (அவற்றினும் மிகுமன்றோ? அவ்வாறு அறுக்கத்தொடங்கினால்), ஊழிக்காலம் வரையிலும் அறுத்துக்கொண்டிருந்தாலும்(நாசியெல்லாம்) அறுத்தாகாது;(எ-று.)—வாழி-அசை. பி-ம்:—1என்ன, என்று. 2ஒழியாதால். (உஉசுரு)

கச. தூது நடந்தவ னைத்தொழு [1]தந்நாள்
ஓது நெடுஞ்செரு வஞ்சி யுடைந்தார்
தீதிலர் [2]நின்றவர் சேனையி [3]னுள்ளார்
[4]பாதியின் மேலுளர் நாசி படைத்தார்.

(இ - ள்.) தூதுவந்த அநுமானை அன்று தொழுதுவிட்டு, ஓதுகின்ற நெடுஞ்செருவில் அஞ்சித் தோற்றவர் தீதில்லாதுநின்றவராய் (இப்போது) சேனையிலுள்ளவர் பாதியளவுக்கும் மேலாவர்:(அவர்களெல்லாம்),நாசி படைத்துள்ளார்கள்; (எ - று.)—பி-ம்:—1அன்னோர், அன்னான். 2நின்றுளர், நின்றனர். 3நின்றோர். 4பாதியினன்றுயர். (உஉசுசு)

கரு. விட்டிலை சீதையை யாமெனின் [1]வீரர்
ஒட்டிய [2]போருள தோவொரு நாளே
[3]வெட்டுதி நாசியை வெந்தொழில் வல்லோர்
பட்டில [4]ரென்றிலை யென்று [5]பகர்ந்தான்.

(இ - ள்.) சீதையை விட்டிடாதபடியினால், வீரர் சபதஞ்செய்த(படி நடத்திய)போர் ஒருநாளேனும் உளதோ? வெவ்வியபோர்த்தொழிலில்வல்லவரான இராமலட்சுமணரோ உயிர்பட்டொழிந்திலர்; (ஆகவே, போர்க்குச் சென்றவர்) நாசியை யெல்லாம் வெட்டுவாயென்று சொல்லவில்லையே; [அங்ஙனமும் சொல்லவேண்டாவோ?] என்று சொல்லிமுடித்தான், (மாலி); (எ - று.)—பி-ம்:—1வீர. 2போரினிலாருளரொட்டார், நாளுளதோவொருநாளே, நாளுளதேயொழியாமல். 3வெட்டிடு. 4எலெனில், என்னலை, என்னிலை. 5பகர்ந்தார். (உஉசுஎ)

கசு.—பின்பு தூமிராட்சமகாபாரிசுவர் இராவணனிடம் கூறத்தொடங்குதல்.

ஆறின [1]னென்ப தறிந்தன ரன்னோர்
[2]தேறினர் நின்றனர் சிந்தை தெளிந்தார்
சீறிய நெஞ்சினர் செங்கண [3]ரொன்றே
[4]கூறினர் தந்நிலை செய்கை குறித்தார்,

(இ - ள்.) (மாலிவார்த்தையைக்கேட்டு இராவணன் (கோபம்அடங்கினு னென்பதையறிந்தவராய், அந்த மகாபாரிசுவன் தூமிராக்ஷன்என்ற இருவரும் ---,மனக்கலக்கந்தீர்ந்து தெளிந்து தைரியமடைந்துநின்று, சீறியநெஞ்சத்தை யுடையவரும் (அதனுற்) செந்நிறமடைந்தகண்களையுடையவருமாகி, தம்மு டையநிலைமையையும் செய்கையையுங்குறித்து ஒன்று கூறலாயினர்; (எ - று.) —அதனை மேல் மூன்றுகவிகளிற் காண்க. பி-ம்:—1 பின்னரழிந்தனர், மன்ன ரழிந்திலன், என்னவறிந்தனர், என்னை வறிந்தனர். 2 தேறினனென்பது சிந்தை தெரிந்தார், தேறினரன்னது சிந்தையுணர்ந்தார். 3 அன்றே, ஒன்றே. 4 கூறின ரன்னிலை, கூறுவதின்னிலை, கூறுவதன்னிலை. (உஉசுஅ)

கஎ.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்:
தூமிராட்ச மகாபாரிசுவர் கூறுவதைத் தெரிவித்தும்.

உன்மக [1]னல்கி யொதுங்கின [2]னென்றே
மின்னகு வானிடை [3]யேகி [4]விரைந்தே
[5]அன்னதின் மாயை [6]யியற்றி யகன்றான்
இந்நக ரெய்தின னுய்ந்தன னெந்தாய்.

(இ - ள்.) எந்தாய்! உன்மகனுகிய இந்திரசித்து (போரிற்) பின்வாங்கி யொதுங்கினுன்: இம்மட்டோ? மின்னல்விளங்குகின்ற வானிலே விரைந்து சென்று,அங்கு மாயையையியற்றி அகன்றுபோய் இந்நகரையடைந்து பிழைத் தான்;(இது நிகழ்ந்தவிஷயம்); (எ - று.)—பி-ம்:—1 அஞ்சி. 2 அன்றே. 3 ஏக. 4 விரைந்தான். 5 அன்னது. 6 இயற்றியகன்றே, இயற்றியதென்றான்.(உஉசுக)

கஅ. இப்பக [1]லொன்றினி [2]னாளையி னெல்லாம்
[3]மூப்பக [4]தீர்க்கில மாவி முடிப்போம்
வெப்பக லாவெரி [5]வெந்தழல் வெந்த
செப்பகல் வெண்ணெயி னேண்மை[6]தெரிந்தோய்.

(இ - ள்.) வலிமையையுணர்ந்தோனே! (நாங்கள்அப்படியெல்லாம்ஓடா மல்), இப்பகலொன்றிலும் நாளையிலும் எல்லாம் வெம்மைநீங்காத எரிகின்ற வெவ்வியநெருப்பிலே வெந்த செப்பகலிலேபட்ட வெண்ணெய்போலாகும் படி(எதிர்த்தவரின்)ஆவியை முடிப்போம்;(அங்ஙனன்றி)மூன்றும்பகல் போக விடோம்; (எ - று.)

இன்றைநாளையில் பகைவரின் ஆவியைத்தொலைத்துவிடுகின்றோம்:மூன் ரும்நாளும் இந்தப்போர் போகும்படி விடுவதில்லையென்றனர், அந்தமகாபாரி சுவதூமிராட்சர்களென்க. பின்னிரண்டடியைத் தனியேயெடுத்து, (எதிர்த்த வரை) நெருப்பிற்பட்ட அகலிற்பெய்த வெண்ணெய்போலாக்கவல்ல எமது நோன்மையை [வலியை] அறிந்தோனே! என்று விளியாக்கினுமாம். பி-ம்:— 1 அன்றெனில், அன்றியல். 2 நாளையிதெல்லாம், நாளையினல்லால். 3 மூப்பகை. 4 தீர்கிலம். 5 வெந்தழிவந்த. 6 திரிந்தார். (உஉஎ0)

கசு. [1]விட்டனை யெம்மை [2]விடுத்தினி [3]வெம்போர்
பட்டனை [4]ஒான்று படுத்தனை ஒான்றே.

கெட்டன ரென்பது [5]கேளலை யென்று
ஒட்டின ராவி முடிக்க [6]வுவந்தார்.

(இ - ள்.) எம்மை (ப்போர்க்கு) அனுப்பினவனுய், விடுத்தபின்பு, இனி வெவ்வியபோரில் தாம்இரந்தார்களென்பதொன்று, (பகைவரை) அழித்தாரென்பதொன்று: (இவ்விரண்டினிலொன்றனையே கேட்பாய்;) போரில் தோற்றுவந்திட்டாரென்றுகேட்கமாட்டாயென்று, (தம்முடைய)ஆவியைப்போக்க மகிழ்ச்சிகொண்டவராய்ச் சபதஞ்செய்தனர்; (எ - று.)

'ஒன்று வென்றுவரவேண்டும்: அன்றி, உயிரையிழக்கவேண்டும்:தோற்றுவருவதில்லை'என்று தாம்உறுதிகொண்டு தூமிராட்ச மகாபார்சுவர் இராவணனுக்குச் சபதஞ்செய்து தெரிவித்தனரென்க. ஒன்றேஎன்பதன்பின் வருவித்துஉரைக்கப்பட்டது. பி - ம்:—[1]விட்டினி. [2]விடுத்தனே. [3]வெய்யோர். [4]என்று. [5]கேளினி, கேட்கலை. [6]உணர்ந்தார், உகந்தார். (உஉஎக)

உ0.—இராவணன் அவர்களுடன் சேனையை யேவுதல்.

அன்னவர் [1] தம்மொடு மையிரு வெள்ளம்
மின்னு படைக்கை யரக்கரை விட்டான்
சொன்ன தொகைக்கமை யானை சுடர்த்தேர்
[2]துன்னு வயப்பரி யோடு [3]தொகுத்தான்.

(இ-ள்.) (இராவணன்),—அவர்களுடனே மின்னும்படைக்கலந்தரித்தவரான பத்துவெள்ளந்தொகையுள்ள அரக்கரை அனுப்பினன்; (முன்)சொன்னதொகைக்கு ஏற்ற யானைகளையும் சுடரைக்கொண்டதேரையும், நெருங்கிய வலிமையுள்ள குதிரைகளுடனே சேர்த்துஅனுப்பினன்; (எ - று,)—பி-ம்:—[1]தாமொடும். [2]மன்னும்வயப், துன்னவயப், துன்னியவப். [3]வகுத்தான், தொகுத்தார். (உஉஎஉ)

உக.—இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்: யஜ்ஞசத்துருமுதலியோரும் சதுரங்கசேனைகளும் பக்கபலமாகச் சென்றமை கூறும்.

[1]நெய்யழல் வேள்வி நெடும்[2]பகை நேர்விண்
தைவரு சூரிய சத்துரு [3]வென்பான்
பெய்கழன் மாலி பிசாச னெனும்பேர்
வெய்யவன் [4]வச்சிரம் வென்ற வெயிற்றன்.

(இ - ள்.)நெய்சொரியப்பெற்ற அனலைக்கொண்ட பெரிய வேள்விக்குச் சத்துரு [யஜ்ஞசத்துரு], நேர்ந்து விண்ணிற் சஞ்சரிக்கின்ற சூரியனுக்குச் சத்துரு [சூரியசத்துரு], அணிந்த வீரக்கழலையுடைய மாலி, பிசாசனென்னும் பேரைக்கொண்ட கொடியவன், வச்சிரத்தைவென்ற கோரப்பற்களையுடையவன் [வஜ்ரதம்ஷ்ட்ரன்],—(எ - று.)—என்பான்-முதல்வேற்றுமைச்சொல்லுருபு. பி-ம்:—[1]நெய்யெரி,நெய்யெழில். [2]பகையோன்,படைதேர், பகைதேர். [3]என்றார், என்றோர், எற்றல், ஒன்றே. [4]வச்சிரமென்ற. (உஉஎங)

உஉ. என்றவ ரோடு மெழுந் நால கேழும்
வென்றவ [1]னேவலின் முன்னம் விரைந்தார்

சென்றன [2]மால்கரி தேர்பரி செல்லக்
[3]குன்றின மென்ன நடந்தனர் கோட்பால்.

(இ - ள்.) என்றவருடனே (மகாபாரிசுவ தூமிராட்சர்கள்)—எழுந்து, உலகேழும் வென்றவனுன இராவணனுடைய ஏவலினுல் முன்னம் விரைந்து சென்றூர்: பெரிய யானை தேர் பரிஎன்றவைகளும் நடந்தனவாய் (உடன்) போக, வலிமையோடு மலையினம்போல நடந்தார்கள்; (எ - று.)—பி - ம்:— [1]ஏவலினேகி. [2]மா. [3]குன்றினமாகநடந்தது கொட்ப, குன்றினமாகநடந்தன கொட்பால், குன்றினுமுயரியர்வீரியர்கொட்பால். (உஉஎச)

உரு.—அரக்கருடன்செல்லும் பெருஞ்சேனைவருணனை, இதுமுதல் ஆறுகவிகளிற் கூறப்படும்.

விண்ணை விழுங்கிய [1]தூளிய விண்ணோர்
[2]கண்ணை விழுங்கு தலிற்கரை [3]காணார்
[4]எண்ணை விழுங்கிய சேனையை யாரும்
[5]பண்ணை விழுங்க வுணர்ந்திலர் [6]பண்பால்.

(இ - ள்.) விண்ணைவிழுங்கிய தூளியானது அந்தவிண்ணோரின்கண்ணை மறைத்தலால், (அவர்கள், சேனையின்)கரையைக் காணாதவராயினர்; (இப்படித் தேவரே காணமாட்டாமையால்), எண்ணைக்கடந்தசேனையின் அமைந்துள்ளவகையை எவரும் முறைமையால் நன்குஉணராதவராயினர்; (எ - று.)

பேருணர்வுடைத்தவரென்னப்படுந் தேவர்களே உணராதபோது, மற்றவர் அச்சேனை அமைந்துள்ள அளவைக் காணமுடியாமைஇயல்பேயென்க. அவ்விண்ணோரென்பது அ விண்ணோரென்று தொகுத்தல்விகாரப்பட்டது. பண்-அமைந்துள்ளநீதி. பி-ம்:—[1]தூளியின், தூளியர். [2]எண்ணை. [3]காணும்,காணு. [4]மண்ணைவிழுங்கியெழுந்துயர்சேனை, மண்ணைவிழுங்கியசேனை வரும்போர்,எண்ணைவிழுங்கியசேனையர்யாரும்.[5]மண்ணை.[6]வானோர். (உஉஎரு)

உசு. கால்கிளர் தேரொடு [1]கால்வரை யோடும்
மேல்கிளர் பல்கொடி வெண்டிரை வீச
மால்கட லானது [2]மாப்படை வாள்கள்
பால்கிளர் [3]மீனிடை யாடிய பண்பால்.

(இ - ள்.) சக்கரத்தோடுவிளங்குகின்ற தேர்களோடு கால்படைத்தமலை போன்ற யானைகளிடத்தும் மீதுவிளங்குகின்ற பலகொடியாகிய வெள்ளிய அலைகள்வீச, பெருஞ்சேனையிலுள்ளவாட்படையாகிய (அக்கடலின்) இடத்து விளங்குகின்றமீன் இடையே சஞ்சரிக்கின்றதன்மையால், அச்சேனை,—பெரியகடல்போன்றது; (எ - று.)—இச்செய்யுள் சிலபிரதியிற் காணப்படவில்லை. பால்-இடம். பி-ம்:—[1]கார்வரையோடு, [2]மாமழைவானம், மாமழைவானப். [3]மின்னிடையோடிய. (உஉஎசு)

உரு. பேரி கலித்தன [1]பேருல கைச்சூழ்
[2]வாரி கலித்தனவாமென [3]யானை
[4]காரி கலிக்கட லோடு [5]கலித்த
மாரி [6]கலித்தென வாசி [5]கலித்த.

(இ-ள்.) பெரியஉலகைச்சூழ்ந்த கடல் ஒலித்தனபோலப் பேரி ஒலித்தன: யானைகள் காரோடு போட்டிபோட்டுக் கடலோடு கலித்தன; மாரி கலித்தாற் போல வாசிகள் ஒலித்தன; (எ - று.)—பி-ம்:—1பேருலகஞ். 2வாரி. 3யானைக். 4காருருமேறு கலித்தெனவொப்ப. 5கலிப்ப. 6கலித்தன. (உஉஎஎ)

உகூ. சென்றன சென்ற 1சுவட்டொடு செல்லா
நின்று 2பிணங்கிய 3கல்வியி 4னில்லா
ஒன்றினை யொன்று தொடர்ந்தன வோடைக்
குன்று நடந்தன போற்கொலை யானை.

(இ - ள்.) கொலைபுரியுந்தன்மையனவான யானைகள்,—சென்றபடைகள் சென்ற சுவட்டினிற் செல்லாமல்நின்று பிணங்கியனவும் (பாகரின்) கல்விக்கு அடங்காதனவுமாகி, நெற்றிப்பட்டமுள்ள குன்றுநடந்தனபோல ஒன்றினையொன்று தொடர்ந்து சென்றன; (எ - று.)—பி-ம்:—1சுவட்டின, சுவட்டினைச். 2பிணங்கள். 3கவ்வையின். 4தில்லாது. (உஉஎஅ)

எ௨. மாக நெடுங்கரம் 1வானின் வழங்கா
மேக 2நெடும்புனல் வாரின 3மேன்மேற்
போக 4விலங்கின வுண்டன 5போலாங்
காக நெடுங்களி யானை களிப்பால்.

(இ - ள்.)காகங்கள்சூழப்பெற்ற மிக்க மதக்களிப்புப்பொருந்திய யானைகள்,—களிப்பினாலே வானம்வரையிற்செல்லுமாறு நீண்டுள்ள (தமது) துதிக்கையை வானத்திலே செலுத்தி மேகத்திலுள்ள மிக்கபுனலை முகந்தனவாய், மேன்மேற்செல்லுதலை விட்டிட்டு (அப்புனலை) உண்பனவாயின; (எ - று.) —போல், ஆம் - அசைகள். வெற்றிகொண்டு கொல்லும் பிராணிகளின்தசையை யுண்ணக் காகங்கள்சூழுமென்க. மாகம் - வானம். பி-ம்:—1மானின். 2இரும்புனல். 3வீசி. 4விலங்கினர் விண்ணவர். 5போதக், போலக், போவக். ()

உஅ. எரிந்தெழு பல்படை யின்னொளி 1வீரர்
அருங்கல 2மின்னொளி தேர்பரி யானை
பொருந்திய பண்ணொளி 3தாரொளி பொங்க
4இரிந்தது பேரிரு ளெண்டிசை 5யெங்கும்.

(இ - ள்.) விளங்கியெழுகின்ற பலபடைக்கலங்களினொளியும் வீரரின் அரிய அணிகலங்கள் மின்னுகின்ற ஒளியும், தேர்பரியானைகளுக்குஅமைந்த அலங்காரங்களினொளியும், கிண்கிணிமாலைகளினொலியும், மிகுதியாயிருத்தலால், எண்டிசைமுழுதுமுள்ள மிக்கஇருள் நிலைகெட்டு ஓடிற்று; (எ-று.)—பி-ம்: —1யாணர். 2நன்னிழல். 3தாரொலி. 4இரிந்தன. 5தோறும். (உஉஅ௦)

உகூ.—இராமன் 'இந்திரசித்தே சேனையோடு மீண்டுவருகின்றனா?' என்று விபீஷணனை வினவுதல்.

எய்திய சேனையை யீச னெதிர்ந்தான்
1வெய்திவண் 2வந்தவன் மாயையின் 3வெற்றி
செய்தவ 4னேகொ றெரித்தி யிதென்றான்
5ஐயமில் வீடண 6னன்ன 7துரைத்தான்.

(இ-ள்.) (யாவர்க்குந்) தலைவனாகிய ஸ்ரீராமன்,—(அவ்வாறு)வந்த சேனையைஎதிரேகண்டு, 'உக்கிரங்கொண்டு இந்தச் சேனையில் வந்துள்ளவன் மாயையினால் வெற்றியை உண்டாக்கிக்கொண்டவனாகிய இந்திரசித்துதானோ? இதனைத்தெரிவிப்பாய்' என்று வினாவினான்; சந்தேகமற உணர்ந்தவனாகிய விபீஷணன் அதுகுறித்துச் சொல்பவனானான்; (எ - று)—பி-ம்:—[1]வெய்தினில். [2]வந்திவண். [3]வெற்றஞ்.[4]என்கொல்.[5]எய்யென,ஐயனவ்.[6]அன்றிது. [7]உரைப்பான். (உஉஅக)

வேறு.

௩0.—இதுமுதல் ஆறுகவிகள்-ஒருதொடர்: விபீஷணன் முக்கியமானவரையெல்லாம் இன்னார்இன்னாரென்று தெரிவித்தலைக் கூறும்.

முழைக்குலச் சீயம் [1]வெம்போர் வேட்டது முனிந்த தென்னப்,
புழைப்பிறை யெயிற்றுப் பேழ்வா [2]யிடிக்குலம் பொடிப்ப வார்த்
துத், [3]தழற்பொறி வாளிப் புட்டில் கட்டிவிற் றூங்கிச் சார்வான்,
மழைக்குரற் றேரின் மேலான் மாபெரும் பக்கன் மன்னோ.

(இ - ள்.) குகையில்வாழ்கின்ற சிறந்த சிங்கம் கொடியபோரை விரும்பியதாய்ச் சீற்றங்கொண்டதுபோல, பிறைபோன்ற எயிற்றைக்கொண்ட பிளவுபட்டவாய்ப்புழையினாலே இடிக்குலமும் பொடியாகும்படி [பேரொலியுண்டாக] ஆரவாரித்து,—நெருப்புப்பொறியைக்கக்கவல்ல வாளிப்புட்டிலை [அம்புத்தூணியை] (முதுகிற்) கட்டிக்கொண்டு வில்லைப் பிடித்தவண்ணம் மழைக்குரல்போன்ற(சக்கரத்)தொனியைக்கொண்ட தேரின்மீதாகவருபவன், மஹாபார்சுவனென்பவன்;(எ-று.)-மன்ஓ-ஈற்றசைகள்.பி-ம்:-[1]மொய்ப்போர், மாப்போர். [2]பொருகளிறென்ன. [3]தழைப்பொறி, தழைப்பொழி. (உஉஅஉ)

வேறு.

௩க. சிகை[1]நிறக் கனல்பொழி தெறுகட் [2]செக்கரான்
பகைநிறத் தவருயிர் பருகும் [3]பண்பினான்
நகைநிறப் பெருங்[4]கடை [5]வாயை நக்குவான்
புகைநிறக் [6]கண்ணவன் பொலம்பொற் றேரினான்.

(இ - ள்.) சுவாலையினாலே நிறத்தைப்பெற்ற நெருப்பைக் கக்குகின்றனவும் அழிக்கவல்லனவுமான கண்கள் செந்நிறமாகஇருக்கப்பெற்றவனும், பகைத்தன்மையைக்கொண்டவரின் உயிரைப் பருகுகின்றதன்மையையுடையவனும், சிரிப்பினால் நிறம்பெற்ற பெரியகடைவாயை (அடிக்கடி)நக்குபவனுமான அழகியபொற்றேரிலிருப்பவன்,—தூம்ிராட்சனென்பவன்; (எ-று.)

தூம்ராட்சன்என்பதை மொழிபெயர்த்து 'புகைநிறக்கண்ணவன்' என்றார். பி-ம்:—[1]நிறத்தனல். [2]தீயினான். [3]பண்பினால். [4]கடல். [5]வாயில். [6]கண்ணனப். (உஉஅங)

௩உ. பிச்சரிற் [1]றிகைத்தவன் பெற்றிப் பேச்சினான்
முச்சிரத் தயிலினான் மூரித் தேரினான்

[2]இச்சிர மும்மதே [3]யெனவந் தெய்துவான்
வச்சிரத் [4]தெயிற்றவன் [5]மலையின் மேனியான்.

(இ - ள்.) பித்தரைப்போன்று திகைத்தவலியதன்மையையுடைய பேச்சையுடையவனும், முச்சிரத்தைக்கொண்ட எயிற்படையையுடையவனும், வலியதேரினையுடையவனும், 'இந்தத்தலை உம்மதோ?' என்றுவந்து (போரிற்) பொருந்துபவனும், மலைபோன்ற மேனியையுடையவனுமானவன்,---வச்சிரதம்ஷ்ட்ரனென்பவன்; (எ - று.)—போரில்என்தலையைக்கொள்ளலாமென்று நீர் கருதுவது சிறிதும்பொருந்தாதென்பது, 'இச்சிரமும்மதே' என்றதன் கருத்து: ஏகாரம்-வினா. இனி, இச்சிரமும் அதே என என்றுபிரித்து-இந்தச்சிரமும் எயிறுபோல வச்சிரமானதே என்னுமாறு [வலியதலைபடைத்து] என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]திகைத்தனபெற்றிப்பேச்சினன், திகைத்தனன் பெற்றபோரினன், திகைத்தவன்பெற்றபேச்சினன். [2]இச்சிரமுறுவதோ. [3]என்பது, என்ன. [4]எயிற்றினன். [5]மழையின். (உஉஅச)

கஙு. காலையு மனத்தையும் பிறகு காண்பதோர்
வாலுளைப் [1]புரவியன் மடித்த வாயினன்
வேலையி னார்ப்பினன் விண்ணை மீக்கொளுஞ்
சூலமொன் றுடையவன் பிசாசன் [2]றோன்றுவான்.

(இ - ள்.) காற்றையும் மனத்தையும் பின்னிடச்செய்வதாகிய [வாயுவேகம் மனோவேகம் இவற்றினும் விரைந்துசெல்வதாகிய] வெள்ளிய பிடரிமயிரைக்கொண்ட ஒப்பற்ற குதிரையையுடையவனும் மடித்தவாயையுடையவனும் கடல்போன்ற ஆரவாரத்தையுடையவனும் வானுலகத்தைவெல்லவல்ல சூலமொன்றுடையவனுமாகித் தோன்றுபவன், பிசாசனென்பவன்; (எ-று.)—இச்செய்யுள், சிலபிரதிகளில் "சூரியன்பகைஞன்" என்ற அடுத்தபாடலின் பின் காணப்படுகின்றது. பி-ம்:-[1]புரவியின். [2]தோளினன், தோன்றினன்.

கஙச. சூரியன் [1]பகைஞனச் சுடர்பொற் றேரினன்
[2]நீரினு முழக்கின னெருப்பின் [3]வெம்மையான்
ஆரிய வேள்வியின் பகைஞ னமரோ
சோரியுங் [4]கனலியுஞ் சொரியுங் கண்ணினன்.

(இ - ள்.) கடலினும் மிக்கமுழக்கத்தையுடையவனும் நெருப்பினும்மிக்க வெம்மையையுடையவனுமாய் அந்த ஒளிர்கின்ற பொற்றேரிலிருப்பவன், சூரியசத்துருவென்பவன்; ஆரியனே! இரத்தத்தையும் நெருப்பையுங் கக்குகின்ற கண்களுடைய அவன், யஞ்ஞசத்துருவென்பவன்; (எ-று.)—பி-ம்:—[1]பகைஞனுந்துரிதத், பகைஞன்முன்றாகத், பகைஞன்முன்தொடுத்த, பகைஞன்முன்னுறுத்த. [2]நீர்தரு, நீரிரு, நீரக. [3]நீர்மையான், கண்ணினன். [4]கனல்களும். சிலபிரதியில் நான்காவதடி இரண்டாவது அடியாக உள்ளது. ()

கஙரு. [1]சாலிவண் கதிர்நிகர் புரவித் தானையான்
[2]மூலவெங் [3]கொடுமையிற் றவத்தின் முற்றினன்

[4]சூலியும் வெருக்கொளத் தேரிற் றேன்றுவான்
மாலியென் [5]றடிமுறை வணங்கிக் [6]கூறினுன்.

(இ - ள்.) செந்நெற்பயிரின் வளப்பம்பொருந்தியகதிரை யொத்த குதிரைச்சேனையையுடையவனும், அநாதியாயுள்ள மிக்ககொடுமையினைக்கொண்ட தவத்தினுல் முற்றுப்பெற்றவனும் [தவப்பயனை நிரம்பப்பெற்றிருப்பவனும்] ஆகி, சிவனும்அஞ்சும்படி தேரில்தோன்றுபவன், மாலியென்பவனுவன் என்று (ஸ்ரீராமனது)பாதங்களில் முறைமையுடனே வணங்கிக்கூறிமுடித்தான், (விபீஷணன்); (எ-று.)—பி-ம்:—[1]சாலியின். [2]மூலி. [3]கொடுமையான். [4]சூரியும். [5]அடியிணே. [6]கூறுவான். (உஉஅஎ)

௩௬.—அரக்கவாநரர்கட்குக் கைகலந்த யுத்தம்நடப்பது ஒன்பது கவிகளினுற் கூறப்படும்.

ஆர்த்தெதிர் நடந்ததவ் வரியி [1]ஞர்கலி
தீர்த்தனை வாழ்த்தி [2]யொத்திரண்டு சேனையும்
போர்த்தொழில் [3]புரிந்தன புலவர் போக்கிலார்
வேர்த்துயிர் பதைத்தனர் நடுங்கி [4]விம்மியே.

(இ - ள்.) பரிசுத்தமூர்த்தியான இராமபிரானை வாழ்த்திவிட்டு அந்தக் குரங்குச்சேனுசமுத்திரம், ஆரவாரித்துக்கொண்டு(அரக்கர்சேனைக்கு) எதிரே நடந்தது; (பின்பு) இரண்டுசேனையும் ஒத்துப் போர்த்தொழில்செய்தன; புலவர்,—(அந்தப்போரின்கடுமையைக்கண்டு வானத்தைவிட்டுச்)செல்லமாட்டாதவராய், நடுங்கிவிம்மி வேர்த்துஉயிர்துடித்தனர்; (எ-று.)—வானவர்க்கு வேர்த்தல்முதலியன நிகழ்ந்தமை, ஒருகால் வானரர்கட்குத்தோல்விநேர்ந்திடுமோ என்ற அச்சத்தினுலெனினுமாம். பி-ம்:—[1]தானையுந். [2]உற்று. [3]புரிந்தது, புரிந்தனர். [4]விம்மவே, விம்மினுர். (உஉஅஅ)

௩௭. கல்[1]லெறிந் தனகடை [2]யுருமிற் [3]காரென
வில்லெறிந் தனகணை விசும்பின் [4]மேகத்துச்
செல்[1]லெறிந் தனவெனச் சிதறி வீழ்ந்தன
பல்லெறிந் தனதலை மலையின் [5]பண்பென.

(இ - ள்.) கடைக்காலத்தில் [யுகாந்தகாலத்தில்] உருமைக்கொண்ட கார் கல்லையெறிந்தனபோல(அரக்கர் தமது) வில்லினின்றுவெளிவிட்டகணைகள்,—விசும்பின்மேகத்தினின்று இடியெறிந்தாற்போன்றிருக்க, மலையின்தன்மையையொப்ப (வானரங்களின்) தலைகள் பல்லையெறிந்தவண்ணம் சிதறி வீழ்ந்தன; (எ - று.)—மேகத்தினின்றுமலைமீது இடிவிழுந்தால் அம்மலை பலபடி சிதறிவிழுதல்போல, அரக்கரெறிந்தகணையால் வானரங்களின்தலைகள் தம்பற்களுகவீழ்ந்தன வென்றவாறு. மேகத்தினின்று ஒளியுள்ளஇடிகள்விழுவனபோலப் பற்கள்சிதற, மலைவிழுந்தனபோலத் தலைகள்விழுந்தன என்றுஉரைப்பாருமுளர். முதலடியைத் தனிவாக்கியமாக்கொண்டு, வானரர் யுகாந்தகாலத்துமேகம்போலக் கல்லையெறிந்தன ரென்பாருமுளர். பி-ம்:—செல்-இடி. [1]எறிந்தனர். [2]உருமின். [3]காரெனு. [4]மேகத்த. [5]பண்ணையே, பண்பின. (உஉஅகூ)

ந.அ. கடம்படு [1]கரிபடக் [2]கலின மாப்பட
இடம்படு சில்லியி [3]னீர்த்த தேர்பட
உடம்படு மரக்கரை யனந்த னுச்சியிற்
படம்படு மெனப்[4]படுங் கவியின் [5]கற்பல.

(இ - ள்.) மதம்பெருகுகின்ற யானை இறந்துபடவும், கல்லணைபூண்ட குதிரை இறந்துபடவும், விசாலம்பொருந்திய சக்கரத்தாலிழுத்துச் செல்லப் படுகின்ற தேர் படவும்,உடம்பு அடப்பட்ட அரக்கரை அநந்தனுச்சியிற்படம் அழிந்தொழியுமென்னுமாறு குரங்குகளெறிந்த பலகல் படுத்தும்[வீழ்த்தும்]; (எ-று.)—படும் = படுத்தும்: பிறவினைப்பொருளில்வந்த தன்வினை: இவ்வாறு வருவதனை வடநூலார்அந்தர்ப்பாவிதணிச் என்ப. பி-ம்:—[1]கிரி.[2]புரவிக்கால். [3]எழினித்தேர், எழிலிற்றேர், எழுனிபிற். [4]படு. [5]கற்படை. (உஉகூ0)

ந.கூ. [1]கொலையொடுங் காநெடும் புயத்தின் குன்றொடும்
நிலைநெடுங் காலொடு நிமிர்ந்த வாலொடும்
மலையொடு மரத்தொடுங் கவியின் [2]வன்னெடுந்
தலையொடும் [3]போம்விசைத் [4]தெறிந்த சக்கரம்.

(இ - ள்.) விரைவுகொண்டு (அரக்கர்) எறிந்த சக்கரம்,—குரங்குகளின் கொலைத்தொழில் ஒடுங்காத நெடியபுயக்குன்றொடும் நெடியநிலையையுடைய பாதங்களுடனும் நிமிர்ந்த வாலுடனும் மலையோடும் மரத்தோடும் வலிய நெடியதலையொடும் போகும்; (எ-று.)—அரக்கரெறிந்த சக்கரம்,குரங்குகளின் புயம் முதலியவற்றை அறுத்துக்கொண்டு செல்லு மென்க. பி-ம்:—[1]கொலை யொடுங்கரநெடும்புகறின். [2]மார்பொடுந், மன்னெடுந். [3]போர். [4]எறியும். ()

சு0. ஆண்டகைக் [1]கவிக்குலத் தலைவ ராக்கையைக்
கீண்டன [2]புவியினைக் கிழித்த [3]மாதிரந்
தாண்டுவ குலப்பரி [4]மனத்திற் றுவ்வுவ
[5]தூண்டினர் [6]கைவிசைத் தெறிந்த தோமரம்.

(இ - ள்.) திக்குக்களைத் தாண்டுவனவும் மனத்தைப்போல் தாவுந் தன்மையுள்ளனவு மான சிறந்தகுதிரைகளைத் தூண்டினகுதிரைவீரரின் கைகள் விரைவுபட எறிந்த தோமரமென்னும் படைக்கலம்,---ஆண்மைக்குண முள்ள கவிக்குலத்தலைவரின் உடலைக் கீண்டனவாய்ப் புவியைக்கிழித்தன; (எ - று.)—இச்செய்யுள் "சில்லியந்தடந்தேர்" என்ற அடுத்தபாடலுக்குப்பின் சிலபிரதியி லுள்ளது. பி-ம்:—[1]கவிக்குல வீரராக்கைகள். [2]புவியிடை. [3]மாத் திரம், மாக்கிரி, மாக்கரி.[4]மனத்திற்றுய்மிக. [5]தூண்டுவ. [6]கைவிசைத்தெறியும், கைவிசைத்தெரிந்த. (உஉகூஉ)

சுக. சில்லியந் [1]தேர்க்கொடி சிதையச் சாரதி
[2]பல்லுடை நெடுந்தலை மடியப் பாதகர்
வில்லொடு கழுத்[3]திறப் பகட்டை வீட்டுமால்
கல்லெனக் கவிக்குலம் வீசுங் கல்லரோ.

(இ - ள்.) கல்லென்ற ஒலிதோன்றக் கவிக்குலம் வீசுங் கல்லானது,— சில்லியையுடைய அழகிய தேர்களின் கொடிகள் சிதையவும்,சாரதியினுடைய

பல்லுடைந்து நெடியதலை அறுபட்டுவிழவும், பாதகரான அரக்கருடைய வில்லோடு கழுத்துஇறவும் (செய்து), யானைகளையும் ஒழிக்கும்; (எ-று.)—பி-ம்:—1தேர்கொடிபரிகள். 2பல்லொடு. 3அற. (உஉகங)

சஉ. 1கரகமுந் தியமலை முழையிற் கட்செவி
2உரகமுந் தினவென வொளிக்கு மொள்ளிலை
3அரகமுந் துற4நெடுங் கவியி 5ளுக்கையில்
6துரகமுந் தின7ரெடுத் தெறியுஞ் 8சூலமே.

(இ - ள்.) குதிரையையேறிச் செலுத்தியஅரக்கர் எடுத்தெறிவனவான ஒள்ளியஇலைகளையுடைய சூலங்கள்,—ஆலாங்கட்டி மழை பெய்யப்பெற்ற மலை முழைஞ்சுகளிற் கண்ணையே செவியாகவுடையஉரகம் விரைந்து புகுந்தன வென்னும்படி, நெடிய வானரர்களின்உடலில் (அவர்கள்)அழியும்படி பாயும்; (எ-று.)—அரக-அரங்கஎன்பதன் விகாரம். இக்கவி"வால்பிடித்து"என்ற அடுத்தபாடலின்பின் சிலபிரதியிலுள்ளது. பி-ம்:—1காகமுந்திய. 2ஊகம். 3ஆகமுந்தின,அரகமுந்தின, ஆகமுந்துவ,ஆகமுந்துற. 4நெடுங்கவிகள், கவித்தலைவர். 5மார்பினில். 6தூகமுந்தினர். 7விசைத்தெறியும். 8தோமரம். (உஉகச)

சங. வால்பிடித் தடிக்கும்வா னரத்தை மால்கரி
கால்பிடித் தடிக்குமக் 1கரியி னைக்கவி
2தோல்பிடித் தரக்கரை யெறியுஞ் 3சூர்முசு
வேல்பிடித் தெறிவாம் முசுவை வெங்கணர்.

(இ-ள்.) பெரியயானை, வானரத்தை வாலினாற்பிடித்து அடிக்கும்; (அதினின்று தப்பி) வானரம் அக்கரியைக் காலைப்பிடித்து அடிக்கும்; (அன்றியும்), சூரத்தன்மையுள்ள குரங்கு, யானைகளை(க் கையிற்) பற்றி (அவற்றால்) அரக்கரைமோதும்: அம்முசுவைக் கொடுங்கண்ணையுடைய அரக்கர் வேல்பிடித்தெறிவர்; (எ-று.)—தோல்-யானை. பி-ம்:—1கரிகளை. 2கோல். 3சூற்பொறி, கோண்முசு. (உஉகரு)

சச. முற்படு கவிக்குல 1முடுக வீசிய
கற்படக் 2களம்படு மரக்கர் கார்க்கடல்
பற்படு தலைபடப் 3படுவ பாதகர்
விற்படு கணைபடக் 4குரங்கின் வேலையே.

(இ - ள்.) முற்படுகின்ற கவிக்குலமானது விரையவீசிய கற்கள் படுவதனால்,அரக்கரின் கருங்கடல்போன்ற சேனை, களத்திற் படும்:பாதகரான அரக்கரின் வில்லிலிருந்து வெளிப்படுகின்ற கணைகள் படுவதனால், குரங்குச்சேனை பற்களைக்காட்டுகின்ற தலையறுந்திட உயிரிறப்பனவாகும்; (எ-று.)—பி-ம்:—1முட்டிவீசிய, முடுகவீக்கிய. 2களப்படும். 3படுவர். 4குரக்கு. (உஉகசு)

சரு.—நான்குகவிகள்-போரிலே அரக்கரின்சதுரங்கசேனையுடைந்த தன்மையைக் கூறும்.

இச்சுறு கிரிபடக் கிளர்பொற் 1றேர்நிரை
2அச்சிறச் செல்கில வாடல் 3வாம்பரி

எச்சுறு துயரிடை [4]யெய்த [5]வீத்துண
[6]மூச்சிறு [7]வாழ்க்கையின் மூண்டு ளோரென.

(இ - ள்.) (மனவூக்கம்) குறைதற்குக்காரணமான வறுமைத்துன்பம் இடையில் நேர்வதனால் ஈத்துண்ணாமல் மூச்சுஇறுகின்ற உலகவாழ்க்கையில் மூண்டுள்ளோர்போல,—நெருப்பைக்கொண்ட மலைகள்படுவதனால் விளங்குகின்றபொன்மயமான தேர்களின்கூட்டம் அச்சுஇற்றுப்போகவே, வலிமைபொருந்திய தாவும் பரிகள்,(அத்தேரையிழுத்துச்)செல்லமாட்டாவாயின;(எ-று.)

இது-தேர்ப்படையடைந்தநிலைகூறியது. வறுமையுற்றோர்க்குஇல்வாழ்க்கை இனிதுநடவாததுபோலக் குதிரைகட்கு அச்சிற்றதேரை யீர்த்துச்செல்லுகை யியலாதாயிற்றென்றவாறு. ஏழைமையால்வாழும் வாழ்க்கையை 'மூக்கைப்பிடித்தாற்பிராணன்போகிறது' என்று சொல்லுகின்ற உலகவழக்குப்பற்றி, 'மூச்சிறுவாழ்க்கை' என்றது. மூச்சுஎன்பது 'மூச்சு' என்றாயிற்று. க்ருச்ரமெனன்ற வடசொல், 'கிச்சு' எனத் திரிந்ததென்பர். பி-ம்:—[1]தேர்க்கிழை. [2]அச்சுறச். [3]மாப்பரி, மால்பரி. [4]எய்தி. [5]ஈர்க்கொணு, ஈத்தினம். [6]முச்சறு, முச்சுறு. [7]வாழ்க்கையை. (௨௨௬௭)

௬௬. மீயவர் [1]யாவரும் விளிய வெங்கரி
[2]சேயிருங் குருதியிற் றிரிவ [3]சேர்வில
[4]நாயக ராளொடு [5]மவிய [6]நவ்விகள்
பாயொடு வேலையிற் றிரியும் [7]பண்பின.

(இ - ள்.) (தம்) மீதிருப்பவர்யாவரும் இறந்துபட, கொடிய யானைகள் செந்நிறமுள்ள மிக்க இரத்தவெள்ளத்தில் திரிவனவாய் (அப்பாற்) சேரமாட்டாதனவாயினவை,—(தன்)மாலுமிகளெல்லாம் பணியாளருடனேஅழிந்திடமரக்கலங்கள் பாய்மரத்துடனே கடலிற் றிரியுந்தன்மையையுடையனவாயின; (எ-று.)—இது, யானைச்சேனையடைந்தநிலைகூறியது. களிறுக்கு மரக்கலம் உவமையாதலே, "மொய்களிறுடைதிரைமாக்கலம்" என்றவிடத்துங் காண்க. மரக்கலத்திற்கு யானையும், பாய்மரத்திற்கு அவ்யானையின்மீதுகட்டிய கொடியும் உவமையாம். பி-ம்:—[1]யாவருமலைய. [2]சேயருங், சேயறுங். [3]சேர்கில, சோர்வில. [4]நாயகராரொடும், ஆயதனுளொடும், ஆயதனுளெலாம். [5]வீய. [6]நவ்விதம், அம்பிதம், நவ்விதான். [7]பண்பென, பான்மைபோல். (௨௨௬௮)

௬௭. படையொடு மேலவர் மடியப் பல்பரி
[1]இடையிடை தாவெழுந் [2]தழுந்து [3]பண்பன
கடனெடுங் குருதிய [4]கனலி காலுறு
வடவையை நிகர்த்தன வுதிர [5]வாயன.

(இ - ள்.) பலபரிகள்,—படைக்கலத்துடனே(கூடிநடத்திவந்த தன்) மேலேயுள்ளவர் மடிந்திடக் கடல்போன்ற பெருங்குருதியிலகப்பட்டனவும் நடுநடுவேதாவியெழுந்து (அந்தஇரத்தவெள்ளச்சேற்றிலே) அழுந்துந்தன்மையையுடையனவும் உதிரங்கக்கும்வாயையுடையனவுமாகி,நெருப்பை வாயினுற்கக்குந்தன்மையுள்ள (கடலிடையேவாழும்) வடவையை யொத்தன; (எ-று.)

இது-குதிரைப்படையடைந்த நிலைகூறியது. தன்மைத்தற்குறிப்பேற்ற வணி. வடவை-பெண்குதிரை: இது கடலினிடையேயிருந்து மழைமுதலிய வற்றாற் கடலின்நீர் மிகாதவாறு தன்வாயிலுள்ள கனலினால் வற்றச்செய்யுமெ ன்பது, புராணநூற்கொள்கை. [1]இடையிடை தரவிழுந்து என்றபாடத்திற்கு-போர்க்களத்து அவ்வவ்விடந்தோறும் (வானரங்கள்மலைமுதலியவற்றை)வீசிய தனுற் கீழ்விழுந்துஎன்க. பி-ம்:—[2]இழிந்த. [3]பண்ணன, பண்ணின. [4]கனலி கால்வுறு, கனலிற்காய்வுறு, கனலுங்கால்வன. [5]வாயின. (உஉகக)

சஅ. எயிற்றொடு நெடுந்தலை யிட்ட கல்லொடும்
வயிற்றிடைப் [1]புகப்பல பகலும் [2]வைகிய
[3]பயிற்றிய ராயினுந் தெரிக்கும் பண்பிலார்
[4]அயிர்ப்பர்தங் கணவரை யணுகி யங்கனார்.

(இ - ள்.) எயிற்றோடுகூடிய நெடியதலைகள் (வானரர்)வீசிய மலையோடு கூட (வீட்டின்)நடுவிடத்திற் புகவே, பலநாளிலும்(உடனிருந்து)கழித்த பழக் கத்தையுடையவராயிருந்தும் (அத்தலை இன்னாரதுஎன்று) ஆராய்ந்து அறி தற்குஏற்ற (அறிவாகிய) பண்பு இல்லாதவரான அவர்மனைவிமார்கள், தங் கணவரை நணுகி (இதுயாருடையஉடலோ? என்று) சந்தேகிப்பர்; (எ-று.)—இது,காலாட்படைவீரர் நிலைகூறியது. இனி,வயிற்றிடைப்புக அரக்கரின்தலை தம்வயிற்றிடத்துப்புக என்று உரைத்து, கபந்தன்போலாக என்று கருத்துக் காணலுமொன்று. இச்செய்யுள், சிலபிரதிகளில் "முற்படுகவிக்குலம்" (சச) என்பதன்பின் உள்ளது. பி-ம்:—[1]புக்கபல். [2]வைகியே. [3]பயிற்சியர். [4]அயிர்ப்ப.

வேறு.

சகூ.—இரண்டுபாடல்கள்-சிற்சிலஅரக்கர்க்கும் சிற்சிலவானரர்க்குமாக நிகழ்ந்ததொந்தயுத்தம் கூறும்.

தூமக் கண்ணனு மனுமனு மெதிரெதிர் தொடர்ந்தார்
தாமத் தங்கதன் மாபெரும் பக்கனைத் தடுத்தான்
சேமத் திண்சிலை மாலியு நீலனுஞ் செறுத்தார்
வாமப் போர்[1]வயப் பிசாசனும் பனசனு மலைந்தார்.

(இ - ள்.) தூம்ராக்ஷனும் அநுமனும் எதிரெதிராகத் தொடர்ந்தார்கள்; (வெற்றி)மாலையையணிந்துள்ள அங்கதன் மகாபார்சுவனைத் தடுத்தான்; சேமமான [அழியாத்தன்மையுள்ள] வலிய வில்லைக்கொண்ட மாலியும் நீல னும் கோபித்துப்பொருதார்; நேர்மையற்ற போரைப்புரிகின்ற வலிய பிசாச னும் பனசனும் பொருதார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]வலிப். (உகூ௦க)

ரு௦. சூரி யன்பெரும் பகைஞனுஞ் சூரியன் மகனும்
நேரெ திர்ந்தனர் [1]நெருப்புடை வேள்வியின் பகையும்
ஆரி யன்[2]றனித் தம்பியு [3]மெதிரெதி ரடர்ந்தார்
வீர வச்சிரத் தெயிற்றனு மிடபனு மிடைந்தார்.

(இ - ள்.) சூரியசத்துருவும் சூரியபுத்திரனான சுக்கிரீவனும் நேரே யெதிர்ந்தனர்; யஞ்ஞசத்துருவும் இராமபிரானது ஒப்பற்ற தம்பியான

இலட்சுமணனும் எதிர்க்கெதிராகப் போர்புரிந்தார்கள்; வீரங்கொண்ட வச்சிர தம்ஷ்ட்ரனும் இடபனும் நெருங்கிமலைந்தார்கள்; (எ-று.)

வேள்வியின்பகை - யஜ்ஞசத்துரு.வேள்விக்கு அடைமொழியாக 'நெருப்புடை'என்பது வந்தது.பி-ம்:—1நெருப்பிடை.2துணைத்.3அவரெதிரடர்ந்தார், எதிரெதிரடர்த்தார், எதிரடர்ந்தனரால். (உருO௨)

ருக.—இங்ஙனம் இருபக்கத்துத்தலைவரும் இரட்டையராய்ப்பொருதல்.

வெங்கண் வெள்ளெயிற் றரக்கரிற் கவிக்குல [1]வீரச்
சிங்க மன்னபோர்த் தலைவரிற் றலைவராய்த் [2]தெரிந்தார்
அங்க மர்க்களத் தொருவரோ டொருவர்சென் [3]றடைந்தார்
பொங்கு வெஞ்செருத் தேவரு நடுக்குறப் பொருதார்.

(இ - ள்.) (இவ்வாறு) கொடுங்கண்ணையும் வெள்ளிய எயிற்றையுமுடைய அரக்கரிலும் கவிக்குலத்துஉதித்து வீரச்சிங்கமன்ன போரில்மேம்பாடுபெற்றவரிலும் தலைவராயுள்ளவர்,—அங்கே அமர்க்களத்தில் ஒருவரோடொருவர் சென்றடைந்து, தேவரும் நடுக்குறும்படி மனக்கிளர்ச்சிகொண்டு செய்யப்படுகின்ற கொடியபோரைப் பொருதார்கள்; (எ - று.)—பி-ம்:—1வீரர், வீரரில். 2செறிந்தார். 3அடர்த்தார். (உருOரு)

ரு௨.—பத்துவெள்ளஞ்சேனையில் கவிக்குலத்தலைவர் ஆறுவெள்ளஞ்சேனையையும் இலட்சுமணன் நாலு வெள்ளஞ்சேனையையும் அழித்தல்.

இன்ன காலையி னீரைந்து வெள்ளம்வந் தேற்ற
மின்னும் வெள்ளெயிற் றரக்கர்தஞ் [1]சேனையில் [2]வீரர்
அன்ன வெஞ்சமத் தாறுவெள் ளத்தையு மவித்தார்
சொன்ன நாலையு மிலக்குவன் பகழியாற் றொலைத்தான்.

(இ - ள்.) இவ்வாறு நிகழும்பொழுதில், அந்தக்கொடியபோரில் வந்து எதிர்க்கலான ஈரைந்துவெள்ளமுள்ள மின்னும்வெள்ளியஎயிற்றைக்கொண்ட அரக்கர்சேனையில் ஆறுவெள்ளத்தையும் (கவிக்குல)வீரர் ஒழித்தார்; (மிச்சமாகச்) சொல்லப்பட்ட நாலுவெள்ளஞ்சேனையையும் இலக்குவன்(தன்)பகழியால் தொலைத்திட்டான்; (எ - று.)—2வீரன்...அவித்தான் என்று கொண்டு, ஸ்ரீராமன் அழித்தா னென்று பொருள் கூறுவாரு முளர். பி-ம்:—1சேனையை. 2வீரன்...அறுத்தான். (உருOச)

ருங.—அப்போது தோன்றிய இரத்தப்பெருக்கின் வருணனை.

உப்பு டைக்கடன் [1]மடுத்தன [2]வுதிரநீ ரோதம்
அப்பொ டொத்தன [3]கடுத்தில வார்கவி முழுதுஞ்
செப்பு ருக்கெனத் [4]தெரிந்தது மீன்குலஞ் செருக்கித்
துப்பொ டொத்தன முத்தினங் குன்றியிற் [5]றோன்ற.

(இ - ள்.) உப்பைக்கொண்ட கடலில் நிரம்பிப்பாய்ந்த உதிரநீர்ப்பெருக்குக்கள் (கடலின் நீரோடு)கலந்தனவாய்த் தோன்றவில்லை;(அக்)கடல்நீர்முழுதும், செப்பையுருக்கின உருக்குப்போலச் செந்நிறமாகக் காணப்பட்டது: (அக்கடலிலுள்ள) முத்துக்கள் குன்றிமணியைப்போற் (செந்நிறமுடை

யனவாகக்)காணப்பட, மீன்குலமெல்லாம் (இறைச்சியாகிய நிரம்பிய உணவு கிடைத்தமையாற்)செருக்குக்கொண்டு பவழம்போலத் தோன்றின; (எ - று.)

அப்போரில் இருதிறத்துச்சேனைகளும் பிளப்புண்டதனால்தோன்றிய இரத்தநீர் கடலின்நீரினும் மிகவிஞ்சியிருந்ததனால் கடலினீரில் தாம் கலந்து கடனீர்போலத்தோன்றாமல்,கடலின்நீரைச் செந்நிறத்ததாக்கவே அக்கடலின் நீர் செம்புருக்குப்போலத் தோன்றிற்றென்றார்:கடலின்நீரும் மீன்களும் முத்துக்களும் வேற்றுருவத்தை உதிரப்பெருக்கால் அடைந்தனவெனக்கூறியது- வேற்றுருப்பேறலணியாம். பி - ம்:—[1]மடுத்தது. [2]குருதியினோதம். [3]தடித்தில, கடுக்கில. [4]திரிந்தது, திரிந்தன. [5]தோன்றி, துவன்றி. (உ௩௦௫)

௩௪.—இதுவும் அது.

தத்து நீர்க்கடன் முழுவதுங் [1]குருதியாய்த் தயங்கச்
சித்தி ரக்குலப் [2]பன்னிற மணிகளுஞ் [3]சேந்த
ஒத்து [4]வேற் றுருத் [5]தெரியல வுயர்மதத் தோங்கல்
மத்த கத்துகு தரளமும் [6]வளைசொரி முத்தும்,

(இ - ள்.) (அலை) தாவுகின்ற நீரைக்கொண்ட கடல்முழுவதும் இரத்தமாய் விளங்க, விசித்திரமான [வெவ்வேறுவகையாயுள்ள] தொகுதியான பல நிறத்தைக்கொண்ட இரத்தினங்களும் செந்நிறத்தையடைந்தன: மதம்பெருக்குவனவான மலைபோன்ற யானைகளின் மத்தகத்தினின்றுவெளிப்பட்ட முத்துக்களும் சங்குகளீன்ற முத்துக்களும் ஒத்து[செந்நிறத்தையடைந்து] வேறு நிறம் தெரியாதனவாயின; (எ - று.)

இச்செய்யுளும் கீழைச்செய்யுளில் வந்த வேற்றுருப்பேறலணியே. யானை-போர்க்களத்திலுள்ளன. சங்கு-கடலிலுள்ளவை. இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. பி-ம்:—[1]குருதியிற்றழுங்கிச், குருதியாய்த்தழங்கச். [2]பன்னெடு. [3]சேர்ந்த,சேர்ந்தது.[4]வேறுருத். [5]தெரிகில, தெரிக்கில. [6]அத்தகைமானும்,அத்தகைமுற்றும். (உ௩௦௬)

௩௫.—சூரியோதய வருணனை.

[1]அதிரும் வெஞ்செரு வன்னதொன் [2]றமைகின்ற வளவிற்
கதிர வன்[3]கொழுஞ் சேயொளிக் கற்றையங் கரத்தால்
[4]எதிரும் [5]வல்லிருட் [6]கரியிறுத் தெழுமுறை மூழ்கி
உதிர [7]வெள்ளத்து [8]ளெழுந்தவ னெனமென வுதித்தான்.

(இ - ள்.) அதிர்கின்ற அப்படிப்பட்ட கொடியபோரொன்று நிகழ்கின்றபொழுதில், சூரியன், கொழுவிய செந்நிற வொளித்தொகுதியாகிய அழகிய கரத்தால், எதிர்ந்த வலியஇருளாகிய யானையை யழித்து எழும்போது உதிரவெள்ளத்துள் மூழ்கியெழுந்தவனென்று தோன்றுமாறு உதித்தான்; (எ - று.)

சூரியன் உதிக்கும்போது மிக்க செந்நிறமுள்ளவனாகத் தோன்றுமியல்பு பற்றி, 'மூழ்கி உதிரவெள்ளத்துளெழுந்தவனெமென' என்று வருணித்தார்;

தற்குறிப்பேற்றவணி. பகையொழித்தபின் நீராடியெழுந்திருக்குந் தன்மை, சூரியனிடத்தி லேற்றப்பட்டது. இவ்வணிக்கு 'கற்றையங்காத்தால், வல்லிருட்கரியிறுத்து' என்ற இடங்களிலுள்ள உருவகவணி அங்கமாய் நின்றது. பி-ம்:—1அதிர. 2அமைக்கின்ற. 3செழுஞ். 4எதிர, எதிரிற். 5எல்லிருட், பல்வகைச். 6கரிசெறுத்து, கரியறுத்து, பகையறுத்து. 7வெள்ளத்தின். 8எழுந்தனன்.

ருசா.—இதுவும் அது.

அரக்க 1ரென்றபே ரிருளினை யிராம2னு மிரவி
துரக்க வெஞ்சுடர்க் கதிரவன் புறத்திருள் 3துரக்கப்
புரக்கும் வெய்யவ 4ரிருவரை யுடையன போல
5நிரக்கு நல்லொளி 6பரந்தன வுலகெலா நிமிர.

(இ - ள்.) அரக்கரென்ற பெரிய இருளினை இராமனென்கிற இரவி ஓட்டாநிற்க, வெவ்விய சுடரையுடையவனான சூரியன் புறத்திருளைத் துரத்தலினாலே, பாதுகாக்கின்ற இரண்டுசூரியரை உடையனபோல மிகுதிப்பட்டுத் தோன்றும் மிக்கவொளி உலகமுழுவதும்பரந்தன; (எ - று.)—உதித்தசூரியனையும் இராமனையும் ஒப்பிட்டுக்கூறினார், இதில். பி - ம்:—1என்பதோர். 2அப்போரில், ஆமிர்து, ஆமருக்கன். 3தொலைக்க. 4இருவரையுடையவர், இருவரும்ஒருவரே. 5நிரைக்கும். 6பரத்தலில், பரந்தென. (உருoஅ)

ருஎ.—மூன்றுகவிகள்-விளங்கித் தோன்றிய படுகளத்தன்மையைக்கூறும்.

நிலைகொள் பேரிரு ணீங்கலு நிலத்திடை நின்ற
மலையும் வேலையும் வரம்பில வயின்றொறும் 1பரந்து
2தொலைவி றன்மைய தோன்றுவ போன்றன சோரி
அலைகொள் வேலையு 3மருப்பினக் குன்றமு 4நிரம்பி.

(இ - ள்.) நிலையாகவுள்ள மிக்க இருள் நீங்குதலும், அலையைக்கொண்ட (இரத்தக்) கடலும் தந்தங்களைக்கொண்ட இனம்இனமாகவுள்ள யானைகளும் நிரம்பி, நிலத்தில்நின்ற மலையும் கடலும் வரம்பில்லாதனவாய் ஆங்காங்குப் பரந்து ஒழியாததன்மையவாய்த் தோன்றுபவற்றை யொத்தன; (எ - று.)

உதயகாலத்தில் கடலும் மலையும்வெளிப்பட்டுத்தோன்றியதுபோலவே, இரத்தப்பெருக்கும் யானைகளும் விளங்கிக்காணப்பட்டன வென்றவாறு; உவமையணி. குன்றம்-உவமவாகுபெயர். பி - ம்:—1பரந்த, வதிந்து, வதிந்த. 2தொலையுந்தன்மையதோன்றுவ, தொலைவிலாதவைதோன்றுவ, தொலைவிறன்மயத்தொன்றுவ. 3அரும்பிணக்குன்றமும். 4நிரம்ப, அணவி, நிரவி, நிரப்பி. ()

ருஅ. நிலந்த வாதசெந் நீரிடை நிணக்கொழுஞ் சேற்றிற்
புலர்ந்த காலையிற் பொறிவரி யம்பெனுந் தும்பி
கலந்த தாமரைப் பெருவனங் கதிரவன் கரத்தால்
மலர்ந்த தாமெனப் பொலிந்தன 1வுலந்தவர் வதனம்.

(இ - ள்.) விடியற்காலத்திலே நிலத்தினின்றுநீங்காத இரத்தவெள்ளத்திலே நிணமாகிய கொழுவியசேற்றில் பொறியையும் வரியையுமுடைய அம்புகளாகிற தும்பி கலந்தனவாகிய உயிரிழந்தவரின்வதனங்கள்,—தும்பிகலந்த

தாமரைப்பெருவனம் சூரியன்கிரணத்தால் மலர்ந்துதோன்றுவதுபோல விளங்கின; (எ - று.)

உவமையணி: இதற்கு, 'அம்பெனுந்தும்பி' என்ற உருவகவணி அங்கமாய்நின்றது. 'தும்பிகலந்த' என்பதை 'தாமரைப்பெருவனம்' என்பதனோடு மீண்டுங் கூட்டப்பட்டது. பொறிஎன்ற அடைமொழி-நெருப்புப்பொறி புள்ளியென்ற இருபொருளைச் சிலேடைவகையாலுணர்த்திற்று. வரி-அழகு, இரேகை. "பொறிவரியசிறுவண்டு" என்றார், பெரியாரும். பி-ம்:—[1]உலர்ந்தவர். ()

ருகூ. தேரும் யானையும் புரவியும் விரவின தேவர்
ஊரு மானமு [1]மேகமு முடுக்கள்தம் முலகும்
பேரு மானவெங் காலத்துக் கால்பொரப் பிணங்கிப்
பாரின் வீழ்ந்தன போன்றன [2]கிடந்தன பரந்து.

(இ-ள்.) (போர்க்களத்திலே), தேரும் யானையும் புரவியும் கலந்துவிழுந்துகிடப்பவை,—(உலகம்)நிலைபேர்கின்ற பொருந்திய அந்த(யுகாந்த)காலத்தில் கொடுங் காற்று வீச, மாறுபட்டுத் தேவர்ஊர்ந்துசெல்கின்ற விமானமும் மேகமும் நட்சத்திரமண்டலமும் பாரின்வீழ்ந்தனவாய்ப் பரந்துகிடப்பனவற்றை யொத்தன; (எ-று.)—தேர் யானை பரிஎன்பன முறையே விமானம் மேகம் உடுக்கள்போலும்: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]உடுக்களுமுலகுமலையும், மேகமுமுடுக்களுமுலகும். [2]பரந்தனகிடந்த, கிடந்தனபரந்த. (உ௩கக)

கூ0.—அரக்கியர் களத்தில்வீழ்ந்திட்ட கணவரைப் புல்லுதல்.

எல்லி சுற்றிய மதிநிகர் முகத்திய ரெரிவீழ்
[1] அல்லி சுற்றிய [2]கோதையர் களம்புகுந் தடைந்தார்
புல்லி முற்றிய வுயிரினர் [3]பொருந்தினர் கிடந்தார்
வல்லி சுற்றிய [4]மாமர நிகர்த்தனர் வயவர்.

(இ - ள்.) இரவிற் சஞ்சரிக்கின்ற சந்திரனையொத்த முகத்தையுடையவரும் நெருப்புத்தோற்கின்ற [நெருப்பினுஞ் செந்நிறத்தனவான] பூவிதழ்களைச் சுற்றியுள்ள தலைமயிரையுடையவரும் போர்க்களத்தையடைந்து உட்புகுந்தவருமான அரக்கியரால் தழுவப்பட்டு முடிந்த உயிரையுடையவராய்(அப்போர்க்களத்திலே)பொருந்திக்கிடக்கின்ற அரக்கவீரர், கொடியினால் தழுவப்பட்ட பெரியமரம் (வீழ்ந்து)கிடப்பதை யொத்தனர்; (எ - று.)—உவமையணி. தலைமயிர் செந்நிறத்தனவாதலால், 'எரிவீழ்கோதை' என்றார். பி-ம்:-[1]வல்லி. [2]கோதையிற். [3]பொருந்திடக். [4]மராமரம். (உ௩கஉ)

சுக.—போர்க்களத்தைச் சார்ந்த அரக்கியரின் தன்மை, இதுமுதல் ஏழுகவிகளிற் கூறப்படும்.

வணங்கு நுண்ணிடை [1]மலைமுலைச் செக்கர்[2]வார் கூந்தல்
அணங்கு வெள்ளெயிற் றரக்கியர் [3]களத்துவந் தடைந்தார்
குணங்[4]கொ ளுந்துணைக் கணவர்தம் பசுந்தலை கொடாது
பிணங்கு [5]பேய்களைப் பிளந்தனர் தொடர்ந்தனர் [6]பிடித்தார்.

(இ - ள்.) தொய்யுந்தன்மையுள்ள நுண்ணிய இடையையும் மலைபோன்ற முலையையும் சிவந்த நீண்ட கூந்தலையும் வருத்தவல்ல வெள்ளிய எயிற்றையு

முடைய போர்க்களத்திலே வந்தடைந்தவரான அரக்கியர்கள்,—(தம்மிடத்து அன்புவைத்தலாகிய) குணத்தைக்கொண்ட (தம்) துணையாகிய கணவரின் பசுந்தலையை (உண்பதற்காகக் கையிற் கொண்டு) கொடாமல் மாறுபடுகின்ற பேய்களைத் தொடர்ந்து பிடித்துப் பிளந்தனர்; (எ-று.)—பி-ம்:—1வனமுலை. 2வான். 3அமர்க்களத்து, அமர்க்களம். 4கடந்ததங். 5பேய்களின் வாய்களைப் பிளந்தனர். 6பிடிப்பார், பிடித்தே. (உருகங)

கூஉ. சுடரும் வெள்வளைத் தோளிதன் 1கொழுநனைத் தொடர்வாள்
2உடரு 3மங்கமுங் கண்டுகொண் டொருவழி 4யுய்ப்பாள்
குடலு 5மீரலுங் கண்ணுமோர் குறுநரி கொள்ளத்
தொடர வாற்றல ணெடிதுயிர்த் தாருயிர் துறந்தாள்.

(இ-ள்.) ஒளிர்கின்ற வெள்ளியவளையைப்பூண்ட தோள்களைக்கொண்ட ஒருத்தி, தன் கொழுநனைக் காணச் செல்பவளாய், (அவனது) உடலும்(கை கால்முதலிய)உறுப்புக்களும் (தனித்தனியிருத்தலைக்) கண்டு (அவற்றை) ஓரிடத்தில் தாங்கிக்கொண்டு சேர்ப்பவளாய், (அக்கணவனுடைய) குடலையும் ஈரலையும் கண்களையும் ஒருசிறிய நரி கொண்டிட (அதனைத்)தொடர்தற்கும் வலிமையில்லாதவளாகி,நெடிதாகமூச்சுவிட்டு (த்தன்னுடைய) அரிய உயிரைத் துறந்தேவிட்டனள்; (எ - று.)—குறுநரி-குள்ளநரி. பி-ம்:—1கணவனை. 2உடலும். 3கைளும். 4உய்யாள். 5ஈருளும். (உருகச)

கூங. பெரிய வாட்டடங் 1கண்ணியர் 2கணவர்தம் பெருந்தோள்
3நரிக ளீர்த்தன 4வணங்கவு 5மிணங்கவு நல்கா
இரியல் போவன தொடர்ந்6தய லினப்படை கிடந்த
அரிய 7நொந்தில ரலத்தகச் சீறடி 8யந்தோ.

(இ-ள்.) பெரிய வாள்போன்ற பரந்த கண்களையுடைய மகளிர்,—(தம்) கணவரின் பெரியதோள்களை ஈர்த்தனவான நரிகள் வணங்கிக்கேட்கவும் இணக்கமானமொழியைச்சொல்லியிரக்கவும் கொடாமல் ஓடுபவற்றைத் தொடரலுற்று,அயலில் வீழ்ந்துகிடக்கின்ற தொகுதியான படைகள் அறுத்திடவும், செம்பஞ்சூட்டிய சிறியஅடிகள் வருந்தாராயினர்: ஐயோ!! (எ - று.)—'அந்தோ'என்பது கவியினிரக்கத்தைக்குறிக்கும். பி-ம்:—1கண்ணியோர். 2கணவன்றன். 3நரியுமோரியுங். 4வணங்கிட. 5கவர்ந்தவாவணங்கிட, வணங்கவும். 6அயிலெனப். 7நேர்ந்திலர், நொந்தில, நொந்திலது. 8அயர்ந்தார், அயர்ந்தாள், ஈர்ந்து. (உருகரு)

கூச. நலங்கொ ணெஞ்சினர் தந்துணைக் கணவரை நாடி
விலங்க லன்னவான் பெரும்பிணக் குப்பையின் மேலோர்
அலங்க லோதிய 1ரருந்துணை பிரிந்துநின் 2றயரும்
பொலங்கொண் மாமயில் 3வரையின்மேற் றிரிவன போன்றார்.

(இ - ள்.) தம்முடைய துணையாகிய கணவரை நாடி மலையைப்போன்ற ஓங்கிய மிக்க பிணக்குவியலின்மேலே திரிபவரான மாலையையணிந்த கூந்தலையுடைய நன்மையைக்கொண்ட நெஞ்சையுடையரான அரக்கமகளிர், தமது

அரிய துணைமயில்களைப்பிரிந்து வருந்துகின்ற அழகுகொண்ட பெரிய பெண்மயில்கள் மலைமீது திரிவனவற்றை யொத்தார்; (எ-று.)—உவமையணி.
பி-ம்:—1 துணைவரைப், பெருந்துணை. 2 அயர்வின், அகவும். 3 மலையின்மேல்.()

கூரு. சிலவர் தம்பெருங் [1]கணவர்தஞ் செருத்தொழிற் சினத்தாற்
பலரும் வாய்மடித் துயிர்துறந் தார்களைப் பார்த்தார்
[2]அலைவில் வெள்ளெயிற் றுலிதழ் [3]மறைத்துள தயலாள்
கலவி யின்குறி [4]காண்டுமென் றுமெனக் கனன்றார்.

(இ - ள்.) சிலமகளிர்,---தம்பெருமைபெற்ற கணவர்பலரும் தம் செருத்தொழிலிலே (மூண்ட) சினத்தினால் வாய்மடித்தவண்ணம் உயிர்துறந்தவர்களைப் பார்த்து,—(இவர்கள்)அசைதலில்லாத வெள்ளிய எயிற்றினால் இதழை மறைத்துள்ளது, அயலாளின் கலவிக்குறியை (நாம்)கண்டுவிடுவோ மென்ற கருத்தினாற்போலு மெனக்கருதி (அவர்மீது) கோபித்தார்கள்; (எ - று.)

சினம்மூண்ட நிலையில் வாயிதழைப் பல்லினாற் கடித்துக்கொள்ளல், இயல்பு: அங்ஙனம் வாயிதழைக் கடித்தபடியே இறந்துள்ள கணவரைப் பார்த்து அவர் உயிர்நீங்கினவ ரென்பதைக் கவனியாது, சிலமாதர்கள் 'தம் கணவர் வேறொருத்தியோடு புணர்ந்து அந்நிலையில் அம்மகளிர் வாயிதழிற்செய்த பற்குறிகளை நாம் காணாமலிருக்கவேணு மென்ற கருத்தினால் இவர் இவ்வாறு அவ்விதழை மறைத்துக்கொண்டுள்ளார்' எனக்கருதி அவர்கள்மீது சினம்மூண்டனரென்பதாம். பி - ம்:—1கணவர்கள். 2அலரும், அலகில். 3மறைந்துளது. 4காண்குவம்யாமெனக், காண்குதும்யாமெனக். (உ௬௭)

கூகூ. [1]நவசெய் வன்றலை [2]யிழந்தத [3]மன்பரை நணுகி
அவச [4]மெய்திட [5]மடந்தைய ருருத்தெரிந் தறியார்
துவச மன்னதங் கூருகிர்ப் பெருங்குறி தோண்மேற்
கவச [6]நீக்கினர் [7]கண்டுகண் டாருயிர் [8]கழித்தார்.

(இ-ள்.) வானத்தையொத்த [கறுத்துத்தோன்றுகின்ற]வலியதலையை(ப்போரில்)இழந்தவரான தமது கணவரை நணுகி,மங்கையர்(தம்கணவரின்)உருவினைத் தெரிந்தறியமாட்டாதவராய் அவசத்தையடைய,(பின்பு அவரது)கவசத்தைநீக்கி அவரது தோள்மேல் துவசவடிவத்தையொத்த தம் கூரியநகத்தாற்செய்த பெருங்குறிகளைக் கண்டுகண்டு (தம்) ஆருயிர் நீக்கினார்; (எ - று.)

ஆகாயம் அல்லது மேகம் என்ற பொருளுள்ள நபஸ் என்ற வடசொல். நவசுஎனத்திரிந்துவந்தது; எய் =ஏய்: உவமவுருபு. இனி, நவஞ்செய்என்பது 'நவசெய்' என விகாரப்பட்டதாக்கொண்டு, புதிதாகமணந்தகணவரெனினுமாம்:புதிதாகமணந்தவராதலால் கணவருருவைத் தெரியாதவராயினர். துவச மன்ன குறி என இயையும். பி-ம்:—1நவைசெய். 2இழந்தனர். 3நண்பரை. 4எய்திய. 5மங்கையர். 6நீங்கினர்க். 7கண்டுகொண்டு. 8அழிந்தார். (உ௬௮)

கூஎ. மாரி யாக்கிய கண்ணியர் கணவர்தம் வயிரப்
[1]போரி யாக்கைக [2]ணுடியப் பொருகளம் [3]புகுந்தார்
பேரி [4]யாக்கையின் [5]பிணப்பெரு குன்றிடைப் பிறந்த
சோரி யாற்றிடை [6]யழுந்தின ரின்னுயிர் துறந்தார்.

(இ - ள்.) மாரியையுண்டாக்கிய [மழைபோற்கண்ணீர்வடிக்கின்ற] கண்களையுடையவர்களான மகளிர், கணவருடைய வயிரம்போலுறுதியான போர்செய்த உடல்களை நாடி அந்தப் பொருகளத்திற் புகுந்தவராய், பெரிய யாக்கையைக்கொண்ட பெரிய பிணமலையினின்று பிறந்த இரத்தநதியிலே அழுந்தி இனியஉயிரைத் துறந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]போரிலாக்கைகள். [2]நாடினர், நாடிய. [3]புக்கார். [4]யாக்கையை. [5]பெரும்பிணக். [6]ஒழுக்கினர். ()

வேறு.

கூஅ.—அநுமானுக்கும் தூமிராட்சனுக்கும் நிகழ்ந்தபோரில் தூமிராட்சன்இறந்தமை, ஐந்துகவிகளாற் கூறப்படும்.

[1]வகைநின் றுயர் தாணெடு [2]மாருதியும்
[3]புகையின்பொரு கண்ணவ னும்பொருவார்
மிகைசென் றிலர் பின்றிலர் வென்றிலராற்
சிகைசென் று நிரம்பிய தீயுமிழ்வார்.

(இ - ள்.) அழகாக ஓங்கிநின்றதாளையுடைய பெருமைபெற்ற அநுமானும் புகையோடுபொருகின்ற கண்ணையுடையவனும் [தூம்ராட்சனும்],---போர்செய்பவராய், கொழுந்துஎழுந்து நிரம்பிய தீயையுமிழ்பவராகி, (ஒருவரையொருவர்) மேம்படுதலும் பின்னிடுதலும் வெல்லுதலும் இல்லாதவராயினர்; (எ - று.)—வகைநின் றுயர்தா ணெடுமா ருதியும் என இந்தப்பாக்களை அளவடிகொண்ட கலிவிருத்தமாகவும் பிரிக்கலாம். பி - ம்:—[1]வகைநின்றிரு, வகையின்னுயர், வகையின் றுயர். [2]தாளுயர், தோணெடு. [3]புகைவெங்கணனும்பொருவார் பொரவே. (உருஉ0)

கூக. ஐயஞ்[1]சழல் வாளி [2]யழற்கொடியோன்
மெய்யஞ்சனை கான்முளை மேனியின்மேல்
[3]வையஞ்சிலை யாறு வழங்கின[4]னால்
மொய்யஞ்சன மேக முனிந்தனையான்.

(இ - ள்.)அழல்போற்கொடியவனான தூம்ராட்சன்,---நெருங்கிய கறுத்த மேகம் முனிந்ததனையொத்தவனாகி, அழல்கின்ற இருபத்தைந்து அம்புகளை, உண்மையுள்ள அஞ்சனாதேவியின்புதல்வனான அனுமானுடைய உடலின்மீது (தான்) கொண்டுள்ள அழகியவில்லின்வழியால் எய்தான்;(எ-று.)—அழற்கொடி-புகை: அப்பெயரையுடையோனுமாம். பி-ம்:—[1]அயில். [2]அமர்க். [3]வையஞ்சலிபாய, வையஞ்சலில்பாய. [4]ஆம். (உருஉக)

எ0. பாழிப்புய [1]மம்புரு வப்படலும்
வீழிக்கனி போற்புனல் [2]வீசவெகுண்டு
ஆழிப்[3]பெருந் தேரை யழித்தனனால்
ஊழிப்[3]பெயர் [4]கார்நிக ரொண்டிறலான்.

(இ - ள்.) வலியபுயத்திலே அம்பானது உருவுமாறு படலும், வீழிக்கனிபோன்ற [செந்நிறமுள்ள]இரத்தம்(உடம்பினின்று)வெளிப்பட,—ஊழிக்காலத்திலே சஞ்சரிக்கின்ற மேகத்தையொத்த பெருந்திறமையுடைய அநுமான்,---வெகுண்டு, (அவ்வரக்கனுடைய) ஆழியைக்கொண்ட பெரியதேரை யழித்தான்; (எ - று.)—பி-ம்:—[1]அம்புபுகப். [2]வீழ. [3]பொரு. [4]கானிகர். ()

எக. வில்லிப்பொரு தேர்சிதையச் சிலையோடு
1எல்விற்2பொலி விண்ணின் 3விசைத்தெழுவான்
வில்லிற்ற திலக்குவன் வெங்கணையாற்
புலவித்தரை யிட்டன னேர்பொருவான்.

(இ - ள்.) சக்கரத்தைக்கொண்ட பொருதற்கேற்ற தேர் சிதையவே (தன்)வில்லோடு சூரியனால் விளக்கமுற்ற விண்ணிலே விரைந்தெழுந்தவனான தூமிராட்சனுடைய வில்லானது இலக்குவனுடைய கொடியகணையால் முறிந்தது; நேரேபொருபவனாகிய அனுமான், (தாவி அவனைத்) தழுவித்தரையிலே யிட்டான்; (எ - று.)—பி-ம்:—1எல்லிப். 2பொரு, பெரு. 3விரைந்து. ()

எஉ. மலையிற்பெரி யானுடன் மண்ணிடையிட்டு
1உலறக்கட லுவிய கால்கொடுதைத்து
2அலையிற்றிரு கிப்பகு வாயனல்கால்
3தலைகைக்கொ டெறிந்து தணிந்தனனால்.

(இ-ள்.)(அநுமான்),---மலையினும் பெருந்தோற்றமுடையனான தூமிராட்சனுடைய உடலை மண்ணிலிட்டுக் கடலைத் தாவியகாலைக்கொண்டு (அவ்வரக்கனுடைய ஆவி)வற்றும்படி உதைத்து, பிளந்தவாயினின்று அனலைக் கக்குகின்ற (அவன்)தலையைக் கையால் திருகிக் கடலிலெறிந்து(சினந்)தணிவடைந்தான்; (எ-று.)—உலற=உளற: கதறஎனினுமாம். அலையிலெறிந்தென்க. பி-ம்:—1உலைய. 2அலையத்திருகி, அலையிற்பருகி. 3வலை, மலை. (உஙஉச)

எங.—இனி ஆறுபாடல்கள், அங்கதன் மகாபார்சுவனுடன் பொருது அவனைக் கொன்றமையைக் கூறும்.

மாபக்கனு மங்கத னும்மலைவார்
தீபத்தி 1னெரிந்தெழு செங்கணினார்
கோபத்தினர் கொல்ல நினைந்தடர்வார்
தூபத்தி னுயிர்ப்பர் 2தொடர்ந்தனரால்.

(இ-ள்.) (ஒருவரோடொருவர்) பொருபவரான மகாபார்சுவனும் அங்கதனும், கோபங்கொண்டு தீபம்போல் எரிந்தெழுகின்ற செங்கண்ணையுடையவரும் தூபம்போற் புகைவெளிப்படுகின்ற பெருமூச்சையுடையவருமாகி, (ஒருவரையொருவர்) கொல்லநினைந்து அடர்பவராய்த் தொடர்ந்தார்கள்; (எ - று.)—பி-ம்:—1எரிந்திடு. 2தொடங்கினரால். (உஙஉரு)

எச. ஐம்பத்தொரு வெங்கணை யங்கதன்மா
மொய்ம்பிற்புக வுய்த்தனன் 1மொய்தொழிலான்
வெம்பிக் களியோடு 2விளித்தெழுதிண்
கம்பக்கரி யுண்டை கடாவெனவே.

(இ-ள்.)நெருங்கிப்பொருகின்ற தொழிலையுடையனான மகாபாரிசுவன்,--கோபித்து, மதக்களிப்புடனே ஆரவாரஞ்செய்துகொண்டெழுகின்ற வலிய கட்டுத்தறியிற் பிணிக்கத்தக்க மதயானைமீது உண்டையைச் செலுத்தினாற் போல, ஐம்பத்தொருகொடியபாணங்களை அங்கதனுடைய பெரிய தோள்களிலே புகுமாறு செலுத்தினான்; (எ-று.)---பி-ம்:—1மொய்த். 2விளிந்தெழு.

எ௫. ஊரோடு [1]மடுத்தொளி யோனையுறும்
காரோடு [2]நிகர்க்கத நாகமனான்
தேரோடு மெடுத்துயர் திண்கையினாற்
பாரோடு [3]மடுத்தெறி பண்பிடையே.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) ஊர்தல்தொழிலோடுபொருந்திச் சூரியனையுறுகின்ற மேகத்தோடு ஒத்த [கருநிறங் கொண்ட] சீற்றமுள்ள இராகுகேதுக்களையொத்தவனான அங்கதன், (தனது) உயர்ந்த திண்ணியகைகளால் தேரோடும் எடுத்துப் பூமியிலே பொருந்துமாறு எறிந்த நிலையிலே,—(எ - று.)

தேரைப்பற்றுமாறு சென்ற அங்கதனுக்குச் சூரியனைப்பற்றுமாறு செல்லும் பாம்பை யுவமை கூறினர். "எல்லிற்பொலிதேர்" என அடுத்த செய்யுளிலும் தேருக்குச் சூரியனை உவமை கூறுவர். ஊர்ந்து செல்லுதல் பாம்பிற்கு இயற்கை. ஊரோடும் அடுத்த எனப்பிரித்து - ஊர்கோளோடும் பொருந்தியஎனினுமாம். மகாபாரிசுவனெறிந்தஜம்பத்தொருகணையாற்பற்றப்பட்ட அங்கதனுக்கு இராகுகேதுக்களாகிய நாகங்களினாற் பற்றப்பட்ட சூரியன் உவமையெனக் கொள்வாருமுளர். பாரோடு-பாரில்:வேற்றுமைமயக்கம். பி-ம்:—[1]எடுத்து. [2]நிறக். [3]எடுத்தெறி. (உ௬௨எ)

எ௬. வில்லைச்செல வீசி [1]விழுந்தழியும்
எல்லிற்[2]பொலி தேரிடை நின்றிழியாச்
சொல்லிற்[3]பிழை யாததொர் சூலமவன்
மல்லிற்பொலி மார்பின் வழங்கினனால்.

(இ - ள்.) (மகாபார்சுவன்,—தன்) வில்லை (அப்பாற்) செல்லுமாறு எறிந்துவிட்டு, சூரியனைப்போல் விளங்குவதும் கீழ்வீழ்ந்தழிவதுமான தேரிடையினின்று இழிந்து(சாபச்)சொற்போலத் தவறாது அழிக்கவல்ல ஒரு சூலத்தை அந்த அங்கதனுடைய வலிமையோடு விளங்குகின்ற மார்பிலே விடுத்தான்; (எ - று.)—பி-ம்:—[1]வெகுண்டடரா. [2]பொரு. [3]பிழையாதொரு.

எஎ. சூலம்மெனி [1]னன்றிது தொல்லைவருங்
காலம்மென வுன்னு [2]கருத்தினனாய்
ஞாலம்முடை யானது நாமறவோர்
[3]ஆலம்முடை யம்பி னறுத்தனனால்.

(இ - ள்.) உலகநாயகனாகிய ஸ்ரீராமன்,—(அந்தச் சூலத்தைக்குறித்து) 'இது, (சாதாரண) சூலம் என்போமெனின், அன்று: பழமையாய் வருகின்ற (முடிவைவிளைக்கும்) காலபாசத்தின் சொரூபமானது' என்று நினைத்த எண்ணத்தையுடையவனாய், அது பேரும் அறும்படி நஞ்சுபூசிய அம்பைக் கொண்டு அறுத்தான்; (எ-று.)—பி-ம்:—[1]நின்றது, நன்றது. [2]கருத்தினனால், கருத்தினனு. [3]ஆலம்முகவம்பின். ஒவ்வோரடியிலும் விரித்தல் விகாரமாகிய மகரவொற்று இல்லாதபாடம் சிலபிரதிகளி லுள்ளது. (உ௬உ௯)

எஅ. உளர்ந்தா னினையாதமு [1]னுய்த்துகவாக்
[2]கிளர்ந்தானை யிரண்டு கிழித்[3]துணையாய்ப்

பிளந்தா னுலகேழினொ டேழுபெயர்ந்து
அளந்தான்வலி நன்றென வங்கதனே.

(இ - ள்.) (அப்போது) அங்கதன்,—பதினான்கு உலகங்களையும் (தன் நிலையினின்று) பெயர்ந்து அளந்தவனான திருமாலின் அமிசமான இராமனுடைய வலியை நன்றென்று(சொல்லிக்)கொண்டாடிவிட்டு,—மனத்தினால் நினைப்பதற்குமுன்னமே [விரைவாக] சூலத்தைச் செலுத்தி உவந்து மனக்கிளர்ச்சிகொண்டவனான மகாபாரிசுவனை இரண்டுகிழியின் தன்மையாகப் பிளந்திட்டான்; [இரண்டாகக் கிழித்திட்டான்]; (எ-று.)—உகவா = உகந்து: செய்யாவென்னும் வாய்பாட்டுஉடன்பாட்டுவினையெச்சம். பி-ம்:—[1]உற்றுதவாக். [2]கிளர்ந்தானை. [3]துணையாப். (உ௩௩௦)

எசு.—மாலியும் நீலனும் பொருதல்.

மாமாலியு நீலனும் வானவர்தங்
கோமானொடு தானவர் கோனிகலே
ஆமாறு மலைந்தன ரென்றிமையோர்
பூமாரி பொழிந்து புகழ்ந்தனரால்.

(இ - ள்.) 'பெருமைபெற்ற மாலியென்பவனும் நீலனும் வானவர் தம் தலைவனுடனே தானவர்கோன் புரிந்த போரே உவமையாகுமாறு பொருகின்றனர்' என்று இமையோர் மலர்மாரிபெய்து புகழ்ந்தார்கள்; (எ - று.)—இமையோர்புகழ்ந்தாரென்று கூறினும், புகழுமாறுபொருதாரென்பதே கருத்தாகக்கொள்க. 'வானவர்தலைவன்-தேவாதி தேவனானதிருமாலி னமிசமாகிய நரசிங்கமூர்த்தி: தானவர் கோன் - இரணியன்' என்பர். (உ௩௩௧)

அ௦.—நீலன் மலைபால் வில்லையழிக்க, மாலி தேரின்மேல் வாளோடுப் வந்து அவனைத்தடுத்து நிற்றல்.

கல்லொன்று கடாவிய காலையவன்
வில்லொன்றிரு [1]கூறு [2]விளைத்திடலுஞ்
[3]மல்லொன்றிய தோளினன் [4]வாளினொடும்
நில்லென்றிடை சென்று நெருக்கினனால்.

(இ - ள்.) (நீலன்) மலையொன்றை யெடுத்து செலுத்திய காலையில், (அது) அந்தமாலியினுடைய வில்லொன்றை இருகூறாகச் செய்திடலும்,— வலிமைபொருந்திய தோளையுடையவனான மாலி வாளுடனே (வந்து) நில்லென்றுசொல்லி (நீலன் போக்கைத்தடுத்து) அவனிடையே சென்று அடர்க்கலானான்; (எ-று.)—பி-ம்:—[1]கூறின். [2]விழுந்திடலும்,விளைந்திடலும். [3]செல்லொன்றிய வாளொடு. [4]தேரினனாய், தோளினனாய். (உ௩௩௨)

அக.—குமுதன் இடையேவந்து மாலியின்தேரைப் பொடியாக்கல்.

அற்றத்தொழி லெய்தலு மக்கணமே
மற்றப்புற நின்றவன் வந்தணுகாக்
கொற்றக் குமுதன்னொரு குன்றுகொளா
[1]எற்றப்பொரு தேர்பொடி யெய்தியதால்.

(இ - ள்.) அப்போது அத்தொழில் நிகழ்கையில், அக்கணமே மற்றொருபுறத்திலே நின்றவனாகிய வெற்றிபொருந்திய குமுதன்,—ஒரு குன்றைக் கொண்டுவந்தணுகி மோத,பொருதற்குதவியான (மாலியின்) தேர் பொடியாய் விட்டது; (எ-று.)—அன்றுஅத்தொழில் என்றதொடர், அற்றத்தொழிலென்றாயிற்று: அற்றத்தொழில்என்பதற்கு - வலிமையறுதலாகியசெயல் என்று கூறுவாருமுளர். பி-ம்:—1எற்றிப். (உ௩௩௩)

அஉ.—நீலனெறிந்தமரத்தை வாளால் மாலி துண்டுபடுத்த, அவன்வாள்பிடித்த தோளை இலட்சுமணன் வெட்டிவிடுதல்.

தாளார்மர நீல 1னெறிந்ததனை
வாளான் மடிவித்து 2வலித்தடர்வான்
தோளாசற வாளி துரந்தனனால்
மீளாவினை நூறும் விடைக்கிளையான்.

(இ - ள்.) நீலன் எறிந்ததாகிய தாள்பருத்த மரத்தை (த் தன்) வாளினால் துண்டித்து வலிகாட்டிப்பொருபவனான மாலியின் தோளின் மூட்டு அறும்படி, போக்குதற்குஅரிய வினைகளைப்போக்குபவனான இடபம்போன்ற இராமபிரானது தம்பியான இலட்சுமணன், அம்பைச்செலுத்தினன்: (எ - று.) —பி-ம்:—1எடுத்தனதன், எறிந்தனதன். 2வதித்து, வலிந்து. (உ௩௩௪)

அ௩.—மீண்டும் போரவந்த மாலியினிடம் 'கையற்றுப்போன உன்போலியரோடு பொருதல் தகாது'என்று இலட்சுமணன்போய்விடுதல்.

மின்போன் மிளிர்வாளொடு தோள்விழவுந்
தன்போர் தவிராத வினைச்சலியா
என்போலியர் போரெனி 1னன்றிதுவோர்
புன்போரென நின்றயல் போயினனால்.

(இ-ள்.)மின்போல்விளங்குகின்ற வாளுடனே தோள் அறுபட்டுவிழவும், தன்போர்தவிராமல் பொருபவனான மாலியை(நோக்கி, இலட்சுமணன்),'என் போன்றவருடன் செய்யும்போரோ என்றால்அன்று: இது ஓர்புல்லியபோராகும்' என்றுசொல்லிவெறுத்து, அப்பாற் சென்றிட்டான்; (எ - று.)

'சரியானவீரரோடு பொரலாம்:தோளற்றவனோடு பொருதல் முறைமையன்று' என்றுசொல்லிப் போயினன், இளையபெருமா ளென்க. சலியா-வெறுத்து. சலியா தவிராதவினை என்று கூட்டுவாரு முளர். நன்றிதுஎன்றும்பிரிக்க இடனுண்டு. பி-ம்:—1இன்றிது. (உ௩௩௫)

அச.—இலட்சுமணனைப் புகழ்ந்து வானரவீரர் இராமனிடம் கூறுதல்.

நீர்வீரை யனுனெதிர் நேர்1வரலும்
பேர்வீரனை வாசி பிடித்தவனை
யார்2வீரதை யின்னசெய் தார்களெனப்
போர்3வீர ருவந்து 4புகழ்ந்தனரால்.

(இ - ள்.) நீரைக்கொண்ட கடல்போன்றதிருநிறத்தவனான ஸ்ரீராமனுடையஎதிரே நேரேவருதலும், போர்வீரர்கள், பெரியவீரனும் அம்பைப்

பிடித்துள்ளவனுமாகிய இலட்சுமணனைக்குறித்து, 'எவர் (தம்)வீரத்தன்மையால் இப்படிப்பட்ட தருமயுத்தத்தைச் செய்தார்கள்?' என்றுசொல்லி, உவந்து புகழ்ந்தார்கள்; (எ - று.)—வாஜம்-சிறகு: சிறகுகட்டப்பட்டுள்ளது என்பது பற்றி வடமொழியில், அம்பு 'வாஜி' எனப்படும்; அது, வாசி எனத் திரிந்துவந்தது: இனி, வாசி-போருமாம்; அன்றி வாசிபிடித்தவன் - போர்செய்யத்தக்கவர்இன்னர் தகாதவ ரின்னர்என்ற வேறுபாட்டை யறிந்தவ னெனினுமாம். வீரதை=வீரதா:வடசொல். பி-ம்:—1வரவும். 2வீரமது. 3வீரனும்வந்து. 4புகழ்ந்தனனால். (உ௩௩௬)

அ௫.—யஜ்ஞசத்துருவை இலட்சுமணன் மாய்த்தல்.

வேள்விப் பகையோடு வெகுண்டடருந்
1தோள்வித்தக னங்கொர் சுடர்க்கணையால்
வாழ்வித்தனை யென்றவன் மார்பகலம்
போழ்வித்தன னுருயிர் 2போயினனால்,

(இ - ள்.) யஜ்ஞசத்துருவுடனே சினந்துபொருகின்ற தோள்வலிமையுடைய வல்லவனான இளையபெருமாள், வாழ்வித்தாயென்றுசொல்லி அப்போது ஒளிபொருந்திய ஒருஅம்பினால் அவன்மார்பின்பரப்பைப் பிளக்கச் செய்தான்: (அவ்யஜ்ஞசத்துரு) தன்னுயிர் போகப்பெற்றான்; (எ - று.)

இப்போது உயிர்நீங்கப்போகின்றா யாதலால் அரக்கரை இனி வாழ்விக்கமுடியாதென்பான் 'வாழ்வித்தனை' என்கின்றான். இனி, நீ என்கையிற் பட்டிறக்கப்போகின்றாயென்ற குறிப்பினால் இவ்வாறு கூறினனுமாம். இச்செய்யுள் ஒருபிரதியில் "மல்லற்றடமார்பன்" என்ற அடுத்தபாடலின்பின் உள்ளது. பி-ம்:—1 காழ்வித்தகமுற்றகடுங்கணையால். 2போயினதால்.)உ௩௩௭

அ௬.—இதுவும் அது.

1மல்லற்றட மார்பன் வடிக்கணையால்
2எல்லுற்றுயர் வேள்வி யிரும்பகைஞன்
3வில்லற்றது தோளொடு 4மேனிமிருங்
கல்5லற்ற கழுத்தொடு கால்களொடும்.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய பரந்த மார்பையுடையவனான இலட்சுமணனது கூரிய அம்பினால் ஒளிபொருந்தி ஓங்கி (அக்கினி)யெரிகின்ற வேள்விக்குப் பெரும்பகைவனான யஜ்ஞசத்துருவின் வில் அற்றிட்டது;(அவனது) தோளுடனும கழுத்துக்கால்களுடனும் மேல்கிமிர்ந்துவரும் கல்லும்அற்றது.

இவ்வரக்கன்வேள்வியை யழிக்கும்போது வானத்திலிருந்து கல்முதலியவற்றை மழைபோலவிழும்படி சொரிபவனாதலால், இனி அவ்வாறு யாகத்தைக் கெடுக்குமாறு கல்லைச்சொரிபவரில்லையென்பார் 'கல்லற்றது' என்றார்: இவ்வாறு அறுதற்றொழிலைச் சமத்காரந்தோன்றக் கூறியிருத்தலால், 'தோளொடுகழுத்தொடுகால்களொடும் கல்லற்றது' என்றது - உடனவிற்சியணி. பி-ம்:—1மல்லிற்றடமாரன்வயக். 2எல்லொத்துயர், எல்லிற்றுயர். 3வில்லிற்றதுதேரொடு, வில்லிற்றதுதோளென. 4மேனியிருங். 5இற்ற. (உ௩௩௮)

அஎ.—சூரியசத்துருவைச் சுக்கிரீவன் போரிற் கொல்லுதல்.

தன்றாதையை முன்பு தடுத்தொருநாள்
வென்றானை விலங்கலின் மேனியனைப்
பின்றாத வலத்துயர் பெற்றியனைக்
கொன்றான் கவியின்குல மாளுடையான்.

(இ - ள்) தன்தாதையாகிய சூரியனை முன்பு ஒருநாள் தடுத்து வென்றவனும் மலைபோன்றமேனியையுடையவனும் பின்னிடையாதவலிமையோடு உயர்ந்த தன்மையையுடையவனுமான சூரியசத்துருவை, கவியின்கூட்டத்தையெல்லாம் (தன்) அடிமைக்குடியாகக்கொண்டவனான சுக்கிரீவன், (செய்தபோரிற்) கொன்றான்; (எ - று.) (உ௩௩௯)

அஅ.—இதுவும், அடுத்த கவியும் - இடபனும் வச்சிரதம்ஷ்ட்ரனும் பொருதலைக் கூறும்.

இடபன்றனி வெஞ்சம முற்றெதிரும்
விடவெங்க ணெயிற்றவன் விண்ணதிரக்
கடவுங்கதழ் தேர்[1]கட வாளியொடும்
படவங்கொரு குன்று [2]படர்த்தினனால்.

(இ - ள்.) இடபனென்ற வானரவீரன்,—ஒப்பற்ற கொடியபோரைப் பொருந்தி எதிர்க்கின்றவனும் விடங் கக்குங் கொடுங்கண்ணை யுடையவனுமான வச்சிரதம்ஷ்ட்ரனதுவானதிரும்படிசெலுத்துகின்ற விரைவுபொருந்திய தேரை(அதனைச்) செலுத்துகின்றஆளுடனே [பாகனுடனே] அழியுமாறு அங்கு ஒருமலையைச செலுத்தினான்; (எ-று.)—படர்த்தினன்-படரச்[செல்லுமாறு] செய்தான். [2]படைத்தனனால் என்றபாடத்திற்குப் பெற்றானென்க. பி-ம்.—[1]கெடவாளியொடும், கதிர்வாளியொடும். (உ௩௪௦)

அ௯. திண்டே[1]ரழி யச்சிலை விட்டொருதன்
[2]தண்டோடு மிழிந்து தலத்தினனாய்
உண்டோவுயி ரென்ன [3]வுருத்துருமோடு
எண்டோளனு முட்கிட வெற்றினனால்.

(இ-ள்.) (தன்) வலியதேர் அழியவும் (தான் கைப்பற்றியிருந்த) வில்லை விட்டிட்டு, (அந்த வச்சிரதம்ஷ்டரன்),—ஒப்பற்ற தனது தண்டாயுதத்துடனே பூமியிலிழிந்தவனாகிக் கோபித்து,இடியும் எண்டோளையுடையஉருத்திரமூர்த்தியும் அஞ்சும்படியும் (கண்டவர் 'இனி இவனுக்கு)உயிரும் உளதாகுமோ?' என்று அஞ்சும்படியும்(அந்தத்தண்டாயுதத்தினால் இடபனை) மோதினான்; (எ - று.)—பி-ம்:—[1]ஒழிய. [2]தண்டேகொடிழிந்து. [3]உருத்திரனும். ()

௯௦.—அப்போது அநுமன் அவ்வரக்கனுக்கு முற்படுதல்.

அடியுண்டவ னாவி [1]யுலைந்தயர
இடியுண்ட மலைக்குவ [2]டிற்றதுபோல்
முடியும்மென [3]மெல்லையின் [4]முந்தினனால்
நெடியன்குறி யன்னெனு நீர்மையினான்.

(இ - ள்.) அடியுண்டவனான இடபன் உயிர் மரணவேதனையையடைந்து துன்பப்பட, (இவன்) இடியுண்ட மலைச்சிகரங்கள் இற்றதுபோல முடிந்திடுவா னென்கின்ற காலத்திற்குள்,—(தான் வேண்டியபடி) நெடியனும் குறியனும் ஆகுந்தன்மையுள்ளவனான அநுமான் முற்பட்டுத்தோன்றினான்; (எ-று.)—அநுமான் நெடியவனும் குறியவனும்ஆனதைச் சுந்தரகாண்டத்துங் காணலாம். பி - ம்:—1குலைந்தயரா, குலைந்தலையா. 2இற்றன. 3எல்லையின். 4முற்றினனால். (உ௩௪உ)

௩௧.—இதுவும், அடுத்த கவியும்-அநுமான் வச்சிரதம்ஷ்ட்ரனுடன்போருது அவனைக் கொன்றமையைக் கூறும்.

கிடைத்தானிகன் மாருதி யைக்கிளர்வான்
[1]அடைத்தானென மீதுய [2]ராக்கையினைப்
படைத்தானை நெடும்புகழ் பைங்கழலான்
புடைத்தா[3]னவன் மார்பு பொடிச்சிதற.

(இ - ள்.) வந்துகிட்டினவனும் விளங்குகின்ற வானத்தையடைத்தவனென்னுமாறு மேலோங்கிய சரீரத்தைப்படைத்தவனுமான வலிமைபொருந்திய அநுமானை, மிக்கபுகழ்படைத்த பசும்பொன்னினாற்செய்த வீரக்கழலையணிந்தவனாகிய வச்சிரதம்ஷ்ட்ரன், அவன் மார்பினின்று நெருப்புப்பொறி சிதறுமாறு அடித்தான்; (எ - று.)—பி-ம்:—1மிடைத்தானெனமீயுயர், விடைத்தானெனமீயுயர். 2ஆக்கையனை. 3அகன்மார்பு. (உ௩௪௩)

௩௨. எற்றிப்பெயர் வானை யிடக்கையினாற்
பற்றிக்கிளர் தண்டு பறித்தெறியா
[1]வெற்றிக்கிளர் கைக்கொடு [2]மெய்வலிபோய்
[3]முற்றத்தனிக் குத்த [4]முடிந்தனனால்.

(இ - ள்.) மோதிவிட்டுச் செல்பவனாகிய வச்சிரதம்ஷ்ட்ரனை இடக்கையினாற் பற்றிக்கொண்டு (போரில்) மூள்கின்ற, தண்டாயுதத்தைப் பறித்தெறிந்துவிட்டு, (அநுமான்),—வெற்றியோடு விளங்குகின்ற (தன்) கையைக்கொண்டு உடல்வலியெல்லாம் (ஓரிடத்து)ச்சென்று முதிர [மிக்க வலிமையோடு] தனிக்குத்துக் குத்த, (அவ்வரக்கன்) உயிர்முடிந்திட்டான்; (எ - று.)—பி - ம்:—1மற்றைக். 2மைவலிமொய். 3முற்றி. 4முடித்தனனால்.

௩௩.—இதுமுதல் ஆறுகவிகள் - பிசாசன் செய்த கடும்போரைக் கூறும்.

[1]காத்தோர்மரம் வீசுறு [2]கைக்கதழ்வன்
போத்தோர்புலி போற்பன சன்புரளக்
[3]கோத்தோட நெடுங்[4]குருதிப்புனறிண்
மாத்தோமர மார்பின் வழங்கினனால்.

(இ - ள்.) (பிசாசனென்பவன்,—தன்னைப்)பாதுகாத்துக்கொண்டு ஒரு மரத்தை வீசுகின்ற கைவிரைவையுடைய ஒரு வலியபுலிப்போத்துப்போன்ற பனசன் புரளவும், மிக்கஇரத்தநீர்வெள்ளம் கோத்து ஓடும்படியும், வலிய

பெரிய தோமரத்தை (அவனது) மார்பில் விடுத்தான்;(எ-று.)—பி-ம்:—[1]காத் தோமரம். [2]கைக்கழுதன், கைக்கதமுன். [3]தேத்தோட. [4]குருதித்திரைகள். ()

௬௪. [1]கார்மேலின ளோகடன் மேலினனோ
பார்மேலின னோபகன் மேலினனோ
யார்மே[2]லின னோ[3]வின வென்றறியோம்
போர்மேலினன் வாசி யெனும்[4]பொறியான்.

(இ - ள்.) போர்மேலிருப்பவனும் குதிரையெனப்படுகின்ற யந்திரத்தைக் கொண்டவனுமாகிய அந்தப்பிசாசன்,-கார்மேலிருக்கிறனோ? கடன்மேலிருக்கிறனோ? பூமியின் மீதிருக்கின்றனோ? (வானத்துச்) சூரியனிடத்துத்தான் இருக்கின்றனோ? ஆர்மேற்றான் பொருகின்றனோ? இன்னவையென்று சொல்லுதற்கு (யாம்) உணரோம்; (எ-று.)—இது, கவிக்கூற்று. பொருகையிற் பிசாசன் யந்திரத்திலிருப்பவன்போன்று இன்ன இடத்து இருக்கின்றனென்பதும் இன்னார்மேற்பொருகின்றனென்பதும் தெரியாதவாறு பல விடங்களிலுஞ் சுற்றியவண்ணம் பலருடன் பொருதன னென்றவாறு. சாதாரணக் குதிரைபோலவன்றி ஓரியந்திரம்போற் சுழலுந் தன்மையது அவனதுபரி யென்பார் 'வாசியெனும் பொறி' என்றார்: இது-கைதவாபநுதியணி. பி-ம்:—[1]கார்மேலனவோ. [2]எனவோ. [3]எனவென்றறியாப். [4]புரையான். இங்கேசிலபிரதிகளில் ஒருபாடல் காணப்படுகின்றது வருமாறு:—.

* விசைகண்டுயர் வானவர் விண்ணிரியக்
குசைதங்கிய கோளென வாசியுடன்
திசையெங்கணு நின்று திரிந்துளதாற்
பசைதங்குகளத்தொரு பாய்பரியே. (௨௩௪௬)

௬௫. [1]நூறாயிர கோடிகொ லன்றுகொலென்று
[2]ஆறாயிர வானவ ரும்மறிவில்
தேறாவகை நின்று திரிந்துளதாற்
பாறாடுகளத்தொரு [3]பாய்பரியே.

(இ - ள்.) ஆறாயிரம் வானவர்களும், 'நூறாயிரகோடிக்குதிரைகள் திரிகின்றனவோ? அன்றோ?' என்று அறிவில் தெளியாதபடி[ஐயமுறும்படி](விரைந்து), பருந்துகள் உலாவுகின்ற போர்க்களத்திலே பாயுந்தன்மையுள்ள (அந்தப்பிசாசனுடைய) ஒப்பற்ற குதிரை திரிந்துதிற்பதாகும்; (எ - று.)—இது, குதிரையின்விரைவைக் கூறியது. போர்காண ஆறாயிர வானவர் அப்போது வந்திருந்தனரென்று கொள்க. பி-ம்:—[1]நூறாயிரம்,கோறாயிர. [2]ஆறாயுத், ஆறாயிரம். [3]வன். (௨௩௪௭)

௬௬. கண்ணிற்கடு கும்மன னிற்கடுகும்
விண்ணிற்[1]படர் காலின் மிகக்கடுகும்

---

* குசை-கடிவாளம். களத்துத் திசையெங்கணும் பரி குசைதங்கிய கோள் என வானவர் இரியத் திரியும். பசை-இரத்தம் நிணம் முதலியவற்றின் ஈரத்துடன் ஒட்டும்கிலே. வாசியுடன்-வேறுபாட்டுடனே. ()

உண்ணிற்கு மெனிற்புற னிற்குமுலாய்
மண்ணிற்[2] றிரி யாத வயப்பரியே.

(இ - ள்.) மண்ணில் திரிதலில்லாத(பிசாசனுடைய)வலிமைபொருந்திய குதிரை,—கண்ணின்பார்வையைக்காட்டிலும் விரைந்துசெல்லும்;மனத்தினும் விரைந்து செல்லும்; வானத்திற் பரவிச்செல்லுகின்ற காற்றைக்காட்டிலும் மிகுந்து விரைந்துசெல்லும்;உள்ளேநிற்கின்றதென்னும்போதே உலாவிப் புறத்திலேநிற்கும்; (எ - று.)—இதுவும், பிசாசன்குதிரையின் விரைவுகூறியதே. பி-ம்:—[1]படுகாலின். [2]திரியாது. (உ௩௪அ)

௬௭. [1]மாப்புண்டர [2]வாளியின் [3]வட்டணைமேல்
[4]ஆப்புண்டவ னொத்தவ னாயிலான்
பூப்புண்டர வாவி புறத்தகலக்
கோப்புண்டன வானர வெங்குழுவே.

(இ - ள்.) பெரிய கழுகுபோற்(பரந்து)செல்லுகின்ற குதிரையின் விரைந்தநடையிலே (அதன்மீது)கட்டப்பட்டவன் போன்றவனை[உறுதியாயிருந்த]பிசாசனுடைய அரிய வேற்படையினால், பூமிதேவி புண்ணைப்பெற்றிருக்கவும் (தம்)ஆவி (உடம்பினின்று) வெளிப்படவும் கொடிய வானரக்கூட்டம்(மடிந்து) குவிந்தன; (எ-று.)—இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை. வானரர்கூட்டம் மடிந்துகுவிந்தமை கூறிற்று. புண்டரம்-கழுகு. வாளி-குதிரைக்குஆகுபெயர். பி - ம்:—[1]மார்புண்டன. [2]வாசியின். [3]வட்டணையால். [4]ஆப்புண்டனொத்தனராவியலாற். (உ௩௪௯)

௬௮. நூறும்மிரு நூறு நொடிப்பளவின்
ஏறுங்[1] நுதி வேலி னிறைப்பொழுதில்
சீறுங்கவி சேனை சிதைக்குமெனு
ஆறுந்திற லும்பரு மஞ்சினரால்.

(இ - ள்.) 'ஓரிமைப்போதும் ஓய்வில்லாமல் நொடிப்பொழுதில் நூறும் இருநூறுமாகச் சீறுங் கவிசேனையைக் கூர்மையேறியவேலினால் சிதைக்கின்றானே, (இப்பிசாசன்!)'என்று தணிந்துள்ள வலிமையுள்ள தேவரும் அஞ்சினர்; (எ-று.)—'நொடிப்பளவில்' என வந்ததனால், இறைப்பொழுதுஇல்---இறைப்பொழுதும் வெறுமனேயில்லாமல் என்று உரைக்கப்பட்டது. பி-ம்:—[1]திறல் ...பொழுதிற், பரியுந்தியிமைப்பொழுதிற். (உ௩௫0)

௬௯.—இலட்சுமணன் வாயவ்யாஸ்திரத்தினற் பிசாசனைக் கொன்றிடுதல்.

தோற்றும்முரு வொன்றென வோ[1]துணியாக்
கூற்றின்கொலை யாலுழல் கொள்கையனை
ஏற்றுஞ்[2]சிலை யாண்மை யிலக்குவன்வெங்
காற்றின்படை O3காண்டு கடந்தனனால்.

(இ - ள்.) (போர்செய்யுமாறு) தோன்றியுள்ள உரு ஒன்றே என்று துணியமுடியாதபடி கூற்றுக்குஉரிய கொலைத்தொழிலோடு (சாரிகைதிரிந்து) சஞ்சரிக்கின்ற தன்மையையுடையவனை பிசாசனை நாணேற்றுகின்ற

வில்லைக்கொண்ட ஆண்மையையுடைய இலக்குவன் கொடிய வாயவ்யாஸ் திரத்தினால் வென்றிட்டான்; (எ - று.)

விரைந்துசெல்லுந்தன்மையுள்ள குதிரையின் மீதேறித் திரிந்து கொல்லுந்தன்மையனான பிசாசனுடைய தலையை, இலக்குவன், வாயுவைத் தெய்வமாகக்கொண்டுள்ள அம்பையெய்து கொய்திட்டனனென்க. சாரிகைதிரிந்து பலவிடத்துங்காணப்படுவதனால், பிசாசனை 'உருவொன்றெனவோ துணியா உழல் கொள்கையன்' என்றார். பி-ம்:—[1]துணியார். [2]சிலயானை. [3]கரந்தனனால்.

க௦௦.—பிசாசன் தலையற்றபின்பும் வினைத்தொடர்ச்சியால் கீழ்விழாது கொலைத்தொழில் புரிதல்.

குலையப்பொரு [1]சூல னெடுங்கொலையும்
உலைவுற்றில வுய்த்தனு [2]மோய்விலனாண்
தலையற்றுக வுந்தரை யுற்றிலனால்
இலையப்[3]பரி கோளி னிருக்கையினான்.

(இ - ள்.) இலயத்திற்கு ஏற்ப அடிவைத்து நடக்கின்ற பரிமேலிருக்கையைக்கொண்ட பிசாசன்,—ஒள்ளிய தலை யற்று விழுந்தபின்பும், (உயிர்) குலையும்படி பொருகின்ற சூலப்படையையுடையவனாய், (தான் மேற்கொண்ட) கொலையும் குறைதலில்லாதனவாய் நிகழ்த்துதலையும் ஒழியாதவனாகித் தரையில் வீழாதிருந்தனன்: (எ - று.)—இது, இறந்தபின்பும் சற்றுநேரம் முன் தொடங்கிய தொழில்நிகழ்தலைக் கூறியது. தாளலயத்திற்கு ஏற்ப அடிவைப்பது அவன்குதிரை யென்பார் 'இலயப்பரி' என்றார். இலையம்-எதுகைபற்றிய போலி. பி-ம்:—[1]சூலநெடுங். [2]ஓய்விலதொண், ஓவிலதோள், ஓய்விலவன். [3]பரிமேல் கொளிருக்கையினால். (உ௩௫௨)

க௦க.—சீதைக்கு நன்னிமித்தந் தோன்றுதலும் யமதூதரும் அரக்கத்தூதரும் தம் நகரஞ்சேர்தலும்.

இன்றாதிய முண்டென [1]வின்னகைபாற்
சென்றூதின [2]தும்பிக டென்றிசையான்
வன்றூதரு [3]மெய்தினர் வஞ்சனையான்
றன்றூதரு [3]மெய்தினர் [4]தந்நகர்வாய்.

(இ - ள்.) இனிய பற்களையுடையளான சீதாதேவியினிடத்தில் இன்றைக்கு க்ஷேமமுண்டென்று தெரிவிக்கும்படி [நன்னிமித்தமாக] வண்டுகள் சென்று ஊதின; தெற்குத்திக்குப்பாலகனாகிய யமனது வலியதூதரும், (போரிலிறந்த உயிர்களைக்கொண்டு தம்நகருக்குச்) சென்றனர்; வஞ்சனைக்குணமுள்ளவனான இராவணனுடைய தூதரும், தம் நகரினிடத்துச் சென்றனர்.

'தந்நகர்வாய்' என்றதொடரை, 'வன்றூதரும்' என்றதன் பின்னும் கூட்டுக. இன்னகை - பண்புத்தொகையன்மொழி: சீதையைக் காட்டிற்று. சில பிரதிகளில் இந்தப்பாடலோடு இப்படலம் முடிகின்றது. பி-ம்:—[1]இன்னகையாற். [2]கூனிகள். [3]ஏகினர். [4]தன்னெதிரே. (உ௩௫௩)

௧௦௨.—இராவணனிடத்துச் சென்று தூதுவர் செய்தியுரைத்தல்.

ஏகித் தனி மன்ன னிருந்துழி புக்கு
ஓகைப்பொரு [1]ளின்றென வுள்ளழியா
[2]வேகத் தடல் வீரர் [3]விளிந்தவெலாஞ்
சோகத்தொ டிறைஞ்சினர் சொல்லினரால்.

(இ - ள்.) (ஒற்றர்கள்,—தம்நகர்க்குச்) சென்று ஒப்பற்ற மன்னவனை இராவணனிடத்திற் புகுந்து (அவனை) வணங்கிச் சந்தோஷசமாசாரம் சொல்வதற்கில்லையேயென்று மனமழிந்து, வேகத்தோடு வலிமைகாட்டுகின்ற படைவீரர் இறந்தசெய்தியையெல்லாம் சோகத்துடனே சொல்லினார்கள்; (எ - று.)—'வேகத்தடல்வீரர்' என்றதொடர்-ஒற்றரைக்காட்டுமெனினுமாம்.
பி-ம்:—[1]கேளெனவுற்றுழிவாய். [2]வேகக்கடல். [3]விளிந்தது. (௨௩௫௪)

படைத்தலைவர்வதைப்படலம் முற்றிற்று.

---

## ௨௦.—ஆவது மகரக்கண்ணன்வதைப்படலம்.

மகரக்கண்ணனை ஸ்ரீராமன் வதைத்தலைப்பற்றிக் கூறும்படலமென்பது பொருள்: மகராட்சனென்பதும் மகரக்கண்ணனென்பதன் பரியாயம்: இவன், மகரம்போன்ற கண்ணையுடையவனென்பது, ௬-ஆஞ் செய்யுளிற் கூறப்பட்டுள்ளது: இவன், கரனுடைய புதல்வனவன்.

படைத்தலைவர்இறந்தொழிந்ததைக்கேட்ட இராவணன் வருந்தி வெய்துயிர்த்திருக்கையில், கரன்புதல்வனான மகராட்சன் 'என்னையேவின், என் தந்தையைக்கொன்ற பழம்பகைவனைக் கொன்றுதீர்வேன்' என்று உறுதிகூற, இராவணன் அனுமதிதர, தன்சேனையுடனே இராவணனனுப்பிய இருபது வெள்ளச்சேனையும் இரக்தாட்சன் சிங்கன்என்ற தேர்ச்சக்கரக்காவலாளரும் உடன்வரப் போர்க்களங்குறுக, அரக்கவானரர்கட்கு மும்முரமான போர்நிகழ்கையில்,அந்த மகரக்கண்ணன் இராமனிருக்குமிடத்தைநோக்கித் தன்தேரைச் செலுத்தி, 'என்தந்தையைக்கொன்ற உன்னுயிரைவாங்குவேன்' என்றுகூறிப் பொரலுற்றான். அந்தப் போரில் மகராட்சன் தவத்தின்சித்தியினாலும் மாயையினாலும் காற்று இருள்முதலியவற்றையுண்டாக்கித் தன் நிசவுருவந்தோன்றா வண்ணம் நின்றுபொர, ஸ்ரீராமன் தனது அம்புகளாலடிபட்டு இரத்தம்பெருகுகின்ற சுவட்டால் நிசவடிவத்தையறிந்து அவனைக் கணைகளினால் வீழ்த்தினான். அப்பால் குருதிக்கண்ணனை நீலனும், சிங்கனைப் பனசனும் பொருதுமாய்த்தன ரென்ற செய்தி இப்படலத்துக் கூறப்படுகின்றது.

௧.—தூதர்சொல்லைக் கேட்டு இராவணன் வருந்துதல்.

சொன்னாரவர் சொற்[1]செவி பாற்[2]றொடர்வோன்
[3]இன்னாத மனத்தி னிலங்கையர்கோன்
வெங்[4]நாக வுயிர்ப்பினன் விம்மினனால்
அன்னானிலை கண்டய னின்றறைவான்.

(இ - ள்.) சொன்ன அத்தூதரின்சொல் காதில் தொடரப்பெற்றவனுன இலங்கையர் தலைவனுன இராவணன் வருந்திய மனத்தினனாய்,கொடிய நாகம் போற் பெருமூச்சைவிடுபவனாய், வருந்தினான்; அவன் நிலைகண்டு (மகரக்கண்ணன்)அயலில்நின்று சொல்பவனானான்; (எ - று.)—'அறைவான்' என்பதற்கு எழுவாய் வருவிக்க. மகரக்கண்ணன் எழுவாயென்பது,மேல் ரு-ஆங்கவியால் விளங்கும். பி-ம்:—1செவியிற். 2தொடர்ந்தொன்று, தொடர்கொண்டு. 3இன்னுக. 4நாகமுயிர்த்தென. (உ௩ருரு)

உ —இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: மகரக்கண்ணன் போர் வென்றுவரத் தனக்கு அனுமதியளிக்குமாறு இராவணனைக் கேட்டலைத் தெரிவிக்கும்.

முந்தேயென [1]தாதையை மொய்யமர்வாய்
அந்தோ வுயிருண்டவ னாருயிர்மேல்
உந்தா யெனையாது முணர்ந்திலையோ
எந்தா[2]யொரு நீயிடர் கூருதியோ.

(இ - ள்.) முன்னமே என்னுடையதந்தையை [கரனை] நெருங்கிய போரில் ஐயோ!உயிரையுண்டவனுடைய அரிய உயிர்மேல் என்னைச் செலுத்தாது இருந்துவிட்டாய்; என்தந்தையே! என்னைச் சிறிதும் அறிந்திலாயோ? (அங்ஙனம்அறியாமையால்),ஒப்பற்றநீ துயர்மிக்கிருக்கக்கடவையோ? (எ-று.)

என்னையறிந்திருப்பின், நீ துயர்கூரவேண்டுவதில்லை: யான் பகையொழித்துத் துயர்தீர்ப்பது திண்ணமென்று கூறியவாறு. மகரக்கண்ணனென்பவன் கரனுடையபுதல்வனாவன்: இது, இந்தப்படலத்து கசு-ஆங் கவியாற் பெறப்படும். ஸ்ரீராமன் இவன்தந்தையைக்கொன்றமை,ஆரணியகாண்டத்துக் கரன்வதைப்படலத்தாலறிக.'கங்குல்மகராட்சப்படைத்தலைவர் மகரகண்ணன் வதைப்படலம்' என்று எழுதிய பிரதியில், இச்செய்யுளினிறுதியில் படைத்தலைவர்வதைப்படலம் முற்றும்என்று எழுதியுள்ளது. ஆயினும் அடுத்தபாடலுக்குச் செய்யுட்டொகை தொடர்ச்சியாகவேயுள்ளது. பி-ம்:—1தந்தையை. 2இனி. (உ௩ருசு)

௩. யானே[1]செல வெண்ணுவ னெய்தவவண்
[2]தானேர்வது தீதெனவே தணிவேன்
வானேநில னேமுதன் மற்றுமெலாங்
கோனேயெனை வெல்வதெதோர் கொள்கையதோ.

(இ - ள்.) நானே (போர்புரியுமாறு) அங்கு [போர்க்களத்தில்] செல்ல எண்ணியிருப்பேன்; தானே நேர்ந்துசெல்வது தீதென்றே (அவ்வெண்ணந் தவிர்ந்து)ஆறியிட்டேன்; தலைவனே! வானும் நிலனும் (இவை)முதலிய மற்றுமெல்லாமும் என்னை வெல்லவல்ல வலிமையுள்ளதோ? (எ - று.)—பி-ம்:—1பொரவெய்துவதெண்ணிலனால், செலவெண்ணுவெனேவுதியேல், செல... எய்துதலால்,செல...எய்தவவன்.2தானேயதுநின்றுதடுப்பரிதாம்,தானேர்வது தீயுதெனத்தணிவன், தானேவுதிநன்றுதடுப்பரிதால், (உ௩ருஎ)

இங்கே ஒருபாடல் ஒருபிரதியிற் காணப்படுவது வருமாறு:---

இந்திரியத் தையிகழ்ந்தவ னங்கோ
மந்திரவெற் றிவழங்க வழங்கும்
இந்திர மற்றதெனக் கடிதிக்கொல்
வந்ததென் விற்றொழிலைக் கொலைமான.

வேறு.

௪. அருந்துயர்க் [1]கடலு ளாளென் னம்மனை யழுத கண்ணள்,
பெருந்திருக் [2]கழித்த லாற்றாள் கணவனைக் கொன்று [3]போந்தோன்,
கருந்தலைக் [4]கலத்தி னல்லாற் [5]கடனது கழியே னென்றாள், பருந்தி
னுக் கினிய வேலா யின்னருள் பணித்தி யென்றான்.

(இ-ள்.) என்னுடையதாய் அழுதகண்ணையுடையவளாய்(க் கடத்தற்கு) அரிய துயர்க்கடலுள்ஆழ்ந்திருக்கின்றாள்;கணவனைக்கொன்றுபோனவனுடைய கரியதலையாகிய கலத்திலேயல்லாமல்(கணவனுக்குச்செய்யவேண்டிய)கடமையைக் கழிக்கமாட்டேனென்று சொன்னாளாய்,(இன்னும்)பெருமைபெற்ற மங்கலியத்தையும் கழித்திடப்பொறுக்ககில்லாள்; (உணவளித்தலால்)பருந்துக்கு இனிதாகத்தோன்றுகின்ற வேற்படையையுடையவனே! (உனது) இனிய அருளால் (என்னை) ஏவுவாய் என்றுவேண்டிக்கொண்டான், (மகரக்கண்ணன்); (எ-று.)—பி-ம்:—[1]கடலுளாழும்.[2]துறக்கலாற்றாள், கழித்திலாதாள். [3]போந்தார். [4]தலத்தினல்லாற், தரைவீழ்ந்தல்லாற், களத்தினல்லாற். [5]அருங் கடன் கழியேன், கடன்கழியேனான். (௨௩௫அ)

௫.—இராவணன் அநுமதியளிக்க, மகராக்கண்ணன் போருக்குச்செல்லுமாறு தேரேறுதல்.

அவ்வுரை மகரக் கண்ண [1]னறைதலு [2]மரக்க னைய
[3]செவ்விது சேறி [4]சென்றுன் பழம்பகை தீர்த்தி யென்றான்
வெவ்வழி யவனும் பெற்ற விடையினன் றேர்மேற் கொண்டான்
வவ்விய வில்லன் போனான் [5]வரம்பெற்று வளர்ந்த தோளான்.

(இ - ள்.) அவ்வார்த்தையை மகரக்கண்ணன் சொன்னவுடனே, அரக்கன் [இராவணன்],—'ஐய! நல்லது: (நீ போர்க்குச்) செல்வாய்: சென்று உன்பழம்பகைமையைத் தீர்த்துக்கொள்வாய்' என்றான்; கொடுவழியையுடையவனான அந்த மகரக்கண்ணனும்,---விடைபெற்றுக்கொண்டவனாகி, அநுமதி பெற்றமையால் ஓங்கிவளர்ந்த தோளையுடையவனும் (வில்லைக்)கையிற்பற்றிக் கொண்டவனுமாய்த் தேர்மீதுஏறிக்கொண்டுபோனான்; (எ - று.)—வரம்-சம்மதி. வரம்பெற்றுவளர்ந்ததோளான்-(தேவர்களிடத்து) வரம்பெற்றதனால்வலிமைமிக்க தோளையுடையனாகிய வெவ்வழியவனும் என்றுகூட்டினுமாம்.பி-ம்: —[1]உரைத்தலும். [2]அரக்கர்கோமான். [3]செவ்வழி.[4]என்றுன், இன்றுன்.[5]அமர்.

௬.—மகராக்கண்ணன் தன்சேனையுடன் இராவணன்சேனையும்வரச் செல்லுதல்.

தன்னுடைச் சேனை [1]கோடி யைந்துடன் றழுவத் தானை
முன்னுடைச் சேனை [2]வெள்ள நாலைந்து [3]மழையிற் பொங்கிப்

பின்னுடைத் தாகப் 4பேரி கடல்படப் பெயர்ந்த தூளி
பொன்னுடைச் 5சிமையத் துச்சிக் குச்சியும் 6புதையப் போனான்.

(இ - ள்.) தன்னுடைச்சேனை ஐந்துகோடி உடன்தழுவிவரவும், தானை கொண்ட மன்னவனுடையசேனை இருபதுவெள்ளம் மழைபோற்பொங்கிப் பின்னே வரவும், பேரி கடல்போல்ஒலிக்கவும், (அப்போது பூமியினின்று) கிளம்பிய தூளியால் திரிகூடபருவதத்து உச்சியும் புதைந்திடப் போனான், (மகரக்கண்ணன்);(எ-று.)--பொன்னுடைச்சிமையம்-மேருமலை: அதனுடைய மூன்றுசிகரங்களே திரிகூடமலையாதலால், அந்தத்திரிகூடமலையினுச்சியும் புதையஎன்ற பொருளில், 'பொன்னுடைச்சிமையத்துச்சிக்குஉச்சியும்புதைய' எனப்பட்டது. பி-ம்:—1வெள்ளம். 2ஓரைந்து. 3மழைபோற். 4பேரிக்கடல். 5புவனத்துச்சிக்குச்சியும். 6பொதிய. (உ௩௯௦)

எ.—சோணிதாட்சன்முதலியோர் மகராட்சனைத் தொடர்ந்துசெல்லுதல்.

சோணிதக் கண்ண னோடுஞ் சிங்கனுந் 1துரகத் திண்டேர்த்
தாண்முதற் காவல் பூண்டு செல்கெனத் தக்க தென்று
2ஆண்முதற் றானை யோடு 3மனையவர் தொடரப் 4போனான்
நாண்முதற் றிங்க டன்னைத் தழுவிய 5வனைய 6நண்பான்.

(இ - ள்.) 'சோணிதாட்சனோடு சிங்கனென்பவனும் குதிரைகட்டிய திண்ணியதேரின் சக்கரத்தினிடத்துக் காவல்பூண்டு செல்க'என்று (இராவணன்) கட்டளையிட, தக்கதேயென்று உடன்பட்டு, பதாதிமுதலிய (நால்வகைச்) சேனையுடனே அவர்கள் தொடர்ந்துவர, நட்சத்திரம்முதலியவை சந்திரனைத் தழுவியதையொத்த நண்பினரையுடைய மகரக்கண்ணன் போனான்; (எ - று.)

சந்திரன் பிரதானமாகத் தோன்ற மற்றைநட்சத்திரம் முதலியன அவனைத் தழுவித்தோன்றுவதுபோல, யாவரும் தன்னைத் தழுவிநிற்கத் தான் பிரதானனாய் மகரக்கண்ணன் போர்க்குச்சென்றன னென்பதாம். பி-ம்:—1துரிதத், துருதத். 2ஆண்முகத். 3யாவரும், அனைவருந். 4வந்தார், வந்தான். 5மீனம். 6போன்றார், நண்பர், நண்பால். (உ௩௯௧)

அ.—அரக்கச் சேனையால் வானரச்சேனை சிரமந் தீர்தல்.

பல்பெரும் 1பதாகைப் பத்தி மீமிசை தொடுத்த பந்தர்
2செல்லவெங் கதிரோண் கற்றை 3முற்றவுந் தெரியா வண்ணந்
4தொல்வன யானை யங்கை 5விலாழிநீர்த் துவலை 6சுற்ற
7செல்வனங் கவியின் சேனை யமர்த்தொழிற் சிரமம் 8வீய்ந்த.

(இ - ள்.) பலபெரிய பதாகைப்பத்திகளாகிய மிக்கமேலிடத்துப்பந்தர் வெவ்விய கிரணங்களையுடைய சூரியனது ஒள்ளிய கிரணத்தொகுதி ஒருசிறிதுந்தெரியாவண்ணம் செல்லவும், பழமையான காட்டியானைகளின் அழகிய கையினின்றுபுறப்படுகிற உமிழ்நீர்த்துவலை(எங்குஞ்) சூழவும் செல்வனவான அரக்கச்சேனைகளால் கவிச்சேனைகளின் அமர்த்தொழிற் சிரமம் தீர்ந்தன; (எ-று.)--சேனைகளிற் பிடிக்கப்பட்ட கொடிகள் நடைப்பந்தல்போன்று நிழலைச்

செய்ய யானையின் விலாழிநீர்கள் நீர்தெளித்தனபோலாக, அந்தப்போர்க்களம் குளிர்ச்சிபெற்று வானரச்சேனைகளின் சிரமத்தைத் தீர்த்ததென்றவாறு. பி-ம்:—1பதாகைபற்றி,பதாகைசெற்றி.2ஒல்வன சுடரோன்கற்றை,எல்லவன் சுடரிற்கற்றை, எல்லவன்சுடரொண்கற்றை, எல்லவன் சுடரோன்கற்றை. 3முற்றவின்னிழலையீந்த, முற்றவுந்தோற்றுவண்ணம், முற்றியநீழலீய. 4கொல்சினயானை, தொல்சினயானை. 5ஆழிநீர்த். 6தூற்றச், தூற்றிச். 7செல் பெருங். 8தீர்ந்த (உ௩௬உ)

௯.—அரக்கரின் யுத்தகோலாகலம்.

முழங்கின 1யானை வாசி 2யொலித்தன முரசின் 3பண்ணை
தழங்கின வயவ 4ரார்த்தா ரென்பதோர் முறைமை 5தள்ள
6வழங்கின பதலை யோதை யண்டத்தின் 7வரம்பின் 8காறும்
புழுங்கின வுயிர்க ளி9யாவுங் கால்புகப் புரை10யின் றுக.

(இ - ள்.) '(அங்ஙனம் வானரங்கள் சிரமந்தீர்ந்திருக்கையில்), யானைகள் முழங்கின; குதிரைகள் கனைத்தொலித்தன: முரசத்தொகுதி ஒலித்தன; அரக்கவீரர் ஆரவாரித்தார்கள்' என்கின்ற ஒருமுறை அடங்கும்படி, அண்டத்தின்எல்லைவரையும் பதலை யோசை வழங்கின;(அதுகேட்டு) உயிர்கள் யாவும் காற்றுப்புகவும் இடமில்லாமையால் வேர்த்தன; (எ-று)—பி-ம்:—1ஆனை. 2ஒலித்ததன், மொய்த்தன. 3மும்மை. 4ஆர்ப்பது. 5தள்ளி. 6தழங்கின. 7வரம்பு. 8தாறும், தானும். 9யாண்டும். 10இன்றுகி. (உ௩௬௩)

௧௦.—மூன்றுகவிகள்-பொதுவாக அரக்கர் வானரர் என்ற இருவர்க்கும் கைகலந்தபோர் நிகழ்ந்தமை கூறும்.

வெய்தினி னுற்ற தானை முறை1விடா நூழில் வெம்போர்
2செய்தன செருக்கிச் சென்று 3நெருக்கினர் தலைவர் 4சேர்த்திக்
கையொடு கைக ளூற்றுக் 5கலந்தன கல்லும் வில்லும்
6எய்தன வெறிந்த யானை யிர்த்தன 7கோதந்த சோரி.

(இ - ள்.) வெம்மையோடு பொருந்திய சேனை, முறைவிடாமல் கொல்லுதல் தொழிலைக்கொண்ட வெவ்விய போரைச் செய்தன; தலைவர் செருக்கிச் சென்று சேர்த்தியால் நெருக்கினர்; (சேனைகள்)கையோடு கைகள் பொருந்திக் கலந்தன;கல்லும் வில்லும் எய்தலும் எறிதலுஞ்செய்யப்பட்டன;(அப்போது) பெருகிய இரத்தம்,யானைகளை இழுக்கலாயின: (எ - று.)—கல்லும் வில்லும் எய்தன எறிந்த எனச் சென்றியைதலால் எதிர்நிரனிறைப்பொருள்கோள். பி-ம்:—1விடநூழில்,விடாதூழின். 2செய்தனர்செருக்கி, செய்தனர்செருக்கில். 3நெருக்கின. 4செற்றிக், சாற்றி, சேர்ந்து. 5கலந்தனர். 6எய்தனரெறிந்தார்.7சோரிவெள்ளம். (உ௩௬௪)

௧௧. வானர வீரர் விட்ட மலைகளை யரக்கர் வவ்வி
மீனொடு மேகஞ் சிந்த விசைத்தனர் 1மீட்டும் வீசக்
கானக 2மிடியுண் டென்னக் கவிக்குல 3மடியுங் கவ்விப்
போனக நுகரும் பேய்கள் 4வாய்ப்புறம் புடைப்பொ டார்ப்ப.

(இ - ள்.) வானரவீரர்கள் விட்ட மலைகளை, அரக்கர், (தம் கையினாற்) கவர்ந்து நட்சத்திரங்களுடனே மேகமுஞ்சிந்தும்படி, மீண்டும் விரைந்தவராய்

வீச, (அதனால், பிணங்களைக்)கவ்வி உணவுஉண்கின்றபேய்கள் வாயின்புறத்திலேபுடைத்துக்கொள்ளும்புடைப்புடனே [வாயலைறைந்துகொண்டு] ஆரவாரிக்கும்படி, கவிக்குலங்கள் காட்டினிடம் இடியுண்டாற்போல மடிந்துவிழும்; (எ - று.)—வாயிற்புடைத்துக்கொண்டு பேய்கள் ஆரவாரித்தமை, பேருணவு கிடைப்பதுபற்றிய மகிழ்ச்சியினாலாகும். பி-ம்:—1விட்டு. 2இடிப்புண்டென்ன. 3மடியக். 4வாய்ப்புறப். (உ௩௯௫)

க௨. மைந்[1]நிற வரக்கர் [2]வன்கை வயிரவாள் [3]வலியின் வாங்கி
மெய்ந்நிறத் தெறிந்து [4]கொல்வர் வானர வீரர் [5]தங்கள்
கைந்[6]நிறைத் தெடுத்த [7]கல்லு மரனுந்தங் கரத்தின் வாங்கி
மொய்ந்நிறத் [8]தெறிவ ரெற்றி முருக்குவ ரரக்கர் [9]முன்பர்.

(இ - ள்.) வானரவீரர்கள்,—மைந்நிறமுள்ள அரக்கரின் வலிய கையிலுள்ள உறுதியான வாளை வலாற்காரத்தால் வாங்கி, (அவ்வரக்கர்களுடைய) உடலின்மார்பிலேயெறிந்து கொல்வார்கள்; அரக்கரில் வலிமையுள்ளவர்,—குரக்குவீரருடைய கையில்நிறையவெடுத்த கல்லையும் மரங்களையும் தம் கையால் வாங்கி (அக்குரக்குவீரருடைய) வலியமார்பிலேயெறிவர்; எற்றியழிப்பர்; (எ-று.)—பி-ம்:—1நிறத்து. 2வன்மை,வண்மை. 3உறையின். 4கொல்ல. 5வீரக், வீரர். 6நிறத்து. 7குன்று. 8எதிந்துபற்றி. 9மொய்ம்பர். (உ௩௯௬)

க௩.—மகரக்கண்ணன் தன்தேரை இராமனிருக்குமிடம்நோக்கி ஓட்டிச்செல்லுதல்.

வண்[1]டுலா [2]வலங்கன் மார்பன் [3]மகரக்கண் மழையே [4]றென்னத், திண்டிற லரக்கன் கொற்றப் பொற்றடஞ் சில்லித் தேரைத், தண்டலை மருத வைப்பிற் கங்கைநீர் [5]தழுவு நாட்டுக், கொண்டன்மே [6]லோட்டிச் சென்றான் குரக்கினப் [7]படையைக் [8]கொன்றான்.

(இ - ள்.) வண்டுகள்உலாவுகின்ற மாலையையணிந்த மார்பையுடையவனும் மகரக்கண்ணையும் மழையேற்றையொத்த மிக்கவலிமையையும்படைத்தவனும் வானரத்தொகுதிப்படையைக்கொன்றவனுமான அரக்கன் [மகரக்கண்ணன்],(தன்னுடைய)வெற்றிபொருந்திய பொன்மயமான பெரியசக்கரமுள்ள தேரை, குளிர்ந்தஇடத்தையுடைய மருதநிலத்தை(ப் பெரிதுங்)கொண்ட கங்கைநீர் பாயப்பெற்ற கோசலநாட்டையுடைய மழைபோன்றவனான ஸ்ரீராமன் மேல் ஓட்டிச்சென்றான்; (எ-று.)--பி-ம்:—1உலாம். 2மாலை. 3மகராக்கன். 4என்னும், அன்ன. 5தழுவுநாட்டார், தழுவநாட்டார். 6ஓடிச். 7பரப்பைக். 8கொன்றே. ()

க௪.—சேனைகளையும் சேனைத்தலைவர்களையும் புறியவடித்து ஸ்ரீராமனையடைந்து மகரக்கண்ணன் சொல்லத்தொடங்குதல்.

இந்திரன் பகைஞ [1]னேகொ லென்பதோ ரச்ச மெய்தித்
தந்திர [2]மிரிந்து சிந்தப் படைப்பெருந் தலைவர் தாக்கி
எந்திர [3]மெறிந்த வென்ன வேவுண்டு புரண்டா ரெய்திச்
சுந்தரத் [4]தோளி னானை நோக்கினின் றினைய சொன்னான்.

(இ - ள்.) இந்திரசத்துருவேயோ [இந்திரசித்துத்தானோ?] என்பதாகிய ஒப்பற்றஅச்சமடைந்து (வானர)சேனை நிலைகெட்டுச்சிதறவும், (வானர

சேனைப்பெருந்தலைவர் (தாம்) எந்திரத்தால் தாக்கி எறியப்பட்டாற்போல அம்பினாலடியுண்டு புரளலானார்கள்; (மகரக்கண்ணனும்) அழகியதோள்களை யுடையவனான ஸ்ரீராமனைக் கிட்டி (அவனை)நோக்கிநின்று இவ்வாறானசொற்களைச்சொல்பவனானான்; (எ-று.)—மகரக்கண்ணன்கூறுவதை மேற்கவியிற்காண்க.பி-ம்:—[1]கொல்லாம். [2]அழிந்து. [3]எறிந்தது, மறிந்த. [4]வில்லினானை. ()

கரு.—மகரக்கண்ணன் என்தந்தையைக்கொன்ற உன்னோடுபோருது பகைபோக்கிக்கொள்வேனெனல்.

* என்னுடைத் தாதை தன்னை யின்னுயி ருண்டா [1]யென்று, முன்னுடைத் தாய தீய முழுப்பகை [2]மூவர்க்கின்றி, நின்னுடைத் [3]தாய தன்றே [4]யின்றது நிமிர்வ தென்றான், பொன்னுடைத் தாதை வண்டு குடைந்[5]துண்ணும் பொலம்பொற் றாரான்.

(இ - ள்.) பொன்னிறத்தையுடைய தாதினை வண்டு குடைந்துஉண்ணப்பெற்ற மிகஅழகிய மாலையையணிந்தவனாகிய மகரக்கண்ணன், (ஸ்ரீராமனைநோக்கி),—'என்னுடைய தந்தையை இன்னுயிருண்டாயென்பதனால், முன்முதலுள்ளதாகிய கொடிய நிறைந்தபகை (எனக்குத்) திரிமூர்த்திகளிடத்திலில்லாமல் உன்னிடத்துள்ள தன்றோ, அது இன்று வளர்கின்றது' என்றான்;(எ - று.)—'யான் த்ரிமூர்த்திகளை வெல்லலாமாயினும் அவர்களிடத்துப்பகைகொள்ளாது நின்னிடம் பகைகொண்டது, நீ என்தாதையைக் கொன்றமையாலாகும்; இப்போது பொருது அந்தப்பழம்பகையைத் தீர்த்துக்கொள்வேனென்கிறான், மகரக்கண்ணனென்க. 'இன்றதுநிமிர்வன்' என்ற பாடத்திற்கு - இன்றைக்கு உன்னைக்கொல்வதனால் அப்பகை தீரப்பெறுவேனென்றுபொருளாம். பி - ம்:—[1]என்னும் [2]மூவர்க்கன்றி. [3]ஆயதாமே. [4]இன்றிதுநிமிர்வென்,இன்றிதுநேர்வன், இன்றிதுநீப்பன். [5]உணும்.(௨௩௬௯)

கசு.—இராமபிரான் மகரக்கண்ணன்வார்த்தையைத் தக்கதே யெனல்.

தீயவன் பகர்ந்த மாற்றஞ் சேவகன் றெரியக் கேட்டான்
நீகரன் புதல்வன் [1]கொல்லா நெடும்பகை நிமிர வந்தாய்
ஆயது [2]கடனே யன்றோ வாண் பிறந் தமைந்தார்க் கைய
ஏயது சொன்னா யென்றா னிசையினுக் கிசைந்த தோளான்.

(இ-ள்.) புகழ்பெறுதற்கு அமைந்த தோள்வலியுள்ளவனும் வீரனுமான ஸ்ரீராமன்,கொடியவன் சொன்ன சொல்லை விளங்கக்கேட்டு,நெடியபகையைப் போக்கவந்தவனே!நீ கரன்புதல்வனா?(நீ)கூறிய அது முறைமையே யன்றோ; ஐயா! வீரத்தன்மையுடன் பிறந்தவர்க்கு ஏற்றதையே சொன்னாயென்றான்; (எ - று.)—பி-ம்:—[1]கொல்லோ, போலாம். [2]கடனேயானது, கடனேயன்றே. [3]திறன்மைந்தர்க்கெல்லாம். (௨௩௭௦)

---

* "யத்ததா தண்டகாரண்யே பிதரம் ஹதவாந்மம மதக்ரதஸ் ஸ்வகர்மஸ்தம்-த்ருஷ்ட்வா ரோஷோபிவர்த்ததே" என்ற ஸ்ரீவால்மீகராமாயணம் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

கஎ.—இதுமுதல் நான்குகவிகள்-மகராட்சனுக்கும் இராமபிரானுக்கும் நிகழ்ந்த போரைத் தெரிவிக்கும்.

உருமிடித் தென்ன வின்னா ணொலிபடுத் துன்னோ [1]டெய்ந்த
செருமுடித் தென்க ணின்ற சின[2]முடித் தமைவ னென்னாக்
கருமுடித் [3]தமைந்த மேகங் [4]கால்பிடித் தெழுந்த காலம்
பெருமுடிக் கிரியிற் பெய்யுந் தாரைபோற் [5]பகழி பெய்தான்.

(இ - ள்.) இடியிடித்தாற்போல வின்நாணியிலிருந்து ஒலியையெழுப்பி, 'உன்னுடனே பொருந்திய போரைமுடித்து என்னிடமுள்ள சினத்தைப் போக்கி (ப்பின்பு) அமைதியாயிருப்பேன்' என்று சொல்லி, (மகரக்கண்ணன்), கருவை நிரம்பப்பெற்றுள்ள மேகம் (வானத்தின்மீது) எழுந்தகாலத்து மழைக் கால்பற்றிப்பெரியசிகரங்களையுடைய மலையிற் பொழியுந்தாரைபோற் பகழியைச் சொரிந்தான்; (எ - று.)

நீர்கொண்டு கருமுற்றியமேகம் கால்வீழப்பெற்று மலைச்சிகரத்தின்மேல் மழைபெய்வதுபோல் இராமபிரான்மீது மகரக்கண்ணன் அம்புமழைபெய்ய லானனென்க. இராமபிரானுக்கு மலைச்சிகரத்தை உவமைகூறியதனால் அச்சர மழைக்கு அப்பிரான் சிறிதுஞ்சலியாமை பெறப்படும். பி-ம்:—[1]எந்தை. [2]முடிக்குவனின்றென்னாக். [3]எழுந்த. [4]கான்முடித்து, கார்பிடித்து. [5]கணைகள்.

கஅ. அம்புயக் கண்ணன் கண்டத் தாயிரம் பகழி நாட்டித்
தம்பிதன் கவசமீதே யிரட்டிச்சா யகங்க டாக்கி
வெம்பிக லனுமன் மீதே வெங்கணை மாரி வித்தி
உம்பர்த முலக முற்றுஞ் சரங்களாய் மூடி யுய்த்தான்.

(இ - ள்.) (அந்த மகரக்கண்ணன்),—தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடைய இராமபிரானுடைய கண்டத்திலே ஆயிரம் அம்புகளைப் பதிய எய்தும், (அவன்) தம்பியினுடைய கவசத்தின்மேல் இரண்டாயிரம் அம்புகள் கொண்டு தாக்கியும், (பிறர்) தவிப்பதற்குக்காரணமான வலிமையையுடைய அநுமான்மீது கொடிய அம்புமழைகளை விதைத்தும், வானவர்களினுலகமெல்லாம் அம்புமயமாகி மூடுமாறு (பலகணைகளைப்) பொழிந்தான்; (எ - று.)

மூடி - எச்சத்திரிபு. இத்துணையென்னமல் வெங்கணையென்று கூறியதனால், அநுமன்மீது எய்தஅம்புகள் கணக்கிடமுடியா வென்பது, பெறப்படும். இச்செய்யுள் பலபிரதிகளிலில்லை: செருகுகவியாயிருக்கலாம். (௨௩௭௨)

கக௯. சொரிந்தன பகழி யெல்லாஞ் சுடர்க்கடுங் கணைக டூவி
[1]அரிந்தன னகற்றி மற்றை [2]யாண்டகை யலங்கலாகத்து
[3]எரிந்தொரு பகழி பாய [4]வெய்தன னிராம னேவ
நெரிந்தெழு புருவத் தான்றன் [5]னிறத்துற்று நின்ற தன்றே.

(இ - ள்.) (மகரக்கண்ணன்) பொழிந்த அம்புகளையெல்லாம் சுடருள்ள கொடியகணைகளைத் தூவிஅரிந்துபோக்கி, பின்பு ஆண்மைக்குணமுள்ள அந்த மகராட்சனுடைய (வெற்றி) மாலையையணிந்த மார்பிலே எரிந்து ஒருஅம்பு பாயுமாறு இராமபிரான் எய்தான்: (அவ்வண்ணம்) ஏவவே, நெரிந்தெழு

கின்ற புருவத்தையுடைய மகரக்கண்ணனுடையமார்பில் (அந்தஅம்பு) தங்கியிருந்தது; (எ-று.)—பா-ம்:—1அரிந்துகவகற்றிமற்ற, அரிந்தனனகற்றி மாற்றி. 2அரக்கனது, ஆண்டவன். 3எரிந்ததொர். 4எவினன். 5நிறத்துற. ()

உ௦. ஏவுண்டு துளக்க மெய்தா [1]விரத்தகப் பரிதி யீன்ற [ன்
பூவுண்ட கண்ணன் வாயிற் புகை[2]யுண்ட துமிழ்வான் போல்வா
தேவுண்ட கீர்த்தி யண்ண றிருவுண்ட கவசஞ் சேரத்
தூவுண்ட வயிர வாளி யாயிரந் தூவி யார்த்தான்.

(இ-ள்.) (இராமபிரானால்) அம்புஎய்யப்பட்டுச் சலித்துச் செந்நிறமுள்ள சூரியனையீன்றபூவை[சூரியகாந்திப்பூவை]ஒத்த கண்களையுடையவனும்(முன்பு உண்ட) புகையை வாயினாலுமிழ்கின்றவன்போல்பவனுமான மகரக்கண்ணன், தெய்வத்தன்மைபொருந்திய கீர்த்தியைக்கொண்டபெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனுடைய அழகுஉள்ள கவசத்தைச் சேர, மாமிசம்படியப்பெற்ற வச்சிரம்போலுறுதியான அம்புகள்ஆயிரங்களைத் தூவி ஆரவாரித்தான்; (எ-று.)—பா-ம்:—1இலைத்தகப், ஈர்த்தகைப். 2உண்டதுமிழ்வ. (உ௩எச)

உக.—ஸ்ரீராமன் மகரக்கண்ணனது வில் குதிரைக்குளம்புகள் சாரதி இவற்றை அம்புகளா லறுத்தல்.

அன்னது [1]கண்ட வானோ ரதிசய முற்று ராழி
மன்னனு முறுவல் [2]செய்து வாயம்போ ராறு வாங்கிப்
பொன்னெடுந் தடந்தேர் பூண்ட [3]புரவியின் குரங்கள் போக்கி
வின்னடு வறுத்துப் பாகன் றலையையு நிலத்து வீழ்த்தான்.

(இ-ள்.) அதனைக்கண்ட வானவர் வியப்படைந்தனர்; ஆஞ்ஞாசக்கரத்தையுடைய ஸ்ரீராமனும்,—புன்சிரிப்புச்செய்து, கூர்மைவாய்ந்த ஓராறுஅம்புகளையெடுத்து அழகிய நெடியபெரியதேரிலேபூட்டியுள்ள குதிரைகளின்குளம்புகளைப் போக்கி, (அந்தமகரக்கண்ணனேந்திய)வில்லை நடுவிடத்திலே துண்டித்துப் பாகனுடையதலையையும் நிலத்திலே விழுமாறு தள்ளினான்; (எ-று.)—பா-ம்:—1கண்டு. 2எய்தி. 3துரகதக், துரகத்தின், துரகங்கள். (உ௩எரு)

உஉ.—மகரக்கண்ணன் பேரிடி காற்று முதலியவற்றைத் தவவலிமையாலுண்டாக்குதல்.

மார்பிடை நின்ற வாளி வாயிடை [1]வெயிலின் வாருஞ்
[2]சோரியன் விசும்பி [3]னூடோ ரிமைப்பிடைத் [4]தோன்றா நின்றா
காருரு மேறுங் காற்றுங் கனலியுங் கடைநாள் வையம் [ன்
பேர்வுறு கால மென்னப் பெருக்கினன் றவத்திற் பெற்றான்.

(இ-ள்.) தவத்திற்சித்திபெற்றவனாகிய அந்தமகராட்சன்,—(தன்) மார்பிலேதங்கிய அம்பினாலே வாயினின்று வெயில்போன்றநிறத்துடன் பெருகுகின்ற இரத்தத்தையுடையவனாய், [வாயிலிருந்துஇரத்தம்வெளிப்பட], ஓரிமைப்பொழுதிற்குள் வானத்தினிடத்துத் தோன்றுபவனாய், மேகத்திற்பொருந்திய பேரிடியும் காற்றும் நெருப்பும் என்றஇவற்றை, வையம்நிலைபெயர்கின்ற கடைநாளாகிய ஊழிக்காலந்தான் வந்திட்டதோஎன்னுமாறு மிகுதியாக உண்டாக்கினான்; (எ-று.)

யுகாந்தகாலத்தில் மேகங்கள்தோன்றுதலும் கடுங்காற்றுவீசுதலும் நெருப்புஎங்குஞ்சுடுதலும் நிகழுமென்பது,நூற்கொள்கை. இவ்வாறு பேரிடிமுதலியவற்றை மகரக்கண்ணன் பெருக்கியது தவச்சித்திபெற்றவனுதலா லென்பார் 'தவத்திற் பெற்றான்' என்றார்: ஆகவே, இத்தொடர்-கருத்துடையடைகோளியணியாம். பி-ம்:—1வெரினின். 2சோரியின். 3ஈண்டோர். 4மறைந்து தோன்றான். (உ௩எசு)

உ௩.—மகரக்கண்ணன் தவச்சித்தியால் காற்றுமுதலியன உண்டாக்கவே வானரர்கள் நிலைகெட்டு ஓடுதல்.

உருமுறை யனந்த கோடி யுதிர்ந்தன வூழி நாளின்
இருமுறை 1காற்றுச் சீறி யெழுந்தது 2விழுந்த தெங்குங்
கருமுறை 3நிறைந்த மேகங் 4கான்றன கல்லின் மாரி
பொருமுறை மயங்கிச் 5சுற்று மிரியலிற் கவிகள் போன.

(இ - ள்.) இடிகள் முறையாகப் பலகோடிகள் விழுந்தன; யுகாந்தகாலத்து நிகழும் முறைப்படி பெருங்காற்றுச் சீறியெழுந்து எங்கும் வீசிற்று; கருநிறம் நிறைந்த மேகங்கள் கன்மாரியை வெளிப்படுத்தின; வானரங்கள், பொருகின்ற முறைமையினின்று மயங்கிச் சுற்றிலும் நிலைகெட்டு ஓடிப்போயின; (எ-று.)—இருங் காற்று என இயையும். பி-ம்:—1காற்றும். 2எழுந்தது, விழுந்த. 3மேகமெங்குங். 4கலந்தன கலித்தமாரி. 5சுற்றி. (உ௩எஎ)

உச.—ஸ்ரீராமன் மகரக்கண்ணனுக்குக் காற்றுமுதலியவற்றை யுண்டாக்கும்வல்லமை எதனுல் நேர்ந்ததென விபீஷணனை வினவுதல்.

போயின திசைக ளெங்கும் புகையொடு நெருப்புப் போர்ப்பத்
தீயின 1மமையச் செல்லுங் 2மாயமா மாரி சிந்த
ஆயிர கோடி மேலு மவிந்தன கவிக ளையன்
மாயமோ வரமோ வென்றான் வீடணன் வணங்கிச் 3சொன்னான்.

(இ - ள்.) (வானரங்கள்) ஓடிப்போன திசைகளிலெல்லாம் புகையோடு நெருப்பும் கவிந்துகொள்ளவும், மேகமும் நெருப்புத்தொகுதிபொருந்த மாயத்தன்மையுள்ள பெருமழையைப் பொழியவும்,ஆயிரகோடிக்கு அதிகமாக வானரங்கள் மடிந்தன; (அதுகண்ட)ஸ்ரீராமன், '(இது) மாயத்தால் நிகழ்வதா? (அன்றி, பெற்ற) வரத்தின்பயனுல் நிகழ்வதா?' என்று வினவினான்; விபீஷணன் வணங்கி மறுமொழிசொல்லலானான்;(எ-று.)—அதனை மேலிற்காண்க. பி-ம்:—1அனைய. 2கல்லின். 3சொல்வான். (உ௩எஅ)

உரு.—விபீஷணன் வரத்தால்நேர்ந்ததிதனென்று தெரிவிக்க, ஸ்ரீராமன் இவற்றைப் போக்குவேனெனல்.

நோற்றுடைத் தவத்தி னேன்மை நோக்கினர் கருணை 1நோக்கிக்
காற்றுடைச் செல்வன் றானு மழையுடைக் கடவு டானும்
2மாற்றல ரீந்த தெய்வ வரத்தினால் 3வந்த தென்றான்
நூற்றிதழ்க் கமலக் கண்ணா னகற்றுவ னொடியி னென்றான்.

(இ-ள்.) கருணைநோக்கத்தையுடையனான வாயுதேவனும் வருணதேவனும் (இவன்) நோற்றுள்ள தவத்தின்வலிமையை நோக்கினவராய், மாற்ற முடியாமல் தந்த தெய்வத்தன்மையுள்ள வரத்தினால் (இது) நிகழ்ந்துள்ளதென்றான், (விபீஷணன்); நூறுஇதழ்களையுடைய செந்தாமரைமலர்போன்ற கண்களையுடையஸ்ரீராமன் ஒருநொடிப்போதில் இதனைப் போக்குவேனென்றான்; (எ - று.)—பி-ம்:—[1]நோக்கக், நோக்கால். [2]ஆற்றலாலீந்த, ஆற்றலிற்றீர்ந்தே. [3]அமைந்தது. (உ௩எகூ)

உசூ.—இராமன் ஆக்நேயாஸ்திர வாயவ்யாஸ்திரங்களால் மகாக்கண்ணனால் விளைந்த இடிமுதலியவற்றைப் போக்குதல்.

காலவன் படையுந் தெய்வக் கடலவன் படையும் [1]காலக்
கோல[2]வன் சிலையிற் [3]கோத்த கொடுங்கணை யோடுங் கூட்டி
மேலவன் றுரந்த லோடும் [4]விசும்பினி னிரிந்து வெய்தின்
மாவிருங் கடலின் வீழ்ந்து மறைந்தன மழையுங் காற்றும்.

(இ - ள்.) மேன்மைபெற்றவனாகிய ஸ்ரீராமன்,—காற்றுக்குஉரிய கடவுளாகிய வாயுதேவனது அஸ்த்ரமும் [வாயவ்யாஸ்த்ரமும்], கடற்றெய்வமாகிய வருணபகவானுடைய அஸ்த்ரமும் [வாருணாஸ்த்ரமும்] வெளிப்படும்படி அழகிய வலிய வில்லிலே கோத்த கொடிய கணையோடுங் கூட்டிச் செலுத்தியவுடனே, மழையும் காற்றும் வானத்தினின்று விரைந்துஓடி மிகப் பெரியகடலிலே வீழ்ந்துமறைந்தன; (எ-று.)—பி-ம்:—[1]கால்கொள். [2]வெஞ்சிலையிற். [3]கோத்துக். [4]விசும்பினின்றெரிந்து, விசும்பினின்றிரிந்து. (உ௩அ0)

உஎ.—மகரக்கண்ணன் மாயையால்மறைந்துபோருதல்.

[1]அத்துணை யரக்க னோக்கி [2]யந்தர வான மெல்லாம்
[3]ஒத்ததன் னுருவே யாக்கித் தான்மறைந் தொளித்துச் [4]சூலப்
பத்திகள் கோடி கோடி பரப்பின னதனைப் [5]பார்த்த
வித்தக னொருவன் [6]செய்த வினையமென் னென்று சொன்னான்.

(இ - ள்.) அத்தன்மையை [தன்வரத்தினால் தோற்றுவித்த மழையுங் காற்றும் மறைந்ததை]க்கண்டு, (மகரக்கண்ணன்) இடைவெளியாயுள்ள வானமெல்லாம் ஒத்த தன்னுருவே யமையுமாறுசெய்து (தான்) மறைந்தொளித்துச் சூலவரிசைகளைக் கோடிகோடியாகப் பரப்பினான்; அதனைக்கண்ட ஞானஸ்வரூபியாகிய ஸ்ரீராமன் 'ஒருவன்செய்த மாயம் என்னை!'என்றுகருதி (இவ்வாறு) கூறலானான்; (எ - று.)—இராமன் கூறியதை, மேற்கவியிற் காண்க. பி-ம்:—[1]அத்திறம். [2]அந்தரம். [3]ஒத்தனவுருவேயாகி, ஒத்ததன்னுருவேயாகி. [4]சூலம். [5]பார்த்து. [6]செய்யும். (உ௩அக)

உஅ.—அதுகண்டு ஸ்ரீராமன் மனம்நோதல்.

மாயத்தால் வகுத்தா னியாண்டும் [1]வரம்பிலா வுருவந் தானெத், தேயத்தா [2]னென்னு வண்ணங் காந்தனன் [3]றெரிந்தி லாதான், [4]காயத்தா லினைய னென்று நினையலாங் கருத்த னல்லன், [5]தீயோத்தான் றிறத்தி [6]னென்னை செயுமெனச் சிந்தை [7]நொந்தான்.

(இ - ள்.) '(மகரக்கண்ணன்), மாயத்தினுல் வரம்பில்லாத உருவத்தை யாண்டும் வகுத்தவனுய்த் தான் எவ்விடத்திலுள்ளானென்றுஅறியாவண்ணம் ஒளிந்தான்: (அவன் கண்ணுக்குப்)புலனுகாதுள்ளான்; உடலைக்கொண்டு இவன்தான்என்று துணியும் மனவறிவுக்குஎட்டியவனல்லன்; தீயையொத்த கொடியவனுகிய அந்தமகராட்சன்விஷயத்திற் செய்யவேண்டுவது யாது?' என்று மனம்நொந்து கருதினன்; (ஸ்ரீராமன்); (எ-று.)—பி-ம்:---[1]வரம்பிலா வுருவத்தானைத், வரம்பில்லாவுருவந்தானே. [2]எண்ணு. [3]தெரிந்திலானிக், தெரிந்திலாத. [4]காயத்தாலினையதென்றுநீக்கலாங், காயத்திலெலினையனென்று நோக்கலாங். [5]தீயத்தான். [6]என்னே, ஒன்று. [7]செய்தான். (உ௬அஉ)

உ௯.—ஸ்ரீராமன் மகரக்கண்ணனது நிசவடிவத்தையநுமானித்துக் கணையால் வீழ்த்துதல்.

அம்பின்வா யாறு சோரு [1]மரக்கன்ற னருளில் யாக்கை
[2]உம்பரிற் பரப்பித் தான்வே றொளித்தன னென்ன வோர்வான்
செம்புனற் சுவடு நோக்கி [3]யிதுநெறி யென்று தேவர்
தம்பிரான் பகழி தூண்டத் தலைபற்றுத் [4]தலத்த னுனன்.

(இ - ள்.) (தான் விட்ட) அம்பினுல் வாயினின்று(குருதி)யாறு பெருகப் பெற்ற அரக்கன் தன்னுடைய அருளில்லாதயாக்கையை வானத்திற்பரப்பினு னுய்த் தான் வேறேயொளித்துள்ளானேயென்று சிந்தைகொண்டவனுகி,தே வாதிதேவனுன ஸ்ரீராமன்,—(ஓரிடத்து)இரத்தச்சுவட்டைக் கண்டு,இது(அவ னுள்ள) இடமென்றுதுணிந்து (தன்) பகழியைச்செலுத்த, (அந்தமகரக்கண் ணன்) தலையற்றுப் பூமியில்விழுந்திட்டான்; (எ - று.)

பலஉருவங்களுள்,அம்புபட்டதனுற் குருதிசோரப் பெற்றஉருவமே அரக் கனுடைய உண்மைவடிவ மென்று ஸ்ரீராமன் தெரிந்தானெனக:இது-அநுமா னுலங்காரம். பி-ம்:—[1]அரக்கனதருளில்,அரக்கன்றனளவில்,ஆகத்தனளவில். [2]உம்பரிற்பரந்தானுக. [3]அதுநெறிசென்று. [4]தரையின்வீழ்ந்தான், தலத்தி லானுன். (உ௬அ௩)

௩௦.—அரக்கனுழியவே மாயைநீங்குதல்.

[1]அயில்படைத் துருமிற் செல்லு மம்பொடு மரக்கன் [2]யாக்கை
[3]புயல்படக் குருதி [4]வீசிப் படியிடைப் புரள்த லோடும்
[5]வெயில்கெடுத் திருளை [6]யீட்டுங் [7]காலத்தின் [8]விளைவி னேடுந்
துயில்[9]கெடக் கனவு மாய்ந்தா [10]லொத்தது சூழ்ந்த [11]மாயை.

(இ - ள்.) கூர்மைபெற்று இடிபோலச்செல்லுகின்ற அம்புடன் [இராம பிரான் அம்பைச்செலுத்தியவுடனே] அரக்கனுடையயாக்கை புயல்தன்மை யைப் பொருந்த இரத்தத்தைக் கக்கிகொண்டு [இரத்தமழைபொழிந்து கொண்டு] பூமியிற் புரளத்தொடங்கியவளவில்,---சூழ்ந்திருந்தமாயையானது, வெயிலையொழித்து இருளைமிகுதியாகக்கொண்டுள்ள இராக்காலத்தின் நிகழ் ச்சியுடனே துயிலுங்கெட [யாவரும் துயிலுணருமாறு இராநீங்கிப்பொழுது புலருமளவிலே] கனவு ஒழிவதுபோல வொழிந்தது; (எ - று.)

துயிலுணருங்காலத்துக் கனா நீங்குவதுபோல அரக்கன்உயிர்நீங்க அவனுடல் பூமியிற் புரண்டகாலத்து அவனால் விளைந்த மாயையும் நீங்கிற்றென்றவாறு. பி-ம்:—[1]அயில்படுத்து, அயின்மடுத்து. [2]ஆக்கை. [3]புயலுடைக். [4]வீசப். [5]வெயிலெடுத்து, வெயில்படைத்து. [6]ஓட்டும். [7]கருமத்தின். [8]இயற்கைவீயத், விளைவையொத்த, விடிதலோடும். [9]படக். [10]ஒத்ததச். [11]மாயம். (௨௩௮௭)

௩௧.—நான்குகவிகள்-இரக்தாட்சனோடு நளன் பொருது அவன் தலையைத்தரையில் தள்ளுதலைத் தெரிவிக்கும்.

குருதியின் கண்ணன் வண்ணக் கொடிநெடுந் தேரன் கோடைப்
பரிதியி [1]னடுவட் டோன்றும் [2]பசுஞ்சுடர் மேகப் பண்பன்
எரிகணை சிந்திக் [3]காலி னெய்தினான் றன்னோ டேற்றான்
விரிகடற் றட்டான் கொல்லன் வெஞ்சினத் தச்சன் வெய்யோன்.

(இ - ள்.) (அதுகண்டு பல்)வண்ணக் கொடிகட்டிய நெடிய தேரையுடையவனும் கோடைக்காலத்துச் சூரியனிடையே தோன்றும் பசுஞ்சுடரைக்கொண்ட மேகத்தின் தன்மையையுடையவனுமாகி எரிகின்ற அம்புகளைச் சிந்தியவண்ணம் காற்றுப்போல விரைந்துவந்தவனான இரக்தாட்சனென்பவனுடன், பரந்தகடலைத் தடுத்திட்டவனும் கொல்லுந்தன்மையையுடையவனுமான கொடுங்கோபத்தைக்கொண்ட கொடியவனாகிய தச்சத்தொழில்புரியும் நளன் எதிர்த்தான்; (எ - று.)—இச்செய்யுளில், தட்டான் கொல்லன் தச்சன்என்ற சாதிப்பெயர்கள் அமைந்துள்ள நயம் காணத்தக்கது. பி-ம்:—[1]நடுவுட். [2]பரஞ்சுடர்நயனப்,பரஞ்சுடர்மேய. [3]கால்போலெதிர்ந்தவன்.

௩௨. அன்[1]றவ னாம வின்னா ணலங்கற்றோ [2]ளிலங்க வாங்கி
ஒன்றல பகழி மாரி யூழித்தீ யென்ன வுய்த்தான்
நின்றவ னெடிய தாங்கோர் தருவினா [3]லகல நீக்கிச்
சென்றனன் [4]கரியின்வாரிக் கெதிர்படர் சீய மன்னான்.

(இ - ள்.) அன்றைக்கு அந்தரக்தாட்சன்,—(பகைவர்க்கு) அச்சத்தைத் தருகின்ற வில்லின்நாணியை,மாலையைபணிந்ததோள் விளங்குமாறு வளைத்து ஒன்றல்லாத அம்புமழைகளை யுகாந்தகாலத்துத் தீப்போலச் செலுத்தினான்; அங்கே நின்றவனாகிய நளன் நெடியதான ஒருமரத்தினால்(அவற்றை) அப்பாற்படும்படிநீக்கி, யானை கட்டியுள்ள இடத்துக்கு எதிராகச்செல்லுகின்ற சிங்கத்தை ஒத்துச்சென்றான்; (எ - று.)

பகழிமாரியை மரத்தினால் நீக்கிக்கொண்டு,அவ்வரக்கனுள்ள இடஞ்செல்கின்ற நளனுக்கு வாரிக்கெதிரேபடர் சிங்கம் உவமையாம். வாரி-யானையின் கட்டுத்தறி. பி-ம்:—[1]இடிபோலும், அவனாலும். [2]குலுங்க. [3]கலக்கி, அடித்து. [4]பகழிமாரிக்கெதிர்படு, கரியின்வாரிக்கெதிர்பட்ட. (௨௩௮௯)

௩௩. கரத்தினிற் றிரியா நின்ற மரத்தினைக் கண்ட [1]மாகச்
சரத்தினிற் றுணித்து வீழ்த்த தறுகணான் றன்னை நோக்கி
[2]உரத்தினைச் சுருக்கிப் பாரி னொடுங்கினான் [3]றன்னை யொப்பான்
சிரத்தினிற் குதித்தான் றேவர் திசைமுகங் கிழிய [4]வார்த்தார்,

(இ - ள்.) கையிலே சுழல்கின்றமரத்தினைத் துண்டமாகுமாறு சரத்தினால் துணித்துவீழ்த்திய அஞ்சாமையையுடைய அரக்கனைப் பார்த்து,தன்னைத் தானேயொப்பவனான நளன்,--மார்பையொடுக்கிப் பூமியிலொடுங்கினான்போற் பதுங்கி(உடனே அந்தரக்தாட்சனுடைய) சிரத்திலே குதித்தான்; திசைமுகங் கிழியத் தேவர்களும் ஆரவாரித்தார்; (எ-று.)—பி-ம்:—[1]ஆக்கிச்.[2]உரத்தினிற் சுருக்கிப்பார் நின்றொடுங்கினன். [3]மகுடமோங்குந், தன்னைத்தோரான், தன்னையொவ்வான். [4]ஆர்த்தான். (௨௩௮௭)

௩௪. [1]எரியும்வெங் குன்றி னும்ப [2]ரிந்திர வில்விட் டென்னப்
பெரியவன் றலைமே னின்ற பேரெழி லாளன் சோரி
சொரிய[3]வன் கண்ணின் மூக்கிற் செவிகளின் மூளை [4]தூங்க
நெரியவன் றலையைக் காலா லுதைத்துமா நிலத்தி விட்டான்.

(இ - ள்.) எரிகின்ற கொடியமலையின்மீது இந்திரவில் விட்டாற்போலப் பெருந்தோற்றமுள்ள அவ்வரக்கனது தலைமேனின்ற மிக்கஎழிலையுடைய நளன்,-வலியகண்ணின் வழியாகவும் மூக்கின்வழியாகவும் செவிவழியாகவும் இரத்தஞ்சொரியும்படியும் மூளை தொங்கும்படியும் வலிய (அவ்வரக்கனது) தலையைநெரியக் காலாலுதைத்துப் பெரியபூமியில் வீழ்த்திவிட்டான்;(எ-று.) —பி-ம்:—[1]எரியவன். [2]இந்திரன். [3]வெங்கண்ணின். [4]தூங்கி. (௨௩௮௮)

௩௫.—இதுமுதல் மூன்றுகவிகள் - சிங்கனைப் பனசன் கொன்றிடுதலைக் கூறும்.

அங்கவ [1]னுலத்த லோடு மழற்கொழுந் தொழுகுங் கண்ணான்
சிங்கன்வெங் கணையன் வில்லன் [2]றாரணி தேரின் மேலான்
எங்கடா போதி யென்று வெய்தின [3]னெதிரி லாத
பங்கமின் மேரு வாற்றற் பனசன்வந் திடையிற் பாய்ந்தான்.

(இ - ள்.) அப்போது அந்தரக்தாட்சன் இறந்தவுடன், தீக்கொழுந்து ஒழுகுகின்றகண்களையுடையவனாய்ச் சிங்கனென்பவன் கொடிய அம்பையுடையவனும் வில்லையுடையவனும் சிறுமணிகள்கட்டிய தேரின்மேலேறியவனுமாகி, 'எங்கடா போகிறாய்?' என்று சொல்லிக்கொண்டு வந்தான்; குற்றமற்ற மேருவையொத்த வலிமையுடைத்த ஒப்பில்லாத பனசன் வந்து நடுவேகுதித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]உதைத்தலோடும். [2]தாரணித். [3]தன்னோடெய்திப், தன்முனெய்திப். (௨௩௮௯)

௩௬. பாய்ந்தவன் றோளின் மார்பின் பல்லங்க ணல்ல [1]பண்போடு
[2]ஏய்ந்தன வசனி [3]போல வையிரண் டழுந்த [4]வெய்தான்
[5]காய்ந்தனன் [6]கனலி [7]நெய்யாற் கனன்றது போலக் காந்தி
வய்ந்தெழு தேரி னோடு மிமைப்பிடை யெடுத்துக் கொண்டான்.

(இ-ள்.) பாய்ந்தவனானபனசனுடைய தோளிலும் மார்பிலும் நல்லபண்பைப்பொருந்தியனவான பல்லமென்னும்பாணங்கள் பத்தை, (சிங்கன்) இடிபோல அழுந்தும்படி யெய்தான்: காய்ந்தவனாகிய பனசன், தீயானது நெய்யினாற் சொலிப்பதுபோல(ச் சினத்தினாற்)காந்திப் பொருந்தியெழுந்துவருகின்ற

தேரினேடும்(அவ்வரக்கனை)இமைப்பிற்குள்(கையினால்)எடுத்துக்கொண்டான்; (எ - று.)—பி-ம்:—1பார்ப்போடு. 2ஆய்ந்தன. 3என்ன. 4எய்யக். 5காய்ந்தெழு, காய்ந்தெரி. 6கனலின். 7நெய்யிற். (உ௬௬௰)

௬எ. தேரொடு மெடுத்த லோடு நிலத்திடைக் 1குதித்த 2செங்கண்
மேருவிற் றோற்றத் தான்ற னுச்சிமே லதனை 3வீசப்
பாரிடை 4விழுத லோடுந் 5தானவ னும்பர் பாயச்
சோரியு முயிருஞ் சோரத் துகைத்தனன் வயிரத் தோளான்.

(இ - ள்.) தேரோடும்(சிங்கனை)எடுத்தவளவில்,செங்கண்ணையும் மேருப் போன்ற தோற்றத்தையுமுடையவனான நிலத்திடையிற் குதித்த அந்தச் சிங்கனுடைய உச்சிமீது (பனசன்) அந்தத்தேரை வீச,அவ்வரக்கன் பாரிடை விழுந்த வளவில், இரத்தம் மேலேபாயவும் உயிர் சோரவும் வயிரம்போலுறுதி யான தோளையுடைய அந்தப்பனசன், துகைக்கலானான்; (எ-று.)--தானவன்-அரக்கன். பி-ம்:--1குதிக்கச். 2செம்பொன்.3வீசிப். 4வீழ்த்தலோடும். 5அந்தர மவனும்பாயச், மானவனம்பிற்பாய்ந்து, தானதன்மீதுபாய்ந்து. (உ௬௬௧)

௬அ.---அரக்கர்சேனையில் யாவரும்இறக்க, செய்திசொல்லத் தூதர் இலங்கைசேர்தல்.

தராதல வேந்தன் 1மைந்தர் சரத்தினுங் கவியின் றானை
மாராமர மலையென் றின்ன 2வழங்கவும் வளைந்த 3தானை
பராவருங் 4கோடி யைந்தும் வெள்ளநா லைந்தும் பட்டன
இராவணன் றூதர் போனார் படைக்கல மெடுத்தி லாதார்.

(இ - ள்.) சக்கரவர்த்திதிருமகர்களாகிய இராமலக்ஷ்மணரின் அம்புகளி னாலும், குரக்குச்சேனை மராமரம் மலை என்றஇவற்றை வழங்குதலாலும்,--- வளைந்திட்ட (அரக்க)சேனை சொல்லுதற்கு அரிய ஐந்துகோடியும்இருபது வெள்ளமும் இறந்துபட்டன: படைக்கலம் எடுக்காதவராயும் (அதனால்) இற வாமல்நின்றவருமான இராவணன்தூதர் (செய்திசொல்லுமாறு நகர்க்குச்) சென்றனர்; (எ - று.)—பி-ம்:—1மைந்தன். 2வழங்கலும். 3தானைப். 4வெள்ள மொக்கப்பட்டது பட்டிலாதார், வெள்ளம்பத்தும்பட்டன பட்டிலாதார். ()

மகராக்கண்ணன் வதைப்படலம் முற்றிற்று.

---

## உக - ஆவது பிரமாத்திரப்படலம்.

இந்திரசித்து பிரமாஸ்திரத்தைவிடுத்து இலக்குமணனையும் வானரர்களை யும் உயிரொடுங்கச்செய்தமையைக் கூறும் படல மென்று விரியும்.

மகரக்கண்ணன் தன்சேனையோடும் தேர்ச்சக்கரக்காவலாளரோடும் இறந் திட்டானென்றசெய்தியைத் தூதுவர் சொல்லக் கேட்ட இராவணன்,இந்திர சித்தைவிரைவிலழைத்துவருமாறு கூற, பணியாளர்செய்தியறிவிக்க, இந்திர சித்து உடனே வந்து,'யான்நரரையும் வானரரையும் வென்றுவருவேன்: வருந் தற்க' என்று கூறி, அறுபதுவெள்ளத்தானையோடும் போர்க்குஉரிய வாச்சியங்

கள்முழங்க முனைமுகஞ்சார்ந்து கிரௌஞ்சவியூகமாகச் சேனையையணிவகுத்து சங்கநாதஞ்செய்து நின்றானாக, அவன் சேனையுங் கிளர்ந்துநின்றது. அது கண்ட வானரசேனை நிலைகெட்டோடிற்று. அநுமான் சுக்கிரீவன் அங்கதன் இராமலட்சுமணர் விபீஷணன்முதலிய சிலரே நிற்கலாயினர். அப்பால் அநுமான்தோளின்மீது ஸ்ரீராமனும் அங்கதன்தோளின்மீது இளையபெருமாளும் ஏறிநிற்க, வானவர் மலர்மழைபொழிந்தனர். நீலன்முதலியோர் மரங்களையும் குன்றுகளையு மேந்தி அரக்கரைத் தடுக்கத்தொடங்கியபோது, ஸ்ரீராமன் 'தெய்வப்படைகளை இந்திரசித்து விடுத்தால் நீங்கள் தாங்கமாட்டீராகை யால், அவற்றைத்தாங்குமாறு முன்னிடத்தை எமக்குவிட்டுப் பின்னேநின்று எம்முடைய விற்றிறமையைக் காண்க' என்றான். அவர்களும் உடன்பட்டுநிற்க, இந்திரசித்து பிரமிக்கும்படி அறுபது வெள்ளஞ்சேனையையும் இராமலட்சு மணர் அழித்தனர். ஆயிரகோடித்தேர்வீரர்தவிர மற்றையோரெல்லாம் மாய்ந்திடவும், இந்திரசித்தினிடத்து அச்சத்தால் நிலைகெட்டோடிய குரக் குச்சேனை மீண்டிலது. ஸ்ரீராமலக்ஷ்மணர்செய்த போர்த்திறனைக்கண்டு அநு மான் தோள்கொட்டி யாரவாரித்தனன். அவனுடைய ஆரவாரத்தால் அரக் கசசேனை பின்னிட்டது. அதுகண்டு இந்திரசித்து அவர்களை முனிந்து நோக்கிப் பழித்து இராமலட்சுமணர்மீது பொருமாறு தான் ஒருவனாக வந் தான். அவன் வருவது கண்டு அவனோடு தான் ஒருவனாகவே பொருவதாக ஸ்ரீராமனிடத்து இலட்சுமணன் அநுமதிபெற்றுப் பொரலானான். ஆயிர கோடிச்சேனையும் இந்திரசித்துக்குப் பக்கபலமாகவந்தது. இந்திரசித்து தத்த ளிக்கும்படி இலட்சுமணன் அரக்கரைக் கொன்றுவீழ்த்துகையில், ஸ்ரீராமனும் அநுமானைத் தூண்டி அரக்கர்மீது சரமாரிபொழிந்து இந்திரசித்து தேரும் தானுமே மிச்சமாகச்செய்தனன். அவ்வேளை இந்திரசித்து 'நீங்கள் தனித்துப் பொருவீரோ? சேர்ந்துபொருவீரோ? சேனையுடன்கூடியவராய்ப் பொருவீரோ? நுமதுகருத்துயாது?' என்று வினவ, இலக்குமணன் தான் இந்திரசித்தைக் கொல்லுமாறு சூளுரைத்திருப்பதைத் தெரிவித்தான். இந்திரசித்து இலட்சு மணனைக் கொல்வதாகச் சூளுரைக்க, வாக்குவாதத்திற்குப்பின் இருவர்க்கும் கடும்போர்நிகழ்ந்தது. அப்போரில் இலட்சுமணன் இந்திரசித்தின்தேரையழி க்க, இந்திரசித்து அங்கதன்மீதும் இலட்சுமணன்மீதும் கணைகளைத் தூர்த்துச் சங்கெடுத்துமுழக்கினன். அக்காலையில் இலக்குவன் இந்திரசித்தின் கவசத்தைப் பத்துக்கணையாற்பேதிக்க, அப்போது ஸ்ரீராமன்கட்டளையால் வானரர் பேராரவாரஞ்செய்தனர். இமைப்பொழுதிற்குள் இந்திரசித்து ஆகாயத்துமறைய, இலட்சுமணன் பிரமாத்திரத்தைத் தொடுப்பேனென்ன, ஸ்ரீராமன் தடுத்த னன். இவரது ஆலோசனையையறிந்த இந்திரசித்து தான் பிரமாத்திரத்தை விடுக்கக் கருதி மெல்லப்பெயர்ந்து செல்ல, கண்டவானவர் அரக்கன் அஞ்சிச் சென்றானென்று நகைத்தனர்; வானரரும்ஆரவாரித்தனர். இராமலக்ஷ்மணரும் தம் வாகனத்தினின்று இறங்கி, தூணிமுதலியவற்றைத் துறந்திருந்தனர்.

இந்திரசித்து பிரமாத்திரம் விடுத்தற்கு முயற்சிகொண்டு அதற்குரிய வேள்வியைத் தொடங்கஅமைந்தான். சூரியன் அத்தமித்தான். ஸ்ரீராமன்

சேனைகட்கு விரைவில் உணவுகொணருமாறு ஸ்ரீவிபீஷணாழ்வானை யனுப்பிவிட்டு, சேனையைக் காத்திருக்குமாறு இலக்குவற்குக் கட்டளையிட்டு, அத்திரபூசைசெய்யச்சென்றான். இந்திரசித்து இலங்கையிற்சேர்ந்து இராவணனிடம் போரில் நிகழ்ந்ததைச்சொல்லி,'மாறுசெய்யாதபடி மாற்றார் என்னை மறந்திருக்கையில் வஞ்சனையாகப் பிரமாத்திரம்விடுத்துப் பகையைமுடிப்பேன்' என்றான். அதுகேட்ட இராவணன் முன்னின்ற மகோதரனை நூறுவெள்ளஞ்சேனையோடு மாயைப்போர் புரியுமாறு ஏவ, அவ்வரக்கச்சேனை முடுகிச்சென்று வானரர்களைக் கடுமையாகத் தாக்கிற்று. ஒருபக்கத்து அநுமான் அரக்கரையழிக்கத்தொடங்கிக் கீழேகிடந்த கும்பகர்ணனது தண்டாயுதத்தைக் கையிற்கொண்டு சாரிதிரிந்து அரக்கரை நீறாக்கலானான். நீலன்முதலிய தலைவர் ஒருவரையொருவர் காணமாட்டாது அரக்கரின் படைக்கடலுளிருந்தனர். அநுமான் அரக்கரை நீறாக்குகையில் முற்பிறவியில் தாருகனாயிருந்து குமாரக்கடவுளாற் கொல்லப்பட்டு இப்போது அகம்பனென்று பிறந்துள்ள சேனாபதியான வீரனை நெருங்க, இருவர்க்கும் பெரும்போர் நிகழ்ந்தது. முடிவாக அகம்பன் அம்புதூவுவதைவிட்டுத் தண்டாயுதங்கொண்டு பொர, அநுமன் தண்டுகொண்டு தாக்கவே, அவனது கதாயுதத்துடனே வலக்கையும் இற்றது. பிறகு குத்துச்சண்டையால் அவனுயிரை அநுமான் குடித்திட்டான். மற்றொருபக்கத்து மாயையாற் பரந்திருந்த அரக்கச்சேனையில் தென்மேற்குத்திக்கில் ஏழுயோசனைதூரம் அங்கதன் சென்றிருந்தான்: அப்பால் பதினான்குயோசனைதூரம் சுக்கிரீவனும் அப்பால் பின்னும்நான்மடங்குமிக்கயோசனைதூரம் இலட்சுமணனுஞ் சென்றிருந்தனர்: மற்றையோர் நாலைந்துகாததூரமே சென்றிருந்தனர். அப்போது அநுமான், இலக்குமணனுள்ள இடம்தெரியாமலும் அவன் வில்லொலியுங் கேளாமலும், என்ன நிகழ்கின்றதென்ற செய்தி யுரைப்பார் இல்லாமலும் இருப்பதுகண்டு, பொருமலுற்றுச்சென்று இலட்சுமணனுள்ள இடத்துக்கு இரண்டுமூன்று காததூரமிருக்குமிடத்தைச் சார்ந்து அப்பிரானதுகணையால் யானைமுதலிய அழிந்துகிடக்கும் பலகாட்சிகளைக்கண்டு, முடிவாக இலட்சுமணனைக் கிட்டிப் பெருமகிழ்ச்சியாலார்ப்பரித்து,'இவ்வரக்கப்போர் மாயத்தால் விளைந்திருத்தலால் மந்திரப்படைகொண்டு போக்கவேணும்' என்ன, இலட்சுமணன் பாசுபதாஸ்திரத்தை விடுக்க, எல்லாம் ஒழிந்தது. மாயைநீங்கவே மகோதரன் மறையப்போயிட்டான். வானரர் இலக்குவனை யடைந்தனர்: வானவர் பூமாரிபொழிந்தனர்.

தூதுவர் அச்செய்தியை இராவணனுக்குஉணர்த்த, அவன் இந்திரசித்துக்குச்சொல்லுமாறு பணிக்க, அவ்வாறே செய்தனர். இந்திரசித்து இஷ்டதேவதையைப் பூசித்துவிட்டு மாயையால் வானத்துமறைந்துநின்று காலம்நோக்கிநிற்க, மகோதரன் இந்திரனுருக்கொண்டு ஐராவதவுருவுள்ள யானைமீதேறி வானவர் இருடியர் முதலியவரின் உருக்கொண்டவீரருடன் இலட்சுமணன்மீது எதிர்த்துவந்தனன். அதுகண்ட இலட்சுமணன் அதிசயமுற்று 'இதுஎன்?' என்று அநுமானை வினாவினான். அப்போது இந்திரசித்துப் பிரமாஸ்திரத்தைத்தொடுத்து விடுக்க, இலட்சுமணன் அறிவொடுங்கிச்சாய்ந்தான். அநுமான் 'இந்திரனா

இவ்வாறு செய்தான்? அவனை யானையோடு எற்றுவேன்' என்று எழ, அவ்வநு மானைப் பிரமாஸ்திரம் இறுக்க, அவனும் நினைவுஞ்செய்கையும் மறைந்து நிலஞ் சேர்ந்தான். சுக்கிரீவன் அங்கதன் நீலன் மயிந்தன் துவிவிதன் சுடேணன் கேசரி முதலிய வீரர்யாவரும் அந்த அஸ்திரத்தினால் உயிரொடுங்கிச்சாய்ந்த னர். இந்திரசித்து 'வானரசேனையுடனே இளையவன் இறந்தான்: இராமன் அகன்றிட்டான்' என்று வெற்றிச்சங்கு ஊதி, தான் வென்றுவந்தசெய்தியை இராவணனிடம் தெரிவித்துத் தன்னரண்மனைக்குச் சென்றான். மகோதர னும் தன்னிருப்பிடஞ் சேர்ந்தான்.

பூசனைசெய்துவிட்டு மீண்டுவந்த ஸ்ரீராமன் ஆக்கினேயாஸ்திரத்தால் இருளையொழித்துச் சுக்கிரீவன் முதலிய தலைவர் உயிரொடுங்கிவிழுந்திருப்பது கண்டு பெருந்துயரடைந்து பலபடிபேசிப்புலம்பிப் பின் இலட்சுமணனும் உயிரொடுங்கிவிழுந்திருப்பதுகண்டு அவனைத்தழுவி வெம்பி மனம்முறிந்து பூமியிற்சாய்ந்து மூர்ச்சித்துக்கிடந்தான். அவனதுநிலையைக் கண்டு சராசரங் கள்யாவும் புலம்பின. சற்றுநேரம் கழிந்ததும் ஸ்ரீராமனுக்குச் சற்றுஉணர்வு வர, அப்பிரான், இலட்சுமணனை யிறந்தவனாகஎண்ணிப் பலபடியாகப்புலம்பி மூர்ச்சையாகிவிழத், தேவர்கள் அப்பரமனைத் துதிசெய்து துயருற்றிருந்தனர். தூதுவர் இராவணனிடஞ்சென்று, 'தன்தம்பியுந் துணைவரும் இந்திரசித் துவிடுத்த பிரமாத்திரத்தினால் இறந்தது கண்டு பெருந்துயரெய்தி, அத்துயர் மிகுதியால் இராமன் தானும் மாண்டனன்: ஆகவே, உன்பகையொழிந்தது' என்று செய்தியுரைத்தார் என்பது, இப்படலத்திற் கூறப்படுகின்றது.

க.—மகராட்சன் முதலியோர் மாண்டதைத் தூதர் உரைக்க, இராவணன் இந்திரசித்தை யழைத்துவரச்சொல்லுதல்.

கரன்மகன் பட்ட வாறுங் குருதியின் கண்ணன் [1]காலிற்
சிரனெரிந் [2]துக்க வாறுஞ் [3]சிங்கன தீறுஞ் சேனைப்
பாமினி யுலகுக் [4]காகா தென்பதும் பகரக் கேட்டான்
வரன்முறை [5]தவிர்ந்தான் வல்லைத் தருதிரென் மகனை யென்றான்.

(இ-ள்.) கரனுடையபுத்திரனான மகரக்கண்ணன் இறந்தவகையினையும், இரக்தாட்சன் (குரங்கின்) காலினாற் சிரம் நெரிந்துபோய் உயிரொழிந்த வகையினையும், சிங்கனுடைய மரணத்தையும் சேனைக்கூட்டம் இனி உலகி னில் இல்லாமலொழிந்ததென்பதையும் (தூதர்) சொல்லக்கேட்டவனாய், நீதி முறை நிகழ்வதைத் தவறினவனாகிய இராவணன், 'என்மகனை விரைவில் அழைத்துவாருங்கள்' என்று (அத்தூதருக்குக்) கட்டளையிட்டான்; (எ - று.)

இராவணன் சேனையெல்லாம் நாசமாதற்குக் காரணம் அவனுடைய முறைக்கேடே யென்பார், அவனை 'வரன்முறை தவிர்ந்தான்' என்றார். வரன் முறை தவிர்ந்தான்=முறைவரல் தவிர்ந்தான்: முறை - நீதி. சிலபிரதிகளில் இந்தச்செய்யுளோடு மகரகண்ணன்வதைப்படலம் முடிகின்றது. பி-ம்:—[1]கா லுஞ், காஃற். [2]இற்ற. [3]சிங்கனுஞ்சீறும், சிங்கனிற்செறிந்த, சிங்கனிற்சீறும். [4]ஆகாவென்பது, ஆகானென்பதும், [5]துறந்தான். (உ௩கூ)

உ.—இராவணன் கட்டளையைத் தூதர் அறிவிக்க, செய்தியுணர்ந்த இந்திரசித்து விரைந்துவருதல்.

கூயின னுந்தை யென்றார் குன்றெனக் [1]குவிந்த [2]தோளான்
போயின நிருத ரியாரும் [3]பொன்றினர் போலு மென்றான்
ஏயின பின்னை [4]மீள்வார் நீயலா தியாவ ரென்று
மேயது சொன்னார் [5]தூதர் தாதைபால் விரைவின் வந்தான்.

(இ - ள்.) 'உமது தந்தையார் (உம்மை)அழைத்தனர்' என்று (தூதுவர்) தெரிவித்தார்; குன்றுபோலத்திரண்ட தோளையுடையவனான இந்திரசித்து போருக்குச்சென்ற நிருதர்யாவரும் இறந்தார்போற் காண்கிறதேயென்று வினவினான்; 'போருக்கு ஏவினபின் அப்போரிற் செல்பவரில் மீளவல்லவர் நீயல்லாது எவர் (உளர்?)' என்று கூறி, நிகழ்ந்ததைத்தூதுவர் சொன்னார்; தன்தாதையினிடத்தில் இந்திரசித்து விரைந்துவந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]குவவு. [2]தோளார். [3]போந்திலர்போலும். [4]மீள்வானீயல தியாவ தில்லை. [5]கேட்டான். (உருகச)

ங.—இந்திரசித்து இராவணனைத் தேற்றி, நான் வானரரையும் நரரையுங் கோல்வேனெனல்.

[1]வணங்கிநீ யைய நொய்தின் [2]மாண்டனர் மக்க ளென்ன
உணங்கலை யின்று காண்டி [3]யுலப்பறு [4]குரங்கை நீக்கிப்
பிணங்களின் குப்பை மற்றை [5]நரருயிர் பிரிந்த யாக்கை
கணங்[6]குழைச் சீதை [7]தானு மமரருங் காண்ப [8]ரென்றான்.

(இ - ள்.) (வந்த இந்திரசித்து,—தன் தந்தையை) வணங்கி, 'ஐயா! நீ மக்கள் இலேசாக மாண்டிட்டனரென்று மனம் வாடவேண்டா; அளவற்ற குரங்குச்சேனைகளை(உயிர்)நீக்குவதனால்(படுகளத்திற் கிடக்கும் அந்தகுரங்குப்) பிணங்களின் குவியலையும் மற்றை நரரான இராமலட்சுமணரின் உயிர் பிரிந்த உடலையும், திரண்ட பொன்னாற் செய்த குழையென்னும் காதணியணி பவளான சீதையும் அமரரும் காண்பார்; (இவ்வாறு நிகழ்வதை)இன்று(நீயே) காண்பாய்' என்று கூறினான்; (எ - று.)—பி-ம்:—[1]வணங்கினன். [2]மாண்டன மாக்கள், மாண்டனரரக்கர். [3]உலப்புறு. [4]குரங்கினேங்கல். [5]ஆருயிர். [6]குழற். [7]காணும். [8]அன்றே. (உருகரு)

ச.—இங்ஙனம் கூறிவிட்டு இந்திரசித்து தானையோடு போர்க்களம் நோக்கிச்செல்லுதல்.

வலங்கொண்டு வணங்கி வான்செ லாயிர மடங்கல் [1]பூண்ட[னான்
பொலங்[2]கொடி நெடுந்தே ரேறிப்[3]போர்ப்பணை [4]முழங்கப் போ
அலங்கல்வா ளரக்கர் தானை யறுபது [5]வெள்ள மியானைக்
குலங்களுந் தேரு மாவுங் குழாங்கொளக் [6]குழீஇய வன்றே.

(இ - ள்.) (பின்பு தன் தந்தையைப்) பிரதட்சிணஞ்செய்து வணங்கி விட்டு, வானத்திலுஞ் செல்லவல்லதும் ஆயிரஞ்சிங்கம் பூண்டதும் அழகிய கொடியுடன் கூடியதுமான நெடிய தேரின்மீது ஏறிக்கொண்டு,போர்க்குரிய வாச்சியங்கள் முழங்க, (அவ்விந்திரசித்துச்)சென்றான்; (வெற்றி)மாலைசூடிய

வாட்படையைக்கொண்ட அரக்கர்சேனை அறுபதுவெள்ளம் யானைக்கூட்டங்களும் தேர்களும் குதிரைகளும் கூட்டமாகத் திரளத்திரண்டு சென்றன; (எ - று.)—அன்றே - ஈற்றசை. தேற்றமுமாம். பி-ம்:—1பூண்டான். 2கொடியாடுங். 3பொருபணை. 4பொலியப். 5வெள்ளயானை. 6குழீஇயது. (உ௩௬௬)

ரு.—பலவகைவாச்சியங்களும் அப்போது ஒலித்தல்.

கும்பிகை திமிலை செண்டை குறடுமாப் 1பேரி கொட்டும்
2பம்பைதார் முரசங் 3கஞ்சம் பாண்டில்போர்ப் பணவந் தூரி
கம்பலி யுறுமை தக்கை காடிகை 4துடிவேய் கண்டை
5யம்பலி கணுவை யூமை சகடையோ டார்த்த வன்றே.

(இ - ள்.) கும்பிகை திமிலை செண்டை குறடு பெரியபேரிகை கொட்டுகின்ற பம்பை மாலைசூடியமுரசம் கஞ்சம் பாண்டில் போர்க்குஎடுத்த பணவம் தூரி கம்பலி உறுமை தக்கை காடிகை துடி புள்ளாங்குழல் கண்டை அம்பலி கணுவை ஊமை சகடை என்ற இவைகள் ஆரவாரித்தன; (எ - று.)—பி-ம்:—1பேரிகோடி, பேரிகொட்டி. 2பம்பமர், பம்பைமா. 3சங்கம். 4துடிகை கண்டை, துடிசேகண்டை. 5அம்புலிகடுமை, அம்பலிதடுமை. (உ௩௬எ)

சு.—யானைமுதலிய படைகளினின்று தோன்றிய ஒலி.

யானைமேற் பறை1சா லீட்டத் தறைமணி யார்த்த தாழி
2மானமாப் புரவிப் 3பொற்றூர் 4மாக்கொடிக் 5கண்டைமானச்
சேனையோர் 6கழலுந் தாருஞ் சேடகப் புளகச் சில்லி
7வானகத் தோடு மாழி யலையென வளர்ந்த வன்றே.

(இ - ள்.) யானையின்மீது உள்ள பறைகளின் மிக்ககூட்டத்தோடு (அவைகளின் இருபுறத்துந் தொங்கி) ஒலிக்கின்ற மணி ஆழிபோல் ஒலித்தது; ரோஷத்தையுடைய பெரிய குதிரைகளணிந்த பொன்னுலியன்ற கிங்கிணிமாலையின் பெரியவரிசைகள் கண்டைபோன்று ஒலிக்க, சேனையோரின் கழலிஞெலியும் பொன்னரிமாலையிஞெலியும் பெருமைபொருந்தியகண்ணுடி பதித்துள்ள தேர்ச்சக்கரவொலியும், வானம்வரையில் கடலொலிபோலமிக்குத்தோன்றின; (எ-று.)—பி-ம்:—1கீழ்ப்பட்டதெறிமணியிரதத்தாளி, கீழ்ப்பட்டதெறிமணியயிர்த்ததாழி, கீழட்டத்தெறிமணியிரைத்ததாழி, கீழ்ப்பக்கத்தெறி...ஆழி, கீழ்ப்பட்டத்தெறிமணியீர்த்ததாழி. 2மானமார். 3பொற்றேர். 4மாக்கடற். 5கொண்டபண்ணைச், கடலைமானச், கண்டைவாவுஞ். 6கழலுந்... சேண்டரப்புலம்பமற்றை, கழலுந்...சேண்டரப்புரளுஞ்சில்லி, கலிப்பத்தாவிச்சென்றதேருருமின்சில்லி. 7வானகத்தோடுமாழிமலையென வளர்ந்ததன்றே, வானகத்தோடுவானையரியென வளைந்ததன்றே, ஏனையபிறவுமெல்லாமரியெனவளைந்தவன்றே, ஏனையபிறவுமெல்லாமெழுமொலியெழுந்ததன்றே, ஆனகத்தோடுவானையரியென வளைந்தவன்றே. (உ௩௬அ)

எ.—பலவகை வாச்சியம் சேனையோலி இவற்றின் வருணனை.

சங்கொலி வயிரி ரோசை யாகுளி தழங்கு காளம்
பொங்கொலி 1வரிகண் பீலி 2போரொலி வேயின் பொம்மல்

சிங்கத்தின் முழக்கம் வாசிச் சிரிப்புத்தே ரிடிப்புத் திண்கைம்
மங்குலி [3]னதிர்வு வான மழையொடு [4]மலேந்த வன்றே.

(இ - ள்.) சங்கிஞெலியும் வயிரென்னும் ஊதுகொம்பிஞெலியும் ஆகுளியின்ஒலியும் ஒலிக்கின்ற காளத்தினின்று மிக்குத்தோன்றுகின்ற ஒலியும் மயிற்கண் வரிந்த பீலியென்ற வாச்சியத்தின் போர்க்கின்ற ஒலியும் புள்ளாங்குழலின்ஓசையும் சிங்கத்தின் முழக்கமும் குதிரையின் கனைப்பொலியும் தேரினின்று தோன்றுகின்ற இடிபோன்றஒலியும் வலியதுதிக்கைகளேக்கொண்ட மேகம்போன்ற யானையிஞெலியும், வானத்துத்தோன்றுகின்ற மேகத்திஞெலியோடுமாறுபட்டன; (எ - று.)—அன்றே-தேற்றம். சிங்கம்-தேரிற்கட்டப்பட்டிருப்பன. பெரியார்பாசுரத்தில், "தாழ்பீலி" என்றவிடத்து பீலிதாழ்ந்ததொரு வாத்தியவிசேஷமுமாமென்று அருளிச்செய்திருத்தல் காண்க. பி-ம்:—[1]வரிதாட்பீலி. [2]பேரொலி. [3]குரல்போல்வானின், அதிர்ப்பும்வான. [4]மலிந்ததன்றே, மலேந்ததன்றே. (உ௯௯௯)

அ.—பலவகைச்சங்கீதம்.

[1]பண்டரு கிளவிச் செவ்விப் [2]பல்லியத் தொழுகு தீந்தேன்
கண்டினிற் குயின்ற வீணை நரம்பொடு [3]கமழுந் தேறல்
வண்டினிற் பொலியு நல்யாழ் [4]வழியுறு நறவம் வானத்து
அண்டர் தஞ்[5]செவியி னுண்ணு மமிழ்தென [6]லாயிற் றன்றே.

(இ - ள்.) இனியராகத்தைத்தோற்றுவிக்கின்ற சொற்களின் தன்மையைக்கொண்டனவாய்ப் பல்வகைவாச்சியங்களினின்று தோன்றுகின்ற இனிய சங்கீதமும், (முறைப்படி) அமைந்த வீணைநரம்பினின்று கற்கண்டுபோல் இன்சுவைதோன்றுகின்ற சங்கீதமும், நல்யாழினிடத்தினின்று தோன்றுகின்றதும் வண்டிஞெலிபோல் விளங்குவதுமான சங்கீதமும், வானத்திலுள்ளதேவர்கள் தஞ்செவியாலுண்கின்ற அமிழ்துபோலத் தோன்றிற்று.

வாச்சியம் பேசுவதுபோல அவற்றினின்று இன்ஞெலிதோன்றுகின்றதென்பது முதலடியிற்கூறியபொருள். நக்கியுண்ணப்படுந் தேன் நாவுக்குஇனிமைதருவதுபோலச் செவிப்புலன்கொண்டு முகர்ந்துண்ணப்படுஞ் சங்கீதம் அச்செவிப்புலனுக்கு இனித்தலால், உவமவாகுபெயரால், சங்கீதத்தொனியை'தேன், தேறல், நறவம்' என்ற சொற்களாற் கூறினர். போர்க்குச்செல்வோர் மகிழ்ச்சியுறுமாறு அந்த இராக்கதசேனையிற் சங்கீதமயமாகஇருந்ததென்க. இச்செய்யுள் பலபிரதிகளிலில்லாமையைக் காணுமிடத்து, புதிதாகப் பாடிச் சேர்க்கப்பட்ட வெள்ளிப்பாட்டிற் சேர்ந்ததோஎன்று ஐயந்தோன்றுகின்றது. பி-ம்:—[1]பண்டொகு. [2]பலகையின். [3]கள்ளுந். [4]அளவுறு. [5]செவிள். [6]ஆய. (உ௬௦௦)

௯.—வில்லொலிமுதலியன.

வில்லொலி வயவ ரார்க்கும் விளியொலி தெழுப்பி ஞெங்கும்
ஒல்லொலி வீரர் பேசு முரையொலி [1]யுரப்பிற் [2]றேன்றுஞ்
[3]செல்லொலி [4]திரடோள் கொட்டுஞ் [5]சேஞெலி நிலத்திற் செல்லும்
[6]கல்லொலி துரப்ப மற்றைக் கடலொலி [7]கரந்த தன்றே.

(இ - ள்.) வில்லினொலியும், வீரராரவாரிக்குங் குரலொலியும், அதட்டு தலாலோங்கித்தோன்றுகின்ற ஒல்லென்ற ஒலியும், வீரர்பேசுகின்ற உரை யொலியும், கனைப்பிற்றோன்றும் இடிபோன்ற ஓசையும், திரண்டதோளைக் கொட்டும் மிக்கஒலியும், நிலத்தில் நடந்து செல்வதனாலான கல்லென்றஒலியும் ஒட்டிவிடுவதனால், இவற்றினும்பிறிதான கடலொலியானது ஒளித்திட்டது; (எ - று.)—வில்லொலிமுதலியவற்றாற் கடலொலி யடங்கிற்றென்க. இதில், ஒப்புமையால் ஒன்றில்மற்றொன்று மறைதலாகிய மறைவணி காண்க. பி-ம்:—1உரப்பித். 2சொல்லுஞ். 3சொல். 4தாடோள். 5தோள். 6கல்லொலியோடுங் கூடக், கல்லொலிபரப்பமற்றைக். 7பரந்த, கடந்தது. (உசுOக)

கO.---தூளிவருணனை.

நாற்கட லனைய தானை 1நடந்திடக் கிடந்த பாரின்
மேற்2கடுத் தெழுந்த தூளி விசும்பின்மேற் 3றொடர்ந்து வீச
மாற்கடற் 4சேனை காணும் வானவர் மகளிர் மானப்
பாற்கட லனைய வாட்கண் பனிக்கடல் படுத்த தன்றே.

(இ - ள்.) நாற்கடலையொத்த (நால்வகைச்)சேனை நடந்திட்டதனாற் கிடந்த பாரிலிருந்து மேலேவிரைந்துபுறப்பட்டெழுந்த தூளியானது,---ஆகா யத்தின்மீது தொடர்ந்துவீசுவதனால்,பெரியகடல்போன்ற சேனையைக் காண் கின்ற வானவமகளிரின் பெருமைபெற்ற பாற்கடலையொத்த ஒளிபடைத்த கண் குளிர்ந்தகடலை[மிக்ககண்ணீரை]த் தோற்றுவித்தது; (எ - று.)

சேனைப்பரப்பாலெழுந்த தூளி வானத்தளவும் மிக்குச்சென்றதென்ற கருத்தை விளக்குதற்பொருட்டுத் தூளி தம்கண்களிற் படுதலால்,வானவர் மக ளிர் கண்களிலும் கண்ணீர் மிகுத்தோன்றிற்றெனத் தொடர்புயர்வுநவிற்சி யணிபடக் கூறினாரென்க. பி-ம்:—1நயத்தலையெய்தப்.2கடந்து.3கொழுந்து. 4சேனையோடும். (உசுOஉ)

கக.---பலதேர்களினிடையே இந்திரசித்து தேரின்மீது தோன்றுதலின் வருணனை.

ஆயிர கோடித் திண்டே ரமரர்கோ னகர மென்ன
1மேயவர் சுற்றத் தானோர் கொற்றப்பொற் றேரின் மேலான்
2தூயபொற் சுடர்க ளெல்லாஞ் 3சுற்றுற நடுவட் டோன்றும்
நாயகப் பரிதி போன்றான் 4றேவரை நடுக்கங் 5கண்டான்.

(இ-ள்.) தேவேந்திரனுடையமாளிகை(யில் மேயவர்) என்னுமாறு ஆயிர கோடி, வலியதேரின்மேற் பொருந்தியவர் சுற்றிநிற்க, தேவரை நடுக்கங்கண்ட வனாகிய இந்திரசித்து,--தான் ஒருவெற்றிபொருந்திய பொற்றேரின்மேலேறி யவனாய்,பரிசுத்தமாகிய அழகிய ஒளிமயமான நட்சத்திரங்களெல்லாஞ்சுற்றி நிற்க(அவற்றின்)இடையே தோன்றுகின்ற தலைமைபூண்ட சூரியனுக்குஒப்பா னான்; (எ-று.)—சுடர்-கிரகங்களுமாம். பி-ம்:---1மேயின. 2தூயவற், தூயவச். 3சுற்றிட, 4எவரையுங். 5கொண்டான். (உசுOங)

### கஉ.—இந்திரசித்து கிரவுஞ்சவியூகம் வகுத்தல்.

[1]சென்றவெங் களத்தை [2]யெய்திச் சிறையொடு துண்டஞ் செங்கண், ஒன்றிய கழுத்து [3]மேனி காலுகிர் [4]வாலோ டொப்பப், பின்றவில் வெள்ளத் தானை [5]முறைபடப் பரப்பிப் பேழ்வாய், அன்றிலி [6]னுருவ தாய வணிவகுத் தமைந்து நின்றான்.

(இ - ள்.) (இந்திரசித்து),—போய்க் கொடியபோர்க்களத்தையடைந்து, சிறையும் மூக்கும் செங்கண்ணும் பொருந்தியகழுத்தும் உடலும் காலும் உகிரும் வாலும் என்ற இவை ஏற்றஅளவினவாக அமைய, பின்னிடுதலில்லாத வெள்ளக்கணக்கான சேனையை முறைமைபொருந்தப் பரப்பிப் பிளவுபட்ட வாயையுடைய அன்றிலின் உருவத்தைக்கொண்டதான அணியை வகுத்து(ப் போர்செய்ய)ச் சித்தனாகஇருந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]சென்ற. [2]எய்த. [3]மென்கால். [4]வாலினொப்பப். [5]முற்பட. [6]உருவமாக. (உ௬0௪)

### கங.—சங்கநாதஞ்செய்தல்.

புரந்தரன் செருவிற் றந்து போயது புணரி யேழும்
[1]உரந்தவிர்த் தூழி பேருங் [2]காலத்து ளொலிக்கு மோதை
கரந்தது [3]வயிற்றுக் கால வலம்புரி கையின் வாங்கிச்
சிரம்[4]பொதிர்ந் தமர ரஞ்ச வூதினன் றிசையுஞ் [5]சிந்த.

(இ-ள்.) இந்திரன் போரில் தந்திட்டுப்போனதும் ஏழுசமுத்திரங்களும் (மற்றைப்பொருளின்) உரத்தைத்தவிர்த்துக் கற்பம் மாறுங்காலத்தில் ஒலிக்கின்ற ஓதையை(த் தன்)வயிற்றினுள்ளே ஒளித்துவைத்துக்கொண்டிருப்பதுமான யமன்போற்பயங்கரமான வலம்புரிச்சங்கத்தை(த் தன்)கையிலே வாங்கிக்கொண்டு, அமரர் தலைநடுக்கமெடுத்து அஞ்சும்படியும் திசைகள் நிலைகெட்டிடும்படியும் ஊதினான்; (எ - று.)—பி-ம்:—[1]உரந்தையுற்று. [2]காலத்தின். [3]வயிற்றுள். [4]பொதிர்ந்து. [5]தீந்த. (உ௬0௫)

### க௪.—சங்கத்தொனிகேட்டு வானரச்சேனை நிலைகெட்டோட, இந்திரசித்து நாணொலிசெய்து ஆரவாரித்தல்.

சங்கத்தின் முழக்கங் கேட்ட [1]கவிப்பெருந் தானை [2]யானை
சிங்கத்தின் முழக்கங் கேட்ட தொத்தது விரிந்து சிந்தி
[3]எங்குற்ற வென்னு வண்ண [4]மிரிந்ததீ தன்றி யேழை
பங்கத்தன் மலைவி [5]லென்னச் சிலையொலி பரப்பி யார்த்தான்.

(இ - ள்.) சங்கத்தின்முழக்கத்தைக்கேட்ட பெரிய குரங்குச்சேனை சிங்கத்தின் முழக்கங்கேட்டதான யானையை யொத்ததாய், (நாற்புறமும்) பரவிச் சிதறி எங்கேசென்றது என்பதுதெரியாமல் நிலைகெட்டோடிற்று; (நிகழ்ந்த) இது அல்லாமல், உமாதேவியை (வாம)பாகத்திலே கொண்டவனான சிவபிரானது மலைவில்லையொப்ப(த் தன்)வில்லின் ஒலியைப் பரவச்செய்து (இந்திரசித்து தானும்) ஆரவாரித்தான்; (எ - று.)—பி-ம்:—[1]வயப். [2]தள்ளிச்சிங்கத்தினுதம்வந்து செவிப்புகவிலங்கு. [3]எங்குத்தம்முயிரினேடும். [4]இரிந்தனதிருந்தவ்வேழை, இரிந்தபோலிரிந்தவேழை, இரிந்தபோலாங்கவேழை. [5]அன்ன. ()

கரு.—வானரத்தின்நிலைமை.

ஈண்டன செவிக ணெஞ்சங் கிழிந்தன கிளர்ந்து செல்லா
மீண்டன கால்கள் கையின் விழுந்தன மரனும் வெற்பும்
பூண்டன நடுக்கம் வாய்கள் புலர்ந்தன மயிரும் [1]பொங்க
[2]மாண்டன மன்றோ வென்ற வானர மெவையு மாதோ.

(இ-ள்.) வானரங்களெவையும்,--செவிகள் கிழியப்பெற்றன; மனம் விண்டன; கால்களால் உற்சாகங்கொண்டு செல்லமுடியாமல் திரும்பின; (அவற்றின்)கைகளிலிருந்து மரமும் மலைகளும் (கீழ்)விழுந்தன; நடுக்கத்தைக் கொண்டன; வாய்கள் உலரப்பெற்றன; (உடல்)மயிரும் மிகுதியாகச்சிந்த'உயிர்மாண்டேபோயினோமல்லவா?' என்றன; (எ - று.)—இச்செய்யுளில் அச்சத்தின் மெய்ப்பாடுகள் கூறப்பட்டன காண்க. பி-ம்:--[1]பொங்கா, பொங்கி. [2]மாண்டனமென்றோ. (உ௫0எ)

கசு.—சுக்கிரீவன்முதலிய சிலரன்றி மற்றையோர் நிலைகெட்டோடியமை.

செங்கதிர்ச் செல்வன் சேயுஞ் சமீரணன் [1]சிறுவன் றானும்
அங்கதப் பெயரி னானு மண்ணலு மிளைய கோவும்
வெங்கதிர் மௌலிச் செங்கண் வீடணன் [2]முதலாம் வீரர்
இங்கிவர் நின்றா ரல்ல திரிந்தது [3]குரங்கி னீட்டம்.

(இ - ள்.) செந்நிறக்கிரணங்களையே செல்வமாகவுடைய சூரியனது குமாரனான சுக்கிரீவனும் வாயுபுத்திரனான அநுமானும் அங்கதனென்ற பெயரையுடையவனும் ஸ்ரீராமனும் இளையபெருமாளும் கொடியகிரணங்களைவீசுகிற கிரீடந்தரித்த செங்கண்ணையுடைய விபீஷணனும் முதலிய வீரராகிய இவர் இங்கே நின்றாரல்லது, மற்றைக் குரங்குக்கூட்டம் நிலைகெட்டோடிற்று; (எ - று.)---பி-ம்:---[1]தனயன். [2]முதல, முதலர். [3]சேனையெல்லாம். (உ௫0அ)

கஎ.—வானரச்சேனை யிரிந்தோடியதாக, அரக்கர்சேனை கிளர்ந்து ஆரவாரிக்க, அவ்வரக்கர் போர்க்களத்துப் புகுதல்.

படைப்பெருந் தலைவர் நிற்கப் பல்பெருந் [1]தானை வேலை
உடைப்புறு புனலி னோட வூழிநா ளுவரி யோதை
[2]கிடைத்திட முழங்கி யார்த்துக் [3]கிளர்ந்தது நிருதர் சேனை
[4]அடைத்தது திசைக ளெல்லா மன்னவ [5]ரகத்த ரானார்.

(இ - ள்.) படைக்குரியபெருந்தலைவர் நிற்கவும் மிகப்பெரிய குரக்குச்சேனைசமுத்திரம் கரையுடைத்துக்கொண்டுசெல்லுகின்ற(பெருக்கு)நீர்போல் ஓடாநிற்க,---நிருதர்சேனையானது,---யுகாந்தகாலத்துக் கடலினின்றுதோன்றும் பேரொலி தோன்றுமாறு முழங்கியாரவாரித்து உற்சாகமூண்டதாகித் திசைகளெல்லாவற்றையும் (வெற்றிடமில்லையாம்படி) அடைத்துக்கொண்டது; அவ்வரக்கரும், போர்க்களத்தவரானார்; (எ - று.)---இச்செய்யுள், "செங்கதிர்" என்ற பாடலின்முன் சிலபிரதிகளிலுள்ளது. பி-ம்:---[1]சேனை வெள்ளம். [2]கிடைத்திடைமுழங்கி, கிடைத்திடப்பொங்கி. [3]கிளர்ந்தெழும், கிளைந்தெழும். [4]அடைத்தன. [5]கதத்தரானார். (உ௫0கூ)

கஅ.—அநுமான்தோளின்மீது ஸ்ரீராமனும் அங்கதன்தோளின்மீது இலக்ஷுமணனும் ஏறிநிற்க, வானவர் பூமழைபொழிதல்.

மாருதி யலங்கன் மாலை மணியணி வயிரத் தோண்மேல்
வீரனும் வாலி சேய்தன் விறல்கெழு சிகரத் தோண்மேல்
ஆரியற் கிளைய கோவு [1]மேறின ரமரர் வாழ்த்தி
வேரியம் பூவின் மாரி சொரிந்தன [2]ரிடைவி டாமை.

(இ - ள்.) அநுமானுடைய அசையுந்தன்மையுள்ள மாலையையணிந்த அழகிய உறுதியானதோளின்மேல் ஸ்ரீராமனும், வாலிபுத்திரனை அங்கதனுடைய வலிமைவிளங்குகின்ற(மலைச்)சிகரத்தையொத்த தோளின்மீது இளையபெருமாளும் ஏறினார்கள்; (அப்போது)தேவர்கள், வாழ்த்தி, தேனைக்கொண்ட அழகிய மலர்மாரியை இடைவிடாமற் சொரிந்தனர்; (எ-று.)---இச்செய்யுள், சிலபிரதிகளிற் காணப்படவில்லை. பி-ம்:---[1]மேவுகின்று. [2]இடைவிடாமல். (உசக௦)

கக.—அநுமான் அங்கதன்இவர்களின் தோள்மேலிருக்கும் இராமலட்சுமணரின் வருணனை.

விடையின்மேற் கலுழன் றன்மேல் வில்லினர் விளங்கு கின்ற
கடையின்மே லுயர்ந்த [1]காட்சி யிருவருங் கடுத்தார் கண்ணுற்று
அடையின்மே ருவையுஞ் சாய்க்கு மனுமனங் கத[2]னென் றின்னோர்
தொடையின்[3]மேன் மலர்ந்த தாரார் தோளின்மேற் றோன்றும் வீரர்.

(இ - ள்.)தொடுத்தநிலையில் மலர்ந்த பூமாலையையணிந்தவரும் கண்ணுக்குப்புலனாகிச்சேருமாயின் மேருவையும் அழிக்கவல்லவருமான அநுமான் அங்கதன் என்ற இவர்களின் தோளின்மேல் தோன்றுகின்ற இராமலட்சுமணர்,- விருஷபத்தின்மீதும் கருடன்மீதும் வில்லினராகிவிளங்குகின்ற எல்லையில்லாமல் மேன்மையாக வுயர்ந்த காட்சியையுடைய (சிவன் திருமால் என்ற) இருவரையும் ஒத்தார்; (எ - று.)—பலஇடங்களில் உருத்திரமூர்த்தியை இலட்சுமணனுக்கு உவமைகூறுதலைக் காணலாம். பி-ம்:---[1]காட்சிக்கிருவரும். [2]என்றன்னோர், அன்றன்னர், என்றின்ன. [3]மேலமர்ந்த, மேலுயர்ந்த. (உசகக)

உ௦.—நீலனைமுதலாகவுள்ள படைத்தலைவர் யுத்தசன்னத்தராய்நிற்க, ஸ்ரீராமன் விலக்கிக்கூறத்தொடங்குதல்.

[1]நீலனை முதலா யுள்ள நெடும்படைத் தலைவர் நின்றார்
தாலமு மலையு மேந்தித் தாக்குவான் [2]சமையுங் காலை
ஞாலமும் விசும்புங் காத்த நானிலக் கிழவன் மைந்தன்
[3]மேலமர் [4]வினையை யுன்னி [5]விலக்கினன் விளம்ப லுற்றான்.

(இ - ள்.) நீலனைமுதலாகவுடைய நெடியபடைத்தலைவர் பனைமரங்களையும் மலைகளையும் ஏந்திக்கொண்டுநின்றவராய்த் தாக்குதற்கு முயன்ற பொழுதில், மண் விண் என்ற இரண்டையுங் காத்த சக்கரவர்த்திதிருக்குமாரனான ஸ்ரீராமன்,—மேல் நிகழும் போர்வினையைக் கருதி, விலக்கினனாய்(ப் பின்வருமாறு)கூறத்தொடங்கினான்; (எ-று.)---அதனை மேற்கவியிற் காண்க. பி-ம்:--- [1]நீலனே. [2]சமைந்தவேலை. [3]மேலமை, மேலவாம். [4]வினையை. [5]வினவினான், விலங்கினன். (உசகஉ)

உக.—'இந்திரசித்து கடவுட்படையை விடுத்தால் உம்மால் தாங்கமுடியாதாகையால், பின்னிரையில் நிற்க' என்று நீலன்முதலியோர்க்கு ஸ்ரீராமன்கூறல்.

*கடவுளர் [1]படையை நம்மேல் வெய்யவன் றுரந்த [2]காலந்*
*தடையுள [3]வல்ல தாங்குந் [4]தன்மையி [5]ரல்லிர் தாக்கிற்கு*
*இடையுள [6]தெம்பா னல்கிப் [7]பின்னிரை நிற்றி ரீண்டிப்*
*படை[8]யுள தனையு மின்றெம் விற்றொழில் பார்த்தி ரென்றான்.*

(இ - ள்.) 'கொடியவனான இந்திரசித்து தெய்வப்படைகளை நம்மீது விடுத்தபோது, (அவை மரம் மலைமுதலியவற்றால்) தடைப்படுவனவாகா: (நீங்கள் அவற்றைத்)தாங்கும் வல்லமையுடையவரல்லீர்; தாக்குதற்கு(வேண்டியதாக) உள்ளதாகிய இடத்தை இங்கே [முன்னிரையில்] எமக்குக் கொடுத்திட்டுப் பின்வரிசையில் நில்லுங்கள்; இந்த அரக்கப்படையுளதனையும் இன்று எம்முடையவிற்றொழிலைக்காணுங்கள்' என்றுகூறினான், (இராமன்); (எ-று.) —பி-ம்:-[1]படைகள். [2]காலைத், [3]அல்லவாகும், அல்லதாகும், அல்லற்றாங்கும். [4]தானையிர், தன்மையால். [5]வீரத்தானைக்கு. [6]ஓம்பனல்கி. [7]பின்னுற. [8]உளவதனையெம்பி, உளதனையேயின்றெம், உளதனையென்றம்பி, உளதனையுமெம்பி. (உ௪௯௩)

உஉ.—இராமலட்சுமணர் அரக்கர்சேனையோடு பொருதல்.

*அருண்முறை யவரு நின்றா ராண்டகை வீர ராழி*
*உருண்முறை தேரின் மாவி னோடைமால் வரையி [1]னூழி*
*இருண்முறை நிருதர் தம்மே [2]லேவின ரிமைப்பி லோரும்*
*மருண்முறை [3]யெய்திற் றென்பர் சிலைவழங் கசனி மாரி.*

(இ-ள்.) (பின்பு இராமபிரானது)அருளின்முறையிலே [இராமன்சொல்லியபடியே] அந்தவானரரும்(பின்னிரையில்)நின்றார்: ஆண்மைக்குணமுள்ள வீரரான இராமலட்சுமணரும், (பொருமாறுசித்தமாகநின்றவர்களாய்,) சக்கரம் உருளுகின்ற முறைமையினாற்செல்லுகின்ற தேரின்மீதும் குதிரைமீதும் முகபடாமணிந்தபெரிய மலைபோன்ற யானைமீதும் ஊழிக்காலத்து இருளின்தன்மையைக்கொண்ட [மிக்ககருநிறமுள்ளவரான] அரக்கர்மீதும் வில்லானது வெளிவிடுகின்ற இடியேற்றோடுகூடிய(அம்பு)மழையை ஏவினர்:(அதுகண்ட) இமையாக்கண்ணரான தேவர்களுக்கும்மருளும்நிலைமையுண்டாயிற்று;(எ-று.) ---எல்லாமழியும் பிரளயகாலத்து எங்கும் இருள்மயமாக இருக்குமென்க. என்பர்-அசை: என்றுசொல்வார்களெனினுமாம். பி-ம்:—[1]ஊழின். [2]ஏவினான். [3]எய்திநொய்திற்சிலைவழங்கசனிகேட்டார். (உ௪௯௪)

உ௩.—இராமலட்சுமணருடைய வீரத்தொழிலின் சிறப்பு.

*இமைப்பதன் முன்னம் வந்த [1]விராக்கத வெள்ளந் தன்னைக்*
*குமைத்தொழில் புரிந்த வீரர் தனுத்தொழில் [2]குறித்தின் றெம்மால்*
*[3]அமைப்பதென் பிறிதொன் [4]றுண்டோ [5]மேருவென் றமைந்த வில்*
*உமைக்கொரு பாக னெய்த புரங்களி னொருங்கி வீழ்ந்த. [லான்*

(இ - ள்.) இமைப்பதற்குமுன்னமே (பொருமாறு)வந்த வெள்ளக்கணக் கான இராக்கதசேனையை அழிக்குந்தொழிலைப் புரிந்த வீரரான இராமலட்சு மணரின் வில்லின்செயலைக்குறித்து, இப்போது எம்மால் சொல்லத்தக் கது யாதுஉளது? உமாதேவியார்க்கு (த் தன்) வாமபாகத்தைக் கொடுத்தவ னான சிவபிரான் மேருவென்றமைந்தவில்லால்எய்த திரிபுரத்து அசுரச்சேனை போல உயிரொழிந்து வீழ்ந்தன (என இவ்வாறுசொல்லலாமேயன்றி,) வே ெறான்று உளதோ? (எ - று.)—பி-ம்:—[1]இராக்கதர்வேலைதன்னை. [2]குறைந் தின்றம்பால். [3]அமைப்பதின். [4]ஆண்டு, ஈண்டு. [5]மேகம். (உ௯௫)

உ௪.—இராமலக்ஷ்மணரின் போர்த்திறனை இந்திரசித்து காணுதல்.

தேரின்மேற் சிலையி னின்ற விந்திர சித்தென் றோதும்
வீரருள் வீரன் கண்டான் [1]விழுந்தன விழுந்த வென்னும்
பாரின்மே [2]னோக்க லன்றேற் பட்டனர் பட்டா ரென்னும்
போரின்மே [3]னோக்கி லாத விருவரும் பொருத பூசல்.

(இ - ள்.) விழுந்தவை விழுந்தபடியேயுள்ளன என்றுசொல்லுதற்கு இடனான(போர்செய்யும்)பூமியின்மீது (விழுந்துகொண்டிருப்பதைக்) காண்ப தல்லது(இன்னார்) பட்டனர் (இன்னார்) பட்டார் [இறந்தார்] என்று சொல்லு மாறு போரின்மேல்நோக்குச்செல்லாத இருவரும் பொருத போரை, தேரின் மீதுசிலையையூன்றிக்கொண்டுநின்ற இந்திரசித்தென்று சொல்லப்பட்ட வீரர்க் குள் வீரன், கண்டான்; (எ - று.)—இராமலட்சுமணர் அப்போது பொருத பூசலானது போர்க்களத்தில்சேனைகள் உயிர்மடிந்து விழுந்துகொண்டேயிருக் கின்றனஎன இம்மாத்திரஞ் சொல்லலாமே தவிர, இன்னாரிறந்தாரென்று கண்டு குறித்துச் சொல்வதற்கும்முடியாதவாறு மிகவும் உக்கிரமாய் நிகழ்ந் தது: அதனை இந்திரசித்து பொரமுடியாது வில்லையூன்றிக்கொண்டு கண்டா னென்பதாம். பி-ம்:—[1]வீழ்ந்தனர் வீழ்ந்த. [2]நோக்கவன்றேற், நோக்கவன் றே, நோக்கினன்றேற். [3]நோக்கியிந்த, நோக்கிலீதிவ். (உ௯௬)

உரு.—யானைமுதலியன இறந்துவீழ்ந்ததுகண்டு இந்திரசித்து திகைப்படைதல்.

யானைபட் டனவோ வென்று னிரதமிற் றனவோ வென்றான்
மானமா [1]வந்த வெல்லா மறிந்தொழிந் தனவோ வென்றான்
ஏனைவா ளரக்க ரியாரு மில்லையோ வெடுக்க வென்றான்
வானுயர் பிணத்தின் குப்பை மறைத்தலின் மயக்க முற்றான்.

(இ - ள்.) (இந்திரசித்து), யானைகள் இறந்தனவோ என்றான்; இரதங் கள் முறிந்தனவோ என்றான்; மானமுள்ள குதிரைகள் வந்தனஎல்லாம் உயிர் மடிந்துபோயினவோ என்றான்; (இறந்துபோனவர்களை) எடுத்துஅப்பாற் போடுதற்கு மற்றும் வாட்படையையுடைய அரக்கர்யாரும் இல்லையோ என் றான்;வானம்வரையில் ஓங்கிய பிணத்தின்குவியல் (எதிரிகளைத்தெரியவொட் டாமல்) மறைப்பதனால் திகைப்படைந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]ஆனதெல் லாமடிந்தழிந்தன. (உ௯௭)

உசு.—இராமலட்சுமணரின் போர்த்திறமையை இந்திரசித்து வியந்து கூறுதல்.

செய்கின்றா ரிருவர் வெம்போர் சிதைகின்ற சேனை [1]நோக்கின்
ஐயந்தா [2]னில்லா வெள்ள மறுபது மவிக வென்று
வைகின்றா [3]ரல்ல ராகின் வரிசிலை வலத்தான் மாள
எய்கின்றா ரல்ல [4]ரீதெவ் விந்திர சால மென்றான்.

(இ - ள்.) கொடியபோரைச் செய்கின்றவரோ, இருவரே; அழிந்து வீழ்கின்ற சேனையைப் பார்த்தாலோ, சந்தேகமில்லாத அறுபதுவெள்ளமாகும் [சந்தேகமில்லாமல் அறுபது வெள்ளத்திற்குக் குறையாதென்னலாம்]; 'யாவையும் அவிந்திடுக' என்று வைதல்மூலமாகச் சிலசேனைகளைச் சிதைக்கின்றாரேயன்றி சிதைக்காதவராயின் கட்டமைந்தவில்லின் வலத்தினால்(உயிர்)மாளுமாறு எய்கின்றவரல்லர் [எய்து அறுபதுவெள்ளஞ்சேனைகளை இருவர் இவ்வளவு சொற்பகாலத்துக்குட் சிதைத்தல் இயலாதகாரியம் என்றபடி]: இவ்வண்ணம் நிகழ்ந்தது, என்ன இந்திரசாலமோ!என்று கூறினான்,(இந்திரசித்து); (எ - று.)—பி-ம்:—[1]நோக்கி. [2]அறுக, இல்லை. [3]அல்லவாக, அல்லவாகின். [4]ஈதாமிந்திரஞாலம், எந்தவிந்திரசாலம், ஈதோரிந்திரஞாலம். (உசகஅ)

உஎ.—இதுமுதல் மூன்றுகவிகள் - போரின்நிகழ்ச்சியை இந்திரசித்து வியப்புடன் கவனித்துப்பார்த்தலைக் கூறும்.

அம்பின்மா மழையை [1]நோக்கு முதிரத்தி னாற்றை நோக்கும்
உம்பரி [2]னளவுஞ் சென்ற பிணக்குன்றி [3]னுயர்வை நோக்கும்
கொம்[4]பற வுதிர்ந்த முத்தின் குப்பையை நோக்குங் [5]கொன்ற
தும்பியை நோக்கும் [6]வீரர் சுந்தரத் தோளை நோக்கும்.

(இ - ள்.) அம்பினாலியன்ற பெருமழையைப் பார்க்கும்; உதிரத்தினாலியன்ற நதியைப் பார்ப்பான்; வானம்வரையிலோங்கிய பிணமலையின் ஓக்கத்தைப் பார்க்கும்; தந்தம் அற்றதனால் உதிர்ந்த முத்தின்குவியல்களைக் காண்பான்; கொல்லப்பட்ட யானைகளைக் காண்பான்; (இவற்றிற்கெல்லாம் ஏதுவான) வீரர்களின் [இராமலக்ஷ்மணரின்] அழகியதோளைப் பார்ப்பான்; (எ - று.)—பி-ம்:—[1]நோக்கி. [2]அளவினின்ற, அணவிநின்ற,அளவிச்சென்ற. [3]ஒழுக்கை. [4]இறஉற. [5]கொண்ட. [6]வீரன். (உசகக)

இங்கே ஒருசெய்யுள் சிலபிரதியிற் காணப்படுகின்றது வருமாறு:—

தலைகளை நோக்குந் தான்றன் சரங்களை நோக்குந் தன்கைச்
[1]சிலையினை நோக்குஞ் செம்பொற் [2]றேரினை நோக்குஞ் செய்த
கொலைகளை நோக்குங் கொன்ற கொற்றவர் தம்மை நோக்கும்
அலை[3]பொருங் குருதி யென்னு மளக்கரை யமைய நோக்கும்.

இச்செய்யுளிற் கூறிய விஷயங்கள்பலவும், "மலைகளைநோக்கும்" என்ற பாடலில் வந்திருத்தலால், இது, வேறொரிப்பாட்டாயிருக்கலாமென்று தோன்றுகின்றது. பி-ம்:—[1]சிலைகளை. [2]தேர்களை. [3]பெறு.

௨அ. மலைகளை [1]நோக்கு மற்ற வானுறக் [2]குவிந்த வன்கண்
தலைகளை நோக்கும் வீரர் சரங்களை நோக்கு் [3]தாக்கி [க்குஞ்
உலைகொள்வெம் பொறியி னுக்க படைக்கலத் [4]தொழுக்கை நோ
சிலைகளை நோக்கு நாணேற் [5]றிடியினைச் செவியி [6]னேக்கும்.

(இ-ள்.) மலைகளை நோக்குவான்; மற்று வானுற(ஓங்கிக்)குவிந்த கொடிய கண்களைக் கொண்ட அந்தத் தலைகளை நோக்குவான்;(இவ்வாறுகுவிதற்குக் காரணமான)வீரரின்சரங்களின்வல்லமையை யாராய்வான்:மோதி உலைக்களத்துக்கொண்ட நெருப்புப்பொறியினுடனே கீழ்விழுந்துகிடக்கின்ற படைக்கலங்களின் ஒழுங்கைப் பார்ப்பான்; (இங்ஙனமாகுமாறு அம்புமழைபொழிகின்ற இராமலக்ஷ்மணரின்) விற்களைப் பார்ப்பான்; (அன்னார்) நாணேற்றியொலிப்பிக்கின்ற பேரொலியைச் செவியினாற் காண்பான்; (எ - று.)

நோக்குதல், ஐம்பொறிகட்கும் உள்ளசெயலாகும். மலைகள் - ஒடிந்துவீழ்ந்த தேர்க்குலங்க ளென்றேனும், யானைகளென்றேனும், அரக்கவீரரின் உடற்குவையென்றேனுங் கொள்க. உலைக்களத்திற் காய்ச்சி யடிக்கும்போது படைக்கலம் தீப்பொறிகளுடன் இருப்பதுபோலப் போரில்தாக்கும்பொழுது இருக்கு மாதலால், 'தாக்கி உலைகொள்வெம்பொறியி னுக்க படைக்கலம்' என்றார். ஒழுக்கு - ஒழுங்காயிருப்பது. இச்செய்யுள் "ஆர்க்கின்ற" (௩௩) என்ற பாடலின்பின் சிலபிரதியி லுள்ளது. பி-ம்:---[1]நோக்குமர்போல். [2]குவித்த. [3]தாங்கி, தாக்கும். [4]ஒழுங்கை. [5]இடிகளை. [6]ஏற்கும். (௨௬௨0)

௨கூ. ஆயிரந் தேரை யாட லானையை யலங்கன் மாவை
ஆயிரந் தலையை யாழிப் படைகளை [1]யறுத்து மப்பாற்
போயின பகழி வேகத் தன்மையைப் புரிந்து நோக்கும்
பாயும்வெம்[2] பகழிக் கொன் றுங் கணக்கிலாப் பரப்பைப்பார்க்கும்.

(இ - ள்.) ஆயிரந்தேர்களையும், வலிமையுள்ளயானைகளையும், கூத்தாடுந்தன்மையுள்ள குதிரைகளையும், ஆயிரம் (வீரர்)தலைகளையும், அழிக்குந்தன்மை வாய்ந்த படைக்கலங்களையும், அறுத்திட்டும் (அமையாது) அப்பாற்போயினவாகிய அம்புகளின்வேகத்தன்மையையும், விரும்பிப் பார்ப்பான்; பாய்கின்ற வெவ்வியபகழிக்கு ஒருவரம்பும் இல்லாதபரப்பைப் பார்ப்பான்; (எ - று.)

'வீரர்சரங்களைநோக்கும்' என்று சாமானியமாகக் கீழ்க்கவியிற்சொல்லியதை, அச்சரங்கள் யானைமுதல் படைக்கலம் ஈறாகக் கூறியவற்றையழிக்குந் தொழிற்சிறப்பைக் கூறுவதன்நிமித்தம் மீண்டும் எடுத்துக்கூறுகின்றாரென்க. பி-ம்:—[1]அறுக்கும். [2]பகழியென்னுங். (௨௬௨௧)

௩0.---அறுபதுவெள்ளவரக்கரின் படைகளும்
சாம்பராய்ப்போய்விட்டதை இந்திரசித்து நோக்குதல்.

அறுபது [1]வெள்ள மாய வரக்கர்த மாற்றற் [2]கேற்ற
எறிவன [3]வெய்வ பெய்வ வெற்றுறு படைக ளியாவும்
பொறிவனம் வெந்த போலச் [4]சாம்பராய்ப் [5]போய தல்லாற்
செறிவன வில்லா [6]வாற்றைச் சிந்தையாற் றெரிய நோக்கும்.

(இ-ள்.) அறுபதுவெள்ளந்தொகையினரான அரக்கர், தம்வல்லமைக்கு ஏற்றனவான எறிவனவும் எய்வனவும் பொழிவனவும் தாக்குவனவு மான படைக்கலங்கள்யாவும், வண்டுகள்மொய்க்கின்ற வனம் வெந்தது போலச் சாம்பராய்ப் போனதல்லாமல் (தாக்குமாறுவந்து)நெருங்குபவை இல்லாததன்மையை (மனத்தினால்) ஆராய்ந்து பார்க்கலானான்; (எ - று.)-- இச்செய்யுள், சிலபிரதிகளில் "வயிறலைத்து" என்ற அடுத்தபாடலுக்குப்பின் காணப்படுகின்றது. பி:ம்---1வெள்ளத்தாய. 2ஒத்த. 3எய்யப்பெற்றது. 4சாம்ப லாற். 5போவது. 6வார்த்தை. (உ௬உ௨)

௩க.---படுகளநிகழ்ச்சியை இந்திரசித்துப்பார்த்தல்.

வயிறலைத் தோடி வந்து கொழுநர்மேன் மகளிர் மாழ்கிக்
குயிறலத் துக்க வென்னக் குழைகின்ற குழைவை நோக்கும்
எயிறலைத் 1திடிக்கும் பேழ்வாய்த் தலையிலா வாக்கை யீட்டம்
பயிறலைப் பறவை 2பாரிற் படிகிலாப் 3படியைப் பார்க்கும்.

(இ - ள்.) வயிற்றிலடித்துக்கொண்டு ஓடிவந்து தம்கணவர்மீது மகளிர் மனம்வருந்திக் குயில் பூமித்தலத்திலே (இறகொடிந்து) வீழ்ந்துகிடக்கின்றன என்னுமாறு வருந்துகின்ற வருத்தத்தைப் பார்ப்பான்; பல்லைக்கடித்துக் கொண்டு சத்தமிடுகின்ற பிளவுபட்டவாயையுடைய தலைகளைப் பெற்றிராத உடலின்கூட்டம் [கபந்தங்கள்] கூத்தாடுதலாலே (அச்சங்கொண்டு) பறவை கள் பூமியிற் படியமுடியாததன்மையையும் பார்ப்பவனானான், (இந்திரசித்து).

பயிறல் - பழகுதல்: இங்கே கூத்தாடுதல். தங்கணவரிறந்ததுபற்றிப் பூமியில் விழுந்து அழுகின்ற அரக்கியர்க்குக் குரலிற் குயில்உவமை. 'எயிறலைத் திடிக்கும்பேழ்வாய்த்தலை' என்றது-இப்போது கபந்தமாயிருக்கும் யாக்கைக்கு உரிய வீரர்பொருங் காலத்து நிலையைக் கூறியதாம். பி-ம்:---1இடுக்கும். 2ஈட்டம். 3பரப்பை. (உ௬உ௩)

௩உ.---அநுமான் அங்கதன்என்ற இவர் சாரிதிரிந்த திறனை இந்திரசித்து வியத்தல்.

அங்கத ரனந்த கோடி 1யுளரெனு மனும 2னென்பார்க்கு
இங்கினி யுலக 3மெல்லா மிடமிலை போலு 4மென்னும்
5எங்குமிம் மனித ரென்பா 6ரிருவரே கொல்லென் றுன்னுஞ்
சிங்கவே றனைய வீரர் கடுமையைத் 7தெரிகி லாதான்.

(இ - ள்.) ஆண்சிங்கத்தையொத்த வீரரான அங்கதன் அநுமான்என்ற இவர்களின்வேகத்தை யறியமாட்டாதவனான இந்திரசித்து,-'அங்கதரென்பார் பலகோடிக்கணக்கினர் உள்ளார்' என்பான்; 'அநுமான்என்று பேர்கொண்ட வர்க்கு இனி இங்கே உலகமெல்லாமும் செல்லுதற்கு இடம்போதியதாக இல் லைபோலும்'என்பான்;'எல்லாவிடத்துமாகக்காணப்படுகின்றஇந்தமனிதரென் பவர் இருவரேதாமோ?' என்று நினைப்பான்; (எ - று.)

அநுமானும் அங்கதனும்இராமலட்சுமணரைத் தோளிற்சுமந்தவண்ணம் போரிற் சாரி திரிவதனால் எங்கும் அங்கதனும் எங்கும் அநுமானும் எங்கும்

இராமலட்சுமணரும் காணப்பட்டனரென்க. அநுமான் பெருவேகமுள்ள வனுதலால், அவன் சாரிதிரிதற்கு இவ்வுலகமே போதா தென்று கருதி னன், இந்திரசித்து. பி-ம்:---1உளவெனும். 2என்பாற்கு. 3யாவும். 4என் பான்.5எங்குமே.6இருவர்சொல்லென்ன,இருவரேசொல்க.7தெரிக்கிலாதான்.

௩௩.---இதுவரையில்நேராத நிகழ்ச்சிகளை அப்போது இந்திரசித்து காணுதல்.

ஆர்க்கின்ற [1]வமரர் தம்மை நோக்குமாங் கவர்க ளள்ளித்
தூர்க்கின்ற பூவை நோக்குந் துடிக்கின்ற [2]விடத்தோ ளுேக்கும்
பார்க்கின்ற திசைக ளெங்கும் [3]படும்பிணப் பரப்பைப் பார்க்கும்
ஈர்க்கின்ற குருதி [4]யாற்றின் யானையின் பிணத்தை நோக்கும்.

(இ - ள்.) ஆரவாரிக்கின்ற தேவர்களைப் பார்ப்பான்; அங்குள்ள அவர் கள் கையினுல்முகந்து தூர்க்கின்ற பூவை நோக்கும்; (அபசகுனமாகத்) துடிக் கின்ற (தன்) இடத்தோளை நோக்குவான்; பார்க்கின்ற திசைகளெங்கும் விழுந்துகிடக்கும் பிணத்தின் பரப்பைப் பார்க்கும்; குருதியாற்றினுல் ஈர்க்கப் படுகின்ற யானையின்பிணத்தைப்பார்ப்பான்; (எ - று.)---பி-ம்:---1தேவர்தம் மை.2தோளை. 3பெரும். 4யாற்றூடியானையின்,யாற்றேடியானையின். (உ௪உ௫)

௩௪.---அரக்கரிற் பெரும்பாலோரிறந்தும் வானரசேனை இந்திரசித்தினிடமுள்ள அச்சத்தினுல் திரும்பிவராமை.

ஆயிர கோடித் தேரு மரக்கரு மொழிய [1]வல்லார்
மாயிருஞ் சேனை யெல்லா மாய்ந்தன கண்டும் வல்லே
போயின [2]குரக்குத் தானை [3]புகுந்தில தன்றே பொற்றேர்த்
தீயவன் றன்மே லுள்ள [4]பயத்தினுற் [5]கலக்கந் தீரா.

(இ - ள்.) ஆயிரகோடித்தேர்களும் அரக்கரும்தவிர மற்றையோரான அரக்கரின் மிக்கபெருஞ்சேனையெல்லாம் மாய்ந்தவற்றைக் கண்டும்,விரைவாக நிலைகெட்டோடின குரக்குச்சேனை,பொற்றேரைக்கொண்ட தீயவனை இந்திர சித்தினிடமுள்ள பயத்தினுல், கலக்கந்தீராமல் மீண்டுவந்திலது; (எ - று.)--- பி-ம்:---1வல்ல.2 குரங்கின்றூனை.3புகுந்திலவன்றே. 4மனத்தினுற். 5சிறுமை தீரா,சிறுமைதீர்ந்தார். (உ௪உ௬)

௩௫.---இராமலட்சுமணர் அரக்கரிற்பெரும்பாலோரை அழித்திட்டதுகண்டு, அநுமான் தோள்கொட்டி ஆரவாரித்தல்.

தளப்பெருஞ் சேனை [1]வெள்ள மறுபதுந் தலத்த தாக
அளப்பருந் தேரி [2]னுள்ள தாயிரக் கோடி யாகத்
துளக்கமி லாற்றல் வீரர் பொருதபோர்த் தொழிலை நோக்கி
அளப்பருந் தோளைக் கொட்டி யஞ்சனை [3]மதலை யார்த்தான்.

(இ-ள்.)கூட்டமான பெருத்த சேனைவெள்ளம் அறுபதும் தரையில்(உயி ரொழிந்து) விழுந்ததாய்விடவும் (கண்களாற்கண்டு) கணக்கிடமுடியாத தேரி லுள்ள (அரக்கச்)சேனை ஆயிரங்கோடியே எஞ்சியதாய்விடவும்,கலக்கமில்லாத வல்லமையுள்ள வீரரான இராமலட்சுமணர் பொருத போர்த்தொழிலைட்

பார்த்து, அஞ்சனாதேவியின்குமாரனான அநுமான், அளக்கமுடியாத [மிகப் பரந்த] (தன்)தோளைக்கொட்டி ஆரவாரஞ்செய்தான்; (எ - று.)—பி-ம்:—1வெள்ளத்து. 2உள்ள. 3சிங்கம். (உசஉஎ)

கூசு.—அநுமானதுமுழக்கத்தைக் கேட்ட அரக்கரின் நடுக்கம்.

ஆரிடை யனும ஞார்த்த [1]வார்ப்பொலி யசனி கேளாத்
தேரிடை நின்று வீழ்ந்தார் சிலர்சிலர் படைகள் சிந்திப்
பாரிடை [2]யிழிந்து போகப் பாரித்தார் பைம்பொ னிஞ்சி
ஊரிடை [3]நின்று ளாரு முயிரினோ டுதிரங் கான்றார்.

(இ - ள்.) (காணுதற்கு) அரிய [கொடிய] போர்க்களத்தில் அநுமான் ஆரவாரித்த பேரொலியாகிய இடியைச் செவியிலேற்று, சிலஅரக்கர், தேரி டையினின்று(கீழ்)வீழ்ந்திட்டார்; சிலர், (தாம் கையிற்கொண்டிருந்த)படைக் கலங்களைச் சிந்திப் பூமியிலேயிழிந்து (ஊர்க்குத்திரும்பிப்)போய்விடப் பரபரப் புக்கொண்டார்கள்; பசும்பொன்னாலியன்ற மதிளையுடைய ஊரிலிருந்த அரக் கர்களும், உயிருடனே இரத்தத்தைக் கக்கினார்கள் [இரத்தங்கக்கியவண்ணம் உயிரொழிந்தார்கள்]; (எ-று.)—பி-ம்:—1 ஆர்கலி. 2வீழ்ந்துபோகப்பாரித்தார். அழிந்துபோதப்பரித்தனர், இழிந்து வீழ்ந்து பதைத்தனர்.3நின்றுளார்தம்முய ரொடும். (உசஉஅ)

கூஎ.—அஞ்சினவர்களைச்சினந்திட்டு, இந்திரசித்து, இராமலட்சுமணர்மீது வருதல்.

[1]அஞ்சினீர் போமி [2]னின்றே ரார்ப்பொலிக் [3]கழியற் பாலிர்
வெஞ்சமம் விளைப்ப [4]தென்னே [5]நீருமிவ் வீர ரோடு
துஞ்சினிர் போலு [6]மன்றே வென்றவர்ச் [7]சுளித்து நோக்கி
[8]மஞ்சினிற் கரிய மெய்யா னிருவர்மே லொருவன் வந்தான்.

(இ - ள்.) மேகத்திலும் கருமையான வடிவுபடைத்தவனான இந்திர சித்து,-'இன்று ஒரு ஆரவாரவொலிக்கு மனமழிவுபடுதலைக்கொண்ட தன்மை யுடையவர்களாய் அஞ்சினவர்களே! (நீங்கள் திரும்பி ஊர்க்கே, போய்விடுங் கள்; (இப்படிப்பட்ட நீவிர்) கொடும்போரை விளைப்பதென்பது என்ன உள் ளது? [இப்படியஞ்சுபவர்களாற் கடியபோர் செய்யமுடியாதென்றபடி]; நீங் களும் (உயிர்போய்த் தரையில் வீழ்ந்துகிடக்கின்ற)இந்தவீரரோடு இறந்தவரே போற் பயனற்றவராகவேயுள்ளீரன்றோ?' என்று (கூறி அஞ்சிய) அவ்வரக்க வீரரை (முகஞ்)சுளித்துப்பார்த்துவிட்டு, இராமலட்சுமணர் இருவரின்மீது தானொருவனாகவே வந்தான்; (எ - று.)—பி-ம்:—1அஞ்சினிர், அஞ்சினர் 2என்றான். 3இழியற்பாலிர். 4என்னே.5நீவிரும்,நீரிரு.6என்றென்றவர்முகஞ் அன்றேயென்றவர். 7சுளிய, சுளிந்து. 8மஞ்சினும். (உசஉகூ

கூஅ.—ஆயிரகோடித்தேரும் ரோஷங்கொண்டு போரப்புகுதல்.

அக்கணத் தார்த்து மண்டி யாயிர கோடித் தேரும்
புக்கன நேமிப் பாட்டிற் கிழிந்தன புவன மென்னத்
[1]திக்கணி நின்ற [2]யானை சிரம்பொதி ரெறியப் [3]பாரின்
உக்கன விசும்பின் மீன்க ளுதிர்ந்திடத் தேவ ருட்க.

(இ - ள்.) அந்தக்கணத்தில்தானே ஆரவாரஞ்செய்து நெருங்கி ஆயிர கோடித்தேரும் சக்கரம்ஓடுவதனாற் புவனம்கிழிவனவாய்விடுமென்று (யாவரும்) கருதுமாறு (பேரதிர்ச்சியுண்டாகப் போர்க்களத்திற்) புக்கன: (அது கண்டு), ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்கள் உதிர்ந்திடவும், தேவர்கள் அஞ்சவும், திக்குக்கு அலங்காரமாகநின்ற திக்கஜங்களெல்லாம்(தமது)சிரம் நடுக்கலெடுத்துப் பூமியில் விழுந்திட்டன; (எ - று.)—பி-ம்:—[1]திக்கிடைநின்ற, திக்கிடநின்ற. [2]ஆனை. [3]சிந்தி. (உ௬௩௰)

வேறு.

௩௯—இதுமுதல் ஐந்து கவிகள்-ஒருதொடர்: இலட்சுமணன் தானே இந்திரசித்துடன் பொருது அவன்தலையை வீழ்த்துவேனென்று, காரணத்தோடு சபதங் கூறுதலைத் தெரிவிக்கும்.

மாற்றமொன் றிளையவன் [1]வளைவிற் செங்கரத்து
[2]ஏற்றினன் வணங்கிநின் றியம்பு வானிகல்
[3]ஆற்றின னரவுகொண் [4]டசைப்ப வாரமர்
தோற்றன னென்று[5]கொண் டுலகஞ் சொல்லுமால்.

(இ - ள்.) (நாணேற்றிட்டதனால்) வளைந்துள்ள வில்லைத் (தன்) செவ்விய கையிலேந்தியவனாய் (ஸ்ரீராமனை) வணங்கிநின்று, இளையபெருமாள், ஒரு வார்த்தையை(ப் பின்வருமாறு)கூறலானான்:-வல்லமையை(மிகுதியாகக்)காட்டியவனாகிய இந்திரசித்து, நாகாஸ்திரத்தைக்கொண்டு கட்டியதனால் அரிய போரில் (நான்) தோற்றேனென்று உலகஞ் சொல்லும்; (எ - று.)—'இயம்புவான்' என்பதை, இச்செய்யுளின் பின்னீரடிமுதல் நான்கவைச்செய்யுள்களால் கூறுவர். என்றுகொண்டு, கொண்டு-அசை. பி-ம்:—[1]மழையில், மழையின். [2]ஏற்றினை. [3]ஆற்றலனரவுகொண்டு, ஆற்றலனாற்றல்கொண்டு. [4]இசைப்ப. [5]எனை.

௪௦. காக்கவுங் [1]கிற்றிலன் காத னண்பரைப்
போக்கவுங் [1]கிற்றில னொருவன் போய்ப்பிணி
ஆக்கவுங் [1]கிற்றிலன் [2]வென்றி யாருயிர்
நீக்கவுங் [1]கிற்றில [3]னென்று நின்றதால்.

(இ-ள்.) அன்புள்ள நண்பரை(யாதொருதீங்கும் வரவொட்டாமற்) காக்கவும் வல்லமையற்றவனாய், (அவர்கட்குநேர்ந்த பாசக்கட்டைப்) போக்கவும் வல்லமையற்றவனானதோடு, ஒருவனாகப்போய்(த் தீங்குபுரிந்த அந்த இந்திரசித்துக்கு) வெற்றிபொருந்திய அரியஉயிரை நீக்கவல்லமையற்றவனானதோடு (அவனுக்குப்) பிணிப்பையுண்டாக்கவும் வல்லமையற்றவனாகி விட்டேனென்று (வசைச்சொல்லொன்று உலகத்தில்) நின்றிட்டது; (எ - று.)—பி-ம்:—[1]கற்றிலன். [2]அமரின். [3]ஒன்று. (உ௬௩௨)

௪௧. இந்திரன் பகையெனு மிவனை யென்சரம்
அந்தரத் தருந்தலை [1]யறுத்தி லாதெனின்
வெந்தொழிற் [2]செய்கையன் விருந்து மாய்நெடு
மைந்தரிற் கடையெனப் [3]படுவன் வாழியாய்.

(இ - ள்.) வாழ்ச்சிபெறுபவனானவனே! இந்திரன்பகைவனென்கின்ற இவனுடைய அரியதலையை என்சரம் அந்தரத்தில் அறுத்துத்தள்ளாதெனின், கொடுந்தொழிலைச் செய்கின்றவனுக்கு [யமனுக்கு] விருந்தாகி [இறந்துபோய்]ப் பெருமைபெற்ற மனிதரிற் (சேராது) கடைப்பட்டவனென்னப்படுபவனாவேன்; (எ - று.)—பி - ம்:—1அறுக்கிலாதெனின், அறுக்கலாதெனின். 2செய்கையர்விருந்துமாய், செவ்வையின் முந்துமேல். 3வாழுவன், திரிவன்.

சஉ. நின்னுடை 1முன்னரியான் நெறியி னீர்மையான்
தன்னுடைச் சிரத்தையென் சரத்திற் றள்ளினாற்
பொன்னுடை 2வினைகழற் பொலம்பொற் றோளினாய்
என்னுடை யடிமையு 3மிசையிற் றாமரோ.

(இ - ள்.) பொன்னாலியன்றபூண்ட வீரக்கழலுடனே அழகிய பொன்னணிகளையணிந்த தோள்களையுடையவனே! உன்னுடைய(கண்) முன்பாக யான் நன்னெறியிற் செல்லுந்தன்மையில்லாதவனை இந்திரசித்தினுடைய தலையை என்அம்பினால் தள்ளினால்தான்,என்னுடையஅடிமையும்புகழ்பொருந்தியதாகும்; (எ-று.)—அரோ-ஈற்றசை. பி-ம்:---1முன்னரின்,...நீர்மையான், முன்னரிந்...நீர்மையான், நெடும்பகை மனையினேர்ந்தவன். 2பொலங், வரி· 3இயைபிற்றாமரோ. (உசுஙச)

சங. 1நெடியன வுலகெலாங் கண்டு நிற்கவென்
அடிசர மிவன்றலை யறுத்தி லாதெனின்
முடிய2வொன் 3றுணர்த்துவ னுனக்கு நான்முயல்
அடிமையின் 4பயனிகந் தறுவ தாகென்றான்.

(இ - ள்.) பரந்தனவாகிய உலகமெல்லாங் கண்டுநிற்கையில்தானே என்னுடைய அடவல்ல சரம் இவ்விந்திரசித்தின்தலையை அறுக்காததானால், முடிவாக (நான் உன்னிடத்து) ஒன்றுசொல்லுவேன்: உனக்கு நான் முயல்கின்ற அடிமைத்தொழிலின் பயன் (என்னைவிட்டு) நீங்கிப்போய்விடுவதாக என்று கூறிமுடித்தான் (இலக்குமணன்); (எ - று.)---பி-ம்:---1கடிதினினுலகெலாங் கண்டு நிற்பவென்-சுடுசுரமிவன்றலை துணிக்கலாவெனின். 2நின்று. 3உணர்த்தியென். 4பயனிழந்தறுகவாழியாய், பயனிழந்தாவனழியாய். (உசுஙடு)

சச.—அதுகேட்டுத் தேவர்முதலியோர் மகிழ்ச்சியினால் ஆரவாரித்தல்.

1வல்லவ னவ்வுரை வழங்குங் 2காலையின்
3அல்லனீங் கினமென வமர ரார்த்தனர்
எல்லையி 4லுலகமு மெவையு மார்த்தன
நல்லற 5மார்த்தது நமனு மார்த்தனன்.

(இ - ள்.) வல்லமையுள்ளவனாகிய இலக்குமணன் அவ்வாறான பேச்சைச் சொல்லுஞ் சமயத்தில்,---தேவர்கள் (இனி நம்பகைஞனான இந்திரசித்து ஒழிவது திண்ணமென்ற உறுதியான கருத்தினால்), 'துன்பம் நீங்கினோம்' என்று (மகிழ்ச்சிகொண்டு) ஆரவாரித்தார்கள்: எல்லையில்லாத உலகமும் மற்றுமுள்ளபிராணிகளும் ஆரவாரித்தன; நல்லதருமத்திற்குஉரிய தே

வந்தையும் (இனி உலகத்தில் தருமம் தடையில்லாமல் நடைபெறுமென்ற கருத்தினால்) ஆர்த்தது; யமனும் (இதுவரையிற்கிட்டுதற்கு அரியனவான அரக்கருயிர்களைக் கொள்ளை கொள்ளலாமென்று) ஆரவாரித்தான்; (எ-று.)--- பி-ம்:-[1]வல்லையினிவ்வுரை. [2]எல்லையுள், போழ்தினில், மாலையின். [3]அல்லலை நீங்கிய. [4]உலகங்களெவையும், உலகமும்யாவும். [5]ஆர்த்தன. (உசாஙகூ)

சரு.---இராமபிரான் இலட்சுமணன்திறத்தைக் கொண்டாடுதல்.

முறுவல்வாண் முகத்தினன் முளரிக் கண்ணனும்
[1]அறிவைநீ [2]யடுவலென் றமைதி யாமெனின்
இறுதியுங் [3]காவலு மியற்று மீசரும்
வெறுவியர் வேறினி [4]விளைவ தி யாதென்றான்.

(இ - ள்.) தாமரைக்கண்ணனான ஸ்ரீராமனும்,-- புன்சிரிப்புத்தோன்றுகின்ற ஒளிபொருந்திய முகத்தையுடையவனாய்,'நீ (இன்னாரைச்) சங்கரிப்பேனென்று (மனத்தினால்) கருதினாயாயின், (அதற்கு ஏற்றஉபாயத்தையறிய) அறிவுபடைத்துள்ளாய்; சங்காரமும் காத்தலும்என்றதொழிலைச் செய்கின்ற உருத்திரமூர்த்தி விஷ்ணுமூர்த்திஎன்ற இருதலைவரும் (உன்திறமைக்கு முன்னே) ஒன்றுமில்லாதவர்;இனி வேறே விளையக்கூடியது என்னஉளது?" என்று (இலட்சுமணன் திறமையைப்) புகழ்ந்துகூறினான்; (எ - று.)---பி-ம்:--- [1]அறிவனீ. அறிவநீ, அறியநீ. [2]செய்தியென்று, செய்வனென்று, அடுவையென்று. [3]காலமும். [4]விளைவ. (உசாஙஎ)

சகூ.---ஸ்ரீராமனைத்தொழுது அரக்கரைச் சங்காரஞ்செய்வேனென்று இலட்சுமணனெழுதல்.

[1]சொல்லிது [2]கேட்டடி தொழுது சுற்றிய
பல்பெருந் தேரொடு [3]மரக்கர் பண்ணையைக்
[4]கொல்வனிங் கன்னது [5]காண்டி கொல்லெனா
ஒல்லையி லெழுந்தன னுவகை யுள்ளத்தான்.

(இ - ள்.) இச்சொல்லைக்கேட்டுத் திருவடிகளை வணங்கி, 'சூழ்ந்துள்ள பல்பெருந்தேரோடும் அரக்கர்கூட்டத்தைக் கொன்றிடுவேன்: இப்போது அத்தன்மையைக் காண்பாய்' என்றுசொல்லி, மகிழ்ச்சிநிரம்பிய மனத்தையுடையவனாய், விரைந்தெழுந்தான்; (எ-று.)---கொல்-அசை.பி-ம்:---[1]சொல்லது. [2]கேட்டவன், கேட்டபின். [3]அரக்கன். [4]கொல்லுவனீங்கிது. [5]காண்டிகோ.

சஎ.---அங்கதனாரவாரிப்பும் ஸ்ரீராமபிரானது சங்கநாதமும்.

அங்கத னார்த்தன னசனி யேறெனா
[1]மங்குனின் றதிர்ந்தன வயவன் றேர்[2]வருஞ்
சிங்கமு நடுங்குறத் திருவி னாயகன்
சங்கமொன் [3]றொலித்தது கடலுந் தள்ளுற.

(இ - ள்.) வீரனான இந்திரசித்தின் தேரிற்கட்டிய சிங்கங்களும் நடுங்கும்படி,மேகத்தினின்று அதிர்ந்தனவான பேரிடிகள்போல(ப் பேரொலிதோன்ற) அங்கதன் ஆரவாரித்தான்; கடலொலியும் பின்னிடும்படி ஸ்ரீராமனுடைய சங்கமொன்று ஒலித்தது; (எ - று.)

மங்குல்-மேகம். சிங்கம் நடுக்குறவும் கடல்தள்ளுறவும் சங்கமொன்று ஒலித்தது என்று கூட்டியுரைத்தலு மொன்று. இலட்சுமணனுக்கு உற்சாக மூட்ட ஸ்ரீராமன் சங்கத்தை யூதின னென்க. திருவினாயகன் என்றதொடர்க்கு-வெற்றித்திருவிற்கு உரியதலைவனான இளையபெருமாள் என்றலும், "லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்ந:" என்றபடி கைங்கர்யஸ்ரீக்கு உரியதலைவனான இலட்சுமணனென்றலும் அமையும். பி-ம்:—[1]மங்கிநின்றுதிர்ந்துகவயவற். [2]புனை. [3]ஒலித்தனன், ஊதினான். (உசங்க)

சஅ.—அரக்கர் பலபடைக்கலங்களை வீசுதல்.

எழு[1]மழுச் சக்கர மீட்டி தோமரம்
[2]முழுமுரட் டண்டுவேன் முசுண்டி மூவிலை
கழு[3]வயிற் கப்பணங் [4]கவண்கல் [5]கன்னகம்
விழுமழைக் கிரட்டிவிட் [6]டரக்கர் வீசினார்.

(இ - ள்.) எழுக்கள் மழுக்கள் சக்கரம் ஈட்டி தோமரம் பெருவலிமை கொண்ட தண்டு வேல் முசுண்டி மூவிலையைக்கொண்ட முனையோடுகூடிய சூலம் கழு கூரியகப்பணம் கவண்கல் கன்னகம் ஆகியஇவற்றை (வானத்தினின்று)விழுகின்ற மழைக்கு இருமடங்காக அரக்கர் விட்டெறிந்தனர்;(எ-று.)—மூவிலை-பண்புத்தொகையன்மொழி. பி-ம்:—[1]மரச். [2]முழுமுதல். [3]வயக். [4]கனைகற். [5]பின்னகம். [6]அரக்கன்வீசினான். (உசசO)

சகூ.—அரக்கரெறிந்தபடைக்கலம் யாவையும் இலக்குமணனால் துணிந்து விழுந்திடுதல்.

மீனெலாம் விண்ணினின் றொருங்கு [1]வீழ்ந்தென
வானெலா மண்ணெலா மறைய [2]வந்தன
[3]தானெலாந் [4]துணிந்துபோய்த் தகர்ந்து [5]சாய்ந்தன
வேனிலா னனையவன் பகழி வெம்மையால்.

(இ-ள்.) மன்மதனையொத்த கட்டழகையுடையவனான இலட்சுமணனது அம்புகளின் கொடுமையால், நட்சத்திரங்களெல்லாம் வானத்தினின்று ஒருங்குவீழ்வனபோல வான்முழுதும் மண்முழுதும் மறையும்படி வந்தனவான எல்லாப்படைக்கலங்களும், துண்டுபட்டுத் தகர்ந்து சாய்ந்தன;(எ-று.)--தான்-அசை.பி-ம்:—[1]வீழ்ந்தன. [2]வந்தெனத். [3]கான். [4]தணந்து. [5]காந்தின.(உசசக)

நூO.—அரக்கச்சேனைமுறிந்தவகையை நான்குபாடல்கள் கூறும்.

ஆயிரந் தேரொரு தொடையி னச்[1]சிறும்
பாய்பரிக் குலம்படும் பாகர் பொன்றுவர்
நாயகர் நெடுந்தலை [2]துமியு [3]நாமறத்
தீயெழும் புகையெழு [4]முலகந் [5]தீய்ந்தற.

(இ - ள்.) ஒருதொடையில் ஆயிரந்தேர் அச்சிற்றுவிழும்; பாயுந்தன்மையுள்ள குதிரைக்கூட்டம் இறந்துபடும்; பாகரும் இறந்துபடுவர்; அச்சம் அறும்படி தலைவர்களின் நெடியசிரங்கள் அறுபடும்; உலகம்தீய்ந்துவிடும்படி (அந்த அம்பின்விசையிலே) தீயெழும்: புகையும் எழும்; (எ-று.)—நாமறன்ன்

பதற்கு-நாமமும் [பெயரும்]ஒழியும்படி என்று உரைத்தலும் ஒன்று. பி-ம்:—[1]அறும். [2]துணியும். [3]நாகமுஞ். [4]உலகும். [5]தீயுமால். (உசசுஉ)

ருக. அடி[1]யறுந் தேர்முர ணாழி[2] யச்[1]சிறும்
வடிநெடுஞ் சிலை[1]யறும் [3]வாசி மார்[1]பறுங்
கொடி[1]யறுங் குடை[1]யறுங் கொற்ற வீரர்தம்
முடி[1]யறு முர[1]சறு [4]முழுதுஞ் சிந்துமால்.

(இ - ள்.) தேர் அடிப்பகுதி யற்றிடும்: (அன்றியும்), வலிமையுடைய சக்கரம் அச்சுடனே அற்றிடும்; தேர்நெடுத்து(த் தேரில்வைக்கப்பட்டுள்ள) நெடிய வில் அற்றிடும்;(தேரிற்பூட்டிய)குதிரை மார்பு அற்றிடும்;கொடி அற்றிடும்; குடை அற்றிடும்; வெற்றிபொருந்தியவீரருடையமுடிகள் அற்றிடும்: (வெற்றிக்குஅறிகுறியாக அடித்தற்கு வைத்துள்ள) முரசம் அற்றிடும்; மற்று முள்ளனவும் வீழ்ந்திடும்;(எ-று.)—சொற்பொருட்பின்வருநிலையணி.பி-ம்:—[1]இறும். [2]அக்கு. [3]கவசம். [4]முகிலும். (உசசுங)

ருஉ. [1]இன்னதோ ருறுப்பிவை யினைய தேர்பரி
மன்னவ ரிவ[2]ரிவர் படைஞர் மற்றுளோர்
என்னவோர் தன்மையுந் தெரிந்த தில்லையாற்
சின்ன[3]பின் னங்களாய் மயங்கிச் [4]சிந்தலால்.

(இ - ள்.) (எல்லாமும்) சின்னபின்னங்களாய் (ஒன்றோடொன்று) கலந்து சிந்தியதனால், 'இது இன்னஉறுப்பு: இவை இப்படிப்பட்டனவான தேர்களும் பரிகளும்:இவர் மன்னவர்: இவர் படைஞரும் மற்றுமுள்ளாரும்'என்று ஓர்தன்மையும் தெரிந்ததில்லை; (எ - று.)—பி-ம்:—[1]இன்னவோர், இன்னதோல். [2]உவர். [3]சின்னங்களாய். [4]சிந்துமால். (உசசுச)

ருங. [1]தந்தையர் தேரிடைத் தனயர் வன்றலை
வந்தன தாதையர் வயிர வான்சிரஞ்
சிந்தின [2]காதலர் தேரிற் சின்னமாய்
அந்தரத் தம்பொடு மற்றெழுந்தன.

(இ - ள்.) துண்டமாக அற்று அம்புடனே ஆகாயத்துஎழுந்தனவாகிப் புதல்வரின் வலியதலைகள், தந்தைமார்களின் தேர்நடுவேவந்துவிழுந்தன; தாதையரின் உறுதிபொருந்திய பெரியசிரங்கள், புத்திரருடையதேரிற் சிந்தின; (எ-று.)—'சின்னமாயந்தரத்தம்பொடு மற்றெழுந்தன'என்றதொடர்-முன்வாக்கியத்திலும், பின்வாக்கியத்திலும் இயையும். பி-ம்:—[1]தந்தையை. [2]கரதலஞ் சிரந்தலத்திடை, காதலர்க்கியைந்ததேரிடை. (உசசுரு)

ருச.—இதுமுதல் ஐந்துகவிகள் - படுகள வருணனை.
செம்பெருங் குருதியிற் றிகழ்ந்த செங்கண்மீன்
கொம்பொடும் பரவையிற் றிரியுங் [1]கொட்பெனத்
[2]தும்பையின் றொடையலார் தடக்கை தூணிவாங்கு
அம்பொடுந் துணிந்தன [3]சிலையொ டற்றன.

(இ - ள்.) தூணியினின்றுவாங்கின அம்பொடுதுணிந்தனவும் (பிடித்த) வில்லுடனே துண்டுபட்டனவுமாகித் தும்பைப்பூவினாற்றொடுத்தமாலையைப்

புனைந்த பெரியகைகள், செங்கண்களைப்படைத்த மீன்கள் கொம்புடனே கடலிலே திரிகின்றதன்மைக்கு ஒப்பாகச் செந்நிறப்பெருங்குருதி வெள்ளத்திடையே விளங்கின; (எ-று.)—தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1கொட்பன. 2தும்பியந்தொடைமலர், தும்பையுந்தொடைமலர். 3நிலையொடு. (உசசசு)

ருரு. தடிவன கொடுஞ்சரந் தள்ளத் தள்ளுற
மடிவன கொடிகளுங் குடையு மற்றவும்
1வெடிபடு கடலினிகர் குருதி வெள்ளத்திற்
படிவன 2வொத்தன பறவைப் 3பன்மைய.

(இ - ள்.) வெட்டிவீழ்த்துந்தன்மையனவாகிய கொடுஞ்சரம் மிகுதியாகவெட்டித்தள்ளுதலால் அழிந்துவீழ்ந்தனவாகிய கொடிகளும் குடைகளும் மற்றுமுள்ளனவும்,—அச்சம்பொருந்திய கடலையொத்த குருதிவெள்ளத்திலே படிவனவாகிய பலவகைப்பட்டனவான பறவைகளை யொத்தன; (எ - று.)—தள்ளத்தள்ளுற-ஒருபொருட்பன்மொழி. வெடி-அச்சம். தற்குறிப்பேற்றவணி. பி-ம்.—1முடிவறுபெரும்பிணக்கணத்தின்மொய்த்தன, முடிவறுபிணப்பெருங்களத்தின்மொய்த்தன. 2போன்றன. 3பான்மையே, பான்மைய. (உசசஎ)

வேறு.

ருசு. சிந்து ரங்களின் பருமமும் பகழியுந் தேருங்
குந்து வன்னெடுஞ் சிலைமுதற் படைகளுங் கொடியும்
இந்த னங்களா யிறந்தவர் விழிக்கன 1லிலங்க
வெந்த வெம்பிணம் 2விழுங்கின 3கழுதுகள் விரும்பி.

(இ - ள்.) யானைகளின் கழுத்திடுதவிசும், அம்புகளும் தேரும் (அம்பு) ஊன்றுகின்ற வலிய நெடிய சிலை முதலிய படைக்கலங்களும் கொடிகளும் விறகாக (அமைய), இறந்தவர்களின் விழியினின்று தோன்றுகின்ற நெருப்புச் சொலித்துக்கொண்டிருத்தலால் வெந்திட்ட கொடியபிணங்களைப் பேய்கள் விரும்பினவாய் உட்கொண்டன; (எ-று.)—போர்ப்பரிகரங்களைக் காணுமிடத்து வீரர்க்கு விழியினின்று நெருப்புப்பொறி பறக்குமென்பார் 'சிந்துரங்களின்பருமமும்... இந்தனங்களாய்' என்றார். கழுதுகள் பிணந்தின்னலைக் கூறியது. பி-ம்:—1பிறங்க. 2அருந்தின. 3கழுகினம். (உசசஅ)

ருஎ. சில்வி 1யூடறச் சிதறின சிலசில 2கோத்த
வல்லி யூடற 3மறிந்தன புரவிகள் 4மறையப்
புல்லி மண்ணிடைப் புரண்டன சிலசில போரா
ளில்லி சாரதி யொடும்படத் திரிந்தன வெறிய.

(இ - ள்.) (எதிராளிஎறிந்ததனால்), சிலதேர்கள், சக்கரங்கள் இடையில் முறியச் சிதறின; சிலதேர்கள் (தம்மிற்) பிணைத்த குசைக்கயிறுகள் இடையில் அற்றுப்போக, மண்ணினிடம் மறையுமாறு தழுவிப் புரண்டனவாய்க் குதிரைகள் உயிர்மடங்கிவிழப்பெற்றன; சில சிலதேர்கள், போரைச்செய்கின்றவில்லாளிசாரதியுடனே இறந்திட வெறிச்செனத்திரிவனவாயின; (எ - று.)—இது போர்க்களத்து அழிந்ததேர்களின்வருணனை கூறியது.

வெறிய - சூனியமாக. பி - ம்:---[1]ஊடுற. [2]சேர்ந்த. [3]மறைந்தன. [4]மறியப், மடியப். (உ௲௬௯)

௫அ. அலங்கு பன்மணிக் [1]கதிரன குருதியி [2]னழுந்தி
விலங்கு [3]செஞ்சுடர் விடுவன [4]வளவின்றி மிடைந்த
குலங்கொள் வெய்யவ [5]ரமர்க்களத் தீயிடைக் [6]குளித்த
இலங்கை மாநகர் [7]மாளிகை நிகர்த்தன விரதம்.

(இ - ள்.) விட்டுவிட்டுப்பிரகாசிக்கின்ற பல்வகைமணிகளினொளியை யுடையனவும் குருதியிலழுந்தி விளங்குகின்ற செந்நிறக்காந்தியை வெளி விடுவனவுமாகி, அளவின்றிநெருங்கிய இரதங்கள்,---கூட்டமாகவுள்ளகொடிய அரக்கர்களின் போர்க்களத்துத்தோன்றிய தீயினிடையிலே அமிழ்ந்த இலங் கைமாநகரின் மாளிகையை யொத்தன; (எ - று.)---இதுவும், அழிந்ததேர் களின் வருணனை கூறியதே. குருதியினிடையழுந்திய தேர்கள், தீயினி டையிலே குளித்த இலங்கைமாநகரின் மணிமாளிகையைப்போலுமென்றார்: தற்குறிப்பேற்றவுவமையணி. பி-ம்:---[1]கதிரினம். [2]அழுந்த. [3]வெஞ்சுடர், வெஞ்சரம். [4]வெளியின்றி. [5]மறுகிடத். [6]கொதித்தார். [7]மாளிகைக்கொத்தன.

௫௯.---ஸ்ரீராமனும் அம்புதூவ, இந்திரசித்துத் தானுந்தேருமாகத் தனிப்பட்டவனாதல்.

ஆன காலையி னிராமனு மயின்முகப் பகழி
சோனை மாரியிற் சொரிந்தன னனுமனைத் தூண்டி
வான மானங்கண் [1]மறிந்தெனத் தேரெலா [2]மடியத்
தானுந் தேருமே யாயின னிராவணன் றனயன்.

(இ-ள்.) அப்போது இராமனும் அநுமானை (இந்திரசித்தின் சமீபத்திற் செல்லத்)தூண்டிக் கூரியமுனையையுடைய அம்பை விடாப்பெருமழைபோற் சொரிந்தான்: (அப்போது) வானத்திலுள்ளவிமானங்கள் ஒடிந்துவிழுந்தாற் போலத் தேரெல்லாம் மடிய, இராவணகுமாரனான இந்திரசித்து, தானும் (தன்) தேருமாகத் தனிப்பட்டவ னாயினன்; (எ - று.)---பி-ம்:---[1]மடிந்தெ னத். [2]மடிந்த. (உ௲௭௧)

௬0,---இந்திரசித்து ஒன்றுகூறத்தொடங்குதல்.

பல்வி லங்கொடு புரவிகள் பூண்டதேர்ப் பரவை
வல்[1]வி லங்கல்போ [2]லரக்கர்தங் குழாத்தொடு [3]மடிய
வில்வி லங்கிய வீரரை நோக்கினன் வெகுண்டான்
சொல்[4]வி லங்கலன் சொல்லின னிராவணன் றோன்றல்.

(இ - ள்.) பலமிருகங்களுடனே குதிரைகள்பூட்டிய தேர்த்தொகுதிகள் வலிய மலைகள்போல அரக்கர்கூட்டத்தோடு அழிந்திட, (அப்போது) விற் றொழிலிற் பின்னிட்ட வீரரையெல்லாம் நோக்கி வெகுண்டவனாய், இராவ ணன் குமாரனான இந்திரசித்து,---(தன்னிலையினின்று) பின்வாங்காதவனாய், (இராமலக்ஷ்மணரைநோக்கிப் பின்வருமாறு ஒரு) சொல்லைக் கூறுபவனா னான்; (எ - று.)

தேர்மிகப்பலவாதலால் 'தேர்ப்பரவை' என்றார். தேர்கள்ஒடிந்து மலைகள் கிடப்பனபோல இருந்தனவென்க. வில்விலங்கியவீரர் - விற்றொழிலில் விளங்கிய வீரரென்று இராமலக்ஷ்மணரைக் குறிக்குமென்றுகொள்ளுதல், பொருந்தும். விலங்கிய = விளங்கிய. பி-ம்:—1விலங்கு. 2அரக்கரைக்குலத்தொடும். 3அவிய. 4விலங்கில, விலங்கல்கள். (உசுருஉ)

சுக.—இந்திரசித்து நீவிர் எவ்வண்ணம்போரப்போகின்றீரென்று இராமலக்ஷ்மணரை வினவுதல்.

1இருவி 2ரென்னொடு பொருதிரோ வன்றெனி னேற்ற
3ஒருவிர் வந்4தமர் தருதிரோ 5வன்றியும் படையோடும்
பொருது பொன்றுதல் புரிதிரோ வுறுவது புகலும்
6தருவ னின்றுமக் 7கேற்றுள தொன்றெனச் 8சலித்தான்.

(இ - ள்.) (நீங்கள்) இருவீரும் என்னுடன் பொருகின்றீரோ? அல்லாவிடின்,(எனக்கு)எற்றஒருவீர் வந்துபோர்செய்கின்றீரோ? அன்றி, உம்படையோடும் போர்செய்து இறத்தற்கு உடன்பட்டிருக்கின்றீரோ?(நீங்கள்) செய்யப்போவதைச் சொல்லுங்கள்: இன்று உமக்கு ஏற்றுள்ளதான ஒருபோரைத் தருவன் என்று கோபங்கொண்டுரைத்தான், (இந்திரசித்து); (எ - று.)

இருவருமே ஒருங்கேபோர்செய்யப்போகின்றீரோ? அன்றித் தனித்தனியே பொரப்போகின்றீரோ? அல்லாக்கால், சேனையுடன்வந்து பொருது இறக்கப்போகின்றீரோ? என்று வினவினான்: நீவிர்சேனையோடு வந்து பொருதாலும் இறப்பது திண்ணமென்பதை வலியுறுத்தற்கு 'அன்றியும்படையோடு பொருது பொன்றுதல்புரிதிரோ' என்றான். பி-ம்:—1இருவர். 2என்னுடன். 3ஒருவர். 4உயிர். 5உம்படையோடும். 6தருவல். 7ஒன்றுளது, உற்றுளது. 8சமைந்தான். (உசுருங)

சுஉ.—இலக்குமணன் உன்னைக்கொல்லுமாறு சபதங்கூறியுள்ளேனென்று மறுமொழிகூறுதல்.

வாளிற் றிண்1சிலைத் தொழிலினின் மல்லினின் மற்றை
ஆளுற் றெண்ணிய படைக்கல மெவற்றினு மமரிற்
கோளுற் றுன்னொடு 2குறித்தமர் செய்துயிர் 3கொள்வான்
சூளுற் றேனிது சரதமென் றிலக்குவன் சொன்னான்.

(இ - ள்.) வாளினாலும் திண்ணிய வில்தொழிலினாலும் (உடல்) வலிமையினாலும் மற்றும் ஆளுதல்பொருந்தி யெண்ணப்பட்டுள்ள படைக்கலமெல்லாவற்றினாலும் போர்க்களத்திலே வலிமைபொருந்தி உன்னோடு நேர்நின்று பொருது உன்னுயிரைக்கொள்ளும்படி சபதஞ்செய்துள்ளேன்; இது திண்ணம்என்று இலட்சுமணன் மறுமொழி சொன்னான்; (எ - று.)—பி-ம்:—1சிலைமல்லினின்றோளினின்மற்றை. 2குறித்தது. 3கொள்ளச். (உசுருச)

சுங.—இந்திரசித்து இலட்சுமணனைநோக்கி, உன்னைக்கொன்றுபின் இராமனைக்கொல்வேனெனல்.

முன்பி றந்தவுன் 1றமையனை முறைதவிர்த் துனக்குப்
பின்பி றந்தவ னுக்குவன் பின்பிறந் தோயை

முன்பி றந்தவ னுக்குவ னிதுமுடி யேனேல்
என்பி றந்தத னற்பய னிராவணற் கென்றான்.

(இ - ள்.) முன்னேபிறந்த உன்தமையனை முறைமைதவிர்த்து உனக்குப் பின்பு இறந்தவனுக்குவேன்: பின்பிறந்தஉன்னை (அவனுக்கு) முன்புஇறந்தவனுக்குவேன்; இச்செயலைச் செய்துமுடியேனானல், (நான்) இராவணற்கு (மகனாக) ப் பிறந்ததனல் யாது பயன்? என்று (இந்திரசித்து) கூறினான்; (எ-று.)

நான் இராவணனுக்கு மகனாய்ப்பிறந்ததற்குப் பயன் அவன்கருத்தை முற்றுவிப்பதே யாதலாலும், அவன்கருத்து ராமலக்ஷ்மணரைக் கொல்வதே யாதலாலும், முதலிற் போருக்கு வருகின்ற உன்னை முடித்திட்டுப் பிறகு உன்தமையனையும் முடிப்பே னென்று இந்திரசித்து கூறினா னென்க. பின்னேபிறந்தவனை முன்னே பிறந்தவனாகவும், முன்னேபிறந்தவனைப் பின்னே பிறந்தவனாகவும்ஆக்குவே னென ஒருபொருளுந் தோன்ற நின்ற நயங் காண்க. வயசினால்மூத்தவர் முன்னேயிறத்தலும், இளையவர் மூத்தவற்குப் பின்இறத்தலும் அக்காலத்துமுறையாதலால், 'முறைதவிர்த்து' எனப்பட்டது. பி-ம்:—1 தம்முனை, நும்முனை. (உசநிரு)

சஎ.—பின்னும் இந்திரசித்து இலக்குவனைநோக்கி,
உன்னைக்கொல்வேனெனல்.

இலக்கு வன்னெனும் பெயருனக் கியைவதே [1]யென்ன
இலக்கு வன்கணைக் காக்குவ னிதுபுகுந் திடையே
விலக்கு வன்னென விடையவன் [2]விலக்கினும் [3]வில்லால்
[4]விலக்கு வன்னிது காணுமுன் றமையனும் விழியால்.
மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இலக்குவனென்னும்பெயர் உனக்குத்தக்கதேயென்று (யாவரும்) கருதுமாறு, (உன்னை என்னுடைய) வலிய கணைக்கு இலக்கு ஆக்குவேன்:(விலக்குவேனென்றுசொல்லி இப்போர்க்களத்திடையேபுகுந்து)விலங்கின்வடிவத்தையெடுத்த அந்தத்திருமால்போலவே (எங்கட்குவரமீந்த) விருஷபத்தை வாகனமாகவுடைய உருத்திரமூர்த்தியே விலக்கினாலும் (அவனுடைய வீரத்தையும்) வில்லால்விலக்குவேன்: இந்த(என்) வலிமையை உன் தமையனும் கண்களாற் காண்பான்; (எ - று.)

இலக்குவனென்று உனக்குவழங்கும்பெயர் செவ்வனே பொருள்புலப்படாமலுள்ளது: இப்போது என்சரத்திற்கு உன்னை இலக்குஆக்கி, "இலக்குவன் [இந்திரசித்தின்கணைக்கு இலக்குஆனவன்]" என்று யாவரும் உன் பெயர்ப்பொருளை யுணர்ந்து உனக்கு இப்பெயர் தக்கதே யென்னுமாறு செய்வேன்: யார் உனக்குப் பக்கபலமாக இருப்பினும், அவர்கள்வீரத்தையும் குலைப்பே னென்றனன் இந்திரசித்தென்க. மூன்றாமடியில், விலங்குஉவன் என-மச்சம் கூர்மம் வராகம் சிங்கம்என்ற விலங்குகளினுருவமெடுத்த அத் திருமால்போல எனப் பொருள்காண்க. இச்செய்யுள், முன்னிரண்டடி ஒரு வகையாகவும் பின்னிரண்டடிஒருவகையாகவும்நின்ற யமகமென்னுஞ்சொல்

லணி பெற்றது. விழியால் என்றது-இதுவரையில் அரக்கர் கொலையுண்ணக் கண்டதன்றி, அரக்கரால் தாம் கொலையுண்ணக் காணாத கண் என்றுகுறிப்பித்தற்கு. லக்ஷ்மணன் என்றவடசொல்லின்திரிபுஆகி, இராமகைங்கரியமாகிய இலட்சுமியையுடையவனென்று பொருள்படுகிற 'இலக்குவன்' என்றசொல்லுக்கு-கணைக்கு இலக்குஆகுபவன் என்று சமத்காரமாக வேறுஒருபொருள் கற்பித்துக் கூறியது-பிரிநிலைநவிற்சியணி: இது-வடமொழியில், நிருக்தியலங்கார மெனப்படும். பி-ம்:—[1]என்னே, என்றான், என்னா, என்னில். [2]விலங்கினும். [3]வீரம். [4]கலக்குவன்னிது...கண்ணால், விலக்குவனின்னே...விழியால்.

சூரு.—இந்திரசித்து வானரப்படைகளையே யொழிப்பேனெனல்.

[1]அறுப தாகிய [2]வெள்ளத்தி னரக்கரை யம்பால்
இறுவ [3]தாக்கிய விரண்டு[4]வில் வினருங்கண் டிரங்க
மறுவ தாக்கிய வெழுபது வெள்ளமு மாள
[5]வெறுவி தாக்குவ [6]னுலகினைக் கணத்திடு னோர் வில்லால்.

(இ-ள்.) அறுபதுவெள்ளமாகவுள்ள அரக்கரை அம்பினால் இற்றுப்போமாறுசெய்த இரண்டுவில்வீரராகிய நீங்கள் கண்டு இரங்க, (அரக்கர்க்கு) மறுவைஉண்டாக்கிய எழுபதுவெள்ளம்(குரக்குச்)சேனைகளும் மாளுமாறு ஓர் வில்லினால் கணப்பொழுதிலேஉலகை வெறிச்சென்றுள்ளதாகஆக்குவேன்;(எ-று.)—மறுவது, அது-பகுதிப்பொருள்விகுதி. பி-ம்:—[1]அறுபதாக்கிய. [2]அரக்கர் தம்வெள்ளத்தை. [3]ஆகிய. [4]வில்லீருங். [5]வெறுவது. [6]உலகையிக், உலகினீற். ()

சூசூ.—இந்திரசித்து 'உங்கள்இரத்தத்தைக்கொண்டு இறந்ததம்பிமார்க்கும் சிற்றப்பனுக்கும் நீர்க்கடன்செய்வேன்'எனல்.

கும்ப கன்னனென் [1]றொருவனீ ரம்பிடைக் குறைத்த
தம்பி [2]யல்லனு னிராவணன் மகனொரு தமியேன்
எம்பி மாருக்கு மென்சிறு தாதைக்கு [3]மிருவிர்
செம்பு னீர்[4]கொடு கடன்[5]கழிப் பே[6]னென்று [7]தீர்ந்தான்.

(இ - ள்.) நீர் அம்பினாற்குறைத்த கும்பகர்ணனென்று பேர்பூண்ட ஒருவனாகிய (இராவணன்) தம்பியல்லன் நான்: (நான்), இராவணன்மகனாவேன்: ஒப்பற்றுத் தனிப்பட்டுள்ளவன்:(இதற்குமுன்னே இறந்த) என்தம்பிமாரான அட்சகுமாரன் அதிகாயன் என்பவர்க்கும் என்சிறியதந்தை கும்பகர்ணனுக்கும் உங்கள்இருவரின் செந்நிறமுள்ள இரத்தத்தைக்கொண்டு புனற்கடனைக் கழிப்பேன் என்றுசொல்லி (பேசுவதினின்று) நீங்கினான்; (எ - று.)—பி-ம்:—[1]இராமன் றமரிடைக்கொன்ற, ஒருவனீரமரிடைக்கொன்ற. [2]அல்லயானிராவணனொருமகன். [3]இருவர். [4]கொண்டு. [5]கழிப்பான். [6]இன்று, எனத். [7]தீர்ந்தேன், தெரித்தான். (உசருஅ)

சூஎ.—இலட்சுமணன், உனக்குஉன்தந்தையும், உன்தந்தைமுதலியோர்க்கு விபீஷணனும் அந்திமக்கடன் செய்வாரெனல்.

அரக்க ரென்பதோர் பெயர்[1]படைத் தவர்க்கெலா [2]மடுத்த
புரக்கு [3]நன்கடன் செயவுளன் வீடணன் போந்தான்

கரக்கு [4]நுந்தைக்கு நீசெயக் கடவன கடன்கள்
இரக்க முற் [5]றனைக் கவன்செயு மென்றன [6]னிளையோன்.

(இ-ள்.) அரக்கரென்றுஓர்பேர்பெற்றவர்கட்கெல்லாம்எற்றநும்(ஆன்மா) ஈடேறுதற்குஉரியதுமான சிறந்த(அந்திமக்)கடனைச்செய்ய விபீஷணன் இங்குவந்துள்ளான்; இறக்கப்போகின்ற உன் தந்தைக்கு நீ செய்யவேண்டியனவாகிய அந்திமக்கடமைகளை (நீ இப்போதே இறந்துவிடப்போகின்றாயாதலால்) மனத்துயரங்கொண்டு உனக்கு அத்தந்தை செய்வானென்று கூறினன், இளையபெருமாள்; (எ - று.)—பி - ம்:—[1]படைத்தீர்க்கெலாம், படைத்துயிர்க்கெலாம். [2]அடுத்துப், அடையப். [3]மந்திரஞ்செயவுளன், நன்கடன்செய்யவும். [4]உந்தைக்கும். [5]உமக்கிவன். [6]இளங்கோ, இளங்கோன். (உ௯௫௯)

சூஅ.—இதுமுதல் நான்கு கவிகள்-இந்திரசித்தின் கடும்போரைக்கூறும்.

ஆன காலையி னயிலெயிற் றரக்கனெஞ் [1]சழன்றான்
[2]வானும் வையமுந் திசைகளு [3]மியாவையு மறையப்
[4]பானல் வேலையைப் பருகுவ சுடர்முகப் பகழி
சோனை மாரியி னிருமடி மும்மடி [5]துரந்தான்.

(இ-ள்.) அப்போது கூரிய கோரப்பற்களையுடைய இந்திரசித்து,---மனங்கொதித்தவனாய், வானமும் வையகமும் திசைகளும் யாவையும் மறையுமாறு, சிறந்த பாற்கடல்போன்ற குரக்குச்சேனையைப் பருகுவனவான சுடரைமுகத்திலேகொண்ட பகழியை, பெருமழைபொழியும் மேகத்தினும் இருமடங்கு மூன்றுமடங்கு (மிகுதியாகப்) பொழிந்தான்; (எ-று.)—பால் நல் வேலை எனப் பிரிக்க. பி-ம்:—[1]அழன்று. [2]வானம். [3]பரவையும். [4]பானுவேலையை, பானவேலையை. [5]சொரிந்தான். (உ௯௬௦)

சூகூ. அங்கதன் றன்மே லாயிர மவற்றினுக் கிரட்டி
வெங்கண் மாருதி மேனிமேல் வேறுள [1]வீரச்
சிங்க மன்னவ ராக்கைமே லுலப்பில செலுத்தி
எங்கும் வெங்கணை யாக்கின னிராவணன் சிறுவன்.

(இ - ள்.) அங்கதன்மேல் ஆயிரம்அம்புகளும், கொடுங்கண்ணையுடைய அநுமான் உடலின்மீது அவற்றிற்கு இரட்டி [ஈராயிரம்]அம்புகளும், வேறேயுள்ள வீரச்சிங்கத்தையொத்தவருடைய உடலின்மீது கணக்கில்லாதஅம்புகளும் செலுத்தி, இராவணகுமாரன்,—எங்கும் கொடியஅம்புமயமாக்கினன்; (எ - று.)—பி - ம்:—[1]வீரர். (உ௯௬௧)

எ௦. இளைய மைந்தன்மே லிராமன்மே [1]லிராவணி [2]யிகலி
விளையும் வன்றொழில் வானர வீரர்மேன் [3]மெய்யுற்று
[4]உளையும் வெஞ்சரஞ் சொரிந்தன னாழிகை [5]யொன்று
[6]வளையு [7]மண்டிலப் பிறையென [8]நின்றது வரிவில்.

(இ - ள்.) இராவணகுமாரனான இந்திரசித்து,---இளையபெருமாள்மேலும் இராமன்மேலும் மாறுபட்டுத்தோன்றுகின்ற வலியதொழிலையுடைய வானரவீரர்மேலும் உடம்பிற்பொருந்தி வருந்துதற்குக்காரணமான கொடிய

அம்புகளைப் பொழிந்தான்: (அந்த இந்திரசித்தினுடைய) கட்டமைந்த வில்லானது வளைந்துதோன்றுகின்ற மண்டிலமாகவுள்ள பிறைச்சந்திரன்போல ஒரு நாழிகைப்போது நின்றது; (எ-று.)—பி-ம்:—1அநுமன்மேல். 2இகலில். 3மெய்யிற்று. 4உளைய. 5ஒன்றில். 6வளைய. 7மண்டலம். 8நின்றதவ். (உஅகூஉ)

எக பச்சி மத்தினு முகத்தினு 1மருங்கினும் பகழி
உச்சி முற்றிய வெய்யவன் கதிரென வுமிழுக்
2கச்ச முற்றவன் 3கைத்துணைக் கடுமையைக் காணு
அச்ச முற்றனர் கண்புதைத் 4தடங்கின ரமரர்.

(இ - ள்.) உச்சியில்வந்துள்ள முற்றிய வெம்மையையுடையனுன சூரியனுடைய கிரணங்கள்போல [மிகக்கொடிய] அம்புகளைப் பின்புறத்திலும் முகத்திலும் பக்கங்களிலும் சிந்தக் கச்சங்கட்டிக்கொண்டுள்ளவனுன இந்திரசித்தினுடைய இருகைகளின்வேகத்தைக் கண்டு, அமரரும், அச்சமடைந்தவராய், (தமது இமையாக்) கண்களைமூடிக்கொண்டு அடங்கிக்கிடந்தனர்; (எ - று.)---தொடர்புயர்வுநவிற்சியணி. பி-ம்:---1மருங்கினுமுகத்தினும். 2கச்சுமுற்றவன். 3கைத்தொழிற், தகத்தொழிற். 4ஒடுங்கினர். (உஅகூங)

எஉ.—இலக்குவன் இந்திரசித்தின்அம்புகளைப் போக்குதல்.

மெய்யிற் பட்டன படப்படா தனவெலாம் விலக்கித்
தெய்வப் 1பொற்கணைக் கத்துணைக் கத்துணை செலுத்தி
ஐயற் காங்கிளங் கோளரி 2யறிவிலா னறைந்த
பொய்யிற் போம்படி 3யாக்கினன் கடிதினிற் புக்கான்.

(இ - ள்.) இராமபிரானுக்கு இளைய சிங்கம்போன்ற இலக்குமணன்,—விரைவிற் (போர்செய்யத்) தொடங்கினவனுகி, அப்போது தன்னுடம்பிற்பட்டவை படப்படாதனவெல்லாவற்றையும்விலக்கி, (எதிராளியெறிந்த)தெய்வத்தன்மையுள்ள பொற்கணைகட்குஅவ்வளவுக்குஅவ்வளவு(தெய்வக்கணைகளைச்) செலுத்தி,அறிவிலாதவன்கூறிய பொய்யைப்போலப்போம்படிசெய்திட்டான்.

அறிவுள்ளபெரியோன் சிலசமயங்களிலே கூறும் பொய் நன்மைபயப்பதாய் மெய்போலப் பாராட்டப்படு மாதலால்,'அறிவிலானறைந்தபொய்யிற் போம்படி யாக்கினன்'என்றூர். பி-ம்:—1போர். 2அறமிலானறைந்த, அறமிலான்மறைத்த. 3போக்கினன். (உஅகூச)

எங.—இனி ஆறுகவிகள்-இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் கடும்போர் நிகழ்கையில், இறுதியாக இந்திரசித்தின்தேரை இலக்குவன் சிதைத்துக் கவசத்தைமறித்தமையைத் தெரிவிக்கும்.

1பிறகி னின்றனன் பெருந்தகை யிளவலைப் பிரியான்
அறனி 2தன்றென வரக்கன்மேற் சரந்3தொடுத் தருளான்
இறவு 4கண்டில ரிருவரு மொருவரை யொருவர்
விறகின் வெந்தன விசும்பிடைச் 5செறிந்தன விசிகம்.

(இ-ள்.) பெருமைக்குணமுள்ளவனுன ஸ்ரீராமன்,'இதுஅறமன்று'என்றகாரணத்தினல் இந்திரசித்தின்மீது அம்புபொழியாதவனுக, இளையபெரு

மாளைப் பிரியாதவனுய்ப் பின்புறத்தில்தானே நின்முன்; இந்திரசித்தும் இல க்குவனும் ஒருவரையொருவர் (வெற்றியினுல்)மேம்படுதலேக் கண்டாரில்லே; (அவர்கள்சொரிந்த)அம்புகள்,விறகுபோல எரிந்தனவாய் ஆகாயத்தினிடத்து நெருங்கின; (எ-று.)--ஒருத்தன்மீது இருவர் அம்புதொடுத்தல் அறனன்றென ஸ்ரீராமன் சரத்தைத் தொடுக்காதவனுனன். பி-ம்:--[1]பிறகு. [2]அல்லவென்று, என்றவ். [3]தூரந்து. [4]கண்டிலன். [5]சென்றன. (உசசரு)

எச. மா[1]டெ ரிந்தெழுந் திருவர்தங் [2]கணைகளும் வழங்கக்
காடெ ரிந்தன கனவரை யெரிந்தன கனக
வீடெ ரிந்தன வேலேக ளெரிந்தன [3]விலங்கல்
[4]ஊடெ ரிந்தன வூழியி னெரிந்தன வுலகம்.

(இ-ள்) இருவரும் தங்கணைகளை விடும்போது,—(அவை),—பக்கங்களி லெல்லாம் சொலித்துக்கொண்டு எழுதலாலே காடுகள் எரிந்தன; பருத்த மலேகள் எரிந்தன; பொன்மயமான (இலங்காநகரத்து) மாளிகைகள் எரிந் தன: கடல்களெரிந்தன; அங்கேயுள்ள விலங்கினங்கள் எரிந்தன; யுகாந்த காலத்திற்போல உலகமும் எரிந்தன; (எ - று.)

அம்புகளின் கொடுமையை விளக்கவந்த உயர் வுநவிற்சியணி. விலங்கல், அல் - சாரியை: விலங்கல் - திரிகூடமலேயுமாம். பி-ம்:—[1]எரிந்தெரிந்து, எரிந்தன. [2]சரங்களின்மயங்கிக், சரங்களும்வழங்கக். [3]விரிஞ்சன், மேகம். [4]ஊர். (உசசுசு)

எரு. படங்கொள் பாம்பணே துறந்தவற் கிளேயவன் பகழி
விடங்கொள் வெள்ளத்தின் [1]மேலன வருவன விலக்கி
இடங்க [2]ரேறன வெறுழ்வலி யரக்கன்றே [3]ரிழுக்கும்
மடங்க லேயிரு நூற்றையுங் கூற்றின்வாய் மடுத்தான்:

(இ - ள்.) படத்தைக்கொண்டுள்ள ஆதிசேஷனுகிற படுக்கையைத் துறந்து ஸ்ரீராமனுகத் திருவவதரித்தவனுக்கு இளேயவனுன இலக்குமணன் வெள்ளத்தினும் மேம்பட்டனவாய் வருவனவாகிய விடத்தைக்கொண்ட அம்புகளே விலக்கி, பெருவலியைப்படைத்த அரக்கனதுதேருடனே [அத் தேரைச்சிதைத்து] (அதனே) இழுத்துச்செல்வனவான ஆண்முதலேபோன்ற சிங்கங்கள் ஆயிரத்தையும் யமன்வாயில் உட்புகச்செய்தான்; (எ - று.)— 'இடங்கரேறன' என்பதையும் அரக்கனுக்குக்கூட்டினும், 'எறுழ்வலி' என்ற அடைமொழியையும் மடங்கலுக்குக் கூட்டினுமாம். மேல் "தேரழிந்திட" என வருவதனுல் இங்குத் தேரையுஞ் சிதைத்ததாகப் பொருள்கொள்ளப்பட் டது. பி-ம்:—[1]மேலவன்விடுவன. [2]எறனுன். [3]ஈர்க்கும். (உசசுஎ)

எசு. தே[1]ர ழிந்திடச் சேமத்தேர் பிறிதிலன் செறிந்த
ஊர ழிந்திடத் தனிநின்ற கதிரவ னுைத்தான்
பார ழிந்தது [2]புரமெனும் படியவான் பகையின்
சூர ழிந்திடத் [3]தூரந்தனன் சுடுசரஞ் [4]சொரிந்தான்.

(இ - ள்.) (இந்திரசித்து தன்) தேர் அழிந்திட ஏறிச்செல்வதற்கு சேமத் தேரும் வேறு இல்லாதவனுய், நெருங்கிய ஊர்கோள் அழிந்திடப்பெற்றுத்

தனித்துநின்ற சூரியனை யொத்தான்; (அப்போது இந்திரசித்து) சுடுகின்ற சரத்தைச் சொரிந்தவனாய்ப் பெரும்பகையின் சூரத்தன்மையழிந்திட(அதனை) ஓட்டினான்: (அதனால், அப்போது) திரிபுரமென்னுந் தன்மையதாய், (வானரர்களிருந்த)போர்க்களமே யழிந்தது; (எ - று.)—பி-ம்:—1அழிந்துகச் 2சூரங் கெனும்பெயரெனப்பகைத்தார், புரமெனும்...பகையை. 3சொரிந்தநற். 4துரந்தான். (௨௬௮)

௭௭. அற்ற 1தேர்மிசை நின்றுபோ ரங்கத னலங்கற்
கொற்றத் தோளினு மிலக்குவன் புயத்தினுங் 2குளித்து
மூற்ற வெண்ணிலா முரட்கணை 3தூர்த்தனன் முரட்போர்
ஒற்றைச் சங்கெடுத் தூதினா னுலகெலா முலைய.

(இ - ள்.) வலியபோரிலே,(இந்திரசித்து),—சிதைந்திட்ட தேரின்மீதே நின்று, போரில்வல்ல அங்கதனுடைய மாலையையணிந்த வெற்றித்தோளின் மீதும் இலக்குவனுடையபுயத்தின்மீதும் உட்புக்குநிரம்பும்படி வெள்ளிய பிறைச்சந்திரன்போன்ற வலிய கணைகளை[அர்த்தசந்திரபாணங்களை] நிரம்பச் செலுத்தி, உலகெலாம்வருந்தும்படி (தனது) ஒற்றைச்சங்கையெடுத்து ஊதினான்; (எ-று.)—பி-ம்:—1தேரின்மேல். 2குளிக்க. 3துரந்தனன். (௨௬௯)

௭௮. சங்க 1மூதிய தசமுகன் றனிமகன் றரித்த
2கங்க மார்பெருங் கவசமு 3மிற்றுடன் கழல
வெங்கொ டுங்கணை யையிரண் டுருமென வீசிச்
சிங்கவே 4றன்ன விலக்குவன் சிலையைநா ணெறிந்தான்.

(இ - ள்.) ஆண்சிங்கத்தையொத்தவனான இலக்குவன்,—சங்கத்தை யெடுத்தூதிய இராவணனுடைய ஒப்பற்றமைந்தன் தரித்திருந்த பொன்னினா லியன்ற பெரிய கவசமும் இற்றுப்போய் உடனே கழன்றுவிடும்படி வெவ் வியகொடிய கணை பத்து இடிபோல(த் தாக்குமாறு) வீசி(த் தன்) சிலையின் நாணைத் தெறித்தான்; (எ-று.)—கங்கம்-ஒருதேசம்:அங்குஉண்டாகும் பொன் னுக்கு ஆகுபெயர்: வடமொழியில் காங்கேயம்என்ற பெயர் பொன்னுக்கு அமைந்திருத்தலும் காண்க. பி-ம்:—1ஊதினன். 2தங்கடற்பெருங், கங்கணத் தொடு. 3மூட்டறக். 4என்ன. (௨௭௦)

௭௯.—இலக்குமணனது போரைக்கண்ட இராமன் ஆரவாரஞ் செய்யுமாறு கட்டளையிட, வானரர் ஆர்த்தல்.

கண்ட கார்1முகில் வண்ணனுங் கமலக்கண் கலுழத்
துண்ட வெண்பிறை நில2வென மூறுவலுந் தோன்ற
அண்ட முண்டதன் வாயினா லார்மினென் றருள
விண்ட தண்டமென் றலைந்திட வார்த்தனர் வீரர்.

(இ - ள்.) (அதனைக்)கண்ட கரியமுகில்போன்ற திருநிறத்தையுடைய வனான ஸ்ரீராமனும், கமலம்போன்ற கண்கள்(மகிழ்ச்சி)நீர்பெருக, வெள்ளிய துண்டமான பிறைச்சந்திரனிடத்தினின்று நிலவுதோன்றுவதுபோலப் புன் சிரிப்புந் தோன்ற, அண்டமுண்ட தன்வாயினாலே 'ஆரவாரஞ்செய்யுங்கள்

என்று அருளிச்செய்ய, வானரவீரர் அண்டம் விண்டிட்டதென்று வருந்தும் படி பேராரவாரஞ் செய்தனர்; (எ-று.)—பி-ம்:—1மழை. 2எனும். (உ௬௭௧)

அ௦.—இந்திரசித்து ஆகாயத்தில் மறைய, ஸ்ரீராமனிடத்து இலக்குமணன் பிரமாத்திரம் தொடுப்பேனெனல்.

கண்ணி மைப்பதன் 1முன்புபோய் 2விசும்பிடைக் கரந்தான்
அண்ணல் மற்றவ னுக்கைகண் 3டறிகில னாகிப்
பண்ண வற்கிவன் பிழைக்குமேற் படுக்கு4நம் படையை
எண்ண மற்றிலே யயன்படை தொடுப்பனென் றிசைத்தான்.

(இ - ள்.) (அப்போது இந்திரசித்து) கண்ணிமைப்பதற்கு முன்னம் போய் வானத்தில் மறைந்திட்டான்; பெருமையிற்சிறந்தவனான இலட்சுமணன், அவனுடலைக் காணாதவனாகி, 'இவன் பிழைத்திடுவானானால் நம்சேனையை யழிப்பான்: (ஆதலால்), வேறுஆலோசனையின்றிப் பிரமாஸ்திரத்தை இவன்மீதுதொடுப்பேன்' என்று ஸ்ரீராமனுக்கு கூறினான்; (எ - று.)—பண்ணவன்-தேவன்: இங்கு, ஸ்ரீராமன். பி-ம்:—1முன்னம்போய்.2விண்ணிடைக். 3அறிந்திலனாகிப், அறிந்திலனாழிப். 4வெம். (உ௬௭௨)

அக.—ஸ்ரீராமன்வேண்டாஎன்ன, இலக்குமணன் பிரமாஸ்திரம் விடுவதைத் தவிர்தல்.

1ஆன்ற வன்னது 2புகறலு 3மறவனீ முனிந்தால்
ஈன்ற வந்தணன் படைக்கலந் 4தொடுக்கவிவ் வுலகம்
மூன்றை யுஞ்சுடு மொருவனுன் 5முடிகல தென்றான்
சான்ற வன்னது தவிர்ந்தன னுணர்வுடைத் தம்பி.

(இ - ள்.) மிக்கோனாகிய இலட்சுமணன் (பிரமாஸ்திரத்தைத் தொடுப்பேனென்ற) அந்த வார்த்தையைச் சொன்னவுடனே, தருமசொரூபியாகிய ஸ்ரீராமன்,—(இலக்குவனைநோக்கி)'உலகங்களையெல்லாம் படைத்த கடவுளாகியபிரமனுடைய படைக்கலத்தை [பிரமாஸ்திரத்தை]த் தொடுக்குமாறு நீ முனிந்தாயானால்,(அது)இவ்வுலகமூன்றையுஞ் சுடும்; ஒருவனால்(விலக்க)முடிவதன்று; (ஆகையால், அது செய்யற்க)' என்றான்; அறிவுடையதம்பி, அச்செயலை [பிரமாஸ்திரத்தை விடுவதை]த் தவிர்ந்திட்டான்; (எ-று.)---அறவன் என்பதை நீ என்பதற்கு அடையாக்கினுமாம். பி-ம்:---1ஆன்றவன்னவை. 2பகர்தலும். 3அறனிலைவழாதாய்,மறனிலைவாழாய்.4தொடுக்கிலிவ். 5முடியுமோ வென்னச், முடிக்குறுவென்றாற். (உ௬௭௩)

அஉ.---இந்திரசித்து இவர்களெண்ணத்தையறிந்து தானேமுந்தி பிரமாஸ்திரம் விடுவதாக எண்ணிச்செல்லல்.

மறைந்து போய்நின்ற 1வஞ்சனு மவருடை மனத்தை
அறிந்து தெய்வவான் படைக்கலந் தொடுப்பதற் கமைந்தான்
பிறிந்து 2போவதே கருமமிப் பொழுதெனப் பெயர்ந்தான்
3செறிந்த தேவர்க ளாவலங் கொட்டினர் சிரித்தார்.

(இ - ள்.) மறைந்துபோய்நின்ற வஞ்சனைக்குணமுள்ள இந்திரசித்தும், அவ்விராமலட்சுமணருடைய கருத்தையறிந்து, தெய்வத்தன்மையுள்ள

சிறந்தபடைக்கலத்தை [பிரமாஸ்திரத்தை]த் தொடுப்பதற்கு எண்ணினவனாய், (அதற்குவேண்டிய சடங்குகளைச்செய்யும்பொருட்டு (இவ்விடத்தை) விட்டு (அப்பாற்) போவதே இப்போது செய்யத்தக்கதெனக்கருதி அவ்விடத்தைவிட்டுச் சென்றான்; (வானத்து)நெருங்கிய தேவர் ஆவலங்கொட்டிச்சிரித்தார்கள்; (எ - று.)

இந்திரசித்தின் கருத்தை யாராயாது தோற்றோடினானெனக் கருதித் தேவர்கள் ஆவலங்கொட்டியார்த்தன ரென்க. பி-ம்:—1அரக்கனும். 2போயதே. 3செறிந்து. (உ௯எச)

அங.---வானரர் ஆரவாரித்தல்.

செஞ்1ச ரத்தொடு 2சேண்கதிர் 3விசும்பின்மேற் 4செல்லா
5மஞ்சன் மாமழை 6போயின தாமென மாற
அஞ்சி னான் 7மறைந் தானகன் றானென வார்த்தார்
வெஞ்சி னந்தரு 8களிப்பினர் வானர வீரர்.

(இ-ள்.) செந்நிறச்சரத்தோடுகூடிவெகுதூரத்திற் சூரியன்சஞ்சரிக்கின்ற விசும்பின்மேற் சென்று, (இராவண) குமாரனான இந்திரசித்து கறுத்த [நீர் கொண்ட] மேகம் போயதுபோல் (அக்களத்தினின்று)நீங்க,வானரவீரர்‘(இந்திரசித்து போர்க்கு)அஞ்சி மறைந்து அகன்றான்’என்று கருதிக் கொடுங்கோபத்தின்மேலெழுந்த களிப்பையுடையவராகி ஆரவாரித்தார்கள்; (எ - று.)—பி-ம்:-1சரங்கொடு. 2செம்மழை, சேண்மழை,சினமழை.3விசும்பிடைச். 4செல்வான், செல்ல. 5மஞ்சின்மாமழை. 6ஓவியதாமென,ஓவியமாமென. 7அகன்றானென்பதறிந்தனர், அகன்றானெனவறிந்தனர். 8தோளினர். (உ௯எரு)

அச.---முன்தோற்றோடிய வானரசேனைவந்து ஆரவாரிக்க, இந்திரசித்து இலங்கை சேர்தல்.

உடைந்த வானரச் சேனையு மோதநீ ருவரி
அடைந்த தாமென வந்திரைத் தார்த்தெழுந் 1தாடித்
தொடர்ந்து சென்றது 2தோற்றவன் யாவர்க்குந் தோன்றாக்
கடைந்த 3வேலைபோற் கலங்குறு 4மிலங்கையைக் கலந்தான்.

(இ - ள்.) தோற்ற வானரச்சேனையும் வெள்ளநீர் கடலை அடைந்ததாமென்னுமாறு வந்து உரக்கஆரவாரித்து எழுந்து ஆடியவண்ணம் தொடர்ச்சியாகச்சென்றது; தோற்றவனாகிய இந்திரசித்து, யாவர்க்கும் கட்புலனாகாமல் கடையப்பட்டபாற்கடல்போற் கலக்கமுற்ற இலங்கையைச் சேர்ந்தான்; (எ - று.)—பி-ம்:—1ஓடித். 2கொற்றமன்னிளவற்குத்தோற்றான், தோற்றவன் யாவர்க்குந்தோற்றான். 3வேலையிற். 4இலங்கையிற் கரந்தான். (உ௯எசு)

அரு.---இந்திரசித்தின் மனோபாவத்தை இராமலட்சுமணருணராமல் அவன் திறத்தை மறத்தல்.

எற்கொ ளான்முகன் படைக்கல மிவரென்மேல் 1விடாமுன்
முற்கொள் வேனெனு முயற்சியன் மறைமுறை மொழிந்த

சொற்கொள் வேள்விபோய்த் தொடங்குவா[2]னமைந்தவன் றுணிவை
மற்கொ டோளவ ருணர்ந்தில [3]ரவன்றிற மறந்தார்.

(இ - ள்.) 'ஒளியைக்கொண்ட பிரமன்படைக்கலத்தை இவர் என்மேல் விடுவதற்குமுன்னம் (நான்) முற்படுவேன்' என்னும்முயற்சியுடையவனாய், வேதம்முறையாகமொழிந்த வேதமந்திரங்களைக்கொண்ட வேள்வியைத் தொடங்கும்பொருட்டுப் போய் முயல்கின்ற இந்திரசித்தின் மனத்துணிவை வலிமைகொண்டதோளையுடைய இராமலக்ஷ்மணர் அறியாதவராய் அவன் செயலைப்பற்றி (யாதாயாமலே) மறந்திட்டார்; (எ-று.)—பி-ம்:—[1]விடுமுன். [2]துணிந்தவன். [3]அமர்த்தொழில். (உசஎஎ)

அசு.—இராமலக்ஷ்மணர் போர்க்கோலங் கலைந்து நிற்றலும் வானவர் பூமழைபொழிதலும்.

அனும னங்கதன் றோளினின் றிழிந்தன ராகித்
தனுவும் வெங்கணைப் புட்டிலுங் கவசமுந் தடக்கைக்கு
இனிய கோதையுந் துறந்தன [1]ரிருந்தன ரிமையோர்
பனி[2]ம லர்த்தொகை பொழிந்தனர் [3]வாழ்த்தொலி பரப்பி.

(இ - ள்.) அநுமான் அங்கதன் இவ்விருவருடைய தோளினின்று (இராமலக்ஷ்மணர்) இறங்கியவராய், விற்களும் கொடிய அம்புப்புட்டில்களும் கவசங்களும் பெரியகைக்கு இனியவாகிய கையுறைகளும் துறந்திட்டிருந்தார்கள்; தேவர்கள் குளிர்ந்த மலர்த்தொகுதிகளை வாழ்த்தொலியைப் பரப்பியவண்ணம் பொழிந்தனர்; (எ-று.)—சிலபிரதியில் இச்செய்யுள் இல்லை. பி-ம்:—[1]இருவரும். [2]மலர்பொழிந்தார்த்தனர். [3]வாழ்த்தினர்பல்கால், வாழ்த்தினர்பரப்பி. (உசஎஅ)

அஎ.—சூரியாஸ்தமன வருணனை.

ஆர்த்த சேனையி னமலைபோய் விசும்பினை யலைக்க
ஈர்த்த தேரொடுங் கடிதுசென் று[1]னகன் றிரவி
[2]தீர்த்தன் மேலவன் றிசைமுகன் படைக்கலஞ் செலுத்தப்
[3]பார்க்கி லேன்முந்திப் படுவதே நன்றெனப் பட்டான்.

(இ - ள்.) சேனை ஆரவாரித்த பேரோசைபோய் வானத்தினைக் கலக்க, (குதிரைகளால்) இழுக்கப்பட்ட தேருடனே இரவி (அவ்வானத்தை)விட்டுக் கடிதுசென்றவனாய், 'பரிசுத்த மூர்த்தியாகிய இலட்சுமணன்மீது அந்த இந்திரசித்து பிரமாஸ்திரத்தைச் செலுத்தக் காணப்பொறேன்; (ஆகையால்), முந்தியே (கடலிற்) படுவதுநல்லது' என்பான்போல (மேல்கடலில்) மறைந்தான்; (எ - று.)

இயற்கையாகச் சூரியன் அஸ்தமித்ததற்குக் காரணங் கற்பித்துக் கூறியதனால், இது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி. தன்குலக்குமாரனுக்கு ஒரு தீங்கு நேரக் காணப்பொறுதான்போலச் சூரியன் பட்டானென்றார். பி-ம்:—[1]அந்தவிரவி. [2]தீர்த்த. [3]பார்க்ககிற்கிலேன்படுவன்யானென, பார்க்கிலேன்முந்தப்படுவலென்பானெனய். (உசஎகூ)

அஅ.—இராமன் விரைவில் உணவுகொண்டுவருமாறு விபீஷணனை யனுப்புதல்.

*இரவு நன்[1]பக லும்[2]பெரு நெடுஞ்செரு வியற்றி*
*உரவு [3]நம்படை மெலிந்துள தருந்துதற் குணவு*
*வரவு தாழ்த்தது வீடண வல்லையி [4]னேகித்*
*[5]தரவு வேண்டின னென்றனன் றாமரைக் கண்ணன்.*

(இ-ள்.) 'இராத்திரியும் நல்லபகலிலுமாக மிக்கபெரும்போர்செய்துவலிய நமதுசேனை மெலிவுற்றுள்ளது; (இச்சேனை) உண்பதற்கு உணவுவரத் தாழ்த்திட்டது; விபீஷணனே!(நீ)விரைவிற் போய் (அவ்வுணவைக்)கொணருவதை வேண்டினேன்' என்று புண்டரீகாட்சனான ஸ்ரீராமன் கூறினான்; (எ-று.)— பி-ம்:—[1]பகலிலும். [2]நெடும்பெருஞ்செரு, பெருஞ்செருவினை. [3]நன்படைமே லெறிந்துந்துதற்குணவு. [4]எய்தித். [5]தரவுவேண்டினது. (உ௬அ௦)

அகூ.—விபீஷணன் உடன்பட்டுச்சேல்லுதல்.

*இன்ன தேகடி தியற்றுவ னெனத்தொழு தெழுந்தான்*
*பொன்னின் மௌலியன் வீடண் னமரொடும் போனான்*
*கன்ன லொன்றிலோர் [1]காலினின் வேலையைக் கடந்தான்*
*அன்ன [2]வேலையி னிராமனீ திளையவற் கறைந்தான்.*

(இ - ள்.) பொற்கிரீடமணிந்தவனான விபீஷணன் இச்செயலையே விரைவிற்செய்வேனென்று தொழுது எழுந்து தம்மவரோடுஞ் சென்றான்: (சென்று) ஒருநாழிகைப்போதிற்குள் ஒப்பற்றவாயுபகவான்போலக் கடலைக் கடந்திட்டான்; அப்போது இச்சொல்லை ஸ்ரீராமன் இளையபெருமாளுக்குக் கூறலானான்: (எ - று.)—ஸ்ரீராமன் கூறுவதை அடுத்தசெய்யுளிற் காண்க. பி-ம்:—[1]கங்குலின். [2]காலையில், காலையீது. (உ௬அக)

கூ௦.—சேனையைப் பாதுகாப்பாயென்று இளையபெருமாளுக்குச் சோல்லிவிட்டு ஸ்ரீராமன் அஸ்திர பூசைக்குச் சேல்லுதல்.

*தெய்வ வான்பெரும் படைகட்கு வரன்முறை [1]திருந்து*
*மெய்கொள் பூசனை [2]யியற்றினம் [3]விடுமிது விதியால்*
*ஐய நா[4]னிவை யாற்றினன் வருவதோ ளவுங்*
*கைகொள் சேனையைக் காவெனப் போர்க்களங் கடந்தான்.*

(இ - ள்.) 'தெய்வத்தன்மையுள்ள மிகச்சிறந்த அஸ்திரங்கட்கு வரன் முறையாகத் திருத்தமான உண்மையானபூசையை யியற்றினோமாகி(ப் பிறகு அவற்றைப்) பிரயோகிக்கின்ற இச்செயலே முறைமையானசெயலாகும்: ஐயனே! நான் இப்பூசனைகளைச்செய்து(மீண்டு)வருமளவும் அணிவகுத்தலைக்கொண்ட சேனையைப் பாதுகாத்துக்கொண்டிருப்பாய்' என்றுசொல்லிப் போர்க்களத்தைக் கடந்துசென்றான், (ஸ்ரீராமன்); (எ - று.)

பரிசுத்தமான இடத்திலேயிருந்து அஸ்திரதேவதைகட்குப் பூசனைபுரிய ஸ்ரீராமன் சென்றானென்க. பி-ம்:—[1]திருத்து. [2]இயற்றினன். [3]விடுவது. [4]அவையியற்றியே. (உ௬அஉ)

கூக.—இந்திரசித்து களத்து நிகழ்ந்தனமுதலியவற்றை இராவணனிடஞ் சொல்ல, 'இனி யாது செய்யவேண்டுவது?' என்று அவன்வினவல்.

*தந்தையைக் கண்டு புகுந்துள தன்மையுந் தன்மேல்*
*[1]முந்தை நான்முகன் படைக்கலந் தொடுக்குற்ற முறையுஞ்*
*சிந்தை யுட்புகச் செப்பின னனையவன் றிகைத்தான்*
*[2]எந்தை யென்னினிச் செயத்[3]தக்க திசையெனா விசைத்தான்.*

(இ - ள்.) (இந்திரசித்து, தன்) தந்தையைப்பார்த்து நேர்ந்துள்ளசெயலையும் தன்மீது பழமையானபிரமாஸ்திரத்தைத்தொடுக்குமாறு (மாற்றார்) நினைந்த முறைமையையும் (அந்தஇராவணனுடைய) மனத்திற்புகுமாறுகூறினன்; (அது கேட்டு) அந்த இராவணன் திகைப்புற்றவனாய், 'எந்தாய்! இப்போது செய்யத் தக்கது என்? சொல்' என்று வினவினன்; (எ - று.)—எந்தை - அண்மை விளி: அன்புபற்றிய மரபுவழுவமைதி. பி - ம்:—[1]முந்த. [2]எந்தையே. [3]தக்க தாமென. (உசஅங)

கூஉ.—இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்: இந்திரசித்து பகைவர்கள் அறியாமல் மறைந்து பிரமாஸ்திரம்விடுத்து அவர்களையொழிப்பேனெனல்.

*தன்னைக் [1]கொல்வது துணிவரேற் றனக்கது [2]தருமேன்*
*[3]முன்னர்க் கொல்லிய [4]முயல்கவென் [5]றறிஞரே மொழிந்தார்*
*அன்னப் போரவ [6]ரறிவுறா வகைமறைந் தயன்றன்*
*[7]வென்னப் [8]போர்ப்படை விடுதலே நலமிது [9]விதியால்.*

(இ - ள்.) '(ஒருவர்) தன்னைக் கொல்வதற்குத் துணிந்தாராயின், தனக்கு அங்ஙனம் தன்னைக்கொல்லத் துணிந்தவரைக் கொல்வதென்பது கூடுமாயின், முன்னர் (அவர்களைக்) கொல்லுமாறு முயல்க' என்று அறிஞரே கூறியுள்ளார்; அப்படிச்செய்யும்போரை அந்தமானுடர் அறியாதபடி மறைந்து பிரமதேவனுடைய அழகிய போர்க்குரிய படைக்கலத்தை விடுதலே நல்லது: இதுவே முறைமையாம்; (எ-று.)—வர்ணம் என்ற வடமொழியின் திரிபாகிய வன்னம் என்பது 'வென்னம்' என்று மொழிமுதல்அகரம் எகரமாக மாறிவந்தது. பி-ம்:—[1]கொல்லிய. [2]துணிய. [3]முன்னரிற்கொலை, முன்னர்க்கொல்லுகை, முன்னைச்சொல்லியது. [4]உலகமென்று, நலமென. [5]அறிஞரோ. [6]அறிவரும். [7]வென்னற். [8]பொற்படை. [9]மெய்யால். (உசஅச)

கூங. *தொடுக்கின்றேனென்ப [1]துணர்வரேலப்படை [2]தொடுத்தே*
*தடுப்பார் காண்பரேற் கொல்லவும் [3]வலத்தரத் தவத்தோர்*
*இடுக்கொன் றாகின்ற தில்லைநல் [4]வேள்வியை யியற்றி*
*முடிப்ப னின்னவர் [5]வாழ்வையோர் [6]கணத்தென [7]முடித்தான்.*

(இ - ள்.) (யான் பிரமாஸ்திரத்தைத்) தொடுக்கின்றேனென்பதை (அவர்கள்) அறிந்தால், அந்தப்படையைத் தொடுத்தே (யான் தொடுத்த அஸ்திரத்தைத்) தடுப்பார்கள்; காண்பார்களேயானால் (என்னைக்) கொல்லவும் வல்லமையுடையவர் அந்தத்தவத்தோர்கள்; இடுக்கில் ஒன்றும் ஆகின்றதில்லை; நல்ல

வேள்வியைச்செய்து அந்தமானுடரின்வாழ்வை ஓர்கணத்தில் (மாயவஞ்சனையால்)முடிப்பேன்' என்று சொல்லி(த் தன்வார்த்தையை)முடித்தான் (இந்திரசித்து);(எ-று.)—கொல்லுதல் - படைக்கலத்தைக் கொல்லுதலுமாம்.பி-ம்:—
1அறிவரேல். 2தொடுத்துத். 3வல்லவர், வல்லரத். 4வேள்வியின். 5ஆவியோர். 6கணத்தென்று. 7மொழிந்தான். (உசஅ௫)

கூச.—இந்திரசித்து சொல்லியதுகேட்டு இராவணன் மகோதரனை நோக்கிக் கூறத்தொடங்குதல்.

என்னை யன்னவர் 1மறந்தனர் நின்றிக லியற்றத்
துன்னு 2போர்ப்படை 3முடிவிலா தவர்வயிற் 4றாண்டின்
பின்னை நின்றது புரிவனென் 5றன்னவன் பேச
6மன்னன் முன்னின்ற மகோதரற் கிம்மொழி வழங்கும்.

(இ - ள்.) 'என்னை அவ்விராமலட்சுமணர்கள் மறந்தனராய்நின்று போர்செய்தவற்காக நெருங்கிய போரைப்புரியவல்ல சேனைகளை முடிவில்லாமல்[மிகஅதிகமாக] அவ்விராமலட்சுமணர்மீது (செல்லத்) தூண்டினுயானல், பின்பு (நான் செய்யவேண்டியதாய்) நின்றதை [பிரமாஸ்திரத்தை விடுப்பதை]ச் செய்வேன்' என்று அந்த இந்திரசித்து பேச, இராவணன் (தன்) முன்னின்ற மகோதரற்கு இம்மொழியைச் சொல்வானுனன்; (எ-று.)—இராவணன் கூறுவதை மேலிரண்டு கவிகளிற் காண்க. பி-ம்:—1அறிந்திலாவகை செயல்,மறைந்திலனென்றிகல். 2பொய்ப்படை.3முடிவிலா.4தூண்டிப்.5இனையவன். 6மன்னனுந்திறன், மன்னனின்றவன். (உசஅசு)

கூ௫.—இதுவும்,அடுத்த கவியும்-ஒருதொடர்:நூறுவெள்ளஞ்சேனையோடும் அகம்பன்முதலியோரோடும்போய் இராமலட்சுமணருடன்பொருது உயிர்கொள்வாயென இராவணன் மகோதரனுக்குக் கூறுதல்.

வெள்ள நூறுடை வெஞ்1சினச் சேனையை 2வீர
அள்ளி லைப்படை 3யகம்பனே முதலிய வரக்கர்
எள்ளி லெண்ணிலர் தம்மொடு விரைந்தனை 4யேகிக்
5கொள்ளை வெஞ்6செரு வியற்றுதி மனிதரைக் குறுகி.

(இ - ள்.) வீரனே! நெருங்கிய இலையையுடைய வேற்படையைக் கொண்டுள்ள அகம்பன்முதலிய அரக்கர் குற்றமற்றுக் கணக்கிட முடியாமல் மிகப்பலராயிருப்பவருடனே நூறுவெள்ளமென்னுங் கணக்குடைய கொடுங் கோபத்தையுடைய சேனையையும் (உடன்கொண்டு) விரைந்துசென்று (உயிரைக்)கொள்ளை கொள்ளுதற்குஉரிய கொடியபோரை மனிதரைக் குறுகி இயற்றுவாய்; (எ-று.)—பி-ம்:—1சினத்தானையை. 2விரவி. 3அகம்பனே. 4எய்திக். 5கொள்ளும். 6சமம். (உசஅஎ)

கூசு. மாயை யென்றன வல்லன யாவையும் வழங்கித்
தீயி ருட்பெரும் 1பரப்பினைச் செறிவுறத் திருத்தி
நீயொ ருத்தனே யுலகொரு மூன்றையு நிமிர்வாய்
போயு ருத்தவ ருயிர்2குடித் துதவெனப் புகன்றான்.

(இ - ள்.) (இங்குநின்றும்) போய், வல்லனவாகிய மாயையென்றன எல்லாவற்றையுஞ் செய்து, கொடிய மிக்க இருட்பரப்பினை நெருக்கமுற வுண்டாக்கி, நீ ஒருத்தனே மூவுலகத்தினும் மேம்பட்டவனாய் (நம்மைக்) கோபித்துப்போர்புரிபவராகிய இராமலட்சுமணரின் உயிரைக் குடித்து உதவுவாயென்று (மகோதரனைநோக்கி இராவணன்) கூறினன்; (எ - று.)— பி-ம்:--1பிழம்பினைத்திகழ்வுறத், பரப்பினைச்செருவுறத். 2உகுத்து. (உ௪அஅ)

௯௭.—அதுகேட்ட மகோதரன் மகிழ, அரக்கர் உடன்செல்லுமாறு அம்மகோதரனைச் சூழ்ந்துகொள்ளுதல்.

என்ற காலையி னென்றுகொ லேவுவ தென்று
நின்ற வாளெயிற் றரக்கனு முவகையி 1னிமிர்ந்தான்
சென்று தேர்மிசை யேறின னிராக்கதர் செறிந்தார்
குன்று சுற்றிய மதகரிக் 2குலமன்ன குறியார்.

(இ - ள்.) என்று (இராவணன்) கூறியபோது, ('நம்மை இராவணன்) ஏவுவது எப்போதோ?' என்று (பார்த்துக்கொண்டு) நின்றுள்ள வாள்போன்ற பற்களையுடைய அரக்கனும் [மகோதரனும்],—உவகையின்மேம்பட்டவனாய்ப் புறப்பட்டுத் தேர்மிசையேறினன்; மலையைச்சுற்றிய மதயானைக் கூட்டம் போன்ற நிலையையுடையராகி இராக்கதர் (அவனுடன்செல்லுமாறு) நெருங்கினர்; (எ-று.)—பி-ம்:—1நிமிர்ந்து. 2குலமெனக். (உ௪அ௯)

௯௮.—மகோதரனுடன்சென்ற தேர் முதலியவை.

கோடி கோடிநூ றாயிர மாயிரங் 1குறித்த
ஆட லானைக ளணிதொறு மணிதொறு 2மமைந்த
ஓடு தேர்க்குல முலப்பில 3வோடிவந் 4துற்ற
5கேடில் வாம்பரி 6கணக்கையுங் கடந்தன 7கிளர்ந்த.

(இ - ள்.) கோடிகோடி நூறாயிரம் ஆயிரமென்னுங்கணக்கினவான வலிய யானைகள் அணிதோறும் அணிதோறும் பொருந்தியிருந்தன; ஓடுகின்ற தேர்க்குலம் அளவற்றன ஓடிவந்துற்றன; கெடுதலில்லாத தாவுகின்ற பரிகள் எல்லைகடந்தனவாய்க் கிளர்ச்சிகொண்டுவந்தன; (எ-று.)—பி-ம்:--- 1குவித்த. 2அமைத்தது. 3கோடி. 4உற்றது. 5ஆடல்வாம்பரிக். 6அரந்தை. 7அடைந்த. (உ௪௯௦)

௯௯.---அரக்கப்பதாதிகள் மிடைதல்.

படைக்க லங்களும் பருமணிப் பூண்களும் பகுவா
யிடைக் 1க லந்தபே ரெயிற்றிளம் பிறைகளு மெறிக்கப்
புடைப்ப ரந்தன வெயில்களு நிலாக்களும் புரள
விடைக் குலங்கள்போ 2லிராக்கதப் பதாதியு மிடைந்த.

(இ - ள்.) (தாம் கைக்கொண்ட) படைக்கலங்களும் பருதத மணிகளழுத்திய பூண்களும் பிளந்த வாயினிடையேகலந்துள்ள பெரும்பற்களாகிய இளம் பிறைகளும் ஒளிவீசுவதனாற் பக்கங்களிற் பரவியனவான வெயில்களும் நிலாக்களும் மாறிமாறிவிளங்க,விடைக்குலங்கள்போல இராக்கதப்பதாதியும் நெருங்

கின; (எ - று.)—படைக்கலவொளியால் வெயிலும், பற்களினொளியால் நிலவுந்தோன்றின. பி-ம்:—[1]கலந்தன, கலந்தனர். [2]அரக்கர்தம். (உசகக)

கசoo.—கொடிகள் துழமியிருத்தலும், தூளிகள் மேலெழுதலும்.

கொடிக்கு ழீஇயின கொழுந்தெடுத் தெழுந்து[1]மேற் கொள்ள
இடிக்[2]கு ழீஇயெழு மழைப்பெருங் குலங்களை யிரித்த
அடிக்கு ழீஇயிடு [3]மிடந்தொறும் [4]பிதிர்ந்தெழுந் தார்த்த
பொடிக்கு ழீஇயண்டம் படைத்தவன் கண்ணையும் புதைத்த.

(இ-ள்.) திரண்டனவாகிய கொடிகள், (தம்)கொழுந்துகள்(காற்றினாற்) கிளர்ந்தெழுந்து மேலிடத்தைக்கொள்வதனால் இடிகள்திரண்டு எழுவனவாகிய மழைகளின் பெரியதொகுதிகளை நிலைகெடுத்தன; (அச்சேனைகளின்) அடிகள் திரண்டுபதிகின்ற இடந்தோறும் பிதிர்ப்பட்டுஎழுந்து நிரம்பிய தூளிகள், திரண்டு அண்டத்தைப்படைத்தவனான பிரமதேவனது கண்களையும் மறைத்தன; (எ - று.)—கொழுந்து-கொடிச்சீலையின்நுனி. பிதிர்தல் - பொடிபடுதல்.பி-ம்:—[1]செற்கொள்ள,கொள்விசும்பின்.[2]குழீஇயன. [3]இடத்தொடும். [4]பிரிந்தெழுந்து. (உசகஉ)

கசoக.—யானைகுதிரைகளுடையமிகுதியின்வருணனை.

ஆனை யென்னுமா [1]மலைகளி னிழிமத வருவி
வான [2]யாறுகள் வாசிவாய் நுரையொடு [3]மயங்கிக்
கான மாமரங் கல்லொடு மீர்த்தன [4]கடிதிற்
போன [5]போக்கரும் பெருமைய [6]புணரியுட் புக்க.

(இ - ள்.) ஆனைகளென்கின்ற பெரியமலைகளினின்று இழிகின்ற மதவருவிகளினாலாகிய வானநதிகள்,—குதிரைகளின் வாயினின்றுவெளிப்படுகின்ற நுரைகளுடன் கலந்து, காட்டிலுள்ள பெரியமரங்களைக் கற்களுடனே இழுத்துக்கொண்டு கடிதிற்போனவையாய், போக்கமுடியாத பெருமையையுடையவாகிக் கடலினுள்ளே புக்கன; (எ - று.)

இவ்வருணனையால் யானைகுதிரைப்படைகளின்மிகுதி தொனித்தல் காண்க. பி-ம்:—[1]மலையினின்றிழிதரும். [2]யாறெனவாசியின் விலாழியின், யாறுகள்வாசியினுரையொடு. [3]மயங்கக். [4]கடுகிப். [5]போக்கரும்பெருமையிற், போக்கரும்பெருமையைப், நீர்தரும்பொரும்புழை, போதரும்பெருநதி, போதரும்பெருந்திரைப், போதரும்பெருமைய. [6]புணரியிற். (உசகங)

கசoஉ.—அரக்கர் தம்படைக்கலங்களை விதிர்த்தல்.

தடித்து [1]மின்குலம் விசும்பிடைத் [2]தயங்குவ சலத்தின்
மடித்த வாயினர் வாளெயிற் றரக்கர்[3]தம் வலத்திற்
பிடித்த திண்படை [4]விதிர்த்திட விதிர்த்திடப் [5]பிறழ்ந்து
பொடித்த [6]வெம்பொறி கொதித்துமேற் போவன போல்வ.

(இ - ள்.) தடித்துஎன்றுசொல்லப்படுகின்ற மின்னலின் கூட்டங்கள் விசும்பினிடத்திலே விளங்குவன,—கோபத்தோடு மடித்த வாயையுடையவரான வாள்(போற் கூரிய) எயிற்றைக்கொண்ட அரக்கர் தம் வலப்புறத்திலே

பிடித்த வலியபடைக்கலங்களை அசைக்குந்தோறும் மாறிமாறி வெளிப்பட்ட கொடிய அனற்பொறிகள் கொதித்து மேலேபோவனவற்றை யொத்தன.

இங்கு மின்னற்குலத்தை வருணித்தாற்போற் கூறியிருப்பினும், மின்ன லென்பது அப்பிரகிருத மாதலால், அரக்கர்தம்படைக்கலங்களை விதிர்க்குந் தோறும் அவைகளினின்று எழும் அனற்பொறிகள் வானத்துத்தோன்றும் மின்னற்குலம்போல் விளங்கின என்பதே கருத்தாகக்கொள்க. உபமான உபமேயங்களை மாற்றிக்கூறியது-எதிர்நிலையணி. பி-ம்:—1மீன்களும். 2தயங் கிய. 3தம்வரத்திற். 4அங்கையால்விதிர்த்திடைப். 5பிறழ்ந்த, பிறந்த, பிறந்து, மின்னும். 6வெம்பிறைநெத்தினபோன்றனபோவ, வெம்பொறிகொதித்து முன்போவனபோன்ற, வெம்பொறிதோற்றினபோன்றனபோல்வ. (உசகூச)

கoரு.—சேனை இலங்கைவாயினின்று வெளிப்படுவதன்வருணனை.

சொன்ன 1நூறுடை வெள்ள2மன் றிராவணன் றுரந்த
அன்ன 3சேனையை வாயிலூ டுமிழ்கின்ற வமைதி
முன்னம் 4வேலையை முழுவதுங் குடித்தது முறையீ து
என்ன மீட்டுமிழ் 5குறுமுனி யொத்தது விலங்கை.

(இ - ள்.) அன்று இராவணன் அனுப்பியனவான (கீழ்க்)கூறிய நூறு வெள்ளமென்ற கணக்குக்கொண்ட அந்தச்சேனையை, இலங்கைநகரானது,— (தன்) வாயிலின்வழியாக வெளிவிடுகின்றதன்மையால்,—முன்னம் கடலை முழுவதுங்குடித்திட்டதை (வெளிவிடுகின்ற) இதுவேமுறையென்றுமீண்டும் உமிழ்ந்த குறுமுனியை யொத்தது; (எ - று.)—பி-ம்:—1நூறிடை. 2என்று. 3சேனையவ். 4வேலைகள். 5தமிழ. (உசகரு)

கoசு.—பலவகையொலி.

1சங்கு பேரியுங் 2காளமுந் தாளமுந் தலைவர்
சிங்க நாதமுஞ் சிலையினா ணொலிகளுஞ் சினமாப்
பொங்கு மோதையும் புரவியி 3னமலையும் 4பொலிதேர்
வெங்க ணேலமு மாலென 5விழுங்கிய வுலகை.

(இ - ள்.) சங்கங்களும் பேரிகளும் எக்காளங்களும் தாளங்களும் தலை வரின் சிங்கநாதங்களும் விற்களின்நாணொலிகளும் கறுக்கொள்ளுந்தன்மை யுள்ள மிருகமாகிய யானைகளின் கிளர்ந்தெழுகின்ற வீரிடுமொலியும் குதிரை களின் கனைப்பொலியும் விளங்குகின்றதேரின் கொடிய (சக்கரக்) கண்ணிலி ருந்துபுறப்படும் ஒலியும் திருமாலைப்போல உலகைத் (தன்னுள்) அடக்கிக் கொண்டன; (எ - று.)

உலகை எப்புறமும் ஒலிகள்சூழ்ந்துகொண்டதனால், அவ்வொலிகள், உல கைவிழுங்கியவென்றார்:அதனால்,அவ்வொலிக்குத் திருமாலை யுவமை கூறினார். பி-ம்:—1சங்கும், சங்க. 2தாளமுங்காளமும். 3ஓதையும். 4பொலந்தேர். 5விழு ங்கியது. (உசகசு)

க0௫.—இனி, நான்துகவிகள் - அரக்கர்க்கும் வானரர்க்கும் கைகலந்த போர் நிகழ்தலைக் கூறும்.

புக்க தாற்பெரும் போர்ப்படை பறந்தலைப் புறத்தில்
தொக்க தானெடு வானரத் தானையுந் துவன்றி
ஒக்க [1]வார்த்தன வுறுக்கின தெழித்தன வுருமின்
மிக்க வான்படை விடுகணை [2]மாமலை [3]விலக்கி.

(இ - ள்) பெரும்போரைச்செய்தற்குரிய (அரக்கப்)படை, போர்க்களத் திடத்துப் புக்கது;நெடியவானரைச்சேனையும், நெருங்கிக் கூடிற்று: (பிறகு), மிகுதியாகவுள்ள பெரிய அரக்கப்படை விடுகின்ற அம்புகளைப் பெரியமலை களால் விலக்கி, (குரக்குப்படைகள்),---ஒருசேர ஆரவாரித்தன; கோபித் தன; இடியைப்போல(ப் பேரொலிபட) அதட்டின; (எ-று.)---இது, இருதிறத் தாரும் கைகலந்துபொருதமைகூறிற்று. பி-ம்:—[1]ஆர்த்தனருறுக்கினர், ஆர்த் தனவுருக்கின. [2]மாமழை. [3]விலங்கி, விலக்க. (உ௬கள)

க0௬.குன்று கோடியுங் கோடிமேற் கோடி யுங் குறித்த
வென்றி வானர [1]வீரர்கண் முகந்தொறும் [2]விலங்கல்
ஒன்றி னல்வரு மைவரு மிராக்கத ருலந்தார்
பொன்றி [3]வீழ்ந்தன [4]பொருகரி பாய்பரி பொலந்தேர்.

(இ - ள்.) இடந்தோறும், கோடியும் கோடிக்குமேற்கோடியு மாகக் குன்றுகளைக் குறிபார்த்துவிட்ட வெற்றிபொருந்திய வானரவீரர்களின் ஒருகுன்றுக்கு நால்வரும் ஐவருமாக இராக்கதர் உயிரொழிந்தார்:போர்செய்ய வல்ல யானைகளும் பாய்கின்ற பரிகளும் அழகிய தேர்களும், அழிந்துவிழுந் தன; (எ - று.)---இது,அரக்கச்சேனையழிந்தமை கூறியது. பி-ம்:—[1]வீரர்தம். [2]விலங்க. [3]வீழ்ந்தனர். [4]பொருகளம், மதகரி. (உ௬கூஅ)

க0எ. மழுவுஞ் சூலமும் வலயமு நாஞ்சிலும் வாளும்
எழுவு மீட்டியுந் தோட்டியு [1]மெழுமுனைத் தண்டுங்
[2]தழுவும் வேலொடு கணையமும் பகழியுந் தாக்க
[3]குழுவி னோடுபட் டுருண்டன வானரக் குலங்கள்.

(இ - ள்.) மழுவும் சூலமும் வலயமும் நாஞ்சிலும் வாளும் எழுவும் ஈட்டி யும் தோட்டியும் எழுந்த கூர்முனையையுடைய தண்டாயுதமும் (கைகளால்) தழுவும்வேலும் கணையமும் அம்பும் ஆகியஇவைகள்தாக்குதலால், கூட்டத் தோடு வானரங்கள் கொல்லப்பட்டு உருண்டன: (எ - று.)—பி-ம்:—[1]எழு முனைத், எழுமுழுத். [2]கழுவும்...காத்த. [3]குழுவினோடுமெட்டு. (உ௬கூக)

க0அ. முற்க ரங்களு [1]முசலமு முசுண்டியு [2]முளையுஞ்
சக்க ரங்களும் பிண்டிபா லத்தொடு தண்டுங்
கற்ப ணங்களும் [3]வளையமுங் [4]கவண்விடு கல்லும்
வெற்பி னங்களை [5]நுறுக்கின கவிகளை வீழ்த்த.

(இ - ள்.) முத்கரங்களும் உலக்கையும் முசுண்டியும் முளையும் சக்கரங்க ளும் பிண்டிபாலமும் தண்டும் கப்பணங்களும் வளையமும் கவண்கல்லும் (குரங்குகள்விடுத்த) மலைக்கூட்டங்களை நொறுக்கினவாய்க் குரங்குகளையும்

(உயிரொழிந்து)விழச்செய்தன; (எ - று.)---கீழ்ச்செய்யுளும் இச்செய்யுளும், குரங்குகள் உயிரொழிந்தமையைக் கூறுவன. பி-ம்:—1முசுண்டியும்வளையமும். 2முனையும். 3கணையமும். 4கவணுமிழ். 5துரக்கின்ற. (௨௫௦௦)

௧௦௯.—இருதிறத்துச்சேனைகளும் இயங்கமாட்டாமை.

கதிர யிற்படைக் கலம்[1] வரன் முறைமுறை கடாவ
[2]அதிர்பி ணப்பெருங் குன்றுகள் படப்பட வழிந்த
[3]உதிர முற்றபே ராறுகள் திசைத்திசை யோட
எதிர்ந டக்கில [4]குரக்கின மாக்கரு மியங்கார்.

(இ - ள்.) ஒளிவிடுகின்ற கூரிய படைக்கலங்களை வரன்முறைபிறழாமல் முறையே (அரக்கர்)கடாவுவதனால், கவிக்குலம், அரக்கரெதிரே நடக்கமாட்டாவாயின; அதிர்ந்துவிழுகின்ற பெரியபிணமலைகள் மிகுதியாகப் படுவதனாலும், (அப்பிணங்களினின்று) மிகுதியாகத்தோன்றிய இரத்தத்தினாலியன்ற பேராறுகள் திசைத்திசைதோறும் ஓடுவதனாலும் அரக்கரும், (எதிரே)இயங்கமுடியாதவராயினர்; (எ-று.)---பி-ம்:—1அவர்முறை, வரமுறை,குலம்வரன். 2எதிர்விளைப்பெருங்குன்றுகள்படப்படவிழுந்த. 3உதிரவிற்பிணப். 4கவிக்குலம். ()

௧௧௦.—மடிந்த வானரர் தேவர்களாதல்.

யாவ [1]ராங்கிகல் [2]வானர ராயின ரெவருந்
தேவ ராதலி [3]னவரொடும் [4]விசும்பிடைத் திரிந்தார்
மேவு காதலின் மெலிவுறு [5]மரம்பையர் விரும்பி
ஆவி யொன்றிடத் [6]தழுவினர் பிரிவுநோ யகன்றார்.

(இ - ள்.) அப்போர்க்களத்திலே எவர் மாறுபட்டுப்பொருதலையுடைய வானரரோ, அவரெல்லாம் (தமது இயற்கைவடிவான) தேவராகிவிடுதலினால் அவ்வானவருடனே விசும்பிடைத் திரிந்தவராகவே, (இத்துணைக்காலம்) பொருந்திய ஆசையினால் தளர்ச்சியடைந்த அரம்பையர்கள், (இப்போது தம்) விருப்பம் கைகூடப்பெற்று உயிரொன்றுஎன்னும்படித் தழுவினராய் விரக நோய் தீரப்பெற்றனர்; (எ - று.)

திருமால் ஸ்ரீராமனாகத் திருவவதரிக்கையில் அப்பெருமானுக்கு உதவுமாறு தேவர்களே வானரராய்ப்பிறந்தாராதலால், அத்தேவர்களின் மனைவிமாரான தேவஸ்திரீகள் இத்துணைக்காலம் தம்கணவரைப் பிரிந்த துயரால் மெலிவுற்று இப்போது போரில்மடிந்து மீண்டு சுவர்க்கத்தையடைந்த அக்கணவரை இரண்டறத் தழுவித் தம்பிரிவுநோய் தவிர்ந்தன ரென்றவாறு. பி-ம்:—1இங்கிகல். 2வானரமாயினர். 3அவருடன். 4விசும்பினில். 5மங்கையர். 6விழைவினர். (௨௫௦௨)

௧௧௧.—மடிந்த அரக்கர் தேவராதல்.

கரக்கு மாயமும் வஞ்சமுங் களவுமே கடனா
[1]இரக்க மேமுதற் றருமத்தி [2]னெறிக்கென்று [3]மிழியா
அரக்க ரைப்பெருந் தேவர்க [4]ளாக்கின வமலன்
சரத்தின் வேறினிப் பவித்திர [5]முளதெனத் தகுமோ.

(இ - ள்.) ஒளித்துச்செய்கின்ற மாயமும் வஞ்சகமும் களவுமே (தமது) கடமையாகக்கொண்டு இரக்கம்முதலிய தருமவழியில் என்றும் இறங்காதவரான அரக்கரையும் பெரியதேவர்களாக்கின குற்றமற்றஇலட்சுமணனது அம்புகளைக்காட்டிலும் இனிப் பரிசுத்தமான வேறுபொருள் உள்ளதுஎன்று சொல்லுதல் தகுமோ? (எ-று.)

பெரும்பாவிகளான அரக்கரையும் தாம் தீண்டியதனால் தேவர்களாகச் செய்ததனால் இலட்சுமணனது அம்புகளைக்காட்டிலும் பரிசுத்தியையுண்டாக்கவல்ல பொருள் வேறில்லை யென்பதாம். இலட்சுமணனது அம்புகளாற் கொடியஅரக்கர்பலரும் இறந்து வீரசுவர்க்கமடைந்தன ரென்றவாறு. பி - ம்:—1இரக்கமாம். 2நெறியென்றும், நெறியொன்றும், நெறிக்கொன்றும். 3இல்லா. 4ஆக்கின்ற. 5உள. (உ௫௦௩)

கக௨.—இலக்குமணன் செய்தபோர்.

அந்த கன்பெரும் படைக்கல 1மந்திரித் தமைந்தான்
இந்து வெள்ளெயிற் றரக்கரு மியானையுந் தேரும்
வந்த 2வந்தன வானக மிடம்பெறா வண்ணஞ்
சிந்தி னான்சர மிலக்குவன் முகந்தொறுந் 3திரிந்தான்.

(இ - ள்) இலக்குவன்,—யமனது சிறந்த அஸ்திரத்தை அபிமந்திரித்துக் (கையிற்)கொண்டவனாய், முனைமுகத்திலெல்லாந் திரிந்தவண்ணம், சந்திரனைப் போன்ற வெண்ணிறப்பற்களையுடைய அரக்கரும் யானையுந் தேரும் ஆகிய (தன்மீது)வந்த வந்தஅவைகளை வானகத்தில் இடம்போதாமல்நிறையும்படி சரங்களைச் சிந்தினான்; (எ-று.)—இறந்த உயிர்கள் மிகப்பலவானதனால் வானத்தில் தங்க இடம்பெறாவாயினவென்க. பி-ம்:—1மந்திரத்து. 2வந்துயர். 3தெரிந்தான். (உ௫௦௪)

கக௩.—இதுமுதல் எட்டுகவிகள்—அநுமான் தண்டாயுதங்கொண்டு பொருதலின் சிறப்பைக்கூறும்.

கும்ப கன்ன1னாண் டிட்டது வயிரவான் குன்றின்
வெம்பு வெஞ்சுடர் விரிப்பது தேவரை மேனாள்
தும்பை யின்றலை துரந்தது சுடர்மணித் தண்டொன்று
இம்பர் ஞாலத்தை 2நெளிப்பது மாருதி யெடுத்தான்.

(இ - ள்.) கும்பகர்ணன் அங்கே [போர்க்களத்திலே] போகட்டதும் பெரிய வயிரக்குன்றுபோல வெம்புதற்குக்காரணமான கொடுஞ்சுடரை விரிப்பதும் தேவரை முன்னாளில் போர்முனையில் ஓட்டியதும் இவ்வுலகத்தை நெளியச்செய்வதும் ஒளிபொருந்தியமணிகளழுத்தியதுமான தண்டாயுத மொன்றை அநுமான் கையிலெடுத்துக்கொண்டான்; (எ-று.)—ஆண்டிட்டதுஎன்று ஒருசொல்லாகஎடுத்து - ஆண்டதுஎன்று உரைத்தாருமுளர். தும்பை-போர். பி-ம்:—1அன்றிட்டது. 2தடுப்பது, தடுத்தது. (உ௫௦௫)

வேறு.

கக௪. காற்றன்றிது 1கனலன்றென விமையோரிடை காணா
ஏற்றங்2கடு விசையோடுயர் கொலைநீடிய 3வியல்பாற்

சீற்றந்தனி யுருவாயிடை தேறாத[4]தொர் மாறாய்க்
கூற்றங்[5]கொடு [6]முனை[7]வந்தெனக் கொன்றா னிக[8]னின்றான்.

(இ - ள்.) வீரத்தில்நிலைநின்றவனான மாருதி,—மிக்குள்ளதானகொடிய விசையுடனே பெருங்கொலைத்தொழிலும் மிக்குள்ள இயல்பினால், 'இது காற்று அன்று: (இது) கனலும் அன்று' என்றுசொல்லி இமையோரும் நிலைமையைக் காணமாட்டாமலிருக்க, யமன் சீற்றமென்பதே தனியே உருவாகப் படைத்துத் (தன்)நிலை தேறமுடியாதபடியான ஒப்பற்ற மாறுபாடுகொண்டு கொடியமுனைக்களத்து வந்தாற்போல (அந்தத் தண்டாயுதத்தைக்கொண்டு அரக்கரைக்) கொல்லலுற்றான்; (எ - று.)—பி - ம்:—[1]கனலாமென. [2]கொடு விசையோடின. [3]இயலால். [4]ஒருமாறாங். [5]கடு. [6]முன். [7]வந்துளதென்னும்படி. [8]கொன்றான். (உ௫0௬)

௧௧௫. வெங்கண்மத மலைமேல்விரை பரிமேல்விடு தேர்மேற்
சங்கந்தரு படைவீரர்க ளுடன்மேலவர் தலைமேல்
எங்குமுள [1]னொருவன்னெதிர்த் திருநான்மறை [2]தெரிக்குஞ்
செங்கண்ணவ னிவனேயெனத் திரிந்தான்கலை தெரிந்தான்.

(இ-ள்.) (சகல) சாஸ்திரங்களையும் கற்றுத்தேர்ந்தவனாகிய அநுமான்,—கொடுங்கண்ணையும் மதத்தையுமுடைய மலைபோன்ற யானைமீதும் விரையுந் தன்மையுள்ள குதிரைமேலும் விடுகின்ற தேரின்மேலும் கூட்டமாகவுள்ள படைவீரர்களின் உடலின்மேலும் அவர்களின்சிரசின்மேலும், பெரிய நான் மறைகளாலுந் தெரிவிக்கப்படுகின்ற புண்டரீகாட்சன் இவனே என்னும்படி (தான்)ஒருவனே எங்கும் உளனாகி எதிர்த்துத்திரிந்தான்; (எ - று.)—எங்குமுள்ள தன்மையினால் இவன் திருமாலோஎன்று கருதும்படி அநுமான் அத்துணை விரைவுபடத் திரிந்தா னென்க. பி-ம்:—[1]ஒருவன்னென. [2]தெரியும். ()

௧௧௬. [1]கிளர்ந்தாரையுங்[2]கிடைத்தாரையுங்கிழித்தான்கனல்விழித்தான்
களந்தானொரு குழம்பாம்வகை யரைத்தா[3]னுருக் கரைத்தான்
[4]வளர்ந்தானிலை யுணர்ந்தாருல கொருமூன்றையும் வலத்தால்
[5]அளந்தான்முன மிவனேயென விமையோர்களு மயிர்த்தார்.

(இ - ள்.) பொங்கிமேல்வந்தாரையும் கையிலகப்பட்டாரையும் கனல் புறப்படவிழித்துக் கிழித்துப் போர்க்களம் (எங்கும்) ஒப்பற்ற நிணக்குழம்பு நிறையும்படி (அவருடலை) அரைத்து உருவைக் கரைத்திட்டான், (மாருதி): ஓங்கிவளர்ந்தவனான(அந்த)அநுமானுடைய நிலையை யுணர்ந்தவராய், தேவர்களும், 'ஒரு மூன்றுவுலகங்களையும் (தன்)வலிமையால் முன்னம் அளந்தவன் இவனே' என்று ஐயவுணர்வுகொண்டார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]கிளர்ந்தானியல். [2]கிடந்தாரையும். [3]இருகரத்தான். [4]வளர்ந்தேர்நிலை. [5]அளந்தானுமுன்.

௧௧௭. மத்தக்கரி நெடுமத்தகம் [1]வகிர்ப்பட்டுக [2]மண்மேல்
[3]முத்திற்பொலி முழுமேனியன் முகில்விண்டொடு மெய்யான்
[4]ஒத்தக்கடை யுகமுற்றுழி [5]யுறுகால்பொர [6]வுடுமீன்
[7]தொத்தப்பொலி கனகக்கிரி வெயில்சுற்றிய தொத்தான்.

(இ - ள்.) மதம்பிடித்தயானைகளின் நெடியமத்தகம் பிளவுபட்டுச் சிந்துவதனால் (இப்)பூமியிலே (அம்மத்தகத்தினின்று வெளிப்பட்ட) முத்துக்களினால் விளங்குகின்ற முழுவுடலையுடையவனும் முகில்படிந்த ஆகாயத்தைத் தொடுகின்ற உடலையுடையவனுமான அநுமான்,—(எல்லாப்பொருளும்) ஒருசேர அந்த யுகாந்தகாலத்து அழியும்போது பெருங்காற்று வீச, உடுவென்னப்படுகின்ற மீன்கள் [நட்சத்திரங்கள்] (தன்மீது) தொத்திநிற்க விளங்குவதும் சூரியன் சுற்றுவதுமான மேருமலையை யொத்தான்; (எ - று.)

"காஞ்சநாத்ரிகமநீயவிக்ரஹம்" என்றவாறு உள்ள அநுமான் திருமேனியில் யானைமத்தகத்துமுத்தம்விளங்கும்போது, அவனுக்கு,விண்மீனோடுபொலியும் கனகக்கிரிஉவமையாமென்க;நற்றுறிப்பேற்றவணி.கனகக்கிரிக்கு'வெயில் சுற்றியது' என்ற அடைமொழி, அதன்இயற்கையைவிளக்கவந்தது. வெயில்-சூரியனுக்கு, இலக்கணை: இனி, ஒளியுமாம். கடல்மீனைவிலக்க, 'உடுமீன்'என்றார்.உடு-வடசொல்.பி-ம்:--[1]அதிர்பற்றுக.[2]மணிமேல்.[3]வித்தப்பொலி...மழை விண்டொடுமெய்யான். [4]ஒத்தைக். [5]உடுகார்பொார.[6]உடுவின்.[7]தொத்திப்பெயர், செத்தப்பொலி. (உ௫0க)

கக௮. இடித்தா[1]னிலம் விசும்போடெனவிட்டானடி யெழுந்தான், பொடித்தான்கடற் பெருஞ்சேனையைப் பொலந்தண்டுதன் வலத்தாற், [2]பிடித்தான்மத கரிதேர்[3]முதற் [4]பிழம்பானவை குழம்பா, [5]அடித்தானுயிர் குடித்தானெடுத் தார்த்தான்பகை தீர்த்தான்.

(இ-ள்.)(பின்னும் அநுமான்),—அழகியதண்டை தன் வலிமையாற் பற்றியவனாய் நிலத்தை விசும்புடனே இடித்தானென்று கருதும்படி அடியிட்டு எழுந்து,கடல்போன்ற பெரிய(பகைவர்)சேனையைப் பொடியாக்கினான்; (அன்றியும்), மதகரி தேர் முதலிய வடிவுள்ளபொருள்களையெல்லாம் குழம்பாகும்படி செய்திட்டு (அவற்றினுடைய)உயிரைப் பருகி, பகையை(இவ்வாறு)ஒழித்தவனாகிக் குரலெடுத்துப் பேராரவாரஞ்செய்தான்; (எ - று.)—பி-ம்:---[1]இகல் விசும்போடுடன். [2]படித்தான்மதக்கரி. [3]பரி. [4]பிழம்பாமது,பிழம்பாயுறு,பரியாவையும். [5]வடித்தான். (உ௫௪0)

கக௯. நூறாயிர மதமால்கரி யொருநாழிகை நுவல்போது
[1]ஆறாய்நெடுங் கடுஞ்[2]சோரியி னளறும்வகை யரைப்பான்
ஏறாயிர [3]மெனலாயெழு வயவீரரை [4]யிடறித்
தேறாதுறு கொலைமேவிய திசையானையிற் றிரிந்தான்.

(இ - ள்.) ஒருநாழிகையென்றுசொல்லக்கூடியகாலத்திற்குள் ஆறாய்ப் பெருகுகின்றமிக்கொடிய இரத்தத்தில் நூறாயிரம் மதம்பிடித்தபெரியயானைகளைச் சேறாகும்படியரைப்பவனான அநுமான்,--ஆயிரக்கணக்கான ஆண்சிங்கமென்றுசொல்லுமாறு (தன்) மேல்வருகின்ற வலிமைபொருந்திய (அரக்க) வீரரை(க் காலினால்) இடறி, தெளிவடையாது [மதமயக்கங்கொண்டு] மிக்க கொலைத்தொழிலை விரும்பிச்செய்கின்ற திக்கஜம்போலத் திரிந்தான்; (எ-று.) —பி-ம்:---[1]ஆறா. [2]சோரியாறும்வகை, சோரியினாறும்படி. [3]எனலாய்வரும், எனலாவெழும். [4]இடித்த. (உ௫கக)

கஉ0. தேரேறினர் பரியேறினர் [1]விடையேறினர் சினவெங்
காரேறினர் மழையேறினர் [2]கலையேறினர் [3]பலவெம்
போரேறினர் புகழேறினர் [4]புகுந்தார்புடை வளைந்தார்
நேரேறினர் விசும்பேறிட நெரித்தான்கதை திரித்தான்.

(இ - ள்.) காளைத்தன்மைகொண்டவராய்த் தேரின்மீது ஏறிவந்தவரும் குதிரையின்மீது ஏறிவந்தவரும் கோபம்மூண்ட கொடிய மேகத்தையொத்த ஆனையின்மீது ஏறிவந்தவருமாகி, (அம்பு)மழையை மிகுதியாகப் பொழிகின்றவரும் போர்க்கலையில் தேர்ந்தவரும் பலகொடிய முனைமுகத்திற்சென்று பொருது வெற்றிப்புகழ்படைத்தவரும் (இப்போது போர்க்களத்திற்) புகுந்து (தன்னை) எப்புறத்திலும் வளைந்துகொண்டு நேரேபொருபவருமான (அரக்க) வீரர்களையெல்லாம், (அநுமான்), தண்டாயுதத்தைச் சுழற்றி விசும்பிலேறும்படி நெரித்திட்டான்; (எ - று.)

ஒரேபொருளைக்கொண்ட ஏறுதல் என்ற சொல் பன்முறைவந்தது--சொற்பொருட்பின்வருநிலைபணி. விடையி லேறிவந்துபொருதல் சிவபெருமானுக்கு அன்றி மற்றையோர்க்கு இல்லை யாதலால், விடையேறினர் என்பதற்கு-விடையின்தன்மைமிக்கவர் [காளைபோன்றவர்] எனப் பொருளுரைக்கப்பட்டது. பி-ம்:—[1]களிற்றேறினர். [2]கடலேறினர். [3]மழைவெம், பலவும். [4]புகுந்தாரிடை. (உ௫கஉ)

வேறு.

கஉக.---சுக்கிரீவன்முதலியோர் ஒருவரையொருவர் காணுமல் அரக்கச்சேனைக்கடலினிடையி லிருத்தல்

அரிகுல மன்ன னீல னங்கதன் [1]குமுதன் சாம்பன்
பருவலிப் பனச னென்றிப் படைத்தலை வீரர் யாரும்
பொருசினந் திருகி [2]வெற்றிப் போரக்கள [3]மருங்கிற் புக்கார்
ஒருவரை யொருவர் காணு ருயர்படைக் கடலி னுள்ளார்.

(இ - ள்.) வானரராசனான சுக்கிரீவனும் நீலனும் அங்கதனும் குமுதனும் சாம்பனும் மிக்கவலிமையையுடைய பனசனும் என்ற தலைமைபெற்ற இந்தச்சேனைவீரர்யாரும்,—போர்செய்தற்குஉரியசினத்தினால்மாறுபட்டு, வெற்றியைத்தருகின்ற போர்க்களத்தினிடையிலே புகுந்து ஒருவரையொருவர் காணுமல் பெரியஅரக்கர்சேனையாகிய கடலினுள்ளே இருப்பவரானார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]அநுமன். [2]வென்றிப். [3]நெருங்கப். (உ௫கங)

கஉஉ.---அநுமான் அகம்பனை எதிர்ப்படல்.

தொகும்படை [1]யரக்கர் வெள்ளந் துறைதுறை [2]யள்ளித் தூவி
[3]நகம்படை யாகக் கொல்லு நரசிங்க [4]நடந்த தென்ன
மிகும்படைக் கடலுட் செல்லு மாருதி வீர வாழ்க்கை
அகம்பனைக் கிடைத்தான் றண்டாலரக்கரை யரைக்குங் கையான்.

(இ - ள்.) வெள்ளக்கணக்கான தொகுதியாகவுள்ள அரக்கர்படையை முனைத்துறைதோறும் வாரியிறைத்து, நகத்தையே படையாகக்

கொண்டு கொல்லுந்தன்மையுள்ள நரசிங்கமூர்த்தி (முன்பு) நடந்ததுபோலப் பெரிய(அரக்கர்)படையாகியகடலுட் செல்லும் மாருதி, தண்டாயுதங்கொண்டு அரக்கரையரைக்குங் கையையுடையவனாகி வீரத்தினால் வாழ்தலையுடைய அகம்பனைச் (சேய்மையிற்)சந்தித்தான்; (எ - று.)—பி-ம்:—[1]அவுணர்தம்மை. [2]அள்ளத். [3]நகும்படைத்தலைவர்க்கொல்லும். [4]நடந்ததேபோல். (உ௫கச)

கஉ௩.—அகம்பன் இன்னானெனல்.

மலைப்பெருங் கழுதை யைஞ்ஞூற் றிரட்டியான் மனத்திற் செல்லும்
தலைத்தடந் தேரன் வில்லன் றாருக னென்னுந் தன்மைக்
கொலைத்தொழி [1]லவுணன் [2]பின்னை யிராக்கத வேடங் கொண்டான்
சிலைத்தொழிற் குமரன் கொல்லத் தொல்லைநாட் செருவிற் றீர்ந்தான்.

(இ - ள்.) மலையொத்த பெருந்தோற்றமுள்ள கழுதைகள் ஆயிரங்கட்டியிருத்தலால் மனத்தைக்காட்டிலும் (விரைந்து)செல்லவல்ல தலைமைபெற்ற பெருந்தேரையுடையவனும் வில்லைக்கொண்டிருப்பவனுமான அந்தஅகம்பன்,- தாருகனென்றுபெயர்பூண்ட கொலைத்தொழிலையே தன்மையாகக்கொண்ட அவுணன்: (அவன்), சிலைத்தொழிலையுடைய குமாரக்கடவுள் முற்காலத்து நிகழ்ந்தபோரிற்கொல்லப் போர்க்களத்து உயிர்நீங்கியவனாய்ப் பின்பு [இப்போது] இவ்விராக்கதவடிவுகொண்டுள்ளவன்; (எ - று.)

குமாரக்கடவுளாற் சங்கரிக்கப்பட்ட தாருகாசுரனே இப்போது அகம்பனென்ற அரக்கனாய்ப் பிறந்துள்ளானென்றவாறு. இது, கவிக்கூற்று. பி-ம்:- [1]வீரன். [2]பின்னோர். (உ௫க௫)

கஉச.—அகம்பன் அநுமானதுதிறத்தை வியத்தல்.

பாகசா தனனு மற்றைப் பகை[1]யடுந் திகிரி பற்றும்
[2]ஏகசா தனனு மூன்று [3]புரமும்பண் டெரித்து ளோனும்
போகதா மொருவர் [4]பற்றிக் குரங்கொடு பொரக்கற் றாரே
[5]ஆககூற் றுவி யுண்ப திதனின்[6]மேற் றுகு மென்றான்.

(இ - ள்.) (அந்த அகம்பன்),—'தேவேந்திரனும் மற்றும் பகையையடுந் தன்மையுள்ள சக்கராயுதத்தைக்கொண்டுள்ள ஒப்பற்றசாசனத்தையுடைய திருமாலும், முப்புரங்களையும் முன்புஎரித்துள்ளோனான சிவபிரானும்போகட்டும்; (வேறே எவரேனும்) ஒருவர் தாம் எதிர்ந்து (இந்தக்) குரங்குடன் யுத்தஞ் செய்யக் கற்றாரேயாகட்டும்: (அங்ஙனம் போர்செய்குவாராயின்) கூற்றைக்கொண்டு அவருயிரையுண்பது இந்தக்குரங்கினிடத்திலே யமைந்துள்ளது' என்றான்; (எ - று.)

தேவேந்திரன்முதல் ஒருவராலும் இந்தக்குரங்கின் எதிரில்நிற்கவும் முடியாது: எப்படிப்பட்டதிறலினோரையும் இது மாய்த்திடுமென்றவாறு. போக, ஆக - வியங்கோள். பி-ம்:—[1]படும். [2]ஏகமால்தானும். [3]புரங்கள். [4]மற்றிக். [5]ஆகடற்றுவி. [6]மேலாகும். (உ௫கசு)

கஉரு.---அகம்பன் அம்புதொடுத்து அநுமான்மீது செல்ல, அநுமானும் எதிர்த்துவருதல்.

யான்றடே னென்னின் மற்றிவ் வெழு[1]திரை வளாக மென்னும்
[2]வான்றடா தரக்க ரென்னும் பெயரையு மாய்க்கு மென்று
ஊன்றடா நின்ற வாளி [3]மழைதுரந் துருத்துச் [4]சென்றான்
மீன்[5]றொடா நின்ற திண்டோ ளனுமனும் விரைவின் வந்தான்.

(இ-ள்.) '(அவ்வநுமானை)யான் தடுக்காமற்போனால்,பின்பு ஏழுகடலாற் சூழப்பட்ட இந்தப் பூமண்டலம் யாதாகும்? [பூமியே இவனாற் பாழாய்விடு மென்றபடி]; வானத்தாரோ தடுக்கமாட்டார்: (இவன்),அரக்கரென்ற பெயரே இல்லாதபடி மாய்த்திடுவான்' என்றுசொல்லி, (எதிர்க்கின்ற) உடல்படைத்த பிராணிகளைத் தடுக்கின்ற அம்புமழையைப் பொழிந்துகொண்டு கோபித்துச் சென்றான்;வானமீனை [நட்சத்திரமண்டலத்தை] அளாவியோங்கிநின்ற வலிய தோளையுடைய அநுமானும் விரைவாக(அவனிடம்)வந்தான்; (எ-று.)—பி-ம்:--1கடல்வளாகமெல்லாம்,கடல்வளாகமென்ன.2மான். 3மழையெனத்துரந்து, மழைதுரந்துரத்துச். 4சொன்னான், வந்தான். 5தடாநின்ற. (உருகஎ)

கஉசு.--இதுமுதல் மூன்றுகவிகள்-அகம்பன்வர அநுமான் தண்டாயுதத்தைச் சுற்றித் தன்வீரத்தைக்காட்டுதலைத் தெரிவிக்கும்.

தேரொடு களிறு மாவு மரக்கரு [1]நெருங்கித் [2]தெற்றக்
காரொடு [3]கனலுங் காலுங் கிளர்ந்ததோர் கால மென்ன
வாரொடுந் தொடர்ந்த பைம்பொற்கழலினான் வருதலோடுஞ்[ன்.
சூரொடுந் தொடர்ந்த தண்டைச் [4]சுழற்றினான் வயிரத் தோளா

(இ - ள்.) தேரோடு யானைகளும் குதிரைகளும் அரக்கரும் நெருங்கி உடன்வர, காரோடு நெருப்பும் காற்றும் பொங்கியெழுந்ததொரு காலம் போல வாரினாற்கட்டப்பட்ட பைம்பொற்கழலையணிந்த அகம்பன் வருதலோடும்,வயிரம்போலுறுதியானதோளையுடைய அநுமான்,--சூரத்தனத்தோடு (தான்)பற்றியிருந்த தண்டாயுதத்தைச் சுழற்றினான்; (எ - று.)—பி-ம்:— 1நெருக்கி. 2செற்றி, தெற்றி. 3காலுங்காற்றுங் 4சுற்றினன். (உருகஅ)

கஉஎ.எற்றின வெறிந்த [1]வெல்லை [2]யெய்தின வெய்த [3]பெய்த
முற்றின படைக ளியாவு முறைமுறை முறிந்து சிந்தச்
[4]சுற்றின வயிரத் தண்டாற் றுகைத்தன னமரர் துள்ளக்
கற்றில [5]னின்று கற்றான் கதையினால் வதையின் கல்வி.

(இ - ள்.) (அகம்பனுடன்வந்தஅரக்கர்), எற்றியவைகளும் எறிந்தவைகளும் தன்னெல்லையையடைந்தனவாகஎய்தவைகளும் சொரிந்தவைகளும் ஆகிய (வலிமை)முற்றின எல்லாப்படைகளும் முறைமுறையே முறிந்து சிந்துமாறு சுற்றின வயிரத்தண்டினாலே, அமரர்கள் (கண்டு) துள்ளாநிற்கத் துகைத்திட்டான்; (இதுவரையில் வதைத்தொழிலைக்)கற்காதிருந்த அநுமான் இப்போது கதையின்மூலமாய் வதைத்தலாகியகல்வியைப் பழகினான்; (எ-று.) ---இன்றுசெய்தாற்போல் ஒருபோதும் இத்துணை மிகுதியாக அநுமான்

வதைத்தொழிலைச்செய்ததில்லையென்பது, கருத்து. பி-ம்:—[1]வல்லே. [2]எயின. [3]போர்க்கண். [4]சுற்றினன். [5]அன்று. (உ௫கக)

கஉ அ. அகம்பனுங் காணக் காண வையிரு கோடிக் கைம்மா
முகம்பயில் கலினப் பாய்மா [1]முனைவயிற் றாண்டு மூரி
நுகம்[2]பயி றேரி னோடு நுறுக்கின [3]னூழி தீர்த்தான்
உகம்பெய ரூழிக் [4]காற்றி [5]னுலைவிலா மேரு வொப்பான்.

(இ - ள்.) கற்பம் முடிகின்ற யுகாந்தகாலத்தில்தோன்றுகின்ற (பெருங்) காற்றுற் சலிப்படையாத மேருவொடோத்தவனுன அநுமான்,—அகம்பனும் பார்த்துக்கொண்டேயிருக்கையில், பத்துக்கோடியானைகளையும் முகத்திற் பொருந்தியகடிவாளம்பூண்ட (அத்துணைக்) குதிரைகளையும், போர்க்களத்திலே தூண்டப்படும் வலிய நுகத்தோடுகூடிய அத்துணைத் (தேர்களோடும்) நுறுக்கிக் கொன்றுகுவித்தலைத் தீரச்செய்தான்; (எ - று.)

யுகாந்தகாலத்துச் சண்டமாருதம்போன்றவனுன அகம்பன் கண்டவண்ணமிருக்கையில்தானே நூழிலை நடத்தியதனுல், அநுமானை 'உகம்பெயரூழிக்காற்றினுலைவிலாமேருவொப்பான்' என்றுர். பி-ம்:—[1]முளையெயிற்றரக்கர், முளையெயிற்றிட்ட. [2]படு, பல. [3]ஊழிதீர்த்தான். [4]காற்றுல். [5]உலாவினுன். (உ௫உ௦)

கஉ கூ.—அநுமானைக்கொல்லக்கருதி அகம்பன் நெருங்க, அநுமானும் வாவென்றுசொல்லிச்சேர்தல்.

இன்றிவன் றன்னை [1]விண்ணு டேற்றி[2]வா ளிலங்கை வேந்தை
வென்றிய னுக்கி மற்றை மனிதரை வெறிய ராக்கி
[3]நின்றுயர் நெடிய துன்ப மமரர்பா [4]னிறுப்ப னென்னுச்
சென்றன னரக்க னன்று வருகென [5]வனுமன் [6]சேர்ந்தான்.

(இ - ள்.) 'இன்று இவனை வீரசுவர்க்கத்திலேற்றி வாட்படைபெற்றுள்ள இலங்காபதியாகியஇராவணனை வெற்றிபெற்றவனுக்கி, மற்றை மனிதரைத் தோல்வியடைந்தவராகச்செய்து, தேவர்களிடத்து மிக்குநின்ற பெருந் துயரத்தை நிலைநிறுத்துவேன்' என்றுசொல்லி, அரக்கன் சென்றுன்; அப்போது 'வருக' என்றுசொல்லி அநுமானுஞ் சேர்ந்தான்; (எ - று.)—சிலபிரதிகளில் இச்செய்யுள் "வில்லினுல்" (கூ௬கூ) என்ற பாடலின்பின் உள்ளது. பி-ம்:—[1]விண்ணில். [2]வாழ், வான். [3]நின்றுழி. [4]நிற்குமென்னச். [5]அவனுஞ். [6]சென்றுன். (உ௫உக)

கூ௩௦.—இதுவும், அடுத்த கவியும் - அகம்பன் அநுமானைக்கடிய அம்புமழைபொழிந்ததைக் கூறும்.

படுகளப் பரப்பை நோக்கிப் பாழிவாய் [1]மடித்து [2]நூழிற்
[3]சுடுதழற் புகைவெங் கண்ணிற் றேன்றிடக் கொடித்தேர் தூண்டி
[4]விடுகணைப் படல மாரி மழையினு மும்மை வீசி
முடுகுறச் [5]சென்று குனறின் முட்டினுன் முகிலி னுர்ப்பான்.

(இ - ள்.) (அகம்பன்), போர்க்களப்பரப்பை நோக்கி, குகைபோன்ற (தன்)வாயைமடித்துக்கொண்டு (பகையைக்) கொன்றுகுவிக்குந்தொழிலிலே

சுடுகின்ற நெருப்புடன்கிளர்கின்ற புகை (தன்)கொடுங்கண்ணிலே தோன்றிட, கொடிகட்டியதேரைத் தூண்டி, விடுகின்ற அம்புக்கூட்டமழையை மழையினும் மும்மடங்குஅதிகமாக வீசிக்கொண்டு, மேகம்போன்ற பெருங்குரலுடனார்ப்பவனாகி,—விரைந்துசென்று குன்றுபோல(அநுமானைக்) கிட்டிநின்றான்; (எ-று.)—பி-ம்:—[1]மடித்த, மடுக்கும், அதுக்கி. [2]ஊழின், ஊழிச். [3]சுடுகின்ற பொறிகள்வெங்கண். [4]விடுகின்றபகழி, விடுகனற்பகழி. [5]சென்ற. (உ௫உஉ)

௧௩௧.சொரிந்தன பகழி மாரி தோளினு மார்பின் மேலுந்
தெரிந்தன [1]வசனி போல்வ செறிபொறி பிதிர்வ திக்கின்
[2]வரிந்தன [3]வெருவை மானச் [4]சிறைகளா[5]லமரர் மார்பை
அரிந்தன வடிப்பு பொன்கொண் [6]டணிந்தன வாகுங் கண்ண.

(இ - ள்.) இடியைப்போல்வனவாய் நெருங்கிய தீப்பொறிகளைத் திக்குக்களிற்சிந்துவனவும், கழுகுகளின் பெருமைபொருந்திய சிறகுகளாற் கட்டப்பட்டிருப்பனவும், அமரர்மார்பை (முன்னர்) அரிந்தனவும், வடிம்பு பொன்கொண்டணிந்தன வாகும்இடத்தைக்கொண்டனவுமான (அகம்பன்) சொரிந்தனவான அம்புமழைகள்,—(அநுமானது) தோளின்மீதும் மார்பின் மீதும் தெரிந்தன; (எ - று.)—பி-ம்:—[1]அசனிபோலத்தெறு. [2]விரிந்தன. [3]மேரு. [4]சிறைகளாம். [5]வீரமார்பை, மானமார்பை, வீரர்மார்பை. [6]அணிந்தன வாங்குகண்ணன், அணிந்தனவாகுமென்ன, அமைந்தனவாகுங்கண்ண. ()

௧௩௨.—அநுமான் அகம்பனது தேரின்அச்சு முதலியவற்றைத் துண்டித்தல்.

மார்பினுந் தோளின் மேலும் வாளிவாய் மடுத்த வாயிற்
சோர்பெருங் குருதி [1]சோரத் துளங்குவான் [2]றேறு முன்னந்
தேரிரண் [2]டருகு பூண்ட கழுதையு மச்சுஞ் [3]சிந்தச்
சாரதி புரள வீரத் தண்டினாற் [4]கண்டஞ் செய்தான்.

(இ - ள்.) (தன்) மார்பிலும் தோளின்மீதும் வாளி துளைசெய்துசென்ற வாய்வழியாகப் பெருகுந்தன்மையுள்ள பெருங்குருதி பெருகியவண்ணமிருக்கச்சலித்தவனான அநுமான்,—(தான்)தேறுவதற்குமுன்னமே, தேரின்இரு பக்கத்தும்பூண்ட கோவேறுகழுதையும் அச்சும் முறிந்துசிந்திவிடவும், சாரதி புரண்டுகீழ்விழவும் வீரத்தண்டாயுதத்தினாற் கண்டமாக்கினான்; (எ - று.)—மிகையுயர்வுநவிற்சியணிபட 'தேறுமுன்னம்' என்றார்: தேறினவுடனே கண்டஞ்செய்தானென்க. பி - ம்:—[1]கக்கித்தொன்னிறஞ்சிவந்துதோன்றத். [2]அருகுப். [3]சிந்திச். [4]துண்டம். (உ௫உ௪)

௧௩௩.—அகம்பன் தானும் தண்டாயுதத்தை யெடுத்துக்கொள்ளுதல்.

வில்லினு லிவனை [1]வெல்ல லரிதென நிருதன் வெய்ய
மல்லினு லியன்ற தோளின் வலியினால் [2]வானத்தச்சன் [ண்டான்
கொல்லினு [3]லமைத்த [4]நாண்டோர் [5]கொடுமுனைத் தண்டுகொ
அல்லினால் வகுத்த தன்ன மேனியான் கடலி னார்ப்பான்.

(இ - ள்.) 'இவனை வில்லினால்வெல்வது அருமை' என்றுநினைத்து, இருளைக்கொண்டு வகுத்தாற்போன்ற [கருநிறமுள்ள] மேனியையுடைய வனும் கடற்போற்பேராரவாரஞ் செய்பவனுமான அகம்பனென்பவன்,— உடல்வலிமையோடுபொருந்திய தோள்வலியால் (வெல்லக்கருதித்) தெய் வத்தச்சன் கொல்லுத்தொழிலினாலியற்றிய கொடியமுனையையுள்ள ஓர் தண்டாயுதத்தை அப்போது எடுத்துக்கொண்டான்; (எ - று.)—கொல்லுத் தொழில் - இருப்புப்பூண்கட்டுதல், பி-ம்:—1வெல்ல, வெல்வது, வென்றல். 2வாய்ந்த, 3அமைந்தது. 4ஆங்கோர். 5சுடர்மணித், குருமுனைத், கொடு முளைத், குழுமுனைத். (உ௫உ௫)

௧௩௪.—இது முதல் ஆறு கவிகள் - அகம்பனுடனே அநுமன் தண்டாயுதங்கொண்டு பொருது அவனைக்கொன்றமையைக்கூறும்.

தாக்கினா[1]ரிடத்து மற்றும் வலத்தினுந் திரிந்தார் சாரி
[2]ஓக்கினா[3]ரூழி னார்ப்புக் கொட்டினார் [4]கிட்டி னார்கீழ்த்
தூக்கினார் [5]சுழற்றி மேன்மேற் சுற்றினா[6]ரெற்றி வெற்றி
நீக்கினார் [7]நெருக்கி னார்மே னெருங்கினார் நீங்கி னார்மேல்.

(இ - ள்.) (அநுமானும் அகம்பனும் ஒருவரையொருவர்) தாக்கினார்கள்; மற்றும் இடத்திலும் வலத்திலுமாகச் சாரிதிரிந்தார்கள்; யுகாந்தகாலத்தைப் போலப் பேராரவாரத்தை ஓங்குவித்தார்;(தோள்)கொட்டினார்; கீழ்ப்புறமாகக் கிட்டித் தூக்கிச் சுழற்றி மேன்மேற்சுற்றி மோதி வெற்றியைநீக்கப்பார்த் தார்; நெருக்கினார்: மேலே நெருங்கினவராய்(ப் பின்) நீங்கினார்; (எ - று.) —பி - ம்:—1வந்துமற்றையிடங்களுந்திரிந்து, வலத்துமற்றையிடத்தினுந் திரிந்து, வந்துமற்றெவ்விடத்திலுந்திரிந்து. 2போக்கினார். 3தெழிப்பின், கழிப் பின். 4ஒட்டினார்கள். 5சுழற்றினார்மேற். 6எற்றவெற்ற,எற்றவெற்றி. 7நெருக் கினார்மேனெருக்கினார்நீங்கினார்மேல், நெருக்கினார்போய்நீங்கினாரேங்கினார் மேல், நெருக்கினார்போய்நீங்கினார்நீங்கினார்மேல், நெருக்கினார்போய் நெக்கி னார்நீங்கினார்மேல். (உ௫உ௬)

௧௩௫. தட்டினார் [1]தழுவி னார்மேற் றாவினார் தரையி னோடுங்
கிட்டினார் கிடைத்தார் வீசிப் புடைத்தவை கீழு மேலுங்
கட்டினார் காத்தா [2]ரொன்றுங் காண்கிலா ரிறவு கண்ணுற்று
ஒட்டினார் [3]மாறி வட்ட மோடினா [4]ராதி போனார்.

(இ - ள்.) (பின்னும் தோள்)தட்டி, (ஒருவரையொருவர்) தழுவினார்: மேலேதாவினார்: தரையிற் கிட்டினார்: (ஒருவரையொருவர்) நெருங்கினார்; ஓங்கியறைந்தவை(படாதபடி) கீழும்மேலும் (கையாற்) கட்டிக்காத்தார்; (மற்றையோரினும் தாம் வலிமையில்) மேம்படுவதைச் சிறிதுங் காணமாட்டா தவராய்(ஒருவரையொருவர்)பார்த்துச் சபதஞ்செய்தனர்:வட்டமாகப்போதலை மாறிநேராகப்போனார்; (எ - று.)—இறவு-மேம்படுகை. பி-ம்:—1தடவினார். 2என்றுங். 3மாழ்கி, திகிரி, மாதி. 4சாரிபோனார், அதிபோரானார். (உ௫உ௭)

கஙசு.மையொடும் பகைத்து நின்ற நிறத்தினன் [1]வயிர மார்பிற்
பொய்யொடும் பகைத்து நின்ற குணத்தினன் [2]புகுந்து மோத
வெய்யவ னதனைத் தண்டால் விலக்கினன் விலக்க லோடுங்
கையொடு [3]மிற்று மற்றக் கதைகளங் [4]கிடந்த தன்றே.

(இ - ள்.) பொய்யோடுபகைத்துநின்ற குணத்தையுடையவனான அநுமான்,---அஞ்சனத்தோடு பகைத்துநின்ற நிறத்தையுடையனான [மிகக்கரியவனான] அகம்பனுடைய உறுதியானமார்பிலே (தண்டுகொண்டு) புகுந்து மோத,—கொடியஅகம்பன், அந்தமோதுதலைத் தண்டாயுதத்தினால் விலக்கினன்; விலக்கியவுடனே அந்தக்கதாயுதம் (பற்றியிருந்த வலக்)கையுடனே இற்றுப் போர்க்களத்தில் விழுந்திட்டது; (எ - று.)

தண்டாயுதம்மோதுதலைத் தண்டாயுதத்தினால் விலக்கப் பார்க்க, அவ்விசையைத் தாங்கமாட்டாமல் தண்டாயுதத்துடனே அதனைப்பற்றியகையும் இற்றுவீழ்ந்திட்ட தென்பதாம். பி-ம்:-1வயிரத்தோண்மேற்.2புகன்று.3அற்று. 4கண்டது. (உருஉஅ)

கஙஎ.கையொடு தண்டு [1]நீங்கக் கடலெனக் கலக்க [2]முற்ற
மெய்யொடு நின்ற[3]வெய்யோன் மிடலுடை யிடக்கை [4]யோச்சி
ஐயனை யலங்க லாகத் தடித்தன னடித்த லோடும்
[5]ஒய்யென வயிரக் குன்றத் தருமினை றிடித்த [6]தொத்த.

(இ-ள்.) (வலக்) கையுடனே தண்டாயுதமும் நீங்கிவிட, கடல்போலக் கலக்கமுற்ற உடலோடுநின்ற கொடியோனான அகம்பன், வலிமையுள்ள இடக்கையை யோங்கி அநுமானை மாலைபூண்ட மார்பில் அடித்தான்; அடித்தலோடும், திடீரென வயிரக்குன்றத்து ஆணிடியிடித்ததை யொத்திருந்தது; (எ - று.)—பி - ம்:—1நீங்கி. 2உற்று. 3வீரன். 4வீசி. 5மெய்யொளிர். 6ஒத்தான், ஒப்ப. (உருஉக)

கஙஅ.அடித்தவன் றன்னை நோக்கி யசனியே றனைய தண்டு [னை
பிடித்துநின் றேயு[1]மெற்றுன் வெறுங்கையான் பிழையிற் றென்
மடித்துவா [2]யிடத்துக் கையான் மார்பிடைக் குத்த [3]வாயாற்
குடித்துநின் றுமிழ்வா [4]னென்னக் கக்கினன் [5]குருதி வெள்ளம்.

(இ - ள்.) (அநுமான்), பேரிடியையொத்த தண்டாயுதத்தை(த் தான்) பிடித்துநின்றுலும்,(தன்னை) அடித்தவனைப்பார்த்து'(இவன்)வெறுங்கையான்: (இவனைத்தண்டுகொண்டுஅடித்தல்) அதருமமாகும்' என்றுகருதி (தண்டுகொண்டு) மோதாதவனாய், வாயைமடித்து (அந்தஅகம்பனைப்போலவே) இடக்கையினால் (அவன்) மார்பினிற் குத்த, (அவ்வரக்கன்) இரத்தப்பெருக்கை வாயால் (முன்னம்) குடித்துநின்று (இப்போது) உமிழ்பவன்போலக் கக்கினன்; (எ-று.)—பி-ம்:—1ஆற்றுன். 2இடததகையான், இடக்கையானை. 3வாயிற். 4போல. 5குருதிகொள்ள, குருதிக்கொள்ளை. (உருங0)

கஙகூ.மீட்டுமக் கையால் வீசிச் செவித்தலத் [1]தெற்றி [2]வீழ்த்தான்
[3]கூட்டிறை னுயிரை விண்ணோர் குழாத்திடை யரக்கர் கூட்டங்.

காட்டில்வாழ் விலங்கு மாக்கள் கோளரி [4]கண்ட வென்ன
ஈட்டமுற் [5]றெதிர்ந்த வெல்லா மிரிந்தன திசைக ளெங்கும்.

(இ-ள்.) மறுபடியும்(அநுமான்) அந்த(இடக்)கையாலேயே (அகம்பனை) யோங்கிக் காதினிடத்துமோதி(க்கீழ்)வீழ்த்தி, அவனுயிரை வானவர்கூட்டத்திற் சேர்த்தான்; (இதுவரையிற்) கூட்டமாகப்பொருந்தி எதிரிட்ட அரக்கர் கூட்டமெல்லாம், (அப்போது) காட்டில்வாழ்கின்ற திர்யக்குக்களாகிய மிருகங்கள் வலியசிங்கத்தைக் கண்டனபோல எல்லாத்திசைகளிலும் நிலைகெட்டோடின; (எ - று.)—பி-ம்:—1எற்ற. 2வீழ்ந்தான். 3கூட்டினார். 4கண்டது. 5எதிர்ந்தது. (உருஙக)

கசo.—இலட்சுமணனம்பால் அரக்கச்சேனை மாளுதல்.

மாண்டன னகம்பன் மண்மேன் மடிந்தன நிருதர் சேனை
[1]மீண்டனர் குரக்கு வீரர் விழுந்தன சினக்கை வேழம்
தூண்டின [2]கொடித்தே ரற்றுத் துணிந்தன தொடுத்த வாசி
ஆண்டகை யிளைய வீர னடுசிலை பொழியு மம்பால்.

(இ - ள்.) அகம்பன் மண்மேல் மாண்டுவிழுந்திட்டான்; நிருதர்சேனைகளும் (மண்மேல்) மடிந்தன; குரக்குவீரர் மீண்டார்கள்; ஆண்மைக்குணமுள்ள இலட்சுமணனுடைய வில்லிலிருந்து வெளிப்படுகின்ற (பகைவரைக்) கொல்லும் அம்புகளால், சினம்பொருந்திய கையையுடைய வேழங்கள்(உயிர் மாண்டு)விழுந்தன;(அரக்கர்)தூண்டிய கொடித்தேர் அற்றுப்(போகப்)பூட்டிய வாசிகள் துண்டுபட்டன: (எ - று.)—அநுமான்செய்கை அவனுக்குஉரிய திக்காகிய ஒருபக்கத்து நடக்க,இலட்சுமணன் தென்மேற்குத்திக்கில் பகைவர் சேனையையொழித்துக்கொண்டிருந்தானென்க. இவ்விஷயம் அடுத்த இரண்டு பாடல்களினால் விளங்கும்.பி-ம்:—1மீண்டன குரங்குவெள்ளம்.2கொடித்திண் டேர்க ளிளக்கையம்பொருப்பு, கொடித்திண்டேர்கடுணிந்தனபொருப்பு. ()

கசக.—இலக்குமணன் முதலியோரைப்பற்றி ஒன்றுந்தெரியாமையால் அநுமான் துயருறுதல்.

ஆர்க்கின்ற குரலுங் கேளா னிலக்குவ னசனி யேற்றைப்
[1]பேர்க்கின்ற சிலையி னாணின் பேரொலி கேளான் [2]வீரர்
[3]யார்க்கின்ன லுற்ற தென்ப [4]துணர்ந்தில னிசைப்போ ரில்லைப்
போர்க்குன்ற மனைய தோளா [5]னனையதோர் பொருமலுற்றான்.

(இ - ள்.) இலக்குவன் ஆரவாரிக்கின்ற குரலையும் கேளாதவனும்,(அவனுடைய) பேரிடியினொலியையும் அடக்கவல்ல வில்நாணியின்பேரொலியையும் கேளாதவனும்,வீரரில் யார்க்குத் துயரம் நேர்ந்துள்ள தென்பதை இசைப்போரில்லாமையால் உணராதவனுமாய் போர்செய்யவல்ல குன்றத்தையொத்த தோளையுடையவனான அநுமான் அவ்வாறானதொரு [மிகவும்அதிகமான] துன்பத்தை யடைந்தான்; (எ - று.)---சிலபிரதிகளில், இச்செய்யுள், இலக்குவனைப் பாதுகாக்க வைத்திட்டு அஸ்திரபூசைசெய்துவரச் சென்ற ஸ்ரீராமன் மீண்டுவந்ததும், சேனைக்காவலனாக நியமித்துச்சென்ற இலட்சு

மண்ணது குரலொலிமுதலியன ஒன்றுஞ் செவிப்படாமையால் அவ்விராமன் வருந்தினனென்பதைத் தெரிவிப்பதாக கஅஅ-ஆம்பாடலுக்குப்பின் அமைந்துள்ளது. பி-ம்:—1போர்க்கின்ற...நாணிற்போரொலி. 2வீரன். 3ஆர்க்கின்னதுற்றதென்பது, யார்க்கின்னலுற்றதென்ன, ஏற்கின்றதுற்றதென்பது, யார்க்கின்னலுற்றதென்றுது,ஈர்க்கின்றதென்னேயுற்றது. 4உணர்கிலன்,அறிகிலான். 5இணையதோர், வெய்யதோர். (உருஙரு)

கசஉ.—அங்கதன்முதலியோர் அரக்கர்பெருஞ்சேனையில் வெகுதூரஞ் சென்றிருந்தமை.

1வீசின நிருதர் சேனை வேலையிற் றென்மேற் றிக்கின்
யோசனை யேழு சென்றா னங்கத 2னவனுக் கப்பால்
ஆசையி னிரட்டி சென்றா னரிகுலத் 3தலைவ னப்பால்
ஈசனுக் கிளைய வீர னிரட்டிக்கு மிரட்டி சென்றான்.

(இ - ள்.) வெகுதூரம்பரவியிருந்த அரக்கர்சேனையாகிய கடலின் தென் மேற்குத்திக்காக அங்கதன் ஏழுயோசனைதூரஞ் சென்றிருந்தான்; குரங்குக் குலங்கட்குஅரசனான சுக்கிரீவன்,அவ்வங்கதனுக்குஅப்பால் அத்திக்கில் இரட்டிப்பாக [பதினான்குயோசனைதூரஞ்]சென்றான்; ஸ்ரீராமனுக்குஇளையவனாகிய இலட்சுமணன், (சுக்கிரீவனுக்கும்) அப்பால் நான்குமடங்குதூரம்[ஐம்பத்தாறு யோசனைதூரம்] சென்றிருந்தான்; (எ - று.)—பி-ம்:—1வீசினன், வீசினர். 2அதனுக்கு. 3அரசன், மன்னன். முதலடிதவிரமற்றைமூன்றடிகள்"ஓசனையெழுந்துசென்றானரிகுலமன்னனுப்பால், ஈசனுக்கிளைய...சென்றான், நீசரைத் தொலைத்துநீலஞேசனையாறுசென்றான்" என்று ஒருபிரதியிற் காணப்படுகின்றன (உருஙச)

கசங.—அநுமான் தனக்கும் இலக்குமணனுக்கும் இரண்டுமூன்றுகாவதமிருக்குமாறு சேர்தல்.

மற்றையோர் நாலு மைந்தும் யோசனை மலைந்து புக்கார்
கொற்றமா ருதியும் வள்ள லிலக்குவ 1னின்ற சூழல்
2முற்றின னிரண்டு மூன்று காவத மொழியப் பின்னுஞ்
சுற்றிய சேனை நீர்மேற் 3பாசிபோன் 4மிடைந்து துன்ன.

(இ - ள்.) மற்றைவானரர்கள் போர்புரிந்து நாலும்ஐந்தும்யோசனை (அந்தச்சேனைக்கடலுக்குட்) புகுந்தார்கள்: பின்னும் சுற்றியசேனை நீர்மேற் பாசிபோல் நெருங்கிக்கிட்ட,வெற்றிபொருந்திய மாருதியும், வள்ளலான இலக்குவன்நின்ற இடத்திற்கு இரண்டுமூன்றுகாவததூரமிருக்கச் சேர்ந்தான்;(எ-று.)—பி-ம்:—1நின்றகொற்றம்,உற்றகொற்றம்,நின்றுகொற்றம்.2முற்றின.3பாசியின்.4மிடைந்துசுற்றி,மிடைந்துதுன்னி,மிடையுந்துள்ளி, மிடையுந்துன்னி.

கசச.—இளையபெருமாளைக்கிட்டுமாறு சென்ற மாருதி தன் கண் நீங்கப் பல்வேறுதுறிகளைக் காணுதல்.

இளையவ னின்ற சூழ லெய்துவென் விரைவி 1னென்றோர்
உளைவுவந் துள்ளந் தூண்ட ஆழிவெங் காலிற் செல்வான்

களைவருந் [2]துன்ப [3]நீங்கக் கண்டன னென்ப [4]மன்னோ
[5]விளைவன செருவிற் பல்[6]வே றுயின குறிகள் [7]மெய்யின்.

(இ-ள்.) (அநுமான், தனக்குக் களைப்புவந்திருப்பவும்) 'இளையபெருமானுள்ள இடத்தே விரைவிற் கிட்டுவேன்' என்று ஓர்வருத்தம்வந்து ஊக்கத்தைத் தூண்டவே, யுகாந்தகாலத்துச் சண்டமாருதம்போல(விரைந்து)செல்பவனாய், (தனது) களைப்புத் துன்பம்நீங்குமாறு செருவில்விளைவனவாகிய பல்வேறு குறிகளை உண்மையாகக் கண்டான்; (எ - று.)—என்ப, மன்னோ-அசைகள். குறிகள்-இலக்குமணன் போர்செய்வதனால்நிகழ்ந்த குறிகள்: அவற்றை, மேல் ஏழுகவிகளிற் காண்க. பி-ம்:—[1]என்றான், என்று.[2]துயரம். [3]நீங்கிக்.[4]மாதோ. [5]இளையவன். [6]வேறுக்கினகுறியீது. [7]என்ன, மேய, ஏய. (உ௱௬௬)

கசஙு.—இலக்குமணன் போர்செய்வதனால் நிகழ்ந்தகுறிகள்
ஏழுகவிகளிற் கூறப்படும்.

ஆனையின் கோடும் பீலித் தழைகளு மாரத் தோடு
மானமா மணியும் பொன்னு முத்தமுங் கொழித்து வாரி
மீனென வங்கு மிங்கும் படைக்கல மிளிர [1]வீசும்
[2]பேனவெண் குடைய வாய குருதிப்பே ராறு கண்டான்.

(இ-ள்.) ஆனையின்தந்தங்களையும் பீலிக்குடைகளையும் ஹாரங்களுடனே சிறந்த(பல்வகை) இரத்தினங்களையும் பொன்னையும் முத்துக்களையும் கொழித்துக்கொண்டு, நீரில்வாழ்கின்ற மீனென்னுமாறு அங்கும்இங்கும் படைக்கலங்கள் விளங்க வீசுகின்ற நுரையென்றுசொல்லத்தக்க வெண்குடையையுடைய அப்படிப்பட்ட குருதிப்பேராற்றை (அநுமான்) கண்டான்; (எ - று.)—பீலித்தழை-வாச்சியமென்பாருமுளர். பி-ம்:—[1]ஈர்க்கும், வீசிப், வீங்கும். [2]மோனைவெண்குடையவாறுமுதிரப் பேரியாறு, கான...பேராறு, ஆனவெண்குடைய வாயகுருதிப்பேராறு. (உ௱௬௭)

கசசு.ஆசைக டோறுஞ் சுற்றி [1]மலைகின்ற [2]வரக்கர் தம்மேல்
வீசின பகழி [3]யற்ற [4]தலையொடும் விசும்பை முட்டி
ஓசையி னுலக மெங்கு [5]மதிர்வுற வூழி நாளிற்
காசறு கல்லின் மாரி பொழிவபோல் [6]விழுவ கண்டான்.

(இ-ள்.) ஆசைகடோறுஞ் சூழ்ந்துகொண்டு பொருகின்ற அரக்கர்களின் மேல் வீசின பகழிகள்,(தம்மால்) அறுபட்ட தலைகளோடும் விசும்பைமுட்டி, ஓசையினால் உலகமெங்கும்அதிர்வுற, யுகாந்தகாலத்திலே குற்றமற்ற கல் மழைபொழிவனபோல விழுவனவற்றை (அநுமான்)கண்டான்; (எ - று.)—பி-ம்:—[1]அலைகின்ற,அலைக்கின்ற. [2]அரக்கன் றன்மேல்.[3]பற்றத், அற்றத். [4]தலைகளும். [5]உதிர்வுற, தானிறும். [6]வீழக். (உ௱௬௮)

கசஎ.மானவே லரக்கர்விட்ட படைக்கல [1]வான மாரி
ஆனவன் பகழி சிந்தத் [2]திசைதொறும் பொறியோ டற்ற
மீனினம் விசும்பி னின்று [3]மிருளுக விழுவ போலக்
கானகந் தொடர்ந்த தீயிற் சுடுவன பலவுங் கண்டான்.

(இ-ள்.) (அன்றியும், அநுமான்),—பெருமைபொருந்திய வேற்படையையுடைய அரக்கர் விடுத்த படைக்கலமாகிய வானமாரிகள்,—(பொருதற்குப்) பொருந்தியவனான இலக்குமணனுடைய பகழிகள் (தம்மேற்) படுவதனால் திக்குக்கள்தோறும் தீப்பொறியோடும் அற்றனவாய், நட்சத்திரக்கூட்டங்கள் விசும்பிலிருந்து இருள்கெட வீழ்வனபோல (விழுவனவாகி), காட்டில் தொடர்ந்ததீப்போல சுடுபவை பலவற்றையுங் கண்டான்;(எ-று.)—பி-ம்:—1ஆனவாரி. 2பொறியொடுந்திசையோடற்ற, திசையொடும்பொறியோடற்ற. 3மீச்செலவீழ்வ. (௨௫௩௯)

௧௪௮. அருளுடைக் குரிசில் வாளி [1]யந்தர மெங்குந் [2]தாமாய்த்
தெருளுறத் [3]தொடர்ந்து [4]வீசிச் செல்வன தேவர் காண
[5]இருளுடைச் சுடலை [6]யாடு மெண்புயத் தண்ணல் வண்ணச்
சுருளுடைச் சடையின் கற்றைச் சுற்றெனச் சுடர்வ கண்டான்.

(இ - ள்.) (மற்றும்அநுமான்),—அருளையுடைய ஆண்களிற்சிறந்தவனான இலக்குமணனுடைய அம்புகள் ஆகாயமெங்கும் தாமேயாய் (யாவரும்) உணரும்படி தொடர்ச்சியாக வீசப்பெற்றுச் செல்பவை,—இருண்ட மயானத்திலே தேவர்காண ஆடுகின்ற எண்புயங்களையுடைய சிவபெருமானின் அழகியசுருளுதலைக்கொண்ட சடைக்கற்றைச்சுற்றெனச் சுடர்பவற்றைக் கண்டான்; (எ - று.)

இலக்குமணனுடையஇப்போதைய யுத்தம்கறுத்தஇரவில் நடப்பதனால் அவ்விரவில் ஒளிரும் வாளிகட்கு உவமை கூறுவார், 'இருளுடைச்சுடலையாடும் அண்ணலின் சடைக்கற்றையைக் கூறினர்: விஷகண்டனாதலால் 'இருளுடையண்ணல்'என்றாரெனினுமாம். பி-ம்:—1பரந்திட. 2தானாய். 3துரந்து. 4வீசச். 5இருளிடைச், அருளுடைச். 6ஓடும். (௨௫௪௦)

௧௪௯. நெய்யுறக் கொளுத்தப் பட்ட நெருப்பெனப் பொருப்பி னோங்
மெய்யுறக் குருதித் தாரை விசும்புற [1]விளங்கு கின்ற [கும்
[2]ஐயனிக் கங்குன் மாலை [3]யரசென வறிந்து காலங்
கைவிளக் கெடுத்த தென்னக் கவந்தத்தின் காடு கண்டான்.

(இ - ள்.) வானத்துற(ஓங்கி)விளங்குகின்ற ஐயனான அநுமான், நெய்பொருந்தக் கொளுத்தப்பட்ட நெருப்புப்போன்று மலைபோலஓங்கிநிற்கும் உடலிலே குருதித்தாரை பொருந்த,(அதனால்),இந்தக்கங்குலானது இரவுக்கு அரசன் என்று அறிந்து காலம் கைவிளக்குப்பிடித்தாற்போலத்தோன்றக் கவந்தக்காட்டையுங்கண்டான்; (எ - று.)—மலைபோன்றஉடலிலே குருதித்தாரைபொருந்துவது ராக்ஷஸலங்காரம்நடப்பதனால் அவ்விரவு கங்குற் கரசு என்றுகொண்டு காலம் நெய்யிட்டெரிக்குங்கைவிளக்குப்போல்தோன்ற, அங்ஙனமான கவந்தங்களை அநுமான் கண்டானென்க. பி-ம்:—1விளங்கிநின்ற. 2வையகங் 3ஒன்றவாறிந்துவந்தக், ஆமெனவறிந்துவந்த, ஆச்செனவறிந்துகாலன், ஆச்செனவறிந்துவந்த. (௨௫௪௧)

௧௫௦. ஆளெலா [1]மழிந்த தேரு மானையு மாடன் மாவும்
நாளெலா மெண்ணி னாலுந் தொலைவிலா [2]நாத ரின்றித்

[3]தாளெலாங் குலைய வோடித் திரிவன [4]தாங்க லாற்றுங்
[5]கோளிலா மன்ன [6]னுட்டிற் குடியெனக் குலைவ கண்டான்.

(இ - ள்.) (அன்றியும் அநுமான்),—(தம்மீது இருக்கப்பெற்ற) வீரரெல்லாம் அழியப்பெற்ற தேரும் ஆனையும் ஆடுந்தன்மையுள்ள குதிரைகளும், நாளெலாமெண்ணினும் (தம் வாழ்நாட்கு) அழிவுஇல்லாத (தம்) தலைவரையில்லாமல், தாளெல்லாங்குலையுமாறு ஓடித்திரிவனவாய், தாங்குதலைச்செய்யும் கொள்கையில்லாத மன்னவனுட்டிலுள்ள குடிகள்போல அழிவனவற்றைக் கண்டான்; (எ - று.)

அழிந்திடாமல் வெகுநாள் வாழ்ந்திருக்கக்கூடியவர் தேர்முதலியவற்றின் நாத ரென்பது, 'நாளெலாமெண்ணினுந் தொலைவிலா நாதர்' என்பதன் கருத்து. இனி, மிகப்பலவுள்ளனஎன்றகருத்துப்பட தேர்முதலியவற்றை 'நாளெலாமெண்ணினுந் தொலைவிலா' என்றாரெனினுமாம். பி-ம்:—[1]இழந்த. [2]நாகரீகத். [3]தோளெலாங். [4]தாகன்றுனுங். [5]கோளுலாம். [6]நாட்டுக். (உ௫௬உ)

௧௫௧. மிடல்கொளும் பகழி [1]மாரி வானினு மும்மை வீசி
மடல்கொளு மலங்கன் மார்பன் மலைந்திட [2]வுலந்து மாண்டார்
உடல்களு முதிர நீரு [3]மொளிர்[4]படைக் கலமு [5]முற்ற
கடல்களு நெடிய [6]கானுங் கார்தவழ் மலையுங் கண்டான்.

(இ - ள்.) (மற்றும் அநுமான்),—இதழைக்கொண்ட பூமாலையை யணிந்த மார்பையுடையஞன இலட்சுமணன் வலிமைகொண்ட அம்புமழைகளை மழையைக்காட்டிலும் மும்மடங்கு வீசிப் போர்செய்திட்டதனல், உயிரொழிந்து மாண்டவரான அரக்கரின் உடல்களும் இரத்தநீரும் விளங்குகின்ற படைக்கலங்களுமாகப் பொருந்திய கடல்களையும் நெடிய கானகத்தையும் மேகந்தவழ்கின்ற மலையையுங் கண்டான்; (எ-று.)—உடல்களை மலையாகவும், உதிரநீரைக் கடல்களாகவும், படைக்கலங்களைக் கானகவுங்கொள்க. பி-ம்:—[1]வானின் மாரியின், மாரிவானினும். [2]உலைந்தோர், உலைந்து, அலைந்து. [3]உடைப், மிடை, மிடல். [4]படைக்கலக்கம், படக்கலக்கம். [5]இற்ற. [6]வானுங். (உ௫௬௩)

௧௫உ.—அனுமான் இலட்சுமணனது நாணொலிகேட்டு மகிழ்ச்சியாற் பேராரவாரஞ் செய்தல்.

சுழித்தெறி யூழிக் [1]காலிற் றருவினன் றொடருந் தோன்றல்
[2]தழிக்கொண்ட குருதி வேலை தாவுவான் றனிப்பே ரண்டங்
கிழித்தது கிழித்த தென்னு நாணுரு மேறு கேட்டான்
[3]அழித்தொழி காலத் தார்க்கு மார்கலிக் கிரட்டி யார்த்தான்.

(இ - ள்.) சுழித்தடிக்கின்ற யுகாந்தகாலத்துக் காற்றுப்போலத் தேடித் தொடர்பவனும் தழுவிக்கொண்ட இரத்தக்கடலைத்தாவுபவனுமாகிய ஆண்களிற்சிறந்த அநுமான், 'தனித்த பெரிய அண்டத்தைக் கிழித்தது கிழித்தது' என்றுசொல்லத்தக்க நாணியின் பேரோசையைக் கேட்டு, (உலகத்தையெல்லாம்) அழித்தொழிக்கின்ற கற்பாந்தகாலத்து ஆரவாரிக்கின்ற கடலினும் இருமடங்கு ஆரவாரித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]காலத்துருமெனத்தொடர்ந்து

தோன்றத், 2தழீஇக்கொடு, தழிக்கொடு, தழீஇத்தழீ. 3அழித்தொழில்வீரரார்க்கும். (உருசச)

கருரு.---அனுமான் இலட்சுமணனைக் கண்டு தழுவுதல்.

ஆர்த்தபே ரமலே கேளா வணுகின னனும [1]னெல்லார்
வார்த்தையுங் கேட்க லாகு மென்[2]றக மகிழ்ந்து வள்ளல்
[3]பார்ப்பதன் முன்னம் வந்து வணங்கினன் விசயப் பாவை
[4]தூர்த்தனை யிளைய வீரன் [5]றழுவின னினைய சொன்னான்.

(இ - ள்.) (வில்நாணி) ஒலித்த பெருஞ்சத்தத்தைக் கேட்டு, அநுமான், (இலட்சுமணனைக்) கிட்டியவனாகி, (இனி)எல்லார்செய்தியும் கேட்டல் கூடுமென்று மனமகிழ்ந்து, உதாரகுணமுள்ளவனான அவ்விலட்சுமணன் பார்ப்பதற்குமுன்னம் வந்துவணங்கினான்: விசயமங்கையின் ஆசைநாயகனாகிய அநுமானை இளையபெருமாள் தழுவினவனாய் இவ்வார்த்தைகளைச் சொன்னான்; (எ - று.)---இளையபெருமாள் சொல்லியதை மேற்கவியிற் காண்க. பி-ம்:--- 1எல்லா. 2உளம்.3பார்த்தனன்...,பார்த்தவன்முன்னஞ்சென்றுபணிந்தனன். 4தூர்த்தனன், தீர்த்தனே. 5தழுவிநின்று. (உருசரு)

கருசு.---இலட்சுமணன் அநுமானை வானரவீரர்களைக்குறித்து வினவுதல்.

அரிகுல வீர ரைய யாண்டைய ரருக்கன் மைந்தன்
[1]பிரிவுனைச் செய்த தெவ்வா றங்கதன் பெயர்ந்த தெங்கே
[2]விரியிருட் பரவைச் சேனை வெள்ளத்து[3]விளைந்த தொன்றுந்
தெரிகிலே னுரைத்தி யென்றான் [4]சென்னியிற் கையன் சொன்னான்.

(இ - ள்.) 'ஐயனே! வானரகுலவீரர்கள் எங்கேயுள்ளார்? சூரியகுமாரனான சுக்கிரீவன் உன்னைப் பிரிந்தது எவ்வாறு? அங்கதன் சென்றது எங்கே? விரிந்தஇருளிலே கடல்போன்ற சேனைவெள்ளத்திலே விளைந்தது ஒன்றும் அறிந்திலேன்; சொல்வாய்' என்று (இலட்சுமணன்)வினவினான்;(அனுமான்) சிரசிற்கூப்பியகையையுடையவனாகிக் கூறலானான்; (எ - று.)---அநுமான் கூறுபவற்றை மேலிரண்டுகவிகளிற் காண்க. பி-ம்:---1திருவினைசெய்ததீலனங்கதன்போர்ந்தது. 2விரியருட்பரவைவேலை. 3விளைந்த, விளைத்தது. 4சென்னிமேற். (உருசசு)

கருரு.---தானும் ஒன்றும் அறிந்திலாமையை அநுமான் தெரிவித்தல்.

போயினார் போய வாறும் போயின தன்றிப் போரில்
ஆயினா [1]ராய தொன்று மறிந்தில [2]னைய யாரும்
மேயினார் மேய போதே [3]தெரியலாம் விளைந்த தென்றான்
[4]தாயினான் வேலை யோடு [5]மயிந்திரப் பரவை தன்னை.

(இ - ள்.) கடலினுடனே ஐந்திரவியாகரணமாகியகடலையும் கடந்தவனாகிய அநுமான்,---(இலக்குமணனைநோக்கி),---'ஐயனே! (ஓடிப்)போயினார் போனபடியும், (ஓடிப்)போன தன்றிப் போரிலே சென்றவர் அடைந்தவகையையும் சிறிதும் அறிந்திலேன்: யாரைப்பற்றியும் சென்றவர் மீண்டுவந்தபோதே விளைந்தது அறியமுடியும்' என்றான்; (எ - று.)---பி-ம்:---1ஆயவாறும்.

[2]அனைய. [3]தெரிவது, தெரியுறும். [4]தாயினர்வேலையொன்றுதாயினன்பரவை யோடும்.[5]இந்தியப்பரவைதன்னை,..பரவைத்தானை,...பரவைதானே.(உருசஎ)

கருசு.—ஒன்றுமறியாதபடி மனமயக்கந் தோன்றியதை விலக்கும் உபாயத்தை அநுமான் கூறுதல்.

மந்திர மூளதா லைய வுணர்வுறு [1]மாலைத் தஃதுன்
சிந்தையி னுணர்ந்து [2]செய்யற் பாற்றெனிற் செய்தி தெவ்வர்
தந்திர [3]மிதனைத் தெய்வப் [4]படையினாற் [5]சமைக்கி னல்லால்
எந்தைநின் னடியர் யாரு மெய்தலர் நின்னை யென்றான்.

(இ - ள்.) ஐயனே! (திகைப்புநீங்கி) உணர்வைப்பொருந்துந்தன்மைய தான உபாயம் உள்ளது; அஃது உன்சிந்தையினாலே உணர்ந்துசெய்தற்குஉரிய தாதலால், செய்வாய்; (நம்)பகைவர்தந்திரத்தால் நேர்ந்த இம்மதிமயக்கத்தைத் தெய்வப்படையினாற் போக்கினாலல்லாமல், எந்தையே! நின்னடியார் எவரும் நின்னை (உணர்வுபெற்று) அடையமாட்டார்' என்று (அநுமான் இலட்சுமண னிடம்) தெரிவித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]மாலைகாறும், மாலைதானும், மாலைத் தோன்றும். [2]செய்யற்பாற்றினி. [3]அதனைத். [4]படைகளாற். [5]சமைப்பின். ()

கருஎ.—இலட்சுமணன் அநுமான் சொல்லைக்கேட்டுப் பாசுபதாஸ்திரத்தைத் தொடுத்துவிடுதல்.

அன்னது புரிவ னென்னா வாயிர நாமத் தண்ணல்
தன்னையே [1]வணங்கி வாழ்த்திச் சரங்களைத் தெரிந்து [2]வாங்கிப்
பொன்மலை வில்லி னான்றன் படைக்கலம் பொருந்த [3]வேந்தி
மின்னெயிற் றரக்கர் தம்மேல் [4]வீசினான் வில்லின் செல்வன்.

(இ-ள்.) விற்றொழிற் செல்வத்தையுடையவனான இலட்சுமணன்,—'அத னைச்செய்வேன்' என்றுசொல்லி, ஸஹஸ்ரநாமத்துக்குஉரியவனான ஸ்ரீராமனை யே வணங்கி வாழ்த்திவிட்டு, (பிறகு) அம்புகளைத் தெரிந்து எடுத்து மேரு மலையை வில்லாகக்கொண்டவனான சிவபெருமானது அஸ்திரத்தைப் பொருந் தச்செய்து ஏந்தி, மின்னல்போன்ற எயிற்றையுடைய அரக்கர்மீது வீசினான்; (எ-று.)—சிறந்தபாணங்களிற் பாசுபதாஸ்திரத்தை அபிமந்திரித்து இலட்சு மணன் அரக்கர்மீது விடுத்தா னென்க. பி-ம்:—[1]தொழுது. [2]தாங்கி. [3]பற்றி. [4]ஏவினான். (உருசக)

கருஅ.—இலட்சுமணன்விடுத்த பாசுபதாஸ்திரத்தினால் அரக்கர்படையெரிய இருளொழிதல்.

முக்கணான் படையை மூட்டி விடுதலு மூங்கிற் காட்டிற்
புக்கதோ ரூழித் தீயிற் [1]புறத்தினோ ருருவும் போகாது
[2]அக்கணத் தெரிந்து வீழ்ந்த தரக்கர்தஞ் சேனை [3]யாழி
திக்கெலா [4]மிருளுந் தீர்ந்த தேவரு [5]மயக்கந் தீர்ந்தார்.

(இ-ள்.) சிவபெருமானுடைய அஸ்திரத்தை (இலட்சுமணன்) தொடுத்து விடுதலும், மூங்கிற்காட்டிலே புக்கதான ஓர் ஊழித்தீபோலப் புறத்தே ஒரு பொருளும் போகாமல் அரக்கர்சேனைக்கடல் அக்கணத்தில்தானே எரிந்துவீழ்

ந்தது: திக்குக்களிலெல்லாம் இருளும் நீங்கிற்று; வானரர்யாவரும் அறிவுமயக்கந் தீர்ந்தார்; (எ - று.)—தீர்ந்த தேவருமென்று பிரிப்பாருமுளர். பி-ம்:—[1]புறத்தின்...போகா, புறத்தொன்றும்போகாவண்ணம். [2]அக்கணத்தெரித்து வீழ்த்தானரக்கர்தம்படையை, அக்...வீழ்ந்த...படையை. [3]ஆழித். [4]மருளுந் தீர்த்தான். [5]இடுக்கண். (௨௫௯௦)

௧௫௯.—மகோதரன் மறையப்போக, வானரரெல்லாம் இலட்சுமணனைக் கூடியிடுதல்.

தேவர்தம் படையை விட்டா [1]னென்பது சிந்தை செய்யா
[2]மாபெரு மாயை நீங்க மகோதரன் மறையப் போனான்
[3]யாவரு மிரிந்தா ரெல்லா [4]மினமழை கழிய வார்த்துக்
கோவிளங் களிற்றை வந்து கூடினா ராடல் கொண்டார்.

(இ - ள்.) (இலட்சுமணன்) பாசுபதாஸ்திரத்தை விடுத்தானென்பதையறிந்து கருநிறமாகவந்த பெருமாயை நீங்கிவிட, மகோதரன் மறையப்போயிட்டான்; நிலைகெட்டவராகிய யாவரும், தொகுதியான மேகமெல்லாம் பின்னிடும்படி யாரவாரித்து இளையபெருமாளை வந்துகூடி ஆடல்புரிந்தார்; (எ - று.)—பி-ம்:—[1]என்பதுஞ். [2]மாபெருந்தேரினின்ற, மாவரு மாயைநீங்க. [3]எவரும். [4]மேன்மழையென்ன, இனமழையிரிய. (௨௫௯௧)

௧௬௦.—இலட்சுமணன் வானரச்சேனையோடு மகிழ்ந்திருத்தல்.

யாவர்க்குந் தீதி லாமை [1]கண்டுகண் டுவகை யேறத்
தேவர்க்குந் தேவன் றம்பி திருமனத் தையந் தீர்ந்தான்
காவற்போர்க் [2]குரக்குச் சேனை [3]கல்லெனக் கலந்து புல்லப்
பூவர்க்க மிமையோர் தூவப் [4]பொலிந்தனன் தூதர் போனார்.

(இ - ள்.) தேவதேவனான ஸ்ரீராமனது திருத்தம்பியான இலட்சுமணன் எவர்க்குந் தீதிலாமையைச் செவ்வனே கண்டு உவகைமிக மனத்தில் ஐயந் தீர்ந்தவனாய், (தன்னுடைய) காவலாய்ப் போர்க்குரியதான குரக்குச்சேனை கல்லென்றவொலியுடன் (தன்னைச்) சேர்ந்து தழுவிநிற்க, மலர்த்தொகுதியைத் தேவர் தூவ, விளங்கிநின்றான்: (அச்செய்திசொல்ல இராவணனிடம் அவனுடைய) தூதுவர் சென்றார்; (எ - று.)—பி - ம்:—[1]கண்டுவந்துவகையெய்தித். [2]குரங்கின்சேனை. [3]கடலெனக்கடிதுகூட, கடலெனக்கிளர்ந்துசுற்ற. [4]பொலிந்தனர். (௨௫௯௨)

௧௬௧.—தூதர் இராவணனுக்கு அரக்கர்சேனையொழிந்தமையைத் தெரிவித்தல்.

இலங்கையர் கோனை யெய்தி யெய்திய துரைத்தார் [1]நீவிர்
விலங்கினிர் போலும் வெள்ள [2]நூற்றையோர் [3]வில்லின் வேழக்
குலங்களி னோடுங் கொல்லக் கூடுமோ வென்னக் கொன்றை
அலங்கலான் படையி னென்றா ரன்னதே லாகு மென்றான்.

(இ-ள்.) இலங்கைக்குஅரசனான இராவணனையடைந்து, (தூதர்), நிகழ்ந்ததையுரைத்தார்; (அதுகேட்ட இராவணன்) 'நீங்கள் (அஞ்சி) விலகிவந்

திட்டீர்போலும்; யானைக்கூட்டங்களுடனே நூறுவெள்ளம் (அரக்கச்) சேனையையும் ஒரு வில்லினாலே கொல்லமுடியுமோ?" என்று வினவ, '(இலட்சுமணன் சேனையெல்லாவற்றையுங்கொன்ற இது நிகழ்ந்தது), கொன்றைமாலையையணிந்த சிவபெருமானுடைய படையினால்' என்று (தூதர்விடை)கூறினார்: (இராவணன்) 'அப்படியானால் (அரக்கர்சேனை யெல்லாம் அழிந்ததென்பது) நிகழ்ந்திருக்கும்' என்று (தூதுவர்வார்த்தையை இராவணன்) உடன்பட்டான்; (எ - று.)

நீங்கள் இலக்குமணனுடையஅம்புக்கு அஞ்சி விலகிவிட்டு அவன் சேனைகளையெல்லாங் கொன்றதாகக் கூறுகின்றீரென்ற குறிப்போடு 'நீவிர்விலங்கினிர்போலும்:வெள்ளநூற்றை யோர்வில்லின் வேழக்குலங்களினோடுங் கொல்லக்கூடுமோ?" என்று வினவினன் இராவணனென்க.பி-ம்:--[1]நீங்கள்,நீர்கள். [2]நூற்றையும். [3]வில்லால்வீழக். (உருநரு)

கருஉ.—இச்செய்தியை இந்திரசித்திற்குஉணர்த்துமாறு இராவணன் தூதரிடம் கூறுதல்.

தோடவி ழலங்க லென்சேய்க் குணர்த்துமி னென்னச் சொன்னான்
ஓடினார் [1]சாரர் வல்லை யுணர்த்தினர் துணுக்க மெய்தா
ஆடவர் திலகன் யாண்டை [2]யானிக லனும னேனோர்
[3]வீடணன் யாங்க ணுள்ளா ருணர்த்துமின் விரைவி னென்றான்.

(இ - ள்.) 'இதழ்கள்மலரப்பெற்ற மாலையையணிந்த என்குமாரனுக்கு (இச்செய்தியை) உணர்த்துங்கள்' என்று (இராவணன்) கூறினான்; ஒற்றர் ஓடி விரைந்து (அச்செய்தியை இந்திரசித்துக்கு) உணர்த்தினார்கள்; (அது கேட்ட இந்திரசித்து),—மனநடுக்கமடைந்து, (தூதரைநோக்கி), 'ஆடவரில் திலகம்போன்றவனான இராமன் எங்குஉள்ளான்? வலிமையுள்ள அநுமானும் மற்றைவானரரும் வீடணனும் எங்கேயுள்ளார்? விரைவில் உணர்த்துங்கள்' என்று வினவினான்; (எ - று.)—இச்செய்யுள், பலபிரதிகளிலில்லை. பி-ம்:—[1]சாரர். [2]அனலனோடனிலனேனோர். [3]வீடணக்குரிசில்யாங்கண். (உருருச)

வேறு.

கருங.—தூதர் இராமன் முதலியோருள்ள இடத்தை இந்திரசித்தினிடங் கூறுதல்.

வந்தில னிராமன் வேறோர் [3]மலையுளா [1]னுந்தை மாயந்
[4]தந்தன தெரிவான் போனா னுண்பன தாழ்க்கத் [5]தாழா
எந்தை[6]யீ தியன்ற [7]தென்ன மகோதர னியாண்டை [8]யென்ன
அந்தரத் [9]திடைய [8]னென்ன [2]விராவணி [10]யழுகிற் றென்றான்.

(இ - ள்.) 'இராமன் வந்தில்லை: (அவன்), வேறோர்மலையிடத்துள்ளான்; (அரக்கர்)விளைப்பனவாகிய மாயத்தை அறியுந்தன்மையனானஉன்சிறியதந்தை [விபீஷணன்] (படைகட்கு)உணவுப்பொருள் தாமதிக்கவே (அவற்றைக் கொணரப்) போனான்; தாமதியாத [விரைந்துதொழில்செய்யவல்ல] எந்தையே! இது நிகழ்ந்தசெயல்' என்று (தூதர்) தெரிவிக்க, (இந்திரசித்து), 'மகோ

தரனென்பவன் எங்கே?' என்று வினவ, ஆகாயத்திடத்தேயுள்ளானென்ன, இராவணகுமாரன் 'அழகிது' என்றுகூறினன்; (எ - று.)

சேனையெல்லாம் ஒழிகையில் மகோதரன் வானத்தில் மறைந்திருப்பது தகுதியன்று என்பான் 'அழகிது' என்றான். இராவணி - இராவணகுமாரன்; வடமொழித்தத்திதாந்தநாமம். "தோடவிழலங்கல்" என்ற முன் பாடல் இல்லாத ஏடுகளிற்காணப்படும் பாடம் வருமாறு:—1உம்பி.2இராவணன். பி-ம்:—3மலையினன்.4தந்திரந்தீர்ப்பான்.5தாழாது.6தீதியன்றது, நீயென்றது.7என்றான், என்றார். 8என்றார். 9இடையாய். 10அழகிது. (உ௫௫௫)

வேறு.

கசுச.—இதுவும் அடுத்த கவியும் - இந்திரசித்து பிரமாஸ்திரம் விடக் கருதி அங்கியில் வேட்டதைக் கூறும்.

கால மீதெனக் 1கருதிய விராவணன் 2காதல்
ஆல மாமர மொன்றினை விரைவினி னடைந்தான்
மூல வேள்விக்கு வேண்டுவ கலப்பைகண் முறையாற்
கூல 3நீங்கிய விராக்கதப் பூசுரர் கொணர்ந்தார்.

(இ - ள்.) 'இதுவே (பிரமாஸ்திரம் விடுதற்குஉரிய) காலம்' என்று கருதிய இராவணன்குமாரன் [இந்திரசித்து], பெரியதொரு ஆலமரத்தினடியை விரைவினிலடைந்தான்: ஒழுக்கவரம்பைமீறிய இராட்சசப்பிராமணர், பிரதானவேள்விக்குவேண்டியனவான கருவிகளை முறைபடக் கொணர்ந்தார்கள்; (எ - று.)—இராமனும் விபீஷணனும் இல்லாமையால் 'காலம் ஈது' என்றான், இந்திரசித்து. ஸ்ரீமகாபாரதத்தும் பதினெட்டாம்போர்முடிவில் ஆலமரத்தடியில் அசுவத்தாமா பாண்டவரைக்கொல்லுமாறு படைக்கலம் பெறப் பூசனைபுரிந்ததாக வில்லிபுத்தூரார் கூறியது இங்குக் காணத்தக்கது. காதல்=காதலன்: ஆகுபெயர். பி-ம்:—1கருதியிட்டு. 2மைந்தன். 3நீங்கிலா. ()

கசுரு. அம்பி னாற்பெருஞ் சமிதை 1க ளமைத்தன 2னளவில்
தும்பை மாமலர் 3தூவினன் காரியெட் 4சொரிந்தான்
5கொம்பு 6பல்லொடு கரியவெள் 7ளாட்டிருங் குருதி
வெம்பு வெந்தசை முறையினிட் டெண்ணெயால் 8வேட்டான்.

(இ - ள்.) (இந்திரசித்து) அம்பினாலேயே பெரியசமித்துக்களை அமைத்தான்; அளவில்லாத சிறந்த தும்பைமலர்களைத் தூவினான்; கருநிறஎள்ளைப் பெய்தான்; கொம்பு பற்கள் என்றஇவற்றோடுகூடிய கருநிறமுள்ள வெள்ளாட்டின் மிக்கஇரத்தத்தையும் வேகக்கூடியவெவ்விய தசையையும் முறையாக இட்டு நெய்யைச்சொரிந்து ஓமஞ்செய்தான்; (எ - று.)—பி-ம்:—1 அமைத்தனர். 2அனலில். 3தூவினர். 4சொரிந்தார். 5கொம்பர். 6பல்லெழும். 7ஆட்டொடுங். 8வேட்டார். (உ௫௫௭)

கசுசு.—நற்குறிப்புக்கண்டு, இனித் தனக்கு வெற்றிகிடைக்குமென்று பிரமாஸ்திரந்தொடுக்க இந்திரசித்து வானத்தில் நிமிர்தல்.

வலஞ்சு ழித்துவந் 1தெழுந்தெரி நறுவெறி வயங்கி
நலஞ்2சு ரந்தன பெருங்குறி 3முறைமையி னல்கக்

குலஞ்சு ரந்[4]தெழு கொடுமையான் [5]முறையினிற் கொண்டே
நிலஞ்சு ரந்[6]தெழும் வென்றியென் றும்பரி னிமிர்ந்தான்

(இ - ள்.) அக்கினியானது, நறுமணம்விளங்கப்பெற்று வலப்பக்கமாகச் சுழன்று வந்து கிளர்ந்து நன்மைசுரப்பனவான பெரியகுறிப்பை முறைமையாகத் தெரிவிக்க,(அரக்கர்)குலத்திற் சுரந்து தோன்றுகின்ற கொடுமைகட்கு இருப்பிடமான இந்திரசித்து,—வென்றி போர்க்களத்தினின்று தோன்றுமென்று முறைமையால் மனத்திற்கொண்டு (பிரமாஸ்திரந்தொடுக்குமாறு)மேலிடத்திலே நிமிர்ந்தான்; (எ - று.)

அக்கினி பிரதட்சிணமாகச் சுழித்து வீசின், போரில் வெற்றி கைகூடுமென்பது, நூற்கொள்கை. எரி - அக்கினி. பி-ம்:—[1]எரியெழுமுவகையை வணங்கி, எழுந்தனவுவகையின்வணங்கி. [2]சிறந்தன, செறிந்தன. [3]எனநின்று நல்கி. [4]அனற். [5]வரன்முறைகொண்ட,சிறையினிற்கொண்டான்.[6]உயர்,எழு

கசுஎ.---இந்திரசித்து தேவர்முதலியஎவரும் உணராதவாறு மாயையால் வானத்துமறைந்திருத்தல்.

விசும்பு போயினன் மாயையின் பெருமையான் மேலைப்
பசும்பொ னாட்டவர் [1]நாட்டமு முள்ளமும் [2]படரா
[3]அசும்பு விண்ணிடை யடங்கினன் முனிவரு [4]மறியார்
தசும்பு நுண்ணெடுங் [5]கோளொடு காலமுஞ் [6]சார.

(இ - ள்.) மிக்கமாயையையுடையவனான இந்திரசித்து, விசும்பிற்சென்றவனாய், சஞ்சரிக்குந்தன்மையுள்ள நுண்ணிய நெடியகிரகங்களுடனே(வெற்றியைத்தருகிற)காலம் வரும்வரவே, மேலைப்பசும்பொன்னாட்டிருப்பவரான தேவர்களின்கண்ணும்உள்ளமும் செல்லாத கீர்த்திவலையையுடையவானத்திடை மறைந்தான்; (அவன் அங்ஙனிருப்பதை) முனிவரும் அறியாதவராயினர்; (எ - று.)—கண்ணுக்குச்சிறிதாகத்தெரியினும் பெரும்பயன்விளைக்கும் கிரகமென்பார் 'நுண்ணெடுங்கோள்' என்றார். சாரஎன்பதற்கு சாரும்வரையில், விண்ணிடையடங்கியிருந்தான் என உரைத்தலும் ஒன்று. எதுகைநோக்கி, 'ததும்பு' என்பது'தசும்பு'எனத் தகரத்துக்குச் சகரம்பெற்றுவந்தது: சஞ்சரிக்கின்றஎன்பது பொருள். பி-ம்:—[1]உள்ளமும் நாட்டமும். [2]பதைப்ப, பதைத்தார். [3]அசும்பின். [4]அறியாத். [5]கோலமுஞ். [6]சோர. (உ௫௬௬)

கசுஅ.---இதுவும், அடுத்த கவியும்-மகோதரனதுமாயப்போரைக்கூறும்.

அனைய [1]னின்றன னவ்வழி மகோதர னறிந்தோர்
வினைய மெண்ணின னிந்திர வேடத்தை [2]மேவித்
[3]துனைவ லத்[4]தயி ராபதக் கழுத்தின்மேற் [5]றோன்றி
முனைவர்[6] வானவ ரவரொடும் போர்செய மூண்டான்.

(இ - ள்.) அந்தஇந்திரசித்து, (வானத்துஅடங்கினவனாய்) நின்றான்; அப்போது, மகோதரன் ஆலோசித்து ஒருமாயச்செய்கையைச் செய்யக் கருதினான்; (கருதியபடியே), இந்திரவேடத்தைக்கொண்டு, விரைவையும்

பலத்தையுமுடைய ஐராவதத்தின்பிடரிமேல் தோன்றி முனிவர் வானவர் என்றஇவரோடுங் கூடிப் போர்செய்யமுனைந்தான்; (எ - று.)—மகோதரன் தான்இந்திரனாகவும், தன் வாகனம் ஐராவதமாகவும், தன்பரிவாரமான அரக்கர்கள் வானவரும் இருடியருமாகவும் மாயையால் தோன்றுமாறுசெய்து பொருதற்குவந்தனனென்க. பி-ம்:—[1]நின்றவன். [2]மேவா. [3]துணைமதத்து. [4]ஐராவதக்களிற்றின்மேல். [5]தோன்ற. [6]வானவரெவரொடும்...மூண்டான், வானவரோடும்......போயதிசயமுற்றார். (உ௫௬௦)

ககூகூ. அரக்கர் மானிடர் குரங்கெனு [1]மவையெல்லா மல்ல
உருக்களி [2]யாவுள வுயிரினி யுலகத்தி னுழல்வ
[3]தருக்கு போர்க்குடன் [4]வந்துள வாமெனச் [5]சமைத்தான்
[6]வெருக்கொ ளப்பெருங் கவிப்படை குலைந்தது [7]விலங்கி.

(இ - ள்.) அரக்கர் மானுடரும் குரங்கும் என்ற அவற்றோடு எல்லாம் அல்ல. (இப்போது)உலகத்திற்சஞ்சரிப்பனவாய் உருவைப்படைத்த பிராணிகள் எவையுள்ளன, அவையெல்லாம் செருக்கிச்செய்கின்றபோர்க்கு உடன் வந்துள்ளனவாம்என்று கருதுமாறு (மாயைகளைச்) செய்தான்; (அதுகண்டு), பெரியவானரசேனை அச்சங்கொண்டதனாற் பின்வாங்கி நடுங்கலாயிற்று; (எ - று.)—பி-ம்:—[1]இவையெலாமல்லா. [2]யாவுளயாவையுமுலகத்தினுழல்வ, யாவுளவுயிரெனவுலகத்தினுமுலவத், ஆயுளயாவையுமுலகத்தினுலவாத். [3]தருக்கும். [4]வந்துளதாமென, வந்தனவாமென. [5]சார்ந்தான். [6]வெருக்கொளாப். [7]விளங்கி, வெருவி. (உ௫௬௧)

கஎ௦.—'இந்திரன் தேவர்முதலியவரோடு நம்மீது பொருதற்கு வரக் காரணம் என்'? என்று வானரர் திகைத்தல்.

கோடு நான்குடைப் [1]பாணிறக் குன்றமேற் கொண்டான்
ஆட லிந்திர னல்லவ ரியாவரு மமரர்
சேடர் சிந்தனை முனிவர்க ளமர்பொரச் சீறி
ஊடு வந்துற்ற தென்கொலோ [2]நிபமென வுலைந்தார்.

(இ-ள்.) நான்குதந்தங்களையுடைய (ஐராவதமென்ற) வெண்ணிறயானையின்மேலேறிநடத்துபவன், வலிமைபொருந்திய இந்திரன்: மற்றையோரான (பரிவாரமாக அமைந்தவர்) யாவரும் தேவர்கள்: மிச்சமானவர் கடவுட் சிந்தனைபுரிகின்ற இருடியர்: (இவர்யாவரும்) போர்புரியுமாறு சீற்றங்கொண்டு இப்போரினிடையே வந்துபொருந்தியதற்குக் காரணம் என்னையோ!' என்று சொல்லி (வானரர்) வருந்தினர்; (எ - று.)

தேவர்கோன் தேவர்முனிவர்களுடனே நம்மீதுபோர்க்குவருமாறு நாம் யாதொருபிழையும் புரிந்திலோமே; அப்படியிருக்க, இவர்கள் பொரவருதற்குக் காரணம் என்னே! என்று திகைப்புடன் வருத்தமுங் கொண்டார்கள் வானரரென்க. பி-ம்:—[1]பாகடுங்குன்றின்மேற், பாணிறக்களிற்றின்மேற். [2]ஆம். ()

கஎக.---இலக்குமணன் 'முனிவர்முதலியோர் சினந்துவர யாதுகாரணம்?' என்று அநுமானை வினவுதல்.

அனுமன் வாண்முக நோக்கின னாழியை யகற்றித்
[1]தனுவ லங்கொண்ட தாமரைக் கண்ணவன் றம்பி
முனிவர் வானவர் முனிந்து[2]வந் தெய்தயா முயன்ற
[3]துனிக ளென்கொலோ சொல்லுதி [4]விரைந்தெனச் சொன்னான்.

(இ-ள்.) சக்கரப்படையைநீக்கித் தனுசை வலப்புறத்திற்கொண்ட புண்டரீகாட்சனான ஸ்ரீராமனது திருத்தம்பியான இலட்சுமணன் அநுமானுடைய ஒளிபொருந்தியமுகத்தைப்பார்த்து 'முனிவரும் தேவர்களும் சினந்து (நம்மேற்போர்செய) வந்துசேருமாறு நாம் முயன்றுசெய்த அபராதங்கள் என்னோ? விரைந்துசொல்வாய்?' என்று வினவினான்; (எ - று.)—பி-ம்:—[1]தனுவிடங். [2]வந்தேயமர், வந்தெய்தமர். [3]துனியிது. [4]புணர்ந்தென. (உ௫சுரு)

கஎஉ.---இவ்வாறு வினவிக்கொண்டிருக்கையில் இந்திரசித்து இலட்சுமணன்மீது பிரமாஸ்திரத்தை விடுத்தல்.

இன்ன காலையி னிலக்குவன் மேனிமே லெய்தான்
[1]முன்னை நான்முகன் படைக்கல மிமைப்பதன் முன்னம்
பொன்னின் மால்வரைக் [2]குரீயின மொய்த்தது போலப்
பன்ன லாந்தர மல்லன [3]சுடர்க்கணை பாய்ந்த.

(இ - ள்.) இவ்வாறுசொல்லிக்கொண்டிருக்கும்போது, பழையநான்முகனாதுபடையை [பிரமாஸ்திரத்தை] இமைப்பதற்குமுன்னம் இலக்குமணன் மீதுவிடுத்தான்; பொன்மயமான பெரியமலையிலே குருவியினங்கள் நெருங்கியதுபோலச் சொல்லத்தரமல்லாதனவான ஒளியையுடையஅம்புகள் (அவ்விலக்குமணன்) மேனியிற் பாய்ந்தன; (எ - று.)—பி-ம்:---[1]முன்னம். [2]குரீஇயினமொய்ப்பனபோலப், குரிசிலேமேயதுபோலப். [3]சுடுகணை, கடுங்கணை. ()

கஎக.---இலக்குமணன் பிரமாஸ்திரத்தால் அறிவொடுங்கியயர்த்தல்.

கோடி கோடிநூ றாயிரங் [1]கொடுங்கணைக் குழாங்கள்
மூடி மேனியை முற்றுறச் சுற்றின மூழ்க
ஊடு செய்வதொன் றுணர்ந்தில னுணர்வு[2]டக் கொடுங்க
ஆடன் [3]மாகரி சேவக மமைந்தென [4]வயர்ந்தான்.

(இ - ள்.) கோடிகோடிநூறாயிரங் கொடியகணைக்கூட்டங்கள் மேனியை முற்றுற மூடிச் சுற்றினவாய் மூழ்க, அவ்வேளையில் செய்வதின்னதென்பதைப்பற்றி அறியமாட்டாதவனாய்த் தன்னுணர்வுபோயொடுங்க, வலிய பெரியயானை படுக்கையிடத்தில் அடங்கினாற்போல அயர்ந்திருந்தான்; (எ-று.) ---பி-ம்:—[1]சுடுகணைக்குழாங்கள், கொடுஞ்சுடர்க்கணைகள். [2]கெட்டொதுங்க. [3]வாம்பரி. [4]அசைந்தான். (உ௫சுரு)

கஎ௪.---அநுமான் பிரமாஸ்திரத்தாற் சோர்ந்து விழுதல்.

அனும னிந்திரன் வந்தவ னென்கொலீ [1]தமைந்தான்
[2]இனிய னெற்றுவன் கனிற்றினை டெடுத்தென வெழுந்தான்

[3]தனுவி னாயிரங் கோடிவெங் [4]கடுங்கணை தைக்க
நினைவுஞ் செய்கையு மறந்துபோய் நெடுநிலஞ் [5]சேர்ந்தான்.

(இ - ள்.) அநுமனானவன், [1](நமக்கு)இனியனான இந்திரன் (இப்போது வந்தவனாகி, நம்மோடுபொருதலாகிய) இச்செயலை ஏன் பொருந்தினான்? (அவ்விந்திரனை) யானையோடுஎடுத்து எற்றுவேன்' என்று எழுந்தான்: (அப்போதுதன்) உடலில் ஆயிரகோடிகொடியகணை தைத்ததனால் நினைவுஞ்செய்கையும்மறந்துபோய்நெடியநிலத்திலேசேர்ந்தான்[தரையில்விழுந்திட்டான்]; (எ - று.)—பி-ம்:—1 அமைத்தான். 2 இனிதினெற்றுவான்களிற்றினோடெடுத்தெனா, இனியவன்களிற்றின்னொடுமெடுக்கெனா. 3தனுமன். 4கணைபலதைப்ப. 5உற்றான். (உ௫௬௬)

களடு.—சுக்கிரீவன் பிரமாஸ்திரத்தால் தரையில் விழுதல்.

அருக்கன் மாமக னுடைகக் [1]குன்றமொன் றலர்ந்த
முருக்கின் கானக [2]மாமெனக் குருதிநீர் [3]முடுகத்
[4]தருக்கி வெஞ்சரந் தலைத்தலை [5]மயங்கின [6]தைக்க
[7]உருக்கு செம்பெனக் கண்ணின னெடுநில முற்றான்.

(இ - ள்) சூரியனது சிறந்தகுமாரனாகிய சுக்கிரீவன், பொன்மயமானதொரு குன்றமொன்றில் அலர்ந்த பலாசங்காடாமென்னுமாறு குருதிநீர் விரைந்து (உடலினின்று) பெருக,செருக்கிக் கொடிய அம்புகள் உடலினிடங்களிலெல்லாம் மாறிமாறித் தைக்க, உருக்கினசெம்புபோன்ற கண்களையுடையவனாய் நெடுநிலத்து வீழ்ந்திட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]குன்றினில். [2]ஒத்தனவாமெனா. [3]முழங்கத். [4]தருக்கின். [5]மயர்குறத். [6]தைப்ப. [7]உருக்குஞ் செம்பன. (உ௫௬௭)

களசு.—அங்கதனும் சாம்பவானும் சாய்தல்.

அங்க தன்[1]பதி னாயிர மயிற்கணை யழுந்தச்
சிங்க வேறிடி யுண்டென நெடுநிலஞ் சேர்ந்தான்.
சங்க மேறிய பெரும்புகழ்ச் சாம்பனுஞ் சாய்ந்தான்
துங்க மார்பையுந் தோளையும் வடிக்கணை [2]துளைக்க.

(இ - ள்.) அங்கதனென்பவன், (தன்னுடலின்மீது) கூரியபதினாயிரங்கணைகள் அழுந்தியதனால் ஆண்சிங்கம் (தன்மீது) இடிவிழப்பெற்றதுபோல நெடுநிலத்துச் சேர்ந்தான்; (வீரர்) கூட்டத்திலே ஏறிய பெரும்புகழையுடைய ஜாம்பவானும் உயர்ந்த மார்பையும் தோளையும் (இந்திரசித்து விடுத்த) கூரிய அம்புகள் தொளைத்ததனால்(நிலத்திற்) சாய்ந்திட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]நெடிதாயிரம். [2]துளைப்ப, தொலைப்ப, தொலைக்க. (உ௫௬௮)

களள.—நீலன் இடபன் பனசன் குமுதன் இவர்கள்உயிர்குன்றுதல்.

நீல னாயிரம் வடிக்கணை நிறம்புக்கு [1]நெருங்கக்
கால னார்முகங் கண்டன னிடபன்விண் கலந்தான்
ஆலமே யன்ன பகழியாற் பனசனு [2]மயர்ந்தான்
[3]கோவின் மேவிய கூற்றினாற் குமுதனுங் [4]குலைந்தான்.

(இ - ள்.) நீலனென்பவன் ஆயிரம் கூரியஅம்புகள் மார்பிற் புகுந்து நெருங்கவே, யமனுர்முகத்தைப் பார்த்திட்டான் [இறந்திட்டான்]; இடபனும் வானுலகஞ்சேர்ந்தான்; பனசனும் விஷத்தையேயொத்த (இந்திரசித்தின்) பாணங்களால் உயிரொடுங்கினுன்; குமுதனும் அம்பினுலே விரும்பிவந்தடைந்த யமனுல் உயிரொழிந்தான்; (எ - று.)

கோலினுல் - செங்கோலோடு: அதிகாரத்தோடு எனினுமாம். பி-ம்:—1நேடுங். 2அசைந்தான். 3கோலமேனிமால்வரையன்ன, கோலின்மேனியன் கூறினுல். 4குறைந்தான். (உருசுகூ)

கஎஅ.—நளன் மயிந்தன் துமிந்தன் கவயன் கேசரி இவர்கள் மாளுதல்.

வேலை 1கட்டினே ஞாயிரம் பகழியால் வீழ்ந்தான்
வாலி நேர்2வலி மயிந்தனுந் 3தம்பியு 4மடிந்தார்
கால வெந்தொழிற் கவயனும் வானகங் கண்டான்
மாலை வாளியிற் கேசரி மண்ணிடை 5மறைந்தான்.

(இ - ள்.) (மலைகொண்டு) கடலைக் கட்டினவனுகிய [சேதுபந்தனஞ் செய்த] நளன் ஆயிரம்அம்புகளால் இறந்திட்டான்: வாலியையொத்த வலிமையையுடைய மயிந்தனென்பவனும் (அவனுடைய) தம்பியான துமிந்தனென்பவனும் மடிந்தார்கள்; யமன்போற் கொடியதொழிலையுடைய கவயனும் வானலோகத்தைப் பார்த்தான் [இறந்தான்];மாலைபோல(த் தொடர்ச்சியாக)வீழ்ந்த அம்புகளினுல் கேசரியும் மண்ணில் மறைந்துபோனுன்:(இறந்துபோனுன்]; (எ - று.)—பொருட்பின்வருநிலை பணி. பி-ம்:—1கட்டவன், தட்டவன். 2வரும். 3துமிந்தனும். 4மாண்டார். 5மடிந்தான். (உருஎ0)

இப்பாடலுக்குப்பின் சிலபிரதிகளில் பின்வரும் பாடல் காணப்படுகின்றது:—

கனக னுயிரங் கணைபட 1வானிடைக் 2கலந்தான்
அனக னுயின சங்கனு 3மக்கணத் தயர்ந்தான்
முனையின் வாளியிற் சதவலி 4யென்பவன் முடிந்தான்
புனையு 5மம்பினிற் றம்பனும் பொருப்பெனப் புரண்டான்.

பி-ம்:—1விண்ணிடைக். 2கரந்தான். 3அமர்க்களஞ்சார்ந்தான். 4மொய்ம்பனும். 5மைந்நிறத்துமிந்தனும். 'முனையும்வாளெயிற்றரக்கனு மொய்யமர்முடிந்தான், புனையும்வாளியாற்றுன்மருடனு முயிர்புலந்தான்' என்று பின்னிரண்டடிகள் சிலபிரதியிலுள்ளன. "கனகன்"என்றுதொடங்கும் இச்செய்யுள், சிலபிரதிகளில் கஎஎ-ஆம் பாடலுக்குப்பின்னே காணப்படுகின்றது.

கஎகூ.—சதவலி சுசேடணன் வினதன் கெந்தமாதனன் இடும்பன் ததிமுகனென்பவர் இறத்தல்.

விந்த 1மன்னதோட் 2சதவலி சுசேடணன் வினதன்
கெந்த மாதன னிடும்பன்வந் ததிமுகன் 3கிளர
4உந்து வார்கணை கோடிதம் முடல5 மூற் றுருளிப்பத்
தந்த மல்லுணர் 6வொடுங்கினர் மண்ணுறச் சாய்ந்தார்.

(இ - ள்.) விந்தமலையையொத்ததோளையுடைய சதவலியும் சுசேடணனும் வினதனும் கந்தமாதனனும் இடும்பனும் வலிய ததிமுகனும், பொங்கி மேல்விழுகின்ற நீண்ட அம்புகள் கோடி தம்முடைய உடலிற்பொருந்திஒளிக்க, தங்கள் தங்களுடைய நல்லஅறிவு ஒடுங்கப்பெற்றவராய்ப் பூமியிற் பொருந்த வீழ்ந்திட்டார்கள்; (எ - று.)—உடலம்முற்றுஎன்று பிரிக்கவும்இடமுண்டு. இச்செய்யுள், சிலபிரதிகளிலில்லை. பி-ம்:—[1]என்னுந். [2]சரபனிற். [3]கிளரும். [4]துங்க. [5]முற்றுந்தொளைப்ப [6]ஒடுங்கிட. (௨௫௭௧)

௧௮0.—மற்றைவாநரரும் உயிர்நன்றிவிழுதல்.

[1]மற்றை வீரர்க ளியாவரும் வடிக்கணை மழையால்
[2]முற்றும் வீந்தனர் முழங்குபே ருதிரத்தின் முந்நீர்
எற்று வான்றிரைக் கடலொடும் பொருதுசென் [3]றேற
ஒற்றை [4]வான்கணை யாயிரங் குரங்கினை யுருட்ட.

(இ - ள்.) ஒலிக்கின்ற மிக்க இரத்தக்கடலானது மோதுகின்றபேரலைகளையுடைய(நீர்க்)கடலோடு மாறுபட்டுச் சென்று சேருமாறு ஒப்பற்ற சிறந்த ஆயிரம் அம்புகள் குரங்குகளை உருட்டுதலால், மற்றுமுள்ள வானரவீரர்கள் எல்லாரும் கூரிய அம்புமழையினால் முழுவதும் [நன்றாக]உயிர்போகப்பெற்றவராயினர்; (எ - று.)—பி - ம்:—[1]மற்றும். [2]முற்றும்வீழ்ந்தனர், இற்றவிந்தனர். [3]எற்ற, எறி. [4]வார்கணை. (௨௫௭௨)

௧௮௧.—பிரமாஸ்திரத்தால் வானரம் யாவும் உயிரொழிந்து பூமியிற் கிடத்தல்.

தளைத்து வைத்தது [1]சதுமுகன் பெரும்படை தள்ளி
ஒளிக்க மற்றொரு புகலிட [2]முணர்கில ருருமின்
வளைத்து [3]வித்திய வாளியான் மண்ணொடு திண்ணம்
முளைப்பு டைத்தன [4]வொத்தன வானர முடிந்த.

(இ - ள்.) பிரமனுடைய பெருமைபெற்ற அஸ்திரமானது (கீழே) வீழ்த்தித் தளைபூட்டியதுபோற் செய்திட்டது: (அந்த அஸ்திரத்தினின்று) தப்புவதற்கு (வானரவீரர்) வேறோர்புகலிடத்தைக் காணாதவராயினர்; வளைத்துக்கொண்டு விதையையிட்டாற்போல் (தம்மீது இந்திரசித்து)இடிபோன்று விடுத்த அம்புகளினாலே வானரங்கள் மண்ணோடு உறுதியாய்(அசைவற்றுநிற்குமாறு) முளையடிக்கப் பட்டனபோன்றனவாய் உயிர்முடிந்தன; (எ - று.)—பி-ம்:—[1]திசைமுகன். [2]இல்லெனா. [3]வீட்டிய. [4]ஆமெனா. (௨௫௭௩)

௧௮௨.—குருதியிற்கிடந்த வானரக்கடலின் வருணனை.

குவளைக் [1]கண்ணியர் வானவர் மடந்தையர் [2]கோட்டித்
துவளப் பாரிடைக் [3]கிடந்தனர் குருதிநீர் சுற்றித்
திவளக் கிழொடு மேல்புடை பரந்திடை செறியப்
பவளக் காடுடைப் பாற்கட லொத்ததப் பரவை.

(இ - ள்.) குவளைமலர்போன்ற கண்களையுடையவராகிய வானுலகத்தவரான தேவமடந்தையர் தலைசாய்த்துத் துவளுமாறு,(இலட்சுமணனும் வானர

(ரும்)பாரிற்கிடந்தனர்; (அவர்களுடைய) குருதிநீர் வளைத்துக் கீழுடனே மேலிடத்தும் பரந்து எங்கும் விளங்கி நெருங்குதலால்,(அந்தவானரசேனை)சமுத்திரம் பவழக்காட்டைக்கொண்ட பாற்கடலை யொத்தது; (எ - று.)—பி-ம்:-- கண்ணினை, கண்ணுடை. 2கோடி. 3கிடந்தது. (உருஎச)

கஅ௩.—வானரர் விருந்தினராய்வந்ததுகண்டு வானவர் உபசரித்துப் 'பூமியிற்செல்லுக' எனல்.

விண்ணிற் சென்றது கவிக்குலப் பெரும்படை வெள்ளங்
கண்ணிற் [1]கண்டனர் வானவர் விருந்தெனக் கலந்தார்
உண்ணிற் கும்பெருங் [2]களிப்பின ரளவளா [3]யுவந்தார்
மண்ணிற் செல்லுதி ரிக்கணத் தே[4]யென வலிந்தார்.

(இ - ள்.) வானரக்கூட்டங்களின் பெரும்படைவெள்ளமானது, வானுலகத்துக்குச் சென்றது: வானவர் (அவர்களைக்) கண்ணிற்கண்டவராய், விருந்தினர் என்று நட்புக்கொண்டு மனத்திற்பொருந்திய பெருமகிழ்ச்சியையுடையவராய் க்ஷேமம்விசாரித்து உவப்புக்காட்டி 'இப்போதே (அரக்கரைக் கொல்லுமாறு)பூமியிற்செல்க'என்று வலாற்காரஞ் செய்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]கண்டவர். 2களியினர். 3உகந்தார். 4எனுமனத்தார். (உருஎரு)

கஅ௪.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்:வானரர்களைத் தேவர்கள் புனைந்துகூறியதைத் தெரிவிக்கும்.

பார்ப டைத்தவன் படைக்கொரு பூசனை படைத்தீர்
நீர்ப டக்கட வீரலீர் வரிசிலை நெடியோன்
பேர்ப டைத்தவற் [1]கடியவர்க் கடியரும் பெறுவார்
வேர்ப டைத்தவெம் [2]பிறவியாற் றுவக்குறு வீடு.

(இ - ள்.) உலகங்களைப் படைத்தவனான பிரமதேவன் அஸ்திரத்துக்கு ஒருபூசனை செய்தீர்: நீர் இறத்தற்கு உரியீரல்லீர்:கட்டமைந்த வில்லையுடையனாகித் திருமாலென்னும் பேரைப்படைத்தவனான ஸ்ரீராமனது அடியவர்க்கு அடியவரும் வேரூன்றிய கொடியபிறவியினாலே நேருங் கட்டுப்படுதலில்லாது விடுதலையைப் பெறுபவராவர்; (எ - று.)

இந்தச்செய்யுளில், நீவிர் ஸ்ரீராமனுக்கு அடியவ ராதலால் பிறவியுடையார்க்கு உண்டாகக்கூடிய துவக்கின்றி இந்த அஸ்திரத்தினின்று விடுதலையடைவீர்நீர் இப்போது பிரமதேவனுடைய அஸ்திரத்தைக் கௌரவிப்பதற்காக இங்ஙன் இறந்தவர்போன்றீரே யல்லது நுமக்குஇறப்புக்கிடையாதுஎன்று பொருள்காண்க. இனி,முதலிரண்டடிகளால்'நீர் இறக்கத்தக்கவரல்லீர்'என்று வீரசுவர்க்கம் புகுந்த வானரருயிர்க்கு உபசாரமொழிகூறியதாகவும், 'உமக்கு இனிப்பிறப்புக்கிடையாது: மோக்ஷமே' என்பது பின்னிரண்டடிகளாற்கூறியதாகவும் கருத்துக்காணலாம். பி-ம்:—[1]அடியருக்கடியரும். 2பிறவியிற். ()

கஅ௫.தங்கள் காரிய மியற்றுவா [1]னுலகிடை நடந்தீர்
[2]உங்க ளாருயி ரெம்முயி ருடல்பிறி துற்றீர்
செங்க ணாயகற் காகவெங் களத்[3]திடைத் தீர்ந்தீர்
எங்க [4]ணாயகர் [5]நீங்களென் றிமையவ ரிசைத்தார்.

(இ - ள்.) '(நீங்கள்) எங்கள்காரியத்தைச் செய்வதற்காகவே உலகத்திற் பிறந்தீர்: உங்கள்அரியஉயிர் எம்முயிரே;உடல்(மாத்திரம்)வேறாகப் பொருந்தியிருந்தீர்: புண்டரீகாட்சனான ஸ்ரீராமனுக்குஉதவும்பொருட்டுக் கொடிய போரிலே உயிர்நீங்கினீர்;நீங்கள் எங்களுக்குத் தலைவராவீர்' என்று தேவர்கள் கூறினார்கள்; (எ - று.)

"ஆண்மின்கள் வானக மாழியான் தமரென்று வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே" என்ற பெரியார்பாசுரம்,ஒருசார் இங்குஒப்புநோக்கத்தக்கது.பி-ம்:--1பாரிடை.2எங்களாருயிரும்முயிருடல்பிறிதுற்றீர்,உங்களாருயிரோடுலகம்பிறவுற்றீர். 3உயிர். 4நாயகம். 5நீர்கள். (உ௫எஎ)

கஅ௬.—இந்திரசித்து வெற்றிச்சங்கு ஊதி இராவணனை யடைதல்.

வெங்கண் வானரக் குழுவொடு 1மிளையவன் 2விளிந்தான்
இங்கு வந்தில 3னகன்றன னிராமனென் 4றிகழ்ந்தான்
சங்க மூதினன் றாதையை வல்லையிற் சார்ந்தான்
பொங்கு போரிடைப் புகுந்துள பொருளெலாம் புகன்றான்.

(இ - ள்.) 'கொடியகண்களையுடைய வானரக்கூட்டங்களுடனே இளையவன் இறந்தான்: இராமனோ இப்போர்க்களத்தில் வாராதவனாய் அப்பாற் சென்றிட்டான்' என்று (இந்திரசித்து) இகழ்ந்தான்: (பின்பு, வெற்றிச்)சங்க மூதினவனாய், தந்தையை விரைவிலடைந்து, கிளர்ச்சிகொண்டுசெய்யும் போரிலே நிகழ்ந்தவிஷயங்களையெல்லாஞ் சொன்னான்; (எ - று.)—பி-ம்:—1இலக்குவன். 2வீழ்ந்தான். 3இராமனிப்போதெனை. 4இசைத்தான். (உ௫எஅ)

கஅஎ.—'இராமன்இறந்திலனோ?' என்று இராவணன் வினவ,
இந்திரசித்து சமாதானங் கூறுதல்.

இறந்தி லன்1கொலவ் விராமனென் றிராவண னிசைத்தான்
துறந்து 2நீங்கின னல்லனேற் றம்பியைத் தொலைத்துச்
சிறந்த நண்பரைக் கொன்றுதன் சேனையைச் சிதைக்க
3மறந்து நிற்குமோ 4மற்றவன் றிறனென்றான் மதலை.

(இ - ள்.) 'அந்தஇராமன் இறந்திலனே கொல்?' என்று இராவணன் வினவினான்: (அதற்கு அவனது) புதல்வனாகிய இந்திரசித்து,—(அச்சத்தினால் யாவரையும்) விட்டிட்டுச் சென்றிட்டான்: (இது திண்ணம்): அவ்வாறுவிட்டிட்டுச்செல்லாதவனாயின், (தன்) தம்பியை உயிர்போக்கிச் சிறந்த நண்பரைக் கொன்று தன்சேனையைச் சிதைக்கவும் அவ்விராமன்(தன்)திறமையை மறந்திட்டு (ப் பதிலொன்றுஞ்செய்யாது வாளா) இருப்பனோ?' என்று சமாதானங்கூறினான்; (எ-று.)—பி-ம்:—1கொலாம். 2நீங்கிலன். 3மறைந்து போகுமோ, மறந்துநீங்குமே. 4என்றனன்றசானனன்மதலை. (உ௫எக)

கஅஅ.—சமாதானத்தினால் இராவணன் திருப்தியடைய,
இந்திரசித்தும் மகோதரனும் தம்மனைசேர்தல்.

அன்ன தேயென வரக்கனு 1மாதரித் தமைந்தான்
சொன்ன மைந்தனுந் தன்பெருங் கோயிலைத் 2தொடர்ந்தான்

மன்ன[3]னேவலின் [4]மகோதரன் போயினன் வந்தான்
என்னை யாளுடை நாயகன் வேறிடத் திருந்தான்.

(இ - ள்.) இராவணனும் 'அப்படித்தான்(இருக்கும்)' என்று(அவ்விந்திர சித்துச்சொல்லியதை) ஆதரித்து மனவமைதிகொண்டான்: சொன்ன(இராவண)குமாரனும்,தன் பெரியஅரண்மனையைச் சேர்ந்தான்;அரசனேவலினால் வந்திட்டவனான மகோதரனும் (தன்னிருப்பிடத்திற்குப்)போயினான் என்னை யாளுடையநாயகனான ஸ்ரீராமன், வேறிடத்து இருந்தவனானான்: (எ - று.)— பின்னிரண்டடிகட்கு - மன்னனேவலின் மகோதரன்போயினன்: வேறிடத் திருந்தானாகிய என்னையாளுடைநாயகன்(போர்க்களம்நோக்கி)வந்தான் எனப் பொருள் கூறுதல் அமையும்: இப்பொருட்கு அடுத்தபாடலில்லாதிருப்பின் நலம்: அங்ஙனமே அடுத்தபாடலில்லாமற் சிலபிரதிகள் காணப்படுகின்றன. பி-ம்:—[1]அனுதரித்தகன்றான். [2]சூழ்ந்தான். [3]ஆணையின். [4]மகோதரன்போனவன்,போயினமகோதரன். இப்பாடலுக்குப்பின்"ஆர்க்கின்ற" என்று தொடங்கும் கசசக - ஆவது பாடல் சிலபிரதியில்உள்ளது. (உ௬அ௦)

கஅகூ.—ஸ்ரீராமன் அஸ்திரபூசைசெய்துபின் போர்க்களம் துறுதுவோமென முயறல்.

செய்ய தாமரை நாண்மலர்க் கைத்தலஞ் சேப்பத்
துய்ய [1]தேவர்தம் படைக்கெலாம் [2]வரன்முறை தூக்கும்
மெய்கொள் பூசனை [3]விதிமுறை யியற்றிமேல் வீரன்
மொய்கொள் போர்க்களத் [4]தெய்துவா மினியென முயன்றான்.

(இ - ள்.) வீரனாகிய ஸ்ரீராமன் செந்தாமரைமலர்போன்ற (தன்) கைத்தலம்(பின்னுஞ்)சிவக்கும்படி பரிசுத்தமாகிய தேவர்படைக்கெலாம்[அஸ்த்ரங்கட்கெல்லாம்]முறைப்படி செய்யவேண்டிய உண்மையான பூசனையை விதிப்படியே செய்து, பிறகு, இனி வலியபோர்க்களத்துச் செல்வோமென முயன்றான்; (எ-று.)—பி-ம்:—[1]தெய்வவான். [2]முறைமுறை. [3]முறை. [4]எய்துவன்.

கசூ௦.—ஸ்ரீராமன் போர்க்களஞ்சேர்தல்.

[1]கொள்ளி யிற்சுட ரனலிதன் பகழிகைக் கொண்டான்
அள்ளி [2]நுங்கலா மாரிருட் பிழம்பினை யழித்தான்
[3]வெள்ள வெங்களப் [4]பரப்பினைப் [5]பொருக்கென விழித்தான்
[6]தள்ளி ருமரைச் சேவடி [7]நுடங்குறச் சார்ந்தான்.

(இ - ள்.) கொள்ளிக்கட்டைபோல் ஒளிவிடுகின்ற அக்கினிதேவனது பாணத்தை[ஆக்நேயாஸ்திரத்தை]க் கையிற்கொண்டு,(கையினால்)அள்ளி உண்ணுதற்குரியதுபோன்றுசெறிந்த(போக்குதற்குஅரிய)இருட்பிழம்பினைப்போக்கினான்;தள்ளப்படுதலில்லாத[சிறந்த]தாமரைச்சேவடி அசையநடந்து(போர்க்களத்தைச்) சேர்ந்து, சேனைவெள்ளத்தைக் கொண்ட கொடிய பரந்தபோர்க்களத்தினை விரைவிற்பார்த்தான்; (எ-று.)—ஒருபிரதியில் நான்காமடி 'தள்ளு வானரத்தலைவரைத்தனித்தனிகண்டான்' என்றுஉளது.பி-ம்:—[1]கொள்ளியின்

சுடர்ப்பகழியினங்கி, கொள்ளியின்சுடரனலியின்பகழி. 2நுங்கலா, நீக்கலா. 3வெள்ளி. 4பரப்பினில். 5விழிமுகத்துதரம். 6தள்ளித். 7நுடங்கிடத்தளர்ந்தான்.

கககூக.—ஸ்ரீராமன் களத்திற்கிடக்கும் வானரத்தலைவரைத் தனித்தனிப் பார்த்தல்.

நோக்கி னான்பெருந் திசைதொறு முறைமுறை நோக்கி
1ஊக்கி னான்றடந் தாமரைத் 2திருமுகத் துதிரம்
போக்கி னா3னிணப் பறந்தலை யழுவத்துட் புக்கான்
4காக்கும் வன்றுணைத் தலைவரைத் தனித்தனி கண்டான்.

(இ - ள்.) விசாலமான திக்குக்கள்தோறும் நோக்கினன்; முயன்றவனாய் முறைமுறையேபார்த்துப் பரந்த தாமரைமலர்போன்ற திருமுகத்திலே உதிரத்தை வெளிப்படுத்தினன்; நிணம்நிறைந்த போர்க்களப்பரப்பினுள்ளே புகுந்தான்: (இதுவரையிற்)காத்தல்தொழிலை மேற்கொண்டிருந்த வலிமைகொண்ட(த் தனது) துணைத்தலைவர்களைத் தனித்தனிக்கண்டான்; (எ - று.) —பார்த்தற்குக் கோரமாயிருந்ததனால் போர்க்களம் முயன்றுபார்க்கவேண்டுவதாயிற்று. சினத்தினால்முகத்தில் இரத்தங்குழம்பக் கண்வழியாக உதிரம் வெளிப்பட்டதென்பது, இரண்டாம்அடியிற் கூறியபொருள். பி-ம்:—1தூக்கினன், நூக்கினன். 2திருமுகஞ்சோரப். 3நிணப்பங்கயத்து, நிணப்பங்கயம். 4காக்கும்வான்றுணைத், தாக்கும்வான்றுணைத், தாக்கும்வானரத். (உகூஅங)

கககூஉ.—ஸ்ரீராமன் சுக்கிரீவனையும் அநுமானையுங் காண்டல்.

சுக்கி ரீவனை 1நோக்கித்தன் றாமரைத் துணைக்கண்
2உக்க நீர்த்திர ளொழுகிட நெடிதுநின் றுயிர்த்தான்
3தக்க தோவிது நினக்கென்று 4தன்மனந் 5தளர்ந்தான்
பக்க நோக்கினன் மாருதி 6தன்மையைப் பார்த்தான்.

(இ - ள்.) சுக்கிரீவனைப் பார்த்துத் தன்னுடைய தாமரைமலர்போன்ற இருகண்களிலிருந்து வெளிப்பட்ட நீர்த்தொகுதிகள் ஒழுகியபடியேயிருக்க வெகுநேரம்நின்று பெருமூச்சுவிட்டு, 'இது நினக்குத் தக்கதோ?' என்று தன் மனந் தளர்ச்சியுற்றான்; பக்கத்திற் பார்த்தான்: மாருதியின்நிலையைக் கண்டான்; (எ - று.)—பி-ம்:—1நோக்கினன். 2உக்கு. 3தக்கவோவது, 4தனி. 5தளர்வான். 6தன்மையும். (உகூஅச)

கககூங.—அநுமானைக் கண்டதும் ஸ்ரீராமன் புலம்புதல்.

கடல் 1கடந்து2புக் கரக்கரைக் கருவொடுங் கலக்கி
இடர்3க டந்து4நா னிருக்கநீ நல்கிய 5திதற்கோ
உடல்க டந்தன வோவுனை யரக்கன்வில் லுதைத்த
அடல்6க டந்தபோர் வாளியென் றுகுலித் தழுதான்.

(இ - ள்.) கடல்கடந்து (இலங்கையிற்) புகுந்து அரக்கரைக் கருவுடனே கலக்கி இடரைக்கடந்து நான்இருக்குமாறு நீ உதவியது (முடிவில் நீ) இவ்வாறு ஆகுவதற்குத்தானோ? அரக்கனுடையவில் வெளிப்படுத்திய வலிமைமிகுந்த போர்க்குரியஅம்புகள் உன்னுடைய உடலை(த் தொளைத்துக்)கடந்து

சென்றனவோ? என்று மனம்துயருற்றுப் புலம்பினன்; (எ - று.)—ஒன்று, மூன்று, நான்காம் அடிகளில் லகர ரகரப்போலியாக 'கடர், உடர், அடர்' என்றும் பாடமுண்டு. பி-ம்:—[1]புகுந்து. [2]போயரக்கரைக்கருமுதற். [3]கடந்த. [4]நாமிருக்க, யாணிருப்ப. [5]இதுவோ. [6]கிடந்த. (உ௫அ௫)

கக௯௪.—மூன்றுகவிகள் - இராமபிரான் தன்னைநோதலைத் தெரிவிக்கும்.

முன்னைத் தேவர்தம் வரங்களு முனிவர்தம் மொழியும்
பின்னைச் சானகி யுதவியும் பிழைத்தன [1]பிறந்த
புன்மைச் செய்தொழி லென்வினைக் [2]கொடுமையாற் புகழோய்
என்னைப் போல்பவ ராருள ரொருவரென் றிசைத்தான்.

(இ-ள்.) புகழோனே! (உடன்)பிறந்த இழிவானசெய்தொழிலையுடைய என்செயலின் கொடுமையால் முன்பு தேவர்கள் (உனக்குக்) கொடுத்த வரங்களும் முனிவர்சொற்களும் பிறகு சீதை (உனக்குப்புரிந்த) உதவியும் பயனில்லாமற்போயின; (இப்படிச்செய்த) என்னைப்போல்பவர் ஒருவர் யாருளர்? என்று (தன்னை வெறுத்துக்)கூறினன் (ஸ்ரீராமன்); (எ - று.)

தேவர்முதலியோர் அநுமானுக்கு வரங்கொடுத்ததை "பாயநோக்கிய வானவர் தானவர்பழிப்பில், தூயமாதவர் முதலினோர் தோன்றியவியப்பால், வாயுவேகமும் வயினதேயன்றன் மாக்கதியும், ஒய்விலாதிவனிடத்தினிலிருக்க வென்றுரைத்தார்," "கூர்பற்றியவென்குலிசத்தாற் கூறுபடுபுண்வடுத்தீர", "பொல்லாவிருளைக் கடிந்தோட்டும் புவனதீபன்புகல்வானென், வில்லார்கரத்திற் சதகூற்றி லொருகூற்றுனக்கு மேவிடுக, எல்லாவிஞ்சைகளுந் தரிக்கவிசைந்தசத்தியுண்டாக," "இரணபூமியிடை நேர்ந்தாலென்பாசத்தாலார்த்தக்கால், மரணமில்லையுனக்கென்று வருணராசன்வரங்கொடுப்ப", "தாதாவுரைக்குமிவன் பிரமதண்டத்தாற்றானுஞ் சாவின்றி, மேதாவியுமா யொருநாளும் விளியாநாளுமுறுகவென" என்பனமுதலாக அனுமப்படலத்தில் வருவது காண்க. சானகியுதவி - அநுமான்வாலில் அரக்கர் தீக்கொளுவிப் பறையறைந்தபோது அதனையுணர்ந்த சீதை வருந்தி அக்கினிபகவானைக்குறித்து "கற்பதனிற் றாயேனென்னில் தொழுகின்றேன் எரியே! அவனைச்சுடல்" என்றுவேண்டிக் குளிர்வித்தமை. பி-ம்:—[1]பிறிதென். [2]கொடுமையிற்புகழோர். (உ௫அசு)

கக௯௫. புன்றொ ழிற்புலை யரசினை [1]வெஃகினேன் [2]பூண்டேன்
கொன்றொ ருக்கினே னெந்தையைச் சடாயுவைக் குறைத்தேன்
இன்றொ ருக்கினே [3]னித்தனை வீரரை யிருந்தேன்
[4]வன்றொ ழிற்கொரு வரம்புமுண் டாய்[5]வர வற்றோ.

(இ-ள்.) (பின்னும் ஸ்ரீராமன் புலம்புவான்:—)இழிவானதொழிலைச்செய்யவேண்டிய இழிவான அரசினை விரும்பினேனாய் மேற்கொண்டேன்: (அதனால்), என்தந்தையைக் கொன்றொழித்தேன்; (எனக்குத் தந்தைமுறையான) சடாயுவையும் (என்பொருட்டாக) உயிர்குறையச்செய்தேன்; இன்று இத்தனை வீரரையும் அழித்திட்டேனாய்(நான் ஸ்வஸ்தனாக)இருந்தேன்; (எனது) வன்மையானதொழிற்குஒருவரம்பும் உண்டாய்வரக் கூடியதோ? (எ-று.)-என்வன்றொ

ழில் ஒருவரம்புக்கு உட்படாதென்றபடி. பி-ம்:—[1]வெம்கிலென், வாவினன். [2]பூண்ட. [3]இத்தனைவரையுமிருந்தே, இத்துணை... இருந்தேன். [4]வன்றொழிற்கு மொர். [5]வரமற்றேர். (உ௫அஎ)

கசுகூ. தமைய னைக்கொன்று தம்பிக்கு வானரத் தலைமை
அமைய நல்கின னடங்கலு [1]மவிப் பதற் கமைந்தேன்
கமைபி டித்துநின் றுங்களை யித்துணை கண்டேன்
[2]சுமையு டற்பொறை சுமக்க[3]வந் தனனெனச் சொன்னான்.

(இ - ள்.) தமையனைக்கொன்று தம்பிக்கு வானரங்கட்குஅரசனுந்தன்மையைப் பொருந்தத் தந்த நான், எல்லாவற்றையும் அழிப்பதற்கே முயன்றவனானேன்; பொறுமையை உறுதியாகக்கொண்டுநின்று உங்களை இவ்வளவு கஷ்டத்திற்கு உள்ளாக்கினேன்; (பூமிக்குப்)பாரமான உடற்சுமையைச் சுமக்கத்தான் பிறந்தேனென்றுசொல்லிப் புலம்பினன், (இராமன்); (எ - று.)— சீதையைமீட்பதற்கே சுக்கிரீவபட்டாபிஷேகஞ்செய்ததனுல், ஸ்ரீராமன் இவ்வாறு கூறுகின்றான். பி-ம்:—[1]வீய்ப்பதாகமைந்து. [2]எமையுடைப். [3]வந்தேன்.

கசுஎ.—அங்கதனைப்பார்த்து ஸ்ரீராமன் புலம்புதல்.

விடைக்கு லங்களி [1]னடுவணோர் விடைகிடந் தென்னக்
கடைக்கண் டீயுக வங்கதக் களிற்றினைக் கண்டான்
[2]படைக்க லங்களைச் சுமக்கின்ற பதகனேன் [3]பழிபார்த்து
அடைக்க லப்பொருள் காத்தவா றழகிதென் றழுதான்.

(இ - ள்.) விருஷபக் கூட்டங்களின் நடுவிலே ஒரு விருஷபம்கிடந்தாற்போல(க் கிடக்கின்ற) அங்கதனென்ற சிறந்த வீரனைக் கண்டு, (ஸ்ரீராமன்), கடைக்கண்ணினின்று தீ வெளிப்பட,படைக்கலங்களைச் சுமக்கின்ற பாவியாகிய யான் (உங்கட்கு விளைந்த) ஆபத்தைப் பார்த்தும் அடைக்கலப்பொருளைக் காத்தவகை அழகியது! என்று அழுதான்; (எ-று.)—பழி-எதிரிகள்பழித்தற்குக் காரணமான ஆபத்து. பயன்படாமையால்‘படைக்கலங்களைச் சுமக்கின்ற' என்றது. தன்னையடைந்தவர் உயிரிழக்குமாறு தான் அஜாக்கிரதையாக இருந்ததனுல்‘அடைக்கலப்பொருள்காத்தவாறழகிது'என்றான். பி-ம்:—[1]இடையொரு, நடுவொரு. [2]படைக்கலக்கடல்சுமக்கின்ற, படைக்கலஞ்சுமந்துழல்கின்ற. [3]பாதத்து. (உ௫அக)

கசுஅ.—இலட்சுமணனை ஸ்ரீராமன் காணுதல்.

[1]உடலி டைத்தொடர் பகழியி னொளிர்[2]கதிர்க் கற்றைச்
[3]சுடரு டைப்பெருங் குருதியிற் [4]பாம்பெனச் சுமந்த
[5]மிடலு டைப்பிண மீமிசைத் தான்பண்டை வெள்ளக்
[6]கடலி டைத்துயில் வானன்ன தம்பியைக் கண்டான்.

(இ-ள்.) உடலினிடையே தொடர்ந்த அம்புகளின் விளங்குகின்ற கதிர்க்கற்றையினுற் சுடரையுடைய மிக்க குருதியிலே பாம்பென்று சொல்லுமாறு சுமந்த வலிமையையுடையபிணங்களின்மேலே பழமையான வெள்ளக்கடலின்மீது துயில்வானை தன்னை யொத்த தம்பியை ஸ்ரீராமன் கண்டான்.

உடலினிடமெங்கும் பொத்திய அம்புகள் தொகுதியாக ஒளிவீசக் குருதி வெள்ளத்திலே பிணங்களின்மீது தூங்குபவன்போலுள்ள இலட்சுமணன் கடலினிடையே ஆதிசேஷசயனத்திலே பள்ளிகொள்ளுந்திருமாலுக்கு ஒப்பாவனென்க. [5]மிடலுடைப்பணமிமிசை என்றபாடத்திற்கு-பாம்பின்பணத்திற்கு ஏற்ப உபமேயத்தில் பிணங்களைக்கொள்க. பி-ம்:—[1]உடலிற்றைத்தன, உடலிடைத்தைத்தன, உடலுடைத்துயர். [2]தளிர்க்கற்றைச். [3]சுடரிற்சூழ். [4]பாரம்போற். [5]மிடலுட்பன்மணிப்பார்மிசைத். [6]கடலிடை. (உ௬கo)

க௬௯.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஸ்ரீராமனது துயரத்தைக்கூறும்.

பொருமி னானகம் பொங்கி னானுயிர் முற்றும் புகைந்தான்
குருமணித்திரு மேனியு [1]மனமெனக் குலைந்தான்
தரும [2]நின்றுதன் கண்[3]புடைத் தலம்வரச் சாய்ந்தான்
உருமி னாலிடி யுண்டதோர் மராமர [4]மொத்தான்.

(இ - ள்.) மனம் வருந்தினான்; (துயரங்)கிளர்ந்துதோன்ற உயிர்ப்புமுழுவதும் புகைந்துதோன்றப்பெற்றான்; சிறந்த நீலரத்தினம் போன்ற திருமேனியும் மனம்போலவே நடுங்கினான்; தருமதேவதை நின்று தன் கண்ணைப் புடைத்துக்கொண்டு வருந்துமாறு, உருமினாலிடியுண்டதான ஒருமராமரத்தையொத்தானாய்ப் (பூமியில்)விழுந்திட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]அன்னவா. [2]நின்ற. [3]புதைத்தனவலம்வர, புடைத்தலமரச். [4]ஒப்பான், ஒப்ப. (உ௬௬க)

உoo.உயிர்த்தி லன்னொரு நாழிகை யுணர்ந்தில னொன்றும்
[1]வியர்த்தி லனுடல் விழித்திலன் [2]கண்ணிணை விண்ணோர்
[3]அயர்த்த னன்கொலென் றஞ்சின ரங்கையுந் தாளும்
பெயர்த்தி லன்[4]னுயிர் பிரிந்திலன் கருணையாற் பிறந்தான்.

(இ-ள்.) கருணையாற்பிறந்தவனான ஸ்ரீராமன்,—ஒருநாழிகைநேரம் மூச்சுவிட்டானில்லை; ஒன்றும் உணர்ந்தானில்லை;உடல் வேர்த்தானுமில்லை; கண்ணிணை விழித்தானு மில்லை;விண்ணவர் 'உயிரொடுங்கினானோ?' என்று அஞ்சினார்:அங்கையுங் காலும் நிலைபெயர்க்காதவனாயினான்: [இட்டகால்இட்டகையனாயினான்]: உயிர்பிரிந்தானென்பதுமாத்திர மில்லை; (எ - று.)

ஸ்ரீராமனுக்குப் பெருந்துயரால் உயிர்பிரிந்தானென்பதுமாத்திரம் நிகழவில்லையேதவிர, உயிர்பிரிந்தார்க்கு உளவாகுந் தன்மைகளெல்லாம் நிகழ்ந்திட்டனவென்பதாம். பி-ம்:—[1]வெயர்த்திலன். [2]கண்ணிணை. [3]அயிர்த்திலன். [4]உயிர்த்திலன். (உ௬௬உ)

௬உo.தாங்கு வாரில்லைத் தம்பியைத் தழீஇக்கொண்ட [1]தன்னை
வாங்கு வாரில்லை வாக்கினாற் றெருட்டுவா ரில்லை
பாங்க [2]ராயுள்ளோ ரியாவரும் பட்டனர் பட்டது
[3]ஈங்குவாலிது தமியனை யார்துயர் தீர்ப்பார்.

(இ - ள்.) (அவ்வாபத்தில் வந்து) உதவுவாரோ இல்லை; தம்பியைத்தழுவிக்கொண்டுகிடக்கின்ற தன்னை (அங்குநின்று)மீட்பவருமில்லை; வாயினால் தேறுதல்கூறுபவரு மில்லை; தோழராயுள்ளோர்யாவரும் இறந்திட்டனர்; இது

இங்கே நிகழ்ந்த செயல்: தமியனைத் துயர்தீர்ப்பவர் யாருளர்? (எ - று.)— ஆல் - அசை. பி-ம்:—1தடக்கை. 2ஆயினோர். 3நீங்கினலிது, நீங்குமா விறைத். 4பிற. (உ௫௬௩)

உ௦உ.—ஸ்ரீராமனைத் தேற்றுபவரில்லாமைக்குக் காரணம்.

கவந்த பந்தமுங் கழுதுந்தங் கணவரைக் காணுச்
சிவந்த கண்ணியர் தேடினர் திரிபவர் திரளும்
உவந்த 1சாதகத் தீட்டமு மோரியி 2னொழுக்கும்
நிவந்த வல்லது 3பிறவில்லைக் கடத்திடை நின்ற.

(இ - ள்.) கவந்தங்களின்தொகுதியும், பேய்களும், தங்கணவரைக்காணாமையால்(துயரத்தால்)சிவந்த கண்ணையுடையவராய்த்தேடித்திரியும் மடந்தைமாரின் திரளும், (இரைமிகுதியாகக்கிடைத்ததுபற்றி) மகிழ்ந்த பூதங்களின் கூட்டமும்,நரிகளின் வரிசையும் மிக்கனவேயல்லாமல்(அந்தப்)பிணக்காட்டில் உயிருடனிருந்தன வேறுஇல்லை; (எ - று.)—பி-ம்:—1சாதகரீட்டமும், பாதகரீட்டமும். 2ஒழுங்கும். 3பிறரில்லைகளத்திடைநின்றார். (உ௫௬௪)

உ௦௩.—தேவர்முதலியயாவரும் துயர்கூர்தல்.

வான நாடியர் வயிறலைத் தழுத1கண் மழைநீர்
சோனை மாரியிற் 2சொரிந்தனர் தேவருஞ் 3சொரிந்தார்
ஏனை நிற்பவுந் 4திரிபவு 5மிரங்கின வெவையும்
ஞான நாயக னுருவமே யாதலா னடுங்கி.

(இ-ள்.) வானநாட்டிலுள்ள மங்கையர் வயிற்றிலடித்துக்கொண்டு(தாம்) அழுதகண்மழைநீரை விடாப்பெருமழைபோலச்சொரிந்தார்;தேவர்களும்(கண்ணீரைச்)சொரிந்தார்கள்:எவையும் ஞானசொரூபியான திருமாலின் உருவமேயாதலினால், ஸ்தாவரஜங்கமமாகவுள்ள ஏனைப்பொருள்களெல்லாம் நடுங்கித் துயரத்தை வெளிக்காட்டின; (எ - று.)—பி-ம்:—1கண்மலிநீர். 2சொரிந்தன. 3சோர்ந்தார். 4இரங்கின. 5மயங்கின. (உ௫௬௫)

உ௦௪.—இதுவும் அது.

முகையி னுண்மலர்க் கிழவற்கு முக்கணான் றனக்கும்
1நகையு நீங்கிய திருமுகங் 2கருணையி னலிந்த
தொகையி னின்றவர்க் 3குள்ளது சொல்லியென் றொடர்ந்த
பகையும் 4பார்க்கின்ற பாவமுங் கலுழ்ந்தது பரிவால்.

(இ-ள்.) அன்றுமலரும் முகையின் தன்மைகொண்ட(நாபீ) கமலத்தில் வசிப்பவனான பிரமனுக்கும் திரிநேத்திரனான உருத்திரமூர்த்திக்கும் சிரிப்பும் நீங்கிய திருமுகம் கருணையினால் வருந்தின; இனத்தைச்சேர்ந்தவர்க்கு உள்ளதாகிய துன்பத்தைப்பற்றிக் கூறுவதிற் பயன் யாது? தொடர்ந்துள்ள பகையும், (அத்துயரத்தைக்) காண்கின்ற பாவத்திற்குஉரியதேவதையும் துன்பத்தினால் கண்ணீர்விட்டன; (எ - று.)

பகையாயினவரும், துன்பத்தை யனுபவிக்குமாறுசெய்கின்ற பாவமும் இரக்கங்கொள்ளும்படி ஸ்ரீராமன் புலம்பினானென்று அப்பிரானது துயர்மிகு

தியைப் புலப்படுத்தியவாறு. பிரமதேவனும் உருத்திரமூர்த்தியும் த்ரிமூர்த்தி பரிற் சேர்ந்தவ ராதலால், மூவருள் ஒருமூர்த்திக்குத் துன்பம்நேர மற்றையோர் வருந்துதல் இயல்பேயென்பார்'தொகையினின்றவர்க்குஉள்ள துசொல்லியென்' என்றார். 'தொகையினின்றவர்' என்பதற்கு-தேவகணத்துட்சேர்ந்தவ ரென்றலும் ஒன்று. பி-ம்:—1தகையினீங்கியதிருமுகக், நகையுநீக்கியதிருமுகங். 2கருணையுநலியத். 3உற்றது. 4பார்த்தன்று, ஆர்த்தது. (உ௫கசு)

உ௦ரு.—ஸ்ரீராமன் கண்விழித்துப்பார்த்துத் தம்பியிறந்தானென்று புலம்பத்தொடங்குதல்.

அண்ண லுஞ்சிறி துணர்வினோ டயர்வுயிர்ப் பணுகிக்
கண்வி ழித்தனன் றம்பியைத் தெரிவுறக் கண்டான்
விண்ணை யுற்றனன் மீள்கில னென்றகம் 1வெதும்பப்
புண்ணி 2னுற்றதோ ரெரியன்ன துயரினன் புலம்பும்.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனும்,—சிறிது உணர்ச்சியோடும் நெட்டுயிர்த்தலோடும்பொருந்திக் கண்விழித்துத் தம்பியை நன்கு கண்டான்: (கண்டு,'தம்பி)விண்ணகஞ்சேர்ந்திட்டான்:மீளமாட்டான்' என்று கருதி மனம் பெருவாட்டங்கொள்ள, புண்ணிற் கனல்நுழைந்தாற்போன்ற துன்பத்தையடைந்தவனாய்(பின்வருமாறு)புலம்புபவனானான்; (எ - று.)— இராமன்புலம்புவன்த மேற்பதினைந்துகவிகளிற் காண்க.மனைவியை மாற்றான் கையிற்பறிகொடுத்ததோடு தம்பியையிழந்த துயரமுஞ் சேர்ந்து புண்ணிலெரியிட்டாற்போலாயினவென்க. பி-ம்:—1வெதும்பிப், வெதும்பாப். 2உற்றதோர்வேலன்ன, உற்றனவேலன்ன. (உ௫கஎ)

வேறு.

உ௦௫.—பதினைந்துகவிகள் - இராமன் புலம்புதலைத் தெரிவிக்கும்.

எந்தை யிறந்தா 1னென்று மிருந்தே னுலகெல்லாந்
தந்தன 2னென்னுங் கொள்கை தவிர்ந்தேன் 3றனியல்லேன்
4உய்ந்து மிருந்தாய் நீயென நின்றே 5னுரைகாணேன்
வந்தன னையா 6வந்தன னையா வினிவாழேன்.

பதினாறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) என்தந்தையிறந்தான் என்றுகேள்வியுற்றும், (யான்)உயிருடனிருந்தேன்: உலகெல்லாவற்றையும் (பரதனுக்குத்) தந்தேனென்ற கொள்கையையும் தவிர்ந்தேன்; (நான்) தனிப்பட்டவனல்லாதவனாய், நீ உய்ந்து இருந்தாயென்றே (இவ்வாறு உறுதியாகச்செய்து) நின்றேன்: (இப்போது) (உன்)பேச்சைக் காணேன்: (ஆகையால், யான்), இனிவாழேன்; ஐயா! வந்திட்டேன், ஐயா! வந்திட்டேன்; (எ - று.)

'நீ என்னுடன்இருக்கின்றாய்' என்ற உறுதியால் தந்தையிறந்தானென்ற துக்கத்தையுங் கொள்ளாமல், நான்,. உன்னுடைய உதவிகொண்டு எளிதாக ஆளலாமென்றநம்பிக்கையால் பரதனுக்குக்கொடுத்த அரசையும் அவன் திருப்பிக்கொடுக்கப் பெற்றுகொள்வதாக ஒப்புக்கொண்டேன்: நீ இறந்திட்டாயாத

லால்,யான் இனி உயிர் வைத்திரேனென்றவாறு. ஸ்ரீராமன் தன்தந்தை இறந்ததைக்கேள்வியுற்று, இலட்சுமணனைப்பார்த்து *உன் தந்தைஇறந்தாரென்று கூறியதாகவும், சீதாபிராட்டியைப்பார்த்து உன்மாமனார் இறந்தாரென்றுகூறியதாகவும் வான்மீகிபகவான் அருளிச்செய்திருத்தல் இங்குக் காணத்தக்கது. பி-ம்:—[1]யானும். [2]என்றும். [3]தமியல்லேன்.[4]கந்தனிருந்தாய். [5]கரைகாணேன், தனிகாணேன். [6]எம்பீ. (உருகூஅ)

உ௦எ.தாயோ [1]நீயே தந்தையு நீயே தவ[1]நீயே
சேயோ [1]நீயே [2]தம்பியு நீயே திரு[1]நீயே
போயோ நின்றா யென்னை [3]யிகந்தாய் புகழ்பாராய்
[4]நீயோ யானோ [5]நின்னினு நெஞ்சம் [6]வலியேனால்.

(இ - ள்.) தாயோ நீதான்: தந்தையும் நீதான்: தவமும் நீதான்: சேயோ நீயே: தம்பியும் நீதான்: செல்வமும் நீ தான்: (இப்படிப்பட்ட) நீ யோ புகழைக் கருதாமல் என்னைவிட்டுப் போனவனானாய்: யானோ (இன்னும் உயிர்வைத்துக் கொண்டிருக்கிறேனாதலால்), உன்னைவிட நெஞ்சம் வலிமையானவன்; (எ-று.)---பி-ம்:—[1]நீயென். [2]செய்பொருணீயே. [3]இகழ்ந்தாய். [4]நீயாயானோ, நீயோயானும். [5]நின்றனன்,நின்றனில், நின்றன.[6]வலியேமால், வலியேனோ.

உ௦அ.[1]ஊறாய் நின்ற புண்ணுடை யாய்பா லுயிர்காணேன்
ஆறா நின்றே னாவி [2]சுமந்தே யழுகின்றேன்
ஏறே யின்னு முய்யினு முய்வே னிருகூறாக்
கீறா நெஞ்சம் பெற்றன [3]னன்றோ [4]கெடுவேனே.

(இ - ள்.) ஊறுபட்டுத்தோன்றியுள்ள புண்ணையுடைய உடலில் உயிர் காணேன்: பொறுமையுடையேனாகி உயிரைச்சுமந்தவண்ணம் நின்றே யழுகின்றேன்: சிங்கம்போன்றவனே! கெடுவேன்! இருகூறாகப்பிளவாத நெஞ்சம்பெற்றேனன்றோ? (ஆதலால்), இன்னும் (வாழ்ச்சியுடன்)உய்ந்திருப்பதென்றாலும் இருப்பேன்; (எ- று.)

எனக்குச் சகோதரவாஞ்சை யிருக்குமானால், உன்னுடலைக் கண்டபோதே உயிர்போகவேண்டாவோ? என்றவாறு. பி-ம்:—[1]ஊறா. [2]சுமந்தேனழுகின்றேன். [3]அன்றே.[4]கெடுவேனான். (உகூ௦௦)

உ௦கூ.பயிலுங் காலம் பத்தொடு நாலும் [1]படர்கானத்து
அயில்கின் றேனுக் [2]காவன நல்கி யயிலாதாய்

* "ஸீதேம்ருதஸ்தே ப்வஶுர:—பித்ராஹீநோஸிலக்ஷ்மண" என்றது காண்க. லக்ஷ்மணனைப்பார்த்து உனக்குப்பிதாஇறந்தாரென்று ஸ்ரீராமன் அருளிச் செய்யக்காரணம் எனக்குப் பிதா செய்யவேண்டியவற்றைச்செய்ய நீ இருத்தலால், என்வரையில் தந்தையிறந்தாரல்லரென்பது: இவ்விஷயத்தை "ஹாவஜ்ஞேநக்ருதஜ்ஞேந - தர்மஜ்ஞேநசலக்ஷ்மண | த்வயாபுத்ரேணதர்மாத்மா - ந ஸம்வ்ருத்த: பிதாமம" என்று வெளிப்படையாக அருளிச்செய்திருத்தல் காண்க.

வெயிலென் றுன்னாய் நின்று [3]தளர்ந்தே மெலிவெய்தித்
துயில்கின் றாயோ [4]வின்றிவ் வுறக்கந் துறவாயோ.

(இ - ள்.) பரவியகாட்டிலே பழகும் பதினான்குவருஷமும் (காட்டிற் கிடைக்கும் உணவுகளையெல்லாம்) உண்கின்ற எனக்கு வேண்டுவன வற்றைத் தந்து உண்ணாதிருந்தவனே! வெயிலென்றுகருதாத நீ உடல் தளர்ந்துநின்று மனமும்மெலிவுற்று இன்றுதுயில்கின்றாயோ? இவ்வுறக்கத் தை (என்றும்) துறக்கமாட்டாயோ? (எ - று.)—காலம் - வருஷமென்னும் பொருளது. பி-ம்:--[1]பயில். [2]ஆனவை. [3]தளர்ந்து. [4]இன்றி. (உ௬0௧)

உ௧0. அயிரா நெஞ்சு மாவியு மொன்றே யெனுமச்சொற்
பயிரா [1]வெல்லைப் பாதக னேற்கும் பரிவுண்டோ
செயிரோ [2]வில்லா வுன்னை யிழந்துந் திரிகின்றேன்
உயிரோ நானோ வாரினி யுன்னோ டுறவையா.

(இ - ள்.) 'சந்தேகிக்காத [ஒருத்தரையொருத்தர் நம்புகின்ற] நெஞ்சும் ஆவியும்(இருவர்க்கும்)ஒன்றே'என்று(உலகத்தார்)சொல்லுகின்ற அச்சொல் பொருளுடைய தாகாதபோது பாவியான என்னிடத்து இரக்கம் என்ற குணந்தான் உளதாகுமோ? குற்றமென்பது சிறிதும்இல்லாத உன்னையிழந்த பின்பும் (உயிரோடு) திரிகின்றேன்: ஐயா! இப்போது உன்னோடு உறவு (எனது) உயிரோ, யானோ, யார்? (எ - று.)—நான் உண்மையுறவினனல்லே னென்று ஸ்ரீராமன் தன்னைப் பழித்தவாறு. பயிர்தல்=பயிலுதல். பி-ம்:— [1]வேலைப்பதகனெனக்கும். [2]இல்லாய்நின்னை. (உ௬0உ)

உ௧௧.வேள்விக் [1]கேகி வில்லு மிறுத்தோர் விடமம்மா
[2]வாழ்விக் கும்மென் றெண்ணினன் முன்னே வருவித்தேன்
சூழ்வித் தென்னைச் சுற்றின ரோடுஞ் சுடுவித்தேன்
தாழ்வித் தேனோ வித்தனை கேடுந் தருவித்தேன்.

(இ - ள்.) (சனகராசன் புரிந்த)வேள்விக்குச் சென்று (சிவ)தநுசையும் முறித்து ஓர்விஷத்தை [சீதையை] (நம்மை இது)வாழ்விக்குமென்று எண்ணி னேனாய் முன்புவருவித்தேன்; (யாவரையும்) தூராலோசனைசெய்வித்து என்னைச்சுற்றினவரோடும் [நண்பரோடும்] சுடுவித்தேன்: (சிறிதேனும்) பின் வாங்கச்செய்தேனோ? இத்தனைத்தீங்கையும் உண்டாக்கிவிட்டேன்; (எ - று.) —அம்மா-வியப்பிடைச்சொல்: சீதையைக்கொண்டதன்மூலம் விளைந்த கேட் டைப்பற்றி வியந்தவாறு. சூழ்வித்து, தாழ்வித்தேனோ என்பவற்றைத் தன்வி னைப்பொருளில்வந்த பிறவினையெனக் கொண்டு கூறுதலும்ஒன்று. இப்பாட லுக்குப்பின் சிலபிரதிகளில் "மாண்டாய் (உகங)" என்ற பாடல்உள்ளது. பி-ம்:---[1]எய்தி. [2]மாள்விக்கும்மென்றெண்ணிலன். (உ௬0௩)

உ௧உ.மண்மேல் வைத்த காதலின் மாதா [1]முதலோர்க்குப்
புண்மேல் வைத்த [2]தீநிகர் துன்பம் புகுவித்தேன்
பெண்மேல் வைத்த காதலி னிப்பே றுகள்பெற்றேன்
எண்மேல் [3]வைத்த வென்புகழ் [4]நன்று லெளியேனே.

(இ - ள்.) பூமியின்மேல்வைத்த காதலினால் மாதா[கைகேயி]முதலான வர்க்குப் புண்மேல்வைத்த தீயையொத்த துன்பத்தை உண்டாக்கினேன்; பெண்மேல்வைத்த காதலினால் இப்பேறுகளைப் பெற்றேன்: மதிக்குமாறுள்ள என்புகழ் மிகஅழகிது; (நான்) சாமானியமானவனோ! (எ - று.)

'இப்பேறுகள்பெற்றேன், எண்மேல்வைத்த என்புகழ்நன்று' என்பன - பிறகுறிப்பு. இச்செய்யுள் சிலபிரதிகளில் "சான்றோர்" (௨௧௫) என்ற பாடலுக்குப்பின் உள்ளது. சிலபிரதிகளில் இதன்பின் "இருந்தேனானால்" (௨௧௭) என்ற பாடல்உள்ளது. பி - ம்:—1முதலோர்க்கும். 2தீயன. 3வைத்தேன். 4யான்றான், நன்றே. (௨௬௦௪)

௨௧௩. மாண்டாய் நீயோ யானொரு போது முயிர்வாழேன்
ஆண்டா [1]னல்ல னானில மந்தோ [2]பரதன்றான்
பூண்டா ரெல்லாம் பொன்றுவர் [3]துன்பம் பொறையாற்றார்
வேண்டா வோநா னல்லற மஞ்சி மெலிவுற்றால்.

(இ - ள்.) நீயோ மாண்டாய்: யான் (இனிமேல்) ஒருபோதும் உயிர்வாழேன்: (நான் உயிர்வாழாவிடின்), பரதன் (தான்) பூமியை யாள்பவனாகான்: அந்தோ! துன்பத்தைச் சகிக்கமாட்டாதவராகி, (உறவு)பூண்டவரெல்லாம் இறப்பர்: நான் சிறந்ததருமத்திற்கு அஞ்சி மெலிவுற்றால், (அதன்பயனாக இவ்வளவு) உண்டாகவேண்டாவோ? (எ - று.)

'பிரமாஸ்திரத்தைவிடவேண்டா' என்று என்தம்பியைத் தடுத்ததற்குப் பயன் இவ்வாறு விளைந்ததென இரங்குகின்றான், ஸ்ரீராமனென்னலாம். பி-ம்:—1அந்தோநானிலமன்றே. 2பரதன்றாள். 3துன்பப். (௨௬௦௫)

௨௧௪. அறந்தாய் [1]தந்தை சுற்றமு [2]மற்று மெனையல்லால்
[3]துறந்தா யென்று [4]மெய்ம்மற வாதாய் துணைவந்து
பிறந்தா யென்னைப் பின்பு தொடர்ந்தாய் [5]பிரிவாற்றாய்
இறந்தா யுன்னைக் கண்டு மிருந்தே னெளியேனோ.

(இ-ள்.) அறமும் தாயும் தந்தையும் சுற்றமும் மற்றுமுள்ளனவும் என்னையல்லாமல்(வேறொன்றுஉளதென்றுகொள்ளாது)விட்டிட்டவனே!எப்போதும் சத்தியத்தைமறவாதவனே!(எனக்குத்) துணையாகவந்துபிறந்தவனே! என்னைப் பின்பற்றி(க் காட்டிலும்)தொடர்ந்து வந்தவனே!(என்)பிரிவையாற்றாதவனாய் (நீ) இறந்தாய்; (அங்ஙனம் இறந்த) உன்னைக்கண்டும் (யான்)உயிருடன் இருந்தேன்; (நான்) சாமானியமானவனோ? (எ - று.)

தான் பூசனைசெய்யச்சென்றபோது இலட்சுமணன் இறந்ததனால், பிரிவாற்றாமையாலிறந்தனனாக்கொண்டு பேசுகின்றான், ஸ்ரீராமன்: பிரிவாற்றாய் பின்புதொடர்ந்தாய் என்று ஒன்றாகஎடுத்து-நான்காட்டிற்குச் செல்லுகையில் பிரிவையாற்றாது பின்புதொடர்ந்தவனே! எனினுமாம். எளியேனோ - நான் மிகக்கொடியவனன்றோ என்றபடி: இவ்வாறுகூறுதல் உலகவழக்காதலுணர்க. இச்செய்யுளும், "வேலைப்பள்ளக்குண்டகழி" (௨௧௬)என்றசெய்யுளும் "கொடுத்தேன்" (௨௨௦)என்றசெய்யுட்குப்பின் முறையேயுள்ளன. ஒருபிரதியில் இந்தச்

செய்யுள்மாத்திரம்''வேலைப்பள்ளக்'' என்பதன்பின்உள்ளது. பி-ம்:---[1]எந்தை. [2]மற்றையவையெல்லாம், மற்றையனவெல்லாம். [3]மறந்தாய். [4]மெய்ம்மைமறந்தயுடன்வந்து. [5]பிரிவற்றாய். (உகு0கு)

உகங. சான்றோர் மாதைத் [1]தக்க வரக்கன் சிறை[2]தட்டால்
ஆன்றோர் சொல்லு நல்லற மன்னான் [3]வயமானல்
மூன்றாய் நின்ற பேருல கொன்றாய் முடியா வேல்
தோன்றா வோவென் [4]வல்விலின் [5]தீரத் தொழிலம்மா.

(இ - ள்.) சான்றோரின்பெண்ணை வலிமைமிக்க அரக்கன் சிறையிலே தடுத்துவைத்திட்டால், (தருமம் அவனுக்கு விரோதமாகஇருந்து அவனை யழிக்கவேண்டும்: அங்ஙனம்புரியாமல்), ஆன்றோர்பாராட்டிக்கூறுகின்ற நல்ல அறமும் அவனுக்கு வசப்பட்டிருக்குமானால், மூன்றாய்நின்ற பெரியஉலகமெல்லாம் ஒருங்கே (அழியவேண்டும்: அங்ஙனம்) அழிந்திடாதாயின், என்னுடையவலியவில்லின் தீரத்தன்மையோடுகூடிய தொழில் வெளிப்படமாட்டாவோ? (எ-று.)

முறைகேடானசெயலைப்புரிந்த அரக்கன் அறக்கடவுள்அழியாது அவன் வாழ்ந்திருப்பதனால், இந்த மூன்றுஉலகத்தையும்என்வில்வலியால் தொமிசஞ் செய்துவிடுவேனென்று ஸ்ரீராமன் கூறியவாறு. பி-ம்:--[1]தக்கது. [2]தட்ட, கட்ட, வைக்க, செய்ய. [3]வசமானல் [4]வில்வலி. [5]வீரத். (உகு0எ)

உகசு. வேலைப் பள்ளக் குண்டக ழிக்கும் [1]விராதற்கும்
காலிற் [2]செல்லுங் காக மணிக்குங் கரனுக்கும்
மூலப் [3]பொத்தற் [4]செத்த மரத்தேழ் முதலுக்கும்
வாலிக் கும்மே [5]யாயின [6]வாறென் வலியம்மா.

(இ - ள்.) கடலென்றுசொல்லப்படுகின்ற பள்ளமாகிய ஆழ்ந்த (இலங்கையின்) அகழிக்கும், விராதனுக்கும், காற்றுப்போற் செல்லுங் காகாசுரனுடைய (கண்ணின்) கருமணிக்கும், கரனுக்கும், வேரிலே தொளையையுடைய ஆராய்வதற்குஉரிய ஏழுமராமரமாகிய முதலுக்கும், வாலிக்குமே என்வலி செல்லுபடி யாயினவாறு என்? (எ-று.)—அம்மா-ஆச்சரியம். இத்துணைவரைக் கொன்றவில் இவ்விந்திரசித்தைக் கொல்லாமலிருக்கின்றதே! என வியந்தவாறு. பி-ம்:—[1]விரதிக்கும். [2]செல்லாக்கவந்தனுயிர்க்கும், செல்லுகவந்தனுயிர்க்கும். [3]பொத்தைச். [4]சொத்தை. [5]ஆயினது. [6]என்றன், ஒருவன். (உகு0அ)

உகஎ. இருந்தே னானு லிந்திர சித்தே முதலாய
பெருந்தே ரரைக் கொன்று பிழைக்கப் [1]பெறுவேனோ
[2]வருந்தே [3]னீயே [4]வெல்லுதி யென்னும் வலிகொண்டேன்
[5]பொருந்தே னனிப் பொய்ப்[6]பிற விக்கும் [7]பொறையல்லேன்.

(இ - ள்.) '(இந்திரசித்தைக்கொல்லுமாறு, வருந்தி முயற்சிசெய்யேன்): நீயே வெல்லுவாய்' என்று (உன்னைநோக்கிக்) கூறிய வலிகொண்ட நான், (இங்குத்தானே) இருந்தேனானல் (அப்போதுதான்) இந்திரசித்துமுதலான பெரியதேர்வீரரைக்கொன்று பிழைக்கப்பெறுவேனோ? நான் (உண்மையான

அன்புஉற்ற உடன்பிறவியையும் இப்போது உயிருடன்) இருக்கப்பெறுதவ ஞயினேன்: (அதனால்) இப்பொய்ப்பிறவியைச் சுமக்கவும்வல்லேனல்லேன்.

இந்திரசித்துமுதலிய பெரியதேர்வீரரைக் கொல்லும்வலிமைபெற்றிருந் தேனுனல் இந்திரசித்துவந்தபோதே என்திறமையால்வென்றிருக்கமாட்டே னேஎன்று கூறியவாறு.பொருந்தேன்என்பதற்கு-நான்உன்னுடன் பிறந்ததாக வும்உடன்படேன் என்றுமாம்: இவ்வாறுகூறுவது சகோதரவாஞ்சையற்றுத் தான்உயிரோடிருப்பதுபற்றி யென்னலாம்.பி-ம்:-1பெறுவேனேல்,பெரியோ னே.2மருந்தே. 3நானீ. 4வெல்லுமதன்றே. 5பொருந்தேனன்றே.6பிறவிக்குப். 7பொருள், புரை. (உசுOக)

உகஅ.மாதா வும்நஞ் சுற்றமு நாடு மறையோரும்
ஏதா ஞரோ வென்று தளர்ந்தே யிறுவாரைத்
தா தாய் காணச் சால நினைந்தேன் [1]தளர்கின்றேன்
போதா யையா பொன்முடி யென்னைப் [2]புனைவிப்பான்.

(இ - ள்.) தாயும் நமது சுற்றத்தாரும் நாட்டிலுள்ளாரும் பிராமணரும், '(காட்டிற்குச்சென்ற இராமலட்சுமணர்) எந்தக்கதியானரோ?' என்று தளர்ச் சியுற்று மனம்முறிந்து வருந்துபவரை, குழந்தாய்! காணவேணுமென்று மிக வும் நினைந்துள்ளேனுய் மனத்தளர்ச்சியடைகின்றேன்:ஐயா!என்னைப் பொன் முடிபுனைவிக்குமாறு வருவாய்; (எ-று.)—'தாதாய்' என்பது-அன்புபற்றியது. பி-ம்:—1தரையாள்வேம், தரைவாழ்வேன். 2புனைவிப்பாம், புனைவிக்க, புனை விப்பாய். (உசுகO)

உகக.பாசமு முற்றச் சுற்றிய போதும் பகையாலே
நாச[1]மு ஞற்றிப் போது நடந்தே னுடனல்லேன்
நேசமு மற்றூர் செய்வன [2]செய்தே நிலைநின்றேன்
தேசமு [3]முற்றென் [4]கொற்ற நலத்தைச் [5]சிரியாரோ.

(இ - ள்.) நாகபாசம் (உடல்)முழுதுஞ்சுற்றியபோதும் பகையாலே நாசம் ஏற்பட்ட இப்போதும் உடன்இராதவனுய் அப்பாற்சென்றிட்டேன்; நேசமற்றூர் செய்வனவும்செய்தே உயிரோடுள்ளேன்: தேசத்திலுள்ளாரெல் லாம் பொருந்தி என்வெற்றிநலத்தைச் சிரியாரோ? (எ - று.)

உலகத்தாரெல்லாம் என்தோல்வி யுணரும்படி நேர்மையற்றவழியில் நடந்துகொண்டேனேயென்று தன்னை நொந்தவண்ணம் புலம்பியவாறு. பி-ம்:—1உற்றிப், உஞற்றப். 2செய்தேன்றனி. 3 மற்றென்.4சொற்றநலத்தும். 5தெரியாதோ. (உசுகக)

உஉO.கொடுத்தே [1]னன்றே வீடண னுக்குக் [2]குலமாள
முடித்தோர் செல்வ மியான்முடி யாதே முடிகின்றேன்
[3]படித்தே னென்றே பொய்ம்மை குடிக்குப் பழிபெற்றேன்
[4]ஒடித்தே னன்றே யென்புகழ் [5]நானே யுணர்வற்றேன்.

(இ - ள்.) (நான் முன்பு) விபீஷணனுக்கு (அரக்கர்)குலத்தையாளும் படி முடிசூட்டி (அதற்குஉரிய) ஒப்பற்ற (அரசச்)செல்வத்தையும் கொடுத்தே

னல்லவா? (அதனை) யான்நிறைவேற்றிவையாமலே (இப்போது) உயிர் முடிகின்றேன்: (இதனால்), பொய்யைப்படித்தேனென்றே (இட்சுவாகு)வமிசத்துக்குப் பழியைச் சம்பாதித்துவைத்திட்டேன்; அவிவேகியான நான், (சுயமாகவே) என்புகழைக் கெடுத்துக்கொண்டேனல்லவா? (எ - று.)—பி-ம்:—[1]அன்றென், அன்றோ. [2]குலமாளும். [3]படித்தோனென்றே, படித்தேனன்றே, படித்தோனன்றே, படுத்தேனன்றே, பிடித்தேனன்றே. [4]கொடித்தேனன்றே. [5]நான்றுனுடையேனே. (உ௬௧உ)

உஉக.—இவ்வாறுபுலம்பித் தன்னைமறந்து ஸ்ரீராமன் அறிவுசோர்ந்து துயிலுறுதல்.

என்றென் [1]றேங்கா விம்மு முயிர்க்கு [2]மிடையஃகிச்
சென்றான் [3]றான்றோ டிந்திய மெல்லாஞ் சிறை[4]யெய்தப்
பொன்றாம் [5]மென்னுந் தம்பியை [6]யார்வத் தொடுபுல்லி
ஒன்றும் [7]பேசான் றன்னை மறந்தான் [8]றுயில்வுற்றான்.

(இ-ள்.) என்றென்றுசொல்லியவண்ணம் ஏக்கங்கொண்டு விம்முவான்; பெருமூச்சுவிடுவான்: (இவ்வாறெல்லாஞ்செய்தபின்), இடையிலேகுறைந்துபோய் ஓரிந்திரியத்தோடு [மனத்தோடு] மற்றையிந்திரியமெல்லாம் ஒன்றாகிச் சிறைப்பட இறந்தவனாகின்றானென்னுந் தம்பியை அன்போடுதழுவி ஒன்றும் பேசாதவனாய்த் தன்னைமறந்தவனாகித் துயில்கொண்டான்; (எ-று.)--பி-ம்:—[1]எங்கும். [2]இடையெய்த, இடையாகி. [3]ஒன்றோ. [4]செய்து. [5]என்னுத். [6]மார்பத்தொடு. [7]தேறான். [8]துயிலுற்றான். (உ௬௧௩)

உஉஉ.—ஸ்ரீராமன் மறந்து துயிலுற்றதுகண்டு தேவர் அன்போடு சொல்லத்தொடங்குதல்.

கண்டார் விண்ணோர் கண்கள் புடைத்தார் கலுழ்கின்றார்
கொண்டார் துன்ப மென்முடி வென்னக் குலைகின்றார்
அண்டா வையா வெங்கள் பொருட்டா லயர்கின்றாய்
உண்டோ வுன்பாற் [1]றுன்பென வன்போ டுரைசெய்தார்.

(இ - ள்.) தேவர்கள் (ஸ்ரீராமன் துயிலுற்றதனைக்) கண்டார்கள்; கண்களிலே புடைத்துக்கொண்டவராய் வருந்துபவரானார்: துன்பங்கொண்டவராய், 'முடிவுயாதாகுமோ?' என்று நடுங்குபவரானார்; தேவனே!ஐயனே!எங்கள்பொருட்டாக வருந்துபவனாகப்பாவிக்கின்றாய்: உன்னிடத்துத் துன்பு உண்டோ என்று அன்போடு சொல்லத்தொடங்கினார்; (எ-று.)—தேவர்கள் அன்போடு கூறுவதனை மேல் ஏழுகவிகளிற்காண்க. பி-ம்:—[1]துன்பமுமென்றே, துன்பெனவன்பால். (உ௬௧௪)

வேறு.

உஉ௩.—இதுமுதல்ஏழுகவிகள்-தேவர்கள் ஸ்ரீராமனை உண்மையுணர்த்தி அன்போடுகூறுவதைத் தெரிவிக்கும்.

உன்னை யுள்ள படியறியோ [1]முலகை முள்ள திற[2]முள்ளேம்
பின்னை யறியே முன்னறியே மிடையு மறியோம் பிறழாமல்

நின்னை வணங்கி நீவகுத்த நெறியி னிற்கு மதுவல்லால்
என்னை யடியேஞ் [3]செயற்பால வின்ப துன்ப மில்லோனே.

(இ - ள்.) இன்பதுன்பங்களில்லாதவனே! உன்னைஉள்ளபடியறியும் வல்லமையுள்ளோமல்லோம்: உலகு (உன்னிடத்து) அமைந்துள்ள கூறுபாட்டையும் ஆராய்ந்தறியோம்: இனி நடக்கப்போவதையும் அறியும்வல்லமையுடையோமல்லோம்: முன்னே நிகழ்ந்ததையும்அறியும்வல்லமையுடையோமல்லோம்: இடையிலே நடப்பதையும் மாறுபாடில்லாமல் அறியும்வல்லமையுடையோமல்லோம்; நின்னைவணங்கி நீ ஏற்படுத்தியுள்ள வழியில்நிற்பதல்லாமல் அடியவர்களாகிய நாங்கள் செய்யத்தக்கவை யாவையுள? (எ-று.)

உடலிலுள்ள நரைதிரைமுதலியவை ஆன்மாவைச்சேராதவாறுபோல உலகத்துநிகழும் இன்பதுன்பங்கள் உலகத்துயிர்க்கெல்லாம் உயிரான பரமான்மாவைச் சேராவென்க. பி-ம்:—[1]உலகையுள்ள, [2]அறிவோம், உள்ளாய், அறியோம். [3]செயற்பாலம்,செயற்பாலது. (௨௬௧௫)

௨௨௪. அரக்கர் குலத்தை வேரறுத்தெம் மல்ல னீக்கி யருளாயென்று
இரக்க வெம்மேற் கருணையினா [1]லிசையா வுருவமிவை யெய்திப்
புரக்கு மன்னர் குடிப்பிறந்து போந்தா[2]யறத்தைப் பொறைதீர்ப்
கரக்க[3]நின்றேநெடு [4]மாய மெமக்குங் காட்டக் கடவாயோ. [பான்

(இ - ள்.) 'அரக்கர்குலத்தை வேரோடுபோக்கி எம்துன்பத்தை நீக்கியருள்வாய்' என்று (நாங்கள்) வேண்டிக்கொள்ள,எம்மீதுள்ள கருணையினாலே (உனக்கு) ஏற்காத இந்தவுருவங்களைமேற்கொண்டு காக்குந்தொழிலைக் கைக்கொண்ட (சூரியவமிசத்து)மன்னவரின் குடியிலேபிறந்து போந்தவனே! (தீயோர்பலர் இங்குப்பிறந்திட்டதனால்) தருமதேவதைக்குநேர்ந்துள்ள பாரத்தைப் போக்கும்பொருட்டு மறைந்துநின்றே (யுள்ள உன்) பெரிய மாயத்தை எமக்குங் காட்டக்கடவாயோ? (எ - று.)

திருமால் இராமனாதி நான்குவடிவாப்பிறந்தானென்பதுபற்றி 'உருவமிவையெய்தி' என்றதென்னலாம்: இனி, மச்சம் கூர்மம்முதலிய அவதாரங்களைக் கருதியதென்பாருமுளர். "இம்மாஞாலம்பொறைதீர்ப்பான்,...பிறந்த மாயனே" என்ற நம்மாழ்வார்பாசுரம் இச்செய்யுளின்பின்னிரண்டடியில் ஞாபகத்துக்குவருகின்றது. பி-ம்:—[1]இயையாவுருவமிஃதெய்தி,இயையாவுருவமிசையெய்தி. [2]இந்தப்பொறை. [3]நின்ற. [4]மாயை. (௨௬௧௬)

௨௨௫. [1]ஈன்றெம்[2]மிடுக்கண் டுடைத்தளிப்பானிரங்கி யாசரிற்[3]பிறந்தாய்
[4]மூன்று முலகந் துயர்தீர்த்தி யென்னு மாசை முயல்கின்றோம்
என்று [5]மறந்தோ மவனல்லன் மனித னென்றே [6]யிதுமாயம்
போன்ற தில்லை யாளுடையாய் பொய்யும் புகலப் புக்காயோ.

(இ-ள்.) (உன்னாற்)பெறப்பட்டவரான எம்முடைய துன்பத்தைப் போக்கிப் பாதுகாத்தற்காக இரக்கங்கொண்டு அரசரில்லிற்பிறந்தவனே! மூன்றாகிய உலகத்துக்குநேர்ந்துள்ள துயரத்தைத் தீர்ப்பாயென்கின்ற ஆசையினால் (நாங்கள்) முயல்கின்றோம்: (இவ்வாறு) முயன்றும், '(இவன்) அவனல்லன்:

மனிதன்' என்ற (உறுதியான) கருத்தினால் (நின்தெய்வத்தன்மையைச் சில காலத்து)மறந்திட்டோம்:இம்மாயம்போன்றசெயல் (யாதும்)இல்லை:(எம்மை) அடிமையாகவுடையவனே! (எமது அறியாமைக்குஏற்ப நீ) பொய்பேசவும் தொடங்கிவிட்டாயோ? (எ - று.)—தேவர்களின் முன்னிலையிலும் மனிதன் போலவே ஸ்ரீராமன்நடிப்பதனால்,'பொய்யும் புகலப்புக்காயோ' என்கின்றனர் தேவர். பி-ம்: 1ஈன்றாய். 2இடுக்கந்துடைத்தளிப்பாய். 3பிறந்து. 4மூன்றுதல மூர், மூலகத், மூன்றுமூலகைத். 5அறிந்தேம். 6இம். (உசுக௭)

உ௨சு. அண்டம் பலவு மனைத்துயிரு மகத்தும் புறத்து 1முளவாக்கி
உண்டு முமிழ்ந்து மளந்திடந்து முள்ளும் 2புறத்து முளையாகிக்
3கொண்டு சிலம்பி தன்4வாயிற் 5கூர்நூ லியையக் கூடியற்றிப்
பண்டு மின்று 6மமைக்கின்ற படியை 7யொருவாய் பரமேட்டி.

(இ - ள்.) பரமேட்டியே! அண்டம்பலவற்றையும் அனைத்துயிர்களையும் (வயிற்றின்) உள்ளும், புறத்தும் உளவாக்கியும், (இவ்வண்டத்தை) உண்டும் உமிழ்ந்தும் அளந்தும்இடந்தும் உள்ளும்புறத்தும்உளையாகியு மிருந்து, சிலம்பி தன்வாயில் மெல்லியநூலினாலியையக் கூட்டையியற்றி முன்னும் இப்போதும் அமைக்கின்ற நீதியை நீங்காதிருப்பாய்; (எ - று.)

சிலந்திப்பூச்சி தன்ஸ்வரூபத்திற்கு விகாரம் சிறிதுமில்லாமலே நூலை யுண்டாக்கி மீண்டும் தான் உண்டாக்கின நூலையுட்கொள்வதுபோலவே, ஸர்வேசுவரன் தன்ஸ்வரூபத்திற்கு விகாரமில்லாமலே அண்டங்களைப்படைத்து மீண்டும் அவற்றைவிழுங்குவனென்று வேதங்கூறுவதையொட்டி இந்தத்துதி கூறியது. "யதோர்ணநாபிஸ்ஸ்ருஜதேக்ருஹ்ணதேச", "ஊர்ணநாபிர்யதா ஸ்ருஷ்ட்வா-ஸ்வயம்தத்கரஸதேபுந꞉ | ததாஸ்ருஷ்ட்தேமகிலம் - ஸ்வயம்தத் க்ரஸதேஹரி꞉" என்பன காண்க. 'தன்ஸ்வரூபத்திற்கு விகாரமில்லாமலே படைத்தலும் படைத்தவற்றை யுட்கொள்ளுதலும் கூடுமோ?' என்று பரம்பொருளின் ஸ்ருஷ்டி ஸம்ஹாரவிஷயங்களில் தோன்றும் ஐயத்தைப்போக்க இந்தச்சிலம்பி திருஷ்டாந்தம் கூறப்பட்டது; 'ஒருசிலந்திக்கு உண்டான ஸ்வபாவம் ஸர்வசக்திக்குக் கூடாதொழியாதிறே' என்ற தத்வத்ரயத்தையுங் காண்க. பரம்பொருளான எம்பெருமானுக்கு அற்பஜந்துவான சிலந்தியை உவமைகூறியது இழிவுவமையின்பாற்படாதோ?எனின், —பரம்பொருள் தனக்குயாதொருவிகாரமுமின்றிப்படைத்துப் படைத்ததை உட்கொள்ளுதலை விளக்குதற்கு இவ்வுவமை சிறத்தலால் இழிவுவமைக்குற்றத்தின்பாற்படாது ஏற்றதேயாகுமென்க. பி-ம்:—1அளவாகி, உளவாகி. 2புறம்பும். 3கொண்டுஞ். 4வயிற்றின். 5நூலான்மேயக்கூட்டியற்றி. 6அமைகின்ற. 7ஒருவராப். (உசுக௮)

உ௨௭. 1துன்ப விளையாட்டிதுவேயு முன்னைத் துன்பங்2தொடர் பின்மை
இன்ப விளையாட் டாமெனினு 3மறியா தேமுக் கிடருற்றால்
4அன்பு 5விளையு மருள்5விளையு மறிவு 5விளையு 6மவையெல்லாம்
முன்பு பின்பு நடுவில்லாய் 7முடித்தா லன்றி 8முடியாதே.

* 18

(இ - ள்.) இது துன்பத்தைவிளைப்பதுபோன்ற விளையாட்டேயென்று லும், உன்னைத் துன்பந்தொடர்தல் இல்லாமையால் (இதுவும் உனக்கு) இன்பவிளையாட்டேயாம்: என்றாலும் (அதை)யறியாதஎங்கட்கு, (நீ) இடருற்று யென்றால், (உன்பக்கல்) அன்புதோன்றும்: இரக்கமுந்தோன்றும்; உணர்ச்சி தோன்றும்: முன் பின் நடுஇல்லாமல் எப்போதும் இருப்பவனே! அவையெல் லாம் நீ முடித்துவைத்தாலன்றி (எம்மால்) முடித்துவைக்க முடியாது (எ - று.)—பி-ம்:---1துன்பம். 2தொடர்வு. 3அறியாதோருக்கிடருறுமால். 4அன்பின். 5விளைவும். 6அது, இது. 7முடிந்தாலன்றி. 8முடியாதால், அறியா தோருக்கிடருற்றால். (உகூகக)

உஉஅ. வருவாய் போல வாராதாய் வந்தா யென்று மனங்1களிப்ப [ம்
வெருவா திருந்தோ நீயிடையே துன்பம் விளைக்க மெலிகின்றே
கருவா 2யளிக்கும் களைகண்ணே நீயே 3யிதனைக் களையாயேல்
திருவாழ் மார்ப நின்4மாயை யெம்மாற் றீர்க்கத் தீருமோ.

(இ - ள்.) அறியப்பட்டாய்போலநின்று அறிவுக்குவிஷயமாகாதவனே! (எங்கட்காக நீ) அவதரித்தாயென்று மனம்மகிழ அஞ்சாதேயிருந்தோம்: நீ இடையே துன்பம் விளைக்க (அதனால்) மெலிவடைகின்றோம்: கருப்பத்திற் பிறந்தவனாகி (எம்மைப்) பாதுகாக்கின்ற (எமது) புகலிடமே! நீயே இத்துன் பத்தைப் போக்காயாயின், திருவாழ்மார்பனே! உன்மாயை எம்மாலே தீர்க்கத் தீர்ந்துவிடத்தக்கதோ? (எ - று.)

எவரொருவர் கடவுளை முற்றஅறிந்திட்டோமென்று கருதுகின்றனரோ அவரால் அறியப்படாதவனாகவும், எவரொருவர் கடவுள் முற்றஅறியமுடி யாதவனென்று கருதுகின்றாரோ அவரால் அறியப்பட்டவனாகவும் அக்கடவுள் இருப்பானென்ற நூற்கொள்கைபற்றி, 'வருவாய்போல்வாராதாய்' என்றார். "வந்தாய்போலவாராதாய் வாராதாய்போல் வருவானே", "யஸ்யாமதம் தஸ்ய மதம், மதம்யஸ்ய ந வேதஸ:-அவிஜ்ஞாதம் விஜாநதாம், விஜ்ஞாதம் அவிஜாநதாம்" என்பன இங்குக் காணத்தக்கன. பி-ம்:--1களித்து. 2களிக்கும். 3இடரைக்காவாயேல். 4மாயம். (உகூஉ0)

உஉகூ. அம்ப ரீடற் கருளியது மயனார்1மகனுக் 2களித்ததுவும்
எம்பி ரானே யெமக்கின்று 3பயந்தா யென்றே யேமுறுவோம்
வெம்பு துயர நீயுழக்க வெளிகா ணாது மெலிகின்றேம்
தம்பி துணைவா நீயிதனைத் 4தவிர்த்தெம் முணர்வைத் தாராயோ.

(இ - ள்.) அம்பரீஷனுக்கு அருள்புரிந்ததையும் அயனாருடையமகனை உருத்திரமூர்த்திக்குக் கருணைபுரிந்ததையும், எம்பிரானே! எமக்கு இன்று உண்டாக்கினையென்றே பாதுகாவல்நாடுகின்றேம்: மனங்குழைதற்குக்காரண மான துன்பத்தை நீ யடைய, வெளியிடம்தெரியாது மெலிவடைகின்றேம்: தம்பிக்குத் துணைவனே! நீ இத்துயரைத் தவிர்த்து எங்களறிவைத் தாமாட் டாயோ? (எ - று.)—பி-ம்:—1மகனார்க்கு. 2அளித்தன. 3பயந்ததாமென்று, பயந்தாயென்றென்று. 4தவிர்ந்து.

அம்பரீடற்கருளியகதை:—சூரியகுலத்துதித்தஅரசனாகிய அம்பரீஷன் ஏகாதசிவிரதமனுஷ்டித்துத் துவாதசிபாரணை செய்யவிருக்கையில், துருவாச முனிவன் விருந்தினனாகவர,மன்னவன் அவனை வரவேற்க,அவன் நித்தியகரு மாநுஷ்டானஞ்செய்துவருமாறு யமுனைக்குஏக, அரசன் பாரணைக்குஉரிய காலங்கடத்தல்கண்டு பகவானைப்பூசித்த தீர்த்தத்தை யுட்கொண்டனனாக, நித்தியகருமாநுஷ்டானஞ்செய்து மீண்டுவந்த முனிவன் அரசன்செய்கையை யுணர்ந்து சினந்து அவனைத் தொமிசஞ்செய்யக்கருதித் தன்சடைமயிரி லொன்றை மண்ணிலெறிய, அதினின்று பூதமொன்று உண்டாகி அரசனை யெதிர்க்க, மன்னவன் திருமாலைத் தியானிக்க, அப்பரமனருளாற் சக்கராயு தந்தோன்றிப் பூதத்தைக்கொன்று பின் முனிவனைத் துரத்த, முனிவன் திரி மூர்த்திகளிடமும் அடைக்கலம்பெறாமல் மன்னவனையே வேண்ட, அவ்வர சன் சக்கரத்தைத் தொழுதுவேண்டி முனிவனுக்கு யாதொருதுன்பமும் வர வொட்டாது காத்தனனென்பது.

அரனுக்கு அளித்த கதை:—பஸ்மாசுரனென்பவன் சிவபெரு மானை நோக்கிக் கடுந்தவம்புரிந்து தான் எவர்தலைமீது கைவைத்தாலும் அவர் உயிரிழந்து சாம்பராய்ப்போகும்படி வரம்பெற்றுத்தான் பெற்றவரத்தைப் பரி சோதிப்பதற்காகச் சிவபெருமான்முடிமீது கைவைக்கத் தொடங்கவே, அப்பெருமான் அஞ்சிஉருக்கரந்தனனாக, திருமால் அவன்முன்னே பெண் ணுருவாய்த்தோன்றவும் அசுரன் அப்பெண்ணையணையவர,அப்பெண்'நீராடிச் சுத்தனாகவருக' என்ன, அசுரன் நீரில்மூழ்கித் தன்தலையை துவட்டுதற்காகத் தன்சிரசிற் கைவைக்கவே, தானேஉயிரிழந்துசாம்பராயினனாக, அதனாற் சிவபிரான் அச்சம்நீங்கப்பெற்றனனென்பது. கையிலொட்டிய பிரமகபா லத்தைப்போக்கியது முதலியனவும் கொள்ளலாம். (உசுஉக)

உ௱௦.—தேவருந் துயருழக்குமாறு ஸ்ரீராமன் அறிவுள்ளொடுங்கிய செய்தியைத் தூதர் இராவணனுக்குச் சொல்லச்செல்லல்.

என்ப பலவு மெடுத்தியம்பி யிமையா ரோரு மிட[1]ருழந்தார்
அன்பு மிகுதி யாலைய [2]னாவி யுள்ளே யடங்கினான்
துன்ப மனிதர் கருமமே [3]புணர [4]முன்பு துணிந்தமையாற்
புன்க ணிருதர் பெருந்தூதர் போனா ரரக்க னிடம்[5]புக்கார்.

(இ - ள்.) என்பவை பலவற்றையும் எடுத்துச்சொல்லித் தேவர்களும் துயர்கொண்டு வருந்தினார்: துன்பத்தையனுபவிக்கின்ற மனிதருடைய செய லை(தன்னிடத்துச்)சேர(த் திருவவதரித்தற்கு)முன்னமே சங்கற்பித்ததனால் (தம்பியினிடத்துள்ள)அன்புமிகுதிகாரணமாக ஸ்ரீராமன் ஆவி உள்ளேயடங் கப்பெற்றான்; இழிதகைமையுள்ள அரக்கரின் பெருந்தூதர் (அச்செய்தியைத் தெரிவிக்கப்போய்) இராவணனிடத்திற் சேர்ந்தார்; (எ - று.)—பி - ம்:—
[1]உழந்தே. [2]அறிவும். [3]புரிய. [4]முன்னே. [5]புகுந்தார். (உசுஉஉ)

உ௱க.—இராவணனிடம் தூதர் ஸ்ரீராமன்செய்தியைத் தெரிவித்தல்.

என்வந் ததுநீ ரென்றரக்கர்க் கிறைவ னியம்ப வெறிசெருவில்
நின்[1]மைந் தன்றன் னெடுஞ்சரத்தாற் றுணைவ ரெல்லா நிலஞ்[2]சேரப்

பின்வந் தவனு [3]முயிரிழந்த பிழையை நோக்கிப் பெருந்துயரால்
முன்வந் தவனு [4]முடிந்தானுன் [5]பகைபோய் முடிந்ததெனமொழிந்தார்.

(இ - ள்.) அரக்கர்தலைவனான இராவணன் 'நீர் வந்தது என்னகாரணம் பற்றி?' என்று (அத்தூதரை)வினவ, (அவர்), 'மோதுகின்ற போரில் உன் மைந்தனான இந்திரசித்தின் நெடிய அம்பினால் துணைவரெல்லாம் உயிரொடுங்கி நிலத்தில்வீழ்ந்துகிடக்க, (அத்துணைவருடனே தன்) பின்பிறந்தவனும் உயிரிழந்ததன்பச்செயலைக்கண்டு மிக்கதுயரத்தினால் மூத்தவனான இராமனும் உயிர்முடிந்தான்: (ஆகவே), உன்பகை முடிந்துபோய்விட்டது: (இனி, உனக்குப்பகையில்லை)' என்று கூறினார்கள்; (எ-று.)—பி-ம்:---1மைந்தனது. 2சேர்ந்தார். 3முன்முடிந்தபிழை...பின்னவற்காய். 4பின்முடிந்தான். 5பகையும். ()

பிரமாத்திரப்படலம் முற்றிற்று.

## ௨௨ - ஆவது சீதைகளங்காண்படலம்

பிரமாஸ்திரத்தால் உயிரற்றுக்கிடக்கின்ற இலட்சுமணனையும் இலட்சுமணனையிழந்தோமென்ற துயரத்தின் மிகுதியால் மூச்சற்றுக்கிடக்கின்ற ஸ்ரீராமனையும் சீதாபிராட்டியார் போர்க்களத்திலே கண்டதைக் கூறும் படலமென்பது, பொருள். களங்காட்டுபடலம் என்று சிலபிரதிகளிலும், பிராட்டிகளங்காண்படலம் என்று சிலபிரதிகளிலும், சானகிகளங்காண்படலம் என்று சிலபிரதிகளிலும் இப்படலத்துக்குப் பெயர் காணப்படுகின்றது.

இந்திரசித்தின் பிரமாஸ்திரத்தால், வானரர்களும் இலட்சுமணனும் இலட்சுமணனையிழந்த துயரால் ஸ்ரீராமனும் உயிரொடுங்கி வீழ்ந்திட்டதை ஒற்றர்மூலமாக வுணர்ந்த இராவணன் மிகமகிழ்ந்து, சீதை அவ்வுண்மையை நம்புதற்பொருட்டு அவளைப் புஷ்பகவிமானத்திலேற்றி யுத்தகளத்தை அவட்குக் காட்டுமாறு கட்டளையிட, அரக்கியர் அங்ஙனமே செய்ய, பிராட்டி தன்பிராணநாயகனான ஸ்ரீராமனும் இளையபெருமாளும் உயிரொடுங்கிப் போர்க்களத்தில் வீழ்ந்திருப்பதுகண்டு பெருந்துயர்கொண்டு புலம்பித் தன்னுயிரை விட்டிடுவதென்று எண்ணுகையில், விபீஷணனது புதல்வியான திரிசடையென்பவள் பலவகையடையாளங்களால் இராமலக்ஷ்மணர் உயிரோடிருக்கின்றாரென்பதை நிரூபித்துச் சீதையை அந்தச்செயலினின்று மீட்ட செய்தி இந்தப்படலத்திற் கூறப்படுகின்றது.

க.—மாற்றார்செய்தியை ஊரெங்கும் பறையறைந்துதெரிவிக்குமாறு இராவணன் கட்டளையிடுதல்.

பொய்யார் தூத ரென்பதனாற் பொங்கி யெழுந்த [1]வுவகையனாய்
மெய்யார் [2]நிதியம் பெருவெறுக்கை [3]வெறுக்க வீசி விளைந்தபடி
கையார் வரைமேன் [4]முரசேற்றிச் [5]சாற்றி நகரங் களிசிறப்ப [ன்.
நெய்யா ராடல்[6]கொள் கென்று [7]நிகழ்த்து கென்றா னெறியில்லா

(இ - ள்.) நெறியில்லானாகிய இராவணன்,—தூதர்பொய்கூறுரென்பதனால் (தன்பகைநீங்கிற்றென்றகாரணம்பற்றிஉள்ளடங்காமல்)மேலேபொங்கித்தோன்றியமகிழ்ச்சியையுடையவனாகி, (தன்னிடத்து) நிலையாகப்பொருந்திய தொகுதியாயுள்ள செல்வத்தை(ப் பெற்றுக்கொள்பவர்)வெறுப்படையும்படி [மிகவும் அதிகமாக] வாரியிறைத்து, 'நடந்தசெய்தியை [பகைவர் யாவரும் பட்டாரென்பதை]த் துதிக்கையையுடைய மலைபோன்ற யானையின் மேல் முரசத்தையேற்றி அடித்துத் தெரிவித்து, இலங்காநகரத்திலுள்ள யாவரும் மகிழ்ச்சிமிக, நெய்யிட்டு முழுகுதலைச்செய்க என்று சொல்லுங்கள்' என்று (பறைசாற்றுபவர்க்குக்) கட்டளையிட்டான்; (எ - று.)

இந்திரசித்தின் பிரமாஸ்திரத்தால் வானரவீரர்களும் இலக்குமணனும் இறந்ததையும் அதுகண்ட பெருந்துயரால் ஸ்ரீராமனும் உயிரொடுங்கி வீழ்ந்திட்டதையும் ஒற்றர்கூற, இராவணன், அந்தப்பேச்சை உண்மையென்று நம்பி அடங்காப்பெருமகிழ்ச்சிகொண்டு, அந்தமகிழ்மொழிகூறிய தூதர்க்குப் பெருந்திரவியத்தை வாரியிறைத்து, நடந்த செய்தியை ஊர்முழுதும் பறையறைந்து தெரிவித்து ஊரார்யாவரும் சந்தோஷமாக மங்களஸ்நாநம் செய்யும்படி கட்டளையிட்டனனென்க. செல்வம் நிலையில்லாததாயினும், இராவணன், தனக்குக்கிடைத்துள்ள பெருஞ்செல்வம் என்றும்அழியாது நிலைநிற்குமென்ற கருத்துக்கொண்ட அவிவேகி யாதலால், அவன்நினைவுபற்றி 'மெய்யார் நிதியம் பெருவெறுக்கை' என்றார். இனி,இராவணன் குபேரனைவென்று அவனது சங்கநிதி பதுமநிதி முதலியவற்றைத் தன்வசத்தனவாக்கிக் கொண்டுள்ளதனால், சங்கம் பதுமம் முதலியவற்றின் வடிவங்கொண்டுள்ள அந்த நிதிகளைக் குறிக்குமாறு 'மெய்யார்நிதியம்' என்றாருமாம்; மெய் - வடிவம். நிதியம் - குவியலான செல்வம். 'மகன் தோன்றினான், பகைவன் பட்டான்' என்று பெருமகிழ்ச்சிக்காரணங்கள் இரண்டென்றும், அரசனுக்கு அவை நிகழும்பொழுது அவனதுகுடிகள் அந்தமகிழ்ச்சியைத் தாமுங் கொண்டாடுவரென்றும் அறிக. பிறர்தாரத்தைக் கவர்ந்த பெரும்பாவியாதலால், இராவணனை, 'நெறியில்லான்' என்றது. முரசு - வெற்றிமுரசு. பி-ம்:—1உவகையினான், உவகையினாய். 2நிதியின். 3விளைந்தபடியேமிகவீந்து. 4முரசியற்றி. 5நகரமெங்குங்களிகூர. 6ஆட்டென்று,ஆகென்று.7நிகழ்த்துகின்றான்,நிகழ்த்துமென்றான், நிகழ்ந்தானெஞ்சம். (உசுஉ)

உ.—இறந்தஅரக்கருடலைக் கடலிலிடுமாறு மருத்தனுக்குப் பணிக்க, அவன் அவ்வாறேசெய்தல்.

அந்த நெறியை யவர்செய்ய 1வரக்கன் 2மருத்தன் றனைக்கூவி
முந்த 3நீபோ யரக்கருடல் முழுதுங் கடலில் 4முடுக்கிடுநின்
சிந்தை யொழியப் பிற5ரறியிற் சிரமும் வாமுஞ் சிந்துவனென்று
உந்த வவன்போ யரக்கருடல் 6முழுதுங் கடலி7னுள்ளிட்டான்.

(இ - ள்.) (இராவணனிட்ட) அந்தக்கட்டளையை அந்தப்பணியாளர் செய்ய,—இராவணன் மருத்தனை வரவழைத்து 'முற்பட்டு நீ போய் அரக்கருடைய உடல்முழுவதையும் கடலில் விரைவாகச்செலுத்திவிடு; (நீ இவ்

வாறுசெய்வது) உன்மனத்துக்குத் தவிரப் பிறர்அறிந்தால் (உன்)சிரத்தையும் (உனக்கு யான் கொடுத்துள்ள) மேம்பாட்டையும் வாங்கிவிடுவேன்' என்று சொல்லியனுப்ப, அந்தமருத்தனும் போய் அரக்கருடைய உடல்எல்லாவற்றையும் கடலினுள்ளேயிட்டான்; (எ - று.)

சீதையைவிமானத்திலேற்றிப் போர்க்களத்துக்கு இட்டுக்கொண்டுவந்து அங்குஉயிரின்றி வீழ்ந்துகிடக்கின்ற இராமலட்சுமணரைக் காட்டுமாறுஇராவணன் ஏற்பாடுசெய்யப்போவதனால், அரக்கரில் இறந்தவர் எவருமில்லையென்று அந்தச்சீதை கருதவேண்டு மென்ற கருத்தினால், அரக்கருடலை யெல்லாம் கடலுக்குள் இடுமாறு கட்டளையிட்டானென்க. பி-ம்:-1அரசன். 2மருத்தோன். 3நீயே. 4முடுக்கிவை. 5அறிவிற்செலவாமுந்தன்செயல்செய்கென்று. 6அடங்கக். 7உதிர்ப்பித்தான். (உசுஉ௫)

**ங.—இராவணன்கட்டளைப்படி அரக்கியர் சீதையைவிமானத்திலேற்றிப் போர்க்களத்திற்குக் கொண்டுபோதல்.**

தெய்வ 1விமானத் திடையேற்றி மனித்தர்க் குற்ற செயலெல்லாந்
தையல் 2காணக் காட்டுமின்கள் கண்டா லன்றித் 3தன்னுள்ளத்து
ஐய நீங்கா 4தென்றுரைக்க வரக்கர் மகளி 5ரிரைத்தீண்டி
6உய்யுமுணர்வு 7நீத்தாளை நெடும்போர்க் 8களத்தின்மிசை 9யுய்த்தார்.

(இ - ள்.) (இராவணன் இராக்கதமகளிரை நோக்கி), '(சீதையைத்)தெய்வத்தன்மையுள்ள விமானத்தின்மேலேற்றி, மனிதர்களாகிய ராமலக்ஷ்மணர்கட்கு நேர்ந்துள்ள சம்பவங்களையெல்லாம் [இராமலட்சுமணர் உயிர்நீங்கிக்கிடத்தலை] சீதை பார்க்கும்படி காட்டுமின்கள்; (அவள் நேரிற்) பார்த்தாலல்லாமல், (நிகழ்ந்தசெயதியை நாம் சொல்லக் கேட்பதனால்), தன் மனத்திலுள்ள சந்தேகம் நீங்கப்பெறாள்' என்று உரைப்ப, இராக்கதப்பெண்கள்,—(அதுகேட்ட பெருமகிழ்ச்சியால்) பேராரவாரஞ்செய்து நெருங்கி '(இனி நாம்) பிழைத்திருப்போம்' என்கிற எண்ணம் நீங்கிய அந்தச்சீதையை(விமானத்திலே ஏற்றிக்கொண்டுபோய்) பெரிய (அந்த)யுத்தகளத்தின் மேலே சேர்த்தார்கள்; (எ - று.)

'சீதையைப் போர்க்களத்திற்கு இட்டுக்கொண்டுபோய்க் காட்டினால் அங்கே உயிர்நீங்கி விழுந்துகிடக்கிற ராமலக்ஷ்மணர்களை நேரிற்கண்டால் அப்போதாவது இந்தச்சீதை தன்சந்தேகந்தீர்ந்து நமக்கு வசப்படலாம்' என்ற கருத்தோடு, இராவணன், சீதையை விமானத்திலிட்டுக் கொண்டுபோய் மேலிலிருந்தபடியே போர்க்களத்தைக்காட்டும்படி ஏவ, ஏவலாளிகளான இராக்கதப்பெண்களும் அங்ஙனமே செய்தன ரென்பதாம். இராமலக்ஷ்மணர் பகைவென்று தன்னை மீட்பாரென்ற உறுதியான நம்பிக்கையோடு அரிதின் உயிர்தாங்கியிருந்த சீதை, இராமலட்சுமணர்க்கு நேர்ந்த துர்க்கதியைத் தான் கேட்டதனால், உய்யுமுணர்வு தீர்ந்தன ளென்க. அலக்ஷியந்தோன்ற 'மனித்தர்' என்றான். இங்கே விமானமென்பது-புஷ்பக விமானத்தை; இது, பிரமதேவனாற் குபேரனுக்குக் கொடுக்கப்பட்டது: எத்தனைபேர் தன்மீது ஏறினாலும் அத்தனைபேருக்கும் வளர்ந்து இடங்கொடுப்பது; தன்

மீது ஏறியவர் நினைத்தவிடத்தில் அவர்நினைத்தபடி செல்லவல்லது; திக்கு விசயகாலத்தில் இராவணன் குபேரனை வென்று இதனைக் கைப்பற்றின னென்க.ஒருபிரதியில் இந்தப்பாடலோடு பிரமாஸ்திரப்படலம்முடிகின்றது.
பி-ம்:—[1]மானத்தேர், மானத்திடை.[2]அறியக்.[3]தனதுள்ளத்து.[4]எனவுரைப்ப, என்றுரைப்ப.[5]இரைத்தார்ப்ப,இரைத்தார்த்தே,தங்கணவர்.[6]உய்வுமுணர்வும். [7]தீர்ந்தானை, உற்றானை. [8]களத்தினிடை. [9]உயர்ந்தார். (உசுஉசு)

ச.—சீதையின் பெருந்துயரம்.

கண்டாள் கண்ணுற் கணவனுரு வன்றி [1]யொன்றுங் காணுதாள்
உண்டாள் விடத்தை யென[2]வுடலு முணர்வு முயிர்ப்பு முடனோய்ந்தா
தண்டா மரைப்பூ நெருப்புற்ற தன்மை [3]யுற்று [4]டரியாதாள் [ள்
பெண்டா னுற்ற பெரும்[5]பீழை யுலகுக் கெல்லாம் பெரி[6]தன்றோ.

(இ - ள்.) (தனது) கணவனான இராமபிரானது உருவத்தையே யல்லாமல் வேறு எதையுங் கண்ணெடுத்துப்பாராத [மகாபதிவிரதையாகிய] சீதை,—(அந்தப்போர்க்களத்தில் தனது கணவன் உயிர்நீங்கி விழுந்து கிடத்தலைத் தன்) கண்ணினுற் பிரதியட்சமாகப் பார்த்துச் சகிக்கமாட்டாதவளாய், விஷத்தையுட்கொண்டவள்போல உடம்பும் அறிவும் மூச்சும் ஒருசேரவோய்ந்து, குளிர்ந்த தாமரைமலர் நெருப்பிற் பட்ட தன்மையை யடைந்தாள் [நெருப்பிலே விழுந்த தாமரைப்பூப்போல வாடினாள்]; (இவ்வாறு) ஒரு பெண் அடைந்த பெருந்துன்பம், உலகத்துக்கு மிகப்பெரிதாகத் தோன்றுமன்றோ? (எ - று.)

அப்போது சீதாபிராட்டி போர்க்களத்தில் ஸ்ரீராமன் உயிரொடுங்கி விழுந்துகிடப்பதைக் கண்ணுற் கண்டு,அதனாலுண்டான பெருந்துன்பத்தால் விஷமுண்டவள்போன்று தனதுஉடலும் அறிவும் சுவாசமும் சோர்ந்துவிட, நெருப்பிற்பட்ட தாமரைமலர்போல வாடி அந்தத்துயரத்தைச் சகிக்கமாட்டாதவளாகி நின்றாள். இவ்வாறு உத்தமியான ஒருத்தி பெருந்துன்பத்தை யடைவது, உலகத்தார்க்கே நினைக்கநினைக்கப் பெருந்துயரை யுண்டாக்குமல்லவோ? என்பதாம். 'பெண்ணென்றாற் பேயும் இரங்கும்' என்ற பழமொழி இங்குக் கருதத்தக்கது. ஈற்றடிக்கு - பெண்ணாகிய சீதாபிராட்டியார் அடைந்த பெருந்துயரமானது, உலகத்துத் தோன்றும் துயரமெல்லாவற்றைக் காட்டிலும் பெரிதாமல்லவோ? என்று பொருள் கூறுவாருமுளர்.
பி-ம்:-[1]என்றுங். [2]உயிர்த்தாளுடலுமுணர்வும். [3]ஒத்தாள். [4]தரியாத. [5]பீடை. [6]அன்றே. (உசுஉஎ)

ரு.—இதுவும், அடுத்தசெய்யுளும் - சீதாபிராட்டியின் துயரத்தால் மற்றையோர் துயருறுவதைக் கூறும்.

மங்கை [1]யழுதாள் வானாட்டு மயில்க ளழுதார் மழவிடையோன்
பங்கி னுறையுங் குயிலழுதாள் [2]பதுமத் திருந்த மாதழுதாள்
கங்கை யழுதா ளுமடந்தை யழுதாள் கமலத் தடங்கண்ணன்
தங்கை யழுதா ளிரங்காத வரக்கி மாருந் [3]தளர்ந்தழுதார்.

(இ - ள்.) (பின்பு), சீதாபிராட்டி புலம்பினாள்; (அதனைக் கண்டதனால்), தேவலோகத்திலுள்ளவராய் மயிலைப்போன்ற சாயலுள்ளவரான தேவதா

ஸ்திரீகள் புலம்பினார்கள்; (என்றும்) இளமையாய்த் தோன்றுவதான இடபத்தைவாகனமாகக்கொண்ட சிவபெருமானது (வாம) பாகத்தில்(எப்போதும்) வசிப்பவளும் (குரலினாற்) குயில்போன்றவளுமான பார்வதி, அழுதாள்; செந்தாமரைமலர்மேல் வீற்றிருப்பவளான ஸ்ரீமஹாலக்ஷ்மி, அழுதாள்; (சிவனது ஜடாமகுடத்தி லிருக்கும்) கங்காதேவியும், அழுதாள்; (பிரமனது) நாவினில் வசிக்கும்பெண்ணாகிய ஸரஸ்வதீதேவியும், அழுதாள்; செந்தாமரைமலர்போன்றபெரியகண்களை யுடையவனான திருமாலினது உடன்பிறந்தவளான துர்க்கை,அழுதாள்; (பலசொல்லிஎன்?)(எதற்கும்)இரக்கங்கொள்ளுதலில்லாத[கல்நெஞ்சரா யிருக்கின்ற] ராக்ஷஸஸ்திரீகள்தாமும், (மனஞ்) சோர்ந்து புலம்பினார்கள்; (எ - று.)

'பெண்தானுற்றபீழை உலகுக்கெல்லாம்பெரிதன்றோ' என்று கீழ்க்கவியிற் கூறியதை,இனி,இரண்டுகவிகளால் விவரித்துக் கூறுகின்றன ரென்னலாம். கணவன் உயிரொடுங்கிக் கிடப்பதுகண்டு மனம்பொறாமற் சீதாபிராட்டி புலம்பவே மேலுலகத்துள்ள பெருஞ்சிறப்பினரான தெய்வமங்கையரேயன்றி எதற்கும் மனமிளகாத ராக்ஷஸஸ்திரீகளும் மனமிளகிப் புலம்பலானாரென்பதாம். ஒருபெண்ணின் துயர் அவ்வினத்தைச் சார்ந்தவர்க்குத் துயரத்தை மிகுதியாக விளைக்குமென்பது பற்றிப் பெண்பாலாரையே முற்பட இச்செய்யுளிற் கூறினர்.

கங்கையென்றது - கங்காநதியின் பெண்தெய்வத்தை. பார்வதியினது அம்சவிசேஷமான துர்க்கை விஷ்ணு கிருஷ்ணனாய் வசுதேவன்மனைவியான தேவகியின் வயிற்றில் அவதரித்தவுடனே அப்பெருமானது விருப்பத்தின்படி தான் நந்தகோபன்மனைவியான யசோதையின் வயிற்றில் ஒரு பெண் குழந்தையாய்ப் பிறந்ததனாலும், கண்ணன் கட்டளைப்படி வசுதேவன் எவருமறியாமல் கண்ணனாகிய ஆண்குழந்தையை யசோதையினிடத்திற் கொண்டுபோய்விட்டு அங்கிருந்த துர்க்கையாகிய பெண்குழந்தையை எடுத்துக்கொண்டு வந்து அக்குழந்தையையே தமக்குப் பிறந்ததாகச் சொல்லிக் கம்சனுக்குக்காட்டியதனாலும், இப்படி துர்க்கைக்குத் தந்தையான நந்தகோபன் துர்க்கையின் முன்பிறந்தவனான கண்ணபிரானை வளர்த்த தந்தை யாகுதலாலும், துர்க்கை 'கமலத்தடங்கண்ணன் தங்கை' எனப்பட்டாள். பி-ம்:—1அழலும். 2பதுமமலர்மேன்மாதழுதாள், மலர்மேலிருந்தாள்பரிந்தழுதாள். 3தாம். (உகூஉஅ)

கூ. பொன்றாழ் குழையா டனையீன்ற பூமா மடந்தை புரிந்தழுதாள்
குன்றா மறையுந் தருமமுமெய் [1]குழைந்து குழைந்து [2]தளர்ந்தழுத
பின்றா துடற்றும் பெரும்பாவ மழுத பின்னென் பிறர்செய்கை
நின்றார் நின்ற படியழுதார் நினைப்பு முயிர்ப்பு [3]நீத்திட்டாள்.

(இ - ள்.) பொன்னாற்செய்யப்பெற்றுத் தொங்குந்தன்மையுள்ள குழையென்னுங்காதணியை (முன்பு) அணிந்தவளான சீதாபிராட்டியைப் பெற்ற சிறப்புள்ள பூமிதேவி (மனத்திற்) பேரிரக்கங்கொண்டு புலம்பினாள்; குறையாத[மிகப்பலவாகவுள்ள]வேதங்களும் தருமதேவதையும்(உடல்)மிகவும்வாடிப் போய் மனஞ்சோர்ந்து அழுதன; பின்வாங்காமல் (தனக்குஉரியாரை) வருத்

துந் தன்மையுள்ள பாவமும், (சீதாபிராட்டிவிஷயத்தில் இரக்கங்கொண்டு) அழுதது: அயலார்வருந்தின செய்கையைக்குறித்து இனி (வேறு சொல்ல வேண்டுவது) யாது? ஆங்காங்கிருந்தவர், (செய்யவேண்டுவது இன்னதென்று தோன்றாமல் திக்பிரமைகொண்டு அசையாது) நின்றபடியே புலம்பலானார்கள்; (அப்போது சீதாபிராட்டி, மிக்க துயரத்தால்), பிரஜ்ஞையையும் மூச்சு விடுதலையும் நீங்கினாள்; (எ - று.)

சீதாபிராட்டியைப் பெற்றவளாதலால், பூமிதேவியை இங்கே தனியாக முதலில் எடுத்துக்கூறினார். தருமத்துக்கு மாறான செயல் நிகழ்கையில், அத் தருமத்திற்குஉரிய தேவதை வருந்துதல் இயல்பே. தன்னைச்செய்தாரை எப்போதும் வருத்துவதையே தொழிலாகக்கொண்டபாவமும் இந்தச்சீதாபிராட்டியின் துயரத்தைக் கண்டு தான் மனம்பொறாமல் வருந்திற்றென்றால், மற்றையோர் யாவரும் வருந்தினரென்பது கூறவேண்டுமோ? என்று கைமுதிக நியாயமென்னும் தண்டாபூபிகாநியாயம் தோன்றக் கூறினார். இவ்வாறு யாவரும் அழும்போது சீதாபிராட்டி துயரமிகுதியால் பிரஜ்ஞைதப்பிமூச்சுக்குறைய மூர்ச்சித்தனளென்க. பி-ம்:---1குலேந்துகுலேந்து. 2விழுந்தழுத. 3நீக்கினார், நீங்கினார். (உசுஉக)

எ.—அரக்கியர் சைத்தியோபசாரஞ்செய்ய,
சீதை மூர்ச்சைதெளிந்து மிகவும் வருந்துதல்.

நினைப்பு முயிர்ப்பு நீத்தாளை நீராற் றெளித்து நெடும்பொழுதின்,
இனத்தி னரக்கர் மடவார்க ளெடுத்தா ருயிர்வந் தேங்கினாள், கனத்தி
னிறத்தான் [1]றனைப்பெயர்த்துங் கண்டாள் கயலைக் கமலத்தாற், சினத்தி
[2]னலைப்பா ளெனக்கண்ணைச் [3]சிதையக் கையான் மோதினாள்.

(இ - ள்.) கூட்டமாகவுள்ள ராக்ஷஸர்குலத்தில் தோன்றின ஸ்திரீகள்,— பிரஜ்ஞையும் சுவாசமும்இல்லாமல் (மூர்ச்சித்துக் கீழேவீழ்ந்து)கிடந்தஅந்தச் சீதாபிராட்டியை நீரைக்கொண்டு மேலேதெளித்து (த்தமது கைகளினாற் பிடித்துவாரி) எடுத்தார்கள்; (சீதாபிராட்டி), வெகுநேரங் கழிந்தபின்பு (ஒடுங்கியிருந்த) பிராணன் (செவ்வனே) வரப்பெற்று அழுது,—காளமேகம்போற் கறுத்ததிருநிறமுடைய ஸ்ரீராமனை மறுபடியும்பார்த்து, கோபத்தினாற் கயல்மீனைத் தாமரையைக்கொண்டு மோதுபவள்போல(அப்பிரானுக்கு நேர்ந்துள்ள அந்தநிலையைக்கண்ட தனது) கண்களை, அடியுண்ணும்படி (தன் கையால்) மோதினாள்; (எ - று.)

மூர்ச்சித்து வீழ்ந்திட்ட சீதாபிராட்டி ராக்ஷஸஸ்திரீகள் நீர்கொண்டு தெளித்துச் செய்த சைத்யோபசாரத்தால் மூர்ச்சைதெளிந்து பெருந்துயர் கொண்டு தன்கணவனுடலை மீண்டும் கண்ணுற்கண்டு, அந்தக்கொடுமையைக் காணும்படி நேர்ந்த தன் கண்ணின்மீதுள்ள சினத்தினால் அந்தக்கண்ணைத் தனது கைகளால் மோதிக்கொண்டன ளென்பதாம். உவமையணி. சீதைக்கு இராமனைப் பற்றியுள்ள அன்பைக்கெடுத்து இராவணன்மீது அதனை யுண்டாக்கவேணு மென்ற கருத்தோடு இருப்பவராதலால், அரக்கியர், சீதை

மூர்ச்சையடைந்த காலத்தில் அவட்குச் சைத்தியோபசாரஞ்செய்து ப்ரஜ்ஞை யுண்டாகும்படி செய்தன ரென்க. நீரால்தெளித்து என்பதற்கு - நீரின்மூல மாகத் தெளிவுண்டாகச்செய்து என்று உரைப்பாருமுளர். உயிர் - உயிர்ப்பு மாம். பி-ம்:—[1]பின்னும். [2]அலைத்தாலெனக் கண்ணை, அலைத்தாளிலையகணே. [3]சீதை. சினத்தாற்சிதையாவிலைவயிற்றைச் சிதையக்கையான்மோதினுள். என்று ஒருபிரதியில் நான்காமடி காண்கின்றது. (உகூ௬0)

அ.—இதுவும் அடுத்த கவியும் - சீதையின் பெருந்துயரநிலையைக் கூறும்.

அடித்தாண் முலைமேல் வயிறலைத்தா ளழுதா டொழுதா ளனல்[1]வீழ்ந்த, கொடித்தா னென்ன மெய்சுருண்டாள் கொதித்தாள் பதைத்தாள் குலைவுற்ருள், [2]துடித்தாண் மின்போ லுயிர்கரப்பச் சோர்ந்தாள் [3]சுழன்ரு டுள்ளினுள், குடித்தா [4]டுயரை யுயிரோடுங் குழைத்தா [5]ளுழைத்தாள் குயிலன்னுள்.

(இ - ள்.) குயில்போல் (இனிய) குரலையுடையவளான சீதை, முலையின்மேல் அடித்துக்கொண்டாள்; வயிற்றிலும் அறைந்துகொண்டாள்; அழுதாள்; தொழுதாள்; நெருப்பில்வீழ்ந்த கொடி யென்னும்படி உடல்சுருண்டு போனுள்; (துயரத்தால் மனம்)வெதும்பினுள்; பதைத்தாள்; நடுநடுங்கினுள்; துடித்தாள்; மூச்சுக்குறைய மின்னல்போலத் துவண்டாள்; சுழன்ருள்; துள்ளினுள்: துயரத்தை யுட்கொண்டவளாய் உயிரோடும்ஒன்ருக்கினுள்; (இவ்வாறு) மிகவும்வருந்தினுள்; (எ - று.)

இச்செய்யுளிற்கூறிய செயலெல்லாம், துன்பத்தினுல் நேர்ந்தவை. உயிரைக்குடித்தாள் - பருகதற்குரியதல்லாப்பொருள் பருகுவதுபோலக் கூறப்பட்டது. பி-ம்:—[1]விழித்தாள். [2]நடித்தாள். [3]உயிர்வந்தேங்கினுள். [4]உயிரையுயிரோடுங்குழைந்தாள், உயிரையுரையோடுங்குழைந்தாள். [5]உழைத்த, உலைந்தாள், உளைந்தாள். (உகூ௬க)

கூ. விழுந்தாள் புரண்டா ளுடன்முழுதும் [1]வியர்த்தா ளயர்த்தாள் [2]வெதும்பினுள், எழுந்தா ளிருந்தாண் [3]மலர்க்கரத்தை நெரித்தாள் சிரித்தா ளேங்கினுள், கொழுந்தா வென்ரு ளயோத்தியர்தங் கோவே யென்ரு [4]ளெவ்வுலகுந், தொழுந்தா ளரசே யோவென்ருள் சோர்ந்தா ளரற்றத் தொடங்கினுள்.

(இ - ள்.) (பின்னும் சீதை),—(விமானத்தில்) விழுந்து, புரண்டாள்; உடம்புமுழுதும் வியர்வைகொண்டாள்; (உடம்பு)சோர்ந்தாள்; மனங்கொதித்தாள்; எழுந்து உட்கார்ந்துகொண்டு, (தன்) தாமரைமலர்போன்றகையை (மடக்கிக்கொண்டு)நெரித்தாள்:(இன்னதென்று தோன்ருமல்)சிரிப்புக்கொண்டாள்; புலம்பினுள்; கொழுந்தனே!என்று உரக்கக்கூவினுள்; அயோத்தியிலுள்ளார்க்குத்தலைவனே! என்ருள்; எல்லாவுலகத்தவரும் வீழ்ந்துவணங்கத்தக்க திருவடிகளையுடைய அரசனே!என்றும் கூவினுள்; (மனம்) தளர்ந்தாள்; (முடிவாக), வாய்விட்டுப் புலம்பத் தொடங்கினுள்; (எ-று.)—புலம்புவதை, மேல் பன்னிரண்டுகவிகளிற் காண்க.

பெருந்துயரத்தால் விழுதல் முதலிய செயல்கள் சீதாபிராட்டியினிடம் நிகழ்ந்தன வென்க. பிறர் இகழும்படி தன்னிலை மிகவும் மாறுகிக் கேடு விளைந்ததுபற்றி, சீதாபிராட்டி நகைக்கலாயினள்: இது, எள்ளல்பற்றிவந்த நகை, கொழுந்தன் - கணவனுடன் பிறந்தவன். இலக்குமணனும் ஸ்ரீராமனும் என்ற இருவரும் யுத்தகளத்தில் வீழ்ந்துகிடத்தலால், இருவரையும் கூவிச் சீதை கதறலாயினள். பி-ம்:-1வெயர்த்தாளயர்த்தாள், வியர்த்தாளுயிர்த்தாள் 2வெய்துயிர்த்தாள், மேன்மேலும். 3இரு, தளிர்க். 4எழுலகும், மூவுலகும். ()

வேறு.

கO —பதினொருகவிகள்-சீதை அரற்றுவதைத் தெரிவிப்பன.

உறமே வியகா தலுனக் குடையார்
[1]புறமே துயிலா ரொடு[2]பூ ணகிலாய்
மறமே புரிவார் வசமா யினையோ
அறமே கொடியா [3]யிதுவோ வருடான்.

பன்னிரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அறக்கடவுளே! (உன்னிடத்தில்) மிகுதியாகப் பொருந்திய அன்பையுடையவராய் (உனக்குப்) புறம்பானரிடத்துச் சிறிது சம்பந்தமும் வைத்துக்கொள்ளாதவரான என்கணவனோடு (நட்பைப்) பூணமாட்டாதவனாய், அதருமத்தையே புரிபவரான அரக்கரதுவசத்தில் ஆய்விட்டனையோ? கொடியாய்! (உனது) அருள் இவ்வாறுனதோ? (எ - று.)—பி-ம்:—1புறமே துயிலாரொடு, புறமேதுயில்வாரொடு, புறமேபயிலாரொடு. 2பூண்முலையான், பூண்முலையார். 3இவையோ. (உகூஙந)

கக. முதியா ருணர்வே த[1]மொழிந் தவலாற்
கதியே துயிலார் துயர்கா ணுதியோ
[2]மதியேன் மதியே னுனை[3]வாய் மையிலா
விதியே கொடியாய் விளையா டுதியோ.

(இ - ள்.) சத்தியத்தினிடத்திலே (பக்ஷபாதம்) இல்லாத ஊழ்வினையே! (எல்லாவற்றையும்) அறிந்துசொல்லுகிற வேதம் சொல்லியவழிகளில் (செல்வது) அல்லாமல், (வேறு) எந்தவழியிலும் செல்லாதவராகி (அறிவினாலும் நன்னடக்கையினாலும்) சிறந்தவரான பெரியோர்களுடைய துன்பத்தைக் காணக்கடவையோ? [காணுதல் தகுதியன்று என்றபடி]: உன்னை (நான் ஒருபொருளாக) மதிக்கவேமாட்டேன்; (நீ) கொடுமையுள்ளவனாக இருக்கின்றாய்; (நீ இவ்வாறு செய்து) விளையாடுகின்றாயோ? (எ - று.)

விதியென்பது - இப்பிறவியிலே சத்தியத்திற் பற்றுடையவர்களாய் அதைக் கைவிடாதிருப்பவரையும் பீடித்தலும் சத்தியத்திற் சிறிதும்பற்றில்லாமல் அசத்தியத்திலேயே செல்வாரையும் இன்பத்திற்கு உள்ளாக்குதலும் உடைமையால், 'வாய்மையிலா விதியே' என்று அதனைச் சீதை திட்டுகின்றாள். ராமலக்ஷ்மணர்களின் நாசத்தாற் சத்தியத்திற்பற்றுள்ள பெரியோர்களான ருஷிகட்குத் துன்பம்விளைவதும் அதனால் ராக்ஷஸர்கட்கு மகிழ்ச்சி

விளைவதும் காண்க. நீ ராமலக்ஷ்மணர்களை இறந்தவராகச்செய்தது, எங்கள் மனத்தைச் சோதிக்கச்செய்த விளையாட்டோ? என்பது, 'விளையாடுதியோ' என்பதன் கருத்து; நீ விளையாட்டுவகையாகச்செய்தாயென்றாலும் இந்த உன்செயல் மிகக்கொடியது என்பாள் 'கொடியாய்' என்றாள். முன்இரண்டடிகட்கு- 'பெரியோரும் வேதமும் கூறிய முறைமையில் அல்லாமல் வேறு முறைமையிற் செல்லுதலில்லாதவரான என்னைப் போன்றவரின் துயரத்தைக் காணக்கடவையோ?' என்று பொருளுரைப்பாருமுளர்; 'தருமமுணர்ந்த பெரியோரின் ஒழுக்கமும் வேதமுமே உலகத்தோர் மேற்கொண்டு நடத்தற்குஉரிய பிரமாணங்கள்' என்று நூல்கள் கூறுவது, இங்கு உணரத்தக்கது. பி-ம்:---[1]மொழிந்தகலார். [2]மதியேமதியேயுனை, மதியான்மதியேனுனை, மதியேமதியேனுள. [3]வாய்மையினல். (உசுருச)

கஉ. கொடியே [1]னிவை[2]காண் கிலனென் னுயிர்கோள்
[3]முடியா நமனே [4]முறையோ முறையோ
விடியா [5]விருள்வா யெனைவீ சினையோ
அடியே னுயிரே யரு[6]ணா யகனே.

(இ - ள்.) கொடும்பாவியாகிய யான்,—(ராமலக்ஷ்மணர்கட்கு நேர்ந்த) இந்தநிலைமையைப் பார்த்துச்சகிக்கமாட்டேன்; என்னுடைய உயிரைக் கொள்வதையும் செய்துதீர்க்காத யமனே! (நான் பரிதவிக்குமாறு அவ்விருவருயிரைமாத்திரம் முடித்துவிட்டது (உனக்கு) முறைமையாகுமோ! முறைமையாகுமோ!! என்னுயிர் போன்றவனே! (என்னிடத்துப்) பேரருள்வைத்திருக்கின்றதலைவனே! (ஒருபொழுதும்) விடிதலில்லாத (பெருந்துயராகிய) இருளில் (எப்போதும் நான் இருக்குமாறு) என்னைத் தள்ளிவிட்டாயோ?

முன்னிரண்டடி - ராமலக்ஷ்மணர்களது உயிரைக் கவர்ந்த யமனைக் குறித்துச் சீதை செய்த முறையீடு. பின்னிரண்டடி-இராமபிரான் தன்னைப் பெருந்துயரம் அடையும்படி விட்டிட்டுப் பரலோகஞ் சேர்ந்தது குறித்துச் சீதை புலம்புதல். பரிகாரமில்லாத துன்பமென்பாள் 'விடியாவிருள்' என்றாள். பி-ம்:---[1]உயிர். [2]காணகிலேன். [3]முடியாய். [4]தவமே. [5]இருளாகென. [6]நாயகமே. (உசுருரு)

கங. எண்ணு [1]மெயினோ டுமிருந் ததுநின்
புண்ணா கியமே னி[2]பொருந் திடவோ
மண்ணோ ருயிரே யிமையோர் வலியே
கண்ணே [3]யமுதே கருணா கரனே.

(இ - ள்.) உலகத்தார்க்கு உயிர்போல் அருமையானவனே! தேவர்கட்குப் (பகைவரை யொழித்தலாற் சிறந்த)பலமாகஇருப்போனே! (எனது) கண்போன்றவனே! அமிருதம்போலஇனிமையானவனே! தயைக்குஇருப்பிடமானவனே! (நேர்ந்த வருத்தத்தைப்) பொருள்செய்யாமல் (இந்த) உடம்போடும் (நான் இத்தனைநாள் இங்கேபிழைத்து) இருந்தது, உன்னுடைய (பகைவர் அம்பாற்) புண்பட்டுக் கீழ்விழுந்துகிடக்கிற (உனது) திருமேனியைச் சேர்வதற்காகத்தானோ? (எ - று.)

நான் ராக்ஷஸர்கையிலகப்பட்டுப் பெருந்துன்பத்தை யடைந்தாலும், உயிரைவிட்டிடாமல் இந்த உடம்போடு இந்த இலங்கையில் இத்தனைநாள் காத்திருந்தது - நீ பகைவரையெல்லாம் வென்று என்னைச் சிறைமீட்க, பின்பு நான் உனது திருமேனியைச் சேரலாமென்ற எண்ணத்தினாலே யல்ல வோ? அப்படியிருக்க, பகைவர் அம்பு உடம்பெல்லாம் துளைத்துப் புண்ணுக்க அந்தப்புண்ணோடு கிடக்கின்ற நின்திருமேனியைப் பொருந்தும்படி நேர்ந்த தே! இந்தத்தீவினைக்கு என்செய்கேன்!! என்று சீதை கதறின ளென்க. பி:ம்---1மயலோடும், உயிரோடும்.2பொருந்துறவோ. 3கருணைகரனேயமிழ்தே.

கச. 1மேவிக் கனன்முன் மிதிலைத் தலையென்
பாவிக் கைபிடித் ததுபண் ணவநின்
ஆவிக் கொருகோள் வரவோ வலர்வாழ்
தேவிக் கமுதே மறையின் 2றெளிவே.

(இ - ள்.) தாமரைமலரில் வாழ்கின்ற லக்ஷ்மீதேவிக்கு அமிருதம்போல் இனிமையாக இருப்பவனே! வேதத்தினால் (ஆராய்ந்து முதற்பொருளென்று) தெளியப்படுபவனே! கடவுளே! மிதிலாபுரியில் அக்கினிக்கு முன்னேயிருந்து, (நீ) என்னுடைய பாவமுள்ள கையைப் பற்றியது [நீ என்னைப் பாணிக்கிர கணஞ்செய்தது], உனது உயிருக்கே ஒருதீங்கு வருவதற்காகத்தானோ?

'பாவி' என்பது-கைக்கு அடைமொழி. பாவிஎன் என்றுகூட்டி யுரைப் பினுமாம். நான் மகாபாபி; நீ அப்படிப்பட்ட என்னுடைய கையை அக்கினி சாட்சியாகப்பிடித்துவிவாகஞ்செய்துகொண்டதனால்தான் உனக்குஇப்போது இவ்வாறான ஆபத்து நேர்ந்தது; நீ என்னை விவாகஞ்செய்துகொள்ளா திருந் தால், இவ்வாறான கதி உனக்கு எப்போதும் நேர்ந்திராது என்று சீதை தன் னைப் பழித்துக்கூறுகின்றனளென்க. தன்னைச் சிறைமீட்கப் புரிந்தபோரில் இவ்வாறு இராமனுக்கு ஆபத்து நேர்ந்ததுபற்றி, சீதை தன்னைப் பழித்துக் கொள்ள லாயினள். இராமபிரானைத் திருமாலின் திருவவதாரமென்று தெளிந்ததனால், 'அலர்வாழ் தேவிக்கமுதே' என்றாள். பி - ம்:---1வேள்விக். 2திருவே. (உகூ௯எ)

கரு. 1உய்யா 2ளுயர்கோ சலை3தன் 4னுயிரோடு
ஐயா 5வினையோ ருயிர்வாழ் கிலரால்
6மெய்யே 7வினையெண் ணிவிடுத் தகொடுங்
கைகே சிகருத் திதுவோ களிறே.

(இ - ள்.) ஆண்யானைபோன்றவனே! (உனக்கு நேர்ந்த இந்தநிலையைக் கேட்டால், நற்குணங்களாற்) சிறந்த (உனதுதாயாகிய) கௌசல்யை (தனது) உயிரை வைத்துக்கொண்டு பிழைத்திராள்; தலைவனே! இளையவராகிய மற் றைமகளிரும், (இனி) உயிர்பிழைத்திருக்கமாட்டார்;(நமக்கு நேரவேண்டிய) தீமையையினைத்து (க்காட்டிற்கு) அனுப்பிய கொடியகைகேசியினது கருத்து உண்மையாகவே இதுதானோ? [யாவரும் இறந்தொழியத் தான் தன்புதல்வ னோடு இனிதாக இருத்தலோ?] (எ - று.)

உன்னுடைய மாதாவாகிய கௌசலியாதேவியார் உனக்குநேர்ந்ததைக் கேட்டால், இனிப் பிழைக்கப்போகிறதில்லை; மற்றைமாதராரும் பிழைத்திருக்கப் போகிறதில்லை; உண்மையாக இப்படிப்பட்டசெய்கைகள் நிகழ வேண்டு மென்ற எண்ணத்தினால்தான் கைகேசி உன்னைக் காட்டிற்குப்போகுமாறு சொல்லிய தென்று தோன்றுகின்றதென, வனவாசத்திற்குக் காரணமாக இருந்த கைகேயியைச் சீதைபழித்துரைக்கின்றனளென்க. தனதுஏகபுத்திரனை இராமபிரானைப் பிரிந்தகாலத்திலும் தனதுகணவனுக்கு உற்றன செய்துகொண்டு நாட்டிலிருந்த உத்தமி யாதலால், 'உயர்கோசலை' என்றது. சிறந்த இராசகுலத்திலே பிறந்து வளர்ந்திருந்தும் அதற்குஏற்ற முறைமையை மனத்திற்கொள்ளாமல் மனுமுறைப்படி மூத்தமகனுக்கு உரியதான அரசாட்சியை அவனுக்குக் கொடாதபடி விலக்கி இளையவனை தன்மகனுக்கு அவ்வரசாட்சியை வேண்டியதோடு நில்லாமல்,மூத்தவனைக் காட்டிற்குச்செல்லும்படியும் ஏவினாளே யென்ற தகுதியின்மையை விளக்குதற்கு, 'கொடுங் கைகேசி' என்றாள். சிலபிரதிகளில் இரண்டாமடி 'வெய்யாளில் சுமித்திரையாணகர்வாய்'என்றும், 'வெய்யாளில்சுமித்திரைமாநகர்வாய்' என்றும் பாடங்கள்உள்ளன. பி-ம்:---[1]உய்யார். [2]உயிர். [3]இன். [4]உயிரோ, உயிரும். [5]இளையோனகராளகிலான், இளையாரவர்வாழ்கிலரால், இளையானகர்வாழ்கிலனும். [6]மெய்யா. [7]உனை. (உகூ௩அ)

கசு. தகை[1]வா ணகர்நீ தவிர்வா யெனவும்
வகையா துதொடர்ந் தொருமான் [2]முதலாப்
புகையா டியகா டுபுகுந் துடனே
பகையா டியவா பரிவே துமிலேன்.

(இ - ள்.) '(உனக்குத்) தகுதியான [நீ அரசாட்சி செய்யும்முறைமையையுடைய] ஒளியுள்ள (அயோத்தி) நகரை,(இராமனே!) நீ தவிரவேணும்'என்று (கைகேயி) சொல்லவும் உடனே (அதற்கு) வேறுவகையாகமொழிகூறாமல், (அந்தச்சொல்லைப்) பற்றுக்கோடாகக் கொண்டு (அங்கங்கே) பற்றியெரியுந் தன்மையுள்ள காட்டிற் பிரவேசித்து ஒப்பற்ற மான் முதலாகக்கொண்டு (இதுவரையிலும் நீ) பகைவர்களை வென்ற விதம், (என்னே?) (இப்படிப்பட்ட உன்திறத்தில் யான்), அன்பு ஏதும்இலேன்; (எ - று.)

உன்திறத்தில் உண்மையான அன்பு எனக்கு இருக்குமாயின், உனக்கு இவ்வகையான நிலை நிகழ்ந்தபின்பு என்னுடலில் உயிர் தங்கியிருக்கலாமோ? இன்னும் என்னுயிர் போகாமல் நிற்பதனால் உன்னிடத்து எனக்கு அன்பு சிறிதும்இல்லை யென்பது பெறப்படு மென்று தனது தன்மையைச் சீதாபிராட்டி பழித்துக் கூறுகின்றனளென்க. இச்செய்யுளுக்கு வேறு வகையாகவும் பொருள் கூறலாம்; அதுவருமாறு:—'தகை - (பலவகைக்) குணங்களும் நிரம்பிய, வாள்நகர் - ஒளியுள்ள நகரில்தானே, நீ தவிர்வாய் - நீ தங்கியிருப்பாய்,'எனவும்-என்று (நீ என்னை நோக்கிச்) சொல்லவும்,(நான்),வகையாது-ஒருவகைப்படுத்தாமல் [அப்பேச்சைக் கேளாமல்], தொடர்ந்து - (உன்னைத் தொடர்ந்து, புகையாடிய காடு புகுந்ததனால், உடனே, (என்பொருட்டாக),

ஒருமான்முதல் ஆ - ஒப்பற்ற (மாயமானுன) மாரீசனை முதலாக, பகை-பகைவர்களை, ஆடிய-சொல்லுமாறுநேர்ந்த, ஆ - விதம் (இருந்தபடி என்னே!)என்பது. "நீ வருந்தலை நீங்குவென் யான்," "காட்டயற், கல்லரக்குங் கடுமைய வல்லசின்,சில்லரக்குண்ட சேவடிப்போது" என்று இவ்வகையாகத் தன்னைக் குறித்து இராமபிரான் கூறிக் காட்டிற்கு உடன்வருவதை விலக்கவும், தான் அதனைக் கேளாமல் தொடர்ந்துசென்றதனால்தான் அவ்விராமபிரானுக்கு மாரீசன்முதலாகிய பகைவரோடு போர் நேர்ந்ததென்று தன்னுற் பலவகையான கஷ்டங்கள் ஸ்ரீராமனுக்கு விளைந்ததுபற்றித் தன்னை நொந்து சீதாபிராட்டி 'பரிவேதுமிலேன்' என்கின்றனள். பி-ம்—:[1]வானகர், வாணகை. [2]முதலாய்ப். (உகூகூ)

கஎ. இன்றீச் சிலேயே [1]பிறரில் விடைவாய்ப்
[2]பின்றீ யெனவே [3]பிரிவோ டடியேன்
நின்றீ வதுநின் னைநெடுஞ் செருவிற்
கொன்றீ வதோர்[4]கொள் கை[5]குறித் தலிஞே

(இ - ள்.) (நான் இலக்குமணனை நோக்கி, 'இராமனுக்கு மாயமானினுல் ஆபத்து நேர்ந்த) இப்பொழுது, (அவ்வாபத்தை நீக்கச்செல்லாததனால், நீ வீணே வீரக்குறியாகக் கொண்டுள்ள) வில்லையும் ஒழிவாய்; பிறர்மனைவியினுடையஇடத்தில் தங்குவாய்' என்று (கோபமும் வெறுப்பும் தோன்றுமாறு) சொல்லவே,—(இலக்குமணன் என்னைப் பாதுகாப்பதைவிட்டுப்) பிரிதலினால் நான் (தனிப்பட்டு) நின்றது,—(இந்தப்) பெரிய யுத்தத்தில் நின்னைக்கொல்வதாகிய ஒருஎண்ணத்தைஎண்ணியதனால்தானே? (எ - று.)

மாரீசன் மாயத்தினுல் மானுருக்கொண்டு வந்தபோது அவனைத்தொடர்ந்துசென்ற ஸ்ரீராமன் இலக்குமணனைச் சீதைக்குப் பாதுகாவலாக வைத்திட்டுச் சென்று அந்த மானை மாயமானென்று உணர்ந்து அம்பெய்து வீழ்த்துகையில், அந்த மாயமான் தான் இறக்குந் தருணத்தில் இராமனது குரலால் 'ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணு!'என்று கூறியவண்ணம் இறக்கவே, அதுகேட்ட சீதை கலங்கி'இலக்குமணனைநோக்கி"குற்றம்வீந்த குணத்தினெங்கோமகன், மற்றைவாளரக்கன் புரிமாயையா, விற்றுவீழ்ந்தன னென்னவும் என்னயல், நிற்றியோ", "ஒருபகல் பழகினு ருயிரை யீவரால். பெருமகனுலேவுறு பெற்றி கேட்டும் நீ, வெருவலைநின்றனை" என்று பழித்துச்சொல்லவே,அவ்விலக்குமணன் அந்தச்சீதையைப் பாதுகாப்பதை விட்டுப் பிரிந்துசெல்ல, சீதை தனிப்பட்டுநின்றஅதுவே இராவணன் கவர்ந்துசென்று இராமனுக்குக் கேடு விளைக்க காரணமானதனுல், 'பிரிவோடடியேன் நின்றீவது - நின்னை நெடுஞ்செருவில் கொன்றீவதோர் கொள்கை குறித்தலினே' என்று சீதை தன்னை நொந்து பழித்துக் கூறுகின்றன ளென்க.

'நீ ஆபத்துவரவொட்டாமற் காப்பதற்காகக் கையில் வில்லை வைத்துக் கொண்டிருந்தும் இராமபிரானுக்கு ஆபத்துநேர்ந்த இந்தச் சமயத்தில் உதவச் செல்லாது இங்கே கிடக்கின்றனையே! இந்த வில் உனக்கு எதற்காக?', என்று பழிப்பாள் 'ஈ சிலேயே; பிறரில்விடைவாய்ப் பின்றீ' என்றாள். கொடு

த்தலென்று பொருளுள்ள 'ஈ' என்பது - இங்கே தவிர்தலென்ற பொருளைத் தந்தது; "ஈபாவஞ்செய்தருளாலளிப்பாரார்" என்ற இடத்துப்போல. இடை- இடம்; வாய்-ஏழனுருபு. பின்றீ-பின்என்றஇடைச்சொல் வினைத்தன்மையை யடைந்து, பின்னேயிருத்தல்என்றபொருளைத்தர, அச்சொல், "முன்னிலை முன்னரீயுமேயும், அந்நிலைமரபின் மெய்யூர்ந்து வருமே" என்ற விதிபற்றி 'றீ' என்பதைப் பெற்று வந்தது. நின்றீவது - தொழிற்பெயர்வினைத்திரி சொல்: "செல்லாது நின்றீயல்" என்ற கலித்தொகையில், இங்ஙனமே நச்சினார்க்கினியர் கூறியிருத்தல் காண்க: இதில், இயல்பினால் இறந்தகாலம் எதிர் காலமாகவந்தது காலவழுவமைதி. கொன்றீவது என்பதும் - எதிர்காலத் தொழிற்பெயரே.

இனி, இச்செய்யுளின் முன்னிரண்டடிகள் வேறுவகையாகவழங்குகின்றன: அந்தப்பாடமும் பொருளும்வருமாறு:—"இன்றீகிலையே லிறவிவ்விடைமான், அன்றீயெனவும் பரிவோடடியேன்" என்பது பாடம். அடியேன் - யான், அன்று - அந்தக்காலத்தில், (இராமனைநோக்கி), இன்று இவ்விடை மான் ஈகிலையேல் - இன்றைக்கு இந்தஇடத்தில் (இந்த) மானைப்பிடித்துத் தாராவிட்டால், இறவு-(எனக்கு) மரணம் (வருவதுநிச்சயம்); (ஆதலால், இந்தமானை), ஈ - (பிடித்துத்) தருவாய், எனவும் - என்றுவேண்டவும், (உடனே), (அந்தஇராமன் பிரிந்துசென்றதனால்), பரிவோடு - வருத்தத்தோடு, நின்றீவது - (நான் தனியே) நின்றது, நெடுஞ் செருவில் கொன்றீவது ஓர் கொள்கை குறித்தலினோ? என்பது பொருள்: கருத்து வெளிப்படை. பி-ம்:- 1பிறன், 2பன்றீ. 3பரியோடு. 4தீமை. 5குறித்திலரோ,குறித்ததினோ, கொடுத்தலிலோ. (உகூ௯0)

கஅ. 1மேதா வினையோய் விதியார் வினைவாற்
2போதா நெறியெம் மொடுபோ துறுநாள்
3மூதா னவன்முன் னமுடிந் திடெனும்
மாதா வுரையின் வழிநின் றனையோ.

(இ - ள்.) தீவினையின் பயனால், போவதற்குக்கடுமையான(காட்டு)வழியே (இராமன் சீதைஎன்ற) எங்களிருவரோடும் செல்லப் புறப்பட்ட காலத்திலே,—'இளையோய்! அறிவுடையோனே! (உன்னிலும் பிராயத்தினால்) முதிர்ச்சிபொருந்திய ஸ்ரீராமன் (விதியினால் மரணத்தையடைவதாக விருந்தால், அவன் இறப்பதற்கு) முன்னமே (நீ)மரிப்பாயாக' என்று கட்டளையிட்ட (உனது) தாயாகிய சுமித்திராதேவியின் சொல்லினுடைய வழியிலே இருந்துவிட்டாயோ? (எ - று.)

நாங்கள் காட்டுக்குப் புறப்பட்டபொழுது நீயும் எங்களுடன் வரவிரும்பி உனது தாயை வணங்கி விடைகேட்கையில், அவள் "மகனே இவன், பின் செல்தம்பி என்னும்படியன் றடியாரினில் ஏவல்செய்தி, மன்னும் நகர்க்கே யிவன்வந்திடின் வா,அதன்றேல், முன்னம்முடி" என்று கூறினாளன்றே! அதையொட்டி இராமனுக்குத் தீங்குவருமென்பதை முன்னமே உணர்ந்து

அவனுக்குமுன்னமே நீ இப்பொழுது இறந்திட்டாயோ? என்று இலக்குமணன் இறந்துகிடப்பது கண்டு சீதை இரங்கிக் கூறியவாறு. மேதன் - அறிவையுடையவன்; மேதம் - அறிவு: இது 'மேதா' என்ற வடசொல்லின் விகாரம்: இச்சொல் - விளிவேற்றுமையில் ஈறுகெட்டு அயல் நீண்டுவந்தது. மூது - 'முதுமை' என்ற பண்புப்பெயர் ஈறுகெட்டு ஆதிநீண்டது. பி-ம்:—1வேதாவினைபோய், வேதாவிளையோய். 2போதே. 3மூதாவிவன். (உகூஅக)

கக. பூவுந் தளிருந் 1தொகு2பொங் கணைமேற்
3கோவின் 4துயிலைத் 5தவிர்வாய் 6கொடியார்
7ஏவின் றலைவந் தவிருங் 8கணையின்
மேவுங் குளிர்மெல் லணைமே வினையோ.

(இ - ள்.) மலர்களும் தளிர்களும் நிரம்பிய சிறந்த படுக்கையிற் (படுத்து), அரசன் கொள்ளுகின்ற நித்திரையை நீங்கினவனே! [கானகத்தில் கல்லணையில் கண்துயில்வோனே!] கொடிய இராக்கதருடைய வில்லினிடத்தினின்று தோன்றின பெரிய அம்புகளாலியன்ற குளிர்ந்த மெல்லிய படுக்கையை (இப்போது) விரும்பிச் சேர்ந்தாயோ! (எ - று.)

பகைவர்களெய்த அம்புகள் கீழே பரவியிருக்கிற போர்க்களத்தில் அவ்வம்புத்தொகுதிகளின்மேல் உயிர்ப்பில்லாமல் ஸ்ரீராமன் விழுந்து கிடத்தலைக் கண்ட சீதை, நாட்டில் மெல்லிய தளிர்களாலும் மலர்களாலும் இயன்ற சயனத்திற் பள்ளிகொள்ளுகின்ற நீ அதனைவிட்டிட்டுக் காட்டிற் கல்லணையிற் கண்துயின்றாய்; இப்போது அதனையும் விட்டு அம்புப்படுக்கையில் கண்துயில விரும்பினாய்போலுமெனப் புலம்பின ளென்பதாம். இனி, இச்செய்யுட்கு - லக்ஷ்மணன் சரதல்பத்திற் கிடப்பதுகண்டு சீதை வருந்திக் கூறியதாகப்பொருள் கூறலு மொன்று. கணையால் மேவுங் குளிர்மெல்லணை என்றது-எதிர்மறையிலக்கணையால், வெப்பம்மிகுந்த வலிய அணை என்ற பொருளைக் காட்டும். ஏ என்பது - அம்புகளை ஏவுதற்கு உரிய 'வில்' என்ற பொருளைத் தந்தது. பி-ம்:—1தகு, தரு. 2பொங்கணையிற். 3கோவுந், கோமுன். 4துயிலத், துயிலித். 5தருவாய், துயிலாய். 6கொடியான். 7ஏவுன். 8கணையாம், கணையால். (உகூஅஉ)

உ0. நெய்யார் 1பெருவேள் விநிரப் பிநெடுஞ்
செய்யார் புனனா டு2திருத் துதியால்
மெய்யா கிய3வா சகமும் விதியும்
4பொய்யா னவென்மே னிபொருந் துதலால்.

(இ - ள்.) நெய் நிரம்பப்பெய்யப்பெறும் பெருயாகங்களைப் பூர்த்திசெய்துகொண்டு, நீண்ட வயல்கள் நிரம்பிய நீர்வளமுள்ள கோசலநாட்டை நீதிநெறிதவறாமல்ஆட்சிசெய்திருப்பாய்; (நீ) என்னுடம்பைத் தீண்டியதனால் [என்னை விவாகஞ்செய்துகொண்டதனால்], (உனது) சத்தியமான பேச்சும், (உனது) நல்வினைப் பயனும், பொய்த்துவிட்டன; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

ராக்ஷஸர்களிடத்து அஞ்சித் தண்டகாரணியத்தில் உன்னைச் சரண மடைந்த முனிவர்கட்கு ''சூரறுத்தவனுஞ் சுடர்நேமியும், ஊரறுத்த வொருவனு மோம்பினும், ஆரறத்தினொடன்றிகின்று ரவர், வேரறுப்பென்வெருவன்மினீர்'' என்று அபயமளித்த வாக்கும், இராமா! நீ என்னை மணந்ததனுற் பொய்க்க. இராச்சியத்தை ஆளவேண்டிய நல்வினையையும் இழந்தனையெனச் சீதாபிராட்டி தன்னைப் பழித்துக் கூறிப் புலம்புகின்றனள். இது சிலபிரதிகளில் கஅ-ஆவது பாடலாகவுள்ளது. பி-ம்:—1அழல், எரி, புரி. 2திருத்துதியோ, திருத்துதியாம், திருத்துமெனும், திருந்துதியோ. 3வாய்மையுநீதியுநீ. 4பொய்யாயதென், பொய்யானவன். (உசுசாங)

உக.—புலம்பிய சீதை இராமபிரான்மீது விழப் புக, திரிசடை தடுத்தல்.

மழுவாள் 1வரினும் பிளவா 2மனனுண்டு
3அழுவே னினியென் னிட4ரா றிடயான்
5விழுவே னவன்மே னியின்6மீ திலெனு
எழுவா ளைவிலக் கி7யியம் பினளால்.

(இ-ள்.) 'மழுவென்னும் ஆயுதமும், வாளாயுதமும் வந்துபிளந்தாலும் (அவற்றிற்கும்) பிளவுபடாத மனத்தைக்கொண்டு புலம்புபவளாகிய யான், இனிமேல் எனதுதுன்பம் தணியுமாறு அந்தஇராமபிரானது திருமேனியின்மேல் விழுந்து இறப்பேன்' என்றுசொல்லி (அங்ஙனம் விழுதற்கு) எழுந்த சீதாபிராட்டியைத் தடுத்து(த் திரிசடை)சொல்லலானுள்; (எ-று.)— ஆல் - ஈற்றசை.

'எனது துயர் நீங்குவதற்கு வேறுவகையில்லாமையால், யான் என் பிராணநாயகனுகிய இராமன்மேல் விழுந்து தழுவி உயிரைவிட்டிட்டு என் துயரத்தையொழிப்பேன்' என்று சொல்லி அங்ஙனம் செய்யத் துணிந்த சீதாபிராட்டியை விலக்கித் திரிசடை கூறலானு ளென்க. பி-ம்:—1உறினும். 2மனனேடு. 3அழுவாரினியென்னிடர், அழுவேனினியின்றிடர், எழுவேனெனியென்னிடர், எழுவானெனினென்றிடர். 4ஆறுவன்யான், ஆற்றிடுநாள். 5விழுவான். 6மீதர். 7இயம்பினர். (உசுசாச)

வேறு.

உஉ.—திரிசடை அரக்கியரைவிலக்கிச் சீதையைக் கிட்டி அவள்காதோடு சில சொல்லத் தொடங்குதல்.

மாடுற வளைந்து நின்ற 1வளையெயிற் றரக்கி மாரைப்
பாடுற2வகற்றி நோக்கிப் பாவையைத் 3தழுவிப் பற்றிக்
கூடின ளென்ன நின்று செவியிடைக் குறுகிச் சொன்னுள்
தேடிய 4தவமே 5யன்ன திரிசடை மறுக்கந் தீர்ப்பாள்.

(இ-ள்.) (முற்பிறப்பிலே சீதாபிராட்டி) தேடிவைத்த தவம்போலிருப்பவளான திரிசடையானவள்,—(அச்சீதையின்) மனக்கலக்கத்தைப் போக்குபவளாகி,—(அவளைச்) சுற்றிலும் நெருங்கச் சூழ்ந்துகொண்டிருந்த வளைந்துள்ள கோரப்பற்களையுடைய ராக்ஷஸிகளையெல்லாம் பக்கத்திலே ஒதுங்கும்

படி ஒதுக்கிப் பிரதிமைபோன்றவளான அச்சீதாபிராட்டியைப் பார்த்து நெருங்கி, இறுகத்தழுவிக்கொண்டு, (அவளுடம்பில்) ஒன்றாய்விட்டவள்போல இருந்து, (அப்பிராட்டியின்) காதிலே சொல்பவளானாள்; (எ - று.)—அதனை அடுத்த ஏழுகவிகளிற் காண்க.

திரிசடை-விபீஷணனது பெண்; பெருந்துன்பத்தால் தன்னுயிரையும் இழக்கலாமென்று சீதாபிராட்டி துணிவுகொள்ளும் போதெல்லாம் ஏற்பன சொல்லிச் சமாதானப்படுத்தி இங்ஙனம் ஏற்ற சமயத்தில் உதவுதலால், அந்தத்திரிசடையை 'தேடியதவமேயன்ன திரிசடை' என்றார். பி-ம்:--1வாள். 2அற்றநோக்கிப்பாவையைத், நீக்கிநின்றபாவையைத்,அவரைநீக்கிப்பாடுறத். 3தழுவிக்கொண்டு. 4தெய்வம். 5என்னத். (உகூசுரு)

உகூ.—இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்: திரிசடை சீதாபிராட்டியை மறுக்கந்தீர்த்தலைத் தேர்விக்கும்.

மாயமான் விடுத்த வாறுஞ் சனகனை வருத்த வாறும்
1போயநாள் நாக பாசம் 2பிணித்தது போன வாறும்
நீயமா 3நினையாய் மாள 4நினைதியோ நெறி5யி லாரால்
ஆயமா மாய மொன்று 6மறிந்திலை 7போலு மன்னாய்.

(இ - ள்.) கழிந்த முன்னாள்களில், (இராவணன், மாரீசனென்ற)மாயத்தினால் மானனவனை (உன்னை மயக்க) அனுப்பிய வகையையும், மாயாஜனகனைஏற்படுத்தின விதத்தையும், நாகபாசத்தினால் (இராமலக்ஷ்மணர்) கட்டுண்டது நீங்கின விதத்தையும், அம்மா! நீ நினைத்துப்பாராதவளாய், உயிரைவிட்டிடும்படி நினைக்கின்றாயோ? தாயே! சன்மார்க்கத்திற் செல்லாதவரான [துன்மார்க்கத்திற்செல்பவரான] அரக்கராலுண்டாகிய மிக்கமாயச்செயலைச் சிறிதும் உணராதவள்போலிருக்கின்றாய்; (எ - று.)

அரக்கர் மாயச்செயலில் மிகவும் வல்லவராதலால், அவர் தமது மாயச்செய்கையாற் கட்டுப்படுத்த அதனால் இந்த ராமலக்ஷ்மணர்கள் இறந்தவர்போல இருக்கின்றார்களே யன்றி,உண்மையில் இவர்கள்இறந்துபோகவில்லை; நாகபாசத்தாற் கட்டுண்ட இவர்கள் எப்படி மீண்டும் அது நீங்கப்பெற்று எழுந்தனரோ, அதுபோலவே இப்போதுள்ள இந்நிலைமைநீங்கி எழுந்து இவர்கள் மீண்டும் ஒருகுறைவுமின்றிப் பகைவெல்வார்கள்; ஆதலால்,இது அரக்கர்மாயமென்பதை நினையாமல் உயிர்விடக்கருதுவது உசிதமன்று என்று திரிசடை சீதாபிராட்டியைத் தேற்றினளென்க. மாயத்தினால் அரக்கர் முன்புசெய்த செயல்கள் எவ்வாறு ஒரு துன்பமுஞ் செய்யமாட்டாமற் போயினவோ, அங்ஙனமே இப்போது மாயத்தாற்செய்த இந்தச் செயலும் ஒன்றும் குறைவுண்டாக்காது நீங்கிவிடுமெனத் தெளிவித்தவாறு. 'போயநாள்'என்பதை எல்லாவற்றோடுங் கூட்டாமல் 'நாகபாசம் பிணித்தது போனவாறும்' என்றதனோடு மாத்திரம் கூட்டி, நாகபாசத்தாற்பிணித்தது பிரமாத்திரத்தாற்கட்டியதற்கு முந்தின நாள் நிகழ்ந்ததைக் கூறியதாகக்கொள்ளலுமாம். இராவணன் மாயமானை விடுத்த செய்தி ஆரணியகாண்டத்தில் வந்துள்ளது. பி-ம்:--1போயமா. 2பொதுவுறப். 3நினைவாய். 4நினைத்தியோ. 5இலாதார். 6அஞ்சலை. 7அன்னம்.

உச. [1]கண்டன கனவும் பெற்ற நிமித்தமு [2]நினது கற்புந்
[3]தண்டக முறையு நாளிற் [4]செய்கையுந் தருமந் தாங்கும்
அண்டர் [5]நா யகன்றன் வீரத் [6]தன்மையு [7]மயரேற் செங்கட்
புண்டரீ கற்கு முண்டோ விறுதியிப் [8]புல்ல கையால்.

(இ - ள்.) கண்டுள்ளனவான கனக்களும், அடைந்துள்ள நல்லநிமித்தங்களும் உன்னுடைய பாதிவிரத்தியமும் தண்டகாரணியத்தில் வசித்தபோது நிகழ்ந்த செயலும் தருமத்தைநிலைநாட்டுவதற்காகத்திருவவதரித்துள்ள தேவாதிதேவனான ஸ்ரீராமனுடைய வீரத்தன்மையும் (ஆகிய இவற்றையெல்லாம்) மறவாதே; செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடைய ஸ்ரீராமனுக்கும் அற்பரான இந்த அரக்கர்கையினுல் மரணம் உண்டாகுமோ? (எ-று.)

அரக்கர் யாவரும் இறக்க ராமலக்ஷ்மணர் வெற்றிபெறுவ ரென்பதற்கு அறிகுறியாகக் கனவும் நல்லநிமித்தங்களும் நமக்குத் தோன்றியிருக்கவும், நீ அவற்றையெல்லாம் மறந்துவிட்டு ராமலக்ஷ்மணர் அரக்கராற் கொலையுண்டாரென்று எண்ணிக் கலங்குவது சிறிதும்தகாது; தருமத்தை நிலைநாட்டவந்த இராமபிரானுக்கு அரக்கரால் இறுதியுண்டாக்கமுடியாதெனத் திரிசடை தேற்றின ளென்க. கண்டன கனவுகள்-"எண்ணெய் பொன்முடிதொறு மிழுகியீறிலாத், திண்ணெடுங்கழுதைபேய் பூண்டதேரின்மேல், அண்ணலவ்விராவண னரத்தவாடையன், நண்ணினன் றென்புலன் நவையில் கற்பினுய்", "மக்களும் சுற்றமும் மற்றுளோர்களும், புக்கனரப்புலம் போந்த தில்லையால்" எனவும், "இன்றிவணிப்பொழுதியைந்ததோர்கனு, வன்றுணைக் கோளரி யிரண்டு மாறிலாக், குன்றிடை யுழுவையங்குழுக்கொண்டீண்டியே," "வரம்பிலாமதகரி யுறையுமவ்வனம், நிரம்புறவளைந்தன நெருக்கிநேர்ந்தன, குரம்பறு பிணம்படக்கொன்றமாறிலாப், புரம்புகவிருந்ததோர் மயிலும்போயதால்", "ஆயிரந் திருவிளக்கமையமாட்டிய, சேயொளி விளக்கமொன்றேந்திச்செய்யவள், நாயகன்றிருமனைநின்று நண்ணுதல், மேயினள் வீடணன்கோயின்மென்சொலாய்" எனவும் வந்துள்ளவை யென்னலாம். நிமித்தம்-பின்னேவரும் நன்மைதீமைகளை முன்னரே யறிவிப்பன; சீதைக்கு நன்மையும் ராக்ஷஸர்க்குத் தீமையும் உண்டாமென்பதைத் தெரிவிக்கும் பலவகை நிமித்தங்கள், "ஆண்டகை யிராவணன் வளர்க்கு மவ்வனம், ஈண்டன விறந்தவாலினங் கொள்செஞ்சிகை, தூண்டருமணிவிளக் கழலுந்தொன்மனை, கீண்டதால் வானவேறெறியக் கிழைநாள்" என்பது முதலாகச் சுந்தரகாண்டத்திற் கூறப்பட்டுள்ளன. இனி, நிமித்தம் - சீதைக்கு இடக்கண்துடித்தல் இடத்தோள் துடித்தல்முதலியன எனக் கொள்வாரு முளர். செங்கட்புண்டரீகன் - புண்டரிகச்செங்கண்ணன்: விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. கற்புடைமகளிர்க்கு அவரதுகற்பே தமது மாங்கலியத்தைக் காக்கு மென்ற கொள்கைபற்றி, 'நினதுகற்பும் அயரேல்' என்றாள். தண்டகமுறையும்நாளிற் செய்கை-அரக்கரிடத்திலிருந்து அபயம் வேண்டிய முனிவர்கட்கு "புகல்புகுந்திலரேல் புறத்தண்டத்தி, னகல்வரேனும் என்னம்பொடும் வீழ்வரால், தகவில் துன்பந்தவிருதிர்நீர்", "சூரறுத்தவனுஞ்சுடர்நேமியும், ஊரறுத்தவொருவனுமோம்

பினும், ஆரறத்திறைெடன்றி நின்றுரவர், வேரறுப்பென் வெருவன்மின் நீர்"
என்று இராமபிரான் அபயமளித்தது.

கற்பு-பாதிவிரத்தியம்; அஃதாவது – தன்கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்; அது, கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும், அவனை இன்னவாறே குற்றேவல்செய்து நீ வழிபட்டொழுகெனவும், இருமுதுகுரவர் அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திரவகையாற் கற்பித்தலானும், அந்தணர்திறத்தும் சான்றோர்தேத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலைமகன் கற்பித்தலானும் கற்பாயிற்று.

'தண்டகம்' என்ற பெயர்க்காரணம்:—சூரியகுலத்து மநுசக்கரவர்த்தியினது குமாரனான இக்ஷ்வாகு மகாராஜனுடைய மக்கள் நூற்றுவருள் கடைப்பட்டவனும், மூடனும் மூர்க்கனும் துஷ்டனுமாய்த் தண்டனைக்கு உரியனென்ற காரணத்தால் எதிர்காலவுணர்ச்சியையுடைய தந்தையால் 'தண்டன்' என்று பெயரிடப்பட்டவனும், தண்டகனென்று வழங்கப்படுபவனுமாகிய ஓரரசன் விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத் தன்னுட்சிக்கு உரியதாகக்கொண்டு மதுமந்தமென்கின்ற பட்டணத்தையமைத்து அங்கு அரசுபுரிந்துவருகையில், ஒருநாள் தனது புரோகிதரான சுக்கிராசாரியாரது ஆச்சிரமத்தினுட் சென்று அவர்மகளாகிய அரஜை யென்பாளைக் காதலித்து வலியக் கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த அந்தப் பார்க்கவர் சினந்து 'ஏழுநாள்களில் அவன் குடும்பத்தோடும் சேனை முதலிய பரிவாரத்தோடும் அழிந்துபோக, அவனதுநாடு மண்மழையால் யாதொரு ஜீவஜந்துவுமில்லாமற் பாழாகக்கடவது' என்று சபிக்க, அங்ஙனமே அந்நாடும் அவ்வரசனும் ஏழாநாள் மண்மழையால் அழிந்துபோய்விட, அவ்விடம் பின்பு காடாகித் தண்டகாரணியமெனப் பெயர்பெற்றதென்பதாம். பி - ம்:— 1கண்டவக்கனவும். 2நின்ற. 3தண்டகவிலாதார், தண்டவாளரக்கர். 4பாவச்செய்கையும், செய்யுந்தகைமையும். 5நாயகர்தம். 6திண்மையும். 7அயர்த்தாய்போலும், அயர்த்தாய்போலப், அயர்க்கலாமோ 8புலையர்க்கல்லால், புலையர்கையால். (உசுசுஎ)

உரு. ஆழியா 1னுக்கை தாக்கி யம்பொன்று 2மறுக்கி லாமை
ஏழைநீ காண்டி யன்றே யிளையவன் வதன மின்னும்
ஊழிநா ளிரவி யென்ன 3வொளிர்கின்ற 4வுயிருக் கின்னல்
வாழியாற் கில்லை வாளா 5மயங்கலை 6மண்ணில் வந்தாய்.

(இ - ள்.) அறிவில்லாதவளே! நீ சக்கராயுதத்திற்கு உரியவனான இவ்வீராமனுடைய திருமேனியில் ஓர்அம்பும் மோதிக் கலங்கச்செய்யாத தன்மையைப் பிரதியக்ஷமாகக் காண்கின்றாயன்றோ? (அதனால், அவனுயிருக்குச் சேதமில்லையென்பது திண்ணம்); பூமியினின்று தோன்றினவளே! (லக்ஷ்மணன்அம்பினால் தாக்கப்பட்டிருந்தாலும், இராமபிரானுக்கு) இளையவனான (இந்த) லக்ஷ்மணனுடைய முகமானது இந்நிலையையடைந்த பின்னும் (பிணமூஞ்சிப்படாமல்), கற்பாந்தகாலத்திலுதிக்கின்ற சூரியன்போல விளங்குகின்றது; (ஆதலால்), (ஸ்ரீராமகைங்கர்யத்தால்) நல்வாழ்வுபெற்றுள்ள இந்த

இலக்குமணனுடைய உயிருக்கும் மரணம் இல்லை: (இது நிச்சயம்): வீணாக (நீ) கலங்க வேண்டாம்; (எ-று.)

சீதையைத் திரிசடை பிரத்தியக்ஷஅநுமானப் பிரமாணங்களால் தெளிவிக்கின்றன ளென்க. துயரமடைந்து கலங்க வேண்டிய அவசியமில்லாத பொழுது கலங்கித் துயரமடைவதனால், சீதையை 'ஏழை' என விளித்தாள். மறுக்கிலாமை = மறுக்ககில்லாமை. அம்பொன்றும் அறுக்கிலாமை என்று பிரித்தும் உரைக்கலாம். பி-ம்:---[1]ஆக்கைபேணி, ஆகந்தன்னை, ஆக்கைகாணாய், ஆக்கைதன்னை. [2]அறுத்திலாமை, உறுகிலாமை, அறிகிலாமை. [3]ஒளிர்கின்றது. [4]உயிருக்கினம், உயிருக்கூனம். [5]மயங்கலர். [6]வேள்வி. ()

உரு. [1]வீய்ந்துளை [2]னிராம [3]னென்னி னுலகமோ ரேழு மேழுந்
[4]தீர்ந்தறு மிரவி [5]பின்னுந் [6]திரியுமே தெய்வ மென்னும்
[7]வீய்ந்துறும் விரிஞ்சன் முன்னா வுயிரெலாம்[8]வெருவ லன்னை
[9]ஆய்ந்தவை யுள்ள போதே யவ[10]ருள ரறமு முண்டால்.

(இ - ள்.) ஸ்ரீராமன் (அரக்கனது அஸ்திரத்தாற் பிளப்புண்டு) உயிரொழிந்திருப்பானேயானால், (அப்போது), கீழேழ் மேலேழ் என்ற பதினான்குலோகங்களும் அழிந்தொழியும்; (அன்றியும்), இனியும், (தெய்வத்தின் கட்டளைக்குஅடங்கித் தவறாதுஉதித்துச் சஞ்சரிக்கின்ற) சூரியன் (வானத்திற்) சஞ்சரிப்பானோ? தெய்வமுண்டென்பது யாதாய்முடியும்? பிரமன் முதலாக வுள்ள பிராணிவர்க்கங்கள் யாவும் அழிந்தொழியும்: (கீழே) ஆராயப்பட்ட உலகம் முதலிய பொருள்கள் அழியாமலிருக்கையில், அந்த ஸ்ரீராமர் உயிரோடிருக்கின்றார்; தருமமும் அழியாமல்நிலைத்து நின்றுள்ளது: (இது) திண்ணம்; (ஆதலால்), தாயே! ('ஸ்ரீராமனுயிர்க்குக் குறைநேர்ந்துவிட்டதோ?' என்று நீ) அஞ்சவேண்டா; (எ - று.)

ஸ்ரீராமன் உலகத்துக்கெல்லாம் உயிர் ஆதலால், அந்தஉயிர் நீங்கினால் அவனுக்கு உடலாயுள்ள உலகம்முதலியன அழிந்துவிடும்; அவை அழியாது நிற்றலால் அவ்விராமபிரான் உயிரோடு இருக்கின்றன னென்பது நிச்சயமென்று வேறொருவகையாற் சீதையைத் திரிசடை தெளிவித்தவாறு. தருமத்தை நிலைநாட்டப் பிறந்த ஸ்ரீராமன் ஒருகுறைவுமின்றியிருத்தலினால், அவனால் நிலைநாட்டப்பட்டுத் தருமமும் உளதாகு மென்றனள். இராமபிரான் அரக்கராற் கொலையுண்டா னென்றால், தருமந் தோற்கப் பாவம் வென்றதென்று ஏற்படும்; அப்போது தெய்வமில்லையென்ற நாஸ்திகக்கொள்கையே வலியுறுமென்பது, 'தெய்வமென்னும்' என்பதன் கருத்து. உலகம்பதினான்கில், மேலேழ் - பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மஹர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்பன; கீழேழ் - அதலம் விதலம் சுதலம் ரஸாதலம் தலாதலம் மகாதலம் பாதாளம் என்பன. திரியுமே, ஏகாரம் - எதிர்மறை. அவர் - ராமலக்ஷ்மணர் என்பாரு முளர். பி-ம்:—[1]ஓய்ந்துளன், ஈர்ந்துளன். [2]வீரன். [3]எண்ணும். [4]தீர்ந்துறும், தீய்ந்துறும், தீய்ந்தறும். [5]பின்னைத். [6]திரியுமோ. [7]ஈய்ந்துளவெண்கணன்முன். [8]வெருவுமன்னை. [9]ஆய்ந்தவர். [10]உள்ளார். (உசுசக)

உஎ. மாருதிக் கில்லை யன்றே மங்கைநின் வரத்தி னாலே
ஆருயிர் [1]நீங்கல் [2]நின்பாற் கற்புக்கு [3]மழிவுண் டாமே
[4]சீரிய [5]தன்றி தொன்றுந் திசைமுகன் படையின் செய்கை
பேருமிப் பொழுதே தேவ ரெண்ணமும் பிழைப்ப துண்டோ.

(இ - ள்.) பெண்ணே! நீ கொடுத்துள்ள வரத்தினால், அநுமானுக்கு அருமையான உயிர் நீங்கப்பெறுதல் [மரணமடைதல்], இல்லை யல்லவோ? (அவனுக்கு மரணம் உண்டாயின்), நின்பால் கற்புக்கும் கேடு விளைந்ததாகுமே; இப்படி(நாம்)ஆலோசிப்பது, சிறிதும் சிறப்புடையதன்று; பிரமாஸ்திரத்தினால் நேர்ந்துள்ள (வானரர்களும் ராமலக்ஷ்மணரும் இறந்தாற்போன்ற) இந்தச்செயல் இப்பொழுதே நீங்கிவிடும்; தேவர்களின் மனமும் தவறுவது உள்ளதோ? (எ - று.)

இதுவரையில் ராமலக்ஷ்மணர்கள் இறக்கவில்லையென்பதைப் பலவகையாகச் சொல்லி, இப்போது, 'அநுமான் இறந்துகிடக்கின்றான்போலத் தோன்றுகின்றானே: அவனுக்கு இறப்புஉண்டோ? நீ அவனுக்குச் சிரஞ்சீவியாக இருக்குமாறு வரமளித்திருக்கின்றாயே; அவ்வரம் பழுதுபட்டதாயின் உன் கற்பே பழுதுபட்டதாகவேண்டாவோ? நாம் இப்படியெல்லாம் சொல்வது நன்றாகவில்லை; பிரமாஸ்திரத்தால் இவர்கள் கட்டுண்டிருப்பது விரைவில் தானே நீங்கிவிடும்; அப்போது எல்லாரும் உயிரொழிந்தாற்போன்ற நிலை நீங்கி எழுந்திருப்பார்கள்; தேவர்கள் இவர்களைப் பற்றி இவ்வாறு தான் நினைத்திருக்கிறார்கள்; அவர்கள் கருத்துப் பழுதுபடாது; ஆதலால், 'ராமலக்ஷ்மணர்கட்குக் குறைநேர்ந்ததோ?' என்று சங்கிக்காமல் மனந்தேறியிருக்கவேணும்' என்று சீதையைத் திரிசடை தேற்றினளென்க. சீதை அநுமனுக்குச் சாவாமலிருக்குமாறு வரமளித்ததை 'பாழியபணைத்தோள்வீர! துணையிலேன் பரிவுதீர்த்த, வாழியர் வள்ளலே! யான்மறுவிலாமனத்தேனென்னின், ஊழியோர்பகலாயோதும்யாண்டெலா முலகமேழும், எழும் வீவுற்றஞான்றும் இன்றெனவிருத்தி யென்றாள்" என்ற உருக்காட்டுப்படலச் செய்யுளால் அறிக. அங்கு, 'யான்மறுவிலாமனத்தேன் என்னின்,...யாண்டெலாம்...இருத்தி' என்று சீதாபிராட்டி தன்கற்பின்மகிமையை முன்னிட்டே அநுமானுக்கு வரம் அளித்திருப்பதனாலும், கற்புக்குக்குறைவில்லையென்பது திண்ணமாதலாலும், அநுமான் இறந்திலனென்பது நிச்சயமென்பாள் 'மாருதிக்கில்லையன்றே மங்கைநின்வரத்தினாலே ஆருயிர்நீங்கல், நின்பாற் கற்புக்கு மழிவுண்டாமே' என்றாள். பி-ம்:—[1]நீங்கின். [2]ஆனால், உன்பால். [3]அழிவுமுண்டோ, அழிவுண்டாமால். [4]சீரியர். [5]அன்றித்தோன்றும், ஒன்றி தன்றே. (உகூ௱௦)

உஅ. தேவரைக்[1]கண்டேன் [2]பைம்பொற் செங்காஞ்[3]சிரத்திற்சேர்த்தி
மூவரைக் [4]கண்டா [5]லென்ன [6]விருவரை முறையி னோக்கி
ஆவலிப் [7]பெய்து கின்றா [8]ரயர்த்தில ரஞ்ச [9]லன்னை
கூவலிற் [10]புக்கு வேலை கோட்படு [11]மென்று கொள்ளேல்,

(இ-ள்) தேவர்களை (என்ன செய்கின்றார்களென்று)பார்த்தேன்; (அவர்கள்), த்ரிமூர்த்திகளைக் காண்பதுபோல (உயிரொடுங்கிக் கிடக்கின்ற) இராமலட்சுமணரிருவரையும் முறைமையோடு (பக்திபூர்வாகமாகத்) தரிசித்து, (தமது) பசும்பொன்னாபரணம் பூண்ட செவ்விய கைகளைத் தலையின்மேல் வைத்துக்குவித்து பெருஞ்செருக்கை யடைந்திருக்கின்றார்கள்: (சிறிதும்) வருந்துகின்றார்களில்லை; (ஆதலால்), தாயே! (நீ) அஞ்சாதே; 'சமுத்திரம் கிணற்றினுட் புகுந்து (அந்தநீரைக்) கொண்டுவிடும்'என்று கொள்ளாதே; (எ - று.)

ராமலக்ஷ்மணர் இவ்வாறுகிடக்கையில்'தேவர்கள் என்னசெய்கிறார்கள்?' என்று பார்த்தேன்; அவர்கள் த்ரிமூர்த்திகளைக்காணும்போது தலையின்மேற் கைகுவித்து வணங்குவதுபோலவே, இவர்களை வணங்கித் துதித்துப் பகைதீருமென்று செருக்கோடிருக்கின்றார்களே யன்றி 'இவருக்கு ஊறுவந்திட்டதே!'என்று சிறிது வருத்தப்படுவதாகவும் தோன்றவில்லை; அதனாலும், இவர்கட்குக் குறையொன்றுமில்லை யென்று நாம் துணியலாம்; ஆதலால், நீ அஞ்சவேண்டா என்று தேற்றினனென்க. "கிணற்றுநீரைக் கடல்கொள்ளாது," "கிணற்றுநீரை வெள்ளங் கொள்ளாது" என்று பழமொழி. இச்செய்யுளின் ஈற்றடியால், கிணற்றுநீரைக் கடல்கொள்ளுமென்று கொள்வாருமுண்டோ? அதுபோலவே, பெருந்திரளான அரக்கர்வலிமையால், இராமலட்சுமணரிருவரின் வலிமை கொள்ளப்படுமென்று கொள்ளுதலும் தகாதென்று கூறியவாறும்: இவ்வடியிலே உபமானப்பொருளை நீ கொள்ளேல்என்று ப்ரஸ்துதத்தில் அமைத்துக்கூறியது-உய்த்துணர்வணி:வடமொழியில் வஸிதாலங்காரமெனப்படும். கீழ்ச்செய்யுளில் 'தேவரெண்ணம் பிழைப்பதுண்டோ?'என்று கூறியதை, இச்செய்யுளால் திரிசடை விரித்துக் கூறின ளென்னலாம்.

இனி, ஈற்றடிக்கு—கூவலில் புக்கு - கூவலில் புக்கதனால், வேலை - சமுத்திரம், கோட்படும்-(கிணற்றுநீரால்) கொள்ளப்படும், என்றுகொள்ளேல் என்று பொருள்கூறுதல் நேர்; கிணற்றின் நீரினுட் கடல்வெள்ளம் புகுந்தால் அக்கடல்வெள்ளத்தைக் கிணற்றுநீரால்கொள்ளமுடியாது; அதுபோலவே, வற்றாத பலபராக்கிரமத்தையுடைய இராமபிரானது வலிமையால் அற்பபலத்தையுடைய அரக்கர் அழிவரேயன்றி, அரக்கரால் இராமபிரானை வெல்லமுடியாதென்பது கருத்து: இக்கருத்துக்கு ஏற்ப, விபீடணனடைக்கலப்படலத்தில் "தேவர்க்குந் தானவர்க்குந் திசைமுகனே முதலாய தேவதேவர், மூவர்க்கு முடிப்பரிய காரியத்தை முற்றுவிப்பான் மூண்டு நின்றே, ஆபத்தின் வந்தபய மென்றானை யயிர்த்தகல விடுதியாயின்,கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்த தொவ்வாதோ கொற்ற வேந்தே" என்று அநுமான் கூறியிருப்பதுங் காண்க. "கூவலந்தீம்புனலும் கொள்ளுமோ வெள்ளங்கோளிழைத்தே" என்ற சடகோபரந்தாதி இங்கே ஞாபகத்துக்கு வருகின்றது. அந்தப் பிரயோகங்களை யெல்லாம் கவனிக்குமிடத்து 'கிணற்றுநீரை வெள்ளம் கொள்ளாது' என்ற பழமொழிக்குப் பதிலாக 'கிணற்றுநீர்வெள்ளத்தைக் கொள்ளாது' என்ற பழமொழியே கற்றோரால் கொள்ளப்பட்டிருந்ததென்

பது, பெறப்படும். பி-ம்:—[1]கண்டேம். [2]அப்பால். [3]சிரத்தினேற்றி. [4]கண்டார். [5]அன்ன. [6]இருவரும். [7]எய்தினின்றார். [8]அயர்த்திலவஞ்சில். [9]என்னை. [10]புக்கும், புக்கவ். [11]என்றல்கோளே. (உசுருக)

உகூ. மங்கல [1]நீக்கி ணுரை யாருயிர் வாங்கி ணுரை
நங்கையிக் கடவுண் மானந் [2]தாங்குறா [3]நவையிற் றன்றால்
[4]இங்கிவை யளவை யாக விடர்க்கடல் கடத்தி யென்றாள்
[5]சங்கைய ளாய [6]தையல் சிறிதுயிர் தரிப்ப தானாள்.

(இ - ள்.) பெண்ணே! (தமது) பிராண நாயகன் இறக்கப்பெற்றவராய் (அதனால்) மங்கலநாண்வாங்கப்பெற்றவர்களைத் தெய்வத்தன்மையுள்ள இந்த விமானம் தாங்குகின்ற குற்றமுடையதன்று; இப்போது நான் கூறிய யாவும் (உண்மையை யறிதற்கு ஏற்ற) அளவை யாதலால் (இவற்றால் உண்மை தெளிந்து நீ அடைந்துள்ள) துக்கசாகரத்தைக் கடந்திடுவாய்' என்று கூறி முடித்தாள், (திரிசடை); (மனத்திற்) சங்கைகொண்டிருந்தவளான சீதாபிராட்டி,(அச்சொற்களால் தான் கொண்ட சங்கை ஒருவாறு நீங்க), சிறிதளவாகப் பிராணனைத் தாங்கினாள்; (எ - று.)

தமது பிராணநாயகனை யிழந்து மங்கலநாண் நீக்கின கைம்பெண்களை இந்தத் தெய்வவிமானம் சுமக்காது; ஆகவே, உன்னை இந்தவிமானஞ் சுமப்பதும் உனது தலைவனான ஸ்ரீராமன் உயிரோடிருக்கின்றானென்பதைத் தெரிவிக்குமெனவும் தேற்றினாள். இவ்வாறு பலகாரணங்கள் காட்டி இராமபிரான் உயிரோடிருப்பதைத் திரிசடை நிரூபித்துக் காட்டவே, சீதாபிராட்டி சிறிது தேறி உயிர்தரிக்கலாயின ளென்பதாம். இனி, முதலடிக்கு-மங்கலம் நீக்கினாரையும் [கைம்பெண்களையும்] அருமையான தமதுஉயிர் நீங்கிச் சவமானவரையும் என்று உரைப்பாருமுளர். பி-ம்:—[1]நீங்கினாரை. [2]தாங்குதல், தாங்கல, தங்குதல். [3]நவையிற்றினுதல். [4]இங்குவையாவையாரும், இங்குவையுளவையாக. [5]சங்கையள். [6]நங்கை. (உசுருஉ)

ந௦.—சீதை திரிசடையைநோக்கி 'உன்பேச்சிலுள்ள நம்புதலால் நான் இன்று உயிர் வைத்துக்கொண்டிருக்கின்றேன்' எனல்.

[1]அன்னைநீ யுரைத்த தொன்று [2]மழிந்தில தாத லானே
உன்னையே [3]தெய்வ மாக்கொண் டித்தனை கால முய்ந்தேன்
இன்னமிவ் விரவு முற்று மிருக்கின்றே னிறத்த லென்பால்
முன்னமே [4]முடிந்த தன்றே யென்றனண் முளரி [5]நீத்தாள்.

(இ - ள்.) தாமரைமலரில் வசிப்பதைவிட்டு (ஜநகன்மகளாக)த் திருவவதரித்தவளான சீதாபிராட்டி,—(திரிசடையைநோக்கி), 'அன்னை! நீ சொல்லியது எதுவும் (இதுவரையிலும்) பழுதுபட்டதில்லை; ஆதலானே, உன்னையே தெய்வமாகநினைத்து, இத்தனை காலம் உயிர் வாழ்ந்திருந்தேன்; இன்னும் இந்த இராத்திரி முடியுமளவும் உயிர்வைத்துக் கொண்டிருக்கின்றேன்; இறத்தலென்பது, என்விஷயத்தில் முன்னமே தீர்ந்துள்ளதன்றோ?' என்று கூறினாள்; (எ - று.)

இராவணன் என்னை எப்போது தூக்கிக்கொண்டு வந்திட்டானோ, அப்போதே உயிரை மாய்த்துக்கொள்வதென்று தீர்மானஞ் செய்துள்ளேன்; ஆயினும், நீ சொல்லுகிற பேச்சு தெய்வவாக்குப்போலத் தவறாமலிருத்தலால் அவ்வப்போது உயிரைமாய்த்துக்கொள்வதை நிறுத்தியதுபோலவே இப்போதும் உன்வார்த்தையால் உயிரைமாய்த்துக்கொள்வதை நிறுத்தி, இன்று இராவவரையிற் பார்ப்பேனென்று சீதை திரிசடைக்கு மறுமொழி கூறினளென்பதாம். பி-ம்:—1அன்ன. 2அழிந்தில, அழிவில. 3தெய்வமாக. 4முடிந்த. 5தீர்த்தாள். (உசுரு)

ருக.—சீதை 'நான் உயிர்விட்டிடுதல் எளிதாயினும், இராமனையடையலாமோ? என்ற எண்ணமே உயிர்வைத்திருக்கக் காரணம்' எனல்.

நாணெலாந் துறந்தே 1னில்லி னன்மையி னல்லார்க் கேய்ந்த
2பூணெலாந் துறந்தே னென்றன் பொருசிலை மேகந் தன்னைக்
காணலா மென்னு மாசை 3தடுக்கவென் னுவி காத்தேன்
ஏணிலா 4வுடல 5நீக்க லெளிதெனக் 6கெனவுஞ் சொன்னாள்.

(இ - ள்.) (பின்னும் சீதை திரிசடையை நோக்கி 'பெண்கட்கு வேண்டிய) நாணமென்ற குணத்தை முழுதும் துறந்திட்டேன்; மனைவிக்கு இருக்க வேண்டிய நல்லதன்மையோடுஅமைந்த மகளிர்க்குத் தகுந்த எல்லாவகையாபரணமாகவுள்ள (மடம் அச்சம் முதலிய மற்றைக்)குணங்களையும் துறந்திட்டேன்:(நான் இவ்வாறாகவும்)'பொருகின்ற வில்லைப்படைத்த மேகம்போன்ற எனது ஸ்ரீராமனை மீண்டும் அடைதல்கூடும்' என்னும்ஓர்ஆசை தடுத்தலினால் என்னுயிரை (விடாமற்) பாதுகாத்திருக்கின்றேன்; (பெண்கட்குஉரிய நற்குணம் ஒன்றும் இல்லாமையாற்) பெருமையுடையதாகாத (என்)உடம்பை நீத்தல் எனக்கு எளிமையானதே' என்றுசொன்னாள்; (எ - று.)

இவ்வுடம்பை ஒழித்துவிடுதலென்பது எனக்கு அருஞ்செயலன்று; அப்படியிருக்கவும், மகளிர்குணங்களெல்லாம் என்னிடத்து இல்லாமற்போய் விடவும், நான் உயிரோடிருப்பது-'ஒருகால் எனது இராமனை யடையக்கூடுமோ?' என்ற ஆசையினாலேயேயன்றி வேறொன்றினாலன்று என்று தான் உயிர்வைத்திருக்கும் காரணத்தைச் சீதாபிராட்டி விளங்க வுரைத்தனளென்க. இராவணனாற்கவரப்பட்டு அவன்மனையிற்சிறைப்பட்டிருப்பதுபற்றி,தன்குணங்களெல்லாம் போயினவாகக் கூறுகின்றாள். பி-ம்:-1எல்லினாண்மெயுந்துறந்தாற்கெல்லாம், இல்லினன்மையும் நல்லோர்க்கெய்தும். 2பூணெலாமாகின்றகுணங்களும்பொதுவிற்போகக். 3கடுக்க, கருதி. 4உடலினீங்கல்,உடல நீத்தற்கு, உடலைத்தாங்கி. 5நீக்க. 6என்றும், என்னச். (உசுருச)

ருஉ. தையலை யிராமன் மேனி தைத்த1வேற் றடங்க ணாளைக்
2கைகளிற் பற்றிக் 3கொண்டார் 4விமானத்தைக் கடாவு கின்றார்
5மெய்யுயி ருலகத் தாக விதியையும் 6வலித்து விண்மேல்
பொய்யுடல் கொண்டு செல்லு நமனுடைத் 7தூதர் 8போன்றார்.

(இ-ள்.) இராமபிரானுடைய திருமேனியிலேபதிந்த வேற்படைபோன்ற பெரியக்கண்களையுடையவளான பெண்ணாகிய சீதையைக் கைகளினாற் பற்றிக்

கொண்டு விமானத்தை(மீள)த் தூண்டிச் செலுத்துகின்ற அரக்கிமார்,—மெய்யான உயிர் உலகத்திலிருக்க விதியையும் வலிமையாற்கடந்து விண்மீதாகப் பொய்யான உடலைக் கொண்டு செல்லுகின்ற யமதூதரைப் போன்றார்கள்; (எ - று.)—கொடுமைபற்றி அரக்கியர்க்கு யமதூதரை உவமைகூறினர். மெய்யுயிர்க்கு உவமேயம்-ஸ்ரீராமன். பொய்யுடல்-உண்மையானஉயிர் நீங்கி இருக்கையில் உயிர்உள்ளதுபோலத்தோன்றும்உடல்: சீதை. பி - ம்:— [1]வாள். [2]கையினை. [3]கொண்டு. [4]மானத்தை. [5]மெய்யுரைநல்லதாகவுயிரையும். [6]நலிந்து, வலிந்து. [7]தூதிற். [8]போனர். (உசுருரு)

சீதைகளங்காண்படலம் முற்றிற்று.

---

## உ௬-ஆவது மருத்துமலைப்படலம்.

(ஸஞ்சீவகரணிமுதலிய) ஓஷதிகளையுடைய மலையை (அநுமான் சாம்பவான் மொழிப்படியே) கொணர்ந்து (யாவரும் உயிர்பெற்றெழுந்ததும்) திருப்பிக் கொண்டுபோனதைக் கூறும் படல மென்பது, பொருள். இப்படலத்துக்குப்பெயர், 'மருத்துப்படலம்' என்று பலபிரதிகளிற் காணப்படுகின்றது; மருந்துப்படலம்என்றும் காண்கின்றது. மருந்து + மலை = மருத்துமலை: வேற்றுமைத்தொகையில் மென்றொடர் வன்றொடராயிற்று.

ஸ்ரீராமனதுகட்டளையின்படி சென்ற ஸ்ரீவிபீஷணாழ்வான் உணவைக் கொண்டு மீண்டுவந்து போர்க்களத்தில் யாவர்க்கும் பிரமாஸ்திரத்தால் நேர்ந்துள்ள விபத்தையும் ஸ்ரீராமன் அடைந்திருக்கும்நிலையையுங் கண்டு அநுமானிடஞ்சென்று அவனதுகளைப்பைநீக்க, பின் அவன் ஸ்ரீவிபீஷணனோடு சாம்பவானை யடைய, சாம்பவான் 'மருத்துமலையை விரைவிற் கொணர்ந்து வரவேண்டும்' என்று சொல்லி, அஃது இருக்கும்இடம் முதலியவற்றையும் விளக்கமாகத்தெரிவிக்க, உடனே அநுமான் பேருருக்கொண்டுசெல்ல, அக்காலையில் சாம்பவானும் ஸ்ரீவிபீஷணனும் ஸ்ரீராமனிடஞ்சென்று திருவடி வருட,அப்பிரான் திருக்கண்விழித்து நிகழ்ந்தகுறையைச்சொல்லிக்கிலேசிக்க, சாம்பவான் யாவரையும் உய்விக்கும்படி சஞ்சீவிமலையைக் கொணருமாறு அநுமான்சென்றிருக்குஞ்செய்தியைச்சொல்லித் தேற்ற,அப்போது ஆஞ்சனேயன் சஞ்சீவிமலையைவேருடன்பறித்துக்கொண்டு வானவழியாய் யுத்தகளத்திற்கு நேரே வந்துசேர்ந்தான்: அதன் காற்றுப் பட்டமாத்திரத்தில் இலட்சுமணன் முதலியோர்உயிர்பெற்றெழுந்தனர்: அதுகண்டு ஸ்ரீராமன் அநுமானை ஆசீர்வதிக்க,பிறகு சாம்பவானுடையவேண்டுகோளின்படி அநுமான்அம்மலையை முன்னிருந்தஇடத்திற் கொண்டுபோய்வைக்கும்படி திரும்பவும் கொண்டுபோனானென்ற சரிதை இப்படலத்திற் கூறப்படுகின்றது.

**க.—விபீஷணன் உணவைக்கொண்டுசேர்த்துப் போர்க்களஞ் சேர்தல்.**

[1]போயின னைய விப்பாற் [2]புரிகெனப் புலவர் கோமான்
ஏயின கரும நோக்கி [3]யேகிய விலங்கை வேந்தன்

மேயின 4வுணவு கொண்டு மீண்டவை யுறையுள் 5விட்ட
6ஆயின வாக்கித் 7தான்வந் தமர்ப்பெருங் 8களத்த ணுனன்.

(இ - ள்.) சீதை தன்னிருப்பிடத்துக்குப் போயினள்: இங்கே '(உணவுகளைக்கொண்டுவருந்தொழிலைச்)செய்க' என்று தேவாதிதேவனுன ஸ்ரீராமபிரான் ஏவிய காரியத்தின்பெருமையைப் பார்த்துச் சென்ற இலங்காதிபதியான ஸ்ரீவிபீஷணன் தக்கவுணவுகள்கொணர்ந்து மீண்டு அவைகளைப் பாசறையுள்வைக்கப்பட்டனவாகச்செய்து, தான் வந்து பெரியபோர்க்களத்தையடைபவனுனன்; (எ - று.)—போயினள் தையல்எனப்பிரிக்க. பி-ம்:—1போயினளடைய, போயினளாண்டை, போயினனடைய. 2புகுந்துள, புகுந்துளன், புகுந்தனன். 3எய்திய, எய்தினன். 4உணர்வு. 5விட்டால், விட்டது. 6ஆயினவாகத். 7தானேவந்தமர்க். 8களத்தின். (உசுடு௬)

உ.—வானரர்களின்நிலைமையைக் கண்டு விபீஷணன் உணர்வறுதல்.

நோக்கினுன் கண்டான் பண்டிவ் 1வுலகங்கள் படைக்க நோற்றுன், வாக்கினுன் மாண்டா ரென்ன வானர வீரர் முற்றும், தாக்கினுரெல்லாம் பட்ட 2தன்மையை விடத்தைத் தானே,தேக்கினு னென்ன நின்று தியங்கினு னுணர்வு தீர்ந்தான்.

(இ - ள்.) (அடைந்த விபீஷணன்.—அந்தப்போர்க்களத்திலே), முன்பு இவ்வுலகங்களையெல்லாம் படைக்குமாறுநோற்றுள்ளவனுன பிரமதேவனது (சாப)வார்த்தையால் மாண்டவர்போல (அஸ்திரத்தினுலே) வானரவீரர் (உடம்பு)முழுதும் தாக்கப்பட்டவராய் யாவரும் இறந்தார்போல(த் தரையில்)வீழ்ந்துள்ள தன்மையை(த் தான்) நேரேகண்டு, விஷத்தைத் தானே யுண்டவன் போல (முதலில்)தியக்கங்கொண்டுநின்று (பின்பு) உணர்வுநீங்கினவனுனன் [மூர்ச்சித்தான்]; (எ-று.)—பி-ம்:—1உலகினையடைப்ப.2 தன்மைய. (உசுடு௭)

௩.—மிக்கவருத்தத்துடனே வந்த ஸ்ரீவிபீஷணன் பிறகு இளையபெருமாளுடனே ஸ்ரீராமனைக் காணுதல்.

விளைந்தவா 1றுணர்ந்தி லாதா 2னேங்கினுன் வெதும்பி னுன் 3மேல்,உளைந்துளைந் துயிர்த்தா ணுவி யுண்டிலை யென்ன வோய்ந்தான், வளைந்தபேய்க் கணமு நாயு நரிகளு மிரிய வந்தான், 4இளங்கிளை யோடுஞ் சாய்ந்த விராமனை 5யெய்திக் கண்டான்.

(இ-ள்.)(இவ்வாறு)நிகழ்ந்த தன்மையை யறியாதவனுன ஸ்ரீவிபீஷணன்,—(சிறிதுதேறி),ஏக்கங்கொண்டு(மனம்)வெதும்பிப் பிறகு வருந்திவருந்திப் பெருமூச்சுவிட்டு 'ஆவி உளதோ? இலதோ?' என்று (கண்டவர்) கருதுமாறு ஓய்வுற்றவனுய், சூழ்ந்துள்ள பேய்க்கணமும் நாயும் நரிகளும் நிலைகெட்டோட வந்து,இளையபெருமாளுடனே சாய்ந்துள்ள ஸ்ரீராமனை யடைந்து கண்டான்; (எ-று.)—பி-ம்:—1உணர்கிலாதான். 2வீங்கினுன். 3போய், மெய். 4இளங்களிறோடும். 5இடையிற். (உசுடு௮)

௪. 1ஏன்பென்ப தியாக்கை யென்ப துயிரென்ப திவைக ளெல்லாம்
பின்2பென்ப வல்ல 3வேனுந் 4தம்முடை நிலையிற் பேரா

5மூன்பெண்ப வுளமென் றூலு முழுவதுங் 6தெரிந்த வாற்றால்
அன்பெண்ப தொன்றின் றன்மை யமரரு 7மறிந்த தன்றால்.

(இ - ள்.) என்புஎன்பதும் யாக்கையென்பதும் உயிரென்பதும் இவைகளெல்லாம் (அன்பைநோக்குமிடத்துப்) பிற்பட்டன [முக்கியமானவையல்ல]: (பிற்பட்டன) அல்லஎன்று கூறினாலும் (அவை), தம்முடைய அங்கிலையினின்று பேரா: (அவை அன்பிற்கு) முற்பட்டனஎன்னுங்கொள்கை (ஒருசாரார்க்கு) உள்ளது என்றாலும், நன்றாகஆராய்ந்துபார்த்தவகையினால், அன்புஎன்றுசொல்லப்பட்ட ஒன்றின் தன்மை அமரரும் அறிந்ததன்றாகும்; (எ - று.)

'விபீஷணன் ஸ்ரீராமலக்ஷ்மணரிடம் பேரன்புடையவன்' என்பதைக் கூறக் கருதிய கவி, இந்தச்செய்யுளில் என்புமுதலியவற்றினும் ஒருத்தற்கு அன்பே முக்கியமானது என்கின்றார். என்போடுகூடிய உடல் உயிரோடு இருக்கும்போதே அன்பு ஆண்டுத் தோன்றுதலால், என்புமுதலியவையே முக்கியமென்று ஒருசாரார் வாதிப்பினும் "அன்போடியைந்தவழக்கென்பவாருயிர்க்கு, என்போடியைந்த தொடர்பு" என்றபடி உடலெடுத்து இவ்வுலகத்திற் பிறந்ததற்குப்பயன் அன்புகொண்டுஇருத்தலேயாதலால், அந்தஅன்பே மற்றையவற்றினும் மேம்பட்டது: அதன்சிறப்பைத் தேவராலும் முற்றிலுங் கூறமுடியாதென ஆராய்ந்துகூறியவாறு. பி-ம்:—1என்பென்பதுயிரென்றும். 2என்பது.3என்னும்.4தன்னுடை.5முன்பென்னுமுளவென்றனும், முன்பென்றுமுளதென்றலும். 6தெரியக்காணர். 7அறிந்ததன்றே. (உகூ௫க)

௫.—இராமன் துன்பமிகுதியால் இவ்வாறுள்ளானேயன்றி, இறந்திலானென்று விபீஷணன் உணர்ந்து துன்பந் தீர்தல்.

ஆயினு மிவருக் கில்லை யழிவெனு 1மதனு லாவி
போயின தில்லை வாயாற் 2புலம்பிலன் பொருமிப் பொங்கித்
தீயினு மெரியு 3நெஞ்சின் 4றெரியலன் றெரிய நோக்கி
5நாயகன் மேனிக் கில்லை வடுவென நடுக்கந் தீர்ந்தான்.

(இ - ள்.) (உயிரினுஞ்சிறந்த அன்பை விபீஷணன் உடையவனுகி) இருந்தாலும் இவருக்கு அழிவில்லை யென்பதனால், ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு ஆவி போயினதில்லை; வாய்விட்டுப் புலம்பாதவனாய்ப் பொருமி(த் துயரங்) கிளர்ந்து தீயினும்மிக்கெரிகின்ற நெஞ்சினால் (முதலில்) ஆராய்ச்சியில்லாதிருந்து (பிறகு) ஆராய்ந்துபார்த்துத் தலைவனானஸ்ரீராமனுடைய மேனிக்கு வடுவில்லையென்று நடுக்கந்தீர்ந்தான்; (எ-று.)—பி-ம்:—1இதனால்.2புலம்பினன், புலம்புவான்.3நெஞ்சன். 4வெருவலன், வெருவலால். 5நாயகமேனிக்கு.

சா.—விபீஷணன் விளைந்துள்ளதைநுண்மையாகஆராய்ந்து தெளிந்து பிரமாஸ்திரத்தின் விளைவைத் தீர்க்க உபாயம் நாடுதல்.

அந்தணன் படையால் வந்த தென்பது மாற்றல் 1சான்ற
இந்திர சித்தே யெய்தா னென்பது 2மிளவற் காக
நொந்தன னிராம 3னென்னு முண்மையு 4நொய்து நோக்கிச்
சிந்தையி 5னெண்ணி யெண்ணித் தீர்வதோ ருபாயந் தேர்வான்.

(இ - ள்.) (இளையபெருமாளுக்கும் வானரர்களுக்கும் உயிரொடுங்கியநிலை) பிரமாஸ்திரத்தினால்நேர்ந்ததென்பதையும், வலிமைமிக்க இந்திரசித்துத்தான் (அப்படையை) எய்தவனென்பதையும், இளையபெருமாளுக்காகவே இராமன் நொந்து இவ்வாறுள்ளானென்ற உண்மையையும்(தான்) எளிதிலுணர்ந்து மனத்தில் மிகவும் ஆராய்ந்து (அதனின்றும்) நீங்குவதோருபாயத்தைத் தேர்பவனானான்; (எ - று.)—இராமபிரானது திருமேனியில் அஸ்திரத்தின் தழும்பு இல்லாமையால் அஸ்திரத்தினாலன்றி இளையவனாலேயே நொந்தானென்று விபீஷணன் உய்த்துணர்ந்தான். பி-ம்:—[1]ஆன்ற. [2]இளையோற்காக. [3]என்னுநுண்மையும், இன்னுமுணர்விஞன். [4]நொய்திறேக்கி, நோக்கிநோக்கி. [5]உணரவெண்ணி. [6]அறிவினாற்கண்டானன்றே, தீர்வதோருபாயந்தேர்ந்தான்.

எ.—துயரத்தால் ஸ்ரீராமன் இப்போது இவ்வாறிருப்பினும், தம்பிமாய்ந்தாற் பிழைத்திரானேயென்று விபீஷணன் வருந்துதல்.

உள்ளுறு துன்ப மூன்ற [1]வுற்றன னுறக்க மன்றே
[2]தெள்ளிதி னுணர்ந்த பின்னைச் சிந்தனை [3]தெரிவ தன்றே
வள்ளலோ தம்பி [4]மாய [5]வாழ்கிலன் மாய வாழ்க்கைக்
[6]கள்வரோ வென்று ரென்று மழையெனக் கலுழுங் கண்ணான்.

(இ - ள்.) உள்ளேபொருந்திய துன்பம் ஊன்றியதனால் (ஸ்ரீராமன்) உறக்கம்[மூர்ச்சை] உற்றானன்றோ? தெளிவாகஉணர்ந்தபின்பு(அவன்)சிந்தனை (இன்னதென்று நம்மால்) அறியத்தக்கதன்றே: (எனெனில்),—உதாரகுணமுள்ளவனான இவ்விராமனோ தம்பிமாய்ந்திட உயிர்வாழான்: (ஆகவே), மாயத்தினால் வாழும்வாழ்க்கையைக்கொண்ட வஞ்சரான அரக்கரோவென்றவரானவரென்று மழைபோலக் கண்ணீர்சொரிகின்றகண்களையுடையவனானான் (விபீஷணன்); (எ - று.)—பி-ம்:—[1]உற்றனனுறக்கமென்னாத், உற்றனனுறக்கமொன்றோ, உற்றனவுறக்கமென்றே, உற்றனவுறக்கமன்றோ. [2]தெள்ளிதது. [3]தெரிவதன்றால், தெரிவனன்றால், தெரிவனன்றி. [4]மாள, மாளில். [5]வாழ்கின்றானல்லன்வஞ்சக். [6]கள்ளனோவென்றானென்றான். (உசுசுஉ)

அ.—விபீஷணன் மனத்தடுமாற்றம் ஒழிதல்.

பாசம்[1]போ யிற்றாற் போலப் பதுமத்தோன் படையு [2]மின்றே
நாசப்போ மெய்து நம்பி தம்பிக்கு [3]நாச மில்லை
வீசும்போர்க் களத்து [4]வீழ்ந்த சேனையு [5]மீளும் வெய்ய
[6]நீசன்போர் வெல்வ துண்டோ [7]வென்றுள நிலையி னின்றான்.

(இ - ள்.) (பின்னர்விபீஷணன்),—நாகபாசமானது இற்றுப்போனது போலவே, பிரமாஸ்திரமும் இன்றைக்கே நாசமாய்விடும்: ஸ்ரீராமனது தம்பிக்கும் அழிவுஇல்லை; (படைக்கலங்களை) வீசியெறிகின்ற போர்க்களத்திலே (உயிரொடுங்கி)வீழ்ந்துள்ள சேனையும் (உயிர்) மீளப்பெறும்; கொடியநீசனான இராவணன் போரில்வெல்வதென்பது உண்டாகுமோ? என்று (தன்) மனம்(தடுமாற்றம் நீங்கி) நிலையில் நிற்கப்பெற்றான்; (எ - று.)—பி-ம்:—[1]பேரற்றாற்போல. [2]இன்னே. [3]நடுக்கம். [4]வீய்ந்தவீரரும். [5]மீள்வர். [6]நீசர். [7]என்றகநினைந்து, என்றுள்ளநினைப்பின் என்றனனெறியின். (உசுசுரு)

சு.—'எவரேனும் இறவாதவருளரோ? என்றுபார்ப்பேனென்று விபீஷணன் கொள்ளிக்கட்டையைக் கையிற்கொண்டு போர்க்களத்திற் பார்த்தல்.

உணர்வதன் [1]முன்ன மின்னே யுற்றுழி [2]யுதவற் கொத்த
துணைவர்க டுஞ்ச [3]லில்லா ருளரெனிற் றுருவித் [4]தேடிக்
கொணர்குவன் விரைவி னென்னாக் கொள்ளியொன் றங்கை கொண்
புணரியி [5]னுதிர [6]வெள்ளத் தொருதனி விரைவிற் போனான். [டான்

(இ - ள்.) (ஸ்ரீராமன்) உணர்ச்சிபெறுவதற்குமுன்பே இப்போதே ஆபத்து நேரிட்டகாலத்தில் உதவுதற்குஏற்ற துணைவர்கள் இறவாதவருள ராஹல் ஆராய்ந்துதேடி (அவர்களை) விரைவிற் கொணர்வேனென்றுசொல்லி (விபீஷணன்), கொள்ளியொன்றை அங்கையிலேந்திக்கொண்டு கடல் போன்ற இரத்தவெள்ளத்திலே தன்னந்தனியனாய் விரைவிற்போயினான்; (எ - று.)---பி - ம்:—[1]முன்னர்முன்னே, முன்னேமுன்னே. [2]உதவத்தக்க, உணர்தற்கொத்த. [3]செல்லார். [4]தோன்றக், தோன்றிக். [5]குருதி. [6]வெள்ளக் கொள்ளத்து. (உகூகூச)

கo.—தேடும் விபீஷணன் அநுமானைக் காணுதல்.

வாய்மடித் திரண்டு கையு முறுக்கித்தன் வயிரச் செங்கண்
தீயுகக் கனகக் குன்றிற் [1]றிரண்டதோண் மழையைத் தீண்ட
ஆயிர கோடி யானைப் பெரும்பிணத் தமளி [2]மேலான்
காய்சினத் தனும னென்னுங் கடல்[3]கடந் தானைக் கண்டான்.

(இ - ள்) வாயைமடித்துக்கொண்டும் இரண்டுகைகளையும் முறுக்கிக் கொண்டும், (தன்னுடைய) வயிரம் [பகைமை] தோன்றுஞ் செங்கண்ணிலி ருந்து நெருப்புப்பொறிபறக்க, மேருமலையைப்போல்திரண்ட தோள் மேக மண்டலத்தை யளாவுமாறு, ஆயிரகோடியானைகளின் மிக்கபிணங்களாகிய படுக்கையின்மேலிருப்பவனும், காய்கின்ற சினத்தைக்கொண்ட அநுமனென் கிற கடல்கடந்தவனைவீரனைக் கண்டான், (விபீஷணன்); (எ-று.)—கடல் கடந்தான் - இப்போது நேர்ந்துள்ள துக்கசாகரத்தைக் கடத்தற்குஉரியவ னென்ற கருத்துந் தோன்றும். பி-ம்:—[1]திரண்டதோர்மழையிற்றிரண்ட. [2]மேலாக். [3]கிடந்தானைக். (உகூகூரு)

கக.—விபீஷணன் அநுமானது உடலம்புகளைக்களைந்து அவனுடைய களைப்பைப் போக்குதல்.

கண்டுதன் கண்க ளூடு மழையெனக் கலுழி [1]கால
உண்டுயி [2]ரென்ப துன்னி யுடற்கணை யொன்றொன் றாக
[3]விண்டநீர்ப் புண்ணி னின்று [4]மெல்லெனா வாங்கிக் கையாற்
கொண்டனீர் [5]கொணர்ந்து [6]கோல முகத்தினைக் குளிரச் செய்தான்.

(இ-ள்.) (விபீஷணன்,அநுமானைக்)கண்டு தன்கண்களின்வழியாக மழை போலக் (கண்ணீர்)வெள்ளம் பெருக, (இவனுக்கு) உயிருள்ளதென்றுகருதி வெளிப்படுகின்ற குருதிநீரைக்கொண்ட புண்ணினின்று மெல்ல[நோவாமல்]

(அவனுடைய) உடலிற் பொருந்திய கணைகளை ஒவ்வொன்றாகக்கையால் வாங்கி மேகத்தின்நீரைக்கொணர்ந்து அழகியமுகத்தின்மேல்தெளித்துக் குளிருமாறு [களைப்புநீங்குமாறு] செய்தான்; (எ - று.)—பி-ம்:—1சோர, வார. 2என்ன, 3விண்டுதிர்புண்ணினின்று, விண்டுமேல்வைரப்புண்ணின். 4மெல்லெனவிரகின்வாங்கிக், மெல்லெனவிரைவின்வாங்கிக், விரகினின்வாங் கிவேந்தன். 5முகந்து. 6பல்கால், வீரன். (உசுசுசு)

கஉ.—அநுமான் களைநீங்கிப் பிரஜ்ஞைபெறுதல்.

உயிர்ப்புமுன் னுதித்த பின்ன ரூரோமங்கள் 1சிலிர்ப்ப வூடு
வியர்ப்2புள தாகக் கண்கள் 3விழித்தன மேனி 4மெல்லப்
பெயர்த்துவாய் புனல்வந் தூற விக்கலும் 5பிறந்த தாக
அயர்த்தில 6னிராம நாமம் வாழ்த்தின னமர ரார்த்தார்.

(இ - ள்.) உயிர்ப்பு முன்னே தோன்றியபின்பு மயிர்கள்சிலிர்க்க, இடையே (களைநீங்குதலின் அடையாளமாக) வெயர்வைநீர் தோன்றியதாக, கண்களும் விழித்தலை யடைந்தன; (அப்போது தன்)உடம்பை மெல்லப் பெயர்த்து வாயில்நீர்வந்துஊற விக்கலும் தோன்றியதாக மூர்ச்சையற்றவனாய், இராம நாமத்தை (அவ்வநுமான்) வாழ்த்தினான்: (அதுகண்ட) தேவர் ஆரவாரித்தார்கள்; (எ - று.)—அயர்த்திலன்-மறவாதவனாயெனினுமாம். பி-ம்:—1சிலிர்க்க வூறி, சிலிர்ப்பவூடு, சிலிர்ப்பவாறி. 2உள. 3விழித்தனன். 4என்னப். 5பிறந்த. 6இராமனாமம். (உசுசுஎ)

கக.—இராமனை விசாரித்தறிந்து அநுமான் தொழுதல்.

அழுகையோ டுவகை யுற்ற வீடண னூர்வங் கூரத்
தழுவின னவனைத் தானு மன்பொடு 1தழுவித் தக்கோய்
2வழுவில னன்றே 3வள்ள லென்றனன் 4வலிய னென்றான்
தொழுதன னுலக 5மூன்றுந் தலையின்மேற் 6கொள்ளுந் தூயான்.

(இ - ள்.) அழுகையுடனே உவகையையு மடைந்த விபீஷணன் அன்பு மிக அந்தஅநுமானைத் தழுவினான்: (அநுமான்) தானும் அந்தவிபீஷணனைத் தழுவி, 'பெரியோனே! ஸ்ரீராமப்பிரபு தீங்கில்லாதுஉள்ளானல்லவா?' என்று வினவினான்: (அதற்கு விபீஷணன்), 'க்ஷேமமாயுள்ளான்' என்று விடைகூறினான்: உலகம்மூன்றினும் சிரசின்மேற்கொள்ளத்தக்க தூய்மைவாய்ந்தவனான அநுமான், (அவ்விராமபிரானைத் திக்குநோக்கித்) தொழுதான்; (எ - று.)—பி-ம்:—1தழுவிக்கொண்டான். 2வழுவினன். 3அண்ணல். 4வலியென். 5எல்லாம். 6சுமக்குந்தாளான், கொள்ளுந்தாளான், கொள்ளுந்தோளான்.

கச.—விபீஷணனால் ஸ்ரீராமனுடைய நிலையை யறிந்தபின் அநுமான் சாம்பவானை விசாரித்தல்.

அன்புதன் றம்பி 1மேலாத் தறிவினை மயக்க வையன்
2துன்பொடுந் துயில னானு 3னுணர்வினித் தொடர்ந்த 4பின்னே
என் 5புகுந் தெய்து மென்ப 6தறிகில 7மென்ற லோடுந்
தன்பெருந் 8தன்மைக் கொத்த 9சாம்பனைத் தலைய னென்றான்.

(இ - ள்.) அன்பு தன் தம்பியின்மீது பிணைத்தலால் அறிவினை மயக்க, ஸ்ரீராமன் துன்பத்துடனே துயிலையுடையவனானான்: இனி உணர்வு வந்த பின்பு என்ன வந்துநேரிடுமென்பதை அறியேமென்று (மீண்டு விபீஷணன்) கூறியவுடனே, 'தன்னுடைய பெருந்தன்மைக்கு ஏற்றவனான சாம்பவான் எவ்விடத்துள்ளான்?' என்று வினவினான்; (எ - று.)

அநுமானது தகைமை சாம்பவானாலேயே விளங்குதலால், 'தன்பெருந் தன்மைக்கொத்த சாம்பவன்' என்றது. அநுமான் சோர்ந்துள்ளநிலையில் அவனுடைய திறனைச்சொல்லிக் கடல்கடக்குமாறு அவனைத் தூண்டிவிட்டதும், மருத்துமலையைக்கொணருமாறு இப்போது அவனைத் தூண்டிவிடுவதுஞ் செய்து அவ்வநுமனுடைய பெருமையைச் சாம்பவான் வெளிப்படுத்துவது காண்க. ஆத்து = யாத்து. பி-ம்:—1மேலாய், மேல்வைத்து, மேலே, மேலொத்து. 2துன்புறத், துன்பினன், துன்பவன், பின்பவன். 3உணர்வினை, உணர்வினில். 4பின்னர். 5புகுந்தேயும். 6அறிகிலேன். 7என்றபோழ்து. 8தகைமைக்கு. 9சாம்பனே தலைவன், சாம்பனெத்தலத்தன், சாம்பனெத்தகையன். (உ௬௬௯)

௧௫.—விபீஷணன் சாம்பவானைப்பற்றி அறிந்திலேனென்ன, அநுமான் 'அவனுக்குச் சாவின்மையால் அவனை நாடிக் கண்டுபிடிப்பேனெனல்.

அறிந்தில னவனை 1யாண்டுங் கண்டில 2னாவி யாக்கை
3பிறிந்தில னுளனென் றென்றுந் தெரிந்திலன் பெயர்ந்தே னென்று
செறிந்ததார் நிருதர் வேந்த னுரைசெயக் காலின் 4செம்மல்
இறந்திற 5மவனுக் கின்றா லேடுது மேகி யென்றான்.

(இ - ள்.) 'அந்தச்சாம்பவானைப்பற்றி (யானொன்றும்) அறிந்திலேன்: (அவனை) யாண்டும் காணவில்லை; (அவன்) உடலைவிட்டு உயிர் பிரிந்துள்ளானோ? (அன்றி உயிருடன்) உள்ளானோ?' என்று 'ஒன்றும் தெரியாதவனாகவே வந்துள்ளேன்' என்று நெருங்கிய மாலையையணிந்த அரக்கர்தலைவனான விபீஷணன் சொல்ல, வாயுபுத்திரனான அநுமான் 'அவனுக்குச் சாகுந்தன்மை இல்லை; (ஆகையால்), சென்று (அவனைத்) தேடுவோம்' என்று கூறினான்; (எ - று.)—பி-ம்:—1யானும். 2ஆவியாதும். 3பிறிந்துளதிலதென்று. 4தோன்றல். 5அவனுக்குண்டோ, அவனுக்கில்லை. (உ௬௭௦)

௧௬.—அநுமான் 'அந்தச்சாம்பவானைக் கண்டால் பிழைப்பிக்கும் உபாயம் கூறுவான்' என்ன, இருவரும் சாம்பவானைச் சேர்தல்.

அன்னவன் றன்னைக் கண்டா 1லாணையே 2யரக்கர்க் கெல்லாம்
மன்னவ 3நம்மை மீட்டு வாழ்விக்கு 4முபாயம் வல்லன்
என்னலு 5முய்ந்தோ மைய வேகுதும் விரைவி 6னென்னாச்
7சின்னெறி யிருளிற் சென்றார் 8சாம்பனை விரைவிற் சேர்ந்தார்.

(இ-ள்.)(பின்னும் அநுமான் விபீஷணனை நோக்கி),—'அரக்கர்கட்கெல்லாம் மன்னவனே! அந்தச்சாம்பவானைக் கண்டால், சத்தியமாக நம்மை (இத்துயரத்தினின்று) மீளச்செய்து வாழ்விக்கும் உபாயத்தை(ச் சொல்ல)வல்லான்' என்று சொன்னவுடனே, 'ஐயனே! (அப்படியானால் நாம்)உய்ந்தோம்:

விரைவிலே(அவனிடம்) செல்வோம்' என்று (விபீஷணன்)சொல்ல, (இருவ ரும்), அவ்விரவில்தானே சிறிதுதூரம்போய்ச் சாம்பனை விரைவிற் சேர்ந்தார்; (எ-று.)—இரண்டாமடி'மன்னவன்றனிமையெல்லாம் வாழ்விக்கும் வாயம்வல் லோன்' என்று ஒருபிரதியிலுள்ளது. பி-ம்:—[1]ஆணையவ், ஆணைய. [2]அரக்கர்க் கோலம். [3]நம்மையெல்லாம், நம்மைமீண்டு, எம்மையீண்டு. [4]உறுதி. [5]உவந் தோன், உயர்ந்தோம். [6]என்றான். [7]மின்னிறவொளியிற்சென்றார். [8]சாம்பனை விரைவிற்கண்டார், சாம்பனைவிதியிற்சேர்ந்தார். (உகூஎக)

கள.—தான் மிகவருந்தியிருப்பினும் சாம்பவான் இவ்விருவீரரின் வருகையை யறிதல்.

எரிகின்ற மூப்பி னாலு மேவுண்ட [1]நோவி னாலும்
அரிகின்ற துன்பத் தாலு மாருயிர்ப் படங்கி [2]யொன்றுந்
[3]தெரிகின்ற தில்லா [4]மம்மர்ச் சிந்தைய [5]னெனினும் [6]வீரர்
வருகின்ற சுவட்டை [7]யோர்ந்தான் [8]செவிகளால் வயிரத் தோளான்.

(இ - ள்.) மிகுகின்ற கிழத்தன்மையினாலும், அம்புபொத்தியதனாலான நோவினாலும்(மனத்தை)ஈர்கின்ற துன்பத்தினாலும்,அரியமூச்சு அடங்கி ஒன் றும் அறியமாட்டாத மயக்கங்கொண்ட மனத்தையுடையவனாயிருந்தபோதி லும், வயிரம்போலுறுதியானதோள்களையுடையனான சாம்பவான், வீரரிருவர் வருகின்ற அடையாளத்தைச் செவிகளினா லறிந்தான்; (எ - று.)

அநுமானும் விபீஷணனும் வருகின்ற ஒலி சாம்பவான் செவியிற் பட வே வீரர் வருகின்றாரென்று அன்னவன் உணர்ந்தானென்க. பி-ம்:—[1]புண் ணினாலும், ஓய்வினாலும். [2]யாதும். [3]தெரிகின்றதில்லை. [4]அம்மா, மற்றைச். [5]எனும். [6]செல்வர், சேர்வார். [7]ஏற்றான், ஓர்த்தான். [8]செவியினால். (உகூஎஉ)

கஅ.—யாவர் வருகின்றாரென்று சாம்பவான் நினைப்பிடுதல்.

அரக்கனோ வென்னை யாளு மண்ணலோ வனுமன் றானோ
இரக்கமுற் [1]றருள வந்த தேவரோ முனிவ ரேயோ
வரக்கட வார்க [2]ளல்லர் மாற்றலர் [3]மலைந்து போனார்
புரக்க[4]வுள் ளாரே யென்ன [5]நினைந்தனன் [6]பொருமந் தீர்ந்தான்.

(இ - ள்.) (வருபவன், விபீஷணனென்ற) அரக்கனோ? (அன்றி), என்னையாள்பவனான ஸ்ரீராமனோ? (அல்லாக்கால்), அநுமன்றானோ? (அன் றேல்),இரக்கங்கொண்டுஅருள்புரியுமாறுவந்த தேவர்களோ?(அல்லது), முனி வர்தாமோ?(இரவில்வரக்கூடிய நமது)பகைவர் போர்செய்து(வென்று)போய் விட்டார்கள்:(ஆதலால் அவர்கள் இப்போது)வருதற்குஉரியவரல்லர்:(ஆகவே, நம்மைப்)பாதுகாக்கவுள்ளவரே (வருபவர்)என்றுதுணிந்து மனத்துயரந் தீர்ந் தான்; (எ - று.)---பி-ம்:—[1]அருளி, அருளின், ஆள. [2]எல்லாமாற்றலால்,எல் லின்மாற்றலர், அல்லர்மாற்றவர். [3]மதிந்து. [4]உள்ளாரோவென்னக். [5]கருதி னன். [6]பொம்மல். (உகூஎ௩)

௧௯.—அயல்வந்துநின்றாரை சாம்பவான் வினவியறிதல்.

வந்[1]தய னின்று குன்றின் [2]வார்ந்துவீ ழருவி மானச்
சிந்திய [3]கண்ணி னீர [4]ரேங்குவார் தம்மைத் [5]தேற்றி
அந்தமில் குணத்தி ரீ[6]யாவி ரணுகினி [7]ரென்ற வீனய
உய்ந்தன முய்ந்தோ [8]மென்ற வீடண னுரையைக் கேட்டான்.

(இ - ள்.) வந்து (அந்தச்சாம்பவானுடைய) பக்கத்திலேநின்று, மலையிலிருந்து பெருகிவீழ்கின்ற அருவியையொப்பச் சிந்துகின்ற கண்ணீரையுடையவரும் ஏங்குபவருமாகிய அவர்களைத் தேற்றி, (சாம்பவான்), 'எல்லையற்ற குணத்தையுடையவரே! வந்துசேர்ந்தநீவிர் யாவீர்?' என்று வினவினான்: 'ஐயா! உய்ந்தோம் உய்ந்தோம்' என்ற விபீஷணனுடைய வார்த்தையைச் செவியேற்றான்,(சாம்பவான்); (எ - று.)—கண்களால் விழித்துப்பார்க்கவும் முடியாமையால், 'அணுகினிர் யாவிர்' என்றான். பி-ம்:—[1]அவணின்று, அயனின்றார்.[2]வந்து.[3]கண்ணீரெங்கும்,கண்ணினீரின்,கண்ணினின்றார்.[4]எங்குவான்றன்னை.[5]நோக்கி.[6]யாவர்.[7]என்கின்றானை. [8]என்னு, என்று. (உ௬௭௪)

உ०.—அநுமான் வந்துள்ளமையையறிந்து சாம்பவான் 'இனி யாவரும் உய்ந்தேவிட்டோம்' எனல்.

[1]மற்றய [2]னின்றா னியாவ னென்னமா ருதியும் வாழி
கொற்றவ னுமனின்றேன் றொழுதன னென்று கூற
[3]இற்றில [4]மைய வெல்லோ மெழுந்தன மெழுந்தோ மென்னு
உற்றபே ருவகை யாலே [5]யோங்கினா னூற்ற முற்றான்.

(இ - ள்.) பின்பு 'அயலிலே நின்றவன் யாவன்?' என்று (மீண்டும் சாம்பவன்) வினவ, அநுமானும் 'கொற்றவனே! வாழி: அநுமன் நின்றுள்ளேன்: தொழுதேன்' என்று சொல்ல,(அதுகேட்டு)வலிமைபெற்றவனான சாம்பவான், '(நாம்)இறந்திட்டோமல்லோம்:ஐயனே!எல்லோமும் திண்ணமாக உயிர்பெற்றெழுந்துவிட்டோம்,எழுந்துவிட்டோம்'என்று சொல்லிப் பொருந்திய பெருமகிழ்ச்சியினால் மிக்கவனானான்; (எ-று.)—பி-ம்:—[1]மற்றவன். [2]அயலேநின்றார்யாரென, நின்றார்யாரென்ன. [3]இற்றனம், இற்றில.[4]வையம்வெல்வோம். [5]ஓங்கினர். (உ௬௭௫)

உ௧.—சாம்பவான் 'ஸ்ரீராமன் என்னசெய்துகொண்டுள்ளான்?' என்று வினவ,அநுமான் துன்பத்தினால்அன்னான்துயில்கின்றனென்றுணர்த்துதல்.

விரிஞ்சன்[1]வெம் [2]படையென் றாலும் வேதத்தி[3]னுட்பங் கூறும்
[4]அரிந்தமன் றன்னை யொன்று [5]மாற்றல தென்னு மாற்றல்
தெரிந்தனன் முன்னே [6]யன்னான் [7]செய்ததென் [8]றெரித்தி யென்றான்
பெருந்தகை துன்ப [9]வெள்ளத் துயிலுளான் [10]பெரும வென்றான்.

'(இ - ள்.) பிரமதேவனுடைய கொடிய அஸ்திரமே (விடுக்கப்பட்டது) ஆனாலும், வேதத்தினுடைய நுண்ணியபொருளாகக் கூறப்படுகின்ற சத்துருக்களையடக்கவல்லவனாகிய ஸ்ரீராமனை ஒன்றுஞ்செய்கிலதென்ற (மனத்துக்கு) வலிமையைத்தரக்கூடியவிஷயத்தை முன்னமே யறிந்துள்ளேன்: அப்பிரான் செய்த செயல் யாது? தெரிவிப்பாய்' என்று வினவினான், (சாம்ப

வான்);(அதற்கு அநுமான், சாம்பவானைநோக்கி), 'பெருமையோனே! பெருந் தகுதியுள்ளவனான ஸ்ரீராமன் துன்பவெள்ளத்திலுற்றோன்றிய துயிலுக்கு உட்பட்டுள்ளான்' என்று தெரிவித்தான்; (எ-று.)—பி-ம்:—1தன். 2படையினுலே. 3வேதமன்ன. 4வருஞ்சமர். 5மாற்றலரென்னுமாற்றல், ஆற்றலவரிகிலாமால். 6என்னச். 7செய்தது.8தெரிதி. 9வெள்ளத்திடை. 10பெருமையென்றான். (உகூஎகூ)

உஉ.—தம்பியினிடம் பேரன்பினனுதலால் ஸ்ரீராமன் சோகந்தெளிவது அருமையெனக்கூறி, சாம்பவான்,'விரைவில் யாவரையும்பிழைப்பிக்கும் மருந்து கோணர்க' எனல்.

அன்னவன் 1றன்னைக் கண்டா 2லாற்றுமோ வாக்கை வேறே
இன்னுயி ரொன்றே மூலத் திருவரு மொருவ ரேயால்
3இன்னது கிடப்பத் 4தாழா விங்கினி யிமைப்பின் முன்னர்க்
5கொன்னியல் வயிரத் தோளாய் மருந்துபோய்க் கொணர்தி யென்றான்.

(இ-ள்.) அந்தஇலக்குமணனை (உயிரொடுங்கிவீழ்ந்திருக்கக்) கண்டால், (ஸ்ரீராமன் உயிர்)தாங்கவல்லனோ? அடியேபிடித்து(ஆராய்ந்துபார்த்தால்)இருவரும் ஒருவரே: (இது திண்ணம்:) (அவ்விருவர்க்கும்) உடம்பு வேறே: (ஆயினும்) உயிர்ஒன்றேயாம்: (பகைவர்க்கு) அச்சந்தோன்றக்காரணமான வயிரம்போன்ற தோள்களையுடையவனே!(இத்தன்மை)இவ்வாறுஇருப்பதால், இனி இங்குத் தாமதியாமல் இமைப்பொழுதிற்குமுன்னமேபோய் (யாவரையும் பிழைப்பிக்கவல்ல)மருந்தைக் கொணர்வாய்' என்றான்,(சாம்பவான்); (எ-று.) பி-ம்:---1தன்மை. 2ஆற்றுமே. 3என்னது, இங்கிலே.4தாழ்வதினியில்லை,தாழாவினியில்லை, தாழாதினியில்லை, தாழினினியிலை. 5பொன். (உகூஎஎ)

உந.—சாம்பவான் 'நீ தாழாதுமருந்துகோணர்ந்தால் யாவருந் பிழைப்பார்' எனல்.

எழுபது வெள்ளத் தோரு மிராமனு மிளைய கோவும்
1முழுதுமிவ் வுலக மூன்று நல்லற மூர்த்தி தானும்
2வழுவலின் மறையு முன்னால் வாழ்ந்தன வாகு மைந்த
பொழுதிறை தாழா 3தென்சொன் னெறிதரக் கடிது 4போதி.

இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) மைந்தனே! சிறிதுபொழுதும் தாமதியாமல் என்சொல்லே வழிகாட்டியாக விரைந்துபோவாய்; (போனால்), எழுபதுவெள்ளஞ்சேனைகளும் இராமனும் இளையபெருமாளும் முழுதாகிய இந்தவுலகம்மூன்றும் நல்ல தருமதேவதையும் குற்றமற்றவேதங்களும் உன்னால்வாழ்ந்தனவாகும்;(எ-று.) —பி-ம்:—1முழுவதிவ். 2வழுவிலா. 3என்சொற்றேறுதி. 4போனீ. (உகூஎஅ)

வேறு.

உச.—இதுமுதல் மூன்றுகவிகள்-மருத்துமலையுள்ளஇடத்துக்குச் சாம்பவான் வழிகூறுதலைத் தெரிவிக்கும்.

பின்புளதிக் கடலென்னப் 1பெயர்ந்ததற்பி னியோசனைகள்
2பேச நின்ற, ஒன்பதினா யிரங்கடந்தா லிமயமெனுங் குலவரையை

யுறுதியுற்றால், தன்பெருமை யோரிரண்டா யிர[3]முளதி யோசனையது பின் றவிரப் போனால், முன்புளயோ சனை[4]யெல்லா [5]முற்றினைபொற் கூடஞ்சென் றுறுதி [6]மொய்ம்ப.

(இ - ள்.) வலிமையுள்ளவனே! இந்தக்காண்கின்றகடல் பின்புளதென் னும்படி சென்றபிறகு பேசப்படுகின்ற ஒன்பதினாயிரம்யோசனை கடந்தால் இமயமெனுங் குலபருவதத்தை யடைவாய்; அடைந்தால் (அது) தன்விஸ்தீர் ணம் இரண்டாயிரம்யோசனையுள்ளது: அதுபின்தவிருமாறு முன்புள்ள ஓசனை யெல்லாம் (கடந்து)போனால், கடக்கவேண்டிய வழியைக்கடந்து ஏமகூடத் தைச் சென்றுசேருவாய்; (எ - று.)—பி-ம்:—[1]பேர்ந்ததற்பின். [2]பேசாநின்ற. [3]உளயோசனையது. [4]கடந்து. [5]முற்றின. [6]முன்ப. (உகூஎக)

உ௫. [1]இம்மலைக்கு மொன்பதினா யிர[2]முளதா வியோசனையி னிடத மென்னுஞ், [3]செம்மலைக்கு முளவாய [4]வத்தனையோ சனைகடந்தாற் சென்று காண்டி, எம்மலைக்கும் [5]பெரிதாய வடமலையை யம்மலையி னகல மெண்ணின், மொய்ம்[6]மலைந்த திண்டோளாய் முப்பத்தீ ராயிரமி யோ சனையின் முற்றும்.

(இ - ள்.) இவ்வேமகூடமலைக்கு (அப்பால்) ஒன்பதினாயிரம் யோசனை தூரத்தில் நிடதமென்னுஞ் செவ்வியமலையுளது: அம்மலைக்கும் அவ்வளவு தூரம் [ஒன்பதினாயிரம் யோசனைதூரம்] கடந்துசென்றால் எம்மலைக்கும்பெரி தாய மேருமலையைக் காண்பாய்: அம்மலையின் பரப்பை யெண்ணினால், வலி மையோடுபொருகின்ற திண்ணியதோள்களையுடையவனே! முப்பதீராயிரம் யோசனை முற்றுப்பெற்றிருக்கும்; (எ - று.)—பி-ம்:—[1]அம். [2]உளவோசனை யதினினிடதமென்னும், உளதாவோசனையிலிடபமென்னும், உளவோசனைய வனிநிடதமென்னும். [3]செம்மலையம்மலைக்குமுள, செம்மலைக்குமப்பாலும். [4]அத் துணையதுணை, அத்தகையவது. [5]அரசாய...மலையை, பெரிதாகியவடமலை. [6]மலைந்ததிரள், மலையின்திரள், மலையதிண். (உகூஅ௦)

உகூ. மேருவினைக் கடந்தப்பா[1]லொன்பதினா யிரமுளவோ சனை யை விட்டால், [2]நேரணுகு நீலகிரி தானிரண்டா யிரமுளயோ சனை யி னிற்கும், மாருதிமற் றதற்கப்பா லியோசனை[3]நா லாயிரத்தின் [4]மரு ந்து வைகுங், கார்வரையைக் காணுதிமற் றது[5]காண வித்[6]துயர்க்குக் கரையுங் காண்டி.

(இ - ள்.) மேருவைக்கடந்து அப்பால் ஒன்பதினாயிரம்யோசனைதூரத் தைக் கடந்தால் நேரேயணுகுகின்ற நீலகிரியென்பது தான் இரண்டாயிரம் யோசனைதூரத்தில் இருக்கும்; மாருதியே! அதற்குஅப்பால் நாலாயிரம் யோ சனையில் மருந்துகள் தங்கியிருக்கப்பெற்ற கரியமலையைக் காண்பாய்; அத னைக் காணவே, பின்பு இப்போது நமக்குநேர்ந்திருக்குந் துயருக்குக் கரையை யுங் காண்பாய்; (எ - று.)—பி-ம்:—[1]எண்பதினாயிரம். [2]நேரணுகி. [3]நாலாயி ரத்து. [4]மருத்து. [5]காணிவித். [6]துயரங். (உகூஅக)

உஎ.—சாம்பவான் அங்குள்ள மருந்துகள்இன்னவையென்பதை அடையாளத்தோடு அநுமானுக்குக் கூறுதல்.

மாண்டாரை யுய்விக்கு மருந்[1]தொன்று மெய்வேறு வகிர்க ளாகக், கிண்டாலும் [2]பொருந்துவிப்ப தொருமருந்தும் படைக்கலங்கள் [3]கிளர்ப்ப தொன்றும், மீண்டேயுந் [4]தம்முருவே யருளுவதோர் மெய்ம்மருந்து [5]முளநீ வீர, ஆண்டேகிக் கொணர்தியென வடையாளத் தொடுமுரைத்தா னறிவின் மிக்கான்.

(இ - ள்.) அறிவின்மிக்கவனுன சாம்பவான்,—மாண்டவரையுய்விக்கும் மருந்து ஒன்றும், உடம்பு வெவ்வேறுபிளவுகளாகப்பிளந்திட்டாலும் பொருந்தச்செய்வதொரு மருந்தும், (பொத்திய) படைக்கலங்களை வெளிப்படுத்துவதொருமருந்தும், (உருவம்மாறிவிட்டாலும்)மீண்டும் தம்முருவையேயடையச்செய்யவல்ல மெய்ம்மைமருந்தொன்றும் உள்ளன: வீரனே! நீ அங்கே போய் (மருந்தைக்)கொணர்வாயென்று அடையாளத்தோடும் (அநுமானுக்குக்) கூறினன்; (எ - று.)

மாண்டாரை யுய்விக்கும் மருந்து-ஸஞ்ஜீவகரணியென்றும், வேறுவகிர்களான உடம்பைப் பொருந்துவிக்கும் மருந்து - ஸந்தாநகரணியென்றும், படைக்கலங்கள் கிளர்ப்பது-விஶல்யகரணியென்றும்; தம்முருவை யருள்வது-ஸாவர்ண்யகரணி யென்றும் சொல்லப்படும். பி-ம்:—[1]ஒன்றிவ்வுடல். [2]பொருந்துவிக்கும். [3]கிளைப்பதொன்றும். [4]தம்முருவை. [5]உளது. (உகூஅஉ)

உஅ.—அம்மருந்துகள் தோன்றியவிதமும் ஜாம்பவான்தான் அவற்றைஅறிந்தவிதமும்.

இன்னமருந் தொருநான்கும் பயோததியைக் கலக்கிய[1]ஞான் றெழுந்த தேவர், [2]முன்னியமைத் தனர்மறைக்கு மெட்டாத பரஞ்சுடரிவ் வுலக [3]மூன்றும், தன்னிருதா ளுள்ளடக்கிப் பொலிபோழ்தின் யான்முரசஞ் சாற்றும் [4]வேலை, [5]அன்னவைகண் [6]டியாவுதலுந் தொன்முனிவ [7]ரவற்றியலெற் கறிவித் தாரால்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இப்படிப்பட்ட நான்குமருந்துகளும் தேவர்கள் பாற்கடலைக் கடைந்தபோது தோன்றியன: (அத்தேவர் அவைகளை)ஆராய்ந்து பத்திரமாக வைத்துள்ளார்; வேதத்துக்குமெட்டாத பரஞ்சுடரான திருமால் இவ்வுலக மூன்றையும் தன்னுடைய இரண்டுதாளுக்குள்ளடக்கிப் பொலிந்த காலத்தில் யான் வெற்றிமுரசை யறைகையில், அந்த ஔஷதிகளைக் கண்டு வினவுதலும் பழமையானமுனிவர் அவைகளின் தன்மையை எனக்குத் தெரிவித்தார்கள்; (எ-று.)—இச்செய்யுள் சிலபிரதியில் இல்லை. பி-ம்:—[1]நாள். [2]உன்னியமைத் தொரு, உன்னியமைந்தன. [3]யாவும். [4]அந்நாள். [5]அன்னது. [6]உரைத்தலும். [7]அதன்திறம். (உகூஅங)

உகூ.—சாம்பவான் 'அம்மருந்துகளைக்கொண்டு எம்மைக் காக்க' எனல்.

இம்மருந்து [1]காத்துறைவ [2]வெண்ணிலவாற் றெய்வங்க [3]ளிரங்கா யார்க்கும், நெய்ம்மருக்கு படாகில்லா நெடுநேமிப் படையுமவற்

றுடனே [4]நிற்கும்,பொய்ம்[5]மருங்கி னில்லாதாய் புரிகின்ற காரியத்தின் [6]பொருளை நோக்கிக், கைம்மருந்து கொணர்ந்தெம்மைக் [7]காவாயே லப்புறம்போய்க் [8]காக்கு மென்றான்.

(இ - ள்.) இந்தமருந்துகளைக் காத்துக்கொண்டிருப்பவை எண்ணில்லாத தெய்வங்களாகும்: நெய்பூசியதும் எவரிடத்தும் இரக்கங்கொள்ளாமல் மருங்கேசெல்வதற்கும் முடியாததுமான கொடியசக்கரப்படையும் அத்தெய்வங்களுடனே (பாதுகாவலாய்)நிற்கும்; பொய்யின்சமீபத்திலும் நில்லாதவனே!செய்யப்போகின்றகாரியத்தின் பயனைப் பார்த்துக் கையில்தானே அந்த மருந்துகளைக்கொணர்ந்து (காவாய்: அங்ஙனம்) எம்மைக் காவாயாயின், அப்புறம் எல்லாச்சேனைகளும் அழிந்துவிடும்என்றான்; (எ - று.)

'கைம்மருங்குதொடர்ந்துன்னைக் காவாயென்றப்புறம்போய்க்காக்குமென்றான்' என்று நான்காமடி சிலபிரதியிலுள்ளது.பி-ம்:—[1]காத்துறையுங்,காத்துறைவது, கரந்துறையுங். [2]தெய்வங்க ளெண்ணிலவால். [3]இரங்கி.[4]காக்கும். [5]மருங்குமில்லாதாய். [6]பொதுமை. [7]காயாவாம். [8]காக்கும். (உசுஅச)

## ருo.—அநுமான் மருந்தைக்கொணர்வேனென்று ஒருப்பட்டு அங்குச்செல்லப் பெருவடிவங்கொள்ளுதல்.

ஈங்கிதுவே பணியாகி னிறந்தாரும் பிறந்தாரே யெங்[1]கோக்கியாதுந், தீங்கிடையூ றெய்தாமற் றெருட்டுதிர்போ யெனச்சொல்லி [2]யவரைத்[3]தீர்ந்தான், ஓங்கினன்வா னெடுமுகட்டை [4]யுற்றனன்பொற் றோளிரண்டுந் திசையோ[5]டொக்க, வீங்கினவா காசத்தை விழுங்கினனே யெனவளர்ந்தான் வேதம் போல்வான்.

(இ-ள்.) 'இப்போது இச்செயலே (யான்செய்யவேண்டிய) ஏவலாயின், இறந்தோரெல்லாம் (மீண்டும்) பிறந்தவராய்விடுவர்: எமதுதலைவனாகிய ஸ்ரீராமனுக்குத தீங்கைத்தரும் தடை யாதும் நேரிடாதபடி போய்த் தேற்றரவு கூறுங்கள்என்றுசொல்லி அவர்களை நீங்கினவனாய், வேதம்போல்பவனான அநுமான், உயரவளர்ந்து வானத்துமேல்முகட்டை யுற்றனன்:(அவனுடைய) அழகிய தோள்களிரண்டும் திசையோடொப்ப வளர்ந்தன: ஆகாயத்தைவிழுங்கினன்போல(ப் பேருருவமெடுத்து)வளர்ந்தனன்; (எ-று.)--பி-ம்:—[1]கோற்கு. [2]அவனைத். [3]தீர்ந்தே. [4]உற்றன. [5]ஒப்ப, ஓங்கி. (உசுஅரு)

## ருக.—அநுமான்கொண்ட பெருருவத்தின் நிலை.

கோளோடு [1]தாரகைகள் கோத்[2]தமைத்தமணி யாரக் கோவை போன்ற, தோளோடு தோளகல மாயிரமியோ சனை[3]யெனவுஞ் சொல்ல வொண்ணு, தாளோடு தாள்பெயர்க்க விடமில[4]தா கியதிலங்கை தடக்கை வீச, [5]நீளோடு திசை[6]போதா விசைத்தெழுவா னுருவத்தி [7]னிலையீ தம்மா.

(இ - ள்.) கிரகங்களும் நட்சத்திரங்களும் (அந்தஅநுமானுக்குக்)கோத்து அமைத்த முத்துமணிகளாலியன்ற வடங்களை யொத்தன: தோளொடுதோளுக்குஉள்ளஅகலம் ஆயிரம்யோசனையெனவுஞ் சொல்லமுடியாது: [ஆயிரம்

யோசனையினும் மிக்கிருந்ததென்றவாறு]: (வைத்துள்ள) அடியோடு பெயர்த்து வேறோரடிவைக்க இலங்கையில் இடமில்லாமற் போயிற்று; பெரியகையை வீசுவதற்குநீளமாகஓடுகின்ற திசையே போதாவாம்: விரைந்துஎழுபவனுன அவ்வநுமானதுஉருவத்தின்நிலை இதுவாகும்; (எ-று.)—அம்மா - ஆச்சரியம்: உருவத்தின் பெருமையைவியந்து கூறியவாறு. பி-ம்:—1தாரகைநிலையின். 2அமைந்தமணிக்கோவைபோன்றுகொற்றத்.3அளவு; அகன்ற.4ஆகியவிலங்கை, ஆயினவிலங்கை. 5நீளோடத், நீளோடி, 6போத. 7நிலையது (உகூஅகூ)

## ௬உ.—அநுமான் விசைத்தெழும்போதைய வருணனை.

வால்1வளைத் துக் கைந்நிமிர்த்து வாயினையுஞ் சிறிதகல 2மடித்து மானக், காணிலத்தி னிடையூன்றி 3யுரம்விரித்துக் கழுத்தினையுஞ் 4சுருக்கிக் 5காட்டித், தோன்மயி6ர்க்குச் தளஞ்சிலிர்ப்ப விசைத்7தெழுந்தா னவ்விலங்கை துளங்கிச் சூழ்ந்த, வேலையிற்புக் கழுந்தியதோர் மரக்கலம்போற் 8றிரிந்தயா விசயத் தோளான்.

(இ - ள்.) வெற்றிதங்கியதோளையுடையவனுன அநுமான்,—வாலை வளைத்துக் கையையுயரத்தூக்கி வாயையுஞ் சிறிது அகலுமாறுமடித்துப் பெருமைபொருந்திய தாளை நிலத்திலூன்றி மார்பைவிரித்துக் கழுத்தினையுஞ்சுரக்கிக்காட்டி, உடற்றோலின்மீதுள்ள மயிர்ச்செறிவுகள் சிலிராநிற்க, நிலைகலங்கி(த் தன்னைச்)சுற்றிய கடலிற் புக்குஅழுந்தின ஒருமரக்கலம்போல அந்த இலங்கை திரிந்தயருமாறு விரைவுகொண்டெழுந்தான்; (எ - று.)—பி-ம்:— 1விசைத்து. 2வகுத்து, உருத்த. 3ஒருமித்துக், உரநெருக்கிக்,உரம்விசைத்துக். 4சுரித்து. 5துண்டி. 6கொந்தளம். 7எழுவான். 8சுரித்துலைய, திரிந்துலைய, சுரிந்துலைய. (உகூஅள)

## ௬௩.—அநுமான்சென்ற வேகத்தினல் விளைந்த நிகழ்ச்சி மூன்றுகவிகளாற் கூறப்படும்.

கிழிந்தனபா 1மழைக்குலங்கள்2கீண்டது3நீண் டகல்வேலை கிழக்குமேற்கும், பொழிந்தன4மீன் தொடர்ந்தெழுந்த பொருப்பினமுந் தருக்குலமும் பிறவும் 5பொங்கி, 6அழிந்தன7வா னவர்மான மாகாயத் 8திடையினிற்பே ரசனி யென்ன, விழுந்தனநீர்க் கடலழுந்த வேறினமேற் றினபோய்த் திசைக ளெல்லாம்.

(இ - ள்.) பெரிய மழைக்குலங்கள் கிழிந்தன;நீண்டுபரந்த கடல் பிளவுபட்டது; கிழக்கிலும் மேற்கிலும் நட்சத்திரங்கள் உதிர்ந்தன;பொருப்புக்கூட்டங்களும் மரக்கூட்டங்களும் பிறவும் கிளர்ந்து உடன்தொடர்ந்தெழுந்தன; ஆகாயத்தினிடையனவான வானவரின் விமானம் அழிந்தனவாய்ப் பெரிய இடிபோல நீர்க்கடலிலே அழுந்த விழுந்தனவாய்ப் (பிறகு)கரையேறின: (அதனல் கடல்நீர்) திசைகளையெல்லாம்போய்க் கீறுபடுத்தின; (எ - று.)— பி-ம்:—1மலை.2கீண்டன.3நீணெடுவேலை.4மீண்டெழுந்தபெரும்,பின்றொடர்ந்தெழுந்த. 5போக்கி. 6அழிந்தனர். 7வானவர்நகரம், ஆமானத்தேர். 8இடையே யோய், இடையினிற்போய், இடையனபோல். (உகூஅஅ)

௩௪. [1]பாய்ந்தனனங் கப்பொழுதே பருவரைக ளனைப்பலவும் [2]வடபா கத்துச், சாய்ந்தனபே ருடற்பிறந்த சண்ட[3]மா ருதம்வீசத் தாதை சால, ஓய்ந்தனனென் றுரைசெய்ய விசும்பூடு படர்கின்ற [4]னு ருவே கத்தாற், காய்ந்தனவே லைகண்[5]மேகங் கரிந்தனவெந் தெரிந்த பெருங் கான மெல்லாம்.

(இ - ள்.) அப்பொழுதே அங்குப் பாய்ந்தான்: பருத்தவரைகளெல்லா மும் பெரியஉடலிலிருந்து பிறந்த சண்டமாருதம் வீசுதலால், வடபாகத்துச் சாய்ந்தன: அவன் தந்தையான வாயுபகவானும் மிகவும்ஓய்ந்திட்டானென்று சொல்லுமாறுவிசும்பினிடையே செல்பவனை அநுமானுடைய மிக்கவேகத் தினல் சமுத்திரங்கள் வற்றின:மேகங்கள் கரிந்தன: பெரியகாடுகளெல்லாம் வெந்தெரிந்தன; (எ - று.)—உருவேகம்-ஊருவேகமுமாம்.வாயுவேகத்தினும் மிக்குள்ள வேகத்தை அநுமான் அப்போது கொண்டிருந்தன னென்பது 'தாதைசால ஓய்ந்தனனென்றுரைசெய்ய விசும்பூடுபடர்கின்றான்'என்பதன் கருத்து. இச்செய்யுள் "கடன்பின்னே" என்ற அடுத்தபாடற்குப் பின் சில பிரதிகளிலுள்ளது. பி-ம்:—[1]காய்ந்தனனப்பொழுதத்தே. [2]படரவார்த்து, படர்ந்துபாரிற். [3]மாருதவிசையிற்றாதைகாலை, மாருதவிசையிற்றாதைசால. [4]உ.று. [5]கனலுங்.

(உ௬அக)

௩௫. கடல்[1]பின்னே நிமிர்ந்தோடக் கான்முன்னே [2]கடிதோடக் காலிற் செல்வான், உடல்முன்னே [3]செலவுள்ளங் [4]கடைக்குழையாச் [5]செலச்செல்வா னுருவை நோக்கி, அடன்முன்னே தொடங்கியநா ளாழ்கடல்சூ ழிலங்கையெனு மரக்கர் [6]வாழுந், திடர்[7]முந்நீ ரிடைப்ப டுத்துப் பறித்தனனந் துயரென்றார் தேவ ரெல்லாம்.

(இ-ள்.)கடல்பின்னே நிமிர்ந்துசெல்லவும் கால்முன்னேவிரைந்துசெல் லவும் காற்றுப்போலவிரைந்துசெல்பவனும், உடல்முன்னேசெல்லவும் மனம் கடைக்கூழையாய்(ப் பின்னே) செல்லவும் செல்பவனுமான அநுமானுடைய உருவத்தைப் பார்த்து;தேவரெல்லாம்,-'(இவன்)முன்னே(தன்)வலிமையை(க் காட்ட)த் தொடங்கியபோதே ஆழ்ந்தகடல்சூழ்ந்த இலங்கையென்னும் அரக் கர் வாழ்கின்ற திட்டை(த் துயர்)க் கடலிலே வீழ்த்தி நந்துயரைப் பறித்தா னென்றார்; (எ - று.)

அநுமான் உருவத்தைத் திருமாலின்உருவமென்றே கருதி, இவன் முன்பு அரக்கரைக்கொன்று எஞ்சினரைத் துயர்க் கடலில்வீழ்த்தி நந்துயரந் தீர்த்தவ னென்றுகொண்டாடினர்க ளென்பதாம்.இனிச்சுந்தரகாண்டத்துத் தன்வலிமையை அநுமான்காட்டியதைக்கூறியதுமாம். திருமால் பூர்விகராட்ச சரைத் தொலைத்தமை முன்னரே கூறப்பட்டது. அநுமான்வானத்து எழும் போது தோன்றிய காற்று கடலைத் தள்ளிக்கொண்டுசெல்வதும், அவ்வநுமா னின்நடைக்குப் பின்னேயாயிற்றென்பது, முன்னடியிற்கூறிய பொருள். மனத்தினும் அவ்வநுமானுடையஉடல் விரைந்துசென்றதென்பது, இரண் டாமடியிற்கூறியபொருள். கடைக்குழை=கடைக்கூழை: பின்னணி: இறுதி.

வரிசை. பி-ம்:—1முன்னே...கால்பின்னே. 2தொடர்ந்தோடக்கடிதிற். 3செல்லுமுளம். 4கடைக்குழைவால். 5வான். 6வைகும். 7முந்நீரிடைப்படுத்துஞ்செல்வமலரேறெழுந்து, முந்நீர்க்கிடையெறிந்தான்முரிந்தது...என்றார், முந்நீர்க்கிடையறிந்தான்...என்றார், முன்னரிடைமறித்துப்பறித்திலன்...என்றார். ()

ஙகூ.—அநுமான் எழுந்த உயரத்தின் வருணனை.

மேகத்தின் பதங்கடந்து வெங்கதிருந் தண்கதிரும் 1விரைவிற்
செல்லும், மாகத்தி னெறிக்கப்பால் வானமீன் குலம்2வழங்கும் 3வரைப்பு நீங்கிப், போகத்தின் 4குறிதொடர்ந்தார் புகலிடங்கள் பிறபடப்
போய்ப் பூவின் வந்த, 5ஏகத்தந் தணனிருக்கை யினிச்சேய்த்தன்
றாமென்ன 6வெழுந்து சென்றான்.

(இ-ள்.) மேகமுள்ளதானத்தைக் கடந்து, உஷ்ணகிரணனான சூரியனும் குளிர்ந்தகிரணங்களையுடையவனான சந்திரனும் விரைந்துசெல்கின்ற வானவழிக்குஅப்பால் ஆகாயத்துநட்சத்திரங்கள் சஞ்சரிக்கின்ற (நட்சத்திரமண்டிலத்தின்)எல்லையினின்றுங்கடந்து,போகக்குறிகள்தொடர்ந்தவர்புகும் சுவர்க்கலோகத்தினிடங்களும் பிற்படப்போய், (நாபீ)கமலத்தில்தோன்றிய ஒருமூர்த்தியாகிய பிரமதேவனது இருப்பிடம் இனித் தூரமானதன்று என்னும்படி உயரவெழுந்துசென்றான், (அவ்வநுமான்); (எ - று.)—போகத்தைப்பெறக் குறித்து ஜ்யோதிஷ்டோமம்முதலிய யாகத்தைச்செய்தவர் சுவர்க்கத்தைப் பெறுவரென்பது, நூற்கொள்கை. பி-ம்:—1விரகிற். 2வழுவும், விளங்கும். 3வரம்புநீங்கி, வரம்பைநீங்கிப், வரையைவிட்டு. 4நெறிகடந்தார். 5வேதத்தனிருக்கையினிச்சேய்த்தன்று மென்னமிக. 6விரைந்து. (உசுகக)

ஙஎ.—அநுமான் வேகத்தைக்கண்டு மேலுலகத்தவர்வெவ்வேறு வகையாக ஊகித்துக்கூறுதலை இதுமுதல் மூன்றுகவிகள் தெரிவிக்கும்.

வானநாட் டுறைகின்றார் வயக்கலுழன் வல்1விசையான் மாயன்
வைகுந், தானநாட் 2டுறுகின்றா னென்றுரைத்தார் 3சிலர்சிலர்கள் 4விரிஞ்
சன் றான்றன், ஏனைநாட் டெழுகின்றா னென்றுரைத்தார் 3சிலர்சிலர்கள
ளீச 5னல்லாற், போனநாட் டிடைபோக 6வல்லனோ விவன்முக்கட்
புனித னென்றார்.

(இ - ள்.) வானநாட்டிலுறைபவர்களிற் சிலர் வலிமைபொருந்திய கருடன் மிக்கவிரைவையுடையவனாய்த் திருமால்வாழ்கின்ற தானமாகிய வைகுந்தநாட்டிற்குச்செல்கின்றானென்றுரைத்தார்; (வேறு)சிலர்கள்,பிரமனென்பவன்தான் தன்னுடைய மற்றொருநாடாகிய பிரமலோகத்துக்குச் செல்கின்றானென்றுரைத்தார்;(மற்றுஞ்)சிலர்,ஈசனுக இல்லாவிட்டால் வெகுதூரத்திலுள்ள மேலுலகத்துப் போகவல்லனோ? (ஆகையால்), இவன் திரிநேத்திரங்கொண்ட பரிசுத்தமூர்த்தியாகிய சிவபெருமானேயென்றார்; (எ - று.)—'ஏனைநாடு' என்றது - தான்படைத்த பூமண்டலமல்லாதவேறுலகுஎன்றபடி. பி-ம்:—1விசையின். 2உயர்ந்தான், எழுகின்றான். 3சிலர்கள்சிலர், சதுமறையோன். 4விரிஞ்சனென்றார்க்கு, விரிஞ்சன்றானே, விரிஞ்சனென்பான். 5அல்லார். 6வல்லரோ. (உசுகஉ)

௩அ. வேண்டுருவங் [1]கொண்டுவந்து விளையாடு கின்றான்மெய் வேதநான்குந், தீண்[2]டுருவ னல்லாத திருமாலே யிவனென்றார் தெரிய நோக்கிக், காண்டு[3]மென விமைப்பதன்முன் [4]கட்புலத்தைக் கடந்தகலு மின்னுங் காண்மின், மீண்டுவருந் தர[5]மல்லா வீட்டுலகம் புகுமென்றார் மென்மே லுள்ளார்.

(இ-ள்.) மேன்மேலான உலகத்துள்ளவர்களிற்சிலர், (இவன்) 'வேண்டிய உருவத்தைக்கொண்டு வந்து விளையாடுகின்றவனாகிய உண்மையான வேதம் நான்குக்கும் எட்டத்தக்க வடிவமுடையவனல்லாத திருமாலேயாவன்' என்று கூறினர்: (சிலர்), நன்கு ஆராய்ந்துபார்த்துக் காணக்கடவோமென்றுகருதி 'இமைப்பதன்முன்னம் கட்புலத்தைக்கடந்தகல்கின்றான்: இன்னும் காண்மின்: மீண்டுவருந்தரமல்லாத மோட்சலோகத்தைப் புகுவான் என்று கூறினர்; (எ - று.)—பி-ம்—[1]கொண்டெழுந்து. [2]உருவமல்லாத, உருவனல்லானேல், உருவந்தானல்லான், உருநான்முகனல்லால், [3]எனநினைப்பதன்முன், முன்னினைப்பதன்முன். [4]கட்புலமுங், மேலேபோற். [5]அல்லன். (உகூ௩)

௩கூ. உருவென்றார் [1]சிலர்சிலர்க ளொளியென்றார் [2]சிலர்சிலர்க [3]ளொளிருமேனி, அருவென்றார் [4]சிலர்சிலர்க [5]ளண்டத்துக் கப்புறநின் றுலக [6]மாக்குங், கருவென்றார் [1]சிலர்சிலர்கள் [7]காற்றென்றார் [1]சிலர் சிலர்கள் கடலைத் தாவிச், செரு[8]வென்றா னிலை[9]யொன்றுந் [10]தெரியகிலா ருலகனைத்துந் [11]தெரியுஞ் செல்வர்.

(இ - ள்.) உலகனைத்தையும் தெரிந்த ஞானச்செல்வத்தையுடைய பெரியோர் கடலைக்கடந்து போரில் வென்றவனாகிய அநுமானுடையநிலையை ஒன்றுந்தெரியமாட்டாதவராகி, சிலச்சிலர், உருவுடையவனென்றார்கள்; வேறுசிற்சிலர், ஒளிவடிவமானவ னென்றார்; மற்றுஞ்சிற்சிலர், விளங்குகின்ற(இவ்வநுமானுடைய) திருமேனி அருவடிவமானதென்றார்கள்: சிற்சிலர் அண்டத்துக்கு அப்புறத்திலிருந்து உலகத்தைப்படைக்கவல்ல காரணப்பொருளென்றார்;பின்னுஞ்சிலச்சிலர் காற்றுவடிவமான தென்றார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]சிலர்சிலவர். [2]ஒளியென்ன. [3]ஒளிருமேனும். [4]சிலர்கள்சிலர், சிலர்சிலவர். [5]அண்டத்துக்கப்பானின்று, அண்டத்தும் புறத்தும்நின்று. [6]காக்கும். [7]மற்றென்றார், அன்றாயிற். [8]வென்றார். [9]ஒருவர். [10]தெரிக்கிலார், தெரிகிலார்கள், [11]தெரியுந்தேவர், சொல்வார்தேவர். (உகூ௪)

௪௦. —அநுமானுடலிலிருந்து தோன்றிய ஒலி.

வாசநாண் [1]மலரோன்ற னுலகளவு [2]நிமிர்ந்தனமேல் [3]வானமான, காச[4]மாயினவெல்லாங் [5]கரந்தன துருவிடையே கனகத்தோள்கள், வீசவான் முகடுரிஞ்ச விசைத்தெழுவா [6]னுடற்பிறந்த முழக்கம் விம்ம, [7]ஆசைகா வலர்தலைகள் பொதி[8]ரெறிந்தார் விதிரெறிந்த தண்ட கோளம்.

(இ - ள்.) நறுமணம்பொருந்திய அன்றுமலர்ந்த தாமரைமலரில்தோன்றியவனான பிரமனுடைய உலகளவும் நிமிர்ந்தனவாகி, மேல்வானமான ஆகாச

மெல்லாம் மறைவதற்குக்காரணமான தனது உருவிடையேயுள்ள பொன் னிறத் தோள்கள் வீசுவதனல் வான்முகட்டையளாவ விசைத்தெழுபவனன அநுமானுடைய உடலிலிருந்து பிறந்தமுழக்கம், விம்மியதனல்,திக்குப்பாலகர் கள் (தம்) தலைகள் நடுக்கமெறிந்தனர்; அண்டகோளமும் விதிர்விதிர்ப்புற்றது; (எ-று.)--பி-ம்:—1மலரவன்றன்,மலரயன்றன்.2இரந்து, இரிந்தன, இழிந்தன, விரிந்தன. 3வானமா,வானமானக்.4ஆயினது.5கரந்துதனதுருவிடையே,கவர்ந் ததுதன்னுருவென்ன.6உடன்.7வாசற்காவலர்கள்தலை. 8எறிந்தவிடைபிளந்த.

வேறு.

சுக.—அநுமானெழுந்த காலத்தின்வருணனை.

தொடுத்தநாண் மாலை வானோர் 1முனிவரே முதல தொல்லோர்
அடுத்த2நான் மறைக ளோதி 3வாழ்த்தலா லவுணர் வேந்தன்
கொடுத்தநா ளளந்து கொண்ட 4குறளனோர் குறிய பாதம்
எடுத்தநா ளொத்த 5தண்ண லெழுந்தநா ளுலகுக் கெல்லாம்.

(இ - ள்.) பெருமையிற்சிறந்த அநுமான் வளர்ந்தெழுந்த அக்காலமா னது,-உலகுக்கெல்லாம், அன்றுமலர்ந்தமலர்கொண்டுதொடுக்கப்பெற்ற மாலை யையணிந்த வானவரும் முனிவரும் முதலான பழமையோர் (தமக்கு உரிய) நான்குவேதங்களை யோதி வாழ்த்தியதனல், அவுணர்தலைவனன மகாபலிசக் கரவர்த்தி(தாரைவார்த்துக்) கொடுத்தகாலத்தில் பூமியையளந்துகொண்டவாம னவதாரமூர்த்தியானவர் (தமது)சிறியபாதத்தை யெடுத்த காலத்தை யொத் திருந்தது; (எ - று.)

முதலிற்சிறுகியவடிவினனுயிருந்த அநுமான் மருந்துமலையைக்கொண ரச்செல்லும்போது பெருவடிவினனாகி, அப்போது, வாமனவதாரமூர்த்தி முதலிற்குறுகியவடிவினனயிருந்து பிறகு பேருருவுகொண்டு அளக்கையில் முனிவர்முதலியோர் வேதமந்திரங்கொண்டு துதித்தாற்போல துதித்தன ரென்க. பி-ம்:—1முனிவரந்தொல்லைநல்லோர், முனிவர்மற்றுள்ளோர்சொல் லோர். 2நாண். 3ஆய்ந்தாள். 4குறளனுள். 5அன்னன். (உகூகக)

சுஉ.—தேவர்முதலியோர் மணிமுதலியன தூவுதல்.

தேவரு முனிவர் தாமுஞ் சித்தருந் தெரிவை மாரும்
1மூவகை யுலகி னுள்ளா ருவகையால் தொடர்ந்து மொய்த்தார்
2தூவின மணியுஞ் சாந்துஞ் சுண்ணமு மலருந் 3தொத்தப்
பூவுடை யமரர் தெய்வத் தருவென விசும்பிற் போனான்.

(இ - ள்.) மூவுலகிடத்துமுள்ளவரான தேவரும் முனிவரும் சித்தரும் அவர்களின்ஸ்த்ரீகளும், மகிழ்ச்சியினல் தொடர்ந்து நெருங்கினவர்களாய், தூவின மணியும் சாந்தும் சுண்ணமும் மலரும் (தன்மீது) தொத்தியதனலே பூவைக்கொண்ட தேவர்களின்தெய்வத்தருவைப்போல (அநுமான்) விசும்பிற் போனான்; (எ-று.)—மணிமுதலியனதொத்தியதனல் அநுமான் தெய்வத்தரு வைப்போன்றன னென்க. பி-ம்:—1மூவுலகிடையுமுள்ளார், மூவுலகிடையு ளோரும், மூவகையுலகுளோரும். 2தூவினர்மலருஞ்...அரியும். 3தொக்க, தொக்குப், தோற்றப். (உகூகஉ)

௪௩.—இமயத்தையும் கயிலையையும் அநுமான்அடைதல்.

இமயமால் வரையை யுற்று [1]ஙனங்குள விமைப்பி லோருங்
கமையுடை முனிவர் [2]மற்று மறனெறி [3]கலந்தோ ரெல்லாம்
அமைகநின் கரும மென்று வாழ்த்தின ரதனுக் கப்பால்
உமையொரு பாகன் வைகுங் கயிலைகண் டுவகை யுற்றான்.

(இ-ள்.) (அநுமான்),—இமயமென்ற பெரியமலையை யடைந்தான்: அங்கேயுள்ள இமைப்பில்லாத தேவர்களும் பொறுமையுடைய முனிவரும் மற்றும் தருமமார்க்கத்தில்நடப்போரும்ஆகிய யாவரும் 'நீ எடுத்த காரியம் இனிதாகுக' என்று வாழ்த்தினர்: அதனுக்குஅப்பால் உமையை (த் தன்) வாமபாகத்தேகொண்டவனாகிய சிவபெருமான் தங்கியருளும் கயிலாசகிரியைக் கண்டு சந்தோஷமடைந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]அங்குறை. [2]தாழுந்தன்னெறி, முற்றுமறநெறி, மற்றநன்னெறி. [3]கடந்தோர். (உ௬௯௮)

௪௪.—சிவபெருமான் அனுமானைச் சுட்டிக்காட்டி உமைக்குஉரைத்தல்.

வடகுண திசையிற் றோன்று மழுவலா ளுண்டு வைகுந்
தடவரை [1]யதனை நோக்கித் தாமரைச் [2]செங்கை கூப்பிப்
படர்குவான் றன்னை [3]யன்ன பரமனும் [4]பரிவிற் பார்த்துத்
தடமுலை யுமைக்குக் காட்டி வாயுவின் [5]றனய னென்றான்.

(இ - ள்.) வடகீழ்த்திசையிற்காணப்படும் மழுப்படையையுடையவன் அங்கே தங்கியருளுகின்ற பெரிய கைலாசமலையைநோக்கி(த் தன்) தாமரை மலர்போன்ற செங்கையைக்கூப்பிப் போகுபவனானஅநுமானை அன்போடுபார்த்து அந்த மலைக்குஉரிய சிறந்தோனான சிவபெருமானும் பருத்ததனங்களையுடைய உமாதேவிக்குச் சுட்டிக்காட்டி '(இவன்) வாயுகுமாரனான அநுமான்' என்று கூறினான்; (எ - று.)—வடகுணதிசை-ஈசானியம்: இத்திக்குக்குஉரிய பாலகன் - சிவபெருமான். பி-ம்:—[1]அதனில். [2]கைகள். [3]அன்பால். [4]விசும்பைப்பார்த்தான், விசும்பிற்பார்த்தான். [5]மதலை. (உ௬௯௯)

௪௫.—சிவபெருமான் உமையினிடத்து அநுமான் செல்லுங் காரணத்தைத் தெரிவித்தல்.

என்[1]னிவ [2]னெழுந்த தன்மை யென்றுல கீன்றாள் கேட்ப
மன்னவ னிராமன் றூதன் மருந்தின்மேல் வந்தான் வஞ்சர்
தென்னக ரிலங்கைத் தீமை [3]தீர்வது திண்ணஞ் சேர்ந்து
நன்னுத லாமும் வெம்போர் காணுது நாளை யென்றான்.

(இ - ள்.) 'இவன்(விசும்பிலே)எழுந்துசெல்லுகின்ற காரணம்என்னோ?' என்று உலகையீன்றவளான உமை வினவ, 'அரசகுலத்திற்பிறந்துள்ளவனான இராமபிரான் தூதனாகியஇவன் மருந்தைக்கொண்டுசெல்ல வந்துள்ளான்: வஞ்சகரான அரக்கருடைய தென்றிசையிலுள்ளதாகிய இலங்கை நகரத்தின் தீமை தீர்வது திண்ணமாகும்: அழகியநெற்றியையுடையாய்! நாமும் (தேவருடன்) சேர்ந்து நாளைக் கொடியபோரைக் காண்போம்' என்று (சிவபெருமான்) கூறினான்; (எ - று.)—பி-ம்:—[1]அவன். [2]ஏகும். [3]தீர்ப்பது. (உ௭௦௦)

சகூ.—அநுமான் ஏமகூடஞ்சேர்ந்து பின் நிடதத்தை யடைதல்.

நாமயோ சனைகள் [1]கொண்ட தாயிர நடுவு நீங்கி
ஏமகூ டத்தி னும்ப [2]ரெய்தின னிறுதி யில்லாக்
காமமே நுகருஞ் செல்வக் கடவுள ரீட்டங் கண்டான்
நேமியின் விசையிற் செல்வா [3]னிடதத்தி னெற்றி யுற்றான்.

(இ - ள்.) சக்கரப்படைபோல விசைகொண்டு செல்பவனாகிய அநுமான்,—பேர்பெற்ற ஆயிரம்யோசனைகள் தூரம்கொண்டதான நடுவிடத்தை நீங்கி ஏமகூடத்தின் மேற்புறத்தையடைந்து,இறுதியில்லாத காமவின்பத்தை யனுபவிக்கும் செல்வவளத்தோடுகூடிய தேவர்களின் கூட்டத்தைக் கண்டான்: (அப்பால்) நிடதமலையின்மேலிடத்தைச் சேர்ந்தான்; (எ - று.)—இச் செய்யுள் சிலபிரதியிலில்லை. பி-ம்:—[1]கொண்டீர், சொன்ன. [2]எய்தினின்று. [3]இடபத்தின். (உஎ௦க)

சஎ.—அநுமான் மேருவின்மீது செல்லுதல்.

எண்ணுக்கு மளவி லாத வறிவினோ [1]ரிருந்து நோக்குங்
கண்ணுக்குங் [2]கருதுந் தெய்வ மனத்திற்குங் கடிய னானோன்
மண்ணுக்குந் திசைகள் வைத்த வரம்பிற்கு மலரோன் வைகும்
விண்ணுக்கு மளவை யாய மேருவின் மீது சென்றான்.

(இ - ள்.) (மனிதரின்) மனத்திற்கும், அளவிடமுடியாத அறிவை யுடையவரிருந்துநோக்குகின்ற (ஞானக்) கண்கட்கும், (எதையும்)நினைக்க வல்லதெய்வமனத்திற்கும்(எட்டாதபடி) விரைவையுடையவனான அநுமான்,- பூமிக்கும் திசைகளின் ஏற்பட்டுள்ள எல்லைக்கும் மலரவனானபிரமதேவன் தங்கியுள்ள வானுலகத்திற்கும் அளக்குங் கருவிபோலுள்ள மேருவின்மேலே சென்றான்; (எ - று.)

பூமியினிடையே வானுறவோங்கித் திக்குக்களை வியாபித்துக்கொண்டு நிற்பதனால், மேருவை 'மண்ணுக்கும்... அளவையாயமேரு' என்றார். பி-ம்:— [1]இமைத்து, இரைத்து. [2]கருணைத். (உஎ௦உ)

சஅ.—மேருமலையின்மீது நாவன்மரத்தைக் காணுதல்.

யாவது நிலைமைத் தன்மை யின்னதென் [1]றிமையா நாட்டத்
தேவருந் [2]தெரிந்தி லாத வடமலைக் கும்பர்ச் சென்றான்
நாவலம் பெருந்[3]தீ வென்று [4]நளிர்கடல் வளாக வைப்பிற்
காவன்மூன் றுலக மோதுங் கடவுண்மா மரத்தைக் கண்டான்.

(இ - ள்.) இமையாக்கண்ணைப்படைத்தவரான தேவரும் நிலையாயுள்ள தன்மை இன்னதென்று சிறிதும் தெரியமுடியாத மேருமலையின்மீது சென்று, (அநுமான்),—குளிர்ந்தகடலாற் சூழப்பட்ட இடமான பூமியில்பெருமைபெற்ற நாவலந்தீவென்று காவலைக்கொண்ட மூன்றுலகமும் ஓதுவதற்குக்காரணமான தெய்வத்தன்மையைக்கொண்ட பெரிய நாவன்மரத்தைக் கண்டான்; (எ - று.)—பி - ம்:—[1]அறியா. [2]தெரிக்கிலாத. [3]தீவென்னும், தீவென்ன. [4]நளி. (உஎ௦௩)

சகூ.—அனுமான் மேருமலையிற் பிரமனைக் கண்டு வணங்குதல்.

அன்னமா மலையி னும்ப ருலகெலா மமைத்த வண்ணல்
[1]நன்னக ரதனை நோக்கி யதனடு [2]நாப்ப ணுமப்
பொன்[3]மலர்ப் பீடந் தன்மே னான்முகன் [4]பொலியத் தோன்றுந்
தன்மையுங் கண்டு கையால் வணங்கினான் றருமம் போல்வான்.

(இ-ள்.) தருமமே வடிவமெடுத்தாற் போன்றுள்ளவனான அநுமான்,—அந்தப்பெரிய மேருமலையினுச்சியிலே உலகெல்லாவற்றையும் படைத்த பெருமையிற்சிறந்த பிரமதேவனது சிறந்த நகரத்தைப் பார்த்து அதன்நட்டநடுவிலே சிறந்த பொன்மலர்ப்பீடத்தின்மேல் நான்முகனான பிரமதேவன் விளங்கத்தோன்றுகின்ற தன்மையையுங் கண்டு முறைப்படி வணங்கினான்; (எ-று.)—மேருமலைச்சிகரம் எல்லாத்தேவர்கட்கும் இருப்பிடமானதனால்,அங்குப்பிரமன்முதல் தேவர்கள் எழுந்தருளியிருக்க, அத்தேவர்களையெல்லாம் முறையேகண்டுஅநுமான் வணங்கினமையை ஐந்துகவிகளிற் கூறுகின்றனரென்க. கை - முறைமை. கையால்வணங்கினானுமாம். பி-ம்:—[1]நன்னெடு நகரம். [2]நாப்பணுய. [3]மலைப். [4]பொலிந்து. (உஎ0ச)

ரு0.—திருமாலைக் கண்டு வணங்குதல்.

தருவன [1]மொன்றி வானோர் தலைத்தலை மயங்கித் [2]தாழப்
பொருவரு முனிவர் வேதம் புகழ்ந்துரை யோதை பொங்க
மருவிரி துளப மௌலி மாநிலக் கிழத்தி யோடுந்
திருவொடு மிருந்த மூலத் தேவையும் வணக்கஞ் செய்தான்.

(இ - ள்.) (பின்பு அநுமான்),—தருக்களடர்ந்த வனம்பொருந்தி,—வானவர் ஆங்காங்குப் (பக்தியினாற்) பரவசப்பட்டு வணங்கவும் ஒப்பற்றமுனிவர் வேதத்தினாற் புகழ்ந்துரைக்கும் ஓசை எங்கும்பரவவும், பூமாதேவியோடும் செல்வளோடும் நறுமணம் விரிகின்ற திருத்துழாயைத் தாங்கிய மௌலியுடனேயிருந்த (எல்லாப்பொருள்கட்கும்) மூலகாரணனான திருமாலையும் வணங்கினான்; (எ-று)—இச்செய்யுள் சிலபிரதிகளில் "ஆயதன்" என்ற அடுத்துள்ளபாடலுக்குப்பின்உள்ளது. பி - ம்:—[1]ஒன்று, ஒன்றில். [2]தாழ்ந்து, தாழ்ந்த. (உஎ0ரு)

ருக.—உருத்திரமூர்த்தியைக் கண்டு வணங்குதல்.

ஆயதன் வடகீழ் பாகத் தாயிர [1]மருக்க ரான்ற
காய்கதிர் [2]பரப்பி யஞ்சு கதிர்முகக் கமலங் காட்டித்
தூயபே ருலக மூன்றுந் தூவிய மலரிற் சூழ்ந்த
[3]சேயிழை [4]பாகத் தெண்டோ ளொருவனை வணக்கஞ் செய்தான்.

(இ - ள்.) (அன்றியும் அநுமான்),—அந்தமலையின் வடகீழ்பாகத்தில் ஆயிரஞ் சூரியர் சிறந்தனவும் (இருளைக்) கடிகின்றனவுமான கதிர்களைப் பரப்பிக்கொண்டு ஒளியுள்ளஐந்து முககமலத்தைத் தோற்றுவித்து, பரிசுத்தமாகிய பெரியமூவுலகத்தோரும் அருச்சித்த மலரினாற் சூழப்பெற்றுள்ள செம்பொனாபரணங்களையணிந்த உமாதேவியை (வாம) பாகத்திற்கொண்ட எண்தோள்களையுடையஒருவனை [சிவபெருமானை] வணங்கினான்; (எ - று.)

சிவபெருமான் ஆயிரஞ்சூரியரின் பிரகாசம்பொருந்தி ஐந்துமுகங்களுடனும் எட்டுத்தோள்களுடனும் இம்மலையிலுள்ளன னென்க. சேயிழை-உமாதேவிக்கு, பண்புத்தொகையன்மொழி. பி-ம்:—[1]அருக்கர்க்கான்ற, அருக்கர்கற்றை. [2]பரப்பில். [3]சேயிதழ். [4]பாதத்தெண்டோள், பாகத்திண்டோள். ()

ருஉ.—இந்திரனைக் கண்டு வணங்குதல்.

சந்திர னனைய [1]கொற்றத் தனிக்குடை [2]தலையிற் றாகச்
சுந்தர மகளி ரங்கைச் சாமரை தென்ற றூவ
அந்தர வான நாட ரடிதொழ முரச மார்ப்ப
இந்திர னிருந்த தன்மை கண்டுவந் திறைஞ்சிப் போனான்.

(இ-ள்.) (மற்றும் அனுமான்),—சந்திரனையொத்த வெற்றிபொருந்திய தனிக்குடை தலையின்மீதாக (நிழல்செய்ய)வும், அழகியமகளிர் அழகிய கையிலேந்திய சாமரைதென்றலை வீசவும், அந்தரமென்றுவழங்கப்படும் வானத்திலுள்ள நாடாகிய சுவர்க்கலோகத்தவர் [தேவர்] பாதங்களை வணங்கவும், (வெற்றி)முரசம் ஆரவாரிக்கவும் தேவேந்திரன் வீற்றிருந்த நிலையைக் கண்டு மகிழ்ந்து வணங்கிச்சென்றான்; (எ - று.)—பி-ம்:—[1]தோற்றத்தனிக். [2]தலையதாக. (உஎ0எ)

ருங.—அனுமான் அஷ்டதிக்பாலகரைக் காணுதல்.

[1]பூவலர் மரத்தைப் போர்ப்பப் பொற்பகம் விரிந்து [2]பொங்கித்
தேவர்த மிருக்கை யான மேருவின் [3]சிகரச் சேர்ப்பின்
மூவகை யுலகுஞ் [4]சூழ்ந்த முரட்டிசை [5]முறையிற் றாங்குங்
காவல ரெண்மர் நின்ற தன்மையுந் தெரியக் கண்டான்.

(இ-ள்.) மலர்கள் மலர்ந்துள்ள கற்பகவிருக்ஷத்தைச் சூழும்படி பொலிவு தன்னிடத்துவிரிந்துகிளர்ந்து தேவர்கட்கு இருப்பிடமான மேருமலையின் சிகரத்தின் எல்லையிலே மூவகையுலகத்திலுஞ் சூழ்ந்துள்ள மாறுபட்டதிசைகளை முறைமையாகத்தாங்குகின்ற அஷ்டதிக்குப்பாலகர்நின்ற தன்மையையும் கண்ணுக்குப் புலனாக (அவ்வனுமான்) கண்டான்; (எ - று.)

கற்பகவிருக்ஷங்களை மேருவின்ஒளி போர்த்துக்கொண்டுள்ள தென்க. மேரு சிகரத்தின் எட்டுப்புறத்திலும் எண்டிசைக்குங்காவலர் தங்கியுள்ளாராவர். பி - ம்:—[1]பூவலரமைந்தபொற்பிற்கிரணங்கள்பொலிந்து, பூவிலமரத்தைப்போலவந்தரமறைந்து. [2]பொங்கத், பொங்கும். [3]சிகரவெற்பில், சிகரவைப்பின். [4]சூழ்ந்து. [5]முறையிற்றாங்கக். (உஎ0அ)

ருச.—மேருவைக்கடந்து உத்தரகுருவையடைந்து உதயமாய்விட்டதே யென்று அனுமான் கருதுதல்.

அத்தடங் கிரியை நீங்கி யத்தலை யடைந்த [1]வள்ளல்
உத்தர குருவை யுற்றா னொளியவன் [2]கதிர்க ளூன்றிச்
[3]செற்றிய விருளின் றாக்கி விளங்கிய செயலை நோக்கி
வித்தகன் விடிந்த தென்னா முடிந்ததென் வேக மென்றான்.

(இ - ள்.) அந்தப் பெரியமலையைக் கடந்து அப்புறத்தையடைந்த உதார குணமுள்ளவனான அநுமான், உத்தரகுருவையடைந்தான்; (அங்குச்) சூரியனுடைய கதிர்கள்(தாம்)ஊன்றிநெருங்கிய இருளை யில்லையாகச்செய்து விளங்கிய தன்மையைப் பார்த்து, செய்தொழிலில் திறமையமைந்தவனாகிய அநுமான், 'விடிந்திட்டதே!' என்றுசொல்லி, என்விரைவுமுடிந்தது(இவ்வளவு தானோ? என்று வருத்தங்கொண்டு) கருதினான்; (எ - று.)

விடிவதற்குள் மருத்துமலையைக்கண்டு கொண்டுபோய் இறந்தவர்யாவரையும் பிழைப்பிக்கவேண்டுமென்று கருதியிருந்ததனால், உத்தரகுருவிற் சூரியன் பேரொளிவீசியது கண்ட அநுமான் 'இவ்வளவில் விடிந்திட்டதே! என்னுடைய வேகம் பயனற்றதாய் முடிந்திட்டதே!' என்று வருத்தமுற்றுக் கருதினானென்பதாம். பிறரைப் பிழைப்பிப்பதில் தன்வருத்தம்பாராது விரைதல்பற்றி, 'வள்ளல்' என்றார். வித்தகன் - எடுத்துக்கொண்டகாரியத்தைத் திறனுறச் செய்துமுடிப்பவன். பி-ம்:—1அண்ணல். 2கதிரையூன்றிச். 3செத்தியவிருளிற்றுக. (உஎ0க)

ருரு.—அநுமான் வருந்தியவகை.

ஆதியா னுணரா முன்ன மருமருந் துதவி 1யல்லிற்
பாதியா லனைய துன்ப 2மகற்றுவான் பாவித் தேற்குச்
சோதியா னுதயஞ் 3செய்தா 4னுற்றதோர் 5துணித லாற்றேன்
ஏதியான் செய்வ தென்னு விடருற்று னிணையி லாதான்.

(இ - ள்.) தன்னையொப்பாரில்லாதவனாகிய அநுமான்,—'ஆதிமூர்த்தியாகிய ஸ்ரீராமன் உறக்கந்தெளிவதற்குமுன்னம் அரியமருந்தைக் (கொண்டு போய்)கொடுத்து, பாதியிரவுக்குள் அந்தத் [தம்பிமுதலியோர் இறந்ததனால் நேர்ந்துள்ள] துன்பத்தை நீக்குமாறு எண்ணியிருந்த எனக்கு, (என்னெண்ணத்திற்குமாறாகப் பேரொளியுடையவனான சூரியன் உதித்திட்டான்: (அதனால் துன்பம்)நேர்ந்திட்டதற்கு (இப்போது செய்யவேண்டுவது இன்னது என்று) ஓர் துணிவைக் கொண்டிலேன்; யான் செய்யத்தக்கது எது?' என்று துன்பத்தையடைந்தான்; (எ-று.)—பி-ம்:—1அல்லாற். 2ஆற்றுவான். 3செய்தால். 4உற்றது. 5துணிதறேற்றேன். (உஎக0)

ருசா.—இரவுகழியவில்லையென்பதுணர்ந்து அநுமான் துயர்தீர்தல்.

காற்றிசை 1சுருங்கச் செல்லுங் கடுமையான் கதிரின் செல்வன்
மேற்றிசை யெழுவா னல்லன் விடிந்தது மன்று மேரு
மாற்றினன் வடபாற் றோன்று மென்பது மறைகள் வல்லோர்
சாற்றின 2ரென்னத் துன்பந் 3தணிந்தனன் 4றவத்து மிக்கான்.

(இ - ள்.) தவத்தினால்மிக்கவனும் காற்று திசையிலே சுருங்குமாறு [திக்கில்வீசுங் காற்றுச் சுருங்கியவேகமுள்ளதென்னுமாறு] செல்கின்றவேகமுடையவனுமான அநுமான்,—(வடதிசையாகச்செல்லும் தன்னுடைய இடப்பக்கத்திற் சூரியனிருப்பதுகண்டு), (ஆயிரங்) கிரணங்களைச்செல்வமாகக்கொண்டுள்ளசூரியன் மேற்குத்திசையில்உதிப்பவனல்லன்:(இப்போது)

பொழுதுவிடியவும் இல்லை: மேருவில் (தன் கதியை) மாற்றினவனும் (ச் சூரியன்) வடக்கேதோன்றுமென்பது மறைகள்வல்லவர் கூறியுள்ளாரென்று (தன்) துன்பம் நீங்கப்பெற்றான்; (எ - று.)—முதலடியில் கால்திசைஎன்று பிரிக்க. பி - ம்:—1கருக்காச்செல்லுங். 2என்று. 3தவிர்ந்தனன். 4தவத்தின்.()

௫௭.—உத்தரகுருநாட்டைக் காணுதல்.

இருவரே தோன்றி யென்று மீறிலா வாயு ளெய்தி
1ஒருவரோ டொருவ ருள்ள முயிரொடு மொன்றே 2யாகிப்
பொருவரு 3மின்பந் துய்த்துப் புண்ணியம் புரிந்தோர் வைகுந்
திருவுறை கமல மன்ன நாட்டையுந் தெரியக் கண்டான்.

(இ - ள்.) (ஆண் பெண் என்ற) இரட்டையராகவே தோன்றி என்றும் அழிதலில்லாத ஆயுளைப் பெற்று ஒருவரோடொருவர் உயிருடன் மனமும் ஒன்றுபட்டவராய் [இருவர்க்கும் ஒருயிரேயென்னுமாறு அன்புபொருந்தியவராய்] நிகரற்ற இன்பத்தை யனுபவித்துக்கொண்டு புண்ணியம்புரிந்தோர் தங்குவதான இலக்குமிதங்குகின்ற தாமரையையொத்த [இலக்குமி மாறாதுஉறைவதற்குஇடனான] உத்தரகுருநாட்டையும் விளங்கப்பார்த்தான்; (எ - று.)—பி-ம்:---1ஒருவரோடொருவரென்றும். 2ஆகப். 3இன்பதுன்பம். (உ௲௧௨)

௫௮.—உத்தரகுருவைக் கண்டபின் அப்பாற் போதல்.

வன்னிநாட் டியபொன் மௌலி வானவன் மலரின் மேலான்
கன்னிநாட் டிருவைச் 1சேர்ந்த கண்ணனு மாளுங் 2காணிச்
சென்னிநாட் டெரியல் வீரன் 3றியாகமா வி னோதன் றெய்வப்
பொன்னிநாட் டுவமை வைப்பைப் 4புலன்கொள நோக்கிப்போனான்.

(இ - ள்.) நெருப்பைநாட்டினாற்போன்ற பொன்னிறச்சடையைச் சிரசிலேகொண்டவனான தேவனும் [சிவபெருமானும்], தாமரைமலரின்மீதுவீற்றிருப்பவனாகிய பிரமதேவனும் செவ்விமாறாதகன்னிப்பருவமுள்ள திருவை (த் திருமார்பிலே) கொண்டுள்ள திருமாலும் ஆட்சிபுரிகின்ற இடமாகி, சிரசிலே அன்றுமலர்ந்தமலர்மாலையைத்தரித்தவீரனும் தியாகத்தையே பெரும்போதுபோக்காகக்கொண்டவனுமான சோழனுடைய பொன்னிநாட்டுக்குஉவமையான (அந்நாட்டு) நிலங்களைக் கண்ணுக்குவிஷயமாகக் கண்டு (அநுமான்), போகலானான்; (எ - று.)

பொன்-சடைக்கு, ஆகுபெயர். கம்பர் தமதுதேசாபிமானத்தால் சோழநாட்டை உத்தரகுருநாட்டுக்கு உவமையாகக்கூறினார். பி-ம்:—1சேரும். 2காட்சிச். 3தியாகவினோதன். 4பொலன்கொள. (உ௲௧௩)

௫௯.—நீலமால்வரையைக் காணுதல்.

1விரியவன் மேரு வென்னும் 2வெற்பினின் மீது செல்லும்
பெரியவ னயனார் செல்வம் பெற்றவன் 3பிறப்பிற் பேர்ந்தான்
அரியவ னுலக மெல்லா மளந்தநாள் வளர்ந்து தோன்றுங்
கரியவ னென்ன நின்ற நீலமால் 4வரையைக் கண்டான்.

(இ-ள்.) விரிவுற வலியமேருவென்னும் வெற்பிற்குமீதாகவுஞ்செல்லும் பெருமையுள்ளவனும் பிரமபட்டத்தை நிச்சயமாகப்பெறப்போகின்றவனும்,

(இனிப்)பிறப்புஇல்லாதவனுமாகிய அருங்குணத்தையுடைய அநுமான்,—(திரிவிக்கிரமனாகி) உலகமெல்லாம் அளந்தகாளிலே வளர்ந்துதோன்றிய கருநிறமுள்ள திருமால்போல (ஓங்கிவளர்ந்து) நின்ற நீலமால்வரையைக்கண்டான்; (எ - று.)—தெளிவுபற்றி, 'பெற்றவன்' என இறந்தகாலத்தாற்கூறினார். அரியவன் கரியவன் என்றுஎடுத்து-ஹரியென்றுபேரைக்கொண்ட கரியவனாகிய அந்தத்திருமால் என்றலும்ஒன்று. பி-ம்:—1விரியவான். 2வெற்பினும். 3பிறப்பும். 4மலையைக். (உஎகச)

சுO.—அநுமான் மருந்துமலையை காணுதல்.

அற்[1]குன்ற வலங்கு சோதி யம்மலை யகலப் போனான்
பொற்குன்ற மனைய தோளா னோக்கினான் புலவன் சொன்ன
நற்குன்ற மதனைக் கண்டா னுணர்ந்தன னாக முற்ற
எற்[2]குன்ற வெறியுந் தெய்வ மருந்தடை யாள[3]மென்ன.

(இ - ள்.) இருளும் (தன்முன்னே) ஒடுங்கும்படி [மிகச்சுறுத்து] விளங்குஞ் சோதியையுடைய அம்மலை அகன்றிடும்படி கடந்துசென்றவனாய்,பொன்மலையையொத்த (தோள்களையுடைய) அநுமான் (கண்களால்)நோக்கி, பேரறிவாளனானசாம்பவான்சொன்ன சிறந்த மருத்துமலையைக் கண்களாற் கண்டு, 'தெய்வமருந்துக்கு அடையாளம் மேலுலகம்முற்றிலும் ஒளிகெடும்படி (ஒளி) வீசும்' என்றதனால் உணர்ந்தான்; (எ - று.)

வானுலகத்துஒளியும்கெடும்படி பேரொளிவீசுவதனால், இதுவே தெய்வமருந்து இங்குஉள்ளதென்பதற்கு அடையாளமென்று அநுமான் ஊகித்து மருத்துமலை இதுதானென்பதையுணர்ந்தானென்றவாறு. நாகம் - நகமென்பதன்நீட்டலெனக்கொண்டு, நாகம்முற்றமலைமுழுதும், எல் - ஒளிமயமான சூரியனும், குன்ற - தன்னொளிகெட என்று உரைப்பாருமுளர். கண்டான் உணர்ந்தனன்-கண்டுணர்ந்தவனாய், நாகம்முற்றமருந்து அடையாளம்என்ன-மலைமுற்றிலும் மருந்தின்அடையாளம் (உள்ளன)என்ற காரணத்தினாலே 'பாய்ந்தனன்' எனமேற்கவியோடு குளகமாகஉரைத்தலும் ஒன்று. பி-ம்:—1குன்றமலங்கற், குன்றவிளங்கு, குன்றவிலங்கு, குன்றமலங்கு. 2குன்றாந்தெரியும். 3என்றான். (உஎகரு)

சுக.—அநுமான் அம்மலைமீதுபாய மலைதாழ்தலும்; ஔஷதிகளைக் காக்குந் தேவதைகள் அநுமானைச் செய்திவிசாரித்தறிதல்.

பாய்ந்தனன் பாய்த லோடு மம்மலை [1]பாத லத்துச்
[2]சாய்ந்தது காக்குந் தெய்வஞ் [3]சலித்தன [4]தடுத்து வந்து
[5]காய்ந்தன நீதா னியாவன் கருத்தென்கொல் கழறு கென்ன
[6]ஆய்ந்தவ [7]னுற்ற தெல்லா மவற்றினுக் கறியச் சொன்னான்.

(இ - ள்.) (அநுமான் அம்மலைமீது) பாய்ந்தான்: பாய்தலோடும் அம்மலை (அநுமானதுவேகத்தைத் தாங்கமுடியாமல்) பாதாளத்துச் சாய்ந்திட்டது: (மருந்துகளைக்) காக்குந் தேவதைகளும் (முதலில்) நிலைகலங்கினவாய், (பிறகுதேறி அவ்வநுமானைத்) தடுத்துவந்துகாய்ந்து'நீ யாவன்?(உன்) கருத்து

என்னை? சொல்வாய்' என்றுவினவ, ஆராய்ந்தறியுந்தன்மையனான அநுமான் (தான்) நெருங்கிவந்த காரணத்தையெல்லாம் அத்தேவதைகட்குத் தெரியும் படி கூறினான்; (எ - று.)—பி-ம்:—[1]பாதாளத்துச். [2]சாய்ந்தன. [3]சலித்தது. [4]கடுத்து. [5]காய்ந்தனை...என்சொல், காய்ந்தனன்...கருத்தென்ன, காய்ந்த நீயாவனோதுகருத்தென்னை. [6]ஆய்ந்துதான். [7]உற்றதன்மை. (உஎகசு)

சுஉ.—தெய்வங்கள் அனுமதிதந்தபின் அநுமானுக்குத் திருவாழி காட்சிகொடுத்துச் செல்ல, அம்மலையை அனுமான் பேர்த்தல்.

[1]கேட்டவை யைய வேண்டிற் றியற்றிப்பின் கெடாம லெம்பாற்
காட்டென [2]வுணர்த்தி வாழ்த்திக் [3]கரந்தன கமலக்கண்ணன்
வாட்டலை நேமி தோன்றி [4]மறைந்தது மண்ணி னின்றுந்
தோட்டன னுமன் மற்றக் குன்றினை வயிரத் தோளால்.

(இ - ள்.) அத்தெய்வங்கள் (அவன்சொன்னவற்றைக்)கேட்டு, 'ஐயனே! (மருந்துகளினால் உனக்கு) வேண்டியசெயலைச் செய்துகொண்டிட்டு, பின்பு கெடாமல் எம்மிடம்(அவைகளை)வரவிடுக' என்றுதெரிவித்து வாழ்த்திமறைந் தன: (பின்பு) புண்டரீகாட்சனான திருமாலின்கூரியநுனியையுடைய சக்கரப் படை காட்சிகொடுத்து (அதுவும்) மறைந்திட்டது: வயிரம்போலுறுதியான தோளினால் அநுமான் பின்பு அக்குன்றினைப்பூமியிலிருந்து (வேரோடு) தோண்டியெடுத்தான்; (எ-று.)—அம்மலையை வேரோடுபறித்துக்கொண்ட தற்குக்காரணம் மேலைக்கவியில் விளங்கும். பி-ம்:—[1]கேட்டனவுய்ய. [2]உரைத்து. [3]கரந்தனன், [4]மறைந்தன. (உஎகஎ)

வேறு.

சுங.—அநுமான் மருந்துமலையைக் கையிலேந்தி விரைந்துபோதல்.

இங்குநின் [1]றின்னன மருந்தென் றெண்ணினாற்
[2]சிங்குமாற் காலமென் [3]றுணர்ந்த [4]சிந்தையான்
அங்கது வேரொடு மங்கை தாங்கினான்
[5]பொங்கிய விசும்பிடைக் [6]கடிது [7]போகுவான்.

(இ - ள்.) 'இங்கிருந்துகொண்டு இன்னவை நமக்குவேண்டியமருந்து களென்று ஆராயத்தொடங்கினால், காலங்கழியும்'என்று அறிந்த மனத்தை யுடையவனாய், (அநுமான்), அப்போது அம்மலையை வேருடன் அழகிய கையில்தாங்கி ஓங்கிய சிறந்தவிசும்பில் விரைந்துசெல்பவனானான்; (எ-று.)— கீழ்ச்செய்யுளில் 'தோட்டன னுமன்மற்றைக் குன்றினைவயிரத்தோ ளால்' என்றார்; இங்கு ஔஷதிகளைமாத்திரம் தேடிக்கொண்டுசெல்லாமல் அநு மான் மலையைஅவ்வாறுதோண்டியெடுத்துச் சென்றதற்குக் காரணங்கூறுகின் றாரென்க. பி - ம்:—[1]இன்னமா. [2]சிங்குமாங், தங்குமாங். [3]உணரும், [4]தன்மையான். [5]பொங்குநல். [6]கடந்து. [7]போதுவான். (உஎகஅ)

சுச.—அம்மலையின் கீழ்மேற்பரப்புக்கள்.

[1]ஆயிர மியோசனை [2]யகல [3]மீதுயர்ந்து
ஆயிர மியோசனை [4]யாழ்ந்த தம்மலை

ஏயெனு மாத்திரத் தொருகை யேந்தினன்
[5]தாயின னுலகெலாந் [6]தவழ்ந்த [7]சீர்த்தியான்.

(இ - ள்.) உலகெலாம்பரவிய கீர்த்தியையுடையவனான அநுமான்,— ஆயிரம்யோசனைதூரம் அகலம் மேற்புறத்துயர்ந்து, ஆயிரம்யோசனைதூரம் ஆழ்ந்துள்ளதான அந்தச்சஞ்சீவிமலையை ஒருநொடிப்பொழுதுக்குள் ஒருகையிலேந்தித் தாவினன்; (எ-று.)--பி-ம்:--[1]ஆயிரயோசனை. [2]அகன்று. [3]மீ. [4]ஆழ்ந்த. [5]தாயினும். [6]தழுவுங், தழைத்த. [7]கீர்த்தியான். (உஎகக)

கூரு.—கவிக்கூற்று: இந்து இவ்வாறு நிகழ்கையில், அங்குநிகழ்ந்ததைச் சொல்வோமெனல்.

அத்தலை [1]யன்னவ [2]னனைய னுயினன்
இத்தலை யிருவரும் [3]விரைவி னெய்தினர்
கைத்தலத் தாலடி வருடுங் காலையில்
உத்தமற் குற்றதை யுணர்த்து வாமரோ.

(இ - ள்.) அங்கு அந்தஅநுமான் அவ்வாறாயினன்: இங்கே (இலங்கையிற் போர்க்களத்திலே சாம்பவான் விபீஷணன்என்ற) இருவரும், விரைவினில் (ஸ்ரீராமனை) அடைந்தவர்களாய்,கைத்தலத்தினால் (அப்பிரானுடைய) திருவடிகளை மெல்லப் பிடிக்கின்றகாலத்தில், உத்தமனான அவ்விராமனுக்கு நிகழ்ந்ததை உணர்த்துவோம்; (எ-று.)—அரோ-ஈற்றசை. அத்தலைஎன்றது- அனுமானுள்ளஇடத்தை. இத்தலையென்றது - போர்க்களத்துச் சாம்பவான் விபீஷணன் ஸ்ரீராமன்என்பவருள்ளஇடத்தை. பி-ம்:-[1]அனையவன். [2]அனையவாந்துணை, அணையவாந்துணை. [3]இசைய, அசைய. (உஎஉ0)

கூகூ.—இராமபிரான் கண்களை விழித்தல்.

[1]வண்டென மடந்தையர் மனத்தை வேரொடுங்
[2]கண்டன கொளவருங் [3]கருணை தாமெனக்
கொண்டன கொடுப்பன [4]வரங்கள் கோளிலாப்
[5]புண்டரீ கத்துணை தருமம் [6]பூத்தன.

(இ - ள்.) (தம்மீது படிந்திருக்கும்) வண்டென்னும்படி மடந்தையரின் மனத்தை வேரோடுங்கொண்டனவும்,(எல்லாப்பிராணிகளும் முகந்து)கொள்ளும்படி தோன்றுகின்ற கருணையே தாமென்னுமாறு (அக்கருணையைநிரம்பக்) கொண்டனவும், வரங்களைக்கொடுப்பனவுமான மாறுபாடில்லாத புண்டரீக விணைகளாகிய (அப்பிரானுடைய) திருக்கண்கள் தருமம்போல மலர்ந்து விளங்கின; (எ - று.)

ஸ்ரீராமபிரான்திருக்கண்களை விழித்துப் பார்த்தானென்றவாறு. தாமரைமலரில் வண்டுகள்படிவதுபோல இத்திருக்கண்களின்அழகிலீடுபட்டு மடந்தையர்மனங்கள் முற்றும்படிந்துள்ளனவென்பது,முதலடியிற்கூறியபொருள்: கருணைவடிவமானவையென்பது, இரண்டாமடியின்பொருள். முதலடிக்கு - வண்டைப்போலத்தொடரும் மடந்தையர்மனத்தைத் தம்மிடத்துஅணுகவொட்டாது வேருடனே நீக்கியவை யெனப் பொருள் கொள்வாரு முளர்.

பி-ம்:—[1]வண்டனை. [2]கண்டனனிருவருங், கண்டனகெழீஇவருங். [3]கருணைத் தாமெனக். [4]வரத்தைக். [5]புண்டரீகத்தடங். [6]பூத்தெனை. (உ௭உ௧)

௬௭.—சாம்பவானும் விபீஷணனும் அழுதகண்ணீருடன் அருகிருந்ததலை ஸ்ரீராமன் காணுதல்.

நோக்கினன் கரடிகட் கரசு நோன்[1]புகழ்
ஆக்கிய நிருதனு மழுத [2]கண்ணினர்
தூக்கிய தலையினர் தொழுத கையினர்
ஏக்கமுற் றருகிருந் [3]தேங்கு வார்களை.

(இ - ள்.) கண்ணீரைவடிக்குங் கண்களையுடையவரும், தூக்கிய தலையையும் தொழுதகையையுங்கொண்டவர்களும் ஏக்கங்கொண்டு தன்னருகேயிருந்து ஏங்குகின்றவர்களுமான கரடிகட்குஅரசனுனசாம்பவான் மிக்க புகழைப்பெற்றுள்ளவனுனஅரக்கர்குலத்துப்பிறந்த விபீஷணன் என்பவர்களைப் பார்த்தான், (ஸ்ரீராமன்); (எ - று.)—பி-ம்:—[1]கழல். [2]கண்ணினீர். [3]இரங்குவார்களை. (உ௭உ௨)

௬௮.—விபீஷணன் ஜாம்பவான் என்ற இருவரையும் ஸ்ரீராமன் விசாரித்தல்.

ஏவிய காரிய மியற்றி [1]யெய்தினை
நோவிலை [2]கொல்லென நோக்கி வீடணன்
[3]தாவரும் பெரும்புகழ்ச் சாம்பன் [4]றன்னையும்
ஆவிவந் தனைகொலென் றருளி னனரோ.

(இ - ள்.) விபீஷணனைநோக்கி, 'விபீஷணு! ஏவின காரியத்தைச் செய்து வந்தாயா? நீதின்றியுள்ளாயா?' எனவும், குற்றமற்றபுகழையுடைய சாம்பவானை(நோக்கி)'ஆவிவரப்பெற்றாயா?' எனவும் அருள்கொண்டு வினவினன், (ஸ்ரீராமன்); (எ - று.)—'எய்தினைகொல்,நோவிலைகொல்'என் 'கொல்' என்பதை ஈரிடத்துங் கூட்டுக. இனி, எய்தினை-எய்தினாய் என வினையாலணையும் பெயராகவுமாம். பி-ம்:—[1]வந்தனை.[2]வீடணுவென்றுநோக்கிப்பின். [3]தாழ்வறும். [4]தன்னைநீ. (உ௭உ௩)

௬௯.—ஸ்ரீராமன்'இப்போது நாம் செய்யத்தக்கது யாது?'என வினவுதல்.

ஐயன்மீர் [1]நமக்குற்ற வழிவி தாதலின்
[2]செய்வகை [3]பிறிதி லாவுயிரிற் றீர்ந்தவர்
உய்கில ரினிச் [4]செயற் குரிய துண்டெனிற்
பொய்யிலீர் [5]புகலுதிர் புலமை யுள்ளத்தீர்.

இதுமுதல் பதின்மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஐயன்மீர்! மாறுகச்செய்யத்தக்க செயல் இல்லாமல் உயிர் நீங்கினவர் உய்யாமலேபோயினர்; நமக்கு நேர்ந்த அழிவு இவ்வாறாயிருத்தலால், இப்போது செய்தற்குஉரிய செயல் (ஏதேனும்) உண்டாயின், தேர்ந்த அறிவுபொருந்திய மனத்தை யுடையவரே! பொய்யிலீர்! சொல்லுவீர்களாக; (எ - று.)—பிறிதுசெய்வகை - உயிர்பிழைக்குமாறுசெய்யுஞ்செயல். பி-ம்:—

[1]நங்குலத்து, நம்முற். [2]செய்கையோ, செய்கையோர். [3]பிறிதிலை, பிறிதிலார் பிறிதிலம். [4]செயல். [5]புகலுதீர், புகலுவீர். (௨௭௨௬)

௭௰.—பதினொருகவிகள்-இராமபிரான் பலபடி வருந்துதலைத் தெரிவிக்கும்.

சீதையென் றொருத்தியா லுள்ளந் [1]தேம்பிய
[2]பேதையேன் சிறுமையா லுற்ற [3]பெற்றியை
யாதென வுணர்த்துகே [4]னுலகொ டிவ்வுறுக்
[5]காதைவன் பழியொடு நிறுத்திக் காட்டினேன்.

(இ - ள்.) சீதையென்ற ஒருத்தியால் மனம்வாடிய அறிவில்லாதயான், தாழ்மையானபுத்தியினால் அடைந்த தன்மையை யாதென்றுசொல்லுவேன்? இவ்வுலகத்தோடுபொருந்தாத [உலகத்தில் எங்கும் நடந்திலாத] (இந்த என்) கதையைக்கொடிய பழியோடும் நிலைபெறச்செய்துகாட்டினேன்; (எ - று.)—பி-ம்:—[1]தீர்விலாப். [2]பேதையன். [3]பேதைமை, பெற்றிமை. [4]உலகொடீர்வுறுக், உலகொடீவுறுக். [5]காதலன்வழியொடு நிறுத்தி, காதைவன்பழியொடுநிறுத்தி.

௭௧. மாயை[1]யின் மானென வெம்பி [2]வாய்மையால்
[3]தூயன வுறுதிகள் சொன்ன சொற்கொளேன்
போயினன் பெண்ணுரை மறாது [4]போனதால்
ஆயதிப் பழியுடை [5]யானி யன்பினீர்.

(இ - ள்.) அன்பையுடையவர்களே! '(இது), மாயையினால்வந்த மானாகும்' என்று என்தம்பி உண்மையால் தூய்மைபெற்றனவான உறுதிகளைச் சொன்ன சொற்களைக் கொள்ளேனாய், (அம்மானைப்பிடிக்க)ப் போயினேன்: பெண்ணினுரையை மறுக்காமல் (அங்ஙனம்) போனதனால், பழியைக்கொண்ட இந்தத் தீங்கு உண்டாயிற்று; (எ - று.)—ஆனி - ஹாநி: தீங்கு. பி-ம்:—[1]இம். [2]வாய்மையான். [3]தூய்மையினுணர்த்தின்னுணர்த்தச்..., தூய்மையினுணர்த்தினனுணர்ந்த..., தூயனவுறுதிதான்சொற்கொளேனெனப். [4]போகலால். [5]மரணம்.

௭௨. கண்டன னிராவணன் றன்னைக் கண்களால்
மண்டமர் [1]புரிந்தனன் [2]வலியி னாருயிர்
கொண்டில [3]னுறவெலாங் கொடுத்து[4]மாளநான்
பண்டுடைத் தீவினை பயந்த பண்பினால்.

(இ - ள்.) இராவணன்றன்னைக் கண்களாற் கண்டேன்: வலிமையோடு நெருங்கிய போரைச் செய்தேன்: (ஆயினும், நான்) முன்னே செய்துள்ள தீவினை யுண்டாக்கிய நிலைமையினால், நான் உறவினருயிரையெல்லாம் (மாண்டிடுமாறு) பறிகொடுத்து (என்) வலிமையினால் (அவனுடைய) அருமையான உயிரைக் கொள்ளாதவனாயினேன்; (எ - று.)

முன்னமே வலிமையினால் இராவணனுயிரைக் கொண்டிருந்தால், இப்போது உறவினருயிரை மாளப்பறிகொடுக்கநேர்ந்திராது: அங்ஙனஞ்செய்யாதொழிந்தது, எனது தீவினையின் தூண்டுதலே யென்றவாறு. பி-ம்:—[1]புரிந்திலன். [2]வலியினாலுயிர். [3]உயிரெலாம். [4]மீள. (௨௭௨௭)

எக. தேவர்தம் படைக்கலந் தொடுத்துத் தீயவன்
சாவது [1]காண்டுமென் றிளவல் [2]சாற்றவும்
[3]ஆவதை [4]யிசைந்தில [5]னழிவ தென்வயின்
மேவுத லுறுவதோர் விதியின் [6]வெம்மையால்.

(இ-ள்.) (என்) தம்பி நான்முகக்கடவுளுடைய படைக்கலத்தைத் தொடுத்துத் தீயவன்சாவதைக் காண்போமென்று சொல்லியபோதும், பொருந்தியதான அச்செயலை உடன்படாதவனாயினேன்: ஒப்பற்ற விதியின் கொடுமையால் அழிவு என்னிடத்துப் பொருந்துவதாயிற்று; (எ - று.)—அழிவது, அது - பகுதிப்பொருள் விகுதி. பி-ம்:—[1]காண்டினென்று, காண்டியென்று. [2]சாற்றலும். [3]ஆவகை. [4]அறிந்திலன்,உணர்ந்திலேன். [5]நவையினின் றமர், அழிவிதென்வயின். [6]வென்றியால். (உஎஉஅ)

எஅ. நின்றில னுடன்[1]னெறி படைக்கு நீதியால்
ஒன்றிய பூசனை [2]யியற்ற வுன்னினேன்
பொன்றினர் தமரெலா மிளவல் போயினான்
[3]வென்றில [4]னரக்கனை [5]விதியின் [6]வெம்மையால்.

(இ-ள்.) (போர்க்களத்துத்)தம்பியுடன் நிற்காதவனாய் எறிகின்ற படைக் கலத்துக்கு முறைப்படி பொருந்திய பூசனையை இயற்ற நினைத்தேன்: தீவினையின் மிகுதியால், (நம்)தமயரெல்லாம் இறந்திட்டனர்: என்தம்பி அரக்கனை வெல்லாதவனாய் உயிர்நீங்கினான்; (எ - று.)—போதல் - உயிர்நீங்குதல். பி-ம்:—[1]ஒரு, நெடும். [2]அமைக்க. [3]வென்றிலேன். [4]அரக்கரை. [5]வினையின். [6]மேன்மையால். (உஎஉக)

எகூ. [1]ஈண்டிவ ணிருந்[2]திவை யியம்பு மேழைமை
வேண்டுவ [3]தன்றினி யமரின் வீடிய
ஆண்டகை யன்பரை யமரர் நாட்டிடைக்
காண்டலே நலம்[4]பிற கண்ட தில்லையால்.

(இ-ள்.) இப்போது இங்கே யிருந்து இவ்வாறானசொற்களைச் சொல்லுகின்ற அறிவின்மை வேண்டத்தக்கதன்று: இனி, அமரிலிறந்த ஆண்மைக் குணமுடைய அன்பரைத் தேவலோகத்திற் காண்டலே நலம்:(அவர்களை இவ்வுலகிற்காண) வேறுஉபாயம் காணப்படவில்லை; (எ-று.)—இதனால், தானும் இறப்பதில் துணிவுபூண்டமையை ஸ்ரீராமன் தெரிவிக்கின்றான். அமரர் நாட்டிடைக்காண்டல்-இறந்து சுவர்க்கலோகத்தையடைந்து அங்குக்காணுதல். இறத்தலே நலமென்பதை வேறுவகையாகக் கூறியது-பிறிதினவிற்சியணி. பி-ம்:—[1]ஈண்டிருந்திவை. [2]அவை. [3]இன்று. [4]இனிக். (உஎ௩௦)

எ௬. எம்பியைத் துணைவரை [1]யிழந்தப் பாலினி
வெம்புபோ ரரக்கரை முருக்கி வேரறுத்து
அம்பினி னிராவண னாவி பாழ்படுத்து
உம்பருக் குதவிமே [2]லுறுவ தென்னரோ.

(இ - ள்.) என்தம்பியையும் சினேகிதர்களையும் இழந்துவிட்டு அதற்குப் பிறகு இனிமேல் (மனம்) வெதும்பிச்செய்கின்ற போரிலே அரக்கரை

அழித்து (அவர்களை) அடியோடொழித்திட்டு, என்னம்பினால் இராவணன் ஆவியையும் ஒழித்துத் தேவர்கட்கு உதவுதலைச்செய்திட்டுப் பின்னர் (யான்) அடையப்போவது என்? (எ-று.)

தம்பியுந் துணைவரும் இறந்தபிறகு தேவகாரியத்திற்காக அரக்கரை யொழிப்பது எனக்குப் பயன்தருவ தாகா தென்றபடி. பி-ம்:—1இழந்துயா னினி, இழந்தநானினி. 2உறுதலைன்றரோ. (உஎஅக)

எஎ. இளையவ னிறந்தபின் 1னெவரு மென்னெனக்கு
2அளவறு சீர்த்தியென் 3னறனென் னாண்மையென்
கிளையுறு சுற்றமென் 4னரசென் 5கேண்மையென்
விளைவுதா னென்மறை விதியென் 6மெய்ம்மையென்.

(இ-ள்.) இளையவன் இறந்தபிறகு,'எனக்கு',எவரால்தான் என்னபயன்? அளவற்றகீர்த்தியினால்தான் என்ன? அறத்தினால்தான் என்ன? ஆண்மையினால்தான் என்ன? கிளைபோல(த் தழுவுந்தன்மை)பொருந்திய சுற்றத்தினால்தான் என்ன? அரசினால்தான் என்ன? (வேறு) நட்பினால்தான் என்ன? (வேறே) நல்விளைவினால்தான்என்ன? வேதவிதியினால்என்ன? மெய்ம்மையினால்தான் என்ன? (எ - று.)

தம்பியில்லையானால் எவற்றாலும் எவராலும் நான் அடையத்தக்கபயன் எதுவுமில்லையென்றபடி. பி-ம்:—1எவம், எவ்வம். 2அளவுறு. 3அறிவென், அரசென், தவமென். 4அறமென், அரக்கன். 5கேள்வி. 6மென்மை, வேள்வி.

எஅ. இரக்கமும் பாழ்பட வெம்பி யீறுகண்டு
அரக்கரை 1வென்றுநின் றாண்மை 2யாள்வனேல்
மரக்கண்வன் 3கள்வனேன் வஞ்ச னேனினிக்
4கரக்கும தல்லதோர் கடனுண் டாகுமோ.

(இ - ள்.) தயையென்கின்ற குணமும் பாழ்படும்படி என்தம்பியின்நாசத்தைக் கண்டபின் அரக்கரைச் சயித்துநின்று பராக்கிரமத்தை யாள்வேனேயானால், மரப்பாவையின்(கண்போன்ற) கண்களைப்பெற்ற வலியகள்வனும் வஞ்சகனுமாவேன்: (ஆதலால்),இனி உயிரையிழப்பதல்லது ஒருசெய்யவேண்டிய செய லுண்டாகுமோ? (எ - று.)

காத்தல் - உயிர்போயொளித்தல். கண்படைத்ததற்குப்பயன் - இரக்கத்தைப்பெற்றிருத்தல்: அவ்விரக்கமில்லாவிடின், என்னுடையகண் மரப்பாவைக்கண்ணைப்போன்றதாகி, கள்வனென்றும் வஞ்சகனென்றும் சொல்லும் பழிச்சொல்லுக்கு இடனாவே னாதலால், உயிரைவிடுவதே தகுதி யென்றபடி. அன்பின்செயல் என்னிடத்து இல்லாவிடின் யான் இத்துணைநாள் தம்பியிடத்தும் துணைவரிடத்தும் பேரன்புடையவன்போலக்காட்டியது, கள்ளமும் வஞ்சகமுமாய் முடியு மென்க. மரம்-மரத்தினாலியன்றபாவைக்கு ஆகுபெயர்: "மரக்கண்ணோமண்ணாள்வார்கண்" என்றது இங்குக் காணத்தக்கது. பி-ம்:—1முருக்கி. 2ஆள்வனே. 3கள்வனே. 4கரக்குவது. (உஎஅஉ)

எ௯. தாதையை [1]யிழந்தபின் சடாயு விற்றபின்
[2]காதலின் றுணைவரு [3]முடியக் காத்துழல்
கோதறு தம்பியும் [4]விளியக் [5]கோளிலன்
சீதையை [6]யுவந்துளோ னென்பர் சீரியோர்.

(இ - ள்.) (நான் இப்போது அரக்கரைவென்று சீதையை மீட்பேனு னல்), 'தந்தையாகிய தசரதசக்கரவர்த்தியை யிழந்தபின்னும் (தாதைமுறை யாகிய) சடாயுஅழிந்தபின்னும், அன்பையுடைய நண்பரெல்லாம் உயிர்முடிய வும் (எல்லாநிலையிலும்)காத்து வருந்திய குற்றமற்றதம்பியும் விளியவும் சீதை யையுகந்துள்ளான்: நல்லெண்ணமில்லாதவன்' என்று பெரியோர்(என்னைப்) பழிப்பர்; (எ - று.)—இவ்வாறு பழிச்சொல்லைப்பெறுமாறு சீதையைமீட்டுவாழ் வதினும் உயிரையிழப்பதே கடமை யென்றவாறு. பி-ம்—[1]இழந்து. [2]காத லென். [3]படியக், மடியக். [4]மடியக், பிரியுங். [5]கோதிலன், கோளினன்.[6]உகந் துளோன். (உஎ௩ச)

அ0. வென்றன [1]னரக்கரை [2]வேரும் வீய்ந்தறக்
கொன்றன னயோத்தியைக் குறுகினேன் குணத்து
இன்றுணைத் [3]தம்பியை யின்றி யானுளேன்
நன்றர சானு[4]மா சால நன்றரோ.

(இ-ள்.)(போரில்)வெற்றிபெற்று அரக்கரை வேரும் ஒழிந்திடக் கொன் றவனுகி,அயோத்தியாபுரியையடைந்து,நற்குணம்நிறைந்தஇனிய துணைவனுன தம்பியையில்லாமலே யான்உயிர்வாழ்பவனுய் அரசுபுரியும்வகை நன்று:மிகவும் நன்று; (எ - று.)—அரோ - ஈற்றசை. தம்பியையின்றி அயோத்திசென்று அரசுபுரிவது எனக்கு மிகவும் பழிப்பைத்தருவதா மென்பது, குறிப்பு. பி-ம்:—[1]அரக்கனை. [2]வெருவி. [3]எம்பியை. [4]அவ்வரசு. (உஎ௩ரு)

அக.—முடிவதே தகுதி யென்று ஸ்ரீராமன் கூறுகையில், சாம்பவான் ஒன்று கூறத்தொடங்குதல்.

[1]படியின தாதலி னியாதும் பார்க்கிலன்
முடிகுவ [2]னுடனென [3]முடுகிக் கூறலும்
அடியிணை [4]வணங்கியச் சாம்ப னுழியாய்
நொடிகுவ துளதென நுவல்வ தாயினன்.

(இ - ள்.) (என்) நிலைமை இவ்வாறுள்ள தாதலால், எதையும் ஆலோசி யாதவனுய் உடனே முடிந்திடுவே னென்று தீர்மானமாக (ஸ்ரீராமன்) கூறின வுடனே,—சாம்பவான் (அப்பிரானது) இணையடிகளை வணங்கி 'ஆழியாய்! சொல்லவேண்டுவது (ஒன்று) உள்ளது' என்று சொல்லி, சொல்லலாயி னன்; (எ - று.)—சாம்பவான் கூறுவதை மேல் பத்துக்கவிகளிற்காண்க. இனது = இன்னது. பி - ம்:—[1]படியின்மேற்காதலின், படியினைக்காத்த லோ, படியினுகாதலி. [2]யானெனை. [3]முடியக். [4]வணங்கிய. (உஎ௩௬)

அஉ.—இதுமுதல்பத்துக்கவிகள் - ஒருதொடர்: சாம்பவான் ஸ்ரீராமனைத் துதித்து அநுமான் சஞ்சீவிமலையைக்கொணரச்சென்றிருப்பதையும் அதனால் யாவரும் உய்வரென்பதையுந் தெரிவித்தலைக் கூறும்.

உன்னைநீ யுணர்கிலை யடிய னேனுனை
முன்னமே [1]யுணர்குவன் மொழித [2]றீதது
[3]என்னெனி லிமையவ [4]ரெண் ணுக் [5]கீனமாம்
பின்னரே [6]தெரிகுதி [7]தெரிவில் பெற்றியாய்.

(இ-ள்.) (எவராலும்) தெரிந்துகொள்ளமுடியாத தன்மையுள்ளவனே! உன்னை நீ அறியாதவன்போலிருக்கிறாய்: அடியேன் உன்னை முன்னரே அறிகுவேன்: (அதனை)மொழிதல் நன்றன்று:ஏனெனின், இமையவருடைய எண்ணத்துக்குக் குறைவாம்; (உன் தன்மையை நீ) பின்பே அறிகுவாய்; (எ-று.)

பரம்பொருளை "யதோவாசோநிவர்த்தந்தே, அப்ராப்யமநஸாஸஹ" என்று வேதபுருஷனும் தன்வாக்குமனசுகளுக்கு எட்டாதவனென்பதனால், 'தெரிவில் பெற்றியாய்' என்றது இராவணவதத்தின்பொருட்டு தெய்வவுருவத்தைக்கரந்து வேற்றுருக்கொண்டு கடவுளாகிய நீயும் தேவர்களும் வந்திருக்கையில் அந்தப்பரமரகசியத்தை வெளியிடுவது அபசாரமாகுமென்பான் 'இமையவரெண்ணுக்கீனமாம்' என்றான். பி-ம்:—1அறிகுவேன். 2தீதிது, தீத்துவென். 3என்னினி. 4எண்ணக்கு. 5ஈனமால். 6தெரிகுதும் 7தெரியும்.

அங. அம்புயத் தவன்படை யாத [1]றேறினன்
[2]உம்பியை யுலப்பரு [3]முருவை யூன்றிட
வெம்பு[4]வெங் களத்திடை [5]விழுத்த வென்றியான்
[6]எம்பெருந் தலைவவி தெண்ணமுண்மையால்.

(இ - ள்.) எம்முடையபெருந்தலைவனே!(மனம்)புழுங்குவதற்குக்காரணமான கொடிய போர்க்களத்திலே உன்தம்பியையும் அளவிடமுடியாத வானரரையும்மேற்பதிந்திட்டனுதல் உயிரைப்போக்கிய வெற்றியைப்படைத்துள்ளதனல், (எதிரிவிட்டது)பிரமதேவனது அஸ்திரமென்பதையுணர்ந்திட்டேன்; இந்தஎன்னெண்ணம் சத்தியமானதேயாகும்;(எ-று.)—ஆல்-ஈற்றசை: தேற்றமுமாம். பி - ம்:—1தேறிமுன். 2தம்பியை. 3அவற்றிலேனதைத்த, வலத்தையோய்த்தது, வலத்தையொத்தது. 4போர்க். 5மேவும், வீழ்த்த,விழுந்த. 6எம்பதித்தலைவரின்மேலுமெய்தலால், எம்பெருந்தலைவரின் மெய்ம்மையெய்தலால். (உஎஙஅ)

அச. அன்னவன் படைக்கல [1]மமரர் தானவர்
[2]தன்னையும் விடினுயிர் [3]குடிக்குந் [4]தற்பர
உன்னையொன் [5]றிழைத்தில [6]தொழிந்து நீங்கியது
இன்னமு [7]மவகையொன் [8]றெண்ண வேண்டுமோ.

(இ - ள்.) அந்தப்பிரமதேவனுடைய அஸ்திரமானது பிரயோகிக்கப் படுமாயின் அமரர் தானவர்என்பவர்களையும் உயிர்போக்கியேதீரும்; எல்லாப் பொருளினும் மேம்பட்டவனே! (அது) உன்னை யொன்றுஞ்செய்யமாட்டாது

ஒழிந்துநீங்கியது; இதைக்காட்டிலும் (வேறே) மகிழ்ச்சியைத் தரக்கூடியது ஒன்று எண்ணவேண்டுமோ? (எ - று.)—ஈற்றடியில் 'உவமை வேறெண்ணவேண்டுமோ' என்றபாடத்திற்கு-இது பிரமாஸ்திரமென்பதற்கு உன்னைத்தவிர யாவரையும் ஒழித்ததுவே போதியநிதரிசனமென்று பொருள்கூறலாம். பி-ம்:—1அமலகல்லது, மாறெறன்றன்னது. 2தன்னையேவிடின். 3தவிர்க்குந். 4சாய்விலாது, தாழ்க்கிலாது, சார்தலால். 5இழைக்கிலது. 6ஒளிந்துநீங்கியது, ஒழிந்துவீங்கியது. 7உளவை. 8எண்ணில். (உளஙக)

அரு. பெருந்திற லனுமனீண் டுணர்வு 1பெற்றுத்தான்
அருந்துய 2ரளவிலா தாற்று வானையான்
மருந்திறைப் பொழுதினிற் 3கொணர்கு வாயெனப்
பொருந்தினன் வடதிசைக் கடிது போயினான்.

(இ - ள்.) பெருஞ்சாமர்த்தியம்படைத்த அநுமான் இப்போது உணர்வு அடைந்து, (போக்குவதற்கு) அரிய துயரை அளவில்லாதவாறு காட்டுவானை நோக்கி, யான், '(யாவரையும் பிழைப்பிக்கவல்ல) மருந்தை நொடிப்பொழுதிலே கொணர்வாய்' என்று கூற, உடன்பட்டவனாய், (அவன் அம்மருந்து கொணரும்பொருட்டு) வடதிசைக்கு விரைந்துசென்றுளான்; (எ - று.)—பி-ம்:—1பெற்றுளான், பெற்றுத்தன். 2முடிக்குறுமளவினாற்றலான், முடிவுறுமளவிலாற்றலான், அளவினாலாற்றுவான்றனை. 3கொணரும்வாய்மொழி.

அசு. பனிவரை கடந்தனன் பருப்ப தங்களின்
1தனியர சின்புறந் தவிரச் சார்ந்துளன்
இனியொரு கணத்தின்வந் தெய்து 2மீண்டுறு
துனிவரு துன்பநீ 3துறத்தி 4தொல்லையோய்.

(இ - ள்.) இமயமலையைக்கடந்து பருப்பதங்கட்கு ஒப்பற்ற அரசனை அப்பருப்பதத்திடமும் நீங்க (அப்பாற்) சேர்ந்துளானாகிய அநுமான் இனியொருகணத்திற்குள் இங்கே வந்துசேர்வான்; பழமையானவனே! மிக்க மனக்கலக்கம் வருவதற்குக்காரணமான துன்பத்தை நீ விட்டிடுவாய்; (எ-று.)—பருப்பதங்களின் தனியரசு என்றது மேருமலையைக் குறிக்குமென்னவுமாம். உறு-மிக்க. பி-ம்:—1தனியரசிதன்புறந்தவிர்ந்து, தனிவரைசிறப்பவுந்தவிர்க்கச். 2மீண்டவன். 3துடைத்தி. 4நேமியாய். 2ஈண்டவன் என்றும்படிக்கலாம். (உளசுக)

அஎ. யானலா 1லெந்தையா 2யுலகை 3யீன்றுளான்
தானலாற் சிவனலா னேமி 4தாங்கிய
கோனலா 5லியாவரு 6முணருங் கோளிலர்
வேனிலான் 7மேனியா மருந்தை 8மெய்யுற.

(இ-ள்.) மன்மதன்போற் கட்டழகுவாய்ந்தவனே! யான் அல்லாமலும், எனதுதந்தையாகி உலகைப்படைத்தவனான பிரமதேவனல்லாமலும், சிவனல்லாமலும், சக்கராயுதத்தைத் தாங்கிய தலைவனாகிய திருமாலல்லாமலும், எவரும் மருந்தை உண்மைபொருந்த அறியும் அறிவு இல்லாதவராவர். அம்மருந்துகளின் தன்மை எனக்கும் திரிமூர்த்திகட்குந் தெரியுமேயன்றி, மற்றையோர்க்குத் தெரியாதென்றபடி. மூன்றுமடியில், கோளிலா என்று

படித்து—யானும் பிரமன்முதலியோருமன்றி மற்றையெவரும் அறியுந்தன்மை யில்லாத அம்மருந்தை மெய்யிற்பொருந்த (அங்ஙனம்பொருந்தியவர்க்கு)மன் மதன்போன்ற மேனியுண்டாகுமெனினுமாம். பி - ம்:—[1]எந்தையால். [2]உல கம். [3]ஈன்றவன். [4]தாங்குறும். [5]எனைவரும், எனையரும். [6]கோளிலார்களால். [7]மேனிய, மேனியாய். [8]மேயுற. (உஎசஉ)

அஅ. ஆர்கலி கடைந்தநா ளமிர்தின் வந்தன
[1]கார்நிறத் தண்ணற [2]னேமி காப்பன
மேருவி னுத்தர குருவின் [3]மேலுள
யாரு[4]முற் [5]றுணர்கிலா [6]வரண மெய்தின.

(இ-ள்.) அம்மருந்துகள்,—கடலைக்கடைந்தபோது அமிழ்தத்துடனே தோன்றினவை; கருநிறமுடையகடவுளான திருமாலின் சக்கரப்படையாற் பாதுகாக்கப்படுவன: மேருவின்உத்தரத்திலுள்ள குருநாட்டிற்கும் அப்பாலுள் ளன:எவராலும்பொருந்தி அறியப்படாத பாதுகாவலையடைந்தன:(எ-று.)— பாரதயுத்தம்நிகழ்ந்த குருக்ஷேத்திரத்தினும் வேறுபாடு விளங்க, 'மேருவினுத் தர'என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பி-ம்:-[1]கார்நிறக்கண்ணன்றன். [2]மேனி. [3]மேலுளோர், மேலுளது. [4]மற்று. [5]அணுகலா, உணர்கிலர். [6]வான மெய்தினோர். (உஎசங)

அகூ. தோன்றிய நாண்முத லியாருந் [1]தொட்டில
ஆன்ற[2]பே ரண்ணலே [3]யவற்றி னாற்றல்கேள்
[4]மூன்றென வொன்றிய வுலக [5]முன்னைநாள்
ஈன்றவ னிறப்பினு [6]மாவி யீயுமால்.

(இ - ள்.) தோன்றினநாள்தொடங்கி எவராலுந் தொடப்படாதன; மிக்க புகழ்பெற்ற பெருமையிற்சிறந்தோனே! அவற்றின்வல்லமையைக் கேட்பாயாக:மூன்றென்று ஒருமித்துச்சொல்லப்படுகின்ற(எல்லா)வுலகங்களை யும் ஆதியிற்படைத்தவனான பிரமதேவன் இறப்பையடைந்தாலும்(அம்மருந் துகள் அவனுடைய) உயிரையும் ஈயும்; (எ - று.)—பி-ம்:—[1]தொட்டிலார். [2]பேரமுதினவ். [3]அளவினாற்றல, அதனினாற்றல்கேள், மருந்தின்..., [4]மூன்றி னோடொன்றுள. [5]முன்ன நாள். [6]உயிரை. (உஎசச)

கூ0. சல்லிய மகற்றுவ தொன்று சந்துகள்
புல்லுறப் [1]பொருத்துவ தொன்று போயின
நல்லுயிர்[2]நல்குவ தொன்று நன்னிறந்
[3]தொல்லைய தாக்குவ தொன்று தொல்லையோய்,

(இ - ள்.) பழமையானவனே! (அம்மருந்துகளில்), ஒன்று, சல்லியத் தைப் போக்குவது: ஒன்று, கூட்டுக்களைப் பொருந்தும்படி கூட்டுவது: ஒன்று, போன [இறந்த] பிராணனைத் தருவது; ஒன்று, நல்லஉடலைப் பழமைபோல ஆக்குவது; (எ-று.)

கீழ்ச்செய்யுட்களில் மருந்து கொணர்வதைக்குறித்துப் பொதுவாகக் கூறிய சாம்பவான் அம்மருந்துகளில் நான்குவகையுண்டென்பதை இங்குத்

தெரிவிக்கின்றான். உடலில் எதிரிகளுடையபடைபொருந்தியிருந்தால் அவற்றை நீக்குவதுஒன்று: அது விசல்லியகரணியெனப்படும். அங்ஙனம் சல்லியத்தைப்போக்கியபின் மூட்டு விட்டிருந்தால் சேர்ப்பது - மற்றொன்று: அது, ஸந்தாநகரணியெனப்படும். போனஉயிரைத்தருவது - பிறிதொன்று: அது, ஸஞ்ஜீவகரணியெனப்படும். காயம்பட்டவடு இருந்தால் அவ்வடுவை நீக்கி உடலை முன்போல ஆக்குவது ஒன்று: அது-ஸாவர்ண்யகரணியெனப்படுமென்க. இந்நான்கனுள் உயிரைப்பிழைப்பிப்பதேமுக்கியமாதலால், அதனைப்பாராட்டி 'ஈன்றவனிறப்பினுமாவியீயும்' என்று கீழும் கூறினன். பி-ம்:—[1]பொருந்துவது. [2]ஈகுவது. [3]தொல்லையதாகவேதோன்றும். (உஎசரு)

கூக. [1]வருவது திண்ணநீ வருந்தன் மாருதி
தருநெறி தருமமே [2]காட்டத் [3]தாழ்கலன்
அருமைய தன்றென வடிவ ணங்கினன்
இருமையுந் [4]துடைப்பவ னேம்ப லெய்தினன்.

(இ - ள்.) (மருந்து) வருவதென்பது நிச்சயம்: நீ வருந்தாதே: அநுமான் தருமமே வழிகாட்டத் தாமதியாதவனாய்க் கொணர்வான்:(அவனுக்கு இது), அருமையானதன்று என்றுசொல்லி (ஜாம்பவான் ஸ்ரீராமபிரானுடைய) திருவடிகளில் வணங்கினன்: (அதுகண்டு, தன்னைபடைந்தாருடைய நல்வினை தீவினையென்ற) இரண்டுவினைகளையும் போக்குபவனான (திருமாலின் அமிசமான) ஸ்ரீராமன் மகிழ்ச்சியடைந்தான்; (எ - று.)—பி-ம்:---[1]வருமது. [2]காட்டுங், கணமும். [3]தாழ்க்கிலன். [4]துறப்பவன். (உஎசசு)

கூஉ.—அநுமான் மருந்துகொணர்வானென்பதை நம்பினேனென்று ஸ்ரீராமன் கூறுகையில் வடதிசையிலொலியெழுதல்.

பொன்மலை மீதுபோய்ப் போக பூமியின்
நன்மருந் துதவுமென் றுரைத்த [1]நல்லுரைக்கு
[2]அன்வய மில்லையென் [3]றயிர்க்கின் றேனலேன்
என்னலும் [4]வடதிசை [5]யெழுந்த தங்கொலி.

(இ - ள்.) மேருமலைக்கும் அப்பாற்போய்ப் போகபூமியிலுள்ள நல்ல மருந்தை (அநுமான்) கொணர்வானென்று சொன்ன நல்லஉரைக்குப் பொருத்தமில்லையென்று சந்தேகிக்கின்றேனல்லேன்என்று (ஸ்ரீராமன்) சொல்லுமளவிலே, அங்கே வடதிசையில் ஒலி எழுந்தது; (எ-று.)—பி-ம்:—[1]நல்லுரை. [2]அன்மையம், அன்மயம். [3]அயிர்க்கின்றேனரோ, அயிர்ப்புநீங்கினேன், [4]விசும்பிடை. [5]எழுந்ததீண்டொலி, எழுந்ததாண்டொலி, எழுந்ததீட்டொலி. (உஎசஎ)

கூங.—பெருங்காற்றுத் தோன்றுதல்.

கடல்கிளர்ந் தெழுந்துமேற் படரக் கார்வரை
[1]இடையிடை பறிந்துவிண் ணேற [2]விற்றிடை
தடை[3]யில துடற்றுறு சண்ட மாருதம்
வடதிசை [4]தோன்றிய [5]மறுக்க [6]முற்றதால்.

(இ - ள்.) கடல்பொங்கியெழுந்து(கரை)மீதுசெல்லவும், கார்தங்கியமலை இடையிடைபறியுண்டு வானத்திலேறவும், நடுவே இற்றுத் தடுக்கப்படுதலில்லாமல் வீசுகின்ற சண்டமாருதம் வடதிசையிலே தோன்றியதனாலான கலக்கம் உண்டாயிற்று; (எ - று.)—சண்டமாருதம் தோன்றியது, அநுமான் வரும்விரைவினு லென்க. கீழ்ச்செய்யுளிற்கூறியபடி ஒலியெழுந்ததும் மேலே மீன்குலம் குலைதல்முதலியனவும் இதுபற்றியேயாம். பி-ம்:—[1]இடைபறிந்துதிர. [2]வீற்றிடை. [3]இலனுற்றுறு, இலதுடற்றுவ, இலதுற்றெருரு. [4]வந்தோர். [5]மயக்கம். [6]வந்ததால். (உஎசஅ)

கூச.—நட்சத்திரக்கூட்டம் நிலைதலைநல்முதலியன நிகழ்தல்.

மீன்குலங் குலைந்துக வெயிலின் மண்டிலந்
தான்குலைந் துயர்[1]மதி [2]தழுவத் [3]தன்னுழை
[4]மான்குலம் வெருக்கொள [5]மயங்கி மண்டிவான்
தேன்குலங் கலங்கிய நறவிற் [6]சென்றவால்.

(இ - ள்.) நட்சத்திரக்கூட்டம் நிலைகுலைந்துசிந்தவும், சூரியமண்டலம் தான் நிலைதடுமாறி உயர்ந்துள்ள சந்திரனைத் தழுவவும், தன்னிடத்து [சந்திரனிடத்து] உள்ள மான் திரண்டவெருட்சியை யடையவும், தேன்கூண்டிலே மொய்ப்பனவாய் நிலைகலங்கப்பெற்ற தேனினம்போல மேகம் (ஒன்றோடொன்று) நெருங்கி மயங்கிச் சென்றன; (எ - று.)—நறவுகலங்கிய தேன் குலத்தின்என உருபு மாறுக: நறவு-தேன்கூண்டிற்கு, இலக்கணை. பி-ம்:—[1]மழை. [2]தழுவித். [3]தண்ணமை. [4]வான். [5]தெற்கு. [6]சென்றதால். (உஎசக)

கூரு.—அநுமான் ஆரவாரித்தல்.

[1]வேர்த்துணர் தாரொடு விசும்பை மீச்செலப்
[2]போர்த்தன மலையொடு [3]மரனு முன்புபோல்
[4]தூர்த்தன வேலையைக் காலின் றோன்றலும்
ஆர்த்தன [5]னனைய வ[6]ரரந்தை யாற்றுவான்.

(இ - ள்.) வேரும் பூங்கொத்தும் தாருடனே ஆகாயத்தின்மேற் சென்றதனால்(அவ்விடத்தை)மூடிக்கொண்டன: மலையும் மரனும் முன்புபோல் [நளன் சேதுவைக் கட்டியபொழுதிற்போல]கடலைத் தூர்த்தன; அநுமானும்,அங்குள்ள ஸ்ரீராமன் ஜாம்பவான் விபீஷணன் என்பவருடைய துயரத்தைத் தீர்க்கும் பொருட்டு ஆரவாரஞ்செய்தான்; (எ-று.)—பி-ம்:—[1]வேர்த்துள, வேர்த்தன. [2]போர்த்துள. [3]மரனும்போவன, வானம்போல்வன. [4]தூர்த்தனன். [5]அனையவன். [6]அரதி. (உஎ0)

கூசா.—அநுமான் செய்த பேரொலியின் வருணனை.

மழைகளுங் கடல்களு மற்று முற்றுமண்
[1]உழையவும் விசும்பவு மொலித்தற் கொத்துள
[2]குழீஇயின குமுறின கொள்கை [3]கொண்டதால்
[4]உழுவையின் சினத்தவ னார்த்த வோசையே.

(இ - ள்.) புலிபோன்றசினத்தையுடையவனை அநுமான் ஆரவாரித்த ஓசையானது,—மண்ணினிடத்திலிருப்பனவும் விசும்பினிடத்தனவுமாகி

ஒலித்தற்குஏற்றனவான மழைகளும் கடல்களும் மற்றுமுள்ள எல்லாமும் (ஒன்று)கூடியனவாய் ஒலித்ததன்மையைக் கொண்டது; (எ - று.)

அநுமான் செய்தபேரொலியானது, பூமியிலும் வானத்திலு மிருப்பனவாகி ஒலிசெய்வனவான மேகம் கடல்முதலியயாவும் ஒன்றுதிரண்டு ஒலித்தாலெழும் ஆரவாரத்தைப்போல மிக்கிருந்த தென்றவாறு: தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]உழைகளும் விசும்புமேலொலிதங்தொத்துள, உழையவும் விசும்பின்மேலொலிவங்தொத்துள. [2]குழைஇயின. [3]கொண்டன, கண்டதால். [4]உழுவையைநிகர்த்தவன். (உஎருக)

கூஎ.—மருந்துமலையைக்கொண்டுவரும் அனுமானுடைய தோற்றம்.

[1]எறிதிரைப் பெருங்கடல் கடைய வேற்றநாள்
செறிசுடர் [2]மந்தரந் தருதி சென்றென
[3]வெறிதுகொ லெனக்கொடு விசும்பின் [4]மீச்செலும்
உறு[5]வலிக் கலுழனே யொத்துத் தோன்றினான்.

(இ - ள்.) வீசுகின்ற திரைகளையுடைய பெரியபாற்கடலைக் கடையும்படி (தேவதானவர்) அங்கீகரித்த காலத்தில், 'நெருங்கியஒளியையுடைய மந்தரமலையைப் போய்க் கொணர்வாய்' என்று கட்டளையிட, (இவ்விடம்) வெறுமையானதுதானோஎன்று (மந்தரமிருந்த இடத்தைக் கண்டவர்) சொல்லும்படி (வேரோடுபெயர்த்துக்)கொண்டு ஆகாயத்தின்மீது செல்லுகின்ற மிக்க வலிமையையுடைய கருடனையே யொத்து (மருந்து மலையைக் கையிலேந்தியுள்ள) அநுமான் தோன்றினான்; (எ - று.)—தற்குறிப்பேற்றவுவமையணி. பி-ம்:—[1]எறிசுடர், எரிசுடர். [2]மந்தமத்தருகுசென்றனன், மந்தரந்திருகிச்சென்றென. [3]வெறிதுலகெனக்கொடு. [4]மேற். [5]வகைக். (உஎருஉ)

கூஅ.—இதுவும் அது.

பூதலத் [1]தரவொடு மலைந்து போனநாள்
ஓதிய [2]வென்றிய [3]னூடற்று மூற்றத்தன்
[4]ஏதமி லிலங்கையங் [5]கிரிகொ டெய்திய
தாதையு மொத்தன னுவமை [6]தாழ்க்கிலான்.

(இ - ள்.) பூலோகத்திலே ஆதிசேஷனோடு பொருதுபோனகாலத்தில், (யாவரும்)சிறப்பித்துக்கூறுகிற வெற்றியையுடையவனும் போர்செய்யவல்ல பெருவலிபடைத்தவனுமாகி, குற்றமற்ற இலங்கையிலே அழகிய திரிகூடமலையைக்கொண்டுவந்த தாதையாகிய வாயுபகவானையும் உவமையிற்பின்வாங்காதவனாய் ஒத்தவனாயினான் (அவ்வநுமான்); (எ - று.)—பி-ம்:—[1]அரசொடு மலிந்து. [2]வென்றியேன்று. [3]ஊற்றமுற்றதன். [4]ஏதமிலங்கையங். [5]கரங்கொடெய்திய, கிரியொடேந்திய. [6]தற்கிலான். (உஎருங)

கூகூ.—வந்தானென்றுசொல்லுதற்குமுன்னே அனுமான் வந்து அடியூன்றி நிலத்தைச் சேர்தல்.

தோன்றின [1]னென்னுமச் சொல்லின் முன்னம்வந்து
ஊன்றின னிலத்தடி கடவு ளோங்கலுன்

[2]வான்றனி னின்றது வஞ்ச ரூர்வா
[3]ஏன்றில தாதலி னனும னெய்தினன்.

(இ - ள்.) (கடல்முதலியனநிலைகுலைந்ததையும் பெருங் காற்றும்பேரார வாரமுந் தோன்றியதையுங் கண்டு, அநுமான்) வந்திட்டானென்று (சாம்ப வன்)பேசிய அச்சொல்லுக்குமுன்னமே, வந்து நிலத்திலே (தன்)பாதம் ஊன்றப்பெற்று (அவ்விடத்தை) அடைந்தான், அநுமான்; வஞ்சகருடைய ஊரிலே வருவதற்கு உடன்படாததால், தெய்வத்தன்மையுள்ள அந்தமருத்து மலையானது வானில்தானே நின்றது; (எ - று.)—பி - ம்:—[1]என்பதோர் சொல்லின். [2]வான்றனி. [3]ஏன்றலவாதலால், ஏன்றலதாதலின். (உஎ௯௪)

க00.—வாயுபகவான் மருந்தின்மீதுபட்டு வீசிச் சுக்கிரீவன்முதலியோரை ஆர்த்தெழுமாறு செய்தல்.

வந்தனன் மருந்தினை மருத்து வானவன்
சிந்தையிற் பெருமகிழ் சிறப்பச் சேர்ந்துறீஇ
அந்தரத் தருக்கன்மா மகனொ டாயவர்
வந்திரைத் தார்த்தெழும் வகைசெய் தானரோ.

(இ - ள்.) வாயுபகவான் வந்து சிந்தையிலே மிக்கமகிழ்ச்சி சிறக்குமாறு அம்மருந்தைச் சேர்ந்துபொருந்தி, அந்தரத்திற்செல்பவனை சூரியனது சிறந்தகுமாரனோடு பொருந்தியவரானமற்றைவீரரும்(உயிர்பெற்று)வந்துஇரைச்சலிட்டு ஆரவாரஞ்செய்து எழும்படி செய்தான்; (எ - று.)—இச்செய்யுள் பலபிரதிகளி லில்லை. (உஎ௯௫)

க0க.—யாவரும் உயிர்பெற்றெழுதல்.

காற்றுவந் தசைத்தலுங் கடவு ளூட்டவர்
போற்றினர் [1]விருந்துவந் திருந்த புண்ணியர்
ஏற்றமும் பெருவலி [2]யழகொ டெய்தினர்
கூற்றினை வென்று[3]த முருவுங் கூடினர்.

(இ - ள்.) வானுலகத்தவராற் போற்றப்பட்டவராய் விருந்தாகவந்திருந்த புண்ணியவான்கள்,—(இறந்ததம்முடலின்மீது)காற்றுவந்து வீசுதலும்,(பிறகு) மேன்மையும் பெருவலியுடனேஅழகும் பெற்றவராய் யமனைவென்று தம் முருவையுங் கூடினார்கள்; (எ - று.)

பிரமாஸ்திரத்தினல் மரணம்நேரிட்டதுபற்றிச் சுவர்க்கத்தையடைந்து வானவராற் போற்றப்பட்ட வானரர் மருந்துக்காற்றுப் பட்டவுடனே ஏற்றமடைந்து வலிமுதலியவற்றைப்பெற்ற தம்முடலை மீண்டும் அடைந்தார்களென்க. பி-ம்:—[1]நந்தவந்து. [2]அழகும். [3]தம்முயிரும். (உஎ௯௬)

க0உ.—அரக்கர் உயிர்பெறாமைக்கும் வானரர் உயிர்பெற்றமைக்குங் காரணம்.

[1]அரக்கர்த மாக்கைக [2]ளாழிவி லாழியிற்
[3]கரக்கமற் றெழிந்தன வொழியக் கண்டன

மரக்கல முதலவு முய்ந்து வாழ்ந்தன
குரக்கின [4]முய்ந்தது கூற வேண்டுமோ.

(இ - ள்.) அரக்கருடைய உடல்கள் அழிவில்லாதசமுத்திரத்திலே (எறியப்பட்டு) அமிழ்ந்ததனால் (உயிரைப் பெறாமல்) உயிர்நீங்கியபடியேயிருந்தன: (அவை)தவிரக் காணப்பட்டனவான மரக்கலம்முதலியனவும் உய்ந்து வாழ்வுபெற்றன: குரக்கினம் உய்ந்ததுபற்றிக்கூறவேண்டுமோ? (எ - று.)—ஒழிந்தன-முற்று. மரக்கலம் - மரக்கலத்திலிருந்த உயிர்நீங்கியவுட லென்னலாம். அரக்கருடல்களைக் கடலி லெறியுமாறு இராவணன் மருத்தனுக்குக் கட்டளையிட, அவன் அங்ஙனமே செய்தன னெனக் கீழ்ப்படலத்துக் கூறப்பட்டது. மற்று-வினைமாற்று. பி-ம்:—[1]அரக்கர்கள். [2]அரக்கராழியில், அளக்கராழியில். [3]கரக்கலுற்று, கரக்கவற்று. [4]உற்றது. (உஎ௫எ)

கoங.—இலட்சுமணன் உயிர் பெறுதல்.

கழன்றன நெடுங்கணை [1]கழன்ற புண்கடுத்து
[2]அழன்றன குளிர்ந்தன வங்கஞ் செங்கண்கள்
[3]சுழன்றன வுலகெலாந் [4]தொழுத [5]தொங்கலின்
[6]குழன்றெழுங் குஞ்சியா [7]னுணர்வு கூடினான்.

(இ-ள்.) நெடியகணைகள் (இலட்சுமணனுடைய உடம்பைவிட்டுக்) கழன்றன: கழன்றதனால் தோன்றிய புண்கள் கடுப்புக்கொண்டு எரிந்தவை, குளிர்ந்துவிட்டன; உடம்பிலே செந்நிறக்கண்கள், சுழலத்தொடங்கின; உலகெலாம் தொழுவனவாயின: மாலைபோலக்குழற்சிகொண்டு தோன்றுகின்ற மயிர்முடியையுடைய இலட்சுமணன் உணர்வு கூடப்பெற்றான்; (எ - று.)—பி-ம்:—[1]கரந்த. [2]அழன்றில. [3]சுழன்றில. [4]தொழுவ. [5]ஓங்கலே. [6]குழன்றபூங். [7]உணர்வுங். (உஎ௫அ)

கoச.—இலட்சுமணன் எழுதல்.

யாவரு [1]மெழுந்தன ரார்த்த வேழ்கடல்
[2]தாழ்வரும் பேரொலி [3]செவியிற் சார்தலும்
தேவர்கள் வாழ்த்தொலி கேட்ட செங்கணான்
[4]யோகநீங் கினனென விளவ லோங்கினான்.

(இ - ள்.) ஏழ்கடலும் தாழ்தற்குக்காரணமாய் (வானரவீரர்) யாவரும் உயிர்பெற்றெழுந்து ஆரவாரித்த பேரொலி (தன்)செவியிற் பட்டவுடனே, தேவர்கள் வாழ்த்துகின்ற ஒலியைக் கேட்ட செங்கணனாகிய திருமால் யோகநித்திரையினின்று நீங்கியெழுந்தான்போல, இளையபெருமாள் எழுந்து நின்றான்; (எ - று.)—பி-ம்:—[1]எழுந்தவரேத்த, எழுந்துவந்தார்த்த, எழுந்தனரேத்த. [2]தாவரும். [3]செவியைச். [4]ஏவம். (உஎ௫௯)

கo௫—இராமன் தம்பியைத் தழுவுதல்.

ஓங்கிய தம்பியை யுயிர்வந் துள்ளுற
வீங்கிய தோள்களாற் றழுவி வெந்துயர்

நீங்கின னிராமனு முலகி [1]னின்றில
தீங்குள தேவரு மறுக்கஞ் [2]சிந்தினார்.

(இ - ள்.) உயிர்வந்து உடம்பினுள்ளே பொருந்தியதனால் எழுந்த தம்பியை (உவகையாற்)பூரித்த தோள்களினால் தழுவி, ஸ்ரீராமனும், (தனது) கொடியதுயர் நீங்கப்பெற்றான்; தேவரும் (தம்பகைக்)கவலையொழியப் பெற்றனர்: தோன்றிய தீங்கும் உலகில் நின்றில; (எ - று.)—உளஎன்பதை 'தீங்கு' என்பதனோடு இயைக்காமல் அமுதமுண்டதனாற் சாவாமலிருப்பவராதலின், 'உளதேவர்'என்று ரெனினுமாம். பி - ம்:—[1]நின்றவர், நின்றுள. [2]தீர்ந்தனர். (உஎசு0)

க0௫.—அரம்பையர்முதலியோரின் மகிழ்ச்சிச்செயல்.

அரம்பைய [1]ராடின ரமுத வேழிசை
நரம்[2]பியல் [3]கின்னர முதல [4]நன்மையே
நிரம்பின [5]வுலகெலா முவகை நெய்விழாப்
[6]பரம்பின முனிவரர் வேதம் பாடினார்.

(இ - ள்.) அரம்பையர் ஆடினர்: நரம்பினாலியன்ற கின்னரம்முதலிய இசைக்கருவிகள் இனிதாக அமிழ்தம்போலினிய ஏழிசை நிரம்பப்பெற்றன: உலகமுழுவதும் உவகைக்குஅறிகுறியாக நெய்யாடல்திருவிழா பரவின: முனிவரர் வேதம்பாடினார்; (எ - று.)—ஒருபிரதியில் "ஓங்கிய" (க0௩) என்றதன்பின் "உந்தின" (க0அ) என்ற செய்யுளும், அதன்பின் இச்செய்யுளும் உள்ளன. பி-ம்:—[1]வாழ்த்தொலி.[2]அயர்,அயில்.[3]கின்னரர்முதல்வர்.[4]நாணுற, நாதமே. [5]உலகெனை. [6]விரும்பினமுனிவரும். (உஎசுக)

க0எ.—அப்போது வேதம்முதலின ஆர்த்தல்.

[1]வேதநின் றார்த்தன வேத வேதியர்
[2]போதநின் றார்த்தன [3]புகழு மார்த்தன
ஓதநின் றார்த்தன [4]வோத வேலையிற்
சீதநின் றார்த்தன தேவர் [5]சிந்தனை.

(இ-ள்.) வேதங்கள், (மகிழ்ச்சியோடு)நின்று ஆரவாரித்தன;வேதம்வல்ல வேதியரின் ஞானமும், (மகிழ்ச்சியோடு)நின்று ஆர்த்தன; புகழ்களும், ஆர்த்தன: கடல்களும், (கிளர்ந்து)நின்று ஆர்த்தன; தேவர்களின்மனமும், நீர்ப்பெருக்கைக்கொண்ட கடலைப்போலக் குளிர்ச்சிகொண்டுஆரவாரித்தன; (எ-று.)—புகழார்த்தல்-புகழ்பலராலுஞ்சொல்லப்படுதல். பி-ம்:—[1]வேதநின் றார்த்தனர் வேதவேள்வியர். [2]தாதைநின்றார்த்தனன். [3]தருமம்பூத்தன. [4]ஓதமுள்ளுறச். [5]ஆர்த்தனர். (உஎசுஉ)

க0அ.—பிரமாஸ்திரம் ஸ்ரீராமனை வலம்வந்து வணங்கித் தன்னிடஞ் சேர்தல்.

[1]உந்தின பின்கொலை [2]யொழிவி லுண்மையும்
தந்தனை [3]நீயது நினக்குச் சான்றெனாச்

சுந்தர வில்லியைத் தொழுது சூழவந்து
அந்தணன் படையுமின் [4]றகன்று போனதால்.

(இ - ள்.) கொலை நீங்கினபின் [யாவரும் உயிர்பெற்றெழுந்தபின்], பிரமாஸ்திரமும், அழகிய வில்லாளியான ஸ்ரீராமனைச் சூழவந்து தொழுது, எதிர் நின்று 'நீ ஒழிவில்லாத சத்தியத்தைத் தந்தாய்; அது நினக்குப் பெருமையே'என்றுசொல்லி,மறைந்து போயிற்று;(எ-று.)—இச்செய்யுள் சிலபிரதிகளில்"வேதநின்மூர்த்தன"(கoஎ)என்றதன்முன் உள்ளது. பி-ம்:—[1]உந்திளைபின், உய்ந்தனனினிக். [2]ஒழிவதுண்மையுந்தந்தனன். [3]இனையது. [4]அயர்ந்து.

வேறு.

கoகூ.—ஸ்ரீராமன் அநுமானைத் தழுவுதல்.

[1]ஆய [2]காலையி னமர ரார்த்தெழத்
[3]தாயி னன்பனைத் தழுவி னான்றனி
நாய கன்பெருந் [4]துயர நாமறத்
[5]தூய காதனீர் துளங்கு [6]கண்ணினான்.

(இ - ள்.) அப்போது ஒப்பற்ற தலைவனான ஸ்ரீராமன்,—மிக்கதுயரம் பேரும் அற்றதாயொழியவே,பரிசுத்தமான அன்பினால் நீர்ததும்புகின்ற கண்களையுடையவனாய், தாய்போல் அன்புடையவனான அநுமானை அமரர் (மகிழ்ச்சியால்) ஆரவாரித்து எழாநிற்க, ஆலிங்கனஞ்செய்து கொண்டான்; (எ-று.)—நீர் - மகிழ்ச்சிக்கண்ணீர். பி-ம்:—[1]ஆயின. [2]காலைவாய். [3]தாயினும். [4]துயரகன்று, துயர்நாளும். [5]தூயவர், தூயினன். [6]கண்ணினார். இங்ஙனம் பாடபேதமுள்ள பிரதிகளிலெல்லாம் அடுத்தபாடலின்முதலில் தான் வேறு என்று உள்ளது. (உஎகூ௪)

கஉo.—தன்னைத் தொழுத அனுமானுக்கு ஸ்ரீராமன் பின்வருமாறு கூறுதல்.

எழுது குங்குமத் திருவி னேந்துகோடு
உழுத மார்பினா னுருகி யுள்ளுறத்
[1]தழுவி நிற்றலுந் தாழ்ந்து தாளுறத்
தொழுத மாருதிக் [2]கினைய சொல்லுவான்.

(இ-ள்.) (கோலமாக) எழுதிய குங்குமச்சாந்தைக்கொண்டதாய்ச் சீதையின் சாயாதமுலையினுச்சியினாலே உழப்பெற்ற மார்பையுடையவனான ஸ்ரீராமன், மனமுருகிஅழுந்த அணைத்துநின்றவளவில், பாதங்களிற்பொருந்தப் பணிந்துதொழுத வாயுகுமாரனுக்கு இவ்வார்த்தைகளைக் கூறுவானானான்; (எ - று.)—ஸ்ரீராமன் கூறுவதை மேல் நான்குகவிகளிற் காண்க. பி - ம்:—[1]தழுவியுற்றலும். [2]இனியசொல்லினான். (உஎகூ௫)

கஉக.—நான்குகவிகள் - ஒருதொடர்: ஸ்ரீராமன் அநுமானைப் புகழ்ந்து வாழ்த்தியதைத் தெரிவிக்கும்.

முன்னிற் றோன்றினோர் முறையி [1]னீங்கலாது
என்னிற் றோன்றிய துயரி னீறுசேர்

மன்னிற் றோன்றினோ [2]முன்ன மாண்டுளோம்
நின்னிற் றோன்றினோ நெறியிற் றோன்றினாய்.

(இ - ள்.) முன்னே(எங்குலத்துப்)பிறந்தாருடைய முறைமையினின்று நீங்காமலிருந்து என்னால் தோன்றிய துயரினால் மரணத்தையடைந்த [என் பிரிவினால் இறந்தவனான] தசரதமன்னவனிடத்துநின்று முன்புபிறந்த நாங்கள், (பிரமாஸ்திரத்தினால்) மாண்டுபோனோம்: (பிறகு), நன்னெறியிலேயே (நடந்துகொண்டு)விளங்குபவனே! உன்னிடத்தினின்று (மீண்டு) தோன்றினவரானோம்; (எ-று.)---பி-ம்:—[1]நீங்கலா, நின்றிலாது, நீங்கலான். [2]முதல. ()

ககஉ. அழியுங் காற்றரு [1]முதவி யையனே
மொழியுங் காற்றரு [2]முயிரின் முற்றுமே
பழியுங் [3]காத்தரும் பகையுங் காத்தெமை
வழியுங் [4]காத்தனை [5]மறையுங் [6]காத்தனே.

(இ - ள்.) ஐயனே! சொல்லுமிடத்து, (உயிர்) அழியுங்காலத்திலேசெய்கின்ற உதவியானது, தருகின்ற உயிரினால் [உயிரைப் பதிலுக்குக் கொடுத்தலால்]தான் ஈடுசெய்த தாகுமோ?(நீஎம்முயிரைக் கொடுத்ததன்மூலம்)பழியும் (எமக்குவரவொட்டாமல்)தடுத்து, அரியபகைவரையும் (கிளர்ச்சிகொள்ளாது) அழிந்திடும்படியடக்கி, எம்மைக் குலத்தோடும் காத்தாய்; (இம்மூலமாக) வேதமார்க்கத்தையும் நிலைநிறுத்தினாய்; (எ - று.)

ஸ்ரீராமலட்சுமணர்க்குத் தீங்குநேரின் பரதன்முதலியோரும் இறப்பது திண்ணமாதலால் சூரியகுலமே நாசமுறும்: அவ்வாறு போகவொட்டாமற் செய்தா யென்பான் 'வழியுங்காத்தனை' என்றான். இனி, அரக்கர்நசிப்பது திண்ணமாதலால், மறையும் காக்கப்பட்டனவாகு மென்க. பி-ம்:-[1]உதவிக்கு. [2]உயிரின்முற்றுமோ, உயிருங்காத்தனை. [3]காத்தனை..., காத்தனபகையுங்காத்தனை. [4]காத்துநம், [5]மரபுங். [6]காத்தநீ. (உஎகூஎ)

ககஙு. [1]தாழ்வு மீங்கிறைப் பொழுது [2]தக்கதே
வாழி யெம்பிமே லன்பு [3]மாட்டலால்
ஏழும் [4]வீயுமென் பகர்வ [5]தெல்லைவாய்
ஊழி [6]காணுநீ யுதவி னாயரோ.

(இ - ள்.) என்தம்பிமேலுள்ள அன்பை நிலைநிறுத்திக்காட்டியதனால், இப்போது ஒருகணப்பொழுது(எங்கட்குநேர்ந்த)தாழ்ச்சியும் தகுதியானதே: (வாணாளோடிருந்து) யுகாந்தகாலத்தையும் காணவல்ல நீ தக்க காலத்தில் உதவினாய்; (அவ்வாறு தக்கசமயத்தில் நீ உதவாவிட்டால் நான்), என் சொல்லுவது? இந்தஏழுலகங்களுமே யழிந்திருக்கும்; (எ - று.)—பிரமாஸ்திரத்தினால் இலட்சுமணன் இறைப்பொழுது உயிர்நீங்கியதும் நான் அன்னனிடத்துக்கொண்ட அன்பைக் காட்டஇடனானதால்தக்கதேயென்றுகூறியஇது, குற்றமுள்ளஒன்றை ஒருநற்குணத்தைக்கண்டுவேண்டுவதாகிய வேண்டலணியாம்:இது,வடமொழியில் அநுஜ்ஞாலங்காரமெனப்படும். எல்லைவாய்-யுகாந்தகாலத்தில், ஊழி காணும்-பிரளயத்தைக்காணப்போகின்ற, நீ என்று உரைப்

பாருமுளர். வாழி-அசை. பி-ம்:—1தாழ்விலிங்கு, தாழவீங்கு. 2தாழ்த்ததேல். 3மாட்டிவான், மாட்டலான். 4வீழும். 5எல்லைநாள், எல்லையின். 6கோண, நீ, காலமும். (உஎசுஅ)

ககச. இன்று வீகலா தெவரு மெம்முடன்
நின்று 1வாழுமா றெயுது நல்கினாய்
ஒன்று மின்னலுறு யுறுகி லாதுநீ
என்றும் 2வாழ்தியா லினிதெ னேவலால்.

(இ-ள்.) (இந்திரசித்து பிரமாஸ்திரத்தைத் தொடுத்த) இன்றையதினம் எவரும் உயிரொழிந்திடாமல் எம்மோடும்நின்று வெகுகாலம் வாழ்ச்சிபெறுமாறு பேருதவிபுரிந்தாய்;(இவ்வாறு உதவிபுரிந்த)நீ,துன்பம்விளைத்தற்குஉரிய நோயொன்றும் உறாமல் என்னேவலினால் இனிதாக என்றும்வாழ்வாய் (என்றான், ஸ்ரீராமன்); (எ - று.)—பி-ம்:—1வாழுநாள். 2வாழுவாயினிதின். ()

ககரு.—மற்றையோரும் அநுமானைத் தொழுதுவாழ்த்துதல்.

மற்றை யோர்களு மனுமன் 1வண்மையால்
பெற்ற வாயுளார் பிறந்த காதலார்
சுற்று 2மேயினார் தொழுது 3வாழ்த்தினார்
உற்ற வாறெலா முணரக் 4கூறினான்.

(இ - ள்.) மற்றையவரும், அநுமானுடைய உதாரகுணத்தினால் பெற்ற வாழ்நாளையுடையவரும் [பிழைத்தெழுந்தவரும்], (அநுமானிடத்துத்) தோன்றியஅன்புடையவருமாகி, (அவனைச்)சுற்றிலும் பொருந்தியவராய்த் தொழுது வாழ்த்தினார்கள்: நிகழ்ந்த நிகழ்ச்சிகளையெல்லாம்(அவர்கள்)தெரிந்துகொள்ளுமாறு (அவ்வநுமான்) கூறினான்; (எ-று)—பி-ம்:—1வன்மையால்.2மேவினார், எய்தினார். 3வாழ்த்தினார்க்கு. 4கூறினார். (உஎஎ0)

ககசு.—சஞ்சீவிமலையைத் திருப்பிக்கொண்டுவைத்திடுமாறு சாம்பவான் அநுமானுக்குக் கூறுதல்.

உய்த்த மாமருந் துதவ 1வொன்னலார்
பொய்த்த சிந்தையா ரிறுதல் 2பொய்க்குமால்
மொய்த்த குன்றையம் 3மூல மூழைவாய்
வைத்து மீடியால் வரம்பி லாற்றலாய்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ-ள்.)எல்லையில்லாத வல்லமையுடையவனே!(நீ)கொணர்ந்தமஹௌஷதம் உதவிபுரிவதால் பொய்த்தசிந்தையையுடையரான (நம்) பகைவர் உயிரொழிதலும் பொய்த்துவிடும்: [இம்மலை இங்குத்தானேயிருப்பின், நம்பகைவரும் உயிர்பெற்றெழுந்திடுவரென்றபடி]; (ஔஷதிகள்) நெருங்கியுள்ள இம்மலையை அது இருந்த முன்னையஇடத்தில்தானே வைத்து மீண்டுவருவாயாக; (எ - று.)—வரம்பிலாற்றலாய் - சஞ்சீவிமலையைக் கொணரவும் திரும்பக் கொண்டுபோகவும் வல்லமையுடையாய் நீ என்றவாறு: கருத்துடையடை

கோளியணி. மூழை=முழை: பள்ளமான இடம். பி-ம்:—[1]ஒன்றலாப்.[2]போக்குமால், போகுமால். [3]மூலவூழிவாய், மூலவூழின்வாய். (உஎஎ௪)

ககஎ.—அனுமான் சஞ்சீவி மலையை மீட்டுங் கொண்டுசெல்லுதல்.

என்று [1]சாம்பவ னியம்ப வீதரோ
நன்று சாலவென் [2]றொன் று நாழிகைச்
[3]சென்று மீள்வனென் [4]றுணர்ந்து தெய்வமாக்
குன்று [5]தாங்கியக் குரிசில் போயினான்.

(இ - ள்.) என்று சாம்பவான்சொல்ல, '(இவன் சொன்ன)இது மிகவும் நன்று' என்று சொல்லி, ஒருநாழிகையிற் போய்மீண்டுவருவேனென்று மனத்திற்கருதி, பெரிய(அத்) தெய்வமலையையெடுத்துக்கொண்டு அந்த ஆண்களிற் சிறந்த அநுமான் போயினான்; (எ - று.)—பி-ம்: —[1]சாம்பனுண்டு. [2]உவந்தோர், உவந்து. [3]ஒன்றி, ஒன்றில்.[4]எழுந்து.[5]தாங்கிய.ஒருபிரதியில் மருந்துமாமலைப்படலம்முற்றும் என்று உள்ளது. (உஎஎ௫)

மருந்துமலைப்படலம் முற்றிற்று.

---

அதிகாயன்வதத்திற்குப்பின் இதுவரையிலுமுள்ள படலங்களின் சரித்திரம் ஸ்ரீவான்மீகத்திற் கூறியவகை வருமாறு:—இராவணன் புத்திர சோகத்தினால் தன்இல்லத்தில் நெட்டுயிர்ப்பெறிந்தவண்ணமிருந்தானாக, துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவ்விராவணனைப் பெருவீரனான இந்திரசித்து, அடைந்து 'இந்திரசித்து இருக்கையில் நீ துயரமடையலாமோ? என்னுடைய கூரியபாணங்களினால் மாற்றாரை இதோ தொலைத்துவிடுகின்றேன்: நீ கவலையற்றுஇருப்பாய்'என்றுகூறி அவனைத்தேற்றி அந்தத்தந்தையினிடத்து வாழ்த்துக்களைப்பெற்றுக்கொண்டு போர்க்களத்துக்குச் சென்றனன். அவனைத் தொடர்ந்து புகழ்ந்தவண்ணம் மிகப்பல அரக்கர் பலவகைப்படைக்கலங்களை யேந்திச்சென்றனர். அப்போது இந்திரசித்து அந்தப்போர்க்களத்தில் திவ்விய ரதம்பெறுதற்கு ஓமஞ்செய்யக்கருதி அரக்கர்களைக் காவல்வைத்து ஆயுதங்களை நாணலாகவும் தானிக்கட்டைகளைச் சமித்துக்களாகவும் தோமரங்களை பரிஸ்தரணமாகவுஞ்செய்து, இரும்புஸ்ருவத்தையுங்கொண்டு கருநிறமுள்ள ஆட்டின்கழுத்தை யறுத்து ஓமஞ்செய்தான். அவன் ஈந்த ஹவிசை அக்கினி புருஷன் நேராகவந்து பெற்றுக்கொண்டனன். அக்கினியில் வெற்றியைத் தோற்றுவிக்கும் அடையாளங்கள் காணப்பட்டன. அப்பொழுது இந்திரசித்து பிரமாஸ்திரத்தையழைத்து, அந்தஅஸ்திரத்தினால் தனது தேர் வில் முதலிய எல்லாவற்றையும் அபிமந்திரித்தனன்: பின் வில் அம்பு கத்தி தேர் குதிரை பாகன் முதலியவற்றை ஆங்குப்பெற்று ஆகாயத்திற்சென்று மறைந்தனன். அப்பால் அரக்கச்சேனை கிளர்ந்து பலவகைப்படைக்கலங்களால் வானரசைனியத்தைத் தாக்கிற்று. இந்திரசித்தும் வானத்திலிருந்தபடி பலவகைப்படைக்கலங்களால் தாக்கினான். வானரங்கள்ஒன்றுகூடி எதிர்த்தும் இந்திரசித்தின் பாணவேகத்தைத் தாங்கமாட்டாது பறந்துபோயின. சிலவானரத்தலைவர்கள் தம்முயிரின்மீது நசைகொள்ளாது இந்திரசித்தை யெதிர்த்தனர்; அங்ஙனம்

எதிர்த்த கந்தமாதனன் நீலன் ஜாம்பவான் சுக்கிரீவன் ருஷபன் அங்கதன் முதலியோர்மீது இந்திரசித்து அம்புகளையும் பலவகைப்படைகளையும்பொழிந்து அவர்களை மூர்ச்சிக்கச்செய்தனன். சிலர் தலையைத்தூக்கி வானத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்து கண்களில்கூரிய அம்புகள் விழப்பெற்று ஒருவர் மீதுஒருவர்சாய்ந்து விழுந்தனர். ஹநுமான் சுக்கிரீவன் அங்கதன் கந்தமாதனன் ஜாம்பவான் ஸுஷேணன் வேகதர்ஶி மைந்தன் த்விவிதன் நீலன் கவாக்ஷன் கஜன் கோமுகன் கேஸரி ஹரிலோமன் வித்யுத்தம்ஷ்ட்ரன் ஸூர்யாநநன் ஜ்யோதிர்முகன் ததிமுகன் பாவகாக்ஷன் நளன் குமுதன் முதலிய வானரத்தலைவர்களனைவரையும் இந்திரசித்து பிரமாஸ்திரத்தினால்அபிமந்திரித்த ஈட்டிகளாலும் சூலங்களாலும் அம்புகளாலும் இம்சித்தனன். அங்ஙனம் வானரரைவருத்தியபின் இராமலக்ஷ்மணர்மீது அந்தப் பாணங்களை விடுக்கலானான். அப்போது மஹாதீரனான ஸ்ரீராமன் லக்ஷ்மணனைப்பார்த்து 'லக்ஷ்மணா!இந்திரசித்து பிரமாஸ்திரத்தைக் கைக்கொண்டு வானரர்களைவீழ்த்தி நம்மீதுபாணங்களை விடுக்கின்றான். பிரமதேவனுடைய வரமகிமையால் தன்னுடல் கண்ணுக்குத்தெரியாதபடி வானத்தில்போர்புரியும் இவனைக் கொல்வது எப்படி? இந்தஅஸ்திரத்துக்கு உரியதேவதையின் மகிமை எண்ணுதற்குஅரியது. நீ என்னுடனே மனக்கலக்கமின்றி இந்தப் பாணங்களைப் பொறுத்திருப்பாயாக. நாம் இந்தப்பாணங்களால் மூர்ச்சித்துத் தரையில்வீழ்ந்தமையைக் கண்டவுடனே இந்திரசித்து ஜயலக்ஷ்மியையடைந்து இலங்கைக்கு மீளுவான்: இதுதிண்ணம்'என்றனன். அவ்வண்ணமே இந்திரசித்தின்அஸ்திரத்தினால் இராமலக்ஷ்மணர் மூர்ச்சித்துவிழ, இந்திரசித்து மகிழ்ந்து கர்ச்சித்து நகரத்திற்குட் சென்றான். அப்பால் விபீஷணன் வானரசைனியங்களெல்லாம் ஒடுங்கியிருப்பதுகண்டு 'நீங்கள் அஞ்சவேண்டா: இராமலக்ஷ்மணர்கள் பிரமதேவனைக் கௌரவிக்கும்பொருட்டு உயிரற்றவர்போலக் கிடக்கின்றனரேயன்றி வேறில்லை'என்றனன். அநுமான் (பிரமாஸ்திரத்தைக் கௌரவித்தற்காக ஒருமுகூர்த்தகாலம் உயிரற்றாற்போலிருந்து பின்பு அஸ்திரத்தினின்று விடுவித்துக்கொண்டு 'இந்தவானரசேனையில் எவர் உயிரைவைத்துக்கொண்டிருக்கின்றார்களோ, அவர்களைச்சமாதானப்படுத்துவோமென்றுசொல்லி, விபீஷணனுடனே கொள்ளிக்கட்டையைக் கையிற்கொண்டு கைபோயும்கால்போயும் மூத்திரம்விட்டுக்கொண்டும் வீழ்ந்துகிடக்கும் வானரவீரர்களெல்லாம் பாணங்களாற்பீடிக்கப்பட்டிருப்பதைக் கண்டனன். அப்பால் அவ்விருவரும் ஜாம்பவானைத் தேடலாயினர். விபீஷணன்வயதுமுதிர்ந்து பாணங்களாற் பொத்தப்பட்டு வீழ்ந்திருக்குஞ் சாம்பவானைக் கண்டு அவனருகேசென்று 'பெரியோனே! நீ உயிருடனிருக்கின்றாயோ?"என்று வினவினான்.ஜாம்பவான் கண்விழித்துப்பார்க்கமுடியாமையால் குரலினாலே விபீஷணனைக் கண்டு, 'அநுமான் உயிரோடு இருக்கின்றானா?"என்றுவினவினான்.சாம்பவான் மொழிந்ததுகேட்டு விபீஷணன் வியப்புற்று 'இராமலக்ஷ்மணர்களையும்கூட வினவாமல் அனுமானிடத்து இவ்வளவு பேரன்பு வைத்துவினவக் காரணம் என்' என்றான். ஜாம்பவான் 'அந்தஹநு

மான் ஒருவன்மாத்திரம் பிழைத்திருந்தால், மற்றையாவரும் இறந்திடினும் அஞ்சவேண்டுவதில்லை: அவன் ஒருவன்இல்லாவிடின் யாவரும் பிழைத்திருப்பினும் இறந்தவர்போலவேயாவோம்: அவனுடையதிறமை அத்துணைபாராட்டத்தகுந்தது' என்றான். அப்பால் அநுமான் ஜாம்பவானைக் கிட்டிவணங்கினன். அநுமான்குரலைக் கேட்டதும், ஜாம்பவான் உடலெங்கும் அம்புகளாற் பொத்துண்டிருப்பினும் புதுப்பிறவியெடுத்தான்போலாயினன்.

பின்னர் சாம்பவான் அநுமானைப்பார்த்து 'பெருந்திறலுடையோனே! இந்த அறுபதுகோடி சேனையும்பிழைத்தெழுவது உன்வசத்திலுள்ளது:உற்ற சமயத்தில் உன்னைப்போன்று பராக்கிரமத்தைக் காட்டக்கூடியவர் வேறு எவருமில்லை.நீ இந்தராமலக்ஷ்மணர்களையும் வானரசைனியங்களையும் சல்லியந்தீர்ந்து இனிதிருக்கச்செய்வாய்.அநுமானே!நீ ஆகாயத்தில் வெகுதூரஞ்சென்று இமாலயத்திற்குப் போகவேண்டும். அப்பால் ஸ்வர்ணமயமான ருஷபமென்னும் மலையையும் கைலாசசிகரத்தையும் காண்பாய். அவ்விரண்டுசிகரங்களின் இடையில்தான் ஸஞ்ஜீவினி முதலியஓஷதிகளையுடைய ஓஷதிமலைஇருக்கின்றது.அந்தஓஷதிகளைக்கொணர்ந்துவானரர்களைப்பிழைப்பிப்பாய்' என்றனன். அதுகேட்டுப் பெருமகிழ்ச்சியடைந்த அநுமான் அந்தச்சாம்பவான்சொற்படியே செல்லக்கருதிப் பேருருவங்கொண்டு வானத்தில்தாவிப்பாய்ந்து இமாலயத்தை யடைந்தனன். அங்கே அநுமான் மஹரிஷிகளின் ஆச்ரமங்களும் பிரமகிருகமான பிரமகோசமும் இந்திரன்வச்சிராயுதம்பெற்ற இடமும் குபேரஸ்தானமும் முதலியன கண்டு, சுவர்ணமயமான ருஷபபர்வதத்தையும் கைலாசபருவதத்தையும் அவற்றினிடையே ஓஷதிமலையையும் கண்டனன்: அம்மலையைக் கண்டதும் ஸஞ்சீவகரணிமுதலியஓஷதிகளைத் தேடிப்பார்க்க, அவை அநுமானுக்குப் புலனாகாதுமறைந்தன.அநுமான் சினந்து அந்தமலையைப்பார்த்து, 'இராமகாரியத்தில் தயைகாட்டாதிருக்கின்றனையே: நீ இப்படியிருப்பதேன்? நான் என் தோள்வலிமையால் உன்னையேபறித்துக்கொண்டுசெல்கின்றேன்பார்' என்றுசொல்லி, அந்தமலையை வேரோடுபேர்த்துக்கொண்டு இலங்கையிற் போர்க்களஞ்சேர்ந்தான்.சேர்ந்ததும் அம்மலையிலுள்ள மூலிகைகளின்காற்றுப்பட்டமாத்திரத்தில்யாவரும் உயிர்பெற்றெழுந்துபோராரவாரஞ்செய்தனர். வெளிக்குத்தெரியாதிருக்கும்பொருட்டு,இறந்த அரக்கர்களை அவ்வப்போது கடலிலிடுமாறு இராவணன் கட்டளையிட்டிருந்ததனால், அரக்கர்எவரும் உயிர்பெற்றெழுந்தாரில்லை.அநுமான் அம்மலையைத் திருப்பிக்கொண்டுபோய்ப் பின்பு இருந்தவிடத்தில்வைத்திட்டு மீண்டுவந்தனன்.

பிறகு சுக்கிரீவன் 'தன்தம்பி கும்பகர்ணனும் அதிகாயன்முதலிய மக்களும் மாண்டனராதலால், இராவணன் இப்போது போருக்குவாரான்: ஆகையால் வல்லமைவாய்ந்த வானரர்கள் மதிலைக் கடந்து இலங்கையில் தீ வைக்கட்டும்'என்றுகட்டளையிட்டான்; அந்தக்கட்டளையின்படியே வானரர்கள் அவ்விரவில் இலங்கையையெரிக்கலாயினர். இலங்கையையெரித்துக்கொண்டு அந்தப்புரத்துக்குஅருகில் வானரர் அணுகுவதுகண்டு சீற்றம்விஞ்சியவனாய், இராவணன், 'கும்பகர்ணன்புதல்வரான கும்பநிகும்பர்களை யூபாட்சன்

சோணிதாட்சன் ப்ரசங்கன் கம்பனன் முதலியஅரக்கவீருடன் செல்லுமாறு கட்டளேயிட்டான். அந்தக்கட்டளேயின்படி கும்பநிகும்பர் ராட்சசமுக்கிய ரோடும் பெரியஅரக்கப்படையோடும் கொக்கரித்துக்கொண்டுவருவதுகண்டு, வானரசைனியம்,ஆரவாரஞ்செய்துகொண்டெதிர்த்தது. அப்போதுவானரர்க் கும் அரக்கர்க்கும் அச்சத்தைவிளேக்கத்தக்க கைகலந்த கடும்போர் நிகழ்ந்தது. அப்போரில், அங்கதன் கம்பனனென்பவனேடு பொரத்தலேப்பட்டான். கம்பனன் அங்கதனே வெருட்டிக்கொண்டுவந்து கதையினுற்புடைக்க, துடித் துப் பூமியில்வீழ்ந்த அவ்வங்கதன் பேராற்றலனுதலால் தெளிந்து பர்வத சிகரத்தைக் கொண்டு கம்பனனுடைய மார்பில்தாக்க, அவன் உயிரற்றுக் கீழ் விழுந்தான். அதுகண்டசோணிதாட்சன் விரைந்துவந்து அங்கதனே அம்பு கொண்டு எதிர்த்தான் அரக்கனுடைய அம்பால்தொளேயுண்ட அங்கதன் அவனுடையவில் தேர் அம்புகள்இவற்றை முறித்துப் பொடியாக்கினன். பின்பு சோணிதாட்சன் கத்தியைக் கையிற்கொண்டு வானத்திலெழ,அங்கதன் அவனிலும்ஓங்க வானத்தெழுந்து அவன் கத்தியைப்பிடுங்கிக்கொண்டு அத ஞல் பூணூல்போல் அவன்மார்பிற் கீறினுன். ஆனுல், அரக்கன் மாண்டிலன். பின் அங்கதன் அக்கத்தியையேந்தியவண்ணம் கர்ச்சித்துக்கொண்டு ப்ரஜங் கன்முதலிய பகைவர்மேல் எதிர்த்துப்போயினன்.யூபாக்ஷன்ப்ரஜங்கனேடுகூடி அங்கதனே யெதிர்த்தான்; சோணிதாட்சனும் உடன்வந்தான். மூவர் அங்க தனே யெதிர்ப்பதுகண்டு அவ்வங்கதனுடைய மாமன்மார்களான மைந்த துவிவிதர் அங்கதனுக்குத் துணேயாயினர். மூவர்க்கும் போர்நிகழ்கையில், ப்ர ஜங்கன் கத்தியைக்கொண்டு அங்கதனேத் தொடர, அவன் ஆச்சாமரத்தினு லடித்துப் பின்பு கத்தியேந்திய அரக்கன்முஷ்டியைத் தாக்க, கத்திகீழ்விழுந் திட்டது: அரக்கன் முஷ்டியினுல் அங்கதனே நெற்றியின்மீது தாக்க, சிறிது நேரம் உணர்வற்றிருந்துதெளிந்து, அங்கதன் கத்தியினுல் அவன்சிரசைக் கொய்தனன். தனதுசிறியதகப்பனுகியப்ரஜங்கன் மாண்டதுகண்டு, யூபாட் சன் கத்தியைக் கையிற்கொண்டுவர, துவிவிதன் அவனேப் பிடித்துக்கொண் டான்: தன்னுடன்பிறந்தோன் பிடியுண்டதுகண்டு சோணிதாட்சன் கதையி னுல் தாக்கினுன்: அடியுண்டதுவிவிதன் வருந்தினுனுயினும்,கதையைப் பிடுங் கிக்கொண்டான். மைந்தன் யூபாட்சனதுமார்பில் மோதினுன்: இங்ஙனம் மைந்ததுவிவிதர்களுடனே யூபாட்சசோணிதாட்சர்கட்கு நிகழ்ந்த நெருங்கிய போரில்,இறுதியாக துவிவிதன் சோணிதாட்சனேப் பிடித்தரையிலரைந்துஉட லேப்பிசைந்து பிண்டமாக்கினன்.மைந்தன்கையால்யூபாட்சன் மாண்டனன். பிரதானரான அரக்கவீரர்மாண்டதனுல் அரக்கப்படை அஞ்சியோடிற்று.

அதுகண்ட கும்பன் அஞ்சியோடிய சேனேகளே நிறுத்தி இதுவரையில் நிகழ்ந்திராத கடும்போரைச் செய்தவனுய் மைந்ததுவிவிதர்களேத் தோற்கடித் துக் கடும்போர்நிகழ்த்தி, அங்கதனேயும் அம்புகளேப்பொழிந்து மூர்ச்சிக்கச் செய்தனன். அங்கதன் மூர்ச்சையடைந்தசெய்தியை ஸ்ரீராமனுக்கு வானரர் அறிவிக்க, அப்பெருமான் அங்கதனுக்குத்துணேயாகப்பொர ஜாம்பவான் முதலியோரை யனுப்பினுன்.அப்போரில் இறுதியாகச் சுக்ரீவன் கும்பனேடு

தொந்தயுத்தஞ்செய்து அவனைக் கடலில் தூக்கியெறிய, அவன் மீண்டுவந்து முஷ்டியினால் தாக்க, சுக்கிரீவன் தன்முஷ்டியினால் அந்தக்கும்பனுடைய உயிரைப்போக்கினான். தன்னுடன்பிறந்தோன் இறந்ததுகண்டு பெருஞ்சீற்றத்துடன் நிகும்பன் கடும்போர் புரிந்து வானரர்களை வெருட்டியடிக்க, அநுமான் எதிர்த்துப்பொருது அவன்தலையைத் திருகியெறிந்து அவனுடலைப் பிண்டமாக்கி விட்டான். அரக்கப்படை நிலைகலங்கியோடிற்று.

கும்பநிகும்பர் மாண்டதுகேட்டு இராவணன், கரனுடையபுதல்வனான மகராட்சனைப் பொருமாறு ஏவினான். அவன் நேர்ந்த தீநிமித்தங்களையும் பொருட்படுத்தாது பெருஞ்சேனையோடு ஆர்ப்பாடஞ்செய்துகொண்டு வந்து எதிர்க்க, அரக்கர்கள்வந்துஎதிர்த்து வானரர்களைத்தொலைத்து நிலைகுலையச் செய்தனர்: அதுகண்ட ஸ்ரீராமன் அரக்கர்களைக் கணைகொண்டு நலிய, மகராட்சன் சீற்றங்கொண்டு இராமபிரானைநோக்கி 'நீ என்தந்தையைத் தண்டகாரணியத்திற் கொன்றவ னல்லவா? தெய்வாதீனமாய் நீ எதிர்ப்பட்டாய். உன்னைத் தொமிசஞ்செய்கிறேன்' என்று இவைமுதலாக வீரவாதஞ் செய்ய, ஸ்ரீராமன் 'வாயாற் பிதற்றிஎன்ன? செய்கையாற்காட்டவேணும்' என்றுசொல்ல, இருவர்க்கும் பெரும்போர் நிகழ்ந்தது. முடிவாக, ஸ்ரீராமன் அவ்வரக்கனுடைய வில்லைத் துண்டித்துச் சாரதியைவதைத்துத் தேரைமுறித்துக் குதிரைகளைக் கொன்றனன். அப்போது சூலத்தை அரக்கன் ஸ்ரீராமன்மீதுஎறிய அதை அப்பிரான் துண்டித்தான். அரக்கன் முஷ்டியுத்தஞ்செய்யவர, ஸ்ரீராமன் ஆக்நேயாஸ்திரத்தினால் அவனுயிரைப் போக்கினன்.

மகராட்சன் மாண்டதுகேட்டு இராவணன் சினங்கொண்டு செய்யவேண்டுவதையாலோசித்து இந்திரசித்தைப் புகழ்ந்து போருக்குஅனுப்பினான். அவனும் உற்சாகங்கொண்டு, யாகசாலைக்குப் போய், ஆயுதங்களையே பரிஸ்தரணம்முதலியனவாகக்கொண்டு கருநிறமுள்ளஆட்டைஅறுத்து ஓமமியற்றி, அந்த வேள்வியின்வலிமையினால் கண்ணுக்குப்புலப்படாமல் மறைந்திருக்கும் வல்லமையைப்பெற்று, அவ்வாறானவல்லமைவாய்ந்த தேரினாலும் பிரமாஸ்திரத்தினாலும் பாதுகாக்கப்பெற்று வானத்தெழுந்து. போர்க்களத்தில் சரமாரி பொழிந்து வானரர்களைப் பெருவாரியாக உயிரொழித்து நடுநடுங்கச்செய்து இராமலட்சுமணர்களையும் கணைக்கூட்டங்களாற் பொத்தினான். இராமலட்சுமணர்கள் தமது திவ்யாஸ்திரங்களை அவ்விந்திரசித்தின்மீதுவிடுத்தும், அவன் தான் படைத்திருந்த வல்லமையால் அவைகட்குத்தப்பினான். இந்திரசித்து கண்ணுக்குப் புலனாகாமலே கணைத்தொகுதிகளை விடுத்து வானரர்களையொழித்துத் தம்மையும்தாக்குவது கண்ட இலட்சுமணன் பெருஞ்சினமடைந்து ஸ்ரீராமனைப்பார்த்து 'பிரமாஸ்திரத்தைத் தொடுத்து அரக்கர்களையெல்லாம் தொலைத்துவிடுகின்றேன்' என்ன, ஸ்ரீராமன், 'ஒருவனுக்காகப் போர்புரியாமலிருப்பவரையுமுளப்படயாவரையும் கொன்றிடுவது தகுதியன்று; நமது திவ்யாஸ்திரங்களால் அவ்விந்திரசித்தைக் கொன்று தரையில் வீழ்த்தலாம்' என்றுசொல்லி இலட்சுமணனைச் சமாதானப்படுத்தி, அந்தஇந்திரசித்தைக் கொல்லுதற்குஉரிய உபாயத்தைச் சிந்தித்துக்கொண்டிருந்தனன்என்பது.

## உச.—ஆவது களியாட்டுப்படலம்

அரக்கமகளிர்இராவணன்காணுமாறு கள்ளைப்பருகிய களியாலாடியதைக் கூறும் படலமென்பது, பொருள். களியாட்டம் - கள்ளுண்டு ஆடும் ஆட்டம். களியாட்டுபடலம்எனவும் சிலபிரதிகளிற் காண்கின்றது.

இந்திரசித்தின் பிரமாஸ்திரத்தினால் தமது மன்னவனுடைய பகைவர் சேனையோடும்மாண்ட மகிழ்ச்சிச்செய்தியைச்செவியுற்றதனால், ஆங்குள்ளமடந்தையர் கள்ளுண்டு வெறியோடு ஆடல்பாடல்முதலியனசெய்ய, அதைக் கண்டு களித்தவனாய் இராவணன் இருக்கையில், அநுமான்கொணர்ந்த மருத்துமலையிலுள்ள ஓஷதிகளின் காற்றுப் பட்டதனால் உயிர் பெற்று முன்னினும்வலிமையோடு கிளர்ந்தெழுந்தவானரங்கள்ஆர்ப்பரிக்க, அந்த ஆர்ப்பொலியையும்இராமலட்சுமணரின் வில்நாணியொலியையும் செவியேற்று இராவணன் திடுக்குற்றிருக்க, அப்போது ஒற்றர் நிகழ்ந்தசெய்தியையுணர்த்தினராக, இராவணன் மந்திரசாலைக்குச் சென்றானென்ற செய்தி இப்படலத்துக் கூறப்படுகின்றது.

வேறு.

க.—இராவணன் மகளிரின் களியாட்டங் காணுதல்.

இன்னதித் [1]தலைய தாக விராவண னெழுந்து பொங்கித்
தன்னையுங் [2]கடந்து நீண்ட வுவகையன் [3]சமைத்த கீதங்
[4]கின்னரர் முதலோர் பாட முகத்திடைக் கிடந்த கெண்டைக்
கன்னிநன் மயிலன் னாரை நெடுங்களி யாட்டங் கண்டான்.

(இ - ள்.) இவ்விடத்து [இராமனுடையசேனையில்]நிகழ்ந்த செயல் இவ்வாறாக,—(பிரமாஸ்திரத்தால் பகைவர் உயிரொழிந்து கிடந்தா ரென்று அறிந்ததனால்), இராவணன்,-ஊக்கங்கொண்டு கிளர்ந்து தன்னையும் கடந்துநீண்ட [விஞ்சிய] உவகையையுடையனாய், (இலக்கணப்படி) அமைந்தசங்கீதத்தைக் கின்னரர் முதலோர் பாட(ச் சென்று, தம்) முகத்தினிடத்துத்தங்கிய கெண்டைமீனையுடைய [கெண்டைமீன்போற் கண்களையுடைய] இளம்பருவமுள்ள அழகியமயிலையொத்தசாயலையுடையரான மகளிரின் நெடியகளியாட்டங் கண்டான்; (எ - று.)

அரக்கியர் தம்மரசனுக்குநேர்ந்த வெற்றியால்தோன்றிய பெருமகிழ்ச்சியாற் கள்ளுண்டு ஆடுதலைச்செய்தனராக, இராவணன் அந்தக்களியாட்டத்தை, கின்னரர்முதலோர்பாடச் சென்று காணலாயினனென்பதாம்; களியாட்டங் கண்டான் - களியாட்டத்தையாடுமாறு செய்தானெனினுமாம். இந்தக்களியாட்டம் தெய்வப்போதுகு பந்தரில் நிகழ்ந்ததென்பது, இந்தப்படலத்தின் ஈற்றுச்செய்யுளாற் பெறப்படும். பி - ம்:—[1]தலையவாக. [2]கடக்க. [3]சமயந்தன்னில். [4]கின்னரமுதல்வர். (உஎஎ௩)

உ.—அரம்பையர் முதலோர் வருதல்.

அரம்பையர் விஞ்சை மாத ரரக்கிய ரவுண மாதர்
குரும்பையங் கொங்கை நாகர் [1]கோதைய ரியக்கர் கோதில்

கரும்பினு மினிய சொல்லார் சித்தர்தங் கன்னிமார்கள்
வரம்பறு [2]சும்மை யோர்கண் மயிற்குல மருள வந்தார்.

(இ - ள்.) தேவலோகத்துஸ்திரீகளும், வித்தியாதரஸ்திரீகளும், ராட்சசஸ்திரீகளும், அசுரஸ்திரீகளும், குரும்பைபோன்ற அழகியதனங்களையுடைய நாகசாதிஸ்திரீகளும், யட்சஸ்திரீகளும், கரும்பைக்காட்டிலும் இனியசொற்களையுடையவரான குற்றமற்ற ஸித்தஸ்திரீகளும்ஆகிய எல்லையற்ற தொகுதியானவர் மயிலின்கூட்டமும் மருளும்படி(அவனுடன்)வந்தார்கள்;(எ-று.)

இராவணன் களியாட்டத்தைக் காணவந்தபோது அரம்பையர்முதலியோர்உடன் வந்தனரென்க. அரம்பையர்முதலியோர் களியாட்டமாடவந்தனரென்பாருமுளர். அரம்பையர் முதலியோரைக் கண்டு சாயலொப்புமையால் தம்மினமோ என்று மயிற்குலம்மருளுமென்க. பி-ம்:—[1]தோகையர். [2]மகளிர் கூடி. (உஎச)

ரு.—மேனகை யரம்பைமுதலியோர் நர்த்தனஞ்செய்துகொண்டு வருதல்.

மேனகை [1]யிலங்கு வாட்கட் டிலோத்தமை யரம்பை [2]மெல்லென்
தேனகு மழலை யின்சொ லுருப்பசி [3]முதல தெய்வ
[4]வானக மகளிர் வந்தார் [5]சில்லரிச் சதங்கை பம்ப
[6]ஆனக முரசஞ் சங்க [7]முருட்டொடு மிரட்ட [8]வாடி.

(இ - ள்.) மேனகையும், விளங்குகின்றவாட்படைபோன்ற கண்களையுடைய திலோத்தமையும், அரம்பையும், தேன்போல்விளங்குகின்ற மெல்லியவான முற்றுதஇன்சொல்லையுடைய உருப்பசியும் முதலிய தெய்வத்தன்மையுள்ள வானுலகத்துமகளிர்கள்,—ஆனகமென்னப்படுகிற முரசப்பறை சங்கவாச்சியத்துடனும் முருடென்னும் பறையுடனும் ஒலித்துக்கொண்டிருக்க, சிலவாகிய அரிகளையுடைய சதங்கையொலிக்குமாறு ஆடிக்கொண்டு வந்தனர்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் 'அரம்பையர்' என்றதனால் வானுலகத்துமகளிர் வந்தமையைக் கூறியிருக்கவும் இந்தச்செய்யுளில் மேனகைமுதலிய வானுலகத்து மகளிர் வந்ததைக் கூறியது.சிறப்புடைப்பொருளைத் தனிப்படஎடுத்து மொழிதல் ஒருவகைமரபாதலா லென்க: அன்றியும், இந்தமேனகைமுதலியோர் வாச்சியத்திற்குஏற்ப நடனஞ்செய்துகொண்டுவந்தன ரென்பதைத் தெரிவித்தற்காகக் கூறியதுமாம். [8]ஆடஎன்றபாடம், இவர்களே களியாட்டமாட வந்தனரென்று கீழ்க்கவியிற்கூறிய உரைக்குஏற்கும். பி-ம்:—[1]விசயவாட்கட், விஞ்சைவாட்கட்,விசயவொண்கட். [2]மெல்லன். [3]முதலார். [4]வானவர். [5]சில்லரிப் பாண்டில்வேணு, சில்லரிமழலைமாழ்க, சில்லரிமழலைப்பாடல், சில்லரிப்பாண்டில்மாழ்க, சில்லரிச்சதங்கைமாழ்கி, ஆர்வமென்கொங்கைமாழ்க. [6]ஆனசீர். [7]முருடொடும். (உஎரு)

சா.—கள்ளுண்டமையால் மடந்தைமாரின் முகம் செந்நிறத்தனவாதல்.

தோடுண்ட சுருளுந் [1]தூங்குங் குழைகளுஞ் சுருளிற் [2]றேன்றும்
[3]ஏடுண்ட பசும்பொற் பூவுந் திலதமு [4]மிலவச் செவ்வாய்

[5]ஊடுண்ட முறுவன் முத்து [6]முள்ளுண்ட முளரிச் செங்கட்
காடுண்டு [7]புகுந்த தென்ன முணிந்தது கறைவெண் டிங்கள்.

(இ - ள்.) பனந்தோட்டினுலியன்றதுபோன்ற (பொன்னாற்செய்த)சுருளென்னும் அணியும், தொங்குகின்ற குழையென்னுங் காதணியும்,(ஐம்பால் முடிவகையிலொன்றான) சுருளிலே தோன்றுகின்ற இதழ்பொருந்திய பசும்பொற் பூவும், திலகமும். இலவமலர்போன்ற செந்நிறவாயால் ஊடப்பெற்ற புன்சிரிப்பைச்செய்கின்ற முத்துப்போன்ற பற்களும், முள்ளையுடைய தாமரைமலரையொத்த கண்களும்என்றவற்றைக்கொண்ட (கூந்தற்)காடு (தன்னை மறைக்குமாறு)புகுந்துள்ளதென்ற காரணத்தினால் கறையையுடைய வெள்ளியதிங்கள் சீற்றத்தைக்கொண்டது; (எ - று.)

மாதரார் கள்ளுண்டமையால் அவர்களின்முகமாகியமதிகள் தம்முடைய இயற்கையுருவத்தை நீத்துச் செந்நிறத்தை யடைந்தமையை, தம்மிடத்துத் தானே தாம் பகைக்கின்ற தாமரை முதலியவற்றைக் கொண்ட கூந்தற் காடு புகுந்ததுண்டென்ற கருத்தினாற்சீற்றங்கொண்டு சிவந்தனவாகக் கற்பித்துக் கூறினர்: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1தூண்டுங். 2தோய்ந்த,தொத்தும், கோதை. 3தேடுண்ட. 4இலங்கச். 5ஊடுண்ட. 6முள்ளுடைக்கமலச்செங்கேழ், முள்ளுண்டகமலச்செங்கேழ், உலப்பிலாக் கமலச்செங்கேழ்க். 7பரந்ததென்ன..., புகுவற்கொத்தபுருவமும். (௨எஎ௬)

௫.—மாதராரின் முறுவல் முதலியவற்றால் இருளும் மருளுதல்.

முளைக்கொழுங் கதிரின் கற்றை முறுவல்வெண் [1]ணிலவு மூரி
ஒளிப்பிழம் [2]பொழுகும் பூணி [3]னுமிழிள வெயிலு மொண்பொன்
விளக்கையும் விளக்கு மேனி [4]மிளிர்கதிர்ப் பரப்பும் [5]வீச
வளைத்த[6]பே ரிருளுங் கண்டோ ரறிவென [7]மருளு மாதோ.

(இ - ள்.) தோன்றுதலையுடைய கொழுவிய கிரணத்தொகுதியைக்கொண்ட புன்சிரிப்பாகிய வெண்ணிறநிலவும்,மிக்கஒளித்திரட்சி வெளிப்படுகின்ற ஆபரணங்களினின்று வெளித்தோன்றுகின்ற இளவெயிலும்,ஒள்ளிய பொன்போன்று விளக்கையும்விளங்கச்செயயவல்ல(அங்குவந்துள்ள மகளிரின்)மேனியிலிருந்து கிளர்ந்தெழுகின்ற கதிர்த்தொகுதியும் வீசுதலினால்,-வளைத்திருந்த மிக்கஇருளும் கண்டவரின்அறிவைப்போல மருள்வதாயிற்று; (எ - று.)

களியாட்டத்தில் திரண்ட மடவாரைக் கண்டவரின்அறிவு எவ்வாறு திகைப்புறுமோ அவ்வாறு இருளும் திகைப்புறுவதாயிற் றென்றவாறு: இருள் நிலைகெட்டதென்றபடி. மடவாரின் முறுவலினின்று வெண்ணிலாப்போன்ற ஒளியும், அன்னாரின்பூண்களினின்று இளவெயில்போன்ற ஒளியும் வெளிப்பட, அன்னாருடையமேனியினின்று விளங்கச்செய்யவல்ல பேரொளி வெளிப்பட்டதென்க. இவ்வாறுதோன்றிய ஒளிகளினால் களியாட்டம்நிகழ்ந்த அந்தக்கிருஷ்ணபட்சத்து இரவும் விளக்கமுற்றிருந்ததென்றபடி. பி - ம்:—1நிலவின். 2ஒழுகு. 3ஊடுமிழ், உதிக்குறு. 4விரி. 5வீசி. 6பேருலகிற்கண்டோரறிவையும். 7மருட்டும், மயங்கும். (௨எஎஎ)

சு.—கள்ளின்வேகம் பரத்தல்.

நற்பெருங் கல்விச் [1]செல்வ நவையறு [2]நெறியை நண்ணி
முற்பய னுணர்ந்த தூயோர் மொழியொடும் பழகி முற்றிப்
பிற்பய னுணர்த [3]தேற்றாப் [4]பேதைபால் வஞ்சன் செய்த
கற்பனை யென்ன வோடிக் [5]கலந்தது கள்ளின் வேகம்.

(இ - ள்.) சிறந்த மிக்க கல்விச்செல்வத்தாலே குற்றமற்றவழியைச்சார்ந்து, மேலேவரும்பயனையறிந்த பரிசுத்தகுணமுடையவரான பெரியோரின் நல்லுபதேசமொழியோடும்பழகி அறிவுமுதிர்ந்து,பின்னால்விளையும்பயனையும் அறியவேண்டியதாயிருக்க அங்ஙனம்) அறியமாட்டாத பேதையோனிடத்தில் வஞ்சகக்குணமுடையோன்செய்த ஏமாற்றச்செயல்போல,கள்ளினுடைய வேகமானது (மடவாரிடத்து) விரைந்துகலந்தது; (எ - று.)

கள்ளின்வேகம் - உண்டாரைவிரைவில் மயங்கச்செய்வதான மதுவினிடத்திலுள்ள குணம்; அது விரைந்துகலந்தமை, மேற்கவிமுதல் விளங்கும். 'தூயோர்மொழியொடும்பழகி முற்றிப் பிற்பயனுணரும் உணர்ச்சியைத்தேற்றாதவன் பேதை'எனப் பேதையின்தன்மையைக் கூறினார். பேதையை வஞ்சகக்குணமுடையோர் ஏமாற்றமடையுமாறு தமதுவசமாக்கிக்கொள்ளவல்லவராதல்போலக் கள்ளின்வேகமும் உண்டமடவாரைத் தம்வசமாக்கிக்கொண்ட தென்க. பி-ம்:—[1]செவ்வி. [2]நெறியின். [3]தோற்றாப். [4]பேதைபோல், பேதைமை. [5]கலந்தன. (உஎஎஅ)

எ.—இனி, மதுவுண்டதனால் மடவாரிடத்துத்தோன்றிய நிலைமை பத்துக்கவிகளாற் கூறப்படும்.

பலபட முறுவல் வந்து [1]பரந்தன [2]பனித்த மெய்வேர்
இலவிதழ் [3]துடித்த முல்லை யெயிறுவெண் ணிலவை யீன்ற
கொலைபயி னயன [4]வேலின் கொழுங்கடை சிவந்த கொற்றச்
சிலைநிகர் புருவ [5]நெற்றிக் [6]குனித்தன [7]விளர்த்த செவ்வாய்.

(இ - ள்.) சிரிப்பு,மிகுதியாகவந்து பரவின; உடல், வேர்வைத்துளியையடைந்தன; இலவமலர்போன்ற அதரங்கள், துடித்தன; முல்லையரும்பு போன்ற பற்கள், வெண்ணிறமுள்ளஒளியை வெளிவீசின; கொலைத்தொழிலிற் [ஆடவரைவருத்துவதிற்] பழகின வேற்படைபோன்ற கொழுவியகண்களின் ஓரங்கள், செந்நிறத்தையடைந்தன; வெற்றிபொருந்திய வில்லையொத்தபுருவங்கள் நெற்றிமீது வளைந்தன; செந்நிறவாய் வெளுத்தன; (எ - று.)

மதுபானஞ்செய்தார்க்கு முறுவல்வருதல்முதலியன இயற்கையாதலறிக. பி-ம்:—[1]பயந்தன. [2]வேர்த்தமெய்ய,பனித்தமெய்வேர்வு. [3]வெளுத்த. [4]வேல்கள், வேற்கள். [5]தெற்றிக்.[6]குனிர்த்தன. [7]வெளுத்தசெவ்வாய், துவர்த்த செவ்வாய், மயக்கஞ்செய்ய. (உஎஎக)

அ. கூந்தலம்பாரக் கற்றைக் கொந்தளக் [1]காலக் கொண்டல்
ஏந்தக லல்குற் [2]றேரை யிகந்துபோ [3]யிறங்க யாணர்ப்

பூந்துகி [4]லோடும் பூசன் மேகலை [5]சிலம்பு பூண்ட
[6]மாந்தளி [7]ரெய்த நொய்தின் மயங்கினர் மழலைச் சொல்லார்.

(இ - ள்.) '(தமது) கூந்தலின் அழகிய சுமையானதொகுதியாகிய பொங்கியெழுதலையுடைய காளமேகம் ஏந்திய்அகன்றஅல்குலாகியதேரையும் கடந்துபோய்த் தாழ்ந்திருக்க, புதுமையான பூந்துகிலுடனே ஆரவாரஞ்செய்கின்ற மேகலையென்னும் இடையணி சிலம்பையணிந்துள்ள மாந்தளிரை [பாதத்தை]யடைய, குதலைச்சொல்லையுடையவரான மகளிர் விரைவில் மயங்கினார்கள்; (எ - று.)

மடவார் மதுவையுண்டதால், குழல்சோர,உடையும் மேகலையும் நெகிழ்ந்துவிழ, மயங்கிக்கிடந்தன ரென்பதாம். கூந்தல் நீண்டிருத்தல்பற்றி அது அவிழ்ந்துதொங்கும்நிலையில் அல்குற்றேரையும் இகந்து இறங்கிற்றென்க. பாதத்தை உவமச்சொல்லாகிய 'மாந்தளிர்' என்பதனாலேயே குறித்தார்: 'சிலம்புபூண்ட'என்ற அடைமொழி இதனை விளக்கும். பி-ம்:---1கோலக். 2தேரினிழிந்து, தேரையிகழ்ந்து. 3இறங்கி. 4படுமாப். 5சிலம்பப். 6மாந்தரின். 7நொய்தினெய்தி, பாதநோக்கி. (உஎ௮௦)

கூ. கோத்தமே கலையி னோடுந் துகின்மணிக் [1]குறங்கைக் கூடக்
காத்தன கூந்தற் கற்றை [2]யற்றமத் தன்மை கண்டு
வேத்தவை [3]கீழு ளோர்கள் கீழ்மையே விளைத்தார் [4]மேலாஞ்
சீர்த்தவர் செய்யத் தக்க கருமமே செய்தா ரென்ன.

(இ - ள்.) இராசசபையிலே தாழ்நிலையிலிருப்பவர்கள் கீழ்மையான தொழிலையே செய்தாராக, மேன்மைபெற்ற சிறந்தகுணமுடையோர் செய்யத்தக்கசெயல்களையே செய்பவராவதுபோல, கோக்கப்பட்ட மேகலையுடனே ஆடையும் (இடையைவிட்டு) அழகிய தொடையைச் சேர, அந்தநிலைமையைக் கண்டு, கூந்தற்கற்றை அவமானம் (நேரிடாதபடி) பாதுகாத்தன.

மேகலையும் துகிலும் அரையினின்று தொடையைச்சேர்ந்து மானபங்கம் விளைப்பனவாக,அத்தன்மையைக்கண்டு கூந்தற்கற்றைகள் மடவாருடைய அவயவம் பிறர்க்குத்தெரியாதவாறுசெய்து மானக்கேடு நேராதபடி பாதுகாத்தனவென்பதாம்: இவ்வாறு செய்ததற்குக் கீழோர் கீழ்மையைச்செய்ய நினைக்கையில், மேலோர் சீர்த்ததொழிலால் அக்கீழ்மையை யகற்றுதலை உவமைகூறினார். கூந்தல் மேலிருப்பதாதலும், மேகலையும் துகிலும் கீழிருப்பதாதலுங் காண்க.பி-ம்: --1கோவை.2அற்றவத், உற்றவத்.3கீழுளாரும். 4மேலோர்."வேர்த்தமைகீழுளோரும் கீழ்மையைவிளைத்தார் மேலோர்,சீர்த்தமைதவிரத்தக்க கருமமேசெய்தாரென்ன" என்று ஒருபிரதியிற் பின்னிரண்டடிகளுள்ளன.

கo. [1]பாணியிற் றள்ளிக் கால மாத்திரைப் படாது [2]பட்ட
[3]நாணியின் முறையிற் [4]கூடா தொருவழி [5]நடையிற் செல்லும்
[6]ஆணியி [7]னழிந்த பாட [8]லின்றன ரனங்க வேடன்
றூணியி [9]னடைத்த வம்பிற் கொடுந்தொழி [10]றுறந்த கண்ணார்.

(இ - ள்.) அநங்கனாகியவேடன் (உலகத்தவர்மேல் எய்யாமல்) தூணீரத்திலே அடைத்துவிட்ட அம்பைப்போலக் கொடுந்தொழிலைத் துறந்த கண்களையுடைய மகளிர்கள்,—(பாடவேண்டிய) முறைமையினின்று தவறி, (துருதம் மத்திமம் மந்தம் என்பவைகட்கு ஏற்பட்ட) அட்சரகாலத்துக்குக் கட்டுப்படாமலும் (நரப்புக்கருவியிற்) பொருந்தியுள்ள நரம்பு ஒலிக்கின்ற முறைக்குஏற்காமலும் வேறொருவழியான ரீதியிற் செல்லுகின்ற வரம்புதவறியபாடலைப் பாடலானார்கள்; (எ - று.)

நரம்புஒலிக்கும் காலமாத்திரைக்கும் பாடவேண்டியமுறைக்கும் மாறாக மகளிர் மதுபானமயக்கத்தால் வேறுவகையாகப் பாடினரென்பதாம். மன்மதன் அம்பெய்து ஆடவரையும் மகளிரையும் ஆசைநோய்விளைத்து வருத்துதலால், 'அநங்கவேடன்' என்றார். அவ்வனங்கன் ஆடவர்மகளிராகிய இவர்கள்மீதுஎய்யாமல் தனதுதூணீரத்தில் அம்புகளை வைத்திட்டால் அந்தஅம்புகள் ஸ்திரீபுருஷர்களுக்கு நோயை விளைக்கமாட்டாதனவாதல்போல, மதுவுண்டமகளிர் மதவெறிகொண்டு காமக்குறிப்புத்தோன்றப் பார்க்கும் பார்வை யின்றி யிருத்தலால், அம்மகளிர்கண்கள் அந்நிலையிற் காமநோயை விளையாவாயின வென்பார், அவைகட்கு, அநங்கவேடன் தூணியினடைத்த அம்புகளை உவமைகூறினார். இது, மதமயக்கத்தாற் கண்செருகிய நிலையைக் கூறியது. பி-ம்:—1வாணியிற். 2வட்ட. 3நாணினம், நாணியன். 4செல்லாது. 5நடப்பவான. 6பாணியின். 7உமிழ்ந்த, அழித்த, பாடப். 8பயின்றனர், நறவென. 9இருந்த. 10தோற்றும், புரிந்த. (உஎஅஉ)

கக. 1வங்கியம் வருத்த கான 2மாறுகொண் 3மழலை வாயர்
சங்கையில் 4பெரும்ப ணுற்ற 5நிறத்துறை நிரம்பித் தள்ளச்
சிங்கலி னமுதி னோடு 6புளியளாந் தேற லென்ன
7வெங்குர லெடுத்த பாடல் 8விளிந்தனர் மயக்கம் 9வீங்க.

(இ - ள்.) புள்ளாங்குழலினின்று வெளித்தோன்றுகின்ற பாடலுடனே மாறுகொள்ளும் நிரம்பாமென்சொல்லைக்கொண்ட வாயையுடையமாதரார்,—(கள்ளுண்ட) மயக்கம்மிகவே, குற்றமற்ற பெரும்பண்ணின் பொருந்திய விளக்கமான துறையினின்று மிக்குமாறுபட்டுப்போக, குறைவில்லாத அமிருதத்துடனே புளிச்சுவைபொருந்திய கள் (சேர்ந்தாற்)போல வெவ்விய [கர்ணகடூரமான] குரல்கொண்டு உரத்துள்ளபாடலைப் பாடலானார்கள்; (எ-று.)

மழலைவாயரான மகளிர் மயக்கம்மிக்கதனால் பெரும்பண்ணின் துறையினின்று திறம்பிப்போகுமாறு உரத்தகுரலோடு பாடலானாரென்க. மழலைவாயில் வெங்குரல்வந்தது அமிழ்தினோடு புளிப்புச்சுவையுள்ள தேறல் கலந்ததுபோலு மென்க. சிங்குதல் குறைதலாதலை "சிங்காமைவிரித்தவன்" என்ற பெரியார்பாசுரத்திலும், விளிதல் பாடுதலாதலை "விளியாதான்கூத்தாட்டுக்காண்டலும்" என்ற இடத்துங் காண்க. பி-ம்:—1வங்கியம்வருத்தநாதம், வங்கியகுருகுற்றென்ன. 2வயங்கிய, மாறுகோள். 3மழலைமாறாச், மழலைமாணச், மலைழயீறாக், மலைத்தூகச். 4பெரும்பாணுற்ற, பெரும்பணீத்துத். 5 துன்ற

தொறும்திறம்பித், நிறைத்துறைதிறம்பத். 6அளியளி.7விங்கிசையமுதபாடல். 8விரிந்தன, விளித்தனர். 9வீங்கி. (உஎஅங)

கஉ. 1ஏனைய பிறவுங் 2கண்டார்க் 3கிந்திர சால மென்னத்
தானவை யுருவிற் 4றோன்றும் பாவனைத் தகைமை 5சான்றோர்
மானமர் 6நோக்கி னாரை மைந்தரைக் காட்டி வாயால்
ஆனையை 7விளம்பித் தேரை 8யபிநயத் தியற்றி யுற்றார்.

(இ - ள்.) (அங்ஙனம்பாடும்மகளிரின்) மற்றைய அபிநயச்செயல்களும் கண்டவர்க்கு இந்திரசாலத்தோற்றம்போல அவ்வப்பொருள்கள் தம்முருவில் தோன்றுமாறுஅபிநயிக்கவல்ல அபிநயத்திலே மேம்பாடுபெற்று மிக்கவர்கள், —(இப்போது கள்ளுண்டதனாலான மயக்கமிகுதியால்), மானையொத்த பார்வையையுடைய மகளிரையும் ஆடவரையும் சுட்டி வாயினால் (பாடும்போது) ஆனையைச் சொல்லி, அபிநயங்காட்டும்போது தேரைக் காட்டிவிட்டார்கள்.

இந்திரசாலவித்தைக்காரர் ஒருநொடியில் ஒருபொருளை முதலிற் காட்டி அப்பொருளைப் பின் வெவ்வேறுபொருளாகக் காட்டும் வல்லமையுடையவர்: அங்ஙனமே அபிநயம்வல்லவர்களும்,இப்போது கள்ளுண்டமயக்கத்தால்,ஆடவரையும் மகளிரையும் சுட்டிக் களிற்றைச்சொல்லித் தேரினை அபிநயத்தில் தெரிவித்தன ரென்க. அபிநயச்செயல்முடிவதற்குள், வெவ்வேறுபொருளைக் காட்டியதனால், இந்திரசாலம் வல்லோர் இந்தஅபிநயம்வல்லோர்க்குஉவமையாவர். பி-ம்:—1ஏனையர்.2கண்டர்.3இந்திரஞாலம்.4தோன்றன்.5சான்ற.6நோக்கினார்க்கும்.7காட்டி.8அபிநயத்தாற்றியுற்றார்,அபிநயந்தெரிக்கலுற்றார். (உஎஅச)

கங. 1அழுவார்க ணகுவார் பாடி யாடுவா 2ரயலின் னாரைத் [றேன்
தொழுகுவார் துயில்வார் 3துள்ளித் தூங்குவார் 4துவர்வாயின்
ஒழுகுவா ரொல்கி யொல்கி யொருவர்மே லொருவர் புக்கு
முழுகுவார் 5குருதி வாட்கண் 6முகிழ்த்திட மூரி போவார்.

(இ-ள்.) (மதுபானமயக்கத்தாற் சிலர்), அழுவார்: (சிலர்), சிரிப்பார்: (சிலர்),பாடியாடுவார்; (சிலர்),அயலிலேநின்றவரைத் தொழுவார்கள்; (சிலர்), துயில்வார்; (சிலர்), துள்ளிச்சோர்வார்: (சிலர்), செந்நிறமுள்ளவாயினின்று தேன்போன்றநீர் ஒழுகப்பெறுவார்: (சிலர்),தளர்ந்துதளர்ந்து ஒருவர் மேல்மற்றொருவர் புகுந்துபடிவார்: (சிலர்), சிவப்புநிறமடைந்த வாளையொத்த கண்ணைமூடிக்கொண்டு சோம்பல்முறிப்பார்; (எ - று.)—பி-ம்:---1அழுகுவர். 2ஆயினாரை. 3தள்ளித்தூங்குவார், தூங்கித்துள்ளுவர். 4வாயிற்றீந்தேன். 5மூரி. 6முகிழ்த்திடை. (உஎஅரு)

கச. உயிர்ப்புறத் துற்ற தன்மை 1யுணர்த்தினா ருள்ளத் 2துள்ளது
3ஆயிர்ப்பினி 4லறிதி ரென்றே யதுகளி யாட்ட மாகச்
செயிர்ப்பறு 5தெய்வச் சிந்தைத் திருமறை முனிவர்க் கேயும்
மயிர்ப்புறந் தோறும் வந்து 6பொடித்தன 7மதன வாளி.

(இ - ள்.) (மகளிர்கள், 'எமது) மனத்திலுள்ளதைச் சந்தேகித்தலினாலல்லாமல் [தெளிவாக] எல்லீரும்அறிவீர்கள்' என்று தமது உயிரினிடத்துஉள்ள

இயல்பை உணர்த்தினார்கள்: அவ்வாறு களியாட்டம்நிகழ்கையில், (அதனைக் கண்டவர்) தமது ஐம்பொறிகளையடக்கிக் கடவுட்சிந்தனையையேபுரியும் சிறந்த நான்மறைவல்ல முனிவராகஇருப்பினும் அவர்கட்கும் மன்மதனுடைய அம்புகள் மயிர்க்கால்கள்தோறும் வந்துநிரம்பின; (எ-று.)

இங்ஙனம் மடவார் களியாட்டயர்கையில் அந்தக்களியாட்டத்தைக் கண்டவர் தெய்வசிந்தனையேயுடைய முனிவராகஇருப்பினும், அவர்கட்கும் அது வேட்கையையுண்டாக்கிற்றென்பதாம். கள்ளுண்டவர் எவரிடத்துஞ்சொல்லாது தம்மனத்திலேயே இரகசியமாகவைத்திருந்ததைச் சொல்லிவிடுதல் இயல்பென்பது, முன்னிரண்டடிகளிற் கருதத்தக்கது. அயிர்ப்பின்இல் - அயிர்ப்போடுஇல்லாமல்என்றபடி. பி-ம்:—1உணர்த்தினால், உணர்த்தினும். 2உள்ள. 3அயிர்ப்பினால், அயிர்ப்பினை. 4அறிதுமன்றே, அரியதன்றே, அறிதுநன்றே, அற்றதன்றே, அறிதியன்றே. 5சிந்தைத்தெய்வத். 6பொடித்தது. 7காமவாரி.

கரு. மாப்பிறழ் நோக்கி னார்தம் 1மணிநெடுங் குவளை வாட்கண்
சேப்புற 2வரத்தச் செவ்வாய்ச் செங்கிடை வெண்மை 3சேரக்
4காப்புறு படைக்கைக் கள்வ நிருதர்க்கோ 5ரிறுதி காட்டிப்
பூப்பிறழ்ந் துருவம் வேறாய்ப் 6பொலிந்ததோர் 7தன்மைபோன்ற.

(இ - ள்.) வண்டுகள்போன்று பிறழுந்தன்மையைக்கொண்ட கண்களையுடையாரான அரக்கமகளிரின்சிறந்தகுவளைமலர்போன்றகருமணியைப்பொருந்திய ஒளியுள்ளகண்கள், செந்நிறத்தைப்பொருந்தவும் செஞ்சடையையும் செவ்வாம்பல்மலரையும்ஒத்துச்செந்நிறம்பொருந்திய வாய்கள் வெண்ணிறத்தைச்சேரவும், - காவலாகப்பொருந்திய படைக்கலங்களைக் கையிற்கொண்ட வஞ்சனைக்குணமுள்ள அரக்கர்க்கு (நேரப்போகின்ற)ஒப்பற்றமுடிவை முன்னந்தோற்றுவித்து, மலர்கள் (தமதுநிறம்மாறி) வேறாகி விளங்குகின்ற ஒருதன்மையைப் போன்றன; (எ - று.)

மலர்கள் நிறம்மாறி வேறுநிறத்தனவாகப் பூத்தல், பின்னர்விளையுந் தீங்கை முன்னர்த் தெரிவிக்கும் உற்பாதமாம். மகளிருடைய கண்களாகிய குவளைமலர்களும், வாய்களாகிய செவ்வாம்பல்மலர்களும்,--கள்ளுண்டதனால் நிறம்மாறிச் செந்நிறத்தையும் வெண்ணிறத்தையும் அடைந்து, உற்பாதமாக நிறம்மாறிப்பூத்த மலர்களைப்போன்றனவென்றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இச்செய்யுள் சிலபிரதிகளில் "கயல்வரு" என்ற அடுத்தபாடலின் பின் உள்ளது. பி-ம்:—1மணிக்கருங்குவளை. 2வாய்த்த..., துவர்த்தவாயார். 3தோன்றக். 4காப்புறழ். 5இறுதிக்காலம். 6மலர்ந்ததோர். 7பழனம்போன்ற.

கசா. 1கயல்வரு 2காலன் 3வைவேல் காமவேள் கணையென் றாலும்
இயல்வரு கிற்கி லாத நெடுங்கணா ரிணைமென் கொங்கைத்
துயல்வரு கனக நாணுங் காஞ்சியுந் துகிலும் வாங்கிப்
புயல்4வரு கூந்தற் பாரக் கற்றையிற் புனைய லுற்றார்.

(இ - ள்.) கயல்மீனும் (உயிரைக்கொள்ள)வருகின்ற யமனுடையகூரிய வேற்படையும் காமவேளின்அம்பும் என்றுஉவமைகூறினாலும் ஒப்புமை

பொருந்தாத நீண்டகண்களையுடைய அரக்கமகளிர்,---(களிமயக்கத்தால் தம்முடைய) இரட்டையாகிய மெல்லியதனங்களிற் புரள்கின்றபொற்சரட்டினையும்,(இடையிற்பூண்டுள்ள)மேகலையினையும் ஆடையையும் கையினலெடுத்து, மேகத்தையொத்த மயிர்ச்சுமைத்தொகுதியில் அணியத் தொடங்கினார்கள்.

களிமயக்கத்தால் தாஞ் செய்யுஞ் செயல் இன்னதென்றுதெரியாது மகளிர் கனகநாண்முதலியவற்றை வேற்றிடத்தில் அணிந்தன ரென்க. முதலிரண்டடிகளில் கண்ணுக்குச்சிறந்த உவமைப்பொருளான கயல்முதலியவற்றை உபமானமாகாவென்று மறுத்துச் சொன்னமையால், எதிர்நிலையணியாம். ஒருபிரதியில் இச்செய்யுளோடு களியாட்டுப்படலம் முடிய, அடுத்தபாடலில் மாயாசீதைப்படலம் தொடங்குகின்றது. பி-ம்:---1கயல்வருங்.2காமன். 3கை. 4பொரு. (உஎஅஅ)

கஎ.---இங்ஙனம் களியாட்டயர்தலை இராவணன் கண்டுநிற்கையில், வானரசேனை ஆர்த்தஓசை அவன்காதில் விழுதல்.

முத்தன்மை மொழிய லாகா 1முகிழிள முறுவ னல்லார்
இத்தன்மை 2யெய்த னோக்கி யரசுவீற் றிருந்த 3வெல்லை
யத்தன்மை யரியின் சேனை யார்கலி யார்த்த வோசை
அத்தன்மெய் 4மயங்க வந்து செவிதொறு 5மடுத்த தன்றே.

(இ - ள்.) முத்தல்லாமையைச்சொல்லமுடியாத [முத்துஎன்றேசொல்லத்தக்க] தோன்றுகின்ற புன்சிரிப்பையுடைய (அரக்க) மகளிர் (களியாட்டினால் கீழ்க்கூறிய) இவ்வாறான நிலைமையையடைதலை (அரக்கர்) மன்னவனை இராவணன் கண்டுகொண்டு வீற்றிருந்தபோது,---(மருத்துமலைவரப்பெற்றதனால் உயிர்பெற்று எழுதலாகிய) அத்தன்மையையுடைய குரங்குச்சேனையாகிய சமுத்திரம் ஆரவாரித்த ஓசையானது காமவெறிகொண்ட (அந்த) இராவணனுடையஉடல் சோரும்படி (அவனுடைய) செவிதோறும் வந்து நுழைந்தது; (எ - று.)

உயிர்பெற்றெழுந்த வானரசேனை யார்த்த தென்பது கீழ் மருத்துமலைப்படலத்து கoo, கoச-ஆஞ் செய்யுளிற் கூறப்பட்டுள்ளமை காண்க. முத்து அன்மைஎன்று பிரியும்.'முத்துத்தன்மை'யென்றதொடர்'முத்தன்மை' என்று விகாரப்பட்டு வந்த தெனக்கொண்டு, முத்தின்தன்மையையுடையது என்று சொல்லுதற்காகாத[முத்தினுஞ்சிறந்த]முகிழ்நகை என்று உரைத்தலும் ஒன்று. பி - ம்:---1முகிணகை, முகிணிலா. 2செய்தனோக்கி, எய்தநோக்கி. 3வேலை. 4மயக்க. 5மடுத்தமாதோ. (உஎஅகூ)

கஅ.---வானரங்களின் ஆர்ப்பொலியால் மகளிரின் ஆடல்முதலியன ஒடுங்குதல்.

1ஆடலுங் களிப்பின் வந்த வமலையு 2மமுதி னன்ற
பாடலு 3முழவின் றெய்வப் பாணியும் பவள வாயார்
4ஊடலுங் கடைக்கண் 5ணோக்கு 6மழலைவெவ் வுரையு மெல்லாம்
7வாடன்மென் மலரே யொத்த வார்ப்பொலி வருத லோடும்.

(இ - ள்.) பவழம்போன்றவாயையுடையமகளிரின் ஆடல்களும், களிப்பினால்வந்த ஆரவாரங்களும், அமிழ்தினும் சிறந்தபாடல்களும், (பாடலுக்கேற்ற) முழாக்களின் தெய்வத்தன்மையுள்ள ஒலிகளும், ஊடலும், கடைக்கண்பார்வையும், கொச்சையாகப்பேசுகின்றவெவ்வுரைகளும் ஆகிய இவைகளெல்லாம், (வானரசேனையின்) ஆரவாரம் காதிற் கேட்டவுடன் வாடியமெல்லியமலரைப்போன்றன [பொலிவழிந்தன] (எ-று.)—பி-ம்:—1ஆடலின்களிப்பின், ஆடலுங்களியின். 2அழகினுன்ற, அளவிலாத. 3முழவும், அளவில். 4ஊடலின். 5நோக்கம். 6முதல. 7வாடினமலரே, ஆடல்செய்வேலே, ஆடுவல்லரவே. (உஎகo)

கக.—இராமலட்சுமணரின் நாணொலி தோன்றுதல்.

1தறிபொரு களிநல் யானை 2சேவகந் தள்ளி யேங்கத்
துறுசுவற் புரவி 3தூங்கித் துணுக்குற வரக்க ருட்கச்
செறிகழ லிருவர் தெய்வச் சிலையொலி 4பிறந்த தன்றே
எறிகடல் 5கடைந்த மேனா ளெழுந்த6பே ரோசை யென்ன.

(இ - ள்.) நெருங்கியவீரக்கழலையணிந்த ராமலக்ஷ்மணர்இருவரின் தெய்வத்தன்மைபொருந்திய விற்களின் நாணோசையானது,—கட்டுத்தறியைப்பொருகின்ற மதக்களிப்புள்ள சிறந்தயானைகள் (தாம்) படுக்குமிடங்களில் சோர்ந்துஏங்கவும், பிடரிமயிர்நெருங்கிய குதிரைகள் திடுக்கிட்டுச் சோரவும், அரக்கர்கள் அஞ்சவும்,—(அலை) மோதுகின்ற பாற்கடலைக்கடைந்த முற்காலத்தில் எழுந்த பேரோசைபோலத் தோன்றிற்று; (எ - று.)—பி - ம்:—1தெறுபொருக். 2சோர்வுற்றுத்தள்ளியேங்க, சேவகந்... ஓங்கத். 3தூங்கத். 4சிறந்ததன்றே, பரப்புஞ்செய்கை. 5கடந்த. 6பேரொலிகொலென்ன. ஒருபிரதியில் இந்தச்செய்யுளோடு களியாட்டுப்படலம் முடிகின்றது. (உஎகக)

உo.—அப்போது இராவணனுக்குக் களியாட்டுமகளிரிடத்தில் வெறுப்புத் தோன்றினமை.

1முத்தம்வா ணகைக்குத் தோற்கு முகத்தியர் முழுக்கண் வேலாற்
குத்துவார் கூட்ட மெல்லாம் வானரக் குழுவிற் றோன்ற
மத்து2வாழ் கடலி னுள்ள 3மறுகுற வதன மென்னும்
பத்து4வாண் மதிக்கு மந்நாட் பகலொத்த 5திரவு பண்பால்.

(இ - ள்.) முழுக்கண்ணுகியவேலினலே குத்துவாராகி முத்துக்கள் ஒளிபொருந்திய (தமது)நகைக்குத் தோற்கும் முகத்தையுடையரான அரக்கமகளிரின் கூட்டமெல்லாம், (இன்பத்தைச்செய்யாமல் துன்பத்தைச்செய்தலால்) வானரக்கூட்டத்தைப்போற் காணப்படவும், (மந்தரமாகிய) மத்து பொருந்தப்பெற்ற கடல்போல(த் தன்) மனம் கலங்கவும், அந்நாளின் இரவானது (பொலிவைநீங்கச்செய்த) தன்மையால் (இராவணனுடைய) முகமென்று சொல்லப்படுகின்ற ஒளியுள்ள பத்துச்சந்திரர்களுக்கும் பகலைஒத்தது; (எ-று.)—மனத்திலச்சந்தோன்றியதனல் இராவணன் மகளிரிடத்துப் பகைவரிடத்துப்போல வெறுப்புக்கொண்டு விருப்பமற்றவனுய் முகவொளிகுறையப்

பெற்றன னென்க. பி-ம்:—[1]முத்தவாணகையின்மூரல், முத்துவாணகைக்குங் கொற்ற, முத்துவாள்முறுவல்மூரல். [2]வார். [3]மறுகிட, மறுக்கிட. [4]வாழ், வான், வார். [5]இரவும்பைய. (உஎகஉ)

உக.—இராவணன் ஒற்றரால்செய்தியுணர்ந்து மந்திரசாலைக்குச் செல்லுதல்.

ஈதிடை யாக வந்தா [1]ரலங்கன்மீ தேறி னார்போய்
[2]ஊதினர் வேய்கள் [3]வண்டி னுருவினா ருற்ற [4]வெல்லாந்
தீதிலர் பகைஞ ரென்னத் [5]திக்கென்ற மனத்தன் றெய்வப்
[6]போதுகு பந்தர் நின்று [7]மந்திரத் திருக்கை புக்கான்.

(இ-ள்.) (இராவணன் களியாட்டங்காணுமிடத்து) இவ்வாறு நிகழுஞ் சமயத்தில், ஒற்றர்கள் வண்டினுருவத்தைக்கொண்டவராய், (இராவணனுடைய மாலையின்மீதில் ஏறிப்போய், (அனுமான் மருத்துமலைகொணர்ந்ததனால்யாவரும் உயிர்பெற்றுஎழுந்ததாகிய) நிகழ்ந்தசெயலை எல்லாம் ஊதினார்கள்: (இராவணன்) 'பகைவர்கள் குறைவின்றிப் பிழைத்துள்ளார்' என்று (தூதர்கள்) சொல்லக்கேட்டதனால் திடுக்கிட்டமனத்தையுடையவனாய், கற்பகமலர்கள் சிந்தியுள்ள (அந்தப்)பந்தலைவிட்டு மந்திரசாலையைப் போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

தூதர்கள்வண்டினுருவங்கொண்டு ஊதியது, பிறர்அறியாமலிருத்தற்காக. பி-ம்:—[1]இலங்கையர்வேர் தன்றன்னோடு அலங்கல்மீதேறினார்போல் [2]ஓதினர். [3]வண்டிற்றுருவினர், வண்டினுருவதாய். [4]தன்மை. [5]தீகின்ற, தீக்கின்ற. [6]போதவிழ்சோலை. [7]மந்திரத்தெல்லை, மந்திரவிருக்கை. "ஈதிவணிகழுங்காலை இராவணன்செவியில் மெல்ல" என்று சிலபிரதிகளில் முதலடி. சீதைக்குக் களங்காட்டியதும் களியாட்டுக்கண்டதும் முதனூலிற்காணப்படவில்லை.

களியாட்டுப்படலம் முற்றிற்று.

---

## உரு-ஆவது மாயாசீதைப்படலம்

(நிகும்பலையில் வேள்விசெய்து முடிக்கக்கருதிய இந்திரசித்து, அதற்கு இடையூறுசெய்யாமல் பகைவரின்கருத்தை வேறிடத்திற்செலுத்தக்கருதி, சஞ்சீவிமலையைக்கொணர்ந்துவைத்து மீண்டுவந்த அநுமான் இலங்கையின் மேலைவாயிலிலிருக்க, அவன்முன்னிலையில்) மாயையால்நிருமித்த சீதையை வெட்டியதைத்தெரிவிக்கும் படல மென்பது, பொருள்.

இராவணன் மந்திரசாலைக்குப்போனபோது, இந்திரசித்து சேனைத்தலைவனாகியமகோதரன் மாலியவான்முதலியோர் பக்கத்திலிருந்தனராக, தனக்கு நேர்ந்த துயரத்தையெல்லாம் அவரறியும்படி அவ்விராவணன் கூறினான். அப்போது மாலியவான் 'ஔஷதிமலைகொணர்ந்ததனால் பிரமாஸ்திரமும் பழுதுபட்டது: இனி மாற்றவரை எங்ஙனம் வெல்வது? இனியாவது சீதையைக்கொடுத்து அடைக்கலம் புகுவதே தக்கது' என்ன, அதுகேட்ட இராவ

ணன், மிகச்சீறி 'என்னநேர்ந்தாலும் சீதையைவிடேன்: அஞ்சினவர்களெல்லாம் போய்விடுங்கள்: நான் நாளைக்கே பகைவெல்கின்றேன்' என்றான். அப்போது இந்திரசித்து 'மாற்றார் திறமையைப்பற்றி இப்போது சொல்வது சரியன்று: எனக்கு ஒன்று தோன்றுகின்றது. நான் நிகும்பலைக்குப்போய் யாகஞ்செய்துமுடித்தால் பகைவெல்லலாம்: ஆனால், உன்தம்பி நான் யாகஞ் செய்வதை அப்பகைஞர்க்குச் சொல்லிவிட்டால், அன்னார்யாகத்தை முடிக்கவொட்டார்கள்: ஆகவே, சானகியைப்போல்உருவஞ்செய்து அநுமான் கண்முன் நிறுத்தி அந்தமாயாசீதையை என்கைவாளாற்கொன்றுவீழ்த்தி, அயோத்திக்குப்போவதாகவழிகாட்டிப் போய்விட்டால், அவர்கள் அந்தத்துயரத்தினாற்போய்விடுவார்கள்:போகாவிட்டாலும்,நான் அயோத்திக்குச்சென்றஉண்மையைஅநுமான்மூலமாகத் தெரிந்துகொள்ளப்பார்ப்பார்கள்: அதற்குள் வேள்வியைமுற்றினால் வெற்றிபெறலாம்'என்றான்: அதற்குஇராவணனும் உடன்பட்டான். இது இவ்வாறாக; சுக்கிரீவனுடைய ஆலோசனையினால் ஸ்ரீராமனனுமதியின்மேல் வானரர்கள் இலங்கையில் கொள்ளிக்கட்டையைக்கொண்டு தீவைத்துக்கொண்டிருந்தார். இவ்வாறுநிகழ்கையில், அநுமான் மருத்துமலையை வைத்திட்டு மீளவந்தனனாக,இந்திரசித்து மாயாசீதையை அவன்கண்முன்னேநிறுத்தி அவ்வநுமான் பலபடிசொல்லித்தடுக்கவும் கேளாது அவ்வுருவத்தை வாளால்வெட்டிப் பிறகு 'அயோத்தியிலுள்ளார்மீதும் செல்லப்போகின்றேன்'என்றுசொல்லி, பெருஞ்சேனையோடு புஷ்பகவிமானத்தை அத்திசைசெல்வதாகக்காட்டி நிகும்பலையைச்சேர்ந்தான். அநுமானோ மூர்ச்சையடைந்திட்டான்: தெளிந்ததும், பலவகையாகப்புலம்பி, செய்திதெரிவிக்குமாறு ஸ்ரீராமனைச்சேர்ந்து, சீதையை இந்திரசித்து மாய்த்தசெய்தியை அரிதில்தெரிவித்தான். அதனால், அப்பெருமான் கொண்ட துயரத்திற்கோ அளவில்லை; வானரர்களும் பெருந்துயர்கொண்டு அப்பிரான்காலில்விழுந்தழுதனர்; இலக்குமணனும் அயர்ந்துவீழ்ந்தான். விபீடணனும் இந்திரசித்து அங்ஙனஞ்செய்திருக்கலாமென்று ஐயங்கொண்டான். பின்பு பிரஞ்ஞையற்றிருக்கிற ஸ்ரீராமபிரானை விபீஷணன் சைத்தியோபசாரத்தினால் தெளிவிக்க, இலக்குவன் 'சீதையைக்கண்ணெதிரேகொன்ற பாவியரைக்கொல்லாமல் துயரத்தினால் நம்முயிரைமாய்ப்பது தக்கதன்று' என்று பலபடிகூற, சுக்கிரீவன் கனாக்கண்டவன்போலெழுந்து'அரக்கர்மார்பிற்போய்க் குதிப்போம்: வாருங்கள்' என்றுமுயல, அப்போது பரதன்முதலியோரைத்தாக்க இந்திரசித்து அயோத்திசென்றிருப்பதை அனுமான் தெரிவித்தான். அப்பால் ஸ்ரீராமன் சீதையைக்குறித்த துயரத்தை விட்டு அயோத்தியைக்குறித்து மிகத்துயருற்று'அயோத்திசென்ற அரக்கச்சேனையைத்தொலைத்தபின் இலங்கையைவெல்வேன்:உடனே அயோத்திசெல்ல உபாயமுண்டோ?'என்ன,தன் தோளிலேறிக்கொண்டால் புஷ்பகத்தினும் விரைந்துசெல்வதாகஅநுமான்கூற,இராமலக்ஷ்மணர்ஏறஇருக்கையில், ஸ்ரீவிபீஷணன்'துயரத்தால்அயர்ந்திட்டேன். இந்திரசித்துசெயல் மாயை யெனக் கருதுகின்றேன்: நான் உண்மையறிந்துசொன்னபின் உரியதுசெய்யலாம்' என்று சொல்லிவிட்டு, அவ்விபீஷ

ணன் வண்டினுருவங்கொண்டு அசோகவனிகைசென்று சீதை இனிதிருப்பதையுணர்ந்து மீண்டுவந்து அச்செய்தியைத்தெரிவிக்க, யாவரும் மகிழ்ந்தன ரென்பது இப்படலத்துக் கூறிய பொருள்.

க.—மைந்தன்முதலியோர் சூழ்ந்துநிற்க,
இராவணன் தனக்குநேர்ந்துள்ள நிலைமையைத் தானே கூறுதல்.

மைந்தனு மற்று ளோரு [1]மகோதரன் முதலோ ராய
தந்திரத் [2]தலைமை யோரு முதியருந் தழுவத் தக்க
[3]பந்திய ரெவரும் வந்து [4]மருங்குறப் [5]படர்ந்தார் பட்ட
[6]அந்தர முழுதுந் தானே யனையவர்க் கறியச் சொன்னான்.

(இ - ள்.) புதல்வனாகிய இந்திரசித்தும் மகோதரன் முதலியவரான சேனைத்தலைவரும் முதியவரும் மற்றுமுள்ளோராகிய உரியகாலங்களில் வந்து தழுவுதற்குஉரிய கூட்டமாகவுள்ள எல்லோரும் அருகிற்பொருந்த வந்துசேர்ந்தார்; நேர்ந்துள்ள துன்பங்களையெல்லாம் தானே அவர்கட்குத் தெரியும்படி (இராவணன்)சொன்னான்;(எ-று.)—பி-ம்—[1]மகோதரப்பெயரினானும், மகோதரன்முதலோராய்ந்த. [2]தன்மையோரும். [3]மந்திரர். [4]மறுகுற, [5]பரந்தார். [6]தந்திரமெழுந்ததன்மைதான். (உஎகூச)

உ—.இதுமுதலேழுகவிகளால்-மாலி ராவணனுக்கு இதோபதேசஞ்செய்தல்.

நங்கிளை [1]யுலந்த தெல்லா [2]முய்ந்திட நணுகு மன்றே
வெங்கொடுந் தீமை தன்னால் வேலையி னிட்டி லோமேல்
இங்[3]குள வெல்லா மாடற் கினிவரு மிடையூ றில்லை
பங்கயத் தண்ணன் மீளாப் படைபழு துற்ற பண்பால்.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மிகக்கொடியதீவினையினால் கடலி லிட்டிராவிட்டால், நமது கிளை அழிந்ததெல்லாம் உயிர்பெற்றிருக்க (இப்போது போருக்குச்) செல்லுமல்லவா? பிரமனுடைய மீட்கமுடியாத அஸ்திரமும் பழுதுபட்ட தன்மையினால், இங்குள்ள (எதிராளிகளின்) சேனையெல்லாம் போர்புரிதற்கு வரும்: இனிஇடையூறில்லை; (எ - று.)—இங்குளவெல்லாமாடற்கினி வரும் இடையூறில்லையென்ற தொடர்க்கு - இங்குள்ள (நம்)சேனையெல்லாம் மாண்டுபோகும்படிபொருதற்கு (எதிராளிகளுக்கு) இனிவரக்கூடிய இடையூறில்லையென்றும் உரைக்கலாம். இது சிலபிரதியில் ''இலங்கையின்'' என்ற அடுத்தபாடலின்பின் உள்ளது. பி-ம்:---[1]உலந்ததேயும், உலர்ந்ததெல்லாம். [2]நயந்திட. [3]உளது. (உஎகூரு)

ங. இலங்கையி னின்று [1]மேருப் பிற்பட விமைப்பிற் [2]பாய்ந்து
வலங்கிளர் மருந்து நின்ற மலையொடுங் கொணர வல்லான்
அலங்கலந் தடந்தோ ளண்ண லனுமனே [3]யாதல் வேண்டும்
கலங்கலி லுலகுக் கெல்லாங் காரணங் கண்ட வாற்றால்.

(இ - ள்.) கலக்குதலில்லாத உலகங்கட்கெல்லாம் காரணமானகடவுள் [ஸ்ரீராமன்] (தனது கருணைநோக்கத்தால்)கடாட்சித்திருத்தலால்,-இலங்கையி

விருந்துமேருவும் பிற்பட இமைப்பொழுதிற்குட்பாய்ந்துசென்று வெற்றிபொருந்திய மருந்தை(அவை)நின்ற மலையுடனே பேர்த்துக்கொணரவல்லமை பெற்றவன்வெற்றிமாலையையணிந்தபெருந்தோளையுடைய பெருமையிற்சிறந்த அநுமனேயாகவேண்டும்; (எ-று.)—பி-ம்:—1மேருபிற்பட. 2தாவி. 3ஆக. ()

சு. நீரினைக் கடக்க 1வாங்கி 2யிலங்கையா நின்ற குன்றைப்
3பாரினிற் கிழிய வீசி னுருளர் பிழைக்கற் பாலார்
4போரினிப் பொருவ தெங்கே போயின வனுமன் பொன்மா
மேருவைக் கொணர்ந்5திவ் வூர்மே 6லிடுமெனின் விலக்க லாமோ.

(இ - ள்.) இலங்கையாகுமாறுநின்ற திரிகூடமலையைக் கடலினின்று பெயர்த்துஎடுத்துப் பூமியின்மீது கிழியுமாறு (அவ்வநுமான்) எறிந்தால், பிழைத்தற்குஉரியார் யாருளர்? (அப்பகைவருடன்) இனிப் போர்புரிவது எவ்வாறுசாத்தியம்? (மருத்துமலையைவைத்துவிட்டு வருமாறு)போயுள்ள அநுமான் பொன்மயமானமகாமேருவைக்கொண்டுவந்து இந்தஇலங்காபுரியின்மேல் வீசியெறிவனாேல், (அதனை நம்மால்) தவிர்க்கமுடியுமோ? (எ-று.)—பி-ம்:—1ஓங்கி. 2இலங்கையாய். 3பாரினைச்சுழிக்க. 4போரினில். 5இவ்வூரில். 6விடுமெனில். (உஎகஎ)

ரு. முறைகெட 1வேண்டின் முன்பு2 நினைத்ததே முடிப்பன்3முன்பின்
4குறைவிலாக் குணங்கட் காங்கோர் 5கோதிலர் வேதங் கூறும்
இறைவர்கண் மூவ ரென்ப 6தெண்ணிலா ரெண்ண மேதான்
அறைகழ லனும னோடும் 7நால்வரே முதல்வ ரம்மா.

(இ - ள்.) (அநுமான் லோகஸ்ருஷ்டியின்) முறை அழிந்திடுமாறு எண்ணுவானாேல் முன்னம் (தான்) வலிமையோடு நினைத்தபடியேசெய்து முடிக்கவல்லான்; குறைவில்லாத குணங்கள்விஷயத்தில் ஒப்பற்ற குற்றமற்றவராகி வேதங்கள்கூறுகின்ற தலைமைத்தேவர்கள் மூன்றுபேரென்பது, ஆராயும்வன்மையில்லாதவரின் கருத்தாகும்; ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த அநுமானோடுஞ்சேர்த்து முதல்வராமவர் நால்வரே யாவர்; (எ-று.)—அம்மா - வியப்பிடைச்சொல்:அநுமானுடையதிறமையைக்குறித்து வியந்தவாறு.ஆங்கு- அசை. பி-ம்:—1வென்றுவேண்டின். 2நினைந்ததே. 3முன்னிற். 4குறையிலை குணங்கட்கென்னே. 5கோளிலா. 6எண்ணமோவெண்ணிலந்த.7முதல்வரோர் நால்வர். 5கோதிலா என்றும் படிக்கலாம். (உஎகஅ)

கூ. 1இறந்தவ ரிறந்து தீர வினியொரு பிறவி வந்து
பிறந்தன மாகி னுள்ளோ முய்ந்தனம் பிழைக்கும் பெற்றி
2மறந்தன மெனினு மின்னஞ் சனகியை மரபி 3னீந்தவ்
வறந்தரு சிந்தை யோரை யடைக்கலம் புகுது மைய.

(இ - ள்.) ஐயனே! இறந்துபோனவர்கள் இறந்தவராகவேயொழியட்டும்: இனி வேறொருபிறவியிலேவந்துபிறந்தாற்போன்றுள்ளோமாகில் உள்ளவராவோம்: (அங்ஙனம் நாம்) உயிர்தப்பினோமாகிப் பிழைக்குந்தன்மையை (இதுவரையில்) மறந்துவிட்டோம்: என்றாலும், இப்போதாவது சீதையை முறைப்படிகொடுத்திட்டு அந்தத்தருமத்தையே நினைக்கின்ற எண்ணமுடையரான அவரை அடைக்கலம் புகுவோம்; (எ-று.)

'அறந்தருசிந்தையோர்' என்றதனால், அவர்கள் அடைக்கலம்புகுந்தோரையாதரிக்குந்தன்மையுள்ளவ ரென்பது, பெறப்படும். இனியொருபிறவி வந்து பிறந்தனமாகி னுள்ளேம்என்றது - அரக்கத்தன்மைநீங்கிச் சாதுத்தன்மையை மேற்கொண்டால் உள்ளவராகலா மென்றபடி: அவ்வாறுஉள்ளவராதற்கு உபாயம் மேலே கூறப்படுகின்றதென்க. பி-ம்:--1இறந்தனர். 2மறந்திலம். 3ஏய்ந்தே. (உஎகக)

எ. வாலியை வாளி யொன்றால் வானிடை வைத்து வாரி
வேலையை வென்று கும்ப கருணனை வீட்டி னானை
ஆலியின் மொக்கு ளன்ன வரக்கரோ [1]வமரின் வெல்வார்
சூலியைப் பொருப்பி னோடுந் [2]தூக்கிய விசயத் தோளாய்.

(இ - ள்.) சூலப்படையைக்கொண்ட சிவபெருமானை(க் கைலாய) மலையோடும் தூக்கிய வெற்றிபொருந்திய தோள்களையுடையவனே! வாலியென்னும்வீரனை ஓரம்பினாற் சுவர்க்கத்திலிருத்தி[இறக்கச்செய்து]நீர்க்கடலை(அணைகட்டுமாறு) ஜயித்துக் கும்பகர்ணனை யழித்தவனான இராமனை, நீரில்தோன்றும்குமிழியைப்போன்ற [எளிதிலழிபவரான] அரக்கரோ போரில்வெல்லவல்லார்? (எ - று.)—இச்செய்யுள் சிலபிரதியில் "மறிகடல்" என்ற அடுத்தபாடலின்பின்உள்ளது. சிலபிரதியில் 'கட்டுரை' (கo) என்றபாடலின்பின்உள்ளது. பி-ம்:--1வல்லரென்றான். 2துளக்கிய. (உஅ௰)

அ. மறிகடல் குடித்து [1]வானை [2]மண்ணொடும் பறிக்க வல்ல
எறிபடை யரக்க ரெல்லா மிறந்தன ரிலங்கை [3]யூருஞ்
சிறுவனு நீயு மல்லால் யாருள ரொருவர் தீர்ந்தார்
வெறிதுநம் வென்றி யென்றான் மாலிமேல் விளைவ [4]தோர்வான்.

(இ - ள்.) (அலை) மடங்குகின்ற கடலின்நீரைப் பருகி, வானை மண்ணுலகத்தோடு பேர்த்தெடுக்கவல்ல வீசுகின்றபடைக்கலங்களைக்கொண்ட அரக்கர்யாவரும் இறந்துவிட்டனர்: இலங்கையூரும் (உனது) குமாரனாகிய இந்திரசித்தும் நீயும் அல்லாமல் உயிர்தப்பிப்பிழைத்தவர் ஆர்ஒருவர்இருக்கின்றனர்?நமக்குவெற்றியென்பது வெறும்பேச்சே: [காரியத்திற்கைகூடுவதல்ல] என்றுகூறினான், மேல்விளைவதை யாராய்ந்தறிபவனாகிய மாலி: (எ-று.)

இச்செய்யுளில், மாலியென்றது-மாலியவானைக்குறிக்கும்: மேற்செய்யுளில் "என்றுமாலியவான்கூற" என வருதல் காண்க: இனி,அச்செய்யுளை இல்லையென்றுகொள்வார் மாலியென்பவனே புத்திகூறியதாகக் கொள்ளலாம். அணிவகுப்புப்படலத்து "மாதுலத்தலைவன்", "மாலி" என வந்துள்ளது காண்க. அங்கும் மாலிஎன்பது - மாலியவானைக்குறிக்குமென்றும், மாதுலத்தலைவன்என்பது-தாய்ப்பாட்டன்என்றபொருளைத் தருமென்றும் கொள்ளுவதும் ஒன்று. பி-ம்:—1வானம். 2மண்ணொடுமெறிக்க, மண்ணொடுமறைக்க. 3ஊரில். 4ஓரான். (உஅ0க)

கூ.—மாலியவானை இராவணன் சினத்தல்.

என்றுமா லியவான் கூறப் [1]பிறையெயிற் றெழிலி நாப்பண்
மின்றெரிந் தென்ன நக்கு [2]வெருவர வுரப்பிப் பேழ்வாய்

[3]ஒன்றினொன் றசனி யென்ன [4]வுருத்துநீ யுரைத்த மாற்றம்
நன்றுநன் றென்று சீறி யுரைத்தன [5]னலத்தை யோரான்.

(இ-ள்.) என்று மாலியவான் சொல்ல, மேகத்தினிடையிலே மின்னல் விளங்கினாற்போலப் பிறைபோன்ற எயிறு (தோன்றச்) சிரித்து, அச்சமுண்டாகுமாறு அதட்டி, பிளவுபட்டவாய்களுள் ஒன்றினொன்று (பட்டு நெறு நெறென்ற ஒலியுண்டாகுமாறு பற்களைக்கடித்தலால்) இடியென்னுமாறு பேரொலியுண்டாகக் கோபித்து, 'நீ கூறியசொல் நன்றாயுள்ளது! நன்றாயுள்ளது' என்று சீறிக் கூறினான்: (யாவனெனில்),—(தன்)நன்மையையாராயாதவனாகிய இராவணன்; (எ - று.)—இச்செய்யுள் பலபிரதிகளிலில்லை; ஒருகால்வெள்ளிப்பாட்டாயிருப்பினும் இருக்கலாம். பி - ம்:—[1]எயிறுடை. [2]வெற்புகவிழித்து. [3]ஒன்றொடொன்று. [4]கடித்து. [5]அரக்கர்நாதன். (உ-அ0உ)

கஎ0.—இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்: இராவணன் சீதையைவிட்டிட ஒருப்படாமையோடு வீரவாதம்படப் பேசுதல்.

கட்டுரை யதனைக் கேளாக் கண்ணெரி கதுவ நோக்கிப்
பட்டன ரரக்க ரென்னிற் படைக்கலம் [1]படைத்த வெல்லாங்
கெட்டன [2]வெனினும் வாழ்க்கை கெடாதுநற் கிளிய னாளை
விட்டிட வெண்ணி யோநான் பிடித்தது வேட்கை [3]வீய.

(இ - ள்.) (மாலியவான் கூறிய) உறுதிமொழியைக் கேட்டு, (இராவணன்),—கண்கள் நெருப்பைக்கொள்ள விழித்துப்பார்த்து(க் கூறுவான்):—அரக்கர்இறந்தாரென்றாலும் (நாம்) வைத்துக்கொண்டுள்ள படைக்கலமெல்லாம் அழிந்திட்டன வென்றாலும்,(நாம்)வாழ்ந்திருக்கை கெடாமலிருக்கையில் இனிக் கிளியையொத்து (இன்மொழி)பேசுபவளான சீதையை விட்டிடுமாறு எண்ணியா, வேட்கையானதுகொன்றுகொண்டிருக்க நான் கவர்ந்துகொண்டு வந்தது? (எ - று.)

வேட்கை மரணவேதனையைவிளைக்க நான் சீதையைக் கவர்ந்துகொண்டு வந்தது,அவளை விட்டிடுவதற்காகவல்ல:அவளுடன் இனிதிருக்கவேணுமென்றகருத்தினாலேயே: ஆகவே, அரக்கர்பலர் இறத்தல்முதலிய காரணங்களைமுன்னிட்டுச் சீதையை விட்டிடேனென்றவாறு. இந்தச்செய்யுளில், உயிர்வாழ்க்கைகெடுவதற்காகவே நான் சீதையைப்பிடித்த தென்ற அமங்கலப்பொருள் தோன்றுதல் காணத்தக்கது. 'நோக்கி'என்றது, அடுத்தசெய்யுளில்'என்றான்'என்பதனோடுமுடியும். பி-ம்:—[1]படைத்தது.[2]என்னில்யாக்கை கெடாதெனிற்,...கெடாதுநற்...[3]வீரம். (உ-அ0ங)

கஎக. [1]மைந்தனென் மற்றை யோரெ [2]னஞ்சினிர் [3]வாழ்க்கை [4]வேட்டீர்
[5]உய்ந்துநீர் போவீர் நாளை யூழிவெந் தீயி னோங்கிச்
[6]சிந்தினன் [7]மனித ரோடு குரங்கினைத் [8]தீர்ப்ப னென்றான்
வெந்திற [9]லரக்கர் வேந்தன் மகனிவை விளம்ப லுற்றான்.

(இ - ள்.) 'மைந்தரென்ன, மற்றையோரென்ன,(இவ்வாறாக)அஞ்சியுள்ளவராய் வாழ்க்கையை விரும்பினவர்களே!நீங்கள் உயிர்பிழைத்தவராய்ப் போ

ங்கள் நாளைக்குக் கற்பாந்தகாலத்துக் கொடிய தீப்போலக் கிளர்ந்து(அம்பைச்) சிந்தினவனாய் மனிதருடனே அநுமானென்ற குரங்கினையும் உயிர்தீர்த்து விடுவேன் என்றுகூறினான், கொடியதிறமையையுடையவனான அரக்கர்தலைவனான இராவணன்; மைந்தன்இவைகூறத்தொடங்கினான்; (எ - று.)—மைந்தன்கூறுவதை மேல் மூன்றுகவிகளிற் காண்க. மைந்தனென்-மைந்தனால்தான் என்னபயன்? மற்றையோரென் - மற்றையோரால்தான்யாதுபயன்? என்று உரைப்பினுமாம். பி-ம்:—[1]மைந்தர்.[2]எஞ்சினிர்.[3]வாழ்வு.[4]வேண்டில்.[5]உய்ந்து நீர்போமின், உய்ந்தனீர்போவிர். [6]சிந்தனை, சிந்திய. [7]மனித்தரோடக்.[8]தீப்பே னென்றான், தீர்வனென்றன். [9]காண்மினென்றான். (உஅ0ச)

கஉ.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: இந்திரசித்து இராமலட்சுமணரைப் புகழ்ந்து, பிறகு 'நான் நிகும்பலையில் வேள்விமுடித்தால் உன்மனத்துயர் நீங்கும்'என்றதைத் தெரிவிக்கும்.

உளதுநா னுணர்த்தற் [1]பால துணர்ந்தனை கோட லுண்டேல்
தளமலர்க் கிழவன் றந்த [2]படைக்கலந் தழலிற் [3]சாற்றி
அளவில தமைய விட்ட திராமனை [4]நீக்கி யன்றால்
[5]விளைவில தனையன் மேனித் [6]தீண்டில [7]மீண்ட தம்மா.

(இ-ள்.) உணர்ந்தவனாய்(ச்சொல்வதை)மேற்கொள்வது உண்டாகுமானால்,நான் அறிவிக்கவேண்டுவதுஒன்றுண்டு:(நான்)இதழ்நிறைந்த தாமரைமலரில்வாழ்பவனான பிரமதேவன் தந்திட்ட அஸ்திரத்தை யபிமந்திரித்து எல்லையற்றதழலோடுஅமையவிட்டது, இராமனை நீக்கியன்றாகும்: (அப்படைக்கலம்) பயன்விளைப்பதாகாமல் அவ்விராமனுடையமேனியைத் தீண்டிலதாய் மீண்டது; (எ - று.)—அம்மா-வியப்பிடைச்சொல்: பிரமாஸ்திரமும் இராமனைத்தீண்டாமையைப்பற்றி வியந்தவாறு. பி - ம்:—[1]பால. [2]சரப்படை. [3]சாத்தி. [4]அடையாவென்றால், வீட்டியன்றால். [5]இளவலதனையமேனி. [6]தீண்டின்றி. [7]இழந்ததம்மா. (உஅ0ரு)

கரு. [1]மானிட னல்லன் றல்லை வானவ னல்லன் மற்றும்
மே[2]னிவர் முனிவ னல்லன் வீடணன் மெய்யிற் சொன்ன
[3]யானென தென்ன றீர்ந்தா ரெண்ணுறு மொருவ [4]னென்றே
[5]தேனகு தெரியன் மன்ன [6]சேகறத் தெரிந்த தன்றே.

(இ - ள்.) தேன்விளங்குகின்ற மாலையையணிந்த அரக்கர்தலைவனே! (இவ்வாறுபிரமாஸ்திரமும் தீண்டாதிருத்தலால் அந்தஇராமன் (சாதாரண) மனிதன் அல்லன்: பழமையான [சாதாரணமான] தேவசாதியானும்அல்லன்: மற்றும் மேன்மைமிகுந்த முனிவன் அல்லன்: விபீஷணன் உண்மையாகச் சொன்ன அகங்கார மமகாரங்களற்றவரான யோகியர் தியானிக்கின்ற ஒப்பற்றகடவுளென்றே ஐயமின்றித் தெரிந்தது; (எ - று.)—அன்றே-தேற்றம். பி-ம்:—[1]மானவன். [2]நிமிர், நிலை. [3]எனவனெண்ணிற்,யானெனதெண்ணிற். [4]அன்றே. [5]தேனுறு. [6]சிக்குறத். (உஅ0சு)

கசு. அனையது [1]வேறு நிற்க வன்னது பகர்த லாண்மை
[2]வினையெனி னன்று நின்று [3]வீழ்ந்தது வீழ்க வீர

[4]இனையனீ ழுண்டி யான்போய் நிகும்பலை [5]விரைவி னெய்தித்
தூனியறு வேள்வி வல்லை [6]யியற்றினுன் முடியுந் துன்பம்.

(இ - ள்.) அவ்வாறுனவார்த்தை வேறேஇருக்கட்டும்: அதனைக்கூறுவது ஆண்மைவினையாகுமோஎன்றால், அன்று:நிகழ்ந்துகழிந்தது கழியட்டும்: வீரனே! நீ வருந்தாதே: யான் முனைந்துபோய் நிகும்பலையென்னுமிடத்தை விரைவாகஅடைந்து, குற்றமற்ற வேள்வியை விரைவில்முடித்தால் (உன் மனத்) துன்பம் ஒழிந்திடும்; (எ - று.)—நிகும்பலை - ஓர்தேவாலயம்: வடமொழியில் 'நிகும்பிலா' என்றுகூறியுள்ளது. அங்குவேள்விமுற்றினல், பகைவர் தவறுதுவீவ ராதலால் துன்பந்தீருமென்கின்றான். பி - ம்:—[1]பிறவும், வென்றி. [2]வினையன, வினையென. [3]வீழ்ந்தவர். [4]முனையது, வினையது. [5]விறவின். [6]தொடங்கினல். (உஅ0எ)

கரு.—இராவணன் உடன்பட்டு 'அவ்வேள்விக்கு இடையூறுநேராமல் செய்யும்உபாயம்யாது?' என்று வினவுதல்.

அன்னது [1]நல்ல தேயா லமைதியென் றரக்கன் சொன்னான்
[2]நன்மக [3]னும்பி கூற [4]நண்ணலார் கண்டு நண்ணி
முன்னிய வேள்வி முற்றா வகைசெரு [5]முயல்வ ரென்றா
என்னவ ரெய்தா வண்ண மியற்றலா முறுதி யென்றான்.

(இ - ள்.) '(நீ கூறுகின்ற) அது நல்லதே: அவ்வாறே செய்வாய்'என்று இராவணன் கூறினான்:(அவனது)சிறந்தகுமாரனை இந்திரசித்து 'உன்தம்பி விபீஷணன் (உளவு) சொல்ல (நமது) பகைவர் கண்டு கிட்டி (நாம்செய்யக்) கருதிய வேள்விநிறைவேறாதபடி போர்முயல்வரே' என்று சொல்ல, 'அவர் வராதபடி என்னஉபாயம்செய்யலாம்?' என்று (இராவணன் மீண்டும்) வினவினான்; (எ - று.)—பி-ம்:---[1]நலத்ததேயால். [2]நன்னெறி. [3]நம்பி. [4]நண்ணுவராண்டு. [5]முயல்வனென்றான். (உஅ0அ)

கசு —இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: மாயாசீதையை அநுமான்முன்புகொன்று, 'யான் அயோத்திக்குப் படையெடுத்துள்ளேன்' என்றல், பகைவராலிடையூறின்றி என்வேள்விமுற்றுமெனல்.

சானகி [1]யுருவ மாகச் சமைத்தவ டன்மை கண்ட
வானுய ரனுமன் முன்னே [2]வாளினாற் கொன்று மாற்றி
யானெடுஞ் சேனை யோடு மயோத்திமே [3]லெழுந்தே னென்னப்
போனபின் [4]புரிவ தொன்றுந் [5]தெரிகிலர் துன்பம் பூண்பார்.

(இ - ள்.) சானகியினுருவமாகஒன்று (மாயையினால்) நிருமித்து அவளுடையதன்மையைக்கண்ட மிக்கஉயர்ச்சியுள்ள அநுமானுடைய முன்னே வாளினாற்கொன்று (அவளுடைய)உயிரைப்போக்கி, யான் பெருஞ்சேனையுடனே அயோத்திமீது படையெடுத்துச்சென்றுள்ளேனென்றுசொல்ல, (இவ்வாறு)நிகழ்ந்துவிட்டபின் [சீதையும் கொல்லப்பட்டு யானும் அயோத்திமீது படையெடுத்தேனென்றஎண்ணம்பகைவர்கட்கு உண்டானபின்பு],(தாம்)செய்யக்கூடியது ஒன்றுந்தோன்றாமல்(அவர்)துன்பம்அடைவார்கள்;(எ - று.)—பி-ம்:-[1]வடிவமாக. [2]வாளியிற். [3]எழுகேன். [4]புகுந்தது. [5]இலாதவர் துயரம்.()

கஎ. இத்தலைச் சீதை மாண்டாள் [1]பயனிவ ணில்லை யென்பார்
அத்தலைத் தம்பி மாருந் தாயரு மடுத்து ளோரும்
உத்தம [2]நகரு மாளு மென்பதோர்[3]ரச்ச மூன்றப்
பொத்திய [4]துன்பத் தோடுஞ் சேனையுந் தாமும் போவார்.

(இ - ள்.) 'இவ்விடத்திற் சீதையோமாண்டாள்; இங்கே (பொருது வென்று நாம் பெறக்கூடிய) பயன் ஒன்றுமில்லை' என்றுகருதுகின்ற இராம லட்சுமணர், 'அங்கே [அயோத்தியில்] தம்பிமார்களும் தாய்மார்களும் சேர்ந்த பந்துக்களும் (ஆகியஇவர்களைக்கொண்ட) சிறந்தநகரமும் மாண்டுவிடும்' என்ற அச்சம்பொருந்தவே,(மனத்தை)க்குத்துகின்ற துன்பத்துடனேசேனை யும் தாமுமாக (இங்கு நின்று அயோத்திக்கே மீண்டு) செல்வார்; (எ - று.)— என்பார் போவார் எனஇயையும். பி-ம்:—[1]பயனிவை. [2]நகருளோரும், தமரு மாரும். [3]வருத்தம். [4]துன்பமூளச். (உ௮க0)

கஅ. போகல ரென்ற போது மனுமனை யாண்டுப் போக்கி
ஆகிய தறிந்தா லன்றி யருந்துய ராற்ற லாற்றார்
ஏகிய கரும முற்றி யா[1]னவண் விரைவி னெய்தி
வேகவெம் படையிற் கொன்று தருகுவன் வென்றி யென்றான்.

(இ - ள்.) (அயோத்திக்கு அவர்கள்) போகவில்லை யென்றாலும் அநு மனை அங்கே யனுப்பி நிகழ்ந்ததை யுணர்ந்தாலன்றி, (தாங்குதற்கு) அரிய துயரத்தைத் தாங்கமாட்டார்கள்: நான், சென்ற (வேள்வியாகிய) காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு அங்கு [போர்க்களத்தில்] விரைவில்அடைந்து, வேக முள்ள கொடியபடைக்கலத்தாலே (பகைவரைக்) கொன்று வென்றியை (உனக்குத்) தருவேன் என்றுகூறி முடித்தான், (இந்திரசித்து); (எ - று.)— பி-ம்:—[1]இவண். (உ௮கக)

கக௯.இராவணன்உடன்படவே மாயாசீதையையமைக்குமாறுஇர்திரசித்து சென்றிட, சுக்கிரீவன் இலங்கையைக் கொள்ளியாற் சுடுவேமெனல்.

அன்னது [1]புரித னன்றென் றரக்கனு [2]மமைய [3]வஞ்சப்
[4]பொன்னுரு வமைக்கு மாய மியற்றுவான் [5]மைந்தன் போனான்
இன்ன[6]தித் தலைய தாக விராமனுக் கிரவி செம்மல்
தொன்னக ரதனை வல்லைக் [7]கடிகெடச் சுடுது மென்றான்.

(இ - ள்.) அச்செயலைச் செய்வது நல்லதென்று இராவணனுமுடன் பட, வஞ்சனைச் சீதையின்உருவத்தை யமைக்கவல்லமாயத்தை யியற்றும்படி இந்திரசித்து சென்றான்; இங்கே இன்னதுநிகழ, (அங்கே) ஸ்ரீராமனிடத் தில், சூரியபுத்திரனை சுக்கிரீவன் 'பழமையான இலங்கைநகரத்தை விரை விலே காவல்கெடும்படி கொள்ளியாற்சுடுவோம்'என்று(ஓராலோசனை) கூறி னான்; (எ - று.)—பொன் - இலட்சுமியின் அமிசாவதாரமானசீதை. கடி - காவல்:விளக்கமுமாம். பி-ம்:—[1]புரிவை. [2]அருள.[3]அஞ்சொற்.[4]பொன்னுருக் குவமை [5]அமைந்து. [6]இத்தலைய. [7]கடிதினிற். (உ௮கஉ)

உ௦.—ஸ்ரீராமனனுமதியின்மேல் வானரங்கள் இலங்கையைச்சுடுமாறு கையிற் கொள்ளிக்கட்டையைக் கொள்ளுதல்.

*அத்தொழில் புரித னன்றென் [1]றண்ண லு மமைய வெண்ணித்*
*தத்தின னிலங்கை மூதூர்க் கோபுரத் துமபர்ச் [2]சார்ந்தான்*
*[3]பத்துடை யேழு சான்ற [4]வானரப் பரவை பற்றிக்*
*[5]கைத்தலத் தோரோர் கொள்ளி யெடுத்தடுதெவ் வுலகுங் காண.*

(இ - ள்.) அத்தொழிலை [இலங்கையைக்கொள்ளிகொண்டுசுடுதலை]ச் செய்தல் நல்லதென்று ஸ்ரீராமனும் ஆலோசித்து உடன்பட, (சுக்கிரீவன்) தாவி இலங்கையென்ற முதுமையான நகரின் கோபுரத்தின்மீதுசேர்ந்தான்); எழுபதுவெள்ளமான வானரசேனசமுத்திரத்தில்(ஒவ்வொன்றும்)ஒவ்வொரு கொள்ளிக்கட்டையை எவ்வுலகமுங்காணக் கையிற்பிடித்துஎடுத்துக்கொண்டது; (எ - று.)—பி-ம்:—[1]அருளினனிராமனண்ணல். [2]சார்ந்தார். [3]பத்துடனேழு. [4]வானரக்குழுவும். [5]கைத்தலத்தாலோர். (உஅகூ)

வேறு.

உக.—கொள்ளிக்கட்டையையெடுத்த வானரசேனையின் வருணனை.

*[1]எண்ணின கோடிப் பல்[2]படை யாவும்*
*மண்ணுறு காவற் றிண்[3]மதில் வாயில்*
*வெண்ணிற மேக [4]மின்னினம் வீசி*
*நண்ணின [5]போல்வ தொன்னகர் [6]நாண.*

(இ - ள்.) பழமையான இலங்கைநகர் கூச்சமடையும்படி, எண்ணப்பட்டுள்ள கோடிக்கணக்கான பலவகையாயுள்ள வானரசேனையாவும், பூமியிலே மிக்ககாவலாகவுள்ள திண்ணியமதிளின்வாசலிலே, வெண்ணிறமேகங்கள் மின்னினத்தைவீசிக்கொண்டு நண்ணினவற்றைப் போல்வனவாயின;(எ-று.)—இச்செய்யுளிலேகொள்ளியெடுத்து மதில்வாசலிலேசென்ற வானரசேனைக் குஉவமைகூறினர். நகர்-நகரத்தார்க்கு ஆகுபெயர். பி-ம்:—[1]எண்ணில. [2]கவி. [3]மதிருவி. [4]மின்னினை. [5]போலத். [6]நண்ணி, நாமம். (உஅகூ)

உஉ.—வானரங்கள் கொள்ளிக்கட்டையை வீசுதல்.

*ஆசைக டோறு மள்ளின கொள்ளி*
*[1]மாசறு தானை மர்க்கட வெள்ளம்*
*நாசமிவ் வூருக் குண்டென [2]நள்ளின்*
*வீசின வானின் மீன்[3]விழு மென்ன.*

(இ - ள்.) குற்றமற்ற தானையாகிய வெள்ளக்கணக்காகவுள்ள மர்க்கடங்கள், திக்குக்கள்தோறும் கொள்ளியைக் கையிற்கொண்டனவாய் வீசி யெறிந்தவை,—இவ்வூருக்குநாசமுண்டென்பதை(த் துர்க்குறியாக முன்னம்) அறிவிக்க நள்ளிரவில் வானினின்று மீனினங்கள் விழுவதை யொத்தன;(எ-று.)—வானத்தினின்று மீனினம் மிகுதியாகவுதிர்தல், தீக்குறியென்பர். பி-ம்:—[1]காசறுதானைக்கார்க்கடல்...,காசறுவீரர்கடாவிடவீழ்வ. [2]நாளின். [3]விழல். ()

உ௩.—வானரங்கள்வீசிய கொள்ளியின்வருணனை.

[1]வஞ்சனை மன்னன் வாழு மிலங்கைக்
குஞ்சர [2]மன்னார் வீசிய கொள்ளி
அஞ்சன வண்ண னாழியி லேவுஞ்
செஞ்சர மென்னச் [3]சென்றது மென்மேல்.

(இ - ள்.) வஞ்சனையையுடைய அரக்கர்தலைவனான இராவணன் வாழ்கின்ற இலங்கையிலே யானையையொத்தவரான வானரர் வீசியகொள்ளியானது;—அஞ்சனம்போன்ற திருநிறத்தையுடையவனான ஸ்ரீராமன் கடலின்மீதுஏவிய செந்நிறமுள்ள ஆக்நேயாஸ்திரத்தைப்போல மேன்மேலுஞ் சென்றது; (எ - று.)—பி-ம்:—[1]வஞ்சனையாளன், வஞ்சனையன்னவர். [2]அன்னவர். [3]சென்றன. (உ௮௧௩)

உ௪.—இலங்கையில் நெருங்கிய தீயின் வருணனை.

கையக [1]விஞ்சிக் காவல் [2]கலங்கச்
செய்ய [3]கொழுந்தீச் சென்று நெருங்க
[4]ஐய னெடுங்கா ராழியை [5]யம்பால்
எய்ய [6]வெரிந்தா லொத்த திலங்கை.

(இ - ள்.) இடமகன்ற மதிளாகிய காவல் கலங்குமாறு செந்நிறமுள்ள கொழுவியதீச சென்றுநெருங்கியதனால்,இலங்கையானது,---ஸ்ரீராமன் நீண்டகரிய கடலை அம்பினாலெய்ய எரிந்ததை யொத்தது; (எ - று.)—ஸ்ரீராமன் ஆக்நேயாஸ்திரத்தைவிட்டபோது எரிந்தகடலையொத்தது,இலங்கை யென்க. பி-ம்:—[1]அஞ்சிச். [2]இலங்கைச். [3]கொளுந்திச். [4]ஐய. [5]அம்மால். [6]உலர்ந்தால்.

உ௫.—சோலையில்எரிபற்ற, பறவைக்குலங்கள் கூட்டினின்று விண்ணில். ஒலித்துக்கொண்டெழுதல்.

பரற்றுறு [1]பல்பழு வத்தெரி பற்ற
நிரற்றுறு பல்பற வைக்குல [2]நீளம்
உரற்றின விண்ணி னொலித்[3]தெழும் வண்ணம்
அரற்றி யெழுந்த தடங்க லிலங்கை.

(இ - ள்.) பரல்நெருங்கிய பலசோலைகளிலும் எரிபற்றியதனால் வரிசையாக நெருங்கிவாழ்கின்ற பலபறவைக்குலங்கள், (தம்முடைய) கூட்டினின்று ஆகாயத்தில் பிரதித்தொனி எழும்வகையாகக் கத்தின:(இவ்வாறு) இலங்கை முழுதும் (பட்சிக்குலங்களால்) அரற்றிக்கொண்டெழுப்பெற்றது;(எ-று.)— இனி,(இலங்கையின்மீது) எரிபரந்ததனால், அவ்விலங்கையிலுள்ளஅரக்கர்கள் பழுவத்தில் எரிபற்றப் பறவைக்குலம் தம்நீடத்தினின்று விண்ணில்வந்து ஒலிப்பதுபோல,வெளியேவந்து அரற்றியெழுந்தார்களென, இச்செய்யுளுக்கு உரைகூறலாம். இவ்வுரைக்கு, இலங்கை-இலங்கையிலுள்ளவரக்கர். நீளம் கூடு. பி-ம்:—[1]தொல். [2]நெஞ்சில். [3]எழு. (உ௮௧௮)

உ௬.—இராமசரத்தாற் கோபுரம்விழுதல்.

[1]மூவுல கத்தவ ரும்முத லோரும்
[2]மேவின விற்றொழில் வீர னிராமன்

[3]தீவ மெனச்சில வாளி செலுத்தக்
[4]கோபுர [5]முற்றும் [6]விழுந்தது குன்றின்.

(இ - ள்.) (அப்போது) மூவுலகத்தவரும் முதல்மூர்த்திகளும் விரும்பத் தக்க விற்றொழிலையுடைய வீரனாகிய ஸ்ரீராமன்,—தீபத்தைப்போன்ற சில அம்புகளைச் செலுத்த,கோபுரமுழுவதும் திரிகூடாசலத்தில்விழுந்தது;(எ-று.) —இரண்டாமடியில்,ஏவினஎன்றுபிரித்தலும்உண்டு.பி-ம்:—[1]மூவுலகத்தெவரும். [2]ஏவல்வலத்தொழில். [3]தீபம். [4]கோவுரம். [5]இற்று.[6]முறிந்தது.(உ௮௧௯)

உ எ.—மருந்துமலையை வைத்திட்டு அனுமான் திரும்பிவருதல்.

இத்தலை யின்ன நிகழ்ந்திடு [1]மெல்லைக்
கைத்தலை யிற்கொடு காலி னெழுந்தான்
[2]உய்த்த [3]பெருங்கிரி மேருவி [4]னுப்பால்
[5]வைத்த நெடுந்தகை மாருதி வந்தான்.

(இ - ள்.) இங்கு[இலங்கையிலே] இவ்வாறு நிகழுமிடத்து,கையிலே (மருத்துமலையைக்)கொண்டு காற்றுப்போல் விரைந்தெழுந்துசென்றவனாகிக் கொணர்ந்த பெரியமருத்துமலையை மேருவுக்குஅப்பால் வைத்த பெருந் தகுதியையுடைய அநுமான் (இலங்கைக்கு மீண்டு)வந்து சேர்ந்தான்;(எ-று.) —பி-ம்:—[1]வேலை. [2]அத்த. [3]நெடுங்கிரி. [4]அப்பால். [5]வைத்து. (உ௮உ0)

உ அ.—அநுமான் ஆரவாரித்ததைக் கேட்டு இலங்கையின் நடுக்கம்.

அறையர வக்கழன் மாருதி யார்த்தான்
உறை[1]யர வஞ்செவி யுற்றுள தவ்வூர்
சிறையர வக்கலு ழன்கொடு சீறும்
இறையர வக்குல மொத்த திலங்கை.

(இ-ள்.) ஒலிக்கின்ற ஒலியைக்கொண்ட வீரக்கழலையணிந்த அநுமான், ஆரவாரித்தான்; (அங்குத்)தோன்றிய அரவம், அந்தஇலங்கையிற் கேட்டது; (அதனால்), இலங்கை, கருடனுடையசிறையரவத்தினால் சீறுந்தன்மையுள்ள தலைமையையுடைய நாககுலங்கள்அடைந்தநிலையை யடைந்தது;(எ-று.)—'கலுழன்சிறையரவக்கொடு'என மாற்றுக. பி - ம்:—[1]அரவஞ்சிறையுற்றுளது, அரவஞ்செறிவித்துளது. (உ௮உ௧)

உ ௯.—அநுமான்சேர்ந்த மேற்றிசைவாயிலை இந்திரசித்து அடைதல்.

மேற்றிசை வாயிலை மேவிய வெங்கட்
காற்றின் மகன்றனை வந்து கலந்தான்
மாற்றலின் மாயை வகுக்கும் வலத்தான்
கூற்றையும் [1]வென்றுயர் வட்டணை கொண்டான்.

(இ - ள்.) மாற்றுதல்முடியாத மாயத்தை யியற்றும் வலிமையைப் பெற்றவனும் கூற்றுவனையும்வென்று பெருந்தாளமிட்டவனுமான இந்திர சித்து,—(இலங்கையின்) மேற்குத்திக்குவாயிலைப்பொருந்தியிருந்த கொடு மையையுடைய வாயுகுமாரனான அநுமானை வந்துகூடினான்; (எ - று.)— பி-ம்:—[1]வென்றொரு, வெங்குய. (உ௮உஉ)

௩௦.—மாயைச்சீதைவடிவமைத்து அவள்குழலைப்பற்றி யீர்த்து வாளைக்கையிற்கொண்டு பின்வருமாறு இந்திரசித்து கூறுதல்.

சானகி யாம்வகை கொண்டு [1]சமைத்தோர்
மானனை யாளை வடிக்குழல் பற்றா
ஊனகு வாளொரு கைக்கொ டுருத்தான்
ஆனவ னங்கிலை [2]யின்ன தறைந்தான்.

(இ - ள்.) சானகியென்றுதோன்றுமாறு (மாயையைக்)கொண்டு (ஒருருவத்தை) அமைத்து, ஒப்பற்றமான்போன்றவளான அந்தமாயாசீதையினது தேனைக்கொண்ட கூந்தலைப்பற்றி, ஊன்விளங்குகின்ற வாளை மற்றொருகையிற்கொண்டு கோபித்தவனாகி,—அந்தஇந்திரசித்து அப்போது இவ்வாறான வார்த்தையைக்கூறினான்; (எ - று.)—இந்திரசித்தின் கூற்றை மேற்கவியிற் காண்க. பி-ம்:—1சமைத்த. 2இன்னனசொற்கள். (உ௮உ௩)

௩௧.—இந்திரசித்து 'இவள் காரணமாகவேபோர்நிகழ்ந்ததனால் இவளைக் கொன்றுவிடுவேன்' என, அநுமான் அச்சமடைதல்.

வந்திவள் காரண மாக மலைந்தீர்
எந்தை யிகழ்ந்தன னியானிவ ளாவி
சிந்துவ னென்று செறுத்துரை செய்தான்
அந்தமின் மாருதி யஞ்சி யயர்ந்தான்.

(இ - ள்.) '(நீங்கள்) இந்தச்சீதையின்பொருட்டே வந்து போர்புரிந்தீர்கள்; என்தந்தை உபேட்சையாக இருந்திட்டான்: யான் இவளுடையஆவியை யழிப்பேன்'என்று கோபித்துச்சொன்னான், (இந்திரசித்து): நாசமில்லாதவனான [சிரஞ்சீவியான] அநுமான்,—(அதுகேட்டு) அஞ்சி மனந்தளர்ந்தான்.()

௩௨.—அநுமானின் துயரநிலை.

கண்டவ ளேயிவ ளென்பது கண்டான்
விண்டது [1]போலுநம் வாழ்வென [2]வெந்தான்
கொண்டிடைத் தீர்வதொ ரோளறி கில்லான்
உண்டு யிரோவென [3]வாயு முலர்ந்தான்.

(இ-ள்.) '(நான் தூதுசென்றபோது) பார்த்தவளான சீதையே இவள்' என்று கண்டவனாய்,—(அநுமான்), 'நம்வாழ்வு ஒழிந்ததுபோலும்' என்று (மனம்)வெதும்பினான்; இடையிலே மேற்கொண்டு அத்துயரினின்று நீங்குவதான ஒருபாயம் அறியாதவனாய், உயிர் உண்டோஇல்லையோஎன்னுமாறு வாயும் உலரப்பெற்றான்; (எ - று.)—பி-ம்:—1போயநம், போகநம். 2வேர்த்தான். 3நாவும். (உ௮உ௫)

௩௩.—இதுமுதல் நான்குகவிகள் - அநுமான் இந்திரசித்தைப்புகழ்ந்து 'சீதையைக்கோல்லவேண்டா'என்றதைத் தெரிவித்தும்.

யாது மினிச்செயல் [1]வேறிலை யென்னா
நீதி யுரைப்பது [2]நேரென வோராக்
கோதில் [3]குலத்தொரு நீகுண மிக்காய்
மாதை [4]யொறுத்தல் வசைத்திற [5]மென்றான்.

(இ - ள்.) 'இப்போது(இவளை மீட்குமாறு என்னால் செய்யத்தக்க)செய்கை(இதைக்காட்டிலும்)வேறு ஏதுவுமில்லை:(ஆகையால்,இவனுக்கு)நீதியுரைப்பதே நேர்மையான உபாயம்' என்று ஆராய்ந்து,—(அநுமான்),—'குணம்மிக்கவனே! குற்றமற்றகுலத்திலேபிறந்த ஒப்பற்றநீ மாதைக்கொல்வது பழிப்பின் கூறுபாட்டிற்சேரும்' என்றான்; (எ - று.)—பி - ம்:—1இல்லெனவென்னால், இல்லெனவெண்ணா. 2நீரென. 3குணத்தொரு. 4வதைத்தல். 5அன்றோ. (உ௮உ௬)

௩௪. நான்முக னுக்கொரு நால்வரின் வந்தாய்
நூன்முக முற்று நுணங்க வுணர்ந்தாய்
பான்முக முற்ற பெரும்பழி யன்றோ
1மான்முக மற்றொரு மாதை 2வதைத்தால்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.)(நீ),—பிரமதேவனுக்கு ஒருநாலாந்தலைமுறைபிற்சேர்ந்தவனாக வந்துள்ளாய்; சாஸ்திரங்களின் முக்கியாமிசம்முழுவதையும் சூட்சுமமாக அறிந்துள்ளாய்: முகதாட்சிணியமில்லாமல் ஒருமாதை வதைத்தால், (செய்யத்தகாதவையென்றுவிலக்கப்பட்ட) பகுதிகளில் முதன்மைபெற்ற பெரும் பழிவிளைக்குஞ்செயலன்றோ; (எ - று.)—இரண்டாமடிக்கு - நூல்களைமுகக்குமாறு முற்றுமுணர்ந்தோயெனினுமாம்: நூல்முகம் - நூலினிடமுமாம். முகமால்-முகதாட்சிணியம். இனி, மால்-புத்திமாறுபாட்டமுமாம். பால்-பகுதி. முகம்-முதன்மை. 1மான்முகமற்றொரு என்றபாடத்திற்கு - முகத்தில் மானை [மான்போன்றபார்வையை]ப் பொருந்திய ஒரு மாதைஎன்க. பி-ம்:—2வதைத்தல்.

௩௫. மண்குலை கின்றது 1வான நடுங்கிக்
கண்குலை கின்றது காணுதி கண்ணால்
எண்குலை கின்ற 2திரங்க றுறந்தாய்
பெண்கொலை 3செய்தல் பெரும்பழி யன்றோ

(இ - ள்.) (நீ செய்யக்கருதுகின்ற இதனைக்கண்டு) பூமியும், நடுங்குகின்றது;வானமும்நடுங்கிக் கண்ணடுக்கமடைந்துள்ளது!(நீ இவற்றைக்)கண்ணாற்காண்பாய்; (என்) எண்ணமும் நடுங்குகின்றது; இரங்குவதென்பதைக்கைவிட்டவனே! பெண்கொலைசெய்வது பெரும்பழியாகுமல்லவோ? (எ - று.)—கண்படைத்ததற்குப் பயன் இரங்கத்தக்கதைக் கண்டவிடத்து இரக்கங்கொள்வதேயாதலால், நீ கண்படைத்தபயனைக்கொள்வாயென்பான் 'கண்ணாற்காணுதி' என்றான். பி-ம்:—1வானும். 2நெஞ்சிலிரங்கப். 3செய்கை. (உ௮உ௮)

௩௬. என்1வயி னல்கினை 2யேகுதி யென்றால்
3நின்வய மாமுல கியாவையு நீநின்
4அன்வய மேது மறிந்திலை யையா
புன்மை தொடங்கல் புகழ்க்5கழி வென்றான்.

(இ - ள்.) என்னிடத்திலிரக்கங்கொண்டு [என்பேச்சைக்கேட்டு இரக்கத்தைமேற்கொண்டு], (இச்செயலைவிட்டுச்) சென்றாயென்றால், (உன் குணத்தைக்கண்டு) உலகமெல்லாம் உன்வயத்ததாம்; நீ நின்மரபைச் சிறிதும் ஆராய்ந்துணர்ந்தாயில்லை: ஐயா! புல்லியதொழிலைத்தொடங்குவது

புகழுக்குஅழிவாகும்என்று கூறிமுடித்தான், (அநுமான்); (எ-று.)---பி-ம்:—
1வயம். 2ஏகினை. 3உன். 4அன்மயமொன்றும். 5அழிவன்றோ. (உ௮உ௬)

௩௭.—இந்திரசித்தின் பதில்.

என்றனன் மாருதி யிந்திர சித்தும்
ஒன்றுரை கேளென தெந்தையு மூரும்
பொன்றுத றீரு மிதிற்புக ழுண்டே
நன்றுரை யென்றுபி னக்குரை செய்தான்.

(இ-ள்.) என்று மாருதி கூறினான்: (பின்பு) இந்திரசித்தும்,—(அவனை நோக்கி), 'எனது ஒருவார்த்தையைக்கேள்: என்தந்தையும் இவ்விலங்காபுரியும் அழிவதினின்று நீங்குவதற்குக்காரணமான இச்செயலைக் காட்டிலும் [சீதையை வதைப்பதைக்காட்டிலும்]புகழ்தரக்கூடியசெயல்(வேறு)உண்டோ? நன்கு[ஆராய்ந்து]சொல்வாய்'என்று சொல்லிச்சிரித்துப் பின்னுஞ்சொல்லலானான்; (எ - று.)—கீழ்ச்செய்யுளினீற்றில் 'புகழ்க்கழிவு'என்று அநுமான் கூறியதனால், தந்தையையும் ஊரையுங்காத்தலாற் புகழேவிளையு மென்று இந்திரசித்து மறுமாற்றங் கூறினான். இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை: வெள்ளிப்பாட்டாயிருக்கலாம். (உ௮௩௦)

௩௮.—நான்குகவிகள் - சீதையைவெட்டுவதேபுகழென்றும் அயோத்தியிற் சென்று தம்பியர்முதலியோரையும் அழிப்பேன்என்றுஞ்சொல்லி, இந்திரசித்து மாயாசீதையை வெட்டுதலைத்தெரிவித்தல்.

எந்தை [1]யுமிந்த விலங்கையு ளோரும்
[2]உய்ந்திட வானவ ரியாவரு மோடச்
சிந்துவன் வாளினி லென்று [3]செறுத்தான்
இந்திர சித்[4]தவ னின்ன விசைத்தான்.

(இ - ள்.) 'என்தந்தையும் இந்தஇலங்கையிலுள்ளவரும் உய்ந்திடவும் வானவர்யாவரும் ஓடவும் வாளினால் வெட்டுவேன்'என்றுசொல்லிக் கோபித்தவனாய், இந்திரசித்து (பின்னும்) இவைகளைக் கூறலானான்; (எ - று.)— பி - ம்:—1உவந்தவிலங்கிழைமானை. 2உந்துவன். 3செயிர்த்தான். 4இயலின்னனசொன்னான்."எந்தையிகழ்ந்த விலங்கிழைதன்னைத்,தந்தனனென்று தரும்புகழுண்டோ"என்று முன்னிரண்டடிகள் சிலபிரதிகளி லுள்ளன. (உ௮௩௧)

௩௯. போமி [1]னடாவினை போயது போலாம்
ஆமெனி [2]லின்னு மயோத்தியை [3]யண்மிக்
காமி[4]ன தின்று கனற்கரி யாக
[5]வேமது [6]செய்தினி [7]மீள்குவெ னென்றான்.

(இ - ள்.) 'அடா! (குரங்குகாள்!) போங்கள்: (நீங்கள் வந்த) காரியம் [சீதையை மீட்டலென்பது], போய்விட்டது: இன்னும் (உங்களாற்) கூடுமானால், அயோத்தியைச்சேர்ந்து காத்துக்கொள்ளுங்கோள்: அந்நகரம் இன்று அனலெரித்த கரியாகும்படி வெந்திடுந்தொழிலைச்செய்து இப்போது மீள்குவேன்' என்றான்; (எ - று.)—போல் - ஒப்பில்போலி. ஆம்-அசை. பி-ம்:—

1எடாவிவள்போயினள்.2இன்னம்.3நண்ணிக். 4அதின்றுகளங், எடாக்கனலாய்க். 5வேமிது,வேமின். 6எடாவினி, மெய்யினி. 7மீள்கிலதன்றே. (உஅகூஉ)

சா௦. தம்பியர் தம்மொடு 1தாயரு மாயோர்
உம்பர் விலக்கிடி னும்2மினி யுய்யார்
வெம்பு கடுங்கனல் வீசிடு மென்கை
அம்புக 3ளோடு 4மவிந்தன ரம்மா.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) சினந்ததுபோல்தோன்றுகின்ற கொடியகனலைக் கக்குகின்ற என்கைஅம்புகளினால் (இராமனது) தம்பியருடனே தாய்மாருமாயுள்ளவர் அவிந்தனராவர்: தேவர்கள் வந்துவிலக்கினாலும் இனி அவர்கள் உயிருடனிருக்கமாட்டார்கள்; (எ-று.)—அம்மா-வியப்பிடைச்சொல்: தன்திறமையை வியந்தவாறு. பி-ம்:—1தாயொடும். 2இவர். 3ஒன்றும். 4அழிந்திலரம்மா. ()

சாக. இப்பொழு தேகடி 1தேருவ னியானிப்
புட்பக மான 2மதிற்புக நின்றேன்
தப்புவ ரேயவர் 3சங்கை யிலாவென்
வெப்புறு 4வாளிக ளின்று 5விரைந்தால்.

(இ - ள்.) யான் இந்தப்புஷ்பகவிமானத்திற்புக்குநின்றவனாய் இப்பொழுதே விரைந்துசெல்வேன்: (அங்ஙனம்சென்று அயோத்திசேர்ந்த) என்னுடைய வெப்பம்பொருந்தியனவான எண்ணிக்கையற்ற [மிகப்பலவான] அம்புகள் (இராமனது தம்பியர்முதலியோர்மீது) விரைந்துபாய்ந்தால் அவர் உயிர்தப்புவார்களோ?(எ-று.)—என்று இந்திரசித்து கூறினான்எனவருவித்துமுடிக்க. சங்கை=லங்க்யா: வடசொல். பி-ம்:—1எய்துவன். 2மிசைப்பொலிகின்றேன், அதிற்கொடுநின்றேன். 3தாமினியென்கை. 4வாளிகளோடு, வாளிகளோடி. 5விளைத்தால். (உஅகூச)

சாஉ.—இந்திரசித்து சீதை யிரக்கவும் வெட்டுதல்.

ஆளுடை யாயரு ளாயரு ளாயென்று
1ஏழை வழங்குறு சொல்லி னிரங்கான்
வாளி னெறிந்தனன் மாகடல் போலும்
நீளுறு சேனையி னோடு நிமிர்ந்தான்.

(இ - ள்.) '(என்னை) அடிமையாகவுடையவனே! அருளாய், அருளாய்' என்று (அச்சங்கொண்டு) பேதைமைக்குணத்தையுடையளான (மாயா)சீதை சொல்லுகின்ற சொல்லில் இரக்கங்கொள்ளாதவனாகிய இந்திரசித்து, (அந்த மாயாசீதையை)வாளினால் வெட்டினவனாய், பெரியகடல்போலும் நீட்சிபொருந்தியசேனையுடனே புறப்பட்டான்; (எ - று.)—பி-ம்:—1ஏழையவன்புறுசொல்லியிரங்க, ஏழைவணங்குறு.... (உஅகூரு)

சா௩.—வடக்குநோக்கிப் புட்பகத்தின்மீது இந்திரசித்து செல்ல, மாருதி கண்டு மூர்ச்சித்தல்.

தென்றிசை நின்று 1வடாது திசைக்கட்
2பொன்றிகழ் புட்பக மேல்கொடு போனான்

ஒன்று முணர்ந்திலன் மாருதி [3]யுக்கான்
வென்றி நெடுங்கிரி போல விழுந்தான்.

(இ - ள்.) தெற்குத்திக்கிலிருந்து வடக்குத்திக்குக்காகப் பொன்னணி விளங்குகின்ற புட்பகத்தின்மேலேறிக்கொண்டுபோனான், (இந்திரசித்து): மாருதி சிறிதும்உணர்ச்சியில்லாதவனாய் [மூர்ச்சித்து] உயிரொடுங்கி, வெற்றி பொருந்திய நெடிய கிரிபோல விழுந்தான்; (எ - று.)—பி-ம்:---[1]வடாதிசையின்கட். [2]பொன்றிணி. [3]உட்கா. (௨௮௩௬)

௪௪.—இந்திரசித்து நிகும்பலைசேர, அநுமான் துயர்மிக்கு நெஞ்சமொடுங்கிப் புலம்பத் தொடங்குதல்.

போயவன் மாறி நிகும்பலை புக்கான்
தூயவ [1]னெஞ்சு துயர்ந்து சுருண்டான்
[2]ஓய்வொடு [3]நெஞ்ச மொடுங்க வுலர்ந்தான்
ஏயன பன்னின னின்னன சொன்னான்.

(இ - ள்.) (அயோத்திமேற்செல்வதுபோற்காட்டிய) அந்தஇந்திரசித்து மாறிப்போய் நிகும்பலையிற் புகுந்தான்: பரிசுத்தகுணமுடையவனாகிய அநுமான் நெஞ்சு துயர்கொண்டு சுருண்டவனாய், சோர்வுடனே மனமொடுங்க (நாக்கு)வறண்டுநின்று மனத்துக்குத்தோன்றினவற்றைச் சொல்லத்தொடங்கினவனாய், இவ்வாறானவார்த்தைகளைச் சொல்லலானான்; (எ - று.)—அயோத்திநோக்கி வடதிசையிற் செல்வதுபோலக்காட்டிய இந்திரசித்து அநுமான் மூர்ச்சித்துவீழ்ந்தசமயத்தில் அங்குச்செல்வதினின்று மாறி, நிகும்பலையிற் சென்றானாக,மூர்ச்சித்த அநுமான் சிறிது அறிவுதோன்றப் பின்வருமாறு புலம்பலானா னென்க. பி-ம்:—[1]ஆவிதொலைந்து. [2]ஓய்வொரு,ஓய்வரு. [3]சாரியொருங்கவுணர்ந்தான். (௨௮௩௭)

வேறு.

௪௫.—அநுமான் புலம்புதல்.

அன்னமே யென்னும் பெண்ணி னருங்[1]குலக் கலமே யென்னும்
என்னமே யென்னுந் தெய்வ மில்லையோ யாது மென்னும்
சின்னமே செய்யக் கண்டுந் தீவினை நெஞ்ச [2]மாவி
பின்னமே யாய தில்லை யென்னும்பே ராற்றல் பேர்ந்தான்.

(இ-ள்.)(அநுமான்),—(தனது)பெரியவல்லமை குறையப்பெற்றவனாய், 'அன்னமே!' என்பான்: 'பெண்களின்அருங்குலத்திற்குக் கலம்போன்றவளே!' என்பான்; 'என்அம்மே! என்பான்: 'தெய்வமென்பது சிறிதும் இல்லையோ!' என்பான். '(வாளினால்) வெட்டுதலைச் செய்யக் கண்டும் (பாவியானஎனது)தீவினையையுடைய நெஞ்சமும் ஆவியும் பின்னமாகஆனதில்லையே!'என்றுவருந்துவான்;(எ-று.)—பி-ம்:---[1]கலக்குலமே,கலக்கலமே. [2]பாவி.

௪௬.—அநுமானுடைய பெருந்துயரச்செயல்.

எழுந்தவன் மேலே பாய வெண்ணும்பே [1]ரிடரிற் றள்ளி
விழுந்து[2]வெந் துயிர்த்து விம்மி வீங்கும்போய் மெலியும் வெந்தீக்

[3]கொழுந்துக வுயிர்க்குமியாக்கை குலைவுறுந்[4]தலையே கொண்டுற்று
உழுந்தரை தன்னைப் [5]பின்னு மினையன வுரைப்ப தானான்.

(இ - ள்.) எழுந்து அந்தஇந்திரசித்தின்மேலே பாய எண்ணுவான்: மிக்க துயரத்தினால் தள்ளப்பெற்று விழுந்து வெப்பமுறப் பெருமூச்சுவிட்டு விம்மி (எக்கம்)மிகுவான்; மிகவும்மெலிவுறுவான்: கொடிய நெருப்புச்சுவாலை வெளிப்படப் பெருமூச்சுவிடுவான்: உடம்பு நடுங்குவான்: (தன்)தலையைக் கொண்டு தரையிலுழுவதுபோலமுட்டிக்கொள்வான்: பிறகு இவ்வாறான வார்த்தைகளைச் சொல்லலானான்; (எ - று.)—அநுமான்வார்த்தைகளை மேல் ஏழுகவிகளிற் காண்க. பி-ம்:—[1]இடரைத். [2]வெய்துயிர்ப்பமேனி. [3]கொழுந்து கள். [4]தலைமேற். [5]பின்னை. (உ-அருக)

ருஎ.—இதுமுதல் ஏழுகவிகள் - அனுமான் இரங்கிக்கூறுதலைத் தெரிவிக்கும்.

முடிந்தது நந்த [1]மெண்ண [2]மூவுல கிற்கும் கங்குல்
விடிந்ததென் றிருந்தேன் மீள வெந்துய ரிருளின் வெள்ளம்
படிந்தது [3]வினையின் செய்கை பரந்தது பாவி வாளால்
[4]தடிந்தனன் றிருவை [5]யந்தோ தவிர்ந்தது தரும மம்மா.

எட்டுக்கவிகள் - குளகம்.

(இ - ள்.) 'நம்முடையஎண்ணம் முடிந்தது: மூவுலகிற்கும் இரவு விடிந் திட்டது' என்று எண்ணியிருந்தேன்: மீளவும் கொடுந்துயரமாகிய இருட் பெருக்குப் படிந்தது; தீவினைச்செய்கை பரந்திட்டது: பாவி [இந்திரசித்து], வாளினால் திருவை [சீதாபிராட்டியை] அந்தோ! வெட்டிவிட்டான்: தருமம் நீங்கிவிட்டது; (எ - று.)—அம்மா-இரக்கக்குறிப்பு.

மூவுலகிற்குங்கங்குல்விடிந்தது-அரக்கர்கொடுமையால் இருண்டுதோன் றிய உலகம்மூன்றும் இனி அத்துயர்நீங்கி வெட்டவெளிச்சமாயிற்றென்ற படி. பி-ம்:—[1]எண்ணும். [2]மூவுலகிற்குமூடி, மூவுலகிற்குமூடம். [3]வினையச் செய்கைபயந்தது. [4]தடிந்தது. [5]அன்றோ, என்றே. (உஅசo)

ருஅ. பெருஞ்சிறைக் கற்பி னாளைப் பெண்ணினைக் கண்ணிற் கொல்ல
[1]இருஞ்[2]சிற கற்ற புட்போ லியாதுமொன் றியற்ற லாற்றேன்
[3]இருஞ்சிறை [4]யழுந்து கின்றே னெம்பிரான் றேவி பட்ட
அருஞ்சிறை மீட்ட வண்ண மழகிது [5]பெரிது மம்மா.

(இ-ள்.) பெரியசிறையிலேவைக்கப்பட்டுள்ள கற்பைக்கொண்ட பெண் ணாகிய சீதாபிராட்டியை(என்) கண்ணெதிரிலே கொல்ல, பெரியசிறகுஅற்ற பறவைபோல யாதொருசெயலும் செய்யமுடியாதவனாய்ப் பெரியசிறையில் அழுந்துகின்றேன்: எமது தலைவனாகிய ஸ்ரீராமபிரானுடையமனைவியார் அடைந் துள்ள அரியசிறையினின்று நான்(அவரை)மீட்டவண்ணம் மிகவும்அழகிது! (எ - று.)—அம்மா - இரக்கக்குறிப்பு. துயரமானது ஒன்றுஞ்செய்யவொட் டாது கட்டுப்படுத்துவதனால் அத்துயரில்அழுந்துகின்ற தன்னை 'இருஞ்சிறை யழுந்துகின்றேன்' என்கிறான். பி-ம்:—[1]அருஞ். [2]சிறையிற்ற, சிறையற்ற. [3]பருஞ். [4]அழுங்குகின்றேன். [5]பெரிதின்றம்மா. (உஅசக)

சுகூ. பாதக வரக்கன் றெய்வப் பத்தினி தவத்து ளாளைப்
பேதையைக் குலத்தின் வந்த [1]பிழைப்பிலா தாளைப் பெண்ணைச்
சீதையைத் திருவை[2]த் தீண்டிச் சிறைவைத்த தீயோன் சேயே
காதவுங் கண்டு நின்ற கருமமே [3]கருணைத் தம்மா.

(இ-ள்.) தெய்வப்பத்தினியும் தவத்திலிருப்பவளும் பேதைமைக்குணத்தைக்கொண்டவளும்(ஜநக)குலத்திற்பிறந்தகுற்றமற்றவளுமான பெண்ணாகிய இலக்குமியின்திருவவதாரமானசீதையைத்தீண்டிச்சிறைவைத்ததீயோனுன பாவியரக்கன்இராவணனது புத்திரனை இந்திரசித்தே(வாள்கொண்டு)வெட்டவும் கண்டுநின்ற செயலே கருணையுடன்கூடியது; (எ - று.)

எல்லாவகையினுலும் மிகச்சிறந்த பெருந்தமியைப் பாவியின்மகன் என் கண்ணெதிரிலே வாளினுல் வெட்டப் பார்த்திருந்தேனே! என்னுடைய கருணையற்றதன்மையை பென்னென்பது!! என்று தனக்குநேர்ந்தநிலையை வெறுத்துப் பழித்துக்கூறுகின்முன் அநுமானென்க. 'கருணைத்து' - பிற குறிப்பு. பி-ம்:—[1]அறம்பிழைத்திலாளைப். [2]நீண்டசில்லரித்தடங்கண்ணுளை, தீண்டிசசிறைவைத்தவரக்கன்முனே. [3]பெருமைத்தம்மா, கருணைத்தாமால்.()

ருO. கல்விக்கு நிமிர்ந்த கீர்த்திக் காகுத்தன் றூத ளுகிச்
சொல்விக்க வந்து [1]போனே [2]ஞெய்வுறு துயர்செய்தாரை
வெல்விக்க [3]வந்தே னுன்னை மீட்பிக்க வன்று வெய்திற் [ன்.
கொல்விக்க வந்தே[4]னென்றே கொடும்பழி [5]கூட்டிக் கொண்டே

(இ-ள்.) கல்வியிலே மிக்கபுகழ்பெற்ற ஸ்ரீராமதூதனுகி(அவர்)சொன்ன சொல்லைத் தெரிவிக்க வந்துபோன நான், (இப்போது) நோயைச்செய்கின்ற துயரத்தைச் செய்த அரக்கரை வெல்விக்கவந்தவனுய் 'உன்னைக் கொடுமையாகக் கொல்விக்கவந்தேன்: மீட்பிக்கவரவில்லை'என்ற ஒருகொடியபழியைக் கட்டிக்கொண்டேன்; (எ - று.)

சீதே! நான் செய்தசெயல் உன்னை எதிரிகள்கொல்வதற்கு உதவியாயிற்றேயன்றி,உன்னைமீட்பிக்கஉதவவில்லையே! என்று இரங்கியவாறு. பி-ம்:-[1]போந்தேன். [2]ஆதலிற்றுயர்கள்செய்தேன், ஆயவித்துயர்செய்தாரை, ஓய்விலித்துயர்செய்தாரை. [3]அன்றுநுன்னை, வந்துநின்னை. [4]என்று, என்றோர், அன்றே. நன்றேஎன்றும்பிரிக்கலாம். [5]தேடிக். (உஅகூஈ)

ருக. வஞ்சியை யெங்குங் [1]காணு துயிரினை மறந்தா னென்னச்
செஞ்சிலை யுரவோன் [2]தேடித் திரிகின்று னுள்ளந் தேற [லத்
அஞ்சொலா ளிருந்தாள் கண்டே [3]னென்றயா னரக்கன் கொல்
துஞ்சினு[4]ளென் றுஞ் சொல்லத் தோன்றினேன்[5]ருற்ற மீதால்.

(இ - ள்.) வஞ்சிக்கொடிபோன்ற சீதாபிராட்டியை எங்குங்காணுமல் தன்னுயிரினை மறந்தவன்போன்று செவ்வியவில்வில்வல்லவீரனும் தேடித் திரிகின்றவனுமான ஸ்ரீராமனுடைய மனம் (துயரம்நீங்கித்) தெளிவு பெறுமாறு 'அழகியசொல்லையுடைய சீதை இருந்தாள்: கண்டேன்'என்று கூறின யான், அரக்கன் [இந்திரசித்து]கொல்ல இறந்திட்டாளென்று சொல்லவும் தோன்றினவ னுனேன்: என்பிறப்பு இவ்வாருயிற்றே! (எ-று.)

'எந்தவாயினல் சீதை இலங்கையில் அசோகவனிகையில் இனிதிருக்கின்ருளென்று கூறி ஸ்ரீராமனைத் தேறச்செய்தேனே, அந்தவாயைக்கொண்டே அவள் அரக்கன்வாளால் வெட்டுண்டு இறந்திட்ட செய்தியைச் சொல்லித் துயரத்தில் அப்பிரானை மூழ்குவிக்கவும் வேண்டியவனுனேனே! என்னுடைய இந்தப்பிறவி எற்றுக்கு?' என்றுவருந்திக்கூறுகின்றனன் அநுமா னென்க. ஒன்றற்குக் கருவியானது அதற்குமாறுனமற்ருென்றற்குங் கருவியாயினதாகக் கூறும் மற்றதற்காக்கலணி இங்குக் காணத்தக்கது: இதனை, வடநூலார் வ்யாகாதாலங்காரமென்பர். பி-ம்:—[1]காணுத்துயரிடை. [2]ஒடித். [3]என்றனன். [4]என்று. [5]தோற்றந்தீர்ந்தேன். (உ௮௪௪)

ருஉ. அருங்கடல் கடந்திவ் வூரை[1]யள்ளெரி மடுத்து வெள்ளக்
கருங்[2]கடல் கட்டி மேருக் கடந்தொரு மருந்து காட்டிக்
குரங்கினி [3]யுன்னே டொப்பா ரில்லெனக் களிப்புக் கொண்டேன்
பெருங்கடற் [4]கோட்டந் [5]தேய்வையொத்ததென்னடிமைப்பெற்றி.

(இ - ள்.) (கடத்தற்கு)அரிய கடலைக் கடந்து இந்தவூரை அள்ளிக்கொள்கின்ற எரியால் உண்பித்து வெள்ளமாயுள்ள கரியகடலைச் சேதுகட்டி மேருவையுங்கடந்துசென்று ஒப்பற்ற மருத்துமலையை (க்கொண்டு)வந்து காட்டி (இறந்தோரையெல்லாம் உயிர்ப்பித்து) 'இனி உன்னேடொப்பதாகிய குரங்குஇல்லை'என்று சொல்லுமாறு (அடிமைத்தொழில்செய்து) பெருமகிழ்ச்சியடைந்தேன்: என்னுடைய அடிமையின் தன்மை, பெரியகடலிலே தேய்த்துக்கரைத்த கோட்டத்தின்தேய்வைபோலப் பயனற்றதாயிற்றே; (எ - று.)

கடல்நீருக்குநறுமணமுண்டாகுமாறு கோட்டத்தைத்தேய்த்துக்கரைத்தால் அத்தேய்வை எங்ஙனம் பயனற்ற தாகுமோ அவ்வாறே என்செயலெல்லாம் பயனற்ற தாயிற்றே யென்று இரங்குகின்ருன் அநுமா னென்க. பி-ம்:—[1]அனலெரியூட்டி, அள்ளெரியூட்டி. [2]கடற்றட்டு. [3]என்னேடு. [4]கோட்டத். [5]தேய்த்ததாயது, தேய்வையாயது. (உ௮௪௫)

ருங. விண்டுநின் ருக்கை [1]சிந்தப் புல்லுயிர் விட்டி லாதேன்
கொண்டுநின் ருனைக் கொல்லக் கூசினே னெதிரே கொல்லக்
கண்டு[2]நின் றேன்மற் றின்னுங் கைகளாற் கனிகள் வெவ்வேறு
உண்டுநின் றுய்ய வல்லே னெளியனே வொருவ னுள்ளேன்.

(இ - ள்) அற்பமானஉயிர் விண்டுநின்று ஆக்கையினின்று சிந்துமாறு (அவ்வுயிரை) விட்டிலாத நான், (உன்னைக்கொல்லுதற்குப்பற்றிக்) கொண்டு நின்றவனை இந்திரசித்தைக் கொல்லப் பின்வாங்கினேன்: (என்கண்ணின்) எதிரில்தானே (அவன் உன்னைக்) கொல்லவும் பார்த்துநின்றேனே! (என் தன்மை வெகு நன்ருயிருந்தது!) இன்னுங் கைகளினுற்பறித்து வெவ்வேறு கனிகளைப் புசித்துநின்று உயிர்பிழைத்திருக்கவல்லேன்: (நான்) சாமானிய னே? தனிப்பட்டவனுக உள்ளவனன்றே? (எ - று.)

என்னைப்போல் இப்படி இழிவுபட உயிர்பிழைத்திருப்பவர் எவரும் இராரென்று தன்னைப் பழித்துக்கூறியவாறு. பி-ம்:—[1]சிந்திப். [2]நின்றேனே

நன்றென்கையினிற்கலத்தின்வெண்சோறு,நின்றேனேயென்பென்கைகளாற் கலத்தின் வெண்சோறு. நின்றேனேநன்றென்கையினிற்.... (உ௪௬௬)

ருச.—இரங்கிய அநுமான் தான் இனிச்செய்யவேண்டுவதுபற்றிக் கருதுதல்.

என்னநின் றிரங்கிக் கள்வ னயோத்திமே லெழுவெ னென்று
[1]சொன்னது முண்டு போன சுவடுண்டு தொடர்ந்து செல்லின்
மன்னனிங் குற்ற தன்மை [2]யுணர்கிலன் [3]வருவ தோரேன்
[4]பின்னினி முடிப்ப தியாதென் றிரங்கினு னுணர்வு [5]பெற்றான்.

(இ-ள்.) என்றுசொல்லி இரங்கி, (அநுமான்), 'வஞ்சகக்குணமுடைய ஞனஇந்திரசித்து அயோத்திமேற்செல்வேனென்று சொன்னதுஉண்டு: போன அடையாளமும்உண்டு: (நான் அவனைத்)தொடர்ந்துசென்றால்,(நமது) மன்னவனுகியஸ்ரீராமன் இங்குநிகழ்ந்ததை உணராதவனுவான்: (அதனால்) விளைவது(இன்னதென்று) அறியேன்: பின்பு இனிச் செய்துமுடிக்கவேண்டு வது யாது?' என்று இரங்கினவனுய், (அதுகுறித்து ஒருவாறு) உணர்ச்சியை யடைந்தான்; (எ - று.)

செய்வது இன்னதுஎன்பதையுணராது கலங்கிய அநுமான் பின்பு ஒரு முடிவுக்கு வந்தானென்க. அநுமான் முடிவுக்குவந்தது இன்னதுஎன்பது மேற்கவியிற் பெறப்படும். பி-ம்:—1சொன்னசொலுண்டு. 2உணர்ந்திலன். 3வருவதோரான். 4பின்னிது. 5பேர்ந்தான். (உ௪௬௭)

ருரு.—அநுமான் ஒருதுணிவுகொண்டு ஸ்ரீராமனை யடைதல்.

உற்றதை யுணர்த்திப் பின்னை யுலகுடை யொருவ னேடும்
இற்றறி [1]னிற்று மாள்வ னன்றெனி [2]னெண்ண மெண்ணிச்
சொற்றது செய்வன் வேறோர்[3]பிறிதிலென் [4]துணிவி தென்னுப்
பொற்றடந் தோளான் வீரன் பொன்னடி மருங்கிற் போனுன்.

(இ - ள்.) 'நிகழ்ந்ததை (ஸ்ரீராமனுக்குத்)தெரிவித்துவிட்டு, பின்பு (அப் பிரான்) உயிரை ஒழிந்திடின், உலகுடையஒருவனை அவனேடும் உயிரிற்று மாண்டொழிவேன்; (அவன்) அப்படிச்செய்யாவிட்டால், (அப்பிரானுடைய) எண்ணத்தைக்கருதி (அவன்) சொன்னதைச் செய்வேன்: வேறே பிறிது செய்யவேண்டுவதுஇல்லை: (என்)துணிவு இதுவே' என்று சொல்லி, அழகிய பெரியதோளையுடைய அநுமான் ஸ்ரீராமனுடைய அழகியதிருவடிவாரத்தைச் சார்ந்தான்; (எ - று.)—பி-ம்:—1இன்று. 2என்னையேவின். 3பிறிதில்லை.4துணிவது, துணிவிற்று. (உ௪௬௮)

ருசு.—ஸ்ரீராமனைச்சார்ந்த அனுமான் துயர்மிகுதியாற் கீழ்விழுதல்.

சிங்கவே றனைய வீரன் செறிகழற் பாதஞ் சேர்ந்தான்
[1]அங்கமு மனமுங் கண்ணு மாவியு மலக்க னுற்றான்
பொங்கிய பொருமல் வீங்கி [2]யுயிர்ப்பொடு புரத்தைப் போர்ப்ப
வெங்கணீ ரருவி [3]சோர மால்வரை யென்ன வீழ்ந்தான்.

(இ-ள்.) ஆண்சிங்கத்தையொத்த வீரனுடைய [ஸ்ரீராமனுடைய]நெருங் கிய வீரக்கழலையணிந்தபாதத்தைச் சேர்ந்தவனுன அநுமான்,—உடம்பும் மன

மும் கண்ணும் ஆவியும் வருத்தமடைந்தான்: பொங்கியெழுந்த துயரம் மிகுந்து பெருமூச்சுடனே உடம்பெங்கும் கவிந்துகொள்ள, கண்களிலிருந்து வெவ்விய நீரருவிபெருகப் பெரியமலைபோல விழுந்தான்; (எ-று.)—பி-ம்:— 1அங்கவன். 2உயிர்ப்பொடும்புறத்தை. 3சிந்த. (உஅசகூ)

ருஎ.—ஸ்ரீராமனுக்குப் பெருந்துயருடனே அனுமான் செய்திதெரிவித்தல்.

வீழ்ந்தவன் றன்னை வீரன் விளைந்தது விளம்பு கென்றுத்
1தாழ்ந்திரு தடக்கை பற்றி யெடுக்கவுந் தரிக்கி லாதான்
2ஆழ்ந்தெழு துன்பத் தாளை 3யரக்கனின் றயில்கொள் வாளாற்
போழ்ந்தன4னென்னக் கூறிப் புரண்டனன் பொருமு கின்றான்.

(இ-ள்.) (கீழ்)வீழ்ந்த அநுமானை ஸ்ரீராமன் 'விளைந்ததைச் சொல்லுக' என்று சொல்லி, குனிந்து இரண்டுபெரியகைகளைப் பற்றி யெடுக்கவும், (அவ்வநுமன் துன்பத்தைத்)தாங்கமாட்டாதவனாகி, 'ஆழ்ந்தெழுகின்றதுன்பத்தையுடையவளான சீதையை இந்திரசித்துஇன்று கூரியவாட்படையாற்பிளந்திட்டான்'என்று கூறிப்புரண்டவனாய்ப் புலம்பலானான்; (எ-று.)—பி-ம்:— 1தாழ்ந்தனன். 2ஆழ்ந்தழி, ஆழ்ந்தழு. 3அரக்கன்றன். 4கூறுயென்னப். (உஅருo)

ருஅ.—ஸ்ரீராமனுடைய துயரம்.

துடித்தில னுயிர்ப்பு 1மில்ல னிமைக்கிலன் றுள்ளிக் கண்ணீர்
பொடித்தில னியாது மொன்றும் புகன்றிலன் பொருமி2யுள்ளம்
வெடித்திலன் விம்மிப் பாரின் வீழ்ந்திலன் 3வியர்த்தா னல்லன்
4அடுத்துள துன்ப மியாவு மறிந்தில ரமர ரேயும்.

(இ-ள்.) (அதுகேட்ட ஸ்ரீராமன்),—உடம்புஅசைத்தானுமில்லை;மூச்சையுடையவனாகவுமில்லை: கண்ணிமைத்தானுமில்லை;(துயரத்தால்)துள்ளிக் கண்ணீரைப் பெருக்கவுமில்லை; எதுஒருசொல்லும் சொல்லவுமில்லை:மனம் துயர் மிகுந்து வெடிக்கப்பெற்றானுமில்லை: புலம்பிப் பாரில் வீழ்ந்தானுமில்லை; (உடம்பு)வெயர்த்தானுமில்லை; நேர்ந்துள்ள துன்பத்தையெல்லாம் அமரரும் அறிந்தாரில்லை; (எ - று.)

ஸ்ரீராமன் அச்செய்தியைக்கேட்டதும் உலகத்தவர் சாதாரணமாகத் துன்பத்தைக்காட்டுவதுபோலக் கண்ணீர்துளித்தல்முதலியனசெய்யாமல் பேச்சுமூச்சற்றுத் திகைத்துச் சித்திரம்போல் நின்றானென்பதாம். இச்செய்யுள், அநுமானது துன்பநிலையைக்காட்டுமென்று கொள்வாருமுளர். பி-ம்:— 1இல்லையிமைத்திலன். 2ஒன்றும். 3வினிந்தான். 4அடுத்துளான்றன்னையொன்று மறிந்திலனமலனேயும். (உஅருக)

ருகூ.—அநுமான்சொல்லக் கேட்டதும் வானரர் பெருந்துயர்கொண்டு ஸ்ரீராமனுடையதாளில் விழுதல்.

1சொற்றது 2கேட்ட லோடுந் துணுக்குற வுணர்வு சோர
நற்பெரு வாடை யுற்ற மரங்களி னடுக்க மெய்தாக்
கற்பக மனைய வள்ளல் கருங்கழற் 3கமலக் கான்மேல்
வெற்பின மென்ன வீழ்ந்தார் வானர வீர ரெல்லாம்.

(இ - ள்.) (அநுமான்) சொல்லியசொல்லைக் கேட்டதும், வானரவீர ரெல்லாம்,—(நெஞ்சம்) திடுக்கிட உணர்வுதளர, மிக்கபெரியவாடைக்காற்றி லடிபட்ட மரங்களைப்போல் நடுக்கமடைந்து, கற்பகமரத்தையொத்த [வேண்டு வார்க்குவேண்டியவரத்தைக் கொடுக்கவல்ல] உதாரனான ஸ்ரீராமனுடைய பெரியவீரக்கழலையணிந்த பாதங்களின்மேல் மலையினம்போலவிழுந்தார்; (எ - று.)—பி-ம்:—1சொற்பதம். 2கேட்டபோது. 3கமலத்தாள். (உஅருஉ)

சுo.—ஸ்ரீராமன் மூர்ச்சையடைதல்.

சித்திரத் தன்மை யுற்ற சேவக னுணர்வு தீர்ந்தான்
[1]மித்திரர் வதன நோக்கா னிளையவன் வினவப் பேசான்
பித்தரு மிறைபொ றாத பேரபி மான மென்னுஞ்
சத்திர மார்பிற் றைக்க வுயிரில னென்னச் [2]சாய்ந்தான்.

(இ - ள்.) சித்திரத்தன்மையையடைந்திட்ட பெருவீரனான ஸ்ரீராமன் (பிறகு) உணர்வுதீரப்பெற்றவனாய், நண்பர்முகத்தைப் பாராமலும் இளைய பெருமாள் வினவவும் பேசாமலும், பித்தர்களும் சிறிதும்பொறுக்கமாட்டாத பெரியஅபிமானமென்கின்ற படைக்கலம் மார்பில்தைக்க,உயிரற்றவனென்று கருதும்படி [மூர்ச்சித்து] சாய்ந்திட்டான்; (எ - று.)—சித்திரத்தன்மையுற்ற மை ருஅ-ஆஞ்செய்யுளிற் கூறப்பட்டது. சத்திரம் = ஶஸ்த்ரம்: வடசொல். அபிமானமென்பது பித்தர்களாலும்வெளிக்காட்டாது உள்ளேதாங்குதற்குரிய தன்றென்பான் 'பித்தருமிறைபொறாத அபிமானம்'என்றான். பி-ம்:—1வித்த கர்வதனநோக்கி. 2சார்ந்தான். (உஅருங)

சுக.—இலக்குமணனும் துயரத்தால் தரையில் விழுதல்.

நாயகன் றன்மை கண்டுந் [1]தமக்குற்ற நாணம் பார்த்தும்
[2]ஆயின [3]கரும மீள வழிவுற்ற வதனைப் பார்த்தும்
வாயொடு மனமுங் கண்ணு மியாக்கையு [4]மயர்ந்து சாம்பித்
தாயினை யிழந்த கன்றிற் றம்பியுந் [5]தலத்த னானான்.

(இ - ள்.) (தமது) தலைவனான ஸ்ரீராமனது தன்மையைப் பார்த்தும், தமக்குநேரிட்ட வெள்கத்தகுந்தநிலையைக் கண்டும், (இதுவரையிற்) கைகூடி வந்த செயல் மீண்டும்அழிவுற்றஅதனைப் பார்த்தும், வாயுடனேமனமும் கண்ணும் உடலும் சோர்ந்துவாடி, தாயையிழந்த கன்றுபோல இளையபெரு மாளும் தரையில்விழுந்துகிடப்பவனானான்; (எ-று.)—பி-ம்:—1தனக்கு. 2ஆய ன. 3தருமம். 4மறந்து. 5தலத்தின். (உஅருச)

சுஉ.—இந்திரசித்து சீதாபிராட்டியைக் கொன்றிருக்கலாமென்று கருதல்.

தொல்லைய துணரத் தக்க வீடணன் றுளக்க முற்றான்
எல்லையி [1]றுன்ப மூன்ற விடையொன்றுந் தெரிக்கி லாதான்
[2]வெல்லவு மரிது நாச மிவடனால் விளைந்த தென்னாக்
[3]கொல்வது மடுக்கு மென்று மனத்திலோ ரையங் கொண்டான்.

(இ-ள்.) நிகழ்ந்துபோனவைகளையுணரத்தக்க விபீஷணன் (அவ்விஷ யத்தைக்கேட்டு) மனக்கலக்கங்கொண்டவனாய், அளவற்றதுன்பம் மனத்திற்

பொருந்தியதனால் நிகழ்ந்ததன்மையைச் சிறிதும் ஆராய்ந்தறியமாட்டாதவனாகி, '(ஸ்ரீராமலக்ஷ்மணரை) வெல்வதும் அரிது; இவளால் நாசம் விளைந்தது'என்றுகருதி (இந்திரசித்து சீதையைக்) கொல்லுதலும் தகும் என்று (தன்மனத்திலே) ஐயங்கொண்டான்; (எ - று.)—பி-ம்—[1] துன்பமுற்ற, துன்பமுற்றும். [2]வெல்லுமது, வெல்லுமிது. [3]கொல்லவும். (உஅருரு)

சுங.—விபீஷணன் ஸ்ரீராமனுக்குச் சைத்யோபசாரஞ்செய்ய அப்பிரான் மூர்ச்சைதெளிதல்.

சீதநீர் முகத்தி னப்பிச் சேவகன் மேனி தீண்டிப்
போதவ்வந் தெய்தற் பால யாவையும் புரிந்து [1]பொற்பூம்
பாதமுங் [2]கையு மெய்யும் பற்றினன் வருட லோடும்
வேதமுங் காணா வள்ளல் விழித்தனன் [3]கண்ணை மெல்ல.

(இ - ள்.) குளிர்ந்தநீரை (ஸ்ரீராமனுடைய) முகத்திலேதெளித்து, வீரனான ஸ்ரீராமனது உடம்பைப் பரிசித்துப் (பின்னும்) பிரஜ்ஞைவருதற்குஉரிய எவற்றையுஞ்செய்து, (அப்பிரானது) அழகியதாமரைமலர்போன்ற கால்களையும் கையையும் உடலையும்(மெல்லப்)பிடித்தான்:(அங்ஙனம்) பிடித்தவளவில், வேதங்களினாலுங்காணமுடியாத மகோதாரனான ஸ்ரீராமன் மெல்ல(த் தன்) கண்ணை விழித்துப்பார்த்தனன்; (எ - று.)—பி-ம்:—[1]பூம்பொற், பொன்போற். [2]மெய்யுங்கையும். [3]உயிர்ப்புவீங்க, விழியைமெல்ல. (உஅருசு)

சுச.—இலக்குமணன் ஸ்ரீராமனைத் தேற்றுமாறு கூறத்தொடங்குதல்.

ஊற்றுவார் [1]கண்ணீ ரோடு முள்ளழிந் துற்ற தெண்ணி
[2]ஆற்றுவா னல்ல னாகி [3]யயர்கின்றா னெனினு மையன்
மாற்றுவா னல்லன் மான முயிருக [4]வருந்து மென்னாத்
தேற்றுவா னினைந்து தம்பி யிவையிவை செப்ப லுற்றான்.

(இ - ள்.) இளையபெருமாள்,—'(தான்)ஊற்றுப்போற்பெருகுகின்ற கண்ணீருடனே மனமழிந்து,நேர்ந்ததையறிந்து, ஆற்றமுடியாமல் மிகவும்வருந்துகின்றவனாயிருந்தும், ஸ்ரீராமன், எதிரியைப் போக்கான்:மானத்தினால் உயிர் சிந்தவருந்துகின்றான்' என்றெண்ணி (அவனைத்)தேற்றக் கருதி, இவ்வாறான வார்த்தைகளைக் கூறலானான்; (எ - று.) மானம்-பகைவர்கைப்படும்படிமனைவியைவிட்டிட்டு அவளை மீட்கமுடியாமற் போயிற்றேயென்பதனாலானது. பி-ம்:-[1]கண்ணினோடும்.[2]ஆற்றுவானென்ன.[3]அயர்கின்றான்போலும்.[4]வந்தது.

சுரு.—இதுமுதல் ஏழுகவிகள் - துயரத்தினால்தேய்பியாது பகைஞரையொழிப்பதே கடமை யென்று இலக்குமணன் கூறுதலைத் தெரிவிக்கும்.

முடியுநாட் டானே வந்து [1]முற்றினாற் றுன்ப முக்நீர்
படியுமாஞ் சிறியோர் தன்மை நினைக்கிது பழியிற் றாமால்
குடியுமா சுண்ட தென்னி னறத்தொடு முலகைக் [2]கொன்று
கடியுமா றன்றிச் சோர்ந்து [3]கழிதியோ கருத்தி லார்போல்.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) சிறியோரின்தன்மை (தனக்கு) முடிவுகாலம் (ஊழ்விதிப்படி) தானேவந்து நேரிட்டால், துன்பமாகியகடலில் மூழ்கிக் கிடப்பதேயாகும்: (நீ அத்தொழிலை மேற்கொள்கின்ற) இது, உனக்குப் பழியையுண்டாக்கும்: (நமது) குடியும் மாசை யடைந்திட்ட தென்னில், தருமநெறிதவறாமல் உலகை [எதிராளியாயிருப்பவரை]க் கொன்று கடிகின்றவகையினாலல்லாமல், உறுதியானஎண்ணமில்லார்போல, (உயிர்)சோர்ந்து இறக்கப்போகின்றாயோ?

ஊழ்வினையால் தீங்கு நேரிடுவதாயின் அப்போதும் குடிப்பழிநேராத வாறு தருமமுறையாக எதிரியைக்கொன்று கடியவேண்டுவதே செய்யவேண்டிய கடமையன்றி, சோர்ந்துகிடத்தல் முறையன் றென்றவாறு. முடியுநாள் தந்ததனால் சீதை மாற்றானால் உயிர்முடிந்தாள்; அங்ஙனம்சீதையைக் கொல் லும்படிவிட்டதனால், நம்குடி மாசுண்ணும்: அதனை ஒருவகையாகத்தீர்ப்பது, எதிரியாயினாரைக் கொல்லுவதனாலன்றிச் சோர்ந்திருப்பதனாலன்றென்றான், இலக்குவன். உலகு - சத்துருலோகம்: சத்துருவாயுள்ளஜனம். அறத்தொடு முலகைக்கொன்று என்பதற்கு-அறத்துடனே உலகையுங் கொன்று என்று கொள்ளுதலும்ஒன்று: மேல் ௬௭ - ஆஞ் செய்யுளில், 'நல்நெறியில்நடக்கும் நமக்குத் தீமைநேர, தீநெறியோர்க்கு வெற்றிநேருமாயின், வேதத்தின்கொள் கைதானென்? இம்மூன்றுலகையும் எரிமடுப்போம்'என்று கூறுவது காண்க. வான்மீகத்திலும் இவ்வாறான கருத்துக்கள் இந்தச்சந்தர்ப்பத்துவந்துள்ளன. பி-ம்:---[1]முற்றுநாட்டுன்பமுன்னி. [2]கொண்டு. [3]கழியுமோ. (உ௮௫௮)

௬௬. தையலைத் துணையி லாளைத் தவத்தியைத் தருமக் கற்பின்
தெய்வதந் தன்னை மற்றுன் றேவியைத் திருவைத் தீண்டி
வெய்யவன் கொன்றா [1]னென்றால் வேதனை [2]யுழப்ப தின்னம்
உய்யவோ [3]கருணை யாலோ தருமத்தோ டுறவு முண்டோ.

(இ - ள்.) பெண்ணும் உதவியற்றவளும் தவத்தின்சின்னத்தையுடைய வளும் தருமந்தவறாத கற்புக்குத் தெய்வம்போன்றவளும் மற்றும் உன்தேவியு மான சீதாபிராட்டியைப் பரிசித்துக் கொடியவனான இந்திரசித்து கொன்றா னென்றால், வருத்தங்கொண்டு(இன்னும்) வருந்துவது,பின்னும்உய்வதற்காக வோ? கருணையாலோ? தருமத்துடன்தொடர்புஉள்ளதாகுமோ? (எ - று.)

உன்மனைவியை இந்திரசித்துக்கொன்றால் பெரும்பாவியராகிய அவ்வ ரக்கரைக் கொன்றொழித்துத் தருமத்தைநாட்டுவதே முறையன்றி வருந்திக் கிடப்பது, தருமத்தைநடப்பிக்கவேண்டுமென்பதற்கும் சேராது: கருணையும் ஆகாது: நாம் உய்வதற்கும்வழியாகா தென்றவாறு. நல்லோர்க்குவருத்தம் நிகழும்போது காட்டும் மனவிரக்கமே கருணையெனப்படு மென்க. பி-ம்:— [1]என்னு. [2]உழப்பதெல்லாம். [3]எளிமைதானோ, எளிமையாலோ. (உ௮௫௯)

௬௭. அரக்கரென் னமரர் [1]தாமெ னந்தணர் [2]தாமெனந்தக் [ன்
குருக்களென் முனிவர் [1]தாமென் வேதத்தின் கொள்கை தானெ

[3]செருக்கினர் வலிய ராகி நெறிநின்றார் சிதைவ [4]ராகின்
[5]இருக்குமி தென்னோ மிம்மூன் றுலகையு மெரிம டாதே.

(இ - ள்.) அரக்கரென்ன, அமரர்தாமென்ன, அந்தணர்தாம்என்ன, அந்தக்குருக்களென்ன, முனிவர்தாம்என்ன, வேதத்தின்கொள்கைதான் என்ன, (நாம் எதையும் கவனிக்கவேண்டுவதில்லை): செருக்குக்கொண்டவர் வலியவராகி நல்வழியினின்றவர் அழிவரானால் இம்மூன்றுலகத்தையும் அக்கினிக்குஇரையாக்காமல், வெறுமனேயிருப்பதுஎன்னவாகும்? (எ - று.)

செருக்கினர்வலியராகி, நன்னெறியினராகியநாம் சிதைவதென்று ஏற்படுமானால், அப்போது'நமக்குவேண்டியவர், வேண்டாதவர்'என்ற எதனையுங்கருதாமல், இம்மூவுலகத்தையும் அழித்தொழிக்கவேண்டுவதே செய்ய வேண்டியகடமையென்றவாறு. பி-ம்:—1தாமெனன்.2இயக்கர்தாமென், தாமெனந்தங். 3செருக்கிளர். 4என்னை, என்றால், என்னின். 5இருக்குமதென்னோ. ()

கூஅ. முழுவதே [1]மூலக மின்ன முறைமுறை செய்கை மேன்மூண்டு
[2]எழுவதே யமர ரின்ன [3]மிருப்பதே யறமுண் டென்று
[4]தொழுவதே [5]மேக மாரி சொரிவதே சோர்ந்து நாம்வீழ்ந்து
[6]அழுவதே நன்று நந்தம் விற்றொழி லாற்ற லம்மா.

(இ-ள்.)(நன்னெறியிற்செல்லும்நாம் சீதையைக்கொன்று அரக்கர்வெற்றியடைந்த) இன்னும் ஏழுலகம்முழுவதும் முறைசெய்கைமேல்முயன்று முறையாகவிருத்தியாகுவதே! அமரர்கள் இன்னும் இருப்பதே!அறம் உள்ளதென்று தொழுவதே! மேகம் மாரியைச் சொரிவதே! நாம் சோர்ந்துவீழ்ந்து அழுவதே! நம்முடையவிற்றொழிலின்வல்லமை நன்றாயுள்ளது!! (எ - று.)

'எழுவதே'முதலியவற்றிலுள்ள வினாப்பொருளைக்கொண்ட ஏகாரம்,அவ்வச்செய்கை இனித் தக்கதன்று என்ற பொருளைக் குறிப்பிக்கும். நமக்கு இவ்வாறுதீங்குநேர்ந்தபின்பு, வில்லாளிகளெனப் பெயர்வைத்துக்கொண்டுள்ள நாம் ஏழுலகம் முறைசெய்கைமேல் மூண்டெழுதல் முதலியன நிகழாதவாறு எல்லாவற்றையும் நாசஞ்செய்யவேண்டு மென்றவாறு. பி-ம்:—1உலகோடு. 2எழுவதென். 3இருப்பதென். 4தொழுவதென்.5மோகவாரிசொரிவதே,மோகவாரிசுரப்பதென். 6அழுவதென். (உஅசுக)

கூகூ. புக்கிவ்வூ ரிமைப்பின் முன்னம் பொடிபடுத் [1]தரக்கன் போன
திக்கெலாஞ் சுட்டு வானோ [2]ருலகெலாந் தீய்த்துத் [3]தீர்க்கத்
தக்கநாங் [4]கண்ணீ ராற்றித் தலைசுமந் [5]திருகை நாற்றித்
துக்க[6]மே யுழப்பமென்றாற் [7]சிறுமையாய்த் தோன்று மன்றே.

(இ - ள்.) புகுந்து இந்தஇலங்கையூரை இமைப்பளவிற்குள் பொடியாக்கி, அரக்கன்சென்ற திக்கையெல்லாம் எரித்து, வானோருலகத்தையெல்லாம் தீக்குஇரையாக்கி யொழிக்கத்தக்க நாம் கண்ணீரைப்பெருக்கி, தலையைத்தொங்கப்போட்டுஇருகைகயைத் தலைசுமந்துநிற்கத் துக்கத்தை அநுபவிப்போமென்றால், அது சிறுமையாகக் காணப்படுமல்லவோ? (எ - று.)

தலை நாற்றி இருகைசுமந்து என்று மாறுக.இரண்டுகைகளையும் தலைமீது துயரக்குறியாகவைக்கும்போது அவ்விருகையையும் தலை சுமப்பதாகும். கை

யைத் தலைமேல்வைத்துக்கொள்ளுதல் துயரக்குறியாம்.நாம் துயரக்குறியைக் காட்டிக்கொண்டிருந்தால், பார்ப்பவர் நம்மை எளிமைப்படக்கருதுவ ரென்ற படி. பி-ம்:---1அரக்கர். 2உலகையுந்தீர்த்து. 3தீரத். 4கைகளுற்றித்.5இருந்து தாவித்,இருந்துதாழ்வில். 6ஆயுழைப்பதெல்லாம். 7சிறுமையிற். (உஅசுஉ)

எo. அங்குமிவ் வறமே நோக்கி யரசிழந் தடவி யெய்தி
மங்கையை வஞ்சன் பற்ற வரம்பழி யாது வாழ்ந்தேம்
இங்குமித் துன்ப மெய்தி யிருத்துமே லெளிமை நோக்கிப்
பொங்கு[1]வன் றளையிற் பூட்டி யாட்செயப் [2]புகல்வ ரன்றே.

(இ - ள்.) அவ்விடத்தும் [அயோத்தியிலும்] இந்தத்தருமத்தையேபார்த்து இராச்சியத்தையிழந்து காட்டையடைந்து மனைவியை வஞ்சனைக்குணமுள்ளஇராவணன் கவர்ந்துசெல்ல(த் தரும)வரம்பழியாது வாழ்ந்தோம்: இவ்விலங்கையையடைந்தபின்பும், இத்துன்பத்தையடைந்து இருப்போமானால், (நம்முடைய) எளிமையைப்பார்த்து(த் தாம்) உற்சாகம்மிகுதற்குக்காரணமான கொடியவிலங்கைப் பூட்டி, அடிமைத்தொழில்செய்யுமாறு (நம்பகைவர்) கூறுவா ரன்றோ? (எ - று.)—பி-ம்:—1வான், வெந். 2புகல்வன். (உஅசுரு)

எக. மன்றலங் கோதை யாளைத் [1]தம்மெதிர் கொணர்ந்து வாளிற்
கொன்றவர் தம்மைக் கொல்லுங் [2]கோளிலா நாணங் கூரப்
பொன்றின ரென்ப ராவி [3]போக்கினுற் பொதுமை பார்க்கின்
அன்றிது [4]கரும [5]மென்னீ [6]யயர்கின்ற தறிவி லார்போல்.

(இ-ள்.) (இப்போது துயரத்தினுல் நம்முடைய) உயிரைப் போக்கினுலும், நறுமணமுள்ள அழகிய மயிர்முடியையுடைய பெண்ணைத் தம்மெதிரே கொணர்ந்து வாளினுற்கொன்ற பகைவர்களைக் கொல்லுகின்ற வலிமையில்லாமல், நாணம்மிக (இன்னுர்) இறந்தாரென்று (உலகத்தவர்) பழிப்பார்கள்: பொதுவாகப்பார்க்குமிடத்தும் இப்போது (துயரத்தினுல்) உயிரை விட்டிடுவதென்ற இச்செயல், செய்யத்தக்கதன்று:(ஆகையால்), அறிவிலாதவர்போல் நீ துயரத்தினுல் அயர்ந்திருப்பது என்னே! (எ - று.)

தாம் துயர்க்காரணத்தினுல் உயிரைநீப்பின், கொடியஅரக்கர் உலகத்தாரை மிகவும்நலியத்தொடங்குவ ராதலின், 'பொதுமைபார்க்கின் அன்றிது கருமம்' என்கின்றுன். பொதுமைபார்க்கின் அன்றிதுகருமம்என்பதற்கு, பொதுமை - (யாவர்க்கும்) பொதுவாகவுள்ளதருமத்தை, பார்க்கின் - பார்த்தால், கருமம் - (அந்தத் தருமச்)செயலுக்கு, இது - இக்காலம், அன்று-ஏற்றதன்றுஎன்று உரைகூறினுமாம். பி - ம்:—1நம். 2கோளிலர்என்றும்படிக்கலாம். 3போக்கினுர். 4தருமம். 5எண்ணி, என்னீர். 6அயர்கின்றீரறிவிலீர். ()

எஉ.—அதுகேட்ட சுக்கிரீவன் உணர்வுற்று, இலங்கையில்
அரக்கன்மார்பிற் குதிப்போமெனல்.

[1]அனையன விளவல் கூற வருக்கன்சே[2]யயர்கின் றுனோர்
கனவுகண் டனனே யென்னக் கதுமென வெழுந்து காணும்
வினையினி [3]யுண்டே [4]வல்லை விளக்கின்வீழ் விட்டி[5]லன்ன
ட[6]யி... யரக்கன் மார்பிற்[7]குதித்து நாம் வம்மி னென்றுன்.

(இ - ள்.) அவ்வாறான வார்த்தைகளை இளையபெருமாள் சொல்ல, துயரத்தினால்அயர்கின்றவனான சூரியகுமாரனான சுக்கிரீவன் ஒருகனவைக் கண்டவன்போலத் திடீரென்றுஎழுந்து '(நாம்) ஆராயவேண்டிய செயலும் இனி உண்டோ? விரைவாகவிளக்கில்வீழ்கின்ற விட்டிலையொத்தவனும் மனையிடையிலுள்ளவனுமான அரக்கனுடையமார்பிற் குதிப்போம், நாம்; வாருங்கள்' என்றான்; (எ - று.)—சீதையை நச்சிக் கவர்ந்ததனால், 'விளக்கின்வீழ்விட்டிலன்ன அரக்கன்' என்றது: அரக்கன்-இராவணன்: இந்திரசித்தெனக்கொள்ளலுமொன்று. பி-ம்:—1அனையவனன்ன. 2ஆகிநின்றோன். 3உண்டோ. 4வல்லே, இல்லை. 5என்ன. 6உறையரக்கர். 7குதிக்குதும், குதித்துமால். (உ௮௬௫)

எ௩.—அரக்கரை வேரோடு அழிப்போமெனல்.

இலங்கையை யிடந்து வெங்க ணிராக்கத ரென்கின் றாரைப்
பொலங்குழை மகளி ரோடும் 1பாலுகர் புதல்வ ரோடுங்
குலங்களோ டடங்கக் கொன்று கொடுந்தொழில் குறித்து நம்மேல்
விலங்குவா ரென்னிற் றேவர் விண்ணையு 2நிலத்து வீழ்த்தும்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இலங்கையைப் பெயர்த்தெடுத்து, கொடுங்கண்ணையுடைய இராக்கதரென்கின்றவரைப் பொன்குழையணிந்த மனைவிமாரோடும் முலைப்பால்குடிக்கின்ற புதல்வரோடும் இனத்தாரோடும் ஒருசேரக்கொன்று, (அப்போது அவ்வாறு நாம் செய்கின்ற) கொடுந்தொழிலையெண்ணி நம்மேல் தேவர் எதிர்த்துவருவாரேயானால் (அந்தத் தேவருடைய) விண்ணுலகத்தையும் (இம்)மண்ணுலகில் விழச்செய்வோம்; (எ - று.)

தேவர்கள் தருமத்திற் கருத்துள்ளவ ராதலால், அரக்கரை நாம் கொன்றோ மானாலும், அக்கிரமமாக அவ்வரக்கரின் மனைவிமக்களைக்கொல்வதுகண்டு நம்மீது ஒருகால் பொரவந்தாலும் அவர்களையும் தொலைப்போ மென்கின்றானென்க. குலங்கள் - சுற்றத்தாரைக் குறிக்கும். வீழ்த்தும் = வீழ்த்துதும்: வீழ்தும்என்பதன்பிறவினை. பி-ம்:—1அவருடைப். 2மண்ணில். (உ௮௬௬)

எச.—சுக்கிரீவன் இலங்கையின்மீது தாவுதல்.

அறங்கெடச் செய்து 1மென்ப தமைந்தன மாகி னைய
புறங்கிடந் 2துழைப்ப தென்னே பொருதினிப் புவன மூன்றும்
கறங்கெனத் திரிந்து தேவர் 3குலங்களைக் கட்டு மென்னா
மறங்கிளர் வயிரத் தோளா னிலங்கைமேல் வாவ லுற்றான்.

(இ - ள்.) அறத்தைக்கெடுமாறுசெய்வோமென்று உடன்பட்டோமாகில், ஐயனே! புறத்திலேகிடந்து வருந்துவது எதற்கு? இனிப்போர்புரிந்து புவனம்மூன்றையும் காற்றாடிபோலத்திரிந்து தேவர்குலங்களையும் வேரோடறுப்போம் என்றுநிச்சயித்து, வலிமையால்விளங்குகின்ற உறுதியானதோள்களையுடைய சுக்கிரீவன் இலங்கையின்மேற் பாயத்தொடங்கினான்; (எ-று.)—தருமப்படியன்றித் தருமங்கெடத்தொழில்செய்வதானாலும் எப்படியும்

பகைவரைவதைப்பதே செய்யத்தக்கதென்கின்றான், சுக்கிரீவன். பி-ம்:— [1]என்றே. [2]உழைப்பதென்னிப்பொழுதிறைப். [3]குலங்களும். (உஅ௬எ)

எ௫.—சுக்கிரீவனுடன் மற்றைவானரரும் இலங்கைமீதுபாயத்தொடங்க, அயோத்திக்கு இந்திரசித்து சென்றிருத்தலை அநுமான் கூறுதல்.

மற்றைய வீர ரெல்லா மன்னனின் முன்னந் [1]தாவி
எற்றுது மரக்கர் தம்மை [2]யில்லொடு மெடுத்[3]தென் றேக
உற்றன ருறுத லோடு முணர்த்துவ துளதென் றன்னுச்
சொற்றன னனுமன் [4]வஞ்ச னயோத்திமேற் போன சூழ்ச்சி.

(இ-ள்.) மற்றைவானரவீரரெல்லாரும் (தம்முடைய) அரசனுக்குமுன்னே தாவி, 'அரக்கர்களை (அவர்களுடைய) இல்லத்துடனே பெயர்த்தெடுத்து மோதுவோம்' என்றுசெல்லத்தொடங்கினர்: தொடங்கவே, அநுமான், 'சொல்ல வேண்டுவது ஒன்று உண்டு' என்றுஎண்ணி, வஞ்சனைக்குணமுள்ள இந்திர சித்து அயோத்தியின்மீதுசென்ற சூழ்ச்சியைச்சொல்லினன்; (எ - று.)— பி-ம்:—[1]வாவி, வாரி. [2]எயிலொடும். [3]இன்றேகல். [4]தீயோன். (உஅ௬அ)

எ௬.—அதுகேட்ட இராமனுக்குச் சீதையைப்பற்றியதுயரந்தீர்ந்து தம்பிமுதலியோரைப்பற்றித்துயர் மிகுதல்.

தாயருந் தம்பி மாருந் தவம்[1]புரி நகரஞ் [2]சாரப்
போயின னென்ற மாற்றஞ் செவித்துளை புகுத லோடும்
மேயின [3]வடியி னின்ற [4]வேதனை கனைய வெந்த
தீயிடைத் தணிந்த தென்னச் சீதைபாற் [5]றுயரந் தீர்ந்தான்.

(இ - ள்.) தாய்மார்களும் தம்பிமார்களும் தவம்புரிந்துகொண்டுள்ள அயோத்திநகரத்தைச் சாருமாறு (இந்திரசித்து) போயினு னென்ற சொல் செவித்துளையிற்புக்கவுடனே,—பொருந்திய அடிபட்டதனாலுண்டான வேதனையானது நெருங்க வெந்துவிட்ட நெருப்பினிடையிலே தணிந்து விடுவது போலச் சீதையினிடத்துக்கொண்ட துன்பம் தீர்ந்தான், (ஸ்ரீராமன்).

இதனாற் சீதையைக்காட்டிலும் தம்பிமார் தாய்மார்களிடத்து மிக்க அன்பைக்கொண்டிருந்தனன் ஸ்ரீராமனென்பது, பெறப்படும். அடிபட்டதனால் தோன்றும் வேதனை நெருப்புப்படும்போது தோன்றும்வேதனைக்குமுன் தோன்றுமைபோலத் தாயர்முதலியோருக்கு நேரவிருக்குந் துன்பத்தை நினைக்கையில் சீதையைப்பற்றிநேர்ந்துள்ள துன்பம் மறையலாயிற்றென்று விளக்கினர். கணவனையிழந்த தன் தாய்மார் கைம்மைநோன்பைநோற்பாரென்பது பற்றியும், ஸ்ரீராமனைத் தியானித்தவண்ணம் ஜடாவல்கலதாரியாய்ப் பரதன் வாழ்வதுபற்றியும், 'தாயருந்தம்பிமாரும் தவம்புரிநகரம்' என்றது. பரதன்முதலியோர் நந்திக்கிராமத்தில்வசிப்பது அனுமனுக்குத்தெரியாமையால், 'நகரம்' என்றது: இனி, நகரம்என்றது-அரசுபுரிகின்றஇடத்தையே குறிக்குமெனினுமாம். பி-ம்:—[1]புரிந்தோரும். [2]சேரப். [3]வடுவினின்ற, அடியிலுற்ற. [4]வேதனைக் கிடையேவெந்த, வேதனைமையவெய்யத். [5]துன்பம். (உஅ௬௯)

எஎ.—ஸ்ரீராமன் மனநிலை கலங்குதல்.

அழுந்திய பாலின் வெள்ளத் தாழிநின் றனந்தர் நீங்கி
எழுந்தன னென்னத் துன்பக் கடலினின் றேறி யாருக்
கொழுந்துறு கோபத்[1] தீயு நடுக்கமு மனத்தைக் கூட
உழுந்துருள் பொழுதுந் தாழா [2]வினையினுன் மறுக்க முற்றான்.

(இ - ள்.) ஆழமாகவுள்ள பால்வெள்ளத்தைக்கொண்ட கடலினின்று யோகநித்திரைநீங்கி(த் தான்) எழுந்துவந்தனன்போலச் (சீதையைப்பற்றிய) சோகசாகரத்தினின்று கரையேறி, உழுந்துருள்கின்றகாலமளவும் தாமசித்த லில்லாத முயற்சியையுடையனான ஸ்ரீராமன், தணியாத சுவாலைபொருந்திய கோபத்தீயும் நடுக்கமும் மனத்தைப்பொருந்த மனக்கலக்கங்கொண்டு நின் றான்; (எ-று.)—பி-ம்:—1 தீயினோடெழுள், தீயினடுக்கமும். 2விரைவினான். ()

எஅ.—இதுமுதல் நான்குகவிகள் - நேர்ந்துள்ளநிலைமைக்குறித்து ஸ்ரீராமன் வருந்துதலைக் கூறும்.

தீருமிச் சீதை யோடு மென்கில தன்றென் றீமை
வேரொடு முடிப்ப தாக விளைந்தது வேறு [1]மின்னும்
ஆரொடுந் தொடரு மென்ப [2]தறிகிலே னிதனை யைய
[3]பேரிட வவதியுண்டோ வெம்பியர் பிழைக்கின் றாரோ.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'என்னுடையதீவினை இந்தச்சீதையுடனே தீருமென்றுசொல் லக்கூடியதாகவும் ஆகவில்லை: (அன்றியும், சூரியவமிசத்தை) வேருடனே முடிப்பதாக வேறாகவும் விளைந்துள்ளது' என்றுசொல்லி, இன்னும் யாரு டனேதொடர்ந்துசெல்லுமென்பதனையும் அறியும்வல்லமையுள்ளேனல்லே ன்: ஐயனே! இதனைப் பேர்ந்திடுமாறுசெய்ய வகை ஏதேனுமுண்டோ? என் தம்பியர் பிழைத்தவராவரோ? (எ - று.)—பி-ம்:—1என்ன, இன்னம்.2அறிந் திலனதனை. 3பேருறுகதியும். (உஅஎக)

எகூ. நினைவதன் [1]முன்னஞ் செல்லு [2]மானத்தி னெடிது [3]நின்றான்
வினையொரு கணத்தின் முற்றி மீள்கின்றான் வினையேன் வந்த
மனைபொடி பட்ட தங்கு [4]மாண்டது தார மீண்டும்
எனையன [5]தொடரு கின்ற துணர்கிலே னிறப்புங் காணேன்.

(இ . ள்.) நினைப்பதற்குமுன்னே செல்லவல்ல விமானத்திலே வெகு நேரத்துக்குமுன்னம் ஏறிநின்ற இந்திரசித்து (தன்)காரியத்தை ஒருநொடிப் பொழுதில் முடித்துக்கொண்டு மீள்கின்றவனுவன்: தீவினையேனாகிய யான் பிறந்த மனையும் அங்கே [அயோத்தியில்]நீறானதாகிவிடும்: இங்கேயும் மனைவி மாண்டாள்: (இன்னும்) எப்படிப்பட்டதீமைகள் தொடரப்போகின்றதென் பதை உணரும்வல்லமையற்றிருக்கின்றேன் :(சாவாவது வருமோஎன்றால் அந் தச்) சாவையும் காண்கின்றிலேன்; (எ-று.)—பி-ம்:—1முன்பு. 2மானத்துள். 3போனான். 4மாண்டனை. 5தொடருமென்பது,தொடங்குமென்பது. (உஅஎஉ)

அ௰. தாதைக்குஞ் சடாயு வான தாதைக்குந் தமிய ளாய
சீதைக்குங் கூற்றங் காட்டித்[1] தவிர்ந்தில தொருவன் றீமை
பேதைப்பெண் பிறந்து பெற்ற தாயர்க்கும் பிழைப்பில் லாத
காதற்றம் பியர்க்கு மூர்க்கு நாட்டிற்குங் காட்டிற் றன்றே.

(இ - ள்.) ஒருத்தனுனைஎன்னுடைய தீவினையானது,—பெற்றதந்தையான தசரதனுக்கும் சடாயுவான தந்தைக்கும் தனிப்பட்டளாய்விட்ட சீதைக்கும் யமனைக்காட்டி (இவ்வளவோடு) நீங்கிய தில்லை: (என்தீவினையே),—பேதைப்பெண்ணுய்ப்பிறந்து, பெற்றதாய்மார்க்கும் குற்றமற்ற அன்புபூண்ட (பரதசத்துருக்கினரென்ற) தம்பியர்க்கும் ஊரார்க்கும் நாட்டிலுள்ளார்க்கும் (யமனைக்)காட்டிவிட்டதே; (எ - று.)—அன்றே - தேற்றம்.

தாய்மார் தம்பிமாரையன்றி, ஊராரையும் நாட்டிலுள்ளாரையும் அரக்கர் கொன்றுவிடக்கூடு மென்று கருதி ஸ்ரீராமன் இவ்வாறு கூறுகின்றுன். பி-ம்:—1 தீர்ந்திலது. (உஅஎ௩)

அக. உற்றதொன் [1]றுணர கில்லா ருணர்ந்துவந் துருத்தா ரேனும்
வெற்றிவெம் பாசம் வீசி விசித்தவன் கொன்று வீழ்த்தால்
[2]மற்றைவெம் புள்ளின் வேந்தன் வருகிலன் மருந்து நல்கக்
கொற்ற[3]மா ருதியங் கில்லை யாருயிர் கொடுக்கற் பாலார்.

(இ - ள்.)(அயோத்திநோக்கிச் சேனையோடு சென்ற அரக்கன் அழிக்கும்போது தம்பியர்) உற்றதொன்றையும் உணரமாட்டாதவராவர்: அறிந்துவந்து கோபித்தாரேனும்,வெற்றியைத் தரத்தக்க கொடியநாகபாசத்தை வீசிக்கட்டி அந்தஇந்திரசித்து கொன்று வீழ்த்திஞனுல், பின்பு கொடிய பறவைக்கரசனை கருடனும் வரானே;மருந்துமலையைக்கொணர வெற்றிபொருந்திய அநுமனும்அங்கேஇல்லையே!!அவர்களுயிரை(மீட்டு)க்கொடுத்தற்குஉரியவர் யாவர்?

விசித்தவன்என்று ஒருசொல்லாகஎடுத்து, (நாகபாசத்தாலேனும் பிரமாஸ்திரத்தாலேனும் தம்பியரைக்) கொன்றுவீழ்த்தால்என்றுஉரைப்பினுமாம். பி-ம்:—1 உணர்கிலாதாரறிந்து. 2 மற்றைய. 3 மாருதியுமாங்கில். (உஅஎ௪)

அஉ.—ஸ்ரீராமன் 'இந்திரசித்தைக் கோல்லுமாறு ஆகாயத்தே விரைந்துசெல்ல உபாயமுண்டாயிற் கூறு' எனல்.

மாக [1]வா காயஞ் செல்ல [2]வல்லையின் வயிரத் தோளாய்
ஏகுவா னுபாய முண்டே லியம்புதி [3]நின்ற வெல்லாஞ்
சாகமற் றிலங்கைப் போருந் தவிர்கவச் சழக்கன் கண்கள்
காகமுண் டதற்பின் மீண்டு முடிப்பனென் கருத்தை யென்றான்.

(இ - ள்.) (இந்திரசித்தைத்தொடர்ந்து செல்லவிரும்புகிற எனக்கு) வயிரம்போலுறுதியான தோள்களையுடையவனே! மாகம் எனப்படுகிற வானத்தின்வழியே விரைவிற்சென்றுசேர உபாயமுண்டாயின், சொல்லுவாய்: (இங்கே) இருப்பதெல்லாஞ் சாகட்டும்: பின்னும் இலங்கைப்போரும் ஒழிக: அந்தக்கொடியனுன இந்திரசித்தினுடையகண்களைக் காகங்கள் (கொத்தித்) தின்றபிறகு அங்குநின்றுதிரும்பி என்கருத்தை முடிப்பேனென்று கூறிமுடித்தான், (ஸ்ரீராமன்); (எ - று.)

'வயிரத்தோளாய்'என்றது - அநுமானைநோக்கிய விளியென்னலாம். பி-ம்:—1வானகரஞ், மாநாகஞ். 2வல்விசை. 3நின்றது. (உஅஎரு)

அ௫.—இதுவும் அடுத்த கவியும்-இலட்சுமணன் வார்த்தை:'பரதனை இந்திரசித்தால்வெல்லமுடியாது' எனல்.

அவ்விடத் திளவ லைய பரதனை யமரி 1னார்க்க
2எவ்விடற் குரியான் போன 3விந்திரசித்தே 4யன்று
5தெவ்விடத் தமையின் மும்மை யுலகமுந் 6தீந்த ருவோ
வெவ்விடர்க் கடலின் வைகல் கேளென விளம்ப லுற்றான்.

(இ - ள்.) அப்போது,இளையபெருமாள்,(ஸ்ரீராமனைநோக்கி),—ஐயனே! பரதனைப்போரிலே (பாசம்போன்ற படையினால்)கட்டுவதற்கு, அம்புசெலுத்தற்கு உரியவனாய்ப்போன இந்திரசித்தே யன்று; பகைப்புலத்துப்பொருந்துவதினால்,மூவுலகும் தீந்துவிடாதோ?கொடியதுன்பக்கடலில் தங்கவேண்டா; (யான் கூறுவதைக்)கேள்'என்று(பின்னுஞ்)சொல்லத்தொடங்கினான்;(எ-று.)

இந்திரசித்தேயன்றி, இம்மூவுலகும் எதிர்த்தாலும், பரதனுக்கு முன்னே வலியொழிந்திடு மென்கிறான்.எ விடல்என்பது, எவ்விடல் என்றாயிற்று. பி-ம்:—1வெல்ல. 2எவ்விடர்க்கு. 3இந்திரசித்தை. 4என்னும், என்று. 5தெவ்விடர்க்கிமைப்பின். 6தீய்ந்தருதே. (உஅஎசு)

அ௪. தீக்கொண்ட வஞ்சன் வீசத் திசைமுகன் பாசந் 1தீண்ட
வீக்கொண்டு 2வீழ யானோ 3பரதனும் வெய்ய கூற்றைக்
கூக்கொண்டு குத்துண் டன்னான் குலத்தொடு நிலத்த னாதல்
போய்க்கண்டு கோடி யன்றே யென்றனன் புழுங்கு கின்றான்.

(இ - ள்.) 'தீத்தன்மையைக்கொண்ட வஞ்சனைக்குணமுள்ள இந்திரசித்து வீசியதனால் திசைமுகன் பாசமானது தீண்டினமாத்திரத்தில் மரணத்தையடைந்து வீழ்ந்திடுதற்குப் பரதனும் நானாவனோ? கொடுங்கூற்றத்தைக் கூவிக்கொண்டு(பரதன் படைகொண்டுபொருதலினால்)குத்துண்டு அந்தஇந்திரசித்து சுற்றத்தோடு நிலத்தில் உயிர்துறந்து விழுந்தவனாதலை, நீ போய்க் கண்டுகொள்ளப்போகிறாயன்றோ?'' என்று மனம்புழுங்கினவனாய்க்கூறினான்.

வீழ யானோபரதன்-பிரமாஸ்திரத்தினால் வீழ்த்தப்படுதற்கு என்னைப் போல் பரதன் எளியவ னென்றுநினைத்தீரோ, நினைக்கவேண்டா என்றபடி. பி-ம்:—1தீண்டி. 2வீழ்க. 3பரதனும். (உஅஎஎ)

அரு.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: அயோத்திக்குத் தொடர்ந்துசெல்லுமாறு அனுமான் தன்மீதுஏறிக்கொள்ளும்படி இராமலட்சுமணரை வேண்டுதலைத் தெரிவிக்கும்.

அக்கணத் தனும னின்று னையவென் றோளி 1னாதல்
கைத்துணைத் 2தலத்தே யாத லேறுதிர் 3காற்றுத் தாழ
விக்கணத் தயோத்தி மூதூ 4ரெய்துவெ னிடமுண் டென்னில்
திக்கனைத் தினிலுஞ் செல்வெ னியானேபோய்ப் பகையுந் தீர்வென்.

(இ-ள்.) அப்போர் து நின்றுளுகிய அநுமான் அழகிய என்றோளிலாதல் இரண்டாகிய(என்)கையிலேயாதல் நீவிர் ஏறுமின்;காற்றும் பிற்பட இக்கணத்தே அயோத்தியென்கின்ற பழமையான ஊரை அடைந்தவனுவேன்: அவகாசமிருக்குமாயின்,திக்கெல்லாவற்றிலுஞ்செல்லுவேன்:யானேபோய்ப் பகையையும் ஒழிப்பேன்; (எ - று.)—ஐய - ஸ்ரீராமனைப்பற்றிய விளி யெனினுமாம். பி-ம்:—1ஆக. 2தனுவினேடும், தலத்தேயாக. 3காலந்தாழாது. 4எய்தினன். (உ௭௮)

௭௯. எழுபது வெள்ளத் தோடு மிலங்கையை யிடந்தென் றோண் மேல், 1தழுவுற வைத்தின் றேகென் றுரைத்தியேற் சுமைவெனறக் கோய், பொழுதிறை தாழ்ப்ப 2தென்னே புட்பகம் 3போதன் முன்னங், குழுவொடுங் கொண்டு4போவென் கணத்தொடு குதிப்பென் கூற்றின்.

(இ - ள்.) தகுதியையுடையவனே! எழுபதுவெள்ளஞ்சேனையோடு இலங்கையைத் தோண்டியெடுத்து என்தோளின்மீது பொருந்தவைத்து இன்று செல்லுவாய்'என்று சொல்லுவாயானல், (அவ்வாறே) செய்வேன்: இறைப்பொழுது தாமதிப்பதும் எதற்கு? புட்பகம் போய்ச்சேர்வதற்குமுன்னம் (வானரக்)கூட்டத்துடனே சுமந்துகொண்டுபோய், ஒருநொடிப்போதில் யமனைப்போல அங்குக் குதிப்பேன்; (எ - று.)—இச்செய்யுள் சிலபிரதியில்லை. பி-ம்:—1உழுவுற. 2என்னே. 3போகா.4தோண்மேற்கொணர்கெனிற், தோண்மேற்கணத்தினிற். (உ௭௯)

௮௰. கொல்லவந் தானை நீதி கூறினென் விலக்கிக் கொள்வான், 1சொல்லவுஞ் சொல்லி நின்றேன் கொன்றபின் றுன்ப 2மென்னை, வெல்ல3வுந் தரையின் வீழ்வுற் றுணர்ந்திலன் விரைந்து போனன், இல்லையென் 4றுளதேற் றீயோன் பிழைக்குமோ விழுக்க 5முற்றுன்.

(இ - ள்.) (சீதாபிராட்டியைக்) கொல்லவந்த இந்திரசித்தை விலக்கி(ச்சுவாதீனமாக்கி)க்கொள்ளும்பொருட்டு நீதிகூறக்கருதியவனுய்(ப் பலபேச்சுக்களைச்) சொல்லுதலையுஞ் செய்துநின்றேன்: (அப்படியிருக்கையில்தானே சீதாபிராட்டியை வாளால் அக்கொடியவன் கொன்றிட்டான்):கொன்றபின்பு துன்பமானது என்னை வென்றிட்டதனல் [துன்பம் எனக்கு மிக்குத் தோன்றியதனல்], தரையில் வீழ்ந்து உணர்ச்சியற்றவனுனேன்: (அச்சமயத்தில்) அந்தத்தீயோன் விரைந்துசென்றிட்டான்: இப்படி யில்லாமற்போனல் குற்றமுற்றவனுகிய அவன் எனக்குமுன்னே உயிர்பிழைப்பனே? (எ - று.)

இதனல், இந்திரசித்து சீதையைக் கொன்றபோதே தான் கொல்லாமற்போனமைக்குக் காரணத்தை அநுமான்காட்டியவாறு.பி-ம்:—1சொல்லலும். 2உற்றென். 3வெந்தரையில். 4உளனேல். 5உற்றேன். (உ௮௰)

௮௧. மனத்தின்முன் செல்லு மானம் போனது வழிய தாக
நினைப்பின்மு னயோத்தி 1யெய்தி வருநெறி பார்த்து நிற்பென்
இனிச்சில தாழ்ப்ப 2தென்னே யேறுதி ரிரண்டு தோளும்
புனத்துழாய் மாலை மார்பீர் புட்பகம போதன் முன்னம்.

(இ - ள்.) மனத்தினும் கடிதாகச்செல்லவல்ல புட்பகவிமானம் போன வழியாகவே நினைப்பின்முன் அயோத்தியையடைந்து (அவன்)வருகின்றவழியைப் பார்த்துநிற்பேன், (யான்): இனியும் சிலநேரம் தாமதிப்பது எதற்காக? புனத்தில்விளைகின்ற திருத்துழாய் மாலையையணிந்த மார்பையுடையவரே! புட்பகம் போய்ச்சேர்தற்குமுன்னம் இரண்டுதோளிலும் ஏறுமின் (என்று கூறிமுடித்தனன் அநுமான்): (எ - று.)—பி-ம்:—[1]புக்கு.[2]என்னை.(உஅஅக)

அகூ.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: விபீஷணன் 'சீதையைக் கொன்ற உண்மையையறிந்து நான் சொல்லியபின் மேல்செய்வதை ஆலோசிக்க' என, ஸ்ரீராமன் உடன்படலைக் கூறும்.

[1]ஏறுது மென்று வீர ரெழுதலு மிறைஞ்சி யீண்டுக்
கூறுவ துளது துன்பங் கோளுறக் குலுங்கி யுள்ளந்
[2]தேறுவ தரிது செய்கை [3]மயங்கினன் றிகைத்து நின்றேன்
ஆறின [4]னதனை யைய மாயமென் றயிர்க்கின் றேனால்.

(இ - ள்.) ஏறுவோமென்று ஸ்ரீராமலக்ஷ்மணர் எழுகையில், (விபீஷணன் ஸ்ரீராமனை) வணங்கி(க்கூறுவான்):---ஐயனே! இப்போதுகூறவேண்டுவது ஒன்றுஉள்ளது: துன்பம் (மனத்தைக்)கவரவே,(அம்)மனம் நிலைகலங்கி, தெளிவதுஅரிதாகச் செய்யவேண்டியசெயலில் மயங்கினேனாகித் திகைப்புக்கொண்டுநின்றேன்:(இப்போது)தெளிவுபெற்றேன்; அந்தச்சீதைவெட்டுண்ட செய்கையை மாயமென்று சந்தேகிக்கின்றேன்; (எ-று.)—இச்செய்யுளிலுள்ள 'இறைஞ்சி'என்றது - கக - ஆஞ்செய்யுளிலுள்ள 'விளம்ப' என்ற வினையெச்சத்தோடு தொடரும். இதற்குஎழுவாயும் அக்கவியிலுள்ள 'வீடணன்' என்பதே.பி-ம்:-[1]ஏறுதிரென்ன.[2]தேறுதலருமை.[3]மறந்தனன்.[4] இதனை.(உஅஅஉ)

கூ0. பத்தினி தன்னைத் தீண்டிப் பாதகன் [1]படுத்த போது
முத்திறத் துலகும் வெந்து சாம்பராய் [2]முடியு மன்றே
அத்திற மான தேனு மயோத்திமேற் போன [3]வார்த்தை
சித்திர [4]மிதனை யெல்லாந் [5]தெரியலாஞ் சிறிது போழ்தின்.

(இ - ள்.) பத்தினியாகியசீதையைத் தீண்டிப் பாதகனாகிய இந்திரசித்து கொன்றபோது (சுவர்க்கம் மத்திமம் பாதாளம்என்று) மூவகைப்பட்டஉலகும் வெந்துசாம்பராய் ஒழிந்திடுமன்றோ? (ஒருகால்)அச்செயல் நிகழ்ந்ததென்றாலும் அயோத்திமேற்போனசெயல், விசித்திரமாகவுள்ளது:இதனையெல்லாம் சிறிதுபோதுக்குள் (உண்மை)அறியலாம்; (எ - று.)—தம்மைத்தொந்தரவுபடுத்தும் வானரசேனைகளும் இராமலக்ஷ்மணராகிய நீங்களும் இங்குஇருக்கையில், அவன் அயோத்திக்குச்செல்லுதல், அசம்பாவிதமானசெயலாகுமென்பான்'சித்திரம்' என்கின்றான், விபீஷணன். பி-ம்:—[1]கொன்றபோது, படுத்தபோதின். [2]முற்றும். [3]தன்மை. [4]அதனை.[5]தெரிக்கலாம், தெரிகலாம், தெரிகிலாம். (உஅஅங)

கூக. இமை[1]யிடை யாக யான்[2]போ யேந்திழை யிருக்கை யெய்தி
அமைவுற நோக்கி யுற்ற தறிந்து[3]வந் தறைந்த பின்னர்ச்

சமைவது செய்வ தென்று வீடணன் விளம்பத் தக்கது [ன்.
4அமைகவென் றிராமன் சொன்னா னந்நரத் தவனுஞ் 5சென்று

(இ-ள்.) இமைப்பொழுதிற்குள்ளாகயான் போய்ச் சீதாபிராட்டியின்இருப்பிடத்தையடைந்து பொருத்தமுறக்கண்டு நிகழ்ந்ததையறிந்துவந்து சொன்னபின்பு, தோன்றுவது செய்யத்தக்கது என்று விபீஷணன்சொல்ல, '(நீ சொல்லியது) தக்கதே: அங்ஙனமேயாகட்டும்' என்று ஸ்ரீராமன் சொன்னான்; அந்த விபீஷணனும் வானவழியாகச்சென்றான்; (எ-று.)--பி-ம்:—1இடைப்பொழுதின். 2சென்று. 3பின். 4அமைவது. 5போனான். (உஅஅச)

கூஉ.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: விபீஷணன் வண்டினுருவங் கொண்டுசென்று சீதையைக் காணுநலந் தெரிவிக்கும்.

வண்டின துருவங் கொண்டான் 1மானவன் மனத்திற் போனான்
தண்டலை யிருக்கை தன்னைப் பொருக்கெனச் சார்ந்து தானே
கண்டன னென்ப மன்னோ கண்களாற் 2கருத்தா லாவி
உண்டிலை யென்னச் 3செய்த வோவிய மொக்கின் றாளை.

(இ-ள்.) வண்டினுருவத்தைக்கொண்டவனாய், ஸ்ரீராமனுடைய மனத்தைப்போற்சென்று அசோகவனிகையிற் சீதையினிருப்பிடத்தை விரைவாகச் சேர்ந்து, மனத்தாற்படைத்த சித்திரப்பதுமைபோன்றிருக்கின்ற சீதாபிராட்டியை 'ஆவி உண்டோ, இல்லையோ?' என்னுமாறிருக்கத் தானே நேரேகண்களாற்கண்டான், (விபீஷணன்); (எ - று.)—மன் ஓ-அசைகள்.

சீதையின்வடிவுக்கு ஓவியன்கையினாலெழுதிய சித்திரப்பதுமை ஒப்பாகாதென்பார் 'கருத்தினாற்செய்த ஓவியம்'என்றார். பேரழகினாலன்றித் துயரமிகுதியால் திகைத்து அசைவற்றுநிற்கின்றதனாலும் ஓவியம் சீதைக்குஉவமையாகும். பி-ம்:—1வானவன். 2கருத்தில். 3நின்ற, சாய்ந்த. (உஅஅரு)

கூங. தீர்ப்பது துன்ப மியானென் னுயிரொடென் 1றுணர்ந்த சிந்தை
2பேர்ப்பன செஞ்சொ லாளத் திரிசடை பேசப் 3பேர்ந்தாள்
கார்ப்பெரு மேகம் வந்து கடையுகங் 4கலந்த தென்ன
ஆர்ப்பொலி யமுத மாக வாருயி ராற்றி னாளை.

(இ - ள்.) 'யான்(என்) துன்பத்தைப் போக்குவது என்னுயிரோடுதான்' என்று எண்ணுகின்ற சிந்தையை மாற்றுவனவான செவ்வியசொற்களையுடையளான அந்தத்திரிசடை பேசுவதனால் (துயரம்)நீங்கப்பெற்றவளாகி, கருநிறமுள்ள பெரியமேகம் வந்து யுகாந்தகாலத்திற் கலந்ததொப்ப (வானரர்களுயிர்பெற்றெழுந்து ஆரவாரிக்கின்ற) ஆரவாரவொலி அமிழ்தம்போன்றிருக்க அரியஉயிரை பாற்றினவளை,—(எ - று.) 'கண்டனன்'என்று கீழ்க்கவியோடு தொடரும்.

ஸ்ரீ விபீஷணன் சீதாபிராட்டியைக் கண்டபோது அவளுடையநிலை, இச்செய்யுளிற் கூறப்பட்டது. பி - ம்:—1உணர்ந்து. 2போர்ப்பனசெஞ்சொலன்னை, பேர்ப்பதுமின்சொலன்னை. 3போந்தாள்என்றும்படிக்கலாம். 4கலந்தவந்த, கலந்தவன்ன. (உஅஅசு)

கூச.—வஞ்சனையென்பதுணர்ந்த விபீஷணன், நிகும்பலைநோக்கி அரக்கர்சேனை செல்வதைக் காணுதல்.

வஞ்சனை யென்ப துன்னி வானுய ருவகை வைகும்
நெஞ்சின னாகி யுள்ளந் தள்ளுற லொழிந்து நின்றான்
வெஞ்சிலை மைந்தன் போனா னிகும்பலை வேள்வி யானென்று
எஞ்சலி [1]லரக்கர் சேனை யெழுந்தெழுந் தேகக் கண்டான்.

(இ - ள்.) (சீதையைவதைத்தது) மாயச்செயலென்பதையறிந்து மிகவும் ஓங்கிய மகிழ்ச்சிதங்கிய நெஞ்சையுடையவனாகி மனத்துயரம் நீங்கப்பெற்றவனான விபீஷணன், கொடியசிலையையுடையனான இந்திரசித்து நிகும்பலையில் வேள்விசெய்பவனாய்ப்போனா னென்று எஞ்சுதலில்லாத [மிகப்பல] அரக்கர்சேனை எழுந்தெழுந்துசெல்வதையுங் கண்டான்; (எ - று.)—தான் நிகும்பலையிற்போய் வேள்விசெய்தால் அப்போது மாற்றாரோடு போர்தரத்தக்க வீரர் இலங்கையிலில்லை யென்ற காரணத்தினாலேயே இவ்வாறு இந்திரசித்து மாயச்செயல்செய்துபோயினானென்பது: அன்றியும், ஸ்ரீராமனுடைய கண்ணெதிரில் மாயச்செயல் செய்யத்தொடங்கினால், அப்பெருமான் தன்மீது பெருவெகுளியினனாயிருந்ததனால் அவன்கண்முன்னே நிற்கும்போதே எங்கேளரித்துவிடுவானோஎன்ற அச்சத்தினால் இந்திரசித்து தான் அங்ஙனஞ் செய்யவில்லையென்பர். பி-ம்:—1அரக்கன். (உஅஎ)

கூரு.—இந்திரசித்தின்சூழ்ச்சியைத் தெரிவிக்க, இராமபிரானிடத்து விபீஷணன் மீளுதல்.

வேள்விக்கு வேண்டற் பால [1]கலப்பையும் விறகு நெய்யும்
[2]வாழ்விக்குந் தாழ்வி [3]லென்னும் வானவர் மறுக்கங் கண்டான்
சூழ்வித்த வண்ண மீதோ நன்றெனத் துணிவு கொண்டான்
[4]தாழ்வித்த [5]முடியன் வீரன் றாமரைச் சரணந் தாழ்ந்தான்.

(இ - ள்.) 'வேள்விக்குவேண்டியனவான விறகும் நெய்யும் மற்றைக் கருவிகளும், (நம்மைத்)தாழ்விலே வாழச்செய்யும்' என்றுகருதுகின்ற வானவரின் கலக்கத்தைக்கண்டவனான ஸ்ரீவிபீஷணன், 'ஆராய்ந்துசெய்த வகையான இதுவோ மிகநன்று!!' என்று (அவ்விந்திரசித்தின்செயலை) நிச்சயித்தவனாய், தாழ்த்தியமுடியையுடையவனாகி ஸ்ரீராமனுடைய தாமரைச் சரணத்தில் வணங்கினான்; (எ று.)—இந்திரசித்து இப்போது தொடங்கிய வேள்வியைமுடித்தானானால் அவனே வெல்வா னென்ற காரணம்பற்றி,வானவர் 'வேள்விக்கு........வாழ்விக்கும்'என்றுகருதி மறுகினரென்க. கலப்பை-(ஒற்றற்குஉரிய)கருவிகள். பி-ம்:—1தருப்பையும். 2மாள்விக்கும். 3அன்ன. 4தாழ்விக்கும். 5முடிய. (உஅஅ)

கூசா.—விபீஷணன் இந்திரசித்தின்சூழ்ச்சியைத் தெரிவித்தல்.

இருந்தன டேவி யானே யெதிர்ந்தன [1]னென்க ணார
அருந்ததி கற்பி னாளுக் கழிவுண்டோ வரக்க னம்மை

வருந்திட மாயஞ் செய்து நிகும்பலை மருங்கு புக்கான்
முருங்கழல் வேள்வி முற்றி முதலற [2]முடிக்க மூண்டான்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தேவி (இனிது) இருந்தனள்: என்கண்நிரம்ப யானே எதிரிற் கண்டேன்: அருந்ததியையொத்த கற்புடையாளுக்கு அழிவு நேருமோ? அரக்கன் நம்மை வருந்தும்படி மாயஞ்செய்து நிகும்பலையினிடத்துப் புக்கான்: அழிக்கவல்ல அழலிற் செய்யப்படும் வேள்வியை முடித்து (நம்மை) அடியோடு அறும்படி அழிக்கமூண்டுள்ளான்; (எ-று.)--பி-ம்:—[1]கண்களானம்.[2]முடிக்கை.

கூஎ.—அதுகேட்டு வானரர்யாவரும் மகிழ்தல்.

என்றலு முலக மேழு [1]மேழுமாத் தீவு மெல்லை
ஒன்றிய கடல்க ளேழு [2]மொருங்கெழுந் தார்க்கு மோதை
அன்றெனை வாகு மென்ன வமரரு மயிர்க்க வார்த்துக்
குன்றின [3]மிடியத் துள்ளி யாடின குரக்கின் [4]கூட்டம்.

(இ - ள்.) என்று விபீஷணன் சொன்னவுடனே, 'ஏழுலோகங்களும் இந்தஉலகத்து ஏழுபெரியதீவுகளும் எல்லையிற்பொருந்திய ஏழுகடல்களும் ஒருங்கெழுந்துஆர்க்கின்ற ஓதை (இது)அன்று'என்னவும்,'(இது அவ்வாறான ஓதையே)ஆகும்'என்னவும் தேவர்களும் ஐயுறும்படி ஆரவாரித்து, குன்றினமும் இடியும்படிகுரங்கின்கூட்டம் துள்ளியாடின; (எ - று.)—ஏழுதீவுகள் - நாவல் இறலி குசை கிரௌஞ்சம் புட்கரம் தெங்கு கமுகுஎன்பன. பி-ம்:--- [1]எத்தினைவெல்லையாக. [2]உடன். [3]மடிய. [4]ஈட்டம். சிலபிரதியில் "என்றலு மிறைஞ்சி" (நிகும்பலையாகப்படலம்-2)என்ற செய்யுளோடு மாயாசீதைப்படலம் முடியும்.

"ஸ்ரீவான்மீகத்தில் இச்சரிதம் கூறியுள்ளவிதம் வருமாறு:—இராமன் தன்னைக்கொல்ல உபாயஞ் சிந்திப்பதை யுணர்ந்த இந்திரசித்து இலங்கையிற் புகுந்து கும்பகர்ணனுடையிறந்ததை நினைத்துக் கண்கள் சிவக்கச்சிவந்து இராமலக்ஷ்மணர் துயரத்தினால் போர்முயற்சியை விட்டிருக்குமாறு மாயையை வெளியிடக்கருதி அரக்கச்சேனைசூழ இலங்கையின் மேலைவாயிலாற் புறப்பட்டவனாகி, மாயையினாற் சீதையைப்போன்ற உருவத்தைப் படைத்து, வானரர்கட்கு எதிராகப் போக,அநுமானோடு மற்றை வானரர்களும் கற்களையும் மலைச்சிகரங்களையும் ஏந்திச்சென்றனர். அப்போது சீதை மகிழ்ச்சியற்ற உருவத்துடன் இந்திரசித்தின் தேரி லிருப்பதுகண்டு, வானரப்படையோடு அநுமான் அவனை யணுகினான். வானரப்படை நெருங்குவதுகண்ட இந்திரசித்து, 'ராம! ராம!' என்று சீதைகதறிக் கொண்டிருக்கும்போதே வாளை யுருவிச் சீதையின் தலையைப் பிடித்துக்கொண்டான். அநுமான் கண்ணீர் ஆறாய்ப் பெருகக் குற்றமற்ற பெண்ணைக் கொலைசெய்வதைச்சுட்டி இந்திரசித்தைப் பலபடியாகத் திட்டினன். இந்திரசித்து, 'நீங்களெல்லோரும் எவள்பொருட்டாக இங்கு வந்தீர்களோ, அவளையே கொன்றுவிடுகின்றேன். பின்பு ராமா

தியரான உங்களையெல்லாம் கொல்லுவேன். குரங்கே! பகைவர்க்கு வருத்தத்தை விளைப்பது எதுவோ, அது அவசியம் செய்யத்தக்கது: ஆகவே, சீதையைக் கொல்வது தக்கதே' என்று சொல்லி, அந்த மாயச்சீதையை அவள் புலம்பிக் கொண்டிருக்கும்போதே வெட்டி வீழ்த்திக் கர்ச்சித்தான். அது கண்டு அஞ்சியோடப் பார்த்த வானரரைத் தைரியமூட்டி முதலிற் பொருது மாற்றாரான அரக்கரைத் தடுத்துப் பின் உற்சாகங்குன்றி, அநுமான் 'எவள் பொருட்டுப்போர் நேர்ந்ததோ, அவளோ இறந்திட்டாள். இனி நாம் பொருது என்ன பயன்? இராமபிரானிடத்தும், சுக்கிரீவனிடத்தும் இச்செய்தியையறிவித்து அவர்கள் சொன்னபடி செய்வோம்' என்று சேனையுடன் மெல்லத் திரும்பினான். அதுகண்டு இந்திரசித்து தான் ஓமஞ்செய்ய விரும்பி நிகும்பிலையென்ற தேவாலயத்திற்குச் சென்று, அங்கு முறைப்படி ஓமஞ்செய்யலானான். இது நிற்க.

ஸ்ரீராமன் ராக்ஷஸ வானரர்கட்குநிகழும்போரின் பேரொலியைக் கேட்டு, திடீரெனவந்த சாம்பவானை நோக்கி 'அநுமான் பெரும்போர் புரிவதாகத் தோன்றுகின்றது. அவனுக்கு உதவ, உன் சேனையுடன் ஆங்குச்செல்வாய்' என்றான். சாம்பவான் அநுமான் இருக்குமிடம் நோக்கிச்செல்ல, இடைவழியிற்சாம்பவான் அநுமானைச் சந்திக்க, யாவரும் ஸ்ரீராமனிடம் திரும்பினார்கள். ஸ்ரீராமனைச் சேர்ந்ததும், அநுமான், அப்பிரானிடத்துச் சீதையின் செய்தியைக் கூறினான். அதுகேட்டதும், ஸ்ரீராமன் துயரமிகுதியால் மூர்ச்சித்து வேரற்ற மரம்போல் வீழ்ந்தனன். அதுகண்டு வானரர்கள் பலவகைச் சைத்தியோபசாரங்களினால் அப்பிரானைத் தேற்றலானார்கள். இலட்சுமணன் மிகவும் வருந்தி அப்பிரானைத் தன் கைகளால் அணைத்துப் பலபடி சொல்லித்தேற்றி, 'உனக்கு மாற்றார் வருத்தத்தை யுண்டாக்கியதனால், இலங்கையை இதோ தொலைத்து விடுகிறேன்' என்றனன். இவ்வண்ணம் தேற்றிக்கொண்டிருக்கையில், விபீஷணன் சேனைகளைத் தம்தமது தொழிலைச்செய்யுமாறு ஏற்பாடுசெய்துவிட்டு, அங்குவந்துசேர்ந்து யாவரும் கண்ணீருடனிருப்பதையும் இலட்சுமணன் துடைமீது புலம்பியவண்ணம் ஸ்ரீராமன் படுத்திருப்பதையும் கண்டு 'இதுவென்?' என்றுவினவ, இலட்சுமணன் செய்தியைச் சுருக்கமாகக் கூறினான். அவன் சொல்லும்போதே விபீஷணன் செய்தி தெரிந்தவனாகையால், 'இது எல்லாம் மாயச்செயல். சீதையை விட்டிடவும் விரும்பாத இராவணன், அவளைக் கொல்லுமாறு விடுவனோ? இந்திரசித்து வானரர்களையேமாற்றிவிட்டு நிகும்பலைக்குப் போயுள்ளான்: அவன் வேள்வியை முற்றுமுன் அவனைப் போருக்கு அழைத்தால் பிரமனது வரத்தின்படி கொல்லத்தக்கவனாவான். காலதாமதமின்றி என்னோடு இலட்சுமணனை அனுப்புக. வேள்வியை நிறைவேற்றிவிட்டானானால் தேவர்களாலும் அவனை வெல்லமுடியாது' என்றான் என்பது.

மாயாசீதைப்படலம் முற்றிற்று.

---

# உ௬-ஆவது நிகும்பலையாகப்படலம்.

(மாயாசீதையை வாளால் வெட்டிப் போக்குக் காட்டிய இந்திரசித்து தவறாமல் வெற்றிபெறவேணு மென்ற கருத்தினால்) நிகும்பிலையென்ற இடத்து யாகஞ்செய்ய, (அச்செய்தியை யுணர்ந்த விபீஷணனால் அறிவிக்கப்பெற்ற ஸ்ரீராமன் அனுமதியினால் ஆங்கு அவ்விபீஷணனோடும் வானரசைனியத்தோடும் இலக்குமணன் சென்று பொருது அதனை) முடிக்கவொட்டாது தடுத்திட்டதைக் கூறும் படல மென்பது, பொருள். இது, நிகும்பலைப்படலம் என்றும் வழங்குகின்றது.

ஸ்ரீராமபிரான் 'சீதையைக் கொன்று அயோத்திமீது இந்திரசித்து சென்றிட்டானோ?' என்றுகொண்ட ஐயந்தீர்ந்து விபீஷணனை இறுகத் தழுவிப் புகழ்ந்தானாக, விபீஷணன் இந்திரசித்து நிகும்பிலையில் யாகத்தை முடிக்குமுன் அதனை யழிக்குமாறு இளையபெருமாளைத் தன்னோடு அனுப்புமாறு வணங்கிவேண்ட, ஸ்ரீராமன் இளையபெருமாளுக்கு அஸ்திரங்களைத் தொடுக்கும் விஷயத்தில் உபதேசித்து, வில் கவசம் அம்புக்கூடு என்பன அளித்து உறுதிகள் சொல்லி விடைதர, இலட்சுமணன் விடைபெற்றுக்கொண்டு நிகும்பிலை சார்ந்து, சக்கரவியூகமாக வேள்விக்குப் பாதுகாவலாக இருந்த ஒலியற்ற அரக்கப் பெருஞ்சேனையினைக் காண்கையில் வானரர் அச்சேனையைக் கண்டு ஆரவாரிக்க, அரக்கரும் எதிரே யாரவாரிக்க, இருவருக்கும் பெரும்போர் விளைந்தது. இலக்குமணனும் அச்சேனையிற் பொருதுகொண்டிருந்தனன். விபீஷணன் 'யாகத்தையொழிக்காமல் சேனையின்முன்னின்று பொருது பொழுதுபோக்குவது தக்கதன்று' என்ன, இலட்சுமணன் புகுந்து பொருது பெருவாரியாகக் கொன்று வீழ்த்தவே, யாகப்பொருள்கள் அழியலாயின. வேள்வியும் பாதுகாவலான பெரும்படையும் அழிந்ததுகண்டு இந்திரசித்து முகப்பொலிவுகுன்றி மனம் வருந்தி நின்றான். அப்போது அநுமான் இந்திரசித்தையணுகிப் பலபடி யேசினான். இந்திரசித்து பதிலாகச் சிலகூறி யுத்தசன்னத்தனாய் அனுமானோடு பொருது அவனை மெலிவுறச்செய்ய, அங்கதன் முதலியோர் பொருமாறுவர, அவ்விந்திரசித்து அவர்களை யிகழ்ந்து இலக்குமணனைக் குறித்துச் செல்ல, அப்போது வானரர் கல் மரம் முதலியவற்றை யெறிய, அரக்கன் அவற்றைச் சிதைத்து வானரர்களையும் வலி ஓயுமாறுசெய்தான். அப்போது விபீஷணன் இலக்குமணனைநோக்கி 'நமது வானரப்படை குலைகின்றதே! இந்திரசித்தைப் பிழைப்புறாமல் விரைந்து கிட்டிப் பொருக' என்று விண்ணப்பிக்க, அநுமான் தோளின்மீது ஏறிக்கொண்டு இலக்குமணன் இந்திரசித்தைக் கிட்ட, இருவர்க்கும் கடும்போர் நிகழ்ந்தது. அப்போரில் இந்திரசித்து மெலிய, அதுகண்ட விபீஷணன் அச்செய்தியை இலக்குமணனிடம் விண்ணப்பித்தான். இந்திரசித்து கடுங்கோபங்கொண்டு வாயவ்யாஸ்திரம் முதலிய அஸ்திரங்களைத் தொடுக்க, அவைகளை அந்த அஸ்திரங்களாலேயே இலக்குமணன் குலைத்தான். அப்பால் இதற்குத் தப்பாமல் இறந்தொழிவாய்' என்று பிரமாஸ்திரத்தை அரக்கன் தொடுக்க, இளையபெரு

மாளும் அந்த அஸ்திரத்தையே யெடுத்து 'உலகத்தையழிக்காமல் எதிரிவிடுத்த அஸ்திரத்தையே அழிப்பாய்' என்றுசொல்லி விடுத்தான். இலக்குமணனது அருளைக் கண்டு தேவர்கள் வியந்துகொண்டாடினர். அப்போது தேவேந்திரன் அவதார ரஹஸ்யத்தைத் தேவர்கட்கு நினைப்பூட்டினான். தேவர்களெல்லாம் 'அறிந்தும், மாயையால் மறந்திடுகின்றோம்: இப்போது உண்மையறிந்தோம்' என்றுசொல்லி இலக்குமணனைத் தொழுதனர். பிரமாஸ்திரந் தணிந்தது. பிறகு இந்திரசித்து நாராயணாஸ்திரத்தைத் தொடுக்க, யாவரும் அஞ்சிக் கைகூப்பிவணங்க, இலக்குமணன் தன்னை நாராயணனாகப்பாவித்து நிற்க, அது இவனை வலங்கொண்டு வான்வழியே சென்றது. பின்னர்ப் பாசுபதாஸ்திரத்தை அரக்கன் தொடுக்க, அதனையும் அந்த அஸ்திரத்தினாலேயே இலக்குமணன் தடுத்திட்டான். தெய்வப்படைகள் பழுதுபடவும் இந்திரசித்து சலிப்பில்லாமல் வில்வித்தையில் வெல்வோமென்று அம்புகளைப் பொழிய, வானரர்கள் ஓயாமல் மலைகளைப் பொழிய, இளையபெருமாள் இனி அரக்கர் பிழையாரென்னுமாறு நூறுகோடி அம்புகளைத் தொடுத்தான். அப்போது இந்திரசித்து இலக்குமணனருகேயிருந்த தன் சிறியதந்தையைக் கண்டு இகழ்ந்து பலபடி பேசினான். விபீஷணன் சீற்றங்கொள்ளாமல் 'தருமந்தவறாமல் நடக்கவேண்டுவது கடமையேயன்றிப் பாவவழியில் நடப்பது தகுதியன்று. அதுவே எனக்குச் சிறப்பு' என்று விரிவாகக் கூறினான். பின்பு இந்திரசித்து 'உன் சிறப்பெல்லாம் என்கையம்பால் தீரும்' என்று அர்த்தசந்திரபாணத்தை விபீஷணன்மீது விடுக்க, அதனை இலக்குமணன் ஒழித்தருள, வேற்படையை அரக்கன் விட்டானாக, அதனையும் இளையபெருமாள் கணையால் வெட்டிவீழ்த்தினார். அப்போது விபீஷணன் தனது கதாயுதத்தினால் இந்திரசித்தின் சாரதியையும் தேர்க்குதிரைகளையும் கொன்று தேரையும் சிதிலமாக்கினான். அத்தேரிலிருந்தபடியே இந்திரசித்து, விபீஷணன் இளையபெருமாள் வானரர் என்ற எல்லார்மீதும் அம்புகளைப் பொழிந்து அட்டகாசஞ்செய்து, இனி இதிலிருந்து பொரமுடியாதென்று கருதிக் கண்ணிமைப்போதிற்குள் வானத்தெழுந்து மறைந்து இராவணனருகிற் சேர்ந்தா னென்பது இப்படலத்திற் கூறிய பொருள்.

ச.—ஸ்ரீராமன் விபீஷணனைத் தழுவிக் கொண்டாடுதல்.

வீரனு மையந் தீர்ந்தான் வீடணன் றன்னை மெய்யோடு
ஆர்வமு முயிரு மொன்ற வழுந்துறத் தழுவி யைய
தீர்வது பொருளோ துன்ப [1]நீயுளை தெய்வ முண்டு
மாருதி [2]யுளனுஞ் செய்த தவமுண்டு [3]வலியு முண்டால்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ-ள்.) ஸ்ரீராமனும் ஐயம் நீங்கப்பெற்று, விபீஷணனை(த் தன்) உடலோடு அன்புடனே உயிரொன்றாக அழுத்தமாகத்தழுவி, (அவ்விபீஷணனை நோக்கி) 'ஐயனே! (யான்)துன்பம் நீங்குவது ஒருபெரியகாரியமோ? (அன்று: ஏனெனின்),—நீ உள்ளாய்: தெய்வ முளது: மாருதி உள்ளான்: நாம் செய்த தவமு முண்டு: வலியும் உள்ளதே' (எ-று.)—என்று ஸ்ரீராமன் கொண்டாடிக் கூறினான். பி-ம்:—[1]உண்டு. [2]உண்டுநாஞ்செய். [3]மறையும். (உஅகூக)

உ.—விபீஷணன் இந்திரசித்தின்யாகத்தைத்தடுக்கும்படி இலக்குமணனையனுப்புமாறு ஸ்ரீராமனை வேண்டுதல்.

என்றலு மிறைஞ்சி யாக முற்றுமே [1]லியாரும் வெல்லார்
வென்றியு மரக்கர் [2]மாடே விடையரு ளிளவலோடுஞ்
சென்றவ னுவியுண்டு வேள்வியுஞ் [3]சிதைப்ப னென்றான்
நன்றது புரிதி ரென்று நாயக னவில்வ தானான்.

(இ-ள்.) என்றுகூறியவுடனே, (ஸ்ரீவிபீஷணன் இராமபிரானை) வணங்கி, '(இந்திரசித்துதொடங்கும்) யாகம் முடிவுபெறுமேல், யாரும் அவனை வெல்லமாட்டார்: ஜயமும் அரக்கரிடமேயாம்: (ஆதலால்), இளவலுடனே சென்றுஅவ்விந்திரசித்தின்ஆவியையொழித்து(அவன்தொடங்கிய)யாகத்தையும்அழிப்பேன்: விடையருள்வாய்' என்று வேண்டினான்: 'அது நல்லது: அவ்வாறேசெய்மின்'என்று ஸ்ரீராமன் (சில) சொல்லலானான்; (எ-று.)—இராமபிரான் சொல்வனவற்றை மேற்கவிகளிற் காண்க. பி-ம்:—[1]ஆரும்.[2]மேற்றே [3]சிதைக்க. (உஅகூஉ)

௩.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஸ்ரீராமன் இலக்குமணனைத் தழுவிக்கொண்டு, படைக்கலம்விடுவதுகுறித்துச் சிலஉபதேசித்தலைத் தெரிவிக்கும்.

தம்பியைத் தழுவி [1]யையன் றமரைத் தவிசின் மேலான்
வெம்படை தொடுக்கு மாயின் [2]விலக்கும தன்றி வீர
அம்புநீ [3]துரப்பா யல்லை யனையது [4]துரந்த காலை
உம்பரு முலகு மெல்லாம் [5]விளியுமஃ தொழிதி யென்றான்.

(இ-ள்.) ஸ்ரீராமன்,—இளையபெருமாளைத் தழுவி,'வீரனே! (பகைவன்) பிரமனதுகொடியஅஸ்திரத்தைத் தொடுப்பனாயின், (அதை) விலக்குவதன்றி, நீயே அந்தப்படையைத் தொடுத்துவிடாதே; அந்தப்படையைத் தொடுத்துவிட்டகாலத்து மேலுலகமும் இவ்வுலகமுமெல்லாம் இறந்துபடும்: ஆதலால், அதனை ஒழிந்திடுவாய்' என்றுகூறினான்; (எ - று.)

இந்திரசித்து பிரமாஸ்திரத்தைத் தொடுப்பானாயின், அதனைவிலக்கும் பொருட்டாக நீயும் பிரமாஸ்திரத்தைத்தொடுக்கலாமே யன்றி, மற்றைவேளையில் முற்பட்டு நீ பிரமாஸ்திரத்தைத் தொடுத்துப் பிரயோகிக்கவேண்டா என்று உபதேசித்தவாறு. [2]விலக்குவான்பொருட்டாலந்த என்ற பாடத்திற்கு—விலக்குவான்பொருட்டால் - விலக்கும்பொருட்டாக, அந்தஅம்பு - அந்தப்பிரமாஸ்திரத்தை, நீ துரப்பாய்—:அல்லை-அங்ஙனல்லாமல் [பகைவன் பிரமாஸ்திரத்தைவிடாதபோது], துரந்தகாலை - தொடுத்தாயேயானால் அப்போது எனப் பொருள்காண்க. பி-ம்:—[1]ஐய. [2]விலக்குவதன்றிவெய்தின். [3]தொடுப்பாய். [4]நடந்த. [5]விளியுமஃதொழிநீ, முடியுறத்தொழுதி. (உஅகூ௩)

ச. முக்கணான் படையு மாழி [1]முதலவன் படையு [2]முன்னின் று
ஒக்கவே விடுமே விட்டா [3]லவற்றையு மவற்றி னேயத்
தக்கவா றியற்றி மற்றுன் சிலைவலித் தருக்கி னாலே
புக்கவ னுவி[4]கொண்டு [5]போதுதி [6]புகழின் மிக்கோய்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) புகழினால்மிக்கவனே! மூன்றுகண்களையுடையனான சிவபிரானது அஸ்திரமும் [பாசுபதாஸ்திரமும்] சக்கரப்படையையுடைய முதற்கடவுளினது அஸ்திரமும் [நாராயணாஸ்திரமும்] முன்னேநின்று (யாவும் அழிவனவாக இந்திரசித்து) ஒருசேரவிடக்கூடும்: அங்ஙனம்விட்டால், அவ்வஸ்திரங்களையும் அவற்றாலேயே ஓயுமாறு தகுந்தவகையாகப் பிரயோகித்து, பின்பு உன்னுடைய வில்வலியாலாகியதிறமையினாற்(போரிற்)புகுந்த(அந்த) இந்திரசித்தினுடையஆவியைக் கவர்ந்துகொண்டுபோவாய்; (எ - று.)

பாசுபதாஸ்திர நாராயணாஸ்திரங்களையும் அந்தஇந்திரசித்து விடக்கூடுமாதலால், அவற்றைவிட்டாலும், பிரமாஸ்திரத்தைப்போலவே அந்தஅஸ்திரங்களை நீக்குவதற்காக அந்தஅஸ்திரங்களைப் பிரயோகி: அவன் அவ்வாறான அஸ்திரங்களைப் பிரயோகியாமலிருப்பின், நீ அவனைக்கொல்லுமாறு அவ்வாறானஅஸ்திரங்களைப் பிரயோகிக்கவேண்டா: உன்வில்வலிமையினாலேயே அவனைக் கொல்வா யென்று ஸ்ரீராமன் கூறுகின்றனனென்க.பி-ம்:—1முதலவ. 2முன்னி. 3அவற்றினாலவற்றையோய்த்து, அவற்றையுமவற்றாற்றள்ளி. 4உண்டு. 5போதாநீ. 6புகழுமலிந்தே. (உஅகூச)

ரு. வல்லன மாய [1]விஞ்சை வகுத்தன வறிந்து மாளக்
கல்லுதி [2]தரும மென்னுங் கண்ணகன் கருத்தைக் கண்டு
[3]பல்பெரும் போருஞ் செய்து [4]வருந்தின வற்றம் பார்த்துக்
கொல்லுதி [5]யமரர் தங்கள் [6]கூற்றினைக் [7]கூற்ற மொப்பாய்.

(இ - ள்.) (பகைவர்க்கு) யமன்போன்றவனே! (அவ்விந்திரசித்து தனக்குக்) கைவந்தனவான மாயவித்தைகள்செய்தவற்றையறிந்து (அவை) ஒழியத் தருமமென்கின்ற கண் பரந்துள்ள கருத்தைப் பிரதியட்சீகரித்துப் பேர்த்துத்தள்ளுவாய்: (எதிரி)பலபெரும்போரைச்செய்து வருந்தினசமயம்பார்த்து அமரர்க்குக்கூற்றமாகவுள்ள அவனை யொழிப்பாய்; (எ - று.)—பி-ம்:—1விச்சை.2கருமமென்னுங்கருமங்கள்மனத்திற்கொண்டாய்,...கருமங்கள் கருத்திற்கொண்டோய், தருமமென்னுங்கன்னகங்கருத்திற்கொண்டாய். 3பல்பல. 4வருந்தலே. 5சீர்மைத்தாக. 6என்றனன், எண்ணின்ற, மேனின்ற. 7குற்றமாறாய், குற்றமற்றான். (உஅகூரு)

சு. பதைத்தவன் வெம்மை [1]யோடிப் பல்பெரும் பகழி மாரி
[2]விதைப்பன விதையா நின்று [3]விலக்கினை மெலிவு [4]மிக்கால்
[5]உதைத்தவன் சிலையின் வாளி மருமத்தைக் [6]கருதி யோட்டி
வதைத்தொழில் புரிதி சாப நூன்னெறி மறப்பி லாதாய்.

(இ - ள்.) வில்நூலின்முறையை மறவாதவனே! (இந்திரசித்து) பதைப்புக்கொண்டவனாய் உக்கிரம்மிகுந்து மிக்கபல பகழிமாரி விதைப்பவற்றை (நீயும் பாணங்களை) விதையாநின்று விலக்கினவனாய், (அவனுக்கு) மெலிவு மிக்கால் (அப்போது) உதைந்த வலிய சிலையினின்று வாளியை (அவனது) மருமஸ்தானத்தைநோக்கிச்செலுத்தி வதைத்தொழிலைப் புரிவாய்; (எ - று.)

மருமம் - உயிர்நிலை. மெலிவுமிக்கால்-உனக்குமெலிவுமிக்கால் என்றும், வாளியுதைத்த வல்சிலையினது, மருமத்தை - நடுவிடத்தை, கருதி-குறியாக வைத்து, ஓட்டி - அம்பைச்செலுத்தி (அந்தவில்லையொடித்திட்டு) என்றும் உரைகூறுதலும் உண்டு. பி - ம்:—[1]ஆடி. [2]விதைத்தவன். [3]விலக்கினும். விலக்குதி. [4]மீதால். [5]உதைப்பன. [6]கிழியவோட்டி, கிழியவோடி, கருதியோடி,

எ. தொடுப்பதன் முன்னம் வாளி தொடுத்தவை துறைகடோறும்
தடுப்பன தடுத்தி [1]யெண்ணங் குறிப்பினு [2]லுணர்ந்து தக்க
கடுப்பினு [3]மளவிலாத கதியினுங் கணைகள் [4]காற்றின்
விடுப்பன வவற்றை நோக்கி விடுதியால் [5]விரகின் மிக்காய்.

(இ - ள்.) தந்திரம்மிக்கவனே! (எதிரி)தொடுப்பதற்குமுன்னமே [தொடுத்தவளவில்தானே] தொடுத்தனவாகிய அம்புகளைத் தடுத்தற்குஉரிய வழியிலெல்லாம்தடுத்தற்குரியவற்றைத் தடுப்பாய்: (பகைவனது)எண்ணத்தைக் குறிப்பினாலறிந்து, தக்கவேகத்தோடும் அளவிடமுடியாத பெருவிரைவினோடும் காற்றைப்போற் கணைகளை (எதிரிவிடுத்தால்) விடுப்பனவாகிய அவைகளைக் கவனித்து (அவை தணியும்படி மாற்றுக்கணைகளை) விடுவாய்; (எ-று.)—கடுப்புஎன்றது-ஒருஅம்பைச்செலுத்தியபின் மற்றோரம்பைச்செலுத்துதற்கு உரியகாலம் சொற்பமாம்படி மேன்மேல்விடும் வேகம். கதிஎன்றது-விடுத்தகணை விரைந்துசெல்லுகை. பி-ம்:—[1]எண்ணும், எண்ணி. [2]உணரத் தக்க. [3]விளம்புமாற்றற்கதியினும்,விளைவுமாறக்கதியெனும். [4]ஆற்றின். [5]விரகிலாதாய், விரைவிலாதாய். (உஅகஎ)

அ.—இராமபிரான் வைஷ்ணவவில்லைப் பெற்றுக்கொள்வாயேனல்.

என்பன [1]முதலு பாய மியாவையு மியம்பி [2]யேற்ற
முன்பனை நோக்கி யைய மூவகை யுலகுந் தானாய்த்
தன்பெருந் தன்மை தானு மறிகிலா வொருவன் றாங்கும்
வன்பெருஞ் சிலை[3]யி தாகும் [4]வாங்குதி வலமுங் [5]கொள்வாய்.

(இ - ள்.) என்பனமுதல் உபாயம் எவற்றையும் சொல்லி, தகுதியுள்ள வலியனை (அந்த)இளையபெருமானைநோக்கி, ஐயனே! மூவகையுலகமும் தானாகித் தனது பெரியதன்மையைத் தானும்அறியமாட்டாத ஒப்பற்றவனை திருமால் தாங்குகின்ற வலிய பெரிய வில், இதுவாகும்: (இதனைப்) பெற்றுக்கொள்வாய்: வெற்றியையும் அடைவாய்; (எ - று.)

இச்செய்யுளிலுள்ள'நோக்கி'யென்பது அடுத்தசெய்யுளில்'என்றுகொடுத்தனன்'என முடியும். தன்பெருந்தன்மை தானும் அறியாவொருவன்-"தனக்குந்தன்றன்மையறிவரியானை" என்றார், நம்மாழ்வாரும். 'தன்தன்மையறிவரியான்' என்றால், ஸர்வேச்வரனுடைய ஸர்வஜ்ஞதைக்கு [முற்றுணர்வுக்கு]க் குறை வாராதோ?என்னில்,—அளவிடமுடியாததை அங்ஙனமுள்ளதாக அறிந்திடுதலால் வாராதென்ப. பி-ம்:—[1]முதலயாவும், முதலவாய. [2]ஏக. [3]ஈதாகும், ஈதன்றே, இதொன்றே, இதென்றே,ஈதொன்றே, ஈதன்றே. [4]வணங்குதி. [5]கொண்டே. (உஅகஅ)

கூ.—ஸ்ரீராமன் வில்லுடனே கவசத்தையுந் தருதல்.

இச்சிலை யியற்கை மேலுள் தமிழ்முனி யியம்பிற் றெல்லாம்
[1]அச்செனக் [2]கேட்டா யன்றே யாயிர [3]மௌலி யண்ணல்
மெய்ச்சிலை விரிஞ்சன் [4]மூட்டும் வேள்வியின் வேட்டுப் பெற்ற
கைச்சிலை [5]யென்று தானே கொடுத்தனன் கவசத் தோடும்.

(இ - ள.) 'இந்தவில்லின்தன்மையைக்குறித்து மேலுளில் அகஸ்திய முனிவன் கூறியதெல்லாம் மனத்திற்பதியும்விதமாகக் கேட்டுள்ளாயல்லவோ? (இந்தவில்), ஆயிரந்திருமுடிகளையுடையபரமபுருஷனின் மெய்ம்மையான சிலையாகும்: (இது),விரிஞ்சன் முயன்றுசெய்த யாகத்தில் ஓமஞ்செய்து பெற்ற கைச்சிலை' என்று சொல்லிக் கவசத்தோடும் (ஸ்ரீராமன்) கொடுத்திட்டான்; (எ - று.)—அச்சு - இலக்கணையால், மனத்துப்பதிதலைக் காட்டிற்று. பி-ம்:—[1]அச்சன. [2]கேட்டி.[3]நாமத்து.[4]தானே.[5]கோடியென்று,என்றுகாட்டிக்.

க௦.—அம்பறாத்தூணிகொடுத்தல்.

ஆணியிவ் வுலகுக் கான வாழியான் புறத்தி [1]ணார்த்த
தூணியுங் கொடுத்து [2]மற்று முறுதிகள் பலவுஞ் சொல்லித்
தாணுவின் [3]றோற்றத் தானைத் தழுவினன் றழுவ லோடுஞ்
சேணுயர் விசும்பிற் றேவர் தீர்ந்ததெஞ் சிறுமை யென்றார்.

(இ - ள்.) இவ்வுலகுக்கெல்லாம் ஆதாரமான சக்கரப்படையையுடைய திருமால் முதுகிற்கட்டியிருந்த அம்பறாத்தூணியும் கொடுத்து, மேலும் பல உறுதிகளையுஞ் சொல்லிச் சிவபெருமான்போன்ற [உக்கிரமான] தோற்றத்தையுடையனை இளையபெருமானைத் தழுவினான், (ஸ்ரீராமன்); தழுவினவுடனே, மிகவுயர்ந்தவிசும்பிலுள்ளதேவர் எம்முடைய சிறுமை நீங்கிற்றென்றார்கள்; (எ-று.)--பி-ம்:--[1]ஆர்க்கும்,ஆத்த,ஆர்க்க.[2]மற்ற.[3]ஆற்றலானை.(உகூ௦௦)

கக.—போர்மேற்செல்லும் இலக்குமணனுடையபொலிந்ததோற்றம்.

மங்கலந் [1]தேவர் கூற [2]வானவ மகளிர் [3]வாழ்த்திப்
பங்கமி லாசி [4]கூறிப் பலாண்டிசை பரவப் பாகத்
திங்களின் மௌலி யண்ணல் திரிபுரந் [5]தீக்கச் சீறிப் [போவான்.
பொங்கின னென்னத் தோன்றிப் பொலிந்தனன் [6]போர்மேற்

(இ - ள்.) தேவர்கள் மங்கலத்தைச் சொல்லவும்,தேவமகளிர்வாழ்த்திக் குற்றமற்றஆசியைக் கூறிப் பல்லாண்டுபாடவும், போர்மேற்செல்பவனாகிய இலக்குமணன்,—(அப்போது) பிறைச்சந்திரனை முடியிற்கொண்டவனாகிய பெருமைபெற்ற சிவபெருமான் திரிபுரத்தைத்தீக்குமாறுசீறிப் பொங்கினான் போலத் தோன்றிவிளங்கினான்; (எ-று.)—பி-ம்:—[1]முனிவர்.[2]வானவர்.[3]வாழ்த்த. [4]கூற. [5]எரிக்க, தீப்ப, எரியச். [6]பகைமேற். (உகூ௦க)

கஉ.—ஸ்ரீராமன்விடைகொடுக்க, அப்பிரானைவணங்கி வானரசேனையோடு நிகும்பலைக்கு இலட்சுமணன் புறப்படுதல்.

மாருதி [1]முதல்வ ராய வானரத் தலைவ ரோடும்
வீரநீ சேறி யென்று விடைகொடுத் தருளும் [2]வேலை

ஆரியன் கமல பாத 3மகத்தினும் புறத்து 4மாகச்
சீரிய சென்னி 5சேர்த்துச் சென்றனன் றருமச் செல்வன்.

(இ - ள்.) 'வீரனே! மாருதிமுதலாகவுள்ளவரான வானரத்தலைவருடனே நீ செல்வாய்' என்று (ஸ்ரீராமன்) விடைகொடுத்தருளும்போது, அந்த ஸ்ரீராமனுடைய கமலபாதம் மனத்திலும்புறத்திலுமாக இருக்குமாறு சிறப்புப் பொருந்திய முடிமீதுசேர்த்து, தருமத்தைச்செல்வமாகக்கொண்டவனான இலட்சுமணன், (நிகும்பலைக்குச்) செல்பவனானான்; (எ-று.)—மனத்திலேயேதியானித்திருப்பதனால் அகத்திலும், சென்னியிற்சேர்த்தலாற் புறத்திலும் ஆரியன் பாதம் இருந்ததென்க. பி-ம்:—1முதலவீரர். 2எல்லை. 3அகத்துத்தன். 4ஆக்கிச். 5சேரச்சேர்த்தினன். (உகூ0உ)

கங.—இலக்குமணன் நிகும்பலைநோக்கிச் செல்லுதல்.

பொலங் 1கொண்ட லனைய மேனிப் புரவலன் பொருமிக் கண்ணீர்
நிலங்கொண்டு படர நின்று நெஞ்சழி வானைத் தம்பி
வலங்கொண்டு வயிர வல்வி லிடங்கொண்டு வஞ்சன் மேலே
சலங்கொண்டு 2கடிது சென்றான் றலைகொண்டு 3வருவெ னென்றே.

(இ - ள்.) அழகிய மேகத்தையொத்த மேனியைக்கொண்ட மன்னவனும் விம்மிக் கண்ணீர் புவியிலேவிழுந்து பரவுமாறு நின்று வருந்துபவனுமான ஸ்ரீராமனை, இளையபெருமாள்,—பிரதட்சிணஞ்செய்து, (அப்பிரானளித்த)வலியஉறுதியானவில்லை இடப்புறத்திற்கொண்டு, (இந்திரசித்தினுடைய)தலையை(அறுத்துக்)கொண்டுவருவே னென்றுசொல்லி, வஞ்சகனான (அந்த)இந்திரசித்தின்மீது கோபங்கொண்டு விரைந்துசென்றான்; (எ-று.)—மூன்றாமடியில் தொடைமுரண் காண்க. கொண்டு என்பது பலமுறைவந்தது-சொற்பொருட்பின்வருநிலையணி. பி - ம்:—1கொண்டகரிய. 2விரைவிற். 3தருவனென்று, வருவனென்று. (உகூ0௩)

கச.—இலட்சுமணனைப்பிரிந்த இராமபிரான்நிலை.

தான்பிரி கின்றி லாத தம்பிவெங் கடுப்பிற் 1செல்லா
வூன்2பிரி கின்றி லாத வுயிரென 3மறைத லோடும்
வான்பெரு 4வேள்வி காக்க 5வளர்கின்ற 6பருவ நாளிற்
தான்7பிரிந் தேகக் கண்ட தயரதன் றன்னை யொத்தான்.

(இ - ள்.) தான் பிரிந்திராத தம்பி மிக்கவேகத்தோடுசென்று உடலைவிட்டுப்பிரிந்திராத உயிர் (சென்றாற்)போல(ப் பிரிந்து சென்று கண்ணுக்கு) மறைந்தவுடனே,—வளர்ந்துவருகின்ற இளம்பருவத்தில் (விசுவாமித்திரன் செய்யும்) மிக்கபெரியவேள்வியைப் பாதுகாக்கும்பொருட்டுத் தான் பிரிந்து செல்லக் கண்ட தயரதனை யொத்தான்; (எ - று.)

இந்தச்செய்யுளும் இலட்சுமணனிடத்து இராமன் எவ்வளவுஅன்பு பூண்டிருந்தா னென்பதை விளக்கும். ஊன்-உடலுக்கு, இலக்கணை. பி-ம்:—1செல்வான், செல்ல. 2பிரிவுடையதாக, பிரிவுடையதான. 3உலாவலோடும். 4வேள்விக்காக. 5வருகின்ற. 6பருவமாலைத். 7பிரிகின்றநாளிற், பிரிகின்றநாளத்.

வேறு.

கரு.—வானரர்களும் இலட்சுமணனுடனே நிகும்பலையை யடைதல்.

சேனாபதி யேமுதல் சேவகர்தாம்
ஆனார்நிமிர் [1]கொள்ளி கொளங்கையினார்
கானார்[2]நெறி யும்மலை யுங்[3]கழியப்
போனார்க ணிகும்பலை புக்கனரால்.

(இ - ள்.) சேனாபதிமுதலிய வீரர்களாயுள்ளவர், எரிகின்ற கொள்ளிக்கட்டையை யேந்திய அகங்கையையுடையவர்களாய், காட்டிற்பொருந்திய வழியும் மலையும் கழிந்துவிடும்படி போனார்களாய், நிகும்பலையைப் புகுந்தார்கள்; (எ-று.)—சேவகரானார்தாம்என இயைக்க. இந்தவிருத்தச்செய்யுள்களை 'சேனா பதியே முதல்சே வகர்தாம்'' என இவ்வாறாக நாற்சீராகவும் பிரிக்கலாம். பி-ம்:—[1]கொள்ளியின். [2]மலையுநெறியும். [3]கிழியப். (உகூ0ரு)

கசு.—சென்றவர்கள் அரக்கர்சேனையைக் காணுதல்.

உண்டாயதொ [1]ராலில குள்ளொருவன்
[2]கொண்டானுறை கின்றது போற்குலவி
[3]விண்டானும் [4]விழுங்க விரிந்ததனைக்
கண்டார வரக்கர் [5]கருங்கடலே.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தோன்றியதான ஓராலில் உலகை யுட்கொண்டஒருவன் உறைகின்றதுபோல் விளங்கி,ஆகாயமும் தன்னுளடங்கப் பரந்ததாகிய அந்த அரக்கர்கருங்கடலை (ச் சென்றவர்கள்) கண்டார்; (எ - று.)

சிறியஇடத்தில் மிகப்பரந்தசேனை யிருப்பதற்கு, ஆலிலையிலே உலகத்தையெல்லாமுட்கொண்ட திருமால் பள்ளிகொண்டதனை உவமையாகக் காட்டினார். ஆதாரத்தினும் ஆதேயம்மிக்கிருத்தலைக் கூறுவது பெருமையணியாம்: வடநூலார் அதிகாலங்காரமென்பர். பி-ம்:-[1]ஆலிடை. [2]தண்டாதுறை.. தானெனலாய். [3]விண்டாலம் [4]விழுங்கியவிருந்ததனை. [5]பெருங்கடலை, கருங்கடலை. (உகூ0சு)

கஎ.—இதுமுதல் நான்குகவிகள் - அரக்கர்சேனையின் வருணனை.

நேமிப்[1]பெயர் யூக [2]நிரைத்துநெடுஞ்
[3]சேமத்தது நின்றது [4]தீவினையோன்
[5]ஓமத்தனல் வெவ்வட வைக்குடனே
[6]பாமக்கட னின்றதொர் [7]பான்மையதை.

(இ - ள்.) கொடுஞ்செயலையுடையோனான இந்திரசித்தினுடைய ஓமாக்கினியைச் சக்கரயூகம் வரிசைப்பட்டு நெடுஞ்சேமத்தை [பாதுகாப்பை]ச் செய்வதாக்கொண்டு நின்றது,—வெவ்வியவடவைக்குடனாக ஒளியையுடைய கடல் நின்றதன்மையையுடையதனை,—(எ-று.)—'கண்டார்' என்று கீழ்க்கவியோடுஇயையும். இவ்வாறே மேல்மூன்றுகவிகளிலும் ஈற்றிலுள்ள இரண்

டாம்வேற்றுமையேற்றசொல் கசு-ஆங்கவியிலுள்ள 'கண்டார்' என்பதனோடு முடியும்.

கீழ் அரக்கர்சேனைக்குக் கடலை உவமைகூறிய கவி,இங்கு அரக்கர்சேனை சூழ அரக்கனுடையவேள்விக்கனலிருப்பதற்குக் கடலினிடையே வடவைக் கனலிருப்பதை உவமை கூறினர். பாமம்-ஒளி: இனி,இச்சொல்லுக்குக் கோப மென்ற பொருளுள்ளதனல், வாமக்கடல்-பொங்குதலையுடைய கடலுமாம்; பாமம்-வடசொல். பி - ம்:—1பெயருக்கு, பெயருகம். 2நிறைத்து. 3சேமத் துற. 4தீவினையோர். 5ஓமக்கனல்..., நாமக்கடல்வேறுநவைக்குடனன். 6பாமைக்.7பான்மையதே. (உகூ0எ)

கஅ. 1காராயின காய்கரி தேர்2கலிமாத்
தாராயிர கோடி 3தழீஇயதுதான்
நீராழி4யொ டாழி 5நிறீஇயதுபோல்
ஓராயிர 6மியோசனை யுள்ளதனை.

(இ-ள்.)மேகத்தையொத்தனவாகிய சினக்குந்தன்மையுள்ள யானைகளும் தேரும் குதிரையும் காலாட்படையும்(ஆகிய சேனை) ஆயிரகோடிதழுவப்பெற்றது,—நீரமயமானகடலுடனே வேறே கடல் (சேர) நிறுத்தப்பட்டது போல ஓராயிரம்யோசனைதூரம் பரவியுள்ளதனை,—(எ - று.)—நீர்க்கடலோடு மற்றைக்கடல்சேர்ந்தால் எவ்வளவு பரந்திருக்குமோ அவ்வளவு பரந்திருந்தது அந்த அரக்கச்சேனையென்க. தார்-சேனை: இங்கு,பதாதிச்சேனை.பி-ம்:-. 1காராயினதார்கலி. 2கரிமாத், பரிமாத், பரியாட். 3தழீஇயனபோர். 4ஒரேழும்- 5நிறீஇயன. 6மால்புடையுள்ளதனை, மாவுடையுள்ளதனை. (உகூ0அ)

ககூ. பொற்றேர்1பரி மாகரி மாபொருதார்
எற்றேபடை வீரரை 2யெண்ணிலமால்
உற்றேவிய 3யூக மூலோகமுடைச்
சுற்றாயிர மூடு 4சுலாயதனை.

(இ - ள்.) பொருகின்ற முன்னணியிலுள்ள பொற்றேர்களும் குதிரைகளும் யானைகளும் எவ்வளவோ? படைவீரரையேஎண்ணமுடியாதவராேம்; (இவ்வாறு) பொருந்தியேவிய வியூகம் உலோகத்தினுடைய சுற்றுப்புறத்தை ஆயிரம்முறைசுற்றவல்லதனை,—(எ-று.)—தார் - முன்னணி. பரிமா-பரியாகியமா: கரிமா - கரியாகியமா. பி-ம்:--- 1கரிமாகலிமாபொருகால். 2எண்ணிலவால். 3ஊகயிலேனமுடன், யூபமுலோகமுடைச். 4குலாயதனை. (உகூ0க)

உ0. வண்ணக்கரு மேனியின் மேன்1மழைவாழ்
விண்ணைத்தொடு செம்மயிர் வீசுதலால்
அண்ணற்கரி யா2ன னலம்படவெம்
பண்ணைக்கடல் 3போல்வதொர் 4பான்மையதை.

(இ - ள்.) (தமது) கருநிறமானமேனியின்மீதுள்ள செம்மயிர் மழைவாழ்கின்றவிண்ணைத் தொடுமாறு வீசுவதனல், பெருமையிற்சிறந்த சிராமன் விடுத்த ஆக்கிநேயாஸ்திரம்பட வெவ்விய நீர்த்திரளைக்கொண்ட கடலையொத்த தன்மையையுடையதை,—(எ-று.)—'கண்டார்'(கசு)என்றுஇச்செய்யுளோடு குளகம் முடியும். அரக்கர்சேனைக்குக் கருங்கடலை உவமைகூறிய கவி,

அவ்வரக்கருடலில் செம்பட்டமயிர் மேனிமிர்ந்து நிற்பதனை, ஸ்ரீராமன் கருங் கடலின்மீது ஆக்கினேயாஸ்திரத்தைத் தொடுத்துவிட்டபோது அக்கடலி னிடையே அக்கினிச்சுவாலை வானுறவோங்கிநின்றநிலையோடு உவமிக்கின் றார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]மழுவாள். [2]அனலப்படை. [3]நின்றதொர். [4]பான்மையதே. (உகசுo)

உக.—அவ்வரக்கர்சேனை நாணொலிமுதலியன தோன்றியிருந்தமை.

[1]வழுங்காசிலை நாணொலி வானின்வரும்
பழுங்கார்முக மொத்த [2]பணிக்குலமும்
[3]தழுங்காகடல் வாழ்வன போற்றகைசால்
முழுங்காமுகி லொத்தன [4]மா முரசே.

(இ - ள்.) (அந்த அரக்கச்சேனை கொண்டிருந்த) நாணியினொலி யை வெளிப்படுத்தாத விற்கள்,—மேகத்தினிடத்துத்தோன்றுகின்ற பழமையான இந்திரவில்லை யொத்தன: சங்குகளின்கூட்டமும், கடலில்வாழ் கின்றவைபோல் முழுங்காமலிருந்தன: பெரியமுரசமும், பெருமைபொருந் திய முழுங்காதமுகிலை யொத்தன; (எ - று.)

'நாணொலிமுதலியன செய்யப்படின் மாற்றார் அங்குவந்திடுவரே' என்ற காரணத்தினால், அரக்கர்சேனை நாணொலிமுதலியனசெய்யாது ஒலி யடங்கியிருந்ததென்க. அங்ஙனமிருக்கும் சிலைமுதலியவற்றிற்கு, இந்திர தனுசுமுதலியவற்றை யுவமைகூறினார். முரசத்திற்கு முழங்காமையில்மாத் திரம் உவமையாவதன்றி, வடிவத்தினால் முகில் உவமையாகாது. பணிலக்குல மென்பது,பணிக்குலமெனக் குறைந்துவந்தது. பி-ம்:—[1]வழுங்கார். [2]பணைக். [3]தழுங்கார். [4]மும்முரசே, வான்முரசே. (உகசுக)

உஉ.—அரக்கச்சேனையைக்கண்டு வானரசேனை யார்த்தல்.

[1]வலியான விராகவன் வாய்[2]மொழியாற்
சலியாத நெடுங்கட லொனெனலாய்
[3]ஒலியாதுறு சேனையை யுற்றொரு[4]நாள்
மெலியாதவ [5]ரார்த்தனர் [6]விண்கிழிய.

(இ - ள்.) சலியாமல்நின்ற நெடியகடலென்று (உவமை)சொல்லத்தக்க தாய் ஒலியாமலிருந்த அரக்கர்சேனையை வலிமையுள்ளவனான ஸ்ரீராமனுடைய வாய்மொழியினாற் பொருந்தி, ஒருநாளும் மெலியாதவரான வானரர், வான மும் கிழியும்படி யாரவாரித்தனர்; (எ - று.)—பி-ம்:—[1]வலியானவ். [2]மொழி யாம். [3]ஒலியாவொரு. [4]தன். [5]ஒத்தன. [6]விண்கழியே. (உகசுஉ)

உங.—நான்குகவிகள் - வானரசேனையுடனே அரக்கச்சேனைக்கு நிகழ்ந்த கைகலந்த யுத்தத்தைக் கூறும்.

ஆர்த்தாரெதி ரார்த்த வரக்கர்[1]குலம்
போர்த்தார் முரசங்கள் [2]புடைத்தபுகத்
தூர்த்தாரிவர் கற்படை சூன்முகிலின்
நீர்த்தாரையி [3]னம்பவர் நீட்டினரால்.

(இ - ள்.) ஆரவாரித்தவரான வானரர்கட்குஎதிராக அரக்கர்குலம் ஆர வாரித்தன: போர்க்குரிய மாலைசூட்டிய முரசங்கள், அறையப்பட்டன: இவ் வானரர்கள், (அரக்கர்சேனையிடையே) செல்லுமாறு கல்லாகியபடைக்கலங் களைத் தூர்த்தார்: அந்தஅரக்கர்கள், கருக்கொண்டமேகத்தினின்று நீர்த்தாரை (பொழிவது)போல அம்புகளைச் செலுத்தினார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]வலம். [2]புடைக்கமுகம்,புடைத்ததகால். [3]அம்புகள். (உ௬௧௩)

உ௪. மின்னும்படை [1]வீசலின் [2]வெம்படைமேற்
பன்னும்[3]கவி சேனை [4]படிந்துளதால்
துன்னுந்துறை நீர்நிறை வாவிதொடர்ந்து
அன்னங்கள் படிந்தன வாமெனலாய்.

(இ - ள்.) துறைநெருங்கிய நீர்நிறைந்த வாவியிலே தொடர்ந்து அன் னங்கள் படிந்தனபோலுமென்று சொல்லுமாறு, மின்னுகின்ற படைக்கலங் களை வீசுவதனால் கொடிய (அரக்கர்)சேனையின்மேற் சிறப்பித்துக்கூறப்படு கிற கவிசேனை படிந்துளது; (எ - று.)

கருநிறமுள்ள அரக்கர்சேனைமீது கவிக்குலங்கள் படிந்தது, வாவியில் அன்னங்கள் படிந்தன போலு மென்றார்:உவமையணி. வெம்பகைஎன்றதற் குக் காரணம் 'படைவீச'என்றது. பி-ம்:---[1]வீசினர். [2]வெம்பகைமேல்,வெம் பகைபோய். [3]கவிமீது. [4]படிந்துளவால், படிந்துளமால். (உ௬௧௪)

உ௫. வில்லும்மழு வும்மெழு வும்[1]மிடலோர்
பல்லுந்தலை யும்முட லும்படியிற்
செல்லும்[2]படி சிந்தின [3]சிந்தினவாற்
கல்லும்மர மும்கர மும்கதுவ.

(இ - ள்.) (வானரங்கள்வீசிய)கல்லும் மரமும் (அவ்வானரங்களுடைய) கைகளும் கௌவியதனால்,வலியவரான அரக்கருடைய வில்லும் மழுவும் எழு வும் பற்களும் தலையும் உடலும் பூமியிற்செல்லும்படி மிகச்சிந்தின; (எ - று.) —வானரர்வீசிய கல்லும் மரமும் கதுவின: கரத்தினாலும் வானரர் கதுவின ரெனக. பி-ம்:—[1]விடுவோர். [2]பொடி. [3]சென்றனவாற். (உ௬௧௫)

உ௬. வாலுந்[1]தலை யும்முட லும்வயிறுங்
காலுங்கர மும்[2]தரை கண்டனவாற்
கோலும்மழு வும்மெழு வுங்கொழுவும்
வேலுங்கணை யும்வளை யும்விசிற.

(இ - ள்.) (அரக்கர்கள்) தண்டாயுதங்களையும் மழுக்களையும் எழுக்களை யும் கொழுக்களையும் வேல்களையும் அம்புகளையும் வளையங்களையும் விசிறியத னால், (வானரங்களின்) வாலுந் தலையும் உடலும் வயிறும் காலும் கரமும் தரையில்விழுந்தன: (எ-று.)—பின்னால் 'கணையும்'என வருவதனால், கோல்- தண்டாயுதமெனப்பட்டது. பி-ம்:—[1]உடலுந்தலையும்வயிறும், தலையும் வயி றும்முடலும். [2]கரைகண்டிலவாற். (உ௬௧௬)

உஎ.—விபீஷணன் இந்திரசித்தின்வேள்வியை யழிக்காது அச்சேனையினிடத்துப் போதுபோக்குதல் தகாதெனல்.

வென்றிப்[1]படை வீரனை வீடணனீ
நின்றிக்[2]கடை தாழுத [3]னீதியதோ
சென்றிக்கடி வேள்வி [4]சிதைத்திலையேல்
[5]என்றிக்கடல் வெல்குது மியாமெனலும்.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) விபீஷணன்,—வெற்றிபொருந்திய படைவீரனை இலட்சுமணனைநோக்கி, 'நீ, இவ்விடத்துநின்று தாமதித்தல் முறைமையையுடையதாகுமோ? போய் இந்தக் காவலுள்ள (இந்திரசித்துசெய்யும்) வேள்வியை யழிக்காவிட்டால், நாம் எப்போது இந்தஅரக்கர்சேனையாகிய கடலைவெல்லுவோம்?'என்று கூறியவளவில்,—(எ-று.)—'விசும்புறைவோர்மேவாதவரில்லை' என அடுத்த கவியோடு முடியும். பி-ம்:—[1]சிலை. [2]கடழுழ்வன. [3]நீதியவோ. [4]சிதைக்கிலை. [5]இன்றிக்கடல்வெல்கிலம். (உகூஎ)

உஅ.—தேவர்முதலியோர் யாவரும் அப்போரைக்காண வானத்தில் வருதல்.

[1]தேவாசுர ருந்திசை நான்முகனும்
மூவாமுத லீசனு [2]மூவுலகின்
கோவாகிய கொற்றவ னும்[3]முதலோர்
மேவாதவ ரில்லை விசும்புறைவோர்.

(இ - ள்.) தேவாசுரரும் நான்குதிசையைநோக்கிய நான்குமுகங்களையுடையபிரமதேவனும் மூவாமுதலோனாகிய கடவுளும் மூவுலகின்தலைவனாகிய இந்திரனும் முதலோரான விசும்புறைவோரில் விரும்பி வாராதவர் இல்லை; (எ-று.)—பி-ம்:—[1]தேவாதியரும். [2]முன்னினராற். [3]முதலாய். (உகூஅ)

உகூ.—அரக்கச்சேனையில் நால்வகைப்படையும் இருத்தல்.

பல்லார்படை [1]நின்றது பல்[2]லணியாற்
பல்லார்படை [1]நின்றது [3]பல்பிறைவெண்
பல்லார்படை [1]நின்றது பல்லியமும்
பல்லார்படை [1]நின்றது பல்படையே.

(இ - ள்.) பல் படை - பலவகைப்பட்டசேனைகளில்,—பல்லார்-பலவீரரேறிய, படை - தேர்ப்படை, நின்றது—; பல் அணியால் - பலநிரையாக, பல் ஆர் - பலவாகப்பொருந்திய, படை - குதிரைச்சேனை, நின்றது; பல் பிறை வெண்பல்லார் - பலவான அர்த்தசந்திரபாணமும் வெள்ளியபற்கள்போற்பொத்துகின்ற தம்ஷ்ட்ரபாணமும்பொருந்தியவரான பதாதியரின், படை - சேனை, நின்றது-; பல்லியம்-வாச்சியங்களுடனே,உம்பல் ஆர் படை-யானைகள்நிரம்பிய படை, நின்றது—; (எ - று.)

இச்செய்யுள், அரக்கச்சேனையில் நால்வகைச்சேனையும் நின்றமையைக் கூறியது.பின்னிரண்டடிகளில் பதாதிச்சேனையானைச்சேனைகளைக் கூறினமை

யால், முன்னிரண்டடிகளில் மற்றை தேர் பரிச்சேனைகளைக்கூறினரெனக்கொள்ளப்பட்டது. அணியணியாகசிறப்பது குதிரைப்படைக்குச்சிறத்தலால், பல்லணியாற்பல்லார்படையென்பதைக் குதிரைச்சேனையென்றது. இரண்டாமடியிலும் நான்காமடியிலும் ஆர்தல்-பொருந்துதல் நிறைதல் என்றபொருளில்வந்தன. இச்செய்யுளில் யமகமென்னுஞ்சொல்லணியும், சொற்பொருட்பின்வருநிலையணியும் காணத்தக்கன. பிறை, வெண்பல்என்பன பாணவிசேடங்கள். பி-ம்:---1நின்றன. 2அணியும், அணியார்ப். 3பல்லிறை. (உகூகக)

௩0.—இலட்சுமணன் அரக்கசேனையையழித்தல்.

அக்காலை யிலக்குவ னப்படையுட்
புக்கான யிலம்பு பொழிந்தனனால்
1உக்கார வரக்கர்த மூறொழியப்
புக்கார்நம னூருறை தென்2புலமே.

(இ - ள்.) அப்போது, இலக்குவன்,—அந்த(அரக்கர்)சேனையினுட் புகுந்து, கூரிய அம்புகளைப் பொழிந்தான்; (அதனால்), அவ்வரக்கரும்,—(உயிர்) சிந்தினவராய்,தம்மூறொழியயமன்வாழ்கின்றதென்புலத்தைச் சேர்ந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—1உக்கார்களரக்கர்கள்,உக்காரவரக்கரும்.2புலமேல். (உகூஉ0)

௩க.—இதுவும் அது.

தேறுமத மாகரி தேர்பரிமா
1நூறாயிர கோடியி னூழில்படச்
சேறூர்குரு திக்2கட லிற்றிடரிற்
கூறாயுக 3வாவி 4குறைத்தனனால்,

(இ - ள்.) தெளிவடையாமலிருத்தற்குக் காரணமான மதமுள்ள விலங்காகிய யானைகளும் தேரும் குதிரையும் நூறாயிரகோடிக்கணக்காகக் கொன்று குவிக்கப்படவும், சேறாகப்பொருந்திய இரத்தக்கடலிலே திட்டைப்போலக் கூறுபட்டுச்சிந்தவும், (அரக்கச்சேனையின்உயிரையொழித்தான், (இலட்சுமணன்); (எ-று.)—பி-ம்:—1நூறாயிரமாயிரம்.2கடலற்றிடலில், கடலிற்றிடராய். 3வாளி. 4குதித்தனனால். (உகூஉக)

௩உ.—இதுமுதல் பதினொருகவிகள்-படுகளச்சிறப்புக்கூறும்.

வாமக்கரி 1தானழி வார்குழிவன்
2தீமொய்த்த 3வரக்கர்கள் செம்மயிரின்
4தாமத்தலை 5புக்க தழங்கெரியின்
ஓமத்தை நிகர்த்த வுலப்பிலவால்.

(இ - ள்.) அழகிய யானை தான் பிடிபட்ட நீண்டகுழியிலே வலியதீ மொய்த்தாற்போன்றுள்ள செம்பட்டமயிர்களைக்கொண்ட அரக்கர்களின் ஒளிபொருந்திய தலை புக்கவை,—முழங்குகின்ற அக்கினியிலே செய்யப்படும்ஓமத்தை[ஓமஞ்செய்யப்படுகின்ற அக்கினியை]ஒத்தவை அளவிறந்தன; (எ-று.)—அழிவார்குழி-(காலால்) தரையைப் பேர்த்ததனால்தோன்றிய பெரியகுழி என்

றலுமுண்டு. தற்குறிப்பேற்றவணி. பி-ம்:---1தோரழிவார், தாளழிவார். 2தீம த்த. 3அரக்கனல். 4நாமத்தலை. 5உக்க. (உகூஉஉ)

ஙங. சிலையின்கணை யூடு 1திறந்தனதிண்
கொலைவெங்2களி மால்கரி செம்புனல்கொண்டு
உலைவின்று கிடந்தன 3வொத்துளவால்
மலையுஞ்சுனை யும்வயி றும்முடலும்.

(இ - ள்.) (இலட்சுமணனுடைய) வில்லினதுகணையினாலே இடையே பிளக்கப்பட்டனவான கொலைத்தொழிலையுடைய கொடிய மதமயக்கங்கொண்ட வலியபெரியயானைகளின் இரத்தத்தைக்கொண்டு கலைதலில்லாமற் கிடந்தனவான உடலும் வயிறும், மலையையும் சுனையையும் ஒத்துள்ளன; (எ - று.)—யானையின்உடல் மலையையும், வயிறு சுனையையும் ஒத்தன: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:---1திரிந்தன. 2குலமால். 3ஒத்தனவால்.

ஙச. விற்றொத்திய வெங்கணை யெண்கின்வியன்
1பற்றொத்திய 2போற்படி யப்பலவும்
முற்றச்சுடர் 3மின்மினி மொய்த்துளவன்
4புற்றொத்த முடித்தலை 5பூழியன.

(இ - ள்.) புழுதியிற்கிடப்பனவான கிரீடமணிந்த தலைகள்,—கரடியின் பெரியபற்கள் தொத்தியனபோல வில்லினின்று வெளிப்பட்ட கொடியஅம்புகள்பலவும் படிதலாலே,விளங்குகின்ற மின்மினி முழுவதும்மொய்த்துக்கொண்டுள்ள வலிய புற்றுக்களை யொத்தன; (எ - று.)

படைக்கலங்களாலறுப்புண்டு தரையிற்கிடக்கும் முடித்தலைகள் எங்கும் பளபளவென்றிருக்கும் அம்புகளாற் பொத்தப்பட்டிருத்தலால், எங்கும் மின்மினிமொய்த்துக்கொண்டுள்ள புற்றுக்கள்போலு மென்றார்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1மற்றொத்திய. 2வென்றடியும்பலவும். 3மின்மினவொத்துளவால். 4புற்றொத்து. 5பூழியபோல். (உகூஉச)

ஙரு. படுமாரி நெடுங்கணை பாய்தலினால்
1விடுமாறுதி ரப்புனல் வீழ்வன2வால்
தடுமாறுநெ டுங்கொடி தாழ்கடல்வாய்
நெடுமாமுகில் வீழ்வ நிகர்த்தனவால்.

(இ - ள்.) தோன்றியமாரியையொத்து நெடியஅம்புகள் பாய்தலினாற் பெருகுகின்ற உதிரப்புனலாறுகள் (கடலில்) விழுவனவாயின: (அங்கே) அலைகின்ற நெடிய துவசங்கள்,ஆழ்ந்த கடலினிடையில் நெடியமாமுகில் வீழ்வனவற்றை யொத்தன; (எ - று.)—விடுதல்-பெருகுதல். உதிரப்புனலாறு என மாறுக. பி-ம்:---1விடுமால். 2மின்வல். (உகூஉரு)

ஙசு. மின்னார்கணை 1தாளற 2வீசவிழுந்து
3அன்னாருதி ரத்து 4எழுந்துவதால்
ஒன்னார்முழு வெண்குடை 5யொத்தனவாற்
6சென்னாகம் விழுங்கிய திங்களினை.

(இ-ள்.) பகைவரின் முழுமையான வெள்ளியகுடைகள்,—ஒளிபொருந்திய அம்புகளினாலே காம்புகள் அற்றுப்போக(க் காற்று)வீசுதலால் விழுந்து, அப்பகைவரின் இரத்தப்பெருக்கினு ளழுந்துதலால்,—(பற்றும்படி)செல்லுகின்ற(இராகுவென்ற)பாம்பினால் விழுங்கப்பெற்ற சந்திரனை யொத்தன.

இரத்தப்பெருக்கிலழுந்திய குடை யொவ்வொன்றும் தனித்தனியே இராகுவால் விழுங்கப்பெற்ற சந்திரன்போலு மெனக் குறித்தார்: தன்மைத் தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1கான்றிட. 2வீசி. 3அர்நாள். 4அழுந்துதலால். 5ஒத்துள. 6செந்நாகம். (உகஉசு)

ருஎ. கொடுநீள்கரி 1கையொடு தாள்குறையப்
படு2நீள்குரு திப்படர் கின்றனவால்
3அடுநீளுயி 4ரின்மையி ளாழ்கிலவால்
நெடு5நீரிடை வங்கம் நிகர்த்தனவால்.

(இ - ள்.) கொடிய நீண்ட யானைகள்,—கையுடனே தாள்களும் அறுபட (ப்படைக்கலங்களினால்)அடப்பெற்று நீண்டவுயிர் இல்லாமையினால்,பெருகுகின்ற மிக்க இரத்தப்பெருக்கின்வழியே ஆழ்கிலவாய்ச் செல்கின்றவை,—நெடியநீர்ப்பெருக்கினிடையே தோன்றும் மரக்கலங்களை யொத்தன; (எ-று.)

உயிரில்லாமையால் குருதிசெல்லும்வழியாக அவ்யானையினுடல்கள் மிதந்துசென்றன வென்க. இதுவும் தற்குறிப்பேற்றவணியே. இச்செய்யுள் சிலபிரதிகளில் "வாயிற்கனல்(ருகூ)"என்றபாடலின்பின் உள்ளது. பி-ம்:—1தாளொடுகை. 2நீர். 3இடு. 4இன்மையநீக்கிலவால். 5நீரினிடங்கர். (உகஉஎ)

ருஅ. கரியுண்ட களத்திடை யுற்றன1கான்
நரி2யுண்டி யுகப்பன நட்டனவால்
3இரியுண்டவ ரின்னிய மிட்டிடலால்
4மரியுண்ட வுடற்பொறை மானினவால்.

(இ-ள்.) யானைகள் நிரம்பியிருந்த போர்க்களத்திடையே கானில்வாழும் நரி உணவையுகப்பனவாய் விரும்பிவந்து சேர்ந்தன; நிலைகெட்டுஓடியவரின் இனிய பறைகள் (அவர்கள்)விட்டுச்சென்றதனால், மரித்த உடற்பொறையை யொத்தன; (எ-று.)—பி-ம்:—1கார். 2உண்டியுகப்படை நட்டனனுன், உண்டையகப்படநட்டனவால். 3இரியுண்டிய விந்தியமிட்டிடலால்,இரியுண்டிடையின்னியம்விட்டிலரால், இரியுண்டவரின்னியம்விட்டிலதால். 4வரியுண்ட.

ருகூ. வாயிற்1கனல் வெங்கடு வாளியினம்
பாயப்பரு மக்குலம் வேவனவால்
வேயுற்ற நெடுங்கிரி 2மீவெயிலாந்
தீயுற்றன 3போன்ற சினக்கரியே.

(இ-ள்.) சினத்தையுடைய யானைகள், வாயில் நெருப்பைக்கொண்ட வெவ்வியகொடிய அம்புகளின்தொகுதிபாய்தலினால் (மேலேபூண்ட) அலங்காரங்கள் வேவப்பெறுபவை,—மூங்கிலைப்பொருந்திய நெடியமலைகளின் மேலே வெம்மையையுடைய நெருப்புப்பற்றினபோன்றன; (எ - று.)

பருமக்குலம்வேவனவான சினக்கரிகள், தீயுற்றனவேயுற்றகிரிகள் போன்றன: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—1சுடுவெங்கனல். 2மீவயினன், மீவயினர். 3ஒத்த. (உகஉக)

சச0. அலைவேலை யரக்கரை [1]யெண்ணினுகிர்த்
[2]தலைமேன்முடி யைத்தரை தள்ளுதலான்
மலைமேலுயர் புற்றினை வள்ளுகிரால்
நிலைபேர மறிப்ப நிகர்த்தனவால்.

(இ-ள்.) கரடிகளின் நகங்கள் அலைகளையுடையகடல்போற் பரந்த அரக்கரின் மேலுறுப்பான முடித்தலையை(க் கிள்ளித்) தரையிலேதள்ளுவதனால், மலைமேலுயரவுள்ளபுற்றினைக் கூரியநகத்தினால் நிலைபெரும்படி பேர்த்துத் தள்ளுவதை யொத்தன;(எ-று.)—முடித்தலைக்குப் புற்று உவமை: முடிக்குஉவமையெனக்கொண்டு உரைத்தலுமுண்டு. பி-ம்:—1என்னனுகித். 2தலைமேலைமுடித்தலை, தலைமேவுமுடித்தலை. (உகஙo)

சசக. மாவாளிகண் மாமழை போல்வரலால்
மாவாளிகள் [1]போர்தெறு மாமறவோர்
மாவாளிகள் வன்றலை [2]யின்றலைவாம்
மாவாளிக ளோடு [3]மறிந்தனரால்.

(இ-ள்.) பெரிய ஆளிகளைப் போரி லழிக்கவல்ல (காலாட்களாகிய) சிறந்த அரக்கவீரர்களும்,—அழகியஅம்புகள் பெருமழைபோலவருதலால், யானை குதிரையென்னும் இவற்றை யாள்கின்றவரான யானை குதிரைவீரர்களும்,(தமது)வலிய தலையினிடத்துத்தாவிமொய்க்கின்ற கருநிறமுள்ள வண்டுகளோடும் இறந்துவீழ்ந்தார்கள்; (எ-று.)

வீரர்புனைந்த போர்மாலைகளில் வண்டுகள் மொய்க்கின்றன வென்க. புனைந்த பூமாலைகளுடனே மூவகைவீரரும் இறந்தன ரென்றவாறு. மூவகை வீரரைக்கூறியது,தேர்வீரர்க்கும் உபலட்சணம்.முதலடியில்,மா-அழகு:வாளி-அம்பு. இரண்டாமடியில் மா-பெரிய, ஆளிகள்-யாளிகள்: மூன்றாமடியில்,மா-விலங்கு: இங்கு, யானை குதிரைகள்: அவற்றைஆள்பவர்-ஆளிகள். நான்காமடியில், ஆளிகள் - அளிகள் என்பதன் நீட்டல். யமகமென்னுஞ்சொல்லணி. பி-ம்:-1பேர்தெறுமாமிகவோர்.2விண்டலைவாய்,இன்றலைவாழ்.3மறிந்தனவால்.

சச௨. [1]அங்கங் கிழியத்துணி பட்டதனால்
[2]அங்கங் கிழிகுற்ற வமர்த்தலைவர்
[3]அங்கங்கிழி [4]செம்புனல் பம்பவலைந்து
அங்கங்க ணிரம்பி [5]யலம்பியதால்.

(இ-ள்.) அங்குஅங்கு-அவ்வப்போர்த்துறைகளில், இழிகுற்ற-தோல்வி படைந்த,அமர்தலைவர்-போர்த்தலைவர்,அங்கம்-(தமது)உடல்,கிழிய-(போரிற்) கிழியும்படி, துணிபட்டதனால்-துண்டுபட்டதனால், அம்-அழகிய,கங்கு-பருந்துகள், இழி-(உண்ணும்பொருட்டு) இழிகின்ற, செம் புனல்-உதிரநீரானது, பம்ப-நிரம்ப,அலைந்து-அலைகளெறிந்து,அம்[ஆம்]-கிடக்கின்ற,கங்கள்-சிரச்க்க

ளை,நிரம்பி-முழுவதும், அலம்பியது-கழுவிற்று;(எ-று.)—பி-ம்:—1அங்கங்கமி கத்..., அங்கங்கமதிற்றுளைபட்டதனால், 2அங்கங்கமிகுத்தவமர்த்துறைவாய், அங்கங்கள்மிகுத்தவமர்த்தொழில்வாய். 3அங்கங்கனி, அங்கங்கழி. 4செம்புன லங்கமமைந்து, செம்புனல்பம்பவமைந்து. 5அலம்பினவால். (உ௬௫உ)

சரு.—இலக்குமணன் அரக்கர்தானையையெய்து குறைத்தல்.

1வன்றானையை வார்கணை மாரியினால்
2முன்றாதையொர் தேர்கொடு மொய்பலதேர்ப்
பின்றாவெதிர் 3தானவர் பேரணியைக்
கொன்றானென வெய்து 4குறைத்தனனால்.

(இ - ள்.) (அப்போது இலக்குமணன்),—முன்பு ஒருதேரைக்கொண்டு (பத்துத்திசையிலுஞ் சென்று) நெருங்கிய பலதேரைக்கொண்டு பின்னிடாம லெதிரிடுகின்ற தானவரின் பெரிய அணிவகுப்பினைக் கொன்றவனை(தன்) தாதையாகிய தசரதன்போல நீண்டகணைமாரியினால்(அரக்கரின்)வலியதானை யையெய்துகுறைத்தான்;(எ-று.)—பி-ம்:—1வன்றானையர். 2அன்றுயிரமோலிய னந்தனெழாப், அன்றுயிரமௌலியனந்தனமர்ப். 3தாரணி. 4குறித்ததனால், குறைத்ததனால். (உ௬௫௩)

வேறு.

சச.—இலட்சுமணன் செய்த போரினால் இந்திரசித்தின் யாகங்கெடுதல், எட்டுக்கவிகளாற் கூறப்படும்.

மலைகளு மழைகளும் வான மீன்களும்
அலையவெங் 1கால்பொர வழிந்த வாமென
2உலையவெங் கனல்பொதி யோம முற்றவால்
தலைகளு முடல்களுஞ் 3சரமுந் தாவுவ.

(இ - ள்.) அலையுமாறு கொடுங்காற்றுவீசுவதனால் மலைகளும் மழைக ளும் வானத்திலுள்ளநட்சத்திரங்களும் அழிந்துவிழுந்தனபோல, (அரக்கரின்) தலைகளும் உடல்களும் சரங்களும் தாவினவாய், (இந்திரசித்து) மனவருத்த முறும்படி வெவ்வியகனல்நிரம்பிய ஓமகுண்டத்தையுற்றன;(எ-று.)—பி-ம்:— 1கால்வழியழிந்த. 2உலைகொள்...உற்றவால், உலகளவெங்கனல் பொதியுமொ த்தவால். 3சரமுந்தாவின, கரமுந்தாவின, சரங்கடாவின. (உ௬௫௪)

சரு. வாரண மனையவன் றுணிப்ப வான்படர்
தாரணி 1முடிப்பெருந் தலைக டாக்கலால்
ஆரண மந்திர மமைய வோதிய
பூரண 2மணிக்குட முடைந்து 3போயதால்.

(இ - ள்.) யானையையொத்தவனான இலட்சுமணன் துண்டித்துவீழ்த்து தலாலே வானத்திற்படர்ந்தனவான மாலையையணிந்த (அரக்கரின்) முடிப் பெருந்தலைகள்(வந்து)மோதுவதனால்,வேதமந்திரம் பொருந்தக் கூறிய பூரண மணிக்குடம் உடைந்துபோயிற்று; (எ - று.)

ஆரணமந்திரமமையவோதிய பூரணமணிக்குடம்-வேதமந்திரங்கொண்டு அபிமந்திரிக்கப்பெற்ற நீர்நிறைந்த குடம். பி-ம்:—1முடியெலாந்தகர்ந்துசாய் தலால். 2பொற்குடம். 3போயவால், போயதாய். (உகூரு)

சசு. தாறுகொண் மதகரி 1சுமந்து தாமரை
சீறிய 2முகத்தலை யுருட்டிச் செந்நிறத்து
ஊறுகள் 3சொரிந்தபே ருதிரத் தோங்கலை
4யாறுக வெழுங்கன லவியச் 5சென்றவால்.

(இ - ள்.) அங்குசத்தைக்கொண்ட மதயானைகளைச் சுமந்தும், தாமரையைச்சீறிய முகத்தோடுகூடிய தலைகளை யுருட்டியும்,செந்நிறமுள்ளவடுப்பட்ட இடங்கள் வெளிப்பெருக்கிய மிக்கஉதிரத்தின் ஓங்கியஅலைகளைக்கொண்ட யாறுகள், (வேள்வியில்)எழுகின்ற கனல் அவிந்திடும்படி பெருகிச்சென்றன (எ - று.)—பி-ம்:—1சுமந்த. 2நெடுந்தலை. 3செறிந்த.4ஆறுகளருங்கனல்,யாறுகண்முருங்கனல். 5சென்றதே. இச்செய்யுள் சிலபிரதிகளில் "தெரிகணை" என்ற அடுத்தபாடலுக்குப்பின் காணப்படுகின்றது. (உகூசு)

சஎ. தெரிகணை விசும்பிடைத் 1துணிப்பச் செம்மயிர்
2வரிகழ லரக்கர்தந் தடக்கை வாளொடும்
உருமென 3வீழ்தலு 4மனலுக் கோக்கிய
எருமைகண் 5மறிந்தன 6மறியு மீர்ந்தவால்.

(இ - ள்.) (இலக்குமணன்) ஆராய்ந்துதொடுத்த அம்புகள் ஆகாயத்திலே துணிப்ப, செம்மயிரையும் கட்டியவீரக்கழலையுமுடைய அரக்கரின் பெரியகைகள் (பிடித்த) வாளுடனே இடிபோல விழுதலால், ஓமாக்கினியில் ஓமஞ்செய்யப்படுமாறு வைக்கப்பட்டுள்ள எருமைகள் அறுப்புண்டனவாக, யாடுகளும் அறுப்புண்டன; (எ - று.)

இலட்சுமணன் அம்புகளை யெய்ததனால், ஏந்தியவாளுடனே அறுப்புண்ட அரக்கர்கைகளாலே,வெட்டி வேள்விக்கனலில் ஓமஞ்செய்யுமாறுயூபத்திற்கட்டப்பட்டுள்ள எருமைகளும் யாடுகளும் அறுப்புண்டன வென்க. பி-ம்:—1சுமந்து, துணித்த. 2விரிதலை. 3விழுதலின். 4அனலினோக்கிய, மறவித்தோச்சிய. 5மறிந்தென. 6குறிப்புவீய்ந்தவால், குறிலும்வீழ்ந்தவால், குறியுமீந்தவால். (உகூஎ)

சஅ. அங்கடங் 1கழிந்தபே ரருவிக் 2குன்றினின்று
அங்கடங் 3கிழிந்தில ரழிந்த வாடவர்
4அங்கடங் கலும்படர் குருதி யாழியின்
அங்கடங் கினர்தொடர் 5பகழி யஞ்சினார்.

(இ - ள்.) அழகியகன்னத்தினின்று வெளிப்பட்ட மிக்க(மத)நீரருவியையுடைய யானையிலே தங்கிய தம்முடல் கிழியபட்டிலராயினும், ஊக்கங்குறைந்த இராக்கதர், அவ்விடத்தில்எல்லாம் பரவிய இரத்தக்கடலினிடத்தே (இலக்குமணன்) தொடர்ச்சியாகஎய்கின்ற அம்புக்குஅஞ்சினவராய்த் தங்கினார்கள்; (எ - று.)

முதலடியில், கடம் - கன்னம்: வடசொல். இரண்டாமடியில், அம்-ஆம் என்பதன்விகாரம். கடம்-கடம் என்றவடசொல்லின்விகாரம்: உடலென்று பொருள். மூன்றாமடியில், அங்கு அடங்கலும்என்றுபிரிக்க. ஆழியினங்கண் தங்கினர்எனப்பிரியும். இது-யமகமென்னுஞ்சொல்லணி: ஆதிமடக்குஆகும். இச்செய்யுள், சிலபிரதியில், "காறலைத்தலத்தொடு"(சக)என்ற பாடலுக்குப் பின்னுள்ளது. பி-ம்:—[1]கழித்த, களித்த, கிழிந்த. [2]குன்றினின். [3]கழித்திலர ழிந்த, கிழிந்திலவழிந்த, கழிந்தவாளிழந்த, கழித்தவர்களித்த. [4]அங்கடர்ந்தி ழிபடர், அங்கடங்கிழிபடர், அங்கடங்கழிபட. [5]பழியினஞ்சலால். (உகருஅ)

சக. [1]காறலைத் தலத்தொடுந் துணியக் காய்கதிர்க்
கோறலைத் தலை[2]யுற [3]மறுக்கங் கூடினார்
வேறலத் தூன்றினர் [4]துளங்கு [5]மெய்யினார்
நாறலைக் குடலினர் பலரு நண்ணினார்.

(இ-ள்.) கால்கள் தலையுடனே துணிந்திட (ப் பின்னும்)காய்கின்ற கிரணங்களையுடையனவான (இலட்சுமணன்எய்த) அம்புகள் (தம்உடலில்) ஆங்காங்குப் பதிதலால், மயக்கங்கொண்டவராய், (தாம் கையிற்பிடித்த) வேலைத் தரையிலூன்றி நடுக்கமெடுத்தஉடலையுடையவரும், வெளித்தோன்றுகின்ற அலையுங்குடரைக் கொண்டவர்களுமாகி, பலஅரக்கர்களும்,—சேர்ந்துநின்றார்கள்;(எ-று.)—நான்காமடியில் நாறு அலைஎனப்பிரிக்க. இனி, நால்என்ற பகுதி 'தல்' என்னுந்தொழிற்பெயர்விகுதிபெற்று நாறல் என்றாகி, இரண்டனுருபைப்பெற்றுவந்ததாகக்கொண்டு, நாறலை - தொங்குதலை(யுடைய) என்று பொருள்கூறலாம். தலைத்தலம்-தலையிடம். பி - ம்:—[1]கால்கரத்தொடுதலையற்றகால்கதிர், காறலத்தொடுந்துணிந்தமுந்த..., காறலத்தொடு துணிந்தழியக் காய்கதிர்க். [2]அற. [3]வருக்கங்கூட்டினர். [4]விளங்கு. [5]மேனியர். (உகருக)

ரு௦. [1]பொங்குடற் றுணிந்ததம் புதல்வர்ப் [2]போக்கிலார்
[3]தொங்குடற் றோண்மிசை யிருந்து சோர்வுற
[4]அங்குடற் றம்பியைத் [5]தழுவி யண்மினார்
[6]தங்குடர் முதுகிடைச் சொரியத் தள்ளுவார்.

(இ - ள்.) சினந்துபோர்செய்த உடல்துணிந்த தம்புதல்வரைப் போக்க மாட்டாதவராய்த் தொங்குகின்றஅவ்வுடல் (தம்) தோளின்மீதுஇருந்தவண்ணம் தொங்க, (தம்முடைய)குடர் முதுகிடையே வெளிப்பட (அதனையுட்புறத்துத்)தள்ளுபவராய்(ச் சிலஅரக்கர்), அங்கு மாறுபட்டுப்போர்செய்கின்ற இளையபெருமானை நெருங்கிக் கிட்டினார்கள்; (எ - று.)

மூன்றாமடியில் உடற்றம்பி-வினைத்தொகை: உடலுதல்-மாறுபட்டுப் பொருதல். பி-ம்:—[1]பொருங். [2]போக்கினார். [3]சுருங்குடற்றோண்மிசையிருந்து, தொங்குடைத்...சுமந்து. [4]அருங்கடற். [5]அன்பினாவர். [6]தருங்குடர்முழுதுடற்.

(உகரு௦)

ருக. [1]மூடிய நெய்யொடு நறவு முற்றிய
[2]சாடிகள் பொரியொடு தகர்ந்து தள்ளுறக்

கோடிகள் [3]பலபடுங் குழாங்கு ழாங்களாய்
ஆடின வறுகுறை [4]யறக்கு [5]மாக்கையே.

(இ - ள்.) நெய்யுடனே நறவுகள் நிரம்பியனவான மூடியுள்ள சாடிகள் பொரிகள்வைத்திருக்கின்ற சாடிகளுடனே உடைந்துவீழ்ந்திடுமாறு அறுக்கப் பட்டனவான அரக்கராக்கைகள் குழாங்குழாங்களாய்ப் பலகோடிகள்விழும்; (அன்றியும்), அற்றஉடற்குறைகள் ஆடுவனவாயின; (எ - று)—பி - ம்:— [1]குடிய. [2]சாடிகளங்கியிற்சரிதல்போலவே, காடிகள்...கரந்துகாய்தலாற். [3]பல பலகுழாங், பலபலபடுங். [4]இறுக்கும், மறுகும், அரக்கர். [5]ஆக்கைகள். (உகூசக)

ருஉ.—போர்க்களம் அங்ஙனமாதம்படி இலட்சுமணன்அரக்கச்சேனையை வெட்டிவீழ்த்துதல்.

காலெனக் கடுவெனக் [1]கலிங்கக் கம்மியர்
நூலென [2]வுடற்பொறை தொடர்ந்த நோயெனப்
பாலுறு [3]பிரையெனக் கலந்து பன்முறை
[4]வேலுறு சேனையைத் துணித்து [5]வீழ்த்தினன்.

(இ - ள்.) காற்றுப்போலவும் விஷம்போலவும் ஆடைநெய்வோரின் நூல்போலவும் உடற்சுமையைத்தொடர்ந்த நோய்போலவும் பாலைப்பொருந் திய பிரைபோலவும் பலமுறைகலந்து வேல்பொருந்திய அரக்கச்சேனையை (இலக்குமணன்) வெட்டி வீழ்த்தினன்; (எ - று.)—பி-ம்:—[1]கலங்கிக்கம்மி யர், கழுங்கமம்மியர். [2]உயிர்ப்பொறைதொடர்ந்து. [3]மோராது. [4]மேலுறு. [5]வீழ்த்தினர். (உகூசஉ)

ருங.—இதுமுதல்மூன்றுகவிகள் - இலக்குமணனால் நிகும்பிலையிற் சேனைமுதலியன நிலைகுலைந்தமையை இந்திரசித்து காணுதலைக்கூறும்.

கண்டனன் றிசைதொறு நோக்கிக் கண்ணகன்
மண்டல மறிகட லன்ன மாப்படை
[1]விண்டெறி[2]கால்பொர [3]மறிந்து [4]வீற்றுறுந்
தண்டலை யாமெனக் கிடந்த [5]தன்மையை.

(இ - ள்.) இடமகன்றபூதலத்தில் (அலை)மடங்குகின்ற கடல்போலப் பெரிய [பரந்திருந்த] இராக்கதசேனை, வானத்தினின்று வீசுகின்ற காற்று மோதுதலால் ஒடிந்து சின்னபின்னப்பட்ட சோலைபோல(ச் சின்னபின்னப் பட்டுக்)கிடந்த தன்மையைத் திசைதோறும்நோக்கிக் கண்டான், (இந்திர சித்து); (எ - று.)

'கண்டான்'என்பதற்கு,எழுவாய் வருவிக்க.மேலிரண்டுசெய்யுள்களிலும் இவ்வாறே. விண்டு=விஷ்ணு: வானம்: பி-ம்:—[1]விண்டொடர். [2]கால்பட. [3]மறித்து. [4]வீழ்ந்தனன்,வீற்றிருந். [5]தன்மையே. (உகூசங)

ருச. மிடலின்வெங் கடகரிப் பிணத்தின் விண்டொடுந்
[1]திடலும்வெம் புரவியுந் தேருஞ் [2]சிந்திய
உடலும்வன் றலைகளு முதிரத் தோங்கலைக்
கடலு[3]மல் லாதிடை யொன்றுங் கண்டிலன்.

(இ - ள்.) வலிமையையுடைய கொடிய மதம்பெருகும் (கன்னத்தை யுடைய) யானைகளின் சவத்தினாலான வானத்தையளாவுகின்ற மேடும், வெவ் வியகுதிரைகளும் தேரும் (இறந்தோரின் உயிர்சிந்திய உடலும் வலியதலைக ளும் ஓங்கியஅலைகளையுடையஉதிரக்கடலும் அல்லாமல் இடையே வேறொன் றுங்காணாதவனாயினான், (இந்திரசித்து); (எ - று.)

சதுரங்கசேனைகளும் அழிந்து குவிந்திருப்பதையும், இரத்தம் கடல் போலப் பெருகியிருப்பதையும் இந்திரசித்து கண்டானென்பதாம். பி-ம்:— 1திடரும். 2எஞ்சினர், சிந்தினர். 3அல்லால். (உ௬௪௪)

௫௫. நூறு1நூ றாயிர கோடி கோன்கழன்
2மாறுபோ ரரக்கரை யொருவன் வாட்கணை
கூறுகூ றாக்கிய 3குவையுஞ் சோரியின்
ஆறுமே யன்றி4யோ ராக்கை கண்டிலன்.

(இ - ள்.) வலியவீரக்கழலையும் மாறுகச்செய்யும்போரினையுமுடைய நூறுநூறாயிரகோடியரக்கரை ஒருவனுடைய [இலட்சுமணனுடைய] கொடிய அம்புகள் துண்டுதுண்டாக்கிய குவியலையும் சோரியின்ஆற்றையுமேயன்றித் துண்டுபடாத ஓராக்கையையும் கண்டிலன்,(இந்திரசித்து);(எ-று.)—பி-ம்:— 1நூறாயிரம். 2மாறில். 3குவையின். 4வேறரக்கன். (உ௬௪௫)

௫௬.—அப்போது அரக்கர்களின்நிலைமை.

நஞ்சினும் வெய்யவர் நடுங்கி நாவுலர்ந்து
அஞ்சினர் சிலர்சில ரடைகின் றார்சிலர்
வெஞ்சின வீரர்கண் மீண்டி லாதவர்
துஞ்சினர் 1துணையில ரெனத்2து ளங்கினார்.

(இ-ள்.) (அப்போது) விஷத்தைக்காட்டிலும் கொடியவரான சிற்சிலவ ரக்கர்,—அஞ்சினவராய்(உடல்)நடுக்கமெடுத்துநாவறண்டு,இந்திரசித்தையடை கின்றவராயினார்; கொடியசினத்தையுடைய வீரர்களான(மற்றுஞ்) சிலர், (தா முள்ளஇடத்தினின்று) மீண்டுவரமாட்டாதவராய்த் துணையில்லாதவரென்ற காரணத்தினாற் கலங்கி யிறந்தொழிந்தார்; (எ-று.)—பி-ம்:—1தொலைவிலார். 2துடங்கினார். (உ௬௪௬)

௫௭.—ஆங்குள்ள நிலையைக் கண்ட இந்திரசித்தின் தோற்றம்.

ஓமவெங் கனலவிந் துழைக்க லப்பையுங்
காமர்1வண் டருப்பையும் பிறவுங் கட்டற
2நாமமந் திரத்தொழின் மறந்து 3நந்துறு
தூமவெங் கனலெனப் பொலிந்து தோன்றினான்.

(இ - ள்.) வெப்பமுள்ள ஓமாக்கினியும் அவிந்து அவ்விடத்திருந்த ஓம சாமக்கிரிகளும் அழகியவளப்பமுள்ள தருப்பையும் பிறபொருள்களும் நிலை குலைய, அச்சத்தைத்தரக்கூடிய மந்திரத்தொழிலையும்மறந்து, அவிந்துகொண் டிருக்கின்ற புகைநிறைந்த வெவ்வியஅக்கினிபோல விளங்கிக்காணப்பட் டான், (இந்திரசித்து); (எ - று.)

ஜ்வலிக்கின்றதன்மைநீங்கிப் புகையுந்தன்மையடைந்துள்ள அக்கினி எவ்வாறு தோன்றுமோ, அவ்வாறே பொலிவின்றி வெம்மையுடன்காணப்பட்டான் இந்திரசித் தென்றவாறு. பி-ம்:-1வண்டிரவியக்குலமும், வண்டருப்பையின்குலமும். 2வாமமந்திரத். 3மற்றவன், நன்குறும். (உகூஎஎ)

ருஅ.—எஞ்சியஅரக்கர் இந்திரசித்தைச் சார, போருமாறு வானரசேனை அங்குப் புகுதல்.

அக்கணத் தடுகளத் தப்பு மாரியால்
உக்கவ ரொழிதர வுயிரு ளோரெலாந்
தொக்கன ரரக்கனைச் சூழ்ந்து சுற்றுறப்
புக்கது [1]கவிப்பெருஞ் சேனைப் போர்க்கடல்.

(இ - ள்.) அந்தக்ஷணத்தில் போர்க்களத்தில் (இலக்குமணனுடைய) அம்புமழையால் உயிரொழிந்தவர்போக, உயிருள்ளவரான அரக்கரெல்லாம் ஒருங்குகூடினவராய் இந்திரசித்தைவளைந்து சுற்றிக்கொள்ள, வானரப்பெருஞ்சேனையாகிய போர்புரியுங் கடலானது(அவ்விடத்துப்)புகுந்தது; (எ - று.)—பி-ம்:—1கவிக்குலப்பொருவில்போர்க்கடல். (உகூஎஅ)

ருகூ.—இந்திரசித்து மனம்வெம்புதல்.

[1]ஆயிர மலருடை [2]யாழி மாப்படை
ஏயெனு [3]மளவினி னழிந்த வென்பதுந்
தூயவன் சிலைவலித் தொழிலுந் துன்பமும்
மேயின வெகுளியுங் கிளர வெம்பினான்.

(இ - ள்.) ஆயிரந்தாமரையென்னுங் கணக்கைக்கொண்ட கடல்போன்ற பெரிய (அரக்கச்)சேனை ஏயென்னும்மாத்திரத்திலே யழிந்ததென்பதும், பரிசுத்தமூர்த்தியாகியஇலட்சுமணன் வில்வலியின்செயலும், துன்பமும் பொருந்திய சினமும் (மனத்துக்)கிளர்ந்துகொண்டிருக்க, (இந்திரசித்து) மனம்வெதும்பினான்; (எ - று.)

மலர் - பத்மமென்ற எண். துன்பம்-தான்தொடங்கியதொழில் முற்றுப்பெறுமையாலானது. பி-ம்:—1ஆயிரகோடியின், ஆயிரங்கோடியின். 2அழிவில்வெம்படை, அளவிலப்படை, அளவுருப்படை. 3மாத்திரத்திற்றகொற்றமும். (உகூஎகூ)

சுo.—அரக்கர்இறக்க, முனிவர் மகிழ்தலை, இந்திரசித்து காணுதல்.

மெய்[1]குலைந் திருநில மடந்தை விம்முறச்
செய்கொலைத் தொழிலையுஞ் சென்ற தீயவர்
மொய்குலத் திறுதியு முனிவர் [2]கண்டவர்
கைகுலைக் கின்றதுங் கண்ணி னோக்கினான்.

(இ - ள்.) பெரியபூமாதேவி உடல்நடுங்கித் துன்புறும்படி (இலட்சுமணன்)செய்கின்ற கொலைத்தொழிலையும், (போரச்)சென்ற கொடியவர் நெருங்கிய தொகுதியாக இறந்ததையும் கண்டவரான முனிவர் கைகுலைக்கின்றதையும் கண்ணினால்(இந்திரசித்து)கண்டான்; (எ - று.)—பெரும்பாரம்விழு

வதனால் நிலமடந்தை மெய்குலைந்துவிம்மினாள். 'நிகும்பிலையில் வேள்விமுடிந்தால் என்செய்வது!' என்ற அச்சத்தினால் முனிவர்கை குலைப்பதாயிற்று. இனி, முனிவர் - ஓமஞ்செய்கின்ற அரக்கமுனிவரெனினுமாம். கைகுலைத்தல் - கையைக் குலுக்குதல்என்று பொருளுரைப்பாரும், கைகுலுக்கின்றது என்றுபடிப்பாருமுளர். பி-ம்:---1குலைத்து. 2கண்டனர். (உகூ௫0)

சூக.—இந்திரசித்து நியமந்தலையவே வருந்திக்கூறத்தொடங்குதல்.

மானமும் பாழ்பட வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட முடிவி லாமுரட்
சேனையும் பாழ்படச் சிறந்த மந்திரத்து
ஏனையும் பாழ்பட வினைய [1]செப்பினான்.

(இ - ள்.) (தன்)மானம் பாழ்படவும், வகுத்தவேள்வியின் மோனம் பாழ்படவும், முடிவிலாதவலிமையையுடைய சேனை பாழ்படவும், சிறந்த மந்திரத்துக்குஉரிய ஏனையும் பாழ்படவும், (இந்திரசித்து) இவ்வாறான சொற்களைச் சொல்பவனானான்; (எ - று.)

அரக்கர்க்குக்கேடுவிளைந்ததுபற்றி மானம்பாழ்பட்டன. யாகத்தில் யஜமானன் மௌனத்துடனிருக்கவேண்டியது விதியென்பர். மந்திரபூர்வமாகச் செய்யத்தொடங்கிய வேள்வி பாழ்பட்டதென்க. பி-ம்:—1கூறினான். (உகூ௫க)

சூஉ.—இதுமுதல் நான்குகவிகள்-இந்திரசித்து வருந்திக்கூறுதலைத் தெரிவிக்கும்.

[1]வெள்ளமை யைந்துடன் விரிந்த [2]சேனையின்
உள்ளதக் குரோணியீ ரைந்தொ [3]டோயுமால்
எள்ளரு [4]வேள்விநின் றினிதி யற்றுதல்
பிள்ளைமை யனையது சிதைந்து போர்ந்ததால்.

(இ - ள்.) இருபத்தைந்துவெள்ளத்துடன் பரந்த (அரக்கர்)சேனையில் (இப்போது)மிச்சமாகவுள்ளது, பத்துஅக்குரோணிசேனையோடும்ஆகும்: (அது ஓய்ந்துவிடும்: (இனி), பழிப்புஇல்லாத வேள்வியை மனம் ஒருப்பட்டிருந்து இனிதாகஇயற்றுதல் குழந்தைத்தனமாகும்: அந்தவேள்வி சிதைந்தொழிந்தது; (எ-று.)--பி - ம்:---1வெள்ளநானூறுடன். 2வேலையின். 3எயுமால். 4வேள்விநின்றினி, வேள்வியின்றினி. (உகூ௫உ)

சூ௩. தொடங்கிய வேள்வியின் றூம வெங்கனல்
[1]அடங்கிய தவிர்ந்துள தமையு மாமன்றே
[2]இடங்கொடு வெஞ்செரு வென்றி [3]யின்றெனக்கு
அடங்கிய தென்பதற் கேது [4]வாகுமால்,

(இ - ள்.) தொடங்கிய வேள்வியினுடைய புகையோடுகூடிய வெவ்விய கனல் அடங்கியதாகி யவிந்துவிட்டதென்பது, அமைந்துள்ளதன்றோ?(அது), —இடத்தைக்கொண்டு[பரந்து](உள்ள)மிகக்கொடிய போரிலே வென்றி எனக்கு இன்றுஅடங்கிவிட்டதென்பதைக் குறிப்பதற்குச் சூசகமாகும்; (எ - று.) —பி - ம்:—1அடங்கிடாது. 2விடங்கொள்வெஞ்செருத்தொழில்வென்றி. [3]நூனொடும், [4]ஆமரோ, வாய்மையால், ஆனதால். (உகூ௫௩)

கூச. அங்கது கிடக்கநான் மனிதர்க் காற்றலன்
சிங்கின னென்பதோ ரெளிமை தேய்வுற
இங்குநின் றிவையிவை [1]நினைவ தென்னினி
பொங்கு[2]போ ராற்றவென் றோளும் போனவோ.

(இ - ள்.) அது கிடக்கட்டும்: நான் மனிதர்க்குமுன் (போர)வல்லமையற்றவனாய்க் குன்றினே னென்பதாகிய எளிமையோடு தேய்ந்திடுமாறு இங்கேயிருந்து இவ்விவைகளை நினைவது எதற்காக? இவைகளைநினைந்திருப்பது தக்கதன்று]; இப்போது கிளர்ந்துசெய்யப்படும் போரைப்-புரிவதற்கு என்தோள்வலியும் போயினவோ? (எ-று.)— அங்கு-அசை. பி-ம்:—[1]நினைக்கிலென். [2]போராற்றற்கு. இச்செய்யுள் வேறுவகையாகப் பாடம்காண்கின்றது வருமாறு:-ஆங்கது கிடக்கநான் மனிதர்க் காற்றலென், நீங்கினு னென்பதோ ரிழிவுநேருற, ஈங்குநின் றியாவரு மியம்ப வென்குலத், தோங்குபே ராற்றலு மொளியுமொல்குமால். இப்பாடத்துக்கு, ஆற்றலேன்என்பதன்பின், 'ஆயின்' என்று ஒருசொல் வருவித்துப் பொருளுரைக்க. (உகூருச)

கூரு. மந்திர வேள்விபோய் மடிந்த தாமெனச்
சிந்தையி னினைந்து[1]நொந் திருந்து தேய்வுறல்
அந்தரத் [2]தமரர்தா மனிதர்க் காற்றலன்
[3]இந்திரற் கேயிவன் வலியென் றேசவோ.

(இ-ள்.) 'மந்திரத்தோடு செய்யப்படும் யாகம்போய்மடிந்ததாகும்' என்று மனத்திலே நினைந்து நொந்திருந்து குறைவது,--ஆகாயத்திலேவாழும் அமரர்கள் '(இவ்விந்திரசித்து),மனிதர்க்குமுன் வல்லமையற்றவனானன்; இவன்வலிமை இந்திரனுக்குத்தானு (செல்லுவது?)' என்று பழித்தற்காகவோ? (எ-று.)— பி-ம்:—[1]நான்வருந்துஞ்சிற்றியல். [2]அமரரும். [3]இந்திரற்கோ, இந்திரற்குளி.

கூகூ.—அப்போது வானரவீரரெறிந்த குன்றுமுதலியவற்றல் அரக்கச்சேனை சின்னபின்னப்படுதல்.

[1]என்றவன் பகர்கின்ற வெல்லே [2]யின்னிருங்
[3]குன்றொடு மரங்களும் பிணத்தின் கூட்டமும்
பொன்றின கரிகளுங் கவிகள் போக்கின
சென்றன பெரும்படை யிரிந்து [4]சிந்தின.

(இ - ள்.) என்று அவன் (தன்னுட்) சொல்லிக்கொண்டிருக்குஞ் சமயத்தில், பெரிய மலைகளுடனே மரங்களும் பிணத்தின் கூட்டமும் இறந்தயானைகளும் ஆகியவற்றை வானரங்கள் போக்கின; (இந்திரசித்துடன்) சென்றிருந்த பெருஞ்சேனை நிலைகெட்டுச் சிந்தின; (எ - று.)—பி - ம்: —[1]என்றது, என்றின. [2]வல்விசைக். [3]குன்றமும். [4]சிந்திட. (உகூருகூ)

கூஎ.—வானரர் வீசிய குன்றுமுதலியவற்றலும் இலட்சுமணபாணங்களினலும் அரக்கரோடுங்குதல்.

ஒதுங்கின ரொருவர்கீ ழொருவர் புக்குறப்
பதுங்கினர் நடுங்கினர் பகழி பாய்தலிற்

பிதுங்கினர் குடருடல் பிளவு பட்டனர்
மதம்புலர் களிறெனச் சீற்ற [1]மாற்றினர்.

(இ - ள்.) (அரக்கர், வானரசேனையெறிந்த குன்றுமுதலியவற்றைத் தாங்கமாட்டாமல்),—நடுங்கினவராய், விலகி ஒருவர்கீழ் ஒருவர் புகுந்துகொண்டு மிகவும்பதுங்கினர்: (அப்போதும் இலட்சுமணன்விடுத்த)அம்பு பாய்தலினால்,(அவ்வரக்கர்) குடல்பிதுங்கி உடல் பிளவுபட்டு மதம்புலர்ந்தயானைபோலச் சீற்றம் ஒழிந்தார்கள்; (எ - று.)பி-ம்:—[1]மாறினர். (உகூ௬எ)

சூஅ.—வானரரும் இலட்சுமணனும் விடுத்தவை அரக்கர்சேனையிற் படிந்தவற்றின் வருணனை.

வீரன்வெங் கணையொடுங் [1]கவிகள் வீசிய
கார்வரை யரக்கர்[2]தங் கடலின் [3]வீழ்ந்தன
போர்நெடுங் கால்பொரப் [4]பொழியு மாமழைத்
தாரையு மேகமும் படிந்த தன்மைய.

(இ - ள்.) இலட்சுமணன்விடுத்த கொடியஅம்புகளுடனே குரங்குகள் வீசிய பெருமலைகள், அரக்கருடைய (சேனை)சமுத்திரத்திலே வீழ்ந்தவை— போர்த்தபெருங்காற்று வீசப் பொழியும் மாமழையின்தாரையும் மேகமும் படிந்தாற்போன்ற தன்மையையுடையன; (எ - று.)—இலக்குமணனுடைய கணை-மழைத்தாரையையும், வானரரெறிந்த வரைகள் மேகத்தையும் போலும் என்க. பி-ம்:—[1]முதல்வர். [2]வெங். [3]வீழ்ந்தனர். [4]படியும். (உகூ௬அ)

சூகூ.—அநுமான் இந்திரசித்தையணுகிப் பரிகசித்துக் கூறத்தொடங்குதல்.

திரைக்கடற் பெரும்படை யிரிந்து சிந்திட
மரத்தினிற் [1]புடைத்தடர்த் [2]துருத்த மாருதி
அரக்கனுக் கணித்தென வணுகி யன்னவன்
[3]வரக்கதஞ் சிறப்பன மாற்றங் கூறுவான்.

(இ - ள்.) திரையையுடைய கடலைப்போன்ற பெரிய (அரக்கச்)சேனை நிலைகெட்டுச் சிதறிவிடுமாறு மரத்தினாற்புடைத்து அடர்த்துச் சினந்த அநுமான்,—இந்திரசித்துக்குச் சமீபமாக நெருங்கி, அவனுக்குக் கோபம்வரச் சிறந்துள்ளனவான வார்த்தைகளைக் கூறலானான்: (எ-று.)—அவற்றை மேல் பத்துக்கவிகளிற் காண்க. கதம்-கோபம். பி-ம்:—[1]புடைத்தரைத்து. [2]உதிர்த்த, உருத்து. [3]உரைக்கதமுறுவதோர்மாற்றமோதினன். (உகூ௬கூ)

வேறு.

எ௦.—பத்துக்கவிகள் - ஒருதொடர்: அநுமான் இந்திரசித்தை இகழ்ந்துகூறுதலைத் தெரிவிக்கும்.

நானுனை யிரந்து கூறு நயமொழி யொன்றுங் கேளாய்
சானகி தன்னை வாளாற் றடிந்ததோ தனதன் றந்த
மானமேற் சேனை யோடும் வடதிசை நோக்கி மீது
போனதோ கோடி கோடி வஞ்சமும் பொய்யும் வல்லாய்.

(இ - ள்.) பல்கோடிக்கணக்கான வஞ்சனையையும் பொய்யையும் வல்லவனே! நான் உன்னை இரந்துகூறிய நீதிமொழியொன்றையுங் கேளாதவனாகி, சானகிதன்னை வாளால் வெட்டியதோ? குபேரன் கொடுத்திட்ட புஷ்பகவிமானத்தின்மீது சேனையுடனே வடதிசைநோக்கிமேற்சென்றதோ? (இது எதைச் சேர்ந்தது?) (எ-று.)—இச்செய்யுள் பலபிரதிகளி லில்லை. (உகசுO)

எக. தடந்திரைப் பரவை யன்ன சக்கர [1]யூகம் புக்குக்
கிடந்தது கண்ட துண்டோ நாணொலி [2]கேட்டி லாமோ
தொடர்ந்துபோ யயோத்தி தன்னைக் கிளையொடுந் துணிய நூறி
[3]நடந்ததெப் பொழுது வேள்வி [4]முடிந்ததே கரும நன்றே.

(இ-ள்.) பெரியஅலைகளையுடைய கடலையொத்த சக்கரவியூகம்(நிகும்பலையிற்)புகுந்து கிடந்ததை (நாங்கள்) கண்டதுண்டோ? நாணொலியைக் கேட்டிலோமோ? அயோத்தியைத் தொடர்ந்துசென்று (பரதனைச்)சுற்றத்தாருடனே துண்டாம்படிஅழித்து (நீ)மீண்டுவந்தது எப்போது? (நீ தொடங்கிய) வேள்வி முடிந்திட்டதா? (உன்)செயல் நன்றாயிருந்தது! (எ - று.)

அநுமான் பிறகுறிப்புவகையால் இந்திரசித்தை இகழ்கின்றனனென்க. கிடந்தது கண்டதுண்டோ நாணொலிகேட்டிலாமோஎன்றது-உனதுசேனைகள் நாணொலிசெய்யாமல் ஒலியற்றிருக்கவும், இங்குமறைந்து வேள்விசெய்வதையும் சக்கரயூகம் காவல்செய்ததையும் கண்டிட்டோமென்று குறிப்பித்தபடி. பி-ம்:—[1]யூபம். [2]கேட்டிலாயோ. [3]கடந்தது. [4]முடித்ததே. (உகசுக)

எஉ. ஏந்தகன் ஞால மெல்லா மினிதுறைந் [1]தியற்கை தாங்கும்
பாந்தளிற் பெரிய திண்டோட் பரதனைப் பழியிற் றீர்ந்த
வேந்தனைக் கண்டு [2]நீநின் வில்வலங் காட்டி மீண்டு
[3]போந்ததோ வுயிருங் கொண்டே [4]யாயினும் புதுமை யன்றே.

(இ - ள்.) (ஆதிசேஷன் முதலியவர்) தாங்குகின்ற அகன்ற பூமியையெல்லாம் இனிதாகஉறையுமாறு நல்லியற்கையாற் பாதுகாக்கின்ற குற்றமற்ற வேந்தனாகி, ஆதிசேஷனைக்காட்டிலும்மிக்க தோள்வலியையுடைய பரதனைக் கண்டு, நீ உன்னுடைய வில்வலிமையைக்காட்டி உயிரையுங் கொண்டு மீண்டு வந்ததுண்டோ? ஆனாலும், (இது உன்விஷயத்திற்)புதுமையன்று; (எ - று.)

பரதனுடன் பொருது வென்று உயிருடன்மீண்டு வரமுடியாதென்பது, கருத்து. ஆதிசேஷன் பூமியைத் தாங்குவதுபோலப் பரதன் தன்தோள்வலியாற் பூமிமுழுவதையும் தாங்குவதனால் 'பாந்தளிற்பெரிய திண்டோட்பரதன்'எனப்பட்டான். உறைந்து=உறைய. பி-ம்:—[1]இவரத்,இவரைத். [2]நீர்நும் வில்வலி, நீர்நும்மிகுவலி. [3]போந்ததேயளவை யன்றே, [4]போனவை பொருந் திற்றன்றே. (உகசுஉ)

எ௩. [1]அம்பரத் தமைந்த வல்விற் சம்பர னாவி வாங்கி
உம்பருக் குதவி செய்த வொருவனுக் குதயஞ் செய்த
[2]நம்பியை முதல்வ ரான மூவர்க்கு நால்வ ரான
தம்பியைக் [3]கண்டு நின்றன் [4]றனுவலங் காட்டிற் றுண்டோ.

(இ - ள்.) ஆகாயத்தே (போர்செய்யுமாறு) வந்த வலிய வில்லைக்கொண்ட சம்பராசுரனுடைய உயிரைப் போக்கித் தேவருக்கு உதவிபுரிந்த ஒப்பற்ற தசரதனுக்குப் பிறந்த குணபூர்ணனும் முதல்வரான மூவர்க்கு நாலாமவனுமான சத்துருக்கினுழ்வானைக் கண்டு உன்னுடைய வில்வலிமையைக் காட்டினது உண்டோ? (எ - று.)—மூவரான முதல்வர் - இராமலட்சுமண பரதர். பி - ம்:—[1]அம்பியைந்து, அம்புயத்து. [2]நம்பியாம். [3]கண்டதுண்டோ. [4]அவரொடுந்தாக்கினீரோ, வலனொடுந்தாக்கினீரோ. (உகசுரு)

எச. தீயொத்த வயிர வாளி யுடலுறச் சிவந்த சோரி
[1]காயத்தின் செவியி னூடும் வாயினுங் [2]கண்க ளூடும்
பாயப்போ யிலங்கை புக்கு வஞ்சனை [3]பரப்பச் செய்யும்
மாயப்போ ராற்ற லெல்லா மின்றோடு [4]மாளு மன்றே

(இ - ள்.) (இலட்சுமணனுடைய) நெருப்பையொத்த உறுதியான அம்புகள் உடம்பிற் பொருந்துவதனாலே சிவந்த இரத்தம் உடம்பிலே காதின்வழியாகவும் வாயின் வழியாகவும் கண்களின்வழியாகவும் பாய்ந்துகொண்டிருக்கையிலே போய் இலங்கையிலே புகுந்துகொண்டு வஞ்சனையைப்பரப்புமாறு செய்கின்ற மாயப்போரின் வல்லமையெல்லாம் இன்றோடு முடிந்திடும்; (எ - று.)—அன்றே - தேற்றம். உன்னை இனிமாயஞ்செய்ய வொட்டாது இன்றைக்கே கொன்றிடுவோமென்றபடி. பி - ம்:—[1]காயத்துஞ். [2]கண்களூனும். [3]பலவுஞ், பரப்பிச். [4]முடியும், மடியும். (உகசுச)

எரு. பாசமோ மலரின் மேலான் பெரும்படைக் கலமோ பண்டை
ஈசனார் படையோ மாயோ னேமியோ யாதோ வின்னம்
வீசநீர் [1]விருப்பு கின்றீ ரதற்குநாம் வெருவிச் சாலக்
கூசினோம் போதும் [2]போதும் கூற்றினார் குறுக வந்தார்.

(இ - ள்.) நாகபாசமோ, தாமரைமலரின்மீது வாழ்பவனாகிய பிரமதேவனுடைய பெரிய அஸ்திரமோ, பழமையான சிவபிரானது அஸ்திரமோ, மாயைக்குரிய கடவுளான திருமாலினது சக்கரப்படையோ, இன்னும் யாதோ, நீர் (எங்கள்மீது) வீசுமாறு விரும்புகின்றீர்? அந்தப்படைக்கு நாங்கள் அஞ்சி மிகவும் பின்வாங்கினோம்; (உம்முடையதிறமை) அமையும் அமையும்; நமனார் நெருங்கவந்து விட்டார்; (எ - று.)

கூசினோமென்றது-கூசவில்லையென்ற பொருளைக் குறிப்பிக்கும். கூற்றினாரென்பது - இலட்சுமணனைக் குறிக்குமென்றலுமாம். ஓகாரம் - விகற்பப்பொருளன. பி-ம்:—[1]விரும்புகின்றதற்கு. [2]நும்மை. (உகசுரு)

எசு. வரங்களீ ருடைய வாறு மாயங்கள் வல்ல வாறும்
பரங்கொள்[1]வா னவரிற் றெய்வப் படைக்கலம் படைத்த வாறும்
[2]உரங்களு நின்ற தன்றே யும்மைநா முயிரி னோடுஞ்
[3]சிரங்களைத் துணித்து மென்னக் கண்டது திறம்பி னோமோ.

(இ - ள்.) நீங்கள் வரங்களைப் பெற்றிருக்கின்ற வகையும், மாயங்களில் வல்லதன்மையும், பெருமையைக்கொண்ட தேவர்களிடத்தில் தெய்வப்படைக்

கலங்களைப் பெற்றுள்ள தன்மையும்,(உமது)தேகவலிமையும் நின்றதல்லவா? 'உம்மை நாம் உயிரோடு சிரங்களைத் துணிப்போம்' என்று சொல்லியதில் மாறுபட்டுப் போனவரானோமோ? (எ - று.)

நீங்கள் வரம்முதலியவற்றால் மிக்குள்ளோமென்று செருக்கவேண்டா: தவறாமல் நாங்கள் சொல்லியபடி உம்முடைய சிரத்தைக் கொய்து உயிரை மாய்ப்போமென்றபடி. இனி, உயிரினோடுஞ் சிரங்களைத் துணித்தும் என்பதற்கு—நீ உயிரோடிருக்கையிற்றானே உன்சிரத்தைக் கொய்து தீருவோமென்றுமாம். பி-ம்:—1வான் வரிவிற். 2உரங்களோடுன்னியன்றோ. 3சிரங்கொளத்துணிந்ததன்ன தண்டது. (உகூசுசு)

எஎ. விடந்துடிக் கின்ற கண்டத் தண்ணலும் விரிஞ்சன் றானும்
படந்துடிக் கின்ற நாகப் பாற்கடற் பள்ளி யானுஞ்
சடந்துடிக் கிலராய் வந்து தாங்கினுஞ் சாத றிண்ணம்
இடந்துடிக் கின்ற துண்டே 1யிருத்திரோ வியம்பு வீரே.

(இ - ள்.) விஷந்ததும்புகின்ற கண்டத்தையுடைய பெருமானான சிவனும்,பிரமதேவனும்,(சீறிப்)படமெடுக்கின்ற ஆதிசேஷனிடத்துத் திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டுள்ளவனான திருமாலும், (தங்களுடைய)உடல் நடுங்காதவராய்வந்து (உம்மைத்)தாங்கினாலும்,(நீர்)சாவது திண்ணம்;(உங்களுக்கு) இடப்பக்கம் துடிக்கின்ற தன்றோ? (இவ்வாறு நிமித்தமும் உமக்குவரும்மரணத்தைத் தெரிவிக்க நீர்) உயிருடனிருப்பீரோ?சொல்வீர்; (எ-று.)—சடம்-உடல். பி-ம்:—1என்னிருந்தெழுகிலீரோ. (உகூகூஎ)

எஅ. கொல்வனென் றுன்னைத் தானே 1குறித்தொரு சூளுங் கொண்ட
வில்லிவந் தருகு சார்ந்துன் சேனையை முழுதும் வீட்டி
2வல்லைநீ பொருவா யென்று விளிக்கின்றான் வரிவி லாணின்
ஒல்லொலி யைய செய்யு மோமத்துக் 3குறுப்பொன் றாமோ.

(இ - ள்.) கொல்வேனென்று சொல்லி உன்னைக் குறித்தே ஒருசபதமும் செய்துகொண்ட வில்லாளியான இலக்குமணன் வந்து சமீபத்திற் சேர்ந்து உன்சேனையை முழுவதும் கொன்று, 'விரைவில் நீ பொருவாய்' என்று அழைக்கின்றான்: (அவனுடைய) கட்டமைந்த வில்லின் நாணியினின்று எழுகின்ற ஒல்லென்ற வொலியானது, ஐயனே! (நீ) செய்கின்ற வேள்விக்கு உறுப்பாவதொன்றோ? (எ - று.)

இந்திரசித்து செய்யும்வேள்வி அழிக்கப்பட்டதுபற்றி, 'ஒல்லொலியுறுப்பொன்றாமோ?' என்று இகழ்ச்சியாகக் கூறுகின்றான். பி-ம்:—1என்றொருசபதங். 2வல்லைநீபொருவாய், வல்லைநீவாவா,வல்லையேல்வாவா. 3உறுப்புண்டாமோ. (உகூகஅ)

எகூ. மூவகை 1யுலகுங் காக்கு முதலவன் றம்பி பூசல்
தேவர்கண் முனிவர் மற்றுந் திறத்திறத் துலகஞ் சேர்ந்தார்
யாவருங் காண நின்றா ரினியிறை தாழ்ப்ப 2தென்னே
சாவது சாத மன்றோ வென்றனன் றருமங் 3காப்பான்.

(இ - ள்.) மூவகையுலகங்களையும் காக்கின்ற முதற்கடவுளான திருமாலின் அமிசமான ஸ்ரீராமனுடைய தம்பி செய்யப்போகின்ற போரை, தேவர்களும் இருடியரும் மற்றும் பலவேறுவகைப்பட்ட உலகத்திலுள்ளாரும் யாவரும் காணும்பொருட்டு(வானத்தில்)வந்துநின்றார்கள்:இனி இறைப்பொழுதேனும் தாமதிப்பது ஏன்? (நீ) இறப்பது திண்ணமன்றோ?என்று கூறினான், தருமத்தைக் காக்கவந்தவனான அநுமான்; (எ - று.)

தருமத்தைநிலைநிறுத்துதற்பொருட்டு அவதரித்துள்ள ஸ்ரீராமனுக்குப் பெருந்துணையாயிருத்தல்பற்றி, அநுமானை 'தருமங்காப்பான்' என்றது. பி-ம்:-[1]வினையினின்ற முழுமுதற்றலைவர்முன்னைத். [2]என்னே, [3]போல்வான்.

அ௦.—அதுகேட்ட இர்திரசித்து மறுமாற்றங்கூறத் தொடங்குதல்.

அன்னவா சகங்கள் கேளா வனலுயிர்த் [1]தலங்கற் பொற்றோள்
மின்னகு பகுவா யூடு [2]வெயிலுக நகைபோய் வீங்க
முன்னரே வந்திம் மாற்ற [3]மொழிகின்றீர் மொழிந்த மாற்றம்
என்னதோ [4]நீயிரென்னை யிகழ்ந்ததென் றினைய சொன்னான்.

(இ - ள்.) அந்தவார்த்தைகளைக்கேட்டு, நெருப்பெழப் பெருமூச்செறிந்து, மாலையையணிந்த பொன்தோளையுடைய இந்திரசித்து,—ஒளிவிளங்குகின்ற பிளவுபட்டவாயிலிருந்து வெம்மைவெளிப்படவும், வெகுளிச் சிரிப்பென்பது மிகுதியாகத் தோன்றவும், ('என்) முன்னேவந்து இவ்வாறானவார்த்தையைச் சொல்லுகின்றீர்: நீர் என்னைஇகழ்ந்ததாகி சொன்னசொல் என்னபொருளுள்ளதோ! என்றுசொல்லிப் பின்வருமாறு கூறலானான்; (எ-று.)—இந்திரசித்து கூறுவதனை மேல்ஐந்துகவிகளிற் காண்க.

அலங்கல்பொற்றோள் - இந்திரசித்துக்கு, அன்மொழித்தொகை: இனி, இந்திரசித்தென எழுவாய்வருவித்து, பொற்றோளொடு வெயிலுக, மின்னகுபகுவாயூடு நகைபோய்வீங்க என்றுஇயைத்து, பொற்றோளின் ஆபரணகாந்திவீசுவதையும் வாயிலே வெகுளிச்சிரிப்பு மிகவருவதனையும் இத்தொடர்கள்குறிக்குமென்றலும் ஒன்று. வலியற்றநீசொல்லிய மாற்றம் பொருளுள்ளதன்றென்பான் 'மொழிந்தமாற்றம் என்னதோ நீயிரென்னையிகழ்ந்தது' என்றான். பி-ம்:—[1]அலங்கற்றோளான். [2]நகையுகவெயில்போய்வீங்க. [3]ஆற்றலின்மொழிந்தவாறே, ஆற்றலான்மொழிந்தவாறது. [4]நீங்கள்.'முன்னம் வந்திரந்தமாற்ற மாற்றலன்மொழிந்தவாறே'என்று ஒருபிரதியில்மூன்றாமடி.

அக.—இதுமுதல் ஐந்துகவிகள்-இந்திரசித்து அநுமன்முதலியோரை இகழ்ந்துகூறுதலைத் தெரிவித்தும்.

மூண்டபோர் தோறும் பட்டு முடிந்தநீர் முறையிற் றீர்ந்து
மீண்டபோ ததனை யெல்லா [1]மறத்திரோ விளிதல் வேண்டி
[2]ஈண்டுவா வென்னு நின்றீ ரிந்தனை பேரும் பட்டு
மாண்டபோ துயிர்[3]தந் தீயு மருந்து[4]வைத் தனிரோ [5]மான.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பெருமைபாராட்டுபவனே! நேர்ந்த யுத்தந்தோறும் இறந்தொழிந்த நீங்கள்(இறந்தவர் உயிர்பெறுவதில்லையென்ற) முறைமையினின்று

நீங்கி உயிரைமீளப்பெற்றபோது அந்தச்சாவுநேர்ந்ததையெல்லாம் மறந்து விடுகின்றீரோ? இறத்தலைவிரும்பி, 'நெருங்கவா' என்று அழையாநின்றீர்: நீங்கள் இத்தனைபேரும் உயிரொழிந்துஇறந்தபோது உயிரைத்தரவல்ல மருந்தை வைத்துக்கொண்டிருக்கின்றீர்களோ? (எ-று.)—பி-ம்:—[1]மறத்திரே. [2]ஈண்டவொட்டென்றுநின்றீ ரித்தனைவீருமின்னும், ஈண்டவொட்டென்றுநின்று யித்தனைவீருமின்னம். [3]தந்துய்யும். [4]வைத்தனையோ. [5]மீண்டு. (உகூ௬௬)

அ௨. இலக்குவ னாக மற்றை யிராமனே யாக [1]வின்று
விலக்குவ ரெல்லாம் வந்து [2]விலக்குக [3]குரங்கு வெள்ளங்
குலக்குல மாக மாளுங் கொற்றமு மனிதர் கொள்ளும்
அலக்கணு [4]முனிவர் தாமு மமரருங் காண்ப [5]ரன்றே.

(இ - ள்.) இலக்குவனாகட்டும்: (அன்றி), மற்றையோனாகிய இராமனேயாகட்டும்: இவ்விடத்து (எம்முடையவலிமையை) விலக்குவோரெல்லாம் வந்து விலக்கட்டும்; குரங்கின்வெள்ளக்கணக்கானசேனை கூட்டங்கூட்டமாக மாள்வதனால்(யான் அடையும்)வெற்றியையும்,மனிதராகியஇராமலட்சுமணர் அடையும்வருத்தத்தையும், முனிவர்களும் அமரரும் காணப்போகின்றார்: (எ - று.)—அன்றே - தேற்றம். பி-ம்:—[1]மீண்டு. [2]விலக்குறக், விலக்கினுங். [3]குரங்கின்,குரக்கின். [4]முனிவர்தம். மோடமரரும். [5]இன்றே. (உகூ௭௨)

அ௩. யானுடை வில்லு மென்பொற் றோள்களு மிருக்க வின்னம்
ஊனுடை யுயிர்க ளியாவு [1]முய்யுமோ வொளிப்பி லாமற்
கூனுடைக் குரக்கி னோடு மனிதரைக் கொன்று [2]சென்றவ்
[3]வானினுந் [4]தொடர்ந்துங் கொல்வன் மருந்தினு முய்ய மாட்டீர்.

(இ-ள்.) யான்கொண்டுள்ள வில்லும் என்னுடைய அழகியதோள்களும் இருக்கையில், இன்னமும் சரீரத்தைப்படைத்த பிராணிகளெல்லாம் ஒளிந்து கொள்ளுதல்செய்யாமல் [ஒளிந்துகொள்ளாவிட்டால்] உயிருய்யுமோ? கூனலையுடையகுரங்குடனே மனிதரைக்கொன்றுபோய் அந்தவானத்திலும்தொடர்ந்து (அங்குள்ளாரையும்) கொல்வேன்: (இப்போது இறந்தால் நீவிர்) மருந்தினாலும் பிழைக்கமாட்டீர்: (எ - று.)—'ஒளிப்பிலாமல்'என்ற தொடரை 'கொன்று'என்பதனோடு இயைத்து உரைத்தலுந் தகும். பி-ம்:-[1]உய்யுமேகழுதுண்ணவே, உய்புமேயுயிருணவே. [2]நின்ற. [3]வானிலுந், வானிடைத். [4]தொடர்ந்துகொள்வென். (உகூ௭௩)

அ௪. வேட்கின்ற வேள்வி [1]யின்று பிழைத்தது [2]வென்றோ மென்று
கேட்கின்ற வீர மெல்லாங் [3]கிளத்துவீர் கிளத்தல் வேண்டா
தாழ்க்கின்ற தில்லை [4]யும்மைத் தனித்தனித் தலைகள் [5]பாறச்
சூழ்க்கின்ற [6]வீர மென்கைச் சரங்களாய்த் தோன்று மன்றே.

(இ - ள்.) (நான்)செய்கின்ற வேள்வியானது இன்று (முற்றாமல்) தவறிவிட்டது: (இந்தக்காரணத்தைக்கொண்டு), சயித்தோமென்றுகருதிக் கேட்கப்படுகின்ற வீரவாதமெல்லாஞ் சொல்லுபவர்களே! (அங்ஙனம்) சொல்லவேண்டா; தாமதியாமல் உம்மைத் தனித்தனியே தலைகள்சிந்துமாறு ஆராய்ந்துசெய்யவல்ல வீரத்தன்மை என்கையிலுள்ள அம்புகளாய்த் தோன்றும்;

(எ-று.)—அன்றே-தேற்றம். பி - ம்:—[1]அன்றே. [2]வேறுமின்று. [3]இளைத்துதல் இளத்தலம்மா, இளைத்தது இளைத்தலம்மா. [4]நும்மை. [5]சிந்தச். [6]விதியார்செய்கை—தொடங்குமின்றுணிந்த தெல்லாம். (உகூஎச)

அரு. மற்றெலா நும்மைப் போல வாயினாற் சொல்ல மாட்டேன்
வெற்றிதா [1]னிரண்டுந் தந்தீர் [2]விரைவதீ வெல்லற் கொல்லா
[3]உற்றுநா னுருத்த காலத் தொருமுறை யெதிரே நிற்கக்
கற்றிரோ வின்ன மாண்டு கிடத்திரோ [4]கடத்தி ரோதான்.

(இ - ள்.) (இனி), நும்மைப்போல எல்லாம் வாயினாற் சொல்லமாட்டேன்: இரண்டுமுறையும் எனக்கே வெற்றியைத் தந்தீர்: விரைவதால் வெல்லுதற்கு முடியாது: நான் (போருக்கு)நின்று கோபித்தகாலத்தில் (இன்னம்) ஒருமுறை என்னெதிரேநிற்கக் கற்றுக்கொண்டீரோ? இன்னமும் மாண்டு கிடக்கப்போகின்றீரோ? ஓடிவிடப்போகின்றீரோ? (எ-று) —தான்-அசை. இருமுறை வெற்றிதந்தது-நாகபாசம் விடுத்தபோதும், பிரமாத்திரம்விடுத்த போதும் என்க. பி-ம்:-[1]மூன்றும். [2]விளைவது விளம்பவீவர், விரைவதுவெல்லற்கெல்லாம். [3]முற்று. [4]நடத்திரோதான். (உகூஎரு)

அசு.—இந்திரசித்து யுத்தசன்னத்தனாதல்.

நின்மின்க ணின்மி னென்னா நெருப்பெழ விழித்து நீண்ட
[1]மின்மின்கொள் கவச மிட்டான் வீக்கினான் றூணி வீரப் [வில்
பொன்மின்கொள் கோதை கையிற் பூட்டினான் பொறுத்தான் போர்
என்மின்கொள் வயிரத் திண்டே ரேறினா னெறிந்தா ணாணி.

(இ - ள்.) 'நில்லுங்கள், நில்லுங்கள்'என்று சொல்லி,(இந்திரசித்து),—நெருப்புப்பொறி பறக்க விழித்து நீண்ட [நிலைத்துள்ள] மின்னலைப்போல் ஒளிவிடுகின்ற கவசத்தை (உடலிற்) பூண்டு, தூணியைத் தோளிற்கட்டி, வீரத்திற்குஅறிகுறியான பொன்னினாற் செய்து ஒளிவிடுகின்ற விரலுறையைக் கையிற் பூட்டினவனாய்,போர்வில்லைத் தாங்கி, சூரியன்போல் ஒளிவிடுகின்ற வயிரத்திண்டேரிலேறி, வில்நாணியை யெறிந்தான்; (எ - று.) எல் - சூரியன். மின்கொள்ளுதல் - ஒளிவிடுதல். பி-ம்:—[1]வில். (உகூஎசு)

அஎ.—இந்திரசித்து சங்கத்துவானஞ் செய்தல்.

ஊதினான் சங்கம் வானத் தொண்டொடி மகளி ரொண்கண்
மோதினார் கணத்தின் முன்னே முழுவது [1]முருக்கி முற்றக்
காதினா னென்ன வானோர் கலங்கினார் கயிலை யானும்
போதினான் றானு [2]மின்று புகுந்தது பெரும்போ ரென்றார்.

(இ - ள்.) சங்கத்தை(வாயில் வைத்து) ஊதினான்;கணத்திற்குமுன்னே [க்ஷணகாலத்திற்குள்ளே] முழுவதும் அழித்து மிச்சமின்றிப் பொருதானென்றே கருதி, வானோர் கலங்கினார்கள்; வானத்துள்ள ஒள்ளிய தொடியையணிந்த மகளிர் ஒள்ளிய கண்ணின்மீது மோதிக்கொண்டார்கள்: கயிலையில் வசிப்பவனான சிவபெருமானும் தாமரை மலரில் வாழ்பவனாகிய பிரமதேவனும் 'இன்று பெரும்போர் புகுந்தது' என்றனர்; (எ - று.)—'தமக்குவிருப்ப

மில்லாதசெயல், நிகழ்வதைக் கண்ணுற்பார்க்கநேருமே!' என்றுவானமகளிர் கண்ணின்மீது மோதிக்கொண்டனர். பி-ம்:—[1]முருங்கமுற்றிக், ஒருங்கமுற்றக், முருகமுற்றிக். [2]வல்லே. (உகூஎ)

அஅ.—முன்னர்க்கலங்கினவானவர் பின்புதேறி இந்திரசித்து இறப்பானென்று மகிழ்தல்.

இழைத்தபே ரியாகந் தானே யாஞ்[1]செய்த தவத்தி னாலே
பிழைத்தது [2]பிழைத்த லாலே யிவனினிப் பிழைக்க லாற்றான்
[3]அழைத்தது விதியே [4]யாகு மிலக்குவ னம்பி னாலே
[5]உழைப்பது காண்கின் றேமென் [6]றேங்கினா ரும்ப ரெல்லாம்.

(இ - ள்.) (இந்திரசித்து)செய்யத்தொடங்கிய பெரிய யாகமானது யாஞ்செய்த தவத்தினாலே (முற்றுறாமல்) பிழைபட்டு விட்டது; (அவ்வாறு) பிழைபட்டதனால் இவ்விந்திரசித்து இனிப்பிழைக்க மாட்டான்;(இவனைப்)போர்க்கு அழைத்தது விதியின் செயலேதான்: இலக்குவன் அம்பினாலே (இவ்விந்திரசித்து) வருந்தப்போவதைப் பார்க்கப்போகின்றோமென்று தேவர்களெல்லாம் மனத்தி லூக்கங்கொண்டு கிளர்ந்தார்கள்; (எ-று.) பி-ம்:—[1]செய்மா.[2]பிழைத்தேனும்வானரம் பிழைக்கலாற்றா, பிழைத்தலாலே... ஆற்றாது. [3]அழைத்தது விதுவே. [4]கொல்லெலன்றஞ்சினாரம்பினேரும், கொல்லென்றஞ்சினாரம்பினேடும். [5]உழைத்தது. [6]வணங்கினார். (உகூஅ)

அகூ.—குரங்குகள் இந்திரசித்தினுடையவில்லின் நாணொலிகேட்டதும் நிலைகெட்டோடுதல்.

நாண்டொழி லோசை வீசிச் செவிதொறு நடத்த லோடும்
[1]ஆண்டொழின் மறந்து கையி னடுக்கிய மரனுங் கல்லும்
[2]மீண்டன மறிந்து சோர விழுந்தன [3]விழுந்த மெய்யே
மாண்டன [4]மென்றே யுன்னி [5]யிரிந்தன [6]குரங்கின் மாலை.

(இ - ள்.) நாணைத்தெறித்தலாகிய தொழிலினாலே (தோன்றிய) ஓசை, பரந்து (தம்முடைய) காதுகள்தோறும் படுதலும், (தம்முடைய) பராக்கிரமச் செயலை மறந்து, கையிலே வரிசையாகக் கொண்டிருந்த மரமும் கல்லும் (போர்க்குஉதவாமல்) மடங்கி(ப் பூமியிற்)சோர்ந்துவிழ, (தாமும் போரினின்று)மீண்டனவாய்க் கீழ் வீழ்ந்தன;(அங்ஙனம்)விழுந்தவையான குரங்குகளின் வரிசைகள் மெய்யாகவே மாண்டுவிட்டோமென்று நினைத்து நிலை கெட்டோடின; (எ - று.) இங்ஙனம் நிலைகெட்டோடியவர் சேனாபதியரல்லாத மற்றை வானர ரென்பது அடுத்த கவியால் விளங்கும். பி-ம்:—[1]ஆண்டொழிலுடனே. [2]மீண்டென. [3]வீழமேன்மேல், விழுந்தமெய்ம்மை.[4]எனவே. [5]இரிந்தது. [6]கவியின். [1]மாண்டொழில்என்றும்பிரிக்கலாம். (உகூஎகூ)

கூ௦.—அநுமான் ஒரு மலையைக்கொண்டு போர்க்கு நிற்றல்.

படைப்பெருந் தலைவர் நின்றா ரல்லவ ரிறுதி பற்றும்
அடைப்பருங் காலக் காற்று [1]லாற்றல தாகிக் கீறிப்
[2]புடைத்திரிந் தோடும் வேலைப் புனலென விரிய லுற்றார் [டான்.
கிடைத்தபே ரனும னாண்டோர் நெடுங்கிரி கிழித்துக கொண்

(இ - ள்.) படையிலே பெருமைபெற்ற சேனுபதியாகவுள்ளவர் தவிர மற்றையோர், நாசத்தை யுண்டாக்கவல்ல தாங்கமுடியாத யுகாந்தகாலத்துக் காற்றினாலே தாங்கும் வல்லமையற்றதாகி(த் தன்கரையைவிட்டு) மீறிப்பக் கங்களிலெல்லாம் நிலைகெட்டுஓடுகின்ற கடல்நீர்போல் நிலைகெட்டோடத் தொடங்கினார்கள்: (போர்க்கு) நேர்ந்த பெருமைபெற்ற அநுமான், அங்கே ஒரு பெரிய கிரியைப் பூமியினின்று பேர்த்து எடுத்துக் கொண்டான்;- (எ - று.) பி-ம்:—[1]ஆற்றலவாகிக். [2]உடைத்திரிந்து. (உகூஅ0)

கூக.—இந்திரசித்தின் வீரவாதம்.

நில்லடா நில்லு நில்லு [1]நீயடா வாசி பேசிக்
கல்[2]லெடா நின்ற [3]தென்னே போர்க்களத் தமரர் காணக்
கொல்லலா [4]மென்றோ நன்று குரங்கென்றற் கூடு மன்றே
[5]நல்லைபோர் வாவா வென்று னமனுக்கு நமனாய் நின்றான்.

(இ - ள்.) (அப்போது அதுகண்ட) யமனுக்கும் யமனாய் நின்றவனான இந்திரசித்து,—(அந்த அநுமானை நோக்கி), 'நில் அடா! நில்லு, நில்லு; அடா! நீ விசேஷவார்த்தைகளைப் பேசிக்கொண்டு கல்லை யெடுத்துக்கொண்டு நிற்பது என்ன காரணம்பற்றி? போர்க்களத்திலே தேவர் காணும்படி (என்னைக்) கொல்லலாமென்றுகருதியோ? (உன் செயல்) நன்றாயுள்ளது; குரங் கென்பதனால் (இந்தச் சாபலம்) பொருந்தியதே: (நீ) நல்லவன்தான்: போருக்கு வருவாய், வருவாய் என்றான்; - (எ - று.) பி - ம்:—[1]நீயெடா. [2]அடா நின்ற. [3]என்னைப். [4]என்றேமுன்னி, என்றே நின்று. [5]நல்லையேபொர. ()

கூஉ.—அப்போது தேவர்கள் நடுங்குதல்.

வில்லெடுத் துருத்து நின்ற வீரருள் வீர னேரே
கல்லெடுத் தெறிய [1]வந்த வனுமனைக் கண்ணி னோக்கி
மல்லெடுத் [2]துயர்ந்த [3]தோளாற் கென்கொலோ [4]வலிய தென்னாச்
சொல்லெடுத் தமரர் சொன்னார் தாதையுந் துணுக்க முற்றான்.

(இ - ள்.) வில்லை யெடுத்துக் கோபித்துநின்ற வீரருள் வீரனான இந்திரசித்துக்கு நேரே கல்லையெடுத்துஎறியவந்த அநுமானைக் கண்களால் நோக்கி, 'வலிமையோடு ஓங்கிநின்ற தோளையுடைய இந்தஅநுமானுக்கு மனவுறுதி என்கொலோ?'என்று சொல்லையெடுத்து அமரர் சொன்னார்கள்: (அநுமானுடைய) தந்தையும் மனநடுக்கமடைந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]நின்ற. [2]அமைந்த. [3]தோளார்க்கு. [4]வருவது. (உகூஅஉ)

கூ௩.—அநுமான் வீசிய மலையைக் கண்டு அரக்கர் நடுங்குதல்.

வீசினன் வயிரக் [1]குன்றம் வெம்பொறிக் குலங்கள் விண்ணின்
ஆசையி னிமிர்ந்து செல்ல வாயிர [2]முருவொன் றாகப்
பூசின [3]பிளப்பி தென்ன வருமதன் புரிவை நோக்கிக்
கூசின வுலக மெல்லாங் குலைந்ததவ் வரக்கர் கூட்டம்.

(இ - ள்.) (அநுமான்) உறுதியுள்ள அந்த மலையை, வானத்திலும் திக்கிலும் கொடிய தீப்பொறிக்குலங்கள் பரந்து செல்ல வீசினான்; வெவ்வே

றாகவுள்ள ஆயிரம் உருவம் ஒன்றாகச் சேரப் பூசியதாகும் இது என்னுமாறு வருகின்ற அந்தமலையின் செயலைப் பார்த்து, உலகமெல்லாம் அஞ்சின; அந்த அரக்கர் கூட்டமும் நிலை குலைந்தது; (எ - று.) பிளப்பு என்றதனால் வெவ்வாறான மலையென்பது பெறப்படும்; ஆயிரம் மலைகளை ஒன்றாகச் சேர்த்து இயற்றினாற் போன்றது, அநுமானெறிந்த அம்மலையென்க. பி - ம்:—[1]குன்றைவெறி. [2]உருமொன்றாக.[3]பிழம்பினென்ன,பிழம்பிதென்ன.(உகூஅரு)

கூச.—அம்மலையை இந்திரசித்து தூளாக்கி வீழ்த்தல்.

குண்டல நெடுவில் வீச மேருவிற் குவிந்த தோளான்
அண்டமுங் குலுங்க [1]வார்த்து மாருதி யசனி யஞ்ச
விண்டலத் தெறிந்த குன்றம் வெறுந்துக [2]ளாகி வீழக்
[3]கண்டன னெய்த தன்மை கண்டில ரிமைப்பில் கண்ணார்.

(இ - ள்.) (தண்) குண்டலம் பேரொளியை வீசிக்கொண்டிருக்க, மேருவைப்போலக் குவிந்த தோளையுடையவனான இந்திரசித்து,—அண்டமுங் குலுங்கும்படி ஆரவாரித்து,அநுமான் இடியும் அஞ்சும்படி விண் தலத்திலே யெறிந்த குன்றம் வெறுந்துகளாகி வீழச் செய்தான்: இமைத்தலில்லாதகண்ணையுடைய தேவர்களும், அவன் எய்த செயலைக் கண்டாரில்லை; (எ-று.)—அநுமான் மலையை வீசிய மாத்திரத்தில் வெகு விரைவில் அம்பை யெய்து பொடியாக்கி வீழ்த்தினன் இந்திரசித்தென்க. பி-ம்:—[1]ஆர்த்த. [2]ஆக்கி. [3]கண்டனர். (உகூஅச)

கூரு.—அநுமானை அம்பெய்து இந்திரசித்து துன்புறுத்துதல்.

மாறொரு குன்றம் வாங்கி மறுகுவான் [1]மார்பிற் றோளில்
[2]காறரு காலிற் கையிற் கழுத்தினி னுதலிற் கண்ணின்
ஏறின வென்ப மன்னோ [3]வெரிமுகக் கடவுள் வெம்மை
சீறிய பகழி மாரி தீக்கடு விடத்திற் றோய்ந்த.

(இ - ள்.) வேறொரு குன்றத்தை யெடுத்துச் சுழல்பவனான அநுமானுடைய மார்பின்மீதும் தோளின்மீதும் காற்றைப்போற் செல்லவல்ல காலின்மீதும் கையின்மீதும் கழுத்தின்மீதும் நுதலின்மீதும் கண்களின் மீதும், தீய கொடியவிடத்திற் படிந்தனவாய் எரியைமுகத்திற்கொண்டு தெய்வத்தன்மைவாய்ந்து வெம்மையோடு சீறி வருகின்றனவான (இந்திரசித்தின்) அம்புகளின் மழைகள் ஏறின; (எ - று)—என்ப, மன்னோ - அசைகள். பி-ம்:—[1]வயிரமார்பிற். [2]காறுறு. [3]எரிமுகத். (உகூஅரு)

கூகூ.—அம்பினாலடிபட்ட அநுமானுடைய தோற்றம்.

வெதிரொத்த சிகரக் [1]குன்றின் மருங்குற விளங்க லாலும்
எதிரொத்த விருளைச் [2]சீறி யெழுகின்ற வியற்கை யாலும்
கதிரொத்த பகழிக் கற்றை [3]கதிரொளி காட்ட லாலும்
உதிரத்தின் செம்மை யாலு முதிக்கின்ற கதிரோ னொத்தான்.

(இ - ள்.) மூங்கில் பொருந்திய சிகரத்தோடுகூடிய மலையிலே பக்கத்திலே விளங்குவதாலும், (தன்னுடலொளியால்) எதிரிற்பொருந்திய இரு

ளைப் போக்கித் தோன்றுகின்ற தன்மையாலும், கதிரையொத்த அம்புத் தொகுதி கதிர்களினொளியைக் காட்டுதலாலும், உதிரத்தாற் றோன்றிய செம்மைநிறத்தாலும்,(அநுமான்),--உதிக்கின்ற சூரியனை யொத்தான்;(எ-று.) திரிகூடாசலத்து மருங்கில் தோன்றும் அநுமாநுக்குச் சூரியனுவமை: தற்குறிப்பேற்றவணி. மலையைக்கொண்டு அதன் மருங்குத் தோன்றவதால், 'குன்றின்மருங் குறவிளங்கலாலும்' என்றுரெனினுமாம். பி-ம்:—[1]குன்றம். [2]கிறி. [3]கரவொலி, கரனொளி. (உ௬௮௬)

௬௭.—அநுமான் அயரவே, அங்கதன் முதலியோரும், சுக்கிரீவனும்வர, இர்திரசித்து கூறத் தொடங்குதல்.

ஆயவ னயர்த லோடு மங்கதன் முதல்வ ரானோர்
காய்சினந் திருகி வந்து [1]கலந்தனர் கதிரோன் பெற்ற
தூயசுக் கிரீவன் வந்து தோன்றினன் றோன்றக் கண்டு
தீயவ [2]னவனை நோக்கிக் கனலெனச் சினத்துச் சொன்னான்.

(இ - ள்.) அந்த அநுமான் (இந்திரசித்து எய்த அம்புமழைகளால்) அயர்ந்தவளவில், அங்கதன் முதலோர் காயவல்ல சினத்தோடுமாறுபட்டு வந்து (அங்குச்)சேர்ந்தார்கள்: சூரியன் பெற்ற பரிசுத்தகுணமுள்ள சுக்கிரீவனும் (அங்கு)வந்து தோன்றினான்; தோன்றக்கண்டு, தீயவனான இந்திரசித்து, -அவ்வானரரைப்பார்த்துக்கனல்போலச் சினத்துடனே கூறலானான்;(எ-று.) --அதனைமேலேகாண்க. பி-ம்:—1'கலந்துள்ளார் தம்மைக்காணு, நீயிர்கணின் மினின்மினிருமுறைநெடியவானிற், போயவனெங்கே நின்று னென்றனன் பொருள்செயாதான்'என்ற இந்தப்பாடத்திற்கு,இருமுறைநெடியவானிற்போயவன்-(நாகபாசத்தாற் கட்டுண்டபோதும் பிரமாத்திரம் விடுத்தபோதுமாக) இருமுறைஉயிர் நீங்கிச் சுவர்க்கஞ் சேர்ந்த இலட்சுமணனென்க [2]அவனை. ()

௬௮.—இந்திரசித்து இலக்குமணனைத் தனக்குக் காட்டக் கூறுதல்.

[1]வெம்பின [2]செருவின் வந்து மேவினும் வெகுண்டு சீயந்
தும்பியைத் தொடர்வ தல்லாற் குரங்கினைத் [3]தொடர்வ துண்டோ
அம்பினை மாட்டி யென்னை சிறிதுபோ ராற்ற வல்லான்
தம்பியைக் காட்டித் தாரீர் சாதிரோ [4]சலத்தி னென்றான்.

(இ - ள்.)'கோபித்துச் செய்யும் போரிலே வந்து எதிர்த்து நின்றாலும், சிங்கமானது சினங்கொண்டு யானையைத் தொடருமே யல்லாமல் குரங்கினைத் தொடர்வது உண்டோ? (நும்மீது) அம்பைச் செலுத்தி என்ன பயன்? [உம்மை என்னம்பினாற் கொல்வதால் எனக்குப் புகழுண்டாகாதென்றபடி]; கோபத்தினால் சாகப் போகின்றீரோ? (என்னுடன்) சிறிது போரைச் செய்ய வல்லவனாகிய (இராமன்)தம்பியைக் காட்டிக் கொடுங்கள்' என்று கூறினான்,(இந்திரசித்து); (எ-று.) --பி-ம்:—1வெம்பினர்.2பின்னுமேன்மேற்சேறலும். 3சுளிவதுண்டோ. 4சவத்தின். (உ௬௮௮)

கூகூ.—இதுவும் அது.

*அனுமனைக் கண்டி லீரோ வவனிலும் வலிய ரோவென்*
*[1]தனுவுள தன்றோ தோளி னவ்வலி தவிர்ந்த துண்டோ*
*[2]இனு[3]முனை நீர லீரோ வெவ்வலி யிட்டி வந்தீர்*
*மனிதரைக் காட்டி நுந்த [4]மலைதொறும் வழிக்கொ ளீரே.*

*இதுவும் அடுத்த கவியும்-குளகம்.*

(இ - ள்.) அநுமானைப் பார்த்தீரில்லையோ? அவ்வநுமானைக் காட்டிலும் (நீங்கள்) வலிமையுடையவர்களோ? என்னுடைய வில் உள்ளதன்றோ? (என்) தோளின் அவ்வலி நீங்கிற்றுண்டோ? இன்னும் முன்னேயிருந்த நீங்களே யல்லீரோ? (இப்போது) வெவ்வியவலிமையைச் சம்பாதித்துக் கொண்டு வந்தீரோ? மனிதனைக் காட்டிவிட்டு நும்முடைய மலைதொறும் வழிக்கொள்க [சென்றிடுக]; (எ - று.)

இனுமுனைநீரலீரோ - முன்னம் பல முறைகளில் நீங்கள் என்னால் அடிபட்டவரல்லீரோ? என்றபடி. வெவ்வலியிட்டி வந்தீர் என்பதன் பின்னும் ஓகாரஞ் சேர்த்துப் பொருளுரைக்க. பி-ம்:—[1]தனுவலமின்றோ தோளு மவையல. [2]இனி. [3]முனைநீர். [4]மலையிடை. (உகூஅகூ)

கoo.—இந்திரசித்தின்மீது மரம்முதலியனவீசிய வானரங்கள் அவனால் வலிமையோய்தல்.

*என்றுரைத் திளவ றன்மே லெழுகின்ற வியற்கை நோக்கிக்*
*குன்றமு மரமும் [1]வீசிக் குறுகினர் [2]குழாங்க டோறுஞ்*
*[3]சென்றன பகழி மாரி மேருவை யுருவித் தீர்வ*
*ஒன்றல கோடி கோடி [4]யுளைந்தன [5]வலியு மோய்ந்த.*

(இ - ள்.) என்று (இந்திரசித்து) சொல்லி, இளையபெருமாள்மீது எழுகின்ற செயலைப்பார்த்து, (வானரர்கள்) குன்றங்களையும் மரங்களையும் வீசிக் கிட்டினார்கள்; (அவ்வானரக்) கூட்டங்கடோறும் மேருவையும் உருவியே தீர்வனவாகிய பகழி மழை ஒன்றல்லாமற் பல கோடிக்கணக்காகச் சென்றன: (அம்மழைகளினால் வானரங்கள்) வருந்தினவாய், (தம்) வலிமையையும் இழந்தன; (எ-று.) பி-ம்:—[1]கல்லும் வீசின. [2]குழாங்களோடும். [3]சென்றனன். [4]நுழைந்தன. [5]வலியினுய்த்தான், வலியுமோய்ந்தார். (உகூகூo)

கoக.—விபீஷணன் சொல்ல, இந்திரசித்துமேல் விடத்துணிந்துவந்து இளையபெருமாள் போரில் மூளுதல்.

*படுகின்ற தன்றோ [1]வுன்றன் பெரும்படை பகழி மாரி*
*விடுகின்ற தன்றோ வென்றி யரக்கனுங் காள மேகம்*
*[2]இடுகின்ற வேள்வி யாண்ட தினியவன் பிழைப்பு றாமே*
*முடுகென்று ரைக்கன் றம்பி நம்பியுஞ் சென்று மூண்டான்.*

(இ - ள்.) (அப்போது) இராவணனுடைய தம்பியாகிய விபீஷணன், (இலட்சுமணனை நோக்கி), 'உன்னுடைய பெரிய வானரசேனை இறந்துபடுகின்றதன்றோ? வெற்றிபொருந்திய அரக்கனாகிய காளமேகம் பகழிமாரியை

விடுகின்றதன்றோ? (பலி)இடப்படுகின்ற வேள்வி ஒழிந்திட்டது: இனி அந்த இந்திரசித்து (உயிர்) பிழைத்துப்போகாதபடி விரைவாயென்றான்: இளையபெருமாளும் (இந்திரசித்து இருக்குமிடத்துச்) சென்று (போரில்) மூண்டான்; (எ - று.) பி-ம்:—[1]மற்றான், முற்றான். [2]அடுகின்ற. (உகூகக)

வேறு.

கo௨.—இலட்சுமணன் அநுமான் வேண்டுகோளின்படி அவன்தோளின்மீது ஏறுதல்.

வந்தானெடுந் தகைமாருதி மயங்காமுக மலர்ந்தான்
எந்தாய்கடி தேறென்றிரு தோண்மிசை யென்றான்
[1]அந்தாகவென் றுவந்தையனு மமைவாயின னிமையோர்
சிந்தாகுலங் [2]களைந்தானென நெடுஞ்சாரிகை திரிந்தான்.

(இ-ள்.) நெடுங்குணமுள்ள மாருதி மயங்காமல்[அயர்வுநீங்கி]வந்துமுகம் மலர்ந்து, 'எந்தாய்! எனது இரண்டு தோளின்மீது கடிது ஏறுவாய்' என்று வேண்டினான்; அவனும் அப்படியேயென்று உவந்து உடன்பட்டான்;'இமையோருடையசிந்தாகுலத்தை (இவன்) போக்கிவிட்டான்' என்று(கண்டோர்) கருதும்படிநெடுஞ்சாரிகை திரிபவனானான், (அநுமான்); (எ-று.)—அநுமான் சாரிகை திரிவதனால்இந்திரசித்தை இலட்சுமணன் எளிதில்வெல்லலாமென்றஎண்ணமுண்டாக, அவ்வழியால் தேவர்களின் சிந்தாகுலத்தைக் களைந்தானென்க. அந்து -கன்னடத்தினின்று தமிழில் வந்து வழங்கிய திசைச்சொலென்பர். பி-ம்:—[1]அந்தாவறவுவந்து. [2]துறந்தாரவன். (உகூகஉ)

கoந.—இனி இருபத்தைந்து கவிகள் - இந்திரசித்துக்கும் இலட்சுமணனுக்கும் நிகழ்ந்த போரைத் தெரிவிக்கும்.

காராயிர [1]முடனானகிய தெனலாகிய கரியோன்
ஓராயிரம் பரிபூண்டதொ ருயர்தேர்மிசை [2]புயர்ந்தான்
நேராயின ரிருவோர்களு நெடுமாருதி நிமிரும்
பேராயிர முடையானெனத் திசையெங்கணும் பெயர்ந்தான்.

(இ - ள்.) ஆயிரம்மேகங்கள் ஒருசேர நின்றது என்று சொல்லுதற்கு ஏற்ற [மிகக்கரிய] கொடியவனான இந்திரசித்து, ஓராயிரம்பரிபூண்டதான ஒரு உயர்ந்ததேரின்மிசை யுயரத்தோன்றினான்: (இலட்சுமணன் இந்திரசித்து என்ற) இருவீரர்களும் நேர்க்குநேராயினர்: நெடியமாருதி, (திரிவிக்கிரமனாகி) ஓங்கிய ஆயிரம்பேர்படைத்த திருமால்போல எல்லாத்திசைகளிலும் சென்றான்; (எ - று.)— 'காராயிரமுடனானகிய தெனலாகிய' என்பதை, விரைவுபற்றிப் பரிக்கு உவமைகூறியதாகப் பொருள் கூறுவாருமுளர். பி-ம்:—[1]உடனாயின வெனலாயினகரியோன். [2]உருத்தான். (உகூகூ)

கoச. தீயொப்பன வுருமொப்பன [1]வுயிர்வேட்டன திரியும்
பேயொப்பன பசியொப்பன பிணியொப்பன பிழையா
மாயக்கொடு வினையொப்பன [2]மனமொப்பன கழுகின்
தாயொப்பன [3]சிலவாளிக டுரந்தானுயி றுறந்தான்.

(இ - ள்.) துயிலை நீத்தவனாகிய இலட்சுமணன்,—தீயையொத்து எரிக்குந்தன்மையனவும், இடியையொத்து உக்கிரமுள்ளனவும், உயிரை விரும்பியனவாய்த் திரியும் பேயையொப்பனவும், பசியை யொப்பனவும், பிணியையொப்பனவும், தவறாத பிரகிருதிசம்பந்தத் தாலுளதாகிய கொடிய வினையையொப்பனவும், மனத்தையொப்ப னவும், கழுகின் தாய்ப் பறவையையொப்பனவுமான சில அம்புகளைத் துரந்தான்; (எ - று.)

பேய் உயிரைவேட்டலில் வாளிக்கு உவமை; வாளி-அம்பு. பசியும் பிணியும்-உள்ளும் புறமும்நின்று வருத்துதலில் உவமை. இலக்கு ஆன வனைத்தவறாமற் பயனை நுகர்வித்தலில், வினை உவமை. தாய்ப்பறவை தம்குஞ்சுகளுக்கு உணவளிக்குந் தன்மையன : கழுகுகட்கு இரை தரு தலால், 'கழுகின் தாயொப்பன' என்றது. பி-ம்:—[1]உயிர்வேட்டெனத். [2]மழுவொப்பன. [3]சிலவெங்கணை. (உகூகச)

கoரு. [1]அவ்வம்பினை யவ்வம்பினி னறுத்தா [2]னிக லரக்கன்
எவ்வம்பினி யுலகத்[3]துள தென்னும்படி யெய்தான்
[4]எவ்வம்பர மெவ்வெண்டிசை யெவ்வேலைகள் பிறவும்
[5]வவ்வுங்கடை யுகமாமழை பொழிகின்றது [6]மான.

(இ-ள்.)வலிமை பொருந்திய அரக்கன்,—அந்த அம்புகளை அந்த[அவ் வாறான] அம்புகளினாலேயே முறித்துத் தள்ளினான்: (பின்பு), ஆகாயம் எவ்வளவு (உண்டோ), எட்டுத்திசைகள் எவ்வளவு (தூரம்உண்டோ), எத்துணைச் சமுத்திரங்கள் (உண்டோ)(இவைகளையும்)மற்றைப் பிரதே சங்களையும் கவிந்து கொள்கின்ற கடையுகத்து மிக்கமழைகள் பொழி வதையொப்ப, இனி எந்த அம்பு உலகத்து (மிச்சமாக) உள்ளது [எந்த அம்பும் மிச்சம் இல்லை] என்னும்படி (மிகப் பல அம்புகளை இலட்சும ணன்)தொடுத்து விட்டான்;(எ-று.)--எய்தானென்பதற்கும் அரக்கனெ ன்பதையே எழுவாயாகக்கொள்வாருமுளர். பி-ம்:—[1]அவ்வம்பையும். [2]அடல். [3]உள. [4]வெவ்வம்பரம்வையந்திசைமலை. [5]வய்யம். [6]மானம். ()

கoசு. ஆயோனெடுங் குருவிக்குல [1]மென்னுஞ்சில வம்பாற்
[2]போயோடிடத் துரந்தானவை பொறியோவென [3]மறியத்
தூயோனுமத் துணைவாளிகள் தொடுத்தானவை [4]தடுத்தான்
தீயோனுமக் கணத்தாயிர நெடுஞ்சாரிகை திரிந்தான்.

(இ - ள்.) அந்த இந்திரசித்து, நெடிய குருவிக்கூட்டமென்று சொல்லுதற்குரிய சில அம்புகளினால் அவைகளை ஒழிந்துபோய்விடும் படி துரந்தான்: (அவை) பொறியோவென்னுமாறு மீண்டிட, பரிசுத்த னாகிய இலட்சுமணனும் (பின்னும்) அத்துணைவாளிகள் தொடுத்தான்: அவற்றைத் தடுத்தவனாய்க் கொடியவனாகிய இந்திரசித்தும், அக்கணத் தில் ஆயிரம் நெடுஞ்சாரிகை திரிந்தான்; (எ - று.)—பொறி - தீப் பொறி; ஊழ்வினையென்பாருமுளர். பி - ம்—[1]எனலாஞ்சில, என்பா னென. [2]போயோவிடத். [3]மறைய. [4]துணித்தான். (உகூகசு)

கoஎ. கல்லுந்நெடு [1]மலையும்பல மரமுங்[2]கடை காணும்
புல்லுஞ்சிறு [3]கொடியும்மிடை தெரியாவகை புரியச் [வோன்
செல்லுந்நெறி[4] தொறுஞ்சென்றன [5]தெறுங்கால்புரை மற
[6]மல்லின்முதிர் [7]தேருஞ்சின வயமாருதி [8]தாளும்.

(இ - ள்.) கற்களும் நெடியமலைகளும் பலமரங்களும் (தாவரவருக்கத்திற்) கடையாய்நின்ற புல்லும் சிறுகொடியும் வேறுபாடு தெரியாதபடி [எல்லாவிடத்திலும் சமனாக] விரும்பச் செல்லுகின்ற வழிதோறும், (யுகாந்த காலத்திலே உயிர்களையெல்லாம்) அழிக்கின்ற சண்டமாருதத்தையொத்த மறத்தையுடையவனான இந்திரசித்தின் வலிமைமிக்க தேரும், சினங்கொண்ட வலிய மாருதியின் கால்களும் சென்றன.

அநுமன் கால்சென்றவழி இந்திரசித்தின்தேரும், இந்திரசித்தின் தேர் சென்றவழி அநுமன்காலும், கல் மலை முதலிய இடவேறுபாடு கருதாது எங்கும் ஒருநிகராகப் புரிந்துசென்றன வென்க. பி - ம்:— [1]மரனும்பலமலையும். [2]இடை. [3]பொடியும். [4]முறை. [5]தெறு. [6]சில்லும், மல்லும், சில்லின். [7]தேருங்கவி. [8]காலும். (உகூஎ)

கoஅ. இருவீரரு மிவனின்னவ [1]னிவனின்னவ னென்னச்
[2]செருவீரரு மறியாவகை திரிந்தார்கணை சொரிந்தார்
ஒருவீரரு மிவ[3]ரொக்கில ரெனவானவ ருவந்தார் [ர்.
பொருவீரையும் பொருவீரையும் பொருதாலெனப் பொருதா

(இ - ள்.) (இந்திரசித்து இலட்சுமணன் என்ற) இருவீரர்களும் 'இவன் இன்னான், இவன் இன்னான்' என்று போர்வீரரும் அறியாவகை திரிந்தவராய்க் கணைகளைப் பொழிந்தார்கள்; (அப்போது) 'ஒருவீரரும் இவரை ஒத்திலர்' என்று தேவர்களும் பாராட்டிக்கூறினார்கள்: (அலை) மோதுகின்ற கடலும் (அலை) மோதுகின்ற கடலும் (தம்மிற்) பொருதாலென (அவ்விருவீரரும்) பொருதார்கள்; (எ - று.) —பி - ம்: —[1]இவனின்னனென்றிமையாத். [2]திருவீரருந்தெரியா. [3]நேர்கிலர். ()

கoகூ. விண்[1]செல்கில செல்கின்றன விசிகம்மென விமையோர்
கண்செல்கில மனஞ்செல்கில கணிதம்முறு [2]மெனினோர்
எண்செல்கில நெடுங்காலவ னிடைசெல்கில [3]னுடன்மேற்
புண்செல்வன [4]வல்லாலொரு பொருள்[5]செல்வன தெரியா.

(இ - ள்.) '(எய்த) அம்புகள் விண்ணிற் செல்கிலவோ, செல்கின்றனவோ?' என்றுஉணருமாறு தேவர்களின் கண்களுஞ் செல்கில: மனமுஞ் செல்கில: அளவில் (அந்தஅம்புகள்) அடங்குமெனிலோ, ஒரு எண்ணும் செல்லவில்லை: (அவ்வம்புகளின்) இடையே நெடியவாயுதேவனும் செல்லமாட்டாதவனாயினன்: உடலின்மீது புண்செல்வனவல்லாமல் வேறொருபொருள் செல்லுந்தொழில்கள் காணப்பட்டில;(எ - று.) —விண் - ஆகுபெயர். கண்முதலியவற்றின்பின் உம்மைகள் விகாரத்தால் தொக்கன. கால்அவன் - கால்என்று சொல்லப்படுகின்ற அத்தேவன்; வாயுதேவன். பி - ம்:—[1]செல்வனசெல்கின்றன, செல்கிலசெல்கின்றில. [2]எனிலோ. [3]உடனே. [4]வல்லார், [5]செய்வன, (உகூகூ)

ககo. எரிந்தேறின திசையானையு [1]மிடியாமெனப் பொடியாய்
நெரிந்தேறின நெடுநாணொலி [2]படர்வானிறை [3]யுருமிற்
சொரிந்தேறின [4]சுடுவெங்கணை தொடுந்தாரகை முழுதுங்
கரிந்தேறின வுலகியாவையுங் கனல்வெம்புகை கதுவ.

(இ-ள்.)(யாவையும்)நெரியும்படி மிக்குத்தோன்றிய நெடிய நாணொலி பரந்தவானத்தில் நிறைகின்றஇடிபோல(க்காணப்பட,அவ்விருவீரரும்) சொரிந்ததனால் வெளியேறின சுடுவெங்கணைகள் உலகெங்கும் கனலின் வெவ்வியபுகைகதுவ(ஒன்றையொன்றுமோதி)ப் பொடியாகிஇடிபோல எரிந்துகொண்டு திசையெங்கும் வியாபித்தன:(ஆகாயத்துத்)தோன்று கின்ற நட்சத்திரமுழுதும்(அந்தஅம்புகளினாற்) கரிந்துகொண்டு பரவிநி ன்றன; (எ-று.)—பி-ம்:—[1]மலையானையுமிமையா, மலையானையுமிடியா. [2]பட. [3]உருமுஞ். [4]துரந்தேறினசுடுவெங்கணைமுழுதும். (கூ000)

ககக. வெடிக்கின்றன [1]திசையானையும் [2]விழுகின்றன [3]விடிவந்து
இடிக்கின்றன [4]சிலைநாணொலி யிருவாய்களு மெதிரக்
கடிக்கின்றன கனல்வெங்கணை கலிவா[5]னுற விசைமேற்
பொடிக்கின்றன பொறிவெங்கன லிவைகண்டனர் புலவோர்.

(இ - ள்.) வில்நாணியினொலி,—திசையானையும் வெடிக்கின்றன வாய், விழுகின்றனவான இடிபோலத்தோன்றி ஒலிக்கின்றனவாயின; (வில்லின்)இரண்டுமூனைகளும் எதிர்தலாலே [வளைதலாலே] (உடலைக்) கடித்துக்கொள்வனவான கனலைக்கொண்ட கொடியஅம்புகள்,—ஒலி யைக்குணமாகக்கொண்ட வானத்திற்பொருந்தச்சென்ற விசையினால் மேலே வெங்கனற்பொறியைத் தோற்றுவிப்பனவாயின: இவற்றை யெல்லாம் தேவர்கள் கண்டார்கள்; (எ - று.)—இருவாய்களுமெதிரக் கடிக்கின்றனஎன்றுஎடுத்து - இரண்டுவீரரின்வாய்களும் மாறுபட்டு (க் கோபத்தால் நெறுநெறென)க் கடிப்பனவாயின என்றுமாம். பி-ம்:— [1]மலைநின்றன. [2]அழிக்கின்றன. [3]விழவந்து. [4]சிறு. [5]உரை. (கூ00க)

ககஉ. கடல்வற்றின மலையுக்கன [1]பருதிக்கனல் [2]கதுவுற்று
உடல்[3]பற்றின [4]மரமுற்றன [5]கனல்பட்டன வுதிரஞ்
[6]சுடர்வற்றின சுறுமிக்கது துணிபட்[7]டுதிர் கணையின்
[8]திடர்பட்டது பரவைக்[9]குழி [10]திரியுற்றது புவனம்.

(இ - ள்.) (அவ்விருவரும் எய்த அம்புகளினால்), கடல்களெல்லாம் வற்றின; மலைகள், பிளவுபட்டன; சூரியனுடைய உடல்முழுதும், கன லாற்கதுவப்பட்டுப் பற்றியெரிந்தன, மரங்கள் உற்றனவான கனலினால் அழிந்தன; இரத்தம், சுடர்வற்றின; சுறுநாற்றம், மிக்குத்தோன்றிற்று; துணிபட்டுஉதிர்கின்ற கணைகளாலே கடலாகியகுழிந்தஇடம் மேடாகி விட்டது; புவனமும் சுழன்றது; (எ - று.)—பி - ம்:—[1]பருவக்கனல். [2]பருகுற்று. [3]வற்றின. [4]மரமுற்றின. [5]அனல்பட்டன, கனல்பற்றின. [6]சுடர்பற்றினசுறவுக்கன, சுடுவற்றனவெரியுக்கது. [7]உயர். [8]திடருற் றது. [9]புவி. [10]திரிவுற்றன, திரிவுற்றது. (கூ00உ)

கக௩.எரிகின்றன [1]வயில்வெங்கணை யிருசேனையு மிரியத்
திரிகின்றன [2]புடைநின்றில திசைசென்றன சிதறிக்
கரிபொன்றின பரிமங்கின கவிசிந்தின கடல்போற்
சொரிகின்றன பொருசெம்புன [3]லுலைகின்றனர் கொலையால்.

(இ-ள்.)(இருவரும் விடுத்த)எரிகின்றனவான கூரிய வெவ்வியகணைகள்;—இருசேனைகளும் நிலைகெடும்படி திரிவனவாய் அங்குத்தானே நில்லாமல் திக்குகளிற் சிதறிச் சென்றன: (அக்கணைகளினால்), யானைகள் இறந்தன; குதிரைகள் அவிந்தன; வானரங்கள் சிதறின: கடல்போல (அலை) மோதுகின்ற இரத்தம் வெளிப்படுவனவாயின; (பலவீரர்களும்) கொலையால் உயிர்தொலைபவராயினர்; (எ - று.)—பி - ம்:—[1]விரிவெங். [2]இடை. [3]தொலைகின்றன. (௩௦௦௩)

ககச.[1]புரிந்தோடின [1]புகைந்தோடின பொரிந்தோடின [2]புகை
யரிந்தோடின [3]கரிந்தோடின விடமோடின வலமே [போய்
[4]திரிந்தோடின [5]செறிந்தோடின விரிந்தோடின திசைமேற்
[6]சரிந்தோடின கருங்கோளரிக் கிளையான்விடு [7]சரமே.

(இ - ள்.) கருநிறமுடைய வலிய சிங்கம்போன்ற ஸ்ரீராமனுக்கு இளையவனாகிய இலட்சுமணன் விடுத்த சரங்களுள் (சில), வளைந்தோடின: (சில), புகைந்தோடின; (சில), பொரிந்தோடின; (சில), புகை நீங்கி எரிந்தவண்ணம் மோடின; (சில), கரிந்தோடின: (சில), இடமோடின; (சில), வலமே திரிந்தோடின; (சில), நெருங்கியோடின; (சில ஒன்றுநூறாகி), விரிந்தோடின; (சில), திக்குகளிற் சரிந்து ஓடின;(எ-று)—பி - ம்:—[1]பொரிந்தோடினபுகைந்தோடின, புகைந்தோடினபொறிந்தோடின. [2]புகையோடு. [3]எதிர்ந்தோடின, இரிந்தோடின. [4]தெரிந்தோடின. [5]கரிந்தோடின செறிந்தோடின, விரிந்தோடின செறிந்தோடின. [6]கரிந்தோடின. [7]விசிகம். (௩௦௦௪)

ககரு.நீரொத்தன நெருப்பொத்தன பொருப்பொத்தன நிமிருங்
காரொத்தன வுருமொத்தன கடலொத்தன கதிரோன்
தேரொத்தன விடைமேலவன் [1]சிரிப்பொத்தன வுலகின்
வேரொத்தன [2]செருவொத்திக லரக்கன்விடு [3]விசிகம்.

(இ - ள்.) போரிலே ஒத்துப்போர்செய்கின்ற இந்திரசித்து விடுத்த அம்புகளுள் (சில), நீரையொத்தன; (சில), நெருப்பையொத்தன; (சில), மலையையொத்தன (சிலவானத்து) நிமிரும் மேகத்தையொத்தன;(சில), இடியையொத்தன: (சில), கடலையொத்தன; (சில), சூரியன்தேரைப் போன்றன; (சில), இடபத்தை வாகனமாகக்கொண்டு ஊர்பவனாகிய சிவபெருமானின் சிரிப்பையொத்தன; (அச்சத்தினால்தோன்றிய) உலகத்தின் வேர்வை நீரையொத்தன; (எ - று.)

வேர்என்பதற்கு - மூலமெனப்பொருள்கொள்ளலும் ஒன்று: உலகம் நிலைகெடும்படி களைந்துவெளிவிட்ட வேரையொத்தன என்க. நீரொத்தன என்பதற்கு - மேகத்தினின்று நீர்த்தாரை வெளிப்படுவதுபோல

விற்களினின்று அம்புகள் வெளிப்பட்டன எனக் கருத்துக்காணலாம். பி-ம்:—1சினம்.2வாயொத்தனநிருதன்,விறன்மேதகுநிருதன். 3சரமே.()

ககசு.1ஏமத்தடங் கவசத்திக லகலத்தன விருவோர்
வாமப்2பெருந் தோண்3மேலன வதனத்தன 4வயிரத்
5தாமத்தன மார்பத்தன சாணத்தன 6தத்தங்
காமக்குல மடமங்கையர் கடைக்கண்ணெனக் கணைகள்.

(இ - ள்.) காமத்தையுண்டாக்குகின்ற குலத்திற்பிறந்த மடமைக் குணம்பூண்ட தம்தமது மங்கையரின் கடைக்கண்ணைப்போல, (இந்திர சித்தும் இலட்சுமணனும் விட்ட) அம்புகள்,—பாதுகாவலாகிய பெரிய கவசத்தைப்பூண்ட பராக்கிரமம்அமைந்த மார்பில்தங்குவனவும், இருவோரின்அழகிய பெரியதோளிற்பதிவனவும், முகத்திற்பாய்வனவும் உறுதியான மாலையையணிந்தனவான மார்பிற்பாய்வனவும், இரண்டு கால்களிலும் பாய்வனவுமாயின; (எ - று.)—மங்கையர்கண்கள்போல மார்புமுதலியபலவிடங்களிலும் அம்புகள் பாய்ந்தன வென்க. பி-ம்:—1ஏமத்தடுகவசத்தனவொருவோரென.2பொருந்.3மேலவன், மேலென, 4வயிர்த்த, உயிர்த்த. 5தாமத்துணைக்குறங்கோடிரு. 6தங்காக்.(ருoOசு)

ககஎ.எந்நாளினி னெத்தேவர்க ளெத்தானவ 1ரெவரே
2அன்னார்செரு வொத்தாரென விமையோரெடுத் தார்த்தார்
பொன்னார்சிலை யிருகால்களு மொருகால்பொறை யுயிரா
முன்னாளினி லிரண்டாம்பிறை முளைத்தா லென வளைத்தார்.

(இ - ள்.) எந்தநாளினில் எந்தத்தேவர்கள் எந்தத்தானவர் (மற்று முள்ள) எவர்தாம் (இந்திரசித்து இலட்சுமணன் என்ற) அவருடைய செருவையொத்துப் போர்புரிந்தாரெனத் தேவர்கள்எடுத்து ஆரவாரித்தார்கள்; பொன்கட்டுஅமைந்த விற்களின்இருமுனைகளும் ஒருமுறை பொறையுயிர்க்குமாறு முதற்பட்சமாகிய சுக்கிலபட்சத்தில் இரண்டாம் பிறை முளைத்தால்போல வளைத்தார்; (எ - று.)—பொறையுயிர்த்தல்-அம்புகளைவெளிப்படுத்துதலால் தம்பாரம்நீங்குதல். ஒருமுறைவளைத்த வில் அம்புகளை உமிழ்ந்தபடியே இருந்ததென்பார், 'ஒருகால் வளைத்தார்' என்றார். நாள் - பட்சமென்றபொருளில்வருதலை, "இருணாட் பிறந்தவம்மானை" என்ற இடத்துங்காண்க. முன்நாள்-பூர்வபட்சம்.பி-ம்:—1இவரே. 2என்னே, இன்னார்.　　(ருoOஎ)

ககஅ.வேகின்றன 1வுலகிங்கிவர்விடுகின்றன விசிகம்
போகின்றன 2சுடர்வெந்தன விமையோர்களும் 3புலர்ந்தார்
ஆகின்றதொ ரழிகாலமி தாமன்றென வயிர்த்தார்
நோகின்றன திசையானைகள் 4செவிநாணொலி நுழைய.

(இ - ள்.) இப்போது இவர் விடுகின்றனவான அம்புகளால் உலகம் வேகின்றன; (வானத்திற்) சஞ்சரிப்பனவான (சூரியன்முதலிய)சுடர்கள்வெந்தன; இமையோர்களும் உடல்வற்றினர்:(அன்றியும்),'தோன்றுகின்ற ஊழிக்காலம் இதுவாகும் அன்றாகும்' என்று அயிர்த்தார்கள்

திக்கஜங்கள், (தம்)செவியிலே நாணியினொலி நுழைய வருந்துவனவாயின; (எ-று.)—பி-ம்:—[1]உலகங்கிளர். [2]கடல்வெந்தன, சுடர்கின்றன. [3]புலந்தார். [4]சிலை. (௩00அ)

௧௧௯. மீ[1]னுக்கது நெடுவானகம் வெயி[1]னுக்கது சுடரும்
மா[1]னுக்கது முழுவெண்மதி மழையுக்கது வானந்
தானுக்கது குலமால்வரை [2]தலையுக்கது தகைசால்
[3]ஊனுக்கன வுயிருக்கன வுலகத்தினி னெங்கும்.

(இ-ள்.) (இருவரும் எய்த அம்புகள் படுவதனால்), நெடியவானத்திலிருந்து நட்சத்திரங்கள் உதிர்ந்தன; சூரியனும் வெம்மையை யுகுத்திட்டது; முழுவெண்மதி மானைச் சிந்திவிட்டது, வானம் மழைகளைச் சிந்திற்று; அஷ்டகுலாசலமும் பொடியாகிவிட்டது; பெருமைமிக்க (பல) தலைகள் கீழ்சிந்தின: உலகத்தி லெங்கும் (எல்லாப் பிராணிகளும்) உடம்பைச் சிந்தினவாய் உயிரைச்சிந்தின; (எ-று.)—மீன், மலை, தலை என்பன-சாதியொருமையாதலால், ஒருமைமுற்றைக் கொண்டன. தானுக்கதுகுலமால்வரை தலையுக்கது என்பதற்கு-குலமால்வரை உகத்தொடங்கி முதலிற் றலையுக்கதெனக் கூறுவாருமுளர். பி-ம்:—[1]உக்கன. [2]தரையுக்கன. [3]ஊனுக்கனவுயிருக்கனவுலகத்தினுளவரும், ஊனுக்கவெவ்வுலகத்தினு முள்வாயின வுயிரும், ஊனுக்கதெவ்...னெங்கும், ஊனுக்கது முயிரோடேனுலகத்தினுளவையும். (௩00௯)

௧௨0. அக்காலையி னயில்வெங்கணை யையைந்துபுக் கழுந்தத்
திக்காசற வென்றான்மக னிளங்கோ[1]வுடற் செறித்தான்
கைக்கார்முகம் வளையச்சில [2]கனல்வெங்[3]கணை கவசம்
புக்காகமுங் கழன்[4]றோடிட விளங்கோளரி பொழிந்தான்.

(இ - ள்.) திக்குக்களையெல்லாம் குற்றமற வென்றவனான இராவணனுடையமகனான இந்திரசித்து,—அந்தக்காலத்தில், கூரிய வெவ்விய கணை இருபத்தைந்து புக்கு அழுந்தும்படி இளையபெருமானின் உடலிலே நெருங்க விடுத்தான்; இளையசிங்கம்போன்ற இளையபெருமானும்,—(தன்) கையிற்பிடித்த வில் வளைய, சில கனல்கின்ற கொடிய அம்புகள் (இட்சுமணனது) கவசத்திற்புகுந்து உடலினின்றுங் கழன்று போம்படி பொழிந்தான்; (எ-று.)—கவசத்திற் புகுந்து உடலைத்துளைத்து வெளிப்படுமாறு இளங்கோளரிபொழிந்தானென்க. ஐயைந்து என்பதை உம்மைத்தொகையாகக்கொள்ளின், பத்து என்று பொருள்படும். பி-ம்:—[1]உடல். [2]கதிர். [3]சரங். [4]ஆடிட. (௩0௧0)

௧௨௧. தெரிந்தான்சில சுடர்வெங்கணை [1]தேவேந்திரன் சினமா
இரிந்தோடிடத் துரந்தோடின விமையோரையு [2]முன்னாள்
அரிந்தோடின [3]வெரிந்தோடின வவைகோத்தட லரக்கன்
சொரிந்தா [4]னுயர் நெடுமாருதி தோண்[5]மேலினிற் றோன்ற.

(இ - ள்.) வலிமைபொருந்திய அரக்கன்,—தேவேந்திரனுடைய சினங்கொண்ட ஐராவதயானை நிலைகெட்டு ஓடிவிட (வில்லைவிட்டுத்)

தூரந்து விரைந்துசென்றனவும், தேவர்களையும் முற்காலத்தில் அரிந்தோடினவும், எரிந்தோடினவுமான சில சுடர்கின்ற வெவ்விய கணைகளைத் தெரிந்தெடுத்து அவற்றைக் கோத்து உயர்ந்துள்ள நெடியமாருதியின் தோளின்மேல் தோன்றுமாறு பொழிந்தான்;(எ-று.)—பி-ம்:—
[1]தேர்பூண்டன, தெய்வேந்திரன். [2]அந்நாள். [3]எரிந்தோடுறும். [4]அவை. [5]புக்கனதோன்ற. (௩௦௧௧)

கஉஉ. குருதிப்புனல் [1]சொரியக்குணங் குணிப்பில்லவன் குணபாற்
[2]பருதிப்படி பொலிவுற்றதை யிலங்கோளரி பார்த்தான்
ஒருதிக்கினும் [3]பெயராவகை யவன்றேரினை யுதிர்த்தான்
பொருதிக்கணம் வென்றானெனச் சரமாரிகள் பொழிந்தான்.

(இ - ள்.) எண்ணமுடியாத [மிக்க] குணங்களையுடையவனான அநுமன் குருதிநீர்சொரிவதனால் மேற்றிசையிற்சேர்ந்த [அஸ்தமிக்குந்தருணத்தையடைந்த],சூரியன்போலப் பொலிவுற்றதை இளையசிங்கம்போன்ற இலட்சுமணன்,—பார்த்து, 'பொருது இக்கணத்தில்தானே வென்றானவன்' என்று (கண்டோர்) கருதும்படி சரமாரிகளைப் பொழிந்து, ஒருதிக்கிலும் பெயர்ந்து செல்லமுடியாதபடி அந்த இந்திரசித்தின் தேரைப் பொடிப் பொடியாக உதிரச்செய்தான்; (எ - று.)—பி-ம்:—
[1]சொரியும்முயர்குன்றென்னுமவ்வநுமன். [2]பருதித்திருநிறமொத்ததை. [3]உயராவகை. (௩௦௧௨)

கஉ௩. அத்தே[1]ரழிந் ததுநோக்கிய விமையோரெடுத் தார்த்தார்
முத்தேவரு முவந்தா[2]ரவ னுருமேறென முனிந்தான்
தத்தாவொரு தடந்தேரினைத் தொடர்ந்தான்சரந் தலைமேற்
பத்தேவின னவை[3]பாய்தலி னிளங்கோளரி பதைத்தான்.

(இ-ள்.) அந்த இந்திரசித்தின்தேர் அழிந்ததை நோக்கிய தேவர்கள் எடுத்து[ஓங்கியகுரலுடன்] ஆரவாரித்தார்கள்; (அயன் அரி அரன்என்னும்)மூன்றுதேவர்களும் மகிழ்ந்தார்கள்; அந்த இந்திரசித்து இடியேறுபோலச்சினந்து பாய்ந்துசென்று ஒருபெரியதேரினைத் தொடர்ந்தேறி, (பின்பு)பத்துச்சரங்களை (இலட்சுமணனுடைய) தலைமேல் ஏவினான்;அவைபாய்தலினால்,இளையபெருமாள் துடித்துச்சோர்ந்தார்;(எ-று.)-பி-ம்:
—[1]அழிந்திடநோக்கினன், அழிந்திடநோக்கினர். [2]முதல். [3]பாய்தலும்.

கஉ௪. பதைத்தானுட [1]னிலைத்தான்சில பகுவாயயிற் பகழி,
விதைத்தா[2]னவன் விலக்காதமுன் விடைமேல்வரு [3]விமலன், [4]மத
த்தாலெதிர் வருகாலனை யொருகாலுற மருமத்து, [5]உதைத்தா
லெனத் தனித்தோர்கணை யவன்[6]மார்பினி[7]லுதைத்தான்.

(இ - ள்.) பதைத்த இலட்சுமணன்,—உடம்பு தேறினவனாய், சில பிளவுபட்ட வாயையுடைய கூரிய அம்புகளை வித்தினான்: அவ்விந்திரசித்து (அவைகளை) விலக்குவதற்கு முன்னமே, விடைமேல் வருகின்ற விமலனான சிவபெருமான் உடற்கொழுப்பினால் எதிர்த்து வந்த யமனை ஒருகால் மருமத்திலே யூன்ற உதைத்தாற்போலத்தனித்த ஒருகணையை அந்த இந்திரசித்தினுடைய மார்பிலேசெலுத்தினான்;(எ-று.)—பி-ம்:—

[1]தரித்தான்சில.[2]அவை.[3]நெடியோன்,சடையோன்.[4]மதத்தானென,மதித்தானென. [5]உதைத்தானெனத். [6]மார்பிடை. [7]உய்த்தான்,தைத்தான்.

௧௨௫. கவசத்தையு நெடுமார்பையுங் [1]கழன்றக்கணை கழிய
அவசத்தொழி லடைந்தானதற் கிமையோரெடுத் தார்த்தார்
திவசத்தெழு [2]கதிரோனெனத் [3]தெரிகின்றதொர் கணையாற்
றுவசத்தையுந் [4]துணித்தேயவன் மணித்[5]தோளையுந் துளைத்தான்.

(இ - ள்.) (இலட்சுமணன்விடுத்த) அந்த அம்பானது (இந்திரசித்தினுடைய) கவசத்தையும் நெடியமார்பையும் (தொளைத்துக்கொண்டு) வெளிப்பட்டு அப்பாற்செல்ல, அவசத்தன்மையை யடைந்தான், (இந்திரசித்து); அதற்காகத் தேவர்கள் குரலெடுத்து ஆரவாரித்தார்கள்; (அப்போது இலட்சுமணன்),—நாளில் உதயமாகின்ற சூரியனைப்போலத் தோன்றுகின்றதான ஒருகணையினாலே, (அந்தஇந்திரசித்தின் தேர்த்) துவசத்தையுந் துணித்து அவன் அழகிய தோள்களையும் தொளைத்திட்டான்; (எ - று.)—பி - ம்:—[1]கடந்தக்கணை. [2]சுடரோன். [3]திரிகின்றதொர். [4]துணித்தானவன். [5]தோள்களைத். (௩0௧௫)

௧௨௬. உள்ளாடிய வுதிரப்புனல் [1]கொழுந்தீயென வொழுகத்
தள்ளாடிய வடமேருவிற் சலித்தா[2]னுட றரித்தான் [போல்
[3]தொள்ளாயிரங் கடும்போர்க்கணை துரந்தானவை [4]சுடர்
விள்ளாநெடுங் கவசத்திடை நுழையாதுக வெகுண்டான்.

(இ - ள்.) (அவ்வாறு இலட்சுமணனெய்த அம்பினால்) உள்ளே ஓடிக்கொண்டிருந்த இரத்தநீர் கொழுவிய நெருப்புச்சுவாலைப்போல வெளிப்பட, தள்ளாடிய வடமேருவைப்போல (முதலில் இந்திரசித்து) நிலைகலங்கினான்: (உடனே) உடம்புநிலைநிற்கப்பெற்றவனாய், தொள்ளாயிரம் கடிய போர்க்கணைகளைத் துரந்தான்; அவை சுடரைப்போன்ற பிளவாதநெடியகவசத்தினிடையே நுழையாது சிந்திவிடச் சினந்தான், (எ - று.)—பி - ம்:—[1]எழுந்தீயினொடுமிழ்ந்தான், கொழுந்தீயொடுமிழ்ந்தான். [2]உடன்றரித்தான். [3]புள்ளாடிய. [4]துறைபோய். (௩0௧௬)

௧௨௭. [1]மறித்தாயிரம் வடிவெங்கணை [2]மருமத்தினை மதியாக்
குறித்தாயிரம் பரித்தேரவன் [3]விடுத்தானவை[4]குறிபார்த்து
[5]இறுத்தானெடுஞ் சரத்தாலொரு தனிநாயகற் கிளையோன்
செறித்தா[6]னுடல் சிலபொற்கணை சிலை[7]நாணறத்தெரித்தான்.

(இ-ள்.) ஆயிரம்பரிபூண்ட தேரையுடையவனானஇந்திரசித்து,—மீண்டும் வெவ்விய வடித்துக்கூராக்கின ஆயிரங்கணைகளை மருமத்தைக்குறியாக எண்ணிவிடுத்தான்: ஒப்பற்றதனிநாயகற்கு இளையவனான இலட்சுமணன் நெடுஞ்சரத்தாற் குறிபார்த்து அவற்றையெல்லாம் முறித்திட்டு,சிலபொற்கணைகளை (அவ்விந்திரசித்தின்)உடலிலே நெருங்கச்செலுத்தி,(சிலபொற்கணைகளைச் செலுத்திச்) சிலையின்நாணியை யறும்படி செய்தான்; (எ-று.)—பி-ம்:—[1]மறுத்து. [2]மருமந்துளை, மருமங்களை. [3]துரந்தான். [4]குறியால், குறிபாத். [5]தறித்தான். [6]நுதற்சில,உதைசில. [7]நாணுறத்தெரிந்தான், நாணையுந்தெறித்தான், நாணறத்தெறித்தான். (௩0௧௭)

கஉஅ.—இந்திரசித்து சலித்தல்.

வில்லிங்கிது நெடுமால்சிவ [1]னயன்மேலவர் தனுவே [யாச்
கொல்லென்றுகொண் டயிர்த்தானெடுங் கவசத்தையுங் [2]குலை
செல்லுங்[3]கொடுங் கணையாவையுஞ் [4]சிதையாமையுந் தெரிந்
வெல்லுந்தர [5]மில்லாமையு மறிந்தா[6]னக மெலிந்தான்.[தான்

(இ-ள்.) 'இப்போது இவ்விலட்சுமணன் பிடித்துள்ள வில், நெடுமால் சிவன்பிரமன் என்றுசொல்லப்படுகின்ற சிறந்த தேவர்களின்தனுவேதானோ?' என்று (திகைத்துக்) கூறி (இந்திரசித்து), ஐயுற்று, (தன்னுடைய) நெடிய கவசத்தையும் அழித்துக்கொண்டு செல்கின்ற கொடியகணை எல்லாமும் அழிவுபடாம லிருப்பதையும் ஆராய்ந்தான்: (தான்) வெல்லுந்தன்மை இல்லாமையையும் அறிந்தவனாய் மனம் மெலிந்தான்; (எ-று.)—பி-ம்:—[1]எனும். [2]கொலையாற். [3]கடுங். [4]திசையாவையும். [5]அல்லாமையும். [6]அற. (௩0கஅ)

கஉகூ.—இந்திரசித்து மனஞ்சலித்தமையை விபீஷணன் இலட்சுமணனிடம் கூறுதல்.

[1]அத்தன்மையை யறிந்தானவன் சிறுதாதையு மனுகா
முத்தன்முக நோக்காவொரு மொழிகேளென [2]மொழிவான்
எத்தன்மையு மிமையோர்களை வென்றானிகல் [3]வென்றாய்
பித்தன்[4]மனந் தளர்ந்தானினிப் பிழையானெனப் பகர்ந்தான்.

(இ-ள்.) அந்த இந்திரசித்தின் சிற்றப்பனான விபீஷணனும்வானும் (இந்திரசித்தின்) அந்தத்தன்மையை யுணர்ந்து (இலட்சுமணனை) நெருங்கி முத்திக்கு உரிய திருமாலினம்சமான இலட்சுமணனுடைய முகத்தை நோக்கி 'ஒருமொழிகேள்' என்று மொழிபவனாய், 'எந்த நிலைமையிலும் [எப்படிப்பட்டவராயிருந்தாலும்] இமையோர்களை வென்றவனை இவனைப்போரில் வென்றவனானாய்: (எவ்வாறெனில்?—) போர்ப் பித்துப்பிடித்தவனான இவ்விந்திரசித்து மனஞ்சோர்ந்திட்டான்: இனி, 'உயிர்பிழையான்' என்று கூறினான்: (எ-று.)—பி-ம்:—[1]அத்தன்மையும். [2]மொழிந்தான். [3]கண்டாய், கண்டால். [4]மகன். (௩0ககூ)

கங0.—இரண்டுகவிகள்-இந்திரசித்து பலவகையஸ்திரங்களைத் தொடுத்தலையும், இலட்சுமணன் அவற்றைமாற்றுதலையும் கூறும்.

கூற்றின்படி [1]கொதிக்கின்றவக் கொலைவாளெயிற் றரக்கன்
ஏற்றுஞ்சிலை நெடுநாணொலி யுலகேழினு மெய்தச்
சீற்றந்தலைத் தலைசென்றுற விதுதீரெனத் தெரியாக்
காற்றின்படை [2]தொடுத்தானவ னதுவேகொடு காத்தான்.

(இ-ள்.) கூற்றினையொப்பக் கொதிக்கின்றவனான அந்தக்கொலைபுரியும் வாட்படையையும் எயிற்றையுமுடைய அரக்கன் ஏற்றிய சிலையின் நெடியநாணொலி உலகேழினுஞ் சென்றுசேர, சீற்றம் தலைக்குமேற் சென்று பொருந்த, 'இதைப் போக்குவாய்' என்றுசொல்லி, ஆராய்ந்து, வாயுபகவானைத் தேவதையாகக்கொண்ட அம்பைத் தொடுத்தான்;

அவ்விலக்குமணன் அதனையேகொண்டு தடுத்தான்; (எ-று.)—பி-ம்:— [1]கொடுத்தானறக். [2]துரந்தான்.

**௩௩௧. அனலின்படை தொடுத்தானவ னதுவேகொடு [1]தடுத்தான், புனலின்படை [2]தொடுத்தானவ னதுவேகொடு பொறுத்தான், [3]கனவெங்கதி ரவன்வெம்படை [4]துரந்தான்மனங் [5]கரியான், சினவெந்திற லிளங்கோளரி யதுவேகொடு தீர்த்தான்.**

(இ-ள்.) ஆக்கினேயாஸ்திரத்தை (இந்திரசித்து) தொடுத்தான்: அவ்விலக்குமணன் அதனையேகொண்டு காத்தான்: வாருணாஸ்திரத்தைத் தொடுத்தான் (இந்திரசித்து): இலட்சுமணன் அதனையேகொண்டுதாங்கினான்; நெருங்கிய வெவ்விய கிரணங்களையுடையவனான ஸூர்யனது வெவ்விய அஸ்திரத்தைச் செலுத்தினான் கரியமனமுள்ளவனான இந்திரசித்து: சினம்பொருந்திய வெவ்விய திறலையுடைய இளையசிங்கமான இலட்சுமணன், அதனையேகொண்டு (இந்திரசித்து விடுத்தஅஸ்திரத்தைப்) போக்கினான்; (எ - று.)—பாபசிந்தையை யுடையவனென்பது, 'மனங்கரியான்'என்பதன்பொருள். பி-ம்:—[1]காத்தான். [2]தொடுத்தார்க்கவும். [3]கனலின்கதிரவன். [4]தொடுத்தான். [5]களியான். (௩0௨௧)

௩௩௨.—இந்திரசித்து பிரமாஸ்திரம் விடுதல்.

**இதுகாத்திகொ லென்றுவெடுத் திசிகப்படை யெய்தான், அதுகாப்பதற் கதுவே[1]யள வென்றுத்தொடுத் [2]தமைத்தான், செதுகாப்படை [3]தொடுப்பேனென [4]நினைந்தான்றிசை முகத்தான், [5]முதுமாப்படை [6]துரந்தானினி முடிந்தாயென மொழிந்தான்.**

(இ - ள்.) 'இதுதன்னைக் காப்பாயோ?' என்றுசொல்லி எடுத்து இசிகப்படையை(இந்திரசித்து)எய்தான்: அதனைக்காப்பதற்கு அதுவே தக்கவளவினதென்று (அதனையே) தொடுத்து (இலட்சுமணன்) அடக்கினான்; (பிறகு), அழியாதபடையைத் தொடுப்பேனென்றுநினைத்தானாய், நான்முகத்தையுடையவனான பிரமதேவனது முது மாப்படையைவிட்டவனாய் 'இனி (நீ) இறந்தவனாவாய்' என்றுமொழிந்தான், (அந்தஇந்திரசித்து); (எ - று.)—இசிகப்படை இஷீகாஸ்த்ரமென்ப. பி-ம்:— [1]உளதென்றுத். [2]அறுத்தான். [3]துரவேனென. [4]அமைத்தான். [5]முதுகாப்படை. [6]துரந்தேன், துரந்தால். (௩0௨௨)

௩௩௩.—போர்காணவந்த தேவர்களின்அச்சம்.

**வானின்றலை [1]நிலைநின்றவர் மழுவாளியு மலரோன்**
**றானும்[2]முனி வரரும்பிற [3]தவத்தோர்களு மறத்தோர்**
**கோனும்பிற பிறதேவர்கள் குழுவும்மனங் குலைந்தார்**
**ஊனம்மினி [4]யிலதாகுக விளங்கோக்கென வுரைத்தார்.**

(இ-ள்.) வானத்தினிடத்துஇருந்தவராகிய சிவபெருமானும் பிரமதேவனும் முனிவரரும் பிறதவத்தோர்களும் அறத்தையுடையரான தேவர்கட்குத்தலைவனும், [இந்திரனும்]மற்றுமுள்ளதேவவர்க்கங்களும்

மனம்நடுங்கி, 'இளையபெருமாளுக்கு இனி ஊனம் இல்லாதிருக்க'என்று உரைத்தார்; (எ - று.)

இந்திரசித்து பிரமாஸ்திரத்தை விடுத்ததனாலே, 'ஊனம்உளதாகும்'என்று அஞ்சி மழுவாளிமுதலியோர் 'ஊனம்இலதாகுக'என்றனர். பி-ம்:—[1]நின்றூர்முழு. [2]முனிவோரும். [3]அறத்தோர்களுந் தவத்தோர். [4]உளதாகுமிவ். (௩0௨௩)

௩௩௪.—இந்திரசித்து பிரமாஸ்திரந்தொடுத்ததை இலட்சுமணன் காணுதல்.

ஊழிக்கடை [1]யிறுமத்தலை யுலகியாவையு முண்ணும்
ஆழிப்பெருங் கன[2]றன்னொடு சுடரென்னவு [3]மாகாப்
பாழிச்சிகை [4]பரப்பித்தனி படர்கின்றது பார்த்தான்
ஆழித்தனி முதனாயகற் கிளையா[5]னது மதித்தான்.

(இ - ள்.) ஆழியையுடைய ஒப்பற்ற தலைவனான ஸ்ரீராமனுக்கு இளையவனான இலட்சுமணன்,—யுகாந்தகாலத்தில் (யாவும்) அழிகின்ற அப்போது உலகுஎவற்றையும் உண்ணுகின்ற கடலிடையேயுள்ள பெரியவடவைக்கனலினுடனே சூரியன் என்றாலும் உவமையாகப்பெறாத வலிய சுவாலைகளைப் பரப்பிக்கொண்டு தனியே (பிரமாஸ்திரம்) படர்கின்றதைப் பார்த்தவனாய், அதுகுறித்து எண்ணினான்; (எ - று.)—பி-ம்:—[1]இறுதித்தலை. [2]தன்னொரு. [3]ஆகத். [4]விரியத். [5]இவை. (௩0௨௪)

௩௩௫.—இலட்சுமணன் தானும் பிரமாஸ்திரம் விடுமாறு துணிதல்.

மாட்டா[1]னிவன் மலரோன்படை [2]முதற்போதுதன் வலத்தால், [3]மீட்டானலன் றடுத்தானலன் முடிந்தானென விட்டான், காட்டாதினிக் [4]கரந்தாலது கருமம்[5]மல தென்னாத், தாட்டாமரை மலரோன்படை தொடுப்பேனெனச் சமைந்தான்.

(இ - ள்.) "வலிமையற்றவனாகிய இவன், மலரோனஸ்திரத்தை முதற்போதில் [முன்முறையில்] தன் வலிமையினால் மீளச்செய்தானல்லன்: தடுத்தானல்லன்: முடிந்திட்டான், (ஆகவே, இப்போதும் இறந்தேதீருவான்), என்று கருதி (இந்திரசித்து நம்மீது) விடுத்தான்: இப்போது (நம் திறமையை) வெளிக்காட்டாமல் ஒளித்தால், அதுசெய்தக்க செயலாகாது" என்று கருதி, (இலக்குமணன்), தாளத்தைக்கொண்ட தாமரைமலரின் மீதிருப்பவனாகிய பிரமதேவனுடைய அஸ்திரத்தைத் தொடுத்துவிடுவே னென்று துணிந்தான்; (எ - று.)—மலரோன்படை - பிரமாஸ்திரம். பி - ம்:—[1]இனி, இகல். [2]முற். [3]வீட்டாவகை. [4]கரந்தில்லது. [5]அல. (௩0௨௫)

௩௩௬.—'எவர்க்குந் தீமைவிளைக்காது அரக்கன்விடுத்த பிரமாஸ்திரத்தைமாத்திரம் ஒழிக்க' என்று இளையபெருமான் பிரமாஸ்திரம் விடுதல்.

நன்றாகுக வுலகுக்கென முதலோன்மொழி நவின்றான்
[1]பின்றாதவ னுயிர்மேற்செல வொழிகென்பது பிடித்தான்

[2]ஒன்றாகவிம் முதலோன்படை தனை மாய்க்கவென் றுரைத்தான்
நின்றாஅது துரந்தா[3]னவ னலம்வானவர் நினைந்தார்.

(இ - ள்.) (அப்போது) முதன்மைபெற்றவனான இலக்குமணன், 'உலகுக்கு(த்தீங்குவிளையாமல்) நன்மையுண்டாகுக' என்று (இந்த)மொழியைக்கூறினான்; '(பிரமாஸ்திரத்தை விடுதற்குப்) பின்வாங்காதவனான இந்திரசித்தினுடைய உயிர்மேற்செல்லுதலை ஒழிவாயாக' என்பதையும் உறுதியாகக்கூறினான். '(பின்னும்) தவறாமல் இந்த முதலோனுடைய படையை [பிரமாஸ்திரத்தை]மாய்க்க' என்றும் கூறிநின்றானாய் அந்தப் பிரமாஸ்திரத்தைவிட்டான்; வானவர் அந்த இலட்சுமணனுடைய நற்குணத்தை யெண்ணிவியந்தார்கள்; (எ- று.)—வியந்தவகை மேற்கவியிற் கூறப்படும். இந்திரசித்துவிடுத்த பிரமாஸ்திரத்தினால் உலகத்துஎவர்க்கும் தீமையுண்டாகாதிருக்க வேணுமென்ற கருத்தினால் அதனை யடக்குமாறு இலட்சுமணன் பிரமாஸ்திரத்தைவிடுத்தானென்க. பி-ம்:—[1]பிறுதவருயிர்மேல்விடலொழி. [2]ஒன்றுதவிம், ஒன்றுதவம். [3]இவன்றனி. (௬)

கஙஎ.—தேவர்கள் இலக்குமணனது நற்குணத்தைப் பாராட்டிக்கூறுதல்.

தான்[1]விட்டது மலரோன்படை [2]யென[3]மற்றிடை தருமே
வான்விட்டது மண்விட்டது மறவோ[4]னுட [5]லறுமே
தேன்[6]விட்டிடு மலரோன் படை [7]தீர்ப்பாயெனத் தெரிந்தான்
ஊன்[8]விட்டவன் மறம்விட்டில னெனவானவ ருவந்தார்.

(இ - ள்.) "இவ்விலக்குமணன் விடுத்தது பிரமாஸ்திரமாதலால், (அது) வானத்தை அழியாது விட்டதும் பூமியை அழியாது விட்டதுமானாலும், (இந்திரசித்தினுடலை யறுத்திடு என்றால்) மறத்தையுடையோனான அந்த இந்திரசித்தினுடல் அறுபட்டுவிடுமே: (அது) பின்னிடையுமோ? [பின்னிடையாது]; தேனை வெளியிட்டுச் சிந்துகின்ற மலரிலெழுந்தருளியிருப்பவனான பிரமதேவன் படையைத் தீர்ப்பாயென்றே (இந்தப்படையைத்) தெரிந்து விடுத்தான்; குற்றமற்ற இலட்சுமணன் மறக்குணத்தை வெளிவிட்டானில்லை [அறக்குணத்தையே வெளிவிட்டான்]" என்று வானவர் உவந்துகூறினார்கள்; (எ - று.)

'இலட்சுமணன் பிரமாஸ்திரத்தையே பிரயோகித்திருத்தலால்-இவ்விலட்சுமணன் அந்த அஸ்திரத்தைவிடுத்தபோது வானையும் மண்ணையும் அழியாமல் விட்டிட்டு, இந்திரசித்தையழியென்றால் அழித்திருக்குமே: அவ்வாறுசெய்யாமல் கருணையுடையவனாய் அரக்கன் விடுத்த பிரமாஸ்திரத்தையே ஒழிப்பாயென்றுசொல்லி விடுத்தானே! இவனுடைய கருணையை என்னென்றுசொல்வது' என்று வியந்துகூறினார்க ளென்பதாம். ஊன்-ஊநமென்ற வடசொல்லின் விகாரம். ஊன் மாமிசம் என்பாருமுளர். பி-ம்:—[1]விட்டனமலரோன், விட்டதுமுதலோன். [2]எனின். [3]மற்றிவைதருமோ. [4]உடன். [5]இறுமோ, இறுமே. [6]விட்டுகு. [7]தீர்ப்பானெனத்தீர்ந்தான். [8]விட்டவும். (௩௦௨எ)

௧௩அ.—இலட்சுமணன் விடுத்த பிரமாஸ்திரம் அரக்கன் விடுத்த அஸ்திரத்தையழித்து எங்குமாதல்.

உருமேறுவந் [1]தெதிர்த்தாலென னெதிரேநெருப் புய்த்தால்
வருமாங்கது தவிர்ந்தாலென [2]மலரோன்படை மாயத்
திருமாறனக் கிளையான்படை [3]யுலகேழையுந் தீய்க்கும்
அருமாகன லெனநின்றது விசும்பெங்கணு மாகி.

(இ-ள்.) நெருப்பைச்செலுத்தினல் அதனெதிரே பேரிடிவந்து எதிர்க்க ஆரம்பித்தால் அப்போது(முதலிலே)வந்த அந்தநெருப்புதவிர்ந்தாற்போல (இந்திரசித்து விடுத்த) பிரமாஸ்திரம் மாய்ந்திட்டதாக, திருமாலுக்கு [ஸ்ரீராமனுக்கு] இளையதம்பியாகிய இலட்சுமணன் விடுத்த பிரமாஸ்திரம் உலகேழையும் தீய்க்கவல்ல அரியபெரிய நெருப்புப்போல ஆகாயத்திலே எங்குமாகி நிறைந்தது; (எ-று.)---இலக்குமணன் விடுத்த பிரமாஸ்திரத்துக்கும் இந்திரசித்து விடுத்த பிரமாஸ்திரத்திற்கும், பேரிடிக்கும் நெருப்பிற்கு முள்ள வேறுபாடு இருந்ததென்க. பி-ம்:—[1]இழிந்தால். [2]மறவோன். [3]உலகியாவையும். (௩0உஅ)

௧௩௯.—இலட்சுமணன் ஒருபாணத்தைவிடுத்துப் பிரமாஸ்திரத்தின் வேகத்தைத் தீர்த்தல்.

படையங்கது படராவகை பகலோன்குல மருமான்
[1]இடையொன்றது தடுக்கும்படி செந்தீயுக வெய்தான்
[2]தொடையொன்றினைக் கணைமீமிசைத் துறுவாயினி யென்றான்
[3]விடமொன்றுகொண் டொன்றீர்ந்தது போற்றீர்ந்தது வேகம்.

(இ-ள்.)சூரியகுலத்துத்தோன்றியவனான இலட்சுமணன்,--அந்தஅஸ்திரம் வானத்திற்படராதபடியும் வானத்திலொன்றிய அதைத்தடுக்கும்படியும் 'இனி, (அந்தப்) பிரமாஸ்திரத்தின்மீது நெருங்குவாய்' என்று சொல்லியவனாய், ஒருபாணத்தைச் செந்தீப்புறப்படஎய்தான்: ஒருவிடத்தால்மற்றொருவிடம்ஈரப்பட்டதுபோல (இலட்சுமணன் பின்னர்விடுத்த கணையால் முன்விடுத்த பிரமாஸ்திரத்தின்) வேகம் நீங்கிற்று;(எ-று.)— பி-ம்: —[1]உடையென்றெடுத்தொடுக்கும்படியதனுலுறுகளிற்றை.[2]இடையொன்றணைப்பவன் போலமைத்திறுவாயினியென்றான், இடைசென்றிமைப்பனபோலமைத்திறுவாயினியென்றான். [3]விடையொன்றொருவிடமுற்றெனஎன்றபாடத்துக்கு-ஒருவிடத்தால் மற்றொருவிடம்விடைகொண்டு போனாற்போல எனப்பொருளாம். (௩0உ௯)

௧௪0.—இராமலட்சுமணரின் திறமையைத் தேவர்கள் வியந்துகூற, சிவபெருமான் கூறத்தொடங்குதல்.

விண்ணோரது கண்டார்வய [1]வீரர்க்கினி மேன்மேல்
ஒண்ணாதன வுளவோவென மனந்தேறின ருவந்தார்
[2]கண்ணார்நுதற் பெருமா[3]னிவர்க் கரிதோவெனக் கடைபார்த்து
எண்ணாதிவை பகர்ந்தீர்பொருள் [4]கேளீரென விசைத்தான்.

(இ - ள்.) விண்ணோர் அந்தஇலட்சுமணனதுசெயலைப் பார்த்து 'வலிமைபொருந்திய வீரராகிய இவ்விராமலக்குமணர்கட்கு இனிமேன்

மேல் செய்து முடித்தற்குஅரியனவும் உளவோ?' என்றுசொல்லி, (தங்கள்காரியம் நிறைவேறலாமென்று) மனந்தேறினவராய் மகிழ்ந்தார்கள்: கண்பொருந்திய நெற்றியையுடைய சிவபெருமான் (அத்தேவர்களைப்பார்த்து), 'இவர்க்கு அரியதும் உண்டோ? என்று கடைவரையிற்பார்த்து உண்மையை யெண்ணுமல் இவ்வார்த்தையைச்சொன்னீர்கள்:உண்மைப்பொருளைக்கேளீர்'என்றுசொல்லிக்கூறலானான்;(எ-று.) ---சிவபெருமான் கூறுவதை மேல்நான்குகவிகளிற் காண்க. பி-ம்:— [1]வீரற்கு. [2]கண்ணுநுதல். [3]அவர்க்கு, இவற்கு. [4]கேணீர். (௩0௩0)

கசுக.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: சிவபெருமான் தேவர்கட்குக் கூறியவற்றைத் தெரிவிக்கும்.

நாராயண நரரென்றிவ ருளராய்[1]நமக் கெல்லாம்
வேராய்முழு முதற்காரணப் பொருளாய்வினை [2]கடந்தோர்
ஆராயினுந் தெரியாததொர் நெடுமாயையி னகத்தார்
பாராயண மறைநான்கையுங் கடந்தா[3]ரிவர் பழையோர்.

(இ-ள்.) இந்த இராமலட்சுமணர்,—நாராயணன் நரன் என்ற இருவராக உள்ளவராய்,நமக்கெல்லாம் மூலகாரணமாய்,(இவ்வண்டங்கட்கெல்லாம்) முழுமுதற்கடவுளான காரணவஸ்துவாய், வினைகடந்தவர் ஆராய்ந்தாலும் (அவர்கட்குந்) தெரியாததான ஒப்பற்ற பெரிய மாயையினுள் மறைந்திருப்பவராய், (நாம்) பாராயணஞ்செய்கின்ற மறைநான்குக்கும் அப்பாற்பட்டவர்: இவர், புராணபுருஷ ராவர்; (எ - று.)

திருமாலே உலகத்தார்க்கு ஆசாரியனும் சிஷ்யனும் இருக்கவேண்டிய முறையைக் காட்டுவதற்காக, பதரிகாச்சிரமத்திலே நரநாராயணராகத் திருவவதரித்து நரனைசிஷ்யனுக்கு நாராயணனென்ற தான் ஆசார்யனுகித் திருமந்திரத்தையுபதேசித்தா னென்று நூல்கள் கூறும்: அந்த இருவராய்த்திருவவதரித்த மூர்த்தமே இப்போது இராமலட்சுமணராகத் திருவவதரித்துள்ள தென்றபடி. பி - ம்:—[1]நமர்க்கெல்லாம். [2]கடந்தார். [3]சில. (௩0௩௧)

கசுஉ. அறத்தாறழி வுளதாமென வறிவுந் தொடர்ந் தணுகாப்
புறத்தார்[1]புகுந் தகத்தாரெனப் [2]புகுந்தன்னது புரப்பார்
மறத்தார்[3]குல முதல்வேரற மாய்ப்பானிவண் வந்தார்
[4]திறத்தாலது தெரிந்தியாவருந் தெரியாவகை [5]திரிவார்.

(இ - ள்.) அறிவும் தொடர்ந்து நெருங்கமுடியாதபடி (அவ்வறிவுக்கு) அப்பாற்பட்டவரும், தருமமார்க்கம் அழிவுள்ளதாகுமென்கையில், புகுந்துள்ள பூதலத்தவர் போலவே (தாமும்) புகுந்து அந்தத்தருமத்தைப் பாதுகாப்பவருமான அவர்கள், கொடுமையையுடைய அரக்கரின் குலம் முதன்மைபெற்ற வேரோடு அறும்படி ஒழிப்பதற்காக இங்குவந்துள்ளார்;(ஆயினும், தம்) திறமையால் அச்செயலை யாவரும் ஆராய்ந்து உணராதபடி சஞ்சரிப்பார்; (எ-று.)—புகுந்தகத்தார்-பெயரெச்சத்தின் அகரவீறு, தொகுத்தல். பி - ம்:—[1]புகுந்தறத்தாரென. [2]புறந்தாரது. [3]முதற்குலம். [4]திறத்தாலவை, திறத்தாரவை. [5]தெரிவார். (௩0௩உ)

௧௬௩. [1]உயிர்தோறுமுற் றுளன்[2]ரோத்திரத் தொருவன்னென வுரை
அயிராநிலை [3]யுடையானிவ னவனிவ்வுல கனைத்துந் [க்கும்
தயிர்தோய்பிரை [4]யெனலாம்வகை கலந்தேறிய தலைவன்
பயிராததொர் பொருளின்னதென் [5]றுணர்வீரிது பரமால்.

(இ - ள்.) 'உயிர்தோறும் பொருந்தியுள்ளவனுய்த் தோத்திரஞ்செய்தற்கு உரிய ஒப்பற்ற கடவுள்' என்று சொல்லத்தக்கவனுகிச் சந்தேகிக்கவேண்டாத நிலையையுடையவன் இந்த இலட்சுமணன்: அந்த இராமனும் இவ்வுலகனைத்திலும் தயிராகத்தோய்தற்குக்காரணமான பிரைமோரென்று சொல்லலாம்படிகலந்து எங்கும்பரந்த தலைவன்: தவறுதலில்லாத ஒப்பற்றபொருள் இன்னதாகுமென்று நீங்கள் உணருங்கள்: இதுபரமார்த்தமாகும்; (எ - று.)—முதற்கடவுளே இருமூர்த்தியாக வந்துள்ளார்: இது உண்மையென்றவாறு. பி-ம்:—[1]உயிர்தோறுமுளன். [2]கோத்திரத்து. [3]உடையானென. [4]எனலாமவை. [5]அறிவீர், உணரீர். ()

௧௬௪. நெடும்பாற்கடற் [1]கிடந்தாரும்பண் டிவர்[2]நாங்குறை
நேர,விடும்பாக்கிய முடையார்களைக் [3]குலத்தோடற வீட்டி,இடும்
பாக்கியத் தறங்[4]காப்பதற் கிசைந்தாரென [5]விதெலாம், அடும்பா
க்கியத் துடைச்செஞ்சடை முதலோன்பணித் தமைந்தான்.

(இ - ள்.) நெடியபாற்கடலிலே கிடந்தவரும், முன்பு நாம் குறைநேர, அழியத்தக்க பாக்கியத்தையுடையவர்களான அரக்கரைக் குலத்தோடு அறுமாறுகொன்று பொருந்திய பாக்கியத்தையுடைய அறத்தைக் காப்பதற்கு இசைந்தாரும் இவர் எனஇதனையெல்லாம், சங்காரத்தொழிலை (த் தனக்கு) உரியதாகக்கொண்ட அஷ்டைசுவரியங்களுக்கு உரிய செவ்விய சடையை யுடைய முதல்வனுன சிவபெருமான், சொல்லி அமைந்து நின்றுன்; (எ-று.)

விடும்பாக்கியமுடையார் - தம்முடையபாக்கியம் விட்டுப்போகுங் காலத்தை யடைந்துள்ளவர். பாக்கியத்து இடும் அறம்-சௌபாக்கியத்தைக்கொண்ட தருமம். பி-ம்:—[1]கிடந்தானும். [2]நீர். [3]தவத்தோடற. [4]காப்பதிற். [5]எல்லாம். [6]பாக்கியத்தொடை. (௩0௩௪)

௧௬௫.—தேவர்கள் பரமார்த்தமுணர்த்திய சிவபெமாநுனைப் புகழ்ந்து தொழுதல்.

அறிந்தேயிருந் [1]தறியேமவ னெடுமாயையி [2]னயிர்ப்போம்
பிறிந்தோமினி முழுதையமும் பெருமானுரை பிடித்தோம்
எறிந்தோம்பகை முழுதும்[3]மினித் தீர்ந்தோமிடர் கடந்தோம்
செறிந்தோர்வினைப் பகைவாவெனத் தொழுதார்நெடுந் தேவர்.

(இ-ள்.) 'நெருங்கினவரின் தீவினையைப் போக்குபவனே! அறிந்திருந்தே அவனுடைய நெடியமாயையினுலே அறியாமாகிச் சந்தேகிப்போம் இப்போது ஐயம்முழுதும் நீங்கப்பெற்றேம் பெருமானுகிய உம்முடைய உரையை உறுதியுரையாகக்கொண்டோம்: பகைமுழுதையும் போக்கினவராறேம்; இனித் துயர் தீர்ந்தோ மாகி (அவற்றை)க்கடந்

திட்டோம்:' என்று சொல்லிப் பெருமைபெற்ற தேவர்கள், (சிவபெருமானைத்) தொழுதார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]அயர்ந்தோம். [2]அயற்பால், அயர்ப்போம். [3]இனிதிருந்தோம், இனியிருந்தோம். (௩0௩௫)

௧௬௬.-இந்திரசித்து இலட்சுமணன்மீது திருமாலின்படையை விடுத்தல்.

மாயோனெடும் படைவாங்கிய வளைவாளெயிற் றரக்கன்
[1]நீயேயிது [2]தடுப்பாயெனி னினக்காரெதிர் [3]நிற்பார்
[4]போயேவிசும் படைவாயிது பிழையாதெனப் புகலாத்
தூயோன்மிசை யுலகியாவையுந் தடுமாறிடத் துரந்தான்.

(இ-ள்.) வளைந்த ஒளியுள்ள கோரப்பற்களை யுடையவனான அந்த இந்திரசித்து, மாயையுடையவனாகிய திருமாலின் நெடியபடையை யெடுத்து, 'நீ இதனைத் தடுப்பாயானால் உனக்கு எதிரே நிற்கவல்லவர் எவருளர்? (இதனால் நீ இவ்வுலகத்தைவிட்டுப்(போய் விசும்பையடைவாய்: இது தவறாது' எனச்சொல்லி, பரிசுத்தமூர்த்தியாகிய இலட்சுமணன்மீது உலகெல்லாம் தடுமாறும்படி விடுத்தான்; (எ - று.)—மாயோன்படை யென்பதற்கு - சக்கரப்படையென்று ஒரு சாராரும், நாராயணாஸ்திரமென்று மற்றொருசாராரும் கூறுவர். பி-ம்:—[1]நீயோ. [2]தடுத்தாய். [3]நிகர்ப்பார். [4]போயோ. (௩0௩௬)

௧௬௭.—இதுவும் அடுத்த கவியும் - யாவரும் கைதுவிப்ப, அந்தப்படைக்குமுன்னே இலட்சுமணன் தன்னை நாராயணனாகத் தியானிக்க, அது விலகிச்செல்லுதலைக்கூறும்.

சேமித்தன ரிமையோர்தமைச் சிரத்தேந்திய [1]கரத்தார்
ஆமித்தொழில் பிறரியாவரு [2]மடைந்தார்பழு தடையாக்
[3]காமிப்பது முடிவிப்பது [4]படிகின்றது கண்டான்
[5]நேமித்தனி யரிதானென நினைந்தா[6]னெதிர் [7]நடந்தான்.

(இ-ள்.) தேவர்கள் சிரத்திலேந்திய கையையுடையவராய் தம்மைக் காத்துக்கொண்டனர்; பொருந்திய இத்தொழிலையே (முனிவர் முதலிய) மற்றையோர்யாவரும் செய்தனர்: [யாவரும் கைகூப்பித் தம்மைப் பாதுகாத்துக்கொண்டனர்]: பழுது அடையாமல் வேண்டியதை முடிப்பதாகிய அந்தப்படை (கைகூப்புவார்க்குப்) படிந்துபோவதைக் கண்ட இலட்சுமணன், ஒப்பற்ற சக்கரப்படையைக்கொண்ட அரி தான் என்பதைநினைந்தவனாய் (அந்தச்சக்கரத்தின்) எதிரேநடந்தான்; (எ - று.)

திருமாலின்படை இலட்சுமணன்மேற் பிரயோகிக்கப் பட்டிருப்பினும், இடையிலிருப்பவற்றையெல்லாம் அறுத்துக்கொண்டு செல்லவல்ல தன்மையதாதலால் தேவர் முதலியோர் 'நம்மை இது துண்டித்துவிடுமோ?' என்று அஞ்சிக் கைகுவித்தாராக, அது அவர்களையெல்லாம் ஒன்றுஞ் செய்யாது படிந்துபோயிற்று: அதுகண்டு இலட்சுமணன்வருவது திருமாலின்படையாதலையறிந்து தன்தன்மையைக் காட்டக் கருதித் தன்னைத்திருமாலாக உள்ளநிலையை நினைந்தவண்ணம் அதனெதிரே நடந்தானென்பதாம். பி - ம்;—[1]காத்தால், [2]அமைத்தார்,

அமைந்தார். [3]காமித்தது. [4]படர்கின்றது, படர்வுற்றது, படற்வுற றிது. [5]நாமத். [6]அது. [7]நயந்தான், நயத்தான். (௩0௩௭)

௧௪அ. தீக்கின்றதிவ் [1]வுலகேழையு மெனச்[2]செல்வதுந் தெரிந்தான், நீக்குந்தர [3]மல்லாமுழு முதலோனென நினைந்தான், [4]வீக்கின்றில தயல்[5]சென்றது விலங்காவலங் கொடுமேற், [6]போய்த்தங்கது கனன்மாண்டது புகைவீய்ந்தது பொதுவே.

(இ - ள்.) இவ்வுலகேழையும் தீக்கின்ற தென்னுமாறு (அந்தப்படை) செல்வதையும் உணர்ந்தான்: ஒழிக்குந்தன்மை உடையோனல்லாத முழுமுதற்கடவுளே (தான்) என்றுநினைந்தான்; (பின்பு) அங்கே அந்தப்படை, (அவ்விலக்குமணனை) அழிக்காததாகிவிலகிப் பக்கத்துச் சென்று பிரதட்சிணஞ்செய்து அந்தரத்திலேபோயிற்று; (அது), பொதுவாக [எவர்க்குமாக]நெருப்புச்சுடர் ஒழிந்துபுகையும்அற்றது;(எ-று.) —போய்த்து - முற்று. பி - ம்:—[1]உலகியாவையும். [2]சேறலுந்தெளிந்தான், [3]அல்லான்முழுமுதனுனென, அல்லான்முழுமுதலாமென. [4]மீச்சென்றிலது, மீச்சென்றில. [5]சென்றியது. [6]போய்ச்சங்கது. (௩0௩அ)

௧௪௯.—இமையோர்முதலோரின் களிப்பு

ஏத்தாடின [1]ரிமையோர்களுங் கவியின்குல மெல்லாங்
கூத்தாடின ரமரமங்கையர் குனித்தாடினர் தவத்தோர்
காத்தாயுல கனைத்தும்மெனக் களித்தாடினர் கமலம்
[2]பூத்தானுமம் மழுவாளியு முழுவாய்கொடு புகழ்ந்தார்.

(இ-ள்.) இமையோர்களும் ஏத்தி ஆடினார்கள்: கவியின் குலத்தார் யாரும் ஆனந்தக்கூத்தாடினர்; அமரமங்கையர் குதித்தாடினர்: தவத்தவர் 'உலகனைத்தும் காத்தவனுனாய்' என்று மனமகிழ்ந்தாடினர்:(நாபீ) கமலத்தில்தோன்றியவனான பிரமதேவனும் அந்தமழுவாளியும், முழுவாயைக்கொண்டு புகழ்ந்தார்; (எ - று.)

முழுவாய்கொடு புகழ்தல்-தம்மாலியன்றவரையும் பூர்ணமாகப் புகழ்தல். பி-ம்:—[1]இமையோர்புலம். [2]பூத்தானுடன்...புகழ்ந்தான். ()

௧௫0.—இந்திரசித்து பாசுபதாஸ்திரத்தைத் தொடுக்கக் கருதுதல்.

அவனன்னது கண்டானிவ னாரோவென வயிர்த்தான்
[1]இவனன்னது முதலேயுடை யிறையோனென [2]வியவா
[3]எவனென்னினு நன்றாகுக வினியெண்ணல னென்னாச் [தான்.
[4]சிவனின்படை தொடுத்தாருயிர் முடிப்பேனெனத் [5]தெரிந்

(இ-ள்.) அந்த இந்திரசித்து அவ்வாறு திருமாலின்படை போனதைக் கண்டான்: 'இவன் ஆரோ?' என்று சந்தேகித்தான்: 'இவன் அந்தச்சக்கரப்படையையுடைய முதல்வனான தலைவனே' என்றுவியந்து, எவனானாலும் (என்செயல்) நன்றாகுக: இனி (இதனைப்பற்றி) எண்ணேனென்று சொல்லி, சிவனுடைய அஸ்திரத்தை [பாசுபதாஸ்திரத்தை]த் தொடுத்து (இவனுடைய) அரிய உயிரை முடிப்பேனென்று எண்ணினான்; (எ-று.)—இவன் அன்னது உடைமுதல் இறையோனே என இயையும். இனி, அன்னது முதலேயுடையிறையோன் என்பதற்கு அந்

தப்படைக்குமுதல்வனும் எல்லாவற்றையுந்தனதாகவுடைய இறைவனு மாவனெனினுமாம். பி-ம்:—[1]இவனின்னது முதலேயுடையிறையோ வென. [2]என்ஞு. [3]எவனென்னினி. [4]சிவனன்படை. [5]தெளிந்தான். ()

கருக.—அதுகண்டு வானோரும் உலகோரும் கலங்குதல்.

பார்ப்பான்றரு முலகியாவையு [1]மொருநாளொரு பகலே
தீர்ப்பான்படை தொடுப்பேனெனத் [2]தெரிந்தானது தெரியா
மீப்பாவிய விமையோர்குலம் வெருவுற்ற[3]திப் பொழுதே
மாய்ப்பானென வுலகியாவையு [4]மறுகுற்றன [5]மயங்கா.

(இ-ள்.) பிரமதேவன்படைத்த உலகை எல்லாம் ஒருநாளின் ஒரு பகற்பொழுதில் தானே ஒழிப்பவனானபசுபதியின் படையைத் தொடுப் பேனென்றுகருதினவனான இந்திரசித்தினுடைய அக்கருத்தை யுணர்ந்து, மேலே பரவியிருந்த தேவர்கூட்டம், அச்சங்கொண்டது; உலக மெல்லாம், இப்பொழுதே இவன் (நம்மை) மாய்ப்பானென்று மயங்கிக் கலக்கங்கொண்டன; (எ-று.)—பி-ம்:—[1]ஒருகால். [2]மனத்தோடுறைத் தெளியா. [3]அப். [4]மறுகுற்றது. [5]மயங்கி. (ருOசக)

கருஉ.—இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்: சிவபெருமான் நேரேதந்த இந்தப்பாசுபதாஸ்திரத்தைவிடின் இவன்அழிவது திண்ணமென்று இந்திரசித்து அந்தப்படையை விடுத்தலைக் கூறும்.

[1]தானேசிவன் றரப்பெற்றது தவநாள்பல [2]வுழந்தே
[2]தானேபிற ரறியாதது தந்தேனெனச் சமைந்தான்
ஆனாலிவ னுயிர்கோடலுக் கையம்மிலை யென்னா
[3]மேனாளுமி தனையேவிடி னெதிர்நிற்பவ ரில்லை.

(இ-ள்.) 'இது, (நான்) பலநாள் வருந்தித்தவஞ்செய்ததனால், சிவபிரான் (பிரதியட்சமாகவந்து) தானே தரப்பெற்றது பிறரறியாத இதனைத்தந்தேனென்று தானே (அநுக்கிரகித்துக்) கொடுத்தான்: இப்படி யானால் [இப்படியிருத்தலால்], இவன் உயிரை (இதனாற்) கொள்ளுதற் குச் சந்தேகம் இல்லை: முற்காலத்திலும் இதனைவிடினே எதிர்நிற்பவ ரில்லாதவராயினர்' என்று (இந்திரசித்து) கூறி,—(எ-று.)—'என்னா' என்றவினையெச்சம், அடுத்தசெய்யுளில் 'விட்டான்' என்பதனோடு இயையும். பி-ம்:—[1]நானே. [2]உழந்தேன். [3]மேனாளினுமதனாலெதிர்தடைசெய் தவர்மீளார், எனாளுமிதானாலெதிர் தடையில்லதையெடுத்தான். ()

கருங. மனத்தான்மலர் புனல்சாந்தமொ டவி[1]தூபமும் வகுத்தான், நினைத்தானிவ னுயிர்[2]கொண்டிவ ணிமிர்வாயென நிமிர்த்தான், சினத்தானெடுஞ் சிலைநாண்டடந் தோண்[3]மேலுறச் செலுத்தா, [4]எனைத்தாயதொர் பொருளாலிடை தடையில்லதை விட்டான்.

(இ - ள்.) புஷ்பமும் (அர்க்கியபாத்தியங்கட்கு ஏற்ற) ஜலமும் சந்தனமும் (நிவேதனத்திற்குஉரிய) அவிசும் தூபமும்ஆகிய எல்லாவற்றையும் மனத்தினாலேயேவகுத்தவனாய், (இந்திரசித்து),—தியானஞ்செய்து

பூசித்தான்; எப்படிப்பட்டதொருபொருளாலும் இடையே தடையில்லாத அந்தப்படையை (நோக்கி), 'இந்த இலட்சுமணனுடைய உயிரைப் பறித்துக்கொண்டு இங்கேவருவாய்' என்றுசொல்லி, சினத்துடனே நெடியவில்லின் நாணி பெரியதோண்மேற்பொருந்தச்செலுத்தி மேலெடுத்துவிட்டான்; (எ-று.)—நிமிர்த்தான் விட்டான்=நிமிர்த்துவிட்டான். பி-ம்:—[1]தீபமும். [2]கோடனைநிமிர்வாயெனநெஞ்சாற், கொண்டனை நிமிர்வாயெனநெஞ்சார். [3]வேலுற. [4]வினைத்தாயதொர். (௩௦௪௩)

௧௫௪.—பாசுபதாஸ்திரம் வந்தபோது தோன்றிய கடுநிலையை இதுவும் அடுத்தகவியும் தெரிவிக்கும்.

சூலங்களு மழுவுஞ்சுடு கணையுங்[1]கனற் சுடரும்
ஆலங்களு மரவங்களு மசனிக்[2]குல மெவையுங்
காலன்றன துருவங்களுங் கரும்பூதமும் பெரும்பேய்ச்
சாலங்களு நிமிர்கின்றன வுலகெங்கணுந் தானாய்.

(இ-ள்.) (அப்போது), சூலங்களும் மழுக்களும் சுடுகின்றஅம்புகளும் அக்கினிச்சுவாலைகளும் விஷங்களும் பாம்புகளும் இடிக்குலமெல்லாமும் யமனுடையசொரூபங்களும் கரும்பூதங்களும் பெரியபேய்களின் கூட்டங்களும் உலகுஎல்லாம் தானாகிப்பரந்துவரலாயின;(எ-று.) —பி-ம்:—[1]கறைசுடரும். [2]குலத்தெவையும். (௩௦௪௪)

௧௫௫. ஊழிக்கன லொருபாலத னுடனேதொடர்ந் துடற்றுஞ்
சூழிக்[1]கொடுங் கடுங்காற்றத னுடனேவரத் தூர்க்கும்
[2]ஏழிற்குமப் புறத்தாயுள பெரும்போர்க்கட லிழிந்தாங்கு
ஆழித்தலைக் [3]கிடந்தாலென நெடுந்தூங்கிரு ளடைய.

(இ-ள்.) யுகாந்தகாலத்து அக்கினி ஒருபக்கத்து அதனுடனே தொடர்ந்துவந்து (உலகத்தை) வருத்தாநிற்கும்: (ஒருபக்கத்து) எழுகடல்களும் அப்புறத்ததாகியுள்ள பெரும்புறக்கடல் அங்கு [ப் போர்க்களத்திலே] இழிந்தாற்போன்றுள்ள சேனை சமுத்திரத்திலே கிடந்தாற்போல நெடிய மிக்க இருள்வந்து நெருங்க, சுழலுந்தன்மையதான கொடியசண்டமாருதம் அந்தப்படைக்கலத்துடனே வருதலால் (உலகமெல்லாவற்றையும்) தூராநிற்கும்; (எ-று.)—சேனைசமுத்திரம் பெரும்புறக்கடல் வந்தாற்போலிருக்க, அது தனக்கு அப்பாலுள்ள இருள்வந்தாற்போலப் பேரிருள்வந்து சேரப்பெறுமென்க. பி-ம்:—[1]கடுங்கொடுங்காற்றதனயலே வரத்தொடங்கும், கொடுங்கடுங்காற்றயலே வரத்தூர்க்கும். [2]எழுக்கும். [3]கடந்தாங்கென, கிடந்தாங்கணே. (௩௦௪௫)

௧௫௬.—பாசுபதாஸ்திரத்தாற் பலவிடத்து மூண்டான நிலைதிரிவு.

இரிந்தார்குல நெடுந்தேவர்க ளிருடிக்குலத் தெவரும்
பரிந்தா[1]ரிது பழுதாகில திறுவானெனும் பயத்தால்
நெரிந்தாங்[2]கழி குரங்குற்றது பகருந்துணை நெடிதே
திரிந்தா[3]ரிரு சுடரோடுல கொருமூன்றுடன் றிரிய.

(இ-ள்.) சிறந்த பெருமைபெற்ற தேவர்கள், நிலைகெட்டோடினார்கள்; இருடி குலத்திலுள்ள எவரும், 'இது பழுது ஆகுந்தன்மைய தன்று;

(ஆதலால் இலட்சுமணன்) அழிந்திடுவான்' என்ற பயத்தினால் வருந்தினர்; அப்போது வானரங்கள் நொருங்கிப்போய் அழிதலை யடைந்தது; (அந்தப்பாசுபதத்தினால் நிகழ்ந்ததுபற்றிச்) சொல்லும் அளவு மிக்கதோ? (அந்தப்படை) திரிதலாலே இருசுடர்களோடு உலகொரு மூன்றிலுள்ளவர்களும் உடன்திரிந்தார்; (எ - று.)—ஈற்றடிக்கு—(அந்தப்பாசுபதாஸ்திரம்), இருசுடரோடு - இருசுடர்களுடனே, உலகு ஒரு மூன்று - மூவுலகத்திலும், உடன்திரிய - ஒருசேரத் திரிதலாலே, திரிந்தார் - (எங்கு உள்ளாரும்) சுழன்றாரெனக் கூறினுமாம். நெடிதே என்பதன்கருத்து, எவ்வளவுசொன்னாலும் அந்தப்பாசுபதத்தைப்பற்றித் தகுமென்பது. அழி - முதனிலைத்தொழிற்பெயர். பி - ம்:—[1]அது பழுதாகியது, அதுபழுதாகிலது. [2]இனி. [3]அதிர்ந்திடலே. (ரூ0சசு)

கருஎ.—'விபீஷணன் இதனை விலக்கமுடியுமோ?' என்ன இளையபெருமாள் சிரித்தல்.

பார்த்தா[1]னெடுந் தகைவீடண னுயிர்[2]காலுறப் பயத்தால்
வேர்த்தானிது விலக்குந்[3]தர முளதோ[4]முதல் வீரா
தீர்த்தாவென [5]வழைத்தானதற் கிளங்கோளரி சிரித்தான்
போர்த்தா[6]ரடர் கவிவீரரு மவன்[7]றாணிழல் புகுந்தார்.

(இ - ள்.) பெருங்குணமுடையவனை விபீஷணன் (அதனைக்) கண்டு, பயத்தால் உயிர்ப்புவெளிப்பட உடல்வேர்த்தவனாய், (இலட்சுமணனைநோக்கி), 'இதனை விலக்குதற்குஉரிய ஆதாரவு இருக்கின்றதோ? முதல்வீரனே! பரிசுத்தமூர்த்தியே!' என்று கூவினான்: அதற்கு எதிராக, இளையபெருமாள் சிரித்தார்: போர்மாலையை யணிந்த (பகைவரை) அடர்க்கின்ற வானரவீரர்களும், அந்த இலட்சுமணனுடையபாதநிழலிலே பதுங்கிக்கொண்டார்கள்; (எ-று.)—போர்த்தார் என ஒரு சொல்லாக எடுத்து, ஒன்றுசேர்ந்தவராய் எனினுமாம். பி-ம்:—[1]அதனெதிர். [2]சால்வுறு. [3]துணை. [4]உடல். [5]உரைத்தான். [6]உடல், அடற். [7]தாளிணை முதல்வீரர் என்று படித்தாரும் உளர். (ரூ0சஎ)

கருஅ.—யாவர்க்கும் அபயமளித்து, 'இதனைச் சமிப்பிக்குமாறு பாசுபதாஸ்திரத்தையே தொடுப்பேன்'என்று இலக்குமணன் கருதுதல்.

[1]அவயம்முனக் [1]கவயம்பெறு மனைவோரையு [2]மஞ்சல்
[1]அவயம்[3]முவக் [4]களித்தோமெனத் தன்கைத்தலத் தமைத்தான்
[5]உவயம்முறு முலகின்பய [6]முணர்ந்தேனினி யொழியேன் [ன்.
[7]சிவனைம்முக முடையான்படை தொடுப்பேனெனத் [8]தெளிந்தா

(இ-ள்.) 'அபயம்: உனக்கு அபயம்' என்கின்ற அனைவோரையும் பார்த்து, (இலட்சுமணன்), 'அஞ்சற்க: உமக்கு அபயம் அளித்தோம்' என்று சொல்லித் தன்கைத்தலத்தினால் அமர்த்தினான்: '(பூமி விண் என்ற) இரண்டாகவுள்ள உலகின்பயத்தை யுணர்ந்திட்டேன். இனி, சும்மா இரேன்: ஐம்முகமுடையவனை சிவபெருமானுடைய படையையே தொடுப்பேன்' என்று (மனத்தில்) தெளிவுகொண்டான்: (எ-று.)—[7]சிவையன் மனமுடையான் என்ற பாடத்திற்கு - பார்வதியை ஒருபா

கத்துக்கொண்டவனும் தன்னையணுகினரைக்காக்கும்மனமுடையான் என்க: மனமுடையானென்ற தொடர் இலக்குமணனைக் காட்டுமெனக் கொள்ளினுமாம். சிவை-பார்வதி. பி-ம்:—[1]அவையம். [2]அஞ்சேல், அஞ்சற்க. [3]உனக்கு, [4]என்றேளிணையெனக்கைத்தலங்கவித்தான். [5]உபயம், உவையம். [6]உணர்வான். [7]சிவனின்மனம். [8]திரிந்தான். (௩௦௪௮)

கருசு.—இலட்சுமணன்விடுத்த பாசுபதாஸ்திரம் இந்திரசித்தின் படையை விழுங்கிடுதல்.

அப்[1]பொற்படை மனத்தானினைந் [2]தர்ச்சித்ததை யழிப்பாய்
இப்பொற்படை தனைமற்றொரு [3]தொழில்செய்கிலையென்றுத்
துப்பொப்பதொர் கணைகூட்டினன் றுரந்தா[4]னிடைதொடரா
எப்[5]பொற்பெரும்படையும்புக விழுங்குற்றதொ ரிமைப்பின்.

(இ-ள்.) அந்த அழகிய படையை மனத்தினால் நினைத்து, அதனை அருச்சித்து 'இந்த (இந்திரசித்து விடுத்த) பொற்படையை அழிப்பாய்: மற்றொரு செயலும் செய்யவேண்டா' என்றுசொல்லி(த் தன்) வலிமைக்கு ஒப்பதாகிய ஒரு பாணத்துடனே (அந்தப்பாசுபதாஸ்திரத்துக்கு உரிய மந்திரத்தைக்)கூட்டி விடுத்தான்: (அது, முன் இந்திரசித்துவிடுத்த அஸ்திரத்தின்) இடத்தைத் தொடர்ந்து எப்படிப்பட்ட [மிகக் கொடுமையுள்ள] பெரும்படைகளை ஓரிமைப்பிற்குள் (தன்னுள்) அடங்க விழுங்கிவிட்டது; (எ-று.)—பி-ம்:—[1]போர்ப்படை. [2]அமைந்தானிவை, அருசித்துவைத்து. [3]செயல்செய்யலை. [4]அவை. [5]பொற்படையெவையும், போர்ப்படையெவையும். (௩௦௪௯)

கசூ௦.—மகிழ்ச்சியினால் விண் மண்முதலியன ஆரவாரித்தல்.

விண்ணார்த்தது மண்ணார்த்தது மேலோர்மணி முரசின்
கண்ணார்த்தது கடலார்த்தது மழையார்த்தது [1]கலையோர்
எண்ணார்த்தது [2]மறை[3]யார்த்தது விசயம்மென [4]வியம்பும்
பெண்ணார்த்தன ளறமார்த்தது [5]புறமார்த்தது பெரிதால்.

(இ-ள்.) விண்ணுலகத்தார் ஆரவாரித்தனர்; மண்ணுலகத்தார் ஆரவாரித்தனர்: மேலேயுள்ளாரான வானவருடைய அழகிய முரசின் கண் ஆர்த்தது; கடல்ஆர்த்தது; மழை யார்த்தது; கலைவல்லோரின் மனம் ஆர்த்தது; மறைஆரவாரித்தது; விசயப்பெண் ஆர்த்தனள்: அறம் ஆர்த்தது: (மற்று இவ்வாறு)புறம்பே மிகவும் ஆர்த்தது; (எ-று.)—பி-ம்:—[1]கலையோடு. [2]கவி. [3]ஆர்த்தன. [4]விசயப். [5]பிறர், பிற. (௩௦௫௦)

கசூக.—இலட்சுமணன்திறனைக் கண்டு இந்திரசித்து திகைக்க, அவனைத் திருமாலே யென வுணர்தல்.

இறுகாலையி னுலகியாவையு [1]மவிப்பானிகற் படையை
மறுகாவகை [2]வலித்தானது வாங்கும்படி வல்லான்
தெறு[3]காலனிற் கொடியோனுமற் றதுகண்டகந் திகைத்தான்
[4]அறுகால்வயக் கவிவீரரு மரியென்பதை யறிந்தார்.

(இ-ள்.) (யாவையும்) அழியும் யுகாந்தகாலத்தில் உலகம்முழுவதையும்அழிப்பவனாகிய உருத்திரமூர்த்தியின் வலிமையுள்ள அந்தஅஸ்திரத்தைப்பின்வாங்கும்படி, வல்லவனான இலட்சுமணன்,—(உலகம்) கலங்

காவகை வலித்திட்டான்; அழிக்கின்ற யமனைக்காட்டிலும்கொடியவனை இந்திரசித்தும் —அந்த இலட்சுமணனது திறலைக்கண்டு மனந்திகைத்தான்; (பாசுபதம்வருவதைக்கண்டு) (முன்பு) காலற்ற [ஓய்ந்த] வானரவீரரும் (அவன்) அறியேயாவனென்றறிவையை யுணர்ந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]வீய்ப்பான். [2]புரிந்தான், புரந்தான் [3]காலினில். [4]அருகாம்...யறிந்தார், மறுகாவயக்...யாம்வகையறிந்தார். (௩௦௫௧)

௧௬௨.—அஸ்திரத்தினலன்றி எய்யும் வல்லமையாற் போருவேனென்று இந்திரசித்து கணைதூவுதல்.

தெய்வப்படை [1]பழுதுற்றது வெனக்கூசுதல் [2]சிதையா
எய்வித்தக [3]முள[4]தன்னது [5]பிழையாதென விசையாக்
கைவித்தக மதனுற்சில கணைவித்தின னவையும்
மொய்வித்தகன் றடந்தோளினு நுதற்சூட்டினு மூழ்க.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) 'தெய்வப்படை பழுதுற்றது'என்று பின்வாங்குதலையொழித்து, (இந்திரசித்து), 'எய்கின்றவல்லமை (எனக்கு) உள்ளது; அது பிழைபடாது'என்று சொல்லி, கைத்திறமையாற் சிலகணைகளை (இலட்சுமணன்) மீது தூவினன்; அவைகளும், வலிமைபெற்ற சமர்த்தனை இலட்சுமணனுடைய பெரியதோள்களிலும் நெற்றியினுச்சியிலும் மூழ்க, (பின்னும்),—(எ-று.)—'உய்த்தான்' என அடுத்த கவியில் முடிவுபெறும். பி - ம்:—[1]முழுதிற்றது. [2]தெளியா, சிதைவால். [3]உள. [4]என்னிது. [5]பிழையோ. (௩௦௫௨)

௧௬௩.—சுக்கிரீவன் முதலியோர்மீது பல அம்புகளைத்தூவி, இந்திரசித்து அயல்நின்ற விபீஷணனைச் செறுத்தல்.

வெய்யோன்மகன் முதலாகிய [1]விறலோர்மிகு திறலோர்
கையோய்விலர் மலைமாரியி னிருதக்கடல் கடப்பார்
உய்யாரென வடிவாளிகள் சதகோடிக ளுய்த்தான்
[2]செய்யோனய றனிநின்றதன் சிறுதந்தையைச் [3]செறுத்தான்.

(இ - ள்.) (அந்த இந்திரசித்து),—சூரியபுத்திரனை சுக்கிரீவன் முதலாகிய வலிமையுடையரான மிக்கபராக்கிரமசாலிகள் கையோய்வு இல்லாதவராய் மலைகளை மாரிபோலத் தூவி நிருதக்கடல் கடப்பவரை, '(இவர்) உய்யார்' என்னுமாறு கூறிய அம்புகள் சதகோடிகள் செலுத்தினன்: செம்மைநிறமுள்ளவனை இலட்சுமணனுடைய அயலில் தனியேநின்ற தன்னுடையசிறிய தந்தையைப்பார்த்துச்சினந்துகூறலானன்; (எ-று)—பி-ம்:--[1]மிடலோர். [2]வெய்யோன். [3]வெறுத்தான். (௩௦௫௩)

வேறு.

௧௬௪.—இதுமுதல் எட்டுகவிகள் - ஒருதொடர்: விபீஷணனை இந்திரசித்து இகழ்தலைத் தெரிவிக்கும்.

முரட்டடந் தணடு மேந்தி [1]மனிதரை [2]முறைமை குன்றப்
பிரட்டரிற் புகழ்ந்து பேதை யடியரிற் [3]றொழுது பின்சென்று
இரட்டுறு முரச [4]மென்ன விசைத்ததே யிசைக்கின் றுனைப்
புரட்டுவன் றலையை[5]யின்று [6]பழியெலா வொழிவன் போலாம்.

(இ - ள்.) வலியபெரியதண்டாயுதத்தை (கையில்ஏந்தியும்,) (சாதியினின்றும்) பிரஷ்டரானுரைப்போல முறைமைதவற மனிதரைப் புகழ்ந்து, பேதைமையையுடைய அடியவரைப்போலத்தொழுதுகொண்டு (அவருடைய) பின்னேசென்று, அரையப்படுகின்ற முரசவாத்தியம்போல (அந்தமனிதர்) சொன்னதையே சொல்லுகின்றவனான உன்னைத் தலையை இன்றுபுரட்டுவேன்: (ஆனால், அவ்வாறுசெய்வது) பழியாயிற்றே என்று ஒழிவேன்; (எ - று.)—ஒலித்தவண்ணமே மீண்டும் ஒலிப்பதால், சொல்லியதே சொல்லுவதற்கு, முரசு, உவமையாயிற்று. பி - ம்:—[1]நீசரின். [2]முறைமைகூறி, முறைமையைக்குன்றிப். [3]இரந்து. [4]என்ன. [5]அந்தோ, ஒன்றோ. [6]பழியொடும். (௩௦௫௪)

௧௧௫. விழிபட முதல்வ ரெல்லாம் வெதும்பின[1]ரொ துங்கி வீழ்ந்து
வழிபட வுலக மூன்று [2]மடிப்பட வந்த தேனும்
அழிபடை தாங்க லாற்று மாடவ ரியாண்டும் [3]வெஃகாப்
பழிபட வந்த வாழ்வை [4]யாவரே [5]நயக்கற் பாலார்.

(இ-ள்.) கண்விழி பட்டமாத்திரத்தில் (உடலம்)வெதும்பினவராய் முதல் மூர்த்திகளான பிரமருத்திர விஷ்ணுக்கள் யாவரும் ஒதுங்கிக்கீழ் வீழ்ந்து, வழிபடுமாறு உலகமூன்றும் (உனக்குச்) சுவாதீனமாகவந்தாலும்,தோற்றோடுகின்ற சேனைகளை (ஓடவொட்டாது) தாங்கும் வல்லமைபெற்ற ஆடவர் எங்கும் விரும்பாதபழி விளையுமாறு வந்த வாழ்வை யாவர்தாம் விரும்புதற்கு உரியார்? (எ - று.)—பி-ம்:—[1]ஒதுங்கிவீழ, ஒதுங்கவீழ்ந்து. [2]அடிதொழ, அடிபட. [3]ஆகாப், வைகார், வைகப். [4]யாவரோ. [5]பகரற். (௩௦௫௫)

௧௧௬ [1]நீருள தனையு முள்ள [2]மீனென நிருத ரெல்லாம்
வேருள தனையும் [3]வீவா ரிராவண னோடு மீளார்
ஊருள தொருவ னின்றாய் நீயுளை [4]யுறைய நின்னோடு
ஆ[5]ருள ரரக்கர் நிற்பா ரரசுவீற் றிருக்க வையா.

(இ - ள்.) நீர் இருக்குமளவும் உயிருடனுள்ள மீனென்னுமாறு நிருதரெல்லாம் வேருள்ளதனையும்(பொருது) இராவணனுடனே இறந்துபடுவரேயன்றி, (எவரும் உயிருடன்) மீளமாட்டார்; (பின்பு), இலங்கைநகரம் உள்ளதாகும்: (இப்போது) ஒருத்தனாய் [வேறுபட்டவனாய்] நின்றவனான நீ (அந்நகரத்தில்) வசிப்பதற்கு உள்ளவனாவாய்: ஐயா! (நீ) அரசுசெய்து வீற்றிருக்குமாறு உன்னுடன் நிற்கப்போகின்றவரான அரக்கர்யாவருளர்? (எ-று.)—பி-ம்:—[1]நீருளதனையே. [2]மீனினம். [3]வீய. [4]உறையும். [5]உளராகி. (௩௦௫௬)

௧௧௭ முந்தைநா ளுலகந் தந்த [1]மூத்தவா னோர்கட் கெல்லாந்
தந்தையார் தந்தை யாரைச் செருவிடைச் சாயத் தள்ளிக்
கந்தனார் தந்தை யாரைக் கயிலையோ டொருகைக் கொண்ட
எந்தையா ரரசுசெய்வ திப்பெரும் பலங்கொண் டேயோ.

(இ - ள்.) முந்தைநாளில் உலகங்களைப்படைத்த மூத்த(வரும்) வானோர்களின் தந்தையாருமான பிரமதேவரது தந்தையான திருமா

லைப்போரிலே தளர்ந்து விழுமாறுதள்ளி, கந்தனுருடையதந்தையரான சிவபிரானைக் கயிலைமலையுடனே ஒருகையில் தூக்கிக்கொண்ட என்தந்தையார் அரசுசெய்வது இந்த (மானுடரின்)பெரும்பலத்தைக்கொண்டு தானோ? (எ - று.)---மானுடரின் துணைவலிகொண்டு இலங்கையை யாளவேணுமென்று கருதுவது, சிறிதுந் தகுதியன் றென்றவாறு. பி-ம்:---[1]மூர்த்தி...எல்லாம், முழுமுதலிமையோர்க்கெல்லாம்.(௩௰௭)

௧௬அ. பனிமலர்த்தவிசின்மேலோன்பார்ப்பன குலத்துக் கெல்லாந்
தனிமுதற் றலைவ[1]னான வுன்னைவந் தமரர் தாழ்வார்
மனிதருக் கடிமை[2]யாய்நீ யிராவணன் [3]செல்வ மாள்வாய்
[4]இனியுனக் [5]கென்னோ மான மெங்களோ [6]டடங்கிற் றன்றே.

(இ - ள்.) குளிர்ந்த தாமரைமலராகிய ஆசனத்தின் மீது இருப்பவனான பிரமதேவனுடைய பார்ப்பனக்குலத்துக்கெல்லாம் தனிமுதற்றலைவனான உன்னை வந்து(பிறந்தகுலப்பெருமைக்காகத்)தேவர்களும் வணங்குவார்: நீயோ, மனிதருக்கு அடிமையாகி இராவணனுடைய செல்வத்தை யாளப்போகிறாய்: இனி உனக்கு மானம் என்பது என்ன இருக்கின்றது? (மானமென்பது நாங்களொழியின்) எங்களோடு அடங்கி விட்டதேயாம்; (எ-று.)---பி-ம்:---[1]ஆனாய், ஆவாய். [2]செய்வாய். [3]செல்வமாள. [4]இனி தினக்கு, இனிதுளது, இனிதுநின். [5]எண்ணமெந்தாய். [6]அடங்கிற்றென்றால், அடங்கிற்றன்றால். (௩௰அ)

௧௬௯. [1]சொல்வித்தும் [2]பழித்து நுங்கை மூக்கினைத் [3]துணிவித்தோரால், [4]எல்வித்தும் படைக்கை யுங்க டமையனை யெங்களோடுங், [5]கொல்வித்துந் தோற்று நின்ற கூற்றினார் குலத்தை யெல்லாம், வெல்வித்தும் வாழும் வாழ்வின் [6]வெறுமையே [7]விழுமிதன்றே.

(இ-ள்.) (பிறரைக்கொண்டு இழிமொழிகளைச்) சொல்வித்தும், (நேராகவே)பழித்தும், உன்தங்கை மூக்கினைத் துணித்தோரால் ஒளியைவெளிவிடுகின்ற படையைக் கையிற்கொண்ட உங்கள் தமையனை எங்களுடனே கொல்வித்தும், (இதுவரையில்)தோற்றுக்கிடந்த யமனுருடைய பரிவாரங்களை யெல்லாம் வெல்வித்தும் (நீ) வாழ்கின்றவாழ்வைக் காட்டிலும், வெறுமையே [வாழ்ச்சியற்ற நிலைமையே] சிறந்ததாகு மல்லவோ? (எ-று.)---சொல்வித்தும் என்பதற்கு - உளவுகளைச் சொல்லியும் என்று உரைப்பாருமுளர். துணிவித்தோர்=துணித்தோர். பி-ம்:---[1]சொல்வித்துப். [2]பழிதந்துங்கை. [3]துணித்தோராலே, துணிவித்தோரார். [4]வெல்வித்தும். [5]கொல்வித்துத். [6]பெருமையே. [7]விழுமிதன்றோ. (௩௰௯)

௧௭0. எழுதியே யணிந்த திண்டோ ளிராவண னிராம னம்பாற், புழுதியே பாயலாகப் புரண்டநாள் புரண்டு மேல்வீழ்ந்து, அழுதியோ நீயுங் கூட வார்த்தியோ [1]வினை வாழ்த்தித், தொழுதியோ [2]வென்னோ செய்யத் [3]துணிந்தனை விசயத் தோளாய்,

(இ-ள்.) வெற்றிதங்கிய தோள்களையுடையவனே! (சித்திரம்) எழுதப்பெற்று அழகைக்கொண்ட வலிய தோளையுடைய இராவணன் இராமனுடைய அம்பினாலே புழுதியே பாயாகப் புரள்கின்ற காலத்தில் நீயும் கூடப்புரண்டு மேல்வீழ்ந்து அழப்போகின்றாயோ? (அன்றி மகிழ்ச்சியினால் ஆரவாரிக்கின்றவரோடு) மகிழ்ச்சி யாரவாரஞ் செய்யப்போகின்றாயோ?இந்தஇராமனை வாழ்த்தித் தொழப்போகின்றாயோ?என்ன செய்யத் துணிந்துள்ளாய்? (எ - று.)—பி - ம்:—[1]அவனை. [2]யாதோ. [3]துணிந்தது. (௩௦கூ௦)

களஎக. ஊனுடை [1]யுடம்பி [2]னீங்கி [3]மருந்தினா லுயிர்[4]வந் தெய்தும்
மானிட ரிலங்கை வேந்தைக் [5]கொல்வரே நீயு மன்னான்
தானுடைச் செல்வந் [6]துய்க்கத் தகுதியே சரத்தி னேடும்
வானிடைப் [7]புகுதி யன்றே யான்பழி மறுக்கி லென்றான்.

(இ-ள்.) ஊனையுடைய உடம்பினின்று (உயிர்) நீங்கி மருந்தினாலே (மீண்டும் அவ்)வுயிர்வந்து சேரப்பெறும் மானுடர் இலங்கைவேந்தைக் கொல்லமாட்டுவரோ? நீயும், அந்தஇராவணனுடைய செல்வத்தைப் பெற்று அனுபவித்தற்குத் தக்கவனாவாயோ? யான் பழியென்பது பாராது (அம்பினாற்) கொன்றேனாயின், அவ்வம்பினேடும்; வானிடைப் புகுவாயல்லவோ! என்று கூறிமுடித்தான், (இந்திரசித்து); (எ-று.)—பி-ம்:—[1]உடம்பு. [2]நீக்கி. [3]மருந்தினின். [4]பெற்றுய்யும், வந்துய்யும். [5]கொல்வதே. [6]துய்யத்துறுதியே. [7]படுதி. (௩௦கூக)

களஉ.—விபீஷணன் பதிலுரைக்கத் தொடங்குதல்.

அவ்வுரை யமையக் கேட்ட வீடண னலங்கன் மௌலி
[1]செவ்விதிற் றுளக்கித் [2]தன்பான் முறுவலுந் தெரிவ தாக்கி
வெவ்விது பாவஞ் சாலத் தருமமே விழுமி தைய
இவ்வுரை கேட்டி யென்னா வினையன [3]விளம்ப லுற்றான்.

(இ - ள்.) (இந்திரசித்து கூறிய) அந்தவார்த்தையைப் பொருந்தக்கேட்ட விபீஷணன், மாலையை யணிந்த முடியை நன்கு அசைத்துத் தன்னிடத்துப் புன்முறுவலும் வெளித்தெரிவதாகச்செய்து, 'ஐயனே! பாவம் கொடியது: தருமமே மிகவுஞ் சிறந்தது: இந்தவுரையைக் கேட்பாய்' என்று இவ்வார்த்தைகளைக் கூறத்தொடங்கினான்; (எ - று.)—விபீஷணன் கூறுவதை மேல்ஐந்து கவிகளிற் காண்க. பி-ம்:—[1]செவ்விது. [2]வீர, மூரல். [3]இயம்பல். (௩௦கூஉ)

களஈ.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: விபீஷணன் கூறுவதைத் தெரிவித்தும்.

அறந்[1]துணை யாவ தல்லா லருநர கமைய [2]நல்கும்
மறந்துணை யாக மாயாப் பழியொடும் வாழ மாட்டேன் [லாற்
துறந்திலேன் [3]மெய்ம்மை யெய்தும் பொய்ம்மையே துறப்ப தல்
[4]பிறந்திலே னிலங்கை வேந்தன் பின்னவன் [5]பிழைத்த போதே.

(இ - ள்.) தருமமே துணையாவதல்லது (கடப்பதற்கு) அரிய நரகத்தைப் பொருந்துமாறு தருகின்ற பாவம் துணையாக மாயாத பழியோ

டும் வாழமாட்டேன்: செய்யுமாறுநேர்கின்ற பொய்ம்மையைத் துறப்பதல்லாமல், மெய்ம்மையைத் துறந்திலேன்: இலங்கைவேந்தனான இராவணன் பிழைபட நடந்தபோதே, (நான் அவனுக்குத்) தம்பியாகப் பிறவாதவனே யாயினேன்; (எ - று.)—பி - ம்:—[1]துணையாக. [2]நல்க. [3]மெய்ம்மைபொய்ம்மையும்மையே. [4]பிறந்திலன். [5]இறந்த. (௩௦௬௩.)

௧௭௪. உண்டில னறவம் பொய்ம்மை யுரைத்திலன் வலியா லொன்றுங், கொண்டிலன் மாய வஞ்சங் குறித்தில [1]னியாருங் குற்றங், கண்டில ரென்பா லுண்டே நீயிருங் காண்டி ரன்றே, பெண்டிரிற் [2]றிறம்பி னாரைத் துறந்தது பிழையிற் [3]றாமே.

(இ - ள்.) மதுவைப் பருகினதில்லை; பொய் பேசியதில்லை; வலிமையினாலே [பலாத்காரத்தினால்] எதையும் கவர்ந்துகொண்டதில்லை; மாயத்தினாற் செய்யும் வஞ்சனைச்செயலை (மனத்தினால்) எண்ணியதுமில்லை; எவரும் என்னிடத்தில் தீச்செயலைக்கண்டதில்லை: என்னிடத்து (த்தீமை) உளதோ? நீங்களும் பார்க்கின்றீர்களல்லவா? பெண்டிரின் பொருட்டு முறைதிறம்பிநடந்தவரைத் துறந்திட்டது, பிழையையுடையதாகுமோ? (எ-று.)—'என்பால்' என்பது, மத்திமதீபமாக ஈரிடத்தும் இயைந்தது. பி-ம்:—[1]எவரும். [2]திறம்பினானை. [3]ஆமோ. (௩௦௬௪)

௧௭௫. மூவகை [1]யுலக[2]மேத்து முதலவ னெவர்க்கு மூத்த
[3]தேவர்தந் தேவன் றேவி கற்பினிற் [4]சிறந்து ளாளை
[5]நோவன செய்த தீதென் றுரைப்பநுந் தை சீறிப்
போவென [6]வுரைக்கப் போந்தே னரகதிற் பொருந்து வேனோ.

(இ - ள்.) 'மூவகையுலகமும் துதிக்கின்ற முதற்கடவுளும் எல்லாத் தேவரினும் மேம்பட்ட தேவாதிதேவனுமான திருமாலின் பத்தினியான கற்பிற் சிறந்துள்ளவளை வருந்தத்தக்கனசெய்தல் தீமையானது' என்று (நான்) உரைப்ப, உன்தந்தை சீற்றங்கொண்டு 'போ'என்று சொல்ல, (அவனைவிட்டு) வந்திட்டேன்: (இதனால்), நரகத்திற் சேர்வேனோ? (எ - று.)—பி - ம்:—[1]உலகும். [2]தந்தமுதல்வனே. [3]காவலன்றேவியன்றே. [4]பிறந்துளாளை. [5]நோவது. [6]பொருந்தேனின்று. (௩௦௬௫)

௧௭௬. [1]வெம்மையிற் றரும [2]நோக்கா வேட்டதே வேட்டு வீயும், உம்மையே புகழும்[3]பூண [4]துறக்கமு முமக்கே யாக, செம்மையிற் பொருந்தி மேலோ ரொழுக்கினோ டறத்தைத்தேறும், எம்மையே பழியும் [5]பூண நரகமு மெமக்கே யாக.

(இ - ள்.) கொடுமையினாலே தருமத்தைப் பாராமல் காமத்தையே விரும்பி இறக்கப்போகின்ற உம்மையே, புகழும் அடையட்டும்: நல்லுலகமும் உமக்கே யுண்டாகட்டும்: நற்குணத்திற்பொருந்திநின்று மேலோருடைய ஒழுக்கத்தினோடு அறத்தைத் தேறுகின்ற எம்மையே பழியும் அடையட்டும்: நரகமும் எங்கட்கே யுண்டாகட்டும்: (எ - று.)— தருமத்தைச் செய்வதனால் பழியும் நரகமும் கிடைக்குமென்றாலும், நாங்கள் தருமத்தை நாடுவோமேயன்றி அதருமத்தை நாடமாட்டோ

மென்றவாறு. பி - ம்:—[1]மெய்மையிற். [2]நோக்கிர். [3]பூண்க, பூணத். [4]சுவர்க்கமும். [5]பூண்க. (ருOகூகூ)

கஎஎ. அறத்தினைப் பாவம் வெல்லா தென்னுமி தறிந்து [1]ஞானத், [2]திறத்தினு முறுமென் றெண்ணித் [3]தேவர்க்குந் தேவைச் சேர்ந்தேன், புறத்தினிற் புகழே யாக பழியொடும் புணர்க [4]போதச், [5]சிறப்பினிப் பெறுக [6]தீர்கவென் றனன் சீற்ற [7]மில்லான்.

(இ - ள்.) 'அறத்தைப் பாவம் வெல்லாது' என்கின்ற அதனையறிந்து (இராமபிரானைச் சேர்கின்ற அச்செயல்)ஞானத்தின் கூறுபாட்டிலும் பொருந்து மென்று கருதி, தேவாதிதேவனை ஸ்ரீராமனைச் சேர்ந்தேன்: வெளியே (எனக்குப்) புகழுண்டாகட்டும்: (அல்லது) பழியோடும் (நான்) சேர்க: மிகவும் மேன்மையை இனிப்பெறுக: (அல்லது, சிறப்பு) ஒழிக: (அதுபற்றிக்கவலையில்லை) என்றுகூறினான்:(யாவனெனில்), சீற்றம்நீங்கினவனாகிய விபீஷணன்; (எ - று.)—பி - ம்:—[1]யானே, நானே, தானே. [2]திறத்தினதும். [3]தேவர்க்குத். [4]போகச். [5]சிறப்பினைப். [6]தீர்க்க, போக, தக்காய். [7]தீர்ந்தான். (ருOகூஎ)

கஎஅ.—விபீஷணன்மீது வீரவாதத்துடன் இந்திரசித்து அம்புஎய்தல்.

பெறுஞ்சிறப் பெல்லா மென்கைப் பிறைமுகப் [1]பகழி பெற்றால்
இறுஞ்[2]சிறப் பல்லா லப்பா [3]லெங்கினிப் போவ தென்னாத்
தெறுஞ்சிறைக் கலுழ னன்ன வொருகணை [4]தெரிந்து செம்பொன்
உறுஞ்சுடர்க் கழுத்தை நோக்கி நூக்கினா [5]னுருமின் வெய்யோன்.

(இ - ள்.) இடியைப்போல் வெய்யவனான இந்திரசித்து, (நீ) பெறுவதாகக் கருதுகின்ற சிறப்புகளெல்லாம், என்கையிலேயுள்ள பிறைமுகத்தையுடைய பகழியைப் பெற்றால் அழிகின்ற சிறப்பாகுமேயல்லாமல், இனிஎங்கே'(இதற்குத்தப்பி) அப்பாற்போவது?' என்று சொல்லி, (சர்ப்பத்தை) அழிக்கின்ற சிறையையுடைய கருடனை யொத்த ஒரு கணையை ஆராய்ந்தெடுத்து (விபீஷணனுடைய) செம்பொன்னணிபொருந்திய ஒளியுள்ளகழுத்தை நோக்கிச்செலுத்தினான்; (எ-று.)—பெறுஞ்சிறப்பு இறுஞ்சிறப்பாகும் என்றது-நீ பெறக்கருதுஞ்சிறப்பு இற்றதாய்விடு மென்றபடி.-பி-ம்:—[1]வாளியொன்றால்.[2]சிறப்பில்லையைய.[3]எங்கினிப்பெறுவை, எங்கினிப்போவை. [4]தொடுத்துச். [5]அசனியொப்பான். ()

கஎகூ.—இலட்சுமணன் அந்தக்கணையைத் தடுத்தல்.

அக்கணை யசனி யென்ன [1]வனலென்ன வால முண்ட
முக்கணன் சூல மென்ன முடுகிய முடிவை நோக்கி
[2]இக்கணத் திற்றா னிற்றா [3]னென்கின்ற [4]விமையோர் காணக்
கைக்கணை யொன்றால் [5]வள்ள லக்கணை கண்டங் கண்டான்.

(இ - ள்.) அந்தக்கணையானது இடியேயென்னவும்,அனலே என்னவும், விஷத்தையுண்ட திரிநேத்திரனான உருத்திரமூர்த்தியினது சூலப்படையென்னவும் விரைந்துசென்ற முடிவான நிலையை நோக்கி, 'இக்கணத்திலே(இந்தவிபீஷணன்)ஒழிந்தான், ஒழிந்தான்'என்கின்ற இமை

யோருங் காணும்படி உதாரகுணமுடையவனாகிய இலக்குமணன் (தன்) கையிலிருந்த கணையொன்றினாலே(இந்திரசித்து விட்ட)அக்கணையைத் துண்டமாக்கினான்; (எ - று.)—பி-ம்:—[1]அன்றெனை, அன்றவன். [2]இக்கணம். [3]என்பதன். [4]இடையேயெய்தான், இடையேயீண்டு. [5]ஜயன். ()

கஅ௦.—இந்திரசித்து வேற்படையை விபீஷணன் மீது ஏவ அதனையும் இலட்சுமணன் அழித்தல்.

கோலொன்று துணித லோடுங் கூற்றுக்குங் [1]கூற்ற மன்னான்
வேலொன்று வாங்கி விட்டான் வெயிலொன்று [2]விழுவ தென்ன
நாலொன்று மூன்று [3]மான புவனங்க ணடுங்க லோடும்
நூலொன்று [4]வரிவி லானு மதனையு நுறுக்கி வீழ்த்தான்.

(இ - ள்.) ஒப்பற்ற அம்பு துணிபட்டவுடனே, யமனுக்கும் யமனையொப்பவனான இந்திரசித்து,---வேற்படையொன்றைக் கையிலெடுத்து விட்டான்: ஒருசூரியன் விழுவதுபோல (அந்தச்சூலப்படை பிரகாசித்துக்கொண்டுதோன்ற), ஏழான புவனங்கள் நடுங்குதலும், சாஸ்திர முறைப்படியே கட்டமைந்த விற்றொழிலில் வல்லவனான இலட்சுமணனும் அந்தவேற்படையையும் அழித்துத்தள்ளினான்; (எ-று.)---பி-ம்:---[1]கூற்றுமென்ன, கூற்றமன்ன. [2]விழுந்தது. [3]ஆயவுலகங்கள். [4]விதிவலானும், வரிவிலன்றான், வரிவில்வல்லான். (௩௦எ௦)

கஅக.--விபீஷணன்இந்திரசித்தினதுதேரின் சாரதிகுதிரைகளையழித்தல்.

[1]வேல்கொடு நம்மே லெய்தா னென்றொரு வெகுளி [2]பொங்கக்
[3]கால்கொடு காலிற் கூடிக் கைதொடர் கனகத் தண்டாற்
கோல்கொளு மொருவ னோடுங் [4]கொடித்தடந் தேரிற் பூண்ட
பால்கொளும் [5]புரவி யெல்லாம் [6]படுத்தினான் [7]படியின் மேலே.

(இ - ள்.) வேலைக்கொண்டு நம்மேல் எறிந்தானென்று ஒருகோபம் கிளர்ந்தெழ, (விபீஷணன்),---காலினால் காற்றுப்போல் (விரைவு) பொருந்திக் கையிற்பற்றிய பொன்மயமான தண்டாயுதத்தினால் தேரை செலுத்துகின்ற ஒருவனுடனே [பாகனுடனே] கொடிகட்டிய பெரிய தேரிற்பூட்டிய பால்நிறமான குதிரைகளையெல்லாம் பூமியின்மீது விழுத்தினான்; (எ - று.)---பி-ம்:---[1]வேலொடுகொல்லலுற்றானென்பதோர். [2]வீங்கக், தோன்றக். [3]காலொடு...கூட்டிக்கைகொடு. [4]அவனெடுங்கொடித்திண்டேரும், அவனெடுங்...தேரின். [5]புரவியோடும், புரவிபாரிற். [6]பரப்பினான். [7]துடிப்பும்மாற,உயிர்ப்புமாற, துடிப்பும்பாற.

கஅஉ.--விபீஷணன் இலக்குமணன் முதலியோர் மீது இந்திரசித்து அம்புபொழிந்து ஆரவாரித்தல்.

அழிந்ததேர் மீது நின்றா னயிர கோடி [1]யம்பாற்
பொழிந்தவன் றோளின் [2]மேலு மிலக்குவன் புயத்தின் மேலும்
[3]ஒழிந்தவ ருரத்தின் மேலு முதிரநீர் வாரி [4]யாக
[5]அழிந்திழிந் தோட [6]நோக்கி [7]யண்டமு [8]மிரிய வார்த்தான்.

(இ - ள்.) அழிந்ததேரின்மீது நின்றவனான இந்திரசித்து, அந்த விபீஷணன் தோளின்மேலும் இலக்குமணனுடைய புயத்தின்மேலும் ஒழிந்தவரின் மார்பின்மேலும் ஆயிரகோடி யம்புகளினாற் பொழிந்து, இரத்தப் புனற்கடல் அழிந்திழிந்தோட நோக்கி அண்டமும் நிலைகெட்டோட ஆரவாரித்தான்; (எ-று.)---பி-ம்:---1அம்பு. 2மீதும். 3ஒழிந்தபேர். 4ஓதம். 5அழிந்தழிந்து. 6நூக்கி. 7பகிரண்டம். 8மடிய, வெடிக்க. ()

௧அ௩.—இந்திரசித்து வானத்துமறைந்து இராவணனிடம் செல்லுதல்.

ஆர்த்தவ னனைய போதி னழிவிலாத் தேர்கொண் டன்றிப்
போர்த்தொழில் 1புரிய லாகா தென்பதோர் பொருளை யுன்னிப்
2பார்த்தவ ரிமையா முன்னம் விசும்பிடைப் 3பாய்ந்தா னென்னும்
வார்த்தையை நிறுத்திப் போனா னிராவணன் மருங்கு சென்றான்.

(இ - ள்.) ஆரவாரஞ்செய்த அந்த இந்திரசித்து, அப்போது 'அழிவில்லாத தேரைக் கொண்டாலல்லாமல் போர்த்தொழிலைச் செய்ய முடியாது'என்பதான ஒருவிஷயத்தைக் கருதி, பார்த்தவர் கண்ணைக் கொட்டுங்காலத்திற்குள் விசும்பினிடத்துப்பாய்ந்தானென்னும் வார்த்தையையுண்டாக்கிவிட்டுப்போனவனாய், (அங்குநின்று)இராவணனுள்ள இடத்துக்குச்சென்றான்; (எ - று.)---பி-ம்:---1வெல்லல். 2காத்தவர். 3கரந்தான், புக்கான். (௩௦எ௩)

* நிதும்பலையாகப்படலம் முற்றிற்று.

## ௨எ.—ஆவது இந்திரசித்துவதைப்படலம்.

(இலக்குமணன் செய்த) இந்திரசித்தினுடைய வதையைக் கூறும் படலமென்பது, பொருள்.

இராவணன் மருங்கு சென்று சேர்ந்த இந்திரசித்து, அவ்விராவணனைக்கண்டு விபீஷணன் உளவுசொல்லித் தருவதையும் இலட்சுமணனுடைய பராக்கிரமத்தையுஞ் சொல்லி, 'சீதையை விட்டிடுவதே செய்யத்தக்கது'என்ன, அதுகேட்ட இராவணன் சினந்து தான் போருக்கு எழுமுயல,அப்போது இந்திரசித்து அவ்விராவணனைத் தடுத்துத்தானே போருக்கு எழுந்துசென்று இலட்சுமணனோடு கடும்போர் விளைக்க, சூரியனுதித்ததும் இலட்சுமணன் இந்திரசித்துசெய்த மாயப்போரை வென்று அவனைச்சங்கரிக்கவே, அரக்கரிரிந்தோடினராகத் தேவர்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரித்தனர். அப்போது கடவுளருளால் இறந்த வானரர் உயிர்பெற்றெழ, அங்கதன் இந்திரசித்தின்தலையை யேந்தி முன்னணியில் வர,இலக்குமணன் அநுமன்தோளின் மீதேசென்றனன். இந்திரசித்தின்தலையைக் காணிக்கையாகவைத்து இலட்சுமணன் வணங்க, ஸ்ரீராமன் அவனைப் புகழ்ந்து அவனிடத்துள்ள பேரன்பினால் அவனுடலிலுள்ளபுண்களை யொற்றிப் போக்கின னென்பது, இந்தப்படலத்திற் கூறிய பொருள்.

* நிகும்பலைவேள்விப்படலம்முற்றும் என்று ஒருபிரதியிலுள்ளது.

க.—இராவணன் இந்திரசித்தைநோக்கி வினவத்தொடங்குதல்.

விண்ணிடைக் [1]கரந்தா [2]னென்ன வஞ்சனை விளைக்கு மென்பார்
[3]கண்ணிடைக் கலக்க நோக்கி யையுற வுழக்குங் காலை
புண்ணிடை யாக்கைச் செந்நீ ரிழிதரப் புக்கு நின்ற
எண்ணுடை மகனை நோக்கி யிராவண னினைய சொன்னான்.

(இ - ள்.) வானத்தினிடத்தே ஒளிந்துகொண்டா னென்ற காரணத்தால் (முன்போல) மாயச்செயலைத் தோற்றுவிப்பானென்பாராய்க் கண்ணினிடத்துக் கலக்கமுண்டாக எண்ணமிட்டு (வானரர்)சந்தேகப் பட்டு வருந்திக்கொண் டிருக்கும்போது, உடலின் புண்ணினிடத்தினின்று இரத்தம்பெருக (த் தன்முன்னே) வந்துநின்றவனான (மகாவீரனென்று) மதிப்புப்பெற்ற மகனை [இந்திரசித்தை] ப் பார்த்து, இராவணன் இவ்வாறான வார்த்தையைக் கூறலானான்; (எ - று.)—அதனை மேற்கவியிற்காண்க. கண்ணிடைக்கலக்கநோக்கிஎன்பதற்கு - தமது கண் வானத்தினிடத்துப்பொருந்தப் பார்த்தவண்ணம் என்று உரைத்தலுமாம். பி-ம்:—[1]கலந்தான். [2]என்பார்.[3]கண்ணிடைக்கலக்கனோக்கி, கண்ணிடை கலக்கநோக்கி. [4]புண்ணுடையாக்கைசெந்நீர். (௩௦௭௪)

உ.-நிகழ்ந்ததைச் சொல்வாயென்று இராவணன் இந்திரசித்தைவினவல்.

தொடங்கிய வேள்வி [1]முற்றப் பெற்றிலாத் [2]தொழில்நின் றோண்
அடங்கிய [3]வம்பே யென்னை யறிவித்த தழிவி லியாக்கை [மேல்
நடுங்கினை [4]போலச் சாலத் தளர்ந்தனை கலுழ னண்ணப்
படங்குறை யரவ மொத்தா யுற்றது பகர்தி யென்றான்.

(இ - ள்.) (நீ) தொடங்கிய வேள்வியானது முடிவுபெற்றிலாத தன்மையை உன்னுடைய தோளின்மேற் பதிந்துள்ள அம்பே என்னை யறிவித்தது; அழிவில்லாத உடல் நடுக்கமடைந்தாய்போல மிகத்தளர்ந்தாய்: (அதனால்),கருடன் கிட்டப் படமொடுங்கின சர்ப்பம்போன்றாய்: நிகழ்ந்ததைக் கூறுவாயென்றான்: (எ - று.)—பி - ம்:—[1]முற்றும், முற்றிப். [2]தொழிலுங். [3]அம்பிற்றேறவறைந்தனவயர்வில் யாக்கை, அம்பு தோன்ற வறைந்தன வயர்வில்யாக்கை. [4]மனமுஞ். (௩௦௭௫)

ங.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்:
இந்திரசித்து கூறிய பதிலைத் தெரிவித்தும்.

சூழ்வினை [1]மாய மெல்லா மும்பியே துடைக்கச் சுற்றி
வேள்வியைச் சிதைய நூறி வெகுளியா லெழுந்து வீங்கி
[2]ஆள்வினை யாற்றல் [3]தன்னு லமர்த்தொழில் தொடங்கி யார்க்குந்
தாழ்விலாப் படைகண் மூன்றுந் தொடுத்தனன் றடுத்து விட்டான்.

(இ - ள்.) (நான்) ஆராய்ந்து செய்த மாயச்செயலையெல்லாம் உன் தம்பியே யொழிக்க,(பிறகு இலட்சுமணன் வானர சேனையுடனே) முற்றுகைசெய்து வேள்வியைக் கெடும்படி யழித்ததனால், (நான) சினத்தோடு எழுந்து பராக்கிரமத்தோடுகூடிய வல்லமையால் மிக்குப் போர்த்தொழிலைத் தொடங்கி ஆரவாரிக்கின்ற தாழ்வில்லாத (முத்தேவர்

களின்படைகளையும் தொடுத்து விட்டேன்:(அவற்றை யெல்லாம் அவ்வி லக்குமணன்) தடுத்து விட்டான்; (எ - று.)—ஆற்றல் தன்னால் வீங்கித் தொடங்கி என்க: வீங்குதல் - மிகுதல். பி - ம்:—[1]மாயை. [2]ஆழ்வினை. [3]ஆற்றான்...புக்கு நின்றான். (௩0எசு)

ச. நிலஞ்செய்து விசும்புஞ் செய்து [1]நெடியமால் படைநின் றானை
வலஞ்செய்து [2]போயிற் றென்றால் மற்றினி வலிய [3]துண்டோ
குலஞ்செய்த[4]பாவந் தாலே கொடும்[5]பகை[6]தேடிக்கொண்டாய்
சலஞ்செயி னுலக மூன்று மிலக்குவன் [7]முடிப்பன் றானே.

(இ - ள்.) நிலத்தையுண்டாக்கி மேலுலகத்தையுமுண்டாக்கிப் பெருமைபெற்ற திருமாலின் படையும் (போரில் நின்ற) இலக்குமணனைப் பிரதட்சிணஞ்செய்து போயிற்றென்றால்,பின்னர் இனி வலிமையுடைய படையும் உண்டோ? (அரக்கர்)குலஞ் செய்த தீவினையாலே கொடிய பகையைத் தேடிக்கொண்டாய்: இலக்குவன் கோபங்கொண்டால் தானொருவனே உலக மூன்றையும் முடிப்பான்;(எ - று.)—குலம்-தொகுதியுமாம். பி - ம்:—[1]நெடியவன். [2]போவதானால். [3]உண்டே. [4]தீமையாலே. [5]பழி. [6]தேடிக்கொண்டேம். [7]முடிக்கும். (௩0எஎ)

ரு. முட்டிய செருவின் முன்னா முதலவன் படையை [1]யென்மேல்
[2]விட்டில னுலகை யஞ்சி யாதலால் வென்று மீண்டேன்
கிட்டிய [3]போதுங் [4]காத்தா னின்னமுங் [5]கிளர வல்லான்
சுட்டிய [6]வலியி னாலே கோறலைத் துணிந்து நின்றான்.

(இ-ள்.) நெருங்கச்செய்த போரில் முன் (மும்மூர்த்தியரில்)முதலிற் சொல்லப்படுபவனான பிரமதேவன் படையை உலகை(யழித்து விடுமே யென்று)அஞ்சிஎன்மீது விடுத்திலன்:அதனால்வென்றுமீண்டேன்:(நான் பிரயோகித்த பிரமாஸ்திரம் தன்னைக்)கிட்டியபோதும் காத்துக்கொண்டான்: இன்னமும் உற்சாகங்கொண்டு போர்செய்ய வல்லான்: பெருமைபெற்ற(தன்) வலிமையாலேயே (என்னைக்)கொல்வதைத் துணிந்து நின்றான்; (எ - று.)—பி - ம்:—[1]முன்பா, முன்பால், என்பால். [2]விட்டிலர். [3]போது. [4]காத்தார்...வல்லார்.[5]கிளர்வரல்லாச். [6]மூனையிலன்னான் றொடங்கிய சொலற்பாற்றோ, வலியினாலே...நின்றார். (௩0எஅ)

சு. ஆதலா லஞ்சி னேனென் றருளலை யாசை தானச்
சீதைபால் விடுதி யாயி [1]னனையவர் சீற்றந் [2]தீர்வர்
போதலும் புரிவர் செய்த தீமையும் பொறுப்ப ரென்மேற்
காதலா லுரைத்தே னென்றா னுலகெலாங் கலக்கி வென்றான்.

(இ - ள்.) இவ்வாறுநடந்ததனால் (நான்) அஞ்சினேன் என்று நினையாதே: (நீ) அந்தச்சீதையினிடத்து ஆசையை விடுவாயாயின், அந்த இராமலட்சுமணர் சினம் நீங்கிவிடுவர்; (போர்செய்து நம்மைக் கொல்லாமல்)மீண்டுபோதலையுஞ் செய்வார்கள்:(நீ)செய்த தீமையையும் பொறுப்பார்கள்: உன்மீது அன்பினாற் கூறினேன் என்று கூறிமுடித்தான்: (யாவனெனில்),—உலகத்தை யெல்லாம் கலங்கவடித்து வென்றவனான இந்திரசித்து; (எ - று.)

உலகத்தையெல்லாம் கலங்கவடித்தவன் இப்போது தான் கலக்கமடைந்து இவ்வாறுகூறலானு னென்க. தான் கூறுவது அச்சத்தினாலன்று: தந்தைமீதுள்ள அன்பினாலென்று இந்திரசித்து தான்கூறுவதற்குக் காரணத்தைவிளக்குகின்றான். பெரியோரிடத்துப் பேசுமிடத்து 'அருள்'என்ற சொல்லை உடன்சேர்த்துச்சொல்லும் மரபுபற்றி, நினையாதேயென்ற பொருளில் 'அருளலை' என்றான். பி-ம்:---[1]அன்னவர், [2]இர்ந்து. (௩0௭௧)

எ.---இனி, ஆறுகவிகள் - ஒருதொடர்: இராவணன் இந்திரசித்தை வெறுத்துக்கூறுதலைத் தெரிவிக்கும்.

இயம்பலு மிலங்கை வேந்த னெயிற்றிள [1]நிலவு தோன்றப்
புயங்களுங் குலுங்க [2]நக்குப் [3]போர்க்கினி [4]யொழிதி போலாம்
மயங்கினை [5]மனிதன் றன்னை யஞ்சலை வருந்த லைய
சயங்கொடு தருவ னின்றே மனிதரைத் தனுவொன் றாலே.

(இ - ள்.) (இவ்வாறு இந்திரசித்து) கூறியவுடனே, இலங்காதிபதியாகிய இராவணன் கோரப்பற்களினின்று இளநிலா வெளிப்படவும் தோள்கள் குலுங்கவுஞ் சிரித்து, 'இனிப் போர்க்குச்செல்லாமல் நீங்குவாய்போலும்: மனிதனைப்பார்த்து மயக்கமடைந்துவிட்டாய்: அஞ்சாதே: வருந்தாதே:ஐயனே! (என்னுடைய)ஒற்றைவில்லைக்கொண்டு இன்றே மனிதரிடத்து வெற்றியைக்கொண்டு தருவேன்: (எ-று.)---பி-ம்:- [1]நிலவுமெய்தப். [2]நக்கான். [3]போக்கு. [4]ஒழிநீபோத, ஒழிதிபோல, ஒழிதல்போலாம்.[5]மனமுமஞ்சி வருந்தினை, மனிதன்றன்னையஞ்சினை.()

அ. முன்னையோ ரிறந்தோ ரெல்லா மிப்பகை முடிப்ப ரென்றும், [1]பின்னையோர் நின்றா ரெல்லாம் [2]வென்றவர்ப் பெயர்வ ரென்றும், [3]உன்னைநீ யவரை வென்று தருதியென் றுணர்ந்து மன்றால், என்னையே நோக்கி [4]யானிந் நெடும்பகை [5]தேடிக் கொண்டேன்.

(இ - ள்.) நான் (சீதையைக்கவர்ந்து பகைதேடிக்கொண்டது),—முன்னரேபோர்க்குச் சென்றவராய் இறந்தவரெல்லாம் (எனது) இப்பகையை யொழிப்பாரென்றாவது இன்னும் (போர்க்குச் செல்லாது) பிற்பட்டவராய் நிற்பவரெல்லாம் வென்றுமீள்வரென்றாவது, உன்னைக்குறித்து 'நீ அவரை வென்றுதருவாய்' என்றாவது கருதி அன்று: என்வலிமையையே எண்ணி யான் இந்த நெடியபகையைத் தேடிக்கொண்டேன்; (எ-று.)—என்றும் உணர்ந்தன்று என்க.பி-ம்:—[1]பின்னையே. [2]வென்றவர். [3]இன்னநீ...இன்றால். [4]அன்றே. [5]கொண்டதென்றான். (௩0அக)

௯. பேதைமை யுரைத்தாய் [1]பிள்ளா யுலகெலாம் பெயரப் பேராக்
காதையென் புகழி னோடு நிலைபெற வமரர் காண
மீதெழு மொக்கு ளன்ன யாக்கையை விடுவ தல்லாற்
சீதையை விடுவ துண்டோ விருபது [2]தோளுண்டாக.

(இ - ள்.) பிள்ளாய்! அறிவில்லாத ஆலோசனையைச் சொன்னாய்: (ஒருகால் எனக்கு வெற்றியேயுண்டாகாதென்றாலும்),எனக்கு இருபது

தோள் உண்டாயிருந்தும், உலகமெல்லாம் பெயர்கையிலும் அழியாத என் புகழினோடுகூடியபாடல் நிலைபெறுமாறு அமரர்கண்டுகொண்டிருக்க(நீரின்)மீதுதோன்றுகிற குமிழியையொத்த(என்)யாக்கையை விடுவதல்லாமற் சீதையை விடுவது உண்டோ? (எ-று)

இரண்டுதோள்களையே பெற்றமனிதர்க்கு அஞ்சித் தேவர்காணச் சீதையைத் திருப்பிக்கொடுத்து நிலைத்த பழியைப் பெறுவதைக்காட்டிலும், தேவர்காண. நிலையாத இத்தேகத்தைப் போரில் விட்டிட்டுநிலைத்துள்ள புகழைப்பெற்றுப்போவதே இருபதுதோள் படைத்த யான்செய்யத்தக்க தென்கின்றான், இராவணன். இவ்விராவணன் கூறியபடியே இவன் பெயர்கதையாகி வழங்குதல் காண்க. பி - ம்:—[1]மைந்தா. [2]திரடோளுண்டால், திண்டோளுண்டாய். (ஙοஅஉ)

கο. வென்றில னென்ற போதும் வேதமுள் ளளவு மியானும்
[1]நின்றுள னன்றோ மற்ற விராமன்பேர் நிற்கு மாகிற்
பொன்றுத லொரு[2]கா லத்துத் தவிருமோ பொதுமைத் தன்றோ
இன்றுளார் நாளை மாள்வார் புகழுக்கு மிறுதி யுண்டோ.

(இ - ள்.) (நான்) வெற்றிப்பெற்றிலே னென்ற காலத்தும், அவ்விராமனுடைய(வீரப்)பேர் நிலைத்துநிற்குமாயின், வேதமுள்ள அளவும் யானும் (பெயரினால்) நிலைபெற்றுள்ளே னவனன்றோ? (எந்தக்காலத்திலாவது) ஒருகாலத்தில் இறப்பு என்பது நீங்காதுவருவதேயன்றோ? (இறப்பென்பது பிறந்த பிராணிகட்கெல்லாம்)பொதுமையானதன்றோ? இன்றுஉள்ளவர் நாளைக்கு [வருங்காலத்தில்] இறந்தே தீர்வர்: புகழுக்கும் அழிவுண்டாகுமோ? (எ - று.)—கீழ்ச்செய்யுளிற்கூறிய கருத்தையே இங்கு விவரித்துக் கூறுகின்றனன் இராவணனென்க.—பி - ம்:—[1]நின்றிவன். [2]காலத்தும். (ஙοஅங)

கக. விட்டனன் [1]சீதை தன்னை [2]யென்றலும் விண்ணோர் நண்ணிக்
கட்டுவ தல்லா [3]லென்னை [4]யானெனக் கருது வாரோ
பட்டன னென்ற போது மெளிமையிற் படுகி லேன்யான்
[5]எட்டினோ டிரண்டு மான திசைகளை யெறிந்து [6]வென்றேன்.

(இ-ள்.) (நான்) சீதையை(இராமனிடம்) விட்டேனென்றவுடனே, (பின்பு) தேவர்கள் என்னைக் கிட்டிக் கட்டிக்கொண்டுபோவதல்லாமல் நான் என்று எண்ணி அஞ்சிநிற்பாரோ? பத்துத்திசைகளை (ப் படைக்கலங்களை) எறிந்துவென்றவனாகியநான் இறந்தேனேயென்றாலும் எளிமையோடு இறக்கமாட்டேன்; (எ-று.)—பி-ம்:—[1]சனகிதன்னை. [2]என்னலும். [3]பின்னைப். [4]பொருள். [5]எட்டுமோரிரண்டுமான. [6]கொண்டேன். ()

கஉ. சொல்லியென் பலவு நீநின் னிருக்கையைத் தொடர்ந்து தோளிற், புல்லிய பகழி வாங்கிப் போர்த்தொழிற் சிரமம்போக்கி, எல்லியுங் கழித்தி யென்னு வெழுந்தன [1]னெழுந்து பேழ்வாய், வல்லிய [2]முனிந்தா லன்னான் வருகதேர் [3]விரைவி னென்றான்.

(இ - ள்.) பலசொல்லி யென்? நீ உன்னுடைய இருப்பிடத்தைச் சார்ந்து, தோளிலேபடிந்த அம்புகளைப் பேர்த்தெடுத்து,போர்த்தொழி

லால்நேர்ந்த இளைப்பைநீக்கி,இரவையுங்கழிப்பாய் என்றுசொல்லி எழுந்தனன்: எழுந்து, பிளந்தவாயையுடைய புலி கோபித்தால் (அதை) ஒத்தவனான இராவணன், தேர் விரைவில்வரட்டும்' என்றுசொன்னான்; (எ - று.)—பி - ம்:—[1]எயிற்றுப். [2]முனிந்தவன்றான், முனிந்ததென்ன. [3]தருக, வருக. (௩௦௮௫)

௧௩.—இந்திரசித்து இராவணனைத் தடுத்துத் தானேபோருமாறுசெல்ல இரதமேறுதல்.

[1]எழுந்தவன் றன்னை நோக்கி யிணையடி யிறைஞ்சி யெந்தாய்
ஒழிந்தருள் சீற்றஞ் சொன்ன வுறுதியைப் பொறுத்தி [2]யானே
கழிந்தன னென்ற [3]பின்னர் [4]நல்லவா காண்டி யென்னா
[5]மொழிந்தவன் றெய்வத் தேர்மே லேறினன் முடிய வூற்றான்.

(இ - ள்.) எழுந்த இராவணனைப் பார்த்து, இணையடிகளிலே வணங்கி,'எந்தாய்!சீற்றம் ஒழிந்தருள்: (உனக்கு நான்)சொன்ன உறுதிமொழியைப்பற்றி, (என்மீது சினங்கொள்ளாது) பொறுத்தருள்வாய்: யானே இறந்தே னென்ற பின்பு (நான் சொல்லியவற்றை) நல்லனவாகக் காண்பாய்'என்று கூறியவனாய், இறத்தற்கு நிச்சயங்கொண்டவனான இந்திரசித்து தெய்வத்தேரின்மீது ஏறினான்; (எ-று.)—பி-ம்:—[1]எழுந்தனன். [2]யான்போய்க். [3]போது, பின்னும். [4]நல்லவாக், நாவலா, [5]மொழிந்துதன். (௩௦௮௬)

௧௪.—தானம்முதலியன செய்து இந்திரசித்து இராவணனை நோக்கிக் கண்ணீர்பெருக்கிச் செல்லுதல்.

படைக்கல விஞ்சை [1]மற்றும் படைத்தன பலவுந் தன்பால்,
அடைக்கல [2]மென்ன வீச னளித்தன [3]தேர்மேலாக்கிக்,கொடைத்
தொழில் வேட்டோர்க் கெல்லாங் [4]கொடுத்தனன் கொடியோன்
றன்னைக், கடைக்கணா னோக்கி நோக்கி [5]யிருகணீர் கலுழப்
போனான்.

(இ-ள்.) (தான் தேறிய) படைக்கலவிச்சையிலே படைத்துள பலவகைப்படைக்கலங்களையும், தன்னிடத்து அடைக்கலம்போலச் சிவபிரானளித்துள்ள படைக்கலங்களையும், மற்றுமுள்ளனவற்றையும் தேர்மேலே வைத்து, கொடைத்தொழிலிலே விரும்பினவர்க்கெல்லாம் (விரும்பியன எல்லாம்) கொடுத்து, (பின்பு) கொடியோனான இராவணனைக் கடைக்கண்ணினால் பார்த்துப்பார்த்து இருகண்களினின்றும் கண்ணீர்பெருகப் புறப்பட்டுச்சென்றான், (அந்தஇந்திரசித்து); (எ - று.)

இனி, இராவணனைப் பார்க்கப்போகிறதில்லை யென்ற கருத்தினாலும், இவனாலல்லவா இவ்வளவு நேர்வதென்ற கருத்தினாலும், கொடியோனைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் பெருக்கினன், இந்திரசித்து. பி-ம்:—[1]மற்று. [2]ஆகத்தேவர். [3]எல்லாம்வாங்கி. [4]கொடுத்தபின். [5]பிறிவினிற்கழிந்து, பிரிவினாற்கலுழ்ந்து. (௩௦௮௭)

கரு.—இலங்கைவீரர் மனமழிந்து தொடர, இந்திரசித்து அவர்களை இராவணனைக் காக்குமாறு கூறித் தேற்றிச்செல்லுதல்.

இலங்கையி னிருத ரெல்லா [1]மழிந்தனர் விரைவி னெய்தி
விலங்கலந் [2]தோள நின்னைப் பிரிகலம் விளிது [3]மென்ன
வலங்கொடு தொடர்ந்தார் தம்மை மன்னனைக் காமின் யாதுங்
கலங்கலி [4]ரின்றே சென்று மனிதரைக் [5]கடப்ப லென்றான்.

(இ - ள்.) இலங்கையிலுள்ள அரக்கரெல்லாம், மனமழிந்தவராய் விரைவிற்கிட்டி, 'மலைபோன்ற அழகிய தோளையுடையவனே! உன்னைப் பிரியோம்:இறப்போம்' என்று சொல்லிப் பிரதட்சிணஞ்செய்து தொடர்ந்தவரான அவ்வரக்கரைநோக்கி, 'மன்னவனைக் காத்திடும்: சிறிதும் கலங்காதிர்: இன்றேபோய் மனிதரை வெல்வேன்'என்று கூறினான். (அவ்விந்திரசித்து): (எ - று.)—வலங்கொடுதொடர்ந்தார் - தாமே வலியத்தொடர்ந்தாரென்றும், தம்சேனைவலிமுதலியனகொண்டு பொரத் தொடர்ந்தாரென்றும் உரைக்கலாம். பி-ம்:—[1]எழுந்தனர். [2]தோளா யுன்னை. [3]என்ன, என்று. [4]இனிமேற். [5]கடப்பேன். (௩௦அஅ)

கசு.—அரக்கமகளிர் அஞ்சி நோக்க, இந்திரசித்து போர்க்களஞ் செல்லுதல்.

வணங்குவார் [1]வாழ்த்து வார்தன் வடிவினை நோக்கித் தம்வாய்
உணங்குவா ருயிர்ப்பா ருள்ள முருகுவார் [2]வெருவ லுற்ற
கணங்குழை மகளி ரீண்டி யிரைத்தவர் கடைக்க ணென்னும்
[3]அணங்குடை நெடுவேல் பாயு மமர்கடந் தரிதிற் போனான்.

(இ - ள்.) அஞ்சுதல் பொருந்திய திரண்ட குழையென்னுங் காதணியையணிந்த மகளிர் நெருங்கி, வணங்குபவரும் வாழ்த்துபவரும் இந்திரசித்தின் வடிவத்தைப் பார்த்துத் தம்வாய் உலரப்பெறுபவரும் பெருமூச்செறிபவரும் மனமுருகுபவருமாகி(த் துயரத்தினால்) கதறுகின்றவரின் கடைக்கணென்கிற வருத்துந்தன்மையமைந்த நெடியவேற்படை பாயப்பெற்றபோரைக்கடந்து, (இந்திரசித்து போர்க்களம் நோக்கி) அரிதிற் சென்றான்; (எ - று.)

தனக்கு மரணம் நேருமென்று மனத்திற் பட்டுள்ளதனாற் சிரமப்பட்டு, தன்மீது காதலுள்ள மகளிர் அச்சத்தோடு விரும்பி நோக்குகையிற் சென்றானென்பார் 'வெருவலுற்ற மகளிர் கடைக்கணென்னும் வேல்பாயும் அமர்கடந்து அரிதிற்சென்றான்' என்றார்:வேல்பாய்வதனால் அவ்விடமே அமர்க்கள மாயிற்று. இச்செய்யுளில் 'உருகுவார்' என்பதுவரையிலுள்ள வினைகள் கீழ்ச்செய்யுளில் 'மனிதரைக்கடப்பல்' என்று அபயமளிக்கப்பெற்ற அரக்கரின் செயலாகக் கொண்டாருமுளர். பி-ம்:—[1]வாழ்த்துவார்கள். [2]வெருவலுற்றுக், ஆகிமேயும். [3]அணங்குறை, அணங்குளை. (௩௦அக)

கஎ.—இலட்சுமணன் இந்திரசித்தின் தேரொலியைக் கேட்டல்.

ஏயின [1]னின்ன னாக விலக்குவ னெடுத்த வில்லான்
சேயிரு விசும்பை நோக்கி வீடண னீயோ னப்பாற்

போயின னாதல் [2]வேண்டும் புரிந்தில னொன்று மென்பான்
ஆயிரம் புரவி பூண்ட தேரின்பே ரரவங் [3]கேட்டான்.

(இ - ள்.) (விசும்பின்வழியாகச்)சென்ற இந்திரசித்து இவ்வாறு மீண்டு போர்க்களம்நோக்கிவருபவனாகவிருக்க,—இலக்குவன்,—கையி லெடுத்தவில்லையுடையவனாய், உயர்ந்துப்பரந்த ஆகாயத்தைப்பார்த்து, (இந்திரசித்தின் செயலொன்றையும் காணாமையால் விபீஷணனைநோக்கி), 'விபீஷணா! கொடுங்குணமுடையவனான இந்திரசித்து (வானத்தை விட்டு) அப்புறம்போயினவனாகவேண்டும்: (ஏனெனில்), யாதொருசெயலையும்செய்திலன்' என்று சொல்பவனாக, (அப்போது), ஆயிரங்குதிரைகள் பூட்டிய தேரின் மிக்க ஒலியைக் கேட்டான்; (எ - று.)

நிகும்பலையாகப்படலத்தின்இறுதிச்செய்யுளில் "விசும்பிடைக்கரந்தானென்னும் வார்த்தையை நிறுத்திப்போனான்"என்று கூறிய கவி, இங்கு 'ஏயினன்'என்று அதனோடு தொடர்புபடுத்திக் கூறுகின்றார். அங்ஙனம் இந்திரசித்து விசும்பில்மறைந்து இராவணனிடம்வந்து அவனுக்குப் புத்திமதிகூறியும் அவ்விராவணன் இசையாது சினங்கொள்ளவே, அவ்விந்திரசித்து அவனைத்தெளிவித்துப் போர்க்கோலங்கொண்டு போர்க்களம்நோக்கி ஆயிரம்புரவிபூண்டதேரின்மீது வர, அவ்வரவம், வானத்தில் இந்திரசித்து இல்லாமையைக் கண்டு விபீஷணனோடு அது குறித்துப்பேசிக்கொண்டிருந்தஇலட்சுமணனுடையசெவியிலேபட்டதென்க. ஒன்றும் புரிந்தில்லாமையாகிய ஏதுவை முன்னிட்டு, அப்பாற் போயினனாதல்வேண்டுமென்று இலட்சுமணன் அநுமானித்ததனால்,இது-அநுமானலங்காரம்.பி-ம்:—[1]இன்னது.[2]ஒன்றும்புரிந்திலனாகும்.[3]கொண்டான்.

வேறு.

௧அ.—இந்திரசித்தின் இரதம் வருவதை, இதுவும் அடுத்தகவியும் தெரிவிக்கும்.

குன்றிடை நெரிதர வடவரையின் குவடுருள் குவதென
[1]முடுகுதொறும்,பொன்றிணி கொடியின திடி[2]யுருமி [3]னதிர்குரன்
[4]முரல்வது புனைமணியின், [5]மின்றிரள் சுடரது கடல்பருகும் வட
வனல் வெளியுற வருவதெனச், சென்றது திசைதிசை யுலகிரியத்
திரிபுவ னமுமுறு [6]தனியிரதம்.

(இ - ள்.) பொன்தண்டத்திற் றிண்ணியதாகப்பொருந்திய கொடியையுடையதும், இடியேற்றின்குரல்போல அதிர்கின்ற ஓசையையுண்டாக்குவதும், அலங்காரமாகப்பதித்த இரத்தினங்களால் மின்னலின் திரண்டசுடரையுடையதுமாகித், திரிபுவனத்திலும் சென்றதான ஒப்பற்ற அந்தஇந்திரசித்தின் இரதம்,—விரைந்துவருந்தோறும் மேருமலையின்உச்சி உருள்வதென்னுமாறு திரிகூடாசலத்தினிடம் நெரிந்திட,—கடலைப்பருகுகின்ற வடவைக்கனல்(அக்கடலினின்று) வெளியேபொருந்தவருவதென்று கருதுமாறு திசைதோறும் உலகு நிலைகெட்டோடச் சென்றது; (எ-று.)—குற்றெழுத்துப் பயின்றுள்ளதனால், இச்செய்யுள் -

துறுஞ்சீர்வண்ணம்: மேற்கவிகளிலும் இங்ஙனமே காண்க. பி-ம்:—[1]முகடுதொறும். [2]உருமென். [3]பொதிர். [4]முதிர்வது. [5]மின்றிணிவிரிசுடர் கடல்பருகும், மின்றிணிவிரிகடல்பருகுறுமவ். [6]திறல். (௩௦௧௧)

௧௯. கடன்மறு கிட[1]வுலகுலையநெடுங் [2]கரியிரி தரவெதிர் கவிகுலமும், [3]குடர்மறு கிட[4]மலை குலைய[5]நிலங் குழியொடு கிழி பட [6]வழிபடரும், இட[7]மறு கியபொடி [8]முடுகிடவு மிருளுள தெனவெழு மிகலரவின், படமறு கிடவெதிர் [9]விரவியதவ் விருள் பக லுறவரு பகையிரதம்.

(இ - ள்.) அந்தஇரவு பகல்போலாகுமாறு (பேரொளியுடன்) வருகின்ற பகைவனுடையஇரதம்,—கடல் கலங்கவும், உலகு வருந்தவும், நெடிய(திக்) கசங்கள் நிலைகெட்டோடவும், எதிர்நிற்கின்ற வானரர்கூட்டமும் குடல்மறுகிடவும், அஷ்டகுலாசலங்களும் நடுங்கவும், நிலம் குழிவுபடுதலுடனே கீண்டிடவும், செல்லுகின்றவழியாகியஇடம் தூள்தூளான புழுதிவிரைந்து வானத்துச்செல்லவும், இருள் உள்ளதென்னுமாறு (விஷத்தைக் கக்கிக்கொண்டு) எழுகின்ற வலிய ஆதிசேஷனது படம் மறுகும்படி (இலட்சுமணனுக்கு) எதிராகப்பொருந்தியது; (எ - று.)

புழுதிபோய்விடவே பூமியின்கீழிருந்து தாங்குகின்ற ஆதிசேஷனுடையபடம்மறுகுவதாயிற்றென்று உயர்வுநவிற்சியணிபடக்கூறியவாறு. பி-ம்:—[1]உலகிடைய, நிலைகுலைய. [2]நெடுங்கதிரிரிதர. [3]குடல். [4]நிலைகுலைய மலையுலைய, உலகுலைய. [5]நெடுங். [6]நிலைகுலைய உடல்குலைய. [7]மறுகிய படி. [8]பரவியவண்பகலிருள்வருவன. [9]விரவ விருள் பகலுறவருவன. ()

## உ௦.—இந்திரசித்துக்கும் இலட்சுமணனுக்கும் போர்நிகழ்தல்.

ஆர்த்தது நிருதர்த மனிக [1]முட னமரரும் வெருவினர் கவி குலமும், வேர்த்தது வெருவலொ [2]டலம்வரலால் விடுகணை [3]சிதறின னடுதொழிலோன், தீர்த்தனு மவனெதிர் முடுகிநெடுந் திசைசெவி டெறிதர விசைகெழுதிண், போர்த்தொழில் புரிதலு [4]முலகுகடும் புகையொடு சிகையனல் பொதுளியதால்.

(இ - ள்.) அரக்கர்களின்சேனை, (ஒருசேர) ஆரவாரித்தது; (அதுகேட்டு) உடனே அமரர்களும் அஞ்சினர்; குரங்குகளின்கூட்டமும், அச்சத்துடனே மனச்சுழற்சிதோன்றியதால் (உடல்) வேர்க்கலாயிற்று; (பின்பு), கொல்லுந்தொழிலையுடையவனான இந்திரசித்து (வில்)வெளிவிடுகின்ற அம்பைச் சிதறினன்; பரிசுத்தமூர்த்தியாகிய இலட்சுமணனும், அந்த இந்திரசித்துக்கு எதிரே விரைந்து நெடியதிசைசெவிடுபடும்படி (நாணியை) எறிய(ப் பிறகு) விரைவுபொருந்திய வலிய போர்த்தொழிலைப்புரிதலும், உலகிற் கொடியபுகையுடனே சுவாலையோடுகூடிய நெருப்புநெருங்கிற்று; (எ - று.)

நிருதசேனை ஆரவாரிக்கவும் அதுகேட்டு அமர ரஞ்சினராக, 'இந்திரசித்து போர்க்கு வந்திட்டானே! என்னசெய்திடுவானோ?' என்று

கருதுவதனால், மனச்சுழற்சியும் அச்சமும் மனத்துத்தோன்ற, வானரங்கள் உடல்வேர்த்தனவென்க. பி-ம்:—[1]உடன்றமரரும். [2]அலம்வரலும். [3]சிந்தினன். [4]உலகநெடும். (௩௦௧௩)

௨௧.—விபீஷணன் 'இப்போது இந்திரசித்தை விட்டிட்டால் பின் வெல்வது அரிது' என, இலட்சுமணன் கடுமையாகப் பாணப்பிரயோகஞ்செய்தல்.

வீடண னமலனை விறல்கெழுபோர் விடலையை யினியிடை விடலுளதேற், சூடலை துறுமலர் வாகையெனத் தொழுதன [1]னவ ளவி லழகனுமக், கோடணை வரிசிலை யுலகுலையக் குலவரை பிதிர்பட [2]நிலவரையிற், சேடனும் வெருவுற வுருமுறழ்திண் [3]டெறுகணை முறைமுறை சிதறினனால்.

(இ - ள்.) குற்றமற்றவனும் வலிமைபொருந்திய போரில்வல்ல வீரனுமான இலட்சுமணனை நோக்கி, விபீஷணன், 'இனி இடை தாமதித்த லேற்படுமாயின், நெருங்கிய வாகைமலர்மாலையைச்சூடமாட்டாய் [வெற்றிபெறமாட்டாய்]' என்று தொழுதுகூறினன்; அவ்வளவிலே அழகியவனான இலட்சுமணனும்,—அந்தப் பேரொலிசெய்தலுள்ள கட்டமைந்த வில்லை, உலகுவருந்தவும் குலமலைகளும் பொடிபடவும் பூமியின்கீழெல்லையிலுள்ள ஆதிசேஷனும் அச்சமடையவும் இடியையொத்த வலிய அழிக்கவல்ல அம்புகளை முறைமுறையே தூவினன்; (எ - று.)—வாகைமலர்மாலை, பகைவென்றோர் சூடுவதற்கு உரியது. நிகும்பலையென்னும் ஆலயமரத்தைச் சேர்ந்திடின் இந்திரசித்தைப் பின்வெல்வது அரிது என வீடணனுரைத்ததாக முதனூலிற் கூறியது, இங்குக் காணத்தக்கது. கோடணை-கோஷணை என்ற வடசெல்திரிந்துவந்தது. பி - ம்:—[1]அவ்வளவு, உரைசெய. [2]நிலவரையுஞ். [3]சிதறிடலும். (௩௦௧௪)

௨௨.—இனி ஐந்துகவிகள் - இந்திரசித்துக்கும் இலட்சுமணனுக்குங் கைகலந்த போர்நிகழ்தலைக் கூறும்.

[1]ஆயிர வளவின [2]வயின்முகவா யடுகணை யவன்விடவிவன் [3]விடவத், தீயினு மெரிவன வுயிர்பருகச் சிதறின [4]கவிகளொ டினநிருதர், போயின [5]போயின திசைநிறையப் புரள்பவர் முடிவிலர் பொருதிறலோர், [6]ஏயின ரொருவரை யொருவர்குறித் தெரிகணை [7]யிருமழை [8]பொழிவனபோல்.

(இ - ள்.) ஆயிரக்கணக்கான கூரியமுனைபொருந்திய கொல்லவல்ல அம்புகளை அந்த இலட்சுமணன் பிரயோகிக்க, இந்த இந்திரசித்து(ம் எதிரே)பிரயோகிக்கவே, அந்தத்தீயைக்காட்டிலும் (கடுமையாக) எரிவனவான (இருவரின்) அம்புகளும் உயிர்பருகுவதனால் சிதறின வானரர்களுடனே கூட்டமாயுள்ள அரக்கர்களும், ஓடிச் சென்ற திக்குக்களிலெல்லாம் நிறையப்புரண்டு வீழ்பவர் அளவில்லாதவராயினர்: போர்செய்கின்ற வல்லமையுடைய அவ்விருவரும்,—எரிகின்ற கணைகளை, பெரிய இரண்டு மேகங்கள் சொரிவனபோல ஒருவரை யொருவர்

இலக்காகவைத்துச் சிந்தினார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]ஆயினவளவை யின் [2]அனல். [3]விடலும். [4]கவிகளோடினர். [5]திசைதிசையனல். [6]ஏயின. [7]சொரிவன. [8]இருமழைபோல். (௩௦௩௫)

உ௩. [1]அற்றன வனல்விழி நிருதன்வழங் கடுகணை யிடை யிடை. [2]படலரியின், கொற்றவன் விடுகணை முடுகியவ னுடல் [3]பொதி குருதிகள் பருகினகொண்டு, உற்றன வொளிகிளர் கவச நுழைந் துறுகில தெறுகில வனுமனுடற், புற்றிடை யரவென நுழையநெடும் பொருசர [4]மவனவை யுணர்கிலனால்.

(இ - ள்.) நெருப்புப் புறப்படுகின்ற கண்களையுடைய இந்திரசித்து விடுத்த கொல்லுங் கணைகள் இடையிடையே யற்றனவாக, வலிய சிங் கம்போன்ற வெற்றியையுடையவனான இலக்குவன் விட்ட கணைகள் விரைந்து அந்த இந்திரசித்தினுடைய உடலில் நிறைந்த இரத்தங்களைப் பருகினவாய்க்கொண்டு பொருந்தின; (பின்னர் இந்திரசித்து விடுத்த) நெடிய பொருகின்ற சரங்கள், ஒளிவிளங்குகின்ற(இலட்சுமணனுடைய) கவசத்திலே நுழைந்து பொருந்தில: ஊறுபடுத்தவுமில்லை; (ஆயினும்), அநுமனுடலிலே புற்றிடை அரவு (நுழைவன)போல நுழைய, அவற்றை அவ்வநுமான் உணரவில்லை; (எ - று.)

அவனவையுணர்கிலன் - தன்னுடலிலே நுழைந்த சரங்களை அநு மான் இலட்சியஞ் செய்யவில்லையென்பது கருத்து. பி-ம்:—[1]அற்றவன். [2]அரியவிளங், அரியினிளங். [3]பொதிர், பொழி. [4]அவன்விட. (௩௦௩௬)

உ௪. ஆயிடை யிளையவன் [1]விடமனையா னவனிடு கவசமு மழிவுபடத், தாயின னயின்முக விசிகநெடுந் [2]துளைபட [3]விழி கனல்சொரிய [4]முனிந்து, [5]ஏயின நிருதனெரிகணைதா னிடனில படுவன விடையிடைவந்து, ஓய்வுறு வனவது தெரிவுறலா லார றினரிமையவ ருவகையினால்.

(இ - ள்.) அப்போது [அநுமானுடலில் நுழையும்படி இந்திரசித்து சரங்களைத் தூவினபோது], இளையபெருமாள் விஷத்தையொத்தவனாய் [பெருஞ்சினங்கொண்டு], அந்த இந்திரசித்து தரித்திருந்த கவசமும் அழிவுபடக் கூரியமுகத்தையுடைய அம்புகளைத் தூவினான்; (அந்த அம்பு களால் தன்னுடல்) பெருந்தொளைபட்டதனால், விழியினின்று அனல் புறப்படச் சினங்கொண்டு ஏவின இந்திரசித்தினுடைய எரிகின்ற கணை கள், (தான்குறிக்காத) இடத்திலே படுவனவும் இடை யிடையே வந்து தளர்வுறுவனவு மாயின; அதனைக்காணுதலால், இமையவர் உவகை யினால் ஆரவாரித்தனர்; (எ - று.)—பி - ம்:—[1]விடநிகைவான். [2]திரள். [3]வழிபுனல், விழியனல். [4]முகந்து. [5]எயினன். (௩௦௩௭)

உ௫. வில்லினின் வலி [1]தர வரிதெனலால் வெயிலினு [2]மன லுமி ழயில்விரைவிற், செல்லென [3]மிடல்கொடு கடவினன்மற் றது திசை முகன்மக னுதவியதால், [4]எல்லினும் வெளிபட [5]வெதிர் வதுகண் டிளையவ னெழுவகை [6]முனிவர்கடஞ், சொல்லினும் வலியதொர் சுடுகணையா [7]னடுவிரு துணிபட வுரறினனால்.

(இ - ள்.) (தன்) வில்லினுடைய வலியைக் காட்டுதல் முடியா தென்று ஏற்பட்டதனால், வெயிலைக்காட்டிலும் (வெப்பமான) அனலை யுமிழ்கின்ற அயிற்படையை 'விரைவிலே செல்வாய்' என்று வலிமை கொண்டு செலுத்தினான் (இந்திரசித்து); அதுபிரமதேவனுடையமகனான புலஸ்திய முனிவன் உதவியதால் பகற்பொழுதினும் விளக்கமுண்டாக எதிர்ந்து வருவதுகண்டு, இளையபெருமாள், எழுவகை முனிவர்களின் சாபச் சொல்லினும் வலியதான ஒரு சுடுகணை (யெய்ய அக்கணை)யினால் (அவ்வயில்) நடுவிலே இரண்டுதுண்டுபட முழங்கினான்; (எ - று.)—மற்று-வினைமாற்று. திசைமுகன்மகன் - உருத்திரமூர்த்தியென வுரைப் பினுமாம். பி - ம்.—[1]தரலருமையினால். [2]மினிர்வதொரயில். [3]முடுகினை ணையது முற்றிசை முகன்மகன்முதல். [4]எல்லியை. [5]வருவதுகண்டு. [6]முனிவரர்தம், முனிவர்தரும். [7]உடலிருதுணிபட வுதவினனால். ()

உகூ. ஆணியி [1]னிலையென விசிக[2]நுழைந் தாயிர முடல்புக [3]வழிபடுசெஞ், சோணித நிலமுற வுலறிடவுந் தொடுகணை [4]விடு வன மிடல்கெழுதிண், பாணிகள் கடுகின முடுகிடலும் பகலவன் மருமக [5]னடுகணையின், [6]தூணியை யுருமுறழ் பகழிகளாற் றுணி பட முறைமுறை சிதறினனால்.

(இ - ள்.) ஆணிவந்துநிற்பதுபோல (இளையவனேவிய) அம்புகள் ஆயிரமுகமாக நுழைந்து உடலிலே புக்கனவாக, (அங்கிருந்து) பெருக் கெடுத்த செந்நிறமுள்ள இரத்தம் நிலத்திலே பொருந்த (உடல்) வற்ற வும், தொடுத்துவிடும் அம்புகளை விடுவனவாக வலிமைவிளங்குகின்ற (இந்திரசித்தின்) வலியகைகள்மிகவும் விரைவுகொண்டு சென்றவளவில், சூரியனுடைய குலத்தோன்றலாகிய இலட்சுமணன், அவ்விந்திரசித்தின் அடுகணை நிறைந்த தூணீரத்தை இடியையொத்த அம்புகளினால் துணி படும்படி முறைமுறையே தூவினான்; (எ - று.)—பி-ம்:—[1]நிலயவன். [2]நுழைத்து. [3]வடுபடு, அழிவுபடும். [4]தொடுவன, தொகுவன. [5]அடுகணை வன், எரிகணையின், எரிகணைவன். [6]தூணியின். (ரு0கக)

உஎ.—அப்போரிலே இந்திரசித்தின் சாரதியை இலக்குமணன் துணித்து வீழ்த்துதல்.

தேருள தெனினிவன் வலி[1]தொலையா னெனு[2]மது [3]தெரிவுற வுணருறுவான், [4]போருறு புரவிகள் படுகில[5]வாற் [6]புனைபிணி[7] துணி கில பொருகணையாற், சிரிது [8]பெரிதித னிலைமையெனத் தெரிபவ னெரு[9]சுடு தெறுகணையாற், சாரதி மலைபுரை தலையைநெடுந் தரையிடை யிடுதலு [10]நிலைதிரிய.

இதுவும் அடுத்த கவியும்-குளகம்.

(இ - ள்.) 'தேர் உள்ளதாயின், இவன் வலிதொலையமாட்டான் என்கிற அதனை (மனத்திற்பட) நன்கு உணர்பவனான இலட்சுமணன் பொருகின்ற கணையால் போரில் அருமையாகச் செல்கின்ற குதிரைகள் இறந்துபட்டில: (அன்றியும்), புனைந்துள்ள கட்டும், துணிவுபட்டில: இந்தத்தேரின்நிலை மிகவும் சீர்மையுற்றதாகும்' என்று ஆராய்பவ

ஞய், அழிக்கவல்ல ஒருகூடுகணையினுல் (தேரின்) நிலை மாறுபடும்படி (அத்தேரின்) சாரதியினுடைய மலையையொத்த தலையை(க் கொய்து) நெடியதரையிலே தள்ளுதலும்,—(எ - று.)—'போன்றது' என அடுத்த கவியோடு முடியும். பி-ம்:—[1]தொலையாது. [2]இது. [3]தெரிகுறவுணர்குறுவான். [4]போரரு, போரரறு. [5]திண். [6]தன்பிணி. [7]துறுகிலபொரு, துணிகிலவது. [8]பெரிதிது. [9]தெறுசுடு. [10]முறைதிரிய. (௩௪௦௦)

வேறு.

உஅ.—சாரதியழிந்த தேரின்நிலைமை.

[1]உய்வினை யொருவன் [2]றாண்டா னுலத்தலிற் றவத்தை நண்ணி, ஐவினை நலிய நைவா னறிவிற்கு முவமை யாகி, மெய் வினை யமைந்த காமம் விற்கின்ற [3]விரகிற் றேலாப், பொய்வினை மகளிர் [4]கற்பும் போன்றதப் பொலம்பொற் றிண்டேர்.

(இ - ள்.) உய்வினையுண்டாக்குகின்ற ஒப்பற்ற சாரதி தூண்டமுடியாதவனாய் அழிந்திட்டதனால், அந்தஅழகிய வலிய பொற்றேரானது,—தவத்தைப்பொருந்தி(ரூபம் ஸ்பரிசம் முதலிய) ஐந்துவிஷயங்களைக்கொண்ட ஐம்பொறிகள் நலிவதனால் நைபவனாகிய தவசியின் அறிவிற்கும் உவமையாகப்பொருந்தி, மெய்ம்மைச்செயலமைந்தாற்போன்றுள்ள காமத்தைவிற்கின்ற தந்திரத்திற் பின்வாங்காத பொய்ம்மைச் செயலையுடைய பொதுமகளிரின் கற்பையும் போன்றது; (எ - று.)

சாரதியற்றதனால் ஒருநிலைப்படாத தேருக்கு - தவத்தைத்தொடங்கிச்செய்தும் பஞ்சேந்திரியங்களை யடக்கமாட்டாதவனுடைய மனத்தையும், வேசியரின்கற்பையும் உவமைகூறினார். ஐவினை - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்துவிஷயங்களையுடைய ஐம்பொறிக்குப் பண்புத்தொகையன்மொழி. பி-ம்:—[1]நைவினை. [2]தூண்டாது. [3]விரைவிற்சோரப், விரகிற்றேராம். [4]கற்பே. (௩௪௦௧)

உகூ.—இந்திரசித்து தன்தேரைத் தானே தூண்டித் தன்உடம்பிற் பொத்திய அம்புகளை யெடுத்துத் தூவுதல்.

துள்ளு[1]பாய் புரவித் தேரு முறைமுறை தானே தூண்டி, அள்ளினன் பறிக்குந் தன்பே ராகமே யாவமாக, வள்ளன்மேலனுமன் றன்மேன் மற்றையோர் [2]மற்றிண் டோண்மேல், உள்ளுறப் பகழி [3]தூவி யார்த்தன னெவரு முட்க.

(இ - ள்.) துள்ளுதலுடனே பாய்ந்துசெல்கின்ற குதிரைகள்பூட்டிய தேரையும் முறைமுறையாகத் தானேசெலுத்தி, தன்பெரியமார்பே அம்புப்புட்டிலாகக்கொண்டு, அள்ளிப்பிடுங்கிய (மார்பிற்பொத்திய) அம்புகளை இலட்சுமணன்மீதும் அநுமான்மீதும் மற்றையோரின்வலிய திண்ணிய தோளின்மீதும் எவருமுட்க உள்ளேபாயும்படி தூவியாரவாரித்தான், (இந்திரசித்து); (எ-று.)

அம்பறுத்தூணி துணிபட்டுப்போய்விட்டதனாலும் சாரதி இறந்துபட்டதனாலும், இந்திரசித்து தானே தேரைக் கடவியவண்ணம் தன்

னுடலிற்பொத்தியிருந்த அம்புகளை யெடுத்துத் தூவின னென்றவாறு. பறித்தனன்அள்ளும் பகழி தூவி யார்த்தனனென்க. அம்பறாத்தூணி யிற்போல இவனுடம்பில் அம்புகள் மிக்கிருந்ததனால், 'பேராகமே யாவ மாக' என்றது. பி-ம்:—[1]வான். [2]மாத்திண். [3]தூண்டி. (௩௧0௨)

௩௦.—தேவதைகள் இந்திரசித்தின்திறனைவியந்து மலர்மாரி தூவுதல்.

வீரரென் பார்கட் கெல்லா [1]முன்னிற்கும் வீரர் வீரன், பேர ரென் பார்க [2]ளாகும் பெற்றியிற் பெற்றித் தாமே, சூரரென் றுரைக்கற் பாலார் துஞ்சும்போ துணர்விற் [3]சோரார், தீரரென் றமரர் [4]பேசிச் சிந்தினர் தெய்வப் பொற்பூ.

(இ - ள்.) '(இவன்) வீரரென்று சொல்லப்படுபவர்கட்குள் முதலில் நிற்கும் மகாவீரனுவன்: பேர்பெற்றவரென்னப்படுபவர்களிடத்து உண் டாகும் வீரத்தன்மையைப்போன்ற தன்மையையுடையதோ (இவ னுடையவீரத்தன்மை)? [இவனுடைய வீரத்தன்மை எவ்வீரரிடத்தும் கண்டதில்லை யென்றபடி]; சாவுநேரும்போதும் (தமது)வீரவுணர்ச்சி யிற் சோர்வுபடாமல் தைரியத்தோடு இருப்பவரே, சூரரென்று சொல் லத்தக்கார்' என்று தேவர்கள் சொல்லித் தெய்வத்தன்மையுள்ள பொற் பூவைச் சிதறினர்கள்; (எ - று.)—பி-ம்:—[1]இனிமற்றிவ். [2]ஆகாப், அல் லாற். [3]சோராத்தீரன். [4]செப்பிச். (௩௧0௩)

௩௧.—இளையபெருமாளும் இந்திரசித்தின்ஆற்றலை வியத்தல்.

[1]எய்தவன் பகழி யெல்லாம் [2]பறித்தவ னென்மே லெய்யுங், கைதடு மாறு துள்ள [3]முயிரினங் கலங்கா யாக்கை, மொய்க்கணை கோடி கோடி மொய்க்கவு [4]மிளைப்பொன் றில்லான், ஐயனு மிவனோ டெஞ்சு மாண்டொழி [5]லாற்ற லென்றான்.

(இ - ள்.) '(நான்) எய்த வலிய அம்புகளெல்லாம் (தன்னுடலிற் பொத்த இந்த இந்திரசித்து அவற்றையெல்லாம்) பிடுங்கினவனாய், என் மேலேயே தொடுப்பான்; (யான் எய்த)நெருங்கிய அம்புகள் பலகோடி கள் உடம்பிலேமொய்த்துக்கொண்டிருக்கவும், (இவன்)மனம் நிலைதடு மாறுகின்றதில்லை; இன்னும் உயிரும் கலங்காது; சோர்வும் சிறிதும் இல்லாதவனாகஇருக்கிறான்; (இப்படி மகாவீரனாகஇருத்தலால் இவ னிறந்தால்), ஆண்மைத்தொழிலும் வல்லமையும் இவனுடனே (இவ் வுலகத்தில்) ஒழிந்திடும்' என்று (வியந்து) கூறினான்,இலட்சுமணனும்.

'இவன்இறந்தபின், இவ்வாறான ஆண்டொழிலும்ஆற்றலும் வே றெங்குங் காணமுடியா' என்று அந்த இந்திரசித்தின் திறத்தை இலட்சு மணன் வியந்துகூறினனென்க. இனி, என்னுடைய ஆண்டொழிலும் ஆற்றலும் இவனுடனேபொருதலா லெஞ்சு மென்று இலட்சுமணன் கூறியதாக உரைகொள்வாருமுளர். கைதடுமாறுது-அவ்வாறு பறித்து எய்வதற்குக் கைதடுமாறுவதில்லை: உள்ளமும் உயிருங் கலங்காஎனினு மாம். பி - ம்:—[1]எய்தன. [2]பறித்திவன். [3]உயிர்நின்றுகலங்காது, உயி ரின்றுங்கலங்காது, உயிரினங்கலங்காது. [4]முடிகின்றில்லான், மொய்க் கின்றில்லென்று. [5]ஆற்ற. (௩௧0௪)

௩௨.—விபீஷணனுழ்வான் இந்திரசித்தைப்பற்றிக் கூறுதல்.

தேரினைக் கடாவி [1]வானிற் செல்லினுஞ் செல்லுஞ் செய்யும்
போரினைக் கடந்து [2]மாயம் புணர்க்கினும் புணர்க்கும் [3]போயக்
காரினைக் [4]கடந்து வஞ்சங் கருதினுங் கருதுங் காண்டி
வீரமெய்ப் பகலி னல்லால் விளிகில னிருளின் [5]வெய்யோன்.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (இந்த இந்திரசித்து), தேரினைத் தூண்டி வானத்திற் சென்றாலும் செல்வான்: செய்கின்ற போரை விட்டிட்டு மாயப்போரைச் செய்தாலும் செய்வான்; (இங்குநின்று) வெளிப்பட்டுப்போய் அந்தமேக மண்டலத்தைக் கடந்திருந்து வஞ்சனைசெய்யக் கருதினாலும் கருது வான்: வீரனே! (கருத்துடனே) காண்பாய்: கொடியவனான இந்திர சித்து பகற்பொழுதிலல்லாமல் இருட்பொழுதில் இறந்திடான்: (இது) உண்மை: (எ - று.)—தேரினைக்கடாவி வானிற் செல்லுதல்முதலியன இந்திரசித்தின்செயலாதல், கீழ்க்கண்டனவே. பி - ம்:—[1]விண்மேற். [2]மாயை. [3]அம்பால். [4]கலந்து,கடந்தும். [5]வெல்வான். (௩௧0௫)

௩௩.—இலட்சுமணன் இப்பொழுதே வெல்வேனெனல்.

என்றெடுத் திலங்கை [1]வேந்தற் கிளையவ னியம்ப [2]வின்றே
பொன்றுவ தல்லா லப்பா லினியொரு போக்கு முண்டோ
சென்றுழிச் செல்லு மன்றே [3]தெறுகணை வலியிற் [4]றீர்ந்தான்
வென்றியிப் போதே கோடுங் காணென [5]விளம்பு மெல்லை.

(இ - ள்.) என்று எடுத்துக்கூறிய இலங்காதிபதியான விபீஷண னுக்கு, இளையபெருமாள் இயம்புமாறு, 'இப்போதே (இவன்) இறப்ப தல்லாமல் அப்பால் (போவதற்கு) இனிஒருபோக்கும் உண்டாகுமோ? (எனது)அழிக்குந்தன்மையுள்ள அம்பு (இவன்)சென்ற இடமெல்லாம் செல்லுமல்லவோ? (மேலும் இவன் தன்) வலிமையினின்று ஒழியப் பெற்றான்: இப்பொழுதே வெற்றியைப்பெறுவோம்: காண்'என்று சொல்லுமளவில்,—(எ - று.)—"உதித்தன னருக்கனுப்பால்"என மேற் கவியோடுமுடியும். இயம்பவென்னே-சொல்லுமாறுயாதுஉள்ளதுஎனி னுமாம். பி-ம்:—[1]வேந்துக்கு. [2]இன்னேஒன்னே. [3]தெரி. [4]தீர்ந்தால். [5]விளம்பலுற்றான், விளம்பும் வேலை. (௩௧0௬)

௩௪.—சூரியனுதித்தல்.

செம்புனற் சோரிச் செக்கர் திசையுறச் [1]செறிகை யாலும்
[2]அம்பென வுற்ற கொற்றத் தாயிரங் கதிர்க ளாலும்
வெம்புபொற் றேரிற் றோன்றுஞ் [3]சிறப்பினு மரக்கன்[4]வெய்யோனா
உம்பரிற் [5]சென்றா னொடொத் துதித்தன [6]னருக்க னுப்பால்.

(இ - ள்.) செந்நீராகிய இரத்தத்தாற் செவ்வானம் திசைகளிற் பொருந்த நெருங்கிக்தோன்றுகையாலும், அம்பென்றுசொல்லுமாறு பொருந்திய வெற்றிபொருந்திய ஆயிரங்கிரணங்களைப் பெற்றிருத்தலா லும்,வெம்புகின்றபொற்றேரிலே தோன்றுகின்றசிறப்பினாலும்,அரக்கனா கியவெய்யோன் உம்பரிலே சென்றானை யொத்து மேலிடத்துச்

உதித்தான்; (எ-று.)—எதிர்நிலையணி: சிலேடையையங்கமாகக்கொண்டு வந்தது. பி-ம்:—[1]சேறலாலும். [2]அம்புடற்றுற்ற, அம்பெனத்துற்ற. [3]விசையினும், சிறப்பொடும். [4]மெய்யோடு. [5]செல்கின்றான். [6]அருக்கனும்பால், அருக்கனப்பால். (௩௧0எ)

௩௫.—பொழுது விடிந்தது கண்டு, இந்திரசித்து ஒழிந்திடுவா னென்று வானவர் மகிழ்தல்.

விடிந்தது [1]பொழுதும் வெய்யோன் விளங்கினா னுலக [2]மீதா
விடுஞ்சுடர் விளக்க மென்ன [3]வரக்கரி னிருளும் வீயக்
கொடுஞ்சின மாயச் செய்கை வலியொடுங் [4]குறைந்து குன்ற
முடிந்தன னரக்க னென்று [5]முழங்கின ரும்பர் முற்றும்.

(இ - ள்.) பொழுதும் விடிந்தது: சூரியன் உலகம் மீதாக விளங்கினான்: சுடர்விடும் விளக்குக்கள்போலவே அரக்கர்போன்றஇருளும் ஒழிய, (அப்போது) வானவரெல்லாம், 'இந்திரசித்து, வலிமையுடனே கொடிய சினம் மாயச்செய்கை என்பன குறைந்து ஒழிய (இனி) முடிந்திட்டான்' என்று (மகிழ்ச்சியினால்) ஆரவாரித்தார்கள்; (எ - று.)

மாயத்திற்கு இடங்கொடுக்கும் இராக்காலம் இருந்தவரையில் இந்த இந்திரசித்து 'என்ன மாயச்செயலைத் தொடங்கிச்செய்வானோ?' என்று அஞ்சியிருந்த தேவர், இரவுஒழியச் சூரியனுதித்திட்டதனால், 'இனி மாயஞ்செய்ய இடமில்லை யாகையால், இவன் பொன்றுவது திண்ணம்'என்று கருதி, மகிழ்ச்சியினால் ஆரவாரித்தார்க ளென்பதாம். முடிந்தனன் - தெளிவினால் வந்த காலவழுவமைதி. பி - ம்:—[1]பொழுது. [2]மீதாய். [3]அரக்கராமிருளும். [4]கரைந்து. [5]முழங்கினது. (௩௧0அ)

௩௬.—சிவபெருமானீந்தசிலையும் தேரும் இருக்க இவன் அழியா னென்று விபீஷணன் தெரிவித்தல்.

ஆரழி யாத சூலத் [1]தண்ணற னருளி னீந்த
தேரழி யாத போதுஞ் சிலைகரத் திருந்த போதும்
போரழி யானிவ் வெய்யோன் புகழழி யாத பொற்றோள்
வீரவி தாணை யென்றான் வீடணன் விளைவ தோர்வான்.

(இ - ள்.) 'புகழ் அழியப்பெறாமலிருத்தற்குக் காரணமான அழகிய தோள் வலிமையையுடைய வீரனே! இலைஅழியாமலுள்ள சூலப்படையை யேந்திய பெருமையிற்சிறந்தவனாகிய சிவபெருமான் தன்னருளோடுகொடுத்த தேர் அழியாதபோதும், (இந்தச்)சிலை கையிலிருந்தபோதும், இந்தக்கொடியவன் போரில் அழிந்திடான்: இது திண்ணம்' என்று கூறினான்: (யாவனெனில்),—விளைவதை யுணர்பவனாகிய விபீஷணன்; (எ - று.)—பி - ம்: [1]அந்தணன். (௩௧0௯)

௩௭.—அதுகேட்ட இலட்சுமணன் இந்திரசித்தின்தேரைத் தன்வில்வல்லமையால் அச்சுவேறு ஆணிவேறு ஆக்குதல்.

பச்சைவெம் புரவி வீயா [1]பல்லியச் [2]சில்லி பாரின்
[3]நிச்சய மற்று [4]நீங்கா வென்பது நினைந்து வில்லின்

விச்சையின் [5]கணவ னானன் [6]வின்மையால் [7]வயிர மிட்ட
அச்சினோ [8]டாழி வெவ்வே றாக்கினா [9]னாணி நீக்கி.

(இ - ள்.) வில்வித்தைக்குத் தலைவனான இலட்சுமணன், 'இந்தத் தேரிற்பூட்டிய கொடிய பச்சைக்குதிரைகளோ இறந்துபடா: பல்லியம்போலொலிக்கின்றசக்கரம்(உடைந்துபோய்ப்)பூமியில் நீங்கமாட்டா: திண்ணம்'என்பதைநினைந்து, (தன்)வில்லின்வல்லமையால் கடையாணியைக்கழற்றி, வயிரத்தன்மைபொருந்திய அச்சுடனேசக்கரத்தை வெவ்வேறாகப்பிரித்திட்டான்: (எ - று.)—பல்லியம் - பலவகைவாச்சியம். பி-ம்:—[1]பல்லியற். [2]சில்லிப்பாருள், சில்லியாருள். [3]நிச்சயமன்றி. [4]நீங்காது. [5]கணவனான. [6]வன்மையால், வண்மையால். [7]வயிரமீட்ட. [8]ஆணி. [9]நாணே. (ந௬௧௰)

ந௬அ.—குதிரை வலிமையற்றுச் சிதறுதல்.

மணிநெடுந் தேரின் [1]றட்டு விட்டது மறிது லோடும்
அணிநெடும் புரவி [2]யெல்லா மாற்றல வாய வன்றே
திணிநெடு மரமொன் றாழி வாண்மழுத் தாக்கச் சிந்திப்
[3]பணைநெடு முதலு [4]நீங்கப் [5]பாங்குறை பறவை [6]போல.

(இ - ள்.) அழகியநெடிய தேரின் தட்டுக்களெல்லாம் பூட்டுவிட்டுப் போனதனால் அந்தத்தேர் அழிந்தவுடனே, அழகிய நெடிய குதிரைகளெல்லாம்,—வலிய [தமக்குப்பற்றுக்கோடான] நெடியமரமொன்று ஆழிபோற்கூரிய கோடாலிப்படை தாக்குவதனாற் பருத்தநீண்ட அடிப்பகுதியுமுட்படஒழிந்திட, (ஆங்கு) இனிதுறைந்துவந்த பறவைகள் (சிதறுவன)போலச் சிதறி வல்லமையற்றனவாயின; (எ - று.)

பற்றுக்கோடாயிருந்த பொருள் நீங்கவே, அதனை யொட்டிய பிராணிகள் சிதறு மென்க. பி - ம்:—[1]கட்டு. [2]எல்லாமற்றவாறன. [3]பணையொடு. [4]நீங்கிப். [5]பாங்குறு. [6]போலும். (ந௬௧௧)

ந௬௯.—இந்திரசித்து வானத்து மறைந்துபோதல்.

அழிந்ததேர்த் தட்டி னின்று [1]மங்குள்ள [2]படைக ளள்ளிப்
[3]பொழிந்தன[4]னிளைய வள்ளல் கணைகளாற் றுணித்துப் போக்க
[5]மொழிந்திரு வகையில் விண்ணை [6]முட்டினா னுலக மூன்றுங்
கிழிந்தன வென்ன வார்த்தான் கண்டில ரோசை கேட்டார்.

(இ - ள்.) அழிந்ததேரின் தட்டிலிருந்து அங்கிருந்த படைக்கலங்களையெல்லாம் (இந்திரசித்து) அள்ளிப் பொழிந்தனன்: (அவற்றை), இளையபெருமாள், (தன்) கணைகளால் துணித்துப் போக்க, சொல்லுஞ் சொல் முடிவதற்குமுன்[வெகுவிரைவில்]வானத்தில்தாக்கிநின்று 'உலக மூன்றும் கிழிந்திட்டன' என்று தோன்றும்படி ஆரவாரித்தான்: (அப்போது எவரும் அந்தஇந்திரசித்தைக்) காணமாட்டாதவராகி, அவனாரவாரத்தைமாத்திரம் கேட்டார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]ஆங்குள்ள, வரங்களிற். [2]படையை. [3]பொழிந்தவை. [4]இளையவீரன். [5]மொழிந்த தோரளவில். [6]மூட்டினான், முட்டினது. (ந௬௧௨)

௬௦.—இந்திரசித்து பொழிந்த கல்மழையால் வானரவீரர் மடிந்து விழுதல்.

மல்லின்மா மாரி யன்ன தோளினன் மழையின் [1]வாய்ந்த
கல்லின்பா மாரி பெற்ற வரத்தினாற் சொரியுங் காலைச்
[2]செல்லுவான் றிசைக [3]ளோரார் சிரத்தினோ [4]டுடல்கள் சிந்தப்
புல்லினார் நிலத்தை [5]நின்ற வானர வீரர் [6]போகார்.

(இ - ள்.) பெரிய மழையையொத்தவனாகி வலிமைகொண்ட தோளையுடையவனான இந்திரசித்து மழையையொத்துப்பொருந்திய பெரிய கல்மழையை(த் தான்) பெற்றுள்ள வரத்தினாற் பொழியும்போது,—நின்றவானரவீரர், (அப்பாற்)போகத்தக்க பெரிய திசைகளையறியமாட்டாதவராய், சிரத்தினோடு உடம்புகள் வீழ நிலத்தைத் தழுவிக்கிடந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]வாய்த்த. [2]செல்லுவான்றிசையுள். [3]ஓராச். [4]உடலஞ்சிந்திப். [5]நின்று. [5]போல்வார். (௲௧௧௩)

௬௧.—இந்திரசித்து வானத்துமறைந்து கல்மழைபொழியவே, இளையபெருமாள் திசைகளெங்கும் வாளியேவுதல்.

[1]காண்கிலன் கல்லின் மாரி யல்லது காளை வீரன்
சேண்கலந் தொளிந்து நின்ற [2]செய்கையாற் றிசைக ளெங்கும்
மாண்கலந் [3]தளந்த மாயன் வடிவென முழுதும் [4]வெளவ
ஏண்கலந் தமைந்த வாளி யேவினா னிடைவி டாமல்.

(இ - ள்.) வானத்திலே ஒன்றுபட்டு (இந்திரசித்து தன்னை) மறைத்துக்கொண்டு நின்ற தன்மையினாலே, காளைபோன்ற வீரனான இலட்சுமணன், கல்மாரியல்லது (வேறொன்றைக்) காணமாட்டாதவனாய், பெருமைபெற்றுத் திசைகளெங்கும் அளந்த (திரிவிக்கிரமனான) திருமாலின் வடிவுபோல(த் திசைகள்) முழுதையும் கவரும்படி பெருமைபெற்றமைந்த அம்புகளை இடைவிடாமல் ஏவினான்; (எ - று.)—பி - ம்:—[1]காண்கில. [2]செயற்கையாற்...ளெங்கும், செயலினைத்தெளிந்துநோக்கி. [3]அமைந்த. [4]வவ்வி. (௲௧௧௪)

௬௨.—இரத்தம்பெருக இந்திரசித்து வானத்துக் காணப்படுதல்.

மறைந்தன திசைக [1]ளெங்கு [2]மாறுபோய் [3]மலையு மாற்றல்
[4]குறைந்தன னிருண்ட மேகக் குழாத்திடைக் குருதிக் கொண்மூ
உறைந்துள தென்ன நின்று [5]னுருவினை யுலக மெல்லாம்
நிறைந்தவன் கண்டான் காணு வினையதோர் [7]நினைவ தானான்.

(இ - ள்.) (இலட்சுமணன்விடுத்த அம்புகளால்), திசைகளெங்கும் மறைந்தன; மாறாக எதிர்த்துப் பொருகின்ற வல்லமை (இந்திரசித்து) குறையப்பெற்றான்:(அப்போது)இருண்ட மேகக்கூட்டத்தினிடையில் செவ்வானம் உறைந்துளதென்னுமாறு நின்றவனான இந்திரசித்தின் உருவினை, உலகமெல்லாம் நிறைந்தவனான இலட்சுமணன், கண்டான்: கண்டு, இப்படிப்பட்ட ஒருஎண்ணத்தைக் கொண்டவனானான்; (எ-று.)

—'இனையதோர்நினைவு' என்பதை, மேற்செய்யுளில் "சிலையறுதெனி னும் மற்றத்திண்ணியோன்றிரண்டதோளாம், மலையறு தொழியாதென்று" என்று கூறுதல் காண்க.

வானத்தினிடையே உடலெல்லாம் செந்நீருடனே தோன்றும் இந்திரசித்துக்கு, இருண்டமேகக்குழாத்திடை உறைந்துளதாகிய குருதிக் கொண்மூ ஏற்ற உவமையாம். குருதி - செந்நிறத்துக்கு, ஆகுபெயர். மறைந்தனதிசைகளெங்கும் மாறுபோய்என்பதற்கு - அம்புகள் இந்திர சித்துக்கு மாறாகப்போனதனால் திசைகளெங்கும் மறைந்தன எனினுமாம். பி-ம்:—[1]எல்லாம். [2]மாயம்போய். [3]மறையுமாற்றால். [4]குறைந்தன. [5]வடிவினை. [6]நிறைந்தமன். [7]நினைப்பன். (௩கக௫)

சங.—இலட்சுமணன் இந்திரசித்தின் விற்பிடித்த கையைக் கொய்யுமாறு அம்புஏவுதல்.

சிலையறு தெனினு மற்றத் திண்ணியோன் றிரண்ட[1]தோளாம்
மலையறு தொழியா தென்று [2]வரிசிலை யொன்றும் வாங்கிக்
கலையறுத் திங்க ளன்ன வாளியாற் கையைக் கொய்தான்
விலையறு மணிப்பூ ணோடும் வில்லொடு நிலத்து வீழ.

(இ - ள்.) 'வில் (எனதுஅம்புகளால்) துண்டிக்கப்பட மாட்டாதென்றாலும், அந்தவலியோனுடைய இந்திரசித்தின் திரண்டதோளாகிய மலை துண்டிக்கப்படாமற் போகாது' என்றுசொல்லி, (இலட்சுமணன்), கட்டமைந்த ஒருவில்லை வளைத்து, விலைதீர்க்கமுடியாத [மதிப்பிடமுடியாத]மணிகளழுத்திய ஆபரணங்களோடும் வில்லோடும் நிலத்திலேவீழ, மானினால் அற்றுப்போதலில்லாத (அர்த்த)சந்திரனையொத்த பாணங்களினாற் கையை யறுத்துவீழ்த்தினான்; (எ - று.)—மற்று-வினைமாற்று.

தேரும் வில்லும்உளனாக இவனை வெல்லமுடியாதென்று ஸ்ரீவிபீஷணாழ்வான் கூறியதையொட்டி இந்திரசித்தின்தேரை ஆணியைக் கழற்றி அச்சுவேறு தட்டுவேறாக்கிச் சிதைத்த இலட்சுமணன், வில்லைப் பாணத்தைக்கொண்டு துண்டிக்கமுடியாதென்று துணிந்து அதனைப் பற்றியகையையே துணித்துவீழ்த்தினானென்க. பூர்ணசந்திரனினிடைப்பகுதி களங்கமாகிய கலையினால் [மானினால்] அற்று [அறுபட்டு]த் தோன்றும்: பிறைச்சந்திரனின் இடையிடம் அவ்வாறு கலையினால் அற்றுத்தோன்றாதாதலால், பிறைச்சந்திரனை 'கலையறுத்திங்கள்' என்றார்: 'பாகவான்பிறைபோல் வெவ்வாய்ச்சுடுகணை' என மேல் வருவதும் காண்க. ஆகவே, இத்தொடர்க்கு-(தன்னுடைய)கலைகள் [கிரணங்கள்] குறையப்பெறாத பூர்ணசந்திரனென்று பொருளுரைத்தல் பொருந்துவதாகத் தோன்றவில்லை. பி-ம்:—[1]திண்டோள். [2]வடிக்கணை. (௩ககசு)

சச.—இந்திரசித்தின் சாகைஅற்றுவீழ்தல்.

பாகவான் பிறைபோல் வெவ்வாய்ச் சுடுகணை படுத லோடும்
[1]வேகவான் [2]கடுங்கா லெற்ற முற்றும்போய் [3]விளிந்த நாளின்

மாகவான் றடக்கை மண்மேல் விழுந்தது மணிப்பூண் மின்ன
மேகமா காயத் திட்ட வில்லொடும் வீழ்ந்த தென்ன.

(இ-ள்.) வானத்துத்தோன்றும் (சந்திரனுடைய)பாகமாகிய பிறை போன்ற வெவ்வியவாயைக்கொண்ட சுடுகின்ற கணை பட்டவுடனே, மிக்கவேகங்கொண்ட கொடுங்காற்றுவீசுவதனால் யாவும்அழிந்துபோன நாளில் [யுகாந்தகாலத்திலே], ஆகாயத்திலுள்ள மேகமானது (தன் மீது)இட்ட வில்லோடும் (மண்ணின்மீது)விழுந்த தென்னும்படி,-மாகத்தினின்று [ஆகாயத்தினின்று] மிகப்பெரிய (இந்திரசித்தின்)கையானது, மணிப்பூண்மின்ன (வில்லொடும்) மண்மேல் விழுந்தது; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. வான்பிறை-சிறந்தபிறையுமாம். வான்-ஆகாயம், பெருமை. மாகவான் - மகாகமென்னப்படுகின்ற வானமுமாம். கடுங்காற்று - சண்டமாருதம். பி-ம்:—[1]மோகவான். [2]கொடுங். [3]விளியும். (௩கசஎ)

சுரு.—கீழ்வீழ்ந்த இந்திரசித்தின் கை துடித்தல்.

படித்தலஞ் சுமந்த நாகம் பாகவான் பிறையைப் பற்றிக்
கடித்தது போலக் கோல விரல்களா லிறுகக் கட்டிப்
பிடித்தவெஞ் சிலையி னோடும் பேரெழில் வீரன் பொற்றோள்
துடித்தது மரமுங் கல்லுந் துகள்படக் [1]குரங்குந் துஞ்ச.

(இ - ள்.) பூமியைச்சுமந்துகொண்டுள்ள ஆதிசேஷன் பாகமாயுள்ள சிறந்தபிறைச்சந்திரனைப்பற்றிக் கடித்ததுபோல அழகியவிரல்களினால் உறுதியாகக்கட்டிப்பிடித்த கொடிய சிலையினோடும், பேரழகையுடையவீரனது பொற்றோளானது,—மரமும்கல்லும்துகளாகவும் குரங்குகள் இறக்கவும் துடிக்கலாயிற்று; (எ - று.)—வளைந்தவில் பிறைச்சந்திரனைப்போலுமென்க. பூமியில்வீழ்ந்தகை வில்லை இறுகப்பிடித்துள்ளதனால், இல்பொருளுவமை கூறினார். பி-ம்:—[1]குரங்கு. (௩கசஅ)

சகூ.—இந்திரசித்தின் கை அற்றுவீழ்ந்ததுகண்ட வானவரின் அதிசயம்.

அந்தர மதனி னின்ற வானவ ரருக்கன் வீழாச்
சந்திரன் [1]வீழா மேரு மால்வரை தகர்ந்து [2]வீழா
இந்திர சித்தின் பொற்றோ [3]ளிற்றிடை விழுந்த தென்றால்
எந்திர மனைய வாழ்க்கை யினிச்சில [4]ருகந்தெ னென்றார்.

(இ - ள்.) வானத்தினின்ற வானவர், 'சூரியன் வீழ்ந்திடாமலும் சந்திரன்வீழ்ந்திடாமலும் மேருமால்வரை யுடைந்து வீழாமலுமிருக்கையில், இந்திரசித்தின் பொற்றோளானது இடையிலே துண்டுபட்டு விழுந்ததென்றால், எந்திரம்போன்ற [இன்னபோதுகெடுமென்பது உணரப்படாத] (இந்தஉயிரோடுகூடிவாழும்) வாழ்க்கையை (உலகத்துச்) சிலர் இனி(நசுவரமென்று நினையாமல்) உவந்து என்னபயன்! என்று கூறினார்கள்;(எ-று.)—அருக்கன்முதலியோர்வீழ்ந்தால் இவன்கைவீழத்தக்கதேயன்றி இவ்வளவுசாமானியமாக இவன்கை வீழத்தக்கதன்றென்பார்

'அருக்கன்வீழா...வீழா இந்திரசித்தின் பொற்றோளிற்றிடைவீழ்ந்தது' என்றனர்; வீழா-எதிர்மறைவினையெச்சம்: இனி, செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டுவினையெச்சமாகக்கொண்டு, அருக்கன்முதலியனவீழ என்று பொருள்காண்பாருமுளர். பி-ம்:—[1]வீழ, வீழ்க. [2]மேல். [3]இற்றினி. [4]உகப்பதென்னே, உவந்ததென்றார். (௩௧௧௯)

சஎ.—அதுகண்ட இராக்கதரின் கலக்கம்.

மொய்யற மூர்த்தி யன்ன [1]மொய்ம்பினு னம்பி னுலப்
பொய்யறச் சிறிதென் றெண்ணும் பெருமையான் புதல்வன் பூத்த
மையறக் [2]கரிதென் றெண்ணு [3]மனத்தினன் வயிர மன்ன
கையறத் தலையற் றார்போற் கலங்கினார் நிருதர் கண்டார்.

(இ - ள்.) நெருங்கிய தருமத்தின் சரீரத்தையேயொத்த [தருமமே வடிவுபடைத்து வந்தாற்போன்ற] வலியவனான இலட்சுமணனுடைய அம்பினால், பொய்யை (பஞ்சமகாபாதகங்களுள் ஒன்று என்று கருதாமல்) மிகவும் அற்பமானதுஎன்று எண்ணுகின்ற அந்தப்பெருமைபெற்ற இராவணனுடைய மகனும், உண்டாக்கிய அஞ்சனத்தைக்காட்டிலும் மிகவும் கரியதென்று எண்ணுதற்குரிய [கொடிய எண்ணங்கள் நிறைந்த] மனத்தையுடையவனுமான இந்திரசித்தின் வயிரம்போன்ற [உறுதியான]கை யறுபடவே,(அதனைக்)கண்டவரான நிருதர்,(தம்)தலையற்றவர்போலக் கலக்கமடைந்தனர்; (எ - று.)—தீமனமுடைமையை மனம் இருண்டிருப்பதெனக் கூறுதல், மரபு. பி - ம்:—[1]முன்பினன் [2]கரியதென்னும். [3]நிறத்தினன். (௩௧௨0)

சஅ.—வானரர் மேல் வீழ்ந்து அரக்கர்களை மடித்தல்.

அன்னது நிகழும் வேலை யார்த்தெழுந் தரியின் வெள்ளம்
மின்னெயிற் றரக்கர் சேனை யாவரு மீளா வண்ணங்
கொன்னகக் கரத்தாற் [1]பல்லான் மரங்களான் மானக் குன்றாற்
[2]பொன்னெடு நாட்டை யெல்லாம் புதுக்குடி யேற்றிற் றன்றே.

(இ - ள்.) (இந்திரசித்தின்கை அற்றுவீழ்கையாகிய) அந்தச்செயல் நடந்தபோது, குரங்குவெள்ளம்,—ஆரவாரித்துக் கிளர்ந்து, மின்னல்போன்ற எயிற்றையுடைய அரக்கரின் சேனையிலே எவரும் மீண்டு பேர்காதபடி கொல்லுந்தன்மையுள்ள நகத்தையுடைய கையினாலும் பல்லினாலும் மரங்களினாலும் பெரியகுன்றுகளினாலும் நெடியபொன்னுலகம் [சுவர்க்கம்] முழுவதையும் புதுக்குடியாக ஏறச்செய்தது; (எ-று.)- அன்றே - தேற்றம்.

'அரக்கர்சேனையைக் கொன்றது' என்றபொருளில், 'அரக்கர் சேனை யாவரும் மீளாவண்ணம் புதுக்குடியேற்றிற்று' என்றது - பிறிதினவிற்சியணி. பி - ம்:—[1]காலான். [2]பொன்னுடை. (௩௧௨௧)

சகூ.—இந்திரசித்து இலக்குமணனைநோக்கி உன்னை முடித்தாலன்றி யான் முடியேனெனல்.

காலங்கொண் டெழுந்த மேகக் கருமையான் செம்மை காட்டும்
ஆலங்கொண் டிருண்ட கண்டத் தமரர்கோ னருளிற் பெற்ற

சூலங்கொண் [1]டெறிவ லென்று தோன்றினன் [2]பகையின் றோற்ற
மூலங்கொண் டுணரா நின்னை முடித்தன்றி முடியே [3]னென்றான்.

(இ - ள்.) விஷத்தையுட்கொண்டுஇருண்ட கண்டத்துடனே செந்நிறத்தைக்கொண்ட தேவதேவனை சிவபெருமானுடைய அருளினாலே பெற்ற சூலத்தை க்(கையிற்)கொண்டு, '(இதனை) எறிவேன்' என்று தோன்றியவனும், கார்காலத்து(நீரைக்)கொண்டு எழுந்தமேகம்போன்ற கருநிறமுடையவனுமான இந்திரசித்து,--'பகையினுடைய பிறப்பு வரலாற்றையறியாத உன்னைக் கொன்றொழித்தல்லாமல் (நான்) இறவேன் என்று கூறினன்; (எ - று.)—தோற்றம் - பிறவி.' எமது பிறப்பு வலிமை முதலிய சிறப்புக்களையறியாது பொருபவன் நீ' என்று பழிப்பான்,'பகையின் றோற்றமூலங்கொண்டுணரா நின்னை' என்றான். பி - ம்:—[1]எறிவன். [2]பகையிற்றோற்ற, பகையிற்றோன்ற. [3]என்ன. (ரு௧௨௨)

ரு௦.—இந்திரசித்து மாயப்போர் புரிதல்.

காற்[1]றென வுருமே றென்னக் கன[1]லெனக் கடைநா ளுற்ற
[2]கூற் றமோர்சூலங் கொண்டு [3]குறுகிய தென்னக் கொல்வான்
[4]தோற்றினு னதனைக் காணு வினித்தலை துணிக்கும் [5]காலம்
எற்றதென் றயோத்தி வேந்தற் கிளையவ [6]னிதனைச் செய்தான்.

(இ-ள்.) காற்றென்னவும் இடியேறென்னவும் கனலென்னவும் கடைநாளிற்பொருந்திய யமன் ஓர் சூலங்கொண்டு குறுகிய தென்னவும், கொல்லும்பொருட்டு, (இந்திரசித்து),—தோன்றினன்; அதனைக்கண்டு அயோத்திக்கு அதிபதியாகிய இராமபிரானுக்கு இளையவனான இலட்சுமணன் இனி (இவனுடைய) தலையைத்துணிக்குங்காலம் வந்திட்டதென்றுஇச்செயலைச் செய்யலானன்; (எ-று.)—பி-ம்:—[1]என்ன. [2]கூற்றென வுருவுகொண்டு. [3]குறுகுறுது. [4]தோற்றினன்றன்னை. [5]காலே. [6]இனைய.()

ரு௧.—'இராமனே பரம்பொருளானால் இந்திரசித்தைக்கொல்க' என்று இலக்குமணன் அம்பு ஏவுதல்.

மறைகளே தேறத் தக்க வேதியர் வணங்கற் [1]பாலான்
இறையவ [2]னிராம னென்னு நல்லற மூர்த்தி யென்னிற்
பிறை[3]யெயிற் றிவனைக் கோறி யென்றொரு பிறைவாய் வாளி
[4]நிறையுற வாங்கி விட்டா னுலகெலா [5]நிறுத்தி நின்றான்.

(இ - ள்.) 'மறைகளே ஆராய்ந்து அறியத்தக்கவனும் வேதம் வல்ல அந்தணர்கள் வணங்குதற்கு உரியவனுமான தலைவன் இராமனென்கிற சிறந்த தருமமூர்த்தியே யாவா னென்னில், பிறைபோன்ற எயிற்றையுடைய இவனைக் கொல்வாய்' என்று ஒருபிறைவாயையுடைய அம்பை (த் தன்வலிமை) நிறைதலுற இழுத்துவிட்டான்: (அதனால்),உலகமெல்லாம் (அச்சம் நீங்க) நிலைநிறுத்திநின்றான்; (எ - று.)—உலகெலாம் நிறுத்திநின்றான் - தன்முடிமீது தாங்குவதனால் உலகமுழுதையும் நிலைபெறச்செய்கிற ஆதிசேஷனுடைய அமிசமான இலக்குமணனெனினு

மாம். பி-ம்:—[1]பால. [2]இராமனேயங், இராமனென்னின். [3]எயிற்றவனை.
[4]நிறைவுற். [5]நிறுத்த. (௩௧உ௪)

௫உ.—இந்திரசித்தின்தலை அறுபடுதல்.

நேமியுங் குலிச வேலும் [1]நெற்றியி னெருப்புக் கண்ணான்
நாமவே லூனு மற்றை நான்முகன் படையு நாணத்
தீமுகங் கதுவ வோடிச் சென்றவன் சிரத்தைத் தள்ளிப்
பூமழை [2]வானோர் சிந்தப் [3]பொலிந்ததப் பகழிப் புத்தேள்.

(இ - ள்.) (விஷ்ணுவின்) சக்கரப்படையும் வச்சிராயுதமும் நெற்றியிலே நெருப்புக்கண்ணையுடையவனான சிவபெருமானுடைய அச்சத்தைவிளைக்கின்ற வேலும் மற்றும் பிரமதேவன்படையும் நாணுமாறு, அந்த (இலட்சுமணன் விடுத்த) தெய்வவாளியானது,—நெருப்பு தன் வாயிலேபற்றி யெரியஓடிச்சென்று, அந்த இந்திரசித்தினுடையதலையை (உடலினின்று) அப்புறப்படுத்தி (த் தேவர்கள்) மலர்மாரிபொழிய விளங்கிற்று; (எ-று.)

தேவர்களால் வெல்லமுடியாத இந்திரசித்தின் தலையை யறுத்துத் தள்ளியதனால், நேமிமுதலியவை இந்த லட்சுமணனது பகழியைக் கண்டு நாணுவன வாயின. குலிசவேல் - குலிசப்படை. புத்தேட் பகழி யென மாறுக. இனி, பகழிப்புத்தேள் - அம்புத்தெய்வ மென்பாரு முளர். பி-ம்:—[1]வாயுவும். [2]மாரி அமரர். [3]போந்தது, புகுந்தது. ()

௫௩.—இந்திரசித்தின்தலை வீழ்வதற்குமுன் அவனுடல் மண்ணில்விழுதல்.

அற்றவன் றலைமீ தோங்கி [1]யண்டமுற் றணுகா முன்னம்
பற்றிய சூலத் தோடு [2]முடனிறை பகழி யோடும்
எற்றிய காலக் காற்றான் மின்னொடு மிடியி னோடுஞ்
[3]சுற்றிய புயல்வீழ்ந் தென்ன வீழ்ந்தது சோர னியாக்கை.

(இ - ள்.) அவ்விந்திரசித்தின்தலை அற்று மேலேஎழுந்து பூமியிற் பொருந்திச் சேர்வதற்கு முன்னம், வஞ்சனைக்குணத்தையுடைய அந்த இந்திரசித்தின் உடல்,மின்னலோடும் இடியினோடுஞ் சூழ்ந்தமேகம் வீசிய யுகாந்தகாலக் காற்றினால்விழுந்தாற்போலக் (கையிற்) பற்றிய சூலத்தினோடும் தன்னிடத்து நிறைந்த அம்புகளோடும் வீழ்ந்தது; (எ-று.)— கொண்ட படையும் உடல்நிறை பகழியும் - மின்னலுக்கும், வீழ்ந்த போது தோன்றிய ஒலி - இடிக்கும், உடல்-மேகத்துக்கும் உவமையாம். அண்டம் - வானமுமாம். பி - ம்:—[1]அண்டத்தை. [2]உடலுறு, உடலுறை. [3]இற்றொருகாளமேகம்வீழ்ந்தென வீழ்ந்தநியாக்கை. ()

௫௪.—இந்திரசித்தின்தலை மண்மேல்விழுதல்.

[1]விண்டலத் திலங்கு திங்க ளிரண்டொடு [2]மின்னு வீசுங்
குண்டலத் துணைக ளோடுங் கொந்தளக் குஞ்சிச் [3]செங்கேழ்ச்
சண்டவெங் [4]கதிரோன் செக்கர்த் தழலொடு மருவித் தாம
மண்டலம் [5]விழுந்த தென்ன விழுந்தது தலையு மண்மேல்.

(இ - ள்.) கொடிய உஷ்ணகிரணனான சூரியனது ஒளியுள்ளமண்டலம் ஆகாயதலத்திலே விளங்குகின்ற சந்திரனிரண்டோடும் மின்

ணலைவீசுகின்ற குண்டலமிரண்டினோடும் தலைமயிராகிய செம்மைநிறம் விளங்குகின்ற செந்நிறத்தழலோடும் பொருந்தி விழுந்தாற்போல, (இந்திரசித்தின்)தலையும் மண்மேல் விழுந்தது; (எ - று.)

திங்களிரண்டு - இரண்டுவக்கிரதந்தங்கட்கு உவமை. துணை - இரண்டு. பி-ம்:—[1]விண்டலத்தியங்கு...,விண்டலத்திரண்டுதிங்களிரண்டென.[2]மின்னும், மின்னின். [3]செங்கட். [4]கதிரின்கற்றைத்தழையொடுமிரவித்தாய, கதிரின்கற்றைத்தழையொடுமிரவிதானம். [5]வீழ்வது. ()

௫௫.—இந்திரசித்துஇறக்கவே, அரக்கர் இரிந்தோடுதல்.

[1]உயிரிறப் புக்க காலை [2]யுண்ணின்ற வுணர்வி னோடுஞ்
செயிரறு பொறியு [3]மந்தக் கரணமுஞ் சிந்து மாபோல்
அயிலெயிற் றரக்க ருள்ளா ராற்றல ராகி [4]யான்ற
எயிலுடை யிலங்கை நோக்கியிரிந்தனர் படையும் விட்டார்.

(இ - ள்.) (உடலிலுள்ள) ஆன்மா (அந்தஉடலை விட்டு,நீங்கத தொடங்கியகாலத்து, உள்ளேநின்ற உணர்ச்சியினோடும் குற்றமற்ற ஐம்பொறிகளும் அந்தக்கரணமும் அப்பாற்படுவனபோல,(இந்திரசித்து இறக்கவே, சேனையிலுள்ள) கூரியபற்களைக்கொண்ட அரக்கராகியுள்ளவர், தரித்துநிற்கமுடியாதவராகி, (கையிற்கொண்ட) படைகளையும் போகட்டுவிட்டு, சிறந்தமதிலையுடைய இலங்கைநகரைநோக்கி நிலைகெட்டு ஓடினர்; (எ - று.)—பி - ம்:—[1]உயிர்புறத்துற்ற. [2]உண்ணிறை. [3]மற்றைக்கரணமும். [4]ஆற்றல், ஆற்ற. (௩௧௨௮)

௫௬.—தேவர்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரித்தல்.

வில்லாள ரானார்க் கெல்லா மேலவன் விளித லோடுஞ்
செல்லாதவ் விலங்கை வேந்தற் கரசெனக் [1]களித்த தேவர்
எல்லாருந் தூசு நீக்கி யேறிட வார்த்த போது
கொல்லாத விரதத் தார்தங் கடவுளர் கூட்ட மொத்தார்.

(இ - ள்.) விலலாளராயுள்ளவர்கட்கெல்லாம் மேலானவனான இந்திரசித்து இறந்தவுடனே, '(இனி), அந்த இலங்கைவேந்தற்கு அரசு நடவாது'என்று மனமகிழ்ச்சிகொண்ட தேவர்கள் யாவரும், (தம்அரையிற் செய்தலுடுத்திருந்த) ஆடைகளையவிழ்த்து மேலேவீசியெறிந்து ஆரவாரஞ்செய்தபோது,கொல்லாவிரதத்தைக்கொண்டவரானஅருகமதத்தவருடைய தெய்வங்களின் கூட்டத்தை யொத்தார்; (எ-று.)—பி:ம்:—[1]களித்துத்.

கொல்லாவிரதத்தாரின்தெய்வம்-அரையில்ஆடையின்றி அம்மணமாகஇருக்கும்: அரையிலாடையின்றி யிருக்கையென்ற பொருளில் 'அமணம்'என்ற பெயர்வழங்கியதும்,இதற்கு ஒருசான்றாகும். (௩௧௨௯)

௫௭.—திருமால்முதலியோரை வானவர் தம்கண்ணாற் காணுதல்.

வரந்தரு முதல்வன் மற்றை மான்மறிக் கரத்து வள்ளல்
புரந்தரன் முதல்வ ராய நான்மறைப் [1]புலவர் பாரில்
நிரந்தரந் [2]தோன்றி நின்ற ரருளினா னிறைந்த நெஞ்சர்
கரந்தில ரவரை யாக்கை கண்டன [3]குரங்குங் கண்ணால்.

(இ - ள்.) (வேண்டுவார்வேண்டிய)வரத்தைத் தரவல்ல திருமாலும் மான்குட்டியைக்கரத்திலேந்திய உதாரகுணமுள்ளவனை சிவபெருமானும் நான்மறைகளையோதிக்கொண்டிருக்கும் கடவுளாகிய பிரமதேவனும் இந்திரனும் முதல்வராய அருளினால்நிறைந்த நெஞ்சையுடைய தேவர்,(தம்முருவத்தை)மறைத்துக்கொள்ளாமற்பூமியிலே(அப்போது) நிரந்தரமாகக் காணப்பட்டிருந்தனர்; அவருடைய யாக்கையைக் குரங்கும் (தம்)கண்ணாற் கண்டன; (எ-று.)—கரந்தில ரென்பதை, 'அருளினால்நிறைந்த நெஞ்சர்' என்பது சமர்த்தித்துநின்றது: தொடர்நிலைச் செய்யுட்குறியணி. பி - ம்:—[1]புலவரானோர். [2]தோன்ற. [3]குரங்கு. ()

௫அ.—இறந்தவானரர் கடவுளருளினால் உயிர்பெற்றெழுதல்.

அறந்தலை நின்றார்க் கில்லை யழி [1]வெனு மறிஞர் வார்த்தை
சிறந்தது சரங்கள் பாயச் சிந்திய [2]சிரத்த வாகிப்
பறந்தலை யதனின் [3]மற்றப் பாதக வரக்கன் கொல்ல
இறந்தன [4]கவிக ளெல்லா மெழுந்தன விமையோ ரேத்த.

(இ-ள்.) (இந்திரசித்துவிடுத்த)அம்புகள்பாய்ந்ததனாற் சிரம் சிந்தப்பெற்றனவாகிப் போர்க்களத்திலே பாதக வரக்கனாற் கொல்லப்பட்டு இறந்தனவாகிய கவிகளெல்லாம், இமையோரேத்த உயிர்பெற்றெழுந்தன: (அதனால்), 'அறத்தைமேற்கொண்டுநின்றவர்கட்கெல்லாம் அழிவு இல்லை' என்கிற அறிஞர்வார்த்தை சிறப்புற்றதாயிற்று; (எ - று.)—கீழ் கடவுளர்வருகையைக்கூறி, இங்கு வானரம் உயிர்பெற்றெழுந்தமையைக் கூறியதனால், அறிஞர்வார்த்தை சிறத்தல் - அறிஞர்கூறியசொல் பழுதுபடாது அநுஷ்டாநத்துக்கு வருதலென்ற பொருளைக் காட்டுமென்பது, பெறப்படும். பி-ம்:—[1]என்பது. [2]சிரத்தர். [3]வந்த. [4]கவியும். ()

௫௬.—அங்கதன் இந்திரசித்தின் தலையையேந்தி முன்னணியிற் செல்ல, அநுமன்மீது இலக்குமணன் செல்லுதல்.

ஆக்கையி னின்று வீழ்ந்த வரக்கன் [1]றன் றலையை யங்கை
தூக்கின [2]னுள்ளங் கூர்ந்த வாலிசேய் [3]தூசி செல்ல
மேக்குயர்ந் தமரர் வெள்ள [4]மள்ளியே தொடர்ந்து வீசும்
பூக்கிளர் பந்தர் நீழ லனுமன்மே லிளவல் போனான்.

(இ - ள்.) உடலினின்று (வேறுபட்டு) வீழ்ந்த அரக்கனுடைய தலையை, மனமகிழ்ச்சிமிக்க வாலிகுமாரனை அங்கதன்,-அழகியகையிலேந்தியவனாய் முன்னணியிற்செல்ல, வானத்துஉயரவிருந்த அமரர்களின்திரள் அள்ளித் தொடர்ந்துவந்துஎறிந்த விளங்குகின்ற பூக்களினாலாகிய பந்தரின்நிழலில் இளையபெருமாள் அநுமான்மீது ஏறியவண்ணம் போனான்; (எ - று.)—பி - ம்:—[1]செந்தலையை, செய்தலையை. [2]துள்ளுங்கூத்தன். [3]தூசு. [4]அள்ளினர்...வீசும், இடைவிடார் வீசுகின்ற. (உகரு௨)

௬0.—இராமன் இந்திரசித்தின்தலையை அங்கதன்கையிற் காணுதல்.

ஓங்கிய தோளன் றேய்ந்து மெலிகின்ற[1] பழியன் மேன்மேல்
[2]ஓங்கிய வுவகை யூறு முள்ளத்த னும்பர்க் காகத்

[3]தேங்கிய கடலை முன்னாட் டிரித்தவன் சேய்செங் கையால்
[4]தாங்கிய குரிசில் பற்றிக் கொணர்ந்திடுந் தலையைக் கண்டான்.

(இ-ள்.) (இயற்கையாகப்) பருத்த தோளையுடையவனும், தேய்ந்து மெலிகின்ற பழியையுடையவனும், மேன்மேல் ஓங்கிய மகிழ்ச்சி சுரக்கின்ற உள்ளத்தையுடையவனுமான குரிசில் [ஸ்ரீராமன்], (ஆழமாகத்) தேங்கிய பாற்கடலைத் தேவர்களின்பொருட்டாக முன்னாள் கடைந்தவனான வாலியின்குமாரன் சிவந்த கையால்தாங்கியதாய்ப்பற்றிக்கொணர்ந்திடுந்தலையை(த் தூரத்திற்)கண்டான்; (எ - று.)—பி-ம்:—[1]விழியன் மீதுற்று. [2]ஓங்கியமுடியன்றிங்களொளிபெறுமுகத்தனுள்ளால், ஓங்கிய முகத்தன் றிங்கட்கொளிர்கின்ற முகத்தனுள்ளாய். [3]வாங்கியதுயரன் மீப்போய்வளர்கின்றபுகழன்வந்துற்று. [4]ஓங்கியவுவகையாள னிந்திரனுரைப்பதானான், ஓங்கியவுவகையாள னிந்திரனினைய சொன்னான். ()

௬௧.—இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: கையில் இந்திரசித்தின் தலையையேந்திவரும் அங்கதனைக்கண்டு, இராமன் கூறுதலைத் தெரிவிக்கும்.

எல்லி[1]வான் மதியி னுற்ற கறையென [2]வென்மேல் வந்து
புல்லிய வடுவும் [3]போகா தென்றகம் [4]புலம்பு கின்றேன்
[5]சொல்லிய தரும நல்கத் [6]துவக்கறுத் துயரந் தீர்ந்தேன்
செல்வமும் பெறுதற் குண்டோ குறையினிச் சிறுமை யாதோ.

(இ - ள்.) இரவில் விளங்குகின்ற வெள்ளிய சந்திரனிடத்துப் பொருந்திய களங்கம்போல என்மேல்வந்து பொருந்திய வடுவும் போகாதென்று மனத்திற்குள் வருந்தாநிற்கின்றவனான நான், (நூல்களிற்) கூறப்பட்ட தருமதேவதை கருணைசெய்யப்பிணிப்பு நீங்கி (அந்தத்) துயரம் நீங்கப்பெற்றேன்; செல்வமகளையும் பெறுதற்குக் குறையுண்டாமோ? இனி (எனக்குச்)சிறுமை யாதோ? (எ-று.)—பி-ம்:—[1]வாள், வாழ். [2]இரண்டுமென்றோள். [3]போகா. [4]புழுங்குகின்றேன். [5]வில்லியர்திலகம், வில்லியரொருவர். [6]துடைத்துறும் வெறுமை. (௩௧௩௪)

௬௨. தென்றலை [1]யாழி சூழ்ந்த திண்மதி லிலங்கை காக்கும்
[2]புன்றலைக் கள்வன் பெற்ற புதல்வனை யிளவல் வீழ்த்த
[3]வன்றலை யெடுத்து நீமுன் வருதலால் வான ரேச
என்றலை [4]யெடுக்க லானே னினிக்குடை யெடுப்ப னென்றான்.

(இ - ள்.) தென்புறத்துக் கடலாற் சூழப்பட்ட திண்ணிய மதிலையுடைய இலங்கையைக் காக்கும் சிறுமையைக்கொண்ட வஞ்சனைக் குணமுள்ள இராவணன் பெற்ற புதல்வனை இளையவன் கொன்று வீழ்த்த,(அவனுடைய)வலியதலையை நீ கையிற்கொண்டு முன்னேவருதலால், வானரேசனே! (இதுவரையில் நாணத்தாற்கவிழ்ந்திருந்த) என்னுடைய தலையையெடுக்கலானேன்:இனி,(என்)வெண்கொற்றக் குடையையும் எடுப்பே னென்று கூறினான், (ஸ்ரீராமன்); (எ-று.) குடையெடுத்தல்- வெற்றிபெறுதல்,பி-ம்.—[1]ஆழிதொட்டோன்சேயருட்சிறுவன்செம்மல்,

ஆழிதொட்டார்தேவருட்சிறுவன்செம்மல். [2]வென்றலைத்தென்னையார்த்துப் போர்த்தொழில்கடந்தவெய்யோன், வென்றலைத்தென்ன...வெய்யோன். [3]இன்றலை...வானரேச, தன்தலையெடுப்பக்கண்டு தானவர் தலைகள்சாய. [4]எடுத்தேனின்னந்தனிக். (௩௧௩ரு)

௬௩.—இராமனருகிலிருந்தவர் அங்கதனைப் புகழ்ந்துரைத்தல்.

வான்றலை யெடுக்க வேலை மண்டலை யெடுக்க வானோர்
கோன்றலை யெடுக்க வேதக் குலந்தலை யெடுக்கக் குன்றாத்
தேன்றலை யெடுக்குந் தாராய் தேவரை வென்றான் றீய
ஊன்றலை யெடுத்தாய் நீயென் றுரைத்தன ருவகை மிக்கார்.

(இ-ள்.) 'குறையாத தேன் தன்னிடத்துத் தோன்றப்பெற்ற மலர்மாலையை யணிந்தவனே! வானுலகத்தார் (குனிந்த)தலையை நிமிரஎடுக்கவும், கடலாற்சூழப்பட்ட மண்ணுலகத்தார் (அச்சம்நீங்கித்)தலையெடுக்கவும், வானோர்க்குத் தலைவனான இந்திரன் தலையெடுக்கவும், வேதத்தொகுதி தலையெடுக்கவும், தேவரைவென்றவனான தீய இந்திரசித்தின் ஊன்தலையை யெடுத்துவந்தாய் நீ' என்று உவகைமிக்கவராய், (இராமனருகினின்றவர்) கூறினார்கள்; (எ - று.)

அங்கதன் இந்திரசித்தின் தலையையெடுத்து வந்தது - வானத்தார் முதலியோர் தலையையெடுக்க ஏதுவாயிற்று எனச் சமத்காரந்தோன்றக் கூறியவாறு காண்க. 'தலையெடுத்தல்' என்பதுபொருள் வேறுபாட்டுடன்பல முறை வந்தது - சொற்பின்வருநிலையணி. இச்செய்யுள் பலபிரதிகளில்லை. (௩௧௩௬)

௬௪.—இராமன் இந்திரசித்தைவென்று இலக்குமணன் மீண்டுவருவதைக் காணுதல்.

வரதன்போய் மறுகா நின்ற [1]மனத்தினன் மாயத் தோனைச்
சரதம்போர் வென்று மீளுந் தருமமே [2]தாங்க வென்பான்
விரதம்பூண் [3]டுயிரி னோடுந் தன்னுடை மீட்சி நோக்கும்
பரதன்போன் றிருந்தான் றம்பி வருகின்ற பரிசைப் பார்த்தான்.

(இ - ள்.) மிகவும் கலங்காநின்ற மனத்தையுடையவனும், 'தருமதேவதை தாங்க மாயத்தையுடையவனை இந்திரசித்தைநிச்சயமாக [தவறாமல்] போரில் வென்று மீளுவான்' என்று எண்ணியிருப்பவனும், விரதத்தைமேற்கொண்டு தன்னுடைய உயிருடனே [யாதோரிடையூறுமின்றி] மீட்சியையே யெதிர்பார்த்திருக்கும் பரதனைப் போன்று (இலக்குமணன்வென்று மீண்டுவருவதை எதிர்பார்த்து) இருந்தவனுமான இராமன், தம்பிவருகின்ற தன்மையைக்கண்டான்; (எ - று.)— வரதன் - இராமன். போதல் - மிகுதல்.—பி-ம்:—[1]மன்னன்மா, மன்னுமா. [2]தாங்குகென்பான். [3]உய்வனோடும். (௩௧௩௭)

௬௫.—இலக்குமணனைக் கண்ட இராமன் கண்ணீர்பெருக்கியவருணனை.

வன்புலங் கடந்து மீளுந் தம்பிமேல் வைத்த மாலைத்
தன்புல நயன மென்னுந் தாமரை சொரியுந் தாரை

அன்புகொ [1]லழுக ணீர்கொ லானந்த வாரி யேகொல்
[2]என்புக ளுருகிச் சோருங் கருணைகொ லி[3]யார தோர்வார்.

(இ - ள்.) பகைவனிடத்துச்சென்று வென்றுமீளுகின்ற தம்பிமேல் வைத்த தன்பொறியாகிய நயனமென்கின்ற தாமரை ஒழுங்காகச் சொரியும் நீர்த்தாரையானது,--அன்பினால் பெருகியதோ? அழுகையால் நேர்ந்த கண்ணீர்கொலோ? ஆநந்தப்பெருக்கோ? என்புகள்உருகிப் பெருகுதற்குக்காரணமான கருணையின்பெருக்கோ? அதனைஅறிந்து சொல்வார் யாவர்? (எ - று.)

இலட்சுமணனிடத்து இராமபிரான் பேரன்புஉடையவனாதலா லும், பிரிந்தாரைக் கூடுமிடத்துப் பிரிவுத்துயரம் தோன்றுதலும் மகிழ்ச்சிதோன்றுதலும் இயற்கையேயாதலாலும், இராமபிரான் கருணை மூர்த்தியாதலாலும் அப்பிரானுடைய கண்ணீரை 'அன்புகொல்' முத லியவாகக் குறித்தார்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:---[1]கழிக ணீர்கொல். [2]என்புற. [3]யாரேதேர்வார். (௩கரு௩அ)

௯௯.—இராமபிரானதுதிருவடிகளில் இந்திரசித்தின்தலையைச் சமர்ப்பித்தல்.

[1]விழுந்தழி கண்ணி னீரு முவகையுங் களிப்பும் வீங்க, எழுந் தெதிர் [2]வந்த வீர னிணையடி முன்ன ரிட்டான், [3]கொழுந்தெழுஞ் செக்கர்க் கற்றை [4]வெயில்விட வெயிற்றின் [5]கூட்டம், அழுந் துற [6]மடித்த பேழ்வாய்த் தலை[7]யடி யுறையொன் றாக.

(இ - ள்.) கண்களினின்று இழிந்து பெருகுகின்ற நீரும் உவகை யும் களிப்பும் மிக எழுந்து எதிரேவந்த வீரனை ஸ்ரீராமபிரானுடைய இரண்டு திருவடிகளின்முன்னே, ஜ்வாலைதோன்றுகின்ற செவ்வானத் தையொத்த மயிர்க்கற்றையின்தொகுதி ஒளிவிட, பற்களின் தொகுதி அழுந்தும்படி மடித்த பிளவுபட்ட வாயையுடைய இந்திரசித்தின் தலையை ஒப்பற்ற பாதகாணிக்கையாக அமையவைத்தான், (இலட் சுமணன்); (எ - று.)

வீங்க வந்தஎன்க. உவகை - மகிழ்ச்சி. களிப்பு-தான் செய்வது இன்னதுஎன்பது தெரியமுடியாதபடி தலைதடுமாறுதற்கேதுவாகிய மன நிலை. கோபக்குறியாகப் பல்லைக் கடித்த உதட்டுடனும் செம்பட்டமயி ருடனும் இந்திரசித்தின்தலை யுள்ள தென்பது, பின்னிரண்டடிகளில் விளங்கும்.பி-ம்:—[1]விழுந்திழி. [2]நின்ற.[3]கொழுந்தெரிசுடரின், கொழுந் தழிசுடரின். [4]குழாங்கொள. [5]ஈட்டம். [6]கடித்த. [7]உறையடி, அடியிறை.

௯௭.—அப்போதைய இராமபிரானுடைய மகிழ்ச்சி.

தலையினை நோக்குந் தம்பி கொற்றவை தழீஇய பொற்றோண், மலையினை நோக்கு நின்ற மாருதி வலியை நோக்கும், சிலையினை நோக்குந் தேவர் செய்கையை நோக்குஞ் செய்த, கொலையினை நோக்கு மொன்று முரைத்திலன் களிப்புக் கொண்டான்,

(இ - ள்.) தலையைப் பார்ப்பான்; தம்பியினுடைய வெற்றிமகள் தழுவிய பொற்றோளாகிய மலையை நோக்குவான்; எதிர்நின்ற மாருதியின் வலிமையை நோக்குவான்;(இலக்குமணனது)வில்லை நோக்குவான்; தேவர்களின்செய்கையை நோக்குவான்; தம்பிசெய்த இந்திரசித்தின் கொலையினை நோக்குவான்; (பின்பு) களிப்புக்கொண்டவனாய், ஒன்றும் உரையாதவனாயினான்; (எ - று.) (௩௧௪0)

சூஅ.—ஸ்ரீராமன்தாளில் இலட்சுமணன் வீழ்ந்துவணங்குதல்.

காள[1]மேகத்தைச் செக்கர் கலந்தெனக் கரிய [2]குன்றம், நாள்வெயிற் பரந்த தென்ன நம்பிதன் றம்பி மார்பில், தோளின்மே லுதிரச் செங்கேழ்ச் சுவடுதன் னுருவிற் றோன்றத், தாளின்மேல் வணங்கி னானைத் தழுவினன் [3]றனித்தொன் றில்லான்.

(இ - ள்.) தனிப்பட்டு(த் தனக்கு) உவமையாவதொருபொருளைப் பெறாதவனாய்க் குணபூர்ணனான இராமபிரான்,—(தன்) பாதங்களில் வணங்கினவனான தன் தம்பி இலட்சுமணனை,காளமேகத்தைச் செவ்வானம் கலந்ததுபோலவும் கரியகுன்றத்தில் காலை வெயிற்பரந்ததுபோலவும் (அவனுடைய)மார்பிலும் தோளின்மேலும் பரந்த உதிரத்தின் செந்நிறச்சுவடு தன்னுருவிலே காணப்பட, தழுவிக்கொண்டான்; (எ - று.)

அரக்கரோடு பொருது வென்றுவந்த இலட்சுமணனுடைய மார்பிலும் தோளிலும் படிந்திருந்த இரத்தக்கறையானது அழுந்தத்தழுவிய ஸ்ரீராமபிரானுடைய திருமேனியிற்படியவே,அத்திருமேனி காளமேகத்திற் கலந்த செக்கரையும் கரியகுன்றத்திற் பரந்த நாள்வெயிலையும் போன்று தோன்றிற்றென்க. பரம்பொருளான திருமாலால் வடிவம் உருவம் படைக்கலம் முதலியனவெல்லாம் அடியார்பொருட்டுக்கொள்ளப்பட்டனவே என்ற நூற்கொள்கைபற்றி 'தனித்தொன்றில்லான்' என்றாரெனினும் பொருந்தும். தனித்தொன்றில்லான் நம்பி, தன்தம்பி தாளின்மேல் வணங்கினானை, மார்பில் தோளின் மேல் உதிரச்செங்கேழ்ச்சுவடுகாளமேகத்தை ...என்னத் தன்னுருவில் தோன்றத் தழுவினன் என்க.—பி-ம்:—[1]மேகத்திற். [2]குன்றின். [3]தழிசொன்றில்லான். (௩௧௪௧)

வேறு.

சூகூ.—இராமன் இலட்சுமணனைப் புகழ்தல்.

கம்ப மதத்துக் களியானைக் காவற் சனகன் பெற்றெடுத்த, கொம்பு மென்பா லினிவந்து குறுகி னா[1]ளென் றகங்குளிர்ந்தேன், வம்பு செறிந்த மலர்க்கோயின் மறையோன் படைத்த மாநிலத்தில், தம்பி யுடையான் பகையஞ்சா னென்னு மாற்றந் தந்தனையால்.

(இ - ள்.) கட்டுத்தறியிற்கட்டப்படுகின்ற மதக்களிப்புக்கொண்ட யானைச்சேனையாலாகிய காவலையுடைய சனகன் பெற்றெடுத்த கொம்பு போன்ற சீதையும் இனி என்னிடம் வந்து குறுகினவளாவ ளென்று மனங் குளிர்ந்தேன்; மணம் நிரம்பிய தாமரைமலரை(த் தன்)வாழிடமாக

வுடைய பிரமதேவன் படைத்த பெருநிலத்தில் 'தம்பியுடையான் பகைக்குஅஞ்சான்' என்ற சொல்லை நிலைநிறுத்தினாய்; (எ - று.)

தம்பியாகிய உன்னைப் பெற்றதனாலன்றோ இந்திரசித்தை இப்போது வெல்ல, இனி இராவணனை வெல்வது அருமையன்று என்ற கருத்துத் திட்பமாக உண்டாயிற்றென்றவாறு. 'தம்பியுடையான் படைக்கஞ்சான்' என்ற பழமொழியைப் பெய்து கூறியிருத்தலால், இச்செய்யுள்-உலகவழக்குநவிற்சியணியாம். இச்செய்யுள், சில பிரதிகளிலில்லை. பி - ம்:—[1]நன்றெனக். (௩௧௪௨)

வேறு.

எ௦.—இராமபிரான் இலட்சுமணனிடத்துப் போன்பினால் அவனுடற்புண்களை யாற்றிப் போக்குதல்.

தூக்கிய தூணி வாங்கித் தோளொடு [1]மார்பைச் சுற்றி
வீக்கிய கவச பாச [2]மொழித்தது [3]விரைவி னீக்கித்
தாக்கிய பகழிக் கூர்வாய் தடிந்தபுண் டழும்பு மின்றிப்
போக்கினன் றழுவிப் பல்காற் பொற்றடந் தோளி னொற்றி.

(இ - ள்.) (தோளிற்) கட்டிய தூணீரத்தை (அப்பால்) வாங்கி, தோளுடனே மார்பைச் சுற்றிக் கட்டியுள்ள கவசக் கட்டையவிழ்த்து அதனை விரைவிற் கழற்றி, மோதிய அம்புகளின் கூரிய வாய் வெட்டியதனாலான புண்களை, பலமுறைதழுவி அழகியபெரிய தோளினாலொற்றித் தழும்பு மில்லாதபடி போக்கினன், (ஸ்ரீராமன்); (எ - று.) பி-ம்:—[1]மார்பிற். [2]விசித்தது. [3]விரகின். (௩௧௪௩)

எக.—இராமன் விபீடணனைப் புகழ்தல்.

ஆடவர் திலக நின்னா [1]லன்றிக லனும னென்னும்
சேடனா லன்று [2]வேறோர் தெய்வத்தின் சிறப்பு மன்று
வீடணன் றந்த [3]வென்றி யீதென [4]விளம்பி மெய்ம்மை
ஏடவி ழலங்கன் [5]மார்ப னிருந்தன னினிதி னிப்பால்.

(இ-ள்.) இதழ்விரியப்பெற்ற மாலையையணிந்த மார்பனான ஸ்ரீராமன்,—(இலட்சுமணனை நோக்கி), 'ஆடவரிற் சிறந்தோனே! (இப்போது தோன்றிய)இந்தவெற்றியானது,உன்னாலன்று;வலிமையையுடைய அநுமானென்கிற சிரேட்டனா லன்று: வேறானதெய்வத்தின் மகிமையினாலு மன்று; விபீஷணன் கொடுத்த வெற்றி(யாகும்)' என்று உண்மையைச் சொல்லி,இங்குஇனிது இருந்தனன்; (எ - று.)—அங்கு இராவணன் இந்திரசித்து இறந்ததையறிந்து புலம்புவதைக் கூறப்போகின்றாராதலின், 'இப்பால் இனிதினிருந்தனன்'என்றார். பி-ம்:---[1]அன்றிந்த. [2]மற்றோர். [3]வெற்றி.[4]விளம்பும். [5]மார்பரிருந்தனர். (௩௧௪௪)

ஸ்ரீ வான்மீகத்தில் நிதும்பலையாகப்படலம் இந்திரசித்துவதைப்படலம்என்ற இவற்றிலுள்ள சரிதம் கூறியவகை வருமாறு:—'நிகும்பிலையில் ஹோமத்திற்குமுயன்று அதனை நிறைவேற்றாமலும் நிகும்பிலையென்ற

ஆலமரத்தைச்சேராமலும் இருக்கும்போது, எவன் உன்னை யெதிர்த்து வருத்துவானோ, அவன் இந்திரசத்துருவான உன்னை வதிப்பான்' என்று அந்த இந்திரசித்துக்குப் பிரமன் வரந்தந்துள்ளான்: ஆகையால், இலக்குமணனை இப்போது ஏவுக'என்று விபீஷணன் ஸ்ரீராமனை வேண்டிக்கொண்டதும், அப்பிரான், இந்திரசித்தின் இயல்பைஎடுத்துரைத்து, 'வானரசைனியங்களோடும் விபீஷணதியரோடும் அந்த இந்திரசித்தை வெல்லுமாறு செல்லுக'என்று இளையபெருமாளை யேவினன். இளையபெருமாள் போர்க்கோலங்கொண்டு புறப்படுகையில், வானரசைனியங்களும் உடன்சென்றன: கரடிச்சேனைகளும் உடன் சேர்ந்தன. அச்சேனைகளுடனே வெகுதூரங்கடந்து சென்று இலட்சுமணன், விபீஷணனோடும் அநுமான் அங்கதன் என்பவர்களோடும் இருந்து நிகும்பலையைக் காவல்செய்யும் அரக்கச்சேனையைக் கண்டனன். அப்போது விபீஷணன் இலட்சுமணனைநோக்கி, 'இந்த அரக்கப் பெருஞ்சேனையை வானரரும் அழிக்கட்டும்: நீயும் இதனைப் பிளந்தாயாயின், இந்திரசித்து புலப்படுவான்: அவன் தான் தொடங்கிய சடங்கைமுடித்து நிகும்பலையென்னும் ஆலமரத்தைச் சேருமுன் அவனைக் கொன்றிடவேண்டும்: பிறகுகொல்ல முடியாது'என்றனன். அந்தவிபீஷணனது மொழிப்படியே வானரர்களும்இலக்குமணனும்பொரலாயினர். அப்போது இந்திரசித்து,தன்படை பகைவரால் வருத்தப்படுவதுகேட்டுத் தொடங்கிய சடங்கு முடியுமுன்னே சினங்கொண்டு அரக்கத்துணைவரோடு போர்க்குஎழுந்து, அனுமான் அரக்கர்களை உருமாய்த்துக் கொண்டிருத்தலைக் கண்டு, அவனைநோக்கிச் சென்றனன்.

அப்போது விபீஷணன் சேய்மையிலுள்ள இந்திரசித்தை இலட்சுமணனுக்குச் சுட்டிக்காட்டி, 'இவன் நிகும்பலையென்ற ஆலமரத்தினடியைச்சேர்ந்து பூதங்கட்குப் பலிகொடுத்துப் பொரவருவானாயின், யாவர்கண்ணுக்கும் புலப்படானாகையால், அங்குச்சேர்வதற்குமுன் அவனைக்கொல்வாய்' என்று அந்த நிகும்பலையென்ற ஆலமரத்தண்டை இட்டுக்கொண்டு போயினன். இலக்குமணன் அங்குநின்றிருக்கையில், இந்திரசித்துப் போர்க்கோலங்கொண்டு இலட்சுமணனுக்குப் புலப்பட்டனன். இலட்சுமணன் அவனைநோக்கி 'போர்தருக' என்ன, இந்திரசித்து அங்கு விபீஷணன் இருப்பதுகண்டு அவ்விபீஷணன்செயலைப் பலபடியாகக் கண்டித்துக்கூறினன். விபீஷணன் அவற்றுக்குத் தக்க சமாதானங்களைக் கூறி, 'நீ விரைவில் இலட்சுமணனாலிறப்பாய்' என்றனன்.

அப்பால் அனுமான்தோளில் விளங்கும் இலக்குமணனைக் கண்டு, இந்திரசித்து,'முன்னர் இராப்போரில் நீவிர் அடிபட்டுவீழ்ந்ததை மறந்திட்டீர்போலும்' என்பது முதலாகப் பலவாறு வீரவாதங்கூற, இலக்குமணன் 'கள்ளன்போல மறைந்துபொருத அதனைக்குறித்துத் தற்புகழ்ச்சிசெய்வதிற் பயன் என்ன? வல்லாயாயின் நேர்நின்று பொருக'என்ன, அப்போது இருவர்க்கும் மும்முரமான போர் நடக்கலாயிற்று. அப்

போரில் இலட்சுமணனது அம்பால் இந்திரசித்து முகவொளி குறைந் தானாக, விபீஷணன் அதனைச் சுட்டிக்காட்டி, 'இவன் தோல்வியுற்றா னென்று தெரிகின்றது: இவனைக் கொல்ல விரைந்து முயல்க'என்ன, கடுமையான அம்புகளை இலட்சுமணன் விடுக்க, அரக்கன் முகூர்த்த நேரம் மூர்ச்சையடைந்திருந்தான்.பின்பு தெளிந்து,முன் தான் செய்து காட்டிய பராக்கிரமச்செயலை மெச்சி வீரவாதங்கூறி,அம்புகளைவிடுத்து, விபீஷணனிடத்துச் சினமும் பரபரப்பும் அதிகரித்தமையால் அவன் மீதும் நூறுபாணங்களை விடுத்தனன். அப்போது இலட்சுமணன் புன்சிரிப்புச்செய்து,'உன்னுடையபாணங்கள் உறுதியற்றவையாதலால் வருத்தப்படுத்தாமல் இனியனவாக மேல்விழுகின்றன: சூரர் இங்ஙனம் பொரார்' என்றுசொல்லி, வலிமையுள்ள பாணங்களை யிழுத்துவிட, அதனால் இந்திரசித்தின்கவசம் பொடியாகி வானத்தினின்று நட்சத்தி ரம்விழுவதுபோல உதிர்ந்தது: இந்திரசித்து உக்கிரங்கொண்டு பல பாணங்களைத்தூக்க, இலட்சுமணன் கவசமும் முறிந்துவிழுந்தது. இங்ஙனம் வெகுநேரம்கழிந்தும் வெற்றிதோல்வியின்றி, இருவரும் அம்புகளையும் அஸ்திரங்களையும்விடுவதும் எதிரிவிடுவனவற்றைத் தடுப் பதுமாக இருந்தனர்.

இவ்வாறு நேரம்கழிவதுகண்டு விபீஷணன் மந்திரிமாரோடு தானும் போரிற்புகுந்து வானரர்களைப் புகழ்ந்து உற்சாகமூட்ட, வான ரர் போரிற் கிளர்ச்சிகொண்டனர். ஜாம்பவான் தன் சேனையுடன் கூடி யவனாகி, அரக்கச்சேனையோடு கடுமையாகப் பொருதனன். அநுமா னும் சாலமரத்தைக்கொண்டு பல்லாயிரமரக்கரைத் தாக்கினன்.

விபீஷணன்மேல் அம்பெய்த இந்திரசித்தோ இலட்சுமணனையே எதிர்த்துப் போயினன். அவ்விருவர்க்கும் வெற்றிதோல்வியின்றி மிக்க கடும்போர் நிகழ்ந்ததாக, அதுகண்டு இருடியர் அஞ்சி 'உலகங் கட்கு மங்களமுண்டாகுக'என்று வாழ்த்தினர்: போர்காணுந் தேவ கணத்தாரும் அஞ்சி விலகினர். அப்போரில் இலட்சுமணன் இந்திரசித்தின் தேர்ப்பாகனுடைய சிரத்தை யறுத்து வீழ்த்த, இந்திர சித்து தானே தேரைச் செலுத்தியவண்ணம் பொரலாயினன். எதிரி தேரையோட்டுஞ் சமயந்தோறும் இலட்சுமணன் அவனைத் தாக்கவே, இந்திரசித்து போர்ச்செருக்கு ஒழிந்து வருந்தினான்: வானரயூதபதிகள் இலக்குமணனைப் புகழ்ந்தனர்.அப்போது ப்ரமாதி சரபன் ரபசன் கந்த மாதனன் என்னும் வானரவீரர் நால்வரும் இந்திரசித்தின் தேர்க்குதி ரைகள் நான்கின்மேற்பாய்ந்து அவைகளைக்கொன்று பெருந்தேரையும் முறித்தனர். பதாதியான இந்திரசித்து கூரியஅம்புகளை யெய்தவண் ணம் நெருங்கிவர, இலட்சுமணன் தன்அம்புகளால் தடுத்திட்டான்.

இங்ஙனம் போர்நிகழ்கையில், அரக்கர்களும் தந்தலைவனை இந் திரசித்தைக் கவிந்துகொண்டு அவனுக்குப் பக்கபலமாக இருந்தனர். அப்போதுஇந்திரசித்துஅரக்கர்களைப் புகழ்ந்து'இந்தத்திசையெல்லாம்

இருள்மூடிக்கொண்டிருத்தலால், நிகழ்வதின்னதென்பது புலனாகா திருக்கின்றது. இங்கு நீவிர் எதிராளிகளுடன் போர்புரிந்துகொண் டிருப்பின், நான் இலங்கைசேர்ந்து வேறொருதேரின்மீது ஏறிக் கொண்டுவருவேன்' என்று சொல்லி, அவர்கள் அங்ஙனமே புரிய வானரர்களை யேமாற்றி இலங்கைசேர்ந்து திவ்யமானதேரொன்றின் மீது வல்லமையுள்ள பாகனோட்டிவர மீண்டுவந்துசேர்ந்தான்: அது கண்ட இலட்சுமணன்முதலியோர் அவ்விந்திரசித்தினுடையதிறமை யை வியந்தனர். அப்பால் இந்திரசித்து பெருஞ்சினங்கொண்டு ஓயாமல் அம்புஎய்து வானரர்களைக்கொல்லவே, வானரர்கள் அஞ்சி இலட்சு மணனைச் சரணமடைந்தனர். பிறகு, இலட்சுமணன் கடுஞ்சினங் கொண்டு அம்பெய்து அவனது விற்களைத்துணித்துக் கவசத்தையும் பிளந்தான். இங்ஙனம் இலட்சுமணன் இந்திரசித்து விடுக்கும் அம்பு கட்குப் பின்வாங்காது வெகுகடுமையாகத் தன் வீரியத்தைக்காட்டிக் கொண்டு பலஅரக்கர்களையும்எய்து பாகனையும் வீழ்த்தினான். இந்திர சித்து வேறொருவிற்கொண்டு இலக்குமணன்மீது அம்புதொடுத்து அவனது கவசத்தைப் பிளக்கப்பார்க்க, அது அபேத்ய கவசமாயிருந் ததுகண்டு அவன்நெற்றியின்மீது அம்புதொடுத்தான். இவ்வாறு போர்நிகழ்கையில், இந்திரசித்து விபீஷணன்மீதும் வானரர்மீதும் அம் புகளைத் தூவ, விபீஷணன் தன்கதாயுதத்தால் அவன்தேர்க்குதிரை களைப்புடைத்து வீழ்த்தினான். சாரதியையும் குதிரையையு மிழந்த தேரி னின்று இந்திரசித்து கீழேகுதித்து அத்தேரிலுள்ள சக்தியென்னும் படையையெடுத்து விபீஷணன்மீது எறிய, இலட்சுமணன் இடையே அதைப் பத்துச்சுக்கலாகுமாறு துணித்திட்டான். இந்திரசித்து சீறி யமாஸ்திரத்தை எடுத்துவிட, குபேரன் ஸ்வப்நத்திலே தனக்குக் கொடுத்திருந்த அஸ்திரத்தை இலக்குமணன் தொடுக்க, இரண்டும் மோதிக் கீழ்விழுந்தன. இருவரும் தமதுஅஸ்திரங்கள் பழுதுபட் டமைக்கு நாண, இலட்சுமணன் வாருணாஸ்திரத்தை விட, அரக்கன் ரௌத்ராஸ்திரத்தினால் அதனைத் தடுத்திட்டு, ஆக்நேயாஸ்திரத்தைத் தொடுக்க, இலக்குமணன் சூரியாஸ்திரத்தினால் தடுத்திட்டான். தன் அஸ்திரம் பழுதுபடவே, கதம்விஞ்சிய அரக்கன் ஆஸுராஸ்திரத்தை விடுக்க, இலட்சுமணன் மாஹேஶ்வராஸ்திரத்தினால் அதனைத் தடுத் திட்டான்; இவ்வண்ணம் அவ்விருவருடைய போரும் ஆச்சரியமாக இருந்தது. இருடியர்முதலியோர், 'இலட்சுமணனுக்கு வெற்றியுண் டாகுக' என்று வாழ்த்தினர். அப்பால் இலட்சுமணன் மிகச்சிறந்த அம்பு ஒன்றையெடுத்து வில்லிலேப்பூட்டி ஐந்திராஸ்திரத்தை அபிமந் திரித்து 'ஸ்ரீராமன் தருமஸ்வபாவனும் சத்தியசந்தனும் ஆண்மையில் தன்னொப்பாரில்லாதவனுமாயின், கணையே! இவனைக் கொல்க' என்று சொல்லிவிடுத்தனன்: அந்தக்கணை அந்தஇந்திரசித்தினுடைய தலையைத் துண்டித்துத் தரையில்வீழ்த்தியது. அதுகண்டு வானரர்முதலியோர் பெருமகிழ்ச்சிகொண்டு கொக்கரித்தனர்: சாம்பவான்முதலிய பலர்

இலட்சுமணனைப் புகழ்ந்தனர்: தேவர்கள் பூமாரிபெய்தனர்: அந்தர துந்துபி முழங்கிற்று. சிலதேவர்கள் தாமே போர்க்களத்தில் நேரே வந்துகண்டு இந்திரசித்து இறந்ததை நம்பினர்.

பிறகு இலட்சுமணன் இந்திரசித்தைவென்ற மகிழ்ச்சியுடனே உடலிற்பொத்திய பாணங்களாற் சோர்ந்து வானரர்கள்சூழ, அனுமான் மீதும் விபீஷணன்மீதும் ஊன்றியவண்ணம் போர்க்களத்தினின்று ஸ்ரீராமனிருக்குமிடத்துக்கு விரைந்துபோய்,அப்பிரானை வலஞ்செய்து வணங்கி அருகில்நின்று இந்திரசித்துமாண்டதைத் தெரிவித்தானாக, ஸ்ரீராமன் மனமுவந்து இலக்குமணனை நோக்கி, 'நீ இந்திரசித்தைக் கொன்றதனால், இனி இராவணனைக் கொன்று சீதையைமீட்டதாகவே நினைக்கின்றேன். இராவணனுக்குப் பெரிய பற்றுக்கோடாக இருந்த அவன்மகன் மூன்றுஅகோராத்ரங்களிற்பொருது கொல்லப்பட்டானன்றோ? விபீஷணனும் அனுமானும் இந்தப்போரில் மிக்க திறமையைக் காட்டியுள்ளார்' என்றுகூறி, அவனை மடியிலிருத்தி உச்சிமோந்து உடலெல்லாம் கணைகளாற்பொத்துண்டு புண்பட்டிருப்பது கண்டு மிகவருந்திக் கையினால்தடவிக்கொடுத்து,சுடேணனென்பவனையழைத்து,'நீ சிகிச்சைசெய்வதில் வல்லவனாதலால்,இந்தஇலக்குமணனையும் விபீஷணனையும் மற்றும் கணையாற் புண்பட்ட வானரர்களையும் பிணி நீங்கித்தந்நிலையினராகுமாறுசெய்க' என,அவனும் ஓஷதியொன்றை இலட்சுமணனதுமூக்கில்வைத்து மோக்கச்செய்தனன்: அம்மாத்திரத்தால் அவ்விலக்குமணனுடைய உடலிற்பொத்துண்டிருந்த சல்லியங்களெல்லாம்நீங்கி வேதனையுந்தீர்ந்து புண்களும் உலர்ந்திட்டன: இவ்வண்ணமே அனைவரையும் சொஸ்தராக்கினன். யாவரும் புண்ணொழிந்து இன்னிலையையடைந்து இந்திரசித்துமாண்டமைக்குமனமுவந்திருந்தன ரென்பதாம்.

இந்திரசித்துவதைப்படலம் முற்றிற்று.

---

## உ௮-ஆவது இராவணன்சோகப்படலம்.

இராவணன் இந்திரசித்துமாண்டதையறிந்து துயரமுற்றதைக் கூறும் படலமென்பது, பொருள். சில ஒற்றர் இந்திரசித்துமாண்டதும் அறிதிற் போர்க்களத்தைநீத்துச்சென்று இலங்கையையடைந்து மிக்க நடுக்கத்தோடு இராவணனுக்குச் செய்தி யறிவித்ததும், அருகிலிருந்த தேவர்முதலியோர்'உலகுக்கு என்னநேருமோ!'என்றுஅஞ்சியொளிக்க, இராவணன் துயரத்துடனே சினம்விஞ்சச் செய்திசொன்ன ஒற்றர்களை ஒரேவீச்சாகவீசி, புதல்வனிடத்துவைத்திருந்த அன்பும் கொடுங்கோபமும் வெளித்தோன்ற இருபதுகண்களிலும் இரத்தக்கண்ணீர் தாரைதாரையாய்ப்பெருகப் பற்களைநெறுநெறென்று கடித்துக் கைகளால்மோதி வெகுவாய்ப் புலம்பி, போர்க்களத்து இறந்துவீழ்ந்துகிடக்கும் மகனுடலைக் காணப்புறப்பட்டுச்சென்று ரணகளங்குறுகி, ஒரு

நாளெல்லாம் களத்தில்வீழ்ந்துகிடக்கும் பரிமாமுதலியவற்றினுடல்களைப் புரட்டிப்புரட்டிப்பார்த்து முதலிற் கையைக் கண்டு பித்துப்பிடித்தவன்போன்று அந்தக்கையைத் தலையிற்கொள்வதும் பெருமூச்சுடனேமார்பிற்கொள்வதும் தன்கழுத்தில் வைத்துக்கொள்வதும் கண்களில் ஒற்றிக்கொள்வதுமாயிருந்து பிறகு தலையற்ற அவ்விந்திரசித்தினுடலைக்கண்டு அந்தப்பிணத்தின்மேல்விழுந்து ஒருவரும்பட்டிராத பெருஞ்சோகத்துடனே பலபடிபிரலாபித்துப் பின் அதனை எடுத்துக்கொண்டு இலங்கையிலே பெண்களின்திரள் கோவெனக்கதறியழுகின்ற அரண்மனையிற் போய்ச் சேர்ந்து, பின்பு 'இவ்வாறெல்லாம் நமக்குத் துயரம் நேர்ந்ததற்குக் காரணம், சீதையேயல்லவா! ஆகையால், அவளைக் கொன்றுவிடுகின்றேன்' என்று விரைய, அதுகண்ட மகோதரன் பலபடிகூற, இராவணன் சினந்தணிந்து இந்திரசித்தினுடலைத் தயிலத்தோணியிலிட்டு வைக்குமாறு நியமிக்க, பணியாளர் அவ்வாறே செய்தார்களென்ற செய்தி இப்படலத்திற் கூறப்படுகின்றது.

வேறு.

க.—இராவணனிடத்தில் இந்திரசித்து இறந்தசெய்தியைச்சொல்லத் தூதர்ஓடுதல்.

[1]ஓத ரோதன வேலை [2]கடந்துளார்
[3]பூத ரோதரம் புக்கெனப் [4]போர்த்திழி
சீத ரோதக் குருதித் [5]திரையொரீஇத்
தூத [6]ரோடினர் தாதையிற் சொல்லுவான்.

(இ - ள்.) தூதர் - ஒற்றர்கள்,—தாதையின்-(இந்திரசித்தின்) தந்தையாகிய இராவணனிடத்தில், சொல்லுவான் - (புதல்வனான இந்திரசித்து இறந்ததைச்) சொல்லும்பொருட்டு,—போர்த்து இழி - (போர்க்களமெங்கும்) போர்த்துக்கொண்டு இழிகின்ற, சீதம் ரோதம் குருதி திரை-குளிர்ச்சியையும் கரையையுமுடைய இரத்தக்கடலை, ஒரீஇ-நீங்கி, ஓதம்-பெருவெள்ளமாகத்திரண்ட, ரோதனம்-அழுகையைக்கொண்ட, வேலை-அரக்கராகிய கடலை, கடந்து உளார்-கடந்தவராகி,பூதர உதரம் புக்குஎன - மலையின் உள்ளிடத்திற் புகுந்தாற்போல, (லங்காநகரின் கோபுரவாயிலிற்புகுந்து), ஓடினர் - ஓடினார்கள்; (எ - று.)

இந்திரசித்து இறந்தசோகத்தாற் புலம்பும் பெருந்திரளான அரக்கரை அத்தூதர் கடந்துசென்றமையை, 'ஓதரோதன வேலை கடந்துளார்' என்றார். இலங்கையின் கோபுரவாயில் "மேருவை நிறுத்தி வெளிசெய்ததுகொல்" என்றவாறு மேருமலையைத் தொளைசெய்து வைத்தாற்போல் இருத்தலால், இராவணனிடத்துச் செல்வதற்காகத் தூதர்கள் அவ்வாயிலைக்கடந்தமையை 'பூதரோதரம் புக்கென' என்று உபமானமுகத்தால் விளக்கினார். அமர்க்களத்தைக் கடக்குமிடத்து இரத்தவெள்ளத்தைத் தூதர்கடந்துசென்றன ரென்பது,மூன்றாமடியிற் குறிக்கப்பட்ட பொருள். இரத்தம் உடலிலிருந்துவெளிப்படுமிடத்து

வெம்மையாயிருக்குமாயினும் பிறகு குளிர்ந்துவிடுமாதலால், 'சீதக்குருதி' என்றனர். இச்செய்யுளில், திரிபுஎன்ற சொல்லணிகாண்க. ஓதம் - வெள்ளம். ரோதனம் - அழுகை. பூதரோதரம்-குணசந்திபெற்ற வடமொழித்தொடர்; பூதரம்-பூமியைத்தாங்குவது என மலைக்குக் காரணக்குறி. ரோதம் - கரை. திரை - கடலுக்கு, ஆகுபெயர். குருதித்திரைக்குக் கரை, நாற்புறத்திலுங் குவிந்த சவங்களென்னலாம். ரோதநம், ரோதம் என்று வடமொழியிற் பிறந்தவண்ணமாகவே கூறினர்: 'ராசமாபுரி' என்றதுபோல. பி-ம்:—[1]ஓதரோதமர், ஓதரோதரம், ஓதரோதமா, ஓதரோதந்தம். [2]கடந்துராய்ப். [3]பூதரோதனம், பூதரோதந்தரம். [4]போக்கறுஞ், போக்கலும், போர்த்துறும், பொய்த்துவ. [5]திசை. [6]ஓதவெங்காலிற்றுணைந்துளார், ஓடினர் தாதையிற்சொல்லுவார். ஒருபிரதியிற் கீழ்ப்பாடலோடு படலம் முடிக்கப்படாமல், இந்தப்பாட்டின்முன் இராவணன்சோபம் என்று எழுதியுள்ளது. (௩௧௬)

உ.—தூதர் இராவணனைக் கிட்டுதல்.

அன்றி லங்கரும் பேடைக ளாமென
முன்றி லெங்கு [1]மரக்கியர் [2]மொய்த்தழ
இன்றி லங்கை யழிந்ததென் றேங்குவார்
சென்[3]றி லங்கையிற் றாதையைச் சேர்ந்துளார்.

(இ - ள்.) அழகிய கரிய அன்றிற்பேடைகள்போல வீட்டின் முன்னிடமெங்கும் அரக்கமாதர்கள் நெருங்கி யழுதுகொண்டிருக்கையில் (அத்தூதுவர்), 'இன்று இலங்கையழிந்துவிட்டது' என்று ஏங்குபவர்களாய், விளங்குகின்ற வேற்படையைக்கொண்ட இந்திரசித்தின் தந்தையான இராவணனைச் சென்றுசேர்ந்தவரானார்; (எ - று.)

நான்காமடியில்,' அயில்' என்பது - 'ஐயில்என்று போலிபெற்று வந்தது. பி-ம்:—[1]அரக்கரை. [2]மொய்த்தெழ, மொய்த்தொடி. [3]இலங்கையினிப் பகைசெந்துளார், இலங்கையிற் றாதையிற்சேர்ந்துளார். ()

௩.—தூதர் இந்திரசித்து இறந்தசெய்தியை இராவணனிடம் தெரிவித்தல்.

பல்லும் வாயு மனமுந் தம் பாதமும்
நல்லு யிர்ப்பொறை யோடு நடுங்குவார்
இல்லை யாயின [1]னுன்மக னின்றெனச்
சொல்லி னார்பயஞ் சுற்றத் [2]துளங்குவார்

(இ - ள்.) (அத்தூதுவர்), தம்முடைய பல்லும் வாயும் மனமும் பாதமும் சிறந்த உயிர்ச்சுமையோடு நடுங்கப்பெற்றவரும், அச்சஞ்சூழ்ந்துகொள்ள நிலைகலங்கியவருமாகி, 'இன்றைக்கு உன் மகன் இல்லையாயினன்' என்று (இந்திரசித்து இறந்தசெய்தியைச்) சொல்லினார்; (எ - று.) பி-ம்;—[1]நும். [2]தொடங்கினார், துளங்கினார். (௩௧௭)

௪.— ஆங்கிருந்த வானவர்முதலியோர் அதுகேட்டு 'இராவணன் என் செய்வானோ?' என்று ஓடியொளித்தல்.

மா[1]டி ருந்தவர் [2]வானவர் மாதரார்
[3]ஆட னுண்ணிடை யார்[4]மற்று மியாவரும்
வீடு மின்றிவ் வுலகென [5]விம்முவார்
ஓடி யெங்கணுஞ் சிந்தி [6]யொளித்தனர்.

(இ - ள்.) (அதுகேட்டு), இராவணன்பக்கத்தி லிருந்தவரான வானவர்களும், ஆடுந்தன்மையுள்ள நுண்ணிய இடையைக்கொண்டவரானமாதரார்களும் மற்றுமுள்ளாரும்,(இராவணனுடைய சினத்தினால்) இன்றுஇவ்வுலகமானது அழிந்துவிடுமென்று புலம்புபவராய், ஓடிஎங்கும் சிதறியொளித்துக்கொண்டனர்; (எ-று.)—பி - ம்:—[1]இருந்தனர். [2]மாதவர்வானவர், வானவர்மாதவர். [3]ஈடு, ஈடில். [4]மற்றியாவரும். [5]விம்மினார். [6]ஒளித்ததால். (௩௧௪௮)

௫.—செய்திசொன்ன தூதரை இராவணன்வெட்டித் தான் கீழ்விழுதல்.

சுடர்க்கொ ழும்புகை தீவிழி தூண்டிடத்
[1]தடற்று வாளுரு வித்[2]தரு தூதரை
மிடற்று [3]வீச லுற்[4]விழுந் தானரோ
கடற்[5]பெ ருந்திரை போற்கரஞ் [6]சோரவே.

(இ - ள்.) கோபாக்கினியின் கொழுவியபுகையைத் தீவிழிக்கின்ற கண்கள் வெளிப்படுத்தவும், (இராவணன் தனது)வாட்படையை உறையினின்று உருவி (யெடுத்துத் துயர்ச்செய்தியைக்)கொணர்ந்த தூதுவர்களைக் கழுத்தினிடத்தில் வீசி, பெரியகடலலைகள்போற் கைகள் சோர்ந்திட வீழ்ந்திட்டான்; (எ - று.)—தீவிழி-நெருப்புப்பொறி புறப்பட விழிப்பது; கண். பி-ம்:—[1]தடக்கை. [2]தருந். [3]வீசலுற்றான். [4]விழுந்தார். [5]கருந்திரை. [6]சேரவே. (௩௧௪௯)

௬.—புத்திரசோகத்தால் இராவணனுக்குச் சினத்தீ மிக்குத்தோன்றுதல்.

வாய்ப்பி றந்து [1]முயிர்ப்பின் [2]வளர்ந்தும் வான்
[3]காய்ப்பு றுந்தொறுங் கண்ணிடைக் காந்தியும்
போய்ப்[4]பி றந்திவ் வுலகைப் [5]பொதியும்வெந்
தீப்பி றந்[6]துள தின்றெனச் செய்ததால்.

(இ - ள்.) (புத்திரசோகமானது),—'வாயினிடத்தில் பிறந்தும், பெருமூச்சில் வளர்ந்தும், மிகுதியாகக் காய்த்தல்பொருந்துந்தோறுங் கண்ணினிடையில் விளங்கியும் பிறந்துபோய், இவ்வுலகை மூடுகின்ற கொடிய (சினத்)தீயானது இன்று இராவணனுக்குத் தோன்றியுள்ளது' என்னுமாறு செய்தது; (எ - று.)

புத்திரசோகத்தால் இராவணனுக்கு மிகுந்த சினம் தோன்றிற்றென்றவாறு. சினத்தீத் தோன்றியது - வாயைக்கடித்தல், பெருமூச்சு

விடுதல், உறுத்துப்பார்த்தல் முதலிய செயல்களாற் புறத்துவிளங்குவ தால், 'வாய்ப்பிறந்துமுயிர்ப்பின்வளர்ந்தும் கண்ணிடைக்காந்தியும் உலகைப்பொதியும் தீ' யென்றார். பி-ம்:—[1]உயிர்ப்பு, உயிர்ப்பும். [2]வளர்ந்தும்வன், வளர்ந்துவான். [3]காப்பிறந்தறுவான். காப்புறுந்தொறு. [4]பிறங்கிவ்வுலகம். [5]பொதிய. [6]உளவன்றெனச்செய்கையால், உளதின்றெனச்சென்றதால். (௩௧௫0)

எ.—இதுவும் அது.

படம்பி றங்கிய பாந்தளும் பாரும்பேர்ந்து
இடம்பி றங்கி[1]யலம்[2]பெயர்ந் தீடுற
உடம்பி றங்கிக் [3]கிடந்துழைத் தோங்குதீ
விடம்பி றந்த கடலென [4]வெம்பினான்.

(இ-ள்.) (தன்) உடல் தளர்ச்சியுற்று(த் தரையிற்) கிடந்துவருந்துதலால், (ஆயிரம்) படங்களோடுவிளங்குகின்ற ஆதிசேஷனும் (அவனால் தாங்கப்படுகின்ற)பூமியும் (தாம் இருக்குமிடத்தைவிட்டுப்) பெயர்ந்து ஒலித்து அலமந்துவலிகுலைய,(இராவணன்), வெளிப்பட்டோங்குகின்ற கோபத்தீயினால் விடந்தோன்றிய கடல்போல வெதும்பினான்; (எ-று.) இடம்பேர்ந்துபிறங்குதல் - இடம்விட்டுப்பெயர்ந்து ஒலித்தல். பி-ம்:—[1]வலம்.[2]பெயர்த்தீண்டுற.[3]கிடந்துதைத்து,கிடந்துமைத்து.[4]விம்மினான்.

அ.—இராவணன் கண்ணீர்பெருக்குதல்.

திருகு வெஞ்சினத் தீநிகர் சீற்றமும்
பெருகு காதலுந்[1] துன்பும்[2]பிறங்கிட
விருப தென்னு மெரிபுரை கண்களும்
உருகு செம்பென வோடிய [3]தூற்றுநீர்.

(இ - ள்.) (யாவும்) நிலைகெடுதற்குக்காரணமான தீயையொத்த கொடியகோபமென்றுசொல்லப்படுகின்ற சீற்றமும் மேன்மேல் பெருகுகின்றஅன்பும் துன்பமும் விளங்கித்தோன்றியதனால், இருபதுஎன்று சொல்லப்படுகின்ற(இராவணனுடைய)எரியையொத்த கண்களினின்று (மேன்மேற்)சுரக்கின்ற அழுகைக்கண்ணீரானது, உருகினசெம்புபோல் ஓடலாயிற்று; (எ - று.)

பகைவனிடத்துச் சீற்றம், மகன்மீதுள்ள அன்பு, அவனையிழந்ததனாலுண்டானதுன்பு என்ற இவற்றால் இராவணனுடைய கண்களிலிருந்து கண்ணீர் இரத்தம்போற் பெருகலாயிற் றென்க.பி-ம்:—[1]அன்பும். [2]பிழிந்திட, பிறழ்ந்திட. [3]ஊன்றின, ஊறின. (௩௧௫௨)

௯.—சினத்தினால் இராவணன் பற்களைக் கடித்துத் தரையில் மோதுதல்.

கடித்த பற்குலங் [1]கற்குலங் [2]கண்ணற
இடித்த காலத் துருமென வெங்கணும்
அடித்த [3]கைத்தல மம்மலை யாழிநீர்
[4]பொடித்த வாய்தொறும் பொங்கின மீச்செல.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (இராவணன்நெறுநெறென்று)கடித்தபற்களின்கூட்டத்தினல், மலைக்கூட்டத்தின்மீது கண்ணேட்டமில்லாமல் இடித்தமழைக்காலத்து இடிபோல எங்கணும் பேரொலியுண்டாக; (அம்மலையில் இராவணன்)மோதியகைத்தலத்தினல்[கைத்தலத்தினல்மோத] பொடியாய்விட்ட அம்மலையிடந்தோறும் கடலின்நீர்கள் கிளர்ந்துமேற்செல்லவும்,—(எ-று.)—"மைந்தவோவெனும்" என அடுத்த கவியில் முடியும்.

இலங்கை கடலிடையிலுள்ள தீவு ஆதலால், தான்உள்ளதிரிகூடாசலத்தில் இராவணன் கையினல்மோதுகையில் மோதப்பட்ட மலையினிடமெல்லாம் பொடியாய்விடவே,கீழிருந்த ஆழிநீர் கிளர்ந்துபொங்கி மேற்செல்வதாயிற்றெனஉயர்வுநவிற்சியணிபடக் கூறினர்.இனி,குளகமாகக்கொள்ளாமல், மீச்செலப் பொங்கின என்று முடிக்கவுமாம். பி-ம்:—[1]கைக்குலம். [2]கண்ணுற. [3]கைத்தலத்து. [4]வெடித்த. (௩௧௫௩)

க0.—இதுமுதல் நான்குகவிகள் - இராவணன்புலம்புதலைத் தெரிவிக்கும்.

**மைந்த வோவெனு மாமக னேயெனு**
**மெந்தை யோவெனு [1]மென்னுயி ரேயெனும்**
**முந்தி னேனுனை நா[2]னுள னேயெனும்**
**வெந்த புண்ணிடை வேல்பட்ட [3]வெம்மையான்.**

(இ - ள்.) (அப்போது) வெந்த புண்ணினிடையில் வேல்பட்டாற்போன்ற கொடுந்துன்பத்தை யடைந்தவனான இராவணன்,—மைந்தனே! ஓ!! என்பான்; சிறந்தமகனே! என்பான்; எந்தையோ! என்பான்; என்னுயிரே! என்பான்; உனக்கு முந்தினவனாகிய நான் உயிரோடுஇருக்கின்றேனே!! என்பான்; (எ - று.)

சீதையைப்பெறவேண்டுமென்று தான் செய்துவந்த முயற்சி பலியாமையோடு மிகச்சிறந்த புதல்வனாகிய இந்திரசித்து இறந்த துயரையும் அடைந்தவனான இராவணனை 'வெந்தபுண்ணில் வேல்பட்ட வெம்மையான்' என்றார். இச்செய்யுள், அடுத்த பாடலின்பின் சிலபிரதியில் உள்ளது. பி-ம்:—[1]என்மகனே. [2]உளனே, உளனே. [3]வெம்மையால். ()

கக. **புரந்த ரன்பகை [1]போயிற்றன் றோவெனும்**
**அரந்தை [2]வானவ ரார்த்தன ரோவெனும்**
**கரந்தை சூடியும் [3]பாற்கடற் கள்வனும்**
**[4]நிரந்த ரம்பகை நீங்கின ரோவெனும்.**

(இ - ள்.) இந்திரனதுபகை போயிற்றன்றோ! என்பான்; (இதுவரையில் நம்மால்) துன்பத்தையடைந்தவரான வானவர்கள் (மகிழ்ச்சியால்)ஆரவாரித்தாரோ! என்பான்; கரந்தப்பூவைச்சூடிய சிவனும் பாற்கடலில்ஒளித்துக்கொண்டுள்ள வஞ்சனைக்குணத்தையுடைய திருமாலும் நிரந்தரமாகத் தம்பகை நீங்கப்பெற்றாரோ! என்பான்; (எ - று.)

சிலபிரதிகளில், இச்செய்யுளின் முதலிரண்டடிகள் தம்முள் மாறியுள்ளன. பி-ம்:—[1]போயினதோ. [2]வானரர். [3]கார்க்கடல். [4]நிரந்தவான் பகைநீக்கினரோ. (௩கருரு)

கஉ. நீறு பூசியு நேமியு நீங்கினார்
மாறு குன்றொடு வேலை மறைந்துளார்
ஊறு நீங்கின ராயுவ ணத்திறேனாடு
ஏறு மேறி யுலாவுவ [1]ரென்னுமால்.

(இ - ள்.) விபூதியைத்தரித்தவனான சிவபெருமானும் திருமாலும் (மாறுபட்டு) எதிர்நிற்பதினின்று நீங்கினவர்களாய், மலையோடு கடலில் மறைந்துளார்கள்,—(இப்பொழுது) இடையூறு நீங்கினவர்களாய்க் கருடப்பறவையோடு இடபத்தின்மீது ஏறி யுலாவுவார்கள் என்று சொல்லுவான்; (எ - று.)—ஊறு - அச்சமுமாம். 'நீறுபூசி' 'நேமி' என்று கூறியதற்கு எதிராக, 'உவணத்திறேனாடு', 'ஏறு'என்றது-எதிர்நிரனிறைப்பொருள்கோள். பி-ம்:—[1]சேயெனும். (௩கருசு)

கங. வான மானமும் வானவ ரீட்டமும்
போன போன [1]திசையிடம் [2]புக்கன
தான மானவை [3]சார்கிலர் [4]சார்குவ.து
ஊன [5]மானிடர் வென்றிகொண் டோவெனும்.

(இ - ள்.) வானவர்களின்கூட்டமும் (அவர்கள்ஏறிச் செல்லுகின்ற) வானத்திற்சஞ்சரிக்கவல்ல விமானங்களும், (இந்திரசித்துக்கு முன்னே எதிர்த்துநிற்கமாட்டாமல் அச்சத்தினால்) ஓடிப்போன ஓடிப்போன திக்குக்களில்தானே பதுங்கினவை, (இதுவரையில்) தமக்கு உரியனவான தானங்களிற் சேரமாட்டாதனவாயின: அவை, மீண்டு சேருவது தாழ்மையான மானுடரின் வெற்றியைக்கொண்டுதானோ? என்பான்;(எ-று.)—ஆனவை-அவை: தானமானவைஎன ஒன்றாகஎடுப்பினுமாம். மானம் - விமானமென்பதன்முதற்குறை. பி - ம்:—[1]திசையிடைப். [2]புக்கனர். [3]சார்கில. [4]சார்குவ. [5]மானிடர்கள், மானுடன். ()

கச.—இதுவும், அடுத்த கவியும் -
இராவணனுடைய துயரநிலையைக் கூறும்.

கெட்ட தூதர் [1]கிளத்தின [2]வாறொரு
கட்ட மானிடன் கொல்லவென் காதலன்
பட்டொ ழிந்தன [3]னேயெனும் [4]பன்முறை
விட்ட ழைக்கு முழக்கும் வெதும்புமால்.

(இ - ள்.) 'தீமையையுடைய ஒற்றர் சொன்னவாறு கஷ்டப்படுகின்ற ஒருமனிதன் கொல்ல எனது புதல்வன் உயிரொழிந்து அழிந்தனனே! என்பான்; பலமுறை குரல்விட்டுக் கூப்பிடுவான்; வருந்துவான்; (மனம்) வெதும்புவான், (இராவணன்); (எ-று.)—சிலபிரதியில், இச்செய்யுள்,"எழுமிருக்கும்"என்ற அடுத்த பாடலுக்குப்பின் உள்ளது. பி-ம்:—[1]கிளர்த்தின, கிளத்தினர். [2]போய். [3]ஓ. [4]பான்முறை. ()

௧௫. எழுமி ருக்கு [1]நடக்கு [2]மிரக்கமுற்று
அழும ரற்று [3]மயர்க்கும் [4]வியர்க்கும்போய்
விழும்வி ழிக்கு முகிழ்க்குந்தன் [5]மேனியால்
உழு[6]நி லத்தை யுருளும் புரளுமால்.

(இ-ள்.) (பின்னும் இராவணன் துயரமிகுதியால்)எழுந்திருப்பான்: உட்காருவான்: நடப்பான்: இரக்கங்கொண்டு அழுவான்:கதறுவான்: சோர்வான்: (உடல்)வியர்க்கப்பெறுவான்: எழுந்துபோய் விழுவான்: (கண்ணை)விழித்துப் பார்ப்பான்:(பின்பு)மூடிக்கொள்ளுவான்:தன்உடலாற் பூமியையுழுவான்; புரண்டுஉருளுவான்; (எ-று.)—பி-ம்:—[1]இரைக்கும். [2]இரக்கும். [3]பரக்கும், உயிர்க்கும். [4]அழைக்கும், வியக்கும். [5]மேனியை. [6]நிலத்தையுறழும். (௩௧௫௧)

௧௬.—இதுமுதல் ஏழுகவிகள்—இராவணன்சிரங்கள் புலம்பியதைக் கூறும்.

ஐய னேயெனு மோர்[1]சிரம் யானினம்
[2]செய்வ னேயர சென்னுமங் கோர்[1]சிரம்
கைய னே[3]னுனைக் காட்டிக் [4]கொடுத்தநான்
உய்வ னேயென் றுரைக்குமங் கோர்[1]சிரம்.

(இ-ள்.) அப்பொழுது (இராவணனுடைய பத்துச்சிரங்களில்) ஒருசிரமானது, ஐயனேஎன்னும்: அங்கு ஒருசிரமானது, யான் இன்னும் அரசுசெய்வேனே என்னும்: அங்கே ஓர்சிரமானது, உன்னைப் பகைவர்கையிற் காட்டிக்கொடுத்த அற்பனாகிய யான் உய்வேனோ!என்னும்;(எ-று.)—'அங்கு'என்பதை அசையாகக்கொள்ளினுமாம். பி-ம்:—[1]தலை. [2]செய்யனேயரசே யெனும். [3]கையனே. [4]கொடுத்தயான். ()

௧௭. எழுவிற் கோல மெழுதிய [1]தோள்களால்
தழுவிக் கொள்கலை [2]யென்னுமங் கோர்தலை
உழுவைப் போத்தை யுழைபுயி [3]ருண்பதே
செழுவிற் சேவக னேயெனு மோர்[4]சிரம்.

(இ - ள்.) ஓர்தலையானது, '(சந்தனக்குழம்புகளாற்) கோலமெழுதப்பெற்ற இரும்புத்தூணையொத்ததோள்களினால் (என்னைத்) தழுவிக் கொள்ளாமலிருக்கின்றாயே!' என்றுசொல்லும்; ஒருதலையானது, 'வளப்பமுள்ள வில்வீரனே! புலியேற்றை மான் உயிருண்பது தகுதியோ!' என்றுகூறும்; (எ - று.)—அலங்காரமாகத் தோள்களிற் கோலமெழுதுத லுண்டு: அன்றி, மகளிரை யணையும்போது அவர்கள்மார்பில்அணிந்த கோலம் பதிந்திருப்பதைக் கூறியதுமாம். இனி, 'எழுவிற்கோல மெழுதிய தோள்களால்' என்பதற்கு-போரில் மூண்டெழுகின்ற வில்லிலிருந்து புறப்பட்ட அம்புகளாற் பகைவர்கள் மேனியிலெழுதுகின்ற (வலிமைபெற்ற) தோள்களால் எனினுமாம்: கோல்-அம்பு: அம் - சாரியை. பி - ம்:—[1]கைகளால். [2]ஓவெனும். [3]உண்பதோ. [4]தலை. (௩௧௫௩)

௧௮. நீலங் காட்டிய கண்டனு நேமியும்
ஏலுங் [1]காட்டி னெறிந்த படையெலாந்
[2]தோலுங் காட்டித் துரந்தனை மீண்டுநின்
ஓலங் காட்டிலை யோவெனு மோர்[3]சிரம்.

(இ - ள்.) ஒருதலையானது,—'நீலநிறத்தைக்கொண்ட கண்டத்தை யுடையனான சிவபெருமானும், சக்கரபாணியாகிய திருமாலும் எதிர்க்கின்ற தொகுதியாயிருந்த படைகளுக்கெல்லாம் தோல்வியைக் காட்டி, (அவர்களைத்) துரத்திவிட்ட நீ மீண்டும் உன்குரலைக் காட்டாமற் போனாயோ!' என்றுகூறும்; (எ-று.)—காட்டின் - காடுபோல: தொகுதியாக என்றபடி. தோல்-தோல்வி: முதனிலைத்தொழிற்பெயர். துரந்தனை-துரந்தநீ: வினையாலணையும்பெயர். இச்செய்யுள், சிலபிரதிகளில் "காகமாடும்" என்ற செய்யுளின்பின் உள்ளது. பி - ம்:—[1]காட்டில். [2]கோலம். [3]தலை. ஒருபிரதியில் இரண்டு மூன்றும் அடிகள் 'கோலங்காட்டித் துரந்த படையெலாம், ஏலுங்காட்டி லெறிந்தனையீண்டநின்' என்று உள்ளன. (௩௧௬௨)

௧௯. [1]துஞ்சி னாய்கொ றுணைபிரிந் தேனெனும்
வஞ்ச மோவெனும் வாரலை யோவெனும்
நெஞ்சு நோவ நெடுந்தனி யேகிடந்து
அஞ்சி னே[2]னென் றரற்றுமங் கோர்தலை.

(இ - ள்.) அங்கே ஒருதலை,—'நீ இறந்திட்டாயோ! (நான்) துணையைப் பிரிந்திட்டேனே!' என்று கூறும்; (உனக்கு நேர்ந்த இவ்விபத்து) வஞ்சகமோ! என்று கூறும்; இனித் திரும்பிவரமாட்டாயோ! என்று கூறும்; (நான்) தன்னந்தனியே கிடந்து அஞ்சினேன்' என்று நெஞ்சு நோவக் கதறும்; (எ-று.)—இச்செய்யுள், சிலபிரதிகளில் "சேலியற்கண்" (௨௧) என்ற செய்யுளின்பின் உள்ளது: சிலபிரதிகளில் "காகமாடு" (௨0) என்றதன் பின் உள்ளது: சிலபிரதிகளி லில்லை: ஆயினும், "ஐயனே" (௧௬) என்றசெய்யுள் தொடங்கி, பத்துத்தலைகளும் புலம்புதலைக் கவி கூறுகின்றாராதலின், அந்தச்செய்யுளில் மூன்றுதலைகளும் அடுத்த "எழுவில்" என்றசெய்யுளில் இரண்டுதலைகளும் புலம்புதல் கூறப்பட்டனவாதலாலும், பிறகு ஒவ்வோர் தலையே கூறிவருவதனாலும், மற்றையைந்து தலைகட்கு ஐந்துசெய்யுட்கள் வேண்டுமென்க. பி-ம்:—[1]துஞ்சும்போது. [2]என்னருமகனேயெனும். (௩௧௬௩)

௨0. காக மாடு களத்திடைக் [1]காண்பனோ
[2]பாக சாதனன் மௌலியொ டும்[3]பறித்து
[4]ஓகை [5]மாதவ ருச்சியின் வைத்தநின்
வாகை நாண்மல ரென்னுமற் றோர்தலை.

(இ-ள்.) பின்னும்ஒருதலையானது,—'இந்திரனுடைய (வெற்றிமாலையை அவன்) கிரீடத்துடன் பறித்ததனால்மகிழ்ச்சிகொண்ட மாதவர் (உனது) உச்சியிலேவைத்த உன்னுடைய அன்றுமலர்ந்த வெற்றிமலர்மாலையைக் காகங்களாடுகின்ற போர்க்களத்திடைக் காண்பேனோ? (இது தக்க

தோ?)'என்னும்;(எ-று.)-மாதவரென்பது-பிரமதேவரைக்குறிக்குமென்னலாம்.நீ இந்திரனை வென்றமையால்மிகமகிழ்ந்து பிரமதேவன் உன்உச்சியிலே உனதுவெற்றிக்கு அறிகுறியாக அந்தஇந்திரனது வாகைமாலையைச் சூடினனே, அதனை இன்று காகங்கள் சஞ்சரிக்கின்ற களத்திற் புரளக் காணுமது தக்கதோ!!என இரங்கு மென்றவாறு.பி-ம்:—[1]காண்பனே, காண்பனேல். [2]பாகசாதன். [3]பொறித்து. [4]ஓதை, ஓகம். [5]மாதவவுச்சியின்வைத்தநின், மாதவர்வைத்தெனவுச்சியில், மாதவர்வைத்தவனுச்சியில். ஒருபிரதியில் இச்செய்யுள் "கூற்றம்" (உஉ) என்ற பாடலின் பின்உள்ளது. (ருகசுச)

உக. சேலி யற்[1]க ணியக்கர்தந் தேவிமார்
[2]மேலி னித்தவிர் கிற்பர்கொல் [3]வீரநின்
[4]கோல விற்குரல் கேட்டுக் குலுங்கித்தந்
தாலி யைத்தொட லென்னுமற் றோர்தலை.

(இ-ள்.) மற்றோர்தலையானது,—'வீரனே! சேல்மீனையொத்த கண்களையுடைய இயக்கமனைவியர் உன்னுடைய அழகியவில்லொலியைக் கேட்டு நடுங்கித் தம்தாலியைத் தொடுதலை யினிமேல் தவிர்வார்களோ!' என்று சொல்லும்; (எ - று.)—இதற்குமுந்தி இந்திரசித்து வில்லையொலிப்பிக்கும்போது 'தங்கணவரிறத்தலினால் தந் தாலிக்கு எங்குப் பங்கம் வருகின்றதோ?' என்ற கருத்தினால் தம்தாலியைத் தொட்டுப் பார்ப்பர் இயக்கிய ரென்க. பி-ம்:—[1]கண்ணியர்தேவர்தேவியர்,கணித்தேவர்தந்தேவியர். [2]மேல் விதிர்க்கப்படாார்கொல். [3]வீரனுன், வீரனுங். [4]கோலுவில். (ருகசுரு)

உஉ. [1]கூற்ற முன்னெதிர் வந்துயிர் கொள்வதோர்
ஊற்றந் தானுடைத் தன்றெனையும் [2]மொளித்து
ஏற்ற வெவ்வுல குற்றனை யெல்லையில்
ஆற்ற லாயென் [3]றுரைக்குமங் கோர்தலை.

(இ - ள்.) அங்கே ஒருதலையானது, எல்லையில்லாத வல்லமையுள்ளவனே! உன்னெதிரேவந்து யமன் உயிர்கொள்ளுவதற்குரிய ஒப்பற்ற உறுதியைத் தான் உடையதன்று; (அவ்வாறு இருக்கவும்), என்னையும்ஒளித்து (உனக்கு) ஏற்ற எந்தஉலகத்தை யடைந்தாயோ?என்று சொல்லும்; (எ - று.)—பி-ம்: —[1]சீற்றம். [2]ஒழித்து. [3]அழைக்கும். ()

உங.—இராவணன் மகனை நாடப் போர்க்களங் துறுகல்.

இன்ன வாறழைத் தேங்குகின் றானெழுந்து
உன்னு [1]மாத்திரத் தோடின னூழிநாட்
பொன்னின் வானன்ன [2]போர்க்களம் புக்கனன்
[3]நன்ம கன்றன தாக்கையை நாடுவான்.

(இ - ள்.) இவ்வாறு கதறிக்கொண்டு ஏங்குகின்றவனான இராவணன் நினைக்குமளவிற்குள் எழுந்தோடி, ஊழிக்காலத்திலே செம்பொன்னின் நிறத்தைக் கொண்ட வானத்தை [செவ்வானத்தை]ப்

போன்ற [இரத்தத்தாற் செந்நிறமடைந்துள்ள] போர்க்களத்தில் தன் சிறந்தமகனுடைய உடலைத் தேடும்பொருட்டுப் புகுந்தான்; (எ - று.) —பி-ம்:—[1]மாத்திரைத்தேரடித் தாழிநாள். [2]பொற்களம். [3]தன்மகன்.

௨௪.—தேவர்முதலியோர் இராவணனைத்தொடர்ந்து 'என்னவிளையுமோ?' என இரங்குதல்.

[1]தேவ ரேமுத லாகிய சேவகர்
[2]யாவ ரும்முட னேதொடர்ந் தேகினர்
மூவ கைப்பே [3]ருலகின் முறைமையும்
[4]ஏவ தாகுமென் றெண்ணி யிரங்குவார்.

(இ - ள்.) தேவர்முதலாகிய பணியாளர்கள் யாவரும், இராவணனுடன் தொடர்ந்துசென்றவர்களாய், 'மூவகைப்பெரிய உலகின்முறைமையும் யாதாகுமோ?' என்றெண்ணி யிரங்குவா ராயினர்; (எ - று.)—[1]தேவர்கள். [2]எவரும். [3]உலகமுறைமையும், உலகும்முறைமையும். [4]யாவதாகுமின்றென்ன விரங்குவார். (௩௧௬௮)

௨௫.—களத்தில் இராவணனைக் கண்ட பேய்முதலியவற்றின் செயல்.

அழுத வாற்சில [1]வன்பின போன்றடி
தொழுத வாற்சில தூங்கின வாற்சில
உழுத வானைப் பிணம்புக் கொளித்தவாற்
[2]கழுதும் புள்ளு மரக்கனைக் காண்டலும்

(இ-ள்.) (அந்தப்போர்க்களத்தில்)இராவணனைக் கண்டவுடனே,— பேய்களும்(கழுகுமுதலிய) பறவைகளும் என்ற இவற்றிற் சில அன்பையுடையனபோல அழுதன; சில அடிதொழுதன; சில சோர்ந்தன; சில போரில்முயன்றுபொருத யானைகளின் பிணங்களிற் புகுந்து ஒளிந்துகொண்டன; (எ - று.)—பேய்களும் பறவைகளும் பிணத்தைத்தின்ன வந்தவை. பி-ம்:—[1]அன்பினர். [2]கழுகும். (௩௧௬௯)

௨௬.—பிணங்களினிடையில் இராவணன் தன்மகனுடலை ஒருநாள்முழுவதுந் தேடிப்பார்த்தல்.

கோடி கோடிக் குதிரையின் கூட்டமும்
ஆடல் வென்றி [1]யரக்கர்த மாக்கையும்
ஓடை [2]யானையுந் தேரு [3]முருட்டினன்
நாடினன்றன் மக[4]னுட லெல்லாம்.

(இ-ள்.) இராவணன் தன்மகனுடலைத் தேடியவனாய்ப் பலகோடிக் கணக்கான குதிரைக்கூட்டங்களையும், வலிமையையும் வெற்றியையுமுடைய அரக்கரின் உடலையும், நெற்றிப்பட்டமணிந்த யானைகளையும், தேர்களையும் ஒருநாளெல்லாம் புரட்டிப்புரட்டிப்பார்த்தான்; (எ-று.)— பி-ம்:—[1]அரக்கரது. [2]ஒண்கரி. [3]உழக்கினன். [4]உடனுடவொன். (௩௧௭௦)

௨௭.—இராவணன் இந்திரசித்தின்கையைக் காண்டல்.

[1]மெய்கி டந்த விழிவழி [2]நீருக
நெய்கி டந்த கனல்[3]புரை நெஞ்சினன்

மொய்கிடந்த சிலையொடு மூரிமாக்
கைகி டந்தது கண்டனன் கண்களால்.

(இ - ள்.) தன்னுடம்பிலிருந்த கண்களிலெல்லாம் நீர்சிந்த, நெய் பெய்யப்பெற்ற நெருப்பையொத்த [கோபாக்கினி மிக்குத்தோன்றுகிற] நெஞ்சையுடையவனான இராவணன்,—வலிமைபொருந்திய சிலையுடனே கிடந்ததாகிய வலியபெரிய (துண்டுபட்ட இந்திரசித்தினது) கையைக் கண்களாற் கண்டான்; (எ-று.)—இதுவரையில் இவ்வாறான கோலத்தைப் பாராத கண்ணாற் பார்க்கநேர்ந்ததுபற்றி 'கண்களாற் கண்டான்' என்றார். பி-ம்.—[1]கிடந்து, கடந்து. [2]நீர்விழ. [3]பொரு. ()

உ௮.—இராவணன் இந்திரசித்தின்கையை யெடுத்துத் தலைமேல் வைத்துக்கொள்ளல்.

பொங்கு தோள்வளை யுங்[1]கணைப் புட்டிலோடு
அங்க தங்களு மம்பு [2]மிலங்கிட
வெங்க ணாக மெனப்[3]பொலி மெய்க்கையைச்
செங்கை யாலெடுத் தான்சிரஞ் சேர்த்தினான்.

(இ - ள்.) கிளர்ந்து தோன்றுகின்ற தோளில் வளைந்துள்ள அம்புப்புட்டிலோடு, தோள்வளைகளும் அம்பும் விளங்கிக்கொண்டிருக்க, கொடுங்கண்ணையுடைய சருப்பம்போல விளங்குகின்ற (இந்திரசித்தின்) மெய்ம்மையான கையை (இராவணன் தன்) சிவந்தகையினாலெடுத்துத் தலைமீது சேர்த்துக்கொண்டான்; (எ - று.)—'வளையும்' - பெயரெச்சம். 'மெய்க்கை' - இதற்குமுன் பகைவரையழிப்பதில் தவறாதகை. பி-ம்:—[1]விரற், பொழி. [2]அலங்கிட, அலம்பிட. [3]பொலிகின்றதைச், பொலிமெய்யதைச். (௩௧௭௨)

உ௯.—அப்போதைய இராவணன் செயல்கள்.

கற்றிண் மார்பிற் றழுவுங் கழுத்தினிற்
சுற்றுஞ் சென்னியிற் [1]சூட்டுஞ் சுழல்கணோடு
ஒற்று [2]மோந்திட் டுருகு [3]முழைக்குமால்
முற்று நாளின் விடுநெடு மூச்சினான்.

(இ-ள்.) (அப்போது) ஆயுள்முடிகின்றகாலத்தில் [மரணகாலத்தில்] விடுகின்ற பெருமூச்சைக் கொண்டவனான இராவணன்,—(கண்ட இந்திரசித்தின்கையை) மலைபோன்ற வலிய (தனது) மார்பிலே தழுவிக்கொள்வான்; கழுத்தினிற் சுற்றிக்கொள்வான்; சென்னியிற் சூடிக்கொள்வான்; சுழல்கின்ற (தன்) கண்களில் ஒற்றிக்கொள்வான்; மோந்துபார்த்து உருகுவான்; (இவ்வாறு) வருத்தத்தைக் காட்டுபவனானான்; (எ - று.)—பி-ம்:—[1]சூழும். [2]சோருமுருகும், ஓர்ந்திட்டுருகும், மோந்துள்ளுருகும். [3]உளைக்குமால். (௩௧௭௩)

௩௦.—இந்திரசித்தினுடலைக் கண்டு இராவணன் விழுந்து புலம்புதல்.

கைகண் டான்பின் கருங்கடல் [1]கண்டென
மெய்கண் டானதன் மேல்விழுந் தானரோ

பெய்கண் டாரை யருவிப் [2]பெருந்திரை
[3]மொய்கண் டார்திரை வேலையை மூடவே.

(இ-ள்.) கையைக்கண்டவனாகிய இராவணன்,—பின்பு கரியகடலைக்கண்டாற்போல அவ்விந்திரசித்தின்உடலைக் கண்டவனாய், பொழிகின்ற கண்ணீர்த்தாரையாகிய அருவியினாலியன்ற பெருங்கடலானது போர்க்களத்தைக் கண்ட வீரர்களாகிய அலைபொருந்திய கடலை மூட, அவ்வுடலின்மேல் விழுந்தான்; (எ-று.)—பி-ம்:—[1]போன்றவம், கண்டன. [2]பெரும்புனல். [3]உய்கண்டார்திரைவேலையினோட்டுவான், பொய்கண்டார்திரைவேலையிற்போக்குவான், ஒய்கண்டாரில்லைவேலையினோடுவான். (௩௧௭௪)

௩௧.—இரண்டுகவிகள்—இராவணனுடைய சோகச்செயல்களைத் தெரிவிக்கும்.

அப்பு மாரி [1]யழுந்திய [2]மார்பைத்தன்
அப்பு மாரி [3]யழுதிழி [4]யாக்கையின்
அப்பு [5]மாரி னணைக்கு மரற்றுமால்
அப்பு மானுற்ற தியாவருற் றாரரோ.

(இ-ள்.) மரித்தலைச்செய்கின்ற அம்புகள் அழுந்திய (இந்திரசித்தின்) மார்பை, (இராவணன்),—அழுதலினால் கண்ணீர்மழை யிழிந்த தன் உடலிலே ஒற்றிக்கொள்வான்; மார்பில் அணைத்துக்கொள்வான்; வாய்விட்டுக் கதறுவான்; அந்த(இராவணனென்கின்ற) புமான் அடைந்த வருத்தத்தை (இதுவரையில்) யாவர்அடைந்தார்? (எ-று.)—முதலடியில், அப்பு - அம்பு என்பதன் வலித்தல். மாரி - மரித்தல். இரண்டாமடியில், அப்பு-அப்என்ற வடசொல்லின்விகாரம்: நீரென்றுபொருள்; இங்குக் கண்ணீர். மூன்றாமடியில் 'மார்'-மார்புஎன்பதன் மரூஉ. புமாந் - புருஷன்: வடசொல். இச்செய்யுள் - யமகமென்னுஞ் சொல்லணியுடையது. பி-ம்:—[1]அழுத்திய. [2]மாரைத். [3]அழுந்திய, அழுத்திய. [4]யாக்கையன். [5]மார்பில். (௩௧௭௫)

௩௨. பறிக்கு மார்பிற் பகழியைப் பன்முறை
முறிக்கு மூர்ச்சிக்கு [1]மோக்கு முயங்குமால்
எறிக்கும் [2]வெங்கதி ரோடுல கேழையுங்
கறிக்கும் வாயிலிட் டின்றெனக் [3]காந்துமால்.

(இ-ள்.) (பின்னும் அவ்விராவணன்,இந்திரசித்தின்)மார்பிலுள்ள அம்புகளைப் பேர்த்தெடுத்துப் பலமுறை முறிப்பான்; மூர்ச்சிப்பான்; (அவ்வுடலத்தை) மோந்துபார்ப்பான்;தழுவுவான்; (இவன்), வீசுகின்ற உஷ்ணகிரணங்களைக்கொண்ட சூரியனோடு எழுலகங்களையும் இன்று வாயிலிட்டுக்கடிப்பானென்று (கண்டவர்) கருதும்படி கோபிப்பான்; (எ - று)—இராவணனுக்குக்கோபம் சோகத்தினொலெழுந்த தென்க. பி-ம்:—[1]ஏங்கும். [2]பைங். [3]காந்துவான். (௩௧௭௬)

௩௩.—இராவணனுடைய கோபத்தால் தேவர்முதலியோர் அடைந்த அச்சம்.

தேவ ரோடு முனிவருஞ் சீரியோர்
ஏவ ரோடு [1]முடன்றிரி கின்றிலர்
மூவ ரோடு முலகொரு [2]மூன்றுடன்
[3]போவ தேகொல் முனிவெனும் [4]பொம்மலான்.

(இ-ள்.) '(இவனுடைய)கோபமானது,—திரிமூர்த்திகளோடும் ஒரு மூன்றுலோகத்தோடும் போய்விடுவதோ?' என்று கொண்ட வருத்தத்தினால், தேவர்களுடனே முனிவர்களும் சிறந்தவரெவர்களோடும் உடன் திரியாதவராயினர்; (எ-று.)—'திரிமூர்த்திகளுடனே மூவுலகமும் இந்த இராவணன்சினத்தினால் அழிந்துவிடுமோ!'என்று வருந்தித் தேவர்முதலிய சிறந்தோர்பலரும் இராவணனுடையகோபத்திற்குஅஞ்சிவெளிவருதற்குப் பயந்து ஒளிந்துகிடந்தனரென்றபடி. பி - ம்:—[1]உடனறிகின்றவர், இடமின்றிநின்றவன், முனிவருகின்றிறம். [2]மூன்றொடும். [3]போவதேனும். [4]பொம்மலால், பொம்மலார். (௩௭௭)

௩௪.—இந்திரசித்தின்தலையைக் கண்டு இராவணன் வருந்தத் தொடங்குதல்.

கண்டி லன்றலை [1]காந்திய [2]மானிடன்
கொண்[3]டி றந்தன [4]னென்பது கொண்டவன்
புண்டி றந்தன [5]நெஞ்சன் பொருமலன்
விண்[6]டி றந்திட விம்மி யரற்றினன்.

(இ-ள்.) (இராவணன், இந்திரசித்தின்)தலையைக் காணாதவனாய்,—கோபித்து 'அந்தமானுடன் தலையைக்கொண்டு அகன்றான்'என்பதைக் கருதியவனாய், புண்திறந்தாற்போன்ற நெஞ்சையுடையவனும் பெருஞ் சோகத்தையுடையவனுமாகி, விம்மி, ஆகாசம் பிளந்துபோம்படி யரற்றத்தொடங்கினான்; (எ - று.)—இராவண னரற்றுதலை, மேல் ஐந்துகவிகளிற் காண்க. அம் மானிடன்என்றது-'அ மானிடன்'எனத் தொக்குவந்தது; இனி, 'காந்திய'என எடுப்பினுமாம். இறத்தல்-கடந்து போதல். பி - ம்:—[1]காதிய. [2]மானிடர். [3]அகன்றனன் இறந்தனர். [4]என்பதுங். [5]நெஞ்சம். [6]திறந்திற. (௩௭௮)

வே று.

௩௫.—இதுமுதல் ஐந்துகவிகள் - இராவண னாற்றுதலைத் தெரிவிக்கும்.

[1]நிலையு[2]மா திரத்து நின்ற யானையு நெற்றிக் கண்ணன்
மலையுமே [3]யெளிய வோநான் பறித்தற்கு மறுவின் மைந்தன்
தலையுமா ருயிருங் கொண்டா [4]ரவருட லோடுந் தங்கப்
புலையனே [5]னின்னு மாவி சுமக்கின்றேன் போனும் போனும்.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) நிலையாகவுள்ள திக்கில் நின்ற யானையும் நெற்றிக்கண்ணையுடையவனான சிவபெருமானுடைய கைலாசமலையுந் தானா, நான்

பறித்தற்கு எளியவாயின? (அற்பமனிதர்கள் நான் பறித்தற்கு எளிய ரல்லராய்விட்டாரோ!!) குற்றமற்ற(என்)மைந்தனது தலையையும் அரிய உயிரையும் கொண்டவரான அந்தப்பகைவர் உடலோடுந் தங்கியிருக்க, இழிகுணத்தையுடைய நான் இன்னும் ஆவியைச் சுமக்கின்றேன் போலும்போலும்; (எ - று.)

'பகைவரை யொழிக்கமாட்டாத நான் உயிர்வைத்துக்கொண் டிருப்பது தகுதியன் றென்பதைக் குறிப்பிக்க, 'சுமக்கின்றேன் போலும்போலும்' என்கிறான். பி-ம்:—[1]நிலையின். [2]மாத்திரத்து. [3]எளிய வாயான் மறித்தற்குமறுவில், எளியவோநான் மறிதற்கு மறிந்த, எளிய வென்றுன்மனிதர்க்குமறிந்த, எளியவென்றுமறித்தற்குமறித்த. [4]எனை வுடருங்கிகின்ற, எனவுடலோடுந்தாங்கிப், அவருடலோடுந்தாங்கிப், அவருடலோடுந்தாக்கப். [5]எனினும். (௩௧௭௬)

௩௬. எரியுண வளகை மூதூ [1]ரிந்திர னிருக்கை யெல்லாம்
பொரியுண வுலக மூன்றும் பொதுவறப் [2]புரந்தேன் போலாம்
அரியுணு மலங்கன் மௌலி [3]யிழந்தவென் மதலை யாக்கை
நரியுணக் கண்டே னுணி [4]ஞயுணு முணவு நன்றால்.

(இ - ள்.) (நான்) அளகையென்ற பழமையானஊரை நெருப்புண் ணவும், இந்திரனதுஇருக்கையான சுவர்க்கலோகமெல்லாம் (தீயின் வன்மையாற்) பொரிந்துவிடவும்(செய்து), உலகமூன்றையும் வேறொரு வர்க்கும் பொதுவாகாதபடி காப்பாற்றினேன்போலும்! வண்டுகளுண் கின்ற பூமாலையையணிந்த தலையையிழந்த என்புத்திரனது உடலை நரி யுண்கையிற் கண்டவனாகிய யான் உண்ணும் உணவைக்காட்டிலும் நாயுண்கின்ற உணவும் நல்லதாகும்; (எ - று.)

'என்னுடையபிழைப்பு நாய்ப்பிழைப்பினுங் கடைகெட்டது' என்று தன்னை இராவணன் நொந்தவாறு. வெறுப்பினாலும் இகழ்ச்சியினாலும் 'உலகமூன்றும் புரந்தேன்போலாம்' என்கிறான். பி-ம்:—[1]இந்திரர் இருக்கை. [2]புகுந்தேன். [3]என்மகனழிந்தயாக்கை. [4]நானுனுமுணர்வு.()

௩௭. பூண்டொரு பகைமேற் புக்கென் [1]புத்திர னோடும் போனார்
மீண்டிலர் விளிந்து வீழ்ந்தார் விரதிய ரிருவ ரோடும்
ஆண்டுள குரங்கு மொன்று [2]மமர்க்களத் தாரு [3]மின்னும்
மாண்டில ரினி [4]மற் றுண்டோ விராவணன் வீர வாழ்க்கை.

(இ - ள்.) (யுத்தசந்நாகத்தை) மேற்கொண்டு ஒருபகையின்மேற் (போர்செய்யப்)புகுந்து என்புத்திரனோடும் போனவர்கள்(எவரும்)மீளா தவராய் இறந்துவீழ்ந்தார்; அந்தப்பக்கத்திலுள்ள தவக்கோலம்பூண்ட இரண்டுமனிதருடனே போர்க்களத்திற்பொருந்தும் குரங்குகளில் இன்னும் யாரும் மாண்டிலர்; இராவணனுடைய வீரவாழ்க்கையைப் பற்றி இனி வேறு (கூறவேண்டியது) உண்டோ? (எ - று.)

என்பக்கத்தவராய்ச் சென்றவரெல்லாம் இறக்க,மாற்றார்பக்கத்து எவருஞ்சாகாமலிருக்கக் கண்டுகொண்டிருக்கின்ற நான் வீரனென்று

பேர்பூண்டு வாழலாமோ? என்வீரம் மிகஅழகிது!! என்று தன்னைப் பழித்தவாறு. 'இனிமற்றுண்டோ இராவணன் வீரவாழ்க்கை' என்பதற்கு- இனியும் இராவணனுக்கு வீரவாழ்க்கை யுண்டாகுமோ? உண்டாகாது என்று கூறுவாருமுளர். இது, தன்னைப்படர்க்கையாக வைத்துக்கூறியது. பி - ம்:—[1]புத்திரரோடும். [2]மாகளத்து.[3]இன்னம், வந்து. [4]வேறு. (௩௧௮௧)

௩௮. கந்தற்ப ரியக்கர் சித்த ரரக்கர்தங் கன்னி மார்கள், [1]சிந்தொக்குஞ் சொல்லி னாருன் றேவியர் திருவி னல்லார், வந்துற்றெங் கணவன் றன்னைக் [2]காட்டென்று மருங்கு வீழ்ந்தால், [3]அந்தொக்க [4]வரற்ற வோநான் கூற்றையு [5]மாடல் கொண்டேன்.

(இ - ள்.) கந்தருவர், இயக்கர், சித்தர், அரக்கர் ஆகிய இவர்களின் மகளிராய்ப் பண்ணையொக்குஞ் சொல்லையுடையவரான இலக்குமியைக் காட்டிலும் அழகிய உன்தேவியர் வந்து நெருங்கி 'எம்முடையக்கணவனைக்காட்டுவாய்' என்று சொல்லி என்னருகே வீழ்ந்தால், யமனையும் வெற்றிகொண்டவனாகிய நான்,—அவர்களுடனும் (உங்கள்கணவனை யமன் கொண்டுபோய்விட்டானென்றுசொல்லி) அரற்றுதலைச் செய்யவோ!கஷ்டம்!!(எ-று.)—என்று இந்திரசித்தை முன்னிலைப்படுத்திஇராவணன் புலம்பின னென்க. நான்காமடியில், 'அந்த' - ஹந்த என்ற வடசொல்லின்திரிபு. அந்த + ஒக்க = அந்தொக்க; தொகுத்தல்.பி-ம்:—[1]செந்தேற்குஞ், செந்தேங்குஞ், செந்தோங்குஞ். [2]காட்டொன்று. [3]ஐந்தொக்க. [4]அரற்றலோநான். [5]வெற்றி. (௩௧௮௨)

௩௯. சினத்தொடுங் கொற்ற [1]முற்ற விந்திரன் [2]செல்வ மேவ, நினைத்தது முடித்து நின்றே னேரிழை யொருத்தி [3]நீரால், எனக்குநீ செய்யத் தக்க கடனெலா [4]மேங்கி யேங்கி, உனக்குநான் செய்வ [5]தானே [6]னென்னின்யா [7]ருலகத் துள்ளார்.

(இ - ள்.) கோபத்துடனேநின்று வெற்றியை நிறைவேற்றவும் இந்திரசம்பத்தைப்பெறவும் (இவ்வாறு முன்பெல்லாம்) நினைத்ததை முடித்துநின்றேன், (யான்: இப்போது) நேர்மையான ஆபரணங்களையணிந்த ஒருபெண்ணின் பொருட்டாகஎனக்கு நீசெய்யவேண்டிய ஈமக்கடன்களையெல்லாம் மிக்கஇரக்கங்கொண்டு உனக்கு நான் செய்யுமவனானேன்; என்னைப்போன்றவர் உலகத்தில் யாரிருக்கின்றார்? (எ-று.)

"நீசெயக்கடவன கடன்கள் இரக்கமுற்றுனக்கவன்செய்யு,மென்றனனிளையோன்" என்று பிரமாத்திரப்படலத்தில் வந்தது, இங்கே கருதத்தக்கது.பி-ம்:—[1]முற்றி. [2]செல்வமேவி,செல்வன்றேவி.[3]நேரால், நின்றான். [4]இரங்கி. [5]என்னின். [6]எண்ணிலார். [7]உலகின். (௩௧௮௩)

௪0.—பலரும்புலம்ப, இராவணன் இந்திரசித்தினுடலுடன் இலங்கைக்குட் செல்லுதல்.

என்பன பலவும் பன்னி யெடுத்[1]தழைத் திரங்கி யேங்கி அன்பினுன் மகனைத் தாங்கி யரக்கிய ரரற்றி விழப்

பொன்புனை நகரம் புக்கான் கண்டவர் [2]புலம்பும் பூசல்
ஒன்பது திக்கு மற்றை யொருதிக்கு முற்ற தன்றே.

(இ - ள்.) என்பன பலவற்றையுஞ்சொல்லிக் குரலெடுத்துக் கூவி இரங்கி யேக்கமுற்று, அன்பினால் மகனைச் சுமந்து, அரக்கியர் வாய்விட்டுக் கதறிக்கொண்டுவிழ, பொன்னாலலங்கரித்துச்செய்யப்பெற்ற நகரத்திற் புகுந்தான்,இராவணன்:(அப்போது),கண்டவர்யாரும் புலம்புகின்ற ஆரவாரமானது, பத்துத்திக்கிலும் போய்ப் பொருந்தியது; (எ - று.)—பி-ம்:—[1]அமைத்து. [2]புலம்பப். (௩௧௮௪)

௬௧.—பலமாதரின் துயரச்செயல்.

கண்களைச் [1]சூல்கின் றாருங் கழுத்தினைத் [2]தடிகின் றாரும்
[3]புண்கொளத் திறந்து மார்பி [4]னீருளைப் போக்கு வாரும்
[5]பண்கள்புக் கலம்பு நாவை யுயிரொடு பறிக்கின் றாரும்
எண்களிற் [6]பெரிய வாற்றா ரிருந்துயர் [7]பொறுக்க லாற்றார்.

(இ-ள்.) தொகையில்மிக்க ஆறுபோன்ற மாதர்கள்,—(தங்கள்)கண்களைத் தோண்டுகின்றவர்களும், கழுத்தைவெட்டிக்கொள்பவர்களும், (மார்பிற்) புண்கொள்ளும்படி பிளந்து (அம்)மார்பின்மூலமாக ஈரலை வெளிப்படுத்துகின்றவர்களும், இராகங்கள் புகுந்துஒலிக்கின்ற நாவை உயிருடனே பறிக்கின்றவர்களுமாகி,(அப்போதுதமக்குநேர்ந்த)பெருந்துயரைப் பொறுக்கமாட்டாதவராயினார்; (எ - று.)

இந்திரசித்தினுடைய உடலுக்கு 'கடலை'கீழ் ௩௦ - ஆஞ்செய்யுளில் உவமைகூறியதனால், அவ்வுடலைச்சாரும் மகளிரை ஆறாகக் கொண்டாரென்னலாம். அவர்கள்பெருந்திரளினராயிருந்தமைபற்றி, 'எண்களிற் பெரிய' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பி-ம்:—[1]சூர்கின்றாரும். [2]கடிகின்றாரும். [3]புண்பட. [4]ஈரலைப்.[5]பெண்கள்புக்கிரங்கி....பிடுங்குவாரும். [6]பெரியரிந்த. [7]பொறுக்கிலாதார். (௩௧௮௫)

௬௨.—பெண்களின் கண்ணீர்வெள்ளம்.

மாதிரங் கடந்த [1]திண்டோண் மைந்தன்றன் மகுடச் சென்னி
[2]போதலைப் புரிந்த யாக்கை [3]பொறுத்தனன் [4]புகுதக் கண்டார்
ஓதநீர் வேலை யன்ன கண்களா லுகுத்த வெள்ளக்
காதனீ ரோடி யாடற் கருங்கடன் மடுத்த தன்றே.

(இ-ள்.) திக்குக்களெல்லாம்வென்ற திண்ணிய தோளைக்கொண்ட மைந்தனை இந்திரசித்தின் கிரீடமணிந்த தலை நீங்கிய உடலைச் சுமந்தவனாய் (இராவணன்)வருவதைக் கண்டவரான மகளிரின் வெள்ளமான நீரைக்கொண்டகடல்போற்பரந்த கண்களாற் சொரிந்ததும்,அன்பைத் தோற்றுவிப்பதுமான அழுகைநீர் வெள்ளமானது,—அலையாடுதலைக் கொண்ட கரியகடலை நிரப்பிற்று; (எ-று.)—போதலைப்புரிதல்-நீங்குதல். அன்றே-தேற்றம். பி-ம்:—[1]தோளான்வீரன். [2]போதலர்துறந்த, போதலாற்புரிந்த. [3]பொருதவன். [4]போதக், யோகக். (௩௧௮௬)

சங.—அரக்கியர்அழ, இராவணன் இந்திரசித்தினுடலைக்கொண்டு அரண்மனையிற் புகுதல்.

ஆவியி னினிய காத லரக்கியர் முதல்வ ராய
தேவியர் குழாங்கள் [1]சுற்றிச் சிரத்தின்மேற் றளிர்க்கை சேர்த்தி
ஓவியம் வீழ்ந்து வீழ்ந்து புரள்வன வொப்ப வொல்லை
கோவியல் கோயிற் புக்கான் குருதி[2]நீர்க் குமிழிக் கண்ணன்.

(இ - ள்.) இரத்தத்தைக்குமிழ்த்தலைக்கொண்ட கண்களையுடையவனான இராவணன்,—உயிரினும் இனிய அன்பைக்கொண்ட இராக்கத மகளிர் முதலோராகிய அவ்விந்திரசித்தின்மனைவியரின்கூட்டங்கள் சூழ்ந்துகொண்டு (தங்கள்) சிரத்தின்மேல் தளிர்போன்ற கைகளை வைத்தவண்ணம் சித்திரப்பதுமை தரையில்வீழ்ந்து வீழ்ந்து புரள்வனவற்றையொப்ப (ப் புரண்டுகொண்டிருக்க), விரைவாக அரசற்குஉரிய அரண்மனையிற் புகுந்தான்; (எ-று.)—தலையின்மேற் கையை வைத்துக்கொண்டிருத்தல்,சோகத்தைக் குறிப்பிக்கும்.பி-ம்:—[1]சுற்றச். [2]நீர்குழிய. ஒருபிரதியில் 'கோவியங்கோயில்புக்காள் குருதிநீர்க்குமிழிக்கண்ணாள்' என்று நான்காமடி. (௩கஅஎ)

சச,—மண்டோதரி வருதல்.

கருங்குழற் கற்றைப் பாரங் காறொடக் கமலப் பூவாற், குரும் பையைப் புடைக்கின் றாள்போற் கைகளான்[1]முலைமேற் கொட்டி, [2]அருங்கலச் சும்மை தாங்க வகலல்கு லன்றிச் சற்றே, [3]மருங் குலு முண்டோ வென்ன மயன்மகண் மறுகி வந்தாள்.

(இ - ள்.) மயன்மகளான மண்டோதரியானவள்,—தாமரைப்பூவி னாற் குரும்பையைப் புடைக்கின்றவளைப்போல(த் தன்) கைகளால் முலைமேற்புடைத்துக்கொண்டு, அருங்கலமாகிய மேகலாபரணத்தின் பாரத்தைத் தாங்குவதற்கு அகன்ற அல்குலேயல்லாமல் நுண்ணியதாகிய இடையும் இருக்கின்றதோ என்னுமாறு கரியகூந்தலின் பாரமாகிய தொகுதி காலைத்தீண்டவும், (ஒல்கியொசிந்தவண்ணம் துயரத்தாற்) கலங்கிவந்தாள்; (எ - று.)—அருங்கலம்-அருமையான [சிறந்த] ஆபரணங்களாகிய முத்தாகாரம்முதலியன என்பாருமுளர். பி - ம்:— [1]முலையிற். [2]அருந்தலைதளிர்ப்பொற்பாதநிலத்தொடு மஃதேயென்று, அருள்கலத்தளிர்ப்பொற்பாதநிலந்தொடு மதுவேயன்றி. [3]மருங்குலு முண்டுண்டென்ன, மருங்குலுண்டுண்டென்னும். (௩கஅஅ)

சரு.—வந்த மண்டோதரி இந்திரசித்தினுடலின்மேல் விழுதல்.

தலையின்மேற் சுமந்த [1]கைய [2]டழலின்மேன் மிதிக்கின் றாள்போல்
நிலையின்[3]மேன் மிதிக்குந் தாள ணேசத்தா னிறைந்த நெஞ்சள்
கொலையின்மேற் குறித்த வேடன் [5]கூர்ங்கணை யுயிரைக் [6]கொள்ள
மலையின்மேன் மயில்வீழ்ந் தென்ன மைந்தன்மேன் மறுகி வீழ்ந்தாள்.

(இ - ள்.) தலையின்மேற் சுமந்த கையையுடையவளும், நெருப் பின்மேல் மிதிக்கின்றவள்போலப் பூமியின்மேல் மிதிக்கின்ற

தாளையுடையவளும், அன்பினால் நிறைந்த நெஞ்சையுடையவளுமாகி,— (மண்டோதரியானவள்),— கொல்லுதற் றொழிலில் எண்ணங்கொண்ட வேடனுடைய கூரிய கணை உயிரைக்கொள்ள மயிலானது மலையின்மேற் விழுந்தாற்போல இந்திரசித்தினுடலின் மேல் துயரத்தாற் கலங்கி வீழ்ந்தாள்; (எ - று.)

நிலை-ஸ்திரா என்ற வடசொல்லின் மொழிபெயர்ப்பு. வெறுந்தரையில் தாளைவைத்து நடந்து பழகாமையால், அழலில் மிதிக்கின்றாள் போல் நிலையில்மிதிக்கலானாள். மலை - இந்திரசித்தின்மார்புக்கும், மண்டோதரி மயிலுக்கும் உவமை. பி-ம்:—[1]கையாள், கைகள். [2]அனலையே தணலின். [3]மேற்பதைக்குந். [4]ஏக்கத்தால், ஏகத்தால், ஓக்கத்தால். [5]கூன்கணை. [6]கூட. (௩௧அ௬)

௬௬.—சோகத்துறியோடு நின்ற மண்டோதரி புலம்பத்தொடங்குதல்.

உயிர்த்தில ளுணர்வு [1]மில்ல ளுயிரிலள் [2]கொல்லோ வென்னப்
பெயர்த்தில ளியாக்கை யொன்றும் பேசலள் [3]விம்மி யாதும்
வியர்த்தில [4]ணெடிது போது [5]விம்மலண் [6]மெல்ல மெல்ல
[7]அயர்த்தில ளரிதிற் றேறி வாய்திறந் தரற்ற லுற்றாள்.

(இ - ள்.) நெடுநேரம் மூச்சற்றவளும், உணர்வுஇல்லாதவளும், 'உயிரற்றவளோ!' என்று கருதுமாறு உடம்பை யசைத்தலில்லாதவளும், ஒன்றும் பேசாதவளும் துயர்மிக்குச் சிறிதும் வியர்க்காதவளுமாயிருந்து, மண்டோதரியானவள்,—மெல்லமெல்ல அயர்ப்புநீங்கினவளாய் அரிதில் தேறி விம்மி வாய்விட்டுக் கதறத்தொடங்கினாள்;(எ-று.)—மண்டோதரி கதறுதலை, மேல் ஏழுகவிகளிற் காண்க. பி-ம்:—[1]இல்லை. [2]கொல்லென்றெண்ணி, என்கொலென்னப். [3]அல்லதியாதும், பிறிதொன்றியாதும், பிறங்கியாதும். [4]நெடியபோதும். [5]விம்மினள். [6]மெள்ளமெள்ள. [7]அயிர்த்திலள், அயர்ந்தனள். (௩௧௬0)

௬எ.—இதுமுதல் ஏழுகவிகள் - மண்டோதரி புலம்புதலைக்கூறும்.

கலையினாற் றிங்கள் [1]போல வளர்கின்ற [2]காலத் தேயுன்
சிலையினா லரிகைய வெல்லக் காண்பதோர் [3]தவமுஞ் செய்தேன்
தலையிலா வாக்கை காண வெத்தவஞ் செய்தே னந்தோ
நிலையிலா வாழ்வை [4]யின்னு நினைவனோ நினைவி லாதேன்.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) சந்திரன் கலையினால் நாளுக்குநாள் வளர்வதுபோல வளர்கின்ற இளம்பருவத்திலேயே உன்னுடையவில்வலியினால் இந்திரனை வெல்லக்காண்பதற்கு ஏதுவாகிய ஒப்பற்ற தவத்தைச் செய்துள்ள நான், (இப்போது) தலையில்லாத (உன்) உடலைக் காண்பதற்கும் என்ன தவம்செய்தேனோ! அந்தோ!! நல்லெண்ணமில்லாதவளாகிய யான் நிலையில்லாததான உடலோடு வாழ்வதை இன்னும் நினைக்கக்கடவேனோ? (எ-று.)

நிலையில்லாதஉடலுடன் வாழ்க்கையை விரும்பி மேற்கொள்வது, எனக்குத் தக்கதன்றென்றபடி;உயிர்விடுதலே தக்கதுஎன்பது கருத்து. இரண்டாவது வந்த 'தவம்' என்பது எதிர்மறை யிலக்கணையாகிய பிறகுறிப்பால், தீவினையைக் காட்டிற்று. இந்திரனையும் இளம்பருவத்தில் நீ வெல்ல அதனைக்கண்டு களிக்குமாறு தவஞ்செய்திருந்த எனக்கு அவ்வண்ணஞ் சூரனுன மகனுடையதலையை மாற்றான்கொள்ள,முண்டமாகிய உடலைக் காணுந் தீவினை எவ்வண்ணம் நேர்ந்ததோ! என்று இரங்கியவாறு. அரி-இந்திரன். பி-ம்:—[1]என்ன. [2]காலத்தையை. [3]தவமுன்செய்தேன். [4]இன்னம். (௩௧௧௧)

௬௮. ஐயனே யழக னேயென் னரும்பெற [1]லமிழ்தே யாழிக்
கையனே மழுவ னே[2]யென் றிவர்வலி கடந்த [3]கால
மொய்யனே முளரி யன்ன நின்முகங் கண்டி லாதேன்
உய்வனோ வுலக [4]மூன்றுக் கொருவனே [5]செருவ லோனே.

(இ - ள்.) சக்கரத்தைக் கையிலேந்திய திருமாலும், மழுப்படையையுடையவனுன சிவபெருமானும் என்ற இவர்களின் வலிமையை வென்ற யமன்போன்ற வலிமையுள்ளவனே! உலகம்மூன்றுக்கும் ஒப்பற்றவீரனே! போரில்வல்லவனே! ஐயனே! அழகனே! என்னுடைய பெறுதற்கரிய அமுதே!தாமரைமலரையொத்த உன்முகத்தைக் காணப்பெறாத யான் உய்வேனோ! (எ - று.)—தலையற்ற உடலைக் கண்டதனால், இவ்வாறுகூறினுளென்னலாம். இரண்டாமடியில் ஏகாரங்கள் - எண்ணுப்பொருளன. காலன் + மொய்யன் = காலமொய்யன்: யமன்போல் வலியன். இச்செய்யுள், சிலபிரதிகளில் "முக்கணன்" (௫௨) என்றபாடலின்பின் உள்ளது. பி - ம்:—[1]மருந்தே. [2]என்றவர். [3]காலே. [4]மூன்றில். [5]சிலே. (௩௧௧௨)

௬௯. தாளரிச் சதங்கை [1]யார்ப்பத் தவழ்கின்ற பருவந் தன்னிற், கோளரி யிரண்டு பற்றிக் கொணர்ந்தனை [2]கொணர்ந்து [3]கோப, மூளுறப் பொருத்தி மாட முன்றிலின் [4]முறையி னோடு, [5]மீளரு விளையாட் டின்னங் [6]காண்பனோ விதியி லாதேன்.

(இ - ள்.) தாள்களில்(உள்ளே)பரலிட்டசதங்கைகள் ஒலிக்கும்படி தவழ்கின்றபருவத்தில்தானே (நீ) இரண்டுவலிமையுள்ளசிங்கங்களைப் பிடித்துக்கொண்டு வந்தாய்; (அங்ஙனங்)கொண்டுவந்து மாளிகையின் முன்றிலில் கோபம்மூளும்படி (அவைகளை) முட்டவிட்டு முறைமையோடு (செய்கின்ற) மீளமுடியாத (உன்னுடைய) விளையாட்டை நல்வினையில்லாத யான் இன்னங் காணப்பெறுவேனோ? (எ - று.)—ஓகாரம்-எதிர்மறையோடுபுலம்பல். பி-ம்:--[1]ஆர்க்கும் பருவத்தேதளிர்க்கைதன்னல். [2]கொணர்ந்த. [3]கோமுன், [4]முறையினேடி. [5]மீளரு. [6]காண்பனே. (௩௧௧௩)

௫௦. அம்புலி [1]யம்ம வாவென் றழைத்தலு மவிர்வெண் டிங்கள்
[2]இம்பர்வந் தானை யஞ்ச லெனவிரு கரத்தி [3]னேந்தி

வம்புறு மறுவைப் பற்றி முயலென வாங்கும் 4வண்ணம்
எம்பெருங் களிறே காண வேசற்றே 5னெழுந்தி ராயோ.

(இ - ள்.) எமது பெரிய யானையைப்போன்றவனே! 'அம்புலி அம்மா! வா' என்று நீ அழைத்தலும், விளங்குகின்ற வெள்ளிய சந்திரன் (அஞ்சி) இவ்வுலகில் வந்தவனை, 'பயப்படாதே' என்றுசொல்லி, இரண்டுகைகளினாலும் ஏந்திக்கொண்டு, வீணாகப்பொருந்திய களங்கத்தைப்பற்றி முயலென்று (சொல்லி) வாங்கும் விதத்தைக் காண்பதற்கு ஆசைகொண்டேன்: (என்னாசைதீர்க்க நீ) எழுந்திருக்கமாட்டாயோ! (எ - று.)—அம்புலியை 'அம்மா' என்றது-அன்புபற்றிய மரபுவழுவமைதி. பி-ம்:—1அம்மா. 2நம்பவுன்றாதையானைக் கஞ்சினன்மருங்கு, நம்பவுன்றாதையானைமறுத்திடாமருங்கு. 3நண்ண, நின்ற. 4வாட்கை, வாழ்க்கை. 5எழுந்திராயோ. (௩௧௧௪)

௫௧. இயக்கிய 1ரரக்கி மார்கள் விஞ்சைய 2ரேழை மார்கள்
முயற்கறை 3பயிலாத் திங்கண் முகத்தியர் 4முருக நின்னை
5மயக்கிய முயக்கந் தன்னான் மலரணை யமளி மீதே
அயர்த்தனை யுறங்கு வாயோ வமர்பொரு 6தலசி னாயோ.

(இ - ள்.) முருகன்போன்ற அழகையுடையவனே! இயக்கியரும் அரக்கிமார்களும் வித்தியாதரஸ்திரீகளும் ஆகிய முயலாகிய களங்கமற்ற சந்திரன்போன்ற முகத்தையுடைய ஸ்திரீகள் உன்னைத் தம்வசப்படுத்திய முயக்கத்தினால் மலரணையாகிய படுக்கையின்மீது அயர்ந்தவனாயுறங்குகின்றாயோ? (அன்றி), போர்செய்து அலுத்து உறங்குகின்றாயோ? (எ-று.)—பி-ம்:—1அரக்கர்மாதர், அரக்கிமாதர். 2ஏனைமாதர், ஏழைமாதர். 3மலராத், இலாத, மெலிந்த. 4முழுக. 5நயக்குநர்மருளநீ நின்னளிர்முகங்காட்டிநல்காய், நயக்குனர்மருள நீயும்...நல்காய், 6அஞ்சினாயோ. (௩௧௧௫)

௫௨. முக்கணான் முதலி னோரை யுலகொரு 1மூன்றி னோடும் [ம்
புக்கபோ ரெல்லாம் வென்று 2நின்றவென் புதல்வன் போலா
மக்களி லொருவன் கொல்ல 3மாள்பவன் வான பேரு
4உக்கிட வணுவொன் றோடி யுதைத்தது போலு மம்மா.

(இ - ள்.) ஒருமூன்றுஉலகத்திலும் புகுந்தபோரிலெல்லாம் திரிணேத்திரனான சிவபெருமான் முதலினோரை ஜெயித்துநின்ற என் புதல்வன்,—மக்களில் ஒருவன் கொல்வதனால் மாள்வான்போலும்; (இச்செயலானது), 'வானம்வரையில் வளர்ந்தமேரு சிந்தும்படி ஓர் அணுவானது ஓடி உதைத்ததையொக்கும்; (இதுஎன்ன)வியப்போ! (எ - று.)—பி-ம்: 1மூன்றினேடும். 2நின்றவன். 3மாள்வதேமான, வாழ்வதேவான. 4உக்குமென்காலால் வேரோரொடிதலுமுளதே யம்மா, உக்கவென்காலால் வேரோடொடித்தலுமுளதே யம்மா, உக்கமென்காலால்வேரோடொடிவதுமுளதே யம்மா. (௩௧௧௬)

௫௩. 1பஞ்செரி யுற்ற தென்ன வரக்கர்தம் பரவை யெல்லாம்
வெஞ்சின 2மனிதர் கொல்ல 3விளிந்ததே மீண்ட தில்லை

அஞ்சினே[4]னஞ்சி னே[5]னச் சீதையென் [6]றமிழ்திற் றோய்த்த
நஞ்சினா லிலங்கை [7]வேந்து நாளையித் தகைய னன்றோ.

(இ-ள்.) பஞ்சிலே தீப் பொருந்ினாற்போல அரக்கருடைய சேனா சமுத்திரமெல்லாம் கொடுங்கோபத்தையுடைய மனிதர் கொல்ல இறந்ததேயாம்; (போனது) திரும்பினதில்லை:(நான்) மிகவும் அஞ்சினேன் அஞ்சினேன்;அந்தச்சீதையென்கிற அமிழ்தத்தில் தோய்த்தநஞ்சினாலே இலங்கையரசனும்[இராவணனும்]நாளைக்கு இத்தன்மையுடையவனாவானன்றோ [இறந்துவிடுவானன்றோ]? (எ-று.)—வெளிக்கு இனிமைபயப்பதுபோலத்தோன்றி,இறுதியில்தீமை விளைத்தலால்,'சீதையென்றமிழ்திற்றோய்த்த நஞ்சு'என்றாள். பி-ம்:—[1]மஞ்சரி.[2]மனிதன். [3]விளிந்தவர். [4]நடுங்கினேன். [5]இச். [6]அமிர்தாற்செய்த. [7]வேந்தனை ...னன்றோ, வெந்துநாளையித்தகையதன்றோ. (௩௧௬௭)

௫௪.—இராவணன் சீதையை வெட்டச்செல்லுதல்.

என்றழைத் [1]திரங்கி யேங்க வித்துயர் [2]நமர்கட் கெல்லாம், பொன்றழைத் தனைய வல்குற் சீதையாற்[3]புகுந்த தென்ன, [4]வன்றழைக் கல்லி னெஞ்சின் வஞ்சகத் தாளை வாளாற், கொன்றிழைத் திடுவெ னென்னா வோடின [5]னரக்கர் கோமான்.

(இ - ள்) என்று (இவ்வாறாக மண்டோதரி)கூவி இரங்கி ஏங்குகையில்,-அரக்கர்களுக்கு அரசனான இராவணன்,—'இத்துயரமானது நம்மவர்க்கெல்லாம் பொன்றழைத்தாற்போன்ற அல்குலையுடைய சீதையினால் வந்ததாகும்' என்றுகருதி, 'வன்மை தழைத்தலைக்கொண்ட கல்நெஞ்சையுடைய வஞ்சனைக்குணமுள்ள அச்சீதையை வாளாற் கொன்று பகைவர்களுக்குத்) தீமைவிளைப்பேன்' என்றுசொல்லி(ச்சீதையிருக்குமிடம்நோக்கி) ஓடலானான்; (எ - று.)—பி-ம்:—[1]இரங்க நோக்கி, ஏங்கிநோக்கி. [2]எமர்கட்கு, எங்கட்கு. [3]புகுந்ததந்தோ. [4]வன்றளைக்கள்விநெஞ்சவஞ்சகத்தாளை. [5]கொடியனுள்பால். (௩௧௬௮)

௫௫.—இராவணன்செயலைத் தடுத்து மகோதரன் சொல்லத்தொடங்குதல்.

ஓடுகின் றானை நோக்கி யுயர்பெரும் [1]பழியை யுச்சி
சூடுகின் றானென் றஞ்சி மகோதரன் றுணிந்த நெஞ்சன்
மாடுசென் றடியின் வீழ்ந்து வணங்கினின் புகழ்க்கு மன்னா
கேடுவந் [2]தடுத்த தென்னா வினையன [3]கிளத்த லுற்றான்.

(இ-ள்.) (அவ்வாறு) ஓடுகின்ற இராவணனை நோக்கி, மகோதரன் '(இவன்) அழியாத பெரும்பழியை(த் தன்)தலையில் சுமந்துகொள்ளப் போகின்றானே' என்று பயந்து, துணிவுகொண்டநெஞ்சையுடையவனாய், அருகிற்சென்று அடியில்வீழ்ந்து வணங்கி, 'அரசனே! உன்னுடைய கீர்த்திக்குக் கெடுதி வந்துசேர்ந்துவிட்டதே' என்று பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்;(எ-று.)--அதை அடுத்த ஐந்துகவிகளிற் காண்க. பி - ம்:—[1]பழியே, பழியின். [2]உறுவதென்னா, உற்றதென்றே. [3]கிளக்கல், கிளரல். (௩௧௬௯)

ருசூ.—இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: சீதையை வெட்டவேண்டாமென்று மகோதரன் இராவணனுக்குக் காரணத்தோடு கூறுதலைத் தெரிவிக்கும்.

நீருள தனையுஞ் [1]சூழ்ந்த நெருப்புள தனையு நீண்ட
பாருள தனையும் [2]வானப் பரப்புள தனையுங் காலின்
பேருள தனையும் [3]பேராப் பெரும்பழி பிடித்தி போலாம்
போருள தனையும் வென்று புகழுள தனையு [4]முள்ளாய்.

(இ - ள்.) (இதுவரையில் நேர்ந்துள்ள) போரத்தனையும் வெற்றி பெற்றுள்ள புகழையெல்லாம் கொண்டிருப்பவனே! (நீ) ஐம்பெரும் பூதங்கள்இருக்குங்காலம் வரையிலும் அழியாத பெரும்பழியைக் கைக் கொள்வாய் போலும்; (எ-று.) சூழ்ந்த-வளைத்துக்கொள்ளும் தன்மை யுள்ள. கால்-காற்று. பி-ம்:—[1]நீண்டநெருப்புளதனையுஞ்சூழ்ந்த. [2]காயப் பரப்புளது, காயப்பரப்பினது. [3]மாயாய். [4]உள்ளால். (ூஉ00)

ருஎ. தெள்ளருங் காலகேயர் சிரத்தொடுந் [1]திசைக்கண் யானை
வெள்ளிய மருப்புச் சிந்த வீசிய [2]விசயத் தொள்வாள்
வள்ளிய மருங்குற் செவ்வாய் மாதர்மேல் வைத்த போது
[3]கொள்ளுமே யாவி தானே நாணத்தாற் குறைவ தல்லால்.

(இ - ள்.) (இவ்வளவுவலிமையுடையவரென்று) தெளிவதற்குமுடியாத காலகேயருடைய சிரத்துடனே திக்கஜங்களின் வெண்ணிறமுள்ள தந்தங்கள் சிந்தும்படி வீசியவெற்றிபெற்ற ஒள்ளிய வாளை, கொடியையொத்த அழகிய இடையையும் செந்நிறவாயையுமுடைய மாதர் மேற் செலுத்தியபோது, (அவ்வாளானது)தானே நாணத்தினாற்குறைவது அல்லாமல் (அம்)மாதராவியைக்கொள்ளுமோ? [கொள்ளாது].

தெய்வவாளானதால், இவ்வாறு கூறினன்போலும். காலகேயர் - கச்யபருக்குக் கலையென்பவளிடத்துப் பிறந்தவரெனவும், புலோமருக்குத் திதியென்பவளிடத்துப் பிறந்தவரெனவுங் கூறுவர். இவர்கள் அசுரர்:பொன்னிறமுள்ளவர்;மகாபலசாலிகள். இந்திரனைப் பலமுறை வெற்றிகொண்டவர்கள். கடலில் ஒளித்திருந்த இவர்களைத் திசைக்காவலரைவெல்லச்சென்ற இராவணன் வருணன்மாளிகைக்குச்செல்லுமுன் வென்றானென்பதை, "அங்கரிவிட்டரக்கர் அடல் வருணன்றனை வெல்வானவன்றான்மேவுங்,கன்னகிரிதனைமூடிக் காலகேயரையெல்லாங்கணத்திற்கொன்று,தன்னுடைய தங்கையாந் தடவரைத்தோள்சூர்ப்பணகை தன்னைக்கொண்ட, மின்னனைய சுடரிலைவேல் வித்தியுசிங்கன்றனை வெங்களத்து வீழ்த்தான்" என்ற உத்தரகாண்டச்செய்யுளா லறிக. இச் செய்யுள் சிலபிரதிகளில் "ஓடுகின்றானை" (ருரு)என்பதன்பின்உள்ளது. பி-ம்:—[1]திசைக்கை. [2]விசையவொள்வாள். [3]கொள்ளுமோதானவ்வாவி.

ருஅ. [1]மங்கையர் குலத்து ளாளைத் தவத்தியை முனிந்து [2]வாளாற்,சங்கையொன் றின்றிக் [3]கொன்றாற் குலத்துக்கே தக்கானெ

ன்று, கங்கையஞ் சென்னி யானுங் கண்ணனுங் கமலத் தோனுஞ்,
செங்கையுங் கொட்டி யுன்னைச் சிரிப்பராற் [4]சிறிய னென்றே.

(இ - ள்.) ஸ்திரீஜாதியைச்சேர்ந்தவளும், தவக்கோலத்தை யுடையவளுமாகிய சீதையைச்சினந்து சிறிதுங்கூச்சமில்லாமல் வாளாற் கொன்றால்,-கங்கையை அழகியசென்னியில்வைத்த சிவபெருமானும், திருமாலும்,பிரமதேவனும்,ராக்ஷஸகுலத்துக்கேற்ற தகுதியையுடையவ னென்றும் அற்பனென்றுஞ் சொல்லி(த் தமது) செவ்வியகைகளைக் கொட்டி உன்னைச் சிரிப்பார்கள்; (எ-று.) பி-ம்:—[1]மங்கையைக். [2]வாளிற். [3]கொன்றான். [4]சிறியை.இச்செய்யுள் "ஓடுகின்றானை" (௫௫)என்ற பாடலின்பின் சிலபிரதிகளில் உள்ளது. (௩௨0௨)

௫௯. நிலத்தியல் பன்று வானி னெறியன்று [1]நீதியன்று
தலத்தியல் பன்று மேலோர் [2]தருமமே [3]லதுவு மன்று
புலத்தியன் மரபின் [4]வந்து புண்ணிய[5]மரபு [6]பூண்டாய்
[7]வலத்தியல் பன்று [8]மாயாப் [9]பழிகொடு மறுகு வாயோ.

(இ - ள்.) புலஸ்தியனுடைய வமிசத்திலேபிறந்ததனால் பரிசுத்த குலத்திற்பிறந்தவ னென்ற புகழைப் பூண்டவனே!—(நீ ஒருபெண்ணைக்கொல்வது) பூலோகத்தாருடைய இயல்பல்ல; வானுலகத்தாருடைய இயல்புமல்ல: (மற்றெந்த) இடத்திலுள்ளவர்களுடைய இயல்புமன்று; மேலோருடைய தருமமென்று நினைப்போமானால், அதுவும் அன்று; நீதிசாஸ்திரத்திற்கும் ஏற்றதன்று: வெற்றிக்குரியது மன்று; (இப்படிப்பட்ட இழிதொழிலைச்செய்து) மாயாப்பழியைப் பெறுமாறு மனங்கலங்கப்பெறுவாயோ? (எ-று.)—பி-ம்:—[1]புறத்திளின்ற,புறத்துநின்ற. [2]கருமமேல், தருமமே. [3]அன்றுதக்க. [4]வந்த. [5]விரதம். [6]பூண்டார். [7]பலத்து. [8]மாயப். [9]பழிகொள. (௩௨0௩)

௬0. இன்றுநீ யிவளை வாளா [1]லெறிந்துபோ [2]யிராமன் றன்னை
வென்று[3]மீண் டிலங்கை மூதூ ரெய்தினை [4]வெதும்பு வாயோ
பொன்றினள் சீதை [5]யென்றே [6]போவர்க ளவர்தா மல்லால்
வென்றிட முடியா தென்னும் வீரமோ விளம்ப லென்றான்.

(இ-ள்.) இப்போது இவளை நீ வாளால்எறிந்துபோய் இராமனை வென்று மீண்டு இலங்கையென்கிற பழமையான ஊரை அடைந்து (விரும்பிய சீதையையிழந்தகாரணத்தினால் மனம்) புழுங்கிக்கிடப்பாயோ?(அன்றி)'சீதையிறந்திட்டாளென்று கருதி அவர்கள் தாமே திரும்பிச்சென்றுவிடுவார்கள்: (அங்ஙனம்அவர்களைச்)செல்லவிடுவதல்லாமல் (அவர்களை)வென்றிடமுடியாது' என்ற சூரத்தனமோ? (இவ்விரண்டிற் சீதையைக் கொல்ல யாது காரணம்?)சொல்லுவாயாக என்றுகூறிமுடித்தான், (மகோதரன்); (எ - று.)

நீ சீதையைக்கொல்வதாற் பெறலாகும்பயனென்று கருதக்கூடியவை - சீதையையிழத்தலால் மனம்வெதும்புதல், பகைவரை நேரே பொருது வெல்லமுடியாமையால் அப்பகைவர்களைத் தானே திரும்பச்

செய்யும் சூரத்தனம் என இவை: இவைகளில் நீ விரும்பியது எது? இரண்டும் விரும்பத்தக்கனவல்லவே! என்பது குறிப்பு. வீரமென்பது - இகழ்ச்சிதோன்றக் கூறியது: பிறகுறிப்பு. விளம்பல் - அல்லீற்று வியங்கோள். பி-ம்:—[1]எறிந்தனே. [2]மனிதன். [3]பின். [4]விளம்புவாயோ. [5]இன்று, என்று. [6]புரவலபுதல்வன்றன்னைக், கொன்றவர்தம்மைக் கொல்லக்கூசினைபோலுமென்றான், புரவல ... சாலவென்றான், புரவல ... ... கூசினைகொள்கவென்றான். (௩௨0௪)

௬௧.—இராவணன் சீதையை வெட்ட முயல்வதைவிட்டு, இந்திரசித்தினுடலை எண்ணெய்த்தோணியிலிடச் சொல்லுதல்.

**என்னனு மெடுத்த கூர்வா ளிருநிலத் திட்டு [1]மீண்டு, மன்னவன் மைந்தன் றன்னை மாற்றலர் [2]வலிதிற் கொண்ட, சின் னமு மவர்க [3]டங்கள் சிரமுங் கொண் டன்றிச் [4]சேர்கேன், [5]தொன் னெறித் தயிலத் தோணி வளர்த்துமி னென்னச் சொன்னான்.**

(இ - ள்.) என்று (மகோதரன்) சொல்லவும், (தான்) எடுத்த கூரியவாளைப் பெரியநிலத்தி லிட்டு, (தான் செய்யத்தொடங்கிய தொழிலினின்று) மீண்டு, ராக்ஷஸராஜனான இராவணன், (தன்) மைந்தனைப் பகைவர்வலிமையாற்கொண்ட துண்டிக்கப்பட்ட சிரத்தையும், அம் மாற்றலரின்சிரத்தையும் கொண்டுவருதலில்லாமல் திரும்பேன்; பழமையான முறைப்படியே (இந்திரசித்தின் உடலை) எண்ணெய்த்தோணியி லிடுமின்கள் என்று சொன்னான்; (எ - று.)—சின்னம் - துண்டிக்கப்பட்டது: வடசொல்; இங்கே, இந்திரசித்தின்சிரசு. பி-ம்:—[1]மீண்டான், மீண்ட. [2]வலியாற். [3]தத்தம், தந்தம். [4]மீளேன், சேரத், சேர்த்தேன். [5]துன்னருந், துன்னெறித்.

அச்சிட்டபிரதிகளில் அடுத்தபாடலில் தான் இராவணன்சோகப் படலம் முடிகின்றது; ஆயினும், பல ஏட்டுப்பிரதிகளில் இச்செய்யுளோடு இப்படலம் முடிவதாலும், அப்படிமுடிவது பொருத்தமாக இருப்பதாலும் இங்ஙனம் கொள்ளப்பட்டது. இச்செய்யுளினிறுதியில், ஒருபிரதியில் இராவணன்சோபம் இந்திரசித்துவதைப்படலம் முற்றும் என்று உள்ளது. (௩௨0௫)

இந்தப்படலத்துக்கூறிய கதை ஸ்ரீ வான்மீகத்திற்கூறியபடி வருமாறு:—இராவணனுடைய மாளிகையிலிருந்து அவனுக்குத் துணைபுரியும் மந்திரிமார் இந்திரசித்தின்வதத்தைத் தாமே நேரில்தெரிந்து கொண்டு மனவருத்தத்துடன் இராவணனிடம் தெரிவிக்க, அவன் அத்துயரச்செய்தியைக் கேட்டதும் புத்திரசோகத்தினால் மூர்ச்சித்து வெகுநேரம்கழிந்தபின் தேறி, ஐம்பொறிகலங்க எளிமையுடன் 'இந்திரனையும் புறங்கண்ட நீ எப்படி இலட்சுமணனிடம் அகப்பட்டுக்கொண்டாய்? இனி எல்லாத்தேவர்களும் நீ இறந்ததைச் செவியுற்று அச்சமற்றுத் திரிவார்கள். நீ இல்லாமையால் இந்தலோகமே எனக்குச் சூனியமாகத் தோன்றுகின்றது. இனி, களிற்றைப்பிரிந்த

பிடியானைகளைப்போல அரக்கக்கன்னியர் கதறுவதைக் கேட்கும்படி யாயிற்றே: நீ எனக்கு ஈமக்கடனைச் செய்யவேண்டியது முறையா யிருக்க, உனக்கு நான் ஈமக்கடன் செய்யும்படியாயிற்றே! இதுவரை யில் என் மனச்சள்ளையைப் போக்கிக்கொண்டிருந்த நீ எனக்குச் சல்லி யம்போன்ற சுக்கிரீவனும் இலட்சுமணனும் பிழைத்திருக்கையில் அச் சல்லியத்தைப் போக்காமல் எங்குப்போயினை!' என்று பலவாறாகப் புலம்பினான். பின்னர் அந்தத்துயரம் சினத்தைமூட்டக் கண்களி னின்று நெருப்புப்பொறிபறக்க முகஞ்சிவந்து பல்லைநெறுநெறென்று கடித்தான். அந்தச்சீற்றக்குறியைக்கண்டு இனி எதிரிகள் இறந்துவிடு வார்களென்று அரக்கர் மகிழ்ந்தனர். அவ்வண்ணம் உக்கிரமான கோபத்துடனே என்துயர்க்கெல்லாம் காரணமான சீதையைவெட்டி வீழ்த்துவேனென்று சொல்லி நண்பர்கள்தடுக்கவும் கேளாமல் சீதை யிருக்குமிடம் நோக்கிச்சென்றான். அங்ஙனம் தன்னைவெட்டுமாறு சினந்து வருகின்ற இராவணனைக் கண்டு சீதை நடுநடுங்கிப் பலவாறு புலம்பினள். அவ்வேளையில் இராவணனுக்கு ஆப்தநண்பனான சுபார் சுவன் இராவணனைக் கிட்டி 'சீதையைக்கொல்வது புலஸ்த்யகுலத்திற் பிறந்து மகாவீரத்தன்மையையும் பூண்ட உனக்குத்தகாது: ஆகையால், எதிரிகளான இராமன்முதலியோரைவதைத்துச் சீதையைக் கைப்பற் றுவதேமுறைமை' என்று நீதியாகவும் இனிமையாகவும் எடுத்துக்கூறி னான். அதனால் இராவணன் தன்மனநிலை மாறித் தன்மாளிகைசேர்ந்து பிறகு நண்பர்களாற்சூழப்பட்டு மீளவும் சபாமண்டபம் சேர்ந்தா னென்பது.

இராவணன் சோகப்படலம் முற்றிற்று.

---

## உகூ.—ஆவது படைக்காட்சிப்படலம்.

தூதுவரால் அறிவிக்கப்பட்டுவந்த படைகளை இராவணன் காணு வதைக்கூறும் படலமென்பது, பொருள்.

ஆங்காங்குள்ள ராக்ஷஸசேனைகளை வருமாறுபணித்த இராவணன் கட்டளையைத் தூதர் அவ்வாறே அறிவிக்க, அப்படைகளெல்லாந் தலைவருடன் திரண்டு வந்தனவாக, அவ்வாறு படைகள்வந்ததைத் தூது வர் இராவணனுக்கு அறிவித்தார். அவ்வரக்கர்தலைவன் கோபுரத்தின் மீது ஏறி அச்சேனைகளைக்காண, தூதுவர் 'இந்தச்சேனை இவ்விடத் தது, இந்தச்சேனை இவ்விடத்தது' என்று பகுத்துக்காட்டினர். பிறகு இராவணன் இச்சேனைகளின்முழுத்தொகை எவ்வளவு?' என்ன, 'பித் தர் இதன்அளவு ஓராயிரவெள்ளமென்றனர்: அது இதனளவுக்குமிகச் சிறிது' என்று சொல்ல, இராவணன் அந்தச்சேனைகளின் தலைவரை அழைத்துவருமாறு பணித்தான். அக்கட்டளைப்படியேவந்த தானைத் தலைவர் வணங்கிநிற்க இராவணன் சேமம்விசாரித்தபின், அவர்கள் தம் மைவரவழைத்தகாரணத்தை வினவ, சீதைகாதலாற் புகுந்துள்ளவற்றை

யெல்லாம்விவரித்தான்: அதுகேட்டு அவர்கள் 'மனிதர்மீதும் குரங்கின்மீதும்சென்றுபொருவதா?' என்று நக, அப்போது புஷ்கரத்தீவின்தலைவனுனவன்னியென்பவன் அவர்களைக்கையாலமர்த்தி 'அந்தமானுடருடையவலிமையாது?' என்றுவினவ, மாலியவான் ஆதியோடந்தமாக நிகழ்ந்தனசொல்லிச்சீதையைவிட்டிடுவதே நன்றுஎன்ற தன்கருத்தைப் புலப்படுத்த, வன்னி'சீதையைவிடுதல் முன்னர்ச் செயத்தக்கது: இந்திரசித்தும் இறந்த இப்போது செய்தல் தக்கதன்று:பகைவரைமுடிப்பதே கடமை' என்றுசொல்ல, பிறகு அரக்கர்யாவரும் 'பகைவென்று வருவோம்' என்று சபதஞ்செய்து சென்றன ரென்பது, இப்படலத்துக் கூறும் பொருள்.

க.—இராவணன்கட்டளைப்படி சென்றிருந்த தூதுவர் ஆங்காங்கிருந்து படைகள்வந்திருத்தலை யறிவித்தல்.

அத்தொழி லவருஞ் செய்தா ராயிடை யனைத்துத் திக்கும்
பொத்திய நிருதர் தானை கொணரிய போய தூதர்
ஒத்தன [1]ரணுகி வந்து வணங்கின ரிலங்கை யுன்னூர்ப்
பத்தியி [2]னமைந்த தானைக் கிடமில்லை [3]பணியென் னென்றார்.

(இ - ள்.) (இந்திரசித்தினுடலைத் தைலத்தோணியிலிடுவதாகிய) அத்தொழிலை ஆங்கிருந்த பணியாளர்கள் செய்தார்கள்; அவ்வேளையில்,—அனைத்துத்திக்குக்களிலும் நிரம்பியிருந்த அரக்கர்சேனையைக் கொணரும்பொருட்டுச் சென்றிருந்த தூதுவர் ஒருசேரநெருங்கிவந்து (இராவணனை)வணங்கினவராய்,'இலங்கையென்கிற உன்னூரில் வரிசைவரிசையாக (இப்போதுவந்து) பொருந்தியுள்ள சேனைக்கு இடமில்லை [ஆங்காங்கிருந்து மிகத்திரண்டபெருஞ்சேனை வந்துள்ளன]; (இனி, நாங்கள் செய்யக்கடவ) கட்டளை யாது?'என்று வினவினார்கள்; (எ-று.)

பு-ம்:—[1]அணுக. [2]அடைந்த. [3]பணியிது, பணியேது. (௩௨௦௯)

உ.—இராவணன் 'சேனை எங்குளது?' என்ன, அரக்கர் விடைகூறுதல்.

ஏம்பலுற் [1]றெழுந்த மன்ன [2]னெவ்வழி யெய்திற் [3]றென்றான்
கூம்பலுற் [4]றுயர்ந்த கைய ரொருவழி கூற லாமோ
வாம்புனற் பரவை யேழு மிறுதியின் வளர்ந்த [5]தென்னத்
தாம்பொடித் தெழுந்த [6]தானைக் குலகிட மில்லை யென்றார்.

(இ - ள்.) மகிழ்ச்சிபொருந்தியெழுந்த இராவணன், '(வந்த சேனை) எவ்விடத்தில் இருக்கிறது?' என்று வினவினன்; குவித்தோங்கிய கையையுடைய தூதுவர், (அவ்விராவணன் வினவிற்கு விடையாக 'அச்சேனை) இன்னவிடத்திலுள்ளதென்று ஒருஇடத்தைச் சுட்டிக் கூறமுடியுமோ? தாவுகின்றநீரையுடைய ஏழுகடல்களும் யுகாந்தகாலத்திற் பொங்கியெழுந்ததென்னுமாறு தாம் பொங்கியெழுந்தசேனைக்கு இந்தஉலகத்தில் இடம் போதாது' என்று கூறினார்கள்; (எ-று.) 'தானைக்கு உலகிடமில்லை' என்றதில், எல்லாம் இறந்து விரைவில் வீரசுவர்க்கஞ் சேருமென்று அமங்கலப்பொருள் தொனித்தல் காண்க.

பி-ம்:—[1]எழுதுந். [2]எவ்வழியெய்தின். [3]என்னக். [4]எழுந்த. [5]என்னமித். [6]தானைக்குலகிடந்தா னில்லென்றார், தானைக்குலகிடந்தா மில்லென்றார், தானைக்குலகிடந்தா னில்லென்றான். (௩௨0எ)

௩.—சேனை இலங்கையைநோக்கி வருதல்.

மண்ணுற நடந்த தானை வளர்ந்தமாத் தூளி மண்ட
விண்ணுற [1]நடக்கின் றாரு மிதித்தன [2]ரேக மேன்மேற்
[3]கண்ணுற லருமை [4]காணுக் கற்பத்தின் [5]முடிவிற்கார்போல்
[6]எண்ணுற லரிய சேனை யெய்திய திலங்கை நோக்கி.

(இ - ள்.) பூமியிற்பொருந்தநடந்தசேனையினாலே மிக்க பெருந்தூளி நெருங்கியதால், ஆகாயத்திற்பொருந்தி நடக்கின்ற தேவர்களும் காலையூன்றியவர்களாய்ச் சென்றுகொண்டிருக்க, யுகாந்தகாலத்துமேகம்போல எண்ணமுடியாத [பெருந்திரளாயுள்ள] அச்சேனையானது, (தூளிப்பரப்பினால்) பார்த்தற்கு அருமையாகக்காணப்பட்டு இலங்கையைநோக்கி மேன்மேற் பொருந்திற்று; (எ - று.)

சேனையின்தொகுதி யெழுப்பிய தூளியானது வானத்தில் பூமிப்பரப்புப்போற் படிவதனால், அவ்வானத்துச்செல்கின்ற தேவர், பூமியிற் காலைவைத்துச் செல்வதுபோல் ஆங்குச் செல்லலாயினரென்பது முன்னிரண்டடியிற் கூறிய பொருள். யுகாந்தகாலத்தில்மிகுதியாக எழும் மேகம்போற் பெருந்திரளாயுள்ள அச்சேனை மிகுதியாக எழுப்பிய தூளி, அச்சேனையைப் பிறர் பார்க்கவொட்டாமல்தடுத்து நிற்க, அஃது இலங்கைக்குச் சென்றமையைப் பின்னிரண்டடியிற் கூறினார். முடிவு - யுகாந்தகாலம். பி-ம்:—[1]நடிக்கின்றாரும். [2]ஏகி. [3]கண்ணுறவு [4]காணக். [5]இறுதிக். [6]எண்ணுறவு. (௩௨0அ)

௪.—சேனைகளின் வருணனை.

[1]வாட்டனின்[2]வயங்க [3]மின்னு மழையதி னிருள்[4]மாட்டா
ஈட்டிய முரசி னார்ப்பை [5]யிடிப்பெதிர் [6]முழங்க மாட்டா
மீட்டினி யுவமை யில்லை வேலை [7]மீச் சென்ற [8]வென்னில்
[9]தீட்டிய [10]படையு மாவு மியானையுந் தேருஞ் [11]செல்ல.

(இ - ள்.) வாள்கள் (மின்னுவது)போல விளங்க மேகங்கள் மின்னலைப்பெற்றிரா; நெருங்கிய முரசினுடைய ஆரவாரத்திற்குமாறாக (அவ்வானத்தின்)இடிப்புகள் கர்ச்சிக்கமாட்டா;(அன்றியும்), அச்சேனைபோல மேகங்கள் இருண்டிருக்கமாட்டா: (ஆகையால், அச்சேனைக்கு மேகங்கள் உவமையாகமாட்டா): தீட்டப்பெற்ற படைக்கலமுள்ள பதாதிகளும், குதிரைகளும், யானைகளும், தேரும் எல்லாம் கடல்மீது நடந்துசென்றனவென்றால் (அச்சேனையால் மிதிக்கப்பட்டகடல் அச்சேனைக்கு உவமையாகுமோ? ஆகாதன்றோ)? இனிமீண்டும் (அந்தச்சேனைக்கு) உவமை (கூறுமாறு) வேறுபொருள்இல்லை; (எ - று.)

அரக்கர்களுடையனவாதலால், கடலிலும் செல்லும் வல்லமையன அந்தச்சேனைகளென்னலாம்: இனி,பூமியில்இடம்போதாமையால்,கடலிலும் அச்சேனைகள்சென்றன என்றலும் ஒன்று. சேனைகளின்காலால்

மிதிக்கப்பட்ட பொருளாகையினால் அக்கடலை இச்சேனைக்கு உவமையாகச் சொல்லமுடியாதென்பது,பின்னிரண்டடிகளிற் கூறியபொருள். ஈட்டிய-ஈண்டியஎன்பதன் வலித்தல். செல்ல-முழுதும்என்றபடி. நான்காமடியில் படை-பதாதி: ஈட்டிய என்பதற்கு ஏற்பப் படைக்கலம் என்பது வருவிக்கப்பட்டது. பி-ம்:—[1]வாட்டனை. [2]வயங்கா,வயங்கு. [3]மின்னை. [4]மாட்டார் [5]இடிப்பொடு, இடியொடு. [6]முழக்கமாட்டா, முழக்கவொட்டா. [7]மேல். [8]என்னின், சென்னி. [9]நீட்டிய. [10]தேரும்......படையும். [11]செல்லா. (௩௨0௧)

ரு.—சேனையின் மிகுதி.

உலகினுக் குலகு போய்ப்போ யொன்றினொன் [1]றொதுங்க லுற்ற
[2]தொலைவருந் [3]தானை மேன்மே லெழுந்தது தொடர்ந்து [4]சுற்ற
நிலவினுக் கிறைவு மீனு [5]நீங்கின நிமிர்ந்து நின்றான்
அலரியு முந்து செல்லு [6]மாறுநீத் தஞ்சி யப்பால்.

(இ - ள்.) (எண்ணிக்கையில்) தொலைதலற்ற [எண்ணிக்கையில்லாத] சேனை மேன்மேல் எழுந்ததாய்த் தொடர்ந்துசூழ, (அச்சேனைத்தொகுதியைக் கண்ட அச்சத்தால்) உலகுக்குமேல்உலகாயுள்ளஇடங்கள் போய்ப்போய் ஒன்றிலொன்று ஒதுங்கத்தொடங்கின: நிலவுக்குரியதலைவனாகிய சந்திரனும், நட்சத்திரங்களும், (தாம்இருந்தஇடத்தைவிட்டு) நிமிர்ந்து நீங்கின; சூரியனும்அஞ்சி முந்துசெல்லும்வழியைவிட்டு அப்பால் நின்றான்; (எ - று.)

சேனைத்தொகுதியைக் கண்ட உலகுகள்முதலியவை, 'இடம்பற்றாமையால் அச்சேனைகள் நம்மேல்வந்தால் தாங்கமுடியாது' என்று அஞ்சித் தம்மிடத்தைவிட்டுச் சென்றனஎன்பது, முன்னிரண்டடியிற் கூறிய பொருள். இச்செய்யுள் - சேனையின்மிகுதியை விளக்க வந்த தொடர்புயர்வுநவிற்சியணி. பி-ம்:—[1]ஒதுங்காவுற்ற. [2]துலைவரும். [3]தானைதன், தானையின். [4]சுற்றி. [5]நீக்கிட நிமிர்ந்துசென்றார், நீங்கினநிமிரநின்றார், நீங்கினநிமிரநின்றான், நீங்கின நிமிர்ந்துநின்றார்,நீங்கினநிமிரநின்ற. [6]பரிசு ()

சு.—அச்சேனைகள் இலங்கைக்கு வந்த வருணனை.

மேற்பட விசும்பை முட்டி மேருவின் விளங்கி [1]விண்ட
நாற்பெரு வாயி லூடு மிலங்கையூர் [2]நடக்குந் தானை
[3]கார்க்கருங் கடலை மற்றோ [4]ரிடத்திடைக் [5]காலன் றானே [னா.
[6]சோர்ப்பது போன்றதி யாண்டுஞ் சுமை[7]பொறா துலக [8]மென்

(இ - ள்.) மேலிடம்பொருந்த வானத்தை முட்டி மேருவைப்போல் விளங்கித் திறந்துள்ள நான்குபெரியவாயில்வழியாக இலங்கையூரைநோக்கி நடக்கின்ற அந்தச்சேனையானது,—யமனே,கருநிறமுள்ள பெருங்கடலை,உலகம்எவ்விடத்தும் சுமைபொறாதுஎன்ற காரணத்தால் மற்றொருஇடத்திலே சோர்ப்பதை யொத்திருந்தது; (எ - று.)

வெளியிலிருந்துவந்து இலங்கையிற்புகுஞ்சேனை விரைவில்அழியப்போவதாகிக் கடல்போற் பரந்திருந்த தென்பது, இங்குக் கூறிய

தற்றுறிப்பேற்றத்தாற் பெறப்படும். முதலடி - இலங்கையின் நாற்பெரு வாயிலின்தன்மையை விளக்குவதாகும். சோர்த்தல்-இருந்த இடத்தைவிட்டுவேறோரிடத்திற்குப் போகச்செய்தல். பி-ம்.—[1]நின்ற். [2]நடந்த். [3]காற்றடங், கார்ப்பெருங். [4]இடைக்கிடை. [5]காணவாங்கி. [6]சேர்ப்பது. [7]பெருது. [8]மன்றே, என்று. (௩௨௧௧)

எ.—அச்சேனைகள் மதிலின்மேலாகவும் இலங்கையுட் புகுதல்.

நெருக்குடை வாயி லூடு புகுமெனி னெடிது காலம்
[1]இருக்குமித் தன்மை யென்ற [2]மதிலினுக் கும்ப ரெய்தி
[3]அரக்கன திலங்கை யுற்ற [4]வண்டங்க ளனைத்தி னுள்ள
[5]கருக்குல மேக மெல்லா [6]மொருங்குடன் கலந்த தென்ன.

(இ - ள்.) நெருக்கையுடைய வாயிலின்வழியாக உள்ளேபுகுவோமென்றால் (புகுகின்ற) இத்தன்மையானது நெடுங்காலமிருக்குமென்று கருதி (அச்சேனைகள், வாயிலின்வழியாகவே உட்புகுவதென்று கொள்ளாமல்),-அண்டங்களெல்லாவற்றிலுமுள்ள கருக்கொண்ட மேகக்குழாமெல்லாம் ஒருகாலத்தில் ஒருசேரக்கலந்தாற்போல, மதிலின்மேற்புறத்தைப்பொருந்தியும் இராவணனுடைய இலங்கையிற் புகுந்தன; (எ-று.)—புகும்=புகுதும்என்பதன் விகாரம். பி - ம்.—[1]இருக்குமத்தனையே, இருக்குமத்துணையே, இருக்கவைத்தன்மை, [2]மதிலிக்குமும்பர். [3]அரைக்கணத்து, அரக்கரது, [4]கண்டங்கள். [5]கருக்கிளர், [6]ஒருவழி. (௩௨௧௨)

அ.—இராவணன் அச்சேனை முழுதையுங் காண விரும்புதல்.

அதுபொழு தரக்கர் கோனு [1]மணிகொள்கோ புரத்தி னெய்திப்
பொதுவுற [2]நோக்க லுற்று [3]றொருநெறி போகப் போக
விதிமுறை காண்ப னென்னும் வேட்கையான் வேலை யேழுங்
கதுமென வொருங்கு நோக்கும் பேதையிற் காதல் கொண்டான்.

(இ - ள்,) அப்பொழுது அரக்கர்தலைவனை இராவணனும்,—ஏழ்கடல்களையும் ஒருசேர விரைந்துபார்க்கவேணுமென்றுவிரும்புகிற மூடனைப்போலக்காதல்கொண்டவனாய்,—அழகுபொருந்திய கோபுரத்தின்மேற்பொருந்திப்பொதுவாகப்பார்க்கத்தொடங்கியவனாய்,—(பார்வை) ஒருவழிபோய்க்கொண்டிருக்க,—முறைப்படியே [பிரித்துப்பிரித்து]காண்பே னென்னும் விருப்பத்தையுடையவனானான்; (எ-று.)ஒருவனேகாண முடியாதவாறு தானை மிகப்பேரளவுடையதாக இருக்கவே, பார்வை ஒருவழிச்செல்லப் பிரித்துப்பிரித்துப் பார்க்கலாயினான் இராவணனென்க. பி - ம்:—[1]ஆசனத்திருக்கைபுக்கான், மாசிலத்தாணிபுக்கான். [2]நோக்கினல்லால். [3]ஒருவழி. (௩௨௧௩)

௯.—தூதுவர் அணிகளை முறையேகாட்டிச் சொல்லத்தொடங்குதல்.

மாதிர மொன்றி னின்று [1]மாறொரு திசைமேன் மண்டி
ஓதநீர் செல்வ [2]தன்ன தானையை [3]யுணர்வு கூட
வேதமே தாந்தங் கூறும் பொருளினை விரிக்கின் றார்போல்
தூதுவ ரணிக டோறும் வரன்முறை [4]காட்டிச் சொன்னார்.

(இ - ள்-) ஒருதிக்கிலிருந்து மற்றொருதிக்கின்மேல் நெருங்கிக் கடல்நீர் செல்வதுபோன்ற தானையை, தூதுவர்கள்,--வேதவேதாந்தங்கள் சொல்லும்பொருளை விரிக்கின்றவர்போல, சேனையின் அணிகள் தோறும் (இராவணனது) அறிவு கூடும்படியாகச் சுட்டிக் காட்டிமுறையாகச் சொன்னார்கள்; (எ - று.)

வேதவேதாந்தங்களில் விரிவாகக்கூறும் நுண்மையாயுள்ள பரம்பொருளின் சொரூபத்தை நல்லாசிரியன் சீடனுக்குஉணர்வுகொள்ளும்படி விளக்கிக்கூறுவதுபோலத் தூதர்கள் இராவணனுக்குப் பரந்த சேனையை அணியணியாகப்பிரித்துஉணரக் கூறினார்கள். பி-ம்:—[1]மற்றொரு, [2]என்னத். [3]ஒருங்குகூடி, உணர்வுகூட்டி. [4]நோக்கிச் சொல்வார். (ரூஉகச)

வேறு

கo.—இதுமுதற் பதினெட்டுக்கவிகள்—இன்னாரின்னார் இன்னின்ன இடத்தவரென்பதைத் தூதுவர் கூறுவதைத் தெரிவிக்கும்.

சாகத் தீவினி னுறைபவர் [1]தானவர் சமைத்த
யாகத் திற்பிறந் தியைந்தவர் தேவரை [2]யெல்லாம்
மோகத் திற்[3]பட [4]முடித்தவர் மாயையின் முதல்வர்
மேகத் தைத்தொடு மெய்யின ரிவரென [5]விரித்தார்.

(இ-ள்.) இவர்கள்,--சாகத்தீவினிலுறைபவர்கள்: தானவர் முயன்று செய்த யாகத்திற்பிறந்து பொருந்தியவர்: தேவர்களையெல்லாம் மோகத்திற்புகுமாறு தீர்த்தவர்: மாயைகள்செய்வதில் முதன்மைபெற்றவர்: மேகத்தைத்தொடுகின்ற உடலையுடையவர் என்றுவிரித்துரைத்தார்; (எ - று.)—பி - ம்:—[1]தாபதர். [2]மேனாள். [3]புக. [4]முடிந்தவர். [5]விதித்தார். (ரூஉகரு)

கக. குசையின் றீவினி னுறைபவர் [1]கூற்றுக்கும் விதிக்கும்
வசையும் [2]வன்மையும் [3]வளர்ப்பவர் வானநாட் டுறைவார்
இசையுஞ் செல்வமு மிருக்கையு மிழந்ததிங் கிவரால்
விசயந் [4]தாமென [5]நிற்பவ ரிவர்நெடு விறலோய்.

(இ - ள்.) மிக்க பராக்கிரமத்தை யுடையவனே! இவர்கள்,---குசத்தீவில் வசிப்பவர்: யமனுக்கும் பிரமனுக்கும் முறையே பழிப்பையும் வல்லமையையும் வளர்ப்பவர்: வெற்றியே (வடிவுபடைத்துள்ள) தா மென்று சொல்லுமாறு நிற்பவர்: வானநாட்டி லுறைகின்ற தேவர்கள் இவர்களால்தான் கீர்த்தியையும் செல்வத்தையும் இருப்பிடத்தையும் இப்போது இழந்தது; (எ - று.)

கூற்றிற்கு வசை-கொல்லமுடியாமையாலும், பிரமனுக்குவன்மை-தான் படைத்தஉயிர் இறவாதிருத்தலாலுமாகும். பி - ம் :—[1]இவர்கொடுங்கூற்றின். [2]மென்மையும். [3]வளர்த்தவர். [4]தோமெனை, நாமெனை, தாமெனை. [5]நின்றவரிவர்நெடு, உவகைமிக்கெழுந்தனர். (ரூஉகசு)

கஉ. இலவத் தீவினி னுறைபவ [1]ரிவர்கள் பண் டிமையாப்
புலவர்க் கிந்திரன் பொன்னக ரழிதரப் பொருதார்

நிலவைச் செஞ்சடை வைத்தவன் வரந்தர [2]நிமிர்ந்தார்
உலவைக் [3]காடுறு தீயென வெகுளிபெற் றுடையார்.

(இ - ள்.) இவர்கள்,—சான்மலித்தீவிலுறைபவர்: இமையாக்கண்ணைப்படைத்த தேவர்களுக்கரசனான தேவேந்திரனது சொர்ணமயமான அமராவதிநகரம் அழியுமாறு முன்பு பொருதவர்: பிறைச்சந்திரனைச்செஞ்சடையில் வைத்தவனான சிவபெருமான் வரம்தர மேன்மைபெற்றவர்:காட்டில் காற்றோடுபொருந்திய தீப்போல வெகுளியைப் பெற்றவர்; (எ - று.)—உலவை - காற்று: மரச்செறிவுஎனினுமாம். பி - ம்:—[1]இவரிடம். [2]நிமிர்வார். [3]காட்டுறு. (௩உகஎ)

கங. அன்றிற் றீவினி னுறைப ரிவர் [1]பண்டை யமரர்க்கு
என்றைக் கும்மிருந் துறைவிட [2]மாம்வட மேருக்
குன்றைக்கொண்டுபோய்க் குரைகட[3]லிடவறக் [4]குலைந்தோர்
சென்றித் தன்மையைத்[5]தவிருமென் றிரந்திடத் தீர்ந்தோர்.

(இ - ள்.) இவர்,—கிரௌஞ்சத்தீவில் வசிப்பவர்: பழமையான தேவர்களுக்கு என்றைக்கும் இருந்துறைகின்ற இடமாகிய வடமேருக் குன்றைக் கொண்டுபோய் ஒலிக்கின்றகடலிலே போகடத்தொடங்க, (அத்தேவர்கள்) மிகநடுங்கினவர்களாய்ச்சென்று 'இத்தன்மையை நீங்குங்கள்' என்றுவேண்ட அச்செயலைத்தவிர்ந்தவர்; (எ - று.)—பி-ம்:—[1]பண்டவ்வமரர்க்கு. [2]என்றிட, ஆமென்னும், எனவட. [3]இடலுற்ற, இடையுற. [4]குலத்தோர், குயத்தோர். [5]தீருமென்று. (௩உகஅ)

கச. [1]பவளக் குன்றினி னுறைபவர் வெள்ளி [2]பண் பழிந்தோர்
குவளைக் கண்ணி [3]யங் கிராக்கதக் கன்னியைக் கூட
அவளிற் றோன்றின [4]ரையிரு கோடியர் நொய்தின்
[5]திவளப் பாற்கடல் [6]வறள்படத் தேக்கினர் [7]சிலநாள்.

(இ-ள்.) (இவர்கள்),—பவளக்குன்றிலுறைபவர்கள்: சுக்கிராசாரியன் குணம்மாறி [காமபரவசனாகி] ஒரு குவளைமலர்போன்ற கண்களையுடையவளான இராக்கதகன்னியை அங்குப்புணர அவளிடத்திலிருந்து தோன்றியவர்: பத்துக்கோடித்தொகையை யுடையவர்: (வெண்ணிறத்தோடு) விளங்குகின்ற அந்தப்பாற்கடல் வறண்டுவிடும்படி விரைவாகச் சிலநாளில் தேக்கினவர்; (எ-று.)—தேக்குதல்-நிரம்பப்பருகுதல். பி-ம்:—[1]பவளத்தீவினில், பவளக்குன்றிடை.[2]பண்பழித்தே,பண்பழித்தோர், பண்பழிந்தே. [3]ஓர். [4]ஆயிருகோடியர், ஐயையிருகோடி. [5]துவளப். [6]பாழ்படத், வறளதாத். [7]சின்னாள். (௩உகக)

கரு. [1]கந்த மாதன மென்பதிக் கருங்கடற் கப்பான்
மந்த மாருத [2]மூர்வதோர் [3]கிரி யதில் வாழ்வோர்
[4]அந்த காரத்தொடும் [5]ஆலகா லத்தொடும் பிறந்தோர்
இந்த வாளெயிற் றரக்க [6]ரெண் ணறிந்தில மிறைவ.

(இ-ள்.) இறைவனே! இந்த வாள்போன்ற எயிற்றையுடையஅரக்கர்,இக்கருங்கடற்கப்பாலுள்ள கந்தமாதனமென்பதாகிய இளங்காற்று

தவமுப்பெற்ற ஒப்பற்ற கிரியில் வாழ்பவர்: (நிறத்தினால்) இருட்டையும் ஆலகாலத்தையும் ஒத்துப்பிறந்தவர்: (இவர்கள்)எண்ணிக்கையை(நாம்) அறிந்திலோம்; (எ - று.)—பி - ம்:—[1]கந்தமாருதமென்பர். [2]உறுவதோர், முரல்வதோர். [3]கிரியிதில், கிரியினில். [4]அந்தகாலத்தவ், அந்தகாலத்தொடும். [5]ஆலகாலத்துடன். [6]எண்ணிறந்தனர், எண்ணிறந்தவர், எண்ணிறந்தவர். (௩௨௨௦)

௧௬. மலய மென்பது [1]பொதியமா மலையதின் மறவோர்
நிலய மன்னது [2]சாகரத் தீவிடை [3]நிற்குங்
[4]குலையு மிவ்வுல கெனக்கொண்டு நான்முகன் [5]கூறி
[6]உலைவி லீரிதி லுறையு [7]மென் றிரந்திட வுறைந்தார்.

(இ-ள்.) மலையமென்பது பொதியமாமலையாகும்: அதில்தோன்றிய வீரராகிய இவருடைய வாழிடமென்கின்ற அது கடலிடையேஉள்ள தீவில்இருக்கும்: (இவர்கள் இவ்வுலகில்வசித்தால்) இந்தஉலகமே அழிந்துவிடும் என்றுகருதி, பிரமதேவன் (அவர்களைநோக்கி) 'அழிவில்லாதவர்களே! இங்குவசியுங்கள்' என்று கூறி வேண்ட, (இவர்கள் அங்கு) உறைவதானார்கள்; (எ-று.)—பி - ம்:—[1]பொதியினல்லாதினி, பொதியமாத்தீவினில்,பொதியிலாதீயிடை. [2]சாகரத்தீயிடை. [3]நிற்கில். [4]குலையுமெவ். [5]கூற. [6]உலைவிலர். [7]என்றிட. (௩௨௨௧)

௧௭. [1]முற்க ரக்கையர் மூவிலை வேலினர் முசுண்டி
சக்க ரத்தினர் [2]சாபத்த ரெனநின்ற தலைவர்
நக்க ரக்கட [3]லொடொரு மூன்றுக்கு நாதர்
புக்க ரப்பெருந் தீவிடை யுறைபவர் புகழோய்.

(இ-ள்.) புகழையுடையவனே!'(இவர்கள்),--செம்மட்டியைக் கையிற் கொண்டவர்: மூவிலைவடிவான வேலையுடையவர்: முசுண்டியையுஞ் சக்கரத்தையுங் கொண்டவர்: வில்லையேந்தியவர்' என்றுசொல்லப்படுகின்ற தலைவர்கள்; முதலையையுடைய ஏழுகடல்களுக்குந் தலைவர்: புட்கரமென்னும் பெருந்தீவினிடையில் வாழ்பவர்; (எ - று.) முற்கரம்= முத்கரம்: நக்கரம்=நக்ரம்: வடசொற்கள். பி-ம்:—[1]முக்கரக். [2]சாபத்தின் றனிநின்றதலைவர், சாபத்தரிந்திரன் றலைவர், சாபத்தினினின்றதலைவர். [3]நாலொடு. (௩௨௨௨)

௧௮. மறலி யைப்பண்டு தம்பெருந் தாய்சொல வலியாற்
[1]புறநி லைப்பெருஞ் சக்கர மால்வரைப் பொருப்பின்
விறல்கெ டச்சிறை யிட்டய னிரந்திட விட்டோர்
[2]இறலி யப்பெருந் தீவிடை [3]யுறைபவ ரிவர்கள்.

(இ-ள்.)இவர்கள்,--இறலியென்ற அப்பெருந்தீவில் வாழ்பவர்கள்; முன்பு தம் பெருமைபெற்ற தாய்சொல்ல (இவ்வேழுலகுக்கும்) அப்பாலுள்ள சக்கரவாளமெனப்படுகின்றபெரிய மலையிலே (தம்முடைய)வலியினால்யமனை வலிகெடச்செய்து சிறையிலிட்டு, பிரமதேவன் இரக்க (யமனைச்சிறையிலிருந்து விட்டவர்; (எ று.)—பி-ம்:—[1]புறநிலத்தரும், புறநிலந்தரும். [2]இறலியைப். [3]உற்றவர். (௩௨௨௩)

ககூ. வேதா ளக்கரத் [1]திவர் [2]பண்டு புவியிடம் விரிவு
[3]போதா துந்தமக் [4]கெழுவகை யாய்நின்ற புவனம்
பாதா ளத்துறை வீரென நான்முகன் [5]பணிப்ப
நாதா [6]புக்கிருந் [7]துனக் கன்பி ஞலிவ ணடந்தார்.

(இ - ள்.) தலைவனே! வேதாளத்தின் கையைப்போன்ற கையையுடையஇவர்--,--'முன்ஞெருகாலத்திலே பூலோகத்தில் வசிப்பதற்கு உமக்கு இடம்விஸ்தாரமாகப் போதாது; எழுவகையாய்நின்ற புவனத்தில் (எங்கும் இடம்போதாது: ஆகையால்), பாதாளத்தில் உறைவீர்' என்று, பிரமதேவன் பணித்ததனுற் பாதாளத்திற் புக்கிருந்து, உன்னிடத்தன்பினுல் (இப்போது) இங்கே வந்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]ஈவர். [2]இவ்வுலகிடம், பண்டுலகிடம். [3]போதாளப்புகும், போதாபுக்குமக்கு, போதாபுக்குமற்று. [4]எழுவகையால். [5]பணிக்க. [6]புக்கிருந்தார், புக்கிருந்தனர். [7]உனக்கரிதினிடைந்தார், உனகருத்தினடைந்தார், உனக்கன்பினுனடந்தார். (ஙஉஉச)

உ0. நிருதி தன்குலப் புதல்வர்நின் குலத்துக்கு நேரே
பருதி [1]தேவர்கட் கெனத்தக்க பண்பினர் [2]பானக்
குருதி பெற்றில [3]ரேற்கட லேழையுங் குடிப்பார்
இருணி றத்தவ [4]ரொருத்தரேழ் [5]மலையையு மெடுப்பார்.

(இ - ள்.) (இவர்கள்),---நிருதியென்னும் திக்பாலகியினது குலத்துப்பிறந்த புதல்வராவர்: உன்குலத்துக்கு நேரே (சேர்ந்தவர்): தேவர்கட்குப் பருதியெனச் சொல்லத்தக்க பண்பையுடையவர்: குடித்தற்கு உரிய இரத்தத்தைப் பெறுமற்போவாரேயாயின் கடலேழையுங் குடிப்பர்: இருள்நிறத்தையுடையவர்: ஒருத்தரே எழுமலையையு மெடுத்தற்குரியவர்; (எ - று.)—பி ம்:—[1]தேவர்கள். [2]யானைக். [3]எனில், ஆழ். [4]ஒருவர். [5]உலகையும், மலையினே. (ஙஉஉரு)

உக. பா[1]ர ணைத்தவெம் பன்றியை யன்பினுற் [2]பார்த்த
[3]கார ணத்தினி [4]னுதியிற் பயந்த[5]பைங் கழலோர்
பூர ணத்தடந் திசைதொறு மிந்திரன் புலரா
வார ணத்தினே [6]நிறுத்தியே சூடினர் வாகை.

(இ - ள்.) பூமிதேவியை யணைத்த விருப்பந்தரத்தக்க பன்றியை அன்பினுல் (அந்தப்பூமிதேவி) பார்த்த காரணத்தினுலே ஆதியிற் பெறப்பட்ட பசும்பொன்னுற் செய்த கழலினையுடையவராவர், (இவர்கள்): (இவர்),---பெருந்திக்குத்தோறும் (மதம்) வற்ருத (தம்முடைய) யானைகளை (அத்திக்கு)ப் பூரணமாகும்படி நிறுத்தி இந்திரனைவென்ற வெற்றிமாலையைச் சூடியவர்; (எ - று.)

பகைவரைவென்றவர் தம்யானைகளைப் பகைவர்நாட்டின் எல்லைகளில் வைத்தல் மரபுஎன்பர்: "இன்று, ரிகலறநூறித் தன்மதவாரணந், திசைதொறு நிறுவிய.....சீயகங்கன்" என்றதுங் காண்க. பி - ம் :—[1]அணைந்த,மணந்த. [2]பார்க்கும். [3]காரணத்தினன். [4]ஆதியான். [5]வெங்,[6]நிறுத்தினனிவர்வுரவஞ்சி, நிறுத்தியதிவர்வுரவஞ்சி. (ஙஉஉசு)

௨௨. மறக்கண் வெஞ்சின மலையென [1]விந்நின்ற வயவர்
இறக்கங் [2]கீழிலாப் பாதலத் துறைகின்ற [3]விகலோர்
அறக்கண் [4]டுஞ்சில வாயிரம் [5]பணந்தலை யனந்தன்
உறக்கந் தீர்ந்தன [6]னுறைகின்ற திவர் [7]நடந் தொறுக்க.

(இ - ள்.) கொடுங்கண்களையும் கடுங்கோபத்தையுமுடைய மலை போன்ற (பெருந்) தோற்றமுள்ள இந்த நின்றவீரர்கள்,—(தன்னினுங்) கீழே இறங்குவதற்கு இடமில்லாத பாதலத்துஉறைகின்ற பராக்கிர மத்தையுடையவர்:இவர்கள்,--(தாம்)உறைகின்ற இடத்து நடந்துஅலைத் தலினால்,ஆயிரம்படத்தோடுகூடியதலைகளையுடையஅனந்தன்,--உறக்கம் நீங்கினவனாய் மிகவும் கண்டுஞ்சாதவனாயினான்;(எ - று.) பி-ம்:—[1]விண் ணின்ற. [2]கீழிலவாசலத்து, கீழிலாரசாதலத்து. [3]விறலோர். [4]துஞ்சிலா. [5]நனந்தலை. [6]உணர்கின்றது, உறைவிடம். [7]வரவு, தொடர்ந்து. ()

௨௩. காளி யைப்பண்டு கண்ணுதல் காட்டிய காலை
மூள முற்றிய [1]சினக்கொடுந் தீயிடை முளைத்தோர்
கூளி கட்குநல் லுடன்பிறந் தார்பெருங் குழுவாய்
வாளி மைக்கவும் வாளெயி றிமைக்கவும் வருவார்.

(இ-ள்.) (இவர்கள்),—முன்பு நெற்றியிற் கண்ணையுடைய சிவபெரு மான்காளியை(த் தோற்கும்படி ஊர்த்துவதாண்டவஞ் செய்து)காட்டிய பொழுது(அக்காளியினது)மூளுமாறுமுதிர்ந்த கோபமாகியகொடுந்தீயி னின்றுபிறந்தவர்: பேய்கட்குச் சிறந்த உடன்பிறந்தவர் போன்றவர்; (கையிற்பிடித்த)வாட்படை விளங்கவும், ஒளிபொருந்தியபற்கள் பிரகா சிக்கவும் பெருங்கூட்டமாய் வருபவர் ; (எ-று.)பி-ம்:—[1]சினத்தொடும், சினக்கடும். (௩௨௨௮)

௨௪. பாவந் தோன்றிய காலமே தோன்றிய பழையோர்
தீவந் தோன்றிய [1]முழைத்துணை யெனத்தெறு கண்ணர்
கோவந் தோன்றிடிற் றாயையு முயிருணுங் கொடியோர்
சாவந் தோன்றிட வடதிசை மேல்வந்து சார்வார்.

(இ - ள்.) வில்லானது தோன்றும்படி வடதிக்கின்மேல் வந்து சேருகிறவர்களாகிய இவர்கள்,—பாவந்தோன்றிய காலத்திலேயே தோன்றியபழையவர்கள்:தீபங்காணப்படுகின்றஇரண்டுகுகைகளென்று சொல்லுமாறு (தோன்றி) அச்சத்தைவிளைவிக்கின்ற கண்களையுடைய வர்: கோபந்தோன்றினால் தாயையும் உயிருண்ணக்கூடியகொடியவர்.

செந்நிறக் கண்களுடனேதோன்றும் குழிந்தாழ்ந்த குவளையிணை கள் தீபந்தோன்றும் முழையிணைபோலும்; "கொள்ளி கொண்டி ரண்டே முழையுட்புக குன்றுதோன்றுவபோல விழிப்பன" என்ற கலிங்கத்துப்பரணி இங்குக் காணத்தக்கது. பாபம், தீபம், கோபம், சாபம் எனப் பகரஎதுகைபடப் படிப்பதுமுண்டு. பி - ம் :—[1]முழை யெனத்தெறுகின்ற, முழைதொறு மெனத்தெறுங்,முழையெனத் தெறு சுடர்க், முறைமையாமெனத்தெறு,முழைத்துணையெனத்தறு. (௩௨௨௯)

௨௫. சீற்ற மாகிய [1]வைம்முக னுலகெலாந் தீப்பான்
ஏற்ற [2]மாநுதல் விழியிடைத் தோன்றின ரிவராற்
கூற்ற மாகிய கொம்[3]பினைம் பாலுடைக் [4]கொடுமை
[5]ஊற்ற மாகப்பண் [6]டுதித்தவ ரென்பவ ருவரால்.

(இ-ள்.) இவர்கள்,—சீற்றங்கொண்டுள்ள ஐம்முகங்களையுடையனான சிவபிரான் உலகெல்லாவற்றையுந் தீக்கும்படி கொண்டுள்ள பெரிய நெற்றிக்கண்ணினிடத்திருந்து தோன்றினவர்; அதோ அங்கிருப்பவர்,-கூந்தலைக்கொண்ட யமன் என்றுசொல்லத்தக்க ஓர்மாதின் கொடுமைக்கு ஊன்றுகோலாக முன்புபிறந்தவரெனப்படுவோர்; (எ - று)

'ஐம்பாலுடைக்கொம்பு' எனவே,பெண்ணாயிற்று. நான்காமடிக்கு-யமனுடையகோபத்தினின்று பிறந்தவர் உவர் எனப்பொருள் காணலுமாம். பி - ம்:—[1]நான்முகனுலகுளவுயிரெலாம், நான்முகன்முதலிடையுலகெலாம், நான்முகன்முகத்திடை யுலகெலாம். [2]நாள்மற்றெவ்வெரியிடை, நாள்மற்றவ்வெரியொடும். [3]ஐம்பாலிடை, அம்பாலுடை. [4]கொடுமைக்கு. [5]ஊற்றமாகி, எற்றமாக. [6]உதித்தனர், உதித்துளோர். ()

௨௬. காலன் [1]மார்புழைச் சிவன்கழல் பட[2]வன்று கான்ற
[3]வேலை யேயன்ன குருதியிற் றோன்றிய வீரர்
சூல [4]மேந்திமுன் னின்றவ ரிங்கின்ற தொகையார்
[5]ஆல காலத்தி னமிழ்தின்முன் பிறந்த [6]போரரக்கர்.

(இ - ள்.) சூலத்தைக்கையிலேந்தி முன்னே நின்றவர், யமனுடைய மார்பில் சிவபெருமானுடைய திருவடிபட அப்பொழுது (அம்மார்பு)கக்கிய கடலையொத்தஇரத்தத்தினின்றும் தோன்றிய வீரராவர்; (பெருந்)தொகையாயுள்ள இவர், ஆலகாலத்துக்கும் அமிழ்துக்கும் முன்பாகப்பிறந்த போரரக்கர்; (எ - று.)—பி - ம்:—[1]மார்பினிற், மார்பிடைச். [2]பண்டு. [3]வேலையேழென்ன, வேலையேழெனக். [4]ஏந்தியகையினர், ஏந்தியுநின்றவர், ஏந்தியேநின்றவர். [5]ஆலகாலமுமமிர்தமும், ஆலகாலத்துமமிழ்தினும், ஆலகாலத்துமமுதொடும். [6]பேரரக்கர், போலரக்கர். (௩௨௩௧)

௨௭. வடவைத் [1]தீயினில் வாசுகி கான்றமா [2]கடுவை
இடவத் தீயிடை யெழுந்தவ [3]ரிவர்கண மழையைத்
[4]தடவத் தீயென [5]நிமிர்ந்த குஞ் சியருவர் தனித்தேர்
[6]கடவத் தீந்தவெம் புரத்திடைத் தோன்றிய கழலோர்.

(இ - ள்.) இவர்கள்,—(பாற்கடலைக் கடைந்தபொழுது) வாசுகிகக்கிய பெரியவிஷத்தை வடவைத்தீயினிலிட, அத்தீயில்நின்றும்பிறந்தவர்: தொகுதியாகிய மேகத்தைத் தீண்டும்படி தீப்போல் நிமிர்ந்துள்ள குஞ்சியை யுடையவராகிய அதோஉள்ளவர்கள்,ஒப்பற்ற தேரை(ப் பிரமனாகியசாரதி) தூண்டிச்செலுத்த(ச் சிவபெருமானால்) தீய்ந்துபோன கொடியதிரிபுரத்தில் தோன்றிய வீரக்கழலையுடையவர்; (எ - று.)—முதலிரண்டடியாக் கொள்வாருமுளர். அவர்பிறவியையுண்மையாகவே

கூறியவெனக்கொள்ளாது. தந்துறிப்பேற்றவணி. பி - ம்:—[1]தீயினை தீயிடை. [2]கடுவைத்திட, கடுவைவிடவைத். [3]இவரிவர், இவரினம். [4]தடவத்தீநிகர், தடவித்தீநிமிர், தடவைத்தீயென. [5]நிமிர்ந்தவர்தறு கணரிறைவர், குஞ்சியர்சங்கரன் தனித்தேர், குஞ்சியரிவருவர்தனித்தேர், குஞ்சியரிறையவர்தனித்தேர், குஞ்சியரிவரிவர் தனித்தேர். [6]சுட. ()

உஅ.—அச்சேனையிலுள்ளவர் இன்னரென்றும் இத்துணையரென்றுஞ் சொல்லமுடியாமை.

[1]எனைய ரின்னவ [2]ரென்பதோ ரளவில ரைய
நினைய வுங்குறித் துரைக்கவு மரிதிவர் [3]நிறைந்த
வினைய முப்[4]பெரு வரங்களுந் தவங்களும் [5]விளம்பின்
அனைய பேருக மாயிரத் தளவினு [6]மடங்கா.

(இ-ள்.) ஐயனே! இத்தனையவர் என்பதற்கும், இன்னரென்பதற்கும் ஓரளவில்லாதவர், (இவர்கள்):(இவர்களைப்பற்றி)நினைக்கவும்குறிப்பிட்டுச்சொல்லவும் முடியாது; இவர்களிடத்தில் நிறைந்துள்ள வஞ்சனைகளும் பெருத்தவரங்களும் தவங்களும் சொல்லப்புக்கால், அப்படிப்பட்ட பெரியயுகம் ஆயிரத்திலும் அடங்காவாம்; (எ-று.)—'அனைய'என்பது-மிகப்பலநாள் பெற்றதென்ற குறிப்பு. பி-ம்:—[1]இனையர். [2]என்பதொன்றிந்திரற்கேயும். [3]நினைந்த. [4]பெருந்தவங்களும்வரங்களும். [5]விசும்பின். [6]அடங்கார். (௩௨௩௩)

உகூ.—வந்த சேனையோரின் திறமை.

ஒருவ ரே[1]சென்றவ் வுறுதிறற் குரங்கையு முரவோர்
இருவ [2]ரென்றவர் தம்மையு [3]மொருகைகொண் டெற்றி
வருவர் [4]மற்றினிப் [5]பகர்வதென் வானவர்க் கரிய
[6]திருவ வென்றனர் தூதுவ ரிராவணன் [7]செப்பும்.

(இ-ள்,) தேவர்கட்கும் அரிய சம்பத்தையுடையவனே! இச்சேனையிலுள்ளவர்களில்) ஒருத்தரேபோய் அந்த மிக்கதிறலுடைய குரங்கையும், வலிமையுடையவர் எனப்படுபவராகிய (இராமலக்ஷ்மணர்) இருவரையும் ஒருகையைக்கொண்டு அடித்துவருவார்: வேறினிச்செல்ல வேண்டுவதென்ன? என்று தூதுவர்சொன்னார்கள்: (அப்போது) இராவணன் சொல்பவனானான்; (எ - று.)—பி-ம்:—[1]சென்றிவ். [2]என்பவர். [3]முன்கைகொண்டெற்றி, முன்கையோடெற்றி, ஒருகையோ டொற்றி. [4]மாறினி, என்னினி. [5]பகர்வது. [6]திருவை, திருப. [7]நிகழ்த்தும். ()

௩௦.—'இராவணன் இச்சேனைக்கு அளவுஎன்?' எனத் தூதுவர் விடைஇறுத்தல்.

[1]எத்தி றத்திறத் தெண்ணெனத் தொகைவகுத் தியன்ற
[2]அத்தி றத்தினை [3]யறைதிரென் [4]றுரைசெய வவர்கள்
ஒத்த வெள்ளமோ [5]ராயிர முளதென [6]வுரைத்தார்
பித்த ரிப்படைக் கெண்[7]சிறி தென்றனர் பெயர்ந்தார்.

(இ-ள்.) 'இச்சேனைக்கு எண் எத்திறத்தில் என்று தொகையை வகுத்துப் பொருந்திய அத்திறத்தினைச் சொல்லுங்கள்' என்று(இராவணன்)வினவ, அத்தூதுவர்கள்,—'பொருந்திய வெள்ளம் ஓராயிரமுளது என உரைத்தவர் பித்தராவர்: இந்தப்படைக்கு (அளவிட்டுச் சொல்லுவதற்கு இப்பொழுதுள்ள) எண்ணே சிறியது' என்று சொன்னவர்களாய் விலகிநின்றார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]எத்துணைத்திறத்தது, எத்துணைத்திதற்கு, [2]இத். [3]அறைதி. [4]உரைசெய்வாரவர்கள். [5]ஏழு நூறுமென, ஆயிரம்மென. [6]உரைத்திடுவர், உரைப்பார். [7]அரிது. ()

௩க.—இராவணன் சேனாபதிகளை அழைத்துவரச் சொல்லுதல்.

படைப்பெ ருங்குலத் தலைவரைக் [1]கொணருதி ரென்பாற்
கிடைத்து [2]நானவர்க் குற்றுள பொருளெலாங் [3]கிளத்தி
[4]அடைத்த நல்லுரை விளம்பின னளவளா [5]யமைவுற்று
[6]உடைத்த பூசனை வரன்முறை [7]யியற்றவென் றுரைத்தான்.

(இ-ள்.) (இராவணன், தூதரைநோக்கி), நான் நெருங்கி அந்தப் படைத்தலைவர்க்கு நிகழ்ந்துள்ள விஷயங்களையெல்லாஞ்சொல்லி, ஏற்ற நல்வார்த்தைகளைச் சொல்லினவனாய் (மனம்பொருந்தி) அளவளாவி உள்ள பூசனைகளை வரன்முறையியற்றுமாறு பெருந்தொகுதியாயுள்ள படைத்தலைவர்களை என்னிடத்தில் இட்டுக்கொண்டு வாருங்கள்' என்றுகூறினான்;(எ-று.)—உடைத்த=உடைய. பி-ம்:—[1]கொணர்குதிரென்பாற், கொணருதிர்பண்பாற். [2]நாள் [3]கிளர்த்தி. [4]அடுத்து. [5]உவந்தே. [6]உடைத்தோர். [7]இயற்றெனச்சொன்னான். (௩உ௩கூ)

௩உ.—இராவணன்தாளிற் சேனாபதிகள் விழுந்துவணங்குதல்.

தூதர் கூறிடத் திசைதொறுந் திசைதொறுந் [1]தொடர்ந்தார்
ஓத வேலையி னுயக ரெவரும்வந் துற்றார்
போது தூவினர் வணங்கின ரிராவணன் பொலன்றாள்
மோது [2]மோலியின் [3]பேரொலி [4]வானினை [5]முட்ட.

(இ - ள்.) பெருக்கைக்கொண்ட கடல்போற்பரந்தசேனைக்குத் தலைவர்யாவரும்,--தூதர்(இராவணன்கட்டளையைச்)சொல்லவும் திக்குகள்தோறுந் திக்குகள்தோறுந் தொடர்ந்துவந்தவராய் இராவணனுடைய அழகியதாள்களிலே மலர்களைத்தூவி (யருச்சித்து)மோதுகின்ற கிரீடத்தின் பேரொலியானது வானத்தைமுட்ட வணங்கினார்; (எ - று.) —வந்துற்றார்=உற்றுவந்தார். பி - ம்:—[1]தொடர்ந்த. [2]மோலியர். [3]பேரெழில். [4]விசும்பினை, விசும்பின்மேல். [5]முடங்க. (௩உ௩எ)

௩௩.—இராவணன் வணங்கினவரை க்ஷேமம்விசாரித்தல்.

அனைய ரியாவரு மருகுசென் [1]றடிமுறை வணங்கி
வினய [2]மேவின ரினிதினங் கிருந்தபோர் வேலை
[3]நினையு [4]நல்வர வாகநும் வரவென [5]நிரம்பி
மனையு மக்களும் [6]வலியரே யென்றனன் மறவோன்.

(இ-ள்.) அவர்கள்யாவரும் (இராவணனுடைய)அருகிற் சென்று பாதங்களை முறையேவணங்கி வணக்கம்பொருந்தியவராய் அங்கே

இனிதாக இருந்தபோது --வீரகுணத்தையுடையவனான இராவணன்,—(அவர்களைநோக்கி),—'நம்முடையவரவு நினைக்கின்ற நல்வரவாகுக' என்றுசொல்லி மனம்நிரம்பி, '(நம்முடைய) மனைவியரும் மக்களும் திடமாகஇருக்கின்றார்களோ?' என்று க்ஷேமம்விசாரித்தான்; (எ-று.)—பி-ம்:—[1]அடியுற, அடிமுடி. [2]மேனியோரினிதினங்கு, மேவினனருகி னங்கு, மேவினனருகுணங்கு. [3]நினைய, நினையின். [4]மன்னவர்முகந்தொறும்விரும்பின. [5]நிரப்பி. [6]வலியரோ. (௩உ௩அ)

௩சு.—சேனாதிபதிகளின் விடை.

பெரிய [1]திண்[2]புய னீயுளை தவவரம் பெரிதால்
உரிய வேண்டிய பொருளெலா முடிப்பதற் [3]கொன்றே
[4]இரியல் தேவரைக் கண்டனம் பகைபிறி தில்லை
[5]அரிய தென்[6]னெமக் கென்றன ரவன்கருத் தறிவார்.

(இ-ள்.) பெரிய வலிய புயம்படைத்த நீ உள்ளாய்: தவத்தினாற் பெற்ற வரமோ பெரியது: உரியனவாய் வேண்டியனவான பொருள்களையெல்லாம் முடித்துக்கொள்வதற்கு அருமையானதோ? [எக்காரியத்தையும் எளிதில்முடித்துக்கொள்ளலாமென்றபடி]: தேவர்களை நிலைகெட்டோடச் செய்தோம்: பகையோ வேறேயில்லை: எமக்கு அருமையானது என்னஉள்ளது? என்றுகூறினார்கள்: (யாவரெனில்?)—அந்தஇராவணனுடைய கருத்தையறிபவர்களான சேனாதிபதிகள்; (எ-று.)—'அரியதென்' என்ற சொற்றொடர் - நீ எப்பணிசெய்யச் சொன்னாலும் அதனைச்செய்துமுடிப்போம் என்ற கருத்தினது: இவ்வாறு கூறியதுபற்றியே அவர்களை 'கருத்தறிவார்' என்றது. பி-ம்:—[1]தின். [2]புயமாயிரம், புயமுயர்ந்துள, புயயாமுளம். [3]என்றே. [4]இரிய. [5]அரிய. [6]நமக்கு. (௩உ௩௯)

௩௫.—சேனாபதியர்வினவ, இராவணன் தன்செய்தியை யவர்கட்கு உரைத்தல்.

மாத ரார்களு மைந்தரு [1]நின்மருங் கிருந்தார்
பேது றாதவ ரில்லைநீ வருந்தினை பெரிதும்
யாது காரண மருளென [2]வனையவ ரிசைத்தார்
சீதை காதலிற் [3]பிறந்துள பரிசெலாந் [4]தெரித்தான்.

(இ-ள்.)'உன்பக்கத்திலிருந்த மாதரார்களும் மைந்தர்களும் என்றவர்களில் கலக்கமுறாதவர்களில்லை: நீ மிகவும் வருந்தியுள்ளாய்: (இவ்வாறுவருந்த) யாதுகாரணம்? சொல்லியருள்வாய்' என்று அவர்கள் கூறினார்கள்: (அதற்கு இராவணன்), சீதையினிடத்துக்காதலால் (தனக்குத்)தோன்றியுள்ள நிலைமையையெல்லாம் கூறினான்; (எ-று.)—பி-ம்:—[1]நுன்மருங்கிருந்தார், அருகிருந்தாரும். [2]இனையவருரைத்தார். [3]புகுந்துளபொருளெலாம், புகுந்துளபரிசவன். [4]செப்பும், தெரிந்தான்.

௩௬.—சேனாதிபதிகள் அதுகேட்டுச் சிரித்துக்கூறுதலைத்தெரிவிக்கும்.

கும்ப கன்னனொ டிந்திர சித்தையுங் குலத்தின்
வெம்பு வெஞ்சினத் தரக்கர்தங் குழுவையும் வென்றார்

அம்பி னாற்[1]சிறு மனிதரே நன்றுநம் மாற்றல்
நம்ப சேனையும் வானர மேயென [2]நக்கார்.

(இ - ள்.) கும்பகன்னனுடனே இந்திரசித்தையும் (வீரக்குலத்துப் பிறந்த (மனம்) வெம்புகின்ற கொடுங்கோபத்தையுடைய அரக்கர்தங் கூட்டத்தையும் அம்புகொண்டு வென்றவர்,—சிறியமானுடரோ? நம் வல்லமை நன்று! நம்பனே! (அவர்களுடைய)சேனையும் வானரமேயோ! என்று சொல்லிச் சிரித்தார்; (எ-று.)---பி-ம்:—[1]சில.[2]நக்கான்.(௩உசக)

௩எ.—இதுவும் அது.

உலகைச் சேடன்ற [1]னுச்சியின் றெடுக்க[2]வன் றேரேழ்
மலையை வேரொடும் வாங்கவன் றங்கையால் [3]வாரி
அலைகொள் வேலையைக் [4]குடிக்கவன் றழைத்தது மலரோடு
இலைகள் கோதுமக் குரங்கின்மே லேவக்கொ லெம்மை.

இதுவும் அடுத்த கவியும் - ஒரு தொடர்.

(இ - ள்.) (நீ) எங்களை வரவழைத்தது,---இந்தஉலகத்தை ஆதிசேஷனுடைய உச்சியிலிருந்து அப்பாலெடுப்பதற்கன்று; ஒப்பற்ற சப்த குலாசலங்களை அகங்கையால் வேரோடும் பறிப்பதற்கன்று; அலைகொண்டகடலைக் குடிப்பதற்கன்று;மலரோடு இலைகளைக்கோதித்தின்கின்ற அந்தக்குரங்குப்படையின்மேல் (போர்செய்ய) விடுவதற்காகவோ?

அரும்பெருங் காரியத்தைச் செய்வதற்கு எங்களை ஏவவேண்டுமே தவிர, பொருமாறு அற்பக்குரங்குகளின்மேல் ஏவுவது தகுதியன்று என்றவாறு. வாரிவாங்குதல்-வேரோடும்பெயர்த்தெடுத்தல். இனி வாரி அலை - நீரலையுமாம்: வாரிக்குடிக்க என்னவுமாம். பி - ம்:—[1]உச்சிமேல். [2]ஒன்று. [3]வாங்கி. [4]இறைக்க, இழைக்க. (௩உசஉ)

௩அ.—பரிகசித்தஅரக்கரைவிலக்கிப் புட்காத்தீவிற்தஅரசனான வன்னியென்பவன் 'அந்தமானுடரின் வலி யாது? என' விசாரித்தல்.

என்னக் [1]கையெறிந் திடி[2]யுரு மேறென [3]நக்க
மின்னும் [4]வெள்ளெயிற் றரக்கரை யங்கையால் விலக்கி
வன்னி [5]யென்பவன் [6]புட்கரத் தீவுக்கு மன்னன்
[7]அன்ன மானிடர் தம்வலி [8]யாதென வறைந்தான்.

(இ-ள்.) என்றுசொல்லிக் கைகொட்டிப் பேரிடிபோல(ப் பேரொலியுண்டாகுமாறு) சிரித்த விளங்குகின்ற வெண்ணிறப்பற்களையுடைய அரக்கர்களை, புட்கரத்தீவிற்குமன்னனான வன்னியென்பவன்,—(தன்னுடைய) அழகியகையினால்விலக்கி, 'அந்தமானிடரின் வலி எப்படிப் பட்டது?' என்று கூறினான் [வினவினான்]; (எ - று.)

ஈற்றடிக்கு அந்தமானிடரின்வலி எப்படிப்பட்டது! [மிகப்பெரியது] என்றுகூறினான் என்றலும்ஒன்று. பி-ம்:—[1]கைம்மறித்து. [2]உருமாமென, உருவாமென. [3]நக்கு. [4]வாள். [5]என்றவன். [6]புட்கலத். [7]அன்னமானுடரார்வலி, அன்னமானுடர்யாரவர். [8]வலியரென்றறைந்

தான், யாவதென்றுரைத்தான். 'அன்னதோர் நரர்வலியரென்றேயவர்க்கறைந்தான்' என்று ஒருபிரதியில் நான்காமடி யுள்ளது. (௩௨௪௩)

௩௯.—மாலியவான் பதில் கூறத்தொடங்குதல்.

மற்ற வாசகங் கேட்டலு மாலிய வான்வந்து
உற்ற தன்மையு மனிதர தாற்றமு முடனுங்
கொற்ற வானரத் தலைவர்தங் [1]தகைமையுங் [2]கூறக்
கிற்றுங் [3]கேட்டிரா லென்றவன் கிளத்துவான்[4]கிளர்ந்தான்.

(இ-ள்.) பின்பு அந்த(வன்னியின்)வார்த்தையைக்கேட்டவுடனே, மாலியவானென்பவன்,--(அப்போது)நிகழ்ந்துள்ள தன்மையையும் மனிதருடையவல்லமையையும் உடன்நிற்கின்ற வெற்றிபொருந்தியவானரத்தலைவர்களின் குணத்தையும் கூறும்வல்லமையுடையோம் [சொல்வோம்]:கேளுங்கள் என்றுசொல்லி,அவன் சொல்லுவதற்குமூண்டான்; (எ - று.)—'வந்து'என்பது சொல்விழுக்காடாக வந்தது; இனி, வந்து-முன்வந்து என்று உரைப்பாருமுளர். பி-ம்:—[1]தலைமையும், வலிமையும். [2]கூறிக். [3]கேட்டிரேயென்றவன், கேட்டிரேலென்றனன், கேட்டிரேயென்றனன். [4]துணிந்தான். (௩௨௪௪)

௪௦.—இதுமுதல் ஒன்பதுகவிகள்-ஒருதொடர்: மாலியவான் ஸ்ரீராமனது வல்லமையைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

ஆழி யன்னநீ ரறிதி[1]ரன் றேகட லனைத்தும்
ஊழிக் காலெனக் [2]கடப்பவன் வாலியென் போனை
ஏழு [3]குன்றமு மெடுக்குறு மிடுக்கனை யிந்நாள்
பாழி மார்பகம் பிளந்துயிர் குடித்ததோர் பகழி.

(இ - ள்.) கடலைப்போன்று பரந்த நீங்கள், (ஒருதினத்தில்தானே) எல்லாக்கடலையும் யுகாந்தகாலத்துக் காற்றுப்போலக் கடப்பவனாகிய வாலியென்போனை அறிவீரன்றோ? சப்தகுலாசலங்களையும் பெயர்த்தெடுக்கவல்ல வலிமைபடைத்தஅவனை, இந்நாளில் (இராமனுடைய) ஓர்பகழியானது,--வலியமார்பினிடத்தைப் பிளந்துஉயிரைப் பருகிற்று; (எ-று.)—இச்செய்யுள் அடுத்தசெய்யுளுக்குப்பின் ஒருபிரதியிலுள்ளது. பி - ம்:—[1]அன்றேழ். [2]கடிப்பவன். [3]குன்றையும். (௩௨௪௫)

௪௧. பரிய தோளுடை [1]விராதன்மா ரீசனும் பட்டார்
கரிய மால்வரை நிகர்[2]கர தூடணர் கதிர்வேல்
திரிசி ராவவர் திரைக்கட [3]லனபெருஞ் சேனை
ஒருவி லாலொரு நாழிகைப் [4]பொழுதினி னுலந்தார்.

(இ - ள்.) பருத்ததோள்களையுடைய விராதனும் மாரீசனும் இறந்தார்; கரிய பெரிய மலையையொத்த கரன் தூடணன் ஒளிபொருந்தியவேலையுடைய திரிசிரா என்கின்ற அவர்கள் (தங்களுடைய) அலைபொருந்திய கடலையொத்த பெருஞ்சேனையோடு (இராமனுடைய) ஓரேவில்லால் ஒருநாழிகைப்பொழுதில் அழிந்தார்; (எ - று.)—பி-ம்:—[1]வீரமாரீசனும்பட்டான். [2]கரன்றூடணன். [3]எனும்,எனப். [4]பொழுதிடை,

போதிடை. சிலபிரதிகளில் இச்செய்யுளின் முதலடி, நான்காவதடியாக உள்ளது. ஒருபிரதியில் முதலடி 'பரியதோளுடை வீரமாரீசனும்பட்டான்'என்ற பாடத்தோடு நான்காம் அடியாகவுள்ளது. (௩௨௪௬)

௪௨. இங்கு [1]வந்துநீர் வினையதெனெறிதிரைப் பரவை
அங்கு [2]வெந்தில தோசிறி [3]தறிந்தது மிலிரோ
கங்கை [4]சூடிதன் கடுஞ்சிலை யொடித்தவக் காலம்
உங்கள் வான்செவி [5]புகுந்தில தோ[6]முழங் கோதை.

(இ-ள்.) நீர் இங்குவந்து வினவுவதுஎன்? அலைமோதுகின்றகடலை (ஆக்கினேயாஸ்திரத்தினால் அவ்விராமன் எரித்தபொழுது நீரிருக்கும்) அந்தஇடத்தும் வெந்திலதோ? (அதனை நீங்கள்) சிறிதும் (கவனித்து) அறிந்ததும் இல்லீரோ? கங்கையை(ச்சிரசில்)சூடியசிவபெருமானுடைய வலிமைபொருந்திய (சீதையின்கன்னியாசுல்கமாக)வைத்தவில்லை(இராமன்) ஒடித்த அந்தக்காலத்து உங்கள்பெருஞ்செவியில் முழங்கியஓசை விழுந்ததில்லையோ? (எ-று.)—பி-ம்—[1]நீர்வந்து. [2]வெந்திலவோ. [3]அறிந்துமிலிரோ. [4]சூடினன். [5]கேட்டிலவோ. [6]முழக்கோதை. (௩௨௪௭)

௪௩. ஆயி ரம்பெரு வெள்ளமுண் டிலங்கையி னளவில்
[1]தீயின் வெய்யபோ ரரக்கர்தஞ் [2]சேனையச் சேனை
போய [3]தந்தகன் புரம்புக [4]நிறைந்தது போலாம்
[5]ஏயு மும்மை[6]நூன் மார்பின ரெய்தவில் லிரண்டால்.

(இ-ள்.) இலங்கையின்எல்லையில் தீப்போன்ற கொடிய போரரக்கரின் சேனை ஆயிரம்பெருவெள்ளமுண்டு: அப்படிப்பெருந்தொகையாயுள்ள சேனையானது,—முப்புரிநூலைப் பொருந்திய மார்பையுடைய அந்தராமலக்ஷ்மணர் அம்புதொடுத்துவிட்ட இரண்டுவிற்களால்யமபுரத்தில் உட்புகச்சென்றுநிறைந்ததுபோலும்; (எ - று.)—பி - ம்:—[1]தீய. [2]சேனையைச்சேனை, சேனையுஞ்சேரப். [3]அந்தகபுரம். [4]நின்றது. [5]ஏய. [6]நூறம்மவர்து, நூன்மார்பர்வந்து, நூன்மனிதரே. (௩௨௪௮)

௪௪. கொற்ற வெஞ்சிலைக் [1]கும்பகன் னனுநுங்கள் கோமான்
பெற்ற [2]மக்களும் [3]பிரகத்தன் [4]முதலிய பிறரும்
மற்றை வீரரு மிந்திர சித்தொடு மடிந்தார்
இற்றை நாள்வரை யானுமற் [5]றிவருமே யிருந்தோம்.

(இ-ள்.)வெற்றிபொருந்திய கொடியவில்லையுடைய கும்பகன்னனும் உங்களது அரசனாகிய இராவணன்பெற்ற(அதிகாயன்முதலிய)மக்களும் பிரகத்தன்முதலியபிறரும், மற்றுள்ளவீரரும் இந்திரசித்துடன் மடிந்தார்கள்: இன்றுவரையிலும் யானும் இவருமே யிருந்தோம்; (எ-று.)

மற்று-வினைமாற்று. இந்திரசித்தும் புதல்வனேயாயினும் அவனைத் தனியே யெடுத்துக்கூறியது சிறப்புப்பற்றி. இங்ஙனங்கூறுவதனை வடநூலார் கோபவர்த்தநியாயம் என்பர். நுங்கள்கோமான் பெற்ற மக்களென்பது - கும்பகர்ணனுடைய மக்களைக் குறிக்குமெனக் கொள்

வாருமுளர். பி - ம்:—[1]கும்பகர்ணனனுங்கள். [2]மைந்தரும். [3]பிதுக்களும். [4]முதலினர்.[5]இவனும், அவனும். (௩௨௪௧)

௪௫ மூலத் [1]தானையென் றுண்டது மும்மைநூ றமைந்த
கூலச் [2]சேனையின் வெள்ளமற் [3]றதற்கின்று குறித்த
காலச் செய்கையா [4]னீர்வந்து ளீரினித் தக்க
சீலச் [5]சேனையுஞ் சேனையின் செய்கையுந் தெரிக்கில்.

(இ-ள்.) மூலச்சேனையென்று ஒன்றுஉண்டு: அது மூன்றுநூறமைந்த தொகுதியான சேனையின்வெள்ளம்: அதற்கு இன்று (போர் செய்யுமாறு) குறிக்கப்பட்டது: காலத்தன்மையால் நீர் வந்துளீர்: இனித்தகுதியானவீரவொழுக்கமுள்ள (மாற்றார்) சேனையையும் அதன் செய்கையையும் தெரிவிப்பின்,—(எ - று.)—"ஏகியது" என அடுத்த கவியோடு தொடரும்.

இங்கே தஞ்சேனாசமுத்திரங்களோடு வந்துள்ளவர் தவிர, மூலபலம் வேறே மும்மைநூறமைந்த சேனையுமுண்டென்று கொள்க. இவரும் மூலச்சேனைகளிற்சேர்ந்தவரேயெனக் கொள்ளாது துணைப்படையாக வந்தவர்கள் வேற்றிடத்தினின்று வந்துள்ளவெனக்கொள்வாருமுளர்.--பி-ம்:[1]தானையை.[2]சேனையிவ்.[3]இதற்கு.[4]நீர்வந்திலீரெனத்தக்க, நீர்வந்திலிரேலக்கழலோர், நீர்வந்திராயின்க்கழலோர். [5]செய்கையுங் கவிப்பெருஞ்சேனையுந், செய்கையைச்சேனையின் செய்கையும், செய்கையுஞ் சேனையின்செய்கையுந். (௩௨௫௦)

௪௬. ஒருகு ரங்குவந் திலங்கையை [1]மலங்கெரி யூட்டித்
திருகு வெஞ்சினத் தக்கனை நிலத்தொடுந் தேய்த்துப்
பொருது தூதுரைத் தேகிய தரக்கியர் புலம்பக்
கருது [2]சேனை யாங்[3]கடலுமாக் கடலையுங் கடந்து.

(இ - ள்.) ஒருகுரங்குவந்து இலங்கையை கலங்குதற்குக்காரணமான தீயைமூட்டி,--அரக்கியர் புலம்பும்படி, மாறுபடுகின்றகொடுஞ்சினத்தையுடைய அக்கனை [அட்சகுமாரனை] நிலத்தோடுந் தேய்த்துப் பொருது மதிக்கத்தகுந்த சேனையாகியகடலையுங் கொன்றுதூதுரைத்துப் பெரியகடலையுங்கடந்து போய்விட்டது; (எ - று.)—பி - ம்:—[1]மலக்கெரி. [2]சேனையுங், சேனமாக். [3]கொன்றுமாக், கடலையும். ()

௪௭. கண்டி லீர்[1]கொலாங் கடலினை மலை[2]கொண்டு கட்டி
மண்டு போர்[3]செய [4]வானர ரியற்றிய மார்க்கம்
உண்டு வெள்ளமோ ரெழுபது மருந்தொரு நொடியிற்
கொண்டு வந்தது மேருவிற் கப்புறங் குதித்து.

(இ - ள்.) கடலை மலைகொண்டு கட்டி நெருங்கிப்போரைச் செய்யுமாறு வானரர் கடலிலியற்றிய சேதுவைக் கண்டிலிரோ? (எதிரிகள் பக்கத்து) எழுபதுவெள்ளஞ்சேனையுள்ளது: (ஒருவானரம்) மேருவிற்கு அப்புறம்குதித்து ஒருநொடியில் மருந்துமலையைக் கொணர்ந்தது; (எ-று.)—இப்பாட்டின்போக்கால்,ஒருநிமிஷத்திற் றாவிச்சென்று மேரு

விற்குஅப்பால் மருந்துமலையைக்கொணர்ந்துவந்த வானரத்தைப் போலவே பெருந்திறல்படைத்த எழுபதுவெள்ளம் வானரமுண்டுஎன் பது, பெறப்படும். பி-ம்.—[1]கொலோ. [2]கொடு. [3]செய்த. [4]வானரம். ()

சஅ. இதுவி யற்கையோர் சீதையென் [1]றிருந்தவத் தியைந்தாள்
பொதுவி யற்கைதீர் கற்புடைப் பத்தினி பொருட்டால்
விதி[2]வி ளைத்ததவ் வில்லியர் வெல்கநீர் வெல்க
முது[3]மொ ழிப்பதஞ் சொல்லின னென்றுரை முடித்தான்.

(இ - ள்.) இப்போரெழுந்த இயல்பு,—சீதையென்று மிக்கதவத்து இயைந்தவளான பொதுவியற்கைதீர்ந்த [வேறொருவர்க்கில்லாது தனக்கேசிறப்பியல்பாகஅமைந்த] கற்பையுடைய ஒரு பத்தினியின் பொருட்டால் விதி விளைத்தது: அவ்வில்லியரே வெல்க: நீரே வெல்க: பழமையானமொழிகளால் [கிழப்பேச்சாக] நிகழ்ச்சியைச்சொல்லினே னென்று பேச்சைமுடித்தான், (மாலியவான்); (எ-று.)—பி-ம்:—[1]இருந் தவத்துயாள். [2]விளைத்தவா. [3]மொழிப்பவன். (௩உ௫௩)

சகூ.—'இத்தனைநாள் நீ போராமைக்குக் காரணம் என்?'என,குரங்குடன் பொருதல்தகாதென்றிருந்தேனென்று இராவணன் கூறுதல்.

வன்னி மன்னனை நோக்கிநீ [1]யிவரெலா மடிய
என்ன [2]காரண மிகல்செயா திருந்ததென் றிசைத்தான்
புன்மை [3]நோக்கின [4]னாணினற் [5]பொருதிலே னென்றான்
[6]அன்ன தேலினி யமையுமெங் [7]கடனஃ தென்றான்.

(இ-ள்.) வன்னியென்றஅவன்,-(அரக்கர்)மன்னனைஇராவணனை நோக்கி,'நீ இவரெல்லாம்மடியவும் போர்செய்யாதிருந்தது என்ன காரணம்?' என்றுவினாவினான்: (குரங்குச்சேனையின்) இழிவைநோக்கின வனாய்வெட்கத்தினாற்போர்செய்யாதிருந்தேனென்றான்,(இராவணன்): அவ்வாறாயின், இனி, எமதுகடமையாக அப்போர்செய்தல் அமையும் என்றான், (வன்னி); (எ - று.)—பி - ம்:—[1]அவரெல்லாம். [2]காரணத்து. [3]நோக்கினான்,கண்டியாம். [4]நாணினன், நாணினேன். [5]பொருந்திலேன், பொருகிலன்,பொருதிலம். [6]அன்னதே. [7]கடமையவென்றான், கடமையு மென்றான், கடமையஃதன்றோ, கடமையதென்றான். (௩உ௫௪)

௫0.—இரண்டுகவிகள் - மாலியவான்சொற்படி சமாதானஞ்செய்வது இது காலமன்றுஎன வன்னி கூறுதலைத் தெரிவிக்கும்.

மூதுணர்ந்த விம் முதுமகன் கூறிய முயற்சி
சீதை யென்பவ ளைவிட்[1]டிம் மனிதரைச் [2]சேர்தல்
ஆதி யின்றலை [3]செய்தக்க தினிச்செய [4]லிழிவால்
காத [5]லிந்திர சித்தையா [6]மியாண்டினிக் [7]காண்டும்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) பழஞ்செய்தியையுணர்ந்தஇந்தமுதியமகன்[மாலியவான்] கூறியமுயற்சி, சீதையென்பவளைவிட்டுஇம்மனிதரைச்சேர்ந்திடலாகும்: (அது),முதலிற் செய்யத்தக்கது:இனிச்செய்வது இழிவைத்தருவதாம்: அன்பிற்குஉரிய இந்திரசித்தை யாம் இனி எங்கேகாண்போம்?

மாலியவான் 'சீதையைவிட்டிட்டு இந்தமனிதரைச்சேர்தல்தக்கது' என்று இங்கு வெளிப்படையாகக் கூறுவிடினும் இராமாதியரின்திறத்தைச் சொல்லும் முறைமையிலிருந்து மாலியவான் கருத்துத் தொனிப்பது கொண்டு, சீதையைக்கொடுத்து இராமனைச்சேர்தல் தக்கதென்று மாலியவான் கூறியதாக வன்னி கூறினனென்க. பி-ம்:—[1]இம். [2]திருத்தல். [3]செயத்தக்கது. [4]அழிவால். [5]இந்திரசித்தையும். [6]மாய்வித்தல். [7]கண்டும், காண்மே. (௬௨௫)

௫௧. [1]விட்ட மாயினு மாதினை வெஞ்சமம் விரும்பிப்
பட்ட வீரரைப் பெறுகிலம் பெறுவது [2]பழிப்பால்
முட்டி மற்றவர் [3]குலத்தொடு முடிக்குவ தல்லாற்
[4]கட்ட மத்தொழில் செருத்[5]தொழி லினிச்செயுங் கடமை.

(இ-ள்.) மாதினை விட்டிட்டோமானாலும், கொடியபோரில் விரும்பி இறந்தவீரர்களை (இனிப்) பெறமாட்டோம்: (ஆகவே, நாம்) பெறுவது பழியேயாம்: சிரமமெடுத்துக்கொண்டு மாற்றவரைக்குலத்தோடுமுடிப்பது செய்யத்தக்கதல்லாமல், அச்சமாதானத்தொழில் கஷ்டமானது: [செய்யத்தகாதது] இனிச்செய்யவேண்டியகடமை சருத்தொழிலே; (எ-று.)—பி - ம்:—[1]விட்டமாதினையியினும், விட்டமாதரைவீயினும், விட்டம்மாதினையாயினும். [2]பழியால். [3]குலத்தையும். [4]கட்டமைத்தொழில்செருத், கட்டமாத்தொழிலினிச். [5]தொழில்செருச் செயுங். ()

௫௨.--அரக்கர் இராவணனிடம் தாம்மாற்றரைவென்றுவருவதாச்சேறல்.

என்[1]றெழுந் தன னிராக்கத [2]ரிருக்க நீயாமே
சென் றுமற்றவர் [3]சில்லுடற் [4]குருதிநீர் தேக்கி
[5]வென் று [6]மீளுதும் [7]வெள்குது மேன்மிட லில்லாப்
புன்றொழிற்குல [8]மாதுமென் றுசைத்தனர் போனார்.

(இ-ள்.) என்றுசொல்லி(வன்னியென்பவன்)எழுந்தான்:(அவனுடனிருந்த)இராக்கதர் 'நீ (இங்குத்தானே)இருப்பாய்:நாமே போய் அந்த மானிடரின் சிறியஉடலின்இரத்தத்தைக் குடித்து வென்று மீள்வோம்: பின்வாங்குவோமேயானால், வலிமையற்ற புல்லியதொழிலையுடைய குலத்திற்பிறந்தவராவோம்' என்றுசொல்லிப்போகலானார்; (எ-று.)

வெவ்வேறிடத்திருந்து இராக்கதசேனைகளைத் தலைவரோடு வரவழைத்த விவரம் ஸ்ரீவான்மீகத்தில் இல்லை.பி-ம்:—[1]எழுந்தனர். [2]இருத்தி. [3]சில்லுடைக். [4]குருதியுந். [5]கொன்று.[6]மீள்குதும். [7]வெள்குவதன்மிடலில்லா, வெகுள்வதென் கொற்றவவென்றார். [8]இன்றினியென்றவர்புகன்றார், இன்றினியென்றனர்போனார். 'வென்றுமீளுதும் வெஃகுவதென்மிடலில்லாப், புன்றொழிற்குலமொன்றவேயென்றனர்புகன்றார்' என்று பின்னிரண்டடிகள் ஒருபிரதியில். (௬௨௭)

* படைக்காட்சிப்படலம் முற்றிற்று.

---

* மூலபெலவரவுகாண்படலம்முற்றும் என்றும், மூலபலஞ்சேனைகாண்படலம் முற்றும் என்றும் ஏட்டுப்பிரதிகளிற்காணப்படுகின்றன.

# ௩௦.—ஆவது மூலபலவதைப்படலம்.

மூலபலத்தை ஸ்ரீராமன் வதஞ்செய்ததைக் கூறும் படலமென்பது பொருள். (பலம் - சேனை; சேனைகள்-நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை, மூலப்படை, கூலிப்படை என்று அறுவகைப்படும்: இவற்றுள் மூலப்படையாவது - தொன்றுதொட்டுவருஞ் சேனை.)

அரக்கர்கூறியதுகேட்டு இராவணன், 'நான் வானரச்சேனையை உயிருண்கின்றேன்: நீயிர் இராமலட்சுமணரை வதியுங்கள்' என்ன, அவர்கள் தம்தமது வாகனங்களின்மீது ஏறிப்போய்த் தங்கள்சேனையுடன்சேர்ந்தார்கள்: இராவணன் அந்தச்சேனைகளுக்கு முன்னே தனது மூலபலத்தை அனுப்புமாறு கட்டளையிட்டு, தான் தேரிலேறிப் புறப்பட்டு யாவரும் அஞ்சிநடுங்கும்படி வானரசேனைகளின்மீது சென்றான். அப்போது வள்ளுவர் யானைமீது முரசுஅறைவித்துத் தெரிவிக்கஇராவணனுடைய மூலபலங்கள் பத்துத்திக்கிலும் நிறைந்து திரண்டன. எங்கும்அரக்கச்சேனையாகவே யிருந்ததுகண்டு தேவர்கள் நடுநடுங்கிச் சிவபிரானிடம் முறையிட, அப்பிரான் 'இவர்களையெல்லாம் ஸ்ரீராமமூர்த்தி சங்கரிப்பார்: அஞ்சற்க'எனச் சமாதானப்படுத்தினன். இது இங்ஙனமாக, வானரர்கள் அச்சேனைத்திரளைக் கண்டு அஞ்சிச் சிதறியோடலாயினர்: சுக்கிரீவன் அங்கதன் அநுமான் என்ற இவர்கள்தாம் அப்போது ஓடாதவர்கள். அப்போது ஸ்ரீராமன் விபீஷணனை வினவி அச்சேனைகளின் வரலாற்றையறிந்தபின், அஞ்சியோடின வானரர்களையழைக்குமாறு பணிக்க, அங்கதன் ஓடினவர்களை யழைக்கவும் வானரத்தலைவர்கள் தமது அச்சத்தைத்தெரிவித்து நிற்க, அவ்வங்கதன் சாம்பவானைநோக்கி, 'யாவருக்கும் அறிவையுணர்த்துகிற நீர் இப்படி அஞ்சியோடலாமோ?' என்று பலபடி யெடுத்துக்கூறவே, சாம்பவான் எப்படிப்பட்டவரையும் அஞ்சிநடுங்கச்செய்யும் எதிரிகளின் பலபராக்கிரமங்களை எடுத்துக்கூறி நாணிநிற்க, அங்கதகுமாரன் 'நம்மால் இச்சேனைகட்குமுன் செய்யலாவது ஒன்றுமில்லை: ஸ்ரீராமனைச் சார்ந்திருப்போம்: வந்தது வரட்டும்'என்று கூறித் திருப்ப,ஜாம்பவானுடனே வானரர்களும் திரும்பிவந்துசேர்ந்தனர். அப்போது ஸ்ரீராமன் வானரசேனையைப்பாதுகாக்குமாறு இலட்சுமணனுக்குக் கட்டளையிட்டு, சுக்கிரீவன்முதலானோரை அன்னுனுக்குத் துணைவலிமையாக வைத்திட்டுத் தாம் தனியே போர்க்குச்செல்ல, அவ்வேளையில் அநுமான் தன்தோளின்மீது ஏறிக்கொண்டாவது அல்லது தான் அருகிருந்து குற்றேவல்புரியவுடன்பட்டாவது பொருமாறு வேண்ட, அவனையும் இலட்சுமணனுக்கே துணைபுரியும்படிபணித்துத் தான் தனியே சென்று ஓய்ச்சலொழிவின்றிச் சாரியைதிரிந்து மாற்றார்சேனையை மருட்டி அம்புமழைகளைப்பொழிந்து முன்னணிச்சேனைகளையெல்லாந் தொலைத்தனன்.

அதுகண்ட ராட்சசசேனுபதி வன்னியென்பவன் 'ஒருவனையெதிர்க்க நாம் இத்தனைபேரிருந்தும் முடியாமல் மயங்குவதா? நாம் ஒருமித்து மேல்விழுந்தாலும் அவ்விராமனை ஒன்றுஞ்செய்யாமற் செய்திடலாமே' என்றுசொல்ல, அப்போது ஏழுவெள்ளம்சேனைகள் ஒருங்கே இராமனை வளைந்துகொண்டுபடைக்கலங்களைப்பொழிய, இராமன் எல்லாவற்றையும் ஒழித்துச் சின்னபின்னப்படுத்தியபின் மேன்மேலும் வந்து பொருந்தியும் அப்பிரானுல் நூறுவெள்ளஞ்சேனை நொருங்கிவிட, அப்பால் பதினுயிரங்கோடிசேனைத்தலைவர் ஸ்ரீராமனைக்கிட்டி வெகுகடுமையாகப்பொரலானுர்கள். அப்போது தேவர்களும் அஞ்ச சிவபிரான் சமாதானப்படுத்தினன். இராமபிரான் பெருவிசைகொண்டு பொருது அவ்வீரரையும் வீழ்த்தி எஞ்சினவர்களை ஓடிப்போகாதவாறு சரக்கூடம்கட்டித்தடுத்துப்பொர, யாவும் அஞ்சி நடுங்கின: அப்போது வன்னியென்பவன் தைரியங்கூறி யாவரையும் ஒன்றுசேர்த்துக் கடுமையாகப் பொருதனன். ஸ்ரீராமன் காந்தர்வாஸ்திரம் விடுக்க, இராவணன் மூலபலம் பெரும்பாலும் ஒழிய வெவ்வேறிடங்களிலிருந்த அரக்கர் திரண்டுபொரலாயினர்: ஸ்ரீராமன் சாரிகைசுற்றிப்பொருகின்ற விசையினுல் அப்போரில் அவர்கட்கு எங்கும் இராமனுகவேதோன்றிற்று: அன்றியும், தம்மவரே இராமனுகத்தோற்றினபடியால் தம்மவரைத் தாமே வதிப்பவரு மாயினர். இராமனுடைய கோதண்டத்திற் கட்டிய கண்டை கணகணவென்று ஒலித்தது. சிவபெருமானும்பிதாமகக்கடவுளும் அவ்விராமபிரானுடைய வில்லினின்று வெளிவரும் அம்புகளைக் கணக்கிடுவோமென்றுபார்த்து முடியாமல் திகைத்து, இராமனதுதிறலில் வியப்புக்கொண்டனர்.

ஸ்ரீராமனுக்குமுன்னிருந்த பலகோடி இராட்சதவீரர் மாண்டது கண்டு எஞ்சிநின்றவர் தெய்வப்படைகளைவிடுத்து வெல்வோமென்று கருதி நாராயணுஸ்திரம்முதலியபல அஸ்திரங்களை விடுக்க, ஸ்ரீராமனும் அந்தந்த அஸ்திரங்களினுலே அவற்றை யொழித்து, தாம் தனியே அவர்கள்மீது தெய்வப்படைகளைவிடுப்பின் உலகுக்குக் கேடுஉண்டாமென்று கடுமையான கணைகளினுலேயே அந்த அரக்கச்சேனை முழுமையையும் ஒழித்தான். ஆயிரம்யானையும் பதினுயிரந்தேரும் ஒருகோடி குதிரையும் ஆயிரஞ்சேனுபதிகளும் இறந்தால் ஸ்ரீராமனுடைய வில் ஒருதரம் கணீரெனவொலிக்கும்: அந்தமணி ஏழரை நாழிகையோயாதுஒலித்ததென்றுல்; இறந்தவரின்தொகையை எவ்வாறு கணக்கிடுவது? இவ்வாறுஅரக்கர்ஒழியவே பூமிபாரம்நீங்கிற்று.

இவ்வண்ணம் மூலபலஅரக்கரையெல்லாம்ஒழித்தபின்பு, முனிவர் முதலியோர்மகிழத்தேவர்கள் பூமாரிபொழியப் பொருத இளைப்புத்தீர்ந்துஸ்ரீராமன் அப்போர்க்களத்தைவிட்டு இளையபெருமாளோடு இராவணன் பொருகின்றஇரணகளத்தைநோக்கிச் சென்றுனென்பது, இந்தப் படலத்துக் கூறும் பொருளாகும்.

க.—போகத்தொடங்கியசேனாதிபதிகட்கு இராவணன்
இராமலட்சுமணரைக் கொல்லுமாறு கட்டளையிடுதல்.

வான ரப்பெருஞ் சேனையை யானொரு வழிசென்று
[1]ஊன றக்குறைத் துயிருண்ப னீயிர்போ யொருங்கே
ஆன [2]மற்றவ ரிருவரைக் கோறிரென் [3]றறைந்தான்
தான வப்பெருங் [4]கரிகளை [5]வாட்கொண்டு தடிந்தான்.

(இ - ள்.) அசுரராகிய பெரிய யானைகளை வாள்கொண்டு வெட்டினவனாகிய இராவணன்,—(சேனாபதிகளை நோக்கி), 'யான் ஒருபுறமாகப்போய் வானரப்பெருஞ்சேனையை உடலறும்படிவெட்டி,உயிருண்பேன்: நீயிர் ஒருசேரச்சென்று,(எதிரிகளாகப்)பொருந்தியஅந்தஇரண்டு வீரர்களைக் கொல்லுமின்'என்று கூறினான்; (எ-று.)---பி-ம்:---[1]ஊனுற. [2]அப்பெயர். [3]அமைத்தான், அமைந்தான். [4]கிரிகளை, கிளைகளை. [5]வாள் கொடு, வேரொடுந். (௩௨௫௮)

உ.---இராவணன் மூலபலத்தை முற்படச்செல்ல ஏவுமாறு பணித்தல்.

எனவு ரைத்தலு மெழுந்து[1]தம் மிரத[2]மே லேறிக்
கனை[3]தி ரைக்கடற் சேனையைக் கலந்தது காணா
வினைய மற்றிலை மூலமாத் தானையை விரைவோடு
[4]இனையர் முற்செல [5]வேவுகென் றிராவண னிசைத்தான்.

(இ-ள்.)என்று(இராவணன்) சொன்னவுடனே, (அச்சேனாபதிகள்) எழுந்து தம்முடைய இரதத்தின்மீது ஏறி, ஒலிக்கின்றஅலையைக் கொண்ட கடல்போற்பரந்த சேனையைச் சேர்ந்ததைக்கண்டு,'(வேறு) செயலில்லை: பெரியமூலபலத்தை விரைவாகஇவர்க்கு முற்செல்லுமாறு ஏவுக' என்று இராவணன் கூறினான்;(எ-று.)--அவ்வரக்கர்சேனையோடு தன்வசத்திருந்த மூலச்சேனையைச்செல்லவிடுமாறு இராவணன்பணித்தனனென்க. பி-ம்:---[1]தம்மூர்தி. [2]போயேறிக். [3]கடற்பெருஞ், கடிபெருஞ். [4]இனைய. [5]ஏகென. (௩௨௫௯)

௩.---இராவணன் வானரசேனையின்மீது போர்க்குஎழுதல்.

[1]ஏவி யப் [2]பெருந் தானையைத் தானும் [3]வேட் டெழுந்தான்
தேவர் மெய்ப் [4]புகழ் தேய்த்தவன் சில்லியந் தேர்மேற்
காவன் மூவகை யுலகமு முனிவருங் கலங்கப்
பூவை [5]வண்ணத்தன் சேனைமே லொரு [6]புறம் போனான்.

(இ-ள்.) தேவர்களுடைய உண்மையான புகழை யழித்தவனாகிய இராவணன்,—அந்தமூலபலத்தை ஏவி, தானும் (போரில்) விருப்பங் கொண்டெழுந்தவனாய்,காவலிலுள்ள மூவகையுலகமும் முனிவருங் கலங்குமாறு,சில்லியைக்கொண்ட தேரின்மேல்(ஏறி),பூவைவண்ணத்தனை இராமபிரானுடையசேனைமேல் ஒருபுறஞ் சென்றான்; (எ-று.)—பூவை வண்ணன் - காயாம்பூப்போன்ற நிறமுள்ள திருமால்: இங்கே, இராமபிரான். பி - ம்:---[1]ஏவிய. [2]பெருஞ்சேனைமேல், பெருஞ்சேனையை. [3]விட்டெழுந்தான். [4]புகழதுய்த்தவன், புகழ்செயிர்த்தவன். [5]வண்ணன் றன். [6]திறம். (௩௨௬௦)

௩.---வள்ளுவர்முரசறைய மூலபலம் எங்கும் நெருங்குதல்.

எழுக சேனையென் றி[1]யானைமேல் மணிமுர [2]செற்றி
வழுவில் வள்ளுவர் துறை [3]தொறும் விளித்தலும் வல்லைக்
[4]குழுவி யீண்டிய தென்பராற் குவலய முழுதுந்
தழுவி விண்ணையுந் திசையையுந் தடவு[5]மத் தானை.

(இ-ள்.) குற்றமற்ற வள்ளுவர்,—'சேனையெழுக' என்று யானைமீது அழகியமுரசத்தை அடிப்பித்து உரியஇடங்களிலெல்லாம் கூவிச் சொல்லுதலும்,—விரைவாக வானத்திலும் திக்குக்களிலும் பரவியிருந்த அந்தச்சேனை, பூமிமுழுவதும் திரள்திரளாகி நெருங்கியது; (எ - று.)---இராவணன் ஏவியபடியே வள்ளுவர் தெரிவிக்க, அவ்விராவணனுடைய மூலபலம் எங்கும் நிறைந்த தென்க. என்பர், ஆல் - அசைகள். பி-ம்:---[1]யானைமேலணி. [3]துறை. [4]குழுவினீடியது, குழுவுமீண்டியது, குழுவினீண்டியது. [5]மாத். [2]எற்றிஎன்றும்படிக்கலாம். (௩உ௬௧)

௫.-- திரண்டசேனையின் வருணனை.

அடங்கும் வேலைக ளண்டத்தி [1]னகத்தகன் மலையும்
அடங்கு[2]மன்னுயி [3]ரனைத்துமவ் வரைப்பிடை [4]யவைபோல்
அடங்கு மேமற்றப் [5]பெரும்படை [6]யரக்கர்த மியாக்கை
அடங்கு மாயவன் குறளுருத் [7]தன்மையி னல்லால்.

(இ-ள்.) (தன்னிடத்து) அடங்கிய கடல்களையுடைய அண்டத்தினுள்ளே அகன்ற மலைகளும் நிலைபெற்றஉயிர்களெல்லாமும் அடங்கி நிற்கும்: அவைபோல், (மிகவும்பரந்திருந்த) அந்தப்பெரும்படையேந்திய அரக்கரின் உடல்கள் சிற்றெல்லையையுடைய இலங்கைக்குள் (தன்னுள் உலகமூன்றும்) அடங்குதற்குக்காரணமான மாயவனுடைய வாமனத்திருவுருவத்தின்தன்மையில் (அடங்கியிருந்தவே) அல்லாமல் அடங்குமோ? (எ-று.)---

பெரிய அண்டத்தில் இருக்கத்தக்ககடல் மலை உயிர்கள்எல்லாம் வாமனத்திருவுருவங்கொண்ட திருமாலின் வயிற்றில் அடங்கியிருந்தது போல, மிக்கபெருந்தொகுதியான மூலத்தானை அவ்விலங்கையினுள் அடங்கியிருந்ததென்க: உவமையணி. பி - ம்:---[1]அகத்தனமலைகள். [2]முன். [3]அனைத்தையும் அனைத்துமால். [4]அவர்போல், அவைபோய். [5]மற்றைப். [6]இரும்படை. [7]தன்மையாலல்லால், தன்மையினவரால். நான்காமடி 'அடங்குமாய்வதற் குற்றொருதன்மையவல்லால்' என்று ஒருபிரதி. (௩உ௬உ)

௬.---இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்: சேனையின்வீரரின் தன்மையைக் கூறும்.

அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகிவே றமைந்த
மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மஞ்ஞர்
[1]நிறத்துக் காரன்ன நெஞ்சினர் [2]நெருப்புக்கு நெருப்பாய்ப்
[3]புறத்துப் [4]பொங்கிய பங்கியர் காலனும் புகழ்வார்.

(இ-ள்.) (அந்தமூலபலத்திலுள்ளசேனைவீரர்),--அறத்தை வாயிற் போகட்டுக்கொண்டு அரிய கருணையைக் குடித்துவிட்டு (அற)த்திற்கு மாறாக அமைந்த மறத்தை மேற்கொண்டு கொடியபாவத்தைக் கட்டிக் கொள்கின்ற மணவாளப்பிள்ளைகளும், நிறத்தினால் மேகத்தையொத்த [கரிய] நெஞ்சையுடையவர்களும், நெருப்புக்குநெருப்புப்போன்று [கடுஞ்சீற்றங்கொண்டு] (அம்மனத்திலுள்ளநெருப்புப்) புறத்துப்பொங் கினாற் போன்ற [செம்பட்ட]மயிரையுடையவர்களும், காலனும்கொண் டாடத்தக்கவருமாவர்; (எ - று.)—தன்னினும் கொலைத்தொழிலில் முந்துறுதலால், காலனும் இவ்வீரரைப் புகழ்வ னென்க. பி-ம்:--- [1]நிறத்துக்காரெனும், நிறத்திற்காரென்ற. [2]நெருப்பிற்குநெருப்பாப். [3]புறத்திற். [4]3பாகிய. (௩௨௬௩)

எ. நீண்ட [1]தோள்களால் வேலையைப் புறஞ்செல நீக்கி
வேண்டு மீனொடு மகரங்கள் வாயிட்டு விழுங்கித்
[2]தூண்டு வானுரு மேற்றினைச் செவிதொறுந் தூக்கி
[3]மூண்ட [4]வான்மழை [5]யுரித்துடுத் [6]துலாவரு மூர்க்கர்.

(இ-ள்.) (அவ்வீரர்), நீண்டகைகளால் கடலினீரைப்புறத்தே செல்லநீக்கி வேண்டிய மீனுடனே மகரங்களை(த் தம்) வாயிலேயிட்டு விழுங்கி, மேகத்தினா லுண்டாக்கப்படுகின்றபேரிடியைக் காதுகளுக்கு அணிகலமாகஅணிந்து, வானத்துமூண்ட மழைகளையுரித்து உடுத்துக் கொண்டு உலாவுகின்றகொடுமைக்குணமுள்ளவர்; (எ - று.)

வீரரின்கொடுமையை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணி. புறஞ்செலநீக்குதல் - ஒதுக்குதல்: வாரியிறைத்துவிடுதலெனக்கூறி னாருமுளர். வான்தூண்டுதல் - வானத்தினாலுண்டாக்கப்படுதல். உரு மேறு - பேரிடிதோன்றுவதற்குக்காரணமான பெருமின்னல். பி-ம்:— [1]தாள்களால், கால்களால். [2]தூண்டுவார். [3]மூண்டு. [4]மாமழை. [5]புரிந் துடுத்து, முரித்துடுத்து. [6]உலாய்நடைமுயல்வார், உலாவருமுருவர், உலாய்வருமுருவர். (௩௨௬௪)

அ. மால்வ ரைக்குலம் [1]பரலென மழைக்குலஞ் [2]சிலம்பாக்
கால்[3]வ ரைப் பெரும் பாம்புகொண் டசைத்தபைங் கழலார்
மேல்வ ரைப்படர் கலுழன்வன் காற்றெனும் [4]விசையோர்
நால்வ ரைக்கொணர்ந் துடன்பிணித் தாலன்ன நடையார்.

(இ - ள்.) (பின்னும் அந்தக்கொடியவீரர்) பெரியமலைக்குலம் பர லென்னுமாறுஅமைய,—மழைக்குலம் சிலம்பாக,தாளுன்றிய மலைகளி லுள்ள பெரும்பாம்புகொண்டு கட்டிய பைம்பொன்னாற்செய்த கழல் களை யுடையவர்கள்: மேலெல்லையிற்பறந்துசெல்லுகின்ற கருடனும் கொடியகாற்றுமென்று சொல்லத்தக்க விசையை யுடையோரான நால்வரை ஒருசேரக்கொணர்ந்து பிணித்தாற்போன்ற நடையை யுடையவர்; (எ - று.)

வரைகளை பரலாக இட்டு அம்மலைக்களைக்கவிர்தமழைகளைச் சிலம்பாகக்கொண்டு அணிந்தும், மலைப்பாம்பாகிய நாணினாற் பசிய

வீரக்கழலைக் கட்டியுமுள்ள பாதத்தரென்பது, முன்னிரண்டடிகளிற் கூறிய பொருள். ஈற்றடிக்கு - யானையைக்கொணர்ந்து உடன்பிணித்தாற்போன்ற கம்பீரமான நடையையுடையா ரென்பாருமுளர். இப்பொருளில், மூன்றுமடி, விரைவையுணர்த்துமென்க. வாய்தொங்குதல்பற்றி யானைக்கு 'நால்வாய்'என்று பேரிருத்தலால், யானையை நால்வரை யென்றார்: நால்வரை - வாய்தொங்குகின்ற மலைபோன்ற யானை: பி-ம்:—[1]மானென. [2]சிலம்பக். [3]வரைக்குலஞ்சிலம்பு. [4]வெய்யோர். ()

 கூ. உண்ணுந் [1]தன்மைய வூன்[2]முறை தப்பிடி னுடனே
[3]மண்ணி னின்றமா லியானையை வாயிடும் பசியார்
தண்ணி னீர்முறை தப்பிடிற் றடக்கையாற் றடவி
விண்ணின் மேகத்தை [4]வாரிவாய்ப்[5]பிழிந்திடும் விடாயர்.

(இ - ள்.) (மற்றும்அவ்வீரர்),—உண்ணுந்தகுதியையுடைய ஊன் உண்ணவேண்டிய வேளைக்குக்கிடைக்காது தவறுமாயின், உடனேபூமியில்(திசைக்காவலாக)நின்றபெரியயானைகளை வாயிலிட்டுஉண்ணுதற்கு ஏற்ற பசியையுடையவர் ; தண்ணீர்குடிக்கவேண்டிய வேளைக்குக்கிடையாவிடின் தமதுபெரியகையால் தடவி வானத்திலுள்ளமேகத்தை வாரி வாயிற் பிழிந்துகொள்ளுதற்கு ஏற்ற விடாயையுடையவர்; (எ-று.)—மண்ணினின்ற மாலியானை-புவியில் எட்டுத்திசையிலுமுள்ள திக்கஜங்கள். பி - ம்:—[1]தன்மையினூண், தன்மையவூண். [2]பிழைத்துளதெனின், பிழைத்துளவெனின்,முறைதப்பினவ். [3]பண்ணின். [4]வானின். [5]பெய்திடும். இச்செய்யுள் சிலபிரதிகளில் "நீண்ட தோள்களால்" (எ) என்பதற்குப் பின்னும், இதன்பின் "மால்வரைக்குலம்" (அ) என்றபாடலும் காணப்படுகின்றன. (௩௨௬௬)

௧O. உறைந்த மந்தர [1]முதலிய கிரிகளை யுருவ
[2]எறிந்து வேனிலை காண்பவ ரிந்துவா லியாக்கை
சொறிந்து தீர்வுறு தினவினர் [3]மலைகளைச் சுற்றி
அறைந்து கற்றமாத் தண்டின ரசனியி னார்ப்பார்.

(இ-ள்.) (பின்னும் அவ்வீரர்கள்),—(பூமியில்) தங்கிய மந்தரம்முதலிய மலைகளை ஊடுருவுமாறுஎய்து (தம்முடைய)வேலின் நிலைமையைச் சோதித்துஅறிபவர்: இந்துவினால் தம்முடலைச்சொறிந்து தினவுதீரப் பெறுபவர்; மலைகளைச்சுற்றியறைந்து கற்றுக்கொண்ட பெரியதண்டாயுதத்தையுடையவர்; இடிபோன்று பெருஞ்சத்தஞ்செய்பவர்; (எ - று.)

முதலிரண்டடிகட்கு - குளிர்ச்சிநீங்குமாறு பனியுறைந்துள்ள மந்தரம்முதலிய கிரிகளைத்துளைபடும்படி கையாற்குத்தி வெம்மையை யுண்டாக்குபவ ரென்று பொருள்காண்பாரு முளர்: இப்பொருளில், வேனிலைக்காண்பவர்,எனமிகும். தாம் தண்டாயுதம் பயில்கையில் மலைகளின்மீது தண்டாயுதங்கொண்டு சுற்றியறைந்து கற்றவரென ஈற்றடிக்குப்பொருள் காண்க. மலைகளைச்சுற்றிவந்து அறைந்து என்றலும் ஒன்று.—பி - ம்:—[1]முதலினாற். [2]எறிந்தவேனுனைக். [3]மலையெனச். ()

௧௧. சூலம் வாங்கிடிற் சுடர்மழு [1]வெறிந்திடிற் [2]சுடர்வாள்
[3]கோல வெஞ்சிலை [4]பிடித்திடிற் கொற்றவேல் கொள்ளின்
சால [5]வான்றண்டு [6]தரித்திடிற் சக்கரந் தாங்கின்
காலன் மால்சிவன் குமரனென் [7]றிவரையுங் கடப்பார்.

(இ - ள்.) சூலாயுதத்தைக் கையிற்கொண்டாலும் சுடருள்ள மழுவை யெறிந்தாலும், சுடருள்ள வாள் அழகியகொடியவில் இவைகளைக் கையிற்கொண்டாலும், வெற்றிபொருந்திய வேற்படையைக் கைக்கொண்டாலும், மிகவும் பெரிய தண்டாயுதத்தையேந்தினாலும், சக்கரப்படையைச் சுழற்றினாலும், யமன் திருமால் சிவன் குமாரக்கடவுள் என்ற இவரையும் வெல்ல வல்லவர்; (எ - று.)

இந்தச்சேனையிலுள்ள வீரர்கள் சூலம் முதலியவற்றைத் தாங்குவாராயின், அந்தச்சூலம் முதலியவற்றைத் தாங்கும் யமன் முதலியோரையும் விஞ்சியிருப்பரென்க. சூலம் - காலனுக்கும், மழு - சிவபெருமானுக்கும், வாள் சிலை தண்டு சக்கரம் என்பன-திருமாலுக்கும்,வேல்-குமாரக்கடவுட்கும் உரிய படைக்கலங்களாம்.—பி - ம்:—[1]வாங்கிடிற், எந்திடிற். [2]சூர்வாள். [3]கோலும். [4]பிடித்தலில். [5]வான். [6]திரித்திடில், தரிக்கில். [7]இவையையும். (௩௨௬௮)

௧௨. ஒருவ ரேவல்ல ரோருல கத்தினை [1]வெல்ல
இருவர் [2]வேண்டுவ ரேழுல கத்தையு மிறுக்கத்
திரிவ ரேனுடன் றிரிதரு நெடுநிலஞ் செவ்வே
வருவ ரே[3]னுடன் கடல்களுந் [4]தொடர்ந்துபின் வருமால்.

(இ - ள்.) ஒருலகத்தினை வெல்வதற்கு ஒருத்தரே (போதுமான) வலியையுடையவர்; ஏழுலகத்தையும் வெல்வதற்கு இருவரே வேண்டப்படுவார்; (அன்னார்) திரிவராயின் அவருடனே நெடுநிலமும் உடன்திரியும்;நேரேவருவராயின் (அவ்விசையால்) அவருடனே கடல்களும் தொடர்ந்து பின்வரும்;(எ-று.)—ஆல்-தேற்றம்.பி-ம்:—[1]உண்ண, அண்ண. [2]வேண்டுவதேழுலகத்தையுமிறுக்க, வேண்டுவரேலெழுகிற்றையுமிறுக்கிற். [3]கனைகடல்களும்,அகன்கடல்களும். [4]நடந்து. 'ஒருவர்வேண்டுவரோருலகத்தினையுண்ண' என்று ஒருபிரதியில் முதலடி. (௩௨௬௯)

௧௩.—சதுரங்கசேனைகளின் மிகுதி.

மேக [1]மெத்தனை [2]விரிஞ்சன்ற னண்டத்து விரிந்த
நாக [3]மத்தனை [4]நவிர்பணித் தேர்களு நானா
[5]போக முற்றின வெத்தனை யத்தனை புரவி
[6]ஆக முற்றின வெத்தனை யத்தனை யனிகம்.

(இ-ள்.) பிரமனாற்படைக்கப்பட்ட அண்டத்திற்குள் விரிந்த மேகம் எத்தனையோ, அத்தனையானைகள்(அங்குள்ளன): ஒலிக்கின்ற மணிகளையுடைய தேர்களும் மிகப்பல:(போரிற்) செல்லுமாறு தொழில்முற்றிய தேர்கள் எத்தனையோ, அத்தனை புரவிகள்: உடலில் (நல்லிலக்கணம்) நிரம்பினவான புரவிகள் எத்தனையோ, அத்தனைகாலாட்படை; (எ-று.)

* 52

பலஅண்டங்கள் இருத்தலால் அவற்றினுள்ளெல்லா முள்ள மேகங்களையெல்லாம் ஒன்றுசேர்த்தால் எவ்வளவு இருக்குமோ அவ்வளவு யானைகள் அச்சேனையி லுள்ளன: அவ்வாறே தேர் புரவி காலாட்களும் உள்ளனவென்றவாறு. யானைகளைப்போலவே தேர்கள் மிகப்பலவென்பார் 'நாளு' என்றார். அனிகம்-இங்குகாலாட்படை. பி-ம்:—[1]அத்தனை. [2]அத்தனைமால்கரிவிரிந்த. [3]எத்தனை. [4]நனிமணித்தேர்களுநாளு, நனிர்மணித்தேர்களுமாளா, அத்தனைநனிர்மணித்தேர்கள்,அத்தனைதேர்நனிநாளாப். [5]போகமெத்தனையத்தனை (யவன்) புரவியினீட்டம். [6]ஆகமேலனவெத்தனை யத்தனையனிகம், ஆகமெத்தனையத்தனையானையினவதி, ஆகமெத்தனையத்தனை யவன்படையவதி, ஆகமுற்றியவெத்தனையத்தனையவதி. (௩உ௭0)

கசு.—நால்வகைச்சேனைகளின் அலங்காரம்.

இன்ன தன்மைய யானைதே ரிவுளியென் றிவற்றின்
பன்னு [1]பல்லணை [2]மருமமற் றுறுப்பொடு பலவும்
பொன்னு நன்னெடு மணியுங்கொண் டல்லது புனைந்த
சின்ன [3]முள்ளன வில்லன மெய்ம்முற் றுந் [4]தெரிந்தால்.

(இ-ள்.) இப்படிப்பட்ட தன்மையையுடைய யானை தேர் குதிரை என்ற இவற்றின் உடல்முழுதையும் ஆராய்ந்துபார்த்தால், சிறப்பித்துச் சொல்லத்தக்க மேற்றவிசும் பலஅவயவங்களுடனே மருமத்தானங்களும் பொன்னையும் சிறந்த பெரியஇரத்தினங்களையும் கொண்டுபுனைந்துள்ளனவன்றி,இந்தப் பொன்மணிகளினாலியலாத சின்னத்தை உடையன இல்லாதனவாயின; (எ-று.)—பல்லணம் முதலிய யாவும் பொன்மணிகளினாலியன்ற சின்னத்தோடு அமைந்துள்ளன என்றவாறு சதுரங்கங்களில் மூன்றைக்கூறியது, பதாதிக்கும் உபலட்சணம். பி-ம்:—[1]பல்வணப்,பல்படைப். [2]பருமமற்றுறுப்பொடு, பருவமுற்றுறுப்பொடு. [3]இல்லனவல்லனவே, அல்லனவல்லனவே. [4]தெரிந்தான். (௩உ௭௧)

கரு.—படைகளெழுப்பிய தூளியும் மதநீரும்.

இப்பெ ரும்படை [1]யெழுந்திரைத் தேகமே [2]லெழுந்த
[3]துப்பு சீர்த்தன தூளியின் படலமீத் தூர்ப்பத்
[4]தப்பில் கார்நிறந் தவிர்ந்தது கரிமதந் தழுவ
உப்பு நீங்கிய தோங்குநீர் [5]விங்கொலி யுவரி.

(இ-ள்.) இப்படிப்பட்ட பெரியசேனை எழுந்து ஆரவாரஞ்செய்து கொண்டு செல்ல, மேலேகிளம்பிய பவளத்தின் நிறத்தையுடைய தூளியின்தொகுதி மேலிடத்தை மறைத்ததனால், குற்றமில்லாத மேகமும் (தனது) கருநிறம் நீங்கியது [செந்நிறத்தையடைந்தது]; யானை மதம் பாய்ந்து கலந்ததனால்,மிக்கநீரையும் பேரொலியையுமுடைய உப்புக்கடல், (தன்) உவர்ப்புச்சுவை நீங்கியது; (எ-று.)

இந்தச்செய்யுளில் கார் தனதுகருநிறத்தை நீத்துச் செந்நிறத்தையடைந்ததாகக்கூறியதும், உப்புக்கடல் அத்தன்மைநீங்கிக் கரிமதச்

சுவையை யடைந்ததாகக் கூறியதும் - பிறிதின்குணம்பெறலணியாம். பி-ம்:—[1]எடுத்து. [2]எழுந்து. [3]துப்புதிர்ந்தன.................ஆர்ப்பத், துப்புறச்சினத்துற்றன தூளியின்படலம். [4]தப்ப. [5]வீங்கலை, விலங்கலை. ()

௧௬.—மூலசேனைகள் புறப்பட்ட இலங்கைநகரின் வாயில்வருணனை.

மலையும் வேலையு மற்றுள பொருள்களும் வானோர்
நிலையு மப்புறத் துலகங்கள் யாவையு நிரம்ப
உலைவு றுவகை [1]யுண்டுபண் டுமிழ்ந்தபே [2]ரொருமைத்
[3]தலைவன் வாயொத்த திலங்கையின் [4]வாயில்க டறுவ.

(இ - ள்.) (மூலசேனையை) வெளிவிடுவனவாகிய இலங்கையின் வாயில்கள்,—மலையும் கடல்களும் மற்றுமுள்ளபொருள்களும் தேவர்களின் இருப்பிடமும், அப்புறமுள்ளஉலகங்களும் ஆகியயாவும் அழியாதபடி (தன் வயிற்றினுள்) நிரம்புமாறு முன்புஉண்டு (பின்னர்) உமிழ்ந்த பெரிய ஒப்பற்றதலைவனான கடவுளது வாயையொத்தது; (எ-று.)—வாயில்களொத்தது-ஒருமைப்பன்மைமயக்கம். இலங்கையின் ஒவ்வொருவாயிலும் திருமாலின் வாயையொத்த தென்றவாறு. பி-ம்:—[1]உண்டுமிழ்ந்தளந்த, உண்டுமீண்டுமிழ்ந்த. [2]உவமை. [3]தலைவனேயொத்தது, தலைவன்வாயொக்க, தலைவன்வாயொத்த. [4]வாயில்கடோறும். ()

௧௭.—மூலசேனையின் மிகுதியும் வானரங்கள் இரிந்தோடினமையும்.

கடம்பொ ருமதக் களிறுதேர் பரி[1]மிடை காலாள்
படம்பொ றுமையி னனந்தலை யனந்தனும் பதைத்தான்
விடம்பொ றுதிரி யமரர்போற் குரங்கின மிதிக்கும்
இடம்[2]பொ றுமையுற் றிரிந்துபோய் [3]வடகரை யிறுத்த.

(இ - ள்.) கன்னத்தில்தங்காதுபெருகுகின்ற மதநீரைக்கொண்ட களிற்று யானைகளும் தேர்களும் குதிரைகளும் நெருங்கிய காலாள்களும் என்ற இவற்றின்பாரத்தைப் பரவியதலையையுடைய அநந்தனும் (தன்) படம் தாங்கமுடியாமையால் துடித்தான்; (பாற்கடலினின்று) ஆலகாலம்விஷம்தோன்றியபோது அவ்)விஷவேகத்தைத் தாங்கமுடியாமல் நிலைகெட்டோடிய அமரர்போல் குரங்குக்கூட்டங்கள், (அரக்கரின்மூலபலத்தைக் கண்டு அஞ்சித்தாங்கள்) ஊன்றிநிற்கின்ற இடத்தில் பொறுத்துக்கொண்டுநிற்கமுடியாமையினால் நிலைகெட்டுப்போய் வடகரையில்தங்கின; (எ - று.)—பி - ம்:—[1]இடைக்காலாள், இடைக்கடவ, மிடைகடல்கள், படைகடற்றன். [2]பெருமையிற்றிரிந்து, பொருமையினிரிந்து. [3]வட திசை. (௩௨௭௪)

௧௮.—கவிக்கூற்று - யமனும் விதியும் தீவினையும் இலங்கையில் அரக்கவீரரை வேட்டையாடச் சென்றமை.

ஆழி மால்வரை [1]வேலி[2]சுற் றிடவகுத் தமைத்த
ஏழு வேலையு மிடு[3]வலை யரக்கரே யினமா
வாழி காலனும் விதியும்வெவ் வினையு[4]மே மள்ளர்
[5]தோழ மாமதி லிலங்கை[6]யால் வேட்டமேற் றொடர்ந்தார்.

(இ - ள்.) சக்கரவாளகிரிவேலியாக சுற்றிநிற்க(இடையே) வகுத்து அமைத்துள்ள எழுசமுத்திரக்கரைகளைக்கொண்டஇடமும் வலையிடும் இடம்: அரக்கரே தொகுதியாகவுள்ள (வேட்டையாடும்) மிருகம்: காலனும்விதியும்தீவினையுமே (வேட்டையாடும்)வீரர்: (இவ்வீரர், அரக்கரடைபட்டுள்ள) பெரியமதிலாற் சூழப்பட்ட இலங்கையாகிய தொழுவத்திற் பெரிய வேட்டைத்தொழிலில் தொடர்ந்துவந்தனர்; (எ-று.)

மூலபலவீரர் விரைவில் தொலைவரென்று விளக்கியபடி. உருவகவணி. வேலை - வேலையைக்கொண்ட இடம். இடுவலை-இடுகின்ற வலையைக்கொண்டஇடம். அரக்கரை 'மா' என்று கூறியதனால், அவர்கள் வாழிடத்தை 'தோழம்' என்றார்: தோழம்=தொழுவம்: கொட்டில்: இங்கே, மிருகங்கள் வாழுமிட மென்ற பொருளைக் காட்டிற்று. வாழி - அசை.--பி - ம்:--[1]வேலை. [2]சுற்றிடை. [3]திரை. [4]வேறுள்ள. [5]தோழமாகிய, தோழிமாமதில். [6]மாவேட்டை மேற் றொடர்ந்தார், மாறொடர்ந்திடவந்தார், மால்வேட்டமேற்றொடர்ந்தான். (கஉஎ௬)

கக.---பேரொலிதோன்றுதல்.

ஆர்த்த வோசையோ வலங்குதே ராழியி [1]னதிர்ப்போ
கார்த்திண் மால்கரி முழக்கமோ வாசியின் கலிப்போ
போர்த்த பல்லியத் தரவமோ நெருக்கினுற் [2]புழுங்கி
வேர்த்த வண்டத்தை வெடித்திடப் [3]பொலிந்ததுமேன்மேல்.

(இ - ள்.) (பதாதிவீரர்களின்) ஆரவாரித்த ஓசையோ, அசைந்து செல்லுகின்ற தேர்களின் சக்கரத்தின் அதிர்ப்பு ஒலியோ, கரியவலிய பெரியயானைகளின் வீரிடும்முழக்கமோ, குதிரைகளின்கனைப்பொலியோ, (இவ்வொலிகளையெல்லாம்) மறைக்கின்ற பல்வகைவாச்சியங்களினொலியோ, நெருக்கினாற் புழுங்கிவேர்க்கின்றஅண்டத்தை வெடித்திடும்படி மேன்மேல்விளங்கித் தோன்றிற்று; (எ-று.) பி-ம்:—[1]அதிர்வோ. [2]புழுங்கு. [3]பொடித்தது. (கஉஎ௯)

உ0—சேனாசமுத்திரத்தின் வருணனை

வழங்கு பல்படை [1]மீனது மதகரி மகரம்
முழங்கு கின்றது [2]முரிதிரைப் பரியது முரசந்
தழங்கு [3]பேரொலி [4]கலிப்பது தறுகண்மா [5]நிருதப்
புழுங்கு வெஞ்[6]சினச் சுறவது [7]நிறைபுடைப் புணரி.

(இ-ள்.) நிறைதலையுடைய (அந்த)மூலபலமாகியசமுத்திரம்,--விடுத்தற்குஉரிய பல படைக்கலங்களாகிய மீனைக்கொண்டது; மதயானையாகிறமகரம்[முதலை]முழங்கப்பெற்றது;மடங்குகின்ற அலையாகிய குதிரையையுடையது; முரசம் ஒலிக்கின்றபேரொலியாகிய பேரோசையைக் கொண்டது; அஞ்சாமையையுடையபெரிய நிருதராகிய மனம்புழுங்குகின்ற கொடுங்கோபத்தையுடைய சுறாவையுடையது; (எ-று.)

உருவகவணி. நிறைபு-நிறைதல். பி-ம்:- -[1]மீனத்து. [2]முது. [3]பேரொலி. [4]களிப்புறும். [5]நிருதர். [6]சினத்தரக்கராற், சினச்சுறவதின். [7]குறைப்படைப், நிறைபடைப், நிறைபடப், இடைப்பட்ட. (கஉஎஎ)

உக.—இதுவும் அது.

தசும்பிற் பொங்கிய திரள்புயத் [1]தரக்கர்தந் தானை
பசும்புற் [2]றிண்டல மிதித்தலிற் கரிபடு மதத்தின்
அசும்பிற் சேறுபட் [3]டளறுபட் டமிழுமா லடங்க
விசும்பிற் சேறலிற் கிடந்ததவ் விலங்கன்மே லிலங்கை.

(இ - ள்.) அந்தச்சுவேலாசலத்தின்மீதுள்ள இலங்கையானது,— குடம்போன்றுள்ள கிளர்ந்ததிரண்டபுயங்களைக்கொண்ட அரக்கரின் சேனை பசும்புல்லைக்கொண்ட குளிர்ந்தஇடங்களை மிதித்தலாலும் யானைகளினின்றுதோன்றுகின்ற மதநீர்ப்பெருக்கினாலும் வழுக்குநிலத்துச் சேறுபோன்று குழைசேறுபட்டு எல்லாம்அமிழ்ந்திடும்: ஆனால்,(பலரும்) வானவழியைச் சேர்ந்திட்டதனால் (அழியாது)கிடந்தது; (எ - று.)

சேனையிலுள்ளார் பலரும் வானவழிசென்றதனால் இலங்கை குழைசேற்றிற்பட்டு அழியாது எஞ்சியதென, வருணனைமூலமாகச் சேனை மிகுதியை விளக்கியவாறு. பி - ம்:—[1]இராக்கதர். [2]பொற்றிண்டலம், புற்றண்டலே. [3]அழுந்துபட்டழியும். (௩௨எஅ)

உஉ.—வானவர் மூலபலத்தைப்பார்த்து நடுங்குதல்.

படியைப் பார்த்தனர் பரவையைப் பார்த்தனர் படர்வான்
முடியைப் பார்த்தனர் பார்த்தனர் நெடுந்திசை முழுதும்
[1]வெடியப் [2]பார்ப்பதோர் வெள்ளிடை கண்டிலர் மிடைந்த
கொடியைப் பார்த்தனர் [3]வேர்த்தனர் வானவர் குலைந்தார்.

(இ - ள்.) வானவர்கள்,—பூமியைப் பார்த்தனர்: கடலைப் பார்த்தனர்: பரவிய வானத்தினுச்சியைப் பார்த்தனர்; நெடிய திசை முழுதும் பார்த்தனர்; (எங்கும்) நெருங்கியகொடிகளைக் கண்டனர்; சேனையில்லாதுபோகப் பார்க்கத்தக்கதொரு வெற்றிடத்தைக் கண்டிலர்; (உடல்) வேர்த்தவராய் நடுங்கினார்கள்; (எ - று.)

வெடிதல் - சேனாசமுத்திரம் இல்லாதிருத்தல்.—பி - ம்:—[1]விடிய. [2]பார்த்தது. [3]வேர்த்தன. (௩௨எக)

உ௩.—தேவர்கள் மூலபலத்தைக்கண்டு வியந்துகூறுதல்.

உலகி [1]னாமலா வுருவெலா மிராக்கத வுருவா
[2]அலகில் பல்படை பிடித்தமர்க் கெழுந்தவோ வன்றேல்
[3]விலகு நீர்த்திரை [4]வேலையோ ரேழும்போய் விதியால்
[5]அலகில் பல்லுருப் [6]படைத்தன வோவென வயிர்த்தார்.

(இ-ள்.)'உலகினுள் நாமல்லாத உருவங்களெல்லாம் இராக்கதவுருவாகி, எண்ணுக்குஅடங்காத பலபடைக்கலங்களையேந்திப் போர்க்கு எழுந்தனவோ?அன்றேல்,விலகுகின்றநீரைக்கொண்ட திரையையுடைய கடல்களேழும் போய் விதியினால் அளவில்லாத பலஉருவங்களைப் படைத்தனவோ?' என்று சந்தேகித்துக்கூறினர், (தேவர்கள்); (எ-று.)

தேவர்கட்குத் தம்மைத் தவிர அரக்கர்சேனையே புலப்படுவதனால் 'நாமலாவுரு' என்றார். தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]மால்வரை.

2அலகிலாப். 3விலகினீர், இலகுநீர். 4வேலேயோடேழும். 5அலேகொள் பல், புலேகொள்பல், புலகள்வல். 6பொடித்தனவோவென்றுபுகன்றார், பொடித்தனவாமெனப்பொலிந்தார். (கூஉஅ0)

இங்கே ஒருபிரதியில்

மூன்றி னூற்றினோ டாயிர முளவன வெள்ளம்
ஆன்ற தேர்பரி கரியவை யானையு மடங்கி
மூன்று லோகமு முற்றும்போய் முடிவுறு மென்ன
ஏன்று சென்றதவ் விராமன்மே லிராக்கதப் பரவை.

என்று ஒருசெய்யுள் காணப்படுகின்றது.

உச.—இதுவும் அடுத்த கவியும்-தேவர்கள் சிவபெருமானிடத்து அவ்வரக்கச்சேனையைப்பற்றி அஞ்சிக்கூறலைத் தெரிவிக்கும்.

நடுங்கி 1நஞ்சடை கண்டனை வானவர் நம்ப
ஒடுங்கி யாங்கரந் துறைவிட 2மறிகில முயிரைப்
பிடுங்கி யுண்குவ ரியாரிவர் பெருமை3பண் 4டறிந்தார்
முடிந்த 5தெம்வலி 6யென்றனர் ரோடுவான் 7முயல்வார்.

(இ - ள்.) தேவர்கள், நஞ்சம் அடைந்தகண்டனுன சிவனை நடுங்கியடைந்து, 'நம்பனே! யாங்கள் ஒடுங்கிமறைந்து வாழ்தற்குஉரிய இடத்தை யறிகிலேம்: (இவர்களோ), உயிரைப் பிடுங்கி யுண்டிடுவர்: இவர்பெருமையை முன்னம் உணர்ந்தவர் யாவர்? எம்வலி (இன்று) முடிந்திட்டது' என்று கூறியவராய், ஓடுதற்கு முயல்பவரானார்கள்.

நஞ்சடைகண்டன்-கருத்துடையடை கோளியணி:முன்னர்ப் பாற்கடலினின்றுஎழுந்த ஆலகாலவிஷத்தினின்று காத்ததுபோல, இப்போது இவ்வரக்கர்கடலினால்தோன்றும் கொடுமையைக் காத்தற்கு ஏற்றவன் அப்பிரான் என்ற கருத்தை விளக்குதல் காண்க. பி-ம்:— 1நஞ்சுண்ட. 2உணரலம். 3கண்டு. 4அறிவார். 5எங்குலம். 6என்றவர். 7முயன்றார். (கூஉஅக)

உரு. ஒருவ ரைக்கொல்ல வாயிர மிராமர்வந் தொருங்கே
இருப திற்றிரண் டாண்டுநின் றமர்செய்தா லென்னும்
நிருத ரைக்கொல்வ திடம்1பெறு விடையினின் றன்றே
பொருவ திப்படை கண்டு2தம் முயிர்பொறுத் தன்றே.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) (இவர்களுள்) ஒருத்தரைக் கொல்லவும் ஆயிரம்இராமர் ஒருங்கேவந்து இருபத்துநான்குவருடம் நின்று போர்புரிந்தால்தான் என்னவாகும்?[அப்போதும் இவர்களுள் ஒருத்தரைக்கொல்லவும் முடியாதுஎன்றபடி]: (நாங்களும் உடனிருந்து அவ்விராமனுக்கு உதவுவோமென்றால்), நிருதரைக் கொல்வதென்பது (நிற்க)இடம்பெற்று ஓரிடத்தில் நிலையாகநின்றாலல்லவோ (கைகூடும்? மேலும் ஒருகால் நிற்க இடம்பெற்றாலும், இவர்களுடன்) போர்செய்வது, இப்படையைக் கண்களாற்கண்டு தம்முடையஉயிரைத் தாங்கும்வல்லமையைப் பெற்ற பின்புஅல்லவோ (இயலும்)? (எ - று.)

பதிற்றிரண்டு - பன்னிரண்டு: இப்போது பன்னிரண்டாண்டு வனவாசஞ்செய்யவந்த ஸ்ரீராமன் இதைப்போல் இன்னொருமடங்கு காலம் வனவாசஞ்செய்தாலும் இவர்களைச் சங்கரிக்கமுடியாதென்ற கருத்தைக்காட்ட, 'இருபதிற்றிரண்டியாண்டு' என்றது இருபதிற்றிரண்டு என்பதற்கு-நாற்பதுஎனப் பொருள் கூறுவாருமுளர். பெறு-பெற்று: உடன்பாட்டெச்சம். பி - ம்:—[1]பெற்றோர்நிலையில், பெற்றோரிடையில், பெற்றாரிடையில். [2]தன்னுயிர். (௩உஅஉ)

உசு.—'இராமபிரான் யாவரையுஞ் சங்கரிப்பார்: நீர் அஞ்சற்க' என்று சிவபெருமான் கூறுதல்.

*என்றி றைஞ்சலு [1]மணிமிடற் றிறைவனு மினிநீர்*
*ஒன்று மஞ்சலிர் வஞ்சனை யரக்கரை யொருங்கே*
*கொன்று நீக்குமக் கொற்றவ னிக்[2]குல மெல்லாம்*
*பொன்று விப்பதோர் [3]விதிதந்த தாமெனப் புகன்றான்.*

(இ - ள்.) என்றுகூறி (த் தேவர்கள்) வணங்கலும்,—நீலரத்தினம் போன்ற [கறுத்த] கண்டத்தையுடையவனான சிவனும்,—(அத்தேவர்களைநோக்கி), 'இனி நீங்கள் சிறிதும் அஞ்சாதீர்: அந்தக்கொற்றவன், வஞ்சகக்குணமுள்ள அரக்கரை ஒருசேரக்கொன்று நீக்குவான்; இந்த அரக்கக்குலத்தையெல்லாம் அழிக்கச்செய்வதாகியஊழானது (இங்கே இவர்களைக்)கொண்டுவந்துள்ளதாம்' என்று கூறினான்; (எ-று.)---பி-ம்:—[1]இருள். [2]குழு. [3]விதிதரத். (௩உஅ௩)

உஎ.---இதுமுதல் மூன்றுகவிகள் - வானரர்கள் மூலபலத்தைக்கண்டு அஞ்சியோடியமையைத் தெரிவிக்கும்.

*[1]புற்றி னின்றுவல் லரவினம் புறப்படப் பொருமி*
*இற்ற தெம்வலி யெனவிரைந் திரிதரு மெலிபோல்*
*மற்றை வானரப் [2]பெருங்கடல் [3]பயங்கொண்டு [4]மறுகிக்*
*கொற்ற வீரரைப் பார்த்தில திரிந்தது குலைவால்.*

(இ - ள்.) (பின்பு) புற்றிலிருந்து வலிய பாம்புக்கூட்டம் புறப்பட (அதுகண்டு) வருந்தி, 'எம்வலிமை ஒழிந்திட்டது' என்று விரைந்து நிலைகெட்டோடும் எலியைப்போல, அந்த வானரப்பெருஞ்சேனை (அரக்கரின்மூலபலத்தைக்கண்டு)அச்சங்கொண்டு மனங்குழம்பி, வெற்றிப்பொருந்திய வீரரான இராமலட்சுமணரையும் கருதாமல் நடுக்கத்தோடு நிலைகெட்டோடிற்று; (எ - று.)

கொற்றவீரரைப் பார்த்தல் - இதுவரையில் வெற்றியேபெற்றுவந்த இராமலட்சுமணரின் திறமையை நினைத்துப்பார்த்தல்:இது-அச்சமொழிதற்குஏதுவாம். "ஒலித்தக்காலென்னாமுவரி யெலிப்பகை, நாகமுயிர்ப்பக்கெடும்" என்றது, இங்குக் காணத்தக்கது. பி-ம்:---[1]புற்றுநின்றுபல். [2]பெரும்படை. [3]பயத்தொடு,பயத்திடை. [4]வெருவிக். ()

உஅ. *அணையின் [1]மேற்சில சென்றன வாழிபை நீந்தப்*
*புணைக [2]டேடின சிலசில [3]நீந்தின [4]பேரன*

[5]துணைக ளோடும்[6]புக் கழுந்தின சிலசில தோன்றுப்
பணைக [7]ளேறின [8]மலேமுழைப் [9]புக்கவும் பலவால்.

(இ - ள்.) சிலவானரங்கள், அணையின்மீது (ஏறிச்)சென்றன: சில வானரங்கள், கடலைக் கடப்பதற்குப் புணைகளைத் தேடின: சிலவானரங்கள், நீந்திப்போன: சிலவானரங்கள், துணைகளோடும்போய் நீரிற் சென்றுஅழுந்தின;சிலவானரங்கள்,(கண்ணுக்குத்)தோன்றுமரக்கிளைகளிலேறின;பலவானரங்கள்,மலைக்குகைகளிற் புக்கன; (எ-று.)

பி-ம்:--[1]மேற்சென்றசிலசில. மேற்சிலர்சென்றனர் [2]தேடினர்சிலர்சிலர். [3]நீந்தினர். [4]பொருத, பொருதார். [5]துணைகடோறும். [6]புக்கழுந்தினர்சிலர்சிலர். [7]ஏறினர். [8]பல. [9]புக்கனர்பலரால், புக்கனபலரால். புக்கனபலவால். (௬௨அ௫)

உகூ. அடைத்த பேரணை யளித்தது [1]நமக்குயி ரழிவால்
உடைத்துப் போதுமா லவர்தொட ராமலென் [2]றுரைத்த
புடைத்துச் [3]செல்குவர் [4]விசும்பினு மென்றன போதோன்
படைத்த திக்கெலாம் [5]பாய்ந்தன ரென்றன பயத்தால்.

(இ - ள்.) '(கடலை) அடைக்குமாறு கட்டிய பெரிய அணையானது நமக்கு உயிரழிவை யுண்டாக்கிவிட்டது: (ஆகையால், நம்மை) அந்த அரக்கர் தொடராதபடி (அதனை) உடைத்துப் போவோம்' என்று(சில வானரங்கள்) கூறின:(சிலவானரங்கள்),வானத்திலும் (நம்மைஅரக்கர்) புடைத்துச் செல்குவரென்றன:(சிலவானரங்கள்),பிரமன் படைத்ததிக்குக்களிலெல்லாம் (அரக்கர்)பாய்ந்துள்ளா ரென்று அச்சத்தாற்கூறின.

போதோன் - கமலத்தில்வீற்றிருப்பவன்: பிரமன், பி-ம்:---[1]நமக்குயிரழிவான், நம்முயிரழிய, நமக்குயிரிடைய, பேருயிரடைய. [2]உரைத்துப். [3]செல்குவ. [4]விசும்பினூடேறினவோதான், விசும்பினுமென்றனர்போக்கென், விசும்பினுமென்றனர் போர்க்கப். [5]பரந்தனசென்றன, பரந்தனர்சென்றனர், பாய்ந்தனசென்றன, பரந்தனரென்றனர். ()

௩0.---சுக்கிரீவன் அநுமான் அங்கதன் தவிர மற்றையோர் நிலைகெட்டோடியமையை இராமன் காணுதல்.

அரியின் வேந்தனு மனுமனு [1]மங்கத னவனும்
பிரிய கிற்றில [2]ரிறைவனை நின்றனர் [3]பின்றார்
இரிய லுற்றனர் மற்றையோ ரியாவரு மெறிநீர்
விரியும் [4]வேலையுங் [5]கடந்தது நோக்கினன் வீரன்.

(இ - ள்.)'குரங்குகட்கு அரசனாகிய சுக்கிரீவனும் அநுமானும் அங்கதனும் இராமனைப்பிரிந்துசெல்லமாட்டாமல் பின்னிடாதவராய் நின்றார்; மற்றையோர்யாவரும், நிலைகெட்டுஓடத்தொடங்கினர்; அலைவீசுகின்ற நீர்பரவப்பெற்ற கடலும் (தன்நிலையைக்)கடந்தது; (இவற்றையெல்லாம்) மகாவீரனான ஸ்ரீராமன் கண்டான்; (எ - று.)

வானரர்கள்சென்றவிசையால் கடலும் நிலைகடந்ததென்க. பி-ம்:--[1]அங்கதன்றனும். [2]இறைவரை. [3]பிரிந்தார். [4]வேலையைக்,[5]கடந்தனர்,

௩௧.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: ஸ்ரீராமன் 'இப்படைவந்தவகையேன்?' என்றுவினவ, விபீஷணன் கூறுதலைத் தெரிவிக்கும்.

இக்கொடும் [1]படை யெங்குள தியம்புதி யென்றான்
மெய்க் [2]கொடுந்திறல் வீடணன் விளம்புவான் [3]வீர
திக்கனைத்தினு மேழுமாத் தீவினுந் [4]தீயோர்
புக்[5]கழைத்திடப் [6]புகுந்துள திராக்கதப் புணரி.

(இ - ள்.) 'இந்தக்கொடும்படை எங்கே (இத்துணைக்காலம்) இருப்பைப்பெற்றது? சொல்வாய்' என்றுவினவினன் (ஸ்ரீராமன்); உண்மையான கொடியவலிமையுள்ள விபீஷணன்(பின்வருமாறு)விடைகூறுவானானான்: —'வீரனே! எல்லாத்திக்குக்களிலும் ஏழுபெரிய தீவுகளிலும் கொடியதூதர் போயழைத்திட அரக்கரின்பெருந்திரள்வந்துளது; (எ - று.)—'அடிமலர்தொழுதவன்சொன்னான் என்றுமுடிபு காண்க. பி - ம்:—[1]பகை. [2]சுடும். [3]வீரன். [4]உறைவோர். [5]அமைந்திட, அழைத்தது. [6]புகுந்தது. (௩உஅஅ)

௩உ. ஏழெனப்படுங் கீழுள தலத்தினின் றேறி
ஊழி முற்றிய கடலெனப் புகுந்தது [1]முளதால்
வாழி.[2]மற்றவன் மூலமாத் தானைமுன் வருவ
ஆழி வேறினி [3]யப்புறத் தில்லைவா ளரக்கர்.

(இ - ள்.) ஏழென்றுசொல்லப்படுகின்ற கீழுள்ளஉலகத்தினின்று (இங்கு)ஏறி, யுகாந்தகாலத்தில் உலகத்தைச்(சூழ்ந்த கடலைப்போலப்) புகுந்தசேனைத்திரளும்,(இதில்)உள்ளது;முன்னேவருகின்றஇவை, அந்த இராவணனுடைய பெரிய மூலபலமாகும்: கொடியஅரக்கரின் (சேனா) சமுத்திரம், இனி அப்புறத்தில் வேறேயில்லை; (எ-று.)—வாழி - முன்னிலையசை. பி - ம்:—[1]உளவால். [2]பெற்றவன், மற்றிவண். [3]இல்லையப்புறத்தின். (௩உஅகூ)

௩௩. ஈண்[1]டிவ் வண்டத்தி லிராக்கத ரெனும்பெய ரெல்லாம்
மூண்டு வந்தது தீவினை[2]முன்னின்று [3]முடுக்க
மாண்டு [4]வீழுமின் றென்கின்ற தென்மதி வலியூழ்
[5]தூண்டு கின்றதென் [6]றடிமலர் தொழுதவன் சொன்னான்.

(இ - ள்.) தீவினையானது நின்று முன்னேசெலுத்த, இவ்வண்டத்தில் இராக்கதரென்றுபெயர்படைத்த சேனையெல்லாம் இங்கே மூண்டு வந்தது; வலியஊழ்வினை.தூண்டுவதனால் இன்று (இந்தச்சேனைத்திரள்) மாண்டுவீழுமென்று என்புத்தி எண்ணுகின்றது என்று (ஸ்ரீராமன்) திருவடித்தாமரைகளைத் தொழுது அந்தவிபீஷணன் சொன்னான்; (எ - று.)—பி-ம்:—[1]வந்துள,வந்துளது, இவ்வண்டத்துள்.[2]பினைநின்று, வின்னின்று. [3]முடுக. [4]வீழுமின்றென்பதென்னேன்மதவிதியாற், வீழ்பவரென்பதெனவமதிவிதியார், வீழுமென்கின்றதென்மதிவலியாற். [5]தூண்டுகின்றனரென்று,தூண்டுகின்றனனென்று.[6]அடிதொழுதனன்.()

௩௪.—அந்தரியோடிய வானரசேனையை யழைத்துவருமாறு ஸ்ரீராமன் அங்கதனுக்குக் கட்டளையிடுதல்.

கேட்ட வண்ணலு முறுவலுஞ் சீற்றமுங் கிளரக்
காட்டு கின்றனன் காணுதி யொருகணத் தென்று

[1]ஓட்டின் மேற்கொண்ட தானையைப் பயந்துடைத் துரவோ
[3]மீட்டி கொல்லென வங்கத னேடினன் [4]விரைந்தான். [ய்

(இ - ள்.) (விபீஷணன்வார்த்தையைக்) கேட்ட பெருமையிற் சிறந்த ஸ்ரீராமனும், புன்சிரிப்பும் கோபமும் மூள, '(இவர்கள்படும் பாட்டை) ஒருக்ஷணத்திற் காட்டுகின்றேன்: காண்பாய்' என்றுசொல்லி, (பின்பு, அங்கதனைநோக்கி), 'வலியோனே! ஓட்டத்தைமேற்கொண்டு சென்ற (குரங்குச்) சேனையை அச்சம்நீக்கிமீட்பாயா?' என்ன, அங்கதன்(அச்சேனையை மீட்டுக்கொணர) விரைந்தோடலானான்; (எ-று.) பி - ம்:—[1]ஓட்டமேற்சென்ற. [2]உரங்கொடுத்து. [3]மீட்டுக்கொள்கென. [4]விரைந்து. (கூஉகக)

கூரு.—வானரசேனைத்தலைவர் மீண்டுவருதல்.

[1]சென்று [2]சேனையை யுற்றனன் [3]சிறைசிறை கெடுவீர்
நின்று [4]கேட்டபி னீங்குமி னெனச்சொல்லி நேர்வான்
ஒன்றுங் கேட்கில [5]மென்றதக் குரக்கின [6]முரையால்
வென்றி வெந்திறற் படைப்பெருந் தலைவர்கண் மீண்டார்.

(இ - ள்.) (அங்கதன்) போய் (வானர) சேனையை யடைந்து, 'பற் பலபக்கங்களிலும் சிதறியோடுபவர்களே! நின்று (யான்சொல்வதைக்) கேட்டபின் (போகவேண்டுமென்று தோன்றினால்) போய்விடுங்கள்" என்று நல்வார்த்தையாகச் சொல்லி(ப் பின்னுஞ்) சொல்பவனானான்: 'நாங்கள் ஒன்றையுங் கேட்கமாட்டோம்' என்றது, அந்தக்குரங்கினம்: (இவன்)பேச்சினால், வெற்றியையும் கொடியவலிமையையும் பெற்றிருந்த வானரச்சேனையின் பெருந்தலைவர்கள்மாத்திரம் (ஓடுவதினின்று) மீண்டார்கள்; (எ - று.)

நேர்தல் - சொல்லுதல்: "நேர்தலாயிரத்து" என்றதுங் காண்க.— பி-ம்:—[1]சென்ற. [2]தானையை. [3]சிறிதிறை, சிறிதினம். [4]கேட்டுப். [5]என்றனர், என்றன. [6]முறையால். (கூஉகஉ)

கூசு.—அங்கதன் வினவ, நின்று சேனாபதியர் தாம் ஓடியகாரணத்தை யுரைக்கத்தொடங்குதல்.

[1]மீண்டு வேலையின் [2]வடகரை யாண்டொரு வெற்பின்
ஈண்டி னார்களை யென்குறித் [3]திரிவுற்ற தென்றான்
ஆண்ட நாயக கண்டிலை போலு[4]நீ யவரை
மாண்டு செய்வதெ [5]னென்றுரை கூறினர் மறுப்பார்.

(இ - ள்.) (ஓடுவதினின்றும்)மீண்டு சமுத்திரத்தின் வடகரையில் அங்கேஒருமலையில் நெருங்கிநின்றவரானசேனாபதிகளை நோக்கி, 'என்னகருத்துக்கொண்டு (நீங்கள்)நிலைகெட்டுஓடியது?' என்று (அங்கதன்) வினாவினான்: 'ஆண்டநாயகனே! நீ அந்தஅரக்கரை கண்டதில்லை போலும்: (நாம்) மாண்டு செய்யப்போவதுஎன்?' என்று (போர்க்குவருவதை). மறுப்பவராய்(ப் பின்வருமாறு) உரைகூறினார்கள்; (எ-று.)— அதைமேல்எட்டுக்கவிகளில்காண்க. பி-ம்:—[1]மீண்ட. [2]வடவரை. [3]இரிகின்றது, இரிவுற்றீர். [4]நீவாரை.நீரவரை. [5]என்றனர். (கூஉகங)

௬௭.—இதுமுதல் எட்டுக்கவிகள்-ஒருதொடர்: சேனாதிபதிகளின்விடை.

ஒருவ னிந்திர சித்தென வுள்ளவ னுளநாள்
செருவி [1]னுற்றவை கொற்றவ மறத்தியோ தெரியிற்
பொருவின் [2]மற்றவ ரிற்றில ரியாரொடும் பொருவார்
இருவர் விற்பிடித் தியாவரைத் தடுத்துநின் [3]றெய்வார்.

(இ - ள்.) இந்திரசித்தென்று பேர்படைத்துள்ளவனை ஒருவன் உள்ளநாளில், கொற்றவனே! போரில் நிகழ்ந்தவற்றை மறக்கின்றாயோ? ஆலோசிக்குமிடத்து, ஒப்புமையில் அவ்வரக்கர் (அவ்விந்திர சித்துக்குத்) தோற்றவரல்லராய் யாவரொடும் பொருவார்; (இவ்வாறிருக்க), இருவீரர் விற்பிடித்து யாவரைத் தடுத்துநின்று எய்யவல்லவராவர்? (எ - று)

ஒரு இந்திரசித்து பொருதபோது என்னபாடுபடுத்தினான்! அவனைப்போன்ற பலகோடிவீரர் வந்திருக்கும்போது இவ்விரு வீரர் என்னசெய்யமாட்டுவ ரென்றே யஞ்சினோ மென்றவாறு. பி - ம்.—[1]உற்றன. [2]மற்றவர், நிற்றிவர்...பொருவார், மற்றவனிறறிர பின் யாரொடு பொருவீர், மற்றவருற்றனர்......பொருவார். [3]எய்தார். ()

௬௮. புரங்க டந்தவப் புனிதனே முதலிய புலவோர்
வரங்க டந்தல களிப்பவ ரியாவரு மாட்டார்
கரந்த டங்கின [1]ரினிமற்றவ் வரக்கரைக் கடப்பார்
குரங்கு கொண்டுவந் தமர்செயு மானுடர் [2]கொல்லாம்.

(இ - ள்.) வரங்களைக் கொடுத்து உலகத்தோரைக் காக்கின்ற திருமாலும் திரிபுரத்தைவென்ற பரிசுத்தமூர்த்தியாகிய அந்தச் சிவபெருமானும் முதலிய தேவர்கள்யாவரும்,—முன்னிற்கமாட்டாராய் ஒளிந்து அடங்கிவிட்டனர்: இனி, அவ்வரக்கரை வெல்பவர், வானரங்களைத் துணையாகக்கொண்டுவந்து போர்செய்கின்ற மானுடரோ? (எ-று)—இரண்டாமடியில், வரங்கள்தந்து எனப்பிரிக்க. வரங்கள்தந்து அளிப்பவராகிய புரங்கடந்த அப்புனிதனேமுதலிய புலவோர்யாவரும்எனினுமாம். பி - ம்:—[1]யாரினியரக்கரைக், மற்றிவ்வரக்கரைக், மற்றிவ் வுலகினைக். [2]கொல்லோ. (௬௨௩௫)

௬௯. ஊழி யாயிர கோடிநின் [1]றுருத்திர னோடும்
ஆழி யானுமற் [2]றயனொடு புரந்தர னவனுஞ்
[3]சூழ வோடின [4]ரொருவனைக் கொன்றுதந் தோளால்
வீழ மாசெய்ய [5]வல்லரேல் [6]வென்றியி னன்றே.

(இ - ள்.) உருத்திரனோடு திருமாலும் மற்றும் பிரமனுடனே இந்திரனும் ஆயிரகோடி ஊழிக்காலம் எதிர்நின்று சூழவும்ஓடினராய் ஒருவனைத் தம்தோள்வலியாற் கொன்று வென்றியால் வீழுமாறுசெய்ய வல்லமையுடையரேல் நன்றேயாம்; (எ - று.)

ஆயிரவூழிக்காலம் சிவபெருமான் முதலியோர் எதிர்நின்று பொருது ஒருவரைக்கொன்று வீழ்த்தவும் வல்லமையற்றவராவ ரென்றால், இவ்விருமானுடரால் அவ்வரக்கரை வெல்லுதல் கூடுமோ? என்ற

வாறு. பி-ம்:—[1]உருத்திரரோடும். [2]அயனுமப், அமரரும். [3]சூழுமோடினுல், சூழவோடினுல். [4]ஒருவரை. [5]வல்லரோ, வல்லவோ, வல்லரே. [6]யெனப்பினன்றே. (நஉகக)

சு0. என்னப் பாமற்றிவ் வெழுபது வெள்ளமு -மொருவன்
தின்னப் போதுமோ [2]தேவரின் வலியமோ [3]சிறியோம்
[4]முன்னிப் [5]பாரெலாம் படைத்தவ னுளெலா முறைநின்று
உன்னிப் பார்த்துநின் [6]றுறையிடக் [7]குறையுமோ யூகம்.

(இ - ள்.) என்ன ஆச்சரியம்!! இந்த எழுபதுவெள்ளம் வானரச்சேனையும் ஒருவன்தின்பதற்குத்தான் போதுமோ? சிறியோமாகிய யாம் தேவர்களைக்காட்டிலும் வலிமைபடைத்துளோமோ? (இந்தசேனு) வியூகமானது, முறைநின்று ஆராய்ந்து உலகங்களையெல்லாம் (முன்பு) படைத்தவனுன பிரமதேவன் ஒருநாளெலாம் உன்னித்துப்பார்த்து நின்று உறையிடுமாறு குறைந்தவளவையுடையதாகுமோ? (எ - று.)

ஒருவன்தின்னுதல் - ஒருவனுலழிக்கப்படுதல். உறையிடக்குறைதல் - உறையிடமுடியாதவாறு பேரளவுடையதாதல். பிரமனே உறையிட்டெண்ணினுலும் எண்ணமுடியாது இந்த அரக்கச்சேனையென்பது, பின்னிரண்டடிகளின்கருத்து. உறையிடுதல் - பேரளவுள்ள பொருளையெண்ணும்போது கணக்குத் தெரியுமாறு நூற்றுக்குஒன்றுஎன இவ்வாருகக் குறித்தல். பி-ம்:—[1]ஒருவர். [2]அவர்தம்மின். [3]சீரின். [4]முன்னே. [5]பாரகம். [6]அறையிடக். [7]குறையுமிவ்யூகம், குறையுமோவோதம். ()

சுக. நாய கன்றலை பத்துள கையுநா லைந்தென்று
[1]ஓயு நெஞ்சின மொருவன்மற் றிவண்வந் திங்குற்ருர்
[2]ஆயி ரந்தலை யதற்கிரட் டிக்கைய ரையா
[3]பாயும் வேலையிற் கூலத்து மணலினும் பலரால்.

(இ - ள்.) நாயகன்ஒருவனுக்குத் தலை பத்துள்ளன: கையும் இருபது என்று (கருதியே) ஓய்கின்ற மனத்தையுடையவராஞேம்; இப்போது இங்கு வந்துற்ருரோ, ஆயிரந்தலைகளையும், அதற்குஇரட்டிப்பான [ஈராயிரங்] கைகளையும் உடையார்: ஐயா!(அலை)பாயப்பெற்ற கடற்கரையிலுள்ள மணலினும் பலராவர்; (எ - று)

இவர்களைப்பற்றி எம்மனம் ஓய்வதைப்பற்றிச் சொல்லவேணுமோ? என்பது குறிப்பு. மிகப்பலருக்குக் கடல்மணலை யுவமைகாட்டுவதை "நினைப்பான்புகிற் கடலெக்கலி னுண்மணலிற்பலர்" என்ற பெரியார் பாசுரத்திலுங் காண்க. பி - ம்:—[1]ஓயுமுள்ளதேயொருவன் மற்றவன் வந்திங்குற்ருர், ஓயுநெஞ்சின மொருவனங்கவனில் வந்துற்று, ஓயுமுள்ளத்தேம்......உற்ருர், ஓயுநெஞ்சினன்...இவர்வந்திங்குற்ருர். [2]ஆயிரங்கரமைஞ்ஞூறுதலையினரையா, ஆயிரங்கையரைஞ்ஞூறுதலையினரையா. [3]மாயவேலையிற். (நஉகஅ)

சுஉ. கும்ப கன்னனென்[1]றுளன்மற் றிங் கொருவன்கைக் கொண்ட
அம்பு தாங்கவு [2]மிடுக்கில மவன்[3]செய்த தறிதி

உம்ப ரன்றியே யுணர்வுடை யார்பிற ருளரோ
நம்பி [4]நீயுமுன் றனிமையை யறிந்திலை நடந்தாய்.

(இ - ள்.) கும்பகன்னனென்றுள்ளவனை இங்கிருந்த ஒருவன் கையாண்ட அம்பைத் தாங்கவும் வலிமையற்றவராயிருந்தோம்; அவன் செய்ததை (நீ) அறிவாயே: (அவனைப்போற் பலர் இங்கிருக்கின்றார்களே): தேவர்களன்றியே உணர்வையுடையவர் பிறருளரோ? (அவர்களும், அஞ்சுகின்றார்களே); நம்பி! அறியாப்பிள்ளையாதலால், நீயும் தனிமையையுடையவனாய் (இங்கு) நடந்துவந்தாய்; (எ - று.)

நீ அறியாப்பிள்ளையாதலால், 'இளங்கன்று பயமறியாது' என்ற பழமொழிப்படி அச்சமின்றி இங்குவந்தாய்; அறிவுநிரம்பினபெரியோனாயின், நீயும் இவ்வாறு எங்களைக்கூவ வந்திருக்கமாட்டாய்: அச்சத்தினால் எங்கேனும் மறைந்துகிடப்பாயென்றவாறு. பி - ம்:—[1]ஒருவனங்கவன்கையிற். [2]பிடிக்கிலன். [3]செய்தவறிவை· [4]நீயுனதருமையை, நீயுன்றனருமையை (௩௨௯௯)

௪௩. அனும னாற்றலு[1]மரசன தாற்றலு மிருவர்
தனுவி னாற்றலுந் [2]தம்முயிர் தாங்கவுஞ் சாலா
கனியுங் காய்களு [3]முணவுள முழையுள கரக்க
மனித ராளினெ [4]னிராக்கத [5]னாளினென் வையம்.

(இ - ள்.) அநுமன்வல்லமையும் சுக்கிரீவன்வல்லமையும் இருவீரரான இராமலட்சுமணரின் விற்களின் வல்லமையும் தம்முயிரைத் தாங்குவதற்கும் போதா;கனியும் காய்களுமாகிய உணவோ கிடைக்கின்றன:மறைந்துவாழ மலைமுழைகளோ இருக்கின்றன: (இவ்) வையத்தை மனிதராண்டாலென்ன? இராக்கதனாண்டாலென்ன? (எ - று.)

"இராமனாண்டாலென்ன, இராவணனாண்டாலென்ன" என்ற பழமொழி,இந்தச்செய்யுளின் ஈற்றடியாற்கூறப்பட்டதாகும்: ஆகவே, இச்செய்யுள்-உலகவழக்குநவிற்சியணியாம். வையம்-பூமி. பி-ம்:—[1]அரசன்றனாற்றலும், அரசன்றனாற்றலும். [2]எங்களையின்னுயிர்தாங்கா, தங்களைத்தாங்குவார் தாங்கார், தங்கடமுயிரினைத்தாங்கா. [3]கானுள. [4]இராக்கதர். [5]ஆள்கிலென். (௩௩௦௦)

௪௪. [1]தாமுளா ரன்றே புகழினைத் திருவொடுந் [2]தரிப்பார்
யாமு ளோமெனி [3]னெங்கிளை யுள்ளதெம் [4]பெரும
[5]போமி னீரென்று [6]விடைதரத் [7]தக்கனை [8]புரப்போய்
[9]சாமி னீரென்றல் [10]தருமமன் றென்றனர் தளர்ந்தார்.

(இ - ள்.) தாமுளாராளன்றே புகழினைத் திருவோடுதரிப்பவராவார்? யாங்களுளோமானால், எம்பெரும! எமதுசுற்றமும் உள்ளதாகும்: நீங்கள் போங்களென்று (நீ எங்கட்கு)விடைதருதற்கு உரியவன்: காப்பவனே!நீர் சாமினென்றுகூறுதல் (உனக்குத்)தருமம்அன்று என்று மனந்தளர்ந்து கூறினார்கள்; (எ - று.)

சுவரைவைத்துக்கொண்டே சித்திரமெழுதலாகுமதுபோல, நாங்கள் நிலைத்த பிறகல்லவா எவ்வாறுசெய்யின் புகழுண்டாகுமென்று

ஆலோசிக்கவேண்டும்? எங்கட்கே ஆபத்து நேர்கின்ற காலத்தில் உயிர் தப்ப ஓடிவிடுவது பொருத்தமேயன்றிப், புகழைநாடி உயிரைவிடவோ? எம்முயிரைவிட்டால், அதனால் எமதுகிளைஞரும் மாள்வரே! ஆகவே, நீர் சுகமாய்ப்போய் வாருங்க ளென்று விடைதருவதல்லாமல், சாகும்படி போர்க்குவருகஎன்றல் இளவரசனான உனக்குத் தருமமாகாதென்ற வாறு. பி-ம்:—[1]சேமுளாரலரேபுகழ்ந், தாமுளாரவரேபுகழ். [2]திரிப்பார். [3]எங்கனம். [4]பெருமான். [5]போமுனீர், போமுளீர். [6]விரைதரத். [7]தக்கன. [8]புகழோய், புரம்போய். [9]சாமுன். [10]தருமமோ. (௩௩0௧)

வேறு.

௬௫.—இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்: அங்கதன் சாம்பவானிடம் ஓடுவதுதகாதென்றந்தப்பலபடிநியாயங்காட்டித்தெரிவித்தலைக்கூறும்.

௬௫. **சாம்பனை வதன நோக்கி வாலிசே யறிவு [1]சான்றோய்**
**பாம்பணை [2]யமல னேமற் றிராமனென் றெமக்குப் பண்டே**
**[3]ஏம்பல்[4]வந் தெய்தச் சொல்லித் தேற்றினை [5]யல்லை யோநீ**
**[6]ஆம்பலம்பகைஞன் றன்னோடையிந்திர[7]மமைந்தோனன்னாய்.**

(இ - ள்.) வாலிபுத்திரனான அங்கதன்,—சாம்பவானுடைய முகத்தைப்பார்த்து, 'அறிவுமிக்கவனே! ஆம்பல்மலருக்குப் பகைவனான சூரியனிடத்து ஐந்திரவியாகரணங் கற்றவனான அநுமானையொத்தவனே! நீ, ஆதிசேஷசயனத்திற் சயனித்துக்கொண்டுள்ள அமலனே இந்தவீரனான ஸ்ரீராமனென்று எமக்குமுன்னமே மகிழ்ச்சிவந்துபொருந்தச்சொல்லித் தேற்றினையல்லையோ? (எ - று.)—ஏம்பல் - அங்கலாய்ப்புமாம். ஓடு-இடப்பொருளில்வந்தது. பி-ம்:—[1]சார்ந்தோய். [2]அமலன் மற்றிவ்விராமன், அமலன்மற்றிவ்வீரன். [3]தேம்பல். [4]வந்துதவச்சொல்லித்தேற்றினாய், வந்துற்றகாலத்தியம்பினாய். [5]இல்லையோநீ, இரவிபோலாம், இரதிபோலாம், இரதபோலாம். [6]ஆம்பலன். [7]நிறைந்தோன். (௩௩0௨)

௬௬ **[1]தேற்றுவாய் [2]தெரிந்து சொல்லாற் [3]றெருட்டியித்**
**[4]தெருளி லோரை, ஆற்றுவா [5]யல்லை நீயு [6]மஞ்சினை [7]போலு மாவி,**
**[8]போற்றுவாய் யென்ற போது புகழென்னும் புலமை யென்னும்,**
**கூற்றின்வா யுற்றால் வீரங் [9]குறைவரே [10]யிறைமை [11]கொண்டார்.**

(இ - ள்.) ஆராய்ந்து (நய)மொழியால் இந்தத்தெளிவில்லாத வானரங்களைத் தெளிவுறுத்தித் தேற்றத்தக்காய்; (அப்படிப்பட்ட)நீயும் ஆறுதலில்லாதவனாய் அஞ்சினாய்போலும்? (அன்றியும்உன்), உயிரையே போற்றுபவனானாய் என்றபோழ்து புகழ்தான் என்னவாகும்? (உன்) புலமைதான் என்னவாகும்? தலைமைகொண்டவர் (ஒருகால்) யமன் வாயிலே பொருந்தினாலும் (அதற்காகத் தம்) வீரம் குறையப்பெறுவரோ? (எ - று.)—பி - ம்:—[1]தேற்றுவார், தேற்றுவார்த். [2]சிறந்த, தெரிந்த. [3]தெருட்டுவாய், திரட்டியத். [4]தெளிவிலோரை. [5]அல்ல. [6]அஞ்சினர். [7]போல. [8]போற்றினாய். [9]குறையுமோ, குறைவதே, குறைவதோ. [10]விறன்மை. [11]கொண்டாய். (௩௩0௩)

௪எ. அஞ்சினும் பழியும் பூண்டா [1]மம்புவி யாண்டு மாவி,
துஞ்சுமா [2]றன்றி வாழ வொண்ணுமோ நாண்மேற் றோன்றின்,
[3]நஞ்சுவா யிட்டா [4]லன்ன [5]வமுதன்றோ நம்மை யம்மா, தஞ்ச
மென் [6]றணைந்த வீரர் [7]தனிமையிற் [8]சாத லன்றே.

(இ-ள்.)(இப்போதுநாம்)அஞ்சினேம்: (அஞ்சினமையால்) அழகிய பூமியிற் பழியையும் பூண்டோம்:எங்கு(ச்சென்றாலும், (நம்முடைய)வாழ் நாள்மேல் (யமன்)தோன்றுவானாயின், ஆவி இறப்பதன்றி வாழமுடியுமோ? (நாம்இப்போது இராமபிரானோடு நில்லாது போய்விட்டால்), நஞ்சினை வாயிலிட்டாற்போன்ற அமிருதம்போலாகுவோ மல்லோமோ?நம்மைத் தஞ்சமென்று சேர்ந்த வீரரைத் தனிமையாகவிட்டிட்டுப்போவதிலும் (நாம்) சாதலே நல்லது; (எ - று)—அம்மா-வியப்பிடைச்சொல்.

நஞ்சுவாயிட்டாலன்ன வமுதன்றோ=அமிழ்து (என்றுகருதி) வாயிட்டாலன்ன நஞ்சன்றோ - அமிழ்தென்றுகருதி வாயிலேயிட்ட நஞ்சுபோல்வோமல்லவோஎன்றவாறு. பி - ம்:—[1]அம்பிலால்யாண்டும், அமரினிலாண்டும், அமரினுலாண்டும். [2]இன்றி. [3]நஞ்சினையிட்டால். [4]அன்னது [5]அமிழ்தின்றே, அமுதன்றே. [6]அடைந்த, உணர்ந்த. [7]தனிமை நான். [8]சார்தல். (௩௨0௪)

௪அ. தானவ ரோடு மற்றைச் சக்கரத் [1]தலைவ னோடும்
வானவர் [2]கடைய [3]மாட்டா மறிகடல் கடைந்த வாலி
யானவ னம்பொன் றாலே [4]யயர்ந்தமை [5]யயர்த்த தென்னீ
[6]மீனலர் வேலை பட்ட துணர்ந்திலை போலு மேலோய்

(இ - ள்.) தானவரோடும் மற்றைச் சக்கரப்படையையுடையனை திருமாலோடும் வானவர்கடையமாட்டாத (அலை)மடங்குகின்றகடலைக் கடைந்த வாலியானவன் (இராமபிரானுடைய) அம்பொன்றினாலே உயிர்சோர்ந்தமையை நீ மறந்ததென்? மேலோனே! மீன்விளங்குகின்ற கடல் அடைந்ததிலைமையை உணர்ந்தாயில்லைபோலும்; (எ-று.)
பி-ம்:—[1]தலைவரோடும். [2]செய்ய. [3]மாட்டார். [4]அழிந்தமை, உலர்ந்தமை, உலந்தமை. [5]ஆர்த்ததென்ன. [6]மீனலா, மீனகு. (௩௨0௫)

௪௯. எத்தனை யரக்க ரேனுந் தருமமாண் டில்லை [1]யன்றே
அத்தனை யறத்தை வெல்லும் பாவமென் [2]றறிந்த துண்டோ
பித்தரைப் போல நீயு மிவருடன் பெயர்ந்த தன்மை
ஒத்தில தென்னச் சொன்னா னவனிவை [3]யுரைப்ப தானான்.

(இ - ள்.) அரக்கர் எத்தனைபேர் இருந்தாலும், தருமமென்பது, அங்கே இல்லையன்றோ? மிகுதியாயுள்ள தருமத்தைப் பாவம் வெல்லுமென்பது, அறிந்தது உண்டோ? பித்தரைப்போல நீயும் இந்தவானரர்களோடும் (இராமனுள்ள இடத்தை)விட்டுச்சென்ற தன்மை (உன் தகுதிக்கு) ஒத்ததாகஇல்லை என்றுசொல்லி முடித்தான்: அந்தச்சாம்பவான் இவ்வார்த்தைகளைச் சொல்வதானான்: (எ - று.)—சாம்பவான் கூறுவனவற்றைமேல் ஐந்து கவிகளிற் காண்க.—பி-ம்:—[1]என்றே, அன்றோ. [2]அறிதல். [3]உரைப்பானானான். (௩௩0௬)

ரு௦.—இதுமுதல் ஐந்துகவிகள்-சாம்பவான் கூறுவதைத்தெரிவிக்கும்.

நாணத்தாற் சிறிது போது [1]நலங்கின [2]னிருந்து [3]பின்னர்
தூணொத்த திரடோள் [4]வீர தோன்றிய வரக்கர் [5]தோற்றம்
காணத்[6]தா னிற்கத் தானக் கறை[7]மிடற் றவர்க்கு மாமே
[8]கோணற்பூ வுண்ணும் [9]வாழ்க்கைக் குரங்கின்[10]மேற் குற்ற முண்டோ.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அப்போது சாம்பவான்), நாணத்தினாலே சிறிது பொழுது மனம்வாடியவனாயிருந்து,---(பின்பு) அங்கதனைநோக்கிக்கூறுவான்):—தூணையொத்த திரண்டதோளையுடைய வீரனே!(இப்போது) வந்துள்ள அரக்கரின் தோற்றத்தைக் காணவாவது (அவர்முன்னே) நிற்கவாவது விஷக்கறைகொண்ட கண்டத்தையுடையவனான அந்த உருத்திரமூர்த்திக்குத்தான் முடியுமோ? (அவ்வாறாயின்), உடற்கோணுதலையுடைய மலரையுண்டுவாழும் வாழ்க்கையைக்கொண்ட குரங்குகள் (ஓடிப்போயினவென்றால் அவற்றின்)மேற் குற்றம்உண்டோ?(எ-று.)— 'கோணல்'என்பதைப் பூவுக்கு அடைமொழியென்று கொள்ளலுமாம். பி-ம்:-[1]நல்கினன். [2]இருந்த. [3]பின்னும். [4]மைந்த, மைந்தன். [5]வீரம். [6]தானிறங்கவந்தக். [7]மிடற்றவற்குமன்றே, மிடற்றவனுக்காமோ. [8]கோணப். [9]யாக்கை. [10]பாற். (௩௩௦எ)

ருக. தேவரு மவுணர் தாமுஞ் [1]செருப்பண்டு செய்த [2]காலம்
ஏவரே யென்னுற் காணப் பட்டில ரிருக்கை [3]யான
மூவகை யுலகி னுள்ளா [4]ரிவர்துணை யாற்றல் முற்றும்
பாவக[5] ருளரே கூற்று மிவருடன் பகைக்க வற்றே.

(இ - ள்.) தேவர்களும் அவுணர்களும் முன்பு போர்செய்த காலத்தில் என்னாற் காணப்பட்டிலாதவர் எவர்? இருப்பிடமான மூவகையுலகிலுமுள்ளாரில் இவரளவு வலிமைநிரம்பியகொடியோருளரோ? யமனும் இவருடன் பகைக்க வல்லமையுடையதோ? (எ-று.)—பி-ம்:—[1]பண்டுபோர். [2]காலே. [3]ஆன்ற. [4]அவர் [5]உளரோகூற்றையஞ்சினாற் குற்றமுண்டோ, உளரேகூற்றையஞ்சினர் பழியுமுண்டோ, உளரேறாற்றையஞ்சினர் பயமுமுண்டோ. (௩௩௦அ)

ருஉ. மாலியைக் கண்டேன் [1]பின்னை மாலிய வானைக் கண்டேன்
கால[2]நே மியையுங் கண்டே னிரணியன் [3]றனையுங் கண்டேன்
ஆலமா விடமுங் கண்டேன் மதுவினை [4]யனுச னோடும்
வேலையைக் கலக்கக் கண்டே[5]னிவர்க்குள மிடுக்கு முண்டோ.

(இ - ள்.) மாலியைக் கண்டேன்: பின்னை மாலியவானைக் கண்டேன்: காலநேமியைக் கண்டேன்: இரணியனையும் கண்டேன்: கொடிய ஆலகாலவிஷத்தையும் கண்டுள்ளேன்: (கைடபனென்ற) தம்பியுடனே மதுவென்பானையும் கடலைக்கலக்குகையிற் கண்டேன்: இவ்வரக்கர்க்குள்ள வலிமை அவர்கட்குஉண்டோ? (எ-று.)—பி-ம்:—[1]பண்டை, மற்ற. [2]நேமியைக். [3]தன்னைக். [4]அசனியோடு. [5]உவர்க்குள்ள.

ருங. [1]வலியிதன் மேலே பெற்ற வரத்தினர் மாயம் வல்லோர்
ஒலிகடன் மணலின் மிக்க [2]கணக்கின ருள்ள நோக்கிற்

கலியினுங் கொடியர் கற்ற படைக்கலக் கரத்த ரென்றால்
மெலிகுவ தன்றியுண்டோ [3]விண்ணவர்[4]வெருவல் கண்டால்.

(இ - ள்.) (இவ்வரக்கர்கள்),பலத்துக்குமேலே வரமும்பெற்றவர்: மாயம்வல்லர்: ஒலிக்கின்ற கடலின்மணலைக்காட்டிலும்மிக்க பேரெண்ணினராகவுள்ளவர்: (இவர்களின்) மனத்தைப் பார்த்தாலோ,கலியினுங் கொடியர்: (அன்றியும்) கற்ற படைக்கலத்தைக் கையிற்கொண்டவர்: இவ்வாறானால், விண்ணோர் வெருவுவதைக்கண்டால், (குரங்குகளாகிய நாம்) மெலிவதல்லாமல் (வேறோருசெயல் நமக்கு) உண்டாகுமோ? (எ - று.)—பி - ம்:—[1]வலியிது, வலியது. [2]கணக்கிலர். [3]விண்ணுற. [4]மெலிவு. இச்செய்யுள் ஒரு பிரதியில் இல்லை. (௩௩௧௦)

௫௪ ஆகினு [1]மையம் வேண்டா வழகிதன் றமரி னஞ்சிச்
[2]சாகினும் பெயர்ந்த தன்மை பழிதரு நரகிற் [3]றள்ளும்
[4]ஏகுது மீள வின்னு மியம்புவ துளதா [5]லைய
மேகமே [6]யனையான் [7]கண்ணி னெங்ஙனம் விழித்து நிற்றும்.

(இ-ள்.) இப்படியிருந்தாலும்,சாவதாயிருந்தாலும், போருக்கு அஞ்சிப் பெயர்ந்ததன்மை, அழகியதன்று: (மேலும்), (இம்மையிற்) பழியை விளைக்கும்:(மறுமையில்) நரகத்திலே தள்ளும்: (இவ்விடயத்தில்)ஐயம் வேண்டா: (ஆதலால்), மீளச்செல்வோம்: ஐய! இன்னும் சொல்ல வேண்டுவது ஒன்றுஉண்டு: (அது), மேகத்தையொத்தவனான ஸ்ரீராமனுடைய கண்முன்னே எங்ஙனம் விழித்துநிற்போம்?(என்பதே);(எ-று.)—பி - ம்:—[1]ஐயவுண்டாலார்க்கேனும், ஐயமுண்டாலறத்தினும், ஐயமுண்டாமாகிலும். [2]சாகிலம், போகிலும். [3]போக்கும். [4]ஏகுமே, ஏகுதி. [5]எய்தி. [6]அனையார். [7]காண, கண்முன். (௩௩௧௧)

௫௫.—அந்தச் சாம்பவானுக்கு அங்கதன் சமாதானம் கூறத்தொடங்குதல்.

என்றெடுத் தெண்கின் றானைக் கிறையவ னியம்ப லோடும்
வன்றிறற் குலிச மோச்சி வரைசிற கரிந்து வெள்ளிக்
குன்றிடை நீலக் கொண்மூ வமர்ந்தென மதத்தின் [1]குன்றின்
நின்றவ [2]னளித்த மைந்தன் மகனிவை நிகழ்த்த லுற்றான்.

(இ - ள்.)என்று கரடிச்சேனைக்குத் தலைவனான சாம்பவன் எடுத்துச்சொல்லுதலோடும், மிக்கவலிமையையுடைய வச்சிராயுதத்தை யோங்கியெறிந்து மலைகளைச் சிறகரிந்து, வெள்ளிக்குன்றில் நீலநிறமுள்ள மேகமொன்று பொருந்தினாற்போல் மதத்தையுடையமலை போன்றஐராவதமென்ற யானையில் நின்றவனாகியஇந்திரனது புதல்வனான வாலிபெற்றமகனான அங்கதன் இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ-று.)—அங்கதன் கூறுபவற்றை மேல் இரண்டுகவிகளிற் காண்க. குன்று-யானைக்கு, உவமையாகுபெயர். பி-ம்;-[1]குன்றம். [2]அருளும். இச்செய்யுள்பல பிரதியி லில்லை. (௩௩௧௨)

ருகூ.—சாம்பவானுக்கு நாணம்நீங்க, அங்கதன்கூறுஞ் சமாதானத்தை இதுவும் அடுத்தகவியும் தெரிவிக்கும்.

எடுத்தலுஞ் [1]சாய்த ருனு [2]மெதிர்த்தலு மெதிர்ந்தோர் தம்மைப்
படுத்தலும் வீர வாழ்க்கை [3]பற்றினர்க் [4]குற்ற மேனுள்
[5]அடுத்ததே யஃது [6]நிற்க வன்றியு மொன்று [7]கூறக்
கடுத்தது [8]கேட்டீர் நீருங் கருத்துளீர் கருதி நோக்கின்.

(இ - ள்) (நாமே பகைவரை) விஞ்சுதலும் தோற்றலும், (நம்மைநாடிவந்தபகைவரை) எதிர்த்துநிற்றலும், (நம்மால்)எதிர்த்தோரைக் கொல்லுதலும் வீரவாழ்க்கையை மேற்கொண்டார்க்கு முன்னுள் தொடங்கி அடுத்ததே: அஃது இருக்கட்டும்: அன்றியும் ஒன்றுகூற விரைந்து அதுகேட்டு (இங்கு) இருந்துளீர்: அதனல், ஆராய்ந்து பார்க்குமிடத்து நீரும் ஆராய்ச்சியுள்ளவரே: (எ-று.)—பி-ம்:—[1]சாய்த் தருனும். [2]இறத்தலும். [3]பற்றிநற்கு. [4]உற்று. [5]அடுத்ததேயதெலாம், அடுத்ததேலாகும். [6]நிற்ப. [7]கூறற்கடுத்தது, கூற்றங்கடுத்தது, கூற்றுக் கடுத்தது [8]கேட்டுமீண்டிங்கிருந்துளீரேதுநோக்கின், கேட்டீரீண்டிங் கிளர்ந்துநீர்தருதனோக்கின். (கூகூகக)

ருஎ. ஒன்று[1]நீ ரஞ்ச லைய யாமெலா [2]மொருங்கே சென்று
நின்றுமொன் றியற்ற [3]லாற்றே நேமியான் ருனே நேர்ந்து
கொன்றுபோர் கடக்கு மாயிற் கொள்ளுதும் வென்றி [4]யன்றேல்
பொன்றுது [5]மவனே டென்றுன் [6]போதலோ புகழன்றென்றுன்.

(இ - ள்.) நீர் சிறிதும் அஞ்சவேண்டா: ஐய! யாமெல்லாம் ஒருங்கேசென்று நின்றும் ஒருசெயலும் இயற்றுதற்கு வல்லமையுடையோமல்லோம்: சக்ராயுதத்தையுடையவனுகிய திருமாலினமிசமான ஸ்ரீராமனே(சென்று பகைவரை) யெதிர்த்துகொன்றுபோரைக்கடப்பானுயின் வெற்றிகொள்ளுவோம்: அல்லாவிடின், அவனுடனேஉயிரொழிவோமென்று கூறியவனுய், (அப்பிரானைவிட்டு) ஓடிப்போதலோபுகழன்றென்றுமுடித்தான்; (எ - று.)—பி - ம்:—[1]நீ. [2]ஒருங்கு. [3]ஆற்றும். [4]அன்றிப். [5]அவரோடென்றன், அவரோபொன்றுர், அவரேபொன்றுர். [6]போதலேயழகிற்றென்றுன், போதலோபுகழின்னன்றே, பொருதலேபுகழ்தன்றுல். (கூகூகச)

ருஅ.—சாம்பவான் சொற்படி திரும்பிவந்த வானரசேனைகளைக் கண்டு ஸ்ரீராமன் தம்பிக்குக் கூறத்தொடங்குதல்.

ஈண்டிய தானை நீங்க [1]நிற்பதென் யாமே [2]சென்று
[3]பூண்டவெம் பழியி னேடும் [4]போந்தனம் [5]போவ தென்னு
மீண்டனர் தலைவ ரெல்லா மங்கத னேடும் வீரன்
மூண்டவெம் [6]படையை நோக்கித் [7]தம்பிமேல் மொழிவதானன்.

(இ - ள்.) (அப்போது சாம்பவான்), 'நெருங்கியசேனை நீங்க நிற்பது எதற்காக? யாமே (போர்க்களத்தை விட்டுச்)சென்று அதனுற் பூண்ட கொடிய பழியினேடும் (திரும்பிப்) போகலானேம்: (ஆகவே, யாவரும்) திரும்பிவரட்டும்' என்று கூற, தலைவரெல்லாம் அங்கதனே

டும் திரும்பிவந்தனர்: மகாவீரனான ஸ்ரீராமன், மூண்டுள்ள கொடிய சேனைகளைப்பார்த்துத் தம்பியினிடம் (பின்வருமாறு) கூறலானான்.

போவது - ஒருவகைவியங்கோள்: இனி, தொழிற்பெயராகக் கொண்டு, 'தக்கது' என்று ஒருமுற்றுவருவித்து உரைத்தலும்ஒன்று. மூண்ட வெம்படைஎன்றது - போரில்மூண்டமூலபலத்தையென்க.'தம்பிமேல்மொழிவதானான்' என்பதற்கு - இளையபெருமாள்பிறகு சொல்வதானான் என்று உரைத்து, "அத்தநீ" என்றபாடலை இலக்குமணன் மொழியாகவுரைப்பினுமாம். சேனைமீண்டமை உ௩௫-ஆங்கவியிற் கூறப்படும். பி - ம்:---[1]நின்றதென். [2]என்று. [3]பூண்டனம். [4]போர்தநாம். [5]போதும். [6]பகையை. [7]தம்பிக்கு. (௩௩கடு)

௫௬.---ஸ்ரீராமன் நான் ஒருவனே இந்த அரக்கரையெல்லாம் கொல்வேனெனல்.

அத்தநீ [1]யுணர்தி யன்றே [2]யரக்கர்தா னவுண ரேதான்
[3]எத்தனை யுளரென் றாலு மியான்சிலை யெடுத்த போது
[4]தொத்துறு கனலின் வீழ்ந்த பஞ்செனத் [5]தொலையுந் தன்மை
[6]ஒத்ததோ ரிடையூ [7]றுண்டென் றுணர்விடை [8]யுதிப்ப தன்றால்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இராமன் இலட்சுமணனைநோக்கிக்கூறுவான்:—'அத்தனே! அரக்கரென்ன அவுணரென்ன (இவர்)எத்தனைபேர் உள்ளாரென்றாலும் (அவர்கள்யாவரும்), நான் வில்லையெடுத்து அம்புதொடுத்த போது,திரளாகப்பொருந்தியநெருப்பிலே வீழ்ந்த பஞ்சுபோல அழியுந் தன்மையை நீ அறிவாயன்றே:(என்திறமைக்கு)ஏற்ப தான ஓரிடையூறு உண்டென்று (என்) மதிக்குள் தோன்றுவது (ஏதுவும்) இல்லை;(எ-று.)

எதிர்ந்தவர் எல்லாரையும் ஒருங்கே என்வில்லினால் நான் மாய்ப்பேனென்பதிற் சிறிதும் சந்தேகம் இல்லை: என்திறமை உனக்குந் தெரிந்த தன்றோ! என்று ஸ்ரீராமன் வானரர்க்குத் தெளிவுண்டாகத் தன்திறமையைப் பாராட்டிக் கூறினான். பி - ம்:—[1]உணர்த்தி, அறிதி. [2]அரக்கரேயவுணர்தானென். [3]எத்துணை. [4]தொத்தறு. [5]தொலைந்த. [6]ஒத்ததோ. [7]உண்டோ. [8]உதித்ததுண்டோ, உதித்ததென்றான்.()

௬௦.—மூன்றுகவிகள் - வானரசேனையை மாருதிமுதலியவரோடிருந்து பாதுகாப்பாயென்று ஸ்ரீராமர்இலட்சுமணனுக்குக்கூறுதல்.

காக்குந [1]ரின்மை [2]கண்ட கலக்கத்தாற் கவியின் சேனை
போக்கறப் [3]போகித் தத்த முறைவிடம் [4]புகுத லுண்டால்
[5]தாக்கியிப் படையை முற்றுந் தலைதுமிப் பளவுந் தாங்கி
[6]நீக்குதி நிருத ராங்கு நெருங்குவார் [7]நெருக்கா வண்ணம்.

(இ - ள்.) காப்பவரில்லாமையைக்கண்ட கலக்கத்தினால் குரங்குச் சேனை(யுத்தத்திற்குச்)செல்லுதலொழிய ஓடிப்போய்த் தத்தம்வாழிடங்களிற் புக நேர்ந்ததுண்டு: ஆதலால்,(நான்) இந்த இராட்சசசேனையைத் தாக்கி முற்றவும் தலையைவெட்டிவீழ்த்துமளவும் (நீ) இந்தக்குரங்குச்

சேனையைத்தாங்கி ஆங்கு நிருதர்நெருங்கிவந்து நெருக்காதபடி தவிர்ப்பாய்; (எ - று)—பி ம்:—[1]இன்னங். [2]கண்டாற். [3]பொங்கித்தந்தம், பொதிந்துதத்தம், போக்கித்தத்தம். [4]புகுந்ததுண்டேல், புகுதலுண்டேல். [5]தாக்கிய. [6]நீக்குநீ. [7]நெருங்கா. (௩௩௧௭)

௩௧. இப்புறத் தினைய சேனை யேவியாண் டிருந்த தீயோன்
அப்புறத் [1]தமைந்த சூழ்ச்சி [2]யறிந்தவ னயலே [3]வந்து
தப்பறக் கொன்று [4]நீக்கி லவனையார் [5]தடுக்க வல்லார்
வெப்புறு கின்ற துள்ளம் வீரநீ [6]யன்றி [7]வில்லால்.

(இ - ள்.) இவ்விடத்து இப்படிப்பட்ட சேனையையேவிவிட்டு அங்கேயிருந்த தீயோனும் பொருந்திய சூழ்ச்சியையுடையவனுமான இராவணன், அப்புறத்தில் அயலேவந்து தவறுதலின்றி வானரப்படைகளைக்கொன்று நீக்கினால், வீரனே! அந்தஇராவணனை நீயல்லது வில்லினால் தடுக்கவல்லவர் யாவர்? (இதுபற்றி) மனம் வருந்துகின்றது; (எ - று.)---பி - ம்.---[1]அமைத்த. [2]அறிந்தனன், அறிந்ததன். [3]வந்தால். [4]வீழ்க்கில், நீக்கும். [5]தடுக்கற்பாலார், தடுக்கத்தக்கார். [6]அலது. [7]வில்லோர். (௩௩௧௮)

௩௨. மாருதி யோடு [1]நீயும் [2]வானரக் கோனும் வல்லே,
பேருதிர்சேனை காக்க வென்னுடைத் தனிமை பேணிச், [3]சோருதி
[4]ரென்னின் வெம்போர் தோற்றுநா மென்னச் சொன்னான், வீரன்
[5]மற்றதனைக் கேட்ட விளையவன் விளம்ப லுற்றான்.

(இ - ள்.) மாருதியுடனே நீயும் வானரத்தலைவனான சுக்கிரீவனும் விரைந்து சேனைகாக்கச் செல்லுங்கள்: என்னுடைய தனிமையைக் கருதி மனந்தளர்வீராயின், நாம் கொடும்போரில் தோற்போம் என்று மகாவீரனான ஸ்ரீராமன்சொன்னான்: அதனைக்கேட்ட இளைய பெருமாள் பின்வருமாறு சொல்லத்தொடங்கினார்: (எ - று.)---பி-ம்:--[1]நீயிவ். [2]வானரத்தலைவரோடும். [3]சோருதி. [4]எண்ணின். [5]மற்றிதனை. ()

௩௩.—இலக்குமணன் இராமன்கூறியதை யுடன்படுதல்.

[1]அன்னதே கரும மைய வன்றியு [2]மருகே நின்றால்
என்னுனக் குதவி [3]செய்வ திதுபடை யென்ற போது
சென்னியிற் சுமந்த [4]கையர் [5]தேவரே போல [6]யாமும்
பொன்னுடை வரிவி [7]லாற்றல் புறனின்று [8]காண்டல் போக்கி.

(இ - ள்.) (இலட்சுமணன் ஸ்ரீராமனைநோக்கி), 'ஐயனே! அதுவே செய்யத்தக்கசெயல்: அன்றியும் உன்னருகேநின்றால், அரக்கப்படை இதுஆனபோது, [பேரளவினதும் பெருவலிபடைத்தது மாக இருத்தலால்] தேவரைப்போல யாமும் சென்னியிலே கூப்பியகையை யுடையவராய்ப், பொற்கட்டையுடைய வில்லாற்றலைப் புறத்திலிருந்து பார்த்தலைத்தவிர்த்து, உனக்கு உதவிசெய்வது என்ன உள்ளது? (எ - று.)—பி - ம்: —[1]அன்னது. [2]அனைவேம். [3]செய்தும். [4]கையான். [5]தேவரைப். [6]யானும். [7]ஏந்திப். [8]காண்டுமென்றான், காண்டிபோக்கி, காண்டல்போக்கில். (௩௩௨௦)

௯௪.—அப்போது அநுமான் ஸ்ரீராமனிடம் தன்வேண்டுகோளைத் தெரிவித்தல்.

என்றவ னேக லுற்ற காலையி னனும னெந்தாய்
புன்றொழிற் குரங்கெ னுதென் றோளின்மே லேறிப் புக்கால்
நன்றெனக் [1]கருதாநின்றே னல்லது நாயி னேனுன்
பின்றனி [2]நின்றபோது [3]மடிமையிற் [4]பிழைப்பி லென்றான்.

(இ - ள்.) என்று சொல்லி அந்த இலட்சுமணன் போகத்தொடங்கியபோது-அநுமான், (ஸ்ரீராமனை நோக்கி),'எந்தாய்! புல்லியதொழிலையுடைய குரங்குஎன்று அவமதியாமல்என்தோளின்மேலேறிக்கொண்டு போரிற் புகுந்தால், நல்லது என்றுகருதுகின்றேன்: அல்லாவிடின், நாய்போற்கடைப்பட்டவனான நான் உன்பின்னேதனியே நின்றபோதும் அடிமையிற் பிழைப்பு இல்லாததாகும்என்று(தன் எண்ணத்தைத்) தெரிவித்துக்கொண்டான்; (எ-று.)--பி-ம்:--[1]கருதுகின்றேன். [2]நிற்றுமாயின். [3]அடித்தொழில். [4]பிரியேன். (௩௩௨௧)

௯௫.—இதுவும் அடுத்த கவியும்-இராமன் 'நீ இலட்சுமணனுக்குத் துணையாயிரு' என்று அநுமானுக்குக் காரணத்துடன் கூறுதலைத் தெரிவிக்கும்.

[1]ஐயநிற் [2]கியலா [3]துண்டோ விராவண னயலே [4]வந்துற்று
எய்யும்விற் கரத்து வீர [5]னிலக்குவன் றன்னோ டேற்றால்
மொய்யமர்க் [6]களத்தி னுன்னைத் துணை[7]பெறு னென்னின் [8]முன்ப
[9]செய்யுமா வெற்றி யுண்டோ சேனையுஞ் [10]சிதையு மன்றே.

மூன்று கவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) (இராமன் அநுமானை நோக்கிக் கூறுவான்:—) ஐயனே! உனக்கு முடியாத செயலும் உண்டோ? இராவணன் அருகிலேவந்து பொருந்தி, எய்கின்ற வில்லையேந்திய கையையுடைய வீரனான இலக்குமணனோடு எதிர்த்தால், (அப்போது) நெருங்கிய போர்க்களத்திலே உன்னைத் துணைபெறாமற் போனால், வலியவனே! பெறக்கூடிய பெருவெற்றி விளையுமோ? (அன்றியும்), குரங்குச்சேனையும் கெடுமல்லவோ?(எ-று.)—பி-ம்:—[1]ஐயனுக்கு. [2]ஒண்ணாது. [3]உண்டே. [4]வந்தால். [5]இளையவன். [6]களத்தன். [7]பெறுதொழியின். [8]முன்பு, மொய்ம்ப. [9]செய்யும் வெற்றியுமுண்டாமோ. [10]சிந்துமன்றே. (௩௩௨௨)

௯௯. ஏரைக்கொண் டமைந்த குஞ்சி யிந்திர சித்தென் பான்றன், போரைக்[1]கொண் டிருந்த [2]முன்னு ளிளையவன் றன்னைப் [3]போக்கிற்று, ஆரைக்கொண் டுன்னா லன்றே [4]வென்றதங் கவனை யின்னம், வீரர்க்கும் [5]வீர நின்னைப் [6]பிரிகலன் வெல்லு மென்பேன்.

(இ -ள்.) அழகைக்கொண்டுஅமைந்த மயிர்முடியையுடைய இந்திரசித்துஎன்பவன் தன் போரைக் கொண்டிருந்த முன்னாளில் இளையவனை அனுப்பியது? ஆரைக்கொண்டு (உன்வலிமையில் நம்பிக்கை கொண்டேயல்லவா!) அக்களத்தில் அவனை வென்றது உன்னாலே

யல்லவோ? வீரற்கும் வீரனே! நின்னைப் பிரியாதவனாய் (அந்தஇலட்சு மணன்) இன்னும் வெல்வானென்று கருதுவேன்; (எ-று.)—பி - ம்:—[1]கொண்டிருந்து, கண்டிருந்து. [2]மேனாள். [3]போக்கின். [4]வென்றதன் றென்னச் சொன்னான், வென்றதென்றென்னச்சொன்னான். [5]வீரன். [6]பிரிகிலன், பிரிகிலேன். (௩௩௨௩)

௬௭.—ஸ்ரீராமன் சொல்லியதைக் கேட்டு அநுமான் இளையபெருமாள்பின்னே செல்லுதல்.

சேனையைக் காத்தென் [1]பின்னே திருநகர் நீர்ந்து போந்த
யானையைக் காத்து [2]மற்றை யிறைவனைக் காத்தெண் டீர்ந்த
வானையித் தலத்தி னோடு மறையொடும் வளர்த்தி யென்றான்
ஏனை[3]மற் றுரைக்கி லாதா [4]னிளவல்பின் னெழுந்து [5]சென்றான்.

(இ - ள்.) சேனையைக்காத்து, என்பின்னால் அழகியஅயோத்தியா புரியினின்று நீங்கிப்போந்த யானைபோன்றவனை இளவலைப் பாது காத்து, மற்றைச்சுக்கிரீவனைப்பாதுகாத்து, மனவல்லமையைக்கடந்து நின்ற வானுலகத்தை இவ்வுலகத்தோடும் மறையோடும் வளரச்செய் வாய் என்றான்: மாறாக வேறு உரைக்கமாட்டாதவனாய்,(அநுமான்),- இளவல்பின்னே எழுந்துபோனான்; (எ-று.)—பி-ம்:—[1]பின்னர். [2]மற் றும். [3]மற்றுரைத் திலாதான். [4]இளவலோடு. [5]போனான். (௩௩௨௪)

௬௮.—விபீஷணனையும் இலட்சுமணனுடன் துணைபோகச் சொல்லுதல்.

வீடண நீயு மற்றுன் றம்பியோ டேகி வெம்மை
[1]கூடினர் செய்யு மாயந் [2]தெரிந்தனை கூறிக் கொற்றம்
[3]நீடுறு தானை தன்னைத் [4]தாங்கினை நில்லா யென்னிற்
[5]கேடுள தாகு மென்றா [6]னவனது [7]கேட்ப தானான்.

(இ - ள்.) விபீஷணனே! நீயும் உன்தம்பியோடு போகி வெம்மை யுடையவராகிய அரக்கர் செய்கின்றமாயத்தை ஆராய்ந்து கூறி, கொற்றம்நீடுறுகின்ற தானையைத் தாங்கிநில்லாயென்றால்,தீமையுண்டா கும்என்று கூறினான்: அவன் அதனைக் கேட்டு (அதன்படியே) நடப்ப தானான்; (எ - று.)—பி-ம்:—[1]கூடினே.[2]தெரிந்தனைகுறிக்கொண்டேகி, தெரிந்தனகுறிக்கொண்டேகி, தெரிந்தனைகூறிக்கொற்றம், தெரிந் தன கூறிக்கொற்றம்,தெரித்தனை குறிக்கொண்டேகி,தெரித்திநீகூறிக் கொற்றம். [3]நீடுள. [4]தாங்கிநீ. [5]கோடுள. [6]கேட்டிய. [7]தலைமேற் கொண்டான், கிடைப்புக்கொண்டான். (௩௩௨௫)

௬௯.—யாவரும் இலட்சுமணனுக்குத் துணையாகச் செல்லுதல்.

சூரியன் [1]சேயுஞ் செல்வன் சொற்றதே [2]யெண்ணுஞ் [3]சொல்லன்
ஆரியன் பின்பு [4]போனா னனைவரு மதுவே நல்ல
காரிய மென்னக் கொண்டார் கடற்படை காத்து நின்றார்
வீரியன் [5]பின்னர்ச் செய்த செயலெலாம் [6]விரிக்க லுற்றாம்.

(இ - ள்.) சூரியபுத்திரனான சுக்கிரீவனும் ஸ்ரீராமன்கூறியதையே மதித்துக்கூறியசொல்லையுடையவனாகி, இலக்குமணன் பின்னேபோக

னுற்றான்: யாவரும் அதுவே நல்லகாரியமென்று கொண்டார்களாய், கடல்போன்ற வானரப்படையைக் காத்துநின்றார்; வீரமுள்ளவனான ஸ்ரீராமன்,-பின்புசெய்த செயலையெல்லாம் இனி விவரித்துச்சொல்லத் தொடங்கினோம்; (எ - று.)

ஈற்றடி - கவிக்கூற்று. பி - ம்:—[1]செல்வன் மற்றச். [2]என்னும். [3]சொல்லால், சொல்லான். [4]போனவனைவரும். [5]பின்னைச். [6]விளம்பல்.

எ0.—இராமன் போர்க்கோலம் பூணுதல்.

வில்லினைத் தொழுது வாங்கி யேற்றினன் [1]வின்னாண் மேருக்
கல்லெனச் [2]சிறந்த [3]தேயுங் [4]கருணையங் கடலே யன்ன
எல்லொளி மார்பில் [5]வீரக் கவசமிட் [6]டிமையா வேதச்
சொல்லெனத் [7]தொலையா வாளித் தூணியும் புறத்துத் தூக்கி.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) கருணைக்கடலான ஸ்ரீராமமூர்த்திதாமே (கையால்) தொழுது வில்லை யெடுத்து வில்நாணியை யேற்றி,(பிறகு)மேருமலைபோலச் சிறந்ததாயினும் அந்தவிளங்குகின்ற ஒளியையுடைய(தனது)மார்பிலே வீரக்கவசத்தையிட்டு, (ஒருவரால்) செய்யப்படாத வேதச்சொற்களைப்போலத் தொலையாத அம்புகளைக்கொண்ட தூணீரத்தையும் முதுகிலே கட்ட,—(எ - று.)—"கூசினபொடியாலெங்கும்" என்று மேலிற் கவியில்முடியும்.

விஷ்ணுவின்வில் லாதலால், அதனைத் தொழுது வாங்கினன். மார்பு மலைபோன்ற தேனும் அதற்கும் வீரக்கவசமிட்டா னென்றார். தூக்கி = தூக்க:எச்சத்திரிபு.பி-ம்:—[1]மெய்ந்நாண்.[2]செறிந்தது.[3]எனும். [4]கருணையின். [5]தீரக். [6]இமையோர். [7]தொலைவிலாத. (௩௩௨எ)

எக — சேனையின்முன்னணிவந்து பொருதல்.

[1]ஓசனை நூற்றின் [2]வட்ட மிடை [3]விடா [4]துறைந்த சேனைத்
தூசிவந் தண்ண றன்னைப் போக்கற வளைந்து சுற்றி
வீசின படையு மம்பு [5]மிடைதலும் விண்ணோ ராக்கை
கூசின [6]பொடியா லெங்குங் குமிழ்ந்தன வியோம கூடம்.

(இ - ள்.) நூறுயோசனைதூரம் வட்டமாக இடைவிடாது பொருந்தின சேனையின் முன்னணிவந்து பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனைப் போக்குஇல்லாதபடிவளைந்து சூழ்ந்துகொண்டுவீசின படைக்கலங்களும் அம்புகளும் நெருங்கவும், தேவர்தம் முடல்கள் கூச்சமடைந்தன: அப்போது எழுந்த தூளியால் ஆகாயத்தினிடமெங்கும் பரவின; (எ-று.)—பி - ம்:—[1]யோசனை. [2]வட்டத்திடை. [3]அறாது. [4]உற்ற. [5]மிடைதலின். [6]பொடியாவேனுங்குமிழ்த்தன ரோமக்கூட்டம், ஒடியாவேனுங்குமிழ்த்தனவுரோமக்கூட்டம். (௩௩௨அ)

எ௨.—இமையோர் இராமனையேத்துதல்.

கண்ணனே யெளியே [1]யிட்ட கவசமே கடலே யன்ன
வண்ணனே யறத்தின் வாழ்வே மறையவர் வலியே [2]மாறுது
ஒண்ணுமே [3]நீய லாதோ [4]ரொருவர்க்கிப் படைமே லூன்ற
எண்ணமே முடித்தி யென்று வேத்தின ரிமையோ ரெல்லாம்.

(இ - ள்) (அப்போது) தேவர்களெல்லாம்,—கண்ணனே! எளியவ ராகிய எங்கட்குப் பாதுகாப்பாகப்பொருந்திய கவசமே! கடலையொத்த நிறத்தையுடையவனே! அறத்தின்வாழ்வே! மறையவர்க்குவலிமையாகி யிருப்பவனே! நீ யல்லாத ஒருவர்க்குபின்வாங்கிவிடாமல்இப்படைமேல் எதிர்த்தல் ஒண்ணுமோ? (எம்முடைய) எண்ணத்தை நிறைவேற்றுவாய் என்று சொல்லித் துதித்தார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]விட்ட. [2]மற்ரோர்க்கு. [3]நின். [4]ஒருவர்க்குப், ஒருவரிப். (௩௩௨௯)

எ௩.—முனிவர் அஞ்சி ஸ்ரீராமன்வெல்கஎன்று ஆசிகூறுதல்.

முனிவரே முதல்வ ராய வறத்துறை முற்றி னோர்கள்
தனிமையு மரக்கர் தானைப் பெருமையுந் [1]தரிக்க லாதார்
பனி[2]வரு கண்ணர் விம்மிப் பதைக்கின்ற நெஞ்சர் பாவத்து
அனைவருந் தோற்க வண்ணல் வெல்கவென் றுசி சொன்னார்.

(இ-ள்.)முனிவரேமுதல்வராகிய அறத்துறையில்நிரம்பிநிற்பவர்,— (ஸ்ரீராமனுடைய) தனிமையையும் அரக்கரின் சேனைப்பெருமையையும் (கண்டு) தரிக்கமாட்டாதவராய், நீர்த்துளிவருகின்ற கண்களையுடையவரும் விம்மிப்பதைக்கின்ற நெஞ்சையுடையவருமாகி, 'பாவத்தையுடைய அனைவரும் தோற்க: அண்ணல் வெல்க'என்று வாழ்த்துக் கூறினார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]தரிக்கலாற்ருர், தரித்திலாதார். [2]வருங். (௩௩௩0)

வேறு.

எச.—மற்றுமுள்ள தேவாதியரும் இராமனை வாழ்த்துதல்.

மற்றும்வே றறத்து ணின்ற வான[1]நா டனைத்துளோர்
கொற்ற வில்லி வெல்க வஞ்ச மாயர் வீக குவலயத்து
உற்ற தீமை தீர்க வின்றொ டென்று கூறி னார்[2]நிலம்
துற்ற வெம்ப டைக்கை நீச [3]ரின்ன வின்ன சொல்லினார்.

(இ - ள்.) மற்றும்வேறாக அறத்துள்நின்ற வானநாட்டில்முற்ற வுள்ளவரெல்லாம்,—'வெற்றிபொருந்திய வில்லாளியான ஸ்ரீராமன்வெல்க: வஞ்சனையுள்ள மாயாவிகள் அழிக: பூமியிற்பொருந்திய தீமை இன்றொடுதீர்கஎன்றுகூறினார்கள்: நிலத்துநெருங்கிய கொடியபடைக்கல மேந்திய கையையுடைய நீசர்கள் இவ்வாறு இவ்வாறு கூறலானார்கள்: (எ-று.)—அவர்கள் கூறியவற்றை மேல்மூன்றுகவிகளிற் காண்க. இச்செய்யுள் அனேகபிரதிகளி லில்லை. பி - ம்.—[1]நாட்டு. [2]நிலத். [3]இன்னர். (௩௩௩௧)

௭௫.—மூன்றுகவிகள்-இராமன்தீரத்தைக் கண்டு அரக்கர்வியந்து கூறுதலைத் தெரிவிக்கும்.

[1]இரிந்த [2]சேனை சிந்தி யாரு [3]மின்றி யேக நின்றநம்
விரிந்த [2]சேனை கண்டி யாது மஞ்ச லின்றி வெஞ்[4]சரந்
[5]தெரிந்து [6]சேவ கன்றி றம்ப[7]லின்றி யெய்து செய்கையான்
புரிந்த தன்மை வெற்றி மேலு நன்று மாலி பொய்க்குமோ.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நிலைகெட்டோடிய சேனை சிதறி எவருமில்லாமற்போய் விடவும், நம்முடையபரந்த சேனையைக்கண்டு சிறிதும் அஞ்சுதலின்றி(த் தான்தனித்து)நின்று கொடியஅம்புகளை ஆராய்ந்து (இந்த) வீரன் மாறுபடுதலின்றி (நம்மோடுபொர)வருகின்ற செய்கையால், (இவன்) புரிந்த (இச்)செய்கைவெற்றியினும்மேம்பட்டதே: மாலி பொய்கூறு வானோ? (எ - று.)

நம்மைக் கண்டமாத்திரத்துவானரசேனைகளெல்லாம் ஓடிச்சிதறி விடவும் தான் மனத்திடம் குறைதலின்றி நம்மோடு எதிர்த்து நிற்கின்றான்: இவன் வெல்லவேணுமென்பதும்இல்லை:இவனதுஇச்செய்கையே வெற்றியைவிட மெச்சத்தக்கது: இவன்திறமையைக்குறித்து மாலி முன்பு பாராட்டிக்கூறியது சிறிதும் பொய்ப்படாதென்று இராக்கதர் கூறினரென்க. மாலி=மாலியவான்: இராமன்திறமையை மாலியவான் கூறியதைப் படைக்காட்சிப்படலத்துக் காண்க. பி - ம்:—[1]இரிந்து. [2]தானை. [3]இன்றியேயும். [4]சமம். [5]தெரிந்த. [6]சேவகர். [7]இன்றிநின்றசெய்கையால், இன்றியேசெய்வீரியம். (௩௩௩௨)

௭௬. [1]புரங்க ளெய்த புங்க வற்கு முண்டு [2]தேர்பொ ருந்தினார்
பரந்த தேவர் [3]மாய னம்மை வேர றுத்த பண்டைநாள்
விரைந்து புள்ளின் மீது விண்ணு ளோர்க ளோடு மேவினான்
கரந்தி லன்ற னித்தொ ருத்த னேரும் [4]வந்து காலினான்

(இ-ள்.) முப்புரத்தைஎய்தழித்த பரமற்கும் பரவியதேவர் தேரிற் பொருந்தினராக இருந்தனர்: மாயன் நம்மை வேரறுத்த முன்னாளில் கருடப்புள்ளின்மேல் தேவர்களோடும் விரைந்து பொருந்தினன்: (இப்போதோ) தனித்தஒருத்தன் ஒளியாதவனாய்க் காலினால்வந்து(நம்மை) எதிர்க்கின்றான்; (எ-று.)—நேரும்முற்றும், வேற்றுமையணி. பி-ம்:—[1]புரங்கடந்த. [2]தேர்ப். [3]மாய. [4]வந்தகாலனான். (௩௩௩௩)

௭௭. தேரு மாவு மியானை யோடு சீய [1]மியாளி [2]யாதியா
மேரு மானு [3]மெய்ய நின்ற வேலை யேழின் [4]மேலவால்
வாரும் வாரு மென்ற ழைக்கு மானி டற்கிம் மண்ணிடைப்
பேரு மாறு [5]நம்மி டைப்பி ழைக்கு மாறு மெங்ஙனே.

(இ - ள்.) தேரும் குதிரைகளும் யானையுடன் சீயமும் யாளியும் ஆதியாக மேருவையொத்தமேனியையுடையவை, எழுகடல்களினும் மிக்கனவாய் உள்ளன: (அப்படியிருக்கவும்), 'வாருங்கள், வாருங்கள்

என்று அழைக்கின்ற மானுடற்கு இந்தப்பூமியில் தப்பிப்போகும் வகையும் நம்மிடத்து அகப்பட்டு உயிருய்யும்வகையும் எங்ஙனே? (எ-று.)—ஆல்-தேற்றம். பி-ம்:—[1]ஆளி. [2]ஆதியாய். [3]என்ன, மேய, மெய்யர். [4]மேலவாய், மேலவா, வெய்யவாய். [5]நம்முழைப். (௩௩௩௪)

எஅ.—இராமன் வின்னாணொலியை யெழுப்புதல்.

என்றுசென் றி[1]ரைத்தெ ழுந்தோர் சீய வே[2]ற டர்த்ததைக்
குன்று [3]சூழ்வ ளைத்த போற்றொ டர்ந்த சேனை கூடலும்
நன்றி தென்று ஞால மேழு நாக மேழு [4]மானுதன்
வென்றி வில்லை வேத நாத னாணெ றிந்த [5]வேலைவாய்.

(இ-ள்.) என்றுசொல்லியவண்ணம் (அரக்கர்)சென்று ஆரவாரித்தெழுந்து (தனியே) ஓர்ஆண் சிங்கம் பொருததை யானைகள் சூழவளைத்ததுபோலத் தொடர்ந்தசேனை (இராமனைச்) சுற்றிக்கொள்ளுதலும்,—'இது நன்று'என்றுசொல்லி,கீழேழுலகமும் மேலேழுலகமும் ஒப்பாகப்பெற்ற [பெரும்பாரமமைந்த]தன்னுடையவெற்றிவில்லைவேதநாதன் நாணெறிந்தபோதில்,--(எ-று.)—'புலர்ந்த' என மேற்கவியோடு முடியும். குன்று-உவமவாகுபெயரால், யானையைக் காட்டிற்று.பி-ம்:—[1]அடர்த்திரைத்து. [2]எதிர்ந்ததை, அடர்ந்ததை. [3]வந்துசூழ்வளைத்த போற்றொடர்ந்து, கூடலும், வந்துசூழ்வளைந்தபோற்றொடர்ந்து கூடலும். [4]ஆன. [5]எல்லைவாய். (௩௩௩௫)

எகூ.—இரண்டுகவிகள் அரக்கச் சேனையில்
துர்நிமித்தந்தோன்றியமையைத்தெரிவிக்கும்.

கதம்[1]பு லர்ந்த சிந்தை [2]வந்த காவல் யானை [3]மாவொடு
மதம்[4]பு லர்ந்த நின்ற வீரர் வாய்[5]பு லர்ந்த மாவெலாம்
பதம்[5]பு லர்ந்த [6]வேக மாக வாள ரக்கர் பண்புசால்
விதம்[7]பு லர்ந்த தென்னின் வென்ற வென்றி சொல்ல வேணுமோ.

(இ-ள்.) காவலாகவந்த யானை,—மதமயக்கத்தோடு மதமும் மாறிவிட்டன; மனத்திற் பொங்கிவந்த கோபமும் மாறிவிட்டன; (அங்கு) நின்ற வீரரின் வாய், புலர்ந்தன; குதிரைகளெல்லாம், கால்வேகம் குறைந்தன; மாகம்போன்றபெருந்தோற்றமுடைய கொடிய அரக்கரின் (போர்செய்யும்) பண்பு மிக்கநிலைமையும் மாறிவிட்ட தென்றால், (இராமபிரான்)வென்ற வென்றியின் தன்மையைச் சொல்லவேண்டுமோ! (எ-று.)

வேகம்ஆக அரக்கரின் போர்ப் பண்பு சான்ற விதம்என்றும் உரைக்கலாம். வென்றவென்றி சொல்லவேணுமோ என்பதற்கு இங்ஙனம் அரக்கர்பக்கத்துத் தீநிமித்தந்தோன்றியதனால் அவர்களின் வெற்றியைப்பற்றி நாம் கூறவேண்டியதில்லை யென்றலும்ஒன்று.பி-ம்:--[1]புலந்தசிந்தை. [2]வெந்த, வந்து. [3]மாவொடும். [4]புலந்து,புலர்ந்து. [5]புலர்ந்து. [6]வேகமோய. [7]புலந்தது...வென்றி, புலம்புலர்ந்தவென்றியன்று, புலம்புலர்ந்த வென்றியின்று, புலர்ந்தவென்றியின்றுவேறு. (௩௩௩௬)

அ௦. [1]வெறித்தி ரிந்த வாசி யோடு [2]சீய மாவு மீளியுஞ்
[3]செறித்த மைந்த [4]சில்லி யென்னு மாழி கூடு தேரெலாம்
[5]முறித்தெ றிந்து முந்த யானை வீசு மூசு பாகரைப்
[6]பிறித்தி ரிந்து [7]சிந்த [8]வந்தொ ரா்கு லம்[9]பி றந்ததால்.

(இ-ள்.) சிங்கமும் பேய்களும், திகைத்து நிலைகெட்டோடிய குதிரையுடனே (தாம்) கட்டப்பட்டிருந்த சில்லியென்னப்படும் சக்கரங்கூடியதேரை யெல்லாம் முறித்தெறிந்து முற்பட்டுப்போகவும், யானைகள் (அங்குசத்தை) வீசுகின்ற நெருங்கிய பாகரை உயிர்போக்கி நிலைகெட்டுச் சிதறவும், (அங்கே அரக்கச்சேனையில்) ஒரு கலக்கமான நிலை வந்துதோன்றிற்று; (எ - று.)—பி-ம்:—[1]வெறிந்திரிந்து, எறித்திரிந்த, வெறித்திரிந்து. [2]சீயமாவியாளியும், சீயமீளியாளியும். [3]செறிந்து. [4]சில்லிபுல்லுமாழிகூடுதேரெலாம், சில்லிபுல்லுமாழியோடு கூடுதேர், முந்துசில்லிபுல்லுமாழிகூடுதேர், சில்லியென்னுமாழியோடு தேரெலாம். [5]முறிந்தெறிந்துமுந்த, முறிந்தெழுந்தழுந்த, முறிந்தெழுந்தணிந்த, முறிந்தெழுந்தமுற்கை, முறித்தெழுந்தமுற்கை. [6]பிறிந்திருந்து, பிறிந்திரிந்து. [7]சிந்தை. [8]நொந்தொராகுலம். [9]பிறந்தவால். ()

அக.—இதுவும் அடுத்த கவியும்—ஸ்ரீராமன் அரக்கச்சேனையின்மீது அம்புஎவியதைத் தெரிவிக்கும்.

[1]இந்நி மித்த மிப்ப டைக்[2]கி டைந்து வந்த டுத்த தோர்
[3]துந்நி மித்த மென்று கொண்டு வானு ளோர்க ளுள்ளினர்
[4]அந்நி மித்த முற்ற போத ரக்கர் [5]கண்ண ரங்கமேன்
மின்[6]னி மிர்த்த வன்ன வாளி வேத நாதன் வீசினான்.

(இ - ள்) இந்த நிமித்தங்கள் இந்த (இராக்கத)சேனைக்கு இடையூறுவந்து அடுத்ததாகிய ஒப்பற்ற துன்னிமித்தமென்று (மனத்துக்) கொண்டு வானுளோர்கள் துள்ளினர்கள்; அத்தீநிமித்தங்கள் தோன்றியபோது அரக்கர் வருந்த, அவர்மேல் மின்னைநிமிர்த்தாலொத்த அம்புகளை வேதநாதனாகிய ஸ்ரீராமன் எறிந்தான்; (எ - று.)—கண்ணரங்க, கண் - தமிழுபசருக்கம். பி-ம்:—[1]என்னிமித்தம், எந்நிமித்தம். [2]இடந்துடித்தடுத்தது, இடத்துவந்தெடுத்தது. [3]துன்னிமித்தம். [4]அன்னிமித்தம். [5]மேலரங்குகள், மேலரங்குதன், மேலவாங்குதன். [6]நிமிர்த்தது. (ருருரு அ)

அஉ. [1]யாளி மேலு மாளின் மேலு மானை மேலு மாடன்மா, மீளி மேலும் வீரர் மேலும் வீரர் [2]தேரின் மீதினும், [3]வாளி மேலும் வில்லின் மேலு மண்ணின் மேல்[4]வ ளர்ந்தமாத், தூளி [5]மேலு மேற வேற வீரன் வாளி தூவினான்.

(இ - ள்.) வீரனான ஸ்ரீராமன்,—பூமியின்மீதுபெருகித் தோன்றிய மிக்கதூளிகள் மேன்மேலும் மிக,(தேர்களிற்பூட்டிய)யாளிமேலும் (தேரையோட்டுகின்ற)ஆளின்மேலும் ஆனைமேலும்ஆடுந்தன்மையுள்ள குதிரைகளின்மேலும் வீரர்மேலும் வீரரேறிய தேரின்மேலும் (அவர்கள் வீசிய) அம்புகளின்மேலும் வில்லின்மேலும் அம்புகளைத் தூவினான்,

வாளி தூவுவதனால் அரக்கர்சேனை ஓட்டமெடுப்பதனால் முன்னம் எழுந்த மண்தூளி மேன்மேலும் மிகுவதாயிற்றென்க. இனி, மிகுதியாக அம்புதூவியதை தூள்பறக்கஎய்தானென்ற வழக்குப்பற்றிக் கூறினதாகக்கொள்வாருமுளர் பி-ம்:—[1]ஆளி. [2]தேரின்மேலும்வெவ்,தேரின்மீதரும். [3]வாளின். [4]எழுந்தமா. [5]மேல. (ருருருக)

அரு.—இதுமுதற் பதினேழுகவிகள்-அரக்கர்சேனைகள் பட்ட வகையை வருணனைவகையாற் கூறும்.

[1]மலைவி ழுந்த வாவி ழுந்த மான யானை [2]மள்ளர்செந்
தலைவி ழுந்த [3]வாவி ழுந்த [4]தாய வாசி தாளறுஞ்
சிலைவி ழுந்த வாவி ழுந்த [5]திண்ப தாகை திங்களின்
கலைவி ழுந்த வாவி ழுந்த வெள்ளெ யிற்ற காடெலாம்.

(இ - ள்.) சீற்றமுள்ளயானைகள்,—மலைவிழுந்தவாறு விழுந்தன; தாவின குதிரைகள்,—வீரர்களின் செந்தலைவிழுந்தவாறு விழுந்த; அடியற்ற விற்கள் விழுந்தவகையாக வலிய பெருங்கொடிகள் விழுந்தன; வெள்ளிய கோரப்பற்களின் தொகுதியெல்லாம், திங்களின்கலைகள் விழுந்தவகையாக விழுந்தன; (எ - று.)

முதலடியிலும் நான்காமடியிலும் வந்துள்ள மலை திங்களின்கலையென்பன - அப்பிரகிருதமான உபமானங்கள். மற்றையிரண்டடிகளிலுள்ள மள்ளர்தலை, தாளறுஞ்சிலை என்பன-வர்ண்யங்களான உபமானங்கள். பதாகை-பெருங்கொடி. பி-ம்:—[1]. வைர[2]மன்னர்.[3]ஆய். [4]தானைவாசிதள்ளுறுஞ், தாய...தாளிறும், தாரைவாளிதாளறுஞ். [5]தேர்விழுந்த.

அசு. வாடை நாலு பாலும் வீச மாக [1]மேக மாலைவெங்
கோடை மாரி [2]போல வாளி [3]கூட வோடை யானையும்
ஆடன் மாவும் வீரர் தேரு மாளு [4]மாள்வ தானவாற்
பாடு பேரு மாறு [5]கண்டு [6]கண்செல் பண்பு [7]மில்லையால்.

(இ - ள்.) நாற்புறத்திலுமாகக் காற்றுச் சுழற்றியடிக்கப் பெரியவானத்திலுள்ள மேகவரிசைகள் கொடுங்கோடையிற் பெய்யும் மாரிபோல இராமசரம் மிகுதியாகக்கூடுவதனால்,—நெற்றிப்பட்டமணிந்த ஆனைகளும் வலியகுதிரைகளும் வீரரின்தேர்களும் பதாதிகளும் மாள்வதான; (அங்ஙனம் மாள்வதனால்), பக்கத்தே பெருகிச்சென்ற (உதிரமயமான) ஆற்றைக்கண்டு கண்செல்கின்ற பண்பும் இல்லையாயின; (எ-று.)

கண்கொண்டுபார்க்கமுடியாதபடி வெகுகோரமாக இரத்தநதி பெருகலாயிற் றென்றவாறு. ஆடல் - அடல்என்பதன்நீட்டல்: விகாரங் கொள்ளாமல், ஆடல்-ஆடுந்தன்மையுள்ள எனினுமாம். பி-ம்:—[1]மோக மாலை, லோகமாலை, [2]போலும். [3]கூடியோட. [4]மாள்வதானவர். [5]கொண்டு. [6]பண்செய், கண்செய், போர்செய், பண்சொல்.[7]இன்மையால். ()

அரு. விழித்த கண்கள் [1]கைகள் மெய்கள் வேற லைக்க ழுத்தினில், தெழித்த வாய்கள் செல்ல லுற்ற தாள்க டோள்கள் செல்லினைப், பழித்த [2]வாளி [3]சிந்த நின்று [4]பட்ட வன்றி [5]விட்ட [6]கோல், கழித்த வாயு தங்க ளொன்று செய்த தில்லை [7]கண்டதே.

(இ - ள்.) விழித்த கண்களும் கைகளும் உடல்களும் கழுத்தின் மேலிருந்து வெல்லுதலைப்பழித்த வாய்களும் நடக்கலுற்ற தாள்களும் தோள்களும்ஆகியவை,--மேகத்தைப்பழித்த[மேகத்தினும்மிகுதியாகப் பொழிகின்ற] அம்புகளை (ஸ்ரீராமன்) தூவ அழிந்துநின்றனவன்றி, அவ் வீரர் விட்ட அம்பும் (உறை) கழித்தஆயுதங்களும் (ஸ்ரீராமனை) ஒன்று செய்யக்கண்டதில்லை; (எ-று.)

ஸ்ரீராமனை அரக்கர்படைக்கலமும் அம்புகளும் ஒன்றுஞ் செய்ய மாட்டாவாயினவென்பது, ஈற்றடியிற் கூறிய பொருள். ஸ்ரீராமன் வீரம் கண்கூடாகத்தெரிவதனால், மனப்பூர்வமாகவன்றி வெளிக்குப் பழித்தன வென்பார் 'வேறலைக்கழுத்தினில் தெழித்தவாய்கள்' என்றா ரென்னலாம்: வேறல் - வெல்லுதல். பி-ம்:—[1]கைகள்மெய்கள்விற்கள் வேல்கள் வாளிகள், கைகள் விற்கள் வேல்கள் வாள்கள் விண்ணினுள். [2]வாசி. [3]சேறி. [4]பட்டதன்றி, பட்டதின்றி. [5]இட்ட. [6]தோல். [7]கண்ட தால், கண்டிரே. (௩௩௪௨)

௮௬. தொடுத்த வாளி யோடு விற்று ணிந்து [1]வீழு முன்றுணிந்து
எடுத்த வாள்க ளோடு தோள்க ளிற்று [2]வீழு மற்றுடன்
[3]கடுத்த தாள்கள் கண்ட மாகு மெங்ங னே[4]க லந்துநேர்
[5]தடுத்து வீரர் தாமு மொன்று செய்யு மா[6]ச லத்தினால்.

(இ - ள்.) (அரக்கவீரர்)தொடுத்த அம்புகளோடு விற்கள் துணி ந்துவீழுமுன், (அவர்கள்) துணிந்தெடுத்த வாள்களோடு தோள்கள் இற்றுவீழும்: மற்றும் உடனே வேகங்கொண்ட தாள்கள் துண்டமா கும்: (இவ்வாறாயின்),அரக்கவீரர் நேரேகலந்து (இராமபாணங்களைத்) தடுத்துத் தாமும் கோபத்தினால் (அவ்விராமபாணங்கட்குமாறாக) ஒன்று செய்யும் வகை எங்ஙனே? (எ - று.)

இதனால், வீரர்பட்டமை கூறப்பட்டது. தாம் முன்னர்த்தொடுத்து விடுத்த அம்புகளோடுவில்லும் துணிந்துவீழ்வதற்குமுன்னமே, பின்பு அவ்வரக்கர் துணிந்து கைகளிலெடுத்தவாள்களும் அவற்றையேந்திய கைகளும் துண்டுபட்டுவீழும்: உடனே, அவர்கள் அஞ்சியோட்டம் பிடிக்கவிரைந்தபாதங்கள்விழுவன: இவ்வாறாயின்,அவ்வரக்கர் பொரு வது எங்ஙனம் முடியுமென்றவாறு: முன்னிரண்டடியில் முறைபிறழ் வுயர்நவிற்சியணி. பி-ம்:—[1]விழுமென். [2]வீழுமற்றது, வீழுமுற்றுடன். [3]கடுத்தவாள்கள். [4]கலந்துடன். [5]தடுத்த. [6]சலத்தினர், சலத்தினன். இங்கே சிலபிரதிகளில் ''எட்டு'' (௮௫), ''ஊர'' (௮௮), ''குரந்துணி ந்து''(௮௭), ''தொடுத்த'' (௮௬) என்ற முறையில் பாடல்கள் காணப் படுகின்றன. (௩௩௪௩)

௮௭. குரந்[1]து ணிந்து கண்[2]சி தைந்து பல்ல ணங்[3]கு லைந்துபேர்
உரந்[2]து ணிந்து வீழ்வ தன்றி யாவி யோட வொண்ணுமோ
சரந்து ணிந்த வொன்றை நூறு சென்று சென்று [4]தள்ளலா
வரந்[5]து ணிந்த வீரர் போரின் முந்த வுந்து வாசியே. |ல்

(இ - ள்.) (இராமபிரானுடைய) அம்பு இலக்காகக்குறித்த ஒரு பொருளின்மீது நூறாகச்சென்று சென்று வீழ்த்துவதனால், (தாம்

பெற்ற) வரத்தினால் துணிவுகொண்ட வீரர் போரிலே முந்துமாறு செலுத்திய குதிரைகள்,—குளம்புகள் துணிந்தும் கண்சிதைந்தும் பல்லுடன் மேல்வாயும்அழிந்தும் பெரியமார்புதுணிந்தும் வீழ்வதல்லாமல், உயிருடன் தப்பியோடத்தான் முடியுமோ? (எ - று.)

இதனால், குதிரைபட்டமை கூறப்பட்டது. பல்லணம்என்று ஒரு சொல்லாகக்கொண்டு - முதுகிலிட்ட தவிசுஎன்றல் மிகப்பொருந்தும்: பல்லணம்=பல்யயநமென்ற வடசொல்லின் சிதைவு. பி-ம்:—[1]துணிந்த. [2]சிதைந்த, சிதர்ந்து. [3]குலைந்த. [4]தள்ளினால். [5]துணிந்துவந்தவீரர் போரிலுந்து. (ஙஙசச)

அஅ. ஊர [1]வுன்னின் முன்பு பட்டு யர்ந்த வெம்பி ணங்களால்
பேர [2]வொல்வ தன்று பேரி னாயி ரம்பெ ருஞ்சரம்
தூர [3]வொன்று நூறு கூறு [4]பட்டு குந்து யக்கலால்
தேர்க ளென்று [5]வந்த பாவி யென்ன செய்கை [6]செய்யுமே.

(இ - ள்.) ஊர்ந்துசெல்லக்கருதின் முன்புஇறந்து மேடாகக்கிடக்கின்ற கொடியபிணங்களால் (இடம்விட்டுப்)போகவும் கூடியதாக இல்லை; (அரிதிற்) பேர்ந்துசென்றாலோ, (ஸ்ரீராமன்விடுக்கின்ற) ஆயிரக்கணக்கான பெரியஅம்புகள் நிரம்பஅடைதலால் ஒருதேர் நூறுபகுதியாகிச் சிந்திவிடும்: (ஆகவே), சோர்வுகொள்வதன்றி, தேர்களென்று வந்த பாவி என்னசெய்கைசெய்யும்? (எ - று.)

இதனால், தேர்கள்பட்டமை கூறப்பட்டது. இரதிகர்களின்செயலை 'ஊரவுன்னின்' என்றார். தேர்கள் நினைத்தபடி செல்லப்பெறாமையால் 'பாவித்தேர்' என்னப்பட்டன. பி-ம்:—[1]உன்னி. [2]உண்பது, ஒன்பது. [3]நூறுகூறுசென்று. [4]பட்டுகுத்துயக்கலால், பட்டுகுத்தயக்கலால். [5]வந்தவாவி. [6]செய்யுமோ. (ஙஙசரு)

அகூ. எட்டு வன்றி சைக்க ணின்ற [1]யாவும் வல்ல யாவருங்
கிட்டி னுய்ந்து போகி லார்க [2]ளென்ன நின்ற [3]கேள்வியால்
முட்டும் வெங்கண் [4]மான யானை யம்பு [5]ராய முன்னமே
பட்டு வந்த போல்[6]வி ழுந்த வென்ன தன்மை பண்ணுமே.

(இ - ள்.) முட்டுந்தன்மையுள்ள கொடிய கண்களையும் ரோஷத்தையும்படைத்த யானைகள்,—அம்புஉராய்வதனால், முன்னமே இறந்து வந்தனபோல விழுந்தன: (அவை), என்னசெய்கை செய்யமாட்டும்? 'வலிய எட்டுத்திசைக்கணின்ற எல்லாச்சேனைகளும் வலிமைபெற்ற எல்லாவீரர்களும் கிட்டினால் உய்ந்துபோகார்' என்னுமாறு கேள்வியோடு நின்றன; (எ - று.)

இதனால், யானைகள்பட்டமை கூறப்பட்டது. என்னநின்ற கேள்வியால் - என்றகாரணத்தால் அப்போரின் கடுமையைக் கேட்டல்மாத்திரத்தோடு நின்றனஎன்க: இனி, இவ்வாறானசொல் எங்கும் கேட்கப்படுமாறு அந்தப்போர்க்களத்தில் நிகழ்ந்தன வென்றுமாம். முன்னமே இறந்தபொருள் விழுந்தனபோல, யானைகள் அவ்வளவு இலகுவாக

விழுந்திட்டனஎன்பது, பின்னிரண்டடிகளிற்கூறிய பொருள். பி ம்:—[1]யாதுமல்லவாய்வரும், யாதுமல்லயாவரும். [2]என்று. [3]கேள்வியாய். [4]மாலியானை. [5]பாய. [6]விழுந்தது. (௩௩௬)

௯௦. வாவி கொண்ட புண்ட ரீக [1]மன்ன கண்ணன் வாளியொன்று, [2]ஏவி னுண்டை நூறு கோடி கொல்லு மென்ன [3]வெண்ணுவான், [4]பூவி னண்டர் கோனு மெண்ம யங்கு மன்ன போரின் வந்து, ஆவி கொண்ட கால னூர்க டிப்பு [5]மென்ன [6]தாகுமே.

(இ - ள்.) நீர்நிலையிலுள்ள செந்தாமரைமலரையொத்த கண்களையுடையவனான ஸ்ரீராமன், ஒருபாணத்தை யேவினால் அந்தவில்லுண்டை நூறுகோடிபிராணிகளைக்கொல்லு மென்ற காரணத்தினால், (இறந்த உயிர்களை) எண்ணுபவனான பூவிலுறைகின்ற தேவர்தலைவனான பிரமதேவனும், எண்ணுவதில் திகைப்புக்கொள்பவனானான்; அந்தப்போரில்வந்து (இறந்தபிராணிகளின்) உயிரைக்கொண்ட யமனுடைய விரைந்துதொழில்செய்யுந்தன்மையும் எப்படிப்பட்டதாகுமோ?

இறந்தவுயிர்களைக் கணக்கிடுதலும் ஆகாது:வில் விரைந்து கொல்வதற்கேற்ப யமனால்விரைந்து அவ்வுயிர்களைக் கொண்டுசெல்லுதலு மாகாதென்று, இராமபிரானது வில் செய்யுங் கொலைத்தொழிலைத் தொடர்புயர்வுநவிற்சியணி வகையால் வியந்தவாறு.பி-ம்:—[1]மன்னனன்ன, அன்னகண்ண. [2]ஏவிலுண்ட. [3]உன்னுவான். [4]பூவிலுண்டகோனுமெய். [5]அன்னது. [6]ஆகுமோ, ஆகுமால். (௩௩௭)

௯௧. கொடிக்கு லங்க டேரின் மேல யானை மேல கோடைநாள்
இடிக்கு லங்கள் வீழ வெந்த காடு போலெ ரிந்தவால்
முடிக்கு லங்கள் கோடி கோடி சிந்த வேக முற்றுறா
வடிக்கு லங்கள் வாளியோட [1]வாயி னூடு தீயினால்.

(இ - ள்.) கூரிய அம்புக்கூட்டங்கள் கோடிக்கணக்கான (அரக்கரின்)முடிக்குலங்களைச் சிந்துமாறு வேகம்நிரம்பி ஓடுகையில், (அவ்வம்புகளின்) வாயிலுள்ள தீயினாலே, தேரின்மீதும் யானைமீதுமுள்ள கொடிக்குலங்கள் கோடைக்காலத்தில் இடிக்குலங்கள் வீழ்வதனால் வெந்த காடுபோல எரிந்தன; (எ - று.)—வடிவாளிக்குலங்கள் என்று மாறுக. முற்றுறா - செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டெச்சம்: உறு - துணைவினை. பி · ம்:—[1]வாயினூடு. (௩௩௮)

௯௨. அற்ற வேலும் வாளு [1]மாதி யாயு தங்கண் [2]மீதெழுந்து
உற்ற வேக முந்த வோடி யோத வேலை யூடுறத்
துற்ற வெம்மை கைம்மி கச்சு றுக்கொ ளச்[3]சு வைத்ததால்
[4]மற்ற நீர்வ றந்து [5]மீன்ம றிந்து மண்செ றிந்தவால்.

(இ - ள்.) (இராமபாணங்களினால்) முறிந்துபோன வேலும்வாளும் முதலிய ஆயுதங்கள், (வீரர்கள் வலிமைகொண்டெறிந்ததனால்) பொருந்திய வேகம் செலுத்த மேலெழுந்து ஓடி நீர்பெருக்கைக்கொண்ட

கடலினுள்ளே பொருந்துகையில், (தம்மிடத்து) நெருங்கிய வெம்மை மிக்கிருக்கச் சுறுசுறுவென்னும் ஒலிதோன்றப் பருகியதனால், அந்த (க்கடலின்) நீர்வற்றி (அக்கடலில்வாழும்) மீன் உயிர்மடங்கி [இறந்து] மண்ணில் நெருங்கின; (எ - று.)—பி-ம்:—[1]ஆகி. [2]மீ. [3]தகைத்தவால். [4]வற்றி. [5]பின். (௩௩௪௯)

௬௩. போர்[1]ர ரிந்த மன்று ரந்த புங்க வாளி பொங்கினார்
ஊர்[2]எரி ரிந்த நாள்து ரந்த தென்ன மின்னி யோடலால்
நீரெ ரிந்த வண்ண மேநெ ருப்[3]பெ ரிந்த நீணெடுந்
தே[3]ரெ ரிந்த [4]வீரர் தஞ்சி ரம் [5]பொ டிந்து [6]சிந்தவே.

(இ - ள்.) போரிற் பகைவரையடக்கவல்ல ஸ்ரீராமன் செலுத்திய கூர்முனையுள்ள அம்பு, பொங்கிவந்தஅசுரர்களின் திரிபுரம் எரிந்த நாளில் செலுத்திய அம்புஎன்னுமாறு மின்னி ஓடுவதனால்,(கடலின்)நீர் எரிந்ததுபோலவே, வீரர்தம்சிரம் பொடியாகிச் சிந்துமாறு நெருப்புப் பற்றி யெரிந்தன:(அதனால்), மிகநீண்ட தேர்களும் எரிந்தன; (எ-று.) —'நீரெரிந்தவண்ணம்' என்று கடலில் ஆக்நேயாஸ்திரம்விடுத்தபோது அந்நீ ரெரிந்ததை உவமைகூறினார். பி - ம்:—[1]எறிந்தமன். [2]எறிந்த. [3]எரிந்து. [4]வீரரஞ். [5]பொதிந்த, பொரிந்து. [6]சிந்துமே. (௩௩௫௦)

௬௪. பிடித்த வாள்கள் வேல்க ளோடு தோள்கள் பேர ராவெனத்
துடித்த [1]யானை மீதி ருந்து போர்தொ டங்கு சூரர்தம்
மடித்த [2]வாய்செ ழுந்த லைக்கு லம்[3]பு ரண்ட [4]வானின்மின்
இடித்த வாயி னிற்ற மாம லைக்கு லங்க ளொன்னவே.

(இ - ள்.) யானையின்மீதிருந்து போர்தொடங்குகின்ற சூரருடைய தோள்கள், பிடித்த வாள்களுடனும் வேல்களுடனும்(இற்றுப்) பெரிய அராப்போலத்துடித்தன;(அவர்களுடையசினத்தினால்)மடித்த வாயைக் கொண்டசெழுமையான தலைகளின் தொகுதிகள்,—வானத்தில் இடிதாக்கிய இடத்திலே இற்றுப்போன பெரியமலைத்தொகுதிபோல, (இற்றுப்) புரண்டன;(எ-று.) 'மின்-இலக்கணையால்.இடையையுணர்த்திற்று. பி-ம்:—[1]வானம். [2]வாயசெங், வாய்கள்செங். [3]புரண்டு. [4]வானமின். ()

௬௫. கோர வாளி [1]சிய மீளி கூளி யோடு [2]ஞாளியும்
போர [3]வாளி ஞேடு [4]தேர்க ணூறு கோடி பொன்றுமால்
நார வாளி ஞால வாளி [5]ஞான வாளி நாந்தகப்
பார வாளி [6]வீரவாளி [7]வேக வாளி பாயவே.

(இ - ள்.) நாரங்களையாள்பவனும் இவ்வுலகையாள்பவனும் ஞானஸ்வரூபியும் நாந்தகமென்ற பெருமைபெற்ற வாட்படையையுடையவனுமாகி வீரத்தையாள்பவனான ஸ்ரீராமனுடைய வேகமுள்ள அம்பு பாய்வதனால், பயங்கரமான யாளிகளும் சிங்கங்களும் வலிமையுள்ள பேய்களோடு செந்நாயும் (ஓட்டுகின்ற) சாரதியுடனே உயிர்போய்விட, தேர்கள் நூறுகோடி அழிவனவாயின; (எ - று.)— ஆளிமுதலியவை தேரிற்கட்டியவை. 'போ' என்ற பகுதி - விரித்தலால்

ரகரவொற்றும், அகரவிகுதியும் பெற்று 'போர' என்று வந்தது: இனி, போர - போரிலுள்ள எனக் குறிப்புப்பெயரெச்சமுமாம். பி-ம்:—[1]ரீயமாளி. [2]நாளியும்.[3]வாளியோடு. [4]தோள்கள். [5]நாகவாளி. [6]வீரன். [7]ஏகவாளி. (௩௩௬௨)

௬௬. ஆழி [1]பெற்ற தேர ழுந்து மாள ழுந்து [2]மாவொடச்
சூழி பெற்ற நா[3]வ ழுந்தும் வாசி யுஞ்[4]ச ரிக்குமால்
பூழி பெற்ற வெங்க ளங்[5]கு ழிப்ப டப்[6]பொ ழிந்தபேர்
ஊழி பெற்ற [7]வாழி [8]யென்ன சோரி நீரி னுள்ளரோ

(இ - ள்.) (சோரிப்பெருக்கினால்), குழிப்படும்படி (மேகம்) பொழியப்பெற்ற பெரியயுகாந்தகாலத்துத்தோன்றிய கடலைப் புழுதி பெற்ற கொடிய போர்க்களம் ஒத்திருக்க, (அந்த) இரத்தப்பெருக்கினுள்ளே சக்கரங்களைக்கொண்ட தேர், அழுந்தும்: காலாட்படை, அழுந்தும்: பாகனுடனே நெற்றிப்பட்டத்தைப்பெற்ற அப்படிப் (பட்ட [மிகச்சிறந்த] யானை, அழுந்தும்; குதிரையும், சுழித்துநிற்கும்; (எ - று.)—ஆல், அரோ-ஈற்றசைகள். பி - ம்:—[1]அற்ற. [2]ஆளொடும், ஆளுடன்.[3]எழுந்து.[4]சருக்குமால்.[5]குளம்படப், குழம்பிடைப். [6]பொழிந்து. [7]வேலை. [8]அன்ன. (௩௩௬௩)

௬௭. அற்றுமே [1]லெ ழுந்த வன்சி ரங்க டம்மை [2]யண்மி மேல், ஒற்று மென்ன வங்கு மிங்கும் [3]விண்ணு ளோர[4]ரொ துங் குவார், [5]சுற்றும் வீழ்த லைக்கு லங்கள் [6]சொல்லு [7]கல்லின் மாரி போல், எற்று மென்று [8]பாரு ளோரு [9]மேங்கு வா[10]ரி ரங்குவார்.

(இ - ள்.) 'அற்று மேலேயெழுந்த வலிய தலைகள் தம்மைநெருங்கி மேலேபடும்' என்று விண்ணுளோர்கள் அங்கும்இங்கும் ஒதுங்குவார்; சுற்றிலும் வீழ்கின்ற தலைக்குலங்கள் சொல்லப்படுகின்ற கல்லின் மாரி போல (த் தம்மீது) தாக்குமென்று பூமியில்வாழ்வாரும் ஏக்கமுற்று (அஞ்சி) வருந்துவார்; (எ - று.)—பி - ம்:—[1]எழுந்துவெஞ். [2]அண்மையில். [3]வானுளோர். [4]ஒடுங்கினர், ஒதுங்கினர். [5]சுற்று. [6]சொல்லுங். [7]கல்லு. [8]பாரினெங்கும். [9]வாழுவார், வாழ்குவார். [10]இரங்கினர், இறங்குவார். (௩௩௬௪)

௬௮. மழைத்த மேகம் [1]வீழ்வ வென்ன [2]வான மானம் வாடையிற், சுழித்து வந்து [3]வீழ்வ வென்ன மண்ணின் மீது துன்னுமால், அழித்[4]தொ டுங்கு கால மாரி [5]யன்ன வாளி யோளியால், விழித்தெ ழுந்து வானி னூடு [6]மொய்த்த பொய்யர் மெய் யெலாம்.

(இ - ள்.) (உலகத்துப்பிராணிகளையெல்லாம்) அழித்தலால் (உலகம்) ஒடுங்குகின்ற (யுகாந்த) காலத்து மாரியையொத்த (இராமபிரானுடைய) பாணங்களின் தொகுதியால் (அறுபட்டு) விழித்தவண்ணம் மேலெழுந்து ஆகாயத்து மொய்த்த பொய்யருடைய உடலெல்லாம்,— மழைபொழியுந்தன்மையைக் கொண்ட மேகம் வீழ்வனபோலவும்

வானத்துச்செல்லும் விமானங்கள் பெருங்காற்றினாற் சுழலுதலை யடைந்துவீழ்வனபோலவும் மண்ணின்மீதுவந்து நெருங்கும்; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் சிரங்கள் வீழ்வதை வருணித்த கவி, இச்செய்யுளில் உடல்விழும் வகையை வருணிக்கின்றா ரென்க. பி - ம்:---[1]வீழ்வது, வாழ்க. [2]வானமானவாடையில். [3]வீழ்வது. [4]ஒதுங்கு. [5]யாளியன்னவாளியால், ஆரியன்றன்வாளியால், அன்னமன்னன்வாளியால், அம்புபாயமுன்னமே. [6]மொய்ய. 'சுழித்து வீழ்வதென்னமண்ணின் மீதுவந்துதுன்னுமால்'என்று சிலபிரதிகளில் இரண்டாமடி. (௩௩௫)

வேறு.

கூகூ.—அரக்கர்கள்செய்த போர்.

தெய்வநெடும் படைக்கலங்கள்[1]விடுவர்சிலர் சுடுகணைகள் சிலையிற் கோலி, எய்வர்சில ரெறிவர்சில ரெற்றுவர்[2]சுற் றுவர்மலைகள் பலவு மேந்திப், பெய்வர்சிலர் பிடித்துமெனக் கடுத்துறுவர் படைக்கலங்கள் பெறாது வாயால், வைவர்சிலர் தெழிப்பாசிலர் வருவர்சிலர் திரிவர்சிலர் வயவர் மன்னோ.

(இ - ள்.) சிலவயவர், சிறந்த தேவாஸ்திரங்களை விடுவர்: சிலர், சுடுகின்ற அம்புகளை வில்லிலிட்டு எய்வர்; சிலர், (எறிபடைக்கலங்களை) வீசியெறிவார்கள்; சிலர், மலைகள்பலவுமேந்திச்சாரிகைசுற்றிப்பொழிந்து; தாக்குவர்; (சிலர்), பிடித்துக் கொள்ளுகிறோமென்றுவிரைந்து வருவார்கள்; சிலர், படைக்கலங்கள் (தமக்குப்பொருதற்குக்) கிடையாமையால் வாயால் வைவர்; சிலர், அதட்டுவார்கள்; சிலர் (எதிர்த்து) வருவர்: சிலர், (மகிழ்ச்சிகொண்டு) திரிவார்கள்; (எ - று.)—பி-ம்:---[1]எறிவர். [2]குத்துவர். (௩௩௬)

க00.—இதுவும் அது.

ஆர்ப்பர்[1]பல ரடர்ப்பர்பல [2]ரடுத்தடுத்தே படைக்கலங்களள்ளி யள்ளித், தூர்ப்பர்பலர் மூவிலைவே[3]றுரப்பர்பலர் கரப்பர்பலர் சுடுதீத் தோன்றப், பார்ப்பர்பலர் நெடு[4]வரையைப் பறிப்பர்பலர் பகலோனைப் பற்றிச் சுற்றுங், கார்ப்பருவ [5]மேகமென வேகநெடும் படையரக்கர் [6]கணிப்பி லாதார்.

(இ-ள்.) பகலோனைப் பற்றிச் சுற்றுகின்ற கார்க்காலமேகம்போல வேகமுள்ள நெடும்படைக்கலங்களை யேந்திய எண்ணற்ற அரக்கருள், பலர், ஆரவாரஞ் செய்வார்கள்;பலர்,(நெருங்கிப்)பொருவார்கள்; பலர், அடுத்தடுத்துப் படைக்கலங்களை அள்ளியள்ளி மிகுதியாகஎறிவார்கள்; பலர், மூவிலைவேலை விடுவார்கள்; பலர் ஒளிந்துகொள்வார்கள்; பலர் கண்களிற்சுடுகின்ற நெருப்புவெளிப்பட (உக்கிரமாக விழித்துப்)பார்ப்பார்கள்; பலர் பெரியமலைகளை வேருடன் பேர்ப்பார்கள்; (எ-று.)—கரப்பது-சமயம்பார்த்துப் பகையை யொறுத்தற்கு. பி-ம்:—[2]அடுத்தடுத்த. [3]தொடுப்பர். [4]வரைகள். [5]மேகநிற. [6]கணக்கிலாதார். [1]பலர்என்ற இடங்களிலெல்லாம் சிலர்என்று சிலபிரதிகளிற் பாடம். (௩௩௭)

௧0௧.---ஸ்ரீராமன் அரக்கர்படைகளை வென்று விளங்குதல்.

எறிந்தனவு மெய்தனவு மெடுத்தனவும் பிடித்தனவும் படைக ளெல்லாம், [1]முறிந்தனவெங் கணைகள்பட முற்றினசுற் றினதேரு மூரி மாவும், நெறிந்தனகுஞ் சிகையோடு நெடுந்தலைக ளுருண்டன பே[2]ரிருளி னீங்கிப்,பிறிந்தனவெய் யவனெனப் பெயர்ந்தனன்மீ துயர்ந்ததடம் பெரிய தோளான்.

(இ-ள்.) (அரக்கர்கள்) எறிந்தவைகளும்எய்தவைகளும் (விடுமாறு) எடுத்தனவும், (கையிற்) பிடித்தனவுமாகிய படைக்கலங்கள்யாவும்(ஸ்ரீராமனது) கொடியஅம்புகள்பட முறிந்திட்டன; (அப்பிரானை) முற்றுகையிட்டனவும் சாரிவந்தனவுமான தேர்களும் வலிய யானைகளும்நெறிந்தனவும் மயிருடனே நெடுந்தலைக ளுருண்டனவுமாயின; மேலோங்கிய மிக்க பெருந்தோளையுடையவனான ஸ்ரீராமன், பேரிருளினின்று நீங்கப் பெற்றுப்பிரிந்த சூரியன்போலவெளிப்பட்டுத் தோன்றினான்; (எ-று.)-- பகைப்படையினின்று வெளிப்பட்ட இராமபிரானுக்கு, இருளினின்று பிரிந்துவெளிப்பட்ட சூரியன்உவமை. பி-ம்:---[1]முறிந்தனவும். [2]இருளை நீங்கி, இருளைநீங்க. (௩௩௩௮)

௧0௨.---இராமசரத்தின் செயல்.

[1]சொல்லறுக்கும் வலியரக்கர் தொடுகவசந் துகள்படுக்குந் துணிக்கும் யாக்கை, வில்லறுக்குந் தலையறுக்கு மிடலறுக்கு மட லறுக்கு மேன்மேல் வீசுங், கல்லறுக்கு [2]மரமறுக்குந் [3]கையறுக் குஞ் செய்யமள்ளர் கமலத் தோடு, நெல்லறுக்குந் திருநாட னெடுஞ்சரமென் று[4]லெவர்க்கு [5]நிற்க லாமோ.

(இ - ள்.) கழனியிலுள்ள உழுதொழிலாளர் தாமரைகளுடனே நெல்லை யறுக்கும் (நீர்வளமுள்ள) சிறந்த கோசலநாட்டையுடைய ஸ்ரீராமனுடைய நெடியஅம்பு,—(பெரியோரின்)சொல்லைத் தட்டுகின்ற உடல்வலிபடைத்த அரக்கர் பூண்டுள்ள கவசத்தைத் தூளாக்கும்:(அவர்களின்) யாக்கையைத் துண்டுபடுத்தும்; வில்லை யறுக்கும்; சிரசைக் கொய்யும்; வலிமையை யொழிக்கும்; போர்த்திறமையை யொழிக்கும்; மேன்மேலும் வீசுகின்ற கல்லைத் துண்டாக்கும்; மரத்தை அறுக்கும்; (கற்களையும் மரங்களையும்பற்றிய) கையை யறுக்கும்;என்றால், (இந்த அம்புகட்குமுன்) எவர்க்கேனும் எதிராகநிற்கமுடியுமோ? (எ - று.)-- பி-ம்:---[1]தொல்லறுக்கும். [2]மார்பறுக்கும். [3]கரம். [4]அவர்க்கு. [5]நிற்கலாமே, நினைக்கலாமோ. (௩௩௩௯)

௧0௩.—போர்கண்ட தேவர்பேசுவன.

கா[1]லிழந்தும் [2]வாலிழந்துங் [3]கையி ழந்துங் கழுத்திழந்தும் [4]பருமக் கட்டின், மேலிழந்து மருப்பிழந்தும் விழுந்தன[5]வென் குநால்லால் [6]வேலை யென்ன,[7]மாலிழந்து மழையனைய மதமிழந்து [8]கதமிழந்து மலைபோல் வந்த, [9]தோலிழந்த தொழிலொன்றுஞ் [10]சொன்னார்க ளில்லைநெடுஞ் சுரர்க ளெல்லாம்,

(இ - ள்.) பெருமைபெற்ற தேவர்களெல்லாம்,---காலிழந்தும் வாலிழந்தும் கையிழந்தும் கழுத்திழந்தும் பருமத்தின்மேலே கட்டு தலையுள்ள அம்பாரியிழந்தும் தந்தங்களையிழந்தும் யானைகள் விழுந்தனஎன்று சொல்பவரல்லாமல், (இராமபிரான்போரைக்கண்டதும்) கடல்போற் பரந்தனவாய்,(வெல்லவேணுமென்ற) ஆசையை யிழந்தும் மழைபோலப்பெருகும் மதத்தை யிழந்தும், (இயற்கையாயமைந்த)கோபத்தையிழந்தும் (இவ்வாறு)மலைபோலவந்த யானைகள் இழந்துபோன (மாலிழத்தல்முதலிய அத்) தொழிலொன்றையும் சொன்னார்களில்லை.

வாலிழந்தமைமுதலியன கண்ணுக்குப் புல னாதலால், அவற்றைக் கூறினரே யன்றி, வெகுவிரைவாக இராமபிரான் அம்புதொடுக்கையில் அவ்யானைச்சேனைகள் மாலிழந்தமைமுதலியன தேவர்களாலும் காணவரிதாயின வென்க. அன்ன-குறிப்புவினையாலணையும் பெயர். பி-ம்:--- [2]வாயிழந்தும். [3]கழுத்திழந்தகையிழந்த. [4]கனகக்காட்டின்,பாமக்கட்டின். [5]எங்கினவல்லால், என்குவவல்லால், என்குநவல்லால். [6]வேலையன்ன, வேறுவேறு. [7]மாலுழந்தமலையனைய, மாலிழந்துமையனைய. [8]வலி. [9]கோள். [10]சொல்லினவரில்லை, சொல்லினரில்லை. [1]இழந்தும் என்ற விடங்களில் 'இழந்து' என்று பாடங்காண்கின்றது. (௩௩௯0)

வேறு.

௧0௪.---பலகோடி அரக்கர் போர, ஸ்ரீராமன் ஒருத்தனாகவே யாவரையும்வென்றமையை இதுமுதல் நான்கு கவிகள் கூறும்.

வேல்செல்வன சதகோடிகள் விண்மே[1]னிமிர் விசிகக்
கோல்செல்வன சதகோடிகள் கொலைசெய்வன [2]மலைபோல்
தோல்செல்வன சதகோடிக [3]டுரகந்தொட ரிரதக்
கால்செல்வன சதகோடிக ளொருவன்னவை கடிவான்.

(இ - ள்.) (அந்தப்போரில் ஸ்ரீராமன்மீது) செல்வனவான வேல்கள், நூறுகோடிகள்: வானத்தில்நிமிர்ந்துசெல்வனவான விசிகமென்று சொல்லப்படுகின்ற அம்புகள், சதகோடிகள்; கொலைசெய்யுந்தன்மையவாய் மலைபோலச்செல்வனவான யானைகள், சதகோடிகள்; குதிரைகள் பூட்டப்பெற்றுள்ள இரதங்கள் சக்கரங்களாற் செல்வன சதகோடிகள்: அவற்றையெல்லாம் கடிவான், (ஸ்ரீராமன்) ஒருவனே; (எ - று.)---பி-ம்:---[1]விடு. [2]மலைய, மலையக், மலையைக். [3]துரகத்தொடமிரதக், துரந்தோடினரிந்தக்.

இச்செய்யுளுக்குப் பின் சிலபிரதிகளில் ஒருசெய்யுள் காணப்படுகின்றது: அது வருமாறு:---

கோல்பொத்திய நெடுநாணினிற் கோமான்றொடை நெகிழ
மேல்பொத்திய நிருதக்குலம் வேரோடுடன் விளியத்
தோல்பொத்திய வுயிர்யாவையும் தொடக்கற்றுடன் மடியக்
கால்பொத்திய கையொத்தன காகுத்தன்வெங் கணையால்.

௧௦௫. ஒருவில்லியை யொருகாலையி னுலகேழையு [1]மூடற்றும்
[2]பெருவில்லிகண் முடிவில்லவர் [3]சரயாமழை [4]பெய்வார்
பொரு[5]வில்லவர் கணைமாரிகள் [6]பொடியாமவகை பொழிய
திருவில்லிக டலைபோய்நெடு மலை[7]போலுடல் சிதைவார். [த்

(இ - ள்.) உலகேழையும் வருத்துகின்ற பெரியவில்லாளிகளான கணக்கற்ற அரக்கர்,—ஒருவில்லாளியை, ஒரேகாலத்தில், (இலக்காகக் கொண்டு) மிக்கசரமழையைப்பெய்பவரானார்; பொருகின்ற வில்லையுடையவரின் அம்புமழைகள் பொடியாம்வகை (ஸ்ரீராமன் அம்புகளைப்) பொழிவதனால், பாக்கியமற்றவரான அரக்கர்கள் தலையறுபட்டுப்போய் நெடுமலைபோலுள்ள உடல் சிதைபவரானார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]உற்றுப், உழக்கும், ஒறுக்கும். [2]பொரு. [3]சரமாரிகள். [4]பொழிவார், பெய்தார். [5]வில்லியர், வில்லிவை. [6]பொடியாவனபோழ்தத்து. [7]போலுயர், போலுயிர். (௩௩௯௨)

௧௦௬. நூறாயிர மதயானையின் வலியோரென நுவல்வோர்
மாறாயின ரொருகோல்பட மலைபோலுடன் மறிவார்
ஆறாயிர [1]முளவாகுத [2]லழிசெம்புன [3]லவைபுக்கு
[4]ஏறா[5]தெறி கடல்பாய்வன [6]சினமால்கரி யினமால்.

(இ - ள்.) நூறாயிரம்மதயானையின் வலிபெற்றவரென்று சொல்லப்படுபவரான அரக்கர், - (ஸ்ரீராமனுடைய) ஓரம்புபட (அந்நிலைமை) மாறுபட்டவராய், மலைபோன்ற உடல் ஒழியப்பெற்றார்கள்; அழிபட்டதனால்தோன்றிய இரத்தங்களினால் ஆயிரம் யாறுகள் தோன்றுவவாயினமையால், அவ்யாறுகளிலேபுகுந்து (நீந்திக்)கரையேறமுடியாமல், சினமும் மதமயக்கமு முள்ளனவான யானையினம் அலையெறிகின்ற கடலிற் பாய்வனவாயின; (எ - று.)

உதிரநீர்ப்பெருக்குக்கள் கடலில் விரைந்துசெல்கையில் அவற்றால் ஈர்க்கப்பட்டு யானைகள் சென்று அக்கடலில் சேர்ந்தனவென்க. பி-ம்:—[1]உளவாகுவ, உளதாகுதல், உளராகுவர், உளவாகுவது. [2]வழி. [3]அது. [4]ஏறு. [5]நெறி. [6]சிலமால், சினமா. ஒருபிரதியில், ௧௦௪-ஆம்பாடலின் கீழ்க்கொடுத்த "கோல்பொத்திய" என்ற பாடல், இப்பாடலின் பின்னேயுள்ளது. (௩௩௯௩)

௧௦௭. மழு[1]வற்றுகு மலை[1]யற்றுகும் வளை[1]யற்றுகும் வயிரத்து, எழு[1]வற்றுகு [2]மெயிறற்றுகு மிலை[1]யற்றுகு [3]மெழுவேல், [4]பழு[1]வற்றுகு மதவெங்கரி பரி[1]யற்றுகு மிரதக், குழு[1]வற்றுகு [5]மொரு வெங்கணை [6]தொடைபெற்றதொர் குறியால்.

(இ-ள்.) ஒப்பற்ற கொடியகணை தொடுக்கப்பெற்றதோர் குறியினால், (அரக்கரெறிந்த) மழு அற்றுச் சிந்திவிடும்; மலையும் அற்றுஉகும்; வளையென்னும்படையும் அற்றுகும்; உறுதியுள்ள எழுவும் அற்றுஉகும்; பற்கள் அற்றுஉகும்; மேலோங்கியவேல் இலையற்றுகும்; மதவெங்கரி விலாவெலும்பு அற்றுஉகும்; குதிரை அற்றுஉகும்; இரதத்தொகுதி அற்று

உகும்; (எ - று.)—பி-ம்:—[1]இற்று. [2]இலையற்றுகுமயிலெற்றுகும், இலையற்றுகுமெயிறற்றுகும். [3]எறி. [4]பழுதற்றுகும். [5]ஒருவன். [6]ஒருவன்ஞெருதொடையால். (நடநசுச)

கo௪அ.—அரக்கர் மிகுதியாகப் போரிலிறத்தல்.

ஒருகாலையி னுலகத்துறு முயிர்யாவையு முண்ணும்
வருகாலனு மவன்றூதரு நமன்ருனுமவ் வரைப்பின்
[1]இருகாலுடை யவரியாவருந் [2]திரிந்தாரிளைத் திருந்தார்
அருகாயிர முயிர்கொண்டுதெ மாறேகல [3]ரயர்த்தார்.

(இ - ள்.) ஒருகாலத்திலே உலகத்திலே பொருந்திய உயிரெல்லாவற்றையும் உண்ணும்வல்லமையமைந்த (அப்போர்க்களத்து) வந்த காலனும் அவன்தூதரும் நமனும் யாவரும் இருகாலுடையராதலால், திரிந்தவர்களாய் இளைத்திருந்து அருகேயுள்ள ஆயிரக்கணக்கானஉயிர்களைக்கொண்டு தம்முடைய வழியேசெல்வதற்கும் மறந்தார்கள்; (எ - று.)—நமன்-யமனுடைய பிரதானி;இனி, நமனென்பது-யமனைக் காட்ட, காலன் என்பது அவ்யமனுடைய மந்திரியைக் காட்டுமென்றலும் உண்டு. பி-ம்:—[1]இருகாலுடைவரையாமென, இருகாலுடையவர்யாவரும். [2]விழுந்தார் திருந்தார், இரிந்தார். [3]அயர்ந்தார். (நடநசுரு)

கo௯.—போர்க்களத்துக் கவந்தங்க ளாடுதல்.

அடுக்குற்றன மத[1]யானையு மழி[2]தேர்களும் பரியுந்
[3]தொடுக்குற்றன விசும்பூடுறச் சுமந்[4]தோங்கின வெனினும்
மிடுக்குற்றன கவந்தக்குல மெழுந்[5]தாடலி னெல்லாம்
நடுக்குற்றன பிணக்குன்றுக [6]ளுயிர்நண்ணின வென்ன.

(இ - ள்.) வரிசையாகப்பொருந்தினவாய் அழிந்த மதயானைகளும் தேர்களும் பரியும் (ஒன்றன்மேலொன்று)தொடுத்தல்பொருந்தினவாகி வானத்திற்பொருந்த மிகுதியாக உயர்ந்தனவாயினும், மிடுக்குள்ளனவாய்க் கவந்தங்களின்கூட்டம் எழுந்தாடுவதனால், பிணக்குன்றுகள் உயிர்பெற்றனவென்று எல்லாப்பிராணிகளும் நடுக்கமடைந்தன; (எ - று.)—பி - ம்:—கவந்தம் - தலையற்றதும் தொழிலுடன்கூடியதுமான உடல்: "பேரொத்த வாயிரம்பேர் மடிந்தாற் பிறக்குங்கவந்தம், நேரொத்தவாடும்".—பி - ம்:—[1]யானைகள். [2]கோள்களும். [3]தொடுக்குற்றுற. [4]எங்கின. [5]ஆடின. [6]உயிர்க்குற்றன. (நடநசுசு)

ககo.—செந்நீர்படிந்த ஸ்ரீராமன்வருணனை.

பட்டாருடற் [1]படுசெம்புன றிருமேனியிற் படலால்
கட்டார்சிலைக் கரு[2]ஞாயிறு புரைவான்கடை யுகநாள்
சுட்டாசறுத் துலகுண்ணுமச் சுடரோனெனப் பொலிந்தான்
ஒட்டாருடற் குருதிக்[3]குளித் தெழுந்தானையு மொத்தான்.

(இ - ள்.) இறந்தாருடைய உடலினின்று வெளிப்பட்ட இரத்தநீர்(தன்)திருமேனியிற் படுவதனால், கட்டுப்பொருந்தியவில்லைப் பிடித்த கருஞாயிற்றைப் போல்பவனான ஸ்ரீராமன்,—யுகாந்தகாலத்திலே உலகத்தைச் சுட்டு விரைவிலே யொழியுமாறு உண்ணுகின்ற அந்தச்சூரி

யனைப்போல் விளங்கினான்:(அன்றியும்), பகைவரின் உடற்குருதியாலே மூழ்கியெழுந்த பரசுராமனையும் போன்றான்; (எ-று.)—கடையுகம்= யுகக்கடை: இலக்கணப்போலி.பகைவர் குருதியால்தோன்றிய சியமந்த பஞ்சிகமடுவில் பரசுராமன்மூழ்கியெழுந்தானென்பது, வரலாறு.பி-ம்:-- [1]புகு. [2]ஞாயிறு. [3]களித்து. (௩௩௬௭)

௧௧௧.—இறந்தவர்போக, மற்றையரக்கர் ஸ்ரீராமனைச் சூழ்ந்துகொள்ளுதல்.

**தீயொத்தன வுருமொத்தன சரஞ்சிந்திடச் சிரம்[1]போய்**
**[2]மாயத்தமர் [3]படுகின்றன ரெனவும்[4]மறங் [5]குறையா**
**காயத்திடை யுயிருண்[6]டிட வுடன்மொய்த்தன களியால்**
**[7]ஈயொத்தன நிருதக்குல நறவொத்தன னிறைவன்.**

(இ - ள்.) தீயையொத்தனவும் உருமையொத்தனவுமான பாணங்களை (ஸ்ரீராமன்) சிந்துவதனால் சிரம்போகப்பெற்று மாயத்தையுடைய தம்மவர் (அமரில்) இறக்கின்றார்களென்ற காரணத்தினாலும் வீரங் குறையாமல்(தமது)உடலிடையிலுள்ள உயிரையும்(அவ்விராமசரங்கள்) உண்ணும்படி ஒருமகிழ்ச்சியோடு சேரமொய்த்தனவாகிய(மற்றுமுள்ள) நிருதக்குலம் ஈயை யொத்தன; இராமபிரானோ, நறவையொத்தனன்.

இங்கு,நறவு-தேன்: தேன்கூண்டுக்கு,இலக்கணை.தேன்கூண்டைத் தேனீக்கள் மொய்ப்பனபோல அரக்கர்குலங்கள் ஸ்ரீராமனை மொய்த்தன வென்க. பி - ம்:—[1]போர். [2]மாயத்தவர், மாயத்தனர். [3]மடிகின்றவர். [4]மனங், மதங். [5]குறையார்,குழையார். [6]இடைகிழிந்தோடுவக்கணையால்,இடையுடன் மொய்த்தெழுகளியால் [7]ஈமொய்த்தது,ஈயொத்தது.

௧௧௨.—ஸ்ரீராமன் அங்ஙனம் தன்னை மொய்த்தாரை யழித்தமையை இதுவும் அடுத்தகவியும் கூறும்.

**மொய்த்தாரையொ ரிமைப்பின்றலை [1]முடுகத்தொடு சிலை**
**யால்,[2]தைத்தானவர் [3]கழற்றிண்பசுங் கா[4]யொத்தனர் சரத்தால்,**
**[5]கைத்தார்கடு களிறுங்கனத் தேருங்களத் தழுந்தக், [6]குத்தானழி**
**குழம்பாம்வகை [7]வழுவாச்சரக் குழுவால்.**

(இ - ள்.) (அங்ஙனம்) நெருங்கின அரக்கரை ஓரிமைப்பினில் வேகமாக (அம்புகளைத்) தொடுத்துவிடுகின்ற வில்லாற் பொத்தினான், (ஸ்ரீராமன்):அந்த அரக்கர், பொத்திய அம்புகளால் திண்ணியகழற்சிக் காயை யொத்தனர்: பகைவர்களுடைய விரைவுள்ள யானைகளும் கனமானதேரும் தவறாதஅம்புக்கூட்டத்தினால் பெருகுகின்ற குழம்பாம் வகைசெய்து (அவை) களத்திலேயழுந்த உகுத்தான்; (எ-று.)

கைத்தார் - பகைவர். உகுத்தானென்ற சொல், முதற்குறை விகாரம்பெற்றுவந்தது. பி - ம்:—[1]முடுகிற்றொரு, முடுகிற்றொடு. [2]கைத்தான். [3]கழலிற், [4]ஒத்தன. [5]கைத்தார்நெடுந்தேரும் கடுங்களிறுங், கைத்தானவெங்களிறுங் கடுந்தேருங். [6]குய்த்தாரழி. [7]புரிந்தான்கணைக், வழுவாசரக். (௩௩௬௮)

௧௧௩. பிரிந்தார்பல ரிரிந்தார்பலர் பிழைத்தார்பல ருழைத்தார், புரிந்தார்பலர் நெரிந்தார்பலர் புரண்டார்பல ருருண்டார், எரிந்தார்பலர் [1]கரிந்தார்பல ரெழுந்தார்பலர் விழுந்தார், சொரிந்தார்குடர் [2]துமிந்தார்[3]தலை தொலைந்தாரெதிர் தொடர்ந்தார்.

(இ-ள்.) (இராமபிரான் அம்புக்கணங்களை விடுத்தபோது), உயிர் பிரிந்தார்கள்பலர்; நிலைகெட்டோடினார் பலர்; (இலக்காகாமல்) தவறி விலகினார்கள் பலர்; (பலர்) வருந்தினார்; பலர் (போரை)விரும்பிச்செய் தார்கள்; பலர், உடல்நெரிந்தார்; பலர், மண்ணிற் புரண்டார்; (பலர்), உருண்டார்; பலர், எரிந்தார்; பலர் கரிந்தார்கள்; பலர், எழுந்தார்; (பலர்), விழுந்தார்; (பலர் குடல்)துண்டிக்கப்பட்டவராய்,(அக்குடலை) வெளிச்சொரிந்தார்கள்; (பலர்), எதிர்தொடர்ந்து தலைதொலைந்தார்; (எ - று.)—[3]தலைதொலைந்தாரெதிர்கிடந்தார் என்றபாடத்துக்கு தலை தொலைந்து எதிரேதரையில்விழுந்துகிடந்தாரென்க. பி-ம்:—[1]சரிந்தார், இரிந்தார். [2]துணிந்தார். [3]தலைகிடந்தாரெதிர் தொடர்ந்தார். (௩௩௭0)

௧௧௪.—துணிப்புண்ட அரக்கரின்வருணனை.

மணிகுண்டலம் வலயங்குழை மகரஞ்சுடர் மகுடம்
அணிகண்டிகை கவசங்கழல் [1]திலகம்முத லகலம்
[2]துணியுண்டவ ருடல்சிந்தின[3]தொடர்கின்றன சுடருந்
திணிகொண்டவி னிடைமின்குல மிளிர்கின்றன[4]சிவண.

(இ - ள்.) துணியுண்டவரின்உடலிலே இரத்தினகுண்டலமும் வலயமும் மகரக்குழைகளும், சுடர்கின்ற மகுடமும், அழகியகண்டிகை யும் கவசமும் வீரக்கழலும் திலகமும்முதலியனவான அணிகலங்கள்,-- சிந்தினவாய்,—நெருங்கிய நீர்கொண்டமேகத்தினிடையே மின்குலங் கள்விளங்குவன ஒப்பத் தொடர்ந்துவிளங்கின; (எ-று.)—முதல கலம் எனப்பிரிக்க: கலம் - அணிகலம். பி-ம்:—[1]அதிகமுதலிலகத், திலகம் முதலிகலும், திலகம்முதலகலத். [2]துணிவுண்டவர். [3]தொடர்கின்றது, சுடர்கின்றது. [4]சிவணி. (௩௩௭௧)

௧௧௫.—இதுமுதல் ஆறுகவிகள் - அரக்கர் அதிசயிக்கும்படி இராமன் சாரிகைதிரிந்தமையைத் தெரிவிக்கும்.

முன்னையுளன் பின்னையுளன் [1]முகத்தேயுள னகத்தின்
[2]தன்னையுளன் மருங்கேயுளன் றலைமேலுளன் [3]மலைமேற்
கொன்னையுள னிலத்தேயுளன் விசும்பேயுளன் [4]கொடியோர்
என்னையொரு கடுப்பென்றிட விருஞ்சாரிகை [5]திரிந்தான்.

(இ - ள்.) முன்னையுள்ளான்: பின்னையுள்ளான்: முகத்தினிடத் துள்ளான்: அகத்தினிடத்தே யுள்ளான்: பக்கத்திலே யுள்ளான்: தலை மேலுள்ளான்: மலைமேல் அச்சமுண்டாகவுள்ளான்:நிலத்தே யுள்ளான்: விசும்பிலே யுள்ளான்: (இவனுடைய) ஒப்பற்றவிரைவு இருந்தபடிஎன் னே!என்று கொடியோரான அரக்கர் வியந்துகூறுமாறு பெருஞ்சாரிகை

திரிந்தான்; (எ - று.)—பி-ம்.—[1]முகத்தின். [2]தன்னேரினன். [3]தலை. [4]கொடியோன். [5]திரிந்தார். (௩௩௭௨)

௧௧௯. என்னேரின னென்னேரின [1]னென்றியாவரு மெண்ணப், பொன்னேர்[2]வரு வரிவிற்கரத் [3]தொருகோளரி போல்வான், [4]ஒன்னார்பெரும் படைப்போர்க்கட லுடைக்கின்றன னெனினும், [5]அன்னோரல ருடனேதிரி நிழலேயென லானான்.

(இ - ள்.) யாவரும் 'என்நேரிலுள்ளான், என்நேரிலுள்ளான்' என்று கருத, பொன்னிறம் நேர்மையாகப் பொருந்தியதும் கட்டமைந்ததுமான வில்லேந்திய கரத்தையுடைய ஒப்பற்ற மிடுக்குள்ள ஆண்சிங்கத்தையொத்தவனான ஸ்ரீராமன், பகைவரின் பெரும்படையாகிய கவிதலையுடைய கடலை யுடைக்கின்றானாயினும் அல்லையொத்த அப்பகைவருடனே திரிகின்ற நிழலே யென்று சொல்லத்தக்கவனானான்; (எ-று.)

உடனிருந்தும் சாயை கைக்கு அகப்படாதவாறுபோல, அரக்கருக்கு அருகில்தானேயிருந்தும் கைக்கு அகப்படாதவனாயினன் ஸ்ரீராமனென்க. பி - ம்:—[1]என...எண்ணப், என்றியாவருமியம்பப். [2]பொரு. [3]ஒருவன்புகுந்தேற்றூர், ஒருகோளரிபொருவான், ஒருகோளரிபோவான். [4]அன்னார்விடுபெருவேற்படை யவர்தேர்கரிபரியாய், ஒன்னார்நெடும்......உறையன்றுளதெனினும்,. அன்னரொவிடும்வேற்படையவர்தேர்கரிபரியாய். [5]அன்னோரவருடனெதிரிற் றழலேயெனலானான், அன்னேருடனெதிரேவரு...ஆன. (௩௩௭௩)

௧௧௭. பள்ளம்படு கடலேழினும் படியேழினும் பகையின்
வெள்ளம்பல வுளவென்னினும் வினையம்பல தெரியாக்
[1]கள்ளம்படர் [2]பெருமாயையிற் [3]கரந்தாருருப் பிறந்தார்
உள்ளன்றியும் புறத்தேயு[4]முற் றுளனாமென வுற்றான்.

(இ - ள்.) பள்ளம்பொருந்திய கடலேழிலும் எழுலகங்களிலும் பகைமையையுடையபலவெள்ளஞ்சேனைகள் உளவானாலும், பல வஞ்சனைத்தொழிலையறிந்து கள்ளம்படர்ந்த மிக்கமாயையால் (தம்) உருவைக் கரப்பவராய்ப்பிறந்தாரான அரக்கரின் உள்ளிடத்தன்றிப் புறத்தேயும் பொருந்தியுளனென்னுமாறு (சாரிகையாற்) பொருந்திநின்றான் (ஸ்ரீராமன்); (எ - று.)

ஸ்ரீராமன், "அந்தஃப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா [உள்ளேபுகுந்து ஜநங்களை ஶாஸநம்பண்ணுகிறவனான ஸர்வதர்மாவாவன்]" என்னப்படுகிற பரம்பொருளின் சொரூபியாதலால், அவன் அந்தக்கள்ளவரக்கரிடத்தும்உட்புறத்தானென்பது,பெறப்படும்:அவன் இப்போது விரைந்து சாரிகைதிரிந்துபொருவதனால், ஒவ்வொருவரின் புறத்தும் உளனாயினனென்க. ஈற்றடிக்கு-அவ்வரக்கர்களுடைய உள்ளத்தின்கணிருப்பதன்றியும் அவர்களுக்குப் புறத்தும் வியாபித்திருக்கின்ற தம்முடையஸ்வபாவத்தின்படியே எங்கும் இராமனாயிருந்தான் என்றுஉரைப்பாருமுளர்: "அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய

நாராயணஸ்ஸ்திதஃ [உள்ளும்வெளியும் அலைகளையெல்லாம் வ்யாபித்து நாராயணன் இருக்கின்றான்]'' என்று ஶ்ருதி கூறுதல் காண்க. அச்சத்தினால் அவ்வரக்கரினுட்புறத்தும் சாரிகைதிரிவதனால் வெளிப்புறத்தும் இருக்கின்றான் ஸ்ரீராமனென்க. பி-ம்:—[1]கள்ளம்படு. [2]நெடு. [3]கரந்தானுடன்பிறந்தான், கரந்தானுருப்பிறந்தான். கரந்தானுடல் பிறந்தான். [4]இன்றுளனாமென, அன்றுளதாமென. (௩௩௭௪)

௧௧௮. [1]நானாவிதப் [2]பெருஞ்சாரிகை திரிகின்றது [3]நவிலார்,
போனானிடை [4]புகுந்தானெனப் புலன்கொள்கிலர் [5]மறந்தார்,
தானாவது முணர்ந்தானுணர்ந் துலகெங்கணுந் தானே, ஆனான்
[6]வினை துறந்தானென விமையோர்களு மயிர்த்தார்.

(இ-ள்.) (இருந்தஇடம்விட்டுப்)போனவனாய் இடையிலேபுகுந்தானென்பதை(த் தம்) அறிவினாற் கொள்ளமாட்டாதவராய், (ஸ்ரீராமன்) நானாவகையான பெருஞ்சாரிகை திரிவதைச் சொல்லாதவராய் மறந்து, (ஸ்ரீராமன்) உணர்வுமயமாய் உலகுஎங்கணுந்தானேயான பரம்பொருள் தான் ஆவதையும் உணர்ந்தவனாய்,(தான்அவதாரத்திற்செய்ய வேண்டிய தொழிலாகிய ராட்சச சங்காரமாகிய) தொழிலைத் தவிர்ந்தான்போலும்' என்று இமையோர்களும் சந்தேகித்தார்கள்; (எ - று.)

ஸ்ரீராமன் சாரிகைதிரிந்துபொருகையில், அவ்விரைவுத்தொழிலைக் கண்டறியமாட்டாமையால், தேவரும் 'ஸ்ரீராமன் சாரிகைதிரிந்து பொருகின்றான்' என்று அறிந்துசொல்லமுடியாமல், 'இராட்சசசங்காரஞ்செய்யவேண்டியதொழிலைவிட்டுத் தானானதன்மையை மேற்கொண்டிட்டானோ?' என்று ஓர்ஐயப்பாட்டைக் கொண்டனரென்பதாம். மறந்து = திகைப்புக்கொண்டு. பி-ம்:—[1]நானாவிதம். [2]பெருஞ்சீரிதை. [3]நவில்வார். [4]புகுந்தானவன். [5]மறுத்தார். [6]எனவிமையோர்களுமமரேசருமயிர்த்தார். (௩௩௭௫)

௧௧௯. சண்டக்கடு நெடுங்காற்றிடை [1]துணிந்தெற்றிடத் தரைமேல்
கண்டப்படு மலைபோனெடு மரம்போற்கடுந் தொழிலோர்
[2]துண்டப்படு கடுஞ்சாரிகை திரிந்தான்சரஞ் [3]சொரிந்தான்
அண்டத்தினை யளந்தானெனக் கிளர்ந்தானிமிர்ந் தகன்றான்.

(இ-ள்.) கொடிய நெடியசண்டமாருதம் இடையே துண்டுபடும்படி வீசுவதனால் தரைமேற் கண்டப்படும் மலைபோலவும் நெடுமரம்போலவும் கொடுந்தொழிலையுடையஅரக்கர் துண்டாம்படி (ஸ்ரீராமன்) கடுஞ்சாரிகைதிரிந்தானாய், (முன்பு திரிவிக்கிரமாவதாரத்தில்) ஓங்கியுயர்ந்தவனாகி அண்டத்தையளந்தவனான திருமாலைப்போலக்கிளர்ந்தான்; சரங்களைச்சொரிந்தான்; (எ-று.)

சாரிகைதிரிகையில் எங்குங்காணப்பட்டமையால், திரிவிக்கிரமன்போலக் கிளர்ந்தானென்றார். சண்டமாருதம் வீசுவதனால் மலையும் மரமும் கண்டப்பட்டுத் தரைமேல் விழுவதுபோல, இராமன் அம்பெய்தவண்ணம் சாரிகைதிரிவதனால் கொடுந்தொழிலோர்

கண்டமாக்கப்பட்டுத் தரைமேல் விழுந்தாரென்க. பி - ம்:—[1]தொடர்ந் தேறிட. [2]துண்டப்படக். [3]துரந்தான். (௫௫எசு)

கஉ௦. களியானையு நெடுந்தேர்களுங் கடும்பாய்பரிக் கணனுந்
தெளி [1]யாளியு முரட்சீயமுஞ் சினவீரர்தந் [2]திறமும்
வெளிவானக மிலதாம்வகை விழுந்தோங்கிய [3]பிழம்பால்
[4]நளிமாமலை மலைதாவின னடந்தான்கடற் [5]கிடந்தான்.

(இ - ள்.) கடலிற்பள்ளிகொண்டருளுந் திருமாலினமிசமான ஸ்ரீராமன்,—களியானையும் நெடுந்தேர்களும் விரைந்துபாயுங் குதிரைத் திரளும் (மேம்பட்ட வலிமையுடையதென்று) தெளியப்பட்ட யாளியும் மாறுபாட்டையுடைய சீயமும் சினமுள்ளவீரர்தம் கூறுபாடும் கீழ் விழுந்து வானகமும் வெற்றிடம் இல்லாதபடி ஓங்கிய பிழம்பினால், பெரியதொருமலையிலிருந்து மற்றொருமலையில் தாவி நடப்பவனாயி னான், (ஸ்ரீராமன்); (எ - று.)

பிணக்குவியல் மலைமலைகளாகக் குவிந்துகிடத்தலால், சாரிகை திரியும் இராமன் ஓர்பிணமலையிலிருந்து மற்றொருபிணமலையில்தாவி நடக்கும்படி யாயிற்றென்பதாம்: பிழம்பு-திரள். பி-ம்:—[1]யாளியமுறற். [2]சிரமும். [3]மிளிரும், பிணப்பேர். [4]நளிர்மாமலைமலை, நளிர்மாமலர்தலை, நளிர்மாமலைபல. [5]கடந்தான். (௫௫எஎ)

வேறு.

கஉக,—அறுகவிகள் - சேனையழிந்தமையின் வருணனை.

அம்ப ரங்க டொடுங்கொடி [1]யாடையும்
[2]அம்ப ரங்க ளொடுங்[3]களி [4]யானையும்
அம்ப ரங்க வழுந்தின சோரியின்
[5]அம்ப ரங்க மருங்கல மாழ்ந்தென.

(இ - ள்.)அம்பரம் கம் - கடலின்நீரிலே, அரு கலம் ஆழ்ந்து என - அரிய மரக்கலம் ஆழ்ந்தாற்போல,—அம்பு-(இராமபிரானெய்த) அம்புகள், அரங்க - அழித்தலால்,—அம்பரங்கள் தொடும் கொடி ஆடையும் - வானத்தைத் தொடுகின்ற கொடிச்சீலையுடனே, அம்பரங்க ளொடும் - அம்பாரிகளுடனே, களி யானை உம் - மதக்களிப்புள்ள யானைகளும், சோரியின்-இரத்தவெள்ளத்திலே, அழுந்தின—;(எ-று.)

கொடிச்சீலையுடனே அம்பாரிகளைக்கொண்டயானைகள் சோரிவெ ள்ளத்தில் அமிழ்ந்தது-மரக்கலங்கள் கூம்புடனே கடல்நீரில் அமிழ்ந் ததுபோலு மென்றுகுறித்தார்: தற்குறிப்பேற்றவுவமையணி. முதலடி யில், அம்பரங்கள்-ஆகாயமென்றும், இரண்டாமடியில், அம்பரங்கள் - அம்பாரிகளென்றும், நான்காமடியில், அம்பரம்-கடலென்றும் பொரு ள்பட்டன. பி - ம்:—[1]ஆடைய. [2]அம்பரங்கடொடுங். [3]கொடி. [4]யானை கள், யாளியும். [5]அம்பரங்கள்வருங்,அம்பரங்கவரும்,அம்பரங்களருங். ()

கஉஉ. [1]தம்ம னத்திற் சலத்தர் மலைத்தலை
வெம்மை யுற்றெழுந் தேறுவ [2]மீளுவ

தெம்மு னைச்செரு மங்கைதன் [3]செங்கையால்
[4]அம்ம னைக்குல மாடுவ [5]போன்றவே.

(இ - ள்.) தமதுமனத்திற் கபடங்கொண்டுள்ளவரான அரக்கரின் மலைபோன்ற தலைகள் கொடுஞ்செயலுக்கு [அறுக்கப்படுஞ்செயலுக்கு] உட்பட்டு (அவரது உடல்களினின்று) எழுந்து உயரச்சென்றனவாய் மீள்வன,—போர்முனையிலே போர்க்குரியவீரமகள் தனது செங்கையால் அம்மனைக்குலங்களை யாடுமவற்றைப்போன்றன. (எ-று.)

மேலெழுந்துமீளும் அரக்கர் சிரத்தை வருணித்தவாறு. அரக்கரின் தலைகள் அறுபட்டு உடலினின்று மேலெழுந்து கீழ்விழுவன-விசயமகள் மேலெறிந்த அம்மனைகள் கீழ்விழுவனபோலுமெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. வெம்மை - கொடுமை: கொடுஞ்செயலுக்கு ஆகுபெயர்: இங்கே கொடுஞ்செயலென்றது - அறுக்கப்படுதலாகிய தொழிலை யென்க, பி-ம்:—[1]தம்மனத்த, தம்மதததைதர. [2]மீள்வன, வீழ்வன. [3]கொங்கையால். [4]அம்முலைக்குலம். [5]பெற்றதே. இச்செய்யுள் சிலபிரதியில் "அங்கதங்கள்" (கஉச)என்றபாடலுக்குப்பின் உள்ளது.

கஉரு. கேட கங்கண [1]வங்கையொ டுங்கிளர்
கேட கங்க [2]டுணிந்து கிடந்தன
கேட கங்கி ளர்கின்ற [3]களத்தநன்
கேட கங்கண் மறிந்து [4]கிடந்தவே.

(இ-ள்.) வேட்டைக்குஉரிய கங்கணம்பூண்ட அழகியகையுடனே விளங்குகின்ற கேடகங்கள், துணிந்து கிடந்தன; தீமை தன்னிடம் விளங்குகின்ற போர்க்களத்தனவாய் அழகிய தும்பைமலர் மாலையையுடைய தலைகள் உருண்டுகிடந்தன; (எ - று.)

இது - அரக்கர்களின் கைகளும்தலைகளும் அறுபட்டுக்கிடந்தமையைத் தெரிவிக்கும். முதலடியில், கேடம்-வேட்டை: இங்கு,இலக்கணையால்,கொலைத்தொழிலை யுணர்த்திற்று.இரண்டாமடியில், கேடகங்கள்-பரிசைகள். மூன்றும்அடியை - கேடு அகம் கிளர்கின்ற களத்த நன்கு எனப் பிரிக்க. அகம்-இடம். களத்த - களம் என்ற பகுதியினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்: பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயராக்கொண்டு, களத்த - களத்திலுள்ளனவான சேனைகள், தம்முடைய கேடகங்கள் துணிந்து கிடந்தன: அன்றியும், ஏட-தும்பைமலரைச்சூடிய, கங்கள்-சிரசுகள், மறிந்துகிடந்தன என்னலுமாம். ஏடு-பூவிதழ்: இங்கே, இலக்கணையால் (தும்பை)மலர்மாலையைக் காட்டிற்று. ஏட-குறிப்புப்பெயரெச்சம். கம் - சிரசு: அதன்பன்மை - கங்கள், நன்குஎன்பது, நான்காமடியின்முதலிலுள்ள'ஏட'என்பதற்கு விசேடணம். பி-ம்:—[1]வன்கைநெடுங்கிளர்,அங்கையொடுகிளர், அங்கையொடுங்கின. [2]துணித்து.[3]களத்தன, களத்தெனக், கரத்தன. [4]கிடந்தன. (ருரு அ0)

௧௨௪. [1]அங்க தங்களத் தற்[2]றழி தாரொடும்
[3]அங்க தங்களத் தற்[4]றழி யுற்றவாற்
புங்க வன்கணைப் புட்டில் [5]பொருந்திய
புங்க வன்கணைப் [6]புற்றர வம்பொர.

(இ-ள்.) புருஷரிற்சிறந்தவனான ஸ்ரீராமனுடைய ஆவநாழிகையிற் பொருந்திய(அந்தக்)கூரியநுனியையுடைய வலியகணையாகியபுற்றரவம் பொருதலினால், (தம்)தோள்வளை கழுத்தையொத்தது: [கழுத்து அற்றதுபோல அறுபட்டது என்றபடி]; தேனொழுக்கெடுத்தமலர்மாலைகளுடனே அழகியகோபமும் போர்க்களத்தில் நீங்கியழிவுற்றன.

இராமபிரான் கணையால் கழுத்தைப்போலவே அங்கதமும் அழிவுற, போர்வீரர் கழுத்தற்றதனால் தம்மாலையுங்கோபமும் அழிபட்டவராயினரென்க. இரண்டாமடியில், அற்று-அறு என்றபகுதியினடியாகப் பிறந்தவினையெச்சம். முதலடியில் களம்-கழுத்து. முதலடியில்,அற்று-'அன்' என்ற இடைச்சொல்லினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று; களம்-போர்க்களம். பி-ம்:—[1]அங்கவெங்களத்தற்று, அங்கவங்களத்தற்று. [2]அழிதேரொடும், அழிந்தாரொடும். [3]அங்கவெங்களத்தற்று, அங்கதங்கணத்தற்று. [4]அவியுற்றவால், அழிவுற்றவால். [5]பொருந்தவப், பொருந்தவும். [6]புற்றரவும். (௩௩அக)

௧௨௫. கயிறு சேர்கழற் [1]கார்நிறக் கண்டகர்
எயிறு [2]வாளி படத்துணிந் தியானையின்
வயிறு தோறு மறைவன வானிடைப்
புயறொ றும்புகு வெண்பிறை [3]போன்றவே.

(இ-ள்.) கயிற்றினோடுபொருந்திய வீரக்கழலையணிந்த கார்நிறம்பொருந்திய கண்டகரின் கோரப்பற்கள் அம்புகள்பட்டதனால் துணிப்புண்டு யானையின் வயிறுதோறும் மறைபவை,—வானிடையிலுள்ளமேகங்கள்தோறும்புகுகின்ற வெண்ணிறப்பிறையையொத்தன; (எ-று.)—யானைகள்-புயலையும், எயிறு-பிறைச்சந்திரனையும்போலுமென்க. பி-ம்:—[1]காரினில். [2]வாளியினிற்றன. [3]போன்றவால். ()

௧௨௬. வென்றி வீர ரெயிறும் விடாமதக்
குன்றின் வெள்ளை மருப்புங் [1]குவிந்தன
என்று மென்று [2]மமைந்த விளம்பிறை
[3]ஒன்றி மாநிலத் [4]துக்கவு [5]மொத்தவால்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வீரரின் கோரப்பற்களும் விடாதமதத்தையுடைய மலையையொத்தயானையின் வெண்மைநிறமுள்ள தந்தங்களும், குவிந்தனவாய்,—பலநாளிலும் அமைந்த பிறைச்சந்திரர் ஒன்றுசேர்ந்து பெரியநிலத்திலே சிந்தினவற்றையும் ஒத்தன; (எ-று.)

எயிறும் மருப்பும் பல ஆதலால், அவற்றிற்குஏற்ப இளம்பிறைபலவாதற்காக 'என்றும் என்றுமமைந்த விளம்பிறை' என்றார். பி-ம்:—[1]குவித்தன. [2]எழுந்த. [3]ஒன்றின், [4]உற்றவும். [5]ஒத்ததால், ஒக்குமால்.

௧௨எ.—இரத்தக்கடல் பரந்ததனால் பலதீவுகளிலும் உறைவோர் நெடுமலைகளின்மீது ஏறுதல்.

[1]ஏவி லாருட லுந்துதி ரப்புனல்
[2]பாவி வேலை யுலகு பரத்தலால்
தீவு தோறு மினிதுறை [3]செய்கையர்
ஈவி லாத நெடுமலை யேறினார்.

(இ-ள்) கணக்கற்றவரான அரக்கரின் உடலினின்று வெளிப்பட்ட இரத்தநீர்க்கடல் பரவித்தீவுகளெங்கும் பரத்தலினால், தீவுதோறும் இனிமையாக வாழுந்தன்மையரானவர் (கடல் பெருக்கினால்)அழிதலில்லாத நெடியமலைமீது ஏறினார்கள்; (எ-று.)

அவ்வத்தீவைச் சூழ்ந்த கடல்களிலும் இரத்தநீர்பாயப்பெற்று அவ்வக்கடல் தாம் வாழுமிடங்களிற் பெருகுவதனால் அவ்வத்தீவில்வாழுமவர் ஆங்காங்குள்ளமலைமீது ஏறினரென்க. கடலின்நீர் உலகமெங்கும் பரத்தலினால்பலதீவுகளினின்று வந்த அரக்கர் மலைமீதேறினார்களெனக் கூறினார்களு முளர். பி-ம்:—[1]ஓய்விலாதநதியுதிரப்புனல், ஓய்வில்காலத்தின் றீவினையொத்தன, ஓய்வில்காலுந்தியுதிரப்புனல். [2]பாய்வில்வேலையினூடு பரந்தவால், பாய்வில்வேலையுலகுபரத்தலால். [3]சேர்கையர். (ஙங-அச)

௧௨அ.—விண்முதலியவற்றில் உயிர்முதலியன நிறைதல்.

[1]விண்ணி றைந்தன மெய்யுயிர் வேலையும்
புண்ணி றைந்த [2]புனலி னிறைந்தன
மண்ணி றைந்தன பேருடல் வானவர்
கண்[3]ணி றைந்தன விற்றொழிற் கல்வியே.

(இ-ள்.)உடலிலுள்ளஉயிரால்,விண்ணிடங்கள் நிறைந்தன;கடலும், புண்ணினின்றுவெளிப்பட்ட நிறைந்தஇரத்தநீரினால் நிறைந்தன; (யுத்த) பூமி,(அறுபட்டு) விழுந்த உடலினால் நிறைந்தன; விற்றொழிலைப்பற்றிய கல்வியால், வானவரின்கண்கள் நிறைந்தன; (எ-று.)

தநுர்வித்தையைப்பற்றி என்னென்ன கூறியுள்ளனவோ,அவைகளையெல்லாம் வானவர்கள் இப்போரிற் கண்கூடாகக் கண்டன ரென்க. பேருடல்-வினைத்தொகை: பண்புத்தொகையாகப் பெரியஉடலெனினுமாம். பி-ம்:—[1]விண்ணிறந்தன. [2]புனலினிற்றந்தன. [3]நிறைந்தவவ். ()

௧௨௯.—சோரிவெள்ளத்துடன் படைக்கலங்கள் கடலிற்புகுதல்.

[1]செறுத்த வீரர் பெரும்படை சிந்தின
பொறுத்த சோரி புகக்கடல் புக்கன
[2]இறுத்த [3]நீரிற் செறிந்தன வெங்கணும்
[4]அறுத்து [5]மீன முலந்த [6]வனந்தமே.

(இ - ள்.) கோபித்தவீரர்களின் பெரும்படைகள்,—சிந்தினவாகி, (தம்மைத்)தாங்கின இரத்தநீர்புக்கதனால்(தாமும் அவ்விரத்தநீருடனே)

கடலிற்புக்கு, (அக்கடலில்) தங்கிய நீரிலே நெருங்கினவாகி எங்கும் அறுத்தலால்உயிருலந்த மீன்கள் பலவாகும்; (எ - று.)

போர்க்களத்திற்சிந்தின வாள்முதலியவை குருதி வெள்ளத்தினாலடித்துக்கொண்டுபோகப்பெற்றுக் கடலிற்புக்கு அங்குள்ள மீன்களைத் துண்டிக்க, அதனாற் பலமீன்கள் உயிர்துறந்தனவென்பதாம். பி-ம்:—[1]செறுத்து. [2]இறுத்து. [3]கானிற். [4]அறுத்த. [5]மீன்முதனந்த. [6]அனந்தமால். (௩௩அ௬)

௩௩0.—அப்போது வன்னியென்பவன் ஸ்ரீராமன் வெல்வதைப்பற்றித் தன்னுட் சிந்தித்தல்.

ஒல்வ தேயிவ் வொருவ[1]னிவ் வூகத்தைக்
கொல்வ தே[2]நின் று [3]குன்றன யாமெலாம்
[4]வெல்வ தேது மிலாமையின் [5]வெண்பலை
மெல்வ தேயென [6]வன்னி விளம்பினான்.

(இ - ள்.) வலிமைதேய்ந்த இந்தஒருத்தன் இந்த(அரக்கரின்) வியூகத்தை (எதிர்த்து)நின்றுகொல்வதே!மலையையொத்த நாமெல்லாம் வெல்வதென்பது சிறிதும்இல்லாமையினால் வெண்பல்லை மெல்வதே! என்றுவன்னியென்பவன் (குருதிச் சேனாவீரர்களைப்பார்த்துப் பின்வருமாறு) கூறலானான்; (எ - று.)—வன்னி கூறுவதை மேலிரண்டுகவிகளிற் காண்க.

வன்னி-மூலபலத்தின் சேனைத்தலைவன்போலும், ஒல்வ-வெல்லக்கூடியவை: வலிமையும்பராக்கிரமும் இனி, இவ்வொருவன் இவ்வூகத்தைக் கொல்வதே! இச்செயல் (இவ்விராமனுக்கு) ஒல்வதாவதே! என்று உரைப்பினுமாம். பி - ம்:—[1]நம்மூகத்தை, இவ்வூகத்தை, இவ்வோதத்தை. [2]நின்ற.[3]குன்றென.[4]வல்லது.[5]வன்பனை, வன்பலை. [6]மாலி. "ஆயிரம்" (௩௩௨) என்றுதொடங்கும்பாடல் முதலிலும், அதன்பின் "கோல்"(௩௩௧)என்றுதொடங்கும் பாடலும், அதன்பின் இப்பாடலும் சிலபிரதியில்உள்ளன: சிலபிரதியில்,"கோல்" என்பதன்பின் "ஆயிரம்" என்றபாடலும் அதன்பின் "ஒல்வது" என்ற இப்பாடலும் உள்ளன. ()

௩௩௧.—இதுவும் அடுத்த கவியும் - வன்னி சேனாவீரர்கட்குக் கூறுவதைத் தெரிவிக்கும்.

கோல்வி ழுந்[1]தழுந் தாமுனங் கூடியாம்
மேல்வி ழுந்திடி னும்[2]மிவன் வீயுமால்
கால்வி ழுந்த மழையன்ன [3]காட்சியீர்
[4]மால்வி ழுந்துளிர் போலு [5]மயங்கினீர்.

(இ-ள்.) (இராமனுடைய)பாணம் வந்து விழுந்து அழுந்தாதமுன் யாம் கூடி மேல்விழுந்திட்டாலும், இவன் அழிந்திடுவான்; கால் விழுந்த மழைபோலத் தோன்றுகின்ற காட்சியுடையீர்! நீர் அறிவு மயங்கி, திக்பிரமைக்கு உட்பட்டீர்போலும்; (எ - று.)—உளிர்=உள்ளீர்; முன்னிலைப்பன்மைக்குறிப்புமுற்று. பி - ம்;—[1]அழுக்காதமுன்.

[2]அவன். [3]காட்சியர். [4]ஆல்விழுந்துளிர்போல, மால்விழுந்துளர்போல, மால்விழுந்தளிபோல. [5]மயங்குவீர், மயங்கினீர். (௩௩அஅ)

கஙஉ. ஆயி ரம்பெரு வெள்ள [1]மரைபடத்
[2]தேய நிற்பது [3]பின்னினி யென்செயப்
பாயு முற்றுட னேயெனப் பன்னினன்
நாய கற்கொ ருதவியை நல்குவான்.

(இ - ள்.) ஆயிரம் பெருவெள்ளமாகிய சேனை (அம்புகளால்) அரைக்கப்படுதலினால் அழியநிற்பதாகும்: (இது அழிந்த) பின்பு இனி என்னசெய்ய (வேண்டுவதுஉள்ளது)? (ஆகையால்), உடனே மனவுறுதி கொண்டு (இராமன்மீது) பாயுங்கள்என்று (தன்) தலைவனுக்கு ஒருதவியைச்செய்வானாய்க்கூறினான்; (எ-று.)—பி-ம்: [1]அரைப்பட, அடிப்பட. [2]தேயில். [3]பின்பினியென்செயப், புண்ணினிச்சேயகை. "காயமித்தனையும்மவன்மேற்செல, பாயுமுற்றுடனே யெனப்பன்னினன்"என்று பின்னிரண்டடிகள் சிலபிரதியி லுள்ளன. (௩௩அக)

கஙங.—அரக்கர் பலவகைப்படைகளைப் பொழிதல்.

உற்[1]று ருத்[2]தெழு வெள்ள முடன்றெழாச்
சுற்று முற்றும் [3]வளைந்தன [4]தூவின
ஒற்றை மால்வரை [5]மேலுயர் தாரைகள்
பற்றி மேகம் [6]பொழிந்தெனப் பல்படை.

(இ - ள்.) பொருந்திக் கோபித்தெழுகின்ற (அரக்கரின் சேனை) வெள்ளம் மாறுபட்டெழுந்து சுற்றிலும் முற்றும் வளைந்தனவாய், ஒரு மால்வரைமேல் மேகங்கள் சிறந்தமழைத்தாரைகளைப் பற்றிப் பொழிந்தனபோலப் பலபடைக்கலங்களைத் தூவின; (எ-று.)

பொழியும் படைக்கலத்திற்கு - தூவும்மழைத்தாரைகள்உவமை. ஒன்று - ஒற்றையென ஆயிற்று. மால் - பெரிய. பி - ம்:—[1]ஒறுத்து. [2]ஒருவெள்ளம். [3]வளைத்தவர், வளைந்தனர். [4]தூவினார். [5]போல். [6]பொழிந்தன. (௩௩௯௦)

கஙச.—அப்படைகள் சிந்தும்படி ஸ்ரீராமன் சரமழைபொழிதல்.

குறித்[1]தெ றிந்தன [2]வெய்தன [3]கூற்றுறத்
[4]தறித்துத் தேருங் களிறுந் [5]தரைப்பட
மறித்த வாசி துணித்தவர் மாப்படை
தெறித்துச் சிந்தச் சரமழை சிந்தினன்.

(இ-ள்.) (அரக்கர்) குறித்தெறிந்தனவும் எய்தனவுமானவற்றைப் பலபகுதிப்படத் துண்டித்து, தேரும் யானைகளும் தரையிற்படவும், மடக்கிய குதிரைகளைத் துண்டித்து அக்குதிரையிலேறியவரின் பெரிய படைகள் தெறித்துச்சிந்தவும் சரமழைகளை (இராமன்) தூவினான்; (எ-று.)—பி-ம்:--[1]எழுந்தன. [2]வெய்யன. [3]கூறுறத், கூற்றிறத்,கூற்றிறந், கூற்றைத். [4]தறித்ததேரும். தரித்ததேருங், [5]கறைபட. (௩௩௯க)

௧௩௫.—இரத்தவெள்ளம் பெருகப் பேய்கள் கூத்தாடுதல்.

வாய்[1]வி ளித்[2]தெழு [3]பஃறலை வாளியிற்
போய்வி ளித்த குருதிகள் பொங்குவ
பேய்[4]வி ளிப்ப [5]நடிப்பன [6]பெட்புறும்
தீ[7]வி ளித்திடு தீப நிகர்த்தவால்.

(இ - ள்.) வாய்ப்புறத்திற் சத்தித்துக்கொண்டு எழுகின்ற பலதலைகளையுடைய அம்புகளினால் சத்தித்துக்கொண்டு ஓடிப்பெருகுவனவான இரத்தங்கள் பொங்கியெழுவனவாயின; (அங்குப்)பேய்கள் பாடநடிப்பவற்றின்(வாயில்தோன்றுகின்ற) தீ, விரும்பத்தக்க கலங்கரைவிளக்கத்தைப்போன்றன; (எ - று.)

இரத்தவெள்ளம்பெருகுவதுகண்டு அப்பெருக்கின்முகப்பே பாடிக்கூத்தாடும் கொள்ளிவாய்ப்பேய்களின் வாயிலேதோன்றும் நெருப்பு, கலங்களை இங்குவரலாமென்று தெரிவிக்கும் கலங்கரைவிளக்குப் போன்றன என்றவாறு; தற்குறிப்பேற்றவணி. போய்விளித்த=விளித்துப்போவன: விகுதிபிரித்துக்கூட்டல். பி-ம்:—[1]விரித்து. [2]எழு. [3]பொன்றலை. [4]களிப்பு. [5]நடப்பன. [6]வேட்புறும். [7]விளித்தன, விளிப்புறு.

௧௩௬.—இரத்தவெள்ளம்பெருகப்பெற்ற பூமிதேவியின் வருணனை.

நெய்கொள் சோரி நிறைந்த [1]நெடுங்கடல்
[2]செய்ய வாடைய ளன்ன[3]செஞ் சாந்தினள்
வைய மங்கை பொலிந்தனண் மங்கலச்
செய்ய கோலம் [4]புனைந்தன்ன செய்கையாள்.

(இ - ள்.) நிணத்தைக்கொண்ட சோரியினால் நிறைந்த பெருங்கடலாகிய செந்நிறமுள்ள ஆடையையுடுத்தவளும் அப்படிப்பட்ட செந்நிறச்சாந்து பூசிக்கொண்டிருப்பவளுமான பூமியாகியமங்கை, மங்கலகாலத்திற்கொள்ளும் செந்நிறக்கோலத்தைப் புனைந்தாலொத்த செய்கையை யுடையளானாள்; (எ - று.)

கணவனைக்கூடலுறுகின்ற மகளிர் செங்கோலம் பூண்ப ரென்பதனை "சேக்கைமேவினிதிருந்தாங்கு, அரத்தப்பூம்பட்டரையிசையுடஇக், குரற்றலைக்கூந்தற்குடசம்பொருந்திச், சிறுமலைச்சிலம்பிற் செங்கூதாளமொடு, நறுமலர்க்குறிஞ்சி நாண்மலர்வேய்ந்து,குங்குமவருணங் கொங்கையினிழைத்துச், செங்கொடுவேரிச் செழும்பூம் பிணையல், சிந்துரச்சுண்ணஞ் சேர்ந்தமேனியில், அந்துகிர்க்கோவை யணியொடு பூண்டு,...செவ்வணிகாட்ட" என்ற சிலப்பதிகாரத்தாலும் அறியலாம். இனி, மணத்தின் கடைநாளில் ஆலத்தியை மேலேபெய்து செய்யவாடைதரித்தல் நிகழ்தலைக்கொண்டு கூறியதென்பாருமுளர். பி-ம்:— [1]பெருங். [2]ஐய. [3]செந்தாளினள். [4]புனைந்தனள். (௩௩௧௩)

௧௩௭.—இதுவும்-இரத்தப்பெருக்கின் வருணனை.

உப்புத் [1]தேனுநெய் யொண்டயிர் பால்கரும்பு
அப்புத் தானென் [2]றுரைத்தன வாழிகள்

துப்புப் போற்குரு திப்புனல் [3]சுற்றலால்
தப்பிற் றவ்வுரை யின்றோர் [4]தனுவினால்.

(இ-ள்.) உப்புதேன் நெய் ஒண்டயிர் பால் கருப்பஞ்சாறு நன்னீர் என்று கூறப்படுகின்ற ஏழுகடல்களும் பவழம்போலுள்ள [செந்நிறமான] இரத்தக்கடலால் (எங்குஞ்) சூழ்தலால்,இன்று ஒருதனுவினால் ஏழுகடல்கள்உள்ளனஎன்றஅந்தவார்த்தை தவறிற்று; (எ - று.)

ஏழுகடல்களுள்ளனஎன்று நூல்களிற் கூறிய உரை தவறி, இரத்தக்கடலொன்றே எங்கும் உளதாயிற்றென்றவாறு. தேனு, உ-சாரியை. பி-ம்:—[1]தேன்மது. [2]உரைப்பன. [3]உற்றலால். [4]தனுவினே. (நஙககச)

கநஅ.—இராமன் தனு வளைந்திருத்தலும், அரக்கப்படையின் அளவின்மையும்.

ஒன்று மேதொடை கோலொரு கோடிகள்
சென்று பாய்வன திங்க ளிளம்பிறை
அன்று[1] போலென வாகிய [2]தச்சிலை
என்று [3]மாள்வ [4]ரெதிர்த்த விராக்கதர்.

(இ - ள்.) தொடுத்துவிடுகை, ஒருமுறையேதான்: அம்புகளோ, ஒருகோடிகள் சென்றுபாய்வன: (அவ்விராமனுடைய) அந்தச்சிலை அன்றுதோன்றிய இளம்பிறைத்திங்கள் போலுமென்னுமாறு வளைந்துள்ளது; (இவ்வாறு இருப்பினும்) எதிர்த்தஅரக்கர் என்றுமாள்வரோ?

ஒருதொடையில் ஒருகோடியம்பு வெளிப்படுமாறு இராமன் தன் வில்லை வளைத்தவண்ணமே யிருந்தான்:அதாவது-இடைவிடாமல் அம்பு தொடுத்தவண்ணமே இருந்தானென்பது, முதல்மூன்றடிகளிற் கூறிய பொருள். அரக்கர் அளவின்றி மிக்கிருந்ததுபற்றி, 'எதிர்த்த இராக்கதர் என்று மாள்வர்' என்றது. பி - ம்:—[1]போல்வனவாகிய.[2] இசசிலை. [3]மாள்வது. [4]எதிர்ந்த. (நஙகரு)

வேறு

கநகூ.—இதுமுதல்ஏழுகவிகள்-ஸ்ரீராமன் மீண்டும்'செய்த கடும்போரினால் அச்சேனைபட்டமையைத் தெரிவிக்கும்.

[1]எடுத்தவ ரிரைத்தவ [2]ரெறிந்தவர் செறிந்தவர் மறங்கொடெதிரே,தடுத்தவர் சலித்தவர்[3]சரிந்தவர் பிரிந்தவர் தனிக்க ளிறுபோல், கடுத்தவர் [4]கனித்தவர் [5]கறுத்தவர் செறுத்தவர் [6]கலந்துசரமேல், தொடுத்தவர் [7]துணிந்தவர் [8]தொடர்ந்தனர் கிடந்தனர் துரந்த கணையால்.

(இ - ள்.) (ஆயுதங்களை) எடுத்தவரும், (பொருவதிலுள்ளகளிப்பினால்)பேராரவாரஞ் செய்தவர்களும்,(இராமனுடைய பராக்கிரமத்தைக் கண்டு) நெருங்கியவராய் (ஆயுதத்தை)எறிந்தவரும், வீரகுணத்தைக் கொண்டு எதிரே (வந்து இராமன்அம்புகளைத்) தடுத்தவரும், சலித்துப் போனவரும்,(முன்பு)தோற்றுப்பிரிந்துசென்றவரும்,தனித்த மதயானை போல விசைகொண்டவரும்,செருக்கினவரும்,கோபித்தவரும், சீறியவ

ராய் நெருங்கிவந்துசரத்தைமேலேதொடுத்தவரும் (ஸ்ரீராமன்)துரந்த அம்புகளினால் துண்டுபட்டவராய்த் தொடர்ந்துகிடந்தனர்; (எ-று.)

பி-ம்:—[1]எடுத்தவணிரைத்தவர். [2]எதிர்ந்தவர்செறிந்தவர், எதிர்ந்தவரெதிர்ந்தவர், எறிந்தவரெதிர்ந்தவர். [3]கலித்தவரெதிர்ந்தவர், சரிந்தவரிருந்தவர். [4]கவித்தவர். [5]செறுத்தவரிறுத்தவர். [6]கவர்ந்து. [7]துணித்தவர், துணிந்தனர். [8]தொடர்ந்தவர், தொடர்ந்திலர். (௩௩௬)

௧௪௦. தொடுப்பது சுடர்ப்பகழி யாயிர [1]நிரைத்தவை [2]துரந்த துறைபோய்ப், படுப்பது [3]வயப்பகழி யாயிரரை யன்று பதி னாயி ரவரைக், கடுப்பது கருத்துமது கட்புலன் மனங்கருதல் [4]கல்வி யிலவேல், [5]எடுப்பது படப்[6]பொருவ தன்றி [7]யிவர் செய்வதொரு நன்றி யுளதோ.

(இ - ள்.) தொடுப்பது, சுடரையுடைய பகழி ஆயிரமாகும்; வரிசையானஅவை விரைந்து விடுக்கப்பட்ட துறையிற்போய்ப் படுப்பது, வெற்றிபொருந்திய பகழியைக்கொண்ட ஆயிரம்வீரரை யன்று; பதினாயிரவரை யாகும்; (அந்தஅம்புகளின்) விசை, அப்படிப்பட்டது; (அந்தஅம்பைவிடுத்தவரின்) கருத்தும், அவ்வாறனதே; கட்புலனும் மனமும் (அந்தஅம்புகளின்விசையைக்) கருதுதற்கும் கல்வியுடையன வல்ல; இந்தஅரக்கர், (தாம் கொண்டுள்ள) வேற்படையையெடுப்பது தாக்குமாறு பொருவதன்றி,(மாறுகச்)செய்வதற்குஏற்றஒருநற்செயலும் உள்ளதோ? (எ-று.)—பி-ம்:—[1]நினைந்தவது. [2]துறந்த, துரந்து. [3]வயப்படைஞர், வயப்பகைஞர். [4]கையினயில்வேல், கல்வியிற்றதுவே. [5]அடுப்பது, படுப்பது. [6]பெறுவது. [7]அவர். (௩௩௭)

௧௪௧. தூசியொடு நெற்றியிரு கையினொடு பேரணி கடைக்குழை [1]தொகுத்து, ஊசிநுழை யா[2]வகை சரத்தணி [3]வகுக்குமவை யுண்ணு முயிரை, [4]ஆசைகளை [5]யுற்றுருவு மப்புறமு மோடு மதனிப்பு றமுளார், ஈசனெதி ருற்றுகுவ [6]தல்லதிகன் முற்றுவதொர் கொற்ற மெவனோ.

(இ - ள்.) முன்னணியும் நெற்றியும் இருசிறகும் (இடையிலுள்ள) பேரணியும் பின்னணியும் ஆகிய இவற்றைத்தொகுத்து ஊசியும்நுழையாவகை அம்புகளினால்அணியை வகுப்பவனாயினான், (ஸ்ரீராமன்); அந்தஅம்புகள், (அரக்கரின்) உயிரையுண்ணும்; திக்குக்களிற்பொருந்தி ஊடுருவும்; அப்பாலும்ஓடும்; அந்தஅம்புக்கு(இலக்கான) இப்புறமுள்ளவராகியஅரக்கர், கடவுளாகியஸ்ரீராமனுக்குஎதிரேபொருந்தி உயிர்சிந்துவதல்லதுவலிமைமுற்றிச் செய்வதாகிய ஒருவெற்றியென்பது எது? [அவ்வரக்கர்க்குவெற்றியுண்டாகாதுஎன்றபடி];(எ-று.)—பி-ம்:—[1]வகுத்து. [2]வெகு. [3]வகுக்கும்வகை......உயிரை, வகுத்துநிரையுண்ணுநசையால். [4]ஆசைதனை. [5]உற்றுருவவப். [6]இல்லை. (௩௩௮)

௧௪௨. ஊனகு வடிக்கணைக ளூழியன லொத்தன வுலந்தவுலவைக், கானக நிகர்த்தன ரரக்கர்மலை யொத்தன களித்த

[1]மதமா, மானவன் வயப்பகழி வீசுவலேயொத்தன [2]வளேப்புன லுள்வாழ், மீனகுல [3]மொத்தன கடற்படை யினத்தொடும் விளிந் [4]துறுதலால்.

(இ - ள்.) ஊன்விளங்குகின்ற கூரியஅம்புகள் யுகாந்தகாலத் தீயை யொத்தன; அரக்கர்கள் (அவ்வூழித்தீயினல்) அழிந்துபோன மரக் கூட்டங்களேக்கொண்ட கானகத்தையொத்தார்கள்; களிப்புக்கொண்ட மதயானைகள், (நெருப்புப்பட்டுவேகின்ற) மலேக்குச் சமமாகஇருந்தன: (அன்றியும்), மனுகுலத்துத்தோன்றியவனை ஸ்ரீராமனது வலிபொருந் திய அம்புகள், வீசிய வலேயை யொத்தன; கடல்போன்ற அரக்கப் படைகள் இனத்தொடும் இறந்துபோனதனுல், (உலகை) வளேத்தலேப் பொருந்திய கடலுள் வாழ்வனவாகி (அவ்வலேயிலகப்பட்ட) மீன்கூட்ட த்தை யொத்தன; (எ - று.)

மீனகுலம் - வடசொற்றெடர்: ஆதலின், இயல்பு. பி - ம்:--- [1]கதமா. [2]வளேக்குளுலவா, வளேப்புளுலவா. [3]ஒத்தது, ஒத்தனர். [4]இறுதலால், அறுதலால். (௯௯௯)

கசு௩. ஊழியிறு திக்கடுகு மாருதமு மொத்தன னிராம [1]னுடனே, பூழியென வுக்குதிரு மால்[2]வரைக ளொத்தன ரரக்கர் [3]பொருவார், ஏழுலகு [4]முற்றுயிர்கள் யாவையு [5]முருக்கியிறு திக்க ணின்வரும், ஆழியையு மொத்தன[6]னம் மன்னுயிரு மொத்தன ரலேக்கு நிருதர்,

(இ - ள்.) இராமன்,—யுகாந்தகாலத்து விரைந்துவீசுகிற சண்டமா ருதத்தையும் ஒத்தான்: (அவ்வாறு சண்டமாருதம்வீசுவதால்) உடனே புழுதியாகச்சிந்தி உதிர்கின்ற பெரியமலேகளே யொத்தனர், (அவ்விராம னுடன்) பொருபவராகிய அரக்கர்; (அன்றியும் ஸ்ரீராமன்), ஏழுலகங் களேயும் பொருந்தி உயிர்கள்யாவற்றையும் அழித்து யுகாந்தகாலத்திற் பொங்கிவருகின்ற கடலேயும் ஒத்தனன்: (அவ்விராமபிராஞல்) அலேக் கப்படுகின்ற அரக்கர், (அவ்யுகாந்தத்துப்பொங்குங்கடலால் அழிக்கப் படுகின்ற) நிலேபெற்ற உயிர்களேயும் ஒத்தனர்; (எ - று.) பி- ம்:— [1]உழையே. [2]வரையும். [3]பொருதார். [4]ஒத்து. [5]முறுக்கும், ஒறுக்கும், முறுக் கி. [6]இராமனுயிரொத்தனரரக்கர்மலேவார். (௯௯00)

கசுசு. மூலமுத லாயிடையு மாயிறுதி யாயெவையு [1]முற்று முயலுங், காலமென லாயினனி ராமனவ்வ ரக்கர்கடை நாளில் [2]விளியுங், கூலமில் சராசர மனேத்திணேயு மொத்தனர் [3]குரைக டலெழும், ஆலமென லாயின [4]னிராமனவர் மீனமென லாயி னர்களால்,

(இ - ள்.) இராமன், முதற்காரணமாயிருந்து இடையுமாய் இறுதி யுமாகி எல்லாப்பொருளும் முற்றுவதற்குஇடனுகி முயல்கின்ற யுகாந் தகாலமென்று சொல்லுதற்கு ஏற்றவஞயினன்; அந்தஅரக்கர்கள், —யுகாந்தகாலத்தில் இறக்கின்ற வரம்பில்லாத சராசரங்களெல்லாவற்

றையும் ஒத்தனர்; ஒலிக்கின்றகடலிலெழுகின்ற ஆலகாலவிஷத்திற்கு ஒப்பாயினன், இராமன், (அவ்வாலகாலத்தால்இறந்த) மீனென்று சொல்வதற்கு ஏற்றவராயினர் அவ்வரக்கர்கள்; (எ - று.)

யுகாந்தகாலம்என்பது இறுதியை விளைவிப்பதால்,அரக்கர்க்குஇறுதியைவிளைக்கின்றஸ்ரீராமன் அவ்யுகாந்தகாலத்திற்கு ஒப்பாவனென்க. முற்றுங்காலம்,முயலுங்காலம் என இயையும்.இராமன் யுகாந்தத்தையும் ஆலத்தையும் ஒத்திருக்க,அரக்கர் யுகாந்தத்திலழியும் பொருளையும் ஆலத்தினால்இறக்கும் மீனத்தையும் ஒத்தனரென்க.பி-ம்:--[1]முற்றுமுறலும். [2]விளையும். [3]குரைக்கடல். [4]அவ்வீரன். (௩௪0௧)

௧௪௫. வஞ்சவினை செய்துநெடு [1]மன்றில்வள மூண்டுகரி பொய்க்கு[2]மறமார்,நெஞ்சமுடை யோர்கள்குல மொத்தன ரரக்கர ற [3]மொக்கு நெடியோன், நஞ்சநெடு நீரினையு மொத்தன னடுத்ததனை [4]நக்கினரையும், பஞ்சமுறு [5]நாளில்வறி யோர்களையு மொத்தன [6]ரரக்கர் படுவார்.

(இ - ள்.) வஞ்சகமானதொழிலைச்செய்து பெருமைமிகுந்த நியாயசபையில் பொருளைப்பெற்றுக்கொண்டு பொய்க்கரிகூறுகின்ற அநீதிபொருந்திய நெஞ்சத்தையுடையவர்களின் குலத்தை யொத்தனர், அரக்கர்: பெருமைபொருந்திய இராமன், அறனையொப்பவனானான்; (அன்றியும், இராமன்), நஞ்சத்துடன்கூடிய மிக்கநீரினையும் ஒத்தனன்; அதனைஅடுத்துநக்கினவரையும், பஞ்சமுற்றகாலத்து வறியோர்களையும் ஒத்தவராய், அரக்கர், இறப்பவரானார்; (எ - று.)

மன்றிற் கரிபொய்த்தவர் குலத்தோடு கெடுவ ரென்க. இவ்வாறு அரக்கர்கள் மாண்டதற்குக் காரணம் - வஞ்சனையுடையராயிருந்தமையென்பார்,'அரக்கர்கள் வஞ்சவினைசெய்து கரிபொய்க்குமறமார்நெஞ்சமுடையோர்களொத்தனர்'என்றார். வளனுண்டு கரிபொய்த்தல் - இலஞ்சம்வாங்கிக்கொண்டு பொய்ச்சாட்சிகூறுதல். பி - ம்:—[1]மண்ணில். [2]மறமா, மறவன். [3]ஒத்த. [4]நக்குநரையும். [5]நாள்வறுமையோர்களையும். [6]அவ்வீரர். (௩௪0௨)

௧௪௬.— இலங்கையின்உள்ளும்புறமும்தெரியாதபடி இரத்தவெள்ளந்தோன்ற, அரக்கியர் கலங்கி யலறியோடுதல்.

வெள்ளமொரு [1]நூறுபடும் வேலையினவ் வேலையு[2]மி லங்கை வெளியும், பள்ளமொடு [3]மேடுதெரி யாதவகை சோர்குருதி பம்பியெழலும், [4]உள்ளுமதி லும்புறமு மொன்றுமறி யாதலறி யோடினர்களாற், கள்ளநெடு மான்விழி யரக்கியர் கலக்கமொடு கால்கள் குலைவார்.

(இ - ள்.) ஒருநூறுவெள்ளஞ்சேனை யிறக்குஞ் சமயத்தில், அந்தக்கடலும் இலங்கையின் வெளியிடமும் பள்ளமும் மேடும் தெரியாதபடி பெருகுகின்ற இரத்தவெள்ளம் நிரம்பி யெழலும், கள்ளத்தன்மையைக்கொண்டு நெடிய மானின்விழியையொத்த விழியைக்கொண்ட அரக்கியர்கள், மதிளின் உள்ளும் புறமும் ஒன்றுந்தெரியாமல், கால்கள் குலையக் கலக்கத்தோடு அலறியோடினர்; (எ - று.)—பி-ம்:--[1]நூறொருடிருநூறுபடும்வேலையின், நூறொருடிருநூறுபடவேலையும். [2]இலங்கைநகரும். [3]மேடுமறியாதபடி. [4]உள்ள. (௩௪0௩)

கசஎ.—நூற்சதகோடி படைத்தலைவர் தாங்கிநிற்றல்.

நீங்கினர் நெருங்கினர் முருங்கின [1]ருலைந்துலகி [2]னீளு மலை போல், [3]வீங்கின பெரும்பிணம் விசும்புற வசும்புபடு சோரி[4]விரி வுற்று, [5]ஓங்கின நெடும்பரவை யொத்[6]துயர வெத்திசையு மூற் [7]றெ திருறத், [8]தாங்கினர் படைத்தலைவர் நூறுசத கோடியர் [9]தடு த்த லரியார்.

(இ - ள்.) (சேனைவீரர்), நெருங்கிப்பொருது உயிர்குன்றி அழிந்து (உயிர்) நீங்கினர்: (அதனால்), உலகில் நீளும் மலைபோற் பெரும் பிணங்கள், வானத்திற் பொருந்த ஓங்கிமிக்கன; பெருக்குப்பொருந்திய இரத்தம்விரிவுற்று, பெரியகடலையொத்துயர எத்திசையினெல்லையிலும் சென்று எதிராகப்பொருந்தும்படி [மீண்டு] ஓங்கிநின்றன; (அவ்வேளை யில்) தடுத்தற்குஅரியவரான நூறுசதகோடியினரான படைத்தலைவர், (இராமபிரானோடு) எதிர்ந்துநின்றனர்; (எ-று.)—நூறுசதகோடி-பதினா யிரங்கோடி. பி-ம்:—[1]உலந்து. [2]வீழுவெருவில், நீளுமலையில். [3]வீங்கி னர். [4]வருவித்து. [5]ஓங்கினன். [6]இயைவ, இசைவ. [7]எதிர்வுற. [8]தாங் கின. [9]தடுப்பவரியார். (௩சௌசு)

கசஅ.—இதுவும் அடுத்த கவியும் - படைத்தலைவரும் ஸ்ரீராமனும் பொருதமையைத் தெரிவிக்கும்.

தேருமத மாவும்[1]வரை யாளியொடு வாசிமிகு சீய முதலா, ஊருமவை யாவையு [2]நடாயினர்க டாயினர்க ளுந்தி னர்களாற், காருமுரு மேருமெரி யேறுநிகர் வெம்படையொ டம்பு கடிதின், தூரும்வகை [3]தூயினர் [4]துரந்தனர்க ளெய்தனர் [5]தொடர்ந்த னர்களால்.

(இ - ள்.) (அந்தப்படைத்தலைவர்கள்), தேரும் மதம்பொருந் திய யானையும் மலையிற்சஞ்சரிக்குந்தன்மையுள்ள யாளியோடு குதி ரையும் வலிமைமிக்க சிங்கமும் முதலாக ஊர்தியாகவுள்ள எல்லாவற் றையும் கடாவிநடத்தி, (ஸ்ரீராமரைநோக்கிச்) செலுத்தினார்கள்; (அன்றியும்), மேகமும் பேரிடியும் பேரனலும் ஒத்த கொடிய படைக ளுடனே அம்புகளையும் விரைவின் (போர்க்களம்) தூரும்படி தூவி னார்கள்; விரைந்துஎய்தவண்ணம் நெருங்கித் தொடர்ந்தார்கள்; (எ-று.)

படைக்கலங்களைத் தூவுதலும், அம்புகளை எய்தவண்ணம் நெருங் கித்தொடர்தலுஞ் செய்தனர் படைத்தலைவ ரென்க. பி-ம்:—[1]வய மாவும்வரையாளியொடு, வரையாளியொடுபாய்புரவி. [2]நடாவினர்கடா வினர். [3]வீசினர், சிந்தினர். [4]எய்தனரெறிந்தனர். [5]தொடர்ந்தனையரால்.

கசகூ. வம்பி[1]னட வம்பினெதிர் வந்துநும தாருயிர் வரங் கள் [2]பிறவுந், தம்பினென [3]வின்னமொழி தந்தெதிர் பொழிந்த ன [4]தடுப்ப ரியவாம், வெம்பினென [5]வெம்பகழி [6]வேலையென வேயினனவ் வெய்ய வினையோர், தம்பின மனைத்தையு [7]முனைக் கெதிர் [8]தடுத்தனர் தனித்த னியரோ.

(இ - ள்.) (ஸ்ரீராமன் அந்தப்படைத்தலைவர்களைப் பார்த்து), 'வாருங்கள்; (நான்) அடுமாறு வாருங்கள்: எதிரேவந்து நுமது அருமையானஉயிரையும் வரங்களையும் மற்றுமுள்ளவற்றையும் தந்திடுங்கள்'என இம்மொழிகளைச்சொல்லிக்கொண்டு, எதிர்முகமாகப் பொழிந்தனவும் தடுப்பரியனவுமான கொடியஅம்புகளைக் கொடிய மின்னலைப்போலவும் கடலைப்போலவும் ஏவினன்: அந்தக்கொடிய செயலையுடைய படைத்தலைவர்,தம்மினம்எல்லாவற்றையும் போர்க்களத்திலே (அப்பாற்போகவொட்டாது) தனித்தனியே தடுத்தனர்: (எ - று.)

நடவம்மின்னனஎடுத்து நடந்துவம்மின் என்றுகூறி, வினையெச்சம் பகுதிமாத்திரமாய்வந்தது என்பாருமுளர். பி-ம்:—[1]எட. [2]பலவும். [3]இன்னனமொழிதந்தெதிர் பொழிந்தனர், இன்னமொழி மொழிந்தனர் மொழிந்தனர். [4]தடுப்பவரியார், தடுப்பரியராய். [5]வன்பகழி. [6]வேலயில்கள்வேலை யென, வேலையினவெல்லையில, வேலையெனவம்பினனவ், வேலையெனவேலையில. [7]முனிந்து, முனைந்து. [8]தடுத்தனன், தடுத்தன.

கரு௦.—மூன்றுகவிகள் அரக்கர் கடும்போர்புரியத்தேவர்கள் சிவபிரானைக்கிட்டிவணங்கி 'இப்போர் எவ்வாறுஆதும்.?' என்று வினவுதலைத் தெரிவிக்கும்.

**அக்கணையை யக்கண மறுத்தனர் செறுத்திக [1]லரக்க ரடையப், புக்கணைய லுற்றனர் [2]மறைத்தனர் புயற்[3]கதிகம் வாளி பொழிவார், திக்கணை [4]வகுத்தன ரெனச்[5]செல நெருக்கினர் [6]செருக்கின் [7]மிகையால், முக்கணனை யுற்றடி வணங்கியிமை யோ[8]ரிவை மொழிந்த னர்களால்.**

(இ - ள்.) வலிமையுடைய அரக்கர்கள் யாவரும், புகுந்து ஒன்று சேர்தலைப்பொருந்தி, (இராமபிரான்விடுத்த) அவ்வம்புகளைக் கோபித்து அக்கணத்தில்தானே அறுத்தொழித்து, புயலைக்காட்டிலும்மிகுதியான அம்புகளைப்பொழிபவராய்(ஸ்ரீராமனை)மறைத்து, திக்குக்கு ஒரு அணையைவகுத்தாற்போல மிக்க கருவத்தோடு மிகவும் நெருக்கினின்றார்கள்;(அப்போது),இமையோர்,—மூன்றுகண்களையுடையவனான சிவபிரானை நெருங்கி திருப்பாதங்களை வணங்கி இவ்வார்த்தைகளைச் சொல்லலானார்கள்: (எ - று.)—இமையோர் மொழிந்ததனை அடுத்த இருகவியிற் காண்க.பி-ம்:—[1]அரக்கரடரப், அரக்கர்கடாய்ப். [2]மறைந்தன. [3]அதிகமாரி. [4]வகுத்தனவெனச். [5]சிலர். [6]நெருக்க, நெருக்கின். [7]மிசையான். [8]இது. (௩௪௦௭)

கருக. **படைத்தலைவ ருற்றொருவர் மும்மடி யிராவண னெனும்[1]ப டிமையோர், கிடைத்தன ரவர்க்கொரு [2]கணக்கிலை வளைத்தனர் [3]கிளர்ந்து லகெலாம்,[4]அடைத்தனர் தெழித்தன ரழித்தனர் [5]தனித்துள னிராம னவரே, துடைத்தன[6]ரெம் வெற்றியென [7]வுற்றன ரினிச்செயல் பணித்தி சுடரோய்.**

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) படைத்தலைவர்களிற் பொருந்திய ஒவ்வொருவரும்இராவணனினும் மும்மடங்கானவரென்று சொல்லத்தக்க தன்மையுடையவர்; போரில்வந்து நெருங்கினவரானஅவர்க்கு ஒருஎல்லையில்லை; (அன்னோர்) வளைத்துப் பொங்கி உலகினிடத்தையெல்லாம் அடைத்துக் கொண்டுஅதட்டலுடனே அழிக்கத்தொடங்கியுள்ளார்: இராமன்தனித்துள்ளான்: அவ்வரக்கர்களோ எமதுவெற்றியைத்துடைத்துள்ளாரென்னுமாறு பொருந்தியவர்; தழல்வண்ணனே! இனி, நிகழுஞ்செயல் யாது? சொல்வாய்; (எ - று.)—படிமை - தன்மை. பி - ம்:—[1]பெயரினோர். [2]கணக்கிலர். [3]இளைத்து. [4]புடைத்தனரடித்தனர்தெழித்தனர், அடைத்தனர்தெழித்தனரடர்த்தனர், அடைத்தனரழித்தனர் தெழித்தனர். [5]தெரித்துளதிராமனவனே. [6]நம், செய். [7]உற்றன. இச் செய்யுள் சிலபிரதிகளில் அடுத்தபாடலுக்குப்பின் காணப்படுகின்றது.()

கருஉ. எய்தகணை யெய்துவதன் [1]முன்பிடை[2]யறுத்திவர்களேழுலகமும், [3]மொய்கொள்கணை [4]மாமுகி [5]லெனும்படி வளைத்தனர் [5]முனிந்த னர்களால், [6]வைதுகொலி னல்லது மறப்படை கொடிப் படைகடக்கும் வலிதான், [7]செய்ய[8]திரு மாலினொ டுனக்குமரி தென்றனர் திகைத்து [9]விழுவார்.

(இ - ள்.) (ஸ்ரீராமபிரான்) எய்த அம்பு வந்துசேர்வதற்கு முன்னம் நடுவிலேயே (அந்தக்கணையை) அறுத்துவிட்டு, இவ்வரக்கர்கள் எழுலகங்களிலும் நெருங்குதலைக்கொண்டுதிரண்ட பெரிய முகிலென்னும்படி வளைத்துக்கொண்டவராய் முனிந்துள்ளார்கள்; இவ்வரக்கப் படையைச் சபித்துஒழித்தால் ஒழிக்கலாமேதவிர, வீரத்தைக்கொண்ட படையைக்கொண்டு (எதிர்ந்து)வெல்லக்கூடிய வலிமை, செவ்விய திருமாலினுடனே உனக்கும் அருமையானது என்று கூறினவராய்த் திகைத்துவிழலானார்கள்; (எ-று.) மறப்படைகொடு இப்படை எனப் பிரிக்க.—பி-ம்:—[1]முன்படை. [2]துணித்திவர்கள். [3]பெய்தகணை,மொய்தகணை. [4]மாமுகிலினிற்புடை, மாமுகிலெனப்புடை. [5]பிடித்தனர்கள் போல், உளைத்தனர்களால். [6]வைதகலின். [7]செய்த. [8]திருமாலுடன். [9]விரைவார். (ஙூசoக)

கருங.—இதுஅம் அடுத்தகவியும்-'அரக்கர்தோற்க ஸ்ரீராமன் வெல்வான்' என்று சிவபிரான்கூறியதைத் தெரிவிக்கும்.

[1]அஞ்சலினி யாங்கவர்க ளொத்தனைவ ராயிடினு மத்த னைவரும், [2]பஞ்சி யெரி யுற்றதென வெந்தழிவ ரிந்தவுரை பண்டு முளதால், நஞ்சமமிழ் தத்தை[4]நனி வென்றிடினு நல்லற நடக்கு மதனை, வஞ்ச[5]வினை பொய்க்கருமம் [6]வெல்லினுமி ராமனை[7]யம் மாயர் கடவார்,

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (நீங்கள்) இனி அஞ்சற்க: அவ்வரக்கர் அங்கே எத்தனை பேராயிருந்தாலும் அத்தனைபேரும் பஞ்சில் நெருப்புப்பற்றினாற்போல வெந்தழிந்தொழிவார்; இந்தப்பேச்சு முன்னமேயுண்டானது: நஞ்சமானது அமிருதத்தை மிகவும் வென்றிட்டாலும், நடக்குமதானநல்லறத்தை வஞ்சவினையாகிய பொய்ச்செயல் வென்றாலும், மாயச்செயலையுடைய அவ்வரக்கர் இராமனை வெல்லமாட்டார்: [ஸ்ரீராமனே அவ்வரக்கரை யெல்லாம் வெல்வானென்றபடி]; (எ - று.)

வென்றிடினும், வெல்லினும் என்ற இடத்துள்ள உம்மைகள் வெல்லுதல்நிகழா என்ற பொருளைக் காட்டும். அஞ்சல்-எதிர்மறைவியங் கோள்முற்று. பி-ம்:---[1]அஞ்சியயரன்மினவர், அஞ்சியயரேலவர்கள். [2]பஞ்சில். [3]அனல். [4]நலியாதுநனி. [5]வினையைத்தருமம், வினையக் கருமம். [6]வென்றிடினுமையனை. [7]இவ்வஞ்சர். (௩௪௰)

௬௪. அரக்கருள [1]ரார்சிலரவ் வீடண [2]னலாதுலகி னாவி யுடையார், இரக்கமுள [3]தாகினது நல்லற மெழுந்துவளர் கின்ற தினிநீர், கரக்கமுழை தேடியுழல் கின்றிலிர்க [4]ளின்றொரு கடும்ப கலிலே, [5]குரக்கின்முத [6]னாயகனை [7]யாளுடைய கோளுழுவை கொல்லு [8]மிவரை.

(இ - ள்.) அந்தவிபீஷணனையல்லாது உலகில் ஆவியுடையராகிய அரக்கருள் எந்தச்சிலர்தான் உளர்? இரக்கமென்பது உள்ளதாயின், அதனால் நல்லஅறம் எழுந்துவளர்கின்றதாகும்; இனி, நீர் ஒளித்துக் கொள்ளும்படி குகைகளைத்தேடிக்கொண்டு உழலவேண்டா; இந்த ஒருநாளின் நடுப்பகலிலே, குரங்குகட்குமுதன்மைத்தலைவனான சுக்கிரீவனை அடிமையாகவுடைய வலியபுலிபோன்றவனான ஸ்ரீராமன், இவ்வரக்கரைக் கொல்லுவான்; (எ-று.)—பி-ம்:—[1]ஆர்சிலர்கள், ஆகிட லவ். [2]அலாதுலகிலாவி. [3]ஆகியது, ஆகிறது. [4]நின்றொரு. [5]குரக்கு. [6]நாயகரை. [7]வாள். [8]அவரை. (௩௪௰௧)

௬௫.—பிரமனும் உருத்திரமூர்த்தி கூறியதை உடன்பட்டுச்சொல்ல, அப்போது ஸ்ரீராமன் வாளிமழையால் அரக்கர்தலையைத் துவித்தல்.

என்று[1]பர மன்பகர நான்முகனு மன்னபொருளே [2]யி சைதலும், நின்றுநிலை யாறினர்கள் [3]வானவரு மானவனு [4]நேமி யெனலாம், [5]துன்றுநெடு [6]வாளிமழை [7]மாரியினு [8]மேலன தூரந்து விரைவிற், [9]கொன்றுகுல மால்வரைகண் மானுதலை மாமலை குவித்த னனரோ.

(இ-ள்.) என்று சிவபெருமான் சொல்லப் பிரமதேவனும் அவன் கூறியதையேஉடன்பட, வானவர்களும் (மனத்தடுமாற்றம் ஒழிந்து) நின்று (தம்) நிலையில் மனமமையப்பெற்றார்கள்; மனுகுலத்திற்பிறந்தவனாகிய ஸ்ரீராமனும், சக்கரம்போல் வட்டவடிவாகப் பொருந்திய நெருங்

கிய நெடியவாளிமழையை மாரியினும் மேலனவாகத் தூர்ந்து விரைவிலே கொன்று குலமலைகளையொக்கின்ற பெரியதலைமலைகளைக் குவித்தனன்; (எ - று.)

பெருமலைபோல ஸ்ரீராமனு லறுக்கப்பட்டஅரக்கரின் சிரக்குவியல் குவிந்தன வென்க. தவறுமலறுத்தலால், வாளிமழைகள்நேமியெனற்கு ஏற்றனவாயின. பி - ம்:—[1]சிவனும். [2]இசைத்தலும். [3]வானவர்கள். [4]நேமியெனலாத். [5]வென்றி. [6]வானினுழை, வாளியவை. [7]வாளியினும், தூளியினும். [8]மேலவை. [9]குன்று. (ந௳கஉ)

வேறு

கருசு.—இதுமுதல் மூன்றுகவிகள்-அரக்கர் அழிந்துபட்டதன்வருணனை.

மகர [1] மறி[2]கடலின் வளையும் வயநிருதர்
சிகர மனையவுடல் சிதறி [3]பிறுவருயிர்
பகர வரியபதம் விரவ வமரர்[4]பழ
நகர மிடமருக [5]நவையர் நலிவுபட.

(இ - ள்.) மகரமென்னும்மீனைக் கொண்டதும் (அலை)மடங்கப்பெற்றதுமான கடல்போல(ஸ்ரீராமனை) வளைந்துகொண்ட வலிமையையுடைய குற்றமுள்ளவரான அரக்கர்,—(தம்முடைய) உயிர் பகர்தற்கு அரிய [மிகச்சிறந்த] சுவர்க்கபதவியைப் பொருந்தவும் அமரருடைய பழைமையானதேவலோகம் இடம் இல்லாமற்போகவும், மலைச்சிகரத்தையொத்தஉடல் சிதறுண்டு வருத்தமுற முறியப்பெற்றார்கள்; (எ-று.) நவையரான நிருதர் எனக் கூட்டுக. குற்றெழுத்துப் பயின்றுவருதலால், இவ்வாறுன வண்ணம்-குறுஞ்சீர்வண்ணமெனப்படும். பி - ம்.—[1]எறி. [2]கடலில். [3]உருளவுயிர், இரிவருயிர். [4]படி [5]அனையர். இச்செய்யுளின்பின் "தினகரனை" (கசுரு) என்ற பாடல் சிலபிரதியிலுள்ளது. (ந௳கரு)

கருள. உகளு [1]மிவுளிதலை துமிய வுறு [2]கழல்கள்
[3]அகழி யறவலிய [4]தலைக ளறு தலைவர்
துகளி னுடல்கள்[5]விழ வுயிர்கள் சுரருலகின்
மகளிர் [6]வனமுலைக டழுவி யகமகிழ.

(இ - ள்.) வலியபாதங்கள் (தாம் வீழ்தலால்) (இலங்கையின்) அகழி யற்றிட [தூர்ந்திட] (த் தமது)வலியதலைகளறப்பெற்ற (குதிரைத்)தலைவர்களின் உடல்கள் தூளிபோல்பொடியாய்விழ, அவர்களுயிர்கள் சுரருலகிலுள்ள மகளிரின் அழகியமுலைகளைத் தழுவிமனம் மகிழாநிற்க, (அவர்களேறிய) குதிரைகள் தலைதுண்டுபட்டதனுற் புரண்டு வீழும்; (எ - று.)

குதிரைவீரரான நிருதருயிர்கள் சுவர்க்கமடைந்து தேவசரீரத்தைப் பெற்றுத் தேவதாஸ்திரீகளின் வனமுலைகளைத் தழுவ, அவர்களேறியகுதிரைகளும் அவர்களுடலும் தலையறுப்புண்டுவீழ்வனவாயின வென்றவாறு. தலைதுமிய இவுளி உகளு மென்க. வீரர்களின் உடலினின்று கால்களும் தலைகளும் வேறு வேறாக அறுபட்டமை முன்னடிகளில்விளங்கும். பி - ம்:---[1]புரவிதலை [2]தலைகள். [3]தகளியுற. [4]தலைவாறுகுவன. [5]விழி. [6]இள. இச்செய்யுளின்பின் "பாறுபடு" (கசுச) என்ற செய்யுள் சிலபிரதிகளில்உள்ளது. (ந௳கச)

கருஅ. மலையு மறிகடலும் வனமு [1]மருநிலமும்
உலைவி லமரருறை யுலகு முயிர்களொடு
தலையு முடலுமிடை [2]தழுவு தவழ்குருதி
அலையு மரியதொரு [3]திசையு மிலதணுக.

(இ-ள்.) மலைகளிலும்(அலை)மடங்குகின்ற கடல்களிலும் வனங்களிலும் மருப்பூமியிலும் அழிதலில்லாத அமரருறைகின்ற உலகத்திலும், (அரக்கரின்) தலைகளையும் உடல்களையும் இடையேதழுவிக்கொண்டு தவழ்கின்ற குருதிக்கடலும் உயிர்களும் இல்லாத ஒருதிசையும் அணுகுமாறு இல்லை; (எ-று.)—எங்கும் அரக்கருயிரும்,தலைகளும் உடல்களும் பொருந்திய இரத்தக்கடலும் நிரம்பியிருந்தன வென்க. மரு-நீரில்லாத பிரதேசம்: வடசொல். அலை-கடல். பி-ம்:—[1]வறுநிலனும், உறுநிலமும், அறுநிலமும். [2]தழுவுமிழி. [3]திசையிலவைதருக, திசையுமிலதருகு. ( )

கருகூ.—அரக்கர்முதல்வர் விளிய, வானவர் பூமழைபொழிதல்.

இனைய செருநிகழு மளவி னெதிர்பொருத
வினைய [1]முடைமுதல்வ ரெவரு முடன்விளிய
அனைய படைநெளிய [2]வமரர் சொரிமலர்கள்
[3]நனைய விசையினெழு துவலை [4]மழைகலிய.

இதுமுதல் மூன்று கவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) இப்படிப்பட்ட போர் நிகழும்பொழுது, எதிரேபொருத வஞ்சனைக்குணமுள்ள முதல்வரான அரக்கரெல்லாம் ஒருசேர அழிய, (அவர்களின்) அந்தச்சேனை தத்தளிக்க, அமரர்சொரிந்தமலர்களின் மொட்டுகளிலுள்ள விசையாகஎழுந்த மதுத்திவலைகளின் மழை மிக,—(எ-று.) [4]'மழைநலிய' என்ற பாடத்திற்கு - மகிழ்ச்சியினால் தேவர்கள் மலர்மாரிபொழிய அம்மலர்மாரித்திவலை தான் இடைவிடாதுநிற்றலால் வானத்துமழையைப் பூமியிற்பெய்யவொட்டாது தடுத்தன வென்க. இரியலுறுபடையை, விலகி, கடவ (கசூ0),விலகியது (கசூக)என முடிபு காண்க. பி - ம்:—[1]உடையமுதலவரும். [2]அமராழிகுருதி, அமரினழி குருதி. [3]துணையின். [4]மழைபொழிய. இச்செய்யுள் சிலபிரதியில் "அழிது" (கசூஉ) என்ற பாடலுக்குப்பின் உள்ளது. (௩௪கசூ)

கசூ0.—இராக்கதர் சிதறியோடிய சேனைகளை நிறுத்தி இராமன்மீது செலுத்துதல்.

இரிய லுறுபடையை நிருத ரிடைவிலகி
[1]எரிகள் சொரியுநெடு விழிய ரழுதையர்கள்
[2]திரிக திரிகவென வுரறு தெழிகுரலர்
[3]கரிக ளரிகள்பரி கடிதி னெதிர்[4]கடவ.

(இ - ள்.) இராக்கதர்கள், நடுவேவிலகிப்போய், நிலைகெட்டுஓடுத லுற்ற சேனையைக்கிட்டி,நெருப்பைச்சொரிகின்ற நீண்டகண்களையுடையவரும்,'அசாரமானவர்களே!திரும்புக, திரும்புக'என்று உரத்து அதட்

டிக் கூறுகின்ற குரலையுடையவருமாகி, யானைகளையும் சிங்கங்களையும் குதிரைகளையும் விரைவாக (ஸ்ரீராமனெதிரே) செலுத்த,—(எ - று.) —பி-ம்:—[1]எரியகனல்சொரியும். [2]திருகையெனவுரறுதெழிலர்மிகு குரலர். [3]கரிகளரிபரிகள், கரிகள்பரிகளரி. [4]கவவ. (ரு௬௧௭)

கசுக.—அரக்கர்படை மும்முரமாகப் பொருதல்.

உலகு செவிடுபட மழைக [1]ளுதிரவுயர்
அலகின் மலைகுலைய வமரர் தலையதிர
இலகு [2]தொடுபடைக ளிடியொ [3]டுருமனைய
விலகி யது[4]திமிரம் வளையும் வகைவிளைய.

(இ - ள்.) உலகு செவிடுபடவும், (வானத்திலின்று) மேகங்கள் கீழேசிந்தவும், உயர்ந்தஅளவிடமுடியாத மலைகள் நிலைகுலையவும்,தேவர்களும் தலைநடுங்கவும், விளங்குகின்ற பிரயோகிக்கும் படைகள் இடியுடனே மின்னலையொத்தனவாக, (நிலைகெட்டோடிய அரக்கச்சேனை), இருள்வளையும்வகை விளையுமாறு (ஸ்ரீராமனைச் சூழத்)திரும்பி நின்றது; (எ-று.)

விலகியது - விலகியசேனை யென்று கூறி, இதனையும் குளகமாகக்கொள்ளுதலும் ஒன்று. ஆரவாரிப்பினால் உலகு செவிடுபட்டன வென்க: அதிர்ச்சியினால் மழைக ளுதிர்ந்தன. [4]'திமிலம்வளையும்வகை விளைய'என்ற பாடத்துக்கு-நெருங்கியபோர்சூழ்ந்துகொள்ளுந்தன்மை விளைய, (திரியலுற்றசேனை) விலகியதுஎன்க. பி - ம்:—[1]உயரவுயர். [2]கொடு. [3]உருமலைய. [4]திமிலம்விளையுமதைநலிய, திமிலம்விளையும்வகை விளைய. இச்செய்யுள் "அழகிது" என்று தொடங்கும் அடுத்தபாடலுக்குப்பின் சிலபிரதிகளி லுள்ளது. (ரு௬௧௮)

கசுஉ.—இனி, எட்டுக்கவிகள்-அரக்கருடன் ஸ்ரீராமன் கடுமையாக நடத்திய போரைக் கூறும்.

அழகி தழகிதென வழக னுவகையொடு
பழகு மதிதியரை யெதிர்கொள் பரிசுபட
[1]விழைவி னெதிரவதி ரெரிகொள் விரிபகழி
மழைகண் [2]முறைசொரிய வமரர் மலர்சொரிய.

இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) சுந்தரவுருவினனான ஸ்ரீராமனும், 'அழகாகவுள்ளது,அழகாகவுள்ளது' என்றுசொல்லி, மகிழ்ச்சியுடனே பழகிய அதிதியரை எதிர்கொள்கின்ற தன்மைபொருந்த விருப்புடனே (அரக்கரை) எதிர்கொள்ளுமாறு அதிர்கின்ற எரியைக் கொண்ட விரிந்த அம்புமழைகளை முறையேசொரியவும், (அதுகண்ட)தேவர்கள் மலர்மாரி பொழியவும்,—(எ - று.)—"தினகரனையணவு கொடிகள்திசையடைவ"என அடுத்தகவியில்முடியும். பி - ம்:—[1]விழியி னெதிரெதிரி னரிகள் விளிபகழி, விழைருமெதிரவெதிரெதிர்கொள்விரிபகழி, விழகியொடு வெதிரெரிகொள்விரிபகழி, விழைவியெதிரெதிர்களரிகள் விரிபகழி. [2]மழைசொரிய. (ரு௬௧௯)

௧௬௩. தினக ரனை[1]யணவு கொடிக [2]டிசையடைவ
[3]சினவு பொருபரிகள் செறிவ வணுகவுயர்
அனக னெடு[4]மமரின் முடுகி யெதிரவெழு
கனக வரை[5]பொருவ கதிர்கொள் மணியிரதம்.

(இ - ள்.) சூரியனைத்தொடுகின்ற கொடிகள், திசைகளிற் சென்று சேர்வன; கோபிக்கின்ற போர்செய்யுங் குதிரைகள், (போர்முனையில்) நெருங்குவனவாகிச்செறிவன: ஒளியைக்கொண்ட மணிகளழுத்திய இரதம், — மேன்மைபெற்ற குற்றமற்ற ஸ்ரீராமனோடு போரிலே விரைந்து எதிருமாறுவருகின்றமேருமலையையொத்தன; (எ - று.)—
பி - ம்:—[1]அனைய. [2]திசைகளொடும். [3]வனசகனியுலகு வயிரமிலகுவன, வனகசனியிலகுவயிரமிலதணுக. [4]அமரிலடுகிமுடுகுவன, அமரின் முடுகியெழுபவன. [5]பொருதகடியபரியிரதம், பொருவுகடிகைபரியிரதம். இச்செய்யுள் - சிலபிரதிகளில் "மகரமறிகடல்" (௧௫௬) என்றபாடலுக் குப்பின்உள்ளது. (௩௪௨0)

௧௬௪. பாறு படுசிறகு கழுகு பகழிபட
நீறு படுமிரத நிரையி [1]னுடறழுவி
வேறு [2]படர்படர விரவி சுடர்[3]வலையம்
மாறு பட[4]வுலக நிரைக ளளறுபட.

மூன்று கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) பருந்தும் பொருந்திய சிறகினையுடைய கழுகும் அம்புகள் படுவதனால் நீறுபடுகின்ற இரதவரிசைகளிலுள்ளவுடலைத் தழுவி வேறாகச்செல்லுதலைப்பொருந்தவும், (அந்தவிசையினால்) சூரியனது ஒளிவட்டம் நிலை மாறுபடவும், உலகநிரைகள் (மாறுபட்டனவாய்ச்) சேற்றின் தன்மையைப் பொருந்தவும்,—(எ - று.)

உடலைத்தழுவி அந்தக்குருதியோடு பகழிகள் படர்தலினால், உலகநிரைகள் அளறுபட்டனவென்க. இச்செய்யுள் சிலபிரதியில் "உகளும்" (௧௫௭) என்பதன்பின்னிருக்க, இதன்பின் "மலையும்" (௧௫அ) என்றபாடல் உள்ளது: சிலபிரதியில், இச்செய்யுள் "தேவர் திரி" (௧௬௭) என்றசெய்யுளின்பின்உள்ளது. பி-ம்:—[1]உடல்விரவி, உடறவிர. [2]தொடர். [3]மலையம். [4]உலகின்மலைகளளறுபட, உலகிலாறுபலபடர. (௩௪௨௧)

௧௬௫. அருகு கடறிரிய வலகின் [1]மலைகுலைய
[2]உருகு சுடர்களிடை திரிய [3]வுரனுடைய
இருகை யொருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது முறை[4]திரிய.

(இ - ள்.) இருகைகளைக்கொண்ட ஒப்பற்ற வலிமையையுடைய களிறுபோன்ற ஸ்ரீராமன் (அம்பெய்தவண்ணம்) திரிவதனால், அருகிலுள்ள கடல் திரியவும் அளவில்லாத[பேரளவுள்ள]மலைகள் நிலைகுலையவும், உருகுவதற்குக்காரணமான இருசுடர்களும் வானத்தினிடையே மாறுபடவும், (மண்ணை) இடுகின்ற குயவரின் திரிகையைப்போல உலக

முழுவதும் (தாம் இருக்கும்) முறையினின்று மாறுபடவும்,—(எ-று.)— இச்செய்யுள் சிலபிரதியில் "தேவர்திரி" (கசுஎ) என்றதன்பின்உள்ளது. பி - ம்:—[1]மலைதிரிய. [2]அருகு. [3]வரிவிலுடை. [4]திரிவ. இச்செய்யுளின் பின் ஒருபிரதியில்

திரிய வலகின்மலை திரிய வுருசுடர்கள்
திரிய வொருவனெதிர் சினவி னெடுமடர
வரிகை யொருகளிறு திரிய விடுகுயவர்
திரிகை யெனவுலகு முழுது மிடைதிரிய.

என்று ஒருபாடல் காணப்படுகின்றது. (௩௪௨௨)

கசுசு. சிவனு மயனுமெழு திகிரி யமரர்பதி
யவனு மமரர்குல மெவரு [1]முனிவரொடு
[2]கவன முறுகரண [3]மிடுவர்[4]கழுதினமும்
நமனும் வரிசிலையு மறனு நடனவில.

(இ-ள்.) (அப்போது,) பேய்க்கூட்டங்களும் யமனும் கட்டமைந்த (ஸ்ரீராமனது) வில்லும் அறனும் கூத்தாட, சிவபெருமானும் பிரமதேவனும் (போர்செய்ய) எழுகின்ற சக்கரப்படையையுடைய அமரர்குழுவுக்குத் தலைவனான திருமாலும் அமரர்குலத்தைச்சேர்ந்த எவரும் முனிவர்களும் (மகிழ்ச்சியினால்) விரைவுபொருந்திய கரணம் போடுவாராயினர்; (எ - று.)

கரணமிடுதல் - தலையைக்கீழாகவைத்து உடலைத்தூக்கி புரண்டு விழுகை: இது, மகிழ்ச்சியினாற்செய்யுஞ் செயலாகும். பி-ம்:—[1]முனிவரும். [2]கனமுதல் கரணம். [3]இருவர், இடுவ. [4]கழுகினமும். இச்செய்யுள் சிலபிரதியில் "அழகிது" (கசுஉ) என்பதன்பின் உள்ளது. 'கவனமுதல் கரணமனகன்கவலைவிட' என்று சிலபிரதிகளில் மூன்றாமடி.

இப்பாடலுக்குப்பின் சிலஏட்டுப்பிரதிகளிற் காணப்படும் பாடல் வருமாறு:—

கரிய திலதமலை திரிய வவிர்சுடர்கள்
இரிய வொருவிலுடை யிருகை யொருகளிறு
திரிய விடுகுயவர் திரிகை யெனவுலகு
தெரிய வெழுகடலு முழுது முறை திரிய. (௩௪௨௩)

கசுஎ. தேவர் திரிபுவன [1]நிலையர் [2]செருவிதனை
ஏவ ரறிவுறுவ ரிறுதி முத[3]லறிவின்
மூவர் [4]தலைகள்பொதி ரெறிவ [5]ரறமுதல்வ
பூவை நிறவவென வேத முறை[6]புகழ.

இரண்டு கவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) 'திரிபுவனங்களிலும் தம்மிருப்பைக்கொண்டவரான தேவர்களில் எவர் இத்தச்செருவினது இறுதி இன்னவாகு மென்பதை அறிவார்கள்? முதன்மையறிவைக்கொண்ட மூவர்கள் (இந்தச்செரு

வைக்கண்டு) தலைநடுக்கங்கொள்வார்கள்; அறத்திற்குமுதல்வனே! பூவைமலர்போன்றநிறமுள்ளவனே!' என்று வேதபுருஷன்முறைமை படப்புகழ,—(எ - று.)—பி - ம்:—[1]நிலையில். [2]செருவிறலே. [3]உணர்வின். [4]தலைபொதிர்கள். [5]உற. [6]புகழ்வ. (௩௪௨௪)

௧௬௮. எய்யு மொருபகழி யேழு கடலுமிடு
வெய்ய களிறுபரி யாளொ டிரதம்விழ
[1]ஒய்ய வொருகதியி னோடு வுணரமரர்
[2]கைக ளெனவவுணர் கால்கள் கதி[3]குலைவ.

(இ-ள்.) (இராமபிரான்) எய்கின்ற ஒப்பற்றபகழியினாலே எழுகடலிலும்,(மூகபடாம்)இட்ட கொடியகளிறு குதிரை பதாதி இரதம்என்னும் நால்வகைச் சேனையும் விழவும்,(பாற்கடலைக்கடையுமாறு) விரைய ஒரு கதிகொண்டுசெல்லுகின்ற அவுணர் அமரர்என்ற இவர்களின்கைகளைப் போல (அஞ்சியோடுகின்ற) அரக்கரின்கால்கள் கதிகுலைவனவாயின; (எ-று.)—பி-ம்:—[1]ஒய்யினொரு. [2]கையனெனவுணரக். [3]குலைய (௩௪௨௫)

௧௬௯. [1]அண்ணல் விடுபகழி யானை யிரதமயல்
பண்ணு புரவி[2]படை வீரர் தொகுபகுதி
[3]புண்ணி னெடுகுறிகள் புள்ளி யென[4]விரைவின்
[5]எண்ணு வனவவினைய [6]வெல்லை யிலநுழைவ.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமன் விடுகின்ற பகழிகள்,--சமீபத்திலேயுள்ள யானை இரதம் சேணமமைந்தபுரவி படைவீரர் என்ற இவை கூடிய பகுதிகளிலே புண்ணோடுதோன்றிய வடுக்கள் புள்ளிபோலத்தோன்ற, (அச்சேனைகளை) விரைவில் எண்ணுபவற்றை யொத்தனவாகி எல்லையில்லாதனவாய் நுழைவனவாயின; (எ - று.)

இராமபிரான் விடுத்த எல்லையற்ற சரம் சதுரங்கசேனைகளின் உடலிற்பாய்ந்து புண்வடுவையுண்டாக்கியது-அந்தச்சேனைத்திரளை அந்தப் பாணங்கள்எண்ணுகையிற் புள்ளியிட்டதனைப்போன்றிருக்க,விரைவிற் சென்றன எனக்குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. நூற்றுக்கு ஒருபுள்ளி அல்லது ஆயிரத்துக்கு ஒருபுள்ளி என இவ்வாறு கணக்கிடுவோர் புள்ளியிடும் இயற்கை, இங்குக் கருதத்தக்கது.பி-ம்:—[1]அண்ணலடு. [2]படைவர்தொகுதிபகுதி. [3]புண்ணினிடு. [4]விரவி. [5]எண்ணுமளவு. [6]எல்லையிலநுழைய, எல்லையினினுழைய. (௩௪௨௬)

வேறு.

௧௭௦.—அப்போது ஸ்ரீராமன் அரக்கரை யோடாதபடி சரமதில் சமைத்தல்.

சுருக்கமுற் றதுபடை சுருக்கத் தாலினிக்
[1]கரக்குமுற் றொருபுறத் [2]தென்னுங் கண்ணினால்
அரக்கருக் கன்று[3]செல் வரிய தாம்வகை
சரக்[4]கொடு நெடுமதில் சமைத்திட் டானரோ.

(இ - ள்.) (அப்போது இராமன், 'இவ்வரக்கர்) படை குறைவதாயிற்று; (இங்ஙனம்) சுருங்குவதனால், இனி ஒருபுறத்தில் பொருந்தி ஒளித்துக்கொள்ளும்' என்கின்ற கருத்தினால், அப்போது அரக்கர்க்கு (அப்பாற்) செல்வது இயலாதபடி சரத்தாலியன்ற கொடிய நெடிய மதிலை அமைத்தான்; (எ-று.)

கண் - எண்ணம். கண்ணுதல் - கருதுதல். செல்வு - போகை: தொழிற்பெயர். பி-ம்:---[1]கரக்கமுற்று, கரக்கமற்று. [2]என்றும். [3]செல்லரியவாம், செல்வரியதாகிய, செல்வரியவாம். [4]கடு. (ருசஉஎ)

களக.—அரக்கர் சரமதிலைக் கடக்கமாட்டாமை.

மாலியை மாலிய வானை மால்வரை
போலுயர் கயிடனை மதுவைப் [1]போன்றுளார்
சாலிகை [2]யாக்கையர் [3]தணிப்பில் வெஞ்சர
வேலியைக் கடந்தில [4]ருலகை [5]வென்றுளார்.

(இ - ள்.) உலகைவென்றுள்ளவரும், மாலியையும் மாலியவானையும் பெருமலைபோலுயர்ந்துள்ள கைடபனையும் மதுவையும் போன்று உள்ளாருமாகிய கவசமணிந்தஉடலையுடையரான அவ்வரக்கர்கள், (இராமபிரானுண்டாக்கியதான) தணிதலில்லாத கொடியஅம்பினாலியன்ற (அம்) மதிலைக் கடக்கமாட்டாதவராயினர்; (எ-று.)—பி-ம்:— [1]போன்றுள. [2]யாக்கையது. [3]அளப்பில்வெஞ், அரக்கர்செஞ். [4]உலகை. [5]மேற்கொள்வார். (ருசஉஅ)

களஉ.—அரக்கர்சேனை வற்றுதல்.

[1]மாண்டவர் மாண்டனர் மற்று ளோரெலாம்
[2]மீண்டன ரொருதிசை யேழு வேலையும்
மூண்டற [3]முருக்கிய வூழிக் [4]காலத்திற்
தூண்டுறு சுடர்சுடச் சுருங்கித் தொக்கபோல்.

(இ - ள்.) (இராமபிரானது சரத்தால்) மாண்டவர் மாண்டொழிந்தனராக, மற்றுள்ளோரெல்லாம், தூண்டுதல் பொருந்தினாற்போன்று விளங்குகின்ற (வடவைத்)தீ மூண்டு மிகவும் [எல்லாவற்றையும்] அழிக்கின்ற யுகாந்தகாலத்திற் சுட, (அதனால்) ஏழுகடல்களும் வற்றிச் சுருங்கித்திரண்டதுபோல ஒருதிசையில் மீண்டனர்; (எ - று.)

போர்க்களமெங்கும் பரவியிருந்த அரக்கர் பலர் மாள எஞ்சியவர் அக்களத்தின் ஓரிடத்திலே தொக்கதற்கு, ஊழிக்காலத்து வடவைக் கனலால் வற்றியஏழுகடல் சுருங்கித்தொகுதலை உவமைகாட்டினார்: இதனால்,இராமசரத்தின் கொடுமை விளங்கும்.சுடர்-தீ. பி-ம்:--[1]மாண்டனர் மாண்டனர்,மாண்டவர்மாண்டற. [2]ஈண்டினர். [3]முருங்கிய. [4]காலத்தீத்.

களங.—இதுமுதல் ஐந்துகவிகள்-ஒருதொடர்: இராமனது சரக்கொடுமைகண்டு திகைத்த அரக்கர் கூறியமை தெரிக்கும்.

புரஞ்சுடு கடவுளும் புள்ளின் பாகனும்
அரஞ்சுடு குலிசவே லமரர் வேந்தனும்

உரஞ்சுடு கிற்கில [1]ரொருவ னுமுடை
வரஞ்சுடும் வலிசுடும் வாழு நாள்சுடும்.

(இ-ள்.) திரிபுரத்தையெரித்த சிவபெருமானும், கருடனை யேறிச் செலுத்துவோனாகிய திருமாலும், காய்ச்சி அரத்தினால் அராவப்பட்டுள்ள வச்சிரப்படையையுடைய தேவர்க்கதிபனான இந்திரனும் (நம்முடைய) வலிமையை அழிக்கமாட்டாதவராயினர்; (தனிப்பட்டமனிதனான) ஒருவன், நாம் பெற்றுள்ள வரத்தின்வலிமையைக் கெடுப்பான்: (நம்முடைய) வலிமையையும் அழிப்பான்: வாழ்நாளையும் போக்குவான்; (எ - று.)—பி - ம்:—[1]ஒருவர். (௩௪௩௦)

௧௭௪. ஆயிரம் வெள்ளமுண் [1]டொருவ ராழிசூழ்
மாயிரு ஞாலத்தை மறிக்கு[ம்] [2]வன்மையோர்
[3]ஏயின பெரும்படை [4]யிதனை யோர்விலால்
ஏயெனு மாத்திரத் தெய்து கொன்றனன்.

(இ - ள்) ஒருவரே, கடலாற்சூழப்பட்ட மிகப்பெரியபூமியைத் தடுத்துப்போர்செய்யவல்ல வலிமையுடையோர்: (அப்படிப்பட்டவர்), ஆயிரம் வெள்ளமென்னுந் தொகையினர் (நம்சேனையில்) உண்டு; (அவ்வாறு)பொருந்தின இந்தப்பெரியசேனையை (இவ்விராமன் தனது) ஒரு வில்லினால் ஏ யென்னும் அளவிற்குள் எய்துகொன்றிட்டான்; (எ-று.) பி - ம்:—[1]ஒருவன். [2]பான்மையோர். [3]மேயின. [4]அதனை. (௩௪௩௧)

௧௭௫. இடைபடும் [1]படாதன விமைப்பிலோர்படை
[2]புடைபட வலங்கொடு விலங்கிப் போகுமால்
படைபடு கோடியோர் [3]பகழி யாற்பழிக்
கடைபடு [4]மரக்கர்தம் [5]பிறவி கட்டமால்.

(இ-ள்.) தேவர்களுடையபடையும் போர்க்களத்தில் (இவ்வரக்கர் படைக்குமுன்னே) இறந்துபடும்; (அங்ஙனம்)படாதவைகளும் புடைக்கப்படுவதனால், (அவ்வரக்கப்படை)வெற்றியைப்பெற்று அப்பாற்செல்லும்: (இப்படிப்பட்ட) படைகளிற்பொருந்திக் கோடிக்கணக்கினராய் (இராமனது) ஒருசரத்தினால் தாழ்மையானபழியைப்பெற்ற அரக்கருடைய பிறவியானது கஷ்டத்தை உண்டாக்குவதற்கேயாயிற்று; (எ - று.)

தேவசேனைகளையும்வென்ற இவ்வரக்கப்படை இப்போதுஒருமனிதன் சரத்தினால் எளிமைப்பட்டுப் பழியடைதலால் இவ்வரக்கப்பிறவியே கஷ்டத்தைத் தருவதாயிற்றென்கின்றனர். இமைப்பிலோர் - தேவர். இடை - போர்க்களமாகிய இடம். பி - ம்:—[1]படாதினி. [2]புடைபடு, புடைபடும், உடைபடும். [3]சரத்தினாற். [4]அரக்கராம். [5]பிறவிக்கட்டமால், பிறவிக்கட்டம்மா. (௩௪௩௨)

௧௭௬. பண்டுல [1]குய்த்தவ னோடும் பண்ணமை
குண்டையின் பாகனும் பிறருங் கூடினார்
அண்டர்கள் விசும்பினின் [2]றார்க்கின் றாருழைக்
கண்டில மிவனொடு மாயக் கள்வனால்.

(இ - ள்) முன்பு உலகத்தைப்படைத்தவனான பிரமதேவனோடும், சேணமமைந்த எருதை ஏறிச்செலுத்துபவனான சிவனும், மற்றோரும் ஒருங்குதிரண்டவராய் வானத்தில்நின்று ஆர்க்கின்றவரான தேவர்களிடையில் (மாயவனான விஷ்ணுவைக்) காண்கின்றோமில்லை; (ஆகையால்), இந்தஇராமன் மிக்கமாயத்தையும் கள்ளத்தையுமுடைய திருமாலே யாவன்; (எ - று.)—பி - ம்:—[1]அளித்தலைவனோடும், உதித்தவனோடும். [2]ஆர்க்கின்றாரிடை. (௯௪௯)

கஎஎ. சொன்றன னினியொரு கோடி கோடி[1]மேற்று
அன்றெனிற் [2]பதுமமேற் றாகில் [3]வெள்ளமாய்
[4]நின்றது நின்றினி நினைவ தென்பிற
[5]ஒன்றெனா வுணர்கென வன்னி யோதினான்.

(இ-ள்.) இப்போது ஒருகோடி கோடிக்கணக்கினும்மேலாக, அன்றெனின் பதுமமென்னுங் கணக்குக்கும்மேலாக (இவ்விராமன் நம்மைக்) கொன்றான்: ஆதலால்,(இப்போது) நஞ்சேனை வெள்ளமென்னும் அளவினதாய் (எஞ்சி) நின்றது; வேறொன்றை ஒருபொருளாக இப்போதுநின்று நினைவது என்ன(பயன்தரும்)? ஆராய்க என்று (படையிலுள்ள அரக்கர்கள்)கூற,வன்னியென்பவன் விடைகூறலானான்;(எ-று.)

பிறஒன்றெனநினைவதென் இவனைத் தெய்வமாகமதித்து வழிபடுவது செய்யத்தக்கதே தவிர, மாறுபட்டுச்செய்ய நினைக்கத்தக்கது ஒன்றில்லை யென்றவாறு. பி - ம்:—[1]மற்று. [2]விந்தமற்றாகில், பதுமமன்றாயின். [3]வெள்ளமாம். [4]நின்றனநின்றன. [5]ஒன்றெனநினைகென, என்றனனுணர்கென. (௯௪௯)

௧எ௮.—இதுவும் அடுத்தகவியும் - வன்னியென்பவன்-அரக்கரை நோக்கிச் செய்யவேண்டியதைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

விழித்துபோ மிராவணன் முகத்து மீண்டியாம்
பழித்துமோ நம்மைநாம் [1]படுத்த லஞ்சினால்
அழித்துமோர் பிறப்புறு நெறிசென் [2]றண்மயாங்
[3]கழித்துமிவ் வாக்கையைப் புகழைக் [4]கண்ணுற.

(இ-ள்.) (நாம்பகைவராற்) கொல்லப்படுதற்கு அஞ்சினோமானால், திரும்பிச்சென்றுயாம் இராவணன்முகத்து விழிப்போமோ? நம்மையே நாம் பழித்துக்கொண்டிருப்போமோ? [இவைசெய்யத்தக்கனவல்ல]; புகழைக் காணுமாறு[பெறுமாறு](நம்மை)அழியச்செய்தாவது(மீண்டு) பிறத்தலில்லாத ஒருநெறியை யாம் சென்றுசேர இவ்யாக்கையைப் போக்கக்கடவோம்; (எ - று.)

போரிலிறந்தால் வீரசுவர்க்கம்பெறலா மாதலால், 'பிறப்புறுநெறி சென்றண்ம' என்றது: சுவர்க்கத்தையும் மோட்சத்தையும் அபேதமாகக் கூறும் மரபு, இங்குக் கருதத்தக்கது. பி - ம்:—[1]படுவதஞ்சியே, படுவதஞ்சினால், படுதலஞ்சினால், படுத்தலஞ்சினும். [2]ஆங்குயாம், அண்மலாம், அண்முவாம். [3]கழித்துமேல். [4]கண்ணுற. (௯௪௫)

௧எ௬. [1]இடுக்கினிப் பெயர்ந்துறை யெண்ணு வோமெனின்
[2]அடுத்தசூர் வாளியி னரண நீங்கலோம்
எடுத்தொரு முகத்தினு லெய்தி யாமினிக்
கொடுத்துநம் [3]முயிரென வொருமை [4]கூறினன்.

(இ - ள்.) இடுக்கான (இந்)நிலையில் இப்போது அப்பாற்சென்று உறைதலைப்பற்றி யெண்ணுவோமானுல், அடுத்துள்ள கூரியவாளியினுலியன்ற அரணத்தினின்று நீங்கமுடியாதவ ராவோம்; இனி, நாம் ஒருமுகமாகப்பொருந்திப்பொருது நம்முயிரைக் கொடுப்போமென்று ஒருமைப்படக் கூறினன்; (எ - று.)

வன்னி பலபடி ஆலோசனைகூருது, ஒரேதீர்மானமாகக் கூறினனென்பார்,'ஒருமைகூறினன்'என்ருர். எடுத்தல்-பகைவன்மீதுசென்று பொருதல். பி-ம்:--[1]இடுக்கினிற்போந்துவேறு,இடுக்கினிப்பேர்ந்துறை, இடுத்தினிப்பெருந்துறை. [2]தடுத்தகூர்வாளியினுரைத்தாங்கலேம்,தடுத்தகூர்வாளியின்ருரைநீக்கிலாது, அடுத்தகூர்வாளியினுனை நீங்கலால். [3]உயிரையென்று. [4]கூறினர். (௩௪௩௬)

௧அ௦.—அரக்கர் யாவரும் இராமபிரானை வளைத்துஅதிர்த்தல்.

இளக்கரு நெடுவரை யீர்க்கு [1]மாறெலாம்
அளக்கரிற் [2]பாய்ந்தெனப் பதங்க மாரழல்
விளக்கினில் வீழ்ந்தென விதி[3]கொடுந்தலால்
வளைத்திரைத் தடர்த்தனர் மலையின் மேனியார்.

(இ - ள்.) இளகுவதற்குஅரிய [கடினமான] நெடியமலையையும் இழுத்துச்செல்லவல்ல ஆறுகள்யாவும் கடலிற் பாய்ந்தாற்போலவும், விட்டிற்பூச்சி நிறைந்த தீச்சுடரையுடைய விளக்கினில் வீழ்ந்தாற்போலவும், ஊழ்வினை பிடரியைப் பிடித்துக்கொண்டு தள்ளுதலால் மலைபோன்ற மேனியையுடைய அ(வ்வ)ரக்கர்கள் (இராமபிரானை) வளைத்துக்கொண்டு இரைத்தவண்ணம் அடர்க்கலாயினர்; (எ-று.)—பி-ம்:—[1]ஆறனை. [2]பரந்தெனமதங்கியாரழல். [3]கொண்டுந்தலால், கொடுத்தலால். (௩௪௩எ)

௧அ௧.—அரக்கர் பலபடைக்கலங்களை ஸ்ரீராமன்மீது தூவுதல்.

மழு[1]வெழுந் தண்டுகோல் [2]வலய நாஞ்சில்வாள்
எழுவயிற் [3]குந்தவே லீட்டி தோமரம்
கழு[4]விகற் [5]கப்பண முதல கைப்படை
[6]தொழுவினிற் புலியனு னுடலிற் றூவினர்.

(இ - ள்.) மழுவும் (போரில்) மூண்டெழுகின்ற தண்டும் அம்பும் வலயமும் நாஞ்சிலும் வாளும் எழுவும் கூர்முனையை(த் தன்னிடத்து)க் கொண்ட குந்தமும் வேலும் ஈட்டியும் தோமரமும் கழுக்களும் பராக்கிரமத்தைக்காட்டுகின்ற கப்பணமும்முதலிய கையாற்பிரயோகித்தற்கு உரிய படைக்கலங்களை, தொழுவத்திலேயுள்ள புலியையொத்தவனுன ஸ்ரீராமனுடையஉடலிலே (அவ்வரக்கர்) தூவினுர்கள்; (எ - று.)

தொழுவத்துப்புலியை ஸ்ரீராமனுக்கு உவமைகூறியதனால், ஸ்ரீராமனுடைய பராக்கிரமத்திற்குமுன்னே அரக்கர் பசுப்போல்வரென்பது பெறப்படும். பி-ம்:—[1]எழுத். [2]வலையம், வளைய. [3]குலிசவேல். [4]முதற், முழுக். [5]கற்பணம். [6]தொழுவிடைப், தொழுமனிற். (௩௬௩௮)

கஅஉ.—இராமபிரான் அவ்வரக்கர்மீது காந்தர்வாஸ்திரம் விடுதல்.

காந்தருப் பம்மெனுங் கடவுண் மாப்படை
வேந்தருக் கரசனும் [1]வில்லி [2]னூக்கினன்
பாந்தளுக் கரசெனப் பறவைக் கேறெனப்
போர்[3]துருத் ததுநெருப் பனைய [4]போர்க்கணை.

(இ - ள்.) காந்தருப்பமென்கின்ற தெய்வத்தன்மைபொருந்திய சிறந்த அஸ்திரத்தை, சக்கரவர்த்தியாதற்குஉரிய ஸ்ரீராமனும் வில்லில் தொடுத்து விடுத்தான்; நெருப்பையொத்த (அந்தப்)போரில்விடுத்தஅஸ்திரம், பாம்புகட்குஅரசனான ஆதிசேஷனைப்போலவும் பறவைகட்குத் தலைவனான கருடனைப்போலவும் (வில்லினின்று) புறப்பட்டுச்சென்று கோபித்தது; (எ - று.)—பி-ம்:—[1]விலக்கி. [2]வீக்கினன். [3]உருத்தன. [4]பொற்கணை. (௩௬௩௯)

கஅ௩.—அந்த அஸ்திரத்தின் வருணனை.

மூன்றுகண் ணமைந்தன [1]வைம்மு கத்தன
[2]ஆன்றமெய் தழலன [3]புனலு மாடுவ
வான்றொட [4]நிமிர்வன வாளி மாமழை
தோன்றின புரஞ்சுடு மொருவன் றோற்றத்த.

(இ - ள்.) மூன்றுகண்ணமைந்தனவும் ஐந்துமுகங்களையுடையனவும், சிறந்த உடம்புகள் தழலைப்போன்றனவும் புனலில்மூழ்குவனவும் வானத்தையளாவ வளர்ந்தனவுமான மிக்க (அந்தக்)கணை மழைகள், திரிபுரதகனஞ்செய்த ஒப்பற்ற சிவபெருமான்போன்ற தோற்றத்தவாய்க் காணப்பட்டன; (எ - று.)

சிவபெருமான் மூன்றுகண்களும் ஐந்துமுகங்களும் தழல்நிறவடிவும் கங்கையில்ஆடுதலும் வான்றொடநிமிர்தலும் உடையவனாதல், இங்குக்கருதத்தக்கது. காந்தர்வாஸ்திரத்தினின்று மூன்றுகண்கள் முதலியனபெற்ற அம்புகள் தோன்றினஎன்க: கணைப்பன்மைபற்றி, 'அமைந்தன'முதலிய பன்மைமுற்றுக்கள் வந்தன. பி-ம்:—[1]வைமுகத்தன. [2]ஆன்றனநெய்கனல், ஆன்றருநெய்கனல். [3]புகையுமாமென, புனலுமாடின. [4]நிவர்வன. (௩௬௪௦)

கஅ௪.—பத்துக்கோடிச் சேனைத்தலைவர் அழிந்திட, மூலபலம் நொடிப்போதில் ஒழிந்துபோதல்.

ஐயிரு கோடிய ரரக்கர் வேந்தர்கள்
[1]மொய்வலி வீரர்க ளொழிய முற்றுற
எய்யெனு மாத்திரத் தவிந்த தென்பரால்
செய்[2]தவத் திராவணன் மூலச் சேனையே.

(இ - ள்,) பத்துக்கோடிக்கணக்கினரான அரக்கவேந்தராகிய நெருங்கிய (உடல்)வலியுள்ள வீரர்கள் மிச்சமில்லாமலொழியுமாறு அழிந்திடவே, செய்த தவத்தையுடைய இராவணனது மூலபலம் ஏயெனுமளவில் அழிந்திட்டது; (எ - று.)—என்பர், ஆல் - அசைகள்: என்பர் என்பது, ஸ்ரீவான்மீகமுனிவரைக்குறித்துக் கூறியதுமாம். ஏயெனுமளவில் - வெகுவிரைவிலென்றபடி. பி - ம்:—[1]மெய்யெனும். [2]பலத். (௩௪௪௧)

௧௮௫ —இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்: வெவ்வேறு இடங்களிலுள்ள அரக்கர் போர்க்கு வருதலைத் தெரிவிக்கும்.

மாப்பெருந் தீவுக ளேழு [1]மாதிரம்
[2]பாப்பரும் பாதலத் துள்ளும் பல்வகைக்
காப்பரு மலைகளும் பிறவுங் காப்பவர்
[3]யாப்புறு [4]காதல ரிராவ ணற்கவர்.

(இ - ள்.) மிகப்பெரிய ஏழுதீவுகளிலும் (எட்டுத்) திசைகளிலும் பாம்புகள்வசிக்கின்ற அருமையான பாதாளலோகத்திலும் பலவகைப்பட்ட காத்தற்குஅரிய மலைகளிலும் மற்றுமுள்ள இடங்களிலும் காப்பவராய் இராவணனிடத்து உறுதியாகப்பூண்ட அன்பையுள்ளவர்கள், (வந்த) அந்தவீரர்கள்; (எ - று.)—'நண்ணினர்'என்று மேற்செய்யுளிற் கூறுவதனால், இங்கு அவர்களின்தன்மையைக் கவி கூறுகின்றாரென்க. பாப்பு - பாப்புஎனினுமாம். பி-ம்:—[1]மாதிரப், மாகளப், மாத்திரப். [2]பாப்பெரும். [3]ஆப்புறு. [4]காவலர். (௩௪௪௨)

௧௮௬. மாத்தட [1]மேருவை வளைந்த வான்சுடர்
[2]கோத்தகன் மார்பிடை [3]யணியுங் கொள்கையார்
பூத்தவி சுகந்தவன் புகன்று பொய்யறு
நாத்தழும் [4]பேறிய [5]வரத்தர் நண்ணினர்.

(இ - ள்.) மிகப்பெரிய மேருமலையைச் சூழ்ந்துவருகின்ற சிறந்த சுடர்களாகிய சூரியசந்திரர்களைக்கோத்து அகன்ற மார்பிடத்து அணிகின்ற தன்மையுள்ளவர்களாகி, தாமரைமலரை இருப்பிடமாகவுகந்த பிரமதேவன் சொல்லிப்பொய்யற்ற நாத்தழும்பேறுதற்குக்காரணமான வரத்தையுடையவர் வந்துசேர்ந்தனர்; (எ - று.)—மிகப்பலவரங்களைப் பிரமதேவன் தரப் பெற்றுக்கொண்டவர் அவ்வரக்கரென்பது, பின்னிரண்டடிகளின்கருத்து. பி-ம்:- [1]மேருவையளந்துவானுறை, மேருவை மறைந்தவானென, வையகமளந்தவானவன். [2]கோத்தன. [3]அணிந்த. [4]ஏறியார். [5]அரக்கர், வரத்தை. (௩௪௪௩)

௧௮௭.—வந்த அரக்கர், 'யாவரும் ஒருங்கு திரண்டா, தனித்தனியா பொருவது?' என்று சேனாதிபதியை வினவுதல்.

[1]நம்முளீண் [2]டொருவனை [3]வெல்லு நன்கெனின்
வெம்முனை யிராவணன் றனையும் வெல்லுமால்
இம்மென வுடனெடுத் தெழுந்து சேறுமோ
செம்மையிற் றனித்தனிச் செய்து மோசெரு.

(இ - ள்.) 'இப்போது நமக்குள் ஒருவனை நன்றாக (இந்தராமன்) வெல்வானானால் கொடியபோர்முனையில் இராவணனையும் வென்றிடுவான்: (இது) நிச்சயம்: இப்போது இம்மென்னுமளவிலே ஒருசேரக் கிளம்பிப்பொருமாறு செல்வோமா? (அன்றி), நேர்மையுடனே தனித்தனிப்போர்செய்வோமா?' (என்று வந்துசேர்ந்த அவ்வரக்கர்கள் எல்லாச்சேனைகட்குந் தலைவனாகிய வன்னியை வினவினார்); (எ - று.) —ஒருத்தனோடு பலர் திரண்டு பொருதல் முறைமையன்று ஆதலால், தனித்தனிப் பொரச்செல்வதனை, 'செம்மையிற் றனித்தனிச்செய்துமோசெரு' என்றனர். பி-ம்:—[1]நம்மில். [2]ஒருவரை. [3]வெல்லினன்றிலா வெல்லுநன்றெனில். (ருசசச)

வேறு.

கஅஅ.—வன்னி ஒருங்கேசென்று பொரவேண்டுமென்றுசொல்ல, யாவரும் அதனை உடன்படல்.

[1]எல்லோ மெல்லோ மொன்றி வளைத்திந் நெடியோனை
[2]வல்லே [3]வல்ல போர்[4]வலி முற்றி பலியோமேல்
[5]வெல்லோம் வெல்லோ மென்றனன் வன்னி மிடலோருந்
[6]தொல்லோன் சொல்லே நன்றென [7]வஃதே துணிவுற்றார்.

(இ - ள்.) எல்லோரும் எல்லோரும் ஒற்றுமைப்பட்டு சூழ்ந்துகொண்டு நெடியவனான இந்த ஸ்ரீராமனை விரைவாக வல்ல போர்வல்லமைநிரம்பிப் போர்செய்யோமேயானால், வெல்லமாட்டோம் வெல்லமாட்டோமென்று வன்னியென்பவன் கூறினான்; வலிமையுள்ள அரக்கர்யாவரும் பழையனான சேனாபதியாகிய வன்னியின் சொல்லே நன்று என்றுசொல்லி, அச்செயலையே துணிந்திட்டனர்; (எ - று.)— பி - ம்:—[1]நில்லோமெல்லோநின்று, நில்லேமெல்லாமொன்றி, எல்லோமெல்லோமின்று. [2]வல்லோம். [3]வல்லேயோர். [4]வளமுற்றி, வலிகொண்டு. [5]வெல்லேம்வெல்லேம், வெல்லாம் வெல்லேம். [6]தொல்லோய்சொல்லே, தொல்லோர்சொல்லே,சொல்லோசொல்லோ. [7]வந்து. ()

கஅகூ.—அரக்கர்களின் ஆர்ப்பாடம்.

அன்னார் தாமு மார்கலி யேழு [1]மெனவார்த்தார்
மின்னார் வான [2]மிற்றுறு மென்றே விளிசங்கம்
கொன்னே யூதித் தோள்புடை கொட்டிக் [3]கொடுசார்ந்தார்
என்னும் வைய [4]மென்படு மாலித் [5]திசையேதாம்.

(இ - ள்.) அந்தஅரக்கர்களும் எழுகடல்போல ஆரவாரித்தனர்; (பின்பு),மின்னல்பொருந்திய வானம் இற்றுவீழ்ந்திடுமென்று சொல்லுமாறு ஒலிக்கின்ற சங்கை அச்சமுண்டாக ஊதித் தோளினிடத்துத் தட்டிக்கொண்டு சேர்ந்தார்: இவ்வுலகம் என்னவாகும்? இத்திசையும் எப்பாடுபடுமோ? (எ - று.)—கொன்னே யூதிஎன்பதற்கு - வெற்றியில்லாதிருக்கையில் வீணேயூதி என்றுருமுளர்.பி-ம்:— [1]உடனார்த்தால். [2]வீற்றுறுமென்றால், வீசுறுமென்றால். [3]கொடித்தார்த்தால், கொடுசேர்ந்தால். [4]என்படும்வானந். [5]திசையெல்லாம்.

௧௯0.—ஸ்ரீராமன் வில்நாணியைத்தெறித்து ஒலியெழுப்புதல்.

*ஆர்த்தா ரன்னா ரன்ன கணத்தே யவராற்றல்*
*[1]தீர்த்தா னுந்தன் வெஞ்சிலை நாணைத் [2]தெறிவுற்றான்*
*[3]பேர்த்தான் பேர்த்தான் மூற்று மளந்தான் பிறழ்சங்கம்*
*ஆர்த்தா லொத்த [4]கவ்வொலி யெல்லா வுலகுக்கும்.*

(இ - ள்.) அவ்வரக்கர் ஆரவாரித்தார்கள்: அக்கணத்தில்தானே (இதுவரையில்) அவ்வரக்கரின் ஆற்றலைத்தீர்த்து வென்றுவந்தவனான ஸ்ரீராமனும் தன் கொடியவில்நாணியைத்தெறித்தான்: அதனால் தோன்றியஅந்தஒலி,(தன்தாள்களைப்) பேர்த்துப்பேர்த்து எல்லாவுலகங்களையும்அளந்த திருமாலின் (வெற்றிப்புகழோடு) விளங்குஞ்சங்கம் எல்லாவுலகிலும் ஆரவாரித்ததை யொத்தது; (எ - று.)—பி-ம்:—[1]தீர்த்தான்றானும். [2]தெறிப்பு, தெரிப்பு,தெரிவு. [3]போர்த்தான் பொற்றோள்...புகழ்ச்சங்கம்,பேர்த்தான்......பிறசங்கம். [4]வில்லொலியெல்லாம். (௩.௪௪௭)

வேறு.

௧௯௧.—இதுமுதல் நான்கு கவிகள்-அவ்வரக்கரின்தன்மையையும் அவர்கள் ஸ்ரீராமனைவளைந்து பொருதலையும் தெரிவிக்கும்.

*பல்லாயிர கோடியர் [1]பல்கலை நூல்*
*வல்லா[2]ரவர் மெய்ம்மை வழங்கவலார்*
*எல்லாவுல கங்களு மேறியபோர்*
*வில்லாள ரரக்கரின் மேதகையார்.*

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) பலஆயிரகோடிக்கணக்கானவரும் பலகலைநூல்களிலும் வல்லவர்களும், நேர்வழியிலே (படைகளை) வழங்குதற்குவல்லவர்களும், எல்லாவுலகங்களிலும் பிரசித்திபெற்ற போரில்வல்ல வில்லாளிகளும் அரக்கருள் மேன்மைபெற்றவர்களும்,- (எ - று.)—'சென்று செறிந்தனர்'என்று முடிவுகாண்க. வல்லாரவர், அவர் - முதல்வேற்றுமைச்சொல்லுருபு. இந்த'வேறு'என்பதிலடங்கியசெய்யுட்களைக் கலிவிருத்தமாகவும் அலகிடலாம். பி - ம்:—[1]பல்படையே. [2]இவர். (௩-௪௪௮)

௧௯௨. *வென்றாருல கங்களை விண்ணவரோடு*
*ஒன்றாவுயர் தானவ [1]ரோதமெலாம்*
*கொன்றார்நிமிர் கூற்றென வெவ்வுயிருந்*
*தின்றாரெதிர் சென்று செறிந்தனரால்.*

(இ - ள்.) உலகங்களையெல்லாம் வென்றவர்களும்,விண்ணவரோடு ஒருசேர (வலிமை)சிறந்த தானவரின் பெருங்கூட்டத்தையெல்லாம் கொன்றவரும்,(உயிரைக்)கொண்டுபோவதற்கென்றேயேற்பட்ட யமன்போல எவ்வுயிரையுந் தின்றவருமான அவ்வரக்கர்கள், (ஸ்ரீராமனை) நெருங்கினார்கள்; (எ - று.)—ஓதம்-கடல்: பெருந்திரளைக்காட்டிற்று. ஒன்றா-சேராதவனினுமாம். பி - ம்:—[1]யூகமெலாம். (௩-௪௪௯)

௧௯௩. *வளைத்தார் மதயானையை [1]வன்றொழிலில்*
*தளைத்தா ரெனவந்து தனித்தனியே*

உளைத்தா ருருமேறென [2]வொன்றலபோர்
விளைத்தா ரிமையோர்கள் வெதும்பினரால்.

(இ-ள்.) வந்து, மதயானையைத் தளையிட்டாற்போல் வலிய போர்த்தொழிலால் (ஸ்ரீராமனை) வளைத்துக்கொண்டு தனித்தனியே (தடுத்துப்)பேரிடிபோலக்கர்ச்சித்து ஒருபடித்தல்லாத போரை விளைத்தார்; (அதுகண்டு) தேவர்களும், மனம்வாடினார்கள்; (எ-று.)—
பி-ம்:—[1]வன்றொழுவில், வான்றொழுவில். [2]ஒன்னலர். (௩சரு0)

ககூச. [1]விட்டிடிய [2]வழங்கிய வெம்படையிற்
சுட்டிடிய நிமிர்ந்த சுடர்ச்சுடரும்
கட்டிடியு மொருங்கு கலந்தெழலால்
உட்டீயுற வெந்தன வேழுலகும்.

(இ-ள்.) (பகைவன் இரணகளத்தை) விட்டொழியுமாறு (அரக்கர்) விடுத்த கொடியபடைக்கலங்களில் சுடும்படி எழுந்த சுடரை யுடைய தீயும்,(சினத்தினால் அவர்களுடைய)கண்களினின்றுபுறப்பட்ட தீயும் ஒருசேரக் கலந்து மேலெழுந்ததனால், எழுலகங்களும் உள்ளே தீயுற வெந்திட்டன; (எ-று.)

'விட்டிடிய' என்பது, அரக்கரின் கருத்துப்பற்றிக் கூறியது: இது-செயவென்னும் வாய்பாட்டுச்சொல்: சுட்டிடியஎன்பதும் இவ்வாறான சொல்லே. பி-ம்:—[1]வெட்டிடிய. [2]விளங்கிய. இச்செய்யுள் "தேரார்ப் பொலி" என்ற அடுத்த பாடலுக்குப் பின் சில பிரதிகளிற் காண்கிறது.

ககூரு.—அவ்வரக்கச்சேனையில் தோன்றிய பலவகையொலி.

தேரார்ப்பொலி வீரர் தெழிப்பொலியும்
தாரார்ப்பொலி யுங்[1]கழ றாக்கொலியும்
[2]போரார்சிலை நாணி புடைப்பொலியும்
[3]காராற்பொலி யுங்களி றார்ப்பொலியும்.

(இ-ள்.) தேர்கள் (ஓடும்போது தோன்றுகின்ற) ஆரவாரமான ஒலியும், வீரர்கள் அதட்டுகின்ற ஒலியும், கிண்கிணிமாலைகளின் பேரொலியும், வீரக்கழல்(ஒன்றோடொன்று)தாக்குவதனாலான ஒலியும், போரிலேமூண்ட வில்லின் நாணியைப் புடைத்தலினாலான ஒலியும், கருநிறத்தோடுவிளங்குகின்ற யானையின் வீரிடுதலினாலானஒலியும் (அந்தச்சேனையில் மிக்குத்தோன்றின:)(எ-று.)—வினை வருவித்து முடிக்க.
பி-ம்:—[1]கழலார்ப்பு. [2]போரார்ப்பொலி, போரார்ச்சிலை, போராற்சிலை. [3]காரார்ப்பொலியும். (௩சருஉ)

ககூகூ.—ஸ்ரீராமன் அவ்வரக்கச்சேனைக்கு முன்னே நிற்றல்.

எல்லாரு மிராவண னேயனையார்
வெல்லாவுல கில்லவர் மெய்[1]வலியார்
[2]தொல்லார்படை வந்து தொடர்ந்ததெனா
நல்லானு முருத்தெதிர் நண்ணினனால்.

(இ-ள்.) (அந்த அரக்கப்படையிலுள்ளவர்) எல்லாரும் இராவணனையே யொத்தவர்; (தாம்) வெல்லாத உலகம் இருக்கப்பெறாதவர்;

[எல்லாவுலகங்களையும் வென்றவரென்றபடி]: உடல்வலி படைத்தவர்: (இப்படிப்பட்ட) பழமையானவரின்படை வந்துதொடர்ந்ததென்று கருதி, நற்குணமுடையவனான ஸ்ரீராமனும் கோபித்து(ப் பொருமாறு அவர்களுடைய)எதிரே சென்றான்; (எ - று)—பி - ம்:—[1]வலியாற். [2]சொல்லார்புடை. (௩சருங)

ககஎ.—இராமபிரான் அம்புமழைபொழிதல்.

ஊழிக்கனல் [1]போல்பவ ருந்தினபோர்
ஆழிப்படை [2]யம்பொடு மற்றகலப்
பாழிக்கடை நாள்விடு பன்மழைபோல்
வாழிச்சுடர் வாளி வழங்கினனால்

(இ - ள்.) யுகாந்தகாலத்துத்தீக்கு ஒப்பானவரான அரக்கர் செலுத்தினபோர்க்குரிய சக்கரப்படை (எய்யக்கொண்ட) அம்புடனே அகன்றிடுமாறு, வலிய யுகாந்தகாலத்துப்பெய்கின்ற பெருமழைபோல வாழ்ச்சிபெற்றுச் சுடர்பொருந்திய அம்புகளை (ஸ்ரீராமன் மிகுதியாக)ப் பொழிந்தான்; (எ - று.)—ஆழிப்படை - கடல்போற்பரந்தபலவகைப் படைக்கலமுமாம். பி-ம்:—[1]போலவருந்தின. [2]அம்பொரு. (௩சருச)

ககஅ.—இனிப்பதினெருகவிகள் - இராமபாணங்களால் துணிப்புண்ட அரக்கப்படையின் வருணனையைத் தெரிவிக்கும்.

சூரோடு தொடர்ந்த சுடர்க்கணை [1]தான்
தாரோ டகலங்கள் தடிந்திடலும்
[2]தேரோடு மடிந்தனர் செங்கதிரோன்
ஊரோடு [3]மடிந்தன வொத்[4]துரவோர்.

(இ - ள்.) வலிமையோடு பொருந்திய [வலிமையுடன் செலுத்திய] ஒளிபொருந்திய (அவ்விராம)பாணம், (பகைஞரின்) வெற்றிமாலைசூடப் பெற்ற மார்புகளை அறுத்திடவே, செந்நிறக்கதிரவனான சூரியன் ஊர்கோளோடும் மடிவதையொத்து, வலிய அவ்வரக்கர்(தம்)தேரோடும் மடிந்தனர்; (எ - று.)—தேருக்கு-ஊர்கோளும், வீரர்க்குச் சூரியனும் உவமை: தற்குறிப்பேற்றவணி. ஓடகலம்-ஓடுகின்றமார்பு: வினைத்தொகை. தாரோடு - மாலையுடனே என்பாருமுளர். பி - ம்:—[1]தன். [2]தேரோடும் விழுந்தனர். [3]மறிந்தனவொத்து, மறிந்தனரொத்து, மடிந்தனவொத்து. [4]உளதால். (௩சருரு)

ககக. [1]கொல்லோடு சுடர்க்கணை [2]கூற்றினிணப்
பல்லோடு [3]தொடர்ந்தன [4]பாய்தலினுற்
செல்லோடெழு மாமுகில் சிந்தினபோல்
வில்லோடும் விழுந்த [5]மிடற்கரமே.

(இ - ள்.) கொல்லுதல் தொழில் மிக்குள்ள சுடரையுடைய கணைகள் யமனுடைய நிணம்படிந்த (பற்கள்போன்ற) பற்களால்தொடரப் பெற்றனவாய்ப் பாய்தலினால்,(அறுபட்டுப்பிடித்த)வில்லுடனே விழுந்த வலிய(அவ்வரக்கர்)கை, மின்னலுடனே எழுகின்ற கரியமேகங்கள் சிந்

தினபோற்(காணப்பட்டன);(எ-று.) கூற்றின், இன் - ஒப்பு. வச்சிரதம் ஷ்ட்ரம் அர்த்தசந்தரம் முதலியனவாகப் பலவகைஅம்புகள் உள்ளமை யறியத்தக்கது. பி-ம்:—[1]சொல்லோடு.[2]கூற்றினரும்,சுற்றினரும்.[3]தொடர்ந்தெனப். [4]பாய்தலநற். [5]விடக்கரமே. (ருசகூ)

உ00. செம்போ டுதிரத்திரை யாழியின்வாய்
வெம்போ டரவக்குல மேனிமிருங்
கொம்போடும் [1]விழுந்தன வொத்த [2]குறைத்து
அம்போடு விழுந்த வடற்கரமே.

(இ - ள்.)வெட்டுண்டு அம்போடும் விழுந்த வலிய கைகள்,—செந்நிறத்தோடுபொருந்திய இரத்தங்களான அலைகடலிலே சீறியோடுகின்ற அரவக்குலம் (தாம் தங்கிய) மேலோங்கியமரக்கிளைகளோடும் விழுந்ததனை யொத்தன; (எ-று.)—வெம்பு-வெம்புதல்: கொதித்தல்: முதனிலைத்தொழிற்பெயர்:இனி,வெம்பியோடுஎன்பதன்விகாரமுமாம். பி - ம்:—[1]எழுந்தன. [2]குறைந்து. (ருசகூஎ)

உ0க. முன்னோ [1]டுதிரப்புனன் [2]மூதுலகைப்
பின்னோடி [3]வளைந்த பெருங்கடல்வாய்
மின்னோடும் [4]விழுந்தன மேகமெனப்
பொன்னோடை நெடுங்[5]கரி புக்கனவால்.

(இ - ள்.) பொன்னோடையணிந்த நெடிய யானைகள், முன்னே யோடுகின்ற உதிரநீரைப் பின்பற்றி ஓடி, பழமையானஉலகை வளைந்த பெரியகடலினிடத்து மின்னோடுவிழுந்த மேகம்போலப்புக்கன;(எ-று.)

பொன்னோடையை யணிந்தகரியயானைகள் உதிரப்பெருக்காலீர்க்கப்பட்டுக் கடலிலேசேர்ந்தவை,கடலில்மின்னோடுவீழும் மேகம்போலுமென்றார்: தற்குறிப்பேற்றவணி. இனி, போர்க்களத்தினின்றுஓடிய உதிரநீர் உலகத்தைப் பின்பற்றிக் கடல்போலவளைய அந்தஉதிரநீரில் மின்னலொடுமேகம் விழுந்தாற்போலப் பொன்னோடையணிந்த ஆனைகள் புக்கனவென்றலும் ஒன்று. பி - ம்:—[1]உதிரத்திடை, உதிரத்திரை. [2]மூவுலகைப். [3]வளைத்த. [4]எழுந்தன. [5]கிரி. (ருசகூஅ)

உ0உ. மறவெற்றி யரக்கர் வலக்கையொடும்
[1]நறவக்குரு திக்கடல் வீழ்நகைவாள்
சுறவொத்தன மீது [2]துடித்தெழலால்
இறவொத்தன [3]வாவு மினப்பரியே.

(இ - ள்.) மணமுள்ள குருதிக்கடலிலே, வீரத்தையும் வெற்றியையுமுடைய அரக்கரின் வலக்கையுடனே வீழ்ந்த ஒளியுள்ள வாள்கள்,—மேலேதுடித்து எழுதலாலே சுறவையொத்தன; அங்ஙனமே தாவுகின்ற இனமானபரிகளும் இறவுமீனை யொத்தன; (எ - று.)

இராமபிரானதுசரத்தால் துணிப்புண்டு பிடித்த வாட்படையுடனே இரத்தவெள்ளத்துவீழ்ந்த அரக்கர்களின்வலக்கைகள் துடிக்கும்போது

அவ்வாட்படைகள்பிறழ்ந்து தோன்றுவதால் நீரிற்பிறழ்ந்துசெல்லும் சுறுமீன்கள்போன்றன: தற்குறிப்பேற்றவணி. சுறுமீன்கட்கு முன்புறத்துக் கத்திபோன்ற ஒருறுப்புஇருப்பது இயல்பென்பது ஈண்டுக் கருதத்தக்கது. 'மீது துடித்தெழலால்' என்பது, பரிக்கும் சேரத்தக்கது. பி-ம்:—[1]இறவக். [2]தொடர்ந்தெழலால். [3]வாவுமிளிப்பரியே. (௩சஙக)

௨0௩. தாமச்சுடர் வாளி [1]தடிந்தகலப்
பாமக்குரு திப்படி கின்றபடைச்
[2]சேமப்படர் கேடக மால்கடல்சேர்
ஆமைக்குல [3]மெத்தனை யத்தனையால்.

(இ - ள்.) பேரொளிபொருந்திய அம்புகளால் (கை) அறுக்கப்பட்டுச்செல்வதனால் பரவிய அந்தக்குருதியிலே படிகின்றனவாய்ப் படையிலுள்ள படர் (தமது) ரட்சைக்காகக்கொண்டனவான கேடகங்கள், பெரியகடலைச்சேர்ந்த ஆமைக்குலமெத்தனை அத்தனையாகும்;(எ-று.)- தாமச்சுடர் - ஒருபொருட்பன்மொழி. பாம் அக்கடல்என்று பிரியும். படைப்படரின் [சேனைவீரரின்]சேமக்கேடகம் என்க. பி-ம்:—[1]தடித்தகலப். [2]சேமப்பிடி, சேமப்படை. [3]ஒத்தன. (௩சசo)

௨0௪. காம்போடு பதாகைகள் காருதிரப்
பாம்போடு கடற்படி வுற்றனவால்
வாம்போர்நெடு வாடை [1]மலைந்தகலக்
கூம்போடுயர் பாய்கள் குறைந்தனபோல்.

(இ - ள்.) போர்புரிவதுபோன்று தாவுகின்ற பெருவாடை மிகுதியாகவீசப்பெற்றதனால் மரக்கலங்களின் உயர்ந்தபாய்கள் கூம்புடனே (கடலுள்)மூழ்கியனபோல, காம்போடுகூடிய பதாகைகள் கறுப்புநிறமடைந்திட்ட உதிரப்பரப்பாகிய ஓடுந்தன்மையுள்ள கடலிற் படிவுற்றன; (எ - று.)—போர்வாம் நெடுவாடை என்க மலைந்து அகலஎனப்பிரித்து - அகல மலைதலால் என்றலுமொன்று. தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]மலைத்தகலக், குறைந்தகலக். (௩சசக)

௨0௫. மண்டப்படு [1]சோரியின் வாரியின்வீழ்
[2]கண்டத்த கரத்தொகை கவ்வியதால்
[3]மூண்டக்கிளர் தண்டன முட்டொருவன்
துண்டச்சுற வொத்த துடித்தனவால்.

(இ-ள்.) மிகுதியாகப் பெருகுகின்ற குருதிநீரிலே வீழ்ந்த துண்டிக்கப்பட்ட கைத்தொகுதியை (அம்புகள்) கவ்வியதனால்,(அவை),—தாமரையின் விளங்குகின்ற தண்டினையொத்த முள் தொக்க வலியதுண்டத்தையுடைய சுறவுகளையொத்தனவாய்த் துடித்தன; (எ - று.)-முண்டம்-முண்டகம்என்பதன்விகாரம். 'கவ்வியதாள், முண்டத்திரள்கண்டன முட்டொருவன்' என்ற பாடத்திற்கு - கண்டிக்கப்பட்டனவான கரத்தொகையும் (அம்புகளைக்) கவ்வியதாளும் முண்டத்திரளும் காணப்பட்டவை முள்தொக்கவலிய துண்டச்சுறவையொத்தன வென்க. பி-ம்:—[1]பல்கணைமாரியின். [2]கண்டத்தொகைகவ்வியதோள். [3]முண்டத்திரிதண்டின் முரட்டொருவன். (௩சசஉ)

௨0௬. தெளிவுற்ற பளிங்குறு சில்லிகொடேர்
[1]விளிவுற்றுற [2]வேறுற வீழ்வனதாம்

[3]அளிமுற்றிய [4]சோரிய வாழியிலாழ்
ஒளிமுற்றிய திங்களை [5]யொத்துளவால்.

(இ - ள்.)தெளிவுபொருந்திய பளிங்கினாற்பொருந்திய சில்லியைக் கொண்ட தேர் அழிந்துபோகையில் வேறாகவீழ்வனவாகிய அச்சில்லிகள்,--பாணங்களினால் நிரம்பத்தோன்றிய இரத்தநீரையடைந்தனவாய், கடலில் ஆழ்கின்ற ஒளிநிரம்பிய சந்திரர்களை யொத்துள்ளன; (எ-று.) பளிக்குச்சில்லிகள்-சந்திரர்போன்றிருந்தனவென்றார். தற்குறிப்பேற்ற வணி. அளி-பாணம். பி-ம்:—[1]விளிவுற்றுக, விளியுற்றுற, விளிவிற்றுக. [2]வேறுகவீழ்வனவும். [3]அளிபெற்றுகு, அளிவற்றுகு. [4]சோரியிலாழியிலாழ், சோரியின்வாரியினாழ், சோரியினாழியினாறு. [5]ஒத்துளதால். ()

உ0எ. நிலை [1]கோடலில் வென்றி [2]யரக்கரைநேர்
கொலை [3]கோடலின் மன்குறி கோளுறுமேற்
சிலைகோடிய தோறு [4]சிரத்திரள்வன்
மலைகோடியின் மேலு [5]மறிந்திடுமால்.

(இ-ள்.) நல்வழியைக் கொள்ளுதலில்லாத (இதுவரையில்)வெற்றி பெற்றிருந்த அரக்கரை நேராகக் கொலைகொள்வதில் [கொல்வதில்] ஸ்ரீராமன் மனத்திலெண்ணங்கொள்கின்றானென்பதனால்,(அப்பிரானுடைய)சிலை கோடியபோதெல்லாம் சிரத்திரளாகிய வலியமலைகள் கோடியின்மேலும் மறிந்திடுவனவாயின; (எ-று.)—நிலை-நல்வழி. பி - ம்:— [1]கொண்டலில். [2]அரக்கரும். [3]கோடநமன், கோடிநமன். [4]சினத்தின. [5]மறிந்திறுமால், மறிந்துறுமால். (௩௪௯௪)

உ0அ. திண்மார்பின் [1]மிசைச்செறி சாலிகையின்
கண்வாளி கடைச்[2]செறி கானநுழைந்து
எண் [3]வாயுற மொய்த்தன [4]வின்னறையுற்று
உண்வாய்வரி வண்டின மொத்தனவால்.

(இ - ள்.) வலியமார்பின்மீது நெருங்கக்கட்டிய கவசத்தினிடத்து அம்புகளின் கடையாகிய செறிந்ததொகுதிநுழைந்து எண்ணுந்தன்மை பொருந்திமொய்த்தவை,—இனியதேனையுற்று உண்ணுகின்ற வாயையுடைய வரியமைந்த வண்டுகளின் இனத்தை யொத்தன; (எ - று.)

இது,இராமபிரானது அம்புகள் எதிரிகளின் கவசத்தில் பொத்தியவற்றின் வருணனை. கானம்-'திரள்'என்ற பொருளில் வந்தது.பி-ம்:— [1]மிசைச்செறு. [2]சிறைக்கண்ணின், சிறைகாண. [3]வாயற, வாயிற. [4]இன்னுறை, இன்னறவு. (௩௪௯௫)

உ0௯.—இதுமுதல் நான்குகவிகள்-அரக்கப்படையைக் கொன்று குவிக்குமாறு ஸ்ரீராமன் சாரிவந்தமையை வருணனைவகையாற் கூறும்.

பாறுடு களத்தொரு வன்பகலின்
கூறுகிய நாலிலொர் கூறிடையே
[1]நூறுயின யோசனை [2]நாழிகள்சால்
[3]மாறுதுழல் சாரிகை வந்தனனால்.

(இ - ள்.) பருந்துகள் சஞ்சரிக்கின்ற நூறுயோசனைபரப்புள்ள போர்க்களத்தே தனிவீரனான ஸ்ரீராமன் டகலின்நான்கில்ஒருபகுதியானகாலத்திலே கொன்றுகுவித்தல்தொழிலை மிகவும்மாறாது செய்கின்ற சாரிகை வந்தனன்; (எ - று.)

ஸ்ரீராமன் போர்க்களமுழுதும் சாரிகைவந்தவண்ணம் அரக்கரைக்கொன்றொழிக்குந்தொழிலை எழரைநாழிகை செய்தனனென்றவாறு. பி - ம்:—[1]நூறாகிய. [2]நூழில்களாம், நூழில்களம். [3]மாறுதொர். (௩௪௬௬)

௨௧௦. நின்றாருடன் [1]னின்று நிமிர்ந்தயலே
சென்றாரெதிர் சென்று [2]திரிந்திடலால்
தன்றாதையை யோர்வுறு [3]தன்மகனேர்
[4]கொன்றானவ னேயிவ னென்றுகொள்வார்.

(இ - ள்.) (இவ்விராமன்)நின்றாருடனே நின்றும், வேற்றிடத்துப்புடைபெயர்ந்து சென்றாரெதிரே சென்றும், திரிந்துபொருதுகொல்லுதலால், தன்தாதையையோர்தல்பொருந்திய தன்மகனுக்கு நேரே கொன்றானாகிய அந்தநரசிங்கமூர்த்தியே யிவனென்று கருதுவார்கள்; (எ - று.)

"எங்குமுளன்கண்ணன்" என்றபடி போர்க்களத்தில் எங்குந்திரிந்துகாணப்படுதலால் இவன்திருமாலேயென்று அப்போர்க்களத்திலுள்ளோர் கொள்வாராயின ரென்பதாம். ஓர்வுறுமகனென்றது பிரகலாதன் ஞானவானாதலால்.இனி,ஈற்றடியில் 'கொன்றானிவனென்பதெனென்றுகொள்வார்' என்றபாடங்கொண்டு பின்னிரண்டடிகட்கு-தன்தாதையின் கருத்தையோர்ந்து அதன்படிநடப்பவனான அவனுடைய மகனுக்கு [இந்திரசித்துக்கு] ஒப்பாக இவன் கொன்றானென்பது எவ்வாறு? என்று பொருளுரைத்து, அவ்வவர்களுடன் இவ்விராமன் இருத்தலால் இந்திரசித்துவைப்போல இவன்கொன்றானென்றல் ஏற்குமோ என்றன ரெனினுமாம். அன்றி, 'கொன்றானெனவெய்து குறைத்தனனால்" என்றபாடத்தைக்கொண்டு - இவ்விராமனே, நின்றாருடனேநின்றும் சென்றாருடனேசென்றும் திரிபவனாயுள்ளான்: ஆகவே அரக்கச்சேனையை இவன் கொன்றானென்பது தக்கதன்று: தாதையருடனே இடைவிடாதுநிற்கும் புத்திரனே கொன்றானாகவேண்டுமென்று அச்சேனையிலுள்ளவர் கருதும்படி அம்பினாற்கொன்றா னென்று பொருள்கூறுவாருமுளர்: இதன்கருதது- சாரிகைதிரிவதனால் இராமன் எங்கும்இருந்து அம்புஎய்து அம்புஎய்து அழிக்கும்போது இவன் வேற்றிடத்துச்செல்வதனாலும் அருகிலிருந்து அம்புவீழ்வதனாலும்இராமன் எய்துகொன்றானென்ற கருத்துநீங்கி அருகேயிருக்கும் மைந்தனே அவன்தந்தையைக் கொன்றானென்றகருத்து அச்சேனையிலுள்ளார்க்கும் போர்காணுவார்க்கும் தோன்றிற்றென்பது. பி-ம்:—[1]வந்து. [2]சிதைந்திடலால். [3]என்மகனேர். [4]கொன்றானவனேயவனென்றுகொளா, கொன்றானிவனேயவனென்றுகொளீர். (௩௪௬௭)

உகக. இங்கேயுள னிங்குள னிங்குளனென்று
அங்கே[1]யுணர் கின்ற வலந்தலைவாய்
வெங்கோப [2]நெடும்படை வெஞ்சரம்விட்டு
எங்கேனும் வழங்குவ [3]ரேகுவரால்.

(இ-ள்.) (இராமன் வெகுவிசையாகச் சாரிகை வருவதுபற்றி எங்குந்தோன்றுவதால்), 'இங்கே யுள்ளான், இங்கு உள்ளான், இங்கு உள்ளான்'என்று அந்தப்போர்க்களத்தில் அறிகின்ற கலக்கமானநிலையிலே (அச்சேனையிலுள்ளார்) கொடுங்கோபத்துடனே நெடியவிற்படையினின்று கொடுஞ்சரத்தை விட்டு (இராமனை இலக்காகப்பெறாது) எங்கேனும் எய்து (தாம்) உயிர்செல்லப்பெறுவர்; (எ - று.)

சாரிகைதிரியும் விரைவினால் எங்குப்பார்த்தாலும் இராமனைத் தோன்றுதலால் இராமன்மீது அம்பெய்யவேண்டுமென்று தொடுத்து அவனில்லாத வேறெங்கேயோ வீணில் அம்பெய்து அப்பிரானம்புகளால் தம்முயிர் நீங்கப்பெற்றனர் அச்சேனையிலுள்ளாரென்றவாறு. பி - ம்:—[1]உழல்கின்றவலந்தலையால், உணர்கின்ற வலந்தலைவாய். [2]நெடுஞ்சரவெம்படை [3]எய்குவரால். (௩௪சு அ)

உகஉ. ஒருவன்னெனை வுன்னு[1]முணர்ச்சியிலார்
இரவன் [2]றிது வோர்பக [3]லென்பர்களால்
[4]கரவன்றி திராமர் [5]கணக்கிலரால்
பரவைமணை லிற்பல ரென்பர்களால்.

(இ - ள்.) (இராமனம்புகள் இருளை யோட்டித் தாம் சுவாலித்தலால், அரக்கர்கள்), 'இது இரவு அன்று:, ஒருபகல்'என்பர்கள்:(அன்றியும், இராமன்) ஒருவன் (தான் உளன்) என்றுநினைக்கின்ற உணர்ச்சியில்லாத அவர்கள், இது வஞ்சகம் அன்று: இராமர் கடலின்மணலைப்போல மிகப் பலராகிக்கணக்கில்லாதவராவர்' என்பார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]உணர்ச்சியிலீர், [2]இதுவோ. [3]எய்தினரால். [4]கரவன்றி. [5]கணக்கிலவாம், கணக்கறவப். ஒருபிரதியில் 'இரவன்றதுவோபகலெய்தினரால்' என்று இரண்டாமடி. (௩௪சுக)

உகங.—மூலபலத்தில் ஒருவரையொருவர் தாமே யடித்துக்கொண்டு மாண்டமை.

ஒருவன்னொரு வன்மலை போ[1]லுயர்வோன்
ஒருவன்படை வெள்ளமொ [2]ராயிரமே
ஒருவன்னொரு வன்னுயி [3]ருண்டதலால்
ஒருவன்னுயி[4]ருண்பது[5]முள்ளதுவோ.

(இ - ள்.) (அந்தமூலபலத்தில்) ஒவ்வொருவனும் மலைபோலுயர்ந்த தோற்றமுள்ளவன்: (அங்குள்ள) ஒப்பற்ற வலிய படை, ஓராயிரம் வெள்ளமாகும்: (அப்படையில், தம்மைத் தாமே இராமனாகமயங்கி), ஒருவன் மற்றொருவனுடைய உயிரை யுண்ட தல்லாமல், ஒப்பற்றவீரனான ஸ்ரீராமன் (அப்போது அவர்களுடைய) உயிரை உண்டதும் உள்

ளதோ? (எ - று.)—ஏகாரம் - வினவகையால் எதிர்மறைப்பொருளை யுணர்த்திற்று.

இதனால், இராமனாற் கொலையுண்டவர்களினும் தம்மவரைத்தாமே யடித்துக்கொன்றவர் பலரென்று கூறியவாறு. இங்ஙனம் அவர்கள் செய்தது - இராமன் வெகுவிரைவுடன் சாரிகைதிரிகையால் ஓரிடத்துள்ளானாகத்தோற்ற, அவனைக்குறியாகக்கொண்டுவிடுத்த அப்படைக்கலம் அதற்குள் அவ்விராமன் வேற்றிடத்துச் சென்றிடுவதனால், அங்கிருந்த அரக்கன்மேல் தாக்குவதனாலேயாம்: இங்ஙனம் ஒவ்வொருத்தர்படையும் இராமன்மீதுபடாது தம்மவர்மீது படுதலால், அச்சேனையோர் தம்மைத் தாமே மாய்த்துக்கொள்பவராயினா ரென்க. இச்செய்யுளில், ஒருபொருளுள்ள 'ஒருவன்' என்றசொல் பன்முறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையாம். இரண்டாமடியில் ஒரு வன் படை எனப்பிரியும். பி-ம்:—[1]உயர்வோர். [2]ஆயிரமேல், ஆயிரமும். [3]உண்ணுதலால். [4]உண்டதும். [5]உள்ளதுவே. இச்செய்யுள் சிலபிரதிகளில் "தேர்மேல்"என்ற அடுத்தபாடலுக்குப்பின் உள்ளது. (ருசஎ0)

உகச, உகரு—அந்த மூலபலவாக்கர்க்கு இராமன்தோன்றிய தோற்றம்.

தேர்மேலுளர் மாவொடு செந்தறுகட்
கார்மேலுளர் மாகடன் மேலுளரிப்
பார்மேலுள ரும்பர் பரந்துளராற்
போர்[1]மேல விராமர் புகுந்திடுவார்.

என்னும்படி யெங்கணு மெங்கணுமாய்த்
துன்னுஞ்[2]சுழ லுந்திரி யுஞ்சுடரும்
பின்னும்[3]மரு கும்முட லும்பிரியான்
மன்னன்மகன் வீரர் மயங்கினரால்.

இரண்டுகவிகள் ஒருதொடர்: ஒருங்கே பொருளுரைக்கப்படும்.

(இ - ள்.) (உகச) 'போரை மேற்கொண்டவராய்ப் புகுந்து அழிப்பவராகிய இராமர்,—தேர்மீதுஉள்ளார்: குதிரையுடனே, அழிப்பனபோல்தோன்றுகின்ற செந்நிறக்கண்களைக்கொண்ட யானையின் மீது உள்ளார்: பெரிய கடல்மீது உளர்: இந்தப்பூமியின்மீது உளார்: வானிற் பரந்துள்ளார்' என்று திகைக்கும்படி, தசரதசக்கரவர்த்தி திருமகன் எவ்விடத்திலும் எவ்விடத்திலும் பொருந்தி, பின்புறமும் அருகிலும் உடலிலும் பிரியாதவனாகி, நெருங்குவான்: சுழல்வான்: திரிவான்: சுடர்வான்: (அதுகண்டு) அரக்கவீரர் மயங்குவா ராயினர்; (எ-று.)—பி-ம்:—[1]மேவியவீரர், மேலயர்வீரர், மேலுமிராமர். [2]திரியுஞ் சுழலுந்தொடரும், திரியுஞ் சுடருஞ்சுழலும், திரியுந்தொடருஞ்சுழலும். [3]அருகும்மெதிரும். "ஒருவன்" (உகங) என்றபாடலையும் அரக்கர்கூற்றாகக்கொண்டு மூன்றுபாடலையும் ஒருதொடராக்கி யுரைப்பினுமாம். ()

வேறு.

உகசு.—ஸ்ரீராமனது கோதண்டத்திலுள்ள மணி கணகணென்று ஒலிக்க, சதுரங்கசேனைபடுதல் முதலியன நிகழ்தல்.

படுமத [1]கரிபரி சிந்தின பனி[2]வரை யிரத மவிந்தன, [3]விடு திசை செவிடு [4]பிளந்தன விரிகட [5]லளற தெழுந்தன, [6]அடுபுலி [7]யவுணர்த மங்கைய ரலர்விழி [8]யருவிகள் சிந்தின, கடுமணி [9]நெடிய வெனுஞ்சிலை கண[10]கண கணக ணெனுந்தொறும்.

(இ - ள்.) (ஸ்ரீராமனுடைய) நெடியதெனப்படும் வில்லிலுள்ள கொடியஓசையையுடைய மணி கணகணகண வென்று ஒலிக்குந் தோறும், மதம்படு கரியும் பரியும் சிந்தின; இமயமலைபோன்ற இரதம் அழிந்தன; பரந்த திசை செவிடுபட்டுப் பிளந்தன: பரந்த கடல் சேறுபட்டெழுந்தன; கொல்லுகின்ற புலிபோன்ற அரக்கருடைய மங்கையரின் பரந்தவிழியினின்று அவலக்கண்ணீரருவிகள் சிந்தின; (எ - று.) அளறதுஅது - பகுதிப்பொருள்விகுதி. பி - ம்:— [1]கரிகள். [2]வரையலதிரிந்தன. [3]விடுபடைதிசை. [4]பரந்தன. [5]அளறெழுந்தன. [6]விடு. [7]அவுணர்மங்கையர். [8]அருவி. [9]நெடியவெஞ்சிலை, சிலையினசைந்தன, நெடியவன்வெஞ்சிலை. [10]கடிகையொரரைசெழுகம்பலை,கணவெனுந்தொறும். இதன்பின் சிலபிரதிகளில் "ஆனையாயிரம்" (உஉஅ) என்ற பாடல் உள்ளது. (௩சஎ௩)

வேறு.

உகஎ.—இராமபிரானது விசை.

ஊனேறு [1]படைக்கை வீர ரெதிரெதி [2]ருருவந் தோறுங்
கூனேறு சிலையுந் தானுங் குதிக்கின்ற கடுப்பின் கொட்பால்
வானேறி னூர்க டேரு மலைகின்ற வயவர் தேருந்
தானேறி [3]வந்த தேரே யாக்கினான் றனியே மன்னன்.

(இ - ள்.) ஒப்பற்ற காளைபோன்றவனான ஸ்ரீராமன்,—ஊன்படிந்த படைக்கலமேந்திய கையையுடையவீரரின் எதிரெதிராக அவரவருருவந்தோறும் வளைவுமிக்க சிலையுந் தானுமாகக் குதிக்கின்ற வேகத்தின் தன்மையால்,—இறந்தவரின்தேரும் பொருகின்றவீரரின்தேரும் தானேறிவந்த தேர்போலத் தோன்றுமாறு செய்தான்; (எ - று.)

விசையின்மிகுதியால்,—வீரரில்லாததேரிலும் பொருகின்றவர்தேரிலும் தான் உளன்போலத் தோன்றலாயினன் ஸ்ரீராமனென்றவாறு. இவ்விராமன் கால்வைத்துவந்தது தரையிடமே யாகலாலும், அந்தத் தரை திரிபுரதகனகாலத்திற் சிவபிரானுக்குத் தேர்த்தட்டா யமைந்ததனாலும், தானேறிவந்த தேரேயாக்கினான் என்பதற்கு-தரைமட்டமாக்கினா னென்று பொருள் கூறுவாரு முளர். பி-ம்:—[1]படை. [2]ஊருந்தோறும், உறுக்குந்தோறும். [3]நின்ற. (௩சஎச)

உகஅ.—இராமபிரானது கைவிசையின் வருணனை.

காயிருஞ் சிலையொன் றேனுங் கணைப்புட்[1]டிலொன்றதேனும்
[2]தூயெழு பகழி மாரி மழைத்துளித் [3]தொகையின்மேல

ஆயிரங் கைகள் செய்த செய்தன வயலன் செங்கை
ஆயிரங் [4]கையுங் கூடி யிரண்டுகை [5]யாய வாறே.

(இ - ள்.) (பகைவரைக்) காயவல்ல பெரிய சிலை ஒன்றுதா னென்றாலும், அம்புப்புட்டில் ஒன்றுதா னென்றாலும் (அப்பிரானால்) தூவப் பட்டெழுகின்ற அம்புமழை மழைத்துளிகளின்தொகையைக்காட்டிலும் மிக்கன: (அப்போது) குற்றமற்ற இராமனுடைய செங்கை, ஆயிரங்கைகள்செய்த செயலைச் செய்தன: ஆயிரங்கை யொன்றுகூடி இரண்டுகை யானவாறு என்னஅதிசயம்!! (எ - று.)

இதுவும் அடுத்த செய்யுளும் - கவிக்கூற்று. சேனையிலுள்ளோரின்கூற்று இவை யெனக் கொள்ளினுமாம். ஆயிரங் கைகள்கொண்டு அம்புவிடுதல்தொழிலைச்செய்தால் எவ்வளவு செய்யலாமோ, அவ்வளவு படத் தன்இரண்டுகைகளாலும் இராமன் அம்புகளை விடுத்தா னென்ற வாறு. இங்கு ஆயிர மென்றது - மிகப்பல என்னும் பொருளது. பி-ம்: —[1]ஒன்றுமேனும், இரண்டுமேனும், ஆண்டுமேனும், காண்டுமேலும். [2]தூயவெம். [3]தொகைக்குமேலாம். [4]கைகள்கூடி, கையுங்கூட்டி. [5]ஆயவன்றே,ஆனதன்றே. (௩௪௭௫)

உ௧௯.—இராமனை அவன்செயலாற் பலமுகத்தவனெனல்.

பொய்யொரு [1]முகத்த னாகி மனிதனும் புணர்ப்பி [2]தன்றால்
மெய்யுற [3]வுணர்ந்தோம் வெள்ள மாயிர மிடைந்த [4]சேனை
[5]செய்புறு [6]விசய மெல்லா மொருமுகந் தெரிவ துண்டே
[7]ஐயிரு நூறு மல்ல வனந்தமா முகங்க ளம்மா.

(இ - ள்.) ஒருமுகத்தையுடையனாகி மனிதனாயிருக்கின்ற இந்தத் தோற்றம், (மெய் அன்று:) பொய்யேயாகும்: (இவ்விஷயத்தை), மெய்யாக வுணர்ந்தோம்: ஆயிரம்வெள்ளம் கணக்கோடு நெருங்கிய சேனை செய்த போர்ச்செயலையெல்லாம் ஒருமுகம் அறிவதென்பது உண்டோ? (இவனது முகம்),ஆயிரம்முகமேயும் அன்று: முகங்கள், அளவற்றனவாகும்; (எ - று.)

ஆயிரவெள்ளஞ் சேனையையும் இராமன் ஒருவனே யுணர்ந்து அழிப்பதால், இவன் ஒருமுகத்தையுடையவன்போலத் தோன்றினும் இத்தோற்றம் பொய்த்தோற்றமேயன்றி உண்மைத்தோற்றமல்ல: இவனுக்கு ஆயிரத்தினும் மேம்பட்ட மிகப்பெரியமுகங்கள் கண்ணுக்குப்புலனாகாது இருக்கவேண்டுமென்றவாறு. பி - ம்:—[1]மனித்தனாகி. [2]என்றல், என்ன, என்றால். [3]உணர்ந்த. [4]வீரர். [5]செய்வுறு, செய்யுறும். [6]வினையமெல்லாம். [7]கையிருநூறுகோடி. (௩௪௭௬)

உ௨௦.—சிவபிரான் முதலியோர்க்கும் இராமனெய்த அம்புகள் அளவிடமுடியாமற் போனமை.

கண்ணுதற் [1]பரமன் றானு நான்முகக் கடவு டானும்
[2]எண்ணுதுந் தொடர [3]வெய்த கோலென வெண்ண லுற்றார்

**பண்ணையால் [4]வகுக்க மாட்டார் தனித்தனிப் பார்க்க [5]லுற்றார்
ஒண்ணுமோ கணிக்க [6]வென்பா ருவகையி [7]னுயர்ந்த தோளார்.**

(இ - ள்.) கண்ணை நுதலிலேயுடைய பரமனான உருத்திரமூர்த்தியும் நான்முகக்கடவுளும் தொடர்ச்சிபொருந்த (ஸ்ரீராமன்) எய்த அம்பை எண்ணுவோமென்றுசொல்லி தனித்தனிப் பார்க்கலுற்று எண்ணத்தொடங்கினார்களாய், பெருந்திரளாயிருத்தலால் எண்ணமாட்டாதவராகி மகிழ்ச்சியினாற்பூரித்த தோள்களையுடையவராய் '(இந்தஅம்புகளை) எண்ணுதற்கு முடியுமோ?' என்பாராயினர்; (எ - று.)—பி-ம்:—[1]மூர்த்திதானும்,மாயன்றானும். [2]எண்ணுறும். [3]எய்வகொல்லெனும். [4]வகுப்ப,பகுக்க. [5]ஆற்றார். [6]என்றார். [7]உணர்ந்துகோளார், நிமிர்ந்த தோளார். இது சிலபிரதியில், "குடைக்கெலாம்" (உஉஉ) என்ற பாடலின்பின் உள்ளது. (ஙசஎஎ)

உஉக.—இந்திராதிதேவர்கள், அளவிடமுடியாத அம்புகளை ஸ்ரீராமன் எய்தமைபற்றி யதிசயித்தல்.

**வெள்ளமீ ரைந்து [1]நூறே விடுகணை யவற்றின் [2]மெய்யே
[3]உள்ளவா றுளவா மென்றோ ருரைகணக் [4]குரைத்து மேனுங்
கொள்ளையோ [5]ருருவை நூறு [6]கொண்டன பலவாற் கொற்ற
வள்ளலே [7]வழங்கி னானே வென்றனர் மற்றை வானோர்.**

(இ - ள்.) (பொரவந்த அரக்கர்சேனைத்தொகுதியோ), ஆயிரம் வெள்ளமாகும்: அந்தச்சேனைகளின்மீது (கொல்லுமாறு) விடுத்த கணை சேனையுள்ளவளவினவாக உள்ளவாமென்று பேச்சுக்காக ஒருகணக்குக் கூறுவோ மென்றாலும்மெய்யாகுமோ?[சரியாகுமோ?] (ஆகாது: எனெனின்), கொள்ளைகொள்கின்ற ஒவ்வோருருவையும் நூறுதுண்டாகச் செய்தவைபலஅம்புகளாகுமாதலால்: (ஆகவே, இவ்வாறான பெருந்திரளான அம்புகளையும்) வெற்றிபொருந்திய உதாரகுணமுடையவனான ஸ்ரீராமனே விடுத்தானே! என்று (வியந்து) மற்றைவானவர்கள் கூறினார்கள்; (எ - று.) கீழ்ச்சிவபெருமானும் பிரமனும் கூறியவற்றைச் சொல்லியதனால் இங்கு 'மற்றைவானோர்' என்றது. பி - ம்:—[1]நூறேல். [2]மென்மை, மெய்ம்மை. [3]உள்ளவாறுளதாமென்றோ ருரைக்கணக்கு,உள்ள ... உரைக்கணக்கு, உள்ளவாறுள்ளமென்றோருரைக்குரைக்கு. [4]உணர்துமேனும், உணர்ந்துமேலும். [5]உருவு. [6]கொண்டனன்கொண்டாலன்ன. [7]வழங்கினனே. (ஙசஎஅ)

உஉஉ.—முனிவர், ஸ்ரீராமபாணங்கள் அளவிடற்குமுடியாவெனல்.

**குடைக்கெலாங் கொடிகட் கெல்லாங் [1]கொண்டன குவிந்த
கொற்றப், படைக்கெலாம் பகழிக் கெல்லாம் [2]யானைதேர் பரிமா
வெள்ளக், கடைக்கெலாந் துரந்த வாளிக் [3]கணித்ததற் [4]களவை
காட்டி,[5]அடைக்கலா மறிஞர் யாரேயென்றனர் முனிவ [6]ரப்பால்.**

(இ - ள்.) அப்பால் முனிவர்கள், குடைகளும் கொடிகளும் (போர்க்களத்தை)வியாபித்துக்கொண்டனவாகித் திரண்டுள்ள வெற்றிபெற்ற படைக்கலங்களும் (அரக்கர்விடுத்த) அம்புகளும் யானை தேர் பரிமாஎன்ற வெள்ளவெல்லையுள்ளனவும் ஆகியவற்றுக்கெல்லாம் (அழி

வுண்டாக ஸ்ரீராமன்) துரந்த அம்புகளை எண்ணி யதற்கு ஓரளவைக்கா ட்டி அறுதியிடுதற்குத்தக்க அறிஞர் யாவர்தாம்? என்றனர்; (எ - று.)

[2]யானைதேர் பரிமாவாதிக் கடைக்கெலாம் என்றபாடத்துக்கு - யானைதேர்பரிமாமுதலாக (பதாதி)இறுதியாக உள்ள சேனைகட்கெல் லாம்என்று பொருளுரைக்க. பி - ம்:—[1]கொண்டெனக்,கொண்டனர். [3]கணித்ததிற்கு. [4]அளவை'காட்டி, அளவைக்காட்டி. [5]அடைக்கெலா மறிஞர், இடைக்கலாமுனிவர்.[6]இப்பால். [3]கணிதத்திற்குஎன்றும்படிக்க லாம். இங்கேஒருபிரதியில்

இட்டதோர்பெய ரினீரை யாயிரம்
பட்டபோ தோடுமோர் படுகு றைத்தலை
கட்டறா ருயிரங் கவந்த மாடிடத்
தொட்டனன் சிலையணி மணிது ணுங்கென.

மாத்திரை மணிதொ னித்திடப்
போர்த்தொழி லரக்கர்மேல் பொருத பூசலில்
ஏத்திடை யிடைவிடா தேழு நாழிகை
சீர்த்திறன் சிலைமணி கிணிகி ணென்றமைத.

என்று இரண்டுபாடல்கள் காணப்படுகின்றன. அந்தப்பிரதியில் ''ஆனையாயிரம்'' (உஉஅ) என்ற பாடல் காணப்படவில்லை. (௩௪எக)

உஉ௩.---அரக்கரின் துண்டிக்கப்பட்ட கை கால் கழுத்து முதலியன கிடந்தவற்றின் வருணனை.

[1]கண்டத்துங் கழுத்து மீதாய்க் கபாலத்துங் கடக்க [2]வுற்ற
சண்டப்போ ரரக்கர் தம்மைத் [3]தொடர்ந்துகொன் றமைந்த
பிண்டத்திற்[4]கருவாந் தன்பே ருருக்களைப்[5]பிரமன் றந்த[ தன்மை
அண்டத்தை நிறையப் பெய்து [6]குலுக்கிய தனைய தான.

(இ - ள்.) கொடும்போர்செய்கின்ற அரக்கரைத் தொடர்ந்து (அவர்களுடைய) கண்டத்திலும் கழுத்துக்குமீதாக மண்டையோட்டி லும் கடந்துசென்ற அம்புகள் கொன்றமைந்த தன்மை,—கருப்பிண் டத்துப்பொருந்தியதன்னுடைய மிக்க உருக்களையும்பிரமன்படைத்த அண்டத்தில்நிறைய இட்டுக்குலுக்கிய தன்மையையொத்தன; (எ-று.)

இராமசரங்களால் அறுபட்டுக் கைவேறு கால்வேறு கழுத்துவேறு கத்துண்டிக்கப்பட்டு அச்சேனைகிடந்ததன்மை, பிரமன் தான்படைக்க வேண்டிய பிராணிகள் கருவாயிருக்க, அக்கருக்களை அண்டத்துக் குள் இட்டுவைத்தாற்போலிருந்ததென்றவாறு: தன்மைத்தற்குறிப்பே ற்றவணி. பி - ம்:—[1]கண்டத்திற்கீழுமேலும், கண்டத்துங்கண்மீதுற்ற, கண்டத்துங்கீழுமீதிற். [2]உற்றுன். [3]தொடர்ந்து கோட்புணருந்தன்மை, தொடர்ந்துகோல்புணருந்தன்மை. [4]கருவதான. [5]மற்றந்த.[6]குலுக்கியத னயனன்றன்,குலுங்கியதனையனுறன். 'பிண்டத்துக்கருவாகும் பேரு ருக்களையவந்த' என்று ஒருபிரதியில்மூன்றுமடி காண்கின்றது. ()

உஉச.—பத்துக்கோடி அரக்கவீர ரிறந்துபட, மற்றையோர் தெய்விகப்படைகளைப் பிரயோகிக்கக்கருதி ஸ்ரீராமனை நெருங்குதல்.

[1]கோடியை யிரண்டு தொக்க படைக்கல [2]மள்ளர் கூவி
[3]ஓடியோர் [4]பக்க மாக வுயிரிழந் [5]துலத்த லோடும்
[6]வீடிநின் றழிவ தென்னே விண்ணவர் படைகள் வீசி
மூடுது மிவனை [7]யென்றி யாவரு [8]மூண்டு மொய்த்தார்.

(இ - ள்.) பத்துக்கோடியென்னுந் தொகுதியினரான படைக்கல மேந்திய அரக்கவீரர் கதறிக்கொண்டு ஒருபக்கமாக ஓடிஉயிரையிழந்து அழிந்தவளவிலே,—'(நாம் சாதாரணப்படைக்கலங்களை)வீசி உயிர் கொல்லப்பட்டு நின்று அழிவது எதற்காக? தேவர்களின் அஸ்திரங்களை விடுத்து இவனை மறைப்போம்' என்றுகருதி யாவரும் அங்ஙன்செய்ய ஒருப்பட்டு நெருங்கினார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]கோடியே. [2]மன்னர் கூடி, மள்ளர்கூடி. [3]மூடி. [4]பாகம். [5]உலர்தலோடும், உழைத்தலோடும். [6]வீடியின்று. [7]என்ன. [8]மூடுகி. (ருசஅக)

உஉரு.—அரக்கர் தேவாஸ்திரங்களை விட, ஸ்ரீராமன் அவைகளை அந்தந்தத்தேவாஸ்திரங்களாலேயே தடுத்தல்.

விண்டு[1]வின் படையே யாதி [2]மேவயன் படையீ றாகக்
கொண்டொருங் குடனே விட்டார் குலுங்கிய தமரர் கூட்டம்
அண்டமுங் [3]கீழ மேலா வாகிய [4]ததனை யண்ணல்
கண்டொரு முறுவல் காட்டி யவற்றினை யவற்றாற் காத்தான்.

(இ - ள்.) திருமாலின்படைக்கலம்முதல் (பெருமை) பொருந்திய பிரமன்படை ஈறாகஉள்ளவற்றை (அரக்கர்) கைக்கொண்டு உடனே ஒருசேரவிட்டார்கள்; (அதுகண்ட) தேவர்களின்கூட்டம் நடுநடுங் கிற்று; அண்டமும் கீழ்மேலாக மாறியது; அவ்வாறு நேர்ந்தமையைப் பெருமையிற்சிறந்தவனாகிய ஸ்ரீராமன் கண்டு ஒருபுன்சிரிப்புச்செய்து அந்தத்தேவாஸ்திரங்களை அத்தேவாஸ்திரங்களாலேயே தடுத்திட் டான்; (எ - று.)

வைஷ்ணவாஸ்திரத்தை வைஷ்ணவாஸ்திரத்தினாலும், பிரமாஸ் திரத்தைப் பிரமாஸ்திரத்தினாலும், ஐந்த்ராஸ்திரத்தை ஐந்த்ராஸ்திரத் தினாலும் என இவ்வாறாக எய்து தடுத்திட்டான் ஸ்ரீராமனென்றவாறு. விண்டுவின்படை - வைஷ்ணவாஸ்திரம். பி-ம்:—[1]வன். [2]வெயிலவன், வெய்யவன். [3]கீழமேலாய்த்தாக்கியது, கீழமேலதாகியது, கீழும்மேலு மாகியது. [4]அனைய. (ருசஅஉ)

உஉசு.—இராமன் அரக்கர்தலைகளை அம்புகளாற்கொய்து வீழ்த்தல்.

தானவை தொடுத்த போது தடப்பரி துலகந் தானே
பூநனி வடவைத் தீயிற் புக்கெனப் [1]பொரிந்து போமென்று
[2]ஆனது [3]தெரிந்த [4]வள்ள லளப்பருங் கோடி யம்பால்
ஏனையர் தலைக ளெல்லா மிடியுண்ட மலையி னிட்டான்.

(இ - ள்.) 'தான் அவ்வாறான தெய்விகாஸ்திரங்களைத் தொடுத்தால்; அப்போது (பிறரால் அவை) தடுத்தல் அரியதாகும்: (மேலும்), மலரானது வடவைத்தீயில் நன்கு புகுந்தாற்போல, இவ்வுலகம் தானே பொரிந்துபோய்விடும்' என்று பொருந்திய அந்தவிஷயத்தைஆராய்ந்தறிந்தஉதாரகுணமுள்ள ஸ்ரீராமன், — (அவ்வரக்கரைக் கொல்லுமாறு தெய்வாஸ்திரங்களைவிடுக்காமல்), அளத்தற்கரியனவானகோடிக்கணக்கான அம்புகளாலேயே மாற்றாராகிய அரக்கரின் தலைகளையெல்லாம் இடிவீழ்ந்த மலைபோலத் தோன்றும்படி வீழ்த்தினான்; (எ - று.)—உலகம்பொரிந்து போமேயென்று கருணைகொண்டு தெய்வாஸ்திரத்தை விடாதிருந்தமையால், ஸ்ரீராமனை 'வள்ளல்' என்றார். பி ம்:—[1]போனதாமென்று, பொரிந்துமென்றால். [2]ஆனவை, தானவை. [3]மறந்த. [4]அண்ணல். (௩௪௮௩)

உஉஎ.—அரக்கவெள்ளம் அவியப் பூமிதேவி பாரம்நீங்குதல்.

ஆயிர வெள்ளத் தோரு மடுகளத் தவிந்து வீழ்ந்தார்
மாயிரு ஞாலத் தாடன் வன்பொறைப் பார நீங்கி
மீயுயர்ந் [1]தெழுந்தா ளன்றே விங்கொலி வேலை நின்றும்
[2]போயொருங் கண்டத் தோடுங் கோடியோ சனைகள் பொங்கி.

(இ - ள்.) ஆயிரவெள்ளந்தொகையுள்ள அரக்கப்படையைச்சேர்ந்தோர்யாவரும், போர்க்களத்திலே உயிரொழிந்து வீழ்ந்தார்கள்; மிகப்பெரியபூமிக்குஉரியதேவி தனது வலிய பாரமாயிருந்தசுமைநீங்கியதனால், பேரொலியையுடைய கடலினின்றும் ஒருசேர வெளிப்பட்டுத் தன்னண்டத்தோடும் கோடியோசனைதூரம் கிளர்ந்துபோய் மேலெழுந்து ஓங்கினாள்; (எ-று.)—அன்றே - தேற்றம்.

பாரத்தாற் பெருங்கடலுக்குள் அழுந்திக்கிடந்த பூமிதேவி உலகவுருண்டையோடு கோடியோசனை மேலெழுந்து கிளர்ந்து ஓங்கினளென்க. பி - ம்:—[1]எழுந்தானன்றே, எழுந்ததன்றே. [2]போயொருகண்டத்தோடும். (௩௪௮௪)

வேறு.

உஉஅ.—கவிக்கூற்று: மிகப்பலவரக்கர்மடிந்தமையை நிரூபித்தல்.

ஆனை யாயிரந் தேர்பதி னாயிர [1]மடர்பரி யொருகோடி [றொடுஞ்
சேனை காவல ராயிரம் பேர்படிற் [2]செழுமணிக் கவந்தமொன்
[3]கான மாயிர மாயிர கோடிக்குக் கவின்மணி கணிலென்னும்
[4]ஏன வம்மணி யேழரை [5]நாழிகை யாடிய தினிதன்றே.

(இ-ள்.) யானைகள் ஆயிரமும் தேர்பதினாயிரமும் அடர்க்குந்தன்மையுள்ள குதிரைகள் ஒருகோடியும் சேனைகாவலர் ஆயிரவரும் இறந்தால், வளப்பமுள்ள அழகிய கவந்தம்ஒன்று (போர்க்களத்திலே எழுந்து) ஆடும்: காடுபோன்ற [பெருந்திரளான] ஆயிரமாயிரகோடிக் கவந்தம் எழுந்தாடுதற்கு (ஸ்ரீராமனது கோதண்டத்திற்கட்டியுள்ள அழகியமணி (ஒருமுறை) கணீரென்று ஒலிக்கும்: மற்றை அம்மணி (இந்

தப்போரிலோ) இனிதாகஎழுநூறுநாழிகை யாடியது;(எ-று)—அன்றே-தேற்றம்.

இப்போரில் இறந்தவர் மிகப்பலரென்பது, இவ்வாறு விளக்கப் பட்டது: இச்செய்யுளிற்கூறியவிஷயத்தைப் பிள்ளைப்பெருமாளையங்கார் "பேரொத்தவாயிரம்பேர்மடிந்தாற் பிறக்குங்கவந்த, நேரொத்தவாடு மதாயிரமாடினெடுஞ்சிலையி, னேரொத்தகிண்கிணிசற்றோலிடுமெதொர் யாமநின்று, காரொத்தமேனியரங்கர்தம்போரிற்கறங்கியதே" என்று கூறியுள்ளமை காண்க. இச்செய்யுளையடியொற்றி, "அனேகமாயிரம் பேர்படக்கவந்தமொன்றுமெக்கவந்தங்க ளனேகமாயிர மாடவெஞ் சிலைமணியசைந்தொரு குரலார்க்கு, மனேக நாழிகையருச்சுனன் சிலைமணியார்த்த தக்களம்பட்ட, வனேகமாயிரம்விருதரை யளவ றிந்தார்கொலோ வுரைக்கிற்பார்'' என்று வில்லிபாரதத்திற் கூறிய மையும் கருதத்தக்கது. பி - ம்:— [1]அடற்பரி. [2]கவந்தமொன்றெழுந் தாடும். [3]கானமாயிரங்கவந்தநின்றுடல்விற் கட்டிய மணியொருதி னென்னும், கானமாயிரங்கவந்த நின்றுடிடிற்கட்டியகடைமணிகணி னெனும். [4]எனையிம்மணி, எனையம்மணி. [5]இடைவிடாதாடினவிலங் கை, இடைவிடாதாடின திலங்கை. இடைவிடாதாடியவன்றே. "சேனை காவலத்தாயிரத்தாயிரஞ்சிதைந்திடிற்கவந்த மொன்றுடும்' என்று இர ண்டாமடி சிலபிரதியிற்காணப்படுகின்றது. (௩௪அ௫)

வேறு.

உஉகூ.—தேவர்முதலியோர் துயர்நீங்குதல்.

[1]நினைந்தன முடித்தே மென்று வானவர் துயர [2]நீக்தார்
[3]புனைந்தனன் வாகை [4]யென்று விந்திர னுவகை பூத்தான்
[5]வனைந்தன வல்லா வேதம் [6]வரம்புபெற் றுயர்ந்த [7]மாதோ
அனந்தனுந் தலைக ளேந்தி யயர்வுயிர்த் [8]தவலந் தீர்ந்தான்.

(இ - ள்.) தேவர்கள் நினைத்தவை முடியப்பெற்றோமென்று துன் பம் நீங்கினார்கள்; (ஸ்ரீராமன்) வெற்றிமாலை சூடினான் என்று, இந்தி ரன் மகிழ்ச்சிதோன்றப்பெற்றான்; (ஒருவரால்) செய்யப்படாதனவான வேதம் நிலையைப்பெற்றுமேம்பட்டன;(பூமியின்கீழ்நின்றுதாங்குகின்ற) ஆதிசேஷனும் (தலைப்பொறைகுறைந்ததனால்) தலையெடுத்து மூச்சு விடப்பெற்று வருத்தம்நீங்கினான்; (எ - று.)---பி - ம்:---[1]நினைந்தது முடித்தோம். [2]தீர்ந்தார். [3]புனைந்தனென். [4]என்பான். [5]வனைந்தனரெல் லாம், வனைந்தனவல்ல. [6]வாழ்வு. [7]மாந்தர். [8]அல்லல். (௩௪அகூ)

உஙo.—தேவர்முதலியோர் ஸ்ரீராமனை வாழ்த்துதல்.

**தாய்படைத் துடைய செல்வ [1]மீகெனத் தும்பிக் கீந்து,வேய் படைத் [2]துடைய கானம் விண்ணவர் தவத்தின் மேவி, தோய் படைத் [3]தொழிலால் யார்க்குந் துயர்[4]துடைத் தானை நோக்கி, [5]வாய்படைத் துடையா ரெல்லாம் வாழ்த்தினார் வணக்கஞ் செய் தார்.**

(இ - ள்.) தாய் '(நீ) படைத்த செல்வத்தை ஈவாயாக' என்று சொல்ல, (தன்) தம்பிக்கு (அவ்வரசச்செல்வத்தை)க்கொடுத்திட்டு, மூங்கில்பொருந்திய காட்டில் தேவர்கள்செய்த தவத்தினாற்பொருந்தி, மேற்கொண்ட படைக்கலத்தொழிலால் யாவர்க்கும் துன்பத்தைப் போக்கியவனான ஸ்ரீராமனைப்பார்த்து,வாயைப்படைத்தவர் யாவரும் வாழ்த்தினவராய் வணங்கலானார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]ஈதென· [2]அன்னைய. [3]தொழிலோர். [4]கெடுத்தானை. [5]வாய்படைத்தார்களெல்லாம், வாய்படைத்துடையாரந்தோ. (௩௪அஎ)

௨௩க.—தேவர்கள்வாழ்த்தப் போர்க்களத்தில்நிற்கும் ஸ்ரீராமபிரானது தோற்றம்.

[1]தீமொய்த்த வனைய செங்க [2]ணரக்கரை முழுதுஞ் சிந்திப்
பூமொய்த்த கரத்த [3]ராகி விண்ணவர் போற்ற நின்றான்
பேய்[4]மொய்த்து நரிக ளீண்டிப் பெருப்[5]பிணம் பிறங்கித் தோன்
ஈமத்துட் [6]டமிய னின்ற கறை[7]மிடற் றிறைவ னொத்தான். [றும்

(இ - ள்.) தீமொய்த்தாற்போன்ற செந்நிறம்படைத்த கண்களை யுடைய அரக்கர்யாவரையும் (போர்க்களத்தில்) வீழ்த்தியதனால், பூநெருங்கியகைகளையுடையவராய்த் தேவர்கள்யாவராலும் துதிக்கநின்றவனான ஸ்ரீராமன்,பேய்மொய்த்து நரிகள்நெருங்கி மிக்கபிணங்கள் விளங்கித்தோன்றுவதான மயானத்துள்ளே தனிப்பட்டவனாய் நின்ற (நஞ்சுக்) கறையைக்கண்டத்திற்கொண்டுள்ள சிவபிரானையொத்தான்; (எ - று.)—பி - ம்.—[1]தீயெரித்தனைய. [2]இராக்கதர்தம்மைச். [3]ஆதி. [4]மொய்த்த. [5]பிணக்களத்தில். [6]தனியே. [7]மிடற்றவனை,மிடற்றிறையும்.

௨௩௨.—இதுவும் அது.

[1]அண்டமாக் களமும் வீந்த [2]வரக்கரே வுயிரு [3]மாகக்
கொண்டதோ ருருவந் தன்னா லிறுதிநாள் வந்து [4]கூட
[5]மண்டுநாண் மறித்துங் [6]காட்ட மன்னுயி ரனைத்தும் வாரி
[7]உண்டவன் றானே யான [8]தன்னொரு மூர்த்தி யொத்தான்.

(இ - ள்.) பெரிய போர்க்களம் அண்டமும், வீந்த அரக்கரே (அவ் வண்டத்துள்ள) உயிர்களுமாக,(அங்கு ஸ்ரீராமன் தான்)கொண்டதான ஓருருவத்தினால் யுகாந்தகாலம் வந்துகூட, ஸ்ருஷ்டிகாலத்தில் மீண் டும் எல்லாவற்றையும் படைத்தற்கு நிலைபெற்றபிராணிகளையெல்லாம் வாரியுண்டவன் தானேயான தன்னொருமூர்த்தியை யொத்தான்.

அரக்கரையெல்லாம் மடியச்செய்து தான் அங்குத் தனித்துநின்ற ஸ்ரீராமன் யுகாந்தகாலத்து(எல்லாவுயிர்களையும்)வாயுட்கொண்டுநிற்கும் திருமாலை யொத்தா னென்க. பி-ம்:—[1]அண்டமீதளவுஞ்சேர்ந்த, அண் டமதளவவீந்த. [2]அரக்கரெவ். [3]மாளக். [4]கூடி. [5]மண்டுநென்மறிந்தும், மண்டுநாண்மறித்துக். [6]கொண்ட. [7]உண்டதான். [8]உருத்திர. (௩௪அக)

உ௬௩.—தேவர்கள் மலராலும் சந்தனத்தாலும் உபசரிக்க, ஸ்ரீராமன் இலட்சுமணனுள்ளவிடம் நோக்கிச்செல்லல்.

ஆகுலந் [1]துறந்த தேவ ரள்ளினர் சொரிந்த வெள்ளச்
[2]சேகறு மலருஞ் சாந்துஞ் செருத்தொழில் வருத்தந் தீர்க்க
[3]மாகொலை செய்த வள்ளல் வாளமர்க் களத்தைக் கைவிட்டு
ஏகின னிளவ லோடு மிராவண னேற்ற [4]கைம்மேல்.

(இ-ள்.) துன்பம்நீங்கிய தேவர், அள்ளிச்சொரிந்த பெருந்தொகையான குற்றமற்ற மலர்களும் சந்தனமும் போர்த்தொழிலால் விளைந்த வருத்தத்தைத் தீர்க்க, (அரக்கரைப்) பெருங்கொலைசெய்த வள்ளல் கொடிய அந்தப்போர்க்களத்தை விட்டு, இளையபெருமாளுடனே இராவணன்எதிர்த்த போர்க்களத்தைநோக்கிச் சென்றான்; (எ - று.)

கீழ் அறுபதாஞ்செய்யுள்முதல் பத்துச்செய்யுள்வரை—இராவணன்பொருமாறுவரின் அவனைச் சார்ந்தோரால் குரக்குச்சேனைக்குத் தீங்குநேராதவண்ணம் அநுமான் வீடணன் சுக்கிரீவன் இவர்களையும் அவ்விளையபெருமாளுக்குத் துணையாக அமையும்படி ஏவி, இப்பால் மூலபலத்தோடு ஸ்ரீராமன் பொருததாகக் கூறியதனால், அந்த மூல பலத்தை வென்ற ஸ்ரீராமன் இராவணனோடு தன்தம்பி பொரும் பக்கம்நோக்கிச் செல்லலானானெனக் கூறுகின்றனரென்க. பி-ம்:—[1]துறக்கத். [2]சேகுறு. [3]மாகுலஞ். [4]போர்மேல். (௩௪௯0)

உ௬௪.—கவிக்கூற்று: மூலபலவதை கூறினோம்: இனி, இராவணனுடன் இலக்குமணன்பொருதசெயலைக் கூறுவோமெனல்.

[1]இவ்வழி [2]யியன்ற வெல்லா மியம்பினு மிரிந்து போன
தெவ்வழி யாற்றல் வெற்றிச் [3]சேனையின் செயலுஞ் சென்ற
வெவ்வழி யரக்கர் கோமான் செய்கையு மிளைய வீரன்
எவ்வமி லாற்றற் போரு [4]முற்றுநா [5]மியம்ப லுற்றாம்.

(இ - ள்.) இங்கு [ஸ்ரீராமபிரான்போர்செய்தவிடத்து] நிகழ்ந்தன எல்லாம் கூறினோம்: (இனி),—நிலைகெட்டுச்சென்ற பகைவரை யழிக்கவல்ல வல்லமைபொருந்திய வெற்றியுள்ள குரங்குச்) சேனையின் செயலும், எதிர்த்துச்சென்ற கொடியமுறைமையைக்கொண்ட அரக்கர்தலைவனான இராவணன்செய்கையும் இளையபெருமாளுடைய குற்றமற்ற வல்லமைபொருந்திய போரும் முழுவதையும் நாம் சொல்லத்தொடங்கினோம்; (எ - று.)—பி - ம்: —[1]இவ்வுழி. [2]இயன்றவெல்லாம். [3]சேனையுஞ்செயலும், சேனையின்செலவும். [4]உற்றதும். [5]விளம்பலுற்றாம். இச்செய்யுள் சிலபிரதியில் "பெரும்படைத்தலைவர்" என்ற பாடலுக்குப் பின் அடுத்தபடலத்தின் முதற்செய்யுளாக உள்ளது. ()

உ௬௫.—நிலைகெட்டுச் சென்ற குரங்குச்சேனையும் மீளுதல்.

பெரும்படைத் [1]தலைவர் யாரும் பெயர்ந்திலர் [2]பெயர்ந்து
போய்நாம், விரும்பினம் வாழ்க்கை யென்றால் [3]யாரிடை விலக்
கற் பாலார், வரும்பழி துடைத்தும் [4]வானின் வைகுதும் யாமு

மென்று, இருங்கடல் பெயர்ந்த தென்னத் [5]தானையு மீண்ட திப்பால்.

(இ - ள்) பெரியசேனைத்தலைவரெல்லாரும், (போர்க்களத்தினின்று) மீண்டாரில்லை: [மீண்டும் போர்க்களத்திற்கே சென்றிட்டார்கள்]; மீண்டுபோய் நாம் வாழ்க்கையை விரும்பினோமென்றால் [உயிர் வாழ்தலைவேண்டி நாம் போர்க்களத்தினின்று மீண்டிட்டோமானால்], இடையே தடுத்தற்குஉரியார் யாவர்? [எவருமில்லை]: ஆயினும், வரக்கடவ பழியைத் துடைப்போம்: (போர்க்களத்துச்செல்வதனால் இறப்போமென்றாலும்), யாமும் வீரசுவர்க்கத்துக்குச்செல்வோம் என்று உறுதிகொண்டு, பெரியகடல் நிலைபெயர்ந்தாற்போல வானரசேனையும் இங்கு(ப் போர்க்களம் நோக்கி) நிலைபெயர்ந்துசென்றது; (எ-று.)

வானரச்சேனையோடியமை கீழ் இருபத்தேழாஞ்செய்யுள்முதல் கூறப்பட்டுள்ளமை காண்க. அங்ஙனம் ஓடிச்சென்ற வானரங்கள் தமதுதலைவர்கள் மீண்டு போர்க்களத்தைச் சேர்ந்தமையாலும்,இலக்குமணன் தம்மைக் காப்பாற்ற ஒருப்பட்டமையாலும், மனத்தில் துணிவு கொண்டுமீண்டதென்பது,இங்குக் கூறப்பட்டது.வானரத்தலைவர் மீண்டமை, கீழ் ஐம்பத்தெட்டாஞ்செய்யுளிற் கூறப்பட்டுள்ளது. பி-ம்:— [1]தலைவர்பொன்றயாமெலாம்,[தலைவர்போன்றயாமெலாம்என்றுபடிக்க இடமுண்டு]. [2]பிரிந்துபோனேம். [3]யார்பழி. [4]மாண்டுவைகுதும்வானிலென்னை. [5]சேனையும். ஒருபிரதியில் படைக்காட்சிப்படலம்முதல் இதுவரையிலுமுள்ளபகுதி, மூலபலவதைப்படலம் என்ற பெயரோடு காண்கின்றது. (௩௪௯௨)

ஸ்ரீ வான்மீகிமுனிவர் இந்த மூலபலவதையைக்கூறிய வகைவருமாறு:—அநந்தரம் இராவணன் சபைகூடிச் சேனாபதிகளைநோக்கி 'நீவிர் உங்களுடைய முழுவலிமைகொண்டு ஸ்ரீராமனைத் தொலைக்க: அவனை யழிக்கமுடியாமற்போனாற் பெரும்போர்செய்து அவ்விராமனுடையஉடலைப் புண்படுத்துக:பிறகு நானே அவனைக்கொல்வேன்'என்றனன். சேனாபதிகள் இசைந்து தேரேறிச் சேனைகள்சூழச்சென்று போர்க்களம் குறுக, இருதிறத்தார்க்கும் கடும்போர் நிகழ்ந்தது. அப்போது இராக்கதர்களின் கடும்போரைத் தாங்கமாட்டாது வானரங்கள் நிலைகெட்டு ஸ்ரீராமனைச் சரணமடைந்தன. அவ்விராமன் வெகுவிரைவோடு சாரிதிரிந்து அரக்கச்சேனையையழிக்கையில் இங்குள்ளானென்று அவனைக் காணமுடியவில்லை: இராமன் செல்லுமிடத்துள்ள அரக்கனையே இராமனாகத்திகைத்து, அரக்கர் தம்மைத்தாமே வதித்தலும் புரிந்தனர்.அன்றியும்,அச்சத்தினால் இராமனொருவனையே அனேகமாயிரம் இராமபிரானாகவும் கண்டனர். அப்போரில் முகூர்த்தகாலத்திற்குள், எழுகோடியே இருபதுலட்சந்தேர்களும், பதின்மூன்றுகோடியே பன்னிரண்டுலட்சத்து இருபதினாயிரம் யானைகளும், பத்துக்கோடியே யிருபதுலட்சத்தறுபதினாயிரம் குதிரைகளும், நூற்றுநாற்பத்தைந்துகோடியே எண்பதுலட்சம் காலாட்களும், சுதரிசனமென்ற சக்

காம்போற் சுழன்று பொருந்த அந்த ஸ்ரீராமனால் தொலைந்தன. அநந்தரம் எஞ்சின அரக்கர் அச்சத்தாற் குலைந்து இலங்கைக்குஓடினர். அந்தயுத்தபூமி பெரியமயானம்போற் காணப்பட்டது. அப்போது ஸ்ரீராமன் தன்னருகிலிருக்கும் சுக்கிரீவன் முதலியோரை நோக்கி, 'நான் முகூர்த்தகாலத்திற்குள் மூலபலத்தையெல்லாம் ஒழித்தது மாயையினாலன்று: அஸ்திரங்களைத் தொடுத்துவிடும் வல்லமையினால்தான் ஆயிற்று: இவ்வாறான திறல் சங்காரத்தொழிலுக்கு உரிய சிவபிரானுக்கும் எனக்குமே உள்ளது' என்றான். அப்போது கடவுட்படைகளிலும் மற்றைப்படைக்கலங்களிலும் தேர்ந்துள்ள வல்லமைவாய்ந்த அந்த ஸ்ரீராமன் அரக்கர்சேனையையெல்லாம் ஒழித்தது குறித்துவானத்தில் தேவர்களும் கந்தர்வர்களும் சித்தர்களும் முனிவர்களும்கூடி வாயாரப்புகழ்ந்துகொண்டாடினர்.

மூலபலவதைப்படலம் முற்றிற்று.

---

## ௩௧ - ஆவது வேலேற்றபடலம்.

ஸ்ரீ விபீஷணனுழ்வான்மீது இராவணனெறிந்த வேலை இளையபெருமாள் தாம் ஏற்றதைக் கூறும் படலமென்பது, பொருள்

மூலபலத்தைக்கண்டு அஞ்சியோடி அங்கதனால்தேற்றப்பட்டுத் தலைவர்கள் மீளுதலும், தாமும் மீண்ட வானரசேனைகள் இராவணன் சேனையுடன் தம்மைநோக்கி யுத்தகோலாகலத்தோடு வருவதுகண்டு யுத்தத்தில் மூள, இருதிறத்துச்சேனைகளும் கைகலந்துபொருகையில், இராவணன் தன்னுடையசேனைவலியொடுங்குவதுகண்டு கொதித்துக் கடுங்கணை பொழிய, வானரசேனை நிலைகெடுவதாயிற்று: அப்போது இளையபெருமாள் அவ்வானரசேனைகளை 'அஞ்சற்க'என்று நிலைநிறுத்தி, இராவணனோடு கிட்டிப்பொர, அரக்கன் இலட்சுமணனது திறமையைக் கண்டு சிந்தைகொண்டு மோகநாஸ்திரத்தை விடுக்க, விபீஷணன்பேச்சினால் இலக்குமணன் அதனை விஷ்ணுவின்படைகொண்டு தடுத்திட்டான். அதுகண்டு சினம்மூண்டு இராவணன் மயன் தந்த வேலைவிபீஷணன்மீது எறிய, விபீஷணன் அதன்மகிமையையெடுத்துக் கூறவே இலக்குமணன் அதனைத் தன்மார்பில் ஏற்குமாறுசெல்ல, விபீஷணன் அவனைமுந்த அவர்களைவிலக்கி அங்கதனும் சுக்கிரீவனும் அநுமானும் என இவ்வாறு முந்துறலானார்கள்: அதற்காக அவர்கள்பட்ட அவத்தைக்கு ஓரெல்லையில்லை. இறுதியாகச் சரணாகதனைக் காக்கவேண்டுமென்ற உறுதியான கருத்துடனே இளையபெருமாள் யாவரையும் முந்திஅந்தவேலைத் தன்மார்பிலேற்று மூர்ச்சையாயினன். அப்போது விபீஷணன் கடுங்கோபங்கொண்டு இராவணனது தேர்க்குதிரைகளை யொழித்தான். ஒழிக்கவும், இராவணன் வானத்தின்மீதுநின்று விபீஷணன்மீதும் அநுமான்மீதும் அம்புமழைபொழிந்து, 'என்காரியம் முடிந்தது' என்று சொல்லி இலங்கைக்குச் செல்ல,

விபீஷணன் 'எங்கடா ஓடிப்போகிருய்? இலட்சுமணனை வேலால் உயிர்வாடச்செய்த உன்னைக் கொன்று 'நானும்உயிர்மாய்வேன்' என்று தொடர, இராவணன் 'விபீஷணப்பசுவால் இனி நமக்குஎன்ன? வந்த காரியம் முடிந்திட்டது' என்று அவன்பேச்சை இலட்சியஞ்செய்யாமல் இலங்கையிற்புகுந்திட்டான். பிறகு வானரரும் விபீஷணனும் பெருந் துன்பத்தையடைந்தனராக, 'இலட்சுமணன் இறந்தபின் நான் உயிர் வாழேன்' என்று விபீஷணன் இறக்கத்துணிய, சாம்பவான் தடுத்து, 'அநுமான் ஒஷதிகொணர,இலட்சுமணன் உயிர்பெறுவான்' என்றுகூறி யாவரையும் சமாதானப்படுத்த, சாம்பவான்மொழிப்படியே அநுமான் ஒஷதிகொணர்ந்து இலட்சுமணனை யுயிர்ப்பிக்க, உயிர்பெற்றெழுந்த இலட்சுமணன் விபீஷணன் தீங்கின்றியிருப்பதையுணர்ந்து மகிழ, பிறகு யாவரும் இராமபிரானைச்சேர்ந்துவணங்கினராக, சாம்பவான் நிகழ்ந் தவைகளை இராமபிரானிடம்கூறினன். அப்பிரான் அகமகிழ்ந்து அநு மானுக்கு முகமனுரைத்துவாழ்த்தி இலட்சுமணனைத்தழுவி அவன்செய லைப்பாராட்டி, ஒருமலையிலினைப்பாறியிருந்தனனென்பது, இப்படலத் திற்கூறிய பொருள். வேலேற்றுப்படலம் என்று இப்படலத்துக் குப்பெயர் சிலபிரதிகளிலுள்ளது.

வேறு.

க.—இராவணன் தேரேறிச் செல்லுதல்.

சில்லி யாயிரஞ் சில்லுளைப் பரியொடுஞ் [1]சேர்ந்த
[2]எல்ல வன்கதிர் மண்டில மாறுகொண் டிமைக்குஞ்
செல்லுந் தேர்மிசைச் சென்றனன் றேவரைத் தொலைத்த
வில்லும் [3]வெங்கணைப் புட்டிலுங் கொற்றமும் விளங்க.

(இ - ள்.) ஆயிரஞ்சக்கரங்களுடனே சிலவாகிய [நீட்சியற்ற]பிடரி மயிரோடுகூடிய ஆயிரங்குதிரைகளோடுபொருந்தியதும் சூரியனுடைய ஒளிபொருந்திய மண்டிலத்துடன் மாறுபாடுகொண்டுவிளங்குவதுமான (விரைந்து) செல்லுந் தேரின்மீது, (இராவணன்), தேவர்களையழித்த வில்லும் கொடியஅம்புகளைக்கொண்ட தூணீரமும் வெற்றியும் விளங்க, (அப்போர்க்களத்தை நோக்கிச்)சென்றான்; (எ - று.)

கத்தரிக்கப்பட்டதனால், 'சில்லுளை' என்றது. ஆயிரம்' என்பது - மத்திமதீபமாய், 'சில்லி' என்பதனோடும், 'பரி' என்பதனோடும் இயை யும். பி-ம்:—[1]செறிந்த. [2]எல்லவாம். [3]வெல்கணைப். (௩௪௬௩)

உ.—இராவணன் ஓராயிரவெள்ளம் அரக்கர்சேனையை ராமலக்ஷ் மணர்மேற்செலுத்தி, தான் வானரச்சேனையை யெதிர்ப்படுதல்.

அரக்கர் சேனையோ ராயிர வெள்ளத்தை யமரில்
துரக்க மானுடர் தம்மையென் றொருபுடை துரந்து
வெருக்கொள் வானரச் சேனைமேற் றன்செல்வான் விரும்பி
இருக்குந் தேரொடும் போயவ னிராவண னெதிர்ந்தான்.

(இ-ள்.) 'மானுடர்களைப் போரிலேவென்றுஒட்ட' என்று ஓராயி ரம்வெள்ளம் அரக்கர்சேனையை ஒருபக்கத்தில் விரைவாகச்செலுத்தி,

அச்சங்கொண்டதான வானரச்சேனையின்மீது தான் செல்லவிரும்பி ஏறியிருக்குந் தேருடனே போனவனான இராவணன் (அவ்வானர சேனையைக்) கண்ணுற்றான்; (எ - று.)

'இராமலட்சுமணர்களை நீங்கள் வெல்லுங்கள்: யான் வானரர்களை வெல்வேன்' என்றுபடைத்தலைவர்களைநோக்கிச்சொல்லிய இராவணன் அப்படைத்தலைவரின் சேனைகள் போரில் மூண்டதுகண்டு தன்மூல பலத்தை அவற்றுடன்செல்லு மாறுபணித்துத் தான் வானரர்களுடன் பொருமாறு தேரிலெழுந்தானென்று மூலபலவதைப்படலத்து முதல் மூன்றுசெய்யுளிற் கூறியதையனுவதித்து, அவ்விராவணன் வானர சேனையைக் கண்ணுற்றமையை இங்குக்கூறுகின்றாரென்க. இங்ஙனம் வானரரையும் நரரையும் வேறுபடுத்துங் கருத்துள்ளான் இராவண னென்பதை ஊகித்துணர்ந்த ஸ்ரீராமன் தான் மூலபலங்களை வெல்வ தாகச்சொல்லி வானரர்க்குப் பாதுகாவலாக இலக்குமணனைச் செல்லு மாறு ஏவி, அவனுக்குத்துணையாகச்சுக்ரீவன் விபீஷணன் அநுமான் முதலியோரை யனுப்பினானென்பது, கீழ்க்கூறப்பட்டது. இச்செய்யுள் பலபிரதிகளில் இல்லை. (நசகச)

ந.—இராவணனுடன் சென்ற சேனைகள்.

நூறு கோடிதேர் நொறில்பரி [1]நூற்றிரு கோடி
[2]யாறு போன்மத மாகரி யையிரு கோடி
ஏறு [3]கோளுறு பதாதியு [4]மிவற்றிவற் றிரட்டி
சீறு கோளரி யேறனா [5]னுடனன்று சென்ற.

(இ - ள்.) நூறுகோடித் தேர்களும், விரைவையுடைய இருநூறு கோடிக்குதிரைகளும், யாற்றைப்போல மதநீரைப்பெருக்குகின்ற பத்துக்கோடிப் பெரியயானைகளும், இங்குக்கூறிய சேனைகள்யாவற்றி னுக்கும் இரட்டிப்பாயுள்ள ஆண்சிங்கம்போன்ற வலிமையைக்கொண்ட காலாட்சேனைகளும், கோபிக்கின்ற மிடுக்கைக்கொண்ட ஆண்சிங் கம்போன்றவனான இராவணனுடனே அன்று சென்றன; (எ - று.)— கோள் - வலிமையும், மிடுக்கும். பி - ம்:—[1]நூறிருகோடி. [2]மாறு கோளுடைமால்கரி, ஆறுகோடுடைமால்களிறு, யாறுமாமதமால்கரி. [3]கோளறும், கோளறு. [4]அவற்றினுக்கிரட்டி. [5]உடன்சென்றசேனை, உடனவைசென்ற, உடனதுசென்ற. (நசகரு)

ச.—பேரிகைகள் முதலியன ஒலித்தல்.

மூன்று வைப்பினு [1]மப்புறத் துலகினு முனையின்
ஏன்று [2]கோளுறும் வீரர்கள் வம்மினென் றிசைக்கும்
ஆன்ற [3]பேரியு மதிர்குரற் சங்கமு மசனி
ஈன்ற காளமு மேமொரடே [4]முலகமு மிசைப்ப.

(இ - ள்.) '(சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்ற) மூன்று உலகத் திலும் அப்பாற்பட்டஉலகத்திலும் போர்க்களத்தில் எதிர்த்தலைப் பொருந்திய (அரக்க)வீரர்கள் வாருங்கள்' என்றுசொல்லுகின்ற [சொல்வதுபோல் ஒலிக்கின்ற] பெரிய பேரிகையும், அதிர்கின்ற குர

லையுடைய சங்கமும், இடிபோன்ற பேரொலியையுண்டாக்குகின்ற எக்காளமும் மேலேழ் கீழேழ் என்ற உலகங்களிலெல்லாம் ஒலிப்பனவாயின; (எ-று.)

பேரிகைகள் ஒலிப்பது - முனையில் எதிர்க்கவிரும்பும் வீரர்களை வாருங்கள்என்று இசைப்பது போலுமென்றூர்; தற்குறிப்பேற்றவணி; இங்குத் தற்குறிப்பேற்றவுருபு மறைந்துவந்தது: இவ்வாறுவருவதனை, வடநூலார் கம்யோத்பிரேட்சை யென்பர். என்றுகோள்-எதிர்த்தல். முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பி-ம்:—[1]முப்புறத்து. [2]கொள்ளுதும், கொன்னுறும். [3]பேரிகையரி. [4]உலகினும். (௫௪௬௬)

௫.—வானரவீரர் இராவணனையும் இராக்கதசேனையையுங் காணுதல்.

அனைய வாகிய வரக்கர்க்கு மரக்கனை யவுணர்
[1]வினைய வானவர் [2]வெவ்வினைப் பயத்தினை வீரர்
[3]நினையு [4]நெஞ்சினைச் [5]சுடுவதோர் [6]நெருப்பினை [7]நிமிர்ந்து
கனையு [8]மெண்ணையுங் கடப்பதோர் கடலினைக் கண்டார்.

(இ - ள்.) அவுணரால் மாயச்சூழ்ச்சிசெய்யப்படுபவரான தேவர்களின் கொடியதீவினைப்பயன்போன்றவனும், வீரர்களின் நினைக்குந் தன்மையுள்ளநெஞ்சைச் சுடுவதான ஒப்பற்ற நெருப்புப்போன்றவனுமான அப்படிப்பட்ட அரக்கர்க்கெல்லாம் பெரிய அரக்கனான இராவணனையும், எண்ணிக்கையெல்லாங்கடப்பதாய் ஓங்கிஒலிப்பதான (அவனுடைய) ஒப்பற்ற (சேனை) சமுத்திரத்தையும், (வானரவீரர்கள்), கண்டார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]வினையை. [2]வெவ்வினைப்புயத்தினை. [3]நினைவில். [4]நெஞ்சையும். [5]சுடுவதாய். [6]நெருப்பினில். [7]நிமிர்ந்த. [8]விண்ணையும்......கடலினைக், கூற்றையுங்குடிப்பதோர்கூற்றினைக். (௫௪௬௭)

௬.—கண்ட வானரர்கள், யுத்தகோலாகலத்தோடு ஆரவாரித்தல்.

கண்டு [1]கைகளோ டணிவகுத் [2]துருமுறழ் கற்கள்
கொண்டு கூற்றமு நடுக்குறத் தோள்புடை கொட்டி
அண்ட [3]கோளங்க ளடுக்கழிந் தலைவுற வார்த்தார்
மண்டு [4]போரிடை மடிவதே நல[5]மென [6]மதித்தார்.

(இ - ள்.) (வானரவீரர்கள்,--அவ்வாறு வந்த அரக்கனை அவன்) சேனையோடு கண்டு, (தம்மை) அணியாகவகுத்து, 'நெருங்கிய போரில் (இராமகாரியத்துக்காக)உயிரையும்விடுவதே நன்மை' என்றுமதித்தவர்களாய், யமனும் நடுக்கமடையும்படி தோட்புறங்களிற்கொட்டிப் பேரிடிபோல்தாக்குவனவான மலைகளை(த் தம்கைகளில்) ஏந்திக் கொண்டு, (அதிர்ச்சியினால்) அண்டகோளங்கள்(தாம்) அடுக்காகவுள்ள நிலைமை அழிந்துஒழியுமாறு பேராரவாரஞ்செய்தார்கள்; (எ - று.)—கை-சேனை, கற்கள் - மலைகள். பி - ம்: --[1]கண்களோடு. [2]உருமுழற், உருமுறு. [3]கோடிகள், கோளகை. [4]போர்செய்து. [5]என்று [6]வலித்தார். (௫௪௬௮)

எ.—இருதிறத்துச்சேனைகளும் பொருதல்.

[1]அரக்கன் [2]சேனையு மாருயிர் [3]வழங்குவா னமைந்த
[4]குரக்கு வேலையு மொன்றொடொன் றெதிரெதிர் [5]கோத்து
நெருக்கி நேர்ந்தன [6]நெருப்பிமைப் [7]பொடித்தன நெருப்பின்
[8]உருக்கு செம்பென வம்பரத் [9]தோடின துதிரம்.

(இ - ள்.) இராட்சசனுடையசேனையும் (தமது) அரியஉயிரைக் கொடுக்கவேண்டுமென்றாலும் அதற்கும் சம்மதித்த குரங்குச்சேனையும் ஒன்றோடொன்று எதிர்எதிராகப்பொருந்தி நெருக்கிப் பொருதன; (அப்போர்க்களத்தில்), இமைப்பொழுதிற்குள் (எங்கும்) நெருப்புத் தோன்றின; நெருப்பில் உருக்கினசெப்புப்போல இரத்தம் கடலை நோக்கி யோடிற்று; (எ - று.)—பி - ம்:—[1]அரக்கர். [2]சேனையை. [3]வாங்குவான் [4]குரக்கின். [5]கோத்த. [6]நெருப்பிடை. [7]பொடித்தென. [8]உருக்குசெம்பொன். [9]ஓடின. (௩௪௯௯)

அ.—இதுமுதல் மூன்றுகவிகள்-இறந்துவிட்டசேனைகளின் வருணனை.

அற்ற [1]வன்றலை யறுகுறை யெழுந்தெழுந் [2]தண்டத்து
[3]ஒற்ற [4]வானக முதயமண் டிலமென வொளிரச்
[5]சுற்று மேகத்தைத் [6]தொத்திய குருதிநீர் துளிப்ப
முற்றும் வையகம் [7]போர்க்கள மாமென முயன்ற.

(இ-ள்.) அறுபட்ட வலிய தலைகள் அற்ற உடற்குறைகளினின்றும் ஓங்கியெழுந்து வானத்திற்பொருந்துவதனால் வானினிடம் உதயமண்டிலம்போல் விளங்காநிற்க, வானத்தைச்சூழ்ந்துள்ள மேகத்தில் (அந்தத் தலைகளினின்றும்) தொத்திய இரத்தநீர் துளித்தலால் வையகம்முழுவதும் போர்க்களமென்றுசொல்லும்படி யாக முயன்றன; (எ-று.)

குருதியோடுகூடியதலைகள் வானத்துச்சென்றதனால் அந்தவானத்தினிடம் உதயமண்டலம்போற் செந்நிறமாய்க் காணப்பட்டதென்பது, முன்னிரண்டடிகளிற் கூறப்பட்ட பொருள்; அவ்வாறான தலைகளினின்றுஇரத்தம் வானத்துச்சூழ்ந்துள்ள மேகத்திற்படியவே,அம்மேகம் நீரைப்பொழிவதுபோல் பூமியெங்கும் இரத்தத்தைப் பொழிந்ததனால், போர்க்களம்போலப் பூமியெங்கும் இரத்தம்பெருகலாயிற் றென்பது. பின்னிரண்டடியிற்கூறப்பட்டபொருள்,இவ்வாறுகூறிய தொடர்புயர்வு நவிற்சியணியால், சிரம்அறுபட்டவர் மிகப்பலர் என்பது தொனிக்கும். பி - ம்:—[1]வான்றலை. [2]அண்டம், அண்ட. [3]ஒற்றை. [4]வாண்முகம். [5]சுற்றிய. [6]தோற்றிய. [7]போர்க்களமாம்மெனமுயல, போர்க்களம் போன்றனமுதிர்தம், போதுரக்களமாமென்று முரஞ்ச. (௩௫00)

௯. தூவி யம்பெடை [1]யரிபின மறிதரச் சூழி
தூவி யம்பெடை [2]சோர்ந்தன சொரியுடற் சுரிப்ப
மேவி யம்படை படப்[3]படக் குருதியின் வீழ்ந்த
மேவி யம்படைக் கடலிடைக் குடரொடு [4]மிதந்த.

(இ - ள்.) அம் படை கடலிடை-அழகிய (அரக்கச்)சேனையாகிய சமுத்திரத்தில், மேவி - பொருந்தி, (இலட்சுமணன்), அம்பு எடை - அம்பையெடுக்கையில்,—(மதநீருண்ணவந்த), தூவி - சிறகினையுடைய, அம் பெடை - அழகிய பேடையோடுகூடிய, அரி இனம் - ஆண் வண்டுகளின்தொகுதி, மறிதர - மீண்டுபோக, (அவ்யானைகள்), சூழி - முகபடாத்தை, தூவி - அப்பாலெறிந்து, சோர்ந்தன-சோர்வையடைந்தனவாய்,—வியம் மே-பெருமைபொருந்திய, படை படபட - (இலட்சுமண) சரம் படுந்தோறும், குருதியின்-இரத்தத்திலே, சொரி உடல் - (இரத்தத்தைச்)சொரிகின்ற தம்முடல், சுரிப்ப - சுழன்றமிழும்படி, வீழ்ந்த - வீழ்ந்தனவாய், குடரொடும் - குடலுடனே, மிதந்த-மிதந்தன; (எ - று.)

இலட்சுமணன் அம்பையெடுக்கவும் யானைகள் தம்முகபடாத்தையெறிந்துசோர்ந்து,அம்புபடுந்தோறும் இரத்தப்பெருக்கில் தமதுஉடல் அழுந்தும்படிவீழ்ந்து குடலுடனே மிதந்தன என்றவாறு. இது - முன்னிரண்டடிகளின்முற்பகுதி ஒருவகையாகவும், பின்னிரண்டடிகளின் முற்பகுதிஒருவகையாகவும்அமைந்ததாகித்திரிபும் யமகமுங்கலந்துவந்த கலவையணி. 'அரியினம்'என்ற இடத்துள்ள 'இனம்'என்பது, பெடையென்பதனுடனும் இயையும். 'சூழிதூவி' என்றமையால், 'யானைகள்' என்ற எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. 'மேவி' என்ற வினையெச்சம், அம்பெடைஎன்ற இடத்து 'எடை' என்பதிலுள்ள 'எடு' என்ற முதனிலையோடு முடியும். மூன்றுமடியில், 'மேவு' என்றபகுதி விகாரப்பட்டுவந்தது: மே படை - வினைத்தொகை. பி-ம்:—[1]இரிவன சொரிதர, அரியினமரிதர. [2]படிந்தெனச்சோரியுட்சுரிப்ப, சோர்ந்தெனச்சோரியுட்சுழிப்ப. [3]படாக், படர். [4]மிதப்ப, மிதிப்ப. (௩௫௦௧)

௯௦. கண்[1]டி றந்தனர் கணவர்தம் முகத்தவா முறுவல்
கண்[1]டி றந்தனர் மடந்தைய ருயிரொடுங் கலந்தார்
[2]பண்[1]டி றந்தன பழம்[3]புணர் வகம்புகப் [4]பன்னிப்
[5]பண்[1]டி றந்தன புலம்பொலி சிலம்பொலி [6]பனிப்ப.

(இ - ள்.) மடந்தையர் - மகளிர்,—கண் திறந்தனர் கணவர்தம் - கண்ணைத்திறந்தவராகிய (தம்) கணவரின், முகத்தஆம் - முகத்திலே தோன்றிய, முறுவல் - சிரிப்பை, கண்டு - பார்த்து,—பண்டு இறந்தன பழம் புணர்வு - முன்(தாம் அனுபவித்துக்)கழிந்தனவான பழமையான (சுரதநூலிற்கூறிய)கரணங்கள், அகம் புக - (தம்)நெஞ்சில் நினைவுக்குவரவே, பன்னி-(அவற்றை)விவரித்துக்கூறி, பண் திறந்து அன புலம்பு-சம்பூர்ணராகங்களை விட்டுப்பாடினாற்போல(இன்னிசையுண்டாக)ப்புலம்புகின்ற, ஒலி - ஒலியுடனே, சிலம்பு ஒலி-சிலம்பினொலியும், பனிப்ப-ஒலிக்க,-(கணவருக்கு இறப்புநேர்கின்றதே! என்ற பெருவருத்தத்தைத் தாங்கமாட்டாமல்),இறந்தனர்-(தாமும்)உயிரொழிந்தவராய்,உயிரொடும் கலந்தார்-(தம்)கணவருடனே (சுவர்க்கலோகத்திற்) சேர்ந்தார்கள்.

பதிவிரதையரான சிலஅரக்கியர் தம்கணவனிறக்குந துயரத்தினால் உயிரிழந்து அவனுடனே சுவர்க்கலோகத்துக்கலந்தன ரெனக,

இராமசரத்தாலடிபட்டு உயிர்போகும்நிலைமையை யடைந்த தம் கணவரை அவருடையமனைவியர்கிட்டும்போது அக்கணவர் தாம்சாகுந்தறுவாயில் அம்மனைவியரைக் கண்ணைத்திறந்துபார்க்க, அம்மகளிர்க்குத் தாம் முன்னர் அந்தக்கணவருடனே துய்த்த புணர்ச்சிக்கரணங்கள் நினைவுக்குவரப் பண்ணைத்திறந்தாற்போல் அவற்றையெல்லாம் கூறிப் புலம்பினர் அம்மகளி ரென்க. பெருவீரராதலால், சாகுந்தறுவாயிலும் அவ்வீரருக்கு முறுவல் மாறவில்லை. பண்-ஏழுசுரங்களையுங்கொண்டது. பி - ம்:—[1]இறந்தன, இறந்தவர். [2]பண்டிறந்தனர். [3]புணர்க்கன்புகப், புணர்களம்புகப், புணர்ககம்புகப். [4]பண்ணிப். [5]பண்மறந்தன. [6]பணிப்பார், பணிப்ப. (௩0௫உ)

கக.—மாற்றரின்போரால் தன்சேனை நருக்கழியுமென்று இராவணன் கூறுதல்.

ஏழு மேழுமென் [1]றுரைக்கின்ற வுலகங்கள் [2]யாவும்
ஊழி [3]போவதே யொப்பதோ ருலைவுற [4]வுடற்றும்
நாழில் வெஞ்சம [5]நோக்கியவ் விராவண னுவன்றான்
தாழி லென்படை [6]தருக்கறு மென்பதோர் தன்மை.

(இ - ள்.) மேலேழ் கீழேழ்என்று சொல்லுகின்ற உலகங்கள் எல்லாமும் யுகாந்தகாலத்து அழியப்போவதையொப்பதாகிய ஒப்பற்ற நாசத்தைப் பொருந்துமாறு கடுமையாகச்செய்யும் (எதிர்த்தவரைக்) கொன்றுகுவிக்குந்தன்மையுள்ள கொடியபோரைப் பார்த்து, அந்த இராவணன், தாழ்வில்லாத என்னுடையசேனை செருக்குஒழியுமென்ற ஓர்தன்மையைக் கூறினான்; (எ - று.)—பி-ம்:—[1]இசைக்கின்ற. [2]எவையும். [3]போவனவொப்பன. [4]இடற்று, உடற்ற. [5]நோக்கியராவணன். [6]தளர்வுறும். (௩௫0௩)

கஉ.—வானரசேனைகளுடன் பொருத அரக்கச்சேனை முற்றுங்கெடுதல்.

மரமுங் கல்லுமே வில்லொடு [1]வாண்மழுச் சூலம்
அரமுங் [2]கல்லும்வேன் [3]முதலிய வயிற்படை [4]யடக்கிச்
சிரமுங் கல்லெனச் சிந்தலிற் [5]சிதைந்ததச் சேனை
உரமுங் கல்வியு முடையவன் செரு[6]நின்ற தொருபால்.

(இ - ள்.) (வானரரெறிந்த) மரங்களும் கற்களுமே, (அரக்கரெறிந்த) வில்லும் வாளும் மழுவும் சூலமும் அரமும் கவண்கல்லும் வேலும் முதலிய கூறியபடைக்கலங்களை யடக்கி, (வில்முதலியவற்றைஉபயோகித்த அரக்கர்களுடைய) சிரங்களையும் கல்லைப்போலச்சிந்தும்படி செய்ததனால், அவ்வரக்கச்சேனை சிதைந்திட்டது: வலிமையும் போர்க்கல்வியுமுடையவனான இலக்குமணனுடைய போரோ ஒருபுறம் நிகழ்ந்து நின்றது; (எ - று.)

கீழ்தொட்டு இச்செயுளின் மூன்றடிவரையில் வானரர்களின் வெற்றியைக் கூறிமுடித்து, இச்செயுளின் நான்காவது அடிதொடங்கி இலட்சுமணன் போர்த்திறமையைக் கவி கூறுகின்றார். பி-ம்:—[1]வாள்களும்வேலும். [2]கல்லுமே. [3]முதலியவியற்படை, முதலியவாய்ப்படை. [4]அடுக்கிச், [5]சிதைந்தன, சிந்தின. சிதைந்ததென், சிதைந்தென. [6]நின்ற. ()

௧௩.—அநுமானுடனேகூடிய இலட்சுமணன் இராக்கதப்படையை வென்றமை இரண்டுபாடல்களாற் கூறப்படும்.

அழலுங் [1]கட் களிறணியொடு [2]துணிபடு மாவி
சுழலும் பல்பரித் [3]தேரொடு புரவியுஞ் சுற்றக்
கழலுஞ் சோரிநீ ராற்றொடுங் கடலிடைக் கலக்கும்
குழலு நாலும்[4]போ லனுமனுந் தானுமக் குமரன்.

(இ - ள்.) அநுமனும் அந்தஇலக்குமணனென்ற குமரனும், நாற்குழலும் நாலும்போல(ச்செல்ல), நெருப்பைவெளிவிடுகின்ற கண்களையுடைய களிற்றுவரிசையுடனே துண்டுபட்டதனாலுயிர்சுழல்கின்ற பல பரிகளைப்பூண்ட தேரும்,--குதிரைகளும் நாற்புறத்திலும் வெளிப்பட்டுப் பாய்கின்ற இரத்தநீராற்றினுடனே சமுத்திரத்தினிடத்தே கலக்கும்; (எ-று.)

அநுமானும் இலக்குமணனும் தொடர்ந்துசென்று பொரவே,பகைவரின் களிறுமுதலியன இறந்து, இரத்தப்பெருக்காற்றின்வழியே கடலிற் கலக்கு மென்பதாம். பி - ம்:—[1]கற்களோடு. [2]துணிபடுமாவிச், துணிபடுமமலிச். [3]தேரினத்தொகுதியுமன்ன, தேரொடுகுதிரையுமண்ண. [4]போன்ம். (൩௫0௩)

௧௪. வில்லுங் கூற்றுவற் குண்டெனத் திரிகின்ற வீரன்
கொல்லுங் [1]கூற்றெனக் குறைக்குமிந் நிறைப்பெருங் குழுவை
ஒல்லுங் கோளரி யுருமன்ன குரங்கின நுகிரும்
பல்லுங் [2]கூர்க்கின்ற [3]கூர்க்கிலா வரக்கர்தம் படைகள்.

(இ - ள்.) யமனுக்கு வில்லும்உண்டென்று (கண்டோர்)கருதும்படி (வில்லுடனே) திரிகின்ற வீரனை இலக்குமணன்,--இந்த நிறைந்த (சேனைப்)பெருந்திரளைக் கொல்லுங் கூற்றுவன்போலக் குறையச் செய்வான்:வலிமைபெற்ற வலியசிங்கத்தையும் இடியையுமொத்த குரங்கின் [அநுமானின்] நகமும் பல்லும் கூர்மையைப்பெறுகின்றன: அரக்கரின்படைகளோ, கூர்மையைப்பெறாதனவாயின; (எ - று.)

'கூர்க்கின்ற' என்ற காரணப்பொருட்டான வினைச்சொல், கூராயிருத்தலினால் நிகழும் நாசத்தைக் குறிக்கும். 'கூர்க்கிலர்' என்ற இடத்தும் இவ்வாறே காண்க. பி - ம்:—[1]கூற்றுறக். [2]கூர்கின்ற. [3]கூர்கில,கூர்க்கில. 'பல்லுங்கூர்த்திலவரக்கர்தம்படைகளைப்பற்றி'என்றும், 'பல்லுங்கூர்த்தில ;தரக்கர்தம்படைகளையன்றி' என்றும்பிரதிகளில் நான்காமடி காணப்படுகின்றது. (൩௫0௪)

௧௫.---இங்ஙனம் தன்சேனை யழிபடுவதைக் கண்டு இராவணன் கோபித்தல்.

கண்டு [1]நின்றிறைப் பொழுதினிக் காலத்தைக் கழிப்பின்
உண்டு கைவிடுங் கூற்றுவ [2]னிருதர்பே ருயிரை
மண்டு வெஞ்செரு நாளொரு [3]கணத்திடை மடித்தே
கொண்டு [4]மீள்குவன் கொற்றமென் றிராவணன் கொதித்தான்.

(இ - ள்.) (அங்ஙனம் தன்படையழிவதைச்) சற்றுநேரம் கண்டு நின்று, 'இனிக் காலத்தைப்போக்கினால் யமன் (மிச்சமாகிநிற்கின்ற) அரக்கரின் பெரியஉயிரை முற்றவும்உண்டிட்டு (இப்போர்க்களத்தை) விட்டிடுவான்: (ஆகையால்), மூள்கின்ற கொடியபோரிலே ஒருகணத்திலே நான் (பகைவரை) மடித்து, வெற்றியைப் பெற்றுமீள்வேன்' என்றுசொல்லி இராவணன் வெம்பினான்; (எ - று.)

அரக்கரின் பெருமையை உயிரின்மேலேற்றி, 'பேருயிர்' எனப்பட்டது. பி - ம்:—[1]நின்றப்பொழுதினைக்காலத்தைக்கழிவின். [2]இருந்த. [3]களத்திடை. [4]மீள்கவென். மண்டுவெஞ்செரு பொழுதினிற்செருக்களத்திடையே என்றுசிலபிரதியில் மூன்றாமடி. ஒருபிரதியில் 'கண்டுநின்றிறைப் பொழுதினிற் செருக்களத்திடையே, கொண்டு மீள்வன் வெங்கூலத்தைக்கொடியவென்படையால், உண்டுகைவிடுங்கூற்றுவனிருதர்தமுயிரைச், கொண்டுகொற்றமென்றிராவணன்கரங்கொண்டு கொதித்தான்' என்று பாடங் காண்கின்றது. (௩௫௦௭)

௧௬.---இராவணன் அம்புகளைத் துரத்தல்.

ஊதை போல்வன [1]வுருமுறழ் திறலன வுருவிப்
[2]பூத ரங்களைப் பிளப்பன வண்டத்தைப் பொதுப்ப
மாதி ரங்களை யளப்பன மாற்றருங் கூற்றின்
தூது போல்வன [3]சுடுகணை முறைமுறை [4]துரந்தான்.

(இ-ள்.)காற்றைப்போல் விரைவைப் பெற்றனவும்,இடியையொத்த வலிமையையுடையனவும், மலைகளை ஊடுருவிப்பிளப்பனவும், அண்டத்தைத் துளைப்பனவும், திக்குக்களையளப்பனவும் [திசையுள்ளவளவுஞ் செல்வனவும்], மாற்றுதற்குஅரிய யமனுடைய தூதுபோல்வனவுமான சுடுந்தன்மையுள்ள அம்புகளை முறைமுறையாக விரைந்துசெலுத்தினான், (இராவணன்); (எ-று.)—பி-ம்:—[1]உருமுள. [2]பூதலங்களை. [3]கடுங்கணை. [4]சொரிந்தான். (௩௫௦௮)

௧௭. --இராவணன் கடுங்கணையால் வானரசேனை நிலைகெடுதல்.

ஆளி [1]போன்றுள னெதிர்ந்த[2]போ தமர்க்களத் [3]தடைந்த
[4]ஞாளி [5]போன்றுள [6]வென்படை னள்ளிரு ளடைந்த
காளி போன்றன னிராவணன் வெள்ளிடைக் [7]கரந்த
பூளை போன்றதப் பொருசினத் தரிகடம் புணரி.

(இ - ள்.) சிங்கத்தையொத்தவனாகிய இராவணன் எதிர்த்துப் போர்புரிந்தபோது, போர்க்களத்திலேசேர்ந்திருந்த வானரங்கள் நாய்கள்போல (இழிவடைந்து) நின்றன என்பது எதற்காக? [சிங்கத்திற்கு முன்நாய்கள்போலும் இராவணனுக்குமுன் வானரங்கள்என்றுசொல்லவுந் தகாதென்றபடி]: நடுஇரவிலே வந்தடைந்த காளிபோன்று (மிகக் குரூரனாக) இருந்தான், இராவணன்: வெற்றிடத்திலே (காற்றுக்கு முன்னே இருந்தஇடந்தெரியாது) ஒளித்த பூளைப்பூண்டைப் போன்

றது, அந்தப்பொருகின்ற சினத்தையுடைய வானர (சேனை)சமுத்திரம்; (எ-று.)—பி - ம்.—[1]போன்றுளது. [2]பேர்மறக். [3]எதிர்ந்த, அடைந்தார். [4]நாளி. [5]போன்றுளது, போன்றுளர். [6]எனலதெனள்ளிருளுடைந்த. [7]கலந்த. (௬௫0௯)

௧௮.---நிலைகெட்டோடிய வானரசேனைகளை 'அஞ்சற்க' என்றுவிலக்கி, இலட்சுமணன் அநுமான்தோள்மீதுசென்று இராவணனையெதிர்த்தல்.

இரியல் போகின்ற சேனையை யிலக்குவன் விலக்கி
அரிக ளஞ்சன்மி னஞ்சன்மி னென்றருள் வழங்கித்
[1]திரியு மாருதி தோளெனுந் [2]தேர்மிசைச் சென்றான்
எரியும் வெஞ்சினத் திராவண [3]னெதிர்புகுந் தேற்றான்.

(இ-ள்.) இலட்சுமணன்,--நிலைகெட்டு ஓடுகின்ற(வானர) சேனையை 'வானரர்களே! அஞ்சாதேயுங்கள் அஞ்சாதேயுங்கள்' என்று கருணை செய்து தடுத்து, திரிகின்ற அநுமானுடையதோளென்கிற தேரின்மீது (ஏறிச்)சென்றவனாய், எரிகின்ற கொடுங்கோபத்தையுடைய இராவணனுக்கு எதிரேபுகுந்து (அவனை) எதிர்த்தான்; (எ - று.)—பி - ம்:—[1]தெரிய. [2]தேரிடைச். [3]நேர். (௬௫௧0)

௧௯.---இரண்டு கவிகள் - இலக்குமணனும் இராவணனும் நெருங்கிப் பொருதலைத் தெரிவிக்கும்.

ஏற்றுக் கோடலு மிராவண னெரிமுகப் பகழி
நூற்றுக் கோடியின் மேற்செலச் சிலைகொடு [1]நூக்கக்
காற்றுக் கோடிய பஞ்செனத் [2]திசைதொறுங் கரக்க
வேற்றுக் கோல்கொடு விலக்கின னிலக்குவன் விசையால்.

(இ - ள்.) (இலட்சுமணன் வானரசேனையைத் தாங்கியவண்ணம்) எதிர்த்துப்பொருதலும், இராவணன் நெருப்பை முகத்திலேயுடைய அம்புகளை நூற்றுக்கோடியினும் விஞ்ச வில்லைக்கொண்டு செலுத்த, (அந்தஅம்புகள்) காற்றுக்குமுன் ஓடின பஞ்சுபோலத் திக்குக்கள்தோறுஞ்சென்றுஒளிக்கும்படி இலக்குவன் விசையோடு வேறு அம்புகளைக் கொண்டு விலக்கினான்; (எ - று.)—பி - ம்.---[1]தூவக். [2]தலந்தொறும். (௬௫௧௧)

௨0. விலக்கி னான்றடந் தோளினு மார்பினும் விசிகம்
உலக்க வுய்த்தன னிராவண னைந்தொடைந் துருவக்
கலக்க [1]முற்றில னிளவலு முள்ளத்திற் கனன்றான்
அலக்க ணெய்துவித் தா[2]னட லரக்கனை யம்பால்.

(இ - ள்.) (தன்கணைகளை) விலக்கினவனான இலட்சுமணனுடைய பெரியதோளின்மேலும் மார்பின்மேலும் அம்புகளை இராவணன் நன்கு பதியச்செலுத்தினான்: பத்துப்பாணங்கள் (தன்னுடலை) ஊடுருவிச் செல்லவுங், கலக்கத்தையடையாதவனாகி, இளையபெருமாளும்,—மனத்திற்கோபித்து, வலியஅரக்கனை (த் தன்னுடைய) அம்பினால் துன்பம்

அடைவித்தான்; (எ - று)—பி - ம்:—[1]உற்றிலாவுள்ளத்தவிளவலும், உற்றிலாவுள்ளத்தினிலக்குவன். [2]அன்றவ்வரக்கனே. (ருடுகஉ)

உக.—இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்: இலக்குமணனது வலிமைகண்டு இராவணன் மோகனாஸ்திரத்தைவிட, விபீஷணன் மொழியால் திருமாலின்படைகொண்டு அதனையொழித்தலைக்கூறும்.

காக்க லாகலாக் கடுப்பினிற் றொடுப்பன கணைகள்
[1]நாக்கி னான்கணை நுறுக்கினா னரக்கனு நாழில்
[2]ஆக்கும் வெஞ்சமத் தரிதிவன் றனை[3]வெல்வ தம்மா
நீக்கி [4]யென்னினிச் செய்வதென் றிராவண னினைந்தான்.

(இ - ள்.) தடுத்தற்குமுடியாத விசையோடு தொடுப்பனவாகிய அம்புகளைச் செலுத்தினவனான இலக்குமணனுடைய அம்புகளைநொருங்கச்செய்தவனாகிய (இராவணனென்ற) அரக்கனும், '(பகைவரைக்) கொன்றுகுவித்தலையுடைய கொடியபோரில் இவனை வெல்வது அருமையானது:அம்மா!(இவனை)விட்டிட்டு இப்போது செய்யக்கூடியவீரம் என்?' என்று இராவணன் எண்ணமிட்டான்; (எ - று)—'அம்மா'என்பது - இலட்சுமணன் வீரத்தை நினைந்து இராவணன்வியந்தமையைப் புலப்படுத்தும். பி - ம்:—[1]அவை. [2]ஆக்கி. [3]வெல்லவம்பால், வெல்வதம்பால். [4]எண். (ருடுகரு)

உஉ. கடவுண் மாப்படை தொடுக்கின்மற் றவைமுற்றுங் [1]கடக்க
விடவு மாற்றவும் [2]வல்லனன்றி யாரையும் வெல்லும்
தடவு மாற்றலைக் கூற்றையுந் தமையனைப் போலச்
சுடவு [3]மாற்றுமெவ் வுலகையு [4]மெவனுக்குந் தோலான்.

(இ - ள்.) தேவதைகளைக்கொண்ட பெரியஅஸ்திரங்களைத் தொடுத்தால், அவை முழுதும் கடந்துவிடவும் தாங்கவும் வல்லமையுடையனாவதன்றி யாரையும் வென்றுவிடுவான்:யமனையும் வலிமையைச் சோதித்துப்பார்ப்பான்: தமையனைப்போலவே எவ்வுலகையும் சுடுதலும் செய்யும்வல்லமையுள்ளான்; எவர்க்குந்தோலான்; (எ - று.)—பி-ம்:—[1]மங்க. [2]வல்லனேல். [3]ஆற்றலும்வல்லனே. [4]அவனுக்கும், யாவர்க்கும். (ருடுகச)

உரு. மோக மொன்றுண்டு முதலவன் வகுத்தது முன்னாள்
ஆக மற்றது [1]கொற்றமுஞ் சிவன்றனை யழிப்பது
ஏக [2]முற்றிய விஞ்சையை யிவன்வயி னேவிக்
காக [3]முற்றுழல் [4]களத்தினிற் [5]கிடத்துவன் கடிதின்.

(இ - ள்.) மோகனாஸ்திரமென்று ஒன்றுஉண்டு: (அது) முதற்கடவுள் முன்னாளில் இயற்றியதாகும்: அது சிவனையும் வெற்றியை யழிக்கவல்லது: (ஒப்பற்றதாகி) மந்திரம் நிரம்பிய (அந்த) அஸ்திரத்தை இவன்மீது செலுத்தி, காகங்கள்நிரம்பிச் சஞ்சரிக்கின்ற களத்திலே (இவனை)விரைவில் வீழ்ந்துகிடக்கச்செய்வேன்; (எ-று.)—மற்று-அசை.

முன்னோர்க் - முன்னேயில்என்றபடி: இனி, ஆக மற்றது என்று தனியேயெடுத்து, ஆகம் - கண்ணுக்குத் தெரியக்கூடியவடிவம், அற்றது - இல்லாதது என்று உரைப்பாருமுளர். சிவன்தனையும் கொற்றம் அழிப்பதுஎன இயையும்: எதிர்ப்பவன் சிவபெருமானேயாயினும் அவன்மீது இந்தஅஸ்திரம் விடப்பட்டாலும் அவனையும் தோற்கச் செய்வதென்றபடி. தசைமுதலியன உண்ணும்பொருட்டுக் களத்தில் காகம்நிரம்பியிருக்கு மென்க. பி - ம்:—[1]கொற்றமீங்கிவன்றனையளிப்பது. [2]முற்றியன்னவையவைதனையேவிக். [3]உற்றுறம். [4]களத்திடைக். [5]கிடப்பன, கடத்துவன். (௩௫௧௫)

உ௪. என்ப துன்னியவ் விஞ்சையை மனத்திடை யெண்ணி
முன்பன் மேல்வரத் தூரந்தன னதுகண்டு மூடுகி
[1]அன்பின் வீடண னுழியான் படையினி னறுத்தி
[2]என்ப தோதின னிலக்குவ னதுதொடுத் தெய்தான்.

(இ - ள்.) என்றஇதனையெண்ணி அந்தமோகனாஸ்திரமந்திரத்தை மனத்தினுற் கருதி, வலிமையுள்ளஇலட்சுமணன்மேற் செல்லுமாறு விரைந்துசெலுத்தினன், (இராவணன்): அதுகண்டு விபீஷணன், அன்பினலே விரைந்து 'திருமாலின்படையால் (இந்த மோகனாஸ்திரத்தை) அறுத்திடுவாய்'என்பதை (இலட்சுமணனுக்கு)ச் சொன்னான்; இலட்சுமணனும், அந்தஅஸ்திரத்தைத் தொடுத்துவிடுத்தான்; (எ - று.)— பி-ம்:—[1]அன்பன். [2]என்பதேயுன்னி. (௩௫௧௬)

உரு.—இலட்சுமணன் மோகனாஸ்திரத்தை நீக்குதலும்
இராவணன் விபீஷணனிடஞ் சினங்கொள்ளுதல்.

வீட ணன்சொல [1]விண்டுவின் படைக்கலம் விட்டான்
மூடு வெஞ்சின மோகத்தை நீக்கலு முனிந்தான்
மாடு [2]நின்றவ னுபாயங்கண் மதித்திட வந்த
கேடு நந்தமக் கென்பது மனங்கொண்டு கிளர்ந்தான்.

(இ - ள்.) விபீஷணனாழ்வான்சொல்லவே (இலட்சுமணன்) விஷ்ணுவின்படைக்கலத்தைவிடுத்தவனாய் மூடியவெஞ்சினத்தோடுகூடிய [மிக வுக்கிரமான] மோகனாஸ்திரத்தை நீக்குதலும்,—முனிந்தவனாய், (இராவணன்), 'அருகேயிருப்பவனான விபீஷணன் உபாயங்களை யாலோசித்துச்சொல்ல விளைந்த தீங்கு நமக்கு' என்பதை மனத்திற் கொண்டு பொங்கினான்; (எ-று.)—கேடு=தன்விருப்பின்படி தன்மாற்றானுயிரொழியாமல் தான் விடுத்த படையொழிந்தமை. பி-ம்:—[1]விட்டுவின். [2]நின்றுவன். (௩௫௧௭)

உசா.—மயன்தந்தவேலால் தன்தம்பியை யுயிர்கோள்ள
இராவணன் கருதுதல்.

மயன்கொ டுத்தது [1]மகளொடு வயங்கனல் வேள்வி
அயன் [2]படைத்துள தாழியுங் குலிசமு [3]மனையது

உயர்ந்த [4]கொற்றமு மூழியுங் கடந்துள [5]துருமிற்
சயந்த னைப்பொருந் தம்பியை யுயிர்கொளச் சமைந்தான்.

(இ - ள்.) மயனென்பவன் (தன்மகளை மணஞ்செய்துகொடுத்த போது அம்)மகளுடனே (தனக்குக்) கொடுத்ததும், விளங்குகின்ற நெருப்பையுடையவேள்வியிலே பிரமதேவன் படைத்ததும், சக்கராயுதத்தையும் வச்சிராயுதத்தையும் ஒத்ததும், (மாற்றாரின்) உயர்ந்த வெற்றியையும் யுகாந்தகாலத்துத் தீயையும் கடந்துள்ளதுமான இடியைப் போன்றபடையால், வெற்றியே யொருவடிவுபடைத்தாற்போன்றுள்ள (தன்)தம்பியையுயிர்கொள்ளுமாறு கருதினான்; (எ - று.)

மயன்கொடுத்த வேலையெறியஒருப்பட்டமையைக் கூறினாரென்க. கொற்றத்தைக்கடத்தல் - பிறருடைய வெற்றியைப்போக்குதல். ஊழியைக்கடத்தல் - ஊழியினும் கடுமை விஞ்சியிருத்தல். ஊழி-யுகாந்தகாலத்துத் தீ யெனக் கொள்ளப்பட்டது:யுகாந்தகாலமென்றே கொள்வதுமொன்று. உருமின்-உருமைப்போல எனக்கூறினுமாம். சயந்தனை-இந்திரகுமாரனை ஜயந்தனென்பவனை யென்று உரைத்தலுமாம். பொரும்=பொருவும். பி - ம்:—[1]மகளிடை.....வேள்வி, மகளுடை மங்கலவேள்வி. [2]படைத்ததுவாழியும். [3]அனைய. [4]கொற்றமோழியும். [5]உருவின். (ருடுகஅ)

உஎ.—இராவணன் விபீஷணன்மீது வேலையேவுதல்.

விட்ட போதினி னொருவனை [1]வீட்டியே மீளும்
பட்ட [2]போதவ [3]னான்முக னாயினும் படுக்கும்
வட்ட வேலது வலங்கொடு வாங்கினன் வணங்கி
எட்ட [4]நிற்கலாத் தம்பிமேல் [5]வல்விசைத் தெறிந்தான்.

(இ - ள்.) விட்டபோது ஒருத்தனை உயிர்கொண்டே மீளுவதும், (அதுமேலே) பட்டபோது படப்பெற்றவன் நான்முகக்கடவுளாகவே யிருந்தாலும் (அவனையும்) உயிரொழிக்கவல்லதுமான அந்தவேலை வட்டமாக வலங்கொண்டு வணங்கி வாங்கிச் சமீபத்தில்நிற்காத [தூரத்திலிருக்கிற] தம்பிமீது மிகவும் வேகமுண்டாக்கிஎறிந்தான்; (எ - று.)

—வேலது, அது-பகுதிப்பொருள்விகுதி. பி-ம்:—[1]மீட்டியே.[2]போதது. [3]நான்முகற்காயினும். [4]நிற்கிலாத். [5]விரைந்ததையெறிந்தான் ()

உஅ.—விபீஷணன் 'இப்படை என்னுயிரைமாய்க்கும்'என்ன, இலட்சுமணன் அஞ்சாதேயென்று தான் அங்குச் சார்தல்.

எறிந்த காலையில் விடண னதனிலை யெல்லாம்
அறிந்த சிந்தைய னைய[1]வி தென்னுயி ரழிக்கும்
பிறிந்து செய்யலாம் பொருளிலை யென்றலும் பெரியோன்
அறிந்து [2]போக்குவ லஞ்சலீ யென்றிடை [3]யணைந்தான்.

(இ-ள்.) (இராவணன் அந்தவேலை) எறிந்தபோது, அந்தப்படைக்கலத்தின் தன்மையையெல்லாம் உணர்ந்த மனத்தனான விபீஷணன் (இலட்சுமணனைநோக்கி), 'ஐயனே! இது என்னுயிரை யழிக்கும்;

(இதைக்) கடந்துசெய்யக்கூடிய [இதனினின்று தப்பக்கூடிய] செயல் ஒன்றுமில்லை' என்று கூறலும், பெருமையுடையோனான இலட்சுமணன் '(இதைப்போக்கும் வகையை) அறிந்து போக்குவேன்: நீ அஞ்சாதே' என்றுசொல்லி, அந்தஇடத்தைச் சார்ந்தான்; (எ-று.)—பி-ம்:—[1]இது. [2]போக்குவன், காக்குவன். [3]அணைத்தான், நடந்தான். (௩௫௨0)

உகூ.—இலக்குமணன்விடுத்த அம்புமுதலியன அவ்வேலினை யொன்றுஞ் செய்யமாட்டாதொழியத் தேவர் மனம்வருந்துதல்.

எய்த வாளியு [1]மேயின படைக்கலம் யாவுஞ்
[2]செய்த மாதவத் தொருவனைச் சிறுதொழிற் [3]றீயோன்
[4]வைத வைவினி லொழிந்தன வீடணன் மாண்டான்
உய்த லில்லையென் றும்பரும் [5]பெருமன முலைந்தார்.

(இ - ள்.) (இலட்சுமணன்) தொடுத்துவிடுத்த கணைகளும் ஏவின படைக்கலங்களும் எல்லாமும், செய்தபெருந்தவத்தையுடைய ஒப்பற்றவனை அற்பத்தொழிலைப்புரியுந்தீயவன் திட்டிய வசவுபோலப் பயன் விளைக்காதனவாக,—(அப்போது) தேவர்களும் 'விபீஷணன் மாண்டான்: (இனிப்) பிழைப்புஇல்லை' என்று (தம்முடைய) பெருமனத்தில் வருந்தினர்; (எ-று.)---பி-ம்:—[1]மேவின, ஏவின. [2]செய்ய. [3]தீயோர். [4]வைதவாமெனமறிந்தன. [5]திருமுகம். (௩௫௨க)

௩0.—இதுவும் அடுத்த கவியும்-அவ்வேலைத் தந்தம் மார்பிலேந்துமாறு இலக்குமணன் முதலியோர் ஒருவரையொருவர் முந்துதலைக்கூறும்.

தோற்ப னென்னினும் புகழ்நிற்குந் தருமமுந் [1]தொடரும்
[2]ஆர்ப்ப நல்லவ ரடைக்கலம் புகுந்தவ [3]னழியப்
பார்ப்ப [4]தென்னெடும் பழிவந்து தொடர்வதன் முன்னம்
ஏற்ப [5]னென்றனி மார்பினென் றிலக்குவ [6]னெதிர்ந்தான்.

(இ-ள்.) '(நான் உயிரைத்) தோற்பேனேயானாலும் புகழ் நிலைத்து நிற்கும்: தருமப்பயனும் தொடர்ந்துநிற்கும்: நல்லவர் (மகிழ்ச்சியால்) ஆரவாரஞ்செய்வார்கள்: (நம்மை) அடைக்கலமாகவந்து சேர்ந்தவன் அழிந்திடும்படி பார்த்துக்கொண்டிருப்பது எதுக்கு? (அடைக்கலம் புகுந்தோரைப் பாதுகாவாது விட்டனர் சூரியவமிசத்து அரசரென்ற) நெடியபழிவந்து தொடர்வதற்குமுன்பு என்னுடைய தனித்தமார்பில் நானே (அவ்வேலை)ஏற்பேன்'என்று சொல்லி, இலக்குவன், (அவ்வேலுக்கு) எதிராக நின்றான்; (எ-று.)—பி-ம்:—[1]தொடங்கும். [2]ஆர்ப்பர். [3]உலக்கப், உலக்கிற், நிற்க. [4]என்பெறப், என்றபிற். [5] என்றணி, என்றிணி. [6]நேர்ந்தான். (௩௫௨௨)

௩க. இலக்கு வற்குமுன் வீடணன் புகுமிரு வரையும்
விலக்கி யங்கதன் மேற்செலு மவனையும் விலக்கிக்
கலக்கும் வானரக் காவல னனுமன்முன் [1]கடுகும்
அலக்க [2]னன்னதை யின்னதென் றுரைசெய [3]லாமோ.

(இ-ள்.) இலட்சுமணனுக்குமுன்னே விபீஷணன் புகுபவனானான்: அவ்விருவரையும் விலக்கி அங்கதன் முன்னே செல்பவனானான்: வானரத்தலைவனான சுக்கிரீவன், அவ்வங்கதனையும் விலக்கி (த் தான்) சேர்பவனானான்: அநுமான் (அவனினும்) விரைந்துசெல்லுவான்: (தங்குப் பிறந்த) அத்துன்பநிலையை இன்னதென்று சொல்லமுடியுமோ? (எ-று.) —பி - ம்:---[1]கடுக. [2]உற்றதை. [3]ஆமே. (௩௫௨௩)

௩௨.—இறுதியாக இலக்குமணன் அவ்வேலைத் தன்மார்பி லேற்றல்.

[1]முன்னின் றாரெலாம் பின்னுறக் [2]காலினின் முடுகி
[3]நின்மின் [4]யானிது விலக்குவ னென்றுரை நேரா
மின்னும் வேலினை விண்ணவர் கண்புடைத் திரங்கப்
பொன்னின் மார்பிடை [5]யேற்றனன் முதுகிடைப் [6]போக.

(இ - ள்.) முன்னேயிருந்தவரெல்லாம் (தனக்குப்) பின்னேபொருந்துமாறு காற்றுப்போல விரைந்துசென்று, 'நில்லுங்கள்: யான் இதனை விலக்குவேன்' என்று உரைத்து, விண்ணவர் கண்ணில்மோதிக்கொண்டுவருந்த, முதுகினிடத்து, ஊடுருவிச்செல்லுமாறு, மின்னுகின்ற (அந்த)வேலைப்பொன்போன்ற (தனது) மார்பிலே (இலக்குவன்) ஏற்றான்: (எ - று.)—பி - ம்:---[1]முன்னினாரெல்லாம். [2]காலினும். [3]நின்னில். [4]யானது. [5]எய்தனன். [6]போன. (௩௫௨௪)

௩௩.—விபீஷணன் தண்டாயுதத்தால் இராவணனுடைய தேர்க்குதிரைகளையும் சாரதியையும் அழித்தல்.

எங்கு நீங்குதி [1]நீயென வீடண னெழுந்தான்
சிங்க வேறன்ன [2]சீற்றத்தா னிராவணன் றேரில்
பொங்கு [3]பாய்பரி சாரதி யொடும்படப் புடைத்தான்
சங்க வானவர் தலையெடுத் திடநெடுந் தண்டால்.

(இ - ள்.) விபீஷணன் 'நீ எங்கேஅப்பாற் போகின்றாய்?' என்று எழுந்து, ஆண்சிங்கம்போன்ற சீற்றத்தையுடையவனாய், இராவணனுடைய தேரிலே கிளர்ந்துபாய்கின்ற குதிரைகள் சாரதியுடனே இறந்துவீழவும், திரளாயுள்ள வானவர் தலையெடுத்திடவும் நெடியதண்டாற் புடைத்தான்;(எ-று.)---பி - ம்:---[1]இனியென. [2]சீற்றத்தவ்விராவணன், சீற்றத்தினிராவணன். [3]சாரதி புரவியின்றலையொடு. (௩௫௨௫)

௩௪.—விபீஷணன்மீதும் அநுமான்மீதும் கணைகளையெய்து, தன்காரியம்முடிந்ததென்று இராவணன் இலங்கைக்குச்செல்லுதல்.

செய்வி சும்பினி னிமிர்ந்துநின் றிராவணன் சீறிப்
பாய்க டுங்கணை பத்தவ னுடல்புகப் பாய்ச்சி
ஆயி ரஞ்சர மனுமன்ற [1]னுடலினி னழுத்திப்
போயி னன்செரு முடிந்ததென் றிலங்கையூர் புகுவான்.

(இ - ள்.) இராவணன்,—செய்மையிலுள்ள விசும்பினில் உயரவிருந்துசீறி,பாய்கின்ற கடியபத்துக்கணைகளை அந்த விபீஷணனுடையஉடலிற்புகும்படி செலுத்தி, அநுமானுடையஉடலில் ஆயிரஞ்சரங்கயூ

யழுந்தச்செய்து, 'செரு முடிந்தது' என்றுசொல்லி இலங்கையூரிற்புகுவானாய்ப் போயினன்; (எ - று.)— பி - ம்:—[1]உயிரிடை, உகத்திடை, உரத்திடை. (௩௫௨௬)

௩௫.—இராவணனைத்தொடர்ந்து விபீஷணன் வெகுளுதல்.

தேடிச் [1]சேர்ந்தவென் பொருட்டினு னுலகுடைச் செல்வன்
வாடிப் போயின னீயினி வஞ்சனை [2]மதியால்
ஓடிப் போகுவ தெங்கடா வுன்னொடு முடனே
வீடிப் போவனென் றரக்கன்மேல் வீடணன் [3]வெகுண்டான்.

(இ-ள்.) (அடைக்கலமாகத்)தேடியடைந்த என்பொருட்டினாலே உலகையெல்லாமுடையனான ஸ்ரீமான் [இலட்சுமணன்] (வேலாலுருவப்பட்டு) வாடிப்போயுள்ளான்: இப்படியாயினபின்பு நீ (உன்னுடைய) வஞ்சனைப்புத்தியினால் எங்கடா ஓடிப்போவது? (உன்னோடுபொருது உன்னைக்கொன்று)உன்னுடன் உடனேஉயிரொழிந்துபோவேனென்று (அந்த)இராவணன்மீது விபீஷணன் வெகுண்டான்;(எ-று.)—பி-ம்:— [1]சேர்ந்தவன். [2]மதியாய். [3]எழுந்தான். (௩௫௨௭)

௩௬.—காரியம் முடிந்தபின் 'இவனோடேன்?' என்று இராவணன் இலங்கையிற் புகுதல்.

வென்றி யென்[1]வய மானது [2]வீடணப் பசுவைக்
[3]கொன்றி னிப்பய னில்லையென் றிராவணன் கொண்டான்
[4]நின்றி லன்னென்று நோக்கிலன் முனிவெலா நீத்தான்
பொன்[5]றி ணிந்தன மதிலுடை யிலங்கையூர் [6]புக்கான்.

(இ - ள்.) 'வெற்றியோ என்வசமாகிவிட்டது: வீடணனாகியபசுவைக் கொன்று இனிப் பயனில்லை' என்று (மனத்துக்)கொண்டவனாய், இராவணன்,—எதிர்த்துநிற்றல்செய்யாமலும் சிறிதும் (அந்தவீடணனைக்) கண்ணெடுத்துப்பாராமலும் கோபத்தையெல்லாம் விட்டவனாய், பொன் நெருங்கியுள்ளனவான மதில்களையுடைய இலங்கையூரிலே புகுந்தான்; (எ - று.)—இழிவுதோன்ற 'வீடணப்பசுவை' என்றது. பி - ம்:—[1]வசம். [2]வீடணன். [3]கொன்றுமோர். [4]நின்றுதான். [5]திணிந்தவன். [6]புகுந்தான். (௩௫௨௮)

௩௭.—பிறகு விபீஷணனும் வானரரும் இலட்சுமணனுக்குநேர்ந்த நிலைமைக்காகப் பெருந்துன்பத்துளாழ்தல்.

அரக்க னேகினன் வீடணன் வாய்திறந் தரற்றி
இரக்கந் தானென விலக்குவ னிணையடித் தலத்திற்
[1]கரக்க லாகலாக் [2]காதலன் வீழ்ந்தனன் [3]கலுழ்ந்தான்
குரக்கு வெள்ளமுந் தலைவருந் துயரிடைக் குளித்தார்.

(இ - ள்.) இராவணன் போய்விட்டான்: விபீஷணன் ஒளிக்கமுடியாத அன்பையுடையவனாய், வாய்விட்டுக்கதறி (ஒருருவெடுத்துவந்த) இரக்கமேயென்று (கண்டோர்) கருதும்படி இலட்சுமணனுடைய பாதங்களிரண்டில் வீழ்ந்து கண்ணீர்பெருக்கி வருந்தினான்: குரக்கு

வெள்ளமும் (வானர)சேனாபதிகளும் துன்பத்தினுளாழ்ந்தார்;(எ-று.) —"அன்பிற்குமுண்டோவடைக்குந்தாழார்வலர், புன்கணீர்பூசறரும்" என்பவாதலால், 'கரக்கலாகலாக்காதலன்' என்றார். பி-ம்:—[1]கரக்கலாதகக். [2]காதலின். [3]கலுழக், கவிழ்ந்தான். (ருருஉகூ)

ரு அ.—"இலக்ஷ்மணனுயிர்போன்ற,நான்இருப்பதிற் பயனில்லை"என்று விபீஷணன் இறக்கமுயல, சாம்பவான் தடுத்தல்.

பொன்[1]னரும்புறு தார்ப்புயப் பொருப்பினன் பொன்ற
என்னி ருந்துநா னிறப்பனிக் கணத்[2]தெனை யாளும்
மன்னி ருந்தினி [3]வாழ்கில னென்றனன் மறுக
நின்னி [4]லென்றனன் சாம்பவ னுரையொன்று நிகழ்த்தும்.

(இ-ள்.) அழகுபொருந்திய அரும்புகொண்டு தொடுக்கப்பெற்ற மாலையையணிந்த மலைபோன்ற தோள்களையுடையவனான இலட்சுமணனிறக்க, (நான்)இருந்து என்னபயன்? இக்கணத்தில்தானே நான்இறப்பேன்: இனி [இலக்குமணன் உயிரொழிந்தபின்] என்னையாளும்மன்னவன் [ஸ்ரீ ராமன்]உயிருடனிருந்து வாழமாட்டானென்று மனஞ்சுழலக் கூறினான்,(விபீஷணன்):(அப்போது),நில்நில் என்று(விபீடணன் இறப்பதைத்)தடுத்துச் சாம்பவான் ஒருபேச்சைச் சொல்பவனானான்;(எ-று.) —சாம்பவான் நிகழ்த்தும்உரையை அடுத்த கவியிற் காண்க.

இனி, 'பொன்னிரும்புறுங்காளிமப் பொருப்பினன்பொன்ற'என்ற பாடத்திற்கு-'இராவணனுடைய மோகனப்படையால் இலட்சுமணனிறக்க' என்ற உபமேயப்பொருளை, இரும்பிலேபொருந்திய காளிமைத் தொகுதியால் பொன் அழிந்திட என்று முதலடி உவமையினால் தெரிவித்தது,பிறிதுமொழிதலணியென்க.பி-ம்:—[1]இரும்புறுகாந்தமாப்,இரும்புறுகளிம்பெனப். [2]என்னை. [3]வாழ்கலனென்றனன், வாழ்கிலேனென்றவன். [4]எண்கிறை, என்றிறை, என்கின்ற. (ருருரு0)

ருகூ.—'அநுமான்இருக்கையில் ஔஷதிகொணர்ந்து பிழைப்பிப்பானாதலால் எவரும் வருந்தவேண்டா'என்று சாம்பவான்தேற்றுதல்.

அனும னிற்கநா மாருயிர்க் [1]கிரங்குவ தறிவோ
நினையு [2]மத்துணை மாத்திரத் துலகெலா நிமிர்வான்
வினையி னன்மருந் தளிக்கின்ற [3]னுயிர்க்கின்றன் வீரன்
[4]தினையு மல்லலுற் றழுங்கன்மி னென்றிடர் [5]தீர்த்தான்.

(இ-ள்.)நினையும் அந்த அளவினெல்லைக்குள் உலகெல்லாம் ஓங்கிச் செல்லவல்லவனும்,(தன்)செயலால் நல்லஔஷதிகளைக் கொணர்ந்துதருகின்றவனுமான அனுமான் இருக்கையில், நாம் அரியஉயிருக்கு இரக்கங்கொள்வதுஅறிவுஆகுமோ?(அன்றியும்),வீரனான இலட்சுமணன் உயிர்ப்புடையவனாயுமிருக்கின்றான்:(ஆதலால்),சிறிதும் துன்பமுற்று வருந்தாதீர்கள் என்றுகூறி(ச் சாம்பவான்) துன்பத்தைப் போக்கினான்;(எ-று.) பி-ம்:—[1]இரங்குறில். [2]இத்துணை. [3]வீரர்க்குவீரன். [4]இனையும். [5]அறுத்தான், நீத்தான், (ருருருக)

௯௦.---இதுமுதல்மூன்றுகவிகள்-சாம்பவான்சொற்படி அநுமான் மருந்து கொணர்ந்து இலக்குமணனை உயிர்ப்பித்தலைக்கூறும்.

*மருத்தின் காதலன் மார்பிடை யம்பெலாம் வாங்கி*
*இருத்தி யோகடி தேகலை யிளவலை [1]யின்னம்*
*வருத்தங் [2]காணுமோ மன்னவ [3]னென்னலு [4]மன்ஞன்*
*கருத்தை [5]யுன்னியம் மாருதி யுலகெலாங் கடந்தான்.*

(இ - ள்.) வாயுபகவானுடைய அன்பிற்குஉரியமகனுன அநுமானுடைய மார்பினிடத்துள்ள அம்பெல்லாவற்றையும்போக்கி(ப் பிறகு சாம்பவான்)'இளையபெருமானை (இவ்வாறு) வருத்தத்துடனிருக்கஇராமபிரான் காணப்பொறுப்பனே? இங்ஙனுள்ள நிலையையறிந்தும் (நீ) விரைந்து (மருந்து கொணரச்) செல்லாதவனாய் இருக்கக்கடவாயோ? என்றுகூறலும், அவன்கருத்தையுணர்ந்து, அந்தமாருதி, (மருந்துகொணர) இவ்வுலகத்தினிடங்கள்பலவற்றையுங் கடந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]இங்ஙன், இஞ்ஞன். [2]காணுமே, கான்றவோ. [3]என்றனன். [4]மன்னன். [5]உன்னிய. (௩௫௩௨)

வேறு.

௯௧. *உய்த்தொரு [1]திசைமே லோடி யுலகெலாங் கடக்கப் பாய்ந்து, [2]மெய்த்தரு மருந்து தன்னை [3]வெற்பொடுங் கொணர்ந்த வீரன், பொய்த்தலில் [4]குறிக டானே [5]பொதுவற நோக்கிப் [6]பொன்போல், [7]வைத்தது வாங்கிக் கொண்டு வருதலில் வருத்த முண்டோ.*

(இ - ள்.) (தன்கருத்தைமருந்துகொணர்வதிற்) செலுத்தி (வடதிசையென்னும்) ஒருதிக்கின்வழியில் ஓடி உலகினிடங்கள்பலவற்றையும் கடந்திடுமாறுபாய்ந்துசென்று மெய்ம்மையுடன்பொருந்திய [தவறுமற்பயனைவிளைக்கின்ற] மருந்தினை வெற்புடனே முன்னர்க்கொணர்ந்துவந்த வீரனாகிய அநுமான்,---பொய்த்தலில்லாத அடையாளங்களைத் தானே பொதுவல்லாமல் [விசேடமாகக்] கவனித்துப்பார்த்துப் பொன்போற் போற்றிவைத்ததனை மீண்டும்கொண்டுவருதலில் வருத்தமுண்டோ? [இல்லையன்றே?] (எ - று.)

முன்னொருமுறை அரிதிற்றேடிக் கண்டுபிடித்து ஓஷதிமலையைக் கொணர்ந்துவந்துள்ளவீரனான அநுமான், அதனை மீண்டு வைத்த போதே குறிபார்த்துவைத்துள்ளானாதலால், அவ்வோஷதிமலையை யெளிதிற்கொணர்ந்தா னென்றவாறு. பி-ம்:—[1]திசையேயோடி, திசையேயொல்லை.[2]மெய்த்தரு, மெய்த்தமெய்.[3]வேரொடும். [4]குறிகெடாமே, குறிகடாமே. [5]பொதுவுற. [6]பொன்மேல். [7]வைத்தவை. (௩௫௩௩)

௯௨. *தந்தனன் மருந்து தன்னைத் தாக்குதன் [1]முன்னே யோகம், வந்தது மாண்டார்க் கெல்லா முயிர்தரும் வலத்ததென்றால், [2]நொந்தவர் நொய்வு [3]தீர்க்கச் [4]சிறிதன்றே [5]நொடித்தன் முன்னே, இந்திர னுலக மார்க்க வெழுந்தன னிளைய வீரன்,*

(இ - ள்.) மருந்துதன்னைக் கொணர்ந்தான், (அநுமான்; அது) மேற்படுதற்குமுன்னே உயிரின்சேக்கை (உடலுக்கு)வந்திட்டது; மாண்டவர்க்கெல்லாம் உயிரைத்தரும் வல்லமையுள்ளது (அம்மலையிளேஷதி)என்றால், (கணைபொத்தி)நொந்தவருடைய அந்நோவைத்தீர்த்தல் (அதற்கு)அற்பமானசெயலன்றோ [பெருங்காரியமல்லவன்றோ]? கைந்நொடிக்கும் அளவிற்குள் தேவலோகத்தவர் (மகிழ்ச்சியினால்) ஆரவாரிக்க, இளையவீரன் எழுந்திட்டான்; (எ - று.)

வேல் அழுந்தத்தாக்கியதாலான நோவின்மிகுதியால் மூர்ச்சையடைந்துள்ளானையன்றி, உயிர்நீத்திலனென்பது தோன்ற, 'நொந்தவர்நொய்வுதீர்க்கச்சிறிதன்றோ' என்றார். பி - ம்:—[1]முன்னம்மேகம், முன்னமேக்கம். [2]நொந்தனளேவு, நொந்தவர்நோவு. [3]தீர்த்தல். [4]வலிதன்றோ. [5]நொடிதன்முன்னம், நொடித்தன்முன்னே. சிலபிரதிகளில் வேலேற்றபடலம் இதனுடன் முடிய, அடுத்தசெய்யுளில் வானரச்சேனைகளங்காண்படலம் தொடங்குகின்றது. (ருகருச)

சுரு.—உயிர்பெற்றெழுந்தஇலட்சுமணன் விபீஷணன்தீங்கின்றியிருப்பதை விசாரித்தறிந்துகளித்து, அரக்கன்படுவது திண்ணமென்று உவகை கொள்ளல்.

[1]எழுந்துநின் றனுமன் றன்னை யிருகையாற் றழுவி யெந்தாய்,
விழுந்தில [2]னன்றோ [3]மற்றவ் வீடண னென்று விம்மித்,
தொழுந்துணை யவனை நோக்கித் துணுக்கமுந் துயரு நீங்கிக்,
கொழுந்தியு மீண்டாள் பட்டா னரக்கனென் றுவகை கொண்டான்.

(இ-ள்.)(இலட்சுமணன்)எழுந்துநின்று அநுமானை(த் தன்)இருகையாலும் தழுவிநின்று, 'எந்தாய்! மற்றும் அந்தவிபீஷணன் இறவாமலிருக்கின்றானன்றோ!' என்று விசாரித்தறிந்து, தொழுகின்ற துணைவனை அவனை [விபீஷணனை] ப் பார்த்து (மனத்திலிருந்த) அச்சமும்துயரமும் நீங்கி, உவகைக்கண்ணீருகுத்து, 'கொழுந்தியும்(இனிச்) சிறை மீண்டாள்: இராவணனும் இறந்தான்'என்று மகிழ்ச்சிகொண்டான்; (எ - று.)

இனி,இராவணனைவதஞ்செய்து சீதையைச்சிறைமீட்பது திண்ணமென்பான் 'கொழுந்தியும் மீண்டாள் பட்டான் அரக்கன்' என்று இறந்தகாலத்தாற் கூறினான்: தெளிவினால்வந்த காலவழுவமைதி: விரைவினால் வந்ததுமாம்.கொழுந்தி-சகோதரன் மனைவி.பி-ம்:—[1]எழுந்திருந்து. [2]அன்றே. [3]மற்றவீடணன். (ருகருரு)

சுசு.—எல்லாநும் இராமனைநோக்கிச் செல்லுதல்.

தருமமென் றறிஞர் சொல்லுந் தனிப்பொரு டன்னை [1]யின்னே
கருமமென் றனும [2]னாக்கிக் [3]காட்டிய தன்மை [4]கண்டால்
[5]அருமையென் னிராமற் கம்மா வறம்வெல்லும் பாவந் தோற்கும்
இருமையு நோக்கி[6]னென்னா விராமன்பா லெழுந்து [7]சென்றார்.

(இ - ள்.) தருமமென்று அறிஞர் (கொண்டாடிச்)சொல்லுகின்ற ஒப்பற்றபொருளைச்செய்யத்தக்கதென்று இப்போதே அனுமன் நிரூபி

த்துக் காட்டியதன்மையை ஆலோசித்தால், இராமபிரானுக்கு (நிறைவேறுதற்கு)அருமையானசெயல் என்னஉள்ளது? [ஒன்றுமில்லை]: ஆச்சரியம்!! இம்மை மறுமைகளைக்கவனித்துப் பார்க்குமிடத்து 'அறம் வெல்லும்: பாவம் தோற்கும்' என்றுசொல்லி (யாவரும்) இராமனிடத்துஎழுந்துசென்றார்; (எ-று.)

'தருமம் முடிவில்நன்மையையே விளைக்கும்' என்பதை அநுமான் இலக்குமணனுடையநோயைத் தீர்த்து அவனை மூர்ச்சைதீர்ந்து எழுந்திருக்குமாறுசெய்ததனால், நிரூபித்துக் காட்டியவனுவன். பி-ம்:—[1]பின்னே. [2]ஆகக். [3]காட்டியதினைய. [4]கண்டான். [5]அருமையோயேமதுக்கமாவறம், அருமையேதிராமற்கம்மா.[6]என்றும். [7]போனார். (ரு௫ரு௬)

சரு----இராமபிரானைத் தலைவர்சேன்றடைந்து வணங்க, இராமபிரான் 'விளைந்ததேன்?' என்றுவினவுதல்.

ஒன்றல பலவென் [1]றோங்கு முயர்[2]பிணத் தும்ப ரொன்று
குன்றுகள் பலவுஞ் சோரிக் குரைகட [3]லனைத்துந் தாவிச்
சென்றடைந் [4]திராமன் றன்னைத் திருவடி வணக்கஞ் செய்தார்
வென்றியின் [5]றலைவர் கண்ட விராமனென் விளைந்த தென்றான்.

(இ - ள்.) ஒன்றல்லாமற் பலஎன்றுசொல்லுமாறு மிகவும் ஓங்கியுள்ள பிணங்களின் வானளவும்பொருந்திய குன்றுகள்பலவற்றையும் இரத்தங்களாலாகியஒலிக்கின்ற கடலெல்லாவற்றையும் கடந்துசென்று சேர்ந்து, இராமபிரானைத் திருவடியில் வெற்றிபெற்றதலைவர் வணங்கினார்: (அவர்களைக்)கண்ட இராமன் 'நிகழ்ந்தது யாது?'என்று விசாரித்தான்; (எ - று.)

இராவணன்வந்தாற் பொருமாறுஅனுப்பிய தலைவர்கள் உற்சாகத்துடனே மீண்டு வந்து தன்னைவணங்கியதனால் ஆங்குநிகழ்ந்ததைக் கூறுமாறு ஸ்ரீராமன் அவர்களை வினவினனென்க. இராமன் இலட்சுமணனுள்ள இடங்குறித்துச்செல்கையில, இடையிலே தலைவர்யாவரும் ஸ்ரீராமனைக்கண்டாரென்க. பி - ம்:---[1]ஓதும். [2]பிணத்தும்பரோங்கும். [3]பலவும். [4]இராமன்செம்பொற்றிருவடி. [5]தலைவர்க்கண்டானுரைத்திடும். [2]பிணத்தும்பரோடும் குன்றுகள் என்றபாடத்துக்கு-பிணத்தினாலியன்ற வானத்துச்செல்லுகின்ற குன்றுகள் என்க.　(ரு௫ரு௭)

சசூ.—இராமனிடத்து ஜாம்பவான் நிகழ்ந்தவற்றையெல்லாம்சோல்ல, ஸ்ரீராமன் அநுமானைக்கோண்டாடி வாழ்த்துதல்.

உற்றது முழுது நோக்கி யொழிவற [1]வுணர்வு ளூறச்
சொற்றனன் சாம்பன் வீர னனுமனைத் [2]தொடரப் புல்லிப்
பெற்றனெ னுன்னை[3]யென்னை பெறாதன பெரியோ[4]யொன்றும்
[5]மற்றிடை யூறு செல்லா வாயுளை [6]யாக வென்றான்.

(இ - ள்.) (அதுகேட்ட) ஜாம்பவான், நிகழ்ந்ததை முழுதும் ஆலோசித்து (ஒன்றும்)விடாமல் (இராமன்) மனத்திற்பதியச் சொன்னான்: மகாவீரனை ஸ்ரீராமன் அநுமானைத் தொடர்ச்சியாக [இடைவிடாது] கட்டியணைத்து, 'உன்னைப் பெற்றுள்ளேன்: பெருமையுடை

யோனே! (நான்) பெறுதலை எவை? பின்னும் சிறிதும் இடையூற்றை யடையாத ஆயுளையுடையாயாகுக' என்று வாழ்த்தினன்; (எ - று.)

அநுமான் சிரஞ்சீவியாயினும், அன்பின்மிகுதியால் மீண்டும்வாழ்த்தினன் ஸ்ரீராமனென்க. பி-ம்:—1உணர்வினூன்றச். 2தொடர்ந்து, 3என்னே, என்னே. 4என்று. 5மற்றிடையூறொன்றில்லா, மற்றிடையூறு வாரா, மற்றிடையீறுசெல்லா. 6ஆதி. (கூ௫கூஅ)

சஎ.—இலட்சுமணன் பெருமகிழ்வோடு ஸ்ரீராமனைத் தொழுதுசார்தல்.

**புயல்பொழி யருவிக் கண்ணன் 1பொருமலன் பொங்கு கின்றான்**
**உயிர்புறத் தொழிய நின்ற 2வுடலன்ன வுருவத் தம்பி**
**துயர்3தமக் குதவி மீளாத் துறக்கம்4போய் வந்த தொல்லைத்**
**தயரதற் கண்டா 5லொத்தான் றம்முனைத் தொழுது 6சார்வான்.**

(இ - ள்.) மேகம்போற்பொழிகின்ற நீரருவியைக்கொண்ட கண்களையுடையவனும், உவகையழுகையைக்கொண்டுநிற்பவனும், மகிழ்ச்சி பொங்கப்பெற்றவனும், உயிர் புறத்திலே தவிர்ந்துநிற்கத் தனிப்பட்டு நின்றஉடலினையொத்தவனுமாகிய அழகிய இளையபெருமாள், துயரத்தைத் தங்களுக்குக் கொடுத்திட்டு மீளாதசுவர்க்கத்தையடைந்து(மீண்டும்)வந்தபழமையான தயரதனைக்கண்டாலொத்தவனாகித் தமையனான ஸ்ரீராமனை(க்கண்டு அவனை)த் தொழுது சேர்பவனானான்; (எ - று.)

இலட்சுமணன் இராமபிரானைத் தன்னுயிராகக் கருதுபவனென்பதும், தமையனைத்தந்தைபோலக் கருதுபவனென்பதும் இச்செய்யுளில் விளங்கும். பி-ம்:—1பொம்மலன், பொருமினன். 2உடலன்னவுறுவற், உடம்பன்னவுறுப்பிற், உடம்பன்னவுருவிற். 3நமக்கு, 4பெற்றுயர்ந்த. 5ஒத்த. 6சார்ந்தான். (கூ௫கூகூ)

சஅ.—இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்: ஸ்ரீராமன் விபீஷணனுக்காக இலட்சுமணன் உயிரீந்தமையைப் பாராட்டிக்கூறல்.

**இளவலைத் 1தழுவி யைய 2விரவிதன் குலத்துக் கேற்ற**
**வளவின 3மடைந்தோர்க் காகி மன்னுயிர் 4கொடுத்த வன்மைத்**
**துளவிய றொங்க லாய்நீ யன்னது துணிந்தா யென்றால்**
**5அளவிய லன்று செய்தற் கடுப்பதே யாகு 6மன்றே.**

(இ - ள்.) இளையபெருமாளைத் தழுவிக்கொண்டு, (ஸ்ரீராமன்), 'ஐயனே! அடைந்தவரைப் பாதுகாத்தற்காக மன்னுயிரைக்கொடுத்த வல்லமையால் இரவியின்குலத்திற்குஏற்ற வண்மைக்குணமுடையவராளேம்: துளவத்தினாலியன்ற மாலையைப்பூண்டவனே! நீ அச்செய்கையைத் துணிந்துசெய்தாயென்றால், (அச்செயல்) மிக்கபெருமையைத் தரக்கூடியசெயலாய் அப்போது செய்தற்கு அடுத்தசெயலேயாகுமல்லவோ?' (எ - று.)

அடைந்தோரைத்தன்னுயிரைக்கொடுத்தும்பாதுகாத்த லென்ற இந்தப்பெருமைபெற்ற செயல் சூரியகுலத்துப் பிறந்த நமக்கு ஏற்ற தாய்ச் சிறக்கு மென்றவாறு. பி-ம்:—1நோக்கி. 2இராகவகுலத்துக்கு, இரவிவங்கிசத்துக்கு, இராகவர்குலத்துக்கு. 3அடைந்தோர்த்தாங்கி,

அடைந்தோற்றாங்கி. [4]அளிக்குந்தன்மை, கொடுக்குந்தன்மை, கொடுக்கும்வண்மை. [5]அளவியதன்று. [6]என்றான். (௩௫௪௦)

௪௯. [1]புறவொன்றின்[2]பொருட்டா யாக்கை புண்ணுற வரிந்த புத்தேள், அறவனு [3]மைய நின்னை நிகர்க்கில னப்பா னின்ற, [4]பிற வினை யுரைப்ப தென்னே பேரரு ளாள ரென்பார், கறவையுங் கன்று மொப்பார் [5]தமர்க்கிடர் காண்கி லென்றான்.

(இ-ள்.) 'ஒருபுறாவைக்காப்பதன்பொருட்டாக உடலைப்புண்ணுருமாறு அரிந்துதந்த தெய்வத்தன்மையையுடைய தருமமூர்த்தியான சிபிசக்கரவர்த்தியும் ஐயனே! உன்னை ஒவ்வான்: அந்தச்சரிதத்தினும் வேறுபட்டுநின்ற பிறசெயலை உரைப்பது எதற்காக? பேரருளாளரென்பார் தம்மைச்சார்ந்தோர்க்கு இடரைக்காண்பாராயின் கறவையும் கன்றும்போன்றவராவர்' என்றான் (ஸ்ரீராமன்): (எ - று)

தன்னுயிரை மாற்றான்கையினின்று விடுவிக்கவேண்டுமென்று வேண்டிய புறாவின்பொருட்டுத்தன்னுடலைக்கொய்துகொடுத்த சிபிசக்கரவர்த்தியினும், தன்னைவேண்டாத விபீஷணன்பொருட்டுத் தன்னுயிரையே கொடுத்த இலட்சுமணன் சிறப்புப்பெறுவனென்க. பி-ம்:-- [1]புறவதின். [2]பொருட்டால், பொருட்டின். [3]நின்னையைய. [4]பிறவினி. [5]தமக்கிடர். (௩௫௪௧)

௫௦.—இராமபிரான் இளைப்பாறுதல்.

சாலிகை முதல வான போர்ப்பரந் தாங்கிற் றெல்லாம், நீனிற [1]ஞாயி றன்ன நெடியவன் முறையி னீக்கிக், [2]கோல்சொரி தனுவுங் கொற்ற வனுமன்கைக் கொடுத்துக் கொண்டல், [3]மேனிறை குன்ற மொன்றின் மெய்ம்மெலி வாற்ற லுற்றான்.

(இ - ள்.) கவசம்முதலவாகிய போர்க்காகத்தாங்கிய பாரத்தையெல்லாம் முறைமையின் நீக்கி, நீலநிறமுள்ள சூரியனையொத்த ஸ்ரீராமன், அம்பைச்சொரியும் வில்லையும் வெற்றிபொருந்திய அனுமான் கையிற் கொடுத்து, மேகம் மேலேநிறையப்பெற்ற குன்றமொன்றிலே உடல்தளர்ச்சியை ஆற்றலானான்; (எ - று.)

இதற்கு - இலட்சுமணனதுகவசத்தைநீக்கி அவனையிளைப்பாறச்செய்தானென்று கூறுவாருமுளர். பி-ம்:—[1]ஞாயிறென்னும். [2]கோலியதனுவும். [3]மேலுறைகுன்றமொன்றின், மேலுயர்குன்றினின்று, மேலுறைகின்றகுன்றின். (௩௫௪௨)

மூலபலவதைப்படலத்துக்குப்பின் வேலேற்றபடலம்முடியும்வரை நிகழ்ந்தசரிதையை ஸ்ரீவான்மீகிமுனிவர்கூறிய விதம் வருமாறு:—இவ்வண்ணம் ஸ்ரீராமன் அந்தமூலபலங்களை எளிதில் வதைத்ததும், அந்தப் போரில் தப்பித்துக்கொண்டு ஓடினவர்களும் இலங்கையிலேயே யிருந்தவர்களும் தம்மனைவியரோடு சிந்தைக்கடலுள் ஆழ்ந்தனர். அப்போது அரக்கமகளிர் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு 'சூர்ப்பணகையினால்விளைந்த தீங்குஇது' என்றும், 'இராமன் விராதனையும் கரன் முதலியோரையும் கபந்தனையும் வாலியையும் கொன்றானே: இவற்றுள்

ஒவ்வொன்றுமே இராமனுடைய பேராற்றலுக்குப் போதுமான அத்தாட்சியாகாதோ? இராவணன் தன்தம்பியின்பேச்சைக் கேட்டிருப்பின் இவ்விதமானநிலைமை இலங்கைக்குஏற்பட்டிராதே: கும்பகர்ணன் அதிகாயன் இந்திரசித்துமுதலியோர் மாண்டபின்பும் இராவணனுக்கு அறிவுதோன்றவில்லையே! விபீஷணன் இராமனையே சரணமடைந்ததனுல் நல்லகாரியமேசெய்தவனுயினன். நாம் அனுதைகளாய்ப் பரிதவிக்கிறேம்: நம்மை இந்த விபத்தினின்று காப்பாற்றுவாரில்லையே!' என்றும் புலம்புபவரானுர்கள்.

அந்தப்புலம்பலொலியைக்கேட்டதும் இராவணன் சற்றுக்கவலையிலாழ்ந்திருந்து, பிறகு சினம்பொங்க, அருகேயிருந்த மந்திரியரான மகோதரன் மகாபாரிசுவன் விரூபாட்சன்என்னும் அரக்கர்களைப்பார்த்து,'விரைவிற்போருக்குப்புறப்படும்படி சேனைகட்குக் கட்டளையிடுக' என்றனன். அவர்களும் மன்னவன்பணியைத் தெரிவிக்க,அரக்கர்களும் முனைமுகம்நோக்கிச்சென்றனர். பிறகு மகோதரன் கைகூப்பியவண்ணம்நிற்க, இராவணன் 'பகைவெல்லப்போகின்றேன்: குரங்குகளெல்லாம் முனைமுகத்து உயிரிழக்கும்' என்று பலபடிசொல்லிக்கொண்டு, 'தேரைச்சித்தஞ்செய்து விற்களைக்கொணர்க: சேனைகள் என்னைத் தொடர்ந்துவரட்டும்' என்றனன். மகாபாரிசுவன் சேனுத்யட்சர்க்கு இராவணன்கட்டளையைத் தெரிவிக்க, அவர்கள் வீடுவீடாய்ச்செய்தி தெரிவித்து அரக்கர்சேனையை யரிதிற்றிரட்டிக்கொணர்ந்தனர். பின்னர்த்தன்கட்டளைப்படிவந்த இரதத்தில் இராவணன்ஏறிக்கொண்டு சேனைகள்தொடர வடக்குவாயிலின்வழியாகப் புறப்பட்டுப் போர்க்களஞ்சென்றுன்: அவ்வேளையிற் பலவகைத் தீக்குறிகள்தோன்றின: இராவணன் அவைகளைப் பொருட்படுத்தாமற்சென்றனன். அங்கு அரக்கர்க்கும் வானரர்க்கும் நெருங்கியபோர் நிகழலாயிற்று. இராவணனும் உட்புகுந்துபொரவே, வானரசேனைகள் மிகவுஞ்சேதமடைந்தன: இங்ஙனம் இராவணன் வானரசேனைகளைப் பறக்கடித்து ஸ்ரீராமனைக் கிட்டினன்.

அப்போதுசுக்கிரீவன் வானரரைப்பாதுகாக்கும்படி சேனுகுல்மத்தில் சுஷேணனென்பவனைநிறுத்தி மிகக்கடுமையாக அரக்கச்சேனையோடுபொர, ராட்சசசேனைமுறிந்தது: அவ்வேளையில் அரக்கரைத் தாங்கி விரூபாட்சன் சுக்கிரீவனேடுபொரவர இருவர்க்கும் கடும்போர் நிகழ்கையில், இறுதியாகச் சுக்கிரீவன் தன்உள்ளங்கையாலறைய, விரூபாட்சன் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு தரையில்விழுந்திட்டான். அதனுல், வானரசைனியம் பெருமகிழ்ச்சியடைய அரக்கச்சேனை பெருந்துயரடைந்தது.

தன்சைனியம் குறைவதைக் கண்ட இராவணன் மிகவருந்தி, மகோதரனைப்பார்த்து 'நீயே இந்தவேளையிற்பொருது எனக்கு வெற்றியைத்தரத்தக்கவன்' என்று புகழ்ந்து ஆண்ட, அவ்வரக்கன் பேருற்

சாகத்துடன் பகைஞர்படையிற்புகுந்து வெகுமும்முரமாகப் பொருது வானரர்களை நிலைகெட்டோடச் செய்தனன். அங்ஙனம் ஓடிய வானரர் சுக்கிரீவனைச் சரணமடைய, அவன் அரக்கன்மீது மரங்களையும் மலைகளையும் எடுத்தெறிய, அவைகள் மகோதரனால் நீறுக்கப்பட, பிறகு போர்க்களத்தில் விழுந்துகிடக்கும் பரிகம் முசலம்என்பவைகளைச் சுக்கிரீவன் பிரயோகிக்க, அவை அரக்கனெறிந்த தண்டாயுதங்களோடும் முறிந்து வீழ்ந்தன. பிறகு முஷ்டியுத்தஞ்செய்து சலித்துப் பின்னரும் கத்திகேடகங்களையெடுத்து இருவரும்பொருகையில் மகோதரனுடையகத்தி சுக்கிரீவன்கேடகத்திற்பாய, அவ்வேளையிற் சுக்கிரீவன் மகோதரனுடையகழுத்தைக் கொய்திட்டனன். அதனால், அரக்கர்நிலைகெட, சுக்கிரீவனை வானவர்முதலியோர் புகழ்ந்தனர்.

மகோதரன் மாண்டதைக்கண்டு மகாபார்சுவன் அங்கதனுடைய சேனையோடு கடுமையாகப் பொர, அங்கதன் தன் இருப்புத்தடியால் சாரதியையும் அந்தமகாபாரிசுவனையும் மூர்ச்சிக்கச்செய்ய, கவாட்சனும் சாம்பவானும் பெருஞ்சிலையால் அவ்வரக்கனுடைய தேர்க்குதிரைகளையும் தேரையும் முறித்தனர். மூர்ச்சைதெளிந்ததும் மகாபாரிசுவன் பாணங்களால் கவாட்சனையும் சாம்பவானையும் தாக்கி அங்கதனுடன்கடுமையாகப்பொர, இறுதியாக அங்கதன் மகாபார்சுவனுடையமார்பில் முஷ்டியினால் மோத, அரக்கன் இதயம்வெடிக்கப்பெற்று வீழ்ந்தான். வானரர்கள்பெருமகிழ்ச்சியினால் இலங்கையைச்சார்ந்த பலஇடங்களிலும் ஆரவாரஞ்செய்தனர்: தேவதைகளும் மகிழ்ச்சிகாட்டினர்.

அனந்தரம் இராவணன் கண்டு சினம்மூண்டு தேரினின்றுபேரொலியுண்டாக இராமனைஎதிர்த்துப்போயினன். பூமிமுழுவதும் இரதத்தின் பேரொலியால் அதிர்ந்தது. அப்போது இராவணன் தாமஸாஸ்திரத்தைப்பிரயோகிக்க, வானரர்கள்நாற்புறத்திலும்வீழ்ந்தனர். அக்காலத்து, இராமன் இலட்சுமணனோடுகூடி யுத்தசன்னத்தங்கொண்டு வில்நாணியைத்தெறித்து ஒலியெழுப்ப, அவ்வொலியைக் கேட்டமாத்திரத்தில் பலஅரக்கர்கள்வீழ்ந்தனர். இராவணன் கிட்டினதை, இலட்சுமணன் சில அம்புகளெய்ய, அவற்றையெல்லாம் தன்னம்புகளாற்போக்கி இலட்சுமணனைப்பொருட்படுத்தாமல் இராமனோடுபொரலானான். அப்போரில் ஆஸுராஸ்திரத்தையபிமந்திரித்துப் பலமுகங்களையுடைய அம்புகளை இராவணன் எழுப்ப, ஸ்ரீராமனுடையஆக்நேயாஸ்திரத்தினால் பலவகைமுகமுள்ள பாணங்கள் கிளம்பி அவைகளையெல்லாம் உருமாய்த்தன. இங்ஙனம் ஸ்ரீராமனும் இராவணனும் பலவகைக்கதிகளுடனே பலஅஸ்திரங்களாலும் பாணங்களாலும் பொராநிற்கையில், இலட்சுமணன் தன்ஒருபாணத்தினால் மனுஷ்யன் தலையைக்கொண்டதானஇராவணன் தேர்த்துவசத்தையறுத்து, அவனுடைய தேர்ப்பாகனது தலையையும் கொய்து, அவனுடையவில்லையுந் துண்டித்தனன். அந்தவேளையில் விபீஷணன் அவ்விராவணனது தேர்க்குதிரைகளைக் கதாயுதத்தினால் மாய்த்தனன்.

அப்போது இராவணன் தேரினின்றுகுதித்துச் சக்தியை விபீஷணன்மேல் விடுத்தனன். அது விபீஷணனைச் சார்வதற்கு முன்னே இலட்சுமணன் தான் முன்போய்நின்று அதை மூன்றுபாணங்களால் துண்டித்துவிட்டனன். அப்பால் இராவணன் மயன்நிருமித்த மஹாஶக்தியையெடுத்துச் சுழற்றினமாத்திரத்தில் விபீஷணன் பிராணசந்தேகமடைய, இலட்சுமணன் அவனைத் தப்புவிக்கும்பொருட்டு முன்னின்று இராவணன்மேற் கணைகள்பொழிய, இராவணன் விபீஷணன் மேல் அந்தமஹாசக்தியை எறியும்எண்ணமாறி இலட்சுமணன்மேல்விடுத்தனன்: இராமன் அதுகண்டு 'இலட்சுமணனுக்கு மங்களமுண்டாகுக' என்றுசொல்ல, அதுவலிகுன்றிஇலட்சுமணனுடைய மார்பில் ஆழமாகப் பொத்தியதால் இலட்சுமணன்கீழ்வீழ்ந்தனன். அதுகண்ட ஸ்ரீராமன் கண்களில்நீர்ததும்பி இராவணன்மேற் சீற்றங்கொண்டு மற்றவர்களாற் பேர்த்தெடுக்க முடியாமற்போன அந்தமஹாசக்தியைப் பேர்த்தெடுத்து முறித்தெறிந்திட்டு அநுமான் சுக்கிரீவன்முதலியோரை இலட்சுமணனைக் காத்துக்கொண்டிருக்குமாறுபணித்து, இராவணனுடன் கடுமையாகப்பொருதனன். அப்போரில் இறுதியாக இராவணன் இராமபாணங்களினால் அடியுண்டு அஞ்சியோடினன். அவ்வாறு இராவணன்மீதுஅம்பைப்பொழிந்துகொண்டுநின்றஸ்ரீராமன் சுஷேணனைப் பார்த்து இலட்சுமணனுக்கு நேர்ந்தநிலையைக்கருதி மிகவருந்த, சுஷேணன் இலட்சுமணனிடமுள்ள சுபலட்சணங்களைக்காட்டி ஸ்ரீராமனைத்தேற்றி, அநுமானை ஓஷதிமலையிலிருந்து விஶல்யகரணிமுதலிய ஓஷதிகளைக் கொணருமாறுசொல்ல, அநுமான்சென்று அவ்வோஷதிகள் இன்னவையென்று காணமுடியாமையால் அம்மலைச்சிகரத்தையே பேர்த்துக் கொணர, சுஷேணன் ஓஷதியால் இலட்சுமணனைச் சொஸ்தனாகச் செய்ய, வானரர்யாவரும் சுஷேணனைக் கொண்டாடினர். ஸ்ரீராமன் இலட்சுமணனைத்தழுவி 'நீ மரணம்அடைவாயாயின் எனக்குப்பிராணனாலும் பயனில்லை: சீதையினாலும்பயனில்லை: போர்தான் எற்றுக்கு?' என்ன, இலட்சுமணன் ஸ்ரீராமனைநோக்கி 'நீர் இப்படி வலியற்றவன் போற்பேசுவதுதகாது: அத்தமித்தற்குள் இராவணனை நீர்கொல்வதைப் பார்க்கவிரும்புகின்றேன். போரில் இராவணன் இறந்துபடவேண்டுமென்று விரும்பினால், விபீஷணனுக்குச்செய்துகொடுத்த பிரதிஞ்ஞையை நிறைவேற்றவிரும்பினால், சீதையினிடம்விருப்பமுள்ளதானால் விரைவில் என்சொல்லைச்செய்க' என்றனனென்பது.

வேலேற்றபடலம் முற்றிற்று.

# ௩௨.—ஆவது வானரர் களங்காண்படலம்.

வானரர்கள்(ஸ்ரீராமபிரான்பொருதுவென்ற மூலபலங்கள் வீழ்ந்து கிடக்கும்)போர்க்களத்தைக் கண்டதைக் கூறும் பகுதி.

இவ்வண்ணம் நிகழ்ந்தபின்பு சுக்கிரீவமகாராசா தம்சேனையுடன் இராமனைக்கிட்டிவணங்கி 'மூவுலகத்தினும் அடங்காதசேனையை வென்றது எவ்வாறு?' எனவினவ, ஸ்ரீராமன் 'விபீஷணனோடு களத்திற்சென்று கண்டால்விளங்கும்' என்று மறுமொழிகூற, தலைவர்யாவரும்ஆசைதூண்டியதனால் விபீஷணனோடும் களத்திற்சேர்ந்து இறந்துவீழ்ந்திருக்குஞ் சேனைகளைக் கண்டு அஞ்சிநடுங்கி ஒடுங்கி மெல்லத்தேறி 'ஆயிரம்பருவம்கண்டாலும் காட்சிக்கு ஓரெல்லையில்லை: இதனைத் துறைப்படுத்துக் காட்டுவாய்' என்ன, விபீஷணனும் அங்ஙனமேகாட்ட, வெகுநாழிகை கண்டும் முழுதும் காணுதல் இயலாது என்றுகொண்டு, யாவரும் 'பின்பு பார்த்துக்கொள்வோம்: இவ்வளவுநேரம்கண்டும் சிறிதளவும் கண்டபாடில்லை: இராமனைச்சேர்வோம்' என்றுசொல்லி அவனைச்சார்ந்து வணங்கி அப்பிரானுடையதிறமையை நினைந்து பெருவியப்புக்கொண்டு பெருமூச்செறிந்து தங்கியிருந்தனரென்பது இப்படலத்துக் கூறும் பொருள்.

இப்படலம் சிலபிரதியில் வானரச்சேனைகளங்காண்படலம் என்ற பேரோடு "எழுந்துநின்று" (வேலேற்றபடலம்-௬௩) என்ற செய்யுளில் தொடங்குகின்றது. சிலபிரதியில் "தொழுதனர்" என்ற இப்படலத்தின் மூன்றாஞ்செய்யுளில் வானரர்களங்காட்சிப்படலம் என்ற பெயரோடும், வானரத்தலைவர்களங்காட்சிப்படலம் என்ற பெயரோடும் தொடங்குகின்றது: சிலபிரதியில் படலம் இங்குத்தொடங்கி, இதுவும் இராவணன்களங்காண்படலமும் ஒன்றாகி, களங்காண்படலம் என்ற பெயருடன் காணப்படுகின்றது.

க.—சுக்கிரீவன் தன்தானையோடுவந்து வணங்கிநிற்க, வானரர் இராமபிரானாலொழிந்த மூலபலவரக்கரின் பெருமையைநோக்கி நடுக்கமும் திகைப்புமடைந்து நாணமுறுதல்.

**1 ஆயபின் கவிதன் வேந்து [2]அளப்பருந் தானை யோடு**
**மேயின னிராமன் பாதம் விதிமுறை [3]வணங்கி வீந்த**
**தீயவர் பெருமை நோக்கி நடுக்கமுந் திகைப்பு [4]முற்றார்**
**[5]ஒய்வுறு மனத்தா ரொன்று முணர்ந்திலர் நாண முற்றார்.**

(இ - ள்.) அவ்வாறானபின், வானரர்தலைவனாகிய சுக்கிரீவனும்,— அளக்கமுடியாத வானரசேனையுடனே இராமனுடைய சீர்பாதங்களில் விதிமுறை வணங்கிக் கிட்டினான்: (அப்போது யாவரும்), ஒழிந்திட்ட கொடியவரின் பெருமையைநோக்கி நடுக்கமும் திகைப்புங் கொண்டு ஓய்தலையடைந்தமனத்தையுடையவராய் ஒன்றும்உணர முடியாமல் நாணமடைந்தனர்; (எ - று.)

தாங்கள் பெருவீரரென்றும் இராமனுக்குத்துணைபுரிகின்றோமென்றும் வந்திட்டு எதிராளிகளின் பெருந் தொகுதியான மூலபலவீரரைக் கண்டதும் தமது மனநிலை வீரங்குன்றி மாறுபட்டு ஓடினராதலால் யாவரும்நாணங்கொண்டனரென்க. பி-ம்:—[1]ஆயவெங்கவியின் [2]மடிப்பருந். [3]வணங்கியிந்தத். [4]தீர. [5]ஓய்வுறுமனத்தனென்றுமுரைத்திலர். ()

உ.—'மூன்றுலகத்தினும் மிக்க அரக்கரின் மூலபலத்தை வென்றது எவ்வாறு?' என்று சுக்கிரீவன்வினவ, ஸ்ரீராமன் விபீஷணனோடு அதனைக் காணுமாறு பணித்தல்.

மூண்டெழு சேனை வெள்ள [1]முலகொரு [2]மூன்றின் மேலும்
[3]நீண்டுள வதனை யைய வெங்ஙன நிமிர்ந்த [4]தென்றான்
தூண்டிரண் டனைய திண்டோட் சூரியன் [5]புதல்வன் சொல்லக்
[6]காண்டிநீ யரக்கர் வேந்தன் றன்னொடுங் களத்தை யென்றான்.

(இ - ள்.) தூண் திரண்டாற்போன்ற வலியதோளையுடைய சூரியகுமாரனான சுக்கிரீவன், (போரில்) மூண்டெழுந்த சேனைவெள்ளமானது, உலகம்மூன்றுக்கும் மேலாகவும் நீண்டிருந்தது: ஐயனே! அச்சேனையைக்கடந்துவென்றது எவ்வாறு? என்று வினவினான், (அங்ஙனம்) வினவ, (இராமன்), அரக்கர்வேந்தனான விபீஷணனோடு நீ களத்தைக் காண்பாயென்றான்; (எ - று.)

'மூவுலகத்திலும் அடங்காத பெருமையையுடைய மூலச் சேனையையெல்லாம் ஒருத்தனாகக்கடந்திட்டுவென்றது எவ்வாறு,என்று சுக்ரீவன் வினவ,இராமன் தன்னால்வீழ்த்தப்பட்டுச் சேனைகள்வீழ்ந்துகிடப்பதை விபீஷணனோடும் போர்க்களஞ்சென்று காண்பாயென்று கூறினனென்க. தன்வீரப்பெருமையைத் தன்வாயினாற்சொல்லவிரும்பாமல் களத்தைக்காணுமாறுகூறினான். சிலபிரதிகளில் இங்குத்தான் வேலேற்றபடலம் முற்றுகின்றதென்பது, முன்னரே குறிப்பிக்கப்பட்டது. பி-ம்:—[1]உலகொடு. [2]மூன்றுமுற்றி. [3]நீண்டுளது. [4]என்ன. [5]சிறுவன். [6]காண்டிரால். (௩.௫௪௪)

௩.—வணங்கிவிட்டு வானரத்தலைவர் விபீஷணனோடுசென்று போர்க்களங் காணுதல்.

தொழுதனர் தலைவ ரெல்லாந் தோன்றிய காத றூண்ட, எழுகென விரைவிற்[1]சென்றா ரிராவணற் கிளவலோடுங், கழுகொடு பருந்தும் பாறும் பேய்களுந் கணங்கண் மற்றுங், குழுவிய களத்தைக் கண்ணி னோக்கினர் துணுக்கங் கொண்டார்.

(இ - ள்.) தலைவர்களெல்லாம் (ஸ்ரீராமனைத்) தொழுது (உள்ளத்துத்)தோன்றிய விருப்பம் தூண்டுவதனால் இராவணன் தம்பியானவிபீஷணனோடும் 'எழுக'என்று சொல்லி விரைவிற் போய்,—கழுகுடனே பருந்தும் பாறும் பேய்களும் ஆகியவற்றின்திரள்களும் மற்றுமுள்ளகாக்கைமுதலியனவும்திரண்ட படுகளத்தைக் கண்ணினால் நோக்கி அச்சங்கொண்டனர்; (எ - று.)—பாறு-பருந்தின்சாதிபேதம். பி-ம்:—[1]தேர்ந்தாரிராகவன், சென்றாரிராவணன். (௩.௫௪௫)

௪.—படுகளங்கண்ட வானரர் முதலிற் பேரச்சமடைந்து பிறகு மகிழ்ச்சிமிகுதல்.

ஏங்கினார் நடுக்க முற்றா ரிரைத்திரைத் துள்ள மேற
வீங்கினார் வெருவ லுற்றார் விம்மினா ருள்ளம் [1]வெம்ப
ஓங்கினார் மெள்ள மெள்ள வுயிர்நிலைத் துவகை [2]யூன்ற
[3]ஆங்கவ ருற்ற தன்மை [4]யாரறிந் தறைய கிற்பார்.

(இ - ள்.) (பின்னும் அவ்வானரர்),—ஏக்கங்கொண்டார்: நடுக்கமடைந்தார்: மிகவும்ஆரவாரித்து மனத்தில்(அச்சம்) மிகப் பருக்கப்பெற்றார்: வாய்புலற்றத் தொடங்கினார்; உள்ளம்வெதும்பவருந்தினார்: மெள்ளமெள்ள உயிர்நிலைக்கப்பெற்று மகிழ்ச்சி யூன்ற மேம்பட்டனர்: அப்போது அவருக்குநேர்ந்த தன்மையை எவர் அறிந்து சொல்லமாட்டுவர்? (எ - று.)—பி-ம்:—[1]வெம்பி. [2]ஊறி, ஊற. [3]வாங்கினார், ஆங்கிவர். [4]யார்கொலேபகரற்பாலார். (௩௫௪௬)

௫.—மிகப்பெரிய மூலபலத்தைக் காணும்படி நேறிப்படுத்துக் கூறுமாறு வானவர் வினவ, விபீஷணன் கூறத்தொடங்குதல்.

ஆயிரம் பருவங் [1]கண்டுங் காட்சிக்கோர் [2]கரையிற் றன்றால்
[3]மேயின [4]துறைக டோறும் [5]விம்மினார் நிற்ப தல்லால்
பாய்திரைப் [6]பரவை யேழுங் [7]காண்குறு [8]பதக ரென்ன
[9]நீயிருந் துரைத்தி [10]யென்றார் வீடண னெறியிற் [11]சொல்வான்.

(இ - ள்.) 'பாய்கின்ற அலையையுடைய கடலேழும்(ஒருங்கு திரண்டாற்போற்) காணப்படுகின்ற பாதகரான அரக்கர் பொருந்திய இடங்கள்தோறும் (காண்பவர்கள் அச்சத்தினால்) அழுதுகொண்டு நிற்பதல்லாமல் ஆயிரம்வருஷங்கண்டாலும் காண்பதற்கு ஓர்எல்லையில்லையாகையால், நீ இருந்து உரைப்பாய்' என்று(வானரர்) வினாவினாராக, விபீஷணன் முறைப்படி கூறலானான்; (எ - று.)—பி-ம்:—[1]கண்டால். [2]அளவிற்றன்றால். [3]போயின. [4]உவகையோடும். [5]விம்மினாநிற்பதல்லால், விம்மினர்புலம்பலல்லால். [6]வேலை. [7]காண்குறும். [8]பதகனென்ன. [9]நீயிர்தேர்ந்து, நீதெரிந்து. [10]என்றான். [11]சொன்னான். (௩௫௪௭)

வேறு.

௬.—இதுமுதல் இருபத்தோன்பது கவிகள்-விபீஷணன் இறந்த சேனைகளைச்சுட்டிக் கூறுவதைத் தெரிவிக்கும்.

காகப் பந்தர்ச் செங்கள மெங்குஞ் செறி[1]கால
[2]வோகத் தம்பிற் பொன்றின வேனு [3]முடலொன்றி
மேகச் சங்கந் தொக்கன [4]வேழும் [5]வெளியின்மை
நாகக் [6]குன்றம் நின்றன காண்மி னமரங்காள்.

(இ-ள்.)நம்முடையவர்களே!காகப்பந்தலைக்கொண்டதும் (இரத்தநீர்படுதலாற்) செந்நிறமடைந்ததுமான போர்க்களமெங்கும் நெருங்கிய யமனுடையதொடர்பைக்கொண்ட அம்பினால் இறந்துகிடந்தனவாயி

னும், (தாம்)உடல்கள் ஒன்றுபட்டதனால் மேகத்திரள்பொருந்தப் பெற்றனவான யானைகளாலியன்ற ஏழுமலைகளும் வெளியில்லாமல் நின்றனவற்றைக் காண்மின்கள்; (எ - று.)

யானைகள் இராமனம்புகளால் உயிர்மாண்டு தரையிற்கிடந்தனவாயினும் ஒன்றன்மேலொன்றாக வீழ்ந்தனவாக, இங்ஙனம் யானைப் பிணங்களினாலியன்றனவான பலதிரள்கள் மேகம்படியப்பெறுஞ் சப்த குலாசலங்கள்போலக் காணப்படுபவற்றை சுட்டிக் காட்டியவாறு. கொலைபுரிதலால், இராமபாணங்கள் 'காலயோகத்தம்பு' எனப்பட்டன. மாமிசம்மிக்க விடத்துக் காகங்கள் பந்தரிட்டாற்போல் வானத்தில் நெருங்கிப் பறத்தல் இயல்பு:ஆதலால், 'காகப்பந்தர்ச்செங் களம்' என்றது. ஓகத்து-யோகத்துஎன்பதன்திரிபு. பி - ம்:—[1]காலம். [2]மோகத்தம்பிற், வேகத்தம்பிற், யோகத்தம்பிற். [3]உடனொன்றி, உடலொன்றின். [4]வீழும். [5]வெளியின்றி. [6]குன்றினின்றன. (௫௱௪௮)

எ. வென்றிச் செங்கண் வெம்மை யரக்கர் [1]விசையூர்வ
[2]ஒன்றிற் கொன்றூற் றம்பு தலைப்பட் டுயிர்நுங்கப்
பொன்றிச் சிங்க [3]நாக வடுக்கல் பொலிகின்ற
குன்றிற் றுஞ்சுந் தன்மை நிகர்க்குங் குறிகாணீர்.

(இ-ள்.) (முன்பெல்லாம்) வெற்றிபொருந்தியவரும் செங்கண்ணை யுடையவருமான வெம்மையைக்கொண்ட அரக்கர்கள், விரைந்து செல்வனவும் ஒன்றிற்கொன்று முந்துற்றனவுமான ராமசரங்கள் தம் மீதுபட்டு உயிரைக்கொள்ளுதலால் இறந்து (ஏழுகுலமலைபோற்கிடக்கும் யானைப்பிணங்களின்மீது விழுந்து), பாம்புகளைக்கொண்ட அடுக்கல் விளங்குகின்ற மலையில் தூங்குகின்ற சிங்கத்தின் தன்மையையொத்திருக்குங் குறியைக் காண்மின்கள்; (எ - று.)

யானைப்பிணங்களின்மீது இராமபாணங்கள் பொத்தி யிறந்தஅரக்கர் வீழ்ந்துகிடத்தலைச் சுட்டிக்காட்டியது, இது. உற்றம்பு என்ற இடத்துஉற்றஎன்ற பெயரெச்சத்தின் அகரவீறுதொகுத்தல்.அடுக்கல்-அடுக்கினாற்போலுங்கல். பி - ம்:---[1]விசைஊர, மிசையூர. [2]ஒன்றுக் கொன்று, ஒன்றிச்சென்றுற்று. [3]நாகமடுக்கிற், நாகமடுக்கப், நாக வடுக்கிற். (௫௱௪௯)

அ. அளியிற் பொங்கு [1]மங்கண னேவு மயில்வாளிக்
களியிற் பட்டார் வாண்முக [2]மின்னுங் கரையில்லாப்
புளினத் [3]திட்டிற் [4]கண்ணகன் வாரிக் கடல்பூத்த
நளினக் [5]காடே யொப்பன [6]காண்மி னமரங்காள்.

(இ - ள்.) நம்மவர்களே! கருணையினால் ததும்பப்பெற்ற அழகிய கண்களையுடைய இராமன் ஏவுகின்ற கூரியஅம்பினால் மதக்களிப் போடு இறந்திட்டவரின் வாண்முகங்கள், விளங்குகின்ற கரையைப் பெற்றிராத இடமகன்ற நீரைக்கொண்ட கடல் (தன்னுடைய) புளினத்திட்டிலேபூத்த தாமரைத்தொகுதியை யொத்துத் தோன்றுவனவற்றைக் காண்மின்கள்; (எ-று.)

அம்பு பொத்தப்பெற்றுக் கடற்கரையில் மதக்களிப்பாற் செந்நிறம் பெற்ற வீரர்முகங்கள் விழுந்துகிடப்பவை - தாமரைக்காடு மணல் மேட்டில் மலர்ந்திருப்பவற்றை யொக்குமென்றார்: தற்குறிப்பேற்ற வணி. முகத்திற் பொத்திய பாணங்கள் - தாமரையில் மொய்க்கும் வண்டுகள் போலு மென்க. அளியிற்பொங்கும் - வண்டுகளால் மொய்க்கப்பெற்ற என்று கூறி நளினக்காட்டிற்கு அடையாக்குவாரு முளர். பி - ம்:—[1]கங்கமுதற்பல்குலமார்க்கக், கங்கைமுதற்பல்கணமார்க்கக். [2]என்னுங்கரையில்ல, மின்னுங்கரையில்ல, எங்குங்கரையில்லார். [3]திட்டைக். [4]கண்கனல்சோரிக், கண்ணகன்சோரிக். [5]கானேயொத்தன. [6]பார்மின். (௩ருரு0)

கூ. [1]பூவாய் வாளிச் செல்லெறி காலேப் பரி[2]பொன்றக்
[3]கோவார் விண்வாய் வெண்கொடி [4]திண்பா யொடுகூட
[5]மாவார் திண்டேர் [6]மண்டுத லாளீர் [7]மறிவேலே
நாவாய் மானச் செல்வன காண்மி னமரங்காள்.

(இ - ள்.) நம்மவர்களே! சிறப்புப்பொருந்திய வானத்திற்பொருந்திய வெண்கொடியையுடைய குதிரைகட்டுதலுறுகின்ற வலியதேர்கள், கூர்மைபொருந்திய அம்புகளாகிய இடி எறிந்தகாலத்து(த் தம்பாற் கட்டிய) குதிரைகள் இறந்துபடவும் இரத்தப்பெருக்கிற்) செல்வதனால், நீர்த்திரைமடங்கப்பெற்ற கடலிலே திண்ணியபாயோடுசெல்வனவான மரக்கலங்களை யொத்திருக்கக் காணுங்கள்; (எ - று.)

பூட்டியகுதிரைகள் இராமசரங்களால்இறந்திடவும் வெண்கொடித்தேர்கள் இரத்தப்பெருக்கா லீர்க்கப்பட்டுச் செல்பவை, கடலிற்செல்லும் பாய்கட்டியமரக்கலம்போலு மென்றவாறு. குதிரைகள் பொன்றவும் தேர்கள் செல்வனவெனக்கூறியது - பிறிதாராய்ச்சியணியாம்: இதனை, வடநூலார் விபாவநாலங்கார மென்பர்: இது தற்குறிப்பேற்ற வணிக்கு அங்கமாய் வந்தது. பூ - கூர்மை. செல் - இடி. கோ-தலைமை; சிறப்பு-சந்திரசூரியர் எனினுமாம். பி - ம்:—[1]பாவாய். [2]பொன்றிக். [3]கோவாய்வன்பாய், தேவார்விண்வாய். [4]திண்கால்கொடு, திண்காலொடு. [5]மாவாய், மாவார்த். [6]மண்டுகுலாநீர், மண்டுபுலானீர். [7]மறு.

௬0. [1]ஒழுகிப் பாயு மும்மத வேழ முயிரோடும்
[2]எழுகிற் கில்லாச் செம்புனல் வெள்ளத் திடையிற்ற
[3]பழுகிற் றல்லாப் பஃறிரை [4]தூங்கும் படர்வேலே
முழுகித் தோன்று [5]மீனர சொக்கு முறை[6]நோக்கீர்.

(இ-ள்.) வெளியேசிந்திப்பாய்கின்ற மூன்றுமதங்களையுடைய யானை உயிருடனே இரத்தவெள்ளத்திலே எழுந்திருக்கமாட்டாமல் மூழ்கியது, (இதுவரையிற்) பழகியிராத பலஅலைகள் மடங்கிவிழப்பெற்ற பரவியகடலிலே முழுகித் தோன்றுகின்ற மீனரசை யொத்திருக்கப் பெற்ற முறைமையைக் காண்மின்; (எ - று.)

இரத்தக்கடலில்முழுகுவதால், 'பழுகிற்றில்லா...வேலை' எனப்பட்டது. உயிருடனிருந்தும் இரத்தவெள்ளத்தினிடைப்பட்டு எழுந்து செல்லமுடியாமல் யானை அங்குத்தானே மூழ்கியிற்றது, அபூர்வமான தொருகடலிலே மீனரசு மூழ்கித்தோன்றுந்தன்மையைப் போலுமென்றார்: தற்குறிப்பேற்றவணி. மீனரசு - திமிங்கிலமென்பர். எழுந்து செல்லமாட்டாமைக்குக் காரணம் தம்மீது அம்புபாய்ந்தமை யெனக் கொள்ளலும் ஒன்று. பி-ம்:—[1]முழுகிமாயும். [2]எழுகற்கில்லா, எழுகிற்கெல்லா, மெழுகிச்செல்லாச். [3]பழுகிற்கில்லா. [4]தாங்கும். [5]மீனிறை. [6]காணீர். (ருஉருஉ)

கக. கடக்கா ரென்னப் பொங்கு கவந்தத் தொடுகைகள்
தொடக்கா நிற்கும் [1]பேயில யத்தின் றொழில்[2]பண்ணி
[3]மடக்கோ வில்லா வார்[4]படி மக்கூத் தமைவிப்பான்
[5]நடக்கால் காட்டுங் [6]கண்ணுள [7]ரொக்குந் நமரங்காள்.

(இ-ள்.) நமரங்காள்! தம்முடல் மேகத்தையொத்திருக்கக் கிளர்ந்தெழுகின்ற கவந்தத்திற்குஏற்பக் கைகளைச் சேர்க்காநிற்கின்ற [தாளம் போடுகின்ற]பேய், இலயத்தின்செயலைச் செய்தவண்ணம்மடங்குதலில்லாத [சோம்புதலில்லாத] நீண்ட அபிநயக்கூத்தை (மாணாக்கர்க்குப்) பொருந்தச்செய்யும்பொருட்டு நடனக்காலைக் காட்டுகின்ற பரதாசாரியரை ஒக்கும்; (எ - று.)

கவந்தங்கள் கூத்தாடுகையில் அதற்குஏற்பப் பேய்கள்தாம் கைத்தாளமிட்டுக் கூத்தாடுவது - கூத்துப்பயிலும் மாணாக்கர்க்கு அக்கூத்தைக் கற்பிக்கும்பொருட்டுத் தாளமிட்டுக் கூத்தாடிக்காட்டுகின்ற பரதசாஸ்திரிகரைப்போலு மென்றவாறு. கண்ணுள் - கூத்து: அதனைச்செய்பவர் - கண்ணுளர்: கூத்தர்: இங்குக்கூத்தைப் பயில்விக்கும் ஆசிரியரைக் காட்டிற்று. கூத்தரையேகூறுவதாக உரைப்பினுமாம். கடம் - உடல். கடக்காரென்ன - மதநீரையுடைய காரை [யானையை] யொத்தஎன்று பொருள் ஓதுவாருமுளர். மடக்குஓவில்லா-முடங்குதல் நீங்காத என்றலும், [4]படிமைக்கூத்துஎன்று பாடமோதி-வெறியாளன் ஆடும் வெறியாட்டுஎன்றலும் உண்டு. பி-ம்:—[1]பேய்சிலநாகத், பேய்சிலயத்தின். [2]பூண்ட, பண்ண, பேணி. [3]மடக்கோர், வடக்கோ. [5]நடக்கோல். [6]கண்ணினர். [7]ஒப்பாம். (ருஉருரு)

கஉ. மழுவிற் [1]கூர்வாய் வன்ப லிடுக்கின் வயவீரர்
குழுவிற் [2]கொண்டார் நாடி [3]தொடக்கப் [4]பொறிகூட்டத்
தழுவிக் கொள்ளக் கள்ள மனப்பே யவை[5]தள்ளி
நழுவிச் [6]செல்லு மியல்பின காண்மின் னமரங்காள்.

(இ - ள்.) நமரங்காள்! வாயிலே மழுப்போலக்கூரிய வலிய பல்லையும் இடுங்குதலில்லாத வெற்றியையுமுடைய (அரக்க)வீரர் கூட்டமாக இருப்பவரின் (உடலின்) நரம்புகள், தொடக்குதலையுடைய [கட்டுதலையுடைய] யந்திரம்போல(த் தம்மையும்) உட்படுத்துமாறு தழுவிக்

கொள்ள, வஞ்சகமுள்ளமனத்தையுடைய பேய்கள்அவற்றைத் தள்ளி நழுவிச்செல்லுகின்றவற்றைக் காண்மின்கள்; (எ - று.)

கூட்டமாயிறந்த அரக்கவீரரின் உடலிலிருந்து அறுபட்டு எழுந்த நரம்புகள் தொடக்கப்பொறிபோல் தம்மைக்கட்டுப்படுத்துமாறுதழுவ, அவற்றைத்தப்பிச்செல்லும் பேய்களைக் காண்மின்களென்று காட்டுகின்றனன் விபீஷணனென்க. கவந்தங்களோடு நர்த்தனஞ்செய்யப்புக்க பேய்களின் கால்கள் அக்கபந்தங்களின்பல்லிடுக்கிலே சிக்கிக்கொள்ள, அவற்றின் உடல்நரம்புகள் கூட்டமாகத் தம்மைப் பொறிகளைப்போல் தொடக்குமாறு ஆரம்பிக்க, இக்கவந்தங்களோடு நம்மால் நர்த்தனஞ் செய்ய முடியாதென்று அப்பேய்கள் மெல்லவிலகிச்செல்வதைக் காணீரென்று இப்பாட்டுக்குப்பொருளுரைப்பாருமுளர். பி-ம்:—[1]கூர்வாள். [2]கொண்டனாடி, கொண்டன்னுடி. [3]துடித்தப், துடிக்கப். [4]பொறிகூடித், பொறிகூட்டித். [5]தள்ள, தம்மை. [6]செல்லாவீழ்வன, தள்ளிப்போர்வன, செல்லவீழ்வன, செல்லாவியல்பின. (௩௫௫௪)

௧௩. பொன்னின் ஞெடை [1]மின்பிறழ் நெற்றிப் புகர்வேழம்
பின்னும் முன்னு மாறின வீழ்வில் [2]பிணையுற்ற
தன்னின் னேரா மெய்யிரு பாலுந் [3]தலைபெற்ற
என்னுந் தன்மைக் கேய்வன பல்வே றிவைகாணீர்.

(இ - ள்.) பொன்னுலியன்ற நெற்றிப்பட்டத்தினுல் ஒளிவிளங்குகின்ற நெற்றியிலே (செம்)புள்ளிகளைப்பெற்ற யானைகள் (இராமசரங்களால்) வீழ்கையில் பின்புறமாகவும் முன்புறமாகவும் மாறினவாய்ச் சேர்தல்பொருந்தியவை,தன்னில்(தான்)ஒப்பாக உடம்பின்இருபாலும் தலையைப்பெற்றன என்னுந் தன்மைக்குஏற்றன பல்வேறான இவைகளைக் காணீர்; (எ - று.)

யானைகள் இராமசரங்களால்அடிபட்டு வீழுகையில் ஒன்றன் பிருஷ்டபாகம் மற்றொன்றன்பிருஷ்டபாகத்தோடுபொருந்த மாறிவீழ்பவைபல, இருபுறத்திலும் ஒருநிகரான தலையைப்பெற்ற மிருகங்கள் பல்வேறு போன்றுள்ளவற்றைக் காண்மினென்றவாறு. நேரா-உடன் பாட்டெச்சம். பி - ம்:—[1]மீன். [2]பிணைவுற்ற. [3]தலைபெற்றது. (௩௫௫௫)

௧௪. நாமத் திண்போர் முற்றிய [1]கோபந் நகை [2]நாறும்
பாமத் [3]தொன்னீ ரன்ன நிறத்தோர் பகுவாய்கள்
தூமத் தோடும் [4]வெங்கன லின்னுஞ் சுடர்கின்ற
ஓமக் குண்ட மொப்பன பல்வே றிவைகாணீர்.

(இ - ள்.) அச்சத்தைவிளைக்கின்ற வலியபோரில் முதிர்ந்தகோபம் கடுஞ்சிரிப்பில்தோன்றப்பெற்றனவும் பரவுதலையுடைய பழமையான நீரையுடைய கடலையொத்தநிறத்தைக்கொண்டனவுமான ஒப்பற்ற பிளவுபட்டவாய்கள்,—புகையுடனே கொடியகனல் இன்னும்எரிகின்ற ஓமகுண்டங்களையொப்பன பல்வேறு இவற்றைக் காணீர்; (எ - று.)

இறந்து கீழ்வீழ்ந்துகிடக்கின்ற வீரரின்பகுவாய்கள் - கோபத் தோற்றம்மாறுமையால் புகைகனல்களுடனே சுடர்கின்ற ஓமகுண்டம்

போலு மென்கின்ருன். பி-ம்:—[1]காலந், நாளிந். [2]நின்றும். [3]தெண் ணீர். [4]வெங்கனலோடும். [5]வேறுவை. (நடுருகூ)

கரு. [1]மின்னும் மோடை யாடல் வயப்போர் [2]மிடல்வேழக்
கன்னம் மூலத் [3]தற்றன வெண்சா மரை[4]காணீர்
[5]மன்னும் மாநீர்த் தாமரை மானும் [6]வதனத்த
அன்னம் [7]மெல்லத் [8]துஞ்சுவ [9]வொக்கும் மவை[10]காணீர்.

(இ - ள்.) மின்னுகின்ற நெற்றிப்பட்டத்தையும் ஆடலையுமுடைய வெற்றிபொருந்தியபோரிலே வலிமையைக்காட்டிய யானைகளின் காதி னடிப்புறத்தினின்றுநீங்கிய வெண்சாமரைகளைக் காணீர்: அவைகள், நிலைபெற்ற மிக்கநீரிற்பொருந்திய தாமரைமலரையொத்த(வீரர்களின்) வதனத்தின்மீதுபடிந்தனவாய்,அன்னப்பறவைகள்(தாமரைமலர்களில்) மெல்லத்துஞ்சுமவற்றையொக்கும்: காண்மின்கள்; (எ-று.)—பி-ம்:— [1]பின்னும். [2]மத. [3]உற்றன, இற்றன. [4]காண. [5]மன்னர்மன்னத், மன்னும்வாசத், மன்னர்மாளத். [6]வதனத்தால், வனமீதே. [7]பூவிற், பூமேற், மழுவில். [8]துஞ்சின. [9]ஒக்கின்றன, ஒக்கின்றவை. [10]பாரீர்.

கசு. [1]ஒளின் முற்ரு [2]துற்றுயர் வேழத் தொளிர்வெண்கோடு
ஆளின் முற்ருச் செம்புனல் வெள்ளத் தவைகாணீர்
கோளின் முற்ருச் [3]செக்கரின் மேகக் [4]குழுவின்கண்
நாளின் முற்ரு வெண்பிறை [5]போலுங் நமரங்காள்.

(இ - ள்.) நமரங்காள்! ஒழுங்காக முற்றுகைசெய்யாது (தனித் தனியே) உற்று உயர்ந்த வேழங்களின் விளங்குகின்ற வெண்கோடு கள் வீரர்கள்நிரம்பாத செந்நீர்வெள்ளத்திலுள்ளவை,—ஒளியையுடைய முற்ருத செந்நிறமுள்ள மேகத்திரளிற் காணப்படும் நாள்நிரம்பாத வெண்பிறைபோலத்தோன்றும்: காண்மின்கள்; (எ - று.)

செந்நீரிற்படிந்ததனுற் செந்நிறமான யானைகளின்தந்தங்கள் செந் நிறங்கொண்டவானத்துத்தோன்றும் இளம்பிறைபோலு மென்ருர் திரண்டுவருமாயின் ஒன்றன்மேலொன்று விழுமாதலால், அதனைத் தவிர்க்க 'ஒளின்முற்ருது' என்றது. வீரர்கள்நிரம்பி யானைகள் விழுந்து கிடப்பின் அவ்யானைத்தந்தம் தோன்றுவதருமைபற்றி, 'ஆளின்முற்ரு' என்றது. கண்ணுக்குப்புலனுக வேண்டுமாதலால், முற்ருச்செக்கர் மேகம் கூறப்பட்டது. பி - ம்:—[1]வேளின், ஓளிம். [2]உற்றிகல். [3]செருக்கண், செக்கருள். [4]தழிவிண்ணின். [5]போல்வ. (நடுருஅ)

கஎ. கொடியும் வில்லுங் [1]கோலொடு வேலுங் குவிதேருந்
துடியின் பாதக் குன்றின் மிசைத்[2]தோல் விசியின்கட்டு
ஒடியும் வெய்யோர் கண்ணெரி [3]செல்ல வுடன்வெந்த
தடியுண் டாடிக் கூளி [4]தடிக்கின் றனகாணீர்.

(இ - ள்.) கொடி வில் அம்பு வேல் என்றஇவைகள் குவிந்துள்ள தேரிலும், துடியென்னும் பறைபோன்றபாதங்களையுடையமலைபோன்ற

தோற்றத்தையுடைய யானையின்மேல் தோலாற்கட்டப்பட்ட அம்பாரியிலும்,(இராமபாணங்களால்உயிர்) களையப்பெற்று அழிந்த கொடியோரான அரக்கரின் கண்களிலிருந்து வெளிப்பட்ட தீச் சென்றதனால், ஒருசேரவெந்த மாமிசங்களை யுண்டு பேய்கள்(களிப்பினால்) கூத்தாடி உடல்பருப்பனவற்றைக் காண்மின்;(எ - று.)—யானைவீரர் தேர்வீரர்களின் கண்ணினின்றுபொங்கும் கோபத்தீயாற் பக்குவமாக வெந்த தசையைப் பேய்கள்உண்டு மகிழ்ந்து உடல்பருக்கப்பெறுமென்க. தேரிலும் விசியிலும் கட்டு ஒடியும் வீரர்என இயையும்.கட்டு-இறந்தகாலவினையெச்சம். ஒடிதல் - அழிதல். பி-ம்:—[1]கோலொடு தண்டும். [2]தோல்விசுமஞ்சுட்டொடியும், தோறுவர்ச்சுட்டொடியின், தோல்விசியுஞ்சுட்டொடியும், தோல்விசியின்கட்டொடியின். [3]சிந்த. [4]தடிக்கின்றவை. (௩௫௫௯)

௧௮. சகரம் முந்நீர்ச் செம்புனல் வெள்ளந் [1]தடுமாற
மகரந் [2]தம்மின் [3]வந்தன [4]கண்டு மனமுட்கிச்
சிகரம் மன்ன [5]யாவைகொ லென்னச் சில[6]நாணி
[7]நகரம் நோக்கிச் செல்வன காண்மி னமரங்காள்.

(இ-ள்.)நமரங்காள்!சகரர்தோண்டியதான கடலோடு செந்நீர்வெள்ளமுந் தடுமாறுவதனால், சில சுறாமீன்கள் சோரிவெள்ளங்களில் வந்தவை,—(யானைகளைக்) கண்டு 'மலையையொத்தஇவை யாவையோ?' என்று மனத்து அஞ்சி நாணமுற்றுத் தம்மிடத்தைநோக்கிச் செல்வனவற்றைக் காண்மின்; (எ - று.)

இச்செய்யுளுக்கு, யானைகள் சுறாமீன்களைக்கண்டு அஞ்சி யானையோஎன்றுமயங்கி நாணி மனமுட்கித் தம்மிடத்துச்செல்வன காண்மினென்ற கருத்துப்படப் பொருள்கூறுவாருமுளர். நகரம் - தம்வாழிடம். பி - ம்:—[1]தடுமாறி, தடுமாற [2]தன்மீன், நன்மீன். [3]வந்தது. [4]காணு, காண்டும். [5]யானைகொல். [6]நாளின். [7]நகரன்னோக்கி. (௩௫௬௦)

௧௯. விண்ணிற் [1]பட்டார் [2]வெற்புறழ் காயம் பலமேன்மேல்
மண்ணிற் செல்வார் மேனியின் [3]வீழ மடிவுற்றார்
எண்ணிற் றீரா வன்னவை [4]தீரு மிடமில்லாக்
கண்ணிற் [5]றீயார் விம்மி [6]யுளைக்கும் படிகாணீர்.

(இ - ள்.) வானத்தில்இறந்தாரின் மலையையொத்த உடல்கள் பல மேன்மேல் மண்ணிற்செல்வாரின்மேனியில் வீழவே, (அந்தமண்ணிற் செல்பவர்கள்) உயிர்சோர்ந்தாராய், கணக்குக்குஅடங்காத அவ்யாக்கைகளினாற்றோன்றிய துன்பத்தினின்று நீங்கிட வலிமையற்று, கண்ணிற் றீப்பொறியைக்கக்கினவராய் அழுது வருந்துகின்ற வகையைக் காணீர்; (எ - று.)

வானத்துச்செல்லும் அரக்கவீரர் சிலர்மீது இராமபாணம் பட்டு அவர்களைவீழ்த்த, அவ்வாறுவீழ்ந்த அவ்யாக்கைகளினாற் பூமியிற்செல்லும் சிலஅரக்கவீரர் உயிர்குன்றிக் கண்ணில் தீப்பொறிபறக்க விம்மிக் கத்துவதைக் காட்டுகின்றான் விபீஷணனென்க. பி-ம்:—[1]செல்வார். [2]வெம்புறழ். [3]மீள. [4]நீவுமிடனல்லாக், தீருமிடமில்லாக், [5]தோன்றார். [6]உழக்கும். (௩௫௬௧)

௨௦. அச்சிற் றிண்டே ரானையின் மாமே [1]லகன்வானின்
மொய்ச்சுச் சென்றார் [2]மொய்குரு தித்தா ரைகள் [3]முட்ட
உச்சிச் சென்றா னாயினும் வெய்யோ னுதயத்தின்
குச்சிச் சென்று [4]னொத்துள னாகுங் குறிகாணீர்.

(இ - ள்.) அச்சைப்பிரதானமாகக்கொண்ட வலியதேரின்மேலும் யானையின்மேலும் குதிரைமேலும் அகன்ற வானவழியாக நெருங்கிச்சென்றவரான அரக்கவீரர்களின் நெருங்கியஇரத்தவொழுக்குக்கள் மோதுவதனால்,சூரியன் உச்சிப்போதிற் சென்றிருந்தானாயினும், உதயமலையின்சிகரத்திற் சென்றானை யொத்துத் தோன்றுங் குறியைக் காணீர்; (எ - று.)

இரத்தத்தாரை தன்மேல்முட்டியதனால் உச்சிக்காலத்துச் சூரியன் உதயகாலத்துச் சூரியன் போலச் செந்நிறத்தவனாகக் காணப்பட்டன னென்பதாம். பி-ம்:—[1]காலாளின். [2]மொய்க். [3]மூட. [4]ஒத்துளது.()

௨௧. காறோய் மேனிக் கண்டகர் கண்டப் படுகாலை
ஆறோ வென்ன [1]விண்படர் செஞ்சோ ரியதாகி
[2]வேறாய் நின்ற [3]வெண்மதி செங்கேழ் நிறம்[4]விம்மி
மாறோர் வெய்யோன் மண்டில [5]மொக்கின் றதுகாணீர்.

(இ - ள்.) காற்றின்தன்மைபொருந்திய [விரைந்துசெல்லவல்ல] மேனியையுடைய பகைஞர் துண்டப்படும்பொழுது, விண்ணிற்படர்ந்த (அந்தச்) செந்நிறச்சோரியானது 'ஆறோ!' என்று கருதும்படி தோன்றியதனால், வேறாகநின்ற வெள்ளியசந்திரன் செந்நிறம்மிக்கு(ச் சந்திரனுக்கு)மாறான ஒருசூரியமண்டிலத்தைப் போன்றிருப்பதைக் காணீர்.

இங்குச் சந்திரன் தன்வெண்மைநிறம்மாறிச் சூரியமண்டலம்போல் செந்நிறத்தவனானா னென்று கூறியது - பிறிதின்குணம்பெறலணியாம். கால் தோய் - இரத்தக்கால்படிந்த என்று கூறினுமாம். இனி, காறு ஓய்என்றுபிரித்து, காறு - அளவு [அதாவது - பராக்கிரமம்] ஓய்ந்த என்று கூறினருமுளர். கண்டகர் - முட்போலக்கொடியவர்: எனவே, பகைவரைக்காட்டும். பி-ம்:—[1]விண்டவர். [2]வேறோர். [3]வெண்மணி. [4]விம்ம. [5]ஒக்கும்வகை, ஒக்கும்மவை. (௩௫௬௩)

வேறு

௨௨. வானனைய மண்ணனைய [1]வளர்ந்தெழுந்த [2]பெருங்குருதி மகர வேலை,[3]தானனைய வுற்றெழும்பா ரவைதெளித்த புதுமழையின் [4]றுள்ளி தாங்கி, மீனனைய நறும்[5]போதும் விரையருந்துஞ் சிறைவண்டு நிறம்[6]வேறெய்திக், [7]கானகமுங் கடிபொழிலு முறி[8]யீன்ற போன்றுளிர்வ காண்மின் காண்மின்.

(இ - ள்.) வான்நனையவும் மண்நனையவும் மிக்கு எழுந்த பேரிரத்தத்தினால் மகரம்வாழுமிடமான கடலும் தான் நனைந்திடவும் (இங்ஙனம்பிணங்களினின்று) பொருந்தியெழுகின்ற தெளித்த புதுமழையின் துளியைப் பூமியினிடங்கள்தாங்குவதனால் நட்சத்திரம்போல் விளங்கு

கின்ற [வெள்ளிய] நறுமணமுள்ள மலர்களும் நறுமணமுள்ள தேனை நுகர்கின்ற சிறகையுடைய வண்டுகளும் வேற்றுநிறத்தையடையாநிற்க, காட்டினிடமும் நறுமணமுள்ளபொழில்களும் (தம்மீதுதெறித்தகுருதியினால்) தளிரையீன்றாற்போலத்தோன்றுமவற்றைக் காண்மின்காண்மின்; (எ-று.)—நனைய நனைய நனைய தெளித்த மழைத்துள்ளியைப் பாரவைதாங்க, ஆங்குள்ள போதும் வண்டும் நிறம்வேறெய்தின என்க: எய்தி=எய்த:எச்சத்திரிபு. பி - ம்:—[1]வளைந்தெழுந்த. [2]கொழுங். [3]தானனைவுற்றெழும்பறவைச்சிறை. [4]துளியதாகி. [5]போதின்விரையரும்புங்கறை. [6]வேறுகக் [7]கானினமுங், கானனமுங். [8]ஈன்றதென. (௩௫௬௪)

௨௩. வரைபொருத [1]மதவானைத் [2]துணைமருப்புங் [3]கிளர்முத்து மணியும் வாரித், திரைபொருது [4]புறங்குவிப்பத் திறங்கொள்பணை மரமுருட்டிச் சிறைப்புள் ளார்ப்ப,நுரைக்[5]கொடியும் [6]வெண்குடையுஞ் [7]சாமரையு மெனச்சுமந்து [8]பிணத்தி ணுண்மைக்,கரை[9]பொருந்துங் கடன்மடுக்குங் கடுங்குருதிப் [10]பேராறு காண்மின் காண்மின்.

(இ - ள்.) மலையோடுபொருத மதயானையின் இரட்டைத்தந்தங்களும் விளங்குகின்ற முத்துக்களும் மணிகளும் என்ற இவற்றை வாரிக்கொண்டு அலைகள்மோதி ஒருபுறத்திற் குவிப்பவும், கூறுபாட்டைக்கொண்ட கிளைகளையுடைய மரத்தை யுருட்டுதலாற் சிறைகளையுடைய பறவைகள் ஆரவாரிக்கவும், வெண்குடை கொடி சாமரைஎன்ற இவைகளையெல்லாம் நுரையென்னுமாறுசுமந்துகொண்டு, பிணங்களின் பாரத்தைக் கரைபொருந்திய கடலிற் செலுத்தும் கொடியகுருதிப் பேராற்றைக் காணுங்கள், காணுங்கள்; (எ - று.)

மணிமுதலியவற்றை ஒருபுறத்திற்குவித்தும், தமக்கு வாழிடமான பெருங்கிளைகளையுடைய மரங்களையுருட்டுதலாற் பறவைகளை ஆரவாரிக்கச் செய்துப், குடைமுதலியன நுரைபோல்தோன்ற அவற்றைச்சுமந்தும், பிணச்சுமைகளையும் கடலிற்செலுத்துவது குருதிப் பேராறு எனக் காட்டியவாறு. பி - ம்:—[1]மதயானை. [2]வளை, வளர். [3]கிளை. [4]பிறங்குவிப்ப. [5]குடையும். [6]கொடியும்வெண். [7]சாமரமும். [8]பிணத்தினுண்மைக். [9]பொருது. [10]பேர்யாறு. (௩௫௬௫)

௨௪. கைக்குன்றப் பெருங்கரைய நிருதர்[1]புயக் கற்செறிந்த [2]கதலிக் கானம், மொய்க்கின்ற பரித்[3]திரைய முரட் [4]கரிக்கைக் [5]கோண்மாவ முளரிக் கானின், [6]மெய்க்கின்ற வாண்முகத்த விழுக்குடரின் பாசடைய நிணமேற் [7]சேற்ற, உய்க்கின்ற [8]வுதிரநிறக் களங்குளங்க ளலப்பிறந்த [9]வுவையுங் காண்மின்.

(இ - ள்.) கையையுடைய மலைபோன்றயானையாகிய பெருங்கரையைப்பெற்றனவும், நிருதருடைய புயங்களாகிய (திரள்)கல் செறிந்தனவும், கொடிகளின்தொகுதி நெருங்கிய குதிரைகளாகிய அலையையுடையனவும், மாறுபடுகின்ற யானைக்கைகளாகிய முதலையைக்கொண்டனவும்,தாமரைக்காடுபோல மெய்மையைப்படைத்த ஒள்ளியமுகத்தையுடைய

னவும் [ஒள்ளியமுகங்களாகிய தாமரைக்காட்டைப்பெற்றனவும்], விழு கின்ற குடராகிய பாசிலையையுடையனவும், நிணமாகிய சிறந்தசேற்றை யுடையனவுமான (தன்னிற்பட்டோரை) உட்கொள்ளுகின்ற செந்நிற முள்ள களமாகிய உதிரக்குளங்கள் அளவிறந்தன உதோதோன்றுவன வற்றையும் காண்மின்; (எ-று.) — முற்றுருவகவணி. கோண்மா-முதலே. பி-ம்:—[1]பயக்காற்செறிந்த. [2]பதனங்காப்ப. [3]திரையும். [4]கரியின். [5]குரை மாவும். [6]நெய்க்கின்ற. [7]சேற்றில். [8]உதிரநீர்க்குளங்கள். [9]காண்மின் காண்மின். [7]செற்றனைப்படிப்பாருமுளர். 'உய்க்கின்ற வுதிரநீர்க்களங்க ளுலப்பிலவிறந்த வுவகைக்காண்மின்' என்று ஒருபிரதியில் நான்காமடி.

உரு. நெடும்படைவா ளுஞ்சி[1]லுழு நிணச்சேற்றி னுதிரநீர் நிறைந்த காப்பிற், [2]கடும்பகடு படி[3]கிடந்த[4]கடும்பரம்பி னினமள் ளர் [5]பரந்த [6]கையிற், படுங்கமல மலர்[7]நாறு முடிபரந்த பெருங்கி டக்கைப் [8]பரந்த பண்ணைத், தடம்பணையி னறும்பழனந் தழுவி யதே யெனப்[9]பொலியுந் [10]தகையுங் காண்மின்.

(இ - ள்.) நெடியவாட்படையாகிய கலப்பையினால் உழுகின்ற நிணமாகியசேற்றிலே உதிரநீராகிய நிறைந்த நீர்க்கட்டினையும், விரை வுள்ள யானைகளாகிய எருமைக்கடாக்கள்படிந்து கிடக்கப்பெற்றதாகி விரைவாகப்பரவுதலையுடைய இனமான வீரராகிய கடிய பரம்புஅடிக் குந் தொழிலினையுடைய கூட்டமான உழவர்கள் பரந்த (இரு)புறத் தினையும் (பெற்று), முளைத்ததாமரைமலரின் மணம்நாறுகின்ற தலை களாகிய நாற்றுமுடிகள்பரந்துகிடந்த பெரியஅந்தப்போர்க்களம், மிகுந்த மகளிர்கூட்டத்தையுடைய பெரியவயல்களைக்கொண்ட நறிய மருதநிலத்தின்தன்மையைத் தழுவியதெனப் பொலிகின்ற தன்மை யையுங் காண்மின்; (எ-று.)

போர்க்களத்தை மருதநிலம்போலு மென உருவகவணிவகையாற் கூறினார்: இந்த உருவகத்திற்கு, 'நெடும்பகடு, கடும்பரம்பினினமள்ளர், நாறுமுடி' என்ற இடங்களிலுள்ள சிலேடையணி அங்கமாய்நின்றது. நெடும்பகடுஆகிய பகடு, கடும்பரம்பின் இனமள்ளராகிய கடும்பரம்பின் இனமள்ளர், நாறுகின்ற முடியாகிய நாற்றுமுடி என்க. கலப்பையும், உழுஞ்சேறும், நீர்தேக்குதலும், எருமைக்கடாக்கிடந்த பரம்படிக்குந் தொழிலைக்கொண்ட மள்ளர் பரந்த மருங்கும், நாறுமுடிபரந்தபெருங் கிடக்கையும், பண்ணைமகளிர்கூட்டமும் மருதநிலத்துக்காணப்படும்: வாட்படையும், நிணமும், உதிரத்தேக்கும், கடாக்களிறு தோய்ந்த பரம்பினினமள்ளர்பரந்த மருங்கும்,தாமரைமலர்நாறுமுடி பரந்தகிடக் கையும் இந்தப் போர்க்களத்து உள்ளனவென்க. பி-ம்:— [1]உழு. [2]படும். [3]தோய்ந்த. [4]கரும். [5]கலந்த. [6]கையுட். [7]நாற்று. [8]கரந்த. [9]பொலிந்த. [10]தன்மை. (ருருகூஎ)

உசா. வெள்நீர்த்த [1]வரைபுரையு மிடலரக்க ருடல்விழவும் வீரன் [2]வில்லின், [3]ஒளிநீர்த்த முழுநெடுநா ணுருமேறு பலபடவு முலகங் கீண்டு,களிநீர்த்த [4]நாகபுரம் புக்கிழிந்த பகழி[5]வழி நதியி னோடிக், களிநீர்த்துப் புகமண்டுங் [6]கருங்குருதித் தடஞ்சுழிகள் காண்மின் காண்மின்.

(இ - ள்.) கட்டுத்தறியைப் போக்கிய யானையையொத்த வலிய அரக்கரின் உடல்கள் விழவும், மகாவீரனான ஸ்ரீராமனுடைய விளங்கு

கின்ற(காதுவரையில்)இழுக்கப்பெற்ற வில்லின்முழுநெடுநாணினால் பல இடியேறுபோன்ற ஓசை தோன்றவும்,உலகத்தைக்கீண்டு நடுவிடத்துப் பிளவுபட்ட பாதாளலோகத்துப் போயிழிந்த (இராம) பாணங்களினாற் பெருகியதாய் நதிபோலோடிக் களிறுகளை இழுத்துநெருங்கச் செல்லுகின்ற மிக்க குருதிப்பெருக்கின் பெருஞ்சுழிகளைக் காண்மின்கள் காண்மின்கள்; (எ - று.)

இராமசரங்கள் தாம்புறப்படும்போது நாணினின்றுபேரொலியைப் பரப்பிப் பிறகு அரக்கருடலைவீழ்த்து இவ்வுலகத்தைக்கீண்டு பாதாளத்திற்புகுமென்று அப்பிரானது கணைகளின்தன்மை முதல்மூன்றடிகளிற் கூறப்பட்டது. அவ்வாறுசரங்கள் சேனைகளின்உடலைப்பிளந்து செல்லும்போது, அவ்வழியால்தோன்றிய இரத்தப்பெருக்கு நதிபோலஓடி யானைகளையும் தம்மிடத்துஅகப்பட இழுந்துச்செல்லும்போது அந்த இரத்தநதியில்பெருஞ்சுழிகள்தோன்றுவதைக் காட்டுகின்றனனென்க. வெளில் - கட்டுத்தறி. தடம்-நதி. தடஞ்சுழிகள்-பெருஞ்சுழிகளுமாம். நளில்-நடுவிடத்தில். மண்டப்புகும் எனமாறுக. பி - ம்:—[1]வரைபுரைவமிடலரக்கருடல், பைபுரவிமிடலாட்களுடல். [2]வில்லிற்று. [3]ஒளிநீர்த்தமுறநெடு. [4]நாகர்.[5]தொறுநதியினேடி,தொறுந்தீயினேடி, வழிதொறும்போய். [6]கடுங்குருதி. (௩௫௬அ)

உஎ. கைத்தலமுங் [1]காத்திரமுங் [2]கருங்கழுத்து நெடும்புயமுமுரமுங் கண்டித்து, [3]எய்த்திலபோய்த் திசைகடொறு மிருநிலத்தைக் [4]கிழித்திழிந்த தென்னி னல்லால், [5]மத்தகரி வயமாவின் வாணிருதர் [6]பெருங்கடலின் [7]மற்றிவ் வாளி, [8]தைத்துளதாய் நின்றதென வொன்றேயுங் காண்பரிய தகையுங் காண்மின்.

(இ - ள்.) கையினிடமும் முன்னங்காலும் கரியகழுத்தும் நெடும்புயமும்உரமும் கண்டித்து (அவ்வளவிலும்) இளையாதனவாய்ப்போய்த் திக்குக்கள்தோறும் (சென்று) பெருநிலத்தைக் கிழித்துக்கொண்டு (அந்தஇராமசரம்பாதாளத்திலும்)இழிந்ததென்று சொன்னாற் சொல்லலாமேதவிர, மதம்பிடித்தயானைகளிலும் வெற்றிபொருந்தியகுதிரைகளிலும், கொடிய நிருதராகியபெருங்கடலிலும் இவ்வாளிகளுள் ஒன்றேனுங் தைத்ததாய் நின்றிட்டதுஎன்று காணமுடியாத சிறப்பையும் காணுங்கள்; (எ - று.)

இராமபாணம் ஊடுருவி யப்பாலுஞ் சென்றிடாமற் சேனைகளின் உடலிற் பொத்தியவண்ணமாகவே நின்றிட்டது ஒன்றுமில்லையென்பதை யூன்றிப்பாருங்க ளெனக் காட்டுகின்றன னென்க. காத்திரம் - முன்னங்கால். கைத்தலம் - துதிக்கையின் நுனிப்பாகம். பி - ம்:—[1]காற்றரமும். [2]கடுங்***கண்டித்து, கழுத்துநெடும்புயமுரமுங்கடிது போக. [3]எத்திசைபோய்த். [4]குழித்திழிந்த. [5]மைத்தகளிற்றினமாவின், மைக்களிற்றின்வயமாவின். [6]பேருடலில். [7]தெரியல்வாளி, மற்றினவாளி.[8]தைத்தனவாணின்றவென, தைத்துளவாய் நின்றதென. ()

வேறு.

உஅ. குமுத நாறு [1]மதத்தன [2]கூற்றன
சமுத ரோடு [3]மடிந்தன [4]சார்தரும்

[5]திமிர மாவன்ன செய்கைய வித்திறு
அமிர்தின் வந்தன வைபிரு [6]கோடியால்.

(இ - ள்.) குமுதநாறும் மதத்தையுடையனவும், யமனையொத்தன வும், பாகரோடுமெடிந்தனவும், சார்கின்ற கரும்பன்றிபோன்றசெய் கையையுடையனவுமான இப்படியுள்ள பத்துக்கோடியானைகள் (பாற் கடலில்தோன்றிய) அமிருதத்தோடு வந்தனவாம்; (எ - று.)

ஸம்மிதரென்ற வடசொல் - ஒத்தவரென்ற பொருளில் உள்ளது: அது-ஒத்தபாகரென்ற பொருளில் இங்குவந்ததென்னலாம். இருளி யென்றும் 'கருமா' என்றும் பன்றிக்குப் பெயரிருத்தலால், அதனை 'திமிர மா'என்றார். பெருந்தொகுதியாக விழுந்துகிடப்பதுபற்றி, யானைகளை 'திமிரமாவன்னசெய்கைய' என்றது. பி - ம்:—[1]முகத்தன. [2]மையன. [3]முடிந்தன. [4]தாள்தரும், சார்க்கரும். [5]திமிர்தமாலன்ன வின்னன, திமித மாலன்னவின்னன. [6]கோடியே. (ஙடுஎO)

உகூ. ஏறு நான்முகன் வேள்வி யெழுந்தன
ஊறு மாரியு [1]மோங்கலை யோதமும்
மாறு மாயினு மாமத [2]மாய்வரும்
ஆறு மாறில வாறிரு [3]கோடியால்.

(இ - ள்.) சுரந்துபெய்கின்ற மழையும் ஓங்கிய அலையையுடைய கடலும் நீர்மாறுமாயினும் மிக்கமதநீராய்வருகின்ற ஆறு மாறப்பெறு தனவான (இந்த) ஆறிரு [பன்னிரண்டு] கோடியானைகள்,— பெரு மைமிக்க பிரமதேவனியற்றிய வேள்வியினின்றுஎழுந்தன; (எ - று.)— பி-ம்:—[1]ஓங்கலையேதக. [2]மாறல. [3]கோடியே. (ஙடுஎக)

ங௦. உயிர்[1]வ றந்து முதிரம் [2]வறந்துதம்
மயர் [1]வறந்து மதமற வாதன
புயல வன்றிசைப் போர்மத வானையின்
[3]இயல்ப ரம்பரை [4]யேழிரு [5]கோடியால்.

(இ - ள்.) (இதோவுள்ள) ஏழிரு [பதினான்கு] கோடியானைகள்,— உயிர்வறந்திடினும் உடலினுள்ளஇரத்தம் வறந்திடினும் தமது மத மயக்கம் வறந்திடினும் மதம்மாத்திரம் நீங்காதனவாய், மேகத் திற்குஉரிய தலைவனான இந்திரனுடைய திக்கில் [கீழ்த்திசையில்] இருக்கும் போர்செய்யுந்தன்மையுள்ள மதங்கொண்ட(ஐராவதமென்ற) யானையின் பொருந்திய பரம்பரையை(ச் சேர்ந்தன); (எ - று.)

இந்தப்பதினாயிரங்கோடியானைகள் - ஐராவதகுலத்தில்தோன்றி யவையெனக் காட்டியவாறு. பி-ம்:—[1]மறந்து. [2]மறந்துதம், மறந்துக. [3]இயிரமவர. [4]ஏழெழு. [5]கோடியே. (ஙடுஎஉ)

ஙக. கொடாது நிற்றலிற் கொற்ற நெடுந்திசை
[1]எடாது நிற்பன நாட்ட மிமைப்பில
வடாது [2]திக்கின் மதவரை யின்[3]வழிக்
கடாமு கத்த முளரிக் கணக்கவால்,

(இ - ள்.) (நீவிர் இதனைத் தாங்குங்கள் என்று பிரமன் திசை பாரத்தைத் தாங்குந்தொழிலைக்) கொடாது நிற்பதனால், வெற்றிபொருந்திய நெடியதிசைகளை(த் தாம்) தாங்காதுநிற்பனவும், கண்கள் இமைத்தலில்லாதனவுமாகி, வடக்குத்திக்கிற்குஉரிய (சாருவபௌமமென்னும் பேரைக்கொண்ட) யானையின் சந்ததியாகத்தோன்றிய மதநீர்ப்பெருக்கைமுகத்திற்கொண்டஇவைகள் பதுமமென்ற பெருந்தொகையினவாம்; (எ-று.)—திக்கசங்களைப்போலத்திசைகளைத்தாங்க வல்லனஆயினும், பிரமன் நியமியாத குறையால் திசையானைகளாக இவைகளிருக்கவில்லை யென்பது முன்னிரண்டடிகளின் பொருள். பி-ம்:—[1]எடாதுமிட்டன. [2]திக்கினிற்கைவரையின். [3]விழிக். (௩௫௭௩)

௩௨. வான வர்க்கிறை வன்[1]றிறை தந்தன
ஆன [2]வர்க்கமோ ராயிர கோடியுந்
தான வர்க்கிறை வன்றிறை தந்தன
[3]ஏன வர்க்கங் [4]கணக்கில விவ்வெலாம்.

(இ - ள்.) இவையெல்லாம்,—தேவர்கட்குத்தலைவனான தேவேந்திரன் கப்பமாகத்தந்தனவான களிற்றுவர்க்கம் ஓராயிரகோடியாம்; (இவையெல்லாம்),—தானவர்க்குத்தலைவன் திறையாகத் தந்தனவான மற்றோர் ஆனைவர்க்கம் கணக்கில்லாதன; (எ-று.)—பி-ம்:—[1]இறைதந்தன, திறைதந்தவாறு, திறைதந்தவற்று. [2]வர்க்கமிவ், வர்க்கமது. [3]ஆனை. [4]கணக்கிலையாமரோ, கணக்கிலவீதெலாம். (௩௫௭௪)

௩௩. பாற்க டற்பண் டமிழ்தம் [1]பயந்தநாள்
ஆர்த்தெ ழுந்தன வாயிர மாயிரம்
மாற்க ணப்பரி யிங்கிவை [2]மாறுவை
மேற்கின் வேலை வருணனை வென்றவால்.

(இ - ள்.) முன்பு பாற்கடலில் அமிருதத்தை யுண்டாக்கியநாளில் ஆரவாரித்துக்கொண்டெழுந்தனவும்,ஆயிரம்ஆயிரங்கணக்கானவுமான பெரியதொகுதியான குதிரைகளாகும் இங்கேயுள்ள இவை: மாறாக அதோ இருப்பவை-மேற்குக்கடலிலுள்ளவருணனைவென்றுபெற்றவை; (எ - று.)—பி - ம்:—[1]எழுந்த. [2]மற்றுவை', மாறுசெய். (௩௫௭௫)

௩௪. இருநி திக்கிழ வன்[1]னிழந் தேகின
[2]அரிய வப்பரி யாயிர மாயிரம்
விரி[3]சி னத்திகல் விஞ்சையர் [4]வேந்தனைப்
பொருது பற்றிய தாமரை போலுமால்.

(இ - ள்) பெருநிதிக்குத் தலைவனான குபேரன் இழந்துவிட்டனவாய் அரியனவான அந்தக்குதிரைகள் ஆயிரமாயிரமாகும்: விரிந்த சினத்தையும் பராக்கிரமத்தையுமுடைய விஞ்சையர்க்கரசனைப் பொருது கவர்ந்தவை, பதுமமென்னுங் கணக்கினபோலும்; (எ - று.)—பி - ம்:—[1]இகழ்ந்தேகின. [2]வரவயப்பரி, அரிவயப்பரி. [3]சினத்திவை. [4]வேந்தரைப். (௩௫௭௬)

ஙரு.—இவ்வாறு விபீஷணன் காட்டுகையில் பின்னர்ப்பார்த்துக் கொள்வோமென்று யாவரும் இராமனிடத்துச் செல்லத்தொடங்குதல்.

*என்று காணினுங் காட்டினு மீ[1]திறைக்*
*[2]குன்று [3]காணினுங் [4]கோளில தாதலால்*
*நின்று காணுது நேமியி ஞனுழைச்*
*சென்று காண்டுமென் றேகினர் செவ்வியோர்.*

(இ - ள்.) இவ்வாறு (நாங்களே) கண்டாலும் (நீ காட்டிக்) கண்டாலும், இந்தமூலபலம், மலையரசனை இமயத்தினைக் கண்டாலும் காணமுடியுங் கொள்கையையுடையதன்று: ஆதலால், சிலகாலம்பொறுத்துப் பார்த்துக்கொள்வோம்· (இப்போது)சக்கரப்படையேந்திய திருமாலினவதாரமான ஸ்ரீராமனிடத்திற்போய் (அவனைக்)காண்போமென்று நற்குணமுடைய வானரர் (ஸ்ரீராமனுள்ள இடத்துக்குச்) சென்றார்கள்; (எ - று.)—இறைக்குன்று=குன்றுக்கிறை: மலையரசு: இமயமலை. பி-ம்:--[1]இரைக். [2]குன்றுங். [3]காணெனும். [4]கோது. (ஙருஎஎ)

ஙசு.—யாவரும் இராமபிரானருகே அவன்போர்த்திறமையை வியந்து பெருமூச்சுக்கொண்டிருத்தல்.

*ஆரி யற்றொழு [1]தாங்கவன் பாங்கரும்*
*போரி யற்கை நினைந்தெழு பொம்மலார்*
*பேரு யிர்ப்பொ டிருந்தனர் பின்புறு*
*காரி யத்தி னிலைமை கருதுவார்.*

(இ - ள்.) ஆரியனை [இராமனைத்] தொழுது அங்கே அவனுடைய பக்கத்தில் (அவனுடைய) அருமையான போர்த்திறமையினியல்பை நினைந்து எழுகின்ற வியப்பையுடையவராய், பெருமூச்சுடனே யிருந்தவராகிப் பின்பு நடக்கும் காரியத்தின்நிலைமையைக் கருதுபவராயினர்; (எ-று.)

இந்தப்படலத்திற் கூறியவிஷயமும், அடுத்த இராவணன் களங்காண் படலத்திற் கூறிய சரிதையும் ஸ்ரீவால்மீகிராமாயணத்திற் காணப்பட்டில. 'பின்புறும் காரியத்தினிலைமை கழறுவாம்' என்பது பாடமாயின், கவிக்கூற்றாம். பி - ம்:—[1]ஆங்கரும். (ஙருஎஅ)

வானரர் களங்காண்படலம் முற்றிற்று.

---

## ஙங-ஆவது இராவணன் களங்காண்படலம்.

இராவணன் (மூலபலம்மடிந்த உண்மையைத் தெளியும்பொருட்டு அச்சேனைகள் மடிந்துவீழ்ந்துகிடக்கும்)களத்தைக்காணுவதைக்கூறும் படலமென்பது பொருள்.

அமரர்கள்வருத்தமுறும்படி வானரர்களை ஓட்டி இலக்குமணனை மயன்கொடுத்தவேலால் வீட்டி இலங்கையிற்பெருமகிழ்ச்சியோடிருந்த இராவணன், போர்க்களத்துத் தனக்குஉதவிய வீரர்க்குவிருந்தளிக்கும்

விருப்பமுடையவனாகி வானநாட்டவரை வருகெனக்கூவி, 'தேவலோகத்துப்போகத்தை இவ்வரக்கவீரர் நுகருமாறு தருக'எனப் பணிக்க, சுவர்க்கலோகத்து உணவுமுதலியவற்றை அரக்கவீரர்க்கு வானநாட்டியர் நுகர்வித்துக்கொண்டிருக்கையில், மூலபலமிறந்ததைக் கண்ட தூதுவர் விரைந்து இராவணனருகில்வந்து பேரச்சத்துடனே அவன்காதில் மூலபலம் ஒன்றொழியாதுஇறந்தமையை மெல்லத்தெரிவிக்க, அதுகேட்ட இராவணன் சினத்துடனே அச்சமும் துன்பமும் தோன்றச் சற்றுநேரம் திகைத்துநின்று, பிறகு 'என்னினும்வலியராய்க் கடல்மணலினும்பலரான மூலபலவீரர் மிச்சமின்றி யிறந்தனர் என்பது பொய்போலும்' என்று அயிர்த்துக்கூற, தூதுவர் கூறியது மெய்யேயாகுமென்பதற்குப் பலபியாயங்களை யெடுத்துக்காட்டி, மாலியவான்'உன்பொருட்டினால் உன்கிளைஞரெல்லாம் கேடுஅடைந்தனராதலால், இப்போதாவது சிட்டர்தொழிலைக் கைக்கொள்வாய்' என்ன, இராவணன் சீறி 'நான் இலக்குமணனைக் கொன்றிட்டேனாதலால், இனி வானரரெல்லாம் அழுங்க, இராமனும் தன்னுயிர்ப்பொறையைத்தாங்கமாட்டாது விட்டிடுவான்: எப்படியும் வெற்றி என்வயத்ததே' என்று பேசிக்கொண்டிருக்கையில், அநுமான்கொணர்ந்த ஓஷதிமலையால் இலக்குமணன் உயிர்த்தெழுந்ததைக் கண்கூடாகக் கண்ட தூதுவர் அங்கு நின்றும் வந்து அச்செய்தியைத் தெரிவித்தனர். மூலபலம் மிச்சமில்லாதொழிந்திட்டதை இராவணன் நம்பவில்லையாதலால், அதனுண்மையைக் காணக் கோபுரத்தின்மீதுஏறி, அரக்கியரின் புலம்பலொலி செவிப்படப் போர்க்களத்து அலங்கோலநிலைபலவற்றையுங் கண்களாற் கண்டு,நெஞ்சம் புண்பட்டுக் கோபுரத்தினின்று இறங்கி அத்தாணிமண்டபத்தைச் சேர்ந்தனனென்பது,இப்படலத்துக் கூறப்படுகின்றது.

க.—இலங்கையூர்ச்சென்ற இராவணன் வெற்றிபெற்றதனால் மகிழ்ந்திருத்தல்.

**அலக்க ணெய்தி யமர ரழிந்திட**
**உலக்க வானர வீரரை யோட்டியவ்**
**விலக்கு வன்றனை விட்டி யிராவணன்**
**துலக்க மெய்தினன் றேமில் களிப்பினே.**

(இ - ள்.) தேவர்கள் துன்பமடைந்து அழிந்திடுமாறு வானரவீரர்களை வலியழியும்படி துரத்தியும் அந்தஇலக்குமணனைக்கொன்றும் குற்றமற்றகளிப்போடு இராவணன் விளக்கமுற்றிருந்தான்; (எ-று.)

கீழ் வேலேற்றபடலத்தில் இராவணன் இலங்கைக்கு ஏகினமையை ௩௯-ஆஞ் செய்யுளிற் கூறிய கவி, இச்செய்யுளில் அவன் அங்கு அகமகிழ்ந் திருந்தமையைக் கூறுகின்றாரென்க. அங்குமகிழ்ச்சியோடிருத்தற்குக்காரணம் - குரக்குச்சேனையை ஓட்டியமையும், இலக்குமணனை வீட்டியமையுமே: இவையே தேவர்கள் அலக்கணெய்துதற்குங் காரணமென்க. இச்செய்யுள் பலபிரதிகளிலில்லை: ஆகவே, இரண்டாம் பாடலில்தான் படலம் தொடங்குகின்றது. (௩௫௭௧)

உ.—போரில் தன்னிடத்து அன்போடு உதவியவர்க்கு விருந்தளிக்க இராவணன் விரும்புதல்.

பொருந்து [1]போர்ப்பெருங் கோலத்திற் போர்த்தொழில்
[2]வருந்தி னர்க்குத்த மன்பினின் [3]வந்தவர்க்கு
அருந்து தற்[4]கமை வாயின [5]வாக்குவான்
விருந்த மைக்க [6]மிகுகின்ற வேட்கையான்.

(இ - ள்.) தம்முடைய அன்பினால் வந்தவராகி மேற்பூண்ட பெருமைபெற்ற போர்க்கோலத்தோடு போர்த்தொழிலில் வருந்தினவர்களுக்கு, உண்பதற்கு ஏற்றவைகளை யாக்கும்பொருட்டு (இராவணன்) விருந்தமைத்தற்கு மிகுகின்ற வேட்கையையுடையவனானான்; (எ-று.)— பி - ம்:—[1]பொற்பெருங்கோயிலுட். [2]வருந்தினன்குற்ற. [3]வந்தவர். [4]அமைவாயுற. [5]வாக்கிநல். [6]அமைக்கின்ற. (ருடுஅ0)

ங.—இராவணன் வானநாட்டாரைவருவித்து அவ்வுலகத்துப் போகத்தை ஈந்து அமைக்கவேனல்.

வான நாட்டை வருகென வல்விரைந்து
[1]ஏனை நாட்டவ ரோடுவந் [2]தெய்தினர்
[3]ஆன நாட்டந்த போக [4]மமைத்திர்மற்று
ஊன நாட்டி [5]னிழத்தி ருயிரென்றான்.

(இ - ள்.) மிகவிரைந்து வானநாட்டவரைவருகஎன்று (இராவணன்) கூறுதலும், மற்றைநாட்டவராகிய தானவர்நாட்டிலுள்ளாரோடும் (அவ்வானவர்) வந்துசேர்ந்தார்: (அவரைநோக்கி, இராவணன்),—'அந்த நாட்டிலுள்ள அப்படிப்பட்ட [மிகச்சிறந்த] போகத்தை (இங்குள்ள வீரர்க்கு) அமைப்பீர்; மாறாகக் குறைவுசெய்தால் உயிரையிழப்பீர்' என்று கட்டளையிட்டான்; (எ - று.) பி - ம்:—[1]என. [2]எய்தலும். [3]மானநாட்டந்த, ஆனநாட்டத்த. [4]அமைந்த. [5]இழந்தீர். (ருடுஅக)

ச.—வானுலகத்து நறவுமுதலியன ஆங்குவருதல்.

நறவு [1]மூனு நவையற நல்லன
பிறவு மாடையுஞ் சாந்தமும் பெய்ம்மலர்த்
[2]திறமு நானப் புனலொடு [3]சேக்கையும்
புறமு முள்ளும் நிறையப் [4]புகுந்தவால்.

(இ - ள்.) குற்றமற நல்லனவான கள்ளும் மாமிசமும் பிறஉண்பொருளும், ஆடையும் சந்தனமும் பெய்தமலர்வகைகளும் ஸ்நாநத்திற்குஉரிய நீரும் படுக்கையும் (அரண்மனையின்)புறமும் உள்ளும் நிறையப்புகுந்தன; (எ - று.)—'நானப்புனல்-கஸ்தூரிகலக்கப்பெற்ற திரவ வடிவமான வாசனைநீர்: இக்காலத்து அத்தர்எனப்படுவது' என்றலும் ஒன்று. பி-ம்:—[1]ஊனும். [2]திறவும். [3]செய்கையின். [4]புகுந்ததால். ()

ரு.—அரக்கவீரர்க்குச் சுகந்ததைலந்தேய்த்துநீராட்டல்முதலியன செய்யுமாறு வானவமகளிர் வருதல்.

நான [1]நெய்ந்நன் குரைத்து நறும்புனல்
ஆன [2]கோதற [3]வாட்டி யமுதொடும்
[4]பான மூட்டிச் சயனம் பரப்பவும்
[5]வான [6]நாடிய ரியாவரும் [7]வந்தரால்.

(இ - ள்.) கத்தூரியமைந்தஎண்ணெயை நன்றாகத்தேய்த்து நறுமணமுள்ள புனலினால் பொருந்தியகுற்றம்நீங்க நீராட்டி, உண்டற்குரியபொருளுடனே பருகுதற்குஉரியவற்றையும் ஊட்டி, படுக்கையைப் பரப்பும்படி வானநாட்டுமகளிர்யாவரும் வந்தனர்; (எ - று.)— வந்தர் - வந்தாரென்பதன் விகாரம். சயனம்பரப்புதல் - இடக்கரடக்கல். நானம்-கத்தூரி. பி-ம்:—[1]நெய்யுரைப்பாரும். [2]தோதற. [3]அட்டி. [4]பானமுற்றுமுழுதும்பரப்பவும், பானமூட்டியடிசில்பரப்புவான். [5]மான• [6]நாட்டியர். [7]வந்தவால், வந்ததால். (௩௫அ௩)

சு.—இதுவும்அடுத்தகவியும்-அரக்கவீரர் இன்பம் அனுபவித்தலைத் தெரிவிக்கும்.

பாடு வார்கள் பயி[1]னடம் பாவகத்து
ஆடு வார்க ளமளியி [2]லின்புறக்
[3]கூடு வார்கண் முதலுங் குறைவறத்
[4]தேடி னாரெனப் பண்ணையிற் [5]சேர்ந்தவால்.

(இ - ள்.) (சிலதெய்வமகளிர்), பாடுவார்கள்: (சிலர், தாம்) பழகிய நடனத்தை அபிப்பிராயத்துடனே ஆடுவார்கள்; (சிலர்), படுக்கையில் இன்பமுண்டாகக் கூடுவார்கள்: முதற்பொருளும் குறைவறத் தேடினவர்க்குப்போல அம்மகளிர்கூட்டத்தால் (எல்லாஇன்பங்களும்) பொருந்தின; (எ-று.)

முதற்பொருள்அழியாமல் இலாபம்பெற்றார் அப்பொருளால் தாம் விரும்பியஇன்பங்களை அனுபவிக்கவல்லராதல்போல, அவ்வரக்கவீரர் மிக்கஇன்பங்களைப் பெறலாயின ரென்பதாம். முதலும் என்ற எச்சவும்மையால், இலாபமும்என்பது பெறப்பட்டது. பி - ம்.—[1]நெடும். [2]அன்புறக். [3]கூடுவார்முதலியாருங்குறைவற, கூடுவார்கண்முதலகுறையற. [4]தேடினன், தேடுவார். [5]சேர்ந்ததால். (௩௫அ௪)

எ. அரச ராதி யடியவ [1]ரந்தமா
வரைசெய் மேனி யிராக்கதர் [2]வந்துளார்
[3]விரைவி னிந்திர போகம் [4]விளைவுறக்
[5]கரையி லாத பெருவளங் [6]கண்ணினர்.

(இ - ள்.) இராசகுலத்துப்பிறந்தார்முதலாக அடிமைசெய்வாரிறுதியாக, வந்துள்ளாரான மலையையொத்த உடல்படைத்த இராக்கதர், விரைவில் இந்திரபோகம் (தமக்கு) விளைந்ததனால், அளவிட

உ.—போரில் தன்னிடத்துஅன்போடுஉதவியவர்க்கு விருந்தளிக்க இராவணன் விரும்புதல்.

பொருந்து [1]போர்ப்பெருங் கோலத்திற் போர்த்தொழில்
[2]வருந்தி னர்க்குத்த மன்பினின் [3]வந்தவர்க்கு
அருந்து தற்[4]கமை வாயின [5]வாக்குவான்
விருந்த மைக்க [6]மிகுகின்ற வேட்கையான்.

(இ - ள்.) தம்முடையஅன்பினால் வந்தவராகி மேற்பூண்ட பெருமைபெற்ற போர்க்கோலத்தோடு போர்த்தொழிலில் வருந்தினவர்களுக்கு, உண்பதற்குஏற்றவைகளை யாக்கும்பொருட்டு (இராவணன்) விருந்தமைத்தற்குமிகுகின்ற வேட்கையையுடையவனானான்; (எ-று.)—பி - ம்:—[1]பொற்பெருங்கோயிலுட். [2]வருந்திநன்குற்ற. [3]வந்தவர். [4]அமைவாயுற. [5]வாக்கிநல். [6]அமைக்கின்ற. (ருடுஅo)

ங.—இராவணன் வானநாட்டாரைவருவித்து அவ்வுலகத்துப் போகத்தை ஈந்துஅமைக்கவேனல்.

வான நாட்டை வருகென வல்விரைந்து
[1]ஏனை நாட்டவ ரோடுவந் [2]தெய்தினர்
[3]ஆன நாட்டந்த போக [4]மமைத்திர்மற்று
ஊன நாட்டி [5]னிழுத்தி ருயிரென்றான்.

(இ - ள்.) மிகவிரைந்து வானநாட்டவரைவருகஎன்று (இராவணன்)கூறுதலும்,மற்றைநாட்டவராகிய தானவர்நாட்டிலுள்ளாரோடும் (அவ்வானவர்)வந்துசேர்ந்தார்: (அவரைநோக்கி, இராவணன்),—'அந்த நாட்டிலுள்ளஅப்படிப்பட்ட [மிகச்சிறந்த] போகத்தை(இங்குள்ள வீரர்க்கு) அமைப்பீர்: மாறாகக் குறைவுசெய்தால் உயிரையிழப்பீர்' என்று கட்டளையிட்டான்; (எ - று.) பி - ம்:—[1]ஏன. [2]எய்தலும். [3]மானநாட்டந்த,ஆனநாட்டத்த. [4]அமைந்த. [5]இழந்தீர். (ருடுஅக)

ச.—வானுலகத்து நறவுமுதலியன ஆங்குவருதல்.

நறவு [1]மூனு நவையற நல்லன
பிறவு மாடையுஞ் சாந்தமும் பெய்ம்மலர்த்
[2]திறமு நானப் புனலொடு [3]சேக்கையும்
புறமு முள்ளும் நிறையப் [4]புகுந்தவால்.

(இ - ள்.) குற்றமற நல்லனவான கள்ளும் மாமிசமும் பிறஉண்பொருளும், ஆடையும் சந்தனமும் பெய்தமலர்வகைகளும் ஸ்நாநத்திற்குஉரிய நீரும் படுக்கையும் (அரண்மனையின்)புறமும் உள்ளும் நிறையப்புகுந்தன; (எ - று.)—'நானப்புனல்-கஸ்தூரிகலக்கப்பெற்ற திரவவடிவமான வாசனைநீர்: இக்காலத்துஅத்தர்எனப்படுவது' என்றலும் ஒன்று. பி-ம்:—[1]ஊனும். [2]திறவும். [3]செய்கையின். [4]புகுந்ததால். ()

ரு.—அரக்கவீரர்க்குச் சுகந்ததைலந்தேய்த்துநீராட்டல்முதலியன செய்யுமாறு வானவமகளிர் வருதல்.

நான [1]நெய்ந்நன் குரைத்து நறும்புனல்
ஆன [2]கோதற [3]வாட்டி யமுதொடும்
[4]பான மூட்டிச் சயனம் பரப்பவும்
[5]வான [6]நாடிய ரியாவரும் [7]வந்தரால்.

(இ-ள்.) கத்தூரியமைந்தஎண்ணெயை நன்றாகத்தேய்த்து நறுமணமுள்ள புனலினால் பொருந்தியகுற்றம்நீங்க நீராட்டி, உண்டற்குரியபொருளுடனே பருகுதற்குஉரியவற்றையும் ஊட்டி, படுக்கையைப் பரப்பும்படி வானநாட்டுமகளிர்யாவரும் வந்தனர்; (எ-று.)—வந்தர் - வந்தாரென்பதன் விகாரம். சயனம்பரப்புதல் - இடக்கரடக்கல். நானம்-கத்தூரி. பி-ம்:—[1]நெய்யுரைப்பாரும். [2]தோதற. [3]அட்டி. [4]பானமுற்றுமுழுதும்பரப்பவும், பானமூட்டியடிசில்பரப்புவான். [5]மான. [6]நாட்டியர். [7]வந்தவால், வந்ததால். (௩௫௮௩)

௬.—இதுவும்அடுத்தகவியும்-அரக்கவீரர் இன்பம் அனுபவித்தலைத் தெரிவிக்கும்.

பாடு வார்கள் பயி[1]னடம் பாவகத்து
ஆடு வார்க ளமளியி [2]லின்புறக்
[3]கூடு வார்கண் முதலுங் குறைவறத்
[4]தேடி னாரெனப் பண்ணையிற் [5]சேர்ந்தவால்.

(இ-ள்.) (சிலதெய்வமகளிர்), பாடுவார்கள்: (சிலர், தாம்) பழகிய நடனத்தை அபிப்பிராயத்துடனே ஆடுவார்கள்; (சிலர்), படுக்கையில் இன்பமுண்டாகக் கூடுவார்கள்: முதற்பொருளும் குறைவறத் தேடினவர்க்குப்போல அம்மகளிர்கூட்டத்தால் (எல்லாஇன்பங்களும்) பொருந்தின; (எ-று.)

முதற்பொருள்அழியாமல் இலாபம்பெற்றார் அப்பொருளால் தாம் விரும்பியஇன்பங்களை அனுபவிக்கவல்லராதல்போல, அவ்வரக்கவீரர் மிக்கஇன்பங்களைப் பெறலாயின ரென்பதாம். முதலும் என்ற எச்சவும்மையால், இலாபமும்என்பது பெறப்பட்டது. பி-ம்.—[1]நெடும். [2]அன்புறக். [3]கூடுவார்முதலியாருங்குறைவற, கூடுவார்கண்முதலகுறையற. [4]தேடினான், தேடுவார். [5]சேர்ந்ததால். (௩௫௮௪)

எ. அரச ராதி யடியவ [1]ரந்தமா
வரைசெய் மேனி யிராக்கதர் [2]வந்துளார்
[3]விரைவி னிந்திர போகம் [4]விளைவுறக்
[5]கரையி லாத பெருவளங் [6]கண்ணினார்.

(இ-ள்.) இராசகுலத்துப்பிறந்தார்முதலாக அடிமைசெய்வாரிறுதியாக, வந்துள்ளாரான மலையையொத்த உடல்படைத்த இராக்கதர், விரைவில் இந்திரபோகம் (தமக்கு) விளைந்ததனால், அளவிட

முடியாத பெருவளத்தை அனுபவித்தனர்; (எ - று.)—பி-ம்:—[1]அந்த மால். [2]வந்தவால். [3]விரைசினிந்திரன், விரைசெயிந்திரன். [4]விளைதர, விழைதர. [5]கரைசெலாத. [6]கண்ணினுன்என்றபாடத்துக்கு - கரைசெல்லாத அந்தப்பெருவளத்தை(ப் பாராட்டி யிராவணன்) கருதுபவனுனென்க. (ருஅரு)

அ.—இதுவும் அடுத்தகவியும்-மூலபலம்அழிந்ததைக் கண்ட தூதர் இராவணனிடம்வந்து அச்செய்தியைச் சொல்லத்தொடங்குவதைக்கூறும்.

இன்ன தன்மை [1]யமைந்த விராக்கதர்
மன்னன் மாடுவந் [2]தெய்தி வணங்கினுர்
அன்ன [3]சேனை களப்பட்ட வாறெலாந்
துன்னு தூதர் செவியிடைச் சொல்லுவார்.

(இ - ள்.) இவ்வாருனதன்மையமைந்த இராக்கதரின் மன்னவனை இராவணன் அருகில்வந்துசேர்ந்து நெருங்கியதூதர், வணங்கி அந்தமூலபலம் போர்க்களத்திறபட்ட வகையையெல்லாம் (அவ்விராவணனுடைய) காதினிடம் [இரகசியமாகச்]சொல்லலானுர்;(எ-று.)—பி - ம்:—[1]அமைத்த. [2]எத்தி. [3]சேனைகள்பட்டதவ்வாறெலாம், சேனைகள்பட்டனவாறெலாம். (ருஅசு)

கூ நடுங்கு கின்ற வுடலினர் நாவுலர்ந்து
ஒடுங்கு கின்ற வுயிர்ப்பின [1]ருள்ளழிந்து
இடுங்குகின்ற விழியின [2]ரேங்கினுர்
பிடுங்கு கின்ற [3]வுரையினர் பேசுவார்.

(இ - ள்.) நடுங்குகின்ற உடலினையுடையவரும், நாவறண்டு குறைகின்றமூச்சையுடையவரும், மனமழிதலால் இடுங்குகின்ற கண்விழிகளையுடையவரும், வலியவருகின்றசொற்களையுடையவருமாகி ஏக்கங்கொண்டு (அத்தூதுவர்) பேசலானுர்கள்; (எ-று.)

இச்செய்யுள் - தூதுவர் செய்திசொல்லத்தொடங்கியபோது அத்தூதுவர்க்குநேர்ந்தநிலையைத்தெரிவிப்பது:கூறியதுகூறலன்று.பி-ம்:—[1]உள்ளிழிந்து, உள்ளலைந்து. [2]ஏங்கிமேல், ஏங்கின்மேற். [3]மொழியினர், உணர்வினர். (ருஅஎ)

வேறு.

கo.—தூதுவர் மூலபலம் இராமன்வில்லால் மாண்டமையைத் தெரிவித்தல்.

[1]இன்றியார் விருந்திங் குண்பா ரிகன்முகத் திமையோர் [2]தந்த
வென்றியா யேவச் சென்ற வாயிர [3]வெள்ளச் சேனை
[4]நின்றது [5]புறத்த தாக விராமன்கை [6]நிமிர்ந்த சாபம்
ஒன்றிஞெ [7]ஞன்கு மூன்று கடிகையி [8]னுலந்த தென்ருர்.

(இ - ள்.) போர்முகத்து இமையோரால்தரப்பட்டவெற்றியையுடையவனே! [தேவர்களைவென்றவனே!] (நீ) ஏவச்சென்ற ஆயிரமென்னுங்கணக்கினவான சேனை போர்க்களத்தினிடத்து நின்றதாக,

இராமன்கையில் ஓங்கியவில்லொன்றினுல் எழுநாழிகையில் அழிந்திட்டது! (இவ்வாறுஇருக்க),இன்று இங்குவிருந்துண்பவர் யாவர்? (எ - று.)

'நின்றுளார்' என்றபாடத்தைக்கொண்டு, இன்றுயார் விருந்து இங்கு உண்பார், (அவர்களே) நின்றுள்ளார் என்று உரைப்பதுமுண்டு. புறத்தது - போர்க்களத்தினிடத்தது. பி - ம்:—[1]இன்றிரா. [2]ஆத்த. [3]வெள்ளஞ். [4]நின்றுளார். [5]புறத்தாராக. [6]நெடிய. [7]இரண்டு. [8]உலேந்ததென்ருன். 'சென்றுளார்புறத்தராக விராமன்றன்றிரள்கைச்சாபம்' என்றுசிலபிரதிகளில் மூன்ருமடி காண்கின்றது. (௩௫அஅ)

கக.—மகிழ்ச்சியைக்கொண்டாடுதற்கு உரியகாலம்அன்று எனல்.

வலிக் [1]கடன் வானு ளோரைக் கொண்டுநீ [2]வகுத்த போகம்
கலிக்கட [3]னளிப்ப லென்று நிருதர்க்குக் [4]கருதி னுயேற்
பலிக்கட [5]னளிக்கற் பாலை யல்லதுன் குலத்தின் [6]பாலோர்
ஒலிக்கட லுலகத் தில்லை யூ[7]ருளா ருளரே யுள்ளார்.

(இ - ள்.) நீ (உன்) வலிமையின் முறைமையால் வானுளோரைக் கொண்டு (தேவலோகத்துப்) பலவகையாகவுள்ள போகத்தை அரக்கர்க்கு மகிழ்ச்சியின்கடமையாகச்செய்வேனென்று கருதினுயேல், (அது இப்போது செய்யத்தக்கதன்று): ஊரிலிருப்பவர்தான் உயிரோடு இருப்பவராகவுள்ளார்: அவரல்லது உன்குலத்துச்சேர்ந்தவர் ஒலியையுடைய கடலாற்சூழப்பட்ட உலகத்தில்இல்லை: (ஆகையால் அங்ஙனம் இறந்தவர்க்கு) பலியாகக் கடனைக் கொடுத்தற்கு உரியை (என்றும் அத்தூதுவர் கூறினர்); (எ - று.)

ஊரிலுள்ளார்தவிர, மற்றையரக்கரெல்லாம் மாண்டுவிட்டனராதலால், அங்ஙனம் இறந்தோர்க்கு உத்தரகிரியைசெய்து பிண்டம்போடுவது இப்போதுசெய்தற்குஉரியதல்லது தேவர்களைக்கொண்டு பல்வகைப்பட்டபோகங்களை மகிழ்ச்சிக்குச் சூசகமாக அரக்கரை நுகர்விக்கச்செய்வதற்கு இதுகாலமன்றென்றவாறு. பி - ம்:—[1]கடம். [2]வருத்தப்போகம், வகுத்த புன்கம். [3]அளிப்பனென்று, கழிப்பானென்று. [4]கருதினுயே. [5]அமைக்கார்வல்லை. [6]பாலர். [7]உளாருளராலுள்ளார், உளாரேயிங்குள்ளார். (௩௫அக)

கஉ.—அதனைக்கேட்ட இராவணன் திகைத்துநிற்றல்.

ஈட்டரு முவகை யீட்டி யிருந்தவ [1]னிசைத்த மாற்றங்
கேட்டலும் வெகுளி யோடு துணுக்கமு [2]மிழவும் [3]கிட்டி
ஊட்[4]டரக் கனைய செங்க ணெருப்புக வுயிர்ப்பு வீங்கத்
தீட்டிய படிவ மென்னத் தோற்றினன் றிகைத்த நெஞ்சன்.

(இ - ள்.) (மற்றவர்களாற்) பெறமுடியாத மகிழ்ச்சியைப்பெற்றிருந்தவனுன இராவணன், (தூதுவர்) சொன்ன வார்த்தையைக் கேட்டலும், சினத்துடனே அச்சமும்துன்பமும் பொருந்தப்பெற்று, செவ்வரக்கையூட்டியதுபோன்ற செந்நிறக்கண்களினின்று நெருப்புச்சிந்தப் பெருமூச்சுமிக, திகைப்புக்கொண்ட நெஞ்சையுடையவனுய், எழுதிய சித்திரம்போலத்தோன்றினன்; (எ - று.)—பி-ம்:—[1]உரைத்த, இசைந்த. [2]இழிவுங், [3]கிட்ட, [4]அரக்குண்டவெங். (௩௫கo)

கந.—தூதர்பேச்சை இராவணன் ஐயுற்றுக்கூறுதல்.

என்னினும் வலிய ரான விராக்கத ரியாண்டும் [1]வீயார்
உன்னினு முலப்பி லாதா ருவரியின் மணலி [2]னீள்வார்
பின்னொரு பெயரு மின்றி [3]மாண்டன ரென்று சொன்ன
[4]இந்நிலை யிதுவோ பொய்ம்மை [5]விளம்பினீர்[6]போலு மென்றான்.

(இ - ள்.) (மூலபலத்துச்சென்ற) என்னினும்வலியரான இராக்கதர் எங்கும் இறவார்: (மனத்தினால்)எண்ணுவோமென்றாலும் அளவிட முடியாதவராகிக் கடல்மணலினும் மிக்கிருப்பர்: (அவர்களில்) பின்னொருவருமின்றி மாண்டன ரென்று பேசுகின்ற இந்தநிலைமையான இதுவோ பொய்ம்மையாகக்கூறினீர்போலுமென்று (இராவணன் தூதர்மொழியை நம்பாது ஐயுற்றுக்) கூறினான்; (எ - று.)—பி-ம்:— [1]யாரும். [2]மேலார். [3]மாண்டிறப்பிறந்தோன்செய்த, மான்றனர் பிறந்தோன்செய்த, மாண்டனரென்று பேசும். [4]வின்னிலை. [5]விளம்பினர், விளம்புதிர். [6]விரைவின். (ருடுகக)

கச.—இதுமுதல் நான்குகவிகள் - இராவணன்சொல்லைக்கேட்ட மாலி தூதுவர்மொழி தவறுயிராதென்று நிரூபித்துக்காட்டி, 'பெரியோர் செயலை மேற்கோள்க' என, இராவணன் சினந்ததைக் கூறும்.

கேட்டய [1]லிருந்த மாலி யீதொரு [2]கிழமைத் தாமோ
ஓட்டுறு தூதர் பொய்பே யுரைப்பரோ வுலகம் யாவும்
வீட்டுவ திமைப்பி னன்றே யீங்கெரி [3]விரிந்த வெல்லாம்
மாட்டுவ னொருவ னன்றே யிறுதியின் [4]மனத்தா லென்றான்.

(இ - ள்.) (அதனைக்)கேட்டு அருகிலேயிருந்த மாலியவான், '(மூலபலத்தை ஒன்றுவிடாமல் இராமன்கொன்றானென்ற) இது (ஐயுறுவதற்குஉரிய) ஒருமுறைமையையுடையதாமோ? [ஆகாது]: (நிகழ்ந்ததை) ஓடிவந்துகூறுதலுற்ற தூதுவர் பொய்யாகவே (ஒன்றை) யுரைப்பாரோ? விரிந்தவெல்லாப்பொருளையும் இறுதிக்காலத்தில் [யுகாந்தகாலத்தில்] (தன்) சங்கற்பத்தினால் அழிக்கக்கருதுகின்றவனானசங்காரமூர்த்தி தான் ஒருத்தனாகஇருந்தல்லவா(உலகம்எல்லாவற்றையும்) வீங்கிய [மிக்க] நெருப்பைக்கொண்டு இமைப்பொழுதில் நன்றாக அழிப்பது' என்றுகூறினான்; (எ - று.)

சங்காரக்கடவுள் தானொருத்தனாகவே தன்னினின்றுதோன்றிய எல்லாப்பொருள்களையும் உகாந்தத்தில் நெருப்பினால் சிறிதும் விடாமல் அழிக்கின்றானன்றோ! கடவுளே ஒருகாரியத்தைச் செய்யக்கருதினால் செய்யமுடியா தென்பதில்லை யாதலால், இராமன் மூலபலத்தை யறவொழித்தா னென்பது, பெரியதன்று: ஆகவே, தூதுவர்வார்த்தையை ஐயுறாதுநம்பலாமென்று மாலியவான் இராவணனைத்தெளிவித்தவாறு. மூன்றாமடியில், இமைப்பின் நன்றே எனப் பிரிக்கப்பட்டது. பி - ம்:—[1]இருந்து. [2]கீழ்மைத்தாமோ. [3]விகிர்தநென்ன. [4]மனத்தாலன்றே. (ருடுகஉ)

கரு அளப்பரு முலகம் யாவு [1]மளித்துக்காத் [2]தழிக்கின் றான்றன்,உளப்[3]பெருந் தகைமை தன்னா லொருவனென் றுண்மை

[4]வேதங், [5]கிளப்பது [6]கேட்டு மன்றே [7]யரவின்மேற் கிடந்து
மேனாள், முளைத்தபே ரிராம னென்ற வீடணன் மொழிபொய்த்
தாமோ.

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) தன்னுடைய மனத்தின் பெருந்தகுதியினால் [சங்கற்பத்தினால்] அளத்தற்குஅரிய உலகம்எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிக்கின்றவன் ஒப்பற்றபரம்பொருள்என்று உண்மையாக வேதம் கூறுவது கேட்டிருக்கின்றோமன்றோ! (அப்பரம்பொருள் திருப்பாற் கடலில்) முற்காலத்து ஆதிசேஷனிற்கிடந்து (இங்குத்) தோன்றிய பெருமைபெற்ற ஸ்ரீராமன் என்றுகூறிய (தத்துவஞானியான) விபீஷணனுடையசொல் பொய்ம்மைப்பட்டதாகுமோ? (எ - று.)---பி-ம்:— [1]அமைத்துக். [2]அழிக்கின்றாரும். [3]பருந்தன்மை, பருந்தகைமை, பெருந்தன்மை. [4]என்று. [5]கிளப்பதும், கிளப்புறக் [6]கேட்டி. [7]அவன் றன்மேற்கிளந்து. (ஙருகங)

கசு. ஒன்றிடி [1]னதனை யுண்ணு [2]முலகத்தி னுயிர்க்கொன்
றாக,நின்றன வெல்லாம்[3]பெய்தா லுடனுங்கு நெருப்புங் காண்டும்,
குன்றொடு மரனும் [4]புல்லும் [5]பல்லுயிர்க் குழுவுங் கொல்லும்,
வன்றிறற் காற்றுங் காண்டும் வலிக்கொரு [6]வரம்பு முண்டோ.

(இ - ள்.) பிராணிக்கு உலகத்துள் (உண்ணுதற்குஉரிய) ஒன்றை இட்டால் அதனை உண்ணும்: (அப்படியிருக்க அதற்குமாறாக,) ஒருதன்மைத்தனவாகாதனவாய் நின்றவற்றையெல்லாம்பெய்தால்(அவற்றையெல்லாம்) உடனேவிழுங்கவல்ல நெருப்பையும் கண்டுள்ளோம்: குன்றொடு மரனையும் புல்லையும் பலவகைப்பிராணிவர்க்கங்களையும் கொல்லவல்ல வலியதிறலையுடைய காற்றையும் கண்டுள்ளோம்: வலிக்கு ஒருவரம்பும் உள்ளதோ? (எ-று.)—பி-ம்:---[1]உலகை. [2]உலகத்தினுயிர்க் கொன்றாக, உலகத்துளுயிரொன்றோதி. [3]பொய்தானுடனுகு. [4]மானும். [5]பல்லுயிர்க்குலமும் [6]வரம்புண்டாமோ. 'ஒன்றிடினதனையுண்ணுமுலகத்தைவிறகென்றோத' என்று சிலபிரதியில் முதலடி. (ஙருகச)

கஎ. பட்டது முண்டே யுன்னை [1]யிந்திரச் செல்வம் பற்று,
விட்டது [2]மெய்ம்மை யைய [3]மீண்டொரு வினையு மில்லைக்,கெட்ட
துன் பொருட்டி னாலே நின்னுடைக் கேளி ரெல்லாஞ், சிட்டது
செய்தி யென்றா [4]னதற்கவன் சீற்றஞ் செய்தான்.

(இ - ள்.) உன்னை இந்திரனுடையசெல்வம் பொருந்தியகாலமும் உண்டு: (அது, இப்போது உன்னிடத்துப்)பற்றுவிட்டது என்பதும் மெய்ம்மை: ஐயனே! மீண்டு(செய்வதற்குஉரியது) ஒருசெயலும்இல்லை: உன்பொருட்டினால் உன்னுடையசுற்றமெல்லாம் கேடுஅடைந்திட்டது: (ஆகையால்), சிட்டர்மேற்கொள்ளுவதாகிய அப்படிப்பட்டசெயலைச் செய்வாய்என்றான்: அதற்கு அவ்விராவணன் கோபங்கொண்டான்; (எ-று.)

சிட்டு - சிட்டரின்தன்மை: சிட்டர் - ஶிஷ்டர்: நல்லொழுக்க முடையவர். சிட்டதுசெய்திஎன்றது - பிறர்மனையைநயத்தலைவிட்டுச் சீதையை இராமனிடத்துக்கொடுத்து அவனைச் சரணமாகஅடைதலை. பி - ம்:—[1]இந்திரர், இந்திர. [2]மேன்மையையா, மெய்யேயைய. [3]மீட்டொருவினையம். [4]இராவணன். (ௌருகருா)

கஅ.—இலக்குமணனைக் கொன்றேனாதலால், வெற்றி யென்னதே யென்று இராவணன் கூறுதல்.

**இலக்குவன் றன்னை வேலா லெறிந்துயிர் கூற்றுக் கீந்தேன்**
**அலக்கணிற் றலைவ ரெல்லா மழுந்தின ரதனைக் கண்டால்**
**உலக்கு[1]மா விராமன் [2]பின்ன ருயிர்ப்பொறை [3]யுகவா னுற்ற**
**மலக்கமுண் [4]டாகி னாக வாகையென் வயத்த தென்றான்.**

(இ - ள்.) இலக்குமணனை வேலினாலெறிந்து அவனுயிரை யமனுக்குக் கொடுத்திட்டேன்:(வானரத்)தலைவரெல்லாம்(இலக்குமணன்இறந்ததனால்தோன்றிய) வருத்தத்தில் அழுந்தியுள்ளார்: அதனைக் கண்டால், பின்னே உயிர்ச்சுமையை உகவானாய் இராமன் உயிரொழிவான்: (மூலபலநாசத்தால்) நேர்ந்த துன்பம் (எனக்கு) உண்டானால் உண்டாகட்டும்: (எப்படியும்) வெற்றி என்வயத்தில்தான் இருக்கின்றது என்றான்; (எ - று.)—பி-ம்:—[1]மெய். [2]பின்னே, பின்னை. [3]உதவான். [4]ஆகிலாத. (ௌருகசா)

ககூ.—இலக்குமணன் உயிர்பெற்றமையைக்கண்ட தூதுவர் அப்போதுவந்து அதனைக் கூறுதல்.

**ஆண்டது [1]கண்டு நின்ற [2]தூதுவ ரைய மெய்யே**
**[3]மீண்டதவ் வளவி னாவி மாருதி மருந்து [4]மெய்யில்**
**தீண்டவுந் [5]தாழ்த்த தில்லை யாருமச் செங்க ணானைப்**
**பூண்டனர் [6]தழுவிப் புக்கார் காணுதி போதி [7]யென்றார்.**

(இ-ள்.) அப்போர்க்களத்தில் (இராவணன்வேலாற்பட்ட இலக்குமணன் மருத்துமலையால் உயிர்மீண்ட) அதனைக் கண்டுநின்ற தூதுவர் (அப்போதுஇராவணனைக்கிட்டி), 'ஐயனே! மாருதிகொணர்ந்த ஔஷதி உடம்பிற்படவும் அந்த அளவில்(இலட்சுமணனுடைய) உயிர் மீண்டது (சிறிதும்) தாமதிக்கவில்லை: மெய்யே: தலைவரெல்லாம் அந்தச்செந்தாமரைக்கண்ணனை [இலட்சுமணனை]க் கவிந்துகொண்டவராய், தழுவிப் புகுந்தனர்: (அதனைச்) சென்று காண்பாய்'என்றார்; (எ - று.)

இராவணன்'நான் இலக்குமணனைக் கொன்றிட்டேனாதலால்,வெற்றியென்னதே' என்று சொல்லிக்கொண்டிருக்கையில், போர்க்களத்து இலட்சுமணன் ஔஷதிமகிமையால் உயிர்பெற்றெழுந்ததைக் கண்கூடாகக்கண்ட வேறுசிலதூதுவர் வந்து அந்தஇலக்குமணன் பிழைத்தெழுந்த செய்தியைக் கூறினாரென்க மூலபலம் மாண்டதைக் கூறிய தூதுவரே இலக்குமணன் பிழைத்தெழுந்தசெய்தியைக் கூறினாரெனப் பொருள் கூறினாருமுளர்: அது சிறவாது. தமதுபேச்சில் ஐயுறுதல்கூடுமென்று 'மெய்யே: காணுதிபோதி'என்றார். பி - ம்:— [1]கேட்டு. [2]தூதர்கள். [3]மீண்டதவ்விளவல். [4]மேனி: [5]தாழ்ந்தது.

[6]மருந்துவெற்பைவீசினன்புக்கது,- தழுவிப்புக்கார்போதுதிகாணின். [7]என்றான், (௩௫௫எ)

உ0.—மூலபலமிறந்ததையையுற்ற இராவணன் கோபுரத்தின்மீதுஏறி, அதனுண்மையைக் காணுதல்.

தேறில னாத லானே மறுகுறு சிந்தை [1]தேற
ஏறினன் கனகத் தாரைக் கோபுரத் தும்ப ரெய்தி
ஊறின சேனை வெள்ள [2]மூலந்தபே ருண்மை யெல்லாம்
[3]காறின வுள்ள நோவக் [4]கண்களாற் றெரியக் கண்டான்.

(இ - ள்.) (மூலபலம் அழிந்ததை) நம்பிலனாதலாற் கலங்கிநின்ற மனந்தெளியச் சுவர்ணமாலையாலலங்கரிக்கப்பெற்ற கோபுரத்தின் மேலிடத்தை ஏறியடைந்து மேன்மேற்சுரந்துவரும் தன்மையவான சேனைவெள்ளங்கள் ஒழிந்த மிக்கஉண்மையையெல்லாம் வருந்தியஉள் ளம் பின்னும்வருந்தக் கண்களாலுணரப்பார்த்தான்; (எ - று.)

நாகபாசத்தாலும் பிரமாத்திரத்தாலும்மாண்ட இலக்குமணன் உயிர் பெற்றெழுந்ததைக்கண்டிருத்தலால், இராவணனுக்கு இலக்குவனுயிர் பெற்றெழுந்ததில் ஐயமில்லையாதலால், மூலபலத்தைப்பற்றிய ஐயந் தீரவே கோபுரமேறிக் காணலாயினனென்க. பி-ம்:---[1]தேய. [2]உலந் தனபெருமை. [3]காறினருள்ளநோவக், காறினவுள்ளனைய. [4]கண்களிற்.

உக.—இராவணன் அரக்கியரின் அழுகையொலியைக் கேட்டல்.

[1]கொய்தலைப் பூசற் பட்டோர் குலத்தியர் [2]குவளை தோற்று
நெய்தலை வென்ற வாட்கண் குமுதத்தி [3]னீர்மை காட்டக்
கைதலை [4]வைத்த பூசல் [5]கடலொடு கிமிருங் காலைச்
செய்தலை யுற்ற வோசைச் செய[6]லதுஞ் செவியிற் கேட்டான்.

(இ - ள்.) போரில் தலைகொய்யப்பெற்றுஇறந்தவரின் [தலையறுப் புண்டவரின்]குலஸ்திரீகள் [மனைவியர்]குவளைதோற்க நெய்தல்மலரை யும்வென்ற வாள்போன்ற (தமது) கண்கள் செவ்வாம்பலின் தன்மை யைக்காட்ட[கண்கள் அழுவதனாற்சிவந்துதோன்ற]க் கையைத் தலை யிலேவைத்த(வண்ணம் கதறுகின்ற) அழுகையாரவாரம் கடலொலி யோடுமிக்குத்தோன்றியவளவில், (இங்ஙனம் அரக்கியர்) செய்தலைப் பொருந்திய புலம்பலோசையாகிய அச்செயலையும் செவியிற்கேட் டான்; (இராவணன்) (எ - று.)—கொய்தலைப்பூசற்பட்டோர்-பூசலில் தலை கொய்யப்பட்டோரென்க; கொய் - முதனிலைத்தொழிற்பெயர். கொய்தலைப்பூசற்பட்டோர் என்பதற்கு-உழவரென்று கூறினருமுளர். பி-ம்:—[1]கொய்தலம். [2]குவளையோடு. [3]நேர்மை. [4]உற்ற. [5]கடலொலி கிமிருங், கடலெலாமதிருங். [6]இது, அது. (௩௫௫௯)

உஉ.—இதுமுதல் நான்குகவிகள் - பலவகைத்துக்ககரமான தோற்றங்களை இராவணன் காணுதலைக் கூறும்.

[1]எண்ணுநீர் [2]கடந்த யானைப் பெரும்பிண மேந்தி யாணர்
[3]மண்ணினீ ரளவுங் கல்லி நெடுமலை [4]பறித்து மண்டும்
[5]புண்ணினீ ராறும் பல்பேய் புதுப்புன லாடும் பொம்மல்
கண்ணினீ ராறு [6]மாறாக் கருங்கடன் மடுப்பக் கண்டான்.

(இ - ள்.) எண்ணுந்தன்மையைக்கடந்த யானையின் மிக்க பிணத்தைத் தாங்கிக்கொண்டு, பூமியினடியிலுள்ள நீரளவுந்தோண்டி நெடிய மலையைப்பறித்து மிக்குச்செல்லுகின்ற புண்களிலிருந்துபெருகியபுதிய இரத்தநதிகளையும் (அந்நதிப்) புதுப்புனலிலே மூழ்குகின்ற பலபேய்களின் மிகுதியையும்(தன்) கண்களிலிருந்து (வருத்தத்தினாற்) பெருகுகின்ற நீர்கள் மாறுமற்கருங்கடலிற்சேருமாறு (அவ்விராவணன்) கண்டான்; (எ - று.)—பட்டவரின்புண்களிலிருந்து குருதிநீர்ஆறாய்ப் பெருக, அவ்யாறுகளில்மூழ்கும் பேய்களின்தொகுதிகளைக் காணும்போது இராவணனுடைய கண்களிலிருந்துதுயரத்தினாற் கண்ணீர் ஆறாய்ப்பெருகலாயிற் றென்பதாம். பி - ம்:—[1]எண்ணினீர். [2]கடந்த வானைப். [3]மண்ணுநீர். [4]மறித்து. [5]புண்ணினீராறு, புண்ணுநீராறு. [6]நூறாய்க், மாறக். சிலபிரதிகளில் இச்செய்யுளையடுத்து "குமிழிநீர்" (உரு) என்ற பாடல் உள்ளது. (௩௯00)

உ௩. முற்றியற் சிலைவ லாளன் மொய்க்கணை துமிப்ப வாவி
பெற்றியல் பெற்றி பெற்றா மென்னவா ளரக்கர் யாக்கை[ய்
சிற்றியற் குறுங்கா லோரிக் குரல்கொளை யிசையாப் பல்பே
கற்றியல் பாணி கொட்டக் களிநடம் பயிலக் கண்டான்.

(இ - ள்.) சிறியதன்மையையும் குறியகாலையுமுடைய நரிக்குரல் பாட்டினிராகமாக(அமைய), பலபேய்கள்(தாம்)கற்றுப்பழகிய தாளங் கொட்டாநிற்கையில், நிரம்பியகுணத்தையுடையனாகி வில்லில்வல்லமையுள்ளவனாகிய ஸ்ரீராமனுடைய நெருங்குதலையுடைய அம்புகள் (மிகுதியாகத்) துணிப்பதனால் (இப்போது) ஆவியைப்பெற்றுஇயல்கின்ற இயல்பைப்பெற்றோமென்று கொடிய அரக்கரின்யாக்கைகள் களிப்போடுநடனஞ்செய்வதனைக் கண்டான்; (எ - று.)—இச்செய்யுள் பலபிரதிகளிலில்லை. பலபேரைக் கொன்றால்தான் கவந்தமெழுந்தாடு மென்ற நூற்கொள்கைபற்றி, 'மொய்க்கணைதுமிப்ப ஆவிபெற்றியல் பெற்றிபெற்றாம்'என்று கவந்தங்கள்கூறியனவாகச் சொல்லியது. ()

உ௪. விண்களிற் சென்ற [1]வன்றோட் கணவரை யலகை வெய்ய
புண்களிற் கைக ணீட்டிப் புதுநிணங் [2]கவர்வ நோக்கி
மண்களிற் றொடர்ந்துவானிற் பிடித்து[3]வள் ளுகிரின்[4]மானக்
கண்களைச் [5]சூன்று நீக்கு மரக்கியர் [6]குழாமுங் கண்டான்.

(இ - ள்.) வானத்திற்சென்ற [ஓங்கிய] வலியதோள்களையுடைய (தம்முடைய) கணவரைப் பேய்கள் வெவ்வியபுண்களிலே கைகளைநீட்டிப் புதுநிணங்களைக் கவர்வதைப்பார்த்து, மண்களிலும் வானிலும் (சென்று)தொடர்ந்து (அப்பேய்களைப்)பிடித்து (த் தமது)கூரியநகங்களாற் பேரளவுள்ள (அவற்றின்)கண்களைத் தோண்டி நீக்குகின்ற அரக்கியர் குழாத்தையும் கண்டான்; (எ - று.)

பூமிகளிலும்வானத்திலுமுள்ள பேய்களைப் பிடிக்க அவ்விடங்களில் தொடர்ந்துசென்றனர் அரக்கியர். கண்களிருப்பதுபற்றியே புண்ணின் வழியாகத் தம்கணவரின் நிணத்தைக் கவர்கின்றன பேய்களென்று அவற்றின்கண்களைத் தோண்டலாயினவென்க. வானில்என்றவிடத்து

'வாளில்'என்று பாடமோதி - கோரக்காட்சியைக் காணநேர்ந்த தமது கண்களைப்பற்றிக்கொண்டு வாளினாலும் (வாள்கிடைக்கப்பெறாதவர்) நகங்களினாலும் சூன்றுநீக்கும் அரக்கியர்குழாத்தைக்கண்டான் என்று உரைப்பாருமுளர். மண்களில்தொடர்ந்தது-ரணகளத்திலுள்ள வாளை யெடுக்க: அவ்வாறு தொடர்கையில் வாள்கிடைக்கப்பெறாதவர் நகங் களினாற் சூன்றன வென்க. பி-ம்:—[1]வான். [2]கவரநோக்கி, கவரநோக் கும் [3]வள்ளுகிரன். [4]மாளக். [5]சூழ்ந்து. [6]குழுவுங். (௩௯0௨)

௨௫. குமிழிநீ ரோடுஞ் சோரிக் கனலொடுங் கொழிக்குங் [1]கண்ணான், றமிழெனு [2]வழக்க [3]மன்ன தனிச்சிலை [4]வழங்கச் சா யந்தார், [5]அமிழ்பெருங் குருதி வெள்ள மாற்றுவாய் முகத்திற் றேக்கி, உமிழ்வதே யொக்கும் வேலை யோதம்வந் துடற்றந் கண்டான்.

(இ - ள்.) (கண்களிலிருந்து வருத்தத்தால்) குமிழ்த்தலையுடைய கண்ணீரோடு (சினத்தினால்) நெருப்புடன்குருதியும் கொழிக்கின்றகண் களையுடையவனான இராவணன்,—தமிழ்மொழியில்மரபாகவுள்ள வழக் குக்கள்போல [மிகப்பலவாக] ஒப்பற்ற (இராமனது)வில் (அம்புகளை) வழங்க இறந்தஅரக்கரது, அமிழ்கின்ற பெருங்குருதிப் பெருக்கைக் குடித்து ஆற்றின்முகத்துவாரத்தினால் உமிழ்வபோலக் கடலின்வெள் ளம் வந்து அலைமோதுவதைக் கண்டான்; (எ - று.)

கடல்நீர் அலைமோதுகையில் முகத்துவாரவழியாகக் குருதிநீர் வெளிப்படுவது, மிகுதியாகப்பருகிய குருதிநீரை யுமிழ்வதுபோலுமென் றார்: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]கண்ணாற். [2]வழக்கின். [3]மன்னன். [4]வழக்கிற். [5]இமிழ். (௩௯0௩)

௨௬.—கோரக்காட்சிகளைக் கண்ட இராவணன் கோபுரத்தினின்று இழிதல்.

விண்பிளந் [1]தொல்க வார்த்த [2]வானரர் வீக்கங் கண்டான்
மண்பிளந் தழுந்த வாடுங் கவந்தத்தின் வருக்கங் கண்டான்
கண்பிளந் தகல நோக்கும் வானவர் களிப்புங் கண்டான்
புண்பிளந் [3]தனைய நெஞ்சன் [4]கோபுரத் திழிந்து போந்தான்.

(இ - ள்.) வானம் பிளந்து அசையுமாறு ஆரவாரித்த வானரரின் மிகுதியைக் கண்டான்: பூமிபிளவுபட்டு(ப்பாதாளத்தில்) அழுந்தும்படி ஆடுகின்ற கவந்தத்தின் தொகுதியைக் கண்டான்: (அச்சம்நீங்கித்) (தமது)கண்களை விரித்து விரிவாகப்பார்க்கும் தேவர்களின் மகிழ்ச்சி யையுங் கண்டான்: (இவற்றையெல்லாங் கண்டமையால்) புண் பிளவு பட்டிருந்தாற்போன்ற[வருத்தம்மிக்க]நெஞ்சத்தையுடைய இராவணன் கோபுரத்தினின்று கீழிழிந்துபோனான்; (எ - று.)—பி-ம்:—[1]ஏங்க வார்க்கும். [2]வானர. [3]இனைய. [4]கோபுரமிழிந்துபோனான். சிலபிரதியில், மூன்றாமடியில் 'கண்பிளந்தொக்கவார்க்கும் வான்முனிகணங்கள்கண் டான்'என்று பாடம் காண்கின்றது. (௩௯0௪)

உஎ.—அரசாட்சிமண்டபத்தை இராவணனடைதல்.

நகைபிறக் கின்ற வாய னுக்கொடு கடைவாய் [1]நக்கப்
புகைபிறக் கின்ற மூக்கன் பொறிபிறக் கின்ற கண்ணன்
மிகைபிறக் கின்ற நெஞ்சன் வெஞ்சினத் தீமேல் வீங்கிச்
சிகை[2]பிறக் கின்ற சொல்லா னரசிய லிருக்கை சேர்ந்தான்.

(இ - ள்.) சிரிப்புத்தோன்றுகின்ற வாயையுடையவனும், (கோபந் தோன்ற)நாவைக்கொண்டு கடைவாயைநக்கப் புகைவெளிப்படுகின்ற மூக்கையுடையவனும், நெருப்புப்பொறி வெளிப்படுகின்ற கண்ணை யுடையவனும், குற்றம்தோற்றுதற்குஇடமான நெஞ்சையுடையவனும், கொடுங்கோபத்தீ மேலோங்கப்பெற்று அனற்கொழுந்து [உக்கிரம்]தோன்றுகின்ற சொல்லையுடையவனுமான இராவணன் அரசாட்சியைப்பற்றி ஆராயும்இடமாகிய அத்தாணிமண்டபத்தைச்சேர்ந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]நக்கிப், [2]சிறக்கின்ற. (நகூ0ரு)

இராவணன் களங்காண்படலம் முற்றிற்று.

## நச.—ஆவது இராவணன் றேரேறு படலம்.

இராவணன் இராமபிரானோடுபொருமாறு தேரின்மீது ஏறியதைக் கூறும் படல மென்பது, பொருள்.

அத்தாணிமண்டபத்திலே சிங்காதனத்துச்சிற்றந்தோன்ற வீற்றிருந்த இராவணன் மகோதரனென்பவனை நோக்கி, 'எஞ்சியசேனைகளைப் போர்க்குவருமாறுமுரசறைக' என்றுகட்டளையிட, இராவணன் சொற்படியே முரசுஅறைந்ததனால் அரக்கச்சேனை திரள, பிறகு அவ்விராவணன் தானங்கள்புரிந்து போர்க்கோலம்பூண்டு தெய்விகத்தேரை வரச்சொல்லி அதனைத்தொழுதுபூசித்து மறையவர்க்குத் தானஞ்செய்து, தேரேறி 'பகைவனையாவதுஒழிக்கவேண்டும், நானாவதுஒழியவேண்டும்: இரண்டிலொன்று இன்றுநிகழவேணும்'என்று பிரதிஞ்ஞை செய்து வில்நாணெறிந்து மிகுந்தஆர்ப்பாடத்துடனே போர்க்குப் புறப்பட்டானாக, அதனால் எல்லாவுலகத்தோரும்நடுங்க, வானரத்தலைவரெல்லாம் அஞ்சிக்குலைய, அப்போது விபீஷணன் இராவணன் யுத்தசந்நத்தனாய் வந்தனனென்பதை ஸ்ரீராமனுக்கு அறிவித்தானென்பது, இப்படலத்துக்கூறப்படுகின்றது. அச்சிட்டபிரதிகளிலும் சில ஏட்டுப்பிரதிகளிலும் இந்த இராவணன்றேரேறுபடலம் அடுத்துள்ள இராமன் றேரேறுபடலம்என்ற இரண்டும் தனித்தனியாகக் காணப்படாமல் ஒன்றாக, 'தேரேறுபடலம்'என்ற பெயரோடுகாணப்படும்.

க.—இராவணன் மகோதரனுலோசனையின்மீது 'எஞ்சியசேனைகளைத் திரண்டுவருமாறு முரசுஅறைக'என்று கட்டளையிடுதல்.

பூதர மனைய மேனிப் புகைநிறப் புருவச் [1]செந்தீ
மோதர னென்னு நாமத் தொருவனை [2]முறையி னோக்கி

[3]ஏதுள திறந்தி லாத [4]திலங்கையு ளிருந்த சேனை
[5]யாதையு மெழுகென் றனை [6]மணிமுர செற்று கென்றான்.

(இ - ள்.) இறத்தலில்லாததான சேனை இலங்கையூருள்யாது உளது? இருந்தஅச்சேனையெல்லாவற்றையும் எழச்செய்யவேண்டுமென்று ஆலோசனைகூறினவனும், மலைபோன்றஉடலையும் புகைநிறமமைந்த புருவங்களையும் (கண்களிற்) செந்தீயையுமுடைய மகோதரனென்று பேர் பெற்றவனுமான ஒருவனை முறைமையிற் பார்த்து, அழகிய முரசத்தை அடிப்பிக்கஎன்று (இராவணன்) கட்டளையிட்டான்; (எ-று.)---எழுக = எழுப்புக. கண்கள் தீப்போலத்தோன்ற அக்கண்களின்மீதுள்ள புருவங்கள்புகைபோலத்தோன்றுமென்க. பி - ம்:--[1]செங்கண், செங்கேழ். [2]முகத்து. [3]யாதுளது. [4]இலங்கையின். [5]யாதினையெழுகென்றனை. [6]மணி முரசறைகவென்றான், அணிமுரசறைகெனென்றான். (௩௬௦௬)

உ.—இலங்கையூரிலிருந்த சேனைகள் திரளுதல்.

எற்றின முரசி னோடு மெழிரு [1]நூறு கோடி　[ஞ்
கொற்றவா ளிருதர் [2]சேனை குழீஇயது கொடித்திண் டேரு
[3]சுற்றுறு துளைக்கை மாவுந் துரகமும் பிறவுந் தொக்க
வற்றிய வேலை யென்ன விலங்கையூர் [4]வறளிற் றாக.

(இ-ள்.) சாற்றியமுரசத்துடனே பதினான்குநூறுகோடி வெற்றி பொருந்தியகொடியஅரக்கரின் சேனை திரண்டது: கொடிகளையுடைய வலியதேரும் சூழ்ந்துகொள்ளுந்தன்மையதான துளையுள்ள கைகளை யுடைய யானையும் குதிரையும் மற்றும்பதாதிகளும் வற்றிப்போன கடலென்னும்படி இலங்கையூர் வறுமையையுடையதாகத் தொக்கன; (எ - று.)—பி-ம்:—[1]கோடிகோடி. [2]தானை. [3]துற்றுறுதுனைக். [4]வற ளிற்றன. (௩௬௦௭)

௩.—இராவணன்செய்த யுத்தயாத்ராதானம்.

ஈசனை யிமையா முக்க [1]ணிறைவனை யிருமைக் கேற்ற
பூசனை [2]முறையிற் செய்து திருமறை புகன்ற தானம்
வீசின னியற்றி மற்றும் [3]வேட் டன வேட்டோர்க் கெல்லாம்
ஆசற நல்கி யொல்காப் போர்த்தொழிற் கமைவ தானான்.

(இ - ள்.) பரமைசுவரியமுடையவனும், இமைத்தலில்லாத முக் கண்களையுடையவனுமான சிவபெருமானை இம்மைமறுமைகளுக்கு ஏற்றபூசனையை முறைமையாகச்செய்து, சிறந்தவேதங்களிற் கூறுகின்ற தானங்களை (ஏற்றபாத்திரங்களைப்பார்த்து) வீசிக்கொடுத்துப் பின்னும் விரும்பினவைகளை விரும்பினோர்க்கெல்லாம் குற்றமறக் கொடுத்துத் தளர்தலில்லாத போர்செய்யுந் தொழிற்குப் பொருந்தியவ னானான்; (எ - று.)—பி - ம்:—[1]ஒருவனை. [2]முறையே. [3]வேட்டவர் வேட்டதெல்லாம். (௩௬௦௮)

வேறு.

௪.—இராவணன்கொண்ட போர்க்கோலத்தைப் பதினைந்து கவிகள் கூறும்.

அருவி யஞ்சனக் குன்றிடை யாயிர மருக்கர்
[1]உருவி னேடும்வந் துதித்தன ராமெனா [2]வொளிரக்
கருவி நான்முகன் வேள்வியிற் படைத்ததுங் கட்டிச்
செருவி லிந்திரன் றந்தபொற் கவசமுஞ் சேர்த்தான்.

(இ - ள்.) நீரருவிகளைக்கொண்ட கருநிறமலையிலே ஆயிரஞ்சூரியர் வேற்றுருவத்தோடும்வந்து உதித்தனரோ என்னும்படி ஒளிவிட, (உலகசிருஷ்டிக்குக்)காரணமான பிரமதேவன் வேள்வியிலேதோற்றுவித்ததும் போரில் (இந்திரசித்து) கட்டியதனால் இந்திரன்(தோற்க அவ்வேளையில்) தந்ததுமான பொற்கவசத்தை(த் தன்உடம்பிற்)கட்டியணிந்துகொண்டான்; (எ - று.)

அருவி - குன்றிற்கு, இயற்கையடைமொழி. இராவணன் மார்பில் அணிந்த கவசம்,ஆயிரஞ்சூரியர் ஓருருவெடுத்து ஒருமலையில் உதித்தனரென்னுமாறு விளங்கிற்றென்றார்: தற்குறிப்பேற்றவணி. நான்காமடியில் உம்மை-எதிரதுதழுவியது. பி-ம்:—[1]உருவினேடும். [2]ஒளிரும். ()

௫. வாள்வ லம்பட மந்தரஞ் [1]சூழ்ந்தமா சுணத்தின்
தாள்வ லங்கொளிர் தமனியக் கச்சொடுஞ் சார்த்திக்
கோள்[2]வ லந்தன [3]குவிந்தன வாமெனுங் கொள்கை
[4]மீள்வில் கிம்புரி [5]மணிக்கடி சூத்திரம் வீக்கி.

பதினான்குகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) மந்தரமலையைச்சூழ்ந்த(வாசுகியென்னும்)பாம்புபோல முயற்சிகொண்டு (இடையிற்) சுற்றப்பட்டு ஒளிர்கின்ற பொன்னினாலியன்ற கச்சிலே உடைவாளை வலப்புறமாகப் பொருந்தச்சேர்த்தி, (மேருமலையை) வலம்வருவனவானகிரகங்கள் (ஓரிடத்துக்)குவிந்தனவாகு மென்றகொள்கை மீளுதலில்லாமல் இரத்தினங்களினாலியன்ற கிம்புரிவடிவம்(தன்னிடம்)அமைந்த கடிசூத்திரத்தைக் கட்டி,-(எ-று.) இதுமுதல் ஒவ்வொருபாடல்களிலுமுள்ள வினையெச்சங்கள் அடுக்கிப் பதினெட்டாங்கவியில் முடியும்; ஆதலால் அங்குமுடிபுகாட்டப்படும்.

இதனால்,பொற்கச்சையும் உடைவாளையும் இரத்தினக்கிம்புரியமைந்த கடிசூத்திரத்தையும் இடையிற்கட்டியமை கூறப்படுகின்றது. இராவணன்இடையைச்சூழ்ந்த பொற்கச்சு மந்தரஞ்சூழ்ந்தமாசுணம்போன்றிருக்க, அப்பொற்கச்சிலே உடைவாளை வலப்புறமாகச்சேர்த்தியமை முன்னிரண்டடிகளிற் கூறப்பட்டது. பின்னிரண்டடிகளிற் கடிசூத்திரத்தில்இரத்தினத்தினாலியன்ற கிம்புரி-மேருமலையைச்சூழவரும் கோள்கள்ஓரிடத்துத் தொக்கிருந்தனபோலுமென்றார்:தற்குறிப்பேற்றவணி. கிம்புரி-மகரவாய். பி-ம்—[1]சுழன்ற, அணைந்த. [2]வளர்ந்தன. [3]குவிந்துளவாயன, குவிந்துளவாயன்ன. [4]மீள்விளங்கிய. [5]மணக். (௩௬௧௦)

௬. மறை[1]வி ரித்தென்ன [2]வாடுறு மானமாக் கலுழன்
சிறை[3]வி ரித்தென்ன [4]கொய்சக மருங்குறச் சேர்த்தி
முறை[3]வி ரித்தென முறுக்கிய கோசிக [5]மருங்கிற்
பிறை[3]வி ரித்தன்ன வெள்ளெயிற் [6]றரவமும் பிணித்து.

(இ-ள்.) வேதங்களை விரித்தாற்போல ஆடுதல்பொருந்திய பெருமைபெற்ற பெரியகருடபகவானது சிறையைவிரித்தாற்போல [விரித்த சிறைபோலக்] கொய்சகத்தை (ஆடையாகவுடுத்திய கோசிகத்தின்) இடத்திலே பொருந்தச்சேர்த்து, முறுக்கமைந்த வெண்பட்டாடையை முறையேவிரித்தாற்போல (அணிந்த) இடையிலே பிறையைவெளிவிட்டாற்போல்தோன்றுகின்ற வெள்ளிய கோரப்பற்களையுடைய அரவத்தையும் கட்டி,—(எ - று.)

இதனால், முறுக்கமைந்த வெண்பட்டாடையை முன்னேகொய்சகமமைய விரித்துஉடுத்து, அந்தஆடை அவிழாதபடி வெள்ளெயிற்றரவத்தாற் பிணித்தமை கூறப்படுகின்றது. ஆடுறுசிறைஎன்க. பி-ம்:—[1]விரித்தன்ன, விரித்தென, விரிந்தன்ன. [2]மாடுறு, வாவுறு. [3]விரித்தென்ன, விரிந்தன, விரிந்தன்ன. [4]கொய்யகம். [5]முறையே, முறையில். [6]அரிமுகம். ()

எ. மழைக்[1]கு லத்தொடு [2]வானுரு மேறெலாம் வாரி
[3]அழைத்தெ டுத்தன வனையவா ளுடைமணி யார்த்து
முழைக்கி டந்த[4]வல் லரியின [5]முழங்குவ போல்வ
தழைக்கு [6]மின்னொலிப் பொன்மலர்ச் சதங்கையுஞ் சாத்தி.

(இ-ள்.) மேகக்கூட்டத்தினிடத்து இருக்கின்ற சிறந்த பேரிடிகளையெல்லாம் வரவழைத்து வாரியெடுத்தனபோன்ற ஒளிகளையுடைய மணிகள் பொருத்தப்பெற்று, குகையிற்கிடந்த வலியசிங்கங்களின் தொகுதிமுழங்குபவற்றைப் போல்வனவாய்த் தழைக்கின்ற [கம்பீரமான] இன்னொலியைக்கொண்ட அழகியமலரின்வடிவையுடைய சதங்கையென்னும் அணியையும் (பாதங்களில்) அணிந்து,—(எ-று.)

மின்னல்கள்போன்று பேரொளிவாய்ந்த அரதனங்களைஇழைத்து மலர்களின்வடிவாகஅமைந்த சதங்கையென்னும்அணியை முழையிலுள்ளசிங்கவினங்களின் கர்ச்சனைபோன்று கம்பீரமான இன்னொலியுண்டாகப் பாதங்களில் அணிந்தமையை,இதனாற் கூறினார். ஆர்த்துத் தழைக்கும் இன்னொலிச்சதங்கையென்க. பி-ம்:—[1]குலத்தொடும். [2]வானவல்லேறெலாம். [3]இழைத்தெடுத்தனவனையவமுடைமணி, இழைத்தொடுத்தனவனையவாளிடைமணி. [4]பல்லரி. [5]முழங்குபோராரப்பிற்றழைக்கும், முழங்குவபோல்வந்தழைக்கும். [6]மின்னொளிப்பொன்மலர்ச், இன்னொலிப்பொன்மலைச். (௩௯௧௨)

அ. உரு[1]மி டித்தபோ தரவுறு மறுக்கம்வா னுலகின்
இரு[2]நி லத்திடை யெவ்வுல கத்திடை யாரும்
புரித ரப்படும் பொலங்கழ [3]லிலங்குறப் பூட்டிச்
சரியு டைச்சுடர் [4]சாய்நலஞ் சார்வுறச் சாத்தி.

(இ - ள்.) இடியிடித்தபோது அரவு அடைகின்ற கலக்கத்தை வானுலகத்திலும் பெரிய (இந்தப்)பூமியிலும் எவ்வுலகத்திலும் யாவரும் அடையுமாறு ஒலிக்கின்ற பொன்னுலியன்ற கழலை விளக்கமுண்டாகப் பூட்டிச் சரிந்த உடையில் சுடர்சாய்தலினாலான அழகுண்டாகச்சாத்தி, —(எ-று)—புரிதர-அடைய. பி - ம்:—[1]இடித்துழியரவெனக்கரக்கமாவுலகின், இடித்தபோதயர்வுறுமறுக்கம்வானுலகின். [2]நிலத்தினில். [3]அலங்குறப். [4]சாய்வலம், சாயலுஞ். (ருசூகரு)

கூ. நாலஞ் சாகிய கரங்களி னனந்தலை யனந்தன்
ஆலஞ் சார்மிடற் றருங்கறை கிடந்தென [1]விலங்கும்
[2]கோலஞ் சார்நெடுங் கோதையும் புட்டிலுங் கட்டித்
[3]தாலஞ் சார்ந்த[4]மா சுணமெனக் கங்கணந் தழுவ.

(இ - ள்.) (நீண்ட) நாக்குச்சேர்ந்த பாம்புபோலத்தோன்றுங் கங்கணத்தை(க்கைகள்)தழுவிநிற்கையில்,--இருபதாகியகைகளில் அகன்ற தலைகளுள்ள அனந்தனுடைய விஷஞ்சார்ந்த கழுத்தினின்று (போக்குதற்கு) அரிய கறைகிடந்தாற்போல விளங்குகின்ற வடிவமமைந்த நெடிய மூன்கைத்தோற்கட்டும் விரற்புட்டிலும் என்பவைகளைக் கட்டி,—(எ-று.)—தாலம்=தாலு: நாக்கு:அம்-சாரியை. நாக்கைநீட்டுதல் பாம்பிற்குஇயல்பாதலால், 'தாலஞ்சார்ந்தமாசுணம்' எனப்பட்டது.பி-ம்:—[1]இலங்கு. [2]கோலஞ்சா. [3]சாலம். [4]மாதனமென. (ருசூகச)

கO. கடல் கடைந்தமால் வரையினைச் சுற்றிய கயிற்றின்
[1]அடல்க டந்ததோ ளலங்குபோர் வலயங்க ளிலங்க
உடல்க டைந்தநா ளொளியவ [2]னுதிர்த்தபொற் கதிரின்
சுடர்[3]த யங்குறக் குண்டலஞ் [4]செவியிடைத் [5]தூக்கி.

(இ-ள்.) கடலைக் கடைந்த பெரிய (மந்தர) மலையினைச்சுற்றிய (வாசுகியென்ற) கடைகயிறுபோல வலிமையைக்கடந்த [வலியோரையெல்லாம் வென்ற] தோளில் அசைகின்ற போர்வலயங்கள்விளங்குகையில், உடலை(த் துவஷ்டாவென்பவன் சாணையிலிட்டுக்) கடைச்சல்பிடித்தகாலத்திற் சூரியன் உதிர்த்த பொன்கதிரின் சுடர்விளங்குமாறுகுண்டலங்களைச் செவியிடையணிந்து,—(எ-று.)

த்வஷ்டாவின் புத்திரியான ஸம்ஜ்ஞாதேவி தன்கணவனைசூரியனுடைய ஒளியைத் தாங்கமுடியாமல் தன்சாயையைத் தேவியாக நிருமித்துத்தந்தையின்வீட்டிற்குச்சென்றிட, பிறகு பலகாலஞ்சென்றபின் அவளது தந்தையின் வேண்டுகோட்குஏற்ப அச்சூரியன் தன்ஒளிகுறையுமாறு சாணைபிடிக்க ஒருப்பட்டனனென்பது, புராணவரலாறு. இதனுல், போர்வலயங்களைப் புயங்களிலணிந்தபின் செவிக்குக் குண்டலமும்அணிந்தமை கூறப்படுகின்றது. பி - ம்:[1]அடைகிடந்த. [2]உதித்த பொற்கதிரிற். [3]தயங்குறு. [4]செவிதொறுந். [5]தூங்க. (ருருகச)

கக. உதயக் [1]குன்றத்தோ டொத்ததி னுலாவுறு கதிரின்
[2]துதையுங் குங்குமத் தோளொடு தோளிடைத் தொடரப்

புதையி ருட்பகைக் குண்டல மணையவை பொலியச்
சிதைவி றிங்களு மீனும்போன் [3]முத்தினந் திகழ.

(இ - ள்.) உதயபருவதத்திலே பொருந்தி அந்தமலையில்உலா வுறுகின்ற சூரியகிரணம்போல நெருங்கிய குங்குமச்சேற்றையணிந்த தோளுடனே(கூடி அத்)தோள்களினிடத்து நெருங்கியஇருட்குப் பகையான சூரியர்போன்ற அப்படிப்பட்ட குண்டலங்கள் தொடர்ச்சி யுறப்பொலிகையில் குறைதலில்லாத சந்திரனும் நட்சத்திரங்களும் போல் முத்துக்களின்கூட்டம் திகழவும்,—(எ - று.)

இதனாற் குங்குமச்சேறணிந்த தோள்களின்மீது படும்படி குண்டலங்களணிந்தமையும், தோளையடுத்துக் கழுத்தில் முத்துவடம்அணிந் தமையுங் கூறப்பட்டன. பி-ம்:—[1]குன்றத்தொடத்தத்தின், குன்றத்தொ டோதத்தின். [2]துதையக். [3]முகத்தினம்.　　(ங-சுகசு)

கஉ. மேவலை வாய் வந்து வெய்யவ ரனைவரும் [1]வெடியுங்
காலை யுற்றன ராமெனக் கதிர்க்குலங் [2]காலும்
மாலை பத்தின்மேன் [3]மதியமுன் ஞளிடைப் பலவாய்
[4]ஏல முற்றிய [5]வளையமுந் தக்குடை யிமைப்ப

(இ - ள்.) கடலினிடத்துச் சூரியரனைவரும் வெடியுங்காலையில் வந்து பொருந்தினராமெனக் கிரணங்களைக் காலுகின்ற முடிமாலை பத்தின்மேல் சந்திரன் முன்னளினிற் பலவானவடிவம்பொருந்த முற் றியதையொத்த முத்துக்குடைகள் விளங்கவும்,—(எ - று.)

இதனால், முடிமாலைகளும் அவற்றின்மீது வெண்குடைகளும் விளங்குதல் வருணிக்கப்படுகின்றது. பி-ம்:—[1]வெய்ய, மடியும். [2]சாலும். [3]மதியமுநாளிடைப்பலவாம். [4]மூலை, மூலம். [5]முத்தினத்திரள் குடைமொய்ப்ப, முத்தவெண்குடைகணின்றிமைப்ப.　　(ங-சுகஎ)

கங. பகுத்த பல்[1]வளக் குன்றினின் முழையன்ன பகுவாய்
வகுத்த [2]வான்கடை [3]கடைதொறும் வளையெயிற் றீட்டம்
மிகுத்த நீலவான் மேகஞ்சூழ் விசும்பிடைத் [4]தசும்பூடு
உகுத்த செக்கரிற் பிறைக்குல முளைத்தன [5]வொக்க.

(இ - ள்.) பகுத்துக்கூறப்படுகின்ற பலவளங்களையுடைய குன் றிலே குகையையொத்த பிளவுபட்டவாயிலே வகுக்கப்பெற்ற பெரிய கடைவாய்தோறும் கடைவாய்தோறும் வளைந்த பற்களின்கூட்டம், மிகுதியாகவுள்ள நீலநிறமுள்ள பெரியமேகஞ்சூழ்ந்த ஆகாயத்தில் பாலிகைப்பாத்திரங்களை ஊடேயுகுத்தாற்போன்ற செவ்வானத்திலே (தானியமுளையென்னத்தக்க) பிறைக்குலம் முளைத்தவற்றை யொத் திருக்கவும்,—(எ - று.)

கருநிறமுள்ள இராவணனது செந்நிறக்கடைவாயிலே வெண்ணி றக்கோரப்பற்கள் தோன்றுவதை வருணித்தவாறு: உருவகத்தைத் தன்னுட்கொண்ட தன்மைத்தற்குறிப்பேற்றவணி. திட்டுத்திட்டான செக்கர்-பாலிகையிடும்பாத்திரம்போலுமென்க. பி-ம்:—[1]கலைக், வளங். [2]வான்கடைக். [3]திசை. [4]தசும்போடு. [5]ஒத்த.　　(ங-சுகஅ)

கச. ஒத்த தன்மையி [1]னொளிர்வன தரளத்தி [2]னொக்கத்
தத்து கின்றன வீரபட் டத்தொகை [3]தயங்க
முத்த [4]வோடையின் முரட்டிசை [5]முழுமத[6]யானை
பத்து நெற்றியுஞ் [7]சுற்றிய [8]பேரெழில் படைக்க.

(இ - ள்.) ஏற்பட்டுள்ளதன்மையோடு விளங்குகின்றனவான முத்துக்களினொப்ப ஒளிவீசுவனவான வீரபட்டத்தொகை விளங்குவதனால், முத்தினாலியன்ற நெற்றிப்பட்டத்தையுடைய மாறுபடுந்தன்மைகொண்டகிரம்பியமதத்தோடுகூடிய திக்கசங்களின் நெற்றிசூழ்ந்த பேரெழிலைப்பத்துநெற்றியும் படைக்கவும்,—(எ - று.)

இதனால், இராவணன் நெற்றியில் வீரபட்டம்கட்டியதைக் கூறுகின்றார். திக்கசங்களின்நெற்றியில் முத்துப்பட்டமணிந்தாற்போல இராவணனுடைய பத்துநெற்றிகளில் வீரபட்டம் விளங்குகின்றன வென்றவாறு. உவமையணி. மதயானை நெற்றிசுற்றிய ஓடையின் பேரெழிலைப் பத்துநெற்றியும்படைக்கஎன்று, நெற்றியென்பதைப் பதவுரையில் இருமுறை கூறிக்கொள்க. பி-ம்:—[1]ஒளியவனுதயத்துள். [2]ஓதம். [3]தகைந்த, தகைந்து. [4]ஓடைய. [5]மும்மத. [6]கரிபோல். [7]சந்திரன். [8]படரெழில், போலெழில். (ருசுகக)

கரு. புலவி மங்கையர் பூஞ்சிலம் பரற்றடி போக்கித்
[1]தலைமை [2]கண்ணினர்த் தாழ்கிலா மணிமுடித் தலங்கள்
உலக [3]மொன்றினை விளக்குறுங் [4]கதிரினை யோட்டி
[5]அலகி லெவ்வுல கத்தினும் வயங்கிரு ளகற்ற.

(இ - ள்.) புலத்தலைக்கொண்ட மங்கையரின் அழகிய சிலம்புகள் ஒலிக்கின்ற அடியைத் தவிர்த்துத் தலைமையைக்கருதுகின்றவர்களை வணங்காத இரத்தினமிழைத்துச்செய்யப்பட்ட முடித்தலங்கள், உலகமொன்றை விளங்கச்செய்யுஞ் சூரியனை(த்தன்னொளிக்குமுன்னே) புறங்கொடுத்தோடச்செய்து கணக்கில்லாத உலகினிடமெல்லாமும் விளங்குகின்ற இருளையகற்றவும்,—(எ - று.)

இராவணன், புலவியைக்கொண்ட மகளிரின் அந்தப்புலவியைப் போக்க அவர்களைவணங்குவதன்றி 'நாம் தலைமையுடையோம்' என்று செருக்குகின்றவர்களை ஒருபோதும் வணங்காதவனென்பது, முன்னிரண்டடிகளிற்கூறிய பொருள். சூரியனும் தோற்குமாறு அதனினும் விஞ்ச இராவணன் கவித்த முடித்தலங்கள் கதிரைவெளிவிடுகின்றன என்பது,இச்செய்யுளிற் பின்னிரண்டடிகளிற் கூறிய பொருள்.பி-ம்:—[1]தலைமைக். [2]கண்ணினர். [3]மூன்றையும். [4]அருக்கனை. [5]அலகுபல்லுலகத்தினும்படரொளியெறிப்ப. (ருசுஉ0)

கசு. [1]நாக நானில நான்முக னொடென நயந்த
[2]பாக [3]மூன்றையும் வென்றுகொண் டமரர்[4]முன் பணிந்த
வாகை [5]மாலையு மருங்குற வரிவண்[6]டொடளவித்
தோகை யன்னவர் விழிதொடர் தும்பையுஞ் [7]சூட்டி.

(இ - ள்) சுவர்க்கலோகமும் பூலோகமும் பிரமலோகமும் என்று விரும்பிச்சொல்லப்படுகின்ற மூன்றுபகுதியையும் வென்றுகைக்கொண்டதனால் தேவர்கள் முன்பு அணிந்த வெற்றிமாலையையும்(அதன்)பக்கத்திற்பொருந்த இரேகைகளையுடைய வண்டுகளோடுசேர்த்து மயிலையொத்தவர் விழிதொடரப்பெற்ற தும்பைமாலையையுஞ் சூட்டி,—(எ - று.)

மூவுலகையும் வென்றமைக்காக தேவர்கள் முன்புசூட்டிய வாகைமாலையின்பக்கத்தில் தும்பைமாலையை இப்போது தான் போர்க்குச் செல்லுவதற்கு அறிகுறியாகச் சூடினன் இராவண னென்றவாறு. அத்தும்பைமாலையில் வண்டுகளும் மகளிரின்விழிகளும் மொய்க்கின்றனஎன்று கூறியது - உடனவிற்சியணியாம். பி - ம்:—[1]நாகர். [2]பாகை. [3]ஊன்றியும். [4]முன்பணித்த, முன்பளித்த. [5]மாலையின். [6]ஏரளவி. [7]சூடி. (௩௯௨௧)

கஎ. [1]அகழி வேலையைக் காலத்தை யளக்கர்நுண் மணலை
[2]நிகழு மீன்களை விஞ்சையை [3]நினைப்பதே னின்ற
இகழ்வில் பூதங்க ளிறப்பினு மிறுதி[4]செல் லாத்தன்
புகழெ னச்சரந் தொலைவிலாத் [5]தூணியும் பூட்டி.

(இ - ள்.) (இலங்கைக்கு)அகழியாகஅமைந்த கடலையும் காலத்தையும் கடலின்நுண்மணலையும் (அக்கடலிற்)பொருந்திய மீனையும் கல்வியையும் (அளவிடமுடியாமைக்குஉவமையாகச் சொல்லலாமா? என்று) நினைப்பது எதற்காக? நிலைத்துநின்ற இகழ்வில்லாதபூதங்கள் ஒழிந்தாலும் ஒழிதலில்லாத தன்னுடைய புகழைப்போல அம்புகள் தொலைதலில்லாத அம்பறாத்தூணியையும்பூட்டி, —(எ - று.)

அளவிடமுடியாமையில் பிரசித்த உவமையாகச் சொல்லப்படுகின்ற வேலைமுதலியவற்றை 'நினைப்பதென்'என்று மறுத்தது எதிர்நிலையணியின்பாற்படும். பி-ம்:—[1]அகழும். [2]நிகழுமானில, நிகழுமாதிகள், நிகழுமாதியாம். [3]நினைப்பதேநின்ற, நினைப்புறநின்ற. [4]செல்லாத. [5]தூணியின். (௩௯௨௨)

கஅ.—'வருக' என்ன இராவணனுக்குத் தேர்வருதல்.

வருக தேரென வந்தது [1]வையமும் வானும்
உரக தேயமு மொருங்குட னேறினு முச்சிச்
சொருகு பூ[2]வன்ன [3]சுமையது தூரக[4]மின் றெனினும்
நிருதர் கோமக னினைந்துழிச் செல்வதோர் [5]நினைப்பில்.

(இ - ள்.) பூமியிலுள்ளாரும் வானுலகத்தாரும் நாகர்கள்வசிக்கின்ற பாதாளலோகத்தாரும் ஒருசேர ஏககாலத்தில் ஏறினாலும் உச்சியிற் சொருகுகின்ற உச்சிப்பூஎன்னும் அணியைப்போன்ற சுமையையுடையதும், குதிரைஇல்லாவிட்டாலும் அரக்கர்தலைவனானஇராவணன் நினைந்தவிடத்தில்நினைந்த அந்த ஓர்கணத்தே போகவல்லதுமாகிய தேரானது, (இராவணன்) 'வருக'என்ன வந்திட்டது; (எ - று.)

மூவுலகத்தாரும் தன்மீதுஏறினாலும் அவற்றாலானசுமை உச்சிப்பூவை யணிவதனால் எவ்வளவோ அவ்வளவேயாகத்தோன்றுமாறு

பெருமைவாய்ந்தது அந்தத்தேரென்பது, முதல்மூன்றடிகளிற் கூறிய பொருள். பி-ம்:---[1]வானமும்மண்ணும். [2]என்னுஞ். [3]சுமந்த. [4]என்று. [5]இமைப்பில். ஐந்தாம்பாடல்முதல் பதினெட்டாம்பாடல்வரையிற் பதினான்குபாடல்களுக்கு முடிபு:—சார்த்தி-வீக்கி (௫), சேர்த்தி-பிணித்து (௬), சாத்தி (௭), பூட்டி—சாத்தி (௮), கங்கணந்தழுவப் புட்டிலுங் கட்டி (௯), இலங்க-தூக்கி (௧௦), தொடரத்திகழ (௧௧), இமைப்ப (௧௨), ஒக்க (௧௩), படைக்க (௧௪), அகற்ற (௧௫), சூட்டி (௧௬), பூட்டி (௧௭), தேர்வருகஎன, வந்தது (௧௮) என்க. (௩௬௨௩)

௧௯.—இதுமுதல் ஐந்துகவிகள் - வந்த தேரின் வருணனை.

ஆயி ரம்பரி [1]யமுதொடு [2]வந்தவு மருக்கன்
[3]பாய்வ யப்பசுங் குதிரையின் [4]வழியவும் படர்நீர்
வாய்[5]ம டுக்குமா வடவையின் வயிற்றின்வன் காற்றின்
நாய கற்கு[6]வந் துதித்தவும் [7]பூண்டது [8]நலத்தின்.

(இ - ள்.) (அந்தத்தேர்),—அமிருதத்தோடு தோன்றியனவும் சூரியனுடைய பாயுந்தன்மையுள்ள வலிய பச்சைக்குதிரையின் மரபில் தோன்றியனவும், பரவிய(கடலின்)நீரை (மிகாதபடி)வாயினால் உறிஞ்சுகின்ற சிறந்த வடவையின்வயிற்றிலே வலிய காற்றுக்குத்தலைவனான வாயுதேவனுக்குத் தோன்றியனவுமான ஆயிரங்குதிரைகளை அழகாகப் பூண்டது.

இதனால், அத்தேரிற்பூட்டிய குதிரைகளைக் கூறினார்: இராவணன் பொருட்டுவந்த தேர் ஆயிரம்பரிகளை இனிது பூண்டுள்ளது: அப்பரிகள்-அமுதத்தோடுவந்தவைமுதலியனவா மென்க. பி-ம்:-[1]அமுதத்தின். [2]வந்ததும். [3]பாயசுப். [4]வழியதும். [5]மடுக்குறும். [6]வந்துதித்ததும். [7]பூண்டதோர். [8]நலத்தால். (௩௬௨௪)

௨௦. பாரிற் செல்வது விசும்பிடைச் [1]செல்வது பரந்த
நீரிற் செல்வது [2]நெருப்பினுஞ் [3]செல்வது நிமிர்ந்த
[3]போரிற் செல்வது [4]போய்நெடு முகட் டிடை விரிஞ்சன்
ஊரிற் செல்வ[5]தெவ் வுலகினுஞ் செல்வதோ ரிமைப்பின்.

(இ - ள்.) (பின்னும் அத்தேர்),—பாரிலேசெல்வதுபோலவே, வானத்திலும் செல்வது: பரந்த நீரிலே செல்வது: நெருப்பிலுஞ் செல்வது: மூண்டபோரிலே செல்வது: அண்டமுகட்டிலும்போய் பிரமனுடைய ஊரிலுஞ்செல்வது: ஓரிமைப்பில் எவ்வுலகத்திலும் செல்வது; (எ - று.)

இதனால், அந்தத்தேரினுடைய கமனத்தின் சிறப்புக் கூறினார். பி-ம்:—[1]படர்வது. [2]நெருப்பிடைச். [3]மேருச். [4]பொன்னெடு, போனெடு. [5]எவ்வுலகத்துஞ், எவ்வுலகமும். (௩௬௨௫)

௨௧. எண்டி சைப்பெருங் [1]களிற்றிடை மணியென விசைக்குங்
கண்டை [2]யாயிர கோடியின் [3]றொகையது கதிரோன்
மண்டி லங்களை மேருவிற் குவித்தென வயங்கும்
[4]அண்டம் விற்குநன் [5]காசினாற் [6]குயற்றிய [7]தடங்க.

(இ - ள்.) (பின்னும் அத்தேர்),—எட்டுத்திக்கிலுமுள்ள பெரிய திக்கஜங்களின் மணிபோல ஒலிக்கின்ற கண்டை ஆயிரகோடியென்னுந்தொகையினையுடையது: சூரியனுடையமண்டலங்களை மேருவிற் குவித்தாற்போல விளங்குகின்ற அண்டத்தை விலையாக்கொள்ளுஞ் சிறந்த இரத்தினத்தொகுதி முழுவதும் இழைக்கப்பெற்றது; (எ - று.)

இதனால், அந்தத்தேர் பலமணிகள்கட்டப்பட்டு இரத்தினங்களாலிழைக்கப்பெற்று விளங்குந் தன்மை கூறப்படுகின்றது. ஓங்கியதேரில் பலஇரத்தினங்கள் அமைந்திருப்பது, மேருவிற் சூரியமண்டலத்தைக் குவித்தாற்போலும். ௸-ம்:—[1]களிற்றிடு. [2]ஆயிரங். [3]தகையது. [4]கண்டவிற்குனன். [5]காசினம். [6]இயற்றியது. [7]அலங்கை, அலங்க. (௩௬௨௬)

௨௨. [1]முனைவர் வானவர் முதலின ரண்டத்து முதல்வர்
[2]எனைவ ரீந்தவு மிகலினி லிட்டவு மியம்பா
[3]வினையின் [4]வெய்யன [5]படைக்கலம் வேலையென் றிசைக்குஞ்
சுனையி னுண்மணற் [6]றொகையன [7]சுமந்தது தொக்க.

(இ - ள்.) (மற்றும்அத்தேர்), இவ்வுலகவுருண்டையுள் முதன்மைபெற்றவரான முனிவரும் வானவரும் முதலியோரான எப்படிப்பட்டவரும் [மிக்க பெருமைபெற்றவரும்] ஈந்தனவும், போரில் (தோற்றவர்) கொடுத்திட்டனவும் சொல்லமுடியாதவாறு போர்த்தொழிலிற்கொடுமையையுடையனவுமான படைக்கலங்கள் வேலையென்றுசொல்லப்படுகின்ற நீர்ச்சுனையினுள் மணலின்தொகையையுடையனவாகித் திரண்டவற்றைச் சுமந்தது; (எ - று.)

பலருந்தந்த படைக்கலங்களை மிகுதியாகக்கொண்டது, அந்தத்தேரென்றவாறு. தொக்க - பலவின்பாற்பெயர். மணற்றொகையன்னவாய்த்தொக்கவான படைக்கலம் சுமந்தது அந்தத்தேரென்க. ௸-ம்:—[1]முனிவர். [2]எனைவரன்னவரீய்ந்தவுமிகலிலிட்டனவும், எனைவரன்னவர் யாவருமிகலினிட்டனவும். [3]வினையும். [4]வெய்யவன். [5]படைக்கலவேலை. [6]தொகையது. [7]சுமந்துபின்றொடர, சுமந்ததுதொகுத்த, அமைந்தவை தொகுத்த. (௩௬௨௭)

௨௩. கண்ண னேமியுங் கண்ணுதல் கணிச்சியுங் கமலத்
தண்ணல் குண்டிகைக் [1]கலசமு மழியினு மழியாத்
திண்மை [2]சான்றது தேவரு [3]முணர்வருஞ் [4]செய்கை
உண்மை யாமெனப் பெரியது வென்றியி னுறையுள்.

(இ - ள்.) (மற்றும் அத்தேர்),—திருமாலின்சக்கராயுதமும், கண்ணுதற்கடவுளான சிவபிரானது மழுப்படையும், தாமரையில்வசிக்கும் பெருமையிற்சிறந்தவனான பிரமதேவனுடைய குண்டிகையாகிய பாத்திரமும் அழிந்தாலும் அழியாத வலிமைமிக்கது: தேவரும் உணருதற்கு அருமையான வேலைப்பாட்டுடனே வென்றிக்கு உறைவிடமாகி உண்மையைப்போற் பெரியது; (எ - று.)—௸-ம்:—[1]கமலமும். [2]ஆன்றது. [3]முனிவருஞ். [4]திறம்பா. (௩௬௨௮)

௨௪.—இராவணன் தேரைப்பூசித்து யாத்திராதானஞ் செய்தல்.

அனைய தேரினை யருச்சனை வரன்முறை [1]யாற்றி
[2]இனைய ரென்பதோர் கணக்கிலா மறையவ ரெவர்க்கும்

விளையி னன்னிதி முதலிய வளப்பரும் வெறுக்கை
[3]நினையி னீண்டதோர் பெருங்கொடை யருங்கட னேர்ந்தான்.

(இ - ள்.) அப்படிப்பட்டதேரினை அருச்சனையை நூன்முறைப்படி செய்து, இத்தனைவரென்பதான ஒருகணக்குஇல்லாத பிராமணர் எவர்க்கும் செய்யவேண்டியமுறைப்படி நல்லநிதிமுதலிய அளக்கமுடியாத செல்வத்தை நினைக்கமிக்கதான ஒப்பற்ற அருமையான தானமாக (ப்பிறர்க்குச்செய்தற்கு) அரியகடமையைச் செய்தான்; (எ - று.)— முன்னேகூறிய தானம் போர்க்குப் புறப்படுதற்காகச்செய்ததென்றும், இப்போதுசெய்யுந்தானம் தேரில்ஏறும்போது செய்வதென்றும்அறிக. எப்படியும் இன்றேடுபோர்முடியுமென்று தானஞ்செய்தான் போலும். பி - ம்:—[1]இயற்றி. [2]இனையர், இனையது. [3]நினைய. (௩௬௨௯)

உரு.—இராவணன் தேரிலேறுதல்.

ஏறி னான்[1]றொழு திந்திரன் முதலிய விமையோர்
தேறி னார்களுந் [2]தியங்கினார் மயங்கினார் திகைத்தார்
வேறு [3]தாஞ்செயும் வினையிலை மெய்யி [4]னைம் புலனும்
ஆறி னார்களு [5]மஞ்சின ருலகெலா மனுங்க.

(இ-ள்.) (அத்தேரைத்) தொழுது (இராவணன் அதன்மீது) ஏறினான்: மனந்தேறினவர்களான இந்திரன்முதலிய தேவர்களும் அறிவுசோர்ந்து மயங்கினாராய்ப் பிரமித்தார்கள்: வேறே தாம் செய்யக்கூடிய காரியம்இல்லாமையால், உடலிலுள்ள ஐம்புலங்களும்அடங்கப்பெற்ற முனிவர்களும் உலகமெல்லாம்வருந்த (த் தாம்) அஞ்சினார்; (எ - று.)

இராட்சசசங்காரத்தின்பொருட்டே திருமால் இராமபிரானாகத் திருவவதரித்திருக்கின்றானென்றுதெளிந்த தேவர்கள்முதலியோரும் அஞ்சி அறிவுசோர்ந்து மயங்கித் திக்பிரமைகொள்ளும்படியாயிற்று, அவ்விராவணன் அந்தத்தெய்வத்தேரிலேறியபோதுஎன்றபடி. பி - ம்:— [1]எழில். [2]நடுங்கிடநடுங்கினர். [3]தான்செயும், நாஞ்சொலும், நான்சொலும். [4]ஐம்புனலும். [5]மயங்கினர். (௩௬௩௦)

உசு.—இராவணனுடைய சபதம்.

மன்ற லங்குழற் சனகிதன் மலர்க்கையான் வயிறு
[1]கொன்ற லந்தலைக் கொடுநெடுந் துயரிடைக் குளித்தல்
[2]அன்றி தென்றிடின் மயன்மக ளத்தொழி [3]லுறுதல்
இன்றி ரண்டினொன் றாக்குவன் றலைப்படி னென்றான்.

(இ - ள்.) '(யான்) போர்செய்யத்தொடங்கின் [போர்செய்யத் தொடங்குவதனால்], நறுமணம்பொருந்திய அழகிய கூந்தலையுடைய சானகி தன்னுடையமலர்போன்ற கையினால் வயிற்றை வருத்தி (த்தான்) அலைச்சலைக்கொண்டநெடியதுன்பக்கடலிலிடையேமூழ்குதல்; இதுநிகழாதாயின் மயனுடையபுத்திரியான மந்தோதரி அத்தொழிலை யடைதல், இவ்விரண்டிலொன்றை இன்றைக்கு ஆக்குவேன்' என்று கூறினான், (இராவணன்); எ-று.)—பி-ம்:—[1]கொன்றலந்தலையொடுதன் மலர்க்கணீர்குளித்தல், கொன்றலந்தலையொடுதன்னெடுங்கணீருறக்குளித்தல். [2]அன்றதன்றெனின். [3]உழத்தல், உழைத்தல். (௩௬௩௧)

௨௭.—இராவணனுடைய தோற்றம்.

பலக ளந்தலை மௌலியோ [1]டிலங்கலிற் [2]பஃறோள்
அலக ளந்தறி யாநெடும் படைகளோ டலங்க
விலக ளந்[3]தரு கடற்றரை விசும்பொடு [4]வியப்ப
உலக ளந்தவன் [5]வளர்ந்தன னாமென வுயர்ந்தான்.

(இ - ள்.) பலகழுத்துக்களின்மீது தலைகள் கிரீடங்களோடுவிளங்குகையில் பல [இருபது] கைகள் அளவினால் அளக்கமுடியாத [மிகப் பல]நெடிய படைகளோடு அசையாநிற்க,—விலகியுள்ள உப்பளத்தைத் தருகின்ற கடலினாற்சூழப்பட்ட பூமியுடனே விசும்பிலுள்ளவர்வியப்ப, உலகளந்தவன் வளர்ந்தனனென்னும்படி வளர்ந்தான்; (எ-று.)--தோள்-கை. பி-ம்:—[1]இயங்கலிற். [2]பல. [3]திருகடற்றிரை, தருகடற்றிரை. [4]வீய, விம்ம. [5]ஓங்கினனாமென. (௩௬௩௨)

௨௮.—இராவணன் தோள்தட்டி யாரவாரித்தல்.

[1]விசும்பு விண்டிரு கூறுறக் [2]கற்குலம் வெடிப்பப்
பசும்புண் விண்டெனப் [3]புவிபடப் பகலவன் பசும்பொன்
[4]தசும்பி [5]னின்றிடை திரிந்திட [6]மதிதகை யமிழ்தின்
அசும்பு சிந்திநொந் தலைவுறத் தோள்புடைத் தார்த்தான்.

(இ - ள்.) வானம்விண்டு இரண்டுபகுதியாகவும், மலைக்குலம்வெடிக்கவும், பூமி பசியபுண் விண்டாற்போலாகவும், சூரியன் பசும்பொற்குடம்போன்றிருந்து தன்னிருப்பிடத்தினின்று திரிந்திடவும், சந்திரன் (தன்)குணமாகிய அமிருதத்துளியைச் சிந்திநொந்து வருந்தவும் (தன்) தோளைப்புடைத்து ஆரவாரித்தான், (இராவணன்); (எ - று.)—தோள்புடைத்த அதிர்ச்சியால் வானம்விள்ளுதல்முதலியன நிகழ்ந்தன வென்றார்: தொடர்புயர்வுநவிற்சியணி. அசும்பு-சிறுதிவலை. பி-ம்:—[1]விசும்புதன் மறுகூறுகக். [2]குலவரைவெடிப்பப், குலவரைவெடித்த. [3]புடைபடப். [4]தசும்பு. [5]நின்றிடைந்திரிந்திட, நின்றிடைதிரிந்தன. [6]மதித்தகை.

௨௯.—இராவணன் வில்நாணியைத் தெறித்தல்.

[1]நணித்து வெஞ்[2]சம மென்பதோ ருவமையி னலத்தால்
திணித்த டங்கிரி [3]வெடித்துகச் சிலையை[4]நாண் டெறித்தான்
[5]மணிங்கொ டுங்குழை வானவர் தானவர் மகளிர்
துணுக்க மெய்தினர் மங்கல நாண்களைத் தொட்டார்.

(இ - ள்.) 'கொடியபோர் சமீபித்தது' என்பதைப்பற்றிய ஒப்பற்ற உவமையின்நன்மையினால் வலிய பெரிய கிரிவெடித்துகச் சிலைநாணைத் தெறித்தான்: வளைந்த மணிக்குழைகளையணிந்த வானவர் தானவர் என்ற இவர்களுடைய மகளிர் (மனத்தில்) அச்சங்கொண்டவராய் (த் தமது) மங்கலநாண்களைத் தொடலாயினர்; (எ - று.)

'தமது மாங்கலியசூத்திரத்திற்குக் கேடு வந்திட்டதோ?' என்று அவற்றைத் தானவ வானவமகளிர் தொட்டன ரென்க. எதைப்பற்றி அச்சமுண்டாகின்றதோ, அதனைத் தொட்டுப்பார்த்தல், இயல்பு.

பி-ம்.--[1]நணித்த. [2]சமர். [3]இடிந்திடச்,இரிந்திடச், இடந்துகச். [4]நாணெறிந்தான். [5]தணிக். (ரு௲ரு௪)

ரு.0.—இராவணனது தோற்றம்.

[1]சரிக்கு மண்டலந் தூங்குநீர்ச் [2]சுரிப்புற [3]வீங்க
இரைக்கும் பல்லுயி ரியாவையு நடுக்கமுற் றிரியப்
பரித்தி லன்புவி படர்சுடர் [4]மணித்தலை பலவும்
[5]விரித்தெ ழுந்தன னனந்தன்மீ தென்பதோர் [6]மெய்யான்.

(இ - ள்.) சூரியமண்டல சந்திரமண்டலங்கள் சுழன்றுதோன்றுவதற்குஇடனான மிக்கநீரையுடையகடலிலே சுழற்சிபொருந்துமாறு (அக்கடலின்நீர்)பொங்கவும், (ஏதேனும் ஆபத்துநேரின்)ஆரவாரிக்குந் தன்மையுள்ள பலஉயிர்களெல்லாமும் நடுக்கமுற்று நிலைகுலையவும், அநந்தனானவன் புவியைப் பரிக்காதவனாய்ச், சுடரைக்கொண்ட மணிகளையுடைய (தன்) பலதலைகளையும் மேலேவிரித்தெழுந்தானோ என்னுமாறுதோன்றுகின்ற ஒப்பற்றஉடலையுடையனானான்,(அந்தஇராவணன்).

வளர்ந்துதோன்றியவனான அந்தஇராவணன்,இவ்வுலகபாரத்தைத் தாங்குகின்ற அநந்தனென்ற ஆதிசேஷனே மணித்தலைபலவும் விரித்தெழுந்தானோ? என்னுமாறு தன்னுடலால் தோன்றினனென்க: தன்மைத்தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]சரித்து, துரித்து. [2]சுழியுற, கழியுற. [3]வீங்கி. [4]மணிதலை. [5]விரைத்தெழுந்தன. [6]வெய்யன். (ரு௲ருரு)

ரு.க.—இராவணன் போர்க்களத்துத்தோன்றுதல்.

தோன்றி னான்வந்து சுரர்களோ [1]டசுரரே தொடங்கி
மூன்று நாட்டினு முள்ளவ [2]ரியாவரு [3]முடிய
ஊன்றி னான்செரு வென்றுயி ருமிழ்தர [4]வுதிரங்
கான்று நாட்டங்கள் வடவனற் கிருமடி கனல.

(இ - ள்.) சுரர்களுடனே அசுரர்தொடங்கி மூவுலகத்திலுமுள்ளவர் 'யாவரும் முடிய(இராவணன்)போரில் ஊற்றங்கொண்டான்'என்ற காரணத்தினால் இரத்தத்தைக்கக்கி உயிர்சிந்தவும், (தன்) கண்கள் வடவைத்தீயினும் இருமடங்கு ஜ்வலிக்கவும், (போர்க்களத்தில் அவ்விராவணன்) வந்து தோன்றினான்; (எ-று.)—பி-ம்:—[1]உரகரே. [2]யாரொடும். [3]முடியும் [4]வெந்தீக். (ரு௲ருசு)

ரு.உ.—அப்போதுதோன்றிய நிலைமாறுபாட்டைச்
சுக்கிரீவன்முதலியோர் காணுதல்.

உலகிற் றோன்றிய மறுக்கமு மிமைப்பில ருலைவும்
மலையும் வானமும் வையமு [1]மறுகுறு [2]மறுக்கும்
அலைகொள் வேலைக ளஞ்சின [3]சலிக்கின்ற வயர்வும்
தலைவ னேமுதற் றண்டலி லோரெலாங் கண்டார்.

(இ-ள்.)உலகிலேதோன்றிய கலக்கமும், தேவர்களின்வருத்தமும், மலைகளும் வானமும் பூமியும் ஆகியஇவைகள் சுழல்கின்ற ¹சுழற்சியும்,

அலைகளைக்கொண்ட கடல்கள் அஞ்சினவாய்ச் சலிக்கின்ற தளர்நிலையும் சுக்கிரீவன்முதலிய தடுக்கப்படாதவலிமையையுடையவர் யாவரும்கண்டனர்; (எ - று.)—மறுக்கு - முதனிலைத்தொழிற்பெயர். பி-ம்:—[1]நடுக்குறு, நடுக்குற. [2]மலைவும், வலியும். [3]சலிக்கின்றயாவும். (௩௬௩௭)

௩௩.—அந்நிலை வேறுபாட்டைக்கண்டு சுக்கிரீவன்முதலியோர் துணுக்குற்றெழுதல்.

பீறிற் றுமண்ட மென்பதோ ராகுலம் பிறக்க
வேறிட் டோர்பெருங் கம்பலை பம்பிமேல் வீங்க
மாறிப் பல்பொருள் [1]வகுக்குறுங் காலத்துண் மறுக்கம்
ஏறிற் றுற்றுள தென்னை[2]கொ லோவென [3]வெழுந்தார்.

(இ - ள்.) இவ்வண்டமானது பீறப்பெற்றதோ என்றுகருது மாறுன ஒருதடுமாற்றநிலை தோன்றவும், (இதுவரையிற் கண்டநிலைமையினின்று) வேறுபட்ட ஒருபேரொலி நெருங்கி மேல்மிகவும், அழிந்திட்டதனுற் பலபொருள்களையும் படைத்தற்கு உற்ற காலத்திலே தோன்றுங் கலக்கம் (இப்போது): மிகுதியானதாகத்தோன்றியுள்ளது (இது) என்னை கொலோ?' என்று (சுக்கிரீவன்முதலியோர்) எழலானுர்கள்; (எ - று.)—மாறுதல்-நிலைமாறுதல்: எனவே, அழிதலாயிற்று. பி-ம்:—[1]மாய்வுறு. [2]கொலாமென. [3]எழுந்தான். (௩௬௩௮)

௩௪.—இராவணன் தேர்மீதேறித்தன்சேனையோடுவருகின்றுனென்பதை சுக்கிரீவன் முதலியோர் அறிதல்.

கடல்க ளியாவையுங் கன்மலைக் குலங்களுங் காருந்
திடல்[1]கொண் மேருவும் விசும்பிடைச் செல்வன சிவண
அடல்கொள் சேனையு [2]மரக்கனுந் தேரும் வந்தார்க்குங்
[3]கடல்கொள் பேரொலிக் [4]கம்பலை யென்பதுங் [5]கண்டார்.

(இ - ள்.) கடல்களெல்லாமும் கன்மயமான மலைத்தொகுதிகளும் மேகமும் மிக்கமேடானநிலையைக்கொண்ட மேருவும் வானத்திற்செல்வனவற்றை ஒத்திருக்க, வலிமையைக்கொண்ட (இராக்கத)சேனையும் இராவணனும் (அவன்) தேரும் வந்துஒலிக்கின்ற கடல்களின் பேரொலியையொத்த ஆரவாரம் (இது) என்பதையும் அறிந்தார்; (எ -று.)

முறையே நான்கடியிலுமுள்ள கடல் திடல் அடல் கடல்என்பன லகரரகரப்போலிபெற்ற பாடமும் உண்டு. சப்தத்தைக் குணமாகக் கொண்ட வானவழியே பேரொலிவருவதனுல், அங்ஙனம்வந்த சேனை முதலியவற்றின் ஒலி, கடல்முதலியவை வானத்தில்வந்ததனுல் தோன்றியபேரொலியை யொத்திருந்ததெனை வருணித்தார். முறைநிரனிறைப்பொருள்கோள். வந்து-சொல்விழுக்காடு. பி-ம்;—[1]கொளமேரு. [2]அரக்கரும். [3]குடல்கள். [4]கம்மலை. [5]கொண்டார், கொண்டான். (௩௬௩௯)

௩௫.—இராவணன் வருகையை விபீஷணன் ஸ்ரீராமனுக்குக் கூறுதல்.

எழுந்து வந்தன னிராவண [1]னிராக்கதத் தானைக்
கொழுந்து [2]முந்திய துற்றது கொற்றவ குலுங்குற்று
அழுந்து கின்றது நம்பல மமரரு மஞ்சி
விழுந்து சிந்தின ரென்றனன் வீடணன் [3]விரைவான்.

(இ - ள்.) 'வெற்றியோனே! இராவணன் (தன்சேனையோடு) புறப்பட்டுவந்தான்: இராக்கதருடையசேனையின் முன்னணி முந்திவந்திட்டது: நம்சேனை நடுங்கி (அச்சத்தில்) மூழ்குகின்றது: தேவர்களும் அஞ்சிக் கீழ்விழுந்து சிதறினார்கள்' என்று விபீஷணன் விரைபவனாய் (ஸ்ரீராமனிடம்)கூறினான்;(எ-று.)—பி-ம்:—[1]இராக்கதர்தானை. [2]முற்றியதுற்றது,முந்தவந்துற்றது, முற்றிவந்துற்றது.[3]விரைந்தான்.(௩௯௪0)

இராவணன்றேரோறுபடலம் முற்றிற்று.

---

## ௩௫ - ஆவது இராமன்றேரேறுபடலம்.

ஸ்ரீராமன் இராவணனுடன்போர்புரியுமாறு இந்திரனனுப்பிய தேரின்மீது ஏறியதைத் தெரிவிக்கும் படலம்என்பது, பொருள்.

விபீஷணனாழ்வான் இராவணனதுவருகையைத் தெரிவிக்கவும், வானரசேனை கைகுவித்து வாய்குழறி அபயம்வேண்டுங் கூச்சல்மிக, ஸ்ரீராமன் எழுந்து போர்க்கோலங்கொள்ளாநிற்கையில், சிவபெருமான் தேவர்களைநோக்கி 'இன்றோடு போர்முடிகின்றது: இராவணன் ஒழிவான்: இராமனுக்குத் தேரனுப்புக'என்ன, தேவர்களும் 'இது செய்தற்குஉரியது' என்ன, இந்திரனும் உடன்பட்டு மாதலியைத்தேர்கொணருமாறுகட்டளையிட, அவன் கொணர்ந்தனன்: அப்போது தேவர்கள் இரதத்திற்குஉரியதேவதையையேத்தி 'ஸ்ரீராமனுக்குவெற்றிதருக'என்றுசொல்லி மலர்மாரி தூவியனுப்ப, மாதலி அத்தேரையோட்டிக்கொண்டுபோய் இராமன்முன் நிறுத்தினான்: ஸ்ரீராமன் அந்தத்தேரையும் தேரோட்டியையும்பற்றிவினவ, மாதலி தன்னை இன்னானென்றுதெரிவித்து, அத்தேரைத் தான் இந்திரன்கட்டளையாற் கொணர்ந்தமையைத்தெரிவித்தானாக, ஸ்ரீராமன் அத்தேரைப்பற்றி மற்றும் ஐயுற, அத்தேர்க்குதிரைகள் ஸ்ரீராமபிரானுடைய ஐயத்தைத் தம்வேதக்குரலாற் போக்கவும், மீண்டும் ஸ்ரீராமன் அநுமானையும் இலக்குமணனையும் கருத்துவினவித் தெரிந்து அத்தேரிலேறியமை இதிற்கூறப்படுகின்றது. இராமன்றிருத்தேரோறுபடலம்என்றுசிலபிரதியிலும், இராகவன்றிருத்தேரோறுபடலம்என்றுசிலபிரதியிலும் இந்தப்படலத்திற்குப்பெயர் காணப்படுகின்றது.

வேறு.

க.—ஸ்ரீராமன் போர்க்குஎழுதல்.

தொழுங்கையொடு வாய்குழறி மெய்ம்முறை [1]துளங்கி
விழுந்துகவி சேனை[2]யிடு பூசன்மிக விண்ணோர்

அழுந்து[3]படு பாலமளி [4]யஞ்சலெனா வந்நாள்
எழுந்தபடி யேகடி தெழுந்தன னிராமன்.

(இ - ள்.) கூப்பியகையுடனே வாய்குழறி உடம்பின்நிலைமை சலித்துக் கீழ்விழுந்து கவிசேனை செய்கின்ற பேராரவாரம் மிகவே, ஸ்ரீராமன்,—துன்பத்திலழுந்திய அந்நாளில் 'பயப்படாதீர்கள்'என்று அபயமளித்துத் தேவர்களுக்காகப் பாற்கடலில் (ஆதிசேஷ) சயனத்திலே யோகநித்திரையினின்று, எழுந்ததன்மையொப்பக் கடிதெழுந்தனன்; (எ - று.)

பாற்கடலிற்பள்ளிகொண்டிருக்கையில் இராவணாதியரால் துன்புற்ற தேவர்கள் கூக்குரலிட்டனராக, அதனைச் செவியேற்று அவர்களின்துயரையொழிக்கத் திருமால்தசரதசக்கரவர்த்திக்குப் புதல்வனாகத் தோன்றுவதற்கு எழுந்ததுபோலவே, தேவாமிசமான வானரர்களின் பூசலைக்கேட்டு அவர்கள்துயர்தீர இராவணவதஞ்செய்யும்படி ஸ்ரீராமன் எழுந்தனனென்க. வானரர் கைகுவித்து வாய்குழறிச்செய்த பூசல் - தம்மைக்காக்கவேண்டுமென்பதுகருதி. பி - ம்:—[1]துளங்க. [2]படு. [3]படமீதமளி,பணிமீதமளி. [4]அஞ்சியெழும், துஞ்சியெழும். ()

உ.—மூன்றுகவிகள் - ஸ்ரீராமன் போர்க்கோலங்கொள்ளுதலைத் தெரிவிக்கும்.

கடக்களி றெனத்தகைய கண்ணனொரு காலன்
விடக்கயி றெனப்பிறழும் வாள்வலன் விசித்தான்
மடக்கொடி [1]துயர்க்குநெடு வானினுறை வோர்தம்
இடர்க்கட லினுக்குமுடி வின்றெனா [2]விசைத்தான்.

(இ-ள்.) மதநீர்ப்பெருக்கையுடைய ஆண்யானையென்றுசொல்லத் தக்க தன்மையையுடைய ஸ்ரீராமன், ஒப்பற்ற யமனுடைய விஷமுள்ள பாசாயுதம்போல் விளங்குகின்ற வாட்படையை வலப்புறத்திற் கட்டினனாகி, 'மடப்பத்தையுடைய கொடிபோன்றவளான சீதையின் துயரத்திற்கும் நெடியவானத்தில்வாழ்பவரான தேவர்களுடைய துயர்க்கடலுக்கும் முடிவுகாலம் இன்றாகும்' என்று கூறினன்; (எ - று.)

இன்றைத்தினம் இராவணன் ஒழிந்திடுவா னென்றபடி. பி - ம்:—[1]தனக்கும். [2]இசைப்பான். (௩௬௪௨)

௩. தன்னக வசத் [1]துருவு தங்கவொரு தன்னிற்
பின்னகவ சத்தபொரு ளில்லைபெரி யோனை
[2]மன்னகவ சத்துற [3]வரித்தெனல மாதோ
[4]இன்னகவ சத்தையுமொ ரீசனென லாமால்.

(இ - ள்.) பெரியோனாகிய அவ்விராமனை நிலைபெறக்கவ்வச் சத்துப்பொருந்த [வலிமைபொருந்த] (க் கவசம்) வரிந்ததுஎன்று சொல்லத்துணியோம்: (ஏனெனில்), தன்நெஞ்சின்வசமாக [ஸங்கல்பப்படி] சரீரமுள்ள எல்லாப்பொருளுந் தங்க, தன்னினும் வேறாக(அக் கடவுளால்) ,வலிமைபெறாத ஒருபொருளில்லை: (ஸ்ரீராமனைத் தன்

னிடத்துக்கொண்டுமையால்) இந்தக்கவசத்தையும் ஒப்பற்ற அந்தக் கடவுளேயென்னலாம்; (எ-று.)

கடவுள் எல்லாப்பொருளிலுந்தங்கி அவ்வப்பொருட்குச் சத்தியைத்தருகின்றானென்பதும் அவனினும் வேறாகி அவனால்வலிவுபெறாத ஒருபொருளுமில்லை யென்பதும் நூற்கொள்கை யாதலால், அப்படிப்பட்ட கடவுளுக்குக் கவசமென்று ஒன்று உடலிற்பதிந்து ரட்சையாகநிற்கக் கட்டப்பட்டது என்றுசொல்வது பொருந்துவதாகாது: இக்காலத்து ஸ்ரீராமபிரானைத் தன்னுட்கொண்டமையால் அந்தக்கவசத்தையும் ஒருகடவுள்போலப் பாராட்டுதலாகிய இவ்வளவே நம்மாற் செய்யத்தக்கதென்பதாம். இரண்டாமடியில், பின்னகம்-வேறுபட்டது: அசத்தம்=அசக்தம். மூன்றாம்அடியில், கவ=கவ்வ. செய்யுளின் பொருட்டு 'மன்ன கவ' என்பதும், 'கவ சத்து'என்பதும் இயல்பாயின. பி-ம்:—1உலகு. 2உன்ன. 3விரிந்ததெனமாதோ. 4அன்ன. 'மன்னகவசத்துறவரிந்ததெனவென்கோ'என்று சிலபிரதியில் மூன்றாமடி. (௩௬௩௩)

ச. புட்டிலொடு 1கோதைகள் 2புழுங்கியெரி கூற்றின்
3அட்டிலென 4லாயமல ரங்கையி னடக்கிக்
கட்டியுல கிற்பொரு ளெனக்கரையில் வாளி
5வட்டில்புறம் 6வைத்தவை பொருந்திட வரிந்தான்.

(இ - ள்.) மனம்வேர்த்துக் கொதிக்கின்ற யமனுடைய அட்டிலென்றுசொல்லத்தக்கதான விரற்புட்டிலுடனே கையுறையையும் மலர்போன்ற (தன்) அழகியகையிலே யடங்கச்செய்து கட்டி, உலகிலுள்ள பண்டங்கள்போலக் கரையில்லாதனவான வாளிகளைக் கொண்ட தூணிகளை முதுகிலேவைத்து அவைபொருந்தக் கட்டினான்;(எ-று.)— வட்டில்-அம்பறாத்தூணி. பி - ம்:-- 1கோதைமெய். 2புழுங்க. 3பட்டில். 4ஆயமலனங்கையிலடங்க, ஆயமலர்மங்கையினடங்க, 5வட்டிபுறம். 6வைத்தயல்வயங்குறவலித்தான்,வைத்தவர்வயங்குறிவரித்தான், வைத்தவையலங்குறவரித்தான், வைத்தவைபொருந்திடவலித்தான்.

இங்குச் சிலபிரதிகளில் ஒருபாடல் காணப்படுகின்றது வருமாறு:—

1இத்தகைய ஞகியிகல் செய்திவனே 2யின்னே
கொத்துமுடி கொய்வனென நின்றெதிர் குறிப்பத்
தத்தமுறு வற்செய பவிர்ந்ததென வானிற்
சித்தர்கண் முனித்தலைவர் சிந்தைமகிழ் வுற்றார்.

பி-ம்:—1இத்தலையனுயது. 2என்னே. (௩௬௩௪)

ரு.—சிவபெருமான் ஸ்ரீராமனுக்குத்தேரனுப்புமாறு தேவர்களிடம் கூறுதல்.

மூண்டசெரு வின்றளவின் 1முற்று2மினி வெற்றி
ஆண்3டகைய துண்மையினி யச்சமகல் வுற்றீர்
பூண்டமணி யாழிவய மாகிபிர் பொலந்தேர்
ஈண்டவிடு வீ4ரமர ரென்5றர னிசைத்தான்.

(இ-ள்.) 'தேவர்களே! இப்போது மூண்டுள்ளபோர் இன்றளவில் முற்றுப்பெறும்: இனி, வெற்றியானது ஆண்மைக்குணமுடைய இராமனுடையதே:(இது), உண்மை: இனி அச்சம்நீங்கினவராய், சக்கராங்களையுடையதும் வெற்றிபொருந்திய குதிரைகள் நிமிர்ந்துசெல்லப்பெற்றதுமான மணிபூண்ட பொன்மயமான (ஸ்ரீராமனுக்கு) அமரிலே நெருங்கவிடுவீர்'என்று சிவபெருமான் (தேவர்களைநோக்கிக்)கூறினான்; (எ - று.)—தேவர்கள்-போர்காணுமாறு வானத்துவந்தவர்கள். இராவணபயத்தைவிட்டு ஸ்ரீராமனுக்குத் தேரனுப்புமாறுஉருத்திரமூர்த்தி கூறினனென்க. பி-ம்:—[1]முற்ற. [2]முனிவானும், முனிவோனல், மிகவெற்றி. [3]தகையுமுண்மை, தகையுமும்மை, தகையதும்மை, தகையுறும்மை. [4]அமரில். [5]அயன். (௩கூசரு)

கூ.—தேவேந்திரன் ஸ்ரீராமனுந்த உதவக்கருதித் தேரைக்கொணருமாறு மாதலிக்குச் சொல்லுதல்.

தேவ[1]ரது கேட்டிது [2]செயற்குரிய தென்றார்
ஏவல்புரி [3]யிந்திரனு மற்றென விசைத்தான்
மூவலகு[4]மூந்து மொர் கணத்தின் [5]மிசை முற்றிக்
[6]கோவில்புரி கேன்பொருவி றேர்[7]கொணர்தி யென்றான்.

(இ - ள்.) தேவர்கள் அந்த உருத்திரமூர்த்தியின் வார்த்தையைக் கேட்டு, 'இது செய்தற்கு உரியது'என்று (இந்திரனிடம்) கூறினர்; ஏவல்புரிகின்ற இந்திரனும் 'அப்படியே' என்று கூறினவனாய், 'மூவுலகும் மூந்துந்தன்மையுள்ள ஒப்பற்ற தேரை ஒருகணத்திற்குள் அலங்கரித்து (ஸ்ரீராமனுக்குக்) கோவிலாகச்செய்வேன்: கொணர்தி' என்று (மாதலியை நோக்கிக்) கூறினான்; (எ - று.)—பி - ம்:—[1]இது. [2]செய்குறியதென்றார். [3]இந்திரனுமத்தொழிலிசைத்தான்,இந்திரவெனத்தொழுதிசைத்தார், இந்திரனென * * * இசைத்தான். [4]மூந்தொரு, இன்றொரு, [5]முறை. [6]காவல்புரிதன். [7]கவர்தியென்றான், கொணர்திகாலம். ()

எ.—மாதலி தேர்கொணர்தல்.

மாதலி [1]கொணர்ந்தனன் மகோததி [2]வளாவும்
பூதல மெழுந்துபடர் தன்மைய பொலந்தேர்
[3]ஈதமைதி மண்டலமு மேனை[4]யுள துந்[5]தன்
பாதமென நின்றது [6]படிந்தது விசும்பில்.

(இ - ள்.) கடல்சூழ்ந்துள்ள பூமியின்மீதாகநின்று செல்லுந்தன்மையுடைய பொற்றேரை மாதலி கொணர்ந்தான்: அமைதலையுடைய இந்த(ச்சந்திர)மண்டலமும் மற்றுமுள்ளதும் தன்னுடைய அடிப்பகுதிஎன்றுசொல்லுமாறுநின்றதான அத்தேர்,வானத்தில் வந்தது;(எ-று.)

மண்டலம் - சூரியசந்திரமண்டலம்முதலியன. பூதலமேயெழுந்துபடர்ந்தாற்போன்றதன்மையது அத்தேர்என்று இரண்டாமடிக்குப் பொருள்கூறினுமாம். பி-ம்:—[1]கொணர்ந்தநன். [2]அளாவும். [3]சீதமதி

[4]உளவும். [5]திண். [6]படர்ந்ததுவிசும்பின். "வந்ததனை (கடு)" என்ற பாடல் சிலபிரதிகளில் இங்கேயுள்ளது. (ருகூசுஎ)

அ.—இதுமுதல் ஏழுகவிகள் - வந்ததேரின் வருணனை.

குலக்கிரிக ளேழின்வலி கொண்டுயர் [1]கொடிஞ்சும்
[2]அலைக்குமுயர் பாரின்வலி [3]யாழியினி [4]னச்சுங்
கலக்கற வகுத்தது கதத்தரவ [5]மெட்டும்
வலக்கயிறு கட்டியது முட்டியது வானை.

(இ - ள்.) (அந்தத்தேர்),—குலமலைகள்எழின் வலிமையைக்கொண்டு சிறந்த கொடிஞ்சும், அலைமோதுகின்ற சிறந்த பாரின் வலியுள்ள சக்கரத்துடனே அச்சும், கலக்கமில்லாமல்[உறுதியாக] அமைக்கப்பெற்றது; சீற்றமுள்ள அஷ்டமகாநாகங்களையும் வலிமையுள்ள கயிறாகக் கொண்டுகட்டப்பெற்றது; வானை முட்டியது [மிகவோங்கியுள்ளது]; (எ-று.)—பி-ம்:—[1]கொடிஞ்சின், [2]அலக்குரியபாரும். [3]ஆழியும். [4]நலத்த, நலச்சும். [5]எட்டின். சிலபிரதியில் 'இலக்கணம்வகுத்தத னுகத்தரவமெட்டின்' என்று மூன்றாமடி காண்கிறது. (ருகூசஅ)

கூ. ஆண்டினொடு [1]நாளிருது திங்களிவை [2]யென்று
மீண்டனவு [3]மேலனவும் [4]வீட்டிவிசி தட்டின்
பூண்டுளது தாரகை மணிப்[5]பொருவில் கோவை
நீண்டபுனை தாரினது [6]நின்றுளது குன்றின்.

(இ-ள்.)(அத்தேர்),—வருஷத்துடனே இருதுவும் மாதமும் நாளும் ஆகியஇவைஎன்றுசொல்லப்பட்டு மீண்டனவும் இனிமேல்வருவனவும் என்ற இவற்றையடக்கிஉறுதியாகவமைத்த தட்டிலே பூண்டுளது: தாரகையெனப்படுகின்ற இரத்தினங்களின் ஒப்பற்ற கோவையினாலாகிய நீண்ட அலங்கரிக்கின்ற மாலையையுடையது: மலைபோல நிற்பது; (எ-று.)மீண்டன-கழிந்தன: மேலன - எதிர்காலத்துவருவன: இவ்விரண்டையும்கூறவே இப்போது இருப்பனவும் அடங்கும்:ஆண்டுமுதலியன அவற்றிற்குரிய தேவதைகள். தேவதாமயம்அத்தேரென்க.பி-ம்:-[1]நாளுமிடு.[2]யாவும்,என்னு.[3]வெல்வனவும். [4]விட்டுவிரி,மீட்டுவிரி,விட்டுவிசி. [5]பொருவு. [6]நின்றுலவு, நின்றுளதொர். (ருகூசகூ)

கo. மாதிர மனைத்தையு [1]மணிச்சுவர்க ளாகக்
கோதற வகுத்தது மழைக்குழுவை யெல்லாம்
மீதுறு பதாகையென வீசியது மெய்ம்மைப்
[2]பூதமவை [3]யைந்தின்வலி யிற்பொலிவ தம்மா.

(இ - ள்.) (அத்தேர்),—திக்குக்கள்எல்லாவற்றையும் அழகிய சுவர்களாகக் குற்றமற வகுத்தது;மேகத்தின்கூட்டத்தையெல்லாம் மேலே பொருந்திய கொடியாகப் பறக்கப்பெறுவது: அழியாதபஞ்சபூதங்களின் வலிமைகொண்டு பொலிவது; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல். பி - ம்:—[1]மணிச்சுவரின்மானக். [2]பூதமிவை. [3]ஐந்தும்.

௩௧. [1]மரத்தொடு [2]மருந்துலகில் யாவுமுள வாரித்
தரத்தொடு [3]தொடுத்தகொடி தங்கியது சங்கக்
கரத்தொடு தொடுத்தகடன் மீதுமிமிர் காலத்து
உரத்தொடு [4]கடுத்தகத மோதையத வோதை.

(இ-ள்.) (அத்தேர்),—மரத்துடனே பூண்டுஆகிய உலகிலுள்ளஎல்லா ஓரறிவுயிர்களையும்வாரிச் சிறப்பாகத்தொடுத்தகொடியையுடையது: தொகுதியான அலையோடு பொருந்திய சமுத்திரம் மேலேபொங்கிவருகின்ற (ஊழிக்)காலத்து வலிமையோடு விரைந்துதோன்றுகின்ற உக்கிரமான ஓசை, அந்தத்தேரினின்று தோன்றுகின்ற ஓசை; (எ-று.)

யுகாந்தகாலத்திற் கடல் பொங்கியழிக்கும்போது உண்டாகும் ஓசைபோன்ற பேரோசை, அந்தத்தேரினின்று தோன்றுமென்க. கதழ்தல்-உக்கிரமாதல் பி-ம்:—[1]வரத்தொடு. [2]தொடுத்த. [3]கொடுத்த. [4]தொடுத்த. (௩௬௫௧)

௩௨ பண்டரித னுந்தியயன் வந்தபழ முந்தைப்
புண்டரிக மொட்டனைய மொட்டினது பூதம்
[1]உண்டன வயிற்றிடை யொடுக்கி [2]யுறைகின்ற
[3]அண்டசன் மணிச்சயன [4]மொப்ப தகலத்தின்.

(இ - ள்.) அத்தேர்,—முன்பு திருமாலினுடைய நாபியில் பிரமன் வருதற்குக்காரணமான மிகப்பழமையான தாமரைமொட்டையொத்த மொட்டையுடையது: உயிர்களாகிய உண்டவற்றையெல்லாம் வயிற்றில் ஒடுக்கிவாழ்கின்ற லோககர்த்தாவாகியதிருமாலின் அழகியசயனமாகிய ஆதிசேஷனை அகலத்தில்ஒத்திருப்பது; (எ-று.)—[3]அண்டசமணிச்சயனம் என்றபாடத்திற்கு, அண்டசம்-முட்டையிற்பிறந்ததான, மணிச்சயனம் என்க. பி-ம்:—[1]உண்டவை. [2]உமிழ்கின்றோன், உமிழ்கிற்போன். [3]அண்டவமணிச், அண்டசனியற், அண்டசனியச். [4]ஒத்தது. (௩௬௫௨)

௩௩. வேதமொரு நாலுநிறை வேள்விகளும் வெவ்வேறு
ஓதமவை [1]யேழுமலை யேழுமுல கேழும்
பூதமவை யைந்துமெரி மூன்றுநனி பொய்தீர்
[2]மாதவமு மாவுதியு மைம்புலனு மற்றும்.

௩௪. அருங்கரண [3]மைந்துசுட ரைந்து [4]திசைநாலும்
[5]ஒருங்கரண மூன்றுமுழல் வாயுவொரு பத்தும்
பெரும்பகலு [6]நீளிரவு மென்றிவை பிணிக்கும்
பொரும்பரிக [7]ளாகநனி பூண்டது [8]பொலந்தேர்.

இரண்டுகவிகளும்-குளகம்: ஒருசேரப்பொருளுரைக்கப்படும்.

(இ-ள்.) (௩௪) அந்தஅழகியதேர்,—(௩௩) ஒருநான்குவேதங்களும் நிறைந்த வேள்விகளும் வெவ்வேறான ஏழுசமுத்திரங்களும் ஏழுமலைகளும் உலகேழும் ஐந்துபூதங்களும் மூன்றுஅக்கினிகளும் மிகவும் பொய்ம்மைதீர்ந்த மாதவமும் ஆவுதியும் ஐம்புலனும், மற்றும் (௩௪) அருமையான ஐந்துஇந்திரியங்களும் பஞ்சாக்கினிகளும் நான்குதிசைகளும்

ஒருசேரவமைந்தமூன்றுமதிலும் சஞ்சரிக்கின்ற தசவாயுக்களும் பெரும் பகலும் நீண்டஇரவும்என்ற இவற்றையெல்லாம் தேரிற்பூட்டுகின்ற பொரும்பரிகளாக மிகவும்பூண்டது; (எ - று.)

அழிந்திடாமலிருத்தல் : மிக்கவலிமை அளவிடமுடியாமல்ஓங்கியிருத்தல் சலிப்பில்லாமல் வேகமாகச்சஞ்சரித்தல் முதலிய தன்மைகளால் அத்தேரிற் பிணித்துள்ள பரிகட்கு வேதம்முதலியன உவமையாகுமென்பதுகுறித்து, வேதம்முதலியவற்றைப் பரிகளாகப்பூண்டது அத்தேர் என்றூர். அக்கினிமூன்று - காருகபத்திவம் ஆகவநீயம் தட்சிணுக்கினியென்பன. பஞ்சாக்கினிகள் - நான்கு திசையில் நான்குஅக்கினியும் மேலே சூரியனும் என்பவை. மும்மதில் - பொன் வெள்ளி இரும்புஎன்ற இவற்றூலானவை. பி - ம்:—[1]உலகேழுமலேயேழும். [2]மாதிரமுமாகுதியும், மாதிரமுமாவுதியும். [3]அஞ்சுசுடரஞ்சு. [4]மறை. [5]பொருங்கரணம், ஒருங்குகுணம். [6]நள்ளிரவும். [7]ஆகி. [8]பொலன்றேர். ()

கரு.—தேவர்கள் அத்தேரை வேண்டுதல்.

வந்ததனை வானவர் வணங்கி வலியோய்நீ
எந்தைதர வந்தனை யெமக்குதவு கிற்பாய்
[1]தந்தருள்வை வென்றியென [2]நின்று [3]தகை மென்பூச்
சிந்தினர்கள் மாதலி கடாவிநனி சென்றான்.

(இ - ள்.) வந்த அத்தேரை தேவர்கள் வணங்கி, 'வலிமையுடையோனே! நீ எமதுதலைவனுகிய இந்திரனதுகட்டளையால் வந்துள்ளாய்: (ஆகவே), எமக்கு உதவுவாய்: (ஸ்ரீராமபிரானுக்கு) வெற்றியைத்தந்துஎங்கட்கு அருள்புரிவாய்' என்று (எதிரே) நின்று, அழகிய மெல்லியபூவைச் சிந்திஞர்கள்: மாதலிதேரைத்தூண்டிநன்குவிரைந்து சென்றான்; (எ-று.) —தெய்வத்தன்மையுள்ள தேராதலால், தேவர்கள் அதன் அதிதேவதையைநோக்கி இங்ஙன்வேண்டிஞரென்க. பி-ம்:—[1]தந்துதவு, தந்துருவ. [2]நின்ற. [3]தவ, தலம். இச்செய்யுள் "மாதலி" (எ) என்ற பாடலுக்குப்பின் இருக்க, இதன்பின் "குலக்கிரி" (அ) என்ற பாடல் சிலபிரதிகளில் உள்ளது. (கூகூருரு)

ககூ.—தேர் ஸ்ரீராமபிரானிடத்து விரைந்துவருதல்.

வினைப்பகை [1]விசைக்கொடு [2]விசும்புருவி மான
மனத்தின் விசை பெற்றுளது வந்ததென வானோடு
அனைத்துலக மூந்தொழ வடைந்த தமலன்பால்
நினைப்புமிடை பிற்பட [3]நிமிர்ந்தது நெடுந்தேர்.

(இ - ள்.) (அந்த) நெடுந்தேரானது,—(மாய) வினைக்குப் பகையான மெய்ஞ்ஞானத்தின் விசையுடனே பெருமைபெற்ற மனத்தின் விசையையும் பெற்றுளதாகி, விசும்பை ஊடுருவிக்கொண்டு வந்ததென்று (யாவரும்) பாராட்டிக்கூற, வானிலுள்ளாரோடு அனைத்துலகத்திலிருப்பவரும் தொழும்படி எண்ணமும் இடைந்து பிற்படக் குற்றமற்றவஞன ஸ்ரீராமனிடத்து வந்துசேர்ந்ததாய் நிமிர்ந்துநின்றது;

(எ - று.)—இச்செய்யுள் சிலபிரதிகளி லில்லை. பி-ம்:—[1]மிசை. [2]விசும் புறுவிமானம். [3]திமிர்ந்துயர். (௩௬௫)

கஎ.—அத்தேரினை ஸ்ரீராமன் கொண்டாடுதல்.

அலரிதனி [1]யாழிபுனை [2]தேரிதெனி லன்றால்
உலகின்முடி விற்[3]பெரிய வூழெரி யிதன்றால்
நிலைகொணெடு மேருகிரி யன்றுநெடி தம்மா
[4]தலைவரொரு [5]மூவர்தனி மான[6]மிது தானோ.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) சூரியனுடைய ஒற்றைச்சக்கரம்பூண்ட தேர்(போன்றது) இது என்றால், அவ்வாறுசொல்லுதல் பொருந்தாது;உலகம் முடிவுறுங் காலத்திற் பெரிதாகத்தோன்றுகின்ற ஊழித்தீயினொளியும் இது அன்று; (இது),—நிலைத்தலைக்கொண்ட நெடியமேருகிரியும் அன்று: (இது), நெடியது: ஆச்சரியம்! ஒப்பற்ற தலைவர்களான திரிமூர்த்தி களின் தனியான [பெருமை பெற்ற] விமானம் இதுவோ? (எ-று.)—

ஒற்றைச்சக்கர மின்மையாற் சூரியன்தேரன்று: மேருமலையினும் உயர்ந்திருத்தலால், மேரு அன்று: வெப்பமின்றியிருத்தலால், இத னொளிக்கு ஊழித்தீயொளியும் ஒப்பாகாதுஎன்றான் ஸ்ரீராம னென்க. பி - ம்:—[1]ஆழிமிகு. [2]தேரிதனினன்றால். [3]பெரியவோமொழியினன் றால், பெரியவூழொளியதன்றால். [4]தலைவரொடு. [5]மூவர்தனின். [6]அது தானே. (௩௬௭)

கஅ.—ஸ்ரீராமன் மாதலியை அத்தேர்கொணர்ந்துவந்ததுகுறித்து வினவ, அவன் கூறத்தொடங்குதல்.

என்னையிது நம்மையிடை யெய்தலென வெண்ணு
[1]மன்னவர்த மன்னன்மகன் மாதலியை வந்தாய்
பொன்னினொளிர் தேரிது [2]கொடார்புகல வென்றான்
அன்னவனு மன்னதனை யாகவுரை செய்தான்.

(இ - ள்.) தசரதசக்கரவர்த்திகுமாரனான ஸ்ரீராமன் 'இது, நம் மிடத்து வருவது என்னை?' என்றுநினைத்து, மாதலியைநோக்கி, 'பொன்னுலொளிர்கின்ற இந்தத்தேரைக்கொண்டு யார் செல்ல வந்தாய்?'என்று வினவினான்: அந்தமாதலியும் அவ்விஷயத்தைப் பொருந்த உரைசெய்தான்: (எ - று.)—கீழைச்செய்யுள்தொடங்கி இச்செய்யுளின் முதலடிவரையில் ஸ்ரீராமன் எண்ணியதைத்தெரிவிக் கும். பி - ம்:—[1]மன்னவர்கள். [2]கொடார்புகறி. (௩௬௮)

கசு.—இனி ஐந்துகவிகள் - ஒருதொடர்: மாதலிகூறிய விடையைத் தெரிவிக்கும்.

முப்புர மெரித்தவனு நான்முகனு முன்னாள்
அப்பக லியற்றியுள தாயிர [1]மருக்கர்க்கு
ஒப்புடைய [2]தூழிதிரி [3]காலு[4]மூலை வில்லா
இப்பொருவி றேர்[5]வருவ [6]திந்திரன தெந்தாய்.

(இ - ள்.) எனது தாய்போன்றவனே! திரிபுரதகனஞ்செய்த சிவபிரானும் நான்குமுகமுடையவனான பிரமதேவனும் முன்னாள் (உலகத்தைப்படைத்த)அந்தக்காலத்தில் இயற்றியது: ஆயிரஞ்சூரியர்க்குஒப்பாகவுள்ளது: கற்பம்பெயர்கின்ற காலத்திலும் அழிதலில்லாததாகி வருவதான இந்த ஒப்பற்றதேர், இந்திரனுடையதாகும்: (எ - று.)— எந்தாய் என்பதற்கு - எனதுதந்தைபோன்றவனே! எனினுமாம். பி - ம்:—[1]அருக்கர். [2]ஆழி. [3]நாளும். [4]உலகில்லாது, உலகல்லா. [5]கொணர்வது. [6]இந்திரனில். (ருஅ௬௯)

உ0. அண்டமிது போல்வன [1]வளப்பில வடுக்கிக்
கொண்டுபெய ருங்[2]குறுகு நீளு[3]மவை கோளுற்று
உண்டவன் வயிற்றினையு மொக்கு [4]முவமைக்குப்
புண்டரிக நின்சர மெனக்கடிது [5]போமால்.

(இ - ள்.) இதுபோல்வனவான அண்டங்கள் அளப்பில்லாதவற்றை(த் தன்மீது) அடுக்கிக்கொண்டு பெயரவல்லது: அவ்வண்டங்களைத் தன்னிடத்துக்கொண்டே குறுகவும் நீளவும் வல்லது: உவமைகூறுமிடத்து (அங்ஙனம் அண்டங்களைத் தன்னிடத்துக் கொண்டு அவற்றை)உண்டவனான திருமாலின்வயிற்றையும் ஒக்கும்: தாமரைமலர்போன்ற(கண் கால்முதலிய)உறுப்புக்களையுடையோனே! உன்னுடையசரம்போலக் கடிதுபோம்; (எ - று.)—இதுவும் அடுத்த கவியும் "நீருமுளவே" (உஉ) என்றதன்பின் சிலபிரதியில்உள்ளன. பி - ம்:—[1]அலப்பிலவடுக்கில், அலப்பிலடுகிற்று. [2]குறுகி. [3]இவை. [4]உவமைக்கில். [5]போதும், போகில், போதில். (ருகூ0)

உக. கண்ணுமன முங்[1]கடிய காலு[2]மிவை கண்டால்
உண்ணும்[3]விசை யாலுணர்வு பிற்படர வோடும்
விண்ணுநில னும்[4]மென விசேடமில தஃதே
[5]எண்ணுநெடு நீரினு நெருப்பிடையு மெந்தாய்.

(இ - ள்.) எந்தாய்! கண் மனம் கடியகாற்று என்ற இவைகளைக் கண்டால், (இத்தேர் தான்கொண்ட)விசையினால் (அவற்றை)உண்டுவிடும் [வெல்லும்]: (அன்றியும்), உணர்ச்சியும் பிற்படரும்படி (தான்முந்துற்று) ஓடும்; (இத்தேர் தான்ஓடுதற்கு) வானமும் பூமியும் என்று விசேஷம் இல்லை: (தேர் செல்லமுடியாதென்று) எண்ணப்படுகின்ற நெடியநீரிலும் நெருப்பினிடையும் (இத்தேரின்கதி) அவ்வாறனதே; (எ - று.)

கண் மனம் முதலிய விரைந்துசெல்லும்பொருளினும் விரைவையுடையஇத்தேர், விண் மண் நெருப்பு நீர்என்ற எந்தஇடத்தும் வேறுபாடுஇன்றி ஒருதன்மையதாக ஓடுமென்றவாறு. பி - ம்:—[1]நெடிய. [2]இடை. [3]இசையால். [4]விகடசேடனனிலத்தே. [5]எண்ணி. (ருகூக)

உஉ. நீரு[1]முள வேயவையொ ரேழுநிமிர் கிற்கும்
பாரு[2]முள வேயதி னிரட்டியவை பண்பிற்

பேரு[3]மொரு காலையொரு காலுமிடை பேராத்
தேரு[4]முள தேயிது வலா லுலகு செய்தோய்.

(இ - ள்.) உலகையெல்லாம்படைத்தகடவுளே! கடல்களும் உள்ளனவன்றே,--அவையேழும்,--அந்தக்கடலைக் காட்டிலும் இரட்டியாய் [பதினான்காகி] நிமிர்கின்ற உலகமும் உள்ளனவன்றே,—அவையும், (தமது)தன்மையினின்றும் ஒருகாலத்தில் மாறுபடும்: ஒருகாலும் (தன் பண்பினின்று) நிலைமைமாறுபடாத தேரும் இதுவல்லால் வேறு உளதோ? (எ-று) [3]ஒருகாலையிருகாலையிடைபேராஎன்ற பாடத்திற்கு-ஒருக்ஷணக்காலத்தில் இருமுறை பேர்ந்து சூழ்ந்துவருமென்று பொருள். பி - ம்:—[1]உளவெய்தினினீரிலெழுகிற்கும், உளதேயிதனினீரிலெழுகிற்கும். [2]உளதேயதனில், உளதேயிதின். [4]உளவேயிது வலாது, இதுவேயிதுவலாது. (௩௯௯௨)

௨௩. தேவரு முனித்தலைவ ருஞ்சிவனு [1]முன்னாள்
மூவுல களித்த [2]வவனும் [3]முதல்வ முன்னின்று
ஏவினர் சுரர்க்கிறைவ [4]னீந்துளவி தென்றான்
மாவின்மன மொப்பவுணர் மாதலி [5]வலித்தான்.

(இ - ள்.) முதல்வனே! தேவரும் முனித்தலைவரும் சிவனும் முன்னாள் மூவுலகுஅளித்த அந்தப்பிரமனும் முன்னின்றுஏவினார்: (அவர்களின்கட்டளைப்படியே) தேவர்கட்குத்தலைவனானஇந்திரன் ஈந்துள்ளது இத்தேர் என்று குதிரைகளின்மனத்தைத் தகுதியாக உணர்ந்த மாதலிதிடமாகக்கூறினான்; (எ - று.) முனித்தலைவரும் பிரமனும் ஏவினாரென்பதை இங்கு அநுவாதமாகக்கூறியதனால், முன் அரனும் தேவரும் கூறினாரென்ற விடத்து இவரும் கூறினாரென்று கொள்ளவேணும்.—பி - ம்:—[1]மேனாள். [2]முதலும். [3]முடுகி, முடுக. [4]ஈந்துளவன், ஈந்துளவது. [5]வலத்தால். (௩௯௯௩)

௨௪.—இராமன் 'இத்தேர் அரக்கர்மாயையால்தோன்றியதோ?' என்று ஐயுற, தேர்க்குதிரைகள் அந்தஐயத்தைப் போக்குதல்.

ஐய[1]னிது கேட்[2]டிக லரக்கரகன் மாயச்
செய்கைகொ லெனச்சிறிது சிந்தையி னினைந்தான்
[3]மெய்யவ னுரைத்ததென வேண்டியிடை பூண்ட
மொய்[4]யுளை வயப்பரி மொழிந்த முதுவேதம்.

(இ-ள்.) ஸ்ரீராமன் இதனைக்கேட்டு, 'வலியஇராக்கதரின் பரந்த மாயச்செய்கையோ?' என்று சிறிது மனத்திற்(சந்தேகங்கொண்டு) சிந்தித்தான்: அத்தேரினிடத்துப் பூண்ட நெருங்கிய பிடரிமயிரையுடைய வலிமைபொருந்திய குதிரைகள் பழமையானவேதவாக்கால் அந்த மாதலி யுரைத்தது மெய்யென்று (ஸ்ரீராமனை) வேண்டற்பாடுதோன்ற உரைத்தது; (எ-று.)—பி-ம்:—[1]அது. [2]அதவ்வரக்கமகன். [3]மெய்தவன், மெய்யுற. [4]அரி. (௩௯௯௪)

உரு.—தெளிந்தஸ்ரீராமன் மாதலியைநோக்கி,'உன்பேரைக்கூறுக'என, அவன் தன்பெயரைக் கூறுதல்.

இல்லையினி யையமென வெண்ணிய விராமன்
[1]நல்லவனை [2]நீயுனது நாம[3]நவில் கென்ன
[4]வல்விதனை யூர்வதொரு மாதலி யெனப்பேர்
சொல்லுவ ரெனத்[5]தொழுது நெஞ்சினொடு சொன்னான்.

(இ - ள்.) இனி ஐயமில்லையென்று கருதின ஸ்ரீராமன்,—நற்குணமுடையவனான சாரதியைநோக்கி, 'நீ உனதுபேரைக் கூறுக'என்று வினவ, (அவன்), 'வலியஇந்தத்தேரை ஊர்தலையுடைய ஒருமாதலியென்று (என்)பேர்சொல்லுவார்கள்'என்று தொழுது மனப்பூர்வமாக விடைகூறினான்;(எ - று.)—பி - ம்:—[1]நல்லவினை. [2]நீயெவனையென்ன, நீயெனையுநல்க. [3]நவில்கிற்பான், நவில்கிற்பார். [4]வல்லவனை, வல்லதனை. [5]தொழுதநெஞ்சினிவை,தொழுதுநெஞ்சினிலை. (ஙசுரு)

உசு. ஸ்ரீராமன் அநுமானையும் இலக்குமணனையும் 'உம்கருத்துஎன்?'என, அவர் தாம் அத்தேரைப்பற்றி ஐயுறவுகொள்ளாமையைத் தெரித்தல்.

மாருதியை நோக்கியிளை வாளரியை நோக்கி
நீர்கருது கின்றதை நிகழ்த்துமென நின்றான்
[1]ஆரியன்வ ணங்கியவ ரையமிலை [2]யையா
தேரிது புரந்தரன தென்றனர் [3]தெளிந்தார்.

(இ - ள்.) ஆரியனானஸ்ரீராமன், மாருதியைநோக்கியும் இளைய கொடுஞ்சிங்கம்போன்ற இலட்சுமணனைநோக்கியும் 'நீர் கருதுவதைச் சொல்லுங்கள்' என நின்றானாக,அவரும் (ஸ்ரீராமனை)வணங்கி,'ஐயனே! ஐயம் இலை: இத்தேர் இந்திரனுடையதே'என்று மனந்தெளிந்தவராய்க் கூறினார்; (எ - று.)- -பி - ம்:—[1]ஆரியனையேவணங்கியையமிலை. [2]மெய்யே. [3]தெரிந்தான். (ஙசுசு)

உஎ.—ஸ்ரீராமன் அத்தேரில் ஏறியிருந்தல்.

விழுந்துபுர டிவினை [1]நிலத்தொடு [2]வெதும்பத்
தொழுந்தகைய நல்வினை [3]களிப்பினொடு துள்ள
அழுந்துதுய ரத்தமர [4]ரந்தணர்கை முந்துற்று
எழுந்து[5]தலை யேறவினி தேறின னிராமன்.

(இ - ள்.) தீவினை நிலத்துவிழுந்துபுரண்டுவாடவும், தொழுந்தன்மையதான நல்வினை மகிழ்ச்சியொடுதுள்ளவும், (இதுவரையில்) துயரத்துஅழுந்தியிருந்தவரான அமரர் அந்தணர் என்றஇவர்களின்கை முற்பட்டெழுந்து தலைமீதுஏறவும் இராமன் இனிதாக(த் தேரின்மீது) ஏறினான்; (எ - று.)—பி-ம்:—[1]குலத்தொடும். [2]விலங்கத். [3]கணத்தினொடு. [4]அந்தணர்கள். [5]கரையேற. (ஙசுஎ)

ஸ்ரீ வான்மீகிராமாயணத்தில் வேலேற்றபடலச்சரிதத்திற்குப்பின், இரதமேறுவதைப்பற்றிச் சொல்லிய சரிதைவருமாறு:—பின்பு இலக்

குமணன்கூறிய மொழியைச் செவியேற்றதும் ஸ்ரீராமன் யுத்தசன்ன த்தனாக, அதற்குள் இராவணன் மற்றோரிரதத்தின்மீதுஏறி, ஸ்ரீராமன்மேல் எதிர்த்துவந்து கணைகளைமழைபோற் பொழிந்து ஸ்ரீராமனை வருத்தினன். ஸ்ரீராமனும் அவ்வாறே சுடுங்கணைகளால் இராவணனை வருத்தினன்: அப்போது தேவர்களும் கந்தர்வர்களும் தானவர்களும் இராவணன்தேரிலிருந்தும் ஸ்ரீராமன் மண்மீதிருந்தும் பொருவது ஒத்ததன்றென்று சொல்லிக்கொள்ள, தேவேந்திரன் ஆலோசித்து மாதலியை யழைத்துத் தன்தேரை ஸ்ரீராமனுக்குக் கொண்டுபோகும்படி கட்டளையிட்டான். மாதலியும் தேவேந்திரனது தேரை யோட்டிக்கொண்டு விண்ணினின்றுஇறங்கி ஸ்ரீராமனிடம் வந்து, உளவுகோலைக் கையிற்கொண்டு அஞ்சலிசெய்து, 'காகுத்ஸ்த னே! நீ பகைவரையடக்கும் வலிமையுள்ளவன்: உனக்குவெற்றி யுண்டாகும்பொருட்டுத் தேவேந்திரன் இந்தத்தேரை யனுப்பியுள் ளான்: தநுசையும், அக்கினியையொத்த கவசத்தையும், சூரியனை யொத்த பாணங்களையும், கூர்மையையுடைய இந்தச்சக்தியையும் கொடுத்திருக்கிறான்:இவற்றையெல்லாம் கைக்கொண்டு இந்தஇரதத்தி லேறிப்பகைவனை இராவணனைவதிப்பாய்'என்றனன். அதுகேட்ட ஸ்ரீராமன் அந்தத்தெய்வத்தேரை வலம்வந்து வணங்கி அந்தத்தே ரிலேறின னென்பது.

இராமன்றேரேறுபடலம் முற்றிற்று.

---

## ௬௯-ஆவது இராவணன்வதைப் படலம்.

ஸ்ரீராமன் இராவணனை வதித்ததைக் கூறும் படல மென்பது, பொருள்.

ஸ்ரீராமன் தேவர்வாழ்த்தத் தேரேறிச்செல்கையில் இராவணன் தேரேறி ஸ்ரீராமனைநோக்கிவாராநின்றானாக,அப்போது மகோதரன்இரா வணனிடத்து அநுமதிபெற்று இலக்குமணனோடு பொரச்சென்று இடையே இராமனைக் கண்டு பொருது மடிந்திட,ஸ்ரீராமபிரானைநோக் கிப் புறப்பட்ட அவ்விராவணன் பலதீநிமித்தங்கண்டும் மனவுறுதி குன்றாது ஸ்ரீராமனைக் கிட்ட, இருவர்க்கும் பெரும்போர்நிகழ்ந்தது: அந்தக்கடும்போரில்இராவணன்தேருடன் அந்தரத்திற் சென்றுபொர, ஸ்ரீராமனும் அவ்வாறுசெய்யப் பின் தேர் வானிலும் மண்ணிலும் திரிய இருவரும் பலபலஅஸ்திரங்களைவிடுத்துப் பொரலாயினர்: பின் அப் போரில் இராவணன் சிறப்புவாய்ந்த சூலத்தைவிடுக்க,அதனை ஸ்ரீராமன் உங்காரத்தாற் பொடியாக்கினன். அதுகண்ட இராவணன் கடவுளின் அவதாரம்போலுமென்றுகருதி, யாராயினுமாகுக: பொருவேனென்று பொர, இவ்வாறுபொருகையில் ஸ்ரீராமன் இராவணனுடைய தலையை யறுக்க அறுக்கத் தலை முளைப்பதாயிற்று: அப்போதுஸ்ரீராமன் அவனு டல்முழுவதையும் தமதுபாணங்களால் தொளைத்து மூர்ச்சிக்கச்செய்ய, அதுகண்ட இராவணசாரதிஇரதத்தைவிலக்கிச் செலுத்தினனாக,ஸ்ரீரா மன்'மூர்ச்சித்தவன்மீது படைவிடுத்தல் கூடாது'என்று வாளாவிருக்க,

'இதுவேஇராவணனைக்கொல்லத்தக்க சமயம்'என்று தன்தேரைஇராவணன் தேரைநோக்கி மாதலிசெலுத்த, மாதலியின்சொல்லை ஸ்ரீராமன் மறுத்துக்கூறினன்: அப்பால், இராவணன் களைநீங்கித் தன்தேர்ப்பாகனைக் கடியப் பாகன் நிகழ்ந்ததுகூறித் தன்செயலைப் பொறுக்குமாறு வேண்ட, பின்பு இராவணன் தேரை இராமனைநோக்கிவிடச்சொல்லி அப்பிரானோடு முன்னிலும் மிகக்கடுமையாகப்பொர, ஸ்ரீராமன் அவன் படைக்கலங்களைச் சிதைத்துப் பிரமாஸ்திரத்தைவிடுத்து அவனையும் மாய்த்தனன். அவன்இறந்தபின் அவ்விராவணனைக் கிட்டி அவனது முதுகில் தழும்பிருத்தல்கண்டு, ஸ்ரீராமன் 'இவனைவென்றது தனக்குப் பழியேவிளைக்கும்' என்று மிகவருந்த, விபீஷணன் உண்மைதெரிவித்துத் தெளிவிக்க,பிறகு ஸ்ரீராமன்'வயிரத்தைவிட்டு இராவணனுக்கு ஈமக்கடன்நடத்துக' என்று அவனுக்குக்கட்டளையிட்டனன். அக்கட்டளையைச் சிரமேற்கொண்ட விபீஷணனும் இராவணன்மீது விழுந்து துயர்மிகப் புலம்பிச் சாம்பவான்தேற்ற ஒருவாறுதேறி எழுந்தனன். பிறகு, இராவணனதுமனைவிமார்வந்துஅவனைத் தழுவிப் புலம்புகையில் மண்டோதரி அவ்விராவணனுடலைத்தழுவிப் புலம்பித் துயரத்தால் உயிரொழியப்பெற்றாள். அதுகண்டு யாவரும் அவளைக் கொண்டாடினர். அப்பால் விபீஷணன் இராவணனுக்கும் மண்டோதரிக்கும் ஈமக்கடனைச்செய்து மற்றும் இறந்தஅரக்கர்க்கெல்லாம் செய்யவேண்டிய அந்திமச்சடங்குகளை முறைப்படிசெய்து இராமபிரானைக்கிட்டித் துயர்தோன்றநிற்க, அப்பிரான் அவனைத்தேற்றினனென்பது, இப்படலத்துக் கூறும்பொருள்.

வேறு.

க.—தேரின்மீதேறிய இராமனைத் தேவர்வாழ்த்துதல்.

ஆழியந் தடந்தேர் வீர னேறலு [1]மாசி கூறிப்
பூழியிற் சுரித்த தன்மை நோக்கிய புலவர் [2]போத
ஊழிவெங் காற்றின் [3]வெய்ய கலுழனை [4]யொன்றுஞ் சொல் [லார்
வாழிய வனுமன் [5]றோளை யேத்தினார் மலர்கடூவி.

(இ - ள்.) வீரனான ஸ்ரீராமன் அழகிய பெரியதேரில் ஏறுதலும், (அத்தேரின்) சக்கரம் புழுதியிலே உருளுகின்றதன்மையை நோக்கிய தேவர்கள் வாழ்த்துக்கூறி, யுகாந்தகாலத்துத்தோன்றுங்கொடிய காற்றுப்போலமிகவும் கொடுமைவாய்ந்த கருடனை யொன்றுஞ் சொல்லாதவர்களாய் அநுமான்தோளை மலர்கள்தூவித் துதித்தார்கள்; (எ - று.)

ஆழி - சக்கரம். போத வெய்ய என இயையும். ஸ்ரீராமன்தேரேறியதும், தேவர்கள் அப்பிரானைவாழ்த்தி, இதுவரையும் இவ்வவதாரத்தில் ஸ்ரீராமபிரானை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு உதவியஅநுமான்தோளை மலர்கள்தூவி ஏத்தினரென்க. வாழிய - முன்னிலையசை.

பி-ம்:—[1]அமலச்சில்வி, அலங்கற்சில்வி. [2]எல்லாம்,போல்வார். [3]அன்ன. [4]உவமை. [5]தானென்று...மலருக்தூவி, தோளென்றேத்தினார்மலருந்தூவி.

(ருசுகூஅ)

உ.—தேவர்களாரவாரிக்க, இராமபிரானேறியதேர் செல்லுதல்.

*எழுகதேர் சுமக்க [1]வெல்லோம் வலியும்புக் கின்றே [2]பொன்றி*
*விழுக[3]போ ரரக்கன் வெல்க வேந்தர்க்கு வேந்தன் விம்மி*
*[4]அழுக[5]போ ரரக்கி மாரென் றார்த்தன ரமர ராழி*
*முழுகிமீ தெழுந்த தென்னச் சென்றது மூரித் திண்டேர்.*

(இ - ள்.) '(இத்)தேர் எழக்கடவது: (அன்றியும்), எல்லோ முடையவலிமையையும் பெறக்கடவது: (இத்தேர்) புகுதலால் இன்றே போர்செய்யும் இராவணன் இறந்து போய்(ப் போர்க்களத்தில்) வீழக் கடவன்: வேந்தர்க்குவேந்தன் வெல்லக்கடவன்:போர்செய்யும் அரக் கருடையமனைவிமார் விம்மி யழக்கடவர்' என்று அமரர் ஆரவாரித்த னர்: வலியஉறுதியான(அத்)தேர், சக்கரம் (பூமியில்)முழுகி மேலெழுந் தாற்போற் சென்றது; (எ - று.)

அமரர்களின் ஆர்ப்பரவத்தினிடையே ஸ்ரீராமபிரானேறிய தேர் சென்றதென்க. தேரின்மேற்பகுதி பாரமாயிருத்தலால், அத்தேரின் சக்கரம் புதைந்தாற்போலப் பூமியிற்படிந்துசென்றதென்றார் பி-ம்:— [1]எல்லாவலியும். [2]ஒன்றி. [3]போயரக்கன், போரரக்கர். [4]எழுக. [5]அரக்கி மார்களென்றனர். (௩௬௬௯)

௩.—இராவணன் தன்தேரை ஸ்ரீராமபிரான்மீது விடுமாறு தன்சாரதிக்குக் கூறுதல்.

*அன்னது கண்ணிற் கண்ட வரக்கனு மமர ரீந்தார்*
*மன்னெடுந் தேரென் றுன்னி [1]வாய்மடித் தெயிறு தின்றான்*
*பின்னது [2]கிடக்க வென்றுத் தன்னுடைப் பெருந்திண் டேரை*
*[3]மின்னிவர் வரிவிற் செங்கை யிராமன்மேல் விடுதி யென்றான்.*

(இ - ள்.) அவ்வாறு இராமன்தேரின்மீதுவருவதைக் கண்ணினாற் கண்ட இராவணனும், 'நிலைபெற்ற நெடியதேரை அமரர் கொடுத்தார் கள்' என்பதை நினைந்து (அவர்கள்மீதுசினத்தினால்) வாயைமடித்துப் பல்லினாற் கடித்தான்; பிறகு அதுகிடக்கட்டுமென்று சொல்லித் தன்னுடையபெரியவலியதேரை 'ஒளியைவிடுகின்ற கட்டமைந்த வில்லை யேந்தியசெவ்வியகையையுடைய இராமன்மேல் விடுவாய்' என்று (தன் பாகனுக்குக்) கட்டளையிட்டான்; (எ - று.)

இவ்வாறு மாற்றாரான தேவர்களிடத்துக்காணுதலை இப்போது காணும்படி நேரிட்டதென்பார் 'அன்னதுகண்ணிற்கண்ட வரக்கன்' என்றார். 'இதற்குமுன்பெல்லாம் நமக்குமுன்னே ஒடுங்கிக்கிடந்த இத்தேவர்கள் இப்போது நமக்குமாறாக அற்பமானுடன் வென்றுவிடு வானென்றல்லவா இவ்வாறெல்லாஞ் செய்கிறார்கள்:இந்தப்பகைவனை வென்றதும் இவர்களைச் சும்மாவிடுவேனோ? அதஞ்செய்தேதீர்வேன்' என்று இராவணன் கருதியமை 'பின்னதுகிடக்க'என்ற சொற் றொடரில் தோன்றும். பி-ம்:—[1]வாய்கடித்து. [2]முடிப்பன். [3]மின்னகு. (௩௬௭௦)

சு.—நிலைகெட்டோடிய வானரர்கள் அச்சம்நீங்கிப் பொருதல்.

[1]இரிந்தவான் கவிக ளெல்லா மிமையவ ரிரத மீந்தார்
அரிந்தமன் வெல்லு மென்றற் கையுற வில்லென் [2]றஞ்சார்
[3]திரிந்தனர் மரமுங் கல்லுஞ் சிந்தினர் [4]திசையோ டண்டம்
பிரிந்தன கொல்லென் றெண்ணப் [5]பிறந்தது முழக்கின் பெற்றி.

(இ - ள்.) நிலைகெட்டோடிய சிறந்த வானரர்களெல்லாம் 'தேவர்கள் (இராமனுக்கு) இரதம் கொடுத்தனர்: (ஆகையால்), பகையையடக்கும் வல்லமையுள்ள இராமன் வெல்வானென்பதற்கு ஐயமில்லை'என்று சொல்லி, அச்சம்நீங்கியவராய் மீண்டும்வந்து மரங்களையுங்கல்லையும் சிந்தினர்· (அதனால்), திசைகளுடனே இவ்வுலகவுருண்டையும் பிளந்திட்டனவோ என்று எண்ணும்படி முழக்கத்தின்நிலைதோன்றிற்று; (எ-று.)---'திசையோடண்டம்பிரிந்தனகொல்' என்று எண்ணியது - போரினைக் காணவந்த வானவரின் எண்ணமென்னலாம். வானரர்நிலை கெட்டமை-இராவணன்றேரேறுபடலத்தின் இறுதிச்செய்யுளிற் கூறப் பட்டுள்ளது. பி-ம்:—[1]இரிந்தன. [2]அஞ்சா. [3]திரிந்தன. [4]மலையோ டண்டம். [5]பிறந்தன. (௩௬எக)

ரு.—பலவகையொலிகள்.

[1]வார்ப்பொலி முரசி னோதை [2]வாய்ப்புடை வயவ ரோதை
போர்த்தொழிற் [3]களத்தை முற்றுஞ் சுற்றிய பொம்ம லோதை
[4]ஆர்த்தவி ளியாரும் பார்வீழ்ந் தடங்கின ரிருவ [5]ராடல்
தேர்க்குர லோதை பொங்கச் செவிமுற்றுஞ் செவிடு [6]செய்ய.

(இ - ள்.) வாரினால்விளங்குகின்ற முரசினுடையஓசையும், போர்செய்யத்தகுதிபொருந்திய வீரரின் ஓசையும், போர்த்தொழில்நிகழும் களத்தை முற்றிலும் (சதுரங்கசேனைகள்) சூழ்வதனாலான மிக்கஓசையும், (இராவணன் ஸ்ரீராமன்என்ற) இருவருடைய சஞ்சரித்தலைக் கொண்ட தேர்க்குரலினாலான ஓசையும் மிகுந்துஆரவாரித்தலினால் (தமது) செவிமுழுவதையும் செவிடுசெய்யவே, எவரும் பூமியில் விழுந்து (அச்சத்தினால்) உயிரொடுங்கினர்; (எ - று.) பி - ம்:—[1]வார்ப்பொலியத்தின், ஆர்ப்பொலிவயத்தின். [2]வயவர்வாய்ப்புடைப்பிறோதை. [3]களத்துமற்றுமுற்றிய. [4]ஆர்த்திலர், பார்த்திலர். [5]ஆற்றல். [6]செய்த, செல்ல. (௩௬எஉ)

சா.—'நீ என்கருத்திற்குஇசையத் தேர்ஓட்டுவாய்' என்று மாதலியினிடம் ஸ்ரீராமன்கூறுதல்.

மாதலி வதன நோக்கி மன்னர்த மன்னன் மைந்தன்
[1]காதலாற் கரும மொன்று கேட்டியாற் களித்த சிந்தை
[2]ஏதலன் மிகுதி யெல்லா [3]மியற்றிய பின்றை யென்றன்
சோதனை நோக்கிச் செய்தி [4]துடிப்பிலை யென்னச் சொன்னான்.

(இ - ள்.) சக்கரவர்த்திதிருமகனான இராமன், மாதலியின் முகத்தைநோக்கி, செய்யவேண்டியசெயலைக்குறித்து ஒன்று 'அன்புடனே

கேட்பாய்: களிப்புக்கொண்டஎண்ணமுடையவனான பகைவன்தன்னுடைய மிக்கசெயலெல்லாம் செய்தபின்பு, என்னுடைய தூண்டுதலையொட்டி(விரையத் தேரோட்டுந்தொழிலைச்) செய்வாய்: (இப்போது) விரையாதே' என்று சொன்னான்; (எ - று.)

சோதனை - சோதநா: வடசொல்: தூண்டுதலென்றுபொருள். இராவணனுடைய ஆர்ப்பாட்டமெல்லாம் தீரட்டும். இப்போது அவசரப்படாதே: பிறகு நான் சொன்னபடி தேரைத்தூண்டலாமென்று இராமன் கூறினனென்க. பி-ம்:—[1]காதுதல், காதலக். [2]எதிலன். [3]இடையிற்றபின்றையென்றன், இயம்பினனன்றேயென்னச். [4]துப்பிலே. ()

எ.—மாதலி உடன்பட்டுக்கூறுதல்.

வள்ளனின் கருத்து மாவின் சிந்தையு மாற்ற லார்தம்
உள்ளமு மிகையு [1]முற்ற குற்றமு [2]முறுதி [3]தானுங்
கள்ளமில் காலப் பாடுங் கருமமுங் கருதே னாகில்
தெள்ளிதென் விஞ்சை யென்றா னமலனுஞ் [4]சீரி தென்றான்.

(இ - ள்.) 'வரையாதருளுந்தன்மையோனே! உன்னுடைய கருத்தையும், குதிரைகளின்எண்ணத்தையும், பகைவர்களின் மனத்தையும், நேர்ந்தமிகுதியையும் குறையையும் உறுதியானதையும் வஞ்சனையில்லாமற் பயன்விளைக்குங்காலத்தின் நிலைமையையும் (மேற்கொண்டுள்ள) காரியத்தையும் ஆராய்ந்து (என்தொழிலைச்) செய்யாவிடின் என்னுடையவித்தை மிகத்தெளிவுள்ளதாகும்' என்றுமறுமொழிகூறினான் (மாதலி): குற்றமற்றவனான ஸ்ரீராமனும் நல்லதென்று கூறினான்; (எ - று.)

'உற்ற', என்பது மத்திமதீபமாய் மிகை குற்றம் என்ற இரண்டனோடும் இயையத்தக்கது. 'என்விஞ்சைதெள்ளிது' என்றதொடர் - பிறகுறிப்புவகையால், தெள்ளிதன்று என்று பொருள்படும். என்விஞ்சை - நான்கற்றுள்ளவித்தை: குதிரையோட்டும் வித்தையென்னலாம். பி-ம்:—[1]மற்றகுற்றமும். [2]இறுதி. [3]காணும். [4]செவ்விது. (ருசுஎச)

அ.—'உனக்கு இராமனோடு போர்நிகழ்கையில், எனக்கு வேறே போரிடையளிக்கவேண்டும்'என்று மகோதரன்வேண்டுதல்.

தோன்றின னிராம [1]னீதாற் புரந்தரன் [2]றுரந்த தேர்மேல்
ஏன்றிரு வருக்கும் வெம்போ[3]ரெய்திய திடையே யானோர்
சான்றென நிற்றல் குற்றந் தருதியால் விடையீண் டென்றான்
[4]வான்றொடர் குன்ற மன்ன மகோதர னிலங்கை [5]மன்னை.

(இ - ள்.) 'தேவேந்திரனனுப்பியதேரின்மீது இராமன் இதோ தோன்றியுள்ளான்: எதிர்த்துள்ள நும் இருவருக்கும் கொடும்போர் கிட்டியுள்ளது: (இவ்வாறாயிருத்தலால், நும்மிருவர்க்கும்) நடுவே யான் ஓர்சாட்சியாக [ப்போர் செய்யாமல்வாளா] இருத்தல் குற்றமாகும்: ஆதலால்,இப்போது(பொருமாறு) விடைதருவாய்' என்று வானத்தைத் தொடர்கின்ற மலைபோன்றதோற்றமுள்ள மகோதரன் இலங்காதிபதி

யான இராவணனைக் கேட்டான்; (எ - று.)—பி - ம்:—[1]எந்தாய். [2]தூரகத். [3]எய்தியவிடையேவானோர். [4]வான்றொடுங். [5]மன்னன்.

கூ.—'நீ இலக்குமணனோடுபோருக' என்று இராவணன்கூறுதல்.

அம்புய மனைய கண்ணன் றன்னை[1]யா னரியி னோறு | நின்ற
தும்பியைத் தொலைத்த தென்னத் தொலைக்குவன் றொடர்ந்து
தம்பியைத் தடுத்தி யாயிற் றந்தனை வொற்ற மென்றான்
[2]வெம்பிய லரக்க னஃதே செய்வனென் [3]றவனின் மீண்டான்.

(இ - ள்.) 'செந்தாமரைமலர்போன்ற கண்களையுடையவனான ஸ்ரீராமனை யான் ஆண்சிங்கம் யானையைத் தொலைத்ததென்னும்படி அழித்திடுவேன்: (அவ்விராமனைத்) தொடர்ந்துநிற்கின்ற தம்பியைத் தடுத்துப்பொருதாயாயின், (நீ) வெற்றியைத்தந்தவனாவாய்'என்று (மறுமொழி)கூறினான், (இராவணன்): வெம்புந்தன்மைகொண்ட அரக்கனான மகோதரன் 'அதனையேசெய்வேன்' என்று அவ்விராவணனிடத்தினின்று மீண்டான்: (எ - று.)—பி-ம்:—[1]ஆளரியின். [2]வெம்பி கல். [3]அவனும். (ருகூஎகூ)

க0.—இலட்சுமணனை நெருங்குமுன் இராமன்தேர் நெருங்கிவிட, மகோதரன் அவன்மீதே தேரைவிடுமாறு கூறுதல்.

மீண்டவ னிளவ னின்ற பாணியின் [1]விலங்கா முன்னம்
ஆண்டகை [2]தெய்வத் திண்டே ரணுகிய தணுகுங் காலை
மூண்டெழு வெகுளி யோடு மகோதரன் [3]வெகுண்டு முட்டத்
தூண்டுதி தேரை யென்றான் [4]சாரதி தொழுது [5]சொன்னான்.

(இ - ள்.) (அங்ஙனம்) மீண்டவனாகிய மகோதரன், இளையபெருமாள்நின்றிருக்கின்ற இடத்துக்குச் சேர்வதற்குமுன்னம் ஆண்மைக்குணம்நிறைந்த ஸ்ரீராமனுடைய தெய்வத்தன்மையுள்ள வலியதேர் நெருங்கியது: நெருங்கும்போது, மகோதரன் மூண்டெழுகின்றசினத்தோடும், (தன்சாரதியைநோக்கி), '(தேர்) சினங்கொண்டாற்போன்று (இராமன்தேரை) முட்டுமாறு (நம்)தேரைச் செலுத்துவாய்' என்றான்: (அதற்கு அவனுடைய) சாரதி தொழுது (பின்வருமாறு) சொல்லலானான்; (எ - று.)—சாரதி கூறுவதை அடுத்த செய்யுளிற் காண்க, பி-ம்:—[1]விளங்கா. [2]தெய்வத்தேர்வந்தணுகியதணுகாமுன்னம். [3]முனிந்து. [4]மகோதரன்சூதன், சாரதிதேர்ந்து. மகோதரன்முனிந்து. [5]சொல்லும், சொல்வான். (ருகூஎஎ)

கக.—சாரதி, 'இராமபிரானைக்கிட்டாமல் அப்பாற்போதலே சேமம்'என்று, மகோதரனுக்குக் கூறுதல்.

எண்ணருங் கோடி வெங்க ணிராவண ரேயு [1]மின்று
நண்ணிய பொழுது மீண்டு நடப்பரோ கிடப்ப தல்லால்
அண்ணறன் றேற்றங் கண்டா லையநீ கமல மன்ன
கண்ணனை யொழிய [2]விப்பாற் [3]செல்வதே கரும மென்றான்.

(இ - ள்.) 'பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனது தோற்றத்தைக் கண்டால், (பின்பு இந்தஇராவணனொருத்தனேயன்று:) எண்ணுதற்கு அரிய கோடிக்கணக்கான (இவனைக்காட்டிலும்) கொடுங்கண்களையுடைய இராவணர்கள் இன்று கிட்டிய சமயத்திலும், (இறந்து தரையிற்) கிடப்பதன்றி(உயிருடன்) மீண்டுசெல்லவல்லரோ? (ஆதலால்), ஐயனே! நீ செந்தாமரைமலர்போன்ற கண்களையுடையவனான ஸ்ரீராமனை விட்டு இப்பாற்சேர்தலே செய்யத்தக்க செயலாம்' என்றான், (சாரதி); (எ-று.)--ஒழிய=ஒழிந்து: எச்சத்திரிபு. பி-ம்:—[1]இன்னம், மீண்டு. [2]அப்பால். [3]போவதே, போதலே, பொருவதே, சேறலே. (௩௬௭௮)

௧௨—ஸ்ரீராமனோடு மகோதரன்போருது முடிதலை, இதுமுதல் நான்குகவிகள் கூறும்.

**என்றலு மெயிற்றுப் பேழ்வாய் [1]மடித்தடா வெடுத்து நின்னைத்**
**தின்றன [2]னெனினு முண்டாம் பழியெனச் சீற்றஞ் சிந்துங்**
**குன்றன தோற்றத் தான்றன் [3]கொடிநெடுந் தேரி னேரே**
**[4]சென்றதவ் விராமன் றிண்டேர் விளைந்தது [5]திமிலத் திண்போர்.**

(இ - ள்.) என்று (சாரதி) கூறவும், (அவன்சொல்லைக்கேளாமல் மகோதரன்) பற்கள்தோன்றுகின்ற பிளவுபட்டவாயை மடித்து, 'அடா! (நீ சொன்னசொற்கு நின்னை எடுத்துத்தின்றுவிடுவேன்: அங்ஙனம்) உன்னை எடுத்துத்தின்றேனென்றாலும் (சாரதியைத்தின்றிட்டானென்ற) பழிப்பு உண்டாம்' என்றுகூற, (அப்போது) சினத்தை வெளிவிடுகின்ற மலையையொத்ததோற்றத்தையுடையவனான மகோதரனுடைய கொடிகட்டியநெடிய தேரின் நேராக அவ்விராமனது வலிய தேர்சென்றது: (அப்போது அவ்விருவர்க்கும்) நெருங்கியவலியபோர் நிகழ்ந்தது; (எ - று.) என சென்றது என இயையும். மகோதரன் தன்சேனையோடுகூடி இராமபிரானோடு பொருதமை, மேற்கவியில் விளங்கும். பி-ம்:—[1]மடித்திடா, மடித்தெடா. [2]என்னிலுண்டாம்பழியெனச்சீற்றங்கொண்டான், என்னில்......பழியெனச்சீற்றந்தீர்ந்து. [3]அகடிதற்றடந்தேர், கொடித்தடந்தேரின். [4]சென்றன. [5]திமிலத்தின்போர். (௩௬௭௯)

௧௩. **பொற்றடந் தேரு மாவும் பூட்கையு [1]மிலங்கு வாட்கைக், கற்றடந் [2]திண்டோ ளாளு [3]நெருங்கிய கடல்க ளெல்லாம், வற்றின விராமன் வாளி வடவனல் பருக [4]வென்றான், ஒற்றை கவன் றடந்தே [6]ரோடு மகோதர [7]னொருவன் சென்றான்.**

(இ - ள்.) பொன்னாலியன்ற பெரியதேரும் குதிரைகளும் யானை[5]களும் விளங்குகின்ற வாளைக் கையிலேந்திய மலைபோற்பரந்த திண்ணியதோளையுடைய பதாதிகளும் (ஆகிய) நெருங்கிய (சேனைக்)கடல்களெல்லாம்,---இராமபிரானுடைய அம்புகளாகிய வடவாக்கினிபருகுவதனால் வற்றினவாக, (அப்பிரான்) வென்றான்; (அதனால் தனது) வலியபெரிய ஒற்றைத்தேருடனே மகோதரன் ஒருவனாகவே (எதிர்த்

தச்) சென்றன்; (எ - று.)---உருவகவணி. பி-ம்:---[1]புலவுண், புலவும், பலவுண். [2]திரடோளாரும். [3]நெருக்கிய. [4]வன்றேள்.[5]அம். [6]ஓட்டி. [7]ஒருங்கு. (௩௪அ0)

௧௪. அசனியே றிருந்த கொற்றக் கொடியின்மே லாவத் தேர்மேற், [1]குசையுறு பாகன் றன்மேற் கொற்றவன் [2]குலவுத் தோண்மேல், விசையுறு பகழி மாரி[3]வித்தினன் விண்ணி னோடுந், [4]திசைகளுங் கிழிய வார்த்தான் [5]றீர்த்தனு முறுவல் செய்தான்.

(இ - ள்.) இடியேறுதங்கிய வெற்றிபொருந்திய துவசத்தின் மேலும் ஒலிபொருந்தியதேரின்மீதும் கடிவாளத்தைப்பற்றிய தேர்ப் பாகன்மீதும் வெற்றிபொருந்தியவனான ஸ்ரீராமனது விளங்குகின்ற தோளின்மீதும் வேகம்பொருந்திய அம்புமழையை விதைத்தவனாய், (மகோதரன்)ஆகாயத்தோடு திக்குக்களும் கிழியும்படி ஆரவாரஞ்செய் தான்: (அதுகண்ட) பரிசுத்தமூர்த்தியாகிய ஸ்ரீராமனும், புன்சிரிப் புச்செய்தான்; (எ - று.)—புன்முறுவல், எள்ளல்பற்றியது. பி - ம்:— [1]குசைதொடும். [2]குவவுத். [3]வீசினன். [4]திசைமுகம். [5]தீதுறும். ()

௧௫. வில்லொன்றாற் கவசமொன்றால் [1]விறலுடைக் கர மோரொன்றாற், கல்லொன்று [2]தோளு மொன்றாற் கழுத்தொன் றாற் கடிதின் வாங்கி, செல்[3]லொன்று [4]கணையா லையன்[5]சிந்தினன் செப்பி வந்த, சொல்லொன்றாய்ச் செய்கை யொன்றாய்த் துணிந் தன னரக்கன் றுஞ்சி.

(இ - ள்.) பெரியோனாகிய இராமன்,-அவ்வரக்கனுடைய வில்லை ஒருபாணத்தினாலும், கவசத்தை ஒருபாணத்தினாலும், வலிமைபொருந் திய கைகளை ஒவ்வோர்பாணத்தினாலும், மலையையொத்த தோளையும் ஒருபாணத்தினாலும், கழுத்தை ஒருபாணத்தினாலுமாகச் செல்லுதல் பொருந்திய (தன்) கணைகளால் விரைவிற்போக்கிச் சிதறச்செய்தான்: (அப்போது) அரக்கன்,--இறந்து, சொல்லிவந்த சொல் ஒருவகையாக வும் செய்கையொருவகையாகவும் (போகத்) துண்டுபட்டான்; (எ-று.)

தான் இராமனுடனெதிர்த்துப் பொருவதாகக்கூறியது மாறு பட்டதால், 'சொல்லொன்றாய்ச் செய்கையொன்றாய்த் துஞ்சித் துணிந் தனன்' என்றார். வில்லொன்றால் முதலியஇடங்களிலுள்ள 'ஆல்' என்பதை அசையாகக்கொண்டு, வில்லொன்று கவசம்ஒன்று...கழுத் தொன்று (ஆகியஇவற்றையெல்லாம்), ஐயன் செல்லொன்றுகணையாற் கடிதின்வாங்கிச் சிந்தினன்-என்று உரைகூறலும் ஒன்று.செல்லொன்று கணை - இடியையொத்த அம்புமாம். பி-ம்:---[1]வில்லுடைக். [2]தோளுந் தாளுமோரொன்றாற்கழுத்துமொன்றால், தோளுந்தாளுமொன்றொன் றாற்...ஒன்றால். [3]என்று. [4]கணைகள். [5]செப்பியவழியேசெய்தான். ()

௧௬.—மகோதரன் இறந்ததுகண்டு, இராவணன் இரதத்தை இராமன்மீது செலுத்தச்சொல்ல, சாரதி அங்ஙனமே செலுத்துதல்.

மோதரன் முடிந்த வண்ண மூவகை [1]யுலகத் தோடு
[2]மாதிர மெவையும் வென்ற வன்றொழி லரக்கன் [3]கண்டான்

சேதனை யுண்ணக் கண்டான் செலவிடு செலவி டென்றான்
சூதனு [4]முடுகத் தூண்டச் சென்றது துரகத் திண்டேர்.

(இ - ள்.) மகோதரன் இறந்தவகையை மூவகையுலகத்துடனே திக்குக்களையெல்லாம்வென்ற வலியதொழிலையுடைய அரக்கன் கண்டு, (அத்துயரம் முதலில்) தன்னறிவையுண்டிடக் கண்டவனாய்[மூர்ச்சித்தவனாய்] (ப் பின்பு 'இராமனையணுகத் தேரைச்)செல்லவிடுக, செல்லவிடுக' என்றான்: பாகனும் விரையத்தூண்ட, குதிரைபூட்டிய திண்ணியதேர் (அவ்விராமனை நெருங்கச்) சென்றது; (எ - று.)— பி - ம்:—[1]உலகுமுற்றும், உலகமுற்றும். [2]மாதிரத்தோடுவென்றவான், மாதிரத்தோடும்வென்றவன். [3]தின்றான். [4]முடுகி. (௩௯அ௩)

கஎ.—இராமபிரான் அரக்கச்சேனைகளை நீறக்குதல்.

பனிப்படா நின்ற தென்னப் [1]பரக்கின்ற சேனை பாறித்
தனிப்படா [2]னாகி [3]னின்னந் தாழ்கில னென்னுந் தன்மை
[4]நுனிப்படா நின்ற [5]வீர [6]னவனென்று நோக்கா [7]வண்ணங்
குனிப்படா நின்ற வில்லா [8]லொல்லையி னூறிக் கொன்றான்.

(இ - ள்.) 'பனியானது ஒழிகின்றதுபோலப் பரந்துள்ள அரக்கச் சேனை சிதறிப்போய்(த் தான்)தனிப்பட்டவனாகாவிடின் இனியும் தாழ மாட்டான் [ஒருகால் சேனையெல்லாம் ஒழிந்துபோனால் இவ்விராவணன்வணங்கிவருதலும் கூடும்]'என்ற கொள்கையால்,கூரிய ஆராய்ச்சி பொருந்திய வீரனாகிய அந்தஸ்ரீராமன் (தன்விற்றொழிலைச்) சிறிதும் அவ்விராவணன் காணமுடியாதபடி விரைவிலே வளைதலைப்பொருந்திய வில்லினால் (அரக்கச்சேனையைப்)பொடியாக்கிக் கொன்றான்;(எ-று.)— நுனிப்படாநிற்றல் - கூரியஆலோசனைபொருந்தி யிருத்தல். பி-ம்:— [1]படர்கின்ற, பார்க்கின்ற. [2]என்னில். [3]உள்ளம். [4]துனி. [5]வள்ளல். [6]பிறர், இவன். [7]முன்னம். [8]ஒல்லென. (௩௯அ௪)

கஅ.—இதுமுதல் நான்குகவிகள் - இராவணனுக்குத் தீநிமித்தங்கள் தோன்றுதலைத் தெரிவிக்கும்.

அடல்வலி யரக்கற் கப்போழ் தண்டங்க [1]ளழுந்த மண்டுங்
[2]கடல்களும் வற்ற வெற்றிக் கால்கிளர்ந் துடற்றுங் காலை
வடவரை முதல வான [3]மலைக்குலஞ் சலிப்ப [4]போன்று
சுடர்மணி வலயஞ் சிந்தத் துடித்தன [5]விடத்த பொற்றோள்.

(இ - ள்.) அப்போது,—பெருவலிபடைத்த அரக்கனாகிய இராவணனுக்கு,—அண்டங்கள் முழுகிவிடும்படி (அவற்றினுள்ளேஎழுந்து) கிளர்கிற கடல்களெல்லாம் வற்றும்படி வெற்றிபொருந்திய சண்டமாருதம் உக்கிரமாக வீசுகின்ற (யுகாந்த)காலத்தில், மேருமலைமுதலியவான மலைத்தொகுதிகள் சலிப்பனபோன்று ஒளியுள்ள மணிகளழுத்திய தோள்வளை சிந்தும்படி இடப்பக்கத்து அழகிய தோள்கள் துடிக்கலாயின; (எ - று.)

இராவணனுக்கு இடப்புறத்துள்ள பத்துத்தோள்களும் துடித்தன என்க, தோள் துடித்ததற்கு - மேருமுதலியமலைகள் ஊழிக்காலத்துச் சண்டமாருதத்தாற் சலித்தலை உவமையாக்கினர். பி-ம்:—[1]எழுந்து. [2]கடல்களுமற்ற. [3]மலைகளும் [4]மானச். [5]இடத்துப். (ருசு அரு)

வேறு.

கக. உதிர மாரி சொரிந்த துலகெலாம்
அதிர வான மிடித்த தருவரை
பிதிர [1]விழ்ந்த தசனி யொளிபெருக்
[2]கதிர வன்றனை யூருங் [3]கலந்ததால்.

(இ - ள்.) இரத்தமழை, உலகமுழுவதும் பெய்தது; வானத்தில் அதிர்ச்சியுண்டாக இடித்ததான இடி, பெருமலைகள் பொடிப்பொடியாகியுதிருமாறு வீழ்ந்தது; பரிவேடமும் ஒளிபெருமலுள்ள சூரியனைச் சேர்ந்தது; (எ - று.)

ஒளிபெருஎன்பதைக் கதிரவனுக்குஅடைமொழியாக்காமல் வீழ்ந்ததுஎன்ற முற்றுடன்இயைத்தும், கலந்ததுஎன்பதனோடுஇயைத்தும் உரைப்பாருமுளர். இடித்ததான அசனியென்க. அசனி-இடி. பி-ம்:—[1]வீழ்ந்த. [2]கதிரவன்றணி. [3]கலந்தவால். (ருசு அசு)

உ0. வாவும் [1]வாசி நடுங்கின [2]வாங்கலில்
ஏவும் வெஞ்சிலை நாணிடை [3]யிற்றன
நாவும் வாயு முலர்ந்தன நாண்மலர்ப்
பூவின் மாலை புலால்வெறி [4]பூத்ததால்.

(இ - ள்.) தாவிச்செல்லுந்தன்மையுள்ள குதிரைகள், நடுங்கின; (பின்)வாங்குதலில்லாத ஏவுந்தன்மையுள்ள கொடிய விற்கள், நாண் இடையிலே அறுந்துவிடப்பெற்றன; (அவ்விராவணனுக்கு) நாவும் வாயும் உலர்ந்திட்டன; (அவன்பூண்டிருந்த) அன்றுமலர்ந்த மலர் கொண்டுதொடுத்தமாலையும் புலால்நாற்றம் தோன்றப்பெற்றது;(எ-று.)

மாலையைப்பன்மையாகக் கொள்ளின், [4]பூத்தனனப் பலவின்பால் முற்றுனபாடத்தைக்கொண்டு உரைக்க. பி-ம்:—[1]வாசிகடுங்கின. [2]ஓங்கயில். [3]அற்றன. [4]பூத்தலால். (ருசு அஎ)

உக. [1]எழுது வீணைகொ டேந்து பதாகைமேற்
[2]கழுகுங் காகமு மொய்த்தன கண்கணீர்
ஒழுகு கின்றன் [3]வோடிக லாடன்மாத்
[4]தொழுவி னின்றன போன்றன சூழிமா.

(இ - ள்.) எழுதிய [சித்திரவடிவாக அமைந்துள்ள] வீணையைக் கொண்டு மேம்பட்டுள்ள துவசத்தின்மீது கழுகுகளும் காகங்களும் நெருங்கின; ஓடுந்தன்மையுள்ள மிகவலிய குதிரைகளின், கண்களினின் றுநீர் ஒழுகுவனவாயின; முகபடாத்தையுடைய விலங்காகிய யானைகள், தொழுவில் அடைக்கப்பட்டனபோன்று கிடந்தன [வலிமைகாட்டாதனவாயின]; (எ - று.)—பி-ம்:—[1]இழுகும், இழுகு. [2]கழுதுங். [3]ஓடின. [4]தொழுது. (ருசு அஅ)

௨௨.—துர்நிமித்தங்களை இராவணன் இலட்சியஞ்செய்யாமை.

இன்ன [1]வாகி யிமையவர்க் கின்பஞ்செய்
துர்நி மித்தங்க டோன்றின தோன்றவும்
[2]அன்ன தொன்று [3]நினைந்தில னாற்றுமோ
என்னை [4]வெல்ல [5]மனித்தனென் றெண்ணுவான்.

(இ - ள்.) இப்படிப்பட்டனவாகி இமையவர்க்கு இன்பத்தைச் செய்கின்ற துர்நிமித்தங்கள் (இராவணனுக்குத்) தோன்றின; (அங்ஙனந்) தோன்றவும், 'மனிதனான இராமன் என்னை வெல்லமாட்டுவனோ?' என்று எண்ணுபவனாய், அந்தத்துர்நிமித்தம் ஒன்றையும் இலட்சியஞ் செய்யாதவனாயினன்; (எ - று.)---பி-ம்:—[1]தன்மை. [2]அன்னவொன்றும், அன்னதன்மை. [3]நினைத்திலன், அறிந்திலன், உணர்ந்திலன். [4]வல்ல. [5]மனிதன். (௩௬அ௯)

௨௩.—இராவணன் தேர்வருதலும், வானரவீரர் இருபாலும் ஒதுங்குதல்.

வீங்கு தேர்செலும் வேகத்து வேலைநீர்
ஓங்கு [1]நாளி னொதுங்கு முலகுபோல்
தாங்க [2]லாற்ற கிலார்[3]தடு மாறித்தாம்
நீங்கி னா[4]ரிரு பானு நெருங்கினர்.

(இ - ள்.) கடல்நீர் பொங்கிவரும்(உகாந்த)காலத்து ஒதுங்குகின்ற உலகுபோல, (வேகம்)மிக்கதேர் செல்லும் வேகத்தினால் இருபாலும் நெருங்கின வானரவீரர் தாம் தடுமாறிப்போய்த் தாங்கமாட்டாதவராய் அப்பாற் சென்றார்கள்; (எ - று.)

அவாந்தர பிரளயகாலத்தில் மேலுலகத்திலிருப்பவர் அதனின் மேலானவுலகத்துச் சென்றிருப்பரென்பது, இங்குக் கருதத்தக்கது. பி - ம்:—[1]நாளுக்கொதுங்கும். [2]ஆற்றகலார். [3]தடுமாற்றத்தான், தடுமாற்றத்தர். [4]இருகாலும். (௩௬௯௦)

௨௪.—இதுமுதல் நான்குகவிகள் - இராமராவணர் பொருவதைப் பற்றிய வருணனை.

கரும முங்[1]கடைக் கண்ணுறு ஞானமும்
[2]அருமை சேரு மவிஞ்சையும் விஞ்சையும்
பெருமை சால்[3]கொடும் பாவமும் பேர்கலாத்
தரும மும்மெனச் சென்றெதிர் [4]தாக்கினர்.

(இ - ள்.) கருமமும் (அக்கருமத்தின்) முதிர்ந்தநிலையில் தோன்றும் ஞானமும் போலவும், (பண்டங்களின்நிலையை)உள்ளபடிதெரியவொட்டாமற்செய்கின்ற அவிச்சையும் விஞ்சையும்போலவும், வலிமை பொருந்திய கொடியபாவமும் அழிவில்லாததருமமும்போலவும் (இராவணனும் இராமனும்) எதிரெதிராகச்சென்று தாக்கினார்கள்; (எ-று.)

ஒருவன் கருமயோகத்தைச்செய்யின் அதனால் மனம் தூய்மையடையப் பின்பு ஞானம் உதிக்கும்: அந்தஞானயோகத்தைப் பெற்றோர்க்குப்

பந்தத்தை யுண்டாக்குவதாகிய கர்மயோகம் மாருகத்தோன்றுதல், இயற்கை. மாறுபட்டிருக்குந்தன்மையால் கர்மஞானங்கள்முதலியன இராமராவணர்க்கு உவமைகள். அருமைசேர்தல்-இல்லாமையைச்செய்தல்: உண்மைத்தன்மையைத் தெரியவொட்டாமற்செய்தல். விஞ்சை=வித்யா: ஞானம்: அதற்கு எதிர்த்தட்டானது-அவிஞ்சை: அஞ்ஞாநம். பி - ம்:—[1]கடைகாணுறு. [2]அருமமுந்தவவிஞ்சையும். [3]நெடும். [4]தாக்கினுன். (௩சுகூ)

உரு. சிரமொ ராயிரந் தாங்கிய சேடனும்
உரவு கொற்றத் துவணத் தரசனும்
பொரவு டன்றனர் போலப் [1]பொருந்தினர்
இரவு [2]நண்பக லும்[3]மென லாயினர்.

(இ - ள்.) ஓராயிரஞ்சிரங்களைத்தாங்கிய ஆதிசேடனும் வலிமையுடனே வெற்றியையுமுடைய் கருடராஜனும் பொருமாறு மாறுபட்டனர் போலப் பொருந்தி, (அந்த ராமராவணர்கள்)இரவும் நண்பகலும்போலவும்(தம்முள்மாறுபட்டுத்)தோன்றினர்கள்; (எ-று.)—பி ம்:—[1]பொலிந்தனர். [2]நன்பகலும். [3]எனவேற்றனர், எனலாயினுன். (௩சுகூஉ)

உசு. வென்றி யந்திசை யானை வெகுண்டன
ஒன்றை யொன்று [1]முனிந்தன வொத்தனர்
அன்றி யுந்நர சிங்கமு [2]மாடகக்
குன்ற மன்னவ னும்பொருங் கொள்கையார்.

(இ - ள்.) (அந்தராமராவணர்கள்),—(இயல்பாகவே) வெகுட்சிகொண்டனவான வெற்றிபொருந்திய அழகிய திசையானை(யிரண்டு) ஒன்றையொன்று சினந்தவற்றையும் ஒத்தனர்; அன்றியும், நரசிங்கமும் பொன்மலையையொத்தவனை இரணியகசிபுவும் பொருகின்றதன்மையையுமுடையவராயினர்; (எ - று.)

ஸ்ரீராமனுக்கு நரசிங்கமும்,இராவணனுக்கு இரணியகசிபுவும் உவமை. பி - ம்:—[1]முனிந்தவும். [2]ஆதிமாப் பன்றியும் பொருமாறன்னபண்பினுர், ஆதியாம்-பன்றியும்பொரவென்றனர்பண்பினுல், ஆதியாம்-பன்றியும்மெனலாயினர்பண்பினுல், ஆதிமாப் - பன்றியும்மென்கின்றதொர் பண்பினுர்.சிலபிரதியில் இச்செய்யுள்"துவனவில்லின்"என்று தொடங்கும் அடுத்த செய்யுளின்பின் காணப்படுகின்றது. (௩சுகூ௩)

உஎ. [1]துவன வில்லின் பொருட்டொரு தொல்லைநாள்
எவன வீசனென் பார்[2]பொர வேற்றெதிர்
புவன மூன்றும் பொலங்கழ லாற்றொடும்
அவனு மச்சிவ னும்மென லாயினுர்.

(இ - ள்.) (அன்றியும் ராமராவணர்கள்),—பழமையான [முன்] ஒருகாலத்தில் 'எவன் அந்தமுதற்கடவுள்' என்பவராய் ஒலியுள்ள வில்லின் பொருட்டாகப் பொருமாறு மேற்கொண்டு எதிர்த்து மூன்றுபுவனங்களையும் (தம்முடைய) பொன்னங்கழலால்தீண்டிய அந்தத்திருமாலும் அச்சிவனும்போலவும் ஆயினர்; (எ - று.)

விசுவகருமாவினுல் நிருமிக்கப்பட்ட இரண்டு விற்களைக்கொண்டு தேவர்களின் தூண்டுதலாற் சிவனும் விட்டுணுவும் பொருத வரலாறு, பாலகாண்டத்துப் பரசுராமப்படலத்துக் கூறப்பட்டுள்ளது.'எதிர் அவனும் அச்சிவனும்'என இயையும்.துவனம்=த்வாநம்:வடசொல். அ-உலகறிசுட்டு.அ வீசன்-தொகுத்தல். பி-ம்:—[1]துவனி. [2]தொழ. 'எவனவில் வலியென்றிமையோர்தொழ' என்று சிலபிரதிகளில் இரண்டாமடி. சிலபிரதிகளில் இச்செய்யுள் ''சிரமொராயிரம்'' (உரு) என்ற செய்யுளுக்குப்பிறகு உள்ளது. (ருசுகஎ)

உஅ.—இராவணன் சங்கத்தோனி செய்தல்.

கண்ட [1]சங்கர ஞன்முகன் கைத்தலம்
விண்[2]ட சங்கத் தொல்லண்டம் [3]வெடித்திட
அண்ட சங்கத் தமரர்த மார்ப்பெலாம்
உண்ட [4]சங்க மிராவண னூதினன்.

(இ - ள்.) (போரைக்) கண்டுகொண்டிருந்த சங்கரன் நான்முகன் என்பவரின் கைத்தலங்கள் (தாம்மேற்கொண்ட தொழிலினின்று) நீங்கி அசங்கவும்[நடுங்கவும்], பழமையான அண்டம் வெடித்திடவும், மேலுலகத்துத் தொகுதியாயுள்ள தேவர்களின்(வெற்றி)யாரவாரத்தையெல்லாம் ஒழித்ததான சங்கத்தை இராவணன் ஊதினன்; (எ - று.)

இராவணன் தன்சங்கத்தை யூதியது, போரில் உற்சாகமூண்டெழுதற்காக. மூன்றுமடியில், அண்டம்-மேலுலகம்,சங்கம்-தொகுதி என்க. திரிபுஎன்னுஞ்சொல்லணி. பி-ம்:—[1]சங்கரனுன்முகர். [2]அசங்கித். [3]வெடிபட, வெடிப்புற. [4]சங்கை. (ருசுகஅ)

உகூ.—திருமாலின் சங்கு தானும் ஒலித்தல்.

சொன்ன சங்கின தோசை [1]துளக்குற
என்ன சங்கென் றிமையவ [2]ரேங்கிட
அன்ன சங்கைப்[3]பொறாமை யினுலரி
தன்ன [4]வெண்சங்கந் தானு [5]முழங்கிற்றால்.

(இ - ள்.) அந்தச்சங்கினேசையைப் பொறாமையினுல், சொல்லப்பெற்ற (அச்)சங்கினுடையஓசையும் நடுங்கவும்,'இதுஎன்னசங்கு'என்று இமையவர் ஏக்கங்கொள்ளவும், திருமாலினுடைய வெண்ணிறமுள்ள சங்கமாகிய ஸ்ரீபாஞ்சசன்னியமும் தானும் முழங்கிற்று; (எ - று.)---மூன்றுமடியில் சங்கு-ஆகுபெயரால், அதனேசையைக்காட்டிற்று. பி-ம்:---[1]துளங்குற. [2]எங்குற. [3]பொறாமையினரியன்.[4] ஒண்சங்கந்தானும், வெண்சங்குதானே, வெண்சங்குதானும். [5]முழக்கிற்றால்.

ரு௦.—பஞ்சாயுதங்கள் அடிமைசெய்யுமாறுவந்தருகேநிற்க, ஸ்ரீராமன் அவற்றைக் காணுதிருத்தல்.

[1]ஐய னைம்படை தானு [2]மடித்தொழில்
செய்ய வந்தயல் நின்றன தேவரின்

மெய்ய னன்னவை கண்டிலன் வேதங்கள்
பொய்யி றன்னைப் [3]புலன்றெரி யாமைபோல்.

(இ - ள்.) திருமாலின் ஐம்படைகளும் திருவடித்தொண்டுசெய்யக் கருதி(இராமபிரானுக்கு)அருகே வந்துநின்றன;தேவர்களின்உண்மைக் கடவுளாகியஸ்ரீராமன், வேதங்கள் பொய்யில்லாததன்னைத் தம்மறிவால் அறியாமைபோல அவற்றைக் காணாதவனாய்நின்றான்;(எ - று.)

மெய்யன் - என்றும்அழியாது நிற்பவன். பஞ்சாயுதங்கள் அடிமை செய்யவந்துநிற்கவும், ஸ்ரீராமன் மானுடபாவனையால் அவற்றைக் காணா தவன்போல்நின்றனனென்க. ஐம்படைகளாவன - சுதரிசனமென்ற சக்கரமும், பாஞ்சசனியமென்ற சங்கமும், கௌமோதகியென்ற கதையும்,நந்தகமென்ற வாளும்,சார்ங்கமென்ற வில்லுமாம்.பி-ம்:—[1]ஐயனைப் படைத்தானும். [2]அமர்த்தொழில் [3]புறந்தெரியாமைபோல், புலன்றெரியாமையால், பொலிந்தெரிதன்மையால். (ந௲கூகஎ)

ந௧.—மாதலி இந்திரன்சங்கை யெடுத்து ஊதுதல்.

ஆசை யும்விசும் பும்மலை [1]யாழியுந்
தேச மும்மலை யுங்நெடுந் தேவருங்
கூச வண்டங் [2]குலுங்கக் குலங்கொடார்
வாச வன்சங்கை மாதலி [3]வாய்வைத்தான்.

(இ - ள்.) திக்குக்களும் வானமும் அலைபொருந்திய கடல்களும் நாடுகளும் மலையும் நெடியதேவரும்கூச்சங்கொள்ளவும்,அண்டம்குலுங் கவும், சிறப்பைக்கொண்ட வெற்றிமாலையையணிந்த இந்திரனுடைய சங்கை மாதலியானவன் (தன்)வாயில்வைத்து ஊதினான்; (எ - று.) —பி-ம்:—[1]ஆழியின். [2]குலுங்கிக்குலைந்திட. [3]ஊதினான். (ந௲கூஅ)

ந௨.—இராமபிரான்மீது இராவணன் அம்புதூவுதல்.

தூமில வாளி யரக்கன் றுரப்பன
[1]விமலன் மேனியின் [2]வீழ்வதன் முன்னமே
[3]கமல வான்முக நாடியர் கட்கடை
[4]அமலன் மேனியிற் றைத்த வனந்தமால்.

(இ - ள்.) அரக்கன் விரைவாகச் செலுத்துவனவான நெருங்கிய அம்புகள் குற்றமற்ற ஸ்ரீராமபிரானுடைய திருமேனியில் வீழ்வதற்கு முன்னம், கமலம்போன்றமுகமுள்ள வானநாடியரின் கடைக்கண் ணோக்கம் குற்றமற்றவனான ஸ்ரீராமனது மேனியில் தைத்தவை அநந்த மாகும்; (எ - று.)

ஸ்ரீராமபிரானது மெல்லியதிருமேனியில் இராவணபாணம் வீழ் கையில், 'இந்த அருமந்ததிருமேனியில் கொடியராவணசரம் படுகின்ற தே!'என்றகுறிப்போடு வானநாடியர் இராமன்திருமேனியைக்கண்டன ரென்க. விரைவில்தொழில்நிகழ்ந்ததை வற்புறுத்த 'மேனியின்வீழ் வதன்முன்னம்' எனப்பட்டது: இது, அத்தியந்தாதிசயோக்தி. பி-ம்: —[1]விமலவாயவன், விமலவாயனன். [2]வீழுதன். [3]கமலவானனநாடியர்

கட்கணை, கமலவானவர்நாடியர்கட்கணை, கமலவானகநாடியர்கட்கடை, கமலமுகவானநாடியர்கட்கடை. [4]அமல.　　　　(௩௬௯௯)

௩௩.—இராமராவணர்களின் தேர்க்குதிரைகள் ஒன்றையொன்று கடுமையுறப் பார்த்தல்.

சென்ற தேரொ [1]ரிரண்டொடுஞ் சேர்த்திய
[2]குன்றி வெங்கட் குதிரை [3]குதிப்பன
ஒன்றை யொன்றற் றெரியுக நோக்கின
தின்று தீர்வன போலுஞ் சினத்தன.

(இ-ள்.) (போர்க்களத்துச்)சென்ற (இராமராவணர்களின்)ஒப்பற்ற இரண்டுதேர்களிலும் பூட்டியனவாகிக் குன்றிமணிபோல (ச் சிவந்து) வெம்மைதோன்றுகின்ற கண்களையுடையனவான குதிரைகள்,--தாவிச் செல்வனவும், தின்றால்தீருமென்றுதோன்றுகின்ற சினத்தையுடையனவுமாகி, ஒன்றையொன்றுநெருங்கி நெருப்புச்சிந்தப் பார்ப்பனவாயின; (எ-று.)--பி-ம்:—[1]இரண்டினும். [2]குன்றின். [3]குனிப்பன.　　　　(௩௭௦௦)

௩௪.—தேர்க்கொடிகள் ஒன்றினோடொன்று மோதுதல்.

கொடியின் மேலுறை வீணையுங் கொற்றமா
இடியி னேறு முறையி [1]னிடித்தன
படியும் விண்ணும் பரவையும் [2]பன்முறை
முடியு மென்பதொர் [3]மூரி [4]முழக்கினால்.

(இ - ள்.) (இராவணனுடைய தேர்க்) கொடியின்மேல்தங்கியுள்ள வீணையும் (இராமபிரானுடையதேர்க்) கொடியின்மேல் தங்கியுள்ள வெற்றிபொருந்திய பெரிய இடியேறும் பூமியும் ஆகாசமும் கடல்களும் அழிந்துவிடுமென்று கருதுதற்குஇடனான ஒப்பற்ற பெருமுழக்குடனே (ஒன்றோடொன்று)பலமுறை முறைமையாக இடித்தன;(எ-று.)—இராவணன் காந்தர்வவித்தையில் தான் மிகவல்லவன்என்பதற்கு அறிகுறியாகத் தன் கொடியில் வீணையின்உருவத்தைக் கொண்டுள்ளானெனக் கூறினார்போலும். மானுடத்தலையைக்கொண்ட துவசத்தை இராவணன் கொண்டிருந்தானென்று முதனூலில் வருகின்றது. இந்திரனுடைய தேராதலால், கொடியில் இடியேறு இருந்தது. பி - ம்:—[1]இடத்தன. [2]பண்பற. [3]மாரி. [4]முழக்கென, முழக்கின.　　　　(௩௭௦௧)

௩௫.—இருவர்வில்லொலிகளின் வருணனை.

எழு வேலையு [1]மார்ப்பெடுத் தென்னலாம்
வீழி வெங்க ணிராவணன் வில்லொலி
ஆழி நாதன் சிலையொலி யண்டம் விண்டு
ஊழி [2]பேர்வுழி மா[3]மழை யொத்ததால்.

(இ - ள்.) வீழிக்கனிபோல (ச் சிவந்த) வெவ்வியகண்களையுடைய இராவணனுடைய வில்லினொலி, ஏழுகடல்களும் ஆரவாரஞ்செய்யலாயிற்றென்று சொல்லுதற்குஏற்பப் பொருந்தியது; சக்கரப்படை

கொண்ட தலைவனான திருமாலினம்சமாகிய இராமனுடையவில்லி னொலி (இவ்) அண்டத்தை விள்ளச்செய்து உலகம்அழியுங்காலத்துத் தோன்றுகின்ற பெரியமேகத்தினொலியை யொத்தது; (எ - று.)— பி - ம்:—[1]ஆர்ப்படுத். [2]ஓவுழி. [3]மறை. (ருஎ0உ)

ரு.கூ —அநுமனாதியோர் அவ்வொலியினால்செய்கையற்று விழுந்திடுதல்.

ஆங்கு நின்ற வனுமனை [1]யாதியாம்
வீங்கு வெஞ்சின வீரர் [2]விழுந்தனர்
ஏங்கி நின்ற தலா[3]லொன் றிழைத்திலர்
வாங்கு சிந்தையர் [4]செய்கை மறந்துளார்.

(இ - ள்.) அங்கேநின்ற அநுமனைமுதலாகவுள்ள மிக்க கொடிய சினத்தைக்கொண்ட வீரர்கள்,—சிந்தை (தம்மினின்று) நீங்கப்பெற்ற வரும் செய்கைமறந்தவருமாகி, ஏங்கிநின்றதல்லாமல் எதனைச்செய்வதற் கும்மாட்டாதவராகி விழுந்திட்டனர்; (எ - று.)—பி-ம்:—[1]ஆதியாய், ஆழியாய். [2]விழித்தனர். [3]ஒன்றுமிழைத்திலார். [4]செங்கை. (ருஎ0ரு)

ரு.எ.—தேவரின்செயல்.

ஆவ தென்னைகொ லாமென் [1]றறிகிலார்
ஏவர் வெல்வரென் [2]றெண்ணல ரேங்குவார்
போவர் மீள்வர் பதைப்பர் பொருமலால்
தேவ ருந்தங்கள் செய்கை [3]மறந்தனர்.

(இ-ள்.) (அவ்வொலிகேட்ட) அச்சத்தினால்,தேவரும்,--எவர்வெல் வரென்று எண்ணமாட்டாது ஏங்குபவராய், 'ஆகப்போவது என் னைகொலாம்' என்று அறியும் வல்லமையற்று, போவதும் மீள்வதும் பதைப்பதுஞ்செய்பவராகி, தங்கள்செய்கையை மறந்தவரானார்;(எ-று.) பி - ம்:—[1]அறைகுவார். [2]எண்ணுவர். [3]மறந்துளார். இச்செய்யுள் சில பிரதியி லில்லை. (ருஎ0ச)

ரு.அ.—இராமபிரானுடைய சரமாரியினும் தேவர்களின் பூமாரி முந்துதல்.

[1]சேண வந்தர நோக்கலுந் திண்சரம்
பூண முந்தின [2]சிந்தின பூமழை
காண வந்த கட வுளர் [3]கையெலாம்
[4]ஆண வந்துணை [5]யாருள ராவரோ.

(இ-ள்.) (இராமபிரானுடைய) வலியசரங்கள் ஆரத்திலுள்ள வா னத்துக்குறிநோக்கிப் பாயவும்,(போர்)காணவந்த கடவுளரின்கைகளா லெல்லாஞ் சிந்தப்பெற்ற பூமழை (அவ்வானத்தை) அலங்கரிக்குமாறு முற்பட்டுத்தோன்றின; ஆணவத்துக்குத் துணையாகுபவர் யாவரோ தாம்? (எ - று.)

அரக்கன் ஆணவ முள்ளவனாதலால், அவனுக்குமாறான இராம பிரான் சரத்தை நோக்கவே தேவர்கள் மலர்மழைசிந்தினரென்பதாம்.

இங்குஇராமபிரான் ஆணவமற்றவனாதலால் அவனைத்தேவர்கள் கொண்டாடினாரென்பதைச் சமர்த்திக்க, எதிர்மறையாக 'ஆணவந்துணையாருளராவரோ?' என்றார். முதல்மூன்றடிகளை ஈற்றடியிற் கூறிய பொதுப்பொருள் சமர்த்தித்துநிற்பது - வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். ஆணவம்-செருக்கு. பி - ம்:—[1]சேணிலத்தமர்நோக்கவுந்தன்சிரம், சேணவந்தமர்...சிரம், சேணவந்தரநோக்கலுந்திண்சரம். [2]சிந்தினர். [3]கண்ணெலாம். [4]ஆணவன்றுணை, ஆணவந்தனை, ஆணவந்தனர். [5]யாருளர்யாவரோ, யாருளராவரே. (௩௭0௫)

௩௯.—இருவர்வில்லுந் தோன்றியதன் வருணனை.

நீண்ட [1]மின்னொடு [2]வானெடு [3]நீலவிற்
பூண்டி ரண்டெதிர் [4]நின்றவும் போன்றன
ஆண்ட வில்லிதன் வில்லு மரக்கன்றன்
தீண்ட [5]வல்லவ ரில்லாச் சிலையுமே.

(இ - ள்.) (என்னை)ஆண்ட வில்லாளியாகிய ஸ்ரீராமனுடையவில்லும் அரக்கனுடைய தீண்டவல்லவரில்லாத சிலையும்,—நீண்டஒளியோடு வானிலே நெடிய நீலவில் இரண்டு அணிந்து எதிர்நின்றவற்றையும் போன்றன; (எ - று.)

இராமராவணரதுவிற்கள் இரட்டைவானவிற்களைப் போலுமென்றார். வானவில்லிரண்டு உள்ளனவென்பதை, "வடுத்தவிர் விசும்பிற் செல்லும் வார்சிலையிரண்டும்", "வானில்வந்திட்ட விற்களிரண்டு," "இரட்டைவரிசிலையாற்பஞ்சவண்ணமகரதோரணநாட்டி" என்பவற்றாலறிக. பி - ம்:—[1]விண்ணொடு. [2]வானிடு. [3]நீண்டவிற். [4]நின்றன. [5]வல்லரில்லாத, வல்லிரில்லாத. (௩௭0௬)

௪0.—இராவணனுடைய ஆர்ப்பு வில்லின்றெழிப்புஇவற்றின் வருணனை.

அரக்க னன்றெடுத் [1]தார்க்கின்ற [2]வார்ப்புமப்
[3]பொருப்பு மெய்விற் றெழிப்பு [4]முண் டென்பபோல்
[5]குரைக்கும் வேலையு மேகக் குழாங்களும்
இரைத்தி [6]டிக்கின்ற வின்றுமொ ரீறிலா.

(இ-ள்.)இராவணன் அன்று குரலெடுத்து ஆரவாரஞ்செய்த ஆரவாரமும்,அந்தமலைபோன்ற உடலைப்படைத்தவில்லின்பேரொலியும் உண்டு என்பதைத் தெரிவிப்பனபோல, ஒலிக்கின்ற கடலும் மேகக்குழாங்களும் இன்றும் ஓர்எல்லையில்லாமல் இரைத்து இடிக்கின்றன; (எ-று.)

இராவணன் செய்தஆர்ப்பும் அவன்வில்நாணியைத்தெறித்து எழுப்பியஒலியும் - முறையே, கடலிரைச்சையையும் மேககர்ச்சனையையும் போலு மென்பது கருத்து. பி - ம்:—[1]ஆர்த்தன. [2]ஆர்ப்புடன், ஆர்ப்பும்போர், ஆர்ப்பும்பேர். [3]பொருப்புவில்லிற், உரப்புமோவிற், குரப்புமாவின். [4]உண்டேகொலாம். [5]குரக்குவேலையும். [6]இடிக்கின்றது. (௩௭0௭)

௬௧.—இதுமுதல்ஐந்துகவிகள்-இராவணனதுசினத்தின் நிலையைத் தெரிவிக்கும்.

மண்ணிற் செல்வன செல்லினு மாசற
[1]எண்ணிற் [2]சூன்மழை யல்ல விராவணன்
கண்ணிற் [3]சிந்திய தீக்கடு வேகத்த
விண்ணிற் செல்வன [4]விண்ணின்று வீழ்வன.

(இ - ள்.) ஆலோசிக்குமிடத்து, இராவணனுடைய கண்ணினின்று சிந்திய (சினத்)தீக்கள், மிக்கவிரைவைப்படைத்தனவாய் வானத்திற் செல்வனவாயின: (அதனால்) கருக்கொண்டமழைகள் (அவ்)விண்ணினின்று வீழ்வனவாய் மண்ணிற்செல்பவை, செல்லினும் மாசற (விண்ணில்) இல்லாதனவாயின; (எ - று.)—தொடர்புயர்வுநவிற்சியணி. பி - ம்:—[1]விண்ணிற். [2]சூழ்மழை. [3]சிந்தைய...வேகத்த, சிந்தினதீக்கடு வெங்கணை, சிந்தினதீக்கடுவேகத்தின். [4]மீண்டன்றுமீள்கில வெந்தன வீழ்வன. (௬௭0அ)

௬௨. மால்க லங்கலில் [1]சிந்தையன் மாதிரம்
நால்[2]க லங்க நகுந்தொறு [3]நாவொடு
கால்[4]க லங்குவர் [5]தேவர் கணமழைச்
சூல் [6]கலங்கு மிலங்கை துளங்குமால்.

(இ - ள்.) திருமாலாகிய ஸ்ரீராமனுக்குக் கலங்குதலில்லாத சிந்தையையுடையஇராவணன் நான்குதிசைகளும் கலங்கும்படி சிரிக்குந்தோறும், தேவர்கள் நாக்குடனே பாதங்களும் கலங்கப்பெறுவர்; தொகுதியான மழைகளின்சூலும் கலங்கும்; இலங்கையும் சலிக்கும்; (எ-று.)---வீரநகைகூறியது. மழைச்சூல்-மேகத்தின்கருப்பம். பி-ம்:—[1]சிந்தைய, சிந்தையின். [2]கலங்கும். [3]நாளொடும். [4]கலங்குவ. [5]தேவர் தம். [6]கலங்கவிழுங்கத்துலங்குமால், கலங்கும்விலங்கறுளங்குமால். இச்செய்யுள் ஒருபிரதியில் "இக்கணத்து" என்ற அடுத்தபாடலின்பின் உள்ளது. (௬௭0௧)

௬௩. இக்க ணத்து மெறிப்ப [1]தடித்தென
[2]நெக்க மேகத் [3]துதிக்கும் [4]நெருப்பெனப்
பக்கம் வீசும் [5]படைச்சுடர் பஃறிசை
[6]புக்குப் போகப் பொடிப்பன போக்கில.

(இ - ள்.) இவ்விடத்தும் [பூமியிலும்]மின்னல் வீசுவனபோலவும், பிளவுபட்டுத்தோன்றுகின்ற மேகத்திற் பிறக்கும் நெருப்புப்போலவும், போர்க்களத்துவீசும் படைக்கலங்களின் ஒளிகள் பலதிசைகளிலும் புகுந்துசெல்ல, (அப்படைக்கலங்கள்) தாளாக்குந்தன்மைகளைத்தவிர்தலில்லாதன; (எ - று.)

பொடிப்பனஎன்பதற்கு - மயிர்க்கூச்செறியுந்தன்மையைக் கொண்டவையெனினுமாம். இக்கண் - இவ்விடம்: அத்து-சாரியை. பக்கம்-போர்செய்யும்பக்கமானஇடம். பி - ம்:---[1]தடித்தன. [2]செக்கர். [3]உதிர்க்கும். [4]நெருப்பல. [5]படர்சுடர். [6]புக்கபோதப். (௬௭௧0)

௬௪. [1]கொற்ற விற்கொடு கொல்லுதல் கோளிலாச்
[2]சிற்றை யாளனைத் தேவர்தந் தேரொடும்
பற்றி வானிற் சுழற்றிப் படியின்மேல்
[3]எற்று வேனென் [4]றுரைக்கு மிரைக்குமால்.

(இ - ள்.) (இப்போது என்) வெற்றியுடைய வில்லைக்கொண்டு கொல்லுதற்கு எண்ணங்கொள்ளாமல், சிறுமையையுடையவனான இராமனைத் தேவர்தந்ததேருடனேபற்றி வானிற்சுழற்றிப் பூமியின்மேல் மோதுவேனென்று உரைப்பான்: கதறுவான்; (எ - று.)---அற்பமானுடனை வில்லாலெதிர்த்துப்பொரவேண்டிய அவசியமுமில்லை: தேவரீந்த தேருடனே வானிலெடுத்து எறிவேனென்று இரைந்துகூறினான் இராவண னென்க. பி - ம்:—[1]குற்றவிற்கொடுகொல்லுதல், குற்றம்விற்கொடுகொல்லுதல், கொற்றம்பிற்கொடுகொள்ளுதல். [2]சிற்றையானின. [3]ஏற்றுகமென்று. [4]இசைக்கும், இரைக்கும். (௩௭௧௧)

௬௫. தடித்து வைத்தன்ன வெங்கணை தாக்கற
வடித்து [1]வைத்தன்ன மானுடன் றோள்வலி
[2]ஒடித்துத் தேரை யுதிர்த்தொரு வில்லொடும்
பிடித்துக் கொள்வன் சிறையெனப் [3]பேசுமால்.

(இ - ள்.) (மற்றும் இராவணன்),—மின்னலை வைத்தாற்போன்ற வெவ்விய கணை தாக்கும்படி மிகவும் காய்ச்சியடித்துக்கூராக்கி, அப்படிப்பட்டமனிதனின் தோள்வலியை யொழித்து (அவனேறிய)தேரை (ப் பொடியாக) உதிரச்செய்து, (அவனுடைய) ஒருவில்லுடனே சிறைபிடித்துக்கொள்வேனென்றுபேசுவான்; (எ-று.)

தாக்கு - முதனிலைத்தொழிற்பெயர். தாக்கஎன்றசெயவெனெச்சம், அகரம் தொக்குவந்த தென்றலுமாம். வடித்துவைத்து-கூராக்கி வைத்து. பி-ம்:---[1]வைத்ததுமானுடற்கே. [2]ஒடித்த. [3]பேருமால். (௩௭௧௨)

வேறு.

௬௬.—இராவணன் அம்புஎய்தல்.

பதைக்கின்றதொர் மனமும்[1]மிடை படர்கின்றதொர் சினமும்
விதைக்கின்றன பொறிபொங்கின விழியும்[2]முடை வெய்யோன்
[3]குதைக்கின்றன நிமிர்வெஞ்சிலை [4]குழையக்[5]கடுங் காலால்
உதைக்கின்றன [6]சுடர்வெங்கணை யுருமேறென வெய்தான்.

(இ - ள்.) பதைக்கின்றதான ஒருமனமும்,இடையிடையேதோன்றுவதான ஒருசினமும்,(எங்கும்)வித்துவனபோல்தோன்றுகின்றனவான தீப்பொறிகள் கிளர்ந்தெழப்பெற்ற கண்விழியுமுடைய கொடியோனான இராவணன்,—(அம்புகளை)வெளியுமிழ்வனவாய் நிமிர்ந்த கொடியசிலையை வளையுமாறுகொண்டு, விரைவுள்ள முனையாற் செலுத்துவனவான ஒளியுள்ள கொடிய அம்புகளை உருமேறுபோல எய்தான்; (எ - று.)

வெய்யோன் கணையெய்தான் என்க. குதைக்கின்றன - குதையினின்றுவெளிவருவனவான அம்புகள்; பெயர். அம்புகளைநிமிர்க்கின்ற

வெஞ்சிலை என்று சிலையைச் சிறப்பித்தவாறு. பி-ம்:—[1]இடைப்பிடிக்கின்றதொர், படைபடிக்கின்றதொர். [2]உள. [3]குதைக்குன்றென, குதிக்கின்றன. [4]குலையக். [5]கொடுங்காலை, கொடுங்கடுங்கால். [6]என. ()

சஎ.—இராவணன்விடுத்த அம்புகளின் வருணனை.

[1]உருமொப்பன கனலொப்பன வூற்றந்தரு கூற்றின்
மருமத்தினு [2]நுழைகிற்பன மழை[3]யொப்பன வானோர்
நிருமித்தன [4]படைபற்றற நிமிர்வுற்றன வமிழ்தப்
பெருமத்தினை முறைசுற்றிய [5]பெரும்பாம்பினும் பெரிய.

(இ - ள்.) (அவ்வரக்கன்விடுத்த அம்புகள்),—உருமையொப்பனவும், கனலையொப்பனவும், வலிமைபொருந்திய யமனுடைய மருமத்திலும் நுழையுந்தன்மையுள்ளனவும், மழையையொப்பனவும், வானவரால்நிருமிக்கப்பட்டனவான படைக்கலங்கள் பற்றறும்படி நிமிர்வனவும், அமுதமெழுமாறு கடைந்தபெரியமத்தாகிய மந்தரமலையை முறைமையாகச்சுற்றிய பெரிய வாசுகியென்னும்பாம்பினும் பெரியனவுமாகும்; (எ-று.)—பி-ம்:—[1]உருமொத்தனகனலொத்தன. [2]நுழைகின்றென. [3]ஒப்பென. [4]படையுற்றன. [5]பாம்பெனப். (௩எகச)

சஅ.—இராவணனம்புகளை இராமபிரான் தடுத்தல்.

துண்டப்[1]பட நெடுமேருவைத் [2]தொளைத்துள்ளுறை தொங்காது, அண்டத்தையும் பொதுத்தேகுமென் றிமையோர்களுமயிர்த்தார், கண்டத்தெறு கணைக்காற்றினைக் கருணைக்கடல் கனகச், சண்டச் [3]சர மழைகொண்டவை யிடையேயறத் தடுத்தான்.

(இ - ள்.) 'நெடியமேருவைத் துண்டப்படும்படி தொளைத்து (அங்குத்தானே) உள்ளுறைந்துதங்கிவிடாது அண்டத்தையுந் தொளைத்துச் செல்லும்'என்று தேவர்களும் (அவ்விராவணபாணத்தைப்பற்றிச்) சந்தேகித்தார்கள்; கிருபாசமுத்திரமானஸ்ரீராமன் துண்டுதுண்டாக அழிக்கவல்ல கணைகளாகிய காற்றை, பொன்மயமான கொடிய சரமழைகொண்டுஅவை இடையேயற்றுப்போம்படி தடுத்தான்;(எ-று.)—பி - ம்:—[1]படு. [2]துணித்துள்ளிறத்தொங்க, துணித்துள்ளிடைத்தொங்கா, துணித்துள்ளுறைதொங்கா. [3]சரஞ்சிலை. (௩எகரு)

சகூ.—இராவணன் மீண்டும் சரமாரிபொழிதல்.

உடையான்முயன் [1]றொருகாரிய [2]முறுதீவினை [3]யுடற்ற
இடை[4]யூறுறச் [5]சிதைந்தாங்கெனச் சரஞ்[6]சிந்தின விறலும்
தொடையூறிய கணைமாரிகள் தொகை [7]தீர்த்தவை துரந்தான்
[8]கடையூறுறு [9]கணமாமழை கால்வீழ்ந்தெனக் [10]கடியான்.

(இ - ள்.) வலிமையுடையவன் முயன்றஒருகாரியம் மிக்கதீவினை வருத்துதலால் இடையூறுபொருந்தச் சிதைந்தாற்போலச் சரமும் வலிமைசிந்தின: (அப்போது) கொடியவனான இராவணன்,-கடைக்காலத்தில் ஊறுவிளைக்கின்ற திரண்டபெரியமேகங்கள் காலிறங்கிப் பெய்

தாற்போல்,தொடுத்தல்தொழில்முற்றுப்பெற்றனவான அம்புமழைகள். கணக்கிறந்தவைகளைச் செலுத்தினான்; (எ - று.)---பி-ம்.—[1]உயர், உய்உறு.[2]முதுதீவினை. [3]இயற்ற. [4]ஊறறச், ஊறெனச். [5]சிதைத்தாங்கென. [6]சிந்தினன்விடலும், சிந்தினவிடலும். [7]தீர்ந்தன, தீர்த்தன. [8]கடையூறறு. [9]கனமாமழை, கணமாரிகள். [10]கடிவான். (௩௭௧௬)

௫௦.—இராவணனம்புகளின்செயல்.

விண்போர்த்தன திசைபோர்த்தன மலைபோர்த்தன [1]விசையோர்
கண்போர்த்தன கடல்போர்த்தன படிபோர்த்தன கலையோர்
எண்போர்த்தன [2]வெறிபோர்த்தன விருள்போர்த்தன[3]வென்னே
திண்போர்த்தொழி லென்றானையி னுரிபோர்த்தவன் றிகைத்தான்.

(இ - ள்.) '(இராவணனெய்த அம்புகள்) விண்ணைப் போர்த்தன: திக்குக்களைப் போர்த்தன; மலைகளைப்போர்த்தன; விசையாகஅறியுந் தன்மையுள்ள கண்களைப் போர்த்தன; கடலைப் போர்த்தன; பூமியைப் போர்த்தன; கலைவல்லோரின் எண்ணைப் போர்த்தன; வெறி மிக்கன; இருள்கொண்டுமூடின;(இந்தஇராவணனுடைய) வலியபோர்த்தொழில் என்ன வியப்பாயுள்ளது!'என்று ஆனையின்தோலைப்போர்த்தவனான சிவபிரானும் திகைப்புக்கொண்டான்; (எ - று.)—பி - ம்:—[1]இமையோர். [2]எரிபோர்த்தனவிருள், இருள்போர்த்தனவெரி. [3]விண்ணோர் திண்போர்த்தொழிலின்று. (௩௭௧௭)

௫௧.—இராவணபாணத்தால் வானரசேனை சிதற, ஸ்ரீராமன் இராவணனம்புகளை விலக்குதல்.

[1]அல்லாநெடு பெருந்தேவரு மறைவாணரு மஞ்சி
[2]எல்லார்களுங் கரங்கொண்[3]டிரு விழிபொத்தின [4]ரிருந்தார்
செல்லாயிரம் விழுங்காலுகும் விலங்[5]கொத்தது சேனை
வில்லாளனு மதுகண்டவை விலக்குந்தொழில் வேட்டான்.

(இ - ள்.) அந்தச்சிவபெருமானல்லாத நெடிய பெருமைபொருந்திய தேவரும் வேதவித்துக்களான பிராமணரும் ஆகிய எல்லாரும், அஞ்சி(த் தம்)கையைக்கொண்டு இருகண்களையும் மூடினவரா யிருந்தார்கள்;(அக்காலையில், குரங்குச்)சேனை, ஆயிரம்இடிகள்விழும்போது பொடிப்பொடியாய்ச்சிந்துவதாகியமலையை யொத்தது;அதனைக் கண்டு, வில்லாளியாகியஸ்ரீராமனும்,அவ்வம்புகளை விலக்குந்தொழிலை விரும்பினான்; (எ - று)—பி - ம்:—[1]அல்லானெடு. [2]எல்லாருந்தம். [3]தம். [4]இரிந்தார். [5]ஒத்தன. (௩௭௧௮)

௫௨.—ஸ்ரீராமபாணம் தழைக்க இராவணபாணங் கெடுதல்.

செந்தீவினை [1]மறைவாணனுக் கொருவன்[2]சிறு விலைநாள்
முந்தீந்ததொ ருணவின்பய னெனலாயின முதல்வன்
[3]வந்தீந்தன வடிவெங்கணை யனையான்வகுத் [4]தமைந்த
வெந்தீவினைப் பயனொத்தன வரக்கன் [5]சொரி விசிகம்,

(இ-ள்.) முதற்கடவுளாகியஸ்ரீராமன் வந்து விடுத்த கூரியகொடிய அம்புகள்,---செந்நிறத்தீயில்(ஓமஞ்செய்)தொழிலையுடைய வேதம்வல்ல அந்தணனுக்கு முன்னே பஞ்சகாலத்தில் ஒருவன் ஈந்ததான ஒரு உணவினால் விளையும் பயனென்றுசொல்லுமாறு ஆயின்; [பெரும் பயனைவிளைத்தனஎன்றபடி]: அரக்கனாகியஇராவணன் சொரிந்த அம்புகள், அவ்விராவணனாற் செய்யப்பட்டுப்பொருந்திய கொடியதீவினைப் பயனை யொத்தன [நற்பயனைவிளைக்காவாயின]; (எ - று.)—பி - ம்:—[1]மறையாளனுக்கு. [2]சிறுமலைநாண். [3]வந்தீர்ந்தன. [4]அமைத்த. [5]விடு. ()

ருங.—ஐந்துகவிகள்-இராமராவணர்கள் ஒத்துப்போருதமையைத் தெரிவிக்கும்.

**நூறாயிரம் வடிவெங்கணை நொடியொன்றினின் விடுவான்**
**[1]ஆறாவிறன் மறவோனவை தனிநாயக [2]னறுப்பான்**
**கூறாயின கனல்[3]சிந்தின குடிக்கப்புனல் குறுகிச்**
**சே[4]றாயின பொடி[4]யாயின திட[4]ராயின [5]கடலும்.**

(இ - ள்.) தணியாத வலிமையையுடைய கொடியோனாகிய இராவணன்,---ஒருநொடிப்போதில் லக்ஷக்கணக்கான கூரிய கொடிய அம்புகளை விடுவானாயினான்: ஒப்பற்றதலைவனாகிய ஸ்ரீராமன், அவைகளை அறுப்பவனானான்: துண்டிக்கப்பட்டனவான அம்புகள்,—நெருப்பைச் சிந்தினவையாய் (ச் சமுத்திரத்தை) நெருங்கி (அதன்)நீரைக் குடிக்கவே, அக்கடலினிடங்கள் (முதலிற்) சேறாகிப் பின்பு (ப் பொடியாகி) பிறகு மேடாயின; (எ - று.)—பி - ம்:—[1]ஆறாத்திறமறவோன். [2]துரப்பான், துரப்ப. [3]சிந்துவ. [4]ஆவன. [5]கடலே, கடறூன். (நஎஉ0)

ருச. **வில்லாற்சரந் [1]துரக்கின்றவற் குடனேமிடல் வெம்போர்**
**வல்லா[2]னெழு மழுத்தோமர மணித்தண்டிருப் புலக்கை**
**தொல்லார்[3]மிடல் வளைசக்கரஞ் சூலம்மிவை தொடக்கத்து**
**எல்லாநெடுங் [4]கரத்தாலெடுத் தெறிந்தான்செரு வறிந்தான்.**

(இ - ள்.) வலியகொடியபோரில் வல்லவனும் போர்முறைமையை யறிந்தவனுமாகிய இராவணன்,—வில்லினாலே சரத்தை வெளிவிடுபவனாகிய இராமனுக்கு எதிராக உடனே எழு,மழு,தோமரம்,அழகிய தண்டாயுதம், இருப்புலக்கை, மிகப்பழமைபொருந்திய வலிமையுடைய வளை, சக்கரம், சூலம் இவை முதலாகிய எல்லாப்படைக்கலங்களையும் (தனது) நீண்டகரத்தால் எடுத்தெறியலாயினன்; (எ - று.)—வளையென்று ஓர்படைக்கலமுண்டென்பது, இந்திரன் முடிமேல்வளையெறிந்தபடலம் முதலியவற்றாற் பெறப்படும். பி - ம்:—[1]துரக்கின்றவற்றிடையே. [2]மழுவெழுத், மழுவெழுந். [3]அயில்சுடர், அயில்வாள். [4]தடக்கையெடுத்து. (நஎஉக)

ருரு. **வேலாயிர மழுவாயிர மெழுவாயிரம் விசிகக்**
**கோலாயிரம் பிறவாயிர மொருகோல்படக் குறைவ**

காலாயின கனலாயின [1]வுருமாயின கதிய
சூலாயின [2]மழையன்னவன் றொடைபல்வகை தொடுக்க.

(இ - ள்.) கருக்கொண்ட மழையையொத்தவனாகிய ஸ்ரீராமன், காற்றின்தன்மையமைந்தனவும் கனலின்தன்மையமைந்தனவும் இடியின்தன்மையமைந்தனவுமான பலவகையான போக்குக்களைக்கொண்ட அம்புகளைத் தொடுத்து விடுகையில்,--(அவ்வம்புகளில்) ஒருஅம்புபட வேலாயிரங்களும், (ஓரம்புபட)மழுவாயிரங்களும், (ஓரம்புபட) எழுவாயிரங்களும், (ஓரம்புபட) விசிகமென்று சொல்லப்படுகின்ற ஆயிரம் அம்புகளும் (ஓரம்புபடப்)பிற (ஆயுதங்கள்) ஆயிரங்களும் துண்டப்படுவனவாயின; (எ - று.)

கோல் - அம்பு. கோல்என்பது தண்டாயுதமென்ற பொருளையுமுடையதனால் அப்பொருளை விலக்க, 'விசிகக்கோல்' என்றார். ஸ்ரீராமபாணங்களுள் ஒவ்வோரம்பினால் அரக்கனெய்த வேலாயிரம்முதலியவை குறைந்தன வென்க. பி-ம்:—[1]உருமாயினகதியின், எனலாயின கணியச். [2]மழையன்றொடைபலவாயினதொடுக்க. (௩எ௨௨)

௫௬. ஒத்துச்செரு விளைக்கின்றதொ ரளவின்றலை யுடனே,
பத்துச்சிலை யெடுத்தான்கணை தொடுத்தான்பல [1]முகிலாத்,
தொத்துப்[2]படு நெடுந்தாரைகள் சொரிந்தாலெனத் [3]துரந்தான்,
[4]குத்துக்கொடு நெடுங்கோல்படு களிறுமெனக் கொதித்தான்.

(இ - ள்.) (இவ்வாறு இருவரும்)ஒத்துப் போர்புரிகின்ற சமயத்தில், (இராமபாணம் தன்மீதுபொத்துவதனால்) கொடிய நெடிய குத்துக்கோல் படப்பெற்ற களிறுஎன்னும்படி கொதித்தவனான இராவணன், உடனே பத்துச்சிலைகளையெடுத்துக் கணைகளைத் தொடுத்தவனாய், பலமுகில்களுமாக [எழுமேகங்களுஞ்சேர்ந்து] தொகுதிப்பட நெடியதாரைகளைச் சொரிந்தாற்போல வெளிச்செலுத்தினான்; (எ - று.)

இருபதுகைகளையுடையவனாதலால், பத்துக்கைகளாற் பத்து வில்லை யெடுத்துப் பத்துக்கைகளால் அம்புதொடுத்து விடுத்தனன் இராவண னென்க. பி - ம்:---[1]முகில்போற். [2]பட, படும். [3]துறந்தான். [4]குத்துப்படு. (௩எ௨௩)

௫௭. ஈசன்விடு சரமாரியு மெரி[1]சிந்துறு தறுகண்
நீசன்விடு [2]சரமாரியு மிடையெங்கணு நெருங்கத்
தேசம்[3]முத லைம்பூதமுஞ் [4]செருக்கண்டன செருக்கிக்
[5]கூசம்மயிர் பொடிப்[6]பற்றன [7]வனலாயின கொடிய.

(இ - ள்.) தலைவனாகிய ஸ்ரீராமன்விடுகின்ற சரமாரியும் எரியைச் சிந்துகின்ற அஞ்சாமையையுடைய நீசனான இராவணன் விடுகின்ற சரமாரியும்,---இடையே எல்லாவிடங்களிலும் நெருங்குதலால், --(அப்பெரும்)போரைக்கண்டனவான நிலம்முதலிய ஐம்பூதங்களும்,—கொடிய அனற்படப்பெற்றனவாய், உற்சாகங்கொண்டு மயிர்க்கூச்சுப் பொடித்தலை அடியோடுநீங்கின; (எ - று.)

உற்சாகத்தோடு ராமராவணயுத்தத்தைக் கண்டுகொண்டிருந்த ஐம்பூதங்களும், கணைநெருக்கத்தால் நெருப்புத்தோன்றி எரிக்கத் தொடங்கவே அவ்வுற்சாகங் குன்றலாயின என்றபடி. ஐம்பூதம்-அவற்றிற்குஉரிய தேவதைகளைக் காட்டுமென்னலாம். தேஜம் - வடசொல்: இனி, தேஜஸ்என்பதன் விகாரமெனக்கொண்டு, அக்கினியென்பாருமுளர். பி-ம்:—[1]சிந்துவ. [2]கணைமாரியும். [3]முதலிய. [4]செருக்கண்டனர்நெருக்கக், செறிவுற்றனசெருவிற். [5]கூசி. [6]உற்றன, உற்றென, உற்றனர். [7]மனம்வானவர்குலையா, மனம்வானவர்குலைந்தார், அனலாயினகுலைய ()

வேறு.

ருஅ.—அரக்கன்தேர் வானத்தி லெழுதல்.

மந்தரக் கிரியென மருந்து மாருதி
தந்தவப் பொருப்பெனப் [1]புரங்க டாமெனக்
கந்தருப் பநகர் விசும்பிற் [2]கண்டன
அந்தரத் [3]தெழுந்ததவ் வரக்கன் றேரரோ.

(இ - ள்.) (அப்போது) அந்தஇராவணனுடைய தேரானது,— வானத்திற்காணப்பட்ட அப்படிப்பட்ட மந்தரக்கிரிபோலவும், மாருதி (இறந்தவரைப்பிழைப்பிக்கும்)மருந்துக்காகக்கொணர்ந்த அந்தச்சஞ்சீவிமலைபோலவும், திரிபுரம்போலவும்,கந்தருவநகரம்போலவும், வானத்தில் எழுந்து தோன்றிற்று; (எ - று.)

முப்புரமென்றாராயினும்,தேரொன்றுஆதலால், திரிபுரங்களில் ஒவ்வொன்றும் இத்தேர்க்கு உவமை யென்க. கருடபகவான் பாற்கடலைக் கடையுமாறு மந்தரமலையை வானவழியாகக்கொணர்ந்து அப்பாற்கடலில் வீசினனென்பது, முதலடியில் அறியத்தக்கது. கந்தருப்பநகர்=கந்தர்வநகரம்: மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் முதலிய அமைந்துள்ள நகரம்போல ஆகாயத்தில் தோன்றி மறையுந் தன்மையதென்பர். கந்தருப்பநகர்என்பதன்பின், 'என' என்று ஒருசொல் வருவித்துக்கொள்ளப்பட்டது. இனி, [2]கண்டன என்பதை ஒருசொல்லாகவேகொண்டு, மந்தரம்முதலிய பல உவமையாகவந்ததனாற் பன்மை கூறியதென்றலும் ஒன்று. [2]'கண்டென' என்ற பாடத்தைக்கொண்டு, கந்தரும்பநகர் விசும்பிற் கண்டாற்போலவும் என்று உரைத்தலும் ஒன்று. கண்ட அன்னஎன்பவை - கண்டனஎனத்தொக்கது: பி-ம்:— [1]புரங்கண்டாமென, புரங்கடாஎன்ன, படங்கண்டாமென. [3]எழுந்தன.

ருகூ.—இராமன் காணகையில்தானே, இராவணன்விடுத்த சரத்தால் வானரசேனை யொழிதல்.

எழுந்துயர் தேர்மிசை யிலங்கைக் காவலன்
[1]பொழிந்தன சரமழை யுருவிப் [2]போதலால்
ஒழிந்தது மொழிகில தென்ன வொல்லெனக்
கழிந்தது கவிக்குல மிராமன் காணவே.

(இ - ள்.) (வானத்து) எழுந்து ஓங்கிய தேரின்மேலிருந்து இலங்காதிபதியாகிய இராவணன் பொழிந்தனவான சரமழை (வானரசேனைகளினுடலை) யுருவிப்போதலால், இராமன்காண்கையில் தானேயொழிந்ததும் ஒழியாததுமாயிற்றென்னும்படி விரைவாக வானரக்கூட்டம் உயிர்நீங்குவதாயிற்று; (எ - று.)—பி - ம்:—1பொழிந்தனன். 2போகலால். (௩௭௨௬)

௬0.—இராமன் மாதலியைநோக்கி'தேரை வானத்திலெழவிடுக'எனல்.

முழு1விடு தோளொடு 2முடியும் 3பஃறலை
விழ4விடு வேனினி விசும்பு 5சேமமா
மழவிடை யனையநம் படைஞர் மாண்டனர்
எழவிடு தேரையென் றிராமன் கூறினான்.

(இ - ள்.) (அதுகண்ட) இராமன், '(இராவணனம்புகளால்)இளங்காளையைப்போன்ற நம்படைஞர் மாண்டனர்: (ஆகவே, நான்) இனி (அந்த இராவணனுடைய) முழுவையொத்த தோளுடனே கிரீடமணிந்த பலதலைகளையும் விழவிடுவேன்: விசும்பிற் சேமமாக எழும்படி தேரை விடுக'என்று (மாதலியினிடம்) கூறினான்; (எ - று.)--- முடிப் பஃறலையும் என மாறுக. பி - ம்:—1அடு. 2முடியப். 3வன்றலை. 4விடுகுவன். 5சேமமோ. (௩௭௨௭)

௬௧.—மாதலி உடன்பட, இராமபிரானேறிய தேரும் வானத்துச் செல்லுதல்.

அந்துசெய் குவெனென 1வறிந்த மாதலி
உந்தினன் றேரெனு மூழிக் காற்றினை
இந்துமண் டிலத்தின்மே லிரவி மண்டிலம்
வந்தென 2வந்ததம் மானத் தேரரோ.

(இ - ள்.) அவ்வாறே செய்வேனென்று (இராமபிரான்கருத்தை) அறிந்துகூறிய மாதலியானவன், தேரென்ற யுகாந்தகாலத்துக்காற்றினைச் செலுத்தினான்; அந்தப்பெருமைபெற்றதேரானது, இந்துமண்டலத்தின்மீது சூரியமண்டலம்வந்தாற்போல வந்தது; (எ - று.)— அரோ - ஈற்றசை.

இந்துமண்டலத்தின்மேலிரவிமண்டலம் வருதல் - இல்பொருளுவமை. சந்திரமண்டலத்துக்குமேலே அத்தேர் சென்றதால், இவ்வாறு வருணித்தார். இனி, இராவணனுடையதேரினும் ஒளிமிஞ்சிய ஸ்ரீராமன்தேர் அவ்விராவணன்தேருக்குமேலே சென்றதனால் இவ்வாறுவருணித்ததென்றலும் ஒன்று. அந்துஎன்பது கன்னடபாஷையிலிருந்து தமிழில்வந்து வழங்கிய திசைச்சொலென்பார். பி - ம்:—1அறிந்து. 2வந்தது. (௩௭௨௮)

௬௨.—மூன்றுகவிகள் - இருவர்தேரும் சாரிகைதிரிதலைத்தெரிவிக்கும்.

இரிந்தன மழைக்குல 1மிழுகித் திக்கெலாம்
2உரிந்தன வுடுக்குல முதிர்ந்து சிந்தின

நெரிந்தன நெடுவரைக் குடுமி [3]நேர்முறை
திரிந்தன சாரிகை தேருந் தேருமே.

(இ - ள்.) (இராவணன்) தேரும் (இராமன்) தேரும் (ஆகியஇரண்டும்),—நேரானமுறைமையிற் சாரிகை திரிந்தன; (அந்தவிசையினால்) மேகத்தொகுதிகள் திக்குக்களிலெல்லாம் பரந்து நிலைகெட்டோடின; நட்சத்திரக்கூட்டங்கள் உரிந்தனவாய்ப் பொடிப்பொடியாகச்சிந்தலாயின; நெடியமலைகளின் சிகரங்கள் நெரிந்தன; (எ - று.) நேர்முறை - வஞ்சனையில்லாத நிலை. இழுகுதல்-பூசுதல். பி - ம்:—[1]இழுகு. [2]முரிந்தன. [3]நேர்வரை. (௩எ௨௧)

சு௩. வலம்வரு மிடம்வரு மறுகி [1]வாளொடு
நிலம்வரு [2]மிடம்வல [3]நிமிரும் வேலையும்
அலம்வருங் குலவரை யனைத்து மண்டமும்
சலம்வருங் [4]குயமகன் திகிரித் [5]தன்மைபோல்.

(இ-ள்.) (அத்தேர்களிரண்டும்),-வலம்வரும்:இடம்வரும்: கலங்கி, வானினுடனே நிலத்து வரும்:இடமாகவும் வலமாகவும் ஓங்கும்: (அதனால்), கடலும் குலவரையாவும் அண்டங்களும், சுற்றுந்தன்மையைக் கொண்ட குயவனுடைய சக்கரத்தின்தன்மைபோலச் சுழலமிடும்; (எ-று.)—பி - ம்:—[1]வான்வரும். [2]இடம்வரும். [3]நீருண், நெடிய, நீரும். [4]குயவன. [5]தன்மையே. (௩எ௩0)

சு௪. எழும்புக [1]ழிராமன்றே ரரக்கன் றேரிதென்று
உழுந்துருள் [2]பொழுதினெவ் வுலகுஞ் சேர்வன
தழும்பிய தேவருந் தெரிவு[3]தந்திலர்
[4]பிழம்பின திரிவன வென்னும் பெற்றியார்.

(இ - ள்.) உழுந்துருள்பொழுதுக்குள் எவ்வுலகமுஞ்சேர்வனவாகிய அத்தேர்களைக்குறித்து, 'மிக்கெழுகின்றபுகழையுடைய இராமனுடைய தேராகும் (இது), இது அரக்கனுடையதேராகும்'என்று பிரித்துணர்தலைப் பழகியதேவரும் அறியமுடியாதவராயினர்: (பின்னை அவர்கள் என்ன உணர்ந்தாரென்னில்,—இருதேர்களும்தனித்தனி) பிழம்பையுடையனவென்றும், திரிகின்றனஎன்று உணருந்தன்மையையுடையரானார்கள்; (எ - று.)

இராமராவணர்களின் தேர்ப்பிழம்பும் அவை திரிகின்றனவுமே தேவர்களாலும் உணரக்கூடியனவாயினதன்றி, 'இன்னது ஸ்ரீராமன் தேர் இன்னது இராவணன் தேர்'என்று அத்தேவர்களாலும் அறியமுடியவில்லையென்பதாம். பி - ம்:—[1]இறைவன். [2]பொழுதினின், போதினும். [3]தாங்கிலர். [4]பிழம்பனநிரிவன, பிழம்புளதிரிவன, பிழம்புளதீவினை. (௩எ௩௧)

சு௫.—தேர்களின்சாரிகைவிசையால் நிகழ்ந்தவை.

உக்கிலா [1]வுடுக்களு [2]முருள்க டாக்கலின்
நெக்கிலா மலைகளு நெருப்புச் சிந்தலின்

வக்கிலாத் திசைகளு முதிரம் வாய்வழிக்
கக்கிலா வுயிர்களு மில்லைக் காண்பன.

(இ - ள்.) சக்கரங்கள் தாக்குதலால் சிந்திவிழாத நட்சத்திரங்களும், (தாக்கும்போது) நெருப்புச்சிந்துதலாற் நெகுதலில்லாத மலைகளும், பிளவுபடாத திசைகளும், உதிரத்தை வாயின்வழியாகக் கக்காத உயிர்களும் காணக்கூடியனவாய் (எவையும்) இல்லை; (எ - று.)—வக்குதல்-எரிதலென்பாருமுளர். பி - ம்:—[1]உயிர்களும். [2]உருக்கடாக்கலின், உருள்கடாக்கலில். (௩௭௩௨)

௬௬.—இதுமுதல் நான்குகவிகள் - அத்தேர்களின்விசையைத் தெரிவிப்பன.

இந்திர னுலகத்தா ரென்ப ரென்றவர்
சந்திர னுலகத்தா ரென்பர் தாமரை
அந்தண னுலகத்தா ரென்ப ரல்லரால்
மந்தர மலையின [1]ரென்பர் [2]வானவர்.

(இ - ள்.) (போர்காணுமாறுகூடியிருந்த) தேவர்கள்,—(இராமராவணர்கள் தம்தேர்களுடனே) இந்திரனுலகத்திலுள்ளாரென்பர்: அங்ஙனம்கூறினவரே, சந்திரனுலகத்தா ரென்பர்: (அன்றியும்), தாமரையில்வீற்றிருக்கின்ற அந்தணனாகிய பிரமனுடைய உலகத்தாரென்பர்: (அங்ஙனம்கூறினவரே, ஆங்குஉள்ளார்) அல்லர்: மந்தரமலையிலுள்ளாரென்பர்; (எ-று.) —இச்செய்யுள் சிலபிரதியி லில்லை. பி-ம்:—[1]என்ப. [2]தானவர். (௩௭௩௩)

௬௭. பாற்கட [1]னடுவின ரென்பர் பல்வகை
[2]மாற்கட லினுக்குமவ் [3]வரம்பி னரென்பர்
மேற்கட லாரென்பர் கிழக்கு ளாரென்பர்
[4]ஆர்க்கிடை [5]யுருமென்ப [6]ரறிந்த வானவர்.

(இ - ள்.) பேரறிவுபடைத்த தேவர்கள், — (இராமராவணர்களைப்பற்றி), பாற்கடலின்நடுவிலேயுள்ளா ரென்பர்: பலவகை [எழுவகை]யான பெரிய கடலுக்கும் அப்பாற்பட்ட எல்லையிலுள்ளா ரென்பர்: மேற்கடலிடத்துள்ளா ரென்பர்: கிழக்கேயுள்ளா ரென்பர்; (அவர்களுடைய)தேர்ச்சக்கரத்தினிலைவடிவானஉறுப்பிலே(உள்ளது)என்பர்.

மனிதரறிவினும் தேவர்களின்அறிவு மிக்கதாதலால், அவரை 'அறிந்தவானவர்' என்றார். ஆர்க்கடையுருமென்ப ரென்றது - அவர்கள் மேகமண்டலத்தின ரென்று கூறியவாறு: ஆர்க்கடை—ஆரென்றுசொல்லப்படுகின்ற இலைவடிவான சக்கரத்தினுறுப்பிலென்க. பி - ம்:—[1]நடுவேணோர், நடுவணர், நடுவேண. [2]மாற்கடலேழுக்குமவ். [3]வரம்பிலார். [4]ஆர்ப்பிடை. [5]இதுவென்பர். [6]அறியும். (௩௭௩௪)

௬௮. மீண்டன வோவென்பர் [1]விசும்பு விண்டுகக்
கீண்டன வோவென்பர் [2]கீழ வோவென்பர்

பூண்டன புரவியோ புதிய காற்றென்பர்
மாண்டன வுலகமென் [3]றணங்கும் வாயினர்.

(இ-ள்.) (இன்று)உலகங்கள் இறுதியடைந்ததாமென்று வருந்திக் கூறும்வாயையுடையவரான தேவர்முதலியோர்,—(தேர்கள்) திரும்பியனவோ என்பர்; விசும்பு விண்டுசிந்தும்படி கீண்டனவோ என்பர்; பூமியிலுள்ளனவோஎன்பர்: (தேரிற்) பூட்டப்பட்டுள்ளவை குதிரைகளோ? [அல்ல]: புதியதன்மையுள்ள காற்றுக்களேயென்பர்; (எ-று.)

'புரவியோ' என்றஓகாரம்,வினவகையால் எதிர்மறையுணர்த்திற்று. மூன்றாமடி - குதிரைகளிடத்து அத்தன்மையைமறுத்துக் காற்றாகக் கூறப்பட்டமையால், அவநுதியணி யாகும். பி - ம்:—[1]விசும்பை. [2]கீழுநவோ. [3]உணரும், உரைக்கும். (கூஎகூடு)

கூகூ. ஏழுடைக் கடலினுந் தீவொ ரேழினும்
ஏழுடை மலையினு [1]முலகொ ரேழினுஞ்
சூழுடை யண்டத்தின் [2]சுவர்க ளெல்லையா
[3]ஊழிய காற்றெனத் திரிந்த [4]வோவில.

(இ - ள்.) ஏழுகடலிலும் ஓரேழுதீவுகளிலும் ஏழுமலையிலும் உலகு ஒரெழிலும் சூழ்தலைக்கொண்ட இவ்வண்டத்தின் சுவர்ப்புறங்கள் எல்லையாக, ஊழிக்காலத்துத்தோன்றிய காற்றுப்போல(அத்தேர்கள்) ஒழிவில்லாதனவாய்த் திரிந்தன; (எ - று.)

'புரவியோபுதியகாற்றென்பர்' என்றதற்குஏற்ப, இங்கு'காற்று'என்றது-தேர்களிற்பூட்டிய குதிரைகளை யென்றல் ஏற்கும். ஊழிய - குறிப்புப்பெயரெச்சம். பி-ம்:—[1]உலகமேழினும். [2]சுவரினெல்லையே. [3]ஊழியிற், ஊழியக். [4]ஓய்வில. (கூஎகூ-கூ)

எ0.—இராவணன் படைக்கலம்பொழிதல்.

உடைக்கட லேழினு [1]முலக மேழினும்
இடைப்படு தீவினு மலையொ ரேழினும்
அடைக்கலப் பொருளென [2]வரக்கன் வீசிய
படைக்கல மழைபடு [3]துளியின் பான்மைய.

(இ - ள்.) (பூமிக்கு) உடையாகவுள்ள கடல்களேழிலும் உலகம் எழிலும் பூமியினிடையேயுள்ள (எழு) தீவுகளிலும் மலையோரேழிலும் (வைத்திருந்த) அடைக்கலப்பொருளைப்போல அரக்கன் எடுத்துவீசிய படைக்கலங்கள், (மழைபெய்கையில்) வீழ்கின்ற மழைத்துளியின் தன்மையையுடையனவாயின; (எ - று.)

அடைக்கலப்பொருள்-ஆபத்துக்காலத்துஉதவும்படி வைத்துள்ள பொருள். இதுவரையில் வழங்காது சேமித்துவைத்திருந்த படைக்கலங்களை மழைபோலப்பொழிந்தனன், இராவணனென்றபடி. அருமையானபடைக்கலங்களை வீசியது, அடைக்கலப்பொருளையெடுத்து வீசினாற்போலு மென்றார். பி-ம்:—[1]உலகொரேழினும். [2]அரக்கர். [3]துளியின்பன்மைய, துளியின்பன்மையால். (கூஎகூஎ)

௭௧.—இராவணன்விடுத்த படைக்கலங்களை இராமபிரான் அறுத்தொழித்தல்.

ஒறுத்துல கனைத்தையு [1]முழலு மோட்டிடை
[2]இறுத்தில விராவண னெறிந்த வெய்தன
அறுத்ததுந் தடுத்தது மன்றி யாரியன்
[3]செறுத்தொரு தொழிலிடைச் செய்த தில்லையால்.

(இ - ள்.) இராவணனெறிந்தனவான படைக்கலங்களும் எய்தனவான அம்புகளும், தங்காதனவாய், உலகுஎல்லாவற்றையும் அழித்து ஓட்டத்தோடு சஞ்சரிக்கும்: இராமபிரான் (அந்தஎறிந்தனவற்றையும் எய்தனவற்றையும்) அறுத்ததுந் தடுத்தது மன்றி, இடையே கோபித்து ஒருதொழிலையும் செய்ததில்லை; (எ - று.)

இராவணன் விடுத்தவற்றைத் தடுப்பதற்கே இராமபிரானுக்குப் போது சரியாயிருந்த தென்றபடி. ஓட்டு - முதனிலைதிரிந்ததொழிற் பெயர். பி - ம்:—[1]உழன்றும். [2]இறுத்திலன். [3]செறித்திடையொரு தொழில், செறுத்தொடையத்தொழில். (௩௭௩௮)

௭௨.—பலவிடத்துந் திரிந்த தேர் இலங்கையையணுகுதல்.

**விலங்கலும் வேலையு மேலுங் கீழரும்**
**அலங்கொளி [1]திரிதரு முலக னைத்தையுங்**
**கலங்குறத் திரிந்ததோ [2]ரூழிக் காலக்காற்று**
**[3]இலங்கையை யெய்தின விமைப்பின் [4]வந்ததே.**

(இ-ள்.)மலைகளிலும், கடல்களிலும், மேலுலகங்களிலும், கீழுலகங்களிலும்,விளங்குகின்ற ஒளிவடிவானசந்திராதித்தியர் திரிகின்ற உலகம் எல்லாவற்றிலும் கலங்குதலுண்டாம்படி திரிந்ததாகிய ஓரூழிக்காலக் காற்று இலங்கையை யடையும்பொருட்டு இமைப்பளவிற்குள் வந்தடைந்தது; (எ - று.)

ஊழிக்காலக்காற்று, தேரைக்குறிக்குமென்பர்: ஆயினும்,குதிரையைக்குறிக்கு மென்றலே பொருந்து மென்பது முன்னர்க்கூறப்பட்டது. மேற்செய்யுளிலும் 'தேர்ப்பரி' என வருதல் காண்க. தேரை சாதியொருமையாக, 'வந்தது'என்றார். அலங்கொளி - அன்மொழித்தொகை. பி - ம்:—[1]தெரிதலும். [2]ஊழிக்காற்றென. [3]இலங்கையிற்போந்தன, இலங்கையையெய்திய. [4]வந்தரோ. (௩௭௩௯)

௭௩.—தேர்ப்பரிகளின் திறம்.

**உய்த்துல கனைத்தினு [1]முழன்ற சாரிகை**
**[2]மொய்த்தது கடலிடை மணலின் [3]மும்மைசால்**
**வித்தகர் கடவிய விசயத் [4]தேர்ப்பரி**
**[5]எய்த்தில வியர்த்தில விரண்டு [6]பாலவும்.**

(இ - ள்.) திறமையுள்ளதேர்ப்பாகர் தூண்டிச்செலுத்திய (இராமராவணரென்ற) இருபாலாருடையனவுமானவெற்றிபொருந்திய தேர்ப்பரிகள்,—செலுத்தப்பட்டு, கடலினிடத்துநெருங்கியுள்ள மணலினும்

மும்மடங்குஅதிகமாக உலகமெல்லாவற்றிலும் சாரிகைதிரிந்தன: (ஆயி னும்), இளைப்படைந்தில: உடல்வேர்த்தனவுமல்ல:(எ - று.)--கடலிடை மொய்த்தாகிய மணலென்க. பி - ம்:---[1]முயன்ற. [2]மொய்த்துயர், மொ ய்த்துள. [3]மும்மையால், மும்மைய. [4]திண்பரி.[5]எய்த்ததினுழைத்தில, எய்த்திலவுயிர்த்தில. [6]பாலுமே. (௩எ௪0)

எ௪.---இராமனேறிய இரதத்துஇடிகொடியை
இராவணன் அறுத்துச்சிந்துதல்.

இந்திரன் றேரின்[1]மே லுயர்ந்த [2]வெந்தொழில்
[3]உந்தரும் பெருவலி யுருமி னேற்றினைச்
சந்திர [4]னனையதோர் சரத்தி னற்றரைச்
சிந்தின னிராவண னெரியுஞ் [5]செங்கணான்.

(இ - ள்.) (அப்போது) நெருப்புத்தோன்றுகின்ற செந்நிறக்கண் களையுடையவனான இராவணன்,---இந்திரனனுப்பியதேரின்மே லுயர்ந் துள்ளதும் கொடுந்தொழிலால் தள்ளுதற்கு அரியதுமான மிக்கவலியுள் ள இடியேற்றின்கொடியை, சந்திரனையொத்ததோர் சரத்தினால் தரையி லே சிந்தினான்; (எ-று.)---சந்திரனனையதோர் சரம்-அர்த்தசந்திரபாண மென்க.பி-ம்:--[1]மீது.[2]எங்தெழில்.[3]உய்ந்தரும்.[4]அன்னது.[5]சிந்தையான்.

எ௫.---இடிக்கொடி கடலில்விழுதல்.

[1]சாய்ந்தவல் [2]லுருமுபோ [3]யரவத் தாழ்கடற்
பாய்ந்த[4]வல் லுருமென முழங்கிப் பாய்தலும்
காய்ந்தபே [5]ரிரும்பின்வன் கட்டி காலுறத்
தோய்ந்தநீ ராமெனச் சுருங்கிற் றாழியே.

(இ - ள்.) (தரையில்)வீழ்ந்த வலிய இடிக்கொடிபோய் ஒலியை யுடைய ஆழ்ந்த கடலிலே வலியஇடிபாய்ந்ததுபோல முழங்கிக்கொ ண்டு பாய்தலும், காய்ந்த பெரிய வலிய இரும்பின்கட்டியைப் பொருந் தத் தோய்ந்த நீர்போல கடலும் வற்றியது; (எ-று.)---காலுற,கால்-தமி ழுபசருக்கம். பி-ம்:—[1]சாய்ந்தபல், காய்ந்தவல். [2]உருமும். [3]உவரித் தாழ், உவரிக்கார்க். [4]வெங்கனலெனமுருங்கிப், வெங்கனலெனமு டுகிப், வெங்கனலெனமுழக்கப். [5]இரும்பினைக்கட்டிக், இரும்பினன் கட்டிக். (௩எ௪௨)

எ௬.---இராமன் தேர்க்குதிரைகளின்மீதும் மாதலியின்மீதும்
கணைத்தொகுதிகளை இராவணன் விடுத்தல்.

[1]எழுத்தெனச் சிதைவிலா விராமன் றேர்ப்பரிக்
[2]குழுக்களைக் கூர்ங்கணைக் குப்பை [3]யாக்கினேர்
[4]வழுத்தரு மாதலி வயிர மார்பிடை
அழுத்தினன் [5]கொடுஞ்சர மாறு டாறரோ.

(இ - ள்.) (அப்போது இராவணன்),---சப்தப்பிரமம்போல அழி வில்லாதனவான இராமனுடைய தேரிற்பூட்டிய குதிரைத்தொகுதி களின்மீது கூரிய அம்புத்தொகுதிகளைப் பிரயோகித்து, நேரேயுள்ள

துதிப்பதற்குஅரிய [பெரும்புகழ்படைத்த] மாதலியின் வயிரம்போன்ற [உறுதியான] மார்பின்நடுவிற் கொடிய பன்னிரண்டு அம்புகளை அழுந்துமாறு செலுத்தினான்; (எ - று.)---பி - ம்:---[1]எழுக்கெனச். [2]குழுத்தனை. [3]ஆக்கினான். [4]வழுத்தலில். [5]வெஞ்சரம் (௩௭௪௩)

எஎ.—மாதலியின்மார்பில் இராவணன் அம்புசெலுத்தியது கண்டு, ஸ்ரீராமன் மிகவும் வருந்துதல்.

நீனிற நிருதர்கோ னெய்த [1]நீதியின்
சால்புடை மாதலி மார்பிற் றைத்தன
[2]கோலினு மிலக்குவன் கோல [3]மார்பின்விழ்
வேலினும் [4]வெம்மையே [5]விளைந்த [6]வீரர்க்கு.

(இ - ள்.) கருநிறமுள்ள அரக்கர்தலைவனான இராவணன் எய்தவையாய்,நீதியோடுமேன்மைக்குணமுடைய மாதலியின்மார்பில் தைத்தனவான அம்புகளினாலும், ஸ்ரீராமனுக்கு, --- இலக்குமணனுடைய அழகியமார்பிற் பாய்ந்ததான வேலைக்காட்டிலும் வெம்மையே விளைந்தன; (எ-று.)

இலட்சுமணனுடையமார்பில் வேல்தைத்தபோது எவ்வளவுவருத்தம் உண்டாயிற்றோ அதனினும்மிகுதியாக வருத்தம் மாதலிமார்பிற் றைத்த அம்புகளினால், ஸ்ரீராமபிரானுக் குண்டாயிற் றென்றபடி: இதனால், ஸ்ரீராமன் தன்னையடைந்தார்திறத்துக் கருணையைக் காட்டுபவனென்பதை விளக்கிய வாறு. பி-ம்:--[1]நீதியிற். [2]கோலினை. [3]மார்பின. [4]வெம்மையை. [5]விளைத்த. [6]வீரற்கும். இசசெய்யுள் அச்சிட்டபிரதிகளிலும் சிலஏட்டுப்பிரதிகளிலும் "வானரத்தலைவனும்" (அஉ) என்பதன்பின்இருப்பினும், பலஏட்டுப்பிரதிகளில் இங்கு இருப்பதாலும், பொருட்பொருத்தமிருத்தலாலும் இங்குப் பதிப்பிக்கப்பட்டது. ()

எஅ.—இராமன் இராவணனம்புகளினால் மறைபடுதல்.

மண்டில வரிசிலை [1]வான [2]வில்லொடு
[3]துண்டவெண் பிறையெனத் [4]தோன்றத் தூவிய
[5]உண்டை [6]வெங் கடுங்கணை யொருங்கு மூடலாற்
கண்டில ரிராமனை யிமைப்பில் [7]கண்ணினார்.

(இ - ள்.) மண்டிலமாகவளைத்த கட்டமைந்த (இராவணனுடைய) வில்லானது இந்திரதனுசுபோலவும் துண்டுபட்ட வெள்ளியபிறைச்சந்திரனைப்போலவும் தோன்றிக்கொண்டிருக்க, (அந்த வில்லினின்றும்) தூவிய உண்டையான மிகக்கொடியஅம்புகள் ஒருசேர மூடுதலால், இமைப்பில்லாதகண்ணையுடையவர்களான தேவர்களும் இராமபிரானைக் காணமாட்டாதவராயினர்; (எ - று.)—பி-ம்:—[1]மான. [2]வில்லொரு, வில்லொடும். [3]துண்டவன். [4]தோன்றறூவிய. [5]உண்ட. [6]வெங்கணையவை. [7]கண்ணினான். (௩௭௪௫)

எசு.—இதுமுதல் ஐந்துகவிகள் - தேவர்முதலியோர் அப்போதடைந்த நிலையைத் தெரிவிக்கும்.

தோற்றன னேயினி யென்னுந் தோற்றத்தால்
[1]ஆற்றல்சா லமரரு [2]மச்ச மெய்தினார்
[3]வேற்றவ ரார்த்தனர் மேலுங் [4]கீழுமாய்க்
[5]காற்றியக் கற்றது கலங்கிற் [6]றண்டமே.

(இ-ள்.) (அறிவில்) வலிமையமைந்த தேவர்களும்,—(அப்போது) இனி (இராமபிரான்) தோற்றேவிட்டா னென்கின்ற எண்ணத்தினால் அச்சமடைந்தனர்: பகைவர்களாகிய அரக்கர்(மகிழ்ந்து)ஆரவாரஞ்செய்தார்கள்: காற்றானது மேலும் கீழும் இயங்குதலொழிந்தது;இவ்வண்டமே நிலைகலங்கிற்று; (எ-று.)—பி-ம்:—[1]ஆற்றலார், ஆற்றலர். [2]அச்சத் தாழ்ந்தனர். [3]வேற்றலரார்த்தனர், எர்த்தனதாலற. [4]கீழரும். [5]காற்றது கனலது. [6]உம்பரே. (௯எசௌ)

அ0. அங்கியுந் தன்னொளி யடங்கிற் [1]றார்கலி
[2]பொங்கில [3]திமிர்த்தன விசும்பிற் [4]போக்கில
வெங்கதிர் [5]தண்கதிர் விலங்கி மீண்டன
[6]மங்குலி னெடும்[7]புயல் மழை[8]வ றந்ததால்.

(இ - ள்.) அக்கினியும் தன்னொளி குறையப்பெற்றது; கடல்களும் (அலைகளினாற்) கிளர்தலொழிந்து அசைவற்றுக்கிடந்தன; சூரியசந்திரர்கள் வானத்தில் இயங்குதலொழிந்து விலகி அப்பாற்சென்றன; மேகத்திற் பெருமேகம் மழை வறண்டிட்டது; (எ-று.)--ஆர்கலி-வினைத்தொகையன்மொழி. பி-ம்:--[1]ஆதலின். [2]பொங்கின,பொங்கலபொங்கியது. [3]அமர்ந்தன. [4]போகில. [5]இரவியும். [6]மங்குவ. [7]புனல். [8]தழுந்ததால். (௯எசஎ)

அக. திசைநிலை கடகரி செருக்குச் சிந்தின
[1]அசைவில வேலைக [2]ளார்க்க வஞ்சின
[3]விசையொடு [4]மேகத்தை [5]நெருக்கி [6]யேறின
குசையுறு மேருவுங் குலுக்க முற்றதே.

(இ - ள்.) திக்குக்களில் நிலையாகவுள்ள மதயானைகளெட்டும், (தமது) செருக்கு ஒழிந்தன; கடல்கள், அசைதலில்லாதனவாய் ஒலிசெய்வதற்கும் அஞ்சின; (இராவணனெய்தஅம்புகள்), விசையுடனே மேகத்தை நெருக்கி யேறின; நாணியையுடையமேருவும் சலித்தலை அடைந்தது; (எ - று.)

கீழ்ச்செய்யுளில் கடல் கிளர்தலில்லாது தம்பித்திருந்தமையைக் கூறினார்: இங்கு ஆர்க்க அஞ்சினமையைக் கூறினா ரெனவேறுபாடு காண்க. குசை-குசம்: கடிவாளக்கயிறு: இலக்கணையால், நாணியைக் காட்டிற்று. சிவபிரானுக்கு மேருவில்லா யமைந்தபோது நாணியைப் பெற்றிருந்தமை காண்க. இனி, குசை - குஜம்என்பதன்விகார மெனக் கொண்டு, மரங்களையுடைய மேரு என்னவும் இடமுண்டு. குசை

[குபம் =] நீர் எனக்கொண்டு, குசையுறு மேகம்என இயைப்பினுமாம்: 'விசைகொடுவிசாகத்தை நெருக்கியேறினன் - குசனென...... உற்றதே' என்று பின்னிரண்டடிகளிற் பாடமானபோது - குசன் - அங்காரகன், விசாகத்தை—, நெருக்கி-ஆக்கிரமித்து, ஏறினனென்க: விசாகமென்பது-இட்சுவாகுவமிசத்தவரின் நட்சத்திர மாதலால், அதை அங்காரகன் ஆக்கிரமித்தால், இட்சுவாகுவமிசத்தார்க்குத் தீங்குநேருமென்க: இவ்விடத்து ஸ்ரீவால்மீகிபகவானும் "ஆக்ரம்யாங்காரகஸ் தஸ்தௌ-விஶாகா மபி சாம்பரே"என்றது காண்க. பி-ம்:--[1]அசைவிலா. [2]ஆர்ப்ப. [3]விசைகொடு. [4]விசாலத்தை, ஒகத்தை. [5]நெருங்க. [6]மேற்கொண்ட. ()

அஉ. வானரத் [1]தலைவனு மிளைய மைந்தனும்
[2]ஏனையத் தலைவனைக் [3]காண்கி லேமெனக்
கானகக் [4]கரியெனக் கலங்கி னார்கடல்
மீனெனக் கலங்கினார் [5]வீரர் வேறுளார்.

(இ - ள்.) வானரத்தலைவனான சுக்கிரீவனும்இளையபெருமாளும்,— மற்றையோரும், ('போர்க்களத்தில்) (நாம்) தலைவனான அவ்விராமபிரானைக் காணவல்லமை அற்றவராயினோம்'என்றுசொல்லி (த் தம் இனத்திற்குத்தலைமையான யானையரசைக் காணப்பெறாத)காட்டு யானைகள் போலக் கலங்கினார்கள்; மற்றுமுள்ள வீரர்கள், (திருவணைகட்டிய காலத்துக்) கடலிலுள்ள மீன்போலக் கலங்கினார்கள்:(எ - று.)— பி-ம்:—[1]தலைவரும். [2]யாமுனைத்தலைவனைக். [3]காண்கிலாரெனக். [4]கிரியெனக். [5]வீரர்மேலுள்ளார், அம்புவீய்ந்தநாள், ஆர்ப்புவீழ்ந்தநாள். ()

அ௩.---அப்போது இராமபிரான் இராவணன்மீது பலஅம்புகளையெய்து நோவச்செய்யத் தேவர்கள்தேறுதல்.

[1]எய்தன சரமெலா மிமைப்பின் [2]முந்துறக்
கொய்தன னகற்றிவெங் கோலின் கோவையால்
[3]நொய்தென வரக்கனை நெருங்க [4]நொந்தன
செய்தன னிராகவ னமரர் தேறினார்.

(இ - ள்.) (இராவணன்) எய்தனவானஅம்புகளையெல்லாம் இமைப்பொழுதிற்கும்முற்பட வெவ்விய சரத்தொகுதியாற் கொய்துபோக்கி, இராகவன், — விரைவாக (அம்புகள்) நெருங்குமாறு (விடுத்து) அவ்வரக்கன் மனம்நோவுதற்குஆனசெயலைச் செய்தான்: (அதனால்), தேவர்கள் தேறுதலடைந்தனர்; (எ-று.)—நொந்தன=நோவன: இயல்பினால்வந்த காலவழுவமைதி. பி-ம்:—[1]எய்ததற். [2]முன்னுறக். [3]நெய்தனன்விசும்பினைநிரப்பி, நெய்நனன்விசும்பினைநிரம்பி. [4]நேர்ந்தன, நேர்ந்தெனச். (௩எ௫0)

வேறு

அ௪.---இராவணன்விற்களையெல்லாம் ஸ்ரீராமன் இடையே தறைத்தல்.

[1]தூணுடை நிரைபுரை கரமவை தொறுமக்
[2]கோணுடை [3]மலைநிகர் சிலையிடை [4]குறையச்
[5]சேணுடை [6]நிகர்கணை சிதறின னுணர்வொடு
ஊனுடை யுயிர்தொறு [7]முறைவுறு மொருவன்.

(இ - ள்.) நல்லறிவோடு (தன்னை) உணருகையுடையரான ஞானிகளினிடத்தெல்லாம் (மனவுவப்போடு) உறைபவனான திருமாலின் அம்சமான ஸ்ரீராமன்;--தூண்களினுடைய வரிசையையொத்தனவான(பத்துக்)கைகளிலுங்கொண்டுள்ள அந்த வளைதலையுடைய மலைகளைநிகர்த்த விற்கள் இடையிலே துண்டுபடும்படி, வெகுதூரம் (செல்லுதலைக்) கொண்டனவாய்(த் தம்மைத் தாமே) நிகர்த்த அம்புகளைச் சிதறினன்; (எ-று)

எம்பெருமான் எல்லாப்பொருள்களிலும் எள்ளினுள் எண்ணெய் போல நீங்காது உறைகின்றானாலும், ஞானிகளின் ஆன்மாவினுள் மிக்கமனவுவப்போடு எழுந்தருளியிருக்கின்றானென்பது, நூற்கொள்கை. உபநிடதங்களில் பரம்பொருளை "அந்நம்" என்றுகூறியிருப்பதும், நம்மாழ்வார் "உண்ணுஞ்சோறு......கண்ணன்" என்று அருளிச்செய்திருப்பதும் இங்குக் காண்க. இச்செய்யுளிற் குற்றெழுத்துப்பயின்று வந்தது-குறுஞ்சீர்வண்ணம் எனப்படும்: மேலும் இது காண்க. பி-ம்:—[1]தூணிடை. [2]கோணிடை. [3]மலைநுகர். [4]குலையச். [5]சேணிடை. [6]நிமிர்கணை, நிமிரனச். [7]உணர்வுடை, முறையுறும். (௨எ௫க)

அ௫.—இராமபிரானுடையதேரிற் கருடன் கோடியாய்நிற்றல்.

படையுக விமையவர் பருவரல் கெடவந்து
இடையுறு [1]திசைதிசை யிறுகுற [2]விறைவன்
அடையுறு கொடிமிசை யணுகின னளவில்
கடையுக [3]முடிவெழு கடல்புரை கலுழன்.

(இ - ள்.) யுகாந்தகாலத்துப் பொங்கியெழுகின்ற அளவில்லாத கடல்போற்பெருந்தோற்றமுள்ள கருடன்,---(இராவணனுடைய) விற்படை குறைபடுகையில், இமையவரின் துன்பங்கெட (இவ்வுலகில்) வந்து, இடம் பொருந்திய பலதிசைகளும் (நிலைகெடாமல்) உறுதியாகத்தங்குதல்பொருந்த தலைவனாகிய ஸ்ரீராமனுடைய (தேரிற்) பொருந்தியுள்ள கொடிமீது அணுகிச்சேர்ந்தான்; (எ-று.) —இடித்துவசம் வீழ்ந்திட்டதனால், ஆங்குக்கருடன் வந்து தங்கினன். பி-ம்:—[1]சிறைதிசையிழுகுற, சிறைதிசையிருளுற. [2]இனைய. [3]முடியெழ. இச்செய்யுள் சிலபிரதியில் "திசையுறு" (அஎ)என்பதன்பின் உள்ளது. (௩எ௫௨)

அ௬.—இதுவும் அடுத்த கவியும் -
இராமபிரான் கணைதூவி அரக்கனுடைய கவசத்தை யூடுருவச்செய்து வீணைக்கொடியைத் தரைப்படுத்தியமையைத் தெரிவிக்கும்.

[1]கயில்விரி வறவரு கவசமு முருவிப்
[2]பயில்விரி குருதிகள் பருகிட வெயிலோடு
அயில்விரி சுடுகணை கடவின [3]னறிவின்
[4]துயில்வுழி யுணர்தரு சுடரொளி யொருவன்.

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) துயிலும்போதே (தன்)முற்றுணர்வினால்(யாவற்றையும்) அறியவல்ல பரஞ்சோதியாகிய ஒப்பற்றமுதற்கடவுள் [ஸ்ரீராமன்],—மூட்டுவாய் விரிதலில்லாமலுள்ள கவசத்தையும் இடையேதொளைத்துக் கொண்டு, (உடலிற்) பொருந்தியுள்ள மிக்க இரத்தத்தைப் பருகும்படி

ஒளியுடனே கூர்மைவிரிந்து சுடுகின்ற அம்புகளைச் செலுத்தினான்; (எ - று.)—பி - ம்:—[1]கயில்விரிவுறயரி, கயில்விரிவுறவரு, கயில்பிரிவறவுறக், கயில்விரிகடைபுணர். [2]பயில்வரு. [3]அறியும், அறிவுற்று. [4]உயிருடனெனவுறை, துயில்விரிவிழியுணர், துயில்பிரிவரியுணர். (௩௭௫௩)

௮௭. திசையுறு துகிலது செறிமழை சிதறும்
விசையுறு முகிழது விரிதரு சிரனொடு
இசையுறு கருவியி [1]னினிதுறை கொடியைத்
தசையுறு கணைகொடு [2]தரையுற விடலும்.

(இ - ள்.) திசையிற்பொருந்திய துகிலையுடையதும் நெருங்கிய மழையைச் சிதறவல்ல விசைபொருந்திய அரும்புபோன்ற உறுப்பையுடையதும், பரந்தசிரத்துடனே இசையும்பொருந்திய கருவியாகிய வீணை இனிதாகப்பொருந்தப்பெற்றதுமான (இராவணனது தேர்க்) கொடியை, (ஸ்ரீராமன்) தசைபடிந்துள்ள அம்புகளைக்கொண்டு தரையிற்பொருந்துமாறு தள்ளுதலும்,—(எ - று.)—'விடலும்' என்ற எச்சம், அடுத்த செய்யுளிலுள்ள 'நண்ணலும்'என்ற சொல்லோடு இயையும். பி-ம்:—[1]இலகுறு, இனிதுயர். [2]தசையுறவுரறி. (௩௭௫௪)

௮௮.—'இராமன்கொடியில் கருடன்தங்கிவிட்டதனால் இனி நமக்குக் கவலையில்லை'என்று தேவர்கள் கூறுதல்.

பண்ணவ னுயர்[1]கொடி யெனவொரு [2]பரவைக்
கண்ணக னுலகினை வலம்வரு கலுழன்
நண்ணலு மிமையவர் நமதுறு கருமம்
[3]எண்ணல முனிவினி னிவறின னெனவே.

(இ - ள்.) ஒப்பற்ற கடலாற்சூழப்பட்ட இடமகன்ற உலகை வலம் வருந்தன்மையுள்ள கருடன் ஸ்ரீராமனுடைய சிறப்பமைந்த கொடியாகுமென்று (அப்பிரானுடைய தேர்க்கொடியின்மேற்) பொருந்துதலும், தேவர்கள் 'நமக்கு ஆகவேண்டிய செயலைப்பற்றி இனி எண்ணமாட்டோம்: (ஏனெனில்',—கருடன்) சினமுடையவனாகி(இப்பிரானுடைய தேர்க்கொடியில்தங்கியிருக்க) ஆசைகொண்டுள்ளான்' என்றுசொல்லுதலும்,—(எ - று.)—'எயினன்'என அடுத்த கவியில் முடியும். இச்செய்யுள் "படையுக" (அ௫) என்றதன்பின் இருப்பின் நலமெனத் தோன்றுகின்றது. பி - ம்:—[1]கொடியினே. [2]பறவை. [3]எண்ணலமுனிவினன்றவறினனெனவே, எண்ணலாமுனிவன்றிவறினனென்னெனவே, எண்ணினமுனிவரொடெய்தினனெனவே. (௩௭௫௫)

௮௯.—ஸ்ரீராமன்மீது இராவணன் தாமதாத்திரம் விடுதல்.

ஆயதொ ரமைதியி [1]னறிவினி னறிவான்
நாயக னொருவனை [2]நலிகில துணர்வான்
ஏயின னிருளுறு [3]தாமத மெனுமத்
[4]தீவினை தருபடை தெறுதொழின் மறவோன்.

(இ - ள்) அப்படிப்பட்டதான ஓர்சமயத்தில், அழிக்குந்தொழிலை மேற்கொண்டு மறக்குணமுடையோனான இராவணன், ஞானத்தினால் (உணர்தற்கு)உரியவனான ஒப்பற்ற (லோக)நாயகனாகிய ஸ்ரீராமனை (த்தான்விடுத்தஅம்புகள்) நலியாமற்போனதை யுணர்ந்தவனாய், இருளை யுண்டாக்குகின்ற தாமதமென்கின்ற அந்தத்தீவினையைத்தருகின்ற படையை ஏவினன்; (எ - று.)

எப்படிப்பட்டவர்க்கும் மனத்தி லிருளைத் தருதலால் 'தீவினை தரு படை' எனப்பட்டது. இனி, நலிகிலதுணர்வான்என்பதற்கு - தான் இப்போது எய்யப்போகின்ற தாமதாத்திரம் அவ்விராமனை நலியமாட் டாதென்பதை யறிந்தவனாகிய இராவணன் அப்படையை யேவினான் எனக் கூறினாருமுளர். பி-ம்:—[1]அறிவினுளறிவன், அறிவினனமையும். [2]நலிகிலதுணரான், நலிகிலதுணரா, நல்கினனுணரான். [3]சரமழை. [4]தீயெனவருபடை. (௩எ௬௬)

௬௦.—அந்தத்தாமதாத்திரத்தின் தன்மையும் செயலும் மூன்றுபாடல்களாற் கூறப்படும்.

தீமுக முடையன சிலமுக முதிரந்
தோய்முக முடையன சுரர்முக முடைய
பேய்முக முடையன பிலமுக நுழையும்
[1]வாய்முகம் வரியர வனையன வருவ.

(இ - ள்.) (அந்தத்தாமதாத்திரத்தால்தோன்றிய அம்புகளிற்) சில வற்றின்முகம், நெருப்பைக்கக்குகின்ற முகமுடையனவாம்;(சிலமுகம்), இரத்தம்படிந்த முகங்களையுடையன; (சிலமுகம்), சுரர்முகமுடையன; (சிலமுகம்), பேய்முகமுடையன: (சிலமுகம்), பிலத்தில்நுழைகின்ற வாயோடுகூடிய முகத்தைக் கொண்டனவாய் வரியமைந்தனவான அர வையொத்தனவாய் வருவன; (எ-று.)—பி-ம்:—[1]வான்முகம். (௩எ௬எ)

௬௧. ஒருதிசை முதல்கடை யொருதிசை யளவும்
இருதிசை யெயிறுற வருவன [1]பெரிய
கருதிய [2]கருதிய புரிவன கனலும்
பருதியை மதியொடு பருகுவ பகழி.

(இ - ள்.)(அன்றியும் அப்)பகழிகள்,—ஒருதிசையின் ஆரம்பமுதல் (அதற்குஎதிரான) ஒருதிசையின் முடிவுவரையிலும் இருதிசைகளிலும் (தம்விஷப்)பற்கள்பொருந்த வருவன:மிகப்பெரியவை:(தன்னைவிடுத்த வன்) நினைத்தவற்றையெல்லாம் செய்யவல்லன: எரியுந்தன்மையுள்ள சூரியனைச் சந்திரனோடு பருகுந் தன்மையுள்ளன; (எ - று.)—பி-ம்:— [1]எரியக், வெருவ. [2]புரிவனவழலுறுதழலும். (௩எ௬அ)

௬௨. இருளொரு திசையொரு திசை[1]வெயில் விரியும்
சுருளொரு திசையொரு திசைமழை தொடரும்
உருளொரு திசையொரு திசை[2]யுருமுரலும்
மருளொரு திசையொரு [3]திசைசிலை வருடம்.

(இ - ள்.) (இராவணன்விடுத்த அந்தத்தாமசாஸ்திரத்தினால்), ஒரு திசையில் இருளும், மற்றொருதிசையில் வெயிலும் விரியும்: ஒருதிசையில் சுழல்காற்றும், மற்றொருதிசையில் மழையும் தொடரப்பெறும்: ஒருதிசை சக்கரமும், ஒருதிசை இடியும் முழலும்: ஒருபுறத்தில் மருள் (மிக), ஒருபுறத்தில் கல்மழை (பொழியும்); (எ-று.)—பி-ம்:—[1]எரியெரியின். [2]உருமிடலும். [3]திசைசெலவருடம், திசையிலவருடம். (௩எ௫௯)

௬௩.---இதுவும் அடுத்த கவியும்-ஸ்ரீராமன் ஆராய்ந்து சிவாஸ்திரத்தைவிடுதலைத் தெரிவிக்கும்.

இனையன நிகழ்வுற வெழுவகை யுலகுங்
கனையிருள் கதுவிட [1]வமரர்கள் கதற
[2]வினையுறு [3]தொழிலிடை விரவலும் விமலன்
[4]நினைவுறு [5]தகை மையி னெறியுறு முறையின்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இவ்வாறனநிகழ்ச்சிகள் நிகழ்ந்துகொண்டிருக்க, நெருங்கியுள்ள இருள்எழுவகையுலகங்களையும் கவிந்துகொள்ளவும், அமரர்கள்கதறவும், தீவினையினால்நேர்ந்தாற்போன்ற செயலிலே (இவ்வுலகம்) அகப்பட்டுப்பொருந்துதலும், குற்றமற்றவனான ஸ்ரீராமபிரான்,---நேராகியமுறைமையின் நினைகின்றதன்மையினால்,---(எ - று.)—'கருதிவிடுதலும்' என அடுத்த கவியோடுதொடரும். பி-ம்:—[1]உயிரிடைகதற. [2]வினையறு. [3]தொழிலிசை. [4]நினையுறு. [5]தகையினன். (௩எ௬0)

௬௪. கண்ணுத [1]லொருவன [2]தடுபடை கருதிப்
பண்ணவன் விடுதலு மது[3]நனி பருக
[4]எண்ணுறு கனவினொ டுணர்வென [5]விமையில்
துண்ணெனு [6]நிலையினி னெறிபடை தொலைய.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய ஒப்பற்றவனான சிவபெருமானது கொல்லுந்தன்மையுள்ள அஸ்திரத்தைக் கருதி ஸ்ரீராமன் விடுதலும்,—அது மிகவும்(அந்தத்தாமஸாஸ்திரத்தைப்)பருகியதனால், எண்ணப்படுகின்றகனவோடு நனவுபோல [கனவில்தோன்றிய பொருள் உணர்வு தோன்றியபோது மறைந்துவிடுதல்போல]இமைப்போதில் வெகுவிரைவில் (அரக்கன்)எறிந்த தாமஸாஸ்திரம் தொலைந்துவிட,---(எ - று.)—'எரிந்தகண்ணினன்'என அடுத்தகவியோடு தொடரும். துண்ணெனல்-விரைவுக்குறிப்பு. வெகுவிரைவில்அஸ்திரந்தொலைந்த தென்பார்'இமையில் துண்ணெனுநிலையினின்' என்றார். பி - ம்:—[1]ஒருவனை. [2]தரு. [3]தனி. [4]எண்ணிறு, எண்ணுவ. [5]விடலிற். [6]நிலையின, நிலைமையின். ()

வேறு.

௬௫.---இராவணன் பலபாணங்களை இராமன்திருமேனியில் அழுந்தவிடுதல்.

விரிந்த தன்படை [1]மெய்கண்ட பொய்யென மய்ந்த
எரிந்த கண்ணின [2]னெயிற்றிடை [3]மடித்தவா யினன்றன்

[4]தெரிந்த வெங்கணை கங்கவெஞ் சிறையன்ன திறந்தான்
அரிந்த மன்றிரு மேனிமே லழுத்திநின் றார்த்தான்.

(இ - ள்.) பரவியிருந்த தான் விடுத்த தாமஸாஸ்திரமானது மெய்யைக்கண்ட பொய்போல அழிந்ததாக, எரிந்த [நெருப்புவெளிப்படுகின்ற] கண்களையுடையவனும் பற்களினிடையே மடித்தவாயையுடையவனுமான இராவணன் கொடிய பருந்திறகு கட்டப்பட்டனவும் தெரிந்தெடுத்தனவுமான தன்னுடைய வெவ்வியகணைகளைப்பகைவரையடக்குபவனான ஸ்ரீராமன்திருமேனியில் அப்படிப்பட்ட [வாயாற்சொல்லுதற்குஅரிய] திறமையுடனே அழுத்தமாகப் பதியவைத்துநின்று ஆரவாரஞ்செய்தான்; (எ-று.)---இச்செய்யுளின்முதலடி, 'எறிபடைதொலைய' என்றதன்அநுவாதம். பி-ம்:---[1]மெலியவீந்தமைகண்டே, மெய்...வீய. [2]எயிற்றினை. [3]கடித்தனனெரியத். [4]தெரிந்தவெங்கணையவிந்திடவெஞ்சமரதனால், தெரிந்த...திறத்த. (௯௭௬௨)

௬௬.---இராவணன் ஆசுராஸ்திரம்விடுதல்.

[1]ஆர்த்து வெஞ்சினத் [2]தாசுரப் படைக்கல மமரர்
வார்த்தை யுண்டதின் னுயிர்களான் மறலிதன் வயிற்றைத்
தூர்த்த திந்திரன் [3]றுணுக்குறு தொழிலது தொடுத்துத்
தீர்த்தன் மேல்[4]வரத் துரந்தன [5]னுலகெலாந் தெரிய.

(இ - ள்.) (இராவணன்)ஆரவாரஞ்செய்து (பின்னும்)தேவர்களின் புகழையுண்டதும், இனியஉயிர்களால் யமனுடையவயிற்றை நிரப்பியதும், இந்திரனும் திடுக்கிடும்படியானசெயலையுடையதுமான மிகவுக்கிரமான ஆசுராஸ்திரத்தை உலகெல்லாம் அறியும்படி, பரிசுத்தமூர்த்தியான ஸ்ரீராமன்மேல்வரத் தொடுத்துவிடுத்தான்; (எ - று)---பி - ம்:---[1]ஆர்த்த. [2]அரக்கன்வெம், அசுரர்தம். [3]பலந்தனைத்தொலைத்தது. [4]செலத். [5]உலகங்கடிரிய. (௯௭௬௩)

௬௭.--ஆசுராஸ்திரம் ஸ்ரீராமன்மேற் செல்லுதல்.

ஆசு ரப்பெரும் படைக்கல மமரரை யமரின்
ஏசு விப்பதெவ் [1]வுலகமு மெவரையும் வென்று
[2]வீசு வெற்பிறத் துரந்தவெங் கணையது விசையின்
பூசு ரர்க்கொரு கடவுண்மேற் [3]சென்றது [4]போலாம்.

(இ-ள்.) தேவர்களைப்போரில் ஏசுவிப்பதும்,எவ்வுலகத்திலுமுள்ள எவரையும்வென்று (தன்மீது) வீசிய மலைகளையும் முறிந்துபோம்படி வெளிவிட்ட கொடியஅம்புகளையுடையதுமான (அந்த) ஆசுரமென்ற பெரிய அஸ்திரமானது,—விசையுடனே பிராமணர்தொழும் முக்கியக்கடவுளான ஸ்ரீராமன்மேற் சென்றது; (எ - று.)— போல், ஆம் - அசைகள்.

பூசுரர் - நிலத்தேவர்: அந்தணர்.'பூவின்மேலிருக்கும் சுரர்-பிரமா' என்றுகொண்டு, பிரமனுக்குங்கடவுளாகிய திருமால்என்றுகொள்வாருமுளர். பி-ம்:---[1]உலகையும். [2]வீசிவெற்புறுவெங்கணையெனவவைவிசை

யிற், ...சுவெற்புறத்துரார்தகைவெங்கலைவிசையிற், ...சு***...ணையொ விசையின். [3]சென்றன. [4]போலும். (௰௨௬௮)

௯௮.—ஸ்ரீராமன் ஆக்கினேயாஸ்திரத்தால்
ஆஸுராஸ்திரத்தை யழித்தல்.

நுங்கு கின்றதிவ் வுலகையோர் நொடிவரை யென்ன
[1]எங்கு நின்றுநின் றலமரு மமரர்கண் டிரைப்ப
மங்குல் வல்லுரு மேற்றின்மே லெரிமடுத் தென்ன
அங்கி தன்னெடும் படைதொடுத் திராகவ னறுத்தான்.

(இ - ள்.) ஓர்நொடிப்போதில் இவ்வுலகை (இராவணன் விடுத்த ஆசுராஸ்திரம்) விழுங்குகின்றதென்று எங்கும்நின்றுநின்று அலமருகின்ற தேவர் கண்டு (மகிழ்ச்சியினால்) ஆரவாரஞ்செய்ய, மேகத்திலுள்ள வலியஉருமேற்றின்மீது எரிமடுத்தாற்போல நெடிய ஆக்கினேயாஸ்திரத்தைத்தொடுத்து இராகவன் (அந்த ஆஸுராஸ்திரத்தை) அறுத்தான்; (எ - று.)—பி-ம்:—[1]எங்குமெங்குநின்றமரர்கள்கண்புடைத்து, எங்குமெங்குநின்றலம்வருமமரர்கண்டு. [2]இமைப்ப. (௰௭௬௫)

௯௯.—இராவணன் மீண்டும் அம்புஎய்தல்.

கூற்றுக் [1]கோயு னுங் கோடல [2]கடலெலாங் குடிப்ப
[3]நீற்றுக் குப்பையின் மேருவை [4]நூறுவ நெடிய
காற்றுப் பின்செல[5]ச் செல்வன வுலகெலாங் கடப்ப
நூற்றுக் [6]கோடியம் பெய்தன னிராவண னொடியில்.

(இ - ள்.) யமன் (தன்னுடையகொல்லுதற்றொழிலினின்று) கோடினும் கோடாதனவும், கடலெல்லாங்குடிப்பனவும், மேருமலையைப் புழுதித்திரள்போலாகுமாறு நூறுவனவும் நெடியனவும், (விசையில்) காற்றும் (தமக்குப்) பின்செல்லுமாறு செல்வனவும், உலகெல்லாவற்றையும் கடப்பனவுமான நூற்றுக்கோடி அம்புகளை ஒருநொடிப்போதில் இராவணன் எய்தான்; (எ - று.)—பி - ம்:—[1]கோடலுங்கோடுங். [2]உலகெலாங். [3]நீற்றிற். [4]நூறுபநெடிய, நூறுவநெரியக். [5]வருவன. [6]கோடியிற். (௰௭௬௬)

௪00.—இராவணன் எய்த அம்புகளை முனிவர் பாராட்டிக்கூறுதல்.

என்ன கைக்கடுப் போவென்பர் சிலர்சில [1]ரிவையும்
அன்ன [2]மாயமே யம்பல வென்பரவ் வம்புக்கு
இன்ன முண்டுகொ லிடமென்பர் சிலர்சில ரிகற்போர்
முன்ன மித்தனை முயன்றில னுமென்பர் [3]முனிவர்.

(இ - ள்.) முனிவர்களிற்சிலர், 'என்னகைவிசையோ!'என்பர்: சிலர் 'இவையும் அப்படிப்பட்டமாயமே, அம்புஅல'என்பர்: சிலர் 'அப்படிப்பட்டஅம்புகட்கு இன்னும் இடம்உண்டுகொல்!'என்பர்: சிலர் 'வலிமையுள்ளபோரை முன்னம் இத்தனை முயன்றுசெய்திலனும்'என்பர்; (எ-று.)—பி-ம்:—[1]இவையும். [2]மாயமேயம்பரம்புக்கதென்றயிர்த்தார், மாயமாமம்பலம்புக்கதென்றயிர்த்தார், மாயமோவமலவம்பமேனை புக்கு, மாயமாமரவென்ப ரவ்வம்புக்கு. [3]முனைவர். (௰௭௬௭)

கூ0க.---இராவணனேவிய அம்புகளை இராமன் பிளந்தமை.

மறைமுதற்றனி நாயகன் வானினை மறைந்த
[1]சிறையுடைக்கொடுஞ் சரமெலா மிமைப்பொன்றிற் றிரியப்
பொறைசி கைப் பெருந் தலையின்றும் புங்கத்தி னளவும்
பிறைமு கக்[1]கடு வெஞ்சர மவைகொண்டு பிளந்தான்.

(இ - ள்.) வேதத்தினாற்பிரதிபாதிக்கப்படுகின்ற ஒப்பற்றதலைவனான ஸ்ரீராமன்,—ஆகாயத்தைமறைத்த சிறகையுடையனவான (இராவணன்விடுத்த) கொடியசரங்களையெல்லாம் ஓரிமைப்போதில் மாறும்படி, அர்த்தசந்திர மெனப்படும் பிறைக்கொடிய பாணங்களைக்கொண்டு பாரமானஉச்சியைக்கொண்ட பெரிய தலைப்பாகத்திலிருந்து கூரிய நுனிவரையிலும் பிளவுறச் செய்தான்; (எ - று.) --பி - ம்:—[1]சிறை... இமையொன்றில், சிறைமுகக்கடுங்கணையெலாமம்பினிற். [2]அறை சிதைப்,அறைந்தறைப். [3]பொருந். [4]கொடுஞ்சரங்களிற்றுரந்தெனப்,கொடுஞ்சரங்களாலங்கத்தைப், தடங்கடுங்கொடுஞ்சரங்கொண்டு, கொடு நெடுங்கடுஞ்சரங்களால். (கூஎகூஅ)

கூ0உ.—இராவணன் மயாஸ்திரத்தை விடுதல்.

அயன்ப டைத்தபே ரண்டத்தி னருந்தவ மாற்றிப்
பயன்ப டைத்தவ [1]ரியாரினும் படைத்தவன் பல்போர்
வியன்ப டைக்கலந் தொடுப்பனு னினியென விரைந்தான்
மயன்ப டைக்கலந் [2]துரந்தனன் றயரதன் மகன்மேல்.

(இ-ள்.) பிரமதேவனாற்படைக்கப்பட்ட பெரிய அண்டத்தினுள் (செய்தற்கு)அரிய தவத்தைச்செய்து பயன்படைத்தவர்யாவரினும் (பெரும்பயன்) படைத்தவனான இராவணன்,—'இப்போது பலவான போரிலும்உபயோகித்த பெருமைபெற்றபடைக்கலங்களை நான் தொடுத்துவிடுவேன்' என்று விரைந்தவனாய்த் தயரதகுமாரனான ஸ்ரீராமன் மேல் மயன்படைக்கலத்தை விடுத்தான்: (எ - று.)—இனி, பலபோரிலும் பெருமைபெற்றபடைக்கலமென்றது - மயன்படைக்கலத்தையே குறிக்குமென்றலு மொன்று. பி-ம்:—[1]யாரையும். [2]தொடுத்தனன். ()

கூ0ங.—தேவர்முதலியோர் அஞ்சுகையில், இராமன் அந்தப் படைக்கலத்தின்நிலையைத் தெரிதல்.

விட்ட னன்[1]விடு படைக்கலம் வேரொடு முலகைச்
சுட்ட னன் [2]னெனத் துணுக்கமுற் றமரருஞ் சுருண்டார்
கெட்ட னம்மென வானரத் தலைவருங் [3]கிழிந்தார்
சிட்டர் தந்தனித் தேவனு மதனிலை தெரிந்தான்.

(இ - ள்.) '(இராவணன் தான்) விடுதற்குஉரிய படைக்கலத்தை விட்டவனாய், வேரோடும் உலகைச் சுட்டான்' என்று அச்சங்கொண்டு தேவருஞ் சுருண்டார்; '(நாம்) அழிந்திட்டோம்' என்று வானரத்தலைவரும் பிளவுபட்டோடினர்; சிட்டரின்ஒப்பற்றதேவனான திருமாலும்,—அந்தப்படையின்நிலையைத் தெரிந்தான்; (எ - று.)---பி - ம்:---[1]மயன். [2]எனுந். [3]கிளர்ந்தார். (கூஎஎ0)

௧௦௪.—இராமன் காந்தர்வாஸ்திரத்தால் அதனை யழித்தல்.

பாந்தட் பலைறலைப் [1]பரந்தகன் புவியிடைப் பயிலும்
மாந்தர்க் கில்லையால் வாழ்வென வருகின்ற வதனைக்
காந்தர்ப் பம்மெனுங் [2]கடுங்கொடுங் கணையினாற் கடந்தான்
ஏந்தற் பன்மணி யெறுழ்வலித் [3]திரள்புயத் திராமன்.

(இ - ள்.) 'ஆதிசேஷனுடைய ஆயிரந்தலைகளிலே பரந்துஅகன்று கிடந்துள்ள பூமியிலே வாழ்கின்ற மாந்தர்க்கு [இராமர்க்கு] வாழ்ச்சி யில்லை'என்று வருகின்ற அந்தப்படைக்கலத்தை [மயாஸ்திரத்தை],—மலைபோன்றனவும் பலமணிகளாலியன்ற அணிகலன்பூணுதற்குஉரியன வுமான பெருவலிபடைத்த திரண்டபுயத்தையுடைய ஸ்ரீராமன்,—காந்தர்வமெனப்படுகின்ற மிகக்கொடியஅஸ்திரத்தினால் வென்றிட்டான்; (எ - று.)—பி - ம்:—[1]பரந்தனன்...பரந்த, பரந்தகன்றவிசிடைப்பார்மேல், பரப்பதன்றவிசிடைப்பார்மேல், பரந்தன......பயிலும். [2]கடவுண்மாப்படையினால், கடுங்கொடும்படையினால். [3]தடம். (௩எஎ௧)

௧௦௫.—இராவணன் தண்டாயுதத்தை யெறிதல்.

பண்டு நான்முகன் படைத்தது [1]கனகனிப் பாரைத்
[2]தொண்டு கொண்டது மதுவெனு [3]மவுணன்முன் றொட்டது
[4]உண்டிங் கென்வயி [5]னதுதுரந் துயிருண்ப [6]னென்றுத்
தண்டுகொண்டெறிந் தானைந்தொ டைந்[7]துடைத் தலையான்.

(இ - ள்.) 'முன்பு பிரமதேவனாற்படைக்கப்பட்டதும், இரணியன் இந்தப்பூமியைத் தன்னடிப்படுத்தற்கு உதவியாயிருந்ததும், மதுவென்னும்அசுரன் முன்பு உபயோகித்ததுமான ஒருதண்டு இங்கு என்னிடத்துஉள்ளது: அதனைச் செலுத்தி (இப்பகைவனை)உயிரை யுண்பேன்' என்றுசொல்லி,பத்துத்தலைகளையுடையஇராவணன் (அந்தத்)தண்டாயுதத்தைக் கையிற்கொண்டு (பகைஞன்மேல்)வீசியெறிந்தான்;(எ-று.)—பி - ம்—[1]கணிப்பரும்பாரை, கண்கணிப்பாரை. [2]கொண்டு. [3]அவுணனுந். [4]உண்டதென், உண்டுதன், உண்டதன். [5]இது. [6]என்றோர். [7]உயர். (௩எஎ௨)

௧௦௬.—இராவணனெறிந்த தண்டாயுதம் வருதலைக்கூறும்.

தாரு கன்பண்டு தேவரைத் தகர்த்தது தனிமா
மேரு [1]மந்தரம் புரைவது [2]வெயிலன்ன வொளியது
[3]ஓரு கந்தனி னுலகநின் றுருட்டினு முருளாச்
சீரு கந்தது [4]முகந்தது வானவர் சிரங்கள்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்:

(இ-ள்.) முன்னொருகாலத்தில் தாருகனென்னும்அசுரன் தேவரை முறியவடித்தற்குக்கருவியானதும், ஒப்பற்ற பெரிய மேருவையும் மந்தரத்தையும் ஒத்ததும்,வெயிலையொத்தஒளியை யுடையதும், ஓருகத்தளவும் உலகமெல்லாம் ஒன்றுகூடி உருட்டினாலும் உருளாத சிறப்பினாற் கொண்டாடப்படுவதும், வானவர்சிரங்களை முகந்ததும்,—(எ - று.)—

அடுத்த கவியோடுதொடரும். இச்செய்யுள் - சிலபிரதியில் "பண்டு நான்முகன்" (௧௦௩) என்ற செய்யுளின்முன்உள்ளது. பி-ம்:—[1]கந்தரம்புனைவது. [2]வெயிலினுமொளியது, வெயிலெனமிளிர்வது. [3]ஒருகஞ்செல, ஒருகந்தனி. [4]நெரித்தது தானவர்சிரத்தை, முகந்தன...சிரங்கள், முகந்தது தானவர்சிரங்கள். (௩௭௭௩)

௧௦௭. பசும்[1]பு னற்பெரும் பரவைபண் [2]டுண்டது பனிப்புற்று
அசும்பு பாய்கின்ற தருக்கனி னொளிர்கின்ற தண்டந்
தசும்பு போலுடைந் [3]தொழியுமென் [4]றனைவருந் தளர
விசும்பு பாழ்பட வந்தது [5]மந்தரம் வெருவ.

(இ - ள்.) பசியநிறமுள்ள பெரிய பரவையை முன்பு உண்டதும், குளிர்ச்சிபொருந்தி நீர்கசியப்பெற்றதும், சூரியனைக்காட்டிலும் விளங்குகின்றதுமான அந்தத்தண்டாயுதம், இவ்வண்டமானது நீர்க்குடம்போலுடைந்து ஒழிந்திடுமென்று யாவரும் மனஞ்சோரவும், (விசும்பிலுள்ள பொருள்களெல்லாம் தாக்கப்பட்டதனால் அவ்) விசும்பு பாழாய்விடவும் மந்தரம்வெருவவும் வந்தது; (எ - று.)---மந்தரம்வெருவுவது, தன்னினும் ஓங்கிநிற்பதனால். அசும்பு-பகைவருடைய உதிரநீர்க்கசிவு என்னலாம். பி-ம்:—[1]புனற்படு. [2]உண்டெனப்பணிப்புற்று, உண்டனைபணியாது, உண்டெனப்பணிவுற்று, உண்டவன்பணிப்புற்று. [3]அழியுமென்று. [4]யாவரும். [5]மேருவும், தேவரும். (௩௭௭௪)

௧௦௮.---இராமபிரான் அம்பெய்து அந்தண்டாயுதத்தைப் பொடியாக்குதல்.

[1]கண்ட தாமரைக் கண்ணனக் கடவுண்மாக் கதைதான்
[2]அண்டர் நாயக [3]னாயிரங் கண்ணினு மடங்காப்
[4]புண்ட ரீகத்தின் முகையன்ன புகர்முகம் விட்டான்
உண்டை நூறுடை [5]நூறுபட் டுள[6]தென வுதிர்த்தான்.

(இ - ள்.) (அதனைக்) கண்ட செந்தாமரைக்கண்ணனான ஸ்ரீராமன்,---அந்தத்தெய்வத்தன்மையுள்ள பெரிய கதாயுதத்தை, தேவர்களின்தலைவனான இந்திரனுடைய ஆயிரங்கண்களிலும் அடங்காததாய் நூறுஉண்டைகளையுடையதும் தாமரை மொட்டையொத்த ஒளிபொருந்திய முகமுள்ளதுமான அம்பைவிடுத்து 'முன்னமே நூறுபட்டுள்ளதோ?' என்று (கண்டவர்) கருதும்படி (பொடிப்பொடியாக) உதிரச்செய்திட்டான்; (எ - று.)---புகர்முகம் - அம்புக்கு, அன்மொழித்தொகை. பி-ம்:—[1]கண்டுதாமரைக்கடவுண்மாப்படையெனக் கருதா, கண்டுதாமரைக்கடவுண்மாக்கதையெனக்கழுறு, கண்டதாமரைக் கடவுண்மாப்படையன்னகதையை. [2]அண்டநாயகன். [3]ஆயிரத் தளவினுமடங்காப், ஆயிரத்தளவிலுமடங்கப். [4]புண்டரீகத்தின் பொகுட்டன்னபுகர்முகம்விட்டான், புண்டரீகமொட்டனையதோர்புகர் முகவம்பால், புண்டரீகத்தின் பொருட்டன்னபுகர் முகக்கணையால். [5]நீறுபட்டுளது, நூறுபட்டுள. [6]ஒல்லையினுதிர்த்தான், பொரிந்துதிர்ந்த.

கoசு.---இராவணன் மாயாஸ்திரம் விடக்கருதுதல்.

[1]தேய [2]நின்றவன் சிலைவலங் [3]காட்டினன் றீராப்
[4]பேயை யென்பல [5]தூரப்பதிங் கிவன்பிழை யாமல்
ஆய தன்பெரும் படையொடு [6]மடுகளத் தவிய
மாயை யின்படை தொடுப்பனென் றிராவணன் [7]மதித்தான்.

(இ - ள்.) அழியுமாறுநின்றவன்,—'(நாம் அற்பஅஸ்திரத்தைப் பிரயோகித்ததனால் நம்பகைவன் தன்னுடைய) வில்வலிமையைக் காட்டினன்: (இவனைத்) தீர்க்கமாட்டாதபேய்போன்ற [உபயோகமற்ற] பலஅஸ்திரங்களை (இவன்மீது) தூரப்பதில் என்ன பயன்? இப்போது இவன் பிழையாமல் பொருந்திய தன்பெரும்படைக்கலத்தோடும் அடுகின்றபோர்க்களத்திலேயவிந்துவிடும்படி (பெரும்படையாகிய) மாயாஸ்திரத்தைத் தொடுப்பேன்' என்று இராவணன் நினைத்தான்; (எ-று.)— பி-ம்:---[1]'சேயைநின்றவன்'என்ற பாடத்திற்கு - சேயைப்போலநின்றவனென்பர்: சேய்-குமாரக்கடவுள். [2]நின்றிவன். [3]காட்டியான். [4]பேயையென்பதில். [5]தூரக்குவதினிப். [6]கிளையொடும்படிய, கிளையொடுமடங்க. [7]வலித்தான். (ருஎஎசு)

கக0.---இராவணன் மாயாஸ்திரம் விடுதல்.

பூச னைத்தொழிற் புரிந்துதான் முறைமையிற் போற்றும்
ஈச னைத்தொழு திருடியுஞ் [1]சந்தமு மெண்ணி
ஆசை பத்தினு மந்தரப் பரப்பினு மடங்கா
[2]வீசி னன்செல [3]வில்லிடைத் தொடைகொடு விட்டான்.

(இ - ள்.) (அந்தஅஸ்திரத்தைப்) பூசிக்குந்தொழிலைச்செய்து, தான் முறைமையாகத் துதிக்கின்றசிவபிரானைத் தொழுது, (அந்தஅஸ்திர மந்திரத்துக்குஉரிய) இருடியையும் சந்தசையும் எண்ணி (உச்சரித்து), ப்பத்துத்திக்குக்களிலும் வானகப்பரப்பிலும் அடங்காது (எங்குஞ்) செல்லும்படி வில்லிடையில்அம்புகொண்டுவீசித் தொடுத்துவிட்டான்; (எ - று.)---பி - ம்:—[1]சாந்தமும். [2]வீசிமுற், வீசிமேற், ஈசன்மேற். [3]வில்விசை. (ருஎஎஎ)

ககக.—மாயாஸ்திரத்தால் முன்புஇறந்த அரக்கர் உயிர்பெற்றெழுந்தாற்போற் பேரொலிசெய்தல்.

மாயம் [1]பொத்திய வயப்படை [2]விடுதலும் வரம்பில்
காய [3]மெத்தனை யுளநெடுங் காயங்கள் கதுவ
ஆய முற்றெழுந் தாரென வார்த்தன ரமரில்
தூய [4]கொற்றவர் சுடுசரத் தான் [5]முன்பு துணிந்தார்.

(இ - ள்.) மாயைநிரம்பியுள்ள வெற்றிபொருந்திய அஸ்திரத்தை (இராவணன்) விடுதலும், பரிசுத்தமானவெற்றிபெற்ற ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய சுடுகின்றஅம்பினால் போரில்முன்பு துணிக்கப்பட்டு உயிரிழந்து கிடந்தவரான அரக்கர்களின் வரம்பில்லாதஉடல் எத்தனையுள அவைகளெல்லாம் நெடியவானத்தை யளாவும்படி (பிராண) லாபத்தை

யடைந்து எழுந்தனர்போல ஆரவாரித்தார்கள்; (எ - று.)—ஆயம் லாபம். பி-ம்:—[1]பொத்தியல். [2]விடுத்தலும். [3]அத்தனையுள,அத்தனையும். [4]கொற்றவன். [5]அமர்துணிந்தார், முனந்தொலைத்தான். (௩௭௭௮)

௧௧௨.—இதுவும் அது.

[1]இந்தி ரற்கொரு பகைஞனு மவற் [2]கிளை யோரும்
தந்தி ரப்[3]பெருந் தலைவருந் [4]தலைத்தலை யோரும்
மந்தி ரச்[5]சுற்றத் தவர்களும் [6]வரம்பிலர் [7]பிறரும்
அந்த ரத்தினை [8]மறைத்தனர் மழையுக வார்ப்பார்.

(இ - ள்.) இந்திரசித்தும், அவனுக்குத் தம்பிமாரான அதிகாயன் கும்பன் நிகும்பன் என்பவர்களும், பெரும் படைத்தலைவர்களும், (மற்றுந்)தலைமையாக அமைந்தோரும், (மகோதரன்முதலிய) மந்திரிமாரும் எல்லையற்றவரான பிறரும் ஆகாயத்தினைமறைத்தார்களாய், மழை யுஞ் சிந்தும்படி ஆரவாரிப்பவரானார்;(எ-று.)---பி-ம்:—[1]இந்திரற்கரும். [2]இளையோனும். [3]பெரும்பரவையின், பெரும்பரவையும். [4]தலைத்தலை யெவரும். [5]சுற்றத்தெவர்களும். [6]வரம்பில. [7]மற்றும். [8]நிறைந்தனர்.()

௧௧௩.—இதுவும் அடுத்த கவியும் - இறந்த சேனைகளெல்லாம் வந்து எங்கும் நெருங்கியதைத் தெரிவிக்கும்.

[1]குடப்பெ ருஞ்செவிக் குன்றமு மற்றுள குழுவும்
படைத்த [2]மூலமாத் தானையு [3]முதலிய பட்ட
விடைத்[4]தெ ழுந்தன யானைதேர் பரிமுதல் [5]வெவ்வேறு
[6]அடைத்த வூர்திக ளனைத்தும்வந் தவ்வழி [7]யடைய.

(இ-ள்.) குடம்போன்ற பெருஞ்செவிகளைப்படைத்த மலைபோன்ற தோற்றமுள்ள கும்பகருணனும்,மற்றுள்ள வீரவர்க்கமும்,(இராவணன்) பெற்றிருந்த மூலப்படையும்முதலிய இறந்தவைகளும்,(மற்றும்) யானை தேர் பரிமுதல் வெவ்வேறாகப் பொருந்திய வாகனங்களெல்லாமும் வந்து அவ்வழிப் பொருந்தச் சினந்தெழுந் தன: (எ - று.)—பி - ம்:— [1]குடைப், கடப். [2]வீரமா. [3]முந்துளர்பட்டார், முதலினர்பட்டார். [4]எழுந்தனர். [5]வெல்வேல். [6]படைத்த. [7]அடைந்த. ஒருபிரதியில் 'குடச் செவிக்கும்பகருணனும் மற்றுளகுழுவும்'என்று முதலடிகாண்கின்றது.

௧௧௪. [1]ஆயி ரம்பெரு வெள்ளமென் றறிஞரே [2]யறைந்த
காய்சி னப்[3]பெருங் கடற்படை களப்பட்ட வெல்லாம்
ஈச னிற்பெற்ற வரத்தினு [4]லெய்திய வென்னத்
[5]தேச முற்றவுஞ் [6]செறிந்தன திசைகளுந் [7]திகைக்க.

(இ-ள்.) பெரிய ஆயிரம்வெள்ளமென்று அறிஞரேசொன்னவும்கள த்திலிறந்தனவுமான காயுந்தன்மையுள்ள சினத்தைக்கொண்ட பெரிய கடற்படையெல்லாம்,—ஈசனிடத்துப்பெற்ற வரத்தினால்மீண்டும்உயிர் பெற்றெழுந்தன என்னும்படி திக்குக்களிலுள்ளாரெல்லாந் திகைப்பத் தேசமெங்கும் நெருங்கின;(எ-று.)—கடற்படை - கடல்போன்றபடை: உவமைத்தொகை. பி - ம்;—[1]ஆசிலப். [2]அறைந்தார். [3]பெரும்படை

களத்திடைப்பட்ட தெல்லாம். 4எய்தியது. 5தேசு. 6தெரிந்தது, செறிந்தது. 7திசைப்ப. (௩௭௮௧)

௧௧௫.—மாயத்தினுலுயிர்பெற்றெழுந்தார் போர்ற சேனைவீரர்கள் அறைகூவுதல்.

1சென்ற வெங்கணுந் தேவரு முனிவருஞ் 2சிந்த
3வென்ற தெங்களைப் 4போலும்யாம் விளிவது 5முளதே
இன்று காட்டுது மெய்துமி னெய்துமி னென்னுக்
கொன்ற கொற்றவர் தம்பெயர் குறித்6தறை கூவி.

(இ - ள்.) 'வென்றது எங்களைப் போலும்: யாம் இறப்பதும் உளதோ? இன்று (எமது திறமையைக்) காட்டுவோம்: (பொருமாறு) வாருங்கள், வாருங்கள்' என்று (தம்மைக்) கொன்ற வெற்றியாளரின் பெயரைக் கூறி அறைகூவிக் கொண்டு, தேவரும் முனிவரும் (அஞ்சிச்) சிதறியோடும்படி (உயிர்த்தெழுந்த அச்சேனைகள்) எங்குஞ் சென்றன: (எ-று.)—பி-ம்:—1சென்றது. 2திசைப்ப. 3வென்ற. 4போலுமால், போலுமாம். 5உளதேல், விதியே. 6அறைகூறி, அறைகூற. (௩௭௮௨)

௧௧௬.—அஸ்திரத்தினுற் பூதங்களும் பேய்களும் தோன்றுதல்.

பாரி டந்துகொண் 1டெழுந்தன பாம்பெனும் 2படிய
பாரி டந் 3துனைந் தெழுந்தன மலையன்ன 4படிய
பேரி டங்5கது வரிதினி விசும்பெனப் பிறந்த
பேரி டங்கரின் கொடுங்குழை யணிந்தன பேய்கள்.

(இ - ள்.) (மாயாஸ்திரத்தினுல் பாதாளலோகத்துள்ள) வாசுகி முதலிய பாம்புகள் பூமியைஇடந்துகொண்டு எழுந்தனஎன்னுந்தன்மையனவும், '(இவற்றிற்கு இந்தப்) பெரியஇடம் தங்குதற்குப்போதாது; இனி விசும்பே (தங்குதற்குரியது)' என்றுதோன்ற மலையன்ன உடல் படைத்தனவுமான பூதங்கள்விரைந்துமேலெழுந்தன: (நீரில்) உலாவுகின்ற முதலையை யொத்த வளைந்த குழைகளை [மகரகுண்டலங்களை] அணிந்திருந்தனவான பேய்கள் பிறந்தன; (எ - று.)

இரண்டாமடியில் பாரிடம்—பாரிஷதம்: பூதம்:வடசொல் முதலடியில், படிய - தன்மையவை: இரண்டாமடியில், உடலையுடையவை: இரண்டிடத்தும் வினையாலணையும்பெயர்கள். மூன்றுமடியில், பேரிடம் - பண்புத்தொகை: பண்புத்தொகையன்மொழியாய், பெரிய இடத்தையுடைய பூமி எனினுமாம். கதுவு-முதனிலைத் தொழிற்பெயர்: இனி, கதுவ என்ற செயவெனெச்சம், ஈறு தொக்குவந்த தெனினுமாம். பேரிடங்கர் - வினைத்தொகை. பி - ம்:—1எழுந்துளவாமெனும், எழுந்தனவாமெனும். 2படியப். 3தொடர்ந்தெழுந்தன. 4படிவப். 5பெறலரிதினி விசும்னெப், பெறலரிதினிவிசிம்பினிற். (௩௭௮௩)

௧௧௭.—முனிவர் அஞ்ச மாயாஸ்திரத்தினுலுயிர்பெற்றவர்கள் பலவகைப்படைக்கல மேந்திநிற்றல்.

தாம சத்தினிற் பிறந்தவ ரறந்தெறுந் தகையர்
தாம சத்தினிற் 1செல்கிலாச் சது2முகத் தவற்குத்

[3]தாம சத்திரஞ் செய்பவர் பரிந்தனர் [4]தளரத்
தாம சத்திரஞ் சித்திரம் [5]பொருந்தினர் தயங்க.

(இ-ள்.) தாமசத்தினில் பிறந்தவர்-மாயாஸ்திரத்தினால்தோன்றிய வரும், அறம் தெறு தகையர் - அறத்தையழிக்கவல்ல வல்லமையுள் ளவரும்,—தாம்,—அசத்தினில் - நேர்மையற்றவழியில், செல்கிலா - செல்லாமல், சதுமுகத்தவற்கு-சதுமுகனான பிரமதேவனுக்கு, உத்தா மம் - சிறந்த, சத்திரம் - யாகத்தை, செய்பவர் - செய்பவரான முனி வர், பரிந்தனர் தளர - மனம்வருந்தினவராய்த் தளர, தாமம்-ஒளிபொ ருந்திய, சத்திரம் - படைக்கலங்கள், தயங்க - விளங்க, சித்திரம் - விசித்திரமாக, பொருந்தினர்; (எ - று.)- -தாமசம் = தாமஸம். மூன்று மடியில், சத்திரம் - ஸத்ரம்: நான்காமடியில், ஶஸ்த்ரம்: ஈரிடத்தும் வடசொற்கள். பி - ம்:—[1]செல்கிலர். [2]முகத்தவர்க்குந். [3]தாமசத் தினைத்தொடர்ந்தவர்பரிந்தனர்தாழ்ந்தார், தாமசத்தினைத்தொடரவர் பரந்தவாளரக்கர், தாமசத்தினை ...தரளத். [4]தாமசத்தினைமதித்தனர். [5]பொருதனர்தயங்கி, பொருந்தியதயங்க, பொருதனதயங்க. (௩எஅச)

௧௧அ.—அசுரர் விஞ்சையர் இவர்களும் அந்தமாயாஸ்திரத்தினால் திசைதோறும் தோன்றி நெருங்குதல்.

தாம விந்துமீ தெழுந்தவர்க் கிரட்டியின் றகையர்
தாம [1]விந்துவின் பிளவெனத் தயங்குவா ளெயிற்றர்
[2]தாம விஞ்சையர் [3]கடற்பெருந் தகையினர் [4]தரளத்
தாம [5]விஞ்சையர் துவன்றினர் திசைதொறுந் தருக்கி.

(இ - ள்.) தாம் அவிந்து [இறந்து] அதன்பிறகு உயிர்பெற்றெ ழுந்தவரான அரக்கர்கட்குஇரட்டியான பெருமைபெற்றவர்களும், ஒளி யுள்ள இந்துவின்பிளவுபோலவிளங்கும் ஒளிபொருந்தியகோரப்பற்களை யுடையவர்களும், தாவுகின்ற அவிஞ்சையையுடையவர்களும், கடல் போற்பெருந்தகைமையுடையவருமான அசுரர்களும்,முத்துத்தாமமணி ந்த வித்தியாதரரும் திக்குக்கள்தோறும் செருக்கிநெருங்கினர்; (எ-று.)

முதலடியில், 'தாம் அவிந்து' என்றும், இரண்டாமடியில், 'தாமம் [ஒளியுள்ள]இந்துவின்'என்றும் மூன்றாம்அடியில்,'தா(வு)ம்[தாவுகின்ற] அவிஞ்சையர்' என்றும் பிரிக்க: அவிஞ்சை-மாயம். தரளத்தாமம் - முக்தாஹாரம்: தாமம் - ஹாரம். பி - ம்:—[1]இந்துவிற்பிளவன்ன. [2]தாமவிஞ்சையிற், தாமவிஞ்சையாற். [3]கடப்பருந். [4]தளராத், சார்ந்த, சாரத். [5]விஞ்சைய. (௩எஅரு)

௧௧௯.—மாயத்தினால்தோன்றிய அவர்கள் படைதாங்கிநிற்றல்.

தாம டங்கலு மடங்குளை யாளியுந் [1]தகுவார்
தாம டங்கலு நெடுந்திசை [2]யுலகொடுந் தகைவார்
தாம டங்கலுங் [3]கடலுமொத் [4]தார்தரும் தகையார்
தாம டங்கலுங் கொடுஞ்சுடர்ப் [5]படைகளுந் தரித்தார்.

(இ - ள்.) தாம் - நாவுந்தன்மையுள்ள, மடங்கலும் - சிங்கத்தையும், முடங்கு உளை-முடங்கிய பிடரிமயிரையுடைய, யாளியும் - யாளியென்ற மிருகவிசேடத்தையும், தகுவார் - ஒப்பவரும்,—தாம் அடங்கலும்-தாங்கள்யாவரும், நெடுதிசை-நெடிய திசைகளை, உலகொடும்-உலகுடனே, தகைவார் - (போரில்) தடுக்கவல்லவர்களும்,--தா - வலியையுடைய, மடங்கலும் - ஊழித்தீயையும், கடலும் - கடலையும், ஒத்து - (உருவத்தால்) ஒப்பாகி, ஆர்தரும் - (போர்க்களமெங்கும்) நிறைகின்ற-தகையார் - பெருமையையுடையவருமான அவர்கள், தாம் - ஒளியுள்ள, மடங்கலும் - இடிகளையும், கொடு சுடர் படைகளும்-ஒளியுள்ளகொடிய படைகளையும், தரித்தார் - தாங்கினின்றார்; (எ - று.)

'படைகளுடன்இடியையும்தரித்தார்'என்றுகூறியதனால், இடியைப் பறித்து அவற்றையும் படைக்கலமாக அவ்வரக்கர் கொண்டாரென்பது, பெறப்படும். நான்காம்அடியில், தாம் - தாமமென்பதன்விகாரம். பி-ம்:—[1]தகைவார், தகையார், தருக்கார். [2]உலகெலாந். [3]காரை. [4]ஒத்தார்தருந்தகைத்தார், ஒத்தார்த்திடும்தகையார், ஒத்தார்த்தரும்பகையைத், ஒத்தனர்தருவகையனையார். [5]படையொடுந். (௩எ௬௬)

௬௨௦—மாயாஸ்திரத்தின் செயலைக் கண்ட இராமன் மாதலியை வினவுதல்.

இனைய தன்மையை நோக்கிய விந்திரை கொழுநன்
வினைய மற்றிது மாயமோ விதியது விளைவோ
வனையும் வன்கழ லரக்கர்தம் [1]வரத்தினோ மற்றோ
நினைதி யாமெனிற் பகரென மாதலி [2]நிகழ்த்தும்.

(இ - ள்.) இப்படிநிகழ்ந்த தன்மையை நோக்கிய திருமகள் கொழுநனை ஸ்ரீராமன்,—(மாதலியைநோக்கி), 'இந்தச்செயல் மாயமோ? (அல்லது) விதியின் விளைவோ? அணிந்த வலிய கழலையுடைய அரக்கருடைய வரத்தினால் நிகழ்ந்ததோ: வேறோ? அறிந்தாயானால், (இதனை இன்னதெனச்) சொல்வாய்' என்று வினவ, மாதலி கூறுபவனானான்; (எ-று.)—மாதலி கூறுவதை அடுத்த கவியிற் காண்க. பி - ம்:—[1]மாயையோ. [2]நிரப்பும். (௩எஅஎ)

௬௨௧— மாதலி இது மாயச்செய லென்னுதல்.

இருப்புக் [1]கம்மியற் கிழை[2]நுழை யூசி[3]யொன் றியற்றி
விருப்பிற் [4]கோடியால் விலைக்கெனும் [5]பதடியின் விட்டான்
கருப்புக் கார்[6]மழை [7]வண்ணவக் கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய [8]தோளவன் மீளரு மாயம்.

(இ-ள்.) 'கருப்புக்காலத்துத்தோன்றிய கரிய[நீர்கொண்ட]மேகத்தைப்போன்றவண்ணனே'! இரும்பு வேலை செய்கின்ற கம்மியனுக்கு நூலிழை நுழைகின்ற ஊசியொன்றைச்செய்து விருப்பினோடு'(இதனை) விலைக்குக்கொள்வாய்' என்கின்ற அறிவிலான்போல, கடுமையுள்ள அந்தத் திக்கஜத்தின் தந்தத்தினாற்றோண்டப்பட்ட தோளையுடையவ

னை இராவணன் நீள்வதற்கு அருமையான மாயாஸ்திரத்தை விடுத்துள்ளான்; (எ - று.)

வண்ணம் என்றசொல் - இரட்டுறமொழிதலால், நிறத்தையும் தன்மையையும் ஒருங்கேயுணர்த்திற் றென்க. மாயவனை உன்னிடத்து மாயாஸ்திரத்தை விடுத்தது-இருப்புக்கம்மியனிடத்து ஊசியைச்செய்து கொண்டு வந்து விலைகூறும் மூடன் நிலைமையை யொத்ததாகு மென்றவாறு. "கொண்டுழிப்பண்டம் விலையொரீஇக்கொற்சேரி, நுண்டுளைத் துன்னூசிவிற்பாரின்","வைகொண் டூசி கொற்சேரியின்விற்றெம்மில் வண்ணவண்ணப், பொய்கொண்டுநிற்கலுற்றோ புலையாத்தின்னிபோந்ததுவே", "கற்றதொன் றின்றிவிடினும் குடிப்பிறந்தார், மற்றொன் றறிவாரின்மாணமிகநல்லர், பொற்பவுரைப்பான்புகவேண்டா கொற்சேரித், துன்னூசிவிற்பவரில்"என்பன காண்க; பயனின்முயற்சிக்கு. இது கூறப்படும். 'அஶ்ரோத்ரியபித்ருகாச் ச்ரோத்ரியாதபி ஶ்ரோத்ர்யபித்ருகோ ஶ்ரோத்ரியோ ஶ்ரேஷ்டஃ' என்பது, வடசொற் பழமொழி. பி - ம்:—1கம்மியர்க்கு, கம்மியர். 2துளை. 3என்று. 4கோடிரால், 5பதகரில், தன்மையின். 6நிற. 7அன்ன. 8தோளினனே செய்தமாயை. ()

௧௨௨.—மாதலி இந்தமாயாஸ்திரம் உன்னால் ஒருநொடியில் நீங்குமெனல்.

[1]வீக்கு வாயயில் வெள்ளெயிற் றரவின்வெவ் விடத்தை
மாய்க்கு மாநெடு மந்திரந் தந்ததோர் [2]வலியின்
நோய்க்கு நோய்தரு வினைக்கு[3]நின் பெரும்பெயர் நொடியின்
நீக்கு வாயுனை நினைக்குவார் பிறப்பென நீங்கும்.

(இ-ள்.) நோயைப்போக்குவதன்பொருட்டும், துன்பந் தருகின்ற வினைகளைப் போக்குவதன்பொருட்டும் உனது பெருமைபெற்ற பெயரைக் கீர்த்தனஞ்செய்தால், (அங்ஙனங் கீர்த்தனஞ் செய்பவர்க்கு அவற்றை) நீக்குபவனே! வாயிலேகூரிய வெள்ளிய எயிற்றைக் கொண்ட அரவினுடைய உயிரையழிக்கவல்ல கொடிய விடத்தை மாய்க்குமாறு நெடுமந்திரம் தந்ததான ஒப்பற்றவலிமைபோல (உன்னுடைய அஸ்திர விசேஷத்தினால் மாய்க்கப்பட்டு இந்தமாயாஸ்திரமானது) நின்னை நினைப்பவரின் பிறப்புப்போல நீங்கிவிடும்; (எ-று.)---உவமையணி. நொடித்தல் - சொல்லுதல். வீதல்-இறத்தல்: வீக்குதல்-இறக்கச்செய்தல், வீக்கு-பிறவினை முதனிலை. பி-ம்:—1வீக்கும் மாயின, வீக்குவாயன், வீய்க்கு வாயன்ன. 2வலியும். 3நுன். (௩௭அ௬)

௧௨௩.---ஸ்ரீராமன் ஞானாஸ்திரம் விடுதல்.

வரத்தி னாயினு மாயையி னாயினும் [1]வலியோன்
உரத்தி னாயினு முண்மையி னாயினு மோடத்
[2]துரத்தி யாலென ஞானமாக் [3]கடுங்கணை துரந்தான்
சிரத்தி னான்மறை யிறைஞ்சவுந் [4]தேடவுஞ் [5]சேயோன்.

(இ - ள்.) வேதங்கள் (தம்முடைய) சிரோபாகமாகியஉபநிடதங்களினாலும் வணங்குவதற்கும் தேடுவதற்கும் முடியாதவாறு அப்பாற்

பட்ட பரம்பொருளாகிய ஸ்ரீராமன்,—'(இங்குத்தோன்றியுள்ளது)வலிமையுள்ளவனான இராவணனுடைய வரத்தினாலேனும் மாயையினாலேனும் அல்லது (இயற்கை) உடல்வலிமையினாலேனும், அல்லது உண்மையினாலேனும் சரி (எப்படியினாலாயினும்) ஓடுமாறு (இதனை) அப்பாற்படுத்துவாய்' என்றுசொல்லிப் பெருமைபொருந்திய விரைவுள்ள ஞானாஸ்திரத்தை விடுத்தான்; (எ - று.)—தூரத்தியென்று அஸ்திரதேவதையைக்குறித்துக் கூறியது - தூரத்தியால்என - தூரத்துவாயென்று (மாதலி)தூண்ட என்றலும் ஒன்று. பி - ம்:—[1]வலியோர், வலிய. [2]தூரத்தினாலென. [3]கொடுங். [4]தொடரவுஞ், தொடர்வருஞ். [5]தெரியான், செய்யோன். (௩௭௧0)

கஉச.—மாயாஸ்திரம் அழிதல்.

துறத்த லாற்றுறு ஞானமாக் கடுங்கணை தொடர
[1]அறத்த லாதுசெல் லாதுநல் லறிவுவந் தணுகப்
பிறத்த [3]லாற்றுறும் பேதைமை பிணிப்புறத் தம்மை
[4]மறத்த லாற்றந்த மாயையின் [5]மாய்ந்தது மாயம்.

(இ - ள்.) (ஸ்ரீராமபிரான்) விடுத்ததனால் நெருங்கிய கடிய ஞானமாக்கணை தொடரவே,—அறத்திலே யல்லாது (வேறுஅதருமவழியிற்) செல்லாதபடி நல்லறிவுவந்துசேர்வதனால், பிறத்தலாலே [பிறப்பினாலே]நெருங்கிய.பேதைமை(தம்மைப்)பந்தப்படுத்தத் தம்நிலைமையை [ஆன்மஸ்வரூபத்தை] மறந்திட்டதனால் தோன்றிய மாயை (யழிவது) போல அந்தமாயாஸ்திரம் அழிந்தது; (எ - று.)

ஞானாஸ்திரத்தினால் அந்தஇராவணனுடையமாயாஸ்திரம் அழிந்ததற்கு, ஞானத்தினால் பிறவிக்குக்காரணமான மாயை யொழிவதை உவமைகூறினர். பிறவியினால் இந்தப்பிரபஞ்சத்திற் பிணிப்புறுமாறு பேதைமைதோன்றுகின்றது: அப்பேதைமையினால், ஆத்மஸ்வரூபம் மறைக்கப்படுகின்றது. அதனால், மாயைக்கு உட்படுகின்றது ஆன்மா: அந்தமாயையைக் கடவுளருளாற்பிறக்கும் ஆன்மஞானம் போக்குமென்க. பி-ம்:—[1]அறத்தலாறது, அறத்தினாது. [2]சேறலால், தேறலால், [3]ஆற்றுமப். [4]மறத்தலால். [5]மாய்ந்ததம்மாயை. (௩௭௧௧)

வேறு.

கஉ௫.—இராவணன் சூலங்கொள்ளுதல்.

நீலங் [1]கொண்டார் கண்டனு நேமிப் படையோனும்
மூலங் [1]கொண்டார் கண்டக ராவி [2]முடிவிப்பான்
காலங் கொண்டார் [3]கண்டன முன்னே கழிவிப்பான்
சூலங் கொண்டா னண்டரை யெல்லாந் [4]தொழில்கொண்டான்.

(இ - ள்.) நீலநிறங்கொண்டுபொருந்திய கண்டத்தையுடையவனான சிவபெருமானும், சக்கரப்படையைத்தரித்த திருமாலும்,(திருமாலினது நாபீகமலமாகிய)பிறப்பிடத்தைக்கொண்ட பிரமதேவனும்,---லோககண்டகரான அரக்கரின் ஆவியைமுடிப்பதற்குக் காலங்கொண்டார்;

அண்டரையெல்லாந் தொழில்கொண்டவனான இராவணன், எதிரிற் காணப்படும்பொருளையெல்லாம் ஒழிக்கக் கருதிச் சூலப்படையைக் (கையிற்) கொண்டான்; (எ - று.)

பலபொருள்களும் இச்சூலத்தாலழியுமென்று 'கண்டனமுன்னே கழிவிப்பான்' என்றார். பி - ம்:—[1]கொண்ட. [2]முடிகிற்பார், முடிவிப்பார். [3]கொண்டனர்முன்னேகழிவிப்பான், ஆயினுமுன்னிற்கழிவிக்கும், கொண்டெனமுன்னேகழிவிக்கும். [4]தொலைவித்தான், தொலைகொண்டான். (௩எ௬௨)

௬௨௬—இராவணன் சூலம்விட்டதை இராமபிரான் காணுதல்.

[1]கண்டா குலமுற் றுயிர மார்க்கின் றதுகண்ணிற்
கண்டா குலமுற் றும்ப [2]ரயிர்க்கின் றதுவீரர்
கண்டா குலமுற் றுஞ்சுடு மென்றக்கழல்வெய்யோன்
[3]கண்டா குதன்முன் செல்லவி சைத்துள் ளதுகண்டான்.

(இ - ள்) ஆயிரம் கண்டா குலம் - ஆயிரம்கண்டையின் தொகுதி, முற்று-முற்றிலும்,ஆர்க்கின்றது-ஒலிக்கப் பெற்றதும்,உம்பர்-தேவர்கள், கண்டு-கண்ணின் கண்டு--,ஆகுலம் உற்று-துன்பமடைந்து, அயிர்க்கின்றது-(யாதாய் முடியுமோ? என்று)சந்தேகிக்கின்றதும்,வீரர்கண்-(எதிர்ப்பக்கத்து) வீரரிடத்துள்ள, தா - வலிமையையும், குலம்-சிறப்பையும்-முற்றும் சுடும்-அடியோடு எரித்துவிடும், என்று-,அ கழல் வெய்யோன்-வீரக்கழலையணிந்த அந்தக் கொடிய இராவணன், கண் தாகுதல் முன்-(பிறருடைய கண்)பார்ப்பதற்கு முன்னம், செல்ல-செல்லும்படி,விசைத்துஉள்ளது-விரைந்து விடுத்துள்ளதுமாகிய சூலத்தை, (ஸ்ரீராமபிரான்), கண்டான்-பார்த்தான்; (எ - று)

சுடுமென்று விசைத்துள்ளது என இயையும். பி-ம்:— [1]கண்டார், [2]பதைக்கின்றது கண்ணிற், அயர்க்கின்றது வீரர். [3]கண்டாயுதன்முன், கண்டாவுதன்முன். (௩எ௬௩)

௬௨எ—சூலத்தின் தன்மை.

எரியா நிற்கும் [1]பஃறலை மூன்று மெரியஞ்சத்
[2]திரியா [3]நிற்கத் [4]தேவர்க ளோடத் திரளோட
இரியா நிற்கு மெவ்வுல குந்[5]தன் னொளியேயாய்
விரியா நிற்கு [6]நிற்கில தார்க்கும் விழி[7]செல்லா.

(இ-ள்.)எரிவதான(அந்தத்) திரிசூலமானது மூன்று அக்கினிகளும் அஞ்சுமாறு திரியாநிற்க, (அது கண்டு) தேவர்களோடவும் (வானரத்திரள்) ஓடவும், நிலைகெடுகின்ற எவ்வுலகத்திலும் தன்னொளியேயாகி விரியாநிற்கும்: எவர்க்கும் (அதனைக்கண்டால்) விழிசெல்லாமல் நிற்கிலது; (எ-று.)

வடநூன் முறைப்படி மூன்றுமுதல் பன்மை யெனப்படுதலால், முத்தலைச் சூலத்தைப் பலதலையென்றார்: இது-பண்புத்தொகையன்மொழி. பி-ம்:—[1]என்றிலை மூன்றினெரியுந்தித் 'பலதலை.....சிந்தித்' [2]தெரியா. [3]நற்கும். [4]தேவரை காடித்திரளோடும், தேவர்களோடே திரளோட, தேவரைபோடத்திரளோடும். [5]பேரொளியாக. [6]நின்றவர் யார்க்கும். [7]செல்ல. (௩௭௬௪)

கஉஅ.—இச்சூலத்தை வெல்வாயென்று ஸ்ரீராமனைத் தேவர் வேண்டுதல்.

செல்வா யென்னச் செல்ல விடுத்தா னிதுதீர்த்தற்கு
ஒல்வாய் நீயே வேறொரு வர்க்கும் [1]முடையாதால்
வல்வாய் வெங்கட் சூல மெனுங்கா லனை[2]வள்ளால்
வெல்வாய் வெல்வா யென்றனர் வானோர் மெலிகின்றார்.

(இ-ள்.) வானவர்,—(மனம்)மெலிகின்றாராய், 'வள்ளால்! செல்வா யென்றுசொல்லி (த் திரிசூலத்தைச்) செல்லுமாறு (இராவணன்)விடுத்தான்: இதனைத் தீர்த்தற்கு வலிமையுடையாய் நீயே: (இது), வேறொருவர்க்கும் அழியாது: (ஆதலால்), வலியவாயையுடைய கொடுமையைக் கொண்ட சூலமென்கின்ற காலனை (நீயே)வெல்வாய், வெல்வாய்'என்று கூறினார்; (எ - று.)—பி - ம்:—[1]மிடையாதால், முடியாதால். [2]வள்ளல், வாளா. (௩௭௬௫)

கஉகூ.—இராமபிரான் அந்தச்சூலாயுதத்தின்மீது எறிந்த சரங்கள் வீணுதல்.

துனையும் வேகத் தாலுரு மேறுந் [1]துண்ணென்ன
வனையுங் காலிற் [2]செல்வன தன்னை மறவாதே
நினையு ஞானக் கண்[3]ணுடை யார்மே னினையாதார்
வினையம் [4]போலச் [5]சிந்தின வீரன் சரம்வெய்ய.

(இ - ள்.) (அந்தச்சூலாயுதம்) விரைந்துவருகின்ற விசையினால் பேரிடியும் அச்சங்கொள்ளாநிற்க,—தன்னை மறவாதே தியானிக்கின்ற ஞானக்கண்ணுடையரான பரமபாகவதர்மேல் "(எம்பெருமான்ஒருவன் உளன்'என்று தானும்) நினைக்கமாட்டாதாருடைய தீச்செயல்கள்(பயன் படாமற்போவன)போல(ப் பயன்படாதொழியுமாறு), சஞ்சரிக்கின்ற காற்றுப்போல விரைந்துசெல்வனவான ஸ்ரீராமன்விடுத்த வெவ்விய சரங்கள் சிந்தின; (எ - று.)

சூலாயுதத்தின்மீது வீரன் சிந்தின பாணங்கள் பரமபாகவதர்க்குச் செய்ததீச்செயல்கள் பயன்படாமற்போவனபோலப் பயன்படாவாயின என்பதாம் பிரகலாதனைக்கொல்லுமாறு இரணியகசிபு செய்தவை பயன்படாமற்போனது, இங்குக் கருதத்தக்கது. பி - ம்:—[1]துனி னென்ன. [2]செல்வனதன்மை, செல்வதறன்னே. [3]உடையான். [4]என்ன. [5]சிந்தினன், (௩௭௬௬)

கக.0.—அஸ்திரங்களையெய்தும் ஒன்றும்பயன்படாமற்போகச்
செய்வகையறியாதான்போல் ஸ்ரீராமனிருத்தல்.

எய்யு மெய்யுந் தேவ ருடைத்திண் படையெல்லாம்
பொய்யுந் [1]துய்யு [2]மொத்தவை சிந்தும் புவிதந்தான்
வையுஞ் சாப [3]மொப்பென வெப்பின் வலி [4]கண்டான்
ஐய னின்றான் [5]செய்வகை [6]யொன்று [7]மறிகில்லான்.

(இ - ள்.) புவிதந்தவனான ஸ்ரீராமன்,—தேவருடையதிண்ணிய படைகளையெல்லாம் விடாதுஎய்பவனானான்: அவை பொய்யும் துய்யும் ஒத்து (அந்தச்சூலத்தை ஒன்றுஞ்செய்யமாட்டாது) சிந்தின; ஐயன் வைகின்ற சாபம்போல வெம்மையையுடைய அந்தச்சூலத்தின் வலிமையைக் கண்டானாய், செய்யும்வகைஒன்றையும் அறியாதானாய் [அறியாதான்போல] நின்றான்; (எ - று.)—துய் - பஞ்சின்சிறுநுனி: பஞ்சுஎனினுமாம். பி - ம்:—[1]மெய்யும். [2]ஒப்பன, ஒத்திவை [3]ஒப்பதின்வெம்பும், ஒப்பனவொப்பின், ஒப்பனவம்பின். [4]கண்டே. [5]செய்வதை. [6]எல்லாம். [7]அறிவில்லான். (ஙஎகஎ)

கஙக.—சூலம் இராமனை நெருங்கிவருதல்.

மறந்தான் செய்கை [1]மற்றெதிர் [2]செய்யும் வகையெல்லாம்
துறந்தா னென்னு வும்பர் துணுக்கந் தொடர்வுற்றார்
அறந்தா னஞ்சிக் கால்குலை யத்தா [3]னறியாதே
பிறந்தா [4]னின்றான் [5]வந்தது சூலம் பிறரஞ்ச.

(இ - ள்.) (அப்போது, 'இந்தச்சூலத்திற்கு) எதிராகச்செய்யும் செய்கையின்வகையையெல்லாம் மறந்தவனாய்த்துறந்தான்' என்றுசொல்லித் தேவர்கள் அச்சம் தொடரப்பெற்றனர்: தருமதேவதையும் அஞ்சிக் கால்நடுங்க,(மானுடனாய்ப்)பிறந்தவனான இராமன்தன் தெய்வத்தன்மையைஅறியாமலே நின்றான்; (அவ்வேளையில்,அந்தச்)சூலம் பிறர் அஞ்சும்படி (நெருங்கி)வந்தது; (எ-று.)—செய்யும் செய்கைவகையென்று கூட்டப்பட்டது. பி - ம்:—[1]மாறு. [2]சொல்லுமதியெல்லாம். [3]அறியாது. [4]என்றான். [5]வந்தன.

இங்கு ஒருபிரதியில் இரண்டுசெய்யுள்கள் காணப்படுகின்றன. அவைவருமாறு:—

நெற்றிவிழி யானய னிறைந்த மறையாள
மற்றையம ரர்புவியில் வானவர்க ளீரைந்து
உற்றதலை தானவன் விடுங்கொடிய சூலம்
இற்றொழிய வான்றனியு மோவென விசைத்தான்.

வேதமொரு நாலுமுள வேள்விகளும் வெவ்வேறு
ஓதமுத லாயுதவு பூதமவை யைந்தும்
நீதியொடு கால்குலைய நீசன்விடு சூலம்
மீதளியு மென்றிதய மெண்ணின னிராமன். (ஙஎகஅ)

௧௩௨.—இராமபிரானது உங்காரத்தால் அச்சூலம் பொடியாயுதிர்தல்.

¹சங்கா ரத்தாற் ²கண்டை யொலிப்பத் தழல்சிந்தப்
³பொங்கா ரத்தான் மார்பெதி ரோடிப் புகலோடும்
⁴வெங்கா ரத்தான் ⁵முற்று முனிந்தான் வெகுளிப்பேர்
உங்கா ரத்தா லுக்கது பன்னூ றதிராகி.

(இ - ள்.) (அந்தச்சூலாயுதம்),—சங்காரத்தொழிலோடு மணிகள் ஒலிக்கவும், நெருப்புச் சிந்தவும், மிக்க ஆரத்தைஅணிதற்குஉரியவனை ஸ்ரீராமபிரானது மார்புக்குஎதிராகஓடிப் புகுந்தவளவில்,—(அவ்விராமன்)கொடியஉக்கிரத்தோடு மிகவும் கோபித்தான்: (அவனுடைய) கோபத்தினால்தோன்றிய பெரிய உங்காரத்தினால் (அந்தச்சூலம்) பலநூறு பொடிகளாகிச் சிந்தியது; (எ - று.)—மாதலிதந்த மஹாசக்தியால் இராவணனெறிந்த சக்தியை நீறாக்கினான் ஸ்ரீராமனென்று வான்மீகத்தி லுள்ளது. பி - ம்:—¹சங்காரத்தார, சங்கராரார்த்தார். ²தண்டை. ³பொங்காராத்தான். ⁴வெங்காரார்த்தான். ⁵முற்ற. (௩௭௯௯)

௧௩௩.—அதுகண்ட வானோரின் கொண்டாட்டம்.

ஆர்ப்பா ரானா ¹ரச்சமு மற்றா ரலர்மாரி
தூர்ப்பா ரானார் துள்ளல் புரிந்தார் ²தொழுகின்றார்
தீர்ப்பாய் நீயே ³தீயென வேறாய் வருதீமை
பேர்ப்பாய் போலா மென்றனர் வானோ ருயிர்பெற்றார்.

(இ - ள்.) (அதுகண்ட) வானவர்கள்,---(போனாற்போன்ற தம்முடைய)உயிர் மீண்டுவரப்பெற்றவராய் ஆரவாரிப்பவரானார்: அச்சமும் நீங்கப்பெற்றார்; மலர்மழையைத் தூர்ப்பவரானார்: துள்ளுதலைச் செய்தார்: தொழுகின்றவராய்'(இந்தச்சூலத்தின் கொடுமையைத்)தீர்க்கவல்லவனாகியநீயே தீப்போல(இனியும்) வெவ்வேறாய்வரக்கூடிய தீமைகளையெல்லாம் நீக்குவாய்' என்று கூறினார்கள்; (எ - று.)—போல்-ஒப்பில்போலி. பி - ம்:—¹அசசமுன். ²தொடர்கின்றார். ³தீயனநீயே...தீமை. தீயெனநீயே...தீமை, தீயனதீயாருயர்தீமை. (௩௮௦௦)

௧௩௪.—இதுவும் அடுத்த கவியும் - இராவணன் இராமனைப் பரம்பொருளாயிருக்கலாமெனக் கருதியமையைத் தெரிவிக்கும்.

¹வென்றா னென்றே யுள்ளம் ²வியந்தான் விடுசூலம் [டான்
³பொன்றா னென்னிற் போகல தென்னும் பொருள் கொண்
ஒன்றா முங்கா ரத்⁴திடை யுக்கோ டுதல்காணா
நின்றா ⁵னந்நாள் வீடண னார்சொன் னினைவுற்றான்.

(இ-ள்.) '(நாம்) விட்ட சூலம்(எந்தஅஸ்திரங்களினாலும்)அழியாது' என்கின்ற விஷயத்தை மனத்திற்கொண்டவனான இராவணன்,---ஒப்பற்றதாகிய (ஸ்ரீராமபிரானது) உங்காரத்தினால் (அந்தச்சூலம்) பொடியாய் உதிர்ந்துபோதலைக் கண்கூடாகக்கண்டுநின்றவனாகி,—'(நாம்)விட்டசூலத்தினால் அழியாமற் போவானேயானால், (இவன் நம்மை) வென்றவனேயாவன்' என்று மனத்தில் வியந்தவனாகி, அப்போது விபீஷணனார்சொல்லை நினைக்கலுற்றான்; (எ - று.)

போகலதென்னும் பொருள்கொண்டான்-இராவணன்: போதல்-அழிதல். பி - ம்:—1வென்றேனென்றே, வென்றேசின்றே. 2வெயர்ந்தான். 3பொன்றுகின்ற, பொன்றுவாயின், பொன்றுவென்னில். 4தீயுற்றேடுதல்காணு. 5அன்னுன். (௩அ0க)

கசுரு. சிவனே வல்ல னான்முக னல்லன் றிருமாலாம்
அவனே வல்லன் மெய்வர மெல்லா மடுகின்றான்
தவனே யென்னிற் செய்து முடிக்குந் 1தர னல்லன்
இவனே தானவ் வேத முதற்கா ரண2னென்றான்.

(இ - ள்.) "(நமது) உண்மையான வரத்தையெல்லாம் பயன்படாமற்செய்பவனாகிய இவன்,—சிவனாயிருக்கலாமோஎன்றால் (அவன்) அல்லன்; நான்முகனாயிருக்கலாமோஎன்றால் (அவனும்) அல்லன்; (ஒருகால்) திருமாலாகிய அந்தமூர்த்தியாயிருக்கலாமோ வென்றால், (அவனும்) அல்லன்; (இனிப்பெருந்) தவமுடையான் ஒருவனாயிருப்பனோவென்றால் (அவன் இவ்வளவு பராக்கிரமச்செயலைச்) செய்துமுடிப்பதற்குஏற்ற தகுதியையுடையவனல்லன்: (ஆகையால்), இவன் அந்த வேதமுதற்காரணனான பரம்பொருள்தானோ'என்றான், (இராவணன்); (எ - று.)

திரிமூர்த்திகளும் இதற்குமுன் தன்னெதிரில் வலியொடுங்கிக் கிடந்தமையால், 'அம்மூவரும் அல்லர்' என்றான். ஆக்கல், அளித்தல், அழித்தல்என்ற முத்தொழிலைச்செய்வதற்காகத் திரிமூர்த்திகள் தோன்றியுள்ளாரென்பதும், பரம்பொருள் மனோவாக்காயங்களுக்குஎட்டாத பரமபதத்தில் தனியேவாழ்கின்றதென்பதும் நூற்கொள்கை. பி-ம்:—1தரம். 2என்பான், ஆவான். (௩அ0உ)

கசுசு.—எதிர்ப்பவன் எவனாகஇருப்பினும் போர்செய்வதாக இராவணன் உறுதிகொள்ளுதல்.

1யாரே னுந்தா னாகுக யானென் றனியாண்மை
2பேரே னின்றே வென்றி முடிப்பன் 3புகழ்பெற்றேன்
நேரே 4செல்லுங் 5கொல்லு மெனிற்றா னிமிர்வென்றி
6வேரே 7நிற்கு 8மீள்கில னென்னா 9விடலுற்றான்.

(இ-ள்.) '(எதிர்ப்பவன்) எவனாகஇருந்தாலும் இருக்கட்டும்: யான் (இதுவரையும்) என்னுடைய தனிப்பட்டஆண்மையினின்று பேரேனாய்நின்றே வென்றியைமுடிப்பவனாய் புகழ்பெற்றவனானேன்: '(இப்போது அந்தப்பரம்பொருளே) நேரேவரும்: கொல்லும்என்றால், (அப்போது, மிக்கவென்றியின்வேர் (அப்பிரானிடத்து) நிலைத்துநிற்கும்: (ஆயினும், நான் போரில்நின்றும்) மீள்கிலேன்'என்றுசொல்லி (மேலும் அம்புகளைத்) தொடுத்தற்குப் பொருந்தினான்; (எ - று.)—பி-ம்:—1ஆர். 2பேரேநின்றே, பேரேநின்றேன். 3பெயர்கில்லேன், அகலல்இலன். 4செல்வன். 5கொல்லெனரக்கனிமிர்வெய்தி, கொல்லுமரக்கனிமிரெய்தி, 6வேரா. 7நிற்க. 8மீள்கலது. 9மிடல். (௩அ0௩)

கசுஎ.—இராவணன் நிருதிப்படையை விடுதல்.

நிருதித் திக்கி 1னின்றவன் வென்றிப் படைநெஞ்சிற்
கருதித் தன்பால் 2வந்த தவன்கைக் கொடு3காலன்

'விருதைக் ⁵சிந்து ⁶வில்லின் வலித்தூர் செலவிட்டான்
குருதிச் செங்கண் டியுக ஞாலங் குலைவெய்த.

(இ - ள்.) நிருருதிதிக்கில் [தென்மேற்கில்] நிற்குந் திக்குப் பாலகனது வெற்றிபொருந்திய படையை(விடுவதாக) மனத்தில் எண்ண, (அப்போது) தன்னிடத்தில் வந்ததான (அப்)படையை அவ்விராவணன் (தன்னுடைய) கையிற்கொண்டு, யமனுடைய விருதைச்சிந்தவல்ல வில்லிற்பூட்டி(த் தன்னுடைய) இரத்தம்போற்சிவந்த கண்களினின்று தீப்பொறிபறக்கவும் உலகம்நடுநடுங்கவும் செல்லுமாறு விடுத்தான்; (எ - று.)

நிருதித்திக்கின் நின்றவன்படை நிருருதிதிக்பாலகனிடத்தினின்று கிடைத்தபடை: நிருருதியென்ற திசைக்காவல் செய்யுந்தேவதை பெண்பாலாயினும், இன்னதிக்குப்பாலகன் இன்னனென்று கூறும் வழக்குப்பற்றி, ஆண்பாலாற்கூறினர்: இனி, 'நின்றவர்' என்ற பாடங் கொள்வாருமுளர்: அன்றி, தென்மேற்குத்திசையின் கீழிருந்து பூமியைத்தாங்குபவனான சங்கபாலனென்னும் நாகனதுபடை என்பாருமுளர். அதுபொருந்தாது, (நிருருதியின் மரபினரான நைருதரே அரக்கரென்பது, இங்குக்கருதத்தக்கது பி - ம்:—¹நின்றவர். ²வந்ததைவன்கைக்கொடு, வைத்ததைவன்கைக்கொடு, வைத்தவன்கைக் கொடு. ³காண. ⁴விருதிற். ⁵சிந்தி. ⁶வில்லினிலுந்திச். (௩௮0௪)

௩௩௮.—இதுமுதல் மூன்றுகவிகள்—ஒருதொடர்: இராவணன் விட்ட படையின்தன்மையைத் தெரிவிக்கும்.

வையந் துஞ்சும் ¹வன்பிடர் நாக மன²மஞ்சப்
³பையுங் கோடிப் பஃறலை யோடு ⁴மளவில்லா
மெய்யும் வாயும் பெற்றன ⁵மேருக் கிரி⁶சால
நொய்தென் றோதுந் தன்மைய ⁷வாக நுழைகின்ற.

(இ - ள்.) இவ்வுலகம் தங்குகின்ற வலியபிடரையுடைய ஆதிசேஷன் மனமஞ்சும்படி வரிசையாகவுள்ளபலதலையோடு படமும் அளவில்லாதவுடலும் வாயும் பெற்றனவும் மேருமலையும் மிகஇலேசானதுஎன்று சொல்லும்படியான தன்மையவாய் நுழைகின்றனவும்,—(எ - று.)— இராவணன்விடுத்த நிருருதிப்படையினின்று நாகங்கள்தோன்றின வென்க. 'இராவணன் ராக்ஷஸாஸ்திரத்தைவிடுக்க நாகங்கள் அதனினின்றுதோன்றினஎன முதனூல்கூறும். பி-ம்:—¹வல்விடநாகம், மன்பிடர்நாகம். ²அஞ்சாப். ³ஐயங்கோடிப், ஐயங்கொள்ளப். ⁴அமைவில்லா. ⁵மேகத்திரி. ⁶காலன், தானும். ⁷வானின், ஆன. (௩௮0௫)

௩௩௯. வாய்வாய் தோறு மாகடல் போலும் விடவாரி
போய்வார் கின்ற ¹பொங்கனல் கண்ணிற் ²பொழிகின்ற
³மீவா யெங்கும் வெள்ளிடை யின்றி ⁴மிடைகின்ற
⁵பேய்வா யென்ன வெள்ளெயி றெங்கும் பிறழ்கின்ற.

(இ - ள்.) ஒவ்வொருவாயினிடமாகவும் பெரியகடல்போலும் விஷநீர் மிகுதியாகப்பெருகப்பெற்றனவும், மிக்கநெருப்பைக் கண்ணின்

மூலமாக வெளிப்படுத்துவனவும், மேலிடமெங்கும் வெற்றிடமின்றி நெருங்குகின்றனவும், பேயின்வாய்போல எப்புறத்திலும் வெள்ளிய கோரப்பற்கள் விளங்கப்பெற்றனவும்,---(எ-று.)---பி-ம்:--1வெங்கனல். 2பொலிகின்ற. 3தீவான், தீய்வாய். 4மெலிகிற்ப. 5பேன்வாயென்ன, பேய்வாயெங்கும். (ஙஅ0௬)

கச௪0. கடித்தே தீருங் கண்ணகன் ஞாலங் [1]கடலோடுங்
குடித்தே தீரு மென்[2]றுல கெல்லாங் குலைகின்ற
முடித்தா [3]னன்றே வெங்க ணரக்கன் முழுமுற்றும்
பொடித்தா ளுகு மிப்பொழு தென்னப் [4]புகைகின்ற.

(இ - ள்.) '(இந்த அஸ்திரம் இராமபிரானைக்) கடித்தேதீரும்: இடமகன்றஞாலத்தைக் கடலோடும் குடித்தேதீரும்' என்றுகருதி உலகமெல்லாம் நடுங்குதற்குக் காரணமானவையும், 'கொடுங்கண்ணையுடைய இராவணன் பிரபஞ்சம்முழுவதையும் முடித்தானாய் இப்பொழுதே படுகூரணப்படுத்தினவனுவானன்றோ' என்னுமாறு சீறுந்தன்மையுள்ளனவு மாயின, (இராவணன் விடுத்த அந்தப்படைகள்); (எ - று.)---பி-ம்:—1கடலேழும். 2உயிரெல்லாம். 3என்றே. 4புகைகின்றூர், புகைகின்றூன். (ஙஅ0எ)

கசசக.---இராமபிரான் காருடாஸ்திரத்தினுல் நிருதிப்படையை எதிர்த்தல்.

அவ்வா றுற்ற வாடர வங்[1]கா லகல்வாயாற்
கவ்வா நின்ற மால்வரை [2]முற்று மவைகண்டான்
எவ்வாய் தோறு [3]மெய்தின வென்று வெதிரெய்தான்
தவ்வா [4]வுண்மைக் காருட மென்னும் படைதன்னால்.

(இ - ள்.) அவ்வாறுபொருந்திய ஆடுந்தன்மையையுடைய நாகம் (விஷத்தைக்) கக்குகின்ற பரந்தவாயினுற் கவ்வப்பெற்ற பெரியஎல்லையையுடையஅந்த இடங்கள் [போர்க்களம்]முழுவதையும் கண்டவனுகிய ஸ்ரீராமன், '(இந்தநாகங்கள் ஓரிடமும்விடாமல்) எல்லாவிடங்களிலும் பொருந்தின' என்றுஎண்ணி, (அந்தஅஸ்திரத்தைப் போக்குவதற்கு) நீங்காத உண்மையையுடைய [தவறாமலழிக்கவல்ல] காருடமென்கின்ற அஸ்திரத்தைக் கொண்டு எதிராகப் பிரயோகித்தான்; (எ - று.)—வாயால் மால்வரைமுற்றும் கவ்வாநின்றனவான அரவம் அவற்றைக் கண்டான் எனினுமாம். பி - ம்:---1தன்னடல், காலனல், தன்னகல், தானகல். 2முற்றும்வகை. 3ஏகினவென்ன. 4மெய்ம்மைக், மேன்மைக். (ஙஅ0அ)

கசசஉ.---காருடாஸ்திரத்தின் தன்மை.

எவ[1]ணத் தன்மைத் தேகின நாகத் தினமென்னப்
பவணத் தன்ன [2]வெஞ்சிறை வேகத் தொழில்பம்பச்
சுவணக் [3]கோலத் துண்ட நகந்தோல் சிறை [4]வெல்போர்
உவணப் புள்ளே யாயின [5]வாறே ருலகெல்லாம்.

(இ - ள்.) (இராவணன் விடுத்த அந்) நாகத்தின்கூட்டம் எவ்விடத்து எத்தன்மையையுடையதாய்ச் சென்றதோ அவ்வகையையொப்ப

வே, காற்றையொத்த கொடிய சிறகின் வேகத்தொழில் நிரம்பப்பொன்மயமான மேனிநிறத்தையும் மூக்கையும் நகத்தையும் பழமையானசிறகையும் கொண்டபோர் வெல்லுந்தன்மையுள்ள கருடப்பறவைமயமாகவே மேலுலகமெல்லாமாயின; (எ - று.)—சுவணம் = ஸ்வர்ணம். பி - ம்:—[1]அத்தன்மைத்து. [2]வெஞ்சினவேகத்தொழில், வெஞ்சிறைவேகத்தழல். [3]கொல்லத்தண்டங்கத்தோர், கோலத்துண்ட நகத்தோற். [4]வெம்போர், வேல்போல். [5]எல்லாம். (௩அ0௯)

வேறு.

௧௪௩.—இதுமுதல் மூன்றுகவிகள் - அந்தக்காருடாஸ்திரத்தின் வருணனையைக் கூறும்.

அளக்கரும் புள்ளின [1]மடைய வாரழல்
[2]துளக்கரும் வாய்தொறு [3]மெரியத் தொட்டன
[4]இளக்கரு மிலங்கைத்தீ [5]யிடுது மீண்டென
விளக்கின [6]மெடுத்தன போன்ற [7]விண்ணெலாம்.

(இ - ள்.) அளப்பதற்கரிய (கருடப்)புள்ளினங்கள் யாவும் சலிப்பித்தற்கு அரிய வாய்கள்தோறும் நிறைந்த அக்கினியை எரியுமாறு கொண்டவை,—இளகச்செய்வதற்கு அரியதான இலங்கையிலே விரைவாகத் தீயிடுவோமென்று விண்ணுலகத்திலிருப்பவரெல்லாம்விளக்குகளினினத்தை எடுத்தவற்றை யொத்திருந்தன; (எ - று.)

அந்தக்காருடாஸ்திரத்தினால் தோன்றிய கருடப்புட்களின் வாயில் கோபாக்கினி பற்றியெரிவதைத் தற்குறிப்பேற்றவணியால் வருணிக்கின்றா ரென்க. பி - ம்:—[1]ஆயவாரழல், ஆவமாரழித், அரவமாரழல். [2]துளக்கறு. [3]எரியிற்றோன்றுவ, எரியத்தோன்றுவ. [4]வளப்பெரு. [5]இடுமின். [6]எடுத்தது. [7]விண்ணின, விண்ணென, விண்ணினே. (௩அ௧0)

௧௪௪. குயின்றன சுடர்மணிக் [1]கனலின் குப்பையிற்
பயின்றன [2]சுடர்தரப் [3]பதும நாளங்கள்
வயின்றொறுங் [4]கவர்ந்தெனத் [5]துண்ட [6]வாள்களால்
அயின்றன புள்ளின [7]முகிரி னள்ளின.

(இ - ள்.) (அரக்கரின்சிரசிற்)பதிந்தனவான ஒளியுள்ள மணிகள் அக்கினித்திரளையொப்பப் பொருந்தியனவாய் விளங்க, (அந்தக் கருடப்புட்கள்),---பதுமநாளங்களை இடந்தோறும் கவர்ந்தாற்போல (நாகங்களை)க் கால்நகங்களால் அள்ளினவாய் மூக்குக்களாகிய வாள்களாற் (கொத்தித்)தின்றன; (எ-று.)

கருடப்புட்களாற்கவ்வப்பெற்றநாகங்கள் தாமரைநாளங்கள்போன்றிருக்க, அந்தநாகங்களின் சிரசிலுள்ளமாணிக்கங்கள் கனற்குப்பைபோற் சுடர்வனவாயினவென்க. நாகங்கள் தாமரைநாளங்களை யொத்திருந்தமைக்குஏற்ப, மணிகள் தாமரைமலரையொக்கு மென்க. பி - ம்:—[1]கவின. சுடர்சுடர்ப். [3]பதுமராகங்கள். [4]கவர்ந்தன [5]பணியை. [6]வாய்களால். [7]உகிரும். (௩அ௧௧)

௧௪௫. எவ்வகை யுரகமு மிரியல் போயின
நொவ்விய லுற்றென நொடிப்ப தென்னினி

அவ்வயி னரனணி யடல ராவுமே
கவ்வையி னுழந்தன சிறையின் காற்றினே.

(இ - ள்.) அப்பொழுது சிவபிரானணிந்த வலிய நாகங்களுமே, (கருடப்பறவைகளின்) சிறகுகளினின்றுந் தோன்றிய காற்றினால் துன்புற்று வருந்தின: (இனி) அவ்வகைநாகமும் வீரத்தன்மையைப்பெற்று நிலைகெட்டு ஓடினவென்று பாராட்டிச்சொல்வதிற் பயனென்னை? (எ - று.)—இச்செய்யுள் பலபிரதிகளிலும் இல்லை. (௩அ௧௨)

௧௬௬.---இராவணன் சினத்துடன் சரங்களைத் தூவுதல்.

ஆயிடை யரக்கனு மழன்ற நெஞ்சினன்
[1]தீயிடைப் [2]பொடித்தெழு முயிர்ப்பன் சீற்றத்தன்
மாயிரு ஞாலமும் விசும்பும் [3]வைப்பறத்
தூயினன் சுடுசர முருமின் [4]றோற்றத்த.

(இ - ள்.) அப்போது, இராவணனும்;---கோபித்த மனமுடையவனாகி, தீயானது இடையே பொறியாகப்பறக்கின்ற பெருமூச்சுடையவனும் கோபத்தையுடையவனுமாகி, பெரியஇந்த உலகமும் வானமும் வெற்றிடமில்லாதுபோக இடிபோன்ற கொடுந்தோற்றமுடைய பாணங்களைத்தூவினான்; (எ - று.)---பி-ம்:---[1]தீயினிற். [2]பொடித்தெழு. [3]மாய்ந்தறத். [4]தோற்றத்தான். (௩அ௧௩)

௧௬௭.---இராவணசரம் வீழ்ந்திட, இராமசரம் அவ்வரக்கன் மார்பிற் புகுதல்.

[1]அங்கவெங் கடுங்கணை [2]யயிலின் வாய்தொறும்
வெங்கணை படப்பட விசையின் [3]வழ்ந்தன
புங்கமே தலையெனப் புக்க போலுமால்
துங்கவா [4]ளரக்கன துரத்திற் [5]றோற்றல.

(இ-ள்.) அப்போது அந்தமிகக் கொடிய கணைகள் (தம்முடைய) கூர்மையையுடைய முனைதொறும் (இராமனுடைய) கொடியகணைகள்படப்பட விசையுடனே (திரும்பி) வீழ்ந்தனவாய், மேம்பாடுபொருந்திய வாளரக்கனுடையமார்பிலே புங்கமே தலையாகப் புக்கனவாய்க் காணப்படாதனவாயின; (எ - று.)

அங்கு அ வெம் எனப்பிரிக்க. போலும்-உரையசை: வாக்கியாலங்காரம். இராவணனுடையபாணங்கள் இராமபாணங்களால் மீண்டு அவ்விராவணனுடைய மார்பிலேபுக்கு அங்குத்தானேயழுந்திக்கிடந்தனவென்க. புங்கம் - அம்பின்நுனி. அப்புமுனை மேலே காணப்படத் தலைகளே உடலிற்பொதிந்தனவென்பது, 'புங்கமே தலையெனப்புக்க' என்பதன் கருத்து. பி-ம்:---[1]அங்கவங். [2]அயில, அயிலை. [3]மீண்டன. [4]அரக்கன்றன்றிறத்தில் [5]தோன்றல, தோன்றலை. (௩அ௧௪)

௧௬௮.-- இராவணனுடைய தளர்ச்சியும் இராமனுடைய ஊக்கமும்.

ஒக்கநின் றெதிரம [1]ருடற்றுங் காலையின்
முக்கணன் றடவரை யெடுத்த மொய்ம்பற்கு
[2]நெக்கன [3]விஞ்சைக ணிலையிற் றீர்ந்தன
மிக்கன விராமற்கு வலியும் [4]வீரமும்.

(இ - ள்.) பொருந்தநின்று எதிர்த்துப் போரைச்செய்யும்போது, திரிநேத்திரனான சிவபெருமானுடைய மலையை யெடுத்தவனான வலிமையையுடையஇராவணனுக்குக்கற்றவித்தைகள் (ஞாபகத்துக்குவருந்) தன்மை குறைந்தனவாய், தம்நிலையில் நீங்கின: இராமற்கு வலியும் வீரமும் மிகுந்தன; (எ - று.)---பி-ம்:---[1]உறக்கும். [2]நெக்கென: [3]வித்தைையும், வித்தையின். [4]வேகமும். (௩-அகரு)

௪௯௯.---இராவணன்தலையை இராமனறுத்தல்.

[1]வேதியர் [2]வேதத்து [3]மெய்யன் வெய்யவர்க்கு
[4]ஆதிய [5]னணுகிய [6]வேற்ற நோக்கினன்
சாதியி னிமிர்ந்ததோர் தலையைத் தள்ளினான்
பாதியின் [7]மதிமுகப் பகழி யொன்றினால்.

(இ - ள்.) அந்தணர்கள்ஓதுகின்ற வேதத்தின் உண்மைப்பொருளாகிய ஸ்ரீராமன்,—கொடியோர்களானஅரக்கருக்குமுதல்வனான இராவணன் நெருங்கிய சமயம்பார்த்து,தொகுதியில் நிமிர்ந்த தோற்றமுள்ளதொரு தலையை அர்த்தசந்திரபாணமொன்றினால் அறுத்துத்தள்ளினான்; (எ - று.)---பி - ம்:—[1]வேதியன். [2]வைத்தது. [3]மெய்யும். [4]ஆதியின், ஆதியை. [5]அணுகினன். [6]ஆற்றல், ஆறை. [7]பிறைமுகப். ஒருபிரதியில்முன்னிரண்டடிகள் 'வேதியர்வேதத்துமெய்தவித்தக, நீதிமுறைமையுநெறியுநிற்கலா' என்றுஉள்ளன. (௩-அகசு)

௫௦௦.---இராவணன்தலை கடலில் வீழ்தல்.

மேருவின் கொடுமுடி [1]வீசு காலெறி
போரிடை [2]யொடிந்துபோய்ப் புணரி புக்கென
ஆரியன் சரம்பட வரக்கன் வன்றலை
நீரிடை விழுந்தது நெருப்பொ [3]டன்று போய்.

(இ - ள்.) வீசுந்தன்மையுள்ள வாயுபகவானோடு (ஆதிசேஷன்) செய்த போரிலே மேருவின்கொடுமுடி ஒடிந்துபோய்க் கடலிற்புகுந்தாற்போல, ஆரியனான ஸ்ரீராமனதுசரம் பட்டதனால் அரக்கனுடைய வலிய தலை நெருப்புடனே அன்றுபோய் (க் கடலின்) நீரிடைவிழுந்தது; (எ - று.)—பி-ம்:—[1]வீசுங். [2]ஒடித்துப். [3]ஒன்று, என்று. ()

௫௦௧.—இராவணன்சிரம் வீழ்ந்ததுகண்டு வானவர் கொண்டாடுதல்.

குதித்தனர் பாரிடைக் [1]குன்று [2]கூட்டற
மிதித்தனர் [3]வடகமுந் தூசும் வீசினார்
துதித்தனர் பாடின ராடித் துள்ளினார்
[4]மதித்தன ரிராமனை வானு ளோரெலாம்.

(இ - ள்.) வானுளோரெல்லாம்,---குதித்துப் பூமியிலே திரிகூடமலையானது நெக்குவிடும்படி மிதித்தார்கள்: வடகத்தையும் தூசையும் வீசினார்கள்; துதித்தனர்: பாடினர்: ஆடித் துள்ளினர்: இராமனைப் பாராட்டினார்கள்; (எ - று.)---வடகம்-மேலாடை. தூசு-அரையாடை. பி-ம்:---[1]குன்றங். [2]கூறுற. [3]வடமொடு, படமுகம். [4]மதித்தனன். ()

௩௫௨.—இராவணன்தலை மீண்டும் முளைத்தல்.

[1]இறந்ததோ [2]ருயிருடன் [3]கருமத் தீட்டினாற்
பிறந்துள தாமெனப் பெயர்த்து [4]மத்தலை
மறந்தில தெழுந்தது மடித்த வாயது
சிறந்தது தவமலாற் செய[5]லுண் டாகுமோ.

(இ - ள்.)இறந்ததான ஒருபிராணி கருமத்தொகுதியினால் உடனே பிறந்துளதாவது போல மீண்டும் (முன்கொண்டநிலையை) மறவாமல் (சினத்தினால்) மடித்த வாயையுடையதாய், அத்தலை எழுந்தது; சிறந்ததான தவம்இல்லாவிடின் (இவ்வாறான)செயல் நிகழுமோ? [நிகழாது]; (எ - று.)

அறுபட்டதலை மீண்டெழுந்தது தவத்தினாற்றலாலென்பதை ஈற்றடி விளக்கிற்று. 'சிறந்ததாகியசெயல் தவமல்லாமற் பிறிதாகுமோ' என்று ஈற்றடிக்குப் பொருள்கூறின்,வேற்றுப்பொருள்வைப்பணியாம். ஈட்டு - தொகுதி. பி - ம்:—[1]பிறந்தது. [2]உயிரிடைக். [3]தருமத்து. [4]ஓர்தலை. [5]உண்டாகுமே. (௩௮௧௧)

௩௫௩.—தோன்றியதலை ஸ்ரீராமனை வைது ஆரவாரித்தல்.

கொய்தது [1]கொய்தில தென்னுங் [2]கொள்கையின்
[3]எய்தவந் தக்கணத் தெழுந்த தோர்சிரஞ்
[4]செய்தவெஞ் சினத்துடன் சிறக்குஞ் செல்வனை
[5]வைதது தெழித்தது மழையி னார்ப்பினால்.

(இ-ள்.) கொய்யப்பெற்றதாகிக் 'கொய்யப்பட்டிலது' என்ற எண்ணமுண்டாகும்படி அக்கணத்தில்தானேவந்து தோன்றியதான ஒரு தலை,—கொண்ட கொடுங்கோபத்துடனே, சிறப்புப்பெற்றசெல்வனை ஸ்ரீராமனை மழைபோன்ற ஆரவாரத்தினுடனே திட்டி யதட்டியது; (எ - று.)—பி - ம்:—[1]கொய்திலனேறுங், கொய்திலவென்னும். [2]கோணெறி [3]ஐததுதெரிந்திலவமரர்க்கச்சந்தான், ஐததுதெரிகிலவமரர்க்காயினும், ஐயதுதெரிந்துமோவமரராயினும், ஐததுதெரிகுவதமரர்க்காயினும், ஐததுதெரிந்ததமரர்க்காயினும். [4]செய்ததுந்தெரிந்ததுஞ் சிலைக்குத்தேவனை, செய்ததுதொன்றிடர்ச்சிலைக்குச்செல்வனை, செய்ததுதெரிந்ததில்சிலைக்கைச் செல்வனை, செய்ததுதெரிந்தது சிவற்குஞ் செல்வனை, செய்ததுந்தெரிந்திலைசிலைக்குந்தேவனை. [5]வைததுந்தெழித்துதுமழையினார்ப்பதும், வைதது......ஆர்ப்பது. (௩௮௨0)

௩௫௪.—கடலில்வீழ்ந்த இராவணன்தலையும் ஆரவாரித்தல்.

[1]இடந்தது கிரிக்குவ டென்ன வெங்கணும்
பார்ந்தது குரைகடல் பருகும் பண்பது
விடந்[2]தரு[3]விழியது [4]முடுகி வேலையிற்
[5]கிடந்தது மார்த்தது மழையின் கேழது.

(இ - ள்.) விஷத்தைக்கக்குகின்ற கண்களையுடையதாகி விரைந்து கடலிற்கிடந்ததான தலையும்,—மலைச்சிகரம் குத்தியெடுக்கப்பட்டதை

ன்றபடி (தோன்றி)எங்கும் சென்றதாகி ஒலிக்கின்ற கடலின்கோலப் பருகுகின்ற தன்மையைப்பெற்று,மேகத்தின் ஒப்பைக்கொண்டு ஆரவாரித்தது;(எ - று)—மழையின்கேழது - மழைபோன்ற கருநிறமுடையதானதுஎனத் தலையைக் காட்டுவதாகக் கொள்ளுதலும் ஏற்கும். பி-ம்:—[1]இடைந்தது. [2]தகு, தழு. [3]விழியின். [4]முழுகி, முழுதும். [5]கிடந்தது வார்த்ததுகீழ்மைபோன்றலே, கிடந்தனவார்த்தன மழையின் கேழன; கிடந்தது......கேழன. 'படர்ந்தன பண்பின விழியன கிடந்தன ஆர்த்தன,கேழனஎன்ற பன்மையானபாடம் ஒரு பிரதியிலுள்ளது.(௩௮௨௧)

௧௫௫.—இராமபிரான்தோளில் இராவணன் பதினான்கு அம்புகளை யெய்தல்.

விழுத்தினன் [1]சிரமெனும் வெகுளி மீக்கொள
[2]வழுத்தின வுயிர்களின் முதலின் [3]வைத்ததோர்
[4]எழுத்தினன் றோள்களி னேழொ டேழுகோல்
அழுத்தின னசனியே றயிர்க்கு மார்பினான்.

(இ - ள்.) பேரிடியும் அயிர்க்கவல்ல ஆரவாரத்தையுடையவனான இராவணன்,—(தன்)சிரத்தை வீழ்த்தினனென்கின்ற சினம் மிகுவதனால், (யாவராலும்)துதிக்கப்பட்டு உயிரெழுத்துக்களின் முதலிலே வைக்கப்பட்டதொரு அகாரத்தின் ரூபியாயிருக்கின்றவனான ஸ்ரீராமனுடைய தோள்களிலே பதினான்குபாணங்களைப் பதியுமாறுவிடுத்தான்; (எ - று.)

உயிர்களின்முதலில்வைத்ததோரெழுத்து - அகாரம்: திருமால் அகாரரூபியாயிருக்கின்றா னென்பதை "அக்ஷராணாம் அகாரோஸ்மி" என்றதனாலும் அறியலாம். வழுத்தின எழுத்தினன் என இயையும். [4]எழுத்தின்வல் என்றபாடத்துக்கு, எழுத்து - எழுத்துவடிவானவனைக் காட்டியது, ஆகுபெயர். வல்தோள்எனஇயையும். பி - ம்:—[1]தலையெனும், தலையென. [2]வழுத்தினன். [3]வைத்ததோர், வைத்தவோர், வைத்தபேர். (௩௮௨௨)

௧௫௬.—இராவணன்கையை இராமபிரான் அறுத்தல்.

[1]தலையறிற் றருவதோர் [2]தவமு முண்டென
[3]நிலையுறு நேமியா னறிந்து நீசனைக்
கலையுறு திங்களின் [4]வடிவு காட்டிய
சிலையுறு கையையுந் [5]தலத்திற் சேர்த்தினான்.

(இ - ள்.) 'தலையற்றால்(மீண்டும் அதனைத்) தருவதாகிய ஒருதவப்பயனும் (இவனுக்கு) உண்டு'என்று அறிந்து, நிலையாகப்பொருந்திய சக்கரப்படையையுடையவனான ஸ்ரீராமன்,நீசனான(அந்த)இராவணனை, (சில)கலைகள்பொருந்திய திங்களின்வடிவைக்காட்டிய[அர்த்தசந்திரன் போல் வளைந்துள்ள]வில்லைப்பிடித்த கையையும்(அறுத்துத்)தரையில் தள்ளினான்; (எ - று.)—பி-ம்:—[1]தலையிறத், தலையறத். [2]தவமுண்டென்பதை. [3]நிலையுறநோக்கியநேமியோன்மகன். [4]வளைவுகாட்டிய, வளையுங்காட்டிய, வளையுங்காட்சியிற். [5]நிலத்திற், தலத்துச். (௩௮௨௩)

கருஎ.—அறுபட்ட கையும் மீண்டும் முளைத்தல்.

[1]கொற்றவெஞ் சரம்படக் குறைந்து போனகை
[2]பற்றிய கிடந்தது சிலையைப் பாங்குற
மற்றொர்கை [3]பிடித்தது போல[4]வவ்வியது
அற்றகை [5]பிறந்ததை [6]யார றிந்துளார்.

(இ - ள்.) (இராமபிரானுடைய) வெற்றிபொருந்தியகொடிய சரம் பட்டதனாற் குறைந்துபோன கை பற்றியிருந்ததான சிலையை, அழகு பொருந்த மற்றொரு கை பிடித்ததுபோல(த் தோன்றியகையானது பிடித்துக்கொண்டது: அற்றுப்போன கை பிறந்ததை அறிபவர்) யாவர்? (எ-று.)

அற்றகையிலிருந்த வில்லை ஏற்கெனவேயிருந்த கை பற்றியது போல முளைத்தகை பிடித்துக்கொண்டதனால், வேறொருகை தோன்றிற்றென்பதுவும் காண்பவர்க்குத் தெரிந்துகொள்ள முடியாதாயிற்றென்பதாம். பி-ம்:—[1]கொற்றவன். [2]பற்றியே. [3]அடுத்ததுகாலை, பிடித்தது சிலையை. [4]வவ்வியது,வறுவியது. வவ்வியை[5]எறிந்ததை,பிறந்தகை. [6]யாரதோர்குவார், யாவதேர்குவார். (௬அ௨௪)

கருஅ.—இராவணன், அற்ற தன் கையை மாதலிமீது மற்றெருகையால் எடுத்தெறிதல்.

பொன் [1]கயிற் றார்தியான் வலியைப் [2]போக்குவான்
முன்கையிற் றுறுமயிர் [3]முள்ளிற் [4]றுள்ளுற
[5]மின்கையிற் [6]கொண்டென வில்லை விட்டிலா
வன்கையைத் தன்கையின் வலியின் வாங்கினான்.

(இ - ள்.) (இராவணன்),—அழகிய கயிற்றைப்பிடித்துக்கொண்டு தேரைநடத்துபவனான [சாரதியான] மாதலியின் வலிமையைப் போக்குபவனாகி, முன்னங்கையிலே நெருங்கிய மயிர் முள்ளுப்போல் துள்ளிக்கொண்டிருக்க, மின்னைக் கையிற்கொண்டாலொத்துத் தோன்றுகின்ற வில்லை விட்டிடாததான வலிய கையைத் தன்கையின் வலிமையா லெடுத்துவீசினான்; (எ - று.)

இராவணன் கை வில்லைப்பிடித்திருப்பது, மின்னலைப்பிடித்திருப்பதுபோலு மென்க. மாதலிமீது அற்றகையை யெடுத்துவீசும்போது அதனைப்பற்றியகையில் மகிழ்ச்சியால் மயிர்க்கூச்சஎறிந்ததை 'முன்கையில் துறுமயிர் முள்ளிற் றுள்ளுற'என்றார். கீழ்ச்செய்யுளில் 'பற்றிய கிடந்தது சிலையை மற்றொர்கைபிடித்தது'என வந்ததனால், 'வில்லைவிட்டிலாவன்கை'என்பதற்கு - இதற்குமுன்ஒருபோதும் வில்லை விட்டிலாத [வீரகுணத்துக்குஅடையாளமாகவில்லையேந்திய வண்ணமேயுள்ள]வன்கை என்றுபொருள்காண்க. பி-ம்:—[1]கையிற்று. [2]போக்கினான், போக்கென. [3]முன்னில். [4]துள்ளுறும். [5]பின். [6]கொண்டனன், கொண்டன. இச்செய்யுள் பலஏட்டுப்பிரதிகளிலில்லை. (௬அ௨௫)

கருகூ.—இராவணன் அயப்படைதன்னை யெறியவே,
மாதலி நிலைகுலைதல்.

விளங்கொளி வயிரவா ளரக்கன் வீசிய
துளங்[1]கிளர் [2]தடக்கைதன் மார்பிற் றாக்கலும்
உளங்கிளர் பெருவலி [3]யுலைவின் மாதலி
துளங்கினன் வாய்வழி யுதிரந் [4]தூவுவான்.

(இ - ள்.) விளங்குகின்ற ஒளியையுடைய வயிரவாளைப்பெற்ற அரக்கனான இராவணன் வீசிய பருத்துக் கிளர்ந்த பெரிய கை தன்மார்பில் தாக்கியவுடனே, உள்ளத்துக்கிளர்கின்ற பெருவலி அழிதலில்லாத மாதலி, வாயின்வழியாக உதிரத்தை வெளிச்சிந்துவானாய் நிலைகலங்கினான்; (எ - று.)—பி-ம்:---[1]களி. [2]தடக்கையில். [3]உலவி. [4]தூங்குவான், தூங்குவார். (ருஅஉகூ)

கசுய.—தோமரத்தை அந்த மாதலிமேல் இராவணன் செலுத்துதல்.

மாமரத் [1]தார்கையால் வருந்து வானையோர்
தோமரத் தாலுயிர் [2]தொலைப்பத் தூண்டினன்
[3]தாமரத் தாற்பொராத் [4]தகைகொள் வாட்படை
காமரத் தாற்சிவன் கரத்து [5]வாங்கினான்.

(இ-ள்.) அரத்தால் அராவப்படாத தன்மையைக்கொண்ட [அராவப்படாமலே இயற்கையாகக் கூர்மையாகவுள்ள] வாட்படையைக் காமரமென்றபண்ணைப்பாடிச் சிவபிரானுடைய கையினின்றுவாங்கினவனாகிய இராவணன்,---பெரிய மரம்போற்பொருந்தின (தன்)கை(மார்பிலேதாக்கி)யதனால் வருந்துபவனான மாதலியை ஓர்தோமரத்தினால் உயிரைப்போக்க (எண்ணி)ச் செலுத்தினான்; (எ - று.)

மூன்றுமடியின்முதலிலுள்ள தாம்-அசை. தாம்-தாவுகின்ற, அராமுமாம். மாமரத்தார் கைஎன்பதற்கு - பெருமைபெற்ற மரமாகிய வில்லினோடுபொருந்திய கை என்றுஉரைப்பாருமுளர். பி - ம்:--[1]தடக். [2]தொலையத். [3]தாமரத்தார்ப்பெறு, தாமரத்தாற் பெற்ற, தாம்வரத்தாற் பெற்ற, தாம்வரத்தாற்பெறுந்தன்மைமூற்றுறக். [4]தவத்தனென்னினும், தவநன்றென்னவுங், தவமின்றென்னான், தவமின்றென்னவுங். [5]வாட்கொண்டான். (ருஅஉஎ)

வேறு.

கசுக.---இராமன் அந்தத்தோமரத்தை யழித்தல்,

மாண்ட தின்றொடு மாதலி வாழ்வென
மூண்ட [1]வெந்தழல் சிந்த மூடுக்கலும்
ஆண்ட வில்லியோ [2]ரைம்முக வெங்கணை
தூண்டி னான்[3]றுகளானது தோமரம்.

(இ - ள்.) 'இன்றோடு மாதலியின் உயிர்வாழ்க்கை ஒழிந்திட்டது' என்னுமாறு மூண்ட கொடிய தழலைச்சிந்துமாறு (தோமரப்படையை) விரையச்செலுத்தவும்,--(யாவரையும்)அடிமைகொண்ட வில்லாளியான

இராமன் ஒருபஞ்சமுகாஸ்திரத்தைச் செலுத்தினான்: (அதனால்) தோமரம் துகளாய்விட்டது; (எ-று.)—பி-ம்:—[1]வெம்படை சிந்தமுடுக்கினான், வெந்தழல்சிந்தமுடுகலும், வெந்தழல்சிந்திமுடுக்கலும். [2]அயின்முக. [3]நெடுந்தோமரந்தோமுற, நெடுந்தோமரம்தோய்வர, நெடுந்தோமரந்தோமற. (௫௮௨௮)

௧௯௨.—இராவணனது தலையை ஸ்ரீராமன் ஓய்வில்லாமல் அறுத்தல்.

ஒய்[1]வ கன்ற தொருதலை [2]நூறுறப்
போய கன்று புரளப் பொருகணை
ஆயி ரந்தொடுத் தா[3]னறி வின்றனி
நாய கன்கைக் கடுமை [4]நடத்துவான்.

(இ-ள்.) ஞானத்திற்குரிய ஒப்பற்றதலைவனான இராமன்,—(தனது) கைவிசையைச் செலுத்துபவனாய், ஓய்தல்இல்லாமல் ஒருதலை நூறுமுறை முளைக்கவும் (அவையாவும்)அப்பாற்பட்டுப்போய்ப் புரளும்படி போர்செய்யவல்லஅம்புகள் ஆயிரங்களைத் தொடுத்தான்; (எ-று.)—'அறிவின்றனிநாயகன்' என்றவிடத்து—"ஒண்டாமரையாள்கேள்வ, னொருவனையேநோக்குமுணர்வு" என்ற பெரியார்பாசுரம், கருதத்தக்கது. பி-ம்:—[1]அகன்ற. [2]நூறுறை, நூற்றுறை, நூறிறை,நூறறப். [3]திருவின்றனி. [4]நடத்தியே. (௫௮௨௧)

௧௯௩.—அறுபட்ட இராவணன்தலைகள் பலவிடங்களிலும் விழுதல்.

நீர்த்[1]த ரங்கங்க டோறு நிலந்தொறுஞ்
சீர்த்த மால்வரை தோறுந் [2]திசைதொறும்
பார்த்த பார்த்த விடந்தொறும் பஃறலை
ஆர்த்து [3]வீழ்ந்த [4]வசனிகள் [5]வீழ்ந்தென.

(இ-ள்.) (அறுபட்ட) பல தலைகளும்,—கடலின்அலைகளிலும் நிலங்களிலும் சிறப்புப்பெற்ற பெரியமலைகளிலும் திசைகளிலும் கண்ட கண்ட விடங்களிலும் இடிகள்விழுந்தாற்போலப் பேராரவாரஞ்செய்துகொண்டு விழுந்தன; (எ-று.)---பி-ம்:---[1]தடங்கடறோறும். [2]சிலைதொறும். [3]வீழ்ந்தது, வீழ்ந்தவன். [4]அசனியின், நாணிகள். [5]வீழ்ந்தன.

௧௯௪.—மலைமுதலியவிடங்களில் அறுபட்ட இராவணனுடைய சிரங்களால் நேர்ந்தநிலை.

தகர்ந்து மால்வரை [1]சாய்வுறத் தாக்கின
மிகுந்த [2]வான்மிசை மீன மலைந்தன
புகுந்த மாமக ரக்குலம் போக்கற
முகந்த [3]வாயிற் [4]புனலினை [5]முற்றுற.

(இ-ள்.) (அறுபட்டுவிழுந்த இராவணனுடையசிரங்கள்), பெரியமலைகள் பிளவுபட்டுச் சாயும்படி தாக்கின; பரந்த வான்மீதுள்ள நட்சத்திரங்களை மோதின; (அன்றியும், கடலிற்)புகுந்தனவாய், பெரியசுறாமீன்திரள்கள் போக்கிடம அறவுப்போகும்படி கடல்நீரை முழுவதும் (தம்)வாயினால் மொண்டிட்டன;(எ-று.)—பி-ம்:—[1]சாயறத். [2]வாம்

விசையாற்றலைவீழ்ந்தன, வாள்... விழமலைந்தன. 3வாரிப் 4புணரியை. 5முற்றவும். (ருஅகூசு)

கசுரு.—அறுபட்ட இராவணனது சிரங்களின் தலைகளைப் பேய்கள் தோண்டுதல்.

பொழுது 1நீட்டிய புண்ணியம் போனபின்
பழுதா 2செல்லுமன் றேமற்றப் பண்பெலாம்
தொழுது சூழ்வன 3முன்னின்று தோன்றவே
கழுது 4சூன்ற விராவணன் 5கண்ணெலாம்

(இ-ள்.) நெடுநாளாக அனுபவித்துவந்த புண்ணியப்பயன் நீங்கிய பின், மற்றை(க்கீர்த்திமுதலிய) நற்குணங்களெல்லாம் பழுதுபட்டுப் போகுமன்றோ! (ஆகவே, முன்பெல்லாம்) தொழுது வலம்வருவனவாகிய பேய்கள், எதிரேநின்று வெளிப்படையாக இராவணன் கண்களைத் தோண்டின; (எ - று.)

'முன்பெல்லாம் இராவணனுக்கு அஞ்சி அவனைவணங்கி வலம்வருந் தன்மையனவான பேய்கள் அவன்கண்ணெதிரில்தானே யாவருமறிய அவ்விராவணன்கண்ணைத் தோண்டியெடுக்கலாயின' என்ற சிறப்புப் பொருளை, 'ஒருவனுடையபுண்ணியம் நீங்கினபின் அவனுடையகீர்த்தி பிரதாபம்முதலிய நற்குணங்கள் பழுதுபடுமன்றோ' என்ற பொதுப் பொருள் சமர்த்தித்துநின்றது: வேற்றுப்பொருள்வைப்பணி. பி-ம்:— 1நீட்டித்த, செல்லினும். 2சொல்லும், காட்டும், போகும், போக்கும். 3ஆதலிற்றோன்றிய, முன்னின்றுதோற்றவெங். 4சூழ்ந்த, சூழ்ந்தது, சூழ்வன, சூழ்கின்ற. 5முன்னெலாம். (ருஅகூஉ)

கசுசு.—இராவணன் இராமபிரான்மீது வாள்முதலியன வீசுதல்.

வாளும் வேலு முலக்கையும் வச்சிரக்
கோளுந் தண்டு 1மழுவெனுங் கூற்றமும்
தோளின் பத்திக டோறுஞ் 2சுமந்தன
மீளி 3மொய்ம்ப னுருமென வீசினான்.

(இ - ள்.) பெருவலிபடைத்தவனான இராவணன், (தன்) தோளின் வரிசைகள்தோறும் சுமந்தனவாகிய வாளும் வேலும் உலக்கையும் வலிமையுடைய வச்சிரப்படையும் தண்டாயுதமும் மழுவென்கின்ற யமனும் ஆகியஇவற்றை, இடிபோலவிழும்படி (இராமன்மேல்) வீசியெறிந்தான்; (எ - று.)—கோள் வச்சிரமும்என மாறுக: கோள்-வலிமை. மீளி மொய்ம்பன் - ஒருபொருட்பன்மொழி. பி - ம்:—1எழு. 2சுமந்தவன், சுமந்தசும். 3மொய்ம்பின். (ருஅகூகூ)

கசுஎ.—'இராவணனை வெல்லும்வகை யாது?' என்று இராமபிரான் ஆலோசித்தல்.

அனைய 1சிந்திட வாண்டகை வீரனும்
வினைய மென்னினி 2யாதுகொல் வெல்லலாம்

[3]நினைவெ னென்ன நிசாசரன் மேனியைப்
புனைவன் வாளியி னாலெனப் [4]பொங்கினான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட படைக்கலங்களை (இராவணன்) வீசியெறிய வும், ஆண்களிற் பெருமைபெற்றவனும் மகாவீரனுமாகிய ஸ்ரீராமனும், 'இனிச் செய்யவேண்டிய தொழில் யாது? (இராவணனை) வெல்லும் ஆலோசனை யென்?' என்று ஆராய்ந்து (பின்) 'அரக்கனான இராவண னுடைய மேனியை அம்புகளால் அலங்கரிப்பேன்' என்று தீர்மானித் துக் கோபித்தான்; (எ-று.)---'மூன்றுமடியில் 'நினைவு என்' என்று இர ண்டுசொல்லாகக்கொள்ளாமல், 'நினைவென்' என்றுதன்மையொருமை முற்றாக ஒரேசொல்லாகக்கொள்ளலும் ஒன்று. பி-ம்:—[1]சிந்திய. [2]யாது கொலோவெனா, யாதுகொல்வேறலாம், யாதுகொல்வெல்லுமா. [3]நினை வைநானினைந்தானெடு, நினைவைமன்னினைந்தான், நினைவைமுன்னினைந் தான், நினைவவென்னினைந்தீர், நினைவனென்னினைந்தான். [4]பொங்கு வான். (௩௮௩௪)

௧௬௮.—இராவணனதுமேனியெங்கும் இராமபிரான் தன் அம்புகளாற் போர்த்திவிடுதல்.

மஞ்ச ரங்கிய மார்பினுந் தோளினும்
நஞ்ச ரங்கிய கண்ணினு நாவினும்
[1]வஞ்சன் மேனியை வார்கணை [2]யட்டிய
பஞ்ச ரம்மென லாம்[3]வகை பண்ணினான்.

(இ - ள்.) மேகத்தைத் தோற்கடித்த [மிக்ககருநிறமுள்ள] (இரா வணன்) மார்பிலும், தோளிலும், விஷத்தைத்தோற்கடித்த [கொடுந் தோற்றமுள்ள] கண்களிலும் நாக்கிலுமாக (எங்கும் அம்புகளையெய்து), வஞ்சனைக்குணமுடைய இராவணன் மேனியை, நீண்டஅம்புகள் தங்குவதற்குஏற்பட்ட கூடு என்று சொல்லும்படி செய்தான் (ஸ்ரீரா மன்); (எ - று.)

பஞ்சரம் - அம்புக்கூடு: பறவைக்கூடு எனினுமாம்: அவ்வாறாயின், இராவணன்மேனியைப் பறவைகூடாகக்கொண்டதற்குஏற்ப அவ் விராமன்கணைகளைப் பறவைகளாகக் கொள்க. பி - ம்:-[1]வஞ்சமேனி யை. [2]வட்டியின், வட்டியாய்ப். [3]படி. (௩௮௩௫)

௧௬௯.—இராமபாணங்கள் எங்கும் நிறைதல்.

[1]வாய்நி றைந்தன கண்கள் மறைந்தன
[2]மீநி றங்களி னெங்கு மிடைந்தன
தோய்வு றாங்[3]கணை செம்புன [4]றேய்ந்தில
போய்[5]நி றைந்தன வண்டப் புறமெலாம்.

(இ-ள்.) (இராவணன்) வாய்களில் நிறைந்தனவும், கண்களில்மறை ந்தனவும், சிறந்த மார்பின் இடங்களிலெல்லாம் நெருங்கியனவுமாகிப் பதிதலுற்றஅம்புகள்,— இரத்தம்தோயப்பெறாமல் (அவனது உடலைத் துளைத்து விட்டு) அண்டத்தினப்புறமெல்லாம் போய்நிறைந்தன; (எ-று.)

உடலில்நுழைந்து வெளிப்பட்ட விசையை விளக்க, 'உதிரமுந் தோயப்பெறுமல்' என்றது. பி-ம்:—1.வாய்மறைந்தன, வாயுமடைந்தன. 2மே...யிடைந்தன, வீயமேனிச்செங்குருதியிடைந்தன; தீயமேனிகள்...யிடைந்தன. 3கனல். 4தோய்ந்ததின். 5நிறைந்ததில். (௩அ௩கூ)

கஎ௦.—இராமனம்பால் இராவணன் அயர்ந்துவருந்துதல்.

மயிரின் காறொறும் வார்கணை 1மாரிபுக்கு
உயிருந் 2தீர வுருவின வோடலுஞ்
செயிருஞ் சீற்றமு நிற்கத் 3திறல்திரிந்து
4அயர்வு தோன்றத் துளங்கி 5யழுங்கினான்.

(இ - ள்.) (தனது) மயிர்க்கால்கள்தோறும் நீண்ட (இராமபிரானுடைய)அம்புமழை புகுந்து உயிரும்ஒடுங்கும்படி ஊடுருவினவாய் ஓடுதலும்,—பகைமையும் கோபமும்நிற்கவும் வலிமைதிரிந்து தளர்ச்சி தோன்ற நிலைகலங்கி வருந்தினான், (இராவணன்); (எ-று.)—பி-ம்:—1வாளி. 2தீய. 3திறம். 4அயர்வும். 5அழுந்தினான். (௩அ௩எ)

கஎக.—இராவணன் தன்தேரின்மீது மூர்ச்சித்துக் கிடத்தல்.

வாரி நீர்நின் றெதிர்1மக ரம்படச்
சோரிசோர வுணர்வு 2துளங்கினான்
தேரின் மேலிருந் தான்பண்டு தேவர்தம்
ஊரின் மேலும் பவனி 3யுலாவுவான்.

(இ - ள்.) முன்பு தேவர்களின் ஊரிலும் பவனியாக உலாவுபவனாகிய இராவணன், கடலின்நீரிலிருந்து எதிர்த்துவந்த மகரங்கள் இறந்துபடும்படி (தன்னுடலினின்று) இரத்தஞ் சோர அறிவு கலங்கினவனாய் [மூர்ச்சித்தவனாய்] த் தேரின்மேற் கிடந்தான்; (எ - று)

வெம்மையான இரத்தம் மிகுதியாகப் பாய்வதனால், வாரிநீர்நின்றெதிர்மகரம் பட்டன. பி - ம்:—1வந்திழிந்தென, மகரம்வர, மகரம்படர். 2துளங்கியே. 3உலாவினான். (௩அ௩அ)

கஎஉ.—இராவணசாரதி தேரை விலக்கிநிறுத்தல்.

ஆர்த்துக் கொண்டெழுந் தும்பர்க ளாடினார்
வேர்த்துத் தீவினை 1வெம்பி விழுந்தது
2போர்த்துப் பொய்த்தன னென்று பொலங்கொடேர்
பேர்த்துச் சாரதி போயினன் 3பின்றுவான்.

(இ - ள்.) (அதுகண்டு மகிழ்ச்சியினால்) தேவர்கள் ஆரவாரஞ் செய்துகொண்டு மேலெழும்பிக்குதித்துக் கூத்தாடினார்கள்; தீவினை (உடல்)வேர்த்து (மனம்)வருந்தி விழுந்திட்டது; (இராவணனுடைய) தேர்ப்பாகன்'(இராவணன் இராமபாணத்தால்உடலெங்கும்)மூடப்பட்டு அறிவுசோர்ந்தான்'என்று (அங்குநிற்கப்) பின்வாங்கினவனாய், அழகு கொண்ட தேரை (அவ்விடத்தினின்றும்) திருப்பிச் சென்றான்;

(எ - று.)---பி - ம்:—[1]வெந்து. [2]போர்த்துப்போந்தனனென்று, போர்த்துக்கொய்தனனென்று, போர்க்கயர்ந்தனனென்று. [3]பின்னுற. ()

களஙு.—அப்போது இராமபிரான் அம்புஎய்தலைத் தவிர்தல்.

கைது றந்த படையினன் கண்ணகன்
மெய்து றந்த வுணர்வினன் வீழ்தலும்
எய்தி றந்[1]த விர்ந் தானிமை யோர்களை
உய்தி றந்துணிந் தா[2]னற முன்னுவான்.

(இ - ள்.) இமையோர்களை உய்யச்செய்கின்றவகையிலே துணிவுகொண்டுதொழில்செய்பவனாகிய ஸ்ரீராமன்,---கையைவிட்டுநழுவிய படைக்கலமுடையவனும் இடம் பரந்த உடலைவிட்டுநீங்கிய பிரஞ்ஞையையுடையவனுமாகி (இராவணன் மூர்ச்சித்து)விழுதலும், அறத்தை நினைப்பவனாய், அம்புஎய்யுஞ்செயலைநீங்கினான்; (எ - று.)

'எய்திறந்தவிர்ந்தான்' என்பதை, அறமுன்னுவானென்பது சமர்த்தித்துநின்றது: தொடர்நிலைச்செய்யுட்குறியணி. பி-ம்:—[1]துறந்தான். [2]தவம், என்னது. (கூஅசo)

களச.—இதுவும் அடுத்த கவியும் - மாதலி இராவணனைக் கொல்லச்சொல்ல, இராமன் 'நீதியன்று'என மறுத்தலைத் தெரிவிக்கும்.

[1]தேறி னாற்பின்னை [2]யாதுஞ் செயற்கரிது
ஊறு தானுற்ற [3]போதே யுயர்தவன்
நூறு வாயென மாதலி [4]நூக்கினான்
ஏறு சேவக னும்மிதி யம்பினான்.

(இ - ள்.) (அப்போது) மாதலியானவன், (இராமபிரானைநோக்கி), 'மிக்கதவத்தையுடையவனாகிய இராவணனை (உணர்வு)தெளிந்தாற் பிறகு ஒன்றுஞ்செய்யமுடியாது: (ஆகையால் அவன்) மூர்ச்சித்திருக்கின்ற இப்போதே அழித்திடுவாய்'என்று தூண்டினான்; மிக்க வீரமுள்ளவனான ஸ்ரீராமனும், இதுகூறினான்; (எ - று.) 'இது'என்றது மேலிற்கவியில்வருவதனை. பி-ம்:—[1]தேறினான். [2]யாரும். [3]போழ்திவனின்னுயிர், போழ்தேயுயர்த்தவன், போதவுயிர்தனை, போதினுய்யாதவர். [4]நோக்கினான். (கூஅசக)

களரு. படைது றந்து [1]மயங்கிய [2]பண்பினா
னிடை[3]தெ றும்படி [4]பார்த்திக னீதியின்
நடைது றந்துயிர் [5]கோடலு [6]நன்மையோ
கடை [7]துறந்தது போரென் கருத்தென்றான்.

(இ - ள்.) 'படைக்கலத்தைக்கைவிட்டு அறிவுசோர்ந்த நிலைமையையுடையவனாகிய இராவணனிடத்து (அவனை) அழிக்கக்கூடியநிலைமை ஏற்பட்டிருப்பதைப் பார்த்து, போர்முறையின் ஒழுங்கைக்கைவிட்டு உயிர்கொள்வதும் நன்மையோ? என்மனம் போர்செய்வதை (இப்போது) முற்றும்விட்டுள்ளது' என்று (இராமன்) கூறினான்; (எ-று.)

பண்பிஞனிடை, இடை-ஏழனுருபு. பி - ம்:—[1]மயங்கினன். [2]பண்பிஞேர், பண்பிஞேடு. [3]பெறும்படி, பெறுந்துயர். [4]பார்தக. [5]கோடல்செய், கொள்வது. [6]நன்மையைக். [7]திறந்ததுபேரின், துறந்தபோருனற், துறந்துபேரென்ன. (௩அ௪௨)

௩எ௬.—இராவணன் உணர்வுபெற்றெழுதல்.

[1]கூவி ரஞ்செறி பொற்கொடித் தேரோடும்
போவ ரஞ்சின ரன்னதோர் போழ்தினின்
ஏவ [2]ரஞ்சலி யாதவ ரெண்ணுடைத்
தேவ ரஞ்ச விராவணன் றேறினன்.

(இ - ள்.) கூவரம்பொருந்திய பொற்கொடியோடுகூடின தேரிடத்துப் போகுவாராய் அச்சங்கொண்டவரான அரக்கர்கள், அப்போது (இராமபிரானுடைய தருமகுணத்திற்காகஅவனை) அஞ்சலிசெய்யாதவர் யாவர்? [எவரும் இராமனை வணங்கினர்கள்]; (பிறகு) மதிப்பையுடைய தேவர்கள் அஞ்ச, இராவணன் மூர்ச்சைதெளிந்தான்; (எ-று.)—கூவிரம்-தேரில்ஆசனத்துக்குஎதிராக நடப்பெறுவதும் வீரர்பற்றிக்கொள்வதற்கு உதவுவதுமான தாமரைமொட்டு வடிவினதானஉறுப்பு: தேரின்தலையலங்காரமென்றும் பொருளுண்டு. கூபரம்என்ற வடசொல். நுகத்தடியைத் தாங்கும்மரமெனப் பொருள்படும். பி - ம்:—[1]கோவரம். [2]அஞ்சலிலாதவரென்றுடைத், அஞ்சினரென்னும்பொழுதினில். (௩அ௪௩)

௩எஎ.—தேரை விலக்கிநிறுத்தியதற்காகச் சாரதிமேல் இராவணன் சினங்கொள்ளுதல்.

உறக்க நீங்கி [1]யுணர்ச்சியுற் றுனென
மறக்கண் வஞ்ச னிராமனை [2]வான்றிசைச்
[3]சிறக்குந் தேரொடுங் கண்டிலன் சீற்றத்தீப்
பிறக்க நோக்கினன் பின்னுற நோக்கினன்.

(இ-ள்.) கொடுமையைவெளிக்காட்டுகின்ற கண்களையுடைய வஞ்சனுன அவ்விராவணன் உறக்கம்நீங்கி உணர்வுபெற்றவனுக, (அப்போது), பெரியதிக்குக்களிற் சிறந்துதோன்றுந் தேருடனே ஸ்ரீராமனைக் காணுதவனுய்,(நாணத்திருல்)பின்புறம்நோக்குபவனுய்(த் தன்சாரதியைக்) கோபத்தீப்பிறக்க விழித்துப்பார்த்தான்; (எ - று.)

பின்னுறநோக்கினன்என்பதற்கு - தன்பின்புறத்தில் இராமனைப் பார்த்தான் என்று கூறுதலு முண்டு. பி - ம்:—[1]உணர்தலுற்றுனென, உணர்ச்சியுற்றனவன். [2]வான்றனி, வன்றனி, வன்றிசை. [3]திறக்கும். ()

௩எஅ.—மூன்றுகவிகள் ஒருதொடர்: இராவணன் தன்தேர்ப்பாகனை வெறுத்துக்கடிந்து வாளோச்ச, அவன்பணிதலைத் தெரிவித்தும்.

தேர்தி ரித்தனை தேவருங் [1]காணவே
வீர விற்கை யிராமற்கு வெண்ணகை

பேர வெய்த்தனை [2]யேபிழைத் தாயெனுச்
சார திப்பெய ரோனைச் சலிப்புறா.

(இ - ள்.) 'தேவரும்காணும்படி தேரைத் திருப்பிச்செலுத்தினாய்; (அதனால்),வீரமுள்ள வில்லையேந்தியகையையுடையஇராமற்குப் பரிகாசச்சிரிப்புத்தோன்றச்செய்தாய்;(ஆகவே,) பிழைசெய்தவனானாய்' என்று சொல்லிச் சாரதியென்றுபெயர்கூறப்படுபவனை வெறுத்து,—(எ-று.)— 'உருத்தெழா' என அடுத்த கவியோடு தொடரும். தன்பகைவரான தேவர்கள்முன்னிலையில் மாற்றானுக்குப் பின்னிடைந்தது தனக்குப் பேரவமானம் பயக்கு மென்ற கருத்தினால் 'தேவருங்காணத் தேர்திரித்தனை' என்கின்றான். பி - ம்:—[1]காணவோ. [2]என். (௩௮௪௫)

௧௭௯. தஞ்ச [1]நானுனைத் தேற்றத் தரிக்கிலா
[2]வஞ்ச நீபெருஞ் [3]செல்வத்து [4]வைகினை
[5]அஞ்சி னேனெனச் செய்தனை யாதலால்
உஞ்சி போதி[6]கொ லாமென் றுருத்தெழா.

(இ - ள்.) 'தாங்குதற்குமிக்க வஞ்சனையுடையோனே! இரட்சகனாகி நான் உன்னைத் தேற்ற[மேம்படுத்த], நீ பெருஞ்செல்வத்து வைகினாய்; (நான் உனக்குச் செய்த உதவிக்குமாறாக) அஞ்சினேனென்று (என்னைப் பகைவர்) கருதும்படி செய்தாய்: ஆதலால்,(இவ்வாறுசெய்த நீ) உயிருடன்பிழைத்துப்போவாயோ?' என்று கோபித்தெழுந்து,— (எ-று.)—'வாள்கடைக்கணித்தோச்சலும்' எனத் தொடரும். வஞ்சன்- பகைவரிடத்துப்பரிதானம்வாங்கிக்கொண்டு உரியதலைவனுக்குத்தீமை விளைப்பவன்:இங்ஙனமெல்லாம்திட்டியதாகமுதனூலிலும் வந்துள்ளது. பி - ம்:—[1]என் றுனையெண்ணத்தருதலால், நானுனைத்தேற்றத்தருக்கிலா, நானுனைத்தேற்றத்தருக்கெலாம். [2]வஞ்சம். [3]சோபத்து. [4]மல்கினாய். [5]அஞ்சினான், அஞ்சினாய். [6]கொலோ. (௩௮௪௬)

௧௮௦. வாள்க டைக்கணித் தோச்சலும் வந்தவன்
தாள்க டைக்கணி யாத்தலை [1]தாழ்வுறா
[2]மூள்க டைக்கடுந் தீயின் முனிவொழி
கோள்க டைக்கணித் தென்றவன் கூறுவான்.

(இ - ள்.) (இராவணன்) வாளைக்கடைக்கண்ணாற்பார்த்து (அந்தச் சாரதிமீது விடுக்குமாறு) ஓங்கியவளவில், அந்தப்பாகன்,—கிட்டி அந்த இராவணனுடைய பாதங்களைப் பார்த்துத் தலைதாழ்ந்து '(என்) எண்ணத்தை அருள்கொண்டுஆராய்ந்து யுகாந்தகாலத்துத்தோன்றுகின்ற கொடிய கனல்போல மூள்கின்ற சினத்தை ஒழிவாயாக' என்றுசொல்லியவனாய் (மீண்டுங்)கூறுவான்;(எ-று.)—தேர்ப்பாகன்கூறுவதை அடுத்த இரண்டுகவிகளிற் காண்க. கடைக்கடுந்தீயின் மூள்முனிவுஎன்க. பி-ம்:- [1]தாழ்வுற, சாய்குறா. [2]நீள்கடைக்கடுந்தீயின்னநின்முனி - யாள்கடைத்தின்றறிவிப்பதுண்டென, மூள்கடைக்கடுந்தீயெனநீமுனி-யாள்கடைத்தொன்றறிவிப்பதுண்டென, மூள்கடைக்குறுந்தீயினின்முன்னம்வந்

தாள்கடைத்தொன்றறிவிப்பதுண்டேனு, மூன்கடைக்கடிந்தியின் முனி வரா...என.  (௩அ௪௭)

௧அ௩.—இரண்டுசெவிகள் - சாரதி தேரைத் திருப்பிச்செலுத்தியதன் காரணத்தை இராவணனுக்குக் கூறுதலைத் தெரிவிப்பது.

ஆண்டொ ழிற்றுணி வோய்ந்தனை [1]யாண்டுறை
ஈண்ட [2]நிற்றிடி னையனே நின்னுயிர்
[3]பாண்ட தக்கண மென்றிடர் மாற்றுவான்
மீண்ட தித்தொழி லெம்வினை [4]மெய்ம்மையால்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஐயனே! பராக்கிரமச்செயலைத்துணிந்து செய்தலினின் றும் ஓய்ந்து உயிரொடுங்கினாய்: [மூர்ச்சித்துவிட்டாய்]; அங்குத்தானே ஒருகணப்போது பொருந்தநின்றால், நின்னுயிர் அக்கணமே மாள்வது நிச்சயமென்றுகருதி, (உனக்குத்) துன்பம்நேராதுதவிர்க்கும்பொருட்டு மீண்டதாகிய இத்தொழில் (செய்தது); (உனது அடியவராகிய) எமது செயல், (எப்போதும்) உண்மையானதாகும்: (எ - று.)—பி-ம்:—[1]ஆங் கிறை. [2]நற்பினையேநெடியோய், நிற்பினையேசுலேயே, நிற்றிடினையனே னின். [3]மாண்டொழித்தியனையது, மாண்டதிக்கணமென்று. [4]வெம் மையால். ஒருபிரதியில் 'மீண்டெநிற்படின் மேவிலையேயுயிர்' என்று இரண்டாமடி.  (௩அ௪அ)

௧அ௨. ஒய்வு [1]மூற்றமு நோக்கி [2]யுயிர்ப்பொறைச்
சாய்வு நீக்குதல் சாரதி [3]தன்மைத்தால்
மாய்வு நிச்சயம் [4]வந்துழி வாளினூற்
காய்வு தக்கதன் றூற்கடை காண்டியால்.

(இ - ள்.) சாரதிசெய்யவேண்டியதொழில், (தன்னுடைய இரதி கன்) ஓய்ந்திருப்பதையும் வலிமையுடனிருப்பதையும் கவனித்தறிந்து கொண்டிருந்து மாய்வுநிச்சயமாகவந்திட்டதெனத் தோன்றியபோது [வருமென்றுதோன்றியபோது] (அவனது) உயிராகியபாரத்துக்குத் தளர்வு நேராமல் அப்பாற்கொண்டுவைத்தல் (ஆகும்): (ஆதலால், என் மீது) வாளினூற் சினங்கொண்டுகொல்லுதல், தக்கதன்று முடிவாக: [தீர] ஆலோசித்துப்பார்; (எ - று.)—பி-ம்:—[1]முற்றவும். [2]உயிர்பெற்ற. [3]தன்மையால். [4]வந்தது, வந்துள.  (௩அ௪௯)

௧அ௩.—இராவணன் இரக்கங்கொண்டு 'தேரைமீட்க' என்ன, பாகன் அவ்வாறேசெல்ல, இராவணன் இராமனைக் காணுதல்.

என்றி றைஞ்சலு மெண்ணி [1]யிரங்கினன்
வென்றி யந்தடந் தேரினை [2]மீட்கெனச்
சென்றெ திர்ந்தது தேருமத் [3]தேர்மிசை
நின்ற வஞ்ச னிராமனை நேர்வுறா.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்:

(இ - ள்.) என்றுசொல்லி (அந்தப்பாகன்) வணங்குதலும், (இராவணன் அவன்செயலை) ஆராய்ந்து (அவன்மீது) இரக்கங்கொண்டவனாய், 'வெற்றிபொருந்திய அழகிய பெரியதேரைமீட்பாய்' என்றுசொல்ல, தேரும்போய் (இராமனை) எதிர்ப்பட்டது; அந்தத்தேர்மீதுநின்ற வஞ்சனைக்குணமுள்ள இராவணன் இராமனைச் சந்தித்து,—(எ - று.)— 'வெங்கணைகோடியின்கோடிகள் தூற்றினான்' என அடுத்தகவியோடு தொடரும். பி - ம்:—[1]இரங்குவான். [2]மீளுநச். [3]தேர்த்திசை. ()

௧௮௪.—இராவணன் இராமன்மீது அம்புவிடுதல்.

கூற்றின் வெங்கணை [1]கோடியின் கோடிகள்
தூற்றி னான்வலி [2]மும்மடி தோற்றினான்
வேற்றோர் வாளரக் கன்னென வெம்மையால்
ஆற்றி னான்செருக் கண்டவ ரஞ்சினார்.

(இ-ள்.) யமனைக்காட்டிலும் கொடிய அம்புகள் பலகோடிக்கணக்காயுள்ளவைகளைப் பொழிந்தான்: '(இவன்) வேறோர்கொடியஅரக்கனோ?' என்னுமாறு வலிமை (முன்னிலும்) மும்மடங்கு தோன்றப் பெற்றவனாய், கொடுமையோடு போரைச் செய்தான்: (அதனைக்) கண்டவர் (யாவரும்) அஞ்சினார்கள்; (எ-று.)—பி - ம்:—[1]கோடிய. [2]மும்முறை.

இங்கே ஒருசெய்யுள் காணப்படுவது வருமாறு:—

அஞ்ச லின்றி யமர்க்களத் தாரியன்
வெஞ்சி னத்தொடு வேலரக் கன்பொர
எஞ்ச வேழு திவச மிராப்பகல்
விஞ்சு போர்செயும் வேலையில் வீரனும். (௩அ௬௧)

௧௮௫.—இதுவும் அடுத்தகவியும் - இராமன் கணைசிந்தி இராவணன் வில்லைத் துண்டித்தமையைக் கூறும்.

எல்லுண் டாகி னெருப்புண் [1]டெனுமிதோர்
சொல்லுண் டாயது [2]போலவன் றோளிடை
வில்லுண் டாகின் வெலற்கரி தாமெனாச்
செல்லுண் டாலன்ன தோர்கணை [3]சிந்தினான்.

(இ - ள்.) 'புகையுண்டானால் நெருப்புஉண்டு' என்கின்ற இதுஒரு சொல் உண்டாகியதுபோல், 'அந்தஇராவணனுடைய தோளினிடத்து வில்இருக்குமாயின் வெல்லுதற்குஅரிதுஆம்' என்று கருதி, இடியையுட்கொண்டதையொத்த ஓர்கணையை விடுத்தான், (இராமன்); (எ-று.)

'புகையுண்டாயின் நெருப்புண்டு என்பதுபோல இவன்தோளில் வில்லுண்டாயின் நமக்குவெற்றியில்லையென்பது நிச்சயம்' என்றுதுணிந்து அவ்விராவணன்வில்லை முறிக்கக் கணையை இராமன்விடுத்தானென்பதாம். "புகையுளவிடத்து நெருப்புண்டு" என்பது, மணிமேகலை. எல்-இலக்கணையால், இருள்நிறமுள்ளபுகையை யுணர்த்திற்று: எல் - ஒளியென்பாருமுளர். பி - ம்:—[1]எனுமிதச், எனுமியற். [2]போலிவன். [3]சிந்தியார். (௩அ௬௨)

கஅசு. நார ணன்படை [1]நாயக னுய்ப்புருப்
பார ணங்கினைத் [2]தாங்குறும் பல்வகை
வார ணங்களை வென்றவன் வார்சிலை
ஆர ணங்கை யிருதுணி யாக்கினுன்.

(இ - ள்.) திருமாலின் அவதாரமூர்த்தியான தலைவன்,—[இராமன்] (அங்கனம்) கணைகளைச்செலுத்தி, பூமிதேவியைத் தாங்குகின்ற பலவகை [எட்டான] (திக்கு)யானைகளை வென்றவனுன இராவணனுடைய நீண்டவில்லாகியநிறைந்த அச்சர்தருவதை இருதுண்டாக்கினுன்; (எ - று.)—பி - ம்:—[1]ஆதிநயப்புருப், ஆதிநயப்புருப், ஆகநயப்புருப். [2]தாங்கும்பலவகை. (ங அறிட)

கஅஎ.—அதுகண்ட தேவரின்மகிழ்ச்சி.

அயன்ப டைத்தவில் லாயிரம் பேரினுன்
வியன்ப டைக்கலத் தாலற்று வீழ்தலும்
உயர்ந்து யர்ந்து [1]குதித்தன [2]ரும்பரால்
பயன்ப டைத்தனம் பலறவத் தாலென்ருர்.

(இ - ள்.) பிரமதேவனுற் படைக்கப்பட்ட வில், ஆயிரந்திருநாமங்களையுடையவனுன ஸ்ரீராமனுடைய பெரியபடைக்கலத்தினுல் துண்டுபட்டுவீழ்தலும்,தேவர்கள் உயர்ந்துயர்ந்துகுதித்தார்களாய்ப்பலவகைத்தவத்தினுல் பயன்பெற்ருேமென்று கூறினுர்; (எ - று.)

இங்கு 'ஆயிரம்பேரினுன் வியன்படைக்கலம்' என வந்ததனுலும், 'நாரணன்படை' எனக் கீழ்ச்செய்யுளில் வந்ததனுலும், கஅறு-ஆம்பாடலின், 'செல்லுண்டாலன்னதோர்கணை' என்பதற்கு - நாராயணுஸ்திரம் என்றுபொருள்கூறுதலுமொன்று:அயன்வில்லைத்துண்டிப்பதற்கு,மிகச்சிறந்த நாராயணுஸ்திரத்தை விடுத்தா னென்று கொள்வது சிறப்பே. பி-ம்.—[1]குனித்தனர். [2]உம்பரார், உம்பரும், உம்பரே. (ஙஅறிச)

கஅஅ.—இராவணன் வில்லை யெடுத்துக்கொண்டேயிருக்க, இராமன் அவற்றை யழித்துக்கொண்டேயிருத்தல்.

மாறி மாறி வரிசிலை வாங்கினுன்
[1]நூறு நூறினெ டையிரு நூறவை
வேறு வேறு [2]திசையுற வெங்கணை
நூறி நூறி யிராம [3]னுறுக்கினுன்.

(இ - ள்.) (இராவணன்) மாறிமாறிக் கட்டமைந்தவில்லை எடுத்தவண்ணமிருந்தான்; இராமன், அந்தக்கோடிவிற்களை வெவ்வேறு திசையிலே பொருந்தக் கொடியஅம்புகளாற் பொடிப்பொடியாக்கி நுறுக்கிவிட்டான்; (எ - று.)—பி-ம்:—[1]ஆறுநூறினெடு, ஆறினூறினெடு, நூறிநூறினெடி, நூறிநூறினெடு. [2]விளிவுற. [3]நுணுக்கினுன்.()

கஅகூ.—இராவணன் இராமனுடைய மார்பின்மீது இருப்புலக்கைமுதலியவற்றை விடுத்தல்.

இருப்பு லக்கை [1]வே றண்டுகோ லீட்டிவாள்
நெருப்பு லக்க வருநெடுங் [2]கப்பணம்

திருப்பு லக்க வுய்த்தான் றிசையானையின்
மருப்பு லக்க வழங்கிய மார்பினான்.

(இ-ள்.) திக்கசங்களின் தந்தங்கள்முறியும்படி எதிர்கொடுத்த மார்பையுடையவனான இராவணன், (அந்தஇராமபிரானுடையமார்பிலே நீங்காதுஉறைகின்ற) இலட்சுமி புலவிகொண்டாற்போல் (அம்மார்பை விட்டு) அப்பாற்செல்லும்படி, இருப்புலக்கை வேல் தண்டு குத்துக்கோல் ஈட்டி வாள் செருப்பும்(தன்)வெம்மைகுறையும்படி [மிக்க கொடுமையுடன்] வருகின்ற நெடியகப்பணம் ஆகியஇவற்றை விடுத்தான்; (எ-று.)---பி-ம்:---[1]நீடண்டு வேலீட்டி, கோறண்டுவேலீட்டி. [2]கற்பணம். (௩௮௫௬)

௩௯௦.---இராவணன் விடுத்தவற்றையெல்லாம் பொடிபடுத்தி, 'இவனை யொழிக்க, உபாயம் யாது?' என்று ஸ்ரீராமன் நாடுதல்.

அவைய னைத்து [1]மறுத்தகன் வேலையிற்
குவைய னைத்து மெனக்[2]குவித் தான்குறித்து
இவைய னைத்து மிவனை [3]வெல் லாவெனா
நவைய னைத்துந் துறந்தவ னாடினான்.

(இ-ள்.) (இராவணனெறிந்தஇருப்புலக்கைமுதலிய) அவ்வாயுதங்களெல்லாவற்றையும் (தன்னம்புகளினால்) அறுத்தொழித்து அவையெல்லாம் அகன்றகடலில் திட்டென்றுநினைக்குமாறு குவித்தவனாய், குற்றம்யாவையும் நீங்கினவனான ஸ்ரீராமன்,---இவையாவும் இவனைவெல்லா என்றுஎண்ணி (அவனைக் கொல்ல யாதுசெய்வதென்று) ஆராய்பவனாயினான்;(எ-று.)---பி-ம்:---[1]அறுத்தனன்வேலையிற், அறுத்தவேலேயைக், அறுத்தகன்வேலையைக். [2]குறித்தான். [3]வெல்லாதெனா. (௩௮௫௭)

௩௯௧.---இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்:இராமன்நாடிப் பிரமாஸ்திரம் விடுக்கத்தீர்மானித்ததைத் தெரிவிக்கும்.

கண்ணி னுண்மணி யூடு கழிந்தன
[1]எண்ணி னுண்பணை லிற்பல [2]வெங்கணை
புண்ணி னுண்ணுழைந் [3]தோடிய புந்தியோர்
[4]எண்ணி னுண்ணிய வென்செயற் பாற் [5]றெனா.

(இ - ள்.) ஆலோசிக்குமிடத்து நுண்ணியமணலினும்பலவாகிப் புத்திமான்களின் எண்ணினும்நுண்ணியனவான வெங்கணை கண்ணினுள் மணியினூடும் நுழைந்துசென்றன: (அன்றியும்) புண்ணினுள்ளும் நுழைந்தோடிய: (அவையாவும் இவனை ஒன்றும் செய்யமாட்டிற்றில: ஆதலால், இப்போது) என்னசெய்யத்தக்கது?' என்றுஆலோசித்து,---(எ - று.)---'எண்ணிவலித்தனன்' என்று அடுத்த கவியோடு முடியும். பி - ம்:---[1]எண்ணு. [2]ஈர்ங்கணை. [3]ஓடினபுந்தியோர், ஓடிய புண்ணியர். [4]எண்ணுநுண்ணிய, எண்ணினுன்னிலது. [5]என்றான். ()

௩௯௨. [1]நார ணன்றிரு வுந்தியி னன்முகன்
பார [2]வெம்படை வாங்கியிப் பாதகன்

[3]மாரி னெய்வனென் றெண்ணி [4]வலித்தனன்
ஆரி யன்னவ னுவி யகற்றுவான்.

(இ-ள்.) ஸ்ரீராமன் அந்தஇராவணனுடைய உயிரைப்போக்கும்பொருட்டு ஸ்ரீமந் நாராயணனுடைய திருவுந்தியிலேயுள்ள நான்முகனது பெருமைபெற்ற கொடியகணையையெடுத்து, 'இந்தப்பாதகனுடைய மார்பின் எய்வேன்' என்று எண்ணித் தீர்மானித்தான்; (எ - று.)—அகற்றுவான்-முற்றெச்சம்: வானீற்று எதிர்காலவினையெச்சமுமாம். மார் = மார்பு: மரூஉ. பி-ம்:—[1]நாரநாண்மலர்மேல்வந்த. [2]வாளியைவாங்கினன் பார்த்தனன், வாளியைவாங்கியபாதகன், வாளியைநோக்குடன்பார்த்திலன். [3]மார்பிலெய்வன், மார்பினுய்ப்பன். [4]மதித்தனன். (௩அ௫௧)

௧௬௩.—இதுவும், அடுத்த கவியும் - ஸ்ரீராமன் பிரமாஸ்திரத்தை விடுத்தமையைத் தெரிவிக்கும்.

[1]முந்தி வந்துல கீன்ற முதற் [2]பெயர்
அந்த ணன்படை [3]வாங்கி யருச்சியாச்
[4]சுந்த ரன்சிலை நாணிற் [5]றொடுப்புறு
மந்த ரம்புரை தோளுற வாங்கினன்.

(இ - ள்.) முற்பட்டுத்தோன்றி உலகைப்படைத்த முதல்வனெனப் பெயர்பெற்ற அந்தணனான பிரமதேவனுடைய அஸ்திரத்தைஎடுத்து அருச்சித்து, கட்டழகுடையவனான ஸ்ரீராமன், (தன்) வில்நாணியில் தொடுத்து, மந்தரமலையையொத்த தோளிற்பொருந்த இழுத்தான்; (எ-று.)—பி-ம்:—[1]முந்து. [2]பொருள். [3]ஆங்கு. [4]சுந்தரச். [5]தொடுக்குறு.

௧௬௪. புரஞ்சு டப்பண் [1]டமைத்தது [2]பொற்பணை
மரந்து ளைத்தது வாலியை [3]மாய்த்துளது
[4]அரஞ்சு டச்சுடர் [5]நெஞ்ச னரக்கர்கோன்
உரஞ்சு டச்சு டு [6]ரோன்மக னுந்தினன்.

(இ - ள்.) திரிபுரத்தைச் சுட்டெரிப்பதற்கு முன்புஅமைத்ததும், அழகியகிளைகளுள்ளமரங்களை [ஏழு சாலமரங்களை] துளைத்ததும், வாலியை மாய்த்துள்ளதுமான அந்தஅஸ்திரத்தை, அரம் தாக்க (அஞ்சாது மகிழ்ச்சியால்) விளங்குகின்ற நெஞ்சைக்கொண்ட அரக்கர் தலைவனான இராவணன் மார்பைத்தாக்கும்படி, சூரியகுலத்துத் தோன்றியவனான ஸ்ரீராமன் செலுத்தினான்; (எ - று.)—அரஞ்சுடச்சுடர்நெஞ்சன் - மாற்றார்படைக்கலத்துக்கு அஞ்சாதவனென்றபடி. பி-ம்:—[1]அமைந்தது, அமர்ந்தது. [2]போர்ப்பணை. [3]மாய்த்தது, மாய்த்துள. [4]அரஞ்சுடர். [5]அம்புவரத்தினால், அம்பதவரத்தினால், அம்பதவாற்றலான். [6]சுடரோன்மகன்தோன்றினான், சுடர்மேனியினுந்தினான். ()

௧௬௫.—பிரமாஸ்திரம் இராவணன்மீது செல்லுதல்.

காலும் வெங்கன லுங்கடை காண்கிலா
[1]மாலும் [2]கொண்ட வடிக்கணை மாமுகம்

நாலுங் கொண்டு நடந்தது நான்முகன்
மூல மந்திரந் தன்னொடு [3]மூட்டலால்.

(இ - ள்.) திருமாலினமிசமான ஸ்ரீராமன் கொண்டதாகிக் காற்றும் கொடுங்கனலும் முடிவுகாணமாட்டாத (வேகமும் கொடுமையுமுடைய) கூரிய(அந்தக்)கணையானது, நான்முகனுக்குஉரிய பீஜாட்சரத்தைக் கொண்ட மந்திரத்தோடு அபிமந்திரித்துவிட்டதனால், பெரியநான்கு முகங்களையுங்கொண்டு சென்றது; (எ - று)—பி - ம்:—[1]மேலும். [2]கொண்டிவ். [3]மூட்டலால். (ந அகூஉ)

கககூ.—பிரமாஸ்திரத்தினால் ஏற்பட்ட நிலை.

ஆழி மால்வரைக் கப்புறத் [1]தப்புறும்
பாழி [2]மாகட லும்வெளிப் [3]பாய்ந்ததால்
ஊழி ஞாயிறு மின்மினி [4]யொப்புற
வாழி வெஞ்[5]சுடர் பேரிருள் வாரவே.

(இ - ள்.) (அந்த அஸ்திரம்தன்னுடைய) கொடிய சுடரினால் மிக்க இருளைப் போக்குகையில், யுகாந்தத்தில்தோன்றும் சூரியனும் மின்மினியை யொத்துத்தோன்ற, பெரிய சக்கரவாளமலைக்கு அப்புறத்துள்ள நீர்நிறைந்த வலியபெரியகடலும் [பெரும்புறக்கடலும்] வெளிப்பாய்ந்தது; (எ - று.)—வாழி - அசை. பி-ம்:—[1]அப்புறம், அப்புறப். [2]மால்வரையும். [3]பாய்தலால். [4]ஒத்தவால், ஒப்புறும். [5]சுடர்ப்பேரிருள்.

ககஎ.—பிரமாஸ்திரம் இராவணன்மார்பிற் புகுதல்.

அக்க ணத்தி [1]னயன்படை [2]யாண்டகை
சக்க ரப்படை யோடுந் தழீஇச்சென்று
புக்க தக்[3]கொடி யோனுரம் பூமியும்
திக்க னைத்தும் விசும்புந் [4]திரிந்தவே.

(இ - ள்.) அக்கணத்தில் பிரமாஸ்திரமானது புருஷோத்தமனான ஸ்ரீராமனுடைய சக்கரப்படையுடனே சேர்ந்து [சுதரிசனாழ்வானது அமிசத்தையும்பெற்று]சென்று அந்தக்கொடியோனான இராவணனுடைய மார்பிற் புக்கது: (அக்கணத்து) பூமியும் திக்குக்கள்யாவும் விசும்பும் (நிலை) திரிந்தன; (எ - று.)—பி-ம்:—[1]அயல்நின்ற. [2]ஆண்டகைச். [3]கொடிபோல். [4]திரியவே, தெரியவே. (ந அகூச)

வேறு.

ககஅ.—இராவணனுயிரிழத்தல்.

முக்கோடி வாணாளு முயன்றுடைய [1]பெருந்தவமு [2]முதல்வன் முன்னாள், எக்கோடி [3]யாராலும் [4]வெலப்படா யெனக் கொடுத்த வரமு [5]மேனைத், [6]திக்கோடு [7]முலகனைத்துஞ் செருக்கடந்த [8]புயவலியுந் தின்று மார்பிற், புக்கோடி யுயிர்பருகிப் புறம் போயிற் றிராகவன்றன் புனித வாளி

(இ-ள்.) இராமபிரானெய்தபரிசுத்தமான அந்தஅஸ்திரமானது,—(இராவணனது) முக்கோடியாயுளையும் முயன்றுசெய்த பெருந்தவத்தை

யும், முதற்கடவுளரிற்சேர்ந்தவனானபிரமதேவன் முன்காலத்தில் 'முப்பத்துமுக்கோடிதேவர்களில் எந்தவரிசையிற் சேர்ந்தவராலும் வெல்லப்படாய்' என்றுகொடுத்தவரத்தையும், மற்றும் திக்கோடும்உலகனைத்திலும் போரினால்வென்ற புயவலியையும் ஒழித்துவிட்டு, (அவனுடைய) மார்பிலேபுகுந்து உடலெங்குங்குடைந்து உயிரைப்பருகிவிட்டுப்புறத்திற்போயிற்று; (எ - று.)—"முதலாவார் மூவரேயம்மூவருள்ளும், முதலாவான்மூரிநீர்வண்ணன்" என்பது, பெரியார்பாசுரம். அஷ்டவசுக்கள் ஏகாதசருத்திரர் துவாதசாதித்யர் இரட்டையரான அசுவினிதேவதைகள்எனத் தேவர்கள் பலதிறப்பட்டிருத்தல் காண்க. பி-ம்:—[1]பெருவரமும். [2]முனிவர்தாமே, முதல்வர்தாமே, முனைவர்தாமே [3]எவராலும் [4]வெலப்படாது, வெலப்படான். [5]மேன்மை. [6]திக்கோடி. [7]எவ்வுலகு. [8]பெரு. (௩ - அ௯௫)

௧௯௯.—இராவணனைக்கொன்ற அம்பு மீண்டு இராமபிரானுடைய தூணியிற் புகுதல்.

ஆர்க்கின்ற [1]வானவரு [2]மந்தணரு முனிவர்களு மாசி கூறித், தூர்க்கின்ற [3]மலர்மாரி [4]தொடரப்போய்ப் பாற்கடலிற், றாய்நீராடித், [5]தேர்க்குன்ற விராவணன்றன் [6]செழுங்குருதிப் பெரும்பரவைத் திரைமேற்சென்று, கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப்புட் டிலி[7]னடுவட் கரந்த தம்மா.

(இ - ள்.) (மகிழ்ச்சியினால்) ஆரவாரஞ்செய்கின்ற வானவரும் அந்தணர்களும் முனிவர்களும் வாழ்த்துக்கூறி(ப் பூமியினிடத்தை)தூர்த்துவிடுமாறு மிகுதியாகப்பொழிகின்ற புஷ்பவர்ஷம்தொடரப்போய்ப்பாற்கடலிற் பரிசுத்தமாகநீராடி,(திரும்பிக்) குன்றம்போன்றதேரையுடைய இராவணனுடைய வுடலினுள்ள இரத்தப்பெருங்கடலின் அலைமேற்சென்று, கரியகுன்றையொத்தவனான இராமபிரானுடைய விசையுள்ள கணையானது புட்டிலினுட் புக்குஒளித்தது; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்: அக்கணைச்செய்கையை வியந்தவாறு. பி-ம்:—[1]அமரர்களும்.[2]முனிவரருமந்தணரும். முனிவர்களுமந்தணரும். [3]அலர். [4]சொரிய. [5]தீர்க்கின்ற, போர்க்கின்ற, தேர்க்கின்ற. [6]பெருங்குருதிச்செழும். [7]நடுவுட்.

ஒருபிரதியில் இச்செய்யுளோடு இராவணன்வதைப்படலம் முடிய, மேல் வீடணன்வண்டோதரிபுலம்பல்படலம் என்று காண்கின்றது. ()

௨00—தலைகீழ்ப்பட இராவணன் விழுதல்.

கார்[1]நின்ற மழைநின்று முரு[2]முதிர்வ வெனத்திணிதோட் காட்டி னின்றும், தார்நின்ற மலை நின்றும் [4]பணிக்குலமு மணிக்குலமுந் [5]தகர்ந்து சிந்தப், போர்நின்ற [6]விழிநின்றும் [7]பொறி நின்று புகையோடுங் குருதி [8]பொங்கத், [9]தேர்நின்று நெடு[10]நிலத்துச் சிரமுகங்கீழ்ப் படவிழுந்தான் சிகரம் போல்வான்.

(இ-ள்.) (அரக்கர்க்குச்)சிகரம்போலிருந்தவனான இராவணன்,— கருநிறம்பொருந்திய மேகத்தினின்றும் இடிஉதிர்வதுபோல நெருங்

கிய தோள்தொகுதியினின்றும் மாலைதங்கிய மலைபோன்றமார்பினின்றும் இரத்தினத்தொகுதிகளும் ஆபரணத்தொகுதிகளும்உடைந்துசிந்தவும், போரில்நின்றவிழியினின்று தீப்பொறி(வெளிப்பட்டு)நின்று புகையுடனேகுருதிபொங்கவும் தேரினின்று பெரியநிலத்திலேசிரசுடன்சேர்ந்த முகம்கீழ்ப்படவிழுந்தான்; (எ-று)---சிரமுகம்-பிரதானமுகமுமாம். பி-ம்:—[1]நின்று. [2]அதிர்வ, அதிர்ந்த, அதிர்ப்ப. [3]நின்ற. [4]மணிக்குலமும்பணி. [5]தளர்ந்து. [6]வழிநின்று, வழிநின்றும், விழநின்றும். [7]பொறிநின்ற, பொறைநின்று. [8]பொங்கித். [9]பேர்நின்று. [10]நிலத்தின்முகங்கள், நிலத்துச்சினமுகம். (௩அகூஎ)

உ0க.—இராவணனுடைய முகம் பொலிவுற்றிருந்தல்.

வெம்மடங்கல் வெகுண்டனைய சினமடங்க மனமடங்க வினையம் வீயத், தெம்மடங்கப் [1]பொருதடக்கைச் செயலடங்க [2]மயலடங்க வாற்ற றேயத், தம்மடங்கு முனிவரையுந் [3]தலையடங்க நிலையடங்கச் [4]சாய்த்த நாளின், மும்மடங்கு பொலிந்தனவ் முறைதுறந்தா னுயிர்துறந்த முகங்க ளம்மா.

(இ - ள்.) கொடியசிங்கம் வெகுண்டாற்போன்ற கோபம் அடங்கவும், மனம்ஒடுங்கிவிடவும், வஞ்சனையொழியவும், பகைவரொடுங்கும்படி போர்செய்த பெரிய கைகளின்செயல் அடங்கவும், (காம)மயல் அடங்கவும், வலிமையொடுங்கவும், உயிர்துறந்த அந்த நீதிமுறையைத் துறந்தவனுடைய இராவணனுடைய முகங்கள்,—தமக்குள்ளே அடங்கியிருக்கின்ற முனிவரையும் தலையடங்கவும் நிலையடங்கவும் முறியடித்த நாளினும் மூன்றுமடங்கு பொலிந்தன; (எ - று.)

மகாவீரனாதலால், இறக்கும்போது முகப்பொலிவு மிக்கதென்க: அம்மாஎன்பது - அங்ஙனம் பொலிந்தமைக்கு வியந்தமையைத் தெரிவிக்கும். முனிவரையும், உம்மை - உயர்வுசிறப்பு. பி - ம்:—[1]பொருந்தடங்க. [2]மயலடங்கா. [3]தலையடங்கு, தலையடங்கா. [4]சாய்ந்தவேனும், சாய்த்தவேனும், சாய்த்தவேலும். (௩அகூஅ)

உ0உ.—இராமன் இரதத்தினைக் கீழிறக்குவித்து இராவணனைப் பார்த்தல்.

[1]பூதலத்தி னாக்குவாய் நீவிடுமிப் பொலந்தேரை யென்ற போதின், மாதலிப்பே ரவன்கடவ மண்டலத்தி னப்பொழுதே வருத லோடும், [2]மீதலைத்த [3]பெருந்தாரை விசும்[4]பளப்பக் கிடந்தான்றன் மேனி முற்றுங், காதலித்த வுருவாகி யறம்[5]வளர்க்குங் கண்ணுளன் றெரியக் கண்டான்.

(இ-ள்.) 'நீ சாரத்தியஞ்செய்கின்றஇந்தஅழகியதேரைப் பூதலத்தில் ஆக்குவாயாக'என்று(ஸ்ரீராமன் மாதலிக்குக் கட்டளையிட்ட)போதிலே, மாதலியென்றபேரையுடைய அந்தப்பாகன் தூண்டப் பூதலத்தில் அப்பொழுதே(தேர்)வருதலோடும்,--மேலே அலைமோதிக்கொண்டுள்ள மிக்க(இரத்தப்) பெருக்கு விசும்புவரையிற்செல்லக் கிடந்தானுடைய மேனி

முழுவதையும் அறத்தைவளர்க்கின்ற கருணையையுடையவனாகிய ஸ்ரீராமன்(தான்) காதலித்த உருவேயாகித்தோன்றக் கண்டனன்; (எ - று.)

'இராவணனது உள்ளேயிருந்தராகம் [ராகம் - காதலும் செந்நிறமும்: சிலேடை.] மேலேஎங்கும்வழிந்ததோ?' என்று கருதப்படுமாறு உடலெங்கும் இரத்தப் பெருக்கினால் ராகத்தையடைந்துவிழுந்திருப்பதை ஸ்ரீராமன் கண்டா னென்பதாம். தன்மேனிமுற்றும் காதலித்த உருவாகி அறம்வளர்க்குங் கண்ணாளன் என்றதொடர் - தன்உடல்முழுதும்கண்டாரெவரும் விரும்பத்தக்க நல்லாலட்சணங்களும் அமையப் பெற்றுத் தருமம்வளர்க்கத்தோன்றிய கருணைவான் என்ற பொருள்பட ஸ்ரீராமனைக் காட்டு மெனினுமாம். இது, இராவணன்விழுந்துகிடந்தஇடத்தை இரதம்நணுகியதும் அத்தேரிலிருந்தபடியே அவனைக் கண்டமை கூறிற்று. தேரினின்றுஇறங்கி இராவணனைக் கண்டமையை அடுத்த செய்யுள் கூறும். பி-ம்:—[1]பூதலத்ததாக்குவாயாகலினிப், பூதலத்ததாக்குவாயாமினியிப். [2]மீதலத்த. [3]பெருஞ்சோரி. [4]அலைச; அலச, அளக்க. [5]காக்கும். (௧அ௬௯)

௨௦௩.—தேரை இந்திரனிடம்கொண்டுபோமாறு மாதலியை அனுப்பிவிட்டு, ஸ்ரீராமன் இராவணனை நணுகிக் காணுதல்.

தேரினைநீ கொடுவிசும்பிற் செல்கென்ன [1]மாதலியைச் செலுத்திப் பின்னர்ப், [2]பாரிடமீ தினினணுகித் தம்பியொடும் படைத்தலைவ [3]ரெவருஞ் சுற்றப், போரிடைமீண் டொருவருக்கும் புறங்கொடாப் [4]போர்வீரன் பொருது விழ்ந்த, சீரினையே மனமுவப்ப வுருமுற்றுந் [5]திருவாளன் றெரியக் கண்டான்.

(இ - ள்.) 'நீ தேரைக்கொண்டு விசும்பிற்செல்க' என்றுசொல்லி மாதலியை யனுப்பிவிட்டுப் பின்பு பாரிடமீதினிற் சேர்ந்து, திருமகள் கணவனான ஸ்ரீராமன், தம்பியுடனே படைத்தலைவர்எல்லோரும் (தன்னைச்) சூழ, (இதுவரையிற்) போரிலேமீண்டு ஒருவற்குப் புறங்கொடாப் போர்வீரனாகிய இராவணன் பொருதுவீழ்ந்துள்ள சிறந்தநிலையையே (தன்)மனமுவக்கும்படி (அவனது) உருவமுற்றும் கண்ணுக்குத் தெரியக் கண்டான்; (எ-று.)—பி-ம்:—[1]மாதலியுஞ்சென்ற, [2]பாரிடைப்போயினிது. [3]பலருஞ். [4]தீரனையே. [5]திருமார்பன். இச்செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளி லில்லை. (௧அ௭௦)

௨௦௪.—இராவணனுடைய தலை முதலிய உறுப்புக்களின்மீது வானரங்கள்ஏறிக் கூத்தாடுதல்.

அலைமேவுங் கடல்புடைசூ ழவனியெலாங் காத்தளிக்கு மடற்கை வீரன், சிலைமேவுங் கடுங்கணையாற் படுகளத்தே மனத்தீமை சிதைந்து வீழ்ந்தோன், தலைமேலுந் தோண்மேலுந் தடமுதுகிற் [1]படர்புயத்துந் [2]தாவி யேறி, [3]மலையினின் [4]றுடுவபோ லாடினவால் வானரங்கள் வரம்பி லாத.

(இ - ள்.) அலைபொருந்திய கடலினால் நாற்புறமுஞ்சூழப்பெற்ற பூமிமுழுவதையும் காத்து இரட்சிக்கின்ற வலியகையையுடைய வீர

னாகியஸ்ரீராமனது வில்லிற்பொருந்திய கொடியஅம்பினாலே போர்க் களத்தே மனத்திண்மைகெட்டு இறந்துவீழ்ந்தவனான இராவணனுடைய தலைமீதும் தோளின்மீதும் பெரியமுதுகிலும் படர்ந்தபுயத்திலும் தாவி யேறி, வரம்பில்லாதனவான வானரங்கள் மலையினின்று ஆடுவன போல ஆடின; (எ - று.)

பி-ம்.--[1]பிடர்ப்புறத்தும். [2]தாவித்தாவி. [3]மலைமேல். [4]நின்றாடின. முன்னிரண்டடியில் சிலபிரதிகளிற் காணப்படுகின்ற 'புலைமேலுஞ் செலற்கொத்துப்பொதுநின்ற செல்வத்தின்புன்மைத்தன்மை, நிலை மேலுமினி[1]யுண்டோ நீர்[2]மேலைக்கோலமெனு [3]நீர்மைத்தன்றே' என்ற பாடத்துக்கு - இழிந்தஇடத்துஞ் செல்லுதற்குப் பொருந்திநின்று (ஒரு வர்க்கேயுரியதாகாமல் பலர்க்கும்) பொதுவாந்தன்மையுள்ள செல்வத் தினுடைய இழிந்ததன்மை நிலைத்திருக்குந்திறத்திலும் (இராவணனே செல்வமொழிய அவனுடலின்மீது வானரங்கள்கூத்தாட உயிர்நீத்துச் சென்றபின்பு) இனியும் (எண்ணுதற்குஇடம்)உண்டோ? (அச்செல்வம்) நீரின்மீதுஎழுதியகோலத்தின் தன்மையுடையதன்றேஎன்க. பி-ம்:— [1]உண்டே. [2]மேலிற். [3]நிலைமைத்தன்றே. (௩௮௭௧)

௨௦௫.—இராவணனதுமார்பிற் பாய்ந்த திக்கசத்தின்தந்தம் அணிபோல்விளங்க ஸ்ரீராமன்காணுதல்.

தோடு[1]ழுத நறுந்[2]தொடையற் றுகையுழுத [3]கிளைவண்டின் [4]சுழியத் தொங்கற், பாடுழுத படர்[5]வெரிநின் [6]பணியுழுத வணி [7]நிகர்ப்பப்[8]பணைக்கை யானைக், கோடுழுத நெடுந்[9]தழும்பின் குவை தழுவி யெழுமேகக் குழுவின் கோவைக், காடுழுத [10]கொழும் [11]பிறையிற் கறை[12]கழன்று [13]கிடந்தனபோற்கிடக்கக் கண்டான்.

(இ - ள்.) அகவிதழ்பொருந்திய நறுமணமுள்ள மலரால்தொடுக் கப்பட்டமாலைத்தொகுதிகளில் தங்குந்தன்மையுள்ளபல (சாதிகளான) பிரிவுகளைக்கொண்டவண்டுகள் வந்துபடிகின்றசுழியமென்ற மலர்மாலை கள் பக்கங்களிற் படியப்பெற்ற பரவிய முதுகு இனிய வேலைப்பாடு கொண்ட அணிகலத்தை ஒக்குமாறு பருத்தகையையுடைய (திக்)கஜத் தின்தந்தங்கள்(தாம்)உழுவதனால் தோன்றிய நெடியதழும்பின்தொகுதி யைப்பொருந்தி, எழுகின்ற மேகத்திரளின் வரிசையாகியகாடு சஞ்சரிக் குந்தன்மையுள்ள தொழுவியபிறையினோடு களங்கம் நீங்கிக்கிடந்தன போலக்கிடத்தலைக்கண்டான்; (எ - று.)

தொடையல்-தோளணிமாலை. தொடையலிலிருந்த வண்டுகள் சுழி யத்தில் வந்து மொய்க்கின்றனஎன்க. சுழியம்-முடியைச்சுற்றிவைக்கும் மலர்மாலை: வளையமெனப்படுவது. சுழியத்தொங்கல்-சுழியமாகியமாலை. மார்பிற்பாய்ந்துகுத்திய திக்கஜங்களின் தந்தங்கள் முதுகின்வழியாய் வெளிப்பட்டுக்கிடப்பவை பிறைச்சந்திரனையும், அத்தந்தத்தையடுத்துத் தோன்றும் தழும்பு பிறையினின்றுநீங்கித்தனிகிடக்குங்களங்கத்தையும் போன்றிருக்க, இராவணன்முதுகு மேகம்போலுமென்க. இச்செய் யுளில் தற்குறிப்பேற்றவுவமையணிகாண்க. சுழியம் - முடியணியெனக்

கொள்ளுதலும் ஒன்று. பி-ம்:—[1]உழுது. [2]தெரியல்,தொடையில். [3]திளை. [4]சுழியிற், சுழியற். [5]வென்றில். [6]மணி. [7]நிரைய, நிகர்த்த. [8]பகைகால் யானை. [9]தழும்பும். [10]கொடும். [11]பிறையின். [12]சுழன்ற. [13]இடப்பன. ()

இச்செய்யுளோடு இராவணன்வதைப்படலம் முடிய, அடுத்தபாடல் முதல் "மற்றையோர்க்கும்" (உ௰உ)என்ற பாடல் முடியும் வரையில் மண்டோதரிசோகப்படலமென்று சிலபிரதியிற்காணப்பட வேறுசில பிரதிகளில் "அன்னதோவென்று" (உ௪௬)என்ற செய்யுளோடு இராவணன்வதைப்படலம் முடிய, "அவ்வகையருளிவள்ளால்" (உ௪எ) என்ற பாடலில் மண்டோதரிபுலம்புறுபடலம் தொடங்குகின்றது. (௩அஎஉ)

வேறு.

உ௦௬.—இதுமுதல் நான்குகவிகள் - இராவணனைத் தான் வென்றமையை தனக்குச்சிறப்பைத்தராதென்று ஸ்ரீராமன் புன்சிரிப்புடன் கூறுவதைத் தெரிவிக்கும்.

தளிரியல் பொருட்டின் வந்த [1]சீற்றமுஞ் [2]தருக்கி னோன்றன்
கிளரிய வுருவி னோடுங் [3]கிழிப்புறக் கிளர்ந்து தோன்றும்
வளரியல் [4]வடிவிற் செம்மைத் தன்மையு மருவ நின்ற
[5]முளரியங் கண்ணன் மூரன் மூறுவலன் மொழிவ தானான்.

(இ - ள்.) (இராவணனை) அணுகநின்ற தாமரைமலரைப்போன்ற கண்களையுடைய ஸ்ரீராமன்,—தளிர்போன்ற மெல்லிய தன்மையையுடைய சீதாதேவியின்பொருட்டுத் தோன்றிய கோபமும் செருக்குக் கொண்டவனான இராவணனது விளங்குந்தன்மையுள்ள வடிவோடுங் கிழிபட்டுப்போக, விளங்கித்தோன்றுகின்ற வளருந்தன்மை யுள்ள தழும்பினாலே (தன்வீரச்செயல்)செம்மையுடையதல்லாமையையும்(மன த்துட்கொண்டு புன்சிரிப்புவெளித்தோன்றப்பெற்றவனாய்(ப் பின்வருமாறு) கூறலானான்.

'தருக்கினோன்றன் உருவினோடு சீற்றம் கிழிப்புற' என்றது-இராவணன்உருவம் இராமபாணத்தால் துண்டிக்கப்பட்டதனால் அப்பிரானது சீற்றம் நீங்குவதாயிற்று என்றவாறு: உடனவிற்சியணி. 'செம்மைத்து' என்ற குறிப்புமுற்றிற்கு 'தன்செயல்'என்ற தோன்றுவெழுவாய் வருவிக்க. வெளிநோக்கிற்குச் செம்மையுடையதுபோலத்தோன்றினும், தன்வீரச்செயல் பகைவன்முதுகின் தழும்பைக்காணுமிடத்துச் செம்மையுடையதல்லாமையுங்கொண்டுள்ளதென்பார், 'செம்மைத்தன்மையும்'என்றார். பி - ம்:—[1]சீற்றத்தான். [2]தரிக்கினன்றன். [3]குழிப்புறக், கிழிவுறக். [4]திலகமன்னசெம்மையை மருவிநின்ற, உலகமன்ன செம்மையை மருவிவாய்ந்த, கருணைச்செம்மைத்......மருவநின்ற, வகிரிற் செம்மைத்...மருவ நின்று. [5]முளரியல். (௩அஎ௩)

உ௦எ [1]வென்றியா னுலக மூன்று [2]மெய்ம்மையான் மேவி னாலும், [3]பொனறினை னென்றுதோளைப் [4]பொதுவற நோக்கும்

[5]பொற்பும், [6]குன்றியா சுற்றதன்றே [7]யிவனெதிர் [8]குறித்த போ
ரிற், பின்றியான் முதுகிற் பட்ட [9]பிழம்புள தழும்பி னம்மா.

(இ - ள்.) (சுவர்க்கம் மத்தியம் பாதாளம்என்ற) மூன்றுலகங்களை
யும் உண்மையில் வெல்லுஞ்செயலோடு பொருந்தினாலும், (இவ்விராவ
ணன்) இறந்துபட்டானென்ற காரணத்தினால் (என்) தோள்வலியைப்
பற்றிப் பொதுவற நோக்கக்கூடிய அழகு, இவ்விராவணன் எதிராகக்
குறித்துச் செய்தபோரிற் பின்னிட்டவனாய் (அதனால்)முதுகிற்பட்ட
தழும்பாகஉள்ள பிழம்பினால் குன்றிக் குற்றம்பொருந்தியதாகு மன்
றோ? (எ - று.)

மூவுலகையும் வென்றிட்ட இராவணனைவென்றதனால் என்தோள்
வலி பொதுவறப் பாராட்டற்குரிய தென்று தோன்றலாம்: ஆயினும்,
இப்போது இராவணன்முதுகில்தழும்பு காணப்படுவதனால் அஞ்சி
முதுகுகொடுத்துஓடியவனைத் தோள்வலிகொண்டு தொலைத்தேனென்
பது பெறப்படு மாதலால், என்தோள்வலிக்குப் பழிப்புஉண்டாகுமே
தவிர மேன்மையுண்டாகா தென ஸ்ரீராமன்கூறுகின்றனனென்க.பி-ம்:-
[1]வென்றியான். [2]வெம்மையின்மேயினானும், மெய்ம்மையின்மெய்யினா
லும். [3]பொன்றியானென்னுந்,பொன்றியார்கின்ற, பொன்றியானென்று.
[4]பொதுவுற. [5]பொற்புக். [6]குன்றியாசிற்றதன்றே, குன்றியாச்சுற்ற
தன்றே, குன்றிமாசுற்றதன்றே. [7]அவன். [8]குறிப்ப. [9]தழும்புள
பிழம்பின். (௩அ௪௪)

உ௦அ. கார்த்தவீ ரிய[1]னென் பானாற் கட்டுண்டா னென்னக்
[2]கற்கும்,வார்த்தையுண் டதனைக் கேட்டு நாணுறு [3]மனத்தி னேற்
குப், போர்த்தலை [4]புறகிட் டேற்ற புண்ணுடைத் [5]தழும்பும் போ
லாம், [6]நேர்த்ததுங் காண [7]லுற்ற ஈசனா ரிருக்கை [8]நிற்க.

(இ - ள்.) 'கார்த்தவீரியார்ச்சுனனென்பவனால் (இவ்விராவணன்)
கட்டுண்டான் என்று'சொல்லப்பட்ட வார்த்தை யுண்டு: (இவ்வுலகிற்
கேட்கப்படும்) அதனைக் கேட்டதனாலேயே நாணங்கொண்டமனத்
தையுடைய எனக்கு, போரிலே முதுகுகாட்டியதனால் தோன்றிய
புண்ணினுடைய தழும்பும்நேராகக்காணப்பட்டது! சிவபெருமானுடை
ய இருப்பிடமாகிய கைலாசம் நிற்கட்டும்; (எ - று.)

இராவணனென்பவன் முன்னமே கார்த்தவீரியனால் வெல்லப்பெற்
றுக் கட்டுப்பட்டுள்ளானாதலால், அவனை வென்றதைப்பற்றி எற்கெ
னவே நாணங்கொண்டுநின்ற எனக்கு, அந்தஎன்நாணத்தை மிகுவிக்கு
மாறு முதுகிற்றழும்பும் காணநேர்ந்ததே! முதுகுகொடுத்தவனையா
நாம் வென்றது! இதனை நினைக்க என்நாணம் மிகுகின்ற தென்பதாம்.
ஈசனாரிருக்கைநிற்கஎன்றது-இவன் கைலாயத்தின்கீழ் கைந்நசுக்குண்டு
நடுங்கியவனாதலாலும் இவனை வென்றதிற் சிறப்பில்லையென்பதுபெறப்
படும்: ஆயினும், அது குறித்துத் தெய்வமலையென்று ஒருபோக்குச்
சொல்லலாமாதலால், அதனை இங்குக் கூறியது விலக்கினேனென்று

கருத்தைத் தெரிவிக்கும். பி - ம்:—[1]என்பான்கைக். [2]கேட்கும், கேட்டும். [3]மனத்தினேற்கும்.. [4]புறகிட்டேற்ற, பிறகடேற்றம். [5]தழும்பு. [6]எற்றமும். [7]உற்றது. [8]நிற்கும் (௱௮௭௫)

௨0௬. மாண்டொழிந் [1]துலகி னிற்கும் வயங்கிசை [2]முயங்க மாட்டாது,[3]ஊண்டொழி [4]லுயந்து தெவ்வர் முறுவலென் புகழை யுண்ணப், [5]பூண்டொழி லுடைய மார்பா போர்ப்புறங் கொடுத் தோர்ப் போன்ற, ஆண்[6]டொழி லோரிற் பெற்ற வெற்றியு [7]மவத்த மென்றான்.

(இ - ள்.) (ஆபரணங்களைப்) பூணுந்தொழிலைக் கொண்ட மார்பை யுடையவனே! உண்ணுந்தொழிலையே விரும்பிப் பகைவரின் பரிகாசச் சிரிப்புத் தம்புகழை ஒழித்துவிடப் போரிற் புறங்கொடுத்தோரைப் போன்ற ஆண்மைத்தொழிலையுடைய இவ்விராவணனாற்பெற்ற வெற்றியும் உண்மையானதல்ல; (ஆகையால்), (போரில் இராவணன்)மாண்டு ஒழிந்ததனால் உலகில் நிலைத்துநிற்கும் விளங்குகின்ற கீர்த்தியும் (இனி என்னைச்) சேரமாட்டாது என்று சொன்னான்; (எ - று.)

அடுத்தசெய்யுளில் வீடணன் மறுமொழிகூறுவதாக வருவதனால், இச்செய்யுளிலுள்ள விளி விபீடணனைக் குறிக்கும். சுத்தவீரனை வெல்லும் வெற்றியே புகழைத் தரும்: இவ்விராவணன் புறங்கொடுத்தவனென்று இவனதுமுதுகின்தழும்பினால் ஏற்படுவதுபற்றிச் சுத்தவீரனாகாத இவனை வென்றதனால், புறங்கொடுத்தோரைப்போன்ற இவனைவென்ற எனக்கும் பழியுண்டாகுமே யன்றிப் புகழ்உண்டாகாதென்றவாறு. பி-ம் —[1]உலகமேத்த.[2]வழங்கமாட்டார்,முயங்கமாட்டார்.[3]வீண்.[4]உயர்ந்ததெவ்வர்நகைசெயவுயிரையோம்பிப், உகந்துதேவர்முறுவறம்புகழை யுண்ணப். [5]தாண்டொழிற்றுறந்ததோளாற் றம்முயிர்க்குதவமேற்ற, தாண்டெழிற்றொடர்ந்ததோளிற்றம்முயிர்க்குதவத்தோற்ற, தாண்டொழிற்றுறந்ததோளின்றருயிருதவற்கொத்த, தாண்டொழிறுறந்ததோளிற்றருவியரேற்றந்தோற்ற. [6]தொழிலறிவு. [7]அழுகிற்று, அழுகிது, விசைத்தது, அசைத்தது. (௱௮௭௬)

௨௧0.—விபீஷணன் கூறத் தொடங்குதல்.

அவ்[1]வுரை யுரைப்பக் கேட்ட வீடண னருவிக் கண்ணன்
வெவ்[2]வுயிர்ப் போடு நீண்ட விம்மலன் வெதும்பு நெஞ்சன்
[3]செவ்வியிற் றொடர்ந்த வல்ல செப்பலை செல்வவென்ன
எவ்வுயிர்ப் [4]பொறையு நீங்க விரங்கிநின் றினையசொன்னான்.

(இ - ள்.) அவ்வாறானவார்த்தையை (ஸ்ரீராமன்) கூறக்கேட்ட விபீஷணன், அருவிபோற்கண்ணீர்பெருகுகின்ற கண்களையுடையவனாய், வெவ்வியபெருமூச்சுடனே மிக்கஇரக்கங்கொண்டு வாடுகின்ற

மனமுடையவனாகி, 'செல்வனே! செம்மைபொருந்தாதசொற்களைச் சொல்லக்கடவையல்லை' என்றுசொல்லி, உயிரைப்பொறுத்தல் சிறிதுமில்லையென்னுமாறு நீங்க [பெருவருத்தத்தினால் உயிரொடுங்கினாற்போலத்தோன்றி] இரக்கங்கொண்டு (பின்வருமாறு) சொல்லலானான்; (எ - று.)—விபீஷணன் கூறுவதை மேல் ஐந்துகவிகளிற் காண்க.

இராவணனைவென்றது பெருஞ்செயலாயிருக்க, அதனைப் பழிப்புடையதாகக் கருதிக் கூறிய சொல்லைக் கேட்டு விபீஷணன் வருந்திக் கூறலானான். பி-ம்:—[1]உரைக்கிறுதிநோக்கி. [2]உயிர்ப்பொடுங்கிநீண்ட, உயிர்ப்போடுகின்ற. [3]செவ்வியால். [4]பொறையினோடு, பொறையுநீங்கி, பொறையுமேங்கி, பொறையினோடும். பொறையுநல்கி. (௩௨௭௭)

உ௯௧.—இதுமுதல் ஐந்துகவிகள் - இராமபிரானுக்கு விபீஷணன் சமாதானங்கூறுதலைத் தெரிவிக்கும்.

ஆயிரந் தோளி னானும் வாலியு மரிதி னைய
மேயின வென்றி[1]விண்ணோர் சாபத்தின்[2]விளைந்த மெய்ம்மை
தாயினுந் தொழத்தக் காண்மேற் றங்கிய காதற் றன்மை
நோயுநின் முனிவு மல்லால் வெல்வரோ நுவலற் பாலார்.

(இ - ள்.) ஐயனே! ஆயிரந்தோளையுடையவனான கார்த்தவீரியார்ச்சுனனும் வாலியும் அருமையாகப்பெற்ற வெற்றியானது தேவர்களின் சாபத்தினால் நேர்ந்தன: (இவ்விஷயம்), மெய்ம்மையாகும்: தாயினிடத்துக்காட்டிலும் (பெரும்பணிவுகொண்டு) தொழத்தகுதியுள்ளவளான சீதாபிராட்டியினிடத்துத் தங்கிய காதலின்வடிவமான நோயும் உன்முனிவும் இல்லாவிட்டால், (வாயினால்) வீரம்பேசித்திரிகின்றவர் வெல்லவல்லரோ? [அல்லரென்றபடி]; (எ - று.)

நுவலற்பாலார்-சிறப்பித்துச்சொல்லுதற்குஉரிய வீரரெனினுமாம். எதிர்ந்தார்வலிமையிற்பாதிபெறுமாறு வாலி வரம்பெற்றுள்ளதனாலும், முகம் மாறுபட்டபிராணிகளினால் தீங்குநேருமென்று நந்தி சாபமிட்டதனாலும்,வாலி இராவணனை வென்றானென்க. கார்த்தவீரியன் இராவணனைவென்றதற்குஏற்ப நேர்ந்த சாபவரலாறு புலப்படவில்லை. பி-ம்:---[1]இன்னோர். [2]விழைந்தமென்னாழ்த், விளைத்தமேன்மை. (௩௨௭௮)

உ௯உ. நாடுள தனையு [1]மோடி [2]நண்ணலார் காண்கி லாமற்
[3]பீடுள குன்றம் போலும் பெருந்திசை [4]யெல்லை யானைக்
கோடுள தனையும் புக்குக் [5]கொடும்புறத் [6]தழுந்து புண்ணின்
பாடுள [7]தன்றித் தெவ்வர் படைக்கலம் பட்டடென் செய்யும்.

(இ - ள்.) உலகம்உள்ளஎல்லைவரையுஞ்சென்று பகைவரைக் காணமாட்டாமல் [கிடைக்கப்பெறாமல்], பெருமைபொருந்திய மலையையொத்த பெரியதிக்குக்களினெல்லையிலுள்ள யானை(களோடுபொருதலால் அவை)களின் தந்தங்கள் உள்ள அளவெல்லாம் (மார்பின்வழியாகப்) புக்கு வளைந்த முதுகின்வெளிவரையில் அழுந்துவதனாலான புண்ணினுடைய வெளிப்பாடு (இவன்முதுகில்) உள்ளதேயன்றிப்

பகைவரின் படைக்கலம் இவன்மீதுபட்டு இவனை என்செய்ய மாட்டும்? (எ-று.)

முதுகில் தழும்புதோன்றியதற்குக் காரணத்தை விளங்கச்சொல்லுகின்றனன், விபீஷணனென்க. பி-ம்:—[1]உற்று. [2]நலிந்தநாளரிமுன்னாக, நவின்றநாளரிமுன்னாக. [3]மாடுளதனையுமுற்றும்வவ்வின. [4]வலியினானை. [5]கொழும். [6]எழுந்தபுண்கோட், தழும்புண்கொண்ட, அழுந்தும்புண்ணின். [7]இவன்மேற்றேவர். (௩௮௭௯)

௨௧௩. அப்பணை யனைத்து மார்புக் கணியெனக் கிடந்த [1]வீரக்
கைப்பணை முழங்க மேனா ளமரிடைக் [2]கிடைத்த [3]காலன்
[4]துப்பிணை வயிர வாளி விசையினுங் [5]காலின் றோன்றல்
வெப்பணை [6]குத்தி னாலும் வெரிநிடைப் [7]போய வன்றே.

(இ - ள்.) அந்தத்தந்தங்கள் யாவும் (தன்) மார்புக்கு ஆபரணமாகக் கிடந்தவை, முற்காலத்தில் வீரத்துக்குஅறிகுறியாகக் கைச்சங்கம் ஒலிக்கப் போரில் எதிரிட்ட யமனுடைய வலிமைபொருந்திய உறுதியுள்ள அம்புகளின்விசையினாலும் வாயுகுமாரனான அனுமானுடைய வெம்மைபொருந்திய குத்தினாலும் முதுகினிடத்தில் போயினவன்றோ! (எ-று.)—கிடந்த - பெயர்: இச்சொல், போயஎன்ற பலவின்பால்முற்றுக்கு எழுவாயாகும் பி-ம்:—[1]வீரன். [2]கலந்த, கலந்தான். [3]நாளில், அன்று. [4]துப்பன, துப்பணை. [5]கானற்றோன்றல். [6]குத்தினாலே. [7]போயது. சிலபிரதியில் "வென்றியாய்" (௨௧௫) என்ற பாடலின்பின் இதுவும் அடுத்த செய்யுளும் உள்ளன. (௩௮௮௦)

௨௧௪. அவ்வடு [1]வன்றி யிந்த [2]வண்டத்தும் [3]புறத்து [4]மான்ற
தெவ்வடு [5]படைக ளஞ்சா [6]திவன்வயிற் [7]செல்விற் றேவ
வெவ்விட மீசன் றன்னை விழுங்கினும் பறவை வேந்தை
அவ்விட [8]நாக மெல்லா [9]மணுகினு [10]மணுக லாற்றா.

(இ - ள்.) தலைவனே! ஆராய்ந்தறியுமிடத்து அந்தத் (தந்தம்பாய்ந்ததனாலுண்டான) தழும்பேயல்லாமல், கொடியவிஷம் சிவபெருமானை விழுங்கினாலும் பறவைகட்குஅரசனான கருடனை அந்த விஷமுள்ள நாகமெல்லாம் (துன்புறுத்துமாறு) நெருங்கினாலும், இந்தஉலகிலும் வெளியுலகங்களிலும் சிறப்புப்பொருந்திய பகைவரைக்கொல்லவல்ல படைக்கலங்கள் அச்சமில்லாமல் இவனிடத்தில் (தழும்பை உண்டாக்குமாறு) நெருங்குவதற்குவல்லமையுள்ளனவாகா; (எ - று.)

'செல்லுதற்பொருளையுடைய வினைச்சொற்கள் அறிதற்பொருளையுமுடையன' என்ப வாதலால், 'செல்வில்' என்பதற்கு - ஆராய்ந்தறியின் எனப் பொருள்கொள்ளப்பட்டது; செல்லுதல் - புத்திசெல்லுதலென்க. படைக்கலங்களை எந்தியவரின் அஞ்சுதற்றன்மையைப் படைக்கலத்தின்மீது எற்றிக்கூறியது, உபசாரவழக்கு. பி-ம்:—[1]இன்றி. [2]அண்டத்தின், அண்டத்துப். [3]திறத்தும். [4]மற்ற, மானத்.

[5]படைக்கணஞ்சாது, படைக்கண்சாலின். [6]அவன். [7]செல்லுமன்றே. [8]மறுகாவெல்லாம். [9]அடுகினும். [10]அணுகாதன்றே. இச்செய்யுள், சில பிரதியிலில்லை. (ரு அஅக)

உகரு. [1]வென்றியாய் பிறிது பூண்டோ வேலைசூழ் [2]ஞால மாண்டோர், பன்றியா யெயிற்றுக் கொண்ட [3]பரம்பரன் முதல பல்லோர், என்றியா மிடுக்கண் டீர்வ [4]தென்கின்ற [5]இவனின் றுன்னால், [6]பொன்றினா னென்ற [7]போதும் [8]புலப்படார் [9]பொய்கொலென்பார்.

(இ-ள்.) வெற்றியோனே! கடலினாற்சூழப்பெற்ற பூமியை அக்காலத்தில்[முற்காலத்தில்]ஒப்பற்ற வராகாவதாரமாய்(த் தன்னுடைய)கோரப்பற்களிற்கொண்ட பராபரனை முதலாகவுள்ள பலரும் 'நாங்கள்(இவனால்தோன்றும்) துன்பத்தினின்று நீங்குவது என்றைக்கு?' என்கின்றவராய்,'உன்னால்இவ்விராவணன்இன்றுஇறந்தான்'என்றபோதும்(அச்சத்தினால்) வெளிப்பட்டுத்தோன்றாதவராய், '(இராவணன்இறந்தது) பொய்யோ' என்று கூறுபவராகின்றார்கள்; (எ-று.)---இதனால், இவ்விராவணனைக் கொன்றது, அரும்பெருஞ்செயலென்று விளக்கியவாறு.

பி - ம்:---[1]வென்றியா. [2]ஞாலம்விண்டோர்; ஞானமெல்லாம், ஞாலமுண்டோய். [3]பராபரன். [4]எனநின்றார். [5]இவனின்றுன்னோர், இவனை நின்னால், இவனினுன்னால். [6]பொன்றியான். [7]போது. [8]புலப்பட்டார். [9]பொய்யேயென்பார். (ரு அஅஉ)

உகசு.—இராமபிரான் விபீஷணனை நோக்கி 'இராவணனிடத்துப் பகைமையைவிட்டு ஈமக்கிரியைசெய்க' என்று பணித்தல்.

அன்னதோ வென்னா [1]வீச னையமு நாணு நீங்கித்
தன்னதோ [2]ளிணையை நோக்கி [3]வீடணா தக்க தன்றால்
என்னதோ [4]விறந்து ளான்மேல் [5]வயிர்த்தனீ யிவனுக் [6]கீண்டச்
சொன்னதோர் விதியி னாலே கடன்செயத் துணிதி யென்றான்.

(இ - ள்.) 'அப்படியா?' என்றுசொல்லி, (யாவர்க்குந்)தலைவனாகிய ஸ்ரீராமன்,—ஐயமும் (அதனால்தோன்றிய)நாணமும்நீங்கி, தன்னுடைய தோளிணையைப் (பாராட்டுங்குறிப்பினாற்) பார்த்து, (பிறகு, வீடணனை நோக்கி),'விபீஷணா!இறந்துவிட்டவன்மேல்(பின்னும்) வயிரங்கொண்டு (வாளா) இருத்தல் என்னசெயல்? (இது) தக்கதன்று: நீ இவனுக்கு விரைவாக(நூல்களிற்) சொல்லியுள்ளதான ஒருமுறைமையினால் ஈமக்கடனைச்செய்யத் துணிவாய்' என்று கட்டளையிட்டான்; (எ - று.)—

பி-ம்:-[1]வீரன். [2]அணைய. [3]வீடணன்றகர்த்ததன்றால். [4]இறந்துளார்மேல், இறந்துளான்பால். [5]வயிரநீ. [6]ஈண்டு. (ரு அஅங)

உகஎ.—ஸ்ரீராமன் தன்னைத் தொழவந்த தேவர்களைக் காணுமாறு செல்லுதல்.

அவ்வகை [1]யருளி வள்ள லனைத்[2]துல கங்க ளோடும்
எவ்வகை யுள்ள தேவ ரியாவரு [3]மிரைத்துப் பொங்கிக்

[4]கவ்வையிற் றீர்ந்தார் வந்து சூழ்கின்றார் தம்மைக் காணச்
[5]செவ்வையி னவர்முற் [6]செல்வான் வீடண னிதனைச் செய்தான்.

(இ - ள்.) வரையாதருளுந்தன்மையையுடைய ஸ்ரீராமன் அவ்வாறு (விபீஷணனைநோக்கி) அருளிச்செய்துவிட்டு, (இராவணனைக்கொன்றதற்காக இராமனிடத்து) மகிழ்ந்து துதித்துத் துன்பத்தினின்று நீங்கினவராய் வந்துதொழுகின்றவரான எல்லாவுலகங்களிலுமுள்ள பலவகையாகவுள்ள தேவர்யாவரையுங் காண்பதற்காக நேர்மையோடு அவர்கள்முன்னே செல்பவனான்: விபீஷணன் இதனைச் செய்யலானான்; (எ-று.)—விபீஷணன் செய்வதனை அடுத்த செய்யுளிற் காண்க.

பி-ம்:-[1]அருள. [2]உலகங்கடோறும். [3]உரைத்துப். [4]கவ்வையிற்றிரிந்தார். கவ்வையற்றிருந்தார். [5]செவ்வையின்றவமுன். [6]சென்றான். இச்செய்யுள் சிலஏட்டுப்பிரதிகளி லில்லை. (௩௮௪)

௨௧௮.—இதுமுதல் ஒன்பதுகவிகள்-ஸ்ரீராமபிரான்கட்டளைப்படி ஈமக்கடன்செய்யக்கருதிய விபீஷணன், துயரினால்இராவணன்மீது விழுந்துபுலம்புதலைத் தெரிவிக்கும்.

[1]போழ்ந்தென வரக்கன் [2]செய்த புன்றொழில் [3]பொறையிற் றூமா [ல்
வாழ்ந்தநீ யிவனுக் கேற்ற [4]வரன்முறை [5]வகுத்தி யென்னத்
தாழ்ந்ததோர் கருணை தன்னாற் றலைமக னருளத் [6]தள்ளி
[7]வீழ்ந்தன னவன்மேல் வீழ்ந்த மலையின்மேன் மலைவீழ்ந் தென்ன.

(இ-ள்.) 'பிளந்தாற்போல அரக்கன்செய்த புல்லியதொழில், (இப்போது) பொறுக்கத்தக்கது: (இராவணனைப்போலவாகாமல்) வாழ்ச்சிபெற்ற நீ இவனுக்குத்தக்க ஈமக்கடனை முறைப்படி செய்வாய்' என்று மனவிரக்கத்தைத்தெரிவிக்கின்ற ஒப்பற்ற கருணையினால் தலைமகன் [ஸ்ரீராமன்] அருள்புரிய, வீழ்ந்துள்ளமலையின்மேல் மலைவிழுந்தாற்போல(த்துயரத்தால்) தள்ளப்பட்டு அந்தஇராவணன்மேல் விழுந்தனன், (ஸ்ரீவிபீஷணன்); (எ - று.)

'மரணாந்தாநிவைராணி [சாவுவரையில்தான் பகைமை]' என்றபடி இறந்தவனிடத்துப் பகைமைநீங்கி உரிமையைப் பாராட்டவேண்டுமென்று ஸ்ரீராமபிரான் கருணையோடு அருளிச்செய்ததனால், ஸ்ரீவிபீஷணாழ்வான் இராவணனிடத்துப் பகைமைநீங்கி அவனுக்குஈமக்கடன்புரியக்கருதுகையில் தமையன்முறைமையைக் கருதியதனால் துயரம் மிக அவன்மீதுவிழுந்து பின்வருமாறு புலம்பலாயினனென்க. முதல்மூன்றடிகள் 'வீடணா!...துணிதி' (௨௧௬) என்று கீழ்வந்ததன் அநுவாதம்.

பி-ம்:—[1]போழ்ந்தன, போழ்ந்தெழ. [2]செய்கை. [3]பொறையினாற்றல், பொறையினான்றன். [4]வழிக்கடன். [5]வருத்தி. [6]தாளின். [7]வீழ்ந்தவன் றன்மேல்வீழ்ந்தான் (௩௮௫)

௨௧௯. [1]ஓவரு முலகத் தெல்லா வுயிர்களு [2]மிரங்கி யேங்கத்
தேவரு முனிவர் தாமுஞ் சிந்தையி [3]னிரக்கஞ் சேரத்
தாவரும் [4]பொறையி னான்ற [5]னறிவினாற் றகையத் தக்க
[6]ஆவலுந் [7]துயருந் தீர வரற்றினான் பகுவா யார.

(இ - ள்.) அழிதலில்லாத உலகத்திலுள்ள எல்லாப்பிராணிகளும் இரக்கங்கொண்டு எக்கமுறவும், தேவரும் முனிவரும் (தம்) சிந்தையில் இரக்கம் பொருந்தவும், அழிவில்லாதபொறுமையையுடைய விபீஷணன் தன்னறிவினால் மாற்றிக்கொள்ளுதற்குஉரிய ஆவலும் துயருந் தீரப் பிளவுபட்டவாய்திரம்பக் கதறிப் புலம்பத்தொடங்கினான்; (எ-று.)—விபீஷணன்புலம்புதலை மேல் எழுகவிகளிற் காண்க.

ஓவு-அழிவு. ஆவல்-பற்று. துயர்-வருத்தம்: இவ்விரண்டும்விவேகத்தினாற்போக்குதற்குஉரியனவாதலால், 'அறிவினால்தகையத்தக்க' என்று அவற்றுக்கு அடைமொழி கொடுத்தார். இனி, 'அறிவினைத்தகைந்து நிற்கும்' என்ற பாடம்கொள்ளுதல் ஏற்கும். அரற்றுவது, ஆவலும் துயருந் தீர்தற்கு ஒருவழி யாதலால், விபீஷணன் அரற்றினானென்க. பி-ம்:—[1]எவரும். [2]இரங்கிநெஞ்சிற், இரங்கநெஞ்சிற், எரியிநெஞ்சின். [3]அவலங்கூர, இரக்கஞ்செய்ய, இரக்கஞ்செய்த. [4]பொறையினானும். [5]தாங்கலாந்தரத்ததல்லால், அறிவினாற்றகைந்துநின்ற, அறிவினாற்றகைக்கநின்ற, அறிவினைத்தகைத்துநிற்கும். [6]யாவரும். [7]துயரம் (௩அஅ௬)

வேறு.

௨௨௦. [1]உண்ணாதே [2]யுயிருண்ணா தொரு[3]நஞ்சு சனகியெனும் [4]பெருநஞ் [5]சுன்னைக், கண்ணாலே நோக்கவே [6]போக்கியதே[7]யுயிர் நீயுங் களப்பட் டாயே, [8]எண்ணாதே னெண்ணியசொ லின்றி னித்தா [9]னெண்ணுதியோ வெண்ணி லாற்றல், அண்ணாவோ வண்ணாவோ [10]வசுரர்கட்ப் பிரளயமே யமரர் கூற்றே.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அளவிடுதற்குஅரிய வல்லமையையுடைய அண்ணாவோ! அண்ணாவோ! அசுரர்க்குப் பிரளயகாலம்போன்றவனே [அசுரர்களை யொழிப்பவனே]! அமரர்கட்கு யமனே! உட்கொள்ளாமலே ஒருநஞ்சானது உயிரைக்கொள்ளமாட்டாது: (அதற்குமாறாக), சானகியென்ற பெருநஞ்சானது உன்னைக் கண்ணாலே நோக்கியமாத்திரத்தில் உன்னுயிரைப் போக்கிவிட்டதே! நீயும் களத்தில் உயிரொழிந்துகிடக்கின்றாயே!! (உன்னை அண்ணனென்று) எண்ணாமல்விட்டுச்சென்றவனான என்னுடைய ஆராய்ந்துகூறிய சொல்லை இன்று இப்போதுதான் எண்ணப்போகின்றாயோ? (எ - று.)

தான் தமையனைவிட்டுச்சென்ற கொடுமைக்கு இரங்குவான் 'எண்ணாதேன்' என்று தன்னைக் கூறிக்கொள்கின்றான். சானகியென்னும் நஞ்சு உண்ணாநிலையிற் கண்ணாலே நோக்கிய மாத்திரத்து உயிரைப் போக்கியதனால் 'பெருநஞ்சு' எனப்பட்டது: இங்கு வேற்றுமையணி காண்க. பி-ம்:—[1]உண்ணாத. [2]உண்ணவொரு, உயிருண்ணா, உண்ணுமொரு. [3]மருந்து. [4]ஒரு. [5]உன்றன். [6]போகியதே, போக்கினாய். [7]நீயுயிருங். [8]எண்ணாதே. [9]எண்ணுதியே. [10]அசுரர்கடற். 'உண்ணாநஞ்சுயிருண்ணாவொரு...நஞ்சுன்னை' என்று ஒருபிரதியில் முதலடி. (௩அஅ௭)

௨௨௧. [1]ஓராதே [2]யொருவன்ற னுயிராசைக் குலமகண்மே [3]லுற்ற காதல், [4]தீராத [5]வசையென்றே னெனைமுனிந்த முனிவாறித் தேறி னாயோ, [6]போராசைப் பட்டெழுந்த குலமுற்றும் பொன்றவுந்தான் [7]பொங்கி நின்ற, [8]பேராசை [9]பெயர்ந்ததோ [10]பெயர்ந்தாசைக் [11]கரி[12]யிரியப் புருவம் பேர்த்தாய்.

(இ - ள்.) திசையானைகள் நிலைபெயர்ந்து ஓடுமாறு புருவத்தை நிலைபெயரச்செய்தவனே! 'ஆராய்ச்சியின்றி ஒருவனுடைய உயிர்போல் விருப்பிற்குஉரிய குடிப்பிறந்த ஸ்திரீயினிடத்துப் பொருந்திய காதலானது, நீராதபழி(யை விளைக்கும்)'என்று கூறினேன்: (அப்போது நீ) என்னைச்சினந்த சினம் தணிந்து (இப்போது அவ்வுண்மையை)அறிந்தாயோ? போரிலே விருப்பங்கொண்டெழுந்த (அரக்கரின்)குலம் முழுவதும் இறக்கவும் தான் மேன்மேல்வளர்கின்ற பேராசைநீங்கியதோ?

உன்னுடைய பெருங்காதலால் அரக்கர்குலமே மடிந்துவிட்டதே! நான் சொன்னபோது என்பேச்சைக் கேட்டு நடந்திருந்தால், இந்த ராட்சசகுலமே யன்றி நீயும் உயிருடன் இனிதிருக்கலாமே!! என்றவாறு. ஆசைக்கரி - திசையானை. பி-ம்:---[1]ஓராசை. [2]ஒருவன்மேல். [3]உய்த்த, உடைய. [4]தீராசை. [5]பழி...எனை, பழி...றனை, வழியன்றென்றெனை. [6]பேராசை [7]பொங்காநின்ற, பொன்றுநின்ற. [8]போராசை. [9]தீர்ந்தனையே, பெயர்ந்ததே. [10]பிறவாசை. [11]கிரி. [12]முரிய.'பேராசைக் கிரியிரியத்திசையானை மருப்பொசித்த பெரியதோளாய்' என்று ஒரு பிரதியில் ஈற்றடியுள்ளது. (௫௮௮௮)

௨௨௨. அன்றெரியில் விழுவேத வதிபிவள்கா [1]ணுலகுக்கோரன்னை யென்று, குன்றனைய நெடுந்தோளாய் கூறினே னதுமனத்துட் [2]கொள்ளாதேபோய், [3]உன்றனது குலமடங்க வுருத்தமரிற் படக்கண்டு முறவா காதே, பொன்றினையே [4]பிராகவனார் [5]புயவலியை யின்றறிந்து [6]போயினாயே.

(இ - ள்.) 'அக்காலத்து அக்கினிபிரவேசஞ்செய்த வேதவதியென்பவளே உலகுக்கெல்லாம்ஒப்பற்ற தாயான இவள்காண்'என்று குன்றையொத்த நெடியதோளையுடையவனே!கூறினேன்: அதனை மனத்தினுட் கொள்ளமாட்டாதவனாய்ப்போய், உன்னுடையகுலமெல்லாம் இறந்தொழியும்படி கோபித்துச்செய்கின்றபோரில்இறந்துவீழ்தலைக்கண்டும் (நீ இராமபிரானோடு)உறவுபூண்டு ஒற்றுமையாயிராமல் இறந்திட்டாயே! இராகவனுருடைய புயவலியைஇன்று நேரேகண்டறிந்து உயிர்நீங்கினாயே!! (எ - று.)

இறந்துவீழ்ந்துகிடக்கின்ற இராவணனைப்பார்த்துப் புலம்பிக்கூறுகின்றனன் ஸ்ரீவிபீஷணனென்க. குன்றனையநெடுந்தோளாய் முதலியன - இராவணனைக் குறித்த விளிகள். பி-ம்:--[1]அமருலகுக்கு, உலகுதனக்கு. [2]கொள்கிலாதாய், கொள்ளாதேயே [3]இன்றுனது. [4]இராகவன்றன். [5]புயவலியின்றறிந்துதான், புயவலிநீயின்றறிந்து. [6]போகின்றாயே. சிலபிரதியில் இந்தச்செய்யுள் ௨௨௧ - ஆம் பாடலின்பினாகவல்லாமல் "போர்மகளை" (௨௨௯) என்றதன்பின் உள்ளது. (௫௮௮௯)

உஉரு. [1]மன்றன்மா மலரோனும் [2]வடிமழுவாட் படையோனும் வரங்க ளீந்த, ஒன்றலா தன[3]வுடைய முடியோடும் [4]பொடியாகி யுதிர்ந்து [5]போன, அன்றுதா [6]னுணர்ந்திலையேயானும் [7]வானாட்டை [8]யணுகா நின்ற, இன்றுதா [9]னுணர்ந்தனையே [10]யிராமனா ரியாவருக்கு [11]மிறைவ னாதல்

(இ - ள்.) நறுமணமுள்ள பெரிய தாமரைமலரிலுள்ளவனான பிரமதேவனும், கூரிய மழுப்படையென்கின்ற ஆயுதத்தையுடையவனான சிவபெருமானும் ஈந்த வரங்கள் ஒன்றுஅல்லாதனவாக [பத்தாக]வுள்ள முடியோடும்பொடியாகி உதிர்ந்துபோயின: நீ சீதையைக் கவர்ந்துவந்த அப்போது அறிந்தாயில்லையேயாகிலும், சுவர்க்கலோகத்தை யணுகிநின்ற இன்றைக்காவது அவ்விராமனார் யாவர்க்குந் தலைவராதலை அறிந்தனையா? (எ-று.)—வரங்கள் முடியோடும் உதிர்ந்துபோன-உடனவிழ்ச்சியணி. பி - ம்:—[1]மன்றலார், மன்றல்கமழ். [2]மழுவாளி. [3]உடைவ. [4]பொடியாக. [5]போனது. [6]அறிந்திலையே. [7]அவனாட்டை. [8]அடையநின்ற, அணுகிநின்ற. [9]தெரிந்தனையே, தெரிந்ததே, அறிந்திலையே. [10]இராமன்றான். [11]இறைவர், ஈசன்.

இங்கே சிலபிரதிகளிற்காணப்படும் பாடல்வருமாறு:—

அருவினைவந் தெய்தியபோ தாரர சேயுன்(றன்)
திருவினைநீ பெறுவதற்குத் திருநாமங் களைப்பரவ
ஒருபதுவா யுளவணங்க வொண்முடிபத் துளவினிய
இருபதுகை யுளவிலங்கை யென்னுக [1]யிந்தாயே.

பி.ம்:—[1]இறந்தாயே. வேறு சிலபிரதிகளிற் காணப்படும் பாடல் வருமாறு:—

அருவினைவந் தெய்தியபோழ் தார்தடுப்பா ராரதனை யறிவார் விட்டின், திருவினைநீ பெறுவதற்கிங் கிவன்றிருநா மங்கடனைச் சிந்தித் தேத்த, ஒருபதுநா வுளவணங்க வொண்முடிகள் பத்துளவே [1]யிறைஞ்ச மேரு, இருபதுகை யுளவிலங்கை யென்னுக வுயிரோடு மிழந்திட் டாயே.

பி-ம்:—[1]எழில்கொள். சிலபிரதியில் இந்தச்செய்யுள் (உஉங-ஆம் பாடலின் பின்னுகவல்லாமல் "போர்மகளை" (உஉகூ) என்றதன்பின் உள்ளது. (ருஅகூ0)

உஉச. [1]வீரநா டுற்றாயோ [2]விரிஞ்சனும் யாவருக்கு மேலா [3]முன்பன், [4]பேரநா டுற்றாயோ பிறைசூடும் [5]பிஞ்ஞகன்றன் புரம் [6]பெற் றாயோ, ஆரணு வுன்னுயிரை யஞ்சாதே கொண்டகன்று [7]ரதெலா நிற்க, மாரனார் [8]வலியாட்டந் [9]தவிர்ந்தாரோ [10]குளிர்ந் தாரோ [11]மதிய மென்பான்.

(இ - ள்.) வீரர்போய்ச்சேரும்நாட்டை யடைந்தாயோ? விரிஞ்சனாகிய யாவர்க்கும்மேலாகி முற்பட்டவனாகிய பிதாமகனது நாட்டை

யடைந்தாயோ? பிறைச்சந்திரனை முடிக்குஅணியாகக்கொண்ட சிவ பெருமானது நாட்டை யடைந்தாயோ? அண்ணா! உன்னுயிரை அச் சாமற்கொண்டகன்றவர் யார்? அவைதாமெல்லாம் இருக்கட்டும்: மன்மத னார்(தம்முடைய)வலிமையினாட்டத்தை (இப்போதாவது) தவிர்ந்தாரா? மதியமென்பான் குளிர்ந்திட்டானோ? (எ - று.)

மகாவீரனையும் தன்வழிப்படும்படிசெய்த சிறப்புப்பற்றி 'மாரனார்' என்று பன்மையாற்கூறினது; இனி, அவனுடையகொடுமையைக்கருதி இழிப்பினாற் கூறியதுமாம். பேரன் - பிதாமகன்: இங்கு, பிரமதேவன். பேரன் பிதாமகனென்ற பொருளில்வருதலை "உங்கள்பேரனார்தந்தே சுடையெழுத்தேயாகில்" என்றவிடத்துங் காண்க. பி-ம்:—[1]வீரனோடு, வீரர்நாடு. [2]விரிஞ்சனார். [3]உன்றன் [4]பேரனோடு. [5]இறையவனார், பெருமா னார், ஒருவன்றன். [6]உற்றாயோ. [7]அதுதான்தேவர். [8]வலியாரே, அம ராட்டம், போராட்டம். [9]தவிர்ந்தாரே. [10]குளிர்ந்தானே. [11]வதனமம் மா, மதியினார்தாம், மதியினாரும். (௩௮௯௧)

௨௨௫. கொல்லாத மைத்துனனைக் [1]கொன்றாய்[2]என் றது [3]குறித்துக் கொடுமை [4]சூழ்ந்து,பல்லாலே யித[5]ழதுக்குங் கொடும் பாவி [6]நெடும்பாரிற் [7]பழிதீர்ந் தாளோ, நல்லாருந் தீயாரு நரகத் தார் [8]சொர்க்கத்தார் நம்பி நம்மோடு, எல்லாரும் பகைஞரே யார்முகத்தே விழிக்கின்றாய் [9]வெளியை யானாய்.

(இ - ள்.) கொல்லுதற்குஅரிய மைத்துனனைக் கொன்றாயென்ற அதனைக்குறித்துக் கொடுஞ்செயலைச்செய்யச் சூழ்ச்சிசெய்துகொண்டு பல்லினாலே உதட்டைக்கடிக்குங் கொடியபாவியாகிய சூர்ப்பணகை நெடிய பூமியிற் பழியைத் தீர்த்துக்கொண்டாளோ? நம்பி! நரகத் தார் துறக்கத்தார் ஆகிய தீயாரும் நல்லாரும் என்ற எல்லோரும் நம் மோடு பகைவரேயாவர்: (ஆகையால்), (இப்போது) யார்முகத்தே விழிக்கப்போகின்றாய்? (நீ) எளியவனாய்விட்டாய்: (எ - று.)

தன்கணவனைக் கொன்றவனைப் பழிக்குப் பழிவாங்கவேண்டு மென்று சூர்ப்பணகை சூழ்ச்சிசெய்து உன்னை மாய்வித்தாளென்பான் 'கொடும்பாவிநெடும்பாரிற்பழிதீர்ந்தாளே' என்றான். பி-ம்:—[1]கொன் றான். [2]என்பது. [3]கேட்டு. [4]கூர்ந்து, கூறி. [5]மறைக்கும். [6]நெடும்பாரப். [7]பகை. [8]துறக்கத்தார். [9]எளிமை. (௩௮௯௨)

௨௨௬. போர்மகளைக்[1]கலைமகளைப் புகழ்மகளைத் [2]தழுவியகை பொறுமை [3]கூரச்,சீர்மகளைத்[4]திருமகளைத் தேவர்க்குந் தெரிவரிய [5]தெய்வக் கற்பின், பேர்மகளைத் [6]தழுவுவா னுயிர்கொடுத்துப்பழி [7]கொண்ட பித்தா பின்னைப், பார்மகளைத் தழுவினையோ திசை யானை [8]பணையிறுத்த [9]பணைத்த மார்பால்.

(இ - ள்.) விசயலக்ஷ்மியையும் சரசுவதியையும் கீர்த்தியாகியமகளை யும் தழுவிய கையானது பொறுமைமிக, சிறப்புப்பொருந்தியமகளான

திருமகளும் தேவர்களாலும் உணர்தற்குஅரிய தெய்வத்தன்மை கொண்ட கற்பினாற்புகழ்பெற்றவளுமான சீதாதேவியைத் தழுவுவ தற்கு (விரும்பி அதனால்) உயிரையே கொடுத்துப் பழியையேகொண்ட காமப்பித்தனே! திசையானைகளின் கொம்புகளை முறித்தபருத்த மார் பினாற் பிறகு பூமிதேவியைத் தழுவினாயே! (எ - று.)

பெருத்தமியாகிய திருமகளைத் தழுவவிரும்புவது கண்டு போர் மகள்முதலியவரைத் தழுவிய கைகள் பொறாமை கொண்டனஎன்க. கைகூடாதசெய்கையை விரும்பி உயிரையே பறிகொடுத்ததனால்,இராவ ணனை 'பித்தா' என்றது: இங்கு ஒன்றைக்கொடுத்து மற்றொன்றைப் பெறுதலாகிய மாற்றுநிலையணிகாண்க: வடநூலார் பரிவ்ருத்த்யலங் காரமென்பர் 'கீர்த்தி'என்ற வடசொல் அந்தப்பாஷையிற்பெண்பா லாதலால் 'புகழ்மகளை' என்றது. பார்மகளைத்தழுவுதல்-பூமியிற் பிண மாகக்கிடத்தல். பி-ம்:---[1]குலமகளை. [2]தழுவியவா, தழுவியவப். [3]போ கச். [4]தேவர்க்குந்தேவர்தந்திருமகளைத், திரு........தம்மோயைத். [5]தெய்வக்கற்பை. [6]தழுவினையோ, தழுவாதுன். [7]பூண்ட. [8]மருப்பொ சித்த. [9]பருதிமார்பால், பருதிமார்பா. (௩அ௯௩)

உஉஎ.—சாம்பவானால் விபீஷணன் தேறிநிற்க, மண்டோதரி இராவணனிறந்தசெய்தியை யுணர்தல்.

என்றேங்கி யரற்றுவான் றனையெடுத்துச் சாம்பவனு மெண் கின் [1]வேந்தன், குன்றோங்கு [2]நெடுந்தோளாய் விதிநிலையை [3]மதியாத கொள்கைத் தாகிச், சென்றோங்கு [4]முணர்வினையோ தேறாதே யழுந்துதியோ வென்னத் தேறி, [5]நின்றானப் புறத் தரக்க னிலைகேட்டாண் மயன்பயந்த நெடுங்கட் பாவை.

(இ - ள்.) என்று எக்கங்கொண்டு வாய்விட்டுக்கதறுகின்றவனை விபீஷணனை யெடுத்து, சாம்பவனென்கின்ற கரடிகட்குஅரசன்,— 'மலைபோலோங்கிய நெடிய தோளையுடையவனே! விதியின்நிலைமை யை யறியாத கொள்கையைக்கொண்டதாய்ச் சென்று ஓங்குகின்ற உணர்வையோ செவ்வனேபெறாதே (இங்ஙனம் நீ) துயரில்அழுந்து தலைச் செய்யக்கடவையோ?'என்றுசொல்ல,(ஸ்ரீவிபீஷணன்)தேறி அப் புறத்துநின்றான்: மயன்பெற்ற நெடியகண்ணையுடைய பாவைபோல்பவ ளான மண்டோதரி அரக்கன்நிலைமையை [இராவணன்இறந்தானென் பதை]க் கேள்வியுற்றாள்; (எ - று.)

விதிநிலையைமதியாத கொள்கையாவது, துயரத்திலழுந்துதலென் பது: விதியின்நிலைமையையறிந்த ஓங்கிய உணர்வையுடைய நீ இராவ ணன் இறந்தது விதியின்செய லென்று அறியாது இரங்குவது சிறி துந் தகுதியன் றென்றவாறு. பி-ம்:—[1]மன்னன். [2]திரள். [3]உணராதே, மதியாதே, உணராத. [4]உணர்வினையோ......வருந்துதியோ, உணர் விலர்போற்றேறாதேவருந்தினையோ, உணர்வினர்போற்றேறாதேவருந் துதியோ, உணர்விலர்போற்றேறாதேவருந்துவரோ, உணர்வினர்

[4]போற்றாது வருந்துதியோ, உணர்விலரிற் போற்றாதே வருந்தினையோ [5]நின்றாங்குப். (௩௮௬௪)

வேறு.

௨௨௮.—மண்டோதரி பலமாதருடன் இராவணன் இறந்து வீழ்ந்துகிடக்கும் இடத்துக்கு வருதல்.

அனந்தநூ றாயிர மரக்கர் மங்கைமார்
புனைந்தபூங் குழல்விரித் தரற்றும் பூசலார்
இனந்[1]தொடர்ந் துடன்வர [2]வெய்தி னாளரோ
நினைந்தது மறந்தது மிலாத [3]நெஞ்சினாள்.

(இ - ள்.) பலஇலட்சம் தொகையினரான அரக்கஸ்திரீகள் அலங்கரித்திருந்த அழகிய தம்கூந்தலை விரித்துக்கொண்டு கதறுகின்ற புலம்பலையுடையவராய், கூட்டமாகத்தொடர்ந்து தன்னுடனே வர, நினைப்பதும் மறப்பதும் இல்லாத நெஞ்சையுடையவளான மண்டோதரி வந்தனள்; (எ - று.)

இராவணனை மறந்துவிடுவது பிறகு நினைப்பதுஎன்பதுஇல்லாமல் எப்போதும் அவனைக் கருத்திற் கொண்டிருப்பவளென மண்டோதரியின் கற்புத்தன்மையைக் கூறியவாறு. பி - ம்:—[1]திரிந்து. [2]எய்தினாளென்ப, எகினாளென்ப. [3]நெஞ்சினார். (௩௮௬௫)

௨௨௯.—அரக்கியரின் புலம்பலொலி.

இரக்கமுந் தருமமுந் துணைக்கொண் டின்னுயிர்
புரக்கு[1]நன் குலத்துவந் தொருவன் பூண்டதோர்
பரக்கழி யாமெனப் பரந்து நீண்டதால்
அரக்கியர் வாய்திறந் தரற்று மோதையே.

(இ-ள்.) தயையும் தருமமும் என்றவற்றைத் துணையாகக்கொண்டு இனியஉயிரைப் பாதுகாக்கின்ற சிறந்தகுலத்திலே பிறந்த ஒருவன் மேற்கொண்டதொரு நாணமற்றசெயல்போல, அரக்கியர்வாய்திறந்து அரற்றுகின்ற ஓசையானது பரவிமிக்கது; (எ - று.)—வந்தொருவன் - தொகுத்தல். பி - ம்:—[1]நம். (௩௮௬௬)

௨௩௦. இதுவும் அடுத்த கவியும்-பின்னும் அரக்கமங்கையர் இராவணன் இறந்துகிடக்கும் இடத்திற்குவந்தமையைக்கூறும்.

நூபுரம் [1]புலம்பிடச் சிலம்பு [2]நொந்தழக்
கோபுரந் [3]தொறும்புறங் குறுகி னார்சிலர்
ஆபுரந் தரன்பகை யற்ற தாமெனா
மாபுரந் [4]தவிர்ந்துவிண் வழிச்[5]சென் றார்சிலர்.

(இ - ள்.) நூபுரம் ஒலிக்கவும், சிலம்பு வருந்தியழவும், (நகரவாயிற்)கோபுரந்தோறும் வெளியே சிலர் நெருங்கிவந்தனர் சிலர்; சிலர், 'புரந்தரனுக்குப்பகை அற்றதாகும்: ஆ!!' என்றுசொல்லிப் பெரிய

(தமது)உடலைவிட்டு(உயிர்நீங்க)ச் சுவர்க்கவழியிற் சென்றார்:(எ-று.)— சிலம்புஒலிப்பது அழுவதுபோலுமென்க. நூபுரம் சிலம்புஎன்பன - காலணிவகைகள். பி - ம்:—[1]அலம்பிடச், சிலம்பிடச் [2]நொந்தெழக். [3]புறந்தொறும், தொறுந்தொறும். [4]தவிர. [5]செல்வார். (௩-அகூ௭)

உ௩.௧. [1]அழைப்பொலி [2]முழக்கெழ [3]வழகு [4]மின்னிடக்
[5]குழைப்பொலி [6]நல்லணிக் குலங்கள் [7]வில்லிட
[8]உழைப்பொலி வுண்கணீர்த் தாரை மீதுக
மழைப்[9]பெருங் குலமென [10]வான்வந் தார்சிலர்.

(இ - ள்.) கூவுகின்ற ஒலி இடிமுழக்கம்போலெழவும், அழகு மின்னிடவும், குழைமுதலிய விளங்குகின்ற நல்ல அணிகலன்களின் திரள் வில்லிடவும், மான்போல்விளங்குகின்ற மையுண்ட கண்களி னின்று நீர்த்தாரைமேலேசிந்தவும், மழையின்பெருங்குலம்போல வானின்மீதுசிலர் வந்தார்; (எ - று.)—முழக்கெழுதல், மின்னிடுதல், வில்லிடுதல், நாரையுகுதல், வான்வருதல் என்ற தன்மைகள் வந்த சிலர்க்கும் மழைக்குலத்திற்கும் உள்ளமை காண்க. வில் - ஒளியும், இந்திரவில்லும். [1]அழைப்பொடு, அழைப்பனேல். [2]முழக்கிட, முழக்கென. [3]அலங்க, வழங்கு. [4]மின்னிடைக், மன்னிடைக். [5]குழைப்பொரு. [6]நன்மணிக். [7]மின்னிட. [8]உழைப்பன. [9]கருங். [10]வீழ்ந்துமாழ்கினர். இச்செய்யுள் சிலபிரதியில் "அனந்தநூறு" (உஉ௮) என்ற பாடலின்பின் உள்ளது. (௩-அகூ௮)

உ௩.உ—மகளிர்வீழ்ந்தழுதலின்வருணனையை இதுமுதல் ஆறுகவிகள்கூறும்.

தலைமிசைத் தாங்கிய [1]கரத்தர் தாரைநீர்
முலைமிசைத் [2]தூங்கிய [3]முகத்தர் மொய்த்துவந்து
அலைமிசைக் கடலின்[4]வீ ழன்னம் போலவன்
மலைமிசைத் தோள்கண்மேல் வீழ்ந்து மாழ்கினார்.

(இ - ள்.) தலைமீதுதாங்கிய கையையுடையவரும், கண்விழியி னின்றுபெருகிய நீர் முலைமிசைச் சோர்ந்துவீழ்தற்குக்காரணமான [கவிந்த] முகத்தையுடையவருமான மகளிர், நெருங்கிவந்து கடலின் அலைமீது வீழ்கின்ற அன்னம்போல அவ்விராவணனுடைய மலையினும் உயர்ந்த தோள்களின்மேல் வீழ்ந்து அறிவுசோர்ந்தனர்; (எ - று.)— பி - ம்:—[1]கரத்தின். [2]தூக்கிய. [3]கண்ணார். [4]வீழ்ந்தன்னம். (௩-அகூகூ)

உ௩௩. தழுவினர் தழுவினர் தலையுந் தாள்களும்
[1]எழுவுயர் புயங்களு மார்பு மெங்கணும்
[2]குழுவினர் முறைமுறை [3]கூறு கொண்டனர்
[4]அழுதன ரயர்த்தன ரரக்கி மார்களே.

(இ - ள்.) அரக்கிமார்கள்,—திரண்டவராய், தலையும் தாள்களும் எழுப்போலுயர்ந்த தோள்களும் மார்பும் ஆகிய எல்லாவிடத்தும் முறைமுறையாகப்பாகங்கொண்டவராகிப் பலமுறை தழுவி, அழுத வண்ணம் அறிவு ஒடுங்கினர்; (எ - று.)

தழுவினர்தழுவினர் - அடுக்கு, பன்மைப்பொருளது. சிலர் தலையையும், சிலர் தாள்களையும், சிலர் புயங்களையும், சிலர் மார்பையும் என இவ்வாறு இராவணனுறுப்புகளைக் கூறுகொண்டு தழுவி யழுது அயர்த்தனர் அரக்கியரென்க. பி-ம்:—[1]எழுவிய. [2]தழுவின. [3]கூறு கூறுகொண்டு. [4]அழுநிலருயிர்த்திலராவிநீர்த்திலர், அழுநிலருயிர்த் திலராவிர்த்திலர். (௩௯௦௦)

௨௩௪. வருத்தமே தெனினது புலவி வைகலும்
பொருத்தமே [1]வாழ்வெனப் [2]பொழுது [3]போக்கினார்
ஒருத்தர்மே லொருத்தர்[4]வீழ்ந் துயிரிற் [5]புல்லினார்
[6]திருத்தமே யனையவன் சிகரத் [7]தோள்கண்மேல்.

(இ-ள்.) '(அந்தமகளிர்க்கு இதுவரையில் நேர்ந்த)வருத்தம் யாது?' என்றுஆராய்வோமானால், அது (இராவணனிடம்நேர்ந்த)புலவியாகும்: (அப்புலவி) நேர்ந்தபோதும், (அவனுடன்) வாழ்வு பொருந்துவதே என்று கருதிப்பொழுதுபோக்கினார்கள்:(இப்போது இராவணன் இறந்திட்டதனால், வீரந்தங்கிய) துறையென்னத்தக்கவனான அந்தஇராவணனுடைய மலைபோன்ற தோளின்மேல் ஒருத்தர்மேல்ஒருத்தர்வீழ்ந்து உயிரைத்தழுவுவதுபோல (அம்மகளிர்)தழுவினார்; (எ - று.)

திருத்தம்=தீர்த்தம்: இலக்கணையால், வீரந்தங்கியதுறையைக் காட்டிற்று. திருத்தம் என்பதனைத் திரு தாம்என்பதன் திரிபு எனக் கொண்டு, இலக்குமியே தாம் எனக் கண்டவர்கூறுமாறு எனப் பொருளுரைத்தலும் ஒன்று. இதுவரையில் புலவிவருத்தந் தவிர வேறுவருத்தத்தையுணராத இராவணனுடையமனைவிமாரான மகளிர் அவ்விராவணன் இறந்ததனால், ஒருவர்மே லொருவர்வீழ்ந்து அவனதுதோள்களைத் தழுவினாரென்பதாம். பி-ம்:—[1]வாழ்வெனும். [2]புலவி. [3]போக்குவார். [4]வந்துயிரிற். [5]புல்லுவார். [6]திருத்தமேதென, திருத்தமேயென. [7]தோளின்மேல். (௩௯௦௧)

௨௩௫. இயக்கிய ரரக்கிய ருரக ரேழையர்
[1]மயக்கமில் [2]சித்தியர் விஞ்சை மங்கையர்
[3]முயக்கியன் முறைகெட [4]முயங்கி னார்[5]கள்தந்
துயக்கிலா வன்பு[6]மூண் டெவருஞ் சோரவே.

(இ - ள்.) இயக்கியரும், அரக்கியரும், நாகசாதிப்பெண்களும், மயக்கமற்ற சித்தசாதிப்பெண்களும், வித்தியாதரஸ்திரீகளும் ஆகிய எவரும்,—(தம்முடைய) மாறுபாடில்லாத அன்பு மூண்டிருத்தலால், (இராவணன் இறந்துகிடத்தலைக்கண்டு அறிவு) சோர, தழுவுகின்ற முறைமைகெட அவனைத் தழுவினார்கள்; (எ - று.)

இறந்துகிடப்பவனைத் துயர்மூள இயக்கியர்முதலியோர் தழுவுவதனால், முயக்கியன்முறை கெடுவதாயிற்று. இயக்கியர்முதலியோர், இராவணனுடைய காதலிமார். உரகரேழையர் - நாகரின்பெண்கள்.

பி-ம்:—[1]மயக்கலில். [2]சித்திய. [3]முயக்கியென், முயக்கிய, முயக்கினர். [4]முயக்கினர். [5]கிடந்து. [6]கொண்டு, கண்டு. (ந௩0௨)

உ௩௬. அறந்[1]தொலை வுறமனத் [2]தடைத்த சீதையை
[3]மறந்திலை யோவினு [4]மொக்குன் வாய்மலர்
திறந்திலை விழித்திலை யருளுஞ் செய்கிலை
இறந்தனை யோவென விரங்கி [5]யேங்கினர்.

(இ - ள்.) (அங்ஙனம் முயங்கிய மகளிர்), தருமம் அழியும்படி (காதல்கொண்டு) மனத்தில்வைத்துள்ள சீதையை இன்னும் [இறந்த பின்பும்] மறந்திலையோ? (அவ்வண்ணம் சீதையை மனத்து அடைத்த பின்) எமக்கு உன்வாய்மலரை அளித்தாயில்லை; (எங்களைக்) கண்விழித்துப்பார்த்தாயில்லை; எம்மீது அருளுஞ் புரிந்தாயில்லை; (நீ) இறந்திட்டாயோ! என்று (மனத்தில்)வருத்தங்கொண்டு ஏக்கமுற்றழுதனர்; (எ-று.)—பி-ம்:—[1]தலையுற, தொலைவிலர். [2]அடைந்த. [3]மறந்திலையோயினும்,மறந்திலையோவென. [4]எமக்குவாய்மலர்,மெய்க்கண். [5]ஏங்கினள்.

உ௩எ.—இனி ஒன்பதுகவிகள் - மண்டோதரி இராவணன்மார்பில் வீழ்ந்து இரங்கிப் புலம்புதலைக் கூறும்.

தரங்கநீர் வேலையிற் றடித்து வீழ்ந்தென
உரங்கிளர் [1]மதுகையா [2]னுரத்தி [3]னுற்றனள்
மரங்களு மலைகளு முருக வாய்திறந்து
இரங்கினண் மயன்மக ளினைய பன்னினள்.

(இ - ள்.) மயனுடையகுமாரியாகிய மண்டோதரியானவள்,—மனவலிமையோடு விளங்குகின்ற உடல்வலிமையுள்ளவனை இராவணனுடைய மார்பின்மேலே, அலைகளைக்கொண்ட நீரையுடைய கடலிலே மின்னல் வீழ்ந்தாற்போலப் பொருந்தினவளாய் [வீழ்ந்தவளாய்],மரங்களும் மலைகளும் உருகுமாறு வாய்விட்டு அழுது இவ்வாறுகூறலானாள்; (எ - று.)—மண்டோதரி புலம்பலிற் பன்னியதை மேல் எட்டுக்கவிகளிற் காண்க. இவ்வுவமை ஸ்ரீவான்மீகத்திலும் வந்துள்ளது. மதுகை - உடல்வலி. பி - ம்:—[1]இராவணன். [2]உருவின். [3]வீழ்ந்தனள். இச்செய்யுள் ஒருபிரதியில்லை. (ந௩0௪)

வேறு.

உ௩அ. [1]அன்னேயோ வன்னேயோ [2]வாகொடியேற் கடுத்த வா றரக்கர் வேந்தன், [3]பின்னேயோ [4]விறப்பதுமுன் [5]பிடித்திருந்த[6]கருத்ததுவும் [7]பிடித்தி லேனோ, [8]முன்னேயோ [9]விழுந்ததுவு [10]முடித்தலையோ [11]படித்தலைய [12]முகங்காட்டாயோ, [13]என்னேயோ வென்னேயோ விராவணனார் [14]முடிந்தபரி சிதுவோ பாவம்.

ஒன்பதுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தாயே தாயே! கொடியஎனக்கு நேர்ந்தநிலைமை மிகவும் கஷ்டமானது! (யான்) அரக்கர்தலைவனாகியஇராவணன் இறந்த பின்போ இறப்பது? முன்புதொடங்கி உறுதியாகக்கொண்டிருந்த

மனக்கருத்தையும் அடையாதுபோய்விட்டானே? பூமியினிடத்ததாய் (என்) முன்புறத்தில்தானே விழுந்திருப்பதும் (இராவணனுடைய) கிரீடந்தரித்த தலைதானே? (இராவணா! நீ இனி உன்) முகத்தை எனக்குக்காட்டமாட்டாயே? இராவணனார் உயிர்முடிந்திட்ட நிலைமை என்னேயோ என்னேயோ! இதுவோ மிக்கபாவத்தின்விளைவு!! (எ - று.)

ஓகாரம் - தெரிநிலை: முதலடியில், ஆ - துயரக்குறிப்பு. 'அரக்கர் வேந்தன்பின்னேயோ இறப்பது' என்பதையடுத்து 'முன்பிடித்திருந்த கருத்ததுவும்பிடித்திலேனே' என வந்ததனால், இராவணனுக்குச் சாவு நேருமென்று தோன்றினால் அவனுக்கு அதுநேர்வதற்குமுன்னம் தன்னுயிரைமாய்ப்பதாக மண்டோதரி எண்ணியிருந்தாளென்பது, பெறப்படும். 'இதுவோபாவம்' என்றதொடர் - மகாவீரனான இராவணன் கொலையுண்டு தரையில்வீழ்ந்து கிடக்கும் இந்தநிலைமை ஏற்பட்டது - எம்முடையபாவமென்றும், இராவணனார்செய்த தீவினைப்பயனென்றும் பொருள்படும். பி - ம்:—[1]அன்னையோ வன்னையோ. [2]ஆகொடியோர்க்கென்னேநான், அறக்கொடியோர்க் கடுத்ததுதான், ஆகொடியேற்கடுத்தாள், ஆகொடியேற்கடுத்துதான், ஆகொடியேற்கடுத்ததுமிவ். [3]பின்னையோ. [4]இருப்பதுமுன். [5]பிடித்திருந்தன். [6]மனக்கருத்தும். [7]பெற்றிலேனே, பெற்றிலேனே, பிடித்திலேனே. [8]முன்னையோ. [9]இரப்பதுவும், இறப்பதுவும், விழுந்ததிவன். [10]முடித்தொகையோகங். [11]கரத்தொகையோ, படித்தலையே. [12]முகங்காட்டானே, முகங்கடானே. [13]என்னையோவென்னையோ. [14]முடிந்ததுவும், கிடந்தபரிசு. (௩௧0௫)

௨௩௬. [1]வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலுங் கீழும், எள்ளிருக்கு மிடமின்றி யுயிரிருக்கு
மிடநாடி [2]யிழைத்த வாறோ, கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகி
யை [3]மனச்சிறையிற் [4]கரந்த காதல், உள்ளிருக்கு [5]மெனக்கருதி
யுடல்[6]புகுந்து தடவியதோ வொருவன் வாளி.

(இ-ள்.) ஒப்பற்றஇராமனுடைய வாளி,-வெண்ணிறமுள்ள எருக்கமலரையணிந்த சடைமுடியையுடையவனான சிவபெருமானெழுந்தருளியிருக்கிற கைலாசமலையைத் தூக்கியெடுத்த (இராவணனுடைய) அழகியஉடலின் மேலும் கீழும் எள்ளிருத்தற்குஉரிய இடமுமில்லாமல் உயிரிருக்கின்ற இடத்தைத் தேடிச் செய்தவகையோ? தேன் பொருந்தியிருக்கப்பெற்ற மலரையணிந்த கூந்தலையுடைய சானகிப்பிராட்டியைக்குறித்து மனமாகியசிறையில் ஒளித்துவைத்துள்ள காதலானது உள்ளிருக்குமெனக் கருதி உடல்முழுதும் புகுந்துதடவியதோ? (எ - று.)

உடலெங்கும் எள்ளிடவும் இடமின்றி இராமபாணம் தொளைத்திருப்பது கண்ட் மண்டோதரி, அவ்விராமபாணம் இராவணனுடைய உயிரிருக்குமிடம் தேடியதனாலாகியதா? அன்றிப் புறத்திற் சீதையைச் சிறைவைத்தற்குக் காரணம மனச்சிறையிலுள்ள காதலாத

லால், அதனையொழித்தற்கு அவ்விராமபாணம் திரிந்ததனலாகியதோ? என்று தந்தற்ப்பேற்றவகையாற் கூறுகின்றான். 'கற்புடையமகளிர் பிற ருடைய மனத்தில் தங்குதல் செய்யார்'என்பது தமிழ்நூல்களிற் பயி லுதலால் அதற்குமாறாக இராவணனுடைய காதல் சீதையைமனத்துத் தங்குமாறு புரிந்ததனால் மாறானதொழிலை யொழிக்கவே இராமபாணம் காதலைத் துருவித்தேடிப்போக்கியதாகக்கற்பித்தது இப்பாடலின்பின் ஒருபிரதியில் "ஆராவமுதாய்" (உசரு)என்ற பாடலும், "அன்னையவள் சீதை" என்றபாடல் அதனையடுத்தும் உள்ளன. பி-ம்:—[1]வெள்ளெருக் கின்மலர், வெள்ளெருக்குமலர்.[2]நுழைந்தவாறே.[3]கடுஞ்சிறையில், கடுந் துயரில். [4]வைத்த. [5]என்றெண்ணி. [6]பிளந்துதடவினதோ, புகுந்திங் குலாவினதோ, பிளந்துதடவியதே. (௩௯௦௯)

உசo. [1]ஆரம்போர் [2]திருமார்பை யகன்முழைக ளெனத் திறந்தி[3]வ் வுலகுக் கப்பால், தூரம்போ யினவொருவன் சிலைதுர ந்த [4]சரங்களே [5]போரிற் றேற்றும், வீரம்போ யுரங்[6]குறைந்து வரங்குறைந்து [7]வீழ்ந்தானே [8]வேறே கெட்டேன், ஓ[9]ரம்போ யுயிர்பருகிற் [10]றிராவணனை மானுடவ னாற்ற மீதோ.

(இ - ள்.) ஒப்பற்றவனான ஸ்ரீராமனுடைய வில் விரைந்துவெளி விட்ட அம்புகள், முத்தாகாரத்தை யணிந்த அழகிய மார்பை வாய கன்று குகைபோலப் பிளவுபடும்படிசெய்து இவ்வுலகத்திற்கு அப்பால் வெகுதூரஞ் சென்றன; (அப்பாணங்களினால்) போரிலே காணப்படு கின்ற வீரம்போய் மனவலிமைகுறைந்து வரமுங்குறைந்து (முன்னி லும் தன்னிலை) வேறாக (இராவணன்) வீழ்ந்திட்டானே! கெட்டேன்: (அவ்விராமபாணம்) பட்சபாதம்நீங்கி இராவணனையும் உயிரைப் பருகி யிட்டது: மானுடனுடைய வலிமை இப்படிப்பட்டதோ! (எ - று.)

'மானுடவனூற்றமீதோ'என்ற தொடரில் இவன் கேவலமானுட னல்லன்: மானுடவேடம்பூண்ட பரம்பொருள் என்பது, தொனிக்கும். பி-ம்:—[1]ஆரம்பேர். [2]நன், அகல், பெரு. [3]வைத்தும். [4]நெடுஞ்சரங்கள், சரணங்களெனப். [5]போரிற்றேற்று. [6]குறைத்து. [7]வீழ்ந்தானே, விழுந் தனையே. [8]ஏறே, ஒருவன், வேறே, ஒருங்கே. [9]அம்போ. [10]அறிகின் றேனிராவணனே, இராவணனை மானிடவன், இராவணனை மானுடனோ.

உசக. காந்தையருக் [1]கணியனைய [2]சானகியார் பேரழகு மவர்தங் கற்பும், ஏந்துபுயத் திராவணனார் [3]காதலுமச் சூர்ப்ப ணகை யிழந்த மூக்கும், வேந்தர்பிரான் றயாதனார் பணியினால் வெங்[4]கானில் விரதம் பூண்டு, [5]போந்ததுவுங் [6]கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற் [7]றம்மா.

(இ - ள்.) பெண்பாலார்க்கெல்லாம் அணிபோலவிளங்குகின்ற சானகியாருடைய பேரழகும், அவருடையகற்பும், ஓங்கியபுயத்தைக் கொண்ட இராவணனுடைய காதலும், அந்தச்சூர்ப்பணகையிழந்த மூக்கும், சக்கரவர்த்தியாகிய தயரதனுடைய கட்டளையினாற்

கொடுங்கானில் விரதவொழுக்கத்தை மேற்கொண்டு (இராமன்) வந்ததும், முடிவாகத் தேவேந்திரன்செய்த தவப்பயனாக ஆயிட்டது: ஆச்சரியம்! (எ - று.)

இராமன் தந்தையுரையைப்போற்றக் கானகத்துவந்தநிலையில், சூர்ப்பணகை அப்பிராணிடத்துக் காதல்கொண்டு அங்கபங்கஞ்செய்யப்பெற்றுச், சீதையினழகை இராவணனுக்கு வருணித்துக்கூறிக் காதலை மூட்ட, அவன் பெருங்கற்புடையளான அச்சீதையைச் சிறைப்படுத்தியதே அவனுடைய வதத்திற்குக்காரணமாய்த் தேவர்கட்கெல்லாம் நன்மையைவிளைத்த தாகையால், அந்நிகழ்ச்சியை எடுத்துச்சொல்லிப் புலம்புகின்றனள், மண்டோதரி யென்க. பி-ம்:—[1]அணியான. [2]சானகியாரழகுமவர்கற்பும்வெற்போடு. [3]காமமும். [4]கானம். [5]போந்தனவும். [6]கடைமுறையிற், கடைமுறைபோய். [7]அன்றே. (௩௬௦அ)

உ௬உ. தேவர்க்குந் திசைக்கரிக்குஞ் சிவனார்க்கு மயனார்க்குஞ் [1]செங்கண் மாற்கும், [2]எவருக்கும் வலியானுக் கென்றுண்டா மிறுதியென வேமாப் புற்றேன், [3]ஆவற்க ணீயுழன்ற [4]வருந்தவத்தின் பெருங்கடற்கும் [5]வரமென் றுன்ற, காவற்கும் வலியானோர் [6]மானுடவ னுளனென்னக் கருதி னேனே.

(இ-ள்.) தேவர்கட்குந் திசையானைகட்கும் சிவனார்க்கும் பிரமனார்க்கும் புண்டரீகாட்சனான திருமாற்கும் மற்றுமுள்ள எவர்க்கும் விஞ்சிய வலிமையுடையவனான இராவணனுக்கு, முடிவுகாலம் எப்போது உண்டாகப்போகின்றது? [ஒருபோதும்உண்டாகாது] என்று மனச்செருக்குக் கொண்டிருந்தேன்: (அந்த இறுமாப்பில்) 'நீ ஆவலோடு வருந்திச்செய்த பெருங்கடல்போற்பரந்த அரிய தவத்திற்கும் (அத்தவத்தினாற்பெற்ற) வரமென்னப்படுகின்ற சிறந்த காவற்கும் (அழிவையுண்டாக்கவல்ல) வலிமைபடைத்தவனான ஒருமானுடன் உளன்?' என்றுதான் எண்ணங்கொண்டேனே? (எ - று.)

நீ தவப்பயனாற்பெற்ற வரம், உன்னுயிருக்குக்காவலாக எப்போதும் இருக்குமென்று இறுமாப்பினாற் கருதினேனேயன்றி, இவ்வரக்கர்களைத் தொலைக்க ஒருமனிதன் வருவனென்ற எண்ணத்தையும் கொள்ளாமற்போனேனே! என்று வருந்துகின்றாள். எதிர்பாராதபோது நேர்ந்ததுன்பம் பேரிடர்விளைத்தல், இயற்கை. பி-ம்:—[1]செங்கணாற்கும். [2]யாவர்க்கும். [3]யாவர்க்குநீயிழைத்த, யாவர்க்குநீயுழந்த, வாவற்கு நீயிழைத்த. [4]இருந். [5]வரமென்றேதும், இறையானெய்தும். [6]மானுடனொருளரென்னக், மானிடனொருளரென்று. (௩௬௦க)

உ௬௩. அரைகடையிட் டமைவுற்ற [1]முக்கோடி யாயுவும்பே ரறிஞர்க் கேயும், உரைகடையிட் டளப்பரிய பேராற்றற் [3]றோளாற்றற் குலப்போ லில்லை, திரைகடையிட் [4]டளப்பரிய வரமென்னும் பாற்கடலைச் சீதை யென்னும், பிரைகடையிட் [5]டழிப்பதனை யறிந்தேனோ தவப்பயனின் பெருமை பார்ப்பேன்.

௨௨௩. [1]மன்றன்மா மலரோனும் [2]வடிமழுவாட் படையோனும் வரங்க ளீந்த, ஒன்றலா தன[3]வுடைய முடியோடும் [4]பொடியாகி யுதிர்ந்து [5]போன, அன்றுதா [6]னுணர்ந்திலையேயாகிலும் [7]வானாட்டை [8]யணுகா நின்ற, இன்றுதா [9]னுணர்ந்தனையே [10]யிராமனா ரியாவருக்கு [11]மிறைவ னாதல்

(இ - ள்.) நறுமணமுள்ள பெரிய தாமரைமலரிலுள்ளவனான பிரமதேவனும், கூரிய மழுப்படையென்கின்ற ஆயுதத்தையுடையவனான சிவபெருமானும் ஈந்த வரங்கள் ஒன்றுஅல்லாதனவாக [பத்தாக]வுள்ள முடியோடும்பொடியாகி உதிர்ந்துபோயின: நீ சீதையைக் கவர்ந்துவந்த அப்போது அறிந்தாயில்லையேயாகிலும், சுவர்க்கலோகத்தை யணுகி நின்ற இன்றைக்காவது அவ்விராமனார் யாவர்க்குந் தலைவராதலை அறிந்தனையா? (எ-று.)—வரங்கள் முடியோடும் உதிர்ந்துபோன-உடனவிநிசியணி. பி - ம்:—[1]மன்றலார், மன்றல்கமழ். [2]மழுவாளி. [3]உடைவ. [4]பொடியாக. [5]போனது. [6]அறிந்திலையே. [7]அவனாட்டை. [8]அடைய நின்ற, அணுகிகின்ற. [9]தெரிந்தனையே, தெரிந்ததே, அறிந்திலையே. [10]இராமன்றான். [11]இறைவர், ஈசன்.

இங்கே சிலபிரதிகளிற்காணப்படும் பாடல்வருமாறு:—

அருவினைவந் தெய்தியபோ தாரர சேயுன்(றன்)
திருவினைநீ பெறுவதற்குத் திருநாமங் களைப்பரவ
ஒருபதுவா யுளவணங்க வொண்முடிபத் துளவினிய
இருபதுகை யுளவிலங்கை யென்னுகை [1]யீந்தாயே.

பி.ம்:—[1]இறந்தாயே. வேறு சிலபிரதிகளிற் காணப்படும் பாடல் வருமாறு:—

அருவினைவந் தெய்தியபோழ் தார்தடுப்பா ராரதனை யறிவார் விட்டின், திருவினைநீ பெறுவதற்கிங் கிவன்றிருநா மங்கடனைச் சிந்தித் தேத்த, ஒருபதுநா வுளவணங்க வொண்முடிகள் பத்துளவே [1]யிறைஞ்ச மேரு, இருபதுகை யுளவிலங்கை யென்னுக வுயிரோடு மிழந்திட் டாயே.

பி-ம்:—[1]எழில்கொள். சிலபிரதியில் இந்தச்செய்யுள் (௨௨௩-ஆம் பாடலின் பின்னாகவல்லாமல் "போர்மகளை" (௨௨௬) என்றதன்பின் உள்ளது. (௩௮௬0)

௨௨௪. [1]வீரநா டுற்றாயோ [2]விரிஞ்சனும் யாவருக்கு மேலா [3]முன்பன், [4]பேரநா டுற்றாயோ பிறைசூடும் [5]பிஞ்ஞகன்றன் புரம் [6]பெற்றாயோ, ஆரணு வுன்னுயிரை யஞ்சாதே கொண்டகன்று ரதெலா நிற்க, மாரனார் [8]வலியாட்டந் [9]தவிர்ந்தாரோ [10]குளிர்ந் தாளோ [11]மதிய மென்பான்.

(இ - ள்.) வீரர்போய்ச்சேரும்நாட்டை யடைந்தாயோ? விரிஞ்சனாகிய யாவர்க்கும்மேலாகி முற்பட்டவனாகிய பிதாமகனது நாட்டை

வேறு.

௨௪௫. ஆராவமுதா யலைகடலிற் [1]கண்வளரும்
நாரா யணனென் [2]றிருப்பே னிராமனைநான்
ஓராதே கொண்டகன்று [3]யுத்தமனார் தேவிதனைப்
[4]பாராயோ நின்னுடைய மார்பகலம் [5]பட்டவெல்லாம்.

(இ - ள்.) நான் இராமனைத் திருத்திபிறவாத அமிருதம்போன்றவ னாய் அலைகின்ற(பாற்)கடலிலே நித்திரைபுரிகின்ற நாராயணனென்று அறுதியிட்டிருக்குந்தன்மையேன்; (என்னுடைய கொள்கையைச் சிறிதும்)ஆராய்ச்சிசெய்யாமல் (அந்த)உத்தமனாருடைய மனைவியைத்(தண்டகாரணியத்தினின்று) கவர்ந்துகொண்டு(அங்குநின்று) அப்பாற்சென்றிட்டாய்; (அதன்பயனாக இப்போது) உன்னுடைய மார்பின்பரப்பு அடைந்தனவற்றையெல்லாம் பார்க்கமாட்டாயோ? (எ - று.)

மண்டோதரி துயரத்தினால் மனம்மாறுபட்டுச் சொல்வதனால், 'பாராயோ நின்னுடையமார்பகலம் பட்டவெலாம்' என்றாள். இவ்வாறே முன்பின்வருவனவற்றிற்குங் காரணங் காண்க. தேவர்களாலும் வெல்லமுடியாதவனைக் கேவலமானுடன் வெல்வது பொருந்தாதாதலால், பிரமன் கொடுத்தவரத்தைப் பழுதாக்காதபடியும் தன்னுடைய விபூதியை நலியுமவனை நிரசிக்கும்படியும் எற்ப மானுடவுருக்கொண்டு சங்கசக்கரதாரியான ஸ்ரீமந் நாராயணனே இங்ஙனம் வந்துள்ளானென்று இராமனுடைய பரத்வத்தை மண்டோதரி அறுதியிட்டுக்கூறுகின்றனளென்க. பி - ம்:—[1]கண்வளர்ந்த. [2]பலகாலு நானுரைப்ப. [3]உத்தமன்றன். [4]பாராய்நீ, [5]பட்டது. இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை. (௩௬௪௨)

வேறு.

௨௪௬.—மண்டோதரி இராவணனுடலைத்தழுவித் தன்னுயிர் நீங்குதல்.

என்ற ழைத்தன ளேங்கி யெழுந்தவன்
பொன்ற ழைத்த பொருவரு மார்பினைத்
தன்[1]ற ழைக்கைக ளாற்ற ழுவித்தனி
நின்ற ழைத்துயிர்த் தாளுயிர் நீங்கினாள்.

(இ - ள்.) என்றுபுலம்பினவளாய், (அந்தமண்டோதரி), ஏக்கங்கொண்டு, (பிறகு), எழுந்து அந்தஇராவணனுடைய பொன்னணிகலம் தழைந்திருக்கப்பெற்ற ஒப்பற்ற மார்பைத் தன்னுடைய தளிர்போன்ற கைகளால் தழுவித் தனித்துநின்று உரக்கக்கூவிப் புலம்பிப் பெருமூச்சுவிட்டாள்; (உடனே) தன்னுயிர் நீங்கப்பெற்றாள்; (எ - று.)
பி - ம்:—[1]தழிக், தனிக், தளிக். (௩௬௪௩)

௨௪௭.—மண்டோதரியை யாவரும் புகழ்தல்.

வான [1]மங்கையர் விஞ்சையர் [2]மற்றுமத்
தான மங்கைய ருந்தவப் பாலவர்
ஆன மங்கைய ரும்மருங் கற்புடை
மான மங்கையர் தாமும் வழுத்தினார்.

(இ - ள்.) வானநாட்டிலுள்ளமகளிரும் விஞ்சையரும் மற்றும் அந்த(ப்பாதள)த்தானத்திலுள்ளமங்கையரும் தவத்தின்கூற்றிலேபொருந்திய முனிவரின்பத்தினிமாரும் அரியகற்பையுடைய மநுஷ்யஸ்திரீகளும் (அந்தமண்டோதரியைக்) கொண்டாடினார்கள்; (எ - று.)

தன்கணவன்இறந்தானென்பதைக் கேள்வியுற்றதும் அடக்கமுடியாத்துன்பம் பிடர்பிடித்துந்தப் போர்க்களத்துவந்து அவ்விராவணன் மீது விழுந்து புலம்பி உயிர்த்தமாத்திரத்தில் தன்னுயிர்நீங்கப்பெற்ற மகாபதிவிரதையான மண்டோதரியின்செயல், யாவராலும் புகழத்தக்கதாயிற் றென்க. மானமங்கையர் = மானவமங்கையர். இரண்டாமடியில், தானமங்கையர் - தானவமங்கையரெனினுமாம். முன்னும் பின்னும்மகளிரைக்குறிக்குஞ் சொற்கள் வந்ததனால், விஞ்சையரென்பது வித்தியாதரமகளிரையுணர்த்தும். பி - ம்:—[1]மங்கையரும் மற்றும். [2]மற்றுயர், மற்றுமெத், மற்றுமுற்றுடைத். (௩௯௪௪

உ௬௮.—விபீஷணன் ஈமத்தில் இராவணனையேற்றுதல்.

[1]பின்னர் வீடணன் பேரெழிற் [2]றம்முனை
வன்னி கூவி வரன்முறை யான்மறை
[4]சொன்ன வீம வி[5]முறை யாற்றொகுத்து
இன்ன னெஞ்சினெ [6]டிந்தனத் [7]தேற்றினான்.

(இ-ள்.) பிறகு விபீஷணன், கிரமப்படி அக்கினியைப் பிரதிஷ்டை செய்து ஈமவிதியை வேதம்கூறியமுறையால் தொகுத்து, வருத்தமுற்ற மனத்துடனே மிக்கஎழிலையுடைய தன்னண்ணனை (அந்த) ஈமவிறகிலேயேற்றினான்; (எ - று.)

விபீஷணன் முன்னர்ச்செய்யவேண்டியமுறைமைகளைமுறையிற் செய்து தகனஞ்செய்யுமாறு சிதையில் இராவணனை வைத்தனனென்பதாம். ஈமவிதி - அந்திமச்சடங்கு. ஈமவிறகு - இறந்தஉடலையெரிக்குமாறு அடுக்கி வைத்த காஷ்டம்: இது, சிதையெனவும்படும். பி - ம்:—[1]பின்னை. [2]தம்முனர். [3]மன்னிமுன்னும், மன்னமுன்னும், மன்னிகழ்ந்த, மன்னிமுன்னி, வன்னிமுன்னம். [4]சொன்னநன்னர், சொன்னவீமம், சொன்னசொன்ன, நன்னர்சொன்ன. [5]வழியால். [6]அஞ்சலித்து, இந்தனம். [7]ஏற்றினர். (௩௯௪௫)

உ௬௯.—விபீஷணன் இராவணனுக்குத் தகனம்முதலியனசெய்ததை மூன்றுகவிகள் கூறும்.

[1]இந்த னத்தகில் சந்தன [2]மிட்டுமேல்
அந்த [3]மானத் தழுகுறத் தானமைத்து
எந்த [4]வோசையுங் கீழுற [5]வார்த்திடை
[6]மூந்து சங்கொலி [7]யெங்கு [8]முழங்கிட.

இரண்டுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) எரிகின்ற காஷ்டமாக அகிற்கட்டைகளையும் சந்தனக் கட்டைகளையும் இட்டு, பிறகு, அப்படிப்பட்ட பெருமையுடனே,

அழகுபொருந்த (இராவணனுடலைச்சிதையிலே) கிடத்தி,எந்தஓசையும் கீழ்ப்படும்படி இடையேயிடையே ஆரவாரித்து முழங்குகின்ற சங்கொலி எங்கும் ஒலிக்க,—(எ - று.)—அகரச்சுட்டி - பிரசித்தியையுணர்த்திற்று, பி-ம்:---[1]இந்தனத்தொடு. [2]ஏற்படுத்து, எர்படுத்து. [3]மானமழகுடன், வானமழகுடன். [4]நாமமும். [5]ஆர்த்தெழ. [6]தந்த. [7]ஓங்கி. [8]தழங்கிட, முழங்கிட. இதுவும், அடுத்த செய்யுளும் சிலபிரதிகளி லில்லை. ()

௨௫௦. கொற்ற வெண்குடை யோடு கொடிமிடைந்து
உற்ற வீம விதியி [1]னுடம்படீஇச்
சுற்று மாதர் [2]தொடர்ந் துடன் சூழ்வர
மற்ற வீரன் [3]விதியின் [4]வழங்கினான்.

(இ - ள்.) வெண்கொற்றக்குடையோடு கொடியும் நெருங்கிப் பொருந்திய ஈமவிதிக்கு உடம்பட்டிருந்து, சுற்றும் மாதர்தொடர்ந்து உடன்சூழ்ந்துவர, பின்புஅந்தவீரன் [விபீஷணன்] விதியின்படி (நெருப்பை) வழங்கினான்; (எ-று.)—அரசனனதனல்குடைகொடிகள் ஈமவிதியில்வந்தனஎன்க. பி - ம்:---[1]உடம்படச். [2]பதிந்துடன். [3]மதியின், விழியின். [4]வணங்கினான். ஒருபிரதியில் 'உற்றவிம்பமதியினுடன்படச்' என்று இரண்டாமடி காண்கின்றது. (௩௬௧௭)

௨௫௧. [1]கடன்கள் செய்து முடித்துங் [2]கணவனோடு
[3]உடைந்து போன மயன்மக [4]ளோடுடன்
[5]அடங்க வெங் [6]கன லுக்கவி யாக்கினான்
குடங்கொ ணீரினுங் கண்சோர் குமிழியான்.

(இ - ள்.) குடங்கொண்ட நீரினும் மிகுதியாகக் குமிழியுண்டாகும்படி கண்ணீரைப்பெருக்குபவனான விபீஷணன்,—(செய்யவேண்டிய) கடமைகளையெல்லாஞ் செய்துமுடித்து, கணவனுடனே உயிரொழிந்துபோன மயன்மகளான மண்டோதரியுடன்(அவ்விராவணன்) அடங்கும்படி (அவர்களைக்) கொடியகனலுக்கு, அவிசாகச் செய்தான்.

மண்டோதரியையும் இராவணனையும் அக்கினியி லிட, அவ்வக்கினி அவிசை யெரிப்பதுபோல அவர்களை யெரிக்கலாயின னென்க. அவிசு - ஹவிஸ்: அக்கினிதேவனுக்குஇடும் உணவுப்பண்டம். பி - ம்:--[1]கடன்செய்செய்கை, கடன்கொள்செய்கை. [2]கணவன்றேள், கணவனை. [3]தொடர்ந்துபோன, உடன்றுடர்ந்த. [4]தன்னுடன். [5]அடங்கலும். [6]கனலிற்கரி. (௩௬௧௮)

௨௫௨.—விபீஷணன் இறந்தஅரக்கரனைவர்க்கும் ஈமக்கடன்செய்து ஸ்ரீராமனையடைதல்.

மற்றை யோர்க்கும் வரன்முறை யால்வகுத்து
உற்ற தீக்கொடுத் [1]துண்குறு நீருகுத்து
[2]எற்றை யோர்க்கு [3]மினியன தில்லென
வெற்றி வீரன் குரைகழன் மேவினான்.

(இ-ள்.) மற்றையோர்க்கும் (நூல்களிற்) கூறிய முறைப்படி(செய்ய வேண்டியகடமைகளை) யாராய்ந்து, 'எவர்க்கும் இவனையல்லாமல் (சிரத்தையுடன் சமக்கடன் செய்யக்கூடியவர்)இல்லை' என்னுமாறு, பொருந்திய தகனம்முதலிய சமக்கடனைச் செய்து, உண்ணுமாறு ஜல தர்ப்பணங்களும் கொடுத்து, (பிறகு) வெற்றிபொருந்திய வீரனுன ஸ்ரீராமனுடைய ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளினிடம் வந்துசேர்ந்தான், (விபீஷணன்); (எ - று.)

அடியவன் அடையவேண்டிய துறை சுவாமியின் திருவடிகளே யாதலால் 'வீரன் குரைகழன் மேவினுன்' என்றார். உண்ணுநீருகுத்தல்-வாஸோதகதிலோதகங்கொடுத்தல். பி - ம்:—[1]உற்றவைசெய்தனன், உண்குறு நீர்கொடுத்து. [2]இற்றையோர்க்கும். [3]எவர்க்குமிவனெனு, இங்கியானலதில்லெனு, இன்றியானலதில்லெனு. மண்டோதரி புலம்புதலைத்தனியே ஒருபடலமாகக் குறித்த பிரதிகளில் இதனேடு படலம்முடிய அடுத்தபாடல்முதல் வேறுபடலம் தொடங்குகின்றது. ஒருபிரதியில் "கார்நின்ற" (உ௦௦) என்றபாடல் தொடங்கி இது வரையில் வீடணன்வண்டோதரிபுலம்பற்படலம் என்று உள்ளது. ()

உருந. வந்து தாழ்ந்த துணைவனை வள்ளலும்
சிந்தை வெந்துயர் [1]தீருதி தெள்ளியோய்
[2]முந்தை யெய்து [3]முறைமை யிதாமெனு
[4]அந்த மில்லிடர்ப் [5]பார மகற்றினுன்.

(இ-ள்.) வந்துவணங்கின நண்பனுன விபீஷணனைநோக்கி, உதார குணமுடையவனுன ஸ்ரீராமனும், 'அறிவுள்ளவனே! (உன்)மனத்துள்ள கொடுந்துயர் நீர்க: முற்காலந்தொட்டுநடக்கும்முறைமை இதுவே' என்றுசொல்லி, எல்லையில்லாத் துன்பச்சுமையைப் போக்கினுன்.

விபீஷணன் இறந்தோர்க்கெல்லாம் செய்யவேண்டிய கடமைகளைச் செய்துவிட்டு மனத்திற்கொண்ட வருத்தம் முகத்துத் தோன்ற ஸ்ரீராமபிரானருகில் வந்து நின்றுனுக, அப்பிரான் 'பிறந்தோர்இறப்பது முன்ரெட்டுநிகழ்வதுதானே; விவேகியான நீ இறந்தோர்பொருட்டுத் துயருறுதல் தக்கதோ?' என்றுசொல்லித் தேற்றினுனென்க. தெள்ளியோய் - கருத்துடையடைகோளி. பி-ம்:—[1]தீரினித். [2]முந்தையோது, முந்தையோர்க்கு, முந்தையோர்கள், முந்தியெய்து. [3]முறைமையுளோய். [4]அந்தவில்லிடைப். [5]பாசம். சிலபிரதிகளில் இந்தப் பாடலில், பிராட்டியார்திருவடிதொழுதபடலம் என்றும்,சிலபிரதிகளில் சீதைதிருவடிதொழுதபடலம் என்றும்,சிலபிரதிகளில் விபீஷணன்முடி சூட்டுபடலம்என்றும் விபீஷணன்பட்டாபிஷேகப்படலம்என்றும் பெயர்கொண்டு படலம் தொடங்குகின்றது. (ந-கஉ௦)

இங்கே ஒருபிரதியிற் காணப்படும் பாடல் வருமாறு:—

இனைய வீர னிளவலை நோக்கிநீ
புனையு நன்முடி சூட்டுதி போயெனு

அனைய விரனடியி னிறைஞ்சவே
அனைய னோடு மனுமனைச் சார்கெனு.

இப்பாடலுள்ளபிரதியில் இந்தச் செய்யுளோடு படலம்முடிய, அடு த்தபாடல்முதல் விபீஷணனபிஷேகப்படலமென்று காண்கின்றது.

இராமராவணரிருவரும்தேரேறியபின் இராவணன் வதைப்படலத் துச்சரிதையை ஸ்ரீவான்மீகிமுனிவர்கூறியவகை:—அப்பால் இராமராவ ணர்கட்குப் பெரும்போர்நிகழ்ந்தது.அப்போரில் இராமன் இராவணன் விடுத்த காந்தர்வாஸ்திரத்தைக் காந்தர்வாஸ்திரத்தினாலும் தெய்வாஸ் திரத்தைத் தெய்வாஸ்திரத்தினாலும் தடுக்க, இராவணன் சினம்மூண்டு ராக்ஷஸாஸ்திரத்தைத் தொடுக்க,அதினின்று பலசர்ப்பங்கள்தோன்றிப் பலதிக்குக்களிலுஞ் சூழ்ந்துகொண்டு இராமன்மேல் எதிர்த்தன: இரா மன் அதுகண்டு காருடாஸ்திரத்தைத் தொடுக்க, கருடப்புட்கள் தோன்றி, அந்தநாகங்களை உருமாய்த்தன. இப்படித்தான்விடுத்த அஸ் திரங்கள் பயனற்றனவாகவே, இராவணன்சீறி ஆயிரங்கணைகளைத் தொடுத்து இராமனை வருத்திப் பலகணைகளை மாதலியின்மீதும் பொழிந்து ஒருகணையால் இந்திரத்துவசத்தைக் குறிவைத்து எய்து, கணைத்தொகுதியால் தேர்ப்பரிகளையும் நோவச்செய்தனன் அதுகண்ட சித்தர்முதலியோர் வருந்தினர்.அப்போது வானத்திலும் சிலகோளாறு கள் புலப்பட்டன. இராவணன் தன்திறலைக் காட்டவே, இராமன் எரிப்பதுபோன்ற சீற்றங்கொண்டான். இருவரும்மும்முரமாகப்பொரு கையில், போர்காணுந் தேவதானவர் 'இராமன்வெல்க'என்றும், 'இரா வணன்வெல்க' என்றும் தந்தமதுபட்சபாதத்திற்குஏற்பக் கூறினர். இராவணன் அப்போது இராமன்மீது எதனைவிடுக்கலாமென்று ஆலோ சித்து, மஹாசூலத்தைக் கையிற்கொண்டு ஆர்ப்பரவத்துடனே வீர வாதஞ்செய்து விடுத்தனன். எட்டுமணிகளையுடைய அந்தச்சூலத்தை பலகணைகளால்தடுக்கமுயன்றும்அந்தச்சூலத்தின்மேற்பட்டகணைகளெ ல்லாம் பொடிப்பொடியாய்ச் சிதறிவிடவே, ஸ்ரீராமன் மாதலிகொணர் ந்துகொடுத்ததான பலகண்டைகளையுடையஇந்திரனதுமஹாசக்தியை யெடுத்துச் சுழற்றிவிடுக்க, அது இராவணனுடையசூலத்தை முறித் துத் தரையில் விழுத்தியது. அப்பால் இராமன் பலகணைகளைத்தொடு த்து அவ்விராவணனுடைய தேர்க்குதிரைகளை நோயுறுத்தி, அவ்விரா வணனுடையமார்பிற் பலகணைகளையும் நெற்றியில் மூன்றுகணைகளையும் விடுக்க, அவன் உடலெல்லாம் இரத்தம்பெருகச் சீற்றம்விஞ்சிஇராமன் மேற் சரமாரிபொழிந்தான். இராமனும் இராவணன்விடுத்தகணைகளைத் தடுப்பதும் மேலும் கணைகளைப்பொழிவதுமா யிருந்தான்.

வானத்தில் கணைகள் இருளைப்போற் சூழ்ந்துநிற்கையில்,வீரனான ஸ்ரீராமன் சுபசகுனந்தோன்ற உற்சாகம்மூண்டு இராவணனைப்பார்த்து ஏசிக் கணைமழைகளைப்பொழிந்துமிதமின்றிஇமிசித்தனன்.இராவணன் அப்போதுஊக்கங்குன்றி மாறுசெய்ய இயலாதுசோர்ந்துநிற்க, அவ

னுடையதேர்ப்பாகன் போர்செய்யுமிடத்தினின்று தேரை மெல்லஅப்பாற்கொண்டுபோயினன். பின்னர்த்தேறுதலடைந்த இராவணன் தன் பாகனை முனைமுகத்திலிருந்து தேரை அப்பாலோட்டிக்கொண்டுவந்ததுகுறித்துச் சினந்து பலபடிகடுமையாகப் பேச, பாகன் தன்மீது குற்றமில்லாமையையும் பாகன்செய்யவேண்டியமுறை இன்னதென்பதையும் எடுத்துக்காட்டி அவ்விராவணன்மனங்கொள்ளும்படி சமாதானங்கூறித் தான் இதுவரையில் உண்ட கடன் தீர அவன்விரும்பினபடியே நடப்பதாகஉறுதிகூற, இராவணன் அந்தப்பாகனுக்குப் பொற்றொடியைப் பரிசுஅளிக்க, பாகன் தேரை இராமனுக்குநேர்முகமாக நடத்தினான். தேரும் இராமனருகில் வந்தது.

(* போர்காணத் தேவர்களோடு வந்திருந்த அகஸ்தியமுனிவர் 'இராவணனைவெல்வதுஎவ்வாறு?' என்று இராமன் கவலைகொண்டிருப்பதையும் இராவணன்மீண்டுவந்திருப்பதையுங் கண்டு அவ்விராமனுக்கு ஆதித்யஹ்ருதயத்தை உபதேசித்தனராக, ஸ்ரீராமன் அந்தஸ்தோத்திரத்தைஜபிக்க, ஸூர்யபகவான் இராமனை யநுக்கிரகித்தனன்.) பகைவன்தேர் அணுகுவது கண்டு பாகனை ஜாக்கிரத்தைப்படுத்தி, ஸ்ரீராமன் மாதலிகொடுத்த இந்திரவில்லையும்பாணங்களையும் எடுத்துப் பொரலாயினன். இருவர்க்கும் பெரும்போர்நிகழ்ந்தது. இராவணனுக்குத் தீமையைத்தெரிவிக்கும் பலநிமித்தங்களும் இராமனுக்குநன்மையைத் தெரிவிக்குஞ் சுபசகுனங்களும் தோன்றின. இருவரும் மிக்கதைரியத்துடனே வெகுகடுமையாகப்பொருகையில், ராட்சசசேனைகளும் வானரசேனைகளும் தாம் படையேந்திநிற்பினும் பொராது அவர்கள்செய்யும் போரையே இமைகொட்டாது பார்த்தவண்ணம் எழுதுசித்திரங்கள் போல நின்றன. ஆங்கு இராவணன் இராமனுடையத்வஜத்தைவீழ்த்த முயல இராவணனெறிந்த பாணங்கள் இந்திரரதத்தின்மகிமையால் அதனை நணுகாதனவாக, இராமன் இராவணனது தேர்க்கொடியையறுத்து வீழ்த்தினான்: அப்போது இராவணன் கடுஞ்சினங்கொண்டு எதிரியின் தேர்க்குதிரைகளைக் கணைத்தொகுதியால் தாக்கவும் அவை தாமரைத்தண்டினால் தாக்கப்பட்டனபோல் இலட்சியஞ்செய்யாதனவாக, அளவில்லாச்சீற்றத்துடனே மீளவும் சரமாரிபொழிந்தும் தடி சக்கரம் உலக்கை முதலியபடைக்கலங்கொண்டும் ஸ்ரீராமனைத் தாக்கினன். அவையாவும் இராமபாணங்களால் தடையுண்ணவும், இராவணன் ஊக்கங்குறையாமற் கணைகளைப்பொழிய, இராமனும் அநாயாஸமாக அங்ஙனமேபொழிய, கணையினால்வேறொருஆகாயம் இயன்றதுபோலப் புலப்பட்டது. முகூர்த்தகாலம்நிகழ்ந்த அந்தப்பெரும்போரில் இருவரும் ஒருவர்க்கொருவர் மாறுசெய்துகொண்டுபொருகையில் இராமன் இராவணனுடைய தேர்க்குதிரைகளைத் தன்குதிரைகளுக்கு அருகு

* அகஸ்தியர்உபதேசிக்க, ஆதித்யஹ்ருதயமந்திரத்தை ஸ்ரீராமன் ஜபித்து சூரியனுடைய அநுக்கிரகத்தைப்பெற்றதைக் கூறும்வான்மீகிராமாயணப்பகுதி இடைச்செருகலாய்வந்ததென்பது, சிலர் கொள்கை.

இருக்கவொட்டாது துரத்தினன். இராவணன்சீறி இராமன்மீதுகணை கொண்டுதாக்கவும் அப்பிரான் இலட்சியஞ்செய்யாதிருக்க, மாதலியை யும் தாக்கலானன். இராவணபாணங்கள் மாதலியை யொன்றுஞ்செய்ய மாட்டாமற் போயினவாயினும், ஸ்ரீராமன், தன்னைத்தாக்கியதற்குச் சின வாது மாதலியைத் தாக்கியதற்கு வெகுண்டு தன்னெதிரில் அவ்விரா வணனை நிற்கவொட்டாது செய்தனன்.

மீண்டும் கடும்போர் மூண்டது. அப்போரில் இராவணனெறிந்த படைக்கலவிசைத்தொனியால் கடல்கள் கலங்கின: பூமி நடுங் கிற்று: காற்று வீசாதுஅடங்கிற்று. தேவர்கள்முதலியோர் இராம னுக்கு வெற்றியுண்டாகுமாறு ஜபஞ்செய்து அந்தப்போரை நிகரற்ற தெனக் கொண்டாடினர். அப்போது ஸ்ரீராமன் மிகக்கொடிய அம்பி னல் இராவணன்சிரத்தை யறுக்க, அது முளைக்கலாயிற்று: இங்ஙன் நூற்றொருமுறையறுக்கவும் நூற்றொருமுறையும் அச்சிரம் முளைத்தது. அப்போது ஸ்ரீராமன் 'மாரீசன் கரன் கவந்தன் முதலியோரைக் கொ ன்ற கணை இவ்விராவணனைக் கொல்லத் திறனற்றதே!' என்ற சிந்தை யுடனே கடுமையாகப் போரை நடத்தினன். அவ்விருவர்க்கும் இரவும் பகலும் ஓயாக்கடும்போர் நிகழ்ந்தது.

அப்போது மாதலி ஸ்ரீராமனைநோக்கி, 'நீ ஒன்றும் அறியாதவன் போன்று இராவணன்விடும் அஸ்திரத்துக்குப் பிரதியஸ்திரம் தொடுப் பதுமாத்திரமே பணியாகக்கொண்டுள்ளாயே! இராவணனுக்கு மரண காலம் அணுகிவிட்டது. பிரமாஸ்திரத்தைத் தொடுப்பாயாக' என்று நினைவூட்டினன். பிரமதேவன் அகஸ்தியருக்குக் கொடுக்க, அம்முனி வர் தனக்குக்கொடுத்த கணையை யெடுத்து வில்லிற்பூட்டி இராமன் அந் தத்திவ்யாஸ்திரத்தை இராவணன்மீது எய்ய, இராவணன் மார்புபிள வுண்டுவில்லைப்பிடித்த கைப்பிடி சோர உயிர்நீங்கி மண்மீதுவிழுந் தனன். எஞ்சிய அரக்கர் அஞ்சியோடினர்: வானரர் இராமஜயத்தையும் இராவணநாசத்தையும் கூறியவண்ணம் கர்ச்சித்தனர். வானத்துத் துந் துபிமுழங்கிற்று; மலர்மாரி ஸ்ரீராமனதுதேர்மீது வானத்தினின்று விழுந்தது. வானரருடையகொண்டாட்டத்துடனே வானவர்புரியுந்துதி யும் கேட்கலாயின. சுக்கிரீவன் அங்கதன் விபீஷணன்முதலியவர்களும் சாம்பவான்முதலிய நண்பர்களும் இலட்சுமணனுடன் வெற்றிபெற்ற இராமனைப் பூசித்தனர். இலட்சுமணனுதியோராற் சூழப்பெற்ற இராமன்வானவர்களாற்சூழப்பெற்ற தேவேந்திரன்போல விளங்கினன்.

இராவணன் மாண்டு தரையில்விழுந்திருப்பதைக்கண்டு விபீஷ ணன் துயரத்தைத் தாங்கமுடியாது பிரலாபிக்க, ஸ்ரீராமன் 'வீரதருமத் திற்சலியாது உறுதியாகநின்று பொருது உயிர்துறந்து துறக்கமடைந் தவனைக் குறித்துப் புலம்புதல் தகாது. போரில் வெற்றிதோல்விகளில் ஒன்று நியதியின்றி விளைவது திண்ணமாதலாலும், பிறந்தோர்க்கு இறப்பென்பது இயற்கையேயாதலாலும் இவ்வுண்மையை மனத்தி லாராய்ந்து துயரொழிந்து மேல் நிகழ்த்தவேண்டியதைக் குறித்து

ஆராய்க' என்றனன். விபீஷணன் இராவணனுடைய நன்மைகளை யெடுத்துக்கூறி 'இவனுக்குப் பிரேதகார்யங்களைச் செய்ய உடன்பாடு தருக' என்ன, ஸ்ரீராமன் 'பகைமை மரணம்வரையில்தான்: நம்பயன் கைகூடிற்று: இவனுக்கு ஸம்ஸ்காரஞ்செய்க: உனக்குப்போலவே இவன் எனக்கும்' என்றான்.

இராவணனிறந்ததுகேட்டு அவனுடையமனைவியர் கோவென்று கதறிக்கொண்டு அந்தப்புரத்தினின்றுவெளிப்பட்டுப்போர்க்களத்தைச் சேர்ந்து, தம்கணவனுடைய தோளின்மீது ஒருத்தியும் முகத்தின் மீது ஒருத்தியும் மார்பின்மீது ஒருத்தியும் தாளின்மீது ஒருத்தியுமாக இங்ஙனம் அவனுடைய உறுப்புக்களின்மீதுவிழுந்து அன்றிற் பறவைபோற் புலம்பலாயினர். அவ்வண்ணம் அவர்கள்புலம்புகையிற் பட்டமகிஷியான மண்டோதரி தன்கணவன் மாண்டுவீழ்ந் திருப்பதுகண்டு பொறுக்கொண்ணாத துயரத்துடனே கதறியழுபவளாகி, 'மானுடர்க்குக்கிட்டவொண்ணாத நிலத்திலேநின்று ஓருடம்பிலே அம்புபட்டால் அவ்வடிவத்தைவிட்டு வேற்றுருக்கொள்ளவல்ல உன்னை இராமன்கொன்றானென்பது எவ்வாறுபொருந்தும்? இந்திராதிதேவர்களோ உன்னைக் கொல்லவல்லவரல்லர்! போர்க்கருவிகள் அனைத்தும் நிறைந்துள்ள உன்னைப் போரில்எதிர்த்து இராமன்வென்றானென்பதை ஆராயுமிடத்து, இராமன் கேவலமனுஷ்யனன்று: தம்வடிவத்தைமறைத்துத் தேவர்கள் வானரர் முதலியோராக உருக்கொண்டுத் துணையாக அமைய வந்த பரம்பொருளினமிச மென்று தே ன்றுகின்றது. கரன் வதம் வாலிவதம் ஓர்வானரத்தைக்கொண்டுஅசோகவனிகையை முறிப்பிக்கை ஸேதுநிர்மாணம் முதலியவற்றைக் கேட்டபோதே இராமன் கேவலமானுடனல்ல னென்று உணர்ந்தேன். தீவினை புரிந்தோன் அதன்பயனை யனுபவித்தே தீரவேண்டும்: விபீஷணன் நன்மைபுரிந்தோனாகையால் இராமனையடைந்து நலம் பெற்றான். நீயோ விபீஷணனும் மற்றையோரும் சொல்லவும் கேளாது தீவினைப்பயனைப்பெற்றாய்: தேவாதியர்களால் சாவுநேராதபடி வரம்பெற்றாயாதலால், பரம்பொருளான விஷ்ணுவே தன்விபூதியான உலகத்தை நலியும் உன்னைப் பரிவாரங்களோடு முடித்துப் புகழுடன்வீற்றிருக்கின்றான்: எல்லாப் பிராணிகட்கும் சாவுக்கு நிமித்தம் வேண்டுமாகையால், சீதையின்நிமித்தம் உனக்கு மரணம் ஏற்பட்டது: 'மகனோ இந்திரனையும் வென்றவன்: கணவன்மூவுலகையும்வென்றவன்' என்று இவ்வாறாகச் செருக்குக்கொண்ட எனக்குக் கைம்பெண்ணாகவேண்டிய நிலை நேர்ந்ததே! சீதை இனித் துயரொழிந்து தன்கணவனுடன் இனிதிருக்கப் போகின்றாள்: நானோ மூட்டாக்கிட்டுக் கொண்டு துயரத்திற்கிடக்கவேண்டியகாலம் வந்திட்டது. ஐயோ! உன்னுடல் போர்க்களத்திற் புழுதிபடியப் புரண்டுகிடக்கும் காலமும் வந்ததே! போரில்மாண்டவனைக்குறித்துச் சோகிக்கக்கூடாதாயினும், பெண்ணாகையால், என்மனந்துயரப்படுகின்றது. நீ மரணமடைந்த

தைக்கேள்வியுற்றும் என்னெஞ்சம் ஆயிரஞ்சுக்கலாய்ப்போகாமையால், நான் உன்னிடம் அன்புடையவளென்பது பொய்' என்று இங்ஙனம்பலவாறுபுலம்பி இராவணன்மார்பில்வீழ்ந்து மேகத்தினிடையிற்றோன்றும்மின்னற்கொடிபோல விளங்கினாள்.

அவ்வாறுவீழ்ந்து மூர்ச்சித்த மண்டோதரியை அவளுடையச் சக்களத்திமார் எடுத்துத்தேற்றி அவர்களெல்லாரும் கதறுகையில், ஸ்ரீராமன் விபீஷணனைப்பார்த்து, 'ஈமக்கடனைச்செய்க' என்ன, இராமனுடையமனப்பூர்வமான அநுமதியைப் பெற்றே ஈமச்சடங்கைச் செய்யக்கருதிய விபீஷணனாழ்வான் இவ்விராவணன்என்னுடன்பிறந்தவனேயாயினும், இவனுடையதீக்குணங்களைக் கருதுமிடத்து நான் ஈமச்சடங்கைச்செய்யாது தவிர்தலே தகுதி:இதனால், எனக்குப்பழிப்புஉண்டாகாது'என்ன, ஸ்ரீராமன் விபீஷணனைப்பார்த்து, 'விபீஷணா! நீ என் விருப்பத்தையே செய்யவேண்டியவன்: உன்னால் எனக்கு வெற்றியுண்டானதனால், உன்நன்மையையே யான் சொல்லவேண்டியவன். இவனை ஸம்ஸ்கரிப்பதுஎனக்குவிருப்பமானது:உனக்கும்நலமானது:இவனிடத்துச் சிலதீக்குணங்கள்இருந்தனவாயினும் உத்தமகுணங்கள்பலவும் உள்ளன. மரணம்வரையிலும்தான் பகை: உனக்கு எப்படியோ அப்படியே இவன் எனக்கும் சுற்றத்தான். இவனுடைய ஈமக்கடனைச் செய்க: இதனால் உனக்குப் புகழே விளையும்' என்ன, உடனேவிபீஷணன் ஸ்திரீகளையெல்லாம் அப்பால் அனுப்பிவிட்டு யாகசீலனுக்குச் செய்வதுபோல் ஸம்ஸ்காரஞ்செய்தனன். தகனஞ்செய்து மூழ்கித் தருப்பணஞ்செய்து ராவணஸ்திரீகளைப் பட்டணத்திற்குள் பிரவேசிக்கச்செய்தபின்னர், விபீஷணன் இராமனிடம்வந்து வணங்கி அவன் மருங்கே பணிவுடன் நின்றானாக, ஸ்ரீராமன் சேனைகளும் சுக்கிரீவனும் இலட்சுமணனும் சூழ்ந்திருக்க மகிழ்வோடிருந்தனனென்பது.

இராவணன்வதைப்படலம் முற்றிற்று.

---

## ௩௭-ஆவது மீட்சிப்படலம்.

இராமபிரான் இராவணனைக் கொன்றபின் சீதையை மீட்டுக்கொண்டு இலங்கையினின்று திருவயோத்திக்குமீண்டுவந்த செய்தியை உணர்த்தும் பாகமென்று பொருள்.

ஸ்ரீராமன் விபீஷணனைத் தேற்றியபின் இலட்சுமணனைநோக்கி 'நீ வானரவீரர்களுடன்சென்று விபீஷணனுக்கு முடிசூட்டுக' என்ன, தேவர்களும் விபீஷணனுடைய பட்டாபிஷேகத்துக்கு வேண்டுவன செய்ய, இளையபெருமாள் முடிசூட்டினன்: தேவர்கள் மலர்மாரிபொழிந்துவாழ்த்தினர். விபீஷணன் ஸ்ரீராமனைத் தொழவேணவாக்கொண்டு இலக்குமணனிடம் இராச்சியத்தையொப்பித்து அப்பிரானைத்தொழ, ஸ்ரீராமன் விபீஷணனை எடுத்துத் தழுவி நீதிகளையுபதேசித்தபின், ஸ்ரீராமனேவலால் அநுமான் இராவணனிறந்த செய்தியைப் பிராட்டிக்குத்

தெரிவிக்க அவள்உடல்பூரித்துப் பெருமகிழ்ச்சியாற் பேசாவெழாது சற்றுநேரம்வாளாவிருந்து பிறகு அனுமனைப்புகழ்ந்து 'உனக்கு யான் செய்யத்தக்கது,யாதுஉளது?' என்ன, அனுமான் 'உன்னைநலிந்த அரக்கியரைக்கொல்லுமாறு வரம்தருக' என்ன, அதுகேட்ட அரக்கியர் சீதாபிராட்டியைச் சரணம்புக, அவ்வரக்கியர்க்குப் பிராட்டி அபயமளித்து, அநுமனைநோக்கி 'இவ்வரக்கியர் தலைவனேவலைச் செய்தனராதலால், இவர்மீது குற்றமில்லை: இவர்களைக்கொல்லுதல் தக்கதன்று' என்ன, 'அநுமான் உன்தயவு' என்றான்.

அவ்வேளையில் விபீஷணனைநோக்கிச் சீதையை யலங்கரித்து இட்டுக்கொண்டுவருமாறு இராமபிரான் பணிக்க. கோலங்கொள்ளுதற்குப் பிராட்டிஉடன்படாதிருப்பினும் விபீஷணன் இராமனதுபணியென்றுஇசைவித்துத் தேவமங்கையர் பலவகையாகப்புனையப்பின்னர் அப்பிராட்டியை விமானத்தின்மீதுஎற்றி இராமனிடம்அழைத்துச்செல்கையில் தேவர் முனிவர் வித்தியாதரர்முதலியோரின் மங்கைமார்தொடர்ந்துவரச் சானகிப்பிராட்டி ஸ்ரீராமனைக் கண்டு பூமியிலிறங்கி மகிழ்ச்சிக்கண்ணீர்பெருக வணங்கிநின்றாள்.

சீதையைக்கண்ட இராமன் கடுஞ்சொற்களாற் பலவாறுகடிந்து 'நீ இறத்தலே தக்கது' என்ன, கேட்டவரனைவரும் அரற்றினர்: சீதை கலக்கமுற்றுப் பொறுக்கொண்ணாத துயரத்துடனே தன்னிலையைநொந்து 'எனக்கு இறத்தலேதக்கது' என்றுமொழிந்து இளையபெருமாளைக்கொண்டு அக்கினியைமூட்டுவித்து,வேதம்முதலியனவருந்தவும் இந்திராணிமுதலிய தேவமங்கையர் கண்ணில்மோதிக்கொண்டு துள்ளவும் பிரமாதியர்நடுங்கவும் 'யான் கற்புஇழந்தேனெனின், தீக்கடவுளே! நீ என்னைச் சுடுக' என்று அத்தீயிற் பாய்ந்தனள். பாய்தலும் அப்பிராட்டியின் கற்புக்கனலால் தன்னுடலெரியப்பெற்ற தீக்கடவுள் அப்பிராட்டியையேந்திவந்து ஸ்ரீராமன்முன்னிலையில் வணங்கிநிற்க, ஸ்ரீராமன் சீதையைக்குற்றமற்றவளென்று உணர்ந்து அங்கீகரித்தனன்.

அப்போது தேவர்களின்வேண்டுகோளினால் பிரமதேவனும் உருத்திரமூர்த்தியும் இராமபிரானிடம்வந்து அப்பிரானுடைய உண்மைநிலையைக்கூறித் துதித்துச் சீதையின்கற்புத்திறத்தையும் தெரிவித்துச்சென்றனராகப்பின் உருத்திரமூர்த்தியின் மொழியினால்தசரதன்வந்து இராமனைத் தழுவிமகிழ்ந்து, கைகேயியையும் பரதனையும் துறவாது மனைவியும் மகனுமாகக்கொள்ளுமாறு அவ்விராமன்வேண்டிய இருவரங்களையும் அளித்துச்சென்று மீண்டு துறக்கம்புக்கான். பின்னர்த் தேவர்கள்வந்து' வேண்டும்வரங்கேள்' என்று இராமனிடம்கூற,அப்பிரான்களத்துஇறந்த வானரங்களெல்லாம் உயிர்பெற்றுஎழுமாறுவேண்ட, அவ்வாறேயளித்து விரைவிலயோத்திசேருமாறுசொல்ல,ஸ்ரீராமன் விபீஷணர்கொணர்ந்த புஷ்பகவிமானத்தில் சீதாலட்சுமணசமேதனாய் விபீஷணசுக்கிரீவ ஆஞ்சனேயாதிபரிவாரங்கள்சூழப்புட்பகம்வானவழியேஅயோத்திநோக்கிச் செல்லலாயிற்று. ஸ்ரீராமன், சானகிக்கு இலங்கை திருவணைமுதலியகாட்

சிகளைக்காட்டிக்கொண்டேவர, அவ்விமானம் கிட்கிந்தையைச் சேர்ந்தது; சேரவும் சீதையின்விருப்பின்படி அந்தக்கிட்கிந்தையிலுள்ள வானரங்களையும் விமானத்தில் ஏற்றிக்கொண்டு ஸ்ரீராமன் 'இது கோதாவரி: இது உன்பிரிவுத்துயரை யுண்டாக்கியஇடம்' என்று காட்டியவண்ணம் நிற்க, புட்பகஞ்செல்லுகையில் இது பரத்துவாசாச்சிரமமென்றுகூறி அங்கு இறங்கி முனிவனடிபணிந்து அம்முனிவன்சற்கரிக்கப் பின்பு வானரர் செல்லுமிடம்வளம்பெற வரம்பெற்றபின் பரத்துவாசமுனிவன் யாவர்க்கும் விருந்தமைக்கவே அநுமானைப் பரதனுக்குத் தன்வருகையை யறிவிக்குமாறு அனுப்பினான். அநுமான் குகனுக்கும் செய்தி தெரிவித்துப் பரதனைச்சேர்ந்த, சமயத்து பதினான்குவருடஞ்சென்றும் ஸ்ரீராமன் வராமையால் அந்தப்பரதன் அக்கினிப்பிரவேசஞ்செய்ய நிச்சயித்துச் சத்துருக்கனுக்குத் தன்கருத்தைத்தெரிவித்துக் கௌசலைதடுக்கவும்கேளாமல் தீயில்விழ முந்தினனாக, அநுமான் ஆங்குச்சேர்ந்து தடுத்து எரியையவித்து ஸ்ரீராமன்வருகையைக் கூறிக் கணையாழியை யளிக்க, யாவரும் ஆனந்தபரவசராயினர்.

அப்பால் பரதன் அநுமானைத் தன்வரலாறுகூறச்சொல்லிக்கேட்டு நகரையலங்கரிப்பித்து ஸ்ரீராமனையெதிர்கொள்ளப் பரிவாரங்களோடு நடந்து இராவணாதியரக்கர்களையொழித்த ஸ்ரீராமனது பராக்கிரமச் செயலையோதக்கேட்டவண்ணஞ் செல்ல, அக்கால் தபோதனன்செய் தவிருந்தை யாவருமுண்டபின் ஸ்ரீராமன் தன்னைக்காணவந்த குகப்பெருமானை ஆதரித்து அன்றிரவுநீக்கிச் சூரியோதயத்து யாவரும்புட்பகவிமானமேறி அயோத்திநோக்கிச்செல்லுகையில் அநுமான் சுட்டிக்காட்ட, பரதன் ஸ்ரீராமனைக்கண்டு சேவிக்கையில் அவ்வநுமன் விமானத்திற்பாய்ந்து ஸ்ரீராமனுக்குப் பரதன் திறம்முதலியனகூற, அப்போதுபுட்பகவிமானம் இராமன்றினைவின்படி புவியிலிறங்கிற்று. தாய்மார் வசிட்டன்முதலியோரை இராமனாதியோர்வணங்க இராமனாதியோரைப் பரதன்முதலியோர்வணங்க இங்ஙனம்நிகழ்ந்தபின், ஸ்ரீராமன் யாவரையும் புட்பகவிமானத்திலேற்றிக்கொண்டு அயோத்தியையடுத்த நந்திக்கிராமத்தையடைந்து புவியிற்சேர்ந்தமை இந்தமீட்சிப்படலத்துச் சொல்லப்படுகின்றது.

க.—இராமன் விபீஷணனுக்குத் தேறுதல்கூறி, இலக்குமணனை நோக்கி ஒன்றுசொல்லத்தொடங்கல்.

[1]வருந்த னீதி மனுநெறி யாவையும்
பொருந்து [2]கேள்விப் [3]புலமையி னோயென
அருந்த வப்பய னாலடைந் தாற் [4]கறைந்து
[5]இருந்த வத்[6]திளை யோற்கி தியம்பினான்.

(இ - ள்.) 'மனுதருமசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட நியாயவழிகளெல்லாம் பொருந்திய நூற்கேள்வியையும் அறிவுத்தேர்ச்சியையுமுடையவனே! (நீ) வருந்தாதே' என்று, (செய்தற்கு) அரிய தவத்தைச் செய்துள்ளதன் பயனால் (முன்புவந்து தன்னைச்) சரண

மடைந்தவனை விபீடணனுக்குச் சொல்லி,—பெரிய தவவொழுக்கத்தையுடைய (தன்) தம்பியான இலக்குமணனுக்கு இவ்வார்த்தையைச் சொல்பவனானன் (ஸ்ரீராமன்); (எ-று)—அதனை, அடுத்த கவியிற் காண்க. இதற்கு 'இராமன்' என்ற தோன்றாஎழுவாய் வருவிக்க.

புலமை - இயற்கையறிவோடு, நூற்பயிற்சியாலாகும் செயற்கையறிவையும், நூல்வழக்கையேயன்றி உலகவழக்கையும் அறிதலையும் உணர்த்தும். எல்லாவுயிர்க்கும் புகலிடம் சரணாகதரக்ஷகனான ஸ்ரீராமபிரானே யென்ற சாஸ்திரசித்தாந்தத்தை உள்ளபடியுணர்ந்து அப்பெருமானைப் பிரதியக்ஷமாகத் தரிசித்துத் திருவடியில் வீழ்ந்து அடைக்கலமடைந்து உய்வுபெறுதல் அரிய பெரிய தவத்தின் பயனா லன்றி இயலா தாதலாலும், விபீடணன் பெருந்தவம்புரிகையில் இராவணனுக்குக் காட்சிதந்து வேண்டியவரங்களைக்கொடுத்தருளிய பிரமதேவன் அவ்விபீஷணனைநோக்கி 'நீ யாதுவரம் வரிக்கின்றனை?' என்றபோது அவன் 'அடியேனுக்கு எவ்வளவுசங்கடம் நேர்ந்திருக்கையிலும் அதருமத்திற் புத்திசெல்லாதிருக்கவும், எதுதோன்றினும் அதெல்லாம் தருமத்திற்குஇணங்கிப் பயன்படவும் வரந்தரவேண்டும்' என்றுவேண்டி அத்தவத்தின்பயனாகப்பெற்றவரத்தின்படி ஆபத்காலத்தில் நல்லறிவு தோன்றப்பெற்று இராவணசம்பந்தத்தைத் துறந்து பெருமானைச் சரணமடைந்தவனாதலாலும், விபீஷணனை 'அருந்தவப்பயனாலடைந்தான்' என்றார். இளையபெருமாளுக்குப் பெருந்தவம் - அநாதியாய் ஆதிசேஷனாகிறநிலையில் திருமாலுக்கு அநேகவித கைங்கரியங்களைச் செய்துவருதல் மாத்திரமேயன்றி அவதாரவிசேஷத்திலும் பிரியாமல் உடனிருந்து பலவகைப் பணிவிடைகளைச் செய்து பேறுபெறுந் தன்மை; இனி, மரவுரியுடுத்தல் சடைமுடிதரித்தல் காமவின்பங்கைவிடுதல் ஊணுறக்கமொழிதல் முதலிய தவவிரதங்களைப் பதினான்குவருஷகாலம் சிறிதுந்தவறாது அநுட்டித்த சிறப்புடைமைபற்றி, 'இருந்தவத்திளையோன்' என்றதாகவுங் கொள்ளலாம். உலகத்திற் பிறப்பெடுத்த உயிர்க்கு இறப்புநேர்தல் இயல்பாதலையும், தீத்தொழில் செய்தவர் தவறாது முடிவிற் கேடடைதலும் முற்பிறப்பின் வினைப்பயன் பிற்பிறப்பில் அநுபவித்தே தீரவேண்டிய தாதலும் முதலிய தருமசாஸ்திரக் கொள்கையையும் உணர்ந்த நீ, தமையனை இராவணன் இறந்ததற்குச் சோகித்தல் தகுதியன்றே யென்பார், 'நீதி மனுநெறி யாவையும் பொருந்து கேள்விப் புலமையினோய்' என்றுவிளித்து, 'வருந்தல்' என்று தேற்றினர்; கருத்துடையடைகொளியணி. பி - ம்:—1வருந்தொல், வருந்துநீதி. 2கோவிற் 3புலமையிதாமெனா. 4அறம். 5இருந்தநல், திருந்தநல். 6இளையோன்முகநோக்கியே. (௩௯௨௧)

உ.—'நீ வாநரவீரர்களுடன் சென்று விபீஷணனுக்கு முடிசூட்டு' என்று இராமன் இலக்குமணனை ஏவுதல்.

சோதி யான்மகன் வாயுவின் றோன்றன்மற்று
ஏதில் 1வானர வீரரொ டேகிநீ

ஆதி [2]நாயக னுக்கிய நான்முறை
[3]நீதி யானை [4]நெடுமுடி சூட்டுவாய்

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ-ள்.) சூரியனது மைந்தனான சுக்கிரீவனும் வாயுவின்குமாரனான அநுமானும் மற்றுமுள்ள குற்றமற்றவாநரவீரர்களும் ஆகிய இவர்களுடனே நீ (இலங்கைநகரினுட்) சென்று, (எல்லாவற்றுக்கும்) முதன்மைத் தலைவனான ஸ்ரீமந்நாராயணன் வெளியிட்ட (வேதம்முதலிய) நூல்களிற் கூறிய முறைப்படி நீதிநெறிதவறாதவனான விபீஷணனுக்குச் சிறந்தகிரீடத்தைச் சூட்டுவாய்; (எ - று.)—'என்றுகூறி' என அடுத்த கவியோடு தொடரும்.

தலைமைபற்றி, சுக்கிரீவன் அநுமான் என்ற இவ்விருவரும் எடுத்துக் கூறப்பட்டனர்; இவர்கள் இராமனுக்குப் பலவகையாக மிகவும் உதவிசெய்தமை, பிரசித்தம் சோதியான் - ஆயிரங்கிரணங்களையுடையவன்சூரியன். வாநரம் என்ற வடசொல் - கொஞ்சங்குறைய மனிதர் போலவுள்ள தென்று காரணப்பொருள்படும் சகலசாஸ்திரங்களும் ஆதியில்முழுமுதற்கடவுளான எம்பெருமானிடத்திநின்று வெளிப்பட்டன வென்பது, நூற்கொள்கை. ஏது = ஏதம்: குற்றம். 'நீதியானை'---உருபு மயக்கம். நெடுமுடி - தொன்றுதொட்டுவந்த முடியுமாம். தோன்றல் - தொழிலாகுபெயர்.

(இராமபிரான் தனதுசிறியதாயாகிய கைகேயிக்குத் தனதுதந்தை கொடுத்திருந்த வரத்தை நிறைவேற்றுதற்பொருட்டுப் பதினான்குவருஷம் வனவாசஞ்செய்ய உடன்பட்டு வந்தனனாதலால், அங்ஙனம் காட்டில்வசித்தற்கேயுரிய அக்காலத்தில் நகரப்பிரவேசஞ் செய்தல் தகாதென்ற கருத்தினால், தான் இலங்கையினுட் செல்லாமல், தம்பியைச் சென்று முடிசூட்டக் கட்டளையிட்டன னென்க; முன்பு சுக்கிரீவனுக்கும் இலக்குமணனைக்கொண்டே முடிசூட்டி இராமன் கிஷ்கிந்தாபுரியினுட் செல்லாமை காண்க). பி - ம்:—[1]வானரர்யாவரொடு [2]நான்முகன். [3]நீதியோடு. [4]மிலைச்சுகநீண்முடி. (௩௯௨௨)

௩.—இராமன் இலக்குமணனுக்கும் மற்றையோர்க்கும் விடையளிக்க, தேவர்கள் விபீஷணபட்டாபிஷேகத்துக்கு வேண்டுவன செய்யத்தொடங்குதல்.

என்று [1]கூறி யிளவலொ டாரையும்
வென்றி வீரன் விடையருள் வேலையில்
நின்ற தேவர் நெடுந் [2]திசை யோரொடுஞ்
சென்று தத்தம செய்கை புரிந்தனர்.

(இ - ள்.) என்று சொல்லி வெற்றிபெற்ற வீரனான ஸ்ரீராமன், (தனது) தம்பியாகிய இலக்குமணனுக்கும் மற்றும்யாவர்க்கும் அநுமதிதந்து (அவர்களனைவரையும்) அனுப்பியபொழுது, (அச்செய்தியை யறிந்து) நின்ற தேவர்கள் நீண்டதிக்குக்களின் காவலர்களுடனே

[அஷ்டதிக்பாலகர்களுடனே] சென்று தம்தமக்கு இயன்ற உதவிச் செயல்களைச் செய்வாராயினர்; (எ - று.)—இதன்விவரத்தை, அடுத்த கவியிற் காண்க.

அஷ்டதிக்பாலகர் - இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என இவர்; இவர்களைக் கிழக்கு முதலாக முறையேகொள்க. நெடுங்காலமாகத் தங்களுக்குப் பலவகைத்துன்பங்களை விளைத்துவந்த இராவணனைச் சங்கரித்த இராமபிரானது கருத்தைத் தழுவி அவனதுதிருவுள்ளத்துக்கு உகப்பையுண்டாக்கும்பொருட்டும், அந்தஇராவணனைக் கொல்லுதற்கு ஏற்ற உதவி புரிந்த விபீஷணனுக்குத் தாம் கைம்மாறுசெய்யக் கருதியும், இங்ஙனம் தேவர்கள் அவனது பட்டாபிஷேகத்துக்கு ஏற்ற செயல்களை அன்போடு செய்வாராயின ரென்க. பி - ம்:—[1]இளவலொடியாரையும். [2]திசையாரொடு. (கூகஉகூ)

ச.—தேவர்கள் புண்ணியதீர்த்தம் முதலியன கொணர்தல்.

சூழ்க டற்புன லும்பல [1]தோயமும்
நீள்மு டித்தொகை யும்பிற நீர்மையும்
பாழி துற்றரி பற்றிய பீடமும்
தாழ்வில் கொற்றத் தமரர்கள் தந்தனர்

(இ - ள்.) (உலகத்தைச்) சூழ்ந்துள்ள கடல்களின் தீர்த்தத்தையும் (மற்றும்)பல (கங்கைமுதலியவற்றின்) புண்ணிய தீர்த்தங்களையும், நீண்ட கிரீடங்களின் தொகுதியையும், வலிமைமிக்க சிங்கம்தாங்குவது போல உருவமமையச் சித்திரிக்கப்பட்ட பீடத்தையும் [சிங்காசனத்தையும்], மற்றும் (பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய) உபகரணங்களையும், குறைவில்லாத வெற்றியையுடைய தேவர்கள் (விரைவாகக்) கொண்டுவந்தார்கள்; (எ - று.)

நீள் + முடி என்பது சந்தியில் நீண்முடி யென்று ஆகாது'நீள்முடி' யென்றே நின்றது, எதுகைநயம்நோக்கி யென்க; ழகரத்துக்கு ளகரம் இனவெதுகை யெனக் காண்க: (வடநூலாரும், யாப்பிலக்கணத்துக்கு ஏற்ப, 'வேண்டாதவிடத்துச் சந்தியைக் கொள்ளாது விடுவர்.) இங்கு வேண்டுவது ஒருகிரீடமேயாயினும், தேவர்கள் உபசாரமாகப் பல கிரீடங்களைக் கொணர்ந்தமை தோன்ற, 'முடித்தொகை' எனப்பட்டது; அன்றி, இராவணன் தனதுபத்துத்தலையிலும் அணிந்திருந்த பத்துக்கிரீடங்களையும் கொணர்ந்தன ரென்பதுபற்றி, 'முடித்தொகை' என்றதாகவுங் கூறுவர். பி - ம்:—[1]தோசமும். இங்கே சிலபிரதியில் ஒருபாடல்காணப்படுவது வருமாறு:—

மாரு திச்செல மங்கலம் யாவையும்
மாரு திப்பெயர் கொண்டுடன் வந்தனன்
வீர விற்கை யிளவலவ் வீடணன்
வீர பட்ட மெனநுதல் வீக்கினன். (கூகஉச)

௫.—பிரமன் கூறியபடி மயன் ஒருமண்டபம் நிருமித்தல்.

[1]வாச நாண்மல ரோன்சொல [2]மான்முகன்
[3]காசு மாநிதி யுங்கொடு கங்கைசூடு
ஈச னேமுத லோர்வியந் [4]தேத்திடத்
தேசு லாமணி மண்டபஞ் [5]செய்தனன்.

(இ - ள்.) வாசனையுடைய புதிய [அன்றுபூத்த] (திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றியவனான பிரமன் கட்டளையிட, மானினது முகம்போன்ற முகத்தையுடையவனான மயன், இரத்தினங்களையும் மிக்க பொன்னையுங் கொண்டு கங்காநதியை முடிமேற்கொண்டுள்ள சிவபிரான் முதலான தேவர்கள் (கண்டு) அதிசயித்துக்கொண்டாடும்படி ஒளிவீசுகிற அழகியமண்டபத்தை(ப் பட்டாபிஷேகத்தின் பொருட்டு) அமைத்தான்; (எ - று.)

பிரளயசமுத்திரத்திற் பள்ளிகொண்டிருந்த திருமாலின் நாபியினின்று ஒரு தாமரைமலர் எழுந்து விரிய, அதனினின்று பிரமன் தோன்றினனென அறிக. அசுரத்தச்சனான மயன் மான்முகமுடையவனாதலை, கீழ்க் கிட்கிந்தாகாண்டத்தில் "மான்முகமுகத்தவன் மயன்" என்றதனாலும் அறிக. காசு - நவரத்தினங்களுக்கும் பொதுப்பெயர். நிதி - செல்வத்தொகுதி; இங்கு இலக்கணையாய்ப் பொன்னை யுணர்த்திற்று. பி-ம்:—[1]வாசமா. [2]மாமுகன், வாசவன். [3]காசுலாநிதியும், காசு மாமணியும். [4]எய்திடத். [5]சேர்ந்தனர். இச்செய்யுள் "சூழ்கடல்" (௬) என்றதன்முன் சிலபிரதிகளில் உள்ளது. (௩௯௨௫)

௬.—இளையபெருமாள் விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டுதல்.

மெய்கொள் வேத விதிமுறை விண்ணுளோர்
[1]தெய்வ [2]நீள்புன லாடல் [3]திருத்திட
ஐய [4]னாணையி னாலிளங் கோளரி
கையி னான்மகு டங்கவித் தானரோ.

(இ - ள்.) மெய்ம்மையைக்கொண்ட வேதங்களிற்கூறிய விதியின் முறைமைப்படி தேவர்கள் தெய்வத்தன்மையுள்ள சிறந்த தீர்த்தங்களைக்கொண்டு அபிஷேகத்தைச் செவ்விதாகச் செய்ய, (யாவர்க்குந்) தலைவனான இராமபிரானது கட்டளைப்படி இளமையான வலிமையுள்ள சிங்கம்போன்ற இலக்குமணன் (தனது) கையினாற் கிரீடத்தையெடுத்து (விபீஷணன்முடியிலே) சூட்டினான்; (எ - று.)

மெய்கொள்வேதம்-தத்துவப்பொருள்களை உள்ளபடி யுணர்த்தும் நூல். விண்ணுளோர்-இந்திரன்முதலியோர். புனலுக்குத் தெய்வத்தன்மை - தனதுஸ்பர்சமாத்திரத்தால் தீவினைதீர்த்து எல்லாநன்மைகளையும் உண்டாக்குதல். நீள்புனல்=மகாதீர்த்தம்; இனி, நெடுந்தூரத்தினின்று கொணர்ந்த புனலுமாம். ஆர்யன், ஆஜ்ஞா என்ற வடசொற்கள் - ஐயன், ஆணை எனச் சிதைந்தன. இளங்கோளரி-பலபராக்கிரமங்களிற் சிங்கவேறுபோன்ற இளையபெருமாள்; உவமையாகுபெயர், வேத

விதிப்படி தேவர்கள் அபிஷேகஞ்செய்ய, இராமன்கட்டளைப்படி இலக்குமணன் முடிசூட்டினுனென்ற இதில், இராமன்கட்டளை வேதவிதிபோலத் தவறாது சிரமேற்கொண்டு நன்குமதிக்கத்தக்கதென்பது விளங்கும்; எம்பெருமானது ஆஜ்ஞாரூபமாக இருத்தலினாலன்றோ, வேதத்திற்கும் விசேஷகௌரவம். பி - ம்:—[1]செய்ய. [2]நீர்ப். [3]திருத்தினார். [4]ஆரியனாலிளங், ஆணையினாய், ஆணையிலங்கிளங். இதன்பின் ஒருபாடல் ஒருபிரதியிற் காணப்படுவது வருமாறு:—

வேத வோசை விழாவொலி மேலிட
நாத துந்துமி யெங்கு நடித்திட
வேத பாரக ராசி விளம்பிட
ஆதி தேவ ரலர்மழை யார்த்திட. (௩௯௨௬)

எ.—விபீஷணன் சிங்காசனத்து வீற்றிருத்தலின் வருணனை.

கரிய குன்று கதிரினைச் [1]சூடியோர்
எரிம ணித்தவி சிற்பொலிந் தென்னவே
விரியும் வெற்றி யிலங்கையர் [2]வேந்தனீடு
அரிய ணைப்பொலிந் தான்[3]றம ரார்த்தெழ.

(இ - ள்.) கருநிறமுடைய [பெரிய] மலையொன்று சூரியனை(த் தனது) சிகரத்தின்மீது கொண்டு தீப்போலவிளங்குகிற இரத்தினங்கள்பதித்த ஆசனமொன்றில் (இருந்து)விளங்கினாற்போல, மிகுதியான சயத்தையுடையவனும் இலங்காபுரியிலுள்ளார்க்கு அரசனுமாகிய விபீஷணன், (தனது)உறவினராகிய அரக்கர்கள் (மகிழ்ச்சியால்)ஆரவாரஞ்செய்து உற்சாகமடையப் பெரிய சிங்காசனத்தில்(முடிசூடிவீற்றிருந்து) விளங்கினான்; (எ - று.)

உவமையணி. கரிய குன்று-கருநிறத்தையும் பெருவடிவையும் வலிமையையுமுடைய விபீடணனுக்கும், சூரியன் - மிகவிளங்குகிற கிரீடத்துக்கும் உவமை. கதிர் - சூரியனுக்குச் சினையாகுபெயர். [3]அறமார்த்தெழ என்றபாடத்திற்கு - இராவணன்காலத்தில் வலியழிந்து ஒடுங்கிக்கிடந்த தருமம் தருமாத்துமாவான விபீஷணன் முடிசூடியமை பற்றிமகிழ்ச்சிகொண்டு ஆரவாரத்தோடு தலையெடுக்க என்று பொருள்படும். பி - ம்:—[1]சூட்டியோர், சூடியே. [2]வேந்தனவ், வேந்தென. [3]அமரார்த்தெழ. (௩௯௨௭)

அ.—தேவர்கள்முதலியோர் மலர்மாரிசோரிதலும், வாழ்த்தலும்.

தேவர் பூமழை [1]சித்தர் முதலினோர்
மேவு காதல் விரைமலர் [2]வேறிலா
மூவ ரோடு முனிவர்மற் றியாவரும்
நாவி லாசி நறைமலர் தூவினார்.

(இ - ள்.) (சுவர்க்கலோகத்தில் வசிக்கின்ற) தேவர்கள் (கற்பக) மலர்மாரியையும், சித்தர்முதலானவர்கள் மிக்கஅன்போடு வாசனையுடைய (பலவகைப்) புஷ்பங்களையும், (தம்மில் ஒருவர்க்குஒருவர்)மாறு

பாடில்லாத திரிமூர்த்திகளுடன் முனிவர்களும் மற்றும் (வேதியர் முதலியோர்) எல்லோரும் (தமது) நாவினாற்கூறும் ஆசீர்வசனங்களாகிய நல்லமலர்களையும் (விபீஷணன்மீது) சொரிந்தார்கள்; (எ-று.)

சித்தர் முதலியோர் - வித்தியாதரர், யக்ஷர், கந்தர்வர், கருடர், கின்னரர், கிம்புருஷர், சாரணர் முதலிய பதினெட்டுத் தேவகணங்களின்பாற் பட்டவர். ஸித்தர் - யோகசித்திபெற்றவர். படைப்பு அளிப்பு அழிப்புத் தொழில்களிலும் மற்றும் பல காரியங்களிலும் திரிமூர்த்திகள் தம்மில் மாறுகொள்ளாது ஒற்றுமையுடையராயிருத்தலால், 'வேறிலாமூவர்' என்றார். நறை=நறுமை; 'ஐ'விகுதிபெற்ற பண்புப்பெயர். மங்கலவாழ்த்தாக இனியமொழிகளை விபீஷணன்பொருட்டு வெளியிடுதல், மென்மலர்களைச்சொரிதலாக வருணிக்கப்பட்டது.

இனி, இச்செய்யுளுக்கு-பதினெட்டுத் தேவகணங்களுள் ஒருதிறத்தாரான தேவர்கள் தாமே கற்பகவிருக்ஷங்களின் மலர்களெல்லாவற்றையும்எடுத்துச் சொரிந்துவிட்டதனால் மற்றையோரான சித்தர்முதலானவர்கள் தங்கட்கு வேறுமலர் கிடையாமையால் திரிமூர்த்திகளோடும் முனிவர்களோடும் மற்றும் வேதியர்முதலிய அனைவரோடுங் கூடி ஆசீர்வசனங்களாகிய நறுமலர்களைத் தூவினார்களென்று உரைப்பாரும் உளர். முந்தினபொருளில், இலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; இப்பொருளில், எதிர்மறைவினையெச்சம். பி-ம்:—[1]சிந்திச்செறிந்தற. [2]வேறிலார். (௩௯௨௮)

௬.—இங்ஙனம் முடிசூட்டப்பெற்ற விபீஷணன் இராமபிரானைத் தொழவேண்டுமென்ற அவாவினால் உடனே இலக்குமணனிடம்இராச்சியத்தை ஒப்பித்து இராமபிரானிடம் வந்ததை இதுவும்அடுத்தசெய்யுளுங்கூறும்.

முடி[1]பு னைந்த நிருதர் முதலவன்
அடி[2]வ ணங்கி யிளவலை [3]யாண்டையந்
நெடிய [4]காதலி னோற்[5]குயர் [6]நீர்மைசெய்து
இடிகொள் [7]சொல்ல னவற்கி தியம்பினான்.

(இ - ள்.) (இவ்வாறு) மகுடாபிஷேகம்பெற்ற அரக்கர்தலைவனான விபீஷணன் (இராமபிரானது) திருத்தம்பியான இலக்குமணனைத் திருவடிகளில்விழுந்து நமஸ்கரித்து அப்பொழுது [அல்லது அவ்விடத்தில்] மிக்கஅன்பையுடைய அவ்விளையபெருமாளுக்குச் சிறந்த உபசாரங்களைச்செய்து இடிமுழக்கம்போலக் கம்பீரமாகப்பேசுங் குரலையுடையவனாய் அவ்விலக்குமணனைநோக்கி இவ்வார்த்தையைச் சொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

உயர் நீர்மை - உயர்ந்தசிறப்பு. சொல்லன் - குறிப்புமுற்றெச்சம். இனி, 'இடிகொள்சொல்லன்' என்றது, இராக்கதனுக்கு இயற்கை குறிக்கும் பெயரெனினுமாம். பி-ம்:—[1]புனைந்தங்கிருந்த. [2]வணங்க. [3]யாண்டையின், ஆண்டுறு, யாண்டையான். [4]காதலினோர்க்கு. [5]உறு. [6]நீர்மையின், நீர்மைசேர். [7]சொல்லனலற்கியம்பினான், சொல்லற்கினிதினியம்பினான். (௩௯௨௯)

௯௦. விலங்க லனை [1]மிடை தரு தோளினாய்
இலங்கை மாநகர் [2]யான்வரு மெல்லைநீ
[3]கலங்க லாநெடுங் [4]காவ லிபற்றெனா
அலங்கல் வீர னடியிணை யெய்தினான்.

(இ-ள்.) 'மலை (ஒப்பாகமாட்டாது) வெட்கமடையும்படி (பருமையும் வலிமையும்)மிக்க தோள்களையுடையவனே! யான் (இராமபிரானிடஞ்சென்று) இலங்கைமாநகரத்திற்கு மீண்டுவருமளவும் நீ சோர்வுஉண்டாகாதபடி பெரிய (இந்நகரத்தின்) அரசாட்சியைச் செய்தருள்வாய்' என்றுசொல்லி வேண்டி (அவ்விலக்குமணனிடம் தன் அரசாட்சியை ஒப்பித்து, விபீஷணன்),—வெற்றிமாலையையுடைய மகாவீரனான ஸ்ரீராமபிரானது உபயதிருவடியினிடம் வந்து சேர்ந்தான்.

விலங்கல் - ஊர்க்கு ஒருபுறமாக விலகிநிற்பதெனப் பொருள்படுங் காரணக்குறி; ("இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும், வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு" என்ற திருக்குறளில் 'வாய்ந்தமலை' என்றவிடத்துப், பரிமேலழகர், இடையதன்றி ஒருபுடையதாதலே மலைக்கு வாய்ப்பாகக்கூறியமை உணர்க.) பி - ம்:—[1]விலங்கருந். [2]சூழ்வரும். [3]கலங்கலாய். [4]காவலினாற்றெனா. இச்செய்யுளின்பின் ஒருபிரதியிற் காணப்படும் பாடல் வருமாறு:—

வீர மாமுடி சூடிய வீடணன்
வீர ராகவன் றாளிணை மேவிட
ஆர மார்பொ டழுந்திடப் புல்லினான்
ஆரி னானு மறிவரு மாதியான். (௩௬௩௦)

௯௧.—சுக்கிரீவனோடும் அங்கதனோடும் வந்துவணங்கிய விபீஷணனைத் தழுவி இராமன் ஒன்று சொல்லத்தொடங்குதல்.

ஞாக்கு வீர னரசிளங் கோளரி
அரக்கர் கோமக னோடடி [1]தாழ்தலும்
பொருக்கெ னப்புகல் [2]புக்கவற் புல்லியத்
திருக்கொண் மார்ப னிணையன செப்பினான்.

(இ - ள்.) இராக்கதராசனான விபீஷணன்,—வானரர்களிற் சிறந்த வீரனாய் மகாராசனென்று பெயர்பெற்ற சுக்கிரீவனோடும் (வானரர்களுக்கு) இளவரசனான வலியசிங்கம் போன்ற அங்கதனோடும் (இராமபிரானது) திருவடிகளில் வணங்கிய வளவிலே,—திருமகளைக்கொண்ட மார்பையுடைய அந்தஸ்ரீராமன்,—விரைவாக (ஓடிவந்துமுன்பு தன்னைச்) சரணமடைந்தவனான விபீடணனை (எடுத்து)த் தழுவிக்கொண்டு இச்சொற்களைச் சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை அடுத்த கவியிற் காண்க.

'ஓடு' என்ற மூன்றனுருபு, 'வீரன்' என்பதனோடும், 'கோளரி' என்பதனோடும் பிரித்துக் கூட்டப்பட்டது. தீப்பட்டவீட்டினின்று விரைந்து வெளிப்படுதல்போல நீதிநெறியில்லாத இராவணனது அர

ண்மனையை விட்டு முன்பு விரைவாக வெளிவந்தமை தோன்ற, 'பொருக்கெனப்புகல்புக்கவன்' என்றார். பொருக்கென - விரைவுக் குறிப்பிடைச்சொல். புகல் - சரணமடையுமிடம்; தொழிலாகுபெயர். திருக்கொள்மார்பன் - திருமகள்வீற்றிருக்கும் மார்பினனான திருமால்; இனி, திரு - சயலக்ஷ்மியுமாம். பி - ம்:—[1]தாழ்தரப், தாழலும். [2]புக்கனர் புல்லிய, புக்கவனைத்தழீஇத். இதன்பின்ஒருபாடல் ஒரு பிரதியிற்காணப்படுவது வருமாறு:—

ஆதி நாளி லருண்முடி நின்ன தென்று
ஓதி னேனவை யுற்றுள துத்தம
வேத பாரகர் வேறுளர் யாவரும்
ஓது நீதி யொழுக்கி னொழுக்குவாய். (௩௬௩௧)

கஉ.—இராமபிரான் விபீஷணனுக்கு நீதியை உபதேசித்தல்.

[1]உரிமை [2]மூவுல குந்தொழு [3]வும்பர்தம்
பெருமை நீதி யறன்வழிப் பேர்கிலாது
[4]இருமை யேயர சாளுதி யீறிலாத்
தரும சீலவென் றூன்மறை தந்துளான்.

(இ - ள்.) வேதங்களை (ஆதியில்) வெளியிட்டருளியவனான திருமாலினது திருவவதாரமாகிய ஸ்ரீராமன்,—(விபீஷணனை நோக்கி), 'அழிவில்லாத அறவொழுக்கத்தையுடையவனே! மூன்று உலகத்திலுள்ளாரும்(நன்குமதித்து)வணங்கத் தேவர்களின்மகிமைக்கும்(இராச) நீதிமுறைமைக்கும் தருமமார்க்கத்துக்கும் உரியநிலையில் நின்று, இம்மைமறுமைப்பயன்களான புகழும் புண்ணியமும்மாறாது நிலைநிற்கும்படி (உனக்கு உரிய இலங்காராச்சியத்தை) அரசாளுவாய்' என்று கூறினான்; (எ - று.)

உனது அண்ணனான இராவணன் தேவர்களின் மகிமைக்கும் இராசநீதிக்கும் சாஸ்திரதருமத்துக்கும் மாறான வழியில்நின்று புகழ் புண்ணியங்களையிழந்து பழிபாவங்களைப் பெற்றுத் திரிலோகாதிபத்தியத்தைக் கைக்கொள்ள முயன்றாற்போ லன்றி, நீ, தேவர்களைக் கொண்டாடி வந்தனை வழிபாடுகள் செய்யும் வேள்விமுதலிய வைதிகச் சடங்குகள் ஆங்காங்குத் தடையறநிகழும்படி இராசநீதியும் தருமமார்க்கமும் தவறாமல் நல்லொழுக்கத்தில் நின்று புகழ்புண்ணியங்களைப் பெற்று இராக்கதராசதானியான இலங்கையை அரசுபுரிவாயென்றனனென்பதாம். விபீஷணன் மரணமின்றிச் சிரஞ்சீவியா யிருக்கும்படி பிரமனிடத்தினின்று வரம்பெற்றவனாதலால், அவனுக்கு 'ஈறிலா' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பிரமன் துயில்கையில் வேதங்களைக் கவர்ந்துசென்ற சோமகாசுரனைத் தேவர்களின் வேண்டுகோளின்படி திருமால் மத்ஸ்யாவதாரஞ்செய்து கொன்றபின்பு தான் மீட்டுக்கொணர்ந்த அவ்வேதங்களைப் பிரமனுக்குஹம்ஸரூபியாயிருந்து கூறியருளின னென்பது, 'மறைதந்துளான்' என்பதிலுள்ளகதை.

அன்றி, எவராலும் ஒருகாலத்திலும் இயற்றப்படாமல் முக்காலத்திலும் ஒருபடிப்பட நித்தியமாயிருத்தலால் அபௌருஷேயமென்றுபிரசித்திபெற்றுச் செய்யாமொழியென்று கூறப்படுகிற வேதங்களைத் திருமால் உண்டாக்கின னென்று உரைத்தற்கு இடமின்மை உணர்க. தொழ அரசாளுதி என இயையும். புதியஅரசாட்சிபெற்றோர்க்கு நீதிகளைப் பெரியோருபதேசித்தல் முறைமையாம். உரிமைபேர்கிலாது, இருமைபேர்கிலாதுஎன இயையும். பி-ம்:—[1]உருமை. [2]மூன்று. [3]ஓங்குமுன். [4]இருமையும், இருமையோய். (௩௯௩௨)

௧௩.—இராமன் விபீஷணனுக்கு நீதிகூறியபின் அநுமானை நோக்குதல்.

பன்னு நீதிகள் பற்பல கூறிமற்று
[1]உன்னு டைத்தவ ரோடுயர் [2]கீர்த்தியோய்
மன்னி[3]வாழ்கென் றுரைத்தடன் மாருதி
தன்னை நோக்கினன் [4]றாயர்சொ னோக்கினான்

(இ-ள்.) (தனது மாற்றாந்)தாயான கைகேயியினது சொல்லைப் பரிபாலித்தவனான இராமபிரான்,—ஆராய்ந்துதேர்ந்தெடுத்தபலபலநீதிகளை(இவ்வாறு)சொல்லி மற்றும் (விபீஷணனை நோக்கி),'சிறந்தபுகழையுடையவனே! உன்னுடையஇனத்தாருடன்சேர்ந்துவாழ்வாயாக'என்று உரைத்து, வலிமையையுடைய அநுமானை நோக்கினான்; (எ-று.)

உன் உடைத்தவர்-உன்னுடையவர். உடைத்தவர்என்ற இதில், து-வேண்டாவழிச்சாரியை; த்-சந்தி. தனது தந்தையான தசரதன் தனதுசிறியதாயான கைகேயிக்கு முன்புகொடுத்திருந்த இரண்டுவரங்களை நிறைவேற்றுதற்குக் கட்டுப்பட்டவனாய்நிற்கிற நிலையில், இராமன் அக்கைகேயி தன்னை நோக்கிச் சொன்ன சொல்லின்படிஇராச்சியத்தைவிட்டு வனவாசஞ்சென்றனனாதலால், 'தாயர்சொல்நோக்கினான்'எனப்பட்டான். பி-ம்:—[1]உன்னடைந்தவரோடு. [2]கீர்த்தியின், கீர்த்தியே. [3]வாழ்கவுரைத்திடம், வாழ்கென்றுரைத்தனன். [4]தாய்சொலை,தாய்சொலல். இச்செய்யுளில் விபீஷணனபிஷேகப்படலம்முடிய, அடுத்தபாடல் முதல்*பிராட்டிதிருவடிதொழுபடலம்சிலபிரதிகளில்தொடங்குகின்றது.

"வஞ்ச கக்கொடி யான்முனம் வவ்விடப்
பஞ்ச ரக்கிளி யென்னப் பதைப்பவள்
நெஞ்சி னிற்றுயர் நீங்கிய தென்றுநீ
அஞ்ச னைப்புதல் வாவருள்வா யென்றான்"

என்று ஒருபாடல் இந்தப்பாடலின்பின் ஒருபிரதியிற் காணப்படுகின்றது. இப்பாடலின் பின் சீதாபிராட்டி திருவடிப்படலம் இந்தப் பிரதியில் தொடங்குகின்றது. (௩௯௩௩)

௧௪—இராமன் அநுமானிடம் சீதைக்குச் செய்திகூறி யனுப்புதல்.

[1]இப்பு றத்தின வெய்துறு காலையில்
[2]அப்பு றத்தை [3]யுன்னி யனுமனைத்

* பிராட்டிதிருவடிதொழுபடலம்என்று சிலபிரதிகள்.

துப்[1]பு றச்செய்ய வாய் [5]மணித் தோகைபாற்
செப்பு றிப் [6]படி போயெனச் செப்பினான்.

(இ - ள்.) இப் புறத்து இத்தன்மையனவான செயல்கள் நிகழ்ந்த பொழுது, (இராமன்), இனிநடக்கவேண்டியதை ஆலோசித்து அநுமானை (நோக்கி), 'பவழத்தையொத்த அழகிய சிவந்த வாயையுடைய அழகிய மயில்போன்ற சாநகியினிடத்தில் (நீ) சென்று இங்குநடந்த செய்திகளையெல்லாம் சொல்வாய்' என்று சொல்லினான்; (எ-று.)

இன = இன்ன: இராவணவதம், விபீஷணனுக்கு இராமன்நீதி போதித்தல் முதலியன. பத்துப்பாட்டின் பெரும்பாணாற்றுப்படையில் "அவ்வாய் வளர்பிறை" என்பதற்கு - 'அழகிய இடத்தையுடைய வளரும்பிறை' என்றும், நெடுநல்வாடையில் "அவ்விதழவிழ்பதம்" என்பதற்கு - 'அழகியஇதழ்கள் விரியுஞ் செவ்வி' என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையெழுதிப்போந்தமைகொண்டு, இங்கு 'அச் செய்ய வாய்' என்பதற்கு - 'அழகிய சிவந்த வாய்' என்று உரைகூறப் பட்டது. இனி, அகரத்தைச் சுட்டாகக்கொண்டு, 'தோகை' என்பத னோடு இயைத்து, அத்தோகைபால் - அந்தச் சாநகியினிடத்து என்று உரைத்தலும் ஒன்று. பி - ம்:—[1]இப்புறத்தின்னசெயலுறும்வேலையில், இப்புறத்தினிதெய்துறு மெல்லையில், இப்புறத்தின்னது...காலையில், இப்புறத்தினசெய்கையிக்காலையென்று. [2]அப்புறத்துனே, அப்புறத் தினே. [3]உன்னும். [4]உறழ். [5]பெருந். [6]படியோய். (௬௯௪)

௯௫.—அநுமன் இராமன்கூறியசெய்தியைச் சீதையினிடம் சொல்லத் தொடங்குதல்.

[1]வணங்கி யந்தமின் மாருதி [2]மாமலர்
[3]அணங்கு [4]சேர்கடி காவுசென் [5]றண்மினான்
உணங்கு கொம்புக் குயிர்[6]தரு நீரெனச்
சுணங்கு தோய்முலை யாட்[7]கிவை [8]சொல்லுவான்.

(இ - ள்.) சிரஞ்சீவியான அநுமான், (இராமனை) வணங்கி (விடை பெற்றுச் சென்று), சிறந்த தாமரைமலரில்வசிக்கும் பெண்தெய்வ மான இலக்குமியினம்சமாகிய சீதாபிராட்டி (சிறை)யிருந்த காவலுள்ள அசோகவனத்தை யடைந்து, வாட்டமுற்ற பூங்கொம்புக்கு (மீளத்) தழைத்தற்குக்காரணமான நீர்போலச் சுணங்குபொருந்திய முலையை யுடையளான அப்பிராட்டிக்கு (நடந்த) இச்செயல்களைச் சொல்வானா யினன்; (எ - று.)—அநுமான்கூறியதை ௯எ-ஆங் கவிமுதல் மூன்றுகவி களிற் காண்க. பி-ம்:—[1]வணங்கியேநின்ற, வணங்கியேகியே, வணங்கி யேகிய, வணங்கியெய்திய [2]வாரணம். [3]இணங்கு. [4]தன், தண். [5]எய்தி னன். [6]பெறு, வரு. [7]அவை. [8]சொல்லினான். (௬௯௫)

௯௬.—அநுமான் களிப்புப்பாராட்டிக்கொண்டு சீதையின் முன்னிலையிற் பாடி ஆடுதல்.

பாடி னான்[1]திரு நாமங்கள் பன்முறை
கூடு [2]சாரியிற் குப்புற்றுக் கூத்துநின்று

ஆடி யங்கை யிரண்டு [3]மலங்குறச்
சூடி நின்றனன் குன்றன்ன தோளினன்.

(இ - ள்.) மலைபோன்ற தோள்களையுடையவனான அநுமான்,— (இராமபிரானுடைய) திருப்பெயர்களைப் பலமுறைசொல்லிப் பாடிக்கொண்டும், பொருந்திய வலசாரிஇடசாரிமுறையிலே குதித்துத் திரிந்துகொண்டும், (ஒருநிலையில்)நின்று ஆநந்ததாண்டவஞ்செய்துகொண்டும், அழகிய கைகளிரண்டையும் நடுக்கமடையக் கூப்பித் தலைமேல் வைத்துக்கொண்டும், (பிராட்டியின் எதிரிலே) நின்றான்; (எ - று.)— இது செய்திசொல்லிய அநுமான் நிலையை மொழிந்தது.

அலங்குற—மிகுதியாக நடுங்க; களிப்பின் மிகுதியால் உடம்புநடுங்குதல், இயல்பு. இனி, அலங்குற என்பதற்கு - ஒளிசெய்ய என்றும், மலர்போலப் பொருந்த என்றும், அலங்காரமமைய என்றும் உரைப்பினும் அமையும். தலைமேற் கைகளிரண்டையுங் கூப்பிவைத்துத் தொழுதல், த்ர்யங்கநமஸ்கார மெனப்படும். பி - ம்:—[1]மெய்ப்படித் தலமண்டலம். [2]சாரிகைகூத்துக்குனித்துநின்று, சாரிகைக்கொட்டிக் குனித்துநின்று, சாரியிற்கூட்டிக்குனித்துநின்று. [3]இணங்குற. இச்செய்யுள் சிலபிரதியில் "ஏழைசோபனம்" (கஎ) என்றதன்பின் உள்ளது.()

கஎ.—அநுமான் சோபனம்பாடிக்கொண்டு செய்திகூறியதை இதுமுதல் மூன்றுகவிகளிற் கூறுகிறர்.

ஏழை சோபன மேந்திழை சோபனம்
வாழி சோபன [1]மங்கல சோபனம்
[2]ஆழி யான வரக்கனை [3]யாரியச்
சூழி யானை [4]துகைத்தது சோபனம்.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (மகளிர்க்குஉரிய குணமாகிய) பேதைமையுடையாளே! சோபனம்: தரித்த ஆபரணங்களையுடையாளே! சோபனம்: வாழ்வாயாக: சோபனம்: மிக்க மங்களம்: (தீக்குணங்கட்கும் தீச்செயல்கட்கும்) வரம்பெல்லையான இராக்கதனாகிய இராவணனை நன்குமதிக்கத்தக்கவனான இராமபிரானாகிய முகபடாத்தையுடைய பட்டத்துயானை (காலினால்) துகைத்து அழித்துவிட்டது; சோபனம்; (எ - று.)

சோபனம் என்பதற்கு - (நினக்கு) மங்களமுண்டாயிற்று என்றும், (நினக்கு) மங்கலச்செய்தி (கூறுகின்றேன் யான்) என்றும் கருத்து. மங்கலசோபனம் என்பது-ஒருபொருட்பன்மொழி. ஏழை-ஏழைமையுடையாள்; பண்பாகுபெயர். ஏழைமையென்பது - மகளிர்க்கு உரிய குணம் நான்கனுள் ஒன்றாகிய 'மடமை' என்பதன் பரியாயப்பெயராய் நின்றது: இனி, சிலகாலமாக எளிமையடைந்திருந்தமையைக் குறித்து 'ஏழை'என விளித்ததாகவுங் கொள்ளலாம். ஆழிஆன - கடல்போன்ற எனினுமாம். அரக்கனை ஆரியச்சூழியானை துகைத்தது - உருவகம். வலிமை, நடை, மேன்மையானதோற்றம் என்பனபற்றி, இராமனை

யானையென்றார். பி-ம்:—[1]மங்கலஞ். [2]ஆழியானைய. [3]அண்ணலாஞ். [4]தொலைத்தது. இங்கே ஒருபிரதியிற் சிலபாடல்கள் காணப்படுகின்றன: அவைவருமாறு:—

1. மங்கை சோபன மாமயில் சோபனம்
பங்க யத்துறை பாவையே சோபனம்
மங்குல் வாளி யரக்கனை யாரியச்
சிங்க மின்று சிதைத்தது சோபனம்.

2. வல்லி சோபன மாதரே சோபனம்
சொல்லி னல்லநற் றோகையே சோபனம்
அல்லி னாளி யரக்கனை யாரிய
வல்லி யங்கள் வதைத்தது சோபனம்.

3. அன்னை சோபன மாயிழை சோபனம்
மின்னி னுண்ணிடை மெல்லியல் சோபனம்
அன்ன வாளி னரக்கனை யாரிய
மன்ன னின்று வதைத்தது சோபனம்.

4. நாறு பூங்குழ லுயகி சோபனம்
நாறு பூங்குழ லாரியே சோபனம்
ஆறு வாளி யரக்கனை யாரிய
வேறு மின்று மெரித்தது சோபனம்.

5. சொன்ன சோபனந் தோகை செவிபுக
அன்ன முன்னி யனுமனை நோக்கியே
அன்ன போரி லறிந்துள தையநீ
இன்ன மின்ன மியம்புதி யாலென்றாள். (௩௲௩௭)

௧௮. தலை[1]கி டந்தன தாரணி தாங்கிய
மலை[2]கி டந்தன போன்மணித் [3]தோளெனும்
அலை[2]கி டந்தன வாழி [4]கிடந்தென
நிலை[5]கி டந்த வுட[6]னிலத் தேயென்றான்.

(இ - ள்.) '(அந்த இராவணனுடைய) தலைகள் பூமியைத்தாங்குகிற மலைகள்(விழுந்து)கிடந்தனபோலக்(கீழேவிழுந்து)கிடந்தன; இரத்தினாபரணங்களையணிந்த (அவனுடைய) தோள்கள் கடலிற் பொருந்தினவாகிய அலைகள்போலக் கீழ்விழுந்துபுரண்டன; (அவனுடைய) உடம்பு தரையிலே (விழுந்து)அசைவின்றிக்கிடந்தது' என்று (அநுமான் சீதைக்குச்) செய்திகூறினான்; (எ - று.)

பருத்தவடிவத்தோடு நிலத்திற்கிடத்தல் பற்றித் தலைக்கு மலையையும், நீண்டவடிவத்தோடும் புண்ணீர்ப்பெருக்கோடும் வரிசைவரிசையாய்ப் புரளுதல்பற்றித் தோளுக்குக் கடலின்அலையையும் உவமைகூறினார். மலைகள் பூமியின்கீழ் நெடுந்தூரமளவும் வேரூன்றிநின்று பூமியைத் தாங்குதல்பற்றி 'பூதரம்' என்று ஒருபெயர் பெறுதலால், 'தாரணிதாங்கிய மலை' எனப்பட்டது. தாரணி-தரணியென்பதன் விகாரம். மணி -

அழகும், உறுதியுமாம். 'கிடந்தன' என்ற சொல் மூன்றனுள், முதலதும், மூன்றாவதும் - முற்று; மற்றையது-பெயர். கிடந்த - கிடந்தது என்பதன் விகாரம். பி-ம்:-[1]கிடந்ததும். [2]கிடந்தது. [3]தோணிரை. [4]கிடந்தன. [5]கிடந்ததும்வாளி, கிடந்ததுடல். [6]அநிலத்து. (௩சுரு௮)

கக. அண்ண [1]லாணையின் [2]வீடண னுமறக்
[3]கண்ண லாதவன் [4]காத ரொடர்தலாற்
பெண்ண லாது பிழைத்[5]துள தாகுமென்று
எண்ண லாவதொர் பே[6]ரில தாலென்றான்.

(இ - ள்.) 'பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமபிரானது கட்டளையினாலும் விபீஷணனாகிய கொடுந்தன்மையுடையனல்லாதவனது அன்பு இடைவிடாமலிருந்ததனாலும் பெண்பால்ஒழியப் பிழைத்துள்ளதென்று நினைக்கத்தக்கபேர் ஒன்றும் (இலங்கையில்) இல்லையாயிற்று' என்றும் (அநுமான் சீதைக்குச் செய்தி) கூறினான்; (எ - று.)

இலங்கையில் மகளிர்பிழைத்திருத்தல் உண்டேயன்றி ஆடவரில் பிழைத்துள்ளபேர் எவரும்இல்லையென்னும்படி அரக்கரனைவரும்அழிக்கப்பட்டன ரென்பது, பின்னிரண்டடியின்கருத்து. அந்த அரக்கரழிவுக்குக்காரணம், இராமபிரானது சங்கல்பமும், அதற்குஏற்ப இலங்கையினின்றுவந்து சரணமடைந்த விபீஷணன் அவ்விடத்து மருமங்களையெல்லாம் உரியசமயங்களில் எடுத்துச்சொல்லி அன்போடு துணைபுரிந்தமையு மாதலால், அவை, முன்னிரண்டடியிற் குறிக்கப்பட்டன. மறக்கண்ணலாதவன் - தருமாத்துமா வென்றபடி. பி - ம்:---[1]ஆணையவ். [2]வீடணனுமகர். [3]கண்ணனானவன், கண்ணிலாதவன். [4]காரொடுந்தாரலாற், காரொடர்ந்தானலாற். [5]உள. [6]இலதாம். (௩சுருக)

௨௦.—அச்செய்திகேட்டவுடனே பிராட்டியினுடம்பு பூரித்தல்.

ஒருக லைத்[1]தனி [2]யொண்மதி நாளொடும்
வரு[3]க லைக்குள் [4]வளர்வது [5]மானுறப்
பொரு[6]க லைக்குலம் [7]பூத்தது [8]போன்றனள்
[9]பருக லுற்ற வமுது பயந்தநாள்.

(இ - ள்.) பானஞ்செய்தற்குஉரிய அமிருதம்போன்ற அவ்வசனங்களை (அநுமான் சீதைக்கு)ச் சொன்னபொழுது,—(அவள்),---ஒற்றைக்கலையொன்றையேயுடைய ஒள்ளிய பிறைச்சந்திரன் நாள்தோறும் (ஒவ்வொன்றாத்) தோன்றுகின்ற கலையில் வளர்வதாகிய மான் பொருந்துதலால் அங்ஙனங் களங்கமாகிய மான் தோன்றாம லிருக்கும் பொருட்டு நெருங்கிய அக்கலைகளின் தொகுதியாவும் ஒருங்கே நிரம்பப்பெற்றதைப் போன்றனள்; (எ - று.)

பருகலுற்ற அமுது பயந்த நாள் - சுபசெய்தியைக்குறித்த இன்சொற்களாகிய திவ்வியாமிருதத்தை அநுமான்இவ்வாறு பிராட்டிக்குத் தந்தபொழுது என்க. முன்பு விரகதாபத்தாலும் மற்றும்பலவகைச் சோகத்தாலும்நாளடைவிலே மிகவும்மெலிந்துகிடந்தபிராட்டியின் அவயவங்கள், அநுமான்கூறிய சுபவசனத்தைச்செவியுற்று உணர்ந்தவளவி

லே, சடக்கென்று பூரிப்படைந்தன; அதனால், ஒற்றைக்கலையுள்ள பிறைச்சந்திரன் நாளடைவிலன்றிச் சடக்கென்று மற்றைக்கலைகள் பதினைந்தும்ஒருங்கே நிரம்பப்பெற்றாற்போன்றனவென்றார். பாற்கடல் கடைந்தகாலத்தில் தேவாமிருதத்துடனே ஒற்றைக்கலையுடையதாய்த் தோன்றிய பிறைச்சந்திரன், பின்புநாளடைவில் தன்கலைகள் வளர்ந்து வருதலையும்,தன்வடிவத்திற் களங்கம் நன்குவிளங்குதலையுங் கண்டு, தனக்கு இக்களங்கம் நேர்தற்கு ஏது கலைகள் ஒருங்கேவளராது நாள்தோறும் வளர்தலாகியகுறையேயென்று கருதி, அக்களங்கத்தை யொழித்தற்பொருட்டுஒருங்குகலைகள்வளரப்பெற்றாற் போன்றனவெனக் கற்பித்துக்கூறியவாறும்: தற்குறிப்பேற்றவணி. [8]போன்றனஎன்றபாடத்தைக் கொண்டுபிராட்டியின் திருமேனியிற்பூரித்த அவயவங்கள் தனித்தனி களங்கமில்லாத பூர்ணசந்திரன்போலு மென்றலுமொன்றுகலை - சந்திரன்பங்கு. பி - ம்:—[1]கவின். [2]வெண். [3]கலைக்கு. [4]வளர்ந்தது, வருவது, வருமறு. [5]மானுறு, மாறுறப். [6]வரை. [7]பூத்தன. [9]பருகலுற்றவமுதன்னபான்மையாள். (௩௧௪௦)

உக.—அகத்துமகிழ்ச்சிதோன்றப் பிராட்டியின்கொங்கை பருத்தல்.

ஆம்பல் வாயு முகமு [1]மலர்ந்திடத்
தேம்பு நுண்ணிடை [2]தேயத் திரண்முலை
ஏம்ப[3]லாசைக் கிரட்டி[4]வந் தெய்தினாள்
பாம்பு [5]கான்ற பனிமதிப் [6]பான்மையாள்.

(இ-ள்.) (இராகுகேதுக்களென்ற) பாம்பினாலுட்கொள்ளப்பெற்று வெளிப்பட்டகுளிர்ந்த சந்திரன்போன்ற தன்மையையுடையவளான சீதை,—ஆம்பல்மலரையொத்த வாயும் முகமும் (மகிழ்ச்சிக்கு அறிகுறியாக) அலர்ந்திடாநிற்க, வாடுகின்ற நுண்ணிய இடை பின்னும்வருந்தும்படி திரண்டமுலை மகிழ்ச்சியோடுதோன்றிய காதலினால் இரட்டிப்பாகவந்து பொருந்தப்பெற்றாள்; (எ - று.)—பி - ம்:—[1]அலர்ந்தன. [2]நோவத். [3]ஆசைக்கிடாம். [4]விசைத்திடப். [6]பாவையாள். [5]'கானற்' என்றும் படிக்கலாம். (௩௧௪௧)

உஉ.—பிராட்டியின் உவகைப்பூரிப்புமுதலியவற்றின் வருணனை.

[1]புந்தி யோங்கு முவகைப் பொருமலோ
உந்தி யோங்கு [2]மொளிவளைத் [3]தோள்கொலோ
[4]சிந்தி யோடு [5]கலையுடைத் தேர்கொலோ
முந்தி[6]யோங்கின யாவை [7]முலைகொலோ.

(இ - ள்.) (அந்தப்பிராட்டியின்) மனத்திலோங்குகின்ற உவகையினாலுண்டான பூரிப்போ, (உடற்பூரித்தலால்) தள்ளப்பட்டு அகல்கின்ற ஒளிபொருந்திய வளையலையணிந்த தோள்களோ, அவிழ்ந்து அப்பாற்போய்விடுகின்ற ஆடையணிந்த அல்குலோ, தனங்களோ, முற்பட்டுஓங்கினவை யாவையோ? (எ - று.)

தேர் = தேர்த்தட்டு. அல்குலை உவமையினாலேயே கூறினார். உவகைமிகுதியில் அரையிலாடையில்லாதென்க. பி - ம்:—[1]புந்தியோ போர், புந்தியோகல். [2]ஒளிர். [3]தோள்களோ. [4]சிந்தையோடு, சிந்தியோங்கு. [5]கடையுடைத். [6]ஓங்கியது. [7]முலைகளோ. (௩கூ௪உ)

உ௩.—பிராட்டியினிடம்தோன்றிய மகிழ்ச்சியின்நிலை.

குனித்த சோலைப் புருவங்கள் கொம்மைவேர்
பனித்த கொங்கை மழலைப் [1]பணிமொழி
[2]நுனித்த [3]தொன்று நுவல்வ தொன் றுயினள்
[4]கனித்த வின்களி [5]கள்ளினிற் காட்டுமோ.

(இ - ள்.) அழகியபுருவங்கள் வளையப்பெற்றன: கொங்கைகள் பருமையோடு வெயர்வை யரும்பப்பெற்றன; கொச்சையாகச்சொல்லப் படுகின்ற சொற்களையுடையஅச்சீதை கூர்ந்துஆலோசித்ததுஒன்றும் சொல்லுவதுமற்றொன்றுமாகப் பெற்றாள்; முதிர்ந்த இனியமகிழ்ச்சி கள்ளைப்போன்றுதோன்றுமோ? (எ-று.)

புருவங்குனித்தல்முதலியன கள்ளுண்டார்க்கும் நிகழ்வனவாதலால், பிராட்டியினிடத்து அவை நிகழ்ந்ததுகண்டு 'களி கள்ளினிற் காட்டுமோ' என்றார். பி-ம்:---[1]பனி. [2]நுனிப்பது. [3]ஒன்றாய். [4]கனிக்கவின். [5]கள்ளுண்டுகாட்டுவாள், கள்ளினைக்காட்டுமால், கள்ளென்று காட்டுமால், கண்ணின்றுகாட்டுமால். (௩கூ௪௩)

உ௪.—பிராட்டி களிப்புமிகுதியால் ஒன்றுஞ்சொல்லமாட்டாது வாளாவிருத்தல்.

அனைய ளாகி யனுமனை நோக்கினள்
இனைய தின்ன தியம்புவ தென்பதோர்
[1]நினைவி லாது நெடிதிருந் தாளெடு
மனையின்[2]மாசு துடைத்த மனத்தினள்.

(இ - ள்.) பெருமையையுடைய இல்லறவாழ்க்கையினது குற்றத்தைப் போக்கிய மனநிலையையுடையவளான சீதை,—அத்தன்மையளாய் [உள்ளமும் உடலும் பூரித்தவளாய்],—அனுமனைப் பார்த்து, இத்தன்மையான இன்னவார்த்தையைச் சொல்வதென்ற ஓர் எண்ணம் தோன்றாமலே நெடும்பொழுது சும்மாஇருந்தாள்; (எ - று.)

'நெடுமனையின் மாசு துடைத்த மனத்தினள்' என்பதன் கருத்து:-- இல்லறம் துறவறம் என்ற இருவகையறத்துள் இல்லறம் சிறந்ததோ துறவறம் சிறந்ததோ என்று ஆராயுமிடத்து, இல்லறவாழ்வில் வாழ்க்கைத்துணைவியரான மகளிர் சிறுபான்மை கற்பழிவு நாணமின்மை அடங்காமை முதலிய குணக்கேடு உடையராதல் காணப்படுதலால், அத்தன்மை இல்லறவாழ்க்கைக்கே ஒருகளங்கமாய், 'மனைவிமாண்புடையளாயின் இல்லறம் சிறந்தது; இல்லையாயின், துறவறமே சிறந்தது' என்று விகற்பித்துச் சொல்லும்படி ஆகிறதன்றோ? அப்படிப்பட்ட அபவாதம் முற்றும் ஒழியும்படி,பிராட்டி,தான் பிறன்வசப்பட்டுப் பத்து

மாசகாலம் அவனதுநகரத்திற் பலவகைத்துன்பங்கட்கும் இடமாகச் சிறையிருப்பிலிருக்கையிலும் கற்புநிலையைக் கைவிடாமையாகிய மன நிறையையுடையவ ளென்பதாம். மனை - வீடு: இல்வாழ்க்கைக்கு ஆகு பெயர். ஒரு பெண்ணினுடைய நடக்கை தனது நன்மைதீமைகளால் தான் பிறந்த குடும்பத்துக்கும் புகுந்த குடும்பத்துக்கும் புகழை யும் பழியையும் முறையே உண்டாக்கக்கூடுமே: அங்ஙனம் தான் வளர்ந்த குடியாகிய சனககுலத்துக்கும், புகுந்தகுடியாகிய ரகுகுலத்துக்கும் சிறிதும் களங்கமுண்டாகாதபடி மனத்தைக் கற்பு நெறியில் நிறுத்திய பிராட்டி யென்றுங் கருத்துக்கொள்ளலாம்; மனை- குடி, குலம். பி-ம்:—[1] நினைவிலாமை. [2] மாட்சி. (௩௯௪௪)

உரு.--அநுமான்பிராட்டியைநோக்கி'ஒன்றும்சொல்லாததேன்?'என்றல்.

[1]யாதி தற்கொன் [2]றியம்புவ லென்பது
மீது யர்ந்த வுவகையின் விம்மலோ
தூது பொய்க்குமென் றோவெனச் சொல்லினன்
நீதி வித்தக னங்கை [3]நிகழ்த்தினள்.

(இ - ள்.) நியாயமுணர்ந்து அவ்வழியில்நடப்பவனான அநுமான், —(சீதையை நோக்கி, 'யான்செய்திகூறியதற்கு நீ மறுமாற்றமொன் றுங் கூறாமல் மௌனமாயிருத்தல்), வரம்புகடந்து மேலிட்ட களிப் பின் பூரிப்பினால் 'இம்மொழிக்குஏற்ப என்னமறுமொழி கூறுவேன்?' என்று ஒன்றும் தோன்றாதிருந்தபடியோ? (அன்றி), இத்தூதன்வா ர்த்தை பொய்யாயிருக்கக்கூடுமென்றுஎண்ணி, ('இம்மொழிக்கு என்ன மறுமொழி கூறுவேன்?' என்று)உபேக்ஷித்துவிட்டபடியோ?' என்று (விகற்பமகாச்) சொல்லிவினவினன்; மகளிரிற்சிறந்தவளான பிரா ட்டி (அதற்கு ஏற்ற மறுமொழி) கூறுபவளானாள்; (எ-று.)—அதனை, அடுத்த நான்குகவிகளிற்காண்க.

தான்வகுத்துக்கூறுவான், கூறியதுகூறுவான், ஓலைகொடுத்து நிற்பான் என்று மூன்றுதிறத்தராய்த் தலை இடை கடையென்றுவகுக் கப்படுகிற தூதர்களுள் தான்வகுத்துக்கூறுதலாகிய உத்தமவிலக்க ணம் அமைந்தவன் மந்திரிக்குச்சமானமானவ னாதலின் அத்தன்மைய சிறப்பையுடைய தூதன் ஆஞ்சநேய னென்பார், 'நீதிவித்தகன்' என் றார். பி-ம்:—[1] எது. [2] இயம்பலே, இயம்பலம். [3] நிகழ்த்துவாள் (௩௯௪௫)

உகூ.—இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்: பிராட்டியின் மறுமொழி.

மேக்கு [1]நீங்கிய வெள்ள வுவகையால்
[2]ஏக்க முற்[3]றொன் றியம்புவ தியாதென
நோக்கி நோக்கி [4]யரிதென நொந்துளேன்
பாக்கி யம்[5]பெரும் பித்தும் பயக்குமோ.

(இ - ள்.) (தனக்கு) மேலானது (ஒன்று)இல்லாததான களிப்புப் பெருக்கினால் (யான்) திகைப்படைந்து (இச்சுபவசனத்திற்கு ஏற்ப)

என்னமறுமொழி கூறுவதுஎன்று ஆராய்ந்துகொண்டு, '(இதற்கு ஏற்ற படி என்னாற் சொல்லக்கூடியவார்த்தை ஒன்றும்) இல்லை' என்று எண்ணி, (அதனால்) சிந்தைகொண்டுள்ளேன்; (ஒருவர்க்குப்) பாக்கியம்(நேர்தல்)இப்படிப்பட்ட பெரியபித்தத்தையும் தரவல்லதோ? (எ-று.)

மேக்குநீங்கிய வெள்ளவுவகையால் எக்கழுற்று - அளவிலானந்தத்தாற் பரவசப்பட்டு. வெள்ளவுவகை-உவகைவெள்ளம். பயக்குமோஎன்ற ஓகாரம்-வினாவகையால், வியப்பை விளக்கும்; பித்தத்தைப்போக்கக் கூடியதாகிய பாக்கியம் பெரும்பித்தத்தைத் தருவதாமோ வென்று வியந்தபடியாம். பாக்கியம்-நல்வினைப்பயனால் நன்மைநேர்தல். பி-ம்:—[1]நீங்கிய. [2]ஆக்கம். [3]இங்கு. [4]இருந்தழி, இருந்தனன். [5]இது,வேறு. ()

௨எ. முன்னை நீக்குவென் மொய்சிறை யென்றநீ
பின்னை [1]நீக்கி[2]யுவகையும் பேசினை
[3]என்ன பேற்றினை யீகுவ தென்பதை
உன்னி நோக்கி யுரைமறந் [4]தோவினேன்.

(இ - ள்.) முன்பு[முதன்முறை தூதனாய்க் கடல்தாவிவந்தபோது] 'வலிய (உனது) சிறையிருப்பை (நான்) நீக்குவேன்' என்று (எனக்கு) அபயங்கூறிய நீ பின்னை (அவ்வாறே சொன்ன சொல் தவறாமல் என் சிறையிருப்பை) நீக்கி [சிறையிருப்புக்குக் காரணமான இராவணனைத் தொலைத்தற்கு உதவி] அச்சந்தோஷசமாசாரத்தை (எனக்குவந்து) கூறுதலுஞ்செய்தாய்; '(இப்படி மகோபகாரஞ்செய்த உனக்கு), என்ன பாக்கியத்தைக் (கைம்மாறாகக்)கொடுப்பது? [நீசெய்த உதவிக்கு ஏற்ப ஈயத்தகுதியுடையது யாதொன்றும் இல்லையே]' என்கிற இவ்வொன்றையேஎண்ணிச் சிந்தித்து, (அச்சிந்தையின்மிகுதியால்) பேசமறந்து ஒன்றுஞ் சொல்லாது விட்டேன்; (எ - று.)

உம்-இறந்ததுதழுவிய எச்சம். ஈகுவது - தொழிற்பெயர், வினைமுற்றுத்தன்மைப்பட்டது; இதனை, வடநூலார் 'பாவே ப்ரயோகம்'என்பர். நோக்குதல் - மனத்தினால் ஆராய்தல். பி - ம்:—[1]நோக்கி, நீக்கினை. [2]ஓகையும். [3]என்னபேற்றினையீகுவனென்பதை, என்னவின்றானக்கீகுவனென்பதை, என்னையீகுவனென்பதுபெற்றிலன். [4]ஓயினேன், ஓய்வினேன். (௩கூ௬எ)

௨அ. உலக மூன்று[1]முதவற் கொருதனி
விலை[2]யி லாமையு [3]முன்னினென் [4]மேலவை
[5]நிலையி லாமை நினைந்தனெ னின்னையென்
தலையி னாற்[6]றொழ வேதகுந் [7]தன்மையோய்.

(இ - ள்.) தன்மையையுடையவனே! (நீசெய்த பேருதவிக்குக் கைம்மாறாக) மூன்று உலகங்களையும் (உனக்குக்) கொடுக்கலாமென்று ஆலோசிக்குமிடத்து(அவை நீ செய்த பேருதவிக்கு) ஒரு சிறிதும் ஈடாகாமையையும் அறிந்தேன்; மற்றும்அவ்வுலகங்கள் என்றும்நிலைநிற்பனவன்றி அழியுந்தன்மையனவாதலையும் கருதினேன்; (இங்ஙனம் கைம்

மாறு யாதும் இன்றாகவே), உன்னை (நான்) என் தலையினால் வணங்கு தலே தகுதியாம்; (எ - று.)

விலையிலாமையும் என்ற உம்மை - எதிரது தழுவிய எச்சப் பொருளோடு இழிவுசிறப்புப் பொருளுமுடையது. 'அவைநிலையிலாமை நினைந்தனென்' என்பதன் கருத்து-அவ்வுலகங்கள் பெருவிலையனவாயினும் நிலையில்லாதனவாதலால், நீ செய்த நிலையான உதவிக்கு ஈடாகாஎன்பதாம்; "காலத்தினாற்செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது", "பயன்றூக்கார்செய்த வுதவி நயன்றூக்கின், நன்மைகடலிற் பெரிது" என்ற திருக்குறள்கள் இங்குக் காணத்தக்கன. 'தொழுவே தகும்' என்ற ஏகாரம் - பிரிநிலையோடு உயர்வுசிறப்புப்பொருளது. ஆண்டாள் "தலையல்லாற் கைம்மாறிலேனே"என்று அருளிச்செய்ததை இங்கே அறிக. அதற்குப் பூர்வாசாரியர்கள் 'நீ பண்ணின உபகாரத்துக்கு இத்தலையாற்செய்வது ஒன்று உண்டோவென்று என் தலையை உனக்கு ஆக்கிக் காலமெல்லாம் உன்காலிலேவணங்கி வர்த்திக்குமத்தனையென்கிறாள்' என்று வியாக்கியானமும், "'ஸர்வஸ்யகாத்ரஸ்ய ஶிர:ப்ரதாநம்" என்கிறபடியே அவயவவிசிஷ்டனான என்னை உனக்குச் சேஷமாக்கிக் காலமெல்லாம் அடிமைசெய்கை யொழிய வேறுஉபகாரமில்லை யென்றாள்' என்று அரும்பதமும் இட்டருளியவாறும் காண்க. தன்மை-ஆடவர்க்கு உரிய குணமாகிய அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி என்பனவும், மற்றும்பல உத்தமகுணங்களுமாம். பி-ம்:--[1]உதவினுமுத்தம. [2]இலாமையின். [3]முன்னலன். [4]மேவுசீர். [5]நிலையினவென்றெண்ணினன், நிலையிலாவதென்றெண்ணியும், நிலைநிலாதவென்றெண்ணினன். [6]தொழவுந். [7]தண்மையோய், தன்மையே. (௩௯௪௮)

௨௯. ஆதலானொன் [1]றுதவுத லாற்றலேன்
யாது செய்வதென் றெண்ணி யிருந்தனென்
[2]வேத நன்மணி [3]வேகடஞ் செய்தன்ன
தூத வென்னினிச் செய்திறஞ் சொல்லென்றாள்.

(இ - ள்.) இங்ஙனம் ஆகுதலால் யாதொன்றையும் (உனக்குக் கைம்மாறாகக்) கொடுக்க இயலாதவளான நான் என்னசெய்யக்கடவதென்று சிந்தித்துச் சும்மாஇருந்தேன்; (அன்றி, வேறன்று): துளையிட்டு உபயோகித்தற்குஉரிய நல்லஇரத்தினத்தை, சாணைபிடித்து அழுக்ககற்றி ஒப்பனைசெய்தாற்போன்ற தூதனே! இனி (யான் உன்பக்கல்) செய்யத்தகும் செயல் யாது?(நீயே)சொல்வாய்? என்றாள்,(பிராட்டி);(எ-று.)

'மீதுயர்ந்த வுவகையின் விம்மலோ தூதுபொய்க்கு மென்றோ' என்று அநுமான் ஐயப்பட்டு வினவியதற்கு, பிராட்டி 'பின்னதன்று முன்னதே'என ஐயமகற்றி விடையளித்தவாறும். வேதம் - வடசொல். தொளையிடுகையென்று பொருள். மாசுமறுவற்ற இரத்தினம்போலச் சிறந்தவனாய் அனைவரும் தலைமேற்கொண்டு கொண்டாடத்தக்க உத்தமதூதன் அநுமானென்க. பி - ம்:—[1]இயம்புதல். [2]வேதநாயகன். [3]ஏவியசெய்திடும், வேகடஞ்செய்மணி, மேவியசெய்திடும். (௩௯௪௯)

௩௦.—அநுமான் 'இன்னது செய்யவேண்டுவது' என்றல்.

எனக்க ளிக்கும் வரமெம் பிராட்டிநின்
மனக் [1]களிக்குமற் [2]றுன்னையம் மானவன்
றனக்க ளிக்கும் [3]பணியினுந் தக்கதோ
புனக்க ளிக்குல மாமயில் போன்றுளாய்.

இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) எமது தலைவியே! வனத்திலே களிப்போடுதிரிகிற சிறந்தசாதி மயிற்பேடையையொத்துக் களித்துள்ளவளே! எனக்கு(நீ)கொடுத்தருளும் வரம் நீ அடைந்திருக்கிற மனக்களிப்புக்கு ஏற்ப உன்னை (உடன்கொண்டுபோய்) அந்த மநுகுலதிலகனை ஸ்ரீராமபிரானுக்குச் சமர்ப்பிக்கின்ற அடிமைத்தொழிலினும் தகுதியானது வேறொன்று உண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)—'எனவுரைத்து' என வருங் கவியோடு தொடரும்.

'நீ இப்பொழுது அடைந்த மனக்களிப்புக்கு ஏற்ப, இனி உடனே நான் உன்னை அழைத்துக்கொண்டுபோய் இராமனது சன்னிதியிற் சேர்க்கும்படி எனக்கு அநுமதியளித்தலே நீதந்தருளவேண்டும் வரம்' என்றான், அநுமான். மானவன் - (வைவசுத)மநுவினது குலத்திற் பிறந்தவன்: வடமொழித் தத்திதாந்தநாமம். பி-ம்:--[1]களிப்பும். [2]உன்னி. [3]பணியிது. (௩கூ௫0)

௩௧.—மற்றும் அநுமான் சீதையை நோக்கி 'கொடிய அரக்கியரை யான் வதைக்குமாறு அனுமதிதருக' என்றல்.

எனவு ரைத்துத் [1]திரிசடை யாளெம்மோய்
[2]மனவி னிற்[3]சுடர் மாமுக மாட்சியாள்
தனையொ ழித்திவ் வரக்கியர் தங்களை
வினையி னிற்சுட வேண்டுவென் யானென்றான்.

(இ - ள்.) என்று சொல்லி (மற்றும் அநுமான் பிராட்டியை நோக்கி), 'எமது தாயே! இரத்தினம்போலக் களங்கமற்றுவிளங்குகிற அழகிய முகத்தின்மலர்ந்ததோற்றமுடையவளான த்ரிஜடையென்னும் இராக்கதமாதைத்தவிர்த்து, (மற்ற) இந்த இராக்ஷசிகளை யான் கொடியவகையால் எரித்தழிக்க விரும்புவேன்,' என (மற்றொருவரம்) வேண்டினன்; (எ - று.)

அரக்கியரனைவரும் இராவணனது கட்டளைப்படி சீதையை இணக்கும்பொருட்டுப் பற்பலவாறு வெருட்டிவருத்த அப்பொழுதெல்லாம் திரிசடை அச்சீதைக்கு உற்றதுணையாய்நின்று இன்சொற்களால் தேறுதல்கூறிவந்தமையை அநுமான் தூதுசென்றபோது கட்புலனாகக் கண்டனனாதலால், அவளைவிட்டுக்காவற்றொழில்பூண்ட மற்றை யரக்கியர்களையெல்லாம் யான் இப்பொழுது பலவாறு உபத்திரவித்து வதைக்க விரும்புவேனென்றான். மனவு - இரத்தினப்பொதுப்பெயர்.

எம்மோய் என்றதைத், திரிசடைக்கு அடைமொழியாக்கி, எமது தாய்போன்றவளான திரிசடையை யென்றலும் ஒன்று; அவ்வுரைக்கு,

பிராட்டிபக்கல் அன்புடையவளாயிருந்தமைபற்றித் திரிசடை அநுமானால் எமதுதாய்போன்றவ ளென்று பாராட்டப்பட்டன ளென்க. பி-ம் —[1]திரிசடையாளெனும், திரிசடையாயசெம், திரிசடையெம்மைசெம். [2]மனையினிற். [3]தொடருமனமாட்சியாள். (௩௯௫௧)

௩௨.—இதுவும் அது.

உரை[1]ய லாவுரை யுன்னை [2]யுரைத்துராய்
[3]விரைய வோடி [4]விழுங்குவ மென்றுளார்
[5]வரைசெய் மேனியை வள்ளுகி ராற்பிளந்து
[6]இரைசெய் வேன்மற லிக்[7]கினி யென்னுமால்.

(இ - ள்.) சொல்லத்தகுதியல்லாதவார்த்தைகளைச் சொல்லி, விரைய ஓடி மேல்விழுந்து உன்னை விழுங்குவோ மென்று உறுக்கிப் பேசியுள்ளவர்களாகிய அரக்கியர்களுடைய மலைபோன்ற [மிகப் பெரிய]உடம்பை இப்பொழுது கூரிய (என் கைந்) நகங்களாற் பிளந்திட்டு யமனுக்கு உணவாக்குவேன் என்றுசொல்வன், (அநுமான்);(எ-று.)

கீழ்த் தொகுத்துக்கூறியதை இங்ஙனம் வகுத்துக்கூறியவாறும், இவ்வரக்கியர்களைத் தான் வதைப்பதற்குக் காரணம், இங்கு விவரிக்கப்பட்டது. கொல்வே னென்ற பொருளை 'மறலிக்கிரைசெய்வேன்' என வேறுவாய்பாட்டாற் கூறினது, பிறிதினவிற்சியணி. உராய் = உராய்ந்து: பகுதியே வினையெச்சப்பொருள்பட்டது: "வரிப்புனைபந்து" என்பதில்வரி என்பது வரிந்து என்று பொருள்படுதல் காண்க. பி-ம்:-- [1]இலா. [2]உரைத்துளார். [3]விரைவின். [5]விழுங்குவன். [5]வசை. [6]இசை. [7]இனிதென்பனால். (௩௯௫௨)

௩௩.—அநுமான்சொற்கேட்ட அரக்கியர் சீதையைச் சரணமடைதல்.

[1]குடல்கு றைத்துக் குருதி [2]குடித்திவர்
உடன்மு ருக்கியிட் டுண்குவெ னென்றலும்
அடல ரக்கிய ரன்னைநின் பாதமே
விடல மெய்ச்சர ணென்று [3]விளம்பலும்.

இதுமுதல் நான்குகவிகள்-குளகம்.

(இ - ள்.) 'இவ்வரக்கியர்களுடைய குடல்களைப் பறித்தெடுத்து இரத்தத்தைக்குடித்து உடம்பைச் சின்னபின்னமாகச்சிதைத்து உண்பேன்' என்று (அநுமான் கோபத்தோடு) சொன்னவுடனே, (அது கேட்ட) கொடுமையையுடைய ராக்ஷஸிகள், 'தாயே! உன்னுடைய திருவடியே (எங்கட்கு) உண்மையான ரக்ஷகம்:(அதனை நாங்கள்) விடமாட்டோம்' என்றுசொல்லிச் (சீதையைச்) சரணமடைந்தவளவிலே, (எ - று.)—'அன்னை அஞ்சன்மின்னென மாருதிமுகம்நோக்கி (௩௪) நோய்செயல் என்றனள் (௩௯)'என அடுத்த கவிகளோடு தொடரும்.

'குருதிகுடித்து உடல்உண்குவென்' என்றது, கோபாவேசத்தாலாகியவார்த்தை. முருக்கி - முருங்கியென்பதன் பிறவினை; முருங்குதல்-அழிதல். முன்னிரண்டடி - முன்இரண்டுசெய்யுள்களின் அநு

வாதம்: தொடர்ச்சிதோன்றக் கூறியது. பி-ம்:---[1]குடர். [2]குடித்து வந்து-இட, குடித்தவர்-உடல். [3]வெருவலும். (௩கூ௫௩.)

௩௪.—இதுமுதல் மூன்றுகவிகள் - சீதை அநுமானுக்குக் கூறுஞ் சமாதான வார்த்தையைத் தெரிவிக்கும்.

அன்னை யஞ்சன்மி னஞ்சன்மி னீரெனு
மன்னு மாருதி மாமுக நோக்கிவேறு
என்ன தீமை யிவரிழைத் தா[1]ரவன்
சொன்ன [2]சொல்லின தல்லது [3]தூய்மையோய்.

(இ - ள்.) (லோக)மாதாவான சீதாபிராட்டி, 'நீங்கள் பயப்படாதிருங்கள்பயப்படாதிருங்கள்'என்றுசொல்லி (அவ்வரக்கியர்க்கு அபயமளித்து), நிலைபெற்ற அநுமானுடைய சிறந்தமுகத்தைப் பார்த்து,—பரிசுத்தகுணமுடையவனே! இந்த அரக்கியர்கள் (தங்கள் தலைவனான) அவ்விராவணன் (தங்கட்குக்) கட்டளையிட்டபடியே கடுஞ்சொற்களை (என்னைநோக்கி)ச் சொன்னதே யல்லாமல், (தாமாக எனக்கு) வேறு என்னதீங்குசெய்தார்கள்? [ஒன்றுமில்லையே யென்றபடி]; (எ - று.)—இக்கவியில் 'எனு' என்றதும், 'நோக்கி' என்றதும் - மேல் ௩௬ - ஆம் கவியில்வருகிற 'என்றனள்' என்ற முற்றைக் கொள்ளும்.

தலைவன்கட்டளைப்படியே அடிமைகள் தொழில்செய்தல் முறையேயாதலால், ராக்ஷஸராசனான இராவணனது கட்டளைப்படியே இந்த ராக்ஷசிகள் என்னை உறுக்கிக் கடுஞ்சொற்கள் கூறினது குற்றமாகாது என்றனள் பிராட்டி யென்க இவர்கள் தாமாக ஏதேனும் தீங்குசெய்திருந்தால் மாத்திரமே குற்றமாகலா மென்பாள், 'என்னதீமை யிவரிழைத்தார்' என்றாள்; இதில்,தம்தலைவன்கட்டளைப்படி செய்யாவிடின் இவர்குற்றஞ்செய்தவராவரே யன்றி, தலைவன்சொற்படிநடந்தபோது குற்றமற்றவரேயாவரென்ற பொருளுந் தோன்றும். இங்கு வினு - இன்மைகுறித்துநின்றது

மக்கள் அறிந்தேனும் அறியாமலேனும் செய்தபிழைகளைப் பொறுத்தல் தாயின் இயல்பாதலின், அங்ஙனம் உலகினன்னையான பிராட்டி அரக்கியர்பிழையைப் பொறுத்தருளின ளென்பதுபட, 'அன்னை அஞ்சன்மின் அஞ்சன்மின் நீர் எனு'என்றார். பிராட்டி தன்னுயிரைவிடுவதாகக்கருதுகையில் திரிசடைதன்கனாநிகழ்ச்சியைக் கூறித்தேற்ற, அதுகேட்ட காவலாளியரான அரக்கியர் அஞ்சிப் பிராட்டியைச் சரணம்புக, 'உங்கட்குச்சரணமாவேன்'என்று பிராட்டி அபயமளித்தாளென ஸ்ரீவான்மீகத்திற் சுந்தரகாண்டத்து வந்துள்ளது. தூய்மை-மனமொழிமெய்களின் பரிசுத்தி; கருத்துச்சொற்செயல்களில் தீமையின்மை. பி - ம்:—[1]எனச். [2]சொல்லினவல்லது. தூயமையோ. ()

௩௫. யா[1]னி ழைத்த வினையினி னிவ்விடர்
தா[2]ன டுத்தது தாயினு மன்பினேய்
கூனி யிற்கொடி யாரல ரேயிவர்
போன வப்பொருள் போற்றலை புந்தியோய்.

(இ - ள்.) பெற்றதாய் (மக்களிடத்திற்) கொள்ளும் அன்பினும் மிக்கஅன்பை என்பக்கலுடையவனே! யான்செய்த தீவினைப்பயனால் இந்தத்துன்பம் (எனக்கு) நேர்ந்தது; இவ்வரக்கியர்கள் கூனிபோலக் கொடுமையுடையவர்களல்லரே! தேர்ந்த அறிவுடையவனே! ஒழிந்து போன அச்செயலை நீ பாராட்டவேண்டா; (எ - று.)

வினைப்பயன் தவறாதாதலின், யான்செய்த தீவினையால் எனக்கு இத்தகையஇடர் நேர்ந்தது; இதன்பொருட்டுப் பிறர்மேற் கோபிக்கக் காரணமில்லை யென்பது, முதல்வாக்கியத்தின் தாற்பரியம். நீ இத்தன்மையை அறியாயல்லை; ஆயினும், என்னிடத்து மிக்கஅன்பினால் இவ்வாறு சீற்றங்கொள்கின்றனையாயினை யென்பதுபட, 'தாயினுமன்பினோய்' என்றும், 'புந்தியோய்' என்றும் விளித்தாள். "நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" என்றபடி இவர்கள்சொல்லையும் செயலையும் பொருள்செய்யாது விடுதலே தகுதியென்பது, "போனவப்பொருள் போற்றலை" என்பதன் கருத்து. பெருந்தீங்குகட்கெல்லாம் நாற்றங்காலாய்நின்ற கொடியகூனியினிடத்தும்சிறிதும் சீற்றங்கொள்ளாதஇராமபிரானது பெருந்தகைமையை நீ அறிவாயன்றே; அங்ஙனம் இருக்க, எளிய இவர்கள்திறத்திற்சீற்றங்கொள்ளலாமோ வென்பாள், 'கூனியிற்கொடியாரலரே யிவர்' என்றாள். மூன்றாமடிக்கு - இவர்கள் (நீசொல்லுகிறபடி கொடியவர்களென்றே கொண்டாலும்) கூனியைக்காட்டிலும் கொடியவர்களல்லரே என்று பொருள்கொள்ளினுமாம்; மிகக்கொடிய அக்கூனிவிஷயத்தில் இராமன் ஏதேனும் தண்டனைசெய்யக் கண்டதுண்டோவென்பது, இதன் உட்கோள். தான் இராமனை மாயமானின் பின்னே வலியச்செலுத்தியதும், பின்பு அவன்பின்னே இலக்குமணனையும் வலியத்துரத்தியது மாகிய தீயவினையின் பயனாக இராவணன் தன்னைக்கவர்ந்து சிறைவைத்தலாகிய தீங்கு நேர்ந்தமை பற்றி, 'யானிழைத்தவினையினினிவ்விடர்தானடுத்தது' என்றனளென்னலாம். 'பகவதபசாரத்தினும் பாகவதாபசாரம் கொடியது; அது உடனே தவறாது பெருந்தீங்கு விளைக்கும்' என்கிற தத்துவப்பொருளுக்குத் திருஷ்டாந்தமாக, சீதை இலக்குமணனைக் கடிந்து வெருட்டியவுடனே அவட்குச் சிறையிருப்பாகிய கொடியதண்டனை நேர்ந்ததென்பர், உணர்ந்தோர். பி-ம்:---[1]அடுத்த. [2]அடுத்துளவாயினுந்தன்மையாற். (௩௧௫)

௩௯. எனக்கு நீயருளிவ்வரந் தீவினை
தனக்கு வாழ்விட மாய சழக்கியர்
மனக்கு நோய்செய லென்றனண் மாமதி
[1]தனக்கு மாமறுத் தந்த முகத்தினள்.

(இ - ள்.) கொடிய பாவச்செயல்களுக்கு இருப்பிடமாகவுள்ள அறிவில்லாதவர்களான இவ்வரக்கியர்களுடைய மனத்துக்குத் துன்பஞ்செய்யாதே: நீ எனக்கு இந்தவரத்தைத் தந்தருள்வாயாக என்று (அநுமானை நோக்கிக்) கூறினாள். (யாவளெனில்), பெரியபூர்ணசந்திரமண்டலத்

துக்குப் பெரியகளங்கத்தையுண்டாக்கிய திருமுகமண்டலத்தின் அழகுடையவளான சானகிப்பிராட்டி; (எ - று.)

அரக்கியர்களை நான் கொல்லும்படி அனுமதிசெய்தலாகிய வரத்தைஎனக்கு நீ தந்தருளவேண்டுமென்று அநுமான் சீதையை வேண்ட, தயாநிதியாகிய அப்பிராட்டி, அதற்குஇணங்காமல், அவ்வரக்கியரைச் சிறிதும்வருத்தாதிருத்தலாகிய வரத்தை எனக்கு நீ தந்தருளவேண்டுமென்று மாறாக அநுமானை வேண்டி மறுத்தனளென்பதாம். நீ சொல்லுகிறபடி இவ்வரக்கியர்கள் கொடியவர்களென்றே கொண்டாலும், பாபஜந்மமாகிய ராக்ஷசசன்மத்துக்குத் தீவினைசெய்தல் இயல்பேயாதலால், அதனைப்பொறுத்தல்வேண்டுமென்னுங் கருத்துப்பட, 'தீவினைதனக்கு வாழ்விடமாய சழக்கியர் மனக்குநோய்செயல்' என்றனள். "பாபாநாம்வாஶுபாநாம்வா - வதார்ஹாணாம்ப்லவங்கம!கார்யம் கருணமார்யேண-நகஶ்சிந்நாபராத்யதி"என்பர் ஸ்ரீவான்மீகி.—சந்திரனுக்குஇயல்பாகவுள்ள களங்கத்தை, சீதையின்முகத்துக்கு அது தான் ஒப்பாகமாட்டாமையால் அடைந்த அவமானத்தின் குறியாகக் கற்பித்து 'மாமதிதனக்கு மாமறுத்தந்தமுகத்தினள்' என்றார்; தற்குறிப்பேற்றவணி. சந்திரமண்டலத்தைக்காட்டிலும் அழகியதாய்க் காண்பவர்கண் கவர்ந்து அவர்கள்மனத்தைமகிழ்வித்து விளங்கும் முகமென்க. இராவணவதத்தையும் இராமவிஜயத்தையும் அநுமான் சொல்லக் கேட்டதனாலாகிய ஆநந்தத்தாற்பிராட்டியின் திருமுகத்தில் தோன்றியபுதுமலர்ச்சி, இதில்விளங்கும். பி-ம்:—1தனக்குலாமறு, தனக்குலாமதி. ()

நஎ.—அதற்கு அநுமான் இசைதலும், இராமன் வீடணனைநோக்கிச் 'சீதையைக் கோணர்க' என்றலும்.

1என்ற போதி 2னிறைஞ்சின னெம்பிரான்
தன்று ணைப்பெருந் தேவி தயாவெனா
நின்ற காலை நெடியவன் 3வீடணா
சென்று 4தாநம தேவியைச் சீரொடும்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) என்று (பிராட்டி) கூறியபொழுது, (அநுமான்), 'எமது தலைவனான இராமபிரானது இல்வாழ்க்கைத்துணைவியான சிறந்த மனையாளாகிய உனது திருவருளின்படியே(யாவது)'என்றுசொல்லி வணங்கி நின்ற வளவிலே, (நற்குணங்களால் அனைவரினும்) பெரியவனான ஸ்ரீராமன், (இராட்சசராசனைநோக்கி) 'வீடணா! (நீ) போய் என்னுடைய மனையாளை அலங்காரத்தோடு அழைத்துக்கொண்டுவா'—(எ - று.)— 'என்னுங்காலை' என வருங் கவியோடு தொடரும்.

பெருந்தேவி-கற்பென்னுங் கலங்காநிலைமையாலாகும் மிக்கமேம்பாட்டைக்கொண்ட தேவிஎன்றபொருளைக் குறிக்கும். 'எம்பிரான்தன் துணைப்பெருந்தேவி தயா வெனா' என்றதில், இங்ஙனம் தன்பக்கல் தீமைகளைச் செய்தவர்களிடத்திலும் மாறாத திருவருளையுடைமை "என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னும்

இயல்பினளான பெருமாளினது பெருந்தன்மைக்கு ஏற்ற தேவிக்குத் தகுதியே என்பது தோன்றும். இனி, இரண்டாமடிக்கு - இப்பிராட்டி தயைவடிவமானவள் என்று எண்ணி யெனவும் பொருள்கொள்ளலாம். தயா - வடசொல்: சீரோடும் - வைபவத்துடன். பி-ம்:—[1]என்றகாலே. [2]இறைஞ்சிநின்று. [3]வீடணனன், வீடணு. [4]தாழ்ந்தனன்சீதையை, தம்பி னச்சீதையை, தாநந்தந்தேவியை. (௩௯௱எ)

௩அ.—விபீஷணன் சென்று பிராட்டியை வணங்குதல்.

என்னுங் காலை யிருளும் [1]வெயிலுங்கார்
மின்னுங் [2]காலை யியற்கைய வீடணன்
உன்னுங் காலைக் [3]கொணர்தியென் றோதுமப்
பொன்னின் காற்றளிர் சூடினன் [4]போந்துளான்.

(இ - ள்.) என்று (இராமபிரான் கட்டளையிட்டவளவிலே,—இருளையும் வெயிலையும் மேகத்தினிடத்தே தோன்றும்மின்னலையும் வெளிச்சொரிகிற அழகிய இயல்பையுடையவனான விபீஷணன், (அங்குநின்று பிராட்டியிருக்கும் அசோகவனிகைக்கு)வந்து,--நினைக்குமளவிலே[வெகுவிரைவிலே] அழைத்துக்கொண்டுவா என்று (இராமபிரானால்)சொல்லப்பட்ட அந்த இலக்குமியினம்சமான சீதாபிராட்டியினது திருவடிகளாகிய தளிர்களை(த் தனது)முடியிற் சூடினான்; (எ - று.)

இராமன் கட்டளையிட்டவுடனே விபீஷணன், பிராட்டியினது தளிர்போல்மெல்லிய சிவந்த திருவடி தனதுமுடியிற்படும்படி அவள் பாதத்திற் சாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டன னென்பதாம். விபீஷணன் தனதுமேனியின் கருநிறத்தால் இருளையும், தான் இப்பொழுதுதரித்த திவ்வியகிரீடத்தின்ஒளியால் சூரியகாந்தியையும், தனது கரியஉடம்பிலணிந்துள்ள ஆடையாபரணங்களின் விளக்கத்தால் காளமேகத்தில்தோன்றும் மின்னலையும் வெளித்தோன்றுவித்தல் பற்றி, அவனுக்கு, 'இருளும் வெயிலுங் கார்மின்னுங் கால் ஐஇயற்கைய' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. கால்-வினைத்தொகை; காலுதல்-சொரிதல். ஐ - அழகியஎன்ற பொருளைத்தந்த உரிச்சொல். இனி, காலை யென ஒருசொல்லாகவே கொண்டு, இருளோடும் வெயிலோடும்கூடி மேகம் மின்னுமாயின் அவ்வியற்கை போன்ற தன்மையையுடைய விபீடணனென்று பதவுரைகூறி இக்கருத்தமைப்பினுமாம். 'கால்தளிர்சூடினன்' - உருவகம். பி-ம்:—[1]வெயிலும்போல், பயிலுங்கார், வெயிலுங்கான். [2]மோலி. [3]கொணர்வனென்றோதியப், கொணர்வனென்றோடியப், கொணர்வனென்றோதவப், கொணர்தியென்றோதவப். [4]போற்றினான், போயினான், போதுவான். (௩௯௱அ)

வேறு.

௩௯.—விபீஷணன் பிராட்டியைநோக்கி 'அலங்கரித்துக்கொண்டு இராமன்பக்கல் எழுந்தருள்க' என்றல்.

வேண்டிற்று முடிந்த தன்றே [1]வேதியர் வேத னின்னைக்
காண்டற்கு விரும்பு கின்றா னும்பருங் காண [2]வந்தார்

[3]பூண்டகக் கோலம் [4]வல்லை புனைந்தனை வருத்தம் போக்கி [ன்.
[5]ஈண்டுக்கொண் டணைதி யென்று னெழுந்தரு ளிறைவி யென்று

(இ - ள்.) '(எல்லாப்பொருள்களுக்குந்) தலைவியே! விரும்பப்பட்டதாகிய சத்துருசயம் நிறைவேறிவிட்டது: வேதமுணர்ந்தவர்களான முனிவர்களால் தியானித்து உணரப்படுபவனாகிய ஸ்ரீராமன், உன்னைப் பார்க்க விரும்புகிறான்; தேவர்களும் (உன்னைத்) தரிசிக்க வந்துள்ளார்; 'இவ்விடத்தில் [என்னிடத்தில்] அழைத்துக்கொண்டுவா' என்று (இராமன் எனக்குக்) கட்டளைகூறியுள்ளான்; (ஆதலால் நீ), மனத்துயரத்தைவிட்டு, விரைவாக ஆபரணங்களால் தகுதியாக அலங்காரஞ் செய்துகொண்டு வந்தருள்வாய்' என்று (விபீஷணாழ்வான் பிராட்டியைநோக்கிக்) கூறினான்; (எ - று.) -- பி-ம்:—[1]வேதியர்தேவர், வேதியர்தேவன். [2]நின்றார். [3]பூண்டசக. [4]வல்ல. [5]ஈண்டடற்கொண்டு. (௩௲௩௱௯)

௪0.—'அலங்காரமின்றி யான்வருதல் தகுதி' என்று பிராட்டி கூறுதல்.

யானிவ ணிருந்த [1]தன்மை யிமையவர் குழுவு மெங்கள்
கோனுமம் முனிவர் தங்கள் கூட்டமுங் குலத்துக் கேற்ற
வானுயர் கற்பின் மாத [2]ரீட்டமுங் [3]காண்டன் மாட்சி
[4]மேனிலை கோலங் [5]கோடல் விழுமிய தன்று வீர.

இதுவும் அடுத்தகவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வீரனே! நான் இவ்விடத்திலிருந்த விதத்தைத் தேவர்களுடைய கூட்டமும், நமக்கெல்லாந்தலைவனான இராகவனும், அங்கு வருகிற முனிவர்களுடைய கூட்டமும்,(தமது) குலத்துக்கு ஏற்ற மிகச்சிறந்த கற்புநிலையையுடையதேவமாதர்களின் கூட்டமும் பார்த்தல் தகுதியாம்: இங்ஙனம்ஆனபின்பு(உன்னாற்)கருதிச்சொல்லப்பட்ட அலங்காரத்தை (நான்செய்து)கொள்ளுதல் சிறப்புடையதன்று; (எ-று.)—'என்றனள் இறைவி' என வருங் கவியோடு முடியும்.

யான் இவ்விலங்கைநகரினுட் சிறையிருந்தபோது உள்ள நிலைமை இன்னதென்று எனதுகணவனான எம்பெருமானும் தேவர்களும் முனிவர்களும் கற்புடையமாதர்களும் உள்ளபடி காணுமாறு யான் இப்பொழுதுஉள்ள தோற்றத்துடனே இராமபிரான்சன்னிதியில் வருதலே தகுதி; அலங்கரித்துக்கொண்டுவருதல் உரியதன்று என்று விபீஷணன்சொல்லைப் பிராட்டி ஒருசார்மறுத்தனளென்பதாம்.'எங்கள்'என்ற தன்மைப்பன்மை - எல்லாவுயிர்களையும் உளப்படுத்தியது; எனக்குத் தலைவனாதல்போலவே எல்லாவுயிர்கட்குந் தலைவனென்றவாறு. திருமாலுக்கு அடிமையாகுந் திறத்தில் திருமகளோடு மற்றையனைத்துயிர்களோடு வாசியில்லையென்க. திருமகள் ஜீவகோடியிற்சேர்ந்தவளென்பது, இங்குப் போதரும். பி-ம்:—[1]வண்ணம் [2]வருக்கமும். [3]கண்டால். [4]மேனனி, மேலினைக். [5]கண்டால், கொள்ளல். (௩௲௩௱௰)

௯௧.—'அலங்காரஞ்செய்துகொண்டுவரும்படி ஸ்ரீராமபிரான் கட்டளை' என்று விபீஷணன்கூற, பிராட்டி உடன்பட்டவுடன் தேவமாதர்கள் அலங்கரித்தற்கு வருதல்.

என்றன ளிறைவி [1]கேட்ட விராக்கதர்க் கிறைவ [2]னீலக்
குன்றன தோளி னன்றன் [3]பணியினிற் [4]குறிப்பி தென்றான்
நன்றெனா நங்கை நேர்ந்தா ணாயகக் கோலங் கொள்ளச்
சென்றனர் வான நாட்டுத் திலோத்தமை [5]முதலோர் சேர.

(இ - ள்.) என்று (மறுத்துச்)சொன்னாள், பிராட்டி; (அது)கேட்ட ராக்ஷசராசனான விபீஷணன், 'நீலமலைபோன்ற திருத்தோள்களை யுடையவனான ஸ்ரீராமனது கட்டளையினால் (யான்)விண்ணப்பித்தவாறாகும் இது' என்று கூறினான்; (அங்ஙனஞ்சொன்னவுடனே),உத்தமஸ்திரீ யான சீதை,'நல்லது'என்றுசொல்லி(ச் சிறந்தஅலங்காரத்தைச் செய்து கொள்ள) உடன்பட்டாள்; (அங்ஙனம் அப்பிராட்டிக்கு ஏற்ற)சிறந்த அலங்காரஞ்செய்யும்பொருட்டுத் திலோத்தமைமுதலிய தேவலோகத்து அப்சரஸ்ஸ்திரீகள் ஒருங்கு வந்துசேர்ந்தார்கள்; (எ - று.)

அலங்காரஞ்செய்துகொண்டுவரும்படி சொன்னது, இராமபிரான் கட்டளைபற்றியே யன்றி என்கற்பனையாலன்று என்றுவிபீஷணன் கூறினான். கணவன்கட்டளையென்றவுடனே, அதிலுள்ள குண தோஷங்களைப்பாராமலேஅதற்கு இணங்குவது மகளிரின்உத்தமவிலக் கண மாதலால், 'நன்றெனா நங்கைநேர்ந்தாள்' என்றார். 'நன்று' என்றது, அங்கிகாரத்தைவிளக்கும் வார்த்தை. நாயகக்கோலம் - அனைத் துலகுக்குந் தலைவனான எம்பெருமானது மனைவிக்கு உரிய அலங்காரம். திலோத்தமை-ஆவீறுஜயான வடசொல்; உலகத்திற் படைக்கப்பட்ட அழகுடைமங்கையரது உடம்பிற்சிறந்த அழகை எள்ளளவுஎள்ளள வாக எடுத்துத் திரட்டிஅதுகொண்டு பிரமனால் அமைக்கப்பட்ட பெண்: (திலம் - எள், உத்தமா - மேலானவள்.) தேவமாதர்கள் அலங்காரஞ் செய்யவந்தது, தேவாதிதேவனான இராமனது திருவுள் ளக்குறிப்பை நோக்கிய தேவர்களின் கட்டளையினா லென்க. பி-ம்:— [1]கேட்டான். [2]அந்தக், நீதிக், நீதக். [3]பணியெனக், பணியினும், பணி யினிக். [4]குறிப்பே, குறிப்போன், குறிப்பன். [5]முதலோர்சேர்ந்தார், முதலசெய்யோர், முதலர்சேர்ந்தார். (௩௯௯௧)

௯௨.—தேவமாதர்கள்நீராட்டத்திற்குரியவாசனைப்பண்டங்கொணர்தல்.

மேனகை யரம்பை [1]மற்றை யுருப்பசி வேறு [2]முள்ள
[3]வானக நாட்டு மாதர் [4]யாருமஞ் சனத்துக் கேற்ற
[5]நானநெய் [6]யூட்டப் பட்ட [7]நவையில [8]கலவை [9]தாங்கிப்
போனகந் துறந்த தையன் மருங்குற [10]நெருங்கிப் புக்கார்.

(இ - ள்.) மேநகையும் ரம்பையும், மற்றை ஊர்வசியும் வேறுமுள்ள தேவலோகத்து மகளி ரெல்லோரும் (பிராட்டிக்குத்) திருமஞ்சனஞ் செய்தற்கு உரிய கஸ்தூரிப்புழுகுகலந்த குற்றமற்ற கலவைச்சாந்தை

எடுத்துக்கொண்டு, (இராவணன்கைப்பட்டதுமுதல் இலங்கையிற் சிறையிருந்த பத்துமாசகாலமாக) உணவை ஒழித்துநின்ற உத்தமஸ்திரீயானசானகியினதுபக்கத்திலே பொருந்த(த் தம்மில்) நெருக்கமாக வந்துசேர்ந்தார்கள்; (எ - று.)

குரு சிஷ்யக்கிரமத்தை உலகத்தார்க்கு உணர்த்தும்பொருட்டுத் திருமால் தானே நரனென்ற சிஷ்யனும் நாராயணனென்ற குருவுமாக இரண்டுவடிவங்கொண்டு பதரிகாச்சிரமத்தில் எழுந்தருளியிருக்கையில்; இந்திரனேவலால் அவர்கள் தவநிலையைக் குலைக்குமாறு அங்கு வந்து ஆடல்பாடல்முதலிய விநோதங்களைச் செய்த அப்ஸரஸ்ஸ்திரீகளை மயக்கும்பொருட்டு மிக்கஅழகுடைய ஒருபெண்ணை யுண்டாக்கும்படி அந்நாராயணமூர்த்தி திருவுள்ளங்கொள்ள,அச்சங்கற்பத்தால் அப்பெருமானது ஊருவினின்று தோன்றிய பெண் அக்காரணத்தால் ஊர்வசியெனப் பெயர்பெற்றனள். (ஊரு-தொடை; அதிற்பிறந்தவள் ஊர்வசீ.) மஞ்சனம் - மஜ்ஜந மென்ற வடமொழியின் விகாரம்.
பி - ம்:--[1]மற்றவுருப்பசி. [2]எண்ணும். [3]வானகை. [4]யாவருமனத்திற்கேற்ற, ஆடுமஞ்சனத்தின்வாய்ந்த. [5]நானகை. [6]உடனீராடி, உடன்பட்டாய, உட்பட்டாய. [7]நவையிலா, நனைமலர், நனைபலன். [8]நன்னீர், உழையர், அமைய. [9]தாங்கப். [10]நோக்கிப் (கூகசுஉ)

சுங.—அரம்பை பிராட்டிக்குக் கூந்தல்வகிர்தல்.

காணியைப் [1]பெண்மைக்கெல்லாங் கற்பினுக் [2]கணியைப் [3]பொற்
ஆணியை யமிழ்தின் வந்த [4]வமிழ்தினை யறத்தின் றாயைச் [பின்
சேணுயர் [5]மறையை யெல்லா [6]முறைசெய்த [7]செல்வ னென்ன
வேணியை [8]யரம்பை மெல்ல [9]வரன்முறை சுகிர்த்து விட்டாள்.

(இ - ள்.)பெண்ணிலக்கணங்களுக்கெல்லாம் விளைநிலமானவளும், பதிவிரதாதருமத்துக்கு(ஓர்)ஆபரணமாக அழகுசெய்பவளும்,அழகென்னும் பொன்னின் (மாற்றுமதிப்புக்களை யறிதற்கு) உரையாணிப்பொன் போலுள்ளவளும், (திருப்பாற்கடலினின்று) தேவாமிருதத்துடனே திருவவதரித்த (ஒரு) திவ்வியாமிருதம்போன்ற திருமகளினது அம்சமானவளும், தருமத்தைவளர்க்குந் தாய்போன்றவளுமான பிராட்டியினது தலைமயிர்ச்சடையை,-அரம்பையென்னுந்தேவமாது,--மிகச்சிறந்த வேதம்முழுவதையும் ஒழுங்குபடுத்துகிற திருமால்போல, மெல்ல ஒழுங்காகச்சிக்குவிடுத்து வகைப்படுத்தி வாரிவிட்டனள்; (எ - று.)

இனி,வானமாதர் பிராட்டியைநீராட்டியலங்கரித்தலை நான்குகவிகளாற்கூறுகின்றாரென்க.பிராட்டி இராவணன்கைப்பட்டதுமுதல் கூந்தலைஒப்பனைசெய்திலளாதலால் அக்கூந்தல் சிக்குப்பட்டுச் சடைத்தன்மையடைந்திருந்ததாக, அங்ஙனம் சிக்குப்பட்ட தலைமயிரை அரம்பை மெல்லவகிர்ந்து செம்மைசெய்ததற்கு - வேதம் நிலைகுலைய, திருமால் தான் பிரவேசித்து வேதவியாச னென்று பெயர் பெறுபவனாய் அவ் வேதத்தைத் தக்கபடி எளிதில்வகுத்து ஒழுங்குபடுத்துதலை உவமை

கூறினர். அயோநிஜையான பிராட்டியின் வேணிக்கு, அபௌருஷேய மான வேதம் உவமை கூறப்பட்டது; இதனால், அக்கூந்தலினது தூய் மையும், அது எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மிகப்பாங்காயிருக் குந்தன்மையும் புலனும். பிராட்டியாகிய ஒருபமேயப்பொருளினிடத்து 'பெண்மைக்கெல்லாங் காணி'என்பது முதலிய பல உபமானப்பொருள் களின் தன்மையை ஏற்றிக்கூறியது - பலபடப்புனைவணி. காணி போன்றவளைக் காணியென்றே கூறினது, உபசாரவழக்கு. அமிழ்தின் வந்தவமிழ்து - "அமுதில்வரும்பெண்ணமுது" என்றார் பெரியாரும்.

இருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் என முறையே வருகிற நால்வகையுகங்களுள் திரேதாயுகத்தில்நடந்ததான இராமசரித் திரத்தில் பிராட்டியின்கூந்தலை அரம்பை செம்மைசெய்ததற்குத் துவா பரயுகத்தில் வியாசர் வேதத்தை வகுத்தல் உவமை கூறத்தகுமோ? எனின்,-காரணம் காரியத்துக்கு முந்தியதாதல் வேண்டுமென்ற நியதி போல உபமானம் உபமேயத்துக்கு முந்தியதாதல் வேண்டுமென்ற நியதியில்லாமையால், கவி தான் அறிந்ததும் லோகப்பிரசித்தமுமான எதையும் உவமைகூறத்தகு மென்க. பி-ம்:-- [1]பெண்ணுக்கு. [2]இடைந்த, அமைந்த. [3]பொற்பார். [4]அழகினை. [5]முறையை. [6]உரைசெய்த. [7]செல் வனன்ன, செய்கையென்ன. [8]வகிர்ந்து, சுகிர்ந்து. [9]வரன்முறைத் திறத்து..., வரன்முறைசுருக்கு..., வரன்முறைசுருக்கவிட்டார், விரன்முறைசுகிர்த்து.... (௩௧௯)

௪௪.—தேவமாதர் பிராட்டிக்குப் பல்விளக்கி நீராட்டல்.

பா[1]கடர்ந் தமுது [2]பில்கும் பவளவாய்த் தரளப் பத்தி
சேகற [3]விளக்கி நானந் தீட்டிமண் சேர்ந்த காசை
வேகடஞ் [4]செய்யு மாபோன் மஞ்சன விதியின் வேதத்து
[5]ஓகைமங் கலங்கள் [6]பாட [7]வாட்டினா ரும்பர் மாதர்.

(இ - ள்.) தேவஸ்திரீகள்,—சர்க்கரைப்பாகுபோன்று (இன்சுவை) மிகுந்து அமிருதம்போன்ற இன்சொற்களை வெளிவிடுந்தன்மையதான பவழம்போலச் சிவந்த (பிராட்டியின்) திருவாய்மலரிலுள்ள முத்துவரி சைபோன்ற பல்வரிசையை (ப் பத்துமாசகாலமாக விளக்காமையால்) வைரம்பற்றியஅழுக்கு நீங்கும்படி தேய்த்துச்சுத்திசெய்து, பரிமள தைலத்தை (அப்பிராட்டியின் சிரசில் இட்டு)த் தேய்த்து மண்படிந்த இரத்தினத்தைச் சாணைபிடித்துச்சுத்தஞ்செய்யும்விதம்போல, வேதங் களில்விதித்த ஸ்நாநத்துக்குஉரியமுறைமைப்படி, களிப்போடு மங் கலவாழ்த்துப் பாடல்களைப் (பலமகளிர்) பாடாநிற்க நீராட்டினார்கள்.

'பாகு அடர்ந்து' என்றது, அதராமிருதத்தின் இனிமைமிகுதி யைக்குறித்தது. அமுது, தரளப்பத்தி - உவமையாகுபெயர்கள். வேத த்து ஓகைஎனப்பிரியாமல் வேதம் தோகைஎனப்பிரித்து - வேதத்தி னால் (யாவர்க்கும் மாதாவெனக்) கூறப்பட்ட பெண்ணை [சீதையை] என்று உரைப்பாருமுளர்: அது மோனைக்கு ஏற்காது. பி-ம்:—[1]அமர்

ந்து. 2நல்கும், பல்கும், மல்கும். 3விளங்கி. 4செய்யுமாறின், செய்யுமார்பில். 5ஓதை. 6போடி. 7வார்த்தினர். (ருசுருச)

சுரு.—தேவமாதர் சீதைக்குக் கலவைச்சாந்துபூசிக் குங்குமமப்பிப் பட்டாடையணிந்து மேகலைபூட்டியமை.

உருவிளை பவள வல்லி பானுரை யுண்ட தென்ன
மருவிளை 2கலவை யூட்டிக் குங்கும முலையின் 3மாட்டிக்
கருவிளை 4மலரின் 5காட்சிக் காசறு தூசு 6காமன்
7திருவிளை யல்குற் கேற்ப மேகலை தழுவச் 8செய்தார்.

(இ - ள்.) அழகுமிக்க பவழக்கொடி பால்நுரையால் மூடப்பட்ட தென்னும்படி (பிராட்டியின் சிவந்த திருமேனியில்) பரிமளம்மிக்க (வெண்ணிறமான) கலவைச்சந்தனத்தைப் பூசிக் குங்குமப்பூங்குழம்பை (அவள்) கொங்கையில் அப்பி கருவிளமலர்போன்ற தோற்றமுள்ள குற்றமற்ற [சிறந்த] பட்டாடையோடு காமனதுசெல்வம் விளங்குகின்ற இடைக்கு ஏற்ப மேகலையென்னும் இடையணியையும் பொருந்தச் சாத்தினர், (தேவமாதர்); (எ-று.)—மேகலை-எண்கோவை யிடையணி. பி-ம்:--1விளைப். 2சாந்தம்பூசி. 3ஆட்டி. 4கமலங். 5காட்சிக்காசறுதூசும், காட்சிக் காசறுதூசும், காட்டத்தஞ்சனமெழுதிக். 6சாத்திச். 7திருவினையல்குக் கேற்ப, திருவிளையல்குற்கேற்ற. 8சேர்த்தார். (ருசுருரு)

சுசு.—தேவமாதர் பிராட்டிக்கு மற்றுஞ்சில அலங்காரஞ் செய்து மங்களவாலத்தி சுழற்றல்.

சந்திரன் றேவி மாரிற் றகை1யுறு 2தாளப் பைம்பூண்
3இந்திரன் றேவிக் 4கேற்ப வியைவன பூட்டி யாணர்ச்
சிந்துரப் பவளச் செவ்வாய்த் தேம்பசும் 5பாகு தீற்றி
6மந்திரத் தயினி 7நீரால் வலஞ்செய்து காப்பு மிட்டார்.

(இ - ள்.) இந்திராணியணிவதற்கு ஏற்கும்படி பொருந்தியவையும் சந்திரனதுமனைவியரான நக்ஷத்திரங்கள்போல அழகுமிக்க முத்துக் களினாலாகியவையும் பசும்பொன்வேலைப்பாடு உடையவையுமாகிய (ஆரம்முதலிய) ஆபரணங்களைப் பூட்டி, புதிய சிந்தூரம்போலவும் பவழம் போலவும் செந்நிறமுடையதான (அப்பிராட்டியின்) வாயில் இனிய பசிய தாம்பூலசாரத்தைத் தடவி, மந்திரோச்சாரணத்தோடு ஆலத்திநீரை வலமாகச்சுழற்றி (அதனால்) ரக்ஷையையும் செய்தார்கள்.

அசுவினிமுதலிய இருபத்தேழு நட்சத்திரங்களும் தட்சமுனிவனது புத்திரிகளாய்ச் சந்திரனுக்கு வாழ்க்கைப்பட்டவ ரென அறிக. நட்சத்திரங்களை முத்துக்களுக்கு உவமைகூறியது, அழகும் ஒளியும் பற்றி. வாயிதழ் மிக்கசெந்நிறமுடையதாய் விளங்கி அழகுசெய்யும்படி அதற்குச் செஞ்சாயந்தீற்றுகிறதொரு வழக்கத்தின்படி, வெற்றிலைபாக்குச் சுண்ணாம்புகலந்திடித்த சாரத்தை வாயில்தீற்றின ரென்க. தின் என்னும் பகுதியிலிருந்து தீற்றியெனப் பிறவினை இறந்தகாலவினையெச்சம் வந்ததெனக் கொண்டால், பிராட்டிக்கு வெற்றிலைமடித்துக்கொடு

த்து அத்தாம்பூலத்தை அவர் வாயினுள் மெல்லும்படிசெய்து என்று பொருள் கொள்ளலாம்; கிற்றி = தின்பித்து. பாகு-பாக்கு; இது, வெற்றிலைசுண்ணாம்புகளுக்கும் உபலக்ஷணம். அயினி - செஞ்சோறு; அதனோடுகூடிய மஞ்சள்நீர், அயினிநீர். ஆலத்திசுற்றுதல் திருஷ்டிதோஷம் கழிதற்பொருட்டாதலின், 'மந்திரத்தயினிநால்வலஞ்செய்து காப்புமிட்டார்' என்றார். இனி, மங்களாலத்திசுற்றி மற்றும்பலவகை ரட்சைகளைச் செய்தார்களென்று உரைப்பினுமாம். ஆலத்திநீரைக் கை விரலால் தொட்டு நெற்றியிற் காப்பாகஇடுதலும், சிறுவெண்கடுகின் பொடிகளை நெற்றியிற் காப்பாகஇடுதலும் முதலிய ரட்சைகள் செய்யும் மரபும்உண்டு. பி-ம்:-[1]பெற [2]பவளப். [3]இந்திரை. [4]எற்ற. [5]பாகுக்கிற்றி, பாகும்பற்றி. [6]மந்திரித்தயினி, மந்திரத்தயனீர். [7]சுற்றிவலஞ்செய்தார், சுற்றிவாழ்த்தினர்.

இங்கே ஒருபிரதியிற் சிலபாடல்கள் காணப்படுவன வருமாறு:—

1. சென்றவன் றன்னை நோக்கித் திருவினு ளெங்கே யென்ன
மன்றலங் கோதை யாளும் வந்தனள் மானந் தன்னில்
என்றன னென்ன லோடு மீண்டுநீ கொணர்க வென்ன
நன்றென வணங்கிப் போந்து நால்வரைக் கொணர்க வென்றான்.

2. காத்திர மிகுத்தோர் நால்வர் கஞ்சுகிப் போர்வை யாளர்
வேத்திரக் கையோ ரீண்டி விரைவுடன் வெளளந் தன்னைப்
பாத்திடப் பரந்த சேனை பாறிடப் பரமன் சீறி
ஆர்த்தபே ரொலியென் னென்ன வரிகளார்ப் பரவ மென்றார்.

3. என்றபோ திராம னைய விடணு வென்ன கொள்கை
மன்றலங் குழலி னாளை மணம்புணர் கால மன்றில்
துன்றிய குழலி னார்தஞ் சுயம்வர வாஞ்சை(சூழ)போதும்
வென்றிசேர் களத்தும் வீர விழுமிய தன்று மேலோய்.

4. அற்புத வினைய கூற வையவீ டணனு மெய்யுச்
செப்பின முலையா டன்பாற் செப்பவுந் திருவ னாளும்
அப்பினுட் டுயிலை நீத்து வயோத்தியி லடைந்த வண்ணல்
ஒப்பினைக் கண்ணிற் கண்டே யுள்ளினைந் தினைய சொன்னான்.

சஎ.—பிராட்டியை விமானத்திலேற்றி இராமனிடம் அழைத்துச் செல்லுதல்.

மண்டல மதியி னுப்பண் [1]மானிருந் தென்ன மானங்
[2]கொண்டனா ரேற்றி [3]வான மடந்தையர் தொடர்ந்து கூட
[4]மண்டி[5]வா னரரு மோட வரக்கரும் [6]புறஞ்சூழ்ந் தோட
அண்டர்நா யகன்பா லண்ணல் விடண னருளிற் சென்றான்.

(இ - ள்.) சந்திரமண்டலத்தின் நடுவிலே மான் இருந்தாற்போல விமானத்திலே (பிராட்டி வீற்றிருக்கும்படி அதில் அவளைக்) கொண்டு ஏற்றித் தேவமாதர்கள் (விடாது) அருகிற் சூழ்ந்து உடன்வர, வாநர வீரர்களும் (அவர்களைச் சார)நெருங்கி ஓடிவர, இராக்கதர்களும்

(அவர்களைச்சார) வெளியிற் சூழ்ந்து ஓடிவர, பெருந்தன்மையையுடைய வணுகிய விபீஷணன் தேவர்க்கெல்லாந்தலைவனான ஸ்ரீராமபிரானிடத்து (அப்பெருமான்) கட்டளையிட்டருளியபடி (பிராட்டியை அழைத்துக்கொண்டு) சென்றான்; (எ - று.)

மிக்கவிளக்கத்தையுடைய விமானத்துக்குச சந்திரமண்டலத்தையும், மானின்பார்வைபோன்ற பார்வையழகையுடைமையால் மானெனப்படுகிற பிராட்டி அவ்விமானத்தின்நடுவில் வீற்றிருத்தற்கு அந்தச் சந்திரமண்டலத்தினடுவிற் காணப்படுகிறமான்வடிவையும் உவமைகூறினார். சந்திரன்நடுவில் தெரிகிற களங்கத்தோற்றத்தை மான்வடிவென்றல், கவிமரபு. மானம்=விமாநம்: விகாரம். பிராட்டியையேற்றிய விமானத்தை யடுத்துத் தேவமாதரும், அவர்களை யடுத்து வாநரரும், அவர்களையடுத்துப் புறத்தில் அரக்கர்களும் சூழ்ந்து வந்தனர்.

விலங்கினமாகிய வாநரங்களை 'வானரர்' என உயர்திணையாகக் கூறுதல் இலக்கணத்துக்கு ஒக்குமோ வெனில்,—உயர்திணை அஃறிணை யென்ற பகுப்பிற்குக் காரணம் முறையே அறிவின்நிறைவும் குறைவுமே யாதலால், அவ்வறிவிற் குறைவின்றி ஐம்பொறியறிவோடு பகுத்தறிவையுங் கொண்டு மனிதர்போலவே தொழில்திறமமைந்த தெய்வக் குரங்குகளை உயர்திணையின்பாற்படுத்துதல் ஒக்கு மென்க; இத்தன்மை, கரடியாகிய சாம்பவானுக்கும், கழுகாகிய சடாயு சம்பாதி யென்பவர்க்கும் பொருந்தும். தொல்காப்பியது மரபியலில் உரைகாரர் "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்ற சூத்திரத்தின் கீழ்க் குரங்கை விலங்கினமென்று பொதுவகையாற் கூறியவர்தாமே "மக்கள்தாமே ஆறறிவுயிரே" என்ற அடுத்த சூத்திரத்தின் கீழ் 'குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அமையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும்' என்றமை காண்க. 'ஒரோவழி அஃறிணைப்பொருள்கள் மொழியாற்பேசுவன உளவாயின், அது தெய்வத்தன்மைமுதலிய விசேடத்தா னன்றிப் பொருட்டன்மையான் அன்மையின் அமைத்துக்கொள்வது' என்ற இலக்கணவிளக்கச்சூறாவளியும் இங்குக் காணத்தக்கது. பி-ம்:—[1]மின். [2]கொண்டதில். [3]மான. [4]உண்டை, உ.ண்ட. [5]வானவருமொள்வாள். [6]ஒருங்குசூழ. (௩கசுஎ)

வேறு.

சுஅ.—அளவிறந்த தேவர்களும் ருஷிகளும் தேவஸ்திரீகளும் ருஷிபத்நியரும் வித்தியாதரமாதர்களும்முதலியோர் பிராட்டியை நெருங்கல்.

இப்புறத் திமையவர் [1]முனிவ ரேழையர்
துப்புறச் சிவந்தவாய் [2]விஞ்சைத் தோகையர்
முப்புறத் துலகினு [3]மெண்ணின் [4]முற்றினோர்
[5]ஒப்புறக் குவிந்தன ரோகை [6]கூறுவார்.

(இ - ள்.) இப்பால் [பிராட்டி இராமபிரான்பாற் சென்றவிடத்தில்] தேவர்களும், இருடிகளும், (அவர்களின்) பெண்பாலாரும், பவழத்தை

யொப்பச் சிவந்த வாயையுடைய வித்தியாதரஸ்திரீகளும், (மற்றும்) மூவகையுலகங்களிலுமுள்ள தொகையில்மிக்கவர்களான பிற மகளிரும் ஆனந்தவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே ஒருசேர(வந்து)திரண்டார்கள்;(எ-று.)பி-ம்:---[1]முனிவரேனையர்,முனையர்சேனையர்.[2]தெய்வத்தோகையர்.[3]எண்ணி.[4]முற்றிலார்.[5]ஒப்பிற.கூ[6]டுவார், கூறவே.இதுமுதல்ஐம்பத்தொன்பதாவது கவிவரையிலுமுள்ளபாடல்கள் சிலபிரதிகளில் இல்லை. சிலபிரதிகளில் "எச்சிலென்னுடல்" (ருஎ) என்ற பாடல் சஅ-ஆவதாகவும்,"மானமீது"(ருஅ)என்ற பாடல் சகூ-ஆவதாகவும், "பிறப்பினும்" (ருகூ) என்றபாடல் ருo-ஆவதாகவும், "சிலமும்" (ருசு) என்ற பாடல் ருக - ஆவதாகவும், "இப்புறத்து"என்ற இந்தப்பாடல்முதல் "அருந்ததியனைய" (ருரு) என்ற பாடல்வரையிலுமுள்ள பாடல்கள் முறையே ருஉ - ஆவதுதொடங்கி ருகூ-ஆவதுபாடலாகவும் உள்ளன.()

சகூ.—இங்ஙனம் அனைவரும் பிராட்டியைச் சூழ்ந்து நெருங்குகையில் அவர்களை அரக்கர் அடித்துத் துரத்த அவர்கள் மிகக்கதறுதல்.

அருங்குலக் கற்பினுக் கணியை [1]யண்மினர்
[2]மருங்குபின் முன்செல வழியின் றென்னலாய்
நெருங்கினர் நெருங்குழி நிருத ரோச்சலாற்
கருங்கடன் முழக்கெனப் [3]பிறந்த கம்பலை.

(இ-ள்.) (இவ்வாறு அனைவரும்),—அருமையான [உயர்]குலத்தில் வளர்ந்தவளும் பதிவிரதாதருமத்துக்கு அலங்காரமானவளுமான பிராட்டியை யடுத்துச்சூழ்ந்து, பக்கங்களிலும் பின்னும் முன்னும் ஒதுங்குதற்கும் வழியில்லை யென்னும்படி மிகுதியாக நெருங்கினார்கள்: (அங்ஙனம் அடர்த்தியாக) நெருங்கினவிடத்து, அரக்கர்கள் (அவர்களை விலகும்படி) வெருட்டியடித்துத்துரத்தியதனால் கருநிறமான கடலின் முழக்கம்போலப் பேரொலிகள் உண்டாயின; (எ - று.)

கம்பலை - ஓச்சப்பட்டவர்கள்கதறிய ஒலி. அருங்குலம்-ஜநககுலம். முழக்கு-முழங்கும்ஒலி; முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர். பி-ம்:—[1]அன்பினால், அன்பினர். [2]மருங்குற. [3]பொலிந்த. (ருகூசுக)

ருo—அங்ஙனங்கதறிய ஒலி கேட்ட இராமன், 'அதற்குக்காரணம் என்ன'வென்று வினவி, முனிவர்களாற் செய்தியறிதல்.

அவ்வழி யிராமனு மலர்ந்த தாமரைச்
[1]செவ்விவாண் முகங்கொடு செயிர்த்து நோக்குறு
இவ்வொலி யாவதென் [2]றியம்ப விற்றெனக்
கவ்வையின் முனிவரர் [3]கழறி னாரரோ.

(இ - ள்.) அப்பொழுது இராமனும், மலர்ந்த தாமரைமலர்போல் அழகியதாய்விளங்குகிற(தன்)முகத்தினாற்கோபித்து[முகத்திற் கோபக்குறிகொண்டு] நோக்கி 'இந்தஓசை எதனாலாகியது?' என்றுவினவ, கபடமில்லாத இருடிச்சிரேஷ்டர்கள் (அதன்காரணத்தை) இன்னதென்று சொல்லினார்கள்; (எ-று.)

பிராட்டியைச் சூழ்ந்து நெருங்குகிற சனங்களை அரக்கர்கள் அடித்தலால் அச்சனங்கள் செய்கிற ஆரவாரம் இதுவென்று உள்ளபடி முனிவர்கள் பெருமானுக்குச்செய்திகூறினர். கவ்வை-பழிமொழியுமாம். கவ்வையின் - துன்பமுள்ள ஒலியுமாம். கவ்வையின்-பேரொலியோடு, கூறினார் என்னவுமாம். பி - ம்:—[1]செவ்வியான். [2]இயம்புகிற்றென. [3]கூறினரோ. (௫௲௭௰)

௫௧.—உடனே இராமன் கோபத்தோடு விபீஷணனைக் கண்டித்தலை மூன்றுகவிகள் கூறும்.

[1]முனிவரர் வாசகங் கேட்புறுதமுன்
நனியிதழ் துடித்திட [2]நகைத்து வீடணன்
றனை[3]யெழ நோக்கினீ [4]தகாத செய்தியோ
புனிதநூல் கற்றுணர் புந்தி யோயென்றான்.

(இ - ள்.) (அங்ஙனம்) சிறந்த முனிவர்கள் சொன்ன வார்த்தையைக்கேட்டற்கு முன்னமே (இராமபிரான்), உதடு மிகத்துடிக்கக் கோபச்சிரிப்புக்கொண்டு விபீஷணனை நன்றாக உறுக்கிப்பார்த்து, 'பரிசுத்தமானசாஸ்திரங்களைக்கற்றறிந்த அறிவுடையவனே! நீ தகுதியற்ற செயல்களைச்செய்யக்கடவையோ?' என்று (கடிந்து)கூறினான்; (எ-று.)

தேவர்முதலியோரை அரக்கர்கள் ஓச்சினமையாகிய குற்றத்தை அவ்வரக்கர்தலைவனான விபீஷணன்மேலேற்றி இராமபிரான் அவனைக் கண்டித்து அறிவுகூறுவானாயினனென்க: அடிமைகளின் குற்றத்தைத் தலைவனதாகப் பாவித்தல், இயல்பு. 'கேட்புறுதமுன் ...என்றான்' என்றது-விரைவு தோன்றக் கூறியவாறு. பி - ம்:—[1]முனிவர்கள். [2]நகைத்த. [3]உற. [4]தகாது. (௫௲௭௰௧)

௫௨. கடுந்திற [1]லமர்க்களங் காணு மாசையால்
நெடுந்திசைத் தேவரு நின்ற யாவரும்
அடைந்தன ருவகையி [2]னடைகின் றார்களைக்
[3]கடிந்திட [4]யார்சொனார் கருது நூல்[5]வலாய்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நன்குமதிக்கப்படுகிற சாஸ்திரங்களில் வல்லவனே! கொடியஆற்றலோடு போர்நடத்திய இடத்தைப் பார்க்கவேண்டுமென்னும் ஆசையினால் நெருக்கங்கொண்டு மகிழ்ச்சியோடு வந்துசேர்கிறவர்ளான நீண்டதிக்குக்களில் வசிக்கிற தேவர்களையும் மற்றுமுள்ள எல்லோரையும் வெருட்டியோட்டும்படி சொன்னவர் எவர்? (எ - று.)

தேவர்கள்முதலியோர்வந்து நெருங்கியதற்குப் போர்க்களங் காணும் அவாவும் ஒருகாரணமாதலால், அது இங்குக் குறிக்கப்பட்டது. 'அடைகின்றார்களை' என்பதிலுள்ள இரண்டனுருபு, பிரித்தெடுத்து, 'தேவர்' என்பதனோடும், 'யாவர்' என்பதனோடும் கூட்டப்பட்டது. 'யார்சொனார்' என்பது-யான் கட்டளையிட்டேனோ என்றும், நீ கட்டளையிட்டிருந்தால் அது தகுதியோ என்றும், எவரும் கட்டளை

யிடாதிருக்கையிலே அரக்கர்கள் சாதுக்களுக்கு இங்ஙனம் தீங்குசெய்தல் பெருங்குற்றமன்றோ என்றும் உரைத்திடபடியாம். பி-ம்:—[1]அமரர்கள். [2]அணைகின்றார்களோ. [3]கடிந்திடல். [4]ஆர், நீதி. [5]வலார். (௩௬௭௨)

வேறு.

௫௩. பரசுடைக் கடவு ளோடும் பண்ணவன் பதுமத் தண்ணல்
[1]அரசுடைத் தெரிவை மாரை யின்றியே யமைவ துண்டோ
கரைசெயற் கரிய தேவ [2]ரேனையோர் [3]கலந்து காண்பான்
விரகுறின் [4]விலக்கு வாரோ வேறுளார்க் கென்கொல் [5]வீர.

(இ - ள்.) வீரனே! மழுவென்றும்ஆயுதத்தையுடைய சிவபெருமானும் சக்கராயுதத்தையுடைய கடவுளாகிய திருமாலும் (அத்திருமாலினது நாபித்) தாமரைமலரில் தோன்றிய பெரியோனான பிரமனும், தலைமையையுடைய(தம்தம்மனைவியாராகிய) மகளிரை உடன்கொள்ளாமலேயிருப்பது உண்டோ? (தலைமைத்தேவர்களான திரிமூர்த்திகளே இங்ஙனமாகிறபோது) மற்றுமுள்ளோரைப்பற்றிச்சொல்லவேண்டுவது என்னே? எல்லைகாணவொண்ணாத [பெருந்திரளான] தேவர்களும், மற்றைமுனிவர் முதலியோரும், கூடிப் (போர்க்களத்தையும் எம்மையும்) காணுதற்கு வந்துநெருங்கினால் (அவர்களை) வெருட்டித்துரத்துவாருண்டோ? (எ - று.)

அன்போடு காண வருகின்றவர்களைக் கடிந்தமை குற்றமென்று கீழ்க்கவியிற் பொதுப்படக்கூறி, அங்ஙனம்வரும் மகளிரைக்கடிந்தமை முறையன்றென்பதைச் சிறப்பாக இக்கவியிற் கூறியவாறு. திரிமூர்த்திகளும் மனைவியரை இன்றியமையாதவராகக் கொண்டிருத்தல், முன்னிரண்டடியில் உணர்த்தப்பட்டது. அத்தன்மைகொண்டு, யாவர்க்கும் மனைவியர் இன்றியமையாதவ ரென்பதனைச் சாதிப்பார், 'வேறுளார்க்கு என்கொல்' என்றார்: இங்ஙனம் ஒருபொருளைச்சொல்லி அதுகொண்டு கைமுதிகநியாய மென்னும் தண்டாபூபிகாநியாயத்தால் மற்றொரு பொருளைச் சாதித்தல்,தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி. 'வீர'என விளித்தது, 'நின்வீரத்தன்மைகாட்ட இதுவோஇடம்!' என்றற்கு. பி-ம்:—[1]அரசுடைத்தேவிமாரை, அரைகடந்தேவிமாரை.[2]என்னையோர். [3]கரந்துகாண்பான், காண்கின்றோரை. [4]விலங்குவாரோ, விலக்குவாமோ. [5]வீரம். (௩௬௭௩)

௫௪.—இராமன் கண்டித்துக்கூறிய சொற் கேட்டு விபீஷணன் அஞ்சி உள்ளமும் உடலமும் நடுங்குதல்.

ஆதலா னரக்கர் கோவே யடுப்பதன் றுனக்கு [1]மின்னே
[2]சாதுகை மாந்தர் தம்மைத் தடுப்பதென் றருளிச் செங்கண்
வேதநா யகன்று னிற்ப வெய்துயிர்த் தலக்க ணெய்திக்
கோதிலா மனனு மெய்யுங் [3]குலைத்தனன் குணங்க டேயோன்.

(இ - ள்.) ஆதலால், இராட்சசராசனே! இப்பொழுது சாதுவான ஒழுக்கத்தையுடைய சனங்களைத் தடுப்பது உனக்கும் அடுப்பது அன்று

என்று அருளோடுசொல்லி,சிவந்ததிருக்கண்களையுடையவனும் வேதங்கட்குத்தலைவனுமான இராமபிரான் நிற்க, குணங்களிற்பரிசுத்தனான விபீஷணன் வருத்தமடைந்து, வெவ்விதாகப் பெருமூச்சுவிட்டு, குற்றமில்லாத மனமும் உடம்பும் (அச்சத்தால்) நடுங்குவானாயினன்; (எ-று.) சாது - சற்குணஅமைதி, சாது - ஸாது. பி-ம்:—[1]பின்னே, முன்னே. [2]சாதுவை, சாதுவாம். [3]குலுங்கினன், குலைந்தனன். (ஙகஎச)

ருரு.—சானகி போர்க்களஞ்சார்ந்து இராமனதுதிருக்கோலத்தைக் காண்பவளாய்த் தன்னிலே தான் கூறுதல்.

அருந்ததி யனைய நங்கை யமர்க்[1]கள மணுகி யாடற்
பருந்தொடு கழுகும் பேயும் பசிப்பிணி தீரு மாறு
விருந்திடு வில்லின் [2]செல்வன் விழாவணி விரும்பி நோக்கிக்
கருந்தடங் கண்ணு நெஞ்சுங் களித்திட [3]வினைய சொன்னாள்.

(இ - ள்.) (கற்பில்)அருந்ததீதேவியைப்போன்ற பிராட்டி,-போர்க்களத்தைச் சமீபித்து, வலிமையையுடைய பருந்துகளும் கழுகுகளும் பேய்களும் (தம்தம்) பசிநோய் நீங்கும்படி (அவற்றிற்கு அரக்கருடல் தசையை) விருந்துணவாகஇட்ட (கோதண்டமென்னும்) வில்லையேந்திய ஸ்ரீமானான இராமபிரானது அழகியபோர்க்கோலக்காட்சியை விருப்பத்தோடு நோக்குபவளாய் கரியபெரிய (தனது) கண்களும் மனமும் களிப்படைய இத்தன்மையனவான சொற்களைச் சொல்பவளானாள்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

அருந்ததீ - வசிஷ்டமுனிவனது பத்தினி; இவள், பதிவிரதாதருமத்திற் சிறத்தலால், கற்புடையமாதர்க்கு உவமைகூறப்படுவள்: ஏனையோரினும் இவட்குச் சிறப்பு,நட்சத்திரநிலையிலும் கணவனைவிட்டுப்பிரியாதுஉடனிருத்தல். பதினெட்டுவகை உடற்குற்றங்களுள் ஒன்றாதலால், பசி, பிணியெனப்பட்டது. பி - ம்:—[1]களத்தணுகி, களங்குறுகி, களாணுகி. [2]செல்வவிழா. [3]விருப்பமுற்றாள்,விருப்புமுற்றாள்.

வேறு.

ருசா.—அநுமான்செய்த உதவியைச் சீதை பாராட்டிக்கூறுதல்.

சீலமுங் காட்டியென் கணவன் [1]சேவகக்
கோலமுங் காட்டியென் [2]குலமுங் காட்டியிஞ்
ஞாலமுங் [3]காட்டிய கவிக்கு நாளறுக்
காலமுங் [4]காட்டுங்கொல் லென்றன் கற்பென்றாள்.

(இ - ள்.) (என்னுடைய) நல்லொழுக்கத்தின் நிலைமையையும் (என்கணவனுக்குத்)தெரியச்சொல்லி,எனதுகணவனாகிய(அப்)பெருமானது பராக்கிரமத்தின் தோற்றத்தையும் (உலகம்) அறியச்செய்து, எனது குலத்தின்பெருமையையும் (யாவர்க்கும்) விளக்கி,இவ்வுலகத்தையும் (அழிவில்லாது) காணப்படும்படிசெய்த குரங்காகிய அநுமானுக்கு என்கற்பு நாள்கள்இடையறாத காலமுள்ளளவும் வாழ்தலாகிய சிரஞ்

சீவித்தன்மையைத் தவறாமல் உண்டாக்குமா? என்று (தன்னிலே தான்) சொல்லினாள்; (எ-று.)

தமக்கு மிக்கநன்மையுண்டாம்பொழுது அக்களிப்பினால் அந்நன்மைக்குக் காரணமானவரை மறவாமல் உள்ளத்திற்கொண்டு வாழ்த்துதல் செய்ந்நன்றிமறவாத சான்றோரது இயல்பு. பி-ம்:—[1]செய்தவக். [2]குணமும். [3]காட்டியக். [4]காட்டுமே கொல்லென். (௩௭௭௬)

௫௭.—சீதை இராமபிரானைக் காணுதல்.

எச்சிலென் னுடலுயி [1]ரேகிற் றேயினி
நச்சிலை யென்பதோர் [2]நவையி லாளெதிர்
பச்சிலை வண்ணமும் பவள வாயுமாய்க்
கைச்சிலை [3]யேந்தி [4]நின் றதனைக் கண்ணுற்றாள்

(இ - ள்.) 'எனது உடம்பு (இராவணன் கொணர்ந்து சிறைவைத்ததனால்) அசுத்தி(யடைந்தது):(அவ்வுடம்பு),உயிர்நீங்கியதேயாம்; இனி (எனக்கு) ஆசை யொன்றுமில்லை' என்று சிந்தித்தசிந்தனையையுடைய குற்றம்சிறிதுமில்லாதவளான பிராட்டி,—(தன்) எதிரிலே பச்சிலை போன்ற திருமேனிநிறத்தையும் பவழம்போன்ற திருவாயையுமுடையனாய் (ஸ்ரீராமன்) கையில் வில்லேந்திநின்ற காட்சியைப் பார்த்தாள்.

'எச்சிலென்னுடலுயிரேகிற்றே யினிநச்சிலை'என்பது, சீதை இராவணன்கைப்பட்டு இலங்கையிற் சிறையிருந்தகாலத்தி லெல்லாம் சிந்தித்திருந்த சிந்தை; அதாவது - என்உடம்பு, இராவணன்கொணர்ந்து சிறைவைத்ததனால் அசுத்தப்பட்டது;இதனை என்கணவன் விரும்பான்: ஆதலின்,எனது பிராணநாயகனைப்பிரிந்த இவ்வுடம்பு, உயிரையொழித்துத் தற்கொலைசெய்துகொண்டு இறத்தற்கே யுரியது; இனி, எனக்கு உயிர்வாழ்வின்மேலும் வேறுஎதன்மேலும் ஆசைகொள்ளத் தகுதியில்லை யென்று பலவாறு பிராட்டி அப்பொழுதெல்லாம் சிந்தித்திருந்தன ளென்க. பி-ம்:—[1]எய்திற்றேயினி, ஏகிற்றெனென. [2]நவைவந்துள்ளுறப். [3]தாங்கி. [4]நின்றானை. (௩௭௭௭)

௫௮.—சீதை விமானத்தினின்று இறங்குதல்.

மானமீ தரம்பையர் சூழ [1]வந்துளாள்
போனபே ருயிரினைக் கண்ட பொய்யுடல்
தானது கவர்வுறுந் தன்மைத் தாமென
ஆனனங் காட்டுற வவனி [2]யெய்தினாள்.

(இ-ள்.) தேவமாதர்கள் (தன்னைச்)சூழ்ந்துவர விமானத்தின்மேல் (ஏறி)வந்தவளான சீதை,—(தன்னை விட்டு)நீங்கிச்சென்ற சிறந்தஉயிரை மீளக்கண்ட நிலையற்றதானஉடம்பு தான் அவ்வுயிரை உட்கொள்ளமுயலுந்தன்மையதாகுமென்னுமாறு[பிராணநாயகனான இராமனைச் சாரும்படி](இருந்து, தன்) முகத்தை (அவ்விராமபிரானுக்கு)க் காட்டுமாறு (விமானத்தினின்று) நிலத்திலிறங்கினாள்; (எ - று.)

* 91

சீதை தரையில் இறங்கி இராமபிரான் தன்முகத்தைக்காணுமாறு அவன்கண்ணுக்கு இலக்காய்நின்றன ளென்க. இடையிரண்டடியில் வந்த உவமை - மாயமானின்பின்னே தொடர்ந்துசென்றதுமுதல் தன்னைப்பிரிந்துநின்ற தனதுபிராணநாயகனை ஸ்ரீராமனைக் கண்ட சீதை உடனே அப்பெருமானைச் சாரவிரும்புந்தன்மையளானதை விளக்கும். அரம்பை - ஒரு தேவமாது: இதன்பன்மையாகிய அரம்பையரென்பது- இலக்கணையாய்த் தேவமாதரைக் குறித்துநிற்கும்;அரம்பைமுதலியோர் என்றுபொருள்கொள்ளலாம். பி-ம்:—[1]வந்துளார். [2]எதினர். (௩௧௭அ)

௫௬. — கணவனைக் கண்டு தொழுததனுற் சீதை கவலையொழிதல்.

பிறப்பினுந் துணைவனைப் பிறவிப் பேரிடர்
துறப்பினுந் துணைவனைத் [1]தொழுது [2]நானினி
மறப்பினு [3]நன்றிது [4]மாறு [5]வேறுவீழ்ந்து
இறப்பினு நன்றென வேக்க நீங்கினாள்.

(இ - ள்.) '(இப்பிறப்பில்மாத்திரமேயன்றி) எப்பிறப்பெடுத்தாலும் துணைவனாகின்றவனும் பெரிய பிறப்புத்துன்பம் நீங்கினாலும் துணைவனாகின்றவனுமான பெருமானை நான் (கண்டு) சேவித்திட்டதனால், இனி (அப்பெருமானை நான்) மறந்துவிட்டாலும் நல்லதே; இதற்கு மாறாக, வேறுவகையாய் (நான்) வீழ்ந்தொழிந்தாலும் நல்லதே' என்று எண்ணி(ப்பிராட்டி) கவலையொழிந்தாள்; (எ - று.)

'என்கணவனை நான் காணாமலே போய்விடுவேனோ?' என்று நெடுநாளாகப் பிராட்டி ஏங்கிக்கிடந்தவளாதலால், அக்கணவனைக் கண்டவுடன் 'நான் என்கணவனைக் கண்டு சேவிக்கப்பெற்றேன்; இனி எனக்கு யாது தீங்குஉறினும் குற்றமில்லை' என்று எண்ணி அந்தஏக்கம்நீங்கினளென்பதாம். கருமவசத்தால் உடம்போடுகூடிப் பிறப்பெடுத்து இவ்வுலகில் வாழ்கிற நிலையிலும், அரியபெரிய அப்பிறப்புத்துன்பம் ஒழிந்து முத்தியையடைகிற நிலையிலும் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவே உற்றனசெய்து உதவுபவனென்ற சாஸ்திரார்த்தம், 'பிறப்பினுந் துணைவனைப் பிறவிப்பேரிடர் துறப்பினுந் துணைவனை'என்ற தொடர்களில் விளக்கப்பட்டது. பி - ம்:—[1]தொழுத. [2]நானெனை, நானெனை, நானுனை. [3]நன்றினி, நன்றென. [4]மற்றும் [5]வேறுவந்து. (௩௧௭௧)

௬௦. — இராமன் சீதையை நோக்குதல்.

கற்பினுக் [1]கரசினைப் பெண்மைக் காப்பினைப்
பொற்பினுக் [2]கழகினைப் புகழின் வாழ்க்கையைத்
[3]தற்பிரிந் தருள்புரி [4]தருமம் போலியை
[5]அற்பினத் தலைவனு மமைய நோக்கினான்.

(இ - ள்.) (எல்லாவுயிர்களிடத்தும்) அன்பையுடைய நாயகனான அந்தஇராமபிரானும்,-பதிவிரதாதருமத்துக்குத் தலைவியும்,(நாணம்முதலிய) பெண்மைக்குணங்கட்குப் பாதுகாவலாகவுள்ளவளும், (எல்லாவகை)அழகுகட்கும்அழகுசெய்பவளாயிருப்பவளும்,கீர்த்தி(அழிவின்றி

எங்கும்பரவி) நிலைத்துவாழ்தற்குக் காரணமானவளும், (தலைவனுகிய) தன்னைப்பிரிந்து (தனியேநின்று) கருணைசெய்கிற தருமத்தின்வடிவம் போன்றவளுமான சானகியை நன்றாகப் பார்த்தான்; (எ - று.)

சிறந்த கற்பையும் நீங்காத பெண்மைக்குணங்களையும் நல்ல அழகையும் மிக்கபுகழையு முடையவள் சீதை யென்பது, முன்னிரண்டடியின் கருத்து. பிராட்டி சிறையிருந்தது தேவஸ்திரீகளின் சிறையை விடுவிக்கைக்காக வாகையாலும், சிறைமீளும் முன்னரே தன்னை நலிந்த அரக்கியரின் நடுக்கங்கண்டு'அஞ்சன்மின்'என்று அபயமளித்ததனுலும் சீதையை'தற்பிரிந்தருள்புரிதருமம்போலியை'என்றது,இங்கு, "பிராட்டி முற்படப்பிரிந்தது தன்க்ருபையை வெளியிடுகைக்காக" என்ற ஸ்ரீவசனபூஷணவாக்யமும், அதன்வியாக்கியானமும் காணத்தக்கன. அற்பின் நோக்கினுன் என இயைத்தலும் ஒன்று. பி - ம்:—[1]அரசியைப். [2]அணியினைப். [3]தப்புறப்புரிந்தருள், தற்புறந்தருள்புரி, தற்புரிந்தருள்புரி. [4]தருமபோலியை. [5]அப்பினுட், அற்பெனுந். அற்புறத், அற்புதத். (௩௯௮௦)

௯௧.—இராமன் சீதையின்கற்புறுதியைப்பரிசோதிக்கக்கடிந்துகூறத் தொடங்குதல்.

சுணங்குறு துணைமுலை [1]முன்றிற் றூங்கிய
அணங்குறு நெடுங்கணீ ராறு [2]பாய்தர
[3]வணங்கியன் [4]மயிலினைக் [5]கற்பின் வாழ்வினைப்
பணங்கிள ரரவென [6]வெழுந்து [7]பார்ப்புறு.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நிறவேறுபாடுபொருந்திய இரட்டையானமுலையின்மேற்புறத்து(க் கண்களினின்று)சோர்ந்த வருத்தத்தைத்தெரிவிப்பதான மிக்க கண்ணீராறுபாய வணங்கிய தன்மையையுடைய மயில்போன்ற சாயலுள்ளவளும்கற்புவாழ்ச்சிபெறுதற்குஇடனுமானசீதாபிராட்டியை, படமெடுத்தபாம்புபோலப் பொங்கிச்சீறிப்பார்த்து,—(எ - று.)— 'பார்ப்புறு'என்ற 'செய்யா'வென்னும் வாய்பாட்டுஉடன்பாட்டெச்சம் ௯௮ - ஆஞ் செய்யுளிலுள்ள'என்றனன்'என்ற முற்றேடு முடியும்.

ஆனந்தக்கண்ணீராறுபாயத் தன்னைவணங்கின சீதையை இராமன் கோபக்குறிதோன்ற நோக்கிச் சிலகடுஞ்சொற் சொல்வானுயினனென்க. பி - ம்:—[1]முன்பிற். [2]வார்வுற, பாருற, யாடுற. [3]வணங்கிய. [4]மயிலியல். [5]மாசில்கற்பினைப். [6]முனிந்து, முனிவன். [7]பன்னுவான், பண்ணவன். (௩௯௮௧)

௯௨.—ஏழுகவிகள்-இராமன் சீதையைப் பலவாறு கடிந்துகூறியதைத்தெரிவிக்கும்.

ஊண்டிற முவந்தனை யொழுக்கம் பாழ்பட
மாண்டிலை முறைதிறம் பரக்கன் [1]மாநகர்
ஆண்டுறைந் [2]தடங்கினை யச்சந் தீர்ந்திவண்
மீண்டதென் [3]னினைவெனை விரும்பு மென்பதோ.

(இ - ள்.) நீதிநெறிதவறிய இராக்கதனான இராவணனது பெரிய இலங்கைநகரமாகிய அவ்விடத்தில் (நெடுநாள்)வசித்து (அவன்கீழ்) அடங்கியிருந்தாய்; (அங்கு) அறுசுவையுள்ள உணவுவகைகளை விரும்பி யுண்டு வாழ்ந்தாய்; (உனது) நல்லொழுக்கம் அழிந்திடவும் (நீ) இறந்தா யில்லை; (இத்தன்மையளான நீ), அச்சமின்றி இவ்விடத்தில் [இப்பொழுது] மீண்டுவந்தது யாதுகருதி? '(இராமன்) என்னை விரும்புவான்' என்பது (உன்)கருத்தோ? (எ - று.)

சீதை சிறையிருந்த பத்துமாசகாலத்திலும் யாதோருணவையும் சிறிதும்உட்கொள்ளாமல் "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற் றிலையு மெல்லாம், கண்ணன்" என்றபடி இராமசிந்தனையாலும் இராமனது ஸத்தாமாத்திரத்தாலும் தெய்வசங்கற்பத்தாலும் உயிர்த்திருக்கவும், இராமன் அவளைநோக்கி 'ஊணுண்டிற முவந்தனை' என்றது-நெடுநாள் இறவாது உயிர்வாழ்ந்திருந்தனை யாதலால் உணவுஉண்டேயிருப்பா யென்று அநுமானப்பிரமாணவகையால் அவள்மேற் குற்றமேற்றிக் கூறியவாறும்: பிறவற்றுக்கும் இங்ஙனமேகண்டுகொள்க. பி-ம்:— [1]மாணகர். [2]அடங்கிநீ. [3]இவனெனை, இவனமை. (௩கஅஉ)

௬௩. உன்னைமீட் பான்பொருட் டுவரி தூர்த்தொளிர்
மின்னை[1]மீட் டுறுபடை யரக்கர் [2]வேரறப்
[3]பின்னைமீட் டுறுபகை [4]கடந்தி லேன் [5]பிழை
என்னைமீட் பான்[6]பொருட் டிலங்கை யெய்தினேன்.

(இ - ள்.) உன்னை (ச் சிறை) மீட்டு அழைத்துக்கொள்ளுதற் பொருட்டு,-கடலை (மலைகளைக்கொண்டு)நிரப்பியடைத்து(அணைகட்டி), விளங்குகிற மின்னலை (த் தமது ஒளிக்கு ஒப்பாகாமையாற்) புறங்கொடுத்தோடச்செய்கிற [பேரொளியுள்ள] ஆயுதங்களையுடைய இராக்கதர் வேரோடழிய (ச் செய்து), பின்பும் மேன்மேற் போர்செய்து பெரும்பகையாகிய இராவணனை அழித்தேனில்லை; (மற்றுஎதற்காக எனில்), (தன்மனையாளைக் கவர்ந்துசென்றவனைக் கொன்றிலனென்ற) பிழையினின்று என்னை மீட்டுக்கொள்ளுதற்பொருட்டே(நான்) இலங்கைக்கு வந்து பகைவென்றேன்; (எ - று.)

நான் கடல்கடந்து இலங்கைசேர்ந்து ஆயுதபாணிகளான அநேக ராக்ஷசர்களை நிர்மூலப்படுத்தி விடாதுபொருது இராவணனைக் கொன்றது, உன்னைச் சிறைமீட்டு அழைத்துக்கொள்ள விரும்பியன்று; மனையாளை மாற்றான்கொள மாறுசெய்யாது விட்டன னென்ற பழி எனக்கு வாராமைப்பொருட்டேயென்றனனென்பதாம். பி-ம்:—[1]மீட்டுறுபகை, வீட்டுறுபடை. [2]வேரறுத்து. [3]இன்ன பன்னி, பன்னை. [4]இடித்திலேன். [5]பழி. [6]அமைந்து. இச்செய்யுள் ஒருபிரதியில் "பெண்மையும்"(௬௬) என்பதன்பின் உள்ளது. (௩கஅ௩)

௬௪. மருந்தினு [1]மினியமன் னுயிரின் வான்றசை
அருந்தினை [2]யேநற வமைய [3]வுண்டியே.

இருந்தனை 4யேயினி 5யெமக்கு மேற்பன
6விருந்துள வோவுரை 7வெம்மை நீங்கினாய்.

(இ - ள்.) (என்பக்கல்) அன்புநீங்கியவளே! மிக்க பிராணிகளின் பெரிய மாமிசங்களை அமிருதத்தைக்காட்டிலும் சுவைமிக்கனவாகக் கொண்டு (இலங்கையிற்) புசித்தனையே; மதுவை மிகுதியாகக் குடித்தனையே; (இவ்வாறு மதுமாமிசபட்சணஞ்செய்துஉயிருடன்) இருந்தாயன்றோ? (அத்தன்மையளான நீ), இனி எமக்கும் தகுதியாகச்செய்யும் (அத்தன்மையவாகிய)விருந்துகள் உள்ளனவோ? உரை; (எ - று.)

ராக்ஷசராசனது ராசதானியில் அவன்கீழடங்கிப் பலநாள் உயிர் வாழ்ந்திருந்த நீ, அவ்வரக்கரது வழக்கப்படி மதுமாமிசங்களை வெறுப்பின்றி விருப்பத்தோடு புசித்தேயிருப்பாய்; அப்படிப்பட்ட நீ இப்பொழுது இங்குவந்தது, உன்னோடு முன்புஉறவுடைய எங்கட்கும் அந்த மதுமாமிசவிருந்து செய்விக்கக் கருதியோ? சொல் என்றனனென்பதாம். "வெம்மை வேண்டல்"என்ற தொல்காப்பிய உரிச்சொல்லியற் சூத்திரத்தால், வெம்மை யென்பது - விருப்பத்தை யுணர்த்தும்போது உரிச்சொல்லாதலை யுணர்க. இனி, வெம்மைநீங்கினாய் என்பதற்கு - (கணவனைப் பிரிந்து பிறர்மனையில் வாழ்ந்தமைபற்றித்) தவித்த வில்லாதவளே! என்று உரைப்பினும் அமையும். மதுமாமிசங்கள் அரக்கர்கட்குத் தேவாமிருதத்தினும் உருசிக்கின்றன வென்பதுபற்றி, அவற்றிற்கு 'மருந்தினுமினிய'என்ற அடைமொழி கொடுத்தது. பி - ம்:— 1அரிய, உரிய. 2பெரு. 3உண்டனை. 4போய். 5எமர்க்குமேற்பன, எமக்குமேயென. 6விருந்துளவே. 7வெறுமை. (௩௯௮௪)

௯௫. கலத்தினிற் 1பிறந்தமா மணியிற் காந்துறு
நலத்தினிற் 2பிறந்தன 3நடந்த நன்மைசால்
குலத்தினிற் பிறந்திலை கோளில் 4கீடம்போல்
நிலத்தினிற் பிறந்தமை நிரப்பி னையரோ.

(இ - ள்.) ஆபரணங்களிற் பதிக்கப்படுகிற சிறந்தஇரத்தினங்கள் போல(ச் சிறப்புப்பெற்று)விளங்குகிறநன்மையோடுபொருந்தியனவான குணஞ் செயல்கள் (உன்னிடம்) ஒழிந்தன: (ஆகவே), மேன்மைமிக்க உயர்ந்தகுலத்திற் பிறவாமல் வலிமையில்லாத புழுப்போல நிலத்தினின்று (நீ) தோன்றியதற்குஏற்றதன்மையைப் பூர்ணமாகச் செய்துவிட்டாய்; (எ - று)---அரோ-ஈற்றசை

தேர்ந்தெடுத்து ஆபரணங்களிற்பதிக்கப்படும் விலையுயர்ந்த சிறந்த இரத்தினங்கள் விளங்குதல்போலப் புகழ்பெற்று எங்கும்விளங்கத்தக்க நற்குணநற்செய்கைகள் உன்னிடம் ஒழிந்தன வென்பது, முன்னிரண்டடிகளின் கருத்து. கருப்பத்தினின்று பிறவாமல் நிலத்தினின்று தோன்றினவளான நீ நற்குணநற்செய்கையுடையளாயிருப்பின் அயோநிஜையென்று பேர்பெறுவை; அதற்கு இப்பொழுது இடமில்லை: நற்குணநற்செய்கைகள்மிக்க உயர்குலத்தில் நீ பிறந்தவளாயிருப்பின் அக்

குலத்துக்கேற்ற நல்லொழுக்கமுடையளாயிருத்தல் கூடும்; அங்ஙனம் பிறவாது புழுப்போலத் தரையிற் பிறந்தமைபற்றி, அதற்கு ஏற்ப அற்பத்தன்மையையே முற்றிலும் உடையளாயினை யென்பது, பின்னிரண்டடியின் கருத்து. 'கலத்தினிற் பிறந்தமாமணி' என்பதற்கு-இரத்நாகரமான கடலில் தோன்றி மரக்கலத்திற் கொணரப்பட்ட சிறந்த இரத்தினமென்று பொருள்கொள்ளுதலு மொன்று. பி-ம்: --[1]பிறந்து. [2]பிறந்தது. [3]பிறந்தொளி. நடந்து, [4]நடாத்து [5]கிட்டம்பொன். ஒருபிரதியில் 'நலத்தினர்குலம்பிறந்துடந்து நன்மைசால்' என்று இரண்டாமடி. (௩கூஅ௫)

கூகூ. பெண்மையும் பெருமையும் [1]பிறப்புங் கற்பெனுந்
திண்மையு மொழுக்கமுந் தெளிவுஞ் சீர்மையும்
உண்மையு நீயெனு மொருத்தி தோன்றலால்
வண்மையின் மன்னவன் புகழின் [2]மாய்ந்ததால்.

(இ - ள்.) (நாணம்முதலிய) மகளிர்க்குஉரிய குணங்களும் இழிகுணமில்லாமையும் உயர்குடிப்பிறப்புக்குஏற்றஇயல்பும் பதிவிரதாதருமமென்கிற உறுதியும் நல்லொழுக்கமும்(கணவனையேதெய்வமாகக் கொள்ளும்) அறிவுத்தேர்ச்சியும் புகழும் பொய்யொழுக்கமில்லாமையுமாகிய இவை,—நீ ஒருத்திதோன்றியதனால் ஈகையில்லாத அரசனது கீர்த்தி (அழிதல்) போல (உலகத்தில்) அழிந்தன; (எ - று.)

இங்ஙனம் தீயொழுக்கமுடையளான நீயொருத்தி உலகத்தில் தோன்றியமைபற்றி, உலகத்திற் பெண்மைமுதலியன கேடடைந்தன என்றவாறு. அங்ஙனம் கேடடைதற்கு, தானஞ்செய்யாதவனது புகழ் அழிதல் உவமைகூறப்பட்டது: "ஈதல் இசைபட வாழ்தல்" என்றபடி புகழுக்கு ஈகையே சிறந்த காரண மென்பதும், அதுஇல்லாதவன் கல்வி ஆண்மை முதலிய பிறகாரணங்களாற்படைத்தபுகழும் அழியுமென்பதும் அறியத்தக்கன. திருக்குறளில் "கற்பென்னுந் திண்மை" என்றவிடத்து, பரிமேலழகர் 'கற்பென்னுங் கலங்காநிலைமை' என்று உரைத்தது, இங்கு உணரத்தக்கது. உண்மை-மனமொழிமெய்கள் மாறுபடாமை; அகமாகிய மனத்தின் கருத்தும், புறமாகிய சொற்செயல்களும் தம்மில் மாறுபாடின்றியிருத்தல், பெண்மையும்......உண்மையும்மாய்ந்தது. பன்மையொருமை மயக்கம். "ஏக: பாபாநி குருதே பலம் புங்க்தே மஹாஜந:" [ஒருவன் தீவினைகளைச் செய்கின்றான்; அதன்பயனைப் பலசனங்கள் அனுபவிக்கின்றார்கள்] என்றபடி உன் ஒருத்தியின் ஒழுக்கக்கேட்டினால், உலகத்து மகளிர்க்கெல்லாம் பழிப்பு விளைகின்றது என்க. பி-ம்:—[1]பிறப்பில். [2]மாய்ந்தவால்,மாய்த்ததால்.()

கூஎ. அடைப்பரை ம் புலன்களை யொழுக்க மாணியாச்
சடைப்பரந் [1]தகைந்ததோர் தகைவின் மாதவம்
[2]படைப்பர்வந் திடையொரு பழிவந் தாலது
துடைப்பர்தம் [3]முயிரொடுங் குலத்திற் [4]றோகைமார்.

(இ-ள்.) உயர்குலத்துமகளிர்,—(தம்கணவரைப் பிரிந்தகாலத்து) பஞ்சேந்திரியங்களை(த்தந்தமக்குஉரியபுலன்களில்தடையின்றிச் செல்ல வொண்ணாதபடி) அடக்கிவைப்பர்; நல்லொழுக்கத்தையே உறுதியா கக்கொண்டு (தமதுதலைமயிரைச் சிக்கற வாரிமுடியாமல் சடைத் தொகுதியாகத் திரித்துவிட்டு அந்தச்) சடாபாரத்தைத் தரித்த லோடு கூடிய ஒப்பற்ற தடையில்லாத (கற்பென்னும்) பெருந்தவத்தை யுடையராயிருப்பர்:(அங்ஙனமிருக்கையிலே தமக்கு)ஒருபழிஇடையேவ ந்துநேர்ந்தால், தம் உயிரை விட்டொழிந்து அப்பழியைப் போக்கிக் கொள்வர்; (எ - று.)—இப்படியுள்ள குலஸ்திரீகளுக்குஉரியநற்குண நற்செயல்கள் உன்னிடத்தில் இல்லையே யென்பதாம். இது-பிரிந்தமக ளிருக்கு இருக்கவேண்டிய குணங்கூறியது. பி-ம்:—[1]புனைந்தொளிர்ந் தகைவின், புனைந்தொளிர்தகையின், தவிர்ந்ததோர்தன்மை.[2]படைப்பர ந்து. [3]உயிர்கொடு. [4]தோகையார். இங்கே ஒருபிரதியில் மூன்றுசெய்யுள் கள் காணப்படுகின்றன: அவைவருமாறு:—

1. அழிபுகழ் செய்திடு மரக்க ராகையால்
பழிபடு மென்பரால் பாரு ளோரெலாம்
விழுமிய கன்றுநீ மீண்ட திவ்விடம்
கழிபடு மென்றனன் கமலக் கண்ணனே.

2. கண்ணுடை நாயகன் கழிப்ப னென்றபின்
மண்ணிடை தோன்றிய மாது சொல்லுவாள்
எண்ணுடை நங்கையர்க் கினிய தொன்றநான்
விண்ணிடை யடைவதே விழுமி தென்றனள்.

3. பொங்கிய சிந்தையள் பொருமி விம்முவாள்
சங்கைய தொன்றசொற் றரிக்கி லாமையால்
மங்கையர் குழுக்களு மண்ணுங் காணவே
அங்கியின் வீழலே யழகி தாமரோ. (௩௧அஎ)

௬அ. [1]யாதியா [2]னியம்புவ துணர்வை [3]யீடறச்
சேதியா நின்றதுன் [4]றொழுக்கஞ் செய்வது
[5]சாதியா லன்றெனிற் [6]றக்க தோர்நெறி
போதியா லென்றனன் புலவர் புந்தியான்.

(இ - ள்.) யான் (பல)கூறவேண்டுவது என்ன? உனது தீயொழுக் கம் (என்)அறிவை [மனத்தை] வலியற அறுக்கின்றது;(ஆதலால்),(இப் பொழுது நீ) செய்யக்கடவது (யாதெனில்,)—இறந்தொழி; அங்ஙன மன்றாயின், (உனக்குத்) தக்கதோரிடத்திற் சென்றிடு என்று(சீதையை நோக்கிக்) கூறினான்: (யாவனெனில்),—ஞானிகளுடைய மனத்தில் வீற்றிருப்பவனாகிய ஸ்ரீராமன்; (எ - று.)

நீ இறந்தாவது ஒழி; அன்றி,உனக்கு இஷ்டமானபடி வேறுஎங்கே யாவதுபோ; நான் உன்னைச் சேர்த்துக்கொள்ளே னென்றன னென்க. 'செய்வதுசாதியா லன்றெனின் தக்கதோர்நெறி போதி' என்பதற்கு -

உன்னுடையநடக்கை சாதிக்குஎற்றதன்றுதலால் நீஇங்குவாராது உன க்குஉரியவிடத்தே செல்லென்றுஉரைப்பாருமுளர். புலவர்புந்தியான்-அறிவுடையார் கொண்டாடும் அறிவுடையான் என்று பொருளுரைத்தலும் ஒன்று. அதிபரிசுத்தையும் மகாபதிவிரதையுமான பிராட்டியை நோக்கிப்பெருமாள் இங்ஙனம் நிர்த்தாக்ஷிண்யமாகச் சொன்னது, அவளுடைய கற்பின்நிலைமையை யாவரும் கண்டு உணரும்படி செய்ய வேண்டுமென்னுங் கருத்தினாலேயேயென்றும்,அவளிடம் தூய்மையில்லாமையினாலாவது அவளுடையதூய்மையைத் தான் அறியாமையாலாவது அன்று என்றும் அறிக. இவ்வுண்மை, மேல் விளங்கும். பி-ம்:--[1]ஏது. [2]இயம்புவன். [3]ஈண்டறச். [4]ஒழுக்கச்செய்தியாற், ஒழுக்கஞ்செய்தியாற். [5]சாதியான். [6]தக்கதோ. (௩கூ௮௮)

௯௯.—இராமன்சொன்ன கடுஞ்சொற்களைக்கேட்டு அனைவரும் கலங்குதல்.

[1]முனைவரு மமரரு மற்று முற்றிய
நினைவரு மகளிரு [2]நிருத ரென்றுளார்
எனைவரும் வானரத் தெவரும் வேறுளார்
அனைவரும் வாய்திறந் தரற்றி னாரரோ.

(இ - ள்.) பெரியோரான முனிவர்களும் தேவர்களும் மற்றும் நிறைந்த எண்ணவொண்ணாத [மிகப்பலரான] மாதர்களும் அரக்கர்களாகவுள்ளவர் எல்லோரும் வாநரவகையிற் சேர்ந்தவர்களெல்லோரும் மற்றும் (கரடிமுதலிய வர்க்கங்களிற்) சேர்ந்தவர்களெல்லோரும் (இராமன் பிராட்டியைநோக்கிக் கடிந்துகூறிய கடுஞ்சொற்களைக் கேட்டு மனம்பொறாமையால்) வாய்திறந்து கதறினார்கள்; (எ - று.)

முனைவர்-முன்னோர்; 'முன்னோனை முனைவன் என்பது, ஓர் சொல் விழுக்காடாம்; முன்என்பதனை முனையென்பவாகலின்' என்பது,தொல்காப்பியவுரை. வேறுளார்என்றது, கரடியாகிய ஜாம்பவான் முதலியவரை அடக்குதற்கு. பி-ம்:—[1]முனிவரும். [2]நிருபர். (௩கூ௮௯)

௭०.—இதுவும் அடுத்தகவியும் - இராமனது கடுஞ்சொற்களைச் செவியுற்ற சீதையின் வருத்தத்தைக் கூறும்.

கண்ணிணை யுதிரமும் புனலுங் [1]கான்றுக
மண்ணினை [2]நோக்கிய மலரின் வைகுவாள்
[3]புண்ணினைக் கோலுறுத் தனைய [4]பொம்மலால்
உண்[5]ணினைப் போவதின் றுயிர்ப்பு [6]வீங்கினாள்.

(இ - ள்.) (வெட்கத்தால்) தரையைநோக்கி(த் தலைகவிழ்ந்து)நின்ற செந்தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகளினது திருவவதாரமான சீதாபிராட்டி,-(இவ்வளவுகாலம் இராமனைப் பிரிந்துவருந்தியவள் இப்பொழுது அவ்விராமன் சொன்ன கடுஞ்சொற்களைக்கேட்டவளவிலே), புண்ணைக்கோல்கொண்டு கிளறினாற்போன்ற மிக்கவருத்தத்தால், (தனது) இரண்டு கண்களினின்றும் இரத்தமும் நீரும் மிகுதியாகச்சிந்த மனத்திற்பிரஜ்ஞைதவறிநின்று பெருமூச்சுவிட்டாள்; (எ - று.)

கண்கள் உதிரஞ்சொரிதல் - கோபத்தின் காரியமும், அவை நீர் சொரிதல் - விசனத்தின் காரியமுமாம். பி-ம்:—[1]கான்றது. [2]நோக்கியே, நோக்கியம், நோக்கினள். [3]புண்ணினிற், புண்ணிடைக். [4]பொம்மலாள். [5]நினைவோய, நினைவேட்ட, நினைப்போடு. [6]வீங்குவாள். (௩௯௯0)

எக. [1]பருந்தடர் சுரத்திடைப் பருகு நீர்நசை
வருந்தருந் துயரினுன் மாள லுற்றமான்
இருந்தடங் [2]கண்டதி னெய்து றுவகைப்
பெருந்தடை யுற்றெனப் பேதுற் றுளரோ.

(இ - ள்.) பருந்துகள் மிக்க பாலைவனத்திலே (அகப்பட்டு) நீர் குடிக்கவேண்டுமென்ற விருப்பத்தால் [தாகத்தால்] வருந்துதலாகிய அரிய துன்பத்தால் இறக்கிறநிலையையடைந்த மான் பெரியதடாகத்தைப் பார்த்து அத்தடாகத்தில் இறங்கவொண்ணாதபடி பெரியதடைநேரப்பெற்றாற்போல(அப்போது பிராட்டி அறிவு)கலங்கினாள்; (எ-று.)

கொடியஅரக்கர்கள் வசிக்கும் ஊராகிய இலங்கையிலே அகப்பட்டு இராமபிரானைச்சேரவேண்டுமென்னும் ஆசையினாலாகியதுன்பத்தால் மிகவருந்திய ஜாநகி அவ்விராமபிரானைக் கண்டும் அவனிடம் சாரவொண்ணாதபடி பெருந்தடைப்பட்டதை உவமையால் விளக்கினார். சுரம்-ஐவகைநிலங்களுள் நீரும் நிழலு மில்லாததும் பிராணிசஞ்சாரத்துக்குச் சிறந்ததல்லாததுமான பாலைநிலம். அதன்கருப்பொருள்களுள், பறவை - கழுகும் பருந்தும் புறாவுமெனக் காண்க. பி-ம்:—[1]பருந்தடை. [2]கண்டத்தில். (௩௯௯௧)

எ௨.—சீதை சிந்தித்துச் சிலசொல்லத் தொடங்குதல்.

உற்றுநின் றுலகினை நோக்கி [1]யோடரி
முற்றுறு நெடுங்கணீ ராலி மொய்த்துக
[2]இற்றது போலும்யா னிருந்து பெற்றபேறு
உற்றதா [3]லென்றவ மின்றென் றோதுவாள்.

(இ-ள்.) (இவ்வாறு மதிமயக்கம்) அடைந்துநின்று,—(பிராட்டி),—பரந்துசெல்லும் செவ்வரி நிரம்பிய நீண்டகண்களினின்று நீர்மழை மிக்குச்சிந்த உலகினைநோக்கி 'நான் (இவ்வளவுநாள் தீயொழுக்கமின்றி நல்லொழுக்கத்தோடு) உயிர்வாழ்ந்திருந்து பெற்ற பயன் இவ்வளவினதேபோலும்: எனதுநல்வினை இவ்வளவோடு பயன்தந்துகழிந்தது' என்று (இராமனைநோக்கிச் சிலவார்த்தை) சொல்பவளானாள்;(எ - று.)—அவற்றை, அடுத்த ஐந்துகவிகளிற் காண்க.

நெடுமையைக் கண்ணுக்கு அடைமொழியாக்காமல், நீராலிக்கு அடைமொழியாக்குதலும் ஒன்று. யான்பெற்றபேறு என்கணவனைக் கண்டு தொழுதலாகிய இவ்வளவினதேபோலு மென்பது, மூன்றாமடியின் கருத்து. இனி, பின்னிரண்டடிகளுக்கு - 'யான் இருந்து பெற்ற பேறு—, இற்றதுபோலும் - அழிந்ததுபோலும்,' என்று - என்றும், இன்று அவம் உற்றது என்று - 'இப்பொழுது (எனக்குத்) தீங்குநேர்ந்

தது' என்றும் சிந்தித்து, ஓதுவாள் என்று பதம்பிரித்து உரைத்தலும் ஒன்று. பி-ம்:—1ஓரடி. 2இற்றிது. 3இன்றெனற்றவமென்று, இன்றொடென்றென்று, இன்றவமென்றென்று. (௲௧௧௨)

எ௩.—இதுமுதல் ஐந்துகவிகள் ஒருதொடர்: சீதைசொல்லும்மறுமொழி.

மாருதி 1வந்தெனைக் 2கண்டு வள்ளனீ
சாருதி மீண்டெனச் சமையச் 3சொல்லினான்
யாரினு 4மேன்மையா னிசைத்த தில்லையோ
சோருமென் னிலையவன் றூது மல்லனோ

(இ-ள்.) வரையாது அருளுந் தன்மை யுடையவனே! அநுமான், (முன்பு இவ்விலங்கைக்கு) வந்து, என்னைப் பார்த்து, 'நீ இவ்விடத்துக்கு எழுந்தருள்வாய்' என்று (எனக்குத்) தேறுதலாம்படி கூறிப்போனான்; எல்லோரினும் மேலானவனான அவ்வநுமான், (இங்குச்) சோர்ந்துகிடந்த என்னுடைய நிலைமையை (உள்ளபடி உனக்கு) க் கூறினதில்லையோ? அவ்வனுமான் தூதலட்சணபூர்த்தியுடையவனல்லன் போலும்; (எ-று)

'அநுமான், முன்பு கடல்கடந்து இலங்கைக்கு வந்து என்னைக் கண்டு இராமதூதனென்று தன்னைத் தெரிவித்தபோது, என்னைப் பிரிந்திருக்கிற உன்னுடைய நிலைமையை எனக்குச் சொன்னதுமன்றி, பகைவென்று என்னைமீட்டற்பொருட்டு நீ விரைவில் இவ்விடத்துக்கு எழுந்தருள்வா யென்று எனக்குத் தேறுதலுண்டாம்படி கூறினான்' என்றது - உன்னைப் பிரிந்தவருத்தத்தால் மரணமடையஇருந்த நான் அந்தத்தேறுதல்வார்த்தையினாலேயே மனத்தை ஒருவாறு சமாதானப்படுத்திக்கொண்டு இதுவரை உயிர்வைத்திருந்தேன்; இல்லையாயின், முன்னமே இறந்திருப்பேனென்றவாறு; இது - 'மாண்டிலை' என்று இராமன் குற்றஞ்சாட்டியதற்குக் கூறிய மறுமொழி. 'தான்வருத்துக் கூறுதலாகிய உத்தமவிலக்கண மமைந்த சிறந்த தூதன்போல வந்து உன்னுடையநிலைமையை எனக்குக் கூறிய அந்தஅநுமான் உன்னைப் பிரிந்து இங்கு வசித்த காலத்தில் யான் சோர்ந்திருந்த நிலைமையை உனக்குக் கூறியதில்லையோ?' என்றது - அங்ஙனங் கூறியிருந்தால் 'ஊண்திற முவந்தனை' என்பதுமுதலாக நீ என்மீது குற்றஞ்சாட்டக் காரணமில்லையே யென்றவாறு. இங்ஙனம் சொல்லவேண்டியதைச் சொல்லாதுவிட்டதனால் அவன் தூதலக்ஷணம் சரிவரஅமையப்பெற்றவனல்லனோ வென்று வெறுத்துக்கூறினாள். முன்பு தான் மிகவருந்தி உயிர் துறப்பதாக இருந்த சமயத்தில் அநுமான் சடக்கெனவந்து இராமகுணங்களை யெடுத்துக்கூறித் தன்னைஉயிர்ப்பித்த உதவியைக் கருதி, அவனை 'யாரினும்மேன்மையான்' என்றாள். பி-ம்:—1வந்தெனக்கு. 2ஆண்டு. 3சொல்லிப்பின். 4மெய்ம்மையான். இச்செய்யுள், சிலபிரதியில் "எத்தவம்" என்ற அடுத்த பாடலின்பின்உள்ளது. (௲௧௧௩)

எ௪. எத்தவ மெந்நல 1மென்ன கற்புநான்
இத்தனை 2காலமு 3முழந்த 4வீதெலாம்

[5]பித்தென லாயவம் [6]பிழைத்த தா[7]லன்றே
உத்தம [8]நீமனத் துணர்ந்தி லாமையால்.

(இ - ள்.) புருஷோத்தமனே! இவ்வளவுகாலமாக நான் சிரமத் தோடொத்துவந்தனவாகிய எத்துணைச்சிறந்த தவமும் எத்துணைநற் குணநற்செய்கைகளும் எத்துணைச்சிறந்த பதிவிரதாதருமமும் ஆகிய இவைகளையெல்லாம் நீ (உனது) திருவுள்ளத்தில் அறிந்திடாததனால், (ஒவ்வொன்றும்) பைத்தியச்செயலென்னும்படி வீணே பழுதுபட்டது.

இங்குத் தவமென்றது - ஊணுறக்கமின்றித் தன்உடம்பை ஒறுத் துத் துன்பங்களைப்பொறுத்து ஐம்பொறியடக்கி மனத்தை யொரு வழிப்படுத்திக் கற்புடையளான தனக்குத் தெய்வமும் அனைத்துயிர்க் குந் தெய்வமுமான இராமபிரானையே தியானித்திருத்தல். பி - ம்:— [1]என்றன், என்னல். [2]காலமாய். [3]உளைந்த, உழன்ற. [4]இவ். [5]பித்தென லாயறம், பித்தெனலாயது. [6]பிழைத்ததாம். [7]என்ற்ே, மன்னே. [8]நின். சிலபிரதியில், "மாருதி" (௭௩)என்பதன்பின் "பங்கயத்து"(௭௪)என்ற பாடலிருக்க, அதன்பின் இப்பாடலுள்ளது. (௩௯௯௪)

௭௫. பார்க்கெலாம் பத்தினி பதுமத் தானுக்கும்
பேர்க்கலாஞ் சிந்தைய ளல்லள் [1]பேதையேன்
[2]ஆர்க்கெலாங் [3]கண்ணவ னன்றென் று[4]லது
தீர்க்கலாந் [5]தகையது தெய்வந் தேறுமோ.

(இ - ள்.) பேதைமையுடையளான நான் நிலவுலகமுழுவதிலுஞ் (சிறந்த)பதிவிரதை:(படைத்தற்கடவுளான)பிரமனுக்கும்மாற்றக்கூடிய மனநிலையுடையேனல்லேன்; (இங்ஙனம்இருந்தும்), உலகத்தவரெல் லோர்க்கும் கண்ணாகிய இராமபிரான் (என்னுடையநிறை) அத்தன் மையதன் றென்று கூறினால், அக்கருத்தை மாற்றும்படியான வகையை (வேறொரு)தெய்வம் அறியவதோ? (எ - று.)

உலகமுழுவதுக்கும் நான் உத்தமபத்தினியென்றும், பிரமனு லும் மாற்றமுடியாத மனநிறையை யுடையேன் என்றும் பிராட்டி தன்னைத் தானே புகழ்ந்துகூறியது, தன்னுடையகுணத்தைத் திருவுள் ளத்திற்கொள்ளாமல் தன்னை எதிரிலே பழித்த இராமபிரானது உள்ளத்தின் ஐயத்தை அகற்றும்பொருட்டு. உலகமெங்கும் எப்பொழு தும் நடக்கிற செயல்க ளெல்லாவற்றையும் அறியவல்ல திவ்விய ஞானக்கண்ணை யுடையவனும், எல்லோருடைய காட்சியறிவுக்கும் காரணமாகிற சூரியனைத் தோற்றுவித்த திருக்கண்ணை யுடையவனும், அனைவர்க்கும் உள்ளத்தினுணர்வை உண்டாக்குபவனும், யாவராலுங் கண்போல் அருமையாகப்பாராட்டப்படுபவனும், யாவர்க்கும் கண் போல இன்றியமையாதவனு மாதலால், எம்பெருமான், 'ஆர்க்கெலாங் கண்ணவன்' எனப்பட்டான். "கண்ணாவா னென்றும், மண்ணோர் விண் ணோர்க்குத், திண்ணார்வேங்கட, விண்ணோர் வெற்பனே" என்றார் திரு வாய்மொழியிலும். மேற்காட்டிய பாசுரத்தின் வியாக்கியானத்தில்

'கண் என்று நிர்வாஹகன்' என்று உரைத்தது கொண்டு, இங்கும், எல்லோர்க்கும் களைகணாகிய அவனென்று உரைப்பினுமாம்; களைகண் - இரட்சகன்: சரணமடையுமிடம். 'அப்படிப்பட்ட இராமபிரான்தானே அறியாதவன்போல எனது கற்புநிலைமையைத் தக்கதன்றென்று உபேட்சித்துவிட்டால், அப்பெருமானுடைய திருவுள்ளத்துக்கு ஐயமகற்றி நம்பிக்கையுண்டாக்கவல்ல தெய்வந்தான் வேறு உண்டோ?' என்றது, அனைவர்க்கும் இயலாது என்றவாறு. இப்படித் தன்னை இராமன் பின்பு உபேக்ஷிக்கக்கூடுமென்று முன்னமேஉணராது தான் இதுகாறும் உயிர்வைத்திருந்தமைபற்றி, 'பேதையேன்' என்று தன்னைத் தானே வெறுத்துக்கொண்டாள். பி-ம்:--[1]பேதையென்று. [2]ஆர்க்கலாம். [3]கணிவனும், கணவனது, சொல்லியென். [4]இனித். [5]தகையதோ. (௩௬௫)

௭௬. பங்கயத் தொருவனும் விடையின் பாகனும்
சங்குகைத் தாங்கிய தரும மூர்த்தியும்
அங்கையி னெல்லிபோ லனைத்து நோக்கினும்
மங்கையர் மனநிலை யுணர வல்லரோ.

(இ - ள்.) தாமரைமலரில்தோன்றிய ஒரு மூர்த்தியான பிரமனும் விருஷபத்தை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்துகிற சிவனும் (பாஞ்சசந்நியமென்னுஞ்) சங்கத்தைக் கையிலேந்திய தருமசொரூபியான திருமாலும்(ஆகிய திரிமூர்த்திகளும்),--உள்ளங்கைநெல்லிக்கனியைப்போல எல்லாப்பொருள்களையும் உள்ளபடியுணரவல்லராயினும் மாதர்களுடைய மனத்தின் நிலைமையை (இன்னதன்மையதென்று உள்ளபடி) அறிய வல்லரோ? [அல்ல ரென்றபடி]; (எ - று.)

அங்கையின்நெல்லி - வடமொழியில் 'கரதலாமலகம்' எனப்படும் அகங்கையிற் கொண்ட நெல்லிப்பழம், முழுவதும் எளிதில் நன்கு பார்க்கக்கூடியதும் மேலுள்ள வரைகளைநோக்கி அவற்றைக்கொண்டே உள்ளேயுள்ள விதையின் வரைகளையும் உணரக்கூடியதும் ஆதலால், ஐயந்திரிபற நன்குநோக்கி யுணரப்படுதற்கு உவமைகூறப்படும். மங்கையர்மனத்தின் தூய்மையும் தூய்மையின்மையும் அவர்களுடைய சொற்செயல்களைக்கொண்டு எவர்க்கும் நன்குஉணரத்தக்கனவல்ல வென்பது கருத்து. ஆதலால், யான் நெஞ்சைக் கற்புநெறியில்நிறுத்தியிருந்த நிலையை என்கொழுநன் அறிந்திலனென்றவாறு. (௩௬௬)

௭௭. ஆதலிற் [1]புறத்தினி [2]யாருக் காகவென்
கோதறு தவத்தினைக் கூறிக் [3]காட்டுகேன்
சாதலிற் சிறந்ததொன் றில்லை தக்கதே
வேதநின் பணி[4]யது விதியு மென்றனள்.

(இ - ள்.) வேதசொரூபியே! இங்ஙனமாகுதலால், இனி என்து குற்றமற்ற கற்புநெறியை (வேறு)யாருக்குத்தான் சொல்லி யுணர்த்தக்கடவேன்? (இந்நிலையில் எனக்கு),இறத்தல்போலச்சிறந்தது வேறொன்றில்லை; ('சாதி' என்று) நீ கட்டளையிட்டது தகுதியானதே; (எனது

வினைப்பயனும் அங்ஙனமேஉள்ளதுபோலும் என்றுசொன்னாள், (பிராட்டி); (எ - று.)—விதியும் என்பதற்கு - என்கடமையு மென்றும் உரைகூறலாம். பி - ம்:—[1]பிறர்க்கினி, புறத்தினின், புறத்துநான். [2]ஆருக்காகுகேன், உயிருக்காகவென், ஆருக்காகவிக். [3]காட்டு வேன். [4]இது. (௬௧௧எ)

எஅ.—சீதை இலக்குமணனை நோக்கித் தீயமைக்கச்சொல்ல, இராமனும் அநுமதிசெய்தல்.

இளையவன் றனை[1]யழைத் திடுதி தீயென
வளையொலி முன்கையாள் வாயிற் [2]கூறினாள்
[3]உளைவுறு [4]மனத்தவ னுலகம் யாவுக்குங்
[5]களைகணைத் தொழுதவன் கண்ணிற் கூறினான்.

(இ - ள்.) வளையல்கள் ஒலிக்கின்ற முன்னங்கையையுடையவளான பிராட்டி,இளையபெருமானை(அருகில்)அழைத்து'(யான் குதித்தற் பொருட்டு) அக்கினியை அமைப்பாய்'என்று வாயினால் (வெளிப்படையாகச்)சொன்னாள்; (அதுகேட்டு) வருத்தம் மிக்க மனத்தையுடையவனான அவ்விலக்குமணன், (இராமபிரானது திருவுள்ளத்தை அறிதற் பொருட்டு) உலகத்து உயிர்களெல்லாவற்றிற்கும் புகலிடமான அப் பெருமானை வணங்க, அந்த ஸ்ரீராமனும் கண்பார்வையின்குறிப்பினால் (அவ்வாறே தீயமைக்கச்) சொன்னான்; (எ - று.)

'கூறினாள்' என்றவிடத்து 'வாயின்' என்றது வேண்டாதாயினும், பின் 'கண்ணிற்கூறினான்' என வருவதை நோக்கிச் சொல்லவேண்டிற் றென்க. இங்கு 'கூறுதல்' என்றது, கருத்தைப் புலப்படுத்தலை; "முகனுரைக்கும் உள்நின்ற வேட்கை" என்பதில் 'உரைத்தல்' என்பதுபோல. உலகம்-இங்கு, சீவான்மா. பி-ம்:—[1]அமைத்திடுதி, அமைத் தீதி, அமைத்திடுக. [2]கூறலும். [3]உளைவறு. [4]மனத்தினன், மனத்தற்கு. [5]களைகனைதொழிலவன், களைகணையனையவன், கடவுளேயனையவன். ()

எகூ.—இலக்குமணன் தீமூட்ட, சீதை அதனை அடுத்தல்.

ஏங்கிய [1]பொருமலி னிழிக ணீரினன்
வாங்கிய வுயிரினா [2]னனைய மைந்தனும்
ஆங்கெரி [3]விதிமுறை [4]யமைவித் தானதன்
பாங்குற நடந்தனள் [5]பதுமப் போதினாள்.

(இ - ள்.)(இராமனதுகருத்தை யறிந்தவளவிலே) உயிர்நீங்கியவன் போலான [மரணவேதனைக்கு ஒப்பான மிக்கசோகத்தை யடைந்த] அந்தவீரனான இலக்குமணனும்,விம்மிவிம்மிஅழுதலாற் சொரிகிற கண்ணீரையுடையவனாய்,அவ்விடத்தில்[அப்பொழுது]தீயை (அக்கினிப்பிரவேசவிதியைக் கூறுகிற) சாஸ்திரங்களிற்சொன்ன முறைப்படி (மூட்டிச்)சித்தஞ்செய்தான்; செந்தாமரைமலரில்வாழும் திருமகளினது அவதாரமான சீதை, அத்தீயினருகில் பொருந்தச் சென்றாள்; (எ - று.)

மெல்லியசெந்தாமரையில் வாழ்பவள் கொடியசெந்தீயிற் குதித்தற்கு அணுகினளென இரக்கந்தோன்றக் கூறினார்.வாங்கிய உயிரினன்,

நெடிதாகஎறிந்த பெருமூச்சையுடையவனாய் என்றுமாம். பி - ம்:—[1]பொருமலன். [2]இளைய. [3]விரி. [4]அமைப்பித்தான். [5]பதுமப்போதனாள், பதுமத்தாளினாள். (௩௯௯௯)

௮௦.—அப்பொழுது உலகத்திலுண்டான தடுமாற்றத்தை, இதுமுதல் நான்குகவிகளிற் கூறுகிறார்.

[1]தீயிடை யருகுறச் சென்று தேவர்க்குந்
தாய்தனிக் [2]குறுகலுந் தரிக்கி லாமையால்
வாய்திறந் தரற்றின [3]மறைக ளான்கொடும்
[4]ஓய்வினல் லறமுமற் றுயிர்கள் யாவையும்.

(இ - ள்.) (மற்றையெல்லாவுயிர்கட்கும்மாத்திரமேயன்றிச் சிறப்புடையுயிரான)தேவர்கட்கும் தாயான ஜாநகிப்பிராட்டி தனியே அக்கினியிலே (பிரவேசிப்பவளாய் அதன்)சமீபத்திலே பொருந்தச் சென்று சேர்ந்தவளவிலே,—(அந்தக்கடுஞ்செயலைச்) சகிக்கமாட்டாமையால், நான்கு வேதங்களுடனே, ஒழிவற்றதான சிறந்ததருமமும்மற்றை அனைத்துயிர்களும் (தம்தம்) வாயைத்திறந்து கதறின; (எ - று.)

மறை - வேதபுருஷன். அறம் - தருமதேவதை. உயிர்-பிராணி. தேவர்க்கும் தாய் - லோகமாதா. எல்லாப்பிராணிகட்கும் மூலகாரணமாதலாலும் தந்தையாகிற பெருமானுடைய தேவி யாதலாலும், அவற்றிற்கெல்லாம் தாயாகிறவள்; எல்லாவுயிர்களிடத்தும் தாய்போல மிக்க அன்புடையவள்; அவ்வுயிர்களால் அன்போடு தாய்போல மதித்துப் பாராட்டத்தக்கவள். பி - ம்:—[1]தீயினை. [2]உறுதலும். [3]வரைக்கண். [4]மாய்வினல்லறமுமற்று, ஓய்விலாவறமுது, ஓய்வுறுமறமுமற்று. (௪௦௦௦)

௮௧. வலம்வரு மளவையின் மறுகி வான்முதல்
உலகமு முயிர்களு மோல மிட்டன
அலம்வர லுற்றன [1]வலறி யையவிச்
சலமிது தக்கில தென்னச் [2]சாற்றின.

(இ - ள்.) (பிராட்டி அக்கினிப்பிரவேசஞ் செய்தற்பொருட்டு அவ்வக்கினிதேவனைப்) பிரதட்சிணஞ்செய்யுமளவிலே, சுவர்க்கம்முதலிய உலகங்களும் (அவ்வுலகங்களிலுள்ள) பிராணிவர்க்கமும், (தாம்) நிலைபெயர்ந்துசுழன்று கோவென்றுகதறின; மிகத்துன்பப்பட்டன; கதறியொலித்து (இராமனைநோக்கி), 'ஐய! இத்தன்மையதான இத்தணியாக்கோபம் தகுதியில்லாதது' என்று சொல்லின; (எ - று.)

வலம்வருதல் - வலப்பக்கமாகச்சூழ்ந்துவருதல். அலம் - மிக்க சஞ்சலம். பி - ம்:—[1]அமுதவையனச், அலறியையனச், அலறியையனை. [2]சாற்றினான். (௪௦௦௧)

௮௨. இந்திரன் [1]றேவியர் [2]முதல வேழையர்
அந்தர வானினின் றரற்று கின்றவர்
செந்தளிர்க் கைகளாற் சேய ரிப்பெருஞ்
சுந்தரக் [3]கண்களை யெற்றித் [4]துள்ளினார்.

(இ - ள்.) இந்திரனது மனைவிமார் முதலான தேவமாதர்கள், ஆகாயவெளியிலேநின்று கதறுகின்றவர்களாய்ச்சிவந்த தளிர்போன்ற (தங்கள்)கைகளால்,சிவந்தரேகைகளையுடைய பெரிய அழகிய(தங்கள்) கண்களை மோதிக்கொண்டு துடித்தார்கள்; (எ - று.)

இப்படிப்பட்ட மகாசோகத்துக்குக் காரணமான செயலைத் தங்கள் கண்களாற் பார்க்க நேர்ந்த வருத்தம்பற்றி, அக்கண்களைக் கைகளால் மோதுவாராயினர். பி - ம்:—[1]தேவியே, தேவியை. [2]முதலா. [3]கணவனை. [4]சோர்ந்தனர். (௪00௨)

௮௩. நடுங்கினர் [1]நான்முகன் [2]முதல நாயகர்
படங்குறைந் ததுபடி சுமந்த [3]பாம்புவாய்
விடம் [4]பரந் துளதென வெதும்பிற் றுலகு
[5]இடந்திரிந் தனசுடர் கடல்க [6]ளேங்கின.

(இ - ள்.) பிரமன்முதலிய தலைமைத்தேவர்களெல்லோரும் (உள்ளமும் உடலும்) நடுங்கினார்கள்; (கீழிருந்து) பூமியைச்சுமக்கிற ஆதிசேஷனும் படம் ஒடுங்கிற்று; உலகமுழுவதும் (அப்பாம்பின்) வாயினின்று விஷம் (கக்க) எங்கும்பரவுதலால் தவிப்பதுபோலத் தவிப்படைந்தது; சூரியன் முதலிய சோதிகள் இடம் பிறழ்ந்தன; கடல்கள் அழுகையொலியைச்செய்தன; (எ - று.) பி - ம்:—[1]நாயகன். [2]முதலா. [3]பாந்தளும். [4]பிறந்துளது, பரந்துள. [5]இடந்தனசுடர் கடாம். [6]ஏந்திய. (௪00௩)

௮௪.—சீதை அங்கியங்கடவுளைநோக்கி, 'நான் கற்புக்குறையுடையேனாயின் என்னைச் சுடுக' எனல்.

[1]கனத்தினாற் [2]கடந்த[3]பூண் [4]முலைய [5]கைவளை
மனத்தினால் [6]வாக்கினான் மறுவுற் றேனெனின்
சினத்தினாற் சுடுதியாற் றீச்செல் வாவென்றாள்
[7]வனத்துழாய்க் [8]கணவற்கும் வணக்கம் போக்கினாள்.

(இ - ள்.) (அப்பொழுது) பருமையினால் மிக்குள்ளனவும் பூணணிந்தனவுமான தனங்களையுடைய கைவளையாளான பிராட்டி,-(அக்கினியைநோக்கி), 'அக்கினிபகவானே! (நான்) மனமொழிமெய் என்னுந் திரிகரணங்களில் ஒன்றினாலேனும் களங்கமுடையேனாயின்,(என்னை நீ) கடுமையாகஎரித்திடு' என்றுசொல்லி, வனத்தில்தோன்றுந் திருத்துழாயையணிந்த கணவனான இராமனையும் நமஸ்கரித்தாள்; (எ - று.)— அவதாரங்களில்திருமாலணியும்மாலைகள்திருத்துழாயினமிசமாகுமென்பர். மனோவாக்குக்களைக்கூறியது, காயத்திற்கும் உபலட்சணம். பி-ம்:—[1]கணத்தினால். [2]கடைந்த. [3]பூ. [4]முலையள், முலையைக்,முலையக். [5]கற்பினால். [6]வாங்கினான். [7]புனத். [8]கணவற்கு. (௪00௪)

௮௫.—பிராட்டி அக்கினிப்பிரவேசஞ்செய்ய,அவளை அனல்சுடாதிருக்க, அவளுடையகற்புத்தீயினால் அனற்கடவுள் வேதல்.

நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை
[1]ஏய்ந்ததன் [2]கோயிலே யெய்து வாளெனப்

பாய்ந்தனள் பாய்தலும் [3]பாலின் பஞ்செனத்
தீந்ததவ் வெரியவள் கற்பின் றீயினல்.

(இ - ள்.) நீந்தவொண்ணுத நீரில் [ஆழ்ந்த பெரிய நீர்நிலையில்] ஓங்கியெழுந்த செந்தாமரைமலராகிய பொருந்திய தனதுவாழிடத்தையே சென்று சேர்பவள்போல (அந்தச்செந்தீயிற் பிராட்டி)விரைவாகப் பிரவேசித்தாள்; (அங்ஙனம் அவள்) குதித்தவளவிலே அந்தத் தீ அப்பிராட்டியினுடைய பதிவிரதாதருமமாகியநெருப்பினுல் வெண்ணிறமுள்ள[சுத்தமான] பஞ்சுபோல எரிந்திட்டது; (எ-று.)

அழுக்கற்ற பஞ்சைத் தீ விரைவில் எளிதில் எரித்தழித்தல்போல, பரிசுத்தமான அந்தஅக்கினியைப் பிராட்டியின் பதிவிரதாதருமமாகிய அக்கினி எரிக்கத்தொடங்க, அது பிராட்டியைச்சுடமாட்டாமற்போயிற்றென்க. பால் என்றது, இங்கு இலக்கணையாய் வெண்ணிறத்தின் மேல் நின்றது. நிறம்பற்றிச் செந்தாமரையும் செந்தீயும் தம்மில் ஒக்கும் இங்கு, ஜாநகிப்பிராட்டி திருமகளாகியதனக்கு வாழ்விடமான செந்தாமரைமலரினுள்ளே இனிது சென்றுசேர்தல்போல அச்செந்தீயிலே இனிதுசென்றுசேர்ந்தன ளென்பது விளங்க, உவமைகூறினர். இவ்வுவமை-சீதைக்கு நெருப்பு வெப்பஞ்செய்யமாட்டாதுதட்பஞ்செய்தலை விளக்கும். பி - ம்:—[1]ஏய்ந்தன. [2]கோயிலுள். [3]பாவின், அனலிற், பாலிற். (௪00௫)

அகூ.—அக்கினிதேவன் தவிப்படைந்து பிராட்டியை ஏந்திக்கொண்டு இராமபிரானைக்குறித்து ஓலமிடுதல்.

[1]அழுந்தின [2]ணங்கைமற் றங்கை யாற்[3]சுமந்து
எழுந்தன [4]னங்கிவெந் தெரியு மேனியான்
தொழுங்[5]கரத் துணையினன் சுருதி ஞானத்தின்
கொழுந்தினைப் பூசலிட் டரற்றுங் கொள்கையான்.

(இ - ள்.) (இவ்வாறு தன்னில் அழுந்தினவளாகிய உத்தமஸ்திரீயான சீதையை, (அவளது கற்பின்அனலால்) தவிப்படைந்துஎரிகிற வடிவையுடையவனுகி, உடனே(அந்த)அக்கினிதேவன்,வேதங்களினுல் உணர்த்தப்படுகிற தத்துவஞானத்தின் கொழுந்தாகிய இராமபிரானைக் குறித்து (அபயம்வேண்டி)ப் பேரொலிசெய்து கதறுகிற தன்மையையுடையவனும் குவித்துவணங்குகிற இரண்டுகைகளை யுடையவனுமாகி, அழகிய தனதுகைகளால் தாங்கிக்கொண்டு எழுந்தான்;(எ - று.)

சுருதிஞானத்தின்கொழுந்து-வேதப்ரதிபாத்யமான பரப்ரஹ்மம். இராமபிரானைநோக்கிப் பூசலிட்டது, தனது தவிப்பை யுணர்த்துதற்கென்க. அக்கினிதேவன் எழுகைகளையுடையவனுதல் இங்கு அறியத்தக்கதும். பி - ம்:—[1]அழுந்திய [2]நங்கையை. [3]எடுத்து. [4]அங்கம். [5]துணைக்கரத்தினன். இச்செய்யுளின் பின் சிலபிரதிகளில் ஒருபாடல் காணப்படுகின்றது; வருமாறு:—

அஞ்சின னஞ்சின ளைய வஞ்சினன்
[1]பஞ்சிவர் மெல்லடிப் பதுமத் தாடன்மேல்
[2]விஞ்சிய கோபத்தால் விளையு மீதெலாம்
[3]தஞ்சமோ மறைமுதற் றலைவ வீதென்றான்.

பி-ம்:—[1]பஞ்சினின். [2]மிஞ்சிய. [3]தஞ்சனையலைத்தன. (௩௦௦௬)

அ௭.—தீக்குதித்ததனால் பிராட்டியின்மேனி சிறிதும்வாட்டமுறாமை.

[1]ஊடின சீற்றத்தா [2]லுதித்த வேர்களும்
[3]வாடின வில்லை[4]யா லுணர்ந்து மாறுண்டோ
பாடிய வண்டொடும் பனித்த தேனொடும்
சூடின [5]மலர்களீர் [6]தோய்த்த [7]போன்றவால்.

(இ - ள்.) (தன்பக்கல் தன்கணவன்) காட்டிய கோபத்தாலாகிய தாபத்தால் (சீதையின்மேனியில்) அரும்பிய வேர்வைநீர்த்துளிகளும், உலரவில்லை; (அப்பிராட்டி கூந்தலிற்)சூடிய பூக்கள், (தம்மிடம்மொய்த்து) இசைபாடுகிற வண்டுகளோடும் (இடைவிடாது)துளிக்கின்ற தேனோடும் (நெருப்பிலாழ்ந்த அடையாளம் சிறிதுமின்றி) நீரில்தோய்த்து எடுக்கப்பட்டனபோலக் குளிர்ந்துகாணப்பட்டன; (இன்னும் இதைப்பற்றி) மாறுசொல்லவேண்டுவது உண்டோ? (எ - று.)

கீழ் இராமன் சீதையினிடங் காட்டிய கோபம் அவளது கற்பு நிலையை உலகம் அறியச்செய்விக்கவேண்டு மென்னுங் கருத்தினால் அன்புபற்றி நிகழ்ந்த தென்பது தோன்ற, 'ஊடினசீற்றம்' எனப்பட்டது. இனி, 'ஊடினசீற்றத்தால்' என்பதற்கு - (பிராட்டி பெருமானிடம்)கொண்ட கோபத்தா லென்று உரைப்பாரு முளர். மோனைத் தொடைக்குஏற்ப, உணர்ந்தும் மாறு எனப் பதம்பிரிக்க. மாறு-வேறுவழி யென்க. பி - ம்:—[1]ஊறின. [2]உதிர்த்த. [3]மாறின, வாடினது. [4]மற்று. [5]மலர்க். [6]தோய்ந்த. [7]போலுமால். (௩௦௦௭)

அஅ.—அப்பொழுது உலகம் தடுமாற்றமொழிய உயிர்கள் களித்தல்.

திரிந்தன வுலகமுஞ் [1]செவ்வ னின்றன
[2]பரிந்தவ ருயிரெலாம் [3]பயந்த விர்ந்தன
அருந்ததி முதலிய [4]மகளி ராடுதல்
[5]புரிந்தனர் நாணமும் பொறையு [6]நீங்கினார்.

(இ - ள்.) (பிராட்டி தீக்குதிக்கச்சென்றபொழுது), நிலைகுலைந்தனவான உலகங்களும், (இப்பொழுது அப்பிறழ்ச்சியொழிந்து) சரிவர நின்றன; இரங்கியவர்களுடைய உயிர்களெல்லாம், அச்சமொழிந்தன; அருந்ததிமுதலான மாதர்கள், (களிப்புமிகுதியாற்) கூத்தாடுபவராகி வெட்கமும் அடக்கமும் நீங்கப்பெற்றனர்; (எ - று.)—இதுவும், கீழ்க்கவியும் - கவிக்கூற்று; இவற்றை, அக்கினிதேவன் வார்த்தையாகக் கொண்டு அமைக்கவும் இடமுண்டு. பி-ம்:—[1]செவ்வை,செம்மை. [2]பரிந்தன. [3]பயமும்நீங்கின, பயத்தினீங்கின, பயந்துநீங்கின, பயத்தநீங்கின.

[4]மகளிர்யாவரும், மகளிராரொடும். [5]பொருந்தியநாரெடும். [6]போற்றினர், எந்தினர். (சOOஅ)

அகூ.—அக்கினிதேவன் இராமபிரான்பக்கல் முறையிடுதல்.

கனிந்துயர் கற்பெனுங் கடவுட் [1]டீயினால்
[2]நினைந்திலை [3]யென்வலி [4]நீக்கி னையென
[5]அநிந்தனை யங்கிநீ யயர்வி லென்னையும்
முனிந்தனை யாமென முறையிட் டானரோ.

(இ - ள்.) '(நீ எனதுஎளிமையைத்) திருவுள்ளத்திற் கொள்ளாமல் முதிர்ந்துசிறந்த (உன்மனைவியினது) பதிவிரதாதருமமாகிய தெய்வத்தன்மையுள்ளஅக்கினியைக்கொண்டு என்வலிமையையொழித்திட்டாய்' என்றும், 'நீ (சீதாதேவியைமாத்திரமே யன்றிஉன்பக்கல்)யாதோரபசாரமும்படாதஎன்னையும் கோபித்தனைபோலும்'என்றும், பழிப்புக்கு இடமில்லாதவனை அக்கினிதேவன், (இராமபிரானை நோக்கித் தன்குறைகூறி) முறையிட்டான்; (எ - று.)

கனிந்து - உரியபக்குவமடைந்து, பதப்பட்டு. அயர்வு-சோர்வு: தவறிப்பிழைசெய்கை. அநிந்தனை யங்கிநீ என்றுஎடுத்து, பழிப்பற்றயாகாக்கினி சொரூபியாகிய நீ யென்று உரைத்தால், 'முறையிட்டான்' என்பதற்கு அக்கினி யென்ற தோன்றாஎழுவாய் வருவிக்கவேண்டும். பி-ம்:—[1]தீயைநீ, தீமைநீ. [2]நினைந்தனை. [3]என்வயின். [4]நீங்கினாய். [5]அநிந்தனைவழங்கிநீ மனத்தினெலனை, அனந்தனைமயங்கிநீ மனத்தினென்னையும், அநிந்தனையங்கியான்மனத்தினெலனை, அநிந்தனையங்கிநீயயர்கிலென்னையும், அநிந்தனையங்கிநீயாகிலென்னையும். (சOOகூ)

கூO.—அந்தஅக்கினிதேவனை இராமன் சிலவினாவல்.

[1]இன்னதோர் காலையி னிராமன் யாரைநீ
என்னைநீ [2]யியம்பிய தெரியுட் டோன்றியிப்
புன்மைசா லொருத்தியைச் சுடாது [3]போற்றினாய்
அன்னதார் [4]சொல்லவீ [5]தறைதி யாலென்றான்.

(இ - ள்.) இத்தன்மையதான ஒரு[இங்ஙனம் அக்கினிமுறையிட்ட அச்] சமயத்தில், இராமன்,—(அவனைநோக்கி), 'நீ யார்? நீ நெருப்பினுள்ளே தோன்றிக் கூறியது என்ன? தீயொழுக்கம் மிக்க ஒருத்தியான இவளை(நீ)எரித்திடாமல் பாதுகாத்தாய்;அத்தன்மை யார்சொல்ல (நிகழ்ந்தது)? இவ்வினாவகைக்கு விடை கூறு' என்று சொன்னான்.

அன்னது ஆர் சொல்ல - யார்சொல்லைக்கேட்டு அப்படி நீசெய்தாயென்றபடி. பி - ம்:—[1]இன்னதே. [2]இயம்புவது. [3]போக்கினாய். [4]சொல்லுவது. [5]அறிதி. (சOகO)

கூக.—இதுமுதல் ஐந்து கவிகள் - அக்கினிதேவன் மறுமொழி.

அங்கியா [1]னென்னையிவ் [2]வன்னை கற்பெனும்
பொங்கு[3]வெந் தீச்சுடப் பொறுக்கி லாமையால்

இங்கணைந் தேன்[4]னுறு மியற்கை நோக்கியும்
[5]சங்கியா நிற்றியோ வெவர்க்குஞ் சான்றுளாய்.

(இ-ள்.) யான் அக்கினிதேவன்: என்னை லோகமாதாவாகிய இத் தேவியினது பதிவிரதாதருமமாகிய பொங்கியெழுகிற வெவ்விய நெருப்பு எரிக்க, (அந்தத்தாபத்தை யான்) பொறுக்கமாட்டாமையால் இங்கு அணைந்தேன்: எல்லோரினும் மேம்பட்டுள்ளவனே! (இங்ஙனம் எனக்கு) நேர்ந்த தன்மையைப் பார்த்தபின்பும், (இப்பிராட்டியின் ஒழுக்கத்தைப்பற்றி நீ) சங்கித்துநிற்கக்கடவையோ? (எ-று.)

சான்றுளாய் - (எல்லாக்கருமங்களுக்கும்) சாக்ஷியாகவுள்ளவனே! என்றுமாம். பி-ம்:—[1]இணைவிலா, இணையிலான். [2]அணையின். [3]தீச் சுடவது. [4]எனதியற்கைநோக்கியும், என்திறத்தையெண்ணியும். [5]சங் கையாய். (௪0௧௧)

௬௨. வேட்பது [1]மங்கையர் விலங்கி னாரெனிற்
[2]கேட்பதும் பல்பொருட் கையங் கேடற
மீட்பது [3]மென்வயி னென்னு மெய்ப்பொருள்
[4]வாட்பெருந் தோளினாய் மறைகள் [5]சொல்லுமால்.

(இ - ள்.) 'ஒளியையுடைய பருத்த தோள்களையுடையவனே! (குல ஸ்திரீகளை) விவாகஞ்செய்துகொள்வதும், (அந்த) மாதர்கள் (இல்லறத்தி னின்று) விலகினார்களாயின் (அவர்களுடைய ஒழுக்கத்தைக்குறித் துப் பிரமாணமாகவைத்துக்) கேட்பதும், (மற்றும்) பலவிஷயங்களிலுண் டான சந்தேகத்தைப் பிழையில்லாதபடி நிவிருத்திசெய்துகொள்வதும் (ஆகிய இவையெல்லாம்), என்பக்கலிலேயே (நிகழக்கடவன)' என்கிற தத்துவார்த்தத்தை வேதங்கள் (வெளிப்படையாகக்) கூறுமன்றோ!

அக்கினிசாட்சியாக விவாகஞ்செய்துகொள்ளுதலும், மங்கைய ரொழுக்கத்தைப்பற்றி ஐயமுண்டானபோது அவர்களை அக்கினிசாக்ஷி யாகச் சொல்லும்படி கேட்பதும், மற்றும்பலவிஷயங்களில் 'நெருப்பி லிடினும் கெடாதிருப்பின் தூய்மையுடையது' என்று சந்தேகநிவி ருத்தி செய்துகொள்ளுதலும் இங்குக்குறிக்கப்பட்டன. இல்லறத்தி னின்று விலகிய மகளிர் தீக்குதித்து மீளின் ஒழுக்கந்தவறாதவ ரென் று கொள்ளப்படும் மரபுபற்றி அவர்களுடைய ஒழுக்கத்தைக்குறித்துச் சோதிப்பது என்ற பொருளும், 'மங்கையர்விலங்கினாரெனிற் கேட் பது' என்றதில் அடங்கும். (பல்பொருட்கு ஐயம்கேடறமீட்பது —"உங்கள்மந்திரம் ஏடுஒன்றில் தீட்டுக ஓரேட், டெங்கள்மந்திரந்தன் னையுந் தீட்டுக இரண்டும், அங்கிவாயிடின் வெந்ததுதோற்றது அவ் வங்கி, நுங்கிடாதது வென்றது" என்று சபதஞ்செய்து சமணர்க்கும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்க்கும் நடந்த கனல்வாதத்தின் முடிவு போல்வன காண்க.) 'வாட்பெருந்தோளினாய்' என்பதற்கு - வாள் முதலிய படைக்கலங்களிற் பயின்ற பெருமையுள்ள கையையுடைய

வனே! என்று உரைத்தனு மொன்று. பி-ம்:--[1]மங்கையை. [2]கேட்பது. [3]மேன்மையின். [4]வாட்பொரு. [5]கூறுமால். (௪௰௧௨)

௩௩. [1]ஐயுறு பொருள்களை [2]யாசின் மாசொரீஇக்
கையுறு [3]நெல்லியின் கனியிற் [4]காட்டுமென்
மெய்யுறு கட்டுரை கேட்டு மீட்டியோ
[5]பொய்யுறா மாருதி யுரையும் [6]போற்றலாய்.

(இ - ள்.) பொய்மையில்லாத அநுமானுடைய வார்த்தையையும் நன்குமதித்து(ஏற்றுக்கொண்டு அதன்படி சானகியைக்)கைக்கொள்ளாத நீ, சந்தேகிக்கப்பட்ட பொருள்களின்உண்மைநிலையை விரைவாக (அந்தஐயமாகிய)குற்றத்தை நீக்கி (அகங்கையிற்) பொருந்திய நெல்லிக்கனியைப்போல நன்குகாட்டுந்தன்மையுள்ள எனது உண்மைபொருந்திய உறுதிமொழியைக் கேட்டாயினும் (அச்சீதையை) மீட்டுஅழைத்துச்சேர்த்துக்கொள்வாயோ? (எ - று.)—இது, மீட்டருளுக வென்று வேண்டியபடி. பி-ம்:--[1]ஐயறு. [3]நெல்லியங். [4]காட்டுவேன். [5]பொய்யறு, பொய்யுறும். [6]போக்குமோ [2]அரசின் என்று படிக்கவுமாம்.

௩௪. தேவரு முனிவருந் [1]திரிவ நிற்பவும்
மூவகை யுலகுறு கண்கண் மோதிநின்று
[2]ஆவெனல் கேட்கிலை யறத்தை [3]நீக்கிவேறு
எவமென் றொருபொருள் [4]யாண்டுக் [5]கொண்டியோ.

(இ - ள்.) தேவர்களும் முனிவர்களும் சஞ்சரித்துநிற்பனவான மற்றைப்பிராணிகளும்(மேல் கீழ் நடு என்னும்)மூன்றுவகை யுலகத்துப் பிராணிகளும் (பிராட்டி அக்கினிப்பிரவேசஞ்செய்யத்தொடங்கியபோது அதனைப்பார்த்துச சகிக்கமாட்டாமல்தம்தம்)கண்களை(க்கைகளால்) மோதிக்கொண்டுநின்று ஆஎன்று கதறியதை (நீ)கேட்டுணர்ந்தாயில்லை போலும்; (நீ) தருமத்தைக் கைவிட்டு (அதற்கு) மாறான (இவ்வகை) அதருமமாகிய ஒருபொருளை எங்கிருந்து கொண்டாயோ? (எ - று.)—ஆ - இரக்கக்குறிப்பு இடைச்சொல். எவ்வம் என்பது - எதுகை நோக்கி, எவம்என விகாரப்பட்டது. பி-ம்:—[1]தெரிய, திரிய, திரிப. [2]ஆவெனக். [3]நீக்கவே. [4]எங்ஙன். [5]கண்டியோ, காண்டியால். (௪௰௧௪)

௩௫. [1]பெய்யுமே மழைபுவி பிளப்ப தன்றியே
செய்யுமே பொறையறம் நெறியிற் செல்லுமே
உய்யுமே [2]யுலகிவ ளுணர்வு சீறினால்
[3]வையுமேன் [4]மலர்மிசை யயனு மாயுமே.

(இ - ள்.) (மகாபதிவிரதையான)இச்சீதாதேவி மனத்திற்கோபங்கொண்டால்,மேகம் (மழை)பொழியுமோ? பூமி(உடனே)பிளந்துவிடுவதல்லாமல் (எல்லாப்பாரங்களையும்) பொறுத்துக்கொண்டிருக்குமோ? தருமம் செவ்விதாக நடக்குமோ? உலகம் நிலைத்திருக்குமோ? (இவள் கோபங்கொண்டு)சபிப்பாளானால், தாமரைமலரின்மேல் வாழும் பிரமனும் இறந்திடுவானன்றோ? (எ - று.)—என்று அக்கினிதேவன் கூறி

முடித்தானென்க. பி - ம்:—[1]மெய்யுமே. [2]உலகில்வாழ். [3]வையமேல், வையுமே. [4]மலராயனுலகுமாயுமால். (சு௦கரு)

கூசு.—அக்கினிதேவன் பிராட்டியை இராமனருகிற் சேர்த்தல்

பாடுறு [1]பன்மொழி யினைய பன்னிநின்று
ஆடுறு தேவரோ டுலக மார்த்தெழச்
சூடுறு [2]மேனியவ் வலரி தோகையை
மாடுறக் கொணர்ந்தனன் வள்ளல் கூறுவான்.

(இ - ள்.) (பிராட்டியின்கற்பினாலாவ்) தாபமிக்க வடிவத்தை யுடைய அக்கினிதேவன்,—இத்தன்மையனவான பெருமைமிக்க பல வார்த்தைகளைச் சொல்லிநின்று, (பிராட்டியின் கற்புநிலையைக் கண்ட களிப்பினால்) கூத்தாடுகின்ற தேவர்களுடனே (மற்றை)யுலகத்து உயிர்களும் ஆரவாரித்து மகிழ்ச்சிமிக, மயில்போலுஞ் சாயலுடைய பிராட்டியைப்(பெருமான்) பக்கத்திலே பொருந்தக் கொண்டுவந்துசேர்த்தான்; (அப்பொழுது), வரையாதருளும் இயல்பினனான இராமபிரான், (சில) சொல்லி யருள்வான்;(எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

அலரி - (சுவாலைகளால்) பரந்துவிளங்குபவ னென்று பொருள் படுங் காரணக்குறி: இ - பெயர்விகுதி; இப்பெயர், பெரும்பாலும் சூரியனுக்குவழங்கும்; சிறுபான்மை இலக்கணையாய், முச்சுடர்களுள் மற்றொருசுடராகிய அக்கினிக்கு வழங்கிய தென்க. பி-ம்:—[1]பணி. [2]மேனியன்வணங்கித், மேனியவங்கி. (சு௦கசு)

கூஎ.—அப்பொழுது இராமன் சொன்ன அங்கீகாரவார்த்தை.

அழிப்பில சான்றுநீ யுலகுக் காதலால்
இழிப்பில [1]சொல்லிநீ யிவளை யாதுமோர்
பழிப்பில [2]ளென்றனை பழியு மின்றினிக்
கழிப்பில ளென்றனன் கருணை யுள்ளத்தான்.

(இ - ள்.) 'நீ உலகத்துஉயிர்கட்கெல்லாம் (நீதிநெறி)தவறுதலில்லாத சாட்சியாகிறாய்; ஆதலால்,இகழ்ச்சிக்குஇடமில்லாத சிறந்தவார்த்தைகளைச் சொல்லி நீ இவளை யாதொருகுற்றமுமில்லாதவ ளென்று சொல்லினை: (ஆதலால் இவளிடத்து யாதொரு)பழியு மில்லை; இனி (இவள் என்னால்) நீக்கத்தக்கவளல்லள்' என்றுகூறியருளினன்: (யாவனெனின்),—திருவருளையுடைய திருவுள்ளத்தை யுடையவனான ஸ்ரீராமபிரான்; (எ - று.)

கருணையுள்ளத்தானாதலின் 'இனிக்கழிப்பிலள்' என்றனனென்க; கருத்துடையடைகொளியணி. பி-ம்:—[1]சொல்லிவந்து. [2]என்றெனையமரரங்கினி. சிலபிரதியில் இதனோடு சீதாபிராட்டி திருவடிதொழுபடலம் அல்லது பிராட்டிதிருவடிதொழுபடலம் முடிய, அதன்மேல் "இன்றுசென்று" (கசுக) என்றபாடல்வரையிற் கடவுளர்காட்சிப்படலம் என்று காண்கின்றது. (சு௦கஎ)

வேறு.

கூ அ --அச்சமயத்தில் இராமனுக்கு அவனது யதார்த்தசொரூபத்தை உணர்த்தும்படி தேவர்கள் பிரமனைத் தூண்டுதல்.

*உணர்த்து வாயுண்மை யொழிவின்று காலம்வந் துளதால்*
*[1]புணர்த்த மாயையிற் [2]பொதுவுற [3]நின்றவை [4]புணரா*
*இணர்த்து ழாய்த்தொங்க [5]லிராமற்கென் றிமையவ ரிசைப்பத்*
*தணப்பி லாமரைச் சதுமுக னுரைசெயச் சமைந்தான்.*

(இ - ள்.) '(தானே தனது சங்கற்பத்தால்) உண்டாக்கிய மாயையிலே மற்றைச்சீவாத்மாக்கள்போலவே(பரமாத்மாவாகிய தானும் ஆழ்ந்து)நின்று (தனது உண்மையான) அந்நிலைகளை அறியாதவன்போலுள்ள பூங்கொத்துக்களையுடைய திருத்துழாய்மாலையைத் தரித்த இராமபிரானுக்கு (அந்த) உண்மை நிலைகளை விடாமல் (நீ) அறிவிப்பாய்; (அதற்கு ஏற்ற) காலம் (இப்பொழுது) வந்துள்ளது' என்று தேவர்கள்சொல்ல, பிரிதலில்லாத (திருமாலின்நாபித்) தாமரைமலரில்தோன்றிய நான்கு முகமுடையவனான பிரமன்(அந்தப்பகவானுடைய நிஜசொரூபங்களைச்) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)--அவற்றை, அடுத்த பதினொன்கு கவிகளிற் காண்க.

'முழுமுதற்கடவுளாகிய ஸ்ரீமந்நாராயணனது திருவவதாரமூர்த்தியான இராமபிரான், ஆத்மாக்களை வசப்படுத்துதற்குத் தான் இப்பொழுதுகொண்ட மனிதவடிவத்துக்கு ஏற்பத் தானும் அம்மாயையையேற்றுக்கொண்டு அதன்வசப்பட்டுநின்று, சிலநாள்பிரிந்த மனைவியைச் சேர்த்துக்கொள்ளுகிற விஷயத்திற் சங்கைகொண்டு தடுமாற்றமுற்றுநிற்றலால், இச்சமயத்தில் அவனது உண்மைநிலைகளை அவனுக்கு உணர்த்தவேண்டுவது அவசியம்; இல்லாவிடின், அவன் பிராட்டியை அங்கீகரியாமல் விலக்கிவிட்டால் தீங்குவிளையும்' என்று இந்திரன் முதலிய தேவர்கள் பிரமனைத் தூண்ட, அவன் அங்ஙனமே அப்பரமனுக்கு யதார்த்தஸ்திதிகளைச் சொல்லத்தொடங்கின னென்பதாம். பொதுவுறநின்று - சீவாத்மாக்களினும் பரமாத்மாவாகிய தனக்கு யாதொருவிசேஷமும் தோன்றாதபடி அவைபோலவே தானும்நின்று.

பி-ம்:--[1]புணர்த்த. [2]பொதுவற [3]நின்றவப். [4]புணரா, புராணன், புராணம், புராண. [5]இராமனென்று. (சுOகஅ)

கூகூ.--பிரமன் இராமனுக்கு அவனது சொரூபத்தை யுணர்த்துதல், இதுமுதற் பதினொன்றுகவிகளிற் கூறப்படுகிறது.

*மன்னர் தொல்[1]குலத் தவரினத் துணையொரு மனிதன்*
*என்ன [2]வுன்னலை [3]யுன்னைநீ யிராமகே ளிதனைச்*
*சொன்ன நான்மறை[4]முடிவினிற் [5]றுணிந்தமெய்த் துணிவு*
*பின்ன லாதில்லை [6]நின்னின்[7]வே றுளதிலை நெடியோய்.*

(இ - ள்.) ஸ்ரீராமனே! பெருமையுடையவனே! உன்னை, தொன்றுதொட்டுவருகிற சூரியகுலத்தவரான அரசரது வருக்கத்தில்தோன்றிய

ஒரு மநுஷ்யனென்று எண்ணுதே: உன்னுடைய இந்த உண்மைநிலையைக்குறித்து (யான் சொல்லும்) இவ்விண்ணப்பத்தை நீகேட்டருள்வாய்; சிறப்பித்துச்சொல்லப்படுகிற நான்குவேதங்களின் முடிவில் [வேதாந்தத்தில்] சித்தாந்தஞ்செய்யப்பட்ட உண்மையான தத்துவம், உன்னையல்லாமல் வேறுஇல்லை; உன்னையல்லாது வேறு என்றும் நிலைத்துநிற்கும்பொருள் இல்லை; (எ-று.)

'நின்னலாதில்லை' என்றும், 'நின்னின்வேறுளதிலை' என்றும் இரண்டுவகை வாய்பாட்டால் ஒருகருத்தையே சொன்னது, வற்புறுத்துதற்கென்க. பி-ம்:—[1]குலத்தவதரித்தனை, குலத்தவரினத்துணை, குலத்தவரினத்துளன். [2]உன்னினை. [3]இன்னமுமிறைவ. [4]துணிவினில் [5]துணி பெருந்துணிவு, துணிந்தவெத்துணிவும். [6]ஆகிலும். [7]பழையது, வேறுள்ளில்லை, வேறுள்ளன, வேறுலகமும். (௪0௧௧)

௪00. பகுதி யென்றுள தியாதினும் பழையது பயந்த
[1]விகுதி யால்வந்த வினைவுமற் றதற்குமே [2]னின்ற
புகுதி [3]யாவர்க்கு மரியவப் புருடனு [4]நீயிம்
[5]மிகுதி யுன்பெரு மாயையி னுல்வந்த விக்கம்.

(இ - ள்.) எப்பொருளினும் பழமையதான மூலப்பிரகிருதியென்று உள்ள தத்துவமும், (அந்த மூலப்பிரகிருதி) தந்த விகாரத்தா லுண்டான காரியங்களாகிய தத்துவங்களும், அத்தத்துவப்பொருள்களைத் துக்கும் மேலாய்நின்ற எவர்க்கும் கண்டுணர்தற்குஅரியனுன அந்த ஜீவாத்மாவாகிய தத்துவமும் (ஆகஎல்லாப்பொருள்களும்), நீ: மிகப் பரந்ததாகக்காணப்படுகிற இந்தப்பிரபஞ்சத்தோற்றமெல்லாம், உனது பெரியமாயையாகிய சங்கற்பத்தாலுண்டான பரப்பாம்; (எ - று.)

சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தம் என்னும் பஞ்ச தந்மாத்திரைகளும், மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்ச ஞானேந்திரியங்களும், வாக்கு பாணி பாத பாயுர் உபஸ்தம் என்னும் பஞ்ச கர்மேந்திரியங்களும், நிலம் நீர் தீ காற்று வானம் என்னும் பஞ்ச பூதங்களும், மனம் அகங்காரம் மகத் பிரகிருதி என்னும் நான்கும், ஆக, பிரகிருதி தத்துவங்கள்-இருபத்துநாலு. இருபத்தைந்தாவது தத்துவம்-ஆத்மா; இருபத்தாறுவது தத்துவம் - பரப்ரஹ்மம். நித்தியமாய் அளவில்லாததாய்த் திரிகுணாத்மகமாய் ஜகத்துக்குக்காரணமாய்த் தனக்கு ஒருகாரணம் உற்பத்தி விநாசம் இல்லாததாயிருக்கிற மூலப்பிரகிருதி யென்பது பரமாத்மாவின் கிரியாசாதநரூபமென்றும், நித்தியமான ஆத்மாவும் அத் தன்மையதே யென்றும், சிருஷ்டி காரியத்தில் விருப்பங்கொண்ட பரமாத்மாவினது இச்சையாகிய சங்கற்பத்தாற் சலனப்பட்டமூலப்பிரகிருதியினின்று மகத்தத்துவமும், அதினின்று அகங்காரமும், அதினின்று சப்தமும், சப்தத்தினின்று ஆகாசமும், ஆகாசத்தினின்று ஸ்பர்சமும், ஸ்பர்சத்தினின்று வாயுவும், வாயுவினின்று ரூபமும், ரூபத்தினின்று அக்கினியும், அக்கினியினின்று ரஸமும், ரஸத்தினின்று

ஜலமும், ஜலத்தினின்று கந்தமும், கந்தத்தினின்று பூமியும் உண்டா யினவென்றும், சாத்விகம் ராஜசம் தாமசம் என மூவகைப்பட்ட அகங் காரத்தில் சப்ததந்மாத்திரை தாமசஅகங்காரத்தின் காரியமென்றும், பஞ்சஞானேந்திரியங்களும் பஞ்சகன்மேந்திரியங்களும் மனமும் சாத் துவிகாகங்காரத்தில் தோன்றியவை யென்றும், தாமசாகங்காரமும் சாத்துவிகாகங்காரமும் சுவகாரியங்களைப்பிறப்பிக்கும்போது ராஜ சாகங்காரம் துணைக்கருவியாயிருக்குமென்றும் அறிக. ஆதிகாரண மும் அவ்யக்தமுமான மூலப்பிரகிருதியும், அதன்காரியமான இரு பத்துமூன்று தத்துவங்களும், சீவாத்மாவும் பரமாத்மாவாகிய ஸ்ரீமந் நாராயணனது சொரூபமே யென்பதும், அந்தஇருபத்தைந்து தத்து வங்களின் சம்பந்தத்தினாலாகிய பிரபஞ்சமுழுவதும் அந்தஎம்பெரு மானது அநுக்கிரகரூபமான சங்கல்பத்தால் ஆகியதே யென்பதும், இப்பாட்டின்கருத்து. எல்லாத்தத்துவங்களிலும் எம்பெருமான் நின்று அவற்றைத்தனக்குச் சரீரமாகக்கொண்டிருத்தலால், 'அவையெல்லாம் நீ' என்றது.

'ப்ரகிருதியென்கிறது - விகாரங்களைப் பிறப்பிக்கையாலே' என்ற தத்த்வத்ரயவாக்யமும், 'ப்ரகிருதியென்கிறது,மஹதாதி விகாரங்களைத் தன்பக்கலினின்று ஜநிப்பிக்கையாலே' என்ற அதன்வியாக்கியாநவாக் கியமும் இங்கு உணரத்தக்கன. பிரகிருதி நித்தியமாதலாலும், சிருஷ் டிக்குமுன்னமே உள்ளதாதலாலும். மற்றைப்பிராகிருத தத்துவங்க ளுக்குக் காரண மாதலாலும், 'பகுதியென்றுளது யாதினும்பழையது' எனப்பட்டது. ஆத்மாவுக்கு 'அதற்குமேல்நின்ற' என்ற அடைமொழி கொடுத்தது, பிரகிருதிபோலவே நித்தியமாய்ப் பிராகிருததத்வங்க ளுக்குமுன்னமே யுள்ளதான ஆத்மா விபரீதஞானத்தையுண்டாக்குகிற அசித்தாகிய பிரகிருதிபோ லன்றிச் சித்தாகிய தான் ஞானத்துக்கு இடமாயிருத்தலினாலென்க. அந்தஆத்மா கண்முதலிய இந்திரியங்க ளுக்குப் புலனாகாமல் மனத்தினுணர்வுக்கே புலனாம்படி யிருத்தலால், அதற்கு 'புகுதியாவர்க்குமரிய' என்ற அடைமொழி கொடுத்தது: இது பற்றியே, ஆழ்வார் ஆத்மஸ்வரூபத்தை "ஞானங்கடந்ததே"என்றதும்.

மூலப்பிரகிருதியும், அதன் காரியமான இருபத்துமூன்றுதத்து வங்களும், அவையனைத்துக்கும் மேல்நின்ற [இருபத்தைந்தாவது தத்துவமாகிய] ஆத்மாக்களும், எவர்க்கும்சென்றுசேர்தற்குஅரிய பரம புருஷனாகிய ஸர்வேசுவரனும் இராமனாகியநீயே யென்று உரைகூறினும் அமையும்; இவ்வுரைக்கு, 'நின்ற' என்பது - பெயர். பி-ம்:—1மிகுதி யால். 2விளம்பும். 3யாவதும். 4புகலும், நீயே, நீயும். நீயம். 5மிகுதியாவு நின்மாயையினால்வந்த, தகுதி...தந்த. (௪௦௨௦)

௪௦௧ மூன்பு [1]பின்பிரு புடையெனுங் குணிப்பரு [2]முறைமைத்
தன்பெருந்தன்மை தான்[3]றெரி மறைகளின் றலைகள்
மன்பெரும்[4]பர மார்த்தமென் றுரைக்கின்ற மாற்றம்
[5]அன்ப நின்னையல் லான்மற்[6]றிங் கியாரையு மறையா.

(இ-ள்.) (எல்லாவுயிர்களிடத்தும்) அன்பையுடையவனே! முதல் நிலையாகிய தோற்றமும் இறுதிநிலையாகிய நாசமும் ஆகிய இரண்டு எல் லைகளென்றுசொல்லப்படுகிற அளவு இல்லாத ஒழுங்கையுடைய தமது பெருந்தன்மையை(ப் பிறர்அறியமுடியாமல்)தாமே அறிவனவான வேத ங்களின் சிரசுகள் [வேதாந்தமாகிய உபநிஷத்துக்கள்], மிகமேலான பரம்பொருளென்று சொல்லுகிற உன்னையே குறிக்குமேயல்லாமல் இங்குவந்துள்ள (யானும் சிவனும்இந்திரனும் முதலிய) மற்றைத்தேவர் களுள் எவரையும் குறித்துச்சொல்லமாட்டா; (எ - று.)

வேதம் தான் உற்பத்திவிநாசமில்லாமல் கடவுள்போல நித்தியமா யிருக்கும் பெருந்தன்மையை யுடைமையாலும், அத்தன்மைதான் யார்க் கும் எளிதில் அறியவொண்ணாமையாலும், அவ்வேதம் இருக்குமுதலா கப் பலவகைப்படுதலாலும், 'முன்பு பின்பு இருபுடையெனுங் குணிப் பருமுறைமைத் தன்பெருந்தன்மை தான்தெரிமறைகள்'எனப்பட்டன. மறைகளின் தலைகள்-வேதத்தின்முடிவாகிய உபநிஷத்துக்கள். பி-ம்:—[1]பின்பிடை, பின்பின. [2]முறைய. [3]தெரியாமறைகணின்ற, தெரிமறைக ளின்றலைய, தெரியாமறைத்தலைய, தெரிமறைகளின்றலைகொள். [4]பேர் மாயை, பரமாற்பன், பரமாற்பம், பரமார்த்தன். [5]அன்ப, அன்பின். [6]இன்றுரையும், இங்காரையும். (சு0உக)

க0உ. எனக்கு [1]மெண்வகை யொருவற்கு மிமையவர்க் கிறைவன்
றனக்கும் [2]பல்பெரு முனிவர்க்கு முயி[3]ருடன் றழீஇய
அனைத்தி னுக்குநீ யே [4]பர மென்பதை [5]யறிந்தார்
வினைத்[6]து வக்குடை விட்[7]டருந் தளைநின்று [8]மீள்வார்.

(இ - ள்.) '(பிரமனாகிய) எனக்கும் எட்டுவகைவடிவையுடைய ஒரு கடவுளான சிவனுக்கும் தேவராசனான இந்திரனுக்கும் பலரான சிற ந்தமுனிவர்களுக்கும் உயிரோடுகூடிய எல்லாப்பொருள்களுக்கும்,நீயே பரம்'என்கிற உண்மைப்பொருளை யறிந்தார்,(இரு)வினைகளின் தொட ர்ச்சியையுடைய விடுவித்தற்கு அரிய பாசபந்தத்தினின்று மீண்டுமுத்தி யடைவார்கள்; (எ - று.)

நிலம் நீர் தீ காற்று வானம் என்னும் பஞ்சபூதங்களும், சூரியசந்தி ரர்என்னும் இருசுடரும், யஜமானனும்ஆகிய எட்டுவகைவடிவமுடைமை யால், சிவபிரான், 'எண்வகையொருவன்' எனப்பட்டனன்; இதுபற்றி, அஷ்டமூர்த்தியென்ற ஒருபெயர். பெருமுனிவர்-மகாருஷிகள்; பிரம விருடிகள். பல்முனிவர் என்க. எம்பெருமான் அசேதநங்களுக்கும் இறைவனே யாயினும், சிறப்புப்பற்றி, 'உயிருடன்தழீஇய அனைத்தி னுக்கும் நீயே பரம்' என்று சேதனப்பொருள் எடுத்துக்கூறப்பட்டது. பி-ம்:—[1]எண்வகைமூர்த்திக்கும், எண்வகையுருவற்கும், எண்களாய் மூர்த்திக்கும். [2]பல்வகை. [3]உடற்றழீஇய. [4]பரன். [5]அறியார். [6]துடக் குடை, துடக்கிடை. [7]இருந். [8]விடுவார். (சு0உஉ)

க0௩. என்னைத் தான்முத [1]லாகிய [2]வுருவங்க ளெவ்வையும்
முன்னைத் தாய்தந்தை யெனும்பெரு மாயையின் [3]மூழ்கித்

தன்னைத் தானறி யாமையிற் [4]சலிப்பவச் சலந்தீர்ந்து
உன்னைத் [5]தானெயென் றுணர்குவ முத்திவித் தொழிந்த.

(இ - ள்.) என்னை முதலாகவுடைய: பிராணிகளிற் பலவும்,---(உற்பத்திக்குக்) காரணமான தாயும் தந்தையுமென்கிற[சுற்றத்தாரிடத்துப் பாசமாகிய] பெரியமாயையில் அழுந்தி, தனது நிலைமையை [ஆத்தும சொரூபத்தை]த் தான்உணராமையால் (நற்பேறுபெறுமல்)துன்பப்படுவனவாம்; அந்தஅறியாமைநீங்கியொழிந்தசில சீவராசிகள், உன்னையே (அனைத்துக்கும்) மூலகாரணமென்று உண்மையுணர்வனவாய் வீட்டுலகத்துக்கு விதையாம்; (எ-று.)

என்னை முதலாகவுடைய ஆத்துமகோடிகளிற் பெரும்பாலன, பரமாத்மாவாகிய உனக்குச் சீவாத்மாவாகிய தாம் அடிமையென்றும், "அத்தனுகியன்னையாகி யாளு மெம்பிரானுமாய், ஒத்தொவ்வாத பல் பிறப்பொழித்து நம்மையாட்கொள்வான்" நீயே யென்றும் சீவாத்ம பரமாத்மசொரூபங்களை யுணர்த லின்றி,தம்தமது சன்மத்துக்குப் பிரதி யக்ஷகாரணமான தாயும் தந்தையும்முதலிய உறவினரிடத்து அன்பு செய்தலாகிய பாசபந்தத்திற்பட்டு மீள்வில்லாது முத்திபெருமல் மாறி மாறிப் பல்பிறப்பும்பிறந்து இறந்து வருந்தும்; இவையொழியச் சில சேதநங்களே அங்ஙனமின்றி நின்அருளால் ஜீவபரஸ்வரூபங்களைஉணர்வனவாய் அதனுல் உறவினரிடத்து ஆசாபாசம் ஒழிந்து உன்னையே சகலவிதபந்துவாகக்கொண்டு உனக்குஅடிமைப்பட்டுப் பிறப்புஅற்று முத்திபெறுவன என்றனன் பிரமனென்க. இவ்வுலகத்தில் தனது நிலையையும் கடவுளின்நிலையையும் அறிந்த ஆன்மா வீட்டுலகத்திற் சென்று முளைத்தலால், அதனை 'முத்திவித்து'என்றுர்; இதனைத் திருக்குறளில் "வரனென்னும் வைப்பிற்கு ஓர்வித்து" என்றுற்போலக் கொள்க: அங்குப் பரிமேலழகர் 'அந்நிலத்திற்சென்று முளைத்தலின், வித்து என்றுர்: ஈண்டுப்பிறந்திறந்துவரும் மகனல்லன் என்பதாம்' என உரைத்தது உணரத்தக்கது. பி-ம்:---[1]ஆக்கியிவ். [2]உருவந்த. [3]முயங்கித்,முடங்கித். [4]சலித்தலிற்சலம்,சலித்தது சலம்,சலித்ததச்சலம்,சலித்தவத்தனை. [5]தானினைந்து..., தானெனவுணர்வது..., தாயெனவுணர்வதுமுந்திவித்தொழிந்தாய், தாயெனலுணர்வது முற்றிவித்தொழிந்தாய், தாமெனவுணர்வதுமுற்றுவித்தொழிந்த, தாயெனவுணர்வதுமுற்றுவித்தொழிந்தாய்,தாமெனவுணர்வதுமோகிவித்தொழிந்தீர்.(சoஉரு)

கoசு. [1]ஐயஞ் சாகிய தத்துவர் [2]தெரிந்தறிந் தவற்றின்
மெய்[3]யெஞ் சாவகை மேனின்ற [4]நினக்கு[5]மேல் யாதும்
பொய்[6]யெஞ் சா[7]வில தென்னுமீ தருமறை புகலும்
வையஞ் சான்றினிச் [8]சான்றுக்குஞ் சான்றிலை [9]வழக்கால்.

(இ - ள்.) 'இருபத்தைந்தான தத்துவங்களை ஆராய்ந்துஅறியுமிடத்து,---உண்மைகுறையாதபடி அந்த இருபத்தைந்துதத்துவங்களுக்கும் மேலே (இருபத்தாருவது தத்துவமாய்) நின்ற உக்குமேலே யாதும்

பொய்ம்மையிகாமல் [மெய்யாக]இல்லை' என்னும் இவ்வுண்மைப்பொருளை அறிதற்கு அரிய வேதம் கூறும்; (இதற்கு),உலகத்துஉயர்ந்தோரும் சாட்சியாவர்;இனி,(அவர்களை நம்புவதற்கு வேறொருசாட்சி வேண்டியதில்லை: ஏனெனின்),—வியவகாரதருமத்தில் சாட்சியை நம்புதற்கு ஒருசாட்சி வேண்டப்படுவதில்லையன்றோ? (எ - று.)

"உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே" என்றதனால், வையம் என்பதற்கு - உயர்ந்தோரென்று உரைக்கப்பட்டது. "வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே, நிகழ்ச்சி யவர்கட் டாகலான" என்றதும் காண்க. சாட்சிக்கு ஒருசாட்சி யில்லை யென்பது, வழக்குநூல்வல்லார் துணிபு. பி - ம்:—[1]ஐயைஞ்சு, ஐயைந்து. [2]தேர்ந்தறிந்து, தேர்ந்தறிவு. [3]அஞ்சா. [4]எனக்கு. [5]மேலாகிப், மேலாயோர், மேல்யாரோ. [6]அஞ்சார், அஞ்சா. [7]உளது,நின்றது. [8]சான்றுக்குச். [9]வழக்கே.(௪0௨௪)

௪0௫. அளவை யா [1]லளந் தாமன்றென் [2]றறிவுறு மமைதி
உளவை யாவையு முனக்கில்லை [3]யுபநிடத் துனது
களவை [4]யாய்ந்துறத் தெளிந்தில தாயினுங் [5]கண்ணால்
[6]துளவை யாய் [7]முடி யாயுளை நீயெனத் துணியும்.

(இ - ள்.) திருத்துழாயை(ச் சிறந்ததென்று) தேர்ந்தெடுத்துத் தரித்த திருமுடியையுடையவனே! பிரமாணங்களைக்கொண்டு ஆராய்ந்து ஆம் என்றும் அன்றுஎன்றும் அறிகிற நிகழ்ச்சியாகவுள்ளவையெல்லாம் உனக்கு இல்லை: உபநிடத்து உனதுஒளிப்பை ஆராய்ந்து முழுவதும் நன்கு அறிந்திலதாஹுலும், (தனது ஞானக்)கண்ணினால் நீ உள்ளாயென்று நிச்சயித்துச் சொல்லும்; (எ - று.)

அளவையாவது - பொருளின் உண்மைநிலையை அளவிட்டு அறிதற்குக் கருவியான பிரமாணம். அது எட்டுவகைப்படும்; அவையாவன - பிரதியட்சம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி, அபாவம், ஐதிகியம், சம்பவம் என்பன. அவற்றுள்,ஐம்பொறிகளின் உணர்வுகொண்டு அறிதல் - பிரதியக்ஷம். புகையைக்கண்டு அதுகொண்டு நெருப்புஉண்டெனல் - அநுமானம். பெரியோர்வாய்ச்சொல்-ஆகமம். மரை பசுப்போல் எனல்-உபமானம். 'பகலுண்ணுன், பருத்திருப்பான்' என்றவிடத்து இரவில் ஒளித்து உண்பான் என உணர்தல் - அருத்தாபத்தி முன்னும் இல்லை, பின்னும் இல்லை; ஒன்றிஒன்றில்லை, ஒருகாலத்தும் இல்லை யெனல் - அபாவம். இம்மரத்திற் பேயுளது என்பது - ஐதிஹ்யம். ஆயிரத்தில் நூறுஉண்டு எனல் - சம்பவம். இவற்றுள் ஐதிகியம், சம்பவம் என்பவற்றைப் பலர் வேறுபிரமாணங்களாகக் கொள்ளார். இவை எட்டையும், காட்சி அநுமானம் ஆகமம் என்னும் மூன்றில் அடக்குவர். உபமானம் பிரதியக்ஷத்திலும், அருத்தாபத்தியும் சம்பவமும் அநுமானத்திலும், ஐதிகியம் ஆகமத்திலும், அபாவம் மூன்றிலும் அடக்கப்படும். இதன்விரிவைத் தர்க்கநூல்களிற் காணலாம்.

ஜீவாத்மாக்களாகிய எங்களெல்லோராலும் பலவகைப் பிரமாணங்களைக்கொண்டு ஆராய்ந்து பரமாத்மாவாகிய உனது சொரூபம் உண்

டென்றும் இல்லையென்றும் கூறப்படுவதே யன்றி இங்ஙனம் நீ ஆராயத் தக்க பரம்பொருள் ஒன்றுமில்லை யென்பதும், நீ ஆராய்ச்சியில்லாமலே நினது இயற்கையுணர்வினால் யாவும் உணர்கின்றாய் யென்பதும், முதல் வாக்கியத்தின் கருத்து. உள்ளவை யென்பது, உளவை யெனத் தொக்கது. எம்பெருமானது சொரூபத்தை உள்ளபடி கண்டுஉணர்த் தக் கருதி அதனை ஆராய்ந்துகொண்டேசென்ற உபநிஷத்துத் தனக்கு அதுஎட்டாமையால் மீண்டுவிட்ட தென்பதை அவ்வுபநிஷத்தினாலேயே அறியலாம். ஆயினும், அவ்வுபநிஷத்துத் தனதுதெய்வத்தன் மையால் அறிந்த அளவுகொண்டு கடவுளின் உண்மையை அறுதியிட்டு வெளியிட்டு மூலப்பிரமாணமாய் நிற்றல் பிரசித்தம். கண்ணால் தெளிந் திலது என இயைத்தலும் ஒன்று பி-ம்:—[1]அனந்தமாகுமென்று, அறிந் தாமன்றென்று, அளந்தாமென, அளந்தூறுமென்று [2]அளவுறும். [3]உபநிடதத்தன், உபநிடத்தனக்கு, உபநிடதத்துநின், உபநிடத்தம் முன். [4]யாவையுமறிந்திலது, ஆய்ந்துறத்தெரிகிலது, ஆய்ந்துறத்தெளிந் தில. [5]கண்ணாற், கள்ளார். [6]துளவையார். [7]முடியாயவனுளன், முடி யானவனுளன், முடிமாயவனுளன், முடியானுளது. (௪0உ௫)

க0௬. [1]கரண மென்றுள வுன்னைவந் தறிவுகாணாமே
[2]அரண மல்லவர்க் கிவைகடந் தறிவரிதாக
மரணந் தோற்றமென் [3]றிவற்றிடை[4]மயங்குப வவர்க்குன்
சரண மல்லதோர் சரணில்லை [5]யன்னவை தவிர்ப்பான்.

(இ - ள்.) (நின்கருணைக்கு) இலக்காகாதவர்க்கு அறிவு அடுத்து உனதுசொரூபத்தை உணர வொண்ணாதபடி (ஐம்)பொறிகளென்று உள்ளவை பெருந்தடையாம்; இவ்வைம்பொறிகளை வென்று (உன்னை) அறிதல் அரியதாதலினால், (அவர்கள்), இறத்தலும் (மீளப்)பிறத்தலும் ஆகிய இத்துன்பங்களிலே மாறிமாறி உழல்வார்கள்;அவர்க்கு அத்துன் பங்களை நீக்குதற்கு உனது திருவடியன்றி வேறுபுகலிடமில்லை; (எ-று.) ---அரணம் - அரண்: இலக்கணையாற் பெருந்தடையென்ற பொருளது. பி - ம்:---[1]அரணமாவையும், கரணமொன்றுள, கரணமொன்றுளது. [2]அரணமவ்வவர்க்கியைந்தனடத்தற்குமரிதாம், காரணமற்றவையாவை யுங்கடந்திலதாக, அரணமவ்வறிவகைகடந்தகல்வரிதாக,கரணமவ் வறிவைக்கடந்தகல்வரிதாக. [3]அவற்றிடை, [4]மயங்குறுமவற்றான், மயக் குறுமவற்றான், மயங்குறுமவற்றுள், மயக்குறுமவற்குன் [5]அன்னது. ()

க0எ. தோற்ற மென்பதொன் றுனக்கில்லை [1]நின்கணே[2]தோற்றும்
ஆற்றல் சான் [3]முதற் பகுதிமற் [4]றதனுளாம் பண்பால்
[5]காற்றை முன்னுடைப் பூதங்க ளவை[6]சென்று கடைக்கால்
வீற்று [7]வீற்றுற்று வீவுறு நீயென்றும் [8]விளியாய்.

(இ - ள்.) உனக்கு (ஒருபொருளினிடத்துத்) தோன்றுத லென் கிற ஒரு நிலை [உற்பத்தி] இல்லை; வல்லமைமிக்க மூலப்பிரகிருதி, உன் னிடத்தினின்றே வெளிப்பட்டது: மற்றை யெல்லாத் தத்துவங்களும் அந்தமூலப்பிரகிருதியினின்று வருகையினால் வாயுமுதலான பஞ்ச

பூதங்களும், (மற்றுமுள்ள) அத்தத்துவங்களும் சங்காரகாலத்தில் தனித்தனி பிரிபட்டு லயித்து அழிவடையும்; நீயோ எப்பொழுதும் அழியாய்; (எ - று.)

சர்வேசுவரன் ஒருவனே உற்பத்திவிநாசமின்றி நித்தியனென்க. மூலப்பிரகிருதி நித்தியமாயினும் பரமாத்மாவின் சொரூபத்தினின்று வெளிப்படுதலால்-,'நின்கணே தோற்றும் ஆற்றல்சால் முதற்பகுதி'என ப்பட்டது. இருபத்தைந்துதத்துவங்களுள் புருஷன் மற்றை இருபத்து மூன்றுதத்துவம்போலமூலப்பிரகிருதியின் காரியமல்லாவிடினும், அவ ன்உரைமெழுக்கிற் பொன்போல மூலப்பிரகிருதியில் அடங்கியிருந்து அதனினின்று ஆதியில் வெளிப்பட்டன னென்பதை "நிறைபரஞ்சுடர் நெடுமலர்க்கட்கடை சிறிது, பிறழ மாயையிற் பிறந்தன னொருபெரும் புருடன்" என்ற பாகவதத்தாலும் அறியலாம். விசித்திரமான சிருஷ் டிக்குச் சாதன மாதலால், முதற்பகுதிக்கு 'ஆற்றல்சால்' என்ற அடை மொழி கொடுக்கப்பட்டது. சிருஷ்டிகாலத்தில் எந்தப்பொருள் எந் தப்பொருளினின்று தோன்றியதோ, அந்தக் காரியப்பொருள் அந்தக் காரணப்பொருளிலே மகாப்பிரளயகாலத்தில் அடங்குமென்பது, நூல்துணிபு. பிரளயத்தில் நிலம் தன்குணமாகிய கந்தத்துடன் நீரிலும், அந்நீர் தன்குணமாகிய ரசத்துடன் தீயிலும், அத்தீத் தன் குணமாகிய ரூபத்துடன் காற்றிலும், அக்காற்றுத் தன்குணமாகிய ஸ்பரிசத்துடன் வானத்திலும், அவ்வானம் தன்குணமாகிய சப்தத் துடன் அகங்காரத்திலும் லயிக்க, இவ்வாறே ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் மனமும் தம்தம் உற்பத்தித்தானமான அகங்காரத் திலே லயிக்க, அகங்காரம் மகத்தில் லயிக்க, அது பிரகிருதியில் லயிக்க, அதுவும் புருஷனும் பரமாத்மாவிலே லயிக்க, பரமாத்மா ஒரு வனே என்றும் லயமின்றி நிற்கின்றனனென்க. எம்பெருமானது திரு வவதாரம் கருமவசத்ததன்றி இச்சையின் வசப்பட்ட தென்பது, 'தோற்றமென்பதொன்றுனக்கில்லை' என்றதில் வெளியாம். பி- ம்:— [1]நினக்கொன்று, நினக்கெனத். [2]தோற்றம். [3]முகப். [4]அதனுளான் மாறக், அதனுளான்மாறு, அதனுளவாமாற். [5]காற்று [6]இடைக்காலம். [7]வீற்றுற. [8]வீயாய். (௬௦௨௭)

௧௦அ. [1]மின்னைக் [2]காட்டுதல் போல்வந்து [3]விளியுமிவ் வுலகம்
தன்னைக் காட்டவுந் தருமத்தை [4]நாட்டவுந் தனியே
என்னைக் [5]காட்டுதி யிறுதியுங் [5]காட்டுதி யெனக்கு
முன்னை[6]க் காட்டிலை [7]யொளிக்கினு மிலைமறை [8]யுரையால்.

(இ - ள்.) (விரைவில் அழியுந்தன்மையதான) மின்னலை (மேகம்) தோன்றுவித்தல்போலத் தோன்றி யழியுந்தன்மையையுடைய இவ்வுல கங்களைத் தோன்றுவிக்குமாறும்,(அவ்வுலகங்களில்)தருமத்தை நிலைநிறு த்துமாறும், (நீ) அநாதியாய் ஒருவனாயிருந்து (முதலில்) என்னைப் படைக்கின்றாய்; (அவ்வுலகங்களோடு எனக்கு) அழிவையும் செய்விக் கின்றாய்; எனக்கும் (காரணமாகிய) உன்னுடைய உண்மைநிலைமுழு

வதையும் காட்டுகின்றாயில்லை; (அப்படி நீ) மறைந்துநின்றாலும், வேத வாக்கியங்களைக்கொண்டு (நான் உன்னுடைய சொரூபத்தைச் சிறிது அறிவதனால், உன்னை எனக்கு) முற்றும் ஒளிக்கின்றாயுமில்லை; (எ-று.)

'இறுதியுங் காட்டுதி' என்பதற்கு - சங்காரகர்த்தாவாகிய சிவனை (என்னைக்கொண்டு) உண்டாக்குகின்றாயென்று உரைத்தலும் ஒன்று. எனக்கும், உம்-உயர்வுசிறப்பு. பி-ம்:—[1]மின்னுக், மின்னிக். [2]காட்டுவ, காட்டிய. [3]விளியுமே, விளியுமாம், விளியுமெய். [4]காட்டவும். [5]காட்டினை. [6]காட்டலை. [7]ஒளிக்கின்றும். [8]உரையாய். (சு0உஅ)

கூ0கூ. என்னு ருக்கொடிவ் வுலகினை [1]யீனுதி யிடையே
உன்னு ருக்கொடு புகுந்துநின் றோம்புதி [2]புமையோன்
றன்னு ருக்கொடு துடைத்திமற் [3]றிதுதனி யருக்கன்
முன்[4]னு ருக்கொடு பகல்செயுந் [5]தரத்தது முதலோய்.

(இ - ள்.) முதற்பொருளானவனே! (பிரமனாகிய) எனது வடிவத்தைக்கொண்டு (நீ) இவ்வுலகங்களைப் படைக்கின்றாய்; (திருமாலாகிய) உனதுவடிவத்தைக்கொண்டு இடையில் எழுந்தருளிநின்று (அவ்வுலகங்களைப்) பாதுகாக்கின்றாய்; சிவனதுவடிவத்தைக்கொண்டு (அவற்றை) அழிக்கின்றாய்; இது ஒப்பற்றவனான சூரியன், (யாவர்க்கும்) எதிரில் (கட்புலனாக விளங்குகிற தன்)வடிவத்தைக்கொண்டு பகற்பொழுதைச் செய்கின்ற தரத்தது; (எ - று.)—மற்று அசை.

சூரியன் தனதுஉதயத்தாற் பகலையுண்டாக்கித் தான் சஞ்சரித்து உச்சமடைந்து கழிதலால் அப்பகலைநடத்தித் தனது அஸ்தமனத்தால் அப்பகலை முடித்தல்போல, நீ திரிமூர்த்திசொரூபத்தில் பிரமனுக்கு அந்தராத்மாவாய்நின்று உலகத்தின்தோற்றத்தையும், திருமாலாகிய தானானநிலையில்நின்று அவ்வுலகத்தின்காப்பையும், சிவனுக்கு அந்தராத்மாவாய்நின்று அவ்வுலகத்தின் அழிவையுஞ் செய்கின்றனையென்பதாம். பி - ம்:—[1]பூணுதி. [2]உமைகோன். [3]அது. [4]உருக்கொடவ்வருள் செய்யும்,உருத்தொரு...,உருக்கொண்டிங்குருத்தெய்யும். [5]தரத்தினை.()

கூகூ0. திருக்கு வான்மலி செல்வத்துச் செருக்குவேந் திறத்துத்
தருக்கு மாய்வுறத் தானவ ரரக்கர்வெஞ் சமரில்
இரிக்க மாழ்கிநொந் துணைப்புகல் யாம்புக வியையாக்
கருக்கு ளாய்வந்து தோற்றுதி யீங்கிது கடனே.

(இ - ள்.) பொருட்குவியலாக நிறைந்த ஐசுவரியத்தினால் கருவப்படுகிற எங்களிடமுள்ள அகங்காரம் அழியும்படி தானவரும் அரக்கரும் கொடியபோர்செய்து அதில் (எங்களை) அஞ்சியோடச்செய்ய,— யாம் மனம்வருந்தி உடல்நொந்து உன்னைச் சரணமாகஅடைய, (அக்கொடியவர்களையழித்து எங்களைப் பாதுகாக்கும்பொருட்டு நீ, உனக்குத்) தகுதியில்லாத பிறவிகளிற் பொருந்திவந்து இங்கு அவதரிக்கின்றாய்; இது (உனக்குக்) கடமையோ? (எ - று.)

பிரமன்முதலிய தேவர்கள் தாம் எம்பெருமானருளால் அளவிறந்த ஐசுவரியத்தைப்பெற்று அதனாற்செருக்கிப் பகவானை மறந்து களிப்புற்

திருக்கையில் அசுரர் ராக்ஷசர் முதலிய பல துஷ்டவர்க்கங்கள் அவர்களை எதிர்த்துப் போர்செய்து வென்று துரத்த, அத்தேவர்கள் ஓடிச் சென்று எம்பெருமானைச் சரணமடைய, அப்பெருமான் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலநஞ்செய்தற்பொருட்டுத் திருவருளால் மத்ஸ்யம் கூர்மம் வராகம் நரசிங்கம்முதலிய பிறவிகளைக் கொண்டும், அதிதி ரேணுகை கௌசல்யை முதலியோரது கருப்பத்தில் வாமநன் பரசுராமன் ஸ்ரீராமன் முதலாகவும் அவதரிக்கின்றன னென்க. நித்யனும்க் கர்மவசப்படாதவனும்ப் பிறப்பு இறப்புஇல்லாத பகவானுக்குக் கர்மவசப்பட்ட உயிர்கள் பிறத்தற்குஉரிய எப்பிறப்பும் தகுதியல்லாமை பற்றி, 'இயையாக்கரு' எனப்பட்டது. அந்தப்பிறப்பில் அவதரிக்கும்போது சிறிதும்வேறுபாடுதோன்றாதபடி அதற்குஉரிய குணஞ்தொழில்களில் ஊன்றிநிற்கிற தன்மை, 'ஆய்வந்து' என்றதனால் விளங்கும். திரு-பொருள்: குவால் - குவியல். இது கடனோ - அடியார்கள்வருந்தும்போது வந்து அவர்கள்வருத்தத்தை யாற்றுதல் தலைவனான உனக்குக் கடமையோ என்றபடி: உனதுஇயல்பான கேவலகிருபையாலே இங்ஙனம் தோன்றுகின்றனை யென்பது உட்கோள். இச்செய்யுள், பல பிரதிகளி லில்லை. (௪0௩0)

௧௩௧. ஓங்கா ரப் [1]பொரு டேருவோர் தாமுன்னை யுணர்வோர்
ஓங்கா ரப்[2]பொரு ளென்றுணர்ந் திருவினை [3]யுகுப்போர்
ஓங்கா ரப்பொரு [4]ளாமன்றென் றாழிசென் றுழும்
ஓங்கா ரப் [5]பொரு ளேபொரு ளென்கலா வுரவோர்.

(இ - ள்.) ஓங்காரப் பொருள் தேருவோர்தாம் உன்தன்மையை உள்ளபடி அறிந்தோராவார்; (அவர்கள் உன்னை) ஓங்காரப் பொருளென்று அறிதலால், இருவினைகளை ஒழிப்பார்கள்; பிரணவப்பொருளே பரம்பொருளாகும்என்று உண்மையுணரமாட்டாத (உலகசம்பந்தமான) அறிவையுடையவர்கள், பிரணவப்பொருளாகிய உன்னை உண்மைப்பொருளென்றும் அன்றென்றும் சந்தேகங்கொண்டு நெடுங்காலங் கழித்தாலும், (இருவினையுகுக்கமாட்டாதவராவர்); (எ - று.)

'இருவினையுகுப்போர்' என்று கூறினதற்கு ஏற்ப, 'இருவினையுகுக்கார்' என்பது, பின்னேவருவிக்கப்பட்டது; இந்த எதிர்நிலைச்சொல்லெச்சம், அவாய்நிலையின்பாற்படும். ஓம் என்பது - பிரணவம்; அது, அ உ ம் எனப் பிரிந்து, அகாரவாச்யனான திருமாலுக்கு மகாரவாச்யனான ஜீவன் அடிமை எனப் பொருள்படும். இதன் கருத்தை நோக்க, திருமால் எல்லாவுயிர்களையும் அடிமையாக வுடையவன் என முடிதலால், திருமாலை 'ஓங்காரப்பொருள்' எனக் கூறினார்; "ப்ரணவோ பகவத்வாசீ - ப்ராதாந்யாத் அர்த்த ஸம்பவாத்" என்ற வடநூல்மேற்கோளையுங் காண்க. இங்ஙனமன்றி, பிரணவந்தானே பரம்பொருளை யுணர்த்து மென்றலு மொன்று; "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம"என்பது முதலியவற்றையுங் காண்க. 'இருவினையுகுப்போர்' என்றது, இரு

வினையையும் ஒழித்து எப்பொழுதும் அழியாநிலைமைத்தாகிய முத்திப் பேரின்பத்தினை யடைவர் என்றவாறு.

முத்திபெறுவோர் அவசியம் அறியவேண்டிய ஸ்வஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதிஸ்வரூபம் என்னும் ஐந்தனையும் சகல வேதசாரமாகிய பிரணவம் தன்சொல்லாற்றலாலும் பொருளாற்றலாலும் உணர்த்துவதனால், அதனை யறிபவரே இருவினையுருக்கும்வல்லமை யுடையோ ராவர். பிரணவப் பொருளை உள்ளபடி அறியாதவர்கள் பலயுகங்கள் கழிந்தாலும் இவ்வுலகத்திலேயே பிறந்தும் இறந்தும் இடர்ப்பட்டுக்கொண்டேயிருப்பரென்பது,பின்னிரண்டடியின் கருத்து. 'என்று'என்பதை ஆம், அன்று என்ற இரண்டிடத்துங் கூட்டுக. உரவோர் - பிரபஞ்ச விஷயமான அறிவுடையோர். பி - ம்:—[1]பொருளாவுனையுணர்வுறு முரவோர். [2]பொருளென்றுவந்து, பொருளென்றென்று, பொருளென்றுகொண்டு, பொருளொன்றுணர்ந்து. [3]உருப்போர். [4]என்றுகண்டுருவக்கண்டாலும், இடையறிந்தூழிகண்டாலும், இடையறிந்தூழி சென்றாலும், ஆமென்றென்றூழிகண்டாலும். [5]பொருண்மெய்ப்பொருளென மனத்துன்னோர், பொருணீயெனவுணர்குவருரவோர். (௬0௬௧)

௧௧உ. [1]இனைய தாகலி னெம்மையு [2]மூன்றுல கையு[3]மீன்று
மனையின் மாட்சியை [4]வளர்த்தவெம் மோயினை வாளா
[5]முனைய லென்றது முடித்தனன் [6]முந்துநீர் முளைத்த
[7]சினையின் பந்தமும் பகுதிக ளனைத்தையுஞ் செய்தோன்.

(இ - ள்.) (உனதுசொரூபம்) இத்தன்மையதானதனால்,—எம்மையும் மூன்று உலகையும் பெற்று இல்லறத்தின் மேன்மையை (அழகுபெற)நடத்திக்காட்டுகிற (இந்த) எமது தாயை [சீதையை], வாளா வெறுக்கவேண்டா என்று (தான்கூறத்தொடங்கிய) அவ்விஷயத்தைச் சொல்லி முடித்தான்: (யாவனெனில்,—எல்லாவற்றிற்கும்) முற்பட்ட தன்மையையுடைய திருமாலினிடத்தினின்று தோன்றியவனும் (ஜீவராசிகளுக்குத்)தேகங்களின் சம்பந்தத்தையும் பலவகைப்பட்ட பகுப்புக்களையும் உண்டாக்கியவனுமான பிரமன்; (எ-று.)

முந்துநீர் - முற்பட்ட தன்மையையுடைய திருமால்: வினைத்தொகை யன்மொழி. சினை - அங்கம்; எனவே, தேகமாயிற்று: அதன் பந்தமாவது-உயிரை உடம்பினுட்புகுத்தல். பகுதி - பிரிவு, இங்கே தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்ற எழுவகைப்பிறப்புக்களின் விரிவான எண்பத்துநான்குலட்சம் யோனிபேதங்களைக் குறிக்கும். 'முந்துநீர்முளைத்தசினையின்பந்தம்' என்பதற்கு - முற்பட்டநீரில்தோன்றிய உருண்டைவடிவான அண்டமென்றும் பொருள் கூறலாம். பி - ம்:—[1]இனையகாதலின்எம்மை. [2]மூவுலகையும். [3]ஈன்றிம், ஈன்ற. [4]வளர்த்து. [5]முனியலென்றது,முனியலென்றுரை. [6]முன்புநீர்முளரிச். [7]சினையில்வந்து தொல்மந்திரம்யாவையுஞ்செய்தாய், சினையின்வந்தரும்பவுதிகமனைத்தையுஞ்செய்தோன்.

கககூ.—இதுவும், அடுத்த கவியும் - சிவபிரான் இராமபிரானுக்கு அவன்தன்மையுணர்த்துதலைக் கூறும்.

என்னு மாத்திரத் தேறமர் கடவுளு [1]மிசைத்தான்
உன்னை நீயொன்று [2]முணர்ந்திலை போலுமா லுரவோய்
முன்னை [3]யாதியா மூர்த்திநீ [4]மூவகை யுலகின்
அன்னை [3]சீதையா மாதுநின் [5]மார்பின்வந் தமைந்தாள்.

(இ - ள்.) என்று (பிரமன்கூறி) முடித்தவளவில்,—இடபவாகனத்தில் வீற்றிருப்பவனான சிவபெருமானும் சொல்பவனானான்:—வலிமையுள்ளவனே! நீ உன் தன்மையை(இன்னதென்று)சிறிதும்அறியவில்லை போலும்; நீ மிகவும் அநாதியாயுள்ள முழுமுதற்கடவுளாவாய்; மூன்றுவகையான உலகங்களுக்குந் தாயான சீதையாகிய தேவி (திருமாலான) உனது திருமார்பில்வந்து பொருந்தியுள்ள இலக்குமியே.

'நீ யுன்னை யொன்று முணர்ந்திலை' என்றது, நீ கொண்டுள்ள மனிதத்தன்மைக்கு ஏற்ப நடிக்கின்றா யென்றபடி. இலக்குமி திருமாலின் திருமார்பில் உறைகின்றா ளென்பது, நூற்கொள்கை. பி-ம்:—[1]இசைப்பான். [2]அறிந்திலை. [3]ஆகிய. [4]மூவுலகிற்கும். [5]மார்பகத்தமைந்தாள், மார்புறைந்தமைந்தாள், மார்பில்வந்தணைந்தாள். (சo௩௩)

கக௪. துறக்குந் தன்மைய ளல்லளாற் றொல்லையெவ் வுலகும்
பிறக்கும் [1]பொன்வயிற் றன்னையிப் பெய்வளை பிழைக்கின்
இறக்கும் பல்லுயி [2]ரிறைவநீ யிவடிறத் திகழ்ச்சி
மறக்குந் [3]தன்மைய தென்றனன் [4]மழுவலான் வழுத்தி.

(இ - ள்.) (யாவர்க்குந்) தலைவனே! பழமையான எல்லாவுலகங்களும் தோன்றுதற்கிடமான அழகிய வயிற்றையுடைய தாயாகிய சீதை, (உன்னால் வெறுத்துக்) கைவிடத்தக்க தீயொழுக்க முடையவளல்லள்; (அன்றியும்), அணிந்த வளையல்களையுடைய இச்சீதைவிஷயத்தில் (நீ) தவறுநினைத்துக் கைவிட்டால், எல்லாவுயிர்களும் இறக்கும்: (ஆதலால்), நீ இவள்விஷயத்தில் அவமதிப்புக்கொள்ளுதல் மறந்துவிடத்தக்கதே என்று சிவபெருமான் துதித்துக்கூறினான்; (எ - று.)

பெய்வளை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 'இப்பெய்வளைபிழைக்கின் இறக்கும்பல்லுயிர்'-காத்தல்தொழிலைக் கைக்கொண்ட திருமாலினது மனைவியாயிருந்து உலகங்களையெல்லாங் காக்கிற தாயாகிய இவளுக்கே தீங்குநேரிட்டால் காப்பாற்றுவாரின்றி உயிர்கள்யாவும் அழிந்துவிடுமென்றபடி. பி - ம்:—[1]மென்மையிற்றன்மை. [2]யாவையும், இராமநீ. [3]தன்மைய. [4]வரதர்க்கும்வரதன். (சo௩௪)

ககரு.—சிவபெருமான் மேலுலகத்திலிருந்த தசரதனை இராமனைக் கண்டு துயர்நீக்கச் சொல்லுதல்.

பின்னு நோக்கினன் பெருந்தகைப் [1]புதல்வனைப் பிரிந்த
இன்ன லாலுயிர் துறந்திருந் துறக்கத்து ளிருந்த

[2]மன்னற் சென்றுநின் மைந்தனை மனங்கொளத் தெருட்டி
முன்னை [3]வான்றுயர் [4]நீக்குதி மொய்ம்பினோ யென்றான்.

(இ - ள்.) (சிவபெருமான்),—மேலும் (செய்யவேண்டுவதை) ஆலோசித்தவனாகி, பெருமைக்குணமுடைய (தனது) குமாரனாகிய இராமனைப்பிரிந்ததனாலுண்டான துன்பத்தினால் இறந்துபெருமையையுடைய விஷ்ணுலோகத்தி லிருந்தவனான தசரதமகாராசனிடத்தைச்சேர்ந்து, 'வலிமையுள்ளவனே! உனது குமாரனாகிய இராமனை(ப்பார்த்து, அவன்) மனம்திருப்தியடையும்படி அறிவூட்டி (உன்மனத்தில்) நெடுநாளாகவுள்ள மிக்கதுன்பத்தைப் போக்குவாய்' என்றுகூறினான்; (எ-று)

முன்னைவான்றுயர் - இராமன் வனத்துக்குப்போனபோது அவனைப்பிரிந்ததனா லுண்டான துன்பம். அயோத்தியாகாண்டத்தில் தசரதசக்கரவர்த்திமரணமடைந்த செய்தி கூறியவிடத்து "இந்திரன் முதல்வராய கடவுளர் யாருமண்டிச், சந்திரனனையதாங்கோர் மானத்தின்தலையில்தாங்கி, வந்தனனெந்தை தந்தையென மனங்களித்து வள்ள, லுந்தியானுலகினும்பர் மீள்கிலாவுலகத்துய்த்தார்" என்றதை நோக்கி, இருந்துறக்கத்துள் என்பதற்கு-பெருமையையுடைய விஷ்ணுலோகத்தி லென்று பொருள்கொள்ளப்பட்டது; இது, பிரமலோகத்துக்கு மேற்பட்டதாய்ப் பரமபதம்போலவே கருமவசத்தால் மறித்து வருதலில்லாத மேம்பாடுடையது. பி-ம்:—[1]முன்புதான், முன்புதற், உன்னைமுன். [2]மன்னர்மன்னவன்றசரதற்காண்டலும்வணங்கி, மன்னனாங்குளவண்ணலைச் சென்றுகனைந்து, மன்னவற்சென்றுகண்டுநின் மைந்தனைத்தெருட்டி, மன்னனாங்குவற்சென்று நீ கண்டனை வணங்க, மன்னனாங்குவற்சென்று நீ கண்டிவண்வணங்கி, [3]உன்றுயர், வன்றுயர். [4]நீக்குவானயன்றனைமொழிந்தான், நீக்குதியென்பது முறையால், நீக்குதிமுன்பினோயென்றான். இந்தப்பாடலுக்குப்பின் ஒருபாடல் சிலபிரதிகளிற் காணப்படுவது வருமாறு:—

என்ற வாசக [1]மெறுழ்வலித் தோளினா னியம்ப
புன்ற றங்கிய மலரவன் வாசவற் கூவித்
துன்று [2]தாரினோன் சுரருடன் [3]துருவினை துடரச்
சென்று [4]மற்றவற் றருகென வணங்கினன் சென்றான்.

பி - ம்:—[1]ஏறுகந்தேறினான், ஏறமர்கடவுளும். [2]தாரினாய். [3]வரு. [4]மன்னவன்.

(௬௦௩)

௧௧௬.—தசரதன் பூமியில் வருதலும், இராமன் அவனை வணங்குதலும்.

[1]ஆதி யான்பணி யருள்பெற்ற [2]வரசருக் கரசன்
காதன் மைந்தனைக் [3]காணிய வுவந்ததோர் கருத்தால்
பூதலத்திடைப் [4]புக்கனன் புகுதலும் [5]பொருவில்
வேத [6]வேந்தனு மவன்மலர்த் [7]தாண்மிசை விழுந்தான்.

(இ - ள்.) முதற்கடவுளான சிவபெருமான் அருளிய கட்டளையைப் பெற்ற அரசர்க்கரசனான தசரதன் அன்பிற்குஇடமான (தன்) அன்

பிற்கு உரியகுமாரனைக் காணும்படி கிளர்கின்ற மனத்தோடு பூமியில்வந் தான்; வந்தவுடனே, ஒப்பில்லாத வேதங்களுக்குத் தலைவனானஇராம பிரானும், அத்தசரதனுடைய தாமரைமலர்போன்ற பாதங்களில் விழு ந்துவணங்கினன்.

சிவபெருமான், முதற்கடவுளர் மூவரில் ஒருவனாதலால், 'ஆதி யான்' எனப்பட்டான். 6வேதவேத்தன் என்ற பாடத்துக்கு. 'வேத வேத்யன்' என்ற வடசொல்லின் விகார மென்க. பி-ம்:—1ஆதியாய். 2அரசர்க்குமரசன். 3காணியவந்ததோர், காணியவிருப்புறங், காணிய வலைந்ததோர், காணியவுயர்ந்ததோர். 4புகுந்தனன். 5பொருமி. 7தாளி னில், தாளிணை. (௪0௬௬)

௧௧எ.—தசரதன் மகிழ்ந்து கூறத்தொடங்குதல்.

விழ்ந்த மைந்தனை 1யெடுத்துத்தன் விலங்க2லா கத்தின்
ஆழ்ந்3த முந்திடத் 4தழுவித்தன் கண்ணினீ ராட்டி
வாழ்ந்த 5சிந்தையின் 6மனங்களுங் களிப்புற மன்னன்
போழ்ந்த துன்பங்கள் புறப்பட நின்றிவை புகன்றான்.

(இ - ள்.) (தசரதமகா)ராசன் (தன்பாதத்தில்) விழுந்துவணங்கிய குமாரனை(க் கைகளால்)எடுத்துத்தனது மலைபோன்ற மார்பில் நன்றாக அழுந்தும்படி [இறுகக்]கட்டியணைத்துத்தனது கண்ணீர்ப்பெருக்கினால் (அவனை) முழுகப்பண்ணி, நல்வாழ்வுபெற்றோமென்ற எண்ணத்தோடு அந்தக்கரணங்கள் களிப்பு மிகவும் (இராமனைப்பிரிந்ததனால் தன்னை) வருத்திய துன்பங்கள் நீங்கியொழியவும், (இராமனெதிரில்) நின்று கொண்டு இவ்வார்த்தைகளைச் சொல்வானாயினன்; (எ-று.)—அதனை, மேல்மூன்று கவிகளிற் கூறுகின்றார்.

கண்ணினீர்-உவகையிலாகியது; இது, ஆநந்தபாஷ்பமெனப்படும். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என நால்வகைப்படுகிற அந்தக்கரணங் கள், இங்கு 'மனங்கள்' எனப்பட்டன. புறப்பட-வெளிப்பட எனினு மாம். பி - ம்:—1எடுத்தனன். 2மார்பத்தில். 3அழுந்துற. 4தழுவிக்கண் ணருவிநீராட்டி, தன்கண்ணருவிநீராடி. 5சிந்தையன். 6மனமிகக் களிப்புற்று. (௪0௬எ)

௧௧அ.—இதுமுதல் மூன்று கவிகள் - தசரதன்வார்த்தை.

அன்று கேகயன் மகள்கொண்ட வர மெனு 1மயில்வேல்
இன்று காறுமென் னிதயத்தி னிடைநின்ற தென்னைக்
கொன்று நீங்கல திப்பொழு 2தகன்றதுன் குலப்பூண்
மன்ற 3லாகமாங் 4காந்தமா மணியின்று வாங்க.

(இ - ள்.) அக்காலத்தில் [முதலிற் பட்டாபிஷேகத்துக்கு நிச்ச யித்த சமயத்தில்] கேகயராசனது மகளாகிய கைகேயி நிறைவேற் றிக் கொண்ட வரமென்று பெயர்பூண்ட கூரிய வேலாயுதமானது-இது வரையிலும் எனது இதயத்தினிடைநின்றது; எனது உயிரைநீக்கியும் (என்னை)விடாமலே பற்றியிருந்தது; (அது), இன்று உனது சிறந்த

ஆபரணங்களையணிந்ததும் (இயற்கையில்திவ்விய) கந்தமுடையதுமான மார்பாகிய சிறந்த காந்தமணி (உன்னைத்தழுவிய)இச்சமயத்தில் ஒழித்த தனால், அகன்றது; (எ - று.)

வரமெனும் அயில் வேல்-அயில்வேலே வரமென்று பெயர்பூண்டு தன் தன்மை மறைந்துள்ளது எனக்கூறியதனால், அவநுதியணி. மணி - சிறந்தபொருள்; வடசொல். காந்தமணி - காந்தக்கல். கைகேயி கொண்டவரத்தினால் இராமனைப்பிரிந்து அதனால்தனக்குநேர்ந்த மனத் துன்பம் இப்பொழுது அவனைத்தழுவினமைபற்றி நீங்கியதை, 'வரமெ னும் அயில்வேல் உன்ஆகமாங்காந்தமாமணி இன்றுவாங்க அகன்றது' என்றார். வரத்தை இரும்புமயமான வேலென்றதற்கு ஏற்ப, இராமனது மார்பை அதனைக் கவருங் காந்த மென்றார்; உருவகவணி. காந்தம் - இரும்பைக்கவரவல்லதொரு பொருளென்பது பிரசித்தம். இங்கே 'கைகேயிவரம்' என்றது, இராமன் நாடுதுறந்து பதினான்குவருஷம் காட்டுக்குச் செல்லவேண்டு மென்றதை. பி - ம்:—[1]நெடு. [2]அகன்றது குலப்பூண், அகன்றநின்குலப்பூண். [3]மார்பமாம், ஆகமாள். [4]வரந்தர மணியினின், வரந்தந்தமணியினின், மரகதத்தாணியின். (௬0௩அ)

௧௧௯. மைந்த ரைப்பெற்று வானுயர் [1]தோற்றத்து [2]மலர்ந்தார்
சுந்த ரப்பெருந் [3]தோளினு யென்றுணைத் தாளின்
பைந்து கட்களு மொக்கில ராமெனப் படைத்தாய்
[4]உய்ந்த வர்க்கருந் துறக்கமும் புகழும்பெற் றுயர்ந்தேன்.

(இ - ள்.) அழகிய பெரிய தோள்களையுடையவனே! (நல்ல)புத்திர ரைப் பெற்று மிகச்சிறப்படைந்து விளங்கினவர்களும் எனது இரண்டு கால்களிலுள்ள சிறியதூளிகளுக்கும் ஒப்பாகாரென்னும்படி (திருமா லாகிய நீ என்னிடம் தோன்றி எனக்கு மிக்க பெருமையை) உண்டாக் கினாய்: (தீவினையினின்று) நீங்கினவர்க்கும்(கிடைப்பதற்கு)அரிய மேலு லகத்தையும் கீர்த்தியையும் அடைந்து சிறப்புற்றேன்; (எ - று.)

மேலுலகத்தையடைந்த தசரதன் தன்புதல்வனான இராமனை இங் ஙனம் துதித்தற்குக் காரணம், உண்மையறிவு தன்மனத்தில் வெளிப் பட்டமை யென்க. நன்மகப்பெற்றோர் யாவரினும் தசரதனுக்குச் சிறப்பு, திருமாலே மகனாகவுடைமை. திருக்குறளில் "வானுயர்தோற் றம்" என்றவிடத்து "'வான்றோய்குடி" என்றாற்போல இலக்கணை வழக்கு' என்ற பரிமேலழகருரை வாக்கியம், இங்கு உரைத்தக்கது. பி - ம்:—[1]கொற்றத்து. [2]மலர்ந்த, வாழ்ந்தார். [3]தோளினர். [4]உய்ந்த வர்க்கும்வன், உய்ந்தவர்க்குறும். "மைந்தரைப் பெற்று வானுலகாள்வ ரென்றுலகில், அந்தரத்தவருரைக்கின்ற வாய்மையின்றகவால், நின்ற னைப்பெற்று நேயமா லெழுத்தெட்டினையா, உய்ந்தமாதவ ருயருறுந் துறக்கநாடுற்றேன்" என்று சிலஏட்டுப்பிரதியிற் பாடம். (௬0௩௯)

௧௨0. பண்டு நான்முகன் தேவரு முனிவரும் பாராய்
கண்டு [1]கண்டனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி

[2]புண்ட ரீகத்துப் புராதனன் றன்னொடும் [3]பொருந்தி
[4]அண்ட மூலத்தொ ராசனத் திருத்தினை யழக.

(இ - ள்.) அழகுடையவனே! முன்பு [பூமியில் மனிதனாயிருந்த போது] என்னால் வணங்கப்பட்ட தேவர்களும் முனிவர்களும் (இப்பொழுது), என்னைப் பலமுறையும் நோக்கிக் கைகூப்பித்தொழுகின்ற தோற்றத்தைப்பாராய்: (இன்னும் என்னை, திருமாலின் நாபி)கமலத்தில் தோன்றிய பழையவனான பிரமனோடு சமானனாய் அண்டகோளத்தின்மேலுள்ளதோரிடத்தில் இருக்கச்செய்தாய்; (எ-று.)

இவ்வெல்லாச்சிறப்புக்களும் எனக்கு மகனாய்ப்பிறந்த உன்மகிமையாலேயே நேர்ந்தன வென்பதாம். பி-ம்:—[1]கொண்டமைக் [2]புண்டரீகப். [3]பொருந்த, பொருந்தத். [4]துண்டமூலத்தொராசனத்து, அண்டர் மூவரோடாசனத்து, அண்டமூலத்திலரசென. (கூ0கூ0)

கஉக.—தசரதன் சீதையினருகிற் செல்லுதலும், அவள் அவனை வணங்குதலும்.

என்று மைந்தனை [1]யெடுத் தெடுத் திறுகுறத் தழுவிக்
குன்று போன் [2]றுள தோளினான் சீதையைக் [3]குறுகத்
தன்று ணைக்கழல் [4]வணங்கலுங் கருணையாற் றழுவி
நின்று மற்றிவை நிகழ்த்தின னிகழ்த்தரும் புகழோன்.

(இ - ள்.) என்றுகூறி, மலையையொத்து [உயர்ந்து] விளங்குகிற தோள்களையுடையனான தசரதன்,--புத்திரனான இராமனைப் பலமுறை யெடுத்து அழுந்தக்கட்டியணைத்து(ப்பின்பு)சீதையைச் சென்று கிட்ட, (அவள்)தன்னுடைய இரண்டுபாதங்களையும் வணங்கினவளவில், சொல்லுதற்குஅரிய கீர்த்தியையுடையனான தசரதன் (அவளைப்) பரிவுடன் அணைத்துநின்று இவற்றைக் கூறுபவனானான்;(எ-று.)—அவற்றை அடுத்தமூன்றுகவிகளிற் கூறுகின்றார். மற்று - அசை; பின்பு எனினுமாம். பி-ம்:—[1]எடுத்தணைத்து. [2]உயர். [3]குறுகித். [4]தாழ்தலும். (கூ0கூக)

கஉஉ.—இதுமுதல் மூன்றுகவிகள்-தசரதன் சீதைக்குத் தேற்றாவு கூறுதலைத் தெரிவிக்கும்.

நங்கை [1]மற்றுநின் கற்பினை [2]யுலகுக்கு [3]நாட்ட
அங்கி புக்கிடென் [4]றுணர்த்திய வது[5]மனத் தடையேல்
சங்கை யுற்றவர் [6]பெறுவது முண்டது சரதம்
கங்கை நாடுடைக் கணவனை [7]முனிவுறக் கருதேல்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நங்காய்! உனது கற்பின்பெருமையை உலகத்தார்க்கு அறிவிக்க 'அக்கினிப்பிரவேசஞ் செய்' என்று (இராமன் உன்னைநோக்கிக்)கூறிய அவ்வார்த்தையை (ஒருகுறையாக) மனத்திற்கொள்ளாதே; (உலகத்திலே) சந்தேகங்கொண்டவர்கள் (அச்சந்தேகம் நீங்குதற்காகச்)சத்தியஞ்செய்யச்சொல்லி அதுசெய்யக்கண்டு தெளிதலும் உண்டு;

(இது உலகவழக்கமே ஆதலால், அப்படி உன்னைச் சத்தியஞ்செய்யச் சொன்னவனை) கங்காநதிபாயப்பெற்ற நாட்டுக்குத்தலைவனாகிய உனது கணவனான இராமன்மீது சீற்றங்கொள்ளக் கருதவேண்டா; (எ - று.)

சத்தியஞ்செய்தல்-அக்கினிப்பிரவேசம், குடப்பாம்பிற் கையிடுதல் முதலியன. இச்செய்யுளின் மூன்றாமடிக்கு-உலகத்தில் எவரேனும் உனது கற்பிற் சந்தேகங்கொண்டிருப்பாராயின் அவர் அதுநீங்கி உண்மையுணரப்பெறுவதாகிய பயன் இதனாலுண்டன்றோ! என்றும்உரைக்கலாம் பி-ம்:—[1]நின்பெருங்கற்பினை. [2]உலகினின். [3]காட்ட. [4]உரைத்தனன். [5]மனத்திடையே. [6]தேறுவதுண்டது. [7]முனிவெனக். (சாOசஉ)

கஉஙு. பொன்னைத் தீயிடைப்[1]பெய்வதப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது மனக்[2]கொள றகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகிற்
பின்னைக் [3]காட்டுவ [4]தரியதென் றெண்ணி[5]யிப் பெரியோன்.

(இ - ள்.) 'பொன்னை நெருப்பிலிட்டுக்காய்ச்சுதல் அந்தப்பொன்னினது குற்றமற்றதன்மையைக் காட்டுதற்கேயாகும்' என்கிற இத்தன்மையை மனத்திற்கொள்ளுதலேதக்கதாம்: சிறந்தநற்குணங்களையுடைய இவ்விராமன் இவ்வுலகத்தில் (இச்சமயம் தப்பினால்) பிறகு (உனதுகற்பின்சிறப்பை இங்ஙனம் தலைமைத்தேவர்கள் முதலியோருங் காணும்படி) தெரிவிக்க முடியாதென்று நினைத்து (இப்பொழுதே) உன்னை (அக்கினிப்பிரவேசஞ்செய்யச்சொல்லி அதனால்) நீ கற்பினுக்குத்தலைவியென்று தெரிவித்தான்; (எ - று.)

'உன்னை அக்கினியிற் பிரவேசிப்பித்தது உன்குற்றமற்ற தன்மையைத் தெரிவித்தற்காக' என்னும் உபமேயத்தை உபமானமுகத்தாற் பெறவைத்ததனால், முன்னிரண்டடி - பிறிதுமொழிதலென்னும் அலங்காரம். பி-ம்:—[1]பெய்தலப், பெய்வது. [2]கொளக்கருதி, கொளத்தகுதி. [3]காட்டுதற்கு. [4]அருமை. [5]அப். (சாOசங)

கஉச. பெண்[5]பி றந்தவ ரருந்ததி [2]யேமுதற் பெருமைப்
பண்பி றந்தவர்க் கருங்கல மாகிய பாவாய்
மண்பி றந்தக முனக்குநீ [3]வானின்றும் வந்தாய்
எண்பி றந்தநின் குணங்களுக் [4]கினியிழுக் கிலையால்.

(இ - ள்.) பெண்ணாகப்பிறந்தவர்களாகிய அருந்ததிமுதலான சிறந்த கற்பின்குணம் மிக்கவர்களுக்கு அருமையான அணிகலம்போல விளக்கத்தைச்செய்கிற பாவைபோன்ற சீதையே! உனக்குப் பிறப்பிடமோ, (உலகத்தார்க்குப்போலன்றிப்) பூமியேயாகும்; நீ பரமபதத்திலிருந்து (திருமால் இராமனாகத்திருவவதரித்தபோது சீதையாக) வந்து தோன்றினாய்; (இவ்வாறு சிறப்புற்றதனால்), இனி எண்ணிறந்த உனது நற்குணங்களுக்கு யாதொருகுற்றமு மில்லை; (எ - று.)

'ஆகாசம்போட்டது, பூமி ஏந்திற்று' என்னும் பழமொழி, மூன்றாவதுஅடியில் அமைந்திருப்பது - உலகவழக்குநவிற்சியணி. சீதை

அயோநிஜையென்பதும், திருமகளின்அவதாரமென்பதும் இங்குவெளியாம். எண்பு - நன்குமதிப்புமாம். பி - ம்: —[1]பிறந்தவர்க்கு. [2]எனும். [3]மாறின்றி. [4]இழுக்கெனநினையேல், இனியிழுக்கில்லை, இனியிழுக்கிழையேல். இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை: இங்குப்பலபிரதிகளில் ஒரு பாடல் காணப்படுகின்றது: அது வருமாறு:—

எனக்கு மெண்வகை முனிவர்க்கு மிமையவ ருலகந்
தனக்கு மற்றிவள் தாயென மனக்கொளக் கருதி
மனத்தின் யாவர்க்கு மறு[1]வறுத் திடுமிவண் மலரான்
புனத்து ழாய்முடிப் புரவலனீ[2]ன்ற புகழோய்.

பி-ம்:—[1]அறுத்தருளுமிம்மதுவார். [2]பெற்ற.　　(௬௦௪௪)

கஉ௫.—பிறகு தசரதன் இலக்குமணனைத் தழுவுதல்.

[1]என்னச் [2]சொல்லியவ் வேந்திழை திருமனத் தியாதும்
[3]உன்னச் செய்வதோர் முனிவின்மை [4]மனங்கொளா வுவந்தான்
பின்னைச் [5]செம்மலவ் விளவலை யுள்ளன்பு [6]பிணிப்பத்
தன்னைத் தானெனத் தழுவினன் கண்கணீர் ததும்ப.

(இ-ள்.) என்று,சிறந்தவனாகிய தசரதன்,—சொல்லி ஆபரணங்களையணிந்த அந்தச்சீதை (இராமன் தீயிற்குதிக்கச்சொன்னதைப் பற்றித்) (தன்)சிறந்தமனத்தில் நினைத்தலைச் செய்கின்ற கோபத்தைச் சிறிதுங் கொள்ளாமையைத் (தான்)மனத்தினால் எண்ணி மகிழ்ந்தான்; பிறகு, மனத்தை அன்பானதுகட்ட [அன்புற்றமனமுடையவனாய்], கண்களில் (ஆனந்தத்தால்) நீர்ததும்ப,அங்கிருந்த (இராமனது)தம்பியான இலக்குமணனை, தன்னையே தான் தழுவினதுபோல [ஈருடம்பென்றுதோன்றாது ஒருடம்பென்றே தோன்றும்படி இறுக]த்தழுவினான்; (எ-று.) பி - ம்:—[1]என்னைச். [2]சொல்லியது, கூறிட, சொல்லிய. [3]உன்னற்செய்வதோர், முன்னிச்செய்வதோர், முன்னைச்செய்யவோர்.முன்னைச்செய்வினை. [4]மனக்கொளாவுவந்தாள் [5]செம்மலே. [6]பிணிக்குந். (௬௦௪௫)

கஉ௬.—இதுவும், அடுத்த கவியும் - தசரதன் இலக்குமணனைநோக்கிக் கூறுதலைத் தெரிக்கும்.

கண்ணி னீர்ப்பெருந் தாரைமற் றவன்சடைக் கற்றை
[1]மண்ணி னீத்தமொத் திழிதரத் தழீஇ[2]நின்று மைந்த
[3]எண்ணி னீக்கரும் [4]பிறவியு மென்னெஞ்சி னிறந்த
புண்ணு [5]நீக்கினை[6]யுமையனைத் தொடர்ந்துடன்[7]போந்தாய்.

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) (தசரதன்,—தனது) கண்களினின்று சொரிகிற நீர்ப்பெருக்கானது அவ்விலக்குமணனது தொகுதியானசடையினின்று ஸ்நானத்தினாற்பெருகுகிற நீர்வெள்ளம்போன்று இழியும்படி (அவனைத்) தழுவிக்கொண்டே, 'மைந்த! உன் தமையனை(வனத்துக்குப்புறப்பட்டதுமுதல்) விடாது தொடர்ந்து (அவனுக்குவேண்டிய பலஉபசாரங்களையுஞ்செய்து) அவனுடனே வந்தாய்; (அதனால்), கணக்கில்லாத

நீக்குதற்குஅரிய (உனது) பிறப்புக்களையும் என்மனத்தில் மிகுந்துள்ள துன்பங்களையும் நீக்கினை; (எ - று.)

தசரதன் இலக்குமணனை இறுகத்தழுவியபொழுது பெருக்கிய கண்ணீர் இலக்குமணன்மேற்பெருகி, அவன்சடையின்வழியே தரையில்விழுந்ததை, நீராட்டின நீர் கீழ்விழுவதுபோலு மெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. மண்ணுதல்-கழுவுதல்: இங்கேஸ்நாநஞ்செய்தல். இனி, மண்ணில் நீத்தம் - பூமியில் (ஓடும்)வெள்ளமுமாம். பி - ம்:— [1]மண்ணு. [2]நின்ற.[3]எண்ணி. [4]துன்பமென்னெஞ்சினின்றகலாப். [5]நீக்கி, நீத்தனை. [6]உனையனை, நுமையனை, தமையனை. [7]போந்து. (சுOசசு)

கஉஎ. புரந்த ரன்பெரும் பகைஞனைப் [1]போர் [2]வென்ற வுன்றன்
[3]பரந்[4]து யர்ந்ததோ ளாற்றலே [5]தேவரும் பலரும்
நிரந்த ரம் [6]புகல் கின்றது [7]நீயிந்த வுலகின்
அரந்தை யாம்பகை துடைத்தற நிறுத்தினை யைய.

(இ - ள்.) ஐய! இந்திரனது பெரும்பகைவனை இந்திரசித்தைப் போர்செய்து அழித்து வெற்றிபெற்ற உனது விசாலமான உயர்ந்த தோள்களின் வல்லமையே, தேவரும் பலரும் நிரந்தரம் புகல்கின்றதாகும்; நீ இந்த உலகத்திற்குத் துன்பத்தை யுண்டாக்குகிற பகையையொழித்துத் தருமத்தை நிலைபெறச்செய்தாய்; (எ - று.)

பதினான்குவருஷம் நித்திரையின்றியிருந்த ஒருவனாலன்றி மற்று எவராலும் தன்னைக் கொல்லமுடியாதபடி வரம்பெற்றிருந்த இந்திரசித்தை, அங்ஙனமே வனத்தில் இராமனுக்குப் பாதுகாவலாகும் பொருட்டுத் துயிலின்றியிருந்த இலக்குமணன் கொன்றா னெனவறிக. ஆற்றலே புகல்கின்றது - செயப்படுபொருள் செய்வதுபோலச் சொல்லப்பட்டது. பி-ம்:—[1]பொரா. [2]வென்றது. [3]வரம்பு, பரம்பு. [4]உய்ந்த. [5]வானமுமண்ணும், தேவரும்பிறரும். [6]புகழ்கின்றது. [7]நீதியினில்லா, நிமிர்ந்ததுவுலகின். (சுOசஎ)

கஉஅ.—தசரதன் இராமனை வரங்கேளென, அப்பிரான் என் விருப்பம் நிறைவேறிற்றெனல்.

என்று பின்னரு மிராமனை யானுனக் கீவது
ஒன்று கூறுதி யுயர்குணத் தோயென [1]வுனையான்
சென்று வானிடைக் கண்டிடர் தீர்வெனென் றிருந்தேன்
இன்று காணப்பெற் றேனினிப் பெறுவதென் னென்றான்.

(இ-ள்.)என்றுசொல்லி(த் தசரதன்),பின்பும் இராமனை (நோக்கி), 'உயர் குணத்தோய்! யான் உனக்குத் தரத்தக்கதொரு வரத்தைக் கேட்பாயாக'என்றுசொல்ல,---(அதற்கு இராமன்), 'நான் உன்னை மேலுலகத்திற்சென்றுதரிசித்து (எனது) மனத்துயரை நீக்கிக்கொள்ளலா மென்று நினைத்திருந்தேன்; (அங்ஙனமன்றி நீயே வந்ததனால்) இப்பொழுது (உன்னைத்) தரிசிக்கப்பெற்றேன்; இனி (யான்) பெறக்கூடிய (உன்னைத்தரிசித்தலினுஞ் சிறந்த) பேறு யாது உளது?' என்றான்; (எ - று.)

இராமனுக்கு இடர், தான் வனவாசஞ்செல்லத் தன்பிரிவுத்துயரால் தசரதன் உயிர்துறந்ததனாலும் அக்காலத்துத் தான் அத்தந்தையைப் பார்க்கப்பெறாமையாலும், நேர்ந்தது. பி - ம்:—[1]அனையான், உரையாச். (௪0௪அ)

௧௨௯.—கைகேயியையும் பரதனையும் அங்கீகரித்துமாறு வேண்டுதல்.

ஆயி னும்முனக் கமைந்ததொன் றுரையென வழகன்
தீய ளென்றுநீ துறந்த[1]வென் றெய்வமு [2]மகனும்
தாயுந் தம்பியு மாம்வரந் தருகெனத் தாழ்ந்தான்
வாய்தி றந்[3]தெழுந் தார்த்தன [4]வுயிரெலாம் [5]வழுத்தி

(இ - ள்.) 'ஆனாலும், உனக்குத் தக்கதொருவரத்தை (நீ) கேட்பாயாக' என்று (தசரதன் இராமனை நோக்கிக்) கூற,(அதற்குக்) கட்டழகையுடையனான இராமன், 'தீயவளென்று நீ கைவிட்ட எனக்குத்தெய்வம்போற் சிறந்தவளான கைகேயியும் (அவளது)புதல்வனான பரதனும் (எனக்கு முறையே) தாயும் தம்பியும் ஆம்படியான வரத்தைத் தந்தருள்வாயாக' என்று கூறி வணங்கினான்; (அப்பொழுது இவனதுநற்குண விசேடத்தைக்கண்டு, உலகத்திலுள்ள) ஜீவராசிகள்யாவும் உற்சாகங்கொண்டு (இவனை) வாய்விட்டுத் துதித்து ஆரவாரித்தன; (எ - று.)

'தாயும் தம்பியும் ஆம் வரம் தருக' என்றது - அநாதியாய் வருகிற க்ஷத்திரியதருமத்துக்கு விரோதமாக மூத்தவனான இராமனைக் காடு செல்லும்படியும், இளையவனான தன்மகனை நாடாளும்படியும் கைகேயி வரம்வேண்டினமைக்காகத் தசரதன் அவள்மீது கோபங்கொண்டு 'நீ என்மனைவியு மல்லை: உன்மகன்என்மகனுமல்லன்' என்று மனப்பூர்வமாக அவ்விருவரையும் வெறுத்து உறவொழிந்ததை இப்பொழுது மறந்து மீண்டும் அவர்களது உறவுமுறையைக் கைக்கொள்ளவேண்டுமென்று வேண்டியபடி. தசரதன் துறந்த விவரத்தை "இன்னே பலவும் பகர்வான் இரங்காதானைநோக்கிச், சொன்னே னின்றே யிவளென் தாரமல்லள் துறந்தேன், மன்னே யாவான் வருமப்பரதன்தனையும் மகனென்று, உன்னேன்முனிவா வவனு மாகா னுரிமைக் கென்றான்" என்ற அயோத்தியாகாண்டச்செய்யுளினால் அறிக. இராமன் தனது இயற்கைநற்குணத்தாலும், தாயைத் தெய்வமாகப் பாவிப்பது முறையாதலாலும்,கைகேயியை 'என்தெய்வம்' என்று சிறப்பித்துக் கூறினான்

பி - ம்:—[1]உன்தேவியும். [2]சேயும். [3]எடுத்தார்த்தன, எடுத்தழைத்தன. [4]உலகெலாம். [5]வாழ்த்தி. (௪0௪௯)

௧௩0—தசரதன் மறுமொழி.

வரத கேளெனத் தயரத னுரைசெய்வான் மறுவில்
பரத னன்னது பெறுகதான் [1]முடியினைப் [2]பறித்திவ்
விரத வேட[3] மற் றுதவிய பாவிமேல் விளிவு
சரத நீங்கல தாமென்றான் றழீஇயகை தளர.

(இ-ள்.) '(வேண்டுவோர்க்கு வேண்டிய) வரங்களைத் தருபவனே! (யான் சொல்வதைக்) கேட்பாயாக' என்று தசரதன் (இராமனைநோக்

கிக்)கூறுவானாகி,--'குற்றமற்ற பரதன்(மாத்திரம் நீ கேட்டபடி எனக்கு மகனாகும்)அத்தன்மையைப் பெறக்கடவன்:(உனக்குச் சூட்டும்படி நிச்சயித்திருந்த) கிரீடத்தை(ச் சூட்டவொண்ணாது) தடுத்து(அதற்குமாறாக உனக்குத்)தான் இந்தத் தவவேடத்தைக்கொடுத்த பாவியான கைகேயியின்மீது (நான்கொண்ட) கோபமானது நிச்சயமாய் நீங்காதாகும்' என்று (இராமனைத்) தழுவிய கைகள் நழுவக் கூறினான்; (எ - று.)

இராமனை வனஞ்செல்லச் சொல்லி மரவுரி முதலியவற்றைக் கைகேயி தானே கொணர்ந்து கொடுத்ததனால், 'விரதவேடம் மற்று உதவிய பாவி' என்றான். தாய் தனக்கென்று இராச்சியத்தை வரமாகப் பெற்றிருக்கவும் மறுத்து அயோத்திமாநகரிலும்வாழாமல் நந்திக்கிராமத்திலே அவனது வருகையையே நோக்கியிருக்கும் பரதனது நல்லொழுக்கத்தைக்கருதி, அவனுக்கு, 'மறுவில்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. தழுவியகை தளர்தற்குக் காரணம் - கைகேயிவிஷயமான கோபத்தினாலுண்டாகிய உள்ளச்சோர்வினாலான உடற்சோர்வு. பி-ம்:-
1முடியுனைப். 2பறித்து. 3அன்று, என்று. (சOசுO)

கஙஉக.—இராமபிரானதுமொழியால் தசரதன் கோபந்தவிர்தல்.

ஊன்1பி ழைக்கிலா வுயிர்நெடி 2தளிக்குநீ ளரசை
வான்3பி ழைக்கிது முதலெனா தாள்வுற மதித்து
யான்பி ழைத்ததல் லாலெனை யீன்றவெம் பிராட்டி
தான்பி ழைத்ததுண் டோவென்றா னவஞ்சலந் தவிர்ந்தான்.

(இ - ள்.) (அதற்கு இராமபிரான்),--'சிறிதும் தவறுதலுண்டாகாமற், பிராணிகளை நன்றாகப்பாதுகாக்கவேண்டிய பெரிய அரசுரிமையை 'இது மிக்ககுற்றத்திற்குக் காரணமானது' என்று நினையாமல் ஆளும்படி நினைவுகொண்டதனால் நான் தவறுசெய்தேனேயன்றி, என்னைப்பெற்று வளர்த்த என் அன்னை [கைகேயி] தான் தவறுசெய்தது உளதோ?' என்றான்: (அதுகேட்டவளவில்), அந்தத்தசரதன் கோபம்நீங்கினான்; (எ - று.)

ஊன்பிழைக்கிலா வுயிர் என்பதற்கு - தேகசம்பந்தத்தைத் தவறாது [நீங்காது] பெற்றுள்ள பிராணிகளை யெனினுமாம். இனி, இச்செய்யுளுக்கு - நிலையில்லாத தேக போஷணத்துக்கே உபயோகியாகிற இராச்சியபாரத்தை இது பெருங்குற்றத்துக்கு மூலமானதென் றெண்ணமல் ஆளவிரும்பி முதலில் அதற்கு இசைந்தது எனது குற்றமாமேயன்றி அன்புள்ள எனதுதாயான கைகேயி என்பக்கலருளினால் எனக்கு அதனைநீக்கினது குற்றமாகுமோ வென்றான் இராமன்: அதுகேட்டவுடனே தசரதன் அவள்மேற் கோபந்தணிந்தானென்னுங் கருத்துப்பட உரைத்தலு மொன்று. ("பின்குற்ற மன்னும் பயக்கும் மரசென்றல் பேணேன், முன்கொற்றமன்னன் முடிகொள்கெனக் கொள்ள மூண்டது,என்குற்றமன்றோ இகன்மன்னவன் குற்றம் யாதோ" என்றுஅயோத்தியாகாண்டத்தில் இராமன் இலக்குமணனை நோக்கிச்சொன்ன வார்த்தையோடு இவ்வார்த்தையை ஒப்பிடுக.) பி-ம்:—1பிழைத்திலா,

பிழைத்திடா, பிழைக்கிலாது. [2]அளிக்கநின்னுரையை, அளித்தரசுரி மை, அளித்திடுமோவோய், கின்னரசை. [3]பிழைக்கிதுமுதலெனுதத்னே யேமதித்த, பிழைக்கில்மதத்தநுமுதலென (வாள்வதென்) மதித்த, பிழைக்கிதுமுதலெனத்தளர்வதேமதித்த. (௪0௫௧)

௧௩௨.—தசரதன் இராமனுக்கு வாமளித்தது கண்டு தேவர்கள் வியந்துகூறுதல்.

எவ்வ ரங்களுங் கடந்தவ [1]னப்பொரு [2]ளிசைப்பத்
தெவ்வ ரம்பறு கானிடைச் செலுத்திஞட் கீந்த
அவ்வ ரங்களு மிரண்டவை [3]யாற்றிஞற் [4]கீந்த
இவ்வ ரங்களு மிரண்டென்ருர் [5]தேவரு மிரங்கி.

(இ - ள்.) எல்லாவரங்களையும் கடந்துள்ளவனை இராமபிரான், அவ்வாறு சொல்லி வரம்வேண்டிப்பெற,—(அவற்றைக் கேட்ட) தேவர்களும், (இராமன்மீது) பரிவுகொண்டு,—'எல்லையில்லாத பகைவர்களையுடைய காட்டிலே(இராமனைப்)போகச் செய்தவளான கைகேயிக்கு (த் தசரதன் முன்பு) கொடுத்த அந்தவரங்களும் இரண்டு; அவ்வரங்களின்படியே நடந்தவனுகிய இராமபிரானுக்கு (அத்தசரதனே இப்பொழுது) கொடுத்த இந்தவரங்களும் இரண்டு!' என்று வியந்து கூறினர்கள்; (எ - று.)

பிரமன்முதலியோர் இராவணுதிராக்ஷசர்களுக்குக் கொடுத்த பல வகை வரங்களுக்குந் தவறுண்டாகாதபடி திருமால் அவற்றிற்கு ஏற்பத் தான் திருவுருக்கொண்டு தொழில்களைநடத்தி வரங்களை அழித்தருளுகின்றதனுல், 'எவ்வரங்களுங் கடந்தவன்' எனப்பட்டான். இனி, இதற்கு - எவ்விதவரங்களையும் வேண்டாதவ னென்றும், எல்லாமேன்மைகளையுங் கடந்துஅவற்றிற்கெல்லாம்மேலுள்ளவனென்றும் பொருள் கொள்ளுதலுமாம். இத்தொடர்-தசரதனைக் குறிப்பதெனக் கொண்டு, (இராமன்வார்த்தையாற் கோபந்தணிந்தவனை) தசரதன் அவ்விராமன்வேண்டுகோட்கு இணங்கி வாக்குஅளிக்கஎனினும் அமையும்.தான் பெற்றவரங்களைக்கொண்டு தன்திறத்தில்தீங்கிழைத்தவளானகைகேயி விஷயத்தில் இராமபிரான் சிறிதும் சினங்கொள்ளாது அவள்மீது தசரதன்கொண்டிருந்த கோபத்தையும் ஆற்றி அவளுக்கு நன்மையையே செய்யத்துணிந்து அத்தசரதனிடத்து வரங்கள் வேண்டின அருமையைப்பாராட்டி, தேவர்கள் இங்ஙனம் இராமனது குணதிசயத்தை வியந்தனர். பி-ம்:—[1]இது, இப். [2]இசையத். [3]ஆற்றிஞட்கு. [4]அளித்த. [5]இமையவர், அமரரும். (௪0௫௨)

௧௩௩.—தசாதன் விமானமேறி மீண்டு மேலுலகஞ் செல்லுதல்.

வரமி ரண்டளித் தழகனை யிளவலை மலர்மேல்
விரவு பொன்னினை மண்ணிடை நிறுத்திவிண் ணிடையே
உரவு [1]மானமீ தேகின னும்பரு முலகும்
பரவு மெய்யினுக் குயிரளித் துறுபுகழ் படைத்தோன்,

(இ - ள்.) விண்ணுலகத்தவரான தேவர்களும் மற்றையுலகத்தவர்களும் சிறப்பித்துக்கூறுகின்ற சத்தியத்தின்பொருட்டு உயிரைவிட்டு [இறந்து] (சத்தியந்தவறாதவனென்று) மிக்க கீர்த்திபெற்றவனான தசரதன்,—(இராமபிரான் கேட்டபடி அவனுக்கு அந்த)இரண்டு வரங்களையுங் கொடுத்தபின்பு,—பேரழகையுடையனான இராமனையும் (அவனது) தம்பியாகிய இலக்குமணனையும் தாமரைமலரின்மேல் வீற்றிருக்கின்ற இலக்குமியின் அமிசமான சீதையையும் பூமியில்நிற்கும்படி அநுமதிகொடுத்து வலிய விமானத்தின்மேலேறி மேலுலகுசென்றான்.

தசரதன் தான் கைகேயிக்குக்கொடுத்திருந்த வரங்களைப் பொய்க்கமாட்டாது இராமனை வனஞ்செல்லவிட்டு அப்புத்திரசோகத்தாலே தான் உயிர்துறந்தமையால், 'மெய்யினுக்கு உயிரளித்து உறுபுகழ் படைத்தோன்' என்றார். இதுமுதல் நான்குசெய்யுள்கள் சிலபிரதியிலில்லை. ஆயினும், ஐந்தாவதுசெய்யுளாகிய "மூந்தைநாள்" (கஉஎ) என்பதைநோக்குமிடத்து கஉஉ - முதலிய பாடல்கள் இன்றியமையாதனவெனத் தோன்றுகின்றது. பி-ம்:—[1]வானமீது. (சO௫௩)

கஉச.—இராமன் தேவர்களிடம் வரம்வேண்டுதல்.

கோட்டு வார்சிலைக் குரிசிலை யமரர்தங் [1]குழாங்கள்
மீட்டு நோக்குறா வீரநீ வேண்டுவ வரங்கள்
கேட்டி யாலென [2]வரக்கர்கள் [3]கிளப்பருஞ் செருவில்
[4]விட்ட மாண்டுள குரங்கெலா மெழுகென [5]விளம்பி.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) தொகுதியாகக்கூடியுள்ள தேவர்கள் வளைக்கின்றநீண்ட வில்லையேந்தியபுருஷோத்தமனானஇராமபிரானைத் திரும்பவும்பார்த்து, 'வீரனே! நீ விரும்பியவரங்களை (எம்மிடத்து)க் கேட்பாயாக' என்று கூற,—(இராமபிரான்), சொல்லுதற்கு அரிய (பெரும்)போரில் இராக்கதர்கள் அழிக்க உயிர்மாய்ந்த குரங்குகளெல்லாம் உயிர்பெற்று எழுவனவாக'என்று ஒருவரம் வேண்டி, (எ-று.)—'என்றான்'என அடுத்தகவியோடு முடியும். பி-ம்:—[1]குழுவும், [2]அரக்கர்தம். [3]கிளர்பெருஞ். [4]வீட்டி. [5]இயம்பி. (சO௫ச)

கஉ௫ பின்னு மோர்வரம் வானரப் பெருங்கடல் பெயர்ந்து
மன்னு[1]பல்வன மால்வரைக் குலங்கண்[2]மற் றின்ன
துன்[3]னி டங்கள்[4]காய் கனிகிழங் கோடுதேன் [5]றுற்ற
[6]இன்னு ணீருள வாகென [7]வியம்பிடு கென்றான்.

(இ - ள்.) 'பெருங்கடல்போலுள்ள[பரந்த]வானரசேனை போய்ச் சேர்கிற பலகாடுகளும் பெரிய மலைகளின்தொடர்களும் இவைபோன்ற (குரங்குகள்) சேரத்தக்க வேறிடங்களும் (இவ்வானரங்களுக்கு இரையாகிற) காய்கனிகிழங்குகளுடனே தேன்களும் நெருங்கியனவும் இனிய பருகுதற்குஉரிய நீர் உள்ளனவும் ஆகக்கடவன என்று மற்றும் ஒருவரம் தரவேண்டும்' என்றுகூறினான்; (எ- று.)—பி - ம்:—[1]அவ்வ

னம். [2]மற்றிவர்கள், மற்றிவைகள், மற்றவர்கள். [3]இடங்களில். [4]தேன் காய் கனி கிழங்கோடு. [5]துற்றும், துற்றி, துன்றி. [6]இன்னுநீருளவா கென, இன்னினீருளவகென, மின்னுரநீள்வரவகமே, இன்றுநீள்வர வாகமேல். [7]விளம்பிடும். (௪௦௫௫)

௧௩௬.—இராமன் வேண்டியபடி தேவர்கள் வரமளித்தல்.

வரந்த ரும்முதன் [1]மழுவலான் முனிவரர் வானோர்
[2]புரந்த ராதிமற் றேனையோர் தனித்தனிப் புகழ்ந்தாங்கு
அரந்தை வெம்பிறப் பறுக்குநா யக[3]நின தருளாற்
குரங்கி னம்பெறு கென்றன ருள்ளமுங் [4]குளிர்ப்பார்.

(இ - ள்.) வரங்கொடுக்குந் தன்மையுள்ள பிரமனும் சிவபெருமானும் இருடிச்சிரேஷ்டர்களும் தேவர்களும் இந்திரன்முதலிய மற்றவர்களும்,--(இராமனைத்) தனித்தனியே துதித்து மனமும்குளிரப் பெற்றவராய்,—அப்பொழுது 'துன்பத்துக்குஇடமான கொடியபிறப்புக்களை அறுத்தொழிக்குந் தலைவனே! உனது கிருபையினால் வாநரக் கூட்டம்(உயிரையும் உணவுகளையும்) பெறக்கடவது'என்றனர்; (எ-று.) —மற்று-அசை.

பிரமனை 'முதல்' என்றதற்குக் காரணம், ஸுரஜ்யேஷ்டன் லோகேசன் ஸ்வயம்பூ ப்ரஜாபதி விதி முதலாக அவனுக்கு வழங்கும் பெயர்களின் பொருள்களை நோக்கிக் காண்க. இங்கு 'முனிவரர்' என்றது, தேவரிஷிகளையெனக் கொள்க; அன்றேல், கீழ்ச்செய்யுளில் 'அமரர்தங்குழாங்கள்' என்றதனோடு மாறுகொளக்கூறலாம். பதினெட்டுத் தேவகணங்களுள் தேவவிருடியரும் ஒருவகையினராதல் காண்க. பி-ம்:---[1]மலரவன் மழுவலான். [2]புரந்தராதியர்தனித்தனியவர் களேபுகல, புரந்தராதிமற்று......புகல்வார். [3]நின்றன். [4]குளிர்ப்பான். ()

௧௩௭.—இறந்த வாநரங்கள் உயிர்பெற்றெழுந்து இராமனை வணங்குதல்.

முந்தை நாண்முதற் [1]கடைமுறை [2]யளவையு முடிந்த
அந்த [3]வானர மடங்கலு [4]மெழுந்துட னார்த்துச்
[5]சிந்தை யோடுகண் களிப்புறச் செருவெலா நினையா
[6]வந்து தாமரைக் கண்ணனை [7]வணங்கின [8]மகிழ்ந்து.

(இ-ள்.) (போர்)தொடங்கிய நாள் முதலாகப் போர்முடிந்தநாள்வரையிலும் இறந்தனவான அந்த வானரங்கள்யாவும் உடனேஉயிர் பெற்று எழுந்து யுத்தத்தையெல்லாம் நினைத்து, (தம்பக்கத்து நேர்ந்த வெற்றியைப்பற்றி) ஆரவாரஞ்செய்து, மனமும் கண்களும் களிப்படையச் செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களையுடையனை இராமபிரானைச் சமீபித்து மகிழ்ச்சியோடு வணங்கின; (எ-று.)—பி-ம்:- [1]கடன்முறை. [2]யாவையும், அளவையின். [3]வானரர். [4]எழுந்துடனார்த்த, எழுந்தெழுந்தார்த்துச், எழுந்துறலுற்றுச். [5]சிந்தைகண்ணிணை. [6]வந்த. [7]வணங்கினர், வணங்கியே [8]மகிழ்ந்தார். (௪௦௫௭)

கங-அ.—வானரங்கள் ஆரவாரித்தலும், தேவர்கள் இராமனைநோக்கி ஒன்றுகூறத்தொடங்கலும்.

கும்ப கன்னனோ டிந்திர சித்துவெங் குலப்போர்
வெம்பு வெஞ்சினத் திராவணன் முதலிய வீரர்
அம்பின் மாண்டுள வானர [1]மங்குவந் தார்ப்ப
உம்பர் யாவரு மிராமனைப் பார்த்திவை யுரைத்தார்.

(இ-ள்.) கும்பகர்ணனும் இந்திரசித்தும் கொடிய சிறந்த போரிற் கொதிக்கின்ற கடுஞ்சினத்தையுடைய இராவணனும் முதலான வீரர்களுடைய அம்புகளினால் இறந்து பட்டனவான குரங்குக்கூட்டங்கள், (பிழைத்தெழுந்து) இராமனதுபக்கத்தில் (திரண்டு)வந்து பேரொலி செய்ய, (அப்பொழுது) தேவர்களெல்லோரும், இராமனைப்பார்த்து இவ்வார்த்தைகளைக் கூறுபவரானார்கள்; (எ - று.)---அவற்றை, அடுத்த மூன்றுகவிகளிற் கூறுகின்றார். பி - ம்:---[1]அடங்கவந்து, அடங்கலும்.

கங-கூ.—இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்: இராமனை நோக்கிய தேவர்கள்வார்த்தை.

இடையு வாவினிற் சுவேலம்வந் திறுத்தெயி லிலங்கைப்
[1]புடைய வாவுறச் சேனையை [2]வளைப்புறப் போக்கிப்
[3]படைய வாவுறு மரக்கர்தங் குலமுற்றும் படுத்துக்
கடையு வாவினி லிராவணன் றன்னையுங் [4]கட்டு.

கச0. வஞ்ச ரில்லையிவ் வண்டத்தி [5]னெனும்படி [6]மடித்த
கஞ்ச நாண்மலர்க் [7]கையினை யன்னைசொற் [8]கடவா
அஞ்சொ டஞ்சு[9]நாள் சென்றென மாண்டுபோய் முடிந்த
பஞ்ச மிப்பெயர் படைத்துள திதி [10]யின்று [11]பயந்த.

இவ்விரண்டு கவிகளும் - குளகம்.

(இ - ள்.) (கங-கூ) கிருஷ்ணபட்சத்து இடையில் [அஷ்டமிதிதியில்] (இலங்காநகரமுள்ள இடமான) சுவேலமலையில் வந்துதங்கி, (அன்றைக்கே) மதில்கள் சூழ்ந்த இலங்கையின் சுற்றுப்பக்கத்தில் வானரசேனைகளைவிரும்பி முற்றுகைசெய்யும்படி செலுத்தி, ஆயுதங்களை விரும்புகிற [அல்லது போர்செய்தலில் உற்சாகமுடைய] இராக்கதர்களுடைய வமிச முழுவதையும் கொன்றொழித்து, (அந்தக் கிருஷ்ண பக்ஷத்தின்) கடைசிநாளில் [அமாவாசையில்] (அரக்கர்தலைவனான) இராவணனையும் கொன்று, (கச0) இவ்வுலகத்தில் (இனி) வஞ்சகர்களான அரக்கர்கள் இல்லை யென்றுசொல்லும்படி யொழித்த அன்று பூத்த தாமரை மலர்போன்ற கைகளையுடையவனே! (நீ), தாயான கைகேயியின்வார்த்தையை மறுக்காமல், 'எப்பொழுது பதினான்கு வருஷமும் (முடியும்)' என்று நினைக்கின்ற வருஷங்கள் சென்று கழிந்து விட்டன: இன்றைத்தினமானது, பஞ்சமியென்னும் பெயர்கொண்ட திதியை உண்டாக்கிற்று; (எ-று.)

'இராமபிரான் பங்குனிமாசத்திற் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமிதிதி யன்றை மாலைக்காலத்தில் இலங்காநகரமுள்ள இடமான சுவேலமலை யில் வாநரசேனையுடன் ஏறி, அன்றிரவே சேனையைக்கொண்டு இலங் கையை முற்றுகைசெய்து, மறுநாள் [நவமிதிதி] பகற்பொழுதுக்கு மேல் அரக்கரோடு போர்தொடங்கி, ஆறுநாட்களில் கும்பகர்ணன் இந்திரசித்து முதலிய பல அரக்கர்களையும் கொன்று மூலபலத்தையும் வதைத்து வெற்றிபெற்று, ஏழாநாள் [அமாவாசை] அன்றை இராவண னுடன் மீண்டும் போர்தொடங்கி அன்றிரவின் பிற்பொழுதில் அவனை யுங் கொன்று வெற்றிபெற்றனன்' என்று வால்மீகிராமாயணத்தின் நுட்பமானகருத்துகளை ஆராய்ந்து தெளியக்கூறுகின்றதான ராமாயண ஸாரஸங்க்ராஹமென்னும் வடநூல் கூறும். ஒவ்வொருபக்ஷத்திலும் பதி னைந்தாந்திதியாகிய இறுதிநாளைக்குறிக்கிற 'உவா' என்னும்பதம், இங்கு இலக்கணையாய்ப் பக்ஷமென்னுமாத்திரமாகி நின்றது. இடை யுவா - உவாவினிடை; முன்பின்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத் தொகை; இலக்கணப்போலி. இடையுவாஎன்பதற்கு - நிகண்டு களில் பூர்ணிமையென்று பொருள்கூறி யிருப்பதுகொண்டு, அவ் வாறே யுரைப்பாரு முளர். உவா - என்னும் பதத்திற்கு 'கடை' என்ற அடைமொழி கொடுத்தது, பூர்வபக்ஷத்துப் பதினைந்தாநாளைக் குறியாமல், அபரபக்ஷத்துப்பதினைந்தாநாளையே குறிக்க; இது, இனம்விலக்கவந்த அடைமொழி. [பூர்வபக்ஷம் - முந்தின பக்ஷம், சுக்ல பக்ஷம், வளர்பிறைக்காலம்; அபரபக்ஷம் - பிந்தினபக்ஷம், கிருஷ்ண பக்ஷம், தேய்பிறைக்காலம்.] கடையுவா - கடையாகிய உவா எனப் பண்புத்தொகை.

'இன்று பஞ்சமிப்பெயர் படைத்துள திதி பயந்த' என்ற சொற் போக்கினால், பெரும்பாலும் அன்றைக்குச் சதுர்த்திதிதி இருந்ததென் றும், பின்பு பஞ்சமிதிதி வருகிறதென்றும் பெறப்படும். இவ்விடத்து, 'அமாவாசையில் இராவணசங்காரம் ஆனபின்பு, பிரதமையில் இராவண சம்ஸ்காரமும், துவிதியையன்று விபீஷணபட்டாபிஷேகமும், திருதி யையன்று ஜாநகீபரிசோதனையும் நடந்து, மறுநாளாகிய சதுர்த்தியில் இராமன் வாநரசேனையுடன் புஷ்பகத்தின்மீது ஏறிப் புறப்பட்டு அன் றிரவிற் கிஷ்கிந்தைசேர்ந்து, அங்குள்ள வாநரமகளிரைக் கூட்டிக் கொண்டு, பஞ்சமியன்று பரத்துவாசரது ஆச்சிரமஞ்சேர்ந்து, அன் றைத்தினமே பதினான்குவருஷமும் முடிகிறபடியால், தன்வருகையைத் தெரிவிக்கும்படி அநுமானைப் பரதனிடம் தூதுஅனுப்பினன்' என்ற ராமாயணஸாரஸங்க்ராஹம் உணரத்தக்கது. பி-ம்:—[1]உடை. [2]வளைவுற. [3]படையைவீழ்வுறும். [4]கட்டும், கரந்தாய். [5]புறத்தென. [6]மடித்தாய். [7]கையனை, கையினால். [8]காத்த, கடவாது, காரும், காறும். [9]நாலென் றது. [10]என்று. [11]பகர்ந்து. (௪0௫௯, ௪0௬0)

௩௪௧. இன்று [1]சென்றுநீ பரதனை யெய்திலை யென்னில்
பொன்று மாலவ னெரியிடை யன்னது போக்க

வென்றி வீரநீ போகியா லென்பது [2]விளம்பா
நின்ற தேவர்க [3]ணீங்கினு ரிராகவ னினைந்தான்.

(இ - ள்.) 'வெற்றிபெற்ற வீரனே! நீ இன்றைக்குப் புறப்பட்டுப் போய்ப் பரதனைச்சேர்ந்திடாயானல், அந்தப்பரதன் (முன்பு பிரதிஜ்ஞைசெய்துள்ளபடி நீ வரவில்லையென்னுங் காரணத்தால்) அக்கினியில் விழுந்து உயிரை விடுவான்; அவ்வாறு அவனிறப்பதைத் தடுக்க (இப்பொழுதே) நீபோகவேண்டும்' என்பதைச் சொல்லி(அங்குஇராமனெதிரில்) வந்திருந்த தேவர்கள் (இராமனை நீங்கித் தங்கள்தங்களிருப்பிடத்துக்குச்)சென்றார்கள்; (உடனே), இராமபிரான் பரதனைச்சென்று சேர்வதைப்பற்றிச்) சிந்திப்பவனானன்; (எ - று.)

"ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ, நாமநீர் நெடுநகர் நண்ணி நாளிலங், கோமுறை புரிகிலை யென்னிற் கூெரிச், சாமிது சரதம் நின்னுணை சாற்றினேன்" என்று முன்பு சித்திரகூடபருவதத்தில் இராமபிரான் முன்னிலையிலே பரதாழ்வான் பிரதிஜ்ஞைசெய்திருத்தலை அயோத்தியாகாண்டத்திற் காண்க. பி-ம்:—[1]நீசென்று. [2]விளம்பி, இயம்பா. [3]எகினர். சிலபிரதிகளில் பிராட்டியார்திருவடிதொழுபடலம் இச்செய்யுளோடுமுடிய, மேல் மீட்சிப்படலம் தொடங்குகின்றது. "உணர்த்துவாயுண்மை" (கூ௮) என்றபாடலிற் கடவுளர்காட்சிப்படலம்தொடங்குகின்ற பிரதியொன்றிலும் இங்கு மீட்சிப்படலம்தொடங்குகின்றது: வேறுசிலபிரதிகளில் "எழுபதுவெள்ளம்" (ககூ0) என்ற பாடலில் மீட்சிப்படலம் தொடங்கும். (சு0கூக)

கசுஉ.—இராமன் 'அயோத்திக்கு விரைந்துசெல்ல ஊர்தியுண்டோ?' என்று வினவ,விபீஷணன் விமானமுண் டென்றல்.

ஆண்டு [1]பத்தொடு நாலுமின் றேடறு மாயின்
மாண்ட தா[2]மினி யென்குலம் [3]பரதனே [4]மாயின்
ஈண்டுப் [5]போகவோ [6]ரூர்தியுண் டோவென வின்றே
தூண்டு மானமுண் [7]டென்றடல் வீடணன் [8]றொழுதான்.

(இ - ள்.) 'பதினன்குவருஷங்களும் இன்றோடே முடியுமானல், (நான் வரவில்லையென்ற காரணத்தாற்) பரதன் (இறப்பான்: அப்படி) இறந்தால், இனி எனதுவமிசம் அழிந்ததேயாகும்: (ஆகையால்), இப்பொழுதே சென்று சேரத்தக்கதொரு வாகனம் உள்ளதோ?' என்று (இராமன் விபீஷணனை) வினவ,—(அதற்கு), வலிமையுடைய விபீஷணன்'இன்றைக்கே(சென்றுசேரும்படி)தூண்டத்தக்கவிமானம்(இங்கு) உளது' என்று தொழுதுகூறினன்; (எ - று.)

மாண்டதாம்-தெளிவுபற்றியகாலவழுவமைதி.பரதனொருவன் இறந்தால் அதுகாரணமாக மனவொற்றுமையையுடைய மற்றெல்லாரும் இறந்தொழிவது நிச்சயமென்று, தனக்குப் பரதன்மேலுள்ள அன்பை இராமன்வெளியிட்டபடி. பி - ம்:—[1]பத்தொரு. [2]அன்றே, என்றே, இன்றே. பரதனும், [3]பரதனே. [4]மானும். [5]இன்றேக,போவது, போவ

தோர். [6]உபாயமேதென்றவன்வினவ, உபாயமென்னேனெவின்றே. [7]என்றனன். [8]சொன்னான். இச்செய்யுளின்பின் ஒருபிரதியில் காணப் படும்பாடல் வருமாறு:—

வங்க நீ ணெடு வடதிசை வானவன் விமானம்
துங்க மாகவி யெழுபது வெள்ளமுஞ் சூழ்ந்தால்
எங்கு ளாரெனு மிடமுள தந்நின்மிசை யேறிப்
பொங்கு மாநகர் புகுதியிப் பொழுதினி லென்றான் (௪௦௬௨)

௧௪௩.—விபீஷணன் புட்பகவிமானத்தின் தன்மையைக் கூறி 'இதனிற் செல்வாய்' எனல்.

வாங்கி னானிரு நிதியொடு தனதனில் வள்ளால்
ஓங்கு மால்வெள்ள மெழுபஃ தேறினு மொல்காது
ஈங்கு ளாரெலா மிவருவ திவரினீ யினிது
பூங்கு லாநகர் புகுதியின் றென்றனப் [1]புகன்றான்.

(இ - ள்.) (மீண்டும் விபீஷணன் இராமனைநோக்கி), 'வரையாது அருளுந்தன்மையுடையவனே! குபேரனிடத்திலின்று (இராவணன் இவ்விமானத்தைப்) பெருஞ்செல்வத்துடனே கவர்ந்துகொண்டான்; (இவ்விமானம், உன்னிடமுள்ள) மிகப்பெரிய எழுபதுவெள்ளம் சேனை (தன்மீது) ஏறினாலும் தளராது: இங்குள்ளவர் யாவரும்ஏறக்கூடியது: நீ(இதன்மீது)ஏறுவாயாயின்,இன்றைக்கே அழகுவிளங்குகின்ற அயோத்தியாபட்டணத்திற் சுகமாகப்போய்ச்சேர்வாய்' எனப் புகன்றான்.

தநதன் - (தன்னையடுத்தவர்க்குச்) செல்வத்தைத் தருபவனென்று குபேரனுக்குக் காரணப்பெயர். இவன் இளமையில் பிரமனைநோக்கித் தவஞ்செய்துபெற்றிருந்ததான நினைத்தபடி தடையின்றிச்செல்ல வல்ல இப்புஷ்பகவிமானத்தை இராவணன் இவனோடு போர்செய்து வென்று வலியக் கவர்ந்து சென்றன னென அறிக. பி-ம்:—[1]புகலா. சில பிரதியில் இப்பாடல் இல்லை:"மங்கலா நிதி வடதிசை வானவன்மானந், துங்கமார் கவி யெழுபது வெள்ளமுஞ் சூழ்ந்தா,லெங்குளாரெனு மிடமுள திதன்மிசை யேறிப், பொங்குமாநகர் புகுதியிப் பொழுதினிலென்றான்" என்றுசிலபிரதியிலும், "வாங்கினானள கேசனைத் [2]துரந்து மிம்மானம்,ஒங்குமூவுல கத்தவ ரேறினு முரமேவாய்,ஆங்கிடம் [3]பினு முடையதாமதுதனி லேறிப், பூங்குலாநகர்புகுதியிப்பொழுதினி லென்றான்" (பி-ம்:-[2]துரந்திந்தவிமானம். [3]பின்னுமுடையதொன்றது தனில்.) என்று வேறு சிலபிரதியிலும் பாடல் காணப்படுகின்றது. பின்னும் வேறொரு பிரதியில் "வாங்கி னானது மாநிதி யோடவண்மானம், எங்கு வெள்ளமோரெழுபது மேறினு லின்னும், ஆங்கு ளோரெலா மேறுவததனைநீ யேறிப், பூங்கு லாநகர் புகுதியிப் பொழுதினிலென்றான்" என்று இங்குக் காணப்பட, இதனையடுத்துப் பின்வரும்பாடல்கள் உள்ளன: வருமாறு:—

௧. என்று [1]தேரினை வீடண னெய்திய [2]தென்றான்
[3]நன்று தானென நாயக னேறின [4]னவரோடு

றன்று தானிளங் [5]கோவொடு மக்கவி வெள்ளம
[6]ஒன்று தாமென வொருதிசை யிருந்தது மொக்கும்.

பி - ம்:—[1]தேரினிலீண்டவந்தேறுதி. [2]என்ன. [3]நன்றிதாமென, நன்றிதாகென. [4]நலனோடு. [5]கோவுடன்கவிப்பெருவெள்ளம், கோவுடன் கவிவெள்ளமொருங்கே. [6]ஒன்றினொரெலாம். இங்கே ஒருபிரதியில் படலம்முடிகின்றது. இனி,

## * இயமப்படலம்.

1\. வேறு. ஏறினன் விமானந் தன்னி லிராமனு மிளைய கோவும்
மாறிலாச் சனகி யோடு வளநக ரிலங்கை வேந்தும்
கூறிய வனுமன் சாம்பன் குமரன்வெங் கவிவந் தேற
மாறிலோர் நிலத்து நின்றார் வயந்தனார் கொத்தி லுள்ளார்.

2\. மாறதாய் வெள்ளஞ் சேனை மானத்தின் வராமை நோக்கி
ஏறுநீர் தேரி லென்னக் கருணன்வந் தெதிர்த்த போது
சீறிய நுமரி லெங்கோன் றுக்கிட வரக்கன் சீறி
நீறெழப் பிசைந்தே யிட்டா னெற்றியி லென்னச் சொன்னார்.

3\. வேறு. என்ற வாசகங் கேட்டலும் வானர ரிறங்கி
நின்ற போதினி லிராகவன் றேரினின் றிழிந்தான்
பொன்று மாவரக் காரண மென்னெனப் புழுங்காத்
துன்று தார்ப்புயத் திலக்குவ பொறியெனச் சொன்னான்.

4\. வேறு. வரிசிலை யிராம னோலை [1]மறம்புரி மறலி காண்க
எரிகொளு மிலங்கைப் [2]போரி லின்னுயிர் [3]துறந்து போந்த
[4]குரிசிலை வயந்தன் றன்னைத் தேடியே [5]கொணர்க வன்றேல்
உரியதன் [6]பதமும் வாழ்வு மொழிப்பனென் [7]றெழுதி விட்டான்.

பி - ம்:—[1]மறப்பிலாமறலிகாண. [2]பூசல். [3]இழந்துபொன்சேர், இழந்துபொன்றும். [4]உருவிலான்றன்னைத்தேடித்தேடியே, தெரிவிலா

* வசந்தனுயிர் வருபடலம்என்ற பெயருடன் இங்குக்கூறிய விஷயத்தைத் தெரிவிக்கும் பாடல்கள் கஙு அ - ஆம் பாடலுக்குப்பின் சில பிரதிகளிற் காணப்படுகின்றன: இங்குள்ளபாடல்களிற்பலவும் ஆங்கு உள்ளன: அவை இடையிற்புள்ளிகளிட்டு முதலும் இறுதியுமே ஆங்குக் காட்டப்படும்: இங்கு இல்லாதபாடல்கள் முழுதும் காட்டப்படும். அந்தப்பிரதியிலும்'வாங்கினான்'என்ற செய்யுளுக்குப்பின்''என்றுதேரினை'' என்ற இச்செய்யுளும் உள்ளது. வசந்த னென்றுபேர்பூண்ட வானரவீரனைக் கும்பகர்ணன்பிசைந்து உயிர்போக்கி அவனதுதசை முதலியவற்றை உடலிற்பூசிகொண்டானென்ற விஷயம் உத்தரகாண்டத்து அசுவமேதப்படலத்துள்ள ''வெய்யவன்மறுத்து, வயந்தனைப்பிசைந்து'' (உஉஅ) என்பதனாற் பெறப்படு மென்க. அசுவமேதப் படலத்து கங்கூ-ஆவதுபாடல் முதல் உகூ0-வரையிலுமுள்ளசெய்யுட்கள் சிலபிரதிகளிற் காணப்படவில்லை: ஆகவே, வசந்தனைப்பற்றிக்கூறியபாடல்களைக் குறித்து ஐயம்மிகுகின்றது.

வசந்தன்றன்னைத்தேடியே. [5]கொணரானாகில், கொணர்வதன்றேல், கொணரீராகில். [6]குலமும். [7]உணர்த்தி.

5. அக்கணத் தருகு நின்ற வனுமன்கைத் திருமு கத்தைத்
[1]தக்கவ னீட்ட வாங்கித் [2]தன்றலை மிசையிற் சூடி
இக்கணம் வருவன் வாழி [3]யிராமவென் றிருதோள் கொட்டி
மிக்கமா மடங்கல்போல [4]விண்ணிடை [5]விசைத்துப் பாய்ந்தான்.

பி - ம்:—[1]தக்கவாநீட்டை. [2]தாழ்ந்துதன்றலைமேற், தளர்ந்துதன்றலைமேற். [3]இராமன் [4]விண்மிசை. [5]விசைந்து, விரைந்து.

6. வேறு. மண்டிப் [1]புக்கனன் மறலிதன் [2]பெரும்பத நரகில்
தண்டிப் புண்[3]டறுப் புண்டெரிப் புண்டவர் தம்மைக்
கண்டு மாருதி கண்புதைத் [4]தரியரி யென்ன
[5]மிண்டி யேறினர் நரகிடை வீழ்ந்தவ ரெல்லாம்.

பி - ம்:—[1]பாய்ந்தவன். [2]பதத்தினிற்செல்லத். [3]அறுப்புண்டெரி யுண்பவர்தம்மைக், அருநரகிடைப்படு முயிர்தன்னைக். [4]அரிகரி. [5]மண்டி, மிண்டெரி.

7. துளங்கி யந்தகன் வந்தடி தொழுதலுந் [1]தோலா
வளங்கொள் மாருதி வசந்தனைக் காட்டென வவனும்
உளங்க லங்கியுன் னயக னடியரிங் குறார்கள்
[2]விளங்கு கீர்த்தியாய் தேடு [3]விண் ணவர்புரத் தென்றான்.

பி-ம்:—[1]தோரா. [2]விளைந்த. [3]வானவர்.

8. சொன்ன கூற்றுவன் [1]றன்னைத்தன் வாலிடை[2]த் துவக்கிப்
பொன்னின் கற்பக[3]ப்பதியிடைக்[4]கொண்டுபோய்ப் புகலும்
[5]முன்னை வந்துகண் டிந்திரன் [6]முனிவனே வென்ன
[7]மன்ன வேகுவன் வயந்தனைக் காட்டுதி யென்றான்.

பி - ம்:—[1]தன்னையும்வாலினிற். [2]சுருக்கிப். [3]நாட்டிடை. [4]குதிக் கொண்டுபோக, குதிக்கொண்டுபுகலும். [5]முன்னின்வந்துகண்டு, முன்னிற்கண்டுவந்து. [6]முனைவனே. [7]மன்னனேதலன்காட்டுதிவசந்தனை.

9. வல்ல ரக்கரை மடித்தெமை யெடுத்தமா ருதியே
இல்லை [1]யிங்கய [2]னுலகிடை யறிதியென் றிசைப்பச்
சொல்லு மங்கவன் றன்னையும் வாலிடைத் [3]துவக்கிப்
பல்லு யிர்த்திறம் படைத்தவ [4]னுலகிடைப் பாய்ந்தான்.

பி - ம்:—[1]மற்று. [2]உலகிலுண்டேயறியென்னச் - சொல்ல, உலகிலுண்டேயெனவினிய-சொல்ல. [3]சுருக்கிப். [4]உலகத்திற்.

10 சிந்தை [1]தூயவன் செலவுளந் துளங்கு நான்முகனும்
[2]வந்த காரிய மேதென வயந்தனைப் பார்த்துச்
சுந்த ரத்[3]தடந் தோள்வில்லி நின்றன னவன்றான்
[4]உந்த னீள்பதத் துளானெனிற் காட்டென வுணர்த்தும்.

பி - ம்:—[1]நான்முகனுமன்முன் செலமனந்துளங்கி, தூயவன் செலவுளநடுங்குநான்முகனும், தூயநான்முகன் றனைவணங்கவுஞ் சீறி.

[2]வந்துகண்டெனேவரவென. [3]பெருந்தோளவன்,பெருந்தோள்வில்லி. [4]இந்தநீள்பதத்துளனெனிற்கொணர்திமீண்டென்றான்.

11. என்னு டைப் [1]பெரும் பதத்தின்மே லாகிய வெந்தை
தன்னு டைப்பெருஞ் [2]சோதியிற் கிழதாய்த் தழைத்த
[3]மின்னு நீரொளி விண்டுவின் [4]பதத்துளான் விறலோய்
அன்ன வன்றனைக் கொணருதி யாங்கணைந் தென்றான்.

பி-ம்:—[1]பதந்தனக்குத்தான்மேலவாவெந்தை, பதந்தனக்குமேலா வெந்தைவாழுந். [2]சோதிக்குக்கிழதாய்த்தழைத்த, சோதியாந்தயாபர மூர்த்தி. [3]மின்றிகழ்ந்தொளிர், மின்னுந்டொளி. [4]பதத்தினன்விற லோன், பதத்திலான்விறலோன்.

12. [1]என்று நான்முகன் சொல்லவு மியமனிந் திரனை
ஒன்ற [2]வால்கொடு துவக்கினை யொருகுதி [3]கொண்டான்
றின்றி கழ்ந்தொளி விளங்கிடும் விண்டுவின் [4]பதத்திற்
சென்று கண்டுகொண் டிழிந்தனன் றிசைமுகன் பதியில்.

பி - ம்:—[1]என்றநான்முகன்றன்னையு மிந்திரன்யமனோடு, என்று நான்முகன்றன்னைவிட்டியமனிந்திரனோடு, [2]வாலொடுந்துவக்கிமே லொருகுதி. [3]கொள்ளா. [4]பதத்தே.

13. மலரின் மேலயன் வசந்தற்கு முன்னுரு வழங்கக்
குலவு [1]வாசவன் யமனைவிட் டிருநிலங் குறுகி
அலகில் வீரன்ற னடியினை யவனொடும் வணங்கிச்
[2]சலமுந் தீர்த்தனன் படையையு [3]மேற்றினன் றேர்மேல்.

பி-ம்:—[1]வாலிலங்கவரை, வாலின்மேலவரை. [2]சலமுதிர்ந்தவன்ப டையை, சலமுந்தீர்ந்தனன்..., சலமுந்தீர்ந்தவன்..., சலமுதிர்ந்தவன்ப டையொடும். [3]உய்த்தனன்றடந்தேர்மேல். உய்த்தனன்றடந்தோளான்.

வேறுபிரதியில் "வாங்கினான்" (கசுஙு) என்ற இந்தச்செய்யுளுக்குப் பின் காணப்படுஞ்செய்யுள்கள் வருமாறு:—

1. * என்று .... .... .... ஒக்கும். [கசுஙு-க]

2. ஏறினு னிராமன் றேர்மே லெழின்மலர் மாதினோடும்
ஏறினு னிளைய கோவு மிராக்கதர் வேந்த னோடும்
ஏறினு னனுமன் சாம்ப னிடபனே முதலோ ரேற
மாறினார் நிலத்து நின்றார் வசந்தகோத் திரத்தி லுள்ளார்.

3. ஏறின னிளைய கோவு மிரவிசேய் சாம்ப னீலன்
ஏறினன் வாலி மைந்த னென்றனர் பலரு மேறச்
சீறிய கும்ப கன்னன் [1]சினத்திடைச் சிதைந்து [2]பட்டோன்
மாறிலா வசந்தன் சேனை நின்றது [2]பாரின் மண்மேல்.

பி - ம்:—[1]சிதைத்திடச். [2]பட்ட. [2]மாறி.

4. வேறு. பாரினின்றதங் கொருவெள்ளப் படைவரத் தம்மை
வாருந் தேரின்மே லெனக்கும்ப கர்ணன்வந் தேன்ற

---

* இயமப்படலத்துவந்த செய்யுள்கள் முதலும் இறுதியுமே காட் டப்படும்.

போரி லெம்படைத் தலைவரோ டொன்றின னவனை
நீறு நேர்மிசைந் திட்டன னெற்றியி லென்றார்.

5. ஆழி வெள்ளமோ ரெழுபது மறுமனோ முதலாம்
ஏழு மூன்று[1]மாம் பெரும்படைத் தலைவரை யிராமன்
சூழ நோக்கினன் சுக்கிரீ பன்றனைப் பாரா
வாழி மாப்படை யனைத்துமவ் தனகொலோ வென்றான்.

பி - ம்:—[1]மூன்றெனும், மூன்றிரு.

6. இரவி கான் முளை [1]யிறங்கிவந் திராமனை [2]யிறைஞ்சி
சுருதி யாயொரு பொருள்[3]சொல் லுவதொடர்ந்து
வருவ தான[4]விச் சேனையில் வசந்தனென் றுரைக்கும்
ஒருவன் வந்திலன் [5]கண்டரு ளுதியென வுரைத்தான்.

பி - ம்:—[1]திரிந்து, திருந்த. [2]எய்தி. [3]சொல்லுவதுணர்ந்து. [4]நஞ்.
[5]கண்டருணீ.

7. கசிந்த [1]ஞானங்கள் கலங்கலில் கழற்கும்ப கருணன்
இசைந்த [2]போரின்வந் தெய்தலு மிவன்றனை யெடுத்து
தசைந்த தோல்மயி ரெலும்பிவை தனைத்தெரி யாமல்
பிசைந்து [3]மோந்துடற் பூசினன் பெருநுதற் [4]கணிந்தே.

பி - ம்:—[1]ஞானங்கள்கமழ்தலில், ஞானங்கள்கவர்ந்தொளிர். [2]தே
ரின். [3]போந்து. [4]அணிந்தான்.

8. வேறு. இசைந்தசீ ராம னோலை யிலங்கையிற் பூச றன்னில்
வசந்தனைக் கண்டதில்லை [1]மதித்தவா றழகி தம்மா
வசந்தனைக் கொண்டு தானும் வருகவே வாரா னாகில்
நமன்குலங் களைவ னென்று [2]னைவர வென்ற வீரன்.

பி - ம்:—[1]மதித்தயான். [2]நானைவாவென்றவீரன், ஐவரைவென்ற
வீரன்.

9. வரிசிலையிராமனோலை.... .... .... விட்டான். [கசாங-4]
10. அக்கணத்து.... .... .... பாய்ந்தான். [ ,, -5]
11. மண்டி .... .... .... எல்லாம். [ ,, -6]
12. துளங்கி .... .... .... ரத்தென்றான். [ ,, -7]

13. செல்வனே யின்னங் கேளா யான்றெரி பாசக் கையால்
அல்லெனு மரக்கர் தம்மை வம்மினென் றழைத்து மெள்ள
[1]நல்லிருட் பரவை மேனி [2]நாரணன் றமரைக் கண்டால்
செல்லவே போமினென்று விடுக்குவன் செவியிற் செப்பி.

பி - ம்:—[1]நல்லிதழ்ப்பாவை. [2]நாயகன்.

14. சொன்ன .... .... .... என்றான். [கசாங-8]
15. வல்லரக்கரை .... .... .... பாய்ந்தான். [ ,, -9]
16. சிந்தை .... .... .... என்றான். [ ,, -10]

17. என்னுடை ... .... .... என்றான். [ ,, -11]
18. என்ற .... .... ... பதியில். [ ,, -12]
19. மலரின் .... .... .... தேர்மேல். [ ,, -13]

ஒருபிரதியில் கடவுளர்காட்சிப்படலம் இங்கேமுடிய, கசஎ - ஆம் பாடலில் திருவணைச்சிறப்புப்படலம் தொடங்குகின்றது. (சOகூஙு)

கசச.—இராமன் அவ்விமானத்தைக் கொணருமாறு கூறுதல்.

இயக்கர் வேந்தனுக் கருமறைக் கிழவனன் றீந்த
துயக்கி லாதவர் மனமெனத் தூயது சுரர்கள்
வியக்க வான்செலும் புட்பக விமானமுண் டென்றே
மயக்கி லான்சொலக் கொணருதி வல்லையி னென்றான்.

(இ - ள்.) 'யக்ஷர்களின் அரசனான குபேரனுக்கு (அவன் தவஞ் செய்த) அக்காலத்தில் (உணர்தற்கு)அரிய வேதங்களுக்கு உரியவனான பிரமன் கொடுத்ததும், குற்றமற்ற பெரியோரது மனம்போலப் பரிசுத்தமானதும்,தேவர்களும்அதிசயிக்கும்படிஆகாசத்தில்(விரைந்து) செல்லக்கூடியதுமான புட்பகவிமானம் (இங்கே) உள்ளது' என்று அஜ்ஞானமில்லாதவனான விபீஷணன் சொல்ல, (இராமன்), '(நீ அதனை) விரைவிற் கொணர்வாயாக'என்று கூறினான்; (எ - று.)—வசந்தனை மீட்டுக்கொணர்ந்ததைத் தெரிவிக்கும் பாடல்களைப் பெற்றுள்ள பிரதிகளெவற்றிலும் கசச, கசரு, கசகூ-பாடல்கள் இல்லை. (சOகூச)

கசரு.—விபீஷணன் புஷ்பகவிமானத்தைக் கொண்டுவருதல்.

அண்ட கோடிக ளநந்தமொத் தாயிர மருக்கர்
[1]விண்ட தாமென [2]விசும்பிடைத் திசையெலாம் விளங்கக்
கண்டை யாயிர கோடிக [3]ளொலிப்புறக் கனலக்
கொண்ட ணைந்தன னொடியினி [4]னரக்கர்தங் கோமான்

(இ-ள்.) அநேக வுலகவுருண்டைகள் திரண்டதை யொத்து [மிகப் பெரிதாய்], ஆகாயத்தில் ஆயிரஞ்சூரியர்கள் (ஏககாலத்தில்) தோன்றினாற்போல(த் தன்பேரொளியால்)எல்லாத்திக்குக்களும் விளக்கமடையவும், (தன்னிடங்கட்டிய) மிகப்பலவான மணிகள் அதிகமாகச்சத்திக்கவும்,—இராக்கதர்தலைவனான விபீஷணன்,—(இராமபிரான்கட்டளைப்படியே அந்தப்புஷ்பகவிமானத்தை) ஒருமாத்திரைப்பொழுதிலே கொண்டுவந்தான்; (எ - று.)—அண்டங்கள் - விமானத்தின்பரப்புக்கும், அருக்கர் அதன்ஒளிக்கும் உவமை. பி - ம்:—[1]விண்டலாயென. [2]விசும்பொடுதிசைகளும். [3]மறையெனக்கலிப்ப. [4]இலங்கையர். (சOகூரு)

கசகூ.—புஷ்பகத்தின்மேலே தேவர் பூமாரிபொழிதல்.

அனைய [1]புட்பக விமானம்வந் [2]தவனியை யணுக
இனிய [3]சிந்தனை யிராகவ [4]னுவகையோ டினிநம்
வினைய முற்றிய தென்றுகொண் [5]டேறினன் விண்ணோர்
[6]புனைம லர்சொரிந் தார்த்தன ராசிகள் [7]புகன்றே.

(இ - ள்.) அந்தப் புஷ்பகவிமானம் (ஆகாயமார்க்கமாய்ப்) பூமியில் வந்து சேர, (எப்பொழுதும்) நல்லஎண்ணங்களையேயுடைய இராமபிரான், (அவ்விமானத்தைக் கண்டதனால்) மனமகிழ்ச்சியுடனே 'இனிமேல் நமதுகாரியம் [இன்றைக்கே பரதனைச்சென்றுசேர்வது] நிச்சயமாக நிறைவேறும்' என்றுநினைத்துக்கொண்டு (அதன்மேல்) ஏறியருளினான்; (அப்பொழுது) தேவர்கள் வாழ்த்துக்கூறி, அழகியமலர்களை வருஷித்து (மகிழ்ந்து) ஆரவாரித்தார்கள்; (எ - று.)

புஷ்பகம் - நினைத்தபடி செல்லவல்லதெனக் காரணப்பொருள்படும். பி - ம்:—[1]புட்பகமானம். [2]அவனிடை. [3]சிந்தையன். [4]உவகையின். [5]எழுந்தனன். [6]புனையுமாமலர்பொழிந்தனர். [7]புகன்றார். (௪0௬௬)

௧௪௭.—புஷ்பகத்தின்மீது சீதையும் இலக்குமணனும் ஏறுதல்.

வணங்கு நுண்ணிடைத் திரிசடை [1]வணங்கவான் கற்பிற்கு
இணங்க [2]ரின்மையா ளேக்கியோ ரிடரின்றி யிலங்கைக்கு
அணங்கு[3]தானென விருத்தியென் றையன்மாட் டணைந்தாள்
[4]மணங்கொள் வேலிளங் கோளரி மானமீப் படர்ந்தான்.

(இ - ள்.) சிறந்தபதிவிரதாதருமத்தில் ஒப்பற்றவளான சீதை,—ஒசிகின்ற மெல்லிய இடையையுடைய திரிசடையென்பவள் (தன்னை) வணங்க, (அவளைப்) பார்த்து, '(நீ) சிறிதுந்துன்பமில்லாமல் இவ்விலங்காநகரத்துக்கு ஒருதெய்வப்பெண்போல (இங்கேயே) இருப்பாயாக' என்று (அவட்குக்) கூறி, இராமனருகிற் சேர்ந்தாள் [விமானத்தின்மீது ஏறினாள்]; (பகைவரிரத்தந்தோய்தலால்)முடைநாற்றம் வீசப்பெற்ற வேலாயுதத்தையுடைய வலியஇளஞ்சிங்கம்போன்ற இலக்குமணனும் அவ்விமானத்தின்மேலேறினான்; (எ-று.)—பி-ம்:—[1]வணங்கு. [2]இன்மையான். [3]தார். [4]பணங்கொள்வேலிளங்கோள்வரி. சிலபிரதியில், பணங்கொ ளுகணைப் பள்ளியான்மானமீப் படர்ந்தாள் என நான்காவதடி. ஒருபிரதியில் இந்தப்பாட்டுள்ளவிடத்து இரண்டுபாடல்கள் காணப்படுகின்றன: வருமாறு:—

1 வணங்கு நுண்ணிடைத் திரிசடை வணங்குவாள் கற்பிற்கு
இணங்க ரின்மையா ளேக்கியோ ரிடரின்றி யிலங்கைக்கு
அணங்கு தானென விருத்திய நயன்றந்தை யருளப்
பணங்கொள் வேலிளங் கண்ணினாள் சீதைபா டணைந்தாள்.

2. மைய லின்றியே யிலங்கைமா நகர்காத்து மாதே
செய்ய ளாகிய திருவெனப் பொலிந்தினி திருத்தி
கைக ளான்மிகப் புல்கியே கண்கணீர் ததும்பப்
பொய்யி லாமனத் திரிசடை விடையெனப் போனாள். (௪0௬௭)

கசஅ.—விமானத்தின்மீதுஉள்ள இராமன், விபீஷணன்முதலியோரைப் பார்த்துக் கூறுதல்.

அண்ட முண்டவன் [1]மணியணி யுதரமொத் தனிலன்
சண்ட வேகமுங் குறைதர நினைவெனுந் [2]தகைத்தாய்
விண்ட லந்திகழ் [3]புட்பக விமானமா மதன்மேற்
கொண்ட கொண்டறன் றுணைவரைப் பார்த்திவை [4]குணித்தான்.

(இ-ள்.) (பிரளயகாலத்தில்) அண்டங்களையெல்லாம் உட்கொண்டருளிய திருமாலினது அழகுபொருந்திய திருவயிற்றையொத்து, வாயுவினது உக்கிரமானவேகமும் குறைந்த தென்னும்படி (வேகத்தில்) மனத்தை உவமைகூறத்தக்கதன்மையுடையதாய் ஆகாயத்தில் விளங்குகின்ற விமானமாகிய அந்தப் புட்பகத்தின்மேலேறிக்கொண்டுள்ள காளமேகம்போன்றவனான இராமபிரான்,-(விபீஷணன்முதலிய)தனது சிநேகிதர்களைநோக்கி, இவ்வார்த்தைகளை ஆலோசித்துக் கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

ஏககாலத்தில் அநேகபிராணிகளை உட்கொள்ளுந் தன்மைபற்றித் திருமாலின் திருவுதரமும், நினைந்தவிடங்களிலெல்லாம் விரைந்து செல்லுந்தன்மைபற்றி மனமும் புட்பகத்திற்கு உவமையாம். பி-ம்:— [1]அணிமணி. [2]தரத்தாய். [3]விமானமாம்புட்பகமதன்மேல், புட்பக விமானத்தின்மேல், புட்பகமானமாமதன்மேல், விமானப்புட்பகமென்னும். [4]குறித்தான். (சOகூஅ)

கசகூ.—இதுவும், அடுத்த கவியும்-குளகம்: விபீஷணனைநோக்கிய இராமன்வார்த்தை.

வீட ணன்றனை யன்புற நோக்குறு [1]விமலன்
தோ[2]டணைந்ததார் மவுலியாய் சொல்வதொன் றுளதுன்
மாட ணைந்தவர்க் கின்பமே வழங்கிநீ [3]வாசின்
நாட ணைந்தவர் புகழ்ந்திட வ்ற்றிரு நலத்தால்.

(இ - ள்.) குற்றமற்றவனான இராமபிரான், விபீஷணனை அன்போடு பார்த்து,—பூவிதழ்களாற் கட்டப்பட்ட மாலையை யணிந்த முடியையுடையவனே! (நான் உனக்குச்) சொல்லவேண்டுவது ஒன்று உண்டு: உன்னிடஞ் சேர்ந்துள்ளவர்க்கு நன்மையையே செய்து, நாட்டிலுள்ளார்யாவரும் கொண்டாடும்படி பெரிய இவ்வரசாட்சியிலேயே (எல்லா)நன்மைகளோடும் வாழ்வாயாக; (எ - று.)— வீடணன்தனை, நோக்குறு, விமலன் என்றவற்றிற்கு முடிக்குஞ் சொல்-அடுத்தகவியில் 'புகன்றனன்'என்பது. பி - ம்:—[1]விரைப்பூந். [2]அணிந்த. [3]வான-நாடு, வீர-நாடு. (சOகூகூ)

கருO. நீதி யாறெனத் தெரிவுறு [1]நிலைமைபெற் றுடையாய்
ஆதி நான்மறைக் கிழவனின் குலமென [2]வமைந்தாய்
ஏதி லார்தொழு மிலங்கைமா [3]நகரினு ளினிநீ
போதி யாலெனப் புகன்றன னன்மறை புகன்றான்.

(இ - ள்.) 'நீதிநெறி (இதுதான்)என்று (உன்குணஞ்செயல்களை நோக்கி உலகத்தார்) தெரிந்துகொள்ளும்படியான நிலைமையையடைந் துள்ளவனே! அநாதியான நான்குவேதங்களுக்கும்உரியனான பிரமன் உன்குலத்துக்குப் பெரியோனென்று சொல்லுஞ் சிறப்பைப் பொருந்தியவனே! இனி நீ பகைவர்கள் வணங்கும்படியான [அரண் வலிமையுடைய] இலங்காநகரத்திற்குச் செல்வாயாக'என்று கூறி அநுமதிகொடுத்தான்: (யாவனெனில்),—நான்குவேதங்களையும் வெளி யிட்டருளிய திருமாலின் திருவவதாரமான இராமபிரான்; (எ - று.)

பிரமனதுமகனான புலஸ்தியனுக்குப் பிறந்த விச்சிரவசின் புதல்வ னாதலால், விபீஷணனை, 'ஆதிநான்மறைக் கிழவனின்குலமெனவமைந் தாய்' என்றான். பி - ம்:—[1]நீர்மை. [2]அமைத்தாய். [3]நகரினுக்கினிநீ. ()

கருக.—சுக்கிரீவனை நோக்கிய இராமன்வார்த்தை.

சுக்கி ரீவநின் [1]றோளுடை [2]வன்மையாற் றசந்தொ
[3]கக்கி ரீவனைத் [4]தடிந்துவெம் [5]படையினா லசைத்த
மிக்க வானரச் [6]சேனையி [7]னிளைப்பற மீண்டூர்
புக்கு வாழ்கெனப் புகன்றன னீறிலாப் புகழோன்.

(இ - ள்.) எல்லையில்லாத புகழையுடையனான இராமபிரான்,-(சுக் கிரீவனை நோக்கி), 'சுக்கிரீவ!உன்னுடைய புயவலியினால் [உன்னுடைய உதவியினால்] பத்துஎன்னும் எண்கூட(ப் பெற்றுள்ள) கழுத்துக்களை யுடையவனான இராவணனைக் கொன்றேன்; (பகைவர்களுடைய) கொடிய ஆயுதங்களினாற் சோர்வடைந்த கூட்டமான குரங்குச்சேனையி னது தளர்ச்சி நீங்கும்படி மீண்டு ஊர் புக்கு வாழ்க' என்றுகூறினான்.

தசம் தொகு அக் கிரீவன் என்றும் பிரித்துப் பொருள் கூறலாம்; அ-சுட்டு. தசக்கிரீவனைத் தொகத் தடிந்து என்று கூட்டியும் பொருள் கூறலாம்; தொகுதல்-இங்கே, அழிதல். அசா-தளர்ச்சி. பி-ம்:—[1]தோ ளிடை. [2]வன்மையிற்றொகைத்த, வண்மையினாற்றுணிவால், வண்மை யினாற்றச், வன்மையாற்றசந்தோய். [3]சுக்கிரீவனை, அக்கிரீவனை. [4]தடிந்த நம். [5]படைகளாலசந்து, படைகளாற்றளர்ந்து. [6]சேனையும். [7]வினைப் புற மீண்டேர்ப், இளைப்புறமீண்டேர் (௪0எக)

கருஉ.—அங்கதன்முதலியோரை நோக்கி இராமன் கூறுதல்.

வாலி சேயினைச் சாம்பனைப் பனசனை [1]வயப்போர்
நீல [2]னாதிய நெடும்படைத் தலைவரை நெடிய
காலின் வேலையைத் [3]தாவிமீண் டருளிய கருணை
போலும் வீரனை நோக்கி[4]மற் றிம்மொழி புகன்றான்.

(இ-ள்.)(பின்னும்,) (இராமபிரான்),--வாலியின்மகனான அங்கதனை யும், சாம்பவானையும்,பநசனையும், வலிய போர்செய்யுந்திறமுள்ள நீலன் முதலிய பெரிய படைத்தலைவர்களையும்,நீண்டகால்களினாற் சமுத்திரத் தைத் தாண்டி (இலங்கையிற்சேர்ந்து சீதையின்வரலாறுதெரிந்து) திரும்பி

வந்த கிருபையே ஒருவடிவெடுத்தாற்போன்ற வீரனை அனுமானையும் நோக்கி, இவ்வார்த்தையை [ஊர்புக்குவாழ்க என்பதை]க் கூறினன்.

இராமனும் சீதையும் பிரிந்து வருத்தமுற்றிருக்கையில் அநுமான் கைம்மாறுகருதாது இராமனிடத்தினின்று தூதுசென்று உயிர்போம் நிலையிலிருந்த சீதையைத் தேற்றி அவளிடத்தினின்று மீண்டு இராமனை யடைந்து செய்தி தெரிவித்து இவ்வாறுஇருவர் கவலையையும் ஆற்றுவித்த சூரனுதலால், அவனை 'நெடியகாலின் வேலையைத் தாவி மீண்டருளிய கருணைபோலும் வீரன்' என்றார். காலின்-காற்றுப்போலவெனினுமாம். பி - ம்:---[1]மறப்போர். [2]ஆகியர், ஆகியா. [3]கடந்துநீ, தாவில. [4]நின்று. (சOஎஉ)

கருகூ.—அதற்கு அவர்கள் உடன்படாமை.

ஐய [1]னிம்மொழி புகன்றிடத் துணுக்கமோ டவர்கள்
மெய்யு மாவியுங் குலைதர விழிகணீர் [2]ததும்பச்
செய்ய தாமரைத் [3]தாளிணை முடியுறச் சேர்த்தி
[4]உய்கி லேமினி [5]நீங்கியென் றினையன வுரைத்தார்.

(இ - ள்.) இராமபிரான் இவ்வார்த்தையைக் கூற, அவர்கள் (இராமனைப்பிரிதலைப்பற்றிய) அச்சத்தால் உடம்பும் உயிரும் நடுங்கவும் கண்களில் நீர்தளும்பவும் (இராமனது) செந்தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளிலும் (தங்கள்) தலைபடும்படி வணங்கி, '(நாங்கள்) உன்னை விட்டுப்பிரிவோமாறுற் பிழைக்கமாட்டோம்' என்றுசொல்லி, (மற்றும்) இவ்வார்த்தைகளை உரைத்தார்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க. பி - ம்:—[1]அம். [2]அரும்பச். [3]தாளினை. [4]உய்கிலோமுன்னை. [5]பிரியில். (சOஎரு)

கருச.—விபீஷணன்முதலியோர் இராமனைநோக்கிக் கூறுதல்.

பார மாமதி லயோத்தியி னெய்தினின் பைம்பொன்
ஆர மாமுடிக் கோலமுஞ் செவ்வியு மழகுஞ்
[1]சோர்வி லாதியாங் [2]காண்குறு மளவையுந் தொடர்ந்து
[3]பேர வேயரு ளென்றன ருள்ளன்பு [4]பிணிப்பார்.

(இ - ள்.) (இராமனிடத்து) மனத்தில் (நிறைந்த) அன்பினுற் கட்டுப்பட்டவராகிய விபீஷணன் முதலியோர்,—(இராமனை நோக்கி), 'மிகப்பெரிய மதில்சூழ்ந்த அயோத்தியிற் சேர்ந்து, உனது (பட்டாபிஷேககாலத்தில்) பசும்பொன்னுலாகியதும் முத்துவரிசையுடையதுமான கிரீடத்தை (நீ) சூடுங் கோலத்தையும் (அக்காலத்து நடக்குஞ்) சிறப்புக்களையும் (அப்பொழுது உண்டாகும்) சோபையையும் கண்டு களிக்குமளவும், நாங்கள் (உன்னைப்) பிரியாமலே தொடர்ந்து மீண்டு (ஊர்க்குத்) திரும்பும்படி கிருபைசெய்வாய்' என்று வேண்டிக்கொண்டார்கள்; (எ - று.)---பி - ம்:—[1]சோர்கிலாது. [2]காண்டுறும். [3]போகவே [4]பிரியார், பிணித்தார். (சOஎச)

௧௫௫.—இராமன் அவர்களுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டுக் கூறுதல்.

அன்பி னுலவர் [1]மொழிந்தவா சகங்களு மவர்கள்
துன்ப மெய்திய நடுக்கமு [2]நோக்கிநீர் துளங்கல்
முன்பு [3]நானினைந் திருந்ததப் [4]பரிசுநும் முயற்சி
பின்பு காணுமா[5]றுரைத்ததென் றுரைத்தனன்பெரியோன்.

(இ - ள்.) பெருமையையுடையவனான இராமபிரான்,—அன்பினால் அவர்கள்சொன்ன வார்த்தைகளையும் அவர்கள் துன்பத்தினால் அடைந்த நடுக்கத்தையும் கருதி, (அவர்களைப்பார்த்து), 'நீங்கள் கலங்க வேண்டா; முதலில் நான் நினைத்திருந்தது அவ்விதமே [உங்களையும் உடன் அழைத்துச் செல்லவேண்டுமென்பதே]; (ஆயினும்) பின்பு (நான் இவ்வாறு) கூறியது, நுமதுயத்தனத்தை [உள்ளக்கருத்தை] அறிவதற்காகவே' என்று உரைத்தனன்; (எ - று.)—துன்பம் - இராமனதுபிரிவை நினைத்ததனா லாகியது. பி-ம்:—[1]துணிந்த. [2]நோக்கிய தூயோன். [3]நாநினைந்து. [4]பரிசினும். [5]உற்றது. (௪0௭௫)

௧௫௬.—சுக்கிரீவன்முதலியோர் இராமன்வார்த்தையால் மனமகிழ்தல்.

ஐயன் வாசகங் கேட்டலு மரிகுலத் தரசும்
மொய்கொள் சேனையு மிலங்கையர் வேந்தனு [1]முதலோர்
வைய மாளுடை நாயகன் மலர்ச்சரண் வணங்கி
மெய்யி னோ[2]டருந் துறக்கமுற் றாரென வியந்தார்.

(இ-ள்.) இராமபிரானதுவார்த்தையைக் கேட்டவுடனே, வானரக்கூட்டங்களுக்குத் தலைவனான சுக்கிரீவனும் நெருக்கங்கொண்ட (வானர)சேனையும் இலங்கையிலுள்ளார்க்குத் தலைவனான விபீஷணனும் முதலிய யாவரும்,—பூமியை யாளுதலையுடைய அரசனான இராமபிரானது திருவடித்தாமரைகளை வணங்கி, (தம்தம்) உடம்புடனே (பெறுதற்கு) அருமையான சுவர்க்கத்தையடைந்தவர்போல மகிழ்ந்து அதிசயித்தார்கள்; (எ - று.)—வையம் ஆளுடை நாயகன் - விஷ்ணுவின் அவதாரமாகிய இராமன் எனக்கூறுதலும் ஒன்று. பி-ம்:—[1]முதலேழ். [2]இருந். (௪0௭௬)

௧௫௭.—சுக்கிரீவன்முதலியோரைவிமானமேற இராமன் கட்டளையிடல்.

[1]அனைய தாகிய சேனையோ டரசனை [2]யனிலன்
தனய னாதியாம் படைப்பெருந் தலைவர்க டம்மை
வனையும் வார்கழ லிலங்கையர் மன்னை வந்திங்கு
இனிதி னேறுமின் விமானமென் றிராகவ [3]னிசைத்தான்

(இ-ள்.) அவ்வாறு அதிசயங்கொண்டுள்ள (வானர)சேனையுடனே (அவர்கட்குத்) தலைவனான சுக்கிரீவனையும், வாயுகுமாரனான அநுமான் முதலிய பெரிய சேனைத்தலைவர்களையும், கட்டிய நீண்ட வீரக்கழலையுடைய இலங்காராசனான விபீஷணனையும் (நோக்கி), '(நீங்கள்) இங்கேவந்து விமானத்தின்மீது சுகமாக ஏறுங்கள்' என்று இராம

பிரான் இசைத்தான; (எ - று.)—பி - ம்:—[1]அனையர். [2]அமலன். [3]உரைத்தான், இரைத்தான். (சா௦எஎ)

கருஅ.—அவர்கள்யாவரும் புட்பகத்தின்மீது ஏறுதல்.

சொன்ன வாசகம் பிற்படச் சூரியன் [1]மகனும்
மன்னு வீரரு மெழுபது வெள்ளவா னரரும்
கன்னி மாமதி லிலங்கைமன் னெடுகடற் படையும்
துன்னி னார்[2]நெடும் புட்பக மிசையொரு சூழல்.

(இ-ள்.) (இராமபிரான்) சொன்னவார்த்தையும் பின்னும்படி [மிக விரைவில்] சூரியகுமாரனை சுக்கிரீவனும் பொருந்திய படைத்தலைவர்களும் எழுபதுவெள்ளம் குரங்குச்சேனைகளும் அழியாத பெரிய மதிள்கள் சூழ்ந்த இலங்கைக்கு அரசனை விபீஷணனும் கடல்போலப்பரந்த (அவனது இராக்கத) சேனையும், பெரிய (அப்பு)ஷ்பகவிமானத்தின்மீது ஒருபக்கத்தில் (ஏறித்) தங்கினார்கள்; (எ - று)

மிகப்பெரிய சேனையும் விமானத்தின் ஒருமூலையில் அடங்கியதெனக் கூறியது, பெருமையணி;இதனை வடநூலார் அதிகாலங்காரமென்பர். பி-ம்:—[1]புதல்வன். [2]பெரும்புட்பகமீதொரு.

சிலபிரதிகளில் கடவுளர்காட்சிப்படலமும்,சிலபிரதிகளில் பிராட்டி திருவடி தொழுபடலம் இங்குமுடிய, இதன்மேல் வசந்தனுயிர்வருபடலம் என்ற பெயர்கொண்டு சிலபாடல்கள் உள்ளன; அவைவருமாறு:—

1. ஏறினன் .... .... .... மண்மேல். [கசாந-3]
2. ஆழி .... .... .... என்றான். [ ,, 5]
3. என்ற காலையி லெழுந்தவ னியற்கையை நோக்கி
நன்று நாயக னறிவொடு [1]நினைவலா நயந்தான்
சென்று சேனையை நாடினன் திரிந்துவந் தெய்தி
வென்றி வீரரில் வசந்தனைக் [2]கண்டிலா வெறுத்தான்.

பி - ம்:—[1]நினைவென. [2]கண்டிலர்வெறுத்தார்.

4. இரவி கான்முளை .... ...., .... உரைத்தான். [கசாந-6]
5. என்னுங் காலை யிராமனும் யமபடர் யாரும்
மன்னுந் தொல்புர நோக்கியே மணிநகை முறுவல்
[1]உன்னி னன்றியான் றேவருக் [2]குதவிசெய் தென்னுப்[வே.
பொன்னின் வார்சிலை யெடுத்தனன் பொறுத்தனன் பொர

பி-ம்:—[1]உன்னினின்று. [2]உதவியது.

6. எண்டி சாமுக மிரிந்துக யம்புரங் குலைய
அண்ட கோளகை யடுக்கழிந் துலைவுற [1]வழியாப்
புண்ட ரீகத்துப் புராதனன் முதலிய புலவோர்
தொண்டை வாயுலர்ந் தலமரத் தொடுவினை னெறிந்தான்.

பி-ம்:—[1]அலையால்,

7. [1]பாக வான்பிறை யாமெனப் பலர்நின்று துதிப்ப
வாகை கொண்டவெஞ் சிலையினை வளைவுற வாங்கி
மேக சாலங்கள் [2]குலைவுற [3]வெயிற்கதிர் மாட்சி
சோக மெய்திமெய் துளங்கிடச் சுடுசரந் துரந்தான்.

பி - ம்:—[1]ஆகவெல்லையிலரக்கர்தம்வருக் கமோடறுத்து. [2]குலவுற [3]வெதிர்வரமடங்கி.

8. வல்லை மாதிர மறைந்திட வானவர் மயங்க
எல்லை காண்குறு யாவரு மிரியவிலேக
வில்லை வாங்கிய கரமவை விதிர்விதிர்ப் பெய்த
தொல்லை நான்மறை துளங்கிடச் சுடுசரந் துரந்தான்.

9. வன்பு லங்கிளர் நிருதரை வருக்கமோ டறுக்க
[1]மின்பு லங்கொளு முருமென்ன வீங்கிய வில்லைத்
தன்பொ லங்கையிற் றாங்கியே தொடுத்தவச் சரங்கள்
தென்[2]பு லன்றனை நிறைத்தது [3]செறிந்தது சேணில்.

பி - ம்:—[1]நின். [2]புலங்களை. [3]தேவர்களிரிய.

10. தரும ராசனுங் காலனும் யமபடர் தாமும்
உருமு வீழ்ந்தெனச் சரம்வந்து வீழ்ந்ததை யுணர்ந்தும்
மரும தாரையிற் பட்டதோர் வடிக்கணை வாங்கி
நிருமி யாவிது விராகவன் சரமென நினைந்தார்.

11. கெட்ட தின்றினித் தென்புலங் கேடுவந் தெய்தி
பட்ட னம்மினிப் [1]பிழைப்பில மென்பதோர் பயத்தான்
முட்ட வெய்திய முயற்சியோ டியாவரு மொய்ப்பச்
சிட்டர் தந்தனித் தேவனை வணங்கினர் சென்றார்.

பி - ம்:—[1]பிழைப்பில்லை.

12. வேறு: சிறந்தநின் கருணை யல்லாற் செய்தவம் பிறிதிலார்மேற்
[1]புறந்தரு முனிவு சாலப் போதுமோ புத்தே ணின்னை
[2]மறந்திருந் துய்வ துண்டோ மலர்மிசை யயனைத் தந்த
அறந்தரு சிந்தை யைய வபயநின் னபய மென்றார்.

பி - ம்:—[1]புறந்தர. [2]மறைந்துறைந்து.

13. வேறு: ஐய னேயெமை யாளுடை யண்டர்நா யகனே
மெய்ய னே[1]யெனச் சரணின்வந் தியாவரும் வீழ்ந்தார்
பொய்யி னோர்செய்த பிழைபொறுத் தருளெனப் போர்மூண்டு
[2]எய்ய நேரிலாச் சிலையினை மடக்கின னிராமன்.

பி-ம்:—[1]நினக்கபயமென்று. [2]எய்யும்வாளியைத்தூணியிலிட்டனன்.

14. * வந்த டைந்துனக் கப..மென் றடியினில் வணங்கி
எந்த னிப்பிழை பொறுத்தியென் றியம்பினி ரிதனுல்
உந்தன் மேற்சலந் தவிர்ந்தனன் யூகநா யகன்றன்
தந்த சேனையில் வசந்தன் வந் திலன்தரு கென்றன்.

15. அண்ண லாரியன் றருதியென் றருளலு [1]மவர்போய்
விண்ணெ லாம்[2]புகுந் தோடியே வசந்தனை விரைவிற்
கண்ணி னுடிநல் லுயிரினைக் காண்கிலா திருந்தார்
திண்ணன் யாக்கையெங் கேயெனச் சாம்புவன் செப்பும்.

பி - ம்:—[1]அவன். [2]பரந்து.

| | | |
|---|---|---|
| 16. கசிந்த .... .... .... | துணிந்தான். | [௧௬௩-7] |
| 17. வரிசிலை .... .... .... | விட்டான். | [ ,, 9] |
| 18. அக்கணத்து .... .... | வேலை. | [ ,, 10] |

19. வேறு. அன்ன தேயென வவனுயிர்க் கமரர்தம் பதிக்கே
முன்ன தோருடற் கொண்டிவண் டருகென மொழியச்
சொன்ன வாய்மைகேட் டனுமனுந் துணைவரைப் பாராப்
பொன்னின் பாதுகம் பணிந்தனன் விடையெனப் போனுன்.

| | | |
|---|---|---|
| 20. மண்டி .... .... .... | வீழ்ந்தவ ரெல்லாம். | [௧௬௩-11] |
| 21. துளங்கி .... .... .... | புரத்தென்றன். | [௧௬௩-12] |
| 22. செல்வனே .... .... .... | செப்பி. | [ ,, 13] |
| 23. சொன்ன .... .... .... | என்றன். | [ ,, 14] |
| 24. வல்ல ரக்கரை .... .... .... | பாய்ந்தான். | [ ,, 15] |
| 25. சிந்தை தூயவன் .... .... .... | என்றன். | [ ,, 16] |
| 26. என்னு டைப்பரம் .... .... .... | என்றன். | [ ,, 17] |
| 27. என்ற நான்முகன் .... .... .... | பதியில். | [ ,, 18] |

இதனேடு வசந்தனுயிர்வருபடலம் முடிய, இனித் திருவணைச் சிறப்புப்படலம் என்று காண்கின்றது.

---

* இப்பாடலுக்குப்பதிலாக ஒருபிரதியில் வேருருபாடல் காணப்படுவது வருமாறு:—

தன்ற னிச்சரண் வணங்கலு மிராகவன் சாற்றும்
என்ற னிப்பிழை பொறுத்தியென் றயம்பினை யதனுல்
உன்றன் மேற்சலந் தவிர்ந்தனம் யூபநா யகன்றன்
தந்த சேனையின் வசந்தன் வந்திலன் றருகென்றான்

28. *அன்ன காதலி மாருதகரிடை யாங்கன்
புன்ன தோருடல் நாடியேகொணர்ந் திட முந்ரச்
சொன்ன வாயுவைத் தரிசிக்க வசந்தனும் தோன்றிப்
பொன்னின் பாதுகம் புனைந்தனன் தருமனும் போனான்.

* இச்செய்யுள் ஒருபிரதியில்மாத்திரம் உள்ளது. இங்கே வேறொரு பிரதியில்மாத்திரம் ஒருபாடல் காணப்படுகின்றது: அது வருமாறு:---

அன்ன காலையிற் புட்பக விமானமாங் கவடைய
முன்னி ராகவன் சானகியிலக்குவன் முதலா
மன்னு வானர மெழுபது வெள்ளமும் வரையா
உன்னி யேறலு முச்சியிற்சொருகுபூப் போன்ற. (௪0௭௮)

௧௫௯.—இது, கவிக்கூற்று: விமானத்தின் சிறப்பு.

பத்து நாலென வடுக்கிய வுலகங்கள் [1]பலவின்
[2]மெத்தி யோனிக ளேறினும் [3]வெற்றிட [4]மிகுமால்
முத்த ரானவ [5]ரிதனிலை மொழிகுவ தல்லால்
இத்த ராதலத் தியம்புதற் குரியவர் யாரே.

(இ-ள்.) பதினான்காக (ஒன்றன்மேலொன்றாக) அடுக்கிய பலவுலகங்களிலும் நிறைந்துள்ள ஜீவராசிகளெல்லாம் ஏறினாலும் (இவ்விமானத்தில்)வெறுமையான இடம் அதிகப்பட்டிருக்கும்; இவ்விமானத்தின் தன்மையை முக்தர்கள் சொல்லக்கூடுமே யல்லாமல் இப்பூமியிற் சொல்லுதற்கு உரியவர் யார்தான்? [ஒருவருமில்லை]; (எ - று.)

நிலவுலகத்தார்போலன்றி வீடுபெற்றவர் அஜ்ஞானம் சிறிதுமின்றி எல்லாவற்றையும் அறியவல்ல முற்றுணர்வுடையவராதலால், அவர்களாலேயே இதன்தன்மை கூறப்படுமெனப் புட்பகத்தின் சிறப்பை வியந்து கூறினார். மெத்து + யோனிகள் = மெத்தியோனிகள்: குற்றியலிகரம். பி - ம்:—[1]பலவும். [2]மெய்த்த. [3]வெளியிடம். [4]மிகுமா. [5]அதனிலை. [6]தராதலமொழிதரலாற்றலர். (௪0௭௧)

வேறு.

௧௬0.—இதுவும், அடுத்தகவியும்-இராமன் புட்பகத்தின்மீது விளங்குதலைக் கூறும்.

எழுபது வெள்ளத் தோரு மிரவிகான் முளையு மெண்ணின்
வழுவிலா விலங்கை வேந்தும் வான்பெரும் படையுஞ்[1]சூழத்
தழுவுசீ ரிளைய கோவுஞ் சனகன்மா [2]மயிலும் போற்ற
விழுமிய [3]குணத்து வீரன் விளங்கினன் விமானத் தும்பர்.

(இ - ள்.) எழுபதுவெள்ளம் வானரசேனைகளும் (அவற்றிற்கெல்லாந்தலைவனான) சூரியகுமாரனாகிய சுக்கிரீவனும் மனத்திற் குற்றமில்லாத இலங்கையரசனான விபீஷணனும், (அவனுடைய)மிகப்பெரிய (இராக்கத)சேனையும் சுற்றிலும் நெருங்கிநிற்கவும்,—நிறைந்த சிறப்பை

யுடையஇளையபெருமாளும் சனகராசன் மகளான சிறந்தமயில்போன்ற சாயலையுடைய சீதையும் வணக்கத்தோடு (பக்கங்களில்) வீற்றிருக்கவும்,—சிறந்த நற்குணங்களையுடைய வீரனாகிய இராமபிரான் புஷ்பக விமானத்தின்மேல் விளங்கினான்; (எ - று.)—பி - ம்:—[1]சூழ்ந்த. [2]மகனும். [3]குணத்தினனும். (௪0௮0)

கக௲க. அண்டமே போன்ற [1]தையன் புட்பக மண்டத் தும்பர்
எண்டருங் [2]குணங்க ளின்றி யீறுதலிடை யிறின் றாகிப் [போற்
பண்டை [3]நான் மறைக்கு மெட்டாப் பரஞ்சுடர் பொலிவ தே
புண்டரீ கக்கண் வென்றிப் புரவலன் பொலிந்தான் மன்னோ.

(இ - ள்.) இராமபிரான் ஏறியருளிய புஷ்பகவிமானமானது, உலகவுருண்டையையே ஒத்திருந்தது; (அவ்விமானத்தின்மேல்) தாமரைமலர்போன்ற கண்களையுடையவனாகிய வெற்றிபெற்ற காக்குந்தொழிற்கடவுளான இராமபிரான்,—எல்லாவுலகங்களுக்கும்மேலே (பரமபதத்தில்) எண்ணத்தக்க குணங்களில்லாமல் [அளவிறந்த குணங்களுடன் கூடி], பிறத்தலும் வளர்தலும் அழிதலும் இல்லாமல் [என்றும் ஒரே தன்மைகொண்டு], அநாதியான நான்குவேதங்கட்கும் புலனாகாதசிறந்த ஒளிவடிவமான பரமாத்மா விளங்குவதுபோலப் பொலிந்தான்; (எ-று.)

தற்குறிப்பேற்றவுவமையணி. அண்டம் - பரமபதமுமாம். எண்தரும் குணங்கள் இன்றி என்பதற்கு - எண்ணத்தக்க தீயகுணங்களில்லாம லென்றலுமாம்று.பி-ம்:---[1]அன்றே. [2]கணங்கள். [3]நான்முகற்கும்.

கக௲உ.—இராமன்கட்டளையினால் யாவரும் மனிதவடிவங்கொள்ளல்.

தேனுடை யலங்கன் மௌலிச் செங்கதிர்ச் செல்வன் சேயும்
மீனுடை யகழி வேலை யிலங்கையர் வேந்தும் வெற்றித்
தானையும் பிறரு மற்றைப் படைப்பெருந் தலைவர் தாமும்
மானுட வடிவங் கொண்டார் வள்ளறன் வாய்மை தன்னால்.

(இ - ள்.) தேனையுடைய மலர்மாலையைச் சூடிய முடியையுடையவனும் சிவந்த கிரணங்களையே செல்வமாகக்கொண்ட சூரியனது மகனுமான சுக்கிரீவனும் மீன்களையுடைய கடலையே அகழியாகக்கொண்ட இலங்கையி லுள்ளார்க்கு அரசனாகிய விபீஷணனும், வெற்றியையுடைய (இருதிறத்துச்)சேனைகளும் பிறரும் மற்றும் பெரியசேனைத்தலைவர்களும்,—வரையாதுகொடுக்குந் தன்மையனான இராமபிரானது வார்த்தையின்படி மனிதரூபத்தை ஏற்றுக்கொண்டார்கள்; (எ - று.)

இராக்கதவடிவத்துடனும் குரங்குவடிவத்துடனுமே இவர்கள் சென்றால் அயோத்திமாநகரத்திலுள்ளவர் அஞ்சுவார்களென்று இங்ஙனம் இவர்கள் யாவரையும் மனிதவடிவங்கொள்ளும்படி இராமன் கட்டளையிட்டனனென்க. துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்யத் திருமால் மானிடவுருவங்கொண்டு இராமனாகத் திருவவதரித்தபோது உதவிசெய்யத் தேவர்கள் வானரவுருவங் கொண்டு பிறந்தமையால், தெய்வத்தன்மையுடைய அவர்கட்கு வேண்டியவுருவங்கொள்ளும் வல்

லமை புண்டென்றும், இராக்கதர்க்கும் இஷ்டமானவுருவங்கொள்ளுந் தன்மை இயற்கையிலேயே யுள்ளதென்றும் அறிக. இச்செய்யுள் சில பிரதியிலில்லை. (௪0௮௨)

௧௬௩.--விமானம் வடக்குமுகமாகச் செல்லுகையில் இராமன் சீதையை நோக்கி ஒன்று கூறத் தொடங்குதல்.

குடதிசை [1]மறைந்த பின்னர்க் குணதிசை யுதயஞ் [2]செய்வான்
வடதிசை [3]யயன முன்னி வருவதே [4]கடுப்ப மானம்
தடையொரு சிறிதின் றாகித் [5]தாவிவான் படரும் வேலை
படையமை விழியாட் கைய னினையன [6]பகர லுற்றான்.

(இ-ள்.) (மாலைக்காலத்து) மேற்குத்திக்கில் மறைந்தபிறகு (காலையிற்) கிழக்குத்திக்கில் உதிப்பவனான சூரியன் (அவ்வியல்பையொழித்துத் தெற்கினின்று) வடக்குவழியிற் செல்லநினைத்து வருவதுபோலப் புஷ்பகவிமானம் தடை சிறிது மில்லாமல் ஆகாயவழியிற் பாய்ந்து செல்லத்தொடங்கும்பொழுது, இராமபிரான்,—வேலாயுதம்போன்ற கண்களையுடையவளான சீதைக்கு, இவ்வார்த்தைகளைக் கூறத்தொடங்கினான்; (எ-று.)—அவற்றை,அடுத்த கவிகளிற் காண்க. இல்பொருளுவமையணி. அயநம்-வழி: வடசொல். பி-ம்:—[1]மறைந்து,மறையப்.[2]கொள்வான். [3]வெய்யோன், வாயில்.[4]போல.[5]தாவின.[6]பகர்வதானான்.இதன்பின் சிலபாடல்கள் சிலபிரதிகளிற் காணப்படுவனவருமாறு:—

1 * வென்றிவீ டணன்கொ ணர்ந்த புட்பக விமானந் தன்மேல்
ஒன்றுநற் சீதை யோடு [1]மும்பரும் பிறருங் காண
வென்றுயர் சேனை யோடு மிராமனும் விரைவி [2]னெய்தித்
தென்றிசை யிலங்கை யாதி தேவிக்குத் தெரியக் காட்டும்.

பி-ம்:---[1]இளையவனோடுமேறி. [2]மீண்டு.

2. மன்னுபொற் கொடிக ளாட மாடமா ளிகையி னுங்குத்
[1]துன்னுபைம் பொழில்கள் [2]சுற்றத் தோரணந் துவன்றி வா
பொன்னக [3]ரொக்கு மென்று புகழ்தலிற் புலவ ராலும் [னோர்
பன்னரு மிலங்கை மூதூர் பவளவாய் [4]மயிலே பாராய்.

பி-ம்:---[1]துன்னுமப். [2]சுற்றித். [3]நிகர்க்கையன்று, இயற்கையன்று. [4]வரையே.

3. வெதிரொதி ரஞ்சு மென்றோள் வெண்ணகைக் கனிவாய் வல்லி
எதிர்பொர வந்த விண்ணோ ரிறைவனைச் சிறையில் வைத்த
அதிர்கழ [1]லரக்கன் றனை [2]யஞ்சலி லாது செல்லக்
கதிர்மதி விலங்கி [3]யேகுங் கடிமதின் மூன்றுங் காணாய்.

பி-ம்:—[1]அரக்கர். [2]அஞ்சலிலாதுசெல்லாக். [3]ஓடும்.

* இந்தச்செய்யுள், திருவணைச்சிறப்புப்படலமுள்ள எல்லாப்பிரதிகளிலும் இல்லை: ஒருபிரதியில் "குடதிசை"(௧௬௩) என்றதன்முன் உள்ளது.

4. வென்றிவேற் கருங்கண் மானே யென்னொடு மிகலி வெய்ய
வன்றிற லரக்க [1]னேற்ற வடதிசை வாயி னோக்காய்
கன்றிய வரக்கன் சேனைக் காவலன் றன்னை நீலன்
கொன்றுயிர் கூற்றுக் கீந்த குணதிசை வாயி னோக்காய்.

பி - ம்:—[1]ஏறும்.

5. மறத்திறல் வாலி மைந்தன் வச்சிரத் தெயிற்றோன் றன்னைச்
[1]செறுத்துயிர் செகுத்து நின்ற தென்றிசை வாயி னோக்காய்
அறத்தினுக் கலக்கண் செய்யு [2]மகம்பன்ற னுடலை யாவி
வெறுத்[3]ததி ரனும னின்ற மேற்றிசை வாயி னோக்காய்.

பி-ம்:—[1]செயிற்றுயிர். [2]அகம்பனை யனுமனன்று. [3]உயிர்செகுத்தவித்த.
இச்செய்யுள் ஒருபிரதியில் அடுத்தபாடலின்பின் உள்ளது.

6. கருங்கட னிகர்ப்ப வான [1]வகழியோர் மூன்றுங் காணாய்
மருங்கடர் களபக் கொங்கை மதிநுதல் மிதிலை வல்லி
இருங் [2]கட [3]முகத்த யானை யிவுளிதேர் [4]காலாள் துஞ்சிப்
[5]பொருங்கடர் நிறத்தர் வீய்ந்த[6]போர்க்களந் தன்னைப்[7]பாராய்.

பி-ம்:—[1]அகழிகள். [2]கடன். [3]முகப்ப. [4]முடியவஞ்சாப். [5]பெருங் கடநிறத்தாய், பொருங்கடனிறைய. [6]போர்க்களமதனை. [7]காணாய், நோக்காய். ஒருபிரதியில் இரண்டாவதுஅடி முதலடியாகவுள்ளது. ஒருபிரதியில் "மறத்திறல்" (5) என்ற பாடலின்முன் இதுஉள்ளது.

7. கொடிமதி லிலங்கை வேந்தன் கோபுரத் தும்பர் தோன்ற
அடுதிறற் பரிதி மைந்த னவனிலை குலையத் தாக்கிச்
சுடர்முடி பறித்த வந்நா ளன்னவன் றொல்லை வெம்போர்ப்
படியினை நோக்கி நின்ற சுவேதமால் வரையைப் பாராய்.

8. பூக்கமழ் குழலி னாய்நின் [1]பொருட்டியான் [2]புகலா நின்றேன்
மேக்குயர் தச்சன் மைந்த னளனிவன் விலங்கலா லன்று
ஆக்கிய விதனைவெய்ய பாதக மனைத்தும் வந்து
நோக்கிய பொழுதே நூறுஞ் சேதுவை நீயு நோக்காய்.

பி - ம்:—[1]பொருட்டினாற். [2]புகலாநின்ற.          (௪0அ௩)

௧௬௪.—இதுவும்,அடுத்த கவியும்-சீதையைநோக்கி இராமன் சில கூறுதலைத் தெரிவிக்கும்.

இலங்கையை வலஞ்செய் தேக வெனநினைந் திடுமுன் மானம்
வலங்கிளர் கீழை வாயில் [1]வரப்பிர கத்த னீலன்
நலங்கிளர் கையின் மாண்ட திவணென நயன்றன் வாயில்
[2]கலந்திட வீங்குக் கண்டாய் சுபாரிசற் கட்ட தென்றான்.

(இ-ள்.) இலங்காநகரத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து செல்லவேண்டு மென்று (இராமன்) நினைத்தற்குமுன்னமே (அவ்)விமானம் (அங்ஙனமே வலமாகஎழுந்து) வலிமைமிக்க (அவ்விலங்கையின்)கிழக்குவாயிலில் வருகையில், 'பிரகத்தனென்னும் அரக்கன் நீலனென்னும்வாநர

னது அழகுமிக்ககைகளினால் இறந்தது இவ்விடம்' என்று (இராமன் சீதையைநோக்கிச்) சொல்ல, (பிறகு அவ்விமானம்), யமனுக்குஉரிய தெற்குத்திக்கின்வாயிலிற் சேர்கையில், 'சுபார்சுவனென்னும் அரக்கனைக் கொன்றது இவ்விடம்' என்று (இராமன் சீதைக்குக்) கூறினான்.

பி - ம்:—[1]வருதலும். [2]. ?...வாலிசேய்வச்சிரத்தெயிற்றனைக்கண்டான். இதுவும் அடுத்தகவியும் திருவணைச்சிறப்புப்படலமுள்ள பிரதிகளிலெல்லாம் இல்லை. (௪0அ௪)

௧௬௫. குடதிசை [1]வாயில் வேகக் குன்றரிந் தவனை வென்ற
விடநிகர் மேக நாத னிளவலால் [2]விழ்ந்த தென்முன்
வடதிசை வாயின் மேவ விராவணன் மவுலி பத்தும்
உடலமு [3]மிழந்த திங்கென் றுணர்த்திவே[4]றுரைக்க லுற்றான்.

(இ - ள்.) மேற்குத்திக்கின்வாயிலில் (விமானம் வர),—'(இங்கு) வேகமாகப்பறந்துசெல்லும்இயல்புடைய மலைகளின் இறகுகளை அறுத்தொழித்த இந்திரனைச் சயித்தவனான விஷம் போற்கொடிய இந்திரசித்து, (எனது) தம்பியான இலக்குமணனால் இறந்து விழுந்தது' என்று (இராமன் சீதைக்குச்) சொல்லுதற்குமுன்னே [அதிவிரைவிலே] (அவ்விமானம்) வடக்குத்திக்கின் வாயிலையடைய, 'இவ்விடம், இராவணன் (தனது) பத்துத்தலைகளையும் உடம்பையும் (என்னால்) இழந்து இறந்தது'என்று(இராமன் சீதைக்கு) அறிவித்து,மற்றும் கூறத்தொடங்கினான்; (எ - று.)—பி - ம்:—[1]வாயுமைந்தனகம்பனைக்குறைத்தான் வென்றி. [2]விளிந்தது [3]மேலவ். [4]உரைப்பதானான். (௪0அ௫)

௧௬௬.—இதுமுதல் ஏழுகவிகள்-சேதுவின் சிறப்பைத்தெரிவிக்கும்.

நன்னுத னின்னை நீங்கி நாள்பல கழிந்த பின்றை
மன்னவ னிரவி மைந்தன் வான்றுணை யாக நட்ட
பின்னைமா ருதிவந் துன்னைப் பேதறுத் தனது பெற்றி
சொன்னபின் வான ரேசர் தொகுத்ததிச் சேது கண்டாய்.

எட்டுக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அழகிய நெற்றியையுடையவளே! (நான்) உன்னைவிட்டுப்பிரிந்து பலநாள் கழிந்தபிறகு, (குரங்குகளுக்கு) அரசனும் சூரியபுத்திரனுமான சுக்கிரீவனைச் சிறந்ததுணைவனாகச் சிநேகித்தபின்பு, (அச்சுக்கிரீவனுடைய கட்டளையினால்) அநுமான் (இலங்கையில் நீ சிறையிருந்த அசோகவனத்தில்) வந்து (எனது செய்தியைத் தெரிவித்து உன்கலக்கத்தை யொழித்து, (அங்கிருந்துவந்து எங்களுக்கு) உன்வரலாற்றைத் தெரிவித்த பின்பு, (உன்னைச்சிறைமீட்கக்கருதி இராவணனுடன் போர்செய்யப்புறப்பட்ட வானரசேனைகள் கடலைக்கடக்கும் பொருட்டுக்) குரங்குத்தலைவர்கள் கட்டியது, இந்தச்சேதுவாகும்: (நீ இதனைக்) காண்பாயாக; (எ - று.) (௪0அ௬)

௧௬எ. மற்[1]றிதன் றாய்மை யெண்ணின் மலரயன் றனக்கு
மெட்டா,பொற்றொடித் தெரிவை [2]யானென் புகலுகேன்[3]கேட்டி

யன்பாற், பெற்றதாய் தந்தை யோடு தேசிகற் பிழைத்துச்
சூழ்ந்த, சுற்றமுங் கெடுத்து ளோரு [4]மெதிர்தரிற் சுரர்க ளாவார்.

(இ - ள்.) பொன்னாலாகிய வளையல்களையணிந்த பெண்ணே! ஆலோசித்துப்பார்த்தால், இந்தச்சேதுவின் பரிசுத்தியை (எடுத்துக் கூறத் திருமாலின் நாபீ) கமலத்தினின்று தோன்றிய பிரமனுக்கும் முடியாது: (அதைப்பற்றி) யான் என்னசொல்லமாட்டுவேன்? (ஆயினும் நான் சொல்வதைக்) கேட்பாயாக: அன்புடன் பெற்றுவளர்த்த தாய்தந்தையர்க்கும் ஆசிரியனுக்கும் தீங்குசெய்து, (தன்னை) அடுத்துள்ள சுற்றத்தாரையுங் கெடுத்து வாழ்கின்ற மகாபாவிகளும் (இச்சேதுவைப்) பார்த்தமாத்திரத்தால், (அப்பாவம்நீங்கித்) தேவர்களாவார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]அதன். [2]அரிவையானே, தெரிவைநல்லாய். [3]புகழிற்றோன்றப், கேண்மினம்பால்,அப்பாற்றோன்றிப். [4]எதிர்ந்திடிற், எதிர்தலிற். (சுoஅஎ)

ககஅ. இந்திரற் கஞ்சி [1]மேனா ளிருங்கடல் புக்கு நீங்காக்
[2]கந்தர சயிலந் [3]தன்னைக் கண்டவர் வினைக[4]டீர்க்குங்
கந்தமா தனமென் றோதுங் கிரியிவண் [5]கிடப்ப கண்டாய்
பைந்தொடி யடைத்த சேது பாவன [6]மாய தென்றான்.

(இ - ள்.) பசும்பொன்னாலாகிய வளையல்களையுடையவளே! முற்காலத்தில் இந்திரனுக்குப் பயந்து பெரியகடலினுட் புகுந்து வெளிப்படாத குகைகளையுடையமலைகளுள் கந்தமாதநமென்று பெயர்கூறப்படுவதும் தன்னை (ஒருகாற்) கண்டவரது தீவினைகளையெல்லாம் ஒழிக்கவல்லதுமாகிய மலை இங்கே இருப்பதைக் காண்பாயாக; (அம்மலை, கடலை) அடைத்துக்கட்டப்பட்ட சேதுவின் சம்பந்தத்தால் பரிசுத்தியடைந்தது என்று (சீதையைநோக்கிக்) கூறினான், (இராமன்); (எ-று.)

கந்தமாதனத்தின் சம்பந்தத்தாற் சேதுவுக்குப் பாவனமுண்டாயிற்றென்பாருமுளர். இந்திரன் வச்சிராயுதத்தால் மலைகளின்சிறகுகளையறுத்தகாலத்திற் சிலமலைகள் அஞ்சிக் கடலிற்புக்குஒளித்தன வென்பது, வரலாறு. பி-ம்:--[1]முன்னாள். [2]கந்தமா. [3]தன்னுட். [4]தீரும். [5]கிடத்தலாலே. [6]ஆவது. (சுoஅஅ)

ககக. கங்கையோ[1]டியமுனை[2]கோதா விரியொடு நருமதை காவேரி
பொங்குநீர் [3]நதிகள் யாவும் படிந்தலாற் புன்மை போகா
சங்கெறி தரங்க வேலை [4]தட்டவிச் சேது வென்னும்
இங்கிதி னெதிர்ந்தோர் புன்மை [5]யாவையு நீக்கு[6]மென்றே.

(இ - ள்.) கங்காநதி யமுநாநதி கோதாவரிநதி நருமதைநதி காவேரிநதி (இவைமுதலாகிய) மிக்க நீரையுடைய புண்ணியநதிகளெல்லாவற்றிலும் முழுகினாலல்லாமல் தீவினைகள் தீரமாட்டா; சங்குகளை வீசுகிற அலைகளையுடைய கடலில் தடுத்துக் கட்டிய இந்தச் சேதுவென்னப்பட்ட இங்கேயுள்ள புண்ணியதீர்த்தத்தைப் பார்த்தவர்களுடைய தீவினைகளையெல்லாவற்றையுங்கூட, (இச்சேது) ஒழித்துவிடும்;

நதிகள் தம்மில் முழுகினால்மாத்திரம் பாவத்தை நீக்க, இது தன்னைக் கண்டமாத்திரத்திலும் பாவத்தை நீக்குமெனச் சேதுவின் சிறப்புக் கூறியவாறு; வேற்றுமையணி. பி - ம்:—[1]இயலுங். [2]கோதாவிரியொடுகெளிந்தைசூழ்ந்த, கோதாவிரியொடுகாளிந்திசூழ்ந்த. [3]கன்னி. [4]தந்த. [5]எழுமையுநீங்கும். [6]என்றான். (௬௦௮௯)

களo. ஆவினைக் [1]குரவ ரோடு மருமறை முனிவர் தம்மைப்
பாவையர் குழுவை யின்சொற் பாலரைப் பயந்து தம்மின்
மேவின வவரைச் செற்றோர் விரிகடற் [2]சேது வந்து
தோய்வரேலவர்கள் கண்டாய் சுரர்தொழுஞ்சுரர்களாவார்.

(இ - ள்.) பசுக்களையும் ஐங்குரவர்களையும் (ஓதுதற்கு) அரிய வேதங்களை யுணர்ந்த முனிவர்களையும் மகளிர்கூட்டங்களையும் இனிய மழலைச்சொற்களையுடைய குழந்தைகளையும் அச்சங்கொண்டு தம்மிடத்துச் சரணமாகவந்து அடைந்தவர்களையும் கொன்றவர்களும், பரந்த சமுத்திரத்திலுள்ள(இச்)சேதுகட்டத்தில்வந்து மூழ்குவரானால், அவர்கள் தேவர்களும் வணங்கும்படியான தேவர்களாவார்; (எ-று.)

ஆவினைக் கொல்லுதல்-கோஹத்தி யென்றும், குரவரைக் கொல்லுதல்-குருஹத்தியென்றும், முனிவரைக்கொல்லுதல்-பிரமஹத்தியென்றும், பாவையரைக்கொல்லுதல்-ஸ்திரீஹத்தியென்றும்,பாலரைக்கொல்லுதல்-சிசுஹத்தியென்றும், நம்பிவந்து அடைந்தவர்களைக் கெடுத்தல்-விசுவாசகாதுகமென்றும் சொல்லப்படும். ஐங்குரவர்-"அரசன் உவாத்தியான் தாய் தந்தை தம்முன்" என்பவர். பி - ம்:---[1]குரவர்தம்மை. [2]பாவை. இதுவும் அடுத்தகவியும் சிலபிரதிகளி வில்லை. (௬௦௯௦)

களக. மரக்கல மியங்க வேண்டி வரிசிலைக்[1]குதையாற் கீறித்
தருக்கிய விடத்துப் பஞ்ச பாதக ரேனுஞ் சாரிற்
பெருக்கிய வேழு மூன்று பிறவியும் பிணிக ணீங்கி
நெருக்கிய வமரர்க் கெல்லா நீணிதி யாவ[2]ரன்றே.

(இ - ள்.) மரக்கலங்கள் (கடலில் இங்குத் தடையின்றிச்) செல்ல விரும்பிக் கட்டமைந்த வில்லின் நுனியினாற் கீறி (நான்) உடைத்துத் தள்ளிய இவ்விடத்திற் பஞ்சமகாபாதகர்கள் வந்து மூழ்கினாலும்,(அவர்கள்) ஏழு என்னும் எண்ணினாற் பெருக்கின மூன்று [இருபத்தொரு] பிறப்புக்களிலும் வியாதிக ளில்லாமல் கூட்டமான எல்லாத்தேவர்கட்கும் பெருஞ்செல்வம் போலப் பாராட்டத்தக்கவராவர்;(எ - று.)

இராமன் புஷ்பகத்தின்மீது ஏறிச்செல்லுகையில் கடலில் அவ்விடத்து மரக்கலங்கள் இடையே இனிது செல்லுதற்பொருட்டுத் தனது வில்லின் நுனியாற் சேதுவைக்கீறி யுடைத்து வழிவிட்ட வரலாற்றை விதிமுகத்தாற் கூறாது அநுவாதமுகத்தாற்கூறிப் பெறவைத்தார். இக்காரணத்தால், இவ்விடம் தநுஷ்கோடி யெனப்படும். தருக்கிய-சிதைத்த. பஞ்சமகாபாதகர் - கொலை, பொய்சொல்லுதல், களவு, கட்

குடித்தல், குருநிந்தை என்ற ஐந்து பெரும்பாவங்களைச் செய்தவர்.
—பி - ம்:—[1]குதையினீக்கி. [2]என்றான். (சு0கக)

கஎஉ. நெற்றியி னழலுஞ் செங்க ணீறணி கடவு ணீடு
[1]கற்றையஞ் சடையின் மேவு கங்கையுஞ் சேது வாகப்
பெற்றில மென்று [2]கொண்டு பெருந்தவம் புரிகின் றாளால்
மற்றிதன் றூய்மையெவ்வா றுரைப்பது [3]மலர்க்கண் வந்தாய்.

(இ - ள்.) தாமரைமலரில் தோன்றிய இலக்குமியின் அமிசமானவளே! நெற்றியிலே எரிகிற சிவந்த நெருப்புக்கண்ணையும் விபூதியையும் பூண்டுள்ள பரமசிவனது நீண்ட தொகுதியான அழகியசடையிற் பொருந்திய கங்காநதியும், '(நாம்) சேதுவாகும் பாக்கியத்தைப் பெற்றிலோமே' என்று (மனத்திற்) குறைகொண்டு, (அங்குப்) பெருந்தவஞ் செய்கிறாள் என்றால், இந்தச்சேதுவின் பரிசுத்தத்தன்மையை எப்படி (நாம்) எடுத்துக்கூறுவது? (எ - று.)

நெற்றியில் நெருப்புக்கண்ணையுடைய சிவபிரானது முடியின்மேற் சடைக்கற்றையில் கங்கை இருப்பதை, கங்காதேவி காட்டில் தீயிடையில்நின்றுகொண்டு தான் சேதுவாம்படி தவஞ்செய்வதுபோலு மென்று குறித்தார்: தற்குறிப்பேற்றவணி. பி-ம்:—[1]கற்றையின். [2]நாளும், கொண்டே. [3]மலரின்மாதே. இதன்பின் சிலபாடல்கள் ஏட்டுப்பிரதிகள் பலவற்றிற் காணப்படுவன வருமாறு:—

1. ஆங்கது காட்டக் கண்ட வாயிழை கமல மன்ன
பூங்கழற் புயல்போன் மேனிப் புனிதவெள் பொருட்டாற்
ஈங்கிதற் கேற்ற நீயே வியர்பென [1]விமானத் தின்று [செய்த
[2]பாங்குற நிறுவி நின்றிங் கிவையிவை பகர லுற்றான்.

பி-ம்:—[1]இரதமாங்கே. [2]பாங்கினினிறுவி நின்றிங்கிவை, பாங்கென...,பாங்கரோடிழிந்துதேவி தனக்கிவை.

2. அந்தணர் தம்மைக் கொன்றோ ரருந்தவர்க் கிடுக்கண் செய்தோர், [1]செந்தொழில் வேள்வி செற்றோர் தீமனை யிடுவோர் [2]தம்பால், [3]வந்திரந் தவற்கொன் றீயா [4]வைக்கும்வன் னெஞ்சர் பெற்ற, தந்தையைத் தாயைப் பேணாத் தறுகணர் பசுவைச் செற்றோர்.

பி-ம்:—[1]செந்தழல். [2]சேர்ந்து. [3]வந்தவரவர்க்கியாதே. [4]வெய்ய... பெற்ற, வன்னெஞ்சங்கிளந்துபெற்ற.

3. குருக்களை யிகழ்வோர் கொண்ட குலமக ளொழியத் தங்கள், செருக்கினாற் [1]கணிகை மாரைச் சேர்பவ ருயிர்கொல் [2]தீம்பர், இருக்குட னமருந் தெய்வ மிகழ்பவ ரூன்க [3]டின்று, பெருக்கிய வுடலர் [4]பொய்ம்மை பிதற்றுவோர் பீடைசெய்வோர்.

பி-ம்:—[1]கணிகைமாதைச், கணிகைமாதர்ச். [2]தீயர். [3]தின்னும். [4]பொய்யைப்.

4. *வெய்யவ னுச்சி சேர மிகவழி நடந்து போவோர்
மையறு முன்னோன் றன்னை வலிசெய்யுந் தம்பி மார்கள்
கையுள முதல்கள் தம்மைக் கரந்துதம்பிக்கொன் றீயார்[வோர்.
துய்யனசொற்கள் சொல்வோர் சோம்பரைச் சுளித்துக்கொல்

5. ஊரது முனிய வாழ்வோ ருண்ணும்போ துண்ணா [1]வந் தோர்க்கு, ஆர்வமோ டளியா[2]தில்ல மடைப்பவ ரமணோ சென்று, [3]நீரினு ளிழிவோர் பாவ நெறிகளில் முயல்வோர் சான்றோர், [4]தாரம தணேவோர் மூத்தோர் தமையிக ழறிவி லாதோர்.

பி-ம்:—[1]வந்தால். [2]இல்லை. [3]நீரினிதனேவோர். [4]தாரமதனேயோர்.

6. பின்னவா தருவ னென்று பேசித்தட் டுவிக்கும் பேதை, கன்னியைக் கலக்கும் புல்லோர் காதலாற் கள்ளு [1]மாந்தர், துன் னிய கலைவல் லோரைச் சுளிந்துரைத் திகழ்வோர் சுற்றம், இன் னலுற் றிடத்தாம் வாழ்வோ ரெளியரை [2]யின்னல் செய்வோர்.

பி-ம்:—[1]மைந்தர். [2]வலுமை.

7. ஆண்டவன் படவுந் தாங்க ளாருயிர் கொண்டு மீண்டோர், நாண்டுறந் துழல்வோர் நட்பா னவரைவஞ் சிப்போர் [1]நன்மை, [2]வேண்டிடா திகழ்ந்துதீமை [3]செய்பவர் விருந்தை நீப்போர், பூண் டுமேல் வந்த பேதை யடைக்கலம் [4]போக்கி வாழ்வோர்.

பி-ம்:—[1]நம்மை. [2]வேண்டிலர். [3]விரும்புவார். [4]பொதுக்கி.

8. [1]கயிற்றிலாக் கண்டத் தாரைக் காதலித் தணேவோர் தங் கள், வயிற்றிடைக் கருவைத் தாமே [2]வதைப்பவர் மாற்றார் தம் மைச், செயிர்க்குவ தன்றிச் சேர்ந்த [3]மாந்தரி னுயிரைச் [4]செற் றோர், [5]மயிர்க்குரு ளொழியப் பெற்றம் வெளவுவோர் வாய்மை யில்லோர்.

பி-ம்:—[1]கயிறகல். [2]வதிப்பவர். [3]மாதரின். [4]கொல்வோர். [5]மறி கலையொழியப் பெற்றமாறுவோர்.

9. கொண்டவன் றன்னைப் பேணுக் குலமகள் கோயி லுள் ளே, பெண்டிரைச் சேர்வோர் தங்கள் பிதிர்க்களே யிகழும் பேதை, [1]உண்டலே தருமமென்போ ருடைப்பொரு ளுலோப ருரைத், [2]தெண்டமே யிடுவோர் மன்று பறித்துண்ணுந் தறுகண் ணுளர்.

பி-ம்:—[1]உண்டில. [2]எண்டர விகழ்வோரென்று மேற்றவர்க்கில்லை யென்போர்.

10. [1]தேவதா னங்கள் மாற்றித் [2]தேவர்கள் தனங்கள் வெள வும், [3]பாவகா ரியர்க ளெஞ்சிற் பரிவிலா தவர்கள் வந்து, காவெ ளு வபய மென்று கழலடைந் தோரை விட்டோர், பூவைமார் தம்மைக் கொல்லும் புல்லர் [4]பொய்ச் சான்று போவோர்.

பி - ம்:—[1]தேவர். [2]தெய்வங்கள், செல்வம். [3]பாவகாரியர்தம். [4]போய்ச்சான்று பொய்த்தோர்.

---

* இச்செய்யுள் ஒருபிரதியில்தான்உள்ளது.

11. முறையது மயக்கி வாழ்வோர் மூங்கையந் தகர்க்குத் தீயோர், மறையவர் நிலங்க டன்னை வன்மையால் வாங்கு [1]மாந் தர், கறைபடு மகளிர் [2]கொங்கை கலப்பவர் காட்டில் வாழும், பறவைகள் [3]மிருகம் பற்றிப் பஞ்சரத் தடைக்கும் [4]பாவர்.

பி-ம்:—[1]மூர்க்கர். [2]கூடக். [3]விருகம். [4]பாதர்.

12. கார்க்கன [1]வரைசேர் கானில் கடுங்குழி [2]கல்லுங் கட் டர், நீர்க்கரை யதனி லோட்டி நெடுங்கலை முயல்மான் கொல் வோர், ஊர்க்கெழு கூவல் வீழ்ந்த வுயிர்ப்பசு வெடாது போ வோர், வார்[3]கெழு தனமின் னாரை வழியில்விட் டேகு மாக்கள்.

பி-ம்:—[1]வழியின்மீதே. [2]கண்ணியொட்டி, கண்ணிகட்டி. [3]கொழுங்கொங்கைமாரை.

13. *வழியடித் துண்போர் கேட்டால் வழிசொல்லா தவர் கள் வைப்பைப், பொழியிருள் களவு காண்போர் பொய்சொல் லிப் பண்டம் விற்போர், அழிவிலா வாய்மை கொன்றோ ரடைந் தது....,.......தெரிசிக்கத் தீர்க வென்றான்.

14. †ஆதியர் மூவர்க் கந்நா ளருமறை யறைந்த வந்த
நீதியாம் புராணன் றன்னை யிகழ்பவர் நிரயக் கேளார்
பாதியில் விட்டு வைப்போர் படித்தவர் பிரியப் படுத்தார்
போதமி லாதார் மற்றச் சமயம்பொல் லாத தென்பார்.

15. என்றிவர் முதலா மற்று மெழுநர கடையும் பாவம்
ஒன்றினர் நன்றி தன்னை மறந்தவ ரொழிய [1]வுள்ளோர்
துன்றிய வினைக ளெல்லாஞ் சுடர்கண்ட விருளே போலத்
தென்றிசை வந்து சேதுத் தரிசிக்கத் தீரு மென்றான்.

பி-ம்:—[1]முன்னோர்.

16. வேறு. ஆங்கதுகேட் டருந்ததியே யனையாளு [1]மவதியுடன்
[2]தீங்கணுகுஞ் செய்ந்நன்றி மறந்திடுந்தீ மனத்தோர்கள்
தாங்கரும்[3]பா வங்களையு மெனக்காகத் தவிர்கவென
நீங்கிடுக [4]வதுவுமென்று [5]னிலமடந்தை பொறைதீர்த்தான்.

பி-ம்:—[1]அறிவினுடன். [2]தீங்ககலத்திருமொழிந்தாய் செய்ந்நன்றி மறந்தோரும். [3]பாதகங்களையும். [4]அதுவென்றான். [5]நிலமகடன்.

1.7 [1]பாரெழுவி [2]வாழ்வோர்கள் பஞ்சமாபா தகமுதலாச்
[3]சீரெழுவு திருவணையைத் தெரிசிக்கத் தீர்கவெனக்
[4]காரெழுவு திருமேனிக் [5]கண்ணனினைப் பின்படியே
[6]ஈரெழுவர் நால்வரெனு மிருடிகளு மெழுதினரால்.

---

* இச்செய்யுள் ஒரு பிரதியில் மாத்திரமே காணப்பட்டது.

† இதுவும் அடுத்த செய்யுளும் 13-ஆஞ் செய்யுளுள்ள பிரதியில் இல்லை. 15-ஆஞ் செய்யுளின்பின் "தெவ்வடு" (களங) என்ற செய்யுளும், அதன்பின் "மாருதி" என்றபாடலும், அதன்பின் "இதுதமிழ்" (களச) என்ற பாடலுமாக முறையேயுள்ளன: மற்றைப்பாடல்களில்லை.

பி - ம்:—[1]பாரேழில். [2]வாழ்வோர்தம். [3]சேரேழு, சீர்கெழுவு. [4]காரேழு. [5]கண்ணார் நினைவின். [6]ஈ-ரேழுபேர்.

18. வேறு. என்பன பலவு மந்த வேந்திழைக் கிருந்து கூறித்
தன்பெருஞ் சேனை யோடுந் தம்பியு மரக்கர் கோவும்
பொன்பொரு விமானந் தன்மேற் போகின்ற போது மிக்க
இன்புடை யிராமன் வேலைக் கிப்புறத் திழிந்தென் செய்வான்.

பூசைப்படலமுள்ள ஒருபிரதியில்தான் இச்செய்யுளுள்ளது.

19. வேறு. [1]திருவணை யுயர்பதஞ் செப்பி மீண்டபின்
அருகணை திருமகட் காங்கு மற்றுள
தருவணை திரள்[2]புயச் சனக வல்லிக்காங்
[3]கருவரை முகில்நிற வண்ணன் காட்டுவான்.

பி - ம்:—[1]திருவணைக் குயர்புகழ் செப்பிமீண்டனன். [2]புயத்தளக வல்லிக்காங். [3]கருவணை. இச்செய்யுள் இரண்டுபிரதியில்தான்காணப்பட்டது அவற்றுள், ஒருபிரதியில் இப்பாடலினீற்றில் திருவணைச்சிறப்பு முற்றும் என்று எழுதி, மேல் *'பூசைப்படலம்' என்று தொடங்குகிறது; அப்படலச்செய்யுள்கள் வருமாறு:—

20. வேறு. கப்பையெனுங் கன்னியையுங் [1]கந்தனூர்தந் தாதையை[யும்
அப்பொழுதே திருவணைக்குக் [2]காவலரா யங்கிருத்திச்
செப்பரிய சிலையாலே [3]திருவணையை வாய்கீறி
ஒப்பரியா டன்னுடனே யுயர்சேனைக் கடலுடனே.

பி - ம்:—[1]கந்தமாதனந்தன்னில், கந்தமாத்திரந்தனிலே. [2]காவலாய். [3]திருவாறு.

21. வேறு. வேந்தர் வேந்தனும் வேலையின் கரையினில் வரவே
வாய்ந்த சாய்கையும் வந்தது வானவர் வணங்க
ஏந்து தோள்புயத் திராமனு மிலக்குவன் றானும்
வாய்ந்த சீதையு மானமும் வானர வேந்தும்.

22. நின்ற போதினில் நிகரிலா வகத்தியன் முதலோர்
குன்று போற்புயத் திராகவன் றனைவந்து குறுக
நன்று நின்வர வென்னவே காதனும் வணங்கி
வென்றி வேந்தனும் வேதியர் தம்மொடு வியந்து.

23. சேது வின்கரை சேர்ந்தவத் திறல்புனை யிராமன்
ஏது வித்தல மெனக்குறு முனிவனைக் கேட்ப
வாத ராசனும் வாசுகி தானுமுன் மலைந்த
போது வந்ததிப் பொன்னக ரென்றவன் புகன்றான்.

---

* பூசைப்படலமென்பது ஒருஏட்டில்தான் காணப்பட்டது. 21-முதல் 41 - வரையிலுமுள்ள பாடல்கள் பூசைப்படலமிருக்கும்பிரதியிலன்றி வேறு எந்தப்பிரதியிலும் காணப்படவில்லை.

24. புகன்ற வன்றனைப் பூங்குழ விராகவன் சாய்கை
அகன்ற காரணங் குறுமுனி யுரைசெய வவனும்
பகர்ந்த தேவரும் பாற்கடற் பள்ளியான் பரமன்
புகுந்த திவ்வழிப் பூவில்வந் தவனுமற் றியாரும்.

25. இருப்ப தித்தில மாகையா விராவணன் சாய்கை
அருத்தி யின்றியே யகன்றதென் றருள்முனி யறையப்
பெருத்த தோளுடை யண்ணலும் பிரியம்வந் தெய்திக்
கருத்து மற்றினி யுரையெனக் குறுமுனி கழறும்.

26. இந்த மாநகர் தன்னிலே யிறைவனை யருச்சித்து
உந்தன் மாநக ரெய்தினற் சாய்கைபோ முரவோய்
அந்த நீதியே செய்துமென் றனுமனை யழைத்திட்டு
எந்த னாதனை யிமைப்பினிற் கொடுவர வென்றான்.

27. வேறு. அந்த வேலை முனிவ னளிதெருள்
இந்த மாநிலத் தியாவரு மின்புறக்
கந்த மேவிய கங்கையி லோர்சிலை
தந்து காணென மாருதி தாவினான்.

28. வேறு. போதி யென்றவற் போக்கிய விராமனு மிந்த
மாது சீதையு மைந்தனு மிலக்குவ னானும்
தீது தீரவே தீர்த்தங்கள் யாவையு மாடி
ஆதி நாதனு மிருந்தன னமரர்கள் வியப்ப.

29. வேறு. ஆன போதினி லையன் மனத்துளே
தானி னைந்தது தானு ரறிகுவார்
ஞான மோர்வடி வாகிய நாரணன்
மோன மாகி யிருந்தன(ன்) மூவரான்.

30. காலஞ் சென்ற தெனக்கருதிக் கையால்
கோல மான மணலினைக் கூட்டியே
ஆல முண்ட தேவிவ ராமென
ஞால முண்டவர் தம்மன நாட்டவே.

31. வேறு. முகுத்த மானதென முனிவனு மொழிதலு மிராமன்
மிகுத்த தோரிடத் தெய்தியே வெண்மணல் கூப்பி
அகத்தி னிற்புறம் பூசித்தே யடிமல ரிறைஞ்சிச்
செகுத்த தோளுடைத் தம்பியுஞ் சீதையுந் தானும்.

32. ஒத்த பூசனை செய்யவு மமைதியி னுள்ள
சித்தி மேவிய ஞானமுந் தொடர்விடா திருந்தோன்
அத்தன் பாதக மானவை யழிதர வியற்றிச்
சித்தம் வாழ்தர நின்றனன் றேவர்க டுதிப்ப.

33. நின்ற போதினி னிறங்களும் படலமுங் கொண்டு
வென்றி சேர்புய மாருதி விரைவினில் வந்து

நன்று செய்தனை யெனப்போய் நாதனைப் பிடுங்கி
வென்றி வாலற்று மேதினி வீழ்ந்தனன் வீரன்.

34. விழுந்த வன்றனை வெந்திற லிராகவ னோக்கி
அழுந்து சிந்தையா யறிவிலா ததனையென் செய்தாய்
பொழிந்து மாமல ரிட்டுநீ யருச்சியென் றுரைப்ப
எழுந்து போயவ னிறைவனை யருச்சனை செய்தான்.

35. வேறு. அவ்விடத் தனுமான் றந்த கங்கைமேல்
வவ்வி டப்பரும் வந்திடு வான்சிலை
அவ்வி டத்தினி லியாவரு மேத்தெனத்
தெவ்வ டக்குஞ் சிலையவன் செப்பினான்.

36. எந்த னாத னிவனென் றிறைமகன்
தந்த நாமஞ் சராசரஞ் சார்ந்தபோது
இந்தி ரன்பிர மாமுத லெய்தினார்
வந்து வானவர் யாவரும் வாழ்த்தினார்.

37. இத்த லத்தினில் யாருமங் கோர்சிலை
வைத்து மாமனத் துள்ளே வழுத்துவார்
நத்து லாயகை நாரண னான்முகன்
பித்தன் மூவரு மேத்தப் பெறுகெனா.

38. என்றி ரான? வரசன் பெருமையின்
நன்றி தன்னை நவில வடங்குமோ
சென்று சென்று செயசெய போற்றியென்று
அன்றி ராச குமார (னல)றகுவான்.

39. வேறு. பூசனைத்தொழில் முடிந்தபின் பூங்கழ லிராமன்
தேவத் தச்சனை யழைத்துநீ திரைகடற் கிடந்த
காவல் மாமலை கொணர்ந்துநீ கண்ணுதற் கோயில்
பூவில் வந்தவன் சொல்வழிச் சமையெனப் புகன்றான்.

40. நந்தி யம்பதி யிறைவனை நாதனு மழைத்தே
இந்த மாமலை யிருமென யாவையு நல்கி
விந்தை தங்கிய தோளினீர் வேந்தனைப் பூசித்து
இந்த மாநக ரிருமென விராமனு மகன்றான்.

41. வேறு. * தேரேறி [1]மாருதஞ் சென்னிமிசைச் சென்றேறக்
காரேறு கண்ணபிரான் [2]காவலவன் [3]கமழ்துளபத்

---

* இச்செய்யுள் எமக்குக்கிடைத்தபிரதிகளில் இரண்டில்தான் காணப்பட்டது: பூசைப்படலமில்லாத மற்றொருபிரதியில் இச்செய்யுளினீற்றில் திருவணைச்சிறப்புமுற்றும் என்று எழுதப்பட்டு, மேல் மீட்சிப்படலம் தொடங்குகின்றது. அந்தப்பிரதியில் (க)"திருவணை,";(உ)"தேய்ந்தமாமதி," (௩) "மாருதி,"(௪) "தெவ்வடு" (௧௭௩)என இந்தமுறையிற் பாடலுள்ளன.

தாரேறு தடந்தோளான் தனிவயிரக்[4]குனிசிலைக்கைப்
போரேறு பொலிவுடனே வடதிசையிற் [5]போயினனால்.

பி - ம்:—[1]மானகரஞ். [2]காவலர்கோன். [3]மகிழ்துளபத். [4]சிலை குனி. [5]போயினரால்.

பூசைப்படலம் முற்றும். இனி மீட்சிப்படலம்:—

42. சேர்ந்து சேதுவின் றென்கரை கடந்துவந் தெய்திக்
கூந்தன் மானமே [1]லிருந்தவன் வடதிசை குறுகிப்
போந்து [2]வானரப் புதுமையுஞ் சனகிக்குப் புகன்று
[3]தீர்ந்த சேதுவின் கரையையும் காட்டினன் [4]றிறலோன்.

பி-ம்:—[1]கொண்டுடன். [2]வானவர். [3]தீர்ந்து. [4]தெரிந்தான்

43. நின்னை மீட்பதே நினைந்துசின் னெறியெலா நீந்தி
என்னை யீட்டிய திறத்தினிற் றிருவுட னிருப்பச்
சொன்ன வேற்படை யரக்கரைக் குறைத்தவிச் சேனை
மன்ன னாற்பெற்ற வழியிது வென்றியு மதனால்.

௧௱௭௫.—வருணன்சரணமடைந்தஇடத்தை இராமன்சீதைக்குக் காட்டுதல்.

தெவ்வடுஞ் சிலைக்கை வீரன் சேதுவின் பெருமை [1]யாவும்
வெவ்விடம் பொருது[2]நீண்டு மிளிர் தருங் கருங்கட் செவ்வாய்
நொவ்விடை [3]மயில னாட்கு [4]நுவன்றுழி வருண னேனைது
இவ்விடை வந்து [5]கண்டாய் சரணென வியம்பிற் றென்றான்.

(இ - ள்.) பகைவர்களைக் கொன்ற (கோதண்டமென்னும்) வில்லை யேந்திய வீரனான இராமபிரான், சேதுவின் சிறப்புமுழுவதையும், கொடியவிஷத்துடன்போர்செய்து(காதளவும்)நீண்டுவிளங்குகின்ற கருமையான கண்களையும் சிவந்தவாயையும் (நுண்மையால்) வருந்துகின்ற இடையையுமுடைய மயில்போன்றவளான சீதைக்குச் சொல்லிக்கொண்டுவருகையில், (புஷ்பகவிமானம் தர்ப்பசயனத்தைச் சேர),—'இந்த இடம், வருணபகவான் (எனது ஆக்நேயாஸ்திரத்தின் கொடுமையைப்) பொறுக்கமாட்டாமல் வந்து (என்னைநோக்கி) அடைக்கலமென்று கூறியது: அறிவாய்' என்றான்; (எ - று.)—இராமன் சீதைக்குக் காண்பித்தது, திருப்புல்லாணி என்று வழங்குகிற தருப்பசயனம். பி-ம்:—[1]எல்லாம். [2]மீண்டு. [3]குயிலனாட்கு, அல்குலாட்கு. [4]நுவன்றுழிவருணனேனை, நுவன்றபின்வருணனேனென். [5]கண்டான். (௪0௧௫)

44. வேறு. தேய்ந்த மாமதி போலுஞ் சிலைநுதல்
வாய்ந்த வானர [1]வாரண மாருதி
யாய்ந்த மாமணி [2]யாழியை யன்றுதான்
பாய்ந்த வெற்பு மயேந்திரம் [3]பார்த்தியால்.

பி-ம்:—[1]வானர. [2]ஆயிழையாய்மதி. [3]பார்த்தியால். இச்செய்யுள் இரண்டுபிரதியில்தான் காணப்பட்டது: ஒரு பிரதியில் "மாருதி" என்றபாடலின்பின் உள்ளது.

45. வேறு. மாருதி நின்னை நாடி வருபவ [1]னெறிப் பாயப், பாரிடைக் குளித்து நின்ற [2]பவளமால் வரையைப் பாராய், போரிடைப் [3]பொலன்கொள் பொன்றார்ப் புரவிகள் [4]போக்கிற்றென்ன, நீரிடைத் தரங்க மோங்கு [5]நெறியுட லதனை நோக்காய்.

பி-ம்:—[1]நெறியைப்பாராய். [2]மயேந்திரவரையை. [3]புலன்கள்வென்றோர். [4]பொங்கிற்றென்ன. [5]நிறை.

௧௭௪.—இராமன் பொதியமலை திருமாலிருஞ்சோலைமலை திருவேங்கடமலை முதலியவற்றைச் சீதைக்குக் காட்டுதல்.

இதுதமிழ் முனிவன் வைகு [1]மியறகு குன்ற [2]முன்னோன்
[3]அது[4]வளர் மணி[5]மே லோங்க [6]லப்புறத் துயர்ந்து தோன்றும்
[7]அதிதிக ழநந்த வெற்பென் றருட்ட [8]வனுமன் றோன்றிற்று
[9]எதுவென வணங்கை நோக்கி யிற்றெ னவிராமன் சொன்னான்.

(இ - ள்.) இராமன், 'இம்மலை, தமிழ்ப்பாஷைக்கு உரியவனான அகஸ்தியமுனிவன்வசிக்கிற பெருமைபொருந்திய பொதியமலை; அதோ தெரிகிறது, முழுமுதற்கடவுளான திருமாலெழுந்தருளியுள்ள இரத்தினங்களையுடைய உயர்ந்த திருமாலிருஞ்சோலைமலை; மிகவும் விளங்குகின்ற திருவேங்கடமலை அதோ உயர்ந்துகாணப்படுகின்றது' என்று (சீதைக்குச் சுட்டிக்) கூற, (அப்பொழுது சீதை), 'அநுமான் காணப்பட்ட இடம் எது?' என்று வினவ, (உடனே இராமபிரான்), திருமகளின் அவதாரமான சீதையைப் பார்த்து, (ருசியமூகபருவதத்தைச் சுட்டிக்காட்டி) 'இதுதான்'என்று சொன்னான்; (எ - று.)

அகஸ்தியன் வசிக்கும் பொதியமலை பாண்டியநாட்டிலுள்ளது; இது, மலயமென்று பெயர்பெறும். 'முன்னோன் வளர்' என்று அடைமொழி கொடுத்ததனாலும், உடனே திருவேங்கடமலையைக் கூறுதலாலும், ஓங்கல்என்பதற்கு-திருமாலிருஞ்சோலைமலை யெனப் பொருள் கொள்ளப்பட்டது. இப்படி இவ்விரண்டுமலைகளையும் ஒருசேரக் கூறுதலை, "தென்னனுயர்பொருப்புந் தெய்வவடமலையும்," "சோலைமலையோடிரண்டாய், மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடம்" என்னும் பெரியார்பாசுரங்களினாலும் அறிக. இம்மலை - திருமால் திருப்பதிகள் நூற்றெட்டனுள் ஒன்றும், அவற்றிற் பாண்டியநாட்டுத்திருப்பதிகள் பதினெட்டனுள் முதலதுமாகிய தலம். திருவேங்கடமலை சேஷகிரி யென்று ஒருபெயர் பெறுதலால், அதன் பரியாயநாமமாக 'அநந்தவெற்பு'எனப்பட்டது. பரமபதநாதனது ஆஜ்ஞையின்படி ஆதிசேஷன் மலையுருவமானதனாலும், மேருமலையிலிருந்து ஆதிசேஷனுடனே வாயுவினாற்கொணரப்பட்டதனாலும், இதற்கு இப்பெயர் வாய்த்ததென்பர். இது, திருமாலினது திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வடநாட்டுத்திருப்பதிகள் பன்னிரண்டில் முதலதுமாகிய தலம். தமக்குப் பலவகையிலும் அநுமான் உதவிபுரிந்ததுபற்றி அவன்மீது அன்புகொண்டு, சீதை, அவன் இராமபிரானை முதலிற் சந்தித்த இடத்தைக்

குறித்து வினாவினளென்க. அநுமான் பிறந்த இடம் வடக்குத்திக்கிலுள்ள சுமேருமலை யாதலால். 'தோன்றிற்று' என்பதற்கு - பிறந்தது எனப் பொருள்கூற இடமில்லை; இப்பொழுது விமானஞ்செல்லுமிடம் அவ்விடத்துக்கு மிகத்தெற்காதலால். பி-ம்:--[1]இயலுறு,இகலுறு. [2]மூன்றுறு, மூன்னோர், மூன்றோன்றும். [3]உது [4]வள்ளம், [5]மால். [6]உப். [7]மதிதிகழ், அதுகழல். [8]அமலன், உம்பர்த். [9]அது. (சுoகூச)

களரு.—இராமன் சுக்கிரீவனது நகரைக் காட்டுதல்.

வாலியென் றளவி லாற்றல் [1]வன்மையான் மகர நீர்சூழ்
[2]வேலையைக் [3]கடக்கப் பாயும் விறலுடை யவனை வீட்டி
நூலியற் றரும நீதி நுனித்தறங் [4]குணித்த மேலோர்
போலியற் றபனன் மைந்த னுறைதரும் [5]புரமீ தென்றான்.

(இ - ள்.) அளவில்லாத சாமர்த்தியத்தின் உறுதியையுடையவனும் சுறுமீன்களையுடைய நீர்நிறைந்த கடல்களைத் தாண்டும்படி பாயவல்ல பலமுடையவனு மாகிய வாலியென்னும் பெயருடைய வாநரனை அழித்து, சாஸ்திரங்களிற் கூறியுள்ள நீதிநெறிகளையே ஆராய்ந்து தருமங்களையே மதித்த பெரியோர் போன்ற தன்மையையுடைய சூரிய குமாரனான சுக்கிரீவன் வசிக்கின்ற புரம் இதுதானென்று (சீதையை நோக்கிக்) கூறினான்,(இராமன்);(எ-று.)—பி-ம்:—[1]வண்மையான் [2]வேலியை. [3]கடத்தலாயும். [4]குனிக்கும். [5]பொறையீது. இச்செய்யுளுக்குப் பின் ஒருபிரதியில் ஒருபாடல் காணப்படுகின்றது: அதுவருமாறு:—

ஆரிய னனைய கூற வடியிணை யிறைஞ்சி யையவேரியங் கமலை செப்பும் விரிந்தகிட் கிந்தை யுள்ளார்
சீரிய வயோத்தி சேரத் திருவுளஞ்செய்தி யென்னக்
கார்நிற வண்ணல் மானங் காசினி குறுக வென்றான்.(சுoகூரு)

களகூ.—வாநரமகளிரையும் உடனழைத்துச்செல்லவேண்டுமென்று சீதை கூறுதல்.

கிட்கிந்தை யிதுவே லைய கேட்டியா லெனது பெண்மை
மட்குந்தா னைய வெள்ள மகளி ரின் றாகி வானோர்
உட்கும்போர் சேனை சூழ வொருத்தியே யயோத்தி [2]யெய்தின்
கட்கொந்தார் குழலி னாரை யேற்றுதல் கடன்மைத் தென்றாள்.

(இ-ள்.) 'தலைவனே! இது கிஷ்கிந்தாநகர மாயின், (யான் கூறுவதைக்) கேட்டருள்வாயாக: தான் (பல) வெள்ளமென்னுங் கணக்கையுடையதாகித் தேவர்களும் (கண்டு) அஞ்சும்படியான போர்செய்ய வல்ல சேனை சுற்றிலும்இருக்க, பெண்களின் துணையில்லாமல் (நான்) ஒருத்திமாத்திரமே அயோத்தியாபட்டணத்தைச் சேர்ந்தால், எனது பெண்தன்மை பெருமையடையாதாகும்: (ஆதலால்), தேனையுடைய பூங்கொத்துக்களைச்சூடிய கூந்தலையுடைய (இப்பட்டணத்திலுள்ள

வரான) வாநரமகளிரை (ப் புஷ்பகத்தின்மீது) உடன் ஏற்றிக்கொண்டு செல்லுதல் முறைமையையுடையதாகும்' என்று கூறினாள், (சீதை).

சீதை இராமபிரானருகில் தான் இருப்பதனால் தனக்குச் சிறிதும் அச்சமில்லாதிருக்கவும், மிக்க ஆடவர்திரளில் மகளிர் துணையின்றித் தனியேயிருத்தல் தகுதியன்றென்று கருதி, வானரமகளிரைத் துணை வேண்டினளென்க. பெண்மை - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலிய மகடூஉக்குணங்கள். ஆயம்-தோழிப்பெண்கள்: மகளிர்கூட்டமுமாம். பி-ம்:—[1]இன்றாகில். [2]எய்தக். சிலபிரதியில் இச்செய்யுளுக்குப் பின் "இதுதமிழ்"(௩௭௪), "வாலி"(௩௭௫) என்ற பாடல்களுள்ளன. ()

இங்கேஒருபிரதியில் இரண்டுசெய்யுள்களுள்ளன: அவைவருமாறு:-

1. என்றவன் சேயை நோக்கி யிசைந்தகிட் கிந்தை யுள்ளார்
நன்றுநம் பதியைக் காண நாயக வழைத்தி யென்னச்
சென்றவன் சாம்பன் றன்னைத் திசையெட்டுந் திரியச் சாற்றி
இன்றுநஞ் சுற்ற மெல்லா மியல்புட னழைத்தி யென்றான்.

2. என்றபோ தெழுந்து சாம்ப னிசைந்தகிட் கிந்தை யுள்ளார்க்கு
ஒன்றொழி யாத வண்ண மோதினா னோதக் கேட்டே
ஒன்றிய கடல்க ளேழு முற்றுட னுவாவுற் றென்ன
மன்றலங் குழலி னார்கள் துவன்றினர் மகிழ்ச்சி கூட.

௩௭௭.—வானரமகளிரைக்கொணருமபடி இராமன் கட்டளையிடச் சுக்கிரீவன்கட்டளைப்படி அநுமான் அவர்களைக் கொணர்தல்.

அம்மொழி யிரவி [1]மைந்தற் கண்ணறு னுரைப்ப வன்னான்
[2]மெய்ம்மைசே ரநுமன் றன்னை நோக்கிநீ விரைவின் வீர
மைம்மலி குழலி னாரை மரபினாற் கொணர்தி [3]யென்னச்
செம்மைசே ருள்ளத் தண்ணல் கொணர்ந்தனன் சென்றுமன்னோ.

(இ - ள்.) (சீதை சொன்ன) அவ்வார்த்தையைச் சூரியன்மகனான சுக்கிரீவனுக்கு இராமபிரான் சொல்ல,—அந்தச்சுக்கிரீவன், வாய்மையுள்ள அநுமானைப் பார்த்து, 'வீரனே! நீ விரைவிற் கருமைமிக்க கூந்தலையுடைய வாநரமகளிரை முறைப்படி அழைத்துக்கொண்டுவா' என்ன, நேர்மைபொருந்திய மனத்தையுடைய பெருமையிற்சிறந்தவனான அநுமான் போய் (அவர்களை) அழைத்துக்கொண்டு வந்தான்.

மரபினாற் கொணர்தல் - அந்தந்தஸ்திரீகளுக்கு உரியபடி சிறப்புடனே வரிசைவழாமற் கொணர்தல். ஒழித்தற்குஅரிய பெண்ணாசையை யொழித்தவனாதலால், அநுமானை, 'செம்மைசே ருள்ளத் தண்ணல்' என்றார்; இதுபற்றியே, மகளிரை யழைத்துவருவதில் மற்றவரை யேவாது சுக்கிரீவன் இவனையே ஏவின னென்க. 'மைம்மலி குழலினார்' என்று மானுடமகளிரைக் கூறுதல்போல வாநரமகளிரைக் கூறியுள்ளதனால், ஆண்குரங்குகள்போலவே இவர்களும் இராமபிரானது திருவுள்ளத்தின்படி மனிதவடிவங்கொண்டனரென்பது பெறப்படும். பி - ம்:—[1]மைந்தர்க்கு. [2]மென்மை. [3]என்றான். "என்றவன்,"

''என்றபோது'' என்று கீழ்காட்டிய பாடல்களுள்ளபிரதிகளில் ''அம் முறை வரவுதாழ்க்க வருக்கன்சேயருளினேடும்'' என்று இச்செய்யு ளின் முதலடி காண்கின்றது. (௪0கூஎ)

கஎஅ.—வானரமகளிர் சுக்கிரீவனையும் இராமனையும் சீதையையும் வணங்குதல்.

வரிசையின் வழாமை நோக்கி மாருதி மாதர் வெள்ளம்
கரைசெய லரிய வண்ணங் கொணர்ந்தனன் கணத்தின் முன்னம்
விரைசெறி குழலி னார்[1]தம் வேந்தனை வணங்கிப் பெண்மைக்கு
அரசியை யைய னோடு மடியிணை தொழுது நின்றார்.

(இ - ள்.) அநுமான், வரம்பு காணவொண்ணாதபடியுள்ள (வாநர) மகளிர்கூட்டத்தை ஒருநொடிப்பொழுதிற்குள் (அவரவர்க்குஉரிய) சிறப்புக்களிற் குறைவுண்டாகாதபடி பார்த்துக் கொணர்ந்தனன்; (உடனே), வாசனைமிக்க கூந்தலையுடையரான அம்மகளிர், (விமானத் தின்மீது ஏறி), தமது அரசனான சுக்கிரீவனை வணங்கி, இராமபிரானை யும் ஸ்திரீநாயகமான சீதாபிராட்டியையும் இரண்டுபாதங்களிலும் வணங்கி நின்றார்; (எ - று.)

இச்செய்யுளின் முன்னிரண்டடி - அநுவாதம். விரைசெறிகுழல்- அகிற்புகை முதலியவற்றால் வாசனையூட்டப்பெற்ற கூந்தல். பி-ம்:— [1]தாம்வேந்தரை. இதன்பின் சிலபிரதிகளிற் சிலபாடல்கள் காணப்படு கின்றன: அவை வருமாறு:—

1. சந்திர மானந் தன்மேற் றாரகை சூழ்ந்த தென்ன
இந்திரன் மகனார் தாரத் தாரையும் ருமையுங் கூடி
வந்தனர் வந்து மொய்த்தார் வானர மடந்தை மார்கள்
இந்திரை கொழுநன் றன்னை யேந்தின ரிறைஞ்சி நின்றார்.

2. நின்றவா ரிதியை முன்பு நெருப்பெழக் கடைந்த போதங்கு
ஒன்றல பலவு மாங்கே யுற்பவித் தவற்றி னுள்ளே
தன்னுடன் பிறந்த முத்து மாலையைத் தரையிற் றோன்றி
மின்னென நின்ற சீதைக் களித்தனள் விரைவிற் றாரை.

3. தாரையைச் சீதை புல்கித் தாமரைக் கண்ண னன்பாற்
பாரைவிட் டகன்றான் வாலி பாருளோர்க் கவதி யுண்டோ
ஈரிது மலரோன் செய்கை தெரியுமோ தெரியா தன்றே
யாரது தெரிய கிற்பார் காலத்தி னளவை யம்மா.

4. என்றிடத் தாரை நிற்க வெதிர்கதிர்க் கடக மொன்று
மின்றிரிந் தனைய கொள்கை மேலைநாள் விரிஞ்ச னீந்தது
அன்றது விரவி பெற்று நாயகற் கீந்த தன்று
சென்றடி யிணையி லிட்டே யிறைஞ்சியே ருமையு நின்றாள்.

5. நின்றவள் தன்னை நங்கை யங்கையாற் றழுவி நின்று
வன்றுணை மங்கை மாரு மைந்தரு மங்குச் சூழத்

தன்றிருக் கைக ளாலே தழுவின ளென்னக் கண்ணால்
ஒன்றல பலவுங் கூற வுணர்ந்துள முவகை யுற்றே. (௪௦௬௮)

௬௭௯.—விமானம் மீண்டும் எழுந்து செல்லுதல்.

[1]மங்கல முதலா வுள்ள மரபினிற் [2]கொணர்ந்த யாவும்
அங்கவர் [3]வைத்துப் பெண்மைக் கரசியைத் தொழுது சூழ
நங்கையு முவந்து வேறோர் நவையிலை யினிமற் [4]றென்றாள்
பொங்கிய விமானந் தானு மனமென வெழுந்து போன.

(இ - ள்.) அப்பொழுது அவ்வாநரமகளிர், முறைப்படிகொண்டு வந்த அஷ்டமங்கலங்கள் முதலாகவுள்ள எல்லாப்பொருள்களையும் (எதிரில்) வைத்து, மகளிர்க்குரியதன்மைகளிற் சிறந்தவளான சீதா பிராட்டியை வணங்கிச் சுற்றிலும்இருக்க, சீதையும் மகிழ்ந்து 'இனி மேல் யாதொருகுறையும் இல்லை' என்று கூறினாள்;(ஒளி)மிகுந்த புஷ்பக விமானமும் (ஆகாயத்தில்)எழுந்து மனோவேகமாகச்சென்றது; (எ-று.)

இராமனையடைந்தபின்பு சீதைக்கு இருந்த மகளிர்துணையின்மை யென்னும் ஒருகுறையும் இப்பொழுது நீங்கியதனால், 'வேறோர் நவை யிலை' என்றாள். 'விமானம் எழுந்துபோன' என்று இங்குக்கூறியதனால், முன்பு அவ்விமானம் கீழிறங்கித் தங்கியமை பெறப்படும். அஷ்டமங்க லங்களை "சாமரை தீபம் தமனியப்பொற்குடம், காமர்கயலினிணை முத லாத் - தேமருவு, கண்ணாடி தோட்டி கதலிகைவெண் முரசம், எண் ணிய மங்கலங்க ளெட்டு" என்பதனால் அறிக. பி-ம்:—[1]மங்கல முதல வாய. [2]கலப்பையாவும், கலங்கள்யாவும். [3]கொணர்ந்து. [4]என்ன.

இங்கே சிலபிரதிகளிற் காணப்படுஞ்செய்யுள்கள் வருமாறு:—

1. கடிகமழ் குழலி னாளே கார்காலம் யாங்கள் வைகும்
[1]வடிவுடைச் சிகர மோங்கு [2]மாலியவானை நோக்காய்
அடுதிறற் பரிதி மைந்த [3]னகரத னழகு பாராய்
வடிவுள மலையே [4]மென்ன மராமர [5]மேழு நோக்காய்.

பி - ம்:—[1]வடிவிடைச். [2]மதங்கனதிருக்கை. [3]கிட்கிந்தை, அரணி னது. [4]என்னும். [5]எழை.

2. கனிவளர் பவளச் செவ்வாய்க் [1]கனங்குழை நின்னைக் காணத், துனிவளர் துன்ப நீங்கத் [2]தோழமை நாங்கள் கொண்ட, பனிவள [3]ரிருளை மாற்றும் [4]பகலவன் சேயும் யாமும், நனிவளர் நட்புக் [5]கொண்ட நலந்தரு நாக நோக்காய்.

பி - ம்:—[1]கருங்குழல். [2]தொடர்கின்ற கடவுண்மானப். [3]இருளகற் றும், இருளையெல்லாம். [4]பற்றுறும் புதல்வனோடும், பருதிதன்புதல்வ னோடும். [5]நாங்கள் நயந்தவிந் நாகம்நோக்காய், நாங்கள் செய்தடமிது கண்டாயே.

3. மாழையொண் கண்ணா யுன்னைப் பிரிந்தியான் வருந்து நாளில், தாழ்விலாத் துயரம் நீங்கத் தாமரை யுந்தி யான்கை,

ஆழியா மாற்றலானை யனுமனை [1]பரக்க ரஞ்சும், பாழியான் றன்னைக் கண்ட பம்பையா [2]றதனைப் பாராய்.

பி-ம்:—[1]அரக்கன். [2]இதனை.

4. பொய்வித்தி வஞ்சங் காத்துப் புலவிளைத் தறத்தைத் [1]தின்றோன், கைவித்துஞ் [2]சரத்தி னைக் கடற்பெரும் படையையெல்லாம், நைவித்த [3]விரவு நான்கான் மருந்துக்கு நடந்து நம்மை, உய்வித்த வீரன் றன்னைக் கண்டிட மிதுகண் டாயே.

பி-ம்:—[1]தின்றோர். [2]சரத்தினைக் கடற்படைவெள்ளம். [3]இரவு நாற்கால், வீரனுற்கால்.

5. சவரிய திருக்கை [1]தானுங் கவந்தனைத் [2]தடிந்த கானும்
[3]இவர்செய [4]வெழுந்த வாற்றற் கரனுயி [5]ரிழந்த பாரும்
[6]சவையுறு [7]சுருட்டன் மைந்தன் சரபங்கன் முதலோர்காதற்
[8]சுவையறு முனிவர் தங்க ளிடங்களுங் கருதி நோக்காய்.

பி-ம்:—[1]கானுங். [2]கண்டோங்கள். [3]அமர்செய, இவர்செயல். [4]கண்டு மாற்றல், எழுந்தவாறும். [5]அழித்தவாறும். [6]சமையுறு, நவையறு. [7]வசிட்டன். [8]கமைவுறு.

6. விரைகம ழோதி மாதே விராதன்வந் தெதிர்ந்து போர்செய்
நிரைதவ ழருவி [1]யோங்கு நெடுவரை யதனை நோக்காய்
சரதநா னரசு வேண்டேன் றடமுடி [2]சூடு [3]கென்று
பரதன்வந் [4]தழுது வேண்டும் [5]ப ருவரை யதனைப் பாராய்.

பி-ம்:—[1]ஓங்கல். [2]புனைநீ. [3]யென்னும். [4]எய்தி. [5]பனிவரை யிதனை.

7. வளைபயி றளிர்க்கை மாதே [1]வருபுனல் [2]பெருகக் கண்டு
துளை[3]பயில் வேயின் [4]றெப்ப [5]மியற்றியான் றுயரமின்றி
விளைதரு புனலை நோக்கி [6]வியந்துட னிருப்ப வெல்போர்
இளையவன் [7]றனியே நீந்தும் யமுனையா[8] றிதனைப் [9]பாராய்.

பி-ம்:—[1]வரும். [2]பெருக்கைக். [3]உடை. [4]தெற்பம். [5]இயக்கியான், இயற்றியாங், இயற்றியே. [6]அன்றுடன். [7]தனையே. [8]அதனை. [9]நோக்காய்.

8. பயனுறு தவத்தின் மிக்க பரத்துவ னிருக்கை பாராய், கயல்பொரு கங்கை யாறுங் குகனுறை நகருங் [1]காணாய், அயன் முதலமரர் போற்ற வனந்தன்மே லாதி[2]மூலம், [3]துயல்வருங் கடலே யன்ன வயோத்தியைத் தொழுது நோக்காய்.

பி-ம்:—[1]பாராய். [2]மூர்த்தி. [3]துயிலுமாவரங்க மென்னும்.

9. என்றுரைத் திளவ லோடு சனகியு மிரவி சேயும்
வென்றிவீ டணனுஞ் சேனை வெள்ளமும் விளங்கித் தோன்ற
பொன்றிகழ் புட்ப கத்தேர் [1]பூதலத் திழிய வேவி [ப்
[2]இன்றுணைப் பரத்து வாச [3]னிடவகை [4]யிழிந்தா னன்றே.

பி-ம்:—[1]பூதலத்தியப்போக்கி. [2]இன்றுவண். [3]இடவரை. [4]சேர்ந்ததன்றே. "திருவணை" என்ற பாடலில் மீட்சிப்படலம் தொடங்

கிய பிரதியில், இங்கு மீட்சிப்படலம்முடிய, இதன்பின் "உன்னுமாத் திரத்து" (௧௮௫) என்ற பாடலைக்கொண்டு பரத்துவாசனுச்சிரமப் படலம் தொடங்குகின்றது; ௧௮0-முதலிய பாடல்கள் "கடிகமழ்" முத லிய இப்பாடல்களுள்ள பிரதியி லில்லை: ஒருபிரதியில் ௧எ௮-முதற் கொண்டே ௧௮௪-ஆவது பாடல் வரையில் இல்லை. (௩0௧௧)

வேறு.

௧௮0.—கோதாவரி சீதையைப்பிரிந்த இடம் என்ற இவற்றை இராமன் சீதைக்குக் காட்டுதல்.

[1]போதா விசும்பிற் றிகழ்புட்பகம் போத லோடும்
சூதார் முலைத்தோகையை நோக்கிமுன் றோன்று சூழல்
கோதா விரிமற்றதன் மாடுயர் குன்று நின்னைப்
பேதாய் பிரிவுத்துயர் பீழை பிணித்த தென்றான்.

(இ - ள்.) எழுந்து வானத்தில் விளங்குகின்ற புட்பகவிமானம் போகவும், சூதாட்டத்தில் வைக்கப்படும் வல்லுக்காயையொத்த முலை யையுடைய சீதையைநோக்கி, (இராமன்),—'பேதாய்! எதிரில் தோன் றுகிற இடம், கோதாவிரி: அதனருகிலுள்ள உயர்ந்தகுன்றுபோன்ற இடந்தான் (நாம் ஒருவரையொருவர்) பிரிந்துவருந்துந்துயரை உண் டாக்கியது' என்றான்; (எ - று.)—பி - ம்:—[1]போதார் (௪௧00)

வேறு.

௧௮௧.—தண்டகாரணியம் சித்திரகூடபருவதம் பரத்துவாஜாச்சிரமம் இவற்றை இராமன் சீதைக்குச் சுட்டிக்காட்டுதல்.

சிரத்து வாசவண் டலம்பிடு தெரிவைகே ளிதுநீள்
தரத்[1]து வாசவர் வேள்வியர் தண்டக மதுதான்
வரத்து வாசவன் வணங்குறு சித்திர கூடம்
[2]பரத்து வாசவ னுறைவிட மிதுவெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) (இராமன் சீதையைநோக்கி), 'முடியிலுள்ள நறுமணத் தால்(அங்கு)வண்டுகள் ஒலிக்கப்பெற்ற தெரிவையே!கேள்: இது, மிக்க பெருமையுடைய உபாசனைசெய்பவர்களும் யாகஞ்செய்பவர்களும் உறைகின்ற தண்டகாரணிய மாகும்; அது, பெருமைபெற்ற தேவேந் திரனும் வணங்கத்தக்க(சிறப்பையுடைய)சித்திரகூடபருவதமாம்; இது, பரத்துவாசமுனிவன் வசிக்கும் ஆச்சிரமமாகும்' எனப் பகர்ந்தான்.

திரிபுஎன்னுஞ் சொல்லணி. இரண்டாமடியில், தரத்துஉவாசவர் எனப்பிரிக்க: உவாசவர் - உபாஸகர். உபாசனையாவது - மனத்தைப் பொறிகளின்வழியே போக்காது ஒருவழிப்படக் கடவுளினிடத்துச் செலுத்துதல். சித்ரகூடம்-விசித்திரமான சிகரங்களை யுடையது; கார ணக்குறி. பரத்வாஜன் என்ற வடமொழிப் பெயர்க்கு - பிரஜைகளைக் காப்பவன் என்று பொருள்கூறுவர்: பரத் - பரிப்பவன், வாஜம்-ஜநம்: அச்சொல், பரத்துவாசவனென விகாரப்பட்டது. வாஸவன் என்னும் வடசொல்லுக்கு - வசுக்களுக்குத்தலைவனென்று பொருள்; வசு-தேவர் களில் ஒருசாதியார்; செல்வமுமாம்.

தண்டகவனமேன்னும் பெயர்க் காரணம்:—சூரியகுலத்தில் மநு சக்கரவர்த்தியினது குமாரனான இக்ஷ்வாகுமகாராசனுடைய மக்கள் நூற்றுவருட் கடைப்பட்டவனும் மூடனும் மூர்க்கனுந் துஷ்டனுமாய்த் தண்டனைக்கு உரியவனென்ற காரணங்கருதி எதிர்காலவுணர்ச்சியை யுடைய தந்தையால் தண்டனென்று பெயரிடப்பட்டவனும், தண்டகனென்று வழங்கப்படுபவனுமாகிய ஓர் அரசன், விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத் தன்ஆட்சிக்கு உரியதாகக் கொண்டு மதுமந்தமென்னும் பட்டணத்தை யமைத்து அங்கு அரசாண்டுவருகையில், ஒருநாள் தனதுபுரோகிதரான சுக்கிராசாரியனது ஆச்சிரமத்துட் சென்று அவன்மகளாகிய அரஜையென்பாளைக் காதலித்து வலியக் கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த அந்தப் பார்க்கவன் சினந்து 'ஏழுநாள்களில் அவன் குடும்பத்தோடும் சேனைமுதலிய பரிவாரத்தோடும் அழிந்து போக, அவனதுநாடு மண்மழையால் யாதொரு ஜீவஜந்துவுமில்லாமற் பாழாகக் கடவது' என்று சபிக்க, அங்ஙனமே அந்நாடும் அவ்வரசனும் ஏழாநாள் மண்மழையால் அழிந்துபோய்விட, அவ்விடம் பின்பு காடாகித் தண்டகாரணியமென வழங்கியது என்பது. பின்பு நாளடைவில் பற்பல இருடிகள் வந்து அவ்வனத்திற் குடியேறின ரென்க. பி-ம்:—[1]உவாசனை. [2]பரத்துவாசனது. (௪௧0௧)

௧அ௨.—பரத்துவாசமுனிவன் இராமனை எதிர்கொள்ளுதல்.

மின்னை நோக்கியவ் வீரனீ தியம்பிடும் வேலை
தன்னை [1]நேரிலா முனிவர னுணர்ந்துதன் னகத்தின்
என்னை யாளுடை நாயக னெய்தின னென்னாத்
துன்னுமாதவர் சூழ்தர வெதிர்கொள்வான் [2]றொடர்ந்தான்.

(இ-ள்.) சீதையைப்பார்த்து அந்தவீரனாகியஇராமபிரான் இவ்வாறு கூறிவருகிற பொழுது,—தன்னை ஒப்பவரைப்பெறாத [தனக்குத் தானே சமானமான] இருடிச்சிரேஷ்டனாகிய பரத்துவாசமுனிவன் — (இராமபிரான் எழுந்தருள்வதை) அறிந்து, தானிருக்கிற இடத்தில் என்னையாட்கொண்ட கடவுளான ஸ்ரீராமபிரான் வந்தருளுகின்றானென்று மனமகிழ்ச்சிகொண்டு,(அந்த எம்பெருமானை) எதிர்கொண்டு உபசரிக்கும்பொருட்டு நெருங்கிய பெரிய இருடிகள் (தன்னைச்)சூழ்ந்துவரச் சென்றான்; (எ - று.)—பி - ம்:—[1]நோக்கிய. [2]துணிந்தான். ()

௧அ௩.—இராமன் பரத்துவாசனைக் காணுதல்.

ஆதபத்திரங் குண்டிகை யொருகையி னணைத்துப்
போத மூற்றிய தண்டொரு கையினிற் பொலிய
மாதவப்பய னுருவுகொண் டெதிர்வரு மாபோல்
நீதி வித்தக னடந்தமை நோக்கின னெடியோன்.

(இ - ள்.) குடையையும் கமண்டலமென்னும் ஜலபாத்திரத்தையும் ஒருகையாற் பிடித்துக்கொண்டு, மற்றொருகையில் தண்டம் விளங்க, தத்துவஞானம்நிறைந்த நீதிநெறியையுடைய சிறந்த இருடியான பரத்

துவாசன், பெருந்தவத்தின்பலன் இருடிவடிவுகொண்டு (தன்)எதிரில் வருவதுபோல வந்தமையை, பெருமைமிக்க இராமன் கண்டான்.

ஆதபத்ரம்-வடசொல்; வெயிலினின்று காப்பது எனக் காரணப் பொருள்படும். "நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங்காலை அந்தணர்க்கு உரிய" என்ற தொல்காப்பியத்து மரபியற் சூத்திரமும், 'ஆயுங்காலை' என்றதனாற் குடையுஞ் செருப்பும் முதலாயினவும் ஒப்பன அறிந்துகொள்க' என்ற அதன் விசேடவுரையும் இங்கு உணரத்தக்கன.

கஅ௪.—பாத்துவாசமுனிவனது ஆச்சிரமத்திற் புஷ்பகம் இறங்குமாறு இராமன் கருதுதல்.

எட்ப கத்தினை யளவையுங் கருணையோ [1]டிசைந்த
நட்ப கத்திலா வரக்கரை நருக்கிமா மேரு
விட்ப கத்துறை கோளரி யெனப்பொலி வீரன்
புட்ப கத்தினை வதிகென நினைந்தனன் புவியில்.

(இ - ள்.) தயையோடுகூடிய சிநேகத்தன்மை மிகச்சிறிதளவேனும் மனத்திலில்லாத இராக்கதர்களை (த்தனது)மனம் முறிந்ததனாற் கொன்று, பெரியமேருமலையினது குகையினுள்ளே வசிக்கிற வலிய ஆண்சிங்கம்போல் விளங்குகின்ற (மகா)வீரனான இராமபிரான், புஷ்பகவிமானம் (அங்குத்)தரையில் தங்கும்படி நினைத்தான்; (எ - று.)

கருணாநிதியாகிய இராமபிரானது மனமும் நோம்படி பலவகைத் தீங்குகளைச் செய்ததனால், அவ்வரக்கர்களை இராமபிரான் கொன்றனனென்பார், 'எட்பக நருக்கி' என்றார். எண்பக - மனம்முறிந்ததனால். மேருமலையின் குகையிலுள்ள ஆண்சிங்கம், விமானத்தின் நடுவில் வீற்றிருக்கின்ற இராமனுக்கு உவமை; இதனால், இராமனாற்கொல்லப்பட்ட அரக்கர் சிங்கத்தாற் கொல்லப்பட்ட யானைகட்கு ஒப்பாவரென்ற உவமை தொனிக்கும். விட்பு - மலையிற் பிளப்பாயுள்ள இடம். அகம் - மனமும், இடமும். பி-ம்:—[1]இயைந்த. இதன்பின் சிலபிரதியிற் காணப்படும் பாடல்கள் வருமாறு:—

1. என்று மன்னவன் பற்பல புதுமையும் யாவும்
மன்ற லங்குழற் சனகிக்குக் காட்டினன் மகிழ்ந்து
குன்று துன்றிய நெறியயிற் குடதிசைச் செவ்வே
சென்று கங்கையின் றிருநதித் தென்கரை சேர்ந்தான்.

2. *ஆர்த்து விண்ணவ ராடின ராடகத் தேரும்
போர்த்த போதினி னிலமிசை யணுகுறப் பெரியோர்க்கு

* ஒருபிரதியில் இந்தப்பாடற்குப் பிரதியாகவேறொருபாடல் காணப்படுகின்றது வருமாறு:—

மான மானமீப் போனது வடதிசை வருவது
ஆன காலையி லறிவனு மாயிழை யறியச்
சேனை யோர்திறல் சேதுவின் பெருமையுஞ் செப்பத்
தான மாகிய தீர்த்தமாந் திருநதி சார்ந்தார்.

ஆர்த்த மாகிய வடற்கரு மலையென நடந்து
தீர்த்த மாகிய கங்கையின் றென்கரை சேர்ந்தார்.

3. பாக மங்கையொ டமர்ந்தவன் பயில்வுறு கங்கை
ஆகு மீதென வறநெறி வழுவுறு வலங்கல்
மேக வண்ணனுந் துணைவரும் வியந்துட னுடித்
தாக நீங்கின ரவ்விடைத் தேவருஞ் சார்ந்தார்.

"ஆண்டுபெத்து" (கசஉ) என்றபாடலில் மீட்சிப்படலம் தொடங்கும் பிரதியொன்றில் அப்படலம் இங்குமுடிய, மேல் பரத்துவாசப்படலம் தொடங்குகின்றது.

* இறுத்த தேரினை யிருடிக ளெவரும்வந் தெய்தி
வெறித்து மூாய்முடி வேதமெய்ப் பொருளினை வியவாப்
புறத்த தாமுயிர் பெற்றன னெனவகம் பொங்கத்
திறத்தி ராமன்பால் திருமுனி யவனும்வந் துற்றான். (சகoச)

கஅரு.—இராமன் பரத்துவாசமுனிவனை வணங்குதல்.

உன்னு மாத்திரத் துலகினை யெடுத்தும்ப ரோங்கும்
பொன்னி னாடு[1]வந் திழிந்தெனப் புட்பகந் தாழ
என்னை யாளுடை நாயகன் வல்லையி னெதிர்போய்ப்
பன்னு[2]மாமறைத் தபோதனன் றுணமிசைப் பணிந்தான்.

(இ - ள்.) (இராமபிரான்) நினைத்தவளவில்,—புட்பகம் உலகத்திலுள்ள சனங்களை எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் உயர்ந்துசெல்லுகிற பொன்மயமான தேவலோகம் வந்து இறங்கினாற்போல (த் தரையில்) இறங்க,—இராமபிரான், விரைவாக எதிரிற்சென்று, இடைவிடாது ஓதுகின்ற சிறந்த வேதங்களை யுணர்ந்தவனான பரத்துவாசமுனிவனது பாதங்களில் விழுந்து வணங்கினான்; (எ - று)

பொன்மயமான புஷ்பகம் பூலோகத்தவரை எடுத்துக்கொண்டு ஆகாயவழியாகச் சென்றதை, பொன்னுலகம் பூலோகத்திலுள்ளாரைத் தூக்கிக்கொண்டு சென்றதை யொக்கு மென்று குறித்தார். தபோதனன் - தவத்தையே தனமாகக்கொண்டவன். பி - ம்:—[1]வந்துளது. [2]நான்மறை. (சகoரு)

கஅசு.—பரத்துவாசன் இராமனைத் தழுவி ஆனந்தங் கொள்ளுதல்.

அடியின் வீழ்தலு மெடுத்துநல் லாசியோ டணைத்து
முடியை [1]மோயினன் [2]னின்றுழி முளரியங் கண்ணன்
சடில [3]நீடுக ளொழிதரத் தனதுகண் ணருவி
நெடிய [4]காதலங் [5]கலசம [6]தாட்டின னெடியோன்.

(இ - ள்.) (இராமபிரான்தனது) பாதத்தில் விழுந்துவணங்கியவுடனே, பெருமைமிக்கவனான பரத்துவாசன்,—(அவனை) எடுத்துச் சிறந்த

* இந்தப்பாடல் இரண்டுபிரதியில்தான் காணப்பட்டது.

ஆசீர்வாதத்தோடு கட்டித்தழுவி உச்சிமோந்து நின்றபொழுது,—தாமரைமலர்போன்ற அழகியகண்களையுடையனான இராமபிரானது சடைக்கற்றையிலுள்ள மிக்கபுழுதிகள் நீங்கும்படி (அவனிடத்துள்ள) மிக்க அன்பினா லுண்டாகிய தனதுகண்ணீராகிய அழகிய கலசநீர்த்தத்தினால் நீராட்டினான்; (எ-று.)—பி-ம்:—1மோந்துடல். 2நின்றனன்,நின்றவிழ். 3நீர்கிளர்ந்திழிதரத், நீர்கழிந்திழிதரத். 4காதலின். 5கலசநீர். 6ஆடினன். (௪௧0௬)

௧௮௭.—சீதையும் இலக்குமணனும் முனிவனை வணங்க,அவன் மகிழ்தல்.

1கருகும் வார்2குழற் சனகியோ டிளவல்கை தொழுதே
3அருகு சார்தர வருந்தவ னாசிகள் வழங்கி
உருகு 4காதலி னொழுகுகண் ணீரின னுவகை
பருகு மாரமிழ் தொத்துளங் களித்தனன் பரிவால்

(இ - ள்.) கறுத்த நீண்ட கூந்தலையுடைய சீதையும் இலக்குமணனும் கைதொழுது (பரத்துவாசனது) சமீபத்தை யடைய, அருமையான தவத்தைச் செய்துள்ளவனான அவ்விருடி (அவ்விருவர்க்கும்) வாழ்த்துக்களைக் கூறி, (அவ்விருவரையும் நோக்குதலால்) மனமுருகுதற்குக்காரணமான அன்பினாற் பெருகுகிற(ஆனந்தக்)கண்ணீரை யுடையவனாய், சந்தோஷத்தோடு பருகுகிற அருமையான தேவாமிருதத்தையொத்து [தேவாமிருதத்தை யுண்டாற்போலச் சந்தோஷத்தை யடைந்து](அவர்களிடத்து உள்ள)அன்பினால் மனம்பூரித்தான்;(எ-று.)—பி - ம்:—1கருகு. 2குழலச். 3சாகுழி. 4காதலன். (௪௧0௭)

௧௮௮.—சுக்கிரீவன்விபீஷணன்முதலியோர் முனிவனை வணங்க, அவன் இராமன்முதலியோரைத் தன்னாச்சிரமத்தினுள் அழைத்துச்செல்லுதல்.

வான ரேசனும் வீடணக் குரிசிலு மற்றை
1ஏனை வீரருந் தொழுந்தொறு 2மாசிக ளியம்பி
ஞான நாதனைத் திருவொடு நன்மனை கொணர்ந்தான்
ஆன மாதவர் குழாத்தொடு மருமறை 3புகன்றே.

(இ - ள்.) (பரத்துவாசமுனிவன்),—வாநரராசனாகிய சுக்கிரீவனும் விபீஷணனென்னும் இராக்கதராசனும், மற்றுமுள்ள வீரர்களும், (தன்னை)வணங்குந்தோறும்(ஒவ்வொருவர்க்கும்)வாழ்த்துக்களைக் கூறி(ப் பின்பு, தன்னைச்)சார்ந்த பெரிய முனிவர்கூட்டத்தோடும் அருமையான வேதங்களை ஓதிக்கொண்டு தத்துவஞானத்தினால் அறியப்படுகிற தலைவனான இராமபிரானை இலக்குமியின் அமிசமான சீதையுடனே அழகிய (தனது) பர்ணசாலையில் அழைத்துச்சென்றான்; (எ - று.)

'மற்றை', 'ஏனை' என இரண்டுகூறினது, இவ்விருவரைச் சார்ந்த வானரவீரரையும் இராக்கதவீரரையுந் தனித்தனி குறித்தற்கு எனினுமாம்.பி-ம்:—1ஏனையோர்களும்.2ஆசிகள்பகர்ந்தே. 3பகர்ந்தே. (௪௧0௮)

கஅகூ.—முனிவன் இராமனை யுபசரித்து ஒன்றுகூறத் தொடங்கல்.

பன்ன சாலையுட் புகுந்துநீ டருச்சனை பலவும்
சொன்ன நீதியிற் புரிந்தபின் சூரியன் மருமான்
றன்னை நோக்கினன் பன்முறை கண்கணீர் ததும்பப்
பின்னொர் [1]வாசக [2]முரைத்தனன் றபோதரிற் பெரியோன்.

(இ - ள்.) இருடிகளுட்சிறந்தவனாகிய பாரத்துவாசமுனிவன், (தனது) பர்ணசாலையினுள்ளே சென்று (இராமபிரானுக்குச்) சிறந்த உபசாரங்கள் பலவற்றையும் சாஸ்திரங்களிற் கூறிய முறைமைப்படி செய்த பிறகு, சூரியவமிசத்திற்பிறந்தவனாகிய அவ்விராமனை (ஆனந்தக்) கண்ணீர் பெருகப் பலதரம் பார்த்தவனாகிப் பின்பு ஒருவார்த்தை சொல்பவனானான்; (எ-று.)—அதனை, அடுத்த கவிகளிற் காண்க.

பன்னசாலை=பர்ணசாலை: தழைக்குடிசை. மருமான்-வழித்தோன்றல். பன்முறை நோக்கினது, அன்பு பற்றி. தபோதர்=தபோதநர்; விகாரம். அன்றி, தபோதரர் என்பதன் திரிபுமாம். பி-ம்:—[1]காரியம். [2]உணர்த்தினன். (சுக0கூ)

கககூ0.—இதுவும் அடுத்த கவியும்-பாரத்துவாசன் இராமனதுசிறப்பைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

முனிவர் [1]வானவர் மூவுல கத்துளோர் யாரும்
துனியு ழந்திடத் [2]துயர்தரு கொடுமனத் தொழிலோர்
நனிம டிந்திட வலகைக ளாடக நடிப்பக்
குனியும் வார்சிலைக் குரிசிலே யென்னினிக் குணிப்பாம்.

மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) முனிவர்களும் தேவர்களும் (இன்னும்) மூவுலகத்திலுள்ளவர்யாவரும் அச்சங்கொண்டுவருந்தும்படி துன்பங்களைச் செய்த கொடியமனத்தையும் கொடுந்தொழிலையுமுடைய அரக்கர்கள் நன்றாக [அடியோடு] இறந்துபடவும், (போர்க்களத்திற்) பேய்கள் கூத்தாடவும், வளைந்த நீண்ட (கோதண்டமென்னும்) வில்லை யேந்திய வீரனே! (எங்கள் எண்ணங்கள்யாவும் நிறைவேறியதனால் நாங்கள்) இப்பொழுது யாது சொல்வோம்? [சொல்வதற்கு ஒன்றுமில்லை யன்றோ]? (எ-று.)

'மூவுலகத்துளோர்' என்பதில் யாவரும் அடங்கவும், 'முனிவர் வானவர்' என்று தனியே யெடுத்துக்கூறினது, அவர்கட்கு உள்ள சிறப்புப்பற்றி. பேய்கள் கூத்தாடினது, தமக்குப் போரில் அரக்கரிறைச்சியாகிய மிக்கவுணவு கிடைத்ததனால். முனிவர்கள் நெடுநாளாய் எதிர்பார்த்திருந்த இராக்கதசங்காரம் நிறைவேறினதனால், பரத்துவாச முனிவன் 'என்னினிக் குணிப்பாம்' என்றான். 'இனி என் குணிப்பாம்' என்பதற்கு - இங்ஙனம் செயற்கரியசெய்ததனால் (உன்மகிமையை) எங்ஙனம் சொல்லமாட்டுவோம்? எனினுமாம். பி - ம்:—[1]வானுளோர். [2]துயருறுங், துயர்தொடர், துணர்தரு. (சுககO)

வேறு.

௩௧௧. விராதனுங் கரனு மானும் விறல்கெழு கவந்தன் றானும்
மராமர மேழும் வாலி மார்பமு மகர நீரும்
இராவண னுரமுங் [1]கும்ப கருணன தேற்றந் தானும்
அராவரும் பகழி யொன்று லழித்துல களித்தா [2]யைய.

(இ - ள்.) தலைவனே! விராதனையும் கரனையும் மான்வடிவ மெடுத்துவந்த மாரீசனையும் வலிமைமிக்க கவந்தனையும் ஏழுஆச்சா மரங்களையும் வாலியினது மார்பையும் சுறாமீன்களையுடைய கடலையும் கும்பகர்ணனது சிறப்புக்களையும் இராவணனதுமார்பையும் அராவிச் செய்யப்பட்ட அருமையான ஒப்பற்ற ஆயுதத்தா லழித்து, (நீ) எல்லா வுலகங்களையுங் காத்தருளினாய்; (எ-று.)—பி - ம்:—[1]கும்பகர்ணன் றன் தோற்றந். [2]என்றான். ஒருபிரதியில் இச்செய்யுளில்லை. சில ஏட்டுப்பிரதிகளில் ௧௧௨-முதல் ௨௦௧ - வரையிலுமுள்ள செய்யுள்கள் காணப் படாமல், வேறேசெய்யுட்கள் காணப்படுகின்றன: அவை வருமாறு:—

1. * வேறு. இந்த வாசக [1]மியம்பினன் பின்னரு மிசைப்பான்
எந்தை நீ[2]யின்றிங் கிருந்துள வருத்தமும் போக்கிச்
சிந்தை யன்புசெய் திருநகர் நாளைநீ சேர்கென்று
அந்த மில்பரத் துவன்சொல [3]வவ்விடத் தடைந்தான்.

பி-ம்:—[1]இயம்பிய. [2]இவணிருந்துநின். [3]அவணிடத்து.

2. அடைந்த மாமுனித் தலைவனை யருச்சனை [1]செய்து
மிடைந்த சேனையும் பெருங்கடல் சூழ்தர மேனாள்
கடைந்த பாற்கடல் கண்டுயில் நீங்கிவா னவர்கள்
[2]படிந்து போற்றிட விருந்தெனப் பரிவுட னிருந்தான்.

பி-ம்:—[1]ஆற்றி. [2]பரிந்து .....இருந்தனன்பரமன்.

3. வேறு. இருந்தபோ திராமன் றன்னை யிருடியு மியம்பு மெந்தாய், பெருந்திற லிலங்கை தன்னை யெங்ஙனம் பெரியோய் நீயே, வருந்தினை குரங்கு கொண்டு மாயவல் லரக்கன் றன்னைத் [1]திருந்தவப் போரின் வென்று [2]மீண்டவா செப்பு கென்றான்.

பி-ம்:—[1]திருந்திய. [2]மீண்டது.

4. இராகவ னவனை நோக்கி யிறந்தவா ளரக்க ரெல்லாம்
[1]அராவின்மா றுதியு [2]மேன்மை விடணன் றானு [3]மாங்கே

* சிலபிரதிகளில் இங்குக்காட்டிய பாடல்களுள் முதலிரண்டே யிருக்க, வேறுசிலபிரதிகளில் பலபாடல்கள் காணப்படுகின்றன. முத லிரண்டு செய்யுட்களைக்கொண்ட சிலபிரதிகளில் பரத்துவாசன்விருந்த ளித்தல் முதலியவற்றைத் தெரிவிக்கும் பாடல்கள் ௨௬௧-ஆம் செய்யு ளின்பின்னும் ஒருபிரதியில் ௩௧௧-ஆம் செய்யுளின்பின்னும் உள்ளன; அவை ஆங்காங்குக்காட்டப்படும்.

குராவருஞ் [4]சேனை யெல்லாங் கொன்றிடக் கொற்றங்கொ
விராவியே மீண்ட [5]தென்று மீளவும் [6]பகர லுற்றான். [ண்டு

பி-ம்:—[1]விராவின். [2]இந்த. [3]மிக்க. [4]படையை. [5]வென்றி. [6]விளம்
பும்வீரன்.

5. தந்திர முற்ற சேனை தரைப்பட மறுப்ப டாமல்
அந்தர முற்ற [1]போதங் கருமருந் தனுமன் றந்தான்
மந்திர வித்தே யெம்பி வரிசிலை வளைத்த போரில்
இந்திர சித்தும் பட்டா னிலங்கையு மழிந்த [2]தன்றே.

பி - ம்:—[1]போதே. [2]என்னே.

6. *கறங்குகால் செல்லா வெய்ய கதிரவ னொளியுங் காணு
மறம்புகா நகரந் தன்னில் வானவர் புகுதல் வம்பே
திறம்புகா தவிரு நாளுஞ் சிதைவிலா தேவருங் காலை
அறம்புகா மறத்தி னாலே யழிந்ததப் பதியு மையா.

7 மறக்கண்வெஞ் சினத்தின் வன்கண் வஞ்சக வரக்கர் யாரும்
இறக்கமற் றிறந்த தெல்லா மெம்பித னீட்டி னைந்தாய்
பிறப்புமே லுளதோ சூழ்ந்த பெருந்திசை பேரிற் போராத்
துறக்கத்தோ யாதோ பெற்று ரறிந்தருள் சுருதி நூலோய்.

8. வேறு. என்ற வாசக மிருந்தவன் கேட்டிக விராமன்
தன்று ணைப்பெருந் தம்பியைத் தழுவிநீ தக்கோய்
வென்று மீண்டிலை யாயினவ் விண்ணவர் முனிவர்
பொன்று மாறன்றி யாருயிர் [1]புரப்பதொன் றுளதோ.

பி - ம்:—[1]பொறுப்பதுபொருளோ.

9. மாத வன்சொன்ன வாய்மையை மனங்[1]கொண்டு மறை
பாத [2]முந்துற வணங்கியா முனிவனைப் பாரா [யோன்
ஏதும் யான்செய்த தில்லையவ் [3]விலங்கைமேல் வெஃகுண்டு
வேத நாயகன் [4]புருவத்தை நெரித்தனன் விளிந்தார்.

பி -ம் :—[1]கொண்ட [2]பங்கயம். [3]இலங்கையையிகலில். [4]வெகுளி
யாலிராக்கதர்.

10. அன்றி யும்பிறி துள்ளதொன் [1]றுரைசெய்வ னதுவத்
துன்று தார்புனை மாருதி பெரும்புயத் துணையால்
வென்றி கொண்டனம் யாங்கண்மேல் விளம்புவ தெவனோ
என்றி யம்பின னிருடிக்கு மிளவலு மியைந்தே.

பி - ம்:—[1]அந்தணர்க்கரசே.

11. அனுமனென்பவன் வானரமுக நோக்கின னவனும்
புனித மாதவன் றனைத்தொழாப் புண்ணியப் பொருளாம்
தனுவ லங்கொண்ட தாமரைக் கண்ணவன் றனயன்
எனும தென்கொலோ யாவர்க்குந் தந்தைநீ யென்றான்.

* இதுவும் அடுத்த செய்யுளும் ஒருபிரதியில்தான்காணப்பட்டன.

12. அங்க வன்சொல வனுமனு முரைசெய்வா னருணப்
பங்க யந்தனிற் சீதையாம் பராபரை யாட்டி
சங்க ரனயன் றன்னையுந் தரணியீ ரேழும்
தங்கு [1]பொன்வயிற் றன்னைதன் றன்மையை நிகழ்த்தும்.

பி - ம்:—[1]தன்.

13. இராக வன்பெருங் குலத்தையு மிப்பெருஞ் செல்வத்
தராத லம்புகழ் சனகன்றன் மரபையுந் தந்தென்
[1]பராப ரத்தினைப் [2]பங்கயத் தமுதெனப் பணித்தாள்
புராத னர்க்கர சேயென மாருதி புகன்றான்.

பி - ம்:—[1]பராபவத்தினை. [2]பங்கயத்தமுதெனப்பணித்தான்.

14. அன்ன வாசகங் கேட்டலு மந்தணர் கோவும்
என்ன வாசகஞ் சீதைக்கின் றியம்புவதி [1]யாமென்று
[2]ஒன்றும் வாசக முரைத்தில னுள்ளன்பு குளிர
அன்னை வாசவன் திருவினைத் தந்தனென் றறைந்தான்.

பி - ம்:—[1]யாதென்று. [2]உன்னி.

15. பண்[1]கு லாவிய சுக்கிரீ வன்றனைப் [2]பாராக்
கண்கு லாமனங் களித்தவன் கழல்மிசைப் பணிந்து
மண்கு லாம்புகழ் வீடணன் [3]நீலனே முதலாம்
எண்கின் வேந்தனு மழித்தன ரிலங்கையை யென்றான்.

பி - ம்:—[1]குலாமியல். [2]பார்ப்பக். [3]அங்கதனோடு.

16. வேறு. என்றவ னியம்பக் கேட்டங் கிருந்தமா தவனு மிந்த
[1]வென்றியாந் தானைக் கெல்லாம் [2]விருந்திடுஞ் சயன மேவிக்
குன்றென வருக வென்று கூறலு மிமையோர் [3]நாட்டில்
அன்றினி யரம்பை மார்க [4]ளமுதெடுத் தாங்கு வந்தார்.

பி - ம்:—[1]வென்றியந். [2]விருந்தொடுசயனமற்றும். [3]கூட்டத்து-
ஒன்றியவானமாதர். [4]அமுதுகொண்டெற்றானன்றே

17. வேறு. பான நெய்யுட னுணமுஞ் சாந்தமும் பல்பூண்
ஏனை வானவர் மகளிர்க ளேந்திவந் திழிந்தார்
ஆன மெய்ப்படை தம்முடைப் போகத்து ளழுந்த
ஆன கற்பினொ டுடனெழுந் திராமனு மறைவான்.

18. முனிவன் வாண்முக [1]நோக்கிமெய் முழுதுணர் முனியே
அனும [2]னுண்டகை யளித்தபே ருதவியின் றெம்மால்
நினைய வும்முறை நிரப்பவு [3]மரிதினி நீதி
புனித வுண்டியெம் முடனெனப் புரவலன் புகன்றான்.

பி - ம்:—[1]நோக்கியே. [2]என்றவன். [3]அரிதநுநிலையால்.

19. என்ற வாசகங் [1]கேட்டலு மிருந்தவத் தெவரும்
நன்று நாயகன் கருணையென் றுவகையி னவிலாத்

துன்று தாரவன் பாதுகம் தொழு[3]தருந் தொல்லோய்
ஒன்று [4]கேளென வுவகையின் மாருதி யுரைக்கும்.

பி - ம்:—[1]கேட்டந்தவிருந்தவன் முதலோர். [2]நன்றுநின் கருணை யென்றியாவரும்புகலத். [3]இனித்தோன்றல். [4]கூறுவன்கேளென.

20. [1]செய்த மாதவ முடைமையி னினக்கன்பு சிறந்து
பொய்யில் சாதனம் பூண்டவன் [2]புண்டரீ கக்கண்
ஐய நின்[3]பெருங் கருணைதா னடியனேற் கமையும்
[4]உய்யு மாறிகல் வேறுள தோவென்று மொழிந்தான்.

பி - ம்:—[1]செய்யும். [2]புண்டரிகத்தின். [3]பேரருளுண்டியென்றிணை யடியமையும். [4]உய்யுமாறெனக்காணே யென்றடிதொழுவந்தான்.

21. [1]திருந்து மாதவன் செய்ததோர் பூசனை செயவாண்டு
[2]இருந்த போதுதன் திருவுளத் திராகவ னினைந்தான்
பொருந்த மாமுடி புனைகெனப் பொருந்துமுன் போத
வருந்து தம்பிக்கு வருவன்யா னென்பதோர் [3]வாக்கை.

பி - ம்:—[1]பரிந்தமாதவப் பரத்துவன் பூசனைபகர்ந்தாண்டு. [2]இருந் தகாலையில்......எண்ணும். [3]வார்த்தை. (அகககக)

கக௨.—'இன்று எவ்விருந்தாளியாக இருக்க'என்று பரத்துவாசன் இராமனை வேண்டுதல்.

சித்திர கூடந் தீர்ந்து தென்றிசைத் தீமை தீர்த்திட்டு
இத்திசை யடைந்தெம் மில்லி னிறுத்தமை யிறுதி யாக
வித்தக [1]மறந்தி லேன்யான் விருந்தினை யாகி யெம்மோடு
இத்தின மிருத்தி யென்றான் மறைகளி னிறுதி கண்டான்.

(இ - ள்.) 'ஞானசொரூபியே! (நீ), (முன்னே) சித்திரகூடத்தை நீங்கி (த் தண்டகாரணியத்தைநோக்கிச் சென்றதுமுதல்) தெற்குத்திக் கில் (விராதன்முதல் இராவணன்இறுதியாகவுள்ள இராக்கதர்களால் உண்டான) தீங்குகளை நீக்கி(த்திரும்பி)இந்தவடக்குத்திக்கையடைந்து எமது ஆச்சிரமத்தில் தங்கினது வரையில்(நடந்தவரலாற்றைத் தத்துவ ஞானத்தினால் உணர்ந்த) யான், மறந்திலேன்: (நீ) விருந்தாளியாகி எம் முடன் இன்றைக்குமாத்திரம் இருப்பாயாக'என்று (இராமனைநோக்கி) வேண்டினான்:(யாவனெனில்),-வேதங்களின் முடிவை[வேதாந்தத்தை] யறிந்தவனான பரத்துவாசமுனிவன்;(எ-று.)பி-ம்: -[1]மறந்திலேம் யாம்.

ககங.—பரத்துவாசன் இராமனிடம் பாதனியல்பைக்கூறுவேனெனல்.

கரதல மதனி னீடு கார்முகம் வளைய வாங்கிச்
[1]சரதவா னவர்க டுன்பந் தணித்[2]துல கங்க டாங்கும்
மரகத மேனிச் செங்கண் வள்ளலே வழுவா நீதிப்
பரதன தியல்பு [3]மின்றே பணிக்குவென் [4]கேட்டி யென்றான்.

(இ - ள்.) (பின்னும் பரத்துவாசன் . இராமனை நோக்கி), 'கையி னால் நீண்டவில்லை வளையும்படிசெய்து,சத்தியத்தையுடையதேவர்களது

துன்பத்தைத் தீர்த்து [பகைவர்களான அரக்கர்களை யொழித்து] உலகங்களைக் காப்பாற்றின மரகதரத்தினம் போன்ற திருமேனிநிறத்தையும் சிவந்தகண்களையுமுடைய வரையாதருளு மியல்புள்ளவனே! தவறுதலில்லாமல் நீதியையுடைய பரதனது தன்மைகளையும் இப்பொழுதே சொல்வேன்: கேட்டி' என்றான்; (எ - று.)—அத்தன்மையை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க. பி-ம்:—[1]சரதம் [2]அளித்துலகந்தாங்கும். [3]இன்னே. [4]கேண்மின். (சககக௩)

(வேறு.)

ககூச.—இதுவும் அடுத்த கவியும் - பரத்துவாசன் பரதன்தன்மையை இராமனுக்கு எடுத்துக்கூறலைத் தெரிவிக்கும்.

வெயர்த்த மேனியன் விழிபொழி மழையன்மூ வினையைச்
செயிர்த்த சிந்தையன் றெருமர லுழந்துழந் [1]தழிவான்
அயர்த்து நோக்கினுந் தென்றிசை யன்றிவே றறியான்
பயத்த துன்பமே யுருவுகொண் டென்னலாம் படியான்.

(இ - ள்.) (பரதன்), வேர்க்கின்ற உடம்பையுடையவன்: கண்களினின்று வழிகின்ற நீர்ப்பெருக்கையுடையவன்: மூத்த [பழைய] ஊழ்வினையை வெறுத்த மனமுடையவன்: மனக்கலக்கத்தை அனுபவித்து அனுபவித்து வருந்துவான்: மறந்து (எதையாவது) நோக்கினாலும் (நீ எழுந்தருளியிருந்த) தெற்குத்திக்கையேயன்றி வேறொன்றையும் பார்ப்பவனல்லன்; அச்சத்தோடுகூடிய துன்பமே ஓருருவுகொண்டதென்று சொல்லும்படியான வடிவமுடையவன்; (எ - று.)

மூ வினை - மூத்த வினை யென வினைத்தொகை. மூன்றாகிய வினையெனப் பண்புத்தொகையாக்கி, மனம் மொழி மெய் என்னுந் திரிகரணங்களின் செயலையும் எனினுமாம். செய்தல் செய்வித்தல் உடன்படல் என்னும் புண்ணியபாவவழக்கம் மூன்றைக் கொள்ளுதலும் ஒன்று. நோக்கினும் என்ற சொல்லாற்றலால், அவன் துன்பமிகுதியால் ஒன்றையுங் கண்ணெடுத்துப்பார்ப்பதில்லை யென்பது பெறப்படும். பரதனுக்குப் பயம், இராமன் தன்சொற்படி பதினான்குவருஷங் கழித்ததும் வருவனோ வாரானோ என்ற ஐயத்தினாலாகியது. பிறவற்றுக்குங் காரணம் இதுவே. பி-ம்:—[1]இழிவான். (சகககச)

ககூரு. இந்தி யங்களை நிருங்கனி காய்நுகர்ந் திவுளிப்
பந்தி [1]வந்தபுற் பாயலான் பழம்பதி புகாது
நந்தி யம்பதி யிருந்தனன் பரதனின் னாமம்
அந்தி யும்பக [2]லதனினு மறப்பில னாகி.

(இ - ள்.) பரதன்,—ஐம்பொறிகளையும் (அதனதன்வழியே செல்லவொட்டாது) தடுத்து, (நல்லவுணவுகொள்ளாமல்) மிக்ககாய்கனிகளையே உண்டு, குதிரைகளின் வரிசை (மேய்தற்கு) எற்ற புல்லையே படுக்கையாகவுடையவன்: உனது பெயரையே இரவிலும் பகலிலும் மறவாமல் (ஜபித்துக்கொண்டு சூரியவமிசத்தார்க்குப்) பழைய இராச

தானியான அயோத்தியில் நுழையாமல் (அதனையடுத்த) நந்திக்கிராமத்தில் இருக்கிறான்; (எ - று.)—பி - ம்:—[1]எய்ந்த. [2]தன்னினும். ()

வேறு.

௧௬௬.—பரத்துவாசமுனிவர் இராமனுக்கு முகமன் கூறுதல்.

என்றுரைத் தரக்கர் வேந்த னிருபதென் றுரைக்கு நீலக்
குன்றுரைத் தனைய தோளுங் குலவரைக் குவடு மேய்க்கும்
[1]என்றுரைத் தனைய மௌலித் தலைபத்து மிறுத்த வீர
நின்றனைப் பிரிந்த [2]துண்டே யாவென்ன நிகழ்த்தி னானால்.

(இ - ள்.) என்று உரைத்து,(மீண்டும்அம்முனிவன்),—'ராக்ஷசராசனான இராவணனது இருபதென்று சொல்லப்பட்ட நீலநிறமுள்ள மலைகளை உவமைகூறத்தக்க தோள்களையும் குலபர்வதங்களின் சிகரங்களையும் ஒத்திருக்குமென்று உவமைகூறினால் அதற்கு ஏற்ற கிரீடம்அணிந்த பத்துத்தலைகளையும் அறுத்தொழித்த வீரனே! யான் உன்னைப் பிரிந்தது உண்டோ? [எப்பொழுதும் மனத்தில் உன்னையே தியானித்துள்ளதனாற் பிரிந்தேனல்லேன்]'என்று(ங்)கூறினான்,பரத்துவாசன்.

இராவணனது தலைகளுக்குக் குலபருவதமும், அவற்றிலணிந்த கிரீடங்களுக்கு அம்மலைகளின்சிகரங்களும் ஏற்ற உவமையாம். கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம்என்ற இந்தவெட்டும் குலவரைகளாம். பி-ம்:—[1]மின்றிரைத்தனைய. [2]உண்டோ. (௪௧௧௬)

௧௬௭.—இராமன் பரத்துவாசனைநோக்கிக் கூறிய விநயவார்த்தை.

[1]மின்னையே [2]யுழையி னானும் விரைமலர்த் தவிசி னானும்
நின்னையே புகழ்தற் கொத்த நீதிமா தவத்தின் மிக்கோய்
[3]உன்னையே வணங்கி யுன்ற னருள்சுமந் துயர்ந்தேன் மற்றிங்கு
என்னையே பொருவு மைந்தன் யானலா தில்லை யென்றான்.

(இ - ள்.) 'மின்னலைப்போன்ற உமாதேவியை அழகிய (தனது இடப்)பாகத்தி லுடையவனான சிவபெருமானும் வாசனையுள்ள தாமரைமலரை இருப்பிடமாகக்கொண்ட பிரமனும் உன்னையே துதிப்பதற்குத் தகுந்த முறைமையையுடைய சிறந்த தவத்தில் உயர்ந்தவனே! உன்னை வணங்கி (நான் அனைவரினுஞ்சிறந்தவனான) உனது அருளை மிகுதியாகப்பெற்று மேன்மையடைந்தேன்; (ஆதலால்), என்னையொத்த மைந்தன் யானன்றி வேறுஎவரும் இவ்வுலகத்தில் இல்லை' என்று (இராமன் பரத்துவாசனை நோக்கிக்) கூறினான்; (எ - று.)

'மின்னையேயுழையினான்' என்பதற்கு - மின்னலைப்போல விளங்குகிற மானை இடக்கையிற் கொண்டவனென்றும் கூறலாம். மான்-தாருகவன முனிவரால் ஏவப்பட்டுத் தன்னைக்கொல்ல வந்தது. பி - ம்:—[1]பின்னையேர். [2]மழுவினானும். [3]என்னையே. (௪௧௧௭)

௧௯௮, ௧௯௯.—இரண்டுகவிகள்-ஒருதொடர்: பரத்துவாசமுனிவன் இராமனை 'வேண்டியவரங்கேள்' என்றலையும், இராமன்கேட்டபடி முனிவன்வரந்தந்தலையும் கூறும்.

அவ்வுரை புகலக் கேட்ட வறிவனு மருளி னோக்கி [று
வெவ்வரம் பொருத [1]வேலோய் [2]விளம்புவேன் கேட்டி வேண்டிற்
எவ்வர மெனினுந் தந்தே னியம்புதி [3]யெனலு மையன்
கவ்வையின் றாகி வென்றிக் கவிக்குலம் [4]பெற்று வாழ்க.

அரியினஞ் சென்ற சென்ற வடவிக ளனைத்தும் வானஞ்
சொரிதரு பருவம் [5]போன்று கிழங்கொடு [6]கனிகாய் துன்றி
விரிபுனல் செழுந்தேன் மிக்கு [7]விளங்குகென் றியம்பு கென்றான்
புரியுமா தவனு மஃதே யாகெனப் புகன்றிட் டானால்.

(இ-ள்.)(௧௯௮)(இராமபிரான்)அவ்வார்த்தைசொல்லக்கேட்ட தத்துவஞானமுடையனான பரத்துவாசமுனிவனும், (அவனை) அன்புடன் பார்த்து, 'கொடியஅரத்தினால் அராவிக்கூர்செய்யப்பட்ட வேலையுடையவனே! (ஒன்று) கூறுவேன்: (நீ அதனைக்) கேட்பாயாக: (அது யாதெனில், நீ விரும்பியது எந்தவரமாயினும் (அதனை உனக்கு உண்மையாகத்) தந்தேன்: (உன் விருப்பத்தைச்) சொல்வாயாக' என்று கூறினவுடனே, அவ்விராமபிரான், 'வெற்றிபெற்ற வானரக்கூட்டம் துன்பமில்லாமல் (வேண்டியவற்றைப்) பெற்று வாழக்கடவது: (௧௯௯) வானரக்கூட்டம் இஷ்டப்படி செல்லுகின்ற வனங்களெல்லாம் மழைபொழிகின்ற காலத்தில் (செழித்திருப்பது) போன்று கிழங்குகளும் பழங்களும் காய்களும் நிறையப்பெற்று மிக்கநீரும் சிறந்த தேனும் நிறையப்பெற்று விளங்கக்கடவன என்று வரங்கொடுப்பாயாக' என்று (பரத்துவாசனை நோக்கி) வேண்டினான்; மிக்கதவத்தைச் செய்பவனாகிய அம்முனிவனும், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி வரம் அருளினான்; (எ - று.)

இராமபிரான் முன்பு தேவர்களிடத்தும் இப்பொழுது பரத்துவாசனிடத்தும் வானரங்களைப்பற்றிய ஒருவரத்தையே கேட்டது, அப்பெருமான் குரங்குகளிடத்துச் செய்ந்நன்றி பாராட்டினமையை விளக்கும்.

பி-ம்:—[1]வேலாய். [2]விரும்பியே. [3]என்ன. [4]வாழ்கவென்றான். [5]போலக். [6]கனியுந்துன்னி. [7]விளங்கென விளம்புகென்றான். (௪௧௧௯)

௨௦௦.—பரத்துவாசமுனிவன் எல்லோர்க்கும் விருந்தளித்தல்.

அருந்தவ னைய நின்னோ டனிகவெஞ் சேனைக் கெல்லாம்
விருந்தினி தமைப்பெ னென்னா விளங்குமுத் தீயி னப்பண்
புரிந்தொரா குதியை யீந்து புறப்படு மளவிற் போகம்
திருந்திய வான நாடு சேரவந் திறுத்த தன்றே.

(இ - ள்.) அருமையான தவத்தைச் செய்துள்ளவனான பரத்துவாசமுனிவன், (இராமனை நோக்கி), 'தலைவனே! உனக்கும் அணிவகுப்பையுடைய (உன்னுடைய) விரும்பத்தக்க எல்லாச்சேனைகட்கும் இனி

மையாக விருந்துணவு அளிப்பேன்' என்றுகூறி,சொலிக்கின்ற (ஆகவநீயம் கார்ஹபத்தியம் தக்ஷிணாக்கினி என்னும்) மூன்றுபகுப்பினையுடைய அக்கினியின் நடுவில் ஓர் ஆகுதியை (இஷ்டதேவதையைக்குறித்து) விரும்பிச்செய்து (முடித்து) வெளிவரும்போது, இன்பங்கள்நிறைந்த சுவர்க்கவுலகம் அங்குச் சமீபத்தில் வந்துதங்கியது; (எ - று.)

. பரத்துவாசன் இராமனுக்கு விருந்தளிக்கவேண்டித் தேவர்களைக் குறித்து அக்கினியில் ஓமஞ்செய்தபொழுது, அவர்களது அருளால் தேவலோகத்திலுள்ள பலவகைச்சிறப்புக்களும் முனிவனது ஆச்சிரமத்தில் வந்து நிறைந்தன வென்க. வானநாடு - அதிலுள்ளபலவளங்களுக்கு ஆகுபெயர். (சுகஉ0)

உ0க.--அப்பொழுது இராமன் அநுமானை நோக்கி ஒன்றுகூறத்தொடங்கல்.

அரசரே யாதி யாக வடியவ ரந்த மாகக்
கரைசெய லரிய போகந் துய்க்குமா கண்டி ராமற்கு
அரசியல் வழாமை நோக்கி யறுசுவை யமைக்கும் வேலை
விரைசெறி கமலக் கண்ண னநுமனை விளித்துச்[1]சொன்னான்.

(இ - ள்.) சுக்கிரீவமகாராசன் முதலாக அடிமைசெய்வோர் வரையிலும் [யாவரும்] (தான்செய்விக்கிற விருந்துபசாரத்தினால்) அளவுகாணமுடியாத இன்பத்தை அனுபவிக்கும்விதத்தை (பரத்துவாசன்) பார்த்து(ப் பின்பு), இராமபிரானுக்கு அரசவுரிமைதவறுதபடி கவனித்து அறுவகைச் சுவையையுடைய உணவுகளை அமைக்கும்போது,--வாசனைமிக்க தாமரைமலர்போன்ற கண்களையுடையனான இராமன் அநுமானை அழைத்து (ஒன்று) கூறுபவனானான்; (எ - று.)---அதனை, மேற்கவியிற் காண்க.

அறுசுவை - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஆறுசுவைகளாவன - கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு. அரசனான இராமனுக்கு உதவிசெய்ததனால், சுக்ரீவன், மகாராஜனெனப்படுவன்; அத்தன்மை தோன்ற, சிறப்பாக 'அரசர்' என்றார்: இதில் ராக்ஷசராசனான விபீஷணனும் அடங்குவன். பி-ம்:—1சொல்வான், (சுகஉக)

வேறு.

உ0உ.---இராமன் அநுமானைப் பரதனிடம் அனுப்புதல்.

இன்று [1]நாம் பதி [2]வருதுமுன் மாருதி [3]யீண்டச்
சென்று [4]தீதின்மை செப்பியத்[5]தீயவித் திளையோன்
நின்ற [6]நேர்மையு நினைவுநீ தேர்ந்தெம்பி னேர்தல்
நன்றெ னாவவன் [7]மோதிரங் கைக்கொடு நடந்தான்.

(இ - ள்.) 'அநுமானே! நீ நாம் அயோத்திக்கு வருதற்குமுன்பே இப்பொழுது விரைவாகச் சென்று, (நந்திக்கிராமத்திலுள்ள பரதனுக்கு எனது) க்ஷேமத்தைக் கூறி, (அவன் மனத்திலுள்ள பயமாகிய) அந்த அக்கினியைத் தணித்து (எனது) தம்பியாகிய அப்பரதன் மேற்கொண்டு நின்ற

ஒழுக்கத்தையும் (அவனது) எண்ணத்தையும் ஆராய்ந்தறிந்து, எம்மிடத்து வந்து சேர்தல் நல்லது' என்று கூறி, (அடையாளமாகத் தனது மோதிரத்தைக் கொடுக்க),அவ்வநுமான்,அந்தமோதிரத்தைக் கையில் வாங்கிக்கொண்டு சென்றான்; (எ - று.)

இராமன் தான் குறித்தகாலத்தில் வாராவிடின் அக்கினிப்பிரவேசஞ்செய்வேனென்று முன்பு பிரதிஜ்ஞைசெய்திருந்தபடி பரதன் தீமூட்டியிருப்பானென ஊகித்து 'அத்தீயவித்து'என்று கூறியதாகவுங் கொள்ளலாம். இளையோன்நினைவு-தானே அரசாள்வது, இராமன் அரசாள்வது, இராமன்தன் நாட்டில்வராமலேயிருப்பது ஆகியஇம்மூன்றில் அவனுடைய விருப்பமானது. பி-ம்:---[1]நம். [2]போகலம், எகலம், எகுமுன் [3]ஈண்டிச், இன்னே, அன்னே. [4]நம்வரவுரைத்துவெந். [5]தீமையுந்தீர்த்து, தீமையும்விலக்கி. [6]காலையின்வருதுமென்றேயினனெடியோன், காலையின்வருதியென்றேயினனெடியோன். [8]ஆழியும். ஒருபிரதியில் பாத்துவாசப்படலம் இதனோடுமுடிய, மேல் பரதனுயிர்வநுபடலம் தொடங்குகின்றது. அந்தப்பிரதியில் குகனைப்பற்றிப் பின்பு காட்டப்படும் செய்யுள்களில்லை. சிலபிரதிகளில் பாத்துவாசனுச்சிரமப்படலம் இதனோடுமுடிய, மேல் பரதன்விரதப்படலம் தொடங்குகின்றது. அந்தப் பிரதிகளில் குகன்செய்தியைத்தெரிவிக்கும் பாடல்களுள்படப் பரதன் விரதப்படலம் என்ற பெயர்பெற, வேறொருபிரதியில், குகன் விரதப் படலம்என்று பெயர்பூண்டு ஒருபடலம் தொடங்குகின்றது. (சகஉஉ)

உ0௩.—அநுமான் பாதனிடத்துக்குச் செல்லுதல்.

தந்தை வேகமுந் தனதுநா யகன்றனிச் சிலையின்
முந்து சாயகக் கடுமையும் பிற்பட முடுகிச்
சிந்தை பின்வரச் செல்பவன் குகற்குமச் [1]சேயோன்
வந்த வாசகம் [2]கூறிமேல்[3]வான்வழி போனான்.

(இ - ள்.) (தனது) தந்தையாகிய வாயுவின்வேகமும் தனதுதலைவனை இராமபிரானது ஒப்பற்றவில்லினின்று புறப்படுகிற அம்பின் வேகமும் (தனதுவேகத்துக்கு ஈடாகாமற்) பிற்படும்படி விரைந்து, (தனது) மனமும் பின்னாகும்படி போகின்றவனாகிய அநுமான்,--- (இடைவழியிலுள்ள) குகனுக்கும், செவ்வியகுணங்களையுடைய அந்த இராமபிரான் எழுந்தருளிய செய்தியைக்கூறி,பின்பு,ஆகாசமார்க்கமாக (ப் பரதனைநோக்கி) ச் சென்றான்; (எ - று.)---பி-ம்:—[1]செல்வன். [2]கூறவும், கூறென, கூறியே. [3]வான்வழிச்சென்றான். குகன் விரதப்படலம் உள்ள பிரதியில் ஒருசெய்யுள் உள்ளது வருமாறு:—

*மாருதி விடைகொண் டேக வரதனு மறையோன் பாதம்
ஆருளோடு நீட வணங்கின னவனு மாசி
சீரிது கூறிச் சேறி யென்றலும் மானஞ் சேர்ந்து
போரியல் தானை யோடும் பொருக்கென வெழுந்து போனான்.

---

* இச்செய்யுளின் சொற்பொருள்கள் பெரும்பாலும் ஒத்திருக்கச் செய்யுள்வருவதை [உகூக-21-இல்]காணலாம்.

*சிலபிரதிகளில் இங்குச் சிலசெய்யுள்கள் காணப்படுகின்றன: அவை குகன்செய்தியைக் கூறும்: அவை வருமாறு:—*

1. வேறு. மானேர் விழியா ளுடனே வனமுன்
[1]போனா னொருநாள் வருநா ளிலதோ
தேனே யமுதே தெளிவே [2]தெளிவின்
ஊனே யுயிரே வுலகா ளுடையாய்.

பி - ம்:—[1]போனார். [2]தெளிவின்று.

2. வேறு. அம்பவளச் செவ்வா யணிகடகச் சேவகனை
வம்பவிழுஞ் [1]சோலை கோசலநா டுடைவள்ளல்
எம்பெருமா னென்னை யிழிகுலத்து நாயேனைத்
தம்பியென வுரைத்த தாசரதி தோன்றானே.

பி - ம்:—[1]சோலைசூழ்.

3. வாழி மலைத்திண்டோட் சனகன்றன் [1]மாமயிலை
ஏழுலக மாளு மிறைவன் மருமகளைத்
தாழ்வில் பெருங்குணத்தாள் தானுன் கொழுந்தியீ
தோழ னென [2]வுரைத்த தோன்றலார் தோன்றாரோ.

பி - ம்:—[1]மாமகளை. [2]உரைக்கும்.

4. வேறு. துங்க விற்கரத் தோழனார் சொன்னநாள்
இங்கு வந்திலர் யானிறப் பேனென்னா
மங்கை மாரும் படையும்வன் சுற்றமும்
அங்கு நீர்க்கங்கை யம்பியி லேற்றினான்.

5. வேறு. *வேத நாதனும் வில்லியும் விரைமலர்த் திருவும்
ஏது செய்யினு மென்னுயிர் முடிப்பனென் [1]றெண்ணி
ஓத [2]நீரிடை யோடம துடைத்துயிர் விடுவான்
காத லாருடன் கங்கையி னடுவுறச் சென்றான்.

பி - ம்:—[1]உன்னி. [2]நீரினில், நீரிலே.

6. வேறு. கண்ணுந் தோளும் வலந்துடிக் குங்கரை
வண்ணப் புள்ளும் வலியும் வலத்திலே
[1]எண்ணுங் காலையி லேயெழில் மாருதி
அண்ணல் வந்தன னென்றுரை யாடினான்.

பி - ம்:—[1]பண்ணுங்காலைவந்தே. ஒருபிரதியில் இச்செய்யுள் "உள்ளவான்கிளை" என்ற அடுத்தசெய்யுளின்பின் உள்ளது.

7. உள்ள வான்கிளை யேற்றி யுயர்குகன்
வெள்ளக் [1]கங்கையி னுக்கி விரைந்தவண்
[2]உள்ளு நெற்றி யுடைப்பள விற்புகும்
வள்ள லார்விடு மாருதி தோறினான்.

பி - ம்:—[1]கங்கையினோக்கி. [2]உள்ளிலேற்றி.

---

* குகப்படலமென்று தனியேயிராதபிரதியொன்றில், 5, 8, 10, 11 பாடல்கள் காணப்படுகின்றன.

8. ஓங்கு வாலினை யோட்டியவ் வோடங்கள்
[1]தீங்கு றுவகைச் சுற்றிக் குறுகிநீர்
ஆங்கு [2]நின்றங் கவைவலித் தானவை
[3]தீங்கி லாவகை தென்கரை சேர்ந்தவால்.

பி - ம்:—[1]நீங்கிடாவகைச்சுற்றிநெருக்கினன். [2]நின்றுவலித்தனன், [3]தீங்குதீர்த்தெனத்...சேரவே.

9. வேறு. கையார் வெஞ்சி லைக்கருணா கரற்குக் காதலுடைத்தோழ, மையார் சிருங்க வேரபுர முடையாய் மிகுகோசலைகளிறு, மையார் நிறத்தான் வந்தொழிந்தான் மிதிலை வல்லியவளுடனே, ஐயா வந்தான் றம்பியொடு மடியே முய்ய வந்தானே.

10. வேறு. ஆருனை யுரையென வனுமன் கூறுவான்
சீரிய வாயுவின் [1]றோன்றல் [2]சீரியோய்
[3]சூருடை யிராமற்குத் தூத [4]னென்றுளது
[5]ஏருடைத் தலையின்மே லெழுதப் பட்டுளேன்.

பி - ம்:—[1]புதல்வன். [2]செவ்வியோய். [3]தாருடை, ஏருடை. [4]என்றெனை. [5]ஏர்கொள்வேல்தோளினுயென்றுகூறினன்,ஏருள...தானென.

11. பரதனைத் தீயையும் விலக்கிப் பாருடை
வரதனை யிராமனை[1]மாறிக் காண்பது
சரதமே யினியிறை தாழ்க்கொ ணுதெனுக்
கரதலத் தாழியுங் காட்டிப் போயினன்.

பி - ம்:—[1]மறித்துங். (சகஉரு)

வேறு.

உ௦ச.—கவிக்கூற்று-இராமன் தென்றிசையிற்செய்த செயலைக் கூறின நாம், இனி அயோத்தியின்செயலைக் கூறுவோமெனல்.

இன்றி சைக்[1]கிட மாய விராகவன்
தென்றி சைக்கரு மச்செயல் செப்பினும்
[2]அன்றி சைக்கு [3]மரிய [4]வயோத்தியில்
நின்[5]றி சைத்துள தன்மை நிகழ்த்துவாம்.

(இ - ள்.) இதுவரையிலும் புகழுக்கு ஆதாரமாயுள்ள இராமபிரான் தெற்குத்திக்கிற் சென்று செய்த செய்திகளைச் சொன்னோம்; (இனிமேல் அநுமான் சென்ற) அக்காலத்தில், (யாவராலும்) புகழப்படுகிற (பகைவர்களாற் கிட்டுதற்கு) அருமையான அயோத்தியபட்டணத்தில் பொருந்திநடந்த வரலாற்றைக் கூறுவோம்; (எ-று.)

ஒருநகரத்துக்குச் சமீபத்திலுள்ள சிற்றூரி லுள்ளவர் அந்நகரத்தைத் தமக்குஇடமாகச் சொல்லிக்கொள்ளுதல்போல, அயோத்தியின் மிகச்சமீபமான நந்திக்கிராமத்தில் நடந்த பரதன் வரலாற்றையும் அயோத்தியில் நடந்ததாகவே குறித்தார். பி-ம்:—[1]இடன். [2]இன்று.

[3]இனிய. [4]அயோத்தியுள். [5]இசைக்கின்ற. குகன்விராதப்படலம் என்று பெயருள்ள பிரதியில் இதனோடு அப்படலம் முடிய, இனிப் பரதன்விரதப்படலமென்று காண்கின்றது. (சகஉச)

உ0௫.—இதுமுதல் ஐந்துகவிகள்-பரதனது நிலைமையைக் கூறும்.

[1]நந்தி யம்பதி யின்றலை [2]நாடொறுஞ்
சந்தி யின்றி நிரந்தரந் தம்முனார்
[3]பந்தி யங்கழற் [4]பாத மருச்சியா
இந்தி யங்களை வென்றிருந் தானரோ.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நந்திக்கிராமத்திலே தினந்தோறும் (பூசனைக்கென்று ஏற்பட்ட காலை நண்பகல் மாலை என்ற மூன்று) சந்தியாகாலங்களை (யே பூசாகாலமாகக்கொள்ளுதலை) யின்றி இடைவிடாமல் [எப்பொழுதும்] தனது தமையனாரான இராமபிரானது ஒழுங்கான அழகிய வீரக்கழலையணிந்ததிருவடிகளை [பாதுகையை]ப் பூசித்துக்கொண்டு, (தனது) ஐம்பொறிகளையும்(புலன்வழிப்போக்காமற்)பாதுகாத்துத் தன்வசப்படுத்தியிருக்குந் தன்மையையுடையவனும்,—(எ - று.)

"நந்தியம் பதியிடை நாதன் பாதுகஞ், செந்தனிக்கோன்முறை செலுத்தச் சிந்தையான், இந்தியங்களை யவித்திருத்தல் மேயினன், அந்தியும் பகலும் நீரறாத கண்ணினன்" என்றார் அயோத்தியாகாண்டத்திலும். இருந்தான்என முற்றாகக்கொள்ளுதலுமொன்று. மேலிற்கவிகளிலும்இப்படியே. பி - ம்:---[1]நந்தியின். [2]நாளெலாம், நான்வரும். [3]அந்தி. [4]பாதமதர்ச்சியா. (சகஉ௫)

உ0௬. துன்பு ருக்கவுஞ் [1]சுற்றி யுருக்கொணா
என்பு ருக்குந் [2]தகைமைய திட்டதாய்
முன்பு ருக்கொண் டொருவழி [3]முற்றுறு
அன்பு ருக்கொண்ட தாமென [4]லாகுவான்.

(இ - ள்.) (இராமனைப் பிரிந்த) துன்பமாகிய பெருங்கொடுந்தீ சூழ்ந்துவெதுப்புதலால் (வேறுஎவ்வகையினாலும்) உருக்கமுடியாததான எலும்பும் உருக்கப்படுந்தன்மை பொருந்தியதாக,—முன்பு ஓரிடத்திலும் [ஒருகாலத்திலும்] வடிவங்கொண்டு நிரம்பாததான அன்பெனுங்குணந் தானே ஒரு வடிவங்கொண்டதாகுமென்று சொல்லும்படியிருப்பவனும்,—(எ - று.)

எவ்வாற்றாலும் உருகாததான எலும்பும் இராமவிரகதாபத்தால் உருகும்படி யாயினன் பரதனென்பது, முன்னிரண்டடியின் கருத்து. 'உருக்கவும்' என்ற உம்மை, எடுத்து 'என்பு' என்பதனோடு கூட்டப்பட்டது. எக்காலத்திலும் எவ்விடத்திலும் வடிவங்கொண்டு காணப்படாததான அன்பு ஒருவடிவங்கொண்டதுபோலத் தோன்றுகிறான் இவனென்று காண்பவரனைவருஞ் சொல்லும்படியாயினன் பரதன் என்பது, பின்னிரண்டடியின் கருத்து. "குடத்துள் விளக்கும் தடற்

றுள் வாளும்போல இதுகாண் அன்பென்று தந்துகாட்டலாகாது; அன்புடையரான குணங் கண்டவிடத்து இவை உண்மையான் அங்கு அன்புஉண்டென்று அநுமித்துக்கொள்ளற்பாற்று: அன்புடையரான குணம் யாவையோ வெனின்?—சாவிற்சாதல், நோவின்நோதல், ஒண்பொருள்கொடுத்தல், நன்கினிதுமொழிதல், புணர்வுநனிவேட்டல் பிரிவுநனியிரங்கல் என இவை'' என்ற இறையனாரகப்பொருளுரையாலும், ''நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு, ஆவயின்வரூஉங் கிளவியெல்லாம், நாட்டிய மரபின் நெஞ்சுகொளினல்லது, காட்டலாகாப் பொருளவென்ப'' என்ற தொல்காப்பியத்தாலும் அன்பிற்கு இயல்பில் உருவமில்லாமையை உணர்க: அது, உண்மைமாத்திரமுணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாத தெனப்படும். பி-ம்:—[1]சுற்றமுருக்கவும், சுற்றமுருக்கொளூ,துற்றியுருக்கொளூ. [2]தன்மையினீட்டதாய், தகைமையினீட்டத்தான், தகைமையினீட்டத்தாய், தகைமையீீட்டிதாய். [3]முற்றுற, முற்றற. [4]ஆயினன். (௪௧௨௬)

௨௦௭. [1]நினைக்க வுந்[2]தடங் கண்ணிணை நீர்வர
[3]இனத்த தண்டலை நாட்டிருந் தேயுமக்
[4]கனத்த கந்தமுங் காயுங் [5]கனிகளும்
[6]வனத்த [7]வல்ல வருந்தலில் வாழ்க்கையான்.

(இ - ள்.) (இராமபிரான் காட்டுக்குச்சென்றதை) நினைத்தமாத்திரத்திலே விசாலமான(தனது)இரண்டு கண்களினின்றும் நீர்பெருகக் கூட்டமான சோலைகளையுடைய நாட்டிலே (தான்) இருந்தும், அந்தப் பருத்த கிழங்குகளும் காய்களும் பழங்களும் ஆகிய வனத்திலுள்ளன அல்லாதவற்றை [நாட்டினுள்ளபொருள்களை] உண்ணுதலில்லாத[உண்ணாத] உயிர்வாழ்க்கையையுடையவனும்,—(எ - று.)

பரதன் தான் காட்டிலன்றி நாட்டிலே வசித்தாலும் நாட்டாருண்ணும்உணவுகளைக் கொள்ளாமல், வனவாசஞ்செய்கிற இராமபிரான் போலவே காட்டிலுள்ளனவான காய்கனிகிழங்குகளையேயுண்டு உயிர்வாழ்பவனாயிருந்தன னென்க. பி - ம்:—[1]நினைத்த, நினைந்த. [2]தருங்கற்பகநேர்வரும், தடங்கண்ணிணைநீரவாய். [3]நனைத்த, நனைந்த. [4]கனிந்த. [5]கனியுமவ். [6]வனைந்த. [7]அல்லது. (௪௧௨௭)

௨௦௮. நோக்கிற் றென்றிசை யல்லது[1]நோக்குறான்
ஏக்குற் றேக்குற் றிரவி குலத்துளான்
வாக்கிற் பொய்யான் வரும்வரு மென் றுயிர்
போக்கிப் போக்கி [2]யுழக்கும் பொருமலான்.

(இ - ள்.) கண்ணெடுத்துப்பார்ப்பதாயிருந்தால் (இராமன் வனத்தினின்று வரக்கூடிய) தெற்குத்திக்கைப் பார்ப்பதேயன்றி (வேறொரு திக்கையும்) பாராதவனாய்,—(தமையனாரைநினைத்து மனம்) மிகவும் ஏங்கி 'சூரியகுலத்தவனாகிய இராமபிரான் வாக்கினாற் பொய்கூறாத

லால் நிச்சயமாய் வருவன்' என்று எண்ணி, மிகுதியாகப் பெருமூச்சு விட்டு வருந்துகின்ற புலம்புதலையுடையவனும்;—(எ - று.)

'வாக்கின்'என வேண்டாதுகூறினது, தான் ஒருகாற் பேசினைத் தாலும் தன்வாய் ஒருபொய்யையும் பேசா தென்று அறிவித்தற்காக. பி-ம்:—[1]நோக்குறூ. [2]அழைக்கும், இழைக்கும், உழைக்கும். இச்செய்யுள் சிலபிரதியில்"உண்ணுநீர்க்கு"என்ற அடுத்தபாடலின்பின்உள்ளது.

க0௯. உண்ணு நீர்க்கு முயிர்க்கு [1]முயிரவன்
எண்ணுங் கீர்த்தி யிராமன் [2]திருமுடி
மண்ணு நீர்க்கு [3]வரம்புகண் டாலன்றிக்
கண்ணி[4]னீர்க்கொர்[5]கரையெங்குங் காண்கிலான்.

(இ - ள்.) (பிராணதாரமாகப்) பருகுகின்ற தண்ணீர்க்கும் ஜீவாத்மாவுக்கும் உயிர்போன்ற தன்மையையுடையவனான (யாவராலும்) நன்குமதிக்கப்படுகிற புகழையுடைய இராமபிரானது (பட்டாபிஷேக காலத்தில்) திருமுடியைக் கழுவிவிழும் நீர்க்கு ஓரெல்லையைக் கண்டாலல்லாமல் (தன்) கண்ணினின்று பெருகும் நீர்க்கு ஒருமுடிவை எவ்விடத்தும் காணப்பெறாதவனும்,—(எ - று.)

இராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் நடந்தேறினாலன்றிப் பரதனுக்குத் துயரம் நீங்காது என்பது, கருத்து. வரம்பு - சமயம். கரை-முடிவெல்லை. நீர்க்குஉயிரவன் என்றது-எல்லாப்பிராணிகளும் தரித்திருப்பதற்கு இன்றியமையாததான நீரும் அவனதீனமாயிருக்குமென்றபடி. பி - ம்:—[1]உயிரதாய், உயிர்தா, உயரவைத்து, உயர்வதே. [2]திருவடி. [3]வரம்புமுண்டாலன்றிக், வரம்புமுண்டாமென்பான். [4]நீர்க்குங், நீர்க்குக். [5]கரையொன்றும். (சகஉக)

உக0.—'இராமன் வரவேண்டியதுஎந்நாள்?'என்றுபரதன்ஆலோசித்தல்.

அனைய னைய பரத னலங்கலிற்
புனையுந் தம்முனர் [1]பாதுகைப் பூசனை
நினையுங் [2]காலை [3]நினைத்தன னைமரோ
மனையின் வந்தவ னெய்த மதித்தநாள்.

(இ-ள்.) (கீழ்க்கூறிய) அப்படிப்பட்டதன்மையையுடையனான பரதன் பூமாலையினால் அலங்கரிக்கப்பட்டனவான தமையனாரது மரவடிகளின் பூசையைச்செய்ய எண்ணினகாலத்தில், அவ்விராமபிரான் (தன்) அரண்மனையில் மீண்டுவந்து சேர்தற்குக் குறிப்பிட்டுள்ள நாளைப்பற்றி ஆலோசித்தான்; (எ - று.)—பி - ம்:—[1]பாதுகபூசனை. [2]காலம். [3]நினைந்தனன். (சகக0)

உகக.—'இராமன் வரவேண்டியநாள் இன்றுதான்' என்று சோதிடர்கள் பரதனுக்குத் தெரிவித்தல்.

[1]யாண்டு வந்திங் கிறுக்குமென் றெண்ணினன்
மாண்ட சோதிட வாய்மைப் புலவரை
ஈண்டுக் கூய்த்தரு [2]கென்னவந் தெய்தினர்
ஆண்ட கைக்கின் [3]றறுதியென் றுரரோ.

(இ-ள்.) '(இராமபிரான்) எப்பொழுது இங்கே வந்துசேர்வான்?' என்றுநினைத்தவனான பரதன்,—(தனது ஏவலாளரைநோக்கி), 'மாட்சிமைப்பட்ட சோதிடம்வல்ல உண்மைப்புலவர்களை இங்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்' என்று கட்டளையிட,(அவர்கள் போய்ச் சொன்ன வளவில் அச்சோதிடர்கள், அங்கு)வந்து சேர்ந்து, (இராமபிரான் வர வேண்டியநாளைக்குறித்து உடனே பரதன் வினவியதற்கு), 'ஆண்மைக் குணமுடையனான இராமபிரானுக்கு இன்றைத்தினம் (பதினான்குவருடமும்) முடியுங் காலம்' என்று கூறினார்கள்; (எ - று.)—அறுதி-மீண்டு வந்துசேரவேண்டிய எல்லை யென்க. பி-ம்:—1ஆண்டுவந்திங்கடுக்கும், ஈண்டுதான்வந்திறுக்கும், யாண்டுமின்றுடறுதி. 2என்றனன். 3அவதி.

உகஉ.—சோதிடர்வார்த்தையைக்கேட்டுப் பரதன் மூர்ச்சித்துவிழுதல்.

என்ற 1போதத் திராமன் வனத்திடைச்
சென்ற 2போதத்த தவ்3வுரை செல்வத்தை
வென்ற 4போதத்த வீரனும் வீழ்ந்தனன்
கொன்ற 5போதத் துயிர்ப்புக் குறைந்துளான்.

(இ - ள்.) என்று (சோதிடர்கள்) சொன்னபோது, (அரசாட்சிச்) செல்வத்தை (த் தனக்கு வேண்டாவென்று) வெறுத்துவிட்ட நல்லறிவுடைய வீரனாகிய பரதனும், (இராமனைத் திருப்பியழைத்துவருதற்காகத் தான்) வனத்திற் சென்றபோது (தன்னைநோக்கிக்) கூறியதாகிய இராமனதுஅந்தவார்த்தை (தன்மனத்திற்குவந்து தன்னை) மிக வருத்தியபோது மூச்சுஅடங்கியவனாய் [மூர்ச்சித்து] விழுந்திட்டான்.

தனது தாயின்முயற்சியால் தனக்குக்கிடைத்த அரசச்செல்வத்தைக் கைக்கொள்ளாது பற்றுவிட்டு அதனை மூத்தவனானஇராமற்கே யுரியதாக்கி அவன் வனஞ்சென்றிருந்தகாலத்தும் அவனதுதிருவடி நிலைக்கே முடிசூட்டி ஆண்டமையால், பரதனை 'செல்வத்தை வென்ற போதத்த வீரன்' என்றார். கீழ் வனத்திற் சித்திரகூடத்திலே "ஆமெனி லேழிரண் டாண்டிலையநீ,நாமநீர் நெடுநகர் நண்ணிநானிலங்,கோமுறை புரிகிலை யென்னிற்கூரெரி, சாமிது சரதம் நின் னாணை சாற்றினேன்" என்று பரதன் கூறினதற்கு, இராமன் உடன்பட்டு "அன்னதாக" என்றதை, இங்கே 'அவ்வுரை' என்றது குறிக்கும். அங்ஙனம் வாராமை குறித்து வருந்தலானான். பி - ம்:—1போதில். 2போழ்தொத்து, போதொத்தது. 3உரைச்செல்வனை. 4ஓதத்து, போதத்து. 5போழ்தொத்து, போதொத்து. (சக௩உ)

உக௩.—நான்துகவிகள் - இராமன் வாராமைபற்றிப் பரதன் பலவாறு சிந்தித்து வருந்துதலைத் தெரிவிக்கும்.

மீட்டெ ழுந்து 1விரிந்தசெந் தாமரைக்
காட்டை 2வென்றெழு கண்கலு ழிப்புனல்
3ஓட்ட 4வுள்ள முயிரினை 5யூசனின்று
ஆட்ட வும் 6மேவ லத்தழிந் தானரோ.

(இ - ள்.) (பரதன் மூர்ச்சைதெளிந்து) திரும்பவும் எழுந்து, மலர்ந்த செந்தாமரைத்தொகுதியை வென்றுவிளங்குகின்ற(தனது)கண்கள் கலங்கியநீரை உகுக்கவும், (தன்)மனம் (இராமன் வராமையைப்பற்றிய கவலையைக்கொண்டு) நின்று உயிரை ஊசலாட்டவும், துன்பத்திஞல் நிலைகலங்கிஞன்; (எ - று.)

இராமன் வரவில்லையே யென்னுங் கலக்கத்திஞற் பரதனுக்கு உயிர்போவதும்,மீண்டும் இராமன் எழுந்தருளிஞற் காணலாமே யென்னும் ஆசையிஞல் அவ்வுயிர் மீண்டுவருவதுமா யிருந்த தென்க.பி-ம்:—[1]விரைச்செழுந். [2]வென்றதன், வென்றுளிர். [3]ஆட்ட. [4]உள்ள. [5]ஊசிநின்று. [6]மலர்த்தாள்களருச்சியா. (சகஙங)

உகசு. எனக்கி யம்பிய நாளுமென் னின்னலுந்
தனைப்ப யந்தவ[1]ளேயமுந் தாங்கியவ்
வனத்து வைகல்செய் யான்வந்[2]தடுத்ததோர்
வினைக்கொ டும்பகை யுண்[3]டென விம்மிஞன்.

(இ - ள்.) (இராமன்), என்னைநோக்கிப் (பதிஞன்குவருடங்கழிந்தும் வருகிறேனென்று) கூறிய தவணையான தினத்தையும், (அவன் இங்குஇல்லாமையால்)நான் படுகின்ற வருத்தத்தையும் தன்னைப்பெற்ற தாயான கௌசல்யை (தன்னிடம்வைத்துள்ள) அன்பையும் தன்மேல் தாங்கிக்கொண்டு, அக்காட்டில் வசித்திரான்[இங்கு வந்தேயிருப்பன்]; (அங்ஙனம் அவன் இங்கு இப்பொழுது வாராமைக்குக் காரணமாக வனத்தில்)வந்து சேர்ந்துள்ள(அவனுயிரை யொழிப்பது)ஒரு கொடிய தீவினைப்பயனுகிய பகை உண்டுபோலும்! என்றுஎண்ணிக்கலங்கிஞன்.

இராமன் மீண்டுவருவதற்கு ஒவ்வொன்றே போதுமான மூன்று காரணங்கள் இருக்கவும் அவன்சொன்னபடி திரும்பிவாராமையால் அவனுக்குப் பெரும்பகைவஞல் ஏதோ தீங்கு நேரிட்டிருக்கவேண்டுமென்று நினைத்துப் பரதன் கலங்கினனென்க. விம்முதல் - தேம்பித் தேம்பி யழுதலுமாம். பி-ம்:—[1]துன்பமும். [2]அடுத்ததோ. [3]என்று. ()

உகரு. மூவ கைத்திரு மூர்த்திய ராயினும்
பூவ கத்தில் விசும்பிற் புறத்தினில்
[1]ஏவர் [2]கிற்ப ரெதிர்நிற்க [3]வென்னுடைச்
சேவ கற்கென வையமுந் தேறிஞன்.

(இ - ள்.) 'எனது (தமையஞன) வீரனுக்கு எதிரில்நின்றுபோர் செய்ய, (பிரம விஷ்ணு ருத்திர ரென்னும்) சிறந்த மும்மூர்த்திகளாயினும் பூமியிலும் ஆகாசத்திலும் மற்றென்ருகிய பாதாளத்திலும் (உள்ளவர்களாயினும்), எவர் வல்லமையையுடையவர்? [ஒருவருமிலர்]' என்று ஆலோசித்து(முன்கொண்ட)சங்கையும் நீங்கப்பெற்ருன்;(எ-று.)

'இராமனுக்குப் பெரும்பகையால் ஏதேனும் தீங்கு நேரிட்டிருக்குமோ?' என்று ஐயுற்ற பரதன், மும்மூர்த்திகளாலும் எதிர்க்கவொண்ணுத வலிமையையுடைய இவனுக்கு வேறுபகைவர் உண்டாகாரென

அந்தச்சந்தேகம்நீங்கி, 'வாராமைக்குக் காரணம் வேறுயாதோ?' எனப் பின்னும் எண்ணலாயினனென்க. கிற்பர், 'கில்' என்னும் ஆற்றலுணர்த்தும் இடைச்சொல் - பகுதி. பி - ம்:—[1]எவ. [2]கிற்பர். [3]என்னுடைச்.

௨௧௬. என்னை யின்னு மரசிய லிச்சையான்
[1]அன்ன ளுகி னவனது கொள்கவென்று
உன்னி ஞன்கொ லுறுவது நோக்கினன்
இன்ன தேநல னென்றிருந் தானரோ.

(இ-ள்.) '(அவ்விராமன்), என்னைப்பற்றி, அப்பரதன் (பதினான்கு வருடம் ஆண்டதுபோதாமல்) இன்னமும் அரசாட்சிசெய்தலில் விருப்பமுள்ளவனானால், (அவனே) அவ்வரசாட்சியைக் கைப்பற்றட்டும் என்று நினைத்தானோ?' (என்று கலங்கி), இனிச்செய்யவேண்டுவதை ஆலோசித்தவனாய், 'இச்செயலே (நமக்குத்) தக்கது' என்று துணிந்தான்.

அத்துணிவை அடுத்த கவிகளிற் கூறுகின்றார். 'என்று' என வருவிக்க. இனி, உறுவது நோக்கினன் - (பதினான்குவருடங்கழிந்ததும் தான்) செய்யவேண்டுவதை நினைத்தவனான இராமபிரான், 'பரதன் அரசாட்சியை விரும்பினாற் கைக்கொள்ளட்டும்' என்று, உன்னினான் - நினைத்தவனாய், இன்னதே நலன் என்று இருந்தான் கொல் - காட்டிலிருந்து நாள் கழிப்பதே நலமுடையது என்றுகருதி அவ்விடத்தே இருந்துவிட்டானோ! என்று பரதன் சங்கித்தானெனவும் பொருள்கூறலாம். பி-ம்:—[1]அன்னதாகில். (சகூ௬)

௨௧௭.—பரதன் இறக்கத் துணிதல்.

[1]அனைத்தி லங்கொன்று மாயினு மாகுக
வனத்[2]தி ருக்கவிவ் வையம் புகுதுக
நினைத்தி ருந்து [3]துயர முழக்கிலேன்
மனத்து மாசென் னுயி[4]ரொடும் வாங்குவேன்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (இராமன்) வனத்திலேயே இருக்கட்டும்; (அன்றி), இந்நாட்டில் வரட்டும்; அவற்றுள் எதுநடந்தாலும் நடக்கட்டும்: (இராமன்விஷயமாகப் பலவாறு) சிந்தித்து இங்கிருந்து (இத்)துன்பங்களை அனுபவிக்கமாட்டேன்: என் உயிருடனே (என்)மனத்துன்பத்தையும் நீக்கிக்கொள்வேன்; (எ - று.)---எனது உயிர்நீங்கினாலன்றி மனத்துன்பம்நீங்காது என்பது, ஈற்றடியின் கருத்து. பி-ம்:--[1]அனைத்தும்...ஆகுக, அனைத்திலங்கொன்றுயினதாகுக. [2]இருக்குக. [3]நெடுந்துயர்மூழ்கிலேன், நெடுந்துயருய்க்கிலேன், பெருந்துயர்மூழ்கிலேன், துயரக்கடனீந்தி. [4]எனும்வாங்குவேன். (சகூ௭)

௨௧௮.—பரதன் கட்டளையால் சத்துருக்கினன் வருதல்.

என்னப் பன்னி யிளவலை யென்னுழைத்
துன்னச் சொல்லுதி ரென்றலுந் தூதர்போய்
உன்னைக் கூயின னும்முனென் றுமுனம்
முன்னர்ச் சென்றனன் மூவர்க்கும் பின்னுளான்

(இ - ள்.) (பரதன்) இவ்வாறு பலவிதமாகச் சொல்லி, (தூதர்களை நோக்கி), 'என்னிடத்து என்தம்பியான சத்துருக்கினனை வரச் சொல்லுங்கள்' என்று கட்டளையிட்டமாத்திரத்தில்,—தூதர்(சத்துருக்கினனிடத்திற்) சென்று (அவனைநோக்கி),'உன்தமையன்[பரதன்] உன்னை அழைத்தனன்'என்று சொல்லுதற்கு முன்னமே (இராமன் பரதன் லக்ஷ்மணன் என்னும்) மூவர்க்கும் பின்பிறந்தவனாகிய சத்துருக்கினன், பரதனெதிரிற் சென்றான்; (எ - று.) (சகஙௌ)

௨௧௯.—இதுவும் அடுத்த கவியும் - பரதன் சத்துருக்கினனை வரம்வேண்டுதலைக் கூறும்.

தொழுது நின்றதன் றம்பியைத் தோய்கணீர்
[1]எழுது மார்பத் திறுகத் தழுவினான்
[2]அழுது வேண்டுவ துண்டைய வவ்வரம்
[3]பழுதி லாமையி னாற்றரற் பாற்றென்றான்.

(இ - ள்.) (பரதன்), (தன்னை) வணங்கிநின்ற தனதுதம்பியான சத்துருக்கினனை, நிறைந்தகண்ணீர் (பலவாறாக) வழிந்தோடப்பெற்ற (தனது) மார்பில் அழுந்தத்தழுவினவனாய், அழுது 'ஐயனே! (நான் உன்னிடத்துக்) கேட்டுக்கொள்வதுஒன்று உண்டு: அந்தவரமானது தவறுபடாதபடி தருதற்குத் தகுதியுடையது' என்று வேண்டினான். பி - ம்:—[1]ஒழுக. [2]முழுதும். [3]பழுதில்வாய்மையினாய். (சகநக)

௨௨௦. என்ன தாகுங்கொ [1]லவ்வர மென்றியேல்
சொன்ன நாளி லிராகவன் றோன்றிலன்
பின்னு தீயிடை யானினி வீடுவன்
மன்ன [2]னாதியென் சொல்லை [3]மறாதென்றான்.

(இ - ள்.) (பின்னும் பரதன் தன்தம்பியைநோக்கி), 'அவ்வரம் யாதாகுமோ வென்று கேட்பையானால், (கூறுவேன், கேள்): 'இராமபிரான் (தான்வருவதாகக்) கூறிய நாளில் வந்தானில்லை; (ஆகையால், நான் முன்பு பிரதிஜ்ஞைசெய்துள்ளபடி) இப்பொழுது நான் எரிகின்ற அக்கினியில் விழுந்து உயிர்விடுவேன்; (நீ), என்சொல்லை மறுக்காமல் (இவ்விராச்சியத்துக்கு) அரசனாவாய்' என்றான்; (எ - று.)—பி - ம்:— [1]எவ். [2]ஆணை. [3]மறாய். (சகச0)

௨௨௧.—அதுகேட்டுச் சத்துருக்கினன் வருந்தித் தாபங்கொள்ளுதலை இரண்டுகவிகள் தெரிவிக்கும்.

கேட்ட தோன்றல் கிளர்தடக் கைகளால்
தோட்ட தன்செவி பொத்தித் துணுக்குறா
[1]ஊட்டு நஞ்ச முண்டானெனத் துயங்கினான்
நாட்டமும் மனமும் நடுங்கா நின்றான்.

(இ - ள்.) (அவ்வார்த்தையைக்)கேட்ட சிறந்தவனான சத்ருக்நன், விளங்குகிற பெரிய கைகளினால் துளைபட்ட தனது காதுகளை மூடிக்கொண்டு திடுக்கிட்டு, (பிறரால்) ஊட்டப்பட்ட விஷத்தை யுண்

டவன்போல வருந்தியவனாய், கண்களும் மனமும் நடுக்கங்கொண்டு நின்றான்; (எ - று.)—காதுபொத்தினது, கேட்கத்தகாத கொடிய வார்த்தையைக் கேட்டதனால். பி - ம்:—[1]ஊட்ட. (௬௧௬௧)

௨௨௨. விழுந்து மேக்குயர் விம்மலன் வெய்துயிர்த்து
எழுந்து நானுனக் கென்ன [1]பிழைத்துளேன்
அழுந்து துன்பத்தி னா[2]யென் றரற்றினான்
கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான்.

(இ - ள்.) (சத்ருக்நன் சோர்ந்து) கீழ்விழுந்து, மேன்மேல்உண்டாகிற விம்முதலையுடையவனாய், வெம்மையாகப் பெருமூச்சுவிட்டு எழுந்துநின்று, கொழுந்துவிட்டுக்கிளம்புகின்ற [மேன்மேற்பொங்குகின்ற] தாபத்தையுடையவனாய், (பரதனை நோக்கி), 'துன்பத்தில் அழுந்தியுள்ளவனே! (என்னைநோக்கி இவ்வாறுசொல்லும்படி) யான் உனக்குஎன்ன பிழைசெய்துளேன்?' என்று கூறினான்; (எ - று.)— விம்மல்-புலம்பலுமாம். துன்பம்-இராமன் வரவில்லையேயென்ற கவலையினாலாகியது. கோபம் - மனத்தில்தோன்றுந்தாபம். பி - ம்:—[1]பிழைத்துளது. [2]எனச்சாற்றினான், என்றருளினான். (௬௧௬௨)

வேறு.

௨௨௩.—இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: சத்துருக்கினன் பரதன்வார்த்தைக்கு வருந்தி வெறுத்துக்கூறலைத் தெரிவிக்கும்.

கானாள நிலமகளைக் கைவிட்டுப் [1]போவானைக் காத்துப் பின்பு
போனானு மொருதம்பி போனவர்கள் வருமவதி போயிற் றென்னா
ஆனாத [2]வுயிர்விடவென் றமைவானு மொருதம்பி யயலே[3]நாணாது
யானுமிவ் வரசாள்வெ னென்னேயிவ் வரசாட்சி[4]யினிதே யம்மா.

(இ - ள்) '(தான் மூத்தமகனாய்ப் பிறந்தும் தனக்குஉரிய) இராச்சியத்தை (த் தன்தம்பிக்கென்று) கைவிட்டுக் காட்டையாளும்படி சென்றவனை [வனவாசஞ்சென்ற இராமனை]ப் பாதுகாத்துக்கொண்டு (அவன்)பின்னே போனவனும் [இலக்குமணனும்] ஒருதம்பியாவன்; (காட்டுக்குச்) சென்ற அவ்விருவரும் மீண்டுவருவதற்குஉரிய காலவெல்லை கடந்துவிட்டது என்று நினைத்து அமைந்திராது துன்பப்பட்ட உயிரை விடவேண்டுமென்று முயல்பவனும் [பரதனும்] ஒருதம்பியாவன்: (இவர்களுடனே பிறந்து) மற்றொருதம்பியாகிய நான்மாத்திரம் நாணமின்றி இவ்விராச்சியத்தை ஆள்வேனாம்! (இது) யாதாயிருந்தது! இந்த அரசவுரிமை மிகஇனியது! (எ-று.)—அம்மா-வியப்பிடைச்சொல்; தனக்குநேர்ந்தநிலையின் கொடுமையைப்பற்றி வியந்தவாறு. பி - ம்:—[1]போவானை. [2]எரிபுக. [3]நின்ற, ஆன. [4]இருந்தவாறே. ()

௨௨௪. மன்னிற்பின் வள[1]நகரம் புக்கிருந்து வாழ்ந்தானே பரத[1]னென்னும், சொன்னிற்கு மென்றஞ்சிப் [2]புறத்திருந்து மருந்தவமே [3]தொடங்கி னாயே, என்னிற்பின் னிவனுளனா [4]மென்றேயுன் னடிமையுனக் கிருந்த தேனும், முன்னிற்பின் [5]னிருந்ததுவு மொருகுடைக்கீ [6]ழிருப்பதுவு மொக்கு மென்றான்.

(இ - ள்.) இராமன் வனஞ்சென்ற பிறகு, (அயோத்தியிலேயே வசித்தால்), 'பரதன் செழிப்பான பட்டணத்திற் புகுந்து தங்கிவாழ்ந்தானன்றோ?' என்கின்ற பழிச்சொல்,(உலகத்தில்) உண்டாகும் என்று நினைத்துப்பயந்து, (நீ, அயோத்தியில் நுழையாமல்) வெளியிடத்தில் [நந்திக்கிராமத்தில்] இருந்துகொண்டும், (அரசவேடத்தையும் ஒழித்துச்) செய்தற்கரிய தவத்தையே செய்யத்தொடங்கினாயே; (உனது தன்மை இவ்வாறு இருக்க), நான் அக்கினிபிரவேசஞ்செய்து இறந்த பின்பு, (எனது தம்பியாகிய) இச்சத்துருக்கினன் பிழைத்திருப்பானென்றே உனது அடியவனாகிய என்விஷயத்தில் உனக்கு எண்ணமிருந்ததாயினும், (நீ எண்ணினபடியே) நீ இறந்தபின்பு (நான் உன்னுடனே இறவாமல்) பிழைத்திருப்பதும் (நீ இருக்கும்பொழுதே உன்னைத் தள்ளிவிட்டு) ஒற்றைவெண்கொற்றக்குடையின்கீழ் (நான்) இருந்து அரசாளுவதும் (தம்மில்) ஒத்தனவாகும்' என்றான் (சத்ருக்நன்).

நீ அக்கினிப்பிரவேசஞ்செய்து இறந்தபின்பு நான் உயிர்வாழ்வேனாயின், நீ ஆளும் அரசாட்சியை வலியக் கைப்பற்றி வாழ்வதிலுள்ள பெரும்பாவத்தை யடைவேனாக என்று சத்துருக்கினன் பரதனைநோக்கிச் சபதங் கூறினனென்க. பி - ம்:---[1]நகரேபுகலொழிந்தானேயன்றோபரதனென்று. [2]புறத்திருந்தவ், புறத்தகன்றிவ். [3]தொடங்கிச்செய்தாய். [4]என்றாயேல், என்றேபின். [5]இருந்தேனால். [6]இருந்ததுவும்.

உஉரு.---பரதன் சத்துருக்கினனுக்குச் சமாதானங்கூறித் தீயமைக்கும்படி கட்டளையிடுதல்.

முத்துருக்கொண் டமைந்தனைய முழுவெள்ளிக் கொழுநிறத்து முளரிச் செங்கட், சத்துருக்க [1]னஃதுரைப்ப வவனிங்குத் தாழ்கின்ற தன்மை யானிங்கு, [2]ஒத்திருக்க லன்றே யுலந்தாற்பி [3]னிவ்வுலகை யுலைய வொட்டான், அத்திருக்குந் [4]கெடுமுடனே புகுந்தாளு மரசெரிபோ யமைக்க வென்றான்.

(இ - ள்.) முத்தினது உருவத்தைக்கொண்டு பொருந்தினாற்போன்றதும் மிகச்சிறந்த வெள்ளிபோன்றதுமான நல்லவெண்ணிறத்தையும் செந்தாமரைமலர்போன்றசிவந்தகண்களையுமுடைய சத்துருக்கினன், அவ்வார்த்தையைக் கூற,—(அதற்குப்பரதன்), 'அவ்விராமபிரான் இப்பொழுது (வராமல்) தாமதிப்பது, நான் இங்கே உடன்பட்டு (இராச்சியத்தை) அரசாண்டிருத்தலாலன்றோ? (அவ்வாறன்றி நான்) இறப்பேனானால்,பின்(அவன் அரசனில்லாத) இந்தவுலகத்தை அலையவிடான்; (அவன் இங்குவாராததாகிய) அம்மாறுபாடும் இல்லாததாகும்; (அவன்) உடனே (அயோத்தியில்) வந்து அரசாள்வான்; (ஆகையால், நான் இறப்பதற்காக நீ) சென்று நெருப்பைமூட்டுவாயாக' என்று (சத்ருக்நனுக்குக் கட்டளை) கூறினான்; (எ - று.)

சத்துருக்கன் - சத்ருக்நன்; பகைவர்களை யழிப்பவன்: "முத்துருக்கொண்டு செம்முளரியலர்ந்தா, லொத்திருக்கும் மெழிலுடைய

விவ்வொளியா, லெத்திருக்குங் கெடுமென்பதை யெண்ணாச், சத்துருக் கன்னெனச் சாற்றினாருமம்" என்ற பாலகாண்டச்செய்யுள் அறியத்தக்கது. பி - ம்:---[1]அது, சது. [2]சத்திருக்கலாமென்றே. [3]இவ்வுலகம். [4]கேட்டதுவே, கெடவுடனே, கேட்கவே. (சகசரு)

உ௨௬.---இராமபிரானைப் பெற்றகௌசல்யை அக்கினிப்பிரவேசஞ்செய்யும் பரதனை விலக்க வந்துசேர்தலைக் கூறும்.

அப்பொழுதி [1]னவ்வுரைசென் றயோத்தியினி னிசைத்தலுமே யரியை யீன்ற,வப்பொழுத வொண்ணாத கற்புடையாள் வயிறு புடைத் தலமந் [2]தேங்கி, இப்பொழுதே யுலகிறக்கும் [3]யாக்கையினை [4]முடித்தொழிந்தாள் மகனே யென்று, வெப்[5]பெழுதி னலன்ன வெலிவுடையாள் கடிதோடி விலக்க வந்தாள்.

(இ - ள்.) அச்சமயத்தில், அவ்வார்த்தை அயோத்தியிற்சென்று சொல்லப்பட்டவளவிலே,—(அதைக்கேள்வியுற்று), திருமாலினமிசமான இராமபிரானைப் பெற்றவளும் உவமைகூறப்பெறாத பதிவிரதா தருமத்தை யுடையவளுமான கௌசல்யை வயிற்றில்அடித்துக்கொண்டு வருந்தி ஏக்கமுற்று, 'மகனே! (நீ உனது) தேகத்தை (நெருப்பிற்போகட்டு) இறந்தால், இப்பொழுதே உலகத்துஉயிர்களெல்லாம் இறந்துவிடும்' என்றுசொல்லிக்கொண்டே, தாபத்திலேயே அமைக்கப்பட்டதுபோன்று தளர்ச்சியடைந்த உடம்புடையவளாகி (ப் பரதனை அக்கினிப்பிரவேசத்தினின்று) தவிர்க்க விரைவாகஓடிவந்தாள்; (எ - று.)

கௌசல்யைக்குப் பரதனிடமுள்ள புத்திரவாற்சல்யம் இங்கு வெளியாம். பி - ம்:---[1]இவ். [2]ஓடி, ஓங்கி [3]இயற்கைதனை, இருக்கையினை. [4]முடித்தொழிந்தாய், இன்றொழிவாய். [5]ஒழுகினுல். (சகசசு)

உ௨எ. மந்திரியர் தந்திரியர் [1]வளநகரத் தவர்மறையோர் மற்றுஞ் சுற்றச், சுந்தரிய ரனைப்பலருங் கைதலையிற் பெய்திரங்கித் தொடர்ந்து செல்ல,இந்திரனே முதலாய விமையவரு முனிவரருமிறைஞ்சி யேத்த, அந்தரமங் கையர்வணங்க வழுதரற்றிப் பரதனைவந் [2]தடைந்தா ளன்றே.

(இ-ள்.) (கௌசல்யை), மந்திரிமார்களும், சேனைத்தலைவர்களும், உறவினரான மகளிரும், பிராமணரும், செல்வமுடைய அயோத்தியா புரியிலுள்ள மற்றும் பலவகையோரும் கைகளைத் தலைமேல்வைத்து அழுதுகொண்டு (தன்னைப்) பின்தொடர்ந்து வரவும்,—இந்திரன்முதலான தேவர்களும் இருடிச்சிரேஷ்டர்களும் வணங்கித் துதிக்கவும்,—ஆகாயத்திலுள்ள தேவமாதர்கள் வணங்கவும்,---அழுதுபிரலாபித்துக்கொண்டு பரதனை வந்துஅடைந்தாள்; (எ - று.)

இந்திரன்முதலியோர் கௌசலையை இறைஞ்சித் துதித்தது, ஸர்வலோகசரண்யனை இராமனைப் பெற்றசிறப்பினாலும், தன்புதல்வனைக் காட்டுக்கு ஓட்டிய கைகேயியின் புதல்வனிடத்து மாறாத அன்புகொண்ட அவளுடைய இணையற்ற நற்குணத்தை நோக்கியதனாலு மென்க. பி - ம்:—[1]வளரந்தரத்தவர். [2]அடைந்தார். (சகசஎ)

உஉஅ.—கௌசல்யை பரதனைத் தீயில்விழவொட்டாது தடுத்தல்.

எரி[1] யமைத்த மயானத்தை யெய்துகின்ற காதலனை யிடையே வந்து, விரியமைத்த நெடுவேணி புறத்தசைந்து [2]வீழ்ந்தொசிய மேனி தள்ளச், [3]சொரி[4]வமைப்ப தரிதாய மழைக்கண்ணொ டொடருதலுந் துணுக்க மெய்தாப், பரி[5]வமைத்த திருமனத்தா னடி [6]தொழுதா னவள்புகுந்து பற்றிக் கொண்டாள்.

(இ - ள்.) நீர்ப்பெருக்கு அடங்குதலில்லையான [இடைவிடாதுநீர் சொரிகிற] குளிர்ந்தகண்களையுடையவளான கௌசல்யை, விரித்தல் பொருந்திய [விரித்த] நீண்ட சடைமுடி பின்புறத்தில் அவிழ்ந்து வீழ்ந்துபுரளவும், உடம்பு (மெலிவால்) தள்ளாடவும்,—(சத்துருக்கினன்) தீமூட்டியகன்காட்டை அடைகின்ற புதல்வனை பரதனை இடைவழியில் தொடர்ந்துவந்தமாத்திரத்தில், (இராமன்விஷயமான) அன்புநிறைந்த சிறந்தமனமுடையனான பரதன், திடுக்கிட்டு (ப் பின்பு அவளது) பாதங்களைவணங்கினான்; அவள்நெருங்கி (அவனைத்) தழுவிப்பிடித்துக் கொண்டு கூறுபவளானாள்; (எ - று.)

இடையேவந்து தொடருதலும் என்பதற்கு-பரதனுக்கும் தீக்கும் இடையே குறுக்கிட்டு நின்றவளவில் என்று கருத்து உரைப்பர். இங்கே, மயானம் - தீயமைக்கப்பட்டஇடம். பி-ம்:—[1]அமைக்கும் [2]வீழ்ந்த விழ்ப்ப, வீழ்க்தொழிய. [3]சொரி. [4]அமைப்பற்றிருதாரை. [5]அமைந்த. [6]பணிந்தான். 'அரியமைத்தகருந்தாரைமழைக்கண்ணொடொடருதலுமிடுக்கணெய்தி' என்றுஒருபிரதியில் மூன்றுமடி. (௪௧௪அ)

வேறு.

உஉ௯.—ஏழுகவிகள்-பரதனைத் தீயில்விழவொட்டாது
கௌசலை தடுத்துக் கூறுதலைத் தெரிவித்தும்.

மன்னி ழைத்தது மைந்த னிழைத்தும்
முன்னி ழைத்த விதியின் முயற்சியால்
பின்னி ழைத்தது [1]மெண்ணிலப் பெற்றியால்
என்[2]னி ழைத்தனை யென்மக னேயென்றாள்.

(இ - ள்.) 'தசரதமகாராஜா செய்ததும்[புத்திரசோகத்தால் இறந்ததும்] (மூத்த)குமாரனாகிய இராமன் செய்ததும் [காட்டுக்குச்சென்றதும்], (நான்) முற்பிறப்பிற் செய்த விதியின் பயனால் (ஆயின): ஆலோசிக்குமிடத்து, (இராமபிரான்) பின்பு செய்ததும்[முற்குறித்தபடி வராமற் போனதும்], அத்தன்மையாலேயே (ஆகியதாம்): எனது குமாரனே!(நீ)யாதுசெய்யத் தலைப்பட்டாய்?' என்று (கௌசல்யை பரதனை நோக்கிக்) கூறினாள்; (எ - று.)

'ஊழ்வினைப்பயனால் கணவனும் மகனும்என்றஅவ்விருவரும் என்னைவிட்டு இருவகையாய்ப்போய்விட, நீயும் இவ்வாறுசெய்வது தகுதியோ!' எனப் பரதனைநோக்கிக் கௌசலை கூறினாள். பி - ம்:—[1]எண்ணலை. [2]இழைத்தனையோ.

(௪௧௪௯)

உ௩0. நீ[1]யி [2]தெண்ணினை யேனெடு நாடெரி
பாயு மன்னருஞ் சேனையும் [3]பாய்வரால்
[4]தாய ரெம்மள வன்று தனியறம்
தீயின் வீழு [5]முலகுந் திரியுமால்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) நீ இவ்வாறுசெய்வதை [தீக்குதித்தலை] நினைத்தாயாயின், பெரிய(கோசலமென்னும்)இந்நாட்டுச்சனங்கள்(உன்னோடொக்கத்)தீக்குதிப்பார்கள்; (நம்மைச்சேர்ந்த) அரசர்களும் சேனைகளும் (தீயிற்) பாய்ந்து இறப்பார்கள்; (தீக்குதிப்பது) தாயராகிய எங்களளவில் (நிற்பது) அன்று[நாங்களும் அவ்வாறே இறந்தொழிவோமென்பது மாத்திரமல்ல]: ஒப்பற்ற தருமமும் நெருப்பில் வீழ்ந்துவிடும்;உலகமும் நிலைகலங்கும்; (எ - று.)—பி - ம்:—[1]அது [2]எண்ணினையே. [3]பாயுமால், பாறுமால். [4]தாயரோம். [5]உலகமுந்தீயும். (சகஙு0)

உ௩க. தரும நீதியின் [1]றற்பய னுவதுன்
கரும [2]மேயன்றிக் [3]கண்டிலங் கண்களால்
அருமை யொன்று முணர்ந்திலை யையநின்
பெருமை யூழி திரியினும் பேருமோ.

(இ - ள்.) ஐய! உனதுசெயல், தருமமான நீதிநெறியின் சாரமாகவுள்ளதே யல்லாமல் (தருமத்திற்கு மாறுபட்டதாக எங்கள்) கண்களால் (ஒருபொழுதும்) கண்டதில்லை; உனது அருமையைச் சிறிதும்(நீ) அறிந்தாயில்லை; உனது கௌரவம் யுகம்புரண்டாலும் பேருமோ? (எ - று.)—பி-ம்:—[1]தம். [2]மற்றொன்றுங். [3]கண்டிலன். (சகஙுக)

உ௩உ. எண்ணில் கோடி யிராமர்க ளென்னினும்
அண்ண னின்னரு ளுக்கரு காவரோ
புண்ணி யம்மெனு நின்னுயிர் [1]போயினால்
மண்ணும் வானு [2]முயிர்களும் வாழுமோ.

(இ - ள்.) பெருமையிற்சிறந்தவனே! (இராமன் ஒருவனேயன்றி) அநேககோடி இராமர்கள் கூடினாலும், உனது அன்புக்கு ஒத்தவராவரோ? [ஆகார்]; புண்ணியமே வடிவெடுத்துவந்துள்ளதென்றுகூறத்தக்க உனது உயிர் அழிந்தால், மண்ணுலகமும் விண்ணுலகமும் (அவற்றில் வாழும்) பிராணிகளும் இறவாமலிருக்குமோ? (எ - று.)

அயோத்தியாகாண்டத்தில் "தாயுரைகொண்டு தாதை யுதவிய தரணிதன்னைத், தீவினையென்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப், போயினை யென்றபோது புகழினோய் தன்மை கண்டா, லாயிர மிராமர் நின்கே ளாவரோ வறியினம்மா" என்று குகன் பரதனைக்கூறினது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. பி-ம்:—[1]போக்கினால். [2]மறைகளும். ()

உ௩௩. இன்று [1]வந்தில னேயெனி னோயே
ஒன்றும் வந்துன [2]யுன்னி யுரைத்தசொல்

பின்று மென்[3]றுணை ரேற்பிழைத் தானெனில்
பொன்றுந் தன்மை[4] புகுந்தது [5]போயென்றாள்.

(இ-ள்.) (இராமன்) இன்றைக்கு வாராவிட்டாலும், நாளைக்கே உன்னைவந்து சேர்வான்; ஆலோசித்து ('பதினான்குவருடங் கழிந்ததும் வருவேன்' என்று)கூறிய வார்த்தை தவறிவிடுவானென்று(நீ)எண்ணதே; (ஒருகால் வராது)தவறிவிட்டால், (அவனுக்கு) அபாயம் நேர்ந்துவிட்டதென்பதுபெறப்படு மென்றாள்; (எ - று.)

நாளைவரையிற் காத்திருந்து இராமன் வாராவிடின் அக்கினிப்பிரவேசஞ்செய்யலாமென்று கௌசலை கூறினாள். பொன்றுந் தன்மை புகுந்ததுபோய் - அக்கினியில்விழுந்து இறக்குந்தன்மை நாளை இருக்கவேயிருக்கின்றது என்றலுமொன்று. பி-ம்:—[1]வந்திலனேலினி. [2]உன்னில். [3]உண்டிரேல். [4]புரிதிபின். [5]போல். (சகஙிங)

உ௲௪. ஒருவன் மாண்டன னென்றுகொண் டூழிவாழ்
பெருநி லத்துப் பெறலரு [1]மின்னுயிர்க்
கருவு மாண்டறக் காணுதி யோகலைத்
தரும நீயல தில்லெனுந் தன்மையாய்.

இரண்டுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) சாஸ்திரங்களிற் கூறிய தருமம் நீயல்லாமல் வேறில்லையென்று சொல்லத்தக்க நற்குணமுடையவனே! ஒருவன் [இராமன்] இறந்தா னென்றுகருதி, கற்பகாலம் வரையில் வாழக்கூடிய பெரிய இவ்வுலகத்திலுள்ள பெறுதற்குஅருமையான இனிய உயிர்களைக் கருப்பமும் அழியும்படிசெய்ய ஆலோசிக்கின்றாயோ? (எ - று.)

சகலசாஸ்திரங்களையும் உணர்ந்தவனான நீ இவ்வுலகிலுள்ளார் வேருடன்அழியும்படி தீக்குதித்துஇறப்பது தகாதென்றுசொல்லிப் பரதனைக் கௌசலை விலக்கினாள். 'கலைத்தரும நீயல தில்லெனுந் தன்மையாய்'என்ற தொடர் - கருத்துடையடைகோளியணி. மாண்டனன்- சொல்தவறி வராதொழிந்தானெனினுமாம். பி - ம்:—[1]மன். (சகஙிச)

உ௲௫. இறக்கை யுஞ்சில [1]ரேகலு மோகத்தால்
பிறக்கை யுங்கட னென்றுபின் பாசத்தை
மறக்கை [2]யும்மக னே[3]வலி யாவது
[4]துறக்கை தானுமென் றாண் [5]மனந் தூய்மையாள்.

(இ - ள்.) 'மகனே! சிலர் சாதலும் விட்டுப்பிரிந்துசெல்லுதலும் மோகத்தால் (மறுபடி) பிறப்பெடுத்தலும் (உலகத்தார்க்குக்) கடமையென்றுஎண்ணி, பின்பு (ஒருவர்க்குஒருவருள்ள) பாசத்தை மறந்துவிடுதலும் (அகங்காரமமகாரங்களைத்) துறந்துபற்றறுதலுமே, (உயிர்க்கு) உறுதியுடையனவாம் என்று(பின்னும்)சொன்னாள், பரிசுத்தமான மனத்தையுடைய கௌசல்யை; (எ-று.)

பாசம் - மனைவி மக்கள் முதலாகியவரிடத்து உண்டாகும் மனப்பிணிப்பு. மறக்கை வலியாவது, துறக்கை தானும் வலியாவது எனத் தனித்தனி இயையும். மோகம் - அவா: அவித்தை. "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து" ஆதலால், 'மோகத்தாற் பிறக்கை' என்றார். பி-ம்:—[1]எசலும் யோகத்தால். [2]காண். [3]வலியாவதென், வலியாதவன். [4]துறக்கநாணவென்றாள். [5]மனத்தூய்மையாள். (௪௧௬௫)

௨௩௬.—மூன்றுகவிகள் ஒருதொடர்: கௌசலைசொல்லைப் பரதன் மறுத்தலைத் தெரிவிக்கும்.

மைந்த னென்னை மறுத்துரைத் தா[1]னெனல்
எந்தை [2]மெய்ம்மையு மிக்[3]குலச் செய்கையும்
நைந்து போக [4]வுயிர்நிலை நச்சிலேன்
முந்து [5]செய்த சபத முடிப்பனால்.

(இ - ள்.) (பரதன் கௌசலையை நோக்கி), இராமனது மெய்யுரையும், இந்தச் சூரியகுலத்தினது ஒழுக்கமும் (தவறி) யழிந்துவிட, (நான்) உயிர்வாழ்தலை விரும்பமாட்டேன்; முன்புசெய்துள்ள சபதத்தை நிறைவேற்றுவேன்; (ஆகையால்), 'மகன் எனதுவார்த்தையைத் தடுத்துக் கூறினான்' என்று நினையாதே; (எ - று.)

எனல் - 'அல்' விகுதிபெற்ற எதிர்மறைவியங்கோள். எந்தைமெய்ம்மை - 'பதினான்குவருடங் கழிந்ததும் மீண்டுவருவேன்' என்றது. இக்குலச் செய்கை - செய்தசபதம்தவறாமை. முந்துசெய்தசபதம் - இராமன்சொன்னபடி திரும்பிவராவிட்டால் அக்கினிப்பிரவேசஞ்செய்வேனென்று பரதன்சொன்னது. "ஜ்யேஷ்டப்ராதாபித்ருஸமஃ"என்பவாதலால், 'எந்தை' என்றது. பி - ம்:—[1]எனில். [2]மேன்மையும். [3]குடி. [4]உயிரினை. [5]சொன்ன. (௪௧௬௬)

௨௩௭ [1]யானு மெய்யினுக் கின்னுயி ரீந்துபோய்
வானு ளெய்திய மன்னவன் [2]மைந்தனால்
கானு ளெய்திய [3]காகுத்தற் கேகடன்
[4]ஏனை யோர்க்கி திழுக்கில் வழக்கன்றோ.

(இ - ள்.) யானும் சத்தியத்துக்காக(த் தனது)இனியஉயிரைவிட்டுச் சென்று மேலுலகமடைந்த தசரதமகாராசனது மகன்தானே; (பித்ருவாக்யபரிபாலநஞ்செய்யும்படி தான் தன்மனத்தில் நிச்சயித்ததை நிறைவேற்றுதல்) வனத்திற்சென்ற இராமனுக்குமாத்திரமா கடமை? மற்றவர்க்கும் (தாம்) சங்கல்பித்ததை நிறைவேற்றுதல் குற்றமற்ற ஒழுக்கமேயன்றோ? (எ - று.)—ஆல்-தேற்றம். பி - ம்:—[1]ஏனை. [2]மைந்தன்போற், மைந்தனுய்க். [3]காத்தற்கோ. [4]ஈனனேற்கு. (௪௧௬௭)

௨௩௮. தாய்சொற் கேட்டலுந் தந்தைசொற் கேட்டலும்
பாசத் தன்பினைப் பற்றற [1]நீக்கலும்
ஈசற் கேகடன் யானஃ திழைக்கிலென்
[2]மாசற் றேனிது காட்டுவென் மாண்டென்றான்.

(இ - ள்.) தாயின்பேச்சைக் கேட்டு நடத்தலும் தந்தையின்சொல்லைக்கேட்டு நடத்தலும் அன்புவைத்தற்குரியஇடத்து அன்பை அடியோடு ஒழித்தலும் தலைவனான இராமனுக்கே முறைமையாம்; நான் அத்தொழில்களை (அவன்போல)ச்செய்ய உடன்படமாட்டேன்; (நான்) இறந்து குற்றந்தீர்ந்தேனாகி (இராமனிடத்து அன்புடைமையாகிய) இதை (உங்கட்குக்) காண்பிப்பேன் என்றான்,(பரதன்);(எ-று.)

இராமன் சொன்னபடி வரவில்லையென்று வெறுப்புக்கொண்டு பரதன் இங்ஙனம் நிஷ்டூரமாகக் கூறினான். இராமன் தாய்தந்தையர் சொல்லைக்கேட்டு நடந்தது வனத்துக்குச்சென்றதனாலும், பாசத்தன்மைப் பற்றறநீக்கினது பரதன் பரிவாரங்களுடன் வனத்திற்சென்று வேண்டவும் மறுத்துப் பின்னும் சொன்னபடி வாராதிருந்ததனாலும் வெளியாமென்க. 'அஃது' என்றது - தொகுதியொருமை. அஃது இழைக்கிலென் - தாய்சொல்லையும் கேளேன், இராமனிடம் அன்பையும் விடேன்: ஆதலால், இறப்பேன் என்றபடி. 'மாசற்றேன் இது காட்டுவென் மாண்டு' என்பதற்கு - நான் இன்னதுசெய்வேனென்று ஆதியிற்சொல்லிக்கொண்ட சொல்லை இந்தத்தீயில்விழுந்து மாண்டு காட்டுவேனேயானால் ஒருகுற்றமுமில்லாதவனாவேனென்று உரைப்பாருமுளர். இவ்வளவுவிவரம் முதநூலிலில்லை. பி - ம்:—[1]நீத்தலும். [2]மாசற்றேயிது, மாசற்றேவிது. (சகுஅ)

உ௲கூ.—அங்ஙனமிருந்த பரதனிடம் அநுமான் வருதல்.

என்று தீயினை யெய்தி [1]யிரைத்தெழுந்து
ஒன்று பூசல் விடு[2]மூல கோருடன்
நின்று பூசனை செய்கின்ற [3]நேசற்குக்
குன்று போனெடு மாருதி கூடினான்.

(இ - ள்.) என்றுசொல்லி அக்கினியைக்கிட்டி, (தான் தீயில்விழுவதைக்குறித்துக்) கூக்குரலிட்டு மிக்குப்பொருந்திய பேரொலிசெய்கிற சனங்களுடன் (அவ்வக்கினியின்எதிரில்) நின்றுகொண்டு (அவ்வக்கினிக்குப்) பூசைசெய்கிற (இராமனிடத்துப்) பக்தியுள்ள பரதனிடம் மலைபோன்ற பெரியவடிவத்தையுடைய அநுமான் வந்துசேர்ந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]எழுந்திரைந்து, எழுந்திரைத்து, எழுந்தரை. [2]உலகோலிட, உலகோடரு. [3]நெஞ்சற்குக், நீதியிற். (சகுகூ)

உசo.—ஐந்துகவிகள் - அநுமான் இராமனதுவருகையைத் தெரிவித்து, அக்கினியை அவித்தலைக் கூறும்.

ஐயன் வந்தன னாரியன் வந்தனன்
மெய்யின் [1]மெய்யன்ன நின்னுயிர் [2]வீடினால்
உய்யு [3]மேயவ னென்றுரைத் துட்புகாக்
கையி னாலெரி யைக்கரி யாக்கினான்.

(இ - ள்.) (அநுமான் பரதனைநோக்கி), 'தலைவனான இராமபிரான் வந்தான்; பெரியோன் வந்தான்; சத்தியத்திற்கு உடல்போன்று ஆதாரமாயுள்ளவனான [சத்தியந்தவறாத] உனது உயிர்ஒழிந்தால் அவ்

விராமபிரான் உயிர்வாழ்வனோ?' என்று உரைத்து (அக்கூட்டத்தின்) உள்ளேபுகுந்து (தனது) கையினால் அவ்வக்கினியை (ப் பிசைந்து அவித்து)க் கரியாக்கினான்; (எ - று.)

'சென்று தீதின்மைசெப்பி யத்தீயவித்து' என்ற இராமன்கட்டளைப்படி அநுமான் செய்யலாயின னென்க. மெய்யின்மெய்யன்ன என்பதற்கு - வாய்மைக்கும் ஒருவாய்மையாய் மேம்பட்டுநின்ற என்று உரைப்பாருமுளர். பி - ம்:---[1]மெய்யவனின்னுயிர், மெய்யனினின்னுயிர், மெய்யனெனினின்னுயிர். [2]வீட்டினால். [3]மேலவன். (௪கசு௦)

௨௪௧. ஆக்கி மற்றவ னய்மலர்த் [1]தாள்களைத்
தாக்கத் தன்றலை தாழ்ந்து [2]வணங்கிக்கை
வாக்கிற் [3]கூடப் புதைத்தொரு மாற்றநீ
தூக்கிக் கொள்ளத் தகுமெனச் [4]சொல்லினான்.

(இ - ள்.) (அவ்வாறுதீயைக்) கரியாக்கிவிட்டுப்பின்பு (அநுமான்), அந்தப்பரதனது சிறந்த தாமரைமலர்போன்ற பாதங்களைப் பொருந்தும்படி தனதுதலையாற் பணிந்துவணங்கி, வாயிற் கை சேரும்படி [கையினால் வாயை] மூடிக்கொண்டு, ('நான் இப்போதுசொல்லும்) ஒருவார்த்தையை நீ ஏற்றுக்கொள்ளவேண்டும்'என்று (பின்னும்)சொல்லினான்; (எ - று.)—அவ்வார்த்தையை, அடுத்தகவிகளிற் காண்க. பி-ம்:—[1]தாளிணை. [2]வணங்கினான். [3]கூட்டி. [4]சொல்லுவான். (௪கசுக)

௨௪௨. இன்ன நாழிகை [1]யெண்ணைந் துளவைய
உன்னை [2]முன்னம்வந் தெய்த வுரைத்தநாள்
இன்ன தில்லை யெனினடி நாயினேன்
முன்னம் வீழ்ந்திவ் வெரியின் முடிவெனால்.

(இ - ள்.) ஐயனே! (இராமபிரான்) உன்னை வந்துசேர்வதாக முன்னே தவணைசொல்லியுள்ளநாளில் இன்னும் நாற்பதுநாழிகைப்பொழுது உண்டு; (நான்சொல்லும்) இச்சொல் உண்மையன்றானால்,—அடியவனை நாய்போற் கடைப்பட்ட நான் (உனக்கு) முன்னமே இந்த அக்கினியில் விழுந்து இறப்பேன்; (எ - று.)

பின்னிரண்டடி - தன்வார்த்தையைத் திடப்படுத்தக்கூறிய உறுதிமொழி. எண்ணைந்து - எட்டாகியஐந்து; நாற்பது; பண்புத்தொகை. எட்டும்ஐந்தும் [பதின்மூன்று]என உம்மைத்தொகையாகவுங் கூறலாம். இனி, சில என்னும் பொருளில்வந்த எண்களின் அடுக்கு எனக் கூறுதலும்நேர். ஐந்துஎன்னும் எண்ணுள்ள நாழிகையுள வென்றலும் ஒன்று. பி-ம்:—[1]ஏழுளவெம்பிரான்,எண்ணஞ்சுளதைய. [2]மன்னன். (௪கசு௨)

௨௪௩. ஒன்று தானுள துன்னடி யேன் [1]சொலால்
நின்று [2]தாழ்த்தரு ணேமிச் சுடர்[3]குணக்
குன்று [4]தோன்றள வும்மிது குன்றுமேற்
பொன்று கீயு மூலகமும் பொய்யிலாய்.

(இ - ள்.) சத்தியந் தவறாதவனே! (நான் கூறவேண்டுவது) ஒன்று தான் உண்டு: (அது யாதெனில்), வட்டவடிவமாகிய ஒளிமயமான சூரி

யன் கிழக்குத்திக்கிலுள்ள உதயகிரியில் தோன்றுகிறவரையிலும் உனது அடியவனாகிய எனது வார்த்தையினால் [வார்த்தையை நம்பி] (அக்கினிப்பிரவேசஞ்செய்யாமல்) நின்று பொறுத்துக்கொண்டிருப்பாயாக; (அதற்குள் இராமன் வருவன்); இத்தவணை தவறுமாயின், (பின்பு) நீயும் உலகமும் அழியுங்கள்; (எ - று.)—பி - ம்:—[1]சால. [2]தாழ்தரு, தாழ்த்திரு, தாழ்க்குறின். [3]நெடுங். [4]தாழ்வு. இங்குச்சிலபிரதிகளில் ஒருபாடல் காணப்படுவது வருமாறு:—

பரத்துவன் வருதலும் பரிந்தி ராமனும்
கரத்துணை குவித்தன னிளைய காளையோடு
[1]எரித்திற முனியுமா சிக[2]னி யம்பிட
விருப்பொடு மிடவகை யினிது மேயினான்.

பி-ம்:—[1]அரி. [2]இயம்பினன். (௪௧௧௩)

௨௪௪. எங்க ளாயகற் கின்னமு தீகுவான்
பங்க யத்துப் பரத்துவன் வேண்டலால்
அங்கு வைகின னல்லது தாழ்க்குமோ
இங்க ணல்லதொன் றின்னமுங் கேட்டியால்.

(இ - ள்.) தாமரைமலர்மாலையை யணிந்த பரத்துவாசமுனிவன், எமது தலைவனான இராமபிரானுக்கு(த் தான்)இனிய உணவளிக்க(அதை ஏற்றுக்கொள்ளும்படி) வேண்டினதனால், (அப்பிரான்), அம்முனிவனது ஆச்சிரமத்தில் தங்கினானே யல்லாமல், தாமதிப்பானோ? இப்பொழுது, இன்னமும் இனியதொன்றைக் கேட்பாயாக; (எ - று.)—பிராமணர்கட்குத் தாமரைமலர்மாலை யுரியது; தாமரை மணிமாலையுமாம்.

௨௪௫.—அநுமான் பரதனுக்கு இராமனதுமோதிரத்தை அடையாளங்காட்டல்.

அண்டர் நாத னருளி [1]யளித்துள து
[2]உண்டொர் பேரடை யாள முனக்கது
கொண்டு வந்தனென் [3]கோதற்ற [4]சிந்தையாய்
கண்டு கொண்[5]டருள் வாயெனக் காட்டினான்.

(இ - ள்.) தேவர்தலைவனான இராமபிரான் அருள்கொண்டு (என்னிடம்) கொடுத்துள்ளதாகிய ஓர் பேர் அடையாளம் உண்டு; உனக்கு அது கொண்டுவந்தனென்; குற்றமற்ற எண்ணமுள்ளவனே! (அதனைக்) காண்பாயாக என்று கூறி, (அநுமான் அம்மோதிரத்தைப் பரதனுக்குக்) காண்பித்தான்; (எ - று.)—பி - ம்:—[1]அளித்தொன்று, அளித்துள. [2]உண்டு, உண்ட. [3]கோதறு. [4]சிந்தையால். [5]அருளாய். (௪௧௧௫)

வேறு.

௨௪௬.—இரண்டுகவிகள்-அநுமான் காட்டிய மோதிரத்தைக் கண்டு அங்குள்ளார் யாவரும் மகிழ்தல்.

காட்டிய மோதிரங் கண்ணிற் காண்டலும்
ஊட்டிய [1]வல்விட [2]முற்று முற்றுவார்க்கு

ஊட்டிய நன்மருந் தொத்த தாமரோ
ஈட்டிய வுலகுக்கு மிளைய [3]வேந்தற்கும்.

(இ-ள்.) (அநுமான்) காட்டிய மோதிரத்தைக் கண்களாற் பார்த்தவுடன், (அம்மோதிரம்),—(அங்குத்)திரண்டுள்ள உலகத்துச் சனங்கட்கும் (இராமனது) தம்பியான பரதனுக்கும், உண்பிக்கப்பட்ட கொடிய விஷத்தைப் பொருந்தி [உண்டு] இறக்குந்தருணத்தி லிருப்பவர்க்கு ஊட்டப்பட்ட நல்ல தேவாமிருதத்தை யொத்திருந்தது; (எ - று.)

விடத்திற்கு வலிமை, தன்னையுண்டாரைக் கொல்லுதல். அமிருதத்துக்கு நன்மை, தன்னையுண்டாரை உயிர்ப்பித்தல். உவமையணி. ஈட்டிய - வலித்தல். பி-ம்:—[1]வெவ்விடம், நல்விடம், தீயனல். [2]முறுக, முருக்கி. [3]வீரற்கும். (௨௪௬௬)

௨௪௭. அழுகின்ற வாயெலா மார்த் [1]தெழுந்தன
விழுகின்ற கண்ணெலாம் வெள்ள [2]மாறின
உழுகின்ற தலையெலா [3]முயர்ந்தெழுந்தன
தொழுகின்ற [4]கையெலாங் காலின் றோன்றலை.

(இ - ள்.) (அப்பொழுது அங்குள்ளாருடைய) கதறியழுதுகொண்டிருந்த வாய்களெல்லாம், (மகிழ்ச்சியினால்) மிக்கஆரவாரஞ்செய்தன; (தாரைதாரையாய் நீர்)பெருகுகின்ற கண்களெல்லாம், அந்நீர்ப்பெருக்கு ஒழிந்தன; (துயரத்தினால் தரையிற்) கவிழ்ந்திருந்த தலைகளெல்லாம், (சந்தோஷத்தினால்) முகமெடுத்துத் தோன்றின; கைகளெல்லாம், வாயுகுமாரனான அநுமானைத் தொழுவனவாயின; (எ-று.)—'உழுகின்ற தலை'என்றது-துயரத்தினால் தலைகவிழ்ந்து தரையில் மோதிக்கொள்ளுதலை. பி-ம்:—[1]எழுந்தநீர். [2]மாறிமுன், மாறிமண். [3]முயன்று. [4]கையவாய்.

௨௪௮.—இதுமுதல் ஆறுகவிகள்-மோதிரம்பெற்ற பரதனது மகிழ்ச்சியைக் கூறும்.

மோதிரம் வாங்கித்தன் [1]முகத்தின் மேலணைத்து
ஆதரம் பெறுவதற் காக்கை யோவெனா
[2]ஓதினர் [3]நாணுற வோங்கி னன்றொழுந்
தூதனை முறைமுறை தொழுது [4]துள்ளுவான்.

(இ-ள்.) (தன்னை) வணங்கி (மோதிரங்காட்டி)நின்ற தூதனாகிய அநுமானைப் பலமுறைவணங்கி ஆனந்தக்கூத்தாடுபவனாகிய பரதன்,—(அந்த)மோதிரத்தை (அநுமான்கையினின்று தன்கையில்) வாங்கித் தனது முகத்தின்மேல் அணைத்துக்கொண்டு,—'(இராமபிரானை நெடுநாளாகப்பிரிந்து வருந்திய இவனது) உடம்பு (இனி அப்பிரானது) அன்பைப் பெறுதற்கு உரியதாகுமோ?' என்று கூறினவர் நாணமடையும்படி (மகிழ்ச்சியினால் உடல்) பூரித்தான்; (எ - று.)

'ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோஎனா ஓதினர் நாணுற ஓங்கினான்' என்பதற்கு-இந்தமோதிரத்தைக்கண்டு பூரிப்பதற்கு நமதுபரதனுடைய தேகம் போதுமோ என்று சொன்னவர்கள் நாணும்படி தேகம்பூரித்தது

என்று உரைப்பாருமுளர். பி - ம்:—[1]முடியின். [2]ஒதிறுன். [3]உடலுற, உடற்பெற. [4]தன்னிறுன், சொல்லுவான். (௬௪௬௮)

௨௪௯. ஆதிவெந் [1]துயரலா லருந்த லின்மையால்
ஊது றப் பறப்பதா யுலர்ந்த யாக்கைபோய்
ஏதில வொருவன்கொ லென்ன [2]லாயது
மாதிரம் [3]வளர்ந்தன வயிரத் தோள்களே.

(இ-ள்.) (இராமனைப் பிரிந்தது) முதல் (அனுபவிப்பது) கொடிய துன்பமே யல்லாமல், (யாதொரு சந்தோஷசமாசாரமும்) அனுபவியாத படியினுல், ஊதினுற் பறக்கக்கூடியதாகி வாடின (பரதனது) சரீரமானது,--(மோதிரங்கண்ட அப்பொழுது, அந்நிலை) மாறி, '(இவன் பரதனல்லன்,) அயலானொருவன் போலும்' என்று கூறும்படி பூரித்தது; உறுதியான (அவனது) தோள்கள் மலைகள்போல ஓங்கியெழுந்தன.

இனி, ஆதி வெம்துயரலால்-(இராமனைப்பிரிந்தது) முதல் கொடிய துன்பத்தினுலும், அருந்தல் இன்மையால் - உணவுகொள்ளுத வில்லாமையாலும் எனவும், மாதிரம் வளர்ந்தன - திக்குக்களையளாவ வளர்ந்தன எனவும் பொருள்கூறலாம். இரண்டாமடி - உலகவழக்குநவிற்சியணி. பி - ம்:—[1]துயரினுல். [2]ஆயினுன். [3]பொருதன, அளர்ந்தன.

௨௫௦. அழுநகு மனுமனை யாழிக் [1]கைகளால்
தொழுமெழுந் [2]துள்ளும்வெங் களிது ளக்கலால்
விழு[3]மழிந் தேங்கும்போய் வீங்கும் வேர்க்குமக்
குழுவொடுங் [4]குனிக்குந்தன் றடக்கை [5]கொட்டுமால்.

(இ - ள்.) (அப்பரதன்),—விரும்பப்படுகிற மகிழ்ச்சி அதிசப்பட்டுத் தூண்டுதலால், அழுவான்; சிரிப்பான்; அனுமானை மோதிரம் வாங்கிய (தனது) கைகளாற் கூப்பிவணங்குவான்; உயர எழும்புவான்; துள்ளிக்குதிப்பான்; கீழ்விழுவான்; மனந் திகைத்துக் கலங்குவான்; மிகவும் உடல்பூரிப்பான்; உடல் வேர்ப்பான்; அக்கூட்டத்தாருடனே கூத்தாடுவான்; தனது பெரியகைகளைத் தட்டுவான்; (எ - று.)—இங்குக் கூறியயாவும், உவகைமிகுதியாலாய மெய்ப்பாடுகள். பி - ம்:—[1]கையினுல். [2]துள்ளுறும், துள்ளுமெய். [3]எழுந்து. [4]குனிக்கும். [5]கூப்புமால்.

௨௫௧. ஆடுமி னாடுமி னென்னு மையன்பால்
ஓடுமி னோடுமி னென்னு மோங்கிசை
பாடுமின் பாடுமி னென்னும் பாவிகாள்
சூடுமின் சூடுமின் றாதன் [1]றளெனும்.

(இ - ள்.) 'பாவிகளே! கூத்தாடுங்கள் கூத்தாடுங்கள்' என்று (எதிரிலுள்ளாரை நோக்கிச்) சொல்வான்; 'இராமபிரானிடத்தில் (எதிர்கொண்டு) ஓடுங்கள் ஓடுங்கள்' என்று சொல்வான்; '(இராமபிரானது) மிக்ககீர்த்தியைப் பாடுங்கள் பாடுங்கள்' என்று சொல்வான்; 'அவனது பாதங்களை(த் தலையில்) அணியுங்கள் அணியுங்கள்' என்று சொல்வான்; (எ - று.)

பரதன் எதிரிலுள்ளாரைநோக்கி 'பாவிகாள்' என விளித்தது, இராமபிரானைப் பதினான்குவருஷம் பிரிந்திருந்தமை பற்றியும், அவன் எழுந்தருளுவதை அறிந்தும் தன்னெண்ணத்துக்குத் தக்கபடி அவர்கள் அத்துணைமகிழ்ச்சியை யுடையராகத் தோன்றாதிருந்தமை பற்றியும். தூதன்தாளைத் தலைமேற்கொள்ளச் சொன்னது, இராமன்வருஞ் செய்தியை அறிவித்த பேருதவியால். பி - ம்:—[1]தோள். (௪௧௭௧)

௨௫௨. வஞ்சனை யியற்றிய மாயக் [1]கைகையார்
துஞ்சுவ [2]ரினியெனத் தோளைக் கொட்டுமால்
[3]குஞ்சித வடிகண்[4]மண் டிலத்திற் கூட்டுற
அஞ்சனக் [5]குன்றினின் றாடும் பாடுமால்.

(இ - ள்.) '(இராமபிரானை அரசுபுரியவொட்டாது வனஞ் செல்லுமாறு) சூழ்ச்சிசெய்த மாயத்தன்மையையுடைய கைகேயியார் இனி (அவ்வாறு செய்வதற்கு இடமில்லாமல்) மனம் சோர்வார்' என்று சொல்லி(த் தனது எண்ணம் நிறைவேறியதனால் மகிழ்ந்து) தோளைக் கொட்டுவான்; மடங்கியஅடிகள் மண்டலாகாரமாகப் பொருந்தும்படி சுழன்று மைம்மலைபோலநின்று கூத்தாடுவான்; பாடுவான்; (எ - று.)

கைகையார் என்ற பன்மை, இகழ்ச்சிபற்றியது. குஞ்சிதவடிகள் மண்டிலத்திற் கூட்டுற நின்றாடும் - ஒருகாலைப்பூமியிலூன்றிநின்று மற்றொருகாலைத் தூக்கிக்கொண்டு இவ்வாறே இரண்டுகால்களையும் மாற்றிமாற்றி முடக்கிச் சுழன்றாடுவனென்றவாறு. அஞ்சனக்குன்றை உவமைகூறியதனால், பரதனதுநிறம் கருமை யென்பது விளங்கும். பி-ம்:—[1]கேகியார். [2]என்றுதன். [3]குஞ்சிதவடியன், குஞ்சிதனடியன், குஞ்சித மண்டலங். [4]மண்டலங்கள்கூட்டுற, கால்கள் கூடுற, மண்டிலத்தைக் கூடுற. [5]குன்று. (௪௧௭௨)

௨௫௩. வேதியர் தமைத்தொழும் வேந்த ரைத்தொழுந்
தாதியர் தமைத்தொழுந் தன்னைத் தான்றொழும்
ஏதுமொன் [1]றுணர்குறா திருக்கு [2]நிற்குமால்
காதலென் [3]றதுவுமோர் [4]கள்ளின் றேற்றமே.

(இ - ள்.) (அங்குள்ள) பிராமணர்களை வணங்குவான்; அரசர்களை வணங்குவான்; குற்றேவல் செய்யும் மகளிரை வணங்குவான்; தன்னைத் தானே வணங்குவான்; யாதொன்றையும் அறியாமல் இருப்பான்; (எழுந்து) நிற்பான்; அன்பு என்றுசொல்லப்படுகிறதும் ஒருகள்ளின் தன்மையுடையதே; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

மேற்கூறிய சிறப்புப்பொருள்களை ஈற்றடியிற்கூறிய பொதுப் பொருள்சாதிக்க வந்ததனால், வேற்றுப்பொருள்வைப்பணி. ஈற்றடியை இப்படலத்து இருபத்துமூன்றாஞ்செய்யுளினீற்றடியோடு ஒப்பிடுக. இப்பாடலைக் குறித்து விநோதரசமஞ்சரியில் 'தமையன்வந்த சந்தோஷப்பெருக்கினால் பரதன் அங்கிருந்த பிராமணோத்தமர்களைப்பார்த்து 'சுவாமிகளே! உங்களாசீர்வாதபலத்தினால் எங்கள்தமையன் க்ஷேமமாய் வந்தான்' என்றுசொல்லி அவர்களுக்குத் தண்டன் சமர்ப்

பிப்பான். தன்னை வணங்குதற்குஉரிய அரசர்களைநோக்கி 'வேந்தர்களே! நீங்கள் நீதிதவறாது நடப்பதனால், எங்கள் அண்ணன் சத்துருஜயம்பண்ணிவந்தான்' என்றுசொல்லி அவர்களையும் வணங்குவான்; தங்கள் வீட்டில் வேலை செய்யும் பெண்களைக்கண்டு 'தாதிகளே! நீங்கள் புண்ணியஞ்செய்ததனால் என் தமையன் மீண்டுவந்தான்' என்று சொல்லி அவர்களையும் கும்பிடுவான்; கடைசியில் தன்னைக்குறித்து 'அடா பரதா! நீ நல்ல அதிருஷ்டசாலியாகையால், உங்கள் அண்ணன் வந்துவிட்டான்' என்று சொல்லித் தன்னைத்தானே தொழுதுகொள்ளுவான்; தமையனும் அவனைச்சார்ந்தவர்களும் வந்ததைப்பற்றியாவது கிருககிருத்தியத்தைக் குறித்தாவது இராச்சியத்தின்பொருட்டாவது இன்னது செய்யவேண்டுமென்பது ஒன்றுந்தெரியாதவனா யிருப்பான்; அப்புறம்இப்புறம்அடிபெயராமல் எங்கேநின்றானோஅங்கேதானே திகைத்துநிற்பான்; இப்படியெல்லாம் அவன் பரவசப்படும்படி சம்பவித்ததனால்,'இந்தச்சகோதர வாற்சலியத்தாலுண்டாகிய களிப்பும் கள்ளுண்ட பாவனையாகவேயிருக்கின்றது' என்று கம்பர் பிரசங்கிக்க, கொங்குதேசாதிபதி 'பரதன் பிராமணர்களைத் தொழுதது விசேஷமே:தோஷமல்ல; தன்னைப் பணியும் அரசர்களைத் தான்பணிந்ததோ தகாதசெய்கை: அதுவும் பெரிதல்ல, ஒருபரியாயமாம்; தாதியைத் தொழுதானென்றதுதான் வரம்புகடந்ததா யிருக்கின்றது' என, கம்பர் 'அவன் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கிக் கரைகாணாதிருந்தமையால், தன்மெய்ம்மறந்து எதிரேகண்டவர்களையெல்லாம் இன்னர் இனையரென்று தாரதம்மியம்பாராமல் தொழுதான்; தாரதம்மியம் பாராவிடினும் தாதிமார் தனக்கு வேறாயிருப்பவர்களாகையால், அவர்களைத்தொழுததும் ஆச்சரியமல்ல;வேறல்லாததன்னையும் வேறாகக்கருதித் தொழுதுகொண்டதே அதிகஆச்சரியம்' என்றுசொல்லக் கேட்டு யாவரும் மிகவும் அதிசயித்தார்கள்"எனக் கூறியுள்ளது காணத்தக்கது. பி-ம்:---[1]உணர்ந்திலன். [2]நீக்குமால். [3]இதுவும். [4]கள்ளிற்றேன்றிற்றே. (சகஎந)

உருச.—இதுவும், அடுத்த கவியும்-பாதன் அநுமானைக்கொண்டாடி 'நீயார்?' என்றல்.

அத்திறத் தாண்டகை யனுமன் றன்னைநீ
எத்திறத் தா[1]யெமக் கியம்பி யீதியான்
[2]முத்திறத் தவருளே யொருவன் [3]மூர்த்திவேறு
ஒத்திருந் தாயென [4]வுணர்கின் றேனென்றான்.

(இ - ள்.) (கீழ்க்கூறிய) அத்தன்மைகளையுடைய ஆண்மைக்குணமுள்ளவனான பரதனானவன்,—அநுமானை (நோக்கி), 'நீ எத்தன்மையையுடையவன்? (அதை) எமக்குச் சொல்லியருள்வாயாக; (நீ) வேறாயிருந்தாலும் திரிமூர்த்திகளுள் ஒருமூர்த்தியை ஒத்திருக்கிறாய் என்று ஊகித்தறிகிறேன்' என்று கூறினான், (பரதன்); (எ - று)

இயம்பியீதி, ஈ - துணைவினை. மூர்த்திவேறு என எடுத்து, திரிமூர்த்திகளி லொருவனது வேறுவடிவம்போன்றிருந்தாய் எனினுமாம்,

பி-ம்:—[1]எனக்கு. [2]மூத்திறத்தேவருள். [3]மூர்த்தியோடு, மூர்த்திதான். [4]உரைக்கின்றேனென்றான், உணர்கின்றேனுனை, உணரக்கூறினன். ()

உ௫௫. மறையவர் வடிவுகொண் [1]டணுக வந்தனை
[2]இறைவரி னொருத்தனென் றெண்ணு கின்றனன்
துறையெனக் கி[3]யாதெனச் சொல்லு [4]சொல்லென்றான்
அறைகழ லனுமனு மறியக் கூறுவான்.

(இ - ள்.) வேதமறிந்த பிராமணரது வடிவத்துடன் (நீ இங்கு எம்மைச்) சேரவந்துள்ளாய்; (ஆயினும் உன்னை), தலைமைக் குண முடைய மும்மூர்த்திகளுள் ஒருத்தனென்று எண்ணுகிறேன்; (உனது) வரலாறு எத்தன்மையது என்று எனக்கு விரைவிற் சொல்வாயாக' என்று (பின்னும் பரதன்) கூறினன்; (அதற்கு), ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய அநுமானும் (தன்வரலாற்றை) விளங்கக் கூறுபவ னானான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.
பி-ம்:—[1]அணுகி. [2]இறைவனில். [3]ஆரெனச். [4]சொல்வாயென்றான், சொல்லுமென்று. (௪௧எ௫)

உ௫௬.—அநுமான் தன்வரலாறு கூறுதல்.

காற்றினுக் [1]கரசன்பாற் கவிக்[2]கு லத்தினுள்
[3]நோற்றனள் வயிற்றின்வந் துதித்து நம்முனற்கு
ஏற்றிலா வடித்தொழி [4]லேவ லாளனேன்
மாற்றினே னுருவொரு குரங்கு [5]மன்னயான்.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) அரசனே! யான் ஒரு குரங்கு; காற்றுக்கு அதிதேவதை யான வாயுபகவான் மூலமாக வானரசாதியினுள் (மகப்பேற்றைக் குறித் துத்) தவஞ்செய்தவளான அஞ்சநாதேவியின்வயிற்றில் வந்துபிறந்து உமது தமையனான இராமபிரானிடத்தில் ஒப்பில்லாத அடிமைத்தொ ழிலையுடைய பணியாளனாயுள்ளேன்; (எனக்குஇயற்கையானகுரங்கு) வடிவத்தை (அந்தணவடிவமாக) மாற்றிக்கொண்டுவந்தேன்; (எ - று.)

சுமேருமலையில் அரசாண்டுகொண்டிருந்த கேசரியென்னும் வானர ராசனது மனைவியான அஞ்சநாதேவி திருவேங்கடமலையில் எழுந்தருளி யுள்ள திருமாலை நோக்கி நெடுநாள் தவஞ்செய்ய, அத்தவத்தின்பயனாக அவளிடம் வாயுபகவானுக்கு அநுமான் பிறந்தனனென்பது வரலாறு. எம்பெருமானிடத்திற் கைங்கரியஞ்செய்வது எல்லாப்பேற்றினுஞ் சிறந்ததாதலால், 'ஏற்றிலா வடித்தொழில்'என்றான். நம்முனற்கு ஏற் றிலா என்பதற்கு - மகாத்மாவான இராமபிரானது பெருமைக்கும் (மிக வும் அற்பனான எனது சிறுமைக்கும் (சிறிதும் ஒவ்வாததான என்றுமாம்.
பி-ம்:—[1]அரசனால், அயல்வந்த. [2]குலத்துளாள். [3]நோற்றுளாள். [4]ஏவலாளன்யான். [5]மன்னனே. (௪௧எ௬)

உருஎ.—அநுமான் தனது பெருவடிவத்தைக் காட்டுதல்.

அடித்தொழி லுயினே [1]னற்ப யாக்கையைக்
கடித்தடந் தாமரைக் [2]கண்ணி னேக்கெனப்
பிடித்தபொய் யுருவினைப் [3]பெயர்த்து நீக்கினன்
முடித்தலம் வானவர் [4]நோக்கின் முன்னுவான்.

(இ-ள்.) (இராமபிரானுக்கு) அடிமைத்தொழில் செய்கின்ற நாய் போற்கடைப்பட்டவனை எனது அற்பமான வாநரசரீரத்தை, வாசனையுடைய பெரிய தாமரைமலர்போன்ற (உனது) கண்களாற் காண்பாயாக என்றுகூறி, (தான்) கொண்டுள்ள பொய்யான (மானுட) வடிவத்தைமாற்றியொழித்தவனாகி, முடித்தலம் [தனது தலைப்புறம்] வானத்திலுள்ளவர்களது கண்களில் எதிர்ப்பட வளர்பவனானான்; (எ - று.)

முடித்தலம் வானவர் நோக்கின் முன்னுவான் என்பதற்கு-தேவர்களுடைய கண்ணுக்கும்எட்டாத தூரத்தில் தனதுமுடி உயரும்படி வளரலானான் என்று உரைத்தலும் ஒன்று. பி - ம்:—[1]அருப்பயாக்கையை. [2]கண்ணிற்காணெனப். [3]பெயர்ந்துநீங்கினன். [4]நோக்கிமுற்றுவார், நோக்கின்முந்துவோன். (சகஎஎ)

உருஅ.—அதைக் கண்டவர்கள் அதிசயமும் அச்சமுங் கொள்ளுதல்.

வெஞ்சிலை யிருவரும் விரிஞ்சன் மைந்தனும்
எஞ்சலி லதிசய மிதுவென் றெண்ணினார்
[1]துஞ்சில தாயினுஞ் சேனை [2]துண்ணென
அஞ்சின தஞ்சனை சிறுவ [3]னாக்கையால்.

(இ - ள்.) அஞ்சநாதேவியின் புதல்வனான அநுமானது (பெரு) வடிவத்தைக்கண்டு,—கொடியவில்லையேந்திய (பரதன் சத்துருக்கினன் என்ற) இருவரும் பிரமனதுபுத்திரனானவசிட்டனும், 'இது குறைவில்லாத [மிக்க] அதிசயமானது' என்று நினைத்தார்கள்; சேனையானது (அச்சத்தால்) இறந்திலதாயினும், திடுக்கிட்டுப் பயந்தது; (எ-று.)—மரணபயத்துக்கு ஒப்பான மகாபயத்தை யடைந்த தென்பதாம். பி-ம்:—[1]துஞ்சிலதென்னினுஞ், துஞ்சுவதெனவிருஞ். [2]தூக்கமுற்று. [3]ஆக்கையை.

உருகூ.—பரதன் அநுமானதுபெருவடிவத்தைச் சுருக்கிக்கொள்ள வேண்டுதல்.

ஈங்குநின் [1]றியாமுனக் கிசைத்த [2]மாற்றமத்
தூங்கிருங் [3]குண்டலச் செவியிற் [4]சூழ்வர
ஓங்கல வாதலி னுலப்பில் யாக்கையை
வாங்குதி விரைந்தென மன்னன் வேண்டினான்.

(இ - ள்.) 'இங்கே [தரையில்] நின்றுகொண்டு நாங்கள் உனக்குச் சொல்லும் வார்த்தைகள், தொங்குகின்ற பெரிய குண்டலங்களையணிந்த (உன்னுடைய) அந்தக்காதுகளிற் பொருந்தும்படி உயர்ந்து செல்ல மாட்டுகின்றில: ஆதலால், (உனது) அழிவில்லாத (இந்தப்பெ

ரிய)வடிவத்தை விரைவில் நீக்குவாயாக' என்று பரதமகாராஜன் (அநு மானைப்) பிரார்த்தித்தான்; (எ - று.)—பி-ம்:—[1]உனக்கியான். [2]மாற் றந்தான். [3]குண்டலஞ். [4]துன்னுற. (௪௧௭௧)

௨௯௦.—இதுவும்,அடுத்தகவியும்-அநுமானுக்குப் பாதன் பரிசுகொடுத்ததைக் கூறும்.

சுருக்கிய வுருவனைத் தொழுது முன்னின்ற
அருக்கன்[1]மா ணவகனுக் கைய னன்பினாற்
பொருக்கென [2]நிதியமும் புனைபொற் பூண்களின்
[3]வருக்கமும் வரம்பில நனிவ ழங்கினான்.

(இ - ள்.) பரதன், பிரீதியோடு (தனதுவேண்டுகோளின்படி)சுருக் கிக்கொண்ட வடிவமுடையவனாக வணங்கி எதிரில் நின்ற சூரியசிஷ்ய னை அநுமானுக்கு விரைவாகச் செல்வங்களையும் அணியத்தக்க பொன்னாபரணங்களின் வகைகளையும் எல்லையில்லாதனவாக மிகுதி யாகக்கொடுத்தான்; (எ - று.)

அநுமான் சூரியனிடத்துச் சென்று நான்குவேதங்களையும், ஆறு சாஸ்திரங்களையும், எல்லாவியாகரணங்களையும், விருத்தி பாஷ்யம் முத லிய உரைகளுடனும் கற்றதன்றி, மற்றுமுள்ள பலகலைகளையும் ஒரே நாளில் ஓதியுணர்ந்தா னென்பது வரலாறு. பி - ம்:—[1]மாணாக்கனை யையன்மேயினன். [2]நிதிகளும்...பூண்களும், வனத்திடைப்புகுந்ததன் மையை. [3]ஒருக்கியென்னுணர்வுறவுணர்த்தியாலென்றான், முருக்கிதழ் மாதருமுறையினல்கினான். இச்செய்யுளின்பின் ஒருபிரதியில் "சித்திர கூடத்தை" (௨௭௯) என்ற பாடல் காணப்படுகின்றது. சிலபிரதி களில், "குன்றுறழ்" (௨௭௭) என்றபாடல்முதல் "என்றவனிரங்கி" (௩௦௪)என்பதுவரையிலுமுள்ள பாடல்கள் இங்குக்காணப்படுகின்றன.

௨௯௧. கோவொடு [1]தூசுநற் குலம ணிக்குழாம்
மாவொடு [2]பரிக்குலம் வாவு [3]தேரினம்
தாவுநீ ருடுத்த[4]நற் றரணி [5]தன்னுடன்
ஏவருஞ் சிலைவலான் [6]யாவு நல்கினான்.

(இ - ள்.) அம்புதொடுத்தற்குஉரிய வில்லில்வல்லவனான பரதன்,— (பின்னும்) பசுக்களையும் வஸ்திரங்களையும் உயர்ந்தசாதி நவரத்தினங் களின் தொகுதியையும் யானைகளையும் குதிரைகளின்கூட்டங்களையும் தாவிச்செல்லுகின்ற தேரின்கூட்டங்களையும் தத்திப்பாய்கின்ற நீர் சூழ்ந்த சாரமான பூமியையும் (மற்றுமுள்ள) எல்லாப்பொருள்களையும் (அநுமானுக்குக்) கொடுத்தான்; (எ - று.) — மாஎன்னும் பொதுப் பெயர், இனம்பற்றி யானையைக் குறித்தது. பி - ம்:—[1]தூசினங்... குலம். [2]கரித்திரள், கார்த்திரள். [3]தேர்க்குலம். [4]அத். [5]மற்றெலாம். [6]யாதுநல்கினான், ஆதரித்தனன். சிலபிரதிகளில் இதற்குமேல் ௨௭௫- ஆம் செய்யுள்வரையிலுள்ள செய்யுள்கள் காணப்படாமல் வேறுபாடல் கள் காணப்படுகின்றன: அவை வருமாறு:—

1. நின்றவ னிவ்வயி னெடிய வன்றனைச்
சென்றிறைப் பொழுதினிற் கொணர்வன் [1]செல்வனைப்
பொன்றிணிப் பொலங்கழல் வணங்கிப் போயினான்
வன்றிறல் மாருதி வளர்ந்த கீர்த்தியான்.

பி - ம்:—[1] செல்வனைப்.

2. வேறு. *ஆய காலையி லையனைக் [1]கொண்டுதன்
தூய [2]காலி னுறைவிடந் துன்னினான்
மேய சேனைக் கமைப்பன் விருந்தெனாத்
தீயி னருகுதி செங்கையி னேக்கினார்.

பி - ம்:—[1]கண்டு. [2]காதல்.

3. வேறு. பான நெய்யொடு நானமுஞ் சாந்தமும் பலவும்
ஆன வெள்ளிலை யோடடைக் காய்கருப் பூரம்
தேன வாவிய முக்கனி [1]காயொடு தேன்பால்
வான நாட்டர மங்கையர் மகிழ்ந்துகொண் டிழிந்தார்.

பி - ம்:—[1]கறியமுதொடுபொல்.

4. வேறு. கங்கைதரு கழலாற்கு மிளவலுக்குங் காரிகைக்கும்
துங்கமுடி வீடணற்குஞ் சுக்கிரீவப் பெருமாற்கும்
தங்கு[1]பெரு சேனைக்கும் தனித்தனியே பொற்கலக்கால்
அங்கடைவின் மண்டலமிட் டணிவிளங்க நிறைத்தனரால்.

பி - ம்:—[1]புகழ்ச்.

5. வெள்ளை நறும் போனகமு மிகுபருப்பும் பொரிக்கறியும்
தள்ளரிய முக்கனியுஞ் சருக்கரையு நறுநெய்யும்
எள்ளரிய பலவிதத்துக் [1]கறியமுது மிமையவர்[2]தம்
வள்ளல்முத லனைவோர்க்கும் வரிசைமுறை படைத்தனரால்.

பி - ம்:—[1]கறியதுவும். [2]தாம்.

6. நீருலவி நீர்குடித்து நினைத்திருந்தா குதிபண்ணிக்
காருலவு மேனியனுங் காரிகையு மிளங்கோவும்
தேரிரவி திருமகனுந் தென்னிலங்கைப் பெருமானும்
போரினுயர் சேனையுடன் போனகம்பற் றினர்பொலிவால்.

7. வேறு. அக்கணத்து .... .... .... மார்பினான். [நஉஅ]

8. உருப்பவிர் .... .... .... யாவையும். [நஉகூ]

9. தீவினை .... .... .... மாதவம். [நநO]

10. என்றுரைத்து .... .... .... தோளினான். [நநக]

ஒருபிரதியில் இச்செய்யுளோடு பரதனுயிர்வருபடலம் முடிய, "அன்னதோரளவையின் (நஉஉ) என்ற பாடலைக்கொண்டு நகர்புகு படலம் தொடங்குகின்றது: மேலுள்ளபாடல்களில்லை.

* இரண்டாவதுமுதல் ஐந்துபாடல்கள் "நின்றவன்" என்பது முதலியபாடல்களுள்ள பிரதிகள் சிலவற்றிலும்இல்லை.

11. வேறு. இரவி காதலன் இலங்கையர் கோனிவ ருதவி
அரசி [1]ருசைய தென்னலா மனுமனேயென்பான்
விரவுகாதலின் நீசெய்த வுதவிக்கு வேறு
தருவ தொன்றிலை யுடனுனுந் தரமது [2]வல்லால்.

பி - ம்.—[1]ஆசையால். [2]தகுமால்.

12. முனிவன் .... .... .... புகன்றான். [கசுக - 18]

13. என்ற வாசகம் .... .... .... உரைக்கும். [,, - 19]

14. செய்த .... .... .... மொழிந்தான். [,, - 20]

15. கொற்ற வன்னுட னுண்ணுமோ கோநின்மா தவனே
வெற்றி வீரனே யெனவஞ்சி நின்றனன் விமலன்
மற்றப் [1]போனக மொருகைவாய் வைத்தபின் வாராப்
பற்றி யப்பொழு தனுமனும் பரிகலம் பரித்தான்.

பி - ம்:—[1]போனகத்தொருகையால்.

16. பரிக லத்தமு தேந்தியே பந்திக டோறும்
இரவி காதலற் கங்கதற் கிலங்கையர் வேந்தற்கு
உரிய வீரர்கட் [1]களித்துத்தா னவர்களோ பாதி
வரிசை யாலுண்ண மாமுனி விருந்துமுண் டனரால்.

பி - ம்:—[1]அளித்ததுதானொருபாதி.

17. அன்ன காலையிற் போனக மமரர்பொற் [1]கலத்தே
முன்னம் போற் [2]படைத் துத்திரு முன்புவைத் தனரால்
[3]உன்னும் பேருல கனைத்து முண்டும் பசிதீரா
மன்னன் [4]மாமுனி விருந்துமுண் டகமகிழ்ந் தனனால்.

பி - ம்:—[1]கலத்தில். [2]படைத் தமைத்தனர்திருமுன்புவைத்தார். [3]பன்னும். [4]மாதவன்.

18. பான நல்லமு துடன்கருப் பூரமும் பலவும்
ஏனை வானவர் மகளிர்க ளேந்திமுன் னிற்பத்
தான மெய்ப்படைத் தம்முடைப் போகத்துட் டந்த
ஆன கற்பகா டமிழ் தென்பது மயின்றான்.

19. அண்ணல் மாமுனி யருளிய போனக மளக்கர்
வண்ண னேமுதல் வானரக் கடலெலாம் வாய்ப்பெய்து
உண்ணும் வாசகங் கேட்டிமை யோர்முனி வோரும்
மண்ணு ளாகரும் யாவரு மருந்துயர் மறந்தார்.

20. மானவேந்தரும் வள்ளலு மலர்க்கரம் விளக்கி
ஆன வெள்ளிலை யோடடைக் காயமு தருந்தி
ஞான மாமுனி பெருமையைப் புகழ்ந்துநா யகனும்
பானல் வேல்விழி யாளொடும் படையொடு [1]மிருந்து.

பி - ம்:—[1]எழுந்தான்.

21. வேறு. ஆரிரு ளகலுங் காலை யமலனு மறையோன் பாதம்
ஆர்வமோ டெழுந்து சென்று வணங்கலு மவனு மாசி
சீரிது கூறிச்சேறி யென்றலுந் தேர்மேற் கொண்டு
சீரிய தானையோடுஞ் சிறப்பொடு மகிழ்ந்து சென்றான்.

22. வேறு. விருந்து முண்டுமா முனிவனை விடைகொண்டுதேர்மேல்
அருந்த தி[1]க்கற்பி னாளொடும் படையொடு [2]மமைந்தான்
வருந்து கோசலை நாடு [3]மயோத்தியும் வாழப்
பரிந்தி ராமனு மேகினன் பரதனைக் காண்பான்.

பி - ம்:—[1]கற்பினாரொடும். [2]ஐயன். [3]அயோத்தியர்.

23. இராவணன் .... .... .... செய்தான். [௩0௫]

இங்குப் பரதன் விரதப்படலம் முடிய, இதன்பின் நகர்புகுபடலம் "அன்னதோரளவையின்" (௩௨௨) என்று தொடங்குகின்றது: ௨௬௨-முதல் ௨௭௫-வரையிலுமுள்ள பாடல்களுமில்லை: "சித்திரகூடத்தை" (௨௭௬) என்றபாடல் "சுருக்கிய" (௨௬0) என்ற பாடலின்பின்சிலவற்றிருக்கச் சிலவற்றிற் காணப்படவில்லை. ௩0௬-முதல் ௩௨௧-வரையிலுமுள்ள பாடல்களும் இப்பிரதிகளி லில்லை. (௪௧௮௧)

௨௬௨.—மூன்றுகவிகள் - பரதன், நகரையலங்கரித்து இராமனை யெதிர்கொள்ளும்படி அயோத்தியிலுள்ளார்க்கு முரசறைவிக்கச் சத்துருக்கினனை யேவுதல்.

இளவலை [1]யண்ணலுக் கெதிர்கொண் மென்றுநம்
வளைமதி லயோத்தியில் வாழு மாக்களைக்
கிளையொடு [2]மேகெனக் கிளத்தி யெங்கணும்
[3]அலையொலி முரசின மறைவிப் பாயென்றான்.

(இ - ள்.) (பரதன்),—தம்பியாகிய சத்துருக்கினனை (நோக்கி),—'சூழ்ந்தமதிலையுடைய (நமது) அயோத்தியில் வாழ்கிற மனிதர்களுக்கு இராமபிரானை எதிர்கொண்டு செல்லுங்களெனவும் சுற்றத்தாருடனே (யாவரும்) செல்லுங்களெனவும் கூறி அறிவித்தற்காக எல்லாவிடங்களிலும் பரவுகிறபேரொலியையுடைய முரசவகைகளை (வள்ளுவர்களைக்கொண்டு) அடிப்பித்துத் தெரிவிப்பாயாக' என்று கட்டளையிட்டான்; (எ - று.)

அண்ணலுக்கு, மாக்களை - உருபுமயக்கம். எதிர்கொண்ம்-செய்யுமென்முற்றின் ஈற்றுஉயிர்மெய் கெட்டு ளகரம் ணகரமாயிற்று. அலை ஒலி-பரவுகின்றஒலி. பி - ம்:—[1]அண்ணலையெதிர்கொள்வானம், அண்ணலையெதிர்கொள்கென்றுநம், கண்ணனுக்கெதிர்கொள்கென்றுநம். [2]எழுகென, எய்தென. [3]அளவொலி. (௪௧௮௨)

௨௬௩. தோரண [1]நட்டுமேற் றுகில்பொ திந்துநற்
பூரணப் பொற்குடம் பொலிய [2]வைத்துநீள்
வாரண மிவுளிதேர் வரிசை தான்வழாச்
சீரணி யணிகெனச் செப்பு வாயென்றான்.

(இ - ள்.) (பின்னும் பரதன் தம்பியை நோக்கி), 'தோரணம் நாட்டி(த்தோரணக்கம்பங்களின்) மேற் சீலைகளினால் அழகு செய்து அழகிய நீர்நிறைந்த பொற்குடங்களை (ப் பலவிடங்களிலும்) விளக்கமடையும்படி வைத்து,—பெரிய யானைகளையும் குதிரைகளையும் இரதங்களையும் (அவ்வவற்றிற்குரிய) முறைமை தவறாமற் சிறந்த அலங்காரங்கள் செய்க என்றுங் கூறுவாய்' என்றான்; (எ - று.)—மேல் 'துகில் பொதிந்து என்பதற்கு - மேற்கட்டுகள் கட்டி யென்றும் பொருள்கூறலாம். பி-ம்:—[1]திறவி. [2]வைத்துமே. (௪௪௮௩)

௨௬௪. பரத்துவ [1]னுறைவிடத் தளவும் [2]பைம்பொனின்
சிரத்தொகை மதிற்புறத் திறுதி சேர்தர
வரத்தகு தரளமென் பந்தர் வைத்துவான்
[3]புரத்தையும் புதுக்குவ புகறி போயென்றான்.

(இ - ள்.) 'பரத்துவாசமுனிவனது ஆச்சிரமம்வரையிலும் பசும் பொன்மயமான நீண்ட சிகரங்களின் வரிசைகளையுடைய (அயோத்தியின்) மதிலில் முடிவுபொருந்தும்படி [அயோத்தியாபட்டணத்துமதில் முதல் பரத்துவாஜாச்சிரமம் வரையிலும்] சிறந்த தகுதியான முத்துக்களினாலாகிய மெல்லிய பந்தலைப்போட்டுச் சிறந்த அயோத்தியாபட்டணத்தையும் புதுப்பிக்கும்படிபோய்ச் சொல்வாயாக' என்று (ம் பரதன் சத்துருக்கினனை நோக்கிக்) கூறினான்; (எ-று.)—பி-ம்:—[1]உறைவிடம். [2]பைம்பொனின். [3]புரத்தையும்புதுக்குக, புரத்தினும்....,புரத்துறப் புக்கெனப். (௪௪௮௪)

௨௬௫.—அக்கட்டளையைச் சத்துருக்கினன் சுமந்திரந்குத் தெரிவித்தல்.

என்றலு மவனடி யிறைஞ்சி[1]யெய்தியக்
[2]குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினான்
நன்றுணர் [3]கேள்விய னவையில் செய்கையன்
தன்றுணைச் சுமந்திரற் கறியச் சாற்றினான்.

(இ - ள்.) என்று (பரதன்) கூறினவுடனே,—மலையையொத்த கட்டமைந்தவில்லை யேந்திய திரண்ட தோள்களையுடையவனாகிய அந்தச் சத்துருக்கினன்,—அப்பரதனது திருவடிகளைப் பணிந்துபோய் நன்றாகக்கேட்டறிந்த நூற்கேள்விகளை யுடையவனும் (அதற்கு எற்ற) குற்றமற்ற தொழிலையுடையவனும் தனக்குச் சிநேகிதனுமான சுமந்திரனுக்கு (அக்கட்டளையை) விளங்கக் கூறினான்; (எ-று.)—பி - ம்:—[1]எய்திய. [2]குன்றன. [3]கேள்வியும்...செய்கையும். (௪௪௮௫)

௨௬௬.—இதுவும் அடுத்த கவியும்-குளகம்: சுமந்திரன் வள்ளுவர்க்குக் கட்டளையிட, அவர்கள் முரசறைதலைத் தெரிவித்தும்.

அவ்வுரை கேட்டலு மறிவின் வேலையான்
கவ்வையி [1]லன்பினுற் களிக்குஞ் சிந்தையான்
வெவ்வெயி [2]லெறிமணி வீதி யெங்கணும்
[3]எவ்வமின் றறைபறை யெற்று[4]கென்றிட,

(இ - ள்.) அறிவு நிறைந்தவொரு கடல்போன்றவனான சுமந்திரன் (சத்துருக்கினன் கூறிய) அவ்வார்த்தையைக் கேட்டவுடனே,—பழிப்பில்லாத அன்பினால் மகிழ்கின்ற மனத்தையுடையவனாய், 'அழகிய காந்தியை வீசுகிற இரத்தினங்களையுடைய வீதிகளிலெல்லாம் குறைவில்லாமல் அடித்தற்கு உரிய பறைகளை யடித்து (ச்செய்தி) தெரிவிப்பீர்களாக' என்று (வள்ளுவர்க்குக்) கட்டளையிட,--(எ - று.)—'வள்ளுவர் முரசமெற்றினார்' என அடுத்த கவியோடு தொடர்ந்துமுடியும்.

வெவ்வெயிலெறிமணி வீதி - வீறுசோளணி. அறிவின் வேலையான் - அறிவிற்குஎல்லையாகவுள்ளவனெனினுமாம். வெவ்வெயில் - உக்கிரமான சூரியகாந்திபோன்ற காந்தி யென்றுங் கொள்ளலாம். பி - ம்:—[1]அன்பினிற். [2]புரை. [3]எவ்வயில். [4]என்றனன். (சகஅசு)

உகூஎ. வானையுந் திசையையுங் கடந்த [1]வான்புகழ்க்
கோனையின் றெதிர்[2]கொள்வான் கோல மாநகர்த்
தானையு மரசரு மெழுக் தாமென
[3]யானையின்[4]வள்ளுவர் முரச மெற்றினார்.

(இ - ள்.) வள்ளுவர்,—'ஆகாயத்தையும் திக்குக்களையும் கடந்துள்ள [எங்கும் பரவிய] சிறந்தபுகழையுடைய தலைவனாகிய இராமபிரானை இன்றைக்கு எதிர்கொள்ளும்படி அழகிய பெரிய அயோத்தியாநகரத்திலுள்ள சேனைகளும் ராஜகுலத்தாரும் புறப்படுவார்களாக' என்று யானைமேல் முரசத்தை யேற்றி யடித்தார்; (எ - று.)

வள்ளுவரைக் கொண்டு யானைமேல் முரசமேற்றி யடித்துச் செய்தி தெரிவித்தல் இயல்பு. இராமனை யெதிர்கொள்ளுதற்குச் சேனையும் அரசரும் எழுக வென்று முரசறைந்தமை கூறியது, மற்றைச்செய்திகளைக் கூறி முரசறைந்ததற்கும் உபலக்ஷணம். பி - ம்:—[1]வாழ்விகழ். [2]கொளக். [3]ஆனைமேல். [4]வள்ளுவன்முரசறைந்தனன். (சகஅஎ)

உகூஅ.—முரசொலி கேட்டலும் நகரத்தவர் புறப்படுதல்.

முரசொலி கேட்டலு முழங்கு மாநகர்
அரசரு [1]மாந்தரு மந்த ணாளரும்
கரைசெய லரியதோ ருவகை [2]கைதரத்
திரைசெறி கடலென வெழுந்து [3]சென்றவால்.

(இ - ள்.) (அம்) முரசவாத்தியத்தின் ஓசையைக் கேட்டவுடனே, முடிவுகாணவொண்ணாததான ஒப்பற்ற களிப்பு மிக,---அரசர்களோடும் குடிகளோடும் பிராமணர்களோடும்,---ஒலிசெய்கிற பெரிய அவ்வயோத்தியாநகரம், அலைகள்நிறைந்த கடல்போல எழுந்துபோயிற்று.

நகரத்தவரனைவரும் எழுந்துசென்றன ரென்ற பொருளில், 'நகர் எழுந்துசென்றது' என்றார்; உபசாரவழக்கு. பி - ம்:---[1]சேனையும். [2]கைம்மிக. [3]சென்றதால். (சகஅஅ)

உ௬௯.—அம்முரசொலியின் சிறப்பு.

அனகனை யெதிர் [1]கொள்கென் றறைந்த பேரிநற்
கனக[2]நல் கூர்ந்தவர் கைப்பட் டென்னவும்
[3]சனகன தூர்க்கென முன்னஞ் சாற்றிய
வனை[4]கடிப் பேரியு மொத்த வாமரோ.

(இ - ள்.) 'குற்றமற்றவனை இராமபிரானை எதிர்கொள்க' என்று (வள்ளுவரால்) அடிக்கப்பட்ட பேரிகையின் ஒலிகள்,-மிக்கபொன் வறியவர்கையில் அகப்பட்டால் அதனையும், சனகராசனது பட்டணத்துக்கு (ச் செல்லுக) என்றுகூறி முன்புஅடித்த அலங்கரிக்கப்பட்ட மணமுரசின்ஒலியையும் ஒத்திருந்தன; (எ - று.)

நெடுநாளாகவறுமையால் மிகவருத்தப்பட்டுக்கொண்டிருந்தஏழைகளுக்குப் பெரும்பொருட்குவியல் யாதொருமுயற்சியுமின்றித் தன்னடைவிற் கிடைத்தாற்போல, பதினான்குவருஷமாக இராமவிரகத்தால் வருந்திய அந்நகரத்தவர்க்கு இம்முரசொலி மிக்கமகிழ்ச்சியை விளைத்த தென்க. சனகனதுஊர், மிதிலாபுரி. அங்குச்செல்லுதற்கு முரசறையச்சொன்னதையும், முரசறைந்ததையும், அதுகேட்டவளவில் அனைவருங் கொண்ட கொண்டாட்டத்தையும், பாலகாண்டத்தில் எழுச்சிப்படலத்திற் காண்க. பி - ம்:—[1]கொள்வான். [2]நல்கூர்ந்தவன். [3]சனகனூர்க்கெழுகென. [4]கடல். (௪௪அ௯)

உ௭0.—மூன்றுகவிகள் - பலரும் ஸ்ரீராமனை எதிர்கொள்ளுதற்குச் செல்லுதலைத் தெரிவிக்கும்.

அறுபதி னாயிர மக்கு ரோணியென்று
இறுதிசெய் சேனையு மேனை [1]வேந்தரும்
செறிநகர் மாந்தருந் தெரிவை மார்களும்
உறுபொரு ளெதிர்ந்தென வுவந்து போயினார்.

(இ - ள்.) அறுபதினாயிரம் அக்ஷௌஹிணி யென்று வரையறை செய்யப்பட்ட சேனைகளும் மற்றும் இராசகுலத்தார்களும் நெருங்கிய பட்டணத்துச் சனங்களும் (அங்குள்ள) மகளிரும்,—அடையவேண்டுமென்று (நெடுநாளாகவிரும்பித்)தேடிய செல்வம் தானேவந்து கிடைக்கப்பெற்றாற்போல மனமகிழ்ந்து (இராமபிரானையெதிர்கொள்ளுமாறு) சென்றார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]மன்னரும். (௪௪௯0)

உ௭௧. அன்னையர் மூவரு மமரர் போற்றிடப்
[1]பொன்னியல் [2]சிவிகையி னெழுந்து போயபின்
[3]தந்நிகர் முனிவருந்[4]தமருஞ் சூழ்தர
மன்னவன் மாருதி மலர்க்கை[5]பற்றுறா.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) (கௌசலை சுமித்திரை கைகேயிஎன்னும்) தாய்மார்மூவரும், தேவர்கள்துதிக்கப் பொன்னாற்செய்யப்பட்ட தண்டிகைகளில்

ஏறிக்கொண்டு சென்றபிறகு,—அரசனாகிய பரதன்,—தமக்குத் தாமே சமரான இருடிகளும் சுற்றத்தார்களும் சுற்றிலும்வர அநுமானது தாமரைமலர்போன்ற கையைப்பிடித்துக்கொண்டு,—(எ-று.)—'போயினான்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

திருமால் நான்குவடிவங்கொண்டு தம் வயிற்றி லுதிக்கும் பாக்கியம் பெற்றிருந்தமையால், தாயர் மூவரையும் 'எங்களுடையதுக்கநிவாரணத்துக்குக் காரணபூதர்கள் இவர்களல்லரோ!'என்று தேவர்கள் நெருங்கித் துதித்துவணங்கின ரென்க. உயர்ந்த பதவியிலுள்ளவர்கள் செல்லும்போது தகுதியரான ஒருவருடையகையைப் பிடித்துக்கொள்ளுதல், மரபு. பி - ம்:—[1]பொன்னினம். [2]சிவிகைமேலினிதுபோயினார். [3]துன்னிய, தன்னிகர். [4]தருமஞ். [5]பற்றினான். (சகககக)

உஎஉ. திருவடி யிரண்டுமே செம்பொன் மௌலியா
இருபுறஞ் சாமரை யிரட்ட வேழ்கடல்
வெருவரு [1]முழக்கென [2]வேழ மார்த்தெழப்
பொருவரு வெண்குடை[3]நிழற்றப் போயினான்.

(இ-ள்.) (இராமபிரானது) இரண்டுதிருவடிநிலைகளே செம்பொன்னாலாகிய கிரீடமாக [அவற்றைத் தலைமேற்கொண்டு],(அந்தப்பரதன்,-தனது)இரண்டு பக்கங்களிலும் சாமரைவீசவும்,—ஏழுகடல்களின் அஞ்சத்தக்க ஒலிபோல யானைகள் ஆரவாரித்துப் புறப்படவும்,—ஒப்பற்ற வெண்கொற்றக்குடை நிழல்செய்யவும் போயினான்; (எ - று.)

திருவடியிரண்டுமே செம்பொன்மௌலியா—"அடித்தல மிரண்டையு மழுதகண்ணினான், முடித்தல மிவையென முறையிற் சூடினான்" என்று வந்திருத்தல் காண்க. பி-ம்:—[1]முழக்கெழ. [2]நிழலிற். [3]வேதம்.

உஎ௩.—சூரியாஸ்தமன வருணனை.

எல்லவன் மறைந்தன னென்னை யாளுடை
வில்லியை யெதிர்கொளப் பரதன் மீச்செல்வான்
அல்லியங் கமலமே யனைய தாள்களிற்
[1]கல்லதர் சுடுந்தன [2]கதிரி னென்னவே.

(இ - ள்.) பரதன் 'என்னை யடிமையாகவுடைய கோதண்டபாணியாகிய இராமபிரானை யெதிர்கொள்ளுதற்கு,(தரையின்) மீது (நடந்து) செல்லுகின்றான்: (ஆதலால்), அகவிதழ்கள் நிறைந்த அழகிய தாமரைமலரையேயொத்த (அவனது) பாதங்களிற் கற்கள் நிறைந்த வழியானது தன்னுடைய கிரணங்களினாற் சுடும்' என்றுநினைத்து (அங்ஙனஞ் சுடாதிருக்குமாறு) சூரியன் அஸ்தமித்தான்; (எ-று.)

சூரியன் இயற்கையாக மறைந்ததற்கு, நடந்துசெல்லுகிற பரதன் தாள்களில் வழி சுடாமலிருப்பதற்கு மறைந்தானென்று கற்பித்துக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]கல்லெனச்சுடுகிலேன்க, ல்லதர்சுடுமெனக். [2]க திர்சென்றென்னவே. (சகககரு)

௨௭௪.—பரதன் அநுமானைநோக்கி இராமனதுசெய்கையைக் கூறும்படி வினவல்.

அவ்வழி மாருதி யங்கை பற்றிய
செவ்வழி யுள்ளத்தான் றிருவி னயகன்
[1]எவ்வழி யுறைந்ததச் செயலெ லாம்விரித்து
இவ்வழி யெமக்குநீ யியம்பு வாயென்றான்.

(இ - ள்.) அச்சமயத்தில் அநுமானது அழகிய கைகளைப் பிடித்துக்கொண்டுள்ள நன்னெறியிற்செல்கின்ற மனமுடையவனான பரதன், திருமகளுக்குத் தலைவனான இராமபிரான் (காட்டில்) எங்குத் தங்கியிருந்தான்? அப்பெருமானது வரலாறு முழுவதையும் நீ எமக்கு இப்பொழுதுவிவரித்துக் கூறுவாய்'என்று(அநுமானை)வினவினான்;(எ-று.)

நாயகன் உறைந்தது - திணைவழுவமைதி. இனி, உறைந்தது எவ்வழி என மாற்றி யுரைக்கவுமாம். பி-ம்:—[1]வெவ்வழியுறைந்த. (௪௧௩௪)

௨௭௫.—இதுமுதல் ௩௦௨ - ஆம் கவிவரையில் ௨௮-கவிகள்-அநுமான் இராமனுடையசெய்கைகள் முழுவதையுங்கூறியதைத்தெரிவிக்கும்.

என்றலு மாருதி [1]வணங்கி யெம்பிரான்
[2]மன்றலர் தொடையினு யயோத்தி மாநகர்
நின்றது மணவினை நிரப்பி மீண்டு [3]கான்
சென்றதும் நாயினேன் செப்பல் வேண்டுமோ.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) என்று (பரதன்) வினவியவுடனே, அநுமான்,—(அவனை) வணங்கி,—வாசனையுடைய மலர்ந்த [மலர்களினாலாகிய] மாலையை அணிந்தவனே! எமது தலைவனான இராமபிரான் பெரிய அயோத்தியா பட்டணத்தில் இருந்ததையும் (மிதிலையிற்சென்று) மணஞ்செய்து கொண்டுதிரும்பி (அயோத்திக்குவந்து) வனத்துக்குச் சென்றதையும் அடியேன் சொல்லவேண்டுமோ? [வேண்டாவன்றே என்றபடி]; (எ-று.)—என்றலும், மாருதி, வணங்கிஎன்றவை, அடுத்தசெய்யுளில் வரும் 'விரிக்குஞ் சிந்தையான்' என்பதைக் கொண்டுமுடியும். பின்னிரண்டடிகட்கு-(நீ மாதுலகிருகத்திற்குச் சென்றபோது அயோத்தியில் ஸ்ரீராமன் தங்கியிருந்ததையும் அப்போது பட்டாபிஷேகச் சடங்கிற்குப்பூர்வாங்கமான சடங்குகளைச்செய்துமுடித்து (ப் பட்டாபிஷேகமணத்தைப்பெறாமல் அவன் காட்டுக்குச் சென்றதையும் நாயினேன் சொல்லவேண்டுமோ என்று பொருள்கொள்ளுதல், ஏற்கும். பி-ம்:—[1]தொழுதிங்கு. [2]மன்றலந். [3]தான். (௪௧௩௫)

௨௭௬. சித்திர கூடத்தைத் தீர்ந்த பின்சிரம்
[1]பத்துடை யவனுடன் [2]விளைந்த [3]பண்பெலாம்
இத்தலை [4]யடைந்தது [5]மிறுதியாய போர்
[6]வித்தகத் தூதனும் விரிக்குஞ் சிந்தையான்,

(இ - ள்.) (இராமபிரான்) சித்திரகூடபருவதத்தை விட்ட பிறகு பத்துத்தலைகளையுடையனான இராவணனுடன் நேர்ந்த செயலெல்லாம் (தான்) இவ்விடத்தை யடைந்தது வரையிலும்நிகழ்ந்த இராமசரித்திரங்களை விவரித்துக் கூறுங்கருத்துடையவனானான்: (யாவனெனில்), போரில்வல்லவனான இராமனுடையதூதன்; (எ - று.)—அவ் விவரத்தை அடுத்த கவி முதற் காண்க.

தான் இத்தலையடைந்தது - அநுமான் பரதனிடம் சேர்ந்தது. பி - ம்:—[1]பத்துடையானெனும். [2]விளைத்த. [3]பண்புந்தான். [4]அடைந்ததே. [5]இறுதியாமென. [6]வித்தகனுரைகளால்விளங்கச்சொல்லினான்.

உஎஎ. குன்றுறழ் வரிசிலைக் குரிசி லெம்பிரான்
தென்றிசைச் சித்திர கூடந் தீர்ந்தபின்
வன்றிறல் விராதனை மடித்து மாதவர்
துன்றிய தண்டக வனத்துட் டுன்னினான்

(இ - ள்.) மலையையொத்த கட்டமைந்த வில்லை யேந்திய புருஷசிரேஷ்டனாகிய எமதுதலைவன் [இராமபிரான்], தெற்குத்திக்கிலுள்ள சித்திரகூடபருவதத்தை விட்டுச்சென்றபிறகு மிக்கவலிமையையுடைய விராதனென்னும் அரக்கனைக் கொன்று மிக்கதவத்தையுடைய இருடிகள் நெருங்கிவசிக்கிற தண்டகாரணியத்திற்சென்று சேர்ந்தான்;(எ-று.)

சித்திரகூடம் அயோத்திக்குத்தென்புறத்தி லிருத்தலால், அதற்கு, 'தென்றிசை' என்ற அடைமொழி கொடுத்தார். (சகஎஎ)

உஎஅ. ஆங்குறை தபோதன ரரக்கர்க் [1]காற்றலேம்
நீங்கினந் தவத்துறை நீதி யோயெனத்
தீங்கு[2]செய் பவர்களைச் [3]செகுத்த றிண்ணநீர்
வாங்குமின் [4]மனத்துயர் வாய்மை யாலென்றான்.

(இ - ள்.) அவ்வனத்தில் வசிக்கிற இருடிகள் (இராமபிரானை நோக்கி), 'நீதியையுடையவனே! இராக்கதர்செய்யுந்துன்பங்கட்குப் பொறாதவர்களானநாங்கள் தவஞ்செய்யும் முறையினின்று தவறினோம்' என்று முறையிட, '(உங்கட்குத்) தீமைசெய்பவர்களை (நான்) அழிப்பது நிச்சயம்; (எனது) இவ்வார்த்தையால் நீங்கள் மனத்திற் கொண்டுள்ள வருத்தங்களை யொழிவீர்களாக' என்று (இராமபிரான் அவர்களுக்குக்) கூறியருளினான்; (எ - று.)

இருடிகள் முறையிட்டமையும், இராமபிரான் அவர்கட்கு அபயமளித்தமையும் ஆரணியகாண்டத்திற் காண்க. பி-ம்:—[1]ஆற்றலா. [2]செய்தவர்களை. [3]செகுப்பன். [4]துயரெனவாய்மைகூறினான். (சகஎஅ)

உஎகூ. ஆறுநா லாண்டவண் வைகி யப்புறத்து
ஈறிலா முனிவர ரேய வாணையால்
மாறிலாத் தமிழ்முனி வனத்தை நண்ணினான்
ஊறிலா முனிவர னுவந்து முன்[1]வர.

(இ - ள்.) (இராமபிரான்) பத்துவருஷகாலம் அத்தண்டகாரணியத்தில் (முனிவர்களது ஆச்சிரமமண்டலத்தில்) தங்கியிருந்து அதன்பின்பு முடிவில்லாத இருடிச்சிரேஷ்டர்கள் ஏவிய கட்டளைப்படி ஒப்பில்லாத தமிழுக்குஉரிய அகஸ்தியமுனிவனது ஆச்சிரமத்தை,- துன்பமில்லாத அவ்விருடிச்சிரேஷ்டன் களிப்புடன் எதிர்கொண்டுவரப் போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

அகஸ்தியாச்சிரமத்தை யடைவதற்குமுன், ஒவ்வொருஆச்சிரமத்திலும் சிலசிலநாளாக முனிவர்களாச்சிரமங்கள்தோறுந் தங்கியிருக்க, இராமபிரானுக்குப் பத்துவருஷங்கள் கழிந்தன வென்க. 'ஈறிலா முனிவரர்' என்றது, தண்டகாரணியவாசிகளாகிய வாலகில்யர் முதலானோரையும், சுதீக்ஷ்ணரென்ற முனிவரையும். பி - ம்:—[1]வந்தான். ()

௨அ௦. குடங்கையில் வாரிதி [1]யணைத்துக் கொண்டவன்
தடங்கணான் றனையெதிர் தழுவிச் சாபமும்
கடுங்கணைப் புட்டிலுங் கவசந் தானு[2]மத்
திடம்படு சுரிகையுஞ் சேர வீந்தனன்.

(இ - ள்.) உள்ளங்கையிற் கடல்நீரை(யுண்ணும்படி) முகந்தெடுத்துக்கொண்டவனான அகஸ்தியமுனிவன் பெரியகண்களையுடையனான இராமபிரானை எதிர்கொண்டுதழுவி,(அவனுக்கு)வில்லையும் வேகமாகச் செல்கின்ற அம்புகள்நிறைந்த (இரண்டு) தூணீரங்களையும் கவசத்தையும் உறுதிபொருந்திய அப்படிப்பட்ட வாளையும் ஒருசேரக் கொடுத்தான்; (எ-று.)—"இப்புவனமுற்றுமொருதட்டினிடையிட்டா, லொப்புவரவிற்றெனவுரைப்பரியவாள்" என்றதற்குஏற்ப,'அத்திடம்படுசுரிகை' என்றார். பி-ம்:—[1]அணைத்தும். [2]மற்று - இடம்படு. (௪௨௦௦)

௨அக. அப்புறத் தெருவைவி னரசைக் கண்ணுறாத்
துப்புறச் சிவந்தவாய்த் தோகை தன்னுடன்
மெய்ப்[1]புகழ்த் தம்பியும் வீரன் றானும்போய்
[2]மைப்பொழி றுறுபஞ்ச வடியின் [3]வைகினார்.

(இ - ள்.) அதன்பிறகு பவழத்தையொப்பச் சிவந்த வாயினையும் மயில்போன்றசாயலையு முடைய சீதையுடன் உண்மையான புகழையுடைய இளையபெருமாளும் வீரனாகிய இராமபிரானும்,—போய், கழுகுகளுக்கு அரசனாகிய சடாயுவைக்கண்டு மேகங்கள்தங்கப்பெற்ற [மிக வுயர்ந்த] சோலைகள் நெருங்கிய பஞ்சவடியில் தங்கியிருந்தார்; (எ-று.)

சடாயு - சூரியன்சாரதியான அருணனதுபுத்திரன்; சம்பாதியினது தம்பி.இவன் தசரதசக்கரவர்த்தியினால் தமையன்முறைபாராட்டப்பட்டமைபற்றி, வைஷ்ணவசம்பிரதாயத்தில் இவற்கு 'பெரிய வுடையார்' என்று திருநாமம். பஞ்சவடி - ஐந்து ஆலமரங்களின் தொகுதி; அதனையுடைய இடத்துக்கு ஆகுபெயர்; அது, அகண்டகோதாவரிக் கரையில் நாசிகாத்திரியம்பகத்துக்குச் சமீபத்திலுள்ளது. பி-ம்:--[1]புகட்டம்பியும். [2]மைப்புறப்பொழிற், மைப்பொழிலுறு, மைப்பொழிலப். [3]வைகினன்.()

வேறு.

உஅஉ. பல்பக லிறந்த பின்றைப் பாதக வரக்கி தோன்றி, [1]மெல்லிய லிடையி னாளை வெருண்டுழி யிளைய வீரன், [2]அல்லிய திருவைத் தேற்றி [3]யவளுடைச் செவியு மூக்கும், மல்கிய முலையுங் கொய்தான் [4]மறித்தவள் கரற்குச் சொன்னாள்.

(இ - ள்.) (அந்தப்பஞ்சவடியிற்) பலநாள் கழிந்தபிறகு, (இராவணன்தங்கையான சூர்ப்பணகையென்னும்) கொடும்பாதகியான அரக்கி (இராமனை)எதிர்ப்பட்டு, (அவனது திருமேனியழகைக்கண்டுகாதல் கொண்டு தன்னைமணம்புணர்தற்கு இந்தச்சீதை இடையூறுவள் என்று எண்ணி) மெல்லியஇடையையுடையளான அச்சீதையினிடம் மனம் வெதும்பி (அவளை)க் கவர்ந்துசெல்லத் தொடங்குகையில், இலக்குமணன்கண்டு மனமழிந்தவளான சீதையைத்தேற்றி அவ்வரக்கியின் மூக்குமுதலிய உறுப்புக்களை அறுத்துவிட, அவள் மீண்டு (தனக்குப் பாதுகாவலாக இராவணனால் ஏற்படுத்தப்பட்ட சேனைக்கு முதல்தலைவனான) கரனிடம் (சென்று தனக்குநேர்ந்த வருத்தத்தைத்) தெரிவித்தனள்; (எ - று.)—பி - ம்:—[1]மெல்கிய..., மெல்லிடைமாதைநோக்கி. [2]அல்லியந். [3]அரக்கியை. [4]மடுத்தவள், மதித்தவள். (சஉ0உ)

உஅஙு. கரனொடு திரிசி ராவுங் [1]கடியதூ டணனுங் காந்தி [ம்
எரியுமூன் [2]றனலே யொப்பா [3]ரெழுந்துவெஞ் சேனை யோடு
விரவினா ரையன் செங்கை வில்லினை நோக்கு முன்போர்
[4]எரிதவழ் [5]பஞ்சி னுக்கா ரரக்கியு மிலங்கை புக்காள்.

(இ - ள்.) கரனும் திரிசிரஸ்என்பவனும் கொடிய தூஷணனும் என்னும் மூவரும் (சூர்ப்பணகையின் வார்த்தையைக் கேட்டுக்) கோபித்து எரிகின்ற மூன்றுவகை அக்கினிகளையேபோல்பவராய் (உக்கிரங் கொண்டு) எழுந்து கொடிய (தமது) சேனையோடுங்கலந்து சென்றவர்களாய், இராமபிரான் (தனது) சிவந்தகையிலுள்ள வில்லை(ப் போர் செய்யும்படி நாணேற்றுதற்கு நினைத்துப்) பார்த்தற்குமுன்பே [வெகு விரைவில்]நெருப்புசேரப்பெற்ற பஞ்சுபோல் (மிகஎளிதில்) அழிந்தொழிந்தனர்:(இவர்கள்இவ்வாறுஆனபின்பு) சூர்ப்பணகையும்(தனது தமையனை இராவணனுக்குச் செய்திகூறும்படி) இலங்கையிற்போய்ச்சேர்ந்தாள்; (எ - று.)

பின்னிரண்டடியில் மிகையுயர்வுநவிற்சியணி காண்க. பஞ்சின் போர்-பஞ்சின்தொகுதியென்பாருமுளர். பி-ம்:—[1]கரிய. [2]அனலை. [3]எதிர்ந்துவெஞ்சேனையோடும், எழிருகோடியோடு. [4]எரிதழற். [5]பஞ்சியொத்தார். (சஉ0ங)

உஅச. இருபது தடக்கை யான்மாட் டிசைத்தலு மெழுந்து பொங்கி, ஒருபது திசையு முட்க வஞ்சக வுழையொன் றேவித், தருபதஞ் [1]சமைந்த முக்கோற் [2]றாபத வடிவங் [3]கொண்டு, திருவினை நிலத்தொ டேந்தித் தென்றிசை யிலங்கை [4]புக்கான்.

(இ - ள்.) (இலங்கையிலுள்ள) இருபது பெரிய கைகளையுடையவனான இராவணனிடத்தில் (சூர்ப்பணகை தனக்கு நேர்ந்த மானபங்கத்தையும் கரன்முதலியோரது நாசத்தையும் சீதையின் வடிவழகையும்) சொன்னவுடனே (அவ்விராவணன் கோபமும் காதலுங்கொண்டு) கிளர்ந்தெழுந்து பத்துத்திசையிலுள்ளாரும் அஞ்சும்படி (அச்சீதையை வஞ்சனைசெய்து கவர எண்ணி) மாரீசனாகிய ஒருமாயமானை ஏவி,—(அதன் நிமித்தமாக இராமலக்ஷ்மணர் சீதையைப் பிரிந்த சமயம்பார்த்து, நன்மையைத்) தருதற்குக் காரணமான பக்குவமமைந்த திரிதண்டமேந்திய தவஞ்செய்தலையுடைய முனிவர்போல வடிவங்கொண்டு இலக்குமியினமிசமான சீதையைத் தரையோடு பெயர்த்து எடுத்துத் தேரில்வைத்துக்கொண்டு தெற்குத்திக்கிலுள்ள இலங்கையிற்புகுந்தான்; (எ - று.)

பத்துத்திசை - நான்கு பெருந்திக்குக்களும், நான்குமூலைத்திக்குக்களும், கீழ்மேல் என்ற இரண்டும். திசை - இடவாகுபெயர். 'தருபதஞ்சமைந்த' என்ற அடைமொழி, இராவணன் கொண்டகோலம் போலிச்சந்நியாசிவேடத்தைப் புலப்படுத்தாது உண்மைத்துறவியின் வடிவமாகவே தோன்றிற்றுஎன்பதை விளக்கும். பி-ம்:—[1]அமைத்த. [2]தாபதர். [3]கொள்ளாத். [4]சென்றான். (௬௨0௪)

௨௮௫. போகின்ற [1]காலை யேற்ற சடாயுவைப் பொருது வீட்டி, வேகின்ற வுள்ளத் தாளை வெஞ்சிறை யதனின் வைத்தான், ஏகின்ற [2]வஞ்ச மான்மா ரீசற்கொன் றிளவ லோடு, பாகின்ற கீர்த்தி [3]யண்ணா றந்தையைப் பரிவிற் கண்டான்.

(இ - ள்.) (இராவணன், சீதையைத் தூக்கிக்கொண்டு) செல்லுங்காலத்தில் (அவளது கூக்குரலைக்கேட்டுவந்து அவளை மீட்கும்பொருட்டு வழியில் தன்னை) எதிர்த்த சடாயுவைப் போர்செய்துகொன்று (இராமனது பிரிவினாலும் தான் அரக்கன்கைப்பட்டதனாலும்)வேகின்ற மனமுடையவளான சீதையை (இலங்கையிற் சென்று அசோகவனத்தில் சிம்சுபாவிருக்ஷத்தின்கீழ் அரக்கியர்கூட்டத்தின் நடுவில்) கொடிய சிறையில் வைத்திட்டான்; (சீதையின்செய்தி இவ்வாறாக), பரவுகின்ற கீர்த்தியையுடைய பெருமையிற்சிறந்தவனான இராமபிரான் (தன்னை வெகுதூரம் ஏமாற்றிக்கொண்டு) செல்லுகின்ற மாயத்தையுடைய மான்வடிவங்கொண்ட மாரீசனைக் கொன்றபின்பு தம்பியாகிய இலக்குமணனோடும் (தனக்குப் பெரிய) தகப்பனார்முறையான (இராவணனா லடித்துத் தள்ளப்பட்டுக் குற்றுயிராய் விழுந்துகிடந்த) சடாயுவை இரக்கத்தோடு பார்த்தான்;—(எ-று.)---பி-ம்:—[1]போதுகாத்த... புரட்டிப்போனான், போதுங்காத்த...புரட்டிப்போயவ். [2]உழைமாரீசன் றன்னைவீழ்த்து. [3]வள்ளறந்தையை, அன்னான்றாதையை. (௬௨0௫)

௨௮௬. அன்னவன் றனக்கு வேண்டு மருங்கடன் முறையி னாற்றி
நன்னுத றன்னைத் தேடித் தென்றிசை நடக்கு மையன்
மன்னிய கவந்தன் றன்னை யுயிரொடு சாப மாற்றித்
தன்னையே மறப்பி லாத சவரிபூ சனையுங் கொண்டான்.

(இ - ள்.) அந்தச்சடாயுவுக்குச் செய்யவேண்டிய(கிடைப்பதற்கு) அரிய பித்ருகருமத்தை முறைமையாகச் செய்துமுடித்து (இறந்த சடாயுவின் வார்த்தையின்படி) அழகிய நெற்றியையுடைய சீதையைத் தேடிக்கொண்டு தெற்குத்திக்கைநோக்கிச் செல்லுகின்ற இராமபிரான், (இடைவழியிற்) பொருந்திய (தம்மைக்கொல்லமுயன்ற) கபந்தனென்னும்அரக்கனதுஉயிரையும்சாபத்தையும் ஒழித்துத் தன்னையே மறவாமல் நினைத்திருந்த [தன்வருகையையே எதிர்நோக்கியிருந்த] சபரியினது உபசாரத்தையும் ஏற்றுக்கொண்டான்; (எ - று.)

இராமபிரான், தன்னைப்பெற்ற தந்தையான தசரதன் இறந்தபோது தான் அருகிலிருந்து அவனுக்குச் சரமகைங்கரியஞ்செய்யப்பெறாதகுறைதீரப் பெரியதந்தையான சடாயுவுக்குச் செய்தனனென்பர். இராமபிரான் கழுகாகிய சடாயுவுக்குத் தீக்கடன் நீர்க்கடன் முதலியன செய்துமுடித்ததனால், அப்பெருமானது செய்ந்நன்றிமறவாப் பெருந்தகைமை வெளியாகின்றது. கவந்தன்தன்னை யுயிரொடு சாபம் மாற்றி- உடனவிற்சியணி. (சஉ0௬)

உ௮௭. ஆங்கவ டனது சொல்லா லருக்கன்மா மகனை [1]யண்மிப்
பாங்குற நட்டு வாலி [2]பருவரல் கெடுப்ப லென்று
ஓங்கிய மரமும் வாலி யுரமுமூ டுருவ வெய்திட்டு
ஆங்கவன் றனக்குச் செல்வ மரசொடு மருளி னீந்தான்.

(இ-ள்.)அப்பொழுது அந்தச்சபரி கூறிய சொல்லின்படி சூரியனது சிறந்தமகனை சுக்கிரீவனைச்சேர்ந்து (அவனுடன்)மனங்கலந்து (இனிதாக) நட்புக்கொண்டு 'வாலியினால் நேர்ந்த துன்பத்தை ஒழிப்பேன்' என்று (அச்சுக்கிரீவனுக்கு உறுதிமொழி) கூறி, - உயர்ந்துவளர்ந்த (ஏழு) மராமரங்களையும் வாலியின்மார்பையும் ஊடுருவித் துளைக்கும்படி அம்பெய்து அவ்வுறுதிமொழியின்படியே அச்சுக்கிரீவனுக்குச் செல்வத்தையும் அரசாட்சியையும் அருளுடன் கொடுத்தான்; (எ - று.)

'வாலிபருவரல்' என்றது, சுக்கிரீவனது மனைவியான ருமையை வலியக் கவர்ந்ததுமன்றி அவனை நாட்டிலுந் தங்கவொட்டாது வாலி முறியடித்தமையை. பின்னிரண்டடிகள் - உடனவிற்சியணி. பி - ம்:— [1]எய்திப். [2]பருவரம். (சஉ0௭)

உ௮௮. காலமா மாரி நீங்கக் கவயனோ டிடபன் காந்து
நீலன்மா மயிந்தன் சாம்பன் சதவலி பனச னீடு
வாலிமா மைந்த னென்றிவ் வானரத் தலைவ [1]ரோடு
கூலவான் [2]சேனை சூழ வடைந்தன னெங்கள் கோமான்.

(இ - ள்.) பெரிய மழைக்காலம் கழிந்தவுடன், கவயனும் ருஷபனும் (பகைவர்பக்கல்) மனங் கொதிக்கின்ற நீலனும் பெருமையுடைய மயிந்தனும் ஜாம்பவானும் சதவலியும் பநஸனும் பெரிய வாலியினது சிறந்த புதல்வனாகிய அங்கதனும் என்று கூறப்பட்ட இந்தவானரத் தலைவரோடு கூட்டமான பெரிய குரங்குச்சேனை (தன்னைச்) சுற்றி

லும் வர எங்களுக்குத்தலைவனான சுக்கிரீவன் (இராமபிரானிடம்) வந்துசேர்ந்தான்; (எ - று.)

சாம்பன் - ஜாம்பவான்: கரடியாகிய ஜாம்பவானையுஞ் சேர்த்து 'இவ்வானரத்தலைவர்' என்றது, மிகுதிபற்றிச் சுருங்கச்சொல்லலென்னும் அழகுஅமையக் கூறியதாம். கூலம் - குலமென்பதன் நீட்டல்; இனி, கூலம் என்பதை லாங்கூலம்என்பதன் முதற்குறையாகக்கொண்டு, வாலையுடைய என்றும் பொருள்கொள்ளலாம்; அன்றி, கூலம் - கரை; அது, கடலுக்கு இலக்கணையாக, சமுத்திரம்போன்ற பெருஞ்சேனையென்றும் உரைகூறலாம். கூலம் - படையணியுமாம். பி - ம்:—[1]படைஞராய,தலைவராய. [2]சேனையோடும். [3]வந்தனன்,விசைந்தனன். ()

உ௮௯. எழுபது வெள்ளத் [1]தூற்ற குரக்கின மெழுந்து பொங்கி
அழுவநீர் வேலை யென்ன வடைந்துழி யருக்கன் மைந்தன்
தழுவிய திசைக டோறுந் தனித்தனி யிரண்டு வெள்ளம்
பொழுதிறை கடாது மீளப் போக்கினன் றிருவை [2]நாட.

(இ - ள்.) எழுபதுவெள்ளமாகத்திரண்ட வானரக்கூட்டம் பொங்கியெழுந்து ஆழமானநீரையுடைய கடல்போல(த் தன்னை)ச் சேர்ந்தபொழுது,—சூரியபுத்திரனான சுக்கிரீவன்,—பொருந்தின எல்லாத்திக்குக்களிலும் சீதையைத்தேடும்பொருட்டுத் தனித்தனியாக இரண்டு வெள்ளஞ்சேனையை (ஒருமாச) காலத்திற் சிறிதுந்தவறாமல் மீண்டு வரும்படி அனுப்பினான்; (எ - று.)—அழுவம் - ஆழம்: பரப்புமாம். பி-ம்:—[1]ஏற்ற. [2]நாடி.　　　(௬உ0௯)

உ௯0. தென்றிசை யிரண்டு வெள்ளஞ் சேனையும் வாலி சேயும்
வன்றிறற் சாம்ப னோடு வாவின [1]ரேவ னாயேன்
[2]குன்றிடை யிலங்கை புக்குத் திருவினைக் குறித்து மீண்ட
பின்றைவந் தளக்கர் வேலை பெரும்படை யிறுத்த தன்றே.

(இ - ள்.) இரண்டுவெள்ளம் வானரசேனையோடும் தெற்குத்திக்கில் தாவிச்சென்றவர்களாகிய வாலியின்புதல்வனான அங்கதனும் மிக்கவலிமையையுடைய ஜாம்பவானும் (என்னைத்) தாண்ட, அடியேன் (மகேந்திர) பருவதத்தினிடத்திலிருந்து இலங்கையில் (தாவிச்)சென்று சீதையைக் கண்டு செய்திதெரிந்து மீண்ட பிறகு (சுக்கிரீவமகாராஜனது) பெரிய (வானர)சேனைசமுத்திரம் (தென்) கடற்கரையில் வந்து தங்கிற்று; (எ - று.)—குன்றிடை யிலங்கை என்றெடுத்து - (திரிகூட) மலையிலுள்ள இலங்கையென்றும் பொருள்கொள்ளலாம். பெரும்படையளக்கரென்க: அளக்கர்-கடல். பி-ம்:—[1]எவரும், என்னில். [2]சென்றிடை. ()

உ௯௧. அறிவினுக் கறிவு போல்வான் வீடண னலங்கற் [1]றோளான், செறிபுயத் தரக்கன் றம்பி திருவினை [2]விடுதி யன்றேல், இறுதி[3]யுற் றனைநின் வாழு [4]ளெனவவ னுரைப்பச் சீறிக், கறுவுறப் பெயர்ந்து போந்து கருணையான் [5]சரணம் பூண்டான்.

(இ - ள்.) அறிவுக்கும் அறிவுபோல்பவனும் [மிக்க அறிவுள்ளவனும்] மாலையணிந்த தோள்களையுடையவனும் (ஒன்றன்மேலொன்றாக) நெருங்கிய(இருபது)கைகளையுடைய இராவணனது தம்பியுமாகிய விபீஷணன்,—(தனது தமையனான இராவணனை நோக்கி), 'சீதையை விட்டிடுவாயாக: அன்றேல், உனது ஆயுள்நாள் முடிவுபெறும்' என்று கூறினமாத்திரத்தில், அவ்விராவணன் கோபித்துப்பேச,—(அவ்விபீஷணன் அவன்பக்கல்) வைரம்பொருந்த (இலங்கையினின்று) நீங்கி வந்து அருளுடையவனான இராமபிரானது திருவடியை அடைக்கலமாக அடைந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]தோளாய். [2]விடாதுகாப்பின். [3]உற்றனை, உற்றுளது. [4]என்றவன். [5]பாதங்கண்டான். (௬௨௧௧)

௨௯௨ ஆங்கவற் கவய நல்கி யரசொடு முடியு மீந்து
பாங்கினல் வருணன் றன்னை யழைத்திடப் [1]பதைப்பி லாது
தாங்கினன் சிறிது போது தாமரை நயனஞ் சேப்ப
ஓங்குநீ ரேழு மன்ன னுடலமும் [2]வெந்த வன்றே.

(இ - ள்.) (இராமபிரான்), அச்சமயத்தில் (அக்கடற்கரையிலே) அவ்விபீஷணனுக்கு அபயமளித்து, (அவனுக்கு) இராச்சியத்தையும் கிரீடத்தையும் கொடுத்து [இலங்காராச்சியபட்டாபிஷேகஞ் செய்து] (கடற்குஉரிய கடவுளான) வருணனை வணக்கத்தோடு அழைக்குமாறு பதைப்பில்லாமல் [விரைவுகொள்ளாது] சிறிதுகாலம் (புல்லணையில்) பொறுத்துக்கிடந்தான்: (அப்போதும் அந்தவருணன் பிரதியக்ஷமாகாது தாமதித்ததனாலே சினங்கொண்ட இராமபிரானது)தாமரைமலர் போன்ற கண்கள் (கோபத்தாற்) செந்நிறமடைய, அப்பொழுதே பெரிய கடல்களேழும் (கடற்றெய்வமான) அவ்வருணனது உடம்பும் வெந்துவிட்டன; (எ - று.)

'தாமரை நயனம் சேப்ப' என்றது - ஆக்நேயாஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தொடங்க என்ற பொருளைத் தெரிவித்தலால், காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்காம். சிறிதுபோது என்பதை 'சேப்ப' என்பதனோடுங் கூட்டலாம். பதைப்பிலாது அழைத்திடவும் (வருணன்) சிறிதுபோது தாங்கினன்எனவுமாம். பி-ம்:—[1]பரிவிலாமை. [2]வெந்தது. (௬௨௧௨)

௨௯௩. மற்றவ னவய மென்ன மலர்ச்சர [1]ணடைந்த வேலை
வெற்றிவா னரர்கள் பொங்கி வெற்பினல் வேலை [2]தட்டல்
[3]முற்றுற நன்கி யற்றி மொய்யொளி யிலங்கை புக்குப்
பற்றினர் [4]சுற்றி யார்த்தார் வானவர் பயங்க டீர்ந்தார்.

(இ - ள்) பின்பு அவ்வருணன் அபயமென்று (இராமபிரானது) தாமரைமலர்போன்ற திருவடிகளை யடைந்தபொழுது,—சயத்தையடையுந்தன்மையுடைய வானரவீரர்கள் உற்சாகங்கொண்டெழுந்து மலைகளினாற் கடலை (அணைகட்டித்தடு)த்தலை முடியும்படி நன்றாகச் செய்து (பின்பு) நிறைந்தஒளியையுடைய இலங்கையிற் புகுந்து சுற்றி

லும் முற்றுகைசெய்தவர்களாய் ஆரவாரித்தார்கள்; (அவ்வொலியைக் கேட்டமாத்திரத்தில்), தேவர்கள் (இனி அரக்கர்கள் ஒழிவார்களென்று) அச்சம் நீங்கினார்கள்;—(எ-று.)—பி - ம்:—[1]கொடுத்த. [2]வேலை, கோடு. [3]பெற்றிடவியற்றிநீசர்பிறங்கெயில், பெற்றிடவியற்றி நீசர் பிறங்கொளி. [4]மதிலை. (சஉகங)

உகூச.மலையினை யெடுத்த தோளு மதமலை [1]திளைத்த மார்பும்
தலையொரு பத்துஞ் சிந்தித் தம்பிதன் [2]றோளுந் தாளும்
கொலைத்தொழி [3]லரக்க ராயோர் குலத்தொடு [4]நிலத்து [5]வீழச்
சிலையினை வளைவித் [6]தையன் தேவர்களிடுக்கண் டீர்த்தான்.

(இ-ள்.)இராமபிரான்,—(இராவணனுடையனவான) கைலாசமலையைப் பெயர்த்தெடுத்த (இருபது) தோள்களும் மதங்கொண்ட மலைபோன்ற திக்கஜங்களின் தந்தங்கள் அழுந்தப்பெற்ற மார்பும் பத்துத் தலைகளும் சிதறிவிழச்செய்து, (பிறகு அவன்) தம்பியாகிய கும்பகர்ணனது தோள்களும் கால்களும் கொல்லுதல்தொழிலையுடைய அரக்கர்களின் கூட்டமும் தரையில் வீழ்ந்துஅழிய, (தனது) வில்லை வளைத்து (அம்புதொடுத்து)த்தேவர்களுடைய துன்பத்தைப் போக்கியருளினான்; (எ - று.)—பி - ம்:—[1]கிளைத்த. [2]தாளுந்தோளும். [3]அரக்கர்சுற்றம், அரக்கனார்தங். [4]தலத்து. [5]மாள. [6]ஐய. (சஉகச)

உகூரு.இலக்குவன் [1]பகழி யொன்றா லிந்திர சித்தென் றோதும்
[2]விலக்கரு [3]வலத்தி னானு மிளைஞருங் கிளையும் வீழ்ந்தார்
[4]மலக்கமுண் டுழலுந் தேவர் மலர்மழை தூவி யார்த்தன்று
உலக்குநர் குழுக்க டோறு முடற்குறை யாடல் [5]கண்டார்.

(இ - ள்.) இலட்சுமணனது ஒருபாணத்தினால் இந்திரசித்தென்று கூறப்பட்ட (எவராலும்) விலக்கமுடியாத பலத்தையுடையவனும் இளவீரர்களும் பந்துவர்க்கமும் விழுந்துஇறந்தார்கள்; (அரக்கர்களாற்) கலக்கமடைந்து வருந்திய தேவர்கள், (அப்பொழுது) பூமாரிபெய்து ஆரவாரித்து அந்நாளில் இறந்தவர்களது கூட்டங்கள்தோறும் கபந்தங்கள் எழுந்துகூத்தாடுதலைக் கண்டார்கள்; (எ - று.)

அநுமான் இராமன்செயல் முழுவதையுங் கூறிப் பிறகு இலக்குமணன்செயலைக் கூறுகின்றா னாதலால், இராவணவதத்திற்குப் பிறகு இந்திரசித்தின்வதம் கூறப்பட்டது. அன்று - மூலபலவதம்நிகழ்ந்த அப்பொழுது எனக் கொள்ளலாம். பி - ம்:—[1]பகழிதன்னால். [2]வெலற்கரு. [3]வரத்தினானும். [4]அலக்கணுண்டுழலுந்தேவரலர். [5]கண்டான். ()

உகூகூ.தேவரு முனிவர் தாமுஞ் சித்தருந் தெரிவை மாரும்
[1]மூவகை யுலகு ளோரு[2]முறைமுறை தொழுது [3]மொய்ப்பப்
பூவைபோ னிறத்தி னானும் வீடணப் புலவர் கோமாற்கு
யாவையு மியம்பி மாண்டார்க்கியற்றுதி கடன்க ளென்றான்.

(இ - ள்.) தேவர்களும் இருடிகளும் சித்தர்களும் (அவரவர்களுடைய) மனைவியர்களும் மற்றைமூன்றுஉலகத்தில் வசிப்பவர்களும்

முறைமுறையாக (இராமபிரானைத்) தொழுது நெருங்க,-(அப்பொழுது காயாம்பூவைப்போலுந் திருமேனிநிறத்தையுடையனான ஸ்ரீராமனும், அறிவுடையார்களிற் சிறந்தவனான விபீஷணனுக்கு(ச் சொல்லவேண்டுவன) எல்லாவற்றையுஞ் சொல்லி, 'இறந்தவர்யாவர்க்கும் சாமக்கிரியைகளைச் செய்வாய்' என்றுங் கூறினான்; (எ - று.)

பூவை - கிளியுமாம்: "சிறுகிளிப் பைதலே......நின் பசுஞ்சாம நிறத்தன்", "கிளித்தன கவித்த மேனி" எனத் திருமாலினது நிறத்துக்குக் கிளி உவமைகூறப்படுதலுங் காண்க. பி-ம்:—[1]மூவுலகிடை, மூவருலகு. [2]தனித்தனிப்புகழ்ந்து. [3]மொய்த்து, மொய்த்தார். இதன்பின் சிலபிரதியில் ஒருசெய்யுள் காணப்படுகின்றது வருமாறு:—

**ஏடினை ரலங்கன் மார்பத் திராவணன் முதலோர்க் கெல்லாம்**
**வீடணன் கடன்கள் செய்து மீண்டன னவனுக் கின்னே**
**சூடுக மௌலி யென்னச் சுந்தர விராமன் றம்பி**
**மாடணை துணைவ ரோடும் மகுடமே புனைந்து விட்டான்.** (சஉகசு)

உகூஎ. **நான்முகன் விடையை யூரு நாரியோர் பாகத் தண்ணல்**
**[1]மான்முகன் முதலா யுள்ள வானவர் தொழுது [2]போற்ற**
**ஊன்முகங் [3]கெழுவு [4]வேலா யும்பர்நா யகியைச் சீறித்**
**தேன்முக [5]மலருந் [6]தாரா [7]னரிசொலச் சீற்றந்தீர்ந்தான்.**

(இ - ள்.) (பகைவரது) மாமிசங்கள் நுனியிற் பொருந்திவிளங்குகின்ற வேலாயுதத்தை யுடைய பரதனே! தேனைத் தன்னிடத்திலுடைய மலர்கின்ற பூமாலையை யணிந்த இராமபிரான், நான்குமுகங்களை யுடையனான பிரமனும் விருஷபத்தை வாகனமாக ஏறிநடத்துகிறவனாகிப் பார்வதிதேவியை ஒப்பற்ற இடப்பாகத்திற் கொண்டவனான பரமசிவனும் மானின்முகத்தையுடையவனான மயனும் முதலாகவுள்ள தேவர்கள் (தன்னை) வணங்கித் துதிக்க, தேவர்களுக்கெல்லாந்தலைவியாகிய சீதையை(ப் பிறர்மனையில் உயிர்வாழ்ந்திருந்தமைகுறித்து)க்கோபித்து, (உடனே), ஆக்கினிதேவன் (பிரதியக்ஷமாய்வந்து அவளது கற்பின் உறுதிநிலையை எடுத்துக்) கூறக் கோபந் தணிந்தான்; (எ - று)

அரி - ஹரி; (அடுத்தபொருள்களை) எரித்தழிப்பவன்: அக்கினி, மால் - இந்திரனும், முகன் (தேவர்களுக்கு) முகமாகிற அக்கினியும் என்று உரைப்பினுமாம். ஊன்முகம் கெழுவு - (பகைவரது) உடல் தசையினிடத்தே தடையின்றிஊடுருவிச்செல்கிற என்றலும் ஒன்று. பி - ம்:—[1]மான்முதல், வான்முகன். [2]வாழ்த்த, தோற்ற. [3]கமழும். [4]வேலான். [5]அலர்ந்த. [6]தாராய். [7]எரிசொலச், தீச்சொல்லச். (சஉகஎ)

உகூஅ. மெய்யினுக் குயிரை யீந்த வேந்தர்கோன் விமானத் தெய்த, ஐயனு மிளைய கோவு மன்னமு மடியில் வீழக், கையினாற் பொருந்தப் புல்லிக் கண்ணினீர்க் கலச மாட்டிச், [1]செய்யவட் கருள்க வென்றான் றிருவினை யகனுங் கொண்டான்.

(இ - ள்.) சத்தியந்தவறாமைக்காக உயிரைவிட்ட தசரதசக்கரவர்த்தி விமானத்தின்மீது (ஏறி) வர, (அப்பொழுது) இராமபிரானும் இளையபெருமாளும் அன்னப்பறவைபோன்ற [மெது]வான அழகிய நடையையுடைய[] சீதையும் (அவனது) பாதங்களில் விழுந்துவணங்க, (அத்தசரதன், அவர்களைத் தனது) கைகளினால் இறுகத்தழுவிக் கண்ணீராகிய கலசங்களினால் முழுகப்பண்ணி 'செம்மைக்குணமுடையவளான சீதாபிராட்டியினிடம் (கலக்கங்கொள்ளாமல்) அருள்கொண்டிருப்பாயாக' என்றான்; சீதையின்கணவனான இராமனும் (அதற்கு) உடன்பட்டான்; (எ - று.)—பி - ம்:—[1]செய்வரமருளுகென்றான். ()

௨௯௯. [1]என்னைநன் கருணை தன்னா லீன்றெடுத் தினிது பேணும்
அன்னையு மகனு [2]முன்போ லாகென வருளி னீந்து
மன்னவன் போய பின்றை [3]வானரம் [4]வாழ்வு கூரப்
பொன்னெடு நாட்டி லுள்ளார் வரம்பல வழங்கிப் போனார்.

(இ - ள்.) (பின்பு) 'என்னை நல்லஅன்புடனே பெற்றெடுத்து நன்றாகப் பாதுகாக்கின்ற தாயாகிய கைகேயியும் (அவளது)மகனான பரதனும் (என்னை வனஞ்செலுத்தும்படி கைகேயி வரம்வேண்டினதற்கு) முன் (இருந்தது)போலவே(எனக்குத் தாயும் தம்பியும்)ஆக வேண்டும்' என்று (இராமபிரான் தசரதனை) வரங்கேட்க, (அவ்வாறே) தசரதமகாராசன் அருளுடன் (அவ்வரங்) கொடுத்து (த் தனதுஇருப்பிடமான விஷ்ணுலோகத்துக்குச்)சென்றபின்பு,பெரிய பொன்மயமான சுவர்க்கலோகத்தில் வசிக்கிற தேவர்கள், வானரங்கள் (உயிரும் உணவும் பெற்று) இனிமையாய் வாழும்படி பல வரங்களை (இராமபிரான் வேண்டியபடி) கொடுத்துச் சென்றார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]என்னிடைக்...என்னைத்தந்த. [2]தன். [3]வானவர், வானரர். [4]மகிழ்வு. ()

௩௦௦ வெள்ளமோ ரேழு பத்து [1]விலங்கரும் வீர ராகி
உள்ளவ ரறுபத் தேழு கோடியு மொற்றை யாழி
வள்ளறன் மகனு முள்ள [2]மகிழ்வுற விமான மீந்தான்
எள்ளலி லாத கீர்த்தி வீடண னிலங்கை வேந்தன்.

(இ - ள்.) பழிப்பில்லாத புகழையுடையவனும் இலங்கைக்கு அரசனுமாகிய விபீஷணன்,—எழுபதுவெள்ளம் குரங்குகளும், இராக்கத வீரர்களாகியுள்ளார் அறுபத்தேழுகோடிபேரும், ஒற்றைச்சக்கரம் பொருந்திய தேரையுடைய வரையாதருளுந்தன்மையுள்ள சூரியனது மகனான சுக்கிரீவனும் மனம் மகிழும்படி புஷ்பகவிமானத்தை (விரைவில் அயோத்திக்குச் செல்லும்படி இராமபிரானுக்குக்) கொடுத்தான்.

விலங்கர் - குற்றியலுகரத்துக்கு 'அர்' போலி. 'ஒற்றையாழி வள்ளல்தன் மகன்' என்பதற்கு - (உலகமுழுவதுஞ் செல்லும்) ஒப்பற்ற ஆஜ்ஞாசக்கரத்தையுடைய தசரதசக்கரவர்த்தியின் மகனான இராமபிரான் என்று பொருள் கூறுதலும் ஒன்று. பி-ம்:—[1]வீரரும்விலங்கலாதி, விலங்கல்போல்வீரராகி. [2]மகிழ்வுறுமிரதம், மகிழ்வுறமானம். ()

௩௦க. [1]ஆரியன் பின்னை நின்னை யன்பினு னினைந்து காதற்
சூரியன் மகனுந் தொல்லைத் துணைவரு மிலங்கை வேந்தும்
பேரியற் [2]படையுஞ் சூழப் பெண்ணினுக் கரசி யோடும்
சீரிய விமானத் தேறிப் பரத்துவ னிருக்கை [3]சேர்ந்தான்.

(இ - ள்.) சிறந்தவனாகிய இராமபிரான்,—பின்பு உன்னை(ச் சீக்கிரத்திற் சேரவேண்டு மென்று)அன்போடு எண்ணிக்கொண்டே, சூரியனது அன்புக்குஇடமாயுள்ள புதல்வனான சுக்கிரீவனும் பழமையான சிநேகிதர்களும் இலங்கைக்கு அரசனான விபீஷணனும் பெரிய நற்குணமுள்ள சேனைகளும் (தன்னைச்) சுற்றிலும்சூழ்ந்திருக்கும்படி பெண்களிற்சிறந்தவளான சீதையுடனே சிறந்த புஷ்பகவிமானத்தில் ஏறிப் பரத்துவாச முனிவனது ஆச்சிரமத்துக்கு வந்துசேர்ந்தான்; (எ - று.)—தொல்லைத் துணைவர் - அங்கதன், ஜாம்பவான், நளன் முதலியோர். துணைவர் - போர்த்துணைவருமாம். பி - ம்:—[1]ஆரியனய்யபின்னை. [2]சேனை. [3]சேர்ந்தார். (சஉஉக)

௩௦உ. அன்பினு லென்னை நின்பா லாழியுங் காட்டி யான்ற [ன்று
துன்பெலாந் துடைத்தி [1]யென்றே [2]துரந்தனன் [3]றேன்ற லெ
முன்பினு லியன்ற வெல்லா மொழிந்தனன் [4]முதுநீர் தாவி
[5]அன்பினு லிலங்கை முற்று மெரிக்குண[6]வாக வைத்தோன்.

(இ - ள்.) இராமபிரான் (உன்மீதுஉள்ள) அன்பினால் என்னை நோக்கி உன்னிடத்தில் [பரதனிடத்தில்] மோதிரத்தையுங் காட்டி மிக்கதுன்பத்தையெல்லாம் நீக்குவாயாக' என்று கூறிவிரைவாக விடுத்தான் என்று முன்புநடந்த செய்திகளையெல்லாங் கூறினன்: (யாவனெனில்),—பழமையான கடலைத் தாண்டி (இராமபிரானிடமுள்ள) பக்தியினால் இலங்காபட்டணம்முழுவதையும் அக்கினிக்கு இரையாக்கியவனான [கொளுத்திவிட்டவனான] அநுமான்; (எ-று.)

முதுநீர்தாவி - சிறியதொரு வாய்க்காலைத் தாண்டுவதுபோலப் பெரியசமுத்திரத்தையும் எளிதிற்பாய்ந்து தாண்டியென்றபடி.பி-ம்:—[1]என்றே. [2]விடுத்தனன். [3]என்றுதோன்ற. [4]முன்னீர். [5]வன்பினால். [6]ஆக்கிவந்தான். (சஉஉஉ)

௩௦௩.—பரதன் தன்நிலைமையைப்பற்றி இரங்கிக்கூறுதல்.

காலின்மா மதலை சொல்லப் பரதனுங் கண்ணீர் சோர
[1]வேலிமா மதில்கள் சூழு [2]மிலங்கையில் வேட்டங் கொண்ட
நீலமா முகில்பின் [3]போனு[4]னொருவனு னின்று நைவேன்
போலுமா லிவைகள் கேட்பேன் புகழுடைத் தடிமை[5]மன்னே.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) வாயுவினது சிறந்தபுதல்வனாகிய அநுமான் (இவ்வாறு) சொல்ல,—(அதுகேட்ட) பரதனும்,—கண்களின்நீர் (தாரைதாரையாய்ப்) பெருக,—ஒருதம்பியாகிய லக்ஷ்மணன் பெரியமதில்கள் வேலிபோலச்சூழ்ந்த இலங்கையில் (அரக்கரை) வேட்டையாடிக்

கொன்ற கரியபெரியமேகம்போன்ற இராமபிரான் பின்னே (அவனுக்குப் பணிவிடைசெய்துகொண்டு அவனைவிடாது உடன்) சென்றான்: (மற்றொருதம்பியாகிய) நான் (உடன்செல்லாமல்) இங்கேயேஇருந்துகொண்டு வருந்துபவனாய், இச்செய்திகளையெல்லாம் (உடனிருந்து அனுபவியாமற் பிறர்வாயாற்) கேட்டல்மாத்திரஞ் செய்வேன்போலும்; (இராமபிரான்பக்கலுள்ள எனது) அடிமைத்திறம் மிகவும் புகழுடையதாயிருந்தது!! (எ-று.)—'என்று' என அடுத்த கவியோடு தொடரும்.

இவைகள் கேட்பேன்நின்றனைவேன்போலும்-இவைகளைப் பின்பு காதினாற்கேட்டல்மாத்திரஞ் செய்யக்கடவேனாய் இங்குநின்று வருந்தக்கடவேன்போலும் எனினுமாம். இன்று எனப் பதம்பிரித்துரைத்தல், மோனைத்தொடைக்குப் பொருந்தாது. பி-ம்:---1வேலைமாமதிணீர். 2இலங்கைமாவேட்டை. 3போவான். 4ஒருவனும். 5என்றான்.

௩௦௪.—பரதன் கங்கையை யடைதல்.

என்றவ னிரங்கி யேங்கி யிரு1கணு மருவி சோர
வன்றிற லனுமன் செங்கை 2வலக்கையாற் பற்றிக் காலிற்
சென்றன னிருளி னாடு செறிபுனற் கங்கை3சேர்ந்தான் [னர்.
குன்றினை வலஞ்செய் தேரோன் குணகடற் 4றோன்று முன்

(இ - ள்.) என்று அப்பரதன் இரண்டுகண்களிலும் நீர்பெருக மனமிரங்கி வருந்தி மிக்கவலிமையையுடைய அநுமானது சிவந்தகையை(த் தனது) வலக்கையாற் பிடித்துக்கொண்டே (அரசனாயிருந்தும் வாகனத்திலேறிச் செல்லாமல்) கால்களால் நடந்தவனாகி, மேருமலையைப் பிரதக்ஷிணஞ்செய்கின்ற தேரையுடையவனான சூரியன் கீழ்கடலில் உதிக்குமுன்னமே இருட்பொழுதிலேயே நிறைந்தநீரையுடைய கங்காநதியைச் சேர்ந்தான்; (எ - று.)—பி-ம்:—1கண்ணீர். 2மலர்க். 3சூழல், சூழக். 4தோன்றாமுன்னம். (௪௨௨௪)

௩௦௫.—சூரியோதய வருணனை.

1இராவணன் வேட்டம் போய்மீண் டெம்பிரா னயோத்தி 2யெய்
தராதல மகளும் பூவிற் றையலு மகிழச் சூடும் [தித்
அராவுபொன் மௌலிக் கேய்ந்த சிகாமணி குணபா லண்ணல்
விராவுற வெடுத்தா லென்ன வெய்யவ னுதயஞ் செய்தான்.

(இ - ள்.) எமதுதலைவனாகிய இராமபிரான்,—இராவணனை வேட்டையாடுதற்காக (நாட்டைவிட்டுச்) சென்று(அதனைமுடித்து),திரும்பி அயோத்தியாபட்டணத்தைச் சேர்ந்து பூமிதேவியும் தாமரைப்பூவில் வசிக்கின்ற இலக்குமியும்மகிழும்படிதரிக்கப்போகிற அராவித்தொழில் செய்யப்பட்ட பொன்னாலாகிய கிரீடத்துக்குத் தக்கதான முடிமேற் கொள்ளத்தக்க [சிறந்த] இரத்தினத்தைக் கிழக்குத்திக்குப் பாலகனாகிய பெருமைமிக்க தேவேந்திரன் பொருந்தும்படிஎடுத்தாற்போலச் சூரியன் உதயமானான்; (எ - று.)

சூரியன் கிழக்குத்திக்கில் உதித்ததை, அத்திக்குப்பாலகனாகிய இந்திரன் இராமபிரானது பட்டாபிஷேககிரீடத்துக்குத் தக்கசிகாமணி

யை எந்திறாற்போலு மெனக் குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்ற வணி. சிகாமணி - சிரோரத்நம். தனக்கு நல்லரசன் சேர்வதனால் பூதேவியும் துன்பங்கள்ஒழிந்து நன்மைமிகுதலால் ஸ்ரீதேவியும் களிப் பரென்க. பி - ம்:—[1]இராவணவேட்டை. [2]எய்த. இச்செய்யுள் வெவ் வேறுபிரதிகளில் வெவ்வேறிடத்திற் காணப்படுகின்றது. (சஉஉரு)

கு0சு.—மூன்றுகவிகள்- இராமனது வருகையில் ஐயுற்று பரதன் அநுமானை வினவலைத் தெரிவிக்கும்.

காலைவந் திறுத்த பின்னர்க் கடன்முறை கமலக் கண்ணன்
[1]கூலநீள் கழல்க ளேத்திக் [2]குரக்கினத் தரசை நோக்கிச்
சாலவுங் [3]கலைகள் வல்லோய் தவறுண்டு போலும் வாய்மை
மூலமே யுணரி [4]னுன்றன் மொழிக்கெதிர் மொழியு முண்டோ.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்,) (பரதன்), காலைக்கடமைகளைச்செய்து முடித்த பின்பு தாமரைமலர்போன்ற கண்களையுடையனான இராமபிரானது ஒன்றோடு ஒன்றொத்த இரண்டு திருவடிநிலைகளை வணங்கிக் குரங்குக்கூட்டங்களுக் குத் தலைவனான அநுமானைநோக்கி, மிகவும் சாஸ்திரங்களில் வல்ல வனே! (உனது) வார்த்தையிற் பிழையுள்ளதுபோலும்: அடிமுதல் (நன் றாக) ஆராய்ந்தால், உனது சொல்லுக்கு மாற்றுச்சொல்லும் உளதோ?

கூலம் - குலம் என்பதன் நீட்டல்; இனம்என்பது பொருள். காலை வந்து இறுத்தபின்னர்க் கடன் முறை கமலக்கண்ணன் கூலம் நீள் கழல்கள்ஏத்தி என்பதற்கு - காலைப்பொழுது வந்துசேர்ந்தவுடனே தான் தவறாதுஅனுட்டித்து வருகிற முறைப்படி ஸ்ரீராமனது சிறந்த நீண்ட பாதுகைகளைப் பூசித்து என்றும் உரைக்கலாம். நான்காம்அடி- எதிர்மறையிலக்கணையாகிய பிறகுறிப்பின்பாற்படும். மோதிரங்காட்டிச் சபதஞ்செய்து இராமபிரானதுவருகையைத் தெரிவித்த அநுமானது வார்த்தையில் மிக்கசம்பிக்கை வைத்திருந்தும், பரதன், இவ்வாறு சங் கித்தலால், இவன் இராமபிரானது வருகையைப் பெரும்பேறாக நினைத் திருந்தானென்பது பெறப்படும். பி - ம்:—[1]கோலநீளடிகள், கோலநீள் புகழ்கள். [2]குரங்கினத்தவனை. [3]கவிகளன்றோ தவறிற்றுண்டுனதுவாய் மை. [4]உந்தம். (சஉஉசு)

கு0எ. எழுபது வெள்ளஞ் சேனை [1]வானர ரிலங்கை வேந்தன்,
[2]முழுமுதற் சேனை வெள்ளங் கணக்கில [3]மொய்த்த வென்றால்,
அழுவநீர் வேலை [4]சுற்று மரவமின் றாக வற்றோ, விழுமிதெம்
பிரான்வந் தாளென் றுரைத்தது வீர வென்றான்.

(இ-ள்.) வீரனே! எழுபதுவெள்ளம் வாநரசேனைகளும் இலங்காதி பதியான விபீஷணனது பெருங்கூட்டமான சேனைத்தொகுதிகளும் கணக்கில்லாமல் [வெகுவாக] நெருங்கிவிட்டனவானால் ஆழமான நீரையுடையகடல்போல வெகுதூரம் வியாபிக்கும்படி ஆரவாரம்இல்

லாமலிருக்கக்கூடுமோ? [இல்லாமலிராது]: (அங்ஙனம் ஆரவாரம்இல்லாமையால்)'எமது தலைவனான இராமபிரான் வந்து விட்டான்' என்று (நீ) சொன்னது அழகியதாயிருந்தது! என்றுகூறினான்; (எ - று.)

சேனையின் அரவங்கேளாமையால், பரதன், இராமன் வரவில்லை போலுமென்று ஐயமுற்று இங்ஙனங் கூறினனென்க. இனி, அழுவம் நீர் வேலைசுற்றும் என்பதற்கு - கங்கைக்கரையில் என்று பொருள்கூறவும் இடமுண்டு. 'எம்பிரான் வந்தானென்று உரைத்தது விழுமிது' என்பது, இகழ்ச்சிக்குறிப்பு. பி - ம்:—[1]வன்றிறல். [2]முழுதுறு. [3]முடுகிற்றென்றால். [4]அன்ன. (௪௨௨௭)

௩௦அ. ஓசனை [1]யிரண்டின் டன்றே பரத்துவ [2]னுறையுஞ் சோலை
வீசுதெண் டிரையிற் றூய வெள்ளமோ ரேழு பத்தும்
மூசிய பழுவ [3]மிங்ஙன் [4]கிடப்பதோ முரற்ற லின்றிப்
பேசிய தமையு [5]நங்கோ னெங்குளன் பெரும வென்றான்.

(இ-ள்.) 'பெருமையுடையவனே!பரத்துவாசன் வசிக்கின்ற சோலையானது (இங்கிருந்து) இரண்டுயோசனைதூரத்தில்தானே இருக்கிறது; மோதியடிக்கிற தெள்ளிய அலையைக்கொண்டதான கடலின்தன்மையதாகிய எழுபதுவெள்ளம் சேனைகளும் நிறைந்துள்ள அச்சோலை (இங்குக் கேட்கும்படி) ஆரவாரமில்லாமல் இவ்வாறும் இருக்குமோ! (நீ) சொன்னது தகுதியாயுள்ளது: நமதுதலைவனானஇராமபிரான் எங்கேயிருக்கின்றான்? [அவன் அவ்வாச்சிரமத்திலில்லை]' என்று (அநுமானது பேச்சில் பரதன் நம்பிக்கையில்லாமல் அவனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

'பேசியதமையும்' என்றது-இனி இப்படிப் பொய்சொல்லவேண்டா என்ற பொருளையுந் தரும். பி - ம்:—[1]இரண்டேயுள்ள. [2]உறைபிரயாகை. [3]இன்றே, இன்னே. [4]கிடப்பதாம், கிடப்பதே. [5]ஐயன். ()

௩௦௯.—மூன்றுகவிகள் - ஒருதொடர்: அநுமான்கூறிய சமாதானத்தைத் தெரிவிக்கும்.

பரதனஃ துரைத்த லோடும் பணிந்து[1]மா ருதியுஞ் சீர்சால்
விரதமா [2]தவத்து மிக்கோய் [3]விண்ணவர் [4]தம்மை வேண்டி
வரத[5]னண் டளிப்ப வந்த வரத்தினன் மலருந் தேனும்
[6]சரதமே மாந்தி மாந்தித் துயின்றது [7]தானை யெல்லாம்.

(இ - ள்.) பரதன் அவ்வார்த்தையைக் கூறியவுடனே, அநுமானும், (அப்பரதனை) வணங்கி'சிறப்புமிக்க விரதமாகியபெருந்தவத்தினால்மேம்பட்டவனே! வரந்தரவல்ல பரத்துவாசன் தேவர்களைவேண்டி ஆங்கு அளிக்க வரத்தினால் வந்த மலரையும் தேனையும் மிகுதியாகவுண்டு சேனையெல்லாம் (உண்ட களைப்பினால்)தூங்கிவிட்டது: (இது)நிச்சயம்; (எ - று.)—பி - ம்:—[1]மாருதிதானைய, மாருதியுந்தானே. [2]தவன்றன்னோடும், தவன்மற்றோரை. [3]விண்ணுளோர். [4]தமையும். [5]அன்றளித்தவந்தவரத்தினால். [6]சுரதமே, [7]போலுந்தானை. (௪௨௨௯)

* 109

௯கo.வானவர் கொடுக்க வந்த வரத்தினுன் [1]மதுப மூசுந்
தேனெடு கிழங்குங் காயுங் கனிகளும் பிறவுஞ் [2]சேர்த்துக்
கானகம் பொலித லாலே கவிக்குல [3]மவற்றை மாந்தி
ஆனன மலர்ந்த தில்லை [4]யாகுநீ துயர லெந்தாய்.

(இ - ள்.) எமது தலைவனே! தேவர்கள் கொடுக்கக் கிடைத்த வரங்களினால், காட்டினிடம் வண்டுகள் மொய்க்கின்ற தேனும் கிழங்குகளும் காய்களும் பழங்களும் மற்றுமுள்ளவைகளும் நிறைந்து விளங்குதலினுற் குரங்கின்கூட்டம் அவற்றை உண்டு வாய்திறந்து ஆரவாரஞ் செய்யாததாகும்; (ஆதலால், 'இராமன் வரவில்லைபோலும்' என்ற எண்ணத்தினுல்) நீ வருந்தாதே; (எ - று.)—மதுபம் - தேனைப் பருகுவது; வண்டு: வடசொல். பி - ம்:—[1]மதுவிற்சாலும், மதுவுஞ்சாலத். [2]தெற்றிச். [3]அதனை. [4]ஐயநீமுனியலென்ருன், ஆணைநீமுனியலென்ருன்.

௯கக. இனியொரு கணத்தி [1]னெங்கோ னெழுந்தரு டன்மை யீண்டுப், பனிவருங் [2]கண்ணி னீயே [3]பார்த்தியென் றுரைத்தா னிப்பால், [4]முனிதன திடத்து வந்த முளரியங் [5]கண்ணன் வண்ணக், குனிசிலைக் குரிசில் [6]செய்த திற்றெனக் குணிக்க லுற்ரும்.

(இ - ள்.) 'இனிமேல் ஒருக்ஷணத்தில் [மிகவிரைவில்] எமதுதலைவனை இராமபிரான் எழுந்தருளுவதை இவ்விடத்தில் நீர்பெருகுகின்ற கண்களையுடைய நீயே பார்ப்பாய்' என்று கூறினுன்; இனிமேல், பரத்துவாசமுனிவனது ஆச்சிரமத்தில் வந்த தாமரைமலர்போன்ற அழகிய கண்களையுடையவனும் அழகிய வளைந்த வில்லையேந்திய ஆண்மையிற்சிறந்தவனுமான இராமபிரான் செய்த செயலை இன்னதென்று கூறத் தொடங்கினேம்; (எ - று.)—'இப்பால்' என்றதுமுதல் கவிக்கூற்று. பி - ம்:—[1]நம். [2]கண்ணினுனே. [3]பாரெனப்பணித்தான். [4]முனிவனது. [5]கண்ண. [6]செய்ததிறனெலாம்.

இங்கே ஒரு பிரதியில் "கெட்டவான்பொருள்" (௯உஎ) என்ற பாடலும் அதன்பின் உகூக-ஆம்பாடலிற்காட்டியுள்ள "நின்றவன்"என்ற செய்யுள்முதல் "இராவணன்" என்ற செய்யுள்வரையுள்ளனவற்றுள் 12, 13, 14, 18, 21-பாடல்கள்தவிர, மற்றவையும் உள்ளன. (சஉ௯௧)

௯கஉ.—குகன் தன்சேனையோடு இராமனைக் காண வருதல்.

அருந்தவன் சுவைக ளாறே டமுதினி தளிப்ப வையன்
கருந்தடங் கண்ணி யோடுங் கிளைகளுந் [1]துணைவ ரோடும்
விருந்தினி தருந்தி நின்ற வேலையின் வேலை போலும்
பெருந்தடந் தானை யோடுங் கிராதர் கோன் பெயர்ந்து வந்தான்.

(இ - ள்.) அருமையான தவத்தையுடைய பரத்துவாசன், ஆறு சுவைகளோடுகூடிய உணவை நன்ருக அமைத்தருள, இராமபிரான், கரிய நீண்ட கண்களையுடையளான சீதையோடும் (தனக்கு) ஆதரவாயுள்ள சிநேகிதர்களோடும் அவ்விருந்துணவை நன்ருக உண்டுநின்ற பொழுதில்,—வேடர்தலைவனை குகன் கடல்போன்ற மிகப்பெரிய

சேனையுடன், (இராமனைக்காணும்பொருட்டுச் சிருங்கிபேரமென்னுந் தனது ஊரினின்று) புறப்பட்டுவந்தான்; (எ-று.)

அநுமான் இராமனது வரவைச் சொன்ன அன்றைக்கே குகன் வந்து இராமனைக் கண்டனன் என அறிக. அமுது - தேவாமிருதம் போன்ற இனியஉணவுக்கு உவமவாகுபெயர். பி-ம்:—[1]தம்பியோடும்.

கூகங.—இராமபிரான் குகனைத் தழுவி க்ஷேமம் விசாரித்தல்.

தொழுதனன் மனமுங் கண்ணுந் துளங்கினன் சூழ வோடி
அழுதனன் கமல மன்ன வடித்தல மதனின் வீழ்ந்தான்
தழுவின னெடுத்து [1]மார்பிற் [2]றம்பியைத் தழுவு மாபோல்
[3]வழுவிலா [4]வலிய ரன்றோ மக்களு மனையு மென்றான்.

(இ - ள்.) (குகன்,—இராமனைக் கண்களாற்) சேவித்து, (பெரும்பேறு பெற்றமையால்) மனமும் கண்களும் களிக்கப்பெற்றவனாய் (அப்பிரானை) வலம்வந்து (இவ்வளவுகாலம் பிரியநேர்ந்தமைக்கு வருந்தி) அழுதவனாய்,தாமரைமலர்போன்ற (இராமபிரானது) திருவடிகளில் விழுந்து வணங்கினன் [சாஷ்டாங்கமாகச் சேவித்தான்]; (அப்பொழுது இராமபிரான், அந்தக்குகனைத் தனதுகைகளால்) எடுத்துத் தம்பியைத் தழுவுவதுபோல (அவ்வளவுஅன்போடு) மார்பில் இறுகத் தழுவி, '(உனது) புத்திரர்களும் மனைவியும் குறைவில்லாத வலியை [க்ஷேமத்தை]யுடையவர்கள் தானோ?' என்று (குசலம்) வினவினன்.

மனமும் கண்ணும் சூழவோடித் துளங்கினன்என எடுத்து-இராமபிரானது சௌந்தரியத்தில் மனமும் கண்ணும் ஈடுபட்டு விரைந்துசென்று சுற்றிச்சுற்றிச் சுழலமிட அழுந்தினன் என வுரைப்பாரும் உளர். இராமன் குகனிடம் பிராத்ருவாற்சலியம் வைத்தமை, அயோத்தியா காண்டத்திற் பெறப்பட்டது. தம்பியைத் தழுவுமா போல் - இனிப் பரதனைத் தழுவுவதுபோல எனினுமாம். பி-ம்:—[1]இராமன். [2]தம்பியர்த். [3]வழுவில. [4]வலியவோநின். (சஉகூகூ)

கூகச.—குகன் தான் இராமனுடன்சென்று வனவாசஞ்செய்து அடிமைசெய்யப்பெறாமைக்குக் குறைகூறுதல்.

அருளுனை துளது[1]நாயேற் கவரெலா மரிய வாய
[2]பொருளலர் நின்னை நீங்காப் புணர்ப்பினுற் றொடர்ந்து போந்து
தெருடரு மிளைய வீரன் செய்வன [3]செய்க லாதேன்
மருடரு [4]மனத்தி னேனுக் கினிதன்றோ வாழ்வு மன்னோ.

(இ - ள்.) (குகன் இராமனைநோக்கி), 'அடியேனுக்கு (க்கிடைத்தற்குஅரியதாய) உன்னுடைய கருணை உள்ளது; அவர்கள் யாவரும் (எனக்கு) அருமையான பொருளாகமாட்டார்; உன்னைவிட்டுப்பிரியாத மனப்பிணிப்புடனே தொடர்ந்துவந்து, மெய்யுணர்வுமிக்க இளையபெருமாள் (உனக்குச்) செய்த அடிமைத்தொழில்களைச் செய்யப்பெறாதவனாகிய அஜ்ஞாநம்நிறைந்த மனமுடையனான எனக்கு உயிர்வாழ்க்கை நன்றாயுள்ள தொன்றன்றோ? [இனியதன்று] (என்றான்); (எ - று.)

'இனிதன்றே வாழ்வு' என்றது-பிறதுறிப்பு. இனி, உயிர்வாழ்க்கை யொன்றுமே இனியதாம்எனினும் அமையும்; வெறுப்புரை, ஆதிசேஷனது அம்சமாகிய இலக்குமணன், தனது அடிமைத்தொழிலைச் செய்தற்காகவே உடனவதரித்து, இராமனை விட்டுப் பிரியாது அவனுக்குப் பலவகையடிமைகளையுஞ் செய்துவந்தன னென்க. இச்செய்யுளினால், குகப்பெருமானது மெய்யறிவு விளங்கும். உனது திருவருள் எனக்கு முக்கியமேயன்றி மனைவி மக்கள் முக்கியரல்லர் என்பது முதல்வாக்கியத்தின் கருத்து. பி - ம்:—[1]நாயேனுயினேற்கு, நாயேற்கவையெலாம். [2]பொருளல. [3]செய்கலாது. [4]மனத்தேறகெற்றுவாழவுமன்னர்மன்னு, மனத்தினேனுக்கரிதன்றேவாழ்வுமன்றே. (சஉகஎ)

நகரு.—இராமன் குகனுக்குச் சமாதானங் கூற, அவன் இளையபெருமாளையும் சீதையையும் வணங்குதல்.

**ஆயன பிறவும் பன்னி யழுங்குவான் றன்னை [1]யைய**
**நீயிவை யுரைப்ப தென்னே பரதனி னீவே றுண்டோ**
**போயினி திருத்தி யென்னப் புளிஞர்கோ னிளவல் பொற்றுள்**
**மேயினன் வணங்கி யன்னை விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.**

(இ - ள்.) இவைபோல்வனவாகிய மற்றைவார்த்தைகளையுங் கூறி வருந்துபவனுகிய குகனை (நோக்கி, இராமபிரான்),—'ஐய! நீ இவ்வார்த்தைகளைக் கூறுவது யாதுகாரணம் பற்றியோ? பரதனினும் நீ வேறுவையோ? சென்று இனிதாகவிருப்பாயாக' என்றுகூற,—வேடர்தலைவனுன (அக்) குகன், இளையபெருமாளது அழகிய பாதங்களைச் சேர்ந்து வணங்கி லோகமாதாவாகிய சீதையினது வாசனையுள்ள தாமரைமலர்போன்ற அடிகளில் விழுந்து வணங்கினன்; (எ-று.)

'பரதனின் நீ வேறுண்டோ' என்றது, பரதன் வேறு நீ வேறு அல்ல; பரதன் உடன்வராது என்கட்டளைப்படி நாட்டில் இருந்தது போலவே, நீயும் உடன்வராது நாட்டிலிருந்தது தவறன்று என்று இராமன் குகனைத் தேற்றியவாறு. புளிஞர்=புளிந்தர். பி-ம்:—[1]ஐயன். ()

நககூ.—இராமபிரான் சுக்கிரீவன்முதலியோர்க்குக் குகனை இன்னுனென்று தெரிவித்தல்.

**தொழுதுநின் றவனை [1]நோக்கித் துணைவர்க டமையு நோக்கி**
**முழுதுணர் [2]கேள்வி மேலோன் மொழிகுவான் [3]முழுநீர்க் கங்கை**
**தழுவிரு கரைக்கு நாதன் றுயினு முயிர்க்கு நல்லான்**
**வழுவிலா வெயினர் வேந்தன் குகனெனும் வள்ள [4]லென்பான்.**

(இ - ள்.) எல்லாவற்றையும் அறியவல்ல நூற்கேள்வியையுடைய சிறந்தவனுன இராமபிரான்,—(தன்னை) வணங்கிநின்றவனுன குகனைப் பார்த்து, (பின்பு தனக்குச்) சிநேகிதர்களான சுக்கிரீவன்முதலியோரையும் பார்த்துக் கூறுபவனுனன்:—(இவன்), நிறைந்த நீரையுடைய கங்காநதியைத் தழுவியுள்ள இரண்டுகரைக்குந் தலைவன்; எல்லாவுயிர்களிடத்திலும் தாயைக்காட்டிலும் அதிகமாக அன்புகொண்டு

நடப்பவன்; (நீதிநெறி) தவறாத வேடர்களுக்கு அரசன்; குகனென்னும் பெயரையுடைய வரையாதுகொடுக்குந்தன்மையுள்ளவனென்று (யாவராலும்) சிறப்பித்துச் சொல்லப்படுவான்; (எ - று.)

குகனைநோக்கித் துணைவர்களையும் நோக்கினது, இவனைப்பற்றி உங்கட்குத் தெரிவிப்பே னென்று குறிப்பித்த வாறும். பி - ம்:— [1]சுட்டி. [2]கேள்வியாளன். [3]மூறி. [4]என்றான். (௬௨௩௬)

௩௧எ.—சுக்கிரீவன்முதலியோர் குகனை நட்புக்கொள்ளுதலும், சூரியாஸ்தமனமும்.

**அண்ணலஃ துரைத்த லோடு மரிகுலத் தரச ஞதி**
**நண்ணிய துணைவர் யாரு மினிதுறத் தழுவி நட்டார்**
**கண்ணகன் ஞால மெல்லாங் கங்குலாற் பொதிவான் போல**
**வண்ணமால் [1]வரைக்கு மப்பான் மறைந்தன[2]னிரவி யென்பான்.**

(இ - ள்.) இராமபிரான் அவ்வாறு சொன்னவுடனே,—வானரக் கூட்டத்துக்கு அரசனாகிய சுக்கிரீவன் முதலாகப்பொருந்திய (இராமனுடைய) சிநேகிதர்களெல்லாரும், (குகனை) இனிமையாகத்தழுவிச் சிநேகித்தார்கள்; சூரியன், இடமகன்ற பூமிமுழுவதையும் இருளினால் மூடுபவன்போல [இருட்கு இடங்கொடுத்துக்கொண்டே] அழகிய பெரியமேருமலையின் அப்புறத்தில் மறைந்தான்; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. சூரியன் அஸ்தமித்தவுடன் உலகமுழுதும் இருள் மூடிக்கொண்டது என்பது, கருத்து. கங்குல் - இருள். என்பான் - முதல்வேற்றுமைச்சொல்லுருபு. பி-ம்:—[1]வரைக்குமேல்பால். [2]மறையாவெய்யோன். (௬௨௩எ)

௩௧அ.—அன்று இரவுகழியச் சூரியன் உதயமாதல்.

**அலங்கலந் தொடையி னுனு மந்தியின் [1]கடன்க ளாற்றிப்**
**பொலங்குழை [2]மயிலி னோடு துயிலுறப் புணரி [3]போலும்**
**[4]இலங்கிய சேனை சூழ விளவலு மெயினர் கோனும்**
**கலங்கலர் காத்து நின்றார் கதிரவ னுதயஞ் செய்தான்.**

(இ - ள்.) விளங்குதலையுடைய அழகிய மலர்மாலையையணிந்த இராமபிரானும் (சந்தியாவந்தனம் முதலிய) மாலைக்கடமைகளைச் செய்து முடித்தபின்பு பொன்னலாகிய குழையென்னுங் காதணியை யணிந்த மயில்போலுஞ்சாயலுள்ள சீதையோடு படுத்துத்தூங்க, இளைய பெருமாளும் வேடர்தலைவனான குகனும், கடல்போன்ற விளங்குகின்ற சேனைகள்சூழ மனங்கலங்காதவர்களாய் [ஜாக்கிரதையாக]க் காத்து நின்றார்கள்; சூரியன் உதயமானான்; (எ - று.)---அலங்கல்-விளங்குதல். பி - ம்:—[1]சந்திமுற்றிப். [2]மயிலினோடுந்துயிறா. [3]போல. [4]இலங்கையிற் சேனை. (௬௨௩அ)

௩௧௯.—இராமபிரான் விமானமேறிச் செல்லுதல்.

**கதிரவ னுதய காலைக் கடன்கழித் திளவ லோடும்**
**[1]அதிர்பொலன் கழலி னனவ் வருந்தவன் றன்னை யேத்தி**

விதிதரு [2]விமான மேவி விளங்கிழை யோடுங் கொற்றம்
முதிர்தரு [3]துணைவ ரோடு முனிமனந் தொடரப் போனான்.

(இ - ள்.) ஒலிக்கின்ற அழகிய வீரக்கழலையுடையனான இராமபிரான் சூரியோதயகாலத்திற் செய்யவேண்டிய நித்தியகருமங்களைச் செய்துமுடித்து அருமையான தவத்தையுடைய அந்தப் பரத்துவாசனை வணங்கி (விடைபெற்று)த் தம்பியாகிய இலக்குமணனோடும் விளங்குகின்ற ஆபரணங்களையுடைய சீதையோடும் பிரமனாற் (குபேரனுக்குக்) கொடுக்கப்பட்டதான புட்பகவிமானத்தின்மீது ஏறி வெற்றிமிகுந்த துணைவருடனே பரத்துவாசமுனிவனது மனம் (தன்னைப்) பின் தொடர்ந்துவர (அயோத்தியைநோக்கிச்) சென்றான்; (எ - று.)

இராமன் விட்டுச்சென்ற பிறகும் பரத்துவாசமுனிவன் பூரணானுக்கிரகத்துடனே அவனையே கருதியிருந்தனனென்பார் 'முனிமனந் தொடரப் போனான்'என்றார் விளங்கிழை-வினைத்தொகையன்மொழி. ஏத்தி-வணங்கி. பி-ம்:—[1]அதிர்தரு. [2]மானமேறி. [3]கருணையோடு. ()

௩௨0.—விமானத்துச்செல்லுகையில், அயோத்தியின் மதிற்புறந் தோன்றுதல்.

[1]தாவிவான் பார்த்து மானந் தடையில தேகும் வேலைத்
தீவிய [2]கனிய தாகிச் செருக்கிய காமச் செவ்வி
ஓவிய முயிர்பெற் றென்ன வும்பர்கோ [3]னகரு மொவ்வா
மாவிய லயோத்தி சூழு மதிற்புறந் தோன்றிற் றன்றே.

(இ-ள்.) புஷ்பகவிமானம் தாவி வானத்தில் தடையில்லாமல்விரைந்துசெல்லும்போது இனிய கனிகளையுடையனதாய் மகிழ்ச்சிபூண்ட விரும்பத்தக்க அழகுடன்கூடிய சித்திரம் உயிர்பெற்றாற்போன்று தேவேந்திரனது (அமராவதியென்ற) பட்டணமும்(தனக்கு)நிகராகாத பெருமைவாய்ந்த அயோத்திநகரத்தைச் சூழ்ந்த மதிலின்புறந் தோன்றிற்று; (எ - று )—[2]கன்னியாகின்ற பாடத்துக்கு - கன்னிகையையொத்து [பிறர்கைப்படாமல்] சூழும் மதில் என்க. பி - ம்:—[1]தாவில். [3]திருவும். (௪௨௪0)

௩௨௧.—இராமன் 'அயோத்தி இதுதான்' என்ன, யாவரும் வணங்குதல்.

பொன்மதிற் கிடக்கை [1]சூழப் பொலிவுடை நகரந் தோன்ற
நன்மதிக் [2]கிழவர் தம்மை நோக்கிய ஞான மூர்த்தி[ன்றிற்று
சொன்மதித் தொருவ ராலுஞ் சொலப்படா வயோத்தி தோ
என்னலுங் கரங்கள் கூப்பி [3]யெழுந்தன ரிறைஞ்சி நின்றார்.

(இ - ள்.) (அப்பொழுது) பொன்மயமானமதிலினிடங்கள் சூழப் பொலிவையுடைய அயோத்தியாநகரந் தோன்ற,—நல்ல அறிவுடைய தோழர்களை நோக்கிய ஞானசொரூபியான இராமபிரான் 'எவராலும் (இவ்வளவு சிறப்பையுடையதென்று) எண்ணிப் புகழ்ச்சி சொல்லமுடியாததான அயோத்தி தெரிகின்றது' என்று கூறினவுடனே, (அது கேட்ட எல்லோரும்), கைகுவித்து எழுந்து சேவித்துநின்றார்கள்.

விமானத்திலுள்ளவர் அயோத்தியாநகரை வணங்கியது, அது, இராமபிரானுக்குப் பிறப்பிடமாதலாலும், தேவராசாங்கித்தியமுடையதாதலாலும், முத்திதரும்நகரமேழனுள் ஒன்றாதலாலுமென்க. பி-ம்:— [1]சூழ்ந்த, சூழும். [2]துணைவர். [3]தொழுதனர். சிலபிரதியில் இதனோடு பரதன்விரதப்படலம் முடிய, மேல் நகர்புகுபடலம் தொடங்குகின்றது. ()

வேறு.

௩௨௨.—பரதனுடன் வருகிற அநுமான் அவ்விமானத்தைக் காணுதல்.

அன்னதோ ரளவையின் [1]விசும்ப தாயினும்
[2]துன்னிருங் [3]கதிரவர் [4]தோன்றினாரெனப்
[5]பொன்னணி புட்பகப் பொருவில் [6]மானமும்
மன்னவர்க் கரசனும் [7]வந்து தோன்றினார்.

(இ - ள்.) அச்சமயத்தில் (தான்) ஆகாயத்தில் நெடுந்தூரத்திலுள்ளதாயிருந்தாலும் நெருங்கிய பெரிய (பல) சூரியர்கள் (ஏககாலத்தில்) உதயமானாரென்னுமாறு பொன்மயமான அழகிய புட்பகமென்னப்பட்ட ஒப்பில்லாத விமானமும் (அதில் வீற்றிருக்கிற) அரசர்கட்கு அரசனான ஸ்ரீராமனும் வந்து (அநுமானுக்கு எதிரில்) தோன்றினார்கள்; (எ - று.) —பி-ம்:—[1]விசும்பினூயிரம். [2]துன்னொளிக், துன்னரும். [3]கதிரவன. [4]தோன்றினல். [5]பொன்னொளிர். [6]மானமேல். [7]வந்துதோன்றவே, தானுந்தோன்றிற்றால், வருகின்றார்களே. இதன்பின் சிலபிரதியிற் காணப்படுஞ் செய்யுள் வருமாறு:—

தோன்றலுஞ் சுமந்திரன் [1]றொழுத கையினன்
ஈன்றுகாத் தளித்தவை யியற்று மவ்வுரு
மூன்றுமாய் நான்குமா யைந்து மாமுதற்
[2]சான்றினைப் பரதற்குச் சுட்டிச் சாற்றுவான்.

பி - ம்:--[1]தொழுதுதொல்லுயிர். [2]சான்றுமாய்ப். (௪௨௪௨)

௩௨௩.—இதுவும் அடுத்த கவியும் - அநுமான் விமானத்திலுள்ளாரைப் பரதனுக்குச் சுட்டிக்காட்டுதலைக் கூறும்.

அண்ணலே காண்டியா [1]லலர்ந்த தாமரைக்
கண்ணனும் வானரக் கடலுங் கற்புடைப்
பெண்ணருங் கலமுமின் பின்பு தோன்றிய
வண்ணவிற் குமரனும் வருகின் றார்களை.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.)(அநுமான் பரதனைநோக்கிப் பின்வருமாறுகூறலானான்:--) பெருமையுடையவனே! மலர்ந்த தாமரைப்பூப்போன்ற கண்களையுடையனான ஸ்ரீராமனும் கடல்போன்ற வானரசேனையும் பதிவிரதாதருமத்தையுடைய பெண்கட்கெல்லாம் அரியதோர் ஆபரணம்போன்று அழகு செய்பவளான சீதையும் உனக்குப் பின்பு பிறந்தவனாகிய அழகிய வில்லையேந்திய இலக்குமணனும் (ஆகப்புட்பகத்தின்மீது ஏறி) வருகின்றவர்களை (இதோ) காண்பாயாக; (எ-று.)—பி-ம்:—[1]அலங்கு. (௪௨௪௩)

௩௨௪. ஏழிரண் டாகிய வுலகை [1]மேறினும்
பாழ்புறங் [2]கிடக்குறு படிய தாயதோர்
சூழொளி மானத்துத் தோன்று கின்றனன்
ஊழியா னென்றுகொண் டுணர்த்துங் [3]காலையே.

(இ - ள்.) பதினான்குஉலகங்களிலுள்ளவர்களும்(ஒருங்கு தன்மீது) ஏறினும் வெற்றிடம்பொருந்திய தன்மையையுடையதும் ஒப்பற்றதும் எங்கும்பரவுகிற ஒளியையுடையதுமான புஷ்பகவிமானத்தில், பிரளயத்திலும்அழிவில்லாதவனான இராமபிரான், (இதோ) காணப்படுகின்றான்என்று (இவ்வாறுபரதனுக்கு அநுமான்) அறிவிக்கும் பொழுதில்;—(எ - று.)—தோன்றலும், ஆர்ப்புசென்றது என மேல்முடிபு காண்க.

எல்லாம் அழியும் பிரளயகாலத்தில் கடல் பொங்கி உலகங்களை மூடிக்கொள்ள எங்கும் ஜலார்ணவமான அப்பிரளயப்பெருங்கடலிலே எம்பெருமான் ஒருவனே சராசரங்களையெல்லாம் ஊறுபடாமல் தனது திருவயிற்றில் அடக்கிவைத்துக்கொண்டு ஒருசிறுகுழந்தைவடிவத்துடன் ஆலிலையின்மீது யோகநித்திரை செய்தருளுகின்றன · னாதலால், அத்திருமாலின் திருவவதாரமான இராமனை 'ஊழியான்' என்றார். ஊழியான்-காலத்துக்குத் தலைவனுமாம். பி - ம்:—[1]எய்தினும். [2]கிடப்பதுபடியின்றுவதோர். [3]காலையில். (சஉசச)

௩௨௫.—இராமனைக் கண்டவளவில் எதிர்கொள்ளச்சென்றவர்கள் ஆரவாரித்தல்.

பொன்[1]னொளி மேருவின் பொதும்பிற் புக்கதோர்
மின்னொளி மேகம்போல் வீரன் றோன்றலும்
[2]மன்னெதிர் வருகுந ரார்ப்பி ராவணன்
[3]தென்னகர்க் கப்புறத் தளவுஞ் [4]சென்றதால்.

(இ - ள்.) பொன்மயமான ஒளியுள்ள மேருமலையின் (பெருங்) குகையிற் புகுந்துள்ளதொரு மின்னலின்னொளியோடு கூடியமேகம் போல வீரனான இராமபிரான் (விமானத்தின்மீது பிராட்டியுடன்) புலப்பட்டவளவிலே,—(தமக்கு) அரசனாகிய அவ்விராமபிரானை எதிர்கொள்ளவருகின்ற சனங்களின் (மகிழ்ச்சியாலுண்டான) ஆரவாரம், இராவணனுண்ட தெற்குத்திக்கிலுள்ள இலங்காபட்டணத்துக்கு அப்புறத்தளவும் போய்ப் பரவிற்று; (எ - று).

மேரு-புஷ்பகத்திற்கும்,பொதும்பிற்புக்கதோர் மின்னொளிமேகம்-அப்புஷ்பகத்தினுள்ளே சீதையுடனிருக்கும் இராமபிரானுக்கும் உவமை. முன்னிரண்டடி - உவமையணியும், ஈற்றடி - உயர்வுநவிற்சியணியுமாம். இவ்விரண்டும் திலதண்டுலந்யாயத்தால் [எள்ளும் அரிசியும்போலப் பேதந் தெரியச்] சேர்ந்திருப்பது-சேர்வையணி. பி-ம்:—[1]ஒளிர். [2]அந்நகரார்த்தெழும், அந்நகரார்த்தபோர், மன்னெதிர்வருநர்கள். [3]தன்னகர்ப்புறத்தவுந்தாவிச். [4]சென்றவால். (சஉசரு)

௩௨௬.---பரதன் இராமனைக் காணுதல்.

ஊனுடை யாக்கைவிட் டுண்மை வேண்டிய
வானுடைத் [1]தந்தையார் வரவு கண்டெனக்
கானிடைப் [2]போகிய கமலக் கண்ணனைத்
தானுடை [3]யுயிரினைத் தம்பி [4]நோக்கினன்.

(இ - ள்.) (தன்னுடைய) மாமிசதேகத்தைவிட்டு [இறந்து] சத்தியத்தை விரும்பி நிலைநிறுத்தியவரும் விஷ்ணுலோகத்தையடைந்தவருமான தந்தையாராகிய தசரதரது வருகையை எதிர்கண்டாற்போல,— காட்டிற்சென்ற தாமரைமலர்போன்ற கண்களையுடையவனும் தன்னுடைய உயிர்போன்றவனு மாகிய இராமபிரானை (அவனது)தம்பியாகிய பரதன் பார்த்தான்; (எ - று.)

தமையனது வரவுக்குத் தந்தையின்வரவை உவமை கூறியது, தமையன் தமப்பனோ டொப்ப னாதலால். பி - ம்:—[1]தந்தையை. [2]எய்திய, போனவக். [3]உயிரெனத், அகமகிழ். [4]கண்டனன். (௪௨௪௬)

௩௨எ.---பரதன் இராமனை வணங்குதற்காக அநுமான்கையை விடுதல்.

கெட்டவான் பொருள்வந்து கிடைப்ப முன்புதாம்
பட்டவான் படரொழிந் தவரிற் பையுளோய்
சுட்ட [1]வன் மானவற் றொழுத லுன்னியே
விட்டனன் மாருதி கரத்தை மேன்மையான்.

(இ - ள்) மேலானகுணங்கள்நிறைந்தவனான பரதன்,—(தாம் முன்பு) இழந்துபோன சிறந்தபொருள் (மறுபடி தம்மிடம்) வந்து சேர்ந்தமாத்திரத்தில் முன்பு தாம் பட்ட பெருந்துன்பங்கள்யாவும் நீங்கப்பெறுபவர்போல (முன்பு இராமபிரானைநீங்கியதனால் தனக்கு உண்டாயிருந்த) துன்பநோயை (இப்பொழுது அவனைக் கண்டதனால்) முற்றும் ஒழித்தவனாய் [மனமகிழ்ந்து], மநுகுலத்தோன்றலாகிய இராமபிரானை வணங்கநினைத்து (தான் பிடித்திருந்த) வாயுகுமாரனான அநுமானதுகையை நெகிழவிட்டான்; (எ - று.)

உவமையணி. பரதனுக்கு மேன்மை-இராமன்கட்டளைக்கு எதிர்கூறாது அதனைத் தலைமேற்கொண்டு நடத்தலாகிய பாரதந்திரியமென்பர் அறிந்தோர். அநுமான்கையைப் பிடித்துக்கொண்டு பரதன் வந்ததாக முதனூலிற் கூறப்படவில்லை. பி-ம்:—[1]வான்மானவற், வானவன்வரத். இச்செய்யுள் சிலபிரதிகளில்வேறு இடத்திலுள்ளமை முன்னரே காட்டப்பட்டது: சிலபிரதிகளிலில்லை. ௩௨அ-முதல் ௩௩௧-வரையிலுமுள்ள செய்யுட்கள் வேறு இடத்திலுள்ளமையும் முன்னரே காட்டப்பட்டது. (௪௨௪எ)

௩௨அ.---அநுமான் இராமபிரானை எதிர்சென்று வணங்குதல்.

அக்கணத் தனுமனு [1]மவணின் றேகியத்
திக்குறு மானத்தைச் [2]செவ்வ னெய்தியச்

சக்கரத் 3தண்ணலைத் தாழ்ந்து முன்னின்றான்
உக்குறு கண்ணநீ ரொழுகு மார்பினான்.

(இ - ள்.) அப்பொழுது, அனுமனும்,--அவ்விடத்தினின்று (மேலெழுந்து)சென்று ஆகாயத்திற் பொருந்திய அந்தவிமானத்தை நேராக அடைந்து (அதில் வீற்றிருக்கின்ற) சக்கராயுதத்துக்கு உரிய பெருமை பெற்ற அவ்விராமபிரானைப் பெருகுகிற (ஆனந்தக்) கண்ணீர் வழியப் பெற்ற மார்பையுடையவனாய் வணங்கி முன்னின்றான்; (எ - று.)

பத்துத்திக்குக்களில் ஆகாயமும் ஒன்றாதலால், அதனை இங்கு 'திக்கு' என்றே குறித்தார்; சிறப்புப்பொருள், பொதுச்சொல்லாற் குறிக்கப்பட்டது. இனி, அவ்வடதிசையைநோக்கி வருகிற எனினுமாம். பி - ம்:—1அருக்கனேயெனத். 2செலவினெய்தினான். 3ஐயனை, கரத்தனை. மிக்குயர் முனிவராச்சிரமமேவினான் என்று சிலபிரதியிலிரண்டாமடி. (சஉசஅ)

௩௨௯.—அநுமான் இராமனுக்குச் செய்தி கூறல்.

உருப்பவிர் கனலிடை யொளிக்க லுற்றவப்
பொருப்பவிர் தோளனைப் பொருந்தி நாயினேன்
திருப்பொலி மார்பநின் வரவு செப்பினேன்
இருப்பன வாயின வுலகம் யாவையும்.

(இ - ள்.) (அநுமான் இராமனைநோக்கி), 'இலக்குமி விளங்குகின்ற மார்பையுடையவனே! நாய்போற் கடைப்பட்டவனான அடியேன், வெப்பம்மிக்க நெருப்பினிற் குதிக்கத்தொடங்கிய மலையையொத்த தோள்களையுடைய அப்பரதனைச்சேர்ந்து உனதுவருகையைத் தெரிவித்தேன்;(அதுகேட்டுப் பரதன் தீக் குதித்தலைத் தவிர்ந்ததனால்) எல்லாவுலகங்களும் (அழியாது) நிலைபெற்றிருப்பன வாயின' (என்று கூறினான்); (எ - று.)

இராமனை 'திருப்பொலிமார்ப' என்றது, திருமாலின் அவதாரமாதலால்; திரு - வீரலக்ஷ்மியுமாம். பரதனொருவன் இறந்தால் உலகத்து உயிர்களெல்லாம் இறக்குமென்பதனைக் கீழ்க் கௌசலை கூறியது கொண்டும் அறியலாம். (சஉசகூ)

௩௩௦.---இரண்டுகவிகள்-ஒருதொடர்: இராமன் அநுமானுக்கு உபசாரமொழிகூறித் தழுவிப் புகழ்தலைக் கூறும்.

தீவினை யாம்பல செய்யத் 1தீர்விலா
2வீவில முறைமுறை விளைவ 3மெய்ம்மையாய்
நீ4யவை துடைத்துநின் 5றளிக்க 6நேர்ந்தனை
7தாயினு மன்பினை 8யாஞ்செய் மாதவம்.

(இ - ள்.) (இராமன் அநுமானைநோக்கி), 'மெய்ம்மையோய்! தாயினும் அன்புடையவனே! நாங்கள் பலதீவினைகளை (முன்பு) செய்ய (அவைகள் எம்மைவிட்டு) நீங்காதனவாய் அழிகின்றனவில்லாதன

வாகி மேன்மேல்வந்து இப்பயன்களைத் தருகின்றன; உண்மையாக நீ அத்துன்பங்களை யொழித்துநின்று காப்பாற்றும்படி நேர்பட்டது நாங்கள் (முற்பிறப்பிற்) செய்துள்ள பெருந்தவப்பயனேயாம்'; (எ - று.)— 'என்றுஉரைத்து' என அடுத்த கவியோடு தொடரும்.

இராமபிரான் திருமாலின் அவதாரமாயிருந்தும் தான் கொண்டுள்ள மனிதவடிவத்துக்குத் தக்கபடி இங்ஙனங் கூறினனென்க. பி - ம்:—[1]தீர்விலே. [2]வீவினைமுறை முறைவிளைய. [3]மெய்ம்மையால். [4]இவை. [5]அளத்து. [6]நேர்ந்ததால். [7]தாயினும். [8]யான். (௪உ௰)

௩௩௧. என்றுரைத் தனுமனை யிறுகப் புல்லினன்
ஒன்[1]றுரைத் திறப்பதென் னுனக்கு மெந்தைக்கும்
இன்றுணைத் தம்பிக்கும் [2]யாய்க்கு மென்றனன்
குன்[3]றிணைத் [4]தனவுயர் குவவுத் தோளினன்.

(இ-ள்.) இவ்வாறுகூறி அனுமனை இறுகத்தழுவினவனாகி இரண்டு குன்றுகளைச் சேர்த்தாற்போன்ற உயர்ந்து திரண்ட (இரண்டு) தோள்களையுடையவனான இராமபிரான்,—'(கைம்மாறுகருதாது உதவிய)உன்னைப்பற்றியும் (சத்தியத்துக்காக உயிர்துறந்த) எனதுதந்தையான தசரதசக்கரவர்த்தியைப்பற்றியும் (எப்பொழுதும் இடைவிடாதுஎன்னுடனிருந்து எனக்குப்பலவகையிலும்) இனியதுணைபுரியும்(என்)தம்பியான இலக்குமணனைப் பற்றியும் என்னைப்பெற்ற தாயான கௌசலையைப் பற்றியும் (புகழ்ச்சியாக) ஒருவார்த்தை கூறிமுடிப்பது எவ்வாறு (இயலும்,?' என்றனன்; (எ - று.)—பி - ம்:—[1]உரைத்திடுவது. [2]யார்க்கும். [3]இசைத்து. [4]அனையன, அனையதோர். (௪உ௧)

௩௩௨.—பரதன் இராமனருகில் தோன்றுதல்.

[1]ஈடுறு வான்[2]றுணை யிராமன் சேவடி
சூடிய சென்னியன் றொழுத கையினன்
ஊடுயி ருண்டெனு வுலர்ந்த யாக்கையன்
பாடுறு பெரும்புகழ்ப் பரதன் றோன்றினான்.

(இ - ள்.) (ஒன்றோடொன்று) ஒத்தவையும் [வேறுஒப்பற்றவையும்] (தனக்குப்) பெருந்துணையாகவுள்ளவையுமான இராமபிரானது திருவடிநிலைகளைத்தரித்த தலையையுடையவனும் கூப்பிய கைகளையுடையவனும் உள்ளே உயிர்உள்ளதென்று ஊகித்தறியும்படிவற்றிய உடம்புடையவனுமாகிய சிறப்புப்பெற்ற மிக்ககீர்த்தியையுடைய பரதன் (அருகில்) வந்து கிட்டினான்; (எ - று.)

உடம்பின் இளைப்புமுதலிய நிலைமையைப் பார்த்தால் உயிர் உண்டோவென்று சந்தேகித்தற்கு இடமாய், நடத்தல்முதலிய தொழில்களால் 'உயிருண்டு' என்று ஊகிக்கக்கூடிய நிலையிலிருப்பவனென்பது, மூன்றாமடியின் கருத்து. வான் துணை - முத்திநெறிக்கு வழித்துணையெனினுமாம். பி - ம்:—[1]தேடியமாமறை, ஈடியல்வான், ஈடியவன். [2]இணை. (௪உ௨)

௩௩௩.—அனுமான் இராமனுக்குப் பரதன்வந்ததை அறிவித்தல்.

தோன்றிய பரதனைத் தொழுது தொல்லறச்
சான்றென [1]நின்றவ னினைய தம்பியை
வான்றொடர் பே[2]ரர சாண்ட மன்னனை
ஈன்றவள் பகைஞனைக் [3]காண்டி [4]யீண்டென்றான்.

(இ - ள்.) பழமையான தருமத்துக்குச் சாட்சிபோன்றவனாகிய [நீதிநெறிக்கு ஒருவழிகாட்டியான] அநுமான், அருகில்வருகிற பரதனை வணங்கி,— (இராமனைநோக்கி), 'மிக்கபற்றுக்குஇடமான பெரிய அரசாட்சியை(ச் சிறிதும் பற்றில்லாமற் பதினான்குவருடம்) ஆண்ட அரசனும் (தன்னைப்) பெற்றதாய்க்குப் பகைவனுமாகிய இத்துணைச்சிறப்பையுடைய தம்பியான பரதனை இப்பொழுது காண்பாயாக' என்றான்.

'வான் தொடர் பேரரசு ஆண்ட மன்னன்' என்பதற்கு-பரமபதத்தையடைவதற்குச் சுலபமார்க்கமாகிய (பாரதந்திரியமென்னும்) பெரிய அரசையாண்ட அரசனென்றும் பொருள் கூறலாம். பி-ம்:—[1]நின்றநின் னிளைய. [2]அரசாட்சி. [3]சுட்டி, காட்டி. [4]ஈண்டெனா (௪௨௫௩)

௩௩௪.—பரதன்வரவு கண்டு இராமன் மகிழ்தல்.

காட்டினன் மாருதி கண்ணிற் [1]கண்டவத்
தோட்டலர் தெரியலா னிலைமை சொல்லுங்கால்
[2]ஓட்டிய மானத்தா னுயிரிற் றந்தையார்
கூட்டுருக் கண்டன்ன தன்மை கூடினான்.

(இ-ள்.) அநுமான் (பரதனைக்)காட்டினான்: (அப்பரதனைக்)கண்ணினாற்கண்டஇதழ்கள்மலரப்பெற்ற மாலையையணிந்த அந்தஇராமபிரானது தன்மையைச் சொல்லுமிடத்து,—(அப்பெருமான்), ஏறிநடத்துகிற விமானத்தில் (வந்து காட்சிதந்த) உயிரோடுகூடிய தந்தையான தசரதமகாராசனது பொருந்தியஉருவத்தைக் கண்டது போன்ற தன்மையையடைந்தான்; (எ - று.)

இலங்கையில் தந்தையைக் கண்டபோது தான் அடைந்தது போன்ற மகிழ்ச்சியை, இராமபிரான் இங்குத் தம்பியாகிய பரதனைக் கண்டபோதும் அடைந்தனனென்க. பி-ம்:—[1]காணவத். [2]ஓட்டியதேர் வரவுயிரிற், ஊட்டியதோமயத்துயிரிற். இதன்பின் சிலபிரதியில் "ஆனதோர்" (௩௩௮) என்ற செய்யுள் உள்ளது: சிலபிரதிகளில் அச்செய்யுளோடு 'அவ்வயின்" (௩௩௯) என்ற பாடலும் உள்ளது. சிலபிரதிகளில் இங்கு "ஆனதோரளவையின்" (௩௩௮) என்ற பாடல் இருக்க, அடுத்துள்ள "அவ்வயின்" (௩௩௫) "எவ்வயின்" (௩௩௬)என்ற இரண்டு பாடல்களும் இல்லை. (௪௨௫௪)

வேறு.

௩௩௫.—விமானம் கீழிறங்குதல்.

அவ்வயி னயோத்தி வைகுஞ் சனமொடு மக்கு ரோணி
தவ்வலி லாறு பத்தா யிரமொடுந் தாய ரோடும்

இவ்வயி னடைந்து ளோரைக் காண்பெனென் றிராம [1]னுன்னச்
செவ்வையி னிலத்தை வந்து சேர்ந்தது விமானந் தானும்.

(இ - ள்.) அப்பொழுது, 'அயோத்தியில் வாழ்கிற சனங்களோடும் கெடுதலில்லாத அறுபதினாயிரம் அக்ஷௌஹிணிசேனையோடும், (கௌசல்யை சுமித்திரை கைகேயி என்னும்) தாய்மாரோடும் இவ்விடத்தில் வந்துள்ள எல்லோரையும் பார்ப்பேன்' என்று இராமன் மனத்தில் நினைத்தமாத்திரத்தில், புஷ்பகவிமானமும் செம்மையாக நிலத்தில் வந்து இறங்கிற்று; (எ - று.)— இங்குக் குறித்தவர் யாவரும், இராமபிரானை எதிர்கொள்ள வந்தவர்கள். பி-ம்:---[1]உன்னும். (௪௨௫௫)

வேறு.

௬௬௬.—நிலத்தைச்சார்ந்த புஷ்பகவிமானத்தின் வருணனை.

எவ்வயி னுயிர்கட்கு மிராம னேறிய
[1]செவ்விய புட்பக நிலத்தைச் [2]சேர்தலும்
அவ்வவர்க் [3]கணுகிய வமரர் நாடெய்க்கும்
எவ்வமின் மானமென் றிசைக்க [4]லாயதால்.

(இ-ள்.) இராமபிரான் ஏறியுள்ள அழகிய புஷ்பகவிமானமானது பூமியில் இறங்கியவுடனே, எல்லாவிடங்களிலுமுள்ள உயிர்களுக்கும், அவ்வவ் வுயிர்க்கு (நல்வினையினாற்) கிடைக்கலான சுவர்க்கலோகத்துக்குக் கொண்டுபோகுந்தன்மையுள்ள குற்றமில்லாத விமானமென்று சொல்லலாம்படியிருந்தது; (எ - று.)

புட்பகவிமானம் வந்து இறங்கினதும் அதிலுள்ள இராமபிரானைச் சேவித்த யாவரும் சுவர்க்கானுபவத்தை யொத்த பேரானந்த மடைந்தமையால், அதற்குக் காரணமாகிய அவ்விமானத்தை, உயிர்களைச் சுவர்க்கானந்தத்திற் செலுத்தும் விமானத்தை யொக்கு மென்றார்; தற்குறிப்பேற்றவணி. பி-ம்:---[1]திவ்விய. [2]சேர்தலால். [3]எய்தியஆனதே. ()

வேறு.

௬௬௭.—நான்குகவிகள் - இராமனை யெதிர்கொண்ட அயோத்தியா நகரத்தாரின் நிலைமையைக் கூறும்.

தாயருக் கன்று சார்ந்த [1]கன்றெனுந் தகைய னானான்
மாயையிற் பிரிந்தோர்க் கெல்லா மனோலயம் வந்த தொத்தான்
[2]ஆயினோ யர்க்குக் கண்ணு [3]ளாடிரும் பாவை [4]யானான்
[5]நோயுறத் துலர்ந்த யாக்கைக் குயிர்[6]புகுந் தாலு மொத்தான்.

(இ-ள்.)(இராமபிரான்),தாயருக்கு,(பிரிந்து)அப்பொழுது சேர்ந்த கன்றென்று சொல்லத்தக்க தன்மையையுடையவனாயினான்; மாயையினின்று நீங்கினவர்களுக்கெல்லாம் மனம்லயிக்குமிடம் நேர்ந்ததை ஒத்தான்; சிறந்ததம்பியரான பரதசத்துருக்கினர்களுக்குக் கண்களினுள் அசைகின்ற கருவிழியை யொத்து (அருமையாக) விளங்கினான்; (எல்லோர்க்கும்), வியாதிபொருந்தி உயிர்நீங்கிப்போன உடம்புக்கு (மீண்டும்) உயிர்புகுந்தாற்போன்ற தன்மையையும் ஒத்திருந்தான்; (எ - று.)

அவிச்சையொழிந்த மெய்ஞ்ஞானிகளுக்குத் தமது மனம் லயிக்குமிடம் பரப்பிரஹ்ம மாதலால், அதனது வேற்றுருவமாயுள்ள இராமபிரானைக் கண்டதும் அவர்கள்மனம் பரப்பிரஹ்மத்தைக் கண்டதுபோலவே பேரானந்தத்தை அடைவதாயிற்று என்பது, இரண்டாமடியின் கருத்து. மாயையாவது - உள்ளதை இல்லாததாகவும், இல்லாததை உள்ளதாகவும், ஒன்றை மற்றொன்றாகவுங் காட்டும் எம்பெருமானது ஒருசக்தி. மனம் அந்தமாயைக்கு வசப்பட்டபோது, பொருள்களின் நிலையை யறியுந் தத்துவஞானம் தோன்றுகின்றதில்லை; ஆகவே, நிலையுள்ள பொருள்களை நிலையில்லாதன வென்றும், நிலையில்லாத பொருள்களை நிலையுள்ளன வென்றும் மாறுபடவுணரும் விபரீதஞானம் தலையெடுக்கும்; அதனாலேயே, நித்தியமான ஆத்மாவுக்கு யாதொரு சம்பந்தமும்படாமல் அநித்தியமான தேகத்தையே பற்றிய தாய்முதலியோரிடத்துச் சுற்றத்தவரென்ற பொய்யபிமானம் உண்டாகி நிலைநிற்கின்றது; அது நீங்கவே, அம்மனம் ஆபாசபந்துக்களினிடம் பாசத்தையொழித்து உண்மையில் எல்லாவகைச்சுற்றமுமான பரம்பொருளினிடத்திலே லயிக்குமென்க. இருமை-கருமை. பி - ம்:—[1]கன்றெனத். [2]ஆய்வளையார்க்கு, ஆயிழையார்க்கு. [3]ஆடிய. [4]ஒத்தான். [5]நோயுறவுலந்த, நோய்வுறத்துலர்ந்த. [6]புகுந்தனையது. (௪௨௫௭)

௩௩௮. எளிவரு முயிர்கட் கெல்லா மீன்றதா யெதிர்ந்த தொத்தான், அளிவரு மனத்தோர்க் கெல்லா மரும்பத வமுத [1]மானான், [2]ஒளிவறப் பிறந்த தொத்தா னுலகினுக் கொண்க ணார்க் குக், [3]தெளிவருங் களிப்புச் [4]செய்யுந் தேம்[5]பிழித் தேற லொத் தான்.

(இ - ள்.) (இராமபிரான்,—தன்னைக் காணப்பெறாது) எளிமையடைந்த பிராணிகளுக்கெல்லாம் (தம்மைப்) பெற்ற தாய் எதிர்ப்பட்டதை யொத்தான்; (தன்னிடத்தில்) அன்புபொருந்தின மனமுடையவர்களுக்கெல்லாம் (கிடைத்தற்கு) அரிய பக்குவமான தேவாமிருதங் கிடைத்தாற்போன்றான்;(ஞானத்தால்)உயர்ந்தவரான முனிவர்களுக்கு (தனது உண்மைவடிவம்) மறைதலின்றிப் பிரதியக்ஷமானதை ஒத்திருந்தான்; அழகிய கண்களையுடைய மகளிர்க்குத் தெளிவில்லாதமதக்களிப்பைச்செய்கின்ற இனிய மதுவின் தெளிவை யொத்திருந்தான்; (எ-று.)

இராமபிரானைக் கண்டவுடன் மகளிர் களிப்புற்றுப் பரவசராயினரென்றது, ஈற்றடியின் கருத்து. உலகு - இங்கு, உயர்ந்தோரான முனிவர். பி-ம்:—[1]ஒத்தான். [2]ஒளியவனுதித்ததொத்தானுலகிழைத்தும்பர்க்கெல்லாம். [3]தெளிவரக். [4]நல்கும். [5]பிழிதேறல. (௪௨௫௮)

௩௩௯. ஆவியங் கவன லான்மற் றின்மையா [1]லனைய னீங்கக்
காவியங் கழனி நாடு நகரமுங் [2]கவன்று வாழும்
மாவிய [3]லொண்க ணாரு மைந்தரும் வள்ள லெய்த
ஓவிய முயிர்[4]பெற் றென்ன வோங்கின ருணர்வு பெற்றார்.

(இ - ள்.) அந்நாட்டில் உயிர் அவ்விராமபிரானேயன்றி வேறு இல்லாமையால் [யாவரும் இராமனைத் தம்முயிராகவே கருதியிருந்த தனால்] அவன் (வனஞ்செல்வதற்குத் தம்மைவிட்டுப்) பிரிய, குவளைகள் நிறைந்த அழகிய கழனிகளையுடைய கோசலநாட்டிலும் (அதன் இராச தானியான) அயோத்தியாபட்டணத்திலும் (மனத்திற்) கவலைகொண்டு வாழ்கின்ற (பிளந்த) மாவடுவையொத்த அழகிய கண்களையுடையரான மகளிர்களும் ஆடவர்களும் இராமபிரான் (காட்டிலிருந்து) மீண்டு வந்தமையாற் சித்திரப்பதுமை உயிர்பெற்றாற்போல (இராமபிரான் பிரிந்தபோதுஇழந்த தமது இயற்கையான) அறிவு (மீண்டும்) தூக்கப்பெற்றார்கள்.

'காவியங் கழனிநாடு' என்றதனால், அந்நாட்டின் நீர்வளநிலவளங்கள் விளங்கும். மாம்பிஞ்சினுட்பிளவை மகளிர்கண்களுக்கு வடிவில் உவமைகூறுவது, மரபு. பி-ம்:—[1]ஐயன், அனையோன். [2]கலந்து. [3]உண். [4]பெற்றாலேயொத்தனர். இதுவும் அடுத்த கவியும் சிலபிரதியிலில்லை. ()

௩௪௦. சுண்ணமுஞ் சாந்து நெய்யுஞ் சுரிவளை முத்தும் பூவும்
எண்ணெயுங் கவின மாவி லாழியு [1]மெண்ணில் யானை
வண்ணவார் மதமுந் நீரு மான்மதந் [2]தழுவு மாதர்
கண்ணவாம் புனலு மோடிக் [3]கடலையுங் கடந்த வன்றே.

(இ - ள்.) வாசனைப்பொடிகளும் சந்தனமும் நெய்யும் சுழியையுடைய சங்குகள் ஈன்ற முத்துக்களும் பூவும் எண்ணெயும் கடிவாளம் பூண்ட குதிரைகளின் வாயிலிருந்துவெளிவரும் நுரையும் கணக்கில்லாத யானைகளின் பலவகைநிறமுள்ள பெருகுகிற மூன்றுவகை மதஜலமும் கஸ்தூரி யணிந்த மகளிர்களது கண்களினின்று பெருகுகிற ஆநந்தபாஷ்பமும் (ஒன்றாகக்கலந்து) விரைந்து சமுத்திரத்தையுந் தாண்டிவிட்டன; (எ - று.)

சக்கரவர்த்தித்திருமகன் வந்துவிட்டனனென்கிற களிப்பினால் மகளிரும் ஆடவரும் இராமபிரான்மீதும், ஒருவர்க்கொருவர் தங்கள் மீதும் வாரிவாரித் தூவுகின்ற வாசனைப்பொடி முதலியவைகள் அங்ஙனமே கொண்ட களிப்பினாற்பெருகுகிற குதிரைகளின் நுரையோடும், யானைகளின் மதத்தோடும், அவர்களுடைய ஆனந்தக்கண்ணீர்வெள்ளத்தோடும் ஒன்றாகக் கலந்து பெருகிக் கடலைக்கடந்தன என்றவாறும். கண்ண ஆம் எனப் பிரிப்பினுமாம். பி - ம்:—[1]மிகநல், இளநல். [2]தழுவி [3]கடலிடைக்கலந்ததன்றே, கடலிடைமடுத்ததன்றே. (௪௨௯௦)

௩௪௧.—வசிஷ்டன்முதலியோர் விமானத்தின்மீது ஏறுதலும், இராமபிரான் அம்முனிவனை வணங்குதல்.

அனைவரு [1]மனைய ராகி யடைந்துழி யருளின் வேலை
தனையினி தளித்த தாயர் மூவருந் தம்பி மாரும்
புனையுநூன் முனிவன் றானும் பொன்னணி விமானத் தேற
வினைகழற் [2]குரிசின் மூந்தி மாதவன் றாளில் வீழ்ந்தான்.

(இ - ள்.) யாவரும் அத்தன்மையுடையவராய் [மிக்கசந்தோஷங் கொண்டாடுபவராய்] (விமானம்) நெருங்கியபொழுது,—கருணைக்கடலாகிய இராமபிரானை இனிமையாய்ப் பெற்று வளர்த்த மூன்றுதாய்மார்களும், தம்பிமாரும் பூமாலைதரித்த வசிஷ்டமுனிவனும் பொன்மயமான அழகியபுஷ்பகவிமானத்தில் ஏற, கட்டிய வீரக்கழலையுடைய உத்தமபுருஷனான இராமபிரான் முதலில் (தனது குலகுருவாகிய) மிக்கதவத்தையுடையனான வசிஷ்டமகாமுனிவனது பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான்; (எ - று.)—பி - ம்:—1இனையர். 2இராமன்முந்தி வணங்கினன்வசிட்டன்றாளில். இதுமுதல் நான்குகவிகள் பலபிரதிகளி லில்லை. (சஉகூக)

ந.சஉ.—வசிஷ்டன் இராமலக்ஷ்மணர்களை ஆசீர்வதித்தல்.

எடுத்தனன் முனிவன் மற்றவ் விராமனை யாசி கூறி
[1]அடுத்துள துன்ப நீங்க வணைத்தணைத் தன்பு கூர்ந்து
விடுத்துழி யிளைய வீரன் வேதியன் றாளில் வீழ
வடித்தநூன் முனியு [2]மேந்தி [3]வாழ்த்தினா னாசி கூறி.

(இ - ள்.) அவ்வசிஷ்டமுனிவன் (கீழ்விழுந்து வணங்கிய) அவ்விராமபிரானை (க் கைகளால்) தூக்கியெடுத்தவனாய் (அவனுக்கு)ஆசீர்வாதஞ் செய்து (இராமவிரகத்தால் தனக்கு) நேர்ந்த துன்பங்கள் நீங்கும்படி அன்புமிக்குப் பலமுறை அணைத்து விட்டபின்பு, இளையபெருமாள் வசிஷ்டமுனிவனது பாதங்களில் விழுந்துவணங்கத் தேர்ந்தறிந்த சாஸ்திரங்களையுடைய அந்தவசிஷ்டமுனிவனும் தழுவியெடுத்து (இராமபிரானை வாழ்த்தினதுபோல இலக்குமணனையும்) ஆசீர்வதித்துவாழ்த்தினான்; (எ - று.)—அடுத்துள துன்பம் நீங்க - தனது பிறவித்துன்பங்களெல்லாம் ஒழியும்படியென்றுங் கொள்ளலாம். பி-ம்:—1அடுத்தன. 2முன்போல். (சஉகூஉ)

ந.சந.—இராமபிரான் தாயரை வணங்கல்.

கைகயன் [1]றனயை முந்தக் காலுறப் [2]பணிந்து மற்றை
மொய்குழ லிருவர் தாளு [3]முறைமையின் வணங்குஞ் செங்கண்
ஐயனை யவர்க டாமு [4]மன்புறத் தழுவித் தத்தஞ்
செய்யதா மரைக்க ணீரான் மஞ்சனத் தொழிலுஞ் செய்தார்.

(இ - ள்.) கேகயதேசத்தரசனது மகளான கைகேயியை முதலில் பாதங்களில் நன்றாகவிழுந்து வணங்கி நெருங்கிய கூந்தலையுடைய மற்றையிரண்டு தாய்மாருடைய பாதங்களையும் முறைமைப்படி வணங்குகின்ற சிவந்த கண்களையுடைய இராமபிரானை, அத்தாய்மாரும் அன்போடு இறுகத்தழுவித் தங்கள்தங்களது சிவந்த தாமரைமலர்போன்ற கண்களின் நீர்ப்பெருக்கினால் (அவ்விராமபிரானுக்கு) நீராட்டுந்தொழிலையுஞ் செய்தார்கள்; (எ - று.)—பி-ம்:—1தனயள். 2வணங்க. 3முறைமையிற்பணிந்த, முறைமுறைபணிந்த. 4அணைத்தனர் வழுத்தியன்பால். (சஉகூந)

௩௪௪.—சீதையும் லக்ஷ்மணனும்
வசிஷ்டனையுங் கைகேயி முதலியோரையும் வணங்குதல்.

அன்னமு முன்னர்ச் சொன்ன முறைமையி னடியில் [1]வீழ்ந்தாள்
தன்னிக ரிலாத வென்றித் தம்பியுந் தாயர் தங்கள்
பொன்னடித் [2]தலத்தில் வீழத் தாயரும் பொருந்தப் புல்லி
மன்னவற் [3]கிளவ னீயே வாழியென் றாசி சொன்னார்.

(இ - ள்.) அன்னப்பறவையின் நடைபோன்ற நடையையுடைய சீதையும் கீழ்க்கூறிய முறைமைப்படியே (வசிஷ்டமுனிவன் கைகேயி முதலியதாய்மார் இவர்களுடைய) பாதங்களில் விழுந்து வணங்கினாள்; (பின்பு) தனக்கு ஒருவரையும் ஒப்பாகப்பெறாத வெற்றியையுடைய இளையபெருமாளும் தாய்மார் மூவருடைய அழகிய பாதங்களில் விழுந்துவணங்க, அத்தாய்மார்களும், (அவனை) இறுகத்தழுவி 'அரசனாகிய இராமபிரானுக்குத் தம்பியாந் தன்மையுள்ளவன் (அவனைவிட்டுப் பிரியாது அவனுடன் வனத்துக்குச்சென்று வந்தவனான) நீ யொருவனே: வாழ்வாயாக'என்று வாழ்த்துக்கூறினார்கள்; (எ - று.)—பி-ம்: —[1]வீழத். [2]தலத்துவீழ்ந்தான்வீழ்தலும். [3]அரசநீயேவாழி, அரசனாகிவாழ்தி. ()

௩௪௫.—இராமனைப் பரதன் வணங்க, அவனை இராமபிரான் தழுவுதல்.

சேவடி யிரண்டு [1]மன்பு மடியுறை யாகச் சேர்த்திப்
பூவடி பணிந்து [2]வீழ்ந்த பரதனைப் பொருமி விம்மி
நாவிடை[3] யுரைப்ப தொன்று முணர்ந்தில னின்ற நம்பி
ஆவியு முடலு மொன்றத் தழுவின [4]னழுது சோர்வான்.

(இ-ள்.) (இராமபிரானுடைய) அழகிய இரண்டு திருவடிநிலைகளையும் பத்தியையும் பாதக்காணிக்கையாக (அப்பிரானுக்குச்)சமர்ப்பித்து (அவனுடைய) தாமரைமலர்போன்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்கிநின்ற பரதனைநோக்கி விம்மிப்புலம்பி(த் தனது)நாவினாற்பேச ஒன்றும் அறியாதவனாய்த் திகைத்துநின்ற இராமபிரான், உயிரும் உடம்பும் ஒருசேரப் பொருந்தும்படி இறுகத்தழுவிக்கொண்டு அழுது தளர்பவனானான்; (எ - று.)

சேவடியிரண்டு மன்புமடியுறையாகச்சேர்த்தி - உடனிகழ்ச்சியணி. இராமபிரான் தன்னைவணங்கின பரதனை ஆசீர்வதியாமல் தழுவியது, அவனையும் அவனது மனநிலைமையையுங் கண்டதனா லுண்டாகிய பேரிரக்கத்தினா லென்க. நாவிடை-உருபுமயக்கம். பி-ம்: —[1]அன்பின். [2]நின்ற. [3]பெயர்ப்பது. [4]அன்புகூர.   (௪௨௯)

௩௪௬.—இராமபிரான் பரதன்மீது கொண்ட அன்பின் செயல்.

தழுவின னின்ற [1]காலைத் ததும்பிநீ ருகுவி [2]காலும்
[3]விழுமலர்க் [4]கண்ணீர் [5]மாரி வெள்ளத்தான் [6]முருகின் செவ்வி
வழுவுறப் பின்னி [7]மாசு மாசுண்ட சடையின் [8]மாலை
கழுவின னுச்சி மோந்து கன்றுகாண் [9]கறவை யன்னான்.

(இ - ள்.) (இவ்வாறு இராமபிரான், தம்பியைத்) தழுவிநின்ற பொழுது,—ததும்பிப்பெருகும் நீருவியை வெளிவிடுகிற சிறந்த தாம

ரைமலர்போன்ற கண்களின் பெரிய நீர்வெள்ளத்தால், இளமையின் அழகு குலையும்படி தரித்து நெருங்கிய அழுக்கடைந்த(பரதனது)சடைக்கற்றையைக் கழுவினவனாகி,உச்சிமோந்து,கன்றைக்கண்ட தாய்ப்பசுவை யொத்தவனானான்; (எ - று.)

விழு=விழுமம். இக்ஷ்வாகுவம்சத்தவர் தமது முதுமையில் தவசியரின்வேஷத்தை மேற்கொண்டு தரிக்கின்ற சடைமுடியைப் பரதன் இளமையிலேயே தரித்ததனால், 'முருகின் செவ்வி வழுவுறப் பின்னி மூசுஞ்சடை' என்றார். பி-ம்:—[1]பின்னர். [2]சாலும். [3]முழு. [4]கண்ணன். [5]வாரி. [6]முருகற். [7]மூசி, பின்னி. [8]கற்றை. [9]களிறே. (சஉகசு)

நு. சஎ.—இலக்குமணன் பரதனை வணங்குதல்.

அனையதோர் காலத் தம்பொற் சடைமுடி [1]யடிய தாகக்
கனைகழ [2]லமரர் கோமாற் கட்டவற் படுத்த[3] காளை
துனைபரி கரிதே ரூர்தி யென்றிவை [4]பிறவுந் தோலின்
வினை[5]யுறு [6]செருப்புக் கீந்தான் விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில்,ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய தேவேந்திரனை (வென்று) வலியடக்கினவனான இந்திரசித்தைக் கொன்ற இளவெருதுபோன்றவனாகிய இலக்குமணன்,—வேகமாகச்செல்லுகிற குதிரை யானை தேராகிய வாகனம் என்ற இவைகளையும் மற்றை விபவங்களையும்,தோலினால்தொழில்செய்யப்பட்ட (இராமபிரானது) பாதுகைகளுக்கே உரியனவாக்கிய பரதனுடையநறுமணமுள்ள தாமரைமலர் போன்ற பாதங்களில், அழகிய பொன்னிறமான [சிவந்த] (தனது) சடையையுடைய முடி கீழே பொருந்தியதாக வீழ்ந்து வணங்கினான்; (எ - று.)—பி - ம்:—[1]படியதாகக். [2]அமரர்கோனைக்கட்டறப்பிணித்த,அரக்கரச்சங்கடியவிற்பிடித்த, அரக்கர்கோனைக்கட்டறப்பிணித்த, அரக்கர்கோனைக் கட்டறத்தொலைத்த. [3]வீரன். [4]போலத். [5]அறு. [6]செருப்புநீத்த, செருப்பினீந்த, செருப்புக்கேய்ந்த. இச்செய்யுளின்பின் சிலபிரதியிற் காணப்படும் பாடல் வருமாறு:—

நீடுவே லேற்றவற் கிளைய நின்மலன்
வாடிய மனத்தனை வசிட்டன் முன்வரச்
சூடிய கடிமலர் தூவி [1]யார்த்தனன்
[2]ஏடவிழ் தாமரை யிறைஞ்சி [3]யெய்தினான்.

பி-ம்:—[1]வார்கழல். [2]ஏடுறு, [3]ஏத்தினான். இங்குக்காட்டிய "நீடுவேல்"என்ற இச்செய்யுள் சிலபிரதியில் "ஊடுறு" என்ற அடுத்தபாடலின் பின் உள்ளது. (சஉகஎ)

நு. சஅ.—பரதன் இலக்குமணனைத் தழுவுதலும், இவர்களைப்பற்றி உலகத்தவர் வருந்துதலும்.

[1]ஊடுறு கமலக் கண்ணீர் திசைதொறுஞ் [2]சிவிறி யோடத்
[3]தாடொடு தடக்கை [4]யாரத் தழுவினன் றனிமை [5]நீங்கிக்
காடுறைந் [6]துலைந்த மெய்யோ [7]கையறு கவலை [8]கூர
நாடுறைந் துலைந்த மெய்யோ நைந்ததென் றுலக [9]நைய.

(இ - ள்.) (அப்பொழுது கண்ட) உலகத்தார்,—'(இவ்விருவருடைய உடல்களுள்) தனித்திருக்குந் தன்மையில்லாமல் [இராமபிரானை விட்டுப்பிரியாமல்] (அவனுடன்) காட்டில் வசித்து வருந்திய (இலக்குமணனது) உடம்போ, (தனிமைப்பட்டுச்) செயலறுதற்குக் காரணமான மனக்கவலை அதிகப்பட நாட்டில் வசித்துவருந்திய (பரதனது) உடம்போ, (எது) மிகமெலிந்தது?' என்றுகூறி வருந்தாநிற்க, தாமரைமலர்போன்ற கண்களினின்று மிகுதியாகப் பெருகுகிற நீர்ப்பெருக்கு எல்லாத்திக்குக்களிலும் பரந்துபெருக, (பரதன் தனது) முழந்தாளையெட்டுகிற பெரிய கைகளால் (இலக்குமணனை) அழுந்தத் தழுவினான்; (எ - று.)

இரண்டுஉடம்பும் மெலிந்துள்ளனவாதலால், இங்ஙனம் விகற்பிக்கலாயிற்று. இராமனைப் பிரியாமல் அவனுடனே சென்று வருந்தி யிளைத்த இலக்குமணனதுஉடலைக் காட்டிலும் நாட்டில்தனித்துவருந்தியிளைத்த பரதனது உடம்பே நைந்துள்ளது என்பது அவர்களுட்கோளென்பது சொற்போக்கினால் தொனிக்கும். கமலகண்ஊடுஉறுநீர்என்க. ஊடு உறு கமலம் - (நீரின்) இடையிலே பொருந்திய கமலம் எனினுமாம்: பறிக்கப்படாது வாட்டமின்றிப் பொலிவுற்றிருக்குந் தாமரைமலர். ஊடு உறு கண்என இயைத்து, காதளவுந் தடையின்றி நீண்டு செல்லுங் கண் என்றலுமொன்று. பி - ம்:—[1]சேடுறு. [2]சிந்தி. [3]தாடுறு. [4]ஆட. [5]நீக்கிக். [6]உலர்ந்த. [7]கையுறு. [8]ஊர. [9]நைவ. (௬௨௬௮)

௩௬௯.—இராமன் லக்ஷ்மணன் சீதை இவர்களைச் சத்துருக்கினன் வணங்குதல்.

மூவர்க்கு மிளைய வள்ளன் முடிமிசை முகிழ்த்த கையன்
தேவர்க்குந் தேவன் றாளுஞ் செறிகழ லிளவ றாளும்
பூவர்க்கம் பொழிந்து வீழ்ந்தா னெடுத்தனர் பொருந்தப் புல்லி
வாவிக்கு வன்ன மன்னாண் [1]மலரடித் தலத்து வீழ்ந்தான்.

(இ - ள்.) (இராமன் பரதன் லக்ஷ்மணன் என்ற) மூன்றுபேர்க்கும் தம்பியாகிய சத்துருக்கினன், தலைமேற்கூப்பிய கைகளையுடையவனாய்,—தேவாதிதேவனான இராமபிரானது பாதங்களிலும், கட்டிய வீரக்கழலையுடைய இளையபெருமாளுடைய பாதங்களிலும் மலர்த்தொகுதிகளைச்சொரிந்து வீழ்ந்துவணங்கினான்; (அவனை அவ்விருவரும்), எடுத்துநன்றாகத் தழுவ,—(பின்னர் அவன்), நீர்நிலையில் வாழ்கிற அன்னப்பறவைபோன்ற சீதையின் தாமரைமலரையொத்த பாதங்களில் விழுந்துவணங்கினான்; (எ - று.)—பி - ம்:—[1]அடியிணைத். இச்செய்யுள் சிலபிரதிகளிலில்லை. (௬௨௬௯)

௩௭௦.—இராமபிரான் தன்னுடன்வந்தவர்களைப் பரதசத்துருக்கினர்க்குத்தெரிவிக்க, அனைவரும் அவ்விருவரையும் வணங்குதல்.

[1]பின்னிணைக்[2]குரிசி றன்னைப் பெருங்கையால்[3]வாங்கி வீங்குந்
தன்னிணைத் தோள்க ளாரத் [4]தழுவியத் தம்பி மாருக்கு

**இன்னுயிர்த் துணைவர் தம்மைக் காட்டினு னிருவர் தாளும்**
**மன்னுயிர்க் [5]குவமை கூற [6]வந்தவர் வணக்கஞ் செய்தார்.**

(இ - ள்.) (இராமபிரான், தனது) தம்பியும் ஒத்துவாழ்பவனு மான சத்துருக்கினனைப் பெரிய (தனது) கைகளால்எடுத்துப் பருத்து வளர்ந்துள்ள(தனது) இரண்டுதோள்களால் அழுந்தத்தழுவிய,(பின்பு) அவ்விரண்டு தம்பியர்க்கும் [பரதசத்துருக்கினர்களுக்கு] (தனது) இனிய உயிர்போன்ற (சுக்கிரீவன் முதலிய) நண்பர்களை (இன்னரென்று) அறிவித்தான்; (தனது) நிலைபெற்ற உயிர்க்கு ஒப்பாம்படியுள்ள வந்தவர்களான அவர்கள்(பரதசத்துருக்கினரென்றஅவ்விருவருடைய) பாதங்களையும் வணங்கினார்கள்; (எ-று.)

லக்ஷ்மணன்போலப் பரதனைப் பிரியாமல் எப்பொழுதும் உடன் வாழ்தலால், அவனை 'இணைக் குரிசில்'என்றார். பின் - பின்பிறந்தவன்: தம்பி. வந்தவர் - இராமபிரானுடன் புஷ்பகவிமானத்தில் வந்தவர்கள். பி-ம்:—[1]பின்னினை. [2]குரிசின்பின்னை. [3]வணங்கிவாங்கும், வணங்கிநீங்கத், வாங்கிநீங்கத். [4]தழுவியதம்பியாருக்கு. [5]உண்மைகூற. [6]மைந்தரும். இதன்பின்பலபிரதிகளிலுள்ள செய்யுள்வருமாறு:—

**ஆயிடைக் குகனும் வந்தாங் [1]காண்டவ னடியில் வீழ**
**நாயக னுவந்து புல்லி நண்ணியென் பின்பு வந்த**
**தூயனே கிளையி னோடுஞ் சுகமிருந் தனையோ வென்று**
**வாயிடை மொழிந்தான் மற்றை மறைகளுங் காணு வண்ணல்.**

பி - ம்:—[1]ஆண்டகை. இதன்பின் "அசனி" (௩௰௬௯) என்றசெய்யுளுள்ளது. "குரக்கினத்து" (௩௰௬௧) முதலிய செய்யுட்க ளில்லை. ()

௩௰௬௧.—பரதன் அவர்கட்கு உபசாரவார்த்தை கூறல்.

**குரக்கினத் தரசைச் சேயைக் குமுதனைச் சாம்பன் றன்னைச்**
**செருக்கிளர் நீலன் றன்னை மற்றுமத் [1]திறத்தி னோரை**
**அரக்கருக் கரசை வெவ்வே றடைவினின் [2]முதன்மை கூறி**
**[3]மருக்கமழ் [4]தொடையன் மாலை மார்பினன் பரத னின்றான்.**

(இ - ள்.) வாசனைவீசுகின்ற தொடுத்தலைக்கொண்ட பூமாலையையணிந்த மார்பையுடையவனாகிய பரதன்,—வானரசமூகத்துக்கு அரசனாகிய சுக்கிரீவனையும் (அவனது அண்ணன்) மகனான அங்கதனையும் குமுதனையும் ஜாம்பவானையும் போர்செய்வதில் உற்சாகமுள்ள நீலனையும் இன்னும் அத்தன்மையையுடைய மற்றவர்களையும் இராக்கதர்களுக்கு அரசனாகிய விபீஷணனையும் (பார்த்து), தனித்தனியாக (அவரவர்க்கு) உரியபடிசிறந்த உபசாரவார்த்தைகளைச் சொல்லிநின்றான்; (எ - று.)—பி-ம்:—[1]திறத்துளோரை. [2]மேன்மை. [3]மருக்குறு. [4]தொடையன்மார்பன்பரதற்கு மகிழச்சொன்னான். ஒருபிரதியில் "ஆயிடை"என்று கீழ்க்காட்டியசெய்யுள்இதன்பின்உள்ளது. (௬௰௭௧)

௧௫௨.—சுமந்திரன் மந்திரிகள்முதலியோருடன் இராமபிரானைக் காணவருதல்.

மந்திரச் சுற்றத் துள்ளார் தம்மொடும் [1]வயங்கு தானைத்
தந்திரத் [2]தலைவ ரோடுந் [3]தமரொடுந் தரணி யாளுஞ்
சிந்துரக் களிறு போல்வா [4]ரெவரொடுஞ் சேனை யோடும்
சுந்தரத் தடந்தோள் வெற்றிச் சுமந்திரன் [5]தோன்றி னானால்.

(இ - ள்.) அழகிய பெரிய தோள்களையும் வெற்றியையுமுடைய சுமந்திரனென்னும் முக்கியமந்திரியானவன்,—ஆலோசனைக்கு உரிய இனமாகவுள்ளவர்களான மந்திரிகளுடனும் விளங்குகின்ற சேனைகளையுடைய சேனாதிபதிகளுடனும் (மற்றும்) தன்னைச் சேர்ந்தவர்களுடனும் பூமியை அரசாளுகின்ற சிந்தூரமணிந்தஆண்யானையையொத்தவர்களாகியராஜகுலத்தாரனைவருடனும் சேனையோடும் (இராமபிரானைக் காண) அருகில் வந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]வானினீண்ட. [2]சுற்றத்துள்ளார். [3]பலரொடுந். [4]திரளொடும். [5]தொழுதுவந்தான். ()

௧௫௩.—சுமந்திரன் வணங்க, இராகவனும் லக்ஷ்மணனும் அவனைத் தழுவுதல்.

அழுகையு முவகை தானுந் தனித்தனி யமர்செய் தேறத்
தொழுதன னெழுந்து விம்மிச் சுமந்திர னிற்ற லோடும்
தழுவின னிராமன் மற்றைத் தம்பியு மனைய நீரான்
வழுவினி யுளதன் றிந்த பாரிலக் கிழத்திக் கென்றான்.

(இ-ள்.) அழுகையும் மகிழ்ச்சியும்(தம்மில்)ஒன்றோடொன்று போர் செய்துகொண்டு (ஒன்றினும் ஒன்று) முற்பட்டு வர, (இராமபிரானைச்) சேவித்து எழுந்து கண்ணீர்பெருக்கிக்கொண்டு சுமந்திரன் நின்றவளவில்,—இராமன் (அச்சுமந்திரனைக்) கட்டித்தழுவினான்; மற்றொருவனாகிய இளையபெருமாளும் (சுமந்திரனைக்) கட்டித்தழுவினான்; அங்ஙனம் இராமலக்ஷ்மணரால் தழுவப்பெற்றவனானசுமந்திரன், (இராமபிரானை நோக்கி), 'இனி இந்தப் பூமிதேவிக்குத் துன்பம்இல்லையாகும்' என்றான்; (எ - று.)

இராமபிரான் தனது அருமைத்திருமேனி வாடி வருந்தக் காட்டுக்கெழுந்தருளியதை நினைக்குந்தோறும் அழுகையும், பதினான்குவருஷமும் இனிதுகழிந்து சுகமாக ஊர்க்குவந்துசேர்ந்ததை நினைக்குந்தோறும் மகிழ்ச்சியும் ஒன்றையொன்று அதிகரிக்கச் சுமந்திரனுக்கு எழுந்தன வென்க. தனக்குஉரிய அரசன் பூமிக்குப்பொறையாயிருந்த அரக்கப்பூண்டுகளை அறவொழித்து வந்து ஆளநேர்ந்ததனால், பூமி துன்பமற்ற தாயிற் றென்க. இராமன் தழுவினன், தம்பியும் தழுவினன் என இயையும். (௪௨௭௩)

௧௫௪.—சேனைகள் இராம னநுமதிப்படி புஷ்பகவிமானத்தின்மீது ஏறி இலக்குமணனை வணங்குதல்.

ஏறுக சேனை யெல்லாம் விமானமீ தென்று [1]தன்போன்
மாறிலா வீரன் கூற வந்துள வனிக வெள்ளம்

ஊறிரும் பரவை வானத் தெழிலியு ளொடுங்கு மாபோல்
ஏறிமற் றிளைய வீர னிணையடி[2] தொழுத தன்றே.

(இ-ள்.) (சுமந்திரனுடன் வந்த சேனைகளெல்லாம் இராமபிரானை வணங்கிநிற்க), தனக்குச் சமமாக வேறொரு பொருளில்லாத வீரனாகிய இராமபிரான், 'சேனைகள்யாவும் விமானத்தின்மீது ஏறக்கடவன' என்று கட்டளையிட,—(அங்குச் சுமந்திரனுடன்) வந்துள்ள சேனைத் தொகுதி சுரக்குந்தன்மையுள்ள பெரிய கடல் ஆகாயத்துள்ள மேகத்தில் அடங்குமாறுபோல (விமானத்தின்மேல்) ஏறி, (பின்பு) இளைய பெருமானுடைய இரண்டுதிருவடிகளையும் வணங்கிற்று; (எ-று.)

கடல்-சேனைக்கும், ஆகாயத்திலுள்ள மேகம் - அவ்விடத்திலுள்ள விமானத்துக்கும், பேரொலிசெய்துகொண்டு அணியணியாய்ப் பரந்திருத்தலிலும், ஆகாயத்தில் விரைந்துசெல்லுதலிலும் உவமையாம். பி - ம்:—[1]செம்பொன். [2]காத்துநின்ற. (௪௨௭௪)

௯௫௫.—தேவர்கள் புஷ்பகவிமானத்தைக் கொண்டாடிப் பூமழைபொழிதல்.

உரைசெயி னுலக முண்டான் மணியணி யுதர மொவ்வா
கரை[1]செய லரிய வேதக் குறுமுனி கையு மொவ்வா
விரைசெறி யலங்கன் மாலைப் புட்பக விமான [2]மென்றென்று
உரைசெய்து வானு ளோர்க ளொண்மலர் தூவி யார்த்தார்.

(இ - ள்.) ஆகாயத்திலுள்ள தேவர்கள், (புஷ்பக விமானத்தைப் பார்த்து),'மணம்நெருங்கிய அசையுந்தன்மையுள்ள மாலைகளைத் தொங்கக்கட்டியஇப்புஷ்பகவிமானத்திற்கு (ஒப்புமை)சொல்லுமிடத்து உலகங்களையுட்கொண்டருளிய திருமாலினது அழகுபொருந்திய திருவயிறும் உவமையாகமாட்டாது; எல்லைகாணவொண்ணாத [அநந்தமான] வேதங்களை யுணர்ந்தவனான குறுகியவடிவமுள்ள அகஸ்தியமகா முனிவனுடைய (சமுத்திரத்தைத் தன்னுள்ளடக்கிய) கையும் உவமையாக மாட்டாது' என்று பலமுறை வியந்துகூறி, அழகிய புஷ்பங்களைச் சொரிந்து ஆரவாரித்தார்கள்; (எ - று.)

எல்லா வண்டங்களையும் உட்கொண்டருளிய திருமாலினது திருவயிறு எல்லாவுயிர்களையுந் தன்னுள் அடக்கியிருந்ததேயன்றித் திருமாலையுந் தன்னுள்அடக்கியிராமையால் அத்திருமாலையுமுட்படஅடக்கியிருக்கும் இப்புஷ்பகவிமானத்திற்கு அது உவமையாகாதென்றும், எல்லாப்பொருள்களையுந் தன்னுளடக்கிய திருமாலின் திருவயிறே உவமையாகாதபோது ஒரு சமுத்திரமாத்திரத்தைத் தன்னுளடக்கிய அகஸ்தியரது கை இதற்கு எங்ஙனம் ஒப்பாகும்? என்றும் தேவர்கள்புஷ்பகவிமானத்தைக் கொண்டாடின ரென்க. பி-ம்:—[1]செய. [2]மீதென்று, ஒன்றென்று. (௪௨௭௫)

௩௫௬.—புஷ்பகவிமானத்தில் மங்களவாத்தியங்கள் முதலியன முழங்குதல்.

அசனியின் குமுறு [1]மாழி யேழுமொத் [2]தார்த்த [3]தென்ன
[4]விசையுறு முரசும் [5]வேதத் தோதையும் [6]விளிகொள் சங்கும்
இசையுறு குரலும் [7]மேற்றி னரவமு மெழுந்து பொங்கித்
திசையுறச் சென்று வானோ [8]ரந்தரத் தொலியிற் றிர்ந்த.

(இ - ள்.) விரைந்துபாயுகின்ற முரசவாத்தியங்களின் ஓசையும் (அந்தணர் கூறுகிற) வேதங்களின் ஓசையும் பேரொலியைக்கொண்டுள்ள சங்கநாதமும் இராகத்தோடுகூடிய கண்டத்தொனியும் (யானை குதிரை இவற்றின்) ஆண்களுடைய சத்தமும், இடியின்கூட்டங்களும், எழுகடல்களும் ஒருசேர ஆரவாரித்தாற்போல மிக்குப்பரவித் திக்குக்களின் எல்லையிற்பொருந்தும்படி சென்று தேவர்கள் ஆகாயத்திற் கூறும் (இராமனைப்பற்றிய வாழ்த்துக்களின்) ஒலியில் அடங்கின.

இம்முழக்குக்களெல்லாவற்றினும் தேவர்கள் இராமபிரானுக்குக் கூறிய வாழ்த்தொலி மிக்கிருந்த தென்பதாம். பி - ம்:—1வேலை. 2ஆர்த்த, இழிந்தது. 3என்னை. 4விசியுற. 5வேதவோசையும். 6இளி கொள்சங்கின். 7எத்தின். 8தோத்திரத்தொலியும். இச்செய்யுளுக்குப்பின் சிலபாடல்கள் காணப்படுகின்றன: அவைவருமாறு:—

1 நம்பியும் பரத னோடு நந்தியம் பதியை நண்ணி
[1]வெம்பிய வெரியின் பாங்கர் [2]விலக்குவ னென்று விம்மும்
கொம்பியல் மருங்குற் றெய்வக் கோசலை குளிர்பொற் பாதம்
தம்பிய ரோடுந் தாழ்ந்தான் தாமரைக் கண்ணீர் தாழ.

பி - ம்:—1வெம்பிய. 2விலக்குவானின்று.

2. மூன்றென நின்ற தன்மைக் குணங்களி [1]னுயர்ச்சிக் கெல்லாம்
சான்றென நின்ற மானச் சிறுவனைத் தலைப்பட் டாட்குத்
தோன்றிய வுவகைக் காங்கோ [2]ரெல்லையுஞ் சொல்லற் பாற்றோ
ஈன்றபோ தொத்த தன்றே எதிர்ந்தபோ தொத்த [3]தன்மை.

பி - ம்;—1முயற்சிக்கெல்லாம் 2உவமையும். 3இன்பம்.

3 இணைமலர்த் தாளின் வீழ்ந்த விலக்குவன் றன்னை யேந்திப்
பணைமுலைப் பாலுங் கண்ணீர்த் தாரையும் [1]பாய நின்றாள்
பிணையெனத் தகைய நோக்கிற் சீதையைப் [2]பேடை யன்னத்
துணையினை [3]யுலகிற் கற்பின் [4]பெருங்கதித் துறையைக் கண்டாள்.

பி - ம்:—1பனிப்ப. 2பெருமை. 3புல்லியல்லாற். 4பெருங்கடற்.

4. நான்முகன் முதைத தான்றன் மகனென்று நல்கி விம்மிப்
பான்முலை சோர நின்ற பல்பெருந் தவத்தி னோளைக்
கான்முதற் றொழுது தங்கள் கட்டிரும் பாவம் விட்டார்
மான்முய லுருவத் தோடுந் தோன்றிய [1]வானோ ரெல்லாம்.

பி-ம்:—1வானரேசர். சிலபிரதியில் இப்பாடலுக்குப்பின் திருமுடி சூட்டுபடலத்து "நம்பிய" (க), "ஊழியின்" (௩), "ஆயதோர்" (கக)

என்ற பாடல்களிருக்க, பின் நகர்புதுபடலம் முடிகின்றது. ஒருபிரதியில் இச்செய்யுள் நான்கும் "ஆனதோர்" (௩௫௮) என்ற பாடலின்பின் உள்ளன. இவற்றின்பின் திருமுடிசூட்டுபடலத்து முதலேழுபாடல்களும் முறையேயிருக்க, அவற்றின் பின் "எழுவகை" என்றபாடலும் "ஆயதோர்"(கக) என்றபாடலும் இருக்க,பின்பு நகர்புதுபடலம் முடிகின்றது. சிலபிரதிகளில் இந்நான்குபாடல்களுடனே நகர்புதுபடலம் முடிகின்றது.இவற்றிலெல்லாம் ௩௫எ-௩௫அ-பாடல்களில்லை.(சஉஎசு)

௩௫எ.---விமானம் ஆகாயத்திடெ எழுந்து செல்லுதல்.

அவ்வயின் விமானந் தாவி யந்தரத் தயோத்தி நோக்கிச்
செவ்வையிற் படா வுற்ற செகதல மடந்தை யோடும்
இவ்வுல கத்து ளோர்க [1]ளிந்திர ருலகு காண்பான்
கவ்வையி [2]னே கு கின்ற நீர்மையைக் [3]கடுக்கு மன்றே.

(இ - ள்.) அவ்விடத்தினின்று [நிலத்தினின்று] விமானம் ஆகாயத்திலெழுந்து அயோத்தியாபட்டணத்தை நோக்கி நேராகச்சென்றது,—(தாம் வசிக்கும்) பூமிதேவியுடனே இந்தப்பூமியிலுள்ளவர்கள்வானுலகத்தைக்காணும்பொருட்டுப் பேராரவாரத்தோடுபோகின்றதன்மையை ஒத்திருக்கும்; (எ - று.)

பூமியிலுள்ளவர்களை யேற்றிக்கொண்டு ஆகாயத்தில் விமானஞ் செல்வது, இப்பூமியே தன்னிடத்துள்ளாருடன் இந்திரலோகத்தைக் காண வானத்தைநோக்கிச் செல்வதை யொக்கு மெனக் குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. பி - ம்:—[1]இந்திரற்குவகைகூரக், இந்திரற்குவமைகூறக். [2]எறுகின்ற, எகுமென்ற, எழுந்துசெல்லும். [3]கடுத்த. ()

வேறு.

௩௫அ ---புஷ்பகவிமானம் நந்திக்கிராமத்தை யடைதல்.

ஆனதோ ரளவையி னமரர் கோனொடும்
வானவர் திருநகர் வருவ தாமென
மேனிறை வானவர் வீசும் பூவொடும்
தானுயர் புட்பக நிலத்தைச் சார்ந்ததால்.

(இ - ள்.) அச்சமயத்தில் (எல்லாவற்றினுந்) தான் உயர்ந்ததான அப்புஷ்பக விமானம்,---தேவர்களோடும் (அவர்கட்குத்) தலைவனான இந்திரனோடும் தேவர்களுடைய அமராவதிபட்டணம் (பூமிக்கு) வருகின்றதுபோலுமென்று சொல்லும்படி, ஆகாயத்தில் (இராமபிரானைச் சேவித்துக்கொண்டு) நிறைந்துள்ள தேவர்கள் தூவிய புஷ்பங்களுடன் நந்திக்கிராமத்தலத்தை யடைந்தது; (எ - று.)

இராமபிரானுக்கு இந்திரனும், மற்றையோர்க்குத் தேவர்களும், புஷ்பகவிமானத்துக்கு அமராவதியும் உவமை. பின்னிரண்டடி - உடனவிற்சியணி. புட்பகவிமானம் இறங்கிச்சேர்ந்த இடம் நந்திக்கிராமமென்பதை, "நம்பிய பரதனோடு நந்தியம் பதியை நண்ணி" என அடுத்த திருமுடிசூட்டுப்படலத்தின் முதற்செய்யுளில் வருவதனால்

அறிக. 'இராமபிரான் நந்திக்கிராமத்தை யடைந்தது ஷஷ்டி திதியின் பிற்பகலில்' என ராமாயணதாத்பர்யஸங்க்ரஹம் என்னும் நூல் கூறும். ஒருபிரதியில் இந்தப்பாடலின்னிடத்து,

அவ்வயி னயோத்தி வைகுஞ் சனமுட னக்குரோணி
தவ்விலா வாறு பத்தா யிரரொடுந் தாயரோடும்
இவ்வயி னடைந்து போரைக் காணவென் றிராமனெண்ணத்
திவ்விய விமானம் வந்து நந்தியம் பதியைச் சேர்ந்த.

என்ற பாடலிருக்க, இதன்பின் ஒர் பாடல் மிகுதியும் உள்ளது. (*)

மீட்சிப்படலத்துக் கதையமைப்பு ஸ்ரீ வால்மீகி பகவான் அருளியதன் சுருக்கம் வருமாறு:---இராவணவதமான பின்பு போர்காணவந்திருந்த தேவர்கள்முதலியோர், இராமனது திறல்முதலியவற்றைப்புகழ்ந்தவண்ணம் தத்தம்இருப்பிடத்துக்குச்சென்றனர் ஸ்ரீராமன் மாதலிக்குத் திவ்ய ரதத்தைக்கொண்டுபோகுமாறு அநுமதிதர, அவனும் தேர்மீதூர்ந்து சுவர்க்கலோகத்துக்குப் போயினன். பின்பு இராமன் 'இவ்வளவு வெற்றிக்குங் காரணம் இந்தச்சுக்கிரீவனே' என மொழிந்து அவனைத் தழுவிக்கௌரவித்து இளையபெருமாளைப்பார்த்து, 'நம்மிடத்து அன்பு கொண்டுபேருதவிபுரிந்த இந்தவிபீஷணனை முடிசூட்டுக' என்றுபணிக்க, இலட்சுமணன் வானரர்களைக்கொண்டு கடலினின்று நீர்கொணர்வித்து விபீஷணனுக்கு மறைமுறைப்படியே இலங்காராச்சியத்திற் பட்டாபிஷேகஞ்செய்தான்.

அப்பால் விபீஷணன் தன்னிடத்துப்பரிவரான இலங்கையிலுள்ள அரக்கர்களை இன்மொழிகளாற் சமாதானப்படுத்தி இராமனைச்சார்ந்து மங்கலப்பொருளைத் தர, அவ்விபீஷணனுக்குத் திருத்தியுண்டாக்குமாறு இராகவபிரான் அவற்றை யங்கீகரித்தபின், அருகினிற்கும் மாருதியைநோக்கி, 'யான் இராவணனைவென்றசெய்தியைச் சீதையினிடஞ்சொல்லி, அவள் கூறுவதைத் தெரிந்து வா' என்று அனுப்ப, அநுமான் சீதையைச்சார்ந்து பணிந்து இராமபிரான்வென்றசெய்தியைத் தெரிவிக்க, அதுகேட்டதும் சீதை அளவிறந்தபெருமகிழ்ச்சியால் ஒன்றுந்தோன்றாது திகைத்துநின்றநிலையில், அநுமான் 'நீ மறுமொழிசொல்லாது திகைத்துநிற்கக் காரணம் என்?' என்ன, சீதை தெளிந்து, 'இன்னதுகூறுவதுஎன்று தோன்றாதுநிற்கின்றேன்: மேலும் இவ்வளவுமகிழ்ச்சிச்செய்தியைத் தெரித்த உனக்கு இன்னதுதருவது என்றும் எனக்குத் தெரியவில்லை: உன்சொல்லுக்குவற்ற பரிசு இந்த மூவுலகத்திலும்இல்லை' என்ன, அநுமான் அவள்கூறிய பொருள்நிரம்பியசொல்லைப்பாராட்டி, 'உன்னுடையசொல்லே எனக்குப் பாரிதோஷிகம்: அதற்குஇணையானது எதுவுமில்லை' என்று சொல்லி, 'உன்னை நலிந்த அரக்கிமாரைச் சித்திரவதஞ்செய்யுமாறு அநுமதிதருக' என்று வேண்டினன். அதுகேட்ட சீதை, 'இந்தராட்சசிகள் தலைவன்சொற்

* சில மாறுதலுடன் ௩௩௭-இல் இப்பாடல் உள்ளது.

படி நடந்தார்களாகையால், இவர்கள்மீது சிறிதுங் குற்றமில்லை: ஆகையால், இவர்கட்கு மாறுசெய்யக்கருதுவது தகுதியல்ல. மேலும், எப்படிப்பட்டவரையும் பொறுப்பதே பெரியோர்களின்கடமை: இந்த விஷயத்தில் பல்லூகவ்யாக்ரஸம்வாதத்தையறிவாய்:இவர்களைக் கொல்லுகையிற்காணத்தக்க நெஞ்சுரம் எனக்குஇல்லாமையாற் பொறுத்தேன். உலகத்தில் எவரிடத்தும் குற்றம்இருக்கத்தான்செய்யும். பெரியோனாகிய நீ இவர்கள்திறத்துக் கருணைபுரிவாய்' என்றுவேண்ட, அநுமான் 'கருணைவாளான ஸ்ரீராமனது தர்மபத்தினியென்பதற்குஏற்ப மொழிந்தனை' என்று சீதையைப்புகழ்ந்து 'எனக்குமறுமொழிகூறுக' என்ன, சீதை 'இராமனைக்காணவிரும்புகின்றேன்' என்ன, 'இராமனை அவசியங்காண்பாய்' என்றுசொல்லி அநுமான் ஸ்ரீராமனிருக்குமிடத்துக்கு வந்தனன்.

ஸ்ரீராமனிடத்துஅநுமான் சீதையின்செய்தியைச்சொன்னதும் அப்பிரான் 'நெடுநாள் இராவணன்வீட்டிலிருந்தசீதையை அங்கீகரிப்பின் லோகாபவாதம்நேரும்:கைவிடின் பாதகம்நேரும்:என்செய்வது?' என்று சிந்தைகொண்டு, வெப்பமாகப்பெருமூச்செறிந்து விபீஷணனை நோக்கி 'சீதையைநீராட்டிஅலங்காரஞ்செய்வித்து அழைத்துவருக' என்றனன். உடனேவிபீஷணன் சீதையிருக்குமிடஞ்சேர்ந்து, அவள் பிரிவுக்காலத்து இருந்தநிலையோடு கணவனைப்பார்க்க விரும்பினளாகவும், கணவன்கட்டளைப்படி செய்வதுவே தக்கதென்று தன் மடந்தைமார்மூலமாகத் தெரிவித்தனன் கொண்டானையே தெய்வமாசமதிக்கும் அந்தக்கற்புடையாள் இணங்க, பின்னர் விபீஷணன் மடந்தைமாரைக்கொண்டுநீராட்டி ஆடையாபரணாதிகளாற்புனைவித்து, அரக்கர் பாதுகாவலாய்வரப் பல்லக்கிலேற்றி இராமபிரானைச்சார்ந்து, சீதையையழைத்துவந்ததைத்தெரிவிக்க, இராமன் தன்னருகிலிட்டுக் கொண்டுவரக்கட்டளையிட்டனன். விபீஷணன் சீதையைஇராமனருகிற் சேர்ப்பித்தற்காக வானரர்முதலிய திரளை வேத்திரபாணிகளைக் கொண்டு விலக்க, அப்போது பேரொலியெழுந்தது. இராமன் அதனைப் பொறாமல் திரளை ஒதுக்கவேண்டா' என்றுபணித்து, 'என்னுடையஜநங்களைநீ வருத்துவது தகுதியன்று. மகளிர்க்கு நல்லொழுக்கம் வேண்டப்படுவதன்றி,ராஜோபசாரம் முதலியன, அன்று: மேலும் நான் அருகிலிருக்கையில், சீதையைப் பிறர் பார்ப்பதனாற் குற்றமேயில்லை: சிற்சிலகாலங்களில் ஆடவர்முன் மகளிர்வருவது குற்றமன்று. நண்பர்களுடன்சூழ்ந்திருக்கும் என்னருகிற் சீதையை இட்டுக்கொண்டுவா' என்றான். இராமபிரான்மொழிப்படியே சீதை ஜநத்திரளிலே நாணத்தினால் தன்னுடலில்தான்அடங்குபவள்போன்று ஒடுக்கிக்கொண்டு ஆடையினால்முகத்தைமறைத்தவண்ணம் அருகில்வந்து நின்று 'ஆர்யபுத்ர!' என்றுவிளித்து, முதலில் துயரம்பொங்கப்புலம்பிப் பின்னர்க் கணவன்முகத்தைக் காணப்பெற்றமையால் மனந்தெளிந்து மகிழ்ந்தாள்.

அப்போது இராமன் சீதையைப்பார்த்து 'மனைவியைக்காப்பாற்றக் கையிலாகாது பறிகொடுத்தானென்ற பழிப்புநீங்கும்வண்ணம் பகைவனைத்தொலைத்து உன்னை மீட்டேன். இழந்த புகழைப் பெற்றேன். காமப்பித்துப்பிடித்த அயலான்வீட்டில் பலதிங்கள்வாழ்ந்துவந்த உன்னைப்பற்றி எனக்கு ஐயம் உண்டாயிருக்கிறது: கண்ணோயாளிக்குத் தீபம்போல் எனக்குப் பிரதிகூலையாகத் தோற்றுகின்றாய்: ஆகையால், என்னெதிரில்நில்லாதே: உனக்கு இஷ்டமான இடத்திற்குப்போ' என்று கடிந்துகூறினான். மிகக்கடுமையாகச் செவியில் நுழைந்த ஸ்ரீராமனதுசொற்களைக்கேட்டு, சீதை, 'மகாபாகுவே! நீ என்னை ஒருசாமானியமான பெண்ணைப்போற் கருதி இவ்வாறு மொழிகிறாயே: ஜநகன் என்னை வளர்த்தவனே. நான் பூமியிலிருந்து பிறந்தவள்: என்னிளமைமுதல் என்நல்லொழுக்கத்தைக் கண்கூடாகக்கண்டிருக்கின்றாய்: என்னுடல் பகைவன்கைப்பட்டதற்குத் தெய்வமே பொறுப்பாளி: என்மனமோ உன்வயத்ததாகவே யிருந்தது: இதை ஆணையிட்டுச்சொல்லுகிறேன்' என்று இவ்வாறாகச்சொல்லிக் கண்களினின்று தாரைதாரையாய் நீர்பெருக, இலக்குமணனைநோக்கி, 'லக்ஷ்மணா! அவைநடுவில் என்பர்த்தா என்னைக் கைவிட்டானாதலால், சிதையை யேற்படுத்துவாயாக: இதுவே என்துயரத்துக்கு மருந்து' என்றனள்.

பெருந்துயரத்துழூழ்கிய இலக்குமணன் இராமனுடைய முகக்குறிப்பினாற் சிதையையமைப்பது அப்பிரானுக்கு விருப்பமே யென்பதையுணர்ந்து சிதையை யமைத்தனன். அப்போது சீதை இராமனுடைய திருமேனியழகை யனுபவித்தவண்ணம் அப்பிரானை வலம்வந்து கொழுந்துவிட்டெரிகின்ற அக்கினிக்கு அருகேவந்து, கைகுவித்து, 'என்மனம் இராமனைத்தவிர வேறோரிடத்துச் செல்லாதிருக்குமாயின், லோகசாட்சியான அக்கினிதேவன் என்னைப் பாதுகாக்க' என்றுசொல்லி அந்த அக்கினியை வலம்வந்து அதனுட் குதித்தனள். அங்குக்கூடியிருந்த யாவரும் ஹாஹாகாரஞ்செய்தனர்.

அப்பால் இராமன் ஜனங்களின்கூக்குரல் செவிப்படக் கண்கலங்கச் சிந்தைகொண்டிருக்கையில், குபேரன் யமன் தேவேந்திரன் சிவன் பிரமன்முதலிய தேவர்கள்பலரும் விமானத்தில்வந்து இலங்கையைச் சார்ந்து இராமனையணுகிப் பலவாறு துதித்து 'முற்றுமுணர்ந்தவனும் முற்றும்வல்லவனும் முழுமுதற்கடவுளுமாகிய நீ சாதாரணமனிதன் போலச் சீதை தீக்குதிக்கையில் என் உபேட்சித்திருக்கின்றனை?' என்று வினவ, இராமபிரான் 'நான் தசரதகுமாரனாய்ப்பிறந்த ஒருமானுடனாகவே என்னைக்கருதுகின்றேன். நான் யார்? யாவரைச் சேர்ந்தவன்? எதற்காகவந்தவன்? என்ற விவரங்களையெல்லாம் பிரமதேவன்சொல்லட்டும்' என்ன, அப்பரமன் ஸ்ரீராமனைத்துதித்து நீ முழுமுதற்கடவுளான நாராயணன்: இந்தச்சீதை இலக்குமி: இராவணவதத்தின் பொருட்டு மானுடவுருக்கொண்டனை' என்றுமொழிந்தான். அப்பால்

அக்கினிதேவன் புருஷரூபத்துடன் சீதையைத் தீயினின்று வெளிப்படுத்தித் தான் சூடிய மலர்முதலியன வாடாமற் செவ்விதாகக்கொண்டிருக்கப் பெற்றுச் சீதையைக்கொண்டு வந்து இராமனைச்சார்ந்து 'இராமா! என்னிடத்திற்பாய்ந்த இவள் மாசற்றவள்: இவளை யங்கீகரிப்பாயாக' என்றனன். அதுகேட்ட ஸ்ரீராமன் குற்றமற்றவளைத் தீக்குளிக்குமாறு செய்ததற்காகக் கண்ணீர்பெருகநின்று அக்கினியைநோக்கி 'இவள் மாசற்றவளென்பது உண்மையே; ஆயினும், மாற்றான்மனையிற் பலமாதங்கள் தங்கியிருந்ததுபற்றி உலகர்நிந்தையுண்டாகாதிருக்கும்பொருட்டுப் பரிசோதிக்கலாயிற்று' என இவ்வாறுகூறி, பிரமாதிதேவர்கள் ஏத்தாநிற்கையில் மனைவியைப்பெற்று மகிழ்ந்திருந்தனன்.

அப்போது சிவபிரான் இராவணவதஞ்செய்ததற்காக இராமனைத் துதித்து 'நீ அயோத்திசேர்ந்து மகுடஞ்சூடி யாவர்க்கும்மகிழ்ச்சியை விளைத்து அசுவமேதஞ்செய்து பெரும்புகழுடனே ஸ்ரீவைகுண்டம் போய்ச்சேரலாம். உன்தந்தை உன்னைக்காணத் துறக்கத்தினின்று விமானத்தில் இதோவந்திருக்கின்றார்: இவரைக் காண்க' என்றனன். அதுகேட்டு விமானத்திருக்குந் தந்தையாரைக்கண்டு இராமன்முதலிய மூவரும் வணங்கினர். தசரதன் இராமனைத்தழுவி 'இப்போதுதான் என் மனச்சல்லையொழிந்தது: இராவணவதஞ்செய்துதேவகாரியத்தைமுடித்த நீ அயோத்திசேர்ந்து மகுடஞ்சூடி இனிதுவாழ்க' என்ன, தசரதனை நோக்கி ஸ்ரீராமன் 'கைகேயியும் பரதனும் என்மனைவியும் மகனுமல்லரென்று முன்மொழிந்ததை யருள்கொண்டு மாற்றுவாயாக' என்று வேண்ட, அத்தசரதன் அங்ஙனமேயென்றுசொல்லி, இலட்சுமணன்தன்மையை வியந்துகூறி, சீதையைநோக்கி 'உன்தூய்மை உலகில்விளங்கும்பொருட்டே உன்னை அக்கினிப்பிரவேசஞ்செய்யும்படி இராமன் கூறினனாதலால், அதற்காக மனத்தாங்கல் கொள்ளாதே: கற்புக்கடவுளான உனக்கு யான் உபதேசிக்கவேண்டுவது ஒன்றுமில்லை' என்று தேற்றரவு கூறித் துறக்கத்தைச் சேர்ந்திட்டான்.

பின்னர்த் தேவேந்திரன் ஸ்ரீராமனைநோக்கி, 'இராவணவதஞ்செய்து எம்மிடரைத்தீர்த்தனையாதலால், அதற்குக் கைம்மாறாக வரந்தரவிரும்புகின்றேன்: வேண்டுக' என்ன, ஸ்ரீராமன் 'போரிலிறந்தவானரரெல்லாம் உயிர்பெற்றெழுமாறும் வானரஞ்செல்லுமிடமெல்லாம் அவர்கட்குவேண்டிய காய்கனிமுதலியன நிறைந்திடுமாறும் வரந்தருக' என்ன, தேவேந்திரன் அங்ஙனமே வரந்தரவே, இறந்தவானரர்யாவரும் உறங்கியெழுந்தவர்போலெழுந்து இராமனை வணங்கிநின்றனர். மற்றுமுள்ள தேவர்களும் இராமனை வாழ்த்தி விடைபெற்றுச்சென்றனர்.

பின்னர் விபீஷணன் மறுநாள் வைகறையில், இராமனையணுகி, ஸ்நாநாதிகள்செய்து இரண்டொருநாள்தங்கியிருந்து என்னை 'அனுக்கிரகிப்பாயாக' என்றுவேண்ட, இராமன் 'என்னை விட்டுப்பிரிந்து வருந்துகின்ற பரதனையே என்சிந்தைநாடுகின்றது: பதினாலாண்டு கழிந்தால் அக்கினியிற்புகுவேனென்று அந்தப்பரதன் பிரதிஞ்ஞை

செய்திருக்கும்போது இங்குத் தங்க எனக்கு மனம் எப்படிவரும்? நான் இன்றே அயோத்திசேரும் வழியிற் போவேன்' என்ன, விபீஷணன் 'ஒரு நாளில்தானே அயோத்திசேரவல்ல புஷ்பகவிமானம் இராவணனாற் குபேரனிடத்தினின்று பொரிற்கவர்ந்தது உள்ளது' என்ன, ஸ்ரீராமன், 'ஆயின், அதனைக்கொணர்க' என்ன, விபீஷணன் அவ்விமானத்தைக் கொணர்ந்து நிறுத்தினன். பிறகு ஸ்ரீராமன் விபீஷணனைநோக்கி, 'நான் அரக்கரைவென்றதும் இலங்கையையடைந்ததும் இந்த வானர வீரர்களி னுதவியினாலேயே யாதலாலும், தொழில்முடிவிற் பணியாளரை வெகுமதிக்கவேண்டியது முறைமையாதலாலும் இவர்களை ஏற்றபெற்றி சம்மானிக்க' என்றுகூற, விபீஷணனும் மனமுவந்து வானரர்களை அவரவர்களின் தகுதிக்கேற்பச் சம்மானித்தனன். அப்பால், இராகவன் சுக்கிரீவனை வானரர்களோடு கிஷ்கிந்தைக்குச் செல்லுமாறும் விபீஷணனை இலங்கையிலிருந்து அரசுபுரியுமாறுஞ்சொல்லித் தனக்கு அயோத்திசெல்ல விடைதருமாறு கேட்டனன்: அதற்குச் சுக்கிரீவாதிவானரரும் விபீஷணனும் கைகுவித்துநின்று 'நாங்கள் உனது திருவபிஷேகத்தைக்கண்டு எம்மூர்க்கு மீள விரும்புகின்றோம்: திருவருள்புரிக'என்றுவேண்ட, ஸ்ரீராமனும்இசைய, சுக்கிரீவாதிவானரரும் தன்மந்திரியரோடு விபீஷணனும் அப்புஷ்பகவிமானத்திலேறி, இனிது வீற்றிருந்தனர்.

இராமனனுமதியின்மேற் புஷ்பகவிமானம் விரைந்து வானத்திற் கிளம்பிச்செல்ல, ஸ்ரீராமன் ஒவ்வோரிடத்தையும் சீதைக்குச்சுட்டிக் காட்டி, 'இங்குஇன்னதுநிகழ்ந்தது, இதுஇன்னது' என்று தெரிவிக்கையிற், கிட்கிந்தையைத் தெரிவிக்க, சீதை 'வானரமகளிரும் உடன்வர அயோத்திக்குச் செல்லவிரும்புகின்றேன்' என்றனள். அப்போது கிட்கிந்தையினருகே விமானத்தைநிறுத்தி 'சீதையின்விருப்பின்படி வானரமகளிரை உடனழைத்துச்செல்ல விரும்புகின்றேன்'என்று ஸ்ரீராமன் தெரிவிக்க, சுக்கிரீவன் அப்பிரானுடையவிருப்பின்படியே வானரமகளிரையும் வருமாறுபணிக்க, யாவரும் தம்மைப்புனைந்துகொண்டு புஷ்பகத்திலேறினராக, மீண்டும் அவ்விமானம் வானத்திற்செல்ல, ஸ்ரீராமன் பலவிடங்களையும் சுட்டிக்காட்டி இறுதியில் அயோத்தியையுஞ் சுட்டிக்காட்டிவணங்குமாறு பணிக்க, சீதை அந்நகரைப்பணிய, யாவரும் அயோத்திமாநகரைக் கண்டனர்.

சக்கரவர்த்தித்திருமகனார் பதினாலாண்டுநிரம்புகையில் வளர்பிறையின் பஞ்சமியினன்று பரத்துவாசாச்சிரமத்தைச்சேர்ந்து முனிவனைப் பணிந்து, அயோத்தியின்க்ஷேமத்தை விசாரித்தறிந்தபின்பு, முனிவன் 'நீ இங்கிருந்துசென்றதுமுதல் மீண்டுவந்ததுவரையில் நிகழ்ந்ததையெல்லாம் தவமகிமையால் யான் உணர்ந்தேன்: நானும் உனக்கு வரங்கொடுக்க விரும்புகின்றேன்: நீ இன்று இங்குத் தங்கி நாளை அயோத்தி சேரலாம்'என்ன, முனிவன்மொழியைத் தலையால்தாங்கி ஸ்ரீராமன் 'அயோத்திக்குச் செல்லும்வழியெல்லாம் அகாலத்திலும் பூத்துக்

காய்த்துச் செழித்திருக்குமாறு வரம் வேண்ட, முனிவனும் அவ்வரந் தர, பரத்துவாசாச்சிரமத்திலிருந்து அயோத்திவரையிலும் பட்டமரமுள்படத் தளிர்த்துப்பூத்துக் காய்த்துச் செழித்திருக்க, அதுகண்ட வானரங்கள் நிரைநிரையாகக் காய்கனிவர்க்கங்களையுண்டு துறக்கத்திருப்பவர்போல் மகிழ்ச்சியுற்றனர்.

அப்போது இராமபிரான் அநுமானையழைத்து 'நான் மீண்டுவருஞ் செய்தியை என்னுயிர்த்தோழனை குகனுக்குச் சொல்லிவிட்டுப் பரதனைக் கண்டு செய்திதெரிவித்து அவன் மனோபாவத்தையறிந்துகொண்டு, ஒருகால் இராச்சியத்தைத் தானே அரசுபுரிய விருப்பங்கொண்டிருப்பானாயின், உடனே வந்துசெய்திதெரிவிக்க' என்று சொல்லிவிடுத்தனன். அநுமானும் சென்று குகனுக்குச் செய்திகூறிவிட்டு, நந்திக்கிராமத்தில் தாபசவேஷத்துடனே பதினான்குவருஷங்கடந்தும் அண்ணனார்மீண்டு வராமையால் தன் பிரதிஞ்ஞையின்படியே அக்கினிப்பிரவேசஞ்செய்வதாக இருந்த பரதனைக் கிட்டி, இராமபிரான் இனிது மீண்டுவருஞ்செய்தியைத் தெரிவிக்க, அளவிடமுடியாதகளிப்பினால்அந்தப்பரதன் தரையில்வீழ்ந்து உயிர்ப்பற்றுக்கிடந்து பிறகுதேறி அநுமானைக் கட்டித்தழுவிப்பாராட்டிப் பல நன்கொடைகளை யளித்து இராமனைப்பார்க்க விருப்பமுற்று, பின்னும் இராமனது செய்கைகளை விரிவாகக்கூறுமாறு வினவ, அநுமான், 'இராமன் வனத்திற்குப்புறப்பட்டது முதல் நீர் பாதுகைகளைப்பெற்றுச்சென்றதுவரையில் உமக்கே தெரியுமாதலால் அதன்பின்னர் நிகழ்ச்சிகளைக் கூறுகின்றேன்' என்று ஆரணியத்தில் நிகழ்ந்த இராமனது வரலாறுகளையெல்லாம் விரிவாகஉரைத்து, இன்றுகடந்து நாளை புஷ்யயோகத்தில்வந்து சேருவா னென்று முடித்தான்.

நிகழ்ச்சியையெல்லாஞ்செவியாரக்கேட்ட பரதன் பெருமகிழ்ச்சியுற்று, இராமபிரான்வருவதைமுன்னிட்டு நகரையெல்லாம் விரைவில் அலங்கரிக்குமாறு பணித்து, பிறகு தன்தாய்மாரும் மந்திரிமாரும் சேனைகளும் பட்டணத்துப்பிரதானரும் வந்துசேர,யாவருடனும் எதிர்கொள்ளுமாறுசென்றுவெகுதூரங்கடந்தும் இராமன்வருகையைப்பற்றிய குறிப்புத் தோன்றாமையால் ஐயுற்று வினவ, அநுமான் தாமதிப்பதன் காரணத்தைக்கூறிச் சற்றுக்கடந்ததும் வருகையின் குறிப்புத் தோன்றியதைச் சுட்டிக்காட்டிப் பின்பு புஷ்பகம் தோன்றியதையும் காட்டினன். புஷ்பகம் தனக்கு நேரே வருகையிற் பரதன் அஞ்சலி செய்ய, அவ்விமானம் தரையிலிறங்கியது. பரதன் இராமனைப்பணிய, இராமன் அவனைக்கட்டித்தழுவி உச்சிமோந்து பாராட்டினன். இராமாதியர் கௌசலியாதியரைப் பணிதல்முதலியவற்றை ஏற்றபெற்றிபுரிந்தனர். பரதன் இராமபிரானது மரவடிகளை அப்பிரானது பாதங்களிலணிந்து, 'மரவடியை உனக்குப்பிரதிநிதியாகக்கொண்டு உன்தேசம்முதலியவற்றைப் பாதுகாத்துவர,அவை முன்னிலும் உன் மகிமையால்பதின்மடங்கு வளமுற்றிருக்கின்றன; அவற்றைக் கைக்

கொண்டு இனிதிருப்பாயாக' என்றனன்: வானரர்களும் விபீஷணனும் 'இத்தப்பரதனைப்போன்ற உடன்பிறந்தோனை நம்மவர் பெறாது போயினரே!' என்று கண்ணீர்வடித்தனர்.

அப்பால் யாவரையும் விமானத்திலேற்றிக்கொண்டு நந்திக்கிராமத்திற்பரதனாச்சிரமத்தையடைந்து குபேரனிடத்துச்சேருமாறு புஷ்பக விமானத்துக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுக் காகுத்தன் இனிது வீற்றிருந்தனனென்பது.

மீட்சிப்படலம் முற்றிற்று.

---

## ௩௮ - ஆவது * திருமுடிசூட்டுபடலம்.

(ஸ்ரீராமபிரான் அயோத்திக்குமீண்டு) திருமுடி சூடிக்கொண்டதைக்கூறும் படலமென்பது, பொருள். நந்திக்கிராமத்தைச்சேர்ந்து ஸ்ரீராமன் தனதுசடைமுடியைநீக்கி ஒப்பனைசெய்துகொண்டு தம்பிமார் பணிசெய்யத் துணைவர்கள் சூழ்ந்துவரத் தேரேறி வானவர் முதலியோர் மலர்மழைபொழிய, ஆடம்பரத்தோடு அயோத்திசேர, சீதையும் வானரமகளிர்சூழ விமானமேறி உடன்சென்று சேர்ந்தனளாக, அந்நகரத்தவர்யாவரும் பெருமகிழ்ச்சியிலாழ்ந்தனர். தன்னரண்மனையைச்சேர்ந்த ஸ்ரீராமன் சுக்கிரீவாதியர்க்கு இட்சுவாகுவமிசத்தவரின் கோயிலைக் காட்டுமாறு பணிக்க, பரதன் அக்கோயிலின் சிறப்பையெடுத்துக்காட்ட, கண்டவிபீஷணாதியர் ஆச்சரியமுற்று ஒருடபத்தைச் சேர்ந்தனராக, சுக்கிரீவன் அங்குப் பரதனைநோக்கி 'பட்டாபிஷேகத்திற்குத் தாமதிக்கக் காரணம் என்?' என்ன, பரதன், 'பல திசைகளினின்று தீர்த்தம்வாராமையே தாமதத்தின் காரணம்' என்ன, சுக்கிரீவன் அநுமானைப் பார்க்க, உடனே தீர்த்தங்கள்கொணருமாறு அனுமான் சென்றிட்டான். அப்பால் வசிட்டமுனிவரைக்கொண்டு பரதன் மகுடாபிஷேகநாளை நிச்சயித்து யாவர்க்குஞ் செய்தியனுப்ப, யாவரும் திரண்டனர். பிரமதேவன்கட்டளையால் மயன் மகுடாபிஷேகத்திற்காக ஓர் மண்டபம் வகுத்தனன்: அநுமானும் தீர்த்தங்களெல்லாம் கொணர்ந்தான்: மன்னவர்கள் சரயுவினின்று தீர்த்தங்கொணர்ந்தனர். சக்கரவர்த்தித்திருமகனார் சீதாதேவியோடும் பளிங்குமாடத்தில் வீற்றிருக்க, முனிவர்முதலிய யாவரும் புண்ணியதீர்த்தங்களைக்கொண்டு நீராட்டியபின் ஸ்ரீ வசிஷ்டமுனிவர் முடிசூட்ட, ஸ்ரீராமன் மூவுலகும் இனிதுவாழ முடிசூடிச்செங்கோல் செலுத்தியமை இப்படலத்திற் கூறப்படுகின்றது. அனேகபிரதிகளில் இந்தப்படலத்திற்குப்பெயர் திருவபிஷேகப்படலம் என்று உள்ளது. கிழ்நகர்புகுபடலம்என்று தொடங்கிய பிரதிகளில் இப்படலத்துமுதல்மூன்றுபாடல்க

---

* திருமுடிசூட்டுப்படலம் என்று அச்சிட்டபிரதிகளிற் காணப்படுகின்றது.

ளும், "ஆயதோரளவில்" (திருமுடி-கக) என்றபாடலும் நகர்புகுபடலத்தைச்சேர்ந்தனவாக உள்ளன. பலபிரதிகளில் "தேவரும்" (திருமுடி-8) என்ற பாடலே இப்படலத்தின் முதற்பாடலாக வுள்ளது. சிலபிரதிகளில் 1-"தேவரும்" (அ), 2-"கோடையில்" (கூ), 3-"தருவத்தார்" (க0), 4-"அறுபத்தேழ்" (ரு), 5-"வானரமகளிர்" (எ), 6-"எட்டென" (சு), இதன்பின் 7-"எழுவகைமுனிவரோடும்" என்ற பாடல், 8-"வாங்குதும்" (கஉ), 9-"வேசியர்" (கங), 10-"இறைப்பெரு" (கச), 11-விண்ணுறைவோர்" (கரு), 12-"அடுக்கிய" (உங), 13-"இந்திரகுருவும்" (உரு), 14-"சூழ்கடல்" (ங0), 15-"நான்முகத்து" (உகூ), இதன்பின் 16-'அந்தணர்வணிகர்" என்ற [ஙஉ-இல் உள்ள] பாடல், 17-"தெய்வநீர்" (ஙஎ), 18-"அரியணை" (ஙஅ), 19-"வெள்ளியும்" (ஙகூ), 20-"சித்தமொத்துளன்" (ச0), 21-"பன்னெடு" (சக), 22-"விரதநூல்" (சஉ) என்ற இம்முறையிற்பாடல்களுள்ளன: இவ்வாறுள்ள பிரதிகளில் இங்குக் குறிக்காத செய்யுள்களில்லை. ஆனால், "விரதநூல்" என்ற பாடலின்பின் சிலபாடல்கள் உள்ளன: அவை அங்குக் காட்டப்படும்.

க.—ஸ்ரீராமன் தம்பியரோடு நந்திக்கிராமத்திற் சடையைநீக்கி, நீராடி அலங்கரித்துக்கொள்ளுதல்.

[1]நம்பிய பரதனோடு நந்தியம் பதியை நண்ணி
[2]வம்பலர் சடையு மாற்றி மயிர்வினை [3]முற்றி மற்றைத்
தம்பிய ரோடு தானுந் [4]தண்புனற் படிந்த பின்னர்
உம்பரு முவகை கூர [5]வொப்பனை [6]யொப்பச் செய்தார்.

(இ - ள்) (தன்னிடத்து) அன்புள்ள பரதனுடனே மற்றைத் தம்பியருந் தானுமாக நந்திக்கிராமத்தைச் சேர்ந்து, வாசனை பரவுகின்ற ஜடையைப்போக்கி, க்ஷௌரஞ்செய்துகொள்ளுஞ் செயலைச் செய்துமுடித்து (ச் சரயூநதியின்) குளிர்ந்தநீரில் நீராடியபின்னர், (அவர்கள்யாவர்க்கும் ஒப்பனைசெய்வோர்) தேவர்களும் மகிழ்ச்சிமிகும்படி அலங்காரங்களையேற்குமாறு செய்தார்கள்; (எ-று.)—பி-ம்:—[1]நம்பியைப் பரதன்றன்னைநானிலத்தெவருங்காண, நம்பியும்......நண்ணி, நம்பியப்...நண்ணி. [2]வம்பியல். [3]ஆசுமுற்றித், முற்றிமண்ணித். [4]சரயுவின்புனலிற்றோய்ந்தே, அனையதுசமைந்தபின்னர். [5]ஒப்பமை. [6]ஒப்பஞ்.

உ.—அயோத்திபுகுமாறு ஸ்ரீராமன் தேரேறுதல்.

[1]நிருதியின் றிசையிற் றோன்று நந்தியம் [2]பதியை நீங்கி
குருதிகொப் பளிக்கும் வேலான் கொடிமதி லயோத்தி [3]மேவச்
சுருதி[4]யேத் தனைய [5]வெள்ளைத் துரகதக் குலங்கள் [6]பூண்டு
பருதியொத் திலங்கும் பைம்பூட் பருமணித் [7]தேரி னேறன்.

(இ - ள்.) இரத்தத்தை வெளிச்சிந்துகின்ற வேற்படையையுடையனான ஸ்ரீராமன்,—தென்மேற்குத்திக்கில் தோன்றுகின்ற நந்திக்கிராமத்தினின்று நீங்கி, கொடிகளாலலங்கரிக்கப்பெற்ற மதிலையுடைய அயோத்திசேருமாறு, எத்துதலைக்கொண்ட வேதத்தையொத்த

வெள்ளைக்குதிரைகள்பூண்டு சூரியனையொத்து விளங்குகின்ற பசும்பொற் கலன்களாலலங்கரிக்கப்பெற்ற பருத்தமணிகளைக்கொண்ட தேரின்மீது ஏறியவனானான்; (எ - று.)

கடவுளைத் துதிக்குந் தன்மைவாய்ந்த வேதம் தன்னிடத்து அப்பரம்பொருளைக் கொண்டிருத்தல்போல, அந்தப்பரம்பொருளின் அமிசமாகிய ஸ்ரீராமனைத் தன்னிடத்துக்கொண்டிருத்தலால்,தேர் சுருதியையொக்குமென்க. இனி, வெண்மைநிறமுடையதாகக் கூறப்படுகின்ற சத்துவகுணத்தைப் பிரதிபாதிக்கும் வேதம் வெண்ணிறமுள்ள குதிரைகட்கு உவமையாமென்றலுமொன்று. பி-ம்:—[1]சுருதியந். [2]பதியினீங்கி. [3]நோக்கிச். [4]ஒத்தனைய. [5]வெள்ளத். [6]பூண்ட. [7]தேரன். இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. (௪௨௮௦)

௩.—மற்றைத்தம்பிமார் பணிசெய்ய, ஸ்ரீராமன் தேரின்மீது சென்ற திறம்.

**ஊழியி னிறுதி காணும்[1]வலியின துயர்பொற் றேரின்**
**ஏழுயர் மதமா வன்ன விலக்குவன் கவிகை [2]யேந்தப்**
**[3]பாழிய மற்றைத் தம்பி பானிறக் கவரி [4]பற்றப்**
**பூழியை[5]யடக்குங் கண்ணீர்ப் பரதன்கோல் கொள்ளப் போனான்.**

(இ-ள்.) கற்பகாலத்தினிறுதியைக் காணவல்ல வலியையுடையதாகிய உயர்ந்த பொற்றேரிலே எழுமுழமுயரப்பெற்ற மதமுள்ளயானைபோன்ற இலக்குவன் குடையைத் தாங்கிநிற்கவும், (நித்தியசத்துருக்களையும் அடக்கும்) வலிமையையுடைய மற்றொருதம்பி [சத்துருக்கினன்]வெண்மைநிறமுள்ள சாமரையை யேந்தவும், புழுதியையும்அடக்குமாறு (ஆனந்தக்) கண்ணீரைவடிக்கின்ற பரதன் (பாகனாகி) உளவுகோலைக்கொண்டு (குதிரைகளைத்) தூண்டிச்செலுத்தவும் (ஸ்ரீராமன்) போயினான்; (எ - று.)

தேரின் போனானென்க 'போனான்' என்பதற்கு எழுவாய் வருவிக்க. எழுமுழமுயர்ந்திருத்தல் அரசுவாவினிலக்கணமாம்: அரசுவாவினிலக்கணத்தை "காலோர்நான்குந் தனிக்கையுங் கோசமும், வாலுறப்பொடேழு மாநிலந்தோய்வதும், பாலுஞ்சங்கும் போலுங்காலுகிர், காலினுந்தன்றனிக் கையினு மெய்யினும், வாலினுமருப்பினுங் கோறல்வல்லதுவா, யேழ்முழமுயர்ந்தொன்பான் முழநீண்டு, பதின்மூன்றுமுழஞ் சுற்றுடைத்தாகித், தீயுமிழ்கண்ணுஞ் செம்புகருமுடைத்தாய், முன்னுயர்ந்து பின்பணிந்ததாய, தியானை யரசுவா வாகுமென்ப" என்பதனாலறிக. பி-ம்:—[1]இந்திரனுயர்ந்தபொற்றேர், இந்திரனுயர்பொற்றேர்மேல், வலியினதுயர்பொற்றேரனான். [2]ஏந்திப். [3]பாழியம்புயத்துத். [4]வீச. [5]அடைக்கும். (௪௨௮௧)

௪.—வீடணன்முதலியோர் சென்ற திறம்.

**வீடணக் குரிசின் மற்றை வெங்கதிர்ச் [1]சிறுவன் வெற்றிக்**
**கோடணை குன்ற மேறிக் கொண்டற்றேர் மருங்கு [2]செல்லத்**

தோடணை மவுலிச் செங்கண் வாலிசேய் [3]தூசி செல்லச்
சேடனைப் பொருவும் வீர மாருதி [4]பின்பு சென்றான்.

(இ - ள்.) சிறந்தோனாகிய விபீஷணனும் மற்றும் வெவ்விய கிரணங்களையுடைய சூரியனது புத்திரனாகிய சுக்கிரீவனும் வெற்றிபொருந்திய தந்தத்தோடுகூடிய மலையையொத்த யானையின்மீதுஏறி மேகம்போன்றவனான இராமபிரானது தேரின்பக்கத்திற் செல்லவும், மலரிதழ்களைக் கொண்ட கிரீடம்புனைந்த செங்கண்படைத்த வாலிகுமாரனான அங்கதன் முன்னணியிற் செல்லவும், ஆதிசேஷனையொத்த வீரகுணத்தோடுகூடிய அனுமான், (அப்பிரானது) பின்புறத்துச்சென்றான்; (எ-று.)— கோடணைகுன்றம் - சிகரத்தோடுகூடிய மலையென்று பொருள்பட்டுத் தேரினைக்காட்டுமென்பாருமுளர். பி - ம்:—[1]செல்வன். [2]போதத். [3]தூசு. [4]தேர்ப்பின். (சஉஅஉ)

ரு.—வானரத்தலைவர்கள் சென்ற திறம்.

அறுபத்தே ழமைந்த கோடி யானைமேல் வரிசைக் [1]கான்ற
திறமுற்ற சிறப்ப ராகி மானுடச் செவ்வி [2]வீரம்
பெறுகுற்ற [3]வன்ப ருச்சி பிறங்குவெண் குடையர் [4]செச்சை
[5]மறுவுற்ற வலங்கன் மார்பர் வானரத் தலைவர் போனார்.

(இ-ள்.) (தம்)தகுதிக்கேற்ற கூறுபாடுபொருந்திய சிறப்பையுடையவராகி, மானுடரூபத்துடனேகூடி, வீரத்துடனே பெற்ற அன்பையுடையவரும் உச்சிமீதுவிளங்குகின்ற வெண்குடையையுடையவரும் சந்தனச் சேற்றினால் மறுபொருந்திய மாலையையணிந்த மார்பையுடையவரும் அறுபத்தேழுகோடிக்கணக்கினருமான வானரத்தலைவர் யானைமீது ஏறிச்சென்றார்; (எ-று.)—பி-ம்:—[1]ஏற்ற [2]எய்தி. [3]வனப்பர். [4]வாசம். [5]மறுவற்ற. சிலபிரதிகளில் "இருபத்தமைந்தகோடியானைமேல்வரிசைக்கேற்ற, திருவொத்த சிறப்பராகிமானிடச்செவ்விவீரர், உருவத்தோளொளிரும்பூண ருச்சிவெண்குடையர்பச்சை, மருவொத்தவலங்கன்மார்பர்வானரத்தலைவர்போனார்" என நான்கடியும் மாறுபட்டு வழங்குகின்றது. (சஉஅங)

சு.—பதினெண்பூமிவேந்தர் இராமபிரானைத்தொழுது சூழ்ந்திருத்தல்.

[1]எட்டென விறுத்த பத்தி னேழ் [2]பொழில் வளாக வேந்தர்
பட்டம்வைத் தமைந்த நெற்றிப் பகட்டினர் பைம்பொற் றேரர்
வட்டவெண் குடையர் வீசு சாமரை மருங்கர் வானைத்
தொட்ட[3]வெஞ் சோதி மோலிச் சென்னியர் தொழுது சூழ்ந்தார்.

(இ-ள்.) பட்டம் வைக்கப்பட்டுப் பொருந்திய நெற்றியைக்கொண்ட யானையையுடையவரும், பசும்பொன்னாலியன்ற தேரையுடையவரும், மண்டலாகாரமான வெண்குடையையுடையவரும், சாமரைவீசுகின்ற பக்கங்களையுடையவரும், வானத்தைத்தீண்டுகின்ற வெவ்விய ஒளியைக் கொண்ட கிரீடம்புனைந்த சென்னியையுடையவருமான எட்டென்றுமுடிகின்றபத்து[பதினெட்டுப்]பிரிவுடனெழுகின்ற பூமிவட்டத்து அரசர்

கள், தொழுதவண்ணம் (இராமபிரானைச்) சூழ்ந்துகொண்டனர்; (எ-று.)-- பதினெட்டுநாடுகள் - சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுவம் குடகம் கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் திராவிடம் கலிங்கம் வங்கம் கங்கம் மகதம் கடாரம் கௌடம் கோசலம் என்பன. எழ்பொழில் - ஏழுதீவுகளையுடையபூமியுமாம் பி - ம்:—[1]எட்டமையிறுதிப்பக்கத்து, எட்டமையிறுத்தபக்தின், எட்டமையிறுதிப்பத்தோடு. [2]பெரு. [3]செஞ். இச்செய்யுளின்பின் சிலபிரதிகளில் வழங்கும் பாடல் வருமாறு:—

எழுவகை முனிவ ரோடு மெண்டிசைத் திசைகாப் பாளர்
தழுவினர் திசைக டோறுங் குழாங்கொண்டு களித்துக் கூடித்
தொழுவன வமரர் கைகள் சுமக்கலாம் விசும்பிற் றுள்ளி
வழுவலின் மலர்கள் சிந்தி மானிடஞ் சுருங்கச் சார்ந்தார். (சஉ அச)

எ.—வானரமகளிர் சூழச் சீதாபிராட்டி விமானத்திற் சென்றமை.

வானர மகளி ரெல்லாம் வானவர் மகளி [1]ராய்வந்து
ஊனமில் பிடியு மொண்டார்ப் புரவியும் பிறவு மூர்ந்து
மீனின மதியைச் சூழ்ந்த தன்மையின் விரிந்து சுற்றப்
பூநிற விமானந் தன்மேன் மிதிலைநாட் டன்னம் [2]போனாள்.

(இ - ள்.) வானரமகளிர்கள்யாவரும் தேவமாதர்வடிவினராய் வந்து குற்றமற்றபெண்யானைகளையும் அழகியகிங்கிணிமாலையையணிந்த குதிரைகளையும், மற்றுமுள்ள (பல்லக்குமுதலிய) வற்றையும் ஏறிநடத்தி, நட்சத்திரக்கூட்டங்கள் சந்திரனைச்சூழ்ந்துள்ளதன்மையொப்பப் பரவிச்சூழ, பொலிவும் இன்னிறமுங்கொண்ட விமானத்தின்மேல் மிதிலைநாட்டில்தோன்றிய அன்னம்போன்றமெல்லியநடையினளான சீதை சென்றாள்; (எ - று.)

சீதையைச்சூழ்ந்து வானவர்மகளிருருக்கொண்டு வானரமகளிரிருத்தற்கு, சந்திரனைச்சூழ்ந்த நட்சத்திரக்கூட்டங்களிருத்தல் உவமை. பி-ம்:—[1]ஆகி. [2]போந்தாள். (சஉ அ௫)

அ.—தேவரும் முனிவரும் மலர்மழைபொழிந்ததன் வருணனை.

தேவரு முனிவர் தாமுந் திசைதொறு [1]மலர்கள் சிந்த
[2]ஓவலின் மாரி [3]யெய்ப்ப வெங்கணு [4]முதிர்ந்து வீங்கிக்
கேவல[5]மலராய் வேறோ ரிடமின்றிக் கிடந்த வாற்றால்
பூவெனு நாம [6]மின்றிவ் [7]வுலகிற்குப் பொருந்திற் றன்றே.

(இ - ள்.) தேவர்களும் இருடியரும் திக்குக்கள்தோறும் ஒழிவில்லாத [இடைவிடாது பெய்கின்ற] மழையை யொக்குமாறு எல்லாவிடத்தும் மலர்களைப் பொழிய, மலர்மாத்திரமேயாகி வேறொன்றைக் கொண்ட இடம்இல்லாதவாறு (மலர்கள் எங்கும் மிகுதியாகச் சிந்திக்) கிடந்த தன்மையால் பூவென்கின்ற பெயரானது இப்போது இவ்வுலகிற்குப் பொருத்தமானதாக ஆயிற்று; (எ - று.)—அன்றே - தேற்றம்.

பூமிக்குப் பூஎன்று ஒருபெயருள்ளது:பூத்தவிர வேறொருபொருள் கண்ணுக்குப் புலனாகாதவாறு தேவர்களும் முனிவர்களும் மலர்களைப் பொழிந்ததனால் எங்கும் பூமயமாக இருந்ததுபற்றிவந்த காரணப் பெயரென்று 'பூ' என்றுபெயர்வந்ததற்கு இயற்கையான காரணத் தைவிட்டு வேறொருகாரணம் கற்பித்துக்கூறியது - பிரிநிலைநவிற்சி யணியாகும். பி-ம்:—[1]முறையிற். [2]மேவலின். [3]ஒப்ப. [4]எதிர்ந்து. [5]மல ரால். [6]அன்றிவ், [7]உலகிற்கும். (சஉஅகூ)

கூ.—யானைகள் மதநீரைப்பெருக்கல்.

கோடையில் வறந்த மேகக் குலமெனப் பதினு லாண்டு
பாடுறு மதஞ்[1]செய் யாத பணைமுகப் பருமயானை
[2]காடுறை யண்ண லெய்தக் [3]கடாந்திறந் தொழுக்க வாரி
ஓடின [4]வுள்ளத் துள்ள களிதிறந் [5]துடைந்த தேபோல்.

(இ - ள்.) கோடைக்காலத்தில் நீர்வற்றிய மேகக்குழாம்போன்று பதினான்குவருஷம் வெளிப்படுதல் பொருந்திய மதத்தையுண்டாக் காத தந்தங்களை முகத்திலேகொண்ட அலங்கரிப்போடுகூடிய யானை கள்,—காட்டில்வசித்த பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமன் மீண்டு வர, கன்னந்திறந்து சிந்திய மதநீர்கள், (அவற்றின்) மனத்துக் கொண்டுள்ள களிப்பு வெளிப்பட்டு உடைப்பெடுத்ததுபோல ஓட லாயின; (எ - று.)

தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மதமற்ற நிலையிலுள்ள யானை கட்கு - கோடையில்வறந்த மேகக்குலம் உவமை. இடப்பன்மைபற்றி, 'வாரியோடின' எனப் பன்மையாற் கூறினர். பி-ம்:—[1]செலாத. [2]காடு றைந்து, காடிறந்து. [3]கரத்திருந்து. [4]ஓடிற்றுள்ளங். [5]உடைந்த. ()

க0.—குதிரைகளாலித்தலும் மரங்கள்பூத்தலும் மங்கைமாருடலிற் பசலை பூத்தலும்.

[1]துருவத் தார்ப் புரவி யெல்லா[2]மூங்கையர் சொற்பெற் றென்ன
[3]அரவப்[4]போர் மேக [5]மென்ன வாலித்த மரங்க [6]ளான்ற
பருவத்தாற் [7]பூத்த வென்னப் பூத்தன [8]பகைவிற் சீறும்
புருவத்தார் மேனி [9]யெல்லாம் பொன்னிறப் பசலை பூத்த.

(இ - ள்.) நிலையாகஅணிந்த கிங்கிணிமாலையையுடைய குதிரைக ளெல்லாம், ஊமர்கள் சொல்லுந்திறமையைப் பெற்றாற்போலவும் இடி யொலியைக்கொண்ட மேகம்போலவும் ஆரவாரித்தன: மலர்மரங்கள் சிறந்த [ஏற்ற] பருவத்திற் பூத்தனபோலப் பூத்தன: பகைவர்மீது வில் லைப்போலச் சீறுகின்ற [காதலித்தார்மீது வளைந்துசெல்லுகின்ற] புரு வத்தையுடையவரான மங்கைமாரின் உடல்களெல்லாம் பொன்னிறப் பசலை தோன்றின; (எ-று.)—பி-ம்:—[1]துரகத். [2]மங்கையர். [3]அருவப். [4]பேர். [5]அஞ்ச, அல்க. [6]ஆன்று. [7]பூத்தது. [8]பகையிற். [9]முற்றும். (சஉஅஅ)

௧௧.—ஸ்ரீராமன் தாய்மார்முதலியோரை வணங்கி, அரண்மனையை யடைதல்.

**ஆயதோ ரளவில் செல்வத் தண்ணலு மயோத்தி நண்ணித்**
**தாயரை வணங்கித் தங்கள்[1]இறையொடு முனியைத் தாழ்ந்து**
**நாயகக் கோயி[2]லெய்தி [3]நானிலக் கிழத்தி யோடும்**
**சேயொளிக் கமலத் தாளுங் [4]களிநடஞ் செய்யக் கண்டான்.**

(இ - ள்.) பொருந்தியஅவ்வேளையில், செல்வத்திற்குஉரிய பெருமையிற்சிறந்தவனான இராமபிரானும், அயோத்தியையடைந்து, தாய்மார்களைவணங்கித் தமதுகுலதெய்வமான ஸ்ரீரங்கநாதனுடனே முனிவனையும் பணிந்து, பூமிதேவியுடனே செந்நிறங்கொண்டதாமரையில் [செந்தாமரையில்] வசிப்பவளான இலக்குமியும் களிப்புக்கொண்டு நர்த்தனமாடுவதைச் சிறந்த அரண்மனையைச்சார்ந்து கண்டான்; (எ - று.) —இறை - பாதகாணிக்கையுடனேஎன்றலுமொன்று. நாயகக்கோயில் - இராமனரண்மனையென்னலாம். பி - ம்:—[1]முனிவனைத்தாழ்ந்துதாமம். [2]எய்த. [3]நானிலமாதுமற்றைச். (௪௨௮௯)

௧௨.—ஸ்ரீராமனைக் கண்ட நகரமாந்தரின் மகிழ்ச்சித்திறம்.

**வாங்குதுந் [1]துகில்க[2]ளென்னு [3]மனமிலர் கரத்திற் பல்கால்**
**தாங்கின ரென்ற போது மைந்தருந் தைய லாரும்**
**வீங்கிய வுவகை மேனி[5]சிறக்கவு மேன்மேற் றுள்ளி**
**ஓங்கவுங்[6]களிப்பாற் சோர்ந்த வுடையிலா தாரை யொத்தார்.**

(இ - ள்.) ஆடைகளை அவிழ்த்துவிடவேண்டுமென்னும் எண்ணமில்லாதவரான (அயோத்தியிலுள்ள) ஆடவரும் மகளிரும்,—நெகிழ்கின்றஆடையை(த் தம்) கையினால் பலமுறைதாங்கினவராய் நின்ற போதும், மிக்கஉவகையினால் உடல்பூரித்தலாலும் (அந்தஉவகை மிகுதியால்) மேன்மேற் றுள்ளிப்பாய்தலாலும்,(மதுபானஞ்செய்த)களியினாலே சோர்ந்த ஆடையிலாதாரான ஆடவரையும் மகளிரையும் போன்றனர்; (எ - று.)

கட்குடியர் ஆடைசோர நிற்றல்போல, இராமபிரான் வரவினால் உவகைதோன்றி யுடல்பூரித்தலாலும் துள்ளிக்குதித்தலாலும் அந்நகரத்து ஆடவரும் மகளிரும் ஆடைசோரப்பெற்றனரென்க. பி - ம்:—[1]துயில்கள். [2]என்று, என்ன. [3]மனமிலரெனினும், மனமிலராலும். [4]தாங்கலமென்றபோதும், தாங்குறப்பொருந்தாரங்ஙன். [5]சிறந. [6]களியாற். (௪௨௯௦)

௧௩.—உவகைமிகுதியால் அந்நகரத்தவரின் தலைதடுமாற்றச்செயல்.

**வேசிய ருடுத்த கூறை[1]வேந்தர்கள் சுற்ற[2]வெற்றிப்**
**பாசிழை மகளி[3]ராடை யந்தணர்[4]பறித்துச் சுற்ற**
**வாசமென் கலவைச் சாந்தென் றினையன[5]மயக்கந் தன்னாற்**
**பூசினர்க் கிரட்டி யானார் [6]பூசலார்[7]புகுந் தோரும்.**

(இ - ள்.) வேசியருடுத்த ஆடையை (அப்போதுதோன்றிய) தடுமாற்றத்தால் வேந்தர்கள் உடுத்துக்கொள்ளவும் வெற்றிபொருந்திய

பைம்பொன்னினாலாகிய அணிகலனையணிந்த மகளிராடையை அந்தணர் கைக்கொண்டு உடுத்துக்கொள்ளவும், வாசனைப்பண்டமும் மெல்லியகலவைச்சாந்தும் என்ற இவற்றைப் பூசிக்கொள்ளாதவராய்ப் புகுந்துளோரும் (ஜன)நெருக்கத்தால் கலவைச்சாந்தைப் பூசிக்கொண்டிருப்பவர்க்கு இருமடங்கு பூசிக்கொண்டவர்களானார்; (எ - று.)

இராமபிரானைக் காண்பதிலுள்ள விரைவினால் ஒருவர்கூறையையொருவர் உடுப்பவராயினரென்க. எதிர்கொள்வதிலுள்ள விருப்பமேலீட்டால் தம்மை வாசக்கலவைச்சாந்துகளைப்பூசிக்கொள்ளாமலே வந்தவரும் வாசக்கலவைச்சாந்துகளைப் பூசியவரோடு நெருக்குவதாற் பூசியவர்களின் வாசக்கலவைச்சாந்து தம்மீது இழுசிக்கொள்ள, வாசக்கலவைபூசி வந்தவரினும் இருமடங்கு வாசக்கலவைச்சாந்தையுடையவராயினரென்பதாம். மயக்கம் - பெருந்திரளாலான தலைதடுமாற்றம். பி-ம்:—[1]வேந்தர்கள். [2]வேறு, வெற்பில், மற்றைப், எறப். [3]அன்னராடையைப். [4]பரிந்துசுற்ற. [5]மயக்கத்தன்னார். [6]பூசலாற், வேதியர். [7]புகுந்துளோர்கள். (சஉகக)

கசு.—இராமனுடைய வனவாசகாலத்துத் தம்கணவரைக்கூடாதுகிடந்த மகளிர் அப்போது அணிகலன்பூண்டு விளங்குதல்.

இறைப்பெருஞ் செல்வ நீத்த வேழிரண் டாண்டும் [1]யாரும்
[2]உறைப்பில ராத லாலோ [3]வேறிருந் தொழிந்த [4]வன்னார்
பிறைக்கொழுந் தனைய நெற்றிப் பெய்வளை மகளிர் [5]மெய்யை
[6]மறைத்தனர் பூணின் மைந்த [7]ருயிர்க்கொரு [8]மறுக்கந் தோன்ற.

(இ - ள்.) அரசனாகியாட்சிபுரிகையாகிய பெருஞ்செல்வத்தை விட்டு (ஸ்ரீராமன் காட்டுக்குச்சென்றிருந்த) பதினான்குவருஷமும் மனமகிழ்ச்சியற்றனராதலால் (தம்கணவரைக்கூடாது) தனியேயிருந்திட்ட அந்த இளம்பிறைச்சந்திரனையொத்த நெற்றியையும் பூண்டவளையையுமுடைய (அயோத்திமாநகரத்து) மகளிர்யாவரும் ஆடவருயிர்க்கு ஒரு கலக்கம்பிறக்க அணிகலன்களால் தம்முடலை மறைத்தனர்; (எ - று.)

இராமன் பட்டாபிஷேகந்தவிர்ந்து கானகஞ்சென்றானென்ற துயரத்தினாற் புனைதலின்றித் தம்கணவரையுங் கூடாதிருந்த மகளிர் பதினான்குயாண்டுகழிந்து அப்பிரான் மீண்டுவருவதைச் செவியுற்றுத் தம்மைக்கண்ட கணவர் காமவிகாரத்தால் உயிர்மறுகும்படி இனிதாகத் தம்மை அணிகலன்களாற்புனைந்தன ரென்பதாம். பி-ம்:—[1]காற்றும். [2]மிறைப்பு. [3]வென்று. [4]மின்னார். [5]மெய்ம்மை. [6]மறைப்பனபூண்கள். [7]உயிர்களும். [8]மறுகந். (சஉகஉ)

கரு.—வானவமகளிரும் மானுடமகளிரும் நெருங்கியமையின் வருணனை.

விண் [1]ணுறை வோர்தந் தெய்வ வெறியொடும் வேறு ளோர்தந்
[2]தண்ணறு நாற்றந் தம்மிற் றலைதடு மாறு நீரால்
மண்ணுறை மாத ரார்க்கும் வானுறை மடந்தை மார்க்கும்
உண்ணிறைந் துயிர்ப்பு [3]விங்கு மூடலுண் டாயிற் றன்றே.

(இ-ள்.) வானுலகத்தில்வாழ்கின்றவரின் தெய்விகநறுமணத்தோடு வேறான (மானுட) லோகத்திலுள்ளவரின் குளிர்ந்த நறியமணம் தம்மிற் கலந்துவீசுகின்ற தன்மையினால் மண்ணுலகத்தில்வாழ்கின்ற மாதரார்க்கும் வானுலகத்துவாழ்கின்ற மடந்தைமார்க்கும் உட்புறத்துநிறைந்து பெருமூச்சுமிக்கு வெளித்தோன்றுகின்ற ஊடலானது உண்டாயிற்று.

தேவர்களும் மானுடரும் நெருக்கிரளில் ஒருவரோடொருவர் உராய்தலினாலே வானவரின் தெய்விகநறுமணம் மானுடருடலினும் மானுடரின்குளிர்ந்த நறியமணம் தேவருடலினும் படியவே, வானவரையும் மானுடரையும் அவரவரின் மனைவியர் காணும்போது பிறமகளிரைக் கூடியதால்சேர்ந்தது இந்தமண மென்று மயங்கி ஊடுமாறு இருந்த தென்றவாறு: மயக்கவணி: பி-ம்:—[1]உறையமரர், உலகோர் தந். [2]தண்ணுறு. [3]வீங்கி. (௪௨௧௩)

கசு.—விபீடணுதியர்க்கு அரண்மனையைக்காட்டுமாறு ஸ்ரீராமன் பரதனுக்குக் கட்டளையிடுதல்.

ஆயதோ ரளவி[1]லையன் பரதனை யருளி னோக்கித்
தூயவீ டணற்கு மற்றைச் சூரியன் மகற்குந் தொல்லை
மேய[2]வா னரர்க ளாய வீரர்க்கும் [3]பிறர்க்கு நந்தம்
நாயகக் கோயி[4]லுள்ள நலமெலாந் தெரித்தி யென்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்டதான ஒப்பற்றசமயத்தில் ஸ்ரீராமன் பரதனை அன்போடு பார்த்து, '(மனத்)தூய்மையுடையனாகிய விபீஷணனுக்கும் மற்றும் சூரியகுமாரனான சுக்கிரீவனுக்கும் பழமைபொருந்திய வானரர்களான வீரர்க்கும் பிறர்க்கும் நம்முடையநாயகத்தன்மை பூண்டஅரண்மனையிலுள்ள சிறப்புக்களையெல்லாந் தெரிவிப்பாய்' என்று கட்டளையிட்டான்; (எ-று.)—நாயகக்கோயில் முன்னோரினரண்மனை. பி-ம்:—[1]வீரன். [2]வானரங்களாய. [3]பிறர்க்குமந்த, விளம்பிநந்தம். [4]முற்றுங்காட்டுதிர்நம்பி. (௪௨௧௪)

கஎ.—இராமன்கட்டளையால் துணைவர்களோடு பரதன் நாயகக்கோயிற் புகுதல்.

என்றலு [1]மிறைஞ்சி மற்றைத் துணைவர்கள் யாவ ரோடும்
சென்றன [2]னெழுந்து மாடம் பலவொரீஇ யுலகிற் றெய்வப்
பொன்றிணிந் தமர [3]ரோடும் [4]பூமக [5]ளுறையு மேருக்
[6]குன்றென விளங்கித் தோன்று நாயகக் கோயில் [7]புக்கான்.

(இ-ள்.) என்றுகூறியவுடன், (பரதன்)வணங்கி மற்றைச்சினேகிதர் யாவரோடும் எழுந்துபோய், மாடம்பலகடந்து, பொன்னாலலங்கரிக்கப்பட்டுத் தேவதைகளுடனே பூவிலுறையுந்தெய்வமாகிய இலக்குமி வசிக்கின்ற மேருமலையைப்போல உலகில் விளங்கித்தோன்றுகின்ற தெய்வத்தன்மையுள்ள நாயகக்கோயிலிற் புகுந்தான்; (எ-று.)—பி-ம்:—[1]அவர்களோடுமெழுந்தனனிறைஞ்சிவல்லை. [2]சுதைசெய்,

[3]நாடும். [4]பூமகன். [5]உறைந்துவாழும். [6]குன்றமுநாணவோங்கும். [7]புக்கார். (௪உகூ)

கஅ.—நாயகக்கோயிலைக் கண்ட விபீஷணாதியர் ஆச்சரிய முறுதல்.

வயிரமா ணிக்க நீல மரகத முதலா யுள்ள
செயிரறு மணிக ளீன்ற செழுஞ்சுடர்க் கற்றை [1]சுற்ற
உயிர்[2]துணுக் குற்று [3]நெஞ்சு முள்ளமு மூச லாட
மயர்வறு மனத்து வீர ரிமைப்பிலர் மயங்கி நின்றார்.

(இ - ள்.) கலங்குதலென்பது ஒருபோதுமில்லாத வீரரான விபீஷணன்முதலியவர்கள்,—வயிரமும் மாணிக்கமும் நீலமும் மரகதமும் முதலாகவுள்ள குற்றமற்ற இரத்தினங்கள் வீசுகின்ற மிக்க ஒளித்தொகுதிகள் (எங்குஞ்) சூழ்தலால், தம்முயிர் அச்சமுற்று நெஞ்சமும் (அதன் செயலான) எண்ணமும் ஒருநிலைநில்லாது தடுமாறக்கண்கொட்டாது திகைத்துநின்றார்; (எ - று.)

இதுவரையில் இப்படி பேரொளிபடைத்த மாளிகையைக் கண்டிராமையால், சலித்தலில்லாத மனம்படைத்த வீரரான விபீஷணாதியரின் உயிர்கள் துணுக்குற அவர்கள்நெஞ்சமும் எண்ணுஞ் செயலற்று ஒருநிலைகொள்ளாது போக, அன்னார்இமைப்பற்றுத் திகைப்புற்று நின்றன ரென்பதாம். பி-ம்:—[1]தெற்றி, சுற்றி. [2]துணுக்குற்ற. [3]தத்த முள்ளநின்று. [4]மயரறுசிறப்பின்ரீரர். (௪உகூ)

கக.—பாதன் அம்மாளிகையின் வரலாறுகூறுதல்.

விண்டுவின் மார்பிற் காந்து மணியென விளங்கு[1]மாடம்
கண்டனர் பரதன் றன்னை வினவின [2]ரவர்க்குக் காதற்
புண்டரீ கத்துள் வைகும்[3]புரா தன னகனற் றோளான்
[2]கொண்டநற் றவந்தன் னுலே யுவந்துமுன் கொடுத்த தென்றான்.

(இ - ள்.) திருமாலினுடைய திருமார்பிலே சொலிக்கின்ற கௌத்துபமணியைப்போல விளங்குகின்ற (அந்த)மாடத்தைக் கண்டனராய்ப் பரதனைநோக்கி (அதன்வரலாற்றை) வினவின விபீஷணாதியர்க்கு, (அந்தப்பரதன்),—தாமரைமலரில் வாழ்பவனாகிய பிரமதேவன், அகன்ற அழகியதோளையுடைய இக்குவாகு பூண்ட சிறந்த தவத்தினாலே உவந்து அன்போடு முன்கொடுத்ததாகும் இது என்று (அதன்வரலாறு கூறினான்; (எ - று.)

அகனற்றோளானின்னுனென்பது, மேற்கவியில் விளங்கும். பி-ம்:- [1]கோயில். [2]வாக்குக்,வாங்கு. [3]புராதனனன்பிற்பூசை, புராதனன்கண்ணுற்றோளான், புராதனன்கன்னற்றோளான். கொண்டுவந்தன னந்நாளே யுவந்துகொண்டளித்ததென்றான். எண்டவந்தன்னினுலே... அளித்ததென்றான், கொண்டபின்னவனன்பாலெங்குலத்துளோர்க்களித்த தென்றான். (௪உகஎ)

௨௦.—அவர்கள் அம்மாளிகையினின்று வேறோர்மண்டபஞ் சேர்தல்.

பங்கயத் [1]தொருவ னிக்கு வாகுவிற் களித்த [2]பான்மை
இங்கிது[4]மலராள்[5]வைகு மாடமென்[6]றிசைந்த போதின்
எங்களாற் றுதிக்க லாகு [7]மியல்பதோ வென்று கூறிச்
செங்கைகள் கூப்பி வேறோர் மண்டப[9]மதனிற் சேர்ந்தார்.

(இ - ள்.) தாமரைமலரில்வீற்றிருப்பவனாகிய ஒப்பற்றபிரமதேவன் இட்சுவாகுவிற்குத் தந்த பான்மையைக் கொண்ட இங்கேயுள்ள இம் மாளிகை இலக்குமிவாழுமிடமாகுமென்று (பரதன்) கூறியளவில்,— (இது) எங்களாற் புகழக்கூடிய இயல்பையுடையதோ?'என்றுசொல்லி அதனைக்கொண்டாடித் தமது)செங்கைகளைக்கூப்பி,(விபீஷணாதியர்), வேறொருமண்டபத்திற் சேர்ந்தார்கள்; (எ - று.)—பி-ம்:—[1]ஒருவல்லிக் குப்பாங்குற, ஒருவனிக்குவாகுவுக்கருளும். [2]பண்பால், பான்மைத்து [3]இங்கித. [4]மலரோன். [5]தெய்வபூசை, நல்குமாடம். [6]இசைத்தலோடும் [7]இயல்பிற்றே. [8]செங்கரம். [9]தன்னில். (௪௨௯)

௨௧.—சுக்கிரீவன் 'இராமபட்டாபிஷேக நாள் தெரிந்திடாமைக்குக் காரணமென்?' என்று பரதனை வினவல்.

இருந்தன [1]ரனைய மாடத் தியல்பெலா மெண்ணி யெண்ணிப்
[2]பரிந்தன னிரவி மைந்தன் பரதனை வணங்கித் [3]தூயோய்
கருந் [4]தடங் கண்ணி னாற்குக் காப்புநா ணணியு நன்னாள்
தெரிந்திடா [5]திருத்த லென்னோ வென்றனு மண்ணல் செப்பும்.

(இ - ள்.) விபீடணன்முதலியோர்(அந்த)மாடத்தின்சிறப்பியல்புகளையெல்லாம் எண்ணியெண்ணியிருந்தனர்: (அப்போது) சூரியனது மகனாகிய சுக்கிரீவன் பரிவுகொண்டவனாய்ப் பரதனை வணங்கி'தூய்மையுடையோனே! கரியபெரியகண்களையுடையனாகிய ஸ்ரீராமனுக்கு (ப் பட்டாபிஷேகத்தின்பொருட்டு)க் காப்புநாணை யணிவதற்கு ஏற்ற நல்லநாளை யாராய்ந்திடாமல் (வெறுமனே) இருப்பதுஎன்?' என்று வினவியவுடனே, பெருமையிற்சிறந்தவனான பரதமகாராசன் சொல்லலுற்றான்; (எ - று.)—அதனைமேலிற்கவியின் முன்னிரண்டடிகளிற் காண்க.

'தூயோய்' என்ற விளி-இராமபட்டாபிஷேகத்திற்பேருற்றமுள்ள பரதன்,காப்புநாணணிதற்குஉரிய நாளைத் தெரிந்திடாமைக்குத் தக்க காரணமிருக்கு மாதலால் அதனையறியவே சுக்கிரீவன் தான் வினவுகின்றானென்ற கருத்தைக் குறிப்பிக்கும்.பி-ம்:—[1]இனைய. [2]பரிந்தனர். [3]பண்பாற். [4]தடமுகிலினாற்கு. [5]இருப்பதென்னே. (௪௨௧)

௨௨.—தீர்த்தங்களெல்லாம் வருதற்காகவே தாழ்க்கின்றதென்று பரதன் விடைகூற, சுக்கிரீவன் அநுமானைக் கடைக்கணிக்க, அவன்தீர்த்தங்கள்கொணரச் செல்லல்.

ஏழ்[1]கட லதனிற் றோய மிருநதி பிறவிற் றோயம்
தாழ்விலா திவண்வந் தெய்தற் [2]கருமைத்தோர் தன்மைத் தென்ன

ஆழியோன் றுடையோன் மைந்த னநுமனைக் கடிதி னோக்கச்
சூழ்புவி யதனை யெல்லாங் கடந்தனன் காலின் றோன்றல்.

(இ-ள்.) 'எழ்கடல்களிலுள்ள தீர்த்தங்களையும் மற்றுமுள்ளபெரிய நதியிலுள்ள தீர்த்தங்களையும் குறைவிலாது இங்கே கொண்டுவந்து சேர்தற்கு ஒரு அருமையான தன்மையுடையது' என்று (பரதன்) சொல்ல, ஒற்றைச்சக்கரமுடைய சூரியனது குமாரனான சுக்கிரீவன் அநுமானை நோக்கிக்கூற வாயுவின் புதல்வனாகிய அவ்வநுமான் விரைவில் (தீர்த்தங்கள்கொணருமாறு) கடல் சூழ்ந்த பூமியையெல்லாங் கடந்துசென்றான்; (எ - று.)—பி - ம்:—[1]கடறன்னில். [2]உவமைத்தோதன்மைத்தென்ன, அருமைத்தோதன்மைத்தென்ன. இச்செய்யுள் சிலபிரதியிலில்லை. (௬௩00)

உ௩.—பரதன் சொல்லியனுப்ப, வசிட்டமுனிவன் வருதல்.

கோமுனி யோடு மற்றை[1]மறையவர்க் கொணர்க [2]வென்று
ஏவினன் [3]தேர்வ லான்சென் றிசைத்தலு முலகை யீன்ற
பூமகன் றந்த [4]வந்தப் புனிதமா தவன்வந் தெய்த
யாவரு மெழுந்து போற்றி யிணையடி[5]தொழுது நின்றார்.

(இ-ள்.) 'இருடியர்தலைவனான வசிட்டமுனிவனோடு மற்றையந்தணரையும் அழைத்துவருக' என்று (பரதன் சுமந்திரனை) ஏவினான்: தேர் செலுத்துவதில் வல்லவனான அந்தச்சுமந்திரன் போய்ச் சொல்லுதலும், உலகங்களையெல்லாம்படைத்த தாமரைமலரில்வாழும்மகனான பிரமதேவன் பெற்ற அந்தப்பரிசுத்தமான பெருந்தவத்தையுடையனான வசிட்டன் வந்துசேர, யாவரும் எழுந்து துதித்து (அவனது) உபயபாதங்களைவணங்கிநின்றார்; (எ-று.)—வசிட்டமுனிவரெழுந்தருளியதைக் கூறியது, மற்றையோர் வந்ததற்கும் உபலட்சணம். பி - ம்:—[1]கணிதரைக். [2]என்றே, [3]ஏவலான். [4]காதற். [5]இறைஞ்சி. (௬௩0௧)

உ௪.—வசிட்டமுனிவன்வீற்றிருந்து பட்டாபிஷேகநாள் நாளையெனல்.

அரியணை பரத னீய [1]வதன்கணுண் டிருந்த [2]வந்தப்
பெரியவ [3]னவனை நோக்கிப் பெருநிலக் கிழத்தி யோடும்
[4]உரிய மா மலரா ளோடு முவந்தினி [5]தூழிக் காலங்
கரியவ[6]னுய்த்தற் கொத்த காப்புநாள் நாளை யென்றான்.

(இ - ள்.) பரதன் (அம்முனிவன்வீற்றிருத்தற்குச்) சிங்காதன மீய, அப்போது அதிலிருந்த அந்தப்பெரியவன்,—(காப்புநாண் அணிதற்கு உரியநாள் எந்நாள்? என்று வினவிய) அந்தப்பரதனைப்பார்த்து, 'பெருமைபெற்றபூதேவியுடனும் உரிய சிறந்ததாமரைமலரில்வீற்றிருக்கின்ற திருமகளுடனும்(கூடி)மனமகிழ்ந்து இனிதாக நெடுங்காலம் ஸ்ரீராமன் அரசு புரிதற்குப்பொருந்திய காப்புநாண்பூணற்குரிய நாள் நாளையாகும்' என்று கூறினான்; (எ - று.)

வசிட்டமுனிவன் தனக்குஅளித்த பீடத்திலமர்ந்ததைக்கூறியது - மற்றையோரும் தமக்குஉரிய பீடத்திலமர்ந்தமைக்குஉபலட்சணம்.

பி - ம்:—[1]அனகன். [2]அப்போ. [3]அவரை. [4]உரியமாமகளிரோடுமூவர் தனர், உரியனமலர்களோடுமுகந்தனர், உரியமாமகளிரோடுமுகந்தனர். [5]ஒருவில்செல்வம், ஒழிவில்செல்வம். [6]துய்த்தற்கேய்ந்த. (௩௩௦௨)

௨௫.—இராமபிரானது பட்டாபிஷேகநாளைக்குறித்துப் பலர்க்குந் செய்திபோக்குதல்.

[1]இந்திர குருவு[2]மன்ன ரேனைய[3]ரென்ன நின்ற
மந்திர[4]விதியி னரும்[5]வசிட்ட னும் விரைந்து விட்டார்
சந்திர கவிகை யோங்குந் தயரத ராமன் றமச்
சுந்தர மவுலி [6]சூடு [7]மோரையு நாளுந் [8]தூக்கி.

(இ - ள்.) பிருகஸ்பதியையொத்தவராய் எத்தனையோ பேரென்னு மாறு மிகப்பலராகவிருந்த மந்திரவிதிகளில்வல்லவர்களும் வசிட்ட மாமுனிவனும்,-சந்திரன்போன்ற வெண்குடை யோங்கப்பெற்ற தசரத ராமனுக்கு ஒளியுள்ள அழகிய திருவபிஷேகஞ்சூடுகின்ற வேளையை யும் நாளையும் ஆராய்ந்துஎழுதி(ப் பலர்க்கும்) விரைவிற் செய்தியனுப் பினர்; (எ - று.)—பி - ம்:—[1]இந்திரன். [2]அன்னற்கேனையர், அன்னற் கேய்வன,அன்னரேயின [3]என்னநின்றார், எனவுநின்றார், எனவுநின்ற. [4]விதியினாலே, விதியினானும், முனிவர்மற்றை, விதியினார்க்கும். [5]மயர் வறவரைந்துவிட்டார், முனிவரும்விரைந்துவிட்டான், வசிட்டனே... விட்டான், வசிட்டனும்...விட்டான். [6]சூட, சூட்ட. [7]வாரமும். [8]ஆற்றி. (௩௩௦௩)

௨௬.—மூவுலகத்தவரும் அயோத்தியில்வந்து தங்கியதைப்பற்றிய வருணனை.

அடுக்கிய வுலக மூன்று மாதரத் தூதர் [1]கூற
இடுக்கொரு பேரு மின்றி யயோத்திவந் [2]திறுத்தா ரென்றால்
தொடுக்குறு கவியான் [3]மற்றைத் [4]தொகையினை முடிவு தோன்ற
[5]ஒடுக்குறத் துரைக்குந் தன்மை நான்முகத் தொருவற் குண்டோ.

(இ-ள்.) ஆதரத்தையுடைய தூதுவர்(அந்தத்திருவபிஷேகமகோத் ஸவத்தை) ஒன்றன்மீது ஒன்றாகவுள்ள உலகமூன்றிலுந் தெரிவிக்க, (அம்மூவுலகங்களிலும்) இடுக்கிலும் ஒருபேருமின்றி அயோத்தியில் (யாவரும்) வந்து தங்கினார்களென்றால்,(அந்நகரிற்கூடியவரின்)தொகை யை முடிவுதோன்றுமாறு தொடுக்கின்றகவியால்தொகுத்துச்சொல்லுந் தன்மை நான்குமுகங்களையுடைய ஒருகடவுட்குத்தான் உளதோ?

இதனால், வந்ததொகையினரைத் தாம் சொல்லாமைக்குக் கவி ஏது கூறியவாறு. நான்முகத்தொருவன் - கருத்துடையடைமொழி. நான்முகத்தொருவனென்றதன்பின் சிறப்பும்மை விகாரத்தால் தொக் கது. பி-ம்:—[1]கூவ. [2]இறுத்தது, எய்திற்று. [3]அற்றைத். [4]துளங்கியவுரை யால், துழனியையிறுதி, துளங்குறமுடியால். [5]ஒடுக்குவந்து. (௩௩௦௪)

உஎ.—வசிட்டன் முதலியோர் ஸ்ரீராமனுக்கு அபிஷேகச்செய்தியைத் தொழுதுகூறுதல்.

அவ்வயின் முனிவ னோடும் பரதனு மரியின் [1]சேயும்
[2]செவ்விய நிருதர் கோனுஞ் சாம்பனும் வாலி சேயும்
எவ்வ[3]மி லாற்றல் வீரர் யாவரு மெழுந்து சென்றாங்கு
அவ்விய[4]மவித்த சிந்தை யண்ணலைத் தொழுது சொன்னார்.

(இ - ள்.) அப்போது வசிட்டமுனிவனுடனே பரதனும் சூரிய புத்திரனான சுக்கிரீவனும் நற்குணமுடைய அரக்கர்தலைவனான விபீடணனும் சாம்பவானும் வாலிகுமாரனான அங்கதனும் குற்றமில்லாதவலிமையையுடைய மற்றுமுள்ளவீரர்யாவரும் அவ்விடத்தினின்று எழுந்து போய், பொறாமையென்பதைநீக்கிய மனத்தையுடைய பெருமையிற் சிறந்தவனான இராமனைத் தொழுது (பட்டாபிஷேகம் நாளைக்கு என்பதைக்) கூறினார்; (எ - று.)—பி-ம்:—[1]வேந்தும். [2]செவ்வெயில், வெவ்வியல், செவ்வியல். [3]இலாத. [4]அழித்த. (சஙுoகு)

உஅ.—பட்டாபிஷேகத்திற்குமுன்னர்ச்செய்யவேண்டிய கடமைகளைச் செய்யப்பணித்து வசிட்டன் சென்றிடுதல்.

நாளைநீ மவுலி [1]சூட நன்மைசால் பெருமை நன்னாள்
காளைநீ [2]யதனுக் கேற்ற [3]கடன்மைநீ தியற்று கென்று
வேளையே [4]காயு நெற்றி [5]விழியினன் மேவு [6]மென்பூப்
பூளையே [7]சூடுவானைப் பொருவு[8]மா முனிவன் போனான்.

(இ-ள்.) (வசிட்டமுனிவன் இராமபிரானைநோக்கி),—'காளைபோன்றவனே [வீரனே]! நீ மகுடஞ்சூடுவதற்கு நன்மைமிகுந்த பெருமை பொருந்திய நல்லநாள் நாளையாகும்: நீ அதற்குஏற்ற மேன்மையான கடமைகளைச்செய்வாய்' என்று சொல்லி,—மன்மதனையே எரிக்கவல்ல நெற்றிக்கண்ணையுடையவனும் விருப்பமுண்டாக்கவல்ல மெல்லிய பூவாகப் பூளையைச் சூடுபவனுமாகிய சிவபெருமானையொத்த பெருமை பெற்ற முனிவனான வசிட்டன் சென்றான்; (எ-று.)

மன்மதனைவெல்லுதல் பிரமபுத்திரனாதல் என்ற தன்மை வசிட்டமுனிவனுக்கும் சிவபெருமானுக்கும் அமைந்திருத்தல் காண்க. வேள்-மன்மதன். பி-ம்:—[1]சூடுநலந்திகழ்பெரிய. [2]கரிசமெல்லாம், கிரிச்சமெல்லாம், கருச்சியெல்லாம். [3]கழித்தியென்றுரைத்துக்கன்னல். [4]பொடியதாக, பொடியவாக, பொடிசெய்தாக. [5]விழிக்குநீணுதலின். [6]வெண்பூப், வெண்பூம். [7]சூடுவோனிற்பொள்ளென. [8]மாருதியும், மாமுனியும்.

உகூ.—பிரமன்கட்டளையால் மயன் மகுடாபிடேகமண்டப மமைத்தல்.

நான்முகத் தொருவ னேவ [1]நயனறி மயனென் றோதும்
நூன்முகத் [2]தோங்கு கேள்வி நுணங்கியோன் வணங்கு நெஞ்சன்
கோன்முகத்[3]தளந்து குற்றஞ் செற்றல கெல்லாங் கொள்ளும்
[4]மான்முகத் தொருவ னன்னாள் மண்டபம் [5]வயங்கக் கண்டான்.

(இ - ள்.) பிரமதேவன் ஏவ,—(கட்டிடமமைக்கும்) முறைமையையறிந்த மயனென்றுசொல்லப்படுகின்ற சிற்பநூலிற் படிந்தகேள்வியுட

னே நுண்ணறிவுமுடையோனாகிய மான்முகம்பெற்ற ஒப்பற்றவன் [மயன்] வணக்கங்கொண்ட நெஞ்சமுடையவனாய், கோல்முதலியன அளந்து குற்றம்நீக்கி உலகமெல்லாங்கொள்ளவல்ல மண்டபத்தை அன்று விளக்கமுற நிருமித்தான்; (எ - று.)

பிரமன் கட்டளையால் அன்றைக்கே ஸ்ரீராமபட்டாபிஷேகத்தின் பொருட்டு மயன் அகன்றமண்டபமொன்று ஒருகுற்றமுங் கூறமுடியாது விளங்குமாறு நிருமித்தானென்க. உலகு-உலகத்தவர். பி-ம்:—[1]நயனெறி, நயனுறு. [2]ஒருங்கு. [3]உற்ற, உகக்கு. [4]வான்முகத்தொருவனன்றேன், வான்முதற்பவனங்கொள்ள, மான்...அன்றோன். [5]மலங்கக். (௪௩0௭)

௩0.—அநுமான் நாற்கடனீர்முதலியன கொணர்தல்.

சூழ்கட லான்கிற் றோய மெழு[1]வகை யாகச் சொன்ன
ஆழ்திரை யாற்றி னீரோ [2]டமைத்தியின் றென்ன வாமென்று
ஊழியி னிறுதி செல்லுந் தாதையி னுலவி [3]யன்றே
ஏழ்[4]திரை நீருந் தந்தா [5]னிருந்துயர் [6]மருந்து தந்தான்.

(இ - ள்.) '(உலகைச்) சூழ்ந்த நான்குகடலின்நீரும் எழுவகையாகச்சொல்லப்பட்ட ஆழ்ந்த திரைகளையுடைய கடலினீரும் புண்ணிய நதிகளின்தீர்த்தங்களுடனே இன்று கொண்டுசேர்ப்பாய்'என்று(சுக்கிரீவன்)கூற,—பெரிய [மரணுபாயமான] துயரத்தில் மருத்துமலையைக் கொணர்ந்தவனான அநுமான், அப்படியேகொணர்வேனென்று உடன்பட்டு யுகாந்தத்திற்செல்லுந் (தன்) தந்தையான வாயுதேவன்போல, விரைந்துசென்று, ஏழுகடலினீரையும் அன்றைக்கே கொணர்ந்து சேர்த்திட்டான்; (எ - று.)

திரைகடலுக்குஇலக்கணை. இச்செய்யுளின் முன்னிரண்டடிகள், ௨௨ - ஆஞ்செய்யுளின் அநுவாதம். பி - ம்:—[1]வகைத்தாகச. [2]அமைந்தனனென்னவாமென்று, அமைத்தனனென்னலாமே, அன்றெனவாகுமாமென்று. [3]அன்றோ, என்றோ, ஒன்றும். [4]கடல். [5]இருந்துய்ய, இடர்செட. [6]மருந்திற்றீர்த்தான். (௪௩0௮)

௩௧.-மன்னவர்கள்சரயுவினின்றுபொற்குடங்களில்தீர்த்தங்கொணர்தல்.

எரிமணிக் குடங்கள் பன்னூற் றியானைமேல் வரிசைக் [1]கான்ற
விரிமதிக் குடையி னீழல் வேந்தர்கள் பலரு மேந்திப்
[2]புரைமணிக் காள மார்ப்பப் பல்லியந் துவைப்பப் பொங்கும்
[3]சரயுவிற் புனலுந் தந்தார் சங்கின [4]முரல மன்னோ.

(இ - ள்.) வேந்தர்கள்பலரும் (தம்முடைய) பெருமைக்குப்பொருந்தியுள்ள விரிந்த சந்திரன்போன்ற வெண்குடையின்நிழலிலே விளங்குகின்ற பலநூற்றுக்கணக்கான இரத்தினக்குடங்களை யானைமேலேற்றிக்கொண்டு, உள்துளையுள்ள அழகிய காளமென்னும் ஊதுகருவி ஆரவாரிக்கவும், பலவகைவாச்சியங்களும் ஒலிக்கவும், சங்கினம் ஒலிக்கவும், அலையோங்கப்பெற்ற சரயுவினின்று நீரையும் கொணர்ந்தார்கள்; (எ - று.)—பி - ம்:—[1]ஏற்ற, என்ற. [2]பரு. [3]சரயுநற். [4]ஆர்ப்ப,

௩௨.—இராமபிரான் சீதையோடு பளிங்குமாடத்திட்ட பீடத்தில் விளங்குதல்.

மாணிக்கப் பலகை [1]தைத்து [2]வயிரத்திண் கால்கள் [3]சேர்த்தி
ஆணிப்[4]பொன் சுற்றி முற்றி [5]யழகுறச் சமைத்த பீடம்
[6]ஏணுற்ற பளிக்கு மாடத் திட்டன [7]ரதனின்[8]மீது
[9]பூணுற்ற திரடோள் [10]வீரன் [11]திருவொடும் பொலிந்தான் மன்னோ.

(இ - ள்.) மாணிக்கத்தினாலியன்றபலகைதைக்கப்பெற்று வயிரத்தாலியன்ற திண்ணிய கால்கள் சேர்க்கப்பெற்று ஆணிப்பொன் கொண்டு சுற்றுப்புறம் முற்றவுஞ்செய்து அழகுபொருந்தச்செய்த பீடத்தைப் பெருமைபொருந்திய பளிக்குமாடத்தே இட்டனர்: அதன் மேல் ஆபரணம்பொருந்திய திரண்டதோளையுடையவீரன் இலக்குமியினமிசமான சீதாபிராட்டியோடும் விளங்கினான்; (எ - று.)—பி- ம்:— [1]தைத்த. [2]வயிரத்தின். [3]ஏய்ந்த. [4]பொற்கட்டுமுற்றி, பொன்சுற்று மூச்சி. [5]மரகதமலங்குபீடம். [6]ஆணிப்பொற். [7]இதனின். [8]உம்பர். [9]சேணுற்ற. [10]ஐயன், வள்ளல். [11]ஏறினன்சீதையோடும்.

இச்செய்யுளின்பின் பலபிரதிகளிற் காணப்படுவதொரு செய்யுள் வருமாறு:—

அந்தணர் வணிகர் வேளாண் மரபினோ ராதி நாட்டுச்
சந்தணி புயத்து வள்ளல் [1]சடையனே யனைய சான்றோர்
உய்ந்தன படிய மென்னு [2]மூவகையி னுவரி காண
வந்தன ரிராமன் கோயின் மங்கலத் துரிசை மாக்கள்.

பி-ம்:—[1]சடையனை. [2]உவகையாம். சிலபிரதிகளில் இச்செய்யுள் "மரகத" (௩௫) என்றபாடலின்பின் காணப்படுகின்றது. (௪௩௧௦)

௩௩.—தேவர்கள் ஸ்ரீராமனுக்கு அபிஷேகம் நடத்துதல்.

மங்கல கீதம் பாட மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங் குமுறப் பாண்டி றண்ணுமை [2]யொலிப்பத் தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப் பூமழை பொழிய விண்ணோர்
எங்கணா யகனை [3]வெவ்வே றெதிர்ந்தபி டேகஞ் செய்தார்.

(இ-ள்.) மங்கலகீதங்கள் பாடவும், வேதவொலி முழங்கவும், வலிய வாயையுடைய சங்கினம் குமுறவும், தாளமும் மத்தளமும் ஒலிக்கவும், குற்றமற்ற ஒலியோங்கிய மற்றும் பல்வகைவாச்சியங்களும் ஆரவாரிக்கவும், பூமழைபொழியவும், தேவர்கள் எங்களுடையநாயகனான ஸ்ரீராமனை வெவ்வேறாகஎதிர்ப்பட்டு அபிஷேகஞ்செய்தனர்; (எ - று.)— பி - ம்:—[1]வள்வாய்ச், வெற்றிச். [2]முழங்கவெங்கும், ஒலிப்பத்தாவி. [3]வேதத்தெழில், வெவ்வேறெதிர். (௪௩௧௧)

௩௪.—மாதவர்முதலியோரும் சுக்கிரீவாதியரும் அபிஷேகஞ் செய்தல்.

மாதவர் மறைவ லாளர் மந்திரக் கிழவர் மற்றும்
மூதறி வாள [1]ருள்ள சான்றவர் முதனீ ராட்டச்

சோதியான் மகனு மற்றைத் துணைவரு மனுமன் றானும்
தீதிலா விலங்கை வேந்தும் பின்னபி டேகஞ் செய்தார்.

(இ - ள்.) மிக்க தவஞ்செய்கின்ற இருடியரும் வேதம்வல்ல அந்தணர்களும் மந்திரத்திற்கு உரியவரான மந்திரிமாரும் மிக்கபேரறிவாளிகளுமான ஆங்குள்ள பிற்றைப் பெரியோரெல்லாம் முதலில்சூட்ட, பின்பு சோதிமயனான சூரியனுடையமகனான சுக்கிரீவனும் மற்றைச் சினேகிதர்களும் அநுமானும் குற்றமற்ற இலங்கைவேந்தும் அபிஷேகஞ்செய்தார்; (எ - று.)—பி-ம்:—[1]உள்ளார். (௬௩௯௨)

௩௫.—திருவபிஷேகதீர்த்தத்தின் சிறப்பு.

அங்கண்வா னுலகந் தாய வடிமலர்த் தவிசோ னாட்டும்
கங்கைவார் சடையி னேற்றான் கண்ணுத லொருவ னிந்நாள்
சிங்கவே றனையான் செய்ய திருமுடி யாட்டு நன்னீர்
எங்கணேற் றன்னோன் வாழு மென்றனர் புலவ ரெல்லாம்.

(இ - ள்.) அப்போது, சத்தியலோகத்திலே தாவிய (திரிவிக்கிரமனான திருமாலின்) திருவடியைத் தாமரைமலரைப்பீடமாகக் கொண்டிருப்பவனானபிரமதேவன் கழுவியதனால்தோன்றிய கங்கையை நுதற்கண்ணையுடைய ஒருகடவுளாகிய சிவன் (தன்னுடைய) நீண்டசடைமுடியிலேற்றான்: இப்போது, சிங்கவேற்றை யொத்தவனான இராமபிரானுடைய செவ்விய திருமுடியிலே அபிஷேகஞ்செய்ததனால்தோன்றிய சிறந்தநீரை அந்தச்சிவன் எவ்விடத்திலேற்று வாழ்வானென்று புலவோரெல்லாம் கூறினர்; (எ - று.)

திரிவிக்கிரமனான திருமாலின திருவடியையாட்டியநீரினும் இராமபிரானான திருமாலின் திருமுடியிலாட்டிய நல்லநீர் மிக்குள்ளதனால் அதனை அந்தச்சிவபிரானாலும் ஏற்கமுடியாதென்றவாறு: இதனால் திருவபிஷேக தீர்த்தத்தின் மிகுதி தொனிக்கும். இச்செய்யுள் பல பிரதிகளிலும் காணப்பட்டிலது. (௬௩௯௩)

௩௬.—சீதாபிராட்டியுடனே ஸ்ரீராமன் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு இருந்த தன்மை.

மரகதச்[1] சயிலஞ் செந்தா மரைமலர்க் காடு பூத்துத்
திரை[2]யெறி கங்கை வீசுந் திவலையா னனைந்து செய்ய
இருகுழை தொடரும் வேற்கண் [3]மயிலொடு மிருந்த [4]தேய்ப்பப்
[5]பெருகிய செவ்வி கண்டார் பிறப்பெனும் பிணிக டீர்ந்தார்.

(இ-ள்.) மரகதமலை செந்தாமரைமலர்த்தொகுதிபூத்து அலையெறிகின்ற கங்கைவீசுந் திவலையால்நனைந்து செவ்விய இரண்டுகுழைகளில் தொடர்ந்துசெல்லுகின்ற வேற்கண்களைக்கொண்ட மயிலோடும்இருந்ததையொப்ப மிக்க (அவ்விராமபிரானுடைய) செவ்வியைக் கண்டவர் பிறப்பென்கிற பிணிகள் தீரப்பெற்றார்; (எ-று.)—இல்பொருளுவமை; பி - ம்:—[1]மலைமேற். [2]தவழ், கெழு. [3]மனையொடும். [4]எய்வ, தெய்வப். [5]பெருமிதச். (௬௩௯௪)

ங.எ.—திருவபிஷேகத்திற்குவேண்டியன யாவும் இயலுதல்.

*தெய்வநீ ராடற் கொத்த செய்வினை வசிட்டன் செய்ய*
*ஐயமில் [1]சிந்தை யானச் சுமந்திர னமைச்ச ரோடும்*
*நொய்தினி[2]னியற்ற நோன்பின்[3]மாதவர் நுனித்துக் காட்ட*
*[4]எய்தின வியன்ற பல்வே றிந்திரற் [5]கியன்ற வென்ன.*

(இ - ள்.) தெய்வத்தன்மையுள்ள தீர்த்தங்களினால் அபிஷேகஞ் செய்வித்தற்கேற்ற சடங்குகளை வசிட்டன் செய்துமுடிக்குமாறு நோன்பினையுடைய மாதவர் சூட்சுமமாகக் காட்டாநிற்கையில், ஐயமில்லாத மனத்தையுடையனான அந்தச்சுமந்திரன் அமைச்சருடனே விரைவினில்சித்தஞ்செய்ய, இந்திரற்கு இயன்றனபோலப் பல்வேறுபொருள்களும்வந்தடைந்தன; (எ-று.)—அபிஷேகச்சடங்கினை வசிட்டமாமுனிவன் செய்துமுடிக்குமாறு வேண்டியசாமக்கிரிகளையெல்லாம் மாதவர்கூறச் சுமந்திரன் அமைச்சரோடும்கொணர்ந்து சேர்த்தனனென்க.
பி-ம்:—[1]சிந்தையானைச்சுமந்திரவமைச்சனோடும். [2]இயற்றி. [3]மாதவன். [4]வெய்தினினியன்ற, எய்தினவியைந்த. [5]ஏய, ஏய்வது. (சாஙகரு)

ங.அ.—ஸ்ரீராமபிரானுக்கு வசிட்டமுனிவன் திருமுடி சூட்டுதல்.

*அரியணை யனுமன் றாங்க வங்கத னுடைவாள் [1]பற்றப்*
*பரதன்வெண் [2]குடைக விக்க விருவருங் கவரி வீச*
*விரைசெறி [3]கமலத் தாள்சேர் [4]வெண்ணெய்மன்சடையன் றங்கள்*
*மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி.*

(இ - ள்.) சிங்காசனத்தை அநுமன் தாங்கவும் அங்கதன் உடைவாளைக் கையிற்கொண்டிருக்கவும், பரதன் வெண்கொற்றக்குடையைப்பிடிக்கவும், மற்றையிரண்டு தம்பிமாரும் வெண்சாமரைவீசவும், வாசனைபொருந்திய தாமரைமலரில் வசிப்பவளான இலக்குமி சேர்ந்திருக்கப்பெற்ற திருவெண்ணெய்நல்லூர்க்கு மன்னனான சடையனுடைய வமிசத்துமுன்னோராகவுள்ளோர் கொணர்ந்துகொடுக்க, வசிட்டமுனிவன் வாங்கி (ஸ்ரீராமனுக்கு)மகுடத்தைச் சூட்டினான்.

சூரியகுலத்தவரெனப்படுகின்ற சோழவரசர்க்கு ஒருசார்வேளாண்மரபினர் பட்டாபிஷேகசமயத்தில்மகுடங்கொணர்ந்துதருதல் தமிழ்நாட்டுவழக்கமாதலாலும், இராமபிரான் சூரியவமிசத்தவனாதலாலும் அந்தத்தமிழ்நாட்டு வழக்கையொட்டிவேளாண்குலத்துச் சடையப்பமுதலியாரின் முன்னோர் மௌலிகொடுத்தாரென்றனரென்பர்: இனி, வர்த்தகஞ்செய்யும் வேளாண்மரபைச்சேர்ந்தவன் சடையப்பனாதலால், அவன் முன்னோரென்பது குபேரனைக்குறிக்குமெனக் கூறுவாருமுளர். கவி தம்மை யாதரித்த சடையப்பபிரபுவை எப்படியாவது இந்தப் பட்டாபிஷேகத்திற் சம்பந்தப்படுத்தவேண்டுமென்று அந்தச்சடையன்மரபுளோர் மௌலியைக் கொணர்ந்துகொடுத்ததாகக் கூறினார்.
பி - ம்:—[1]ஏந்த. [2]கவிகையேந்த. [3]குழலியோங்க. [4]வெண்ணெயூர்ச்சடையன்றன்ன. (சாஙககூ)

௩௯.—ஸ்ரீராமன் மௌலிசூடியிருத்தல்.

வெள்ளியும் பொன்னு [1]மொப்பார் விதிமுறை மெய்யிற் கொண்ட
ஒள்ளிய [2]நாளி னல்ல வோரையி னுலக மூன்றும்
[3]துள்ளின [4]களிப்ப மௌலி [5]சூடினன் [6]கடலின் வந்த
தெள்ளிய திருவுந் தெய்வப் பூமியுஞ் [7]சேருந் தோளான்.

(இ-ள்.) திருப்பாற்கடலில்தோன்றிய தெள்ளிய இலக்குமியும் தெய்வத்தன்மையுள்ள பூமியுஞ் சேருந் தோளை யுடையவனான ஸ்ரீராமன்,— தேர்ந்தெடுத்த சிறந்த நல்லநாளில் நல்லமுகூர்த்தத்தில் உலகமூன்றுந் துள்ளினவாய்க் களிப்ப, பிருகஸ்பதியையும் சுக்கிராசாரியனையுமொத்த புரோகிதர் விதித்த முறைப்படியே கிரீடத்தை(த்தன்)சிரசிற் சூடினன்.

மெய் - உடலின் ஏகதேசமாகிய சிரசையுணர்த்திற்று. கொள்ளுதல் - தேர்ந்தெடுத்தல். பி - ம்:— [1]என்போர். [2]நாளுநல்லவோரையும். [3]துள்ளினர். [4]குனிப்ப. [5]சூட்டினன். [6]சுருதிரான்கும். [7]செங்கணானும்.

௪0—இராமன் முடிசூட, மூவுலகமுந் துயர்தீர்தல்.

[1]சித்தமொத் துளனென் றோதுந் திருநகர்த் [2]தெய்வ நன்னூல்
[3]வித்தக னொருவன் சென்னி [4]மிலைச்சிய தெனினு மேன்மை
[5]ஒத்தமூ வுலகத் தோர்க்கு முவகையி னுறுதி யுன்னில்
தத்தமுச் சியின்மேல் வைத்த [6]தொத்ததத் தாமமௌலி.

(இ-ள்.)(அத்)திருநகரிலுள்ள தெய்வநன்னூலில்[வேதங்களில்]வல்லவனான மனத்திற்குஒத்தவனென்றுசொல்லத்தக்க வசிட்டமுனிவன் பேரறிஞனான ஸ்ரீராமனது சென்னியிலே சூட்டியதென்றாலும், அந்த ஒளியுள்ள கிரீடமானது,—மேன்மைபொருந்திய மூவுலகத்தோர்க்கும் (அப்போது தோன்றிய) மகிழ்ச்சியினுறுதியை ஆராய்ந்துபார்ப்போமாயின், தங்கள்தங்களுடைய சிரசில்வைத்ததை ஒத்திருந்தது; (எ - று.)

மூவுலகத்தோரும் தாம்தாம் பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்றனர் போல அவ்வளவுமகிழ்ச்சிகொண்டிருந்தார்களென்றவாறு. பி - ம்:— [1]சித்தமொத்துளது, சித்தமொத்தனன், சித்தமொத்தியது. [2]செல்வமென்ன. [3]உத்தமத்தொருவன். [4]விளங்கியதேனுமெய்ம்மை, விளங்கிய வுயர்பொன்மௌலி. [5]ஒத்து...இறுதியுன்னில், ஒத்துமெய்க்குவமை கூரவோங்குமூவுலகத்தோர்க்கும். [6]ஒத்தெனத்தளர்வுதீர்ந்தார். ()

௪௧.—பூமிதேவி ஸ்ரீராமனைச் சேர்தலின் வருணனை.

பன்னெடுங் கால நோற்றுத் [1]தன்னுடைப் பண்பிற் கேற்ற
பின்னெடுங் கணவன் றன்னைப் [2]பெற்றிடைப் பிரிந்து முற்றும்
[3]தன்னெடும் [4]பீழை நீங்கத் [5]தழுவினு [6]டளிர்க்கை [7]நீட்டி
நன்னெடும் பூமி யென்னு நங்கைதன் [8]கொங்கை யார.

(இ-ள்.) மிகநெடுங்காலம்நோற்றுப் பின்பு தன்னுடையதன்மைக் கேற்ற பெருமையுடையகணவனைப்பெற்று இடையேபிரிந்து (அதனால்) நிரம்பத்தோன்றிய தன்னுடையமிக்கபீழையெல்லாம் நீங்கவே, சிறந்த

நெடியபூமியென்கின்றபெண் தன்கொங்கைசிரம்பத் தளிர்க்கையை நீட்டித் தழுவினாள்; (எ - று.)

பட்டாபிஷேகஞ்செய்துகொண்டதனால் பூமி ஸ்ரீராமனுக்குவசமாயிற்றென்பதைக் கவி இவ்வாறு கூறுகின்றார். பீழை-துன்பம். பி-ம்:— [1]தானுடைப், தன்னிடைப். [2]பிரிந்திடைப்பெற்றுமுற்றும், பெற்றிடைப் பிரிந்து தேம்பும், பெற்றிடைப் பிரிந்தேமுற்றாள். [3]தன்னுடைப். [4]ஆசையாரத், மானநீங்கத், மாசுநீங்கத். [5]தழுவிய. [6]இரு, தடக். [7]தாங்க, தன்னால். [8]கொங்கையோடும். இச்செய்யுளின்பின் ஒருபிரதியில்

இப்படித் தழுவி யாத ரிருவரு மிரங்கு பாலும்
செப்புற வரிய வின்பச் செல்வத்துட் செலுத்து நாளில்
கப்புடைச் சிரத்தோன் சென்னி கடிந்தவி ராமன் காதல்
வைப்புடை வளாகந் தன்னில் மன்னுயிர் வாழ்த்த வந்தான்.

என்று ஒருசெய்யு ளுள்ளது. (சகூகக)

சஉ.—பரதனுக்கு இளவரசுமுடிசூட்டி ஸ்ரீராமர் இனிதிருத்தல்.

விரத[1]நூன் முனிவன் சொன்ன விதிநெறி வழாமை நோக்கி
வரதனு [2]மிளைஞற் காங்கண் [3]மாமணி மகுடஞ் [4]சூட்டிப்
பரதனைத் தனது செங்கோ னடாவுறப் பணித்து நாளும்
கரைதெரி விலாத போகக் [5]களிப்பினு [6]ளிருந்தான் மன்னோ.

(இ - ள்.) விரதங்களையனுட்டிக்குந்தன்மைவாய்ந்த சாஸ்திரங்களில்வல்ல வசிட்டமுனிவன் சொன்ன விதிமுறை தவறாமற்பார்த்து, (வேண்டியவர்விருப்பின்படி) வேண்டியதைத்தரவல்லனான ஸ்ரீராமனும் (தன்) தம்பியாகியபரதனுக்கு (இளவரசுஎன்பதற்குஅறிகுறியாக) அப்பொழுது சிறந்த இரத்தினகிரீடத்தைச்சூட்டி, (அந்தப்) பரதனைத் தன் செங்கோலை நடத்துமாறுகட்டளையிட்டு, நாளும் அளவிடமுடியாதபோகங்களையனுபவிப்பதனாலான களிப்பினு ளிருந்தான்; (எ - று.)—இச்செய்யுள், சிலபிரதிகளி லில்லை. பி - ம்:—[1]மா. [2]இளைஞர்க்கு. [3]மணியணி. [4]சூடிப். [5]களியினுள். [6]இருந்தகாலை. சிலபிரதிகளில் இச்செய்யுளுக்குப்பின்

மறையவர் வாழி வேத மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயு மரசர் திங்கண் மும்மழை வாழி மெய்ம்மை
இறையவ னிராமன் வாழி யிக்கதை கேட்போர் வாழி
அறைபுகழ்ச் சடையன் வாழி யரும்புக ழனுமன் வாழி.

என்றசெய்யுளும், இதன்பின் விடையிறுத்தபடலத்திலுள்ள "உம்பரோடு" (கூஎ) என்றசெய்யுளும் இருக்க, படலமும் யுத்தகாண்டமும் முற்றும் என்று எழுதியுள்ளது: வேறொருபிரதியில், "மறையவர்" என்ற இங்குக்காட்டியசெய்யுளோடு வேறொரு * வாழிச்செய்யு ளிருக்க படலமும் காண்டமும் முற்றும் என்று எழுதியுள்ளது. (சகூஉ0

திருமுடிசூட்டுபடலம் முற்றும்.

---

* ஓலைமுறிந்துபோய்விட்டதனால் இச்செய்யுளைக் குறிக்கமுடியவில்லை

## ௩௯-ஆவது விடைகொடுத்தபடலம்.

(பட்டாபிஷேகமஹோத்ஸவத்தைக் காணுமாறு வந்திருந்தவர் யாவர்க்கும் ஸ்ரீராமன்) விடையீந்ததைக் கூறும் படல மென்பது, பொருள். பட்டாபிஷேகமானபின்புநாடோறும் ஸ்ரீராமன் சீதாதேவி புடனே அத்தாணிமண்டபத்தில் தன்இருமருங்கிலும் வெண்சாமரை வீச, முடிமீது வெண்கொற்றக்குடைநிழற்ற, மறையவராசிகூற, மன்னவரிறைஞ்சியேத்த, மந்திரிமுதலியோர்சூழ்ந்திருக்க, பட்டாபிஷேகங் காணவந்த மன்னவராதியரும் விபீஷண சுக்கிரீவராதியரான துணைவரும் வானரசேனாசமுத்திரமும்சூழச் சிங்காசனத்தில் வீற்றிருக்க, இங்ஙனம் இரண்டுதிங்கள் இனிதுகழிந்தது. பின்புஒருநாள் மறையவர்க்குத் தானமளித்தபின், மன்னவர்கட்குஏற்றபெற்றி பரிசுடனே விடையளித்திட்டு, சுக்கிரீவன் அங்கதன் அநுமான்முதலிய வானரவீரர்கட்கும் விபீஷணன் குகன்என்ற இவர்கட்கும் ஏற்றபெற்றிமுகமன்கூறிப் பரிசுஅளித்து விடையீந்தாக யாவரும் தத்தம்பதிக்குச்செல்ல, பின்னர் அந்தச்சக்கரவர்த்தித்திருமகன் இனிது அரசுபுரிந்தன னென்பது, இப்படலத்திற் கூறும் பொருள்.

க—விடைகொடுக்குமாறு ஸ்ரீராமன் சீதாதேவியுடன் ஓலக்கமண்டபத்தில் வருதல்.

பூமகட் கணிய தென்னப் [1]பொலிபசும் பூரி சேர்த்தி
மாமணித் தூணிற் செய்த மண்டப மதனி னுப்பண்
கோமணிச் சிவிகை மீதே கொண்டலு மின்னும் போலத்
தாமரைக் கிழத்தி யோடுந் தயரத ராமன் சார்ந்தான்.

(இ-ள்.) பூமிதேவிக்கு அணிகலம்போல் விளங்குகின்றதும் பைம்பொன்சேரப்பெற்றுச் சிறந்தமணிகள் பதிக்கப்பெற்ற தூண்களையுடையதுமாகிச் செய்யப்பட்ட மண்டபமதனுடைய நடுவில், சிறந்த மணிகளழுத்திய சிவிகையின்மேல் மேகமும் மின்னலும்போலத் தாமரைமலரில் வீற்றிருப்பவளான இலக்குமியினமிசமான சீதாதேவியோடு தயரதகுமாரனான ஸ்ரீராமன் வந்துசேர்ந்தான்; (எ-று.)—பூரி-பொன்.
பி-ம்:—[1]பொாசி. (சஙஉக)

உ.—இராமன் சிங்காதனத்து வீற்றிருத்தல்.

விரிகட [1]னடுவுட் பூத்த மின்னென வாரம் வீங்க
எரிகதிர் கடவு டன்னை யினமணி மகுட மேய்ப்பக்
கருமுகிற் கரசு செந்தா மரைமலர்க் காடு பூத்தோர்
அரியணைப் [2]பொலிந்த தென்ன [3]விருந்தன னயோத்திவந்தான்.

(இ-ள்.) பரவியகடலின்நடுவிலே தோன்றிய மின்னல்போல (முத்தா)காரம் மிகத்தோன்றவும், விளங்குகின்ற (ஆயிரங்) கிரணங்களையுடையவனான சூரியனைத் தொகுதியான மணிகளழுத்திய மகுடம் ஒத்திருக்கவும், கரியமுகிலரசு செந்தாமரைமலர்த்தொகுதிபூத்து ஒப்பற்ற அரியணையிற்பொலிந்தாற்போல, அயோத்தியில்திருவவதரித்தவனான

ஸ்ரீராமன் (அரியணையில்) வீற்றிருந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]நடுவட். [2]பொலிவதேபோல், பொலிந்ததேய்ப்ப. [3]பொலிந்தனன். (௪௩௨௨)

௩.—இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்:
ஸ்ரீராமன் அத்தாணிமண்டபத்திற் சிறப்புடன் வீற்றிருக்க,
வானரர் முதலியோர் சூழ்ந்திருந்தமையைத் தெரிவிக்கும்.

மரகதச் சயில மீது [1]வாணிலாப் [2]பாய்வ தென்ன
இருகுழை [3]யிட்டறும் வேற்க ணிளமுலை யிழைந லார்தம்
கரகம லங்கள் பூத்த கற்றையங் கவரி [4]தெற்ற
உரகரு நரரும் வானத் தும்பரும் [5]பரவி யேத்த.

(இ - ள்.) மரகதமலையின்மீது வெண்ணிறமுள்ள நிலாப் பாய்வது போல, இருகுழையிலிட்டறும் வேல்போன்ற கண்களையும் இளமுலைகளை யுமுடைய அணிகலனணிந்த மகளிருடைய கைத்தாமரைகளிலே தோன்றிய அழகிய சாமரைக்கற்றை (தன்தோளின்மீது) முட்டவும், உரகர் நரர் சுவர்க்கலோகத்தவரான தேவர் என்ற இவர்கள் பரவித் துதிக்கவும்,—(எ-று.)—இச்செய்யுள் முதலுள்ள செயவெனெச்சங்கள் அடுக்கி, ஏழாஞ்செய்யுளிலுள்ள 'இருந்தகாலை' என்றவிடத்து 'இருந்த' என்றதனோடு இயையும். இராமபிரானுடைய திருத்தோள்களில்வெண் சாமரைக்கற்றை தெற்றியது - மரகதச்சயிலத்து வாணிலாப்பாய்வதை யொக்கு மென்க. பி-ம்:—[1]வானிலாப். [2]பரந்ததேய்ப்ப. [3]தொடரும். [4]தோற்ற. [5]பரசி. (௪௩௨௩)

௪. உலக[1]மீ ரேழுந் தன்னை வொளிநிலாப் பரப்ப வானில்
[2]திலகவா ணுதல்வெண் டிங்கள் சிந்தைநொந் தெளிதிற் றேயக்
கலகவா ணிருதர் கோனைக் கட்டழித் திட்ட கீர்த்தி
இலகிமே னிவந்த தென்ன வெழுதனிக் குடைநின் றேய.

(இ - ள்.) (இராமபிரானுடைய) திலகமணிந்த ஒளிபொருந்திய நுதலாகிய வெண்டிங்கள் பதினான்குஉலகங்களிலும் தன்னிடத்தி லுள்ள ஒளிபொருந்திய நிலாவைப் பரப்புதலால், வானிலுள்ள வெண் டிங்கள் மனம்நொந்து எளிமையுடன் தேயவும்,—'போர்விருப்பமுள்ள வாளேந்திய அரக்கர்தலைவனை இராவணனைப் பந்துவர்க்கத்தோடும் அழித்திட்ட கீர்த்தியானது விளக்கமுற்று மேலோங்கியது?' என்று கருதுமாறு மேலோங்கிய தனிக்குடை நின்று பொருந்தவும்,—(எ-று.)

சந்திரன் கிருட்டிணபட்சத்தில் நாடோறும் தேய்வது, இராமபிரா னுடைய முகசந்திரன் பதினான்குலோகங்களிலும் ஒளிநிலாப்பரப்புவது கண்டுதன்னால் அங்ஙனம் ஒளிபரப்பமுடியாமையால்எளிமையுற்றுத் துய ருறுவதாலாகு மென்னுங் கருத்துப்பட முன்னிரண்டடிகளிற் கூறப்பட் டன. 'வெண்டிங்கள்' என்ற தொடர் 'திலகவாணுதல்' என்பதனோ டும், 'வானில்' என்பதனோடும் இயையும். புகழை வெண்ணிறமுடைய தென்றல்,கவிமரபு.வெண்கொற்றக்குடை பிடிக்கப்பட்டிருப்பதுஇராவ ணனைக் கட்டழித்ததனால்விளைந்த கீர்த்தியே இங்ஙனம் குடையுருக்

கொண்டு மேல்நிவந்ததுபோலு மெனப் பின்னிரண்டடிகளில் தன்மைத் தற்குறிப்பேற்றவணி காண்க. பி-ம்:—[1]நீடெழுந்தடெ தன்ன. [2]இலதவா ளொளிகொடிங்கள், இலதடமாகின்றதிங்கள். (சஙு.உச)

ரு. மங்கல கீதம் பாட மறையவ ராசி கூறச்
சங்கினம் குமுறப் பாண்டில் தண்ணுமை துவைப்பத் [1]தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப் பொருகயற் கருங்கட் செவ்
பங்கய முகத்தி னார்கள் [2]மயினடம் [3]பயில மாதோ. | வாய்ப்

(இ - ள்.) மங்கலகீதங்களை (அவற்றிற்குஉரியவர்)பாடவும், வேதம் வல்ல அந்தணர்கள் வாழ்த்துக்கூறவும், சங்கினம் குமுறவும், தாளமும் மத்தளமும் (தமக்குரிய) ஒலியைச்செய்யவும், குற்றமற்ற (மேன்மேல்) ஒலிசெய்கின்ற பல்வகைவாச்சியங்கள் ஆரவாரிக்கவும்,—போர்செய்கின்ற கயல்மீனையொத்த கரியகண்களையும் செவ்வாயையுமுடையரான தாமரைபோலும்முகமுள்ள மகளிர் மயில்போன்ற நடனத்தைப் பழகவும்,—(எ-று.)—பி-ம்:—[1]தாவிப். [2]பயில். [3]பயிலலுற்றார். (சஙு.உரு)

சு. திரை[1]கடற் கதிரு நாணச் செழுமணி மகுட கோடி
கரைதெரி விலாத [2]சோரிக் கதிரொளி [3]பரப்ப நாளும்
வரைபொரு மாட வாயி னெருக்குற வந்து மன்னர்
பரசியே வணங்குந் தோறும் பதயுகஞ் சேப்ப மன்னோ.

(இ - ள்.) அலைகின்றகடலிற் றோன்றும் (உதயகாலச்) சூரியனும் வெட்குமாறு செழிப்புள்ள [சிறந்த] மணிகளையுடைய மகுடவரிசைகள் அளவுகாணவொண்ணாத சொரிதலைக்கொண்ட கிரணங்களோடுகூடிய ஒளியைப் பரப்பவும்,-நாளும் மலையையொத்துத் தோன்றுகின்ற மாட வாயிலிலே நெருக்கமுண்டாகுமாறு (பெருந்திரளாக)வந்து மன்னவர் துதித்து வணங்குந்தோறும் தாளிணைகள் செந்நிறமடையவும்,—(எ - று.)—மகுடகோடிகள்-வணங்கவந்த மன்னவருடையவை. பி - ம்:—[1]பொருகடலும். [2]சோதிக். [3]கடுப்ப. (சஙு.உசு)

எ. மந்திரக் கிழவர் சுற்ற [1]மறையவர் வழுத்தி யேத்தத்
தந்திரத் தலைவர் போற்றத் தம்பியர் மருங்கு சூழச்
சிந்துரப் பவளச் செவ்வாய்த் தெரிவையர் பலாண்டு கூற
இந்திரற் குவமை யேய்ப்ப வெம்பிரா னிருந்த காலை.

(இ-ள்.)ஆலோசனைக்குஉரியவரான மந்திரிமார் சூழ்ந்திருக்கவும்,-வேதம்வல்லஅந்தணர் கொண்டாடித்துதிக்கவும்,--சேனைபதிகள் போற்றியென்னவும், தம்பிமார் அருகேசூழ்ந்திருக்கவும்,--சிந்துரம்போன்ற [செந்நிறமுள்ள] பவழத்தையொத்த செந்நிறவாயையுடைய மகளிர் பல்லாண்டுகூறவும்,--தேவேந்திரனுக்குஉவமை பொருந்துமாறு எமது தலைவனாகிய ஸ்ரீராமன் வீற்றிருந்தபோது,—(எ - று.)—'வெய்யோன் மகன்வந்துவணங்கிச் சூழ, வீடணக்குரிசில் வணங்கிச் சூழ்ந்தான்' என ஒன்பதாங்கவியில் முடியும். பி-ம்:—[1]மறையவர்க்கிறைவனோடும்,

இதன்பின்சிலபிரதிகளில் இரண்டுசெய்யுள்கள் காணப்படுகின்றன: அவை வருமாறு:—

1. கெவனொடு [1]கெவாக்கன் நாம்பன் கேசரி கெந்த மாதன்
தவ[2]னறு சரபன் சாம்ப னசுடேணன்சம் பாதி நீலன்
நவையறு பனசன் நரன் [3]கெசனளன் [4]சமீர னன்பாம்
இவ[5]னரி லோமன் பின்போ லெயிற்றின னிடப னென்போன்.

பி - ம்:—[1]தெவர்தன். [2]அறு. [3]தசநளன். [4]துமிரன். [5]இரி.

2. [1]விரதன்வி நாக்கன் வேக [2]கேசரி விந்தன் வெற்றிக்
காமுடைச் சதுக்கன் சோதி முகன் [3]ததி முகன்[4]க யந்தன்
அரன்விறற் கொடிய கோப னிடும்பனோ டாம்ப னண்மை
தெரிதரு வசந்தன் கொற்றத் துன்முகன் தீர்க்க [5]பாதன்.

பி - ம்:—[1]விரதன். [2]தெரிசியே. [3]எரி. [4]கவந்தன். [5]பாதன். (௪௩௨௭)

அ. மயிந்தன்பா துமிந்தன் கும்ப [1]னங்கத னனுமன் மாறில்
சயந்தரு குமுதக் கண்ணன் சதவலி குமுதன் றண்டார்
நயந்தெரி ததிமு கன்கோ கசமுகன் முதல நண்ணார்
வியந்தெழு மறுபத் தேழு [2]கோடியாம் வீர ரோடும்.

(இ - ள்.) மயிந்தன்முதல் கெசமுகனீறாகக் கூறியவர்களைப் பிரமுகராகவுடைய பகைவர்வியந்தெழத்தக்க அறுபத்தேழுகோடி யெண்ணிக்கையுள்ள வீரருடனே,—(எ - று.)—பி - ம்:—[1]அகம்பன் மற்று. [2]கோடிய. (௪௩௨௮)

௯. ஏனையர் பிறருஞ் சுற்ற வெழுபது வெள்ளத் [1]துற்ற
வானர ரோடும் வெய்யோன் மகன்வந்து வணங்கிச் சூழத்
தேனிமி ரலங்கற் பைந்தார் வீடணக் குரிசில் செய்ய
மானவா ளரக்க ரோடு வந்தடி [2]வணங்கிச் சூழ்ந்தான்.

(இ - ள்.) மற்றுமுள்ளார்பிறரும் சூழவும், எழுபதுவெள்ளமாகப் பொருந்திய வானரரோடும் சூரியகுமாரனை சுக்கிரீவன்வந்து வணங்கிச் சூழ்ந்திருக்கவும், தேன்மிக்குள்ள அசையுந்தன்மையுள்ள புதியமாலையைச்சூடிய வீடணனென்றகுரிசில் செவ்வியமானத்தையும் வாட்படையையுமுடைய அரக்கரோடும் வந்து அடிவணங்கிச் சூழ நின்றான்; (எ - று.)—பி - ம்:—[1]இற்ற. [2]வணக்கஞ் செய்தார்.

மூன்றாம்பாடல்முதல் இதுகாறுமுள்ள குளகச்செய்யுள்கட்கு முடிபு வருமாறு:—(௩) தெற்ற, ஏத்த, (௪) தேய, ஏய, (௫) பாட, கூற, குமுற, துவைப்ப, ஆர்ப்ப, நடம் பயில, (௬)பரப்ப, சேப்ப, (௭) சுற்ற, ஏத்த, போற்ற, சூழ, கூற, உவமையேய்ப்ப இருந்தகாலை,—(௮) வீரரோடும், (௯) வானரரோடும் வெய்யோன்மகன் வந்துவணங்கிச்சூழ, வீடணக்குரிசில் அரக்கரோடுவந்தடிவணங்கிச்சூழ்ந்தான் என்க. ()

௧௦.—தூதன் சேனையுடனேவந்தமையைத் தெரிவித்தல்.

வெற்றிவெஞ் சேனை யோடும் வெறிப்[1]பொறிப் புலியின்[2]வெவ்வால்
சுற்றுறத் தொடுத்து வீக்கு மரையினன் [3]சுழலுங் கண்ணன்

கற்[4]றிரள் வயிரத் திண்டோட் கடுந்திற லடங்க லன்னான்
எற்றுநீர்க் கங்கை நாவாய்க் கிறைகுகன் [5]பெருநர வந்தான்.

(இ - ள்.) வெற்றியையும் (உடற்)பொலிவையுமுடைய வெவ்விய புலி பின்வாலைச் சுற்றாப் பொருந்திக் கட்டுகின்ற அரையையுடையவனும் சுழலுந்தன்மையைக்கொண்ட கண்களையுடையவனும், கற்போல்திரண்ட உறுதிபொருந்திய தோளுடனே கொடியதிறமையையுடைய சிங்கத்தை யொத்தவனும், மோதுகின்ற நீரைக்கொண்ட கங்கையிலே நாவாய்கட்குத் தலைவனுமான குகன் வெற்றிபொருந்திய(தன்)வெவ்விய சேனையுடனே வணங்கிவந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]பொலிப். [2]வெவ்வாய். [3]சுழல்செங். [4]திறல். [5]இறைஞ்சி நின்றான். (௪௩௱௰)

௧௧.—வந்தவரை யிருக்குமாறு ஸ்ரீராமன் கூறுதல்.

வள்ளலு மவர்க டம்மேல் வரம்பின்றி வளர்ந்த காதல்
உள்ளுறப் பிணித்த செய்கை யொளிமுகக் கமலத் [1]காட்டி
அள்ளுறத் தழுவி னான்[2]போன் மனமகிழ்ந் தினிதி னோக்கி
எள்ளலி லாத [3]மொய்ம்பி ரீண்டினி [4]திருத்தி ரென்றான்.

(இ - ள்.) வரையாதருளுந்தன்மையனான இராமனும் அவர்கள்மீது எல்லையின்றிவளர்ந்த அன்பு உள்ளே பொருந்தப் பிணித்த செய்கையை ஒளிபொருந்திய முககமலத்தாற் காட்டிக்கொண்டு அழுத்தமாகத் தழுவினான்போல மனமகிழ்ந்து இனிமையாகப்பார்த்து, 'பழிப்புஇல்லாத வலிமையுடையீர்! இங்கே இனிது இருங்கள்' என்றான்; (எ-று.)--பி-ம்:—[1]காட்ட. [2]போல். [3]மொய்ம்பர். [4]இருக்க. (௪௩௱௰௧)

௧௨.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: இனிதிருப்ப இரண்டுமாதங் கழிந்ததெனல்.

நன்னெறி யறிவு சான்றோர் நான்மறைக் கிழவர் மற்றைச்
சொன்னெறி [1]யறியு நீரார் தோமறு புலமைச் செல்வர்
பன்னெறி [2]தோறுந் தோன்றும்[3]பருணிதர்[4]பண்பின் கேளார்
மன்னவர்க் கரசன் [5]பாங்கர் மரபினுஞ் சுற்ற மன்றே.

(இ - ள்.) நல்லநெறியில் அறிவுமிக்கவரும், நான்குவேதங்களிலும் உரிமைபெற்றவரும், பேசவேண்டியமுறைமையை யறியுந்தன்மையினரும், குற்றமற்றபுலமையைச்செல்வமாகப்பெற்றவரும், மற்றும்நற்குணங்கட்கு உறவினருமான பலவகைப்பட்டசாத்திரத்துறைகளிலும்விளங்குகிற பக்குவசாலிகள் அரசர்க்கரசனை ஸ்ரீராமன்பக்கத்திலே முறைமைப்படி சூழ்ந்திருக்க,—(எ - று.)—பி - ம்:—[1]அறிவு. [2]வகையிற், தொன்று. [3]பருமணிப். [4]பண்பிற். [5]தன்னை. (௪௩௱௰௨)

௧௩.தேம்[1]படு [2]படப்பை மூதூர்த் [3]திருவொடு மயோத்தி சேர்ந்த
பாம்பணை யமலன் றன்னைப் [4]பழிச்சொடும் வணக்கம் பேணி
வாம்புனற் பரவை ஞாலத் தரசரு மற்று ளோரும்
ஏம்பலுற் றிருந்தார் நொய்தி னிருமதி யிறந்த தன்றே.

(இ - ள்.) வாழுகின்ற புனலைக்கொண்ட கடலினாற்சூழப்பெற்ற நிலவுலகத்து அரசரும் மற்றுமுள்ளாரும், தேன்பொருந்திய சோலையைக்கொண்ட அழகாராகிய அயோத்தியிலே திருவுடனே சேர்ந்த பாம்பை அணையாகக்கொண்ட திருமாலினமிசமான ஸ்ரீராமனைத் துதித்தலோடு வணங்குதலையும் விரும்பிச்செய்தவண்ணம் மகிழ்ச்சிபொருந்தியிருந்தார்: இலேசாக இரண்டுமாதங்கள் (இவ்வாறாகக்) கழிந்தன; (எ-று.)—பி-ம்:—[1]புனற். [2]படலை. [3]திருநகர். [4]பழிப்பற. (௪௩௩௩)

க௪.—கவிக்கூற்று: இனி ஸ்ரீராமன் செய்ததைச் சொல்வோமெனல்.

நெருக்கிய வமரரெல்லா நெடுங்கடற் [1]கிடைநின் றேத்தப்
பொருக்கென வயோத்தி [2]யெய்தி [3]மற்றவர் பொருமல் தீர
வருக்கமோ டரக்கர் யாரு மடிதர வரிவிற் கொண்ட
திருக்கிளர் மார்பி னுன்பிற் [4]செய்தது செப்ப லுற்றாம்.

(இ-ள்.) நெடியதிருப்பாற்கடலினிடையிலே மிகத்திரண்ட தேவர்கள்யாவரும் நின்று துதிக்க, விரைந்து அயோத்தியிலே திருவவதரித்து அந்தத்தேவர்களின் துயரம் நீங்குமாறு கூட்டத்துடனே அரக்கர்யாவரும் மடியும்படி கட்டமைந்தவில்லைக்கொண்ட இலட்சுமிவிளங்குகின்ற திருமார்பையுடையவனுன இராமபிரான் பின்பு செய்ததைச் சொல்லத் தொடங்குவோம்; (எ - று.)—பி - ம்:—[1]இறை. [2]எய்தா. [3]மாற்றவர். [4]செய்ததும். (௪௩௩௪)

கரு.—ஸ்ரீராமன் அந்தணர்க்குத் தானமளித்துவிட்டு, அரசரை வருகவெனல்.

மறையவர் தங்கட் கெல்லா மணியொடு [1]முத்தும் பொன்னும்
நிறைவளம் பெருகு பூவுஞ் சுரபியு நிரைத்து மேன்மேல் [னர்
குறையிதென் றிரந்தார்க் கெல்லாங் குறைவறக் கொடுத்துப் பின்
அறைகழ லரசர் தம்மை வருகென வருள வந்தார்.

(இ - ள்.) வேதம்வல்ல அந்தணர்கட்கெல்லாம் இரத்தினங்களுடனே முத்துக்களும் பொன்னும் மிக்கவளப்பம்பெருகுகின்ற பூமியும் பசுக்களும் மேன்மேல் தொகுதியாகத்தந்து, 'இது எமக்குவேண்டும் பொருள்' என்று இரந்தவர்க்கெல்லாம் குறைவுநீங்கக்கொடுத்துப் பின்பு ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த அரசர்களை 'வருக' என்று அருளப்பாடுசெய்ய, (அவர்கள்) வந்தனர்; (எ - று.)—முத்துச் சிறத்தலால் தனியேகூறினர். பி-ம்:—[1]பொன்னும்பூணும், பொன்னும்முத்தும். ()

கசு.—வந்த அரசர்களுக்கு வேதமதியளித்து விடைதருதல்.

ஐயனு மவர்க டம்மை யகமகிழ்ந் தருளி னோக்கி
வையகஞ் சிவிகை தொங்கன் மாமணி மகுடம் பொற்பூண்
கொய்யுளைப் புரவி திண்டேர் குஞ்சர மாடை [1]யின்ன
மெய்யுறக் கொடுத்த பின்னர்க் கொடுத்தனன் விடையு மன்றே.

(இ-ள்.) ஸ்ரீராமனும்,—அவ்வரசர்களை மனமுவந்து கருணையோடு பார்த்து, (அவர்கட்குப்) பூமி சிவிகை மாலைகள் சிறந்தமணிகளழுத்திய

மகுடங்கள் பொற்பூண்கள் கொய்த பிடரிமயிரையுடைய குதிரைகள் வலியதேர்கள் யானைகள் ஆடைகள் என்றஇவைகளை மனப்பூர்வமாகக் கொடுத்தபின்பு விடையுந் தந்தான்; (எ-று.)—இவ்வரசர்கள் பட்டாபிஷேகங் காண வந்தவர்கள். பி - ம்:—[1]இன்சொல். (சங.ஙக)

கஎ.—இதுமுதற் பதினைந்துகவிகள்-சுக்கிரீவன்முதலினோர்க்கு வெகுமதியளித்ததைக் கூறும்.

சம்பரன் றன்னை [1]வென்ற தயரத னீன்ற காலத்து
உம்பர்தம் பெருமா னீந்த வொளிமணிக் கடகத் தோடும்
கொம்புடை மலையுந் தேருங் குரகதக் குழுவுந் தூசும்
[2]அம்பரந் தன்னை நீத்தா னலரிகா தலனுக் கீந்தான்.

(இ - ள்.) திருப்பாற்கடலைவிட்டு (அயோத்தியில்) திருவவதரித்தவனான ஸ்ரீராமன்,—சம்பராசுரனைவென்ற தசரதன் தன்னைப்பெற்ற காலத்தில் தேவேந்திரனீந்த ஒளிபொருந்திய இரத்தினகடகத்துடனே தந்தங்களையுடைய மலைபோன்ற யானைகளும் தேர்களும் குதிரைக்கூட்டமும் ஆடைகளும்(என்ற இவற்றை),சூரியனுடையகுமாரனாகிய சுக்கிரீவனுக்கு ஈந்தனன்; (எ - று.)—பி-ம்:—[1]வென்றுதசரதனீன்ற. [2]அம்பரத்தனந்தர். (சஙு.ஙஎ)

கஅ. [1]அங்கத மிலாத கொற்றத் தண்ணலு மகில மெல்லாம்
அங்கத னென்னு [2]நாம மழகுறத் திருத்து மாபோல்
அங்கதங் [3]கன்னற் றோளாற் கயன்கொடுத் ததனை யீந்தான்
அங்கதன் பெருமை மண்மே லாரறிந் துரைய கிற்பார்.

(இ - ள்.) குற்றமில்லாத வெற்றியையுடைய பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனும்,—பூமிமுழுவதும் (அவனுடைய) அங்கதனென்கிற நாமத்தை அழகுபொருந்த (க் காரணக்குறியாகத்) திருந்தவழங்கச் செய்யுமாறுபோல, மலைபோன்ற அழகியதோளையுடைய (இட்சுவாகு) மன்னனுக்குப் பிரமதேவன் கொடுத்ததான அங்கதமென்ற அந்தஅணியை(அங்கதனென்பவனுக்கு)க் கொடுத்தான்: அங்கதன்பெருமையை (இந்தப்)பூமியில் அறிந்துசொல்லவல்லவர் யார்? (எ - று.)—கல் நல் தோளாற்குஎனப் பிரிக்க. பி - ம்:—[1]அந்தம். [2]நாமத்து. [3]அகன்ற, கழன்ற. (சஙு.ஙஅ)

ககூ. பின்னரு மவனுக் கையன் பெருவிலை யாரத் தோடு
[1]மன்னுநுண் டேசு மாவு மத[2]மலைக் குழுவு [3]மீந்து
உன்னைநீ யன்றி யிந்த வுலகினி லொப்பி லாதாய்
[4]மன்னுக கதிரோன் மைந்தன் றன்னொடு மருவி யென்றான்.

(இ - ள்.) பின்னும் ஸ்ரீராமன்,—அவ்வங்கதனுக்கு, பெருவிலையுள்ள முத்தாகாரத்துடனே பொருந்திய நுண்ணியபட்டாடைகளும் குதிரைகளும் மதமுள்ள யானைக்கூட்டமும் (என்பவற்றை)யீந்து,'இந்தவுலகினில் உன்னையன்றி (வேறொருவரை) ஒப்பாகப்பெறாதவனே! நீ சூரியபுத்திரனான சுக்கிரீவனோடு பொருந்திவாழ்வாயாக' என்றான்; (எ - று.)—பி - ம்:—[1]மன்ன. [2]மலைக்கரசும். [3]ஈயா. [4]மன்னுவை. ()

உ0. [1]மாருதி தன்னை யையன் மகிழ்ந்தினி தருளி [2]னோக்கி
ஆருத விடுதற் கொத்தார் நீயலா லன்று செய்த
பே[3]ருத விக்கி யான்செய் செயல்பிறி தில்லைப்[4]பைம்பூண்[ன்.
போருத வியதிண் டோளாய் பொருந்துறப் புல்லு கென்று

(இ - ள்.) இராமபிரான்,—வாயுவின்புதல்வனான அநுமானை மகிழ்ந்துஅருளுடனே இனிதுபார்த்து, 'உதவிசெய்வதில் (உன்னை)ஒத்தவர் நீயல்லால் (வேறு) யாவர்? (நீ) அன்றுசெய்த பேருதவிக்கு யான் செய்யுஞ் செயல் வேறொன்றில்லை: பைம்பூணையணிந்த போரிலுதவிய திண்ணிய தோளையுடையவனே! அழுத்தமாகத்தழுவிக்கொள்க' என்றான்; (எ-று.)

ஸ்ரீராமபிரானிடம் அநுமான் தான் சீதையைக் கண்டுவந்த செய்தியைக் கூறியவுடனே, அப்பிரான்,மனமுவந்து அவ்வநுமனைக்கொண்டாடி,'பிரியத்தைச்சொன்னஇவனுக்கு ஏற்ற பிரியத்தைச் செய்ய வியலவில்லையேயென்ற இதுவே எளியஎன்மனத்தை வருத்துகின்றது. இப்படிப்பட்ட தருணத்தைப் பெற்று அப்படிப்பட்டமகாத்மாவான அநுமானுக்குஸர்வஸ்வமான இந்தஆலிங்கனமேகொடுக்கப்பட்டது'என்று சொல்லித்தழுவினானென்று வான்மீகத்தில் வருகின்றது. இவ்விடத்து, "திருமேனியைக்கொடுக்கவே எல்லாம் கொடுத்ததாமிறே. ஸர்வாபாஸ்ரயமாயிறே திருமேனியிருப்பது," "ஸ்நேஹோமேபரம: என்று இவ்வுடம்பைவிரும்பினவனுக்கு இத்தையே கொடுக்கவேணுமே", "இவன் ஒன்றுகொள்வானொருவனல்லன்: நாம் இவனுக்கு ஒன்று கொடுக்கப் பெறுவதுகாண்என்று குறைப்பட்டிருந்தவர் இவன் விலக்காததொரு ஸமயம் பெற்று, இப்படிகொடுத்துக்கொண்டுநின்றார்: ஒருபடி கொடுத்தாராய் ஒன்றுசெய்த வித்தனைபோக்கி, இரண்டுடம்பு கொடுத்தவனுக்குஒருடம்பு தரமன்றிறே.வேண்யுத்க்ரதநத்திலே பிராட்டி ஒருப்பட்டவன்று அவளை யுளளாக்கினான்:'அவகாஹ்யார்ணவம்ஸ்வப்ஸ்யே'என்று பெருமாளை மீட்டு அவரை யுளராக்கி இப்படி இவர்க்கு இரண்டுடம்பு கொடுத்தானிறே அவன்: அவன் பலபடி உபகரிக்கையாலே இவர் ஒருபடி உபகரித்தார்" என்று ஆன்றோர் வ்யாக்யாநம் அருளிச்செய்துள்ளது இங்குக் கருதத்தக்கது. பி-ம்:—[1]மாருதிதன்னையின்னே, மாருதவிமலசேயை. [2]நோக்க. [3]உதவிக்கிங்கியான். [4]மெய்ப்பூண். (சங-ச0)

உக. என்றலும் வணங்கி நாணி வாய்புதைத் திலங்கு [1]தானை
முன்றனை [2]யொதுக்கி நின்ற மொய்ம்பனை முழுது நோக்கிப்
பொன்றிணி வயிரப் பைம்பூ ணாரமும் புனை[3]மென் றாசும்
வன்றிறற் கயமு மாவும் வழங்கினன் [4]வயங்கு சீரான்.

(இ - ள்.) விளங்குகின்ற கீர்த்தியையுடையவனான ஸ்ரீராமன்,—என்றுகூறவும் நாணங்கொண்டு தலைவணங்கி வாயைப்புதைத்து, விளங்குகின்ற சேனையின் முன்புறத்தில் ஒதுக்கிடத்துகின்ற வலிமையுள்ளவனை அந்தஅநுமானை முழுதும்பார்த்து, பொன்றிணிந்த வயிரப்

பைம்பூண்களையும் ஆரங்களையும் அலங்கரிக்கின்ற மெல்லியபட்டாடைகளையும் மிக்கவலிமையுள்ள யானைகளையும் குதிரைகளையும் தந்தான்;(எ-று.)—பி-ம்:—[1]காலே. [2]ஒதுக்கி. [3]பொன். [4]வயங்குஞ்,வழங்கு.

௨௨. பூமலர்த் தவிசை நீத்துப் பொன்மதின் மிதிலை பூத்த, தேமொழித் [1]திருவை யையன் திருவருண் முகந்து [2]நோக்கப், [3]பாமறைக் கிழத்தி யீந்த பருமுத்த மாலை கைக்கொண்டு, ஏமுறக் கொடுத்தா ளன்று ளிடரறிந் துதவி னாற்கே.

(இ - ள்.) பொலிவுபெற்ற தாமரைமலராகிய ஆசனத்தைவிட்டுப் பொன்மதிலைக்கொண்ட மிதிலாநகரியில்தோன்றிய தேன்போலினிய மொழியையுடையஇலக்குமியினம்சமான சீதையை (அன்றுளிடத்து ஒருமுத்தாகாரத்தைக்கொடுத்து உனக்குவிருப்பமானவர்க்கு இதனைப் பரிசாகக் கொடுப்பாய்' என்றுசொல்லிக் குறிப்போடு) ஸ்ரீராமன் திருவருளை முகந்துநோக்க,--(அந்தச்சீதை)பாவிற்குஉரியவளாய்வேதத்திற் கூறப்படுபவளான சரசுவதிதேவி யீந்த (அந்தப்) பருத்தமுத்துக்களாலியன்ற ஹாரத்தைக் கையிற்கொண்டு தன்துன்பத்தையறிந்து உதவினவனாகியஅநுமானுக்கு இன்பமுறக் கொடுத்தாள்; (எ - று.)—பி - ம்:—[1]தெரிவை. [2]நோக்கிப். [3]பார்முதல். (௪௩௨௨)

௨௩. சந்திரற் குவமை சான்ற தாரகைக் குழுவை வென்ற
இந்திரற் [1]கேய்ந்த தாகு [2]மென்னுமுத் தாரத் தோடு
கந்தடு களிறு வாசி தூசணி கலன்கண் மற்றும்
உந்தின னெண்கின் வேந்தற் குலகமுந் துதவி னானே.

(இ - ள்.) நட்சத்திரக்கூட்டங்களைவென்றதும் சந்திரனுக்கு உவமையாகமிக்கதுமான இந்திரனுக்குஏற்றதாகுமென்னுமாறுள்ளமுத்தாகாரத்துடனே கட்டுத்தறியை முறிக்கின்ற யானை குதிரை ஆடை அணிகலன்என்பவற்றையும் மற்றுள்ளவற்றையும் கரடிகட்குஅரசனாகிய சாம்பவானுக்கு, மூன்றுஉலகங்களையுதவினவனான திருமாலினம்சமான ஸ்ரீராமன் தந்தான்; (எ - று.)—[1]இயைந்தது. [2]எண்ணும். (௪௩௨௩)

௨௪. நவ[1]மணிக் காழு முத்து மாலையு நலங்கொ டூசும்
உவமைமற் றிலாத பொற்பூ ணுலப்பில பிறவு மொண்டார்க்
கவனவெம் பரியும் வேகக் கதமலைக் கரசுங் காதற்
பவனனுக் கினிய நண்பன் பயந்தெடுத் தவனுக் கீந்தான்.

(இ - ள்.) நவமணிகளாலியன்ற ஆரமும் முத்தமாலையும் அழகுகொண்ட பட்டாடைகளும் வேறுஉவமைபெறாதபொற்பூணும் அழிவில்லாத மற்றுமுள்ளனவான ஒள்ளியகிண்கிணிமாலையையணிந்த விரைந்துசெல்லவல்ல வெவ்விய பரியும் வேகமுள்ள கோபத்தைக் கொண்ட யானையரசும் என்பவற்றை, வாயுதேவனுடையஇனியநண்பனாகிய அக்கினிபெற்றெடுத்தவனான அன்புள்ள நீலனென்பவனுக்குக் கொடுத்தான்; (எ - று.)—பி - ம்:—[1]மணிக்காசும், (௪௩௨௪)

உரு. பதவலிச் சதங்கைப் பைந்தார்ப் பாய்பரி பணைத்திண் கோட்டு, மதவலிச் சைலம் பொற்பூண் மாமணிக் கோவை [1]மற் றும்,[2]உதவலிற் றகைவ தன்றி யில்லன [3]வுள்ள வெல்லாம், சதவலி தனக்குத் தந்தான் சதுமுகத் தவனைத் தந்தான்.

(இ - ள்.) பிரமனைத் தந்த கடவுளினமிசமான இராமபிரான்,—பாதத்தில் வல்லியை[கொடியை] யொத்த சதங்கையோடுகூடிய பொன்னாலியன்ற மாலையைப்பூண்ட பாயுந்தன்மையுள்ள குதிரைகளும், பருத்த திண்ணியதந்தங்களையும் மிக்கவலிமையையுமுடைய மலை போன்றயானைகளும், பொன்னாபரணங்களும், சிறந்தஇரத்தினவாரங் களும்மற்றும் கொடுப்பதில்(இவைகொடுத்தற்குரிய ஆகாதவையென்று) தகைவது [தடுத்தற்குஉரியது] (எதுவும்) ஆகாதிருக்க, இல்லிலுள்ளன [மனையிலுள்ளன] வெல்லாவற்றையும் சதவலியென்பவனுக்குத் தந் தான்; (எ-று.)—இச்செய்யுள்-திரிபுஎன்னுஞ்சொல்லணியாம். பி-ம்:---[1]முத்தும், முற்றும். [2]உதவலிலுகுத்ததன்றி, உதவலித்தகையதன்றி. [3]உள்ளது. (சாஉசரு)

உசு. பேசரி தொருவர்க் கேயும் பெருவிலை யிதனுக் கீதுக்
[1]கோசரி யிலதென் றெண்ணு மொளிமணிப் பூணுந் தூசும்
[2]மூசரிக் குவமை மும்மை மும்மதக் களிறு மாவும்
கேசரி [3]தனக்குத் [4]தந்தான் கிளர்மணி முழவுத் தோளான்.

(இ - ள்.) விளங்குகின்ற மணிப்பூண்களையணிந்த முழாப்போலுந் தோளையுடையவனான இராமபிரான்,—'இதற்குஉரிய மிக்கவிலை ஒருவ ருக்கும் பேசஇயலாது: இதுக்கோ சரியான [ஒத்த] பொருள் இல்லை' என்று மதித்துச்சொல்லப்படுகின்ற ஒளியையுடைய மணிப்பூணும் ஆடையும்(உலகெங்கும்) பரவுந்தன்மையுள்ள வடவைக்கனலின்மூன்று உவமையாதற்கு அமைந்த [வடவைக்கனலின் மூன்றின் வெம்மையைக் கொண்ட] மும்மதயானைகளும் குதிரைகளும் என்றஇவற்றைக் கேசரி யென்பவனுக்குத் தந்தான்; (எ-று.)—பி - ம்:—[1]ஓர். [2]மூசெரிபிறக்கும் வெம்மை. [3]தனக்கும். [4]ஈந்தான். (சாஉசசு)

உஎ. வளனணி கலனுந் தூசு மாமதக் களிறு மாவும்
நளனொடு குமுதன் [1]றார னவையறு பனசன் மற்றோர்
உளமகிழ் வெய்தும் வண்ண முலப்பில பிறவு மீந்தான்
களனமர் கமல வேலிக் [2]கோசலக் காவ லோனே.

(இ-ள்.) நெற்களம்பொருந்திய கமலவேலியைக்கொண்ட கோசல தேசத்திற்குமன்னவனான ஸ்ரீராமன்,—வளப்பம்பொருந்திய [சிறந்த] அணிகலனும் ஆடைகளும் மிக்கமதங்கொண்ட களிறுகளும் குதிரை களும் அளவில்லாத மற்றுமுள்ளபொருள்களும் என்ற இவற்றை,—நள னும் குமுதனும் தாரனும் குற்றமற்றபனசனும் மற்றுமுள்ளோரும் மனம் மகிழும்படி ஈந்தான்; (எ - று.)—பி - ம்:—[1]காரான். [2]கௌசலைகாத லானே. (சாஉசஎ

௨௮. அவ்வகை யறுபத் தேழு கோடியா மரியின் வேந்தர்க்கு
எவ்வகைத் திறனு நல்கி யினியன பிறவுங் கூறிப்
பவ்வமொத் துலகிற் பல்கு மெழுபது வெள்ளம் பார்மேல்
கவ்வையற் றினிது வாழக் கொடுத்தனன் கடைக்க ணோக்கம்.

(இ-ள்.) அவ்வகையாக அறுபத்தேழுகோடி யென்னும் எண்ணின ரான வானரவீரர்க்கும் பலவகைப்பட்ட கூறுபாடுடைய பொருள் களைக்கொடுத்து இனியனபலசொற்களையுங் கூறி, கடலினையொத்து உலகில்மிக்குத்தோன்றுகின்ற எழுபதுவெள்ளம் வானரசேனைகளும் துன்பமற்று இவ்வுலகில்இனிதுவாழுமாறு கடைக்கண்ணோக்கத்தைத் தந்தான்; (எ-று.)—இவ்வாறு அறுபத்தேழுகோடி வீரர்க்கும் பரிசு தந் தபின், ஸ்ரீராமன் எழுபதுவெள்ளஞ் சேனைகளும் இனிதுவாழுமாறு கருணைகொண்டு கடாட்சித்தன னென்பதாம். (௬௩௬௮)

௨௯. மின்னையேர் மவுலிச் செங்கண் [1]வீடணப் புலவர் கோமான்
றன்னையே யினிது நோக்கிச் சராசரஞ் [2]சூழ்ந்த சால்பின்
நின்னையே யொப்பார் நின்னை யல[3]தில ருளரே லைய
பொன்னையே யிரும்பு[4]நேருமாயினும்பொருவன் றென்றான்.

(இ - ள்.) மின்னையொத்த [பேரொளிபடைத்த] கிரீடமணிந்த செவ்வியகண்களையுடையனான விபீஷணனென்கின்ற புலவர்தலைவ னையே இனிதுபார்த்து, 'சராசரத்தை[பிரபஞ்சத்தை]ச் சூழ்ந்த பெரு மையினையுடைய உன்னை யொப்பவர் உன்னையல்லாது (வேறொருவர்) இலர்: உளராயின், ஐயனே! (ஒருகால்) பொன்னையே இரும்பு ஒப்பாகு மானாலும் (ஒருவரும் உனக்கு) ஒப்பு அன்று என்றான்; (எ - று.)— சால்புடையவராயிருப்பாருளரென்றாலும் பொன்னுக்கும் இரும்புக்கு முள்ளவேறுபாடு உனக்கும் அவர்க்கு மிருக்கு மென்றவாறு. பி-ம்:— [1]வீடணன். [2]சுமந்த. [3]இல்லை. [4]நேரேபொருவெனவொக்குமென்றான்.

௩௦. என்றுரைத் தமர ரீந்த வெரிமணிக் கடகத் தோடு
வன்றிறற் களிறுந் தேரும் வாசியு மணிப்பொற் பூணும்
பொன்றிணி தூசும் [1]வாசக் கலவையும் புதுமென் சாந்தும்
[2]நன்றுற வவனுக் கீந்தா னுகணைத் துயிலைத் தீர்ந்தான்.

(இ - ள்.) ஆதிசேஷசயனத்தில் உறங்குவதைவிட்டு அயோத்தி யில்வந்து திருவவதரித்தவனாகிய ஸ்ரீராமன்,—இவ்வாறுகூறி, தேவர்க ளீந்த விளங்குகின்ற மணிக்கடகத்துடனே மிகவலிய யானைகளும் தேர்களும் குதிரைகளும் மணிகளழுத்திய பொற்பூணும் பொன் நெருங்கிய பட்டாடையும் நறுமணமுள்ள கலவைச்சாந்தும் புதிய மெல்லிய சந்தனமும் ஆகிய இவற்றை நன்மைபொருந்த அந்த விபீஷ ணனுக்குக் கொடுத்தான்; (எ - று)—பி-ம்:—[1]பூவுமருங்குறவுதவிப் பின்னர். [2]மன்றனிவீடணனுக்குதவினன் விடையுமன்றே, நன்று... துயிலிற்றீர்ந்தான். (௬௩௭௦)

ந.க.—குகப்பெருமானுக்கு வேதமதியுடனே விடையும் ஈதல்.

சிருங்க[1]பே ரியதென் றேதுஞ் செழுநகர்க் கிறையை நோக்கி
மருங்கினி யுரைப்ப தென்னே மறுவறு துணைவற் [2]கென்னாக்
கருங்கைம்மாக் களிறு மாவுங் கனகமுந் தூசும் [3]பூணும்
[4]ஒருங்குற வுதவிப் பின்ன ருதவினன் விடையு மன்னே.

(இ - ள்.) பக்கத்திருந்த சிருங்கபேரமென்று சொல்லப்படுகின்ற செழுமையானநகர்க்குத் தலைவனான குகனைப் பார்த்து, 'குற்றமற்ற துணைவனான உனக்கு இப்போது சொல்லவேண்டுவது யாது உளது?' என்றுசொல்லி, கைம்மாவாகிய கருங்களிறுகளும் குதிரைகளும் பொன்னும் பட்டாடைகளும் அணிகலன்களும் ஒருசேரத் தந்து பின்பு விடையும் தந்தான்; (எ - று)—சிருங்கபேரியது, அது - பகுதிப்பொருள்விகுதி. மருங்கு-பக்கம். பி-ம்:—[1]பேரியம், வேரியம். [2]என்னே. [3]பூவும். [4]ஒருங்கற. (சுகூ௯க)

ந.உ.—அநுமன்முதலியோர்க்கு விடைதருதல்.

அநுமனை வாலி சேயைச் சாம்பனை யருக்கன் றந்த
கனைகழற் காலி னானைக் [1]கருணையங் கடலு நோக்கி
நினைவதற் கரிது நும்மைப் [2]பிரிகென்ற னீவிர் வைப்பும்
எனதது [3]காவற் கென்ற னேவலி னேகு மென்றான்.

(இ - ள்.) அநுமான் வாலிகுமாரனான அங்கதன் சாம்பவன் சூரிய பகவான்பெற்ற ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த பாதங்களையுடைய சுக்கிரீவன் என்ற இவர்களைக் கருணைசமுத்திரமாகிய சக்கரவர்த்தித்திருமகன்பார்த்து, 'நும்மைப்பிரிந்துசெல்க' என்று கூறுதல் நினைவதற்கும் கூடாததாகவுள்ளது: உம்முடைய அந்தவாழிடமும் காத்தற்கு எனக்கு உரியது:[பாதுகாக்கவேண்டியதாக எனக்குத்தோன்றுகின்றதென்றபடி]: (ஆதலால்), என்னேவலால் (நும்மிடத்திற்குச்) செல்லுங்கள்' என்றான்; (எ-று.)—எனது என்ற இடத்துள்ள அது என்பதைப் பிரித்து வைப்பதுவும் எனக் கூட்டுக. பி-ம்:—[1]கருணையங்கடவுள். [2]பிரிவென்றல், பிரியென்றல். [3]காவற்கின்றென். (சுகூ௯உ)

ந.ந.—விபீஷணனுக்கு விடைகொடுக்க,
யாவரும் தம்முரிக்குச்செல்வது கடமையே யென்று கருதுதல்.

இலங்கை[1]வேந் தற்கு மிவ்வா றினியன யாவுங் கூறி
அலங்கல்வேன் மதுகை யண்ணல் விடைகொடுத் தருள லோடும்
நலங்கொள்பே ருணர்வின் மிக்கோர் [2]நாமுறு நெஞ்சர் பின்னர்க்
கலங்கல [3]ரேவல் செய்தல் கடனெனக் கருதிச் சூழ்ந்தார்.

(இ - ள்.) இலங்கைக்குஅரசனாகிய விபீஷணனுக்கும் இவ்வாறு இனியவார்த்தைகள் யாவையுங் கூறி, வெற்றிமாலைசூடிய வேற்படையேந்திய வலிமையுள்ள பெருமையிற்சிறந்த ஸ்ரீராமன் விடைகொடுத்தருளலும்,—அழகுபொருந்திய பேரறிவினால் மிக்கவரான சுக்கிரீவன் குகன் விபீடணன் முதலியோர் (முதலில் பிரிவுக்கு)அஞ்சுகின்ற மன

மூடையவராய்ப் பின்பு கலக்கம் நீங்கப்பெற்றவராய் 'எளியவற்றைச் செய்தல்முறைமையாம்' என்று நன்குஆராய்ந்து தீர்மானித்தார்கள்; (எ - று.)—கருதிச்சூழ்ந்தார் - ஒருபொருட்பன்மொழி. பி-ம்:—[1]வேந்தனுக்கும். [2]கலனுறு. [3]வய. (௪௩௩௩)

௩௪.—பரதனும் தம் பதிக்கு ஏகல்.

பரதனை யிளைய கோவைச் சத்துருக் கினனைப் [1]பண்பார்
விரதமா தவனைத் தாயர் மூவரை மிதிலைப் பொன்னை
வரதனை வலங்கொண் டேத்தி வணங்கினர் விடையுங் கொண்டே
சரதமா நெறியும் வல்லோர் தத்தம பதியைச் சார்ந்தார்.

(இ - ள்.) உண்மையான நெறியெல்லாம் [நன்னெறியாவும்] வல்லவரான அவர்கள், பரதன் இளையபெருமான் சத்துருக்கினன் நற்குணம்நிறைந்த விரதம்பூண்ட மாதவத்தினையுடைய வசிட்டன் தாயர் மூவர் மிதிலைப்பொன் [சீதை] வேண்டும்வரங்களைத் தரவல்ல இராமன் என்றிவர்களை வலங்கொண்டுதுதித்து வணங்கினராய், விடையும்பெற்றுக்கொண்டு தம்தம்முடைய ஊரையுஞ்சேர்ந்தார்; (எ - று.)—பி-ம்:—[1]பண்டை. (௪௩௩௪)

௩௫.—குகன் சுக்கிரீவனென்பவர்களை விபீஷணன் அவர்களுடைய பதியில்விட்டு இலங்கைசேர்தல்.

குகனைத்தன் பதியி னுய்த்துக் குன்றினை வலஞ்செய் தேரோன்
மகனைத்தன் புரத்தில் விட்டு வாளெயிற் றரக்கர் சூழக்
ககனத்தின் மிசையே [1]யேகிக் கனைகட லிலங்கை புக்கான்
அகனுற்ற காத லண்ண லலங்கல்[2]வீ டணன்சென் றன்றே.

(இ-ள்.) மனத்துப்பொருந்திய அன்பையுடையனாகிப் பெருமையிற்சிறந்தவனான வெற்றிமாலையைப் பூண்ட விபீஷணன்,—குகனை அவனுடையபதியிற் [சிருங்கிபேரபுரத்திற்] கொண்டுபோய் விட்டிட்டு, மேருமலையை வலஞ்செய்கின்ற தேரையுடையவனான சூரியனதுமகனை [சுக்கிரீவனை] அவனுடைய (கிட்கிந்தா)புரத்தில் விட்டிட்டு, வாள்போன்ற எயிற்றையுடைய அரக்கர் சூழ்ந்திருக்க வான்வழியாகவே சென்று ஒலிக்கின்ற கடலாற்சூழப்பெற்ற இலங்கையில்அன்றேசென்று புகுந்தான்; (எ - று.)—பி-ம்:—[1]எய்தி. [2]வீடணனுமன்றே. வீடணன்சென்றதன்றே. (௪௩௩௫)

௩௬.—இதுவும் அடுத்த கவியும் - ஸ்ரீராமன் யாவருஞ்சென்றபின் இனிது அரசுபுரிதலைத் தெரிவித்தும்.

ஐயனு மவரை நீக்கி [1]யடிதொழு துணைவ ரோடும்
வையக முழுதுஞ் செங்கோல் [2]மனுநெறி முறையிற் செல்லச்
செய்யமா[3]மகளு மற்றச் செகதல மகளுஞ் [4]சற்றும்
கையுயா றின்றிக் காத்தா [5]ஞனிலப் பொறைக டீர்த்தே.

(இ - ள்.) ஸ்ரீராமனும்,—அந்தத்துணைவரை விடைகொடுத்தனுப்பிவிட்டு அடியைத்தொழுகின்ற சிநேகிதரோடும் பூமிமுழுவதிலும் செங்

கோலானது மனுதருமசாத்திரமுறைமைப்படியே நடக்க, செவ்விய இலக்குமியாகியமகளும் பூமிதேவியும் சிறிதும் வருந்துதல்வகையில் லாமல் பூபாரங்களைப்போக்கிப் பாதுகாத்தான்; (எ - று.)—பி-ம்:—[1]அருள்செறி, அடிசெறி. [2]மறை. [3]மகளே. [4]மற்றும். [5]நானிலம். (௬௩௫௯)

௩௭. உம்பரோ டிம்பர் [1]காறு முலகமோ ரேழு மேழும்
எம்பெரு மானென் றேத்தி யிறைஞ்சிநின் றேவல் செய்யத்
தம்பிய ரோடுந் தானுந் தருமமுந் தரணி காத்தான்
அம்பரத் தனந்தர் [2]நீங்கி [3]யயோத்தியில் வந்த வள்ளல்.

(இ - ள்.) திருப்பாற்கடலில் யோகநித்திரைபுரிவதைநீங்கி அயோத்தியில்வந்து திருவவதரித்த வரையாதருளுந்தன்மையனான ஸ்ரீராமன், மேலோடு இவ்விடம்வரையுமுள்ள மேலேழ்கீழேழ்என்ற பதினான்குலோகத்திலுள்ளவரும், ‘எம்பெருமான்’ என்று துதித்துவ ணங்கிநின்று குற்றேவல்புரிய, தம்பியரும் தானும் தருமத்திற்பொரு ந்தநின்று பூமியைப் பாதுகாத்தான்; (எ - று.)---பி - ம்:—[1]பாரும். [2]நீக்கி. [3]அயோத்திவந்திருத்தவண்ணல், அயோத்திவந்திறுத்தகாளை. ஒருபிரதியில் இச்செய்யுளின்பின் விடையிறுந்தபடலம் முற்றும் யுத்த காண்டம்முற்றும் என்று எழுதி, சிலபாடல்கள் எழுதப்பட்டுள்ளன. அவை வருமாறு:—

1. வான்வளஞ் சுரக்க நீதி [1]மனுநெறி முறையே யென்றும்
தான்வளர்ந் திடுக நல்லோர் தங்கிளை தழைத்து வாழ்க
தேன்[2]வழங் கமுத மாலைத் தெசரத ராமன் [3]செய்கை
யா[4]னளந் தறைந்தபாட லிடைவிடா தொளிர்க வெங்கும்.

பி-ம்:—[1]மறை. [2]வளர்ந்தமுதமாலை, வளர்ந்தெரியன்மாலை. [3]கீர்த்தி. [4]விழைந்தறைந்த.

2 எறிகடல் [1]ஞாலந் தன்னு ளின்றமிழ்ப் புலவர்க் கெல்லாம்
முறுவலுக் குரிய வாக [2]முயன்றன மியன்ற வின்சொற்
சிறுமையே நோக்கார் தங்கள் [3]பெருமையே சிந்தைசெய்யும்
அறிவுடை மாந்தர்க் கெல்லா மடைக்கல மாக வாழி.

பி-ம்:—[1]உலகந்தன்னில், [2]மொழிந்தனன் மொழிந்தவெஞ்சொல். [3]மேன்மையைச்.

* 3. அம்பிலே .... .... .... ஈந்தான்.
4. நாரணன்விளையாட்டெல்லாம் .... கவிதைசெய்தான்.
5. எண்ணியசகாத்தம் .... ... அரங்கேற்றினனே.

மற்றொரு பிரதியில்

வாழிய சீரிராமன் வாழிய சீதை கோமான்
வாழிய கௌசலேசை மணிவயி றுதித்த வள்ளல்

---

* இதுமுதல் மூன்றுபாடல்கள் பாலகாண்டப்புத்தகத்திற் காட் டப் பட்டுள்ளன.

